இதனடியிற் குறித்துள்ள புத்தகங்கள் வை. மு. கோபால க்ருஷ்ணமாசார்யர், 17 - தெளிசிங்கப்பெருமாள்கோயில்தெரு, திரு வல்லிக்கேணி என்ற விலாசத்திற் கிடைக்கும்.

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| **கம்பராமாயணம்:—** | | | | | |
| பாலகாண்டம் | உரையுடன் | ... | 5 | 0 | 0 |
| அயோத்தியாகாண்டம் | ,, | ... | 5 | 0 | 0 |
| ஆரணியகாண்டம் | ,, | ... | 4 | 0 | 0 |
| கிட்கிந்தாகாண்டம் | ,, | ... | 4 | 8 | 0 |
| சுந்தரகாண்டம் | ,, | ... | 5 | 0 | 0 |
| யுத்தகாண்டம் 2-வால்யூம் | ,, | ... | 10 | 0 | 0 |
| **பத்துப்பாட்டு:—** | | | | | |
| திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி யுரையுடன் | | ... | 0 | 3 | 0 |
| பொருநராற்றுப்படை | ஷை | ... | 0 | 4 | 0 |
| சிறுபாணாற்றுப்படை | ஷை | ... | 0 | 4 | 0 |
| முல்லைப்பாட்டு | ஷை | ... | 0 | 3 | 0 |
| நெடுநல் வாடை | ஷை | ... | 0 | 4 | 0 |
| பட்டினப்பாலை | ஷை | ... | 0 | 4 | 0 |
| நாலடியார் உரையுடன் | | ... | 2 | 0 | 0 |
| சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை உரையுடன் | | ... | 0 | 2 | 0 |
| தொல்காப்பியச்சொல்லதிகாரக்குறிப்பு | | ... | 3 | 2 | 0 |
| நன்னூற்காண்டிகையுரை | | ... | 1 | 8 | 0 |
| **வில்லிபாரதம்:—** | | | | | |
| சபாபருவம் உரையுடன் | | ... | 2 | 8 | 0 |
| சல்லியசௌப்திக பருவங்கள் உரையுடன் | | ... | 3 | 0 | 0 |
| சடகோபரந்தாதி உரையுடன் | | ... | 0 | 12 | 0 |
| திருப்பாவை உரையுடன் | | ... | 0 | 6 | 0 |
| சரசுவதியந்தாதி உரையுடன் | | ... | 0 | 3 | 0 |
| திருவேங்கடக்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| அழகர்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| மதுரைக்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| அஷ்டப்ரபந்தம் விரிவுரையுடன் | | ... | 3 | 8 | 0 |
| திருக்கருவைக்கலித்துறையந்தாதி உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| திருக்கருவைவெண்பாவந்தாதி | | ... | 0 | 6 | 0 |
| நாலாயிரதிவ்யப்ரபந்தம் | | ... | 3 | 8 | 0 |
| தனித்தனியாயிரமும் கிடைக்கும். | | | | | |
| பெரியபுராணத்துக் கண்ணப்பநாயனர் புராணவுரையும், கந்தபுராணத்து வள்ளியம்மைதிருமணப்படலவுரையும் | | | 0 | 8 | 0 |
| நித்யாநுசந்தானம் | | ... | 0 | 10 | 0 |
| பகவத் விஷயம் 10-வால்யூம் | | ... | 50 | 0 | 0 |
| திருமந்த்ரார்த்தம் | | ... | 1 | 8 | 0 |
| குருபரம்பராப்ரபாவம் ஆறாயிரப்படி | | ... | 3 | 0 | 0 |
| யதீந்த்ரப்ரவணப்ரபாவம் | | ... | 1 | 0 | 0 |

## வசன நூல்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| உதயணன் சரிதை | ... | 0 | 12 | 0 |
| சந்திராபீட சரிதை | ... | 0 | 5 | 0 |

# இப்புத்தகத்தில் அடங்கியவை:—

பக்கம்.



## அயோத்தியா காண்டம்:—





# முகவுரை

"ஒன்று யிரண்டு சுடராயொரு மூன்று மாகிப்
பொன்றுத வேத மொருநான்கோடைம் பூத மாகி
யன்றுகி யண்டத் தகத்தாகியப் புறத்து மாகி
நின்று னொருவன் னவனீள்கழ னெஞ்சில் வைப்பாம்."

"தோத்தலர்பூஞ் சுரிகுழற் கைகேசி சொல்லாற் றொன்னக ரந் துறந்து துறைக்கங்கை தன்னைப், பத்தியுடைக் குகன்கடத்த வனம் போய்ப் புக்குப் பரதனுக்குப் பாதுகமு மரசு மீந்து, சித்திர கூடத் திருந்தான் றன்னைத் தில்லைநகர்த் திருச்சித்திர கூடந் தன்னு, ளெத்தனையுங் கண்குளிரக் காணப் பெற்ற விருநிலத்தார்க் கிமைய வர்நே ரொவ்வார் தாமே."

*அயர்வறுமமரர்கட்கு அதிபதியான திருமால் நல்லோரைப்பாதுகாக் கவும் தீயோரைநலியவும் அறத்தைநிலைநாட்டவும் தான் மேற்கொண்ட அவ தாரங்கள் பலவற்றுள் பூர்ணவதாரமாகப் பிரசித்தமான அவதாரங்கள், ராமா வதாரமும் க்ருஷ்ணவதாரமு மாகும்: அவற்றுள்ளும், மானுடத்தன்மையில் தெய்வத்தன்மை மறைந்துநிற்கத் தன்னுடைய மாசற்ற ஒழுக்கத்தால் உல கத்தோர்க்கு நல்லறிவூட்டியது இராமாவதாரமேயாகும். ஆனதுகுறித்தே, பல பாஷைகளிலுமுள்ள கவிஞர்பலரும், இந்த ராமமூர்த்தியினிடம் ஈடு பட்டுத் தம்முடைய வாக்கை அந்தப்பிரான் திறத்துத் தந்து தாம்வாய்படை த்த பயனைப் பெறுவாராயினர்.*

*ஆயினும், இராமசரிதத்தைச் செய்யுளாலியற்றியவர்களுள் முதன்மை யான கவி, ஸ்ரீவான்மீகிமுனிவரேயாவர்: வடமொழியில் வேதத்தில் மாத் திரமிருந்த செய்யுணடையை இவர்தாம் உலகவழக்கிலும் இயற்றியவராவர்; ஆனதுபற்றியே இவரை ஆதிகவி யென்பர்.*

*நமது அமிழ்தினுமினிய தமிழ்மொழியில் வடமொழிவான்மீகத்தோடு ஒப்பத் துலங்குஞ் சீர்மையையுடையது, கம்பரென்னும் பெருங்கவிஞர் செய்த இராமாயணமாகும்: இந்தப்பெருங்கவிஞர் வான்மீகிமுனிவர் வட மொழியிற் கூறியதை யொட்டித் தமிழில் இராமசரிதையைக் கூறவேணு மென்று கருதினரென்றாலும், படிப்போர்க்கு இனிமைதோன்றுமாறு கதைப் பகுதியை நயப்படுத்துப் பேசுவாராயினர். இத்தன்மையைப் பாலகாண்டத் திற்கு உரையெழுதி வெளியிட்டதில் ஆங்காங்குக் காட்டியுள்ளேன்.*

*இந்த அயோத்தியாகாண்டத்திலும் நுட்பமாக ஒப்பிட்டுப்பார்க்குமிடத் துப் பாலகாண்டத்திற்போலவே யிருப்பதை இயன்றவரையிலூன்றி*

நோக்கி ஆங்காங்குக் காட்டியுள்ளேன். பெரும்புலவராகிய இந்தக்கம்பர்
அங்ஙனம் மாற்றியதற்குக் காரணம் என்னவாயிருக்கலாமென்று கற்போர்
ஆராய்ந்தால், ஆங்காங்குத் தக்க காரணம் புலப்படும்: இம்முறைபற்றியே,
நாட்டைவிட்டுப் புறப்பட்ட இராமபிரானைக் கங்கைக் கரைவரையிலுந்
தேரின்மீது ஏற்றிச்சென்ற சுமந்திரன் கங்கையைத் தேரைக்கொண்டுகடத்த
வியலாதாகையால் இராமனிடத்துப் பேரன்புபூண்ட குகப்பெருமானு
டனே தங்கியிருந்து இராமபிரான் சித்திரகூடஞ் சேர்ந்தானென்ற செய்தி
யை அந்தக்குகனுடைய ஒற்றர்வந்துகூறவே 'இனி இராமன் வனத்தி
னின்று மீண்டுவரான்' என்று துணிவுகொண்டு பின்னர் அங்குநின்று
மீண்டுவந்து அயோத்திசார்ந்து தசரதனுக்குச் செய்திசொல்ல அச்செய்தி
யைக் கேட்டபிறகே தசரதனது ஆவி நீங்கிற்றென்று ஸ்ரீவான்மீகிமுனிவர்
கூறியிருக்கவும், ஒப்புயர்வில்லாப் பண்புகள்யாவும் நிறைந்து தனது அன்
பிற்கெல்லாம் ஒரேபற்றுக்கோடான இராமனைப்பிரிந்து அவனதுதந்தை
யான தசரதன் பலநாள் உயிரோடிருந்தானெனின் அவனை வன்கண்ண
னெனக் கூறியதாகுமெனக்கொண்டு, மகாகவியாகிய கம்பர், கானகம்புறப்
பட்ட அன்று இரவில்தானே சுமந்திரன் இராமனைவிட்டுப்பிரிந்து அயோ
த்தி வந்துசேர்ந்து இராமன் வனத்திற்குச் சென்றிட்டானென்ற செய்தி
யைத்தெரிவிக்க, உடனே தசரதசக்கரவர்த்தியின் ஆவிபோயிற்றென்று கூறு
கின்றார்: இவ்வாறான கோட்பாட்டுடனேதான் மகாகவியாகிய கம்பர் தாம்
கூறியிருக்கின்றாரென்பது "கேட்டேயிருந்தேனெனினுங் கிளர்வானின்
றேயடைய, யாட்டேறுகிலன்றே வன்கணென் கண்மைந்தா" என்று
தசரதன்புலம்பலில் அம்மன்னவர்பிரான்வாக்காகக் கூறியுள்ளதிற் புலனாதல்
காண்க. இங்ஙனம் கம்பர் கூறுவதனால் தசரதன் இராமபிரானிடத்துக்
கொண்ட பேரன்பை எவ்வளவு விளக்குகின்றது என்பது,வான்மீகத்தையும்
கம்பர்கவியையும் ஒப்புநோக்கிப் படிப்போர்க்கு நன்கு விளங்கும். இவ்வண்
ணம் சுவைமிகுமாறு இனிமைப்படுத்துக் கூறுவதையே கம்பர் மேற்கொண்
டிருத்தலால், இவரது காப்பியத்தைக் கம்பநாடகமென்றும் சிலர் வழங்கு
வாராயினர். (இங்குப் படிப்போர் ஊன்றி நோக்கற்பாலது ஒரு பொரு
ளுண்டு. கம்பர் 'சுமந்திரன் வனத்திற்குப்புறப்பட்ட அந்நாளே இராம
பிரானை ஒரு சோலையில்விட்டுத் திரும்பிவந்தான்'என்றுகூறி, பரதன் இராம
பிரானை மீட்டு அழைத்துக் கொணரவேணுமென்று செல்லுகையிற் கங்கைக்
கரை சேர்ந்தபின், குகனைப்பற்றி "உங்கள் குலத்தனிநாதற் குயிர்த்துணை
வன்" என்று பரதனுடன் சென்ற அச்சுமந்திரன் கூற்றாகச் சொல்லுவது
எங்ஙனம் பொருந்துமென்பது: இதற்குச் சமாதானம் ஆங்குக் கூறியுள்
ளேன்.)

இங்ஙனம் கம்பர் மாற்றிக்கூறுவது மேற்கோளில்லாமலேயாகுமென்று
திண்ணமாய்ச் சொல்லுதற்கும் இயலாது. வடமொழியில் இராமபிரான்
விஷயமாகவுள்ள பலநூல்களைப் படித்துப்பார்த்துச் செல்வோமாயின், ஓ

வோரிடத்து இக்கம்பர் மாற்றிக்கூறியதுபோலவே கூறியிருப்பதைக் காண லாகும்; தென்மொழியில் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலும் இரண்டொன்று காணப்படும். படிப்போர்க்கு இப்பொருள் விளங்குமாறு பெரியதொரு விஷயத்தைத் திருட்டாந்தமாகக் கூறுவேன்: உலகமாதாவாகிப் புருஷோத் தமனது பத்தினியாகிய ஸ்ரீசானகிப்பிராட்டியாரை நீசனாகிய இராவணன் கையால்தீண்டியெடுத்துச் சென்றானென்று கூறுவதற்குக் கூசிய இந்த மகாகவி "ஆண்டாயிடை தீயவ னாயிழையைத், தீண்டானெனு மேலுரை சிந் தைசெயாத், தூண்டானெனலாமுயர்தோள் வலியாற், கீண்டானிலம்யோ சனை கீழொடுமேல்," "கொண்டானுயர் தேர் மிசை" என்றுகூறினார்: இவ் விஷயம் வடமொழியில் அத்யாத்மராமாயணத்திலே சாயாசீதையைப் பூமி யோடுபிளந்து தேரின்மீதுவைத்துச் சென்றானென்னும் பொருள் பட, 'ததோவிதார்யதரணீம் நகைருத்த்ருத்யபாஹுபி:—தோலயித்வாரதேக்ஷிப் த்வா யயௌக்ஷிப்ரம்விஹாயஸா"என்றுகூறியுள்ளதுகாண்க. இக்கம்பர்கூறிய சரிதை மாறுதல்களும் சிற்சில வருணனைப்பகுதியும் வடமொழியிலுள்ள நூற்களிற் காணப்படுவது கொண்டு, மகாகவியாகிய இந்தக்கம்பர் வடமொழி யிலும் வல்லவரென்று சிலர் கொள்கின்றனர்: கேள்வியின்மூலமாகக் கதைப் பகுதிகளின் மாறுதல்களை எளிதிலறிந்துகொள்ள வியலுமாதலாலும், பெருங்கவியாகிய இக்கம்பர்க்கு வருணனைப்பகுதியிற் பிறர்கூறியதைக் கொண்டு கூறவேண்டுவதின்றித் தமது இயற்கைப்பேரறிவாலேயே கற்பித் துக் கூறுதற்கு ஏற்ற பேராற்ற லிருப்பதாலும் வடமொழியையறிந்தே இங் ஙனம் இசைத்தன ரென்று கொள்ளவேண்டுவது அவசியமன்று.

இந்த ராமாயணத்தில் இவ்வயோத்தியாகாண்டம் உயிர்நிலையானது: எவ்வாறெனில்,கூனியின் சூழ்ச்சியாற் கைகேயி தன்மனம் மாறுபட்டு இராம பிரானை வனத்திற் செலுத்த,அதுவே இராவணவதத்துக்கு ஏதுவாகி இராம பிரானது சரித்திரந் தோன்றக் காரணமாதலா லென்க. இவ்விஷயத்தைப் பெரும்புலவராகிய கம்பரே "அரக்கர்பாவமு மல்லவரியற்றிய வறமுந், துரக்க நல்லருடுறந்தனள் தூய்மொழிமடமா, னிரக்க மின்மையன்றோ வின்றிவ் வுலகங்களிராமன், பரக்குந்தொல்புக ழமுதினைப் பருகுகின்றதுவே" என்ற பாசுரத்தினாற் சொல்லிப்போந்தார்.

இந்தக்காண்டத்தில் தசரதகுமாரராகப்பிறந்த நால்வர்குணமும், "அகல கில்லேனிறையும்" என்றிருக்கும் பிராட்டியின் தன்மையும் விளங்குவது காணலாம். அன்றியும், அரசியலைநடத்தவேண்டியமுறை அரசர்தமதுமுது மைக்காலத்து நிகழ்த்தவேண்டியவகை அரசுபுரிவோர்மேற் கொள்ளவேண் டியதன்மை அரசனில்லாச்சமயத்து நாட்டை நடத்தவேண்டியவகை பணி யாளர் நடந்துகொள்ளவேண்டியநிலை முதலிய அரசுக்குரியனவும், நட்பின் சிறப்பு, பகவானுடைய சம்பந்தம் முக்கியமேயன்றிப் பிறப்பினாற் பயனின் மையென்பது, ஒருத்தர் ஒரு தீமையைச்செய்வது அவரைச்சார்ந்தார்க்குந் தீமைவிளைப்பதாகை,பெரியோரிடத்து நடந்துகொள்ளவேண்டியவகை, பாக

வதர்களின் சிறப்பு முதலியனவும் ஆங்காங்குவெளியாம். அன்றியும் வசிட்ட முனிவன் இராமபிரானுக்கு உபதேசித்தது, இராமபிரான் தன்வனவாசத்தைக் குறித்து வருந்திய கோசலையாரைத் தேற்றியது, வனவாசத்தைச் செவியேற்றுச் சீற்றங்கொண்ட இலக்குமணனது சினத்தை இராமபிரான் மாற்றியது, சுமித்திரை இலட்சுமணனுக்குச்சொன்னது, சீதைதான்கானகஞ்செல்வேனென்னப்போந்தது, சுமந்திரனை மீண்டுசெல்லுமாறு பணிக்கையில் அவன் வருந்தத் தேற்றியது, பரதன் தன்னைப் பிறர்அயிர்க்கப்போகின்றனரே யென்று ஐயுற்றுப் பிரதிஜ்ஞைசெய்தது, பரத வசிஷ்ட சம்வாதம், தசரதமரணத்தா லிராமன் வருந்துகையில் வசிட்டமுனிவன் அவனைத் தேற்றியது,இராமபரத சம்வாதம்முதலிய இடங்களில் பற்பலநீதிகள் செம்பொருளாகவும் கருத்துப்பொருளாகவும் விளங்குவதைக் காணலாம்.

இந்த அயோத்தியாகாண்டத்தில் **“ஈசுவரன் சேதநனை யங்கீகரித்தால் இச்சேதநனுக்கு உய்வுண்டாகலாமேதவிர,இச்சேதநனுடைய முயற்சியால் எம்பெருமானைக் கால்கட்டிக்கொள்ளுகிறேமென்பது இயலாது”** என்ற அரும்பொருள், முக்கியமாக விளங்குமென்பர். இங்ஙனம் அறத்தையுணரவேணுமென்னுங் கருத்துக்கொண்டார்க்குப் பொதுவாகவும் சிறப்பாகவுமுள்ள தருமத்தைத் தெரிவிப்பதும், ஆஸ்திகர்க்கு இம்மைமறுமைப்பயனை விளைப்பதும், பிறவிப்பெருங்கடலை நீந்துவார்க்குப் புணைபோல்வதுமாகிச் சுவைமிகுந்து துலங்குகின்றது, இந்த அயோத்தியாகாண்டம்.

பாலகாண்டத்தை அச்சிட்டு வெளிப்படுத்தியபின் அயோத்தியாகாண்டத்தையும் அங்ஙனமே அச்சிட்டுவெளிப்படுத்தவேணுமென்னும் விருப்பத்துடன் அடியேன் உரையெழுதிவருகையில், எனது உத்தியோகசாலையில் தலைவராயுள்ள திருவாளர் S.வையாபுரிபிள்ளை B A,B.L அவர்கள் தாம் பலஏட்டுப்பிரதிகளை யொப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்துவைத்திருப்பதாகச் சொல்லி,அங்ஙனங்குறித்துள்ள தமதுபுத்தகத்தைத் தந்தனர்: அந்தப்புத்தகத்திற் பாடபேதங்குறிக்கப்பட்டிருந்ததோடு, அக்காண்டத்தில் முன்பின்வரும் ஒப்புமைப்பகுதிகளும் பிறநூலின் ஒப்புமைப்பகுதிகளும் சிலகுறிக்கப்பட்டிருந்தன: அவர்களது அருமையான உழைப்பு,அவர்களின் புத்தகத்தை நேரிற்கண்டோர்க்குத்தான் தெரியும். இதுவேயுமன்றி, இந்தக்கம்பராமாயண அயோத்தியாகாண்டத்தை ஒப்பிட்டுப்பார்க்க, எனது உத்தியோகசாலையில் தலைமைப் பண்டிதராயிருக்கும் ஸ்ரீ உ. வே. **மு. ராகவையங்கார்ஸ்வாமி**களின் ஏட்டுப்பிரதியும், **அரசாங்கக்கையெழுத்துப் புத்தகசாலை**யினின்று ஐந்து ஏட்டுப்பிரதிகளும் கிடைத்தன:இவற்றோடு திருவாளர் **மயிலை-ஸி. சிவஞானம்பிள்ளையவர்கள்** ‘தி. அ. கனகசுந்தரம்பிள்ளையவர்களின் திருத்தங்குறிக்கப்பட்டபிரதி’ என்று ஒருபிரதியும், வேறொரு அச்சிட்டபழம்பிரதியும் தந்தனர்; பிறகு, எனது உத்தியோகசாலையில் பண்டிதராகவுள்ள **இலக்கணவிளக்கபரம்பரை - சோமசுந்தர தேசிகரவர்கள்** தமது ஏட்டுப்பிரதியையுதவினார்கள். யான் முன்னமே அவ்வப்போது ஆராய்ச்சியிற் குறித்திரு

ந்தவற்றோடு கிடைத்த இந்தப்பிரதிகளின் பாடங்களும் இந்தப்பதிப்பிற்கு உதவின. இவ்வயோத்தியாகாண்டப்பதிப்பு திருத்தம்பெறவேணுமென்ற ஒன்றையே கருதி தமது பிரதிகளை இம்மகோபகாரிகள் உதவியதற்காக, யானும் இப்பதிப்பாற் பயனை நுகர்வோரும் இவர்கள்திறத்து நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்,

இந்தக் காண்டத்தில் முழுவதையும் ஒப்பிட்டுப்பார்த்தவிடத்துப் பெரும்பாலும் எல்லாப்பாடல்களிலும் பாடபேதம் காணப்பட்டதோடு அச்சிட்டபிரதியிற் காணப்படாத சிலபாடல்களும் காணப்பட்டன. அவை - மந்திரப்படலத்தில் "மன்னமேதினியை", "தீங்கிழை" என்று தொடங்கும் பாடல்களும், "நறைக்குழல்" என்பது முதலாகவுள்ள பதினென்குபாடல்களும்: நகர்நீங்குபடலத்தில் "என்றென்றறிவித்து", "வானமேயனையதோர்" என்று தொடங்கும் பாடல்களும், தைலமாட்டுபடலத்தில் "வந்தமுனிவன்" என்றபாடலும்: கங்கைப்படலத்தில் "நின்றுநெஞ்சில்", " அடிதொழுது", "வெயில்விரி", "மறக்கண்வாள்", "மற்றவளிறைஞ்சி" என்ற பாடல்களும்: சித்திரகூடப்படலத்தில் "எய்தவின்னல்" என்ற பாடலும், பள்ளிபடைப்படலத்தில் "கவ்வரவதுவென", "என்று கொண்டுமாதவன்" என்ற பாடல்களுமாம். சீவகசிந்தாமணியில் கந்தியார்பாடல் இடைச்செருகலாய்ச் சேர்ந்திருப்பதுபோல, இந்தக் கம்பராமாயணத்தில் வெள்ளியம்பலத்தம்பிரானென்ற ஒருவர் இடைச்செருகலாய்ச் சிற்சில பாடல்களைப் பாடிச்சேர்த்தாரென்பது, பிரசித்தமாக வழங்குகின்றது. அவை இன்னவையென்று இக்காலத்துப் பிரித்து எல்லாவற்றையுஞ் சொல்லமுடியாவிடினும், மந்திரப்படலத்தில் "மூவெழுமுறைமை" என்பதன் பின் "நறைக்குழல்" என்பது முதலாகவுள்ள பாடல்களும், சித்திரகூடப்படலத்தில் "எய்தவின்னல்" என்றபாடலும் அவ்வகைப்பாடலாக இருக்கலாமென்று தோன்றுகின்றது.

இக்காண்டத்திலுள்ள பன்னிரண்டுபடலங்களுள் ௧-மந்திரப்படலம், ௭-வனம்புகுபடலம், ௮-சித்திரகூடப்படலம் என்பவைதவிர மற்றையவற்றில் படலப்பெயரும் மாறிக்காணப்பட்டன; எங்ஙனமெனின்?—௨-ஆவது மந்தரைப்படலம் என்றும், ௩-ஆவது கைகேசிப்படலம் என்றும், ௪-ஆவதுநகரினீங்குபடலம் என்றும், ௫-ஆவது இலம்பாட்டுப்படலம் என்றும், ௬-ஆவது குகப்படலம் என்றும், ௯-ஆவது பள்ளிபடைப்படலம்என்றும், ௧௦-ஆவதுஆறுசெல்படலமென்றும்,௧௧-ஆவது கங்கைப்படலம் அல்லது கங்கைகாண்படலம் என்றும், ௧௨-ஆவது திருவடிசூட்டுபடலம் என்றுமாம். இங்ஙனம் அச்சிட்ட பிரதிக்கு மாறுகக் காணபட்டவைகளுள் ௯-ஆவது பள்ளிபடைப்படலம் என்ற பெயரையும், ௧௦-ஆவது ஆறுசெல்படலம் என்றபெயரையும், ௧௨-ஆவது திருவடிசூட்டுபடலமென்ற பெயரையும் இந்தப்பதிப்பில் எடுத்துக் கொண்டு அதற்குக் காரணமும் ஆங்காங்குக் கூறியுள்ளேன். மற்றவற்றுள்

ரு - ஆவது இலம்பாட்டுப்படலம் என்பது - தசரதன் இல்லாமற்பட்டதை [இறந்ததை]த் தெரிவிக்கும்படல மெனப் பொருள்பட்டு இனிது கதைப் போக்கைத் தெரிவிப்பதற்கு உதவுவதாயினும், இலம்பாடு என்பது மரண மென்ற இப்பொருளில் வழங்கியதற்கு மேற்கோள் கிடைக்காமையால் அதனைக் கொள்ளவில்லை: மற்றைப்படிபார்ப்பின் இலம்பாட்டுப்படலமென் பதே மிகவும் பொருத்தமான தாகும். பல ஏட்டுப்பிரதிகளிலும் சு - ஆவது கங்கைப்படலம் என்பதற்குக் குகப்படலம் என்ற பெயர் காணப்படுவது மிகவும் பொருத்தமாயிருப்பினும், அச்சிட்டபிரதிகளின்மூலமாய் கக - ஆவது படலத்திற்கே குகப்படலமென்ற பெயர் உலகத்திற் பரவியிருத்தலால், இப் போது மாற்றி சு-ஆவதுபடலத்திற்குக் குகப்படலமென்றும் கக-ஆவது பட லத்திற்குக் கங்கைப்படலமென்றும் பதிப்பித்தால், உலகத்தோர்க்கு மயக்க முண்டாகக்கூடுமென்று கருதி யான் அங்ஙனஞ் செய்திலேன்: ஆயினும், சு-ஆம்படலத்திற்குக் குகப்படலமென்றபெயரும், கக ஆம் படலத்திற்குக் கங் கைப்படலம் அல்லது கங்கைகாண்படலமென்ற பெயருமே யமையுமென்று வற்புறுத்துக் கூறுகின்றேன். மற்றை உ-ங - ச - படலங்கள் எங்ஙன மிருப் பினும் வேற்றுமை யில்லை யாதலால், முன்னுள்ளவாறே பதிப்பிக்கலாயின.

அன்றியும், படலமுடிவு மற்றைப்படலங்களிலெல்லாம் ஒத்துக் காணப்படினும், சிலபிரதிகளில் மந்தரைசூழ்ச்சிப்படலம்மாத்திரம் "நன்று சொல்லினை" (அஎ) என்ற பாடலோடு முடிய, கைகேசிசூழ்வினைப்படலம் "கூனிபோனபின்" என்ற மந்தரைசூழ்ச்சிப்படலத்து எண்பத்தைந்தாம் பாடல்முதற்கொண்டே தொடங்கியுள்ளது.

பலபாடங்களுள்ளவிடத்துப் பொருட்பொலிவு சொற்செறிவு ஓசைநயம் பிரசித்தமாகவழங்குகை பொருள்கூறஅரியதாகை முதலிய காரணங்களை முன்னிட்டு இந்தப்பதிப்பில் ஒருபாடத்தை முக்கியமாகக்கொண்டு, மற்ற வற்றைப் பிரதிபேதத்திற் கூறியுள்ளேன். பிரதிபேதத்திற்காட்டியவற்றிற் சில பிரதானமாகக் கொள்ளத்தக்கனவாகவுஞ் சிலர்க்குத் தோன்றலாம். "லோகோ பிந்நருசிः [உலகம் பல்வேறுசுவையுடைத்து]"என்பவாதலால் எல்லாவிடத்தும் யாவரும் இதுவே தக்கதென்று ஒருமனமாக எங்குமொப்பு மாறுசெய்வது, இயலாத செயலாகு மன்றோ?

இவ்வாறு பாடபேதம் மிகுதியாகத்தோன்றுவதற்கு யாதுகாரணமென்ற ஆராய்ச்சி, கற்போர்மனத்துத் தோன்றலாம்:ஒருநூல் மிகச்சுவையுடைத்தாய் அந்நாட்டுப்பேரறிஞர் பலராலும் பெரிதும்போற்றப்பட்டு, இக்காலத்துப் போல அச்சின்மையால் ஒன்றைப்பார்த்து ஒன்றாகப் பலபிரதிகள்செய்யப்படு மிடத்து, எழுதுவோர் யாவரும் தக்கநல்லறிவுவாய்ந்தவராக இராமைபற்றி உள்ளதையுள்ளபடியே படித்து எழுதுவது அருமையாதலும், அறிஞர் பிரதி செய்யினும் ஒவ்வோரிடத்து மூலப்பிரதிக்கு வேறாக ஒருசொல்லுள்ளவிடத்து வேறொருசொல் எழுதுவதில் வந்துவிடுவது முதலியன இயல்பேயாதலும்,

எட்டுப்பிரதிகளைப் படிக்கும் அறிஞரும் படித்துச்செல்கையில் ஓரெழுத்தை மற்றோரெழுத்தாக மாறுபடக்கருதிப்படித்தலும், படிப்போர்கள் தத்தமது அறிவுக்குஏற்பச் சிற்சிலஇடத்து இவ்வண்ணமிருப்பின் நலமென்றுகருதித் திருத்துவதும், நூலாசிரியரே தாம் முன்எழுதியபாடம் உலகத்திற்பரவி யிருக்க அவ்வப்போது தமக்குத்தோன்றிய திருத்தங்களைச் செய்துகொண்டு வர அத்திருத்தமானபாடமும் பரவியதும் என்றஇன்னோரன்னவை யென்க.

கிடைத்த பிரதிகளிலுள்ள பாடபேதங்களையெல்லாம் விடாமற்பதிப் பிக்க வேணு மென்ற நோக்கத்தோடு இந்நூலைப் பரிசோதித்துள்ளேன்: ஆயி னும், தக்கதுணை முதலியன இன்மையால் என்கருத்து முற்றிலும் நிறை வேறிற்றில்லை: இன்னும் பலபிரதிகளைத் தேடிப்பெற்று ஒப்பிட்டுப்பார்த்தா லும், ஆங்காங்குச் சிறந்த பாடபேதங்கள் கிடைக்குமென்பது, திண்ணம்.

அன்றியும், ஏட்டுப்பிரதிகள் பலவற்றில் ழகரளகரங்கள் மாறிக்காண் பது இயல்புஆதலால் அவை பெரும்பாலும் காட்டப்படவில்லை: மற்றுஞ்சில பெரும்பாலும் காட்டப்படவில்லை: அவை—வடமொழிச்சொற்களில் நகர ணகரவேறுபாடுகள், வேற்றுமையுருபுகளிலும் எதிர்காலவினையெச்சங்களி லும் வரும் லகரனகரவேறுபாடுகள்,ஐயன்=அய்யன், பயம்=பயன் என்றாற் போன்ற போலிகள், என்ன=என்னு என்றாற்போன்ற சொற்கள் என் பனவாம்.

என்போன்றார்க்கு இராமாயணத்துக்குத் திருத்தமுற உரைகாண்டல் இயலாதாயினும் இந்நூலினிடமுள்ள விருப்பத்தால் அடியேன் இராமபிரா னது திருவருளைமுன்னிட்டு இப்பெருந்தொழிலில் தலையிடலானேன். அடி யேனுக்குத் தமிழாசிரியரும் தமையன்முறையானவரும் உரையெழுதுவதில் மிக்கசீர்த்திவாய்ந்தவரும் கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜில் தமிழ்ப் பண்டிதராகவிளங்கி எம்மனோரது தீப்பேற்றால் இளம்பிராயத்திற்றானே பரமபதித்தவருமான **ஸ்ரீ உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகளும்,** அந்தச்சுவாமிகளுடைய தமிழாசிரியரும் சென்னை பிரஸி டென்ஸி காலேஜில் தமிழ்ப்பண்டிதராயிருந்து காலஞ்சென்றவருமான **ஸ்ரீ உ. வே. பு. மா. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமிகளும்** இந்தக்காண்டத்திற் சிற்சிலபடலங்கட்கு எழுதி வெளியிட்டிருந்த உரைகள் இங்ஙனம் யான் அயோத்தியாகாண்டம் முழுவதற்கும் உரையெழுதி வெளியிடுவதற்குப் பெருந்துணையா யுதவின.

இந்த அயோத்தியாகாண்டத்திலும் பாலகாண்டத்திற் போலவே, சீர் பிரித்தசெய்யுளும் பதவுரையும் என்பவற்றோடு பாடலிற்கூறியுள்ள விடயம் விளங்குமாறு எல்லாச்செய்யுட்குந் தலைப்பும், கருத்து பதசாரம் தொனிப் பொருள் மற்றுங் கூறற்குரியஉரைகள் இலக்கணக்குறிப்புக்கள் அணிகள் ஒத்தபகுதிமேற்கோள்கள் புராணகதைகள் முதலியனவும் காட்டப்பட்டுள் ளன: அன்றியும், ஒவ்வொரு படலத்துக்கும் அவ்வப்படலத்துக் கதைச்சுருக்க

மும் காட்டப்பட்டுள்ளது. மற்றும், செய்யுண்முதற்குறிப்பகராதியும் அரும் பதவகராதி முதலியனவுஞ் சேர்க்கப்பட்டுள்ளன.

பெரியோரிடத்துக் கற்றுங்கேட்டுமுள்ளவற்றில் மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்டதொழிய அவன்கையில் அகப்படாதபடி நெஞ்சென்னுந் துணைவன் நிறுத்திவைத்தவற்றைக்கொண்டு எழுதிய இந்தவுரையில், சிறப்புக்கள் காணப்படின் அவை என்னுடைய ஆசிரியர் முதலியோருடையன வென்றும், குற்றங் காணப்படின் அவை என்னுடையன வென்றுங் கருதுக. என்னுடைய திரிபுணர்ச்சி சோர்வு அறியாமை முதலியவற்றால் இவ்வுரையிற் காணக்கூடிய குற்றங்குறைகளை விவேகிகள் பொறுப்பதன்றி, தாம் கண்ட அக்குறைவுகளையேனும் அடியேனுக்குப்புலப்படாத அரியபெரியவிஷயங்களையேனும் எடுத்துத் தெரிவிப்பராயின், அவர்களிடத்துப் பெருமகிழ்வோடு நன்றிபாராட்டிச் சமயம்வாய்க்கும்போது அவ்விஷயங்களைப் பிரசுரஞ்செய்து உலகோர்க்குப் பயன்படுமாறு செய்யவும் முயல்வேன்.

இந்தப்பதிப்பு நடக்கும்போது தமக்குஅவகாசப்பட்டகாலங்களில் பரிசோதித்தற்கு உதவியாயிருந்தவர்கள், ஹிந்துஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் **வித்வான் ஸ்ரீ. உ. வே. G. ரங்கசாமியையங்கார்ஸ்வாமி** என்பவரும், **ஸ்ரீ. உ. வே. E. S. வரதாசார்யர்ஸ்வாமி B. A.** என்பவரும் ஆவர்: இவர்கட்கு நன்மை மேன்மேலும் பெருகுமாறு ஸ்ரீராமன் திருவருள் புரிவாராக.

எமது உரைகளை உபயோகித்தும் உபயோகிக்குமாறு தூண்டியும் எமக்கு ஊக்கத்தைவிளைத்துவருகிற மகான்கள்திறத்தில் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

காப்பியச்சிரேட்டமாகிய இந்தக் கம்பராமாயணத்துக்கு உரையெழுதுமாறு சிற்றறிவுடைய சிறியேனுக்கு விருப்பையுண்டாக்கி, விக்கினகாரியென்று பிரசித்தமாகிய இந்த அயோத்தியாகாண்டத்தின் உரையை முற்றுமாறு தோன்றாத்துணையாய்நின்று திருவருள்புரிந்த ஸ்ரீராமபிரானது திருவடித்தாமரைகளை என்றுங் கருத்திற்கொண்டு வழுத்துவேன்.

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

இங்ஙனம்

**வை. மு. கோபாலக்ருஷ்ணன்.**

# சோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 23 | 21 | (அவற்குப்) | (அதற்குப்) |
| 39 | 22 | வறுமாறு | வருமாறு |
| 49 | 33 | னன்க | னென்க |
| 64 | 18 | உவகை | உகவை |
| ,, | 22 | இசைந்தந்து | இசைந்ததந்து |
| 102 | 17 | லன்று | லன்றி |
| 111 | 35 | எனினிமாம் | எனினுமாம் |
| 116 | 29 | அந்தரங்[2] | [2]அந்தரங் |
| 147 | 36 | வண்டோ? | வஞ்சமுண்டோ? |
| 175 | 4 | நிமித்தங் | நிமித்தம் |
| 178 | 9 | ஞெளி | ஞெலி |
| ,, | 25 | முழங்கினெ | முழக்கினெ |
| 180 | 37 | பணிவார் | யணிவார் |
| 183 | 2 | சாஜ | ராஜ |
| 187 | 6 | நிரம்பின | நிரப்பின |
| 195 | 4 | மூன்றுமடி | மூன்றடி |
| 196 | 19 | கவ்வாறு | கெவ்வாறு |
| 197 | 16 | மூர்த்தியும் | மூர்த்தியிம் |
| 199 | 14 | வரியார் | வறியார் |
| 201 | 35 | வெண்பா | மென்பா |
| 204 | 31 | உள்ளும் | உள்ளம் |
| 257 | 18 | இவ்வருமை | உன்னருமை |
| 261 | 37 | (கூக) | (சுக) |
| 273 | 36 | [2]நின்றன் | [2]நின்றான் |
| 302 | 34 | விளவில் | வளவில் |
| 327 | 38 | ரெண்ணமே | ரெண்ணமோ |
| 352 | 5 | மகிழ்ணர் | மகிணர் |
| ,, | 11 | சுட்டை | 'அ'என்று எடுப்பின், சுட்டை |
| 353 | 22 | [4]நேர்ஞானப் | [4]ஞானப் |
| 369 | 23 | தமிழுபசருக்கம். | கால்வாய். |
| 399 | 23 | போக்கித | போக்கிய |
| 418 | 19 | ஆம் | ஆலம் |
| 420 | 30, 31 | சுமத்தி | சுமித்தி |
| 435 | 7 | என்றப் | என்ற |
| 442 | 10 | எந்திய | |
| 455 | 38 | நங்கை | கங்கை |
| 465 | 19 | தீர்த்த | சீர்த்த |
| 472 | 8 | யிருக்கு | யிறுக்கு |
| 573 | 3 | பட்டன | பட்டனவென்றலும்ஒன்று |
| 583 | 32, 33 | ள்நாடோறும் | ளே |
| 597 | 5 | அழித்தமை-தொடுத் | அழித்துமை-தொகுத் |
| ,, | 21 | நோயொன் | நோயென் |
| 605 | 33 | பதுமுதலியனவும் | டதுமுதலியன |
| 656 | 9 | உவமையாயின. | மாதராரையொக்கும். |
| 764 | 12 | கருத்துத் | கருத்துங் |

மற்றுங்காணப்படினுந் திருத்திக்கொள்க.

# கம்பராமாயணம்.

இரண்டாவது

## அயோத்தியாகாண்டம்.

அயோத்தியில் நிகழ்ந்த விருத்தாந்தங்களைத் தெரிவிக்கும் பாகமென்பது பொருள். இராமன் கங்காநதியைத்தாண்டியது முதல் நடந்தவையெல்லாம் அரணியசம்பந்தமானவை யாயினும், பரதன் அயோத்தியிலிருந்துவருதல் முதலிய கதைகள் கூறப்படுதலால் அவையனைத்தும் அயோத்தியாகாண்டத்தின்பாற் பட்டன.

கீழ்ப் பாலகாண்டத்தில் வக்ஷ்யமாணதர்மாநுஷ்டானஉபயோகமாக ராமாயணபுருஷர்களுக்கு மஹாகுலப்ரஸூதத்வம், மஹாகுருக்ருபாலப்த தநுர்வேதரஹஸ்யத்வம், தத்ஸம்வாதபூத தாடகாதாடகேயாதிநிரஸம், ஹர தநுர்ப்பங்கம், வைஷ்ணவசாபபரிக்ரஹம் முதலிய குணங்களும் தர்மபத்நீ யோகமும் ஸவிஸ்தாரமாகச் சொல்லப்பட்டன; இக்காண்டத்தில் அவர்களால் அநுஷ்டிக்கப்பட்ட பித்ருவசநபரிபாலனம்முதலிய சாமானியதருமங்களும், பகவத்சேஷத்வம், பாரதந்த்ர்யம், பாகவதாபிமாநநிஷ்டை முதலிய விசேஷ தர்மங்களும் சொல்லப்படுகின்றன. முன்காண்டத்தில் லக்ஷ்மீயோகமும் இதில் பூமியோகமுஞ் சொல்லப்படுகின்றன என்றும், முன் பரத்வமும் இங்குச் சௌலப்யமுஞ் சொல்லப்படுகின்றன என்றுஞ் சொல்வர். முன் லக்ஷ்மீ விசிஷ்டமான ப்ராப்யஸ்வரூபம் [சேதநன் அடையவேண்டியபொருள்]சொல்லப்பட்டது; இங்கு ப்ராப்தாவின் [கடவுளைப்பேற்றின்பொருட்டுப் பற்றுபவருண சேதநனது] ஸ்வரூபம் சொல்லப்படுகின்றது என்றலு முண்டு.

### க - ஆவது மந்திரப் படலம்.

சக்கரவர்த்தி தன்திருமகனுக்கு முடிசூட்டக்கருதிக் குலகுருவாகிய வசிஷ்டனோடும் சுமந்திரன் முதலிய மந்திரிகளோடும் ஆலோசித்த கதையைச் சொல்லும் சிறிய பிரிவுஎன்பது பொருள்: மந்திரம்-ஆலோசனை. தசரதசக்கரவர்த்திக்கு நரைதோன்றியதாக, அச்சக்கரவர்த்தி ஒருநாள் தன்வடிவத்தைக் கண்ணாடியிற்கண்டு நரைதோன்றியதை நன்குணர்ந்து மகனுக்கு முடிசூட்டித் தான் பரகதிக்குவேண்டியவற்றைத் தேடுமாறு முயலக்கருதிச் சபாமண்டபத்தையடைந்து மந்திரிமாரை வரவழைக்க, அவர்கள்யாவரும் வந்துகூடிய

பின், தன்கருத்தைஅவர்கட்குத் தெரிவித்து அவர்கள்யாவரும் இராமனுக்கு முடிசூட்டுவதை மிகப்பாராட்டியதுகண்டு, சுமந்திரனைக்கொண்டு இராமனை வரவழைத்து அப்பிரானிடத்துத் தன்கருத்தைத் தெரிவிக்க, அவ்விராகவ பிரானும் தந்தையின்பணி யென்ற காரணத்தினால் மறுக்காமல் முடிசூடுவ தற்கு இசைய, சக்கரவர்த்தி மனமுவந்து எல்லாவரசர்க்கும் ஓலைபோக்கி வர வழைத்து தான் இராமபிரானுக்கு முடிசூட்டக்கருதியிருப்பதை யாவர்க்கும் தெரிவிக்க, அனைவரும் மகிழ்ச்சியோடுஉடன்படவே, சோதிடம்வல்லோரைக் கொண்டு பட்டாபிஷேகத்துக்கு நாளேற்படுத்தச் சென்றனன். இது இங்ஙன மாக: நால்வர் பெண்பிள்ளைகள் கோசலையிடஞ்சென்று இராமனுக்குப்பட்டங் கட்டச் சக்கரவர்த்தி கருதியிருப்பதைத்தெரிவிக்க, அந்தத்தேவி அரசன் துறப்பானென்பதனால் ஒருபால்துயரம்தோன்றவும் மங்களஞ்செய்திசொன் னவர்க்கு வெகுமதியளித்து அந்தணர்க்குப்பலவகைத்தானங்களைச்செய்து, இட்சுவாகுவமிசத்தார்க்குக் குலதெய்வமான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின்சந்நி திக்குச்சென்று அப்பரமனதுதிருவடிகளை வணங்கிவலம்வந்து தன்மகனது நன்மையின்பொருட்டுப் பலவகைநோன்புகளை நோற்றுக்கொண்டிருந்தன ளென்ற செய்தி இப்படலத்துக் கூறப்படுகின்றது.

## க.—கடவுள்வாழ்த்து.

வானின் றிழிந்து [1]வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்[2]பெங்கு
மூனு முயிரு முணர்வும்போ லுள்ளும் [3]புறனு முள[4]னென்ப
கூனுஞ் சிறிய கோத்தாயுங் கொடுமை [5]யிழைப்பக் [6]கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோ ரிடுக்கண் [7]டீர்த்த கழல்[8]வேந்தே.

(இதன்பொருள்.) கூன்உம் - கூனியும், கோ சிறிய தாய்உம்-க்ஷத்திரிய தர்மத்தையுடையசிற்றன்னையும், கொடுமை இழைப்ப-பொல்லாங்கானகாரி யத்தைச் செய்ததமையால், கோல் துறந்து-(தனக்குஉரிய)செங்கோன்மையை விட்டு, கான்உம் - காட்டையும், கடல்உம் - கடலையும், கடந்து - தாண்டி, இமையோர்-தேவர்களுடையவும், (இம்மையோர்)-இவ்வுலகத்தவர்களுடைய வும், இடுக்கண் தீர்த்த - துன்பத்தைப்போக்கியருளிய, கழல் - திருவடிகளை யுடைய, வேந்தே-ஸ்ரீராமபிரானே,—வான் நின்று-மூலப்பிரகிருதியிலிருந்து, இழிந்து-தோன்றி, வரம்பு இகந்த-வரம்புகடந்துபரந்த, மா பூதத்தின் வைப்பு எங்குஉம் - (ஐம்)பெரும்பூதங்களின் காரியமாய்ப் பரவியிராநின்றுள்ள பௌ திக பதார்த்தங்கள் தோறும் [ஜகமெங்கும்], ஊன்உம் உயிர்உம் (போல்)-உட லும் உயிரும்போலவும், (உயிர்உம்) உணர்வுஉம் போல் - உயிரும்உணர்வும்

போலவும், உள்உம் புறன்உம் - உள்ளும்புறத்தும், உளன்-(நிறைந்து) இருப்பான், என்ப - என்று சொல்லுவர் (ஞானிகள்); (என்றவாறு.)

பரமபுருஷனாகிய மன்றலர்துளவினனே, தசரதன் மதலையாய் ஸ்ரீராமனாகத்திருவவதரித்து இந்தக்காப்பியவரதனத்துக்குக் கதாநாயகனாக இருத்தலால், கவிச்சக்கரவர்த்தியாகியகம்பர் ஈடுமெடுப்புமில்லாத இவ்வுத்தமநாயகனையே வாழ்த்தல்வேண்டுதலின் காண்டந்தோறும் அவன்விஷயமாகவே கடவுள்வாழ்த்துக் கூறத்துணிந்து, பாலகாண்டத்தில் ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களைச் சொல்லுகிற முறையாலே மூன்றுகவிகளாற் கடவுள்வாழ்த்துக் கூறி அயோத்தியாகாண்டத்தின் இம்முதற்கவியால், அவன்தன்மையைக் காட்டும் வஸ்துநிர்த்தேசரூபமுகத்தாலே இக்காப்பியத்தலைவனாகிய ஸ்ரீராமபிரான் ஜகச்சரீரகனான ஸர்வேசுவர னென்கிறார்.

வான் - மூலப்பிரகிருதி; அதை "சுரரறிவருநிலை" என்னும் திருவாய்மொழிப்பாசுரத்தில் விண்ணென்னும் பதத்திற்குப் பூர்வாசார்யர்கள் செய்தருளிய வியாக்கியானங்களா லறிக. பஞ்சபூதவிகாரமன்றிப் பிரபஞ்சமென்பது ஒன்று இல்லையாதலாலும், இப்பிரபஞ்சகாரணமாகிய அவைதாம் இத்துணையவென இவ்வுலகத்துஎவராலும்துணியப்படாமையாலும்'வரம்பிகந்தமாபூதத்தின்வைப்பு'என்றார்.ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து அப்பும், அப்பிலிருந்து பூமியுமெனப் பூதங்கள் தோன்றும் முறையை வேதங்கூறுதலால் 'வானின்றிழிந்து...மாபூதம்'என்றுரெனினும்பொருந்தும்: "வானும்நிலனும் முதலீறில் வரம்பில்பூதம்" என்பர், மேல் நகர்நீங்குபடலத்தில். இங்கு உணர்வென்பது - தர்மபூதஜ்ஞானம். 'ஊனுமுயிருமுணர்வும்போ லுள்ளும் புறனு முளனென்ப' என்னுமிடத்து "திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசைப், படர்பொருண்முழுவதுமா யவையவைதொறு, முடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்னும் பாசுரத்தின் விசேஷார்த்தங்கள் விசாரித்தறியத்தகும். உள்ளேயிருப்பதற்கு ஊனுக்குள் உயிரிருப்பதும், வெளிப்பட்டும் இருப்பதற்கு உயிரில்உணர்வு இருப்பதும் உவமையென்க. உயிரும் என்பதை ஆவ்ருத்திசெய்துகொண்டு பொருளுரைக்கப்பட்டது.

கூனி - மந்தரை; கைகேயிக்குச் சூழ்ச்சி கூறினவ ளாதலின் இவளை முற்கூறினர். சுமித்திரையும் ஸ்ரீராமனுக்குச் சிறியதாயாதலின் அவளை விலக்குதற்கு 'கோத்தாய்' என்றார். சக்கரவர்த்தி சம்பராசுரனுடன் அமர்புரிகையில், கைகேயி, க்ஷத்ரியாணியாய் அவனுக்குப்போர்த்துணையாகி க்ஷத்ரகுணத்தைக்காட்டினவ ளாதலின் கோத்தாயாயினள்: அவள் அக்காலத்துப் பெற்றவரங்களாலே ஸ்ரீராமபிரானுக்குக் கொடுமையிழைக்க நேர்ந்ததென்பதைக் குறிக்கின்றதனால், கோத்தாயென்றது - **கருத்துடையடைமொழியணி.** ஸ்ரீராமபிரான் திருவவதரித்தகாரியம் தலைக்கட்டுதற்குக் காரணமாயிருந்தவ

ளாதலின், கோத்தாயென்றுரென்னவுமாம்; அன்றிக்கே, சிறியகோத்தாய்எனக் கொண்டு, இளவரசனான பரதன் தாய் என்றுரென்னவுமாம்; இனி, இகழ்ச்சிக் குறிப்பாய்க் கோத்தாயென்றுரெனக்கொண்டு, அற்பகுணமுள்ள தாய் என வும் பொருள்கொள்ளலாம். கொடுமையிழைத்தல் - மாலைமுடி நீத்து மலர் பொன்னடிநோவப் பெருவனத்திடைப் பதினான்குவருடங்கள் நகரிலிருந்து பெயர்ந்து திரிதரச்செய்தது. கோல்துறத்தல் - அரசாட்சியை அகங்குளிர்ந்து தானேநீக்கல். காட்டைக் கடத்தல்-தண்டகம்முதலிய அரணியங்களைக் கடத் தல். கடலைக்கடத்தல் - கடலில் திருவணைகட்டி இலங்கைசேறல். இரட்டுற மொழிதலால் இமையோர்க்கு என்பதற்கு - இவ்வுலகத்திலுள்ள தண்ட காரணியவாசிகளாகிய மாமுனிகட்கு எனவும் உரைக்கப்பட்டது. அவரிடுக் கண்தீர்த்தலாவது - இராவணன் முதலிய இராக்கதரால் நேர்ந்த துன்பத் தைப் போக்குதல். அண்டர்புகழும் அயோத்திமாநகரந்துறந்து தண்டகாரணி யஞ்சென்றுதாரமிழந்து வானரசேனையோடு வாரிதியில்வாரதிகட்டிஇலங்கை யைக்கிட்டித் தன்மனைவியைக்கவர்ந்த மாபாதகனை மாள்வித்து, அவற்கு ஈனத்தொழில் புரிந்துநின்ற இந்திராதியரை விடுவித்துத் தந்தொழிலில் நிறுத்திய பின்பு அயோத்தியடைந்து பட்டாபிஷேகம்பெற்றுப் பதினாயிரம் வருடம் அரசுபுரிந்தமைதோன்ற 'வேந்து' என்றார்.

இனி இக்கவியுள் 'வானின்றிழிந்து' என்றதனால் தருமத்தைநிலைநாட்டு கைக்காக ஸ்ரீமந்நாராயணன் ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்து இங்கு அயோத்தியில் சக்கரவர்த்திதிருமகனாயவதரித்துப்போந்த பாலகாண்ட சரிதையும், 'கூனுஞ்சிறியகோத்தாயுங் கொடுமையிழைப்பக் கோற்றுறந்து' என்றதனால் இவ்வயோத்தியாகாண்டசரிதையும், புருஷகாரபூதையான பிராட்டியின் பிரிவுக்கஞ்சி 'கானும்' என்ற ஒரேசொல்லால் ஆரணியகாண்ட சரிதையும், கைங்கரியதுரந்தரர்களான சிறியதிருவடிமுதலியோரைக் கண் டது பிராட்டியைத் தேடுகைக்காதலின் அக்கருத்தையுள்ளடக்கி 'கடலும் கடந்து' என்னும் இரண்டுமொழிகளால் கிஷ்கிந்தாகாண்ட சுந்தரகாண்ட சரிதைகளும், இராவணன் வதைக்குப்பயன் தேவர்துயர்தீர்தலும் பெரும் புகழ்விளைதலும் அனைத்துயிரும் அடிபணிய வீற்றிருத்தலுமே யாதலின், 'இமையோரிடுக்கண்தீர்த்த கழல்வேந்து' என்றதனால் யுத்தகாண்டசரிதையும், பெருநாடுகாணச் சராசரங்களை வைகுந்தத்தேற்றித் தானும் அங்குச்சென்றி ருத்தல்தோன்ற, 'உளன்' என்றதனால் உத்தரகாண்டசரிதையும் ஆக ஸ்ரீ ராமாயணசரிதமுழுதும்இச்செய்யுளில்ஒருவாறுகுறிப்பிக்கப்பட்டமை காண்க.

எங்கும்-முற்றும்மை. ஊன், கூன், கொடுமை, கோல், கழல், வேந்து - ஆகுபெயர்கள். என்ப என்னும் முற்றுச்சொல்லுக்கு, ஞானிகள் என்னும் தோன்றுஎழுவாய் வருவித்து முடிக்க.

**பிரதிபேதம்:**—[1]வரம்பிகழ்ந்த. [2]எய்தி. [3]புறத்தும். [4]என்பான். [5]உரைப்ப. [6]குடை. [7]காத்த. [8]வேந்தை, வேந்தன்.

இது மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாய்நின்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம். (க)

வேறு.

உ.—தசரதமன்னவனுக்கு நரை தோன்றுதல்.

† மன்ன[1]னே யவனியை மகனுக் கீந்துநீ
பன்னருந் தவம்புரி பருவ மீதெனக்
கன்ன[2]மூ லத்தினிற் கழற [3]வந்தென
[4]மின்னெனக் கருமைபோய் வெளுத்த தோர்மயிர்.

(இ - ள்.) 'மன்னனே - அரசனே! நீ—, அவனியை - பூமியை [இராச்சிய பாரத்தை], மகனுக்கு - (மூத்த) குமாரனாகிய இராமனுக்கு, ஈந்து - கொடுத்துவிட்டு, பன்ன அரு தவம் புரி - சொல்லுதற்குமுடியாத (பெருஞ்சிறப்பையுடைய) தவத்தைச் செய்வதற்கு ஏற்ற, பருவம் - காலமாகும், ஈது - இந்தக் கிழப்பருவம்', என - என்று, கன்னமூலத்தினில் - காதினடியிலே, கழற - (இரகசியமாகச்) சொல்ல, வந்(த)து என - வந்ததுபோல, மயிர் - மயிரானது, கருமை - (தனது) கறுத்திருக்குந்தன்மை, போய் நீங்கி, மின் என - மின்னலைப்போல, வெளுத்தது - வெளுத்துத்தோன்றலாயிற்று; (எ - று.)—ஓர் - அசை.

தசரதமன்னவனுக்குக் காதினடியில் நரைதோன்றியது, இராமனுக்கு அரசைக் கொடுத்திட்டுத் தவஞ்செய்யச்செல்வாயென ஒருவன் உபதேசிப்பதைப்போலு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. காதினடியில் நரை தோன்றியது, இனி நாம் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேணுமென்ற கருத்துத் தசரதனுக்குத் தோன்றக் காரண மாதலின், இங்ஙனம் வருணிக்கப்பட்டது. பன்னவரு என்பது, பன்னரு என விகாரப்பட்டது. கன்னமூலம் - கர்ணமூலம் என்ற வடசொல் திரிந்துவந்தது. பி-ம்:—[1]மேதினியையும். [2]மூலத்திலே. [3]வந்தன, வந்தனம். [4]மின்னரும், மென்னரும். (உ)

ந.—தனக்கு நரைதோன்றியதைத் தசரதன் கண்ணாடியிற் காணுதல்.

[1]நீங்கிழை யிராவணன் செய்த [2]தீமைதா
னோங்கொரு [3]நரையதா [4]வணுகிற் றாமெனப்
பாங்கில்வந் திடுநரை [5]படிமக் கண்ணடி
[6]யாங்கதிற் கண்டன னவனி காவலன்.

† இச் செய்யுளும், அடுத்த செய்யுளும், சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றன. இவை கதைத்தொடர்ச்சிக்குப்பொருத்தமாயிருத்தலாற்கொள்ளத்தக்கன.

(இ-ள்.) 'தீங்கு இழை-(உலகத்தார்க்கெல்லாந்) தீமையைச்செய்கின்ற, இராவணன்—, செய்த-செய்துள்ள, தீமை-பாவமானது, தான்—; ஆங்கு - அப்பொழுது, ஒரு நரையது ஆ - ஒருநரையாக, அணுகிற்றுஆம் - நெருங்கி வந்து சேர்ந்ததாகும்', என - என்று கருதும்படி, பாங்கில் வந்திடு நரை - தன்னிடத்தே வந்துசேர்ந்த நரையை, படிமம் கண்ணடி அதில் - வடிவத்தைக் காணக்கூடிய கண்ணாடியிலே, அவனி காவலன் - பூமியைப்பாதுகாத்துக்கொண்டிருந்தவனான தசரதன், கண்டனன்—; (எ - று.)—நான்காமடியில், ஆங்கு - அசை: அப்பொழுது எனினுமாம்.

இந்தத்தசரதன் தான் நரையுற்றிருப்பதைக் கண்ணாடியிற்கண்ட காரணத்தினால் 'இனி இராச்சியபாரத்தை இராமபிரானிடத்து வைக்கவேண்டுமேதவிர, நாம் கைக்கொண்டிருத்தல் தகாது' என்ற எண்ணத்தைக் கொண்டு இராமபட்டாபிஷேகத்திற்கு வேண்டிய செயலை மேன்மேற்செய்ய, அதனால் இராமபட்டாபிஷேகத்தை யுணர்ந்த மந்தரையென்ற கூனியானவள் கைகேயியின்தோழி கைகேயியின்புத்தியைக்கலைத்து இராமபிரானைக் கானகம் புகுத்த, அந்தஇராமபிரானது வனவாசமே இராவணசங்காரத்துக்குக் காரணமாதல்பற்றி, 'இராவணன்செய்த தீமைதானுங்கொருநரையதா வணுகிற்றே' என்று நினைக்குமாறாயிற் றென்க. பி - ம்:—[1]தீங்குழல். [2]பாவம். [3]நரையதாய். [4]அணுகிற்றுலென, அணுகிற்றேவென. [5]படிவக்கண்ணடி, படிமத்தின் வடிவு. [6]ஆங்கெதிர். (௩)

ச.—நரையைக் கண்ட தசரதசக்கரவர்த்தி இராமபட்டாபிடேகத்தைக் குறித்து ஆலோசிக்க மந்திரச்சபைசேர்தல்.

மண்ணுறு முரசின மழையி னார்ப்புறப்
பண்ணுறு படர்சினப் பருமயானையான்
கண்ணுறு [1]கவரியங் கற்றை சுற்றுற
வெண்ணுறு சூழ்ச்சியி னிருக்கை யெய்தினான்.

(இ - ள்.) பண் உறு - அலங்கரிக்கப்பட்ட, படர் சினம் - மிக்க கோபத்தையும், பருமம் - தவிசினையுமுடைய, யானையான் - யானைப்படையையுடைய தசரதசக்கரவர்த்தி,-மண் உறு - மார்ச்சனையமைந்த, முரசு இனம் - பேரிகைக்கூட்டம், மழையின் ஆர்ப்புற - மேகம்போல் முழங்கவும், கண் உறு - பெருமைபொருந்திய, கவரிகற்றை சுற்றுஉற - சாமரைத்திரள் சூழ்ந்துவரவும், (அரண்மனையினின்றும் புறப்பட்டுவந்து), எண் உறு - (காரியங்களை) ஆலோசித்தற்குப் பொருத்தமாகிய, சூழ்ச்சியின் இருக்கை-மந்திராலோசனைச்சபையை, எய்தினான் - அடைந்தான்; (எ - று.)

முரசினமார்ப்பக் கவரிக்கற்றைவீசத் தசரதன்சூழ்ச்சியிருக்கையையடைந்தனனென்க. சூழ்ச்சியிருக்கை-ஆலோசனைமண்டபம். கவரி-சமரமென்னும் மானின் வால்மயிரைக்கொண்டு செய்யப்படுவதோ ரிராசசின்னம்.பருமம்-கல்லணை: அது,யானைமுதுகின் முற்புறத்து அரசர்ஏறிவீற்றிருத்தற்குஅமைக்கும் ஆசநம். முரசு-முரஜம்: இது,மற்றைவாத்தியங்களுக்கும்உபலக்ஷணம்; அன்றி, முரசுஇனம் என்பதற்கு - பேரிகையும் அதற்குஇனமாகிய மற்றைவாச்சிய விசேடங்களும் எனினும் பொருந்தும். கண் உறு என்பதற்கு - விளக்கம் பொருந்திய எனினுமாம். கவரியங்கற்றை, அம் - அல்வழிச்சாரியை; அழகுமாம். தன்கோபத்தை மறைத்தற்குரியகாலத்தே மறைத்து வெளிப்படுத்தற்கு உரியகாலத்தே வெளிப்படுத்தலால், 'படர்சினயானை' என்றார்; "கடுஞ்சினங் கடிந்த காட்சியர்" என்றஇடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'சினமென்பது கோபத்தின் பின்னாகச் சிறிதுபொழுதுநிற்பது' எனக் கூறியது இங்குக் காணத்தக்கது. 'யானையான்' என்றது, நால்வகைப்படையுள்ளும் யானை சிறந்தமைபற்றி; அது "படைதனக்கியானை வனப்பாகும்" என்பதனா லறிக. யானையான் - யானைபோன்றவன் என்றுரைத்தலுமொன்று. ஆர்ப்புற, சுற்றுற - வினைச்செவ் வெண். பி-ம்:—[1]கவரியின். (சு)

ரு.—மந்திரச்சபையையடைந்த மன்னவன் யாவரையும் போக்கித் தனிய னாதல்.

புக்கபின் [1]னிருபரும் பொருவில் சுற்றமும்
பக்கமும் [2]பெயர்கெனப் பரிவி னீக்கினா
னொக்கநின் றுலகளித் தி[3]யோகி னெய்திய
சக்கரத் தவனெனத் தமிய னாயினான்.

(இ - ள்.) புக்க பின்-(அவ்வாறு) மந்திராலோசனைச்சபையை அடைந்த பின்பு, நிருபர்உம்-(தன்னுடன்வந்த) அரசர்களையும், பொருவு இல் - ஒப்பு இல்லாத, சுற்றம்உம்-உறவினரையும், பக்கம்உம்-சினேகிதர்களையும், பெயர்க என - நீங்குக வென்றுசொல்லி, பரிவின் - அன்புள்ளவசனங்களால், நீக்கினான் - நீக்கி,—ஒக்க நின்று - (யாவரிடத்துஞ்) சமமாகநின்று, உலகு அளித்து - உலகங்களைக் காக்க, யோகின் எய்திய - யோகநித்திரைசெய்கின்ற [அறிதுயிலமர்கின்ற], சக்கரத்தவன் என - சக்ரபாணியாகிய திருமாலைப் போல, தமியன் ஆயினான் - தனித்தவனானான்; (எ - று.)

சருவேசுவரனான அச்சக்கரத்தவன் சகலலோகங்களையுங் காத்தற்குத் தமியனாகி யோகநித்திரைசெய்யுமாறுபோல் இச்சக்கரத்தவனும் தன்நாடு காத்தற்கு வேண்டும் உபாயத்தை ஆலோசிக்கத்தனித்திருந்தா னென்றவாறு. அச்சக்கரத்தவன் என்றதில் சக்கரம் திருவாழி: இச்சக்கரத்தவன் என்றதில், சக்கரம் - ஆஜ்ஞாசக்கரம். சகலஜகத்காரணனான சருவேசுவரனைத் தனக்குப்

புத்திரனைப்பெற்ற புண்ணிய முடைமை நோக்கி, இச்சக்கரத்தவனுக்கு அச் சக்கரத்தவனை உவமை கூறினார்; உவமையணி. பெருங்காரியமெண்ணுவோர் தனித்திருந்து எண்ணுதல்வழக்காதலால், தமியனாயினனென்றார். அதிகாரத்தினால் யாவரையும்போகச்செய்தல் சக்கரவர்த்திக்கு அமையுமாயினும் அவனது நற்குணந்தோன்றப் பரிவினீக்கினனென்க. நிருபர் என்றது - சக்கரவர்த்தியாகிய தமக்குத் திறையுய்க்கவந்த அந்நியதேசத்தரசர்களை. பக்கம் - அன்பு என்னும் பொருளுள்ள பக்ஷமென்ற வடசொல்லின் சிதைவு. சுற்றம், பக்கம் - ஆகுபெயர்கள். பெயர்கென - விகாரம். யோகு - யோகமென்னும் வடசொற்றிரிபு. உலகளித்தீயோகு - குற்றியலுகரம்; இயோகுஎன்று பிரித்தலுமாம். திருமால் யோகநித்திரை புரிபவனென்பதை "உறங்குவான்போல் யோகுசெய்தபெருமான்", "யோகொடு கறைபறமுயல்வதோர்கடவுள்" என்றவிடங்களிலுங் காண்க. பி-ம்:—[1]நிருவரும். [2]பெயர்கென. [3]யோகம். (ரு)

**௬.—தனித்திருந்த மன்னவன் 'மந்திரிமார்வருக' என்று ஏவுதல்.**

சந்திரற் குவமைசெய் தரள வெண்குடை
யந்தரத் தளவுநின் றளிக்கு மாணையா
னிந்திரற் கிமையவர் குருவை [1]யேய்ந்ததன்
மந்திரக் கிழவரை வருகென் [2]றேவினான்.

(இ - ள்.) சந்திரற்கு உவமை செய் - சந்திரனுக்கு உவமையாக்குதற்குரிய, தரளம் - முத்துக்களாலாகிய, வெள் குடை - வெண்மையாகியகுடையானது, அந்தரத்து அளவு உம் - ஆகாயத்தளவும், நின்று - (ஓங்கி நிழலைச் செய்து) நிற்ப, அளிக்கும்-(அங்குள்ள தேவர்களையும்)காக்கின்ற, ஆணையான்-ஆணையையுடையவனாகிய சக்கரவர்த்தி,—இந்திரற்கு-தேவராசனுக்கு, இமையவர் குருவை ஏய்ந்த-பிருஹஸ்பதிபகவானையொத்த,தன் மந்திரம் கிழவரை-தன்மந்திராலோசனைக்குஉரியவர்களை, வருக என்று ஏவினான்-வருகவென்று நியமித்தான்; (எ - று.)

தசரதசக்ரவர்த்தியின் குடைக்குச் சந்திரனும் உபமானமாயிருக்கத்தக்கவனல்லனென்பது தோன்ற, அவனை உபமேயமாக் கொண்டு 'சந்திரற்குவமைசெய் தரளவெண்குடை' என்றார்: இது, எதிர்நிலையுவமையணியாம். சம்பரனைத்தொலைத்து வாசவன்முடியை நிலைநாட்டியமை தோன்ற, 'அந்தரத்தளவுநின்றளிக்குமாணையான்' என்றது. தசரதனுடைய மந்திரக்கிழவர் ஒவ்வொருவரும் பிருஹஸ்பதிபகவானுக்குச் சமானரென்பது 'இந்திரற்கிமையவர்குருவையேய்ந்த மந்திரக்கிழவர்' என்றதன் பொருள். மந்திரக்கிழவர் - புரோகிதரும், மந்திரிகளும். த்ருஷ்டி ஜயந்தன் விசயன் சித்தார்த்தன் அர்த்தசாதகன் அசோகன் மந்திரபாலன் சுமந்திரன் என்று எண்மர் மந்திரிமாரும், வசிஷ்டர் வாமதேவர் என்று இருவர் புரோகிதரும் முக்கியமாக இருந்தனரென்றும், இவர்களைத் தவிரவும் வேறும் மந்திரிமாரும் புரோகிதருமிருந்தன

ரென்றும் வான்மீகத்தா லுணரப்படும். இமையவர்குரு - ப்ருஹஸ்பதிபகவானுக்கு ஒருபெயர்; இது ஸுராசார்ய: என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. நின்று - செயவெனெச்சத்திரிபு. பி - ம்:—[1]ஏய்ந்தனன், ஏய்ந்தன, எய்தன. [2]எயினன். (௬)

## எ.—வசிட்டமுனிவன் வருதல்.

பூவரு பொலங்கழற் பொருவின் மன்னவன்
காவலி [1]னாணையின் கடவு ளாமெனத்
தேவரு முனிவரு [2]முணருந் தேவர்கள்
மூவரி [3]னால்வனு முனிவந் தெய்தினான்.

(இ - ள்.) பூ வரு - அழகுபொருந்திய, பொலம் கழல் - பொன்னாற் செய்த வீரக்கழலைபணிந்த, பொருவு இல் மன்னவன் - ஒப்பில்லாத தசரத சக்கரவர்த்திக்கு, காவலின் - (புரோகிதமாகிய) காவலினாலும், ஆணையின் - கட்டளையினாலும், தேவர்உம் முனிவர்உம் - தேவர்களும் இருடிகளும், கடவுள் ஆம் என உணரும்-(அவனது குல)தெய்வமென்று மதிக்கத்தக்கவனும், தேவர்கள் மூவரின் நால்வன் ஆம்-திரிமூர்த்திகளிடையே (சேர்த்துச்சொல்லத்தக்க) நான்காமவனுமான, முனி - வசிட்டமாமுனிவன், வந்து எய்தினான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

மந்திரியருள் முக்கியனும், புரோஹிதனும், குலகுருவும், பிரமரிஷியுமான தலைமைநோக்கி வசிட்டன் வரவு முதலிற் கூறப்பட்டது. பூவரு - பூவின்தன்மை யமைந்த என்றும், பூ அரு - பூவையொத்த அரியஎன்றும் உரைத்தலுமாம். பொன் + கழல் = பொலங்கழல்; "பொன்னென்கிளவியீறுகெடமுறையின், முன்னர்த்தோன்றும் லகாரமகாரஞ், செய்யுண் மருங்கிற்றொடரியலான" என்பது விதி: பொலம்என்றே தனியாக ஒருசொல் கொள்ளுவர் பிற்காலத்தார். பொரு வில் எனக்கொண்டு - யுத்தஞ் செய்தற்குரிய வில்லைத்தாங்கிய என்றுகூறலு மொன்று. மன்னவன் காவலி னாணையின் கடவுள் ஆம் என என்பதற்கு - சக்கரவர்த்தியினது காவற்றொழிலில் ஆணையின்கடவுளாவன் என்று உலகத்தோர்சொல்ல, தேவரும் முனிவரும்-, உணரும் - தியானிக்கின்ற, தேவர்கள்மூவரின் - மூன்றுதேவரோடுசேர்த்துச் சொல்லத்தக்க, நால்வன்ஆம் முனி என்றும் உரைக்கலாம். ஆணையின்கடவுள் - ஆஜ்ஞாசக்ரத்துக்கு அதிதேவதை. முனிவர் - மனனசீலர். என என்னும் எச்சம் உணரும் என்பதனோடு முடியும். மும்மூர்த்திகளிடத்தும் தனித்தனியே முக்கியமாயுள்ள ஆக்கலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று சக்திகளையும் இவன் ஒருங்கேயுடையனென்பார், 'மூவரினால்வனு முனி' என்றா ரென்னலுமாம். பி - ம்:—[1]ஆணைசெய், ஆணையங், ஆணையே, இயானையின். [2]தேடும். [3]நால்வராம். (எ)

## அ.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்: பல்வகைக் குணங்களும் நிரம்பிய மந்திரிமார் வருகையைக் கூறும்.

குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் [1]பயனு மெய்தினார்

நலமுத னலியினு நடுவு நோக்குவார்
சலமுத லறுத்தருந் தருமந் தாங்கினர்.

(இ - ள்.) குலம் முதல் தொன்மைஉம் - குலத்தினது முதன்மையாகிய பழமையையும், கலையின் குப்பைஉம் - (அறுபத்தினன்கு) கலைகளின் மிகுதியையும், பல முதல் கேள்விஉம் - பலசிறந்தகேள்விகளையும், பயன் உம் - (அவற்றாலுளவாம்) பயனையும், எய்தினர் - அடைந்தவர்களும், நலம் முதல் நலியின் உம் - (தமக்குவரும்) நன்மைகள் அடியோடு அழிவதாயிருப்பினும், நடுவு நோக்குவார் - நடுவுநிலைமையையே நோக்குபவர்களும், சலம் முதல் - கோபம் முதலானவைகளை, அறுத்து - வேரோடுகளைந்து, அரு தருமம் - அருமையாகிய தருமங்களை, தாங்கினர் - மேற்கொண்டவர்களும், — (எ - று.) இதனல், குடிப்பிறப்பு கலைஞானம் கேள்வி மேற்கொண்டசெயலைப்பயன் தோன்றுமளவும்முயல்கை நடுவுநிலை சினமின்மை அறச்செயலைமேற்கொள்கை என்ற குணங்களைப் பெற்றுள்ளார் அந்த அமைச்சரென்க.

தசரதனுக்கு மந்திரிமார் அறுபதினயிரவர் வந்தனரென்பதைக்கூறத் தொடங்கிய கவி முதலேந்துகவிகளால் அம்மந்திரிமார் அமைச்சுக்குணம் நிரம்பியவ ரென்பதைக் காட்டுகின்றார். தொல்குடிப்பிறந்தோர் கருத்தும் சொல்லும் செயலும் தம்முண்மாறுகாமையையும் பழிபாவங்கட்கு அஞ்சுதலையும் பிறர்கற்பித்தலாலும்கல்வியாலுமன்றி இயற்கையில் தாமே யுடையராதல் நோக்கி 'குலமுதற்றொன்மை' என்றும், யாவர்க்கும் நன்மை புகட்டி வயப்படுத்தற்கும் எல்லாவிடத்துஞ் சென்று ஆங்காங்குள்ள நல்லோரிடத்து மிகப் பயின்று ஐயந்திரிபறப் பொருள்கோடற்கும் பலகலைகள் இன்றியமையாதிருத்தல் நோக்கி 'கலையின்குப்பை' என்றும், கல்விகற்றவழியும் ஊழ்வினைவயத்தால் மதிமயங்குகையில் நிலைநிறுத்துவனவும் அடக்கம்முதலிய பயப்பனவும் ஆன்றோரிடத்துக்கேட்ட வெளிறிலாக்கேள்வியேயாதலின் 'பலமுதற்கேள்வி' என்றும், அரியகல்விகேள்விகளையுடையார்க்கும் வினைவயத்தால் தக்கபயன் கிடைத்தல் அருமையாயினும் இவர்களுக்கு அது அருமையின்றி எளிதாகக் கிடைத்தலின் 'பயனும்' என்றும், தங்களுக்குப் பெரும்பொரு ளழிவதாகவரினும் ஊசிமுனையளவும் தமதுசமநிலைமாறுமைநோக்கி 'நலமுதனலியினுநடுவு நோக்குவார்' என்றும், எல்லா நன்மைகளையும்அழிப்பதற்குஏதுவாகியகோபமும் அதனேடு ஒற்றுமையுடையனவாகிய காமலோபமோகமதமாற்சரியங்களும் ஒருங்குசேர்ந்து, கோள் ஸாஹஸம் துரோகம் பொறாமை பிறன்குணஞ்சகியாமை ஒருவன்பொருளையபகரித்தல் காரணமின்றியடித்தல் திட்டுதல் ஆகிய எட்டுத்துக்கங்களையும் உண்டாக்குந்தன்மையனவாதலின் அவற்றை நீக்கினரென்றமைதோன்ற 'சலமுதலறுத்து' என்றும், பிறராலறிதற்கும் அநுட்டித்தற்கும் அரிய தருமங்களை யறிந்து அவற்றிற்குஏற்ப ஒழுகுதலுடைமைதோன்ற 'அருந்தருமந்தாங்கினர்'என்றுங் கூறினர். 'சலமுதலறுத்தருந் தருமந்தாங்கினர்' என்பதற்கு-அரசன் தம்மைக்கோபித்தபோதிலும் அதனை

நோக்காது தருமத்தையே நாடிச் சொல்பவரென்றும், நலம்முதல் நலியினும் என்பதற்கு-தமது நன்மைக்குக் காரணமான செல்வம் அழிவதாயிருந்தாலும் என்றும் உரை கூறுவதுமுண்டு. குப்பை - கும்பம் என்ற வடசொல்திரிந்து வந்தது. சலம் என்ற வடசொல்லுக்கு - வஞ்சனையென்றும் பொருள்கூற லாம். கலை-கலாசப்தபவம். நோக்குவார் என்பது, எதிர்காலத்தைக் குறியாது தன்மை குறித்து நின்றது. முதல்-முதல வென்பதன் விகாரமாகக்கொண்டு, முதலியவையெனவும் கொள்ளலாம். பி - ம்:—[1]பலனும். (அ)

வேறு.

கூ. உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு [1]ளுணருங் கோளார்
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய நூலுங்
கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்.

(இ - ள்.) உற்றது கொண்டு-நேர்ந்த காரியத்தைக்கொண்டு, மேல்வந்து உறு பொருள்-மேல்விளையுங் காரியத்தை, உணரும்-ஊகித்தறியவல்ல, கோ ளார்-புத்திபல முள்ளவர்களும், அது-அந்த (வேண்டாத) காரியம், வினையின் வந்தது ஆயின் உம் - கர்மாநுகுணமாக வந்ததானாலும், மாற்றல் ஆற்றும் - (அதனை) மாற்றவல்ல, பெற்றியர்-முயற்சித்திற முடையவர்களும், பிறப்பின் மேன்மை பெரியவர் - குடிப்பிறப்பிற்குத்தக்க மேம்பாடு அமைந்த பெரியோர் களும்,அரிய நூல் உம் கற்றவர்-(கற்றற்கு) அருமையான அறிவு நூல்களையும் கற்றவர்களும், மானம் நோக்கின் - மானத்தை நோக்குமிடத்தில், கவரி மா அனைய நீரார் - கவரிமாவை ஒத்தகுணமுடையவர்களும்,—(எ - று.)

இச்செய்யுளினால், அந்த மந்திரிமார்களின் ஊகிக்குந்திறனும் பின்வாங் காது முயலுந்தன்மையும்,குடிப்பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கமுடைமையும்,கல்வி யறிவும், மானமுடைமையுங் கூறப்பட்டன. தனது ஊழ்வினைக்கு ஏற்ப வந்த காலனையும் கண்ணுதற்கடவுளாற் கடிவித்த காளையாகிய மார்க்கண் டேயனைப்போல் ஊழையும் உப்பக்கங்காணவல்லா ரென்பது தோன்ற, 'வினையின் வந்ததாயினு மாற்ற லாற்றும்பெற்றியர்' என்றார்: "ஊழையு முப்பக்கங்காண்ப ருலைவின்றித், தாழா துஞற்றுபவர்" என்றார் நாயனாரும். அரியநூல்களாவன-ப்ரஹ்மவித்தையாகிய வேதாந்தம் முதலியன: அமைச்சர் க்கு உரியநூலுமாம். மானமாவது எந்நாளும் தந்நிலையிற்றாழாமையும் ஊழாற் றாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். மயிர்நீப்பின் வாழாக் கவரிமாப் போல மானங்கெடவரின் இவர் உயிர்நீப்பரென்பது தோன்ற,'மானநோக்கிற் கவரிமாவனைய நீரார்' என்றார். பி-ம்:—[1]ஒன்றுங்கொள்ளார். [2]மெய்ம்மை.

கo. காலமு மிடனு [1]மேற்ற கருவியுந் தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வ [2]நுணித்தறங் [3]குணித்த மேலோர்
சீலமும் புகழ்க்கு வேண்டுஞ் [4]செய்கையுந் தெரிந்து [5]கொண்டு
பால்வரு முறுதி யாவுந் [6]தலைவர்க்குப் பயக்கு நீரார்.

(இ - ள்.) ஏற்ற காலம்உம் - (வினைசெய்தற்கு) ஏற்ற காலத்தையும் இடன்உம்-(அதுசெய்தற்கேற்ற) இடத்தையும், கருவிஉம்-(அதற்கேற்ற) சாதனங்களையும், கற்ற-(தாம்) படித்த, நூல்உற - அரசநீதிநூற்பொருள்களுக்கு ஏற்ப, தெரிய நோக்கி - தெளிய ஆலோசித்து, தெய்வம் நுணித்து-தெய்வாநுகூலயத்தையும் நுட்பமாக ஆராய்ந்து, அறம் குணித்த - இராசதருமத்தைப் பெருக்கிய, மேலோர்-பெரியோர்களும், சீலம்உம்-நல்லொழுக்கத்தையும், புகழ்க்கு வேண்டும் செய்கைஉம் - (தமக்கும் தம்மிறைவற்கும்) கீர்த்தியுண்டாதற்குக் காரணமான காரியத்தையும், தெரிந்துகொண்டு-அறிந்துகொண்டு, பால் வரும்-(அவைகளின்) பங்காக வருகின்ற, உறுதி யா உம்-உறுதிப்பொருள்களெல்லாவற்றையும், தலைவற்கு-(தம்) இறைவனுக்கு, பயக்கும்-கொடுக்கின்ற, நீரார் - குணமுள்ளவர்களும்,—(எ - று.)

இதனால் அவ்வமைச்சர் தொழில்செய்யும்வகை உரைக்கப்பட்டது. ஒரு காரியத்தைச் செய்யுங்கால், அதற்குத்தக்க காலத்தையும் இடத்தையும் கருவியையும் தாம் படித்த ராஜநீதிசாஸ்திரங்களுக்குஏற்பத் தெளிந்து, ஊழ்வினைகளை யாலோசித்துத் தருமங்களை விருத்திசெய்து, நல்லொழுக்கமும் நற்செய்கையுமுடையராய், அக்காரியத்தில் வரும் நற்பயனைத் தம்மிறைவற்குச் சேர்க்குந் தன்மையுடையவர் அவ்வமைச்சர் என்பதுகருத்து. பால் - பலனென்றுமாம். உறுதி - ஆகுபெயர். ஏற்ற வென்பதனைக் காலமும்இடமும் என்பவற்றோடுங்கூட்டுக. பி-ம்:—[1]பெற்ற. [2]நுனித்து. [3]குறித்தமேலோர், குறித்து நல்லோர், குணித்தநல்லோர், குணித்துநல்லோர். [4]செல்வமும். [5]கொண்டே. [6]தலைவற்கே. (கo)

கக. தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
[1]வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் [2]வீரர்
செம்மையிற் றிறம்பல் [3]செல்லாத் தேற்றத்தார் தெரியும் [4]கால
மும்மையு முணர [5]வல்லா [6]ரொருமையே [7]மொழியு நீரார்.

(இ - ள்.) தலைமகன் வெகுண்ட போதுஉம்-(தம்) இறைவன் கோபித்த காலத்திலும், தம் உயிர்க்கு உறுதி எண்ணார் - தம் பிராணனுக்கு நன்மையை நினையாராய், வெம்மையை தாங்கி (அக்கோபத்தினது)கொடுமையை(த்தாம்) ஏற்றுக்கொண்டு, விடாது நின்று-(தம்கொள்கையைக்) கைவிடாமல் நின்று, நீதி உரைக்கும் வீரர்-நீதியையே யிடித்துச்சொல்லும் வீரத்தன்மையுள்ளவர்களும், செம்மையில் திறம்பல் செல்லா தேற்றத்தார் - சன்மார்க்கத்தினின்று தவறாத தேர்ச்சியுள்ளவர்களும், தெரியும் காலம் மும்மைஉம் - (நூல்களால்) அறியத்தக்க முக்காலக்காரியங்களையும், உணரவல்லார்-அறியவல்லவர்களும், ஒருமை ஏ மொழியும் நீரார் - ஒரு பரிசே பேசுமியல்பினரும்,—(எ - று.)

இதனால், அவ்வமைச்சர்கள் தலைவனுறுதியையே நாடி மந்திராலோசனை சொல்லுந் தன்மை விளக்கப்பட்டது. வெகுண்டபோதும் வெம்மையைத் தாங்கி நீதிவிடாது நின்றுரைக்கும் வீரரெனவே, அரசன் முனியினும் உறுதி நோக்கி யிடித்துக்கூறல் அமைச்சர்க்கு இன்றியமையாக்குணமென்பதுபெறப்

பட்டது. தம் நிலை மாறக்கூடியகாலத்தும் மாறாதுநின்று இடித்துச் சொல்ல வல்ல மனத்திட்பமுடையராதல்பற்றி, வீரரெனப்பட்டார். வெம்மை, செம்மை - ஆகுபெயர்கள். மும்மை, ஒருமையென்பன - தன்மையுணர்த்தாது "இருமை வகைதெரிந்து" என்ற இடத்திற்போல எண்ணினையுணர்த்தி, ஆகுபெயரான் எண்ணுடைப்பொருளைக் காட்டின. ஒருமையேமொழியுநீரார் என்றது - ஒருகாலைக்குஒருகால் மாறிப்பேசுமியல்பினரல்லரென்றபடி; அமைச்சர் பலராயிருந்தும் ஒருபடிப்பட ஆலோசனை சொல்பவரெனினுமாம். பி-ம்:—[1]மெய்ம்மையை. [2]நீரார். [3]செய்யாத். [4]காலை. [5]தக்கார். [6]ஒருமையும். [7]மொழியவல்லார். (கக)

வேறு.

கஉ. நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் [1]மருத்துவ னியல்பி னெண்ணுவா
ரொல்லைவந் துறுவன வுற்ற பெற்றியிற்
றொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்.

(இ - ள்.) நாயகற்கு - (தம்) இறைவனுக்கு, நல்லஉம்-நன்மையைத்தருவனவற்றையும், தீயஉம் - தீங்கைத்தருவனவற்றையும், நாடி-ஆலோசித்து, எல்லையில்-கடைசியில், மருத்துவன் இயல்பின்-வைத்தியன் சுபாவம்போல, எண்ணுவார் - இதத்தையே எண்ணுபவர்களும்,—ஒல்லை வந்து உறுவன - விரைவில் வந்து நேர்பவையாகிய துன்பங்கள், உற்ற பெற்றியின் - நேர்ந்த காலத்தில், (அவற்றைப்போக்குதற்கு), தொல்லை நல்வினை என உதவும் - பூர்வபுண்ணியப் பயன்போல வந்துதவுகின்ற, சூழ்ச்சியார்-ஆலோசனைத்திறமுள்ளவர்களும்,—(எ - று.)

பிணியாளனுக்கு விருப்பமில்லாவிடினும் மருத்துவன் அவனுக்கு இதமானவற்றையே செய்ய முயலுதல்போல, இம்மந்திரிமாரும் அரசனுடைய விருப்பத்தைப்பற்றிக் கருதாமல் அவனுக்கு அநிஷ்டமாகஇருப்பினும் நன்மை பயக்குஞ்செயலையே யெண்ணிச்சொல்லுந் தன்மையரென முன்னிரண்டடிகளால் விளக்கியவாறு கீழ்ச்செய்யுளில் முன்னிரண்டடிகளாற் கூறியதையே இங்குக் கூறினும், உபமானமுகத்தால் வேறுவகையாகவிளக்குதல்பற்றிக் கூறியதுகூறலென்னுங் குற்றத்திற்கு இடமின்மை யறிக. ஆபத்துநேர்ந்திடினும் அவற்றைப் போக்க முயலுந் தன்மை பின்னிரண்டடிகளிற்கூறப்பட்டது. பி-ம்:—[1]மருத்துவர். (கஉ)

கங. அறுபதி [1]னுயிர [2]ரேனு மாண்டகைக்
குறுதியி லொன்[3]றிவர்க் குணர்வென் றன்ன[4]லாம்
பெறலருஞ் சூழ்ச்சியர் திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென வந்து சுற்றினர்.

(இ - ள்.) திருவின் பெட்பினர்-செல்வப்பெருக்கமுள்ளவர்களும் ஆகிய, அறுபதினுயிரர் என்உம்-அறுபதினுயிரவரேயாயினும், ஆண்தகைக்கு - சக்கரவர்த்திக்கு, உறுதியில் - நன்மைபயக்கும்விஷயத்தில், இவர்க்கு - இவர்க

னெல்லாருக்கும், உணர்வு-அறிவானது, ஒன்று என்று உன்னல் ஆம் - ஒன்றேயென்று நினைக்கத்தக்க, பெறல் அரு சூழ்ச்சியர் - பெறுதற்கரிய மந்திராலோசனையையுடைய மந்திரிகள், மறி திரை கடல் என - மடங்கி வீழ்கின்ற அலைகளையுடைய கடல்போல், வந்து சுற்றினர் - வந்து (ஆலோசனைமண்டபத்தில்) நிறைந்தார்கள்; (எ - று.)

ஆண்டகை - ஆண்மைக் குணமுள்ளவன்: தகை - தகுதி; அதாவது சற்குணம்; உடையவனுக்கு ஆகுபெயர். அறிவுசூழ்ச்சிகளையுடையரேனும், வறியராயின் ஒருகால் மாறுவராதலின் இவர் அவ்வாறு மாறுதற்குஉரியரல்லரென்பார் 'திருவின்பெட்பினர்' என்றார். கடல்-பரந்தகாட்சிக்கு உவமம். பி-ம்:—[1]ஆயிரம். [2]எனினும், எண்ணும், என்னும். [3]அறிந்துணர்த்த. [4]ஆய்.

எய்தினரும் நோக்குவாரும் தாங்கினரும் (அ), கோளாரும் பெற்றியரும் கற்றவரும் நீராரும் (கூ), மேலோரும் நீராரும் (க0), வீரரும்தேற்றத்தாரும் வல்லாரும் நீராரும் (கக), எண்ணுவாரும் சூழ்ச்சியாரும் (கஉ), பெட்பினரும் ஆகிய சூழ்ச்சியர் வந்து சுற்றினர் (கங) என முடிக்க. (கங.)

**கச.—வந்த அமைச்சர்கள் வசிட்டனையும் மன்னவனையும் தொழுது வரன்முறையே யிருத்தல்.**

முறைமையி னெய்தினர் முந்தி யந்தமி
லறிவனை வணங்கித்தம் மரசைக் கைதொழு
திறை[1]யிடை வரன்முறை யேறி யேற்றசொற்
றுறையறி பெருமையா னருளுஞ் சூடினர்.

(இ - ள்.) முறைமையின் எய்தினர் - (சூழ்ச்சிமண்டபத்துக்குச் செல்லவேண்டிய) முறைப்படியே வந்தடைந்த அவ்வமைச்சர்கள்,—முந்தி - முற்பட்டு, அந்தம் இல் அறிவனை வணங்கி-முடிவில்லாத பேரறிவுடையனாகிய வசிட்டமாமுனிவனைப் பணிந்து [தண்டனிட்டு], தம் அரசை கைதொழுது - (பிந்தித்) தம்மிறைவனைக் கையாற்றொழுது [அஞ்சலிசெய்து], இறையிடை - (தத்தமக்குரிய இருக்கைகளில், வரல் முறை ஏறி-வரலாற்றுமுறையே யேறி, ஏற்ற சொல் துறை அறி பெருமையான் - தகுதியாகிய சொற்றுறைகளை முற்று முணர்ந்த பெருமையுள்ள தசரதசக்கரவர்த்தியினது, அருள்உம் - அருள்நோக்கத்தையும், சூடினர் - பெற்றார்கள்; (எ - று.)

வந்த அமைச்சர்கள் வசிட்டனையும் தசரதனையும் வணங்கித் தமக்குரிய ஆசனத்தையடைந்தவளவில், 'வரவேண்டியவர் யாவரும் வந்தனரா?' என்று அறியத் தசரதமன்னவன் தன் திருவருணோக்கத்தைச் செலுத்தினனென்க. வந்தவர்கள் வசிட்டபகவானுக்குத் தண்டன்சமர்ப்பித்துச் சக்கரவர்த்திக்கு அஞ்சலிபண்ணினார்களென்பது தோன்ற 'வணங்கி' என்றும், 'கைதொழுது' என்றும்கூறினார். முந்தி யென்பதற்கேற்பப் பிந்தியென்பது வருவிக்கப்பட்டது. இறையிடைவரன்முறையேறி யென்பதற்கு - சக்கரவர்த்தியினிடத்து

வரன்முறையாக் கிட்டிச்சென்றுளனினுமாம். சூடினுரென்பதற்கேற்ப அருளைப் பூவாகக்கொள்க. முன் கடவுளென்றதற்கேற்ப, இங்கு, அந்தமிலறிவனென்றார்.எய்தின ரென்பதை,முற்றெச்சமாகக்கொண்டுஉரைப்பது முண்டு. அருள்-இங்கே, அருளோடுகூடிய பார்வை. பி-ம்:—[1]இடம். (கச)

**கரு.—வந்தவர்களைநோக்கித் தசரதன் தங்கருத்தைக் கூறுவேனாதல்.**

அன்னவ னருளமைந் திருந்த வாண்டையின்
[1]மன்னவ னவர்முக மரபி னோக்கினு
னுன்னிய [2]தரும்பெற லுறுதி [3]யொன்றுள
தென்னுணர் வனையநீ ரினிது [4]கேண்மெனு.

இதுமுதல் "ஆதலாவிராமனுக்கு (நுரு)" என்னுங் கவியளவும் ஒருதொடர்.

(இ - ள்.) அன்னவன் - அந்தத்தசரதமன்னவனது, அருள்அமைந்து - அருளைப்பெற்று, இருந்த - (மந்திரிகள் ஆசனத்து) இருந்த, ஆண்டையின் - காலத்தில், மன்னவன் - சக்கரவர்த்தி, அவர் முகம் - அவர்களுடைய முகங்களை, மரபின் நோக்கினுன்-முறையாகப்பார்த்து, 'உன்னியது - (என்னால்) நினைக்கப்பட்டதாகிய, அரு பெறல்உறுதி ஒன்று - பெறுதற்குஅரிய உறுதிப்பொருளொன்று, உளது - உள்ளது; (அதை), என் உணர்வு அனைய நீர் - என்னறிவையொத்த நீங்கள், இனிது கேண்ம்-நன்முகக் கேட்பீர்கள், எனு - என்று சொல்லத்தொடங்கி,—(எ - று.)—நுந 'ஆங்கவியில் "யாது நுங்கருத்தென" என்பதிலுள்ள "என" என்பதனோடு தொடரும்.

தசரதமன்னவன் அமைச்சர்யாவரும் தத்தமக்கு ஏற்றஇடத்துஇருந்த பின் அவர்முகங்களையெல்லாம் பார்த்து 'ஓர்உறுதிப்பொருளெண்ணியுள்ளேன்: அதனைக் கேண்மின்' என்று கூறலாயின னென்க. அறிவு நன்மை தீமைகளைப்பாகுபடுத்துணர்த்துமாறுபோலப் பாகுபடுத்துணர்த்த வல்லுநராதலின், அமைச்சரை 'என்னுணர்வனைய நீர்' என்முன். உறுதிப்பொருள்' இனிது கேட்டற்குஉரியதாதலால், 'கேண்ம்' என்முன். கேண்ம்-கேளுமென்னுஞ்செய்யுமென் முற்றின் ஈற்றுயிர் சென்றதில் அடக்கலாம்: கேண்மினெனு என்பதன் விகார மென்னலுமுண்டு: "இரிந்ததேன்" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளில், 'கொண்மென' என்ற விடத்து, 'கொண்மின் விகாரம்' என நச்சினுர்க்கினியர் கூறியிருத்தல் காண்க. பி-ம்:—[1]மன்னனும். [2]தருமம்போல், கருமமும். [3]என்று. [4]கேட்கெனு, கேட்குக. (கரு)

**கசு.—இதுமுதற் பதினெட்டுக் கவிகளால், தசரதசக்கரவர்த்தி மந்திரிமாரைநோக்கி, தான் வெகுகாலம் அரசுசெய்து கிழத்தனத்தையடைந்தமையால் இராமனுக்கு முடிசூட்டி இனிதிருக்க எண்ணியதைத் தெரிவிக்கின்றான்.**

வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்
செய்கையி னொருமுறை திறம்ப லின்றியே

[1]வையம்யா னாண்டவாண் டுங்கண் மாட்சியா
[2]லையமி லறுபதி னாயி ரம்மரோ.

(இ - ள்.) வெய்யவன் குலம் முதல் வேந்தர் - சூரியகுலத்தில் முதல்வ ராயிருந்த அரசர்களாகிய, மேலவர் - (மனு இட்சுவாகுமுதலிய) மேலோர்க ளது, செய்கையின் - ஒழுக்கத்தில், ஒரு முறை திறம்பல் இன்றி - ஒரு முறையும் வழுவுதலில்லாமலே, உங்கள் மாட்சியால் - உங்கள்பெருமையால், யான் வையம் ஆண்ட ஆண்டு-நான் உலகையாண்ட வருடங்கள், அறுபதினா யிரம் - அறுபதினாயிரமாகும்: ஐயம் இல் - (இதிற்) சந்தேகமில்லை; (எ - று.)

யான் அறுபதினாயிரம்வருடம் உங்கள் துணையைக்கொண்டு அரசு ஆட்சி செய்தேனென்பதாம். முறையும் என்னும் உம்மை, விகாரத்தாற்றொக்கது. உங்கள் மாட்சியால் - உங்கள்பேருதவியாலென்றபடி. ஆயிரம் மரோ - விரித்தல். வெய்யவன் - தபநன் என்னும் வடமொழியின் மொழிபெயர்ப்பு. பி-ம்:—[1]வையகமாண்டது நுங்கண், வையமென்புயத்திடை நுங்கண். [2]ஆயிரண் டாயிரத்தாறுதாங்கினேன். (கசு)

கஎ. கன்னியர்க் கமைவருங் கற்பின் மாநிலந்
[1]தன்னையித் தகைதரத் தருமங் கைதர
மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினே
னென்னுயிர்க் [2]குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்.

(இ - ள்.) கன்னியர்க்கு - பெண்களுக்கு, அமைவு அரு கற்பின் - பொருந்துதலையுடைய அரிய கற்பினோடு, மா நிலந்தன்னை-பெரிய பூமியை, இ தகை தர - இத்தன்மையான அன்பு பொருந்தவும், தருமம் கைதர - தரு மந் தழைக்கவும் (தாங்கி), மன் உயிர்க்கு - நிலைபேறுடைய உயிர்களுக்கு, உறுவதுஏ செய்து வைகினேன் - இதத்தையே செய்துகொண்டிருந்தேன்; (இனி), என் உயிர்க்கு உறுவதுஉம் செய்ய - என்னுயிர்க்கு இதத்தையுஞ் செய்வதற்கு, எண்ணினேன் - கருதினேன்; (எ - று.)

இதுவரையில் உலகிலுள்ள ஜீவராசிகளுக்கு ஹிதம்செய்துவந்தேன்: இனி என்னுயிர்க்கு ஹிதம்செய்துகொள்ள வெண்ணினேனென்பதாம். மாற் றரசரின்றி நானே ஏகசக்ராதிபதியாய் ஆண்டுவந்தனனென்பான் 'கன்னி யர்க்கமைவருங் கற்பின்' என்றும், அன்பும்அறனும் வழுவாது அரசுபுரிந்து வந்தனனென்பான் 'இத்தகைதரத் தருமங்கைதர' என்றுங் கூறினான். முன் னிரண்டடிகளில் "கட்டுடைக்காவலிற் காமர்கன்னியே" என்ற சிந்தாமணி யடி ஒப்புநோக்கத்தக்கது. மாநிலந்தன்னை யென்பதற்குத் தாங்கியென ஓர் முடிக்குஞ்சொல்வருவித்து உரைக்கப்பட்டது. என்னுயிர் - இராகுதலையென் றாற்போல, ஒற்றுமைக்கிழமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகை. கன்னி - கந்யா; ஆரியத்திரிந்த வடசொல். அமைவரும் என்பதனை "வரிப் புனைபந்து" என்பதுபோலக்கொண்டு, பொருந்திவரும் கற்புஎன்றலுமாம்.

கற்பு - தொழிற்பெயர்: பாதிவ்ரத்யத்துக்கு ஆகுபெயர்: பாதிவ்ரத்யத்தைக் கற்பென்ற தென்னையெனின்,—கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும் அவனை இன்னவாறு வழிபடுகவெனவும் இருமுதுகுரவர் கற்பித்தலானும், அந்தணர்திறத்தும் சான்றோர்தேஎத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கந் தலைமகள் கற்பித்தலானும் என்க. உடம்புஅழியினும் உயிர் தானழியாது வேறுஉடம்பு பெற்றுநிற்கு மாதலின், 'மன்னுயிர்' என்றான். உயிரெனப்பொதுப்படக்கூறியவதனால், விலங்கு, பறவை முதலியவும் கொள்க. உறுவதுசெய்தல் - பகை பிணி முதலியவற்றால் துன்பம் வாராமற் காத்தல். பி-ம்:—[1]தன்மையிற். [2]உறுவது. (கஎ)

கஅ. விரும்பிய மூப்பெனும் வீடு [1]கண்டயா
[2]னிரும்பிய லனந்தனு [3]மிசைந்த யானையும்
பெரும்பெயர்க் கிரிகளும் [4]பெயரத் தாங்கிய
வரும்பொறை யினிச்சிறி தாற்ற வாற்றலேன்.

(இ - ள்.) விரும்பிய-(தவத்தை) விரும்புமாறு, மூப்பு எனும் வீடு-மூப்பென்ற வீட்டை, கண்ட—, யான் - நான், இரு பியல் அனந்தன் உம் - பெரியபிடரையுடைய ஆதிசேஷனும், இசைந்த யானை உம் - (திக்குக்களிற்) பொருந்திய யானைகளும் [திக்கஜங்களும்], பெரு பெயர் கிரிகள் உம் - மிக்க பிரசித்திபெற்ற குலாசலங்களும், பெயர - (தம் பாரம்) நீங்கியிருக்கும்படி, தாங்கிய-சுமந்திருந்த, அரு பொறை - (பொறுத்தற்கு) அரிய இவ்விராச்சிய பாரத்தை, இனி - இனிமேல், சிறிது-கொஞ்சமும், ஆற்ற - சுமக்க, ஆற்றலேன் - வல்லேனல்லேன்; (எ - று.)

என்னுயிர்க்கு உறுதிசெய்யவெண்ணினேனென்ற மன்னவன், இப்போது மூப்புமேலிட்டுள்ளதனால் இராச்சியபாரத்தைச் சுமத்தல் எனக்கு வருத்தமாயிருக்கின்றதென்கின்றான். 'மூப்பெனும் வீடுகண்ட' என்றமையால், புருஷார்த்தங்களிற்சிறந்த வீடு காணுமை சொல்லாமலேயமையும். பிரவிருத்திமார்க்கத்தைவிட்டு நிவிருத்திமார்க்கத்திற் செலுத்துவதனால் 'மூப்பெனும்வீடு' எனப்பட்டது. தவத்தில் மனஞ்செல்லும்படி செய்கின்றது மூப்பு என்பான் 'விரும்பிய மூப்பு' என்றான்; இராச்சியத்தை யாண்டு அலுத்தவனுக்கு இளைப்பாறுவதற்கு ஏது வாதலால்,அம்மூப்பு விரும்பப்படுவதாயிற்றென்றலும் ஒன்று. ஆதிசேஷனும், திக்கஜங்களும், குலாசலங்களும் தாங்கும் பூபாரத்தை அரசன் தன்மகிமையால் தாங்குகிறானென்பது, நூற்றுணிபு. பொறை - சுமக்கப்படுவது; செயப்படுபொருள்விகுதிபெற்றுநின்ற பெயர். பி-ம்:—[1]கண்டு. [2]இரும்பயில். [3]இணத்த, எழினல். [4]பெரிதும். (கஅ)

ககூ. † நங்குலக் குரவர்க ளனைவரு நீங்கினார்
தங்குலப் புதல்வரே தரணி தாங்கப்போய்

---

† "குணவத்ஸுதரோபிதஸ்ரியஃ பரிணுமேஹி திலீபவம்ஸஜாஃ-பதவீம் தருவல்கவாஸஸாம் ப்ரயதாஸ் ஸம்யமிநாம் ப்ரபேதிரே" என்ற ரகுவம்ஸ ஸ்லோகம் இங்குக் காணத்தக்கது.

வெங்குலப் புலன்கெட வீடு நண்ணினா
[1]ரெங்குலப் புறுவரென் றெண்ணி [3]நோக்குகேன்.

(இ - ள்.) 'நவையின் நீங்கினர் - குற்றமற்றவர்களாகிய நம் குலம் குரவர்கள் - எங்கள் குலத்திலவதரித்த பெரியோர்கள், (முதுமைப்பருவத்தில்), தம் குலம் புதல்வர் எ - தம்முடைய மேலான புத்திரர்களே, தரணி தாங்க - பூபாரத்தைத்தாங்க, போய் - (தாம் அரணியத்திற்குப்)போய், வெம் குலம் புலன் கெட-வெவ்விய கூட்டமாகிய ஐம்புலவாசை கெட, வீடு நண்ணினர் - மோக்ஷமடைந்தார்கள், எங்கு உலப்பு உறுவர் - எங்குமுடிவு பெறுவார்கள்?' என்று—, எண்ணி நோக்குகேன் - எண்ணிப்பார்க்கின்றேன் [கிர்திக்கி றேன்]; (எ - று.)—எண்ணிப்பார்க்க, அவர்கள் உலப்பற்றவரா யிருக்கின்றன ரென்றபடி.

எங்கள்குலத்துமுன்னோர் குற்றமறஅரசாட்சிசெய்து மூப்பு அடைந்த பிறகு தமதுபுதல்வர் அரசாளத் தாம் தவஞ்செய்து மோட்சமடைந்தவரை எண்ணிப்பார்க்க, அவர்கள் மிகப்பலராயிருக்கின்றன ரென்பதாம். "நங் குலத்துதித்தவர் நவையுணீங்கின, ரெங்குலப்புறுவர்களெண்ணில்" என்று மேல் திருவடிசூட்டுபடலத்தில் இச்செய்யுளடிகளின் சொல்லும்பொருளும் அமைந்துவருதல் காண்க. எங்குஉலப்புறுவர் - அளவிடமுடியாது மிகப்பல ரென்றவாறு. [1]எங்கு உலப்புறுவனென்று பாடங்கொண்டு-(நான்) எவ்வாறு ஒழிவுபெறுவேனென ஓதுவாருமுளர். குரவர்-குரவ: என்னும் வடமொழி யின்திரிபு. ஐம்புலன் - சுவையொளியூறோசைநாற்றமென்பன. பி-ம்:—
[2]எண்ணின். [3]நோக்குவேன், நோக்கிலேன். (கக)

உ0. வெள்ளநீ [1]ருலகினில் விண்ணி னாகரிற்
றள்ளரும் பகையெலாந் தவிர்த்து நின்றயான்
[2]கள்ளரிற் கரந்துறை காம [3]மாதியா
[4]முள்ளுறை பகைஞருக் [5]கொதுங்கி வாழ்வெனோ.

(இ - ள்.) வெள்ளம் நீர் உலகினில்-கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தி லும், விண் (உலகு) இல்-சுவர்க்கலோகத்திலும், நாகர் (உலகு) இல்-பாதாள லோகத்திலும், தள்ள அரு பகை எலாம்-நீக்குதற்குஅரிய பகைவரையெல் லாம், தவிர்த்து நின்ற-ஜயித்துநின்ற, யான்-நான், கள்ளரின்-கள்வர்போல, கரந்து உறை-மறைந்துவசிக்கிற, காமம் ஆதி ஆம் - காமம் முதலாகிய, உள் உறை பகைஞருக்கு - உட்பகைவர்க்கு, ஒதுங்கி வாழ்வென் ஓ - அஞ்சிவாழ் வேனோ? [வாழ்தல்தக்கதன்று என்றபடி]; (எ - று.)

மூவுலகிலுமுள்ள புறப்பகைக்குப் பின்னிடாது பொருதுவெற்றிபெற்ற நான் அகப்பகைக்குஅஞ்சி வாழ்தல் தகுதியோ? அன்று: ஆதலால், இதுவ ரைப் புறப்பகைவரை வென்ற யான் அகப்பகையை வெல்லக்கருதியுள்ளே னென்றவாறு. காமமாதி என்றது-காமம், குரோதம், லோபம், மோஹம், மதம்,மாத்ஸர்யம் என்பவற்றை; இவைகளை வடநூலார் அரிஷட்வர்க்கமென்

பர். தமிழ்நூலார் காமம், வெகுளி, மயக்கம்என்ற மூன்றில் அவ்வாறனையும் அடக்குவர். ஞானவரசனைக்கண்டு பயப்படுதலின் 'கள்ளரின்' என்றும், அஜ்ஞானவிருளினுல் மறைந்துகிடத்தலின் 'கரந்து' என்றும் கூறினர். வாழ்வெனே, ஓகாரம் - தகுதியின்மை குறிக்கும். பி-ம்:—[1]உலகிடை. [2]கள்வரிற். [3]ஆதியாய், ஆதியா. [4]உள்ளுறுமுறப்பகை, உள்ளுறைபகைவருக்கு. [5]ஒளித்து. [6]வாழ்வதோ, வாழ்வனோ, வாழுவோ. (உ௦)

உக. [1]பஞ்சிமென் றளிரடிப் பாவை கோல்கொள
வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேற்
கெஞ்சலின் மனமெனு மிழுதை [2]யேறிய
வஞ்சுதேர் வெல்லுமீ தருமை [3]யாவதோ.

(இ-ள்.)பஞ்சி மெல் தளிர் அடி-செம்பஞ்சுஊட்டிய மெதுவாகிய தளிரையொத்த பாதங்களையுடைய, பாவை-கைகேயியானவள், கோல் கொள-சாட்டைகொண்டு சாரத்தியஞ்செய்ய, வெம் சினத்து அவுணர் தேர் பத்துஉம் - வெவ்விய கோபத்தையுடைய அசுரர்களின் பத்துத்தேர்களையும், வென்று உளேற்கு-வென்றிருப்பவனுகிய எனக்கு, எஞ்சல் இல்-குறைவுஅற்ற, மனம் எனும் - மனமென்கிற, இழுதை - பேய், ஏறிய-ஏறிநடத்துகிற, அஞ்சு தேர்-ஐந்துதேர்களை, வெல்லும் ஈது-வெல்லுந்தொழிலாகிய இது, அருமை ஆவது ஓ - அருமையாகக்கூடியதோ? [அருமையன் றென்றபடி]; (எ - று.)

சம்பராதியரது பத்துத்தேர் வென்ற எனக்கு ஐந்துதேர் வெல்லுவது அருமையாகக்கூடுமோ? கூடாதென்பதாம். இது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம். இதனுல் ஐம்பொறிகளையடக்குதல் தனக்கு எளிது என்கின்றனன். அவுணர் தேர்பத்து என்றது-அவுணரைக்கொல்லப் பத்துத்திசையிலுஞ்சென்றதேர் என்றவாறு; இதுபற்றியே, இவனுக்குத் தசரதனென்ற பெயர்வந்ததும்.பத்துத்திசையாவன-நான்குபெருந்திக்குக்களும், நான்கு மூலைத்திக்குக்களும்,விண்ணும்,மண்ணும். மனத்துக்கு எஞ்சலின்மையாவது-புலநுகர்ச்சியின் பூர்த்தி அஞ்சுதேர்-ஐம்பொறி; அவை - மெய், வாய், கண், மூக்கு,செவியென்பன. பாவை-ஆகுபெயர். பாவை கோல்கொள—"மடந்தை கோல் கொள்ள" என்றார் சிந்தாமணியாரும். கோல்கொள்ளுதலாகிய காரணம் தேரைச் செலுத்தலாகிய காரியத்தை யுணர்த்திற்று; உபசாரவழக்கு மனமெனுமிழுதை - "இழுதைநெஞ்சினேன்" என்பர் பள்ளிபடைப்படலத்தில். பி-ம்:—[1]பஞ்சின், பஞ்சு. [2]ஏவிய. [3]ஆவதே. (உக)

உஉ. ஒட்டிய [1]பகைஞர்வந் துருத்த போரிடைப்
பட்டவ ரல்லரேற் பரம ஞானம்போய்த்
தெட்டவ ரல்லரேற் செல்வ [2]நீண்டெனை
விட்டவ ரல்லரே வியாவர் [3]வீடுளார்.

(இ - ள்.) ஒட்டிய - (நால்வகைச்சேனையுடன்) பொருந்திய, பகைஞர்-பகைவர், வந்து - எதிர்த்துவந்து, உருத்த சினந்துசெய்த, போரிடை-போர்க்

களத்தில், பட்டவர் அல்லர்஑ல்-இறந்தவரல்லராயின்,-பரமம் ஞானம் போய் தெட்டவர் அல்லர்஑ல் - மேலாகிய ஞானமானது கைவந்து தெளிந்தவரல்லராயின்,—செல்வம் ஈண்டு என விட்டவர் அல்லர்஑ல் - சகலஐசுவரியமும் இவ்வுலகத்ததே யென்று (அந்தச் சகலஐசுவரியத்தையும் துறந்து) கைவிட்டவர் அல்லராயின், யாவர் வீடு உளார் - யாவர் மோக்ஷத்தை யடைபவராவார்? (எ - று.)

மன்னராயினோர், களத்திடைமடிந்தாயினும் உண்மை ஞானம்பிறந்து தெளிந்தாயினும், செல்வநிலையாமைநோக்கித் துறந்தாயினும் வீடுபெறலாமேயன்றி வேறுவகையால் வீடுபெற முடியாதென்பது கருத்து. பரமஞானமாவது - ஈசுவரனே உபாயமும் உபேயமு மென்றிருக்கை. முன்னிரண்டு தனக்கு இல்லாமையால், மூன்றாம்வழியே தான் மேற்கொள்ள வேண்டிய தாயிற்றெனத் தசரதன் கூறுகின்றானென்க. ஈண்டென - விரைவாகஎனினுமாம். தெட்டவர் - தெளிவு என்னும் பொருளுள்ள தெட்டுஎன்னும் பெயர்ச் சொல்லினடியாகப் பிறந்தபெயர். பி-ம்:—[1]பகைவர். [2]உண்டென, உண்டெனல். [3]வீட்டுளார். (உஉ)

உ௩. [1]இறப்பெனு [2]மெய்ம்மையை [3]யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
[4]துறப்பெனுந் தெப்பமே [5]துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க [6]லாகுமோ.

(இ - ள்.) இம்மை-இப்பிறப்பில், யாவர்க்குஉம்-எல்லாருக்கும், இறப்பு-மரணம் (உண்டு), எனும் என்கிற, மெய்ம்மையை உண்மையை, மறப்பு எனும் அதனின் மேல் - மறத்தலென்பதற்கு மேற்பட, கேடு-கெடுதி, மற்று உண்டு ஓ - வேறுண்டோ? [இல்லை]; துறப்பு எனும் - துறத்தலென்கிற, தெப்பம் ஏ - மிதவையே, துணை செயாவிடின்-உதவிசெய்யாவிட்டால், பிறப்பு எனும் பெரு கடல் - பிறவியென்கிற பெரியகடலினின்று, பிழைக்கல் ஆகும் ஓ - தப்புதல் கூடுமோ? [கூடாது]; (எ - று.)

"சாவாதவில்லை பிறந்தவுயிரெல்லாம்" என்பது முதலியவற்றாற் கூறிய இறப்புண்மையை ஒருவன் மறந்தானாயின், அவனுடைய மனம் திடங்கொண்டு மிக்கதீவினையுட் புகுத்த, அதனாற் பெரும்பாவம் விளைந்து நரகத்துள் அழுந்தி நிற்குமாறு நேரும்: ஆகையால், உலகத்திற் பிறந்தோன் 'மரணம் நேர்வது திண்ணம்' என்ற இவ்வுண்மையை மறவாது மனத்துக்கொண்டு, பிறவியை யொழித்தற்கு இன்றியமையாத துறவினை மேற்கொள்ளவேண்டும். அங்ஙனம் துறவை மேற்கொண்டால், பிறப்பெனும்பெருங்கடலைப் பிழைக்கலாகுமென்றவாறு. மற்று - இங்கு, பிறிதென்னும் பொருளது. ஓகாரமிரண்டும்- எதிர்மறைப்பொருளன. துறத்தலைத் தெப்பமாகவும், பிறவியைக்கடலாகவும் உருவகப்படுத்தினமையின், இது - உருவகவணி. துணைசெய்தல் - கடத்

தற்குக் கருவியாய்நிற்றல். பிழைத்தல் - கரைசேர்தல். பிறவியைப் பெருங்கடலென்றது-காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றிவருதலின்: "பிறவிப்பெருங்கடல்" என நாயனுர் கூறியதுங் காண்க. பி - ம்:—[1]இறப்பரு. [2]மெய்ம்மையே, மென்மையை, மேன்மையை. [3]இன்மையென்றதை. [4]துறப்பருந். [5]துணைச். [6]ஆவதோ. (உங)

உச. அருஞ்[1]சிறப் பமைவருந் துறவு மவ்வழி
தெரிஞ்[2]சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்[3]சிறை யுளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை [4]கடத்தலி [5]னினியதி [6]யாவதே.

(இ-ள்.) அரு சிறப்பு அமைவரும் துறவுஉம்-(அடைதற்கு) அரிய சிறப்புப்பொருந்திய துறவும், அ வழி - அந்தத்துறவுமார்க்கத்தை, தெரிஞ்சு - தெரிந்துகொள்ளுதலால் (உண்டாகிற), உறவு என - (அத்துறவுமார்க்கத்துக்கு) இனமென்று, மிகும்-சிறந்துள்ள, தெளிவுஉம் தெள்ளுணர்வும், ஆய்-ஆகி, வரும்-வருகின்ற, பெரு சிறை-பெரியசிறைகள் [சிறகுகள்],உளஎனின்-உண்டாயின், பிறவி என்னும் - பிறப்பென்கிற, இ இரு சிறை கடத்தலின்-இந்தப் பெரியசிறையை [காவற்சாலையை]க் கடப்பதினும், இனியது-இனிமையைத்தருவது, யாவது - எது? [ஒன்றுமில்லை]; (எ - று)—ஏ-ஈற்றசை.

ஆன்மாவாகிய பறவைக்குத் துறவையடைதலே மறுமைப்பயனைக்கூட்டுவிக்கு மென்கிற தெரிந்தஅறிவும், அத்தெள்ளுணர்வினைப் பெற்றதற்கு ஏற்பத் துறவினை மேற்கொள்ளுதலு மென்ற இருசிறைகளுளவாயின், பிறவிச்சிறையிலிருந்து தப்பி விண்ணுலகத்திற்குப் பறந்துசெல்லலா மென்றவாறு. "பாடக்ரமத்தினும் பொருள்கொள்ளும்முறையே மிக்கது [பாடக்ரமாபேக்ஷயா அர்த்தக்ரமஸ்ய பலீயஸ்த்வம்]" என்ற நியாயம்பற்றித் துறவினைமுந்திக்கூறி, அதனைப் பெறுதற்குஉரிய தெள்ளுணர்வைப் பிந்திக்கூறினாராயினும், தெள்ளுணர்வே துறவைமேற்கொள்ளுதற்குக் காரணமாகையால், இங்ஙன் கருத்துக்கொள்ளப்பட்டது: "உபாப்யாமேவபக்ஷாப்யாம் ஆகாஸேபக்ஷிணாம்கதி:-ததைவஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதேபுருஷோத்தம: [வானத்தில் இரண்டுசிறகுகளினால் பறவைகட்குச் செல்லுதல் இயலும்: அவ்வாறே தெள்ளுணர்வும் அதற்கு ஏற்ற செயலும் என்பவைகளால்தான் (இந்த ஸம்ஸாரத்தினின்று) புருஷோத்தமனை திருமாலை யடைதல் கூடும்]" என்ற மேற்கோள் இங்குக் காணத்தக்கது. அருஞ் சிறப்பு அமை வரும் என்பதற்கு-அடைதற்குஅரிய மோட்சத்தை யடைதற்குக் காரணமான என்றும் உரைக்கலாம். சிறப்பென்பது மோட்ச மென்னும் பொருளதாதலை "சிறப்பீனும்" என்ற குறளிலும் காண்க. இது - ஏகதேசவுருவகம். சிறையென்பது - தடுத்துக்காத்தல்: இது இப்பொருளதாதலை "சிறைகாக்குங்காப்பெவன்செய்யும்," "சிறைகனியுடைந்த சேயரிமழைக்கண்," "கொலைச்சிறையுய்ந்து போகுமொருவனை"என்றாற்போல்வன பலசெய்யுளாலும், 'சிறைக்கால், நீர்ச்

சிறை' என்னும் வழக்காலும் உணர்க. இஃது - ஆகுபெயராய்ச் சிறைவைத் தாலென்றதிற்போலச் சிறைக்கோட்டத்தை யுணர்த்திற்று. தெரிஞ்சு - தெரிந்துஎன்பதன் போலி. பி ம்:—[1]சிறை. [2]உறவாவரும், உறவெனவரு, உறவாய்வரு, உறவாமிகு. [3]சிறகு. [4]கிடத்தலின். [5]இனிது. [6]யாவதோ. ()

உரு. இனியது போலுமிவ் வரசை யெண்ணுமோ
துனிவரு [1]நலனெனத் [2]தொடர்ந்து [3]தோற்கலா
நனிவரும் பெரும்பகை [4]நவையி னீங்கியத்
தனியர [5]சாட்சியிற் றாழு முள்ளமே.

(இ - ள்.) து(ன்)னி வரும் - நெருங்கி வருகின்ற, நலன் என-இன்பம் என்று சொல்லும்படி, தொடர்ந்து - (ஒன்றன்பின்னொன்றாகத்) தொடர்ந்து, தோற்கலா - தோல்வியடையாது, நனி வரும் - மிகுதியாகவருகின்ற, பெரு பகை - (விஷயங்களாகிய) பெரியபகைவர்களால் வரும், நவையின் நீங்கி - குற்றத்தினின்று நீங்கி, அ - அந்த, தனி-ஒப்பற்ற, அரசு ஆட்சியில்-மோக்ஷ சாம்ராஜ்யத்தையாளுவதில், தாழும்-விரும்புகின்ற, உள்ளம்-(என்) மனமா னது, இனியதுபோலும் இனியது போலக்காணப்படுகிற, இஅரசை-இவ்வுல கத்தரசாட்சியை, எண்ணும் ஓ - (ஒருபொருளாக) மதிக்குமோ? [மதியாது].

சுகதுக்கங்களைவிட்டு மோட்சத்தையடைய விரும்பும் என் மனம் இவ் வுலக வாழ்வை விரும்பாதென்பதாம். விஷயசுகங்கள் இன்பம்பயப்பன போலத் தோன்றி ஆன்மாவை நற்கதியிற் சேரவொட்டாது கெடுத்தலால் அவற்றை 'நலனெனத் தொடர்ந்து தோற்கலாநனிவரும் பெரும்பகை' என் றும், இவ்வுலகத்தரசாட்சி விளைவில் துன்பரூபமாயிருத்தலால், 'இனியது போலு மிவ்வரசு'என்றும்கூறினான். கீழ் மூன்று கவிகளால் துறவின்சிறப்பை யுணர்த்தி, இக்கவியால் அவ்வகைத்துறவில் தன்மனம் செல்வதைத் தெரி விக்கின்றான். பகை - ஆகுபெயர். பி - ம்:—[1]புலனென. [2]தொழுது. [3]தோற் கிலா. [4]நவையு ணீங்கிய. [5]ஆட்சியுட்டாழும். (உ௬)

உகூ. [1]உம்மையா [2]னுடைமையி னுலகம் யாவையுஞ்
செம்மையி னோம்பிநல் லறமுஞ் [3]செய்தனெ
னிம்மையி னுதவி[4]நல் லிசை[5]ந டாயநீ
ரம்மையு [6]முதவுதற் [7]கமைய [8]வேண்டுமால்.

(இ - ள்.) யான்-நான், உம்மை உடைமையின்-உங்களை (மந்திரிகளாக)ப் பெற்றிருத்தலால், உலகம் யாவையும் - எல்லாவுலகங்களையும், செம் மையின் ஓம்பி - முறைமைப்படி பாதுகாத்து, நல் அறமும் செய்தனென் - சிறந்த தருமங்களையும் செய்தேன்; (இப்படிஎனக்கு). இம்மையின் உதவி - இவ்வுலகத்துக்கு வேண்டுங்காரியங்களில் உதவிசெய்து, நல் இசை நடாய - நல்லபுகழை யுண்டாக்கிய, நீர்-நீங்கள், அம்மைஉம்-அவ்வுலகப்பேற்றுக்கும், உதவுதற்கு-துணைசெய்தற்கு, அமைய வேண்டும்-உடன்படவேண்டும்;(எ று.)

நீங்கள் துணையாயமைந்தமையால் முறைதிறம்பாது இராச்சியத்தைப் பாதுகாத்து அறத்தையும் பேணினேன்: அப்படிப்பட்ட நீங்கள் மறுமையில் நற்கதி யடைவதற்கும் துணைசெய்யவேண்டு மெனத் தசரதன் அம்மந்திரி மாரை வேண்டுகின்றனனென்க. சகலசற்குண ஸாகரமாகிய சருவேசுவரனைப் பிள்ளையாகப் பெற்றுவந்த புகழுக்கு இவர்களே காரணமென்பான் 'இம்மையி னுதவி நல்லிசை நடாயநீர்' என்றான். அமைபவேண்டும் - வியங்கோண் முற்று. பி-ம்:—[1]உம்மையே, உம்மையென். [2]உடைமையில், உடைமையால். [3]செய்தனன். [4]என்னிசை. [5]நடாயினீர்க்கு, நடாயினீர். [6]அருளுதற்கு. [7]அருள, ஐயம். [8]வேண்டுமோ. (உசு)

உள. இழைத்த[1]தீ வினைதனைக் [2]கடக்கு மெண்ணுறத்
தழைத்தபே ரருளுடைத்[3]தவத்தி னாகுமேற்
[4]குழைத்ததோ [5]ரமிர்தினைக் கோட னீக்கிவே
றழைத்ததீ விடத்தினை யருந்த லாவதோ.

(இ - ள்.) இழைத்த - (ஒருவன் தான்) செய்த, தீவினைதனை-பாவத்தினின்று, கடக்கும் - தப்பவேண்டுமென்கின்ற, எண் - நினைவு, உற-தோன்ற, (அந்த எண்ணத்தை நிறைவேற்றுதல்), தழைத்த - மிகுந்த, பேர் அருள் உடை - பெரிய அருளையுடைய, தவத்தின்-தவத்தினால், ஆகும் ஏல்-அமையுமானால்,—குழைத்தது - அமைக்கப்பட்டதாகிய, ஓர் - ஒப்பற்ற, அமிர்தினை-அமிருதத்தை, கோடல் - பெற்றுக்கொள்வதை, நீக்கி - விட்டிட்டு, வேறு அழைத்த - (அவற்றுப்) பிரதியாகச் சொல்லப்பட்ட, தீ விடத்தினை-கொடிய விஷத்தை, அருந்தல் - உண்ணுதல், ஆவதுஓ-தகுமோ [தகாது]; (எ-று.)—அதுபோலத் தவத்தினைச்செய்யாது சமுசாரத்துள் முழுகியிருத்தல் கூடாது என்றபடி.

தவத்தினால் எல்லாம் எய்தலாயிருக்க அதனைவிட்டு வேறுகருமங்களில் முயலுதல், அமுதத்தைவிட்டு விஷத்தை யுண்பதுபோலு மென்பதுகருத்து. குழைத்தல் - முக்கனி சர்க்கரை கற்கண்டு பால் முதலியவற்றைக் கூட்டிக் குழைத்தலுமாம். இந்தச்செய்யுளில், தீவினையைக்கடத்தல் தவத்தாலாவதாயிருக்க, அமுதத்தினை நீக்கி விடத்தை யருந்தலாகாது என்று முன்னிரண்டடிகளிற் கூறியவர்ணியத்தில் வர்ணியமல்லாத ஒன்றைத் தொடர்புபடுத்திக் கூறியது - வனப்புநிலையென்னும் லலிதாலங்காரம். "தவத்தின் முன்னில் லாதாம்பாவம்" என்ற நாலடியாராலும் தவத்தினால் தீவினையைப்போக்கலாகுமென்பதை யறியலாம். தவமுடையார்க்கு அருள் சிறந்ததாகலின், 'பேரருளுடைத்தவம்' எனப்பட்டது. பி-ம்:—[1]தொல்வினையையுந், தீவினையையும். [2]கடக்கவெண்ணுதல். [3]தவத்தினார்க்குமேற், தவத்தினாகுமே. [4]குழைத்தபேர். [5]அமிர்தினைக்கோடனீக்கி, அமுதுடைக்கோடனீக்கி. [6]ஆகுமோ. ()

உஅ. [1]கச்சையங் கடகரிக் [2]கழுத்தின் [3]கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழு

னிச்சய மன்றெனி னெடிது நாளுண்ட
வெச்சிலை [4]நுகருவ [5]தின்ப [6]மாகுமோ.

(இ - ள்.) கச்சை-கழுத்திடுகயிற்றையுடைய, கடம் கரி-மதயானையின், கழுத்தின்கண் - பிடர்மீது, உற-பொருந்த, பிச்சம்உம் கவிகைஉம் பெய்யும் - பீலிக்குஞ்சங்களும் வெண்கொற்றக்குடையும் கொடுக்கின்ற, இன் நிழல் - இனியநிழலானது, நிச்சயம் அன்று எனின் சாசுவதமல்லவென்றால், நெடிது நாள் உண்ட - அநேகநாள்களா யநுபவித்த, எச்சிலை உச்சிட்டத்தை [மிகுதியை], நுகருவது - உண்பது, இன்பம் ஆகும்ஓ - இன்பந் தருவ தாகுமோ? [ஆகாது]; (எ - று.)

யானையின்மேலேறிக்கொண்டு குடை சாமரை முதலிய விருதுகளுடன் பவனிவரும் இவ்வரசச்செல்வம் நிலையில்லையென்றால், வெகுநாளனுபவித்த இதையே மறுபடியும் அனுபவித்துக்கொண்டிருத்தல் இன்பந் தராது; ஆதலால், மறுமையை நாடவேண்டுவதே நல மென்பது கருத்து. "ஒருநாயகமா யோட வுலகுடனாண்டவர், கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர், பெருநாடுகாண விம்மையிலே பிச்சைதாங்கொள்வர், திருநாரணன்றாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ," "யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச், சேனைத்தலைவராய்ச் சென்றோரும் - ஏனை, வினையுலப்ப வேறாகிவீழ்வர் தாங்கொண்ட, மனையாளை மாற்றார்கொள" என்பவை முதலியன காணத்தக்கன. முதலடி - முற்றுமோனை. கச்சையங்கடகரி, அம் - அல்வழிச்சாரியை. பிச்சம் - பிஞ்சமென்னும் வடமொழிச்சிதைவு. பி-ம்:— [1]கச்சடு. [2]பிடரில். [3]கண்ணகன். [4]நுகர்வதின், நுகருமிது, நுகருமது. [5]இழுக்கம். [6]ஆவதோ. (உஅ)

உகூ. மைந்தரை யின்மையின் வரம்பில் காலமு
நொந்தன னிராமனென் னோவை நீக்குவான்
வந்தன [1]னினியவன் வருந்த யான் பிழைத்
துய்ந்தனன் போவதோ ருறுதி யெண்ணினேன்.

(இ-ள்.) மைந்தரை இன்மையின்-புத்திரரை யுடையனாயில்லாமையால், வரம்பு இல் காலமும்உம்-அளவற்றகாலமும், நொந்தனன் - (மனம்)வருந்தினேன்; என் நோவை நீக்குவான்-என்மனவருத்தத்தைத் தீர்க்கும் பொருட்டு, இராமன் வந்தனன்-இராமன் வந்துபிறந்தான்; இனி அவன் வருந்த - இனி அவன் வருத்தப்பட, யான் பிழைத்து - நான் பிழைத்து, உய்ந்தனன் போவது - கடைத்தேறிப்போவதாகிய, ஓர் உறுதி-ஓர் உறுதியான காரியத்தை, எண்ணினேன் - ஆலோசித்தேன்; (எ - று.)

இராமனிடத்துப் பூமியைக்காக்கும் பொறுப்பை வைத்திட்டு நான் துறக்க வெண்ணினேனென்பது கருத்து. மற்றைச் செல்வமனைத்தும் இருந்தும் மக்கட்செல்வம் ஒன்று இல்லையானால் அவையனைத்தும் இல்லையானாற்போ

லாகி மனத்துப் பெருவருத்தத்தை விளக்குமாதலால், 'மைந்தரையின்மையின் வரம்பில்காலமும் நொந்தனன்' என்றும், இராமனென்றசொல் - மகிழ்ச் செய்பவனென்று பொருள்படுதலால், அவன் என்னோவை நீக்க எனது தவத்தினாலன்றித் திருவுளமிரங்கித் தானேவந்து தோன்றினனென்பான், 'இராமன் வந்தனன்' என்றும் கூறினான். தசரதன் மனம் நொந்ததற்குக்காரணம் தான் காத்துவந்த பிரசைகள் தன்காலத்துக்குப்பின் காப்பாரில்லாமற்போவரேயென்ற கருத்தினாலாகும்.

இனி இப்பாட்டில், அவன்வருந்த யான்பிழைத்துய்ந்தனன்போவதோருறுதி யெண்ணினேன் என்னுஞ் சொற்றொடரால் - அவன் நாடுதுறந்து காடுசென்று வருந்த, யான் அச்சமயத்தில் இவ்வுடலைத்துறந்து பொன்றுபோவதாகிய ஓருறுதியை யெண்ணினேனென மேல்விளைவைக் குறிப்பிக்கும் ஓர் கருத்துத் தோன்றுதலும் காண்க. பி - ம்:—[1]அவனினி. (௨௯)

௩௦. இறந்திலன் செருக்களத் திராமன் றாதைதா
னறந்தலை [1]நிரம்பமூப் படைந்த பின்னருந்
துறந்தில [2]னென்பதோர் சொல்லுண் டாயபின்
[3]பிறந்தில னென்பதிற் பிறிதுண் டாகுமோ.

(இ - ள்.) 'இராமன் தாதை - இராமன்தந்தையான தசரதன், செருகளத்து இறந்திலன் - போர்க்களத்தி லிறந்தானில்லை; நிரம்ப மூப்பு அடைந்த பின்னர் உம் - மிகுதியாகக் கிழத்தனத்தை யடைந்த பிறகும், அறந்தலை - தருமமார்க்கத்தினின்று, துறந்திலன் - (இருவகைப்பற்றுக்களையும்) துறந்தானில்லை,' என்பது - என்பதாகிய, ஓர் சொல் - ஒருபழிச்சொல், உண்டு ஆயபின் - உண்டானபின்பு, பிறந்திலன் என்பதின் - பிறந்திலனென்பதினும், பிறிது உண்டாகும்ஓ - வேறுஉண்டோ? (எ - று.)—தான் - அசை.

பிறவிப்பயனெய்தாமையின் 'பிறந்திலனென்பதிற்பிறிதுண்டாகுமோ' என்றான். "ஒட்டிய பகைஞர்" என்னும் கவியிற் சொல்லிய பொதுத்தன்மையை இங்குத் தனக்குஆக்கிக்கூறுகின்றான். பிறந்ததன் பயனையடையாதமாந்தர் பிறந்தும் பிறவாதாரேயாவரென்க: "ஆற்ற, வறஞ்செய் தருளுடையீராகுமின் யாரும்; பிறந்தும்பிறவாதாரில்" என்ற நாலடி இங்குக் காணத்தக்கது. அறமாவது - மநுமுதலியநூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலும். தாதை - தாதஃ என்னும் வடமொழிச்சிதைவு. பி - ம்:—[1]நிரம்பி. [2]என்றது. [3]பிறந்தனனென்றலாற், பிறந்திலனென்னலாற், பிறந்திலனென்றசொற். (௩௦)

௩௧. பெருமக னென்வயிற் பிறக்கச் சீதையாந்
திருமகண் மணவினை தெரியக் கண்டயா
னரு[1]மக ணிறைகுணத் தவனி மாதெனு
மொருமகண் மணமுங்கண் [2]டுவப்ப [3]வுன்னினேன்.

(இ - ள்.) பெரு மகன் - ஆணிற்சிறந்தோனாகிய ஸ்ரீராமன், என் வயின் பிறக்க - என்னிடத்திற் பிறக்க, (அவ்விராமனுக்கு), சீதைஆம்-சீதையாகிய,

திருமகள்-திருமகளது, மணவினை-மணக்கோலத்தை, தெரிய கண்ட யான் - கண்ணாரக் கண்ட நான், அரு மகள்-அருமையாகிய பெண்ணிற்குஉரிய, நிறை குணத்து-நிறைந்தகுணத்தையுடைய [கற்பையுடைய], அவனி மாது எனும்-பூமிதேவிஎன்கிற, ஒரு மகள்-ஒருபெண்ணினது, மணம் உம்-மணக்கோலத்தையும், கண்டு உவப்ப-கண்டுகளிக்க, உன்னினேன்-எண்ணினேன்; (எ-று.)

கீழே தான் துறந்து நற்கதிபெறவேண்டு மெனக் கூறின தசரதன், 'இராமனுக்குத் திருமணம் நடந்ததைக் கண்டு களித்த யான் பட்டாபிஷேகஞ் செய்வித்துப் பார்க்கவும் பேரவாக்கொள்கின்றேன்' என்கின்றன னென்க. பெருமகன், திருமகள், அவனிமாது என்னுஞ் சொன்னிலைபால் 'பெருமானுக்குப் பிராட்டிகளிருவருள் ஸ்ரீதேவியின் போகத்தைக் கண்டு களித்தேன்; இனிப் பூதேவியின் போகத்தைக் காண விரும்புகிறேன்'என்றதாகப் பொருள் தோன்றுமாறு அறிக. பெருமகன் = புருஷோத்தமன். அகழ்வாரையுந் தாங்குமவளாதலால், பூமிதேவியை, 'நிறைகுணத்தவனி' என்றது. பி - ம்:— [1]மகன், மறை. [2]உவப்பது. [3]ஆயினேன், ஓங்கினேன். (௩௧)

௩௨. நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையுஞ்
சிவப்புறு மலர்மிசைச் [1]சிறந்த செல்வியு
முவப்புறு கணவனை யுயிரி னெய்திய
தவப்பயன் [2]றாழ்ப்பது தரும மன்றரோ.

(இ - ள்) நிவப்புஉறு - உயர்வுபெற்ற, நிலன் எனும் - பூமியென்கிற, நிரம்பும் - (பெண்மைக்குணங்கள்) நிறைந்த, நங்கைஉம்-பெண்ணும், சிவப்பு உறு மலர்மிசை சிறந்த செல்விஉம் - செந்தாமரைமலரின்மேல் வீற்றிருக்கிற மேலான ஸ்ரீதேவியும் [சம்பத்தும்], உவப்பு உறு - விரும்பத்தக்க, கணவனை—, உயிரின் எய்திய - (தம்) உயிர்போல அடைவதற்குக் காரணமான, தவம் பயன் - தவப்பலனை, தாழ்ப்பது - (நான்) தாமதிக்கச்செய்வது, தருமம் அன்று - தருமமல்ல; (எ - று.)—அரோ - ஈற்றசை.

கீழே தான் இராமபிரானுக்கு முடிசூட்டிச் சகலஐசுவரியங்களையும் ஆட்சிபுரியுமாறு செய்யவேண்டுமென்று விரும்பியதைத் தெரிவித்த தசரதன், இதனால் அந்தமுடிசூட்டுவிபவத்தைத் தாழ்க்காது விரைவிற்செய்யவேண்டுமென்கின்றன னென்க. தனக்குக் கிழத்தன்மை தோன்றியதோடு தான் கண்ட தீக்கனாக்களும் பூமியில்தோன்றும் உற்பாதங்களும் தனக்கு மரணமோ பட்டாபிஷேகத்துக்கு இடையூறோ உண்டாகு மெனத் தெரிவிப்பதுபற்றி இராமனுக்கு முடிசூட்டத் தசரதன் விரைகின்றா னென்பது, முதனூலாற் பெறப்படும். பட்டாபிஷேகஞ் செய்யப்பெறுகின்ற அரசனைப் பூமியோடு சகலஐசுவரியங்களும் அடைவதால் மண்மகளுக்கும் பொன்மகளுக்கும் அவன் கணவனாவ னென்க. பூமிக்குஉயர்வாவது - எல்லாப்பொருள்களையுந் தாங்கும் ஆற்றலுடைமை, வளம் முதலியவற்றாற் சிறந்திருத்தல். ஸ்ரீதேவிக்குச் சிறப்பாவது-யாவர்க்குஞ் செல்வப்பெருக்கை யுண்டாக்கி இகபரசுகங்களை யனு

பவிக்கச்செய்தல். உயிரினைய்திய - உயிர்போல மகனைப்பெற்ற எனப் பொருள்கொண்டு, இவ்விராமனை என்உயிரினும் அரியமகனைப்பெற்ற, தவத்தின் பயனையான் பெறாது வீணிற்கழிப்பது தருமமன்றெனக் கூறினனென வும் கொள்ளலாம். தவப்பயன் தாழ்த்தலாவது-அவனுக்கு முடிசூட்டாமலும் தான் தவம் புரியாமலுமிருத்தல். உயர்ந்தமக்களைப்பெறுதல் உயிர்க்கு உறுதி தேடுகைக்கு ஆதலின்,உடனே அதனை நிறைவேற்றிக்கொள்ளவேண்டு மென் றெண்ணுகிறேனென்றானென்க. வேந்தர்க்குச் சிறந்தது புவியாதலின் அதனை முற்கூறினர். இனி, 'நிவப்புறு நிலனெனு நிரம்புநங்கையும் சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும் உவப்புறுகணவனை யுயிரினெய்திய' என்பதற்கு - நிலமகளும் மலர்மகளும் உவந்து கொண்ட கணவனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவை மகனைப்பெற்ற எனவும் பொருள் தோன்றுமாறறிக.பி-ம்:—[1]பெரிய. [2]இழப்பது. (௩உ)

௩௩. [1]ஆதலா லிராமனுக் கரசை நல்கியிப்
[2]பேதமை தாய்வரும் பிறப்பை [3]நீக்குவான்
மாதவந் [4]தொடங்கிய வனத்தை [5]நண்ணுவேன்
யாதுநுங் கருத்தென [6]வினைய கூறினான்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால், இராமனுக்கு அரசை நல்கி-இராமனுக்கு அரசுஆட்சியைக்கொடுத்து, இ - இந்த, பேதமை தாய் வரும்-அறியாமை தாவிவருவதால் தோன்றுந் தன்மையதான,பிறப்பை-பிறவியை, நீக்குவான் - நீக்குதற்கு, மா தவம் தொடங்கிய-பெரியதவத்தைச் செய்யத்தொடங்க, வனத்தை நண்ணுவேன் - அரணியத்தை யடையப்போகின்றேன்; (இவ்விஷயத்தில்), நும் கருத்து யாது - உங்கள் கருத்து என்ன? என - என்று, இனைய கூறினான் - இவைகளைச் சொன்னான்; (எ - று.)

பேதமை=பேதைமை-அஜ்ஞாநம்:அது நிலையில்லதை நிலையுள்ளதென மாறிநினைக்கும் அவிவேகம்; அது, பிறவிக்கு வித்தாகலின், 'பேதமை தாய் வரும் பிறப்பு' என்றான். "பிறப்பென்னும் பேதைமை" என்றார், நாயனாரும். இனி, பேதமைதாய்வரும் என்பதற்கு-பேதைமை நிறைந்துவரும் எனப்பொருள்கொண்டு,நிலையாப்பொருளை நிலையினவாகவெண்ணி அதனைத் தேடுகைக்காக மிக்கவருத்தமுற்றுப் பண்டே அவன்றெண்டாம் உயிரைத் தன்னதென்னுங் களவுமுதலியன செய்து மிக்கபாவந்தேடி நரகிற்புகப்பண்ணும் பிறப்பு எனவும் கருத்துக்கொள்ளலாம். இனைய என்பது - கீழ் "வெய்யவன் குல முதல்" (கசு) என்பதுதொடங்கி இச்செய்யுள்வரையுங் கூறியதைச் சுட்டும். ஸ்ரீராமனுக்கு இளவரசுப்பட்டங்கட்டமாத்திரம் ஆலோசித்ததாக முதனூலிற் பெறப்படும். தொடங்கிய - செய்யியவென்னும் வினையெச்சம்.

இனி, இக்கவியுள்—பேது அமை தாய் - கூனியால் (மனம்) பேதித்தலமைந்த தாயான கைகேயி, வரும்-(கொடியவார்த்தைகளைச் சொல்ல) வரும்;

(ஆதலால்), இராமனுக்கு-அப்போது அவ்விடத்திலில்லாத அரசனாகிய பரதனுக்கு, அரசைநல்கி-இராச்சியங்கொடுத்து, பிறப்பை நீக்குவான்-(என்)பிறப்பை நீக்கும்பொருட்டு உதித்தவனாகிய[தான் இல்லாச்சமயத்து என்னை உயிர் துறக்கப் பண்ணுபவனாகிய] ஸ்ரீராமன்,மாது அவம் தொடங்கிய-சீதையாகிய பெண் தன்னிடத்து இல்லாமற் போதலாகிய தன்மையைத் தொடங்கும் பொருட்டு, வனத்தை—, நண்ணுவேற்கு(=நண்ணுவிப்பேற்கு)-அடைவிக்க எண்ணங்கொண்ட என்விஷயத்தில், நுங் கருத்துயாது-? என்று தசரதன் கூறினான் என்று ஓர் அமங்கலப்பொருள் தோன்றுமாறு அமைந்துள்ளதென்பர். மாதவந்தொடங்கிய வனத்தை நண்ணுவேற்கு என்பதில் ஒற்றொழித்துப் பதினான்கெழுத்துக்க ளுளவாதலின் வனத்தைநண்ணுதல் பதினான்கு வருடகால மென்பதும் குறிப்பிக்கப்பட்ட தென்பர். பி-ம்:—[1]ஆதலின். [2]பேதைமைத்தாவரு, பேதைமைத்தாய்வரும். [3]நீக்குறும். [4]தொடங்குவான், தொடங்குற. [5]நண்ணுவேற்கு. [6]இனிது. (௩௩)

## வேறு.

### ௩௪.—தசரதனுடைய சொல்லைக் கேட்ட அமைச்சரது மனநிலை.

திரண்ட [1]தோளின னிப்படிச் [2]செப்பலுஞ் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய [3]வுவகைய ராங்கே
வெருண்டு மன்னவன் [4]பிரிவெனும் [5]விம்முறு [6]நிலையா
லிரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென விருந்தார்.

(இ - ள்.) திரண்ட தோளினன் - திரண்ட தோள்களை யுடையவனாகிய சக்ரவர்த்தி, இப்படி செப்பலும் - இவ்வாறு சொல்லுதலும், சிந்தை புரண்டு மீதிட பொங்கிய - மனத்தினின்றுபொங்கி மேலிடவழிந்த, உவகையர் - சந்தோஷத்தையுடையவர்களாய், (அவ்வமைச்சர்),—ஆங்கு-அப்பொழுது, மன்னவன்-சக்ரவர்த்தியின், பிரிவு எனும் - பிரிவென்கிற, விம்முறு நிலையால் - இரங்குதற்கு உரிய நிலைமையால், வெருண்டு-பயந்து, இரண்டு கன்றினுக்கு- இரண்டுகன்றுகளுக்கு, இரங்கும் - இரங்குகின்ற, ஓர் ஆ என - ஒருபசுவைப் போல, இருந்தார்—; (எ - று.)

ஸ்ரீராமபட்டாபிஷேகத்தைக் கருதுவதாற் பொங்கிய வுவகையராயினும், மன்னவன் பிரிவிற் பிரியமில்லாது வருந்தின ராதலின், இரண்டுகன்றினுக்கு இரங்கும் ஆ அம்மந்திரிகளுக்கு உபமானமாக்கப்பட்டது. இரண்டு கன்றினுக்கிரங்கும் ஆ-இளைய கன்றினிடத்தே மிக்க அவாவுடையதாயினும், மூத்த கன்றை மறுத்துவிட மனமில்லாத பசு:இதனால்,அதிகாரத்துக்கு அடங்கியவராகாது அன்புக்கு அடங்கியவரென்றதாயிற்று. பி-ம்:—[1]தோளினன். [2]செப்பவும். [3]உவகையாங்கெய்த, உவகையாங்கெய்தா. [4]பிரிவென. [5]வெருவுறு. [6]நிலையார். (௩௪)

### ௩௫.—தசரதனது சொல்லுக்கு மந்திரிமா ருடன்படுதல்.

அன்ன ராயினு [1]மரசனுக் கதுவல துறுதி
பின்ன ரில்லெனக் கருதியும் பெருநில வரைப்பின்
மன்னு மன்னுயிர்க் கிராமனிற் [2]சிறந்தவ ரில்லை
யென்ன வுன்னியும் விதியது வலியினு மிசைந்தார்.

(இ - ள்.) (மந்திரிமார்), அன்னர் ஆயின்உம் - அத்தன்மையராயினும், அரசனுக்கு - சக்ரவர்த்திக்கு, அது அலது - அவ்வாறுசெய்வதன்றி, உறுதி- இதம், பின்னர் இல் - வேறில்லை, என - என்று, கருதிஉம் - ஆலோசித்தும், பெரு நிலம் வரைப்பில் - பெரிய நிலவுலகத்தில், மன்னும் - அதிகரித்திருக்கிற, மன் உயிர்க்கு - நிலைபேறுடைய உயிர்களுக்கு, இராமனின் - ஸ்ரீராமபிரான்போல, சிறந்தவர்-சிறந்துதோன்றுபவர், இல்லை—, என்ன-, உன்னி உம் - நினைத்தும், விதியது வலியின்உம் - விதிபலத்தினாலும், இசைந்தார் - (சக்கரவர்த்தியின் கருத்துக்கு) இணங்கினார்கள்; (எ - று.)

கருதியும் உன்னியும் வலியினும் இசைந்தா ரென வியைக்க. இங்கு விதியென்றது - எம்பெருமான் ஆதிபிற்கொண்ட சங்கற்பவிசேடத்தை. பி - ம்:—[1]அரசற்கதுவலது, அதுவலதரசனுக்கு. [2]மன்னவர். (ரு௫)

ரு௬.—வசிட்டன் கூறத்தொடங்குதல்.

இருந்த மந்திரக் [1]கிழவர்த மெண்ணமு [2]மகன்பாற்
பரிந்த [3]சிந்தனை மன்னவன் கருதிய பயனும்
பொருந்து மன்னுயிர்க் குறுதியும் பொதுவுற நோக்கித்
[4]தெரிந்து நான்மறைத் திசைமுகன் [5]மகனிவை செப்பும்.

(இ - ள்.) நால் மறை-நான்கு வேதங்களையுடைய, திசைமுகன் - பிரமதேவனுக்கு, மகன் - புத்திரனாகிய வசிட்டமுனிவன், - இருந்த-(அவ்வாறிசைந்து) இருந்த, மந்திரம்கிழவர்தம் எண்ணம்உம்-மந்திரிகளுடைய கருத்தையும், மகன்பால் - (தன்) மகனிடத்தில், பரிந்த - விசுவாசம்பூண்ட, சிந்தனை -மனத்தையுடைய, மன்னவன் - அச்சக்கரவர்த்தி, கருதிய - நினைத்த, பயன்உம் - நினைப்பையும், பொருந்தும் - பொருந்திய, மன் உயிர்க்கு உறுதிஉம் - நிலைபேறுடைய உயிர்களுக்கு இதத்தையும், பொது உற நோக்கி - பொதுவாகப் பார்த்து, தெரிந்து - (சாரம் இதுவென்று) தெளிந்து, இவை செப்பும்-இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று)—அது மேற்கூறுகின்றார்.

பொதுவுறநோக்கல் - பக்ஷபாதமின்றி நாடல். திசை - நான்கு: நான்கு முகங்களையுடைமையால் பிரமதேவனுக்குத் திசைமுகனென்பது, ஒரு பெயர். பிரமதேவனுடைய மானஸபுத்திரனாதலின், வசிட்டனை 'திசைமுகன் மகன்' என்றார். பி - ம்:—[1]கிழவரது. [2]தன்பால், மகன்மேற். [3]சிந்தையம். [4]தெரிந்த. [5]திருமகன். (ரு௬)

ரு௭.—இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்: வசிட்டன் தான் இராமபட்டாபிஷேகத்தை யுடன்பட்டதைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

நிருப நின்குல [1]மன்னவர் நேமிபண் டுருட்டிப்
பெருமை யெய்தினர் யாவரே யிராமனைப் பெற்றார்
[2]கரும மேயிது [3]கற்றுணர்ந் தோய்க்கினிக் கடவ
தரும மும்மிது தக்கதே [4]நினைந்தனை[5]தகவோய்.

(இ - ள்.) நிருப - சக்கரவர்த்தியே! பண்டு - பூர்வத்தில், நின் குலம் மன்னவர்-உன்வம்சத்து அரசர்களாகத் தோன்றி, நேமி உருட்டி - ஆஜ்ஞா

சக்கரத்தைச் செலுத்தி, பெருமை எய்தினர் - பெருமையடைந்தவர்களுக்குள்ளே, இராமனை பெற்றார் - ஸ்ரீராமனைப் போன்ற புதல்வனைப் பெற்றவர்கள், யாவர் - எவர்? [ஒருவருமில்லை]; கற்று உணர்ந்தோய்க்கு - (கற்றற்குரிய நூல்களைக்) கற்று (அவற்றின் பொருளையுள்ளவாறு) அறிந்த உனக்கு, இது கருமம் ஏ - இது தகுதியான காரியந்தான்: இனி கடவ தருமம்உம் இது - இனிச்செய்யத்தக்கதாகிய தருமமும் இது தான்; தகவோய் - அறிவுடையோனே! தக்கது ஏ நினைந்தனை - தக்க காரியத்தையே(செய்ய) ஆலோசித்தாய்.

உனக்கு முன்னிருந்த சக்கரவர்த்திகள் உன்னைப்போற் பெருமைமாத்திரம் பெற்றனரேயன்றி ஸ்ரீராமனைப்போன்ற சகலகுணசம்பந்நனை நற்புதல்வனைப் பெற்றிலர் என்பதாம். இராமனது குணத்தில் ஈடுபட்டிருத்தலால் அவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதைப்பற்றி மாறான கருத்து எவர்க்கும் நிகழாதென்று தெரிவிக்கும்பொருட்டு 'இராமனை யாவரே பெற்றார்' என்று அவனது பிறர்க்கிலாச்சிறப்பைத் தொனிக்கவைத்தான். சக்கரவர்த்தியெண்ணத்துக்கு மகிழ் கூர்ந்தவனாதலால் நிருபனென்றவளவிலமையாது 'தகவோய்' எனவுங் கூறினான். ஆணையைச் சக்கரமென்றல் வழக்கு. இது—தான் மறுமைக்கு முயலுமாறு புதல்வனிடத்து இராச்சியபாரத்தை வைத்தல். இதுதருமம் - மறுமையின் பொருட்டுத்துறத்தல்முறைமையே. கற்றற்குரியநூல்களாவன - அறநூலும் நீதிநூலும் யானை குதிரை தேர் படைக்கலம்என்ற இவற்றின் நூல்களும் என்பவை முதலிய அரசுக்கு உரியனவும், மறுமைக்கு உரிய வேதாந்தமும். பி - ம்:—[1]மரபினோர், முதலினோர். [2]கருமமும்மிது. [3]கற்றுணர்ந்தோர்க்கினி, கற்றுணர்ந்தோர்க்கிது. [4]உரைத்தனை. [5]தகவாய். (௩எ)

௩அ. புண்ணி யந்[1]தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த
[2]வண்ண லேயினி யருந்தவ மியற்றவு மடுக்கும்
வண்ண மேகலை நிலமகண் மற்றுனைப் பிரிந்து
கண்ணி ழந்தில ளெனச்செயு நீதந்த கழலோன்.

(இ - ள்.) புண்ணியம் தொடர் - புண்ணியந்தோன்றக் காரணமான, வேள்விகள் யாவைஉம் - யாகங்கள் எல்லாவற்றையும், புரிந்த - முட்டின்றி முடித்த, அண்ணலே - பெரியோனே! இனி-இனிமேல், அரு தவம் இயற்ற உம் அடுக்கும் - (நீ செய்தற்கு) அரிய தவத்தைச் செய்யவுந் தகும்; நீ தந்த - நீ பெற்ற, கழலோன் - வீரக்கழலை யணிந்த ஸ்ரீராமபிரான், வண்ணம்-அழகிய, மேகலை - மேகலாபரணத்தை யணிந்த, நிலமகள் - பூமிதேவி, உனை பிரிந்து- உன்னை நீங்கியதனால், கண் இழந்திலள் என-கண்ணிழவாதவளாயிருக்கிறாளென்று சொல்லும்படி, செயும் - இராச்சியபாலனஞ் செய்வான்; (எ - று.)

கீழ் இராச்சியபாரத்தை இராமனிடத்துவைத்துத் துறந்துசெல்லுதல் தக்கது என்ற வசிட்டமுனிவன், இனி இராமன் ஒரு குறைவின்றி அரசு செலுத்தவல்லவனென்பதைக் காரணத்தோடு நிரூபிக்கின்றானென்க. வேள்வியைச் செய்வதினுஞ் சிறந்ததென்பான் 'அருந்தவம்' என்றும், சிற்றின்பப்

பயிற்சியற்றுப் பேரின்ப வழிதேடுதல் இன்றியமையா தாதலின் 'அடுக்கும்' என்றும்,நிலமகள் என்னைப்பிரிந்து யாதாவளோ வென்று நீகலங்கவேண்டா: உன்னினும் உன்மகன் ஆயிரமடங்கு அதிகமாக அரசுபுரிவனென்பான் 'கண்ணிழந்திலளாமெனச் செயும்' என்றும்,அவன் அத்துணையாற்றலுடையனோ வென்று நீ அதிசங்கை செய்யவேண்டா வென்பான்'கழலோன்'என்றுங் கூறினான். அரசன் அன்பானாயினும் அச்சத்தானாயினுங் குடிகளை அறத்தின்வழி நிறுத்தி அவனியைப் புரத்தலால்,அவனை நிலமகளுக்கு நேத்திரஸ்தானமாகச் சாஸ்திரஞ் சொல்லுகையால்,'நின்னைப்பிரிந்து நிலமகள் கண்ணிழந்தவளல்லளாகச்செய்வன் நின்மகன்' என்றான். ''யாருஞ்செய்யாத யாகமிவன்செய்து மறந்த'' என்று பாலகாண்டத்துக் கூறியபடி எல்லாயாகமுஞ் செய்த நீயே அருந்தவம் முயலுவதற்குத் தக்கவனென்பது 'வேள்விகள்யாவும் புரிந்தஅண்ணலே! இனி யருந்தவம் இயற்றவுமடுக்கும்'என்ற தொடரிற் போதரும்.கண்-பெருமையுமாம். மேகலை - மாதரிடையிலணியும் எண்கோவையணி; ''எண்கோவை மேகலை'' என்றது காண்க. மற்று - வினைமாற்று.

இனி, கழலோனென்ற சொல்லாற்றலால் - சரணாகதரக்ஷகனான ஸ்ரீராமன் ஞானக்கண்தந்து சராசரமனைத்தையும் வைகுந்தத்தேற்றி வீறுபெறச் செய்ய முன்னடியிடுந்தன்மையுடையோ னென்னும் விசேஷார்த்தத்தையும் உட்கொண்டு வசிஷ்டமுனிவன் வெளியிட்டதாக உய்த்துணரக்கிடக்கின்றது இந்தச்செய்யு ளென்பர்.பி-ம்:—[1]புரி. [2]அண்ணனீ. (௩அ)

௩௯. புறத்து நாமொரு [1]பொருளினிப் புகல்கின்ற தெவனோ
வறத்தின் மூர்த்திவந் தவதரித் தானென்ப தல்லாற்
[2]பிறத்தி யாவையுங் காத்தவை [3]பின்னுறத் துடைக்கும்
[4]திறத்து மூவருந் [5]திருந்திடத் திருத்துமத் திறலோன்.

(இ-ள்.) 'அறத்தின் மூர்த்தி-தருமமூர்த்தியே,வந்து அவதரித்தான்—,' என்பது அல்லால் - என்று சொல்லுவதன்றி, இனி , நாம் - யாம், ஒரு பொருள் புறத்து புகல்கின்றது - ஒருபொருளைப் புறத்ததாக எடுத்துச்சொல்லுவது, எவன் - யாது? அ திறலோன் - அந்தவெற்றியுடையான், யாவைஉம்- எல்லாப்பொருள்களையும், பிறத்தி-உண்டாக்கி, காத்து-காப்பாற்றி, பின் - முடிவில், அவை உற துடைக்கும் திறத்து-அவற்றை மிகவும் அழிக்குந்திறனுள்ள, மூவர்உம் - மும்மூர்த்திகளின்செயலும், திருந்திட - திருத்தமடைய, திருத்தும் - திருத்துவான்; (எ - று.)

இராமபிரான் காக்குந் தொழிற்கடவுளாகிய திருமாலேயென்று கூறிவிட்டால், பிறகு 'இராச்சியபாரத்தை அவனிடத்து வைக்கலாமா?அவனாற் காக்க முடியுமா?' என்பவை முதலிய வினாக்கட்கு வழியில்லையென்பது, 'புறத்து நாமொரு பொருளினிப்புகல்கின்ற தெவனோ?' என்பதன் கருத்து. பிரமனுக்குள் அந்தர்யாமியாகிப் படைத்தும்,உபேந்திரமூர்த்திக்குள் அந்தர்யாமியாகிக் காத்தும், உருத்திரமூர்த்திக்குள் அந்தர்யாமியாகி அழித்தும் முத்தொழிலும்

ஒழுங்குபெற நடக்குமாறு செய்தலின் 'மூவருந் திருந்திடத்திருத்தும்' என்றார்; "மூவர்காரியமுந் திருத்து மம்முதல்வன்" என்றார் பெரியாரும். பிறத்தி - பிறவினை யிறந்தகாலவினையெச்சம்: 'பிற' என்னுந் தன்வினையின்பிறவினையான பிறத்து - பகுதி. யாவையும் என பொருட்டன்மைநோக்கிக் கூறினராயினும், இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் என்னும் இருவகைப் பொருளுங்கொள்க. பிரமவிருடி யாதலின், வசிஷ்டமகாமுனிவன் ஸ்ரீராமனுடைய நற்குணக்கடலிலாழ்ந்து மெய்ம்மறந்து தத்துவத்தைத் தசரதனுக்கு ஒருவாற்றால் விளக்குகின்றா னென்க. பீ-ம்:—[1]பொருளினை. [2]பிறத்தல். [3]பின்னின்று, பின்னுதல். [4]திறத்தின். [5]திருத்தின, திருத்திய, திருந்திய. (௩௯)

௪௦. பொன்னு யிர்த்தபூ மடந்தையும் புவியெனுந் திருவு
மின்னு யிர்த்துணை யிவனென நினைக்கின்ற விராமன்
றன்னு யிர்க்கென்கை புல்லிது தற்பயந் தெடுத்த
வுன்னு யிர்க்கென நல்லன்மன் னுயிர்க்கெலா [1]முரவோய்.

(இ - ள்.) உரவோய்-அறிவின் திட்பமுடையாய்! பொன் உயிர்த்த-அழகைப்பெற்ற, பூ மடந்தைஉம் - ஸ்ரீதேவியும் [செல்வமும்], புவி எனும் திருஉம் - பூதேவியும், 'இவன் - இவனே, இன் உயிர் துணை - இனிய உயிர் போன்ற துணைவன் [பிராணநாயகன்]' என - என்று, நினைக்கின்ற - நினைக்கப்பெறுகின்ற, இராமன் - ஸ்ரீராமன், தன் உயிர்க்கு (நல்லன்) என்கை புல்லிது-தன்னுயிருக்கு இனியானென்று சொல்லுவது தகுதியற்றது: தன் பயந்து எடுத்த - தன்னைப்பெற்றெடுத்த உன் உயிர்க்கு என-உனது உயிர்க்கு (நல்லனாதல்) போல, மன் உயிர்க்கு எலாம் - நிலைபேறுடைய உயிர்களுக்கெல்லாம், நல்லன் - நல்லவன்; (எ - று.)

கீழ் இராமபிரானைத் திருமாலினவதாரமென்றுகூறிய வசிட்டமுனிவன் அவ்விராமனதுகுணங்களைத் தொகுத்துச்சொல்லுகின்றான். உன்னுயிர்க்குறுதி செய்யுமாறுபோல உலகத்துயிர்க்கெல்லாம் இராமன் உறுதியேசெய்வானென்றவாறு. உலகத்துமன்னவர் மன்னுயிரைக் காப்பினும் தன்னுயிரினிடத்தும் நசையுள்ளவராவர்; இவ்விராமனோ தனக்குரித்தல்லாப் பிறர்க்குரியானென்பான், 'தன்னுயிர்க்கென்கைபுல்லிது' என்றான். "இறந்துபோகினுநன்றிதுவல்லது, பிறந்துயான்பெறும்பேறென்பதியாவதோ," "ஆவுக்காயினுமந்தணர்க்காயினும், யாவர்க்கேனுமெளியவர்க்காயினுஞ், சாவப்பெற்றவரேதகைவானுறை, தேவர்க்குந்தொழுந்தேவர்களாகுவார்" என்று மேல் அகத்தியப்படலத்து ஸ்ரீராமபிரான்கூறுவதால், அப்பிரான் பிறர்பொருட்டுத்தன்னுயிரையும் ஈயுங்கருத்துள்ளவனாதல் பெறப்படுதலறிக. உடற்றிட்பம் இம்மைமறுமைகளைப்பயவாமையின், உரமென்பதற்கு-அறிவின்றிட்பமென்று உரைக்கப்பட்டது; இனி அரியாசனத்தின் மேலிருந்து அரசுபுரிந்து ஒன்னலரையொறுத்து உடலைப் பாதுகாத்துவந்த உனக்கு அவ்வுத்தமன்செயல் தெரியுமோவென ஓர்பொருள்

தொனிக்குமாறு 'உரவோய்' என விளித்துக் கூறினானென்னவுமாம். நல்லன் என்பது முன்னுங் கூட்டப்பட்டது. 'திரு' என்னுஞ் சிறப்புப்பெயர் மாதுஎன்னும் பொருளைக்காட்டிற்று. பி - ம்:—[1]உரவோன். (௪௦)

௪௧. வார மென்னினிப் பகர்வது வைகலு மனையான்
பேரி னால்வரு [1]மிடையுறு [2]பெயர்கின்ற பயத்தால்
வீர நின்குல மைந்தனை வேதியர் முதலோர்
யாரும் [3]யாஞ்செய்த நல்லறப் [4]பயனென விருப்பார்.

(இ - ள்.) வீர - பராக்கிரமசாலியே! அனையான் பேரினால்-அந்த ஸ்ரீராமனது திருநாமத்தை யுச்சரிப்பதனால், வைகல்உம் - நாடோறும், வரும் - உண்டாகிற, இடையுறு - துன்பங்கள், பெயர்கின்ற - விலகிப்போகின்ற, பயத்தால் - பயனுள்ளதால், வேதியர் முதலோர் யார்உம் - அந்தணர் முதலியோரெல்லாரும், நின் குலம் மைந்தனை - உனது ஜ்யேஷ்டகுமாரனை, யாம் செய்த நல் அறம் பயன் என - யாங்கள்செய்த சிறந்த தருமபலன் என்று, இருப்பார்-நினைத்திருப்பார்கள்: (என்றால்), இனி—, வாரம் - (பிரஜைகளுக்கு அவன் விஷயத்திலுள்ள) அன்பை, என் பகர்வது - என்னசொல்வது? (எ - று.)

இராமனுடையபேரைச் சொன்னமாத்திரத்திலேயே இடையூறுயாவும் போகின்ற பயனைப்பெறுதலால், வேதியர்முதலிய யாவரும் அவ்விராமபிரானைத் தாம்செய்த நல்லறப்பயனென்று இருப்பாரென்றால், நேரே அவனை அரசனாகப் பெறுவதில் எவ்வளவு அன்புஎன்று அளவிட்டு நம்மாற் கூறமுடியுமோ? என்று கைமுதிகநியாயத்தால் யாவருக்கும் அவ்விராமனிடத்து அன்புடைமையை எடுத்துக்காட்டுகின்றான். வாச்யப்ரபாவத்தைவிட தாரகமந்திரமான வாசகத்தின் ப்ரபாவமே சிறந்தமையின், 'பேரினால்வருமிடையுறு பெயர்கின்றபயத்தால்' என்றான். இடையுறு-இடையூறுஎன்பதன் விகாரம். 'வீர' என விளித்தலால், பகைவரைப்புடைக்குந் தொழிலை மேற்கொண்ட உனக்குப் பத்தரைப் புரக்குந்தொழிலைமேற்கொண்ட அப்புருஷோத்தமனது அவதாரப்பயன் தெரியாது என ஒருபொருள் தொனிக்குமாறு கூறினானென்னவுமாம். பி - ம்:—[1]இடையூறு. [2]பெயர்க்கின்ற. [3]தாம், நாம். [4]ஆமென, தவமென. (௪௧)

௪௨. மண்ணி னு [1]நல்லன் [2]மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணி னு நல்லள் பெரும்புகழ்ச் [3]சனகியோ நல்லள்
கண்ணி னு [4]நல்லன் கற்றவர் கற்றிலா தவரு
முண்ணு நீரினு [5]முயிரினு மவனை யே[6]யுவப்பார்.

(இ - ள்.) பெரு புகழ் - பெருங்கீர்த்தியையுடைய, சனகிஓ - ஜாநகியோவென்றால், மண்ணின்உம் நல்லள்-பூமிதேவியினும் நல்லவள்; மலர்மகள் கலைமகள் கலை ஊர் பெண்ணின்உம் நல்லள் - திருமகள் சரசுவதி பார்வதி என்னும் இவர்களினும் நல்லவள்: (ஸ்ரீராமனோ), நல்லள் கண்ணின்உம் - (அத்திறத்த) நல்லவளுடைய கண்களைக்காட்டிலும், நல்லன் - நல்லவன்; (ஆகையால்), கற்றவர் கற்றிலாதவர்உம் - கற்றவரும் மற்றவரும், உண்ணும் நீரின்உம் - பருகுகின்ற நீரைப்பார்க்கினும், உயிரின்உம் - உயிரைப்பார்க்கினும், அவனை ஏ உவப்பார்-அவனையே (மேலானவனாகவெண்ணி) விரும்புவார்கள்.

அரசன் நல்லவனுயினும் இராணி நற்குணமுடையவளன்றியிருப்பின் அரசன் மனந்திரிய நல்லரசுஆட்சியின்றி விடுமாதலின், இச்செய்யுளில் இராம பிரானேடு அவனதுமனைவியுங் குணஞ்சிறந்திருத்தலைக் கூறுகின்றான். பொறுமையிற் சிறந்தமையின் 'மண்ணினும் நல்லள்' என்றும், அழகிற் சிறந் தமையின் 'மலர்மகளினும் நல்லள்' என்றும், ஞானத்திற் சிறந்தமையின் 'கலை மகளினும்நல்லள்' என்றும், கற்பிற்சிறந்தமையின் 'கலையூர் பெண்ணினுநல் லள்'என்றும் கூறினன். எல்லாப்பெண்களிடத்துமுள்ள நற்குணங்கள்யாவும் ஒருங்கேயுடைய இவள் பிறவிப்பெருங்கடலை நீந்திக் கரையேறமாட்டாத ஆன் மாக்களைக் கண்டு கண்கலுழ்ந்து தன்கணவற்குஉரைத்து ஈடேற்றிவைக்கும் இலக்குமியைப்போலன்றி, வானவர்துயர்தீரத் தானே சிறையிருந்தமையால் விசேஷமுடையளாயினள்: ஆயினும்,இவள் தன்றிறத்து அபராதம்பண்ணின இராவணன்இறந்ததற்குச் சிறிதும்இரங்காதிருக்க, தான் இரங்கி மிகக்கலுழ் ந்து அவன்தம்பியை அவற்குச் சரமக்கிரியை செய்யும்படி யேவினனாதலால், அவளினும் இவ்விராமனிடத்து இரக்கமுடைமை யதிகரித்திருப்பதை யோக த்தாலறிந்தவனாதலின் 'நல்லள்கண்ணினும்நல்லன்'என்றான். "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமே, லென்னடியா ரதுசெய் யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர்போலும்" என்பவாதலால், இவ் வாறு கூறினனுமாம். ராமநாமாம்ருதத்துக்கு ஒப்பாவ தின்றுஆதலானும், அவ்விராமன் உயிர்க்கு உறுதிசெய்பவனாதலானும், 'உண்ணுநீரினு முயிரினு முவப்பார்' என்றான்; யாவரும் இராமனிடத்திலே அன்புகொண்டிருக்கிறு ரென்பது கருத்து. இனி, உண்ணுநீரினும் உயிரினும் அவனையே உவப்பார் என்பதற்கு - உண்ணுநீரைப்போலவும் உயிரைப்போலவும் அவ்விராமனை மகிழ்ந்துபோற்றுவா ரென்றலுமுண்டு: "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்பது, ஆழ்வார்பாசுரம். உண்ணுநீ ரென்றது - நீரோடுகூடியசோற்றினை: உயிரினும் என்றது-பிராணயாமந்தை யென்றுருமுளர். கலையூர் பெண் மானைவாகனமாகவுடைய பார்வதி. சனகி= ஜாநகீ: ஜனகனது மகள்: தத்திதாந்தநாமம். பி - ம்:—[1]நல்லன். [2]நாமகன் மலர்மகள், கலைமகள் மலர்மகள், வானினுநல்லன்மாக். [3]சனகியும்நல்லோர், சனகியினல்லன், சனகியுநல்லள், சனகி பேருலகின். [4]நல்லர். [5]உயிரினும். [6]உகப்பார். (௪௨)

௪௩. மனிதர் வானவர் [1]மற்றுளோ ரற்றங்காத் தளிப்பா
ரினி[2]யிம் மன்னுயிர்க் [3]கிராமனிற் சிறந்தவ ரில்லை
[4]யனைய னாதலி [5]னரசநிற் குறுபொரு ளறியிற்
புனித மாதவ மல்லதொன் றில்லெனப் புகன்றான்.

(இ - ள்.) அரச - சக்கரவர்த்தியே! மனிதர்-மானுடரும், வானவர்-தேவ ரும், மற்று உளோர் - வேறுள்ளாகரும்ஆகிய, இ மன் உயிர்க்கு - இந்த நிலை பேறுள்ள வுயிர்களுக்கு, அற்றம் - வருத்தங்களை, காத்து - வரவொட்டாமல் தடுத்து, அளிப்பார் - பாதுகாப்பவர், இராமனின் இனி சிறந்தவர் - ஸ்ரீராம பிரானினும் மேலாகச்சிறப்புற்றவர், இல்லை - (ஒருவரும்) இல்லை; அனையன் ஆதலின் - (இராமபிரான்) அப்படிப்பட்டவனாதலால், நிற்கு உறு பொருள்

அறியின் - உனக்குச் செய்யவடுப்பதாகிய காரியத்தை ஆலோசிக்குமிடத்து, புனிதம் - பரிசுத்தமான, மா தவம் அல்லது-பெரிய தவமன்றி, ஒன்று இல்-வேறொன்றில்லை. என புகன்றான் - என்று சொல்லி முடித்தான், (வசிட்டன்); (எ - று.)

மக்கள் தேவர் நாகர் என்னும் மூவுலகத்தோரையும் யாதொருவருத்தமும் நேராதபடி பாதுகாப்பதில் இராமனைவிடச் சிறந்தவ ரில்லையாதலால், அவனிடத்து இராச்சியத்தை யொப்புவித்து விட்டு,நீ தவஞ்செய்யச் செல்லுதல் தகுதியென்று வசிட்டன் கூறிமுடித்தன னென்க. கீழ் ருஉ - ஆம் பாடலில் "அரசனுக்கதுவலதுறுதி, பின்னரில்லெனக்கருதியும்......,மன்னுமன்னுயிர்க்கிராமனிற் சிறந்தவரில்லை,யென்ன வுன்னியும்"என வந்தது காண்க. வேண்டிய வேண்டியாங்கெய்தற் பயத்ததாகலின், 'புனிதமாதவம்' என்றார்.
பி-ம்:—[1]மற்றுளவறங்கள் காத்தளிப்போர், மற்றுளாரறங்கள் காத்தளிப்பார். [2]அம். [3]இன்னனிற் [4]அனையது. [5]அரசனுக்கு. (சங)

சச.—அதுகேட்டு மன்னவன் மகிழ்ச்சியடைதல்.

மற்ற வன்சொன்ன வாசகங் கேட்டலு மகனைப்
பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் [1]பிடிக்குமப் பெருவி
லிற்ற வன்றினு மெறிமழு [2]வாளவ னிழுக்க
முற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான்.

(இ - ள்.) அவன் - அவ்வசிட்டமுனிவன், சொன்ன—, வாசகம்-வார்த்தையை, கேட்டலும் - (சக்ரவர்த்தி) கேட்டவளவில்,—மகனை - புத்திரனை, பெற்ற அன்றின் உம்-பெற்ற அந்நாளினும், பிஞ்ஞகன் பிடிக்கும்-உருத்திரன் (கையிற்)பிடிப்பதான, அ பெரு வில்-அந்தப்பெரிய வில்லானது, இற்ற-ஒடிந்த, அன்றின் உம்-அந்நாளினும்,எறி மழு வாளவன் இழுக்கம் உற்ற அன்றின் உம்-வீசுகின்ற குந்தாலிப்படையையுடைய பரசுராமன் தோல்வியடைந்த அந்நாளினும், பெரியது-பெரியதாகிய, ஓர்-ஒப்பற்ற, உவகையன் - சந்தோஷத்தையுடையவனாக, ஆனான்—; (எ - று.)

பிஞ்ஞகன் வில்லென்றது - மயனாற்செய்யப்பட்டதும் சிவன் எடுத்து யுத்தஞ்செய்து திமிவமிசத்தில்தேவராதனிடத்திற் கொடுக்கப்பட்டு குலமுறையாய்ச் சனகனாற் பூசிக்கப்பட்டுவந்ததுமாகிய ஜானகியின்மணத்துக்கு வீரசுற்கமாக ஏற்படுத்தியிருந்த வில். ஸ்ரீராமன் கையி லெடுக்க அது முறிந்ததென்க. மகனைப்பெற்ற உவகையிலும் மருமகளைப்பெற்றஉவகை மேலதாய், மாற்றானை முகம்வணக்கப் பார்த்த உவகை அதனினும் மேலதாயினும், இப்போது வசிட்டன் வார்த்தையாலுண்டாகிய உவகை அதனினும் மேற்பட்டதென்க: **மேன்மேலுயர்ச்சியணி.** ஈன்றகாலத்திலும் வீரனென்று கேள்விப்பட்டபோது மகனிடத்து மகிழ்ச்சி மிக,அவ்வீரத்தன்மையோடு சான்றோனெனப் பெரியோர் தன்மகனைப்புகழ்ந்து கூறக் கேட்டபோது உவகை விஞ்சியதென்க. "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந்தன்மகனைச், சான்றோனெனக் கேட்டதாய்" என்ற குறள் இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. "தந்தைமகற்

காற்று நன்றியவையத்து, முந்தியிருப்பச்செயல்" என்றவாறு தான் செய்ய வேண்டிய கடமை நிரம்பியமைபற்றி உவகையனுயினனுமாம். மற்று - வினைமாற்று. பிஞ்ஞகன் - பிஜ்ஞகன்: வடமொழி: சங்கரிப்போனென்பது, அவயவப்பொருள். பி-ம்:—[1]பிடித்த. [2]வானவன். (௪௪)

௪௫.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: தசரதன் வசிட்டனைப் புனைந்து கூறுதல்.

அனைய தாகிய வுவகையன் கண்கணீ ரரும்ப
[1]முனைவன் மாமலர்ப் பாதங்கண் முறைமையி னிறைஞ்சி
யினிய சொல்லினை யெம்பெரு மானருள் [2]வழியின்
றனிய னானிலந் தாங்கிய தவற்[3]கிது தகாதோ.

(இ - ள்.) அனையது ஆகிய உவகையன் - அத்தன்மையதாகிய சந்தோஷத்தையுடையவனாகிய தசரதன், கண்கள் நீர் அரும்ப-கண்கள் நீர்சொரியாநிற்க, முனைவன் - வசிட்டமுனிவனது, மா - பெருமையமைந்த, மலர்-தாமரைமலர்போன்ற, பாதங்கள் - அடிகளை, முறைமையின் இறைஞ்சி-(வணங்க வேண்டிய) முறைமையோடு வணங்கி,—எம்பெருமான் - எம்மிறைவனே! இனிய சொல்லினை-இனியனவே சொன்னாய்: அருள் வழியின்-(தேவரீரது) அருளினால், தனியன்-அடியேன், நானிலம் தாங்கியது-பூபாரத்தைச்சுமந்தது; அவற்கு - அந்த இராமனுக்கு, இது தகாதுஓ - இச்செய்கை தகுதியற்றதோ?

ஒருபாற்கோடாது உரைத்ததுபற்றி வசிட்டனை வணங்கி, யானே நமது கருணையால் இவ்வுலகத்தை யாண்டிருக்க, சகலகுணசம்பன்னனான அவ்விராமனுக்கு இவ்வரசு மிகவும் ஏற்கு மென்றன னென்றவாறு. ஆநந்தாதிசயத்தாற் கண்கள் நீரரும்பின. இனி, இப்பாட்டின் சொற்போக்கினால், இராமன் இனியனாயுந்தன்மை நோக்கிக் கண்களில் நீர்பெருக வசிஷ்டமுனிவனுடைய திருவடித்தாமரைகளை முறைமையின் வணங்கி, 'தேவர் முனிவர் துயர்தீர்தலாகிய இனியகாரியத்துக்குத் தக்கபடியேசொல்லியருளினீர்; உலக முழுதும் உண்டுமிழ்ந்தளிக்கும் உத்தமன் இவ்வுலகத்தை யளித்தற்கு வந்தவனாதலின் உம்முடைய அருள்நோக்கால் தாங்கிய என் அரசாட்சி இராமனுக்கு உடனே தகாது' என்றதாக வேறோர்பொருள்படு மென்பர். இறைஞ்சியென்ற வினையெச்சம், அடுத்த செய்யுளில் "என்றுரைசெய்து" என்றதனோடு இயையும். பி-ம்:—[1]முனிவன். அன்றோ; விழியின். [3]அது. (௪௫)

௪௬. எந்தை நீயுவந் திதஞ்சொல வெங்குலத் தரச
ரந்த [1]மில்லரும் பெரும்புக ழவனியி [2]னிறுவி
முந்து [3]வேள்வியு முடித்துத்தம் மிருவினை முடித்தார்
வந்த தவ்வரு ளெனக்குமென் றுரைசெய்து மகிழ்ந்தான்.

(இ - ள்.) எந்தை - என்தந்தைபோன்றவனே! நீ—, உவந்து - மனம் மகிழ்ந்து, இதம் சொல - நன்மைகளைச் சொல்ல, எம் குலத்து அரசர் - எங்கள் குலத்துத்தோன்றிய வேந்தர்கள், அந்தம் இல்-முடிவில்லாத, அரு பெரு புகழ் - பெறுதற்கரிய பெருங்கீர்த்தியை, அவனியில் நிறுவி - உலகத்தில் நிலைபெறுத்தி, முந்து - முற்பட்ட, வேள்விஉம் - யாகங்களையும், முடித்து -

நிறைவேற்றி, தம் - தம்முடைய, இரு வினை - இருவினைகளையும், முடித்தார் - வென்றார்; எனக்கும் - அடியேனுக்கும், அ அருள் வந்தது - அந்தக் கிருபைவாய்த்தது, என்று -, உரைசெய்து - சொல்லி, மகிழ்ந்தான் - களித்தான், (தசரதன்); (எ - று.)

அரசாண்டுபெரும்புகழ்படைத்து வேள்விமுற்றியிருந்த தசரதன் தான் இருவினை நீங்கிப் பேரின்பமடையுமாறு, வசிட்டன் 'புனிதமாதவ மல்லதொன்று இல்' என்று புகன்றானாதலால், 'வந்ததவ்வருளெனக்கும்'என்று பாராட்டிக் கூறுகின்றான். இதஞ்சொல்வதில் தந்தை சிறந்தவனாதலால், 'எந்தை நீயுவந்திதஞ்சொல' என்றான். இம்முனிவனது ஹிதவார்த்தை பிறரது ஹிதவார்த்தை போலாது இம்மையிற் பெரும்புகழ்நிறுவுதற்கும், முந்துவேள்வி முடித்தற்கும்,மறுமையில் இருவினை யொழித்து இன்பமடைதற்கும் உதவின வென்பதாம்.முந்துவேள்வியென்றது-அரசர்க்குச் சிறந்த அசுவமேதம் முதலாயினவற்றை. இருவினையென்றதன்பின், முற்றும்மைதொகுத்தல். பி-ம்:— [1]இல்லதொர், இல்லவர். [2]சிறுத்தி. [3]வேள்விகள். (௪௬)

௪௭.—மந்திரிமார்கருத்தைச் சுமந்திரன் கூறத்தொடங்குதல்.

பழுதின் மாதவன் பின்னொன்றும் பணித்தில னிருந்தான்
முழுது [1]மெண்ணுறு [2]மந்திரக் கிழவர்தம் முகத்தா
லெழுதிநீட்டிய விங்கித மிறைமகற் [3]கேற்கத்
தொழுத கையினன் சுமந்திரன் முன்னின்று சொல்லும்.

(இ - ள்.) பழுது இல் - குற்றமற்ற, மா தவன் - பெருந்தவத்தோனான வசிட்டமுனிவன், பின்-அதற்குமேல், ஒன்றும் பணித்திலன் இருந்தான் - ஒன்றுஞ் சொல்லாதிருந்தான்; (அப்பொழுது), முழுதும் எண் உறும்-(ராஜகாரியம்) முழுதும் ஆலோசிக்கவல்ல, மந்திரக்கிழவர் - மந்திரிகள், தம் முகத்தால் எழுதி நீட்டிய - தங்கள்முகத்தினா லெழுதிக்கொடுத்த [குறிப்பித்த], இங்கிதம்-அபிப்பிராயத்தை, இறைமகற்கு-சக்கரவர்த்திக்கு, ஏற்க-பொருந்த, சுமந்திரன் - சுமந்திரனென்னும் முதன்மந்திரி, தொழுத கையினன் - கூப்பினகைகளையுடையவனாய், முன் நின்று - எதிரில்நின்று, சொல்லும்-சொல்லுபவனானான்; (எ - று.)—அதனை மேல் இரண்டுகவிகளாற் காண்க.

புரோகிதனாகிய வசிட்டன் தன் கருத்தைத் தெரிவித்த பின், மற்றை மந்திரிமார் குறிப்பாகத் தெரிவித்த கருத்தை மன்னவனிடத்துச் சுமந்திரன் கூறத் தொடங்கலாயின னென்க. தவமாவது - "உற்றநோய் நோன்றலுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற்குரு" என்பதனா லறிக. தவத்திற்குப் பழுதாவன - பொய் வெகுளி முதலியன. இங்கிதம் - குறிப்பினிகழும்உறுப்பின் தொழில்; அது, இங்கு அவ்வுறுப்பின்றொழிலாற் குறிக்கப்படுங் கருத்திற்கு ஆகியது. சுமந்திரன் - நல்ல ஆலோசனையுடையவன். பி - ம்:—[1]எண்ணும். [2]மந்திரிக். [3]ஏற. (௪௭)

சஅ.—இதுவும் அடுத்த கவியும் - சுமந்திரன்வார்த்தை.

உறத்த கும்மா சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீயெனுஞ் சொற்சுடு [1]நின்குலத் தொல்லோர்
மறத்தல் [2]செய்கிலாத் தருமத்தை [3]மறப்பதும் வழக்கன்
றறத்தி [4]னூங்கினிக் கொடிதென லாவ [5]தொன்றி [6]யாதோ.

(இ - ள்.) அரசு - அரசச்செல்வம், இராமற்கு—, உற - பொருந்தல், தரும்-, என்று—, உவக்கின்ற-சந்தோஷிக்கிற, மனத்தை-, நீ துறத்தி எனும் சொல் - நீ (எங்களைப்) பிரிகிறு யென்கிற சொல்லானது, சுடும் - சுடாநிற்கும்; நின் குலம் - உன்குலத்தில்தோன்றிய, தொல்லோர் - பெரியோர், மறத்தல் செய்கிலா - மறவாத, தருமத்தை -, மறப்பதுஉம் - (நீ) மறந்துவிடுவதும், வழக்கு அன்று - முறைமையல்ல; (ஆகலால்), இனி—, அறத்தின் ஊங்கு-தருமத்தின் மேற்பட, கொடிது எனல் ஆவது-கொடியதென்று சொல்லுதற்கு ஏற்றதாகிய, ஒன்று - ஒரு பொருள், யாது - எது? (எ - று.)

இராமன் அரசனுகின்ருனென்பதை நினைக்க மனம் உவக்கின்றது; நீ துறக்கின்ருயென்பதை நினைக்க, அது மனத்தைச் சுடுகின்றது; ஆனல் இப்போது செய்யவேண்டுவது எது என்பாயோ, பெரியோர்கள் பூண்ட தருமத்தை மேற்கொள்ளவேண்டுவதே யாகும். அறத்தை நோக்குமிடத்து நீ துறக்கவேண்டுவது இன்றியமையாததென்று ஏற்படுவதனுல், அறம் மிகக் கொடிதெனத் தோன்றுகின்றதென்றனனென்க மறத்தல் செய்கிலாத்தருமமாவது - மூத்தமகனுக்கு முடிசூட்டித் தாம் இப்பேதமை தாய்வரும் பிறப்பை நீக்குவான் வனத்தைநண்ணி மாதவமியற்றுதல். பி ம்:—[1]உன். [2]செய்கலாத், செய்திலாத். [3]மறப்பது. [4]ஈங்கினி. [5]இங்கு. [6]யாதே. (சஅ)

சகூ. புரசை [1]மாக்கரி நிருபர்க்கும் [2]புரத்துறை வோர்க்கு
முரைசெய் மந்திரக் கிழவர்க்கு முனிவர்க்கு [3]முள்ள
முரச மார்ப்பநின் முதன்மணிப் புதல்வனை முறையா
லரச னாக்கிப்பின் னப்புறத் தடுத்தது புரிவாய்.

(இ - ள்.) புரசை - கழுத்தணிகயிற்றையுடைய, மா - பெரிய, கரி - யானைச்சேனையையுடைய, நிருபர்க்குஉம் - அரசர்களுக்கும், புரத்து உறைவோர்க்குஉம் - பட்டணத்து ஜநங்களுக்கும், உரை செய் மந்திரக்கிழவர்க்குஉம்-(இப்படித் தமதுஅபிப்பிராயத்தைக்) குறிப்பித்த மந்திரிகளுக்கும், முனிவர்க்கு உம் - (வசிட்டன்முதலிய) முனிவருக்கும், உள்ளம் முரசம் ஆர்ப்ப - மனத்தில் முரசப்பறையே ஒலிக்க [மனம்மகிழஎன்றபடி], நின் - உனது, மணி - நீலமணிபோன்ற மேனியையுடைய, முதல் புதல்வனை - மூத்தகுமாரனை, முறையால் - கிரமமாக, அரசன் ஆக்கி - அரசனாகச்செய்து, பின் - பின்பு; அ புறத்து அடுத்தது - (உனக்கு) மறுமைக்கு ஹிதமானதை, புரிவாய் - செய்யக்கடவாய்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் இராமனுக்குப்பட்டாபிஷேகமும் தசரதமன்னவனுக்குத்துறவும் ஆகஇரண்டு நேர்பட்டுள்ளன என்று கூறிய சுமந்திரன், இதனால் இராமபட்டாபிஷேகத்தை முதலில் நடத்திவிட்டுப் பிறகு துறவுக்குச்செல்ல வேண்டுமென்கிறான். ஸ்ரீராமன் நீலமணிபோலுநிறமுள்ளவனென்பதை "நின் சிறுவர் நால்வரினுங் கரியசெம்மல் ஒருவனைத் தந்திடுதி" என முன் விசுவாமித்திரன் கூறியதனாலு முணர்க. பி-ம்:—[1]மாற். [2]புறத்து. [3]மகிழ்வாய். ()

ரு௦.—அரசன் சுமந்திரனைநோக்கி இராமனையழைத்து வருக வெனல்.

என்ற வாசகஞ் சுமந்திர னியம்பலு மிறைவ
னன்று சொல்லினை நம்பியை [1]நளிமுடி சூட்டி
நின்று நின்றது செய்வது விரைவினி னீயே
சென்று கொண்டணை திருமகள் கொழுநனை யென்றான்.

(இ - ள்.) என்ற வாசகம் - என்ற வார்த்தையை, சுமந்திரன்-, இயம்பலும் - சொன்னவளவில்,—இறைவன் - சக்ரவர்த்தி, (சுமந்திரனைநோக்கி), 'நன்று சொல்லினை - நல்லதையே சொன்னாய்; நம்பியை-இராமனுக்கு, நளி முடி சூட்டிநின்று - பெருமைபொருந்திய கிரீடத்தைச் சூடச்செய்து, (பின்), நின்றது செய்வது - எஞ்சிநின்றது செய்க: (அதற்குஏற்ப), நீயே-, விரைவினில் சென்று - விரைவாகப்போய், திருமகள்கொழுநனை கொண்டு அணை-திருமகளையொத்த பெண்ணாகிய சீதையின் கணவனை [இராமனை] அழைத்துக்கொண்டுவா,' என்றான்—; (எ - று.)

சுமந்திரன் சொல்லியதை இசைந்து தசரதமன்னவன் அவனையே இராமனையழைத்து வருமாறு கூறின னென்க. மநுமுதற்கொண்டு வருஞ் சிறப்பினையுடைய முடியென்பார் 'நளிமுடி' என்றார்: "தடவுங்கயவும் நளியும் பெருமை" என்பது, தொல்காப்பியம். செய்வது-வியங்கோள்; திருக்கோவையாரில் "மறப்பதறிவிலேன் கூற்றுக்களே" என்றவிடத்து 'மறப்பது-வியங்கோள்' என்று பேராசிரியர் உரைத்தமை காண்க: செய்வது - செய்யத்தக்கது எனக்கொள்ளுதலும் ஒன்று. பி-ம்:—[1]நளிர். (ரு௦)

ருக.—சுமந்திரன் அவ்விடத்தினின்று தேருடன் இராகவன் திருமனையிற் புகுதல்.

அலங்கன் மன்னனை யடிதொழு தவன்மன மனையான்
விலங்கன் மாளிகை வீதியின் விரைவொடு [1]சென்றான்
றலங்கள் [2]யாவையும் பெற்றன [3]ளெனத் தளிர்ப்பான்
[4]பொலங்கொ டேரொடு மிராகவன் றிருமனை புக்கான்.

(இ - ள்.) (அதைக்கேட்டு), அலங்கல் மன்னனை - பூமாலையை யணிந்த சக்ரவர்த்தியை, அடி தொழுது - அடிவணங்கி, அவன் மனம் அனையான் - அத்தசரதன் மனத்தை யொத்தவனான சுமந்திரன், விலங்கல் மாளிகை வீதியின்-மலைபோன்ற மாளிகைகள்நெருங்கிய ராஜவீதியில், விரைவொடு சென்

றன் - விரைவாகப்போய்,—தலங்கள் யாவைஉம் பெற்றனன் ஆம் என - உலகங்களெல்லாவற்றையும் அடைந்தவன்போல, களிப்பான்-உள்ளங்களிப்பவனாகி, பொலம்கொள் தேரொடும் - பொன்மயமான தேருடன், இராகவன் திருமனை புக்கான்-ஸ்ரீராமனது திருமாளிகைக்குட் பிரவேசித்தான்; (எ - று.)

இராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போவதைக் கருதி இராச்சியம் தனக்குக் கிடைப்பதுபோல மனக்கிளர்ச்சியடைந்தவனாகி, சுமந்திரன், தசரதனது திருமாளிகைக்கு இராமபிரானை அழைத்துக்கொண்டு போக ஒரு தேருடனே இராமனது திருமாளிகைவாயிலை யடைந்து தேரை நிறுத்திவிட்டுத் தான் மனையினுள்ளே சென்றனனென்க. அரசன் தான் வேண்டும்பொருளைப் பெறுதல் எளிதாக இயலு மாதலாலும், இராமபிரான் அவ்வவர்குறையை வினவி அவற்றைத்தீர்க்க முயல்பவனாதலாலும், தலங்கள் யாவையும் பெற்றனனென்னத் தகும்; "தன்னுயிர் புகழ்க்கு விற்ற தயரதன் றனையனாய் மன்னவன் குறிப்பறிந்து நடப்பவனென்பர், 'அவன் மனமனையான்' என்பர். இராகவன் - இரகுவமிசத்திற் பிறந்தவன்; இது தத்திதாந்தநாமபதம்.

பி-ம்:—[1]செல்வான். [2]எழையும். [3]தானென. [4]புலன். (௫க)

## ௫உ.—இலக்குமணனோடும் மனைவியோடும் இருந்த ஸ்ரீராமனைச் சுமந்திரன் காணுதல்.

பெண்ணி னின்னமு தன்னவ டன்னொடும் பிரியா
வண்ண வெஞ்சிலைக் குரிசிலு மருங்கினி திருப்ப
அண்ண லாண்டிருந் தானழ கரு[1]நற வெனத்தன்
கண்ணு முள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான்.

(இ - ள்.) பிரியா-(தன்னைவிட்டு ஒருகாலும்) நீங்காத,வண்ணம்-அழகிய, வெம் சிலை குரிசில்உம் - உக்கிரமான வில்லையேந்திய இலக்குமணனும், மருங்கு - பக்கத்தில், இனிது இருப்ப - இனிதாக இருக்க, பெண்ணின் இன் அமுது அன்னவள் தன்னொடுஉம்-பெண்களுக்குள் இனிய அமிருதத்தை ஒத்தவளாகிய சீதாபிராட்டியோடும், அண்ணல் - ஸ்ரீராமபிரான், ஆண்டு இருந்தான் - அவ்விடத்திருந்தான்; அழகு - (அச்சேர்த்தியின்) அழகானது, அரு நறவு என - அரிய தேன்போன்று இருக்க, தன் கண்உம் உள்ளம்உம் வண்டு என-தன்கண்களும் மனமும் (அத்தேனை யுண்ணும்) வண்டுகள்போல, களிப்புற - சந்தோஷிக்க, கண்டான் - (சுமந்திரன்) பார்த்தான்; (எ - று.)

எல்லாநிலையினும் பிரியாதிருந்து தொண்டுபூண்டுநடக்கும் இளையபெருமாளும் "அகலகில்லேனிறையும்" என்று உறையும் அம்மலர்மகளும், தன்னிடத்துஒக்கவிருக்கப் பச்சைமாமலைபோன் மேனியச்சுதன் இவ்வயோத்தியுள்ளும் அத்திருமாமணிமண்டபச்செல்வச்சிறப்பை யனுபவித்துக்கொண்டிருக்க, அவ்வழகை நித்தியசூரிகள் கண்டு அனுபவிக்குமாபோல், கொற்றவனகத்துக்

குற்றேவல்புரியுஞ் சுமந்திரனும் தன்தவப்பயனாற் கண்டு மகிழ்ந்தனனென்க. அங்ஙனம் அவ்வழகைக்கண்டு களிப்படைந்த சுமந்திரனுக்கு நறவுண்டுகளிக்கும் வண்டை உவமைகூறினார். பெண்ணின் இன் அமுது அன்னவள் என்பதற்கு-பெண்ணுருவத்தையுடையஇனியஅமிருதமொன்றிருந்ததாயின் அதனை ஒத்தவள் என்றலுமொன்று; இது. இல்பொருளுவமை. பி-ம்:—[1]நறவென்ன.

ருங.—தந்தையின்கட்டளையைச் சுமந்திரன் தெரிவிக்க,
ஸ்ரீராமன் தேர்மீது ஏறுதல்.

கண்டு கைதொழு தையவிக் [1]கடலுடைக் [2]கிழவோ
னுண்டோர் காரியம் வருகென வுரைத்தன னெனலும்
புண்ட ரீகக்கட் புரவலன் பொருக்கென [3]வெழுந்தோர்
கொண்டல் [4]போலவன் கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டான்.

(இ - ள்.) கண்டு - (அச்சேர்த்தியிலே ஸ்ரீராமனைப்) பார்த்து, கைதொழுது - கைகூப்பிவணங்கி, 'ஐய - ஐயனே! இ கடலுடைகிழவோன் - இந்த உலகத்துக்கு உரியவனாகிய சக்கரவர்த்தி, ஓர் காரியம் உண்டு வருக என - ஓர்காரியமுளது (ஆதலால்) (ஸ்ரீராமனை) அழைத்துவருக என்று, உரைத்தனன்-நியமித்தான்', எனலும்-என்றுசொன்னஅளவில்,-புண்டரீகம் கண் புரவலன் - தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீராமபிரான், பொருக்கென எழுந்து - விரைவாக எழுந்து, ஓர் கொண்டல் போல் - ஒருகரிய மேகம்போல, அவன் - அந்தச் சுமந்திரனது, கொடி நெடு தேர் மிசைக்கொண்டான் - கொடிகள் கட்டிய நெடியதேரை மேற்கொண்டான்; (எ - று.)

தந்தை வரச்சொன்னானென்றதைக் கேட்டுப் பொருக்கென ஸ்ரீராமன் எழுந்து தேர்மீதுஏறினனென்க. இராமபிரான்இப்போதுஎழுந்துசெல்வது அரக்கராகியகோடையால் வாடியுள்ள தேவர் முனிவர்களாகிய பயிர்க்கு அவ்வெப்பந்தணிவதற்குப் பரம்பரையாகக்காரணமாகப்போவதனால், 'கொண்டல் போல் தேர்மிசைக்கொண்டான்' என்றார். ஐய - அழகுள்ளவனே! என்றலுமாம். கடலுடை - கடலைஆடையாகவுடையது: பூமி: வடமொழியில் 'அப்தி மேகலா' என ஒருபெயர் பூமிக்கு உள்ளதுங் காண்க. [1]கடலிடைஎன்றபாடத்துக்கு—"பணிவரும்" என்று தொடங்குஞ் சிந்தாமணிச்செய்யுளில் கடலைத் தன்னிடத்துடையதென்பதுபற்றி 'கடலகம்' என்றதொடர்க்கு-உலகு எனப் பொருள்கொண்டாற்போலப் பூமியென்றேபொருள்கொள்க. மிசைக்கொள்ளல்-ஏறுதல். "பழமுதிர்சோலை மலைகிழவோனே" என்றதிற்போல, கிழவன் - கிழவோனாயிற்று. புண்டரீகம் என்னும் பெயர் வெண்டாமரைக்கே வழங்குவதாயினும், இங்கு ஸ்ரீராமபிரானது திருக்கண்களுக்கு ஒப்பிடப்பட்டமையின், செந்தாமரைக்குக் கொள்ளத்தக்கது: "செந்தாமரைக்கண்ணன் செங்கனிவாய்க்கருமாணிக்கம்" என்றார் பெரியோரும். கொண்டல்-கார்மேகம். பி - ம்:—
[1]கடற்புவிக். [2]கிழவன். [3]எழுந்தான், எழுந்து. [4]போல்பவன், போற்சென்று.

௫௪.—இராமபிரான் தேர்மீது செல்லுதல்.

*முறையின் [1]மொய்ம்முகி லெனமுர சார்த்திட மடவா*
*ரிறை[2]க ழன்றுசங் கார்த்திட விமையவ ரெங்கள்*
*குறைமு டிந்ததென் றார்த்திடக் குஞ்சியைச் சூழ்ந்த*
*நறைய லங்கல்வண் டார்த்திடத் தேர்மிசை நடந்தான்.*

(இ - ள்.) முரசு - பேரிகைகள், முறையின்-வரிசையாக, மொய் முகில் என-நெருங்கிய மேகம்போல, ஆர்த்திட - முழங்கவும்,-மடவார் - மாதர்களுடைய, இறை கழன்று - முன்னங்கையினின்றும் கழன்று, சங்கு-சங்கவளையல்கள், ஆர்த்திட-(ஒன்றோடொன்று தாக்குண்டு) ஒலிக்கவும்,—இமையவர்-தேவர்கள், எங்கள் குறை முடிந்தது என்று - எங்கள் குறைதீர்ந்ததென்று சொல்லி,ஆர்த்திட-ஆரவாரிக்கவும்,—குஞ்சியை சூழ்ந்த-(தனது)திருமுடியைச்சுற்றியிருந்த, நறை அலங்கல் - தேனுள்ள பூமாலையில், வண்டு-(மொய்த்த) வண்டுகள், ஆர்த்திட-ஒலிக்கவும்,தேர்மிசை நடந்தான்-தேரேறிச் சென்றான்.

இடியுண்டாவது நீர்கொண்ட மேகத்தினிடத்திலேயே யாதலால், நீர்கொண்ட மேகத்தை 'மொய்ம்முகில்' என்றார். முரசு - மங்களமுரசு. அரசகுமாரன் செல்வதுநோக்கி முரசறைந்தனரென்க. மடவார் இறைகழன்று சங்கு ஆர்த்திட என்றது-மாதர் இராமனதுஅழகிலீடுபட்டு மெலியக் கழன்ற சங்கு வளையல்கள் ஒலித்துக்கொண்டு வீழ்வதனை. இமையவர் - கண்ணிமையாமையாகிய விசேடமுடையவர்; தேவர். சூழ்ந்த அலங்கல் என இயையும். ஆர்க்க என்னுது ஆர்த்திட என்றது, இடையறாமையுணர்த்துதற்கு. சங்கு-ஆகுபெயர். தங்கள்பிரார்த்தனையால் இவ்வுலகில் அவதரித்த எம்பெருமான் அக்காரியத்தைத் தலைக்கட்டநினைத்துச் செல்கின்றா னென்னு முண்மையுணர்ந்தவராதலின்,தேவர் ஆர்த்தனர். சுமங்கலிகளின் கைவளைகழலுதலும், தலையிலுள்ள பூக்களில் வண்டுமிதித்துக்கூவுதலும் அபசகுனங்க ளென்பர். ஒலிக்கஎன்னும் பொருளுள்ள ஆர்த்திட என்றசொல் பலமுறைவந்தது - **சொற்பொருட்பின்வருநிலையணி.** பி - ம்:—[1]இன்முரசார்த்திடமுகிலென. [2]கழன்ற.

(௫௪)

௫௫.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஸ்ரீராமனை வீதியிற்செல்லும்போது கண்ட மாதரார் நிலைமையைக் கூறும்.

*பணை [1]நி ரந்தன பாட்டொலி [2]நிரந்தன வனங்கன்*
*கணை [2]நி ரந்தன நாணொலி கறங்கின நிறைப்பே*
*ரணை [1]நி ரந்தன வறிவெனும் பெரும்புன லனையார்*
*பிணை [3]நி ரந்தெனப் பரந்தனர் நாணமும் பிரிந்தார்.*

(இ - ள்.) பணை நிரந்தன - வாத்தியகோஷங்கள் நிரம்பின; பாட்டு ஒலி நிரந்தன-பாடலின்ஓசைகள் நிரம்பின; அனங்கன் கணை நிரந்தன-மன்மதபாணங்கள் நிரம்பின; நாண் ஒலி கறங்கின - நாணோசை நிரம்பின; (அங்குள்ளமாதர்களது), அறிவு எனும் பெரு புனல் - இராமனைப்பற்றிய எண்ண

மாகிய வெள்ளம், நிறை-மனவடக்கமாகிய, பேர் அணை-பெரிதாகிய அணையை, நிரந்தன - கடந்தன; அணையார் - (அறிவாகிய அணையைக்கடக்கப் பெற்றவராகிய) அம்மாதர்கள், நாணம் உம் பிரிந்தார்-நாணத்தையும் விட்டவர்களாய், பிணை நிரந்து என - பெண்மான்கள் நிரம்பினபோல, பரந்தனர் - (வீதியில் வந்து) நிறைந்தார்கள்; (எ - று.)

ஸ்ரீராமன் வீதியிலெழுந்தருளுகையில் பலவாத்தியங்கள் முழங்கவும் மங்களவாழ்த்துப் பாடல் பாடவும், அவைகேட்டு அங்குள்ளமகளிர் தமது நிறையைக் கடந்து வீதிவழியேசென்று அவ்விராமபிரானழகிலீடுபட்டு நாணத்தை விட்டு எங்கும்பரந்தன ரென்பது கருத்து. பணை - கருவியாற்பிறப்பதற்கும், பாட்டு - கண்டத்தாற் பிறப்பதற்குங் கொள்க. அனங்கன்-உருவில்லாதவன். அனங்கனுக்கு மலர்கள் கணையும் வண்டுகள் நாணியுமாதலின், கணை நிரந்தன நாணொலிகறங்கின என்பதற்கு-அப்பொழுது பூமாரிபொழிய, அவற்றின் தேனுண்ணவந்த வண்டுகள் ஒலித்தனவெனப் பொருள்கொள்ளினுமமையும். அறிவைப்புனலென்றமைக்கேற்ப, நிறையை அணையென்றார். அறிவுஎன்பது - இராமபிரானிடத்து ஈடுபாடு. எல்லாரிடத்துங் கலந்து நிற்கும் புருஷோத்தமனாதலின், இராமபிரானிடத்து ஈடுபாட்டினால் மகளிர்கற்புக்கு இழுக்கின்மையறிக. நாணமும், உம்-உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவியது. பி-ம்:—[1]நிரைந்தன. [2]நிரம்பின, நிரைந்தன. [3]நிரைந்தென. (௫௫)

௫௬. நீளெ ழுத்தொடர் [1]வாயினுங் குழையொடு நெகிழ்ந்த
வாள கத்தினொ டரமியத் தலத்தினு மலர்ந்த
வாள ரத்தவேல் வண்டொடு கெண்டைகண் [2]மயங்கச்
சாள ரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்.

(இ - ள்.) தாமரை மலர்கள்—, நீள் எழு தொடர் வாயின் உம் - நீண்ட தூண்கள் அமைந்த வாயில்களிலும், குழையொடு-குண்டலங்களோடும், நெகிழ்ந்த ஆளகத்தினொடு - அவிழ்ந்தகூந்தலோடும், அரமியம் தலத்தின் உம்-உபரிகைகளிலும், அலர்ந்த - மலர்ந்தன; வண்டொடு - வண்டுகளோடு, வாள்-வாள்களும், அரத்தம் வேல் - உதிரந்தோய்ந்த வேல்களும், கெண்டைகள் - கெண்டைகளும், மயங்க - கலந்துநிற்க, சாளரத்தின் உம் - பலகணிகளிலும், பூத்தன—; (எ - று.)

நிறைகடந்து வீதியில்வந்து ஸ்ரீராமனைப் பார்க்கத்துணியாத பெண்கள் வாயில்களிலும், உபரிகைகளிலும், சாளரங்களிலுமிருந்து பார்த்தன ரென்பது கருத்து. தாமரைமலர்கள் - பெண்களின் முகங்கள். பெண்களின் முகத்தைத் தாமரையாக உருவகஞ் செய்தமைக்கேற்ப, வாயில் முதலியவற்றை நீர்நிலையாக உருவகஞ்செய்யாமையின், இது-ஏகதேசவுருவக வணி.(நீர்த்தாமரை மலர்களில் வண்டொன்றுமே தங்குவதியல்பு;) இம்முகத்தாமரைமலர்களிலோ வண்டொடு வாளும் வேலும் கெண்டைகளும் மயங்கின என்க: உருவக வுயர்வுநவிற்சியணி. புருவம் வாளாகவும், செவ்வரிபடர்ந்த கண் அரத்த

வேலாகவும், கருவிழி வண்டாகவும், இடம்வலமாகப் பிறழ்தல்வாய்ந்த கண்கள் கெண்டையாகவும் கொள்ளப்பட்டன. வாள்முதலியமூன்றும் கண்களையே குறிக்குமெனக்கொண்டு, இயற்கையாகக்காணப்படும்போது கண்கள் வாளையும், பிறர்மீதுபடும்போது அரத்தவேலையும், பிறழும்போது கெண்டையையும் போலு மென்னலும் ஒன்று. மயிரின் நீட்சிதோன்ற அளகமென்ற வடசொல்லை 'ஆளகம்' என நீட்டல்விகாரங் கொடுத்துக் கூறினார். அரமியம் - ஹர்ம்யம்: வடசொல். இனி, தாமரைமலர்கள் வாயிலே குழையோடு நெகிழ்ந்து [மலர்ந்து] இருந்தன: அரமியத்தலத்து அளகத்தினோடு மலர்ந்திருந்தன: சாளரத்தில் மயங்கப் பூத்திருந்தன என மூன்றுமுற்றாக்கவுமாம். [2]மறுகஎன்ற பாடத்திற்கு, முன்னிரண்டடி - மாதரார் முகத்தையும், பின்னிரண்டடி - அவர்கண்களையும் கூறியனவாக வுரைக்க. இனி இச்செய்யுட்கு - தாமரைமலர்கள் குழையோடும் நெகிழ்ந்தவாளகத்தினோடும் மலர்ந்த [விளக்கமுள்ள] வாள் அரத்தவேல் கெண்டைகள் மயங்க, எழுத்தொடர்வாயினும் அரமியத்தலத்தினும் சாளரத்தினும் பூத்தன என்று ஒருமுடிபாக்கியுரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]வாயினுள், வாயினில், வாயிலில். (௫௬)

௫௭. மண்ட லந்தரு மதிகெழு மழைமுகி லனைய
வண்டர் நாயகன் [1]வரைபுரை [2]யகலத்து ளலங்கற்
றொண்டை வாய்ச்சியர் [3]நிறையொடு நாணொடுந் தொடர்ந்த
கெண்டை யும்முள கிளைபயில் [4]வண்டொடுங் கிடந்த.

(இ - ள்.) மண்டலம் தரு மதி கெழு - வட்டவடிவாகிய சந்திரனமைந்த [சந்திரனைப்போலும் முகத்தையுடைய], மழை முகில் அனைய - கார்மேகத்தையொத்த, அண்டர் நாயகன் - தெய்வநாயகனாகிய ஸ்ரீராமபிரானது, வரை புரை அகலத்துள் - மலைபோன்ற மார்பிலுள்ள, அலங்கல் - பூமாலையில், தொண்டை வாய்ச்சியர் - கொவ்வைக்கனிபோன்ற வாயையுடைய மாதரது, நிறையொடுஉம் நாணொடுஉம் தொடர்ந்த - நிறையும் நாணமும் பின்தொடரப்பெற்ற, கெண்டைஉம் - (விழிகளாகிய) கெண்டைகளும்,—உள - (அவ்வலங்கலில்தேனைநாடிஏற்கவேவந்து) உள்ளனவாகிய, கிளை பயில் வண்டொடுஉம் - கிளையென்னும் இசையைப் பழகின வண்டுகளொடு, கிடந்த - தங்கின; (எ - று.)

தேனை நாடிவந்த வண்டுகளோடு மார்பழகை நாடி வந்த கெண்டைகளும் மயங்கிக் கிடந்தன என்பதாம். ஸ்ரீராமனைக் கண்டவுடனே நிறையும் நாணும் மகளிரினின்று நீங்கின வென்பார் 'நிறையொடு நாணொடுந்தொடர்ந்த கெண்டை' என்றார்; எனவே, மகளிர் ஸ்ரீராமனைப் பார்த்தவுடனே அவ்விராமபிரானழகிலீடுபட்டு ஆசைகொண்டன ரென்றதாயிற்று. முழுமதியென்பார் 'மண்டலந்தருமதி' என்றார் மண்டலந்தருமதி இராமனுடைய திருமுகத்துக்கும், மழைமுகில்-திருமேனிக்கும் உவமை. பரிபாடலில் "கிளைக்குற்றவுழைச் சுரும்பின்" என்றாற்போல, 'கிளைபயில்வண்டு' என்றார். பி-ம்:—[1]மலை. [2]ஆகத்துள். [3]நிறையொடுந். [4]வண்டொடு. (௫௭)

௫௮. [1]சரிந்த பூவுள் [2]மழையொடு [3]கலையுறத் [4]தாழப்
பரிந்த [5]பூவுள பணிக்கடை முத்தினம் படைப்ப
வெரிந்த பூவுள விளமுலை [6]யிழையிடை [7]நுழைய
விரிந்த பூவுள [8]மீனுடை [9]வானின்றும் வீழ்வ.

(இ - ள்.) மழையொடு - மேகங்களோடு, கலை - சந்திரகலைகள், உற தாழ - மிகத்தாழ்தலால், சரிந்த - கீழேசிந்திய, பூ - புட்பங்கள், உள - உள்ளன; (அங்ஙனந் தாழநோக்கிய முகத்தினின்று, பரிந்த பூ உள - இரங்கிய குவளைப் பூக்களின்றன்மை யுள்ளனவாகிய, பனி கடை - குளிர்ச்சிபொருந்திய கடைக்கண்கள், முத்து இனம் படைப்ப - முத்துக்கூட்டங்களை யுண்டாக்குவன; எரிந்த பூ உள - தீந்த பூக்களுள்ளனவாகிய, இள முலை - இளமைபொருந்திய தனங்கள், இழை இடை நுழைய - (பூரித்து) ஆபரணங்களினிடையே நுழைய,—விரிந்த பூ உள - மலர்ந்த தாமரைப்பூக்களுள்ளனவாகி, மீன் உடை - மின்னுதலையுடைய வஸ்திரங்கள், வானின்றும் - ஆகாயத்தினின்றும், வீழ்வ - வீழ்வன; (எ - று.)

கலை - சந்திரன்பங்கு. மீன் - முதனிலைதிரிந்த தொழிபெயர். கூந்தலை மழையாகவும், நெற்றியைக் கலையாகவும், கண்களைக் குவளைமலராகவும், கண்ணீரை முத்தினமாகவும், கைகளைத் தாமரைப்பூக்களாகவும் இடையை வானாகவும் உருவகித்தார். 'மழையொடு கலையுறத்தாழ'எனவே, மகளிர் மேன்மாளிகைகளினின்று குனிந்துநோக்கினா ரென்றதாயிற்று; நோக்கின வளவில் அவ்விராமபிரா னழகில் வீடுபட்டு ஆசைகொண்டா ரென்க. கண்ணீர்துளித்தலும், இளமுலை பூரித்தலும், கலைநெகிழ்தலும் - ஸ்திரீகளுக்குக் காமவிகாரங்களால் நிகழ்ந்தன. உடைநெகிழ்வதனையறிந்து கரங்களாற் பற்றிக்கொண்டும் அவைநெகிழ்ந்தன வென்பார்,'விரிந்தபூவுள மீனுடைவானின்றும் வீழ்வ'என்றார். விரிந்த பூக்கள்-கைகளென்க. இனி, மழையொடு-(அவிழ்ந்த) கூந்தலுடனே, கலை-உடைகளும், தாழ - சோர்ந்துநிற்க, சரிந்த - (அக்கூந்தலினின்று) சொரிந்த, பூ உள -: பனி கடை முத்து இனம் படைப்ப - குளிர்ந்த ஓரங்கள் முத்தினம்போலும் கண்ணீரைச் சொரிய, பரிந்த - வருந்திய, பூ-குவளைமலர்போலும் கண்கள், உள -; இளமுலை-, இழை இடை நுழைய-(தாம் பூரித்து) அணிவடத்திலே நுழைந்து வெளிவர, (அம்முலையிலே), எரிந்த பூ உள்-மதனவெப்பத்தால் தீய்ந்துபோன மலர்களுள்ளன; (இராமபிரான்மீது மகளிர் மேன்மாளிகையினின்று சொரிதலால்), மீனுடைவானின்று வீழ்வனவாகிய விரிந்த பூவுள எனப்பொருள் காணலுமாம்: **சொற்பொருட்பின்வருநிலையணி.** இழை அணிவடமாதலை "ஆரம்...மாலை யிழைமாதரணிவடப்பெயரே"என்ற பிங்கலந்தையாலும் அறிக. மீனுடைவானின்றும் வீழ்வ என்ற தொடர் - ஆகாயத்தினின்று நட்சத்திரங்கள் வீழ்வன வென்றும் பொருள்கொள்ளக் கிடத்தலின், இராமனுக்கு அபசகுனமாயிற்றென்ற பொருளும் தோன்றுமென்பர். **பி - ம்:**—[1]கரிந்த. [2]மழையொடும். [3]கலையொடுங், கலையறத். [4]தாழ்வ. [5]பூணுள. [6]இடையொடு. [7]நுழைவ. [8]வியனுடை, அந்தர. [9]வானின்று. (௫௮)

௫௯. வள்ளு றைகழித் தொளிர்வன [1]வாணிமிர் மதியந்
தள்ளு றச்[2]சுமந் [3]தெழு தருந் தமனியக் கொம்பிற்
[4]புள்ளி நுண்பனி பொடிப்பன [5]பொன்னினிற் பொதிந்த
[6]வெள்ளு டைப்பொரி [7]விரிவன வுளசில [8]விளநீர்.

(இ - ள்.) வள் உறை கழித்து வாரிணுலியன்ற உறைகளை நீக்கி, ஒளிர்வன - பிரகாசிக்கின்றனவாகிய, வாள் - வாள்களுடன், நிமிர் - நிமிர்ந்த, மதியம் - சந்திரனை, தள்ளுற - தள்ளாடும்படி, சுமந்து - சுமந்துகொண்டு, எழுதரும் - எழுகின்ற, தமனியம் கொம்பில் - பொற்கொடிகளில், உள சில இளநீர் - உள்ளனவாகிய இரண்டு இளநீர்கள்,—புள்ளி நுண் பனி பொடிப்பன - புள்ளிகளாகிய நுட்பமான பனி யரும்புவனவும், பொன்னினில் பொதிந்த - (இடையிடையே) பொற்பொடிபொதியப்பெற்றனவுமாய், எள் உடை பொரி விரிவன - எட்பொரி ஆங்காங்கு விரியப்பெற்றன; (எ - று.)

தமனியம் - தபநீயம் என்னும் வடமொழிச்சிதைவு. இமைகளை உறையாகவும், கண்களை வாளாகவும், முகத்தை மதியாகவும், மாதரைக் கொம்பாகவும், வியர்வையைப் பனியாகவும், தேமலைப் பொன்னாகவும், பசலையை எட்பொரியாகவும், தனங்களை இளநீராகவும் உருவகப்படுத்தினர்; உருவகவுயர்வு நவிற்சியணி. இராமனைக் கண்ட மாதராரின் தேமலைக்கொண்டதனங்களில் வியர்வையும் பசலையும் உண்டாயினவென்றவாறு. மகளிர்இவ்வாறானது ஸ்ரீராமனிடத்துக்கொண்ட ஆசையினா லென்க. சில என்பது இரண்டுஎன்னும் பொருளில் வருதலைத் திருமுருகாற்றுப்படையில் "சில்காழல்குல்" என்பதற்கு 'சில்காழ் - இரண்டுமணிவடங்கள்' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்துள்ளமையாலும் அறிக. பி-ம்:—[1]வானுறை, வாண்மிளிர், வான்மிளிர். [2]சமைத்து. [3]எழுதரு, எழுதர. [4]புள்ளினுட். [5]பொன்னிடைப். [6]எள்ளிடைப். [7]விரவின. [8]வீழ்வ. (௫௯)

## ௬0—இராமன் தம்பியோடு தேரிலேறிச்சென்று தசரதனிருந்த இடத்தைச் சேர்தல்.

ஆய தவ்வழி நிகழ்தர வாடவ ரெல்லாந்
தாயை முன்னிய கன்றென நின்றுயிர் [1]தளிர்ப்பத்
தூய [2]தம்பியுந் தானுமச் சுமந்திரன் றேர்மேற்
போய கங்குளிர் புரவல னிருந்துழிப் புக்கான்.

(இ - ள்.) ஆயது - அத்தன்மையதாகியசெய்தி, அ வழி - அவ்விடத்து, நிகழ்தர-நிகழாநிற்க,—ஆடவர் எல்லாம்-புருஷரெல்லாம், தாயை முன்னிய-தாய்ப்பசுவை நினைத்த,கன்று என நின்று-கன்றைப்போல நின்று,உயிர் தளிர்ப்ப - மனம் மகிழாநிற்க,-தூய - பரிசுத்தனாகிய, தம்பிஉம் - தம்பியாகியலக்ஷ்மணனும், தான் உம் - தானுமாக, அ சுமந்திரன் தேர்மேல் போய்—, அகம்

குளிர்-மனங்குளிர்ந்திருக்கின்ற, புரவலன்-சக்கரவர்த்தி, இருந்தஉழி-இருந்த விடத்தில், புக்கான் - பிரவேசித்தான்; (எ - று.)

இணைபிரியாத் தம்பியாதலின், தசரதன் இராமனையழைத்துவரக்கட்டளையிட்டபோது இலக்குமணனும் உடன்சென்றானென்றார். இலக்குமணனும் உடன் சென்றதாக முதனூலிற் கூறப்பட்டிலது. சீவாத்துமாக்கள் பரமாத்துமாவைக் கண்டுழிக் களித்த லியல்பாதலின், 'தாயைமுன்னிய கன்றெனநின்று உயிர்தளிர்ப்ப' என்றாரென்னலாம். உயிர்-ஈண்டு, மனத்தின் மேற்று; தம்பியுந்தானும் புக்கான் என்றது-"தானுந் தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்" என்புழிப்போலப் பால்வழுவமைதி. இருந்துழி-விகாரம். பி-ம்:—[1]தரிப்ப. [2]தம்பியொடுந்தனிச். (சுo)

சுக.—ஸ்ரீராமன் வசிட்டமுனிவனை வணங்கிவிட்டுத் தசரதனை வணங்கினனாக, அச்சக்கரவர்த்தி இராமனைத் தழுவிக்கொள்ளுதல்.

மாத வன்றனை வரன்முறை வணங்கிவா ளுழவன்
பாத பங்கயம் பணிந்தனன் பணிதலு மனையான்
காதல் பொங்கிடக் கண்பனி யுகுத்திடக் [1]கவிர்வாய்ச்
சீதை கொண்கனைத் [2]திருவுறை மார்பகஞ் சேர்த்தான்.

(இ - ள்.) (அவ்வாறு புகுந்த இராமன்), மா தவன்தனை-பெரிய தபோநிதியாகிய வசிட்டமுனிவனை, வரன்முறை-முறைப்படி, வணங்கி-தொழுது, (பிறகு), வாள் உழவன் - சக்ரவர்த்தியின், பாதம் பங்கயம் - தாமரைமலர் போன்ற பாதங்களை, பணிந்தனன் - வணங்கினான்: பணிதலும்-வணங்கினவளவில், அனையான்-அச்சக்கரவர்த்தி, காதல் பொங்கிட - அன்பு மிகவும், கண் பனி உகுத்திட-(தன்) கண்கள் நீர்த்துளிகளைச் சிந்தவும், கவிர் வாய் சீதை கொண்கனை - முருக்கமலர்போன்ற [சிவந்த] வாயையுடைய சீதாபிராட்டிக்கு நாயகனாகிய ஸ்ரீராமபிரானை, திரு உறை மார்பு அகம் சேர்த்தான்-அரசச்செல்வி வீற்றிருக்கப்பெற்ற மார்பினிடத்து அணைத்துக்கொண்டான்.

வாள்உழவன் - வாட்போரில் சமர்த்தன்; "வில்லேருழவர்" என்றார் நாயனாரும். பாதபங்கயம்-வடநூன்முடிபு. இனி, பொங்குஇடக்கண் என்றுபிரிந்து, இடக்கண் துடிப்பதோடே நீரைப்பெருக்க எனவும் பொருள்படும்; ஆகவே, இடக்கண் துடித்தல் ஆடவர்க்கு அபசகுன மாதலால், சக்கரவர்த்தி இராமனைத் தழுவும்பொழுது அபசகுனமாயிற் றென்னவுமாம். பி-ம்:—[1]கனிவாய். [2]திருவுறு, திருவமர். (சுக)

சுஉ.—சக்கரவர்த்தி இராமபிரானைத் தழுவியதன் வருணனை.

நலங்கொண் மைந்தனைத் தழுவின னென்பதென் [1]னளிநீர்
நிலங்க டாங்குறு நிலையினை நிலையிட [2]நினைந்தான்
விலங்க லன்னதிண் டோளையு மெய்த்திரு விருக்கு
மலங்கன் மார்பையுந் தனதுதோள் மார்புகொண் டளந்தான்.

(இ - ள்.) நலம் கொள் மைந்தனை - நன்மைகளை(த் தன்னிடத்துக்) கொண்டிருக்கிற புத்திரனாகிய ஸ்ரீராமபிரானை, தழுவினன்-தழுவிக்கொண்டான், என்பது என்-என்று சொல்வது என்ன? நளி நீர் - கடல்சூழ்ந்த, நிலங்கள்-நிலவுலகங்களை, தாங்குறும்-சுமத்தற்கு உரிய, நிலையினை-நிலைமையை, நிலையிட - அளவிட்டறிய, நினைந்தான்-நினைந்து, (அவ்விராமபிரானுடைய), விலங்கல் அன்ன திண் தோளை உம் - மலையையொத்த திடமான தோள்களையும், மெய் திரு இருக்கும் அலங்கல் மார்பை உம் - உண்மையாகிய திருமகள் தங்குகிற பூமாலையையணிந்த மார்பினையும், தனது தோள் மார்புகொண்டு - தனது தோளையும் மார்பையும் (அளவுகோலாகக்) கொண்டு, அளந்தான் - அளவிட்டான், (தசரதன்); (எ - று)

இப்பூபாரத்தைத் தாங்குவதற்குரிய தோள்களின்பரப்பும் மார்பின் பரப்பும் உள்ளனவோ என்று தன் தோள்மார்புகளால் அளந்துபார்ப்பதற்காகவே இராமனைத் தசரதன் கட்டிக்கொண்டான்போலுமென்பது கருத்து. தழுவுதலை மறுத்து மார்புகொண்டளந்ததாகக் கூறியது, அபநுதியணியாம். நலமாவன - நல்லறிவு, அடக்கம், பொறுமை, வல்லமை, மனவுறுதி முதலியன. திருமகளுக்குத் தன் மார்பைப் படைவீடாக்கித் தந்து சகலைசுவரிய சம்பன்னனாய்ச் சகலலோகநியந்தாவா யிருக்குங் கள்ளமாயப்பிரானுருடைய கனத்த தோள்களையும் மார்பையும், சுள்ளிகொண்டு கடலாழம் பார்ப்பாரைப்போலச் சக்கரவர்த்தி அளந்து பார்த்தது, பிள்ளையென்றெண்ணிய பேரபிமானமேயென்று வியக்கின்றார் கவி யென்க. நளி - பெருமை: கடலினும் பெருநீர் இன்மையின், 'நளிநீர்' என்றது - கடலுக்காயிற்று; நளி-குளிர்ச்சியுமாம். நிலங்கள் தாங்குறும்நிலைக்கேற்ப, மைந்தன்என்பதற்கு - திண்ணியன் என்று உரைப்பினும் அமையும். பி-ம்:—[1]நளிர்நீர், நன்னீர். [2]வேண்டி. (சஉ)

**சுங —தசரதன் தான் சொல்லவேண்டுவது ஒன்று உண்டு என்று இராமனிடம் கூறத்தொடங்குதல்.**

ஆண்டு தன்[1]மருங் [2]கிரீஇயுவந் தன்புற நோக்கிப்
பூண்ட போர்மழு வுடையவன் [3]பெரும்புகழ் குறுக
நீண்ட [4]தோளிணாய் நிற்பயந் தெடுத்த[5]யா னின்னை
வேண்டி யெய்திட [6]விழைவதொன் [7]றுளதென விளம்பும்.

(இ - ள்.) ஆண்டு-அவ்விடத்து, தன் மருங்கு இரீஇ-(இராமனைத்) தன் பக்கத்தில் இருத்திக்கொண்டு, உவந்து-மனமகிழ்ந்து, அன்புஉற - அன்புமிக, நோக்கி-பார்த்து, 'பூண்ட-தரித்த, போர்-போர்க்குஉரிய, மழு - மழுவாயுதத்தை, உடையவன்-உடையவனாகிய பரசுராமனது, பெருபுகழ் குறுக-பெரிய கீர்த்தி சுருங்கும்படி, நீண்ட-நிமிர்ந்த, தோளிணாய்-தோள்களையுடையவனே! நின் பயந்து எடுத்த யான்-உன்னைப் பெற்றெடுத்த நான், நின்னை வேண்டி எய்திட - உன்னைப் பிரார்த்தித்து அடையுமாறு, ஒன்று விழைவது-விழை

ந்து நிகழவேண்டிய செயல் ஒன்று, உளது -, என - என்று, விளம்பும் - சொல்லுவான்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

மாமுடிபுனைந்து மாநிலம்புரக்க வேண்டுமென மேற்கூறுதலின், அதற்கு உரிய ஆற்றல் இராமனிடத்து அமைந்துள்ளதென்பதை அவனுக்கு அறிவிக்குமாறு பரசுராமனை வென்றதைக் கூறுகின்றான். முன்னவதாரமான பரசுராமனதுவலியும் பின்னவதாரமான ஸ்ரீராமனுக்கு வந்துவிட்டதென்பது தோன்ற, 'நூறுக நீண்ட தோள்' எனப்பட்டது. இத்தொடரில் முரண்டொடை காண்க. உன்னைப் பெற்றதற்குப்பயன் இப்போது யான் வேண்டுவதைத்தருவதே யென்பான் 'நிற்பயந்தெடுத்தயான், நின்னை வேண்டியெய்திடவிரைவது' என்றான். இரீஇ - இருத்தியென்பது விகாரப்பட்டு அளபெடுத்தது. எய்திட - எய்தியிடஎன்பதன்விகாரம். விளம்பும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்குவந்தது. பி - ம்:—[1]அருகு. [2]இருத்தியங்கு. [3]நெடும். [4]தோளைய. [5]நான். [6]ஏவது. [7]உண்டென. (கூ௩)

கூச.—இதுமுதல் எட்டுக்கவிகள் - ஒருதொடர்: தசரதன் தான் வேண்டுவதைக் காரணத்தோடு விரித்துரைத்தல்.

ஐய சாலவு மலசின னரும்பெரு மூப்பும்
[1]மெய்ய தாயது [2]மேவிடப் பெரும்பரம் [3]விசித்த
[4]தொய்யன் மாநிலச் [5]சுமையுறு சிறைதுறந் தினியா
னுய்ய லாவதொர் நெறிபுக வுதவிட வேண்டும்.

(இ - ள்.) ஐய - ஐயனே! சாலஉம் அலசினன் - மிகவும் வருந்தினேன்; அரு பெரு மூப்புஉம் - (நீக்கிக்கொள்வதற்கு) அரிதாகிய பெரிய முதுமையும், மெய்யது ஆயது-(என்) உடம்பில் தோன்றிவிட்டது; (ஆதலால்), பெரு பரம் மேவிட விசித்த - பெரியபாரத்தைப்பொருந்தத் தொடக்கிய, தொயல் - துன்பத்திற்குக்காரணமாகிய, மா நிலம் சுமை - பெரியபூபாரமென்கிற, உறு சிறை - மிக்க சிறையை, துறந்து - நீங்கி, இனி யான் உய்யல் ஆவது - இனிநான் பிழைக்கலாவதாகிய, ஒர் நெறி புக - ஒப்பற்ற நன்மார்க்கத்திற் பிரவேசிக்க, உதவிட வேண்டும் - உதவிசெய்யவேண்டும்; (எ - று.)

பலநாள் பூபாரத்தைத் தாங்கி யிளைத்த நிலையில் முதுமையும்மிக்குத் தோன்றியதனால், யான் இந்தப்பூமியைத் தாங்குவதாகியசிறையினின்று விடுபட்டு மோட்சநெறிக்குச் செல்லும்வழியைத் தேடுமாறு நீ உதவவேண்டுமென்று இதனால் தன்கருத்தைத் தசரதன் சுருக்கமாகக் கூறுகின்றனனென்க. அலசினதேயன்றி எனப்பொருள்தரலால் 'மூப்பும்' என்றஉம்மை இறந்ததுதழுவியது. தொய்யல்-துவட்சியாய், நிலையற்றதென உரைப்பினும் ஆம். நன்னெறிக்கு ஒப்பின்மையின் 'ஓர்நெறி' என்றான். பி - ம்:—[1]வெய்யது. [2]வியனிடம், வியலிடப். [3]விசித்துத், படைத்துத். [4]தொய்யுமூழ்நுகம், தொய்யன்மாநிலஞ். [5]முழுவதுஞ்சுமையுறுசிறை. உதவிடல். (கூச)

சாரு. [1]உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறு[2]துயர் நீங்கி
[3]யிருமை யும்[4]பெறற் கென்பது [5]பெரியவ ரியற்கை
தரும மன்னநிற் றந்தயான் றளர்வது தகவோ
கரும மென்வயிற் செய்யினென் கட்டுரை கோடி.

(இ - ள்.) உரிமை மைந்தரை பெறுகின்றது - எல்லாவுரிமைகளையு முடைய புத்திரரை (ஒருவர்) பெறுவது, உறு துயர் நீங்கி - மிக்க துன்பத்தினின்று நீங்கி, இருமைஉம் - இருமையின்பங்களையும், பெறற்கு - அடைதற் பொருட்டாகும், என்பது - என்று சொல்வது, பெரியவர் இயற்கை - பெரியோரது இயல்பாயிருக்கின்றது; (அங்ஙனமாக), தருமம் அன்ன நின் தந்த யான்-தருமதேவதையையொத்த உன்னைப் பெற்ற நான், தளர்வது-தளர்ச்சியடைவது, தகவுஓ - தகுதியோ? [அன்று]; (ஆதலால்), என்வயின் - என்னிடத்து, கருமம் செய்யின் - உரியதொழிலைச் செய்யவிரும்பினையாயின், என் கட்டுரை கோடி - எனது உறுதிவார்த்தையைக்கொள்வாயாக; (எ - று.)

சாமானியமாகப் புத்திரரைப்பெறுதல் இருமையும் பெறுதற்குஎன்பது பிரசித்தமாயிருக்க, தருமமே வடிவுபடைத்தாற்போன்றுள்ள உன்னைப்பெற்ற நான் இங்ஙனம் தளர்வது தகுதியன்றாதலால், யான் வேண்டியதை நிறைவேற்றவேணுமென்கின்றான் தசரதன். கல்விகேள்விகளால்நிறைந்து சகலசற்குணங்களுக்கும் இருப்பிடமாகிச் சற்காரியங்களைச் செய்து சான்றோரால் புகழப்பெற்று அகங்களிக்கச் செய்தலின் இம்மையையும், நீர்க்கடன் முதலியன செய்து நற்கதிய டைவித்தலின் மறுமையையும் பெறச்செய்தலின் 'மைந்தரைப்பெறுகின்றது இருமையும் பெறற்கு' என்றார்; "பராவரும் புதல்வரைப் பயக்கயாவரு, முராவருந்துயரைவிட் டுறுதிகாண்பரால்" எனக் கைகேசி சொல்லாக வருவதும் இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]உருமை. [2]பிணி, வலி. [3]பெருமையும். [4]பெறும். [5]முன்பினோர். (சரு)

சாசா. மைந்த நங்குல மரபினின் [1]வந்தருள் வேந்தர்
தந்த மக்களை கடைமுறை நெடுநிலந் தாங்க
வைந்தொ [2]டாகிய முப்பகை [3]மருங்கற வகற்றி
யுய்ந்து போயின ரூழிநின் றெண்ணினு முலவார்.

(இ - ள்.) மைந்த - புத்திரனே! நம் குலம் மரபினில் - நமது சிறந்த வமிசத்தில், வந்தருள் - தோன்றிய, வேந்தர் - அரசர், தம்தம் மக்கள்ஏ - தம்தம் புதல்வரே, கடைமுறை - முதுமைப்பருவத்தில், நெடு நிலம் தாங்க-நெடிய பூபாரத்தை வகிக்க, ஐந்தொடு ஆகிய - பஞ்சேந்திரியங்களாலுண்டாகிய,முப்பகை - முப்பகையையும், மருங்கு அற அகற்றி - சுவடுகெட நீக்கி, ஊழி நின்று - (மறுமைக்குவேண்டிய) முறைமையிலிருந்து, உய்ந்து போயினர் - பிழைத்துப்போனார்கள்; (அவ்வாறுஉய்ந்துபோயினவர்), எண்ணின்உம் - எண்ணினாலும், உலவார் - குறையார் [எண்ணிறந்தோரென்றபடி]; (எ-று.)

பஞ்சேந்திரியங்களினுலாகிய முப்பகைகளை அடியோடறுத்தாலல்லது துறவுண்டாகி முத்திபெறுதல் அருமைபற்றி 'மருங்கறவகற்றி' என்றார். "மெய்வாய் கண் மூக்குச் செவி யெனப்பேர்பெற்ற, வைவாய வேட்கையவா வினைக் - கைவாய்க், கலங்காமற் காத்துய்க்குமாற்றலுடையான், விலங்காது வீடுபெறும்" என்றார் பிறரும். முன் கக-ஆங் கவியில் "நங்குலக்குரவர்கள்" என்று சொல்லிய விஷயத்தையே இங்குத் தன்மகனுக்குச் சொல்லுகின்றான். ஊழிஎன்பதற்கு-இவ்வுலகத்திலிருந்து என்றுமாம்: ஊழி உலகென்னும் பொருள தாதலை "ஊழியேழானவொருவா" என்ற இடத்துங் காண்க. இனி ஊழியின்று எண்ணினும் உலவாரென்று இயைத்து-ஊழிக்காலமிருந்து எண்ணினும் குறைபடா ரென்றுமாம். ஐந்தொடு என்புழி ஒடு உருபு ஐந்தாலெனப் பொருள்பட்டு வினைமுதற்பொருளாயிற்று: "கொடியொடுதுவக்குண்டான்" என்புழிப்போல. முப்பகை - காமம், வெகுளி, மயக்கம். **பி-ம்:—** [1]மணிமுடி. [2]ஆதிய. [3]மருங்குறுது. (கசு)

சுஎ. முன்னை யூழ்வினைப் [1]பயத்தினு முற்றிய வேள்விப்
பின்னை யெய்திய நலத்தினு [2]மரிதினிற் பெற்றே
னின்னம் யானிந்த வரசிய [3]லிடும்பையி னின்று
னின்னை யீன்றுள [4]பயத்தினி [5]னிரம்புவ தியாதோ.

(இ - ள்.) முன்னை ஊழ் வினை பயத்தின்உம் - முற்பிறப்பிற் செய்த நல்வினைப்பயனுலும், பின்னை முற்றிய வேள்வி எய்திய நலத்தின்உம் - இப்பிறப்பில் முடித்த யாகங்களின்பயனை யடைந்த நன்மையாலும், அரிதின் - அருமையாக, நின் பெற்றேன் - உன்னைப் பெற்றேன்; (பெற்றும்), இன்னம் - இன்னமும், யான்—, இந்த அரசு இயல் - இந்த அரசியலைப்பற்றிய, இடும்பையில் - துன்பத்தில், நின்றால் - இருந்தால், நின்னை ஈன்று உள பயத்தினின் - உன்னைப்பெற்ற பயனுல், நிரம்புவது - நிறைவது, யாது—? (எ - று.)—ஓ - அசை.

உன்னைப் பெற்றதற்குப் பயன், இந்த அரசியலிடும்பையிலிருத்தலோ? அன்று: இதனினின்று நீங்குவதே என்பது கருத்து. முற்றியவேள்வி-அசுவமேதம், புத்திரகாமேஷ்டி முதலியன. பிள்ளையின்றி வெகுகாலம் வருந்திப் பெரும்பேருகப்பெற்றன னென்பான் 'அரிதினிற் பெற்றேன்' என்றான். **பி-ம்:—**[1]பயத்தினை. [2]அரிதுனை. [3]இடும்பையனென்றால், இடும்பையனின்றால். [4]பயத்தினுள். [5]நிரம்பியது. (கஎ)

சுஅ. ஒருத்த லைப்பாரத் [1]தொருத்தலைப் பங்குவி னூர்தி
[2]யெருத்தி னீங்குநின் றியல்வரக் [3]குழைந்திட [4]றுழக்கும்
வருத்த [5]நீங்கியவ் வாப்பறு திருவினை மருவு
மருத்தி யுண்டெனக் கைய[6]வி தருளிட வேண்டும்.

(இ - ள்.) ஒரு தலை பரத்து-ஒருபக்கம் பாரத்தையும், ஒரு தலை பங்குவின் - ஒருபக்கத்தில் நொண்டியாயிருக்குந்தன்மையையுங்கொண்ட, ஊர்தி

எருத்தின்-பண்டியிற்கட்டிய எருத்தினுடைய, இயல்-தன்மை, வர-பொருந்த, ஈங்குநின்று-இவ்வுலகத்திலிருந்து, குழைந்து - வாடி, இடர் உழக்கும்-துன்பத்தை யனுபவிக்கச் செய்கின்ற, வருத்தம் - துக்கரூபமாகிய அரசாட்சியினின்று, நீங்கி—, வரம்பு அறு - எல்லையற்ற, அ திருவினை - அந்தமோட்சசாமிராச்சியத்தை, மருவும்-அனுபவிக்கவேண்டுமென்கிற, அருத்தி - ஆசை, எனக்கு உண்டு - எனக்கு உள்ளது; ஐய - இராமா! ஈது - இதனை, அருளிட வேண்டும் - (நீ) கொடுக்கவேண்டும்; (எ - று.)

அறுபதினாயிரமாண்டு அருந்துயருழந்து அரியகிழவனான நான் ஒருபக்கம் பாரமும் ஒருபக்கம் நொண்டிக்காலுமாயுள்ள வண்டியிற்கட்டிய எருது எவ்வாறு குழைவுறுமோ அவ்வாறு குழைவுற்றுள்ளேன்; என்னை இதனினின்று விடுவிப்பாயாக என்கிறான் தசரதன். பாரத்தைத்தாங்கும் வல்லமையற்ற கிழத்தனத்தோடு தான் இராச்சியச்சுமையைத் தாங்கிநிற்றலின், தசரதன் தனக்குப் பெரும்பாரத்தைக் கொண்ட பண்டியிற் பூட்டிய நொண்டியெருத்தை உவமையாக் கூறுகின்றான். வண்டியிற்பூட்டிய எருதுக்குப் பெரும்பாரமும்நொண்டித்தன்மையும்என்று இருவகையான வருத்தமும்நேர்பட்டாற்போலுமென்பான் 'ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவினூர்தியெருத்தினியல்வர' என்றான். எருது என்னும் உயிர்த்தொடர்க்குற்றிய லுகரத்தின் தகரவொற்று வேற்றுமையில் இரட்டி, 'இன்' சாரியை பெற்று எருத்தின் என வந்தது. ஊர்தி - ஏறிச்செல்லுதற்கு உரியது என்ற காரணம்பற்றிப் பண்டியைக் காட்டிற்று. இனி, ஊர்தி எருத்து என்பதற்கு - எருதினது கழுத்து [ஊர்தி - எருது; எருத்து - பிடர்] என்று பொருள்கொண்டு, இத்தொடர்க்கு - ஒருபக்கமான பாரத்தையுடைய வண்டியில் ஒருபக்கத்துப்பூட்டிய பங்குவாகிய எருதினதுபிடரின்தன்மைபொருந்தஎன்றுகூறுவாருமுளர். அரசாட்சி சகடமாகக் கூறப்படுவதை "கால்பார்கோத்து ஞாலத்தியங்கும், காவற்சாகாடு" என்ற புறநானூற்றிலும் காண்க. இனி, முதலடிக்கு - ஒருபக்கமான பாரத்தைக்கொண்ட வண்டியிற்பூட்டிய ஒருத்தலை [எருத்தை]ப் போலவும், நொண்டியைச் சுமக்கின்ற வாகனத்தின் எருத்தம் [பிடரி] போலவும் என்று இரண்டு உவமை வந்துள்ளனவாக உரைகூறினாருமுளர். அன்னார் மிக்கவருத்தத்தையுண்டாக்குதற்கு முதலுபமானமும், எங்ஙனமுடவன் ஊர்தியின்மூலமாகவே செல்லவேண்டுமோ அங்ஙனமே அரசும் ஆள்வோன்மூலமாகவே செல்லவேண்டுமென்பதற்கு இரண்டாவது உபமானமும் கூறியதென்பர். அந்தமில்பேரின்பமென்பான் 'வரம்பறுதிரு' என்றான். சுட்டு, உலகறிபொருண்மேற்று. பெருவீடாகிய மோட்சத்துக்கு உடையவனாகிக் கண்டாரை நிலைகலக்குங்கட்டழகமைந்த கருமாணிக்கத்தைக் காணவே தான் மெய்ம்மறந்து உடலுருகி ஞானந் தலைசிறப்ப நின்ற தசரதனது வாக்கில்'அருளிடவேண்டும்'என வந்ததென்னலாம். ஒருத்தலையென, தகரமிரட்டியது, எதுகைநோக்கியும் சந்தவின்பநோக்கியு மென்க. பங்குவின், இன் - அசை. பங்கு - வடசொல். பி-ம்:—[1]ஒருதலை. [1]எருத்தம் வீங்க

நின்றலம்வர, எருத்தம் வீங்கிநின்றுயல்வர, எருத்தம் வீங்கிநின்றலமர. [3]சுமந்திடர். [4]உழைக்கும். [5]நீக்கி. [6]அதருளிட. (௬௮)

௬௯. ஆளு நன்னெறிக் கமைவரு [1]மமைதியின் றாக
நாளு நங்குல நாயக னறைவிரி கமலத்
தாளி னல்கிய கங்கையைத் [2]தந்துதந் தையரை
[3]மீள்வி லின்னுல கேற்றினா னொருமகன் மேனாள்.

(இ-ள்.) மேல் நாள்-முற்காலத்தில், ஒரு மகன்-ஒருபுருடன்[பகீரதன்], ஆளும்-பெறுதற்குரிய, நல் நெறிக்கு - நல்லவழிக்கு, அமைவரும் - பொருந்திய, அமைதி-தன்மை, இன்று ஆக - (தனது மூதாதையர்க்கு) இல்லாமற் போனதனால், (அவர்களை நற்கதியிற்சேர்க்க விரும்பி), நாள்உம் - எந்நாளும், நம் குலம் நாயகன்-நம்முடைய குலதெய்வமாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய, நறை விரி கமலம் தாளின்-தேனோடுமலர்கின்ற திருவடித்தாமரையினால், நல்கிய-தரப்பெற்ற, கங்கையை-கங்காநதியை, தந்து-(இவ்வுலகிற்)கொணர்ந்து, தந்தையரை - (தன்) மூதாதைகளை [சகரபுத்திரர்களை], மீள்வு இல் இன் உலகு-மீளுதலில்லாத இனிய முத்தியுலகத்தில்,ஏற்றினான்-ஏறச்செய்தனன்.

‘உய்யலாவதோர் நெறிபுக வுதவிடுதல் என்றாற் கூடுமோ?’ என்னும் ஆசங்கையைப் பரிகரித்தற்கும், அரியபெரியகாரியஞ்செய்தாயினும் தந்தையை மகன் நல்வழியிற் சேர்க்கவேண்டு மென்பதை வற்புறுத்தற்கும், அது நம்முடைய குலவழக்க மென்று உணர்த்தப் பகீரதன்சரிதையை யெடுத்துக் காட்டுகின்றான் தசரதன். திருமால் மாவலிவேள்வியிற்புக்கு ஒருகுறளாய் மூவடிமண்வேண்டி உலகனைத்தும் ஈரடியா யளந்த நாளில் அவன்சேவடியை நான்முகன் குண்டிகைநீர்பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் கழுவிய நீரான கங்கையைச் சிவபெருமான் சென்னிமேலேறக் கொணர்ந்து கபிலசாபத்தாலிறந்த தன் மூதாதையரைப் பகீரதன் பரகதியடைவித்தானென்பது இங்குக்குறித்த கதை. இது, பாலகாண்டத்தி லுணர்த்தப்பட்டது. பிரமன் ஆராதித்த திருமால் இட்சுவாகுமன்னவனால் தவஞ்செய்து சத்தியலோகத்தினின்று திருவயோத்திக்குக் கொணரப்பெற்றுச் சூரியகுலமன்னவரால் ஆராதிக்கப்பட்டதனால், ‘நங்குலநாயகன்’ என்கிறான். அபேதம்பற்றித் திரிவிக்கிரமனையும் இத்திருமாலையும் ஒன்றாகக்காண்க. மீள்விலின்னுலகு-பரமபதம். பலதந்தையரைக்காத்த பகீரதன்குலத்துதித்த உனக்கு என்னொருவனைக்காத்தல் அரிதன் றென்று குறிப்பித்தபடி. பி-ம்:—[1]அமைவினாகி. [2]தாழ்த்து. [3]மீள்விலா, மீள்கிலா. (௬௯)

௭௦. மன்னர் [1]வானவ ரல்லர்மேல் வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழற் புரந்தரன் [2]போலிய [3]ரல்லர்
பின்னு மாதவந் [4]தொடங்கி நோன் பிழைத்தவர் [5]பிறரார்
சொன்ம றா[6]மகற் பெற்றவ ருந்துயர் துறந்தார்.

(இ - ள்.) அரு துயர் துறந்தார் - துறத்தற்கரிய துன்பத்தினின்று நீங்கினவர்கள், — மன்னர் (அல்லர்) - இவ்வுலகத்தரசரல்லர்; வானவர் அல்லர் - தேவர்களல்லர்; மேல் - மேலும், வானவர்க்கு அரசு ஆம் - தேவர்க்கரசனாகிய, பொன்னின் வார் கழல் புரந்தரன் போலியர் - பொன்னாற்செய்த நெடிய வீரக்கழலையணிந்த இந்திரனைப் போன்றவரும், அல்லர் -; பின்உம் - அன்றியும், மாதவம் தொடங்கி நோன்பு இழைத்தவர் (அல்லர்) - பெரியதவத்தைத் தொடங்கி விரதங்களை யநுஷ்டித்தவரு மல்லர்; பிறர் ஆர் - வேறுயாவரெனில், சொல் மறா மகன் பெற்றவர் - (தந்) சொல்லை மறுக்காத புத்திரனைப்பெற்றவரே யாவர்; (எ - று.)

மண்ணவரும் விண்ணவரும் மாதவரும் துயர் துறந்தா ரல்லர்; தஞ்சொன் மறா மகற் பெற்றவரே துயர்துறந்தவராவரென்பது கருத்து. "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழி பிறங்காப், பண்புடை மக்கட்பெறின்" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது. எவ்வகைச் செல்வமிருப்பினும் பயனில்லை; நற்குணமுள்ள மகனைப் பெற்றால் எவ்வகைத் தீமையும் தீண்டப்பெறாது இனிது வாழ லாகு மென்க. "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யறிவறிந்த, மக்கட்பேறல்லபிற" என்றது திருக்குறள். இனி, இச்செய்யுட்கு - அருந்துயர்துறந்தாரும் மாதவந்தொடங்கிநோன்புஇழைத்தவரும் மன்னர்முதலியோரல்லர்; சொன்மறாமகற் பெற்றவரே; பிறரில்லையெனப்பொருள்கூறலுமாம். பி-ம்: —[1]ஆனவர். [2]நேரியர். [3]அல்லால். [4]தொடங்கி நோய் பிழைத்தவர், தொடங்கினோர் பிழைத்தவர். [5]அல்லார். [6]மகப். (௭௦)

௭௧. அனைய தாதலி னருந்துயர்ப் பெரும்பர மரசன்
வினையி னென்வயின் வைத்தன னெனக்கொளல் வேண்டா
புனையு மாமுடி புனைந்திந்த நல்லறம் [1]புரக்க
நினையல் வேண்டும்நா னின்வயிற் பெறுவதீ தென்றான்.

(இ - ள்.) அனையது ஆதலின் - அப்படியாகையினால் [தந்தையின் பாரத்தைத் தனயன் நீக்குவதே அரசகுலத்தார்க்கு முறையாதலால்], அரசன் —, அரு துயர் - அரிய துன்பத்தையுடைய, பெரு பரம் - பெரியபூபாரத்தை, வினையின் - கபடத்தினால், என்வயின் - என்னிடத்தில், வைத்தனன் —, என - என்று, கொளல் வேண்டா - நினைத்துக்கொள்ளவேண்டா; புனையும் - அலங்கரிக்கின்ற, மா முடி - பெருமைபெற்ற கிரீடத்தை, புனைந்து - அணிந்துகொண்டு, இந்த நல் அறம் புரக்க - இந்த (அரசுபுரிதலாகிய) நல்லதருமத்தைப் பரிபாலிக்க, நினையல்வேண்டும் - நினைப்பாயாக: நான் —, நின்வயின் - உன்னிடத்து, பெறுவது - பெறத்தக்கது, ஈது - இதுவே, என்றான் —; (எ - று.)

உட்பகை புறப்பகைகளைக் களைந்து எவரெவர் எத்திறத்தரோ அவரவர்க்கு அத்திறத்தனாக நின்று ஆவனசெய்து அறம்வழுவாது நடத்தல் மிகக் கடுமைபற்றி, 'பெரும்பரம்' என்றான். தருமவியாசத்தால் அரசாட்சியைத்

தன்னிடத்துவைத்தானென்றெண்ணுது அரசற்கு ஈது இன்றிமையாத் தருமமென வெண்ணி இதை மேற்கொள்ளவேண்டுமென்றானென்க. "கருமமென்வயிற் செய்யின் என்கட்டுரைகோடி" என்றதை, இதனால் தசரதன் விளக்குகின்றானென்க. பி-ம்:—[1]புகனீ. (எக)

**எஉ.—தாதைகட்டளையென்ற காரணத்தால் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ள இராமன் இசைதல்.**

†தாதை யப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்
காத லுற்றில னிகழ்ந்திலன் [1]கடனிதென் [2]றுணர்ந்தும்
யாது கொற்றவ [3]னேவிய தறுசெய லன்றோ
நீதி யெற்கென [4]நினைந்துமப் பணிதலை நின்றான்.

(இ-ள்.) தாதை-தகப்பன், அ பரிசு அவ்விதமாக, உரை செய-சொல்ல, தாமரை கண்ணன்-புண்டரீகாட்சனான ஸ்ரீராமன், காதல் உற்றிலன்-(இராச்சியங்கிடைத்ததுஎன்ற) விருப்பத்தைக் கொள்ளாதவனாகியும், இகழ்ந்திலன்-(இராச்சியத்தைவகித்தல் பாரமாயிற்றே என்று) மறுக்காதவனாகியும், இது - இப்பூபாரந்தாங்குதல், கடன் என்றுஉம் - கடமையென்றுகருதியும்,—கொற்றவன்-அரசன், உணர்ந்து-ஆராய்ந்து, ஏவியது-ஏவினது, யாது - எதுவோ, அது-அதனை, செயல்அன்றோ-செய்தலல்லவா, எற்கு எனக்கு,நீதி-நியாயம், என-, நினைந்துஉம்—, அ பணி - (இராச்சியத்தையாள ஒப்புக்கொள்ளுதலாகிய) அக்காரியத்தை, தலைநின்றான் - மேற்கொண்டு நின்றான்; (எ - று.)

அரசைக் கைக்கொண்டு தந்தையின்துயரத்தை நீக்கல் தனக்குக்கடமையாயினும், பித்ருவாக்கிய பரிபாலனரூப தருமத்தையே மேலாகக் கருதியிருந்தமையைத் தோற்றுவிக்க, 'யாது கொற்றவனேவியது அதுசெயலன்றோ நீதியெற்கென நினைந்து தலைநின்றான்' என்றார்; விருப்பும் வெறுப்பும் உண்டாயவழி அதன் குணதோஷந் தோன்றாவாதலினாலும், பெரியவரியற்கையவ்வாறாதலினாலும் அவ்விரண்டுமின்றிக் கடனெனத் தான் ஒப்புக்கொண்டமை தோன்றநின்றானென்பதாம். பி-ம்:—[1]கடனது. [2]உணர்ந்து, உணர்ந்தது, உணர்ந்தே. [3]ஏவினன். [4]நினைந்துதன், நினைத்துமப். (எஉ)

**எங.—இராமன்உடன்பாட்டையுணர்ந்த தசரதன் அவனைத் தழுவிவிட்டுத் தன்னரண்மனையைச் சேர்தல்.**

குரிசில் சிந்தையை மனக் [1]கொண்ட கொற்றவெண் குடையான்
றருதி யிவ்வர மெனச்சொலி யுயிருறத் தழுவிச்
சுருதி யன்னதன் [2]மந்திரச் சுற்றமுஞ் சுற்றப்
பொருவின் மேருவும் பொருவருங் கோயில் [3]போய்ப் புக்கான்.

† "துரிதைரபிகர்த்துமாத்மஸாத் ப்ரயதந்தேந்ருபஸூநவோஹியத்-தது பஸ்திதமக்ரஹீதஜ: பிதுராஜ்ஞேதிநபோகத்ருஷ்ணயா" என்ற ரகுவம்ச ச்லோகம் இங்குக் காணத்தக்கது.

(இ - ள்.) குரிசில் - ஸ்ரீராமனுடைய, சிந்தையை - மனக்கருத்தை, மனம் கொண்ட - மனத்துட்கொண்ட, கொற்றம் வெள் குடையான் - சயம் பெற்ற வெள்ளியகுடையையுடையவனாகிய தசரதன், 'இ வரம் - இந்த வரத்தை, தருதி - தருவாய்', என சொலி - என்று சொல்லி, உயிர் உற தழுவி - (அவனைத்) தன்னுயிரோடுபொருந்தும்படி கட்டிக்கொண்டு [இறுகப் புல்லி], (பின்பு), சுருதி அன்ன - வேதத்தையொத்த, மந்திரம் சுற்றம் உம் - மந்திரிகளின்கூட்டமும், தன் சுற்ற-தன்னைச்சூழ்ந்துவர, பொருவு இல் மேரு உம் - ஒப்பில்லாத மேருமலையும், பொருவு அரு-ஒப்பாவதற்கரிய, கோயில் - (தன்) அரண்மனையில், போய் புக்கான் - போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

இங்கிதத்தால் பட்டாபிஷேகஞ்செய்துகொள்வதற்கு இராமன் இசைந்ததை உணர்ந்த தசரதன் வற்புறுத்துதற்பொருட்டு 'நான் வேண்டும் இவ்வரம் தரவேணும்' என்று மீண்டுஞ்சொல்லி இறுகத்தழுவிப் பிறகு மந்திரிமார் சூழ்ந்துவர ஆலோசனைமண்டபத்தினின்று அரண்மனைபோய்ச் சேர்ந்தானென்க. மார்புடன் இறுகப்புல்லிக்கொள்ளுதலா லுண்டாகிய சுகத்தை யநுபவித்தது உயிராதல் பற்றி, 'உயிருறத்தழுவி' என்றார்; உயிரோடொப்பத் தழுவி யென்றுமாம். நன்மைதீமைகளையாராய்ந்து நடுவுநிலைமையாய்ச் சொல்லி அரசனை நீதிவழிநிறுத்துதல் பற்றி, மந்திரிகளுக்குச் சுருதியை யுவமையாக்கினார். அன்றி, "திருவுடைமன்னரைக்காணிற் றிருமாலைக்கண்டேனே" என்றபடி மன்னவர் திருமாலின்அமிச மாதலாலும், திருமால் இத்தசரதனைத் தகப்பனாகக்கொண்டமையாலும் இவனை மந்திரிகள் சூழ்ந்துவருவதற்குச் சுருதியை யுவமையாக் கூறினா ரென்னவுமாம். மேருவை வாசத்தலமாகக்கொண்டிருக்கும் வானவர்க்கரசனான இந்திரன் இத்தசரதனிடத்தும் இவனுடைய வமிசத்தாரிடத்தும் யாசகனாகியும், வாகனமாகியுங்கிடத்தலால் அவனது வாசத்தலம் எவ்வாறுஒக்கு மென்பார், 'மேருவும் பொருவருங் கோயில்' என்றார். பி-ம்:—[1]கொண்டு. [2]மந்திரத்தலைவரும். [3]புசன்றடைந்தான். (எஙு)

எசு—இராமன் தன்னரண்மனையைச் சேர்தல்.

நிவந்த வந்தணர் நெடுந்தகை மன்னவர் நகரத்
துவந்த மைந்தர்கண் மடந்தைய [1]ருழையுழை தொடரச்
சுமந்தி ரன்[2]றடந் தேர்மிசைச் சுந்தரத் [3]திரடோ
[4]ளமைந்த மைந்தனுந் தன்னெடுங் கோயில்[5]சென் [6]றடைந்தான்.

(இ - ள்.) நிவந்த-மேலான, அந்தணர்-வேதியரும், நெடு தகை மன்னவர் - பெருங்குணமுள்ள அரசர்களும், நகரத்து - நகரத்திலுள்ள, உவந்த-(தன்னை) விரும்பின, மைந்தர்கள்-புருஷர்களும், மடந்தையர் - பெண்களும், உழை உழை தொடர-அருகே தொடர்ந்துவர, சுந்தரம் திரள் தோள் அமைந்த-அழகாகியதிரண்ட தோள்களையுடைய, மைந்தன் உம் - ஸ்ரீராமபிரானும், சுமந்திரன் - சுமந்திரனது, தட தேர் மிசை - பெரியதேரின்மீது (ஏறி), தன்

நெடு கோயில் சென்று அடைந்தான் - (தனது) பெரியதிருமாளிகையிற் சென்று சேர்ந்தான்; (எ - று.)

மன்னவர் முதலியோர் அன்போடு அருகேதொடர்ந்துவர, சுமந்திரன் கொணர்ந்த தேரின்மீது இராகவபிரான் ஏறிக்கொண்டு தன்னரண்மனைக்குச் சென்றன னென்க. மைந்தனும், உம்மை - இறந்ததுதழுவியது. அழகிய தட்பத்தினையுடையராய் அதனால்உயர்ந்தவராதலால்,'சிவந்த அந்தணர்'என்றார். தாடகைமுதலியோரின் மிடுக்கையழித்து நீலகண்டன்வில்லை நீறுபடவொழித்துப் பரசுராமன்வலியைப் பழித்துப் பரந்துதிரண்டு பார்த்தவர்கண்களைக் கவரும் பேரழகுஅமைந்த தோ ளென்பார் 'சுந்தரத்திரடோள்' என்றார். பி-ம்:—[1]உழையர்பின். [2]தனி. [3]தடந்தோள். [4]இவர்ந்த. [5]புக்கு. [6]இருந்தான்.

## எரு.—தசரதன் மன்னவர்க்குச் செய்திதெரிவிக்குமாறு ஓலைபோக்கி, முடிகவித்தற்கு வேண்டுவன இயற்றுமாறு வசிட்டனிடங் கூறுதல்.

வென்றி வேந்தரை [1]வருகென [2]வுவணம் [3]வீற்றிருந்த
பொன்றி ணிந்ததோட் டரும்[4]பெற லிலச்சினை போக்கி
நன்று சித்திர [5]நளிமுடி கவித்தற்கு [6]நல்லோய்
சென்று வேண்டுவ வரன்முறை யமைக்கெனச் [7]செப்ப.

இதுவும் அடுத்த கவியும்—குளகம்.

(இ - ள்.) (தசரதன் தன்கோயிலை யடைந்தபின்), வென்றி வேந்தரை- வெற்றிபொருந்திய அரசர்களை, வருக-(இவ்விடத்திற்கு) வரவேண்டும், என- என்று எழுதி, பொன் திணிந்த தோடு-(அங்ஙனம் கட்டளையெழுதப்பெற்ற) பொன்னாலாகிய பத்திரிகைகளில், உவணம் - கருடனதுவடிவம், வீறு இருந்த - பெருமையோடிருந்த, பெறல் அரு - பெறுதற்கு அரிய, இலச்சினை - முத்திரையை (இட்டு), போக்கி - அனுப்பி,—(பின்பு வசிஷ்ட முனிவனை நோக்கி), 'நல்லோய்-பகவானே! நன்று-நன்மையாகிய, சித்திரம் - விசித்திரமாகச் செய்யப்பட்ட, நளி முடி - பெருமை பெற்ற கிரீடத்தை, கவித்தற்கு - (இராமனுக்குச்) சூட்டுதற்கு, வேண்டுவ-வேண்டியவைகளை, வரல்முறை-கிரமப்படி, சென்று அமைக்க-சென்று சித்தஞ் செய்தருள்க,'என செப்ப-என்று சொல்ல,—(எ - று.)—"உரியமாதவ னுள்ளிதென்றுவந்தனன்" என அடுத்த கவியோடு தொடரும்.

கீழ் மந்திரிமாரோடு ஆலோசித்து இராமனுக்குப்பட்டங்கட்டுவதைத் தீர்மானித்தபின், பலநாட்டுவேந்தர்கட்குந் தான் இராமபிரானுக்கு முடிசூட்டக் கருதியிருப்பதைத் தெரிவித்து அவர்களுடைய உடன்பாட்டையும் பெறக்கருதிய தசரதன், அவ்வரசர்கட்கெல்லாம் பொன்னோலைகளில் 'இங்கேவருக' என்று தன்கட்டளையெழுதித் தனக்குஉரிய கருடமுத்திரையை அவற்றின் மேலிட்டு அனுப்பியபின்னர் வசிட்டபகவானைநோக்கி மகுடாபிஷேகத்திற்கு

வேண்டியவற்றையெல்லாஞ் சித்தஞ்செய்யுமாறு கூறினனென்பதாம். பல நாட்டிலுமுள்ள அரசர்களையும் ஜநங்களையும் தன்கருத்தைத் தெரிவிக்குமாறு பத்திரிகை யெழுதி வரவழைத்துத்தசரதன் கேகயதேசத்தரசனுக்கும் மிதிலா நகரத்தரசனாகிய ஜநகனுக்கும் அவர்கள்நாடு வெகுதூரத்திலிருப்பதுபற்றிச் செய்தி தெரிவிக்காது இந்நற்செய்தியைக் கேகயநாட்டரசனும்ஜநகனும்கேட்டுப்பின்னர் இன்பம் அடையட்டு மெனக் கருதினா னென்று முதனூலி லுள்ளது. அரசர்முதலியோர் பிறர்க்கு எழுதும் ஓலையில் தமது இலச்சினையையிட்டுப் போக்குதல்,மரபு. சூரியகுலத்து இட்சுவாகுமன்னவன் முதல் மன்னவர் யாவரும் திருமாலைத் தமக்குக் குலதெய்வமாகக்கொண்டு பூசித்துவந்த வைஷ்ணவராதலால், அம்மன்னவர்கள் அத்திருமாலினது கொடியாகிய கருடபகவானையே தமது இலச்சினையாகக்கொண்டுள்ளா ரெனக் கம்பர் கருதினர் போலும். உவணம்=ஸுபர்ண꞉: இலச்சினை - லாஞ்சநம்: வடசொற்களின் சிதைவுகள். [3]வீற்றிருந்து என்ற பாடத்தைக்கொண்டு, "உவணம்உயர்ச்சி" என்று திவாகரத்திற் கூறியிருத்தலால், உவணமென்ற சொல்-ஆகுபெயரால் உயர்ந்த ஆசனமாகிய சிங்காதனத்தை யுணர்த்தியதாகக்கொண்டு,சிங்காதனத்து வீற்றிருந்து என்று உரைகூறினாரு முளர். உவணம் வீற்றிருந்த ஓலையென்றுகூறலும் உண்டு. பி-ம்:—[1]வருகவென்று.[2]அவணம். [4]பெறும். [5]நளிர். [6]நல்லீர். [7]செப்பும். (எ௫)

**எசு.—வசிட்டன் சேல்ல, வந்த மன்னவரிடம் இராமனுக்கு முடிகவிக்கக் கருதியதைத் தசரதன் தேரிவித்தல்.**

உரிய மாதவ னொள்ளிதென் [1]றுவந்தனன் விரைந்தோர்
பொருவி றேர்மிசை யந்தணர் குழாத்தொடும் போக
நிருபர் கேண்மின்க ளிராமற்கு நெறிமுறை மையினாற்
றிருவும் பூமியுஞ் சிந்தையிற் சிறந்தன வென்றான்.

(இ - ள்.) (அதைக்கேட்டு), உரிய மாதவன் - (சூரியவம்சத்தரசர்களுக்குப் புரோகிதஞ் செய்தற்கு) உரியவனாகிய வசிட்டபகவான், ஒள்ளிது என்று உவந்தனன் - நல்லதென்று மகிழ்ந்தவனாகி, விரைந்து—, பொருவு இல்-ஒப்பில்லாத, ஓர் தேர்மிசை - ஒருதேர்மேல் (ஏறி), அந்தணர் குழாத்தொடும் போக-வேதியர்கூட்டத்தோடும்போக,-(சக்ரவர்த்தியானவன் தான் ஓலைபோக்கியதனால் வந்துசேர்ந்த அரசர்களைநோக்கி), 'நிருபர்-அரசர்களே! கேண்மின்கள் - கேளுங்கள்; நெறி முறைமையினால் - அரசநீதிமுறைப்படி, இராமற்கு- இராமனுக்கு, திருஉம் பூமிஉம்-ஐசுவரியமும் இராச்சியமும், சிந்தையின் சிறந்தன-(என்) மனத்திற் சிறந்தன', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

இராச்சியத்தையும் அதற்குஉரியசெல்வத்தையும் தொன்றுதொட்டு வந்த முறைப்படியே இராமனுக்குத் தருதல் தக்கதாகுமென மனத்திற் கருதியுள்ளே னென்று தசரதன் வந்தமன்னவர்களிடம் தன்கருத்தைத் தெரிவித்தானென்க. சிந்தையின்-மனம்போல என்று உரைத்து, என் மனம் இராமபிரானிடத்துச் சிறந்து நிற்பதுபோலத் திருவும் பூமியும் இராமபிரானிடத்துச்

சிறந்துநிற்கு மெனப் பொருள்காணலு மாம். நெறிமுறைமையினால் இராமற் குத் திருவும் பூமியுஞ் சிந்தையிற் சிறந்தன என்னுஞ் சொற்றொடரால், கைகேயிகூறும் வரமென்னும் வழிமுறையால் ஈங்கிராத மன்னனாகிய பரத னுக்குக் [இரா-இங்கேயிராத, மன்-அரசன்.] கொடுக்க அரசச்செல்வமும் பூமியும் என்மனத்திற் சிறந்தன என அத்தசரதன்கருத்துக்கு மாறாக வேறோர் பொருள் தோன்றுதல் காண்க. பிம்:—[1]அமைந்தனன். (எசு)

எஎ.—அச்சொல்லைக் கேட்டவர் யாவரும் பெருமகிழ்ச்சியடைதல்.

இறைவன் சொல்லெனு மின்னற வருந்தினர் யாரு
முறையி னின்றிலர் [1]முந்துறு [2]களிப்பிடை மூழ்கி
நிறையு நெஞ்சிடை யுவகை போய் மயிர்வழி நிமிர
வுறையும் விண்ணக [3]முடலொடு மெய்தின ரொத்தார்.

(இ - ள்.) இறைவன் சொல் எனும்-சக்கரவர்த்தியின் சொல்லென்கிற, இன் நறவு - இனியமதுவை, அருந்தினர் யார்உம்-(செவியாகிய வாயினால்) உண்டவர்களெல்லாரும்,-முறையில் நின்றிலர்-முறையில் நில்லாதவர்களாய், முந்து உறு களிப்பிடை மூழ்கி - விரைந்துதோன்றுகின்ற களிப்புக்கடலில் முழுகி, நிறையும் நெஞ்சிடை உவகை - நிறைந்த மனத்தின் சந்தோஷம், போய்-மிகுந்து, மயிர் வழி நிமிர - (தம்மளவில் நில்லாது) உரோமங்களின் வழியாய் வெளிப்பட, உடலொடுஉம்-சரீரத்தோடும், உறையும் விண்ணகம் - (யாவரும்) தங்குதற்குவிரும்புகின்ற சுவர்க்கலோகத்தை, எய்தினர்-அடைந்த வர்களை, ஒத்தார்—; (எ - று.)

அரசன்பேச்சைக்கேட்டோர் யாவரும் நறவருந்தினர்போலநிலைதடுமாறி ஆநந்தத்துண்மூழ்கித் தம்மனத்துள்தோன்றிய உவகையானது உள்ளடங் காது மயிர்க்கூச்சமென்ற வியாசத்தால் வெளிப்பட்டுத் தோன்ற, இவ்வுடம் புடனே சுவர்க்கலோகத்தைச் சார்ந்தவர்போன்று பெருமகிழ்ச்சியடைந்தன ரென்பதாம். "உடம்பொடுதுறக்கநக ருற்றவரை யொத்தார்" என்றார் கடி மணப்படலத்தும். ஆநந்தாநுபவத்துக்குக்காரணமாகிய சுவர்க்கம் உடலொழி ந்தபின் கிடைப்பதன்றி முன்புகிடைத்த லருமைபற்றி இவர் உடலொடு விண்ணகமெய்தினரொத்தார் என்றார். மூழ்கியென்றதற்கேற்ப, களியைக் கடலென்க. முறையினில்லாமைக்குக் காரணமாயினமையால், நறவு என்ற தற்கு - மதுவென்று உரை கூறப்பட்டது. மயிர்வழிநிமிர்தல் - மயிர்க்கூச் செறிதல். பி ம்:—[1]முகந்துறு, முன்றுறை. [2]களியிடை. [3]உயிரொடும். (எஎ)

எஅ.—அவர்கள் யாவரும் தசரதனைத் தொழுது நீ செய்யக்கருதியது நன்றெனத் தெரிவிக்கத் தொடங்குதல்.

ஒத்த [1]சிந்தைய [2]ருவகையி [3]னொருவரி னொருவர்
தத்தமக் குற்ற வரசெனத் [4]தழைக்கின்ற மனத்தர்
முத்த வெண்குடை மன்னனை முறைமுறை [5]தொழுதா
ரத்த நன்றென வன்பினொ [6]டறிவிப்ப தானார்.

(இ - ள்.) ஒத்த சிந்தையர் - (இராமனுடைய பட்டாபிஷேக விஷயத்தில்) ஒரு தன்மையாக இசைந்த எண்ணத்தை யுடையவர்களும், ஒருவரின் ஒருவர் அரசு தத்தமக்கு உற்ற(து)என உவகையின் தழைக்கின்ற மனத்தர்- ஒருவரைக்காட்டிலும் ஒருவர் இராச்சியம் தந்தமக்குக்கிடைத்ததுபோல (நினைத்து) மகிழ்ச்சிகொண்டு களிக்கின்ற மனத்தையுடையவர்களுமான அவ்வரசர்கள், முறைமுறை-வரிசைவரிசையாய்நின்று, முத்தம் வெள் குடை மன்னனை - முத்தினாற்செய்த வெண்கொற்றக்குடையையுடைய சக்கரவர்த்தியை, தொழுதார் வணங்கி, (அவனைநோக்கி), 'அத்த-ஐயனே! நன்று-(நீர் நினைத்தது) நல்லகாரியமே,' என-என்று, அன்பினொடு-உள்ளன்போடு, அறிவிப்பது ஆனார்-விண்ணப்பஞ் செய்வாராயினர்: (எ-று.)—அதனை மேற்கவியிற் காண்க.

இராமபிரான் செருக்கின்றி யாவரோடும் ஒருநீரனாகப் பயின்று அவர்கள்குறைவைநீக்குவதனால், அவனுக்கு அரசு கிடைப்பதைத் தமக்குக் கிடைப்பதுபோல யாவரும் பாராட்டுவாராயின ரென்க: கீழ்ச் சுமந்திரனைப்பற்றி "தலங்கள் யாவையும் பெற்றனன் றெனனத் தளிர்ப்பான்" என்று கூறியதுங் காண்க. பி-ம்:—[1]சிந்தையின். [2]உவகையர். [3]ஒருவரையொருவர், ஒருவர்க்கங்கொருவர். [4]தளிர்க்கின்ற. [5]தொழுவார். [6]அறிவிக்கலுற்றார். (எஅ)

## வேறு.

### எகூ.—இவ்விராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்தல் தக்கதேயென்று மன்னவர் கூறுதல்.

மூவெழு முறைமையெங் குலங்கண் [1]முற்றறப்
பூவெழு மழுவினாற் பொருது போக்கிய
சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற்
[2]காவவிவ் வுலகமீ தறனென் றாரரோ.

(இ - ள்.) மூ எழு முறைமை-இருபத்தொரு தலைமுறை, எம் குலங்கள் முற்றுற-எம்முடைய [ராஜ]குலங்கள் முடிவையடைய, பூ எழு மழுவினால் - கூர்மையிருந்த மழுவாயுதத்தால், பொருது-சண்டைசெய்து, போக்கிய - அழித்த, சேவகன்-பராக்கிரமசாலியாகிய பரசுராமனது, சேவகம்-வீரத்தை, செகுத்த-கெடுத்த, சேவகற்கு - மகாவீரனாகிய ஸ்ரீராமனுக்கு, இ உலகம் - இந்த ராஜ்யம், ஆவ-அதீனமாகக்கடவது; ஈது - இது; அறன் - தருமமே, என்றார்—; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இவ்விராமபிரான் மன்னர் யாவரையும் இருபத்தொருதலைமுறை கட்டழித்த பரசுராமனையும் வலியடக்கிய மகாவீர னாதலால், இவனுக்கு இப்பூமியை யதீனமாக்குதல் தக்கதென்றா ரென்க. மூன்றாமடி - முற்று மோனை. தமது துயரத்தைத் தீர்த்த மகாவீர னென்பதும், இனியும் எம்

குறைகளைத் தீர்த்தருளத்தக்கவனென்று தாம் கருதியமையும் தோன்ற,'மழு விஞற் போக்கிய சேவகன் சேவகஞ்செகுத்த சேவகன் என்ருர்கள். ஆவ - அகரவீற்று வியங்கோள். பூ - கூர்மையாதலை "மலருங்கூர்மையும்...பூவெனல்" என்ற நிகண்டிஞலும், "பூவாட்கோவலர்" என்ற புறநாஞற்ருலும் அறிக. பி - ம்:—[1]மூப்புற. [2]ஆவல், ஆக.

க. நறைக்குழற் சீதையு ஞால நங்கையு
மறாத்துமிங் கொருவற்கு மணத்தின் பாலரோ
கறுத்தமா மிடறுடைக் கடவுட் [1]காலவில்
லிறுத்தவற் கன்றியென் றிரட்டர் கூறிஞர்.

பி - ம்:—[1]காவல்வில்.

உ. ஏத்தவந் துலகெலா மீன்ற [1]வேந்தனைப்
[2]பூத்தவ னல்லனேற் புனித வேள்வியைக்
காத்தவ னுலகினைக் காத்த னன்றென
வேத்தவை [3]வியப்புற விதர்ப்பர் கூறிஞர்.

பி - ம்:—[1]எந்தையைப். [2]பூத்தனன். [3]உவப்புற.

ங. பெருமையா னுலகினைப் பின்னு முன்னுநின்
றுரிமையொ டோம்புதற் குரிமை பூண்டவத்
தருமமே தாங்கலிற் றக்கதிண்டொரு
கருமமீவ திலதெனக் [1]கலிங்கர் கூறிஞர்.

பி - ம்:—[1]கவுடர்.

ச. [1]கேடகல் படியினைக் கெடுத்துக் கேடிலாத்
தாடகை வலிக்கொரு சரமன் றேவிய
வாடக வில்லிக்கே [2]யாக பாரெனத்
[3]தோடவிழ் மலர்முடித் துருக்கர் சொல்லிஞர்.

பி - ம்:—[1]கேடகமணியினை. [2]அருள்க. [3]தோடகமலர்.

ரு. கற்றநான் மறையவர் கண்ணை மன்னுயிர்
பெற்ற[1]தா யெனவருள் [2]பிறக்கும் வாரியை
யுற்றதே னுலகினி லுறுதி யாதெனக்
கொற்றவேற் கனைகழற் குருக்கள் கூறிஞர்.

பி - ம்:—[1]தாயினை. [2]பிறங்கும்.

சு. வாட்டொழி லுழவநீ [1]யுலகை வைகலு
மூட்டினை யருளமு துரிமை மைந்தனைப்
பூட்டினை யாதலிற் பொருவி னன்னெறி
காட்டினை நன்றெனக் கலிங்கர் கூறிஞர்.

பி - ம்:—[1]உலகின்.

௭. †தொழுகழல் வேந்தநின் ஷெல்கு லத்துளோர்
முழுமுத லிழித்தகை முறைமை யாக்கியீண்
டெழுமுகில் வண்ண னுக் களித்த விச்செல்வம்
விழுமிது பெரிதென மிலேச்சர் கூறினர்.

௮. கொங்கலர் நறுவிரைக் கோதை [1]மோலியாய்
சங்கநீ [2]ருலகத்துட் டவத்தின் றன்மையா
லங்கண னரசுசெய் தருளு மாயிடிற்
சிங்கள ரிங்கிதிற் சிறந்த தில்லென்றார்.

பி - ம்:—[1]மௌலியாய். [2]உலகத்து.

௯. ஆதியின் [1]மனுவுநின் னரிய மைந்தற்குப்
பாதியு மாகிலன் பரிந்து [2]வாழ்த்துதல்
வேதியர் தவப்பயன் விளைந்த தாமெனச்
[3]சேதிபர் [4]சிந்தனை தெரியச் செப்பினார்.

பி - ம்:—[1]மனுவினாலமைந்த. [2]வாழ்த்துமவ். [3]சேதியர். [4]சேதனை.

௧0. அளம்படு குரைகட லகழி யேழுடை
வளம்படு நெடுநில மன்னர் மன்னனே
[1]யுளம்படிந் துயிரென முவப்ப தோர்பொருள்
விளம்பினை பெரிதென விராடர் கூறினார்.

பி - ம்:—[1]உளம்படியுயிர்.

௧௧. ‡வாய்நனி புரந்தமா மனுவி னான்முறைத்
தாய்நனி [1]புரந்தனை தரும [2]வேலினாய்
நீநனி புரத்தலி னெடிது காலநின்
சேய்நனி புரக்கெனத் தெலுங்கர் கூறினார்.

பி - ம்:—[1]புரந்தெனத். [2]வேலியாய்.

௧௨. வையமும் வானமு மதியு ஞாயிறு
மெய்திய வெய்துப [1]திகழும் யாண்டெலா
நெய்தவழ் வேலினாய் நிற்கும் வாசகஞ்
செய்தவம் பெரிதெனச் சேரர் கூறினார்.

பி - ம்:—[1]திகழும்.

௧௩. பேரிசை பெற்றனை பெருத தென்னினிச்
சீரிய தெண்ணினை செப்பு கின்றதெ
[1]னாரிய நங்குடிக் கதிப நீயுமோர்
[1]சூரிய னமெனச் சோழர் சொல்லினார்.

பி - ம்:—[1]ஆரியனங்குடிக்கமரனீயும்.

---

† இப்பாடல் தஞ்சைப்பிரதியி லுள்ள தென்கின்றனர்.

‡ இது முதலுள்ள நான்கு பாடல்கள் சில பிரதியில் ௫ - ஆவது பாடலுக்குப் பின் காணப்படுகின்றன.

கச. ஒன்றிய வுவகைய ரொருங்கு சிந்தையர்
தென்றமிழ் சேணுற வளர்த்த தென்னரு
மென்றுநின் புகழொடு [1]தருமமேமுற
நின்றது [2]நிலையென நினைந்து கூறினர்.

பி-ம்:—[1]தருமமேயுற. [2]நிலையது.

என்கிற இப் பதினன்கு கவிகள் "மூவெழுமுறை" என்ற இப்பாடலுக்குப்பின் சிலபிரதியிற் காணப்படுகின்றனவாயினும் பல பிரதிகளிலும் இல்லை; இவை பயிலவழங்கா வென்பர்: மேல் "வேறெலா மன்னரும்" என்று பாடமிருப்பதை நோக்குமிடத்து இப்பாடல்கள் இருத்தல்கூடுமெனத் தோன்றினமையால், உரையெழுதாவிடினும் பதிப்பிக்கப்பட்டன. (எக)

அ0.—தசரதன் அவர்கள் கருத்தையறிய மீண்டும் வினவத்தொடங்கல்.

[1]வேறிலா [2]மன்னரும் விரும்பி [3]யன்னது
கூறின ரது[4]மனங் கொண்ட கொற்றவ
[5]னூறிய வுவகையை யொளிக்குஞ் சிந்தையான்
மாறுமோ ரளவைசால் வாய்மை கூறினன்.

(இ - ள்.) வேறு இலா மன்னர்உம்-மாறுபடுதலில்லாத அரசரும், அன்னது-அத்தன்மையான வாக்கியத்தை, விரும்பி கூறினர்-விரும்பிச்சொன்னர்கள்; அது மனம் கொண்ட கொற்றவன் - அதனை உள்ளத்தடைத்த சக்கரவர்த்தி, ஊறிய - (உள்ளே) சுரக்கின்ற, உவகையை-சந்தோஷத்தை, ஒளிக்கும்-அடக்கிக்கொண்ட, சிந்தையான்-மனத்தை யுடையவனுகி, மாறுஉம்-மற்றும், ஓர் அளவை சால் வாய்மை கூறினன் - ஒரு பிரமாணமான வார்த்தையைச் சொன்னன்; (எ - று.)

இராமனுக்குப் பட்டங்கட்டத் தசரதன் கருதியதை யாவரும் மாறுபடாது ஒரேமனமாக ஒப்பித் தனதுபுத்திரனதுபெருமையைப் புகழ்ந்து கூறக் கேட்ட சக்கரவர்த்தி பெருங்களி கூர்ந்தும், அதனை மனத்திலடக்கிக் கொண்டு அவர்கள் கருத்தை உள்ளபடி யுணருமாறு வேறுவகையாக வினவுகின்றன னென்பதாம். [1]'வேறெலாமன்னரும்'என்றபாடத்துக்கு-வெவ்வேறு நாட்டினராக வுள்ள எல்லா அரசர்களும் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வது தகுதியே என ஆமோதித்தனரென்க. பி-ம்:—[1]வேறலா. [2]மன்னவர். [3]இன்னது. [4]மனக். [5]ஊறினன். (அ0)

அக.—நீங்கள் இராமனுக்குப் பட்டங்கட்ட விரும்புவது எதனுலென்று மன்னவன் மீளவும் வினவுதல்.

[1]மகன்வயி [2]னன்பினன் மயங்கி யா[3]னிது
புகலநீர் புகன்ற[4]விப் பொம்மல் வாசக
முகவையின் மொழிந்ததோ வுள்ள நோக்கியோ
தகவென [5]நினைந்ததெத் தன்மையா லென்றான்.

(இ - ள்.) (அரசர்களே!) யான் மகன்வயின் அன்பினால் மயங்கி-புத்திர னிடத்து அன்பினால்யான் மதிமயங்கி, இது புகல-இந்தவார்த்தையைச் சொல்ல,(கேட்டு),நீர் புகன்ற-நீங்கள் சொல்லிய,இ பொம்மல் வாசகம்-இந்தப் பொலிவாகிய வார்த்தை, உகவையின் மொழிந்ததுஓ-மனஞ்சந்தோஷித்துச் சொன்னதோ? உள்ளம் நோக்கி ஓ - என்கருத்து நோக்கியோ? தகவு என நினைந்தது - தகுதியென்று நினைத்தது, எ தன்மையால் - எவ்வகையினால்? என்றான் - என்று (உண்மை கூறுமாறு) வினாவினான், (தசரதன்); (எ - று.)

எனக்கு இராமனிடத்துள்ள அன்பினால் அவனை இராச்சியத்தையாளும் வல்லமையுடையவனென்று எண்ணி அவனுக்குப் பட்டங்கட்ட வேணு மென்று கருதியிருக்கின்றேன். இந்த என்கருத்து தக்கதோ அல்லது தகுதியற்றதோ? என்பது எனக்குத் தெரியாது. நீங்கள் நடுநிலையாகச் சொல்லுவீர்களென்ற எண்ணத்தினால்தான் உங்களை வினாவினேன். நீங்கள் இராமனுக்குப் பட்டங்கட்டுதல் தக்கதென்பது, மனமுவந்து சொன்ன சொல்லா? அன்றி, என்முகத்துக்கு இச்சையாகச் சொல்லவேணுமென்று சொன்ன சொல்லா? எந்தக்காரணத்தால் இராமனுக்கு மகுடாபிஷேகஞ்செய் வது தகுதியென்கிறீர்கள்? இதனைப் பிரமாணமாகச் சொல்லவேண்டுமென்று தசரதன் வினவினனென்க. ஓ - ஐயப்பொருளன. உகவை - தொழிற் பெயர்; உக - பகுதி. பி-ம்:—[1]மக. [2]நானிலம்வழங்க. [3]அது. [4]அப்பொருமல். [5]நினைந்ததோ தன்மையென். (அக)

அஉ.—இது முதல் நான்குகவிகள் - ஒருதொடர்: மன்னவர் இராமமகுடாபிஷேகத்திற்கு இசைந்ததற்குக்காரணம் கூறுதலைத் தெரிவித்தது.

இவ்வகை யுரைசெய விருந்த [1]வேந்தவை
[2]செவ்விய நின்றிரு மகற்குத் [3]தேயத்தோ
[4]ரவ்வவர்க் [5]கவ்வவ ராற்ற [6]வாற்றுறு
மெவ்வமி லன்பினை யினிது [7]கேளென.

(இ - ள்.) இ வகை உரைசெய-இந்தப்பிரகாரம் (சக்ரவர்த்தி) கேட்க,- இருந்த வேந்து அவை - (அவ்விடத்து) இருந்த அரசர்சபை, (சக்ரவர்த்தியை நோக்கி), செவ்விய நின் திருமகற்கு - செவ்வைக்குணமுள்ள உனது புதல் வன்மீது, தேயத்தோர் அவ்வவர்க்கு-அங்கங்கே பற்பல தேசத்துள்ளாருள், அவ்வவர் - யாவரும், ஆற்ற - மிகவும், ஆற்றுறும் - செய்கின்ற, எவ்வம் இல் அன்பினை - குறைவில்லாத அன்பின் தன்மையை, இனிது கேள்-இனிதாகக் கேட்பாய், என - என்று சொல்லத்தொடங்கி,-(எ - று.)—"என்றனர்" என- அடு ஆங் கவியில் முடியும்.

இராமபிரானிடத்து எல்லாத்தேயத்தவரும் அன்புசெய்யுந்தன்மையைக் கூறுவோமென்றனரென்க. தேயத்தோரவ்வவர்க்கு என்பதில் அவ்வவர்க்கு என்பது சொல்லுருபா யுடன்வந்தது: இச்சொல்லில் 'கு' ஏழனுருபில் வந்தது,

உருபுமயக்கம். அவ்வவர் - யாவருமென்றபடி. பி-ம்:—[1]வேந்தர்கள். [2]செவ்வியோய். [3]தேர்ந்துளோர். [4]அவ்வவர். [5]அவ்வவர்க்கு. [6]ஆற்றுமென்று. [7]கேளென்றார். (அஉ)

அரு. தானமுந் தருமமுந் [1]தகவுந் தன்மை [2]சேர்
ஞானமு [3]நல்லவர்ப் [4]பேணு நன்மையு
மானவ [5]வெவையுநின் மகற்கு [6]வைகுமா
லீனமில் செல்வம்வந் [7]திையைக வென்னவே.

(இ - ள்.) மானவ - மநுவமிசத்துக்குத்தலைவனே! தானம்உம்-கொடையும், தருமம்உம் - அறமும், தகவுஉம் - ஒழுக்கமும், தன்மை சேர் ஞானம்உம் - மேன்மைபொருந்திய மெய்யுணர்வும், நல்லவர் பேணும் நன்மைஉம் - பெரியோர்களை விரும்பி வழிபடுகின்ற நலமும், (முதலிய), எவைஉம் - எல்லாக்குணங்களும், 'ஈனம் இல் - குறைவற்ற, செல்வம் - அரசச்செல்வம், வந்து இயைக - வந்து பொருந்தக்கடவது,' என்ன - என்றுசொல்வது போல, நின் மகற்கு - உன் பிள்ளைக்கு, வைகும் - நிலையாகப் பொருந்தியுள்ளன; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

நாங்கள் உன்மகனது மகுடாபிஷேகத்தைப்பற்றி மகிழ்ந்து கூறுவதற்குக் காரணம் அவனிடத்துள்ள நற்குணங்களேயாகு மென்றன ரென்க. இராமனதுகுணம் எங்களை மகிழ்ந்துகூறுமாறு செய்ததன்றி வேறு உன்முகத்துக்கு இச்சகமாகச் சொல்லவேணு மென்று இராமபட்டாபிஷேகத்தை மகிழ்ந்துகூறினோ மில்லை யென்றன ரென்றவாறு. "பஹவோ ந்ருப கல்யாண குணாஃ புத்ரஸ்யஸந்திதே[மன்னவனே! உன் புதல்வனிடத்துப் பல கல்யாண குணங்கள் உள்ளன]" என்று வான்மீகத்திற்கூறியது கருதத்தக்கது. நல்லவர்ப்பேணும் நன்மையாவது - மூவிருகுற்றமும் முறைமையிற்கடிந்து காவற்சாகாடு உகைத்தற்குஉரியனாய், தன்னைத்தீநெறிவிலக்கி நன்னெறிச்செலுத்துந் தவத்தாற் பெரியராய முனிவர்மேலும் ஆற்றலாற்சிறந்தோராய் அரசர்மேலும் அறிவாற்சிறந்தோராய அமைச்சர்மேலும் பிழைபாராட்டித் தவறு கூறித் தவியாது, பலவூசிகளையுந் தன்வயத்துக்கவரவல்ல காந்தம்போல யாவருடைய கருத்தையும் தன்பணிவாற் கவர்ந்து ஒழுகுந் திற மென்பர். பி-ம்:—[1]தவமும். [2]சால். [3]நல்லறம். [4]பேறும். [5]ஐய, கேட்டி. [6]வைகலும். [7]இயைவது, எதிர்ந்தது. (அரு)

அசு. ஊருணி நிறையவு [1]முதவு மாடுயர்
பார்[2]கெழு [3]பயன் மரம் [4]பழுத்தற் றாகவுங்
கார்மழை பொழியவுங் கழனி [5]வாய்நதி
வார்புனல் பெருகவு மறுக்கின் றார்கள்யார்.

(இ - ள்.) உதவும் - (யாவர்க்கும்) உதவுகின்ற, ஊருணி-குளம், நிறைய உம்-(நீர்)நிறையவும்,—பார் - ஊரின், மாடு - நடுவே, கெழு - பொருந்திய, உயர் - உயர்ந்த, பயன் மரம் - பயன்படுமரம், பழுத்தற்று ஆகஉம் - பழுத்ததாகவும்,—கார்-மேகம், மழை-மழையை, பொழியஉம்-சொரியவும்,—கழனி

வாய்-கழனிகளில், நதி-ஆற்றின், வார் புனல்-மிக்கநீர், பெருகஉம்—, மறுக்கின்றார்கள்-(வேண்டாமென்று) தடுக்கின்றவர்கள், யார் - யாவர்? (எ - று.)

பாழ்போகாதுநெடிதுநின்று எல்லார்க்கும் எளிதில் வேண்டும் பலன்களைத் தப்பாது கொடுத்து உதவுகின்ற ஊருணிமுதலியனவற்றிற்கு நீர்நிரம்புகைமுதலியன நேர்படுகையில் அவற்றைத் தடைசெய்வார் இல்லையாதற்போல, நின்மகன் மன்னுயிர்களைப் பாதுகாக்குமாறு மகுடஞ்சூடுதல் உலகத்துப்பிராணிகள் நன்மைபெறுதற்கே காரணமாமாதலால் அதனை மறுப்பார் ஒருவருமில்லை யென்றதாயிற்று. உபமானங்கள் உபமேயப்பொருளைத் தெரிவித்தலால், இச்செய்யுள் - **பிறிதுமொழிதலணி.** ஊருணியும் பயன்மரமும் எல்லாராலும் எளிதிற்கொள்ளுமாறு உதவுவதிலும்,கார்மழை கைம்மாறு கருதாது ஈவதிலும், கழனியிற் பெருகும் நதிப்புனல் யாவர்க்கும் பெரும்பயன்விளைத்தலிலும் உவமையாம். மாடு உயர் எனஎடுத்து-பக்கங்களுயர்ந்த [சுற்றிலும் வேதிகை போடப்பட்ட] எனினுமாம். "ஊருணி நீர்நிறைந்தற்றே யுலகவாம், பேரறிவாளன் திரு", "பயன்மரமுள்ளூர்ப்பழுத்தற்றாற்செல்வ, நயனுடையான்கட்படின்," "நடுவூருள் வேதிகைச் சுற்றுக்கோட் புக்க, படுபனையன்னர் பலர் நச்சவாழ்வார்,குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணுமாக்க, ளிடுகாட்டுளேற்றைப்பனை", "கற்றையஞ் சுடர்மணி கனகமேனைய, பிற்றையென்னுதருள் பெரியர் வண்மைபோன், மற்றவனுள்ளபன் மரமுந்தம்பய, னெற்றையு முலப்புறு தீகைசான்றவே" என்றவை இங்கு ஒப்புநோக்கத்தக்கவை. ஊருணி-ஊராரால் நீருண்ணப்படுவது: குளம்; இ-செயப்படுபொருள்விகுதி. நிறைதலென்னும் இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மே லேற்றப்பட்டது. பழுத்தற்று=பழுத்தன்று: ஒன்றன்பால் முற்று. பார் - பூமியின் ஏக தேசத்தைக்காட்டிற்று. பி-ம்:—[1]உதகமாயொரு. உதவுமாயுயர். [2]நுகர். [3]பழு. [4]பழுத்தது. [5]பாய். (௪௯)

௫௰. பனை[1]யவா நெடுங்கரப் பருமயானையாய்
நினையவாந் [2]தன்மையை [3]நிமிர்ந்த மன்னுயிர்க்
கெனையவா றன்பின னிராம னீண்டவற்
கனையவா [4]றன்பின வவையு [5]மென்றனர்.

(இ - ள்.) பனை அவாம் நெடு கரம் பருமம் யானையாய் - பனைபோன்ற (நீண்ட) கைகளையும் ஒப்பனையையுமுடைய யானைப்படையையுடையவனே! நினை அவாம் தன்மையை - உன்னை விரும்புந் தன்மையை, நிமிர்ந்த - மிகுதியாகக் கொண்டிருந்த, மன் உயிர்க்கு - நிலைபேறுடைய உயிர்களிடத்தில், இராமன்—, எனைய ஆறு அன்பினன் - எத்தன்மையான அன்புடையவனாயிருக்கின்றனனோ, அவைஉம் - அவ்வுயிர்களும், ஈண்டு - இவ்வுலகத்தில், அவற்கு - அந்த இராமனிடத்தில், அனைய ஆறு அன்பின-அத்தன்மையான அன்புடையனவாயிருக்கின்றன, என்றனர் - என்று சொன்னார்கள்; (எ-று.)

நின்னிடத்து விருப்பம் வைத்திருக்கும் உலகத்துயிர்களிடத்தெல்லாம் இராமன் பேரன்பு காட்டி வருதலால்,அவ்வுயிர் யாவும் இராமபிரானிடத்துப்

பேரன்பு பூண்டுள்ளன: ஆதலால், அவ்வுயிர்கள் இராமன் மகுடஞ் சூடுதலிற் பெருமகிழ்ச்சிகொள்ளலாயினவென வேத்தவையோர் கூறின ரென்க. என்றனரென்பதற்கு, அஉ - ஆங் கவியிலுள்ள வேந்தவை என்பது எழுவாய். இராமபிரான் இளம்பிராயந் தொடங்கி யாவரிடத்தும் அன்பு பூண்டு விசாரிக்குந் தன்மையுடனிருக்கின்றனனென்பதையும், உலகத்தவர் அவ்விராமன் இராச்சியத்தை யாட்சிபுரியவேணு மெனக் கருதியிருக்கின்றனரென்பதையும், கீழ்த்திருவவதாரப்படலத்தில் "எதிர்வருமவர்களை யெமையுடை யிறைவன், முதிர்தரு கருணையின் முகமலரொளிரா, வெதுவினையிடரிலை யினிதுநுமனையும், மதிதருகுமரரும் வலியர்கொலெனவே," "அலைதைய நினதெமதரசெனவுடையே, மிலைதொருபொருளல வெமதுயிருடனேழ், மகிதலமுழுதையுமுறுகவிமலரோ, னுருபகலளவென வுரைநனி புரிவார்" என்று வந்தவற்றாலு முணரலாம். பனையவாநெடுங்கர பருமயானையாய் என்ற இயல்பான பாடத்துக்கு, பனையவாம்நெடுங்கர-பனையையொத்த நீண்டகைகளையுடையவனே! என்று விளியாகக்கொள்க. "பனைத்திரண்டனையதோளாய்" என்றார் சிந்தாமணியாரும். அவாம்-அவாவுமென்பது ஈற்றுமிசையுகரம்மெய்யொடுங் கெட்டது. ஈண்டு உயிரென்றது பெரும்பாலும், மக்களுயிர்மேனின்றது. உயிர்க்கு, அவற்கு என்பன - உருபுமயக்கம். பி-ம்:—[1]இவர். [2]தன்மையின், தகையனுய். [3]நினைந்த, நினைந்து. [4]அன்பினர். [5]என்பவே. (அடு)

அசு.—அரசன் வேத்தவையோர் சொற்கேட்டு மகிழ்ந்து கூறத்தொடங்குதல்.

> மொழிந்தது கேட்டலு [1]மொய்த்து [2]நெஞ்சினைப்
> பொழிந்தபே [3]ருவகையிற் பொங்கு காதலன்
> கழிந்த[4]தோ [5]ரிடரினன் களிக்குஞ் சிந்தையன்
> வழிந்தகண் ணீரினன் மன்னன் கூறுவான்.

(இ - ள்.) மொழிந்தது - (அவ்வாறு சபையில் வந்தவர்) சொன்னதை, கேட்டலும் - கேட்டவுடனே,—மன்னன் - தசரதன், நெஞ்சினை - மனத்தினில், மொய்த்து-நெருங்கி, பொழிந்த - சொரிந்த, பேர் உவகையின் - மிக்க களிப்பினுல், பொங்கு காதலன் - அதிகரிக்கின்ற அன்பையுடையவனும், கழிந்தது ஓர் இடரினன்-நீங்கின ஒப்பற்ற துன்பத்தையுடையவனும், களிக்கும் சிந்தையன்-சந்தோஷிக்கும் மனமுடையவனும், வழிந்த கண் நீரினன் - ஆநந்தத்தால் (தன்னடைவே) பெருகின கண்ணீரையுடையவனுமாகி, கூறுவான் - (அவர்களைநோக்கிச்) சொல்வானுயினன்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

தன்மகனைப்பற்றி வேத்தவையோர் கொண்டாடிச் சொன்னது கேட்ட தசரதன், தன் மனத்தினுள்ளடங்காது மிக்குத் தோன்றிய மகிழ்ச்சியினுல் இராமபிரானிடத்துப் பரிவு பொங்கத் தான் கொண்ட துயரமெல்லாந்தீர்ந்து தனதுமிக்கமகிழ்ச்சி ஆனந்தபாஷ்பமாக வெளிப்பட்டுத் தோன்ற அந்த

வேத்தவையோரை நோக்கிக் கூறலானா னென்க. எல்லா வுலகத்தையும் பாதுகாக்கும் பேராற்றல்வாய்ந்த ஸ்ரீராமனை அவ்வேத்தவையோரின் கையடை யென மேற்கூறுவது அவ்விராமனிடத்துப் பெருவிருப்பத்தினா லெழுந்த பேரன்பின்செய லென்பார் 'பேருவகையிற் பொங்கு காதலன் கூறுவான்' என்றார். கழிந்ததோரிடரினன் - வடமொழிநடை. இடர்-தன் மூப்பைக் கருதியதனாலான துன்ப மென்னலாம். பி-ம்:—[1]மொய்த்த. [2]நெஞ்சினில். [3]உவகையான். [4]பேர். [5]துயரினன். (அசு)

அஎ.—தசரதன் தன் மகனை வேத்தவையோர்க்கு அடைக்கலமெனல்.

செம்மையிற் றருமத்திற் செயலிற் [1]றீங்கின்பால்
வெம்மையி னொழுக்கத்தின் [2]மேன்மை[3]மேவினீ
ரென்மக னென்பதென் [4]னெறியி னீங்கிவ
னும்மகன் கையடை [5]நோக்கு மீங்கென்றான்.

(இ - ள்.) 'செம்மையின்-நடுவுநிலையாலும், தருமத்தின்-அறத்தினாலும், செயலின் - நற்செய்கையினாலும், தீங்கின்பால் வெம்மையின் - தீயவைகளி னிடத்துக் கடுமையாகக் காட்டும் வெறுப்பினாலும், ஒழுக்கத்தின்-ஆசாரத்தினாலும், மேன்மை மேவினீர் - மேன்மையைப் பொருந்தியிருக்கின்ற அரசர்களே! ஈங்கு இவன்-இதோ இருக்கிற இவன், என் மகன் என்பது என்-என் புதல்வனென்று சொல்லுவதென்ன? நெறியின் - முறைமையினால், நும் மகன் - (இவன்) நும் புதல்வனே; (இவனை), கையடை - அடைக்கலமாகக் கொண்டு, ஈங்கு-இங்கே, நோக்கும் - பார்த்துக்கொள்ளுங்கள்', என்றான் - என்று சொன்னான், (தசரதன்); (எ - று.)

இவனை என்மக னென்னவேண்டா: உம் மகன்போலவே கருதி, இவ னுக்கு யாதொருகுறைவும் வராமல் நோக்குங்க ளெனத் தசரதன் கூறினா னென்க. நோக்கும் என்னும் உம்மீறு பன்மையுணர்த்தி முன்னிலையாய் நிற்றல் "இர் ஈர் மின்னென வரூஉ மூன்றும், பல்லோர் மருங்கினும் பல வற்றுமருங்கினுஞ், சொல்லோரனைய வென்மனார் புலவர்" என்றதனுள் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியதனா லுணர்க. பி-ம்:—[1]தீங்கிவா, தீங் கென்பார், தீர்கிற்பான். [2]மெய்ம்மை. [3]மேயநீர். [4]இனிநின்றாங்கவன், என்னை யீங்கிவன், அறியிரீதிவன், அறியிலீங்கிவன். [5]நோக்குமீங்கென்றான், நோக் குவீரென்றான், நுமக்கென்றோதினான். (அஎ)

அஅ.—அரசர்களை யனுப்பிவிட்டுத் தசரதன் ராமபட்டாபிஷேகத்துக்குச் சோதிடரைக்கொண்டு நல்ல நாள் நோக்குதல்.

[1]அரசவை விடுத்தபி னாணை [2]மன்னவன்
புரைதபு [3]நாளொடு பொழுது நோக்குவா
னுரைதெரி கணிதரை யொருங்கு கொண்டொரு
வரைபொரு மண்டப மருங்கு போயினான்.

(இ - ள்.) அரசு அவை-இராசசபையை, விடுத்த பின்-அனுப்பியபின்பு,- ஆணை மன்னவன்-ஆஜ்ஞையையுடைய தசரதன், புரை தபு நாளொடு-குற்ற மற்ற தினத்தோடு கூடிய, பொழுது - ஒருசுபமுகூர்த்தத்தை, நோக்குவான்- பார்ப்பதற்கு, உரை தெரி கணிதரை-சோதிடநூலை யறிந்தவர்களை, ஒருங்கு கொண்டு-உடன் அழைத்துக்கொண்டு, ஒரு-ஒப்பற்ற, வரை பொரு மண்ட பம் மருங்கு - மலைபோன்றமண்டபத்தில், போயினான் - போய்ப்புக்கான்.

பட்டாபிஷேகத்துக்கு ஏற்ற நல்லநாளைப் பார்க்கும்பொருட்டுச் சோதி டரையழைத்துக்கொண்டு அரசன் ஒருமண்டபஞ் சேர்ந்தா னென்க. நாளொடு பொழுது - நட்சத்திரத்தோடு முகூர்த்தத்தையும் எனினுமாம். [3]நாளொடு பொழுது போக்குவான் என்ற பாடத்துக்கு, நாளொடு-நாளில் [நாள் பார்ப் பதில்], பொழுது போக்குவான் - பொழுதுபோக்கும்படி என்று வலிந்து பொருள் கொள்ளவேணும். "உப்பகார மொன்றென மொழிப, விருவயி னிலையும் பொருட்டா கும்மே" என்றதனால், இங்கு 'தபு' என்பது, படுத்துக் கூறுதலாகிய ஓசைவேற்றுமை பற்றித் தன்வினையிடத்து வந்தது. ஆணை - ஆஜ்ஞா என்பதன் சிதைவு. நோக்குவான் - எச்சம். பி-ம்:—[1]அரசரை. [2]மன்னனும். (அஅ)

வேறு.

அகூ.—பட்டாபிஷேகச்செய்தியையுணர்ந்த மங்கையர் நால்வர் அதனைக் கௌசலைக்கு அறிவிக்கச் செல்லுதல்.

[1]ஆண்ட வந்நிலை யாக [2]வறிந்தவர்
பூண்ட காதலர் பூட்டவிழ் கொங்கையர்
நீண்ட கூந்தலர் நீள்கலை தாங்கல
ரீண்ட வோடினர் [3]ரிட்டிடை [4]யிற்றிலர்.

(இ - ள்.) ஆண்டு-அவ்விடத்து, அ நிலை ஆக-அவ்வாறிருக்க,— அறிந்த வர் - (இராம பட்டாபிஷேக சமாசாரத்தை) அறிந்தவர்களாகிய, (மங்கையர் நால்வர்)-நான்குபெண்கள், பூண்ட காதலர்-அன்பு கொண்டவர்களும், பூட்டு அவிழ் கொங்கையர் - (கச்சின்) முடி அவிழப்பெற்ற தனங்களையுடையவர் களும், நீண்ட கூந்தலர்-தாழ்ந்த கூந்தலையுடையவர்களும், நீள் கலை தாங்கலர்- நீண்ட ஆடைகளைத் தாங்காதவர்களும், இட்டிடை இற்றிலர் - நேரிய இடை யிறுதவர்களுமாய், ஈண்ட - நெருங்க, ஓடினர் - (கோசலையின் கோயிலுக்கு) ஓடினார்கள்; (எ - று.)

மங்கையர்க்குக் களிப்பின்மிகுதியால் உடல்பூரித்துப்பெருக்கக் கச்சின் முடி தானேயவிழ, ஓடுகின்ற விசையால் தலையவிழ்ந்து கலைநெகிழ்ந்த தென்ப தாம். இவரைக் கோசலையின்சேடிய ரென்னலாம். மங்கையர்நால்வ ரென்பது, மேலைக்கவியால் விளங்கும். இட்டிடை - இப்பொருட்டாதல் "இட்டிடைப், பின்னைகேள்வன்" என்னுந் திருச்சந்தவிருத்தத்திலுங் காண்க. ஓடுகின்ற விசையைப் பார்த்தால் இடை இற்றுவிடுமோ என்று கருதுமாறு இருந்த

தென்பது, 'இட்டிடையிற்றிலர்' என்பதன் கருத்து. ஓடினர் என்பதற்கு எழுவாய் வருவிக்க. பி-ம்:—[1]ஆண்டவன்னிலை, ஆண்டையந்நிலை, ஆண்டையானிலை. [2]அறிந்தனர். [3]இற்றிடை. [4]அற்றிலார். (அகூ)

**கூ0.—செய்தியறிவிக்கக் கோசலையிடஞ் சென்ற மங்கைமாரின் மகிழ்ச்சி.**

ஆடு கின்றனர் [1]பண்டையி னன்றியே
பாடு கின்றனர் [2]பார்த்தவர்க் கேகரஞ்
சூடு கின்றனர் சொல்லுவ தோர்கிலர்
மாடு சென்றனர் மங்கையர் நால்வரே.

(இ - ள்.) ஆடுகின்றனர் - ஆடுகின்றவர்களும், பண்டையின் அன்றி - (இதற்கு)முன் தாங்கள்இருந்த நிலையாகவல்லாமல் [பெருமகிழ்ச்சியால் தம் நிலைமாறி யென்றபடி], பாடுகின்றனர்-பாடுகின்றவர்களும், பார்த்தவர்க்கு - (தாங்கள்)பார்த்தவரெல்லாருக்கும்,கரம் சூடுகின்றனர்-அஞ்சலிசெய்கின்றவர்களும், சொல்லுவது ஓர்கிலர்-சொல்லுவது இன்னதென்று அறியாதவர்களுமாகி, மங்கையர் நால்வர் - அந்நான்கு பெண்களும், மாடு - (கோசலையின்) சமீபத்தில், சென்றனர் - போயினர்; (எ - று.)

ஆடுதல் முதலிய இச்செயல்களெல்லாம் ஆநந்தப்பெருக்கா லுண்டானவை யென்க. பி-ம்:—[1]பண்ணைடைவின்றியே, பண்ணைடையின்றியே. [2]பாத்தவர்க்கேகரம். (கூ0)

**கூக.—உமது உவகைக்காரணத்தைச் சொல்லுங்களென்று கோசலை வினவுதல்.**

கண்ட மாதரைக் காதலி னோக்கினாள்
கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை
யுண்டு பேருவ கைப்பொரு [1]ளன்னது
தொண்டை வாயினிர் சொல்லுமி னீண்டென்றாள்.

(இ - ள்.) கொண்டல் வண்ணனை-நீலமேகவர்ணனாகிய ஸ்ரீராமனை, நல்கிய-பெற்ற, கோசலை—,—கண்ட-(இவ்வாறாகவந்து தன்னைக்) கண்ட, மாதரை - பெண்களை, காதலின்-விருப்பத்தோடு, நோக்கினாள்-பார்த்தவளாகி,—'தொண்டை வாயினிர் - கொவ்வைக்கனிபோன்ற வாயை யுடையவர்களே! (உங்களைப்பார்த்தால்), பேர் உவகை பொருள் - பெரியசந்தோஷ சமாசாரம், உண்டு - உள்ளதாகத் தோன்றுகின்றது: அன்னது - அதனை, ஈண்டு - இப்பொழுதே, சொல்லுமின் - சொல்லுங்கள்,' என்றாள் - என்றுவினவினாள்.

"இங்கிதஜ்ஞாஸ்து கோஸலாঃ [கோசலநாட்டவர் இங்கிதத்தினால் அறிபவர்கள்]" என்பதற்கு ஏற்ப, அம்மங்கையர் கருதியவற்றை அவர் கூறாமலே குறிப்பான் அறிந்தாளாதலின், 'பேருவகைப்பொருள்உண்டு' என்றாளென்னலாம். தொண்டை - ஆகுபெயர். கோசலை-கௌஸல்யா என்னும் வடசொல்லின் திரிபு; கோசலதேசத்தரசன்மகள் என்பது பொருள். கோசலம் - உத்தரகோசலம், தக்ஷிணகோசலம் என இரண்டு பிரிவுள்ளது: அவற்றுள் தக்ஷிண கோசலத்தரசன்மகள் இவள். பி-ம்:—[1]என்றதும். (கூக)

கூஉ.—தசரதன் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிச்சயித்திருப்பதை மங்கைமார் தெரிவித்தல்.

மன்னெ டுங்கழல் வந்து வணங்கிடப்
பன்னெ டும்பகல் பாரளிப் பாயென
நின்னெ டும்புதல் வன்றனை நேமியான்
றொன்னெ டும்முடி [1]சூட்டுகின் றானென்றார்.

(இ - ள்.) 'மன் - அரசர்கள், நெடு கழல்-பெரியவீரக்கழலையணிந்த பாதங்களில், வந்து வணங்கிட—, பல் நெடு பகல் - அனேகநாள்கள், பார் அளிப்பாய்-பூமியைக் காப்பாய், என-என்று சொல்லி, நின் நெடு புதல்வன்தனை- உனது ஜ்யேஷ்டகுமாரனாகிய ஸ்ரீராமனுக்கு, நேமியான்-சக்கரவர்த்தி,தொல் நெடு முடி - பழமையாகிய பெரிய கிரீடத்தை, சூட்டுகின்றான் - சூட்டப்போகின்றான்,' என்றார்-என்று (அம்மங்கையர்) செய்தி தெரிவித்தார்கள்; (எ-று.)

தசரதன் இராமனைவரவழைத்து'நீ இந்தப் பூமியை யரசாட்சிசெய்வாய்' என்று சொன்னான்: இனி விரைவில்தானே குலமுறையாய்வந்த முடியைச் சூட்டப்போகின்றா னென்று அம்மங்கையர் கோசலையிடம் நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்தன ரென்க. கோசலை இராமன்முதலியநால்வரையும் தன் புதல்வர்போலவே கருதி அன்புசெய்பவளாதலின் 'நின்னெடும் புதல்வன்றனை'என்றது. மன்,கழல்-ஆகுபெயர்கள். வணங்கி இட எனப்பிரித்து,வணங்கிக் காணிக்கைகளைக் கொணர்ந்துகொடுக்க என்று பொருள் உரைத்தலுமாம். தொழுத்தையர் சக்கரவர்த்தியின் இயற்பெயரைச் சொல்லார்களாதலால், 'நேமியான்' என்றனர். பரம்பரையாய்வந்த தென்பது விளங்க 'தொன்முடி' எனப்பட்டது. முடி-முடிக்கப்படுவதென்னும்பொருளில் செயப்படுபொருள் விகுதிபுணர்ந்துகெட்ட காரணச்சிறப்புப்பெயர்.புதல்வன்றனை-உருபுமயக்கம். நெடும்முடி - விரித்தல். விரைவில் நிகழுமென்பதுபற்றி, சூட்டுகின்றா னென்று நிகழ்காலத்தாற் கூறியது. பி-ம்:—[1]சூட்டுகென்றான். (கூஉ)

கூங.—கௌசலைக்கு இராமபட்டாபிஷேகத்தால் தோன்றிய உவகையை மன்னவன் துறப்பானென்ற கருத்து மாற்றுதல்.

சிறக்குஞ் செல்வ [1]மகற்கெனச் சிந்தையிற்
பிறக்கும் பேருவ கைக்கடல் [2]பெட்பற
வறக்கு மாவட வைக்கன [3]லானதாற்
றுறக்கு மன்னவ னென்னுந் துணுக்கமே.

(இ - ள்.) (அதைக்கேட்ட கோசலைக்கு), மன்னவன் - சக்கரவர்த்தி, துறக்கும் என்னும் துணுக்கம் - துறந்துசெல்வா னென்னும் அச்சமானது, மகற்கு - ஸ்ரீராமனுக்கு, செல்வம் சிறக்கும் என - அரசச்செல்வம் சிறக்குமென்று, சிந்தையில் பிறக்கும் - மனத்திற் றோன்றுகின்ற, பேர் உவகை கடல் - பெரிய சந்தோஷமாகிற கடலானது, பெட்பு அற - பெருமையற,

வுறக்கும் ஆ - வற்றும்படி, வடவை கனல் ஆனது - வடவைத் தீயையொத் திருந்தது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

மகன் முடிசூடுவானென்றதனுலுண்டாகிய களிப்பு, மன்னவன் துறப்பானென்றதனு லுண்டாகிய அச்சத்தால் மிகுதிப்படாமல் அடங்கி நின்றதென்க. வடவை - வடமொழிச்சிதைவு; இஃது, கடலினிடையில் நின்று அதிகரிக்கும் நீரை உறிஞ்சிப்பருகுமாறு முகத்துக்கனல்பெற்றதோர் பெண்குதிரை. வறக்கும் மா வடவைக்கனல் - வற்றச்செய்கின்ற பெரிய படபாக்கினியென்றுமாம். பி-ம்:—[1]மகற்கெனுஞ். [2]பெட்புற. [3]ஆகுமால், ஆனவால். (கூந)

கூச.—கோசலை மங்கலச்செய்திசொன்னவர்கட்கு வெகுமதியளித்துச் சுமித்திரையோடு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் கோயிலுக்குப் போதல்.

அன்ன ளாயு மருபெற லாரமு
[1]நன்னி திக்குவை யுந்[2]நனி நல்கித் [3]தன்
றுன்னு காதற் சுமித்திரை யோடும்போய்
மின்னு நேமியன் [4]மேவிட மேவினள்.

(இ - ள்.) (கோசலை), அன்னள் ஆயும் - அத்தன்மையளாகியும், அருபெறல்-அரியபெறுதலையுடைய, ஆரம்உம்-மணிவடங்களையும்,நல் நிதி குவை உம்-உயர்ந்த திரவியங்களின் குவியல்களையும், நனி நல்கி- (செய்தி சொன்ன மங்கையர்நால்வர்க்கு) மிகவும் கொடுத்து, (அவர்களை யனுப்பிவிட்டு), தன் காதல் துன்னு - தன்னாசைக்கு விஷயமாகிய, சுமித்திரையோடும் - சுமித்திரையுடனே, போய்—, மின்னும் நேமியன் - விளங்குகின்ற (சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை(க் கையில்) தரித்த ஸ்ரீரங்கநாதன், மேவு இடம் - பொருந்தியிருக்குந் திருக்கோயிலை, மேவினள் - அடைந்தாள்; (எ - று.)

தன்கணவன் துறக்கப்போகின்றானே யென்பதைக் கருதி மனத்திற் றுணுக்க மெய்தின ளாயினும், கோசலை மங்கலச்செய்தி சொன்னவர்கட்குச் சிறந்த மணிவடம் முதலியன கொடுத்துப் பின்பு தன்புதல்வனுக்கு நன்மையைவேண்டி, இட்சுவாகுகாலந் தொடங்கிச் சூரியகுலமன்னர்க்குக் குலதெய்வமாகவிளங்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் கோயிலுக்குச் சுமித்திரையோடுஞ் சென்றனளென்பதாம். கைகேயி இப்பொழுதே வேறுபட்டிருந்தனளென்பது குறிப்பு. நனி - விசேடித்த வுரிச்சொல். முதலடி - முற்றுமோனை. சுமித்திரை=ஸுமித்ரா: நல்லமித்திரரையுடையவள்; இயற்கையில் நற்குணமுடையவளேயன்றிச் செயற்கையிலும் அவ்வாறிருப்பவளென்பது பொருள். பி - ம்:—[1]பன்மணி. [2]பல நல்கி. [3]பின். [4]வைகிடம். (கூச)

கூரு.—கோசலை திருமாலின்திருவடிகளை வணங்குதல்.

மேவி மென்மல ராணில மாதெனுந்
தேவி மாரொடுந் தேவர்கள் யாவர்க்கு
மாவி யும்[1]மறி வும்[2]முத லாயவன்
[3]மாவு லாமலர்ப் பாதம் வணங்கினள்.

(இ-ள்.) (கோசலை), மேவி-(அங்கனம்) அடைந்து, மெல்மலராள்-திருமகள், நிலமாது-நிலமகள், எனும்—,தேவிமாரொடுஉம்-தேவியர்களோடும்;—தேவர்கள் யாவர்க்குஉம் - எல்லாத்தேவர்களுக்கும், ஆவிஉம்-உயிரும், அறிவுஉம் - ஞானமும், முதல்(உம்)-ஆதியும், ஆயவன்-ஆனவனுகிய ஸ்ரீமந்நாராயணனுடைய, மா உலாம் மலர் பாதம்-வண்டுகள் (தேனை யுண்ணும்பொருட்டு) உலாவுகின்ற தாமரை மலர்போன்ற பாதங்களை, வணங்கினுள்—; (எ - று.)

தேவிமாரொடுமுள்ள முதலாயவன் பாதங்களைக் கோசலை வணங்கினுளென்பதாம். [3]வாவிமாமலர் என்ற பாடத்துக்கு, வாடாமலரென்பார் வாவிமாமலர் என்றுரென்க. தேவர் முதலிய யாவர்க்கும் ஆவியும் அறிவும் நாதனும் நம்நாராயணனேயாவ னென்பது மூன்றுமடியிற் கூறிய பொருள். ஆவியும் அறிவும் முதலாயவன் - ஆவியும் அறிவும்முதலான பொருளாக இருப்பவன் எனினுமாம். பி-ம்:—[1]அமுதும். [2]அமுதாயவன். (கடு)

கூசு.—வணங்கிப் பெருமானிடத்துக் கோசலை இராமனுக்குத் திருவருள்புரிய வேண்டுதல்.

என்வ யிற்றரு மைந்தற் கினியருள்
[1]ளுன்வ யத்தடுதன் ருனுல கியாவையு
மன்வ யிற்றி னடக்கிய மாயனைத்
தன்வ யிற்றி னடக்குந் தவத்தினுள்.

(இ - ள்.) உலகு யாவைஉம் - எல்லாவுலகங்களையும், மன் வயிற்றின்-பெருமைபெற்ற (தன்) திருவுதரத்துள், அடக்கிய - அடக்கிக்கொண்ட, மாயனை - நாராயணனை, தன் வயிற்றின் - தன்னுடைய வயிற்றிலே, அடக்கும் - அடக்கிய, தவத்தினுள் - தவத்தையுடைய கோசலை,—(அத்தேவர்பிரானைநோக்கி), இனி - இப்பொழுது, என்வயின் தரும் மைந்தற்கு - என்னிடத்துப் பிறந்த ஸ்ரீராமனுக்கு, அருள் - அநுக்கிரகம்புரிவது, உன் வயத்தது-உன்னதீனத்துளது, என்றுள் - என்றுபிரார்த்தித்தனள்; (எ - று.)

இராமபிரானது நன்மை உன்திருவருளாற் குறைவின்றிப் பெருக வேண்டுமெனத் திருமாலினிடத்து வேண்டினளென்க. இந்தச் செய்யுளின் பின்னிரண்டடிகளில், உலகியாவையு மன்வயிற்றினடக்கிய மாயவனென்று ஆதேயத்திற்குப் பெருமையைக் கூறி, அப்படிப்பட்டவனை யடக்கியவயிற்றவளென்று ஆதாரத்துக்கு [ஆதேயம் - தாங்கப்படு பொருள்: ஆதாரம் தாங்கும்பொருள்.] மேன்மையைக் கூறியதனுல், இது **பெருமையணி**: ஊழிக்காலத்துஉறங்கிக்கிடந்த ஆலிலைபோலேயாயிற்று,இவள் வயிறு.அதில், வினையானன்றி இச்சையாலே இவள்தவத்தாற் பிணிப்புண்டு கிடந்தானென்பதுதோன்ற, 'தவத்தினுள்' என்றுர்: இதுபற்றியே, "என்ன நோன்புநோற்றுள் கொலோ விவனைப்பெற்ற வயிறுடையாள்" என்றுர் பெரியோரும். மாயன்-மாயையையுடையவன்; மாயையாவது - கூடாததையுங் கூட்டுவிக்குந்திறம்; அகடித கடநாஸாமர்த்தியம்; பிரபஞ்சகாரணமாகிய பிரகிருதியு

மாம். மாயவன் என்பதற்கும் இதுவே பொருள்: கருநிறமுள்ள வனென்றலு முண்டு. பி-ம்:—[1]உன்வயிற்றது, உன்வயத்தன். (கசு)

கூஎ.—திருமாலை வணங்கியபின், கோசலை தவசியர்க்குக் கோதானங்கள் புரிதல்.

என்றி றைஞ்சியவ் விந்திரை கேள்வனுக்
கொன்று நான்மறை யோதிய பூசனை
நன்றி ழைத்தவ [1]ணல்ல தவர்க்கெலாங்
கன்று டைப்பசு வின்கட னல்கினள்.

(இ - ள்.) என்று—, இறைஞ்சி-வணங்கி, அ இந்திரை கேள்வனுக்கு - அந்த இலக்குமிநாயகனுகிய நாராயணனுக்கு, ஒன்றும் - தகுந்த, நால் மறை ஓதிய பூசனை - நான்குவேதங்களிலுஞ் சொல்லிய ஆராதனையை, நன்று இழைத்து - விசேஷமாகச் செய்வித்து, அவண் - அவ்விடத்திருந்த, நல்ல தவர்க்கு எலாம் - நல்ல தவசிகளுக்கெல்லாம், கன்று உடை பசுவின் கடல் - கன்றையுடைய பசுவின் திரள்களை, நல்கினள்-(தானஞ்) செய்தாள்; (எ-று.)

அவள் நல்ல எனப்பிரித்து, எழுவாயாகவுமாம். பசு - பால்பகாவஃறிணைப் பெயர். கடனல்கினள் என்பதைக் கடன் நல்கினர் என்று பிரித்து, பசுவின் என்பதிலுள்ள 'இன்'சாரியையைக் கடன் என்பதனோடு கூட்டி, பசு-பசுவை, கடனின் - முறைப்படி, நல்கினள் என்று உரை கூறினரு முளர். பி-ம்:—[1]நல்கித். (கஎ)

கூஅ.—கோசலை அந்தணர்க்குப் பலவகைத் தானங்களைப் புரிதல்.

பொன்னு மாமணி யும்புனை சாந்தமுங்
கன்னி மாரொடு காசினி யீட்டமு
மின்ன யாவையு மீந்தன ளந்தணர்க்
கன்ன[1]முந்தளி ராடையு நல்கினள்.

(இ - ள்.) அந்தணர்க்கு வேதியர்களுக்கு, பொன்உம் - பொன்னையும், மா மணிஉம் - பெருமைபெற்ற நவரத்நங்களையும், புனை - பூசுதற்குரிய, சாந்தம்உம் - சந்தனத்தையும், கன்னிமாரொடு - பெண்களையும், காசினி ஈட்டஉம்-பூமியின் கூட்டத்தையும், இன்ன - இவைபோல்வனவாய, யாவைஉம் - எல்லாவற்றையும், ஈந்தனள் - கொடுத்தாள்; (பின்னும்), அன்னம்உம்-அந்நத்தையும், தளிர் ஆடைஉம்-தளிர்போன்றுள்ள வஸ்திரத்தையும், நல்கினள்-கொடுத்தாள்; (எ - று.)

முதலில் நற்றவர்களுக்குத் தானஞ் செய்து, பின் மற்றவர்களுக்கெல்லாம் பொன்முதலிய கணக்கிறந்தன தந்து அன்னவஸ்திராதிகளும் அளித்தனளென்க. கன்னிமார், மார்-பலர்பாற்பெயர்விகுதி. உம்மைகள்-எண்ணுப் பொருளன. மா-உரிச்சொல்; மஹாஎன்னும் வடமொழிச்சிதைவுமாம். நவரத்நங்களாவன—கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்

கம், முத்து, வைடூரியம், வைரம்என்பன. சாந்தம், காசினி-சந்தநம், காஶ்யபீ என்னும் வடசொற்களின் சிதைவு; காஶ்யபீ - பரசுராமனால் கஶ்யப முனிவனுக்கு யஜ்ஞதக்ஷிணையாகக்கொடுக்கப்பட்டது. ஈட்டம் - தொழிற்பெயர்; ஈண்டு - முதனிலை. 'இவை போன்ற தானங்கள் - பூதானம், தானியதானம் முதலியன. அந்தத்தை அணவுவார்-அந்தணர்: என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பாரென்றவாறு; "அந்தணரென்போரற வோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்றவாறு அழகியதட்பத்தை [அருளை] யுடையாரென ஏதுப்பெயராகவு மாம். பி-ம்:—[1]தானமும். (கஅ)

## கக.—திருமாலை வணங்கி வலஞ்செய்து பின் கோசலை நோன்புகள் தொடங்குதல்.

நல்கி நாயக னாண்மலர்ப் [1]பாதத்தைப்
புல்லிப் போற்றி வணங்கிப் [2]புரையிலா
மல்லன் [3]மாளிகைக் கோயில் வலங்கொளாத்
தொல்லை நோன்புகள் யாவுந் தொடங்கினாள்.

(இ - ள்.) நல்கி - (அங்ஙனம்) தானஞ்செய்து, நாயகன் - அவ்வரங்க நாதனது, நாள் மலர் பாதத்தை-அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடிகளை, புல்லி - தழுவி, போற்றி - (பலவகையாகத்) துதித்து, வணங்கி - சேவித்து, கோயில் - அவ்வாலயத்தை, வலம்கொளா - பிரதக்ஷிணஞ்செய்து, (பின்), புரை இலா - குற்றமற்ற, மல்லல் - வளப்பம்பெற்ற, மாளிகை - அரண்மனையில், தொல்லை - பழைய, நோன்புகள் யாஉம்-விரதங்களெல்லாவற்றையும், தொடங்கினாள் - (செய்யத்) தொடங்கினாள்; (எ - று.)

தானங்களெல்லாஞ் செய்தது கோயிலிலேயே யென்க. கோசலை அங்ஙனம் தானஞ்செய்தபின் மீண்டும் அத்திருமாலின் பாதங்களைச் சென்று அடைந்து வணங்கி வலஞ்செய்து தன்னிருக்கை சேர்ந்து நோன்புகள் நோற்றிருந்தனளென்க. இக்குலத்துதித்த அரசர்க்கெல்லாம் முடிசூட்டுங்கால் அவ்வவர் தாய்மார் செய்துவந்த நோன்புகளென்பார் 'தொல்லைநோன்புகள்' என்றார். மாளிகைக்கோயில் - அரண்மனையிலுள்ள எம்பிரான்கோயி லென்னவுமாம். 'நல்கித்தொடங்கினாள்' என்பவற்றுக்கு எழுவாய் வருவிக்க; சென்ற பாடலிலும் இங்ஙனமே. இப்பாடல் சிலபிரதியிலில்லை. பி - ம்:—[1]பாதங்கள். [2]புரையிலாள். [3]மாமணி. (கக)

மந்திரப்படலம் முற்றிற்று.

## உ.—ஆவது மந்தரை சூழ்ச்சிப் படலம்.

ஸ்ரீராமபட்டாபிஷேகத்தையறிந்து, கைகேயியின் தாதியாகிய மந்தரையென்பாள் கைகேயிக்குக் கலகஞ்செய்த கதையைச் சொல்லுஞ் சிறிய பிரிவென்பது பொருள். (மந்தரை - மனத்தைக்கலக்குபவள் என்று காரணப் பொருள்படும் மந்தரா என்ற வடசொல்லின் திரிபு: இவள்—கைகேயியின் பாங்கி. சூழ்ச்சியென்பது-சுழற்சி: சூழ்வருவானைச் சுழல்வருமென்பவாகலின்; அஃதாவது-மனத்தடுமாற்றம். அது விசாரம், ஆலோசனை; இது இப்பொருட்டாதல் "சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்," "சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல்," "சொல்லாறு கேளானனி சூழ்ச்சியுட்டோற்றவாறும்" என்பவற்றானு முணர்க. இங்கே சூழ்ச்சி-துராலோசனை.) சிலபிரதிகளில், இந்தப்படலத்துக்கு **மந்தரைப்படலம்** என்று பேர்காணப் படுகின்றது.

தசரதசக்கரவர்த்தி சோதிடர்களை நோக்கி 'நல்லநாளையாராய்ந்து சொல்லுக' என்று வினவ, அச்சோதிடர்களும் ஆராய்ந்து 'நாளைக்கு நல்லநாள்' என்றாராக, பிறகு சக்கரவர்த்தி வசிட்டனை வரவழைத்து 'மகுடாபிஷேகத்திற்கு ஏற்ற நாள் நாளைக்கு ஆதலால், இராமபிரானுக்கு முதனாளே செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து உறுதிப்பொருளையும் உபதேசிக்க' என்ன, வசிட்டனும் உவகை மேலிட்டவனாய் இராமபிரானிருக்குமிடஞ் சென்று தன்னை வணங்கி வழிபட்ட அப்பிரானை நோக்கி, 'உத்தம! நாளைக்கு மன்னவன் உனக்கு முடிசூட்டப்போகின்றான்: ஆதலால், சில உறுதிப்பொருள் கூறுகின்றேன்' என்று சிறந்த உபதேசமொழிகள் பலகூறிப் பின்பு அவ்விராமபிரானோடு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் கோயிலுக்குச்சென்று அப்பிரானுக்குத்திருமஞ்சனம் முதலியன செய்து வழிபட்டுப் பிறகு இராமபிரானுக்கு மகுடாபிஷேகதினத்துக்கு முன்னாள் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து அப்பால் மன்னவனுக்கு அறிவிக்க, அத்தசரதமன்னவன் நகரத்தை யலங்கரிக்குமாறு பறைசாற்றித் தெரிவிக்கும்படி கட்டளையிட, வள்ளுவர் தசரதனது அக் கட்டளையைப் பறைசாற்றித் தெரிவித்தனர். இராமபிரானுக்கு மணிமுடிபுனையுந் திருவிழா நாளைக்கு என்றதைக் கேட்ட நகரத்தார் யாவரும் பெருங் குதூகலத்துடன் நகரத்தை யலங்கரிக்கலாயினர். இராமன் பாலகனாயிருக்கையில் சுண்டுவில்லில் மண்ணுண்டை வைத்துத் தன் கூனின் மேலெய்ததனால் அவன்மீது கறுவுகொண்டிருந்த கூனியானவள் நகரத்தவர் அங்ஙனம் பேரார்ப்பரவத்துடன் நகரத்தை யணிவதைக் கண்டு, இராம பட்டாபிஷேகத்தையுணர்ந்து மனம்பொறாது வெதும்பி, கைகேயியின் அரண்மனைக்குச் சரேலென்றுபோய் அணையிற் பள்ளிகொண்டிருக்கும் அக் கைகேயியை விரைவிலணுகித் துயின்றுகொண்டிருந்த அவளை யெழுப்பி, 'பெருந்துயரம்நேரவிருக்கையிலும் இங்ஙனம் துயில்வது தகுதியோ?' என்று கூறி இராமன் பட்டம் புனையப்போவதைத் தெரிவிக்க, கைகேயி அகமகிழ்ந்து சிறந்ததோராரத்தை அந்தக் கூனிக்குத் தந்தனள். அப்போது அந்தக் கூனி

அதனைக் கழற்றி யெறிந்துவிட்டுப் பலவகைத் துர்ப்போதனைகளாற் கைகேயி யின் மனத்தைக் கலக்க, முதலில் மந்தரையின் பேச்சுக்குச் சிறிதும் இணங் காதிருந்த கைகேயி பிறகு மனங் கலங்கி அவள் பேச்சுக்கு இசைந்து அவளை நோக்கி, 'இப்போது யான் செய்யவேண்டிய உபாயம் யாது?' என்ன, முன்னே சம்பராசுரயுத்தத்திலே உதவியதற்காக மன்னவன் இரண்டுவரங் கள் உனக்குக் கொடுத்திருக்கின்றானே, அவற்றில் ஒன்றினால் இராமனைப் பதினான்குவருஷம் காட்டிற்குச் செல்லவும்,மற்றொரு வரத்தினால் பரதனுக்கு முடிசூட்டவும் வேண்டுவாய்' என்று உபாயங்கூறினாள். அங்ஙனம் உபாயங் கூறிய கூனியைக் கைகேயி புகழ்ந்து கொண்டாடிச் சற்கரித்து அனுப்பி விட்டுப் பின் தன் ஆபரணங்களையெல்லாங் களைந்தெறிந்து தலைவிரி கோலத் துடன் பூமியின்மீது புரண்டவண்ணம் மூதேவிபோற் கிடந்தன ளென்பது, இப்படலத்திற் கூறும் பொருள்.

வேறு.

க.—சோதிடர்களை முடிபுனைய நல்லநாள் கூறுமாறு தசரதன் வினவுதல்.

கடிகமழ் தாரினான் [1]கணித மாக்களை
[2]முடிவுற நோக்கியோர் [3]முகமன் கூறிப்பின்
வடிமழு வாளவற் கடந்த மைந்தற்கு
முடிபுனை [4]முதன்மைநாண் மொழிமி னென்றனன்.

(இ - ள்.) (கணிதரை ஒருங்குகொண்டு ஒருமண்டபத்தின் மருங்குபோ ன),கடி கமழ் தாரினான்-வாசனைவீசுகின்ற மாலையையுடைய சக்கரவர்த்தி,— கணிதம் மாக்களை-அச்சோதிடநூல்வல்லோரை, முடிவு உற நோக்கி - கடை பொருந்தப்பார்த்து, ஓர் முகமன் கூறி - (முன்னே) சிறப்பு வார்த்தையைச் சொல்லி, பின் - பின்பு, 'வடி மழு வாளவன் கடந்த மைந்தற்கு - கூர்மை பொருந்திய மழுவாயுதத்தையுடையவனை [பரசுராமனை] வென்ற வீரனாகிய இராமனுக்கு,முடி புனை முதன்மை நாள்-முடிசூட்டுதற்குஉரிய சிறந்த நாளை, மொழிமின் - சொல்லுங்கள்,' என்றனன் - என்றான்; (எ - று.)

இச்செய்யுள் "உரைதெரிகணிதரை யொருங்குகொண்டொரு, வரை பொருமண்டப மருங்குபோயினான்" என்று வந்த அஅ - ஆஞ் செய்யுளோடு தொடர்புடையது. கணிதமாக்கள் - சோதிடர். மாக்கள் - மக்களென்பதன் விகாரம். மாக்களெனப்படுவார் மனவுணர்ச்சியில்லாதார்; மக்களெனப்படுவார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோரறிவுமுடையார்; இதனை "மாவு மாக்களுமையறிவினவே," "மக்கடாமேயாறறிவுயிரே" என்னும் மரபியற் சூத்திரங்களானுமுணர்க; ஆதலின், இவரை மாக்களென்பது பொருந்தாமை தெற்றெனவுணர்க. இனி இச்சோதிடர் கூறுஞ்சோதிடம் பயன்படாமை பற்றிக் கவி 'மாக்கள்' எனப் பழித்துக்கூறினா ரென்னலுமாம். முடிவுற நோக்கி - நன்குநோக்கியென்றபடி. 'பின்' என்றதனால், 'முன்' என்பது வருவிக்கப்பட்டது. வாள் - இங்கு ஆயுதமென்னும்மாத்திரையாய் நின்றது.

மழு ஆளவன் எனப் பிரித்து, மழுவையாளுதலையுடையவன் என்றுமாம். "மெல்லெழுத்து மிகுவழி" என்னுஞ் சூத்திரத்து "உயர்திணையருங்கி னொழியாதுவருதலும்" என்றதன்கண் ஒழியாது என்னும் இலேசால் வாளவனை என்னும் உருபுதொக்கது. வடிமழுவாளவற் கடந்தமைந்தனென அவன் இளமையிற்புரிந்த ஆண்டொழிலையெடுத்துக் கூறவே, முடிபுனைந்து மூவுலகுங் காக்கும் வீரமுடையனென்பது கூறியதாயிற்று. கீழ் எகூ-ஆஞ் செய்யுளில் "மழுவினாற் பொருதுபோக்கிய, சேவகன்சேவகஞ் செகுத்தசேவகற்கு, ஆவ இவ்வுலகம்" என வந்ததுங் காண்க. பி-ம்:—[1]கடிகை. [2]முடியுற. [3]முதன்மை. [4]கடிகை. இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. (௧௦௦)

௨.—நாளை நல்லநாளென்று கணிதமாக்கள் கூறவே, தசரதன் வசிட்டனை வரவழைத்தல்.

பொருந்துநா ளை[1]யுன் புதல்வற் [2]கென்றலுந்
திருந்தினா [3]ரினியசொற் கேட்ட செய்கழற்
பெருந்திண்[4]மா லியானையான் பிழைப்பில் [5]செய்தவ
மருந்தனான் வருகென வசிட்ட னெய்தினான்.

(இ - ள்.) திருந்தினார் - (நூல்களில் தேறினவராகிய முகூர்த்தவிதானிகள், 'உன் புதல்வற்கு-உனது புத்திரனுக்கு (ப்பட்டாபிஷேகஞ் செய்தற்கு), பொருந்தும்-(எல்லாநன்மைகளும்) பொருந்திய,நாள்-முகூர்த்ததினம், நாளை-நாளைக்கேயாகும்', என்றலும் - என்று சொன்ன வளவில்,—இனிய சொல் கேட்ட-அந்த இனிமையான வார்த்தையைக் கேட்ட, செய் கழல் - செம்மையாகிய வீரக்கழலையணிந்த, பெரு திண் மால் யானையான்-பெரிய வலிய மதயானைபோன்ற சக்கரவர்த்தி, 'பிழைப்பு இல் செய் தவம்-குற்றமில்லாத தவத்தைச்செய்துள்ள, மருந்து அனான்-தேவாமிருதம்போற் சிறந்தவனான, வசிட்டன் - வசிட்டபகவான், வருக - வருவானாக,' என-என்று கூற, எய்தினான்-(அம்முனிவன்) வந்தான்; (எ - று.)

விரைவில் இராமபிரானுக்கு முடிசூட்டவேணுமென்று கருதியிருக்கையில், 'உன்புதல்வற்குப் பொருந்துநாள் நாளை' என்று முகூர்த்தவிதானிகள் சொல்லியதனால் 'இனிய சொல்' என்றார். முகூர்த்தவிதானிகள்-முகூர்த்தம் விதிப்பவர். கழல் - வீரர்காலணி; அது "வீரத்தின் வீக்கியகழலை, யாடவர் கான்மிசையணிவடம்" என்பதனாலறிக. செம்பொற்கழலாதலால்'செய்கழல்' என்றார்; செம்மையின்'மை'போய் முன்னின்ற மெய் திரிந்தது; வினைத்தொகையாய்க் கட்டியகழல் என்றும்,கழல்-ஆகுபெயராய்,அழகியபாதங்களென்றுமாம். வசிட்டன் - ஞானம்தன்னிடத்துக்குடிகொண்டவன். பி-ம்:—[1]கின். [2]என்றனர், என்றுவந்து. [3]அன்ன. [4]மால்யானை. [5]செய்தவம் வருந்தினான். ()

ந.—'நாளைக்குப் பட்டாபிஷேகமாதலால் இன்று செய்விக்கவேண்டிய சடங்குகளை இராமனுக்குச் செய்விக்க' என்று தசரதன் சொல்லுதல்.

நல்லியன் மங்கல நாளு நாளையவ்
வில்லிய றோளவற் [1]கின்று வேண்டுவ
வொல்லையி [2]னியற்றிநல் லுறுதி [3]வாய்மையுஞ்
[4]சொல்லுதி [5]பெரிதெனத் தொழுது சொல்லினான்.

(இ - ள்.) (அப்பொழுது சக்கரவர்த்தி வசிட்டனை நோக்கி), 'நல்இயல் மங்கலம் நாள்உம்நாளை-நல்லமுகூர்த்தத்தையுடைய சுபதினமும்நாளைக்கே: (ஆதலால்), அ வில் இயல் தோளவற்கு-அந்தக்கோதண்டம்பொருந்திய புயங் களையுடைய இராமனுக்கு,இன்று-இன்றையதினம்,வேண்டுவ-செய்யவேண்டு வனவாகிய சடங்குகளை, ஒல்லையின்-விரைவாக, இயற்றி-செய்து,நல் உறுதி வாய்மைஉம் - மிக்க நன்மையைத்தருவனவாகிய உபதேசவார்த்தையையும், பெரிது சொல்லுதி-மிகுதியுஞ்சொல்லுவீராக,' என-என்று, தொழுது-அஞ் சலிசெய்து, சொல்லினான் - சொன்னான்; (எ - று.)

வில்லியல்தோளென்றது-சிவனுடையவில்லை யொடித்ததற்கும், விஷ் ணுவினதுவில்லை வளைத்ததற்குங் குறிப்பு. மகுடாபிஷேகத்து முன்னளிற் செய்யவேண்டிய விரதம்முதலியவைகளை இராமனுக்குச் செய்வித்து, இராச் சியத்தை நடத்தவேண்டிய முறைமையைப்பற்றி உறுதிபயக்கும் நீதிகளையும் உபதேசிக்குமாறு வசிட்டனை வேண்டினன் தசரத னென்க. பட்டங்கட்டுப வர்க்குப் பலவகை அரசநீதிகளை யுபதேசித்தல், இயல்பு: அங்ஙனம் உபதே சிப்பதைப் பலநூல்களிலுங் காணலாம். தசரதன் தானே பலவகைநீதிகளை யுபதேசித்தனனென்று முதனூல் கூறும். பி-ம்:—[1]ஈண்டு, என்று. [2]இயற் றிய. [3]வார்த்தையும். [4]சொல்லுதிர்,சொல்லுக. [5]நீயென, போயென. (௧௦௨)

ச.—இராமபிரானது மாளிகைக்கு வசிட்டன்செல்ல, இராமன் முனிவனை யெதிர்கொண்டு தன்னிருக்கைசேர்தல்.

முனிவனு முவகையுந் தானு முந்துவான்
மனுகுல நாயகன் [1]வாயின் [2]மன்னினு
னனையவன் வரவுகேட் டலங்கன் [3]மார்பனு
மினிதெதிர் கொண்டுதன் [4]னிருக்கை யெய்தினான்.

(இ - ள்.) முனிவன்உம் - வசிட்டமுனிவனும், உவகைஉம் தான்உம் முந்துவான்-சந்தோஷமுந் தானும் முற்பட்டுச்செல்பவனாய், மனு குலம் நாய கன்-வைவசுவதமனுவினதுவமிசத்திற் பிறந்தவனாகிய ஸ்ரீராமனது, வாயில் மன்னினான் - மாளிகைவாயிலை யடைந்தான்; அனையவன் வரவு கேட்டு - அம்முனிவனதுவரவைக் (கடைகாப்பாளர் சொல்லக்)கேட்டு, அலங்கல் மார் பன்உம்-மாலையையணிந்த மார்பையுடைய ஸ்ரீராமனும், இனிது எதிர்கொ

ண்டு-இனிதாக எதிர்கொண்டு (எழுந்தருளப்பண்ணி), தன் இருக்கை - தன் னிருப்பிடத்தை, எய்தினன் - அடைந்தான்; (எ - று.)

வசிட்டமுனிவன் தேரின்மீது ஏறியவண்ணம் இராமபிரானது அரண்மனையினுள்ளே சென்றனனென முதனூல் கூறும். முனிவனு முவகையுந் தானு முந்துவான் - முனிவன் மிக்ககளிப்போடு விரைவிற்சென்றென்றபடி. முந்துவான் - முற்றெச்சம். அலங்கல்-தொழிலாகுபெயர். பி-ம்:—[1]வாயல். [2]நண்ணினன், முன்னினன். [3]வீரனும். [4]கோயில். (௩௦.)

## வேறு.

### ரு.—நாளைக்கு உனக்குப் பட்டாபிஷேகமென்று வசிட்டர் தெரிவித்தல்.

[1]ஒல்க லில்தவத் துத்தம னோதுநூன்
மல்கு [2]கேள்விய வள்ளலை நோக்கினன்
புல்கு காதற் புரவலன் போர்வலாய்
நல்கு நானில நாளை [3]நினக்கென்றான்.

(இ - ள்.) ஒல்கல் இல் தவத்து - தளர்ச்சியில்லாத தவத்தையுடைய, உத்தமன்-உத்தமனாகிய வசிட்டன், ஓதும் நூல்-கற்றற்குஉரிய நூல்களையும், மல்கு கேள்விய - நிறைந்தகேள்வியையுமுடைய, வள்ளலை - அவ்விராமனை. நோக்கினன்-பார்த்து, 'போர் வலாய்-யுத்தத்தில் வல்லவனே! புல்கு காதல் புரவலன்-(நின்னிடத்து) விருப்பத்தையுடைய அரசன், நினக்கு - உனக்கு, நாளை - நாளைக்கு, நானிலம் - பூமியை, நல்கும்-கொடுப்பன்', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

அரசன் அன்போடு உனக்கு நானிலத்தைத் தருதலால், அவனது அன்புபெருக நீ நானிலத்தையாளவேண்டுமென்பான் 'புல்கு காதற் புரவலன் நல்கு நானிலம் நாளை நினக்கு' என்றும், உன் தந்தையின்வேண்டுகோளையும் மறுக்காமல் நிறைவேற்றவேண்டு மென்பான் 'வள்ளல்' என்றும், ஆளவல்ல வல்லமையுள்ளவன் நீ யென்பான் 'போர்வலாய்' என்றுங் கூறினன். கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்; கற்றவழி அதனினுய அறிவை வலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனையுண்டாக்குதலானும் இது நூலின்பின் வைக்கப்பட்டது. வள்ளல் - வரையாது கொடுப்பவன். நானிலம் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; நான்காகிய நிலத்தினையுடையது; ஆகுபெயருமாம். நான்கு நிலங்களாவன—குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்பவைகளில், பாலைநீங்க நன்மக்கள் குடியிருப்பதற்குரிய மற்ற நான்குமாம்; பாலைக்கு நிலமில்லை: "நடுவணைந்திணை நடுவணதொழியப், படுதிரை வையம் பாத்தியபண்பே," "மாயோன் மேய காடுறையுலகமுஞ், சேயோன் மேய மைவரையுலகமும், வேந்தன்மேய தீம்புனலுலகமும், வருணன்

மேய பெருமணலுலகமு, முல்லைகுறிஞ்சி மருதநெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும்படுமே'' என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார். "நானிலம் வாய்க்கொண்டு நன்னீ ரறமென்று கோதுகொண்ட, வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்பாலை'' என்பதும் இக்கருத்தேபற்றி வந்தது. நானிலம் - நாற்கடல்சூழ்ந்த நில மெனவுரைப்பாருமுளர். கேள்விய - குறிப்புப் பெயரெச்சம். பி - ம்:—[1]ஒல்கிலாத். [2]கேள்வியவ்வள்ளலே, கேள்வியன்வள்ளலே. [3]நினக்கென. (௧௦௪)

௬.—இராமனைநோக்கி, வசிட்டன் உறுதிப்பொருளைக் கூறுவேன் எனல்.

என்று பின்னு மிராமனை [1]நோக்கிநா
னொன்று கூறுவ [2]துண்டுறு திப்பொரு
ளன்று கேட்டுக் கடைப்பிடி [3]நன்கெனாத்
துன்று [4]தாரவற் சொல்லுதல் மேயினான்.

(இ - ள்.) என்று - என்று சொல்லி, பின்உம்—, இராமனை நோக்கி - இராமனைப்பார்த்து, 'நான் கூறுவது - நான் சொல்லவேண்டுவதாகிய உறுதி பொருள் ஒன்று - நன்மையைத்தருவதாகிய ஒருவிஷயம், உண்டு - உளது; (அதனை), நன்று கேட்டு - நன்றாகக்கேட்டு, நன்கு கடைப்பிடி - நன்றாய் உறுதியாகக்கொள்', எனா - என்று, துன்று தாரவன் - நெருங்கியமாலையையுடைய அவ்விராமனைக்குறித்து, சொல்லுதல் மேயினான் - (வசிட்டன்) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—உறுதிப்பொருள் கூறுவதை மேற்பதினைந்து கவிகளிற் காண்க.

'நானொன்று கூறுவதுண்டுறுதிப்பொருள்' என்றதனால், இதனை அலட்சியஞ் செய்யலாகா தெனக் குறிப்பித்தபடியாம். ஒன்று என்பதை உறுதிப் பொருளோடுகூட்டி, வினைத்தொகையாக, ஒன்று - பொருந்திய [கூறவேண்டுவதாகிய], உறுதிப்பொருள் உளது எனினுமாம். கேட்டவரெல்லாம் அவ்வாறு நடத்த லரிதாதலின், 'நன்குகடைப்பிடி' என்றான். பி ம்:—[1]நோக்கினான். [2]ஒன்று. [3]நன்றெனத். [4]தாரவன். (௧௦௫)

எ.—இதுமுதற் பதினைந்துகவிகள் - இராமபிரானுக்கு வசிட்டன் கூறிய உறுதிமொழிகளைத் தெரிவிக்கும்.

† கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் [1]பேணுதி யுள்ளத்தால்.

இதுமுதல் "ஏனைநீதி'' (உஉ) என்னுங் கவியளவும் - ஒருதொடர்.

---

† "தைவாதீநம் ஜகத்ஸர்வம் மந்த்ராதீநம்துதைவதம்-தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம் ப்ராஹ்மணா மம தேவதா'' என்று ஸ்ரீமஹாபாரதத்திலே ஸ்ரீ க்ருஷ்ணபகவான் அருளிச்செய்துள்ளது கருதத்தக்கது. இதன் பொருள் - உலகமுழுதுந் தெய்வத்தின்வயத்தது; அத்தெய்வம் மந்திரத்தின் வயத்தது; அம்மந்திரம் அந்தணர் வயத்தது;அவ்வந்தணர் எமக்குக் கடவுளாவ ரென்பது.

(இ - ள்.) அந்தணர் - வேதியர்,-கரிய மாலின் உம்-கருநிறத்தையுடைய திருமாலைக்காட்டிலும், கண் நுதலானின் உம் - நெற்றிக்கண்ணனாகிய பரமசிவனைக்காட்டிலும், உரிய தாமரைமேல் உறைவானின் உம் - (இருத்தற்கு) உரிய (திருமாலினது திருவுந்திக்) கமலத்தில் வசிக்கின்ற பிரமதேவனைக் காட்டிலும், விரியும் பூதம் ஓர் ஐந்தின் உம் - விரிகின்ற ஒப்பற்ற பஞ்சபூதங்களைக்காட்டிலும், மெய்யின் உம் - சத்தியத்தைக் காட்டிலும், பெரியர்-பெருமையையுடையர்; (ஆதலின் அவ்வந்தணரை), உள்ளத்தால் பேணுதி - நன் மனத்தோடு ஆதரிப்பாயாக; (எ - று.)

பூதமைந்து - இலக்கணையால், பாஞ்சபௌதிகமயமான லோகம்: இது வடிவத்தாற்பெரியது. அந்தணரதுபெருமை இந்தவுலகத்திலும்அடங்காது; ஏனெனின் வானுலகத்துத் தேவர்களினும் பெரியர் அந்தணரென்று நூல்கள் ஓதுதலாலென்க. அந்தணர் பெருமையைக் கூற வந்தவர் சத்தியம் மிகச் சிறந்ததென்று அதன்பெருமையையும் பெற வைத்தார். மெய்யினும்பெரியர் அந்தணரென்று அந்தணரைச் சார மெய்யை வைத்தது, அவர்க்குச் சத்தியம் வேண்டுமென்பதைக் குறிப்பிக்கும். மும்மூர்த்திகளெனவே, பிரபஞ்ச காரணங் கூறியதாயிற்று;விரியும் பூதமோரைந்தெனவே, காரியமாகிய பிரபஞ்சங் கூறியதாயிற்று. மெய் - பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகிய சத்தியம்: இவையனைத்தினும் உயர்ந்தோர் அந்தணரெனவே, அவரையன்றி உலகம் நின்று நிலவாதாதலின், உலகம்அளிக்கும்அரசர்க்கு அவரைப் பேணுதல் இன்றியமையாததென்றதாயிற்று. பூதமைந்து - நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்பன. உள்ளத்தால் என ஆலுருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. உரிய - உரிமையான எனினுமாம். பி - ம்:—[1]பேசுதி. (௧0௬)

௭. அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் [1]தேவரி
[2]னொந்து ளாரையு [3]நொய்[4]துயர்ந் தாரையு
மைந்த வெண்ண வரம்பு[5]முண் டாங்கொலோ.

(இ-ள்.) மைந்த - குழந்தாய்! அந்தணாளர்-அந்தணர், முனியஉம்-கோபிக்கவும், சிந்தையால் - மனத்தால், அவர்—, அருள் செய்யஉம்-கருணைபுரியவும், தேவரில்-தேவர்களுள், நொந்து உளாரைஉம் - வருந்தியிருப்பவரையும், நொய்து உயர்ந்தாரைஉம் - விரைவாக உயர்வுபெற்றவரையும், எண்ண - கணக்கிட,வரம்புஉம் உண்டுஒ-அளவும்இருக்கின்றதோ?[இல்லையென்றபடி].

தேவர்களில் அந்தணரின்முனிவால் இழிந்தோரும் அநுக்கிரகத்தால் மேன்மையடைந்தோரும் பலர் காணப்படுகின்றனரென்று காரணங்காட்டிக் கீழ்ச்செய்யுளில் தேவரைக்காட்டிலும்பெரியர் அந்தணரென்றதனை நிலைநாட்டுகின்றான் வசிட்டனென்க. அருளிக்கூறினும் வெகுண்டுகூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் நிறைமொழிமாந்தராதலின், இவ்வாறுகூறினர். நொய்து என்பதை நொந்துளாரோடுங்கூட்டுக. நொந்துளார்க்கு - துருவாசமுனிவன்

சாபத்தினால் இந்திரன் தன்பதமிழந்து தாமரைத்தண்டி லொளித்ததும், இந்திர பதவிபெற்ற நகுஷன் அகத்தியமுனிவன்சாபத்தினால் மலைப்பாம்பாயின மையும்; அருளினால் மேம்பட்டதற்கு-பிருகுமுனிவனால் திருமால் பரம்பொருளென்று விளக்கப்பட்டமையும் விசுவாமித்திரன் பிரமவிருடியானதும் முதலியன உதாரணமாதல் காண்க. ஆங்கு, ஆம், கொல் - அசைகள். பி-ம்:—[1]தேவருள். [2]உந்தினுரையும். [3]நொந்து. [4]உணர்ந்தாரையும். [5]உண்டாகுமோ.()

கூ. [1]அனைய ராதலி னையா[2]விவ் வெய்யதீ
வினையி னீங்கிய [3]மேலவர் [4]தாளினைப்
புனையுஞ் சென்னியை [5]யாய்ப்[6]புகழ்ந் [7]தேத்துதி
[8]யினிய கூறிநின் [9]றேயின [10]செய்தியால்.

(இ - ள்.) அனையர் ஆதலின்-(அந்தணர்) அத்தன்மையராதலால், ஐய-குழந்தாய்! வெய்ய தீவினையின்-கொடியபாவத்தினின்று,நீங்கிய-விலகின,இமேலவர் - இம்மேன்மையையுடைய அந்தணரது, தாளினை - திருவடிகளை, புனையும் சென்னியை ஆய்-அணியும் முடியை யுடையவனாகி, புகழ்ந்து ஏத்துதி-மிகவும் துதிப்பாயாக; (இன்னும்), இனிய கூறி - இனியமொழிகளைச் சொல்லி, நின்று-(நல்லொழுக்கத்தில்) நின்று, ஏயின - (அவர்) ஏவினவைகளைக் கரியங்களை, செய்தி - செய்வாயாக; (எ - று.)

முதலில் அந்தணாளர் பெரியராதலால் அவரைப் பேணவேணுமென்று கூறி, கீழ்ச் செய்யுளால் தேவர்களைக்காட்டிலும் அவர் சிறந்தவரென்பதற்குக் காரணங்கூறி, இதனால் அந்த ஏழாஞ் செய்யுளிற் கூறிய விஷயத்தை முடிக்கின்றான். ஐயவென்பது-மரபுவழுவமைதி. இன்-நீக்கம். சென்னியை, ஐ-முன்னிலையொருமைவிகுதி. ஆல்-அசை. பி-ம்:—[1]அனையது. [2]இவைய நீ, அவ்வெய்யதீ. [3]வேதியர். [4]தாளிணை. [5]வாய். [6]புகன்று. [7]ஏத்திநீ. [8]இனைய. [9]ஏயது. [10]செய்தியே. (கOஅ)

கO. ஆவ தற்கு மழிவ தற் கும்மவ
ரேவ நிற்கும் [1]விதியுமென் றாலினி
யாவ [2]தெப்பொரு [3]ளிம்மையு [4]மம்மையுந்
தேவ ரைப்பர வுந்துணை சீர்த்ததே.

(இ - ள்.) 'ஆவதற்குஉம் - (ஒருவர்) மேம்படுதற்கும், அழிவதற்குஉம்-கெடுவதற்கும், அவர் ஏவ-அவ்வந்தணரேவலின்படி, விதிஉம்-ஊழும்,நிற்கும்-காத்திருக்கும்,' என்றால்—, இனி—, இம்மைஉம் - இப்பிறப்பிலும், அம்மைஉம்-மறுபிறப்பிலும், தேவரை - (பூமி) வானவரான அந்தணரை, பரவும் - கொண்டாடுகின்ற, துணை-அளவு, சீர்த்தது-சிறப்பினையுடையது,—ஆவது-பொருந்திய, எப்பொருள்-எந்தப்பொருள்? [ஏதுவுமில்லை]; (எ - று.)

கீழ் இரண்டுசெய்யுளிற் கூறியதே மனத்திற் படும்பொருட்டு வேறு வகையாகக் கூறப்படுகின்றது. நல்லொழுக்கமுடைய அந்தணர் ஒருவனைப் பார்த்து இவனுக்கு நன்மை பெருகவேண்டுமென்று கூறினாலும் இவன்

அழிந்திடவேண்டுமென்று கூறினாலும், விதியும் அவர் ஏவலின்படி நிற்ப தால் அவ்வந்தணரைக்காட்டிலுஞ் சிறந்தது எப்பொருள்? எதுவுமில்லை; தேவர்களைப்பரவுவது இவ்வந்தணரைப் பேணுவதைக்காட்டிலுஞ் சிறந்த அளவையுடையதாகுமோ? என்பது, பொருளாகும். ஆகூழ், போகூழ் என் பனபற்றி, 'ஆவதற்கு மழிவதற்கும்' என்றான். தெய்வமும் தான் அந்தண ர்க்கு ஏவல் செய்யுமென்பதாம். விதியும்-உயர்வுசிறப்பு. பின்னிரண்டடிகள்- 'யாவதிப்பொருளின்மையத் தன்மையாற்......செய்தியோ' என்றுங் காணப் படுகின்றன. பி-ம்:—[1]வினையும். [2]இப்பொருள். [3]எம்மையும், இம்மைக்கும். [4]அம்மைக்கும், மெய்ம்மைக்கும். (கoக)

கக. உருளு நேமியு மொண்கவ ரெஃகமு
[1]மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்குந்
தெருளு நல்லற மும்மனச் [2]செட்மையு
[3]மருளு நீத்தபி னாவதுண் டாகுமோ.

(இ - ள்.) உருளும் நேமிஉம் - வட்டவடிவாகிய சக்கரத்தையும், கவர் ஒள் எஃகம்உம்-(பகைவருயிரைக்) கொள்ளைபிடுகின்ற ஒள்ளிய மழுவையும், மருள் இல் வாணிஉம்-மயக்கமில்லாத சரசுவதியையும், வல்லவர்-படையா கக்கொண்டு வல்லமைபெற்றவராகிய, மூவர்க்குஉம் - மும்மூர்த்திகட்கும், தெருளும்-தெளிவாகிய, நல் அறம்உம்-நல்ல தருமமும், மனம் செம்மைஉம்- மனத்தினது செப்பமும், அருள்உம்-தயையும், (ஆகிய இவற்றை),நீத்த பின்- விட்டபின்பு, ஆவது - நன்மையாவது, உண்டாகும்ஓ - உளதாகுமோ? [ஆகா தென்றபடி]; (எ - று.)

முத்தேவரும் தாம் மேற்கொண்டுள்ள தொழில் இனிது நிறைவேறு தற்கு அறம் முதலியவற்றைக் கைக்கொண்டிருக்கின்றனர்; எனவே, தன் னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுகின்ற அரசர்க்கு,நல்லறமும் செம் மையும் அருளும் இன்றியமையாவென்றானாயிற்று. "சீலமுந் தருமமுஞ் சிதை வில்செய்கையும், சூலமுந் திகிரியுஞ் சொல்லுந்தாங்கிய, மூலம்வந்துதவிய மூவர்" என்று திருவடிசூட்டுபடலத்து வருவது இங்கு நினைக்கத்தக்கது. எஃகு - ஆகுபெயர்: அம் - அசை. அரியும்அரனும் நேமியையும் எஃகத்தை யுங்கொண்டு துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்தல்போல,வாய்மொழி யைக்கொண்டே அதனைச்செய்தலால், அயனை 'வாணிவல்லவன்' என்றான். முதலில் அந்தணாளரைப் போற்றவேண்டுமென்பதைக் காரணத்தோடு கூறி, இதனால் அறம்முதலிய நற்குணங்களைக் கைக்கொள்ள வேண்டுமென்கிறான். நீத்தபின்-வினையெச்சம். பி-ம்:--[1]மருளும்பாசமும். [2]செய்கையும். [3]அருளின்.

கஉ. சூது முந்துறச் சொல்லிய [1]மாத்துயர்
நீதி மைந்த [2]நினக்கில்லை யாயினு
மேதை மென்பன யாவையு மெய்துதற்
கேது மூல[3]மவையென [4]வோர்தியே.

(இ - ள்.) நீதி மைந்த - நியாயமுறைமையையுடைய குழந்தாய்! சூது முந்துற - சூது முதலாக, சொல்லிய - சொல்லப்பட்ட, மா துயர் - பெரிய துன்பங்கள், நினக்கு இலை ஆயின்உம் - உன்னிடத்தில் இல்லையானாலும், ஏதம் என்பன யாவைஉம்-குற்றமென்னப்பட்ட அனைத்தையும், எய்துதற்கு- அடைவதற்கு, ஓதும் மூலம் - சொல்லப்படுகின்ற காரணம், அவை - அவை யாகும், என - என்று, ஓர்தி - அறிவாயாக; (எ - று.)

சூது முதலிய துயரங்கள் பெருங்குற்றத்தைவிளைக்குமாதலால் என்றும் அவை உன்னிடத்துச்சேராது பார்த்துக்கொள்ள வேண்டுமெனக் கூறியபடியாம். மிக்க துன்பத்தை விளைக்குஞ் சூது முதலியன இன்னவை யென்பதை "வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டம் சூது பொரு, ளீட்டங் காமமோடேழு" என்பதனா னறிக. இவற்றை வடநூலார் வ்யஸநமெனக் கூறுவா ராதலின், 'சூதுமுந்துறச் சொல்லிய மாத்துயர்' என்றார். சூதாடுதல், வேட்டையாடுதல்,பகலிற்றூங்குதல், வம்பளத்தல், ஸ்திரீலோலனாயிருத்தல், குடித்தல், பாட்டு கூத்து வாத்திய முதலியவற்றில் பெருவிருப்ப முள்ளவனா யிருத்தல், வீணனாதிரிச்சல் என்னுங் காமத்தினாலுண்டாகும் பத்துத்துக்கங்களென்றலுமுண்டு.சொல்லிய-செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. நினக்கு - உருபுமயக்கம். யாவினும்-எஞ்சாமைப்பொருளது. பி-ம்:—[1]மாதுயர். [2]நினைந்து புரிவரேல், நினக்கிலையாமெனின், நினைக்கிலை யாயினும். [3]அதுவென. [4]ஓதியே, ஓர்தியால். (கககூ)

கா௨. யாரொ டும்[1]மனக் கோளில தென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
றாரொ டுங்கல்[2]செய் யாதது [3]தக்கபின்
வேரொ டுங்[4]கெடல் வேண்ட[5]லுண் டாகுமோ.

(இ - ள்.) (ஒருவனுக்கு), யாரொடுஉம்-எவரோடும், மனம் கோள்-நெஞ்சில்மாறுபாடு [விரோதம்], இலது - இல்லை, என்ற பின்-, போர் ஒடுங்கும் - யுத்தம் அடங்கும்; தன் புகழ் ஒடுங்காது - அவனது கீர்த்திசுருங்காது [வளரும்]; தார் ஒடுங்கல் செய்யாது - (அவனது) படையும் கெடாது; அது தக்க பின் - அத்தகைய நன்மை யுண்டான பின்பு, வேரொடுஉம் கெடல் - (பகை) வேரொடுகெடுதலை, வேண்டல் - விரும்பவேண்டியது, உண்டாகுமோ—? (எ - று.)

மனத்தின்மாறுபாடே போர்நிகழ்ச்சிக்குக் காரணமாதலால், எவரோடும் மனம்மாறுபாடுகொள்ளாவிடின், போர் உண்டாவதற்கே வழியில்லை: எவரோடும் பொருவதில்லாவிடின் புகழ் குறையுமோ என்று கருதவேண்டா: சந்தியைநாடுவது சாதுக்களின் செயலாதலால், அதனாற் புகழே பெருகும்: மேலும், படைகட்குஞ் சேதமில்லை: யாவரும் நண்பினராகவே யிருத்தலால் பகைவர் வேருடன் அழியவேணுமென்று கருதுதற்கும் இடனில்லை யென்றபடி. இதனால், காரணமின்றிப் பகைகொள்ளாதிருக்கவேணு மெனக் கூறிய

வாறு. புகழாவது - இம்மைப்பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி. பி-ம்:—[1]பணைகோளிலதென்ற, பகைகொள்ளிலனென்ற, மனக்கோளிலதான. [2]செல்லாதது. [3]தந்தபின். [4]கெட. [5]உண்டாகுமே. (கக௨)

கச. கோளு மைம்பொறி யுங்குறை யப்[1]பொரு
ளாளுங் [2]கொண்டு [3]நடுவுறு [4]நோன்மையி
னாளு மவ்வர [5]சேயர சன்னது
வாளின் மேல்வரு மாதவ [6]மைந்தனே.

(இ - ள்.) கோளும் -(தத்தமக்கேற்ற புலன்களைக்) கொள்ளுகின்ற, ஐம்பொறிஉம் - பஞ்சேந்திரியங்களும், குறைய - தணிந்திருக்க, பொருள் - சம்பத்தை, நாள்உம் கொண்டு - தினந்தோறும் ஈட்டி, நடு உறு நோன்மையின் ஆளும்-நடுநிலையோடு பொருந்திய மனவுறுதியோடு ஆளுகின்ற, அ அரசே - அந்த அரசாட்சியே, அரசு - அரசாகும்; மைந்தனே - குழந்தாய்! அன்னது - அப்படிப்பட்ட அரசாட்சி, வாளின்மேல் வரும் மா தவம் - வாளாயுதத்தின் மேல் நின்றுசெய்யும் பெருந்தவ மாகும்; (எ - று.)

ஜனங்களைப் பாதுகாத்தற்குப் பொருள் வேண்டியிருப்பதுபற்றி நாடோறும் வருவாயைப் பெருக்கி ஐம்புலன்களை யடக்கி நடுவுநிலை பொருந்த மனவுறுதியோடு இராச்சியத்தைப் பாதுகாப்பது, வாள்கொண்டு செய்யுந்தவமென்றவாறு. இங்ஙனம் அரசாட்சிசெய்யின் முனிவர் ஐம்பொறிகளை யொறுத்துப் புரியும் தவத்தாற் பெறலாகும் பயனைப் பெறலாமென்பது கருத்து. இதனால், அரசு புரியவேண்டிய வகை உணர்த்தப்பட்டது. கோளும்-கொள்ளுமென்பதன்விகாரம். வாளின் மேல்வரும் மாதவம் என்பதற்கு-வாளைக்கொண்டு ஆள்வதைக் காட்டிலும் சிறந்துள்ளதாகித் தவமென்று சொல்லத் தக்கதா மென்று உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]பெரு. [2]கண்டு. [3]நடுநின்று, நடுக்கற, நடுக்குறு, நகைக்குறு. [4]நோன்பராய், நோன்பினி. [5]எய்தரிது, ஏயரிது. [6]மன்னனே. (ககந)

கரு. உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கு
மிமைப்பி லொட்டமொ ரெட்டுடை யானுக்குஞ்
[1]சமைத்த [2]தோள்வலி தாங்கின [3]ராயினு
மமைச்சர் சொல்வழி யாற்றுத லாற்றலே.

(இ - ள்.) உமைக்கு நாதற்குஉம்-பார்வதிக்குக் கணவனாகிய சிவபெருமானுக்கும், ஓங்கு புள் ஊர்திக்குஉம்-உயர்ந்த கருடவாகனனாகிய திருமாலுக்கும், இமைப்பு இல் நாட்டம் ஓர் எட்டு உடையானுக்குஉம்-இமைத்தலில்லாத ஒப்பற்ற எட்டுக்கண்களையுடைய பிரமனுக்கும், சமைத்த - உள்ள, தோள் வலி - புஜபலத்தை, தாங்கினர் ஆயின்உம்-பெற்றிருந்தாராலும், (அம்மன்னவர்), அமைச்சர் சொல் வழி ஆற்றுதல்-மந்திரிகளினது சொற்படி (காரியங்களைச்) செய்தல், ஆற்றல் - (அவர்க்கு வலிமைத்தருவதாகும்; (எ - று.)

த்ரிமூர்த்தியர்போலத் தோள்வலி பெற்றிருப்பாராயினும் அமைச்சர் சொல்வழி மன்னர் நிற்கவேண்டுமென்று இதனாற் கூறப்பட்டது. உமை - உமா: மலைமகளான இவள் இளம்பிராயத்தில் தவஞ்செய்யச் சென்றபோது பெற்றோர்கள் 'உ[அம்ம]! மா[வேண்டா]' என்று கூறியதுபற்றி, இவட்கு இப்பெயர் வந்தது. முகம் நான்காதலால் கண்எட்டாயின. சமைந்த வெனற் பாலது சமைத்த வென வலிந்து நின்றது. அமைச்சர்=அமாத்யர்; ஆலோசனை சொல்லுமாறு அரசனுடைய அருகிலேயிருப்பவரென்று பொருள். ஆற்றலைத்தருவதனை ஆற்றலென்று உபசரித்தார். பி-ம்:—[1]சமைக்கும். [2]தொல்வினை. [3]தாயினும். (ககச)

கரு. என்பு தோ லுடை யார்க்கு [1]மிலார்க்குந்[2]தம்
வன்[3]ப கைப்புலன் மாசற [4]மாய்ப்பதென்
முன்பு [5]நின்றுயர் [6]மூன்றுல கத்தினு
மன்பி [7]னல்லதொ ராக்கமுண் டாகுமோ.

(இ - ள்.) என்பு தோல் உடையார்க்குஉம் - எலும்பையும் தோலையும் உடையவர்களுக்கும் [மனிதர்க்கும்], இலார்க்குஉம்-அவை யில்லாதவர்களுக்கும் [தேவர்க்கும்], தம் வன் பகை புலன் - தமதுவலியசத்துருவாகிய இந்திரியங்களை, மாசுஅற - குற்றமில்லாமல், மாய்ப்பது - நிக்கிரகிப்பது, என் - யாதுபயனைத் தரும்? முன்பு நின்று உயர் - வெகுகாலமாக [அநாதியாக] உயர்ந்து தோன்றுகின்ற, மூன்றுஉலகத்தின்உம் - மூன்றுலோகங்களிலும், அன்பின் அல்லது - அன்பினாலல்லாமல், ஓர் ஆக்கம் - ஒருசெல்வம், உண்டாகுமோ—? [உண்டாகாது]; (எ - று.)

என்பு, தோல் என்பன - மற்றைத்தாதுக்களுக்கும் உபலக்ஷணம்: அவற்றையுடையார் என்றது-எழுவகைத்தாதுக்களாலமைந்த யாக்கையை யுடைய மானுடரை. இலார் என்றது - அத்தன்மைய யாக்கைய ரல்லாத தேவர்களை. யாவராயினும் அன்பி லார்க்கு ஆக்கமில்லை யென்பதாம். அன்பு இல்லாவிடின் ஆக்கமறுமென்பதும், அதுதான் மண்ணுலகத்தோர்க்கு அன்றி மற்றையவுலகத்தோர்க்கும் இன்றியமையாததென்பதுந் தோன்ற 'மூன்றுலகத்தினும்' என்றுங் கூறினர். அன்பால் அருளும், அருளால் அறமும், அறத்தால் நற்கதியும் உளவாதல் பற்றி, அன்பே எல்லாவற்றிற்கும் மூலமென்க. இனி என்புதோலுடையார் என்றதற்கு - காயிலைதின்றுந் தீயிடைநின்றுங் கானிலுறைந்தும் ஐம்புலவாசையை ஆசறவறுத்து உடலையுலர்த்தி முற்றத்துறந்த முனிவரெனவும் பொருள்கொள்ளலாம். முற்றத்துறந்த முனிவர்க்கே அன்பு இன்றியமையாதெனின், மன்னுயிரனைத்துந் தன்னுயிர்போலக் காக்கும் மன்னவர்க்குச் சொல்லவேண்டாதாயிற்று. உடையார்க்கும் இலார்க்கும் மாய்ப்பது - நான்கனுருபு வினைமுதற்பொருளில் வந்தது: "ஒன்று மூன்று நான் காறெனு முருபொடு, வருமே வினைமுத லென வகுத்தனரே" என்பது இலக்கணக்கொத்து. பி - ம்:—[1]எவர்க்கும். [2]தன். [3]புலப்பகை.

[4]வாய்ப்பதென், மாய்ப்பதாம், மாய்ப்பரேன். [5]பின்பற்றி, பின்பது, பின் பின்றி. [6]மூவுலகத்தினும். [7]அன்றியோர். (ககரு)

கஎ. வைய மன்னுயி [1]ராகவம் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன [2]மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருள்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ.

(இ - ள்.) வையம் மன் உயிர் ஆக - உலகத்தவர் பெருமையையுடைய உயிராக, அ மன்உயிர் - அந்த நிறைந்த உயிர்களை, உய்ய தாங்கும் - பிழைக்கும்படி தரிக்கின்ற, உடல் அன்ன மன்னனுக்கு உடம்பையொத்த அரசனுக்கு, அறம் கடவாது - தருமத்தைத் தவறாமல், அருள் - கருணை, மெய்யின் - உண்மையாக, ஐயம்இன்றி - சந்தேகமில்லாமல், நின்ற பின் - இருந்த பின்பு, வேள்விஉம் வேண்டும் ஓ - யாகமும் வேண்டுமோ? [வேண்டுவ தில்லை]; (எ - று.)

எனவே, அசுவமேதம் வாஜபேயம் முதலிய யாகங்களாற் பெறும்பயனை, உயிர்கள்மாட்டு அருள் மெய்ம்மையாயிருக்குமாயின் அதுவே தரு மென்ற படி. வையம் - ஆகுபெயர். "தன்னுயி ரமெனை வுலகிற் றங்கிய, மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்" என்றது, முதலிரண்டடியில் ஒரு சார் ஒப்பு நோக்கத்தக்கது. அருள் - அருளானது, மெய்யின் - வாய்மையோடு என்று உரைத்து, அருளும் வாய்மையும் இருக்குமாயின், வேறு வேள்விகள் வேண்டா எனக் கூறினுமாம். உயிரைத்தாங்குதல்-காத்தல். உயிரில்லாதவழி உடல்இல்லாதது போலக் குடிகளில்லாதவழி அரசனில்லை யாதலின், உலகை அரசனுக்கு உயிரெனக் கூறினர். வேள்வியும்வேண்டுமோ எனலால், அருள் மெய்யினில்லாதாயின் அருள்கடந்த அம்மன்னவன் எத்துணை வேள்விகளைப் புரிந்தாலும் அவற்றாற் பயனெய்தா னென்பதும் பெறப்படும். நின்றபின் - இல்லாதுவிட்டபின் என்க. பி-ம்:—[1]ஆகவும். [2]மன்னருக்கு. (ககசு)

கஅ. [1]இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
[2]வினையன் றூயன் விழுமியன் வென்றிய
னினையு நீதி நெறிகட வானெனி
லனைய மன்னற் கழிவு[3]முண் டாங்கொலோ.

(இ - ள்.) (ஒருமன்னவன்),—'இனிய சொல்லினன் - (கேட்பவர்க்கு இனிய) மொழியை யுடையவன்: ஈகையன் - தானத்தையுடையவன்: எண்ணினன் - ஆராய்ச்சியையுடையவன்: வினையன் - முயற்சியையுடையவன்: தூயன் - பரிசுத்தியையுடையவன்: விழுமியன் - சீர்மையையுடையவன்: வென்றியன் - வெற்றியையுடையவன்: நீதி நினையும் - நியாயமுறைமையை நினைப்பவன்: நெறி கடவான் - சன்மார்க்கத்தினின்றும் விலகான்,' எனில் - என்றால், அனைய மன்னற்கு - அத்தகைய அரசனுக்கு, அழிவுஉம் உண்டு ஆம் கொல் - கேடும்உண்டாகுமோ [உண்டாகாது]; (எ - று.)

கீழ்ப்பாடல்களில் அன்பும் அருளும் இன்றியமையாவெனக் கூறிய ஆசிரியர் இச்செய்யுளினால் மன்னவர்க்கு இன்சொல்முதலியன வேண்டுமென்கிறார். இனியசொல் - மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல். ஈகையாவது - வறியராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். எண் - தான் செய்யும் வினைகளை யாராய்ந்துசெய்யுந்திறம்; வலியறிதல், காலமறிதல், இடனறிதல் முதலியன இதனுளடங்கும். வினையாவது - மேற்சேறன்முதல் தேறலீறாய தொழில்; எனவே - இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனாதல்வேண்டு மென்க. விழுமியன் - விழுமமென்னும் பண்படியாகப் பிறந்த பெயர். விழுமம் என்பது இப்பொருட்டாதல் "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்புமிடும்பையும்" என்றதனாலுணர்க. நினையும் நீதி நெறியைக் கடவான் எனவுங் கூட்டிப்பொருள் கூறலாம். இனியசொல் முதலியன உடையனேனும், நீதியிறந்தவழி நிந்தையும் கேடு முண்டாதல்பற்றி'நெறிகடவானெனில்'என்றார். பி-ம்:—[1]இனைய. [2]வினையுந், வினையின். [3]உண்டாகுமே, உண்டாகுமோ. (கஎ)

ககூ. சீல மல்லன நீக்கிச் செம்பொற்றுலைத்
[1]தால [2]மன்ன [3]தனிநிலை தாங்கிய
ஞால [4]மன்னற்கு நல்லவர் நோக்கிய
கால மல்லது கண்ணுமுண் டாகுமோ.

(இ-ள்.) சீலம் அல்லன நீக்கி-நல்லொழுக்கத்தின்பாற் படாதவைகளையகற்றி, செம் பொன் துலை தாலம் அன்ன - சிவந்த பொன்னை நிறுக்கின்ற துலைநாவை யொத்த, தனி - ஒப்பற்ற, நிலை - நடுவுநிலைமையை, தாங்கிய - உடைய, ஞாலம் மன்னற்கு-உலகத்தரசனுக்கு, நல்லவர்-நன்மையையுடைய அமைச்சரின், நோக்கிய-நோக்கம்பெற்ற, காலம் அல்லது-பொழுது அல்லாமல், கண் உம்-வேறேகண்ணும், உண்டாகுமோ-? [இல்லை]; (எ - று.)

நடுவுநிலைமையாவது-பகை, நொதுமல், நண்பு என்னும் மூன்றுபகுதியினிடத்தும் அறத்தின்வழுவாது ஒப்பநிற்கும் நிலைமை; சமன்செய்தலும், சீர்தூக்குதலும், அமைதலும், ஒருபாற்கோடாமையும், ஐயந்தீரப்பொருளை யுணர்த்தலும், மெய்ந்நடுநிலையும், மிகினுங்குறையினும் நில்லாதாகலும் முதலிய பற்றி, நடுவுநிலைமைக்குத் துலாக்கோல் உவமையாக்கப்பட்டது; "சமன் செய்து சீர்தூக்குங்கோல்போலமைந்தொருபாற், கோடாமைசான்றோர்க்கணி" என்றார் நாயனாரும். கரும்பொன், வெண்பொன் முதலிய நிறுக்குங்கால் தாலஞ் சிறிதுகோடினும் அதனான்வரும் ஊதியக்குறைவு சிறிதேயாதலின், இது மிகப் பெரிதெனத் தோன்ற, 'செம்பொற்றுலைத்தாலம்'என்றார். துலை - துலாஎன்னும் வடமொழித்திரிபு. தாலம்-தாலு என்னும் வடமொழிச் சிதைவு. காலம்-வலிமையினால் மிகுந்தவனாய்ப் பகைமேற்சேறலுற்ற அரசனுக்கு அச்செலவுக்கு ஏற்றகாலம்.வெற்றியைக்காண்டற்குக் கருவியாகலின், அது கண்ணெனப்பட்டது. இது, சிலபிரதிகளில் உஉ-ஆவது பாடலாக வுள்ளது. பி-ம்:—[1]தாலு. [2]என்னத். [3]தனிநிலம், தரணியைத். [4]மன்னர்க்கு.

உ0. [1]ஓர்வி னல்வினை [2]யூற்றத்தி னுருரை
[3]பேர்வி றொல்விதி பெற்றுள [4]தென்றரோ
[5]தீர்வி லன்புசெ லுத்தலிற் செவ்வியோ
ரார்வ [6]மன்னவற் [7]காயுத மாவதே.

(இ - ள்.)'ஓர்வு இல் நல் வினை ஊற்றத்தினர்-ஆராய்தற்குஇடமில்லாத நல்லதொழில்களாகிய பற்றுக்கோட்டையுடைய முனிவருடைய, உரை - வார்த்தையை, பேர்வு இல் தொல் விதி (தன்னிலையினின்று) பெயர்தலில்லாத பழைய ஊழும், பெற்று உளது-(அடைந்து) அங்ஙனமேநடக்கின்றது, என்று-என்றெண்ணி, தீர்வு இல் அன்பு-நீங்குதலில்லாத பக்தியை, செலுத்தலின்-(அவரிடம்) செய்வதனால், செவ்வியோர் ஆர்வம்-நன்மையையுடைய அப்பெரியோரதன்பு, அன்னவற்கு-அவ்வாறு பக்திசெலுத்துகின்றவனுக்கு, ஆயுதம் ஆவதே - படைக்கலமாகும்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

தன்னுபதேசத்தை முடிக்கப்போவதனால், முனிவன்,இதனால் இதனைக் கொள்ளவேண்டுமென்றும், அடுத்தசெய்யுளால் தள்ளவேண்டியது இது வென்றுந் தொகுத்துக் கூறுகிறான். ஆர்வமன்னவற் காயுதமாவதே - முற்று மோனை. ஆர்வம் மன்னவற்கு எனவும்பிரிக்கலாம். அவரருள் பகைவரை யழித்தற்குக் கருவியாய்நிற்றலால், 'ஆயுதமாவது' என்றார். பி-ம்:—[1]ஓரின், ஒரும். [2]ஊற்றத்தினால். [3]சோர்விறொல்வினை. [4]அன்று. [5]தீரில். [6]மன்னவர்க்கு. [7]அற்புதம். (கக௯)

உக. தூம [1]கேது [2]புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே.

(இ - ள்.) புவிக்கு-பூமியில், தூமகேது என - வால்நட்சத்திரம் போல, தோன்றிய உண்டான, வாமம் மேகலை மங்கையரால்-அழகிய மேகலாபரணத்தையுடைய மகளிரால், வரும்—, காமம்-காமநோய், இல்லை எனில் - இல்லையானால், கடுங் கேடு எனும்-மிக்ககெடுதியென்கிற, நாமம்-பெயரும், இல்லை; நரகம்உம் இல்லை - நரகத்துன்பமும் இல்லை; (எ - று.)

கீழ் அரசர்க்குஅன்பு இன்றியமையாது எனக்கூறியதனால்,அந்த அன்பு மாதராரிடத்து மிகுதியாகக் கொள்ளலாகாதென இதனால் மறுத்தவாறு. தூமகேது தோன்றுமாயின், பின் பெருங்கேடு விளைதற்கு அது ஓர் உத்பாதமாகுமென்பது நூற்றுணிபு. இங்குக் காமமென்பது - பெண்ணாசையின் மிகுதியை. அதனால் விளையுங்கேட்டினும் பெருங்கேடு பிறிதில்லை யென்றற்கு, 'கடுங்கேடு' என்றான். காமமிகுதி அரசர்க்கு அநர்த்தஹேது என்பதனைச் சச்சந்தன்முதலானார் சரித்திரத்துங்காண்க. மங்கை-வேட்கைபிறந்தபருவத்துப்

பெயர்; மடந்தை, அரிவை, தெரிவை என்பனவும் இவ்வாறே. காமத்தால் வருவன நேரேபகையல்லவாயினும், ஆக்கஞ்சிதைத்தல் அழிவுதலைத்தருதல் என்னுந் தொழில்களாற் பகையோடொத்தலின் இவ்வாறு கூறினர். மேற் கிட்கிந்தாகாண்டத்தில் "மங்கையர்பொருட்டா லெய்து மாந்தர்க்கு மரண மென்றல், சங்கையின் றுணர்தி வாலிசெய்கையாற் சாலு மின்னு, மங்கவர் திறத்தினானே யல்லலும் பழியுமாத, லெங்களிற் காண்டியன்றே யிதற்குவே றேதியாதோ" என்பதும் இதுபற்றி யென்க. நாம் - அச்சமாயின், அம் - அசை. நாமம் என்னும் எச்சவும்மையாற் றழுவப்படும் எஞ்சுபொருட் கிளவி உம்மையில்சொல்லாதலால், அவ்வும்மையில்சொல் அவ்வும்மைத்தொடர்க்குப் பின்சொல்லாது முன்சொல்லப்பட்டது. பி-ம்:—[1]ஏது. [2]தழற்கு, கனற்கு, புகழ்க்கு. (கஉ0)

## உஉ.—உபதேசித்தபிறகு வசிட்டமுனிவன் ஸ்ரீராமனோடு ஸ்ரீமந்நாராயணனது கோயிலுக்குச் செல்லுதல்.

ஏனை நீதி [1]யினியன [2]வையகப்
போன கற்கு விளம்பிப் [3]புலன்கொளீஇ
யான வன்னொடு மாயிர [4]மௌலியான்
றான நண்ணினன் றத்துவ [5]நண்ணினான்.

(இ-ள்.) தத்துவம் நண்ணினான்-தத்துவத்தையறிந்த வசிட்டமுனிவன்,- இனியன - இனிமையைத் தருவனவாகிய, ஏனை நீதி - இவைபோன்ற பல நீதிகளை, வையகம் போனகற்கு - உலகங்களை யுண்டியாகக்கொண்ட இராமனுக்கு, விளம்பி—, புலன் கொளீஇ-அறிவு கொளுத்தி, ஆனவன்னொடும்- அவனுடன், ஆயிரம்மௌலியான்-திருமாலினது, தானம்-கோயிலை, நண்ணினன் - அடைந்தான்; (எ - று.)

ஊழியிறுதியில் உலகமுண்டபெருவாயனது ஓரவதாரமாதலால், ஸ்ரீராமனை'வையகப்போனகன்' என்றார்."ஸஹஸ்ர பீர்ஷா புருஷ:[புருஷனென்னத்தக்க கடவுள் ஆயிரஞ்சிரசைக் கொண்டவன்]"என்றுவேதங் கூறுவதற்கு ஏற்ப 'ஆயிர மௌலியான்' என்றார். ஆயிரமென்றது - மிகப்பலவாய எண்ணிற்கு ஒன்றுகாட்டியவாறு. தத்துவநண்ணுதல் - தத்துவஞானம்: அஃதாவது-பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் ஐயந்திரிபுகளானன்றி உண்மையாலுணர்தல்;இதனை மெய்யுணர்வென்பர்.இங்கு ஆயிரமௌலியான் என்றது, இக்ஷ்வாகுசக்ரவர்த்தி பிணியரங்கவினையகலப் பெருங்காலந் தவம்பேணி மலரயனைவழிபட்டுக் கொணர்ந்த பணியரங்கப்பெரும்பாயற் பரஞ்சுடராகிய அணியரங்கநாதனை.ஸ்ரீராமன் திருமாலாக இருந்தும் அவன்கொண்ட வேஷத்திற்குஏற்ப உபதேசித்தனனேயன்றிஇராமன் பரம்பொருளென்பதை யுணராதவ னல்லன் வசிட்டமுனிவ னென்பார்'தத்துவ நண்ணினான் வையகப் போனகற்கு விளம்பிப்புலன் கொளீஇ' என்றார். பி-ம்:—[1]இனையன, இனையவும். [2]வையகம். [3]புலங்கொளீஇ,பொலங்கொளி,பொலங்குரு. [4]மோலியான். [5]நண்ணுவான். (கஉக)

உஙு.—வசிட்டன் இராமனுக்குப் பட்டாபிஷேகத்தின் முன்னாட் செய்யவேண்டிய சடங்கு செய்வித்தல்.

[1]நண்ணி நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணி யப்புன லாட்டிப் [2]புலமையோ
ரெண்ணு நல்வினை முற்றுவித் தேற்றினன்
[3]வெண்ணி றத்த தருப்பை விரித்தரோ.

(இ - ள்.) நாகம் அணை வள்ளலை நண்ணி-பாம்பணையிற்பள்ளிகொள்ளும் அரங்கநாதனைச் சேர்ந்து சேவித்து, (அக்கடவுளின்முன் இராமனை), நான் மறை - நான்குவேதங்களால் மந்திரிக்கப்பட்ட, புண்ணியம்புனல் - பரிசுத்த மான தீர்த்தத்தால், ஆட்டி-ஸ்நானஞ் செய்வித்து, புலமையோர் எண்ணும் - அறிவையுடையவர் (அரசனுக்கென்று) எண்ணுகின்ற, நல் வினை - நல்ல சடங்குகளை, முற்றுவித்து-முடியச்செய்து, வெள் நிறத்த தருப்பை விரித்து - வெண்மையாகிய நிறத்தையுடையனவாகிய தருப்பைகளைப் பரப்பி, ஏற்றி னன் - அவற்றில் ஏறப்பண்ணினன், (வசிட்டன்); (எ - று.)

ஸ்ரீமந்நாராயணனது சன்னிதியில் இராமபிரானை நீராட்டுவித்து, பட் டங்கட்டுவோர்க்கு முன்னாள் செய்யவேண்டிய காப்புநாண் முதலிய சடங்கு களையும் அப்பிரானுக்குச் செய்வித்து அவ்விராமனை உபவாசமிருக்கும்படி தருப்பாசனத்தி லிருக்கச் சொல்லினன் வசிட்டமுனிவனென்க. நாகணை வள்ளலை - இராமபிரானை யென்று உரைத்தலும் ஒன்று. நாகணை - விகாரம். தருப்பை தர்ப்பம். இனி, இச்செய்யுளுக்கு-நாகணை வள்ளலைநண்ணி, வெண் ணிறத்த தருப்பைவிரித்து, அவற்றில் அவனை நான்மறைப் புண்ணியப்புன லாட்டிப் புலமையோரெண்ணும் நல்வினையாகிய சோடசோபசாரங்களையும் முடியச்செய்து விளக்கேற்றினன் என்பது பொருளாக உரைப்பாருமுளர். புலமையோர்-ரவ்வீற்றயலாகாரமோவாயிற்று. இச்செய்யுள் அந்தாதித் தொ டையாக வந்தது. பி-ம்:—[1]நண்ணினர்களவ். [2]புலமையோடு. [3]வெண்ணி றத் தருப்பை விரித்தானரோ. (கஉஉ)

வே று.

உச.—தான் முன்னாட் சடங்கு செய்வித்ததை முனிவன் அறிவிக்க, பின் தசரதன் நகரை யலங்கரிக்க ஏவுதல்.

[1]ஏற்றிட வாண்டகை யினி[2]தி ருந்துழி
நூற்றட [3]மார்பனு நொய்தி [4]னெய்தப்போ
[5]யாற்றல்சா [6]லரசனுக் [7]கறிவித் தானவன்
சாற்றுக நகரணி சமைக்க வென்றனன்.

(இ-ள்.) ஏற்றிட-(வசிட்டன் தருப்பாசனத்தில்) இருக்கச்செய்ய, ஆண் தகை - இராமன், இனிது இருந்த உழி - இனிமையாகவிருந்தகாலத்தில்,— நூல் தட மார்பன் உம் முப்புரிநூலைத் தரித்த அகன்றமார்பினையுடைய வசிட்

டனும், நொய்தின் எய்த போய்-விரைவாக அடையச்சென்று, ஆற்றல் சால் அரசனுக்கு-வலிமை மிகுந்த சக்கரவர்த்திக்கு,அறிவித்தான்-(அதனைத்) தெரிவித்தான்; அவன்-அம்மன்னவன், நகர் அணி சமைக்க-பட்டணத்தை அலங்காரஞ்செய்யும்படி, சாற்றுக - பறையறைவிப்பீராக, என்றனன்-; (எ - று.)

கீழ்ச் செய்யுளிற் கூறியவாறு முன்னாட் செய்யவேண்டிய சடங்குகளை முற்றுவித்து அவனை உபவாசமிருக்குமாறு சொல்லித் தருப்பாசனத்தில் வீற்றிருக்கச் செய்தபின், வசிட்டமுனிவன் அதனைத் தசரதமன்னவனுக்குத் தெரிவிக்க,தசரதன் நகரத்தை யலங்கரிக்குமாறு பறைசாற்ற ஏவினனென்க. இருந்துழி - விகாரம். பி - ம்:—[1]எற்றிய. [2]இருந்தபினாற்றொடர். [3]மார்பினன். [4]எய்தி. [5]ஆற்றலின். [6]மன்னவற்கு. [7]உணர்த்தினன். (கஉரு)

## ௨௫.—வள்ளுவர் நாளை இராமபட்டாபிஷேகமென்று பறையறைந்து தெரிவித்தல்.

[1]ஏவின [2]வள்ளுவ ரிராம னாளையே
பூமகள் கொழுநனாய்ப் புனையு [3]மௌலியிக்
[4]கோநக ரணிகெனக் கொட்டும் [5]பேரியந்
தேவருங் [6]களிகொளத் [7]திரிந்து சாற்றினார்.

(இ - ள்.) ஏவின வள்ளுவர் - (அரசனால்) ஏவப்பட்ட வள்ளுவர்கள், 'இராமன்—, நாளை—, பூமகள் கொழுநன் ஆய் - நிலமகளுக்கு இறைவனாக, மௌலி புனையும் - முடி தரிக்கப் போகிறான்: (ஆதலால்), இ கோநகர் - இந்தச் சிறந்தநகரத்தை, அணிக - அலங்கரிப்பீராக,' என - என்று சொல்லி, கொட்டும் - முழக்குகின்ற, பேரியம் - முரசத்தை, தேவர்உம் களிகொள - தேவர்களும் ஆநந்தத்தையடையும்படி, திரிந்து - (நாற்புறமும்) ஓடி, சாற்றினார் - அறைந்தார்கள்; (எ - று.)

வள்ளுவர் பறையறைந்து இராமபட்டாபிஷேகத்தைத் தெரிவிக்க, அதனையுணர்ந்து இவ்வுலகத்தவரே யன்றி விண்ணுலகத்தவரும் களிகொள்வாராயின ரென்பதாம். இராமன் அடவிசென்று அரக்கர்குலம் அழிக்குஞ் சமயம் அணுகியதெனவுணர்ந்து தேவர் களிகொள்ள லாயின ரென்றற்கு, 'தேவரும் களிகொள' என்றாரென்னலாம். வள்ளுவர் - பறையறைவோர். ஆய்-ஆக: எச்சத்திரிபு. பேரியம்-பேரிகா என்றவடசொல்லின் விகாரம்:பெரு இயம் என்று பிரித்து உரைத்தலும் ஒன்று. தேவரும் என்ற எச்சவும்மை முனிவர்முதலிய கணங்களையும் உணர்த்துகின்றது; உயர்வு சிறப்புமாம். இவ்வுலகத்தோர் யாவருந் தவஞ்செய்து ஏறுவா னாதரிக்கின்ற அவ்வுலகத்தோரும் இழிவதற்கு அருத்திபுரிகின்ற நகர மாதலால், அயோத்தியை 'கோநகர்'என்றார். பி-ம்:—[1]ஏவிய, ஏவலின். [2]வள்ளுவன். [3]மோலி. [4]கோவணிநகர். [5]பல்லியம்,பேரியத். [6]மருள். [7]திரிதந்தெற்றினார்,திரிந்துசாற்றினன். (கஉச)

உகூ.—நகரத்தவர்க்கு வள்ளுவர்சொல் மகிழ்ச்சியளித்தல்.

கவியமை கீர்த்தியக் காளை நாளையே
புவியமை [1]மணிமுடி புனையு மென்றசொல்
[2]செவியமை [3]நுகர்ச்சிய தெனினுந் தேவர்த
மவியமு [4]தானதந் நகரு ளார்க்கெலாம்.

(இ - ள்.) 'கவி அமை கீர்த்தி அ காளை - பாடல்களிலமைத்துப் பாடப் படுகின்ற புகழையுடைய அவ்விராமன், நாளை புவி அமை மணி முடி புனையும் - நாளைக்கே இராச்சியபாரத்துக்குஉரிய அரதனகிரீடத்தைச் சூடிக்கொள்வான்,' என்ற - என்று (பறையறைந்து) தெரிவித்த, சொல் - வார்த்தை, செவி அமை நுகர்ச்சியது எனின்உம் - காதுகளுக்கு இனிய இன்பத்தை யுடையதாயினும், அ நகர் உளார்க்கு எலாம் - அந்தப்பட்டணத்திலுள்ளவர் களுக்கெல்லாம், தேவர்தம் அவி அமுது ஆனது - தேவர்களுடைய அவி யுணவையும் அமிருதத்தையும் ஒத்திருந்தது; (எ - று.)

செவியினால் நுகரும் நுகர்ச்சியினும் நாவில் நுகரும் நுகர்ச்சி மிக்க இன் பந்தருவ தாதலின், 'தேவர்தம் அவியமுதானது' என்றார். எனவே, அச் சொல்லைக் கேட்டவுடனே அந்நகரத்தாரனைவரும் தேவர்கள் அவியைப் பெற் றாற்போலவும் அமிருதபானம்பண்ணினாற்போலவும் பேரானந்தமடைந்தன ரென்றதாயிற்று. கவி - ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்பன. புகழ் தான் உரையும் பாட்டு மென இருவகைப்படும்: அவற்றுள், 'கவியமை கீர்த்தி' எனப் புலவர்க்கே யுரிய செய்யுளையே யெடுத்தா ராயினும், இனம் பற்றி எல்லார்க்கு முரிய வழக்குங் கொள்ளப்படும்; ஆகவே, உரையமை கீர்த்தி யென்பதூஉம் பெற்றாம். காளை - உவமவாகுபெயர். வமிசபரம்பரை யாய் வருதல்பற்றி, 'புவியமை முடி' என்றார். அவி, அமுது - ஹவிஸ், அம்ருதம் என்னும் வடமொழிச்சிதைவுகள். அவி - தேவர்க்கு மந்திரபூர்வக மாகத் தீயிற்கொடுப்பது. அமுது - திருமாலாற் பாற்கடலைக் கடைந்தெடுத் துக் கொடுக்கப்பட்டது. அவியமுது - உம்மைத்தொகை. பி - ம்.—[1]கொடு முடி. [2]செவியுற. [3]நுகர்ச்சிய. [4]ஆன, அன்ன. (கஉகூ)

உஎ.—நகரத்தவரின் பெருங்களிப்புச்செயல்.

ஆர்த்தனர் களித்தன ராடிப் பாடினர்
வேர்த்தனர் தடித்தனர் [1]சிலிர்த்து மெய்ம்மயிர்
[2]போர்த்தவர் மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்
தூர்த்தனர் [3]நீணிதி சொல்லி னார்க்கெலாம்.

(இ - ள்.) (அச்சொல் அமுதம்போன்றிருந்ததனால் அதனைப்பருகிய அந் நகரத்துமாந்தர்),—ஆர்த்தனர்-ஆரவாரித்தனர்; களித்தனர் - ஆநந்தித்தனர்; ஆடி பாடினர் - கூத்தாடுதலும் பாட்டுப்பாடுதலுஞ் செய்தனர்; வேர்த்தனர்- உடல் வியர்த்தனர்; தடித்தனர் - (ஆநந்தத்தால் உடல்) பூரித்தனர்; மெய் -

உடம்பில், மயிர் சிலிர்த்து போர்த்தனர்-மயிர்க்கூச்சுக்கொண்டு மூடப்பெற்றனர்; மன்னனை-அரசனை, புகழ்ந்து - துதித்து, வாழ்த்தினர்—; சொல்லினோர்க்கு எலாம் - (இம்மங்களத்தைச்) சொல்லினவர் யாவர்க்கும், நீள் நிதி - மிகுந்த திரவியத்தை, தூர்த்தனர் - நிரப்பினார்கள்; (எ - று.)

அமிருதபானஞ்செய்ததனால் அவர்கள் மெய்ம்மறந்து இவ்வாறுயினரென்க. இது-தன்மைநவிற்சியணி. மெய்-மங்கலவழக்கு. எல்லாமென்பது-இருதிணைக்கும்பொது. இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை. பி-ம்:-[1]சிலிர்த்த மெய்யினர், சிலிர்த்த மெய்ம்மயிர். [2]போர்த்தொழில். [3]இருநிதி. (கஉகூ)

உஅ.—மாந்தர் நகரினை யலங்கரித்தல்.

திணிசுட ரிரவியைத் திருத்து [1]மா றுமப்
பணி[2]யிடைப் பள்ளியான் [3]பரந்த மார்பிடை
[4]மணியினை வேகடம் வருக்கு [5]மாறும்போ
லணிநக ரணிந்தன ரருத்தி மாக்களே.

(இ-ள்.) அருத்தி மாக்கள்-அன்புடைய அந்நகரத்துமாந்தர்,—திணி சுடர் இரவியை - நெருங்கிய கிரணங்களையுடைய சூரியனை, திருத்தும் ஆறு உம் - சீர்திருத்தலையும், அ பணியிடை பள்ளியான் - அந்த ஆதிசேஷனில் அறிதுயிலமர்ந்த திருமாலினது, பரந்த மார்பிடை - அகன்ற மார்பிலுள்ள, மணியினை-கௌஸ்துபமணியை, வேகடம் வருக்கும் ஆறும் - சாணைபிடித்தலையும், போல் - போல, அணி நகர்-அழகிய பட்டணத்தை, அணிந்தனர் - அலங்கரித்தார்கள்; (எ - று.)

ஒப்பாரும் மிக்காருமில்லாத மாமாயனுதித்தாளுதலாலும், அவ்வயோத்தியின் [வைகுண்டத்தின்] பெயரைத் தான் பூண்டிருப்பதனாலுமே இயற்கையழகு பெறப்படும்: அவ்வழகிய நகர்க்கு இப்போது செயற்கையழகு செய்தாரென்பதாம்; உவமையணி. சந்திராக்கினியர்போலப் பதினாறு எழுகிரணங்களை யுடையதாகாமல், அவர்க்குக் கொடுத்து மீளவுங் கவர்கின்ற ஆயிரங் கதிர்களையுடைமை தோன்ற, 'திணிசுடரிரவி' என்றார். பணி - பணத்தையுடையது; பணம்-படம். அகரச்சுட்டு, பணியை விசேடித்து நின்றது. திருவீற்றிருக்கு மார்பென்பார் 'பரந்தமார்பு' என்றார். அருத்தி-'அர்த்தி' என்னும் வடமொழிச்சிதைவு. மாக்கள்-விகாரம். அருத்திமாக்கள் - கருத்துடையடைகோளி. பி-ம்:—[1]ஆறுமைப், ஆறுமைப். [2]உடை, அடை. [3]பாரம். [4]மணியுடை. [5]ஆறு. (கஉஎ)

உகூ.—இதுமுதல் "ஏய்ந்தேழுசேல்வழும்" (கஅ) என்னுங்கவியளவும் அந்நகரை அலங்கரித்த சிறப்புக் கூறப்படுகின்றது.

வெள்ளிய கரியன [1]செய்ய வேறுள
கொள்ளைவான் கொடி[2]நிரைக் [3]குழாங்க டோன்றுவ
கள்ளவிழ் கோதையான் செல்வங் காணிய
புள்ளெலாந் [4]திருநகர் புகுந்த [5]போன்றவே.

(இ - ள்.) வெள்ளிய-வெண்ணிறத்தை யுடையனவும், கரியன-கருநிற த்தையுடையனவும், செய்ய - செம்மைநிறத்தை யுடையனவும், வேறுஉள - வேறுநிறங்களை யுடையனவுமாகி, தோன்றுவ-தெரிவனவாகிய, கொள்ளை - மிகுதியையுடைய, வான் - பெரிய, நிரை-வரிசையாகிய, கொடி - துவசங் களின், குழாங்கள்-கூட்டங்கள்,—கள் அவிழ் கோதையான் - தேனொழுகு கின்ற மலர்மாலையையுடைய ஸ்ரீராமனது, செல்வம்-ஐசுவரியத்தை, காணிய- பார்க்கும்பொருட்டு, புள் எலாம்-பறவைகளெல்லாம், திரு நகர்-அழகியபட்ட ணத்தை, புகுந்த போன்ற - அடைந்தவைபோன்றன; (எ - று.)

இது, பலவகைக்கொடிகள் கட்டப்பட்டவற்றின் வருணனை. புள் பலவேறுநிறமுடையன. புள்ளரசையூர்தியாகவுடையவனாதலின், அவன் செல்வத்தைப் பார்க்க, 'புள்ளெலாம்புகுந்தபோன்ற' என்றார். வேறு-பசுமை, பொன்மைமுதலியன. நிரை - ஒன்றன்கூட்டம். குழாம் - பலவின்கூட்டம். தோன்றுவ-படுத்தலோசையாற் பெயராய் நின்றது. திருவென்பது -கண்டா ரால் விரும்பப்படுந்தன்மைநோக்கம்: அழகு; திருமகள்தங்கும் நகரெனினு மமையும்; தற்குறிப்பேற்றவணி. வெள்ளிய கரியன செய்ய-முரண்தொடை.

பி-ம்:—[1]சிவந்த. [2]நகர்க். [3]குழாங்கொண்டாடுவ, குழாங்கொண்டோடுவ, குழாங்கொடாடுவ. [4]ஒருவழி. [5]போலுமே. (௧௨-அ)

௨௰. மங்கையர் குறங்கென வகுத்த வாழைக
ளங்கவர் கழுத்தெனக் [1]கமுக மார்ந்தன
தங்கொளி முறுவலிற் றாம [2]நான்றன
[3]கொங்கையி னிரைத்தன [4]கனக கும்பமே.

(இ - ள்.) அங்கு-அந்நகரத்தில், மங்கையர் குறங்கு என-மாதரது தொடைபோல, வாழைகள் - வாழைமரங்கள், வகுத்த-அமைக்கப்பட்டன; அவர் கழுத்து என-அவரது கழுத்துப்போல, கமுகம்-பாக்குமரங்கள், ஆர்ந்தன - நிறைந்தன; தங்கு ஒளி முறுவலின் - (அவரது) நிறைந்த காந்தியையுடைய பல்வரிசைபோல, தாமம் - முத்துமாலைகள், நான்றன - தொங்கின; கொங் கையின்-(அவரது) ஸ்தநங்கள் போல, கனக கும்பம்-பொன்மயமான பூர்ண கும்பங்கள், நிரைத்தன-வரிசையாயமைக்கப்பட்டன; (எ - று.)

இதனால், அந்நகரத்தவர் ஆங்காங்கு வாழைமரங்களையும் கமுகமரங்களை யுங்கட்டி, முத்துமாலைகள் நாலவிட்டுப் பூர்ணகும்பங்கள் அமைத்தமை கூறப் படுகின்றது. வாழை - திரட்சிக்கும், கமுகம் - வரையிற்கும் செப்பிற்கும், தாமம் - வெண்மைக்கும் வரிசைக்கும் உவமை. குறங்குமுதலியன - சாதிப் பெயர். வகுத்த-முற்றுவினை. கமுகம்=க்ரமுகம், வடமொழி. இங்கு உபமா னங்களாகிய வாழைமுதலியவற்றை உபமேயங்களாகக்கூறியது - எதிர்நிலை யுவமையணி. செய்பவன்வினையாகிய வகுத்தல்முதலியவற்றைச் செயப் படுபொருளின் வினையாகக்கூறியது, செயப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக்கிளத்தலும் வழக்கியன் மரபு ஆதலின். நான்றன, நால் - முத னிலை. பி-ம்:—[1]கமுகுமான்றன. கமுகமான்றன. [2]நான்றென. [3]கொங்கை யை நிகர்த்தன. [4]கனகக். (௧௨௧)

௩௧. முதிரொளி [1]யுயிர்த்தன முடுகிக் காலையிற்
கதிரவன் வேறொரு [2]கவின்கொண் டானென
மதிதொட [3]நிவந்தன மகர தோரணம்
புதியன வலர்ந்தன [4]புதவ ராசியே.

(இ - ள்.) மதி தொட நிவந்தன - சந்திரனைத் தீண்டும்படி யுயர்ந்தனவும், புதியன - புதியவையும், மகரதோரணம் அலர்ந்தன - மகரதோரணங்கள் விளங்கப் பெற்றனவுமான, புதவம் ராசி-கோபுரவாயிலின்வரிசைகள்,— காலையில் கதிரவன் - விடியற்காலத்திலுள்ள இளஞ்சூரியன், முடுகி - விரைந்து, வேறு ஒரு கவின் - முன்னினும்வேறாகிய ஒப்பற்ற அழகை, கொண்டான் என - கொண்டானென்று சொல்லும்படி, முதிர் ஒளி - மிக்ககாந்தியை, உயிர்த்தன - வீசின; (எ - று.)

இதனால், கோபுரவாயில்கள் விளங்கியமை வருணிக்கப்படுகின்றது. மேன்மேலும் விளங்கின என்பதாம். புதா - கதவு; இச்சொல், குறியதன்கீழ் ஆக் குறுகி அம்முச்சாரியைபெற்று 'புதவம்' என்றாகி, இலக்கணையாற் கதவுகளைக்கொண்ட கோபுரவாயிலைக் காட்டிற்றென்பர்: தோரணவாயிற் கதவுகளின் வருணனை யெனக் கொள்ளினுமாம். புதவு கதவாதலை "கதவு மொரு விகற்பப் புள்ளும் புதவே" என்னும் பிங்கலந்தையாலும் அறிக. மகர தோரணம் - வாயலிற்றூக்குந் தோரணம்: மகரவடிவத்தைத்தாங்கிய கட்டு வாயி லென்றல் பொருந்தும். பி - ம்:—[1]நிகர்த்தன. [2]கவின்கள் காட்டின. [3]நிவந்துயர், நிவந்ததோர். [4]புலவராகியே, புட்பராசியே. (கங௦)

௩௨. [1]துனியறு செம்மணித் தூண நீறுதோய்
வனிதையோர் [2]கூறினன் வடிவு காட்டின
புனைதுகி [3]லுறைதொறும் [4]பொதிந்து [5]தோன்றின
பனிபொதி கதிரெனப் பவளத் [6]தூண்களே.

(இ - ள்.) துனி அறு செம் மணி தூணம்-குற்றமற்ற சிவந்தரத்தினமயமான கம்பங்கள்,—புனை துகில் உறை தொறும் பொதிந்து - அலங்கரிக்கப்பட்ட வெள்ளைவஸ்திரத்தினாலாகிய உறைகள்தோறும் மறைந்து, நீறுதோய் - திருநீற்றைப் பூசிய, வனிதை ஓர் கூறினன் - பார்வதியை யொருபக்கத்திற்கொண்ட சிவபெருமானது, வடிவு - உருவத்தை, காட்டின - ஒத்து விளங்கின; பவளம் தூண்கள் - பவழமயமான கம்பங்கள், (புனைதுகில் உறைதொறும்பொதிந்து), பனி பொதி கதிர் என-(பெய்) பனியில் மறைந்த சூரியனைப்போல, தோன்றின—; (எ - று.)—புனைதுகிலுறைதொறும் பொதிந்து - மத்திமதீபம்.

இதனால், செம்மணித்தூண்களும் பவளத்தூண்களும் உறையோடுவிளங்கியமை வருணிக்கப்படுகின்றது. செம்மணித்தூண்கள் வெள்ளுறைபொதிந்தவை - மேனிமுழுதும் திருநீறுபூசிய சிவபெருமானையும், அங்ஙனம் உறைபொதிந்துள்ள பவளத்தூண்கள் - பனிபொதிகதிரினையும் போலுமென்றார்: **தற்குறிப்பேற்றவணி.** தூணம் - ஸ்தூணா என்னும் வடமொழிச் சிதைவு.

ஓர்கூறு - வாமபாகம். துகில் - வெண்டுகில். உறை - மூடும்உறை. பவளம்-ப்ரவாளம் என்னும் வடமொழிச்சிதைவு. பி - ம்:—[1]துனியுறு. [2]கூற்றினன். [3]அணி. [4]பொலிந்து. [5]தோன்றுவ. [6]தூணெலாம். (கஙக)

ஙங. [1]முத்தினின் முழு[2]நில வெறிப்ப மொய்ம்மணிப்
[3]பத்தியி னிளவெயில் பரப்ப நீலத்தின்
[4]றொத்தின மிருள்வரத் தூண்டச் சோதிட
வித்தகர் [5]விரித்தநா [6]ளொத்த வீதியே.

(இ - ள்.) வீதி-(அந்நகரத்துத்) தெருக்கள்,—முத்தினின் முழு நிலவு எறிப்ப - (அலங்கரித்திருக்கும்) முத்துக்களினால் (ஒருபுறத்தில்) பூரணசந்திர கிரணத்தை வீசுதலாலும், மொய் மணி பத்தியின் - நெருங்கிய (பதுமராக) மணிகளின்வரிசைகளால், இள வெயில் பரப்ப-(ஒருபுறத்தில்) இளஞாயிற்றினொளியை வீசுதலாலும், நீலத்தின் தொத்து இனம் - நீலமணிகளின் பூங்கொத்துப்போன்ற திரள், இருள் வர தூண்ட - (ஒருபுறத்தில்) அந்தகாரமுண்டாம்படி தூண்டுதலாலும், சோதிடம் வித்தகர் விரித்த நாள் ஒத்த - சோதிடசாஸ்திரஜ்ஞர்கள் விளங்கச்செய்த தினங்களை யொத்தன; (எ - று.)

முத்து-முக்தா என்னும் வடமொழிச்சிதைவென்பர்.வீதிகள் தமது இருபுறத்துமுள்ள மாளிகைகளிலும் ஆங்காங்குஅமைந்த கட்டுவாயில்களிலும் முத்து பதுமராகம் நீலமணி என்பவற்றால் அலங்கரிக்கப்பெற்று நிலவு வெயில் இருள் என்ற இவைகளையுண்டாக்குதலால், அவ்வீதியை நாளையொக்குமென வருணித்தார்: இனி, சந்திரன் சுக்கிரன் வெண்ணிறமுடைமையாலும், சூரியன் செவ்வாய் குரு கேது செந்நிறமுடைமையாலும், புதன் , சனி இராகு கருநிறமுடைமையாலும் சோதிடர் விரித்த நாளொத்த, என்றுரைருமுளர். **தற்குறிப்பேற்றவணி.** பத்தி-பங்க்தி யென்னும் வடமொழிச்சிதைவு. நீலம் - ஆகுபெயர். நீலத்தின்தொத்து இருளினம்வர எனவுங் கூட்டலாம். பி-ம்:—[1]முத்தினன், முத்திடை. [2]நிலாமுளைத்த, நிலாமுளைப்ப. [3]பத்தியால். [4]தொத்தினால். [5]விதித்த. [6]இயைந்த. இந்தப்பாடல் சிலபிரதிகளில் ஙOO - ஆம் பாடலுக்குப்பின்னே காணப்படுகின்றது. (கஙஉ)

ஙச. ஆடன்மான் றேர்க்குழா மவனி காணிய
[1]வீடெனு முலகின்வீழ் விமானம் போன்றன
வோடை[2]மாக் கடகளி றுதய மால்வரை
தேடருங் கதிரொடுந் திரிவ போன்றவே.

(இ - ள்.) ஆடல் மான் தேர் குழாம் - கூத்தாடுதலையுடைய குதிரைகளைப் பூட்டிய இரதங்களின் சமூகம்,—அவனி காணிய - பூமியைப் பார்க்கும் பொருட்டு, வீடு எனும் உலகின் வீழ் - சுவர்க்கமென்ற உலகத்தினின்றும் இறங்குகின்ற, விமானம் போன்றன - தேவரதங்களை யொத்தன; ஓடை மா கட களிறு - முகபடாத்தையுடைய பெரிய மதயானைகள்,—உதயம் மால் வரை - பெரிய உதய பருவதங்கள், தேடு அரு கதிரொடும் திரிவ-(உவமை) தேடுதற்குஅரிய சூரியனோடும் திரிவனவற்றை, போன்ற - ஒத்தன; (எ-று.)

கீழே வீதியை வருணித்த கவி, இச்செய்யுளினால் அவ்வீதியிற் செல்லுவனவான தேரிலே பூட்டப்பட்டுச் செல்லுங்குதிரைகளையும், முகபடாத்தைக் கொண்டுள்ள மதயானைகளையும் வருணிக்கின்றார். பொற்றேராதலின், பொன்னுலகினின்றும்வீழ்கின்ற விமானத்தை யுவமான மாக்கினார். வீடு - இலக்கணையால், சுவர்க்கத்தைக் காட்டிற்று. இன் - நீக்கம். கடாம் - மத்தகமுமாம். உதயமால்வரைகள் தேடருங்கதிரொடுந்திரிதல் - இல்பொருளுவமை. மயூரகதி, மல்லகதி, வாநரகதி, விடபகதி, வியாக்கிரகதி என்னும்ஐங்கதியுமுடைமைபற்றி 'ஆடன்மான்' என்றார்; ஐங்கதியை "விக்கிதம் வற்கிதம்வெல்லுமுபகண்ட, மத்திமஞ் சாரியோடைந்து" என்றலு முண்டு. திரிவ - பெயர். பி-ம்:—[1]வீடுசேர். [2]ஒண், வெங். (கருரு)

நுக. வளங்கெழு திருநகர் வைகும் வைகலும்
பளிங்குடை நெடுஞ்சுவ [1] ரடுத்த பத்தியிற்
கிளர்ந்[2]தெரி சுடர்மணி யிருளைக் கீறலாற்
[3]றளர்ந்தில [4]பிரிந்தில [5]சக்ர வாளமே.

(இ - ள்.) வளம் கெழு திரு நகர் - வளப்பம்மிகுந்த அழகிய அந்தநகரத்தில், வைகும் - பொருந்திய, பளிங்கு உடை நெடு சுவர் - பளிங்குக்கற்களையுடைய உயர்ந்த சுவர்களினது, அடுத்த பத்தியில் - சேர்ந்த வரிசைகளில், கிளர்ந்து - நிறைந்து, சுடர் - பிரகாசிக்கின்ற, எரி மணி - பதுமராகங்கள், இருளை கீறலால் - அந்தகாரத்தைப் பிளத்தலால்,—வைகல்உம் - எந்நாளும், சக்ரவாளம் - சக்கரவாகப் பறவைகள், பிரிந்தில - (ஆணும் பெண்ணும்) விட்டுநீங்காதனவாகி, தளர்ந்தில-மனத்தளர்ச்சியின்றி மகிழ்ச்சியுற்றிருந்தன.

பளிக்குச்சுவரிற் பதித்துள்ள பதுமராகக்கற்களி னொளி இருளைப் போக்குவதுபற்றி எப்போதும் பகல்போலவே யிருத்தலால், பகற்பொழுதெல்லாம் ஆணும்பெண்ணுமாயிருக்கும் தன்மையவான சக்கரவாகப் பறவைகள் இரவிலும் பிரியாது மகிழ்ந்திருந்தன வென்றபடி. ஈற்றடியில், 'வளர்ந்தில பிரிந்தில செக்கர்வானமே' என்ற பாடத்திற்கு—செவ்வானம் அந்நகரில் புதிதாகத் தோன்றியனவு மில்லை, நீங்கினவுமில்லை யென்க: இப்பொருளில், 'பதுமராகத்தின் செந்நிறத்தை வானம் எப்பொழுதும் பெற்றிருந்ததாகக் கூறியது - பிறிதின்குணம்பெறலணி. வளம் - ஆகரங்களிற்படுவனவும், வயலினுந்தண்டலையினும் விளைவனவுமாம். வைகுஞ் சுவரென இயையும். வைகலும் - முற்றும்மை. பளிங்கு - ஸ்படிகம்: வடமொழிச்சிதைவு. உதயகிரியில் சிந்தூர அருவிவீழ்ந்த சிந்தூராகரத்திற் பிறந்து பதினாறு சதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக் கெடுக்குமென்பவாதலின், 'மணியிருளைக் கீறலால்' என்றார். பி - ம்:—[1]முத்தின். [2]எழு. [3]தெளிந்தில. [4]பிறிந்தில. [5]சக்கரவாளமே. (கருசு)

௫௬. பூம்மழை புனன்மழை புதுமென் சுண்ணத்தின்
றூமழை தரளத்தின் [1]றோமில் வெண்மழை
தாமிழை [2]நெரிதலிற் றகர்ந்த பொன்மழை
மாமழை நிகர்த்தன மாட வீதியே.

(இ - ள்.) மாடம் வீதி-மாளிகைகளையுடைய தெருக்களில், பூ மழை - புஷ்ப வர்ஷமும், புனல் மழை-நீரின் வர்ஷமும், புது மென் சுண்ணத்தின் - புதிய மெல்லிய வாசனைப்பொடியின், தூ மழை - பரிசுத்தமான வர்ஷமும், தோம் இல் வெண் தரளத்தின் மழை-குற்றமற்ற வெள்ளிய முத்துவர்ஷமும், இழை தாம் நெரிதலின் - ஆபரணங்கள் நெருங்குதலால், தகர்ந்த - (அவை) உடைந்து தோன்றிய, பொன் மழை-சுவர்ணங்களின் வர்ஷமும், மா மழை- பெரியமேகவர்ஷத்தை, நிகர்த்தன - ஒத்தன; (எ - று.)

அந்நகரத்தவர் நீர்தெளித்து மலர்களையும் சுண்ணங்களையும் முத்துப் பவழங்களையுந் தூவி வீதியை யலங்கரித்தன ரென்க. புனல் - பனிநீருமாம். இராமபிரான் கானகஞ்சென்று ராவணசங்காரஞ் செய்வானென்ற மகிழ்ச்சி யால் தேவர்கள் கற்பகமலர்மாரி பொழிந்தாரெனக் கொள்ளுதலும் உண்டு. சுண்ணத்திற்கு மென்மை-கண்களுக்கினிதாகிய மென்மையும், தன்னைமோந் தார் பிறிது மோவாமல் தடுக்கும் மென்மையும். சுண்ணம் - சூர்ணம்: வட மொழிச்சிதைவு. பொன்னணிகலங்களைப்பூண்ட ஜனங்கள் வீதியில் மிகுதி யாகநெருங்கிச் செல்லும்போது அவ்வணிகலங்கள் ஒன்றோடொன்று தாக் கித் தகர்ந்துபொடியாக மழைபோலப் பொற்பொடி யுதிர்கின்ற தென்பது, 'தாமிழை நெரிதலிற்றகர்ந்த பொன் மழை' என்பதன் பொருள். தாம்-அசை.

பி-ம்:—[1]தொழில. [2]நெரித்தலின், நெரிதரத். (௧௫௬)

௫௭. காரொடு தொடர்மதக் களிறு சென்றன
வாரொடு தொடர்கழன் மைந்த ராமெனத்
[1]தாரொடு நடந்தன [2]பிடிக டாழ்கலைத்
தேரொடு [3]நடக்குமத் தெரிவை மாரினே.

(இ - ள்.) காரொடு தொடர் மதம் களிறு-மேகத்தையொத்த மதத்தை யுடைய யானைகள்,—வாரொடு தொடர் கழல் மைந்தர் ஆம் என-கச்சைத்தோடு பொருந்திய வீரக்கழலையுடைய வீரர்போல, சென்றன—; பிடிகள் - பெண் யானைகள், தாழ் கலை தேரொடு நடக்கும் அ தெரிவைமாரின்-தொங்குகின்ற மேகலையையுடைய அல்குலோடு செல்கின்ற அந்நாட்டுமகளிரைப்போல, தாரொடு - கிண்கிணிமாலையுடன், நடந்தன—; (எ - று.)

விலங்குகளும் இராமபட்டாபிஷேகத்தை யுணர்ந்து குதூகலங்கொண்டு திரிந்தனவென்பதற்காகக் களிறும் பிடியும் உல்லாசமாகநடப்பதைக்கூறினார். களிறு-கம்பீரத்தன்மைக்கும், பிடி-நடைக்கும் உவமம்; இங்கு உபமானங்களை உபமேயங்களாகக் கூறினார்: எதிர்நிலையுவமையணி. காரொடு, ஒடு - உருபு

மயக்கம். தொடர்-உவமவுருபு. யானைக்கும், மேகத்திற்கும்-கருமை, பொதுத் தன்மை. இனி, காரொடுதொடர் மதக்களிறுஎன்பதற்கு-மழைநீரையொத்த மதநீரையுடைய களிறென்றுமாம். வாரொடு தொடர் கழல் - கயிற்றாற் கட்டிய கழல் என்றுமாம், ஆம் - அசை. கலை - மேகலையென்பதன் முதற் குறை. தேர் - உவமவாகுபெயர். தெரிவையென்பது, வேட்கைபிறந்த பருவத்துப்பெயர். பி - ம்:—[1]தாரொடுந்தொடர்ந்தன. [2]பிடிகண்மேகலைத், பிடிகள்தண்கலை. [3]தொடர்ந்தன, நடந்தன. (கரு௬)

ரு௭. எய்ந்தெழு செல்வமு மழகு மின்பமுந்
[1]தேய்ந்தில வனையது [2]தெரிகி லாமையா
[3]லாய்ந்தனர் பெருகவு மமர [4]ரிம்பரிற்
போந்தவர் போந்தில மென்னும் புந்தியால்.

(இ-ள்.) எய்ந்து எழு செல்வம்உம்-பொருந்தி மேன்மேலும் வளர்கின்ற ஐசுவரியமும், அழகுஉம் - சௌந்தரியமும், இன்பம்உம்-சுகமும், தேய்ந்தில- (பொன்னகரத்தினும் இந்நகரில்) குறைந்திருக்கவில்லை; அனையது தெரிகிலாமையால் - அதனை யறியாமையால், இம்பரில் போந்தவர்-(இராம பட்டாபிஷேகங் காண) இவ்வுலகத்தி லிழிந்து வந்தவராகிய,அமரர்-தேவர்,போந்திலம் என்னும் புந்தியால்-(இன்னும் திருவயோத்தி)வந்தோமில்லையே யென்னுமெண்ணத்தால், பெருகஉம் ஆய்ந்தனர் - மிகவும் ஆலோசித்தனர்; (எ - று.)

செல்வம் முதலிய தேய்ந்திலாமையால் தேவர்க்குத் திருவயோத்தி பொன்னகரெனத் தோன்ற, மயங்கின ரென்பது கருத்து. பொன்னகரம் போன்றிருந்தது, இந்நகரமென்பதாம். இச்செய்யுளில்,செல்வம்முதலியவை சுவர்க்க லோகத்தோடொப்ப இவ்வயோத்திமாநகரிலும் சுருங்காது நிரம்பியிருத்தல் பற்றி, ஒப்புமையால், வானவர் சுவர்க்கத்திற்கும் இந்த அயோத்திக்குமுள்ள வேறுபாட்டையுணராமல் இங்குவந்தும் தம்நகரத்திலிருந்து இன்னும் வந்துசேரவில்லையே யெனக் கருதினராகக்கூறிய இது - **மறைவணியாம்:** இதனை வடநூலார் மீலிதாலங்காரமென்பர். பி-ம்:—[1]தேய்ந்திலா, தேய்ந்திலர். [2]தெரிந்திலாமையால், தெரிகலாமையின், தெரிக்கிலாமையின். [3]ஆய்ந்துணர், ஆய்ந்தன. [4]உம்பரில். (கரு௭)

**ரு௯ —நகரம் அலங்கரிக்கப்படுதலைக் கூனி காணுதல்.**

அந்நக [1]ரணிவுறு மமலை வானவர்
பொன்னக [2]ரியல்பெனப் பொலியு [3]மெல்லையி
லின்னல்செ யிராவண னிழைத்த [4]தீமைபோற்
றுன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்.

(இ - ள்.) அ நகர் - அவ்வயோத்திமாநகரத்தை, அணிவுறும்-அலங்கரிக்கின்ற,அமலை-பேராரவாரத்தால்,—வானவர் பொன் நகர் இயல்பு என-தேவலோகத்தினதுதன்மைபோல, பொலியும் எல்லையில் - (அந்நகர்) விளங்குங் காலத்தில்,—இன்னல் செய் - (எல்லாவுலகத்துக்கும்) துன்பத்தைச் செய்

கின்ற, இராவணன் - தசமுகன், இழைத்த - (முற்பிறப்பிற்) செய்த, தீமை போல்-தீவினை(இப்பிறப்பில் ஒருருவத்தை யெடுத்து வந்தது)போல, துன்ன அருகொடு மனம் கூனி-(பிறரால்) பெறுதற்கரிய கொடுமையையுற்ற மனத்தையுடைய மந்தரை, தோன்றினாள் - வெளிப்பட்டுப்பார்த்தாள்; (எ - று.)

மந்தரையென்று பேருள்ள கூனி, அரசமாளிகையின் உபரிகைமீது ஏறி நகரம் அலங்கரிக்கப்படுவதையும் யாவருங் குதூகலத்துட னிருப்பதையும் கண்டு, தன்னருகேயிருந்த இராமனது செவிலித்தாயைநோக்கி 'இராமனது தாய் செல்வத்தை மிகுதியாகக் கொடுப்பதற்கும் ஜநங்கள் குதூகலமாயிருப்பதற்கும் நகரம் அலங்கரிக்கப்படுவதற்கும் யாது காரணம்?'' என்றுவினவி, அவளால் இராமபட்டாபிஷேகத்தை யுணர்ந்தாளென்று முதனூல் கூறும். இப்பொழுது மந்தரை செய்யுஞ் சூழ்ச்சியால் இராமன் நாட்டைவிட்டுக் காட்டையடைந்து இராவணனைச் சங்கரிப்பதனால் 'இராவணனிழைத்த தீமைபோல்' என்றார். ஒப்புயர்வில்லாத கொடுமனமென்பார் 'துன்னருங் கொடுமனம்' என்றார். இனி, கிட்டி நட்புக்கொள்ளுதற்குத்தகாத கொடு மனத்தையுடைய கூனி என்றுமாம்: நாமத்தாலும், ரூபத்தாலும் கூனியாதலன்று மனத்தாலுங் கூனி யென்பதாம்; கூன் - வளைவு; "கூனுலாவிய மடந்தை" என்றார் பெரியாரும். இராமனது பட்டாபிஷேகத்தைக் கெடுப்பதற்கு எங்கிருந்தோ இந்தகூனிவந்தாளே என்ற வெறுப்பினால், கவி, 'கூனி தோன்றினாள்' என்கிறார். இராமபிரான் இராவணனைத் தொலைப்பதற்காகக் கைகேயிக்கும் ஸ்ரீராமனிடத்து மனமாறுபாடு உண்டாகுமாறு தேவதைகளே அவளை யனுப்பினார்களாகையால், அந்தத் தேவரகசியத்தை மனத்துட்கொண்டு 'கூனி தோன்றினாள்' என்றாருமாம். அமலையால் தோன்றினாளென்க. ;ராவணன் - கூவினவன், கூச்சலிடச்செய்தவன்; கைலாசமலையின்கீழ்க் கையகப்பட்டுக் கொண்டபோது பேரரவமிட்டானாதலாலும், அதனாற் சகமெல்லாங் கூச்சலிடும்படியான தாதலாலும், அதுமுதல் இவனுக்கு இப்பெயர் வழங்கிற்று என்றும், விச்சிரவசின்மகனென்னும் பொருளில் ஆதேசம்வந்து ராவணனென்றாயிற்று என்றும் இப்பெயர்க்குக் காரணங் கூறுவர். பி-ம்:—[1]அணியுறுமமலை, அணியுமல்வமலை. [2]இதுவென. [3]எல்லையின், காலையில். [4]தீமையாற், தீமையிற். (கங-அ)

கூ௦.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: கூனி கடுஞ்சினங்கொண்டு கைகேயி படுத்திருக்கும் இடத்தைச்சேர்தல்.

தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினா
ளூன்றிய வெகுளியா [1]ளுளைக்கு முள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் [2]கலிக்குஞ் சொல்லினாண்
மூன்[3]றுல கினுக்குமோ [4]ரிடுக்கண் மூட்டுவாள்.

(இ - ள்.) தோன்றிய கூனிஉம்-அங்ஙனம் வெளிப்பட்டு(நகர் அலங்கரிக்கப்படுவது)கண்ட கூனியும்,—(இராமபட்டாபிஷேகத்தை யுணர்ந்து), துடிக்கும் நெஞ்சினாள்-(கோபத்தால்)துடிக்கின்ற மனத்தையுடையவளும், ஊன்றிய

வெகுளியாள் - நிலைநின்ற கோபமுடையவளும், உளைக்கும் உள்ளத்தாள் - வேதனைப்படுகின்ற மனமுடையவளும், எரி கான்ற நயனத்தாள் - தீயைக் கக்குகின்ற கண்களையுடையவளும், கலிக்கும் சொல்லினள் - தடுமாறுகின்ற பேச்சையுடையவளும், மூன்று உலகினுக்குஉம்—, ஓர் இடுக்கண் - ஒப்பற்ற துன்பத்தை, மூட்டுவாள் - செய்யப்போகின்றவளும்,—(எ - று.)

யாவரும் மகிழ்ச்சியோடிருக்கையில், கூனி இராமபட்டாபிஷேகத்தை யுணர்ந்து பொறாமையால் நெஞ்சுதுடிக்க மனக்கொதிப்பால் மிகவருந்திக் கண்களில் தீப்பொறி பறக்க உரைதடுமாற,மூன்றுலகிற்கும் பெருந்துயரத்தை விளைக்குமாறு வழிதேடுவளாயின ளென்க. கலித்தல்-ஸ்கலித்தல். இது கீழ்ச் செய்யுளோடு அந்தாதித்தொடையா னமைந்தது; பின்னுஞ் சிலவிடத்துஇது வரும். பி-ம்:—[1]கொதிக்கும், உழைக்கும். [2]கதிக்கும். [3]உலகிற்கும். [4]இறுதி, உறுதி. (கங்க)

சக. தொண்டை வாய்க் [1]கேகயன் றோகை [2]கோயின்மேன்
மண்டினள் வெகுளியின் மடித்த வாயினள்
பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமி
[3]ழுண்டையுண் டதனைத்தன் னுள்ளத் துள்ளுவாள்.

(இ - ள்.) பண்டை நாள் - முற்காலத்தில், இராகவன் - ஸ்ரீராமனது, பாணி வில் - கையிலுள்ள வில்லினால், உமிழ் - வெளிப்படுத்தப்பட்ட, உண்டை-மண்திரளை, உண்டதனை-(மேற்) பட்டதனை, தன் உள்ளத்து-தன் மனத்தில், உள்ளுவாள் - நினைத்து, வெகுளியின் - கோபத்தினால், மடித்த வாயினள் - மடிக்கப்பட்ட வாயையுடையவளுமாகி,—தொண்டை வாய் கேக யன் தோகை - கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையுடைய கைகேயியினது, கோயின்மேல் - மாளிகையில், மண்டினள் - நெருங்கி,—(எ - று.)—"எய்தி னள்" என அடுத்த கவியோடு முடியும்.

இராகவன் - இரகுமகாராஜனின் வமிசத்திலவதரித்தவன். ஸ்ரீரா மன்,சிறுவனாயிருந்தகாலையில், கையிற்சிறுவில்லும் மண்உண்டையுங்கொண்டு குளத்தினருகே விளையாடி வருகையில்,இக்கூனி குடங்கொண்டு நீர்மொண்டு மங்கையர்குழாத்துட் கலந்து நடக்க, இவன் 'தன்வீட்டு வேலைக்காரிதானே இவள்' எனச் சொந்தம்பாராட்டி மண்ணுண்டையை இவள்மேலேவ, அத னால் இவள்கைநெகிழ்ந்து குடம்வீழ, யாவரும் பெருநகை நகைத்தன ராக, இவள் கடுங்கோபமுற்று அரசன்மைந்தனாதலின் ஒன்றுஞ்செய்ய இயலாது வாளாசென்று தனக்கு வாய்க்குந்தருணத்தை நோக்கிக்கொண்டிருந்தன ளென்பது கதை. இந்த விருத்தாந்தம் முதனூலாகிய வான்மீகத்தி லில்லை யாகிலும், "கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி" என்றும், "கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவுகூனிகூ,னுண்டைகொண் டரங்கவோட்டி யுண் மகிழ்ந்த நாதன்" என்றும், "கூனேசிதையவுண்டைவின் னிறத்திற் றெறித்தாய்" என்றும் மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்திருக்கின்றனர். தேவர்களாலனுப்பப்பட்டுவந்த அக்கூனிக்கு, இராம

பட்டாபிஷேகத்தைக் கலைப்பதற்கு, அப்பிரான் சிறுபிராயத்திற்செய்த இந்த விளையாட்டுத்தொழில் ஒரு வியாஜமாயிற் றென்க. தொண்டை - முதலாகு பெயர். வாய் - அதரம். தோகை - இருமடியாகுபெயர். பண்டை - ஐயீற் றுடைக்குற்றுகரம். பண்டென்றது - இளமையிலென்றபடி. பி - ம்:—[1]கை கயன். [2]கோயிலின். [3]உண்டையான் மெலிந்ததை. (௪௨௦)

௪௨. நாற்கடற் படுமணி நளினம் [1]பூத்ததோர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் [2]கண்ணளி பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாடனை விரைவி னெய்தினாள்.

(இ - ள்.) நால் கடல் படு மணி - நான்குசமுத்திரங்களிலுமுண்டாகிய ரத்நங்களோடுகூடி, நளினம் - தாமரை, பூத்தது - மலரப்பெற்றதாகிய, ஓர்- ஒப்பற்ற, பால் கடல் - பாற்கடலின், திரை-அலையில், படு - அமைந்த, பவளம் வல்லி போல் - பவழக்கொடிபோல, கடைக்கண் அளி பொழிய - கண்ணின் கடை அருளைச் சொரிய, பொங்கு அணைமேல் கிடந்தாள்தனை - விளங்குகின்ற பேரணைமேற் சயனித்துக்கொண்டிருந்த கைகேயியை, விரைவின் எய்தினாள் - சீக்கிரமாக அடைந்தாள்; (எ - று.)—ஏ - அசை.

படுக்கையிற் சயனித்திருந்த கைகேயியை மந்தரை கிட்டினளென்க. நளினம் பூத்ததோர் பாற்கடற் படுதிரைப் பவளவல்லி இல்பொருளுவமை. நாற்கடற்படு மணி என்றது - ஆபரணங்களை. கடலில் மணியுண்டாகு மென்பதனை, ரத்நாகரம் என்னும் அதன்பெயரானு முணர்க. நாற்கடல் - நான்கு புறத்தினுஞ் சூழ்ந்த கடல். நளினமென்றது - கண், கை, கால், முகமாகிய அவயவங்களை. பாற்கடல் என்றது - பள்ளியை. பவளவல்லி யென்றது - சரீரத்தை. படுக்கை பாற்கடற் படுதிரைபோலிருக்க, கைகேயி பவளக்கொடி போன்றிருந்தன ளென்க. இனி, பாற்கடலிற் படுதிரையிற் றோன்றிய பவளக்கொடி என்றே, தூயகுலத்துத் தோன்றிய கைகேயியைக் கவி கூறினா ரெனினுமாம். "பாற்கடன் முளைத்ததோர் பவளப் பூங்கொடி, போற்சுடர்ந் திலங்கொளிப்பொன்செய்கோதை," "பௌவநீர்ப் பவளக்கொடி போல்பவள்" என்ற சிந்தாமணிப் பகுதிகள் இங்குக் காணத்தக்கன. அளி - அன்பு காரணத்தாற் றோன்றும் அருள். மந்தரையின் தீய உபதேசத்தின் பின்பே கைகேயியின் மனம் மாறுதலால் அதற்குமுன் அருளோடு இருந்தனள் என்பார் 'கடைக்கண்ணளி பொழிய' என்றார். அவளைக் காணும்பொழுதே இவளிடத்து அருளுள்ளதெனத் தெரியுமென்க. இராமனது நாயகத்தன்மையும், இலக்குவனது அடிமைத்திறமும், பரதனது கட்டளை கடவாப்பெருந்தன்மையும், சத்துருக்கனனது அடியார்க்கடிமைசெய் திறமும், ஆஞ்சநேயரின் சிறந்தபக்தியும், மகாராசரின் நட்புத்திறனும், இன்னும் மற்றுமுன்னோர்களின் மங்கலகுணங்களும் வெளிப்படுகைக்கும், இராவணாதியர்களின் இழிவு தோற்றுகைக்கும், இமையோரிடுக்கண் நீங்குதற்கும், காரணமாய்த் திருமா

லின் ஆதிசங்கற்பத்தோடொக்கநின்று தக்க காலத்தே யுதவினமையின், அக்கருத்தையுட்கொண்டு 'அளிபொழிய' என்றாரென்னலும் ஒன்று. ஐந்தாயவொன்றும் மும்மூன்றாகப் படுத்த வமளியாதலால், 'பொங்கணை' என்றார். தன்-அசை. இனி, நாற்கடற் படு மணி பொங்கணையென்றுங் கூட்டலாம். படுதிரையென்பதற்கு-ஆற்றொழுக்காக "படுதிரைவையம்" என்புழிப் போல ஒலிக்குந் திரை யென்னவு மாம். பி-ம்:—[1]பூத்தன. [2]கண்ணருள், கண்ணொளி. (கசக)

சு.—கைகேயியின் பாதங்களை மந்தரை மெல்லத்தீண்டுதல்.

[1]எய்தியக் கேகயன் மடந்தை யேடவிழ்
நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினாற்
[2]செய்தபே ருவமைசால் செம்பொற் [3]சீறடி
கைகளிற் றீண்டினாள் காலக் கோளனாள்.

(இ-ள்.) காலம் கோள் அனாள்-உத்பாதகாலத்தைக் குறிக்கத்தோன்றுந் தீக்கோளைப் போன்றவளாகிய அக்கூனி, எய்தி - (அவளை) அடைந்து,—அ கேகயன் மடந்தை-அந்தக்கைகேயியினது, ஏடு அவிழ் - இதழ் நெகிழ்கின்ற, நொய்து அலர்-மென்மையாக மலர்ந்த, தாமரை-தாமரைமலர்கள், நோற்ற - செய்த, நோன்பினால்-தவத்தினால், செய்த பேர் உவமை சால் - பெற்ற மிக்க உவமத்தன்மை பொருந்திய, செம் பொன் சிறு அடி - சிவந்தபொன்னினாலாகிய ஆபரணங்களையணிந்த சிறிய பாதங்களை, கைகளின் தீண்டினாள்-(தன்) இருகைகளாலும் தடவினாள்; (எ - று.)

கைகேயி படுக்கையிற் கண்ணயர்ந்திருந்ததனால் மந்தரை அவளை யுணர்த்துமாறு அவளுடைய சீறடிகளைக் கைகளினால் தீண்டின ளென்க. மகாசுகுமாரனை இராமபிரானைக் காட்டிற்குச்செலுத்தும்படி தோன்றின பாவியாதலால், மந்தரையை 'காலக்கோளனாள்' என்றார்: எங்கேயோ கிடந்தவள் இங்குத் தோன்றியது, பெருந்துன்பத்தை விளைக்கும் உற்பாதக்கோள் தோன்றியதுபோலு மென்க. தாமரைமலர் வனத்திற்சென்று ஒருதாளானின்று மனங்குழைந்து சூரியனை நோக்கி ஆனந்தக்கண்ணீர் பொழிந்து யோகஞ்செய்து அந்தயோகத்திற்குப் பயனாகக் கைகேயியின் பதஸாரூப்யத்திற் சிறிது பெற்றன வென்னும் தற்குறிப்பேற்றவணியின் பொருள்கொள்ள 'ஏடவிழ் தாமரை நோற்ற நோன்பினாற் செய்த பேருவமைசால் செம்பொற் சீறடி' என்றார்; சீறடி-"நுதலடி நுசுப்பெனும் மூவழிச்சிறுகி" என்ற கலித்தொகை காண்க. பி-ம்:—[1]எய்தியகைகயன். [2]செய்தவப்பெருமைத்தாம். [3]சீரடி. (கசஉ)

சு.—கைகேயி சிறிது துயிலுணர்கையில் மந்தரை கூறத்தொடங்குதல்.

தீண்டலு முணர்ந்தவத் தெய்வக் கற்பினாள்
ணீண்டகண் [1]ணனந்தரு நீங்க கிற்றிலள்

மூண்டெழு பெரும்பழி முடிக்கும் [2]வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை சொல்லன் மேயினாள்.

(இ - ள்.) தீண்டலும் - (அவள்) தடவியவளவில்,—(துயிலினின்று), உணர்ந்த-உணர்ச்சி பெற்ற, அ தெய்வம் கற்பினாள்-அந்தத்தெய்வத்தன்மை பொருந்திய கற்பினையுடைய கைகேயி,—நீண்ட கண்-நீட்சியையுடைய கண் களினின்று, அனந்தர்உம் நீங்ககிற்றிலள் - துயிலும் நன்கு நீங்கப்பெற்றா ளில்லை; (அவ்வளவில்தானே கூனி), மூண்டு எழு பெரு பழி-அதிகரித்தெழு கின்ற மிக்க நிந்தையை, முடிக்கும் - கூட்டுதற்காகிய, வெவ் வினை - பாவம், தூண்டிட-ஏவுதலால், கட்டுரை-கட்டிக்கூறுஞ் சொல்லை, சொல்லல் மேயி னாள் - சொல்லத்தொடங்கினாள்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

அனந்தர்-தூக்கமயக்கம். மந்தரையின் துர்ப்போதனைபெறாத நிலையில் கணவன்கொள்கைக்கு மாறுபடாதிருப்பவ ளென்பதைக் குறிப்பிக்க, இங்குக் கைகேயியை 'தெய்வக் கற்பினாள்' என்கிறார். தெய்வக்கற்பு-தெய்வத்தன்மை யையுடைய அருந்ததிபோலுங் கற்பென்றுமாம். கண் அனந்தர் நீங்ககிற்றி லள்-சினைவினை முதலொடுமுடிந்தது. பி-ம்:—[1]அனந்தரினிற்க நிற்கிலாள், அனந்தலு நீங்ககிற்கலாள், அனந்தரினிற்க நீங்கிலாள். [2]வல்வினை. (கசஉ)

சரு.—'பேரிடர் வரவும் வருந்தாது துயிலலாமோ?' என்று கூனி கூறுதல்.

அணங்குவாள் விடவரா வனுகு மெல்லையுங்
குணங்கெடா தொளிவிரி [1]குளிர்வெண் டிங்கள்போற்
பிணங்கு[2]வான் பேரிடர் பிணிக்க நண்ணவு
முணங்குவா யல்லைநீ யுறங்கு வாயென்றாள்.

(இ - ள்.) 'அணங்கு-துன்பஞ்செய்கின்ற, வாள்-வாள்போன்ற, விடம் அரா-விஷத்தையுடைய பாம்பாகிய இராகு, அனுகும்-சமீபிக்கின்ற, எல்லை உம் - வரையிலும், குணம் கெடாது-தன்மைமாறாமல், ஒளி விரி - கிரணங் களை வீசுகின்ற, குளிர் வெள் திங்கள் போல்-குளிர்ச்சியையுடைய வெள்ளிய சந்திரன்போல, பிணங்குவான் - வருந்தும்படி, பேர் இடர்-பெருந்துன்பம், பிணிக்க-கட்ட, நண்ணஉம் சமீபிக்கவும், உணங்குவாய் அல்லை - (அதற்கு) வருந்துவாயல்லை: நீ உறங்குவாய்-நீ தூங்குவாய்,' என்றாள்—; (எ - று)

விடவராவணுகும் எல்லையும் ஒளிவிரிகின்ற திங்கள்போல, நீ செல்வ மெல்லாம் இழக்கவருகின்றஇப்போதும் சிறிதுங் கவலைகொள்ளாமல் பெரு மகிழ்ச்சியோடு தூங்குகின்றாயே யென்றனை ளென்பதாம்; **உவமையணி.** உணங்குவாய், உறங்குவாய் - காலவழுவமைதி. பெரும்பழிப்பை யுண்டாக் குஞ் செயலை முடித்தற்கு உரிய தீவினை மந்தரைக்குக் கிடத்தலால், அது தூண்டக் கைகேயி துயிலுணர்ந்தும்உணராதும் இருக்கையில்தானே ஒரு சொல்லைக் கட்டிச் சொல்லலானா ளென்க. கட்டுரை - தானே படைத்துக் கொண்டு சொல்லுஞ் சொல். அணங்கு என்பதற்கு-கைகேயியை விளிக்கும் விளியாக, தெய்வப்பெண்ணே! என்றும், பிணங்குவானென்றதற்கு - மனம் மாறுபட்டவனாகிய சக்ரவர்த்தியென்றும் பொருள் கூறுவாருமுளர். **பி-ம்:—** [1]கொழு. [2]வாள். (கசங)

சகூ.—கைகேயி என் புதல்வர் யாவரும் அறந்திறம்பாதவராயிருக்கையில் எனக்கு என்ன துன்பமெனல்.

வெவ்விட மனையவள் விளம்ப வேற்கணா
டெவ்வடு சிலைக்கையென் [1]சிறுவர் செவ்விய
ரவ்வவர் துறைதொறு மறந்தி றம்பல
ரெவ்விட ரெனக்குவந் தடுப்ப [2]தீண்டெனா.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வெவ் விடம் அனையவள்-கொடிய நஞ்சையொத்த கூனி, விளம்ப-அங்ஙனஞ்சொல்ல,—வேல் கணாள்-வேல்போலுங்கண்களையுடைய கைகேயி, (அவளைநோக்கி), 'தெவ் அடு சிலை கை என் சிறுவர்-பகைவரை வெல்லுகின்ற வில்லைத்தாங்கிய கையையுடைய என்மைந்தர்கள், செவ்வியர் - சுகமாவிருக்கின்றனர்; அ அவர் - அந்தமைந்தர்கள், துறைதொறும் - தொழில்களிலெல்லாம், அறம் திறம்பலர்-தருமத்தினின்றுதவறுமலிருக்கின்றனர்; எனக்கு-இத்தகைய எனக்கு, ஈண்டு - இப்பொழுது, வந்து அடுப்பது-வந்துசேர்வது, எ இடர் - என்ன துன்பம்?' எனா-என்றுகூறி,—(எ - று.)—"என்றாள்" என அடுத்த கவியோடு முடியும்.

தன்சொல்லைக் கேட்டார்க்குக் கேடு உண்டாகுமாறு துன்பஞ்செய்தலால், 'வெவ்விடமனையவள்' என்றும், கடுஞ்சொற் கூறிய கூனியை விழித்துப் பார்த்தனள் கைகேயி யென்பார் 'வேற்கணாள்' என்றுங் கூறினர். வேற்கணாள்—கருத்துடையடைகோளி. வெவ்விடம் என்றது - பாற்கடலிற் பிறந்த ஹாலாஹலத்தை. சிறுவர்க்கு 'தெவ்வடு சிலைக்கை' என்று அடைமொழி கொடுத்தது—கருத்துடையடைமொழி; 'தெவ்வடுசிலைக்கைச் சிறுவர்' என்பதனால், பிறரால் தீங்குவாராது பாதுகாத்துக்கொள்ள வல்லவ ரென்றவாறு. நால்வரையுங்குறித்து 'சிறுவர்' எனப் பன்மையாற் கூறினாள். அவ்வவர் துறை யென்றது - ஸ்ரீராமன் பெற்றோர் சொல்லைப் பேணுதல், இளைய பெருமாள் ஸ்ரீராமனிடத்து அடிமை பூண்டொழுகுகை, பரதன் இராமன் சொன்ன சொற்படியே அவனுக்குப் பரதந்திரனாக நடக்கை, சத்துருக்கினன் ஸ்ரீராமபிரானிடத்துப் பரதன்போலப் பரதனிடத்துப் பரதந்திரனாக இருக்கை முதலியன. வந்தடுப்பதென்றதனால், இதுகாறும் இடரின்மை யுணர்க. இரண்டாமடி - முற்றுமோனை. பி ம்:—[1]மைந்தர். [2]ஈங்கெனா, ஈண்டென்றாள்.　(சசுரு)

சஎ.—இராமன் புதல்வனாயிருக்கையில் கைகேயி தனக்கு இடருண்டாகா தெனல்.

பராவரும் புதல்வரைப் பயக்க யாவரு
முராவருந் [1]துயரைவிட் டுறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேத மே [2]யன
விராமனைப் பயந்தவெற் [3]கிடருண் டோவென்றாள்.

(இ - ள்.) 'பராவ அரு புதல்வரை-புகழ்தற்கு அரிய புத்திரர்களை, பயக்க-பெறுவதனால், யாவர்உம் - எவரும், உராவ அரு துயரம் விட்டு-வருதற்கரிய [மிக்க] துன்பத்தை நீங்கி, உறுதி காண்பர் - நன்மையை யடைவர்; ஆல் · ஆதலால், விராவ வரு புவிக்கு எலாம்-பஞ்சபூதங்களின்சேர்க்கையால் தோன்றுவதான பூமியிலெல்லாம், வேதமே அன-வேதத்தையேயொத்துத்தோன்றுகின்ற, இராமனை—, பயந்த - பெற்ற, எற்கு - எனக்கு, இடர் உண்டு ஓ - துன்பம் உளதாகுமோ?' என்றாள் - என்றுங் கூறினாள்; (எ - று.)

'முறைதிறம்பாதவராய் பெருவீரரான புதல்வர் நால்வர் இருக்கையில் இடருண்டோ?' என்று மேலேகூறிய கைகேயி, இச்செய்யுளில் 'மற்றவர்களைப் பற்றி நான் நினைக்கவேண்டியதும்இல்லை: இராமபிரான் எனக்குப்புதல்வனாக இருக்கையில், எனக்குத் துயரம் உண்டாகுமோ? உண்டாகாது' எனத் தான் இராமபிரானிடத்துப் பேரன்புவைத்திருத்தல்தோன்றக் கூறினளென்க. பராவரும்புதல்வர்-நற்குணமுள்ள புதல்வரென்றபடி. புதல்வர் இம்மையில் மனத்துயரையகற்றிப் பெருமகிழ்ச்சியை விளைத்தலாலும், மறுமையில் புத்தென்னும் நரகம் சேரவொட்டாது பெற்றோர்களைக்காத்தலாலும், 'பராவரும்புதல்வரைப் பயக்கயாவரு முராவருந்துயரைவிட் டுறுதிகாண்பர்' என்றது. முன்னிரண்டடிகளிற் கூறிய பொதுப்பொருளைப் பின்னிரண்டடிகளிற்கூறிய சிறப்புப் பொருள் சமர்த்தித்துநின்றது, வேற்றுப்பொருள்வைப்பணியின் பாற்படும். வேதமேயன்ன இராமன் - வேதம்போல் நித்தியமான பரப்பிரமசொரூபமாகிய இராமன்: ''சுருதிபன்னசேவகன்'' என்பர், கடறுவுப்படலத்தும். விதிவிலக்குக்களை யுணர்ந்து அறிவிப்பவனெனினுமாம். பராவரும், உராவரும், விராவ அரும் எனப் பிரித்தும் பொருள்கூறலாம். காண்பர், காணுதல்-இலக்கணையாய்ப், பெறுதற்பொருட்டாயிற்று. வேதம் - நன்மை தீமைகளை யறிவிப்பது. பி-ம்:—[1]துயரம். [2]என. [3]இடருண்டாகுமோ. (கசுசு)

சஅ.—கைகேயிக்குப் பொறாமைதோன்றுமாறு மந்தரை 'கோசலைவாழ்ச்சி பெற்றனள்' எனல்.

ஆழ்ந்தபே ரன்பினா ளனைய கூறலுஞ்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள்
வீழ்ந்தது நின்னலந் திருவும்[1] வீழ்ந்தது
வாழ்ந்தனள் கோசலை [2]மதியி னாலென்றாள்.

(இ-ள்.) ஆழ்ந்த பேர் அன்பினாள்-(இராமனிடத்து) மிகுந்த அன்பாகிய கடலில் அழுந்தினவளாகிய கைகேயி, அனைய - அவ்வார்த்தைகளை, கூறலும் - சொன்னவளவில், - சூழ்ந்த தீவினை நிகர் கூனி - வளைந்துகொண்ட (அவளது) பாவத்தையொத்த மந்தரை, சொல்லுவாள் - பேசத்தொடங்கி, 'நின் நலம் வீழ்ந்தது - உனது நன்மை யழிந்தது; திருஉம் - ஐசுவரியமும், வீழ்ந்தது - (உனக்கு) ஒழிந்தது; கோசலை - கௌசல்யை, மதியினால் - புத்தியினால், வாழ்ந்தனள் - செல்வம்பெற்றுவாழ்ந்தாள்,' என்றாள்—; (எ - று.)

இராமபிரானிடத்து அன்புபொங்கக் கைகேயி அங்ஙனம்கூறினவளவில், கூனி, அந்தக்கைகேயிக்குப் பொறாமையுண்டாக்கவேணுமென்ற கருத்தினால் அவளை நோக்கி, உன்செல்வாக்கும் செல்வமும் ஒழிய, உன்சக்களத்தியாகிய கோசலை தன்மதியின்வல்லமையால் எல்லாநன்மையும் பெற்றுவிட்டாளாதலால் இனிவாழ்வாளென்று கைகேயியைத்தாழ்த்திக் கோசலைமேம்படுவதைக் குத்துப்பாடாக எடுத்துக்கூறினளென்க. ஆழ்ந்தபேரன்பினாள் - விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. பழியையுண்டாக்குதலால், தீவினையையுவமை யாக்கினார். வீழ்ந்தது முதலியன - தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டன; விரைவினாலுமாம். மதியாவது - நல்லதன்நலனுந் தீயதன்தீமையும் உள்ளவாறு உணர்தல்; சாமர்த்தியமுமாம். பி - ம்:—
[1]வீந்தது, வீய்ந்தது. [2]மதியினாள். (௧௪௭)

## ௪௯.—கோசலைக்கு ஏற்கவே ஏற்பட்டுள்ள பெருவாழ்வினைக் கைகேயி பாராட்டிக் கூறுதல்.

[1]அன்னசொ லனையவள் [2]கூற வாயிழை
மன்னவர் மன்ன[3]னேற் கணவன் மைந்தனேற்
பன்னரும் பெரும்புகழ்ப் பரதன் பார்தனி
லென்[4]னிதன் [5]மேலவட் கெய்துவம்வாழ் வென்றாள்.

(இ - ள்.) அனையவள் - அந்தக்கூனி, அன்ன சொல் கூற - அந்தவார்த்தையைச்சொல்ல,—ஆய் இழை-ஆராய்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடைய கைகேயி, 'கணவன் - நாயகன், மன்னவர் மன்னன் ஏல் - சக்கரவர்த்தியானால், மைந்தன் - புத்திரன், பன்ன அரு பெரு புகழ் பரதன் ஏல்-புகழ்தற்கு அரிய மிக்க கீர்த்தியையுடைய பரதனானால், - இதன்மேல் - இதனினும் மேலாக, அவட்கு - அக்கோசலைக்கு, பார்தனில் - பூமியில், எய்தும் - வரக்கடவதாகிய, வாழ்வு—, என் - யாது?' என்றாள்—; (எ - று.)

சக்கரவர்த்தி கணவன்: பரதன் மைந்தன் என்றால், இதனினும் மேலாக அவளுக்கு வரும் வாழ்வுயாது? என்பதாம்: புதிதாக அந்தக்கௌசலைக்கு வாழ்ச்சி வரவேண்டியது இல்லை; ஏற்கவே, நல்வாழ்வு அமைந்திருக்கின்றதெனக் கூறியவாறு. அன்புடைமைபற்றிக் கௌசல்யையைப் பரதன்தாயாகக் கூறினாள்.* இனி எனக்குக் கணவன் மன்னவர்மன்னவனென்றால், மைந்தன் பன்னரும் பெரும்புகழ்ப் பரதன் என்றால், என்னினும் மேலாக அவளுக்கு வரும் வாழ்ச்சி யாது? என்பது கருத்தாக வுரைப்பாருமுளர். பரதன் - பரம் = பாரம், இதனையுடையவன், பரதன்: லௌகிகவைதிககாரியங்களை நிர்வகிக்கவல்லவன் என்பது கருத்து; இராச்சியபாரத்தை எம்பெருமான் திருவடிநிலையில்வைத்து ஆண்டவன் என்றுங் கொள்ளலாம். பி-ம்:—
[1]அன்னவளவ்வுரை, அன்னவளனையவள். [2]உரைப்ப. [3]என், எங். [4]அதன். [5]மேலும்வந்து. (௧௪௮)

ரு0.—மந்தரை கௌசலைக்குவரும் வாழ்வை எடுத்துக்கூறுதல்.

ஆடவர் நகையுற வாண்மை [1]மாசுறத்
தாடகை யெனும்பெயர்த் தைய லாள்படக்
கோடிய வரிசிலை யிராமன் கோமுடி
சூடுவ னாளைவாழ் [2]விதெனச் சொல்லினாள்.

(இ - ள்.) (கூனி), 'ஆடவர் நகை உற-வீரர்கள் பரிகசிக்கவும், ஆண்மை மாசுஉற-ஆண்தன்மை குற்றமடையவும், தாடகை எனும் பெயர் தையலாள்-தாடகையென்னும் பெயரையுடையபெண், பட - அழியும்படி, கோடிய-வளைந்த, வரி சிலை - கட்டமைந்தவில்லினையுடைய, இராமன்—, நாளை—, கோமுடி - அரசுக்குஉரிய கிரீடத்தை, சூடுவன்-சூடிக்கொள்வான்: இது வாழ்வு-(அவளுக்கு வரும்) வாழ்வு இதுவே,' என - என்று, சொல்லினாள்—; (எ-று.)

புத்திரன் பட்டமடைதல் உன்வாழ்வினும் மேலானவாழ்வென்பதாம். இராமன் பெண்பாலார்திறத்தில் இரக்கமின்றித் தவறுசெய்பவனென்பாள், 'தாடகையெனும்பெயர்த் தையலாள்படக் கோடியசிலையிராமன்' என்றாள்: இந்த அடைமொழி கொடுத்துக்கூறியது, உன்திறத்துக் கொடுமைபுரிதலிலும் பின்வாங்கமாட்டான் அவ்விராமனென்பதை யுணர்த்தற்பொருட்டாகும். மாசுறுதற்குக் காரணம், பெண்கொலைபுரிதல். தையலாள் - அழகுடையவள். கோடியசிலை - அநீதியாகிய தொழிலில் முயன்ற சிலை யென்றுமாம். பி - ம்:—[1]மாசுண. [2]இதுவெனச்சொல்லினாள், இதுவெனச்சொன்னாள், இதுவெனச் சொன்னாள். (ககக)

ருக.—இராமபட்டாபிஷேகத்தைக் கேட்டுக் கைகேயி கோசலைபோல மகிழ்தல்.

மாற்றமஃ துரைசெய மங்கை யுள்ளமு
மாற்றல்சால் கோசலை யறிவு [1]மொத்தவால்
வேற்றுமை[2] யுற்றிலள் [3]வீரன் றாதைபுக்
[4]கேற்றவ [5]னிருதயத் திருக்க வேகொலாம்.

(இ - ள்) அஃது மாற்றம் உரை செய - அந்தவார்த்தையை (க் கூனி) சொல்ல, மங்கை உள்ளமும் - கைகேயியின் மனமும், ஆற்றல் சால் கோசலை அறிவும்-பெருமைமிகுந்த கௌசல்யையினது புத்தியும், ஒத்த-ஒத்திருந்தன; ஆல் - ஆதலால், வேற்றுமை உற்றிலள் - (கைகேயி) வேறுபாடு அடையவில்லை; (அதற்குக்காரணம்), வீரன் தாதை-இராமன்தந்தையாகிய தசரதன், அவள் இருதயத்து - அவள் மனத்தில், புக்கு ஏற்று - புகுந்து இணங்கி, இருக்கவேகொல்ஆம் - இருந்ததனாற்போலும்; (எ - று.)

இது-கவிக்கூற்று. வீரமாதாவாதலாலும், சருவேசுவரனைத் திருமகனாகப் பெற்றதனாலும், தசரதன்மனைவியர் அநேகர்க்குள் பிரதானமானவர் மூவருள்ளும் முதல்தாரமாய்ப் பட்டம்பெற்றவளாதலாலும், 'ஆற்றல்சால்கோசலை' என்றார். இராமபட்டாபிஷேகத்தைச் செவியுற்றதனால் கோசலைக்கு எவ்வளவு

களிப்புண்டாயிற்றே, அவ்வளவுகளிப்பு கைகேயிக்கும் உண்டாயிற்று என்ற வாறு. இங்ஙனம் மாற்றாள்புதல்வனுக்கு முடிசூடுதலிற் பெற்றதாய்போல் இந்தக் கைகேயிக்கு மனமகிழ்ச்சி தோன்றிய காரணம், எப்பொழுதும் அக் கைகேயியின் மனத்தில் தசரதனிருப்பதால், அவன் மனமே அவள் மனமாவ தன்றி வேறுஇல்லாமையாலெனக் கவி பின்னடிகளால் வருணிக்கின்றாரெ ன்க. ஆல்-விகாரம். இராமன் தன்னறிவும்ஒழுக்கமுங்கண்டார் 'இவன் தந்தை இவனைப்பெறுதற்கு என்னதவஞ்செய்தான் கொல்லோ!' என்றுசொல்லுஞ் சொல்லை நிகழ்த்தியொழுகுமவ னுதலால், தயரதனை 'வீரன்தாதை'என்றார். நான்காமடி-முற்றுமோனை. பி-ம்:—[1]ஒத்ததால். [2]உற்றில. [3]இராமன்றாதையும், வீரவீரனும், வீரர்வீரனும், வீரர்வீரன்புக்கு. [4]ஏற்றவர். [5]இதயத்தில், (கருo)

## ருஉ.—இராமபட்டாபிஷேகச் செய்தியைக் கூறியதற்காகக் கைகேயி மந்தரைக்கு மணிமாலையளித்தல்.

ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத்
தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்
தூயவ [1]ளுவகைபோய் மிகச்சு டர்க்கெலா
நாயக மனையதோர் மாலை நல்கினாள்.

(இ - ள்.) தூயவள்-கைகேயி,—ஆய-உண்டாகிய, பேர் அன்பு எனும் - மிக்க விருப்பமாகிய, அளக்கர் - கடல், ஆர்த்து எழ - ஒலித்துக்கொண்டு கிளரவும், தேய்வு இலா மதி முகம் - (கிருஷ்ணபட்சத்திலும்) தேய்தல் இல் லாத பூர்ணசந்திரன்போன்ற முகம், விளங்கி தேசு உற - தெளிந்து ஒளி யடையவும், உவகை போய் மிக - மகிழ்ச்சி எல்லைகடந்து அதிகரிக்கவும், சுடர்க்கு எலாம் நாயகம் அனையது-முச்சுடர்க்கும் தலைமைபெற்றதுபோன்ற தாகிய, ஓர் மாலை-ஒருஇரத்தினமாலையை, நல்கினாள்-(இராமபட்டாபிஷேக மென்ற மகிழ்ச்சிச்செய்தியைக் கூறிய அந்த மந்தரையென்னுங் கூனிக்குக்) கொடுத்தாள்; (எ - று.)

இராமபட்டாபிஷேகத்தைச் செவியுற்றதனால் கைகேயிக்கு மனத்துக்கு உள்ளே மகிழ்ச்சியடங்காது முகத்தில்வெளித்தோன்ற, அக்கூனி சொல்லிய கொடுஞ்சொல்லைப் பொருட்படுத்தாது கைகேயி பேரொளியுள்ள அரதன மாலையை மகிழ்ச்சியைத்தெரிவித்த அவட்குக் கொடுத்தனளென்க. முகத்தின் ஒளி நாடோறும் வளர்ந்தேவருதலால் தேய்விலாமதியை யுவமை யாக்கினர். தூயவள்-சுத்தமுடையவள்; மனத்திற் களங்கமற்றவள்; கருத்துடையடை கோளி. முச்சுடராவன-சந்திரன் சூரியன் அக்கினி யென்பன. இனி, சுடர்-துவாதசாதித்தருமாம். சுடர்க்கு எலாம்நாயகம் - சூரியனென்னுங்கடவுள் எனினுமாம். பிம்:—[1]உவகையான், உவகைபோல். (கருக)

## ருங.—மந்தரை பெருவருத்தமடைந்து செய்த செயல்.

தெழித்தன [1]ளுரப்பினள் [2]சிறுக்கண் டீயுக
விழித்தனள் வைதனள் வெய் [3]துயிர்த்தன
ளழித்தன ளழுதன ளம்பொன் மாலையாற்
குழித்தன ணிலத்தையக் கொடிய கூனியே.

(இ - ள்.) கொடிய அ கூனி—, தெழித்தனள் - இரைந்தாள்; உரப்பி னள் - அதட்டினாள்; சிறு கண் தீ உக - சிறிய கண்களினின்று நெருப்புப் பொறி சிந்த, விழித்தனள் - பார்த்தாள்; வைதனள் - திட்டினாள்; வெய்து உயிர்த்தனள்-வெப்பமாகப் பெருமூச்சுவிட்டாள்; அழித்தனள்-(தன்கோலத்தைக்) கெடுத்தாள்; அழுதனள் - புலம்பினாள்; அம் பொன் மாலையால் - (உவகைச்செய்திசொன்னதற்காகக் கைகேயி கொடுத்த)அழகிய பொன்மாலையினால், நிலத்தை - பூமியை, குழித்தனள் - குழியாக்கினாள்; (எ - று.)

நிலங்குழிபடப் பொன்மாலையைத் தரையிலெறிந்தாளென்பார், 'குழித்தனணிலத்தை' என்றார். அரதனமாலையேயாயினும் பொன்னிற்பதித்துச் செய்யவேண்டுதலால், அவ்வரதனமாலை பொன்மாலை யெனப்பட்டது. கொடுமை - பெயரிலும், உடலிலும், சொல்லிலும், குணத்திலும், செயலிலு முள்ளது. பி-ம்:—[1]உயிர்த்தனள். [2]சிறுகண். [3]உரப்பினள். (கரு௨)

ருச.—கூனி, 'நீ துயர்படச்சம்மதித்தாலும் கோசலையின் தாதியர்க்கு அடிமைசெய்ய நான் உடன் படேன்' எனல்.

வேதனைக் கூனிபின் [1]வெகுண்டு நோக்கியே
[2]பேதைநீ பேதின்றிப் பிறந்த சேயொடு
[3]மாதுயர் படுகநா [4]னெடிதுன் மாற்றவ
டாதியர்க் காட்செயத் தரிக்கி லேனென்றாள்.

(இ-ள்.) வேதனை கூனி-துயரத்தைச் செய்கின்ற கூனியானவள். பின்-பின்பு, வெகுண்டு நோக்கி-(அந்தக்கைகேயியைக்கோபித்துப்பார்த்து, 'நீ—, பேதை-அறிவுகெட்டவள்: பேது இன்றி-(நாம் வேறு கௌசலைவேறு என்ற) பேதபுத்தியில்லாமையால், பிறந்த சேயொடும் - (உனது வயிற்றிற்) பிறந்த மகனாகிய பரதனோடும், மா துயர் படுக-பெருந்துன்ப மடைவாயாக; நான்—, உன் மாற்றவள் தாதியர்க்கு-உனது சக்களத்தி (கௌசலையின்) தாதிகளுக்கு, நெடிது-வெகுகாலம், ஆள் செய - அடிமைசெய்ய, தரிக்கிலேன் - பொறுக்க மாட்டேன்,' என்றாள்—; (எ - று.)

அந்தக்கூனி கைகேயியைச்சினந்துநோக்கி 'நீ அறிவுகெட்டவள்: அதனால்,'நாம் வேறு,கௌசலை வேறு:அவளுக்கு ஏற்றம்வந்தால் அது நமதுவாழ்வுக்குக் குறைவே'என்ற உண்மையையறியமாட்டாமல் மகிழ்கிறாய்: கௌசலையும் அவளைச் சேர்ந்தவர்களும் உன்னைத் தாழ்மைப்படுத்த, நீ இனி உன் மகனோடு துயரமுற்றுக்கிடப்பாய்: நானோ தன்மகன் இராச்சியம் பெற்றதனாற் பெருமிதங்கொண்ட கோசலையின் தாதியர்க்கு அடிமைசெய்து பிழைக்க மனம்பொறேன்' என்றனளென்க. மாற்றவளின் தாதியர்க்கு ஆட்செயப் பொறேன் என்று மந்தரை கூறியது-நீ கோசலையின்தாதியர்க்கு ஆட்செய்யும்படி நேருமெனக் குறிப்பித்தபடியாம். பி - ம்:—[1]வெகுண்ட நோக்கியப், வெகுண்டுநோக்கியப். [2]பேதைநீ பித்தனில், பேதைநீபேதையை, பேதையைப்பித்திநிற். [3]நீதுயர்ப், நீதுயர். [4]நெடிதுமற்றவள். (கருங)

ருரு.—இராமன் பத்தினியுடன் சிங்காசனத்திருக்க, நின்மகன் தரையிலிருக்கவேணுமே யெனல்.

சிவந்தவாய்ச் சீதையுங் கரிய செம்மலு
நிவந்த[1]வா சனத்தினி திருப்ப நின்மக
[2]னவந்தனாய் [3]வெறுநிலத் திருக்க லானபோ
துவந்தவா [4]றென்னிதற் குறுதி யாதென்றாள்.

(இ - ள்.) சிவந்த வாய் சீதைஉம் - சிவந்தவாயினையுடைய சீதையும், கரிய செம்மல்உம் - கருநிறத்தையுடைய இராமனும், நிவந்த ஆசனத்து - உயர்ந்த சிங்காதனத்தில், இனிது இருப்ப - இனிமையாகவீற்றிருக்க,—நின் மகன் - பரதன், அவம் ஆய் - வீணாய், வெறு நிலத்து - சிங்காதனமில்லாத நிலத்தில், இருக்கல் ஆன போது - இருக்க நேர்ந்த காலத்தில், உவந்த ஆறு - சந்தோஷித்த காரணம், என் - யாது? இதற்கு உறுதி யாது - இதனுக்கு நீ கொண்ட மனவுறுதி யென்ன? என்றாள்—; (எ - று.)

சக்களத்திமகனான இராமன் தன்மனைவியோடு சிங்காதனத்திலேறி வீற்றிருக்க, அவர்கள் பாதத்தின் கீழ் வெறுந்தரையில் உன் மகன் யாதொரு பெருமையுமின்றிக் கைகட்டிநிற்கவேணுமே! இவ்வாறான நிலை நிகழ்வதாயிருக்கவும் மனத்தில் என்ன உறுதிகொண்டு மகிழ்கின்றா யென மந்தரை வினவுகின்றன ளென்க. சிவந்த வாய்ச் சீதை யென்பதனால் அவளது இனிதிருப்பையும், இராமனிடத்துள்ள சினத்தினால் 'கரியசெம்மல்' என்று அவனது கொடுமையையும் விளக்குகின்றா ளென்பர். அவமென்பதன்பின் தன்சாரியை. அவந்தன்-அவத்தனென்பதன் விகாரமுமாம்: வீணானவன்: அவந்த்யன் என்ற வடமொழித் திரிபாகக்கொண்டு - வணங்குதற்கு உரியனல்லாதவன் [அதாவது - எவராலும் இலட்சியம் பண்ணப்படாதவன்] எனக் கூறுதலு மொன்று. பி - ம்:—[1]ஆசனத்தின்மேல். [2]அவந்தனால். [3]வறு. [4]என்னிதன், என்னிதில், என்னிது, என்னிழுக்கு. (கருச)

ருசு.—கோசலையினால் இராமன் அரசுபெற்று மேன்மையடையப் பரதன் தாழ்ச்சிபெறுவதை மந்தரை யெடுத்துக்காட்டல்.

மறந்திலள் கோசலை யுறுதி மைந்தனுஞ்
[1]சிறந்தனன் றிருவினிற் றிருவு [2]நீங்கினா
னிறந்தில [3]னிருந்தில னென்செய் தாற்றுவான்
பிறந்திலன் பரதனீ [4]பெறுத லாலென்றாள்.

(இ - ள்.) கோசலை - கௌசல்யை, உறுதி - நன்மையை, மறந்திலள் - மறந்தாளில்லை; (அதனால்), மைந்தன்உம் - அவள் மகனும், திருவினில் - இராச்சிய சம்பத்தால், சிறந்தனன் - மேம்பட்டான்; பரதன் - பரதனோ,திருஉம் நீங்கினான்-செல்வத்தையும் இழந்தான்; (செல்வமில்லாத அவன்), இறந்

திலன் - செத்தானில்லை; இருந்திலன் - (நல்வாழ்க்கையோடு) இருந்தானு மில்லை; என் செய்து - என்ன செய்து, ஆற்றுவான் - துயர் தீர்வான்; நீ பெறுதலால்- நீ யீன்றதனால், பிறந்திலன்-உற்பவித்தானில்லை, என்றாள்—.

கோசலை தன்னுறுதியை நாடுபவளாய்த் தசரதசக்கரவர்த்தியைக்கொண்டு தன்மகனுக்குப் பட்டங்கட்டுவித்தலால், இராச்சியசம்பத்தை யெல்லாம் பெற்று இராமன் மேம்பட்டு நிற்க, பரதன் இப்போதிருக்குஞ் செல்வ வாழ்க்கையும் குறைய உயிர்ப்பிணம்போல இவ்வுலகில் தடுமாறித் திரியுமாறு நேருமென மந்தரை குத்திக் காட்டுகின்றன ளென்க. பரதனுக்கு இராச்சியத்தை வாங்கித்தருமாறு கைகேயிக்குத் துர்ப்போதனைசெய்யும் மந்தரை, கோசலை தன்னுறுதியைநாடி இராமனுக்கு இராச்சியத்தை வாங்கிந்தந்ததாகக் கூறுகின்றனள். பரதன் இறந்திருப்பானுயின் துயர்தீர்வான்என்று இரங்குவாள் போன்று 'இறந்திலன்'என்றும், நல்வாழ்வின்றியிருப்பதுஇறந்ததுபோலவே யாகு மென்பாள் 'இருந்திலன்' என்றும், இத்தீங்கு தந்தைதாயர் காரணமாக வந்ததனால் 'என்செய்தாற்றுவான்' என்றும் கூறினாள். நீ - மாற்றாளின் செல்வங் கண்டுகளிக்கும் நீ. உலகிற்பிறந்ததனால் ஒருபயனையும் எய்தாமை பற்றிப் பரதன் பிறந்திலன் என்கிறாள்; முன் "பிறந்திலனென்பதிற் பிறிதுண்டாகுமோ" என்றதூஉம் இக்கருத்தே பற்றி வந்தது. [1]சிறந்தாற்றிருவினிற் றிருவு மெய்தினாள் என்ற பாடத்திற்கு - சீதையாகிய இலக்குமியோடு ராஜலக்ஷ்மியுஞ் சேர்ந்தாளென்று பொருள் காண்க. பி - ம்:—[2]எய்தினாள், எய்தினன். [3]இருந்தனன். [4]பெற்றதால். (கருநு)

ருஎ.—மந்தரை பரதசத்துருக்கனர் தவஞ்செய்யச் செல்லலாமெனல்.

சரதமிப் புவியெலாந் தம்பி யோடு[1]மிவ்
வரதனே காக்கு[2]மேல் வரம்பில் காலமும்
பரதனு மிளவலும் பதியி னீங்கிப்போய்
விரதமா தவஞ்[3]செய [4]விடுத னன்றென்றாள்.

(இ - ள்.) இ புவி எலாம் - இவ்வுலகமனைத்தையும், சரதம்-மெய்யாக, இ வரதன் ஏ-இவ்விராமனே, தம்பியோடுஉம்-தம்பியாகிய லக்ஷ்மணனுடன், காக்கும்ஏல் - ஆள்வானுனல், வரம்பு இல் காலம் உம் - அளவில்லாத கால முழுவதிலும், பரதன்உம் இளவல்உம் - பரதனும் அவன்தம்பியாகிய சத்துருக்கனனும் (ஆகிய இவர்களிருவரையும்), பதியின் நீங்கி போய் - நாட்டினின்றும் பிரிந்துபோய், விரதம் மா தவம் செய - விரதங்களோடுகூடிய பெரியதவத்தைச் செய்வதற்கு, விடுதல் - (காட்டுக்கு) அனுப்புதல், நன்று - நல்லதாகும், என்றாள்—; (எ - று.)

"பரதனுமிளவலு மொருநொடிபகிரா,திரதமுமிவுளியு மிவரினுமறைநூ, லுரைதரு பொழுதினு மொழிகிலரெனையாள்,வரதனுமிளவலு மெனமருவினரே"என ஒருவரையொருவர் விடாதுதொடர்தல் கூறப்பட்டதனால், இலக்கு

மணனை இராமன்தம்பியென்றும், சத்துருக்கனனைப் பரதன்தம்பியென்றும் கூறினாள். பதியின்நீங்கி - அரசினின்றும் நீங்கியென்றுமாம்; இன் - நீக்கம். அரசின்றி நகரவாசஞ்செய்வதினும் வனவாசஞ்செய்தல் மேன்மையுடைத்து என்பதாம். பரதனால் யாதுநேருமோ என்று அச்சங்கொண்டு இராமன் பரதனை உயிர்மாய்த்தலுங் கூடுமாதலால், அங்ஙனம்நேராதபடி அந்தப் பரதனைத் தம்பியோடு தவஞ்செய்யுமாறு காட்டுக்கு அனுப்புவது நன்று என மந்தரை கூறினாளென்று முதனூல்கொண்டு கருத்துக்காண்க. பி-ம்:—[1]அவ். [2]ஆல். [3]செய்து. [4]விடுகை. (கருசு)

ருஅ.—பரதன் அரசர்வரிசையில் சேரப்பெறவிடில் இறத்தலே நன்று எனல்.

பண்ணுறு கடகரிப் பரதன் பார்மகள்
கண்ணுறு கவினரா யினிது காத்தவம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையி
லெண்ணுறப் பிறந்தில னிறத்த னன்றென்றாள்.

(இ - ள்.) 'பரதன்—, பண் உறு கடம் கரி - கல்லணைபொருந்திய மத யானைச்சேனையையுடையனுகி [அரசனுகி],—பார்மகள் கண் உறு கவினர் ஆய் இனிது காத்த-நிலமகள் விரும்பத்தக்க அழகையுடையவராய் இனிமையாக ஆண்ட, மண் உறும் முரசு உடை-மார்ச்சனைபொருந்திய பேரிகைகளையுடைய, அ மன்னர் மாலையில் - அவ்வரசரது வரிசையில், எண் உற - கணக்கிடும்படியாக, பிறந்திலன்-; (ஆதலால்), இறத்தல்-,நன்று-,'என்றாள்-.

உலகத்திற் செல்வமில்லாதிருப்பது உயிர் நீங்கிய நிலைக்கே ஒப்பாமாதலால் அரசச்செல்வமின்றிக் கிடக்கும் பரதன் இளிவரவோடு உயிர்வைத்துக் கொண்டிருப்பதினும் இறந்துவிடுவதே நல மென்று மந்தரை கூறுகின்றனளென்க. மனு இட்சுவாகு மாந்தாதா முதலாகக் குலமுறைகிளத்துபடலத்திற் கூறியவாறு சொல்லப்படும்அரசர்கோஷ்டியிற் சேரப்பெற்றிலனேயென்பாள் 'மன்னர்மாலையி லெண்ணுறப் பிறந்திலன்' என்றாள். இப்பாடலினெதுகை மந்திரப்படலத்தின் சு-ஆஞ்செய்யுளோடு ஒத்துவருதல் காண்க. கரி - மற்றையங்கங்களுக்கும் உபலட்சணம். ஈண்டுக் கவின் என்றது - நீதிமுறை பிறழாத செங்கோலினதழகை. மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்ற இவற்றான் வருங் கேடு தோன்றாதபடி காக்கவேண்டுதலின், 'இனிதுகாத்த' என்றாள். இதனானே, ஆறலைப்பார் கள்வர் குறளைகூறுவார்முதலிய மாக்களும், பன்றி புலி கரடி முதலியவிலங்குகளுமாகிய பகையின்மையும் பெற்றாம். மண்ணுறுத்தல் - "ஆவுதிமண்ணி" என்றாற் போலப் பண்ணுதலுமாம். இறத்தல்நன்று என்றவிடத்து இறத்தலே நன்று என்றுபொருளாதலால், ஏகாரம்-விகாரத்தால் தொக்கதென்க. "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது. (கருஎ)

௫௯.—கேகயநாட்டிற்குப் பரதனை யனுப்பியதன் காரணம் விளங்கிற்றென்றல்.

பாக்கியம் [1]புரிந்திலாப் பரதன் றன்னைப்பண்
டாக்கிய பொலங்கழ லரச னாணையாற்
[2]றேக்குயர் [3]கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருளெனக் கின்று [4]போந்ததால்.

(இ - ள்.) பாக்கியம் புரிந்து இலா பரதன் தன்னை - (அரசாளுதற்குப் பொருந்திய) நல்வினையைச் செய்யாத பரதனை, பொலம் ஆக்கிய கழல் அரசன்-பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த சக்ரவர்த்தி, பண்டு - முன்னே, ஆணையால்-(தனது) ஏவலினால், தேக்கு உயர் கல் அதர்-தேக்குமரங்கள் உயரப்பெற்ற மலையைச்சார்ந்த பெருவழியாக, சேண்இடை - வெகுதூரத்தில் [கேகயநாட்டில்], கடிது-விரைவாக, போக்கிய - அனுப்பிய, பொருள் - காரணம், எனக்கு இன்று போந்தது - எனக்கு இப்பொழுது தெரியவந்தது; (என்று மந்தரை கூறினாள்); (எ - று.)—ஆல்-தேற்றம்: அசையுமாம்.

சேணிடைப்போக்கியது என்றது, தசரதன் பரதனைக் கேகயதேசத்தரசனாகிய அவன்மாமன் யுதாஜித்து அழைக்கச் சத்துருக்கனோடு கூட்டி யனுப்பியதனை; இதனை "ஆணைநின்றன் முதுதாதைதையயரிற், காணியவிழைவதோர் கருத்தனுதலாற், கேணியில்வளைமுரல் கேகயம்புகப், பூணுரிமார்பநீ போதியென்றனன்" என்பது முதலாகப் பரசுராமப்படலத்திற் கூறியதனு லுணர்க. இராமனுக்குப் பட்டங்கட்டுதற்குப் பரதன் ஒருகால் தடையாயிருப் பானோஎன்ற காரணத்தினாலே யனுப்பியதாக மந்தரை கூறுகின்றாள். பி-ம்:— [1]புரிந்திலான். [2]தேக்குறு, தேக்கிய. [3]கவலதர். [4]போயிற்றால், போய்த்தென்றாள். சிலபிரதியில் போக்கினையிலையினிப்போதல்செய்யென்றாள் என்று நான்காமடி. சிலபிரதிகளில் "கல்வியும்" என்று தொடங்கும் கூஉ-ஆம் பாடல் இப்பாடலின்முன்னேயுள்ளது. (கநிஅ)

௬௦.—பரதனைக் குறித்து மந்தரை யிரங்குதல்.

மந்தரை பின்னரும் [1]வகைந்து கூறுவா
ளந்தரந் [2]தீர்ந்துல களிக்கு நீரினாற்
[3]றந்தையுங் [4]கொடியனற் றாயுந் தீயளா
லெந்தையே பரதனே யென்செய் வாயென்றாள்.

(இ - ள்.) மந்தரை—, பின்னர்உம் - பின்பும், வகைந்து கூறுவாள் - வகைப்படுத்துச் சொல்லுபவளாகி,—'அந்தரம் தீர்ந்து-வேற்றுமை கொண்டு, உலகு-இராச்சியத்தை, அளிக்கும்-(இராமனுக்குக்) கொடுக்கின்ற, நீரினால் - தன்மையினால், தந்தைஉம் கொடியன் - தகப்பனும் கொடியவன்; (அது கேட்டு மனம் உவக்கின்ற), நல் தாய் உம்-பெற்ற தாயும், தீயள்-கொடியவள்; எந்தையே-என்தந்தையே! பரதனே-! என்செய்வாய் - (இனி நீ) யாதுசெய் வாய்?' என்றாள்—; (எ - று.) ஆல் - தேற்றம்: இரக்கமுமாம்.

தகப்பனுன தசரதனே உன்னிடத்து அன்பின்றிப் பட்சபாதமாக இராமனுக்கு முடிசூட்டுகின்றான்: பெற்றதாயாகிய இந்தக்கைகேயியாவது அதனைத் தடுத்து உனக்குமுடிசூட்ட முயலலாமே; நான் சொல்லியும் அவ்விஷயத்திற் சிறிதும் இவள் மனத்தைச் செலுத்துகின்றாளில்லை; அந்த இராம பட்டாபிஷேகத்துக்கு மனமுவக்கின்றாள்; இப்படி தகப்பனோடு பெற்றதாயோடு வாசியறக்கொடியராயிருக்கப்பெற்ற நீ, ஐயோ இனிஎன்செய்வாய்! என்று பரதனைக் குறித்து மந்தரை இரங்கிக்கூறினளென்க. எந்தையேயென்றது மரபுவழுவமைதி. பி-ம்:—[1]வருந்து, வரைந்து. [2]அந்தரத்தினிது, அந்தரந்தீர்த்து. [3]எந்தையுங். [4]கடியன். [5]செய்தாற்றுவாய். (கருக)

**சூக.—மீண்டும் மந்தரை கைகேயியை யிடித்துக்கூறுதல்.**

[1]அரசரிற் பிறந்துபின் [2]னரச ரில்வளர்ந்
தரசரிற் புகுந்துபே ரரசி யானநீ
கரைசெயற் கருந்துயர்க் கடலில் வீழ்கின்று
யுரைசெயக் கேட்கிலை [3]யுணர்தி யோவென்றாள்.

(இ-ள்.) (மந்தரை மீண்டும் கைகேயியைப்பார்த்து), அரசர் இல் பிறந்து-அரசவமிசத்தில் உற்பவித்து, பின்—, அரசர் இல் வளர்ந்து-வேந்தர்வீட்டில் வளர்ந்து, அரசர் இல் புகுந்து-வேந்தர்வீட்டில் வாழ்க்கைப்பட்டு, பேர் அரசி ஆன நீ - பெரிய ராஜமகிஷியான நீ, கரை செயற்கு அரு - கரைகாணுதற்கு அரிதாகிய, துயர் கடலில் - துக்கசாகரத்தில், வீழ்கின்றாய் - விழப்போகின்றாய்; உரை செய கேட்கிலை-(நான்) சொல்லவும் கேட்கின்றாயில்லை; உணர்தி ஒ - (உனக்கு) உணர்ச்சியுள்ளதோ? [இல்லையென்று தோன்றுகின்றது], என்றாள்—; (எ - று.)

சாமானியமான குலத்துப்பெண்ணாயிருந்தால் அவள் அரசியலையறியாளாதலால் மூற்றாளின்மகன் அரசனாவதைப்பற்றி அப்படிப்பட்டவட்குக் கவலையுண்டாகாமலிருப்பது இயற்கையே; நீ அரசகுலத்திற்பிறந்தாய்: பிறந்தது மாத்திரமன்றி அரசரில்லிலேயே வளர்ந்தாய்: அம்மாத்திரமன்றி அரசரில்லிற் புகுந்து பட்டமகிஷியுமானாய்: இப்படிப்பட்ட நீ உன்மகனுக்கு அரசியல் நேராது மாற்றாளின்மகன் அரசாட்சியைப்பெறுவது உனக்குப் பெருந்துயரை விளைவிக்கப்போகின்றதென்பதையும் உணராமலிருக்கின்றாயே! என்று கைகேயிக்கு இடித்து மந்தரை மதி புகட்டியவாறு. வீழ்கின்றாய் - தெளிவுபற்றி எதிர்காலம் நிகழ்காலமாகக் கூறப்பட்ட காலவழுவமைதி. உணர்தியோ, ஒ - எதிர்மறை. பி-ம்:—[1]அரசியற். [2]அரசினில். [3]உணர்விலோயென்றாள். (கசுo)

**சூஉ —மந்தரை பரதனது அரசியற் குணங்கள் எல்லாம் பயனற்றுப்போவதற்கு இரங்குதல்.**

கல்வியு மிளமையுங் கணக்கி லாற்றலும்
வில்வினை யுரிமையு மழகும் வீரமு
மெல்லையில் குணங்களும் பரதற் [1]கேயது
[2]புல்லிடை யுகுத்தமு தேயும் போலென்றாள்.

(இ - ள்.) கல்விஉம் - வித்தையும், இளமைஉம்-யௌவனமும், கணக்கு இல் ஆற்றல்உம் - அளவில்லாத வல்லமையும், வில் வினை உரிமைஉம்-தனுர் வித்தையிலுள்ள சாமர்த்தியமும், அழகுஉம் - எழிலும், வீரம்உம்-வீரியமும், எல்லை இல் குணங்கள்உம் - மற்றும் அளவில்லாத நற்குணங்களும், பரதற்கு ஏயது-பரதனுக்குப் பொருந்தியுள்ளது,புல் இடை உகுத்த அமுது ஏயும்-புல் தரையில் சொரிந்த அமிருதத்தையொக்கும், என்றாள்—; (எ - று.)

அரசர்க்குஉரிய கல்வி முதலிய யாவும் பரதனிடத்து அமைந்திருந்தும் அரசு பெற்றாலன்றி வேறு வகையில் அவை விளங்காவாதலால் புல்லிலே சிந்திவிட்ட அமுதம்போல வீணாகுமென்பதாம். உகுத்தவென்னும் பெயரெச் சத்து அகரவீறு தொகுத்தல். போல் - அசை. உம்மென்பதைப் போல் என்ப தோடு இயைத்து அமுதேபோலும் என்று உரை கூறுவாருமுளர். பி-ம்:—[1]எய்திய, எய்துபு. [2]புல்லிடையுக்கமுதேயும், புல்விதுபுல்லுகுமமுதம். (கஙக)

வேறு.

கூங.—மந்தரையின்கொடுஞ்சொற் கேட்டுக் கைகேயி சினந்து கூறத்தொடங்குதல்.

வாய்க யப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்
காய்[1]க னற்றலை நெய்சொரிந் தெனக்கதங் கனற்றக்
[2]கேக யர்க்கிறை திருமகள் கிளர்கிளை வரிக
டோய்க யற்கண்கள் சிவப்புற நோக்கினள் சொல்லும்.

(இ - ள்.) வாய் கயப்பு உற - வாய் கசக்கும்படி, மந்தரை—, வழங்கிய- கூறிய, வெம் சொல் - கொடிய வார்த்தை, காய் கனல்தலை - எரிகிற நெருப் பில், நெய் சொரிந்து என-நெய்யைவார்த்தாற்போல, கதம் கனற்ற-கோபத் தை மிகுவிக்க, கேகயர்க்கு இறை திருமகள் - கைகேயி, கிளர் கிளை வரிகள் தோய்-விளங்குகின்ற சிறிய செவ்வரிகள் பொருந்திய, கயல் கண்கள்-கெண்ட டைபோன்ற கண்கள், சிவப்பு உற - (கோபத்தால்) செம்மையடையும்படி, நோக்கினள்-பார்த்தவளாய், சொல்லும்-சொல்லுவாள்; (எ - று.)—கைகேயி சினந்து கூறுவதை மேல் நான்கு கவிகளிற் காண்க.

நெய்விடுந்தோறும் தீ மூண்டெரிதல்போல மந்தரை கடுஞ்சொல் வழங் குந்தோறும் கைகேயிக்குச் சினம் மிகுந்துவருதலின் 'காய்கனற்றலை நெய் சொரிந்தெனக் கதங்கனற்ற' என்று உவமைமுகத்தால் விளக்கினார். மந்தரை கைகேயிக்கும் அவள்மகனுக்கும் மேன்மையுண்டாகுமாறு கூறினாளேயா யினும், இராமனிடத்துச் சினங்கொண்டு கூறியசொற்களாதலின், "யாவ ரேதினினும் கைக்குமாம் வேம்பு" என்ற நியாயம்பற்றி அக்கடுஞ்சொற்கள் சொன்ன அவட்குங் கயப்பை விளைக்குமென்பார், கவி 'வாய்கயப்புற' என்றார்: இதனால் அவள் கூறிய இன்னாச்சொல்லின் தீமை விளக்கப்பட்டது. கயப்பு - கசப்பு. சொரிந்து - எச்சத்திரிபு. பி-ம்:—[1]எரித்தலை. [2]கேகயத் திறை. (கஙஉ)

கூச.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்:
கைகேயி மந்தரையைக் கடிந்து கூறுதல்.

வெயின்[1]மு றைக்[2]குலக் கதிரவன் [3]முதலிய மேலோ
ருயிர்[4]மு தற்பொரு டிறம்பினு [5]முறைதிறம் பாதோர்
மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதன் மரபைச்
[6]செயிரு றப்[7]புலைச் சிந்தையா லென்சொனாய் தீயோய்.

(இ - ள்.) வெயில் முறை குலம் கதிரவன் முதலிய மேலோர் - கிரணங்களின் வரிசையையுடைய சிறந்த சூரியன் முதலாகிய பெரியோர், உயிர் முதல் பொருள் திறம்பின்உம் - உயிரும் மூலதனமும் தவறினாலும், முறை திறம்பாதோர் - நீதிமுறை தவறாதவர்; மயில் முறை குலத்து உரிமையை - (நான் பிறந்த) கேகயகுலத்தினது உரிமையையும், மனு முதல் மரபை - வைவச்சுவதமனுவினது சிறந்தவமிசத்தையும், செயிர் உற - குற்றமடையும்படி, தீயோய் - கொடியவளே! புலை சிந்தையால் - புன்மைக்குணமுள்ள மனத்தினால், என் சொனாய் - யாது சொன்னாய்? (எ - று.)

குலத்திற்கு ஆதிபுருஷனாதலாற் சூரியனையும், அவன்மகனாதலானும் அவனே அரசாட்சியை மேற்கொண்ட முதல்வனாதலானும் மனுவையும் கூறினாள். உயிர்முதல்பொருள் - உம்மைத்தொகை. இனி, உயிர்முதலிய சிறந்த பொருள்களென்றுமாம். பிறந்தஇடத்திலும் நான்புக்கஇடத்திலும் நிகழும் நிகழ்ச்சிக்கு மாறுபாடாக மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டங்கட்ட முயலுமாறு உன் இழிந்த மனப்போக்கின்படி துராலோசனை கூறுகின்றாயே; அடீ துஷ்டை! யாரிடத்தில் என்ன சொன்னாய்? என்று கைகேயி மந்தரையை யதட்டுகின்றன ளென்க. அரசகுலங்களில் தான்பிறந்தகுலம் புக்ககுலம் இவ்விரண்டின் முறைமையை நன்கு உணர்ந்தவ ளாதலால், அவ்விரண்டை யெடுத்துக் கூறினாள். மயின்முறைக்குலத்துரிமையை மனுமுதன் மரபை யென்பதற்கு - மயிலினது முறைமையைக்கொண்ட குலத்துரிமையையுடைய மனுமரபையென்று கூறி, மயில் முட்டையிட்டுப் பொரிக்கும்போது முதற்பார்ப்பின் கலாபத்துப் பீலி பொன்னிறமுடைய மற்றைப்பார்ப்புக்களின் கலாபங்களின் பீலிகள் பொன்னிறமடையாதவாறு போல, முதற்குமாரனே மணிமுடிபுனைய மற்றையோர் முடிபுனையாமையை யுடையது மனுகுலமெனக் கருத்துவிரிப்பர்: இத்தொடர்க்கு, இன்னும் வெவ்வேறு வகையாகவும் உரைப்பர். செயிராவது - முறைபிறழ்வும், உலகநிந்தையும். பி - ம்:—
[1]முதற். [2]குலத்திறையவன், குலத்திறைவனே. [3]முதலினர். [4]முறைப். [5]உரை.
[6]செயிர்முறைப். [7]புலச். (கசுரு)

கூரு. எனக்கு நல்லையு மல்லைநீ யென்மகன் பரதன்
றனக்கு நல்லையு மல்லை[1]யத் தருமமே நோக்கி
னுனக்கு நல்லையு மல்லை[2]வந் தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை [3]மதியிலா [4]மனத் தோய்.

(இ - ள்.) நீ எனக்கு நல்லைஉம் அல்லை - நீ எனக்கு நன்மையைச்செய்பவளுமன்று; என் மகன் பரதன் தனக்குஉம் நல்லைஉம் அல்லை—; அ தருமம் நோக்கின்-அந்தராஜதருமத்தை நோக்குமிடத்து,உனக்கு நல்லைஉம் அல்லை—; மதி இலா மனத்தோய் - அறிவில்லாத நெஞ்சினையுடையவளே ! ஊழ்வினை வந்து தூண்ட - பழவினை வந்து தூண்டுதலினால், மனக்கு நல்லன - (உன்) மனத்துக்கு நன்றாயிருப்பவைகளை, சொல்லினை - சொன்னாய்; (எ - று.)

நீ எனக்கு நல்லவள்போலவும் என்மகனிடத்து நல்லவள்போலவுஞ் சொல்லுகின்றாயானாலும் உன்சொற்களைக்கேட்டு நாங்கள் நடந்தால் அது பழிபாவங்கட்கு ஏதுவாமாதலால், 'நீ எனக்கு நல்லையுமல்லை யென்மகன் பரதனுக்கும் நல்லையுமல்லை' என்கின்றான். தன்தலைவிக்கும், அவள்மகனுக்குமே தீங்கிழைத்தல்பற்றி 'அத்தருமமேநோக்கின் உனக்குநல்லையுமல்லை' என்கின்றானென்க. தீயவற்றை மனத்தினாற் கருதிச்சொல்லுதலும் பாவத்தை விளைக்குமாதலின் உனக்கு நல்லவழியில் மனஞ்செல்லாதது உன்னூழ்வினையே யென்பாள், 'ஊழ்வினை தூண்ட மனக்குநல்லன சொல்லினை' என்றாள். மனக்கு-அத்துச்சாரியை பெறாதுநின்றது. 'உன்மனத்துக்கு நல்லன' என்றதனால், சொல்லிற்குஞ் செயலுக்கும் நல்லனவல்லாதவை யென்பதூஉம், பிறர்மனத்திற்கு நல்லவையல்லாதவை யென்பதூஉம் பெற்றாம்.
பி - ம்:—[1]நீ. [2]நீ. [3]மதியிலி. [4]மறந்தாய். (௧௬௪)

௬௬. பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும்[1]புகழே
னிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
றிறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் [2]செயிர்தீர்
[3]மறந்தி றம்பினும் [4]வரன்முறை திறம்புதல் [5]வழக்கோ.

(இ - ள்.) பிறந்து இறந்து போய் - (மனிதர்) பிறந்தாயினும் இறந்தாயினும், பெறுவதுஉம் - அடையும் பயனும், இழப்பதுஉம் - இழந்து போகும் பயனும், புகழ்எல் - கீர்த்தியென்றால், திறம் திறம்பின்உம் - குணம் மாறுபடினும், நியாயம்எ திறம்பின்உம் - நீதி மாறுபடினும், நெறியின் திறம் திறம்பின்உம் - சன்மார்க்கத்தினது தன்மை மாறுபடினும், செய் தவம் திறம்பின் உம்-செய்யப்படுவதாய தவம் மாறுபடினும், செயிர் தீர் மறம் திறம்பின்உம் - குற்றமற்ற வீரம் மாறுபடினும், வரன்முறை திறம்புதல் - தன்குலத்தினது ஒழுங்கு தவறுதல், வழக்குஒ - நியாயமோ? (எ - று.)

ஒருவர் கருத்தோடு பெறவேண்டுவது புகழேயாதலால், எதுபோவதானாலும் புகழ்போகாமற் பார்த்துக்கொள்ளவேண்டும்; வரன்முறை தவறிநடக்க முயன்றாற் புகழ்கெடுமாதலால் அங்ஙனம் புகழ்கெட வரன்முறைதிறம்புதல் வழக்கன்று என்றவாறு: "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்றது, குறள். திறம்பினும் என்றவும்மைகள், திறம்பாமையுணர்த்தி நின்றன. செய்தவம் திறம்புதல் - மேற்கதி வீடுபேறு முதலியவற்றைப் பெறுவித்தலில்மாறுபடல்.

வழக்குத்திறம்புதல் வரன்முறையோ என்றுங் கூட்டியுரைக்கலாம். ஓ-எதிர்மறை. பி-ம்:—[1]புகழே. [2]மைதீர், செய்தீர், தீரா. [3]வறந். [4]மனுமுறை, மயின்முறை, உயர்முறை, அறன்முறை. [5]அழகோ. (கசுரு)

சுஎ. போதி யென்னெதிர் [1]நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதி யாதிது [2]பொறுத்தனன் புறஞ்சில ரறியி
னீதி [3]யல்லவு நெறிமுறை [3]யல்லவு நினைந்தா
யாதி யாதலி [4]னறிவிலி யடங்குதி யென்றாள்.

(இ - ள்.) என் எதிர் நின்று-என்னெதிரிலிருந்து, போதி - (அப்புறம்) போகக்கடவை; நின் புன் பொறி நாவை-அற்பப்பேச்சுக்களுக்கிடமாகிய உன் புல்லியநாக்கை, சேதியாது-அறுத்தெறியாமல், இது-இக்குற்றத்தை,பொறுத்தனன்-சகித்துக்கொண்டேன்; புறம் சிலர் அறியின் - (என்னையன்றி) வேறு சிலர் இதனையறிந்தால்,நீதி அல்லஉம் நெறி முறை அல்லஉம்-நியாயமல்லாதவையும் நல்லொழுக்கமல்லாதவையுமாகியவற்றை, நினைந்தாய் ஆதி-நினைந்து சொன்ன குற்றத்துக்கு உள்ளாவாய்; ஆதலின்-ஆகையால், அறிவிலி-அறிவு கெட்டவளே! அடங்குதி-வாயைமூடு: என்றாள்—; (எ - று.)

நீ சொன்னதற்கு உன் நாவைத் தோண்டியறுக்கவேணும்: என் தோழியாதலின் பொறுத்தேன்: புறத்தாரறியின் குற்றத்திற்கு உள்ளாவாய்; புறத்தாரறியாதபடி உன்வாயைமூடு என்று கைகேசி மந்தரையைக் கடிந்து கூறினளென்க. இராமன் முடிபுனைவதற்குப் பொறாதுகூறின நாவாதலின், 'புன்பொறி நா' என்றாள். பொறிநா - இருபெயரொட்டு. பி-ம்:—[1]நின்றுமுன், நிற்கினின், நின்றநின். [2]பொறுத்தெனன். [3]அல்லன. [4]அடங்குதியறிவிலி. ()

சுஅ.—நீ சினந்தாலும் உனக்கு உறுதிகூறப் பின்வாங்கேனென்று காலில்வீழ்ந்து மந்தரை கூறத்தொடங்குதல்.

அஞ்சி மந்தரை யகன்றில ளம்மொழி கேட்டு
நஞ்சு தீர்க்கினுந் தீர்கிலா ததுநலிந் தென்னத்
தஞ்ச மேயுனக் குறுபொரு ளுணர்த்துகை தவிரேன்
வஞ்சி போலியென் [1]றடியிசை [2]வீழ்ந்துரை வழங்கும்.

(இ - ள்.) நஞ்சு தீர்க்கின்உம்-விடத்தை நீக்கினாலும், அது தீர்கிலாது - அது நீங்காது, நலிந்(த)து என்ன-வருத்துதல்போல, மந்தரை—, அ மொழி கேட்டுஉம்—, அஞ்சி அகன்றிலள்-பயந்து விலகாதவளாகி, 'வஞ்சி போலி - வஞ்சிக்கொடி போல்பவளே! தஞ்சமே-(எனக்குப்) பற்றுக்கோடாயிருப்பவளே!உனக்கு உறு பொருள் உணர்த்துகை-(நீ சினந்தாலும்)உனக்குப்பொருந்திய நற்காரியங்களை அறிவித்தலினின்று, தவிரேன் - நீங்கேன்', என்று—, அடியிசை வீழ்ந்து-(அக்கைகேயியின்)காலில்வீழ்ந்து, உரை வழங்கும்-மீண்டுஞ் சில சொற்களைச் சொல்வாள்; (எ - று.)—மந்தரை கூறுவதை மேல் எட்டுச்செய்யுள்களிற் காண்க.

கடிந்துகூறினும் மந்தரை மீண்டுபோகாமல் கைகேயியின் மனத்தைக் கெடுக்குமாறு மறுபடியுங் கூறுவதனால், 'நஞ்சுதீர்க்கினுந் தீர்கிலாதது நலிந் தென்ன' என்றார். நலிந்து - நலிந்தது: விகாரம். தஞ்சமே - துணையாக என்றுமாம். சிலபிரதிகளில், ஈற்றடி 'பஞ்சுசேர்வியவடிமிசைப்படிந்திவை பகரும்' என்று காண்கிறது. பி-ம்:—[1]அடியிணை. [2]வீழ்ந்திவை, மூந்துரை. ()

கசுகூ —இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒருதொடர்: மந்தரையின் துர்ப்போதனை·

மூத்த வற்குரித் தர[1]செனு முறைமையி னுலகங்
காத்த மன்னனி லிளையனன் றேகடல் வண்ண
னேத்து [2]நீண்முடி புனைவதற் [3]கிசைந்தன னென்றான்
[4]மீத்தருஞ் செல்வம் பரதனை விலக்குமா றெவனோ.

(இ - ள்.) 'மூத்தவற்கு அரசு உரித்து-(வயதில்)முதிர்ந்தவனுக்கு இராச்சியபாரம் உரிமையுடையது', எனும் - என்கிற, முறைமையின் - கிரமப்படி (பார்த்தால்), உலகம் காத்த மன்னனில்-இராச்சியத்தையாண்ட சக்ரவர்த்தியினும், கடல்வண்ணன்-கடல்போலும் நிறத்தையுடைய இராமன், இளையன் அன்றே-சிறியவ னல்லவோ; (அவ்வாறிருக்கச் சக்ரவர்த்தி அவனுக்கு), எத்தும் நீள் முடி புனைவதற்கு இசைந்தனன் - (யாவராலும்) புகழப்படுகின்ற பெரியகிரீடத்தைச் சூட்டுவதற்குச் சம்மதித்தனன்: என்றால்-ஆனால், மீ தரும் செல்வம்-மேன்மையைத்தருகின்ற அவ்வைசுவரியம்,பரதனை விலக்கும் ஆறு-(அவனினும் இளையோனென) பரதனை (த் தகாதவனென்று) நீக்கும்விதம், எவன்ஒ - எங்ஙனமோ? (எ - று.)

'மூத்தவனிருக்க இளையவன் அரசுபுரிதல் கோத்தரும மன்று என்றால், மூத்தவனாகிய சக்ரவர்த்தி தான் இருக்கத் தன்னினும் இளையவனாகிய இராமனுக்கு முடிசூட்ட முயலுதல் எங்ஙனம்? அது அமையும்பொழுது அவனினுஞ் சிறியனானபரதனுக்கு முடிசூட்டத் தடை யாது?' என்பதாம். கடல்வண்ணன்என்ற தொடர்-கடல்போன்ற தன்மையுடையவனெனப் பொருள்பட்டு, கடலைக்கடைந்தபோது அது அமுதத்தைப் பயந்ததுபோல இராமபிரானைக் காட்டிற்குப்போமாறு அலைத்தால் அரசச்செல்வத்தைப் பரதனுக்குத்தருவா னென்ற கருத்தைப்புலப்படுத்து மென்பர், ஒருசாரார். பி-ம்:— [1]எனின். [2]நன். [3]இயைந்தனன். [4]பார்த்தரும், பாத்தரும். (கசுஅ)

எ0. [1]அறநி ரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதா
மறநி னைந்[2]மை வயிகில ராயினு மனத்தா
விற[3]லு றும்படி யியற்றுவ ரிடையறு வின்னல்.

(இ-ள்.) அறம் நிரம்பிய-துறவறம் நிறைவதற்குக் காரணமாகிய, அருள் உடை-கருணையையுடைய, அரு தவர்க்கு ஏனும் - செய்தற்குஅரிய தவத்தினையுடைய முனிவர்க்காயினும், பெறல் அரு திரு பெற்றபின்-பெறுதற்கு அரிய[மிக்க] செல்வத்தை யடைந்தபின்பு, சிந்தனை பிறிது ஆம் - எண்ணம்

வேறாகும்; (ஆதலால், இராமன் முதலியோர்), மறம் நினைந்து-கொடுமையை யெண்ணி,உமை வலிகிலர் ஆயின் உம்-(இதுவரை)உங்களை உபத்திரவப்படுத் தாதவர்களானாலும்,மனத்தால் இறல் உறும்படி-நெஞ்சினால் துன்பமடையும் படி, இடை அறா இன்னல்-நீங்காத தீங்கை,இயற்றுவர்-(திருப் பெற்றபின்) செய்வர்; (எ - று.)

பரதன் அரசினைப் பெறலாமென்று காட்டிய மந்தரை, இராமன் அரசைப்பெற்றால் உண்டாகுந் தீமையை இனி எடுத்துக்காட்டுகின்றாள். 'அருந் தவர்க்கேனும்' என்றதனால், முற்றத்துறந்த முனிவர்க்கே இங்ஙனமாயின் துறவாத இல்லறத்தார்க்குக் கூறல்வேண்டுமோ? என்றதாயிற்று. கைமுதிக நியாயம்பற்றி முன்னடிகள் பின்னடிகளைச் சமர்த்தித்துநின்றது - **தொடர் நிலைச்செய்யுட்பொருட்பேறணி:** வடநூலார் காவ்யார்த்தாபத்தியென்பர். "என் சிறுவர் செவ்வியர், அவ்வவர் துறைதொறு மறந்திறம்பலர்," "விரா வருபுவிக்கெலாம் வேதமேயன, விராமனைப்பயந்த வெற்கிடருண்டோ" என்று கைகேயி கொண்டுள்ள எண்ணத்தை மாற்றக் கூனி கூறிய தாகும், இது. இறல் - சாவு எனினுமாம். **பி ம்:**—[1]அறனிரம்பிய. [2]மெய் வலியிலர், உமைநலிகிலர். [3]நினைந்திட, இறும்படி. (கஎ)

எக. புரியுந் [1]தன்மக னரசெனிற் பூதல மெல்லா
[2]மெரியுஞ் சிந்தனைக் கோசலைக் குடைமையா மென்றாற்
பரியு நின்குலப் புதல்வற்கு [3]முனக்குமிப் [4]படிமே
[5]லுரிய தென்[6]னவ [7]ளுதவிய வொருபொரு ளல்லால்.

(இ-ள்.) தன் மகன் அரசு புரியும் எனின்-தன்புத்திரன் அரசையாளுவ னென்றால், பூதலம் எல்லாம்-இந்நிலவுலகமுழுவதும், எரியும் சிந்தை கோசலைக்கு - (பிறருடையபெருமையிற்) பொறாமைகொள்ளும் மனத்தையுடைய கௌசல்யைக்கு, உடைமை ஆம் - உரிமையாகும்: என்றால்—, நின் பரியும் குலம் புதல்வற்குஉம் - உனது அன்பிற்குஉரிய சிறந்த புத்திரனுக்கும் [பரத னுக்கும்], உனக்குஉம்—, இ படிமேல்-இவ்வுலகத்தில், அவள் உதவிய ஒரு பொருள் அல்லால்-அவள் கொடுத்த ஒரு (சிறிது) செல்வ மல்லாமல்,உரியது என் - உரிமையையுடையது (வேறு) யாது? (எ - று.)

கௌசலை பிறர்பெருமையைப் பொறாளாதலால்,தன் சொற்படிகேட்கும் மகன் இராமன் அரசுபெற்றானென்றால்,அக்கௌசலை இப்போது இருப்பது போலச் செல்வாக்கு உனக்கு இருக்கும்படி விடாள்: அவள் பார்த்துக்கொடுத்த சிறுபொருளைக்கொண்டே நீயும் உன்மகனும் வாழவேண்டுமென்றனள் மந்தரையென்க. "பிறந்த சேயொடும், நீ துயர்ப்படுக (௫௪)" "கரைசெயற் கருந்துயர்க்கடலில் வீழ்கின்றாய் (௬௧)"என்று கீழ்க்கூறியவற்றை இனி மந் தரை விவரித்துக்காட்டுகின்றனளென்க. இவ்வுலகத்துக்கு இன்றியமையாத பொருளை விருப்பின்படி இனிப்பெறமுடியாதென எடுத்துக்காட்டியவாறு. [2]விரியுஞ்சிந்தனை என்ற பாடத்திற்கு - பிறரேற்றத்தைக்கண்டாற் பொறாமல்

விரிந்துபோகும் மனத்தையுடைய என்றுபொருள்காண்க: விசாலித்த மனத்தையுடைய என்று பொருள்கொள்வது மேற்கூறுவதோடு பொருந்தாதாம். பி-ம்:—[1]தன்மகற்கு. [2]இரியும். [3]நினக்கும். [4]பார்மேல். [5]உரிய. [6]அவர். [7]உறு பொருளுதவியதல்லால். (கஎ0)

எஉ. தூண்டு மின்னலும் வறுமையுந் தொடர்தரத் [1]துயரா
லீண்டு வந்துனை யிரந்தவர்க் கிருநிதி [2]யவனை
வேண்டி யீதியோ [3]வெள்குதி யோவிம்ம னோயான்
மாண்டு போதியோ மறுத்தியோ வெங்ஙனம் வாழ்தி.

(இ - ள்.) தூண்டும்-(பிறரிடத்துப் போய் இரக்குமாறு) ஏவுகின்ற,இன்னல்உம்-துன்பமும், வறுமைஉம்-இல்லாமையும், தொடர்தர-(தம்மிடத்துத்) தொடர்ந்துநிற்க, துயரால் - துன்பத்தோடு, ஈண்டு வந்து - இவ்விடத்தில் வந்து, உனை-, இரந்தவர்க்கு - யாசித்தவர்க்கு, இருநிதி - மிக்கசெல்வத்தை, அவனை வேண்டி ஈதிஓ-அக்கோசலையை யாசித்து (அவளிடத்திலிருந்துபெற்றுக்) கொடுப்பாயோ? வெள்குதி ஓ - ஒன்றும் கொடுக்க இயலாதிருப்பது பற்றி) நாணுவாயோ? விம்மல் நோயால் மாண்டுபோதிஓ - (இரப்பவர்க்குக் கொடுக்க இயலவில்லையே என்ற காரணத்தினால் மனத்துத்தோன்றுகின்ற) வருத்தமாகிய நோயினால் இறந்துபோவாயோ? மறுத்தி ஓ - (அவர்க்கு இல்லையென்று) கொடாதிருப்பாயோ? எங்ஙனம் வாழ்தி - எவ்வாறு சீவிக்கப்போகிறாய்? (எ - று.)

இராமன் அரசுபுரிவானாயின், கௌசலை தந்த சிறுபொருளை பெற்று வாழவேண்டு மென்று கூறிய மந்தரை,சிறுபொருளைப் பெறுவதால் விளையும் வருத்தத்தை இங்கு எடுத்துக்காட்டுகிறாள். பொருள் சுருங்குவதால் நேருந் தீங்கை, இதனாலும் அடுத்த செய்யுளினாலும் எடுத்துக்காட்டியவாறு. ஈண்டு-சுட்டு நீண்டது. 'புகழே இன்றியமையாதது' என்று கூறிய கைகேயிக்கு, பொருளில்லாவிடின் இரப்பார்க்கொன்றீவார்மேல் நிற்கும் புகழ் எய்தலாகாதென் றுணர்த்த,இரப்போர்க்கீய வியலாமை தெனக் காட்டுகின்றாளென்னலாம். "சாதலி னின்னாத தில்லை யினிததூஉ, மீத லியையாக்கடை" என்பவாகலான், 'மாண்டுபோதியோ' என்றாள். பி-ம்:—[1]துயராய். [2]முகந்து; அவனை. [3]வெஃகுதியோ. (கஎக)

எங. சிந்தை [1]யென்செயத் திகைத்தனை யினிச்சில நாளி
றந்த மின்மையு மெளிமையு நிற்கொண்டு தவிர்க்க
வுந்தை [2]யன்னையுன் கிளைஞர்மற் றுன்குலத் துள்ளோர்
வந்து [3]காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய்.

(இ - ள்.) என் செய - என்ன செய்யலாமென்று கருதி, சிந்தை - உன் மனம், திகைத்தனை - திகைப்படைந்தாய்? இனி சில நாளில்—, தம் தம் இன்மைஉம் - தத்தம் இல்லாமையையும், எளிமைஉம் - (அதனாலுண்டாகிய) தாழ்வையும், நின்கொண்டு தவிர்க்க - உன்னைப் போக்கிக் கொள்ள, உந்தை-

உன்தந்தையோ, (அல்லது), அன்னை-(உன்) அன்னையோ, (அல்லது), உன் கிளைஞர் - உனது சுற்றத்தவரோ, மற்று உன் குலத்து உள்ளோர் - (அன்றி) உன்னுடைய குலத்துஉள்ளவராகிய மற்றவரோ, வந்து-(உன்னிடம்)வந்தால், காண்பது-அவர்கள் பார்ப்பது, உன் மாற்றவள் செல்வம் ஓ-நினது சக்களத்தியினது செல்வத்தையோ? மதியாய்-ஆராய்ந்துபார்; (எ - று.)

பொருளில்லாமையால் வந்த இரப்பாளர்க்கு உதவஇயலாது என்று காட்டிய மந்தரை, இதனால் உன்னைச்சார்ந்தவர் ஒருகால் குறையுற்று வந்தாலும் உதவவியலா தென்கின்றனளென்க. உன்னைச்சேர்ந்தவரெளிமையைப் போக்கவியலாது அவரெதிரில் நீ இளிவரவுட னிருக்கநேருமெனக் காட்டியவாறு. இன்மை - நுகரப்படுவன யாவுமில்லாமை. மதியாய் எனஇகழ்ந்து விளித்தன ளென்னவுமாம். சிந்தைசெய்கெனத் தனிவாக்கியமுமாம்.
பி-ம்:—[1]செய்கையில். [2]உன்னை. [3]காண்பது மாற்றவள். (கஎஉ)

எச. காத லுன்பெருங் கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் றாதையைத் தெறுகில னிராமன்
மாது லன்னவ [1]னுந்தைக்கு வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றுணை யாருளர் [2]பழிபடப் பிறந்தார்.

(இ - ள்.) காதல் உன் பெரு கணவனை-விருப்பத்தினையுடைய உனது பெருமையையுடைய கணவனுக்கு, அஞ்சி - பயந்து, அ கனி வாய் சீதை தந்தை - கொவ்வைக்கனிபோன்ற அதரத்தினையுடைய அந்தச்சீதையினது தகப்பனும், இராமன் மாதுலன்அவன் - இராமனுக்குமாமனுமாகிய அந்தச் சநகராசன்,உன் தாதையை தெறுகிலன் - உன்தந்தையை அழித்தானில்லை; இனி நுந்தைக்கு வாழ்வு உண்டுஓ-இனிமேல் நினதுதந்தைக்கு வாழ்த லுளதோ?(இல்லையாதலால்), பேதை-அறிவிலாய்! உன் துணை-உன்னைப்போல, பழிபட பிறந்தார்-நிந்தையடையும்படி பிறந்தவர், யார் உளர்-எவர்இருக்கின்றனர்? [ஒருவருமில்லை]; (எ - று.)

நீ பொருளின்மையால் வருந்தவேண்டுமென்று காட்டிய மந்தரை, உன் பெற்றோரையும் வருத்தத்திற்கு உள்ளாக்குபவளாவா யென்று இதனாற் காட்டுகின்றனளென்க. புகழே இன்றியமையாததென்று கூறிய கைகேயிக்கு இராமன் அரசுபெற்றால் உனக்குப் புகழைப்பெறுதலாகாதென்று கீழே நிரூபித்துக்காட்டி, இதனாற் பழியு முண்டாகுமென்று காட்டுகின்றாள். தசரதனுடைய தாட்சிணியத்துக்குக் கட்டுப்பட்டுச் சனகமகாராசன் கேகயவரசன் மீது படையெடாதிருக்கின்றானாதலால்,தன்மருமகன் அரசுக்குவந்தால் உடனே உன் தந்தையின் இராச்சியத்தைச் சனகன் கைப்பற்றுவன்: ஆதலால், இனி அவனுக்கும் வாழ்வில்லாது போகும்: ஆகவே, பெற்றோரின் தீமைக்குக் காரணமான நீ பெரும்பழிக்கும் பாத்திரமாவா யென்றவாறு. மாதுலன் என்

பதற்குத் தாயோடுபிறந்தவ னென்பதே பொருளாயினும், அம்மான்பெண்ணை மணம்புரிவது தென்னாட்டவர் வழக்க மாதலானும், மாமனென்று மனைவியின் தகப்பனுக்கும் வழங்குதலானும் ஈண்டு மனைவியின்தந்தையை மாதுலனென்றார்; கீழ்ப்பாலகாண்டத்திலும் "நம்பன்மாதுலன்" என்றது காண்க. இராமன் மாதுலன் - இராமனது மாதுலனாகிய கோசலதேசத்தரசன் எனப் பொருள்கொள்வாரு முளர். உந்தைக்கு என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[1]உந்தை வாழ்வுண்டதுமதியாய். [2]வழிகெட. (கஎ௩)

எரு. [1]மற்று நுந்தைக்கு வான்பகை பெரிதுள [2]மறத்தார்
செற்ற போதிவர் சென்றுத வாரெனிற் செருவிற்
கொற்ற மென்பதொன் றெவ்வழி யுண்டது கூறாய்
சுற்ற முங்கெடச் [3]சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்.

(இ - ள்.) மற்றுஉம்—, நுந்தைக்கு-உன்தந்தைக்கு, பெரிது வான் பகை உள - மிகவும்பெரியபகைவராகவுள்ள, மறத்தார் - கொடுமையையுடையவர், செற்ற போது - நெருங்கிப்போர்செய்கின்றகாலத்தில், இவர்-இந்தக்கோசல நாட்டரசர், சென்று உதவார் எனின்—, செருவில்-போரில், கொற்றம் என்பது ஒன்று - வெற்றியென்று சொல்லப்படுகின்ற ஒருபொருள், எவ்வழி உண்டு - எவ்விதத்தினு லுளதாகும்? அது கூறாய் - அதனைச்சொல்லு; (நீ), சுற்றம்உம் கெட-உறவினருங் கெடும்படி, சுடு துயர் கடல்-அழிக்கின்ற துன்பமாகிய கடலில், விழ - விழுவதற்கு, துணிந்தாய் - உறுதிகொண்டாய் போலும்; (எ - று.)

இராமன் உலகாள்வானானால் நின்தந்தைக்குப் போர்த்துணை யாகான்; ஆதலால் நின்தந்தையும் உறவினருங் கெடுவ ரென்பதாம். சனகன் பொரா விட்டாலும் மற்றும்இருக்கின்ற பல பகைவரும் பொருவாராயின், அப்போது துணையாவா ரில்லையே யென்று எடுத்துக்காட்டியவாறு. என்னுடைய பெற்றோர்கள் பேரரசராதலால் யான் உதவவேண்டிய நிலைமை அவர்கட்கு நேராதேயென்று கைகேயி கருதக்கூடுமாதலால், போன செய்யுளாலும் இந்தச் செய்யுளாலும் பெற்ற குலத்தோர்க்கு இழிநிலைநேர்தற்குஉரிய வழியை மந்தரை யெடுத்துக்காட்டின ளென்க. துணிந்தாய்-வினாவியாகவுமாம். சுற்றமும்-எச்சவும்மை. பி-ம்:—[1]மற்றுன் றந்தைக்கும். [2]மறத்தாற். [3]கடுந்துயர். (கஎ௪)

எசு. கெடுத்தொ ழிந்தனை யுனக்கரும் புதல்வனைக் கிளர்நீ
ருடுத்த [1]பாரக முடையவ னொருமகற் கெனவே
கொடுத்த [2]பேரர சவன்குலக் கோமைந்தர் தமக்கு
மடுத்த [3]தம்பிக்கு மாம்பிறர்க் காகுமோ வென்றாள்.

(இ-ள்.) உனக்கு அரு புதல்வனை-நினது பெறுதற்கரிய புத்திரனை [பரதனை], கெடுத்து ஒழிந்தனை - அழித்துவிட்டாய்; கிளர் நீர் உடுத்த பார் அகம்உடையவன்-விளங்குகின்றகடலை யாடையாகவுடுத்திய பூமியையுடைய சக்ரவர்த்தி, ஒரு மகற்கு என ஏ - ஒப்பற்றபுத்திரனுக்கென்றே, கொடுத்த-, பேர் அரசு-பெரிய இராச்சியபாரம், அவன் குலம் கோ மைந்தர் தமக்குஉம் -

அம்மகனது குலத்திற் பிறந்த சிறந்த புத்திரர்க்கும், அடுத்த தம்பிக்குஉம் - அவனைச்சார்ந்த தம்பிக்கும், ஆம் - (உரியது) ஆகும்; பிறர்க்கு ஆகும் ஓ - அயலார்க்கு உரியதாகுமோ? [ஆகாது]: என்றாள்-என்று (மந்தரை)கூறினாள்.

"பரதஶ்சாபிராமஸ்ய த்ருவம் வர்ஷஶதாத்பரம் - பித்ருபைதாமஹம் ராஜ்யம் அவாப்தாபுருஷர்ஷப: [இராமன் நூறுவருஷம் ஆண்டபின் புருஷ சிரேஷ்டனான பரதனும் குலமுறையாகவந்த இராச்சியத்தை யடையப்போகிறான்]" என்று சொன்ன கைகேயியின் சொல்லை மறுத்து, "பவிதாராக வோராஜா ராகவஸ்யாநுயஸ்ஸுத:-ராஜவம்ஶாத்துகைகேயி பரத:பரிஹாஸ் யதே-நஹிராஜ்ஞஸ்ஸுதாஸ்ஸர்வே ராஜ்யேதிஷ்டந்திபாமினி [இராமன் அரசனாகப்போகின்றான்; அவன்பின் அவனது மகன்: ஆதலால், அரசர் மாலையினின்று பரதன் நீக்கப்படுவான். செல்வீ! அரசரின் எல்லாப் புதல்வரும் இராச்சியத்தைப் பெறார்]" என்று மந்தரை கூறிய சொல்லின் கருத்தை உட்கொண்டது, இச்செய்யுள்: ஆகவே, தசரதன் இராமனுக்குக்கொடுத்த இராச்சியம் அவ்விராமனுக்கும் அவனைவிட்டுப் பிரியாத தம்பியாகிய இலக்குமணனுக்கும், அவ்விராமன் காலத்துக்குப்பின் அவன் சந்ததியார்க்கும் அநுபவிக்க உரியதாகுமேயன்றி, பரதனுக்கு வருமாறுஇல்லை; பரதனுக்கு இராச்சியங்கிடைக்க உபாயந்தேடாமையால் அப்பரதனையுங் கெடுத்து நீயும் கெட்டொழிகின்றாயென்று கூனி கூறுகின்றாளென்பதே இச்செய்யுளின் பொருள். இச்செய்யுட்கு வேறுவகையாகப் பொருள்கூறுவது, கவியின் கருத்துக்கும் முதனூலுக்கும் முரண்படுவதாகும். இராமன் அரசையெய்தினால் விளையுந் தீங்கு இன்னவையென்று கூறிய மந்தரை, இதனால் பரதனுக்கும் அவன் வழியில்வருபவர்க்கும் அரசவுரிமையெய்தாதென்றுகூறித் தன்பேச்சை முடிக்கின்றாளென்க. கோமைந்தரென்றது - அரசாள்வதற்குரிய மூத்தமைந்தரை. அடுத்ததம்பியென்றது - "நெய்குழலூறுமிழையெனநிலைதிரிவார்"என்றவாறு விடாதுபின் சென்று தொடர்ந்து கைங்கர்யஞ்செய்யுந் தம்பியாகிய இலக்குமணனை. பி-ம்:—[1]பாரெலாம். [2]போதவன்றன். [3]நம்பிக்கும். (களரு)

### எஎ.—மந்தரையின் போதனையினாற் கைகேயியின் மனம் மாறுபடுதல்.

தீய மந்தரை யிவ்வுரை செப்பலுந் தேவி
தூய [1]சிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியி னிமையோர்
மாயை யும்மவர் [2]பெற்றுள [3]வரமுண் மை யாலு
மாய வந்தண ரியற்றிய [4]வருந்தவத் தாலும்.

(இ - ள்.) தீய மந்தரை இ உரை செப்பலும்-கொடிய கூனி இவ்வார்த்தையைச் சொன்னவுடனே, இமையோர் மாயைஉம் - தேவர்களினது மாயத்தாலும், அவர் பெற்றுள வரம் உண்மையால்உம் - அத்தேவர் பெற்ற சிறந்த வரந்தவறாமையினாலும், ஆய அந்தணர் - அறவோராகிய வேதியர், இயற்றிய-

செய்த, அரு தவத்தால்உம் - (செய்தற்கு அரிய தவத்தினாலும், தேவி தூய சிந்தைஉம் - கைகேயியினது நல்லமனமும், சூழ்ச்சியின் - (மந்தரையின்) தீய ஆலோசனைப்படி, திரிந்தது - மாறிற்று; (எ - று)

இதுமுதல் இரண்டுகவிகள் - கவிக்கூற்று. இவ்வுரையென்றது - "மூத்தவற்குரித்தரசு (கூ௬)" என்று தொடங்கி, "கெடுத்தொழிந்தனை" (எகூ) என்ற பாடல் வரையிற் கூறிய விஷயங்களையெல்லாஞ் சுட்டும். அவையாவன—மூத்தவரிருக்க இளையவர் அரசு புரியலாமென்பதும், அரசினால் எப்படிப்பட்டவரும் சிந்தனைமாறி இடரிபற்றுவரென்பதும், கோசலையின் பொருளாலேயே நீ வாழவேண்டுமென்பதும், இரப்பவர் சுற்றத்தாரேனும் மற்றையோரேனும் அவர்க்கு உதவ இயலாதென்பதும், மாற்றாரால் உன்னைப்பெற்றேன் இராச்சிய மிழக்கநேரு மென்பதும், இனி ஒருநாளும் பரதனுக்கு இராச்சியம் வருமாறில்லை யென்பதும். இமையோர் வரமென்றது - இந்திராதிதேவர் பாற்கடலிற் கண்வளரும் பரமனையடைந்து பணிந்து அரக்கர்தங் கொடுமையைப் பகர, அதற்கு அவன் "வளையொடுதிகிரியும் வடவைத்தீதரு விளைதரு கடுவுடை விரிகொள்பாயலு, மிளைஞர்களெனவடி பரவ வேகினாம், வளைமதிலயோத்தியில் வருதும்," "வஞ்சகர்தந்தலை யறுத்திடர் தணிப்பென்" என்றதனை. திரியாத மனந்திரிந்தது என்பார் 'தூயசிந்தையுந் திரிந்தது' என்றார். தேவர்மாயையே கூனிபாய்வந்து கைகேயிக்குப் போதிக்க, மூர்த்தியே அரக்கரைக் கொல்லுமாறு இமையோர் திருமாலினிடத்து வரம் பெற்றிருத்தலால், அரக்கராலலைப்புண்ட அந்தணர்கள் தவம்பலிக்கின்ற அக்காலத்துக்கு ஏற்ப, இராமபிரானிடத்துத் தன்புதல்வனிடத்திற்காட்டிலும் பேரன்புகொண்டிருந்த கைகேயியின் மனமும் அப்பிரானைக் கானகம்புகுத்துமாறு திரிந்ததென்க. அந்தணர் - தண்டகாரணியவாசிகளாகிய மாமுனிவர். மூன்றாமடி சிலபிரதிகளில் 'மாயையுந்தவும் வரம்பெற்றவரென்றுரையாலும்' என்றும், 'மாயையுந்தவுமவர்பெற்றவர முன்மையாலும்' என்றும் காணகிறது. பி-ம்:—[1]சிந்தனை. [2]பெற்றநல். [3]வரவு. [4]நல்லறத்தாலும். (கஎ௬)

எஅ.—இதுவும் அது.

அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமுந்
துரக்க [1]நல்லரு டுறந்தன [2]டூமொழி மடமா
னிரக்க மின்மையன் றேவின்றிவ் வுலகங்க ளிராமன்
பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே.

(இ - ள்.) 'அரக்கர் (இயற்றிய) பாவம்உம்-இராக்கதர்செய்த தீவினையும், அல்லவர் இயற்றிய அறம்உம்-தேவரும் முனிவருஞ் செய்த நல்வினையும், துரக்க - ஏவுதலால், நல் அருள் துறந்தனள் - நல்லகருணையை விட்டவளாகிய, தூ மொழி மடமான் - பரிசுத்தமாகிய வார்த்தைகளையுடைய இளமையையுடைய மான்போன்ற கைகேயியினது, இரக்கம் இன்மை அன்றே - கருணையில்லாமையினா லன்றோ, இன்று-இப்பொழுதும், இ உலகங்கள்-இவ்வுலகத்

தவர், இராமன் - ஸ்ரீராமபிரானது, பரக்கும் தொல் புகழ் - பரவிய பழைய கீர்த்தியாகிற, அமுதினை-அமிருதத்தை, பருகுகின்றது - குடிக்கின்றது.

கைகேயியின் மனம் மாறுபடாதிருப்பின் சிறையிருந்தவளினேற்றத்தைத்தெரிவிக்கின்ற ஸ்ரீராமாயணமென்ற காவியரத்நமே தோன்றாதாதலால், கைகேயியின் மனத்திரிவிலும் உலகோர்க்கு நன்மையுண்டாயிற்றென்று நன்மையைத்தெரிந்து எடுத்து ஓதுகின்றனர் நூலாசிரிய ரென்க. இங்ஙனம் கைகேயியின் குற்றத்தைக் குணமாகக் கல்பித்துக் கூறியது—இலேசவணி யெனப்படும். அரக்கரையழித்தற்கும், முனிவரையுந் தேவரையும் அளித்தற்கும், இராமன் புகழினைப்பெறுதற்கும், வனம்புகுவித்த கைகேயியே காரணமாதலின் இங்ஙனங் கூறினார். அரக்கர்-ரக்ஷஸ் என்னும் வடமொழிச்சிதைவு. புகழை யமுதென்றார், கேட்போர்க்கு இனிமைபயத்தலும் பவத்துயர்துடைத்தலு முடைமைநோக்கி. பி-ம்:—[1]நல்லறம். [2]தூய்மொழி மடமாது, கேகயன் றேரைை.
(கஎஎ)

எகூ.—கூனியைக் கைகேயி மனமுவந்துநோக்கிப் பரதனுக்கு முடிசூட்ட உபாயங்கூறுமாறு வேண்டுதல்.

அனைய தன்மைய ளாகிய கைகய [1]னன்னம்
வினைநி ரம்பிய கூனியை விரும்பின ணோக்கி
யெனையு வந்தனை [2]யினியையென் மகனுக்கு மனையான்
புனையு [3]நீண்முடி பெறும்படி புகலுதி யென்றாள்.

(இ-ள்.) அனைய தன்மையள் ஆகிய-அப்படிப்பட்ட [மனம்நிலைமாறின] தன்மையுடையவளாகிய, கைகயன் அன்னம் - கைகேயி,—வினை நிரம்பிய-தீவினை நிறைந்த, கூனியை—, விரும்பினள் நோக்கி - விரும்பிப்பார்த்து, '(நீ), எனை உவந்தனை-என்னிடத்து விருப்பம்வைத்தாய்; என் மகனுக்கும் இனியை-என்புத்திரனுக்கும் நல்லவள்; அனையான் - அவன், புனையும் நீள் முடி - அலங்கரிக்கப்பெற்ற அழகிய கிரீடத்தை, பெறும்-அடைகின்ற, படி-விதத்தை, புகலுதி-சொல்லு,' என்றாள்—; (எ - று.)

'வினைநிரம்பிய கூனி' என்றதன்கண், கைகேயிக்குச் சூழ்ச்சிகூறினமையால் இராம னவதரித்த தொழில் நிரம்புதற்குக் காரணமாகியவ ளென ஒரு பொருளுந் தோன்றுமா றறிக. "கண்கள் சிவப்புறநோக்கினள்" என்றதற்கு மாறாக 'விரும்பினணோக்கி' என்றும், "எனக்குநல்லையுமல்லைநீ" என்றதற்கு மாறாக 'எனையுவந்தனை' யென்றும், "என்மகன்பரதன் றனக்கு நல்லையுமல்லை" என்றதற்கு மாறாக 'இனியை என்மகனுக்கும்' என்றும், "வரன்முறைநிறம்புதல்வழக்கோ" என்றதற்கு மாறாக 'புனையுநீண்முடி பெறும்படி புகலுதி' என்றும் கூறுகின்றாள்: மனந் திரிந்ததனு லென்க. மகனுக்கும்-எச்சவும்மை. அனையான் - ஸ்ரீராமனுமாம். பி-ம்:—[1]தனயை, தனயள். [2]என்மகனுக்குமிங்கனையான். [3]நன்.
(கஎஅ)

அ௦.—என்சொல்லைக்கேட்டால் உன்மகற்கு முடிசூட்டுவிப்பேனென்று மந்தரை கூறுதல்.

[1]மாழை யொண்கணி யுரைசெயக் கேட்டமந் தரை[2]யென்
றோழி வல்லள்[3]என் றுணைவல்ல ளென்றடி தொழுதா
[4]டாழு மென்னினி யென்னுரை தலைநிற்பி னுலக
மேழு [5]முன் ஒருபெருமகற் காக்குவெ னென்றாள்.

(இ - ள்.) மாழை ஒண் கணி-மாவடுப்போலும் அழகிய கண்களையுடைய கைகேயி, உரை செய-அவ்வார்த்தையைச் சொல்ல, கேட்ட—, மந்தரை—, 'என் தோழி வல்லள்-எனது தோழி சமர்த்தை; என் துணை வல்லள் - எனக்கு உதவியாயவள் சமர்த்தை', என்று - என்று (கைகேயியைப் புகழ்ந்து) சொல்லி, அடி தொழுதாள்-(அவள்)பாதங்களை வணங்கி,'என் இனி தாழும்-என்ன இனித் தாழ்ச்சியுண்டாகும்? [உனக்கு இனி ஒரு தாழ்வும் உண்டாகாதென்றபடி]; என் உரை தலைநிற்பின்-என் வார்த்தையின்படி நின்று செய்தால், உலகம் ஏழ்உம் - ஏழுலோகங்களையும், உன் ஒரு பெரு மகற்கு-நினது ஒப்பற்ற பெருமையுள்ள புத்திரனுக்கு [பரதனுக்கு], ஆக்குவென் - உரியனவாகச்செய்வேன்,' என்றாள்—; (எ - று.)

தன்கருத்துக்குக் கைகேயி இயைந்தமைபற்றி நயப்புரைத்தாள். 'என் துணைவல்லள்' என்பதற்கு-என்னைப்போலச் சமர்த்தை யென்று உரைத்தலுமொன்று. [4]தாழுமன்னிலையென்றபாடத்திற்கு, மன் ஆகுபெயராய்,மன்நிலை-(இராமனுக்குமுடிசூட்டக்கருதிய தசரத)மன்னவனது மன)நிலைமை,தாழும்-மாறும்என்க; இனி, இராமன் இந்நாட்டைவிட்டுக் காட்டையடைவன் என்றும் உரைக்கலாம். தலைநிற்பின், தலை-தமிழுபசருக்கம். உலகம் ஏழ் - ஏழு தீவுகளாகவுள்ள பூமி யென்னலாம். பி-ம்:—[1]மாழையுண். [2]தான். [3]என்றடியிணையிறைஞ்சின டொழுதாள். [4]தாழ்கிலென்னினி, தாழுமந்நிலை. [5]ஏழுமுன்னொருமகற்கு. (கஎக)

அக.—முன் மன்னவனளித்துள்ள இரண்டுவரங்களைக் கேட்குமாறு மந்தரை கூறுதல்.

நாடி யொன்று[1]நன் குரைசெய்வ னருமணி யனையாய்
தோடி வர்ந்ததார்ச் சம்பரன் றொலைவுற்ற வேலை
யாடல் வென்றியா னருளிய வர[2]மவை யிரண்டுங்
கோடி யென்றன ளுள்ளமுங் கோடிய கொடியாள்.

(இ - ள்.) உள்ளம்உம் கோடிய கொடியாள் - மனமும் கோணியிருக்கின்ற கொடிய மந்தரை, 'நரு மணி அனையாய் - விளங்குகின்ற இரத்தினம் போன்றவளே! நன்கு நாடி ஒன்று உரைசெய்வன் - நன்றாக ஆராய்ந்து (உனக்கு) ஒருகாரியத்தைச் சொல்கின்றேன்: தோடு இவர்ந்த தார் சம்பரன்-பூவிதழ்கள் நெருங்கிய வெற்றிமாலையையணிந்த சம்பராசுரன், தொலைவு

உற்ற வேலை - (யுத்தத்தில்)மடிந்த காலத்தில், ஆடல் வென்றியான்-போரில் வெற்றியையுடைய சக்கரவர்த்தி, அருளிய - (உனக்குக்) கொடுத்த, வரம் அவை இரண்டுஉம் - இரண்டுவரங்களையும், கோடி - (இப்பொழுது) கொள்வாயாக,' என்றனள் - என்று (கைகேயியை நோக்கிக்) கூறினாள்; (எ - று.)

அருளிய என்பது - அவன்தானே உள்ளமுவந்து தந்ததாகையால் மறுக்கொணாது என்பதைக் குறித்தது; சம்பராசுரயுத்தத்தில் கைகேயி பிராணாபாயத்தினின்று மீட்டுச் சாரத்தியஞ்செய்ததற்காகக் கொடுத்த வரம் என்பதாம். அவை - பகுதிப்பொருள்விகுதி. உள்ளமும் என்ற எச்சவும்மை, உடலுஞ் செயலும் பெயருங் கோடியவளென்பது குறித்துநின்றது. பி - ம்:—[1]உனக்குரைசெய்வெ னளிர்மலர்க்கையாய், நின்றுரைசெய்வ னலர்கதிரனையாய், உரைசெய்குவெ னளிர்மணிநகையாய், நின்றுரைசெய்வாணளிர்மதிநகையாய், நன்றுரைசெய்வெ னளிர்மலர்க் கையாய். [2]இவை. (கஅ௦)

அஉ.—மந்தரை இருவரங்கள் இன்னவையெனக் கூறித்தல்.

இரு[1]வ ரத்தினு மொன்றினு லரசுகொண் டிராமன்
பெருவ னத்திடை [2]யேழிரு [3]பருவங்கள் பெயர்ந்து
திரித ரச்[4]செய்வ தொன்றினாற் [5]செழுநில மெல்லா
மொருவ ழிப்படு முன்மகற் குபாய[6]மீ தென்றாள்.

(இ - ள்.) 'இரு வரத்தின்உம் - அவ்விரண்டுவரங்களுள்,ஒன்றினால் - ஒருவரத்தினால், அரசு கொண்டு - இராச்சியபாரத்தை உன்மகனதாக்கிக்கொண்டு, ஒன்றினால்-மற்றொன்றினால், இராமன்—, பெரு வனத்திடை - பெரியகாட்டில், ஏழ் இரு பருவங்கள் - பதினான்கு வருஷங்கள், பெயர்ந்து-(அயோத்தியினின்று) நீங்கி, திரிதர - அலையும்படி, செய்வது - செய்க; (செய்தால்), உன் மகற்கு - நினதுபுத்திரனுக்கு, செழு நிலம் எல்லாம் - வளத்தையுடைய உலகமுழுவதும், ஒருவழிப்படும் - அனுகூலமாய்விடும்; ஈது உபாயம் - இதுவே உபாயம்,' என்றாள்—; (எ - று.)

'நீ முதன்முதலில் முன்னர்ச் சம்பராசுரயுத்தத்தில் எனக்குத் தந்த வரங்களிரண்டையும் இப்போது தா என்று மன்னவனைக் கேள்: அவன் தருகிறேனென்றதும், அப்போது பரதனுக்குப் பட்டங்கட்டுமாறு ஒரு வரமும் இராமன் பதினான்குவருடம் வனஞ்செல்லுமாறு மற்றொருவரமும் கேட்டுப்பெறுக; இவ்வாறு இரண்டுவரமும் பெற்றால், உன் மகன் அரசுபுரிய இராமன் பதினான்குவருடம் நாட்டிலில்லாமற் கானகஞ்சென்றுவிடுவன்: அதனால், அரசின்கீழ்வாழும் ஜநங்களெல்லாம் பரதனுக்கு வசமாகி அனுகூலமாவர்: இதுவே செய்யத்தக்க உபாயம்' என்று மந்தரை கூறினளென்க. வழிப்படும் - பெயரெச்சமாய், உபாயமென்னும் பெயரோடு முடிதலுமாம். பெயர்ந்து - முடிசூட்டும்நிலையினின்றும் மாறியென்றுமாம். செய்வது-வியங்கோள்; திருக்கோவையாரில் "கொள்ளப்படாது மறப்பதறிவிலேன் கூற்றுக்களே" என்றவிடத்து மறப்பது என்பதுபோல. பி - ம்:—[1]வரத்தினில். [2]ஈரெழு, பதினாலு. [3]பருவமும். [4]செய்தி. [5]செல. [6]இது. (கஅக)

அங.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: கைகேயி கூனியைக் கொண்டாடுதல்.

உரைத்த கூனியை யுவந்தன [1]ளுயிருறத் தழுவி
நிரைத்த மாமணி யாரமு நிதியமு நீட்டி
யிரைத்த வேலைசூ ழுலகமென் னொருமகற் கீந்தாய்
தரைக்கு நாயகன் [2]றாயினி நீயெனத் [3]தணியா.

(இ - ள்.) உரைத்த கூனியை - (இவ்வுபாயத்தைச்) சொன்ன மந்தரையை, (கைகேயி), உவந்தனள் - மகிழ்ந்தவளாய், உயிர் உற தழுவி-இறுகத் தழுவிக்கொண்டு, மணி நிரைத்த - நவரத்தினங்களுமிழைத்த, மா ஆரம் உம் - விலையுயர்ந்த மாலையையும், (மா) நிதியம்உம் - மிக்க திரவியங்களையும், நீட்டி - கொடுத்து, 'என் ஒரு மகற்கு - எனது ஒப்பற்ற புத்திரனுக்கு, இரைத்த வேலை சூழ் உலகம் - ஒலிக்கின்ற கடலாற்சூழ்ந்த உலகத்தை, ஈந்தாய் - கொடுத்தாய்; (ஆதலால்), இனி - இனிமேல், தரைக்கு நாயகன் தாய் நீ-பூமிக்கரசனாகிய பரதனைப் பெற்றவள் நீயே,' என-என்று, தணியா - மகிழ்ந்து,—(எ - று.)—"என்றாள்" என அடுத்த கவியோடு தொடரும்.

தன்மகனுக்குப் பட்டம் வருமாறு ஆலோசனை சொல்லித்தந்ததனால், கைகேயி மந்தரையை இறுகத்தழுவிக்கொண்டு அவளுக்கு ஆரமும் நிதியமுங் கொடுத்து அவளைப் புகழ்ந்தன ளென்க. பி - ம்:—[1]உள்ளுற. [2]தாயுநீயே யென, ஆகுவனினியென. [3]துணியா, தணியாய், தனித்தாய். (கஅஉ)

அச.—கைகேயி தன்துணிவை மந்தரைக்குக் கூறுதல்.

[1]நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி [2]சூட்ட
றுன்று கானத்தி லிராமனைத் துரத்த லிவ்விரண்டு
[3]இன்றெய் தாவெனி லரசன்மு [4]னென்னுயிர் துறந்து
பொன்றி நீங்குதல் [5]புரிவென்யான் போதிநீ யென்றாள்.

(இ - ள்.) 'நன்று சொல்லினை - (நீ) நல்லஉபாயத்தைச் சொல்லினாய்: நம்பியை நளிர் முடி சூட்டல் - பரதனைப் பெருமையையுடைய கிரீடத்தைச் சூட்டுதலும், இராமனை துன்று கானத்தில் துரத்தல் - இராமனை நெருங்கிய காட்டில் ஓட்டுதலும், இ இரண்டும்—; இன்று எய்தாவெனில்-இன்றுகைகூடாமற் போமாயின், அரசன்முன்-சக்கரவர்த்தியினெதிரில், என் உயிர் துறந்து-எனதுபிராணனை விட்டு, பொன்றி-இறந்து, நீங்குதல் புரிவென் யான்-நான் ஒழிவேன்: நீ போதி - நீ போ,' என்றாள்—; (எ - று.)—ஆம் - அசை.

நீ சொல்லியவாறு என்கணவனிடம் பரதனுக்கு முடிசூட்டவும் இராமனைக் காட்டுக்குஅனுப்பவும் இருவரங் கேட்பேன்: இவ்விருவரங்களையும் மன்னவன் கொடுத்தானாற் சரி: கொடாவிடின் அவன்முன்னிலையில்தானே என்னுயிரை விடுவேன்: இதுவே என்துணிபு: நீ போய்வருக என்றனள் கைகேசி யென்க. நம்பியை - நம்பிக்கு: உருபுமயக்கம். முன் - இடமுன்.
பி-ம்:—[1]நன்கு. [2]சூட்டி. [3]அன்றதாமெனில். [4]ஆருயிர். [5]புரிகுவென். ()

*சிலபிரதிகளில் இங்கே கைகேயிப் படலம் என்று ஆரம்பிக்கின்றது:*

அரு.—இதுமுதல்மூன்றுகவிகள் - கைகேயி தன்னையலங்கோலமாகச் செய்துகொண்டதைத் தெரிவிக்கும்.

*கூனி போனபின் குலமலர்க் குப்பைநின் [1]றிழிந்தாள்*
*சோனை வார்குழற் கற்றையிற் [2]சொருகிய மாலை*
*[3]வான வார்மழை நுழைதரு மதிபிதிர்ப் பாள்போற்*
*றே[4]ன வாவுறு வண்டின [5]மலமரச் சிதைத்தாள்.*

(இ-ள்.) கூனி போன பின்-மந்தரை போயின பின்பு, (கைகேயி),குலம் மலர் குப்பை நின்று - சிறந்த மலர்களினது கூட்டத்தாலாகிய படுக்கையினின்று, இழிந்தாள் - இறங்கி, சோனை வார் குழல் கற்றையில்-பெருமழை பொழியும் மேகம்போற்கரிய நீண்ட கூந்தற்றொகுதியில், சொருகிய-சொருகி பணிந்திருந்த, மாலை-பூமாலையை, வானம் வார் மழை நுழைதரும் மதி பிதிர்ப்பாள்போல்-ஆகாயத்திலிருக்கின்ற பெரிய கார்காலத்து மேகத்தில் நுழைந்திருக்கின்ற பூர்ணசந்திரனைச் சொரிவிப்பவள்போல, தேன் அவா உறு வண்டு இனம்-மதுவினிடத்துள்ள ஆசையினால் மொய்க்கின்ற வண்டுக்கூட்டம், அலமர-வருந்தும்படி, சிதைத்தாள்-கசக்கியெறிந்தாள்; (எ - று.)

கூந்தலிற்செருகியிருந்த மாலையைக் கைகேயி எடுத்தெறிந்தது, மழையில் நுழைந்த மதியைப் பிதிர்ப்பதுபோலுமென்றார்; தன்மைத் தற்குறிப் பேற்றவணி. "பொங்கணைமேற்கிடந்தாள்" என்றதனை நோக்கி, 'குப்பை நின்றிழிந்தாள்' என்றார். குப்பை-தொகுதி: "போதின் குப்பை" என்பர், வனம்புகுபடலத்தும். பி-ம்:—[1]ஒழிந்தாள். [2]சுற்றிய. [3]வானமார், வானவா, வானமா. [4]அவாவுறும், அவாவற. [5]அலம்வர. (கஅச)

அரு. *விளையுந் தன்புகழ் [1]வல்லியை வேரறுத் தென்னக்*
*கிளைகொண் மேகலை சிந்தினள் [2]கிண்கிணி யோடும்*
*வளைது றந்தனள் [3]மதியினின் மறுத்துடைப் பாள்போ*
*லளக வாணுத லரும்பெறற் றிலதமு மழித்தாள்.*

(இ-ள்.) விளையும் தன் புகழ் வல்லியை - வளர்கின்ற (தனது) கீர்த்தியாகிய கொடியை, வேர் அறுத்து என்ன-வேரோடு அறுத்தாற்போல, கிளை கொள் மேகலை-ஒளியைக்கொண்ட மேகலாபரணத்தை, சிந்தினள் - சிதறி, கிண்கிணியோடுஉம் பாதகிண்கிணியுடன், வளை - கைவளைகளையும், துறந்தனள் - எறிந்து விட்டு, மதியினின் மறு - சந்திரனிடத்துள்ள களங்கத்தை, துடைப்பாள் போல் - அழிப்பவள் போல, அளகம் வாள் நுதல் - கூந்தலையடுத்த ஒளியையுடைய நெற்றியிலுள்ள, அரு பெறல் திலதம் உம் - அரிய பெறுதலையுடைய திலகத்தையும், அழித்தாள்-துடைத்தாள்; (எ - று.)

வெண்ணிறவரதனங்களாலியன்ற கோவைகளையுடைமையால், மேகலையை யறுத்தெறிந்தது - தன்புகழ்வல்லியை வேரோடு அறுத்தது போலு

மென்றார்: இது - தற்குறிப்பேற்றவணி. நெற்றியில் திலகத்தை அழித்தது-மதியை மறுத்துடைத்ததுபோலு மென்ற இதுவும் தற்குறிப்பேற்றவணியே. மேகலையறுத்தது - தன் மனமாறுபாட்டைக் காட்டுதற்கு ஆதலால், 'புகழ் வல்லியை வேரறுத்தென்ன' என்றது. கிளை-அதற்கு இனமாகிய அணிகளுமாம். கிண்கிணி-காரணப்பெயர். பி-ம்:—[1]வில்லியை. [2]மேகலை. [3]மதியினை.()

அஎ. [1]தாவின் மாமணிக் கலன்[2]முற்றுந் தனித்தனிச் சிதறி
நாவி[3]யோதியை நானிலந் தைவரப் பரப்பிக்
காவி[4]யுண்டக ணஞ்சனங் கான்றிடக் [5]கலுழாப்
பூ[6]வுதிர்ந்ததோர் கொம்பெனப் [7]புவிமிசைப் புரண்டாள்.

(இ - ள்.) தா இல் மா மணி கலன் முற்றுஉம்-குற்றமற்ற பெரிய இரத்தினமயமான ஆபரணங்களெல்லாவற்றையும், தனி தனி சிதறி - தனித்தனியாகச்சிந்தி,-நாவி ஓதியை-கஸ்தூரியணிந்த கூந்தலை, நானிலம் தைவர - பூமியைத் தடவும்படி, பரப்பி-அவிழ்த்துவிட்டு, காவி உண்ட கண்-நீலோற்பலம் போன்ற மையுண்ட கண்கள்,அஞ்சனம் கான்றிட-மை கரையும்படி, கலுழா-அழுதுகொண்டு, பூ உதிர்ந்தது ஓர் கொம்பு என - மலர்கள்உதிர்ந்ததாகிய ஒருவல்லிபோல, புவிமிசை - பூமியில், புரண்டாள் - விழுந்துருண்டாள்.

காவி-நிறத்திற்கு உவமை. முன் "நளினம்பூத்ததோர்வல்லி" என்றதற்கு ஏற்ப 'பூவுதிர்ந்ததொர்கொம்பு' என்றார். அணிகலங்களை நீக்கிய நிலையில் பூவுதிர்ந்த கொம்பை உவமை கூறுதலை "பிடிக்கைபோலுந்திரள் குறங்கினணியு நீக்கிப் பிணையன்று, எடிக்கிண்கிணியு மஞ்சிலம்பும் விரன் மோதிரத்தோடகற்றியபின், கொடிப்பூத்துதிர்ந்ததோற்றம்போற் கொள்ளத் தோன்றி" என்று சிந்தாமணியிற் கூறியிருத்தலுங் காண்க. "மேவருங்கலங்களை வெறுத்த மேனியர்...பூவுதிர்கொம்பென மகளிர்போயினார்" என்பர் மேல் ஆறுசெல்படலத்தும். பி-ம்:—[1]தாவினன் மணி. [2]மற்றும். [3]மென்குழல், நன்குழல். [4]உண்கண்கள், ஒண்கண்கள். [5]கலுழப், கலுழ்ந்து. [6]உதிர்ந்தது. [7]படிமிசை, பார்மிசை, பொடிமிசை. (௧அ௬)

அஅ—கவிக்கூற்று: அலங்கோலமாகக் கிடந்த கைகேயியின் வருணனை.

நவ்வி வீழ்ந்தென நாடக மயிறுயின் றென்னக்
கவ்வை கூர்தரச் சனகியாங் கடிகமழ் கமலத்
தவ்வை நீங்குமென் றயோத்திவந் தடைந்தவம் மடந்தை
தவ்வை யாமெனக் கிடந்தனள் [1]கேகயன் [2]றனயை.

(இ - ள்.) கேகயன் தனயை - கைகேயி,--கவ்வை கூர்தர - துன்பம் மிகுதலால், நவ்வி வீழ்ந்து என-மான் விழுந்தாற்போலவும், நாடகம் மயில் துயின்று என்ன - குலாவிக்கூத்தாடுகின்ற மயில் (அஃது ஒழிந்து) ஒடுங்கிக் கிடந்தாற் போலவும்;—சனகி ஆம் - சீதையாகிய, கடி கமழ்

கமலத்து அவ்வை - வாசனைவீசுகின்ற பொற்றாமரைமலரில் வீற்றிருக்கின்ற தாயாகிய இலக்குமி,நீங்கும்-(காட்டிற்கு)நீங்குவாள்,என்று-,அயோத்தி வந்து அடைந்த-அயோத்தியாபுரியில் வந்து சேர்ந்த,அ மடந்தை தவ்வை என-அவ் விலக்குமியினது மூத்தவள்போலவும்,கிடந்தனள்-விழுந்துகிடந்தாள்; (எ-று.)

மனத்தின்மாறுபாடுதோன்ற அலங்கோலத்தைக்கொண்ட நிலைமை யோடு கைகேசி பூமியிற்கிடந்தது-நவ்வி வீழ்ந்ததனையும், மயில் கொஞ்சிக்கூத் தாடுதலொழிந்து ஒடுங்கிக்கிடந்ததனையும், இலக்குமியாகிய சீதை நீங்குவது குறித்து மூதேவி குடிபுகுந்ததையும் போலு மென வருணித்தார்; முதலிரண் டும்-**உவமையணி**; மூன்றாவது-**தற்குறிப்பேற்றவணி.** தவ்வை கூர்தர-காரிய நிமித்தமாக என்றுமாம். அவ்வை - உலகமாதா. தவ்வை, அவ்வை-போலிகள். அயோத்தி-அயோத்யா என்னும் வடசொல்லின் திரிபு: சண்டையிடுவதற்குக் கூடாததென்பது பொருள்; அகழி, மதில், ஆயுதம், சேனை முதலியவற்றால் தக்க காவலுடைத்தென்பது கருத்து. தவ்வை - மூதேவி. ஆம் - அசை. **பி - ம்:**—[1]கைகயன். [2]தனயள். (கஅஎ)

மந்தரைசூழ்ச்சிப்படலம் முற்றிற்று.

---

## ௩-ஆவது கைகேசி சூழ்வினைப்படலம்.

அதாவது - கைகேயி ஸ்ரீராமபட்டாபிஷேகத்துக்கு இடையூறுசெய்ய ஆலோசித்த தீயசெயலைச் சொல்லும் பகுதி யென்பது பொருள். கைகேசி - கைகேயி என்பதன் விகாரம்; கேகயநாட்டரசன்மக ளென்பது பொருள். இந்தப் படலத்திற்குப் பெயர்,'**கைகேசிப்படலம்**' என்று சிலபிரதியிற் காண் கிறது.

கூனியாற்கலைக்கப்பட்டு மாறுபாடுற்று அலங்கோலத்தோடுகைகேயிகிடக் கையில், இராமபிரானுக்குப் பட்டங்கட்டுவ தென்று தீர்மானித்த அன்று நள்ளிரவில் தசரதசக்கரவர்த்தி இராமமகுடாபிஷேகத்தைக் கைகேயிக்கு உணர்த்துமாறு அவளதுமாளிகைக்குச்சென்று,கைகேயிபாயல்துறந்து அலங் கோலநிலையுடன்கிடப்பதைக் கண்டு, 'இவட்கு என்ன நேர்ந்ததோ!' என்று நெஞ்சு சோர்ந்து, தன்கைகளால்அவளை எடுக்கத்தொடங்க,கைகேயி அக்கை யினின்றுநீங்கி மண்ணில்வீழ்ந்து நெட்டுயிர்க்க, அதுகண்ட மன்னவன் அஞ்சி, 'நிகழ்ந்தது என்னை? யாரேனும் உனக்குத் தீங்கிழைத்திருந்தாற் சொல்: நான் அவர்களைச் செய்வதைக் காண்' என்று தேற்ற, அதுகேட்ட கைகேயி,'என்மீது உண்மையாக அன்புளதாயின்,முன்கொடுத்த வரங்களைத் தருமாறு உறுதிகூறுக' என்ன, தசரதமன்னவன் அவளதுவஞ்சனையை யுணராது சிரித்து 'இராமன்மேல் ஆணை: நீ வேண்டும் வரங்களைத் தரு

கிறேன்' என்ன, கைகேயி 'என்மகன் முடிசூடுவது முதல்வரம்: இராமனைக் காட்டிற்கு அனுப்புவது இரண்டாம்வரம்' என்று தன்கருத்தை யறிவித்தாள். அது கேட்ட மன்னவன் சொல்லொணுத்துயரத்தால் கீழ்வீழ்ந்து வெய்துயிர்த்து நாவறளஉயிரொடுங்கமனம்புலர்ந்து ஒருபாற்கோபம்மூளவெம்பிப் புண்ணில் வேற்படைபுகப்பெற்றவேழம்போல வருந்தினுன். மன்னனது அந்தநிலையைக் கண்டும் சிறிதும் மனமிளகாது கைகேயி நிற்க, அவளை நோக்கி மன்னன், 'நீ திகைத்தது உண்டோ? யாரேனும் துர்ப்போதனைசெய்தார்களோ? சொல்' என்று வினவினுன். கைகேயியோ, 'எனக்குத் துர்ப்போதனை செய்தாரும் இல்லை; நான் திகைத்ததும் இல்லை: வரந்தந்தாற் கொள்கிறேன்: இன்றேல், உனக்குவசையுண்டாக மாய்வேன்' என்றுள். அதுகேட்ட மன்னன் மிக வருந்திக் கைகேயியைப்பழித்துப் பின்பு 'இவளை இரந்துபார்ப்போம்' என்று கருதிப்பலபடிகெஞ்சி 'பூமியைக் கொடுத்துவிடுகிறேன்: இராமன்மாத்திரம் நாட்டிலிருக்கட்டும்: இராமன் நீங்கினுல் என்னுயிர் நீங்கும்: யான் உன்னடைக்கலம்' என்று காலில்வீழ்ந்து இரந்தான். என்னஇரந்தும், தன் நிலையினீங்காது கைகேயி விடாப்பிடியுடனிருத்தலை யறிந்து தசரதன் மிகவருந்திப்பலபடியாகப்பழித்துத் தரையிற்புரண்டவண்ணம் கிடந்தான். அப்போதும் கைகேயி 'நீ வரத்தைக்கொடுத்தாற் கொடு: இல்லாவிடின் மாய்வேன்' என்றுள்: மன்னவன் பெருந்துயரத்தோடு 'வரம் ஈந்தேன் ஈந்தேன்; என்மகன் காடு செல்ல, நான் வானகஞ்செல்லுகின்றேன்: நீ உன்மகனேடும் வசைக்கடலில் அழுந்துக' என்றுகூறி மூர்ச்சித்தான். தன்செயல்முற்றியதுகண்டு கைகேயியும் துயின்றுள். பின்பு இரவுபோய்ப் பொழுதுவிடிந்தது; இராமபட்டாபிஷேகத்தைக் காணவேணுமென்று நகரத்தவர்யாவரும் அலங்காரஞ்செய்துகொண்டு எங்குந் திரண்டனர். அரசர்கள் பலரும் பட்டாபிஷேகமண்டபத்துக்கு வந்துசேர்ந்தனர். வசிட்டமுனிவன் பட்டாபிஷேகத்துக்கு வேண்டியபொருள்களைச் சித்தஞ்செய்துகொண்டு அந்தணர்களோடும் அம்மண்டபம் வந்துசேர்ந்தான். இங்ஙனமிருக்கையிற் பட்டாபிஷேககாலம்வந்திட்டதென்று கணிகள் தெரிவித்ததனுல் வசிட்டன் 'விரைவில் மன்னனையழைத்துவருக' என்று பணிக்க, சுமந்திரன் கைகேயியின் மாளிகையில் தசரதன் சென்றிருப்பது தெரிந்து அங்குச்செல்ல, கைகேயி 'இராமனை யழைத்துக்கொண்டுவா' என்றனள். அதுகேட்ட சுமந்திரன் பட்டாபிஷேகத்துக்குத்தான் அழைத்துவரச் சொல்லினளென்றுகருதிப் பேருவகையோடுசென்று இராமபிரானையடைந்து வாய்புதைத்தவண்ணம் கைகேயி யழைத்துவரச்சொன்னசெய்தியைத் தெரிவித்து, 'மகுடஞ்சூடவிரைந்துவருக' என்றனன். இராமபிரானும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை வணங்கிவிட்டு அரசர்சூழவும் பலவாத்தியங்கள் ஒலிக்கவுந் தேரேறிச்சென்று வீதிகளைக்கடந்து பேருவகையோடு அரசர்திரண்டுள்ள மண்டபத்திற்புகாமல் கைகேயியின் மாளிகையிற் சென்றுன். கைகேயி தந்தையைநாடிவரும் இராமபிரானுக்கு எதிர்சென்று, தன்பாதங்களை வணங்கிநின்ற அவ்விராமபிரானிடம் 'தந்தையின் ஏவல்ஒன்று உளது' என்ன, ஸ்ரீராமன்

'தந்தையின்பணியை நீர் உரைசெய்யமுடியுமானல் யான்உய்ந்தேன்; நும் பணியைச் சிரமேற்கொள்வேன்: பணிமின்'என்ன, 'பரதன் உலகத்தையாள நீ பதினன்குவருடம் தவக்கோலத்துடன் காட்டில் வசித்துவரவேண்டும்'என்ருள். அதுகேட்ட ஸ்ரீராமன் இராச்சியபாரத்தைத் தாங்கவேண்டுமென்று தந்தைகூறிய நாளையினும் அப்போது முகமலர்ந்து இராச்சியச்சுமை தன்னை விட்டு நீங்கியதற்காக மனமுவந்து, 'மன்னவன்பணியன்ருகில் நும்பணியே யாயினும் மறுப்பேனே? என்தம்பியின் செல்வம் என்னதே யன்ருே? நும் பணி தலைமேற்கொண்டேன்: கானம் போகின்றேன்; விடைபெற்றுக்கொள் கிறேன்' என்ருனென்பது, இப்படலத்திற் கூறுகிற விஷயம்.

வேறு.

**க.—தசரதன் கைகேயியின் மாளிகையை யடைதல்.**

நாழிகை கங்குலி னள்ள டைந்த [1]பின்றை
யாழிசை யஞ்சிய [2]வஞ்சொ லேழை கோயில்
வாழிய [3]வென்றயின் மன்னர் துன்ன வந்தா
ளுழி நெடுங்[4]கை மடங்க லாளி யன்னன்.

(இ - ள்.)கங்குலின் நாழிகை-இரவின் காலம், நள் அடைந்த பின்றை-நடுவை யடைந்த பின்பு, நெடு கை மடங்கல் ஆளி அன்ன - நீண்டகைகளை யுடைய ஆண்சிங்கத்தை யொத்தவனான, ஆழியான்-சக்கரவர்த்தி,—வாழிய என்று - வாழ்வாயாகவென்றுசொல்லி, அயில் மன்னர்-வேலைத்தாங்கிய அரசர்கள், துன்ன - சூழ்ந்துவர, - யாழ் இசை-வீணையினதுஒலியும், அஞ்சிய - அஞ்சப்பெற்ற, அம் சொல் - அழகியமொழியையுடைய, ஏழை - கைகேயியி னது, கோயில் - மாளிகைக்கு, வந்தான்—; (எ - று.)

இராசாங்க காரியத்தை யெல்லாம் கவனித்து உண்டபின்பு நள்ளிரவில் கைகேயியின் கோயிலுக்குத் தசரதன் சென்ருனென்க. கைகேயியினிடத்து அரசனுக்குக் காதல் மிகுதியாகையால், இராமபட்டாபிஷேகமாகிய உவகைச் செய்தியைத் தானே அவளிடம் நேரே தெரிவிக்கவேணுமென்று தசரதன் சென்ருனென்பதை முதனூலா லறிக. யாழிசையஞ்சிய சொல் - யாழிசை யினும் சொல் இனிதென்பதுகருத்து. 'அஞ்சிய' என்றதனல் சொல்லின் பொருட் கொடுமையும், 'ஏழை' என்றதனல் அறிவில்லாத மனத்தினது கொடுமையும் விளங்குகின்றன. வேந்தர்நெருங்கிய பேரவையினீங்கித் தனித் திருக்க அந்தஃபுரத்திற்குச் செல்வானேடு மன்னர் உடன்செல்லுதற்கு இயையுமோ? எனின்,—மன்னர்மன்னனுதலின் வழிவிடச்சென்ருரென்க; அல்லது, உயிர்போலச் சிறந்த நட்பரசரென்று கொள்க. "ஏறுபோற்பீடு நடை" என்றும், "மடங்கன்மொய்ம்பினுர்"என்றும் கூறப்படுதலால், பெரு மிதமுடையானுக்குச் சிங்கவேறு நடையானும் வலியானும் உவமை. மடங்க லாளி - ஒருபொருளைக்குறித்த இருசொற்கள்; மடங்கல் - பிடரிமயிர் மடங்கி யிருக்கப்பெற்றதுஎன ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி. நாழிகை - நாடிகா என்பதன்சிதைவு. அன்னஆழியான் - விகுதிபிரித்துக்கூட்டல். இனி, ஆழியையுடைய ஆளியன்னனென்றே யுரைப்பினுமாம். பி-ம்:—[1]வேலை. [2]செஞ்சொல். [3]வென்றியன், வென்றயல். [4]கண். (கஅஅ)

உ.—தசரதன் கைகேயியை யணுகுதல்.

வாயிலின் மன்னர் வணங்கி நிற்ப வந்தாங்
[1]கேயின செய்யு [2]மடந்தை மாரொ டேகிப்
பாய றுறந்த படைத்த டங்கண் மென்றோ
ளாயிழை தன்னை யடைந்த வாழி மன்னன்.

இதுவும் மேலிற்கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) மன்னர் - (தன்னுடன்வந்த) அரசர், வணங்கி - தொழுது, வாயிலின் நிற்ப - அந்தஃபுரவாயிலில் நிற்க,—ஆங்கு - அவ்விடத்தில், வந்து-ஓடிவந்து, ஏயின செய்யும் - ஏவினபணி செய்கின்ற, மடந்தைமாரொடு - பெண்களோடு, ஏகி - போய்,—பாயல் துறந்த - படுக்கையைவிட்ட, படை தட கண் - வேல்போன்ற [கூரிய] பெரிய கண்களையும், மெல் தோள் - மெல்லிய தோள்களையுமுடைய, ஆய்இழைதன்னை-கைகேயியை, அடைந்த-சேர்ந்த, ஆழிமன்னன் - சக்கரவர்த்தி,—(எ - று.)—"எடுக்கலுற்றான்" என அடுத்த கவியோடு முடியும்.

மந்தரையால் மனங்கலங்கலுற்ற கைகேயி தான் படுத்திருந்த இடத்தை விட்டுச் சினங்கொண்டபோது இருக்குங் கிருகத்திற்குப் போய் தன்னணி கலங்களையும் மாலைகளையும் களைந்தெறிந்து வெறுந்தரையிற் புரண்டுகிடந்தனளாக, தசரதன் வழக்கமாகக் கைகேயி படுத்திருக்கும் அறையிற்போய்ப் பார்த்து அங்கு அவளைக் காணாமையால் மனந்திடுக்கிட்டு அக்கைகேயி கோப கிருகத்திற் சென்றிருப்பதையறிந்து அங்குச்சென்று அவள் வெறுந்தரையிற் படுத்திருப்பதைக் கண்ணுற்றா னென்று முதனூற்கு ஏற்க விரித்துரைக்க. ஏயின - ஏவின; பெயர். ஆழிமன்னன் - சுட்டு. பி-ம்:—[1]ஏயது. [2]மடந்தை யாரொடேகி, அணங்கினார்கள் சூழ. (கஅஞ)

ங.—தசரதன் மனம்வருந்திக் கைகேயியைத் தழுவி யெடுக்கமுயலுதல்.

[1]அடைந்தவ ணோக்கி யரந்தை யென்கொல் வந்து
தொடர்ந்த தெனாத்துயர் கொண்டு சோரு நெஞ்சன்
[1]மடந்தையை [2]மானை யெடுக்கு [3]மானை யேபோற்
றடங்கைகள் கொண்டு தழீஇ யெடுக்க லுற்றான்.

(இ - ள்.) அவண் அடைந்து - அவ்விடத்தைச் சேர்ந்து, நோக்கி - (அவளைப்) பார்த்து, 'வந்து தொடர்ந்தது அரந்தை என்-(இவளுக்கு) வந்து பொருந்தினதாகிய துன்பம் யாது?' என - என்றெண்ணி, துயர் கொண்டு - துன்பத்தையுட்கொண்டு, சோரும்-தளர்கின்ற, நெஞ்சன்-மனத்தையுடையவனாய்,—மானை - பெண் மானை, எடுக்கும்-(துதிக்கைகொண்டு) தூக்குகின்ற, ஆனை ஏ போல் - களிற்றைப்போல, தட கைகள் கொண்டு - பெரிய கைகளால், மடந்தையை - அவளை, தழீஇ - கட்டியணைத்து, எடுக்கல் உற்றான் - தூக்கத்தொடங்கினான்; (எ - று.)—என் கொல், கொல் - அசை.

அந்தக்கைகேயி தரையில் வீழ்ந்துகிடப்பது கண்டு பெருந்துயரமடைந்த தசரதன் 'என்னசொல்லுவளோ! என்னசெய்வளோ?' என்ற அச்சத்தோடு வேடனது நஞ்சுதீற்றிய அம்பால் அடியுண்டுவீழ்ந்த பெண்யானையை நெடுங் காட்டில்திரியும் பெருங்களிறு பரிசிப்பதுபோலத் தன்கையாற் பரிசித்தா னென்று முதனூல் கூறும். அவள்நோக்கியெனப்பிரித்து, இரண்டனுருபு தொக்கதாகவுமாம். வந்து தொடர்ந்ததென்றதனால்,இதுகாறுந் துயரமின்மை பெறப்பட்டது. கைகளெனப் பன்மையாற் கூறுதலால், இருகைவேழத்தை யுவமையாக்குக. மடந்தை - வேட்கைபிறந்த பருவத்துப் பெயர். பி - ம்:—[1]அடைந்தவன், அடைந்தனன், அடைந்தவர், அடைந்தது. [2]மாலே. [3]யானை.

௪.—மன்னவன்கையைத்தள்ளிக் கைகேயி பூமியில்விழுந்து நெட்டுயிர்த்தல்.

நின்று தொடர்ந்த நெடுங்கை [1]தம்மை நீக்கி
மின்றுவள் கின்றது போல மண்ணில் வீழ்ந்தா
ளொன்று மியம்பல ணீடு யிர்க்க லுற்றாண்
[2]மன்ற லருந்தொடை மன்ன னாவி யன்னாள்.

(இ-ள்.) மன்றல் அரு தொடை மன்னன்-வாசனையையுடைய (கிடைத் தற்கு) அரிய மாலையைத் தரித்த சக்ரவர்த்தியினது, ஆவி அன்னாள்-உயிரை யொத்த கைகேயி,—தொடர்ந்து நின்ற - தழுவியெடுத்து நின்ற, நெடு கை தம்மை-(அரசனுடைய) பெரிய கைகளை, நீக்கி-தள்ளி, மின் துவள்கின்றது போல - அசைகின்ற மின்னலைப்போல, மண்ணில் வீழ்ந்தாள்-பூமியில் (மறு படியும்) விழுந்து, ஒன்றுஉம் இயம்பலள்-ஒன்றும் பேசாதவளாய், நீடு உயிர் க்கல் உற்றாள் - பெருமூச்சுவிடத் தொடங்கினாள்; (எ - று.)

அரசனுக்கு ஆவிபோலச் சிறந்த கைகேசி தன்னைத் தழுவியெடுக்கலுற்ற தசரதனது கைகளைத் தள்ளி ஒரு மின்னற்கொடிபோல் துவண்டு மண்ணில் விழுந்து மன்னவனுக்கு மறுமாற்றமொன்றுஞ் சொல்லாமல் நெட்டுயிர்த்தன ளென்பதாம். நின்றுதொடர்ந்த=தொடர்ந்துநின்ற: விகுதிபிரித்துக்கூட் டல். பி-ம்:—[1]தன்னை நீக்கி, ஏழைநீக்கி, நீக்கியேழை. [2]மன்றறாரவனா வியன்னமன்னாள், மன்றுளர் தாரவனாவியன்னமன்னாள், மன்றுளதாரவனாவி யன்னமங்கை. (ககக)

ரு.—தசரதன் அதுகண்டு 'உனக்கு நிகழ்ந்ததைச் சொல்' என்று வேண்டுதல்.

அன்னது கண்ட வலங்கன் மன்ன னஞ்சி
யென்னை [1]நிகழ்ந்த [2]திஞ்ஞால மேழில் வாழ்வா
ருன்னை யிகழ்ந்தவ ரென்ன வுற்ற தெல்லாஞ்
சொன்னபி னென் செயல் காண்டி [3]சொல்லி டென்றான்.

(இ-ள்.) அன்னது கண்டு அந்தகைகேயிமண்ணில்வீழ்ந்து நெட்டுயிர்த் தலைப்பார்த்த, அலங்கல் மன்னன்-மாலையையுடையஅரசன், அஞ்சி-பயந்து;

'நிகழ்ந்தது என்னை - நடந்தகாரியம் யாது? இ ஞாலம் ஏழில் வாழ்வார் - இவ்வேழுலகங்களில் வாழ்பவர்களுள், உன்னை இகழ்ந்தவர் மாள்வர் - உன்னை இகழ்ந்தவர் (எவராயிருந்தாலும் அவர்கள் என்னாற்கொல்லப்பட்டு) உயிரையிழப்பார்கள்; உற்றது எல்லாம் நடந்தது முழுவதும், சொன்னபின் - (நீ) சொன்னபின்பு, என் செயல் காண்டி - என் செய்கையைப் பார்; சொல் விடு - (நிகழ்ந்ததைச்) சொல்வாயாக,' என்றான்—; (எ - று.)

கைகேயியின் கொடியஎண்ணத்தை யுணராத தசரதன் 'இவள் இங்ஙனம் மண்ணில்வீழ்ந்து நெட்டுயிர்த்தற்கு யாதுகாரணமோ? யார் இவட்குஎன்ன அவமானஞ் செய்தார்களோ? அன்றி ஏதேனும் உடலில்நோய் தோன்றியுள்ள தோ?' என்ற எண்ணத்தினால் மனநடுக்கங்கொண்டு, 'உன்னை எவரேனும் இகழ்ந்தார்களா? அப்படி எவரேனும் இகழ்ந்திருப்பின் அவர்களை இப்பொழு தே கொன்றுவிடுகிறேன்; அன்றி, உடம்பில்ஏதேனும் நோய் தோன்றியுளதா? அப்படிஏதேனும்இருப்பினும் என்னிடம் மிகச்சிறந்த மருத்துவர் இருத்தலால் அவர்களைக்கொண்டு ஒருநொடியில் உன்னோயைப் போக்குவேன்: உனக்கு நேர்பட்டுள்ளது இன்னதுஎன்று விவரமாகச்சொல்: சொன்னால் அதற்குத் தக்கபரிகாரத்தை உடனேசெய்கின்றேன்: பார்' என்று தசரதன் நல்வார்த்தை சொல்லிக் கைகேயியைத் தேற்றப்பார்த்தனனென்க. சொன்னபின் - வினை யெச்சம். காண்டி - முன்னிலையொருமைவினைமுற்று. என்னாற்கொல்லப் படுவரென்பான் மாள்வரெனத் தன்வினையாற் கூறினான். பி-ம்:—[1] நிகழ்ந் தது. [2] இவ்வேழு ஞாலமாள்வார், இவ்வேழு ஞாலம்வாழ்வார். [3] சொல்லிடு, சொல்லுக. (௧௧௨)

**௬.—தசரதன்சொல்லைக் கேட்ட கைகேயி முன்தந்தவரத்தைக் கொடுக்கவேண்டுதல்.**

[1]வண்டுளர் தாரவன் வாய்மை கேட்ட [2]மங்கை
[3]கொண்ட னெடுங்[4]கணி னாலி கொங்கை [5]கோப்ப
வுண்டுகொ லாமரு[6]ளென்க ணுன்க ணொக்கிற்
[7]பண்டைய [8]வின்று [9]பரிந்த ளித்தி யென்றாள்.

(இ - ள்.) வண்டு உளர் தாரவன் - வண்டுகள் ஒலிக்கின்ற மாலையை யுடைய அரசனது, வாய்மை - வார்த்தையை, கேட்ட - செவியுற்ற, மங்கை - கைகேயி,—கொண்டல் - நீர்கொண்டமேகம்போல, நெடும் கணின் - பெரிய கண்களினின்று, ஆலி - நீர்த்துளிகள், கொங்கை கோப்ப - தனங்களில்நிறை யும்படி, (அழுதுகொண்டே), 'என்கண் - என்னிடத்தில், அருள் உண்டு கொல், கருணை இருக்கின்றதோ? உன்கண் - உன்னிடத்தில், ஒக்கில் - இருந்தால் - பண்டைய - முன்னேகொடுத்தவற்றை, இன்று - இப்பொழுது, பரிந்து - விரும்பி, அளித்தி - கொடுப்பாயாக,' என்றாள்—; (எ - று.)—ஆம் - அசை.

மங்கை-பெண்மாத்திரையாய் [illegible] கண்ணீர்த்துளிகள் முத்துக்கள் போலுதலால், 'கோப்ப' என்றார். பண்டைய-அகாரச்சாரியையை இறுதியிற் பெற்றுவந்த பண்டென்னும் மென்றொடர்க் குற்றியலுகரத்தடியாகப்பிறந்த

பலவின்பாற்பெயர். பண்டையவென்றது - சம்பரனோடு சமர்புரிகையில் போர்த்துணையாய் நின்றதனுக்குக் கொடுத்த வரமிரண்டனையும். பி-ம்:—[1]வண்டணி. [2]நங்கை. [3]கொண்ட. [4]கண்ணோவி. [5]போர்ப்ப. [6]என்கணுண்மை நோக்கின், என்கணுங்கணோக்கின். [7]பண்டையது. [8]அன்று. [9]பரிந்துதாவது, பரிந்துதானது, பரிந்துதாரல், பரிந்துதானீ. (கக௩)

எ.—தன்னிடம் ஏதோவேண்டத்தான் கைகேயி இங்ஙனம் இருக்கின்றனளென அறிந்த தசரதன் வேண்டுவதைத் தருவேனென்றாணையிடல்.

கள்ளவிழ் கோதை [1]கருத்துணராத மன்னன்
[2]வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன [3]நக்கா
னுள்ள [4]முவந்தது செய்வ [5]னொன்றுமுலோபேன்
வள்ள லிராம [6]னுன்மைந்த னாணை யென்றான்.

(இ - ள்.) கள் அவிழ் கோதை-தேன்வழிகின்ற கூந்தலையுடையவளான கைகேயியினது, கருத்து-எண்ணத்தை, உணராத-அறியாத, மன்னன்-சக்ரவர்த்தி,—வெள்ளம் நெடு சுடர் மின்னின் - மிகுந்த பெரிய ஒளியையுடைய மின்னல்போல, மின்ன - விளங்கும்படி, நக்கான்-சிரித்து, 'உள்ளம் உவந்தது-(உன்)மனம் விரும்பியதை, செய்வன்-செய்வேன்; ஒன்றும் உலோபேன்-சிறிதும் லோபஞ்செய்யேன்; உன் மைந்தன் - நினது பிள்ளையும், வள்ளல்-வள்ளலுமாகிய, இராமன்-இராமன்மேல், ஆணை-சத்தியம்,' என்றான்—.

நீ வேண்டியதைத்தருவேனென்று தசரதமன்னன் சொல்லக் கேட்டுச் சிறிது தேறிய கைகேயியின் வேண்டுகோளினால் பிரதிஜ்ஞை செய்யத் தொடங்கி, அம்மன்னவன், தனது உயிரைக்காட்டிலும் மேலானவனாக மதித்திருக்கும் இராமபிரான்மீது ஆணையிட்டு வேண்டியதைத் தருவதாகக் கைகேயிக்கு உறுதி கூறினனென்க. கள் - சூட்டியமலர்மாலையினின்றும் பெருகுவது; வாசனையுமாம். கள்ளவிழ் கோதை-அடையடுத்தவாகுபெயர். நக்கான்-பிறர்பேறைதன்மையான் நக்க நகை. "உண்ணிறங்காட்டிநீரென்னுயிர்தரவு லோபினீரே", "எருதுகளோடு பொருதி யேது முலோபாய்காணம்பீ" என்பவற்றிற்போல, உலோபேன்என்பது - லோபமென்னும் வடமொழிப் பெயரடியாகப் பிறந்த எதிர்மறைவினைமுற்று. லோபம் ஈயாமை. வள்ளல் மன்னன் எனக் கூட்டுதல் சிறப்பு. தனக்குப்போல அவளுக்கும் இராமனிடத்து அன்புஇருந்தது கருதி, 'இராமனுன்மைந்தன்' என்றான். பி ம்:—[1]கருத்துணர்ந்த. [2]வெள்ளை. [3]நக்காங்கு. [4]உவந்துள. [5]ஒன்றும்லோபேன், ஒன்றுலோவேன். [6]நின். (கக௪)

அ.—முன்னீந்த வரத்தையே கொடுக்குமாறு கைகேயி கேட்டல்.

ஆன்றவ னவ்வுரை கூற [1]வன்ன மன்னா
டோன்றிய பேரவலந்[2]து டைத்த னுண்டேற்
சான்றிமை யோர்குல மாக [3]மன்ன நீயன்
றேன்ற வரங்க ளிரண்டு மீகி யென்றாள்.

(இ - ள்.) ஆன்றவன்-தசரதன், அ உரை கூற - அந்தவார்த்தையைச் சொல்ல, அன்னம் அன்னாள் - அன்னப்பறவைபோல்பவளான கைகேயி, 'தோன்றிய பெரு அவலம் துடைத்தல் உண்டுஎல் - (எனக்கு) உண்டாகிய மிக்கதுன்பத்தைப் போக்குவது உளதானால், மன்ன-அரசனே! இமையோர் குலம் - தேவர்கூட்டம், சான்று ஆக - சாக்ஷியாகட்டும்: நீ அன்று ஏன்ற வரங்கள் இரண்டும்-நீ அக்காலத்தில் (கொடுப்பதாய்) அங்கீகரித்த இரண்டு வரங்களையும், ஈதி - (இப்பொழுது) கொடுப்பாயாக', என்றாள்—; (எ - று.)

இராமன்மீது பிரதிஜ்ஞைசெய்து கொடுத்தபின்பு, கைகேயி 'நீ என் துயரைப் போக்குமாறு பிரதிஜ்ஞைசெய்ததற்கு முப்பத்துமுக்கோடி தேவர்களும் சந்திரசூரியர்களும் மற்றுமுள்ள தேவர்களும் முதலியோர் சாட்சி: நான் அபூர்வமாக ஒன்றும் உன்னைக் கேட்கவில்லை; முன்பு உன்னால் தரப்பட்டு உன்னிடத்தே வேண்டியபோது கொள்ளுமாறு வைத்திருந்த இரண்டு வரங்களையுந்தான் கேட்கிறேன். அவற்றைத் தருவாய்' என்றனளென்க. இங்ஙனம் முன்னீந்தவரத்தையே மீட்டுங்கேட்பதற்குக் கைகேயி மன்னவனைக் கட்டுப்படுத்துவது, தான் கேட்கப்போவது தசரதமன்னவனுக்கு மிகவும்அநிஷ்டமானதாகையால் எங்கேவாக்குத்தவறிவிடுவானோஎன்று அஞ்சியதனாலென்க. ஆக-முற்று: வினையெச்சமாகக் கொண்டு உரைப்பினுமாம். ஆன்றவன்-பலகுணங்களானும் நிறைந்தவன். பி - ம்:-[1]ஐயமில்லாள். [2]துடைப்பது, துடைத்தது. [3]மன்னமுன்னீ, முன்னர்மன்ன, முன்னநீயன்று, முன்னர்நீபன்று. சிலபிரதியில்'வானவர்வானவமன்னர்மன்ன முன்னீ' என்று மூன்றாமடி. ()

**கூ—தசரதன் 'விரும்பும்வரத்தைக் கூறுக: தருவேன்' எனல்.**

வரங்கொள வித்துணை [1]மம்ம ரல்ல லெய்தி
யிரங்கிட வேண்டுவ [2]தில்லை யீவனென்பாற்
பரங்கெட வி[3]ப்பொழு தேப கர்ந்தி டென்றா
னுரங்கொண் மனத்தவள் வஞ்ச [4]மோர்கி லாதான்.

(இ-ள்.) (அப்போது தசரதமன்னவன்), உரம் கொள் மனத்து அவள் வஞ்சம் ஓர்கிலாதான்-வலிமைகொண்ட நெஞ்சத்தையுடைய அக்கைகேயியினது வஞ்சனையை யறியாதவனாய்,'வரம் கொள-(கொடுப்பதாகச்சொன்ன) வரங்களைப் பெற்றுக்கொள்ள, இ துணை-இவ்வளவு, மம்மர் - தடுமாற்றமும், அல்லல்-வருத்தமும், எய்தி-அடைந்து, இரங்கிட வேண்டுவது - தளர்வேண்டுவது, இல்லை—; என்பால் என்னிடத்துள்ள, பரம்-பாரம், கெட-போம்படி, இப்பொழுதே—, ஈவன் - (நீ வேண்டுவதைக்) கொடுப்பேன்; பகர்ந்திடு - சொல்,' என்றான்—; (எ - று.)

சிறிதுமிரக்கமில்லாத கன்னெஞ்சென்பார், 'உரங்கொள் மனம்' என்றார். அடைக்கலப்பொருளைப் பாதுகாத்துத்தரவேண்டும் பொறுப்புப்போல இரண்டுவரத்தைத் தரவேண்டுமென்கிற பொறுப்புத் தன்னிடத்துத் தங்கியிருத்தலால், 'ஈவனென்பாற்பரங்கெட' என்கிறான் தசரதன். பி-ம்:—[1]மன்னும், மாழ்கி. [2]ஈவனேகொள், ஈவனேசொல். [3]பகலே. [4]ஓர்வதில்லான். (கககூ)

க௦.—பரதனுக்குப்பட்டங்கட்டவும் இராமனைக் காட்டிற்கு அனுப்பவும் கைகேயி இரண்டுவரங் கேட்டல்.

ஏய வரங்க ளிரண்டி னொன்றி னாலென்
சேய்[1] யுல காள்வது சீதை கேள்வ[2] னொன்றாற்
போய்வன[3] மாள்வ தெனப்பு கன்று நின்றாள்
[4] தீயவை யாவை யினுஞ்சி றந்த தீயாள்.

(இ - ள்.) தீயவை யாவையின்உம் சிறந்த தீயாள் - கொடியவை யெல்லாவற்றிலும் மேம்பட்ட கொடியவள் [கைகேயி], 'ஏய வரங்கள் இரண்டின் - (நீ) கொடுத்த இரண்டு வரங்களுள், ஒன்றினால் - ஒரு வரத்தினால், என் சேய் உலகு ஆள்வது - எனது மகன் [பரதன்] இராச்சியத்தை யாள வேண்டுவது; ஒன்றால் - மற்றொன்றால், சீதை கேள்வன் - இராமன், போய் - (இந்நாட்டை விட்டுச்) சென்று, வனம் ஆள்வது - காட்டில் வாசஞ்செய்யவேண்டுவது,' என புகன்று - என்று (வாய்கூசாது) சொல்லி, நின்றாள் - (சிறிதும் மனங்கலங்காமல் உறுதியாக) இருந்தாள்; (எ - று.)

பகைவரும் சொல்ல வாய்கூசுங் கடுஞ்சொல்லைச் சொல்லியும் தன்மன வுறுதி சிறிதுங்குன்றாது கைகேயி இருந்தன ளென்பார் 'தீயவையாவையினுஞ்சிறந்த தீயாள் நின்றாள்' என்றார். தீயவை யென்றது - அக்கி, யமன், விஷம், சர்ப்பம் முதலியன; தீயவையெல்லாவற்றினுஞ் சிறந்த தீப் போன்றவ ளென்றுமாம். 'வனம் ஆள்வது' என்பதனால், நாட்டைப்பற்றிய நினைவு இராமனுக்கு அறவொழிந்திடவேணு மென்பது குறிப்பிக்கப்படுமென்பர். ஏய - ஏவிய வென்பதன் விகாரம். பி - ம்:—[1] நிலன், அரசு. [2] ஒன்றில். [3] வாழ்வது [4] தீயன. (௧௬௭)

௧௧.—இது முதல் ஐந்து கவிகள் - தசரதமன்னவன் கொண்ட வருத்தமிகுதியைத் தெரிவிக்கும்.

நாக மெனுங்கொடி யாட[1] னாவின் வந்த
சோக விடந்தொட ரத்து ணுக்க[2] மெய்தா
வாக மடங்கலும் வெந்த ழிந்த ராவின்
வேக மடங்கிய வேழ மென்ன வீழ்ந்தான்.

(இ - ள்.) நாகம் எனும் - சர்ப்பமென்று சொல்லத்தக்க, கொடியாள் தன் - கொடுமையையுடைய கைகேயியினது, நாவின் வந்த - நாக்கில்தோன்றிய, சோக விடம் - துன்பத்தைத்தருகின்ற (வார்த்தையாகிய) விஷம், தொடர - பற்றினவளவிலே, துணுக்கம் எய்தா - நடுக்கமடைந்து, ஆகம் அடங்கலும் - உடல்முழுவதும், வெந்து - வெதும்பி, அழிந்து - சோர்ந்து, அராவின்-பாம்பினால், வேகம் அடங்கிய - தீவிரந் தணிந்த, வேழம் என்ன - யானைபோல, (தசரதமன்னவன்), வீழ்ந்தான்—; (எ - று.)

நாகம் - நடவாதது, ஊர்ந்துசெல்வது. தலையிலும், கொடுக்கிலும், பல்லிலுமுள்ள விஷத்தினும் வேற்றுமைவிளங்க, 'நாவின்வந்த விடம்' என்றார்.

தன்னைப் பாலூட்டி வளர்த்தானையே தீண்டுதலால், நாகமெனுங் கொடியாளென்றதென்பர். ஆகம் வெந்துவீழ்ந்தான்-சினைவினை முதலோடு முடிந்தது. கீழ் 'ஆனை' என்றதற் கேற்ப, வேழமென்றார். தொடர என்ற விதப்பு, 'உலகத்து விடம் கொல்வது தான் உட்புக்கபின்பே; இச்சோகவிடம் தொடர்ந்தவளவிலே கொல்லும்' என்னும் வேற்றுமை தோன்றநின்றது: உருவகமூலமாக வந்த வேற்றுமையணி. பி-ம்:—[1]நாவினீந்த, நாநயந்த. [2]எய்த. (கககஅ)

கஉ. பூதல முற்றத னிற்பு ரண்ட மன்னன்
மாதுய ரத்தினை யாவர் சொல்ல வல்லார்
வேதனை [1]முற்றிட வெந்து வெந்து கொல்ல
னூதுலை யிற்கன லென்ன வெய்து யிர்த்தான்.

(இ - ள்.) பூதலம் உற்று - பூமியையடைந்து [விழுந்து], அதனில் புரண்ட மன்னன் - அதில் உருண்ட சக்ரவர்த்தியினது, மா துயரத்தினை - மிக்க துன்பத்தை, சொல்ல வல்லார் - (இவ்வளவென்று) சொல்லவல்லமையுடையவர், யாவர் - யார்? [ஒருவருமில்லை]; வேதனை முற்றிட - துன்பம் முதிர்ச்சியடைய, வெந்து வெந்து - (அத்தசரதன் மனம்) மிகவெதும்பி, கொல்லன் ஊது உலையில்-கருமான் ஊதுகின்ற உலைக்களத்திலுள்ள, கனல் என்ன - நெருப்புப்போல, வெய்து உயிர்த்தான் - கொடுமையாய்ப் பெருமூச்சுவிட்டான்; (எ - று.)

இது, கவிக்கூற்று. ஒருவராலும் அளவிட்டுச் சொல்லமுடியாததான சோகவேகத்தைப் பொறுக்கமாட்டாமல் தசரதமன்னவன் பூமியில் விழுந்து புரண்டு வேதனைமிக உடல் வெந்து நெட்டுயிர்ப்பெறிந்தானென்க. அம்மன்னவனது நெட்டுயிர்ப்பின் வெம்மைக்கு, கொல்லனது உலைக்கனல் உவமை. வெந்துவெந்து - அடுக்கு மிகுதிப்பொருளது. பி-ம்:—[1]உற்றிட. ()

கங. உலர்ந்தது [1]நாவுயி ரோட லுற்ற துள்ளம்
புலர்ந்தது கண்கள் [2]பொடித்த [3]பொங்கு சோரி
சலந்தலை மிக்கது தக்கதென்கொ [4]லென்றென்
றலந்தலை யுற்ற வரும்பு லன்க ளைந்தும்.

(இ - ள்.) (அம்மன்னவனுக்கு), நா உலர்ந்தது - நாக்கு வறண்டது; உயிர் ஓடல் உற்றது - பிராணன் போகத்தொடங்கியது; உள்ளம் புலர்ந்தது-மனம்தளர்ந்தது; கண்கள் —, பொங்கு சோரி பொடித்த - மிகுந்த ரத்தத்தைச் சிந்தின; சலம் தலைமிக்கது - கவலை மிகுந்தது; அரு புலன்கள் ஐந்தும் - (நீங்குதற்கு) அரிய ஐந்து இந்திரியங்களும், - தக்கது - செய்யத்தகுந்த தொழில், என் என்று என்று - என்னவென்றெண்ணியெண்ணி, அலம் தலையுற்ற - சஞ்சலம்மிகுந்தன; (எ - று.)—கொல் - அசை.

கீழ் மன்னவனது துயரத்தை விளக்கிய கவி, இதனால் அவனுடைய உறுப்புக்கள் பட்ட நிலையை வருணிக்கின்றார். புலன் - அறிவு: ஞானேந்திரியங்கட்கு இலக்கணை. என்றென்று - பலமுறையென்னும் பொருளில் அடுக்

கிற்று. அலந்தலை எனப் பிரித்து, அலத்தலை என்பதன் விகாரமாகக்கொள்ள லுமாம். பெருந்துன்பத்தோடு கைகேயிபக்கங் கோபமும் அரசனுக்குத்தோன் றிற்றென்பார் 'கண்கள் பொடித்த' என்றார். அவலச்சுவையோடு வெகுளிச் சுவையுங் கலந்துவருவதனை மேலுங் காண்க. பி-ம்:—[1]நாவும். [2]புலர்ந்தன, பொடித்தன, பொடித்தது. [3]பொங்கும், செய்ய. [4]ஈதென்று. (௨௦௦)

கச. மேவி நிலத்தி [1]னிற்கும் [2]விம்மும் வீழு
மோவிய மொப்ப வுயிர்ப்ப டங்கி யோயும்
பாவியை யுற்றெதிர் பற்றி யெற்ற [3]வெண்ணு
மாவி பதைப்ப வலக்க [4]ணெய்தி நின்றான்.

(இ - ள்.) ஆவி பதைப்ப-உயிர் பதைக்கும்படி, அலக்கண்-துன்பத்தை, எய்தி நின்றான்-அடைந்திருந்த சக்ரவர்த்தி,—மேவி - (மனத்தைத் தேற்றிக் கொண்டு)எழுந்து, நிலத்தில் நிற்கும்-பூமியில்(சிறிதுபொழுது)நிற்பான்; விம் மும் - புலம்புவான்; வீழும்-(மறுபடியும்) விழுவான்; உயிர்ப்பு அடங்கி-மூச்சு அடங்கி, ஓவியம் ஒப்ப - சித்திரத்தை யொக்கும்படி, ஓயும் - செயலொடுங்கி விடுவன்; பாவியை-பாவச்செய்கையையுடைய கைகேயியை, எதிர் உற்று - எதிரேபோய், பற்றி-பிடித்து, எற்ற மோத, எண்ணும்-நினைப்பான்; (எ-று.)

இதனாலும், துயரம்மிக்க மன்னவனது செய்கை உணர்த்தப்படுகின்றது. தசரதமன்னவனிடத்து மேவிநிற்றல்முதலிய பலதொழில் ஒருங்கு நிகழ்ந் தனவாகக் கூறிய இது-கூட்டவணியின்பாற்படும்: வடநூலார் ஸமுச்சயாலங் காரமென்பர். மேலும் இவ்வணி காண்க. பி-ம்:—[1]இருக்கும். [2]நிற்கும். [3]என் னும். [4]எய்துகின்றான். (௨௦௧)

கரு. பெண்ணென [1]வுற்ற [2]பெரும்ப ழிக்கு நாணு
முண்ணிறை வெப்பொ டுயிர்த்து யிர்த்து லாவுங்
[3]கண்ணில னொப்ப வயர்க்கும் [4]வன்கை வேல்வெம்
புண்ணுழை [5]கிற்க வுழைக்கு மானை போல்வான்.

(இ - ள்.) வல் கை வேல்-வலிய கையிலுள்ள வேலாயுதமானது, வெம் புண் நுழைகிற்க - கொடிய புண்ணில் நுழைவதனால், உழைக்கும் - வருந்து கின்ற, ஆனை போல்வான்-களிற்றையொத்த அவன்,—பெண் என - பெண் ணென்றெண்ணி, உற்ற பெரும் பழிக்கு - (கைகேயியைப்பற்றி யெற்றுவத னால்)வருகின்ற பெரியபழிமொழிக்கு, நாணும்-நாணுவான்; உள் நிறை வெப் பொடு-உள்ளே நிறைந்த தாபத்துடன், உயிர்த்து உயிர்த்து-மிகப்பெருமூச்சு விட்டு, உலாவும்-அலைவான்; கண் இலன் ஒப்ப-கண்கெட்டுவிடப்பெற்றவன் போல, அயர்க்கும் - சோர்வான்; (எ - று.)

பாவியை யுற்று எதிர்பற்றியெற்ற வெண்ணிய தசரதன், கைகேயி பெண்ணாயிருத்தலால், அவளை வதைத்தாற் பெரும்பழி நேருமே யென்று நாணி அச்செயலினின்று நீங்கி வெய்துயிர்த்து உலாவுவான்: துயரமிகுதி

யாற் கண்கெட்டவன்போன்று சோர்ந்து விழுவானென்றவாறு. உறும்பழியை உற்றபழியென்றார், தெளிவுபற்றி: காலவழுவமைதி. நாணுதலாவது-தனக்கு ஒவ்வாத இழிந்த கருமத்தில் மனமொடுங்குதல்; "கருமத்தானுணுத னுணுத் திருநுத, னல்லவர் நாணுப் பிற" என்றார் நாயனாரும். பெண்கொலைக்குப் பயந்தா னென்க. தான் கொடுத்த வரம் தனக்கே வருத்தத்தை விளைத்த லால், 'கைவேல் புண்ணுழைகிறக' என்றது. பி-ம்:—[1]உட்கும். [2]மிகப். [3]கண்ணினிஞேக்கும், மண்ணினைநோக்கும். [4]மிக்ககைவேல். [5]நைந்த.(உ0உ)

கசு.—தசரதனது சோகத்தைக் கண்டு யாவரும் நிலைகலங்க, கைகேயி வன்னெஞ்சளாயிருத்தல்.

கம்ப நெடுங்களி யானை யன்ன மன்னன்
வெம்பி [1]விழுந்தழும் விம்மல் கண்டு [2]வெய்துற
றும்பர் நடுங்கின ரூழி பேர்வ [3]தொத்த
தம்பன கண்ணவ ளுள்ள மன்ன தேயால்.

(இ-ள்.) கம்பம் நெடு களி யானை அன்ன மன்னன்-கம்பத்திற்கட்டிய மிக்க மதத்தையுடைய களிற்றையொத்த சக்ரவர்த்தி, வெம்பி - வெதும்பி, விழுந்து-(பூமியில்) வீழ்ந்து, அழும் - புலம்புகின்ற, விம்மல் - கலக்கத்தை, கண்டு—, வெய்து உற்று-பயம் மிகுந்து, உம்பர் - தேவரும், நடுங்கினர்—; ஊழி பேர்வது ஒத்தது - (அக்காலம்) பிரளயகாலம் வந்தது போன்றது; அம்பு அன கண்ணவள் - அம்பையொத்த கண்களையுடைய கைகேயியினது, உள்ளம்-மனமோ, அன்னது ஏ-அவ்வாறாகவேயிருந்தது;(எ-று.)—ஆல்-அசை.

கைகேயி சொற்படி நடந்துவந்தமை தோன்ற, 'கம்பயானையன்ன மன்னன்' என்றும், அவனது வருத்தத்திற்குஏதுவாயிருத்தல்பற்றி, 'அம்பன கண்ணவள்' என்றுங்கூறினர். தேவாதிதேவனை திருமாலைப்பெற்ற தந்தை யாதலின், இத்தசரதனதுதுன்பத்தைக் கண்டு தேவரும் வருந்தின ரென்க. இம்மன்னவனது துயரமிகுதியைக்கண்டு உலகத்தவர்யாவரும்வருந்துதலால், 'ஊழிபேர்வதொத்தது' என்றது: இப்படி யாவரும் வருந்தவும் மனம் கல்லா யிருந்த அந்தக்கைகேசியின் நிலையை ஈற்றடியால் விளக்கினர். கம்பம் மன் னன் எனக்கூட்டி-நடுக்கத்தையுடைய அரச னெனவும், உள்ளம் அன்னது என்பதற்கு-மனமும் அவ்வம்புபோல வருத்தத்திற்கு ஏதுவாகவே யிருந்த தெனவும் பொருள்கொள்ளலுமாம். கம்பநெடுங்களியானை - கட்டுத்தறியை முறிக்கின்ற நெடுங்களியானை என யானையி னியல்பை விளக்கும் விசேடண முமாம். பி-ம்:—[1]விழுந்தெழும். [2]வெய்துயிர்த்து. [3]ஒத்த. (உ0௩)

கஎ.—இதுவும் அது.

[1]அஞ்சலை யன தல்லல் கண்டு முள்ளா
[2]நஞ்சில ளுணில [3]ளென்ன [4]நாண யாமால்
வஞ்சனை பண்டு மடந்தை வேட [5]மென்றே
தஞ்செனை மாதரை [6]யுள்ள லார்க டக்கோர்.

(இ - ள்.) ஐயனது அல்லல் கண்டும் - கணவனது வருத்தத்தைப் பார்த்தும், அஞ்சலர் - (அவள்) பயப்படவில்லை, உள்ளம் நஞ்சிலள் - மனம் இரங்கவில்லை, நாண் இலள் - வெட்கப்படவுமில்லை, என்ன - என்று (அவள் நிலையைச்) சொல்ல, நாணம் ஆம் - (சொல்லுகின்ற நமக்கே) வெட்கமுண்டாகும்; தக்கோர் - (கல்விகேள்விகளாற்) பெரியவர், பண்டு - பழமையாய், 'வஞ்சனை - வஞ்சகம், மடந்தை வேடம் - பெண்ணுருவம்,' என்றே - என்று எண்ணியே, மாதரை - பெண்களை, தஞ்சு என - பற்றுக்கோடு [துணை] என்று, உள்ளலார்கள் - நினையார்கள்; (எ - று.)—ஆல் - அசை.

சக்கரவர்த்தியான தன்கணவன் பேரிடர்கொண்டு மனங்கலங்கி விம்மி நிற்கும்போது அவனதுமனைவியான ஒருபெண்ணின் இரக்கம்முதலியன இல்லாநிலைமையை எடுத்துச்சொல்வதென்றால், சொல்லவாய்கூசுகின்றது; அதனால்தான் விவரித்துச்சொல்லவில்லையென்றுகூறி, பெரும்பாலும் மடந்தைமார் வஞ்சகத்தன்மையுடையராதலால், அவர்களை நம்புவது தக்கோர்க்குத் தகாது என்று பின்னிரண்டடிகளாற் கவி கூறுகின்றார்; இதனால், கைகேயியை நல்லகுணமுள்ளவளென்று நம்பி அவள்பால் மிக்கநேயம்வைத்தது தவறு என்று எடுத்துக்காட்டியவாறாயிற்று. நஞ்சிலள் - நைந்திலள்: போலி. தஞ்சு-தஞ்சமென்பதன் விகாரம். பி-ம்:—[1]அஞ்சிலள். [2]எஞ்சிலள். [3]எண்ண. [4]ஞானம். [5]அன்றே, இன்றே. [6]உள்ளுவாரோ, உன்னலார்கள்.　　(உ௦௪)

கஅ.—'மனம் மாறுபடக் காரணமென்?' என்று கைகேயியை மன்னவன் வினவுதல்.

இந்நிலை [1]நின்றவ டன்னை யெய்த நோக்கி
நெய்ந்நிலை வேலவ னீ[2]தி கைத்த துண்டோ
பொய்ந்நிலை யோர்கள் புணர்த்த வஞ்ச முண்டோ
[3]வந்நிலை சொல்லென தாணை யுண்மை யென்றான்.

(இ-ள்.) இநிலை - இந்நிலைமையில், நின்றவள் தன்னை - நின்றஅவளை, எய்த நோக்கி - பொருந்த [நன்றாய்] ப்பார்த்து, நெய் நிலை வேலவன் - நெய் தடவிக் கூர்செய்யப்பட்ட அழியாத வேலாயுதத்தையுடைய அவன், 'நீ திகைத்தது உண்டு ஓ-நீ பிரமித்தது உண்டோ? பொய் நிலையோர்கள் - வஞ்சத்தன்மையையுடையவர்கள், புணர்த்த-(உனக்குக்கற்பித்துச்) சொல்லிய, வஞ்சம்-வஞ்சனைச்சொல், உண்டு ஓ - உளதோ? அ நிலை - அத்தன்மையை, எனது ஆணை - என்மேலாணை, உண்மை - நிச்சயமாய், சொல்—,' என்றான்—.

இதுவரையில் இராமனிடத்துத் தன்புதல்வனைக்காட்டிலும் அன்பு பாராட்டிவந்த கைகேசி அப்பிராமனைக் காட்டிற்குப்போகவும் தன்மகனை நாடாளவும் வேண்டினது விபரீதமாகஇருந்தமையால், 'திகைத்ததுண்டோ? புணர்த்தவண்டோ?' என இவ்வாறு மன்னவன் வினவலானான்: திகைத்தது- எனக்கு உன்னிடம் உண்மையானஅன்பு உண்டாஇல்லையா என்று சந்தேகித்த தெனவுமாம். வேல்மன்னவனாயினும் அந்நிலை கைகேசியினிடம் செல்

லாதென்ற கருத்தினால் 'நெய்ந்நிலைவேலவன்' என்றது. பி-ம்:—[1]ஈன்றவள் இன்றவள். [2]திகைத்தது. [3]உன்னிலை. (உ0௯)

கக௯.—கைகேயியின் மறுமொழி.

திசைத்தது மில்லை யெனக்கு வந்து நீயோ
ரிசைத்தது மில்லை [1]முனீந்த விவ்வ ரங்கள்
குசைப்பரி யோய்தரி னின்று [2]கொள்வெ னன்றேல்
[3]வசைத்திறன் நின்வயி [4]னிற்க மாள்வெ னென்றாள்.

(இ - ள்.) (அதுகேட்டுக் கைகேயி), 'குசை பரியோய் - கடிவாளந்தை யுடைய குதிரையையுடையவனே! திசைத்ததும் இல்லை - (நான்) பிரமித்த தும் இல்லை; எனக்கு நீயோர் வந்து இசைத்ததும் இல்லை - என்னிடத் தில் கொடியவர்வந்து (வஞ்சனையைச்) சொன்னதும் இல்லை; முன் ஈந்த இ வரங்கள் - முன்னே (வாயாற்) கொடுத்த இவ்விரண்டுவரங்களை, இன்று - இப்பொழுது, தரின் - கொடுத்தால், கொள்வென் - பெற்றுக்கொள்வேன்; அன்று எல்-அன்றிக் கொடாமற்போவாயானால், வசை திறன்-பழியின்கூறு பாடு, நின் வயின் நிற்க - உன்னிடத்தில் நிலையாயிருக்குமாறு, மாள்வென் - இறப்பேன்,' என்றாள்—; (எ - று.)

'எனக்குத் திசைத்ததும் இசைத்ததுமில்லை' என்றதனால், உனக்கு இவ்விரண்டும் இருந்தாலுமிருக்கலா மென்றவாறு. "நீ திசைத்ததுஉண்டோ? வஞ்சனையோர் புணர்த்ததுஉண்டோ?' என்று மன்னவன் வினவியதுபற்றிக் கேட்டவரங்களைக்கொடுக்க அவனுக்குச் சம்மதமில்லையென்று விளங்குவதனால், 'வரங்கொடுத்தால் சரி, இல்லாவிட்டால் உயிரைமாய்ப்பது' என்று தான் கொண்டுள்ள மனவுறுதியைக் கைகேயி இங்கு வெளியிடுகின்றனளென்க. குசை - புறமயிருமாம். பரி-பரித்தலையுடையது; பரித்தல்-சுமத்தல். 'குசைப்பரியோய்' என்றதனால் - யான் பரிதூண்டித் தேரூர்ந்ததனாலன்றோ நினக்குப் புகழுளதாயிற்றெனக் குறிப்பித்தவாறு. பி - ம்:—[1]முனீந்த வரங்களென்பால், முனீந்தவைவரங்கள். [2]கொள்வன். [3]வசைப்பொருள். [4]வைத்து.

உ0.—கைகேயியின் கடுமொழிகேட்டுத் தசரதன்
மூர்ச்சித்து விழுதல்.

இந்த நெடுஞ்சொலவ் வேழை [1]கூறு முன்னே
வெந்த [2]கொடும்புணில் வேலு ழைந்த தொப்பச்
சிந்தை [3]திரிந்து திகைத்த யர்ந்து [4]வீழ்ந்தான்
மைந்த னலாதுயிர் வேறி லாத மன்னன்.

(இ - ள்.) மைந்தன் அலாது பிள்ளையை [இராமனை] அல்லாமல், உயிர் வேறு இலாத மன்னன்-வேறேபிராணனில்லாத சக்கரவர்த்தி,-அ ஏழை அக்

கைகேயி,இந்த நெடு சொல்-இப்பெரியவார்த்தையை,கூறும் முன்னே-சொல்லுதற்கு முன்னே,வெந்த கொடு புணில்-வெந்ததனாலுண்டாகிய கொடிய விரணத்தில்,வேல் நுழைந்தது ஒப்ப-வேல்நுழைந்ததைப்போல,சிந்தை திரிந்து-மனந் தடுமாறி, திகைத்து-(மதி) மயங்கி, அயர்ந்து-சோர்ந்து, வீழ்ந்தான்—.

ஏற்கவே வருந்தியிருந்த மன்னவனுக்கு அவளது கடுஞ்சொல் பின்னும் வருத்தத்தையுண்டாக்கிற் றென்பதை,உவமையால் விளக்கினர்.தசரத சக்கரவர்த்தியின் இவ்வளவு துயருக்குங்காரணம் புத்திரவாற்சல்யமே யென்பது, ஈற்றடியாற் பெறப்படும். நெடுஞ்சொல் என்றது-உயிருள்ளவரையும் அவன் நெஞ்சுபுண்படட்டுக்கிடக்கும்படிசொன்னகொடுஞ்சொல்லை. 'ஏழை'யென்றார், அறிவில்லாமைநோக்கி. வெந்தபுண் - வெந்தகரி, உண்டஎச்சில், சங்குசுட்ட சுண்ணாம்பு என்றாற்போலப் பெயரெச்சம் காரணப்பொருட்டு. பி ம்:—[1]கூற. [2]நெடும். [3]கரிந்து. [4]சாய்ந்தான். (௨௦எ)

௨௧.—இதுமுதல் மூன்றுகவிகள் - தசரதன் பட்ட வருத்தத்தைத் தெரிவிக்கும்.

ஆகொடி யாயெனு மாவி காலு மந்தோ
வோ[1]கொடி தேயற மென்னு முண்மை [2]யொன்றுஞ்
சாக வெனுவெழு மெய்[3]த ளாடி வீழு
மாகமு நாகமு மண்ணும் வென்ற வாளான்.

(இ - ள்.) மாகம்உம்-பெரிய மேலுலகத்தையும், நாகம்உம்-கீழுலகத்தையும், மண்உம்-நடுவுலகத்தையும், வென்ற - சயித்த, வாளான் - ஆயுதத்தையுடைய அவன், - ஆ கொடியாய் எனும் - ஐயோ கொடுந்தன்மையையுடையவளே! என்பான்; ஆவி காலும் - பெருமூச்சு விடுவான்; அந்தோ ஓ கொடிது ஏ அறம் என்னும் - ஐயோ! ஓ! தருமங் கொடுமையுடையது! என்பான்; உண்மை ஒன்றும் சாக எனு எழும் - மெய்முழுவதும் அழிக வென்று எழுந்திருப்பான்; மெய் தளாடி வீழும் - உடம்பு அசைந்துவிழுவான்; (எ - று.)

உண்மைதவறக்கூடாதென்ற உறுதியான எண்ணமே தன்னுடைய இவ்வளவு வருத்தத்துக்குங் காரணமாதலால்,'ஓகொடிதே யறம்:உண்மையொன்றும் சாக' என்றான். ஓ கொடிதேயறம்-"அறத்தினூங்கினிக்கொடிதெனலாவதொன்றியாதோ" என்று மந்திரப்படலத்துள் வந்துள்ளது. மூவுலகங்களையும் வென்று வழிப்படுத்திய மன்னவனுக்கு ஒருபெண்ணின்கீழ் நின்று வருந்தும்படியாயிற்றே! என்ற கருத்து, இங்குத் தோன்றும். இது முதல் மூன்றுகவிகளிலும் கவி மன்னவனை ஈற்றடியாற் சிறப்பித்துக் கூறும்வகை, மிகவுப் பாராட்டற்பாலது. ஒன்றும் - முற்றும்மை. ஒன்றும்உண்மை என மாறி - பெயரெச்சமாய், பொருந்திய மெய்யென்றுமாம். சாக-வைதற்பொருளில்வந்த வியங்கோள். மாகம் - வடசொற்சிதைவு. பி-ம்:—[1]கொடிதோ. [2]என்றும். [3]தாளாடி, தளர்ந்து. (௨௦அ)

உஉ. நாரிய ரில்லையிஞ் ஞால [1]மெங்கு மென்னக்
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரிய ரெண்ணிடை வீழ்வ னென்று பொங்கும்
வீரியர் வீரம் [2]விழுங்கி நின்ற வேலான்.

(இ - ள்.) வீரியர் வீரம்-வீரர்களுடையவீரத்தை, விழுங்கிநின்ற-சயித்து நின்ற,வேலான்-ஆயுதத்தையுடையஅவன்,—'இ ஞாலம் எங்கு உம்-இவ்வுலக முழுவதிலும், நாரியர் இல்லை என்ன - பெண்களில்லையென்று சொல்லும்படி, கூரிய வாள்கொடு-கூர்மையையுடையவாளால், கொன்று நீக்கி-கொலை செய்துதள்ளிவிட்டு, யான் உம்—, பூரியர் எண் இடை-கீழ்மக்களது சங்கியையில், வீழ்வன் - விழுவேன்,' என்று—, பொங்கும் - கோபிப்பான்; (எ - று.)

பெருவீரனை தசரதசக்கரவர்த்திக்குக் கைகேயியால்தோன்றிய பெருந்துயரால் உலகத்திற் பெண்பாலாரேயில்லாமற் செய்து அதனால் விளையும் பழியையும் ஏற்றுக்கொள்ளலாமா?என்ற ஒரெண்ணமும் தோன்றியதுபற்றி, 'வீரியர் வீரம் விழுங்கிநின்ற வேலான் - நாரியரில்லையென்னக் கொன்று நீக்கி வீழ்வனென்று பொங்கும்' என்றார்: இங்ஙனம் பலபடி தடுமாறிற்று, அந்தச்சக்கரவர்த்தியினது மன மென்க. நாரீ என்றவடசொல் - குறுகி, பலர்பால் விகுதியேற்றது. பி-ம்:—[1]ஏழும். [2]விழுங்குகின்ற. (உ0௯)

உ௩. [1]கையொடு [2]கைகள் புடைக்கும் [3]வாய்க டிக்கு
[4]மெய்புரை குற்ற மெனப் [5]புழுங்கி [6]விம்மு
நெய்யெரி யுற்றென நெஞ்[7]ச ழிந்து சோரும்
வையக [8]முற்று நடந்த வாய்மை மன்னன்.

(இ-ள்.) வையகம் முற்று உம் நடந்த-உலகமுழுவதும்சென்ற, வாய்மை-சத்தியமான ஒழுக்கத்தையுடைய, மன்னன் - தசரதன்,—கையொடு கைகள் புடைக்கும் - கையுடன் கையை மோதுவான்; வாய் கடிக்கும் - உதட்டைக் கடிப்பான்; மெய் உரை குற்றம் - மெய்சொல்லுதல் தீங்கைத்தருவது, என—, புழுங்கி - மனம்புழுங்கி, விம்மும் - வருந்துவான்; நெய் எரி உற்று என - நெய்யில் நெருப்புப்பட்டாற்போல, நெஞ்சு அழிந்து - மனமுருகி, சோரும் - வருந்துவான்; (எ - று.)

வாய்மை தவறாதிருக்கவேணு மென்று கொண்ட கருத்தே தான் இவ்வளவு வருத்தப்படுதற்குக் காரணமானது குறித்து 'மெய்புரை குற்றம்' என்கின்றான். தன்வாய்மை உலகம் முழுதுஞ்சென்ற மன்னன் மெய்புரை குற்றமென்று சொல்லுமாறும் ஆயிற்றேயென்பார் 'வையகமுற்று நடந்தவாய்மை மன்னன் - மெய்புரை குற்றமெனப் புழுங்கிவிம்மும்' என்கின்றார். மூன்றாமடிக்கு-நெய் எரியி லுற்றாற்போல மனம் வெம்பி யெரிந்தெனினுமமையும். **பி-ம்:**—[1]கைக்கொடு. [2]கையை. [3]நாவொடுக்கும், வாய்மடிக்கும். [4]பொய்புரை. [5]புழுங்க. [6]வாடும். [7]எரிந்து. [8]முற்றநடத்தும். (உ௧0)

உச.—வருந்திய தசரதன் இரந்தாவது பார்ப்போமென்று எழுதல்.

ஒறுப்பினு [1]மந்தர முண்மை [2]யொன்று மோவா
[3]இறுப்பினு [1]மந்தர [4]மென்று வாய்மை மன்னன்
[5]பொறுப்பினு [6]மிந்நிலை [7]போகி லாளை [8]வாளா
[9]லிறுப்பினு மாவ [10]திரப்ப தென்[11]றெழுந்தான்.

(இ - ள்.) வாய்மை மன்னன் - மெய்மையையுடைய அரசன்,—உண்மை - மெய்மை, ஒன்றுஉம் - சிறிதும், ஓவா - காவாமல், ஒறுப்பின்உம் - (இவளைத்) தண்டித்தாலும், அந்தரம் - தீமை; இறுப்பின்உம் - (இவள் கேட்டபடி வரத்தைக்) கொடுத்தாலும், அந்தரம்-தீமை, என்று - என்று நினைந்து,—பொறுப்பின்உம் - பொறுத்தலினும், இந்நிலை போகிலாளை - இந்நிலைமையினின்று விலகாதவளை, வாளால் இறுப்பின்உம் - வாளாயுதத்தாற் கொல்லுதலினும், இரப்பது - (வேண்டி) யாசிப்பதே, ஆவது - பொருந்துவது, என்று - என்றெண்ணி, எழுந்தான்—; (எ - று.)

அந்தரமென்பதைப் பின்னடிகளிலும் சேர்த்து இந்நிலை போகிலாளைப் பொறுப்பினும் அந்தரம், வாளால் இறுப்பினும் அந்தரம்: இரப்பது ஆவது எனக் கூட்டியுரைத்தலுமாம். முன்னிரண்டடிகட்கு - இவளைத்தண்டித்தாலும் அந்தரம்; உண்மையை யொப்புக்கொள்ளாமல் வாயடி கையடியாகச் சொன்னாலும் அந்தரமே என்று உரைகூறுதலும் உண்டு. இந்நிலைபோகிலாள் - இவ்விடம் விட்டுப் பெயராதவள் என்றுமாம். பி - ம்:—[1]ஆவதென். [2]இன்றொடாவி, என்றுமோவா, ஒன்றொடொவ்வா. [3]மறுப்பினும். [4]என்ற. [5]மறுப்பினும். [6]அந்நிலை. [7]சோர்கிலாளை. [8]வாளா, ஆவி. [9]இரப்பினுமாவது, அறுப்பினுமாவது, இறுப்பினும்பாவம். [10]இரப்பன். [11]இரப்பான், இரந்தான்.

வேறு.

உரு.—சமாதானப்படுத்தக்கருதித் தசரதன்
கைகேயியின் காலில்விழுதல்.

கோன்மேற் கொண்டுங் குற்ற [1]மகற்றக் [2]குறிகொண்டார்
போன்[3]மே லுற்ற துண்டெனி னன்றும் பொறை[4]யென்னாக்
கான்மேல் வீழ்ந்தான் கந்து[5]கொல் யானைக் [6]களிமன்னர்
மேன்மேல் வந்து முந்தி வணங்கி மிடைதாளான்.

(இ - ள்.) கந்து கொல் யானை களி மன்னர் - கட்டுத்தறியை முறிக்கின்ற களிறுகள் போன்ற செருக்கையுடைய அரசர், முந்தி - முற்பட்டு, மேல் மேல் வந்து - ஒருவர்பின்பு ஒருவர்வந்து, வணங்கி-சேவித்து, மிடை-நெருங்குகின்ற, தாளான் - பாதங்களையுடைய அத்தசரதன், 'கோல் மேல் கொண்டு உம் - செங்கோலை மேற்கொண்டும், குற்றம் அகற்ற - குற்றங்களை நீக்க, குறி கொண்டார்போல் - (மிக்க அரும்பாடு படுவதில்) தங்கருத்தைச் செலுத்தியவர்போல, மேல் உற்றது - இனிமேல் வரும் நன்மை, உண்டு எனின் - இருந்தால், பொறை நன்று ஆம் - பொறுமை நன்மையையுடைய தாம்,' என்னா - என்று எண்ணி, கால்மேல் வீழ்ந்தான் - (கைகேயியினது) அடியில் விழுந்தான்; (எ - று.)

தாம் மேம்பட்ட மன்னவராயிருந்தும் தமதுஆட்சியிற் குற்றம்நிகழாதிருக்கவேணுமேயென்று அரும்பாடுபட்டவர்போல, நமது சக்கரவர்த்தித்தன்மையைக்கருதாது இந்தக்கைகேயியைச் சினந்தணிவித்துச் சொன்னசொல்தவறினனென்ற பேரில்லாமல் முறைகேடின்றி இராமனுக்கு முடிசூட்டவேணுமென்று தசரதன்கருதிக் கைகேயியின் காலில் விழுந்தானென்பதாம். சொன்னசொல் தவறாமை - இராமனுக்கு முடிசூட்டுவேனென்பதும், கைகேயிக்கு வேண்டும் வரம் கொடுப்பே னென்பதும். கோல் - அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை; அம்முறை ஒருபாற்கோடாது செவ்விய கோல்போறலின், கோலெனப்பட்டது; உவமவாகுபெயர்: வடநூலாரும் தண்டமென்றார். பொறை - காரணம்பற்றியாதல் மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவர்கட்செய்யாது பொறுத்தல். களியை யானைக்குங் கூட்டுக. யானையையுடையமன்ன னென்னினுமாம். மேன்மேலென்ற வடுக்கு, மிகுதிக்கண்வந்தது. பி - ம்:—[1]அகற்றி. [2]குறை. [3]மேற்கொண்டது. [4]அன்னாள். [5]கொள். [6]கழல். (உசஉ)

உசா.—இதுமுதல் நான்குகவிகள் - தசரதர் கைகேயியை யிரந்தலைத் தெரிவிக்கும்.

கொள்ளா னின்சே யிவ்வர சன்னான் கொண்டாலு
நள்ளா திந்த நானில [1]ஞாலந் தனிலென்று
முள்ளா ரெல்லா மோத வுவக்கும் புகழ்[2]கொள்ளா
யெள்ளா நிற்கும் வன்பழி கொண்டென் பயனென்றான்.

(இ - ள்.) நின் சேய் - உனதுமகன் [பரதன்], இ அரசு-இந்த அரசாட்சியை, கொள்ளான் - (கொடுத்தாலும்) பெற்றுக்கொள்ளான்; அன்னான் கொண்டால்உம் - அவன் பெற்றுக்கொண்டாலும், இந்த நானிலம்-இப்பூமியிலுள்ளவர், நள்ளாது - விரும்பார்; (ஆதலால் நீ), என்றுஉம் - எக்காலத்தும், ஞாலந்தனில் உள்ளார் எல்லாம்-பூமியில் இருக்கின்றவரனைவரும், ஓத உவக்கும் - சொல்ல விரும்புகின்ற, புகழ்-கீர்த்தியை, கொள்ளாய்-பெறமாட்டாய்; எள்ளாநிற்கும் - (உலகத்தார்) நிந்திக்கின்ற, வல் பழி கொண்டு - கொடிய பழியை அடைவதனால்,பயன் என்-பிரயோசனம் யாது? என்றான்—; (எ - று.)

நீ கேட்டுவாங்கும் இராச்சியத்தை உன்மகன் அங்கீகரியான்; ஒருகால் அவன் அங்கீகரித்தாலும் உலகத்தவர் உன்னையே பழிப்பர். இப்பழியைக் கொண்டு உனக்கு என்னபய னென்பதாம். பரதன் நீதிநெறிதவறானாதலின் 'கொள்ளான் நின்சேய்' என்றும், ஒருகால் உன்னுடைய துருபதேசத்தால் அந்தப்பரதனும் மனந்திரிந்து அரசைக் கைக்கொண்டாலும் உலகத்தார் பழிப்பரென்பான் 'கொண்டாலும் நள்ளாது இந்தநானிலம்' என்றும் கூறினான். ஞாலம் - பூமியிலுள்ளார்க்கு ஆகுபெயர். கொள்ளாய் - எதிர்மறைமுற்று: உடன்பாடாகக்கொண்டு பொருளுரைப்பினுமாம். சேயென முன்வந்தமையின்,பின் அன்னானெனச் சுட்டி யொழிந்தார். கொண்டாலுமென்றவும்மை-

கொள்ளுதலின் அருமை விளக்கி நின்றது: பி-ம்:—[1]ஞாலத்தினில். [2]கொள்ளாது, கொள்ளா. (உகங)

உஎ. வானோர் கொள்ளார் [1]மண்ணவ ருய்யா ரினிமற்றெ
னேனோர் செய்கை யாரொடு நீயிவ் வரசாள்வா
யா[2]னே சொல்லக் கொள்ள விசைந்தான் [3]முறையாலே
தானே நல்கு முன்[4]மக னுக்குந் தரையென்றான்.

(இ-ள்.) '(இராமனைக் காட்டிற்குத்துரத்திவிட்டுப் பரதன் இராச்சியம் ஆள்வதை), வானோர் கொள்ளார்-தேவர் அங்கீகரியார்; மண்ணவர் உய்யார்-நிலவுலகத்தாரும் (இராமனைப் பிரிவதால்)உயிர்வைத்திரார்;இனி-இனிமேல், மற்று ஏனோர் செய்கை என்-மற்றைப் பாதாளலோகத்திலிருப்பவரின் செய்கையைப்பற்றிச் சொல்லவேண்டுவதென்ன? [அதுவும்அவ்வாறே யென்றபடி]; (இங்ஙனம் மூவுலகத்தவரும் இராமன் காட்டிற்குத் துரத்தப்படப் பரதன் அரசுபுரிவதைக் குறித்து உடன்படாதிருக்கும்போது), நீ—, யாரொடு இ அரசு ஆள்வாய்-எவருடன் இவ்விராச்சியத்தைக் காப்பாய்? யான் சொல்லஏ - நான் சொன்னதனாலேயே, கொள்ள - (இவ்வரசாட்சியைப்) பெற்றுக் கொள்ள, இசைந்தான்-சம்மதித்த இராமன்,—முறையாலே-கிரமமாக, உன் மகனுக்குஉம் - உனதுமைந்தனுக்கும், தானே—, தரை-பூமியை, நல்கும் - கொடுப்பான்,' என்றான் - என்றுங்கூறினான்; (எ - று.)

பரதன் அரசுபுரியவேணுமென்று நீ விரும்புவாயானால்,'இராமபிரானைக் காட்டிற்குத் துரத்தவேண்டுமென்பதில்லை; உன்விருப்பத்தை யறிந்த மாத்திரத்தில் இராமன் தானே பரதனுக்கு இராச்சியத்தைத் தருவன்: அப்படியிருக்க இராமனைக் காட்டிற்குஅனுப்பிப் பரதனை யாளச்செய்யவேணு மென்று மூவுலகத்தார்க்கும் ஏற்காதசெயலைச் செய்யவிரும்புதல் தக்கதன்றென்பதாம். "உண்ணுநீரினுமுயிரினும் அவனையே யுவப்பார்" ஆதலின், அவன் கானகஞ் சென்றால், 'மண்ணவருய்யார்' என்றான்; இராமன் தந்தையிட்ட கட்டளையென்று அரசை யேற்றுக்கொண்டானே யன்றி எப்படியாவது இராச்சியத்தைக் கைப்பற்றவேணு மென்ற விருப்ப முள்ளவனல்ல னென்பது, 'யானே சொல்லக்கொள்ளவிசைந்தான்' என்பதன் கருத்து. பி-ம்:—[1]மன்னவர். நேரொல்ல. [3]அன்பாலே. [4]மகனுக்குத். (உகச)

உரு. கண்ணே வேண்டு மென்னினு மீயக் கடவே[1]னென்
னுண்ணே ராவி வேண்டினு மின்றே யுன[2]தன்றோ
பெண்ணே வண்மைக் [3]கைகயன் [4]மானே [5]பெறுவாயேன்
மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மறவென்றான்.

(இ-ள்.) (என்றுகூறிப் பின்னரும்), பெண்ணே—! வண்மை - வரையாதுகொடுக்குந் தன்மையையுடைய, கைகயன் மானே - கேகயத்தரசன்மகளே! கண்ஏ வேண்டும் என்னின்உம்-(என்) கண்களே வேண்டுமென்றாலும்,

ஈயக்கடவேன்-கொடுப்பேன்: என் உள் நேர் ஆவி-எனது உள்ளேபொருந்திய உயிரை, வேண்டின் உம் - விரும்பினாலும், (அது), இன்றே - இப்பொழுதே, உனது அன்றோ - உன்னுடைய அதீனத்திலிருப்பதல்லவோ? பெறுவாய் ஏல் - (வரத்தைப்)பெறவிரும்புவாயானால், நீ மண் ஏ கொள் - நீ உலகத்தை மாத்திரம் பெற்றுக்கொள்; மற்றையது ஒன்று உம் மற-இன்னொன்றை மாத்திரம் மறந்துவிடு,' என்றான்—; (எ - று.)

எல்லாப்பொறிகளினுஞ் சிறந்தமைபற்றி 'கண்'என்றும், கண்ணினும் அருமைப்பாடுஉடையதாதலின் 'உண்ணோராவி' என்றும், நின் தலைமுறை தலைமுறையாகவந்த ஈகை உனக்கும்வேண்டு மென்பான்'வண்மைக்கைகயன் மானே' என்றுங் கூறினான். சேய்கோள்ளானென்பதைக் கருதாது பெற வேணுமென்று வேண்டினையானால் என்பது 'பெறுவாயேல்' என்பதன் பொருள். இனி, 'வண்மைக்கைகயன் மானே பெறுவாயேல்' என்பதற்கு, கொடுக்குங்குலத்திற் பிறந்த நீ என்வேண்டுகோளைத் தாராது என்னிடத்துப் பெற விரும்பினையானா லென்று கருத்துரைத்தலும் ஒன்று. உனது - குறிப்பு முற்று. மற்றையது-இராமனைக் காட்டிற்கனுப்புதல்; அதனை வாயாற்சொல்லவும் அஞ்சி இவ்வாறு கூறினான். பி-ம்:—[1]நான். [2]அன்றே. [3]கேகயன், கைகயர். [4]மாதே. [5]பெறுவானேல், பெறுவேனே. (உகநி)

உகூ. வாய்[1]தந் தேனென் றேனினி யானோ வதுமாற்றே
னோய்தந் தென்னை நோவன [2]செய்து நுவலாதே
தாய்தந் தென்னத் தன்னை யிரந்தாற் றழல்வெங்கட்
பேய்தந் தீயு நீயிது தந்தாற் பிழை[3]யாமோ.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்.) வாய் தந்தேன் என்றேன்-வாயாற் கொடுத்துவிட்டே னென்று சொன்னேன்; இனி யான்ஓ அது மாற்றேன்-இனிமேல் நானோ அதனைத் தவறேன்; என்னை நோய் தந்து-எனக்கு வருத்தத்தைக் கொடுத்து, நோவன செய்து - துன்புறத்தக்கவற்றைப் பண்ணி, நுவலாதே-சொல்லாதே; தன்னை இரந்தால்-தன்னை (ஒன்று) யாசித்தால், தழல் வெம் கண் பேய் - நெருப்புப் போலும் வெவ்விய கண்களையுடைய பேயும், தாய் தந்துஎன்ன-தாய் கொடுத்தாற்போல, தந்தீயும்-கொடுக்கும்; (ஆதலால்), நீ இது தந்தால்-நீ இதனைக் கொடுத்தால், பிழை ஆம் ஓ - தவறாகுமோ? (எ - று.)

நீ கேட்டவரத்தைக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டபடியால், நான் கொடுத்தது கொடுத்ததுதான்; அதனை மாற்றுகின்றே னென்று என்னைப்பழியாதே:ஆனாலும், கேட்கும்வரம் என்னை மிகவும்வருத்துவதால் அதனை மாற்றிக் கொள்ளும்படி இரக்கின்றேன்:பேயும் ஒருவர் தன்னையிரந்தால்,தாய்போலத் தண்ணளிகொண்டு வேண்டியதைத் தருகின்றது; ஆதலால், நீ இரங்கி என் வேண்டுகோளைத் தரலாகாதா? என்று தசரதன் கைகேயியை இரக்கின்றனனென்க. தழல்வெங்கண்-நெருப்பைக்காலுகின்ற வெங்கண்ணுமாம். பேயென்பது,அதனது இரக்கமின்மையை விளக்கிநின்றது. என்ன-உவமவுருபு

தந்தீயும் - தருமென்னும் படர்க்கை முற்று வினைத்திரிசொல். பேயென்ற விடத்து இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தந்து என்றதைத் தந்தையென்பதன் விகாரமாகக்கொண்டு, தாய் தந்து என்ன - தாயே! தந்தையே! என்றுசொல்லி யிரக்க என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று.
பி - ம்:—[1]தந்நின்றேமற்றினி, தந்தன்றேமற்றினி, தந்தேனென்றேனனி. [2]செய்தே. [3]உண்டோ.　　　(உகசு)

௩௦.—கைகேயி இரங்காது தசரதனை யிழித்துக் கூறுதல்.

இன்னே [1]யின்னே பன்னி யிரந்தா [2]னிகல்வேந்தன்
றன்னே ரில்லாத் தீயவ ளுள்ளந் தடுமாறாண்
முன்னே தந்தா யிவ்வர [3]நல்காய் முனிவாயே
லென்னே மன்னா யாருளர் வாய்மைக் கினியென்றாள்.

(இ-ள்.) இகல் வேந்தன்-வெற்றியையுடைய சக்ரவர்த்தி,—இன்னே இன்னே - இவ்வாறாக, பன்னி-சொல்லி, இரந்தான்-வேண்டினான்; (வேண்டியும்), தன் நேர் இல்லா தீயவள்-தனக்குஒப்பு (வேறு ஒருவரும்) இல்லாத கொடிய கைகேயி,உள்ளம் தடுமாறாள்-மனம்மாறிஇரங்காதவளாய்,—'இ வரம் முன்னே தந்தாய்-இந்தவரங்களை முன்னே (வாயாற்) கொடுத்தாய்; நல்காய்-(இப்பொழுது தொழிலாற்) கொடாமல், முனிவாய் எல் - வெறுப்பாயானால், மன்னா - சக்ரவர்த்தியே! என்னே - (செய்யத்தக்கது) யாதுஉளது? இனி—, வாய்மைக்கு - உண்மைக்கு, யார் உளர்-(இவ்வுலகத்தில்) எவர் இருக்கின்றார்கள்?' என்றாள்—; (எ - று.)

உலகத்தில் தருமத்தை நிலைநாட்டவேண்டுவது மன்னவன்தொழிலே யாதலாலும், "வையகமுற்றும் நடந்தவாய்மையன்" என்றவாறு உலகெங்கும் தன்மெய்ம்மையை நடக்கச் செய்தலாலும், அப்படிப்பட்ட நீயே வாய்மைதவறின் உலகில் வாய்மையே நிலையாதென்பாள் 'மன்னா யாருளர் வாய்மைக்கு இனி' என்கிறாள்;உன்போல வாய்மையுடையவர் வேறொருவருமில்லையென இகழ்ச்சி செய்தபடியுமாம்.கீழ்"தீயவை யாவையினுஞ்சிறந்த தீயாள்"என்றதற்கேற்ப 'தன்னேரில்லாத் தீயவள்' என்றார். கணவன் மனம்நொந்து இரக்கவும் அவனுக்கு மனத்துயர் மிகுவதுபற்றிச் சிறிதும் சிந்தனையின்றிக் கல்லினும் வன்னெஞ்சளாயிருப்பதுபற்றிக் கைகேயியை இவ்வாறு கூறிய தென்க.
பி ம்:—[1]இன்ன, இன்னம். [2]இயன்மன்னன்,இகன்மன்னன். [3]நல்கா.(உகஎ)

௩௧.—கைகேயியின் பேச்சினால் மன்னவன்மூர்ச்சித்துப் பின்பு தெளிந்து பேசத்தொடங்குதல்.

அச்சொற் கேளா வாவி புழுங்கா வயர்கின்றான்
பொய்ச்சொற் [1]கேளா வாய்மொழி மன்னன் பொறை[2]கூர
நச்சுத் தீயே [3]பெண்ணுரு வன்றோ வென[4]நாணா
முச்சற் றார்போற் பின்னு [5]மிரந்தே மொழிகின்றான்.

(இ - ள்.) பொய் சொல் கேளா வாய் மொழி மன்னன்-அசத்தியமான வார்த்தையைக் கேட்டும் அறியாத வாய்மையுள்ள வார்த்தையையுடைய சக்ர வர்த்தி,—அ சொல் கேளா-அந்தவார்த்தையைக் கேட்டு,ஆவி புழுங்கா-உயிர் வெதும்பி, அயர்கின்றான்-சோர்கின்றவனாகி,—பொறை கூர-(பின்பு)பொறு மைமிக, 'பெண் உரு-இந்த ஸ்த்ரீரூபம், நச்சு தீஎ அன்றோ-விஷமும் நெருப் பும் (போன்ற தொன்று) அல்லவோ?' என - என்றெண்ணி, நாணா-வெட்கி, மூச்சு அற்றார் போல்-மூச்சு அற்றவரைப்போல இருந்து [மூர்ச்சையடைந்து கிடந்து], பின்உம் - மீண்டும், இரந்துஎ மொழிகின்றான் - இரத்தலைமேற் கொண்டே பேசுகின்றான்; (எ - று.)—அது மேற்கூறுகின்றார்.

எப்பொழுதும் மெய்யேபேசுபவனாதலால் தசரதமன்னன் 'மன்னா! இவ் வரம் நல்காய்:முனிவாயேல் வாய்மைக்கு யாருளர்?'என்று கைகேயி மொழிந் ததைக்கேட்டு உயிர்வெம்பிச் சோர மிகவருந்தி, அக்கைகேயியின் கொடுமை யைக்கண்டு அவளிடத்துப் பேச நேர்ந்ததற்கு வெட்கி மூர்ச்சித்துப் பின்பு தேறி மீண்டும் குறையிரந்து பேசத்தொடங்கினனென்க. மந்திரிமார்களையும் அரசர் முதலியோரையும் வரவழைத்து 'இராமனுக்குப் பட்டங்கட்டவிரும்பு கிறேன்' என்றுசொல்லி அவரனுமதியையெல்லாம் பெற்று இராமனுக்கும் இராச்சியம் அளிப்பதாகச் சொல்லிவிட்டு, ஒருபெண்ணின் பிடிவாதத்தினால் அச்சொல் பிறழநேர்வது குறித்து வெட்கினனெனினுமாம். மூச்சற்றார் போல்—"இத்தனைகாலம், மூச்சற்றான்கொலம்முழுமுதலோன்" என்பர், யுத்தகாண்டத்தும். கூர்-முன்சிறவாதுள்ளது சிறத்தலாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல். நச்சுத்தீ-நச்சுதலையுடைய தீயென்றுமாம்;'நச்சுதல்-அலட்டுதல்'; விஷாக்கினியுமாம். மூச்சு-மூச்சு என்பதன்விகாரம். பி-ம்:—[1]பேணா. [2]கின் றான். [3]பெண்ணுருவன்றாமெனா. [4]நாணும். [5]இருந்தே. (உசஅ)

### கூஉ.—இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பாதிருக்குமாறு மன்னவன் மீண்டும் கைகேயியை வேண்டுதல்.

நின்மக னாள்வா னீயினி தாள்வாய் [1]நிலமெல்லா
முன்[2]வய மாமே யாளுதி தந்தே னுரை[3]குன்றே
னென்மக னென்க ணென்னுயி ரெல்லா [4]வுயிர்கட்கு
நன்மக னிந்த [5]நாடிற வாமை நயவென்றான்.

(இ - ள்.) 'நின் மகன் ஆள்வான் - (இராச்சியத்தை) உனது மைந்தன் [பரதன்] ஆள்வானாக; நீ இனிது ஆள்வாய் - நீ சுகமாய் அதிகாரஞ்செலுத்து வாயாக; நிலம் எல்லாம்-பூமிமுழுவதும், உன் வயம் ஆம்எ-உன்னுடைய வச த்ததாகவேயிருக்கட்டும்; ஆளுதி-ஆள்வாயாக; தந்தேன்-கொடுத்தேன்; உரை குன்றேன்-சொன்ன சொல் தவறேன்; என் மகன்-எனது புத்திரனும், என் கண்-எனக்குக் கண்போன்றவனும், என் உயிர்-எனது உயிர்போன்றவனும், எல்லா உயிர்கட்குஉம் நல்மகன்-எல்லாவுயிர்களுக்குஞ் சிறந்தபுத்திரன் போன் றவனுமாகிய இராமன், இந்த நாடு இறவாமை - இத்தேயத்தைவிட்டு நீங்கா மையைமாத்திரம், நய - விரும்பியருள்புரிவாய்,' என்றான்—; (எ - று.)

கோசலையின் மேன்மையைப் பொறேனென்று கருதுங் கைகேயியைச் சமாதானப்படுத்த, நீ அதிகாரஞ்செலுத்தும்படி பரதனே முடிசூடி யரசு ஆளட்டும்: அவ்வரத்தைப் பின்வாங்காமற் கொடுத்தேன். எனது கண்மணி இராமனைக்காட்டிற்குச் செல்லவிடாமல் இந்நகரத்திலேயேயிருக்குமாறு அருள்புரிய வேண்டுமென்று மீண்டும்நயந்து வேண்டுகின்றனன் தசரத னென்க. வயம் - வசம். "தன்னுயிர்க்கென்கை புல்லிது தற்பயந்தெடுத்த, வுன்னுயிர்க்கென நல்லன் மன்னுயிர்க்கெலாமுரவோய்" என்று கீழ் வசிட்டன்கூறினதற்கேற்ப 'என்மகன் எல்லாவுயிர்கட்கும் நன்மகன்' என்கிறான். பி - ம்:—[1]உலகு. [2]வசமாகும், வயமாமேல், வயமாயே. [3]நின்றேன். [4]உலகுக்கும். [5]நாடிறவாமல், நாடிகவாமல். [6]நல்கென்றான். (உகக)

௩௩.—மன்னன் என்னுயிர் உன்னபயமெனல்.

மெய்யே யென்றன் வேரற நூறும் வினைநோக்கி
நையா நின்றே னாவு முலர்ந்தே னளினம்போற்
கையா னின்றென் கண்ணெதிர் நின்றுங் கழிவானே
லுய்யே னங்கா யுன்னப யம்மென் னுயிரென்றான்.

(இ - ள்.) 'மெய்யே - சத்தியமே, என்தன் வேர் அற நூறும் - என்னுடைய அடி கெடும்படி அழிக்கின்ற, வினை-செயலாதலை, நோக்கி - கருதி, நையாநின்றேன் - வாடுகின்றேன்; நாஉம் உலர்ந்தேன் - நாக்கும் வறளப் பெற்றேன்; நளினம் போல் கையான் -தாமரைமலர்போன்ற கைகளையுடைய இராமன், இன்று - இப்பொழுது, என் கண்எதிர் நின்றுஉம் - எனது கண்களுடைய எதிரிலிருந்து, கழிவான் ஏல் - நீங்குவானானால், உய்யேன்-(நான்) பிழையேன்; (ஆதலால்), நங்காய் - பெண்ணே! என் உயிர் உன் அபயம் - எனது பிராணன் உனது அடைக்கலம்,' என்றான்—; (எ - று.)

சத்தியந் தலைகாக்கு மென்பர்; தாயே பகையாவதுபோல அந்தச்சத்தியமே என்னை வேரோடுஒழிக்கும் வினையாகிவிட்டதால், யான் மனம்நைந்து நாக்குஉலர்ந்தேன்; தாமரைக்கையனான இராமன் என்கண்ணைவிட்டுஅகன்றானென்றால் யான் உயிரோடு இரேன்; கைகேயி! அதனால் உன்னை அடைக்கலமாகஅடைகின்றேன்: என்னுயிர் தங்கும்படி இராமனைக் காட்டிற்குஓட்டாமல் நாட்டில்தானே இருக்கச்சொல்வாயாகஎன்றனன் தசரத னென்க. மெய்யே நையாநின்றேன் எனக் கூட்டி யுரைத்தலும் ஒன்று. (உஉ0)

௩௪.—கைகேசி 'இந்தவரத்தைத் தவிருமாறுகூறுதல் அறமோ?' எனல். ரு

இரந்தான் சொல்லு மின்னுரை [1]கொள்ளாண் [2]முனிவெஞ்சாண்
மரந்தா [3]னென்னு நெஞ்சின [4]ளுள் வசைபாராள்
சரந்[5]தாழ் வில்லாய் தந்த வரத்தை தவிர் [6]கென்ற
லுரந்தா [7]னல்லா னல்லற மாமோ வுரையென்றாள்.

(இ - ள்.) (பின்னும் கைகேயி), இரந்தான் சொல்லும் இன் உரை கொள்ளாள் - வேண்டுகின்ற மன்னவன்சொல்லுகின்ற இனியவார்த்தையை அங்கீகரியாதவளும், முனிவு எஞ்சாள்-கோபந் தணியாதவளும், மரம் தான்

என்னும் நெஞ்சினள்-மரமேயென்று சொல்லத்தக்க மனத்தையுடையவளும், நாணாள்-(தீச்செயலுக்கு) வெட்கப்படாதவளும், வசை பாராள்-பழியை (ஒரு பொருளாக) இலட்சியஞ்செய்யாதவளுமாகி, 'சரம் தாழ்வு இல்லாய்-பாணங்களை மிகுதியாகக்கொண்டுஎய்பவனே! தந்த வரத்தை - (முன்) கொடுத்த வரத்தை, தவிர்க என்றல்(நீ)-கேளாது ஒழி என்று சொல்லுதல், உரம்தான் அல்லால் - வலியே யல்லாமல், நல் அறம் ஆம்ஓ-நல்லதருமமாகுமோ? உரை-சொல்,' என்றாள்—; (எ-று.)

நீ அம்புஎய்யும்பெருவீரனாயிருந்து ஒருமெல்லியலிடம் வந்து கொடுத்த வரத்தைத் தவிரவேணுமென்று இரப்பவன்போலக் கேட்பது, 'நமக்குஅஞ்சி இவள் வேண்டியவரத்தை மாற்றிக்கொள்ளட்டும்' என்று உன்வலியால் வற்புறுத்துவது ஆகுமேயன்றித் தருமம்ஆமோ? சொல்,என்று தன்மனம் சிறிதும் நெகிழாமல் கைகேயி கூறினளென்க: "வேலொடுநின்றான்இடுவென்றது போலும், கோலொடுநின்றா னிரவு" என்ற குறள் கைகேயியின்பேச்சில் நினைவுக்கு வருகின்றது. 'சரந்தாழ்வில்லாய்' என்ற விளி - உன்னுரை உரத்தால் தோன்றுவதுஎன்பதைத் தெரிவித்தலால், கருத்துடையடைகோளியாம். சரம்தாழ்வில்லாய்-சரத்தைவெளிவிடும்பொருட்டுத் தாழ்கின்ற வில்லையுடையவனே! எனினுமாம்: இதில், உன்னுடைய வன்மையைப் பணிவினால் வெளிப்படுத்துபவன் நீ என்ற கருத்தும் தோன்றும். நெஞ்சில், நெகிழ்ச்சியில்லாமைக்குத் திருஷ்டாந்தமாக 'மரந்தானென்னுநெஞ்சினள்' என்றார்; "மரங்கள்போல் வலியநெஞ்சவஞ்சனேன்" என்றார் பெரியாரும். பி-ம்:—[1]கேளாள். [2]முனிவாருள், முனிவஞ்சாள். [3]அன்ன, என்ன. [4]ஆனாள். [5]தாவில்லாய். [6]என்றல். [7]இல்லா. (உஉக)

நடு.—சோகத்தால் மன்னவன் மண்ணில் விழுதல்.

கொடியா ளின்ன கூறினள் கூறக் குலவேந்தன்
முடி[1] சூடாமல் [2]வெம்பரன் மொய்கா னிடைமெய்யே
நெடியோ னீங்க நீங்கு [3]மென்னா ருயிரென்னா
விடியே றுண்ட மால்வரை போன்மண் ணிடைவீழ்ந்தான்.

(இ - ள்.) கொடியாள் - கொடியவளாகியகைகேயி, இன்ன கூறினாள்-இப்படிப்பட்டவைகளைச் சொன்னாள்; கூற - சொல்ல, குலம் வேந்தன்—, 'நெடியோன் - இராமன், முடி சூடாமல் - கிரீடத்தைச் சூடப்பெறாமல், வெம் பரல் மொய் கானிடை - கொடிய [உறுத்துந்தன்மையுள்ள] பரற்கற்கள் நெருங்கிய காட்டில், நீங்க - பிரிய, என் ஆர் உயிர் - எனது (உடம்பிற்) பொருந்திய உயிர், மெய்யே - உண்மையாக, நீங்கும்-பிரியும்,' என்னா-என்று சொல்லி, இடி ஏறு உண்ட - பேரிடிவிழுந்த, மால் வரை போல் - பெரிய மலைபோல, மண்ணிடை - பூமியில், வீழ்ந்தான்—; (எ - று.)

தசரதன் கைகேயியின் அக்கடுஞ்சொல்லைக்கேட்டு 'இனி இராமன் முடிசூடப்பெறாமல் வெம்பரற்கானிடைச் செல்வது திண்ணம்; அவன் நீங்க என்னுயிரும் நீங்கும்'என்று சொல்லிப் பெருந்துயரத்தாற் புவியில் வீழ்ந்தன

னென்க. குலம்-சூரியகுலம். இடியேறுண்ட மால்வரை யென்றது - முன்னாளிற் சிறகுள்ளனவாயிருந்து பறந்து நாடுகளின்மேல் விழுந்து அழித்துக் கொண்டிருந்ததனால் இந்திரனால் வச்சிராயுதங்கொண்டு சிறகரியப்பட்ட மலைகளையென்னலாம். பி-ம்:—[1]சுட்டாமல். [2]காத்தலும், காத்தது. [3]என்னுவியினி. மூன்றாமடியில் 'நெடியோனிங்குநீக்கலு நீங்கானினியென்று' என்றும் பாடம்.

**௩௬.—வீழ்ந்தமன்னவன் கைகேயியின்கொடுநெஞ்சைக்கண்டு வருந்தத்தொடங்கல்.**

வீழ்ந்தான் வீழா வெந்துய ரத்தின் கடல்வெள்ளத்
தாழ்ந்தா னாழா வக்கட லுக்கோர் கரைகாணான்
[1]சூழ்ந்தா [2]டுன்பஞ் சொற்கொடி யாள்சொற் கொடு[3]நெஞ்சம்
[4]போழ்ந்தா [5]ளுள்ளப் புன்மையை நோக்கிப் [6]புரள்கின்றான்.

(இ-ள்.) (தசரதமன்னவன்),—வீழ்ந்தான்-(பூமியில்)விழுந்தான்; வீழா-விழுந்து, வெம் துயரத்தின் கடல் வெள்ளத்து-கொடிய துன்பமாகிய சமுத்திரத்தினது நடுவெள்ளத்தில், ஆழ்ந்தான் - அழுந்தினான்; ஆழா - அழுந்தி, அ கடலுக்கு - அச்சமுத்திரத்திற்கு, ஓர் கரை காணான் - ஒரு எல்லையைக் காணாதவனாய்,துன்பம் சூழ்ந்தாள்-தீங்கை யாலோசித்தவளும், சொல் கொடியாள்-கொடிய வார்த்தையையுடையவளும், சொல் கொடு நெஞ்சம் போழ்ந்தாள்-(தன்) வார்த்தையால் மனத்தைப் பிளந்தவளுமாகிய கைகேயியினது, உள்ளம் புன்மையை-மனத்தினது அற்பத்தன்மையை, நோக்கி - பார்த்து, புரள்கின்றான்-(மனஞ்சகியாமற் புவியிற்) புரள்பவனானான்; (எ - று.)

கரையின்றிவருதலால், துயரத்தின் கடலென்றார்; "பிறவிப்பெருங் கடல்" என்றாற்போல. கரைகாணாமைக்கு, நடுவெள்ளமென்றுரைத்தாம். நீந்தற்குஅருமையால், 'ஆழ்ந்தான்' என்றார். சொற்கொடியாள் கொடுஞ்சொல்லாள்என விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. துன்பஞ்சூழ்ந்தாள்,சொற்கொடியாள் என்பவை கூனியையாய், அவள்சொற்கொடுநெஞ்சம்போழ்ந்தாளென்றுமாம். நோக்குதல் - கருதுதல். பி-ம்:—[1]சூழ்ந்தான். [2]துன்பச். [3]சித்தம். [4]போழ்ந்தான். [5]என்னைப். [6]புலர்கின்றான். (உஉ௩)

**௩எ.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: தசரதன் கைகேயியைப் பலவாறு பழித்துத் துயருறுதலைத் தெரிவித்தும்.**

[1]ஒன்று நின்ற [2]வாருயி ரோடு [3]முயர்[4]கேள்வர்
பொன்று முன்னம் [5]பொன்றின ரென்னும் புகழல்லா
[6]லின்றோர் காறு [7]மெல்வளை யார்தம் மிறையோரைக்
கொன்றா ரில்லைக் [8]கொல்லுதி யோநீ கொடியாளே.

(இ-ள்.) 'எல் வளையார்-விளக்கமுள்ள வளையலையுடைய மகளிர், ஒன்று நின்ற - (உடலோடு) பொருந்திய, ஆர் உயிரோடு உம் - அரிய உயிருடனே, உயர் கேள்வர் - (எல்லாப்பொருளினுஞ்) சிறந்த பிராணநாயகர், பொன்று

முன்னம் - இறப்பதற்குமுன்னே, பொன்றினர் - (தாம்) இறந்தனர்,' என்னும்-என்றுசொல்லப்படுகின்ற, புகழ் அல்லால்-கீர்த்தியைக் கொண்டவரல்லாமல், இன்று காறுஉம் - இதுவரையிலும், தம் இறையோரை கொன்றுர் - தமதுகணவரைக் கொலைசெய்தவர்,இல்லை-எங்குமில்லை; கொடியாளே-கொடுந்தன்மையையுடையாளே! நீ கொல்லுதிஓ-நீ கணவனைக் கொல்லுகின்றாயோ?

கணவன் இறக்கத் தாம் உயிர்வைத்துக்கொண்டிருக்க விருப்பமில்லாது அவருடன் மாய்ந்தா ரென்று புகழ்பெற்ற மகளிரும் பலர்உளர்:ஆனுல், இதுவரையில், தன் கணவனைக் கொன்றாரென்று பேரெடுத்த மகளிர் இவ்வுலகி லில்லை. நீ கணவனுயிரைக் கொள்கின்று யாதலால், உன்போற் கொடியா ருண்டோ? என்று தசரதன் கைகேயியைப் பழித்தன னென்க. கற்புடைமகளிர் கணவன்இறந்ததைக் கேட்டமாத்திரத்தில் உயிர்மாயப் பெறுவரென்றும், அங்ஙனம் உயிர்போகாவிடின் குளிர்ந்த நீர்ப்பொய்கையிற் குளித்தல்போலத் தீக்குளித்து உயிர்மாய்ப்பரென்றும் நூல்கள் கூறும்: இவற்றை "அரிமா னேந்திய வமளிமிசையிருந்த, திருவீழ்மார்பிற் றென்னர் கோமான், றயங்கிணர்க்கோதைதன் றுயர்பொறுஅன், மயங்கினன்கொல்லென மலரடிவருடத், தலைத்தாணெடுமொழி தன்செவிகேளாள், கலக்கங்கொள்ளாள் கடுந்துயர்பெறுஅண், மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத், தன்னுயிர்கொண் டவனுயிர் தேடினள்போற், பெருங்கோப்பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" என்ற சிலப்பதிகாரமும், "காதலன்வீயக்கடுந்துயரெய்திப், போதல்செய்யாவுயிரொடு புலந்து, நளியிரும்பொய்கை யாடுநர்போல, முளியெரிபுகூஉ முதுக்குடிப்பிறந்த, பத்தினிப்பெண்டிர்"என்ற மணிமேகலையும்,"பெருந்தோட்கணவன் மாய்ந்தென வரும்பற,வள்ளிதழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோரற்றே" என்ற புறநானூறும். "ஒருயிராக வுணர்கவுடன்கலந்தார்க், கீருயிரென்பரிடை தெரியார்-போரில், விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையினுட்கு, முடனே யலந்ததுயிர்" என்ற வெண்பாமாலையும் இங்குக் காணத்தக்கன. ஓர்-ஆசை. எல் - இடைச்சொல்; இது உரிச்சொல் நீர்மைத்தாயினும், ஆசிரியர்"எல்லேயிலக்கம்"என இடைச்சொல்லாக வோதினமையால் இடைச்சொல்லென்றே கொள்க. இனி, மெல்வளையார் என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[1]ஒன்றுய். [2]அவ்வுயிர். [3]உயிர்க். [4]கேள்வன். [5]பொன்றினள், போதினர். [6]இன்றே. [7]பெய். [8]கொல்லுகிறே.()

ஈஅ. ஏவம் பாரா [1]யின்முறை நோக்கா யறமெண்ணு
யாவென் பாயோ வல்லை மனத்தா லருள்கொன்றுய்
நாவம் பாலென் னுருயி ருண்டா யினிஞாலம்
பாவம் பாரா [2]தின்னுயிர் கொள்ளப் [3]போகின்றுய்.

(இ - ள்.) (நீ), ஏவம் பாராய்-குற்றத்தைக் கருதாய்; இல் முறை நோக்காய்-நற்குடிப்பிறந்தமகளிர் செய்யும் கிரமத்தைப் பாராய்; அறம் எண்ணுய் தருமத்தை நினையாய்; ஆ என்பாயோ அல்லை - அந்தோ என்று இரங்குகி

றாயுமில்லை;மனத்தால் அருள் கொன்றாய்-நெஞ்சிற் கருணையழித்து விட்டாய்; நா அம்பால் - (உனது) சொல்லாகிய அம்பினால், என் ஆர் உயிர் உண்டாய்-எனது அரியபிராணனை வாங்கினாய்; இனி—, பாவம் பாராது - பாவத்தை நினையாமல், ஞாலம் - உலகத்தாரது, இன் உயிர்-இனிய பிராணனை, கொள்ளப்போகின்றாய் - கொலைசெய்யப் போகிறாய்; (எ - று.)

மிகக்கொடிய நீ உன்நாவாகிய அம்பை என்மீது எய்ததனால், நான் உயிர் போகும் நிலைமை யடைந்திட்டேன்: இனி, விரைவில்தானே இராமனைக் காட்டிற்குத்துரத்தி அவன்மூலமாய் இவ்வுலகத்தார் உயிரையேகொள்ளப்போகின்றாயென்று தசரதன் பழித்தவாறு. உலகத்தார் இராமபிரானிடத்துப்பேரன்புவைத்திருப்பதை யுணர்ந்ததுபற்றி, மன்னவன் 'ஞாலத்தின்னுயிர் கொள்ளப்போகின்றாய்' என்கிறான். ஏவம்-எவ்வம் என்பதன் விகாரம். பாராய், நோக்காய், எண்ணாய்-எதிர்மறை ஆகாரவிகுதி புணர்ந்து கெட்டன; உடன்பாடாகவுரைக்கவுமாம். பி-ம்:—[1]இனமுறை.[2]என்னுயிர். [3]படுகின்றாய்.

௩௧. ஏண்பா [1]லோவா நாண்மட மச்ச மிவையேதம்
பூண்பா லாகக் [2]காண்பவர் நல்லார் [3]புகழ்பேணி
நாண்பா [4]லோரா நங்கையர் தம்பா [5]னணுகாரே
[6]யாண்பா லாரே [7]பெண்பா லாரோ டடைவம்மா.

(இ - ள்.) ஏண் பால் - பெருமையின்பகுதியினின்று, ஓவா - நீங்காத, நாண் மடம் அச்சம் இவைஏ - நாணம் மடம் அச்சம் என்பவற்றை, தம் பூண் பால் ஆக - தமது ஆபரணங்களின்பகுப்பிற் சேர்ந்தனவாக, காண்பவர் - (மனத்தினாலாராய்ந்து) கொள்பவரே, நல்லார் - மகளிரென்றுசொல்லத்தக்கவர்; புகழ் பேணி நாண்பால் ஓரா - புகழைவிரும்பி நாணின் பகுதியைக் கொள்ளவேண்டியது இன்றியமையாததாகவிருக்கவும் அதனை யறியாத, நங்கையர் - மாதர்கள்,—தம் பால் - தமது பகுப்பாகிய பெண்பாலார் வர்க்கத்தில், நணுகார் - சேரமாட்டார்; (பின்னை அவர் எந்தப்பாலிற் சேர்வரென்னில்),—ஆண்பாலார் ஏ - ஆண்பால்வர்க்கத்திற் சேர்ந்தவரேயாவர்; பெண்பாலாரோடு அடைவு-(அவர்கள் உலகத்திற்) பெண்பாலாரோடு வடிவு ஒப்புமைபற்றிச் சேர்வது (எவ்வாறு?) அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

நாண் மடம் முதலிய பெண்மைக்குணம் இல்லாதவர் பார்வைக்குப் பெண்பாலார் போலத்தோன்றினும் ஆண்பாலாகவே கருதத்தக்கார்: உலகத்தில் அவரைப் பெண்பாலாராக வடிவு ஒப்புமை மாத்திரத்தைக் கொண்டு வழங்குவது வியக்கத்தக்கதேயென்றவாறு. இனிப்பின்னிரண்டடிகட்கு—நாண்என்ற பெண்மைக்குணத்தைத் தம்மிடத்துக்கொள்ளாத மங்கையரிடத்துச் சேராத ஆண்பாலாரே ஆண்பாலாரென்று சொல்லுதற்குஉரியவர்; அங்ஙனம் நாணமற்ற மகளிரிடத்துச்சேரும் ஆண்பாலாரோ பெண்பாலாரோடு சேர்த்துச்சொல்லுதற்கு உரியவரென்று பொருளுரைப்பாருமுளர்.

நாண் மடம் அச்சம் என்பன-பயிர்ப்பென்னும் குணத்திற்கும் உபலக்ஷணம். அவற்றுள்,நாண்-தகாதவற்றின்கண் உள்ள மொடுங்குதல்;மடம்-எல்லா

மறிந்தும் அறியாதுபோலிருத்தல்; அச்சம் - என்றுங்காணாததைக் கண்டவிடத்து அஞ்சுதல். பயிர்ப்பு-தன்கணவனல்லாதவரின் கைமுதலியன மேற்படின் அருவருத்தல். "கடிசொல்லில்லை காலத்துப்படினே" என்றதனால், அம்மாவென்பது வந்ததென்க. பி-ம்:—[1]ஒவ்வா. [2]காண்பயனுக்குப், காண்பயனுகும், காண்பயனந்தப், காண்பவர்நல்ல, காண்பனநல்ல, காண்பனநல்லார். [3]பயனீத்த. [4]ஓரார், ஓர்வார். [5]நணுகாதோர், அணுகாரோ. [6]ஆண்பாலொவ்வா, ஆண்பாலாரோ. [7]அப்பொருளாரோடடைவு, பேருளாரோடடைவு, பெண்பாலுளரோடடைவு, பெண்பொருளானுமடைவு, பேருளொன்னுமவர்.

சO. மண்ணாள் கின்றா [1]ராகி வலத்தான் மதியால்வைத்
தெண்ணா நின்றார் யாரையு மெல்லா விகலாலும்
விண்ணோர் காறும் வென்ற வெனக்[2]கோர் மனைவாழும்
பெண்ணால் [3]வந்த தந்தர மென்னப் [4]பெறுவேனோ.

(இ-ள்.) மண் ஆள்கின்றார் ஆகி-பூமியை ஆளுகின்றவராய், வலத்தால்-பலத்தினாலும், மதியால் - புத்தியினாலும், வைத்து - (மேலாக) வைத்து, எண்ணா நின்றார் யாரைஉம் - எண்ணப்படுகின்ற எல்லாஅரசரையும், எல்லா இகலால்உம் - எல்லாவலியினாலும், விண்ணோர்காறுஉம் - தேவர்வரையிலும், வென்ற-சயித்த, எனக்கு—, மனை வாழும் ஓர் பெண்ணால்-(எனது) வீட்டில் வாழும் ஒருபெண்ணினால், அந்தரம் வந்தது-தீமை நேர்ந்தது, என்ன பெறுவேன் ஓ - என்றுசொல்லத்தக்க நிலைமையை அடைவேனோ! (எ - று.)

புத்திபலம் தேகபலம் முதலியவற்றாற்சிறந்த இவ்வுலகத்தரசரையும்விண்ணுலகத்தவரையும்வென்று பெருவீரனென்று பேர்பெற்ற எனக்கு அவ்விருவகைவலிமையுமில்லாத வீட்டில்வாழும்பெண்ணினால் உயிர்போகும் நிலை நிகழும் படியாவதே! என்று தசரதன் வருந்துகின்றனனென்க. வைத்து-அசையாகவுமாம். எல்லாவிகலாவன - பலம், மதிமுதலியன; எல்லாப்போராலும் என்றுமாம். அந்தரம் - மரணம். ஓ - இழிவுசிறப்பு. மனைவாழும்பெண் - மனைவியென்னவுமாம். பி-ம்:—[1]ஆதிவலத்தின். [2]என், எ. [3]வந்ததீதாம், வந்தவந்தரம். [4]பெறுகேனோ. (உஉஎ)

சக. என்றென் றுன்னும் பன்னி [1]யுயிர்க்கு [2]மிடர்தோயு
மொன்றொன் [3]றொவ்வா வின்ன லுழக்கு [4]முயிருண்டோ
[5]வின்றின் றென்னும் வண்ண [6]மயங்கு [7]மிடியுர்பொற்
குன்[8]றொன் றொன்றோ[9]டொன்றிய தென்னக் குவிதோளான்.

(இ-ள்.) பொன் குன்று ஒன்று-ஒருபொன்மயமான மலை, ஒன்றோடொன்றியது என்ன-(அத்தகையமலை) மற்றொன்றுடன் சேர்ந்தால் (அதைப்) போலவிருக்கின்ற, குவிதோளான்-திரண்டதோள்களையுடைய சக்ரவர்த்தி,—என்று என்று உன்னும்-என்று பலவாறாக நினைப்பான்; பன்னி-(வாயினால்) பலபடி சொல்லி, உயிர்க்கும்-பெருமூச்செறிவான்; இடர் தோயும் - துன்பக்கடலில் மூழ்குவான்; ஒன்று ஒன்று ஒவ்வா-ஒன்றோடொன்று ஒவ்வாத [பலவகைப்

பட்ட], இன்னல் - துன்பத்தில், உழக்கும் - வருந்துவான்; 'உயிர் உண்டோ - பிராணன்இருக்கின்றதோ, இன்று இன்று - இல்லை இல்லை,' என்னும் வண்ணம் - என்றுசொல்லும்படி, மயங்கும் - மூர்ச்சிப்பான்; இடியும் - (நெஞ்சு) உடைவான்; (எ - று.)

தோய்தலென்னும் வினைக்கேற்ப, இடர் கடலாக உரைக்கப்பட்டது பொன்குன்றென்றென்றேடொன்றியது—இல்பொருளுவமை. பி - ம்:— [1]இரக்கும், இரங்கும். [2]மிடலாயும், மிடலேறும். [3]அல்லா. [4]உயிரோடும். [5]இன்றென்றுன்னும்,அன்றென்றுன்னும். [6]அயர்க்கும். [7]இடைகின்றான்,இடைதேறான், மிடிதென்றான், மிடையும்பொற், மடியும்பொற். [8]ஒன்றேடொன்று. [9]ஒன்றியவென்ன. (உஉஅ)

சஉ.—கைகேயி 'நீ உரைதப்பினுல் நான்உயிர்மாய்வேன்' எனல்.

ஆழிப் பொற்றேர் மன்னவ [1]னிவ்வா றயர்வெய்திப்
பூழிப் [2]பொற்றோண் முற்று மடங்கப் புரள்போழ்தி
லூழிற் [3]பெற்று [4]லென்னுரை [5]யின்றே லுயிர்மாய்வேன்
பாழிப் [6]பொற்றார் மன்னவ வென்றாள் பசையற்றாள்.

(இ - ள்.) ஆழி பொன் தேர் மன்னவன் - சக்கரத்தைக்கொண்ட பொன்மயமான இரதத்தையுடைய சக்கரவர்த்தி, இவ்வாறு - இங்ஙனம், அயர்வு எய்தி - தளர்வடைந்து, பொன் தோள் முற்றும் - (தன்) அழகியபுயமுழுவதிலும், பூழி அடங்க - புழுதி நிறையும்படி, புரள் போழ்தில்-(பூமியிற்)புரளுங் காலத்தில்,—'என்உரை - என்வரத்தை, ஊழில் பெற்றால் - முறைமையாகப் பெற்றால்சரி, இன்று எல் - பெறாவிடின், உயிர் மாய்வேன் - பிராணனை மாய்த்துக்கொள்வேன்; பாழி பொன் தார் மன்னவ - வலியையும் அழகிய வெற்றிமாலையையுமுடைய அரசனே!' என்றாள்—; (யாவளெனில்), பசை அற்றாள் - (நெஞ்சில்) ஈரமில்லாதவளான கைகேயி; (எ - று.)

மன்னவன் துயரத்தாற் பலவாறு சொல்லியவண்ணம் பூமியிற் புரண்டுகொண்டிருக்கையில், கைகேயி தன்மனத்திற்கொண்டுள்ள உறுதியை வெளியிட்டனளென்க. பெற்றால் என்ற வினையெச்சத்திற்கு உயிர்வைத்திருப்பேனென்றுமுடிக்குஞ்சொல் வருவிக்க. ஆழிப்பொற்றேர் மன்னவன் என்பதில், தசரதன் என்பதன் கருத்து அடங்கியிருக்கின்றது; இனி, ஆழியையும் தேரையுமுடைய மன்னவனென்றுமாம். 'மன்னவ' என்ற விளி - நான் உன்னைக் கணவனாகக்கொண்டு உன் கொள்கைப்படி நடக்கவேணுமென்கின்ற கற்புடைமகளிர்நிலையிலிருந்து பேசவில்லை; அறத்தைப் பாதுகாக்க வேண்டிய அரசன் முறையில் உன்னைவைத்து நீ அறம்வழுவாது சொன்ன சொல்லைப் பாதுகாக்குமாறு வற்புறுத்துகின்றேனென்பதைக் குறிப்பிக்கும். பூழி, போழ்து - புழுதி, பொழுது என்பவற்றின் மரூஉ. அற்றாள் - பெயர். பசை - ஈரம், உள்ளன்பு. பி - ம்:—[1]அவ்வாறு. [2]பொற்றார். [3]பொய்த்தாற், பொய்த்தாய், பெற்றாய். [4]என்றுரை. [5]அன்றேல், இன்றே. [6]பொற்றோள். ()

சு௯.—கைகேயி 'நீ வரங்கொடுத்துவிட்டு இப்போது வருந்துவது தகாது' எனல்.

அரிந்தான் முன்னோர் மன்னவ [1]னன்றே யருமேனி
வரிந்தார் வில்லாய் வாய்மை வளர்ப்பான் வரநல்கிப்
[2]பரிந்தா [3]லென்னா மென்றனள் [4]பாயுங் கனலேபோ
லெரிந்[5]தா றாதே யின்னுயி ருண்ணு மெரியன்னாள்.

(இ - ள்.) பாயும் கனல் ஏ போல் - பரவுகின்ற தீப்போல, எரிந்து ஆறாதே - எரிந்து தணியாமல், இன் உயிர் உண்ணும் - இனிய பிராணனைக் குடிக்கின்ற, எரிஅன்னாள் - நெருப்பையொத்த அந்தக் கைகேயி, 'வரிந்து - இறுக்கி, ஆர் - கட்டப்பட்ட, வில்லாய் - தனுவையுடையவனே! ஓர் மன்னவன் - (உன்குலத்திற்பிறந்த) ஒரு அரசன், முன் - முன்னே, வாய்மை வளர்ப்பான் - மெய்யை வளரச்செய்யும்பொருட்டு, அரு மேனி - (பெறுதற்கு) அரிய உடலை, அரிந்தான் அன்றே - அறுத்துக்கொடுத்தானல்லவா? (அவன்வமிசத்திற்பிறந்த நீ), வரம் நல்கி - வரத்தைக் கொடுத்து, (அவ்வரத்தைக் கேட்கும்போது), பரிந்தால் - வருந்தினால், என் ஆம்-யாது பயன் உண்டாகும்? என்றனள்—; (எ - று.)

சிபி பிரதிஜ்ஞைசெய்தபடியே தன்னுடலைப் பருந்துக்குஅறுத்துக்கொடுத்துநற்கதியடைந்தான்: அலர்க்கனென்ற ராஜரிஷியும் ஓரந்தணனுக்குத் தன்கண்களைப்பிடுங்கிக்கொடுத்தான். ஸமுத்ரமும் ப்ரதிஜ்ஞைகடவாதிருக்கும்படி கரைகடவாதுஇருக்கின்றது: ஆகவே, சத்தியந்தான் முக்கியம். சத்தியத்தைக்காட்டிலும் மேம்பட்ட தருமமில்லையாகையால், உலகில்மேம்பட்டவனான நீ செய்தபிரதிஜ்ஞைதவறாமல் இராமனைக் காட்டிற்குஅனுப்புவாயாக:மும்முறைசொல்லுகின்றேன். நீ என்பொருட்டுச்செய்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றாவிடின் உன்முன்னிலையிற்றானேபிராணனை விடுவேனென்புதல்வனுக்குப்பட்டங்கட்டி இராமனைக்காட்டிற்குஅனுப்பி எனக்கு எதிரிகளில்லாமற்செய்வாய். இல்லாவிடின் பிரதிஜ்ஞைதவறிய நீ கடைத்தேற முடியாது எனக் கடுமையாகக் கைகேயி கூறினாளென முதனூல்பற்றி விரித்துரைக்க. ஓர்மன்னவன் - சிபி; இதனை "புறவொன்றின் பொருட்டாகத் துலை புக்க பெருந்தகை," "இவர்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாகவழங்கினனால்" எனப் பாலகாண்டத்திற் கூறியவாற்றானுமுணர்க. இதனை யெடுத்துக்கூறினாள், அவன்வமிசத்துப் பிறந்த நீ உயிர் துறந்தாயினும் வாய்மையை நிலைபெறுத்தவேண்டு மென்றற்கு. ஒருபொருளைப் பற்றி யெரித்தபின் ஆறிவிடுவதாயிருக்கக் கைகேயியாகிய தீயோ உயிரோடு கூடிய மன்னவனைப்பற்றியெரித்தும் தணியாது அவனுயிரையுங் கொள்ளுகின்றதென வேற்றுமையணி தோன்றக்கூறுவார் 'எரிந்தாறாதே யின்னுயிருண்ணு மெரியன்னாள்' என்றார். எரிந்தாறாதேயின்னுயிருண்ணு மெரியன்னாள் என்ற விடத்து "தீயினாற்சுட்ட புண்ணுள்ளாறு மாறாதே, நாவினாற்சுட்டவடு" என்னுந் திருக்குறளின்பொருள் அறியத்தகும். வாய்மை - வாயினின்று தோன்றுவதாகிய சத்தியம். பி - ம்:—[1]அன்றோ. [2]பிரிந்தாய். [3]என்னே, என்னே. [4]பெய்யும். [5]எறாதே. (உ௬௦)

**௪௪.—தசரதன் கைகேயிக்கு வரத்தைத் தந்தேனெனல்.**

[1]வீந்தா ளேயிவ் வெய்யவ ளென்று மிடல் வேந்த
னீந்தே னீந்தே னிவ்வர மென்சேய் வனமாள
மாய்ந்தே நான்போய் வா[2]னுல காள்வென் வசைவெள்ள
நீந்தாய் நீந்தாய் நின்மக னோடுந் நெடிதென்றான்.

(இ - ள்.) 'இ வெய்யவள்-இக்கொடியவள், வீந்தாள் ஏ - (கேட்டவரத்தைக் கொடுக்காவிட்டால்) இறந்தவளேயாவள்,' என்று - என்றெண்ணி,—மிடல் வேந்தன்-வலியையுடைய சக்ரவர்த்தி,—'இ வரம் ஈந்தேன் ஈந்தேன்-இவ்வரத்தைக்கொடுத்தேன் கொடுத்தேன், என் சேய் வனம் ஆள-என்மகன் [ராமன்] காட்டையாள, நான் மாய்ந்து ஏ போய்-யான் இறந்துபோய், வான் உலகு ஆள்வென்-தேவலோகத்தை யாளுவேன்; நெடிது - வெகுகாலம், நின் மகனோடுஉம்-உனதுபிள்ளையுடன் [பரதனுடன்], வசை வெள்ளம் - பழியாகிய கடலை, நீந்தாய் நீந்தாய் - கடக்கமாட்டாமல் அதனுள் அழுந்துவாயாக,' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

'இனி இவள் கேட்டவரத்தைக் கொடுக்கப் பின்வாங்கினால் இப்போதே உயிர்விடுவள்: அங்ஙனம் உயிர்நீத்தால் நாம் மெய்ம்மைதவறியவனாவதோடு பெண்கொலைக்குக் காரணமாவதுபற்றிப் பெண்பாவமும் நம்மைத் தொடரும்: ஆதலால், இவள் கேட்டவரத்தைக் கொடுத்தலே சரி' என்று உறுதிகொண்ட தசரதன் 'நீ கேட்கும்வரத்தைத் தந்தேன் தந்தேன்; உண்மை தவறாத நற்பயத்தினால் சுவர்க்கலோகத்தில் நான் மேன்மை பெற்றிருக்க, நீ கணவனைக் கொன்ற பெரும்பழி நிலைத்திருக்க, உன்மகனுடன் இனிது அரசுபுரிவாய்' என்று தன்மனத்திலுள்ள அடங்காத்துயரமும் வெகுளியுந்தோன்றச் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டுக் கூறினனென்க. வீந்தாள் - விரைவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது; தெளிவுபற்றியுமாம். ஈந்தேனீந்தேன், நீந்தாய் நீந்தாய் - அடுக்குதேற்றப்பொருளைக்காட்டும்; வெகுளியுமாம். ஆளுதல்-அடைதல். வெள்ளம்-ஆகுபெயர். பி-ம்:-[1]வீய்ந்தாள். [2]அரசாள்வன்.

**௪௫.—வரந்தந்த மன்னவன் மூர்ச்சிக்க, கைகேயி தன்னெண்ணம் நிறைவேறித் துயிலுதல்.**

கூறா [1]முன்னங் கூறு படுக்குங் கொலைவாளி
னேறா [2]மென்னும் வன்றுய ராகத் திடைமூழ்கத்
தேறா னாகிச் செய்கை மறந்தான் செயன்முற்றி
யூறா நின்ற [3]சிந்தையி னாளுந் துயில்வுற்றாள்.

(இ - ள்.) கூறா முன்னம்-சொல்லுதற்கு முன்னே,—கூறு படுக்கும் - பாதியாக அறுக்கின்ற, கொலை-கொல்லுதற்றொழிலையுடைய, வாளின் ஏறு ஆம்-சிறந்த வாளோடு ஒத்ததாகும், என்னும் - என்றுசொல்லத்தக்க, வன் துயர்-கொடிய துன்பம், ஆகத்து இடை மூழ்க - மனத்தில் அழுந்துதலால்,

(அத்தசரதன்), தேருன் ஆகி-தணியாதவனாய், செய்கை மறந்தான் - செயல் மறந்துகிடந்தான்; செயல் முற்றி-தன்காரியத்தை முடித்துக்கொண்டு, ஊறு நின்ற சிந்தையினாள் உம் - களிப்புமிகுகின்ற மனத்தையுடைய கைகேயியும், துயில்வு உற்றாள் - தூக்கத்தை யடைந்தாள்; (எ - று.)

வரத்தைத்தந்தவுடனே பெருந்துயர் மனத்தில் மூளத் தசரதமன்னவன் திகைத்து மூர்ச்சித்தான்; கைகேயியோ தன்னெண்ணம் முற்றியதனால் மனக் களிப்போடு துயிலலானாளென்க. கூற்றுமுன்னம் செய்கைமறந்தான்-**உயர்வு நவிற்சி.** இச்செய்யுளில் தசரதமன்னவன் பெருந்துயரினாற்செயலற்றுக்கிடக்க, கைகேயியும் பெருமகிழ்ச்சியால் மெய்ம்மறந்து தூங்கினாளெனத் துயருற்றாருக்கும் மகிழ்ச்சியடைந்தார்க்கும் ஒருநிலை நிகழ்ந்ததன்மையைக் கூறிய நயம்பாராட்டத்தக்கது. கூற்றுமுன்னம் என்பதைக் கூறுபடுக்கும் என்பதனோடுஇயைத்து வாளுக்கு அடையாக்கி, வாளினது கூர்மையைச் சிறப்பிக்கின்றதெனினுமாம். ஆற்றல்பற்றி வாளின் ஏறென்றார்; கீழ் "இடியேறு" என்றாற்போல. ஏறு-ஏறுதலென்றுமாம். செயல்முற்றலாவது-தான் கேட்ட வரங்களைப் பெற்றுக்கொண்டது. கூற்றுமுன்னம் செய்கைமறந்தானென்றுமாம். **பி-ம்:**—[1]மன்னன். [2]வண்ணம். [3]சிந்தையினானுந்துயில்வுற்றான். (௨௩௨)

**வேறு.**

**௪௯.—இரவுகழிதலின் வருணனை.**

சேணு லாவிய நாளெ லாமுயி ரொன்று போல்வன செய்துபி
னேணு லாவிய தோளி னானிட ரெய்த வொன்று [1]மிரங்கிலா
வாணி லாநகை மாத ராள்செயல் கண்டு மைந்தர்மு னிற்கவு
நாணி னாளென வேகி னாளிர் கங்கு லாகிய நங்கையே.

(இ-ள்.) (பின்பு),சேண் உலாவிய நாள் எலாம்-மிகுதிபொருந்திய தினங்களிலெல்லாம், ஒன்று உயிர் போல்வன-ஒருஉயிரையொக்கின்றகாரியங்களை, செய்து—, பின்-பிறகு [இப்போது என்றபடி], ஏண் உலாவிய தோளினான்-வலிமைபொருந்திய புயங்களையுடைய கணவன், இடர் எய்த-துன்பத்தை யடைய, (அப்பொழுதும்), ஒன்றுஉம் இரங்கிலா - சிறிதும் மனம் பரிதபியாத, நிலா வாள் நகை மாதராள் - சந்திரகிரணம்போல் ஒளியையுடைய புன்சிரிப்பினையுடைய கைகேயியினது,செயல் கண்டு தீத்தொழிலைப்பார்த்து, மைந்தர்முன்-ஆடவர்முன்னே, நிற்கஉம் - நிற்பதற்கும், நாணினாள் என - வெட்கப்பட்டவள்போல, ஈளிர் கங்குல் ஆகிய நங்கை - குளிர்ந்த இராத்திரியென்கின்றபெண், ஏகினாள் - போனாள்; (எ - று.)

ஒருபகுப்பைச் சேர்ந்தவர் ஒருதீத்தொழிலைப் புரியின் அப்பகுப்பைச் சேர்ந்தவர்க்கெல்லாம் வசையுண்டாதல் உலகத்திலே யியற்கையாதலால், பெண்பாலாரைச் சேர்ந்த கைகேயியொருத்தி தன்கணவன் உயிர்நீங்குநிலையையடைந்தும் சிறிதும்இரக்கமில்லாதது குறித்துப் பெண்பாலார்க்கெல்லாம் வசையுண்டாகுமென்று கருதி மைந்தர்முன் நிற்கவும் நாணினாள்போலக் கங்

குலாகிய நங்கை போயினளென்றார்: இது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இவ்வணிக்குக் கங்குலாகிய நங்கை என்ற உருவகவணி அங்கமாய்வந்தது. கங்குற்பொழுதுகழிந்ததென்றவாறு. சேண் உலாவியநாளென்றது விவாகஞ்செய்து கொண்டதுமுதல் வரம்வேண்டியஅன்று வரையிலுமுள்ள நாட்களை. உயிர் ஒன்று போல்வன - பார்ப்பவர் சக்ரவர்த்திக்கும் இவளுக்கும் உடல்வேறு, உயிர்ஒன்றே யென்று சொல்லத்தக்க இன்செயல்கள். எவ்வாற்றானும் வேறுசோக மில்லாதவ னென்பது விளங்க, 'ஏனுலாவிய தோளினான்' என்றார். ஒன்றும் - இழிவுசிறப்பு. "வரநல்கிப்பரிந்தாலென்னும்" என்று கீழ்க் கூறியதனால், 'ஒன்றுமிரங்கிலாமாதரான்' என்றார். வாள் - ஒளி: இனி, வாள் நிலாநகை—அரசனிறத்தற்கு ஏதுவாகலின் வாள்போன்ற நகையென்றுமாம். நிற்கவும் - இழிவுசிறப்பு. வடமொழியுள் இராத்திரியென்பது பெண்பாற்சொல்லாதலின், 'கங்குலாகிய நங்கை' எனப் பெண்பாலாகக் கூறியது. "பால்வாய்ப்பிறைப்பிள்ளை யொக்கலைக்கொண்டு பகலிழந்த,மேல்பாற்றிசைப் பெண்புலம்புறுமாலை" எனப் பெரியாரும் பணித்தார். மாதரான் - அழகினையுடையவள், அல்லது விருப்பத்தையுடையவள்; மாதர் விருப்பமாதல் "மாதர் காதல்" என்பதனா னுணர்க. பின் - காலம். முன்-இடம். இந்தச் செய்யுளில் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. பி-ம்:—[1] இரங்கலா. (௨௩௩)

சஎ.—கோழிகூவுதலின் வருணனை.

எண்ட ருங்கடை சென்ற யாம மியம்பு கின்றன வேழையால்
வண்டு தங்கிய தொங்கன் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாங்
கண்டு நெஞ்சு கலங்கி யஞ்சிறை [1]யான காமர் துணைக்கரங்
கொண்டு [2]தம்வயி றெற்றி யெற்றி [3]விளிப்ப போன்றன கோழியே.

(இ-ள்.) எண் தரும்-எண்ணப்படுகின்ற [வரையறையையுடைய],கடை சென்ற யாமம் - கடைசியாய்வந்த யாமத்தில், இயம்புகின்றன-கூவுகின்றனவாகிய, கோழி - கோழிகள்,—ஏழையால் - கைகேயியால், வண்டு தங்கிய தொங்கல் மார்பன்-வண்டுகள் மொய்க்கின்ற மாலையணிந்த மார்பினையுடைய சக்ரவர்த்தி, மயங்கி - மதிமயங்கி, விம்மிய ஆறு எலாம்-புலம்பிக்கூறியவகை யெல்லாவற்றையும், கண்டு—, நெஞ்சு கலங்கி—, அம் சிறை ஆன - அழகிய சிறகுகளாகிய, காமர் துணை கரம் கொண்டு-அழகிய இரண்டு கைகளால், தம் வயிறு - தம்முடைய வயிற்றில், எற்றி எற்றி - பலமுறை யடித்துக்கொண்டு, விளிப்ப போன்றன - அழுவனவொத்தன; (எ - று.)

இதுமுதற் பதினாறு கவிகளால் பொழுதுவிடிகையில் நிகழும் பலவகை நிகழ்ச்சிகளை வருணிக்கத்தொடங்கி, இதனாற் கோழிகூவுதலை வருணிக்கின்றார். தாம், கூவிப் பொழுதுவிடிவதைத் தெரிவிக்கின்ற கோழிகள், ஒரு பெண்ணால் தசரதசக்ரவர்த்தி மதிநிலைகெட்டுப் புலம்பியதையெல்லாம் கண்ணாரக் கண்டதனால் அத்துயரத்தையாற்றமாட்டாமல் தமது இறகுகளாகிய கைகளால் வயிற்றிலறைந்துகொண்டு அழுவனவற்றை யொத்தனவென

வருணித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி: இத்தவணிக்கு 'சிறையான காமர் துணைக்கரம்' என்ற இடத்துள்ள உருவகவணி அங்கமாய் நின்றது. விளிப்ப என்பதற்கு - அரசனுக்கு நேர்ந்தவிபத்தை வந்துகாணுமாறு கூப் பிடுவனவற்றை என்று உரைப்பினுமாம். ஏழையென்றார், அறிவு மிரக்கமு மின்மைபற்றி. எற்றியெற்றி-அடுக்கு, பன்மைப் பொருளது. விளிப்ப - அகர வீற்றுப்பலவறிசொல், படுத்தலோசையாற் பெயராய்நின்றது; விளிப்பது என்பதன் விகாரமெனினுமாம். பி-ம்:—[1]ஆய [2]தன். [3]அரற்றல், விழிப்ப. ()

சஅ.—பலவகைப்புட்களும் ஒலித்தலின்வருணனை.

தோய்க யத்து மரத்து மென்சிறை துள்ளி மீதெழு புள்ளெலாந்
தேய்கை யொத்த [1]மருங்குன் மாதர் சிலம்பி னின்று சிலம்புவ
கேக யத்தர சன்ப யந்த விடத்தை [2]யின்னதொர் கேடுசூழ்
மாக யத்திளை புட்கொ தித்து [3]மனத்துள் வைவன போன்றவே.

(இ - ள்.) தோய் கயத்துஉம்-நீராடுதற்குரிய குளங்களினின்றும், மரத்து உம் - மரங்களினின்றும், மெல் சிறை - மெல்லிய சிறகுகளால், துள்ளி - குதித்துக்கொண்டு, மீது எழு - ஆகாயத்திற்பறக்கின்ற, புள்எலாம்-பறவைக ளெல்லாம், தேய்கை ஒத்த - தேய்வு பொருந்திய, மருங்குல் - இடையை யுடைய, மாதர் - மகளிரின், சிலம்பின் நின்று - காற்சிலம்பொலிபோலிரு ந்து, சிலம்புவ - ஒலிப்பவை,—கேகயத்து அரசன் பயந்த விடத்தை - கேகய தேசத்தரசன்பெற்ற விஷம் போன்றவளான, இன்னது ஒர் கேடு சூழ் மாக யத்தியை - இத்தன்மையதாகிய ஒரு கெடுதியைச் சூழ்ந்த மிக்ககீழ்மையை யுடையவளை, உள் கொதித்து-உள்ளம் புழுங்கி, மனத்துள் வைவன போன்ற- மனத்திலே வைவனவற்றை யொத்திருந்தன; (எ - று.)

மரங்களிலும் நீர்நிலைகளிலுமுள்ள பறவைகள் பொழுதுவிடிகையில் ஒலிப்பதை, கைகேயி செய்த கொடுஞ்செயலைக்கண்டு தம்மனத்தினுள் அவளை வைவதுபோலு மென்று வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இராசபத்நினி யாதலாலும், "என்னை நிகழ்ந்த திஞ்ஞால மேழில்வாழ்வார், உன்னையிகழ்ந்தவர் மாள்வுருற்றதெல்லாஞ்,சொன்னபினென்செயல்காண்டி சொல்லிடென்றான்"என்னுமாறு அரசன் இவளிடத்து அன்புவைத்திருக்கின் றமையாலும் வெளிப்படையாய்வைதாற் றீங்கு வருமென்று கருதி மனத்துள் வைவன வென்றார். பறவைகளி னொலிக்கு,மகளிர்காற்சிலம்பொலி ஒப்புமை. கைகேயியை விடமென்றதற்கு ஏற்பக் கேகயத்தரசனைப் பாற்கட லாக்குக. இதனால், இனியபாற்கடலில் நஞ்சு தோன்றியதுபோலச் சிறந்த கேகய குலத்திற் கைகேயி தோன்றின ளென்க. இன்னதொர்கேடு - கணவனை இறக்கும் நிலைக்குக் கொணர்ந்த கொடுஞ்செய்கை. உலகத்திற் பெரும்பழி யைப் படைத்ததன்றி முடிவில் தன்மகன் இராச்சியத்தை யாளுமாறு செய்ய முடியாமற் போனதால், கைகேயியைக் கவி 'கயத்தி' என்றனரென்னலாம். கயமையாவது - ஏற்புடைய குணங்கள் யாவுமிலராய கீழோரது தன்மை.

கயத்தி-பெண்பாற்பெயர். சிலம்புவ, வைவன - பெயர். சிலம்புவனவாகிய புள்ளென்க. போன்ற-வினை. சிலம்பு - ஒலிக்கு, ஆகுபெயர். துன்பஞ் செய்கின்றமையால், விடமென்றார். பி-ம்:—[1]மருங்கின். [2]அன்னவக். [3]மனத்து.

சகூ—யானை துயிலொழிந்து எழுதலின் வருணனை.

சேம மென்பன பற்றி யன்பு திருந்த் வின் றுயில் செய்தபின்
வாம மேகலை மங்கை யோடு வனத்துள் யாரு [1]மறக்கிலா
நாம நம்பி நடக்கு மென்று நடுங்கு கின்ற மனத்தவா
யாமு மிம்ம ணிறத்து மென்பன போலெ ழுந்தன யானையே.

(இ - ள்.) யானை-யானைகள்,—சேமம் என்பன பற்றி - காவல்வீடென்பவைகளைப் பொருந்தி, அன்பு திருந்த - (ஸ்ரீராமனிடத்தில்) நேயம் மிக, இன் துயில் செய்த பின் - இனிய தூக்கத்தைச் செய்த பின்பு, 'வாமம் மேகலை மங்கையோடு-அழகிய இடையணியினையுடைய சீதாபிராட்டியோடு, யார்உம் மறக்கிலா நாமம் நம்பி - ஒருவரும் மறவாத திருநாமத்தையுடைய ஸ்ரீராமபிரான், வனத்துள் நடக்கும் - காட்டிற் செல்வான்,' என்று - என்றெண்ணி,நடுங்குகின்ற மனத்த ஆய்-வருந்துகின்ற நெஞ்சையுடையனவாய், 'யாம்உம்—, இ மண்-இந்நாட்டை, இறத்தும் - விட்டுவிடுவோம்,' என்பன போல் - என்றுசொல்வனபோல, எழுந்தன-கிளம்பின; (எ - று.)

யானைகள் தாம்படுத்திருந்த இடத்தினின்று வெளியே செல்லுமாறு எழுந்ததை, இராமபிரான் நாட்டைவிட்டுக் காட்டுக்குச்செல்லப்போவதனால் நாமும் இவ்விடத்தைவிட்டுச் செல்லுவோமென எழுந்தாற்போல்தோன்றியதென்று வருணித்தார்; இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. சுகுமாரனை இராமபிரான் வனத்திற்குச்செல்வதுகுறித்து விலங்காகிய யானையும் மனம் நடுங்கின வென்க. நடுக்கமென்பது - அன்பும் அச்சமும் முதலாக உடம்பிற் புலப்படுமாற்றான் உள்ளம்நடுங்குதல்: புதல்வர்க்குப் பிணியில்லாப்போதும் எவனுங்கொலென்று நடுங்குதல், அன்பான் நடுங்குதலாம்: அச்சமென்னுஞ் சுவைபிறந்த பின்னர் அதன்வழித்தோன்றிய நடுக்கம்,அச்சத்தாற் றோன்றிய நடுக்கமாம். சேமம் க்ஷேமம்; கட்டுமிடம். வாமம்-அழகு என்னும் பொருளுள்ள தற்சமவடசொல். மேகலை-எண்கோவையணி. தாரகமந்திர வாச்சியனென்பார் 'யாருமறக்கிலாநாம நம்பி' என்றார். நம்பி-'நம்'முதனிலையாக நமக்கின்னானென்னும் பொருள்பட வருவதோருயர்ச்சிச்சொல்; இதனை "எல்லிருள்" என்னுஞ் சிந்தாமணியுட் காண்க. யாமும்-இறந்ததுதழீஇய வெச்சவும்மை. "நினையவாந்தன்மையை நினைந்தமன்னுயிர்க், கெனையவா றன்பின ளிராமனீண்டவர்க், கனையவாறன்பினவவையும்" என்று கீழ்க்கூறினதற்கேற்ப, அஃறிணையாகிய பறவையும் விலங்கும் இரங்கின வென்க.பி-ம்:—[1]மறக்கலா.

### ருo.—வானத்து நட்சத்திரங்கள் மறைதலின் வருணனை.

*சிரித்த பங்க யமொத்த செங்க ணிராம னைத்திரு மாலையக்*
*கரிக்க ரம்பொரு கைத்த லத்துயர் காப்பு நாணணி தற்குமுன்*
*வரித்த தண்கதிர் [1]முத்த தாகியிம் மண்ண னைத்து நிழற்றமேல்*
*விரித்த [2]பந்தர் பிரித்த தாமென மீ[3]னொ ளித்தது வானமே.*

(இ - ள்.) சிரித்த பங்கயம் ஒத்த-மலர்ந்த தாமரைப்பூப்போன்ற, செங் கண் திருமாலை இராமனை - சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய ஸ்ரீராம பிரானது, அ கரி கரம் பொரு கைத்தலத்து - அப்படிப்பட்ட யானையினது துதிக்கையையொத்த கையிலே, உயர் காப்பு நாண் - சிறந்த மங்கலநாணை, அணிதற்கு-கட்டுவதற்காக, முன்-முன்னே, வரித்த தண் கதிர் முத்தது ஆகி-கட்டின குளிர்ந்தகிரணங்களையுடைய முத்துக்களையுடையதாய், இ மண் அனைத்தும் நிழற்ற-இவ்வுலகமுழுதும் நிழலைச்செய்யும்படி, மேல் விரித்த-ஆகாயத்தில் விரியச்செய்த, பந்தர்-பந்தல், பிரித்தது ஆம் என - பிரிக்கப்பட்டாற்போல, வானம்-ஆகாயம், மீன் ஒளித்தது - நட்சத்திரங்களோடு மறைந்தது; (எ - று.)

இந்த உலகம் முழுதையும் மூடிய வானத்தையே பந்தலாகவும், அவ் வானத்துவிளங்கும் நட்சத்திரவரிசைகளை அந்தப்பந்தலில் அலங்காரமாகத் தொங்கவிட்ட முத்துச்சரங்களாகவுங்கொண்டு, உதயகாலத்து அவ்வானத் தினின்று நட்சத்திரங்கள் மறைவதைப் பந்தர்பிரிக்கையில் அலங்காரமாகத் தொங்கவிட்ட முத்துச்சரங்கள் அகற்றப்பட்டனபோலுமென்று குறித்தார்: தற்குறிப்பேற்றவணி. வானம் இரவில்தோன்றுந்தோற்றத்தினும் பகற்பொழுதில் வேறுபட்டுத்தோன்றுதலால் இரவில்தோன்றியவானப்பந்தர் பிரிக்கப் பட்டதெனக் கூறினர்போலும். ஹஸ் என்றவடமொழித்தாதுபோல, 'சிரி' என்றவினைப்பகுதியும் நகைத்தல் மலர்தல்என்ற இருபொருளையுங் காட்டுமென்க; 'நகுதல், நகைத்தல்' என்பனவும் இங்ஙனம்வரும். பட்டாபிஷேகத் திற்கு இடையூறு நேர்ந்தமையால், பந்தல்பிரிக்கப்பட்டதென்க. ஸர்வேசுவரனாதலாலும், சக்கரவர்த்தித் திருமகனாதலாலும் மண்ணனைத்துய்நிழற்றப் பந்தரிட்டார். மலர்ச்சியும், குளிர்ச்சியும், கண்டோரைமகிழ்வித்தலும்பற்றிக் கண்களுக்குத் தாமரைமலர் உபமானமாம். செங்கண்மால் என்றும், தாமரைக் கண்ணன் [புண்டரீகாக்ஷன்] என்றுங் கூறப்படுதலால், 'சிரித்த பங்கயமொத்த செங்கணிராமன்' என்றும், விட்டுணுவி னவதாரமாதலால், 'திருமால்' என்றுங் கூறினர். அக்கைத்தலத்து எனக்கூட்டுக: அகரச்சுட்டு, பிரசித்தியைக் காட்டும். இனி, அகரச்சுட்டினால், சிரித்தபங்கயமொத்த என்பதைக் கைத்தலத்துக்குங் கூட்டலுமாம். கரிகரமென்னும் வடநூன் முடிபு, எதுகைநோக்கி யிரட்டிற்று. கரிகரமென்பது-பூர்வபதமும் உத்தரபதமும் சமானார்த்தகமென்பார்க்கு "வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்," "அடியளந்தான் றாயதெல்லாம்," "கோடாதசெங்கோல்" என்பனபோலக் கேவலபதமாத்திரையாய் நின்றதென்க. கரம்-கை, துதிக்கை; அதனையுடையது-கரி. கரிகரம்-திரட்சியாலும், நீட்சியாலும் உவமம். காப்பு-ரக்ஷாபந்தனம்.

பி-ம்:—[1]முத்தராசி, முத்தமாறி. [2]பந்தறிரைத்தது. [3]ஒளித்தன. (உருஎ)

**௫௧.—காலையில் மணமுரசு ஒலிக்க, மாதரார் எழுதலின் வருணனை.**

*நாம விற்கை யிராம னைத்தொழு நாள டைந்த நமக்கெலாங்*
*காம விற்குடை கங்குன் மாலை கழிந்த தென்பது கற்பியாத்*
*தா[1]மொ லித்தன பேரி யவ்வொலி [2]சாரன் மாரி [3]தழங்கலா*
*மாம யிற்குல மென்ன [4]முன்ன மலர்ந்தெ ழுந்தனர் மாதரே.*

(இ - ள்.) 'நாமம் வில் கை இராமனை - அச்சத்தைத்தருகின்ற கோதண்டத்தையேந்திய புயத்தையுடைய ஸ்ரீராமபிரானை, தொழும் நாள் அடைந்த நமக்கு எலாம் - வணங்கும் நல்லநாளைப்பெற்ற நமக்கெல்லாம், காமன் வில் குடை கங்குல் மாலை - மன்மதனது கருப்புவில் துளைக்கின்ற இராப்பொழுது, கழிந்தது—,' என்பது - என்பதை, கற்பியா - தெரிவித்து, பேரி ஒலித்தன - முரசவாத்தியங்கள் முழங்கின; அ ஒலி - அம்முழக்கம், சாரல் மாரி தழங்கல் ஆ - மலைப்பக்கங்களில்வந்து தங்குகின்ற மேகங்களின் ஒலிபோலாக, மாதர் - (அதனைக் கேட்ட) மகளிர், மா மயில் குலம் என்ன - பெரிய மயில்களினது கூட்டமெழுந்தாற்போல, முன்னம் - (தங் கணவரெழுந்திருப்பதற்கு) முன்பு, மலர்ந்து எழுந்தனர் - முகம்மலரப்பெற்றுத் துயிலொழிந்தெழுந்தார்கள்.

மன்மதனது பஞ்சபாணங்களால் தாக்குண்டு கிடந்த இராப்பொழுதின் முடிவில், 'இராமபிரானை முடிசூடுவிழாவில் தரிசிக்கக்கூடிய நாள் வந்திட்டது' என்றுஉரைப்பதுபோல மங்கலப்பேரொலியொலிக்க, அவ்வொலியைக் கேட்ட மாதரார், மேகத்தின்கருச்சனையைக்கேட்ட மயில்போலமிகமகிழ்ந்து முன்னம் முகமலர்ந்து துயிலொழிந் தெழுந்தன ரென்க. 'நமக்கெலாம்' என்ற இடத்து 'நுமக்கெலாம்' என்று பாடமிருப்பின் நலம். இனி, உடைகங்குலென வினைத்தொகையாய், பிரிந்தவர் காமனதுவில்லிற்குக் கெடுகின்ற கங்குற்பொழுதுமாம். வில்என்பது - இலக்கணையாய், அதுகொண்டு எய்யப்படுகின்ற புஷ்பபாணங்களை யுணர்த்தும். ஆ-ஆக: விகாரம். "மயில்கண்டன்ன மடநடைமகளிர்" எனவும், "மணிமயிற்றொழில்" எனவும், "மயிலெனப் போந்து" எனவும், "நடைமயிலே" எனவும், "மயிலன்னசாயல்" எனவும், "மயிலினமிரியவாங்கோர் மடமயிறழுவிக்கொண்ட வெயிலிளஞ்செல்வன்" எனவும் மயிலை நடைக்குஞ் சாயற்கும் உவமமாக்கலின், மயிலுவமை-நடைக்கும் சாயற்குமென்றுணர்க. பின்றூங்கிமுன்னெழூஉம் பேதையராதலின், 'முன்னமெழுந்தனர்' என்றார். முன்னம்மலர்ந்து - அகமகிழ்ந்து எனினுமாம். மலர்ச்சி - ஸ்ரீராமபட்டாபிஷேகத்தைக்காணும் வேட்கையாலுண்டாயது. தாம் - அசை. பி-ம்:—[1]ஒலித்தது. [2]சார. [3]தழங்கலான், தழங்கலாய், முழங்கலான். [1]உள்ளம். (௨௬௮)

**௫௨.—மந்தமாருதம் வீசுதலின் வருணனை.**

*இனமலர்க்குலம் வாய்[1]வி ரித்தில வாச மாருதம் வீசமுன்*
*புனைது கில்கலை சோர நெஞ்சு புழுங்கி னார்சில பூவைமார்*
*[2]மனம னுக்கம்வி டத்த னித்தனி வள்ள லைப்புணர் கள்ளவன்*
*கனவி னுக்கிடை யூற டக்கம யங்கி னார்சில கன்னிமார்.*

(இ - ள்.) சில பூவைமார் - சிலமகளிர்,—இனம் மலர் குலம்-பலஇனங்களான புட்பங்களின்கூட்டம், வாய் விரித்து - வாய்விட்டுமலர, இள வாசம் மாருதம் - வாசனையையுடைய இளங்காற்று, வீச - வீசுதலினால், முன் - முன்னே, புனை துகில் கலை சோர - அணிந்த சேலையும் மேகலையும் நெகிழ, நெஞ்சு புழுங்கினார் - மனம்வருந்தினார்கள்; சில கன்னிமார் - சிலபெண்கள், மனம் அனுக்கம் விட - நெஞ்சிலுள்ள வருத்தம் நீங்க, தனித்தனி—, வள்ளலை - (தம்) கணவனை, புணர் கள்ளம் வன் கனவினுக்கு-தழுவுகின்ற மிக்க வஞ்சனையையுடைய கனவிற்கு, இடையூறு அடுக்க - தடை பொருந்துதலினால், மயங்கினார் - திகைத்தார்கள்; (எ - று.)

காலையில் மலர்கள்விரிதலையும் இளமாருதம் வீசுதலையும், "மருவிரிந் தொழுகினமாமலரெல்லாம்", "கொழுங்கொடிமுல்லையின் கொழுமலரணவிக்கூர்ந்தது குணதிசைமாருதம் இதுவோ" எனப் பெரியார் அருளிச்செய் திருத்தலும் காண்க. மலர்ந்த பூக்களிற் பட்டு மாருதம் நறுமணமடைந்து வீசுவதனால், அது தம்மீது படப்பெற்றுக் காமோத்திபகமாக, கணவனைப்பிரிந்த மாதரார் அதனால் துகிலும் கலையுஞ் சோர மனம் புழுங்கினாராக, சில மாதரார் தம் மனத்தாற் கருதியிருந்த கணவனைக் கனவினிற் கண்டு புணராநிற்கையில் மந்தமாருதம் தம்மீது படத் துயிலுணர்ந்து தம் கனவுப்புணர்ச்சி இடையூறுபட்டதனால் மனந்திகைத்தனரென்க. வள்ளல் - இராமனெனக் கொள்ளலுமொன்று. இச்செய்யுள் விவாகமாகாத மாதரைக் குறிக்குமென்னலுமாம். இனம் - பலவினக்கூட்டம். விரித்து - விரிக்க; எச்சத்திரிபு. இளமாருதம் - மந்தமாருதம். துகில்கலை - உம்மைத்தொகை; துகிற்கலைபாடமாயின், துகின்மேலணிந்த கலை யென வேற்றுமைத்தொகையாம். பூவை - நாகணவாய்ப்புள்: அதுசொல்லிற்குவமை; அஃது ஈண்டு உவமவாகுபெயர். அனுக்கம் - தொழிற்பெயர்; அனுங்கு - பகுதி. ஒளிக்குந்தன்மையதாதலால் 'கள்ளக்கனவு' என்றும், வருத்தந்தருதலால் 'வன்கனவு' என்றுங் கூறினார். பி - ம்:—[1]விடாது, விடா. [2]மனவனுக்கம்விட, மனமறுக்கமிட. (உ௩௧)

## ௫௩.—குமுதமலர் குவிதலின்வருணனை.

சா[1]ய டங்க நலங்[2]க லந்து [3]தயங்கு [4]தன்குல நன்மையும்
போய டங்க நெடுங்கொ டும்பழி கொண்ட ரும்புகழ் சிந்துமத்
தீய டங்கிய சிந்தை யாள்செயல் கண்டு[5]சீரிய [6]நங்கைமார்
வா[7]ய டங்கின வென்ன வந்து குவிந்த வண்குமு தங்களே.

(இ-ள்.) சாய் அடங்க-(தன்) பெருமை அழியவும், நலம் கலந்து தயங்கு தன் குலம் நன்மைஉம் போய் அடங்க நன்மையோடுபொருந்திவிளங்குகின்ற தனது வமிசத்தினது நன்மையும் சென்றழியவும், நெடு கொடு பழிகொண்டு- பலநாளைக்குஉளதாகிய கொடிய பழியைக் கொண்டு, அரு புகழ் சிந்தும் - (பெறுதற்கு)அரியகீர்த்தியைச் சிதறுகின்ற, அ-அந்த, தீ அடங்கிய சிந்தையாள் - கொடுமைபொருந்திய மனத்தையுடைய கைகேயியினது, செயல்- தீச்செய்கை

யை, கண்டு - பார்த்து,—சீரிய நங்கைமார் - நற்குணங்களையுடைய பெண்களின், வாய்-, அடங்கினஎன்ன - மூடினாற்போல, வண் குமுதங்கள் - வளப்பத்தையுடைய ஆம்பல்மலர்கள், வந்துகுவிந்த - பொருந்திமூடின; (எ - று.)

கணவனைக்கொன்ற காதகியென்று பழிச்சொல்பெற்ற கைகேயியின் தீச்செயலைக்கண்டு 'நமதுவகுப்பைச்சேர்ந்த ஒருத்தி இங்ஙனம் கொடுஞ்செயல் செய்தனளே!' என்று கருதுவதனால் நற்குணமுள்ளமாதரார் நாணங்கொண்டு வாயடங்கிநிற்றல்போல, குமுதங்கள் வாயொடுங்கின வென்றார்: **உவமையணி.** ஒருபெண்பிள்ளை தீச்செயல்புரியின் அது அப்பாலார்க்கெல்லாம் இழிவைத்தருமென்றதை "மாதரார் செயல்கண்டு மைந்தர்முனிற்கவும் நாணினுளென" என முன்னும்கூறினார். சாய் - சாயாஎன்றவடசொல்லின் விகாரம்: சாயல் என்பதன்விகாரமெனக் கொள்வாருமுளர். வந்து - சொல்விழுக்காடாகவந்த அசையுமாம். **பி ம்:—**[1]அலர்த்த. [2]கலங்க. [3]தழங்கு. [4]நன். [5]சிறிய. [6]மங்கைமார். [7]அடங்கியது, அடங்கினர். (௨௪௦)

## ௫௪.—பண்கனிந்தெழுபாடலின் வருணனை.

மொய்ய ராக நிரம்ப [1]வாசை முருங்கு தீயின் முழங்கமேல்
வைய ராவிய மாரன் வாளியும் [2]வானி லாநெடு வாடையு
மெய்ய ராவிட வாவி சோர வெதும்பு மாதர்த [3]மென்செவிப்
பைய ராநுழை கின்ற போன்றன பண்க னிந்தெழு பாடலே.

(இ - ள்.) மொய் அராகம் நிரம்ப-பொருந்திய வேட்கை மிகவும், ஆசை முருங்கு தீயின்மேல் முழங்க-அவா எரிகின்ற நெருப்பினும்மேலாக அதிகரிக்கவும், வை அராவிய மாரன் வாளிஉம்-கூர்மைசெய்யப்பட்ட மன்மதபாணங்களும், வான் நிலா-ஆகாயத்துத்தோன்றுஞ் சந்திரகிரணமும், நெடு வாடைஉம் - நீண்ட வாடைக்காற்றும், மெய் அராவிட - உடலை அறுக்கவும், ஆவி சோர-உயிர்தளர, வெதும்பும்-வாடுகின்ற, மாதர்தம் - மகளிருடைய, மென் செவி-மெல்லிய காதுகளில், பண் கனிந்து எழு பாடல் - இசைமுதிர்ந்து தோன்றுகின்ற பாடல்கள், பை அரா நுழைகின்ற போன்றன - படத்தையுடைய பாம்புகள் உட்புகுவனவற்றை யொத்தன; (எ-று.)

பிரிந்த மாதரார் மாரன்வாளியாலும் நிலாவாலும் வாடையாலும் மெலிந்துநிற்கையில், பண்கனிந்தெழுபாடல் அவர்செவியிற்புகுந்து அவர்களை மிகவும்வருத்திற்று என்க. மேட்டிளமேதிகள் தளைவிடுமாயர்கள் வேய்ங்குழலோசையை, 'பண்கனிந்தெழுபாடல்' என்றனரென்க: இனி இத்தொடர்க்கு - இசைப்பாட்டுடன் பழுத்துத் தோன்றுகின்ற வாய்ப்பாடல் என்று கூறினுமாம். இராமனிடத்துக் காமம் கைம்மிகுதலால், மாதர் இவ்வாறாயின ரென்பாருமுளர். அராகமாவது - பொருள்கண்மேற்றோன்றும் பற்றுள்ளம்; இதனை வேட்கையென்ப. ஆசையாவது - அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழுவது; இதனை அவாவென்ப. அராகம் - ராகம்: வடசொல். நிலாவுமென்னும்எண்ணும்மை, தொக்கது. இனி, வானில் நிலாவுகின்ற வாடையென்றுமாம்; நிலாவுதல் - பரவுதல். வாடை - வடபுறமாக வீசுங்

காற்று எனக்கொண்டு, தென்றற்காற்றென்க. இராமபிரானுக்குப் பட்டங் கட்டவேணுமென்று குறிப்பிட்ட நாள் சைத்திரமாதத்தில் புஷ்யநட்சத்திர மென்று பெறப்படுதலால், இங்ஙனங் கொள்ளுதல் தக்கதாம். "தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்குங்கோகிலத்துக், கன்றிற்கமைக் காழிக்கம்புலிக்கு— நின்றாற்று, மன்னைக்குமாரற் கயர்ந்தாளென்றன்னமே, யென்னைக்குமாரற் கியம்பு" என்னும் வெண்பாவினால், மாரன்வாளி முதலியன துயர்க்கு ஏதுவா மாறுஉணர்க. பி-ம்:—[1]வாசமுருகுதியின். [2]வாணிலா. [3]இன்செவி. (உசக)

ருரு.—மைந்தர் படுக்கையினின்று எழுதலின் வருணனை.

ஆழி யான்முடி சூடு நாளிடை யான பாவி யிதோவிரா
வூழி யா[1]யின வாறெ னாவுயர் போதின் மேலுறை பேதையு
மேழு லோகமு மெண்ட வஞ்செய்த கண்ணு மெங்கண் மனங்களும்
வாழு நாளிது வென்றெ ழுந்தனர் மஞ்சு தோய்புய[2]மஞ்சரே.

(இ - ள்.) 'ஆழியான்-சக்கரதாரனாகிய ஸ்ரீராமன், முடி சூடும் நாள் - பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளும் நாளுக்கு, இடை ஆன-நடுவிலேவந்த, பாவி-பாவியாகிய, இது ஓர் இரா-இந்த ஒரு இராத்திரி, ஊழி ஆயின ஆறு - ஊழிக் காலம்போற் பெரிதாயிருந்தவிதம் (என்ன?),' எனா-என்றுஎண்ணியும், 'உயர் போதின்மேல் உறை பேதைஉம்-சிறந்தபொற்றாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளும், ஏழு லோகம்உம்-ஏழுலோகத்தாருடையவும், எங்கள் - எங்களுடையவும், எண் தவம் செய்த கண்உம் எண்ணத்தக்க[மிக்க] தவத்தைச்செய்த கண்களும், (எண்தவம்செய்த) மனங்கள்உம் - அத்தன்மைய நெஞ்சுகளும், வாழும் நாள்-வாழ்வடையுங்காலம், இது-இஃது,' எனா - என்றுஎண்ணியும், மஞ்சு தோய்-மேகத்தையொத்த [ஈகைத்தன்மையையுடைய], புயம்-தோள்களையுடைய, மஞ்சர் - ஆடவர், எழுந்தனர் - (படுக்கையினின்று) எழுந்திருந்தார்கள்; (எ - று.)

மைந்தர்எழுந்திருக்கையில் இராமபட்டாபிஷேகத்தைக் காண்பதிலுள்ள பெருநசையால் 'பலவூழி ஓரிரவாயிற்றே என்னும்படி நெடிதாகத்தோன்றிய பாவியிரவு ஒழிந்தது' என்று கழித்தஇரவைப்பழித்து, இராமனை முடிசூட்டு கோலத்துடன் காணப்போகின்றோமென்று கருதி அந்நாளைக்கொண்டாடிய வண்ணம் படுக்கையினின்று எழுந்தனரென்க: முடிசூடுநாள் நாளேயென்றும் போது இடையில்வந்து தடுத்தமையால், 'இடையானபாவியிரா'எனப் பழித்தனர்: பழித்தமையால், அம்மைந்தர் இராமுழுதும் துயிலின்றி 'எப்போது பொழுதுவிடியப்போகின்றது?' என்ற கருத்தோடு கிடந்தன ரென்பது தொனிக்கும். உத்தமநாயகனைச் சேர்தல்பற்றி, 'போதின்மேலுறை பேதை வாழும் நாள்'என்றும்,மாந்தர்க்குக் கண்ணும்மனமும்படைத்தமையாற்பெறும் பயன் ஸ்ரீராமசேவையும் வாழ்த்தலுமன்றி வேறில்லையாதலின், 'கண்களும் மனங்களும் வாழுநாள்'என்றுங்கூறினர். போதின்மேலுறை பேதை-இராச் சியலக்ஷ்மி:சீதையெனக்கொண்டு, சீதையும் யாமும் முடிசூட்டுகோலத்துடன்



இராமனைக்கண்டு மனமும் கண்ணும் வாழும்நாளென்றலு மொன்று. 'எண்டவஞ்செய்த' என்னும் அடையை மனத்திற்குங் கூட்டுக. எல்லாவுலகத்தாரும் ஸ்ரீராமபட்டாபிஷேக நிமித்தம் இங்கு வந்திருக்கின்றன ராதலால்'ஏழுலோகமும் கண்ணுமனமும் வாழுநாள்' என்றது: அன்றி லோகமும், கண்ணும், மனமும் வாழுநாளென்றுமாம். தோய்-உவமவாசகம். கைம்மாறு நோக்காமல் தானஞ்செய்தலால், 'மஞ்சுதோய்புயம்' என்றார் மஞ்சர் - மைந்தரென்பதன் போலி. உயர்போது-தாமரைமலர்; புஷ்பங்களில் தாமரை உயர்ந்ததாதலின்; அதனை "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே," "பூவிற்குத்தாமரையே" என்பவற்றானுமுணர்க. பி-ம்:—[1]உயர். [2]மைந்தரே. (உசஉ)

ருசா.—மாதர் படுக்கையினின்று எழுதலின் வருணனை.

ஐயு றுஞ்சுடர் மேனி யானெழில் காண மூளு மவாவினாற்
கொய்யு றுங்குல மாம லர்க்குவை நின்றெ ழுந்தனர் கூர்மைகூர்
நெய்யு றுஞ்சுடர் வேனெடுங்கண் முகிழ்த்து[1]நெஞ்சி னினைப்பொடும்
பொய்யு றங்கு மடந்தை மார்குழல் வண்டு பொம்மென[2]விம்மவே.

(இ - ள்.) கூர்மை கூர் நெய் உறும் சுடர் வேல்-கூர்மைமிகுந்த நெய்தடவிய ஒளியையுடைய வேலாயுதம் போன்ற, நெடு கண் - பெரியகண்களை, முகிழ்த்து-மூடிக்கொண்டு, நெஞ்சில்--, நினைப்பொடுஉம்-(ஸ்ரீராமன்முடிபுனைந்து வீதியில்வலம்வருவதைக்காணவேணுமென்ற கருத்துடன்,பொய்உறங்கு-கள்ளத்துயில் செய்கின்ற,மடந்தைமார்-மகளிர்,—ஐ உறும் சுடர் மேனியான்-வியப்பைத்தருகின்ற ஒளியையுடைய திருமேனியையுடைய ஸ்ரீராமபிரானது, எழில் - அழகை, காண - பார்ப்பதற்கு, மூளும்-மேன்மேலு முண்டாகின்ற, அவாவினால் - ஆசையினால், கொய் உறும் குலம் மா மலர் குவை நின்று-(அப்பொழுது) பறித்த சிறந்த பெரியபுஷ்பங்களினது தொகுதியினாற்செய்த படுக்கையினின்று, குழல் வண்டு - இசைப்பாட்டையுடைய வண்டுகள், பொம்மென விம்ம - பொம்மென்று ஒலியாநிற்க, எழுந்தனர் - எழுந்திருந்தார்கள்.

இராமனது முடிசூட்டுவிபவத்தைக் காண்பதிலுள்ள பேராதரவினால் துயில்வராதிருக்கவும் கண்ணை மூடியவண்ணம்பொய்யுறக்கம் உறங்கும் மாதரார், தாமரை முதலிய விரிந்த மலர்களின் மதுவை யுண்ண வண்டுகள் ரீங்காரஞ்செய்துகொண்டு பறப்பதனால் பொழுது புலர்ந்ததை யுணர்ந்து,இராமனெழிலைக் காண்பதிலுள்ள அவாவினோடு மலர்ப்படுக்கையினின்று எழுந்தன ரென்க. "நாமவிற்கை" என்று தொடங்குஞ் செய்யுள் கணவனுடன் கூடியிருந்த மகளிர் துயிலுணர்ந்தெழுந்ததைத் தெரிவிப்ப தென்றும், இச்செய்யுள் அங்ஙனமில்லாத மகளிரின் துயிலுணர்ச்சியைக் குறிப்பதென்றும் உணர்க. ஐ-வியப்பாகியகுறிப்புணர்த்தும் உரிச்சொல்; "ஐவியப்பாகும்." எழிலாவது - வளர்ந்தமைந்தபருவத்தும் இதுவளர்ந்து மாறியதன்றி இன்னும் வளரு மென்பது போன்றுகாட்டுதல். கொய்யுறும் மலர்-நாண்மலரென்க. இனி, குவை-ஒன்றன்கூட்டமும், குலம்-பலவினீட்டமுமாகவுமாம். குவை-ஆகுபெயர். ஆடவர்க்குத் துன்பத்தைச்செய்தலால், 'வேனெடுங்கண்' என்

றார். குழல்வண்டு-இசைவண்டு: "பாடுவண்டூதும்" என்றார் பிறரும்;"பொன்பால் பொருவும் விரையல்லி புல்லிப் பொலிந்த பொலந்தாது, தன்பாற் றழுவுங் குழல்வண்டு தமிழ்ப்பாட்டிசைக்குந் தாமரையே"என்பர்,கிட்கிந்தாகாண்டத்திலும். பொம்மெனல்-அநுகரண வோசை. பி - ம்:—[1]நெஞ்சு. [2]விம்மும்.

## ருஎ.—ஊடியமகளிர் கூடல்புரியாது பிரிதல்.

ஆட கந்தரு பூண்[1]மு யங்கிட வஞ்சி யஞ்சி [2]யனந்தரா
லேட கம்[3]பொதி தார்[4]பொ ருந்திட யாம பேரி யிசைத்தலாற்
சேட கம்புனை கோதை மங்கையர் சிந்தை யிற்செறி திண்மையா
லூடல் கண்டவர் கூடல் கண்டிலர் நையு மைந்தர்க ளுய்யவே.

(இ-ள்.) சேடகம் புனை கோதை மங்கையர் - சிறப்புப்பொருந்திய மலர் மாலையையணிந்தமகளிர், சிந்தையில் செறி திண்மையால் - மனத்திற்பொருந்திய வலிமையால், ஊடல் கண்டவர் - புலந்தவர்,—(அப்பொழுது), யாமம் பேரி இசைத்தலால் - பொழுதுவிடிந்ததையறிவிக்கின்ற முரசம்ஒலித்தலால், ஆடகம்தரு பூண் முயங்கிட - பொன்னாற்செய்தஆபரணங்கள் அழுந்தவும், வஞ்சி அஞ்சி - வஞ்சிக்கொடிபோன்ற இடை அச்சமடையவும், - ஏடு அகம் பொதி தார்பொருந்திட - புறவிதழ்களும் அகவிதழ்களும் பொருந்திய மாலை பொருந்தவும், நையும் மைந்தர்கள் உய்ய - வருந்துகின்ற ஆடவர் பிழைக்கும்படி, கூடல் - கூடுவதை, அனந்தரால் - மனச்சோர்வோடு, கண்டிலர் - காணவில்லை; (எ - று.)

ஊடல்கொண்ட மகளிர் தாம் கூடுவதற்குமுன்னமே வைகறையையுணர்த்தும்பேரி இசைத்தலால் குறைத்தூக்கத்துடனேயே கணவரைப்பிரிந்து சென்றன ரென்க. அனந்தரால் பேரியிசைத்தலால் என இயைத்து - மந்தவொலியோடு பேரிமுழங்குதலா லென்றலும் ஒன்று: இது, இப்பொருளதாதலை "எடுத்தெறியனந்தற்பறை"என்ற புறநானூற்றிலும் காண்க. வஞ்சியென்றுபிரிக்காமல் அஞ்சியென்றே பிரித்து, பூண்முயங்கிடஅஞ்சியும், தார்பொருந்திடஅஞ்சியும் யாமபேரியிசைத்தலாற் கூடல் கண்டிலரென்றுஉரைப்பாருமுளர்: அஃதுசிறப்பின்மையறிக. சேடகம் - திரட்சி எனக்கொண்டு, சேடகம் புனைகோதை - திரட்சியையுள்ளேகொண்ட மயிர்முடிஎன்றலு முண்டு. ஊடலாவது - தலைமகனுந் தலைமகளும் ஓர்அமளிக்கட்கூடியிருந்துழித் தலைவனிடத்துப்புலத்தற்குக்காரண மில்லையாகவும் காதல்கைம்மிகுதலான் நுண்ணியதோர்காரணமுளதாக உட்கொண்டு அதனை யவன்மேலேற்றித் தலைமகள்புலத்தல்; இருவர்நெஞ்சும் புணர்ச்சி விரும்பாது புலக்கக்கருதியவழி ஒருவரோடொருவர் புலத்தலுமாம். "ஊடுதல் காமத்திற்கின்பமதற்கின்பங், கூடிமுயங்கப்பெறின்" என்றமையின், ஊடலைமுற்கூறினர். இனி, அஞ்சி அஞ்சிஅனந்தரால் நையும் மைந்தர்களெனவுங்கூட்டலாம்.வஞ்சி - உவமவாகுபெயர். அஞ்சி=அஞ்ச: எச்சத்திரிபு. ஏடு - புறவிதழ். அகம் - அகவிதழ்: ஆகுபெயர். யாமபேரி - ஆறனுருபுத்தொகை. ... - டனூன்முடிபு. பி - ம்:— [1]அழுந்திட. [2]அனந்தலால். [3]தரு. [4]பொதிந்திட, பொருந்திடும்.

(உசச)

௫அ.—பலவகையொலிகளின் வருணனை.

தழையொ லித்தன வண்டொ லித்தன தாரொ லித்தன பேரியா
[1]முழவொ லித்தன தேரொ லித்தன முத்[2]தொ லித்தன [3]மல்குபே
ரிழையொ லித்தன புள்ளொ லித்தன யாழொ லித்தன வெங்கணு
மழையொ லித்தன போல்[4]க லித்த மனத்தின் முந்துறு வாசியே.

(இ - ள்.) எங்கண் உம் - எல்லாவிடத்திலும்,—தழை ஒலித்தன-பீலிக் குஞ்சங்கள் விளங்கின; வண்டு ஒலித்தன-வண்டுகள் சப்தித்தன; தார் ஒலித்தன - பூமாலைகள் விளங்கின; பேரிஆம் முழவு ஒலித்தன-பேரிஎன்கிற வாச்சியங்கள் சப்தித்தன; தேர் ஒலித்தன - இரதங்கள் (செல்லுகையிற்) சப்தித்தன; முத்து ஒலித்தன - (ஆங்காங்கு அலங்காரமாகத்தொங்கவிடப்பெற்ற) முத்துமாலைகள் சப்தித்து விளங்கின;மல்கு பேர் இழைஒலித்தன-(ஆடவரும் மகளிரும்)மிகுதியாக அணிந்த சிறந்தஆபரணங்கள் சப்தித்தன;புள் ஒலித்தன-பறவைகள் சப்தித்தன; யாழ் ஒலித்தன - வீணைகள் சப்தித்தன; மனத்தின் முந்து உறு வாசி - மனோவேகத்தினும் மேலாக விரைந்தோடுகின்ற குதிரைகள், மழை ஒலித்தன போல்-மேகங்கள் கர்ச்சித்தனபோல, கலித்த - ஒலித்தன; (எ - று.)

'வினைப்பகுதிகள் வேண்டியபொருளை விளைக்கும்' என்னும் நியாயத்தினாலே, இக்கவியுள் 'ஒலித்தன' என்னுஞ் சொல்லுக்குச் சந்தர்ப்பத்திற்கேற்பப்பொருளுரைக்கப்பட்டது: சொற்பின்வருநிலையணி. தார்-கிண்கிணிமாலையுமாம். பி-ம்:—[1]முழை. [2]ஒலித்தெழும். [3]அல்குலார். [4]ஒலித்த. (உசகூ)

௫கூ.—தீபம் ஒளிமழுங்குதலின் வருணனை.

வைய மேழு மொரேழு மாருயி ரோடு கூட வழங்கு[1]மம்
மெய்யன் வீரருள் [2]வீரன் மாமகன் மேல்[3]வி ளைந்ததொர் காதலா
னைய நைய [4]நலம்பு லன்க ளவிந்த [5]டங்கி நடுங்குவான்
றெய்வ மேனி படைத்த சேயொளி போன்ம ழுங்கின தீபமே.

(இ - ள்.) வையம் ஏழ் உம் ஓர் ஏழ் உம்-உலகமேழுடன் மற்றொரு ஏழுலகங்களையும், ஆர் உயிரோடு கூட-அரியபிராணனுடன்சேர, வழங்கும்-தானஞ் செய்கின்ற, அ மெய்யன்-அப்படிப்பட்ட சத்தியத்தையுடையவனும், வீரருள் வீரன்-வீரர்களுள்வீரனாயிருப்பவனும், மா மகன்மேல் - பெரிய புத்திரனிடத்தில், விளைந்தது-உண்டானதாகிய, ஓர் காதலால் - ஒப்பற்ற விருப்பத்தால், நைய நைய - மிகவும்வருந்த, நல் ஐம் புலன்கள் - சிறந்த ஐந்துபுலன்களும், அவிந்து - அழிந்து, அடங்கி-அமைந்து, நடுங்குவான்-பதறுகின்றவனுமாகிய சக்ரவர்த்தியினது, தெய்வம் மேனி படைத்த - தெய்வத்தன்மையையுடைய உடலில் தோன்றுகின்ற, சேய் ஒளி போல்-செவ்விய காந்திபோல, தீபம் - விளக்குகள், மழுங்கின-(பொழுதுவிடிதலால்) ஒளிகுறைந்தன; (எ - று.)

சக்ரவர்த்தியினது சரீரம் ஒளியிழந்ததுபோலத் தீபங்களும் ஒளியிழந்தனவென்பதாம்: பிரகிருதமாகிய மன்னவன் உடலொளியிழந்திருந்ததையே

வர்ணியமாகிய வைகறையில் விளக்குக்கள் ஒளியிழந்தமைக்கு உவமையாக்கினார். ஒருபொய்கூறுதற்கு நாணி அளவில்லாத அருந்துயரடைந்தமைபற்றி, 'அம்மெய்யன்' என்றார். வீரன் - திண்ணியன். பிறப்புமுறையானும் சிறப்புமுறையானும் முதல்வனாதல்பற்றி, 'மாமகன்' என்றும் சர்வேசுவரனவதாரத்திற்கு ஏதுவாயிருந்தமைபற்றி 'தெய்வமேனி' என்றுங் கூறினார். நைய நைய - அடுக்கு மிகுதிப்பொருளது. பி-ம்:—[1]எம். [2]வீரமாமகன். [3]விளைந்தன. [4]நலன், நலம். [5]அடங்க. (உசகூ)

## கூ௦.—பலவகைப் பாடற்கருவிகளின் ஒலி.

வங்கி யம்பல தேன்வி ளம்பின [1]வாணி [2]முரன்றின [3]பாணியின்
பங்கி யம்[4]பர மெங்கும் விம்மின பம்பை [5]பம்பின பல்வகைப்
பொங்கி யம்பல வுங்க றங்கின நூபு ரங்கள் புலம்பவெண்
சங்கி யம்பின கொம்ப லம்பின சாம கீத [6]நிரம்பவே.

(இ - ள்.) வங்கியம் பல - அநேகமாகிய இசைக்குழல்கள், தேன் விளம்பின-வண்டுகள்போல ஒலித்தன; வாணி-வாழ்த்துச்சொற்கள், முரன்றின-மிகுந்தன; பாணியின் பங்கி-பாட்டுக்களின் வகைகள், அம்பரம் எங்கும் விம்மின-ஆகாயம் முழுவதிலும் ஒலித்தன; பம்பை—, பம்பின-மிக்குஒலித்தன; பல்வகை - பலவகையனவாகிய, பொங்கு இயம் பலவும் - பொலிவுபெறுகின்ற வாச்சியங்கள்அநேகங்களும், கறங்கின-ஒலித்தன; நூபுரங்கள் புலம்ப - காற்சிலம்புகள் ஆரவாரிக்க, வெண் சங்கு இயம்பின-வெள்ளிய சங்கங்கள் (அவற்றிற்கு ஏற்ப) ஒலித்தன; கொம்பு-(ஊதிடு) கொம்புகள், சாமகீதம் நிரம்ப-சாமவேதகானம் போன்ற இசை நிறைய, அலம்பின-ஒலித்தன; (எ - று.)

தேன்விளம்பின-தேனைப்போல இனிமையாக ஒலித்தன வென்றுமாம். தேவாதிதேவனாதலின், அவனது பட்டாபிஷேகத்திற்குத் தேவர்களும் அம்பரத்தில் வாச்சியம் முழக்கினாரென்க; அன்றி, இவ்வுலகத்தில் இயம்பின இயங்களினொலி, அம்பரங்காறுஞ்சென்றுஒலித்தன வென்றுமாம். கொட்டுவன ஊதுவன முதலாகப் பலவகைப்படுதலால் 'பல்வகையியம்' என்றார். பி-ம்:—[1]பாணி. [2]முரன்று. [3]வாணியின். [4]பல. [5]பம்மின. [6]நிரந்தவே. (உசஎ)

## கூக.—சூரியோதயவருணனை.

தூப முற்றிய காரி ருட்பகை துள்ளி யோடிட வுள்ளெழுந்
தீப[1] முற்றவு நீர்த்த கன்றெனச் [2]சேப தாருயிர் [3]தெய்தலாற்
[4]பாப முற்றிய பேதை செய்த பகைத்தி றத்தினில் வெய்யவன்
கோப [5]முற்றி மிகச்சி வந்தன னொத்த னன்[6]குண குன்றிலே.

(இ-ள்.) தூபம் முற்றிய-புகையைப்போல (க்கரியதாகி) முதிர்ந்த, கார் இருள் பகை - கரிய அந்தகாரமாகிய சத்துரு, துள்ளி ஓடிட - குதித்துஓடிப்போகவும், உள் எழும் தீபம் முற்ற உம்-மாளிகைகளினுட்புறத்தே எரிகின்ற விளக்குகளெல்லாம், நீர்த்து அகன்றன-நீர்மை[ஒளி] மழுங்கிடவும்,-வெய்ய

வன் - சூரியன், குணக்கு குன்றில் - உதயபர்வதத்தில், சேயது ஆர் உயிர் தேய்தலால் - (தன்) குலத்திற்பிறந்த புத்திரனாகிய சக்ரவர்த்தியினுடைய அரிய பிராணன் மெலிதலால் [மெலியும்படி], பாபம் முற்றிய பேதை செய்த - தீவினைமுதிர்ந்த கைகேயி பண்ணின, பகை திறத்தினில் - பகைத் தன்மையினால், கோபம் முற்றி - சினம் முதிர்ந்து, மிக—, சிவந்தனன் - சிவப்புநிறத்தையடைந்தவனை, ஒத்தனன்—; (எ - று.)

சூரியன் உதயபருவதத்திற் செந்நிறமாகத்தோன்றியதனைத் தன்குலத் துதித்த தசரதனது உயிரொடுங்குமாறு பாபத்தொழில்புரிந்த கைகேயியின் மீது கோபங்கொண்டான்போல்தோன்றினா னென வருணித்தார்: ஏதுத் தற்குறிப்பேற்றவணி. உதயகாலத்திற் சூரியன் மிக்கசெந்நிறமுடையவனா யிருத்தலும், சூரியனுதிக்கையில் இருள்நீங்கிவிடுதலும், தீபங்கள் ஒளிமழுங் குதலும்இயற்கை. குணகுன்று - உதயகிரி. ஓடிட - செயவெனெச்சம். அகன்றென - செய்தென என்னும் வாய்பாட்டுவினையெச்சம். கீழ் "தெய்வ மேனிபடைத்தசேயொளிபோன்மழுங்கினதீபமே" என்றதற்கேற்ப, "தீப முற்றவுநீர்த்தகன்றெனச்சேயதாருயிர்தேய்தலால்" என்றார். பி-ம்:—[1]முற் றவுதித்தகன்றன, முற்றவு நீத்தகன்றெனச், முற்றவுநீத்தகன்றன. [2]செம் மல். [3]தேயவப். [4]பாவம். [5]உற்று. [6]குணக்குன்றின்மேல். (உ௬அ)

௬௨.—தாமரைமலர் மலர்தலின் வருணனை.

மூவ ராய்முத லாகி [1]மூலம தாகி ஞால மு [2]மாகியத்
[3]தேவ தேவர் பிடித்த போர்வி லொடித்த சேவகர் சேணிலங்
காவன் மாமுடி [4]சூடு பேரெழில் [5]காண லாமெனு மாசைகூர்
பாவை மார்முக மென்ன [6]முன்ன மலர்ந்த பங்கய [7]ராசியே.

(இ - ள்.) மூவர் ஆய் - (அரிஅயன் அரன் என்னும்) மூன்றுமூர்த்திக ளாய், முதல்ஆகி - (அம்மூவர்க்குள்ளும் திருமாலாகிய) முதல்வனாகி, மூல மது ஆகி - (எல்லாவற்றிற்கும்) ஆதிகாரணமுமாய், ஞாலம்உம் ஆகி - ஸக லாண்டசராசரங்களுமாய், அ தேவதேவர் - அந்த இந்திராதிதேவர்களுக்கெல் லாந் தலைவராகிய சிவபெருமான், பிடித்த - (கையிற்) பிடித்த, போர் வில் - போரிற்குரிய வில்லை, ஒடித்த - முறித்(துச் சீதையை மணந்)த, சேவகர் - மஹாவீரனாகிய ஸ்ரீராமபிரான், சேண் நிலம் காவல் - பெரிய இராச்சியத் தைப் பாதுகாத்தற்குரிய, மா முடி - பெரிய கிரீடத்தை, சூடு-சூட்டிக்கொள் கின்ற, பேர் எழில் - மஹோத்ஸவத்தை, காணல்ஆம் - பார்க்கலாம், எனும்- என்கின்ற, ஆசை—, கூர் - மிகுந்த, பாவைமார் - மகளிருடைய, முகம் என்ன - முகங்கள்போல, பங்கயராசி - தாமரைமலர்களின் கூட்டம், முன் னம் மலர்ந்த - விரைவாக மலர்ச்சிபெற்றன; (எ - று.)

தாமரைமலர் மலர்ந்ததற்கு, இராமன் முடிசூடும் பேரழகைக்காண விருப்பங்கொண்டுள்ள மங்கைமார்முகம்மலர்ந்திருத்தலை உவமைகூறினார்: எதிர்நிலையுவமையணி. விபரீதவுவமையெனப் படுவதும் இதுவே. உபமே

யத்தை உபமானமாக்கிக்கூறியமை காண்க. இதனால் மங்கைமார்முகத்துக்கு ஏற்றம் பெறப்படும். மூவரென்னுஞ்சொல், திரிமூர்த்திகளைக் குறிப்பாலுணர்த்திற்று. பிரமாதியரைவிடுவித்துச் சிருஷ்ட்யாதிகளை நிர்வகித்தும் தானுண நிலையிலேநின்று பாலநத்தை நிர்வகித்தும் போருமவனாதலால்,'மூவராய் முதலாகி' என்றார்; "முதலாவார்மூவரேயம்மூவருள்ளும், முதலாவான்மூரிநீர் வண்ணன்"என்றார் பெரியாரும். பி-ம்:—[1]மூலமும். [2]ஆகுமத். [3]தேவர். [4]சூடுமாரெழில், சூடுமாவெழில். [5]காணமூனுமவாவினால். [6]வந்து. [7]வாவியே.(உசக)

சுரு.—கவிக்கூற்று: அயோத்தியிலுள்ளார் இராமாபிஷேகத்தின் பொருட்டுச் செய்தவற்றை ஒருவாறுகூறுவோமெனல்.

இன்ன வேலையி னேழு வேலையு மொத்த போல விரைத்[1]தெழுந்
[2]தன்ன மா[3]நகர் மைந்தன் மாமுடி சூடும் வைக லி[த]ா[4]மெனாத்
துன்னு காத றுரப்ப வந்தவை சொல்ல லாம்வகை யெம்மனோர்க்
குன்ன லாவன வல்ல [5]வென்னினு முற்ற பெற்றி யுணர்த்துவாம்.

(இ - ள்.) இன்ன வேலையின் - இப்படிப்பட்ட சமயத்தில், ஏழு வேலை உம் - ஏழுகடலும், ஒத்த போல-ஒருசேர இரைத்து எழுந்தாற்போல, அன்ன மாநகர் - அந்தப்பெரிய அயோத்தியாநகரத்திலுள்ளவர், 'இது - இந்நாள், மைந்தன் மா முடி சூடும் வைகல் ஆம் - சக்ரவர்த்தித்திருமகன் இராச்சியபட்டாபிஷேகஞ்செய்து கொள்ளுகின்ற நாளாகும்,' எனா - என்றெண்ணி, துன்னு காதல் துரப்ப - பொருந்திய விருப்பந் தூண்டுதலால், இரைத்து எழுந்து - ஆரவாரித்துக்கொண்டு கிளம்பி, வந்தவை - (அவர்கள் செய்து) வந்த விதங்களை, சொல்லல் - சொல்லுதற்கு, ஆம் வகை - உரியவகைகள், எம் அனோர்க்கு - எம்போன்றவர்களுக்கு, உன்னல் ஆவன அல்ல - நினைப்பதற்குத் தக்கவையல்லன: என்னின் உம் - என்றாலும், உற்ற பெற்றி - கூடிய அளவு, உணர்த்துவாம் - சொல்லுவோம்; (எ - று)

எல்லாவுயிர்கட்கும் நன்மகனுதலால், பொதுவாக 'மைந்தன்' என்றும், ஒரு முகத்தையுடைய எம்போலியர்க்கு என்பார், 'எம்மனோர்க்கு' என்றுங் கூறினார். 'உன்னலாவனவு மல்ல' என்னும் இழிவுசிறப்பும்மை. விகாரத்தாற்றொக்கது; எனவே, சொல்லலாவனவல்ல வென்பது கூறாமே பெறப்பட்டது. உணர்த்துவாம் - தன்மைத்தன்மை; ஈண்டு, ஒருவரைக்கூறும் பன்மை. இரைத்தெழுந்தென்பதனை, உவமைக்கும் உவமிக்கப்படும்பொருளுக்குங் கூட்டுக. பி - ம்:—[1]எழும். [2]மன்னன். [3]நிலவேந்தனேய், நகர்வேந்தன்மா. [4]என. [5]ஆயினும். (உ௫௦)

வேறு.

சுச.—இராமபட்டாபிஷேகத்தைக்கருதி மகளிர்தம்மையலங்கரித்தல்.

குஞ்சர மனையார் சிந்தைகொ ளிளையார்
[1]பஞ்சினை பணிவார் பால்வளை தெரிவா
ரஞ்சன மெனவா ளம்புக ளிடையே
[2]நஞ்சினை யிடுவார் நாண்மலர் புனைவார்.

(இ - ள்.) குஞ்சரம் அனையார் - யானையையொத்த பெருந்தன்மையுள்ள ஆடவருடைய, சிந்தை - மனங்களை, கொள் - (தாம்) கவர்கின்ற, இளையார் - இளைய மங்கையர்,—பஞ்சினை செம்பஞ்சுக்குழம்பை, அணிவார் - (கால்களில்) ஊட்டுவார்கள்; பால் வளை தெரிவார் - பால்போலும் வெள்ளிய சங்குவளையல்களை ஆராய்ந்தெடுத்து (கைகளில்) இடுவார்கள்; வாள் அம்புகள் இடையே - வாளும் பாணமும்போற் கொடிய கண்களில், அஞ்சனம் என - மையெனப்பெயர்வைத்து, நஞ்சினை இடுவார் - விஷத்தை இடுவார்கள்; நாள் மலர் புனைவார் - புதியமலர்களைச் (சிரசிற்) சூடுவார்கள்; (எ - று.)

குஞ்சரம்-வடசொல். இளையாரென்றது இலக்கு மிக்குப்பெயராதலால், இளையாரென்பது - பெரும்பாலும் மகளிரையே யுணர்த்தும்; முன்னும் "பந்தினையிளையவர் பயில்இடம்" என்றார். வாள், அம்பு-உவமவாகுபெயர். வாளிற்கும் அம்பிற்கும் விடந்தடவுதல்போலக் கண்களுக்கு மையிட்டாரென்க. வாள் கண்ணுக்கும், அம்பு அதனினின்றுதோன்றும்பார்வைக்கும் உவமையென்னலுமொன்று. பஞ்சணிதல் முதலியவற்றைத் தாமே தமக்குச்செய்து கொள்வார்கள்; ஒருத்தருக்கொருத்தருஞ் செய்வார்களென்க. பி-ம்:—[1]பஞ்சிகள், பஞ்சுகள். [2]நஞ்சுகள். (உருக)

வேறு.

கூரு.—அந்நகரத்தவரின் மகிழ்ச்சி.

பொங்கிய வுவகை வெள்ளம் பொழிதரக் கமலம் பூத்த
சங்கையின் [1]முகத்தார் நம்பி தம்பிய ரனைய ரானார்
செங்[2]கய னறவ மாந்திக் [3]களிப்பெனச் சிவக்குங் கண்ணார்
குங்குமச் சுவடு நீங்காக் குவவுத்தோட் குமர ரெல்லாம்.

(இ - ள்.) பொங்கிய உவகை வெள்ளம் பொழிதர - மிகுந்த ஆநந்தத்தாலுண்டாகிய கண்ணீர்ப்பெருக்குக் கீழ்வழியும்படி, கமலம் பூத்த - தாமரைமலர் போன்ற கண்கள் பொருந்திய, சங்கை இல் முகத்தார் - குற்றமற்ற வதனத்தையுடையவராகிய, செம் கயல் நறவம் மாந்தி களிப்பு என சிவக்கும் கண்ணார் - சிவந்தகெண்டைமீன்கள் மதுவைக்குடித்துக்களிப்படைந்திருந்தால் அவற்றைப்போலச்சிவந்திருக்கின்ற கண்களையுடைய மகளிரது, குங்குமம் சுவடு - (தனங்களிலணிந்த) குங்குமக்குழம்பினது அடையாளம், நீங்கா - நீங்காத, குவவு தோள் - திரட்சியான புயங்களையுடைய, குமரர் எல்லாம் - ஆடவர் அனைவரும், நம்பி தம்பியர் அனையர் ஆனார் - இராமநம்பியினது தம்பிமாரையொத்தவராக ஆனார்கள்; (எ - று.)

மதுவைக்குடித்துக் களித்திருக்குஞ் செங்கயலை, செவ்வரிபரந்து களித்திருக்கும் மாதரார்கண்கட்கு உவமைகூறினார். மகளிரிடத்துள்ள விருப்பால் குங்குமச்சுவட்டைக் குமரர் நீங்காதிருக்கப்பெற்றன ரென்க. கமலக்கண்கட்கு, உவகைவெள்ளத்தைத் தேன்பெருக்கென்னலாம். பருவத்தாற் சிறியவர் தம்பியரை யனையரானார் என்று கூறினார்: இராமாநுஜரைப்போல மகிழ்ச்சி பெற்று

ரென்க. பருவத்தாற் பெரிய ஆடவர் தசரதனையொத்தா ரென்று மேலேகூறுவர். வெள்ளம் என்றதற்கேற்பக் கண்ணீரென்பது வருவித்துரைக்கப்பட்டது. சோகவெள்ளத்தை நீக்குதற்கு, 'உவகைவெள்ளம்' என்றார். சங்கையில்முகம்-நிஷ்களங்கமாகிய மதியுளதேல் அதனை ஒக்கும் முகமென்க. சிவக்கும் கண்ணுதலின், செங்கயலென்றார். பி-ம்:—[1]முகத்தானம்பி. [2]கையின். [3]களிப்பன, சிவணும், களித்தெனச்சிவக்கும். (உருஉ)

ருரு.—அந்தநகரத்தவர் எல்லார்தம்முடையவும் மகிழ்ச்சியின் வருணனை.

மாதர்கள் கற்பின் மிக்கார் [1]கோசலை மனத்தை யொத்தார்
வேதியர் [2]வசிட்ட னொத்தார் வேறுள மகளி ரெல்லாஞ்
சீதையை யொத்தா [3]ரன்ன டிருவினை யொத்தா [4]ளவ்வூர்ச்
[5]சாதுகை மாந்த ரெல்லாந் [6]தயரதன் றன்னை யொத்தார்.

(இ - ள்.) கற்பின் மிக்கார்-கற்பின் மிகுந்தவராகிய, மாதர்கள்—, கோசலை மனத்தை ஒத்தார்—; வேதியர்-அந்தணர், வசிட்டன் ஒத்தார்—; வேறு உள மகளிர் எல்லாம்-வேறாகவுள்ள மாதர்கள் எல்லாம், சீதையை ஒத்தார்—; அன்னாள்-அச்சீதாதேவி, திருவினை-இலக்குமியை, ஒத்தாள்—; அவ் ஊர் சாதுகை மாந்தர் எல்லாம் - அந்நகரத்தில்வசிக்கின்ற சற்குணமாகிய ஒழுக்கத்தையுடைய ஆடவரெல்லாரும், தயரதன் தன்னை ஒத்தார்—; (எ - று.)

அப்போது அந்நகரத்தவர், பெற்றோரையும் புரோகிதனையும் மனைவியையும்போல மகிழ்ந்திருக்க, சீதை இலக்குமியேபோல விளங்கினாளென்க. தயரதன் - தசரதன்: இது - தச ரத எனப்பிரிந்து பத்துத்திக்கிலுஞ் செல்ல வல்ல தேருடையவன் என்று பொருள்படும்; இதனால் எங்குந் தடையின்றிச் செல்ல வல்லவன் என்றதாயிற்று; இது, இந்திரனை வென்ற சம்பராசுரனை வதைக்கும்பொருட்டு அவன்சென்ற இடமெல்லாஞ் சென்றமைபால் விளங்கியது. கற்பாவது, தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்; கற்புக் கற்பனைபாதல் கற்பியலா னுணர்க. வேதியர் - வேதங்களைப் பழுதறக்கற்று அவற்றிற்றந்த அவை சொல்லுகின்ற நெறிக்கண் நிற்பவர். பி-ம்:—[1]கவுசலை. [2]வசிட்டன். [3]அன்னாட்டிருவினையொத்தார். [4]இவ். [5]சாதுலாம், சாதுதை. [6]தசரதன். (உருங)

ருஎ.—பட்டாபிஷேக மகோத்ஸவத்தைக் காண அரசவெள்ளம் திரளுதல்.

இமிழ்திரைப் பரவை ஞால மெங்கணும் வறுமை [1]கூர
வுமிழ்வதொத் [2]துதவு காத [3]லுந்திட வந்த தன்றே
குமிழ்முலைச் சீதை கொண்கன் கோமுடி [4]புனைதல் காண்பா
னமிழ்துணக் [5]குழுவு கின்ற வமரரி னரச வெள்ளம்.

(இ-ள்.) அரசர் வெள்ளம்-ராஜசமூகம்,—குமிழ் முலை சீதை கொண்கன்-புடைத்திருக்கின்ற தனங்களையுடைய சீதைக்குக் கணவனாகிய ஸ்ரீராமன், கோ முடி-அரசிற்குரிய கிரீடத்தை, புனைதல் - சூட்டிக்கொள்ளுதலை, காண்பான்-பார்க்கும்பொருட்டு, உமிழ்வது ஒத்து உதவு காதல் - வெளிப்படுவது போன்று மிகுகின்றவிருப்பம், உந்திட - ஏவித்தூண்டுவதனால், அமிழ்து உணதுழுவுகின்ற-அமிருதத்தையுண்ணுவதற்குக் கூடுகின்ற, அமரரின் - தேவர் போல, இமிழ் திரை பரவை ஞாலம்-ஒலிக்கின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலகம், எங்கண் உம்-எல்லா இடமும், வறுமை கூர-வெறுமையையடையும்படி, வந்தது-(அந்நகரத்தில்) வந்து கூடிற்று; (எ - று.)

பட்டாபிஷேகமகோத்ஸவத்தைக் காணத் திரண்ட அரசர்குழுவுக்கு, அமுதுணத்திரண்ட தேவர்குழுவை உவமைகூறினார்: **உவமையணி.** பரவை-பரவுதலுடையது; ஐ-வினைமுதற்பொருண்மைவிகுதி. வறுமை-ஒருபொருளுமின்மை. பி-ம்:—[1]தீர. [2]உலவு. [3]உயர்ந்திட. [4]அணிதல். [5]குழுமுகின்ற. ()

**௬௮.—ஆடவரும் மகளிரும் செல்ல இடமில்லாமல் வீதியில் திரண்டு நிற்றல்.**

பாகியல் பவளச் செவ்வாய்ப் பணைமுலைப் பரவை யல்குற்
றோகையர் குழாமு மைந்தர் சும்மையும் துவன்றி யெங்கு
மேகுமி னேகு மென்றென் றிடையிடை நிற்ற [1]லல்லாற்
[2]போகில மீள கில்லா பொன்னகர் வீதி யெல்லாம்.

(இ-ள்.) பாகு இயல் பவளம் செம் வாய்-சர்க்கரைப்பாகுபோன்ற இனிமையையும் பவழம்போற் செந்நிறத்தையுங்கொண்ட அதரத்தையும், பணை முலை-பருத்த தனங்களையும், பரவை அல்குல் - பரந்த அல்குலையுமுடைய, தோகையர்-மகளிரது, குழாம்உம்-கூட்டமும், மைந்தர் சும்மைஉம் - ஆடவர் கூட்டமும், பொன்நகர் வீதி எல்லாம்-அவ்வழகியநகரத்தின் தெருக்களிலெல்லாம், எங்கும் துவன்றி-எல்லாவிடங்களிலும் நெருங்கி, 'ஏகுமின் ஏகும்-நடவுங்கள் நடவுங்கள்,' என்று என்று - என்று பலமுறைசொல்லிக்கொண்டு, இடையிடை-தாமிருந்தஇடங்களிலேயே, நிற்றல் அல்லால்-நிற்பதல்லாமல், போகில-செல்லவுமில்லை; மீளகில்லா - (போகவேணுமென்றஎண்ணத்தை) ஒழிந்தனவுமில்லை; (எ - று.)

பாகியல் என்பதைப் பவளத்தோடு இயைப்பின், பாகியல்பவளச்செவ்வாய்என்றதொடர்-இல்பொருளுவமையாம். "பவளம்போற்செந்துவர்வாய்" என்றார்பிறரும். பி-ம்:—[1]ஆற்றார். [2]போகுநர் மீளலாகா, போகலர் மீள்கலில்லர், போகொணாமீள்கலாகாப். (௨௫௫)

**௬௯.—பெருந்திரளின் காட்சி.**

வேந்தரே பெரிதென் பாரும் [1]வீரரே பெரிதென் பாரு
மாந்தரே பெரிதென் பாரு மகளிரே பெரிதென் பாரும்

போந்ததே பெரிதென் பாரும் [2]புகுவதே பெரிதென் பாருந்
தேர்ந்ததே [3]தேரி னல்லால் [4]யாவரே [5]தெரியக் கண்டார்.

(இ-ள்.) வேந்தர் ஏ பெரிது என்பார்உம்-அரசர்கூட்டமே மிகுதியென்பவரும்.வீரர் ஏ பெரிது என்பார்உம்-அந்தணர்கூட்டமே மிகுதியென்பவரும், மாந்தர் ஏ பெரிது என்பார்உம்-ஆடவர்கூட்டமே மிகுதி யென்பவரும்,மகளிர் ஏ பெரிது என்பார்உம் - மாதர்கூட்டமே மிகுதியென்பவரும், போந்ததுஏ பெரிதுஎன்பார்உம் - வந்தஜநமே மிகுதியென்பவரும், புகுவதுஏ பெரிது என்பார்உம் - வரக்கடவ ஜநமே மிகுதியென்பவரும் (ஆகி), தேர்ந்தது ஏ தேரின் அல்லால்-தாம்அறிந்ததையே அறிந்ததல்லாமல், யாவர்ஏ-எவர்தாம், தெரிய கண்டார்-(முழுவதும்)நன்றாயறிந்தவர்? [ஒருவருமில்லை யென்றபடி].

தாம் கண்டதைச் சொல்வதல்லாமல் தெரியக்கண்டு எவராலும் சொல்ல முடியாதபடி வேந்தர் முதலியோரின் பெருந்திரள் திரண்டிருந்த தென்க. வேந்தர் முதலியநான்கும்-ஆகுபெயர்கள். "அந்தணர்க்கரசுவரைவின்றே" என்றதனால்,வீரரென்றார்; "விரிமலர்க்கோதைபாட வெழால்வகைவீரர்தோற்றார்" என்றார் சிந்தாமணியினும். இனி, படைவீரருமாம். பி-ம்:—[1]வேதியர். [2]புக்கதே. [3]தேர்வதல்லால். [4]யாவரோ. [5]தெரியவல்லார். (உகசு)

## எ௦.—மகளிர் நெருங்குதலின் வருணனை.

குவளையி னெழிலும் வேலின் கொடுமையுங் குழைத்து[1]க் கூட்டித்
திவளுமஞ் சனமென் றேய்ந்த நஞ்சினைத் தெரியத் தீட்டித்
தவளவொண் [2]மதியுள் வைத்த தன்மை[3]சா றடங்க ணல்லார்
துவளுநுண் ணிடையா ராடுந் [4]தோகையங் குழாத்திற் றொக்கார்.

(இ-ள்.) குவளையின் எழில்உம் கருங்குவளையினது அழகையும்,வேலின் கொடுமைஉம்-வேலினது கொடுந்தன்மையையும், குழைத்து கூட்டி - ஒன்றாய்க் கலந்துசேர்த்து, (அவற்றில்), திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த நஞ்சினை - மெல்லிய மையென்றுபெயர்கூறப்பட்டுப் பொருந்திய விஷத்தை, தெரிய தீட்டி-விளங்கப்பூசி, (அவற்றை), தவளம் ஒள் மதியுள்-வெண்மையாகிய ஒண்மையையுடைய சந்திரனிடத்தில், வைத்த தன்மை சால் வைத்தாற்போன்ற தன்மைமிகுந்த, தட கண்-பெரியகண்களையுடைய, நல்லார்-அழகியவரும், துவளும் நுண் இடையார்-ஒசிகின்ற மெல்லிய இடையினையுடையவருமாகிய மகளிர், ஆடும் தோகை அம் குழாத்தின் - நர்த்தநஞ்செய்கின்ற அழகிய மயிற்கூட்டம்போல, தொக்கார்-கூடிநெருங்கினார்; (எ - று.)

முகத்திற் கண்கள் - குவளையினெழிலும் வேலின்கொடுமையும் கூட்டி அஞ்சனநஞ்சினைத்தீட்டி மதியுள் வைத்தனபோலு மென்றார்: இல்பொருளுவமை. இது—தன்மைத்தற்குறிப்பேற்றவணியி லடங்கும். அஞ்சனநஞ்சு - உருவகம். ஒண்மை-ஒளி. பூர்ணசந்திர னென்பார் 'தவளவொண்மதி' என்றார். அம் - சாரியையுமாம். பி-ம்:—[1]தீட்டி. [2]மதியின். [3]சார்தடங்கண். [4]தோகையின், (உகஎ)

௭௧.—முடிசூட்டுவிழாவைக் காண வாராதவர் இவரேனல்.

*நலங்கிளர் [1]பூமி யென்னு நங்கையை நறுந்து ழாயி*
*னலங்கலான் புணருஞ் செல்வங் [2]காணவந் தடைந்தி லாதா*
*ரிலங்கையி னிருத ரேயிவ் வே[3]ழுல கத்து வாழும்*
*[4]விலங்கலு [5]மாசை நின்ற விடாமத விலங்க லேயால்.*

(இ - ள்.) நறு துழாயின் அலங்கலான்-மணக்கின்ற திருத்துழாய்மாலையையுடைய ஸ்ரீராமன், நலம் கிளர் பூமி என்னும் நங்கையை-நன்மைவிளங்குகின்ற பூமியென்னும் பிராட்டியை, புணரும் - கூடுகின்ற, செல்வம் - பாக்கியத்தை, காண - பார்த்தற்கு, வந்து அடைந்திலாதார் - வந்துசேராதவர்,— இலங்கையில் நிருதர் ஏ - இலங்காபுரத்திலுள்ள ராக்ஷசர்களும், இ ஏழ் உலகத்து வாழும் விலங்கல்உம் - இந்தஏழுதீவுகளாகவுள்ள உலகத்திருக்கின்ற மலைகளும், ஆசை நின்ற - எட்டுத்திக்குக்களிலும்நின்ற, விடா மதம் விலங்கல் (உம்) ஏ-நீங்காத மதத்தையுடைய அஷ்டகஜங்களுமேயாகும்; (எ-று.)— ஆல் - ஈற்றசை.

பல தேசத்தவரும் பட்டாபிஷேகமகோத்ஸவத்தைக் காணத் திரண்டனரென்பதை வற்புறுத்தும்பொருட்டு, அத்திருவிழாவைக்காண வாராதவர் நிருதர் முதலிய சிலரேயென்றார். அரக்கர் பகைமையாலும், மலைகள் அசைதலில்லாத நிலைமையாலும், திக்கஜங்கள் பூமியைச்சுமப்பதைவிட்டு விலகிவரக்கூடாமையாலும் வரவில்லை யென்க. இருதிணையுங்கலந்து சிறப்பினால் 'அடைந்திலாதார்' என்னும் உயர்திணைமுடிபைப் பெற்றன. விலங்கல்-திரியக்குமாம். விலங்கல் - யானைக்கு உவமவாகுபெயர். பி - ம்:—[1]பூமேல்வைகும்,பூவென்றேங்கும். [2]காணியவந்திலாதார். [3]உலகத்திலுள்ள. [4]விலங்கலே. [5]ஆசைநின்று, மரமுமாதி வேறுளபொருள்களெல்லாம். (உ௫அ)

௭௨.—வந்த மன்னவர் மௌலிசூட்டும் மண்டபத்திற் புகுதல்.

*சந்திரர் கோடி யென்னத் தரளவெண் கவிகை யோங்க*
*வந்தரத் தன்ன மெல்லா[1]மார்ந்தெனக் கவரி துன்ன*
*[2]விந்திரற் குவமை சாலு மிருநிலக் கிழவ ரெல்லாம்*
*வந்தனர் [3]மௌலி சூட்டு [4]மண்டப மதனிற் புக்கார்.*

(இ - ள்.) இந்திரற்கு உவமை சாலும்-(ஒவ்வொருவருந் தனித் தனியே) தேவேந்திரனுக்கு உபமானமாகத்தக்க, இரு நிலம் கிழவர் எல்லாம் - பெரிய அரசுரிமையையுடைய அரசர்கள் யாவரும்,—சந்திரர் கோடி என்ன-சந்திரர் பலரென்னும்படி, தரளம் வெண் கவிகை ஓங்க - முத்தாலாகிய வெள்ளிய குடைகள் உயர்ந்துவிளங்கவும்,—அந்தரத்து-ஆகாயத்தில்,அன்னம் எல்லாம்-ஹம்ஸங்களனைத்தும், ஆர்ந்த என - நிறைந்தன என்னும்படி, கவரி துன்ன-வெண்சாமரை நெருங்கவும், வந்தனர் - வந்தவர்களாய், மௌலி சூட்டும் மண்டபம் அதனில் - பட்டாபிஷேகமண்டபத்தில், புக்கார் - சென்றார்; (எ - று.)

மன்னவர் குடைநிழற்றவும் வெண்சாமரைவீசவும் திருவிழாக்காண வந்து மண்டபத்தில் முறைப்படி புகுந்தன ரென்க. ஆர்ந்துஎனப்பிரிப்பினு மாம். போகங்களிலிந்திரனுக்கு மேம்பட்டவ ரென்பார் 'இந்திரற்குஉவமை சாலுங் கிழவர்' என்றார். பி - ம்.—[1]ஆர்த்தென்ன, ஆர்த்தென. [2]இந்திரக்கு. [3]மவுலிசூடும். [4]மண்டபத்தரிதிற், மண்டபமரபிற். (உருகூ)

**எக.—அம்மண்டபத்துத் திருவிழாக்காண அந்தணர் வந்துசேர்தல்.**

> முற்பயந் தெடுத்த காதற் புதல்வனை முறையி னோடு
> மிற்பயன் [1] சிறப்பிப் பாரி னீண்டிய வுவகை தூண்ட
> வற்புதன் றிருவைச் சேரு மருமணங் காணப் புக்கார்
> நற்பயன் றவத்தி னுய்க்கு [2]நான்மறைக் கிழவ ரெல்லாம்.

(இ - ள்.) தவத்தின்-தவத்தினால், நல் பயன் உய்க்கும்-நல்ல பயன்களை யடைகின்ற, நால் மறை கிழவர் எல்லாம்-நான்குவேதங்களுக்குரிய அந்தணர் யாவரும்,—முன் பயந்து எடுத்த காதல் புதல்வனை - முன்னே தாம் பெற்று வளர்த்த விருப்பத்தையுடைய (தம்) புத்திரனை, முறையினோடும் - முறைமையுடன், இல் பயன் சிறப்பிப்பாரின்-மணஞ் செய்விப்பவர்போல, ஈண்டிய உவகை தூண்ட-மிக்க மகிழ்ச்சி யேவுதலால், அற்புதன்-ஸ்ரீராமன், திருவை சேரும் - ராஜ்யலக்ஷ்மியை அடைகின்ற, அரு மணம் - பெறுதற்கரிய கல்யாணத்தை, காண - பார்த்தற்கு, புக்கார் - சென்றடைந்தார்கள்; (எ - று.)

தூண்டப் புக்கார்என்க. அந்தணர் தமதுபுத்திரனுக்கு மணஞ்செய்விக்கையில் எவ்வளவு உவகையடைவரோ அவ்வளவு உவகையுடனே முடிசூட்டு திருவிழாவைக்காண அம்மண்டபத்தைச் சேர்ந்தாரென்க. இற்பயன் - இல்லிலிருக்கும்பயன்: இல்லிலிருத்தற்குப்பயன் விருந்தோம்புதல் முதலியன ஆதலால், அதற்குஉரியவராம்படி மணப்பித்தலை 'இற்பயன்' என்றார். முற்பயந்தெடுத்த காதற்புதல்வன்-மூத்தகுமார னென்னவுமாம். பி-ம்:—[1]சிறப்பப். [2]நான்மறைப்புலவர். (உகூ0)

**எச.—இதுவும் அடுத்தகவியும் - அங்குத்திரண்டோரினால்நிகழ்ந்த நிகழ்ச்சியின் வருணனை.**

> விண்ணவர் விசும்பு [1]தூர்த்தார் விரிதிரை யுடுத்த கோல
> மண்ணவர் திசைக [1]டூர்த்தார் மங்கல விசைக்குஞ் சங்கங்
> கண்ணகன் முரசி னோதை [2]கண்டவர் செவிக டூர்த்த
> வெண்ணருங் கனக மாரி யெழுதிரைக் [3]கடலுந் தூர்த்த.

(இ-ள்.)(அந்த முடிசூட்டுதிருவிழாவைக் காணுமாறு வந்த),விண்ணவர்-தேவர், விசும்பு தூர்த்தார் - ஆகாயத்தை நிரப்பினார்; விரி திரை உடுத்த கோலம் மண்ணவர்-கடலை(ஆடையாக)உடுத்த அழகிய பூலோகத்திலுள்ளவர், திசைகள் தூர்த்தார் - (எட்டுத்) திக்குக்களையும் நிரப்பினார்; மங்கலம் இசைக்

கும் சங்கம்-மங்களகரமாக ஒலிக்கின்ற சங்கங்களின் ஒலியும், கண் அகல் முரசின் ஓதை - பெரிய முரசுவாத்தியங்களின் ஒலியும், கண்டவர் செவிகள் தூர்த்த - கேட்டவர்காதுகளை நிரப்பின; எண் அரு கனகம் மாரி - அளவில்லாத சுவர்ணத்தோடு(தானஞ்செய்யுங் காலத்தில் வார்க்கின்ற)நீர்மழை, எழு திரை கடல்உம் - அலைகளையுடைய ஏழுகடல்களையும், தூர்த்த - நிரம்பின.

கேள்வியும் உணரப்படுதலிற் காட்சியேயாம்; ஆதலால் 'கண்டவர் செவிகள்' என்றார்; "நம்பிதந்தகீதமேநயந்துகாணவோடினார்" என்றார் சிந்தாமணியிலும். கனகமாரி - பொன்மழையுமாம். விரிதிரை - கடலுக்கு, வினைத்தொகையன்மொழி. எழுதிரை - வினைத்தொகையுமாம். பி-ம்: —[1]தூர்த்து. [2]கேட்டவர். [3]கடல்கடூர்த்த. (௨௬௧)

௭௫. விளக்கொளி மறைத்த மன்னர் மின்னொளி மகுட கோடி
துளக்கொளி விசும்பி னூருஞ் சுடரையு [1]மறைத்துச் சூழ்ந்த
வளக்கர்[2]வாழ் முத்த மூரன் முறுவலா [3]ரணியின் சோதி
[4]வளைக்கலா மென்றவ் வானோர் கண்ணையு [5]மறைத்ததன்றே.

(இ - ள்.) விளக்கு ஒளி மறைத்த - (தமது உடம்பின்ஒளியால்) தீபத்தினொளியை மறையச்செய்த [தீபத்தினும் மிக்க ஒளியுடன் விளங்குகின்ற], மன்னர் - அரசரது, மின் ஒளி மகுடம் கோடி - மின்னுப்போன்ற காந்தியையுடைய பலவாகிய கிரீடங்கள், துளக்கு ஒளி - செய்கின்ற ஒளி, விசும்பின் ஊரும் சுடரைஉம்-ஆகாயத்திற் செல்கின்ற சூரியனையும், மறைத்து சூழ்ந்த-மறைத்தன; அளக்கர் வாழ் - கடலிற்றோன்றிய, முத்தம் - முத்துப்போன்ற, மூரல் முறுவலார் - பற்களையும் புன்னகையையு முடைய மகளிர் அணிந்த, அணியின்-ஆபரணங்களின், சோதி - காந்தி, வளைக்கல் ஆம் என்று-(இந்நிலவுலகத்தைவளைத்த நாம் மேலுலகத்தையும்) சூழ்தல்கூடுமென்று எண்ணி, அ வானோர் கண்ணைஉம் - அத்தேவர்களது (இமையாத) கண்களையும், மறைத்தது - (ஒளியின்மிகுதியால்) இமைக்கச்செய்தது; (எ - று.)

மகுடகோடி சுடரை மறைத்தலாவது - மகுடகோடிகள் சூரியனினும் மிக்கஒளியையுடையனவாதல். கோடி - பலவென்னு மாத்திரையாயிற்று. ஊர்தல் - ஈண்டுப்போதன்மேற்று; "வானூர்மதியம்," "மஞ்ஞையூர்ந்துநின்றமால்" என்பவற்றிற்போல. அன்று-ஏ-ஈற்றசைகள். பி-ம்: —[1]மறைத்த, மறைத்துஞ். [2]வாய். [3]அணியும். [4]வளைத்தலாவொன்றி, வளைத்தெலாமொன்றி, வளைதலாமன்றி. [5]மறைத்த. (௨௬௨)

## ௭௬.—வசிட்டன் வேதியரோடு அங்கு வந்துசேர்தல்.

ஆயதோ [1]ரமைதி யின்க ணையனை மகுடஞ் சூட்டற்
கேயுமங் கலங்க ளான யாவையு மியையக் கொண்டு
தூயநான் மறைகள் வேத பாரகர் சொல்லத் தொல்லை
[2]வாயில்க [3]ணெருக்க [4]நீங்க [5]மாதவக் கிழவன் வந்தான்.

(இ-ள்.) ஆயது ஓர் அமைதியின் கண்-அப்பொழுது,—ஐயனை மகுடம் சூட்டற்கு - ஸ்ரீராமனை முடிசூட்டுவதற்கு, ஏயும் - பொருந்திய, மங்கலங்கள் ஆன யாவைஉம் - சுபகரங்களாகிய எல்லாவற்றையும், இயைய கொண்டு - பொருந்த எடுத்துக்கொண்டு,—வேதபாரகர்-அந்தணர், தூய நால் மறைகள்-பரிசுத்தமாகிய நான்கு வேதங்களையும்,சொல்ல-சொல்லிக்கொண்டிருக்கவும், தொல்லை வாயில்கள் நெருக்கம் நீங்க - பழையவாயிலிலுள்ளவர் நெருக்கத்தை நீங்கி விலகி வழிவிடவும்,மாதவம் கிழவன்-மிக்கதவத்துரிமையையுடைய வசிஷ்டன், வந்தான் - எழுந்தருளினன்; (எ - று.)

தன் சீடர்களோடு வசிட்டன் வந்தானென்று முதனூல் கூறும். பாரம்-அக்கரை,'முடிவு:இங்கு வேதாந்தம்;அதனையறிந்தவர்-வேதபாரகர். தொல்லை வாயில் என்றதனால், வாயில் முதியதாயினும் நெருக்கம் புதிய தென்க. பி - ம்:—[1]அளவையின்கண். [2]வாயல்கள். [3]நெருக்கி. [4]நீக்கி, போக்கி. [5]மாதவற்கரசன். (உசுரு)

## எஎ.—வசிட்டமுனிவன் பட்டாபிஷேகச்சடங்கிற்குச் சித்தஞ்செய்து வைத்தல்.

கங்கையே [1]முதல வாகக் கன்னியீ [2]றானதீர்த்த
மங்கலப் புனலு நாலு வாரியி னீரும் பூரித்
[3]தங்கியின் வினையிற் கேற்ற [4]யாவையு [5]மமைத்து வீரச்
சிங்க[6]வா தனமும் வைத்துச் செய்வன பிறவுஞ் [7]செய்தான்.

(இ - ள்.) (வந்த அம்முனிவன்),—கங்கை ஏ முதல ஆக-கங்காநதி முதலாக, கன்னி ஈறு ஆன - குமரியாறுஇறுதியாக வுடையவாய், தீர்த்தம்-புண்ணிய தீர்த்தங்களினது, மங்கலம் புனல்உம்-மங்களகரமான நீரையும், நாலு வாரியின் நீர்உம் - நான்குகடல்களின் நீரையும், பூரித்து - (கும்பங்களில்) நிறைத்துவைத்து, அங்கியின் வினையிற்கு - அக்கினியிற் செய்யவேண்டும் ஓமம் முதலியவற்றிற்கு, ஏற்ற யாவைஉம் - பொருந்திய எல்லாவற்றையும், அமைத்து - அமையப்பண்ணி, வீரம் சிங்கஆதனம்உம்-வீரஸிம்ஹாஸநத்தையும், வைத்து—, செய்வன பிறஉம் - செய்யவேண்டியபிறகாரியங்களையும், செய்தான் - சித்தஞ்செய்தான்; (எ - று.)

அங்கி - அக்நி யென்னும் வடமொழிச்சிதைவு. வீரச்சிங்கவாதனம் - வீரன் வீற்றிருத்தற்குரிய சிங்காதனம். 'பிறவும்' என்றதனானே, அட்சதை தருப்பம் சுமங்கலிகள் யானை குதிரை அத்திமரத்தாற்செய்தபீடம் முதலிய பட்டாபிஷேகத்திற்குவேண்டிய சாமக்கிரிகளைக் கொள்க. பி-ம்:—[1]முதலாயுள்ள, முதலவான, முதலவாய. [2]ஆய. [3]அங்கிசெய், அங்கவை, இங்கிவை. [4]வியாவையும். [5]புரிந்து. [6]ஆசனமும். [7]செய்தார். (உசுச)

## எஅ.—சுமந்திரன் வசிட்டன்கட்டளையால் மன்னவனை யழைத்துவரச் செல்லுதல்.

கணிதநா லுணர்ந்த [1]மாந்தர் காலம்வந் [2]தடுத்த தென்னப்
பிணியற நோற்று நின்ற பெரியவன் விரைவி [3]னேகி
மணிமுடி வேந்தன் றன்னை வல்லையிற் கொணர்தி யென்னப்
பணிதலை [4]நின்ற காதற் சுமந்திரன் பரிவிற் சென்றான்.

(இ - ள்.) கணிதம் நூல் உணர்ந்த மாந்தர் - சோதிடநூலை யறிந்தவர், 'காலம் வந்து அடுத்தது-முகூர்த்தகாலம் வந்து சமீபித்தது,' என்ன-என்று தெரிவித்ததனால், பிணி அற நோற்று நின்ற பெரியவன் - பந்தம் நீங்கும்படி தவஞ் செய்துநின்ற வசிஷ்டபகவான், 'விரைவின் ஏகி - வேகத்தோடு சென்று, மணி முடி வேந்தன் தன்னை - ரத்நகிரீடத்தையுடைய சக்ரவர்த்தியை, வல்லையின் கொணர்தி-விரைவே அழைத்துக்கொண்டுவா', என்ன - என்று கட்டளையிட,—பணி தலைநின்ற - (அம்முனிவனுடைய) ஆணையைத் தலைமேற்கொண்டுநின்ற, காதல் சுமந்திரன் - விருப்பத்தையுடைய சுமந்திரன், பரிவின் சென்றான் - அன்போடு போயினான்; (எ - று.)

அரசமாளிகையின் வாசற்றிண்ணையில் உட்கார்ந்திருந்த வசிட்ட முனிவன் அலங்காரஞ்செய்துகொண்டு அபிஷேகவுத்ஸவத்தின்பொருட்டு வந்த சுமந்திரனைக்கண்டு, 'சுமந்திரனே! பட்டாபிஷேகத்திற்குவேண்டியனவெல்லாஞ் சித்தமாக வைத்துக்கொண்டு நான் காத்திருப்பதைச் சொல்லிச் சூரியோதயத்திற் புஷ்யநட்சத்திரத்திற் பட்டாபிஷேகம்நடக்குமாறு மன்னவனை விரைவுப்படுத்துக' என்று சொல்லியனுப்பினனென்று முதனூலிற் கூறப்பட்டுள்ளது. காலம் வந்தடுத்ததென்றது, காலங் கழிக்குமதன்றென்றவாறு. பிரமவிருடியென்பார் 'பெரியவன்' என்றார். பி - ம்:—[1]மாக்கள். [2]உற்றது. [3]எய்தி. [4]நின்று. (உ௬௫)

எ௬.—சுமந்திரன் கைகேயியின் அந்தப்புரத்துஅரசனிருப்பது உணர்ந்துஅங்குச்செல்ல, கைகேயி சுமந்திரனிடத்து இராமனை யழைத்துவரச்சொல்லுதல்.

விண்டொட நிவந்த கோயில் வேந்தர்தம் வேந்தன் றன்னைக்
கண்டிலன் [1]வினவக் கேட்டான் [2]கைகயி கோயி னண்ணித்
தொண்டை வாய் மடந்தைமாரிற் சொல்ல [3]மற் றவருஞ் சொல்லப்
பெண்டிரிற் கூற்ற மன்னாள் பிள்ளையைக் கொணர்க வென்றாள்.

(இ - ள்.) (சென்ற சுமந்திரன்), விண் தொட நிவந்த - ஆகாயத்தை யளாவும்படி யுயர்ந்த, கோயில் - அரண்மனையில், வேந்தர்தம் வேந்தன் தன்னை - சக்ரவர்த்தியை, கண்டிலன் - காணாதவனாய், வினவ - (அங்குஉள்ளாரை) விசாரிக்க, கேட்டான் - (அங்கிருப்பவர்கள் சொல்லக்) கேட்டு, கைகயி கோயில் நண்ணி - கைகேயியினது மனையைச் சமீபித்து, தொண்டை வாய் மடந்தைமாரின் சொல்ல - தொண்டைக்கனிபோலும் வாயினையுடைய தாதியரிடத்தில் (தன்வருகையைத்) தெரிவிக்க, அவர்உம் - அத்தாதியரும், சொல்ல - (கைகேயிக்கு) அறிவிக்க,—பெண்டிரில் கூற்றம் அன்னாள்-பெண்களுள் யமனையொத்த அக்கைகேயி, 'பிள்ளையை - இராமனை, கொணர்க - அழைத்துக்கொண்டு வருவாயாக,' என்றாள் - என்று (சுமந்திரனை நோக்கிக்) கூறினாள்; (எ - று.)

விண்டொடநிவந்தகோயில்-தொடர்புயர்வுநவிற்சியணி. வசிட்டமுனிவனது கட்டளைப்படிசென்ற சுமந்திரன் அந்தப்புரத்து எவராலும் தடுக்கப்படாமல் அரசனைத் துதித்தவண்ணஞ்சென்று, தசரதனது துரவஸ்தையை

யறியாதவனும் அம்மன்னவனை இனியமொழிகளாற் பலவகையாக வாழ்த்திப் புகழ்ந்து எழுப்ப, அவ்வரசர்க்கரசன் தலையெடுத்துப்பார்த்து 'சுமந்திரனே! மிகவும்வருந்தியுள்ள என்னைத் துதிமொழிகளால் மீளவும்வருத்துகின்றனை' என்றானாக, வாடிய மன்னவனது முகத்தைப்பார்த்தும் கருணமான அச் சொல்லைக்கேட்டும் மனம்நடுங்கிச் சுமந்திரன் ஒதுங்கிநிற்கையில், கைகேயி அச்சுமந்திரனைநோக்கி மன்னவர் ராமாபிஷேகசந்தோஷத்தால் இரவெல்லாம் உறக்கம்பிடியாதிருந்து இப்போது கண்ணயர்ந்திருக்கின்றார்: நீ விரைவிற் சென்று இராமனையழைத்துவருக: சுபமுண்டாகுக' என்று சொன்னாள். சுமந்திரன் கைகேயியின்பேச்சைக் கேட்டு, மங்கலமே மற்றொன்றுமில்லை யென்றுமகிழ்ந்தான் என்று முதனூலி லுள்ளது. தன்கணவனைக் கொல்ல வழிதேடினவளாதலின் 'பெண்டிரிற்கூற்றமன்னாள்' என்றார். பி - ம்:—[1]வினவி. [2]கைகயை, கைகயற். [3]வந்தவரும். (உகசு)

அ௦—சுமந்திரன் கைகேயியின் கட்டளைப்படி யழைத்துவர ஸ்ரீராமனை அடைதல்.

என்றன ளென்னக் கேட்டா னெழுந்தபே ருவகை பொங்கப்
பொன்றிணி மாட வீதி பொருக்கென [1]நீங்கிப் புக்கான்
றன்றிரு வுள்ளத் துள்ளே தன்னையே நினையு மற்றக்
[2]குன்றிவர் தோளி னானைத் தொழுதுவாய் புதைத்துக் கூறும்.

(இ - ள்.) என்றனள் - என்று அவள் சொன்னாள்; என்ன - என்று சொல்ல, (சுமந்திரன்), கேட்டான் - கேட்டு, எழுந்த பேர் உவகை பொங்க- உண்டாகிய மிக்க மகிழ்ச்சி மேன்மேலும் வளர்தலால், பொன் திணி மாடம் வீதி-பொன்மயமான மண்டபங்களையுடைய வீதிகளை, பொருக்கென நீங்கி - விரைவாகக்கடந்து, புக்கான் - போய்,—தன் திருஉள்ளத்துள்ளே - தனது அழகிய மனத்திற்குள்ளே, தன்னை நினையும் - தன்னையேநினைந்துகொண்டிருக்கின்ற, அ குன்று இவர் தோளினானை - மலையையொத்த புயங்களை யுடைய அந்த ஸ்ரீராமனை, தொழுது—, வாய்புதைத்து - வாயை மூடிக் கொண்டு, கூறும் - (பின்வருமாறு) சொல்லலானான்; (எ - று.)

பட்டாபிஷேகத்தின்பொருட்டே கைகேயி தன்அந்தப்புரத்துக்கு இராமனைவரவழைப்பதாகக் கருதியிருந்ததனால், சுமந்திரனது மனத்தில் உவகை பொங்குவதாயிற்று. தான் கொண்ட மானுடவேடத்திற்கு ஏற்பப் பட்டினி கிடந்து ஸ்ரீமந்நாராயணனைத்தியானித்துநிற்றலின், 'தன்றிருவுள்ளத்துள்ளே தன்னையே நினையுமக் குன்றிவர்தோளினான்' என்றது: இனி, தன்னையே நினைதல் - தனதவதாரத்தின் காரணத்தையும், அதற்குச் செய்யவேண்டிய தொழில்களையும் நினைத்தலுமாம். பொருக்கென - விரைவுக்குறிப்புமொழி. வாய்புதைத்தல் - வணக்கமிகுதியால். மற்று - அசை. பி - ம்:—[1]நீக்கி, நெருக்கி. [2]குன்றனை. (உகஎ)

அ௧.—சுமந்திரன் இராமனிடத்துக் கைகேயிசொல்லைத் தெரிவித்து, மகுடஞ்சூடவிரைவில் வருக எனல்.

கொற்றவர் [1]முனிவர் மற்றுங் குவலயத் [2]துள்ளா ருன்னைப்
பெற்றவன் றன்னைப் போலப் பெரும்[3]பரி வியற்றி நின்றார்
சிற்றவை [4]தானு மாங்கே கொணர்கெனச் செப்பி னாள்[5]அப்
பொற்றட மகுடஞ் [6]சூடப் போதுதி விரைவி னென்றான்.

(இ - ள்.) 'கொற்றவர்-அரசரும், முனிவர்-இருடியரும், மற்றுஉம்-பின்னும், குவலயத்து உள்ளார்-பூமண்டலத்தி லுள்ளவர்களும், உன்னை பெற்றவன் தன்னை போல-உன்னைப்பெற்ற சக்ரவர்த்தியைப்போல, பெரு பரிவு - (உன்பக்கல்) மிக்கஅன்பை, இயற்றி நின்றார் - செய்து நின்றார்; சிறு அவை தான்உம்-சிறியதாயாகிய கைகேயியும், ஆங்கே-அவ்விடத்தில் [தன்மாளிகையில்], கொணர்க-(இராமனை) அழைத்துக்கொண்டு வருவாயாக, என-என்று, செப்பினாள்-சொன்னாள்; (ஆதலால்),அ பொன் தட மகுடம் சூட-சுவர்ணமயமான பெரிய அம்முடியைச் சூட்டிக்கொள்ள, விரைவின் போதுதி - சீக்கிரமாக வருவாயாக,' என்றான்-என்றுகூறினான், (சுமந்திரன்); (எ - று.)

"ஏழையரனைவரு மிவர்தடமுலைதோய், கேழ்கிளர்மதுகையர் கிளைகளுமினையார், வாழியவெனவவர் மனனுறுகடவுட், டாழ்குவர்கௌசலை தயரதனெனவே," "அவ்வூர்ச், சாதுகைமாந்தரெல்லாந் தயரதன்றன்னையொத்தார்," "முற்பயந்தெடுத்தகாதற் புதல்வனை முறையினோடு, மிற்பயன்சிறப்பிப்பாரி னீண்டியவுவகைதூண்ட" என்றவற்றை நோக்கி, 'உன்னைப்பெற்றவன் றன்னைப்போலப் பெரும்பரிவியற்றிநின்றார்' என்றார். சிற்றவை - சிற்றவ்வை; அவ்வை-தாய். பி-ம்:—[1]முனிவோர். [2]உள்ளோர். [3]பரிசு. [4]விரைவின். [5]செம். [6]சூட்ட. (௨௬அ)

அ௨.—இராமன் தேரிலேறிச்செல்லுதல்.

ஐயனு மச்சொற் கேளா வாயிர மௌலி யானைக்
கைதொழு [1]தரச வெள்ளங் கடலென[2]த் தொடர்ந்து சுற்றத்
தெய்வகீ தங்கள் பாடத் [3]தேவரு மகிழ்ந்து வாழ்த்தத்
தையலா ரிரைத்து நோக்கத் தாரணி தேரிற் [4]சென்றான்.

(இ - ள்.) ஐயன்உம்-ஸ்ரீராமனும்,-அ சொல் கேளா-அவ்வார்த்தையைக் கேட்டு,—ஆயிரம் மௌலியானை-ஆயிரந்திருமுடிகளையுடைய திருமாலை, கைதொழுது-அஞ்சலிசெய்து, (பின்), அரசவெள்ளம் - அரசர்கூட்டம், கடல் என-கடல்போல, தொடர்ந்து-பின்றொடர்ந்து, சுற்ற-சூழவும், தேவர்-தேவலோகத்தவர், தெய்வம் கீதங்கள் பாடஉம்-தேவர்கட்குரிய ராகத்தைப் பாடவும், மகிழ்ந்து வாழ்த்த - களித்து ஆசீர்வதிக்கவும், தையலார் இரைத்து நோக்க -மகளிர் இரைந்துகொண்டு வந்துபார்க்கவும், தார் அணி தேரில் - மாலைகளைக்கட்டிய தேரின்மேல், சென்றான்—; (எ - று.)

விரைவிற்புறப்படவேணுமென்று சுமந்திரன்சொல்லியதனால் தமதுகுல தெய்வமான ஸ்ரீரங்கநாதனைத் தொழுதுவிட்டு ஸ்ரீராமன் புறப்பட்டன னென்க. 'தெய்வகீதங்கள்பாடி' என்று பாடமிருப்பின், நலம். ஆயிரமௌலி யென்றது-திருக்கண், திருக்கை, திருவடிகளுக்கும் உபலக்ஷணம். தார் பொன் னரிமாலையும், கொடியுமாம். பி-ம்:—[1]அரசர். [2]வந்து. [3]தேவர்கள். [4]போனான்.

அ௬.—"தையலாரிரைத்துநோக்க" எனக் கீழ்க்கவியிற் கூறியதனை இதுமுதல் நான்குகவிகளால் விவரிக்கின்றார்.

திருமணி மகுடஞ் சூடச் சேவகன் செல்கின் றானென்
றொருவரி னொருவர் [1]முந்திக் காதலொ டுவகை யுந்த
விருகையு [2]மிரைத்து மொய்த்தா ரின்னுயிர் யார்க்கு மொன்றாய்ப்
பொருவருந் தேரிற் செல்லப் புறத்திடைக் கண்டார் போல்வார்.

(இ-ள்.) (அம்மகளிர்),—'சேவகன்-ஸ்ரீராமன், திரு மணி மகுடம் சூட-அழகிய ரத்நகிரீடத்தைச் சூட்டிக்கொள்ளுதற்கு, செல்கின்றான்—,' என்று-, காதலொடு உவகை உந்த-விருப்பமும் மகிழ்ச்சியும் தூண்டுதலால், இன் உயிர்-இனியஉயிர், யார்க்குஉம் ஒன்றுஆய் - எல்லார்க்குமொன்றாகி, புறத்திடை - வெளியில், பொருவு அரு தேரின் செல்ல - ஒப்பில்லாத இரதத்திற்போக, கண்டார் (அதனைப்) பார்த்தவரை, போல்வார்-போன்றவராய்,—ஒருவரின் ஒருவர் முந்தி - ஒருவரினும் ஒருவர் முற்பட்டு, இரு கைஉம் - (அவ்விராம னது) இரண்டுபக்கங்களிலும், இரைத்து-(சந்தோஷத்தினால்) பேராரவாரஞ் செய்துகொண்டு, மொய்த்தார்-நெருங்கினார்; (எ - று.)

மகளிர் தம்முயிரெல்லாமொன்றாகி வெளியே தேரின்மீது ஸ்ரீராமவடிவம் படைத்துச்செல்வதைப் பார்ப்பவரை யொத்து, அப்பிரானைக் காணவேணு மென்னும்ஆசையும் காணப்போகின்றோமென்பதைக் கருதுவதனாலாகியஉவ கையும் தூண்ட,ஒருவரினும்ஒருவர்முந்தி இரைத்தவண்ணம் இராமனது இரு மருங்கிலும் நெருங்கினரென்க. மகளிர் தம்முயிர்போல இராமனைக்கருதியி ருந்தனரென்பது, பின்னிரண்டடிகளிற் பெறப்படும். இருகையும் இரைத்து என்பதற்கு - தமது இரண்டுகைகளையுந் தட்டிக்கொண்டு என்று கூறினரு முளர். பி-ம்:—[1]முந்த. [2]நிரைத்து. (உ௭0)

அ௪. துண்ணெனுஞ் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து தூய
மண்ணெனுந் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல்
பண்ணெனுஞ் சொல்லி னார்தந் தோளெனும் பணைத்த வேயுங்
கண்ணெனுங் கால வேலு மிடைநெடுங் கானம் புக்கான்.

(இ-ள்.) துண் எனும் சொல்லாள் சொல்ல -'அஞ்சத்தக்க சொல்லினை யுடைய கைகேயி சொல்லுதலால், வள்ளல்-ஸ்ரீராமன், சுடர் முடி துறந்து-ஒளிபொருந்திய மகுடஞ்சூடுதலைத் தவிர்ந்து,தூய மண் எனும் திருவை நீங்கி-

தூய்மையையுடைய பூமியென்னும் மனைவியைப் பிரிந்து, வழிக்கொள்ளாமுன்னம் - பயணப்படுதற்கு முன்னமே,—பண் எனும் சொல்லினார்தம் - இசைப்பாட்டென்று சொல்லத்தக்க சொல்லினையுடைய அம்மகளிரது, தோள் எனும் - தோள்களாகிய, பணைத்த வேய்உம் - பருத்த மூங்கில்களும், கண் எனும் கால வேல்உம் - (அவர்) கண்களாகிய (கொடுந்தன்மையால்) யமனையொத்த வேல்களும், மிடை-(இருபுறமும்) நெருங்கிய, நெடு கானம்-பெருங்காட்டில், புக்கான் - போனான்; (எ - று.)

கைகேசிசொல்லால் இராமபிரான் இனிக் கானகம்போகப்போகிறானாதலால், அதற்குமுன்னமே வேயும்வேலும் மிடைந்த கானிற் சென்றானென்றார். இங்ஙனம் மேல்வருவதனை முன்னமே நிகழ்ந்ததாக வருணனையிற்கூறுதலை "சேவகன் சீறாமுன்னஞ் சேதுவுந் தெரிந்தமாதோ" எனச் சுந்தரகாண்டத்துங் காணலாம். 'கானம்' என்றசொல் காடுஎன்பதுபோலவே மிகுதியென்னும் பொருளையுங் காட்டும். கண்ணெனும்வேல் மிடை கானம்— சிலேடையோடு சேர்ந்துவந்த உருவகவணி; "ஆருயிர்கவருங்கூர்நுதிக்கண்ணெனுங்காலவேல்" என்றார், எழுச்சிப்படலத்தும். வேல் - மரத்திற்கும், படைக்கும் சிலேடை. ஸ்ரீதேவி பூதேவியென்னும் இருவருள் ஒருத்தியாதலால், நிலமகளை 'தூயமண்ணெனுந்திரு' என்றும், பரதனுக்கு அரசுகொடுப்பதைநோக்கி இராமனை 'வள்ளல்' என்றுங் கூறினார்.　　　(உஎக)

அ௫. சுண்ணமு மலருஞ் சாந்துங் கனகமுந் தூவ வந்து
வண்ணமே கலையு நாணும் வளைகளுஞ் [1]சிந்த வாரும்　　　[கை
புண்[2]ணுற வனங்கன் வாளி [3]புழைத்த[4]தம் புணர்மென் கொங்
கண்ணுறப் பொழிந்த [5]காம வெம்புனல் கழுவு வாரும்.

அ௬. அங்கண னவனி காத்தற் காமிவ னென்ன லாமோ
நங்கணான் பிலனென் றுள்ளந் தள்ளுற நடுங்கி நைவார்
செங்கணுங் கரிய கோல மேனியுந் தேரு மாகி　　　[பார்.
யெங்கணுந் [6]தோன்று கின்றா [7]னெனைவரோ விராம [8]னென்

இவையிரண்டும் - ஒருதொடர்: ஒருங்கே பொருளுரைக்கப்படும்.

(இ - ள்.) (அ௫) (அம்மகளிர்), சுண்ணம்உம் - கந்தப்பொடியையும், மலர்உம் - புஷ்பத்தையும், சாந்துஉம் - சந்தனத்தையும், கனகம்உம்-, தூவ வந்து—, வண்ணம் மேகலை உம் - அழகிய மேகலாபரணங்களையும், நாண் உம் - வெட்கத்தையும், வளைகள்உம் - கை வளையல்களையும், சிந்துவார்உம் - சிந்துபவரும்,—அனங்கன் வாளி - மன்மதபாணம், புண்உற - விரணமுண்டாகும்படி, புழைத்த - துளைத்த, தம் புணர் மெல் கொங்கை - தமது நெருங்கிய மெல்லிய தனங்களை, கண் - கண்களினின்றும், உற - மிகுதியாக, பொழிந்த - வழிந்த, காமம் - காமநோயாலுண்டாகிய, வெம் புனல் - வெப்பமானநீரினால், கழுவுவார்உம் - கழுவுகின்றவர்களுமாகி,—(அ௬) 'நம் கண்

அன்பு இலன் - நம்மிடத்து அன்பில்லாதவனாகிய, இவன் - இவ்விராமன், அவனி காத்தற்கு ஆம் - பூமியைக்காத்தற்குப் பொருந்திய, அம் கணன்-அழகிய [அருளுடைய] கண்களையுடையவன்,' என்னல் ஆம் ஓ என்றுசொல்லுதல் பொருந்துமோ? [பொருந்தாது], என்று - என்று எண்ணி, உள்ளம் தள்ளுற - மனந் தடுமாறுதலால், நடுங்கி-(உடல்) நடுங்கி, நைவார்-தளர்வார்; செம் கண் உம் - சிவந்தகண்களும், கரிய கோலம் மேனிஉம் - கறுத்த அழகிய திருமேனியும், தேர்உம் ஆகி - இரதமுமாகப்பொருந்தி, எங்கண்உம் - எல்லாவிடத்தும், தோன்றுகின்றார் - தெரிகின்றவர், எனைவர்ஓ இராமன் - இராமனென்பவர் எத்தனைபேரோ?' என்பார் - என்றுசொல்வார்; (எ - று.)

சுண்ணம்முதலியவற்றைத் தூவவந்தவர், ஸ்ரீராமனைக்கண்டவளவிற் காமங்கைம்மிகுதலால், மேகலைசோர நாண்துறந்து உடல்மெலிந்து வளைகளைச்சிந்திக் கண்களினின்றுந் தாரைதாரையாய் நீர்பொழிய நின்றனராகி, 'மெல்லியராகிய நம்மிடத்து மனமிரங்கி யருள்புரியாத இவன் அவனிகாப்பதற்குத் தக்கவன் என்பது எப்படி?' என்று மனந்தடுமாறி நடுங்கி, உருவெளித்தோற்றத்தால் இராமன் எங்குந் தோன்றக் கண்டு 'செங்கண்ணும் கரியமேனியுமாகித் தேர்களில் இராமன் எங்குந் தோன்றுகின்றானே; இராமன் என்பார் எத்தனைபேருண்டோ?' என்று வாய்பிதற்றலானார்களென்பதாம். செங்கணுங் கரியகோலமேனியும்—முரண்டொடை. புழைத்த - புழையென்னும் பெயரடியாகப்பிறந்த பெயரெச்சம். எனைவர் என்பது, (எவ்விடங்களிலுந் தோன்றுகின்றவருள்) இராமன் எவரோ என ஒருவரைக்கூறும் பன்மையாகவுமாம். பி-ம்:—[1]தூவுவாரும். [2]உறு. [3]புதைத்த. [4]புண். [5]காமங்கனற்றரக் கலுழுவாரும். [6]தோன்றுகின்றான். [7]எனையரோ, எவரோ, [8]என்பான். "அங்கணன்" என்றுதொடங்கும் பாடல்முன்னும், "சுண்ணமும்" என்றுதொடங்கும்பாடல் அதன்பின்னுமாகச் சிலபிரதிகளி லுள்ளன. (உஎரு)

அஎ.—கவிக்கூற்று: அயோத்திமாநகரத்திலுள்ள முனிவர் முதலியோர் ஸ்ரீராமனது திருமேனியைக்கண்டு கூறியதைக் கூறுவோமெனல்.

[1]இனையராய் மகளி ரெல்லா மிரைத்தனர் நிரைத்து [2]மொய்த்தார்
முனைவரு நகர மூதூர் [3]முதிஞரு மிளைஞர் தாமு
மனையவன் மேனி கண்டா ரன்பினுக் கெல்லை காணார்
[4]நினைவினர் மனத்தால் வாயா னிகழ்ந்தது [5]நிகழ்த்த லுற்றாம்.

(இ - ள்.) மகளிர் எல்லாம்-மாதரனைவரும், இனையர் ஆய்-இத்தன்மையராகி, இரைத்தனர்-ஒலித்துக்கொண்டு, நிரைத்து-கூட்டமாகி, மொய்த்தார் - நெருங்கினர்; முனைவர்உம்-முனிவரும், நகரம் முதுஊர் முதிஞர்உம்-அயோத்திமாநகரமாகிய பழையவூரிலுள்ள மூத்தவரும், இளைஞர்தாம் உம் - சிறியவரும், அனையவன் - ஸ்ரீராமனது, மேனி-திருமேனியை, கண்டார்-பார்த்தவராகி, அன்பினுக்கு-(அக்காட்சியாலுண்டாகிய)விருப்பத்திற்கு,எல்லை காணார்-அளவையறியாதவராய், - மனத்தால் நினைவினர் - நெஞ்சினால்நினைத்தவர்க

ளாய், வாயால் நிகழ்ந்தது-வாயினாற்கூறியதை, நிகழ்த்தல்உற்றும்-சொல்லத் தொடங்குவோம்; (எ - று.)—அவற்றை, மேல் பதினொருகவிகளிற் காண்க.

முதலடியால், கீழ்க்கூறியபொருளைத் தொகுத்து, பின் மூன்றுமடிக ளால் மேல்விரித்துரைக்கும் பொருளைக் காட்டுகின்றன ரென்க. முன்னோரை முனைவரென்பது ஓர்சொல்விழுக்காடாம், முன்னென்பதனை முனையென்ப வாகலின்; இது இப்பொருட்டாதலை "வினையினீங்கி விளங்கியவறிவின், முனை வன்கண்டது முதனூலாகும்" என்ற விடத்தும் காண்க: ஆகவே, முனைவர் - சிறந்தவராகிய முனிவரை யுணர்த்திற் றென்க. மூதூர் என்றதனால், ஊர் முதியதாயினும், இத்தகைய விழவு புதிய தென்க. சிந்தையும் சொல்லும் ஒரு நிகர்ப்பட்டவரென்பார் 'நினைவினர் மனத்தால் வாயாணிகழ்ந்தது' என் றார். நிகழ்ந்தது=நிகழ்த்தியது: அந்தர்பாவித ணிச்என்பர், வடநூலார். பி-ம்:—[1]இனையரா, இனையன. [2]மொய்க்க, மொய்ப்ப. [3]முதியரும். [4]நினைவன, நினைவினால். [5]நிகழ்த்துவாம்யாம்.　　　(௨௪௪)

அ௮.—இதுமுதற் பதினொருகவிகள் - ஒருதொடர்; முனைவர் முதலியோர் கூறியவற்றைத் தெரிவிக்கும்.

உய்ந்ததிவ் வுலக மென்ப ரூழிகாண் கிற்பா யென்பார்
மைந்தநீ கோடி யெங்கள் வாழ்க்கைநாள் [1]யாவு மென்பா
ரைந்தவித் தரிதிற் செய்த தவமுனக் காக வென்பார்
பைந்[2]துழாய்த் [3]தெரிய லாய்க்கே நல்வினை பயக்க வென்பார்.

(இ - ள்.) (அவர்), இ உலகம் உய்ந்தது என்பார்-'இவ்வுலகம் பிழைத் தீடேறிற்று' என்பவரும்,—ஊழி காண்கிற்பாய் என்பார் - 'யுகமுடிவையும் (இவ்வுலகிலிருந்து) பார்ப்பாயாக' என்பவரும்,—'மைந்த - வீரனே! எங்கள் வாழ்க்கை நாள் யாஉம் - எங்களுடைய வாழுங்காலம் [ஆயுள்] எல்லாவற் றையும், நீ கோடி - நீ (உன்னுடையனவாகக்) கொள்வாயாக,' என்பார் - என்பவரும்,—'ஐந்து அவித்து - (புலன்களிற்செல்கின்ற அவா) ஐந்தினையும் அடக்கி, அரிதின் செய்த-அருமையாக(யாம்)செய்த, தவம்-தவத்தின் பயன், உனக்கு ஆக - உனக்குச்சித்தியாகுக,' என்பார்-என்பவரும்,—'பைந் துழாய் தெரியலாய்க்கு ஏ - பசியதிருத்துழாய்மாலையணிந்த உனக்கே, நல் வினை பயக்க-புண்ணியம் பயன் தருவதாகுக,' என்பார் - என்பவரும்,—(எ - று.)

ஊழிகாண்கிற்பாய் என்பதற்கு-யுகமுடிவுகாறும் இவ்வுலகில்தானே வா ழ்ந்திருப்பாயென்றும், நீகோடியெங்கள் வாழ்க்கைநாள்யாவும் என்பதற்கு-எங் களுடைய ஆயுள்முழுவதையுங் கூடினால் எவ்வளவோ அவ்வளவுகாலம் வாழ் வாயாக என்பதுங்கருத்து. ஐந்துமென்னு முற்றும்மை, விகாரத்தாற்றொக்கது. தவம் உனக்காக என்னுமிடத்து-உனக்குத் தவங் கைகூடுக என்னும் பொரு ளுந் தோன்றுதல் காண்க. பி-ம்:—[1]பலவும். [2]துணர். [3]தெரியலாற்கே.　(௨௪௫)

௮௯. உயரரு ளொண்க [1]ணொக்குந் தாமரை நிறத்தை யொக்கும்
[2]புயல்பொழி மேக மென்ன புண்ணியஞ் [3]செய்த வென்பார்
[4]செயலருந் தவங்கள் செய்திச் செம்மலைத் தந்த [5]செல்வத்
தயரதற் கென்ன கைம்மா றுடையம்[6]யாந் தக்க தென்பார்.

(இ - ள்.) 'உயர் அருள்-மிக்ககருணையையுடைய, ஒள்-ஒண்மையாகிய, கண்-(ஸ்ரீராமனது)திருக்கண்களை,ஒக்கும் போன்ற,தாமரை-தாமரைமலரும், நிறத்தை ஒக்கும்-(அப்பிரானது) நிறத்தைப்போன்ற, புயல் பொழி மேகம் - நீரைப்பெய்கின்ற கார்மேகமும், என்ன புண்ணியம் செய்த-என்ன நல்வினை செய்தன?' என்பார் - என்பவரும்,—'செயல் அரு தவங்கள் செய்து - (பிறரால்) செய்தற்கரிய தவங்களைச்செய்து, இ செம்மலை தந்த - இவ்விராமனைப் பெற்று (இவ்வுலகத்துக்கு)க்கொடுத்த, செல்வம் தயரதற்கு - பாக்கியத்தை யுடைய சக்ரவர்த்திக்கு, யாம்—, தக்கது - (அவர்செய்தநன்றிக்குத்) தகுந்ததாகிய, கைம்மாறு - பிரதியுபகாரம், என்ன உடையம் - என்ன உடைத்தாயிருக்கின்றோம்?' என்பார் - என்பவரும்,—(எ - று.)

உபமானப்பொருளாகிய தாமரையையும் மேகத்தையும் இராமபிரானின் திருக்கண்கட்கும் திருமேனிநிறத்துக்கும் உபமேயமாக்கிக்கூறியது - **எதிர்நிலையணி.** புயல்மொழிமேக மென்ன புண்ணியஞ்செய்தது - "மேகங்களோவுரையீர் திருமால்திருமேனியொக்கும், யோகங்க ளுங்களுக்கவ்வாறு பெற்றீருயிரளிப்பான், மாகங்களெல்லாந் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்த, மாகங்கள்நோவ வருத்துந் தவமாமருள் பெற்றதே" என்பது, நம்மாழ்வார் பாசுரம். புயல் - நீருக்கு, இலக்கணை. பி-ம்:—[1]ஏய்க்குந். [2]புயலணி. [3]செய்தது. [4]செயறரும். [5]தெய்வத். [6]நாநதக்க. இச்செய்யுள் சிலபிரதிகளில் "நீலமாமுகிலனன்" (௯௧) என்ற பாடலுக்குப் பின் உள்ளது. (உ௭௯)

௯௦. வாரண மரற்ற வந்து [1] கராவுயிர் மாற்று நேமி
நாரண [2]ணொக்கு மிந்த நம்பிதன் [3]கருணை யென்பா
ராரண மறித றேற்றா வையனை [4]யணுகி நோக்கிக்
காரண மின்றி யேயுங் கண்கணீர் கலுழ நிற்பார்.

(இ-ள்.) 'இந்த நம்பிதன் கருணை-இவ்விராமபிரானது திருவருள், வாரணம் அரற்ற - கஜேந்திரன் (ஆதிமூலமேஎன்றுகூவி) அழைக்க, வந்து - (உடனே அங்கு) ஓடிவந்துதோன்றி, கரா உயிர் மாற்றும்-முதலையினதுஉயிரைப் போக்கின, நேமி-சக்கரத்தையுடைய, நாரணன் (கருணை)-ஸ்ரீமந்நாராயணனது திருவருளை, ஒக்கும்-,'என்பார்-என்பவர்களும்,—ஆரணம் அறிதல் தேற்றா-வேதங்களாலும் (இனையனென்று) அறிதல்கூடாத,ஐயனை - ஸ்ரீராமனை,அணுகி-சமீபித்து,நோக்கி-பார்த்து, காரணம் இன்றிஏஉம்-எதுவில்லாமலும், கண்கள் நீர் கலுழ - கண்கள் நீரைச்சிந்தும்படி, நிற்பார்-நிற்பவரும்,

பலவிடத்தும் ஸ்ரீராமபிரானை வாரணமழைக்கவந்து உதவியவனென்று பாராட்டிக்கூறுவர். இராமனைக் கண்டமாத்திரத்தில் அவர்கட்கு உவகைக் கண்ணீர் பெருகிற்றென்க. நாரணன் - திருமால்: நாராயணன் என்பதன் சிதைவு; நாரம்=பிரளயப் பெருங்கடனீர்; அதனை இருப்பிடமாகக் கொண்டவன்: எல்லாமழிந்தபோதும் மிகுந்திருக்குங் காரணக்கடவுளென்பது கருத்து. சகலநற்குணங்களுமுடையவ னென்றும், சகல ஆத்மாக்களுக்கும் உள்ளத் திருப்பவனும் இடமாயிருப்பவனுமென்றும், நித்யவஸ்துக்களினுடைய திரளுக்கு ஆஶ்ரயமாயிருப்பவ னென்றும், அவற்றை ஆஶ்ரயமாகவுடையவ னென்றும் இவ்வாறு பலபொருள்களும் சாஸ்திரங்களிற் சொல்லப்படும். நீர்-ஆநந்தபாஷ்பம். பி - ம்:—[1]கராங்கொலமடுத்த, மகரங்கோள்விடுத்த. [2]ஒக்குமேயிங். [3]கருணைக்கு. [4]அணுக நோக்கிக், அணுகி நோக்காக். (உளஎ)

கூக. நீலமா [1]முகில னன்ற [2]னிறைவினோ டறிவு [3]நிற்க
சீலமார்க் குண்டு கெட்டேன் [4]றேவரி னடங்கு வானோ
காலமாக் [5]கணிக்கு நுண்மைக் கணக்கையுங் கடந்து நின்ற
மூலமாய் முடிவி லாத [6]மூர்த்தியும் [7]முன்ப னென்பார்.

(இ - ள்.) 'நீலம் மா முகில் அனன்தன் - கரிய பெரியமேகத்தையொத்த ஸ்ரீராமனது, நிறைவினோடு-நிறைவோடு, அறிவும்-புத்தியும், நிற்க-ஒருபுறத்து நிற்க, சீலம் - (அவனது) சீலகுணம், ஆர்க்கு உண்டு - எவருக்குத்தான் உண்டு? [ஒருவர்க்குமில்லை]; காலம் ஆ கணிக்கும் - பலகாலமாக எண்ணுகின்ற, நுண்மை கணக்கைஉம் - நுட்பமாகிய எண்களையும், கடந்து நின்ற - தாண்டிநின்ற, மூலம் ஆய் - ஆதிமூலமாகி, முடிவு இலாத - அழிவில்லாத, மூர்த்தி - ஸ்ரீமந்நாராயணனுடைய விசேஷாவதாரமான, இ முன்பன் - இந்தஸ்ரீராமபிரான், தேவரின் - (காலக்கணக்கைக் கடவாது நின்று ஆதியந்தங்களை யுடைய) தேவர்களுள், அடங்குவான்ஓ - ஒருவனாக அமைவானோ? [அமையான்]; கெட்டேன் - (இம்மெய்ப்பொருளையறியாது) இதுகாறுங்கெட்டேன்,' என்பார் - என்பவர்களும்,—(எ - று.)

இவனைக்கண்டவரிற் சிலர் 'நிறைவு அறிவுஎன்ற குணங்கள் கிடக்கட்டும்: இவனது சீலகுணம் யாருக்குஉண்டு? எவருக்கும் இராது'எனப்புகழ்ந்து, அவனது குணநிறைவைக்கண்டு 'இவன் மானுடரிற் சேர்ந்தவனல்லன்: தேவரிற் சேர்ந்தவனோ?' என்று ஐயுற்று, 'மும்மூர்த்திகளில் முதன்மூர்த்தியாகிய திருமாலே இவன்' என்று துணிந்து கூறினரென்க. நிறைவு - திருப்தி. சீலமாவது - தான் மிக மேம்பட்டவனாயிருந்தும் மிகத்தாழ்ந்தாரோடும் வேற்றுமையின்றி நடத்தல். ஆர்க்கென்னும் வினா இன்மைகுறித்து நின்றது. 'கெட்டேன்' என்றது, துயரமிகுதியாலே கைந்நெரித்துச்சொல்லும் வார்த்தை; "கோளாரரயர்குலத்தவரிப்பழி கெட்டேன் வாழவில்லை" என்று பெரியாழ்வார்பாசுரத்து வருதலுங் காண்க. ஆதியந்தமில்லாதவனென்பார், 'மூலமாய் முடிவிலாத மூர்த்தி' என்றார். முன்பன் - முதல்வன். பி - ம்:—[1]முகிலனன்றம், முகிலினன்றன். [2]நிறையினோடு. [3]நிற்கச், நீக்கச். [4]தேவரில். [5]குணித்த, குணிக்கும். [6]மூர்த்தியாம். [7]மொய்ம்பன், முதல்வன் (உளஅ)

கூஉ. ஆர்கலி யகழ்ந்தோர் கங்கை யவனியிற் [1]கொணர்ந்தோர் முந்தை
போர்கெழு [2]புலவர்க் காகி யசுரரைப் பொருது வென்றோர் [ப்
பேர்கெழு சிறப்பின் வந்த பெரும்புகழ் நிற்ப வையன்
றார்கெழு திரடோ டந்த புகழினைத் தழுவி யென்பார்.

(இ - ள்.) 'ஆர்கலி அகழ்ந்தோர்-கடலைத் தோண்டினவர்க்கும், கங்கை அவனியில் கொணர்ந்தோர் - ஆகாசகங்கையைப் பூலோகத்திற் கொண்டுவந்தவர்க்கும், முந்தை - பழமையாகிய, போர் கெழு புலவர்க்கு ஆகி - யுத்தத்தில் விளங்குகின்ற தேவர்நிமித்தமாக, அசுரரை - அவுணரை, பொருது வென்றோர் - போர்செய்து வென்றவர்க்கும், பேர் கெழு சிறப்பின் - பெயர் விளங்குகின்ற மேன்மையோடு, வந்த - உண்டாகிய, பெரு புகழ் - மிக்க கீர்த்தி, நிற்பது - நிலைநிற்பது;—ஐயன் - ஸ்ரீராமனது, தார் கெழு திரள் தோள்-வெற்றிமாலை விளங்குகின்ற புயங்கள், தந்த-உண்டாக்கிய, புகழினை- கீர்த்தியை, தழுவி - தழுவியே,' என்பார் - என்பவர்களும்,—(எ - று.)

ஆர்கலி அகழ்ந்தவர் - சகரபுத்திரர். கங்கை கொணர்ந்தவர் - பகீரதன். அசுரரை வென்றவர்-ககுத்தன், முசுகுந்தன் முதலியோர். 'அவனியில் இராமன் பிறந்தது எப்படிப்பட்ட குலத்திலே?' என்று வினா நிகழ்கையில், ஆர்கலியகழ்ந்தோர் முதலியோர் தோன்றிய குலத்தி லென்று விடையளிக்க வேண்டியிருத்தலின், ஆர்கலியகழ்ந்தோர்...பெரும்புகழ் நிற்பதையன்...திரடோள்தந்த புகழினைத் தழுவியென்க. மகாவீரனை ஸ்ரீராமன் இராவணனைச்சங்கரித்த வீரச்செயலைக் கூறுவதாகிய ஸ்ரீராமாயணத்தாலேயே சகரர் முதலியோரின் பெரும்புகழ் நிலைநிற்பதும் இங்குக் கருதத்தக்கது. ஆர்கலகழ்ந்தோர் முதலியோரின் புகழ்களாகிய பூங்கொடிகளுக்கு, இவன்புகழ் கொள்கொம்பாகு மென்க. "இரவியென்பான்றன் புகழ்க்கற்றை மற்றையொளிகளைத் தவிர்க்குமாபோன், மன்புகழ் பெருமைநுங்கண்மரபினோ புகழ்களெல்லா, முன்புகழாக்கிக்கொண்டாய்" எனக் குகப்படலத்துவருவது இங்குக்காணத்தக்கது: புலவர் - அறிவினையுடையவர்: புலமை-அறிவு; இது விபுதர்என்னும் வடமொழியின் மொழிபெயர்ப்பு. அஸுரர் - சுரர்க்குப்பகைவர்: ஸுரர் - தேவர்; அமிருதத்தையுடையவர்; ஸுரா - அமிருதம். அஸுரர் என்பதற்குப் பகைவருயிரைக் கவர்பவரெனவும் பொருளாம். இக்கவியிற் குறிக்கப்பட்ட கதைகளைக் கீழ்ப்பாலகாண்டத்திற் குலமுறைகிளத்துபடலத்தில், "இடரேட்ட," "தூகின்ற," "தான்றனக்கு", "மறைமன்னு" என்னுங் கவிகளிற்காண்க. பி - ம்:—[1]தந்தோர். [2]தேவர்க்காகி, தேவர்க்காக. (

வேறு.

கூ௩. சந்தமிவை தாவின்மணி யார[1]மிவை யாவுஞ்
சிந்துர[2]மு மிங்கிவை [3]செறிந்த மத[4]வேழப்
[5]பந்திகள் வடப்பரி [6]பசும்பொனின் வெறுக்கை
[7]பைந்தலைறி யோர்கொள வழங்கென நிரைப்பார்.

(இ - ள்.) 'இவை—, சந்தம் - சந்தனங்கள்; இவை—தா இல் மணி ஆரம் - குற்றமில்லாத நவரத்நஹாரங்கள்; இங்கு இவை-இவ்விடத்திலுள்ள இவை, சிந்துரம்உம் - திலகமும், யாஉம் - மற்றைஎல்லா அணிகளும், செறிந்த - பொருந்திய, மதம் வேழம் பந்திகள் - மதயானைவரிசைகள்; வயம் பரி - வெற்றியையுடைய குதிரைகள்; பசு பொனின் வெறுக்கை - பசும்பொன்னாகிய செல்வங்கள்; (இவற்றை), மைந்த - வீரனே! வறியோர் கொள-பொருளில்லாத ஏழைகள் பெற்றுக்கொள்ளும்படி, வழங்கு - தானஞ்செய்', என - என்று, நிரைப்பார் - ஒழுங்காய்வைப்பவரும்,—(எ - று.)

ஸ்ரீராமனுக்கு நன்மைவிளையவேணு மென்ற கருத்துக் கொண்ட சிலர் அப்பிரானது மகுடாபிஷேககாலத்தில் தம்முடைய பொருளான சந்தனம் முதலியவற்றை அப்பிரான்கையைக்கொண்டு வறியவர்க்குக் கொடுப்பிக்க விரும்பின ரென்க. சந்தம் - சந்தநத்தின்சிதைவு. 'இவை' என்ற சொல்லைப் பிறவிடத்துங் கூட்டுக. பந்தி - பங்க்தி என்பதன்சிதைவு. "வறியார்க்கொன் றீவதேயீகைமற்றெல்லாங், குறியெதிர்ப்பைநீரதுடைத்து" என்பவாகலான், 'வறியோர்கொள வழங்கு' என்றார். பி - ம்:—[1]அவை தாமம். [2]முகங்களிர். [3]தெரிந்த. [4]வேழம். [5]பந்தமுவையங்கவை, பந்தனல்வயங்குறு, பந்தமும்வயங்கொளி, பந்திகள்வயங்குறு. [6]பசுஞ்சுடர். [7]மைந்தர். (௨௮௦)

௯௪. மின்பொருவு தேரின்மிசை வீரன்வரு [1]போழ்திற்
றன்பொருவில் கன்றுதனி தாவிவரல் கண்டாங்
கன்புருகு [2]சிந்தையொடு மாவுருகு மாபோ
லென்புருகி [3]நெஞ்சுருகி னைந்துருகி [4]நிற்பார்.

(இ - ள்.) மின் பொருவு தேரின்மிசை - மின்னலை யொத்த இரதத்தின்மேல், வீரன் வரு போழ்தில் - ஸ்ரீராமன் வருங்காலத்தில்,—ஆ - பசுவானது, தன் பொருவு இல் கன்று - தனது ஒப்பில்லாத கன்று, தனி - துணையில்லாமல், தாவி வரல் - குதித்துவருதலை, கண்ட ஆங்கு - பார்த்த அப்பொழுது, அன்பு உருகு சிந்தையொடுஉம்-அன்பினாற் கரைகின்ற மனத்தோடும், உருகும் - இரங்குகின்ற, ஆ போல் - விதம்போல, என்பு உருகி - உடம்பு கரைந்து, நெஞ்சு உருக இனைந்து உருகி - மனம்மிராக வருந்தி கரைந்து, நிற்பார் - நிற்பவரும்,—(எ - று.)

"மாதர்கள்கற்பின்மிக்கார் கோசலைதன்னையொத்தார்" என்று கீழ்க் கூறியதை 'கன்றுதனிதாவிவரல்கண்டுஅன்புருகுசிந்தையொடுமாவுருகுமா போல்' என்றுஉவமை முகத்தால் விளக்கினர். நெஞ்சுருக X இனைந்து என்பது நெஞ்சுருகினைந்து என அகரம் தொக்குவந்தது. பின்னிரண்டடிகளில், உருகுதல்என்ற சொல் பன்முறைவந்தது - **சொற்பொருட்பின்வருநிலையணி**யாம். மின் - ஒளிக்கும், விரைவிற்கண்டுங் காணப்படாத தன்மைக்கும் உவமை. ஆ - ஆறுஎன்பதன் விகாரம். என்பு - ஆகுபெயர்; "அன்புடையா, ரென்புமுரியர் பிறர்க்கு" என்புழிப்போல. பி - ம்:—[1]போதிற். [2]சிந்தையினொடு. [3]நெஞ்சுருகிநஞ்சுருகி. [4]நில்லார். (௨௮௧)

கூரு. சத்திர நிழற்றநிமிர் தானையொடு நாஞ
வத்திர நிழற்றவரு ளோடவனி யாள்வார்
புத்திர ரினிப்பெறுதல் புல்லிதென நல்லோர்
சித்திர மெனத்தனி திகைத்துருகி நிற்பார்.

(இ-ள்.) நல்லோர்-நற்குணமுடையவர், சத்திரம் நிழற்ற-குடை நிழலைச் செய்யவும், நிமிர் தானையொடும்-விளங்குகின்ற சேனையுடன், நாஞ அத்திரம்-பலபடைகளும், நிழற்ற-ஒளியைச்செய்யவும், அருளோடு-கருணையுடன், அவனி ஆள்வார்-பூமியை யாள்கின்ற அரசர், 'இனி-ஸ்ரீராமன்பிறந்தபின்பு, புத்திரர் - மைந்தர்களை, பெறுதல் - பெறுவது, புல்லிது - சிறுமையையுடையது,' என - என்றுசொல்லி, திகைத்து,—சித்திரம் என - ஓவியப்பாவை போல, தனி - தனித்தனியாக, உருகிநிற்பார்-உருகிநிற்பவர்களும்,—(எ-று.)

இராமனைப்போன்று வடிவு அழகு குணம் முதலியயாவும் நேர்பட்டுள்ள புத்திரரைப்பெறுவது அவனியாள்வார்க்கு இயையாததலாலும், அங்ஙனம் நற்குணம்நிரம்பாதபுதல்வரைப்பெற்றால் 'இவ்வரசன் தசரதனைப்போலநற்குணம்நிரம்பிய புதல்வனைப் பெற்றானோ?' என்று உலகத்தாரால் வம்பளக்கப்படுமாதலாலும், 'அவனியாள்வார் புத்திரரினிப்பெறுதல்புல்லிது' என்றார்: இதில் - இராமனுடையகுணத்தால் அவனியாள்வார்க்குப் புத்திரரைப்பெறுவது புல்லிது என ஒன்றன்குணத்தால் மற்றொன்றிற்குக் குறைவுகூறியது, **அகமலர்ச்சியணியாம்:** வடமொழியில் உல்லாஸாலங்காரமெனப்படும். சத்திரம் - சத்ரம். அத்திரம் - அஸ்த்ரம்; வடசொற்கள். அத்திரங்கள் - எய்வன, எறிவன, குத்துவன, வெட்டுவன எனப் பலவேறுவகைப்படுதலால், 'நாஞ வத்திரம்'என்றார். நிழல் - சாயை, ஒளி என்று இருபொருளுமுடையதாகையால், நிழற்ற என்பதற்கு - நிழலைச்செய்ய, ஒளிசெய்யஎன்று வெவ்வேறு பொருள்உரைக்கப்பட்டன. இக்கவியிலுள்ள நல்லோர்என்பது "உய்ந்ததிவ்வுலகம்" (அஅ) என்னுங் கவிமுதல் "பாவமும் அறனும்" (கூஅ) என்னுந் துணையும் ஒருதொடராக நின்ற கவிகளுக்கு எழுவாயாகநின்றது; இதை, ஆள்வார்க்கு அடையாக்குதலும், நல்லதொரு சித்திர மென்று இயைத்துரைத்தலும், முதியமகளிரென்றலுமாம். (உஅஉ)

கூக. கார்மினொ டுலாயதென நூல்[1]கஞலு மார்பன்
றேர்மிசைநம் [2]வாயில்கடி தேகுதல்செய் வானோ
[3]கூர்கனக ராசியொடு கோடிமணி யாலுந்
தூர்மினெடு வீதியினை யென்றுசொரி வாரும்.

(இ - ள்.) கார் - கார்காலத்துமேகம், மின்னொடு-மின்னலோடு, உலாயது என - பொருந்தி விளங்கியதன்மைபோல, நூல் கஞலும் மார்பன் - முப்புரி நூல்விளங்குகின்றமார்பினையுடைய ஸ்ரீராமன்,நம் வாயில்-நமது வீட்டுவாயில் வழியாக, தேர்மிசை-தேரின்மேல், கடிது-விரைவாக, ஏகுதல் செய்வானோ - போய்விடுவானோ?(அத்தேரைத்தடுத்தற்காக), கூர் கனகம் ராசியொடு - மிக்க

பொற்குவியலோடு, கோடி மணியால்உம் - பலரத்தினங்களாலும், நெடு வீதியினை - பெரியதெருவை, தூர்மின் - நிரப்புங்கள், என்று - என்றுசொல்லிக் கொண்டு, சொரிவார்உம் - (அவற்றை) மிகப்பொழிபவரும்,—(எ - று.)

இராமபிரான் கடிதுசென்றால் அவனதுவடிவழகை நன்குகாணமுடியாதாதலால் அவனதுதேர் விரைந்துசெல்லமுடியாதபடி கனகம்முதலியவற்றைத் தேர்செல்லும் நெறியிடையே தூர்மினென்று சொல்லியவண்ணம் கனகராசி முதலியவற்றைச் சிலர் பொழிந்துவைத்தனரென்க. கார் - கரியதிருமார்பிற்கும்;மின்-யஜ்ஞோபவீதத்திற்கும் உவமை. "அந்தணாளர்க் குரியவுமரசர்க், கொன்றியவருஉம் பொருளுமாருளவே" என்றதனால், நூல்கூறினார். பி-ம்:—[1]கனலும். [2]வாயல். [3]நேர்மினிமிர்கோடிமணியாலுநிதியாலும். (௨அ௩)

௩௭. தாய்கையில் வளர்ந்திலன் [1]வளர்த்தது தவத்தாற்
கேகயன் மடந்தைகிளர் ஞாலமிவ [2]னாள
வீகையி [3]லுவந்தன ளியற்கையிது [4]வென்றாற்
றோகை[5]யவள் பேருவகை [6]சொல்லலரி தென்பார்.

(இ-ள்.) '(ஸ்ரீராமன்),தாய் கையில் வளர்ந்திலன்-பெற்றதாயாகிய கௌசல்யையினுடைய கையிலே வளர்ந்தானில்லை;வளர்த்தது-(இவனைப்பின்னை) வளர்த்தது (யாரெனில்),தவத்தால்-(முற்பிறவியிற்செய்த)தவப்பயனால், கேகயன் மடந்தை-கைகேயி யாவள்:(அதனால்தான் அவள்),கிளர் ஞாலம்-விளங்குகின்ற உலகத்தை, இவன் ஆள - இவன்அரசாளும்படி, ஈகையில்-கொடுத்தலில், உவந்தனள் - மகிழ்ந்தாள்: இயற்கை - அவளியல்பு, இது என்றால் - இதுவானால், தோகையவள் - அக்கைகேயியினது, பேர் உவகை - பெருங்களிப்பு, சொல்லல் - சொல்லுதல், அரிது-அருமையையுடையது,' என்பார்-என்பவர்களும்,—(எ - று.)

இவன் கோசலையால் வளர்க்கப்படாமல் பூர்வபுண்ணியத்தாற் கைகேயி வளர்க்க வளர்ந்தான்; அதனால்தான் கைகேயி, இவனுக்கு இராச்சியத்தைக் கொடுப்பதில்உவகைகொண்டிருக்கிறாள்:ஆகவே,அவளே இராமனுக்குத்தாயாதலால், அவளைப்போன்ற மகிழ்ச்சி இராமபட்டாபிஷேகத்தில் வேறுயாவர்க்கு உண்டு? என்று சிலமாந்தர் கூறினரென்க. வளர்த்தது தவத்தாற் கேகயன் மடந்தை-பாவேப்ரயோகம். பி-ம்:—[1]வளர்ந்தது. [2]ஆள்வானீகையின். [3]உவந்தவவ்வியற்கை, உவந்தவளியற்கை, உவந்ததமியற்கை. [4]என்றே. [5]இவள். [6]சொல்ல. (௨அ௪)

௩௮. பாவமு மருந்துயரும் வேர்பறியு மென்பார்
பூவலய மின்று[1]தனி யன்றுபொது வென்பார்
தேவர்பகை [2]யுள்ளனவவ் வள்ளறெறு மென்பா
ரேவல்செயு மன்னர்தவம் யாவதுகொ லென்பார்.

(இ-ள்.) 'பாவம்உம்-தீவினையும்,அருதுயர்உம்-நீக்குதற்கரியபிறவித்துன்பங்களும், வேர் பறியும்-அடியோடுகெடும்,' என்பார்-என்பவர்களும்,—பூவல

யம் - பூமண்டலம், இன்று - இப்பொழுது, தனி அன்று - (ஸ்ரீராமனொருவனுக்கே) தனிமையாயுரியது அன்று: பொது-(எல்லார்க்கும்) பொதுவாகும்,' என்பார் - என்பவர்களும்,— 'தேவர் பகை உள்ளன - தேவர்க்குப்பகைவராயுள்ள அரக்கர்கூட்டங்களை, இ வள்ளல் - இவன், தெறும் - அழிப்பான்,' என்பார் - என்பவர்களும்,—'ஏவல் செயும்-(இவன்)ஏவினபணிகளைப்புரிந்துவருகின்ற, மன்னர் - அரசரது, தவம் - நல்வினை, யாவது கொல் - எத்தன்மையையுடையதோ?' என்பார் - என்பவரும், (ஆயினர்); (எ - று.)

இவனைப் பார்த்தமாத்திரத்திலேயே நம்முடைய பாவமுந்துயருந் தீருமென்றார் சிலரென்க; புண்ணியபுருஷரைத்தரிசித்தலால் பாவம் நீங்குமென்பது,நூற்கொள்கை.இதற்குமுன் ஆட்சிபுரிந்த அரசர்போலவல்லாமல் இவன் ஆட்சிபுரிகையில்உலகத்திலுள்ள ஒவ்வொருத்தருடையகுறைகளையும் வினவி, அவரவர் தாமேஅரசுபுரிந்தால்எங்ஙனம் நன்மையைப்பெறலாமோ அங்ஙனம் நன்மையைப் பெறுமாறுசெய்யுந் தன்மையனென்றுஉணர்ந்ததனால்,'பூவலயமின்று தனி யன்று பொது' என்பா ராயினர் சில ரென்க. அன்று பொது என்றதற்கு, இவன்பிறவாதவன்று பொது வென்றும் பொருள் கூறலாம். இச்செய்யுளில் 'ஆயினர்' என்று முற்றுவினைச்சொல்வருவித்து, "உய்ந்த திவ்வுலகம்"என்றபாடல் முதலுள்ளஎன்பார் முதலியவற்றை ஒன்றுசேர்த்து, உம்என்னும் இடைச்சொல்லையும்உடன்பெய்து, "சந்திரநிழற்ற" (கூரு) என்னுங்கவியிலுள்ள'நல்லோர்'என்பதை எழுவாயாகக்கொண்டு,நல்லோர் (கூரு), என்பாரும் என்பாரும் என்பாரும் என்பாரும் (அஅ), என்பாரும், என்பாரும் (அகூ), என்பாரும் நிற்பாரும் (கூ0),என்பாரும் (கூக),என்பாரும் (கூஉ), நிரைப்பாரும் (கூஙு), உருகிநிற்பாரும் (கூச), உருகிநிற்பாரும் (கூரு), சொரிவாரும் (கூசு), என்பாரும் (கூஎ), என்பாரும் (ஆயினர்) (கூஅ) என்று முடிக்க. பகை, ஏவல் - ஆகுபெயர்கள். பி-ம்:—[1]முதல். [2]உள்ளளவும், உள்ளனவும், உள்ளவுமிவ். (உஅரு)

கூகூ.—ஸ்ரீராமன் மன்னவன் அரண்மனையிற் புகுதல்.

ஆண்டினைய ராயினைய கூறவடல் வீரன்
றாண்டுபுர விப்பொருவில் சுந்தர மணித்தேர்
[1]நீண்டகொடி மாட[2]நிரை வீதி[3]நிறை யப்போய்ப்
பூண்டபுகழ் மன்னனுறை கோயில்புக லோடும்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (நகரத்தாரனைவரும்),ஆண்டு-அப்பொழுது,இனையர் ஆய் இத்தன்மையையுடையராய், இனைய-இத்தன்மையனவற்றை, கூற - சொல்விக்கொண்டிருக்க,—அடல் வீரன்-வெற்றியையுடைய ஸ்ரீராமன்,தூண்டு புரவி-(சுமந்திரனால்) செலுத்தப்பட்ட குதிரைகளையுடைய, பொருவு இல் - ஒப்பில்லாத, சுந்தரம் மணி தேர் - அழகிய நவரத்நங்களிழைத்த இரதத்தில், நீண்ட கொடி மாடம் நிரை-உயர்ந்த துவசங்களையுடைய மாளிகைகளினொழுங்கினை

யுடைய, வீதி - தெரு, நிறைய - பூர்ணமாகும்படி, போய்—, பூண்ட புகழ் மன்னன் - (அணிகலமாக) அணிந்த கீர்த்தியையுடைய சக்ரவர்த்தி, உறை - வசிக்கின்ற, கோயில் - அரண்மனையை, புகலோடும் - அடைந்தவளவில்,— (எ - று.)—"காணுன்" என அடுத்த கவியோடு முடியும்.

இனைய - பெயர். புகலோடும் - உம்மீற்றுவினையெச்சம். பி - ம்:—[1]மாண்ட. [2]நெடு. [3]மறைய.  (௨அ௬)

வேறு.

௧00.—ஸ்ரீராமன் அந்த மன்னவனைக் காணுமை.

ஆங்குவந் தடைந்த [1]வண்ண [2]லாசையின் கவரி [3]வீசப்
பூங்[4]குழன் மகளி ருள்ளம் புதுக்களி [5]யாட நோக்கி
வீங்கிருங் காதல் காட்டி விரிமுகக் கமல பீடத்
[6]தோங்கிய மகுடஞ் சூடி யுவகைவீற் றிருப்பக் [7]காணுன்.

(இ - ள்.) பூ குழல் மகளிர்-பூவைமுடித்த கூந்தலையுடைய மாதர், ஆசையின் கவரி வீச - அன்போடு சாமரங்களை வீசவும், உள்ளம் - (அவரது) மனம், புது களி ஆட-புதிய களிப்புப் பொருந்தவும், ஆங்கு வந்து அடைந்த அண்ணல் - அங்குவந்து சேர்ந்த அந்த ஸ்ரீராமன், நோக்கி - (அவ்விடத்தில்) பார்த்து, வீங்கு - (மேன் மேலும்) வளர்கின்ற, இரு காதல்-மிக்க அன்பை, காட்டி - வெளிப்படுத்தி, விரி முகம் - விளங்குகின்ற இடத்தினையுடைய, கமல பீடத்து - பதுமசிங்காசனத்தில், ஓங்கிய மகுடம் சூடி - உயர்ந்த கிரீடத்தைச் சூட்டிக்கொண்டு, உவகை வீற்றிருப்ப-களிப்போடு (தந்தை) மகிழ்ந்திருக்க, காணுன் - காணுதவனுகி,—(எ - று.)—"கோயில்புக்கான்" என அடுத்த கவியோடு இயையும்.

இராமபிரான் அங்குவந்து தசரதன் மகிழ்ச்சியோடு அவ்விடத்து இருப்பதைக் காணுதவனுயின னென்றவாறு. "சிற்றவைதானு மாங்கே கொணர் கெனச் செப்பினுன்" என்று சுமந்திரன் சொன்னதைக் கேட்டுப் புறப்பட்ட இராமன், தசரதனுடன் கைகேயி அரசமாளிகையிலிருந்து தன்னை வரச் சொன்னதாகக் கருதினுதலால் அங்கே பார்த்துத் தன் தந்தை உவகையோடு அங்குஇருப்பதைக் காணுதவனுயினனென்றுர். இனி, [7]கண்டானென்ற பாடத்தைக்கொண்டு, கைகேசியின் அந்தப்புரத்திற்குச் செல்லும்போது தசரதனரண்மனை வழியாகச் செல்லவேண்டியிருந்ததுபற்றி அவ்வரண்மனைவழியாகச்சென்ற இராமன் கவரிவீசலையும் புதுக்களியாடலையும் நோக்கி, ஆங்கே மகுடாபிஷேகங் காணவந்த மன்னர் முதலியோர் காதல்காட்டித் தம்முடைய முகமாகிய கமலபீடத்திலே உவகையென்பது தான் மகுடஞ்சூடி [அரசுசெலுத்தி]வீற்றிருப்பதைக் கண்டா னென்று உரைத்து, பட்டாபிஷேகத்தைஎப்போது காணப்போகின்றேமென்ற பேராவலோடு மன்னவர் முதலிய யாவரும் பெருமகிழ்ச்சிகொண்டிருந்ததைக்கண்டானென்று கருத்துக்கூறல் பொருந்தும். காணுன் என்ற பாடத்துக்கே - மன்னர் முதலியோர் மகிழ்ச்சியோடு வீற்றிருப்பதைக் கண்ணெடுத்துப் பாராதவனுய் என்று உரைத்தல் நேரிதா

கும். ஆசையின் கவரி வீச என்பதற்கு - திசைகள்தோறும் கவரிவீச என்றும் பொருளுரைக்கலாம். விரிதல் - பரத்தலுமாம். கமலபீடம் - வடநூன்முடிபு. பி - ம்:—[1]வீரன். [2]ஆசைமின். [3]வீசி. [4]குழை. [5]ஆட்ட, ஆடல். [6]ஓங்கருள். பின் மூன்றடிகளை 'பூங்குழன் மகளிரோடும்புறுக்களியாட்ட நோக்கி, வீங்கிருங் காதல்காட்டி வியனரி சுமந்தபீடத், தோங்கிய வுவகையோடு மரசன் வீற்றிருப்பக்காணுன்' என்று படிப்பாருமுளர். (உ௮எ)

கoக.—ஸ்ரீராமன் கைகேயியின் அரண்மனையிற் புகுதல்.

வேத்தவை முனிவ ரோடு விருப்பொடு களிக்கு மெய்ம்மை
யேத்தவை யிசைக்குஞ் செம்பொன் [1]மண்டப மினிதி னெய்தா
னோத்தவை யுலகத் தெங்கு முள்ளவை [2]யுணர்ந்தா ருள்ளம்
[3]பூத்தவை வடிவை யொப்பான் சிற்றவை கோயில் புக்கான்.

(இ - ள்.) ஓத்து அவை - வேதங்களையும், உலகத்து எங்கும் உள்ளவை - லோகத்தில் மற்றுமுள்ள நூல்களையும், உணர்ந்தார்-அறிந்தஞானிய ருடைய, உள்ளம் - மனத்தில், பூத்தவை - மலர்ந்தனவாகிய, வடிவை-உருவத்தை, ஒப்பான்-மனமொத்துக் கொள்பவனுகிய ஸ்ரீராமன்,—முனிவரோடு வேத்தவை - இருடியரும் அரசர்கூட்டமும், விருப்பொடு - அன்புடன், களிக்கும் - மகிழ்கின்ற, மெய்ம்மை ஏத்துஅவை இசைக்கும் - உண்மையாகிய புகழை யெடுத்துச் சொல்லுகின்ற, செம் பொன் மண்டபம் - செம்பொன் மயமாகிய சபாமண்டபத்தை, இனிதின் - இனிமையாக, எய்தான் - அடையாதவனுகி,—சிற்றவை - சிறியதாயாகிய கைகேயியினுடைய, கோயில்-மாளிகையை, புக்கான் - போய்ப் பிரவேசித்தான்; (எ - று.)

அரசர்கூட்டமும் முனிவரும் தன்புகழைச் சொல்லிக்கொண்டு மகிழ்ச்சியோடு பட்டாபிஷேகமகோத்ஸவத்தை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிற மண்டபத்திற் புகாமல் ஸ்ரீராமன் கைகேயியின்மாளிகையை யடைந்தனனென்க. உலகத்தெங்கு முள்ளவை - வேதந்தவிர ஆறங்கங்களும் மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்திரங்களும் மற்றுமுள்ள ஞானத்தை யுண்டாக்குங் கலைகளும். உணர்ந்தாருள்ளம்பூத்தவைவடிவையொப்பான் — "தமருகந்த தெவ்வுருவமவ்வுருவந்தானே" என்றார், பெரியாரும். இனி, ஞானிகள் தியானிக்கின்றவடிவைக்கொண்டு அவர்மனத்துத் தோன்றுபவனெனினும், உள்ளும் பூத்த ஐ வடிவைஒப்பான் - உள்ளத்திற்பூத்த (பரம் வியூகம் விபவம் அந்தர்யாமி அர்ச்சை என்ற) ஐவகைவடிவம் அமைந்திருக்கப்பெற்றவனெனினுமாம். அண்ணல் (கoo), ஒப்பான் என்பன - சுட்டுமாத்திரையாம். வேத்தவை - மென்றொடர் வன்றொடராயிற்று. எய்தான் - எதிர்மறை முற்றெச்சம். ஏத்தவை, ஓத்தவை, அவை - பகுதிப்பொருள்விகுதி. ஏத்து - முதனிலைத்தொழிற்பெயர். ஓத்து - ஓதப்படுவது. பூத்தவை - வினையாலணையும்பெயர். பி - ம்:—[1]மண்டபத்தினிதில், மண்டபமதனின். [2]உணர்ந்தாலுள்ளம், உணர்ந்தானுள்ளம், உணர்ந்தோருள்ளம். [3]பூத்தவை வடிவேயொப்பான், பூத்தவைவடிவையொக்கும், பூத்தவை வடிவே லொக்கும். (உ௮௮)

**௧0௨.—இராமன் கைகேயியி னரண்மனையிற் சென்றதை வந்திருந்த புரவலர் முதலியோர் பாராட்டுதல்.**

புக்கவன் றன்னை நோக்கிப் புரவலர் முனிவர் [1]யாருந்
[2]தக்கதே நினைந்தான் றாதை தாமரைச் சரணஞ் சூடித்
[3]திக்கினி [4]னிமிர்ந்த [5]கோலச் [6]செங்கதிர்ச் செல்வ னேய்ந்த
மிக்குயர் மகுடஞ் சூட்டச் சூடுதல் விழுமி தென்றார்.

(இ - ள்.) புக்கவன் தன்னை-பிரவேசித்த ஸ்ரீராமனை, நோக்கி—, புரவலர்-அரசரும், முனிவர்-இருடியரும், யார்உம்-எல்லோரும், 'தக்கது ஏ நினைந்தான்-(ஸ்ரீராமன்) தகுந்தொழிலையே எண்ணினான்;(எப்படியெனில்), தாதை-தகப்பனாரது, தாமரை சரணம் - திருவடித் தாமரைகளை, சூடி-தலையிலணிந்து [வணங்கிவிட்டு], (பிறகு), திக்கினில் நிமிர்ந்த கோலம் செங்கதிர் செல்வன் ஏய்ந்த மிக்கு உயர் மகுடம் - எல்லாத்திக்குக்களிலும்மேலாகத்தோன்றுகிற வடிவுபடைத்த செந்நிறக்கிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியபகவானைத் தொடங்கிவருவதான மிகச்சிறந்த மகுடத்தை, சூட்ட-நான்முறைப்படி அணிவிக்க, சூடுதல் - அணிந்துகொள்ளல், விழுமிது-சிறப்பினையுடையது,' என்றார்—; (எ - று.)

தன்தந்தையை வணங்கிவிட்டுப் பிறகு விதிமுறைப்படி மகுடஞ்சூட இராமபிரான் கருதித் தந்தையுள்ள இடம்நோக்கிச் செல்வதாகக்கருதி ஸ்ரீராமபிரான் செய்கை செவ்விதாகுமென்று வேத்தவையோர் அவனது செயலைப் பாராட்டினரென்க. புரவலர் - காத்தற்றொழிலில் வல்லவர். விழுமிது-சிறப்பாகிய குறிப்புணர்த்தும் விழுமமென்னும் உரிச்சொலடியாப்பிறந்த குறிப்பு வினைமுற்று. பி-ம்:—[1]எல்லாம். [2]தக்கது. [3]திக்கினை. [4]நிமிர்த்த, நிகழ்ந்த. [5]கீர்த்தி. [6]செல்வனே செம்பொற்சோதி. (௨௮௧)

**௧0௩.—இராமன் அங்குவருவதைநோக்கி, தன்வரத்தைச் சொல்லக் கைகேசி முன்னே வருதல்.**

[1]ஆயன நிகழும் வேலை [2]யண்ண லு மயர்ந்து[3]தேறாத்
[4]தூயவ னிருந்த சூழ [5]றாருவினன் வருத னோக்கி
நாயக னுரையான் வாயா [6]னிது பகர்வெ னென்னாத்
தாயென நினைவான் [7]முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்.

(இ-ள்.) ஆயன - அப்படிப்பட்டவை, நிகழும் வேலை - நடக்குங் காலத்தில், அண்ணல்உம் - ஸ்ரீராமனும், அயர்ந்து - மூர்ச்சையடைந்து, தேறா - தெளியாத, தூயவன் - பரிசுத்தனாய தயரதன், இருந்த—, சூழல்-இடத்தை, தருவினன் வருதல் - தேடிவருதலை, நோக்கி - பார்த்து,—'இது - இதனை, நாயகன்-கணவன், வாயால் உரையான்-(தன்) வாயாற் கூறான்: (ஆதலால்), நான் பகர்வென் - நான் சொல்வேன்,' என்னா - என்றெண்ணிக்கொண்டு, தாய் என நினைவான் முன்னே-தாயென்றெண்ணுகின்ற ஸ்ரீராமன்முன்னே,

கூற்று என - யமனைப்போல, தமியள் - ஒப்பற்ற கொடுமையையுடைய கைகேயி, வந்தாள்—; (எ - று.)

யமன் உடலையும் உயிரையும் வேறுபிரித்துக் கூறுபடுத்தல்போலச் சக்ர வர்த்தியையும் திருமகனையும் பிரித்தலால், இது - தொழிலுவமம். பி-ம்:— [1]ஆயது. [2]ஐயனும். [3]தேருன். [4]தூயவன்கிடந்த. [5]குறுகினன். [6]இவை பகர் வல். [7]முன்னர். (உகூ0)

கஉ௪.—கைகேயியைத் தண்டனிட்டு ஸ்ரீராமன் பணிவுதோன்ற நிற்றல்.

வந்தவ டன்னைச் சென்னி மண்ணுற வணங்கி [1]வாசச்
சிந்துரப் பவளச் செவ்வாய் [2]செங்கையிற் புதைத்து மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் [3]துவண்டு நின்று
னந்திவந் தடைந்த தாயைக் கண்டவான் [4]கன்றி னன்னான்.

(இ-ள்.) அந்தி வந்து அடைந்த-மாலைப்பொழுதில் வந்துசேர்ந்த, தாயை-, கண்ட-பார்த்த, ஆன் கன்றின் - பசுவின் கன்றை, அன்னான் - ஒத்த ஸ்ரீரா மன்,—வந்தவள்தன்னை-(அவ்வாறு) வந்த கைகேயியை, சென்னி மண் உற- தலை நிலத்திற்படும்படி, வணங்கி - ஸாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, வாசம் சிந்துரம் பவளம்-வாசனையுள்ளதும் சிந்தூரத்தையும் பவழத்தையு மொத்தது மான, செவ் வாய்-சிவந்தவாயை, செம் கையில் புதைத்து - சிவந்த (ஒரு) கையால்மூடிக்கொண்டு, மற்றை சுந்தரம் தட கை - அழகிய பெரிய மற் றொரு கை, தானை மடக்குற-ஆடையைமடக்க, துவண்டு நின்றான்-வணங்கி நின்றான்; (எ - று.)

இது - அடக்கம்; அடக்கமென்பது உயர்ந்தோர்முன் அடங்கியொழுகு மொழுக்கம்; அது - பணிந்தமொழியுந் தணிந்த நடையுந் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயதொண்டது. எம்பெருமானது செவ்வாய் நறு மணம்பெற்றிருக்கு மென்பதை "கருப்பூரநாறுமோ கமலப்பூநாறுமோ, திருப் பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ, மருப்பொசித்தமாதவன்றன் வாய்ச்சுவையு நாற்றமும், விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழிவெண் சங்கே" என்ற ஆண்டாள் பாசுரத்தாலும் அறிக. அந்தி - ஸந்த்யா என்னும் வடமொழியின் சிதைவு. உவமையால், கைகேயியினிடத்து இராமன்கொண்ட பேரன்புவிளங்கும். கன்றின், இன் - அசை. பி-ம்:—[1]வாய்த்த. [2]செங்கை யாற். [3]தொழுது. [4]கன்றே. (உகூக)

கஉரு.—இராமனிடத்து 'தந்தை உன்னிடம் சொல்லுமாறு ஒருரையுண்டு' என்று கைகேயி தெரிவித்தல்.

நின்றவன் றன்னை நோக்கி யிரும்பினு [1]னியன்ற நெஞ்சிற்
[2]கொன்றுழல் கூற்ற மென்னும் [3]பெயரின்றிக் கொடுமைபூண்டா
ளின்றெனக் [4]குணர்த்த லாவ தேயதே யென்னி லாகு
மொன்றுனக் குந்தை மைந்த [5]வுரைப்பதோ ருரையுண் டென்றாள்.

(இ - ள்.) நின்றவன் தன்னை நோக்கி - அங்ஙனம்நின்ற ஸ்ரீராமனைப் பார்த்து,—இரும்பினான் இயன்ற நெஞ்சின் - இரும்பாலாகிய மனத்தோடு, கொன்று உழல் கூற்றம் என்னும் பெயர் இன்றி-(உயிர்களைக்)கொன்று திரிகின்றயமனென்னும்பெயர்மாத்திரமில்லாமல்,கொடுமை-(அவ்யமன்போன்ற) கொடுந்தொழிலை, பூண்டாள் - மேற்கொண்ட அந்தக்கைகேயி, 'மைந்த—! உந்தை - உன்தந்தை, உனக்கு உரைப்பது-உனக்குச் சொல்லவேணுமென்று கருதியதாகிய, ஓர் உரை ஒன்று - ஒப்பற்ற ஒருவார்த்தை, உண்டு - உளது: ஏயது-அவருரைக்கவேணுமென்ற அது, இன்று - இப்பொழுது, எனக்கு—, உணர்த்தல்ஆவது என்னில் - தெரிவிக்கலாமென்றால், ஆகும்-தெரிவிக்கலாகும்,' என்றாள்—; (எ - று.)

தந்தை உன்னிடத்துச் சொல்லுமாறு மனத்துக்கருதிய உரையொன்றுண்டு: அது எனக்குத் தெரியுமாதலால் தந்தையார் ஏவலை நான் இப்போது சொல்லுவது தக்கதேயாமென்று நீ உடன்பட்டாற் சொல்லுவேனென்று கைகேயி இராமனிடம் கூறினளென்க."இரும்புபோல் வலியநெஞ்சம்" என்றார் பெரியாரும். மைந்த என்றாள், அவனையிராதிருத்தற்கு. பெயர்-பிரசித்தி. பூண்டாள்-பெயர். ஏயது-ஏவியதன்விகாரம். சக்ரவர்த்திகட்டளையைச் சொல்வேனேயன்றி வேறன்றென்பதாம். பி-ம்:—[1]இயைந்த, இசைந்த. [2]கொன்றுழற். [3]பெயரினாற், பெயரீண்டிக், பெயரினிற், பேரின்றிக். [4]உணரலாகாதாவதே யென்னில், உணரலாவதாயதேயென்னல், உணரலாயதாயதே யெண்ணல். [5]உரைத்தவா, உரைக்கலாம். (௨௬௨)

### ௧0௬.—நீரே அந்தக்கட்டளையைத் தெரிவிப்பின் யான் செய்வேனென்று இராமன் கூறுதல்.

எந்தையே யேவ [1]நீரே யுரைசெய [2]வியைவ துண்டே
லுய்ந்தன [3]னடியே னென்னிற் [4]பிறந்தவ ருளரோ வாழி
[5]வந்ததென் [6]றவத்தி னாய வருபயன் [7]மற்றொன் றுண்டோ
தந்தையுந் தாயு [1]நீரே தலைநின்றேன் [8]பணிமி னென்றான்.

(இ - ள்.) 'எந்தை ஏவ-என்தந்தையே கட்டளையிட, நீர் ஏ உரை செய-நீரே சொல்ல, இயைவது - பொருந்துவது, உண்டுஏல் - ஒன்றுண்டானால், அடியேன் உய்ந்தனன்-நான் ஈடேறிவிட்டேன்; என்னின்-என்னைப் போல, பிறந்தவர் - (மேம்படப்) பிறந்தவர், உளர்ஓ - (உலகத்தில்) வேறொருவரிருக்கின்றனரோ? என்-எனது, தவத்தின்-(முற்பிறப்பிற் செய்த) நல்வினையால், ஆய-உண்டாகிய, வரு பயன்-வரக்கடவதாகிய பயன்,வந்தது-வந்துவிட்டது; மற்று ஒன்று உண்டுஓ - இதைவிட வேறொருபயன் உளதோ? தந்தைஉம் தாய்உம் நீர்ஏ-(எனக்கு) மாதாபிதாக்கள் நீரே; தலைநின்றேன்-(நீர் சொல்லப்போவதை) தலைமேற்கொண்டுநின்றேன்; பணிமின்-கட்டளையிடுமின்,' என்றான் - என்று கூறினான், (ஸ்ரீராமன்); (எ - று.)

என்தந்தையின் ஏவல் தாயாகிய நுமது வாயால்வர வாய்க்குமேயானால் எனக்குப் பெரும்பேறாகும்: ஆகவே, அக்கட்டளையைத் தெரிவித்தாற் சிர

மேற்கொண்டு செய்வேனென இராமன் கூறினனென்க. "மஞ்சத்திற்கைகேயியோடிருக்கிற தந்தையைப் பார்த்து இராமன் நமஸ்கரித்தான்: அத்தசரதன் கலக்கமுற்றிருக்கக் கண்டுநடுங்கினான்: பின்பு கைகேயியை நோக்கி 'யான் ஒருபிழையுஞ்செய்யாதிருக்க, மகிழ்ச்சிகொள்ளாமல் இவர் என்மீது கோபிக்கக்காரணமென்ன? எவர்க்கும்ஒருதீங்கும்இன்றா? நீர் அப்பிரியஞ்செய்யாமலிருக்கிறீரா?' என்ன, கைகேயி 'மன்னவர் கட்டளையொன்றைஉனக்குச் சொல்லவெண்ணிவாய்வராமல்சும்மா இருக்கிறார்: மன்னவர்சொல்வதைச்செய்வாயானால் நானேசொல்லுகிறேன்' என்றனளாக, இராமன், 'தமப்பன்பேச்சை இராமன்கேளானென்று இவள் சங்கிக்கும்படியாயிற்றே' என்று வருந்திப்பின் 'மன்னவர் எதுசொல்வதானாலும்செய்வேன்; அரசர்விருப்பத்தைச்சொன்னால் உடனேசெய்வேன்: இரண்டல்லஇராமனுக்கு நாக்கு" என்றானென்று முதனூலிலுள்ளது. நீர் - ஒருவரைச் சிறப்பினாற்கூறும் பன்மை. என்னிற்பிறந்தவர்-என்னினும் மேம்படப்பிறந்தவரென்றுமாம். மாழி - அசை. ஓகாரங்கள்-எதிர்மறை. பி - ம்:—[1]நீயே. [2]இயைந்தது, இசைந்தது. [3]அடியன். [4]பிறந்தனர். [5]வந்தவென். [6]தவத்தினாலே. [7]இனி. [8]பணியது, பணியும். (௨௧௩)

௧௦௭.—பரதன் அரசுபுரிய, நீ தவக்கோலத்துடன் பதினான்குவருடம் வனவாசஞ் செய்யவேணுமென்பது அரசர் கட்டளை யெனல்.

ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் டாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
[1]பூழிவெங் கான நண்ணிப் புண்ணிய [2]நதிக ளாடி
யேழிரண் டாண்டின் வாவென் [3]றேவின னரச னென்றாள்.

(இ - ள்.) ஆழி சூழ் உலகம் எல்லாம்-கடல்சூழ்ந்த உலகமனைத்தையும், பரதன் ஏ ஆள - பரதனே யாண்டுகொண்டிருக்க, நீ போய்—, தாழ் இரு சடைகள் தாங்கி-தொங்குகின்ற பெரிய சடைகளைத் தரித்துக்கொண்டு, தாங்க அரு - தரித்தற்கரிய, தவம் - தவவேடத்தை, மேற்கொண்டு - பூண்டு, பூழி வெம் கானம் - புழுதியையுடைய கொடிய காட்டை, நண்ணி - சேர்ந்து, புண்ணியம் நதிகள் - பரிசுத்தமாகிய நதிகளிலே, ஆடி - நீராடி, ஏழ் இரண்டு ஆண்டின் - பதினான்குவருடங்கழித்தபின்பு, வா - திரும்பி வருக, என்று—, அரசன் - சக்கரவர்த்தி, ஏவினன் - ஆஜ்ஞாபித்தான், என்றாள்—; (எ - று.)

ஆள - அகரவீற்றுவியங்கோளாகவுமாம். பூழி - புழுதியின் விகாரம். பி-ம்:—[1]பூழிருங். [2]துறைகள். [3]ஏயினன், இயம்பினன். (௨௧௪)

௧௦௮.—இராமன் அதுகேட்டு மனமுவந்திருந்ததன் வருணனை.

இப்பொழு [1]தெம்ம னோரா லியம்புதற் கெளிதோ [2]யாருஞ்
செப்பருங் குணத்தி ராமன் றிருமுகச் செவ்வி நோக்கி
னொப்பதே முன்பு [3]பின்பு வாசக முணரக் கேட்ட
வப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா.

(இ - ள்.) யாரும் செப்ப அரு குணத்து-எவராலுஞ்சொல்லுதற்கரிய திருக்கல்யாணகுணங்களையுடைய, இராமன் -ஸ்ரீராமனது, திரு முகம் செவ்வி-திருமுகமண்டலத்தின் சௌந்தரியத்தை, இப்பொழுது—, நோக்கின் - பார்த்தால்,— (அது), எம்மனோரால்-எம்மைப்போன்றவரால், இயம்புதற்கு எளிது ஒ - சொல்லுதற்கு எளியதோ? [அன்றென்றபடி]: (ஏனெனில்), முன்பு-இதற்கு முன்பெல்லாம், (செம் தாமரையினை)-செந்தாமரைமலரை, ஒப்பது-போன்றதாகிய அம்முகச் செவ்வி, அவ் வாசகம் உணர கேட்ட பின்பு - அக்கைகேசிவார்த்தையை அறியக் கேட்ட பின்பு, அப்பொழுது அலர்ந்த செம் தாமரையினை வென்றது - அப்பொழுதுதான் அலர்ந்த செந்தாமரை மலரை வென்றிட்டது; (எ - று.)

எப்பொழுதும் தாமரைமலரை யொப்பதாகிய இராமனது முகச்செவ்வி, கைகேயியின்சொல்லைக் கேட்டவுடனே, தாதைபணியைத் தாயானவளுரைக்கஅதனைப் புரியுமாறு நேர்ந்த பாக்யத்தைக் கருதியும், அரசுபுரியுஞ்சுமை தனக்கு அப்போதுநீங்கிவிட்டது கருதியுந் தோன்றியமகிழ்ச்சியால்,மிகமலர்ச்சிகொண்ட தென்றவாறு. "மெய்த்திருவந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலு, மொத்திருக்குமுள்ளத்துரவோன்," "விலங்கிவில்லுமிழும் பூணான் விழுச்சிறைப்பட்டபோது,மலங்கலந் தாரிஞன்வந் தருஞ்சிறை விடுத்தபோழ்தும், புலம்பலு மகிழ்வு நெஞ்சிற்பொலிதலுமின்றிப் பொன்னூர்ந், துலங்கலந் துயர்ந்ததோளா னூழ்வினையென்று விட்டான்" என்று பாராட்டப்படுபவர், இவ்விராமனது குணத்தோடு எடுத்துக் கழிப்பதற்கும் தகுதியற்றவராதல் காண்க. எளிதோ-எதிர்மறை. அம்மா-வியப்புணர்த்துவதோர் 'ரிடைச்சொல்.
பி-ம்:—[1]எம்மனோருக்கியம்புவதெளிதே. [2]யார்க்கும். [3]பின்பின், பின்பவ். ()

௧0௯.—இதுவும் அது.

தெருளுடை [1]மனத்து மன்ன [2]னேவலிற் [3]றிறம்ப வஞ்சி
யிருளுடை யுலகந் தாங்கு மின்னலுக் [4]கியைந்து நின்றா
னுருளுடைச் [5]சகடம் பூண்ட [6]வுடையவ னுய்த்த காரே
றருளுடை யொருவ னீக்க வப்பிணி யவிழ்ந்த தொத்தான்.

(இ-ள்.)தெருள் உடை மனத்து-அறிவின் தெளிவையுடைய நெஞ்சினையுடைய, மன்னன் - சக்ரவர்த்தியினது, ஏவலின் - கட்டளையினின்று, திறம்ப-பிறழ்வதற்கு, அஞ்சி - பயந்து, இருள் உடை உலகம் - மயக்கத்தையுடைய உலகத்தை, தாங்கும் - காக்கின்ற, இன்னலுக்கு - வருத்தத்திற்கு, இயைந்து நின்றான்-சம்மதித்துநின்ற ஸ்ரீராமன்,-உருள் உடை சகடம் பூண்ட-சக்கரத்தையுடைய வண்டியிற் பூட்டப்பட்ட, உடையவன் உய்த்த-யஜமானனாற் செலுத்தப்பட்ட, கார் ஏறு - கரிய எருது, அருள் உடை ஒருவன் - கருணையையுடைய வேறொருவன், நீக்க - (அவ்வண்டியினின்றும்) விலக்குதலால், அப் பிணி அவிழ்ந்தது - அவ்வருத்தம் நீங்கியதனை, ஒத்தான்—.

இராச்சியத்தைச் சகடமாகவும், அப்பாரத்தைச் சுமப்பவனை எருதாகவும் கூறுதல்வழக்கமாதலால், அரசச்சுமையை நீங்கிய இராமன் வண்டிச்சுமையைநீங்கிய எருதுபோல் வருத்தம்நீங்கி இனிதிருந்தன னென்றவாறு. இதனாற் கைகேயியினிடத்து இராமன் நன்றிபாராட்டலாயின னென்பதும் தொனிக்கும்; உவமையணி. தெருள்-முதனிலைத்தொழிற்பெயர். வாழ்பவரது அஞ்ஞானவிருள் உலகத்தின்மே லேற்றப்பட்டது. "எருமையுமரையும் பெற்றமுமன்ன" என்றதனால் ஏறென்றார். பி-ம்:—[1]மனத்தின். [2]ஏவலை. [3]திறம்பல். [4]இசைந்து. [5]சகடம்பூட்டி, சகடவாழ்க்கை. [6]பாசமதகற்றிப்பின்னர். ()

**கக௦.—இராமன் கைகேயிக்கு இறுத்த விடை.**

*மன்னவன் பணியன் [1]றாகி [2]னும்பணி மறுப்ப னோவென்*
*பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ*
*[3]வென்னிதி னுறுதி யப்பா லிப்பணி தலைமேற் [4]கொண்டேன்*
*[5]மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்.*

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) மன்னவன் பணி அன்று ஆகில்-சக்ரவர்த்தியினது கட்டளையன்றாயினும், நும் பணி மறுப்பன்ஓ - உமதுகட்டளையைச் செய்யமாட்டேனென்பேனோ? என் பின்னவன் பெற்ற செல்வம்-என்தம்பியடைந்தஐசுவரியம், அடியனேன் பெற்றது அன்றோ - நான் அடைந்ததன்றோ? அப்பால் - பின்பு, இதின் - இதனினும்மேலான, உறுதி-நன்மை, என்-யாது?இ பணி-இக்கட்டளையை, தலைமேல் கொண்டேன் - தலைமே லேற்றுக்கொண்டேன்; மின் ஒளிர் கானம் - மின்னல்போன்ற வெயில் விளங்குகின்ற காட்டிற்கு, இன்றுஏ போகின்றேன்-இப்பொழுதே செல்கின்றேன்; விடைஉம் கொண்டேன்-(நும்மிடத்து) உத்தரவும் பெற்றுக்கொண்டேன்; (எ - று)—"என்று ...கோசலை கோயில்புக்கான்" என அடுத்த கவியில் முடிபு காண்க.

அரசர் கட்டளையிடவேண்டுமென்பதில்லை; நுமதுபணியே போதும்: மேலும் என்தம்பிக்கு இராச்சியம் கிடைப்பின், அது நான் அரசுபெற்றது போலவேயாகு மாதலால், இராச்சியமில்லையேயென்ற குறையும் எனக்கு இல்லை;இப்படி நானும் என்தம்பியும் நன்மைபெறுமாறு ஒன்றுநிகழுமாயின் இதைவிட மேம்படஉறுதியபப்பது ஒன்றுமில்லை யாதலால், நுமதுபணியைத் தலைமேற்கொண்டு இன்றே கானகத்துக்குச்செல்கின்றேன்; விடைபெற்றுக் கொள்கின்றேனென்றனன் இராமனென்க. கைகேசி கூறியதைக்கேட்டவுடன் இராமன் 'அப்படியேசெய்வேன். பரதனுக்குப் பட்டங்கட்டுவதைத் தந்தையார் என்னுடன்சொல்லவில்லையேயென்ற வருத்தம் என்னைத் துன்புறுத்துகின்றது: பரதனுக்குஎதையுங் கொடுக்கக்கூடியவன் நான்; தூதுவர் விரைந்துசென்று பரதனையழைத்துவரட்டும்: நான் போகின்றேன்' என்றனாக,கைகேயி 'பரதனையழைத்துவருவதைப்பற்றி நீ சிந்திக்கவேண்டா'என்று

கூறித் தனக்குள் 'பரதன் வந்திட்டால் இராமனைப் போகவிடான்: அதற்குள் இராமனைக்காட்டுக்குப் போக்கவேணும்' என்றுகருதி, 'தாமதியாதே: நீ கானகஞ்செல்வாயோ மாட்டாயோ என்ற ஐயத்தினால் மன்னவர் ஸ்நாநம்முதலியன செய்யார்.இப்போதே காட்டுக்குப் புறப்படுக'என்ன, இராமன் தமப்பனுருக்கு விருப்பமானதைச் செய்வதே எனக்குத் தருமாநுஷ்டாநமாகும். தமப்பனார்சொல்லாவிட்டாலும் நீர் சொன்னதேபோதும்: வரத்தின்மூலமாய் என்னைப்போகச்சொன்னதால் என்தன்மையின்னதென்று நீர் ஆராயவில்லைபோலும். நான் என்தாயுடன்சொல்லி அவரனுமதியைப்பெற்றுக்கொண்டு சீதைக்குஞ் சொல்லிவிட்டுப் பின்செல்கின்றேன்: இந்தத்தாமதத்திற்கு அவகாசந் தருக: பரதன் தந்தையார்க்குப் பணிவிடைசெய்யப் பார்த்துக்கொள்ளும்' என்று இவ்வாறுசொல்லி, தந்தையாரையும் கைகேயியையும் வந்தனஞ் செய்து புறப்பட்டனனென்று வால்மீகத்தி லுள்ளது. தலைமேற்கொள்ளுதல்-பயபக்தியோ டேற்றுக்கொள்ளுதல். நீரென்பது நும் எனத் திரிந்தது.
பி-ம்:—[1]ஆயின். [2]நின். [3]என்னினி. [4]கொண்டு. [5]மின்னொளி. (உகஎ)

கைகேசிசூழ்வினைப்படலம் முற்றிற்று.

---

## ச - ஆவது நகர் நீங்குபடலம்.

அதாவது - ஸ்ரீராமபிரான் கைகேசிசொல்லால் வனம்புகுமாறு நகரினின்று நீங்கியதைச் சொல்லும் படல மென்பது, பொருள்.

இராமன் இங்ஙனங் கைகேயியினிடம் சொல்லி வணங்கிவிட்டுத் தந்தையைத் திக்குநோக்கித் தண்டனிட்டுப் பின் கோசலையின்மாளிகையிற்சென்று தண்டனிட்டுநிற்க, பட்டாபிஷேகத்திற்குஉரிய அடையாளமொன்றுமில்லாமல் மகன் வந்துநிற்பதுகண்டு கோசலை 'முடிசூட ஏதாகிலும் இடையூறு உண்டோ?' என்றுவினவ, இராமன் 'நின்மகன்பரதன் முடிசூடுகின்றான்' என்றான். கோசலை 'முறைமையன்றுஎன்பதன்றி மற்றைப்படி பரதன் குணத்தால் நின்னினும் உயர்ந்தவனே. மகனே! தம்பிக்குப் பூமியைக்கொடுத்து மாறுபாடின்றி நீடூழிவாழ்க' என்றாள். அதுகேட்டு மகிழ்ந்த இராமன், 'தந்தை என்னைப் பதினான்குவருடம் கானகத்திலுறையுமாறு கட்டளையிட்டுள்ளார்' என்றான். அதுகேட்டதும் கோசலை துடிதுடித்து வருத்தத்தினாற் பலவாறுகூறிப் புலம்பினாள். அங்ஙனம் வருந்துகின்ற கோசலையைநோக்கி இராமன், மன்னவனைப் பொய்யனுக்கப் பார்க்கலாமோ? தம்பி இராச்சியம்பெற, காட்டில் நிச்சிந்தையாகவாழ்ந்து தந்தையைச் சத்தியசந்தனுக்குவதைக்காட்டிலும் யான் பெறும் பேறு யாதுஉளது? அண்ணலேவலைமறுக்கல் எனக்கு முடியுமோ? மனமழியேல்' என்ன, கோசலை 'நீ கானகஞ்செல்லத்துணிந்தால் என்னையும் உடன்அழைத்துச்செல்வாய்' என்றாள். இராமன் 'அம்மா! என்னைவிட்டுப்பிரிந்துவருந்தும் மன்னவரைத் தேற்றுகைதல்லவோ நுமது கடன்? என்னுடன்வரத் துணியலாமோ? பரதனுக்குப் பட்டங்கட்டிக் கான

கஞ்செல்லும்போது மன்னவருடன் நீரும்சென்று அருமைநோன்புகள் புரிக; தேவர்களும் தவஞ்செய்து மேன்மைபெற்றாராதலால் யானும் வனஞ் சென்று தவஞ்செய்து பதினான்குவருடங்களையும் பதினான்குநாளாகக்கழித்து மேன்மையுடன்வருவேன்; விடைதருக' என்றனன். எவ்வளவுதேறுதல் சொல்லியும் கோசலை கேளாமற் காட்டுக்கு இராமனைச்செல்லாதிருக்கும்படி அரசனைக் கேட்டுத்தடுப்பேனென்று அரசனிருக்குமிடத்துக்குச் சென்றனளாக, இராமன், 'சுமித்திரையானவள் கோசலையையுந் தேற்றுவாள்' என்று அவள்மாளிகைக்குச் சென்றான். இதுநிற்க.

சென்றகோசலை மன்னவன் மூர்ச்சித்திருப்பதைக்கண்டு பலவாறுபுலம்ப, அக்குரல் பட்டாபிஷேகத்திற்குவந்திருக்கும் மன்னவர்முதலியோரின் செவியில்விழ, அவ்வழுகைக்குரலுக்குக் காரணத்தை யறிந்துவருமாறு அங்குள்ளோர் வசிட்டமுனிவனை வேண்டினார்கள். அம்முனிவன் அந்தப்புரத்துச்சென்று கைகேயியைவினவிச் செய்தியுணர்ந்து 'மன்னவா! அயரேல்: கைகேயியே இராமனுக்கு அரசுதருவாள்' என்றுசொல்லிச் சீதோபசாரஞ்செய்து தேற்ற, அப்போதுமன்னவனுக்கு உயிர்ப்புவரக்கண்டு இன்மொழிகளால் மீண்டும் அவனைத்தேற்றிக் கைகேயியைநோக்கிப் பலவாறு மதி கூறவும் அவள் விடாப்பிடியுடனிருக்க, பிறகு மன்னவனும் அவளை நன்மொழிகள் சொல்லிப்பார்க்கவும் சிறிதும் அவள் இரங்காதது கண்டு, 'நீ என் தாரமல்லை: மன்னனாகவரும் பரதனையும் மகனென்று உன்னேன்: அவனும் என்னுரிமைக்கு ஆகான்' என்று சொல்லிவிட்டு, கோசலை வந்திருப்பதையறிந்து மூர்ச்சிக்க, அவள் பலவகையாகத்தேற்றத் தேறிய மன்னவன் தான் ஒரு முனிகுமாரனைக் கொன்றதனாற் சாபமுற்ற வரலாற்றைத் தெரிவித்து 'என்னுயிர்போவது திண்ணம்' என்றுகூற, அதுகேட்டுக் கோசலை திகைத்து நிற்க, முனிவன்போய் அவையோர்க்குச் செய்தி தெரிவிக்கவே, இராமாபிஷேகம் தடைப்பட்டபொருள் அந்நகரத்து எங்கும் பரவ, உயர்திணையோடு அஃறிணையான பொருள்யாவும் பெருவருத்தமடைந்தன. கூனியும் கைகேசியுமே, அந்நகரில் வருந்தாதவர்.

இச்செய்தி கேள்வியுற்ற இலக்குமணன் பெருஞ்சினங்கொண்டு யுத்தசன்னத்தனாகி 'எவர் வந்தாலும் வரட்டும்: இராமாபிஷேகத்துக்குத் தடைசெய்வோரைத் தொலைத்துவிடுகிறேன்' என்று சொல்லி நாணைப்புடைத்துக் கொண்டு நகர்நடுவில் திரிந்துகொண்டிருந்தான். சிற்றன்னையிடமிருந்த இராமன் அவ்வொலிகேட்டு வந்து இலக்குமணனைநோக்கி, யுத்தசன்னத்தனாகியுள்ள காரணத்தை வினவி, 'எல்லாம் விதியினால் விளைவது: எவர்மீதும் குற்றம்இல்லை' என்ன, 'இலக்குவன் நான் விதிக்கும் விதியாவேன்: என்வில்லின்முன்னே விதி என்னசெய்யமாட்டும்?' என்ன, இராமன் 'மறையோதும் வாயால் நீ இங்ஙனம் சினங்கொண்டு கூறலாமோ? தாதை சொல்லை மீறுதல் எனக்குத்தகாது' என்ன, இலக்குமணன் சீற்றந்தணிய, பின் அவனுடன் சுமித்திரையின் கோயிலையடைந்து தாம் தண்டகவனஞ்செல்வது உணர்ந்து

அன்றோள்வருந்த அவளைத்தேற்றினன். அப்போதுசேடியர்மூலமாகக்கைகேயி வரவிடுத்தமரவுரியைவாங்கிக்கொண்டு, இலக்குமணன் தாயைப் பணிந்து நிற்க, அவள் 'அவ்வனம் இவ்வயோத்தி: இராமனே தசரதன்: சீதையே உன் தாயர்: நீ இவ்விராமனுக்கு அடியவன்போல ஏவல்புரிவாய். இவ்விராமன் திரும்பிவந்தால் வருக: இன்றேல் முன்னம் முடிக: ஒருக்ஷணம் நிற்பினும் ஏதம்' என்று உபதேசித்துவிடைகொடுத்தாள். இருவரும் சுமித்திரையைத் தொழுதுமீண்டபின், சீரைகளைத்தரித்தனர். பின் இராமன் 'தாய்மார்களையும் தந்தையாரையும் தேற்றிக்கொண்டு நகரில்தானே தங்குக'என்று இலக்குமணனிடஞ் சொல்ல, இலக்குவன் கண்ணீர்வடித்து 'நானும்சீதையும் உன்னைவிட்டு ஒருநொடிப்போதும் பிரிந்து உயிர்வாழேம்: கருணைபுரிக' என்று வேண்ட, இராமனும் இலக்குமணன் உடன்வருவதற்கு உடன்பட்டனன். அங்குவசிட்டமுனிவன் வந்து இராமன் மரவுரிதரித்த கோலத்தோடு இருப்பதுகண்டு துன்பக்கடலுளாழ்ந்து இராமனைநோக்கி. நீ கானகஞ்செல்லவேண்டா' என்று தடுக்க, இராமன் 'தான் கானகஞ்செல்வதே தக்கது' என்று தக்கநியாயமெடுத்துக் காட்டினன்; முனிவனும் வாய்மூடினன்.

பின்பு இராமன் சீதையின் மாளிகைநோக்கிச்செல்ல, அவனைக்கண்ட அந்நகரத்து உயர்திணைப்பொருளோடு அஃறிணைப்பொருளோடுவாசியற எல்லாம் துக்கசாகரத்துளழுந்தின.அங்ஙனந்தம்பியோடு செல்கின்ற இராமனைத் தொடர்ந்து தாய்மாரும் அந்தணர் அரசர் முதலியோரும் அழுதுகொண்டு உடன்வந்தனர்.மரவுரிதரித்த கோலத்தோடுஅங்ஙனம்வரும் இராமனைச்சீதை கண்டுதிடுக்கிட்டுநடுங்கிக்கண்களில்நீர்வடிய 'இது என்?' என்றுவினவ, 'என் தம்பிபரதன் அரசுபுரிவான். நான்காட்டுக்குப்போய்த் தந்தைபணியை நிறைவேற்றி வருவேன்: வருந்தாதிரு' என்றான். நாயகன் வனத்துக்குச் செல்வேனென்றதைக்காட்டிலும் வருந்தாதிருஎன்றசொல்லைக் கேட்டதால் துயரம் மேலிடப்பெற்றுச் சீதை 'தாய்தந்தையர்சொல்லைச் செய்வது தக்கதே: என்னைக் கைவிடத்துணிந்த காரணம் யாது?' என்ன, இராமன் 'கல்லையும் உருக்கும் வெப்பத்தையுடைய காடு உன்மெல்லிய பாதங்கட்குச் சுடும்: உன்னையழைத்துச் செல்வதால் எனக்கு வருத்தம் நேரும்' என்று பலபடி சொல்லித் தடுக்க, சீதை 'நின்பிரிவினும் காடு சுடுமோ?'என்னைத் துறத்தலால் இன்பம் நுமக்கு நேரும்போலும்'என்று பலவாறாகத் தன்மனவுறுதியைத்தெரிவித்துச் சீரைசாத்திக்கொண்டு பின்னே வரலானாள். இங்ஙனம் இளையவன்முன்னே செல்லவும் திருமகள் பின்னேவரவும் இடையேநடக்கும் இராமனைக்கண்டு அந்நகரத்தவர் பட்ட வருத்தத்தை அளவிட்டுச் சொல்லுதல் எவர்க்கும் இயலாது. அவ்வண்ணமே இராமன் தந்தையாரிருக்குமிடஞ் சென்று தாய்மாரை வணங்கி 'மன்னவனைத் தேற்றிக்கொண்டிருங்கள்' என்று சொல்லிவிட்டு, சுமந்திரன் கொணர்ந்த தேரின்மீது ஏறிச்செல்லலாயினனென்பது, இப்படலத்திற் கூறும் பொருள்.

க.—ஸ்ரீராமன் கைகேயியையும் தசரதனையும் வணங்கிவிட்டுக் கோசலையின் மாளிகையை யடைதல்.

என்றுகொண் டினைய கூறி யடியிணை [1]யிறைஞ்சி மீட்டுந்
தன்றுணைத் தாதை பாத மத்திசை நோக்கித் [2]தாழ்ந்து
பொன்றிணி போதி னாளும் பூமியும் புலம்பி நையக்
குன்றினு முயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்.

(இ - ள்.) குன்றின்உம் உயர்ந்த தோளான் - மலையினுஞ் சிறந்த புயங்களையுடைய ஸ்ரீராமன், - என்று இனைய கூறி - என்று இப்படிப்பட்டவார்த்தைகளைச் சொல்லி, அடி இணை-(கைகேயியினது) உபயபாதங்களை, மீட்டும் இறைஞ்சி-மறுபடியும் வணங்கி, தன் தாதை-தனது தகப்பனாருடைய [தசரதனுடைய], துணை பாதம் - அடியிணையை, அ திசை நோக்கி தாழ்ந்து - அத்திக்கைக்குறித்து வணங்கி,—திணி பொன் போதினாள்உம்-திண்மையாயிருக்கின்ற பொற்றாமரைப்பூவில்வீற்றிருக்கின்ற இலக்குமியும்,பூமிஉம்-பூமிப்பிராட்டியும், புலம்பி நைய-வருந்தி அழும்படி, கோசலை-கௌசல்யையினுடைய, கோயில் - மாளிகையை, புக்கான் - அடைந்தான்; (எ - று.)

தான் வனஞ்செல்லப்போவதைக் கோசலைக்குத் தெரிவித்துத் தன்னைப் பிரிதலால் வருந்தக்கூடிய தசரதமன்னவனைத் தக்கஉபசாரம் முதலியவற்றால் தேற்றிக்கொண்டு இருக்குமாறு அறிவுறுத்தி அவளைச் சமாதானப்படுத்தி அன்னாளிடத்தினின்று விடைபெற்றுச் செல்வதற்காக அக்கோசலையின் மாளிகைக்கு ஸ்ரீராமன் சென்றனனென்க. தசரதன் மூர்ச்சையடைந்துகிடத்தலால் அவனிடத்து நேரே கிட்டிவிடைபெற இயலாததுபற்றி ஸ்ரீராமன் அவனைத் திசைநோக்கித் தொழுதனன். பிரிவிற்குஅஞ்சி ஆற்றாமையால், போதினாளும் பூமியும் புலம்பி நைவாராயினர்: பொன்திணிபோதினாள்-ராஜ்ய லக்ஷ்மி. நைந்து புலம்பவென மாறுக. கொண்டு - அசை; இனி, எண்ணிக்கொண்டென்றுரைத்தலும், கூறிக்கொண்டென்ற கூட்டலுமாம். கீழ் "வந்தவடன்னைச்சென்னி மண்ணுறவணங்கி" என்றதனை நோக்கி 'மீட்டும்' என்றார். தன்றுணைத் தாதையென்றதற்கு - தான்அவதரித்தபயனைத் தலைக்கட்டுவிக்கத் துணையாய்நின்ற தாதை யென்றுமாம். பி-ம்:—[1]தொழுது. [2]தாழ்த்து.

உ.—இராமன் கௌசலையுழன் சேல்லுதல்.

குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையு மின்றி
யிழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் னிரங்கி [1]யேக
மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென் றென்று
தழைக்கின்ற வுள்ளத் தன்னாண் முன்னொரு தமியன் சென்றான்.

(இ - ள்) (அடைந்து), 'மழை குன்றம் அனையான் - மேகங்கள் தங்கப்பெற்ற மலையையொத்த இராமன், மௌலி கவித்தனன் வரும் - கிரீடத்தைச்

சூட்டிக்கொண்டு வருவான்,' என்று என்று—, தழைக்கின்ற-மகிழ்கின்ற, உள்ளத்து - மனத்தையுடைய, அன்னாள் முன் - அக்கோசலைக்குமுன், குழைக்கின்ற கவரி இன்றி - வீசுகின்ற சாமரமில்லாமல், கொற்றம் வெண் குடைஉம் இன்றி - வெண்கொற்றக்குடையு மில்லாமல், இழைக்கின்ற விதி முன் செல்ல-(நன்மைதீமைகளை)உண்டாக்குகின்ற ஊழ்வினை முன்னே போகவும், தருமம் பின் இரங்கி ஏக - அறக்கடவுள் வருந்திப் பின்னே வரவும், ஒரு தமியன்-தன்னந்தனியனாய், சென்றான்-(அவ்விராமன்) வந்து சேர்ந்தான்.

தான் முடிசூடாமற் காட்டிற்குச்செல்லச் சங்கற்பித்துவிட்டதனால் அரசசின்னங்களை ஸ்ரீராமன் விலக்கிவிட்டானென்று முதனூல்கொண்டு அறிக. உலகத்துப் பிறந்ததற்குஏற்ப ஊழ்வினைவசத்தனாயுழல்பவன்போன்று நடித்தனனென்பதை விளக்க 'இழைக்கின்ற விதிமுன்செல்ல' என்றார். இழைக்கின்றவிதி - தம்முடைய ஆதிசங்கற்பமுமாம். தர்மஸம்ஸ்தாபனார்த்தமாகத் தோன்றினவனாதலின், தருமம் பின்தொடர்ந்தது. இராமன் செல்கையில் தருமமுஞ்செல்லுமென்று கூறப்படுவதனை, 'தருமமே தூது செல்ல - வருகின்றான்'' என்று மிதிலைக்காட்சிப்படலத்துங் காண்க. கருமைக்கும், உயர்விற்கும் 'மழைக்குன்று' என்றார்: இனி, குளிர்ச்சியையுடைய குன்றென்றுமாம். மௌலி-ஆகுபெயர். தமியன்என்னுஞ்சொல், தனிமைப் பொருள்குறித்த தமியென்பதன் அடியாகப்பிறந்தது. ஒரு தமியன் - ஒருபொருளைக்குறித்த இருசொற்கள்: தன்னந்தனியன்: முடிசூட்டு சின்னம் எதுவும்இல்லாத தமியனென்றவாறு. பி-ம்:—[1]செல்ல. (௨௧௧)

### ௩.—கோசலை இராமனைக்கண்டு சங்கையினால் 'முடிபுனைய இடையூறுஉண்டோ?' என்று வினவுதல்.

புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரா
[1]னனைந்திலனென்கொ லென்னு மையத்தா ளனினபாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன் வணங்கலுங் [2]குழைந்து வாழ்த்தி
நினைந்ததென் னிடையூ றுண்டோ நெடுமுடி புனைதற் கென்றாள்.

(இ - ள்.) மௌலி புனைந்திலன் - (இராமன்) திருமுடியைச்சூட்டிக்கொண்டானில்லை; குஞ்சி மஞ்சனம் புனிதம் நீரால் நனைந்திலன் - தலைமயிர் நீராட்டத்திற்குரிய பரிசுத்தமாகிய தீர்த்தத்தினால் நனையப்பெற்றானில்லை; என்கொல்-(இதற்குக்காரணம்) யாதோ?என்னும் ஐயத்தாள்-என்னுஞ்சந்தேகத்தைக்கொண்ட அக்கோசலையினுடைய, நளினம் பாதம்-தாமரைமலர்போன்றதிருவடிகளை, பொன் கழல் வனைந்த கால்-பொன்னினாற்செய்த வீரக்கழலணிந்த திருவடியையுடைய, வீரன்-ஸ்ரீராமன், வணங்கலும்-சேவிக்க,குழைந்துவாழ்த்தி-(அவள்) வருந்தி ஆசீர்வாதஞ்செய்து, 'நினைந்தது என்-(சக்ரவர்த்தி)எண்ணின காரியம் யாதாயிற்று? நெடு முடி புனைதற்கு - நீண்டகிரீடத்தைச் சூடுதற்கு, இடையூறு உண்டோ - (யாதாயினும்) தடையுளதோ?' என்றாள்—; (எ - று.)

குஞ்சி - ஆண்மயிர். கங்கையேமுதலவாய கன்னியீருன தீர்த்த மங்கலப் புனலுநாலுவாரியினீருமாதலின், மஞ்சனப்புனிதநீரென்ருள். பி-ம்:—[1]நனைந்திலதென்கொல். [2]மகிழ்ந்து. (௩௦௦)

வேறு.

ச.—பரதன் முடிசூடுகின்றா னென்றல்.

மங்கை யம்மொழி [1]கூறலு மானவன்
செங்கை கூப்பி[2]நின் காதற் றிருமகன்
பங்க மில்குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின் றானென்றான்.

(இ - ள்.) மங்கை-கோசலை, அ மொழி கூறலும் - அவ்வார்த்தையைச் சொல்ல,—மானவன்-ஸ்ரீராமன், செம் கை கூப்பி-சிவந்தகைகளைக் கூப்பிக்கொண்டு, 'நின் காதல் திருமகன்-உனது அன்பிற்குஇடனான அழகியகுமாரனும், எம்பி - எனது தம்பியுமாகிய, பங்கம் இல் குணத்து - குற்றமில்லாத குணங்களையுடைய, பரதன்ஏ—, துங்கம் மா முடி-உயர்வாகிய பெருமையையுடைய கிரீடத்தை, சூடுகின்றான் - கவித்துக்கொள்ளுகிறான்' என்றான்—.

பரதன் - நாட்டைப்பரிப்பவன்: காப்பவனான தசரதன் சுவர்க்கம்புக, ஸ்ரீராமனும் வனம்புக, அரசனில்லாத இராச்சியத்தைக் காத்தல் நோக்கி இப்பெயர் வசிஷ்டரால் இடப்பட்டது. மானவன்-(வைவஸ்வத) மநுவமிசத்தில் பிறந்தவன். பி-ம்:—[1]கூறலுமன்னவன். [2]உன். (௩௦௧)

ரு.—கோசலை 'மூத்தவனிருக்க இளையவனுக்கு முடிசூட்டுதல் முறைமையன்றே' எனல்.

முறைமை யன்றென்ப தொன்றுண்ட [1]தல்லது
நிறைகு ணத்தவ னின்னினு நல்ல[2]னாற்
குறைவி லனெனக் கூறின ணல்வர்க்கு
மறுவி [3]லன்பினில் வேற்றுமை மாற்றினாள்.

(இ - ள்.) நால்வர்க்கு உம்-(இராமன் இலட்சுமணன் பரதன் சத்துருக்கினன் என்ற) நான்கு குமாரர்களிடத்தும், மறு இல் அன்பினில்-குற்றமற்ற அன்புசெலுத்துவதில், வேற்றுமை-வேறுபாட்டை, மாற்றினாள் - ஒழித்தவளாகிய கௌசல்யை, '(மூத்தவன்இருக்க இளையவன் அரசுஆளுதல்), முறைமை அன்று என்பது ஒன்று உண்டு-இராசநீதியன்று என்கின்ற ஒரு குறைமாத்திரம் உண்டு; அது அல்லது - அதுவல்லாமல், (மற்றைப்படி), (அந்தப் பரதன்), நிறை குணத்தவன்-(யாவரினும்) நிறைந்த குணத்தையுடையவன்; நின்னின் உம் நல்லன் - உன்னைக்காட்டிலும் நல்லவன்; (அன்றியும்), குறைவு இலன்-(ஒருவகையாலும்) குறைவுஇல்லாதவன்,' என-என்று, கூறினள் சொன்னாள்; (எ - று.)—ஆல்-ஈற்றசை; தேற்றமுமாம்.

அப்போது கௌசல்யை, எல்லாப்புத்திரரையும் ஒரு நிகராக நினைப்பவளாதலால் பரதனுக்குப் பட்டங்கட்டப்போவதிற் சிறிதும் மனத்தாங்கல் கொள்ளாது மகிழ்ச்சியேயடைந்து, தன் புதல்வனை நோக்கி 'மைந்தா! இப்போது பட்டங்கட்டக்கருதிய பரதன் மேம்பட்ட குணசாலி; உன்னைக்காட்டிலும் நல்லவன்: அரசு ஆளுதற்கு வேண்டிய தகுதியாவும் நிறைந்தவன்: ஆதலால், அவனுக்குப் பட்டங்கட்டுதல் ஏற்கும்: ஆயினும், குணக்கேடனாயிருந்தாலன்றி மற்றைப்போது மூத்தவனுக்கே முடிசூட்டுதல் அரசமுறையாயிற்றே!' என்றன ளென்பதாம். பரதன் கௌசல்யாதேவியினிடத்து இராமனைக்காட்டிலும் மிக்க பணிவோடு நடத்தலால், அக்கௌசலை, பரதனை 'நின்னினும் நல்லன்' என்கிறாளென்க. கௌசல்யை இராமன் முதலிய நால்வரிடத்தும் ஒரு தன்மையான அன்பையுடையவளாதலால், பரதனுக்குப் பட்டங்கட்டப்போவதைக் கேட்டபோதும் மனத்தில் வேறுபாடின்றி அந்தப்பரதனைப் பாராட்டிக் கூறினாளென்பதை விளக்க, கவி, கௌசலைக்கு 'நால்வர்க்கு மறுவிலன்பினில் வேற்றுமைமாற்றினாள்' என்று ஒரு பெயர் கூறினார்: இத்தொடர்-இங்ஙனம் ஒரு கருத்தைத் தெரிவிப்பது - **கருத்துடையடைகோளியணியாம்.**

ஒன்று-எண்ணலளவையாகுபெயரால், ஒரு குறைவு என்ற பொருளைத் தந்தது. [1]மும்மையின் என்ற பாடத்துக்கு, மும்மை - மூன்று என்ற பொருளது: "தெரிமாண்டமிழ் மும்மை" என்ற இடத்துப்போல; மூவுலகத்தினும் என்க. இனி மும்மையின் நிறைகுணத்தவன் என்பதற்கு - சத்துவம் ரஜசு தமசு என்ற மூன்றுகுணங்களுள் நிறைந்தகுணமாகிய சத்துவகுணத்தையுடையவனெனினுமாம். நின்னினும் மும்மையின் நல்லன் என இயைத்து - உன்னைக்காட்டிலும் மூன்றுமடங்கு நல்லவனென உரைப்பாருமுளர். நிறைகுணத்தவன் - நிறைந்தகுணத்தையுடைய பரதனெனக் கூறி, எழுவாயாக்குதலும் ஒன்று. நால்வர் - தொகைக்குறிப்பு; உம்மை - முற்றும்மைப்பொருளது. நால்வர்க்கும்—**உருபுமயக்கம்:** வேற்றுமைமாற்றினாள்—**பிராசம்.**
**பி-ம்:**—[2]ஓர். [3]அன்பன்றி. (நடO௨)

**சஈ.—கோசலை இராமனை நோக்கி 'தந்தைசொல்லை மறமல், தம்பிக்கு அரசு கொடுத்து வாழ்க' எனல்.**

என்று பின்னரு மன்னவ னேவிய
தன்[1]றெ ணுமை மகனே யுனக்கற
னன்று [2]நும்பிக்கு நானில நீகொடுத்
தொன்றி வாழுதி யூழி பலவென்றாள்.

(இ - ள்.) என்று - என்று கூறி, பின்னர்உம்—, (கோசலை தன் மகனை நோக்கி), 'மகனே—! மன்னவன் ஏவியது - சக்ரவர்த்தி ஆஜ்ஞாபித்த தொழில், அன்று-(நீதி) அன்று, எணுமை-என்று சொல்லாமை, உனக்கு—, அறன் - தருமமாகும்; நீ—, நன்று - நன்மையாக, நும்பிக்கு - உனது தம்பியாகியபரதனுக்கு, நானிலம்கொடுத்து - உலகத்தைக் கொடுத்து, ஒன்றி -

(அவனோடு மாறுபடாமற்) கூடியிருந்து, ஊழி பல - பல நெடுங்காலம், வாழுதி—, என்றாள்—; (எ - று.)

தந்தைசொன் மிக்க மந்திரமில்லையாதலால், 'தந்தையாரின்ஏவல் முறைமையானதா? அன்றா?' என்று ஆராய்ச்சி செய்யாமலே அங்கீகரித்தல் உனக்கு அறமாம்: ஆகவே, தம்பிக்கு இராச்சியத்தைக் கொடுத்து அவனோடு ஒற்றுமை கொண்டு வாழ்வா யென்றனள் கோசலை யென்க. மூத்த குமாரனுக்கே அரசு உரியதாதலால், 'நீகொடுத்து' என்றாள். பித்ருவசநபரிபாலநஞ்செய்யவேண்டுமென்றாளென்பதாம். பி-ம்:—[1]எனுமகனேயுனக்கன்புடை. [2]தம்பிக்கு.(௩௦௩)

எ.—இராமன் 'தந்தையார் எனக்கு ஏவியதும் ஒன்று உண்டு 'எனல்.

தாயு ரைத்தசொற் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தையத் தோமில் குணத்தினா
னாய கன்னெனை நன்னெறி யுய்ப்பதற்
கேய துண்டோர் பணியென் றியம்பினான்.

(இ-ள்.) (என்று), தாய் - கோசலை, உரைத்த - சொல்லியருளிய, சொல்- வார்த்தையை, கேட்டு—, தூய சிந்தை தழைக்கின்ற - பரிசுத்தமாகிய மனம் மகிழ்கின்ற, அ தோம் இல் குணத்தினான் - குற்றமற்ற குணங்களையுடைய அவ்விராமன், (தாயை நோக்கி), 'நாயகன்-சக்ரவர்த்தி, எனை-அடியேனை, நல் நெறி உய்ப்பதற்கு-சந்மார்க்கத்திற் செலுத்துவதற்காக, ஏயது - நியமித்ததாகிய, ஓர் பணி-ஒரு கட்டளை, உண்டு—,' என்று—, இயம்பினான்-சொன்னான்.

பரதனுள்வதைக் கௌசலை ஒப்பியதனால், இராமன் தழைக்கின்ற சிந்தையனானான். மன்னவன் கானகம்ஏகுமாறு ஏவினானென்று முதன்முதலிற் கூறாமல் எனை நன்னெறியுய்ப்பதற்கு ஏயதுஎன்று முதலிற்கூறிப் பின் தெரிவிக்குந் திறம் பாராட்டற்குரியது. பூமிக்கு நாதனாதலாலும், கோசலைக்குத் தலைமகனாதலாலும், ஐங்குரவருள் தகப்ப னொருவ னாதலாலும், "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" ஆதலாலும், சக்ரவர்த்தியை, 'நாயகன்' என்றான்.

அ.—கோசலை வினவ, இராமன் மன்னவன் பணிதெரிவித்தல்.

ஈண்டு ரைத்த பணி[1]யென்னை [2]யென்றனள்
மாண்டோ ரேழினோ டே[3]ழுகன் கானிடை
மாண்ட [4]மாதவத் தோருடன் வைகிப்பின்
மீண்டு நீ[5]வரல் வேண்டுமென் றானென்றான்.

(இ-ள்.) (அதனைக்கேட்டு), 'ஈண்டு-உன்னிடத்து, உரைத்த சொன்ன, பணி-காரியம், என்னை - யாது?' என்றனும்-என்று (அக்கோசலை) வினவிய வளவில்,—(ஸ்ரீராமன் அவளைநோக்கி), 'நீ—, ஓர் ஏழினோடு ஏழ் ஆண்டு-ஒரு பதினான்குவருஷகாலம், அகல் கானிடை-பரந்த காட்டில், மாண்ட மா தவத்தோருடன் - மாட்சிமைப்பட்ட சிறந்த இருடிகளுடன், வைகி - சேர்ந்து தங்கி, பின்—, மீண்டு வரல்வேண்டும் - திரும்பிவரவேண்டும், என்றான் - என்று (சக்ரவர்த்தி) ஆஜ்ஞாபித்தான்,' என்றான்-என்று (தந்தை காட்டிற்குப்போமாறு ஏவியசெய்தியைத்) தெரிவித்தான்: (எ - று.)

பதினன்குவருடங் காட்டில் தவசியரோடு உறைந்து பிறகு மீண்டுவருமாறு தந்தையார் எனக்குக் கட்டளையிட்டன ரென, இராமன் கோசலையிடத்துத் தந்தையின்கட்டளையைத் தெரிவித்தன னென்க. தவத்தால் மனந்தூயவராதலின் 'மாண்டமாதவர்' என்றது. ஈண்டு - முன்னிலைக்கண் வந்தது: இப்போது எனினுமாம். கான் - கானநமென்பதன் விகாரமென்பர். பி-ம்:— [1]என்கொல். [2]என்றவட்கு. [3]அருங். [4]மாதவரோடுடன். [5]வர. (௩௦௫)

க.—இதுமுதல் ஆறுகவிகள் - அச்சொல்லைக்கேட்ட கோசலை வருந்துதலைக் கூறும்.

ஆங்கவ் வாசக மென்னு மனல்குழை
தூங்கு தன்செவி யிற்றொட ராமுன
மேங்கி னளிளைத் தாடிகைத் தாண்மனம்
வீங்கி னள்விம்மி னள்விழுந் தாளரோ.

(இ - ள்.) ஆங்கு-அப்பொழுது, அ வாசகம் என்னும் அனல்-அவ்வார்த்தை யென்கிற தீ, குழை தூங்கு தன் செவியில் தொடரா முனம் - குழையென்னுங்காதணி அசைகின்ற தன்னுடைய காதுகளில் விழாததற்கு முன்னமே, (அந்தக்கோசலை,—ஏங்கினள் - இரங்கினள்; இளைத்தாள் - மெலிந்தாள்; மனம் திகைத்தாள் - நெஞ்சு பிரமித்தாள்; வீங்கினள்-(மயக்கம்) மிகுந்தாள்; விம்மினள் - அழுதாள்;விழுந்தாள்—; (எ - று.)—அரோ - ஈற்றசை.

வாசகமென்னுமனல் என்ற விதப்பு - உலகத்துநெருப்புச்சுடுவது தான் சேர்ந்தபின்பே: இந்நெருப்புச சேராத முன்னுஞ் சுடு மென்னும் **வேற்றுமை** தோன்ற நின்றது. அனலும் வாசகமுஞ் சுடுதற்றொழிலான் ஒத்தலால், **உரு வகப்**படுத்தினர். தூங்குதல் - அசைதலாதலை "தூங்குசிறைவாவல்" என்றவிடத்திலுங் காண்க. இது காரியத்தை முன்னுங் காரணத்தைப் பின்னும் நிகழ்வனவாகச்சொல்லுதலால், **மிகையுயர்வுநவிற்சியணி**: இதனை, அத்யந்தாதிசயோக்தியென்பர் வடநூலார். இதில் காரண காரியங்களின் முன்பின்னிகழ்தலாகிய முறையில் பிறழ்வு கூறப்பட்டது, காரியவிரைவைக் குறிப்பிக்கும். நாற்சீரடிப்பாக்களில் மோனையெழுத்துக்கள் சீரின்முதலிலன்றி இடையிலும்வரப்பெறுமென்பது இச்செய்யுளிற்கருதத்தக்கது.(௩௦௬)

க0. வஞ்ச மோ மக னே [1]யுனை மாநிலந்
தஞ்ச மாகநீ தாங்கென்ற வாசக
நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வெனோ
[2]வஞ்சு மஞ்சுமென் றாநுபி [3]ரஞ்சுமால்.

(இ-ள்.) (விழுந்து),'மகனே—! உனை-உன்னைக்குறித்து,'மா நிலம் தஞ்சம் ஆக நீ தாங்கு - நீ இப்பெரியபூமியைப் பற்றுக்கோடாகக் காப்பாயாக,' என்ற - என்று மன்னவர்சொன்ன, வாசகம்-வார்த்தை, வஞ்சமோ-வஞ்சனையோ? நஞ்சமோ-விடமோ? இனி நான் உயிர் வாழ்வெனோ—? என் ஆர் உயிர்

அஞ்சும் - எனது அரிய பஞ்சபிராணன்களும், அஞ்சும் அஞ்சும் - மிகவும் பயப்படும்' (என்றுகூறினுள் கௌசலை); (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இராச்சியத்தையாளவேணுமென்ற பிரஸ்தாவம் இல்லாவிட்டால் நீ காடு செல்லவும் நிகழ்ந்திராதென்பாள்'உனைமாநிலந்தஞ்சமாக நீ தாங்கென்ற வாசகம் நஞ்சமோ' என்கிருள். "மெய்பொடிப்பச்சிங்கிகுளிர்ந்துங்கொலும்" என்றவாறு முதலில் இனிதுபோன்று பின் இன்னுதாகிமுடிதல் நஞ்சின் இயல்பாதலால், இவ்வாறு கூறியதுமாம். மாநிலந் தஞ்சமாகநீ தாங்கென்ற வாசகம்-"தஞ்சமிவ்வுலகநீ தாங்குவாயென" என்று ஆறுசெல்படலத்து வருகிறது. அவ்வாருன உரையைக் கேட்ட நான் உயிரைக் கொண்டிருக்க இயலாது எனப் பின்னடிகளாற் கூறுகிருள். பி-ம்:—[1]நினை. [2]எஞ்சுமெஞ்சும். [3]எஞ்சுமால், என்னுமால். (௩0எ)

கக. [1]கையைக் கையி னெரிக்குந்தன் காதலன்
வைகு மாலிலை யன்ன வயிற்றினைப்
பெய்வ ளைத்தளி ராற்பிசை யும்புகை
[2]வெய்து யிர்க்கும் [3]விழுங்கும் புழுங்குமால்.

(இ-ள்.) (என்றுசொல்லிப்பின் கௌசலை), கையை கையில் நெரிக்கும்-ஒருகையை மற்றொருகையினுல் நெரிப்பாள்; தன் காதலன் வைகும் - தனது மகனுகிய ஸ்ரீராமன் (பன்னிரண்டுமாதம்) எழுந்தருளியிருந்த, ஆல் இலை அன்ன வயிற்றினை - ஆலிலையையொத்த வயிற்றை, வளை பெய் தளிரால் - வளையல்கள் நெருங்கிய துளிர்போன்ற கைகளால், பிசையும் - பிசைவாள்; புகை வெய்து உயிர்க்கும்-நெருப்புப்புகை கிளம்பும்படி வெம்மையுடையதாகப் பெருமூச்சுவிடுவாள்; விழுங்கும் - (மீண்டும் அவ்வுயிர்ப்பை) உட்கொள்வாள்; புழுங்கும் - (மனமும் உடலும்) வெம்புவாள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

வைகும் வயிறெனெ இயையும். தளிர் - உவமவாகுபெயர். மகளிர்க்கு வயிறு ஆலிலைபோலிருத்தல், மஹாபாக்யலக்ஷணம்; இவ்வாறு வடமொழியுட் சாமுத்திரிகநூலாரும், போசராசனுங் கூறுதல் காண்க. இனி ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு வாழிடமாயிருத்தலால், ஆலிலையையொத்த வயிறு என்றுமாம். பெய்வளையென்ற குறிப்பால் தளிர் கையைக்காட்டிற்று. விழுங்கும் என்பதற்கு-ஏதோசொல்லத்தொடங்கி மனத்துக்குள்ளே யடக்கிக்கொள்வாளென்றுமாம். பி-ம்:—[1]கைகள். [2]வெய்துயிர்த்து. [3]விழுந்து. (௩0அ)

க௨. நன்று மன்னன் கருணை யெனுநகு
நின்ற மைந்தனை நோக்கி நெடுஞ்சுரத்
தென்று [1]போவ [2]தெனுவெழு மின்னுயிர்
பொன்றும் போதுற்ற [3]துற்றது [4]போலுமே.

(இ-ள்.) (இவ்வாறு புலம்பி),மன்னன் கருணை-சக்ரவர்த்தியின் கிருபை, நன்று எனு நகும் - நன்ருயிருக்கின்றதென்று சிரிப்பாள்; நின்ற மைந்தனை நோக்கி-(எதிரே) நின்ற ஸ்ரீராமனைப்பார்த்து, நெடு சுரத்து என்று போவது

எனு-பெரிய காட்டிற் போகிறது எப்போதென்று சொல்லி, எழும் - எழுந் திருப்பாள்; இன் உயிர்-இனியஉயிர், பொன்றும் போது - (உடலினின்று) நீங்குங் காலத்தில், உற்றது - அடைகின்ற வருத்தத்தை, உற்றது - (தான்) அடைந்தால் அதனை, போலும் - ஒப்பாள்; (எ - று.)

மன்னவன் கடுமையைக்கருதிச் சிரித்து 'நீ காட்டுக்குப் போவது எப் போது? நானும் வருகிறேன்' என்று எழுபவளாயினள் கோசலை யென்க. முன் "விழுந்தாள்"(க)என்றதனை நோக்கி,ஈண்டு எழு மென்றருமாம். அந்தக் கோசலைக்கு அப்போது நேர்ந்த வருத்தம் மரணவேதனையை யொக்குமென் பது, 'இன்னுயிர்பொன்றும் போதுற்ற துற்றதுபோலுமே' என்பதன் கரு த்து. பி-ம்:—[1]போவம். [2]எனவெழும், எனுவிழும், என்னுவிழும். [3]உற்றனள். [4]போலுமால். (௩0௧)

௩௩. அன்பி ழைத்த மனத்தர சற்குநீ
யென்பி ழைத்தனை யென்றுநின் றேங்குமான்
முன்பி ழைத்த வறுமையின் முற்றினோர்
பொன்பி ழைக்கப் [1]பொதிந்தனர் போலவே.

(இ - ள்.) (இவ்வாறு பதைத்து), 'அன்பு இழைத்த மனத்து அரசற்கு- (உன்னிடத்துக்) காதலை வெளிப்படுத்துஞ்செயலைச்செய்து வந்த நெஞ்சினை யுடைய சக்ரவர்த்திக்கு, நீ என் பிழைத்தனை - நீ என்ன தவறு செய்தாய்?' என்று நின்று - என்று சொல்லிக்கொண்டு நின்று,—முன் பிழைத்தவறுமை யின் முற்றினோர்-முற்பிறப்பிற்செய்த தீவினையாலுளதாகிய தரித்திரத்தினல் மிக்கிருக்கப்பெற்றவர், பொன் - (இடையிலே தாம் பெற்ற) செல்வம், பிழைக்க - தவறிப்போக, பொதிந்தனர்போல - (செல்வத்தையிழந்த பெருந் துயரத்தினல் முகத்தை) மூடிக்கொண்டு வருந்துபவர்போல, ஏங்கும் - இரங்குவாள்; (எ - று.)

'என்னைப் பதினன்குவருடம் காட்டில் தவசியரோடு வாழ்ந்துவருமாறு தந்தை கட்டளையிட்டார்' என்று இராமபிரான் கூறியதைக் கேட்டவுடனே முற்பிறவியிற்செய்த தீவினைப்பயனல் வறியவனுய்க்கிடந்த ஒருவன் நிதிக் குவியலைச் சிறிதுகாலம்பெற்று மீண்டும் இழந்தாற்போன்று பெருவருத்தங் கொண்ட கோசலை, 'அரசர் தம்புத்திரர்நால்வருள்ளும் உன்னிடத்துப் பேரன்புகொண்டிருந்தாரே; அவருடைய அந்த அன்பு நீங்கும்படி நீ என்ன குற்றஞ்செய்தாய்?' என்று சொல்லியவண்ணம் புலம்பலாயின ளென்க. நெடுங்காலம் புத்திரனில்லாதிருந்து பிறகு பெற்ற புத்திரனைக் காட்டிற்கு அனுப்பிவிடுமாறு நேர்ந்த கோசலைக்கு, முற்பிறவியின் தீவினைப்பயனல் வறி யராயிருந்து இடையிற்செல்வம்பெற்று மீண்டும் அதனை இழக்க நேர்ந்தவர் உவமையாவர்.

ஈற்றடிக்கு-(தாங்கள் அடைந்த) பொருள் தவறிப்போகுமாறு (அந்தப் பொருளை) மூடிக்கொண்டிருந்தவரைப்போல என உரைத்து, என் பிழைத்

தனேஎன்று உரைத்தாருமுளர்: அவ்வுரைக்கு, வறுமையடைந்தவர் தமக்குக் கிடைத்த பொன் தவறிப்போகுமாறு பொதிந்ததுபோலப் பெற்ற அரசினேப் பிறர்க்குத் தெரியாமல் தவறுசெய்ததனுல் இழந்தனேயோ? அப்பிழை யாதோ? என்று கருத்துவிரிப்பர். பொன்பிழைக்கப் பொதிந்தனர் என்ற தொடரை, பொன் பொதியப் பிழைத்தனர் என்று விகுதிபிரித்துக்கூட்டி - பொன்னேப் பத்திரப்படுத்திவைக்கவும் தமது தீவினையால் இழந்தவர் என்று உரைப்பினுமாம். பிழைத்த வறுமை - பிழை[தீவினை]செய்ததனுல்தோன்றிய வறுமை: பெயரெச்சம், காரணப்பொருட்டாய் வந்தது. முன்பு இழைத்த என்றுபிரித்து உரைப்பாரு முளர். முற்றினேர் - வினையாலணையும்பெயர்: முற்றுதல்-மிகப் பெறுதல். பி-ம்:—[1]புலம்பினர். (௩௧௦)

> கச. அறமெனக் கிலேயோ [1]வென்னு மாவி[2]நைந்
> [3]திறவ டுத்ததென் [4]றெய்வதங் காளெனும்
> பிற[5]வு ரைப்பதென் கன்று பிரிந்துழிக்
> கறவை யொப்பக் கரைந்து கலங்கினுள்.

(இ - ள்.) (பின்னும் அந்தக் கோசலே),—எனக்கு அறம் இலே ஓ என்னும்-எனக்குத் தருமமென்பது துணையாவதில்லேயோ என்பாள்; தெய்வதங்காள்-தெய்வங்களே! ஆவி நைந்து இற - (என்னுடைய) உயிர் வாடி யழியும்படி, அடுத்தது-(என்னேச்) சார்ந்துள்ள தீவினை, என்-யாதோ? எனும்—; (அந்தக்கோசலே அப்போது), கன்று பிரிந்த உழி - (தான் ஈன்ற) கன்றைப் பிரிந்தபோது, கறவை ஒப்ப-(அந்தக்கன்றையீன்ற) தாய்ப்பசுவைப்போல, கரைந்து - மனமுருகி, கலங்கினுள் - வருந்தினுள்; பிற உரைப்பது என் - (அங்ஙனம் பெருந்துயரால்வருந்திய கோசலேக்குத் தாயைப்பிரிந்த கன்றைத் தவிர) வேறு உவமையாகக் கூறுவதற்குஉரியது யாது உள்ளது? [எதுவுமில்லே]; (எ - று.)

'யான் மனமாரப் பலதருமச்செயலேச் செய்திருத்தலால், அவையாவும் இப்போது உதவாமற்போயினவே!' என்பாள் 'அறமெனக்கிலேயோ?' என்றும், ஒருவர் அறச்செயலேச் செய்துள்ளாராயினும் முற்பிறவியிற் பெருந் தீவினை செய்திருப்பாராயின் அந்தத்தீவினை அத்தீப்பயனே விளேத்தேதீருமாதலால், அங்ஙனம் யான் செய்த தீவினை யுளதோ? சொல்லுமினென்பாள், 'ஆவிநைந்திறவடுத்ததென் தெய்வதங்காள்' என்றும் கௌசலே கூறினுள். இராமனேப்பிரியுந் தாய்க்குக் கன்றைப்பிரிந்த தாய்ப்பசுவை ஸ்ரீவான்மீகி முனிவரும் பலவிடத்தும் உவமை கூறியுள்ளார். "கறவைகன்றிழந்தபோன் றுங் கிடந்தழுகின்ற கண்ணுர்" என்றது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. எனக்கு என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு, அறம் எனக்கு இலேயோ என்பதற்கு-என்னிடத்தில் தருமமென்பதுஇல்லேயோ? என்றும், இரண்டாமடிக்கு, என் தெய்வதங்காள்-என்னுடைய தேவதைகளே! ஆவி நைந்து இற அடுத்தது-என்னுடைய உயிர் வாடியொழியுங் காலம் சேர்ந்திட்டது, எனும் - என்பாள் என்றும் உரைப்பினுமாம். இறவு அடுத்தது என்றும் பிரிக்கலாம். பிற - அவள்

பட்ட மற்றைவருத்தங்களை, உரைப்பது என்? என்று உரைப்பாருமுளர். இற-செயவெனெச்சம்: இறவு - தொழிற்பெயர்: இரண்டிலும், இறு-பகுதி. தெய்வதங்காள் - தெய்வதங்கள் என்பதன் ஈற்றயல் நீண்ட விளி. தெய்வதம்=தைவதம்: வடசொல். "காலமுலகம்" என்று தொடங்குந் தொல்காப்பியச்சூத்திரத்தில் "பால்வரைதெய்வம்...ஆவயின் வரூஉங்கிளவி யெல்லாம், பால்பிரிந்திசையா வுயர்திணைமேன" என்றதனால், தெய்வதமென்பது உயர்திணையாயினும் உயர்திணையிற் பால்பிரிந்திசையாது அஃறிணைப்பாலாயிசைத்தது. கறவை - கறக்கப்படுவது: ஐ - செயப்படுபொருள்விகுதி. பிரிந்துழி, பெயரெச்சத்தின் அகரம் தொக்கது: விகாரம். பி ம்:—[1]எனும், என. [2]நோம், நொந்து. [3]திறமடுத்த, இறவிடுக்கும், இறவிடுத்தது, இறவிடுத்த. [4]தேவதைகாள். [5]இசைப்பது. (௩௧௧)

கரு.—வருந்துங் கோசலையைக் கையாலெடுத்து இராமன் 'நீ அரசனைப் பொய்யனுக்குவாயோ ?' எனல்.

இத்தி றத்தி னிடருறு வாடனைக்
கைத்த லத்தி னெடுத்தருங் கற்பினோய்
பொய்த்தி றத்தின னுக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனை நீ[1]யென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது ஸ்ரீராமன்), இ திறத்தின் இடர் உறுவாள் தனை - இவ்வகையாக வருத்தமடைகின்ற அக்கோசலையை, கைத்தலத்தின் எடுத்து - (தன்) கைகளால் தூக்கி, 'அரு கற்பினோய்-அரிய கற்பினையுடையவளே! மெய் திறத்து நம் வேந்தனை-சத்தியத்தின் மேன்மையையுடைய நமது சக்ரவர்த்தியை, நீ—,பொய் திறத்தினன் ஆக்குதி ஓ-பொய்யின்பாற்பட்டவனாக்க முயல்கின்றாயோ? புகல் - சொல்வாயாக,' என்றான்—; (எ - று.)

ஸ்ரீராமன் அவ்வாறு வருந்துகின்ற கௌசலையைத் தன்கைகளாலெடுத்து, கணவன் கொள்கைக்கு ஏற்பாடப்பதே கற்புடையமாதரார்செய லாதலால் அவன் தந்த வரத்தை முற்றுவிக்க உதவியாயிராமல் "வஞ்சமோமகனே உனைமாநிலந்,தஞ்சமாக நீ தாங்கென்ற வாசகம்" என்று பழிப்பதும், வருந்துவதும்,ஒருகால் அவ்வரசன் வரம் பொய்ப்பதற்கும் வழியாகலா மாதலால், இந்தஉனதுசெயல் தக்கதன்று என்றனனென்பதாம். நீ எனக்கு விடைதந்து கானகமனுப்பவேண்டுமென்றபடி. கற்பினோய் - இறுதியவாகி, ஈற்றயல் ஆ ஓவாயிற்று. பி - ம்:—[1]என. (௩௧௨)

கசு.—பின்னும் சிறந்த சொற்களால் இராமன் தாயைத் தேற்றல்.

பொற்பு றுத்தன [1]மெய்ம்மை [2]பொதிந்தன
சொற்பு றுத்தற் குரியன சொல்லினன்
கற்பு றுத்திய கற்புடை யாடனை
[3]வற்பு றுத்தி மனங்கொளத் [4]தேற்றுவான்.

(இ - ள்.) (பின்னும் இராமன்), கற்பு உறுத்திய கற்பு உடையாள்தனை - கல்லின் தன்மையை உறுதிப்படுத்திய கற்பினையுடைய அக்கோசலையை, வற்புறுத்தி-உறுதிப்படுத்தி, மனம் கொள - மனத்திற்பதியும்படி, தேற்றுவான் - தேறப்பண்ணும்பொருட்டு,—பொற்பு உறுத்தன - அழகியனவும், மெய்ம்மை பொதிந்தன - உண்மை நிறைந்தனவும், சொற்பு உறுத்தற்கு உரியன - சொல்லுதற்குத் தகுந்தனவுமாகிய வார்த்தைகளை, சொல்லினன்-கூறினன்; (எ - று.)—அவை மேற்காண்க.

மலையினும் பலமடங்கு அதிகமாகச் சலனமில்லாததென்பார் 'சற்புறுத்திய கற்பு' என்றார். இனி "சீலமின்னதென் றருந்ததிக்கருளியதிருவே" என்பதுபோலக் கற்பினிலக்கணத்தை இன்னவகைத்தென்று உலகத்தார் அறியும்படி இலக்கியமாயிருந்து உறுதிப்படுத்திய கற்பென்றுமாம். சொற்பு- சொல்: பு - தொழிற்பெயர்விகுதி. சொற்புறுத்தல், உறு - துணைவினை. தேற்றுவான் - எச்சம்; பெயராய், எழுவாயாகவுமாம். பி - ம்:—[1]மென்மை. [2]புரிந்தன. [3]வைப்பு. [4]தேற்றினன். (௩௧௩)

கஎ.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: இராமன் கோசலையை நியாயங்காட்டித் தேற்றுதலைத் தெரிவிக்கும்.

சிறந்த [1]தம்பி திருவுற வெந்தையை
மறந்தும் பொய்யில [2]னாக்கி வனத்திடை
யுறைந்து தீரு முறுதிபெற் றேன்[3]னிதிற்
[4]பிறந்தி யான்பெறும் பேறென்ப தி[5]யாவதோ.

(இ - ள்.) சிறந்த தம்பி - (என்னிலுஞ்) சிறந்த பரதன், திருஉற-ராஜ்ய லக்ஷ்மியைப் புணர, எந்தையை - என்தந்தையை, மறந்துஉம் பொய் இலன் ஆக்கி - மறந்தும் பொய்சொல்லாதவனாகச் செய்து, வனத்திடை - காட்டில், உறைந்து - வசித்து, தீரும் - திரும்பிவருகின்ற, உறுதி - நன்மையை, பெற்றேன் - அடைந்தேன்; இதின் - இதனிலும், யான்-, பிறந்து - (இவ்வுலகத்தில்) தோன்றி, பெறும்-அடையவேண்டிய, பேறுஎன்பது - பாக்கியமென்று சொல்லப்படுவது, யாவதுஓ - எதுவோ? [ஒன்றுமில்லை]; (எ - று.)

தம்பிக்கு இராச்சியத்தைக்கொடுத்துத் தந்தையை மெய்யனாக்கிக் காட்டில் தவமுஞ்செய்யப்பெறுவதால் மூவர்க்கும் நன்மையைத்தரும் இவ்வனவாசம் பெரும்பேறாகு மென்கின்றான். கீழ் "நின்னினுநல்லன்" எனத் திருத்தாயார் கூறினதற்குஏற்ப 'சிறந்த தம்பி' என்றான். மறந்தும் பொய்யிலன் - "மறந்தும் பிறன்கேடுசூழற்க" என்பதுபோல நின்றது. இதின் - இதனின் என்பது அன்சாரியை தொக்குநின்றது. சரீரமெடுத்ததற்கு இதனைப்பார்க்கிலும் பாக்கியம் வேறென்னவிருக்கின்றதென்றவாறு. பி ம்:—[1]எம்பி. [2]ஆக. [3]இனிப். [4]பிறந்துநான். [5]யாவதே. (௩௧௪)

௧௩. விண்ணு மண்ணு [1]மிவ்வேலையு மற்றும்வே
றெண்ணும் பூத மெலா[2]மழிந் தேகினு
மண்ண லேவல் [3]மறுக்க வடியனேற்
கொண்ணு மோ[4]விதற் குள்ளழி யேலென்றான்.

(இ - ள்.) விண்உம்-ஆகாயமும், மண்உம்-பூமியும், இ வேலைஉம் - இந்தச் சமுத்திரமும் [அப்பும்], மற்றுஉம்-இன்னும், வேறு எண்ணும் - வேறாக எண்ணப்படுகின்ற, பூதம் - (நெருப்பு காற்று என்னும் இரண்டு) பூதங்களும், எலாம்-இவையனைத்தும், அழிந்து ஏகின்உம்-அழிந்துபோவதா யிருந்தாலும், அண்ணல் சக்கரவர்த்தியினது, ஏவல்-ஆஜ்ஞையை, மறுக்க - தடுக்க, அடியனேற்கு-அடியேனுக்கு, ஒண்ணும்ஓ-தகுமோ? [தகாது]; (ஆதலால்), இதற்கு உள் அழியேல் - இதற்கு நீ மனம்வருந்தாதே, என்றான் - என்றுகூறினான் (ஸ்ரீராமன்); (எ - று.)

என்னவிளைவதாயிருந்தாலும் தந்தையின் கட்டளையை மறுக்க என்னாலியலாது; ஆதலால், நீ மனமழியாது யான் கானகஞ்செல்வதற்கு விடைதரவேண்டுமென்று வற்புறுத்திக்கூறியபடி. ஏகினுமென்ற உம்மை, ஏகாமையுணர்த்திநின்றது. அண்ணல் - பெருமையுடையோன்: பண்பாகு பெயர்.
பி-ம்:—[1]அவ். [2]இறந்து. [3]மறுக. [4]அதற்கு.　　　　　　　　　(௩௧௫)

௧௬.—இராமன் காடுசெல்வதையுடன்பட்டுத்
தன்னையும் உடனழைத்துச்செல்லுமாறு கோசலை கூறுதல்.

ஆகி லைய வரசன்ற னாணையா
[1]லேக லென்பதி யானு[2]மு ரைக்கிலேன்
[3]சாக லாவுயிர் தாங்கவல் லேனையும்
[4]போகி னின்னொடும் [5]கொண்டனை [6]போகென்றாள்.

(இ-ள்.) (என்று சொல்லக் கேட்ட கோசலை), 'ஐய-குழந்தாய்! ஆகில் - ஆனால், அரசன்தன் ஆணையால் - சக்ரவர்த்தியினது கட்டளைப்படி, ஏகல் - போகாதே, என்பது-என்பதனை, யான்உம்—, உரைக்கிலேன்-சொல்லமாட்டுவேனல்லேன்; (உன்னைப் பிரிந்து), சாகலா உயிர்-அழியாத [நிலையுள்ள] பிராணனை, தாங்க - சுமக்க, வல்லேனைஉம் - வல்லவளல்லாத என்னையும், போகின்-(நீ) போவாயானால், நின்னொடுஉம்-உன்னோடு,கொண்டனை போகு-அழைத்துக்கொண்டுபோவாயாக,' என்றாள்—; (எ - று.)

கணவனைப் பொய்யனாக்காமல் மெய்யனாக்குவதே கற்புடைமாதர் செயலாதலால், நான் உனக்குப் போக விடை தந்தேன். போகாவுயிரைத் தாங்கி வருந்துகின்ற என்னையும் உன்னுடன் அழைத்துப்போவாயாக எனக் கௌசலை இராமனிடத்துக் கூறினாளென்க. சாகலாவுயிர்—"மன்னுயிர்" போல. சாகலாவுயிர் என்பதற்கு-சாகவில்லையென்ற ஒரு குறைமாத்திரம் உள்ளதே

தவிர மற்றைப்படி ஒன்றுக்கும் உதவாத நிலையை யடைந்துள்ள உயிரென்றுமாம்: இத்தொடரில், செத்தால் இவ்வருத்தம் நீங்கி இன்புற்று வாழ்வேனென்ற குறிப்பும் தோன்றும்: "போகாவுயிர்"என்பது, ஆண்டாள் பாசுரம். இனி, உயிர் சாகலாத் தாங்கவல்லேனை யெனக்கூட்டி, உயிரை விடாமல் தாங்கியிருக்கிற என்னை யென்றுமாம். வல்லேன் - வல்லமையற்ற நான்: வன்மையென்ற பண்பினடியாப்பிறந்த 'வல்'என்ற பகுதி உடன்பாடெதிர்மறையிரண்டிலும் வருதலை "வல்லாராயினும் வல்லுநராயினும்" என்ற புறப்பாட்டாலும் அறிக. பி-ம்:—[1]ஏகனீயென்று. [2]உரைக்கலென். [3]சாகிலா. [4]போகிலுன்றெடும். [5]கொண்டுடன். [6]போது. (௩௧௬)

௨௦.—இதுமுதல்ஏழுகவிகள் - நீ கணவனுடனிருந்து உதவவேண்டுமென்றும் நான் கானகஞ் செல்வது நன்றுஎன்றும் இராமன் கோசலையிடம் தெரிவித்தலைக் கூறும்.

என்னை நீங்கி [1]யிடர்க்கடல் [2]வைகுறு
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
றுன்னு கானம் [3]படரத் [4]துணிவதே
[5]யன்னை யேயறம் [6]பார்க்கிலை யா[7]மென்றான்.

(இ-ள்.) (என்று சொல்லக்கேட்ட ஸ்ரீராமன்), 'அன்னையே-தாயே!(நீ), என்னை நீங்கி அடியேனைப் பிரிந்து, இடர் கடல் - துக்கசாகரத்தில், வைகுறும்-மூழ்குகின்ற, மன்னர் மன்னனை-சக்ரவர்த்தியை, வற்புறுத்தாது-தைரியப்படுத்தாமல், உடன் என்னுடன், துன்னு கானம்-நெருங்கிய காட்டிற்கு, படர-வர, துணிவதுஏ-மனத்து நிச்சயிப்பது தகுமோ? அறம் - தருமத்தை, பார்க்கிலை ஆம்-(ஆராய்ந்து)பார்க்கவில்லைபோலும்,' என்றான்—;(எ - று.)

புதல்வனைப் பிரிந்ததால் பெருந்துயரமடைந்து வருந்தும் மன்னவர்க்கு அருகிலிருந்து தைரியஞ்சொல்லித் தேற்றிக் காக்கவேண்டுவது உமது கடமையாயிருக்க, நீர் என்னோடு கானகம்வரத் துணிகின்றீரே; இது தருமமாகுமோ? என்றனனென்பதாம். பி-ம்:—[1]இடரகல். [2]வைகுமம். [3]தொடரத். [4]துணிவதென், துணிவதோ. [5]அன்னை நீர், அன்னை நீ. [6]பார்க்கிலிரால், பார்க்கிலையால். [7]என. (௩௧௭)

௨௧. வரிவி லெம்பியிம் மண்ணர [1]சாயவற்
குரிமை மாநில முற்றபின் கொற்றவன்
றிருவி னீங்கித் தவஞ்செயு நாளுட
னருமை நோன்புக ளாற்றுதி [2]யாமன்றே.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.) (என்றுகூறிப் பின்னும்), வரி வில் எம்பி இ மண் அரசு ஆயவற்கு-கட்டமைந்த வில்லினையுடைய இவ்வுலகத்திற்கு அரசனாகிய என் தம்பி

க்கு,மா நிலம் உரிமை உற்ற பின்-பெரிய பூமியின் உரிமை பொருந்தியபின்பு, கொற்றவன் - சக்ரவர்த்தி, திருவின் நீங்கி - ராஜ்யலக்ஷ்மியினின்று நீங்கி, தவம் செயும் நாள் - தவத்தைச்செய்யுங் காலத்தில், உடன்-அவருடன் (இருந்து), அருமை நோன்புகள் - (செய்தற்கு) அரிய விரதங்களை, ஆற்றுதி-செய்வாயாக: (எ - று.)—ஆம், அன்றே - அசைகள்.

பரதனுக்கு அரசைத் தந்துவிட்டுத் தவஞ்செய்யுமாறு தசரதசக்ரவர்த்தி காட்டுக்குச்செல்லும்போது உடனிருந்து பணிவிடைபுரிதலும் அருமைநோன்புகள் புரிதலு மல்லவோ நுமக்குக் கடனென்றனன் இராமனென்பதாம்.ஈண்டுத் தவமென்றது-இல்லைவிட்டுத் தீயோடு வனத்திற்சென்று மனையாள் வழிபட வானப்பிரஸ்தனாய் ஒழுகும் ஒழுக்கத்தை. பி-ம்:—[1]ஆயவர்க்கு, ஆளவற்கு. [2]நீயென்றான், ஆமென்றான். (௩கஅ)

உஉ. சித்த நீதிகைக் கின்றதென் றேவரு
மொத்த மாதவஞ் செய்துயர்ந் தாரன்றே
யெத்தனைக்குள வாண்டுக [1]ளீண்டவை
[2]பத்து நாலும் [3]பகலல வோவென்றான்.

(இ-ள்.) (நீ செய்யவேண்டியகடமை கணவன்பணிவிடையேயாயிருக்க), நீ சித்தம் திகைக்கின்றது என்-நீ மனங்கலங்குதற்குக்காரணம் யாது? தேவர் உம்-இப்போது தேவராயிருப்பவர்களும், ஒத்த-(தமது மனத்திட்பத்துக்குத்) தக்க, மா தவம்-மஹாதபசை, செய்து—, (அதனால்), உயர்ந்தார் அன்றே - உயர்ச்சிபெற்றவர்களல்லவா? ஈண்டு ஆண்டுகள் - இப்பொழுது (என்னைக் காட்டில் வசிக்குமாறு தந்தையார் விதித்த) வருடங்கள், எத்தனைக்கு உள - எத்தனையிருக்கின்றனவோ, அவை - அந்தப் பதினான்குவருடங்களும், பத்து உம் நால்உம் பகல் அல்ல - (தேவமானத்தால்) பதினான்கு தினங்களல்லவா? என்றான்—; (எ - று.)

செய்தன்றே உயர்ந்தாரென்று கூட்டினுமாம். மிகவும் மனங்கரைந்து வருந்துகின்ற கோசலையைநோக்கி, இராமபிரான் 'அம்மா! பிரமன் முதலிய தேவர்களும் அந்தப்பதவியைப் பெற்றது தவத்தின்பயனால் வல்லவோ? யானும் காட்டிற்சென்று தவம்புரிந்து அப்படிப்பட்ட மேன்மையை யடையலாமே;அன்றியும், தந்தையார் கூறிய பதினான்குவருடமென்பது, பதினான்கு நாளாகக்கழியுமன்றோ: எனது தந்தையார் என்னுடைய நன்மைக்காகக் காட்டிற் சிலகாலம் தவசியரோடு வாழும்படி ஏவினால், அதற்காக நீர் இங்ஙனம் மனந்திகைத்து வருந்தவேண்டுமோ?'என்று கூறித் தேற்றினனென்க. தேவரும் தவஞ்செய்து உயர்ந்தாராதலால் யானும் தவஞ்செய்யக் கானகஞ்செல்லுதல் இன்றியமையாதென்பது, முன்னிரண்டடிகளிற் போதரும். மனிதர்க்கு ஓராண்டு தேவர்கட்கு ஒருநாளாகு மென்பது நூற்கொள்கை யாதலால், 'அவைபத்துநாலும் பகலலவோ' என்றான்; வெகுவிரைவிற் கழிந்துவிடு மென்ற கருத்தும் இதிற் பெறப்படும். இனி, பகல் - நாழிகையென்றும்

உரைப்பர். இராமபிரான் தான் விஷ்ணுவின் அவதாரமூர்த்தியாதல்பற்றித் தேவமானத்தால் இங்ஙனம் கூறினனென்பாருமுளர். சித்தம் நீதி கைக்கின்றது என் - (நியாயமானசெயலைச் செய்ய ஏவினால்) மனத்தினால் நியாயமான அந்தச்செயலை வெறுக்கின்றது என்ன காரணம்? என்று பிரித்துப்பொருள் கூறவுமாம். ஆண்டுகளீண்டவை - பிராசம். பி - ம்:—[1]ஆண்டவை, யாண்டவை. [2]பத்துநாலு. [3]பகலல்லவோவென, அன்றேபகரென்றனன். (௩௧௯)

௨௩. முன்னர்க் [1]கோசிக னென்னு முனிவரன்
றன்ன ருட்டலை தாங்கிய விஞ்சையும்
பின்ன ரெய்திய பேறும் பிழைத்தவோ
வின்ன [2]நன்[3]றவ [4]ரேயின [5]செய்தலே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (என்றுபின்னும்), முன்னர் - முன்பு, கோசிகன் என்னும் முனிவரன்தன் - கௌசிகன் என்று சொல்லப்படுகின்ற இருடித்தலைவனது, அருள் தலை - கிருபையினால், தாங்கிய - பெற்ற, விஞ்சைஉம் - வித்யையும், பின்னர் - பின்பு, எய்திய - அடைந்த, பேறுஉம் - பாக்கியமும், பிழைத்த ஓ - தவறினவோ? [இல்லை]; அவர் - அப்படிப்பட்ட முனிவர்கள், ஏயின-ஏவின காரியங்களை, செய்தல்—, இன்னம் நன்று - இன்னமும்நல்லது; (எ - று.)

ஈண்டு விஞ்சையென்றது - பலை, அதிபலையென்னும் இரண்டுமந்திரங்களை. பின்னர் - அவ்விஞ்சைகளைப்பெற்று விசுவாமித்திரனது வேள்வியைக் காத்தபின்பு. எய்தியபேறு - சீதாகல்யாணம். ஒருமுனிவனுக்கு ஏயினசெய்தலால் வந்த பயனே இவ்வளவாயிருத்தலாற் பலமுனிவர்களுக்கு ஏவினசெய்தலால் வரும் பேறு அளவிலவாயிருக்கு மென்பார், 'இன்ன நன்றவரே யின செய்தலே'என்றான்."மாண்ட மாதவர்"(அ)'முனிவரன்'எ பவற்றைநோக்கி 'அவர்' எனச் சுட்டினான். இன்ன-இவ்வாறாகவென்றுமாம். இனி, இச்செய்யுளுக்கு-விசுவாமித்திரமுனிவனால் முன்பெற்ற அஸ்திரம்முதலியவை எனக்குத் துணையாயிருக்கின்றனவே யென்பது கருத்தாகவும் பொருள்கூறுவர். கோசிகன் - கௌசிகனென்பதன் விகாரம்; குசிகவமிசத்தவனென்பது பொருள். நமக்குக் குலகுருவாகிய வசிஷ்டமுனிவனோடு பகைத்துப் பின்பு தனது அரசை நீத்துப் பலநாட் பலவிடத்துந் தவஞ்செய்து பிரமரிஷியென்னும் பட்டமும்பெற்ற பெரியவ னென்பது தோன்ற, 'முனிவரன்' என்றான். அருட்டலை, தலை - ஏழனுருபு, கருவிப்பொருட்கண் வந்தது. விஞ்சை-வித்யா என்னும் வடமொழிச்சிதைவு. பி - ம்:—[1]கௌசிகன். [2]நின்று. [3]அவர்க்கு. [4]ஏயது. [5]செய்வதே. (௩௨௦)

௨௪. மாத வர்க்கு வழிபா டிழைத்தரும்
போத முற்றிப் பொருவரு விஞ்சைக
ளோத [1]மற்றன தாங்கி யிமையவர்
காதல் பெற்[2]றிந் நகர்வரக் காண்டியால்.

(இ - ள்.) மா தவர்க்கு வழிபாடு இழைத்து - மிக்கதவத்தினையுடைய முனிவர்க்குப்பணிவிடைசெய்து, அரு போதம் முற்றி-பெறுதற்கரிய அறிவு மிகுந்து, ஏதம் அற்றன - குற்றமற்றவைகளாகிய, பொரு அரு விஞ்சைகள்- ஒப்பில்லாத வித்தைகளை, தாங்கி - பெற்று, இமையவர் காதல் பெற்று - தேவர்களது அன்பை அடைந்து, இ நகர் வர - (அடியேன் காட்டினின்று) இந்நகரத்துக்கு மீண்டுவர, காண்டி - பார்ப்பாயாக; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

போதமாவது - கல்விகேள்விகளினுப அறிவோடு தோன்றும் உண்மையறிவு; வீடு பயக்குந் தத்துவஞானமு மாம். அது "அறிவற்றங்காக்குங் கருவி செறுவார்க்கு, முள்ளழிக்க லாகா வரண்" என்பது முதலாகச் சிறப்பித்துக் கூறப்படுதலால், 'அரும்போதம்' என்றார். அரும்போதமுற்றுதல் - அகத்திய முனிவன்முதலிய அருந்தவ ருபதேசத்தால்; பொருவருவிஞ்சைகள் ஏதமற்றன தாங்குதல் - அவரருளால்; இமையவர் காதல்பெறுதல்-அவருக்குப்பகைவர்களாகிய ராவணாதிராக்ஷஸர்களுடைய வதத்தால். காண்டி - நீ இருந்துபாரென்றபடி. பி - ம்:—[1]அற்றவை. [2]நன்காய், நன்கா. (௩௨௧)

உரு. மகர வேலைமண் டொட்ட[1]வண் டாடுதார்ச்
சகரர் தாதை பணிதலை நின்றுதம்
[2]புகரில் யாக்கையி [3]னின்னுயிர் போக்கிய
[4]நிகரின் மாப்புகழ் நின்றதன் றோ[5]வெனா.

(இ-ள்.) மகரம் வேலை மண் - முதலைகளையுடைய கடலினாற் சூழப்பட்ட பூமியை, தொட்ட - தோண்டிய, வண்டு ஆடு தார் சகரர் - வண்டுகள் உலாவுகின்ற மாலையையுடைய சகரபுத்திரர்கள், தாதை - (தமது) தகப்பனது, பணி தலைநின்று - உத்தரவின்படி யிருந்து, தம் புகர் இல் யாக்கையின் - தமது குற்றமற்ற உடல்களினின்று, இன் உயிர்-இனிய பிராணன்களை, போக்கிய- வெளிப்படுத்தியதனாலுண்டாகிய, நிகர் இல் - ஒப்பில்லாத, மா புகழ்-மிகுந்த கீர்த்தி, நின்றது அன்றோ - (இதுவரையிலும்) இருக்கின்றதல்லவா? எனா - என்றுசொல்லி, (எ - று.)—"என்றான்" என அடுத்த கவியில் முடியும்.

தான் தந்தைசொல்லைத் தலைமேற்கொண்டு நடக்கவேணு மென்று வற்புறுத்துதற்பொருட்டு முன்னோர்கள் தந்தைசொல்லின்படிநடந்து மேம்பாடு பெற்றமையை, இதனாலும் அடுத்த செய்யுளினாலும் காட்டுகின்றான். மண் வேலை தொட்ட என்பதற்கு - மண்ணில் வேலையைத்தொட்ட வென்றும், மண்ணை வேலையாகத்தொட்ட வென்று மாம். சகரர் - ஸாகரர் என்னுந் தத்திதாந்தத்தின்விகாரம். யானும் பித்ருவசனபரிபாலனஞ் செய்வே னாயின் சகரர்புகழ் எல்லாவுலகங்களிலும் நிலைபாய் நிற்றல்போல என்புகழும் நிற்குமென்றா னென்பது. சகரர் தமதுதந்தைபணியால் வேள்விக்குதிரையை நாடிச்சென்றாராயினும், அந்தவியாசத்தாலேயோ உடல்சாம்பராயினராதலால் இங்ஙன் கூறியது. பி-ம்:—[1]தண்டோட்டினர்ச்,வண்டோட்டினர்ச்,திண்டாட்டத்தாற். [2]புகரிலாமையின். [3]நின்று. [4]நிகரிலாய். [5]என்றான். (௩௨௨)

உசு. மான்ம றிக்கரத் தான்மழு வேந்துவான்
றான்ம றுத்திலன் றாதைசொற் [1]றாயையே
யூன றக்குறைத் தானுர வோர்[2]உரை
யான்[3]ம றுப்பதென் றெண்ணுவ தோ[4]வென்றான்.

(இ - ள்.) (பின்னும்), மான் மறி கரத்தான் - மான்குட்டியை (இடக்) கையிலுடைய சிவபெருமானது, மழு - மழுப்படையை, ஏந்துவான் - தாங்கிக்கொண்டிருப்பவனாகிய பரசுராமன், தாதை சொல் - தகப்பனாராகிய ஜமதக்கினிரிஷியினுடைய வார்த்தையை, தான்—, மறுத்திலன் - தடுக்காதவனாய், தாயை - பெற்றவளாகிய ரேணுகையையே, ஊன் அற-சரீரம் அறும்படி, குறைத்தான் - (தலையைத்) துணித்தான்; (என்றால்), உரவோன்-சக்ரவர்த்தியினது, உரை - ஆஜ்ஞை, மறுப்பது - தடுக்கத்தக்கது, என்று-, யான் எண்ணுவதோ - நான் நினைப்பது தகுமோ? என்றான்—; (எ - று.)

கோசலை கணவனுடனிருக்கவேண்டுமென்று வற்புறுத்திய இராமன், 'தந்தையினுரையால் பரசுராமன் தாயையுங் கொன்று விளங்கினான்: அப்படியிருக்க நான் தந்தைசொல்லை மீறுவது தகுதியோ? தகுதியன்று' என்று தான் தந்தைசொல் தட்டலாகாதென்பதை வற்புறுத்திக்கூறுகின்றானென்க. தகப்பனார் வசனத்தை யனுசரித்துக் கோவதஞ்செய்த கண்டுமகர்ஷிசரித்திரமும் இங்கேமுதனூலிற் கூறியுள்ளது. "மாத்ருதேவோபவ [மாதாவைத் தெய்வமாகக் கொள்வாய்]"என்று இருக்க,தந்தையின் கட்டளையால் தாயைக்கொல்வது எங்ஙனம் பொருந்து மெனின்?—"பிதுஸ் ஶதகுணம் மாதா கௌரவேணாதிரிச்யதே [தந்தையைக்காட்டிலும் தாய் நூறு மடங்கு கௌரவத்தால் மேன்மைபெற்றவள்]" என்றாற்போன்ற தருமசாஸ்திரவசனங்கள் இருந்தாலும் அவை தந்தையைவிடத் தாய் மிகவும் உபசரிக்கத்தக்கவ ளென்ற கருத்தைத் தெரிவிப்பனவா மாதலால், தாய்க்குத் தீமை பயப்பதாயினும் தந்தை ஆஞ்ஞையிட்டபொழுது நியாமகனான தந்தையின்சொல்லை நடத்தவேண்டியதாமென்பர். "யாடுங் குதிரையு நவ்வியு முழையு, மோடும் புல்வா யுளப்பட மறியே"என்றதனான் 'மான்மறி' என்றார். மறி-இளமைப்பெயர். ஊவெனத் தசையை யுணர்த்திநின்ற ஓரெழுத் தொருமொழி "ஊவெனொருபெயராவொடுசிவணும்" என்றதனால், னகரவொற்றுப்பெற்று முடிந்தது; அஃது, ஈண்டாகுபெயர். உரவோன் - அறிஞன்; மூத்தவன். இச்செய்யுளிற்கூறிய சரித்திரம் வருமாறு:—சமதக்கினிமுனிவனின் பத்தினியான ரேணுகையென்பாள் ஒருகால் நீராடிப் புனல்கொணரக் †கங்கைக்குப் போயிருக்கையில் அங்கே சித்திரரதனென்ற கந்தருவன் அப்ஸரஸ் ஸ்திரீகளோடு புனல்விளையாட்டயர்கையிற் கண்டு மனம்நெகிழ்ந்து அங்குத்தானே தாமதித்துப் பிறகு பர்த்தா ஓமஞ் செய்யும்வேளை கடப்பதுகண்டு வந்து அச்சத்துடனே தீர்த்தகலசத்தை முன்னேவைத்துநிற்க, முனிவன் அவளதுவியபிசாரத்தை யுணர்ந்து, முறையே

† நருமதைக்கென்று மகாபாரதத்திலுள்ளது.

ருமண்வான் ஸுஷேணன் வஸு விஸ்வாவஸு என்னுந் தன்புதல்வர் நால்வரைக் கூப்பிட்டு 'தீச்செயலைச்செய்த இவளை மனத்திற் கவலையின்றிக் கொல்லுங்கள்' என்று கட்டளையிட, அவர்கள் தாயைக்கொல்வதற்குப் பின் வாங்கி நிற்க, இறுதிப் புதல்வனாகிய பரசுராமனைப் பார்த்துத் தன்சொல்லைக் கேளாத தமையன்மாரையும் வியபிசரித்த தாயையுங் கொல்லுமாறு கூற, பரசுராமன் தனது கோடரிப்படையால் உடன்பிறந்தாரையும் தாயையும் தலையை வெட்டி வீழ்த்தினனாக, பிறகு சினந்தணிந்த சமதக்கினிமுனிவன் மனமுவந்து பரசுராமனைநோக்கி 'நீ என்சொல்லால் செய்தற்குஅரிய தொழிலைச் செய்தாயாதலால் விரும்பிய வரத்தைக் கேட்பாயாக' என்ன, பரசுராமன் 'எனது தாயும் உடன்பிறந்தோரும் துயிலுணர்ந்தெழுந்தவர்போல் எழக்கடவர்' எனவும், 'தீவினைநீங்கக்கடவர்' எனவும் வரம்வேண்ட, முனிவனருளால் அவர்கள் அங்ஙனமே தீவினைநீங்கித் துயிலுணர்ந்தவர்போற் பிழைத்தெழுந்தனரென்பது. பி-ம்:—[1]தாய்தலை. [2]அருள். [3]மறுப்பன், மறப்பது. [4]என. (௩௨௩)

## உஎ.—கோசலை எப்படியும் இராமன் நாட்டைவிட்டுச் செல்வானென்று கருதுதல்.

இத்தி றத்த வெனைப்பல வாசக
முய்த்து ரைத்த மகனுரை [1]யுட்கொளா
வெத்தி றத்து மிறக்கு[2]மிந் நாடென
மெய்த்தி றத்து விளங்கிழை [3]யுன்னுவாள்.

(இ - ள்.) இ திறத்த-இப்படிப்பட்டனவாகிய, எனை பல வாசகம்-இன்னும் அநேகம் வார்த்தைகளை, உய்த்து உரைத்த-ஆராய்ந்து கூறிய, மகன் - ஸ்ரீராமனது, உரை-வார்த்தையை, உள் கொளா - மனத்தினுட்கொண்டு,—'இ நாடு எத்திறத்துஉம் இறக்கும்-எப்படியும் இக்கோசலதேசத்தை(இராமன்) விட்டுவிடுவான் [காட்டிற்குப்போய் விடுவான்],' என என்று, மெய் திறத்து விளங்கு இழை - சத்தியகுணமாகிய ஒளிசெய்கின்ற ஆபரணத்தையுடைய அக்கோசலை, உன்னுவாள் - மனத்துநினைப்பாளானாள்; (எ - று.)

இராமன் வார்த்தையைக்கேட்டுக் கோசலை 'இவன் எப்படியும் என்னை இங்குத்தானேவிட்டுக் காட்டுக்குச்செல்வானெனத் தோன்றுகின்றதே; இதற்கு என்செயலாம்' எனத் தன்மனத்தினு ளாலோசிக்கலானா ளென்பதாம். மெய்த்திறத்துவிளங்கிழை யுன்னுவாள் என்பதற்கு - விளங்கிழை மெய்த்திறத்து உன்னுவாளென்றும், உடம்பின்மேல் விளங்குகின்ற இழையையுடையவள் உன்னுவாளென்றுங் கூறலாம். பி-ம்:—[1]உட்கொளாள். [2]இன்றெனா, இந்நாளெனா. [3]உள்ளுவாள். (௩௨௪)

உஅ—'பரதனரசாளட்டும்: இராமன் காடுசெல்லாதபடி மன்னவனை வேண்டுவேன்' என்று கோசலை மன்னனுள்ளவிடத்துக்குப்போதல்.

அவனி [1]காவல் பரதன தாகுக
விவனிஞ் ஞால மிறந்திருங் கானிடைத்
[2]தவனி லாவகை காப்பென் [3]றகைவிலாப்
புவனி நாதற் றொழுதென்று போயினாள்.

(இ-ள்.) (என்று நினைத்துப் பின்பு), (கோசலை), 'அவனி காவல்-ராஜ்ய பரிபாலனம், பரதனது ஆகுக - பரதனுடையதாகுக: இவன்-இவ்விராமன், இ ஞாலம் இறந்து-இந்நாட்டை விட்டு, இரு கானிடை-பெரிய காட்டினிடத் தில் (போய்), தவன் நிலா வகை - தவசில் நிற்காதபடி, தகைவு இலா - (கைகேயியின் தொழிலைத்)தடுத்தல்செய்யாத, புவனி நாதன்-சக்ரவர்த்தியை, தொழுது-அஞ்சலிசெய்து (வேண்டி), காப்பென் காப்பாற்றுவேன்', என்று-, போயினாள்-(தசரதனிருக்கிற இடத்திற்குப்) போனாள்; (எ - று.)

இரண்டுமூன்றுமுறை இராமபிரான் கோசலையைநோக்கி 'பத்தினிக்குக் கணவனுடனிருந்து பணிவிடைசெய்வதே தகுதி: என்னைப்பிரிந்து வருத்தப் படுகையில் அம்மன்னவனைத் தேற்றி ஏற்ற பணிவிடைசெய்துகொண்டிருக்க: யாவரும் மன்னவனுக்குக்கட்டுப்பட்டுநடக்கவேண்டுமாதலால், எனக்கு அனு மதிதருக. பரதன் தர்மிஷ்டனாகையால் கைகேயியால் உனக்கு அவமரியாதை யடையும்படி விடான்' என்று பலவாறாகச்சொல்ல, கோசலை தந்தையின் சொல்லை நிறைவேற்றுவதில் தன்மகனுக்குஉள்ள ஊற்றத்தைக் கண்டு பிரயா ணஞ்செய்கையில் அழுவது அமங்கலமென்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ரட்சைகட்டி மங்களமுண்டாகுமாறு பலபடியாகவாழ்த்தி அநுமதி தந்தனளென்று முதனூல் கூறும். புவனி-புவநமென்ற வடசொல்லின் விகா ரம்; இச்சொல் இங்ஙனம் விகாரப்பட்டுவருவதனை "பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளிரோ" என்ற நம்மாழ்வார்பாசுரத்திலும் காண்க. பி-ம்:— [1]காத்தல். [2]தவசிலாப்பகை. [3]தகவினப். தகவுடைப். நகவிலாப். (௩௨௫)

உகூ.—இராமன் சுமித்திரையின்மாளிகையை யடைதல்.

போகின் றாளைத் தொழுது புரவல
[1]னாக மற்றிவ டன்னையு மாற்றி[2]யிச்
சோகந் தீர்ப்பவ ளென்று சுமித்திரை
மேகந் [3]தோய்தனிக் கோயிலை மேயினான்.

(இ - ள்.) போகின்றாளை - (அவ்வாறு) போகின்ற கோசலையை, தொழுது - அஞ்சலிசெய்து, (ஸ்ரீராமன்),—புரவலன்ஆக-தசரதனைத் தேறு தலடைய (ச்செய்து), மற்று - பின்னும், இவள் தன்னைஉம் - இக்கோசலை யையும், ஆற்றி - தணியச்செய்து, இ சோகம் தீர்ப்பவள் - இத் துன்பத்தை நீக்கவல்லவள், (சுமித்திரை),' என்று - என்றுகருதி,

சுமித்திரை - சுமித்திரையினது, மேகம் தோய் - மேகங்கள் தங்கப்பெற்ற, தனி - ஒப்பற்ற, கோயிலை - மாளிகையை, மேயினன்-அடைந்தான்; (எ-று.)

இனி, புரவலனாகந்தன்னையும், மற்றிவள்தன்னையும் ஆற்றியென்றுமாம்; புரவலனாகம் - சக்ரவர்த்தி திருமேனி. நாம் சுமித்திரையினிடஞ் செய்தி தெரிவித்து வேண்டிக்கொண்டால் அவள் என் தந்தையாரையும் தாயாரையும் தேற்றுவாளென்று கருதி அச்சுமித்திரையின்மாளிகைக்கு இராமபிரான் சென்றனனென்க. கோசலையால் மங்களவாழ்த்துச் செய்யப்பெற்ற இராமன் சீதையுள்ள இடத்துக்குச்சென்றானென்று முதனூல் கூறும். பி - ம்:— [1]ஆகமுற்றவடன்னையும், ஆகமற்றவடன்னையும். [2]அச். [3]தோய்ந்திடு, தோய்திரு, தோய்மணி. (௩உ௬)

௩௦.—சென்ற கோசலை கைகேயியின்மனையைச் சார்ந்து சக்ரவர்த்தி வீழ்ந்துகிடத்தலைக்கண்டு தான் மூர்ச்சித்துவிழுதல்.

நடந்த கோசலை கேகய [1]நாட்டிறை
மடந்தை கோயிலை யெய்தினள் [2]மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள் கெட்டுயி
ருடைந்த போதி னுடல்விழுந் தென்னவே.

(இ - ள்.) நடந்த கோசலை-(அவ்வாறு) நடந்துபோன கௌசல்யாதேவி, கேகயம் நாடு இறை மடந்தை கோயிலை - கேகயநாட்டிற்குத் தலைவனான அசுவபதியினது புதல்வியாகிய கைகேயியின் மனையை, எய்தினள் - அடைந்தவளாய், மன்னவன் கிடந்த பார்மிசை-அரசன் விழுந்துகிடக்கின்ற இடத்தில், உயிர் உடைந்த போதின் - பிராணன் போன காலத்தில், உடல்—, விழுந்து என்ன-விழுந்தாற்போல, கெட்டு-(அறிவு) சோர்ந்து, வீழ்ந்தனள்—; (எ-று.)

'இராமபிரானைக் காட்டிற்குச் செல்லவிடாமலாவது செய்யவேண்டும்' என்ற கருத்துடன் அரசனிடத்துச்சென்ற கௌசலை அங்கு மன்னவன் தரையில் மூர்ச்சித்துக்கிடத்தலைக் கண்டு, தானும் மூர்ச்சித்து வீழ்ந்தன ளென்பதாம். கீழ்க் கைகேசிசூழ்வினைப்படலத்தில் "கொடியாளின்னது கூற...இடியேறுண்ட மால்வரை போன்மண்ணிடை வீழ்ந்தான்," "கூறாமுன்னங் கூறுபடுக்குங்கொலைவாளி, னேறா மென்னும் வன்றுயராகத்திடை மூழ்கத், தேறானாகிச் செய்கைமறந்தான்" என்பவற்றை நோக்கி 'மன்னவன் கிடந்த பார்' என்றார். உயிருடைந்தபோதினுடல்விழுதல், பிராணநாயகன் வீழ்ந்தபோது பிராணநாயகிவீழ்ந்ததற்கு உவமை. கோசலைபுலம்பலும், வசிட்டன்வந்து செய்தியறிந்து மன்னனைத் தேற்றிக் கைகேயிக்கு நன்மதிசொல்லியும் அவளைப்பழித்துப்பார்த்தும் அவள் தன்னிலையிற் சலியாமலிருத்தலைக் கண்டு இராமனை மீட்பதாகச்சொல்லி மன்னர்முதலியோர் குழுமிய சபைக்குச்செல்லுதலும் என்ற இவ் விஷயங்கள் முதனூலிற் கூறப்படவில்லை. பி - ம்:— [1]நாட்டன்றன். [2]மன்னவர். (௩உ௭)

வேறு.

௲௧.—இதுமுதல் நான்குகவிகள் - மன்னவனைக்கண்ட கோசலையின் புலம்புதலைத் தெரிவிக்கும்.

[1]பிறியார் [2]பிரிவே தென்னும் பெரியோய் தகவோ வென்னு
[3]நெறியோ [4]வடியே னிலைநீ [5]நினையா [6]நினைவே தென்னும்
வறியோர் தனமே யென்னுந் தமியேன் வலியே யென்னு
மறிவோ வினையோ வென்னு மரசே யரசே யென்னும்.

(இ - ள்.) (விழுந்தபின் சிறிது தேறிய கோசலை), பிறியார் பிரிவு ஏது - பிரியத்தகாதவர்களுடைய பிரிவுக்குக்காரணம் யாது? என்னும் - என்பாள்; பெரியோய் தகவு ஓ - பெருமையையுடையவனே! (இது உனக்குத்) தக்கதோ? என்னும்-; நெறி ஓ - நீதியோ? (என்பாள்); அடியேம் நிலை நீ நினையா நினைவு ஏது - அடியவர்களாகிய எங்களுடைய நிலைமையை நீ மனத்திற்கொள்ளாத எண்ணம் எதனால்? என்னும்—; வறியோர் தனமே-ஒருபொருளும் இல்லாதார்க்கு அவர் வேண்டியதொருபொருள் போன்றவனே! என்னும்—; தமியேன் வலியே - (வேறு துணையின்மையால்) தனியளாயின என்னுடைய பலமே! என்னும்—; அறிவு ஓ - (இது உனக்கு) அறிவுதானோ? வினை ஓ - (இது நீ செய்யத்தக்க) தொழிலோ? என்னும்—; அரசே அரசே-அரசனே! அரசனே! என்னும்—; (எ - று.)

பிறியார் - தம்மைப் பிறர்போற்கூறிய படர்க்கை இடவழுவமைதி; நானும் எனதுமகனு மென்றபடி. பெருமையாவது - செயற்கரிய செய்தல் தருக்கின்மை பிறர்குற்றங்கூறாமை என்றிவை முதலிய நற்குணங்களாற் சிறந்தாரது தன்மை. அடியேம் நிலைநீ நினையா நினைவு ஏது என்பதற்கு - அடியேங்களுடைய நிலைமையை நினையாமல் நீ வேறு நினைவதற்குக் காரணம் யாது? என்றுமாம். இது சூத்ரதர்மத்திற்கு அடுத்த தன்றென்பாள், 'வினையோ' என்றாள். அறிவு ஓவினையோ-அறிவு நீங்கினையோ எனவுமாம். அரசே யரசே - முறையீட்டைத்தெரிவிக்க இரண்டடுக்கிற்று; அவலத்தால் இரண்டடுக்கிற்றெனக்கொண்டு, அரசன் கிடக்கிற கிடையினாலே இறந்ததாக நினைத்து இவ்வாறு புலம்பலுற்றா ளென்பாருமுளர். இனி, அரசு ஏய் அரசே - அரசருக்கேய்ந்த அரசனேயென்றுமாம்; பிரிஎன்பதுபோல பிறி என்னும் பகுதியும் உண்டு என்க: "பிறிந்தேன் பெற்றமக்கள்" என்றார், திருமங்கையாழ்வாரும். பி-ம்:—[1]பிறிவோர், பிறிவோ. [2]பிரிவோவிவைதாம், பிரிவோவிது தான். [3]நெறியோய். [4]அடியோம், அடியம். [5]நினையாய். [6]நினைவோ, நினைவென்.

௲௨. இரு[1]ளற் றிடவுற் றொளிரு மிரவிக் கெதிருந் திகிரி
யுருளத் தனியுய்த் தொரு[2]கோ னடையிற் கடைகா ணுலகம்
பொரு[3]ளற் றிடமுற் றுறு[4]மப் [5]பகலிற் புகுதற் [6]கென்றோ
வருளக் கருதிற் றிதுவோ வரசர்க் கரசே யென்னும்.

(இ - ள்.) (பின்னும்), இருள் அற்றிட உற்று ஒளிரும் இரவிக்கு - இருளானது ஒழியும்படி நன்குவிளங்குகின்ற சூரியனுக்கு, எதிரும் - ஒப்பான, திகிரி-ஆஜ்ஞாசக்கரம், உருள-உருளும்படி, தனி - ஒப்பில்லாமல், உய்த்து - செலுத்தி, ஒரு கோல் நடையில் கடைகாண்-(உனது) ஒப்பற்ற செங்கோல் பாதோரிடையூறுமின்றி நடந்துவருதலைக் கொண்டுள்ள, உலகம் - இவ்வுலகமானது, பொருள் அற்றிட முற்று உறும் அ பகலின் புகுதற்கு என்றுஓ-எல்லாப்பொருள்களும் அழியும்படி முடிகின்ற பிரளயகாலத்திற் புகும்படி அழிவை யடையவேண்டுமென் றெண்ணியோ? இது - இக்காரியம் (செய்தது : அருள கருதிற்றுஓ-அருள்கொண்டு செய்யநினைத்ததாகுமோ? என்னும் - என்பாள்; அரசர்க்கு அரசே (என்னும்) - சக்ரவர்த்தியே! என்பாள்; (எ - று.)

ஒழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழுவுதலாகிய இருளறும்படி விளங்குதலாலும், சூரியகிரணஞ் செல்லுமிடங்களிலெல்லாம் பரவுதலாலும், சந்திரனைப்போலத் தேய்தலும் வளர்தலுமின்றி விளங்குதலாலும் 'இருளற் றிடவுற்றொளிரு மிரவிக்கெதிருந் திகிரி' என்றார். ஒருகோல் நடை - ஒரு செங்கோன்முறைமை யென்றுமாம். ஒருகோன் அடையில் எனப்பிரித்து, ஒரு அரசன் வருதலிலென்றுமாம். இனி, திகிரி உருள ஒருகோல் உய்த்து என்றலுமாம். இராமன் உலகத்துஉயிர்போல்பவனாதலால் அவன் நாட்டைவிட்டுச்சென்றால் இந்தக் கோசலதேசமே அழிவுஅடையுமென்பாள், 'பொருளற்றிட முற்றுறுமப்பகலிற் புகுதற்கென்றோ வருளக்கருதிற்று' என்கிறாள், இளைசலை யெனினுமாம். பி-ம்:—[1]அற்றிடையுற்று. [2]தேர்நடையில், தோணடையிற், கோனடைஇக், கோனடவிக், கோலிடையிற். [3]இற்றிட, உற்றிட. [4]இப். [5]புகலிற். [6]அன்றோ. [7]அருளிற். (௩௨௧)

௩௩. திரையார் கடல்சூ ழுலகின் றவமே திருவின் றிருவே
[1]நிரை[2]யார் கலையின் கடலே நெறியார் [3]மறையின் னிலையே
கரையா வயர்வே னெனைநீ கருணா லயனே [4]யென்னென்
[5]றுரையா திதுதா னழகோ வுலகே ழுடையா யென்னும்.

(இ - ள்.) (பின்னும்), திரை ஆர் கடல் சூழ் உலகின் தவமே - அலைகள் நிறைந்த கடலினாற் சூழப்பட்ட நிலவுலகின்கணுள்ளவர் செய்த தவம்போல்பவனே! திருவின் திருவே - இலக்குமிக்கும் இலக்குமிபோல்பவனே! நிரை ஆர் கலையின் கடலே - ஒழுங்கினையுடைய கல்விக்குக் கடல்போல்பவனே! நெறி ஆர் மறையின் நிலையே - நீதிகள்நிறைந்த வேதங்களிற்சொல்லிய சாரமாகிய தத்துவப்பொருள் போல்பவனே! கருணாலயனே-அருளுக்கு வீடாயிருப்பவனே! கரையா அயர்வேன் எனை-மனமுருகி வருந்துகின்ற என்னைக்குறித்து, நீ என் என்று உரையா இது-நீ (அழுதற்குக் காரணம்) என்னென்று ஒருவார்த்தையுஞ் சொல்லாத இது, அழகுதான் ஓ-அழகாகுமோ? உலகு ஏழ் உடையாய் - ஏழுலகங்களையும் உடையவனே! என்னும்—; (எ - று.)

இப்படிப்பட்ட நீதிமானான அரசன் கிடைத்தது உலகத்தோரின் தவப் பயனேயாதலால், 'உலகின்தவமே' என்றும், இவனைப்பெறுதலால் அரச விலக்குமிக்கும் ஒருபேரொளி தோன்றியதனால் 'திருவின் திருவே' என்றும், கல்வி ஒழுங்காக நிரம்பப்பெற்றவனையென்பாள் 'நிரையார்கலையின் கடலே' என்றும், வேதத்திற்கூறிய நல்லொழுக்கத்தை நிலைபாகக்கொண்டவனை யென்பாள் 'நெறியார் மறையின் நிலையே'என்றும் விளித்தாள். முன்னிரண் டடிகள்-தசரதமன்னவன் அதுகாறும் முறைபிறழாது மிக்கமேம்பாட்டுடனே அரசுசெய்தமையைக் குறிக்கும். கருணையாவது-அயலார் துன்புறுவதுகண்டு தானும் மனமிளகி இயன்றால் அதனைப்போக்க வகைதேடுகையே யாதலால், கருணையுள்ளவனான நீ நான் வருந்துகையில் என்னென்னாது உபேட்சிப்பது தகுதியோ வென்பாள் 'கருணாலயனே! கரையாவயர்வேனை என்னென் றுரையா இது அழகோ!' என்கிறாள்; கருணாலயன்-கருத்துடையடைகோளி யணி. உருவகத்திற் றிணையும் பாலும் மயங்கின. பி-ம்:—[1]நிறை. [2]ஆர்கலி யின், ஆர்கவியின். [3]மலையின். [4]எனின்றென்று. [5]உரையாய். (௩௩௦)

௩௪. மின்னின் றனைய மேனி வெறிதாய் விடநின் றதுபோ
லுன்னுந் [1]தகைமைக் [2]கடையா வுறுநோ [3]யுறுகின் [4]றுணரா
[5]னின்னென் [4]றுரையா [6]னென்னே யிதுதான் [7]யாதென் றறி
மன்னன் [8]றகைமை காண வாராய் மகனே யென்னும். [யேன்

(இ - ள்.) (என்று பின்னும்), மின் நின்று அனைய மேனி - மின்னல் நிலைநின்றால் (அதன் நிலைமையை) ஒத்த சரீரம், வெறிது ஆய்விட நின்றது போல் - உயிரில்லாததாக ஆகிவிடும்படியுள்ளதுபோலத் தோன்று மாறு, உன்னும் தகைமைக்கு அடையா - நினைக்குந்தன்மைக்கு அரிதான, உறு நோய் - மிக்க துன்பத்தை, உறுகின்று-அடையாநின்றுகொண்டு, (தசர தன்),உணரான்-அறிவற்றுள்ளான்; இன்ன என்று-(தனக்கு நேர்ந்துள்ளது) இன்ன தன்மையதென்று, உரையான்-சொல்லான்; என்னே-(இதற்குக்)கார ணம் யாதோ? இதுதான் யாது என்று அறியேன் - இது எதுவென்று தெரிந்திலேன்; மகனே-பிள்ளாய்! மன்னன் தகைமை காண - சக்ரவர்த்தியி னது தன்மையைப் பார்க்க, வாராய் வருவாயாக, என்னும்—; (எ - று.)

தனது பேரொளியுள்ளமேனி ஒளிகுன்றிவிட உயிரையேகொள்ளும் நோய் அடைந்திட்டதுபோல் இம்மன்னவன் பேச்சுமூச்சற்றுக்கிடக்கிறான்: தன்னிலை யின்னதென்று சொல்லுகின்றானு மில்லை. இவனது நிலை யாதோ? மகனே! இதனைக் காணவாராய் என்று கதறினாள் கோசலையென்க. நிலை நின்ற மின்னல்போன்று பேரொளியடைத்த தசரதன்மேனி யென்பாள் 'மின்னின் றனையமேனி' என்றாள். இத்தொடர்க்கு - மின்னல்போல் நிலை யற்ற (தனது)உடல் எனப் பொருளுரைத்தாருமுளர். உறுகின்று-"தொழா நின்று" என்பதுபோல வந்த நிகழ்காலவினையெச்சம். பி-ம்:—[1]தன்மைக்கு. [2]இடையா. [3]உணர்கின்று· [4]உணராய், உரையாய். [5]என். [6]இன்னேயிதுதான், என்னேயிதுநான், இதுநாளிடையூறு. [7]எது. [8]தன்மை. (௩௩௧)

நடு.—கோசலை கதறிய குரலைக் கேட்டுப் பட்டாபிஷேகத்திற்குக் காத்திருந்த மன்னர்முதலியோர் சொல்லியபடி வசிட்டன் அங்குவந்து மன்னவன் நிலையைக் காணுதல்.

இவ்வா றழுவா ளிரியற் குரல்சென் றிசையா முன்ன
மொவ்வா [1]தொவ்வா [2]தென்று [3]வொளிவா ணிருபர்[4]முனிவ
ரவ்வா றறிவா யென்ன [5]வந்தான் முனிவன் [6]வந்தான்
வெவ்வா ளரசன் னிலைகண் டென்னும் [7]விளைவென் றுன்னா.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இ ஆறு அழுவாள் - (என்று) இவ்விதமாகப் புலம்புகின்ற கோசலையினது, இரியல் குரல்-கூக்குரல்,சென்று-போய்,இசையா முன்னம்-ஒலிப்பதற்கு முன்பு,—ஒளி வாள் நிருபர்-கிரணத்தையுடைய வாளாயுதத்தை யேந்திய அரசரும், முனிவர் - இருடியரும், 'ஒவ்வாது ஒவ்வாது - (இது இக்காலத்துக்குப்) பொருந்தாது பொருந்தாது;' என்று-என்று(தமக்குட்)சொல்லிக்கொண்டு,(பின்பு),அ ஆறு-அந்த அழுகைக்குரலின் காரணத்தை,அறிவாய்-அறிந்துவருவாய், என்ன-என்றுசொல்ல,—முனிவன் வந்தான்-வசிட்டமுனிவன் (தயரதனிருக்குமிடத்துக்கு) வந்தான்; வந்தான் - அங்ஙனம்வந்த வசிட்டன், வெம் வாள் அரசன் நிலை கண்டு - கொடிய வாளினையுடைய சக்கரவர்த்தியினது தன்மையைப் பார்த்து, விளைவு என் ஆம் என்று உன்னா - இதன் முடிவு யாதாகுமோ? என்று சங்கித்து,—(எ - று.)—''என்றா வுன்னா'' என நஎ - ஆங் கவியோடு தொடரும்.

இங்ஙனம் கோசலை கூக்குரலிடும் ஒலி"பட்டாபிஷேகம் எப்போது நடக்கப்போகிறதோ?'' என்று எதிர்பார்த்தவண்ணம் பட்டாபிஷேக மண்டபத்திற் காத்துக்கொண்டிருக்கும் மன்னர்முனிவர் முதலியோரின் காதில் விழ, 'மங்களம் நிகழவேண்டிய காலத்தில் இவ்வாறு கூக்குரல்கேட்கக் காரணமில்லையே! இது என்னோ?'' என்று சங்கைகொண்டு, யாவரும், அந்தப்புரத்து எளிது செல்லத்தக்க வசிட்டமுனிவனை நோக்கி 'இங்ஙனம் கூக்குரல் நிகழக் காரணம் என்னோ? இதனை யறிந்துவருக' என்ன, வசிட்டமுனிவன் வந்து மன்னவன் நிலையைக்கண்டு என்ன விளையுமோ என்று சங்கித்தனனென்பதாம். இரியல் - அஞ்சுதல். முனிவன் - வசிஷ்டன். பி-ம்:—[1]ஒல்லாது. [2]என்ன. [3]ஒளிர். [4]முனிவ. [5]அந்தார். [6]அவனும். [7]விளையென்று. (நஙஉ)

நசு.—வசிட்டன் ஆங்குள்ளா நிலையைக்கண்டு தன்னுட் கருதுவது.

இறந்தா [1]னல்லன் னரச னிறவா தொழிவா னல்லன்
மறந்தா னுணர்வென் [2]றுன்னு [3]வண்கே கயர்கோன் மங்கை
துறந்தா ரெரந் தன்னைத் துறவா தொழிவா [4]னிவளே
பிறந்தார் பெயருந் தன்மை பிறரா லறிதற் [5]கெளிதோ.

(இ-ள்.) அரசன்-சக்கரவர்த்தியோ, இறந்தான் அல்லன்-முடிந்தவனல்லன்; இறவாது ஒழிவான் அல்லன் - சாவாது நீங்குபவனல்லன்; உணர்வு மறந்தான்என்று-இப்போது (மன்னவன்) அறிவுகெட்டுமூர்ச்சையடைந்தானே யென்று, உன்னு-சிறிதுஞ் சிந்தனைகொள்ளாத, வல் கேகயர்கோன் மங்கை-மனம்வலிய கைகேயி, துயரம் தன்னை துறந்தாள் - துன்பத்தைவிட்டாள்; இவள்ஏ துறவாது ஒழிவாள் - இக்கோசலையோ துன்பத்தை விட்டிடாமல் அழிபவள்; பிறந்தார் - உலகத்துஉதித்த மனிதர், பெயரும் - நிலை வேறுபடுகின்ற, தன்மை-விதம்,பிறரால் அறிதற்கு எளிதுஓ-அயலாரால் தெரிவதற்கு எளியதோ? [அன்று]; (எ - று.)

அங்குவந்து கண்ட வசிட்டமுனிவன் 'தசரதன் இப்போது இறந்திலனாயினும் விரைவில் இறந்துபடுவானென்று தோன்றுகின்றது; இப்படியிருக்கையில் அரசனது காதலுக்குஇடனான கைகேசியோ மனத்திற் சிறிதுந் துயரங்கொள்ளாதிருக்கின்றாள்: கோசலையோ துன்பம் மிகப்பெற்று மனமழிகின்றாள்; தன்கணவனுக்கு நேர்ந்திருக்கிற நிலையைக்கருதி ஒருத்தி மனமழிவதும் மற்றொருத்தி சிறிதும் மனக்கவலைபற்றிருப்பதுமாகிய இவற்றிற்கு இன்னதென்று காரணம் விளங்கவில்லை' என்று தன்மனத்துட் கருதினானென்க. பி-ம்:—[1]அரசனல்லன். [2]அன்னான். [3]வண்கைகயர். [4]என்னாப், என்னே. [5]எளிதே. (௩௩௩)

### ௩எ.—முனிவன் அரசன்நிலைமைக்குக் காரணத்தை வினவ, கைகேசி விளங்கச் சொல்லுதல்.

என்னா வுன்னா முனிவ னிடரா [1]லழிவா டியரஞ்
[2]சொன்னா ளாகா ளெனமுன் றொழுகே கயர்கோன் மகளை
யன்னா யுரையா யரச [3]னயர்வா னிலை[4]யென் னென்னத்
தன்னா [5]னிகழ்ந்த தன்மை தானே தெரியச் சொன்னாள்.

(இ-ள்.) என்னா உன்னா-என்று எண்ணி, முனிவன் - அவ்வசிட்டமுனிவன், 'இடரால் அழிவாள் - துன்பத்தால் மனமழிகின்ற கோசலை, துயரம் சொன்னாள் ஆகாள்-துன்பத்தின் காரணத்தைச் சொன்னவளாகாள்,' என - என்று எண்ணி, முன் தொழு கேகயர் கோன் மகளை - முன்னேவந்து அஞ்சலிசெய்துநின்ற கைகேயியை, 'அன்னாய் - தாயே! அயர்வான் அரசன் நிலை என் - மூர்ச்சித்திருப்பவனாகிய சக்கரவர்த்தியின் நிலைமைக்குக் காரணம்யாது? உரையாய் - சொல்,' என்ன - என்றுகேட்க,—(அவள்), தன்னால் நிகழ்ந்த தன்மை - தன்னால் நடந்த விதத்தை, தான் ஏ தெரிய சொன்னாள் - தானே விளங்கக் கூறினாள்; (எ - று.)

கீழ்க் கூறியவாறு சிந்தைகொண்ட வசிட்டமுனிவன் 'இந்தக்கௌசலையால்,மன்னவனுக்குப்பேரிடர்க்காரணம் நிகழ்ந்துள்ளதென்பது விளங்குவதேயன்றி வேறொன்றும் தெரியவில்லை; இந்தக்கௌசலையின் மூலமாகத் துயர்க்

காரணத்தைத் தெரிந்துகொள்ள முடியாதெனவுந் தோன்றுகின்றது' என்று சிந்தித்து, தன் முன்னேவந்து தொழுத கைகேயியை நோக்கி 'அரசன் வருந்தக் காரணம்என்ன? அம்மா! கூறுக' என்ன, அந்தக்கைகேசியும் நிகழ்ந்தனவெல்லாம் விவரமாகக் கூறினளென்பதாம். அன்னை - அரசன்தேவி. அஞ்சாமலும், நாக்கூசாமலுஞ் சொன்னாளென்பார் 'தானே சொன்னாள்' என்றார். பி-ம்:—[1]அழுவாள். [2]சொன்னால். [3]அயர்வாநிலை. [4]எது. [5]நிகழ்ந்ததெல்லாம், தன்மையெல்லாம். (ருருச)

ருஅ.—வசிட்டன் இன்சொல்லால் மன்னவனைத் தேற்றுதல்.

சொற்றாள் சொற்றா முன்னஞ் சுடர்வா ளரசர்க் கரசைப்
பொற்[1]றா மரைபோற் கையாற் பொடி[2]சூழ் படிநின் றெழுவிக்
கற்றா யயரே லவளே தருநின் [3]காதற் கரசை
யெற்றே செய[4]லின் [5]றொழிநீ யென்றென் [6]றிரவா நின்றான்.

(இ - ள்.) சொற்றாள் - கூறின அவள், சொற்றா முன்னம்-கூறுவதற்கு முன்பு, சுடர் வாள் அரசர்க்கு அரசை - ஒளிபொருந்திய வாளினையுடைய சக்ரவர்த்தியை, பொன் தாமரைபோல் கையால் - அழகியதாமரைமலர் போன்ற கைகளால், பொடி சூழ் படி நின்று எழுவி - புழுதிநிறைந்த பூமியினின்றும் எழுந்திருக்கப்பண்ணி, 'கற்றாய் - (கற்றற்குரிய நூல்களைக்) கற்றவனே! அயரேல் - கவலைப்படாதே; அவள் ஏ நின் காதற்கு அரசை தரும் - அக்கைகேயியே உன்மகனாகிய ஸ்ரீராமனுக்கு இராச்சியத்தைக் கொடுப்பாள்: செயல் எற்று - இச்செய்கை எத்தன்மைத்து? நீ இன்று ஒழி - நீ இப்பொழுது (இவ்வருத்தம்) நீங்கு,' என்று என்று இரவாநின்றான் - என்று (பலமுறை) வேண்டிநின்றான், (வசிட்டன்); (எ - று.)

கைகேசியாற் செய்தியுணர்ந்ததும், வசிட்டன், 'கற்றவனாகிய நீ சாதாரணமனிதன்போல அயர்தல் தகுதியோ? அன்றே; உன் புத்திரன் இராமனுக்கு அந்தக் கைகேசியே அரசை யீந்திடுவாள்: நீ இவ்வாறு வருந்துதல் தக்கதன்று: இதனை யொழிக' என்று பலமுறை வேண்டிக் கூறினானென்பதாம். வருத்தத்தைத் தீர்த்துத் தெளிவையுண்டாக்கத்தக்க கல்வியைக் கற்றவனாயிருந்தும் அறியாமல் வருந்துதற்குக் காரண மென் னென்பான் 'கற்றாய்' என்றான். பி-ம்:—[1]தாமரைப்பொற்கையால். [2]சேர். [3]காளைக்கரசின்று, காதற்கரசென்று, காதற்கரசன்று, புதல்வற்கரசென்று, புதல்வற்கரசின்று. [4]என்று. [5]அறியேன். [6]இசையாநின்றான், இசையாநின்றே, இரவாநின்றே.

ருகூ.—முனிவனது இன்னுரையாலும் சைத்தியோபசாரத்தாலும் மன்னவன் உணர்வுபெறுதல்.

சீதப் பனிநீ [1]ரளவித் திண்கா [2]லுதவுந் தண்காற்
போதத் தளவே [3]தவழ்வித் தின்சொற் புகலா நின்றா
னோதக் கடனஞ் சனையா ளுரைநஞ் சொருவா றவியக்
காதற் புதல்வன் பெயரே புகல்வா னுயிருங் கண்டான்.

(இ - ள்.) (வேண்டிப் பின்னும்), சீதம் பனி நீர் - குளிர்ச்சியையுடைய பனிநீரை, அளவி - தெளித்து, திண் கால் உதவும் தண் கால் - விசிறியினை வீசுதலினாலுண்டாகிய குளிர்ந்தகாற்றை, போதத்து அளவு ஏ தவழ்வித்து - அறிவுதோன்றும் வரையிலும் தவழும்படிசெய்து, இன் சொல்-இனியவார்த்தைகளை, புகலாநின்றான்-சொல்லுகின்ற அம்முனிவன்,—ஓதம் கடல் நஞ்சு அனையாள்-குளிர்ச்சியையுடைய திருப்பாற்கடலினின்றுண்டாகிய விஷத்தையொத்த கைகேயியினது, உரை நஞ்சு - வார்த்தையாகிய விஷம், ஒரு ஆறு அவிய - ஒருபடியாய்த் தணிய, காதல் புதல்வன் பெயர் ஏ - விருப்பத்தையுடைய தன்மகனது நாமத்தையே,புகல்வான் - சொல்லாநின்ற தசரதனது, உயிர் உம் - பிராணனையும், கண்டான் - பார்த்தான்; (எ - று.)

பூமியிலிருந்து கையாற்றூக்கியெடுத்துக் கைகேசி தானே உன்புதல்வற்கு அரசுதருவாளென்று முனிவன்சொல்லிடவும் மூர்ச்சைதெளியாத மன்னவன்மீது அம்முனிவன்பலமுறை பனிநீர்தெளித்து ஆலவட்டத்தைக்கொண்டு மென்காற்றுத் தோன்றுமாறு வீசச்செய்து அவன் உயிர்தோன்றியதும் தோன்றாததுமாக விருக்கையில் இன்சொல்லைச் செவிப்படும்படி யோத, அதனால் கைகேயியின் விஷச்சொல்லால் தோன்றிய துயர் சிறிதுநீங்கவே, தன்காதற்குஉரிய புதல்வனான ஸ்ரீராமனது திருநாமத்தைச் சொல்லியவண்ணம் மன்னன் உயிர்பெற்றெழக் கண்டானென்பதாம். புதல்வன்பெயரைப் புகல்வதைக்கேட்டு உயிரிருத்தலை முனிவன் அறிந்தானென்க. பனிநீர் - ஓர் வாசனைநீர். திண்கால்-சிற்றாலவட்டம்; அன்மொழித்தொகை. போதத்தளவே தவழ்வித்தல் - மூர்ச்சைநீங்கி அறிவுண்டாகும்படி மேலேபட வீசுவித்தல். உயிரும் என்ற உம்மை - உயிர்காணுதலி னருமை விளக்கி நின்றது. இனி, முனிவன் புகலாநின்றான்; ஓதாநிற்கச் சக்ரவர்த்தி தனதுயிரைக்கண்டானென்றுமாம். தண்கால் - மந்தமாருதம். பி - ம்:—[1]உதவி. [2]உக்கமென்கால். [3]தழுவித்தன், தழுவித்தின், தழுவுற்றின். (௲௲.௬)

௪0.—வசிட்டன் மீண்டும் மன்னவனிடத்து இன்னுரை கூறுதல்.

காணா வையா வினிநீ யொழிவாய் கழிபே ரவல
மாணா யகனே யினிநா டாள்வா னிடையூ றுளதோ
மாணா வுரையா [1]டானே தருமா மழையே யனையான்
பூணா [2]தொழிவா னெனில்யா முளமோ பொன்றே மென்றான்.

(இ-ள்.) காணா - (தசரதன் உயிர்வரப்பெற்றதைக்)கண்டு,ஐயா-தலைவனே! இனி-இப்பொழுது,நீ கழி பேர் அவலம்ஒழிவாய்-மிகவும்பெரியவருத்தத்தை விடுவாயாக; இனி ஆண் நாயகன் ஏ நாடு ஆள்வான்-இனிப் புருஷோத்தமனே பூமியைக்காப்பான்; இடையூறு உளது ஓ-(அதற்குத்) தடை யிருக்கின்றதோ? [இல்லை]; மாணாஉரையாள்தான் ஏ-மாட்சிமைப்படாத வார்த்தையையுடைய கைகேயியே, தரும் - (பூமியைக்) கொடுப்பாள்; மா மழை ஏ அனையான் கரிய

மேகத்தையொப்பவனாகிய ஸ்ரீராமன், பூணாது ஒழிவான்எனில்-(மகுடஞ்)சூடாமற் (காட்டிற்குப்) போனால், யாம் உளம்லை-நாம் இருக்கப்போகிறோமோ?[இல்லை]; பொன்றேல்-வருந்தாதே,' என்றான் - என்றுசொன்னான், (முனிவன்).

மூர்ச்சை தெளிந்தபின்பும் மீண்டும் மூர்ச்சையடையாதிருத்தற்பொருட்டு முனிவன் இன்சொற் கூறுகின்றனனென்க. கைகேயியின் வன்னெஞ்சத்தின் தன்மையை யறியாமையால் கைகேயியின்மனத்தைத் திருப்பிவிடலாமென்று உறுதிகொண்டு வசிட்டமுனிவன் இங்ஙனம் கூறலாயினன். கைகேயி தன்புதல்வனுக்கு அரசுகேட்டதும் மகாநுபாவனுயக் குற்றமின்றியிருக்கும் ஸ்ரீராமனைக் காட்டுக்கு அனுப்புமாறு கூறியதும் அதருமமாதலால், கைகேயியை 'மாணாவுரையாள்' என்கிறான். 'இனி' என்றது-"இனி நினைந்திரக்கமாகின்று" என்றவிடத்திற்போல இப்பொழுது என்னும் பொருளது. கழிபேர்-ஒருபொருளைக்குறித்த இருசொற்கள். ஆணையகன் - புருஷோத்தமன்: ஸ்ரீராமன்; ஆள் நாயகன் எனவும் பிரிக்கலாம். பி-ம்:—[1]தருமம் மழையேயனையான்மகுடம். [2]ஒழியான். (ருருஎ)

சக.—தசரதமன்னவன், வசிட்டனை நோக்கி இராமனுக்குப் பட்டங்கட்டுவித்துத் தன்னுரையும் பொய்யாகாதிருக்கச் செய்ய வேண்டுதல்.

என்றம் முனிவன் றன்னை நினையா வினையே னினியான்
பொன்றும் மளவில் லவனைப் புனைமா மகுடம் புனைவித்
[1]தொன்றும் வனமென் [2]றன்னு வண்ணஞ் செய்தென் னுரை
குன்றும் பழிபூ ணுமற் காவாய் கோவே யென்றான். [யுங]

(இ-ள்.) என்ற அ முனிவன் தன்னை-என்று சொன்ன அம்முனிவனைக் குறித்து,—நினையா-(மனத்தில்) ஆலோசித்து, 'இனையேன் யான்-இத்தன்மையனாகிய நான், இனி பொன்றும் அளவில்-மேல் அழியுங்காலத்திற்குள், அவனை-இராமனை, புனை மா மகுடம் புனைவித்து - அழகிய பெரிய திருமுடியைச் சூட்டி, வனம் ஒன்றும் என்று உன்னு வண்ணம் செய்து - காட்டையடைவா னென்று நினையாதபடிசெய்து, என் உரைஉம்-என் வார்த்தையும், குன்றும் பழி பூணமல்-இழிவாகிய பழியை மேற்கொள்ளாதபடி, காவாய் - இரட்சிப்பாயாக; கோவே-தலைவனே!' என்றான் - என்று வேண்டிக்கொண்டான், (தசரதன்); (எ - று.)

தசரதன் தன்மனத்திற்குள்தானே ஆலோசித்துத் தன்னைத் தேற்றின முனிவனைப்பார்த்து, 'நான் கைகேயிக்கு வரங்கொடுத்ததைப் பொய்த்தேனென்ற பழிச்சொல் உண்டாகாவண்ணமும் இராமன் காட்டிற்குச்செல்லாமல் அரசுபுரியும்வண்ணமும் நீ செய்யவேண்டும்' என்று வேண்டினனென்றவாறு. நிலையாத இன்பத்தின் பொருட்டு நிலையான பழியை மேற்கோடல் சால்போடியையாமையின், 'பழிபூணுமற் காவாய்' என்கிறான். என்றம் முனி

வன்-என்ற அம்முனிவன் என்பதன் விகாரம்: இனி, என்றமுனிவன் என்பது விரித்தல்பெற்று வந்ததென்றலும் ஒன்று. வினையேன் எனப்பிரித்து, தீவினையையுடையே னென்றுமாம். இனியா னவனை யெனக் கூட்டலுமாம்; இனியான்-ஸ்ரீராமன். பொன்றும் அளவு இல்லவனை எனப்பிரித்து-அழிவில்லாத ஸ்ரீராமனை யென்றுரைத்து, இனையேன்யான் உன்றவண்ணம் எனக் கூட்டலுமாம். ஈண்டு, உரை யென்றது - கைகேசிக்குக் கொடுத்த வரங்களை. பழிபூணுமல்-பொய்யாகாமலென்றபடி. பி-ம்:—[1]என்றும். [2]உள்ளா. (௩௩அ)

## சஉ.—வசிட்டன் இராமனுக்கு இராச்சியமளித்துப் புகழ்பூணுமாறு கைகேயிக்கு உபதேசித்தல்.

முனியும் முனியுஞ் செய்கைக் கொடியாண் முகமே[1]முன்னி
யினியுன் புதல்வற் கரசு [2]மேனை யோர்க்கின் னுயிரு
மனுவின் வழிநின் கணவற் குயிரும் முதவி வசைதீர்
புனிதம் மருவும் புகழே [3]புனைவாய் [4]பொன்னே யென்றான்.

(இ - ள்.) முனிஉம்-(என்றுசொல்லக்கேட்ட) வசிட்டமுனிவனும்,முனியும் செய்கை கொடியாள் - வெறுக்கப்படுகின்ற தொழிலையுடைய கொடிய கைகேயியினது, முகம்ஏ முன்னி-முகத்தைப்பார்த்து, 'இனி-இப்பொழுது, உன் புதல்வற்கு அரசுஉம் - உன்மகனாகிய ஸ்ரீராமனுக்கு இராச்சியபாரத்தையும், ஏனையோர்க்கு இன் உயிர் உம்-ஒழிந்தவர்களுக்கு இனியபிராணனையும், மனுவின் வழி நின் கணவற்கு - வைவசுவதமனுவினது வம்சத்திற்பிறந்த உனது கொழுநனுக்கு, உயிர்உம் - பிராணனையும், உதவி - கொடுத்து, வசைதீர்-குற்றமற்ற, புனிதம் மருவும்-சுத்திபொருந்திய, புகழ்ஏ - கீர்த்தியையே, புனைவாய்-அணிவாயாக; பொன்னே - இலக்குமிபோன்றவளே!' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

கைகேயியைப்பார்த்து வசிட்டமுனிவன் 'நீ இராமனுக்கு இராச்சியத்தைத் தந்து கானகம் ஏகாவண்ணம்செய்தால் அதனால் இவ்வுலகுக்கே உயிரீந்தவளாவாய்: இம்மன்னனும் உயிர்பெறுவான்: அதனாற் பெரும்புகழ் பெறலாம்: ஆகவே, பழிப்பையுண்டாக்கும் உன்செயலைவிட்டுப் புகழைப் பயக்குமாறு செய்க' என்றன னென்பதாம். ஸ்ரீராமனை உன்புதல்வனென்றான், கருணை பிறத்தற்பொருட்டு: முன் அந்தக்கைகேயி காட்டிவந்த அன்பைக் குறிக்கும்பொருட்டு மாம். மனுவின்வழி நின்கணவன் - நீதிநூல் பிறழாத கணவன் என்றுமாம். இனி, மனுவின்வழியென்பதனை அரசோடு கூட்டலுமாம். பி - ம்:—[1]நோக்கி. [2]ஏனையோருயிருக்குயிரும். [3]புனையாய். [4]பெண்ணே.

(௩௩௯)

## சங.—கைகேயியின் மாற்றமொழி.

மொய்ம்மாண் வினைவே ரறவென் [1]றுயர்வான் மொழியா முன்னம்
விம்மா [2]வழுவா ளரசன் மெய்யிற் றிரிவா னென்னி
னிம்மா வுலகத் துயிரோ டினிவாழ் வுகவே னென்சொல்
[3]பொய்ம்மா ணுமற் [4]கின்றே பொன்று [5]தொழிலே யென்றாள்.

(இ - ள்.) (என்று), மொய் மாண் வினை - நெருங்கிய மாட்சிமையுடைய (நல்வினை தீவினை யென்னும் இரு) வினைகளையும், வேர் அற - அடிகெடும்படி, வென்று - (புலன்களிற்செல்கின்ற அவாவைத்தையும்) அடக்கி, உயர்வான் - மேம்பட்ட அந்த வசிட்டமுனிவன், மொழியா முன்னம் - சொல்வதற்கு முன்பே,—(கைகேயி),—விம்மா அழுவாள் - விம்மிஅழுது, 'அரசன் - சக்ரவர்த்தி, மெய்யின் - வாய்மையினின்றும், திரிவான் என்னின் - மாறுவானானல், இனி - பின்பு, இ மா உலகத்து - பெரிய இந்த நிலவுலகத்தின் கண், உயிரோடு வாழ்வு - உயிரோடு வாழ்ந்திருத்தலை, உகவேன் - விரும்பேன்;என் சொல் பொய் மாணுமைக்கு என் வார்த்தை பொய்படாமைக்காக, இன்றே - இப்பொழுதே, பொன்றுது ஒழியேன் - அழியாதிரேன்,' என்றாள்—; (எ - று.)

ஈண்டு மெய்யென்றது-நிகழ்ந்ததுகூறிக் கூறியவாறொழுகுதலை. அவன் சொன்னசொல் தவறினும் யான் சொன்னசொல் தவறுவேனே என்கிறாள். செய்தவினைத்தொடர்ந்து பயனை அனுபவிக்கச் செய்தலால், 'மொய்வினை' என்றார். மாணுவினையை, மாண்வினை யென்றது - இகழ்ச்சி. தீவினைகள் இருப்புவிலங்கும், நல்வினைகள் பொன்விலங்கும் போலத் தம்முள் சமப்படுத்து உணர்தற்பான்மையவாதலால், இருவினையும் மாணுவாயின; 'வேரற' என்றதனால், அப்பயன்களுள் இறந்தவுடம்புகளான் அனுபவித்தனவும், பிறந்தஉடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னும் அனுபவிக்கக்கடவனவாய் முன்கிடந்த துன்பங்களும், மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாதல் பெற்றாம்: பரம்பொருளை யுணர்தலால் இவை யற்றன. மாணுமைக்குஎன்பது-எதிர்மறை காட்டிவந்த எதிர்காலவினையெச்சமென்பர்: மாணுமைக்குஎன்பது மாணுமைக்குஎன்றுஇருப்பின்நலம்:நான்கனுருபுபெற்றதொழிற்பெயரெனக. சிலபிரதிகளில் இச்செய்யுள் அடுத்த பாடலின்பின் காணப்படுகின்றது.
பி-ம்:—[1]ஒழிவான். [2]விழுவாள். [3]அம்மாண்,அம்மான். [4]இன்னே. [5]ஒழியான்.

௪௪.—இதுமுதல் மூன்று கவிகள் - வசிட்டமுனிவன் கைகேயியைக் கண்டித்துக் கூறியன.

கொழுநன் றுஞ்சும் மெனவுங் கொள்ளா துலகம் மெனவும்
பழிநின் றுயரும் மெனவும் பாவம் முளதா மெனவு
மொழிகின் றிலைபன் றியுமொன் றுணர்கின் றிலையா னினிமேன்
மொழிகின் றனவென் [1]னென்னு முனியும் முறையன் [2]றென்றான்.

(இ - ள்.) (எனக்கேட்டு), முனிஉம் - அம்முனிவனும், கொழுநன் துஞ்சும் எனஉம் - கணவன் இறப்பான் என்றும், உலகம் கொள்ளாது எனஉம் - உயர்ந்தவர் ஏற்றுக்கொள்ளாரென்றும், பழி நின்று உயரும் எனஉம் - பழிமொழி நிலைநின்று மேன்மேலும்வளருமென்றும், பாவம் உளது ஆம் எனஉம் - தீவினை உண்டாமென்றும் (எண்ணி), ஒழிகின்றிலை - (நீ இக்காரியத்தினின்றும்) நீங்குகின்றாயில்லை; அன்றிஉம் - (அது) அல்லாமலும், ஒன்று

உணர்கின்றிலை-(பிறர் சொன்னாலும் அதனைச்) சிறிதும் அறிந்து செய்கின்றாயில்லை; யான்—, இனிமேல் மொழிகின்றன என் - பின்னால் இன்னும் சொல்லத்தக்கவன யாவை? என்று - என்றுகூறி, (பின்னும்), முறை அன்று என்றான் - (இது) கிரமமல்லவென்றுங்கூறினான்; (எ - று.)

உனக்கே உன் செய்கையினால் விளைவன இவையென்று தெரியாவிட்டாலும், பிறர் சொன்னாலும் கேட்கமாட்டேனென்கிறாயே? இனி உனக்கு யான் என்னசொல்லுவது? இறுதியாக ஒன்று சொல்லுகின்றேன்: உன்செயல் முறைமையன்றென்றனன் வசிட்டனென்க. பி-ம்:—[1]என்றான் [2]என்பான்.

௪௫. கண்ணோ டாதே கணவ [1]னுயிரோ டிடர்கா ணாதே
[2]புண்ணூ டோடுங் கனலோ விடமோ வென்னப் புகல்வாய்
பெண்ணோ தீயோ [3]மாயாப் பேயோ கொடியாய் [4]நீயிம்
மண்ணோ டுன்னோ[5]டென்னா[6]வசையோ வலிதே யென்றான்.

(இ - ள்.) (என்று பின்னும் வசிட்டன்), கண் ஓடாது - தாக்ஷிண்யமின்றி, கணவன் உயிர் ஓடு இடர் காணாது-சக்ரவர்த்தியினது உயிர் (உடலைவிட்டு) விரைந்துசெல்லுந் துன்பத்தையும் நினையாமல், 'புண் ஊடு ஓடும் கனல் ஓ - விரணத்தினுட்புகும் நெருப்போ? விடம் ஓ - நஞ்சோ?' என்ன - என்னும்படி, புகல்வாய் - பேசுகின்றவளே! நீ—, பெண் ஓ - ஒரு மானுடமாதரோ? (அன்றி), தீ ஓ - நெருப்போ? (அன்றேல்), மாயா பேய் ஓ - விடாப்பிடியுள்ள பிசாசமோ? கொடியாய் - கொடுமையுடையவளே! இ மண்ணோடு உன்னோடு என் ஆம் - (இனித் தசரதனுக்கு இவ்வுலகத்தோடும் உன்னோடும் என்னஉறவு இருக்கின்றது? வசை ஓ வலிது ஏ - (உனக்குவந்த) பழிச்சொல்லோ வலியதே, என்றான்—; (எ - று.)—முதலடியில், ஏ - அசை.

கண்ணோட்டமாவது - தன்னோடுபயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை; இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று. கேகயன்மகளும் தசரதன்மனைவியுமாதல்பற்றிப் பெண்ணோவென்றும், தீய ஒழுக்கத்தாற் பெண்ணல்லளெனத் துணிந்து தான் சேர்ந்தவிடத்தைச் சுடுதலுங் கொல்லுதலும்பற்றித் தீயோஎன்றும், இவள் தான் சேராதஇடத்தையுஞ் சுடுதலாலும் ஆறாமையாலும் தீயினுங் கொடியளாதலால் தீயல்லளெனத் துணிந்து பிறர்வருத்தத்திற்கு இரங்காது மேன்மேலும் வருத்தல்பற்றிப் பேயோவென்றுங் கூறினான். மாயாப்பேய் என்பதற்கு - உலகத்துப்பேய் வருத்துவது தான் மறைந்து நின்றே, இப்பேய் மறையாமலும் வருத்தும் என்னும் வேற்றுமை தோன்றக் கூறலும் ஒன்று. மாய்தல் - மறைதலாதலை "கதிர்மாய்க்குந்தண்கழனி" என்ற இடத்துங் காண்க. பி-ம்:—[1]துயரோடிடர். [2]புண்ணோடு. [3]மாயப்பேயோ. [4]நீயும், அறியேன். [5]என்னோ. [6]வசையே, மனமே, மனதே. (௫௪௨)

௪௬. வாயான் மன்னன் மகனை வனமே கென்னா முன்ன
நீயோ சொன்னா யவனோ நிமிர்கா னிடை[1]வெந் நெறியிற்

[2]போயே புகலோ தவிரான் புகழோ டுயிரைச் சுடுவெந்
[3]தீயோய் நின்போற் றியா ருளரோ செயலென் னென்றான்.

(இ - ள்.) (என்று பின்னும்). மன்னன் - சக்ரவர்த்தி, வாயால் மகனை வனம் ஏகு என்னு முன்னம்-(தன்) வாய்மொழியாற் குமாரனைக் காட்டிற்குச் செல் என்று ஏவுதற்குமுன்னே, நீ ஓ சொன்னாய் - நீயே (வனமேகென்று) சொன்னாய்; அவன் ஓ - அவ்விராமனோ, நிமிர் கானிடை - நெருங்கிய காட்டில், வெம் நெறியில் - கொடிய வழியில், போய் ஓ புகல் ஓ - சென்று அடைதலையோ, தவிரான் - ஒழியான்; புகழோடு - கீர்த்தியையும், உயிரை - கணவனுயிரையும், சுடு-எரிக்கின்ற, வெம் தீயோய்-கொடிய நெருப்புப் போன்றவளே! நின்போல் தீயார் - உன்னைப்போன்ற கொடியவர், உளர் ஓ - (இவ்வுலகத்து) இருக்கின்றனரோ? செயல் என் - (இதனினுஞ்) செய்யத்தக்க வேறு கொடுந்தொழில் யாது?' என்றான்—; (எ - று.)

தசரதசக்ரவர்த்தி தன்வாயினால் இராமனைக் காட்டிற்குப்போமாறு துணிந்துசொல்லப் பின்வாங்குகையில், 'அந்தச்சக்ரவர்த்தி உன்னை வரவழைத்தது பதினான்குவருடம் வனவாசஞ்செய்யும்படி ஏவுதலின்பொருட்டாகும்' என்று அந்தச்சக்ரவர்த்தியின் அபிப்பிராயமாக நீயே கூறிவிட்டாய்; இராமனோ, 'நம்மைப் பெற்ற தந்தையார் ஏவவில்லை: மாற்றாந்தாயல்லவா அவருடைய கருத்தாக ஏவுகிறாள்' என்று சொல்லிக் காட்டிற்குப் போகாமவிரான். இங்ஙனம் ஒருசக்ரவர்த்திகுமாரனைக் காட்டிற்குச் செலுத்தி அதனாற் புகழை யிழந்து பெரும்பழியைப்பெற்ற நீ தயரதனை உயிர்போகும்நிலையிற் செய்துவிட்டாய். உனது இந்தச்செய்கை எவ்வளவு விபரீதமாயிருக்கின்றது! உன்னைப்போற் கொடியவரும் உளரோ?' என்று வசிட்டமுனிவன் கைகேயியைத் திட்டினனென்க. உலகத்துத்தீ புகழையும் உயிரையும் எரிக்கமாட்டாதாதலின் அவ்வுலகத்தீயினும் வேறுபாடுதோன்ற 'புகழோடுயிரைச் சுடுவெந்தீ' என்றான்; இது - வேற்றுமையணி. புகழையெரித்தல் - புகழைப் போக்குதல்: உயிரையெரித்தல் - தசரதனுயிரைப் பரிதவிக்கச் செய்தல்.
பி-ம்:—[1]வன்னெறியிற். [2]போயே புகலோதவிரப். [3]தீயோ. (௩௪௩)

௪௪.—இதுமுதல் மூன்றுகவிகள் - தசரதன் தன்வருத்தந் தோன்றக் கைகேயியைப் பழித்துக்கூறுதலைத் தெரிவிக்கும்.

தாவின் முனிவன் புகலத் தளரா நின்ற மன்ன
[1]னாவின் னஞ்சம் முடைய நங்கை தன்னை நோக்கிப்
பாவி நீயே வெங்கான் படர்வா [2]யென்றென் னுயிரை
[3]யேவி னாயோ வவனு மேகி னானோ [4]வென்றான்.

(இ - ள்.) (என்று), தா இல் முனிவன் - குற்றமில்லாத அம்முனிவன், புகல-சொல்ல, (கேட்டு), தளராநின்ற மன்னன்-வருந்துகின்ற அத்தசரதன், நாவில் நஞ்சம் உடைய நங்கைதன்னை நோக்கி - நாவில் விஷத்தையுடைய

கைகேயியைப்பார்த்து, 'பாவி - தீயவளே! வெம் கான் படர்வாய் என்று - கொடிய காட்டிற் செல்வாயாகவென்று, என் உயிரை - எனது உயிரோ டொத்த இராமனை, நீ ஏ ஏவினாய் ஓ - நீயே அனுப்பினாயோ? அவன் உம் ஏகினான் ஓ - அவனும் (காட்டிற்குப்) போய்விட்டானோ? என்றான்—; (எ - று.)

கைகேயி இராமபிரானைநோக்கிக் காட்டுக்குச் செல்வாயென்று ஏவிய போது, மன்னவன் மூர்ச்சித்திருந்தானாதலால் நிகழ்ந்தது தெரியாமையால், வசிட்டமுனிவன் 'மன்னன்மகனை வனமேகென்றான்முன்னம் நீயோ சொன்னாய்: அவனோ கானிடைப்போய்ப் புகுதல்தவிரான்' என்று சொன்னதைக் கேட்டுக் கைகேயி இராமனைக் காட்டிற்குச் செல்லுமாறு ஏவியதையுணர்ந்து 'பாவி! நீயே வெங்கான்படர்வாயென்று என்னுயிரை ஏவினாயோ?' என்கிறான். ஈண்டுக்குற்றமென்றது - காமவெகுளி மயக்கங்களை. நஞ்சமென்றது - வெவ்வுரையை. எனதாணையின்றி யென்பான் நீயேயெனப் பிரிநிலையேகாரந் தந்தான்; நீயேபடர்வா யென்றுமாம். உயிர் - உபசாரவழக்கு. பி-ம்:—[1]நாவினஞ்சம். [2]என்றன். [3]ஏவினாயே. [4]என்னா, என்ன. (௩௪௪)

௪௫. கண்டே னெஞ்சங் [1]கனிவாய்க் [2]கனிவாய் விடநா னெடுநா
ளுண்டே னதனா னீயென் னுயிரை முதலோ டுண்டாய்
பண்டே யெரிமுன் னுன்னைப் பாவீ [3]தேவி யாகக்
கொண்டே னல்லேன் வேறோர் கூற்றந் தேடிக் கொண்டேன்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (பின்னும்), நெஞ்சம் கனிவு ஆய் கண்டேன்-(உன்)கருத்தை நன்றாயறிந்தேன்; நான் கனி வாய் விடம் நெடு நாள் உண்டேன் - யான் (உனது) கொவ்வைக்கனிப்போலும் வாயினது விஷத்தைப் பலகாலும் புசித்தேன்;அதனால் நீ என் உயிரை முதலோடு உண்டாய்-ஆதலால்தான் நீ எனது சீவனை அடியோடு புசித்தாய்;பண்டு ஏ-முன்னே, எரி முன்-அக்கினியின்முன், பாவீ - கொடியவளே! தேவி ஆக உன்னை கொண்டேன் அல்லேன் - மனைவியாக உன்னை கொண்டவனல்லேன்; வேறு - மாறாக, ஓர் கூற்றம் தேடிக் கொண்டேன் - ஒருயமனைச் சம்பாதித்துக்கொண்டேன்; (எ - று.)

நான் உன்னை வேற்றுவடிவங்கொண்டுவந்துள்ள யமனென்றுஅறியாது பெண்ணென்று மாறாகஎண்ணித் தேவியாகக்கொண்டேன்: பயன்விளையுங் காலத்து நீ பெண்ணல்லையென்றும், ஓர்கூற்றமென்றும் விளங்கிற் றென்ற வாறு; கைகேயியினிடத்துள்ள தேவியாந்தன்மையை மறுத்துக் கூற்றின் தன்மையை யேற்றிக் கூறியது-அபநுதியணியாம். கணவன் களிக்கும்போது உடன்களித்தலும், அவன் துயருறும்போது உடன்துயருறுதலுமாகிய கற்பிலக்கண மின்மையால் தேவியாகக்கொண்டேனல்லேனென்றும், காலமாகாமைக்கு முன்பே கொல்லுதலால் வேறென்றும், ஸ்ரீராமசம்பந்தம்பெற்றவ ரிடத்துஞ் செல்லுதலால் ஓரென்றும், என்னுயிரை முதலோடுண்டாய் என்பதற்குஏற்பக் கூற்றமென்றும், நீ செய்யும்இது உன்பிழையன்று என்பிழையே

யென்பான் தேடிக்கொண்டேனென்றுங் கூறினன். நெஞ்சம் - ஆகுபெயர். கனிவாய்விடமுண்டல் - அதரபானம். அதராமிருதத்தை 'விடம்' என்றான், துன்பஞ்செய்தலால். நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாதலின், விடமுண்டேன்என உணவென்னும் பொதுச்சொல்லாற் கூறினன். மகனுக்குந்தீங்குவிளைத்தலால், முதலோடென்றான். உயிருண்டாய் என்பது, இலக்கணைக்குறிப்பு; "கண்ணுங்கொளச்சேறி நெஞ்சேயிவையென்னைத், தின்னுமவர்க்காணலுற்று" என்புழிப்போல; இது-"உண்டற்குரிய வல்லாப்பொருளை, யுண்டனபோலக் கூறலுமரபே" என்னுஞ் சூத்திரத்தில் உய்த்துக்கொண்டுணர்தலென்பதனாற் கொள்ளப்பட்டது: "தோணலமுண்டு துறக்கப்பட்டோர், வேணீருண்ட குடையோரன்னர்," "அளித்தயில்கின்ற வேந்தன்" என்றார் கலித்தொகையிலும், சிந்தாமணியிலும். அக்கினியைப் பிரதிஷ்டித்து உதகம் பண்ணுத லுளதாதலின், எரிமுன்தேவியாகக்கொண்டே னென்கிறான். பி-ம்:—[1]கனிநின். [2]விடநாளெடுநாளுன்னோடு. [3]தேவீ. (௧௪௫)

௪௬. விழிக்குங் கண்வே றில்லா வெங்கா னென்கான் முளையைச்
சுழிக்கும் வினையா லேகச் சூழ்வா [1]யென்னைப் [2]போழ்வாய்
பழிக்கு நாணாய் மாணாப் பாவி யினியென் பலவுன்
கழுத்தின் னாணுன் மகற்குக் [3]காப்பின் னாணா [4]மென்றான்.

(இ - ள்.) 'விழிக்கும் கண் வேறு இல்லா - (அவன்அல்லாமல்) திறந்து பார்க்கின்ற வேறுவிழி யில்லாத, என் கான் முளையை-எனது பிள்ளையாகிய இராமனை, வெம் கான் - கொடிய காட்டில், சுழிக்கும் வினையால் - அலையச் செய்கின்ற ஊழ்வினையினால், ஏக - செல்லும்படி, சூழ்வாய் - ஆலோசனை செய்பவளே! என்னை போழ்வாய் - என்னைப் பிளப்பவளே! பழிக்கும் நாணாய் - பழிமொழிக்கும் வெட்காதவளே! மாணா பாவி - மாட்சிமைப்படாத கொடியவளே! இனி என் பல-இனிமேற் பலவார்த்தைகளைக் கூறுவதனாற் பயன்யாது? உன் கழுத்தின் நாண் - உன்கழுத்திற்கட்டிய மங்கலநாண், உன் மகற்கு - உன்பிள்ளையாகிய பரதனுக்கு, காப்பின் நாண் ஆம்-ரக்ஷாபந்தநத்துக்குரிய கயிறாகும்,' என்றான் - என்று கூறினன், (தசரதன்); (எ - று.)

பரதனுக்குப்பட்டங்கட்டுவதற்குள் நான் இறப்பேனென்பதுகருத்து; பிறிதினவிற்சியணி. இராமபிரான் என்கண்போன்றவன்: அவனை யிழந்தால் நான் கண்ணிழந்த குருடனேயென்பது 'விழிக்குங்கண் வேறில்லா என்கான் முளை' என்பதன்கருத்து. இனி எப்பொழுதும் என்கண்ணாரக்காணத்தக்கவன் அந்த ஸ்ரீராமபிரானேயென்ற கருத்துக்கொள்ளவும் இடமுண்டு: "விழிக்குங்கண்ணிலேனின்கண்மற்றல்லால் வேறொருவரோடென்மனம்பற்றாது" என்ற பெரியார்பாசுரமுங் காண்க. கான்முளை - சந்ததியில்முளைப்பது: சந்தானம்: அன்மொழித்தொகை. வெங்கானென்கான், சூழ்வாயென்னைப் போழ்வாய், நாணாய்மாணா—பிராசம். பி-ம்:—[1]என்ன, என்னிற் [2]பேழ்வாய்ப். [3]காப்புநாண். [4]என்னா.
(௧௪௬)

ருo.—மனமிரங்காத கைகேயியைத்துறத்து வசிட்டனைச் சாட்சியாகக் கொண்டு மன்னவன் சிலகூறுதல்.

இன்னே பலவும் பகர்வா [1]னிரங்கா தாளை நோக்கிச்
சொன்னே [2]னின்றே யிவளென் றார மல்ல டுறந்தேன்
மன்னே [3]யாவான் வருமப் பரதன் றனையும் மகனென்
றுன்னேன் முனிவா [4]வவனு மாகா னுரிமைக் கென்றான்.

(இ - ள்.) இன்னஎ - இத்தன்மையவாய், பலஉம் பகர்வான் - அநேக வார்த்தைகளைச் சொல்லுந் தசரதன்,—இரங்காதாளை நோக்கி-மனமிளகாத அக்கைகேயியைப்பார்த்து, [கைகேயி மனமிளகாதிருத்தலைக் கண்டுஎன்ற படி], (வசிட்டனை நோக்கி), 'முனிவா-முனிவனே! இன்று ஏ சொன்னேன்-இப்பொழுதே சொல்லிவிடுகிறேன்; இவள் என் தாரம் அல்லள்-இவள் என் மனைவியல்லள்; துறந்தேன் - வெறுத்துவிட்டேன்; மன்எ ஆவான் வரும் - அரசனாக வருகின்ற, அ பரதன்தனை உம்—, மகன் என்று உன்னேன் - பிள்ளையென்று நினையேன்; அவன் உரிமைக்குஉம் ஆகான் - அப்பரதன் புத்திரன் செய்வதற்குரிய உத்தரகிரியை செய்வதற்குத் தக்கவனாகான்,' என்றான்—; (எ - று.)

தான் கல்லுங் கரையும்படிசொல்லவும், கல்லினும்வன்னெஞ்சளாய்க் கைகேசி சிறிதும் இரங்காதிருத்தலைநோக்கி அவளிடத்துமனங்கசந்து தசரதன்,வசிட்டமுனிவனைநோக்கி, 'சுவாமி!நான் இந்தக்கைகேயியைத் துறந்துவிட்டேன்: என்னுயிரைவாங்குவதால் யமன்போன்ற இந்தப்பாவி எனக்கு மனைவியல்லள்: மூத்தவன்அரசுபுரிதலென்ற முறைமைமாறி இராச்சியத்தை யாளவேண்டுமென்ற கருத்துடன் வரப்போகின்றதனாலும், ஸ்ரீராமனைக் காட்டுக்குச்செல்லுமாறு செய்வதனாலும் என்மனத்துக்கு மாறான பரதனும்,எனது புத்திரன் ஆகான்: ஆகவே, இராமனைப்பிரிவதனால் இறக்கப்போகின்ற எனக்கு அந்திமகிரியைசெய்வதற்கும் அவன் ஏற்றவனல்லனென்றனன்' என்பதாம். இன்னஎ என்பன இன்னேயென்று விகாரப்பட்டன; ஏகாரம் - பிரிநிலை. சொன்னேன் - காலவழுவமைதி: இயல்பினால்வந்தது. தாரம் - தாரா: என்ற வடசொல்லின்விகாரம். மன்-மன்னனுக்கு ஆகுபெயர்:ஏகாரம்-சிறப்பு.

பி-ம்:—[1]இரங்காதவளை. [2]முன்னே. [3]ஆள்வான். [4]அவனென்னுரிமைக்காகான். (கூசஎ)

ருக.—தசரதன்நிலைமைக் கண்டு கோசலை வருந்தழுறுதலை இதுவும் அடுத்தகவியும் கூறும்.

என்னைக் கண்டும் மேகா வண்ணம் மிடையூ [1]றுடையா
னுன்னைக் கண்டும் மிலனோ [2]வென்னா வுயர்கோ சலையைப்
பின்னைக் கண்டா னனையான் பிரியக் [3]கண்ட துபரந்
தன்னைக் கண்டே [4]தவிர்வா[5]டளர்வா னிலையிற் [6]றளர்வாள்.

(இ - ள்.) பின்னை-பின்பு, இடையூறு உடையான்-துன்பத்தையுடைய தசரதன்,—உயர் கோசலையை - சிறந்த கௌசலையைநோக்கி, '(இராமன்), என்னை கண்டு ஏகா வண்ணம் உம்-என்னைப்பாராதபடியே (தான்) காட்டிற்குச்சென்றதுபோலவே, உன்னை உம் கண்டு இலன் ஓ-நின்னையும் பார்க்கவில்லையோ?' என்று-என்றுகூறிக்கொண்டே, கண்டான்-; அனையான் பிரிய கண்ட துயரம்தன்னை-அவ்விராமன் பிரிதலால் (மன்னவனுக்கு) நேர்ந்துள்ள துன்பத்தை, கண்டு ஏ-கண்கூடாகப்பார்த்தபின்பே, தவிர்வாள் - (தான் அந்தத் தசரதனிடம் இராமனைக்காட்டிற்கு அனுப்பாதிருக்கும்படி கேட்கவேணுமென்றுநினைந்துவந்த கருத்தை) ஒழிபவளாய், தளர்வான் - சோர்பவனாகிய அரசனது, நிலையில்—, தளர்வாள்-(தானுஞ்) சோர்பவளானாள்; (எ - று.)

'கானகஞ்செல்கின்றேனென்று சொன்னால் நான் எங்ஙனம் வருந்துவேனோ?' என்று என்னோடு சொல்லாமலே கானகத்துக்குப் புறப்பட்ட இராமன் உன்னிடத்தும் அவ்வண்ணமே சொல்லாதொழிந்தானோ? என்று மன்னவன் வினவியவண்ணம் கௌசலையைக் கண்டானாக, அரசனது துயரமிகுதியைக் கண்டு, தன்னாலியன்றவரையில் இராமனைக் காட்டிற்கு அனுப்பக்கூடாதென்றே இம்மன்னவன் முயன்றுள்ளானென்பதையும் இராமனைப் பிரிந்ததால் தன்னைவிட மன்னவன் மிகுதியாகத்துன்பப்படுகிறானென்பதையும் கண்கூடாகக்கண்ட கோசலை, தான் இராமனைக் காட்டிற்குச்செல்லாதவாறு செய்யவேணுமென்று வேண்டிக்கொள்ளும் எண்ணந் தவிர்ந்து மன்னவன் போலவே தானும் வருந்துபவளாயின ளென்பதாம். என்னைக்கண்டும் ஏகா வண்ணம் இடையூறு ஒன்றுடையான் என்பதற்கு - கானகத்திற்குச் செல்லுமுன் என்னைப்பார்த்துவிட்டுப் போகமுடியாதபடியும் கைகேயியினால் தடைசெய்யப்பட்ட இராமனென்றும், அனையான் பிரியக் கண்ட துயரம் தன்னைக் கண்டே தவிர்வாளென்பதற்கு - அவ்விராமன் பிரிந்ததனால் தோன்றிய துயரத்தைத் தன்னைக் கண்டே போக்கிக்கொள்பவளாகிய அக்கோசலையென்றும் உரைக்கலாம். வீரமாதாவாதலாலும், ஸ்ரீராமனைப்பெற்ற பேறுடைமையாலும், பட்டமஹிஷியாதலாலும், தருமபத்நியாதலாலும் 'உயர்கோசலை' என்றார். இனி அனையான் பிரியக்கண்ட துயரத்தையும் தன்னையுங்கண்டு தளர்வாள் என்றும், தன்னைக்கண்டே அனையான் பிரியக்கண்ட துயரந் தவிர்வாள் என்றும்உரைப்பினுமாம். இனி, இடையூறுடையான் [தசரதன்] கண்டானாகி, என்று, தளர்வான்; இவள்தளர்வாள் எனினுமமையும். பி-ம்:—[1]உடையாய். [2]என்றான். [3]கண்டரசாள. [4]தவிர்வான். [5]தளரா, தளர்வாள். [6]தளர்வான். ()

௫௨. மாற்றாள் செயலா மென்றுங் கணவன் வரமீந் துள்ள
மாற்றா தயர்ந்தா னென்று மறிந்தா ளவளும் [1]மனத்தைத்
தேற்றா நின்றாண் மகனைத் [2]திரிவா யென்றா ளரசன்
றேற்றான் மெய்யென் றுலகஞ் சொல்லும் பழிக்குஞ் சோர்வாள்.

(இ - ள்.) மாற்றாள் செயல் ஆம் என்று உம்-(இது) கைகேயியினது செய்கையாகுமென்றும், கணவன் வரம் ஈந்து உள்ளம் ஆற்றாது-சக்ரவர்த்தி வரத்

தைக்கொடுத்து [வரம்புறுத்தப்பெற்றவரத்தைக் கொடுத்தபோதிலும்] மனம் பொருந்தாமல், அயர்ந்தான் என்றஉம் - மூர்ச்சித்தானென்றும், அறிந்தாள் அவள் உம் - தெரிந்துகொண்டவளாகிய அக்கோசலையும், மனத்தை தேற்றா நின்றாள் - (தன்) மனத்தைச் சமாதானப்படுத்திக்கொண்டு, அரசன் மெய் தோற்றான் என்று-சக்ரவர்த்தி சத்தியந்தவறினனென்று, உலகம் சொல்லும்- உலகத்தார் சொல்லும், பழிக்குஉம்-பழிமொழிக்கும், சோர்வாள் - தளர்பவளாய், மகனை திரிவாய் என்றாள்-இராமனைக்குறித்து(க் காட்டிற்கு)ச் செல்வாயென்றாள்; (எ - று.)

தசரதனைக் கண்டபிறகு அந்தச்சக்ரவர்த்தி சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு வேறுவகையின்றி மகனைக் காட்டுக்குப்போக அனுமதிசெய்து மனம்மிகவுந் தவித்தலை யுணர்ந்த அந்தக் கோசலை, தன்கணவன் ஸத்யப்ரதிஜ்ஞனாகாவிட்டால் உலகத்தார் தூற்றுவாரேயென்று மனந்தளர்ந்து தன்மகன் கானகஞ்செல்வதை யுடன்பட்டுக் கூறினளென்க. மகனைத்திரிவாயென்றாளென்பது-மகன்காட்டிற்குச்செல்வதை யுடன்பட்டாளென்றவாறு. [1]அவனைத்தேற்றாநின்றாள் மகனைத்திரிவானென்றாள் என்ற பாடத்துக்கு-கணவனைத் தேற்றுபவளாய் மகன் காட்டிற்குச்செல்வதினின்று மீள்வானென்றாளென்று பொருள்கூறுக: இப்பொருளில், அரசன் சத்தியபிரதிஜ்ஞனாவதுகுறித்து இராமன் காட்டிற்குப்போவதை யுடன்பட்ட கோசலை கணவனைத் தேற்றும் பொருட்டு இராமன் கானகஞ்செல்லுங்கருத்தை விட்டிட்டானென்றாளென்பாருமுளர். இனி, மகன் திரிவான்-மகன் திரும்பிவருவானென்றா ளென்னலாம். மாற்றாள்-சக்களத்தி: கைகேசி. பி-ம்:—[1]அவனை. [2]திரிவாயென்னாள், திரிவானென்னாள். (நடசக)

**ருங.—கோசலை 'பெருமைக்குத் துறைவாமாதலால், மகன்மீது அன்பை யொழியவேணும்' எனல்.**

தள்ளா [1]நிலைசான் மெய்ம்மை [2]தழுவா வழுவா வகைநின்
றெள்ளா நிலைகூர் பெருமைக் [3]கிழிவா மென்றா லுரவோய்
விள்ளா நிலைசே ரன்பான் மகன்மேன் [4]மெலியின் னுலகங்
கொள்ளா தன்றோ வென்றாள் கணவன் குறையக் குறைவாள்.

(இ-ள்.) கணவன் குறைய குறைவாள்-(இவ்வாறு) கணவன் துயருறும்போது உடன்துயருறுகின்ற கோசலை,—'உரவோய்-வலியுடையவனே! தள்ளா நிலை சால் மெய்ம்மை - தவறத்தகாத தன்மைபொருந்திய சத்தியத்தை, தழுவா-ஏற்றுக்கொண்டு, வழுவா வகை நின்று-தவறாதபடி நிலைநின்றபின்பு, எள்ளா நிலை கூர் பெருமைக்கு இழிவுஆம் என்றால் - இகழப்படாத தன்மைமிகுந்த (நின்) பெருந்தன்மைக்கு நிந்தையைத் தருவதாகுமானால், விள்ளா நிலை சேர் மகன்மேல் அன்பால் மெலியின்-வேறுபடாததன்மைபொருந்திய பிள்ளையிடத்துள்ள நேசத்தினால் சோர்ந்தால், உலகம் கொள்ளாது அன்றோ-உலகத்தார் (அதனை) ஏற்றுக்கொள்ளார்களல்லவா? என்றாள்; (எ-று.)

பெருமைபெறவேணுமானால் சத்தியத்தைப்பாதுகாக்கவேண்டுமேயன்றி மகன்மேலன்புகொண்டு மனமழிவதாற் பயனுண்டோ? அது பெருமைக்கு இழிவாமன்றோ? ஆதலால், மகன்மீது அன்புகொண்டு வருந்தவேண்டா எனக் கோசலை மன்னவனைத் தேற்றினளென்க. பெருமையாவது - எவ்வழியும் மனக்கலக்கமின்றித் தாம் செய்யவேண்டியவைகளைச்செய்யும் உறுதிப்பாட்டானாய உயர்வு. இழிவைத் தருவதனை இழிவென்று உபசரித்தார். உரவு - மனமொழி மெய்களது வலி: அறிவுமாம். அன்பாவது - மனைவியர்கண்ணும், தாய்தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் பிணிப்பித்து நிற்கும் நேயம்; "அன்பெனப்படுவது தன்கிளைசெறாமை" என்றார் கலித்தொகையினும். கணவன்குறையக் குறைதல் - கற்பிலக்கணம். உரவோய்என்ற விளி - உரவோனாகிய உனக்கு இது தகாதென்பதைக் குறிப்பிக்கும். பி-ம்:—[1]நிலையான். [2]தம்மைத்தழுவாவகைநின்று, தழுவாவகையாலெய்தின். [3]இழுவாம். [4]இனியிவ்வுலகம், மெலியனுலகம். (௫௩)

௫௪.—கோசலையின் வருந்தம்.

[1]போவா தொழியா னென்றாள் புதல்வன் றன்னைக் கணவன்
சாவா தொழியா னென்றென் றுள்ளந் [2]தள்ளாற் றயர்வாள்
காவா [3]யென்னாண் மகனைக் கணவன் புகழுக் கழிவா
ளாவா வுயர்கோ சலையா மன்னம் மென்னுற் றனளே.

(இ - ள்.) (என்றுபின்னும்), புதல்வன் தன்னை - (தன்) மகனைப்பற்றி, 'போவாது ஒழியான் - (என்மகன் வனத்திற்குச்) செல்லாமல் நீங்கான்,' என்றாள்—; கணவன் சாவாது ஒழியான் என்று என்று - (இதனால் தன்) கொழுநன் இறவாது விடானென்று பலமுறையெண்ணி, உள்ளம் தள்ளாற்று - மனம்நெருக்கப்பட்டு, அயர்வாள் - வருந்துவாள்; கணவன் புகழுக்கு அழிவாள் - கொழுநனது கீர்த்திக்கு(க் குறைவுவருமேயென்று) வருந்துபவளாய், மகனை காவாய் என்னாள் - இராமனை (வனத்துக்குச் செல்லவொட்டாமல் தடுத்து)க் காப்பாயாக என்று (தன்கணவனிடத்துச்) சொல்லாள்; ஆஆ - அந்தோ! அந்தோ!! உயர் கோசலை ஆம் அன்னம் - சிறந்த கௌசல்யையாகிய அன்னப்பேடை, என் உற்றனள் - எவ்வாறுதுன்பப்பட்டாள்? [மிகவும் வருந்தினாள் என்றபடி]; (எ - று.)

'இராமனோ தந்தை கட்டளையிட்டதனால் வனஞ்செல்லாதிருக்கமாட்டான்; அவன் வனஞ்சென்றாலோ கணவன் உயிரோடும் இருக்கமாட்டான்: இனி கணவனதுபூதவுடம்பைக் காக்கும்பொருட்டு மகனைக் கானகஞ்செல்லவேண்டாமென்று கணவனைக்கொண்டே தடுப்போமென்றாலோ அதனாற் கணவனதுபுகழுடம்புக்கு அழிவு வருமே!' என்று இவ்வாறு நினைந்து நினைந்து அந்தக்கோசலை பட்ட துன்பத்துக்கு ஓரெல்லையில்லையென்பதாம். ஒருபால் மகன் கானகஞ் செல்லுதலும் கணவனிறப்பனோ என்ற சங்கைவருத்த, மகன் கானகஞ்செல்லாவிட்டாற் கணவனது புகழுக்கும் புண்ணியத்துக்கும்

கேடுவருமே என்ற வருத்தம் மற்றொருபால்இடருறுத்த இவ்விருவகைத் துன்பத்துக்குஇடையே அகப்பட்ட கோசலையின் மனத்துயர்நிலை நம்மாற்சொல்ல முடியாதென்றபடி. மகனைக்காவாய் என்பதற்கு-மகனைக்குறித்து (நீ தந்தையைக்) காவாய் என்றுமாம். ஆவா-இரக்கச்சொல்:அவலத்தால், இரண்டடுக்கிற்று. அங்ஙனந் தேவியாயவள் இங்ஙனமாயினளேயென்று குறிக்குமாறு, 'ஆவாவுயர் கோசலையாம் அன்னம் என்னுற்றனளே'என்று கவி இரங்குகின்றன ரென்க. பி ம்:—[1]போவானொழிவாயென்னாள், போவானொழியானென்றாள், போவானொழிவானென்றாள், போவானொழிவானென்னாள். [2]தளர்வுற்று. [3]என்றாள். (ருக)

### ருரு.—இதுமுதற் பன்னிரண்டுகவிகள் - கானகஞ்செல்லாநின்ற மகனைக்குறித்துத் தசரதன் புலம்புதலைத் தெரிவிக்கும்.

உணர்வா னனையா ளுரையா [1]லுயர்ந்தா னுரைசால் குமரன்
புணரா னில[2]மே வனமே போவா னேயா மென்னா
இண[3]ரார் தருதா ரரச னிடரா லயர்வான் வினையேன்
றுணைவா துணைவா [4]வென்றான் [5]றோன்றா[6]றோன்றா [7]யென்றான்.

(இ - ள்.) இணர் ஆர்தரு தார் அரசன் - மலர்கள் நிறைந்த மாலையையுடைய தசரதன், அனையாள் உரையால் - அக்கோசலையினது வார்த்தையினால், 'உயர்ந்தான் உரை சால் குமரன் - சிறந்தவனாகிய கீர்த்திமிகுந்த ஸ்ரீராமன், நிலம் ஏ புணரான் - பூமியைச் சேரான்; வனம் ஏ போவான் ஏ ஆம்-காட்டிற்குச் செல்பவனேயாவான்', என்னா உணர்வான்-என்றுஅறிந்து,— இடரால் அயர்வான் - வருத்தத்தாற்சோர்பவனாகி, வினையேன் துணைவா - தீவினையையுடைய எனதுதோழனே! துணை வா-சகாயமாக வா,என்றான்—; தோன்றால்-மகனே! தோன்றாய் - (என்முன்னே) வருவாயாக, என்றான்—.

இராமன் காட்டிற்குச்செல்வானேயன்றிப் பட்டாபிஷேகஞ்செய்துகொள்ளானென்று கோசலை கூறியதனால், மன்னவன் துயர்மேலிட்டுக் கதறலானானென்க. முதற்குமாரனாதலாலும், சகலகல்யாணகுணங்களுமுடையவனாதலாலும், 'உயர்ந்தான்' என்றார். நிலம்புணர்தல் - பூமிப்பிராட்டியோடு கலத்தல், பட்டாபிஷேகஞ்செய்துகொள்ளுதல். துணைவாதுணைவா, தோன்றால்தோன்றாய் - இத்தொடர்—எழுத்தின்கூட்டம் இடைவிடாது பொருள் வேறுபாட்டாற் பெயர்த்தும் வருவதால், மடக்கு என்னுஞ் சொல்லணியாம். உணர்வான் - முற்றெச்சம். பி-ம்:—[1]உய்ந்தான். [2]மாவனமே. [3]ஆதரித்ததாரான், ஆர்தருதார்மார்பன். [4]என்றாள். [5]தோன்றாய். [6]தோன்றால். [7]என்றாள்.

ருசூ. கண்ணுந் நீரா யுயிரும் [1]மொழுகக் கழியா நின்றே
னெண்ணுந் [2]நீர்நான் மறையோ ரெரிமுன் [3]னின்மேற் சொரிய
மண்ணுந் நீராய் வந்த புனலை மகனே [4]வினையேற்
குண்ணுந் நீரா யுதவி யுயர்கா [5]னடைவா யென்றான்.

(இ-ள்.) (பின்னும் தசரதன் இராமனை விளித்து), 'மகனே-(எனது) புத்திரனே! கண் உம் நீர் ஆய் - கண்களிரண்டும் நீராகி, உயிர் உம் ஒழுக - சீவனும் வெளியிற் செல்ல, கழியாநின்றேன் - இறக்குநிலையையடைந்துள்ளேன்; எண்ணும் நீர் நால் மறையோர் - (யாவராலும்) மதிக்கப்படுந்தன்மையையுடைய நான்கு வேதங்களையுமுணர்ந்த பிராமணர், எரிமுன் - அக்கினியின் முன்னே, (நீ பட்டாபிஷேகத்திற்குச் செய்யவேண்டிய ஓமங்களைச் செய்த பின்பு), நின்மேல் சொரிய - உன்மீது அபிஷேகஞ்செய்வதற்காக, மண்ணும் நீர் ஆய் வந்த - சுத்த ஜலமாகக் (கங்கை முதலிய புண்ணியதீர்த்தங்களிலிருந்து) கொண்டுவந்த, புனலை - தீர்த்தங்களை, வினையேற்கு - தீவினையையுடையேனான எனக்கு, உண்ணும் நீர் ஆய் உதவி - (நான் இறந்துவிடப் பிரேதவுருவத்தையடைந்த எனக்கு) உண்ணுதற்கு உரிய நீர்க்கடனாகக் கொடுத்து, (பிறகு), உயர் கான் - பெருங்காட்டை, அடைவாய் - சென்று சேர்வாய்', என்றான் - என்று புலம்பிக்கூறினான்; (எ - று.)

'எனது கண்ணிரண்டு நீர்மயமாகி ஆறாய்ப்பெருக, என்னுயிரும் நீங்கப்போகின்றேன்: வேதமந்திரங்களைக்கொண்டு ஜபித்து ஓமஞ்செய்து உனக்கு அபிஷேகஞ்செய்யும்பொருட்டுக் கங்கைமுதலிய புண்ணியநதிகளிலிருந்து கொண்டுவந்துள்ள நீரை, மகனே! இறந்துவிட்ட எனக்குத் தர்ப்பணநீராகக்கொடுத்துப் பிறகு காட்டிற்குச் செல்வாய்' என்று தசரதன் இராமனைக்குறித்துப் பெருந்துயரத்தாற் கூறினானென்பதாம். 'கண்ணுந் நீராயுயிரும் மொழுக' என்ற தொடரில், 'கண்ணீராயொழுக, உயிரும் ஒழுக' என்று இனிமையுண்டாக உடனிகழ்ச்சியைக் கூறியது - **உடனவிற்சியணி**யாம். மண்ணும் நீர் - கழுவிநீராட்டுதற்குஉரிய நீர்: "மண்ணுநீர் மருளவாட்டி" என்றார், சிந்தாமணியிலும். வந்தபுனலென்றது-"கங்கையே முதலவாய கன்னியீறான தீர்த்த, மங்கலப்புனலும் நாலுவாரியினீரும் பூரித்து" என்று கீழ்க் கைகேசிசூழ்வினைப்படலத்திற் கூறிய கங்கைமுதலிய புண்ணியநதிகளின் தீர்த்தத்தைக் காட்டும். நான்மறையோர் கொணர்ந்த நீர் பட்டாபிஷேகத்தில் நீராட்டுவித்தற்கு உரிய புனலாக இருக்க இயலாவிடினும், இறந்த யான் உண்ணும் நீராகவாவது உதவட்டுமென்று தசரதன் கூறுகின்றான். ஒருவர் இறந்தபிறகு அவருடைய ஆன்மா பிரேதசரீரத்தைப் பெறுகின்றதென்பதும், புதல்வர்முதலியோர் இறந்தவர்க்குச் செய்யுஞ் சடங்கில் உதவுவனவான திலோதகம்[எள்ளுடன் கூடியநீர்]வாஸோதகம் [துணியைப் பிழிந்து கொடுக்கும் நீர்] என்பன பிரேதசரீரம்பெற்ற அவ்வான்மாவால் உண்ணப்படுமென்பதும் நூற்கொள்கை. இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வதென வசிட்டன் முலியோர் நிச்சயித்து அதற்கு ஏற்ற செயலைத் தொடங்கியும் அது கைகூடப்பெறாமையோடு இராமபிரானையே காட்டிற்குச் செலுத்தும்படியும் நேரிட்டதுபற்றி, தசரதன், தன்னை 'வினையேன்' எனப் பழித்துக் கூறுகின்றான்.

இரண்டாமடியில், நீர் - நீர்மைஎன்றதன் விகாரம். மற்றை மூன்றடிகளிலுமுள்ள நீர் - புனல் என்றபொருளது; எரி - எரிவது: எனவே, அக்கினியாயிற்று; வினைமுதற்பொருள் விகுதிபுணர்ந்துகெட்டபெயர். பி-ம்:—[1]ஒழுகி. [2]நீரான், நீரார். [3]என். [4]வினையேன். [5]அடையாய். இப்பாடலின்பின் சுஅ-ஆவது பாடலாகவுள்ள "எற்றே" என்றுதொடங்கும் பாடல் சிலபிரதியிலுள்ளது. (கூருகூ)

ருஎ. படைமா ணரசைப் பலகான் [1]மழுவா ளதனு லெறிவான்
[2]மிடைமா வலிதா னனையான் [3]வில்லா லடுமா வல்லா
[4]யுடையா மகுடம் புனையென் றுரையா வுடனே கொடியேன்
சடைமா மகுடம் புனையத் தந்தே னந்தோ வென்றான்.

(இ - ள்.) (என்றுபின்னும்), 'படை மாண் அரசை - சேனைகளினது மாட்சிமையையுடைய வேந்தர்களை, பல கால்-இருபத்தொருமுறை, மழுவாள் அதனால் மழுப்படையால், எறிவான் - வெட்டுபவனும், மிடை மா வலி தான் அனையான்-நெருங்கிய மிருந்த பலத்தில் தன்னைத்தானே யொத்தவனுமாகிய பரசுராமனை, வில்லால் அடும் ஆ (று) வல்லாய் - தனுவினால் வெல்லுந் திறத்தில் வல்லவனே! கொடியேன்-தீவினையையுடைய யான், உடையா மகுடம் புனை என்று - குலமுறைதவறாதுவருகிற முடியைச் சூடென்று, உரையா - சொல்லி, உடனே—, சடை மா மகுடம் புனைய - பெரிய சடைமுடியை யணியும்படி, தந்தேன்—; அந்தோ—!' என்றான்—; (எ - று.)

உனது வீரகுணத்துக்குத் தோற்று இவ்வரசு உனக்கே தக்கதென்று அறுதியிட்டு உன்னைக்கூவி, உடையாமகுடம் புனை யென்றுகூறி, உன்னையே சடை மா மகுடம்புனையுமாறு தந்தேனே! என்னுரையென்னே! அந்தோ!! என்று தசரதன் இரங்குகின்றனனென்க. இச்செய்யுளில், கருத்துக்கு விருப்பமாகிய ஒருசெயலைச் செய்யத்தொடங்கி அதற்குமாறாக மற்றொன்றைப் பெறுவதாகிய **ததுதியின்மையணி** வந்துள்ளது காண்க: இது, வடமொழியில் விஷமாலங்காரமெனப்படும். மிடை மாவலிதான் அனையான்-வெற்றிபொருந்திய மகாபலிசக்ரவர்த்தியை யொத்தவனென்றுமாம்; இவ்வுரையில் அவன் தேவரைவென்றாற்போல இவன் அரசரை வென்றமையால் அவனை உவமையாக்கினரென்க. மாவலியை வாமனாவதாரத்தில் வென்றதுபோல, இவனை [பரசுராமனை] இவ்வவதாரத்தில் வென்றனை யென்றபடி. இனி, மிடைமாவலிதானனையான் [தயரதன்] என்றான் எனக் கூட்டலுமாம். [1]பழுவாய் மழுவா லெறிவான்என்ற பாடத்துக்கு-பழுக்கக்காய்ச்சிக் கூர்மைசெய்த மழுப்படையால் எறிபவனெனக. பி-ம்:—[2]மிடன்மாண். [3]வில்லோடு. [4]உடைமா. (கூருச)

ருஅ. [1]கறுத்தா [2]யுருவம் [3]மனமுங் கண்ணுங் கையுஞ் [4]செய்யாய்
பொறுத்தாய் பொறையே யிறைவன் புர[5]மூன் றெறித்த [6]போர்வில்
லிறுத்தாய் தமியே [7]னென்னு ளென்னை யிம்மைப் பிடையே
வெறுத்தா யினிநான் வாழ்நாள் வேண்டேன் வேண்டே னென்றான்.

(இ - ள்.) (என்றுபின்னும்), 'உருவம் கறுத்தாய் - திருமேனி கறுத்திருப்பவனே! மனம்உம் கண்உம் கைஉம் செய்யாய் - உள்ளமுங் கண்களுங் கைகளுஞ் செம்மையாயிருப்பவனே! பொறையே பொறுத்தாய் - பொறுமையென்னுங் குணத்தையே தரித்திருப்பவனே! இறைவன் புரம் மூன்று எரித்த போர் வில் இறுத்தாய் - சிவபெருமானது முப்புரங்களையுமெரித்த யுத்தத்தில்வென்ற வில்லை யொடித்தவனே! தமியேன் என்னாது - தனியனுயிருக்கின்றேனென்று நினையாமல், என்னை இ மூப்பிடை வெறுத்தாய்-என்னை இம்முதுமையிலே வெறுத்திட்டாய்; இனி நான் வாழ் நாள் வேண்டேன் வேண்டேன் - இனி யான் (சரீரத்தோடு) வாழும்நாளை விரும்பேன் விரும்பேன்,' என்றான்—; (எ - று.)

தான் சத்தியபிரதிஜ்ஞனாகவேண்டிக் கானகம்போவென்றாலும் தன் பேச்சைமீறி இராமன் காடுசெல்லாதிருப்பின் நல மென்று கருதுபவனாதலின், அங்ஙனம் தன்பேச்சைமீறாது இராமன் கானகஞ்செல்வதுபற்றி, தமியேனென்னாதுவிட்டுச்செல்வதாக இராமன்மீதுகுறைகூறுகின்றனன் தசரதனென்க. இதனால், தசரதனதுஅன்பும் பெருவருத்தமும் வெளியாம். மனஞ் செம்மையாதல் - மனம்நல்லதாயிருத்தல். இனி, உருவமும்மனமுங்கறுத்தாயென்றுமாம்; அவ்வுரையில் மனங்கறுத்தல் - மனங் கோபித்தல்; "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள." புரமூன்றெரித்த இறைவன்போர்வில் என்றனுமாம். வேண்டேன்வேண்டேன் - அவலம்பற்றியஅடுக்கு. பி - ம்:—[1]கருத்தாய். [2]உருவும். [3]கண்ணும்மனமும். [4]செய்ய. [5]அன்று. [6]பொருவில், ஒருவில். [7]என்னாய். [8]யான். (ருருரு)

ருசு. பொன்னின் முன்னம் மொளிரும் பொன்னே புகழின் புகழே
[1]மின்னின் மின்னும் வரிவிற் குமரா மெய்யின் மெய்யே
யென்னின் முன்னம் [2]வனநீ யடைதற் கெளியே னல்லே
னுன்னின் முன்னம் புகுவே னுயர் [3]வா னகம்யா னென்றான்.

(இ - ள்.) 'பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே - பொன்னினும் மேலாக விளங்குகின்ற பொன்போன்றவனே! புகழின் புகழே - கீர்த்திக்குங் கீர்த்தியானவனே! மின்னின் மின்னும் வரி வில் குமரா - மின்னலினும் (மேலாக) விளங்குகின்ற கட்டமைந்த வில்லையுடைய மகனே! மெய்யின் மெய்யே - வாய்மைக்கும் வாய்மையானவனே! என்னின் முன்னம்-எனக்கு முன்னே, நீ வனம் அடைதற்கு - நீ காட்டிற்போவதற்கு, எளியேன் அல்லேன் - நான் எளிமையை யுடையவனல்லேன்; உன்னின் முன்னம் - உனக்கு முன்னே, யான்—, உயர் வானகம் புகுவேன் - உயர்ந்த தேவலோகத்தை யடைவேன்,' என்றான்—; (எ - று.)

"தேனகுமா மலர்க்கூந்தற்கோசலையுஞ் சுமித்திரையுஞ் சிந்தைநோவக், கூனுருவிற் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட கொடியவள் தன் சொற்கொண்டின்று,கானகமே மிகவிரும்பி நீ துறந்த வானகரைத்துறந்து நானும், வானகமே மிகவிரும்பிப்போகின்றேன் மனுகுலத்தார் தங்கள் கோவே"

என்று தசரதன் புலம்பலில் குலசேகரப்பெருமாளருளிச்செய்த பாசுரம் இங்குக் காணத்தக்கது. 'மெய்யின் மெய்யே' என்பதற்கு - சத்தியத்தினது உருவம் போன்றவனே யென்றும், என்னின்முன்னம், உன்னின்முன்னம் என்பவற்றிற்கு - என்கண்முன்னே உன்கண்முன்னே என்றும் உரைக்கலாம். குமரன் - குமாரன் என்பதன் விகாரம்; குமாரன் என்பதற்கு - மன்மதனைத் தன் கட்டழகாற் குற்சிதனுக்க வல்லவ னென்றும், குற்சிதர்களைச் சங்கரிக்கின்றவனென்றும், பூமியில் மன்மதனைப்போற் சுந்தரனாக இருக்கின்றவனென்றும், எப்பொழுதும் பாலனாகஇருக்கின்றவ னென்றும், பூமியிற் சம்பத்தைக்கொடுக்கின்றவனென்றும், எப்பொழுதும் பிரமசாரியாயிருப்பவனென்றும் பலவகையாய்ப் பொருள்கொள்ளலாம்; இது, முதலில் முருகக்கடவுளது பெயராய்ப் பின்பு அவனைப்போன்ற மைந்தருக்கு ஆயிற்று; சேய் என்பதுபோல. பி - ம்:—[1]மின்னும் வரிவிற்குமரா மெய்யின்மெய்யே வினையேன். [2]அவனி. [3]வானினி. (௩௫௬)

௬0. நெகுதற் கொத்த [1]நெஞ்சு [2]நேயத் தாலே யாவி
யுகுதற் கொத்த வுடலு முடையே [3]னுன்போ லல்லேன்
றகுதற் கொத்த சனகன் றையல் கையைப் பற்றிப்
[4]புகுதக் கண்ட கண்ணாற் போகக் காணே னென்றான்.

(இ - ள்.) (என்றபின்னும்), நேயத்தாலே-அன்பினால், நெகுதற்கு ஒத்த நெஞ்சுஉம்-உருகுதற்குப் பொருந்தின மனமும், ஆவி உகுதற்கு ஒத்த உடல் உம்-அன்பினால் உயிர் விடுதற்குப் பொருந்தின சரீரமும், உடையேன்-உடையநான், உன் போல் அல்லேன் - உன்னைப்போல(இவ்விரண்டையும்உடையனாதவன்) அல்லேன்; தகுதற்கு ஒத்த சனகன் தையல்-உரிமைக்குப் பொருந்தின சானகி [சீதை] யினது, கையை பற்றி-கையைப் பிடித்துக்கொண்டு, புகுத-(இந்நகரத்துப்) பிரவேசிப்பதை, கண்ட-பார்த்த, கண்ணால்-(என்) நேத்திரத்தால், போக - (வனத்திற்) செல்ல, காணேன்-பாரேன்,' என்றான்—.

சானகியைப் பாணிக்கிரகணஞ்செய்துகொண்டு இந்நகரத்திற்புகக்கண்டு களித்த இக்கண்களைக்கொண்ட நான் நீ நகரத்தைவிட்டு அந்தசீதையோடு கானகஞ்செல்வதைக் காண மனம்பொறேன்: அதற்குக் காரணம் உன்போல அல்லாமல் நேயத்தால் நெகும்நெஞ்சும் நேயத்தால் உகும் உடலும் உடையனாயிருப்பதே யென்றன னென்க. நெகுதற்கு...உடையேன்-**கருத்துடையடைகோளியணி.** நேயத்தாலே - **மத்திமதீபம்.** விவாககாலத்தில் பாணிக்கிரகணம்பண்ணி அக்கினியை வலங்கொள்ளுதல் மரபாகலின், சனகன்றையல் கையைப்பற்றி எனக் கூறினானுமாம். உன்னைப்போலப் பிரிவாற்றுபவனல்லேனென்றபடி. பி-ம்:-[1]நெஞ்சின், நெஞ்சம். [2]நேசத்தாலே. [3]நின். [4]புகுதல். ()

௬௧. [1]எற்றே [2]பகர்வே னினியா [3]னென்னை யுன்னிற் [4]பிரிய
[5]வற்றே [6]யுலகம் மெனினும் வானே [7]வருந்தா தெனினும்
பொற்றே ரரசே தமியேன் [8]புகழே யுயிரே யுன்னைப்
பெற்றே னருமை[9]யறிவேன் பிழையேன் பிழையே னென்றான்.

(இ-ள்.) (என்று பின்னும்),'உன்னின் பிரிய-உன்னைவிட்டுப்பிரியும்படி, உலகம் - உலகத்தார், வற்றுஏ எனின்உம் - பொறுக்கவல்லவர்களானாலும், வான்ஏ வருந்தாது எனின்உம் - தேவரும் மனம் வருந்தாராானாலும், பொன் தேர் அரசே-பொன்மயமான தேரையுடைய அரசனே! தமியேன் புகழே - (வேறுதுணையில்லாத) எனது கீர்த்திக்குக் காரணமானவனே! உயிரே - உயிர்போல்பவனே! உன்னை பெற்றேன்-உன்னை (நோற்றுப்) பெற்ற நான், அருமை அறிவேன் - (பெற்ற) அருமையை அறிவேன்; இனி யான் என்னை எற்றுஏ பகர்வேன் - இப்போது நான் எந்நிலைமையைக்குறித்து என்ன வென்று கூறுவேன்? பிழையேன் பிழையேன் - உய்யேன் உய்யேன்,' என்றான்—; (எ - று.)

மண்ணுலகத்தவர் விண்ணுலகத்தவர் யாவர்க்கும் நீ உயிர்போன்றவனாக லின் நீ பிரிய அவரும் உயிர்வைத்திரார்: ஒருகால் அவர் உயிர்வைத்துக்கொண் டிருந்தாலும் என்னுயிர்நிற்கா தென்றவாறு. சிந்தையாலுஞ் சொல்லாலுந் தான் முடிசூட்டினமையால் 'அரசே'என்றும், இம்மை மறுமை இன்பங்களை யொருங்கே யெய்துவித்தலால் 'புகழே' என்றும், இராமன் நீங்கினால் உயிர் நீங்குமென்னு மியைபுபற்றி 'உயிரே'என்றும் உபசரித்துக்கூறினான். நொந்து பரிவாய் மகவைப் பெறுந் துயரத்தை வந்தியறியாள்போல, இவ்வருமையைப் பெற்ற யான் அறிவேனேயன்றிப் பிறர்அறியாரென்றபடி. என்னில் உன் னைப்பிரிய என உருபுகளைப் பிரித்துக்கூட்டிப் பொருள் கோடலுமாம். பி-ம்:—[1]ஒற்றே. [2]பகர்வான். [3]என்னே. [4]பிரியா. [5]மற்றே. [6]உலகத்தேனும். [7]உறைதும், வருந்தான். [8]பொன்னே. [9]அறிவன். (௩௫௮)

௬௨. அள்ளற் பள்ளப் புனல்சூ ழகன்[1]மா நிலமு மரசுங்
கொள்ளக் குறையா நிதியின் குவையும் [2]முதலா மெவையுங்
கள்ளக் [3]கைகே சிக்கே யுதவிப் [4]புகழ்கைக் கொண்ட
வள்ளற் றனமென் [5]னுயிரை மாய்க்கும் மாய்க்கு மென்றான்.

(இ-ள்.) (என்று பின்னும்), 'அள்ளல்-குழைசேற்றையுடைய, பள்ளம் - ஆழத்தையுடைய, புனல்-கடலால், சூழ்-சூழப்பட்ட, அகல் மா நிலம்உம்-மிக வும் பரந்த பூமியையும், அரசுஉம்-இராச்சியபாரத்தையும், கொள்ள குறையா நிதியின் குவைஉம் - (யாவர் எவ்வளவு) கொள்ளினுங் குறையாத திரவிய ராசியையும்,முதல் ஆம்-இவைமுதலிய, எவைஉம்-எல்லாவற்றையும், கள்ளம் கைகேசிக்குஏ - வஞ்சனையையுடைய கைகேயிக்கே, உதவி-கொடுத்து, புகழ் கைக்கொண்ட-கீர்த்தியைப்பெற்ற, வள்ளல் தனம்-(உனது)ஔதார்யகுணம், என் உயிரை மாய்க்கும் மாய்க்கும்-எனது பிராணனைக்கொல்லுங் கொல்லும்;' என்றான்—; (எ - று.)

கைப்பட்ட இராச்சியத்திற் சிறிதும் பற்றுக்கொள்ளாது மனவெழுச்சி யோடு தம்பிக்கு ஈந்த உதாரகுணம் என்னுயிரைக் கொள்ளைகொள்கின்ற

தென்கிறான் தசரதன். இனி, அள்ளல் - அகத்திய னொருகையால் மொள்ளு தலும், சாகரரால் தோண்டுதலுமென்றும், என்னுயிரை மாய்க்கும் மாய்க்கும் - என துயிரோ டொத்த இராமனை மறைக்கும் மறைக்கு மென்றுமாம். பி-ம்:—[1]நானிலமும், மாநிலமாய். [2]முதலாவெவையும். [3]கைகேயிக்கே. [4]புகழைக் கொண்ட. [5]உயிராலன்றி மறையேன். (ருஙக)

சஙு. ஒலியார் கடல்சூ ழுலகத் துயர்வா னிடைநா கரினும்
பொலியா நின்றா ருன்னைப் போல்வா ருளரோ [1]பொன்னே
வலியா ருடையா ரென்றான் மழுவா ளுடையான் வரவுஞ்
சலியா [2]நிலைநின் றான்போற் [3]றடுப்பா ருளரோ வென்றான்.

(இ - ள்.) (என்று பின்னும்), 'ஒலி ஆர் கடல் சூழ் உலகத்து - ஓசை நிறைந்த பெருங்கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்தவரிலும், உயர் வானிடை-மேலாகிய தேவர்களிலும், நாகரின்உம் - பாதாளலோகவாசிகளிலும், பொலியா நின்றார் - புகழ்முதலியவற்றால் விளங்குகின்றவர், உன்னை போல்வார் உளர் ஓ-உன்னை ஒப்பவர் இருக்கின்றனரோ? பொன்னே-பொன்போன்றவனே! மழுவாள் உடையான் - பரசுராமன், வலி உடையார் யார் என்றான்-(என்னினும் மிக்க) வலியுடையவர் யாவர்? [ஒருவருமில்லை] என்று சொல்லியவனாய், வரஉம்-(போருக்கு) வரவும், சலியா நிலை நின்றான்போல் - மனந்தளராது எதிர்த்துவென்றதன்மையை யுடைய இராமனைப்போல், தடுப்பார் உளர் ஓ - (எதிராளியின் வலியைத்) தடுக்கவல்லவர் வேறிருக்கின்றனரோ?' என்றான்—; (எ - று.)

க்ஷத்திரியரை இருபத்தொருகால் வென்ற பரசுராமன் 'என்முன் வலியுடையார் யாவர்?என்று செருக்கோடு கருச்சித்துக்கொண்டுவரவும் அப்படிப்பட்டபெருவீரனையும்வென்ற மகாவீரனை இராமனைப்போல் தைரியசாலிகளானவீரர் எங்குங்கிடையா ரென்பதாம். கிடைத்தற்கருமைபற்றி, 'பொன்னே' என்றான். வலியாருடையாரென்றானென்றது - "மலைகுவன்வல்லையாகில் வாங்கிடித்தனுவையென்றான்" என்றதனை நோக்கி. என்றால் எனப்பிரித்து,தடுப்பார் உளரோ-இனி இதனை விலக்குபவருண்டோவென்றுமாம். இனி, தயரதன், (நின்னினும்) வலியுடையார் யார் என்றான்; தடுப்பார் உளரோ என்றான் எனக்கூட்டலுமாம். [2]நிலையானென்றால் தவிர்வார் உளரோ என்ற பாடங்கொண்டு, இங்கு வலியவர் யாவருளரென்று பரசுராமன் வந்த போதும் சிறிதுஞ் சலியாதுகாத்த இராமனையும் தவிர விடலாமோ? அங்ஙனம் தவிரவிட்ட உன்னைப்போல் யாவர் இவ்வுலகிலிருப்பவ ரென்று இராச்சியவிலக்குமியைத் தசரதன்பழித்துரைத்ததாக இப்பாட்டுக்குப் பொருள் காண்பாருமுளர். பி-ம்:—[1]திருவே. [2]நிலையாயென்றால், நிலைநின்றாய்போற், நிலையாநின்றால், நிலைநின்றார்போல். [3]தவிர்வார். (ருசO)

௬௪. கேட்டே [1]யிருந்தே [2]னெனினுங் கிளர்வா னின்றே யடைய
மாட்டே [3]னாகி லன்றோ வன்க ணென்க ணைமந்தா
காட்டே யுறைவாய் நீயிக் கைகே சியையுங் கண்[4]டிந்
நாட்டே யுறைவே னென்றா னன்றென் [5]றன்மை யென்றான்.

(இ-ள்.) (என்று பின்னும்), 'கேட்டு ஏ-(நீ காட்டுக்குப் போவாயென்று) கேட்டும், இருந்தேன் எனின்உம் - இங்கிருப்பேனானாலும், கிளர் வான் இன்று ஏ அடைய மாட்டேன் ஆகில் அன்றோ - விளங்குகின்ற தேவலோகத்தை இப்பொழுதே யடையாமற்போயினாலல்லவா, என் கண் வன்கண் - என்னிடம் கொடுமைத்தன்மை யுளதாகும்? மைந்தா - மகனே! நீ காட்டே உறைவாய்-நீ காட்டில் வசிப்பாய்: (அங்ஙனமாகவும்), நான்—, இ கைகேசியையும்—, கண்டு-(கொல்லாமல் எதிரிற்) கண்டு, இ நாட்டே உறைவேன்-இப்பூமியிலே வசிப்பேன், என்றால்-, என் தன்மை நன்று-எனதியல்பு நன்றாயுள்ளதாகும்,' என்றான்—; (எ - று.)

நான் உன்னைக் காட்டிற்கு அனுப்பி இந்தக்கைகேசியினது முகத்தில் விழித்த வண்ணம் இந்நாட்டில் இருப்பேனானால், என்தன்மை பரிகசிக்கத் தகுந்ததாகும்: மேலும், நீ காட்டிற்குச் சென்றாயென்பதைக்கேட்டும் நான் உயிர்வைத்திருந்தால் என்னைப்போன்ற வன்கண்ண னொருத்தனு மில்லையா வன்; யானோ அங்ஙனம் வன்கண்ண னென்று பிறர் கூறும்படியும் கைகேசி யின் முகத்தில் விழிக்கும்படியும் இந்நாட்டில் உயிர்வைத்திராமல் வானகஞ்செ ன்றேவிடுவே னென்றனன் தசரத னென்க. நன்று - எதிமறை யிலக்கணை யாகிய பிறகுறிப்பு. பி-ம்:—[1]வீழ்ந்தேன். [2]இன்னும். [3]ஆயின். [4]யான். [5]நன்மை.

௬௫. [1]மெய்யார் தவமே செய்துன் மிடன்மார் பரிதிற் பெற்ற
செய்யா ளென்னும் பொன்னு நிலமா தென்னுந் திருவு
முய்யா ருய்யார் கெடுவே னுன்னைப் [2]பிரியின் [3]வினையே
னையா [4]கைகே சியை[5]நே ராகே னோநா னென்றான்.

(இ-ள்.) (என்று பின்னும்),'மெய் ஆர் தவம் ஏ செய்து-வாய்மைபொருந் திய தவத்தைச்செய்தே, உன் மிடல் மார்பு-உனது வலியையுடைய மார்பை, அரிதின் பெற்ற-அருமையாய்ப் புணரப்பெற்ற, செய்யாள் என்னும் பொன் உம் - திருமகளென்னும் பிராட்டியும், நிலம் மாது என்னும் திரு உம் - நிலமக ளென்னும் பிராட்டியும், உய்யார் உய்யார்-பிழையார் பிழையார்; வினையேன் உன்னை பிரியின் கெடுவேன்-பாவியாகிய யான் உன்னை விட்டுப்பிரிந்தால்அழி வேன்; ஐயா - குழந்தாய்! (உன்னைப்பிரியின்) - உன்னைவிட்டுப் பிரிந்து உயிரோடுவாழ்ந்தால், நான்—, கைகேசியை நேர் ஆகேன் ஓ - கைகேசியை யொத்த பாவியாகமாட்டேனோ?' என்றான்—; (எ - று.)

உன்னைக் காட்டிற்குஅனுப்பியும் நான் இனிது இருந்தேனானால், மனமொ ப்பி உன்னைக்காட்டுக்கு ஏகுமாறுசொன்ன கைகேயிக்கும் எனக்கும் என்ன

வித்தியாசம்? ஆகையால்,உயிர்போக நான் வானகஞ்சேர்வ னென்றனன் தச ரதனென்பதாம். மெய்யார்தவம்-உடம்பு வருந்தச்செய்யுந் தவமுமாம். செய் யாளென்னும் பொன் -சீதையுமாம். அடுக்கு அவலம்பற்றியது. உன்னைப்பிரி யின்-மத்திம தீபம். பி-ம்:—[1]மெய்யே. [2]பிரியில். [3]வினையேற்கு. [4]கைகேசியே, கைகேசிதன், கைகேசிக்கா. [5]மருளாதேனோ, நேராருளராம், நேராருளரோ, நேராருரைதான். (௩௬உ)

௩௬௩. [1]பூணா ரணியும் முடியும் பொன்னா சனமுங் [2]குடையுஞ்
சேணார் [3]மார்புந் திருவுந் தெரியக் காணக் [4]கடவேன்
[5]மாணா மரவற் கலையு மானின் றோலு மவை[6]தான்
[7]காணா தொழிந்தே னென்றா லன்றாய்த் தன்றோ கருமம்.

(இ - ள்.) (என்று பின்னும்), 'பூண் ஆர் அணிஉம்-அணிதல்பொருந்திய ஆபரணங்களும், முடிஉம் - கிரீடமும், பொன் ஆசனம்உம் - பொன்மயமான சிங்காதனமும், குடைஉம் - வெண்கொற்றக்குடையும், சேண் ஆர் மார்புஉம்- அகலம் பொருந்திய மார்பும், திருஉம் - (அதில் வீற்றிருக்கின்ற) ஜயலட்சுமி யும், (ஆகிய இவற்றை), தெரிய காண - விளங்கப்பார்த்தற்கு, கடவேன் - உரிய நான், மாணா மரம் வற்கலைஉம்-மாட்சிமைப்படாத மரவுரியும், மானின் தோல்உம் - கிருஷ்ணாஜிநமும், அவை-ஆகிய அவற்றை, காணாது ஒழிந்தேன் என்றால் - பாராமல் (தேவலோகத்துக்குப்) போய்விட்டேனானால், கருமம் - (உயிர் நீங்கும்) அத்தொழில், நன்று ஆய்த்து அன்றோ-நல்லதாயிற்றல்லவா?' என்றான்—; (எ - று.)—தான் - அசை.

நீ மணிமுடிசூடிவெண்கொற்றக்குடைநிழற்றப்பேரணிகலம்பூண்டுசிங்கா தனத்தில்இலக்குமிதங்கும்மார்போடுவீற்றிருக்கக்காணுதற்குரியயான்அதற்கு மாறாய் நீ மரவுரிதரித்து மான்றோல்போர்த்துச் சடைமுடியுடன் இருக்குந் தவக்கோலத்தைக் காணாது வானுலகஞ்சேர்தல் எனக்குநேருமாயின் அதுவே எனக்குநன்றென்கிறான் தசரதன். தன் திருமகனது மெல்லியல்புக்குப் பொருந்தாமையாலும், அரசர்க்குரித்தன்மையாலும் 'மாணா' என்றான். [4]திரி வேன் என்ற பாடத்துக்கு இவ்வாறு பொருளுரைப்பதன்றி, முடி முதலியன கொண்டுதிரிபவனாகிய யான் அவ்வரசசின்னங்களையெல்லாம்விட்டு வற்கலை முதலிய தாபசவேஷத்தைக்கொள்ளாமல்இறந்திட்டால் என்செயல் நன்றாய் விட்டதல்லவா? என்று, தசரதன் தான் கருதியவாறு தன்னிராச்சியத்தை மகனிடத்து வைத்துத் தான் கானகஞ்சென்று தவஞ்செய்து தன் சரீரத்தை விடப்பெறாத இன்னாப்பினாற் கூறுகின்றானெனக் கருத்துக்காண்டல் ஏற் கும். "பூமருவுநறுங்குஞ்சி புன்சடையாப்புனைந்து பூந்துகில்சேரல்குற், காம ரெழில்விழலுடுத்துக் கலனணியாதங்கங்களழகுமாறி,யேமருதோளென்புதல் வன்யானின்றுசெலத்தக்கவனந்தான்சேர்தல், தூமறையீர்துதகவோசுமந்தி ரனே வசிட்டனேசொல்லீர்நீரே" என்ற பாசுரம் இங்கு ஞாபகத்திற்கு வருகிறது. மாண் ஆம் மரவற்கலை எனப்பிரித்து உரைப்பினுமாம். வற்

கலே - வல்கலா என்னும் வடமொழிச்சிதைவு. பி-ம்:—[1]பூணூர்மார்பும். [2]சிறப்பும். [3]அழகும். [5]மாணுவரை, மாணுமரை, மாணுமா. [6]நான். [7]காணுதொழிவேனென்றானன்றாய்த்தன்றோகருமம், காணுதொழிவேனன்றே நன்றாய்த்தன்றோகருமம், காணுதொழிவே னன்றாய்த்தன்றோ கருமமென்றான், காணுதொழிந்தேனன்றாய்த்தன்றோகன்றேயென்றான். இப்பாடலுக்குப்பின் சில பிரதிகளில் "வன்மாயக்கைகேசி (எ௨)" முதலுள்ள பத்தொன்பது பாடல்கள் உள்ளன. (௩-௬௩)

## ௬௪.—பலபடி புலம்பும் மன்னவனை வசிட்டன் தேற்றுதல்.

[1]என்றா வொன்றொன் றொவ்வா [2]விசைதந் தரசன் னுயிருஞ்
[3]சென்றா னின்றோ டென்னுந் தன்மை [4]யெய்தித் தேய்ந்தான்
மென்றோன் [5]மார்பின் முனிவன் வேந்தே யயரே லவனை
[6]யின்றே காத வண்ணந் [7]தகைவென் னுலகோ [8]டென்றான்.

(இ - ள்.) என்றா - என்று, ஒன்று ஒன்று ஒவ்வா - ஒன்றோடொன்று பொருந்தாத பலவார்த்தைகளை, இசைதந்து-சொல்லி,அரசன்-சக்ரவர்த்தி,—இன்றோடு உயிர்உம் சென்றான்என்னும் தன்மை எய்தி - இற்றைநாளுடன் உயிரும் அழியப்பெற்றான்என்று சொலலத்தக்க இயல்பை அடைந்து, தேய்ந்தான் - வருந்தினான்; மென் தோல் மார்பின் முனிவன்-மெல்லிய மான்றோலைச்சாத்திய மார்பையுடைய அம்முனிவன், 'வேந்தே-அரசனே, அயரேல் - வருந்தாதே; அவனை-அவ்விராமனை, உலகோடு-இந்நாட்டினின்றும், இன்று ஏகாதவண்ணம்-இன்று செல்லாதபடி, தகைவென்-தடுப்பேன்,' என்றான்—.

மன்னவன் பலபடி புலம்பிப் பரிதவிப்பதைக் கண்ட வசிட்டமுனிவன் தசரதனைக்கிட்டி, இராமனைப் போகாதவண்ணந்தகைவேனென்று சொல்லித் தேற்றின னென்க. வசிட்டமுனிவன் இங்ஙனம் தேற்றியதாக முதனூலிற் காணப்படவில்லை. கைகேசிக்கு வரத்தைப் பிரதிஞ்ஞைசெய்துவிட்டு, இராமன் கானகஞ்செல்லாதிருப்பின் நல மென்னுதல் அவன் கானகஞ்செல்வது குறித்துஅவன்மீதுகுறைகூறுதல் முதலியன வருத்தத்தால் மதிமயங்கிக் கூறுகின்றவை யாதலின்,ஒன்றொடொன்றொவ்வாவாயின. உயிர்சென்றான்-சினைவினை முதன்மேல் நின்றது. உலகோடு - உருபுமயக்கம். உலகோடு தகைவென் - உலகவொழுக்கத்தோடுபொருந்தத் தகைவேனென்றுமாம். இன்று - இப்பொழுதுமாம். பி-ம்:—[1]ஒன்றோடொன் றொன்று, ஒன்றோ டொன்றொடொன்றா. [2]உரை. [3]சென்றோநின்றான், சென்றானிந்நாள். [4]எய்திற்றென்றான். [5]மரபின். [6]இன்றேயேகா. [7]தருவன், [8]என்னை. இதுமுதல் ஐந்துபாடல்கள் "சிந்தைதளர்வுற்று" என்று தொடங்கும் ௬௦ - ஆம் பாடலுக்குப் பின் சில பிரதிகளிற் காணப்படுகின்றன. அங்ஙனம் காணுமிடத்து "முனிவன்" என்று தொடங்கும் அடுத்த பாடலி னீற்றில் "மறையோன்றானும் போனான்" என்று பாடமுள்ள பிரதிகளில் "மறந்தான்" (௬௬) என்று தொடங்கும்பாடல்முதல் மூன்றுபாடல்க ளில்லை. (௩-௬௪)

கூஅ.—முனிவன்சொற் கேட்டு மன்னவன் ஆறியிருத்தல்.

*முனிவன் [1]சொல்லு மளவின் முடியுங் கொல்லென் றரசன்*
*றனிநின் றுழறன் னுயிரைச் சிறிதே தகைவா னிந்தப்*
*புனிதன் போனா லிவனாற் [2]போகா தொழிவா னென்னா*
*[3]மனிதன் வடிவங் கொண்ட மனுவுந் தன்னை மறந்தான்.*

(இ - ள்.) முனிவன் சொல்லும் அளவில் - அம்முனிவன் அவ்வாறு சொல்லுங்காலத்தில், முடியும் கொல் என்ற - இப்பொழுதே இறந்துவிடுவானோ என்னுமாறு இருந்த, அரசன் - சக்ரவர்த்தியாகிய, மனிதன் வடிவம் கொண்ட மனுஉம் - மநுஷ்யரூபத்தை யெடுத்துக்கொண்ட வைவஸ்வதமனு சக்ரவர்த்திபோன்ற தசரதனும், 'இந்த புனிதன் போனால் - இப்பரிசுத்த முனிவன் சென்றால், இவனால் - இவன் வார்த்தையினால், போகாது ஒழிவான் - (இராமன் வனத்திற்குப்) போகாமல் நீங்கிவிடுவான்,' என்னா - என்றெண்ணி தனி நின்று உழல் தன் உயிரை - (துணையில்லாமல்) தனியேநின்றுவருந்துகின்ற தனது பிராணனை, சிறிது ஏ தகைவான் - கொஞ்சந்தடுத்தவனாய், (பிறகு), தன்னை மறந்தான்—; (எ - று.)

முடிந்துவிடுவானோ? என்னும் நிலையிலிருந்த தசரதமன்னவன், வசிட்டன் வார்த்தையைக்கேட்டதும் சிறிதுமுதலில்தேறினாலும், உடனே அந்நிலை மாறி மூர்ச்சித்தன னென்பதாம். தன்னைமறத்தல் - தன்னிலை தவறிவிடுதல்: உணர்ச்சியற்றவனாதல். முடியுங்கொல்என்பதற்கு - இராமன் ஏகாதவண்ணம் தடுத்தல் கூடுமாஎன்றுஉரைப்பின், 'புனிதன் போனா லிவனாற் போகா தொழிவான்' என்று பின்னேவருவதோடு மாறுகொளக்கூறியதாதல் காண்க. மனுமுறை கோடாத செங்கோலரசன், முனிவன்சென்றால் இராமன் வருவானென்று கருதித் தேறுதலடைவதும் தன்சொல்லால் இராமனைக்காட்டுக்குச் செல்லாமல்தடுப்பதும் தனது சத்தியபிரதிஞ்ஞைக்குத் தவறாகுமேயென்ற எண்ணத்தால் தன்னைமறந்ததா லென்னினுமாம். வைவசுவதமனு - சூரியன் மகனும், தசரதன் வமிசத்துக்கு ஆதிபுருஷனுமாகியவன்: அவன் நீதிநூல் வகுத்து முறை பிறழாது செங்கோல்செலுத்தினமைபோல இவனுஞ் செங்கோல் செலுத்தலால், அவனை உவமை யாக்கினர். என்றரசன் - தொகுத்தல். பி-ம்:—[1]செல்லும். [2]போகலொழிவான். [3]மனுவின் வடிவங்கொண்ட மன்னுந் தன்னை மறந்தான், மனுவின்வடிவங்கொண்ட மறையோன்றானும் போனான். (ந-சுரு)

கூகூ.—கோசலை தன்கணவன் நிலைகண்டு வருந்தல்.

*மறந்தா னினைவும் [1]முயிரும் மன்னன் [2]னென்னா மறுகா*
*விறந்தான் கொல்லோ வரச னென்னா விடரூற் றழிவா*
*[3]டிறந்தாய் மகனே யுலகோ டெமையும் மென்னத் [4]துணையா*
*மறந்தா னிதுவோ வையா வரசர்க் கரசே [5]யென்றாள்.*

(இ-ள்.) (அரசன் நிலையைக்கண்டு, 'மன்னன் - அரசன், நினைவுஉம் உயிர்உம் மறந்தான் - ஞாபகமும் பிராணனும் மறக்கப்பெற்றான்,' என்று - என்று அறிந்து, மறுகா-மனங்கலங்கி, அரசன் இறந்தான் கொல் ஓ என்று- 'மன்னன் உயிர்நீத்தானோ!' என்றுசொல்லி, இடர் உற்று - வருத்தமடைந்து, அழிவாள் - சோர்பவளாகிய கோசலை,—'மகனே - குழந்தாய்! உலகோடு எமைஉம் துறந்தாய் - இந்நாட்டுடன் எங்களையுந் துறந்துவிட்டாய், என்ன- என்று நான் வருந்துகையில், ஐயா - தலைவனே! அரசர்க்கு அரசே - சக்ரவர்த்தியே! துணைஆம் அறம் தான் - (இல்வாழ்க்கைக்குத்) துணையாயிருக்குந் தருமம், இது ஓ-(என்னைவிட்டுச் செல்லுகின்ற) இதுதானோ?' என்றாள்—.

மன்னவன் உணர்வும் உயிரும் சோர்ந்ததுகண்டு, ஒருகால் இவன் இறந்திட்டானோ? என்றுசங்கையுற்ற கோசலை, 'மகனே! நீ காட்டுக்குச் செல்கின்றாயே! என்று நான் வருந்திக்கொண்டிருக்கையில் என்னைத்தேற்றாது என்னைவிட்டுச் செல்கின்றாயே! இல்லறவாழ்க்கையில் எனக்குத்துணையாவது இவ்வாறுதானோ?'' என்றுபுலம்புகின்றனளென்க. இனி, மகன் எம்மையும் இராச்சியத்தையும்விட்டுக் கானகஞ்சென்றானென்று கருதியதனால் மன்னன் நினைவுகுன்றி யுயிரோடுங்கியுள்ளானென்று மனங்கலங்கி, 'ஒருகால் இறந்துபட்டானோ?' என்றும் அயிர்த்து மனமழிபவளாய்க் கோசலை 'அரசர்க்கரசனை நீ எம்மைத் தனியேவிட்டுச்செல்வது தகுதியோ?' என்று புலம்பினாளெனினுமாம். கோசலையே 'துறந்தாய்மகனே யுலகோடு' என்று மகனைக் குறித்தும் இடையேகூறினாளெனக்கொள்ளலும் ஒன்று. தானுஞ்சக்ரவர்த்தியோடு ஸஹகமனஞ்செய்ய நினைந்தாளாதலால் எமை எனப் பன்மையாற் கூறினாளென்பாருமுளர். [5]என்றான் என்றபாடத்துக்கு, துணைவா-துணைவனே! ஐயா அரசர்க்கு அரசே! அறந்தான் இதுவோ? என்று வசிட்டன் கூறினானென உரைக்க. பி-ம்:—[1]உணர்வும்முயிரும். [2]மறுகிமறுகி, என்னமறுகி. [3]இறந்தாய். [4]துணைவா, துணையான். மூன்றாமடியில், 'துறந்தான்மகன்முன்னெனையுந்துறந்தாய் நீயுந்துணைவா' என்று சிலர் ஓதுகின்றனர். (௩௬௬)

### ௭௦.—கோசலை மன்னவனைத் தேற்றுதல்.

மெய்யின் மெய்யே யுலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே
யுய்யும் வகைநின் னுயிரை யோம்பா திங்ஙன் றேம்பின்
வையம் முழுதுந் துயரான் மறுகும் முனிவன் னுட[1]னம்
[2]மையன் வரினும் வருமா லயரே [3]லரசே யென்றாள்.

(இ - ள்.) (பின்னும்), 'மெய்யின் மெய்யே - வாய்மைக்கு வாய்மையாயிருப்பவனே! உலகின் வேந்தர்க்கு எல்லாம் வேந்தே-மூவுலகத்திலுள்ள அரசர்களுக்கெல்லாம் அரசனே! நின் உயிரை - உனது பிராணனை, உய்யும் வகை-பிழைக்கும்படி, ஓம்பாது - காவாமல், இங்ஙன் தேம்பின் - இவ்வாறு வருந்தினால், வையம் முழுதுஉம் துயரால் மறுகும்-உலகமெல்லாம் துன்பத்

தாற் கலங்கும்; முனிவன்னுடன் நம் ஐயன் வரின்உம் வரும் - அம்முனிவனுடன் நந் திருமகன் வந்தாலும்வருவான்; அரசே அயரேல் - அரசனே! வருந்தாதேயும்,' என்றாள்—; (எ - று.)—ஆல்—ஈற்றசை.

இங்ஙன் - விகாரம். "மன்னனெப்படி மன்னுயிரப்படி" என்பவாகலான், 'நீ தேம்பின் வையம் மறுகும்' என்றாள். பி-ம்:—[1]எம். [2]மெய்யன். [3]அயரேலரசே. (௬௯)

எக.—தேற்றியவண்ணம் கோசலையுபசரிக்க, மன்னன் அறிவுதெளிந்து 'இராமன் வருவானோ?' எனல்.

என்றென் றரசன் மெய்யு மிருதா ளிணையும் முகனுந்
தன்றன் செய்ய கையாற் றைவந் திடுகோ சலையை
யொன்றுந் தெரியா மம்ம ருள்ளத் தரசன் மெள்ள
வன்றிண் சிலைநங் குரிசில் வருமே வருமே யென்றான்.

(இ-ள்.) என்று என்று-என்றுபலமுறைசொல்லி, அரசன் - அரசனது, மெய்உம்-உடலையும்,இருதாள் இணைஉம்-உபயபாதங்களையும்,முகன்உம்-முகத்தையும், தன்றன் செய்ய(இரு)கையால் தைவந்திடு - தனது சிவந்த இரண்டு கைகளாலும் பலமுறைதடவுகின்ற, கோசலையை—, ஒன்றுஉம் தெரியா மம்மர் உள்ளத்து அரசன்-சிறிதும் பிரஜ்ஞையில்லாத மயக்கம்பொருந்திய மனத்தையுடைய அந்தச் சக்ரவர்த்தி, மெள்ள—, 'வல் திண் சிலை நம் குரிசில்-மிகவும் வலியகோதண்டத்தையுடைய நமதுமகன், வரும் ஏ வரும் ஏ-வருவானோ வருவானோ?' என்றான்—; (எ - று.)

அரசன் மகன்மேலுள்ள அன்பினால் 'வருமேவருமே' என்று கூறினனென்க. பரசுராமனைவென்ற ஆற்றல்தோன்ற'வன்றிண்சிலைநங்குரிசில்'என்றது.

எஉ.—மன்னன் கைகேசியின் கொடுமைபேசி வருந்தல்.

[1]வன்மா யக்கை கேசி [2]வரத்தா லென்றன் னுயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா [3]ளேனுங் கூனி மொழியாற்
றன்மா மகனுந் [4]தானுந் தரணி பெறுமா றன்றி
யென்மா மகனைக் கானே கென்று [5]ளென்று ளென்றான்.

(இ-ள்.) 'வல் மாயம் கைகேசி-கொடிய வஞ்சனையையுடைய கைகேயி, கூனி மொழியால் - மந்தரை வார்த்தையால் (தூண்டப்பட்டு), வரத்தால் - (தன்) வரத்தினாலே,என்தன்உயிரை-எனதுபிராணனை,முன்மாய்விப்பதுணிந்தாள் ஏன்உம் - முன்னே அழியும்படிசெய்ய நிச்சயித்தாளாயினும், தன் மா மகன்உம் தான்உம் - தனது பெருமையையுடைய புத்திரனுந் தானும், தரணி பெறும் ஆறு அன்றி-பூமியைப் பெறும்வித மல்லாமல்,என் மா மகனை-எனது மூத்தமகனை, கான்ஏகு-காட்டிற்குப்போ,என்றாள் என்றாள்—,' என்றான்—.

என்றாளென்றாள்-வெகுளியடுக்கு. தன் கருத்திற்கு மாறுபாடாக வரங் கேட்டதுபற்றி,மன்னன்,என்னுயிரை முன்மாய்விப்பத் துணிந்தாளென்றும்,

வெறுப்பினாற் பரதனை வேறுபடுத்தி 'தன்மாமகன்' என்றும் கூறுகின்றான். பி - ம்:—[1]வன்மாமாயக்கேசி, வன்மாக்கைகேசிகைதன். [2]வாக்கால். [3]அன்றேற், எனலும். [4]தரணிதானே. [5]அன்றாவென்றான், என்னாவென்றான், அன்றேயென்றான். இங்கு எறும்பின்கதையாள் என்று சில பிரதிகளிற் காணப்படுகிறது. அப்பாடத்திற்கு எறும்பின்சரித்திரத்தைக்கொண்டவளென்பது பொருள்: எறும்பின் சரித்திரத்தைக் கொண்ட தாயின் குணத்தைக்கொண்டு பிறந்தவளென்பது கருத்து: அச்சரித்திரம் வருமாறு:—கைகேயியின் தந்தை எறும்பு ஈ முதலிய ஜந்துக்களின் பாஷையை யுணர்ந்தவனாதலால் ஒருகால் தன் மஞ்சத்தின் கீழே அருகிற் போய்க்கொண்டிருந்த ஓரெறும்பின்சொல்லைக் கேட்டு வியப்புற்றுச் சிரித்தானாக, கைகேயியின் தாய் தன்னைப் பரிகாசஞ்செய்யவே தன் கணவன் சிரித்தானென்றுகருதிப் பெருஞ்சினங்கொண்டு 'நீ சிரிப்பதன் காரணத்தைச் சொல்லவேண்டும்' என்று வற்புறுத்தினள். அவள்கணவனான அசுவபதி 'இதன்காரணத்தைச் சொன்னால் எனக்குமரணம் நேரும்: ஆகையாற் சொல்லமுடியாது' என்றனன். கைகேயியின்தாயோ 'நீர் பிழைத்திருந்தாலுஞ்சரி, செத்தாலுஞ்சரி: அது எனக்கு அவசியமில்லை; நீர் சிரித்தகாரணத்தைச்சொன்னால்தான் என்னைப்பரிகாசஞ்செய்யவில்லையென்பது எனக்குத் தெரியவரும்' என்று கடுமையாகச் சொல்லினாள். அப்போது கேகயராசன் தனக்கு ஜந்துக்களின் பாஷை தெரியும்படி வரங்கொடுத்திருந்த யோகியின் மொழிப்படியே அந்தக் கைகேயியின் தாயைத்துரத்திவிட்டு இனிதாக இருக்கலாயினனென்பது. கைகேயிக்குத் தன்கணவன்சாவதானாலும் மனமிரங்காத துர்க்குணம் தாயின்வழியாகவந்துள்ளதென்று, அக்கைகேயியைச் சுமந்திரன் பழித்துக்கூறுகையில் இந்தச்சரித்திரம் வால்மீகத்தில் வந்துள்ளது. ()

**௭௩.—பிறகு தசரதன் கோசலையைநோக்கித் தனக்கு முன்னேநேர்ந்த சாபத்தைக் கூறத்தொடங்குதல்.**

[1]பொன்னார் வலயத் தோளான் கானே புகுத றவிரா
னென்னா ருயிரோ வகலா தொழியா [2]திதுகோ சலைகேண்
முன்னா ளொருமா முனிவன் [3]மொழியுஞ் சாபம் முளதென்
றந்நா ளுற்ற தெல்லா மவளுக் கரசன் னறைவான்.

(இ-ள்.) (பின்பு), அரசன்—, (கௌசலையைநோக்கி), 'கோசலை கோசலையே! பொன் ஆர் வலயம் தோளான்-பொன்னாலியன்ற வளையலையணிந்த தோள்களையுடைய இராமன், கான் புகுதல் ஓ - காட்டிற்குச் செல்வதையோ, தவிரான் - நீங்கமாட்டான்; (அதனால்), என் ஆர் உயிர் ஓ - எனது அருமையான உயிரோ, அகலாது ஒழியாது - நீங்காது இராது [நீங்கியே தீரும்]; இது கேள் - (இங்ஙனம் இராமன் காட்டிற்குச்செல்ல எனது உயிர் போயேதீருமென்ற) இதற்குக்காரணமான வரலாற்றைக் கேட்பாயாக: முன் நாள் - முன்னொருகாலத்தில், ஒரு மா முனிவன் - ஒரு சிறந்தஇருடி,

மொழியும் - சபித்த, சாபம்—, உளது - இருக்கின்றது,' என்று - என்று சொல்லி, அ நாள் உற்றது எல்லாம் - அந்தச்சாபகாலத்தில் நேர்ந்ததெல்லாவற்றையும், அவளுக்கு அறைவான் - அந்தக்கௌசலையிடம் சொல்லுவானானான்; (எ - று.)—அதனை மேல் ௬எ-கவிகளிற் காண்க.

இராமன் காட்டிற்குப்போவது திண்ணம்: அவனைப்பிரிந்த துயரத்தால் என்னுயிர்போவதும் திண்ணம்· இவை நேர்ந்தே தீருமென்பதற்கு ஏற்ப ஒருவரலாறு நிகழ்ந்ததுண்டு என அதனைக் கூறலாயினனென்பதாம்.[1]பொன்னார் தோளான் கானே புகுதப் புகுதறவிரான் என்ற பாடத்தில், பொன் ஆர் தோளான் என்பதற்கு - அழகுபொருந்தியதோளையுடையவனென்றும், வெற்றித்திருவீற்றிருக்கின்றதோளையுடையவனென்றும், பொன்னாலாகிய ஆபரணமணிந்ததோளையுடையவனென்றும் பொருளுரைக்கலாம். கானே புகுதப்புகுதல் - ஊர்க்குப் போகப்போகிறார் என்றாற்போன்ற வழக்குப் பற்றிவந்ததென்க: ஏகாரம் - தெரிநிலை. புகுதப்போதறவிரான்என்றும் பாடமுண்டு. அகலாதொழியாது - இரண்டு எதிர்மறைகள் ஒன்று சேர்ந்து, அகன்றேதீரும் எனத் தேற்றப்பொருளைக் காட்டிற்று. உற்றதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். அவளுக்கு அறைவான் - உருபுமயக்கம். பி - ம்:—[1]அது. [2]மொழிந்த. (௩௭௦)

௭௪.—இதுமுதல் " சிந்தைதளர்வுற்று " (௬௦) என்னுங் கவியாவும் ஒருதொடர்: தசரதன் தன் சாபவரலாற்றைக் கூறுவதைத் தெரிவிக்கும்.

வெய்ய கானத் திடையே வேட்டை வேட்கை மிகவே
யைய [1]சென்று கரியோ டரிக டுருவித் திரிவேன்
[2]கையார் சிலையுங் கணையுங் [3]கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச் [4]சென்றே மறைய நின்றேன்.

(இ - ள்.) (முன்னொருகாலத்தில்), வேட்டை வேட்கை மிகவ - வேட்டையாடுதலில் ஆசை பெருக, வெய்ய-கொடுமையையுடைய, ஐய-வியக்கத்தக்க, கானத்து இடையே-காட்டில், சென்று—, கரியோடு அரிகள் துருவி-யானைகளையுஞ் சிங்கங்களையுந் தேடி, திரிவேன் - அலைகின்ற நான்,—கார் மிருகம் வரும்-யானைமுதலிய பெரிய மிருகங்கள் சஞ்சரிக்கின்ற, ஓர் செய்ய நதியின் கரைவாய்-ஒரு அழகிய ஆற்றோரத்தில், சென்று—, கை-கைகளில், ஆர் சிலைஉம் - அரியவில்லையும், கணைஉம்-அம்புகளையும், கொடு - கொண்டு, மறைய நின்றேன் - மறைவாய்நின்றேன்; (எ - று.)

வேட்டையாடவேணுமென்று விருப்பந்தோன்றியதனால், யான் ஒருகால் கையும்வில்லுமாய்க் கானகஞ்சென்று பல மிருகங்களும் தண்ணீர்பருகுதற்குவரும் ஒரு நதியின்கரையில் மறைந்திருந்தேனென்கின்றனன் தசரதனென்க. வேட்கையாவது - பொருள்கண்மேற் றோன்றும் பற்றுள்ளம். ஐ என்னும் உரிசசொல் ஐயவெனப் பெயரெச்சக்குறிப்பாய்நின்றது;" ஆயிதழ்ப் பன்மல ரையகோங்குறைத்தர" என்றவிடத்துப்போல: "ஐவியப்பாகும்"

என்பது சூத்திரம். இனி, ஐய வென்பது-வியப்புச்சொல்லும், அசையுமாம். நீர் குடிக்க மிருகம் வரும் நதி யென்க. பி-ம்:—[1]சென்றே. [2]கையில், கையும். [3]இருக்கக்கதமாவருமோர், இறுகக்கதமாவருமோர். [4]சென்றேன். (௩எக)

எரு. ஒருமா முனிவன் மனையோ டொளி[1]யொன் றிலவாய் நயனந்
[2]திருமா [3]மகனே துணையாய்த் தவமே புரி[4]போழ் தினின்வா
யருமா [5]மகனே புனல்கொண் டகல்வான் வரு[6]மா றறியேன்
பொரு[7]மா கணைவிட் டிடலும் [8]புவிமீ தலறிப் [9]புரள்வான்.

(இ - ள்.) (அப்பொழுது), ஒரு மா முனிவன் - ஒருபெரிய இருடியான வன், மனையோடு - மனைவியுடன், நயனம் ஒளி ஒன்று இல ஆய் - கண்கள் பிரகாசஞ் சிறிதுமில்லனவாகி, திரு மா மகனே துணை ஆய் - அழகிய சிறந்த புத்திரனே சகாயமாகி, தவமே புரி போழ்தினின்வாய்-தவத்தையே செய்து கொண்டிருக்குங் காலத்தில்,—அருமா மகனே-அவ்வரிய பெரிய புத்திரனே; புனல் கொண்டு - நீரைக்கொண்டு, அகல்வான் - போகுதற்கு, வரும் ஆறு - வருகின்ற விதத்தை, அறியேன்-தெரியாத நான், பொரு மா கணை விட்டிடலும் - போர் செய்தற்குரிய அம்பைச்செலுத்த (அந்த அம்பு பெற்றோர்க்குத் தண்ணீர்கொண்டுபோகுமாறுவந்த குமரன் மீது பட்டதனால்),புவிமீது அலறி புரள்வான் - (அவன்) தரையில் (விழுந்து) உருண்டு கதறலானான்; (எ - று.)

அக்காலத்து ஒருமுனிகுமாரன்அந்நாட்டில் தவஞ்செய்துகொண்டிருந்த கண்ணில்லாத தன்தந்தைதாயர்க்குத் தண்ணீர் கொண்டுசெல்லுமாறு நதிக்கு வந்து,நீரைமொண்டனனாக, அவ்வொலியால் யானைதான் நீர்பருகுகின்றதென் றுகருதிச் சத்தவேதியென்னும் யானறிந்த வித்தையின் மகிமையால் அவ் வொலிதோன்றிய இடத்தை இலக்காகவைத்து எய்ய, அந்த அம்பு அம்முனி குமாரன்மேல்பட, அவன் கீழ்வீழ்ந்து அலறலானானென்பதாம.மகிமையுடை யவனென்பார் 'மா' என்றும், முதுமைப்பருவத்திலும் ஒழுக்கந்தவறாதவ னென்பார் 'தவமே புரிபோழ்து' என்றும்,இருமுதுகுரவர்க்குக் கைங்கரியஞ் செய்யும் நற்குணமுடையவனென்பார் 'திரு,அரு' என்றும்,ஏகபுத்திரனென் பார் 'மாமகன்' என்றுங் கூறினார். ஒலியைக்கேட்டு விடுத்தால் அவ்வொலி தோன்றின விடத்துச்சென்று கொன்று வரும் ஸப்தவேதியென்னும் அஸ் த்ரத்தை 'பொருமாகணை' என்றது.பி-ம்:—[1]இன்றெவையுமுதவ, ஒன்றின்றி யன்பால், ஒன்றின்றியன்பார், ஒன்றிலதா நயனன். [2]தரு. [3]மகவே. [4]போழ் தினில்வாய், போதினின்வாய், போதனன்வாய், போதன்றோர்க்கு. [5]மைந் தன். [6]என்று. [7]மால். [8]பூமீது, புதல்வன். [9]புரள. (௩எஉ)

எசு. புக்குப் [1]பெருநீர் நுகரும் [2]பொருபோ தகமென் றொலிமேற்
கைக்கட் கணை[3]சென் றதலாற் கண்ணிற் றெரியக் காணே
[4]னக்கைக் கரியின் குரலே [5]யன்றீ தென்ன வெருவா
மக்கட் குரலென் [6]றயர்வேன் மன[7]நொந் தவண்வந் தனெனால்.

(இ - ள்.) (அதனைக்கேட்டு), புக்கு - சென்று, பெரு நீர் நுகரும் - மிக்க தண்ணீரைக்குடிக்கின்ற, பொரு போதகம் - தாக்குதற்குரிய யானைக்கன்று,

என்று - என்றெண்ணியதனால், ஒலிமேல் - அவ்வோசையின் மேல் [ஓசை வந்தவழியைப்பற்றி], கைக்கண் கணை சென்றது அலால் - கையிலிருந்த அம்பு போனதல்லாமல், கண்ணின் தெரிய காணேன் - கண்ணால் விளங்கப் பாராத நான்,-அ கரியின்-அவ்யானையினது,கை குரலே அன்று ஈது என்ன- தும்பிக்கையிலிருந்துண்டாகிய சத்தமே யன்று ஈது என்று எண்ணி, வெரு வா - பயந்து, மக்கள் குரல் என்று - மனிதரது சத்தமென்று துணிந்து, அயர்வேன் - தளர்ந்து, மனம் நொந்து—, அவண் வந்தனென் - அவ்விடத் திற் போனேன்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

முனிகுமாரன் புரண்டலறுவதைக்கேட்டு சத்தவேதிமகிமையால் உரு வதைக் கண்ணிற்காணாமலே எய்த யான் 'இந்தக்குரல் அடிபட்டயானைக் கன்றின்குரலன்று, மனிதக்குரல்' என்றுதெரிந்து மனந்தளர்ந்து நொந்து அம்பு எய்தவிடத்துக்குவந்துபார்த்தே னென்பதாம். போதகம்-யானைக்கன்று என்று பொருள்படும் வடசொல். கைக்கண், கண் - ஏழனுருபு. பி - ம்:—[1]பொரு. [2]பொரும். [3]சென்றல்லால். [4]இக்கை, விக்கல். [5]அன்றிதெனவொரு மா, அன்றீதென்னவொருவா. [6]அமர்வேன். [7]நெக்கவண் வந்தனனால், நெக்கி வண்வந்தனனால், நொந்தவண் வந்ததனால், நொந்தவலந்தன்னால். (௩௭௩)

௭௭. கையுங் [1]கடமுந் நெகிழக் கணையோ [2]டுருள்வோற் காணா
மெய்யுந் தனுவும் மனனும் வெறிதே [3]கிடமேல் வீழா
[4]வையன் னீதான் யாவ னந்தோ [5]வருள்கென் றயரப்
பொய்யொன் றறியா மைந்தன் கேணீ யென்னப் [6]புகல்வான்.

(இ-ள்.) (போய்), கைஉம் கடம்உம் நெகிழ-கையும் அதிலுள்ள கமண்ட லமும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்க,கணையோடு உருள்வோன்-(உடம்பிற்பொத் தியுள்ள) அம்போடு புரளுகின்ற அம்முனிகுமாரனை,காணா-பார்த்து,மெய்உம் தனுஉம் மனன்உம் - (என்) உடலும் வில்லும் நெஞ்சும், வெறிது ஏகிட - இன்மையையுடையனவாய்ப்போக, மேல் வீழா - (அவன்மேல்) விழுந்து, 'அந்தோ - ஐயோ! ஐயன் - சிறுவனே! நீ யாவன்—? அருள்க-சொல்வா யாக,' என்று அயர-என்று மனந்தளர்ந்து (யான்) கேட்க,—பொய் ஒன்று அறியா மைந்தன்-பொய்யைச் சிறிதுந் தெரியாத அவன், நீ கேள் என்ன—, புகல்வான் - சொல்லுவான்; (எ - று.)—அதனை மேல் நான்குகவிகளிற் காண்க. தான் - அசை.

அங்குச்சென்றயான், தன்கையிற்கொண்டுவந்த நீர்மொள்ளும்பாத்திரம் ஒருபக்கமும் தான்ஒருபக்கமுமாக முனிகுமாரன் கீழ்வீழ்ந்துஉருண்டுகொண் டிருப்பது கண்டு, அவனை 'நீ யாவன்?' என்று வினவினேனாக, அவன் தன் வரலாற்றைக் கூறலாயினா னென்க. அம்முனிகுமாரன் தன் வரலாறுதனை மூன்றுகவிகளாற்கூறிப் பின் அவ்வரசன் செய்யவேண்டுவதைக் கூறுகின்றா னென்க. பி - ம்:—[1]குடமும், கடனும். [2]உழல்வோன். [3]கிடவா. [4]அய்யா. [5]அருளென்றா. [6]புகலும். (௩௭௪)

௭௮. சேலா கியமா முதல்வன் [1]றிருவுந் தியி[2]னீண் மலரின்
மேலா கிய[3]நான் முகனால் வேதங் களின்மா முறையின்
பாலா கியயோ னிகளின் பலவாம் வருணந் தருவா
னாலா கியதாம் வருணந் தனின்[4]முன் னெமைநல் கினனால்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) சேல் ஆகிய மா முதல்வன்-மத்ஸ்யாவதாரமாகிய பெரிய திருமாலினது, திரு உந்தியின்-அழகிய நாபியில்தோன்றிய, நீள் மலரின்மேல் - பெரிய தாமரைப்பூவில், ஆகிய - பிறந்த, நான்முகன் - நான்குமுகங்களையுடைய பிரமன், நால் வேதங்களின் மா முறையின் பால்-நான்கு மறைகளிற் கூறிய சிறந்த கிரமப்படியாக, ஆகிய - ஆன, யோனிகளின்-பிறப்புக்களில், பல ஆம் வருணம் தருவான் - அநேகமாகிய குலங்களைச் சிருஷ்டிப்பவன், நாலாகியதுஆம் வருணம் தனில்-(பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும்) நால்வகையதாகிய குலங்களில், முன்-முதன்மையாகிய பிராமணகுலத்தில், எமை நல்கினன் - எம்மைப்படைத்தான்; (எ - று.)—ஆல் - அசை.

இதனால், அந்தஇருடிகுமாரன் தங்களைப்பிராமணகுலத்தவனென்று கூறியவாறு. திருமால் மத்ஸ்யாவதாரஞ்செய்து, வேதங்களை யபகரித்துக் கொண்டுபோன சோமகாசுரனைக்கொன்று அவற்றைக்கொணர்ந்து பிரமனிடத்துத்தந்து அவற்றிற் கூறிய முறைப்படி படைக்க நியமித்ததனால், 'சேலாகிய' என்றும், "முதலாவார் மூவரேயம் மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்கிறபடியே மும்மூர்த்தியுள்ளும் முதன்மூர்த்தியாதலால், 'மாமுதல்வன்' என்றும், எப்பொழுதும் மலர்ந்ததும் வாடாததுமாயிருத்தல்பற்றி, 'நீண்மலர்'என்றுங் கூறினார். யோனிகளென்றது,எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்களை: இதனை 'ஊர்வபதினொன்றா மொன்பதுமானுடம், நீர்ப்பறவை நாற்காலோர்பப்பத்தாம்-சீரிய, பந்தமாந் தேவர் பதினாலயன் படைத்த, வந்தமில் சீர்த்தாவரநாலைந்து" என்பதனாலறிக. இதுவும் அடுத்தபாடலும் சிலபிரதியில் இல்லாமையாலும் முதனூலுக்கு மாறுபடுவதாலும் செருகுகவியாயிருக்கலாமோவென்று ஐயமுண்டாகின்றது. சிலபிரதியில் அடுத்தபாடல்மாத்திரம் இல்லை; அந்தப்பக்ஷத்தில், நான்காமடிக்கு-முன்னே எமை நான்காம்வருணத்திற் படைத்தா னெனின் ஏற்கும். பி - ம்:—
[1]தருவுந்தியின். [2]மா. [3]நான்முகனார். [4]மேல். (௩௭௫)

௭௯. அந்நான் [1]முகனார் வழியி லருள்கா சிபனன் மைந்தன்
மின்னார் புரிநூன் மார்பன் விருத்தே சனன்மெய்ப் புதல்வ
னன்னான் மறைநூ றெரியு நாவான் [2]சலபோ சனப்பேர்
சொன்னான் முனிவன் [3]றருசு ரோச னன்னென் பெயரோன்.

(இ - ள்.) அ நான்முகனார் - அந்தப் பிரமதேவன், வழியில் அருள் - முறையாய்ப் படைத்த, காசிபன்-காசியப முனிவனுடைய, நல் மைந்தன் - நல்ல புத்திரனும், மின் ஆர் புரி நூல் மார்பன் - மின்னலையொத்த முந்நூலை

யணிந்த மார்பையுடையவனுமாகிய, விருத்தேசனன்-விருத்தேசனனென்பவனது, நல் மெய் புதல்வன்-சிறந்தவாய்மையையுடைய புத்திரனும், நல் நால் மறைநூல் தெரியும் நாவான்-சிறந்த நான்கு வேதங்களையும் சாஸ்திரங்களையுமுணர்ந்த நாவினையுடையவனும், சலபோசனன் பேர் சொன்னான் - சலபோசனனென்று பெயர்சொல்லப்படுபவனுமாகிய, முனிவன் - இருடி, தரு - பெற்ற, சுரோசனன் என் பெயரோன் - சுரோசனனென்னும் பெயரையுடையவன் (நான்); (எ - று.)

என்னுடையதந்தையார் பிரமனது வழியில்தோன்றிய காசிபரது புதல்வராகிய விருத்தேசனனென்பவருடைய குமாரராகிய சலபோசனனென்பவர்: என்பெயர் சுரோசனனென்பது எனத் தன்னை இன்னானென்று அந்த முனிகுமரன் தெரிவித்தன னென்க. தசரதன் செய்யவேண்டிய செயல் இன்னதென்று தெரிவித்தபிறகு, தசரதன், 'இந்த ருஷிகுமாரனைக் கொன்றேமே; இதனாற் பிரமகத்தியும் நம்மைத் தொடருமோ?' என்று அஞ்சிநிற்கையில், தசரதமன்னவனது முகக்குறிப்பால் அம்மன்னவனது மனத்துத்தோன்றிய அச்சத்தை யுணர்ந்த முனிகுமாரன் 'நான் பிராமணனல்லேன்: வைஸ்யனுக்குச் சூத்திரஸ்திரீயினிடம் பிறந்தவன்' என்று தன்னைத்தெரிவித்ததாக முதனூலிலுள்ளது. ஸ்ரீராமனை இரதத்தின்மீது ஏற்றிக்கொண்டுபோய்க் காட்டில் விட்டுவந்த சுமந்திரன் தசரதனிடத்து ஸ்ரீராமனது செய்தியைச் சொன்னபின்பு, இந்தச்சாபவரலாற்றை ஸ்ரீராமன் காட்டிற்குச் சென்ற ஆறுநாள்இரவு கௌசலைக்குச் சொல்லிவிட்டுப் பிறகு அத்தசரதன் மரணமடைந்தானென்று முதனூலால்அறியப்படும். காசிபன்-காஶ்யபன் என்னும் வடமொழிச் சிதைவு; கசியபப்பிரஜாபதியின் மகனென்பது பொருள்; அவன் மரீசியாயிருக்கலாம். விருத்தேசனனது மெய்ப்புதல்வன்என்றுமாம். மின்னார் புரிநூல்-உருவுவமை. புரிநூல் பூணூல்.பி-ம்:—[1]மறையோன். [2]சலபோசனனைச், சலபோசன்னெனச். [3]தருசுரோசனன்யானென்றான், தருசுரேசனன்யானென்றான், புதல்வன் சூரேசனனென்பெயரோன், சுரசேயன்யானென்னச்சொன்னான், தருசுரோசனனேயானென்றான். (ருஎசு)

அ௦. இருகண் களு[1]மின் றியதாய் தந்தைக் கும்[2]மீங் [3]கவர்கள்
பருகும் புனல்கொண் டகல்வான் படர்ந்தேன் பழு[4]தா யினதா
லிருகுன் றனைய புயத்தா யிபமென் [5]றுணரா தெய்தா
யுருகுந் துயரந் தவிர்நீ யூழின் செயலீ [6]தென்றே.

(இ-ள்.) ஈங்கு - இப்பொழுது, இரு கண்கள்உம் இன்றிய - இரண்டு நேத்திரங்களு மில்லாத, தாய் தந்தைக்குஉம் - அன்னைக்கும் பிதாவுக்கும், அவர்கள் பருகும் புனல் கொண்டு - அவர்கள் குடித்தற்குஉரிய தண்ணீரையெடுத்துக் கொண்டு, அகல்வான் - போதற்கு, படர்ந்தேன் - வந்தேன்; (வந்தஇடத்தில்), பழுது இத்தீங்கு, ஆயினது - (எனக்கு) உண்டாயிற்று; இரு குன்று அனைய புயத்தாய் - இரண்டு மலைகளை யொத்த தோள்களை

யுடையவனே! உணராது - (மனிதனென்று) அறியாமல், இபம் என்று - யானை யென்று மயங்கி, எய்தாய் - (என்மீது) அம்பு தொடுத்தாய்; ஊழின் செயல் ஈது என்று - இது விதியினது தொழிலென்று நினைந்து, நீ உருகும் துயரம் தவிர்-நீ மனந்தளர்கின்ற வருத்தத்தை விடு;'எ-று.)—ஆல்-ஈற்றசை.

இருகண்களுமில்லாத என்பெற்றோர்கட்கு நீர்வேட்கையைத் தணிவிக்கும்பொருட்டு நீர்கொண்டுபோகவந்தஇடத்தில் என்னூழ்வினை தூண்ட மனிதனென்று என்னையுணராது யானையென்றுநினைந்து என்னையெய்தாய்;ஆகையால்,உன்மீது குற்றமில்லை:நீ வருந்தவேண்டா என்று தசரதனை அடியுண்ட ருஷிகுமாரன் தேற்றினனென்க. இபம்-வடசொல். இனி, ஊழின் செயல் ஈது, நீ உருகுந் துயரந் தவிர்: என்று - என்று சொல்லி என்றலுமாம். பி-ம்:—[1]இல்யாய்க்கு மெந்தைக்கும், இன்றியாய்க்குமெந்தைக்கும். [2]இங்கு. [3]இவர்கள். [4]ஆயினவால். [5]உணராவெய்தாய். [6]எனவே, என்றான்.　(௬எஎ)

அக. உண்ணீர் வேட்கை மிகவே [1]யுயங்கும் மெந்தைக் கொரு
நீ, தண்ணீர் கொடுபோ யளித்தென் சாவும்[2]முரைத்தும் புதல்வன்,
விண்மீ தடைவான் றொழுதா [3]னெனவும் மவர்பால் விளம்பென்,றெ
ண்ணீர் மையினான் [4]விண்ணோ ரெதிர்கொண் டிடவே கினனால்.

(இ - ள்.) நீர் உண் வேட்கை - தண்ணீர் குடிப்பதிலுண்டாகிய ஆசை [தாகம்], மிகவ - அதிகரித்தலால், உயங்கும்-வருந்துகின்ற, எந்தைக்கு-என் தந்தைக்கு,ஒரு நீ-ஒப்பற்ற நீ,தண் நீர் கொடு போய் அளித்து-குளிர்ந்த நீரைக் கொண்டுபோய்க்கொடுத்து, என் சாவுஉம் உரைத்து-எனது மரணத்தையுஞ் சொல்லி, 'உம் புதல்வன் - நுமது புத்திரன், விண்மீது அடைவான் - தேவலோகத்தின்மேற் செல்லுதற்காக, தொழுதான்-அஞ்சலி செய்தான்,' என உம்-என்றும், அவர்பால் விளம்பு-அவ் விருமுதுகுரவர்பாற் சொல், என்று - என்று சொல்லி, எண் நீர்மையினான் - புகழத்தக்க குணமுண்மையினால், விண்ணோர் எதிர்கொண்டிட - தேவர் எதிர்கொள்ளும்படி, ஏகினன் - (பரலோகத்திற்குச்) சென்றான்; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

தசரதனைத் தேற்றிய முனிகுமாரன் பெற்றோர்க்கு மன்னவன் செய்ய வேண்டியதைப் பணித்து நல்லுலகஞ் சேர்ந்ததை, இதனால் தெரிவிக்கின்றார். எந்தையென்பதில் தாயும் அடங்கினள். அவர் என்பதனை நோக்கி, 'உம்' என்றுபன்மையாற்கூறினான். எண்ணீர்மையாவன - அருளுடைமை முதலாகத் துறவறத்துக்குக் கூறப்பட்டவை. இது துர்மரண மென்பதனை விலக்குவதற்கு'எண்ணீர்மையினான் விண்ணோரெதிர்கொண்டிட வேகினன்' என்றார். நீர்மையினான் - பெயராய், எழுவாயாகவுமாம். பி-ம்:—[1]உயக்கும். [2]உரைத்துப், உரைத்தன். [3]வருந்தேலெனவும். [4]வானோர்.　(௬எஅ)

௫௨. மைந்தன் [1]வரவே நோக்கும் [2]வளர்மா [3]தவர்பான் மகவோ
[4]டந்தண் புனல்கொண் டணுக வையா [6]விதுபோ தளவாய்
வந்திங் [7]கணுகா தென்றோ வந்த [8]தென்றே [9]நொந்தேஞ்
சந்தங் கமழுந் தோளாய் தழுவிக் [10]கொளவா வெனவே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மைந்தன் வரவு ஏ நோக்கும்-மகனது வருகையையே பார்த்துக் கொண்டிருக்கின்ற,வளர் மாதவர்பால்-மிக்கதவத்தையுடைய முனிவனும் முனிபத்தினியுமான (இறந்த குமாரனது) பெற்றோரிடத்தில், மகவோடு - பிள்ளையோடு, அம் தண் புனல்கொண்டு - அழகிய குளிர்ந்த நீரை யெடுத்துக் கொண்டு, அணுக - சென்று கிட்ட,—(அப்பொழுது தமப்பனான முனிவன்), 'ஐயா - குழந்தாய்! இது போது அளவுஆய் - இவ்வளவு நேரமாய், வந்து இங்கு அணுகாது - இவ்விடத்தில் வந்து சேராமையால், என் ஓ வந்தது என்றே - யாதோ துன்பம் நேர்ந்ததென்றே, நொந்தேம் - (எண்ணி) வருந்தினோம்; சந்தம் கமழும் தோளாய் - சந்தனம் மணக்கின்ற புயங்களையுடையவனே! தழுவிக்கொள வா - (நாங்கள்) ஆலிங்கனஞ்செய்யும்படி அருகில் வருவாயாக', என-என்று சொல்ல,—(எ-று.)—இச்செய்யுளின் ஈற்றிலுள்ள 'என' என்பதற்கு, "என்னு விருதாள் சென்னிபுனைந்தேன்" என அறு - ஆங் கவியில் முடிபு காண்க.

தசரதன் முனிகுமாரனது பெற்றோரை யணுகிச் செய்தி தெரிவித்தமை, இதுமுதல்மூன்றுகவிகளா லுணர்த்தப்படுகின்றது. தண்ணீர் கொணரச்சென்ற புதல்வன் இன்னும்வரவில்லையே யென்று மைந்தன்வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருந்த பெற்றோரிடத்தில், 'என்னைப் பெற்றோரிடத்திற் சேர்ப்பி' என்று சொன்ன முனிகுமாரனது வாக்கைத்தழுவி, பருகும் நீரோடு சல்லியம்பட்டிருந்த முனிகுமாரனையும் எடுத்துக்கொண்டுமன்னவன் சென்றணுக, காலோசையால் தம்மகன்றான் வருகின்றானென்று கொண்டு அவர்கள் அவனைநோக்கி 'குமாரனே! சென்று வெகுநேரம் கழிந்தமையால் உனக்கு என்ன விளைந்ததோ என்று மனம் வருந்தினோம். எங்களைத் தழுவிக்கொள்ளாய்' என்று பெற்றோர்கள் கூறினரென்க. காளிதாச மகாகவியும் இந்தச் சாபவரலாற்றைக் கூறுமிடத்து "தச் சோதிதஸ் தமநுத்த்ருதஶல்யமேவ பித்ரோஸ்ஸகாஶ மவஸந்நத்ருஶோர் நிநாய [அம்மகவினால் ஏவப்பட்டவனாய், மன்னவன் கண்ணிலிகளான பெற்றோர்களருகில் உடம்பிற் பொத்திய பாணத்தைப் பிடுங்காமலே அம்முனிகுமாரனை யடைவித்தான்]" என்று கூறியிருப்பதும், அவ்விடத்து மல்லிநாதசூரியென்ற வியாக்யாதா இராமாயணத்தில் 'பின்பு நான் தனியே முனிகுமாரன்கிடந்த அவ்விடத்துக்கு மிகவுந் துன்பமுற்றுள்ள பெற்றோரை யிட்டுக்கொண்டுபோய் அந்தமுனிவனைப் பார்யையோடு அந்தப்புதல்வனைத் தொடுவித்தேன்" என்று நதீதீரத்தில்தானே இறந்த புதல்வனுள்ளவிடத்தைக் குறித்துப் பெற்

ருரையிட்டுக்கொண்டு போனதாகக்கூறியிருத்தலால் இது இராமாயணத் தோடுமுரணுவது' எனச் சொல்லியிருப்பதும் இங்கு அறியத்தக்கன. மக வோடு என்பதன் பின் 'ஒப்ப' என வருவித்து உரைப்பாருமுளர். மகவு - ஆகுபெயர். சந்தங்கமழ்தல் - இயற்கை மணம் வீசுதல். சக்ரவர்த்தியினது தோள்களின் மணம் அருகே வீசுதலால் இங்ஙனங் கூறினருமாம். சந்தங் கமழ்தல்-அழகுதோன்றுதலுமாம். பி-ம்:—[1]வரவு, வரவை. [2]வளம். [3]தவன். [4]இந்தண். [5]அணுகா, அணுகி. [6]அது. [7]அணுகாயென்றே, அணுகாயென்ன. [8]என்ன. [9]கொங்தேன். [10]கொள்ளாய். (௩௭௧)

௮௩. ஐயா [1]யானோ ரரச னயோத்தி நகரத் துள்ளேன், மை யார் [2]மிருகந் துருவி [3]மறைந்தே வதிந்தே னிருள்வாய்ப், பொய்யா வாய்மைப் புதல்வன் புனன்மொண் டிடு[4]மோ தையின்மேற், [5]கை யார் கணை[6]சென் றதலாற் கண்ணிற் றெரியக் காணேன்.

(இ - ள்.) ஐயா - சுவாமீ! யான்—, அயோத்தி நகரத்து உள்ளேன் - அயோத்தியா பட்டணத்திலுள்ளவனாகிய, ஓர் அரசன்—; மை ஆர் மிருகம் துருவி-கருமை பொருந்திய [கொடிய] மிருகங்களைத்தேடி, இருள்வாய் - இருட்டில், மறைந்து வதிந்தேன் - மறைந்திருந்தேன்; பொய்யா வாய்மை புதல்வன்-பொய்பேசாது மெய்யையேபேசுகின்ற உமது புத்திரன், புனல் மொண்டிடும் ஓதையின்மேல் - நீரை (க்கரகத்தில்) முகக்கின்ற சத்தத்தின் மேல், கை ஆர் கணை-என்கையிலுள்ள பாணம், சென்றது அலால்-போயிற் றல்லாமல், கண்ணின் தெரிய காணேன் - கண்களால் விளங்கக் கண்டே னல்லேன்; (எ - று.)

இப்பாடல்முதல் எண்பத்தைந்தாம்பாடலில் "அருள்வாய்" என்னும் வரையும் தசரதன் இறந்த முனிகுமாரனது பெற்றோரிடத்துக் கூறுவது.புதல் வன் புனலைமொண்டிடும் ஓசையைக்கேட்டு ஓசைதோன்றிய இடத்தை இலக்காகக்கொண்டு இலக்குப்பொருளைக் காணமலே யெய்தே னென்று ணென்க. சப்தவேதியென்னும் விச்சையின் மகிமையால் தசரதன் இங்ஙனஞ் செய்தான். இதனால், தன் செயல் அபுத்திபூர்வகமாக நிகழ்ந்த தெனக்காட் டியவாறு. தீங்குபயக்கும் நிகழ்ந்ததுகூறற் பொய்ம்மையின்பாற் படுதலால், அதனை விலக்கித் தீங்குபயவாத நிகழ்ந்ததுகூற லென்றற்கு, 'பொய்யா வாய்மை' என்று னென்னலாம். பி-ம்:—[1]யானேவரசன். [2]களபம், விருகம். [3]மறைந்தேநதிவாய்நின்றேன், நதிவாய்மறையவதிய, மறைந்தேவதிந்தேன் றருவாய். [4]ஓசை. [5]கையாற். [6]சென்றுறலால். (௩௭௨)

௮௪. வீட்டுண் டலறுங் குரலால் வேழக் குரலன் றெனவே யோட்டந் தெதிரா நீயா ரென[1]வுற் றவெலா முரையா வாட்டந் தருநெஞ் சினனாய் [2]நின்றன் [3]வணங்கா வானோ ரீட்டம் மெதிர்வந் திடவே யிறந்தே கினன்[1]விண் ணிடையே,

(இ-ள்.) வீட்டுண்டு-(அம்பு) விடப்பட்டு, அலறும் குரலால் - கதறுகின்ற சத்தத்தினால், வேழம் குரல் அன்று எனவே - (நாம் யானையின் குரலென்று கொண்டு எய்யக் காரணமாயிருந்ததல்லி) யானையின் சத்தமன்றென்றெண்ணி, ஓட்டந்து-ஓடி, எதிரா-பார்த்து, நீயார் என - நீயார்? என்று (நான்) கேட்க, (குமரன்),-உற்ற எலாம் உரையா-நடந்தவை யனைத்தையுஞ் சொல்லி, வாட்டம் தரு நெஞ்சினன் ஆய் நின்றான்-வாடுதலையடைந்த மனத்தையுடையவனாய்நின்று, வானோர் ஈட்டம் வணங்கா எதிர்வந்திடவ-தேவர் கூட்டம் நமஸ்கரித்துவந்து எதிர்கொள்ள, இறந்து - (இவ்வுலகவாழ்க்கையை) விட்டு, விண்ணிடை ஏகினன்-தேவலோகத்திற் சென்றான்; (எ - று.)

அம்பு அடிபட்டு அலறுகின்ற குரலால் 'நான் இலக்காகக் குறித்தது வேழமன்று: மனிதனே' என்று உணர்ந்து மனத்தில் துணுக்குண்டு ஓடிப் போய்ப் பார்த்து, என்னம்பாற் றாக்குண்ட குமாரனைக் கண்டு செய்தியினவ, அவனுந் தன் செய்தியைத் தெரிவித்து வானவர்எதிர்கொள்ள மேலுலகஞ் சென்றனனென்பதாம். நெஞ்சம் வாடுதற்குக் காரணம் - இருகண்ணிழந்து முதுமையால்வருந்தும் பெற்றோர் தன்னைப்பிரிதலால் உதவிபுரிவோரின்றி வருந்துவரே யென்று கருதியதனாலாகியது: அடியுண்ட வேதனையாலாய தென்பாருமுளர். ஓட்டந்து - ஓட்டந்தந்துஎன்பதன் விகாரம்; "உள்ள முருகி யென்கொங்கை யோட்டந்து பாய்ந்திடுகின்ற" என்புழிப்போல். பி ம்.—[1]உற்றதெலாம், உற்றெல்லாம். [2]நின்றான். [3]வணங்கி. [1]விண்ணெனவே.

அரு. அறுத்தாய் கணையா [1]லெனவே யடியேன் றன்னை[2]யையா,
கறுத்தே [3]யருளா யானோ கண்ணிற் கண்டே னல்லேன், மறுத்தா
னில்லான் வனமொண் டிடுமோ தையி[4]னெய் ததலாற், பொறுத்தே
யருள்வா யென்று விருதாள் சென்னி புனைந்தேன்.

(இ - ள்.) கணையால் அறுத்தாய் என எ - அம்பினால் எய்துகொன்றா யென்று, அடியேன் தன்னை—, ஐயா-! கறுத்து அருளாய்-கோபித்தருளாம லிருப்பீராக; மறு தான் இல்லான் - ஒருபிழையுமில்லாத அவன், வனம் மொண்டிடும் ஓதையின்-நீரை முகக்கின்ற சத்தத்தின் மேல்,எய்தது அலால்-(அம்பு) எறிந்ததல்லாமல், யான்ஓ கண்ணில் கண்டேன் அல்லேன் - நானோ கண்களால் நேராகப்பார்த்தவனல்லன்; பொறுத்து அருள்வாய் - (இவ் வெனதுபிழையைப்) பொறுத்துக் கிருபைசெய்வீராக, என்று-என்று, இரு தாள் - (அம்முனிவனது) உபயபாதங்களில், சென்னி புனைந்தேன்-(எனது) தலையை அணிந்தேன்; (எ - று)

இதனால், தசரதமன்னவன் அபுத்தி பூர்வகமாகத் தான்செய்த பிழையைப் பொறுக்குமாறு பணிந்து வேண்டுகின்றான். 'கருமை'என்னும் பண்பு 'கறு' எனத் தொழிற்பட்டு வெகுளியை யுணர்த்தும்: "கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள" என்றது காண்க. அருளுதல் - துணைவினை. பெரியோர் செயலைச் சொல்லுமிடத்து 'அருள்' என்னுந் துணைவினைசேர்த்துச் சொல்லும்

வழக்குப்பற்றி, கோபியாதே யென்னுமிடத்து 'கறுத்தேயருளாய்' என்கிறான். பி - ம்:—[1]என்றே. [2]ஐய. [3]அருளாதியானே. [4]எய்தனனால். (௩௮௨)

௩௮௩. வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார் [1]விழிபோ யிற்றின் றென்று
ராழ்ந்தார் துன்பக் [2]கடலு ளையா வையா வென்றார்
போழ்ந்தாய் நெஞ்சை யென்றார் பொன்னா டதனிற் போய்நீ
[3]வாழ்ந்தே யிருப்பத் [4]தரியேம் [5]வந்தேம் வந்தே மினியே.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்) (அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அவ் விருமுதுகுரவரும்), வீழ்ந்தார - (கீழே) விழுந்தார்கள்; அயர்ந்தார் - சோர்ந்தார்கள்; புரண்டார்—; இன்று விழி போயிற்று - இன்றைக்குத்தான் கண்கள் தெரியாமற் போயின, என்றார்—; துன்பம் கடலுள் ஆழ்ந்தார்-(புத்திர) சோகமாகிய சமுத்திரத்துள் அமிழ்ந்தார்கள்; ஐயா ஐயா - குழந்தாய்! குழந்தாய்! என்றார்—; நெஞ்சை போழ்ந்தாய் - மனத்தைப் பிளந்தாய், என்றார்—; நீ போய்—, பொன்னாடுஅதனில் வாழ்ந்துஏ இருப்ப - சொர்க்கலோகத்தில் வாழ்ந்துகொண்டிருக்க, தரியேம் - (யாங்கள் இங்கு இருக்கப்) பொறேம்; இனியே - இப்பொழுதே, வந்தேம் வந்தேம்-வருவோம் வருவோம்; (எ-று.)

இதனால், தசரதனால் அம்பெய்து தம் புதல்வன் வீழ்த்தப்பட்டதை அம்மன்னவனது சொல்லாலுணர்ந்த பெற்றோர்கள் பட்ட துன்பங் கூறப்படுகின்றது. முன்னமே இருகண்களுமில்லாதவராயினும், இதுகாறும் மகன் கண்போலிருந்ததனால் அவன் போயினமையை 'விழிபோயிற்றின்று' என்றார்; மகன் கணபோலிருத்தல் - கண்களிருந்தால் அவர் பெறும் இன்பத்தைத் தான்செய்யும் உபசாரங்களாற் பெறுவித்தலால். பி - ம்:—[1]விழியே போயிற்றென்றார், விழிபோயிற்றின்றென்றே. [2]கடல்புக்கு. [3]வாழ்ந்தாய். [4]தரியோம். [5]வந்தோம் வந்தோமணியே. (௩௮௩)

௩௮௪. என்றென் றயருந் தவரை [1]யிருதாள் வணங்கி யானே
[2]யின்றும் புதல்வ னினிநீ ரேவும் பணிசெய் திடுவே
னொன்றுந் [3]தளர்வுற் றயரீ [4]ரொழிமின் [5]னிடரென் றிடலும்[ன்.
வன்றிண் சிலையாய் கேண்மோ [6]வெனவே யொருசொல் [7]வகுத்தா

(இ - ள்.) என்று என்று—, அயரும் - வருந்துகின்ற, தவரை - முனிவரை, இரு தாள் வணங்கி—, 'யான்ஏ இன்று உம் புதல்வன் - நானே இன்று முதலாக உங்கள் மகன்; இனி நீர் ஏவும் பணி செய்திடுவேன்-இனிமேல் நீங்கள் கட்டளையிடுகின்ற கைங்கர்யங்களை (அம்மகனைப் போல)ச் செய்துவருவேன்: ஒன்றுஉம் தளர்வு உற்று அயரீர் - சிறிதும் மனச்சோர் வடைந்து வருந்தாதீர்கள்; இடர் ஒழிமின் - (புத்திர) சோகம் நீங்குமின்,'

என்றிடலும் - என்று யான் சொல்லலும்,—(அம்முனிவன்), 'வல் திண் சிலையாய் - மிகவும் வலிய வில்லை யுடையவனே! கேண்மோ - கேட்பாயாக,' எனவ - என்று, ஒரு சொல் வகுத்தான் - ஒருவார்த்தையைச் சொன்னான்; (எ - று.)—அதுமேற் கூறுகின்றார்.

குமாரனைப்பெற்றோர் தம்புதல்வன் இறந்ததுகேட்டு மிகவும்வருந்திப் புலம்ப, அதுகேட்ட தசரதன் அவர்களைநோக்கி, 'இன்று முதல் நான் நுமது புதல்வன்போலிருந்து நீர் ஏவியதைச் செய்வேன்:புத்திரசோகத்தையொழிக' என்று தேற்ற, அம்முனிவன் அரசனைநோக்கி ஒன்றுகூறலானனென்க. கேண்மோ, மோ - முன்னிலையசைச்சொல்; "காமஞ்செப்பாது கண்டது மொழிமோ" என்புழிப்போல. தவத்தவா என்னும் அத்து தொக்கது. பி-ம்:—[1]இருந்தாள். [2]இன்றும்புதல்வன்றனின், இன்றும் புதல்வன்றனினீர், என்றும் புதல்வன்றனினீ, இன்றுமுதனுஞ் சேய்போல். [3]தளரேலையா. [4]ஒழியும், ஒழி நீ. [5]துயர். [6]என்ன. [7]வகுத்தார். (௩அச)

௩௮. கண்ணுண் மணிபோன் மகவை யிழந்தும் முயிர்கா தலியா
[1]வுண்ணு வெண்ணி யிருந்தா லுலகோ ரென்னென் [2]றுரையார்
விண்ணின் றலை[3]சே ருதும்யா மெம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையா யடைவாய் படர்வா[4]னென்ன.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) 'கண்ணுள் மணி போல் மகவை - கண்ணினுள்ள கருமணி போன்ற [மிகவும் அருமையான] (எம்) மகனை, இழந்தும்—, உயிர் காதலியா - பிராணனை விரும்பி, உண்ணு எண்ணி இருந்தால் - உண்டுகொண்டு (இவ்வுலகவாழ்க்கையிலிருக்க) நினைத்திருந்தால், உலகோர் - உலகத்தார், என் என்று உரையார்-என்னவென்றுதான் பழியார்? யாம் விண்ணின் தலை சேருதும் - நாங்கள் தேவலோகத்திற் செல்வோம்; பண்ணும் பரி மா உடையாய் - அலங்கரித்த குதிரையை யுடையவனே! எம்போல் - எம்மைப்போல், விடலை பிரிய-மகன் (உன்னைவிட்டுப்) பிரிவதனால், படர் வான்-பரந்த தேவலோகத்தில், அடைவாய் - (நீ) செல்வாயாக,' என்ன - என்று சாபங்கொடுத்து,—(எ-று.)—"என்ன ..போயினர்" என அடுத்த கவியோடு முடியும்.

இதனால், முனிவன் துயரத்தைப் பொறுக்கமுடியாமல் மன்னவனுக்குச் சாபங்கொடுத்தது கூறப்படுகிறது. "கண்மணிப்பாவையன்னபெண்," "உன் கண்மணிவாழ்பாவை" என்றார்பிறரும். உலகோ ரென்னென் றுரையார் - மகனை விழுங்கியபின்பும் இந்தக் கிழப்பிணம் உண்டுபடுத்து இனிதிருக்க விரும்புகின்றதே! இதன் நெஞ்சு என்ன கல்நெஞ்சோ? என்று திட்டுவரென்றபடி. மனைவியையும் உளப்படுத்தி 'யாம்' எனப் பன்மையாற் கூறினான். பி-ம்:—[1]உண்ண. [2]உரைப்பார். [3]ஏகுதும். [4]எனவே. (௩அரு)

௰௯. தாவா [1]தொளிரும் குடையாய் தவ[2]றிங் கிதுநின் சரணங்
காவா [3]யென்று யதனாற் கடிய சாபங் கருதே
மேவா மகவைப் பிரிந்தின் றெம்போ [4]லிடருற் றனைநீ
போவா யகல்வா[5]னென்னாப் பொன்னாட் டிடைபோ யினரால்.

(இ - ள்.) 'தாவாது ஒளிரும் குடையாய் - கெடாது விளங்குகின்ற ஏக சத்திரத்தையுடையவனே! 'நின் சரணம்-(நான்) உனது அடைக்கலம்; இங்கு இது தவறு காவாய் - இப்பொழுது இப்பிழையைப் பொறுப்பாயாக, என்றாய்—; அதனால்—, கடிய சாபம் கருதேம் - அஞ்சத்தக்க சாபத்தைக் (கொடுக்க) நினையேம்; ஏவா மகவை பிரிந்து - ஏவாமலே [குறிப்பறிந்து கைங்கரியஞ்செய்கின்ற] புத்திரனைப் பிரிந்து, இன்று எம் போல் - இன்றைக்கு எம்மைப்போல, இடர் உற்றனை - சோகமடைந்து, நீ அகல்வான் போவாய்-நீ பரந்த தேவலோகத்திற் செல்வாயாக,' என்னா-என்றுசொல்லி, பொன் நாட்டிடை - தேவலோகத்தில், போயினர்-(இருவரும்) சென்றனர்.

நீ என்னைச் சரணமாகவடைந்ததனால், எங்களைப்போலப் புத்திரனிறக்கத்துயரையுழப்பாயென்று கடியசாபங்கொடாமல் புத்திரன் பிரிய அத்துயரால் உயிர் நீப்பாயென்று இவ்வளவே சாபங்கொடுத்தே னென்றனனென்க. கீழ்மொழிந்ததையே காரணத்தோடு விவரித்து இதிற் கூறின னென்க. கடிய என்பதில் கடியென்கிளவி அச்சப்பொருட்டாயிற்று. "ஏவாமக்கள் மூவாமருந்து" என்றாற்போல, ஏவாமகவு என்றான். பி-ம்:—[1]ஒளிரம். [2]ஈங்கு. [3]என்றவதனால். [4]இடரினைந்து, இடருற்றினைந்து, இடருற்றினையாய், இடருற்றிளையாய். [5]எனவே. (௬௪௯)

௬௦. சிந்தை [1]தளர்வுற் [2]றயர்தல் சிறிது மிலனா யின்சொன்
மைந்த னுளனென் றதனான் மகிழ்வோ டிவண்[3]வந் தனெனா
லந்த முனி[4]சொற் றமையி னண்ணல் வனமே குதலு
[5]மென்ற னுயிர்[6]வீ குதலு [7]மிறையுந் தவறா வென்றான்.

(இ-ள்.) (அவர் அவ்வாறு போயினபின்பு நான்), சிந்தை தளர்வு உற்று அயாதல் - மனம் சோர்வடைந்து வருந்துதல், சிறிது உம் இலன் ஆய் - கிஞ்சித்தும் இல்லாதவனாகி, இன் சொல் மைந்தன் உளன் என்றதனால்-இனிய (மழலைச்)சொல்லையுடைய மகன் பிறப்பா னென்று ஏற்பட்டதனால், மகிழ்வோடு-களிப்புடன், இவண் வந்தனென்-இவ்விடத்து [நகரத்துக்கு] மீண்டுவந்தேன்; அந்த முனி சொற்றமையின்-அந்தமுனிவன்சொன்னதனால், அண்ணல் வனம் ஏகுதல்உம்-இராமன் காட்டிற்குச் செல்லுதலும், என்தன் உயிர் வீகுதல்உம்-எனது பிராணன் போவதும், இறைஉம் தவறா - சிறிதும் மாறா, என்றான் - என்று (தன்சாபவரலாற்றைக்) கூறி முடித்தான், (தயரதன்); (எ - று.)

† தனக்கு வருத்தத்தை யுண்டாக்கவேணு மென்று முனிவன் இட்ட சாபத்தைத் தசரதன் தனக்கு அநிஷ்டமாகக்கருதாமல் பெரும்பேருயுள்ள புதல்வனைத்தருகையாகிய பெருவிருப்பத்தைத் தந்ததெனக் கொண்டதனால், இது - தகுதியின்மையணியாம். "வெய்ய" (எ௬) என்னுங் கவிமுதல் இக் கவியளவும் ஒருதொடராக்கி முடிக்க. பி-ம்:—[1]துயருற்று. [2]அயர்வும், அயரல், அயரேன். [3]வந்தனன். [4]சொற்றமையும். [5]எந்தன். [6]ஏகுதலும். [7]இவை.

௬௯.—அதுகேட்ட கோசலை விளைவையுன்னி வருந்தி மூர்ச்சிக்க, முனிவனும் வருந்துதல்.

இம்மா மொழிதந் தரசன் [1]னிடருற் றிடுபோழ் தினிலச்
செம்மா மயில்கோ சலையுந் திகையா வுணர்வோ வினளாய்
[3]விம்மா நெறியின் விதியின் விளைவுந் தளர்வின் றொடர்வு
மம்மா தவனும் விரைவோ டவலந் தருநெஞ் சினனாய்.

இதுமுதல் இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அரசன்-சக்ரவர்த்தி, இ மா மொழி தந்து - இப்பெரியவார்த்தையைச் சொல்லி, இடர் உற்றிடு போழ்தினில்-வருத்தமடையுங் காலத்தில், அ செம் மா மயில் கோசலைஉம் - அந்த அழகிய பெரிய மயிற்பேடை போன்ற கௌசலையும், திகையா - மனமயங்கி, உணர்வு ஓவினள் ஆய் - அறிவுநீங்கினவளாக [மூர்ச்சிக்க],—அ மாதவன்உம் - அம்முனிவனும், நெறியின் - முறையே, விதியின் விளைவுஉம் - ஊழ்வினையினது விளைவையும், தளர்வின் தொடர்வுஉம் - வருத்தத்தினது தொடர்ச்சியையும், விம்மா - (கண்டு) கலங்கி, அவலம் தரும் நெஞ்சினன் ஆய் - வருத்தத்தைக் கொண்ட மனத்தை யுடையனாகி,—விரைவோடு—,—(எ - று.)—"ஆயினன்" என அடுத்த கவியோடு முடியும்.

நெறியின் விதியின் விளைவும் தளர்வின்றொடர்வும் விம்மா உணர்வுஓவினளாய் எனக் கூட்டுதலுமொன்று. சில பிரதிகளில் இச்செய்யுள் காணப்படவில்லை: "என்றுவொன்றொன் றொல்லை" (௬எ) என்ற பாடலும், ஈற்றடியில் "மறையோன்றானும்போனான்" என்ற பாடத்தோடு "முனிவன் செல்லும்" (௬௮) என்ற பாடலும் உள்ளன. பி-ம்:—[1]இடருற்றனன், இடருற்றன. [2]ஓய்வினள். [3]மெய்ம்மாநெறியும். (௬௮)

† ஶாபோப்யத்ருஷ்டதநயாநநபத்மஶோபே ஸாநுக்ரஹோ பகவதா மயி பாதிதோ஽யம்—க்ருஷ்யாம் தஹந்நபி கலு க்ஷிதி மிந்தநேத்தோ பீஜப்ரரோஹஜநநீம் தஹநஃ கரோதி" என்று குவலயாநந்தத்தில் விஷமாலங்காரத்துக்கு உதாஹரணமாகக் கொடுக்கப்பட்ட ரகுவம்ஶ ஶ்லோகம் இங்குக் காணத்தக்கது.

வேறு.

௯௨.—வசிட்டமுனிவன் அரசர் முதலியோரிருந்த முடிசூடுமண்டபத்திற் போய்ச் சேர்தல்.

உரைசெய் பெருமை யுயர் [1]தவத்தோ ரோங்கல்
[2]புரைசெய் மதகளிற்றான் பொற்கோயின் [3]முன்னர்
முரச முழங்க முடிசூட்ட மொய்த்தாண்
[4]டரச ரினிதிருந்த நல்லவை யி[5]னாயினான்.

(இ - ள்.) உரை செய் பெருமை - (உலகத்தாரால்) சொல்லப்படுகின்ற புகழையும், உயர் தவத்து - மிக்க தவத்தையுமுடைய, ஓர்-ஒப்பற்ற, ஓங்கல் செய்-மலையை யொத்த, புரை - மேன்மையையுடைய, மதம் களிற்றான் - மதயானையையுடைய சக்ரவர்த்தியினது, பொன் கோயில் முன்னர்-அழகிய அரமனையின் முன்னே, முரசம் முழங்க - வாச்சியங்க ளொலிக்க, முடி சூட்ட - (ஸ்ரீராமன்) திருவபிஷேகஞ் சூட்டிக்கொள்ளுதலினிமித்தம், ஆண்டு மொய்த்து - அவ்விடத்தில் நெருங்கி, அரசர் இனிது இருந்த - மன்னவர் இனிமையாயிருந்த, நல் அவையின்-சிறந்த சபையில், ஆயினான்-சேர்ந்தான்.

வசிட்டமுனிவன், தன்னைச் செய்தி யுணர்த்து தெரிவிக்குமாறு வேண்டிக்கொண்ட மன்னவர்முதலியோர் சபையாகவிருந்த முடிசூட்டுமண்டபத்துக்கு மீண்டன னென்க. பெருமை-வீரமுமாம்; அது எல்லாரோடும் ஒப்பில்லாது பேரெல்லையாக நிற்றலாற் பெருமை எனப்படும். உயர்தவம் - ஸ்ரீராமனைப் பெறுதல். செய் - உவமவுருபு. 'மொய்த்து' என்பதனால் அவர்களின்மிகுதியும், 'இனிதிருந்த' என்றதனால் அவையினது பரப்பும் விளங்கும். நல்லவை-இருந்தாரது நன்மை அவைமேல் ஏற்றப்பட்டது. ஆயினான் என்ற வினைமுற்றுக்குக் கீழ்ச்செய்யுளிலுள்ள "மாதவன்" என்பது எழுவாய். இனி, உயர்தவத்தோரோங்கல் என்பதற்கு-இருடிகத்தலைவ னெனப் பொருளுரைத்து, அதனை ஆயினான் என்பதற்கு எழுவாயாக்கினும் அமையும். புரைஎன்பதை உவமவுருபாக்கினால், செய்என்பதைப் பொன்னொடுகூட்டிச் செய்பொற்கோயிலென்க; செய் களிறு - அழகிய களிறுமாம். மூன்றாமடி - முற்றுமோனை. பி-ம்:—[1]குணத்தோர், தவத்தோன். [2]புரசை. [3]முன்னம். [4]அரசன். [5]ஆனான். (௩-அக)

௯௩.—அறிந்துவந்த செய்தியை யுணர்த்துமாறு அரசர் முனிவனை வேண்டுதல்.

வந்த முனியை [1]முகநோக்கி வாள்வேந்த
ரெந்தை [2]புகுந்த விடையூறுண் [3]டாயதோ
[4]வந்தமில் சோகத் தழுத [5]குரற் ற[6]னென்ன
சிந்தை [7]தெளிவி [8]யெமக்கி தென்றுரைத்தார்.

(இ-ள்.) வாள் வேந்தர்-ஆயுதங்களையுடைய அரசர்கள், வந்த முனியை-வந்தமுனிவனை, முகம்நோக்கி—, 'எந்தை எம்தந்தைபோல்பவனே! புகுந்த - (பட்டாபிஷேகம் நின்றுவிடுமாறு)நேர்ந்த, இடையூறு-தடை, உண்டாயதோ-

உளதாயிற்றோ! அந்தம் இல் சோகத்து-முடிவில்லாத துன்பத்துடன், அழுத குரல்தான் என்ன-அழுதசத்தத்திற்குக் காரணந்தான் யாது? ஈது-இவ்விஷயத்தை, எமக்கு—, சிந்தை தெளிவி - மனந்தெளியச்சொல்வாய்,' என்று—, உரைத்தார்—; (எ - று.)

இரண்டாமடியில், எந்தை புகுதற்கு இடையூறுஉண்டாயதோ என்ற பாடத்துக்கு - தயரதர் இங்கேவந்து முடிசூட்டிவைத்தற்கு இடையூறுண்டாயதோ என்றும், எந்தை - ஸ்ரீராமனென்றும் பொருள்கூறலாம். பி-ம்:—[1]முனன். [2]எதுவும், புகுதற்கு. [3]ஆனதோ. [4]அந்தமிலா. [5]குரலும். [6]அறியேம், என்னே. [7]தெளிந்தோய், தெளிந்தாய், தெளிந்திடீ. [8]தெரியெமக்கிவ்வென்றுரைத்தார், செப்பீதெமக்கென்றார். (ந௬0)

## ௬௪.—பட்டாபிஷேகம் தடைப்பட்ட விஷயத்தை வசிட்டன் அவையோர்க்குத் தெரிவித்தல்.

கொண்டாள் வர[1]மிரண்டு கேகயர்கோன் கொம்பவட்குத்
தண்டாத [2]செங்கோற் [3]றயரதனுந் [4]தானளித்தா
[5]னொண்டார் முகிலை வனம்போகென் [6]றொருப்படுத்தா
ளெண்டானும் வேறில்லை யீதடுத்த வாறென்றான்.

(இ - ள்.) கேகயர் கோன் கொம்பு-கைகேயி, 'முன்சம்பரனோடு சமர்புரிகையில்), வரம் இரண்டு கொண்டாள் - இரண்டுவரங்களைப் பெற்றுக்கொண்டாள்; அவட்கு—, தண்டாத செங்கோல் தயரதன்உம் - தடைப்படாத நீதியையுடைய சக்ரவர்த்தியும், தான் அளித்தான்-தான் (அவள் கொடுக்குமாறு இப்பொழுது கேட்டதனால்) கொடுத்தான்; (அவ்வரத்தைக்கொண்டு அவள்), ஒள் தார் முகிலை - ஒள்ளிய மாலையணிந்த ஸ்ரீராமனை, வனம் போகு என்று-காட்டிற்குச் செல் என்று சொல்ல, ஒருப்படுத்தாள்-(அரசனைச்) சம்மதிக்கும்படி செய்தாள்; எண் தான்உம் வேறு இல்லை-(யாருக்கு என்னதீங்குநேரிட்டதோ? என) வேறாக எண்ணவேண்டியது யாதும் இல்லை; அடுத்த ஆறு ஈது-பொருந்தின விதம்இது, என்றான்-என்றுகூறினான்;(முனிவன்);(எ று.)

கொம்பு-ஒல்குதலுக்கும், மென்மைக்கும், நுண்மைக்கும், முகில் - கருமைக்கும், கைம்மாறுகருதாக் கொடைக்கும் உவமை. என்றான்-என்ற முனிவன் எனின், மேலிற் கவியில் "ஆயினான்" என்பதனோடு கூட்டுக. பி-ம்:—[1]இரண்டும். [2]செஞ்சொல். [3]தசரதனும், தலைமகனும். [4]தான்கொடுத்தான், தந்தழிந்தான். [5]ஒண்டாரவனை, ஒண்டாரவனும், ஒண்டாரிராமன், ஒண்டாரறிவன். [6]ஒருப்படுத்தான். இந்தப்பாடலும் அடுத்தபாடலும் சில பிரதிகளில் முன்பின்னாக வுள்ளன. (ந௬௧)

## ௬௫.—இதுவும் அது.

வேந்தன் [1]பணியினாற் கைகேசி மெய்ப்புதல்வன்
[2]பாந்தண் மிசைக்கிடந்த பா[3]ரளிப்பா னாயினா
னேந்து தடந்தோ ளிராமன் றிருமடந்தை
காந்த [4]னொருமுறைபோய்க் காடுறைவா னாயினான்.

(இ-ள்.) வேந்தன் பணியினால்-சக்ரவர்த்தியினது வரத்தினால், கைகேசி மெய் புதல்வன்-கைகேயியினது மெய்ப்புத்திரனாகிய பரதன், பாந்தள் மிசை கிடந்த பார் - ஆதிசேஷன்மேலே யிருக்கின்ற பூமியை, அளிப்பான்-காக்குந் தன்மையன், ஆயினான்—; ஏந்து தட தோள் இராமன் - உயர்ந்து பரந்த தோள்களையுடைய ஸ்ரீராமனாகிய, திருமடந்தை காந்தன் - சீதைக்குக்கணவன், ஒருமுறை போய்—, காடு உறைவான் ஆயினான் - காட்டில் வசிக்குந் தன்மையனானான் (என்றான் முனிவன்); (எ - று.)

பணி - சொல், கட்டளை. மெய்ப்புதல்வன் - வயிற்றிற் பிறந்த பிள்ளை யென்றபடி. ஆயிரமுடிகளாற் சுமக்கப்படுதல்விளங்க 'பாந்தண்மிசைக்கிடந்த' என்றது; இது, பூமிபாரத்தைச் சுமந்தளித்தலினது அருமை தோற்றுவிக்கும். ஏந்து தோள் - அழகிய தோளும், பூமிபாரத்தை ஏந்துதற்குரிய தோளுமாம். பி - ம்:—[1]மதிமயங்கக். [2]பாந்தளிடைக். [3]அளிப்பதாயினான், புரப்பானாயினான், காப்பானாயினான், முழுதுந்தான் புரக்க. [4]ஒருமுறையே காடுறைவானாயினான், அரசிழந்து காட்டகத்தனாயிடவே. (௩௬உ)

௬௬.—இதுமுதல் எட்டுக்கவிகள் - இராமன் வனஞ்சேல்வதைக் கேள்வியுற்ற நகரத்தவர் கொண்ட வருத்தத்தைத் தெரிவிக்கும்.

வாரார் முலையாரு [1]மற்றுள்ள [2]மாந்தர்களு
மாராத காத லரசர்களு மந்தணரும்
பேராத வாய்மைப் பெரியோ னுரை[3]செவியிற்
சாராத முன்னந் [4]தயரதனைப் போல்வீழ்ந்தார்.

(இ-ள்.) பேராத வாய்மை பெரியோன் உரை-வேறுபடாத மெய்யினது தன்மையையுடைய பெரிய முனிவனது வார்த்தை, செவியில் சாராத முன்னம்-காதுகளிற் சேர்தற்கு முன்னமே,—ஆராத காதல் அரசர்கள்உம்-தெவிட்டாத அன்பையுடைய மன்னவர்களும், அந்தணர்உம்-முனிவர்களும், மற்று உள்ள மாந்தர்கள்உம்-வேறுமுள்ள மனிதர்களும், வார் ஆர் முலையார்உம்-கச்சிற்பொருந்திய தனத்தையுடைய மாதர்களும், தயரதனைப்போல்வீழ்ந்தார்—.

மற்றுள்ளமாந்தர் - அமைச்சர்முதலியோர். செய்யுளாதலின், எண்ணுப் பிறழவைத்தார். ஆராதகாதல்-அளவில்லாத காதல். இல்வாழ்வார்க்குஆயின் தமரோடு விளையாட்டுவகையாற் பொய்ம்மைநிகழினும் அமையும்; துறந்தார்க்காயின் அதனைக் கருதியவழியும் பெரியதோ ரிழுக்கா மாகலின்;'பேராதவாய்மை'என்றார். பி-ம்:—[1]மற்றுமுள்ள. [2]மைந்தர்களும். [3]செவியுட். [4]தசரதனே.

௬௭. [1]புண்ணுற்ற தீயிற் புகையி னுரைபதைப்ப
மண்[2]ணுற் றயர்ந்து [3]மறுகிற் றுடம்பெல்லாங்
கண்ணுற்ற வாரி கடலுற்ற தந்நிலையே
விண்ணுற்ற தெய்ம்மருங்கும் விட்டழுத பேரோசை.

(இ - ள்.) புண்-விரணத்தில், உற்ற - பட்ட, தீயின் - நெருப்புப்போல, [புண்ணில்நெருப்புப்பட்டாற்போல], புகையின் - நெட்டுயிர்ப்போடு, உரை பதைப்பு - பேச்சுப் பதைப்புடனேதோன்றவும், உடம்பு எல்லாம் - (அவர்களின்) சரீரங்களெல்லாம், மண் உற்று-பூமியில் விழுந்து, அயர்ந்து-சோர்ந்து, மறுகிற்று - புரளலாயிற்று; கண் உற்ற - (அவர்களின்) கண்களிலிருந்து வழிந்த, வாரி - கண்ணீரானது, கடல் உற்றது - சமுத்திரநீரை யொத்தது; அ நிலை - அந்நிலைமையிலிருந்தே, எ மருங்கும் - எல்லாப் பக்கங்களிலும், விட்டு - வாய்விட்டு, அழுத - அழுதலினாலுண்டாகிய, பேர் ஓசை-மிக்கஒலி யானது, விண் உற்றது - தேவலோகத்தை யடைந்தது; (எ - று.)

[1]புண்ணுற்றதீயிற்புகையுற்றுயிர்பதைப்ப என்ற பாடத்துக்கு, இல்என்னும் உருபைப் புண்ணோடுமாற்றி, புண்ணில்புகை தீ உற்ற (து) உற்று - விரணத்திலே தூமத்தையுடைய தீ பொருந்தினால் அதையொத்து உயிர்துடிதுடிக்க என்றுஉரைப்பர்: உற்று - உவமவுருபு; "தோளுற்றொரீதெய்வம்" என்பதிற்போல. உடம்பெல்லாம்மறுகிற்று - ஒருமைப்பன்மைமயக்கம். கண்ணுற்றவாரி கடலுற்றதுஎன்பதற்கு - கண்ணீர் ஆறாய்ப்பெருகிக் கடலையடைந்ததெனினும் அமையும். அந்நிலையே-அப்படியேயென்றுமாம். பி-ம்:— [1]புண்ணுற்ற தீயிற் புகையிற்று. [2]உற்றுநின்று. [3]மறுகுற்று. (௩௯௪)

௯௫. மாத ரருங்கலமு [1]மங்கலமுஞ் சிந்தித்தங்
கோதை புடைபெயரக் கூற்றனைய கண்சிவப்பப்
பாத மலர்[2]சிவப்பத் தாம்பதைத்துப் பார்[3]சேர்ந்தா
ரூதை யெறிய [4]வொசிபூங் கொடி[5]யொப்பார்.

(இ - ள்.) ஊதை எறிய - பெருங்காற்று வீசுவதனால், ஒசி பூ கொடி ஒப்பார் - அசைகின்ற பூங்கொடியை யொப்பாராகிய, மாதர்—, அரு கலம் உம் - பெறுதற்கரிய ஆபரணங்களும், மங்கலம்உம் - மங்கலநாணும், சிந்தி - சிந்தவும், தம் கோதை புடைபெயர-தமது கூந்தல் அவிழவும், கூற்று அனைய கண்சிவப்ப-யமனையொத்த கண்கள் சிவக்கவும், பாதம் மலர் சிவப்ப—, தாம் பதைத்து—, பார் சேர்ந்தார் - பூமியில் விழுந்தார்கள்; (எ - று.)

பாதமலர் - சிவத்தலென்னும் வினைக்கேற்ப மலரென்பது பாதமாகப் பரிணமித்ததனால் திரிபணியென்னும் பரிணாமாலங்காரம். இத்தொடரை உருவகமாக்கிக்கொள்ளின், சிவத்தலென்னும்வினைக்கு ஏலாது. கூற்றனைய கண் என்றது, கண்ணின்கொடுமையை விளக்கிநின்றது. [1]கமலமுஞ்சிந்தி என்ற பாடத்துக்கு - கண்ணீரைச் சிந்தி என்க. பி-ம்: —[2]பதைப்ப. [3]சோர்ந்தார், வீழ்ந்தார். [4]ஒசியும். [5]போல்வார், அன்னார். (௩௯௫)

௯௬. ஆவா வரச னருளிலனே யா[1]மென்பார்
[2]காவா வறத்தையினிக் கை[3]விடுவேம் யாமென்பார்
தாவாத மன்னர் [4]தலத்தலைவீழ்ந் தேங்கினார்
மாவாதஞ் சாய்த்த மராமரமே போல்[5]கின்றார்.

(இ - ள்.) தாவாத மன்னர்-(வலி)அழியாத அரசர்கள்,—ஆஆ-அந்தோ அந்தோ! அரசன் அருள் இலன் ஏ ஆம் - சக்ரவர்த்தி கருணையில்லாதவனே யாவான், என்பார்-; யாம்-, காவா-பாதுகாக்காமல், அறத்தை - தருமத்தை, இனி—, கைவிடுவேம்—, என்பார்—; மா வாதம் சாய்த்த-பெருங்காற்றினுற் கீழேதள்ளப்பட்ட, மராமரம் ஏ-ஆச்சாமரத்தையே, போல்கின்றார்-போன்ற வராகி, தலத்தலை வீழ்ந்து-மண்மேல்விழுந்து, ஏங்கினர்-அழுதார்கள்;(எ-று.)
பி - ம்:—[1]என்றும். [2]காவாது. [3]விடுவோம். [4]தலைத்தலை. [5]வீழ்ந்தார். (நகூகூ)

க௦௦. கிள்ளையொடு பூவை யழுத கிளர்மாடத்
துள்ளுறையும் பூசை யழுத [1]வுருவறியாப்
பிள்ளை யழுத பெரியோரை யென்[2]சொல்ல
வள்ளல் வனம்புகுவா னென்றுரைத்த மாற்றத்தால்.

(இ - ள்.) 'வள்ளல் - வரையாதுகொடுக்குந் தன்மையனான ஸ்ரீராமன், வனம் புகுவான்-காட்டிற்குச் செல்வான்,' என்று உரைத்த-என்றுசொல்லக் கேட்ட, மாற்றத்தால் - வார்த்தையினால், கிள்ளையொடு பூவை - கிளிகளும் நாகணவாய்ப்பறவைகளும், அழுத - புலம்பின; கிளர் மாடத்துள் உறையும் பூசை - விளங்குகின்ற வீடுகளில் வசிக்கின்ற பூனைகள், அழுத - அழுதன; உரு அறியா பிள்ளை - உருவத்தையறியாத சிறுகுழந்தைகள், அழுத—; (என்றால்), பெரியோரை என் சொல்ல-பெரியோரழுதமையைப்பற்றி யான் என்னவென்றுசொல்லுக; (எ - று.)

அஃறிணையும் அவற்றோடொத்த ஒருசாருயர்திணையும் அழுதனவென்றால், வயசினாலும் குணத்தினாலும் கல்வியினாலும் அனுபவத்தினாலும் அன்பினாலும் பிறவற்றினாலுஞ் சிறந்த உயர்திணையோர் அழுதன ரென்பது, கூறாமலே பெறப்படு மென்றவாறு. கிள்ளைமுதலியவையழுதனவென்றால் பெரியோர் அழுதனரென்பது தானேவிளங்குமென்ற இது-ஒருபொருளைக்கூறிய மாத்திரத்தால் மற்றோர்பொருள் சித்திப்பதைத் தெரிவிக்குந் **தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி**யாம். தனக்குமுறையாகவந்த அரசவுரிமையைத் தம்பிக்கு உதவித் தான் காட்டிற்குச்செல்ல உடன்பட்டானாதலால், இராமபிரானை 'வள்ளல்' என்றார்.

கிள்ளை - பழங்களை மூக்காற் கிள்ளித்தின்பதுபற்றிய பெயர்: கிளக்குந் [பேசுந்] தன்மையதாதல்பற்றிவந்த பெய ரென்பாரு முளர். கிள்ளை பூவை என்ற பால்பகாவஃறிணைப்பெயர்கட்கு, தகுதிபற்றிப் பன்மைப்பொருள் கொள்ளப்பட்டன; சாதியொருமையெனக் கொள்ளினுமாம். அழுத-'அன்' சாரியைபெறாத பலவின்பால் வினைமுற்று; சாரியைபெறின் 'அழுதன'என நிற்கும். ஆசிரியர் தொல்காப்பியனார் மரபியலில் "வெவ்வாய் வெருகினைப் பூசையென்றலும்" என்பதனால் 'பெருந்தோட்டங்களிலும் புதர்களிலும் பதுங்கியிருந்து தசையுண்ணுதற்காகப் பிறபிராணிகளின் உயிரைக் கவரும் வெரு

கம்பூனையை வீட்டிலுறையும் பிராணியாகிய பூசையின் பெயர்கொடுத்துக் கூறுதலும் அமையும்' என்று கூறினாராதலின், அவ்வகைவெருகம்பூனையை விலக்குதற்கு 'கிளர்மாடத்துள் உறையும் பூசை' என்றார். [1]உணர்வறியாப் பிள்ளை என்றபாடத்திற்கு-இவர் வேண்டியவர் இவர் வேண்டாதவர் என்று அறியமாட்டாமலிருப்பனவாய் அஃறிணைப்பொருள்போன்ற சின்னஞ்சிறார் என்க. "குழவியும்மகவும்"என்ற தொல்காப்பியச் சூத்திரத்தில் 'கிழவவல்ல' என்ற மிகையால், பிள்ளைப்பெயர் மக்களுக்கும் வந்ததென்பர். சொல்ல - அகரவீற்றுவியங்கோள்; செயவெனெச்சமாகக்கொண்டு, பெரியோரைக் குறித்து, சொல்ல-சொல்லுமாறு, என்-என்ன உள்ளது? என்றுமாம். **பி-ம்:**— [2]சொல்லி. (ருகஎ)

க0க. சேதாம்பற் போதனைய செங்கனிவாய் வெண்டளவப்
போதாம்பற் றோன்றப் புணர்முலைமேற் [1]பூந்தரள
மாதாம்பற் றென்ன மழைக்கண்ணீ ராலியுக
நாதாம்பற் றாமழலை நங்கைமா ரேங்கினார்.

(இ - ள்.) சேது ஆம்பல் போது - செவ்வல்லிமலரையும், செம் கனி - சிவந்த கொவ்வைக்கனியையும், அனைய-ஒத்த, வாய்-வாயில், வெள் தளவம் போது ஆம் - வெள்ளிய முல்லைமலரையொத்த, பல் - பற்கள், தோன்ற - வெளியில்தெரியவும்,— புணர் முலைமேல் - நெருங்கிய தனங்களின்மேல், மா-பெரிய, பூ-அழகிய, தரளம் தாம்பு-முத்துமாலை, அற்று என்ன-அறுந்து விழுந்தாற்போல, மழை கண் நீர் ஆலி-குளிர்ச்சியையுடைய கண்ணிலிருந்து வழியும் நீரின் துளிகள், உக-சிந்தவும்,-நா பற்றா மழலை-நாவில் நன்குபொருந்தாத [திரம்பாத] சொல்லையுடைய, நங்கைமார்—, ஏங்கினார்—; (எ - று.)

ஆம்பல் உலகத்துப்பெண்பால்கள் வாயது நறுநாற்றத்திற்குவமை; "ஆம்பனாறுந் தேம்பொதிகிளவி"என்பவாகலின், மகளிரின்வாய் நிறத்தால் கொவ்வைக்கனியையும் நறுநாற்றத்தாற் செவ்வாம்பலையும்போலுமென்பது, 'சேதாம்பற்போதனையசெங்கனிவாய்' என்பதன்பொருள். இராமன் கானகஞ்செல்வதனையுணர்ந்து பல்தோன்றவும் கண்களிலிருந்துநீர்வடியவும் தம்மழலைச் சொற்களால் அவலச்சொற்களைச்சொல்லியவண்ணம் மகளிரழுதனரென்க. பூத்தாம்பும் தரளத்தாம்பும்அற்றாற்போலக் கண்ணீராலியுக என உரைத்தலுமாம். தாம்பு-ஆரம். ஈற்றடியில், தாம்-அசை. இச்செய்யுளில், திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. மழைக்கண்ணீர் - மழைபோன்ற கண்ணீருமாம். செம்மை + ஆம்பல் = சேதாம்பல்: "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திரவிதி. **பி-ம்:**— [1]பூண். (ருகஅ)

க0உ. ஆவு [1]மழுதவதன் கன்றழுத வன்றலர்ந்த
பூவு [2]மழுதபுனற் புள்ளழுத கள்ளொழுகுங்
காவு மழுத களிறழுத கால்வயப்போர்
மாவு [3]மழுதன வம்மன்னவனை மானவே.

(இ - ள்.) அ மன்னவனே மான - (இராமபிரானுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாமற் புலம்புகின்ற) அந்தத் தசரதசக்ரவர்த்தியைப்போலவே, ஆஉம் - பசுவும், அழுத—; அதன் கன்று அழுத - அப்பசுவின் கன்றுகளும் அழுதன; அன்று அலர்ந்த பூஉம்-அன்றுமலர்ந்த மலர்களும், அழுத—;புனல் புள் - நீர்வாழ் பறவைகளும், அழுத—; கள் ஒழுகும் காஉம்-தேன்பொழியுஞ் சோலைகளும், அழுத-; களிறு - யானைகளும், அழுத - ; கால் வய போர் மாஉம்-தேரிற்பூட்டப்படுகின்ற வலிமையுள்ள போர்க்குஉரிய குதிரைகளும், அழுதன—; (எ - று.)

கா, பூ - ஓரறிவுயிர்; மற்றவை - ஐயறிவுயிர். இந்தச்செய்யுளில் ஓரறிவுயிரும்ஐயறிவுயிரும்அழுதமைகூறி,மற்றை ஈரறிவுயிர் முதலியன அழுதமையை உபலட்சணத்தாற் பெறவைத்தார். ஆ முதலியன அழுதல் - தம் கண்களால் நீரைப்பெருக்கிக்கொண்டு கதறுதல்.கா, பூ அழுதல் - வாடிவதங்கிப் பொலிவிழத்தலால் தமதுதுயரத்தைப் புலப்படுத்தல். ஆ - சாதியொருமை; அழுத - அழுததென்பதன்விகாரம். 'ஆ என்பது பால்பகாவஃறிணைப்பெயராதலால், அழுத எனப் பன்மைமுற்றைக்கொண்டது' எனக் கொள்ளின், மேலேவரும் 'அதன்கன்றும்' என்பதனோடு பொருந்தாதாம். களிறு - மதக்களிப்பையுடையது: ஆண்யானை. கால் - சக்கரம்: அதனையுடைய தேருக்குச் சினையாகுபெயர். இனி, கால் - கால்வேகத்தைக்கொண்ட மா எனினுமாம். கால்-காலாள் என்பாருமுளர்."வயவலியாகும்" என்ற தொல்காப்பியத்தால், 'வய' என்பது - வலிமைப்பொருள்தரும் உரிச்சொல்லென்பது பெறப்படும்; வயம் என்று பிரித்தால் - வெற்றியென்று பொருளாம். இப்பொருளில், இது பெயர்ச்சொல். மான - உவமவுருபு. பி-ம்:—[1]அழுதன. [2]அழுதவதன், அழுதவப். [3]அழுதவால். (௩௧௧)

௩௦௩. [1]ஞானியு [2]முய்கலா னென்னுதே நாயகனைக்
கானீயு மென்றுரைத்த [3]கைகேசி யுங் [4]கொடிய
கூனீயு[5]மல்லாற் கொடியார் பிறருளரோ
மேனீயு [6]மின்றி வெறுநீரே யாயினர்.

(இ - ள்.) 'ஞானீஉம் - அறிவுடையவனும், உய்கலான் - (இராமனைப் பிரிந்து) பிழையான்,' என்னுது - என்றுஎண்ணுமல், 'நாயகனை - தலைமகனை, கான் ஈயும் - (இராமனுக்கு) வனவாசத்தைக் கொடும்,' என்று உரைத்த-, (கொடிய) கைகேசிஉம்—, கொடிய கூனீஉம்—, அல்லால்—, கொடியார் - கொடியவர் [அழாதவர்], பிறர் உளர் ஓ-வேறேயிருக்கின்றனரோ? [இல்லை]; (பிறரெல்லாம்), மேனீஉம் இன்றி - உடம்புமில்லாமல், வெறு நீர் ஆயினர்- வெறுமையுடைய நீர்போலக் கரைந்தனர்; (எ - று.)

இராமபிரான் உலகத்து எப்பொருளிடத்தும் பற்றுச்செய்யாத ஞானிகளும் பற்றுச்செய்யும் பரம்பொருளின் திருவவதாரமாவனதலால், இவனைப் பிரிந்தால் அந்த ஞானியும் உய்யா னென்க. இராமபிரானது நிலையைக் கரு

தாதுகானகத்திற்செலுத்துமாறு தூண்டிய கைகேயியும், இராமபிரானிடத்துத் தன்மகனிடத்துக்காட்டிலும் பேரன்புவைத்திருந்த கைகேயியையும் தன் துர்ப்போதனையால் மனம்மாறுபடுவித்த கூனியுமே அந்நகரத்துள் மனம்சிறிதும் இளகாதிருந்தவர்; மற்றையோர் யாவரும் துயரமிகுதியால் நீர்ப்பண்டம் போல் தம்முடல் கரைவாராயினரென்றவாறு. கூனி, மேனி - நீட்டல்விகாரங்கள்: "வீடுமின்" என்றவிடத்துப்போல. கொடிய-மத்திமதீபம். வெறுநீரே யாயினர் - வெறுந்தன்மையுடையவராய் மூர்ச்சித்துச் சாகுநிலைமையராயினரென்றபடி. பி-ம்:—[1]கூனியும். [2]உய்கிலாம், உய்கலாம், உய்கலாது. [3]கைகேயீயும். [4]கடிய. [5]அன்றி. [6]எல்லாம். (௬௦௦)

கO௬.—ஊரரின்துயரத்தைத் தெரிவிக்குங் கவிக்கூற்று.

தேறா தறிவழிந்தா [1]ரெங்குலப்பார் தேரோட
நீறாகிச் சுண்ண [2]நிறைந்த தெருவெல்லா
மாறாகி யோடின [3]கண்ணீ ரருநெஞ்சங்
கூறாகி [4]யோடாத [5]வித்துணையே [6]குற்றமே.

(இ-ள்.) தேறாது அறிவு அழிந்தார்-தெளியாமல் உணர்வுநீங்கப்பெற்றவர்கள், எங்கு உலப்பார்-எங்ஙனம் கணக்கிடப்பெறுவார்? தேர் ஓட-தேர்கள் செல்லுதலினால், நீறுஆகி-பொடியாய், சுண்ணம் நிறைந்த-புழுதிகள் நிறைந்திருக்கின்ற, தெரு எல்லாம்-தெருமுழுதும் (அப்புழுதிகள் நீங்கும்படி), கண் நீர் ஆறு ஆகி ஓடின-; அரு நெஞ்சம்-அருவப்பொருளாகிய மனம், கூறுஆகி-வேறாகி, ஓடாத - நீங்காத, இத்துணை - இவ்வளவே, குற்றம்—; (எ - று.)

இராமனைப்பிரிந்த துயரத்தால் இன்னதென்று தெரியாது திகைத்து நின்ற அவ்வூரார் எத்துணைவரோ? சொல்லமுடியாது; அவர்களைத்தவிர்த்து மற்றையோர்கண்களிலிருந்து நீர் ஆறாகிப்பெருகிற்று: அவர்களைப்பற்றிக் குறைகூறவேணுமானால் நெஞ்சம் இருபிளவாகி யழிந்திடவில்லை யென்னலாமென்றவாறு. உலத்தல் - அளவுபெறுதல். அருவப்பொருளாதலின் நெஞ்சங் கூறாகியோடவில்லையென்ற கருத்துப்பட 'அருநெஞ்சங் கூறாகியோடாத' என்றார்: இது - கருத்துடையடைமொழியணியாம். பி-ம்:—[1]எங்குலத்தார். [2]நிரைத்த, நிகர்த்த. [3]கண்ணினீருள், கண்ணுணீரருள், கண்கணீருள். [4]ஓடிலவால். [5]இத்தனையே. [6]கூற்றமே. (௬௦௧)

கO௭.—இதுமுதல் பத்துக்கவிகள் - நகரத்தவர் வருந்தியதைத் தெரிவிக்கும்.

மண்செய்த பாவ முளதென்பார் மாமலர்மேற்
பெண்செய்த பாவ[1] மதனிற் பெரிதென்பார்
புண்[2]செய்த [3]நெஞ்சை விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவங் [4]கடலிற் பெரிதென்பார்.

(இ - ள்.) (அவ்வயோத்தியிலுள்ளார்). 'மண் செய்த பாவம் உளது - நிலமகள் செய்த தீவினை மிகுதியாகவுள்ளது,' என்பார் - என்பார்கள்; 'மாமலர்மேல் பெண் செய்த பாவம் - சிறந்த தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற பெண்ணாகிய இலக்குமி செய்துள்ள பாவம், அதனில் பெரிது - அந்த மண்மகள்செய்த பாவத்தினும் மிக்குள்ளது,' என்பார் - ; 'விதி - (நமது) ஊழ்வினை, நெஞ்சை - (யாவருடைய) மனத்தையும், புண் செய்த - புண்ணாகச் செய்துவிட்டது,' என்பார்—; 'பூதலத்தோர் கண் செய்த பாவம் - இந்நிலவுலகத்தோரின்கண்கள்செய்துள்ளபாவம், கடலின் பெரிது - கடலைக்காட்டிலும் மிக்குள்ளது,' என்பார்—; (எ - று.)

ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு தன்னை யாளும் பாக்கியத்தைப் பெறுமையால், 'மண்செய்தபாவம் உளது' என்றும், மணிமுடி பூண்டு தன்னைக் காக்கும் பாக்கியத்தை மண்மகள் பெறுவிடினும் அப்பிரானது சேவடி தன்மீது பலவிடத்தும் தீண்டப்பெறும் பாக்கியத்தையேனும் பெற்றிருக்க, செல்வத்திற்குஉரியமகள் ஒருவகையாலும் அப்பிரானது சம்பந்தத்தைப் பெறுமையால், 'மாமலர்மேற் பெண்செய்தபாவம் அதனிற்பெரிது' என்றும், இங்ஙனம் இராமபிரான் முடிதுறந்து நம்மனம் புண்படுமாறு காட்டிற்குச்செல்வது நமது ஊழ்வினையே யென்பார் 'புண்செய்த நெஞ்சை விதி' என்றும், இராமபிரான் முடிபுனைந்து பொற்பட்டாடை முதலியன தரித்துச் செல்வத் தரிசிக்கும் பாக்கியத்தைப் பெறுமல் மரவுரிதரித்து முனிவர்கோலத்துடன் சஞ்சரிப்பதைத் தரிசிக்கப்போவதால், 'பூதலத்தோர் கண்செய்த பாவம் கடலிற்பெரிது' என்றும் அந்நகரத்தவர் கூறினரென்க. இதுமுதல் ௧௧ச - ஆங்கவிவரையிலும்வரும் என்பார் முதலிய முற்றுக்களுக்கு ௧௦அ-ஆங்கவியிலுள்ள 'அந்நீணகரார்' என்பது எழுவாயாம். மூன்றுமடியில், 'செய்த'- செய்தது என்பதன் தொகுத்தல்; மற்றை மூன்றடிகளில் 'செய்த'-பெயரெச்சங்கள். திருமகள் தாமரையில் வாழ்பவளென நூல்கள் கூறும். பி - ம்:— [1]இதனில். [2]செய்தார். [3]நெஞ்சம். [4]கடலென்பாராயினர். (௬௦௨.)

௧௦௬. ஆளான் பரத னரசென்பா ரையனினி
மீளா னமக்கு விதி[1]கொடிது காணென்பார்
[2]கோளாகி வந்தவா கொற்ற[3]முடி தானென்பார்
மாளாத நம்மின் [4]மனம்வலியா ராரென்பார்.

(இ - ள்.) 'பரதன் அரசு ஆளான்' என்பார்—; 'ஐயன் - ஸ்ரீராமன், இனி மீளான்—,'(என்பார்)—; 'நமக்கு விதி கொடிதுகாண்—,'என்பார்—; 'கொற்றம் முடி - வெற்றியையுடைய பட்டாபிஷேகம், கோள் ஆகி வந்த ஆ (று) - கொல்வதாகி [யமனாகி] வந்தவிதந்தான் (என்னே?),' என்பார்—; 'மாளாத நம்மின் - இறவாத நம்மினும், மனம் வலியார் ஆர்—?' என்பார்—; (எ - று.)—காண் - முன்னிலையசை. தான் - அசை.

பட்டாபிஷேகப் பேச்சு இல்லாவிடின் ஸ்ரீராமனைக் கைகேயி வனத்திற்குச் செல்லவேண்டுமென வரம்வேண்டாளாதலின்,'கோளாகிவந்தவா கொற்ற

முடிதான்' என்றனர். கோள் - உயிர்கொள்ளுதலை யுடையது; இடையூறும், தூமகேதுவுமாம். பி - ம்:—[1]கொடிதேதான், கொடிதுதான். [2]கோளாகவந் ததோ. [3]முடியென்பார். [4]வலியார்களார். (௬௦௩)

௧௦௭. ஆதி யரச [1]னருங்கே கயன்மகண்மேற்
காதன் முதிரக் கருத்தழிந்தா னாமென்பார்
சீதை மணவாளன் றன்னோடுந் தீக்கானம்
போது மது[2]வன்றேற் புகுது மெரியென்பார்.

(இ - ள்.) 'ஆதிஅரசன் - தலைவனாகிய சக்ரவர்த்தி, அரு கேகயன் மகள் மேல் - அரிய கைகேயியின்மேல், காதல் முதிர-அன்பு மிகுதலால், கருத்து அழிந்தான் ஆம் - மனமயங்கி வரங்கொடுத்தவனானான்,' என்பார்—; '(நாம்), சீதை மணவாளன் தன்னோடும் - ஸ்ரீராமனோடும், தீ கானம் - கொடிய காட்டை, போதும் - அடைவோம்; அது அன்றுஎல் - அதுவுங் கிடைத்த தின்றேல், எரி புகுதும் - தீப்புகுவோம்,' என்பார்—; (எ - று.)

ஆதியரசன் - பிரதானனான அரசனென்க: "ஆதிமன்னனை யாற்றுமினீ ரென்றான்" எனப் பின்னும் வருதல்காண்க: இனிஇத்தொடரில், ஆதியென் னும் முதன்மைகுறிக்கும் அடை, வயதுமுதிர்ந்தமைபான் மதியிழந்தா னென் பதனை விளக்கு மென்பாருமுளர். ஆதி - முன்னே என்றுமாம். அருமகள் - இகழ்ச்சி: நற்குணங்களின் இன்மையை யுடைய மகளுமாம். மணவாளன் - மணத்தை ஆளுதலுடையவன்; மணம் - கல்யாணம். பி ம்:—[1]அருள்கேகயன் மகண்மேல், கேகயர்கோன்மாமகண்மேல். [2]அன்றி, அன்றால். (௬௦௪)

௧௦௮. கையா [1]னிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவா
ருய்யாள்பொற் கோசலையென் [2]றோவாது வெய்துயிர்ப்பா
ரையா விளங்கோவே யாற்றுதி[3]யோ நீயென்பார்
நெய்யா ரழலுற்ற துற்றாரந் நீணகரார்.

(இ - ள்.) கையால் நிலம் தடவி—, கண் நீர் மெழுகுவார்-கண்ணீரால் (தரையை) மெழுகுவார்; பொன் கோசலை - அழகியகோசலைதேவி, உய்யாள் என்று - பிழையாளென்று, ஓவாது - இடைவிடாமல், வெய்து உயிர்ப்பார் - பெருமூச்சுவிடுவார்; 'ஐயா—! இளங் கோவே - இளையபெருமானே! [இலக்கு மணா!], நீ ஆற்றுதி ஓ-நீ மனம்பொறுப்பாயோ?' என்பார்—; நெய் ஆர் அழல் உற்றது - நெய்யைப்பெய்த நெருப்படைந்ததன்மையை, உற்றார் - அடைந் தார்; (யாவரெனில்), அ நீள் நகரார்-அந்தப்பெரிய அயோத்திநகரிலுள்ளார்.

இராமனையிழந்தமை கண்களையிழந்தமைபோலுதலாலும், கண்களில் நீர் ததும்புகின்றதனாலும், கண்திறந்துபார்க்கமுடியாமையால் கையால்நிலந் தடவினர். உய்யாள்போற்கோசலைஎன்று படிப்பாருமுளர். பி - ம்:—[1]நிலத் தடித்து. [2]ஓதுவார். [3]நீயோ, இப்பாடல் சிலபிரதிகளில் "தள்ளூறு" என்ற அடுத்த பாடலுக்குப்பின் காணப்படுகின்றது. (௬௦௫)

கOகூ. [1]தள்ளுறல் [2]வேறில்லாத் தன்மகற்குப் பார்[3]கொள்வா
[4]ளெள்ளுறு தீக்கரும நேர்ந்தா ளிவ[5]ளென்பார்
[6]கள்ளுறு செவ்வாய்க் [7]கணிகைகாண் கைகேசி
[8]யுள்ளுறு காத லிலள்போலென் றுள்[9]ளழிவார்.

(இ - ள்.) 'தன் மகற்கு பார் கொள்வாள் - தன்பிள்ளையாகிய பரதனுக்காக இராச்சியத்தைக் கைக்கொள்பவளாய், தள்ளுறல் - (ஸ்ரீராமனைக்காட்டிற்கு) அனுப்புவதற்குக்காரணம், வேறு இல்லா-வேறு இல்லாமல், இவள் - இக்கைகேசி, எள் உறு தீ கருமம் நேர்ந்தாள்-(யாவராலும்) பழிக்கப்படுகின்ற (வரமென்ற வியாசத்தினால் இராமனைக்காட்டிற்கு ஓட்டுவதாகிய இந்தக்) கொடியகாரியத்தை வேண்டினாள்', என்பார்—; 'கைகேசி-இவள், கள் உறு செவ் வாய் கணிகை காண் - தேன்போல்இனிய சிவந்த அதரத்தையுடைய வேசியேயாவாள்; (அதனால்தான்), உள் உறு காதல் இலள்போல்-மனத்திற் பொருந்திய அன்பில்லாதாள்போல்வாள்,' என்று-என்றுசொல்லி, உள் அழிவார் - மனம்வருந்துவார்; (எ - று.)

எள் - முதனிலைத்தொழிற்பெயர். இனி, சக்ரவர்த்தியைக்கொல்லுதலால், எள்ளுப்பொருந்திய கருமமு மாம். உண்டவர்க்கு மயக்கத்தையுண்டாக்குதலால், கள்ளுறு வாயென்றார் உள்ளுறுகாதலிலளென்றதனால், வெளியில் அன்புபாராட்டுகின்றா ளென்பது பெற்றாம்; வேசியர் இன்னராதல் "தலையுமாகமுந்தாளுந் தழீஇயதன், நிலைநிலா திறைநின்றதுபோலவே, மலையினுள்ளவெலாங்கொண்டு மண்டலால், விலைபின்மாதரை யொத்ததவ் வெள்ளமே," "பொன்விலைப், பாவையர்மனமும்போற்பசையுமற்றதே", "அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்" என்பவற்றா னுணர்க. பி-ம்:—[1]தள்ளுறு [2]வேறில்லை. [3]கொள்வான். [4]எள்ளுறிய. [5]என்று. [6]கள்ளுறு. [7]கணிகைபோல், கணிகையரும். [8]உள்ளுறு. [9]அழிந்தார். (௩Oசு)

ககO. நின்று தவ[1]மியற்றித் தான்றீர நேர்ந்ததோ
[2]வன்றிவ் வுலகத்து ளா[3]ருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் [4]குறித்த பொரு[5]ளொன்றோ
நன்று வரங்கொடுத்த நாயகற்கு நன்றென்பார்.

(இ-ள்.) 'தான்-சக்ரவர்த்திதான், நின்று - நிலையாய், தவம் இயற்றி - தவத்தைச் செய்து, தீர - (இவ்வுலகத்தினின்றும்) நீங்க, நேர்ந்ததுஓ - சம்மதித்தபடியோ? அன்று-அதுவன்றாயின், இ உலகத்துள்—, ஆர் உயிர் ஆய்-அரிய உயிருடன்கூடி, வாழ்வாரை-வாழுஞ் சனங்களை, கொன்று களைய - கொலைசெய்து அடியோடே நீக்கிவிடுதற்கு, குறித்த-நினைத்த, பொருள்ஒன்றோ-ஒருகாரியமோ? வரம் கொடுத்த(து)-(கைகேயிக்கு)வரங்கொடுத்தசெயல், நாயகற்கு-தசரதனுக்கு, நன்று நன்று - நன்றாகவுள்ளது நன்றாகவுள்ளது,' என்பார்—; (எ - று.)

அரசன் கைகேயியின் இஷ்டப்படி வரத்தைக்கொடுத்தது, தவஞ்செய்து தன்னுயிரைவிட்டிடவேணுமென்ற கருத்தினலா? அன்றி, இவ்வுலகத்து வாழ்வாரையெல்லாங் கொன்றுவிடவேணுமென்ற கருத்தினலா? இவ்வரச னதுசெயல் எவ்வளவு தீமையாகவுள்ளதென்றனரென்றவாறு. நன்றுநன்று- பிறகுறிப்பால் மிகவுந்தீதுஎன்ற பொருளைக் காட்டிற்று. உலகத்தவர் இராம னைப்பிரிதலால் இறந்துபடுவரென்பது, இரண்டுமூன்றும்அடிகளின்கருத்து. உலகத்து ளாருயிராய் வாழ்வார் என்றது, இராமனைக்குறிக்கு மெனினுமாம். கொடுத்த=கொடுத்தது: விகாரம். பி - ம்:—[1]உளுற்றி, ஆற்றி, முயற்றி. [2]அன்றியுலகத்துள். [3]உயிரை. [4]கொடுத்த. அன்றே. (௬0௭)

கககக. பெற்றுடைய மண்ணவளுக் கீந்து [1]பிறந்துலக
முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி
யுற்[2]றுறைதும் யாரு [3]முறையவே [4]சின்னாளிற்
புற்றுடைய காடெல்லா நாடாகிப் போமென்பார்.

(இ - ள்.) பெற்று உடைய மண் - (வரத்தினுற்) பெற்றிருக்கின்ற இராச்சியத்தை, அவளுக்கு ஈந்து-அக்கைகேயிக்கு (ஆளுமாறு) கொடுத்து, பிறந்து (தான் மூத்தவனுகப்) பிறந்தமையினுலே, உலகம் முற்று உடைய - உலகமுழுவதுக்கும் உரியவனுன, கோவை-இராமனை, யார்உம் - (யாம்) எல் லோரும், பிரியாது-பிரியாமல், ஈண்டி-திரண்டு, மொய்த்து-நெருங்கி, உற்று- (காட்டை) அடைந்து, உறைதும் - (அங்கே) வசிப்போம்; உறையவ - அவ் வாறு வசித்தலால், புற்று உடைய காடுஎல்லாம்-புற்றுக்களையுடைய வனங்க ளெல்லாம், சில் நாளில்—, நாடு ஆகி போம் என்பார்—; (எ - று.)

நாம் இவ்விராச்சியத்தை விட்டிட்டு இராமபிரானேடு வசிப்போம்: அங்ஙனம் ஊராராகிய நாம் எல்லாரும் வசிப்பதனுல் காடே நாடாகிப்போய் விடுமென்றன ரென்க. பெற்றுடைய மண்ணவளுக்கீந்து-அவள்வாயில் மண் ணைப்போட்டு என்ற கருத்தும் படுமாறு கூறிய நயம் கருதத்தக்கது பிறந்துல கம் முற்றுடையகோ - "முழுவதே பிறந்துலகுடைய மொய்ம்பினேன்" என்பர், பின்னும்; "பிறந்துநீயுடைப் பிரிவில் தொல்பதம்" என்று பரதன் கூறுவதுங் காண்க. காடெல்லாம் நாடாகிப்போ மென்பதில், நாடெல்லாங் காடாகுமென்பதுஉ முணர்க. பி-ம்:—[1]பிறிந்து. [2]உறையும். [3]உறையச். [4]சிலநாளில், இந்நாளில். (௬0௮)

ககஉ. என்னே [1]நிருப னியற்கை யிருந்தவா
தன்னே [2]ரிலாத [3]தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் [4]தம்பிக்குப்
பின்னே கொடுத்தாற் பிழையாதோ மெய்யென்பார்.

(இ - ள்.) 'நிருபன் இயற்கை இருந்தஆ(று)என்ன-தசரதமன்னவனது இயல்பு இருந்தவிதம் என்ன வியப்பாயிராநின்றது! தன் நேர் இலாத தலை மகற்கு-தனக்குஒப்பு(தன்னையேயன்றி வேறு) இல்லாத முதற்புத்திரனுக்கு,

தாரணியை-பூமியை, முன்னே கொடுத்து-முன்னே ஈந்து, முறை நிறம்ப - நீதிதவற, தம்பிக்கு - அவன்பின்னோனுக்கு, பின்னே கொடுத்தால்—, மெய் பிழையாதோ - சத்தியந் தவறாதோ?' என்பார்—; (எ - று.)

'ஒருவனுக்குக் கொடுத்த பொருளை வேறொருத்தனுக்குக் கொடுத்தல் முறையாகாது'என்று தருமசாஸ்திரம் ஏற்பட்டிருக்க, மன்னவன் இராமனுக்குக் கொடுத்த இராச்சியத்தைக் கைகேசிக்கு எவ்வாறு கொடுக்கலாம்? இந்தக் கொடையில் மூத்தவனுக்கு உரியதை இளையானுக்குக் கொடுத்தலும் முன்னே ஒருத்தற்குக் கொடுத்ததை மீட்டும் மற்றொருவர்க்குக் கொடுத்தலும் ஆகிய இரண்டுகுற்றங்கள் அடங்கியிருக்கின்றனவே: ஒருகால் அரசர்க்கென்று வேறே தருமசாஸ்திரம் உண்டுபோலு மென்று கூறியதாகக் கருத்து விரித்துரைத்துக்கொள்க. தனக்குமேல் அதிகாரி எவரும் இல்லாதவனென்பார், 'நிருபன்' என்றும், "ஜ்யேஷ்டபுத்திரனுக்குக் குற்றமுண்டாயிருந்தால் கநிஷ்டனுலகையாள்க" என்று நீதிநூல்வழக்கு உண்மையால் எவ்வாற்றானுங் குறைவற்ற மூத்தகுமார னென்பதற்கு 'தன்னேரிலாத தலைமகற்கு' என்றுங் கூறினர். தாரணி-தரணீயென்பதன் விகாரம். முன்னே கொடுத்து என்றது "புனையுமாமுடி புனைந்திந்தநல்லறம்புரக்க, நினையல்வேண்டும் யானின்வயிற்பெறுவதீதென்றான்" என்றதனை நோக்கி. நினைத்தலும் சொல்லலும் செய்தலோடொக்கு மாதலால், கொடுக்க நினைத்ததனையும் சொன்னதனையும் 'கொடுத்து' என்றார். இராமனுக்கு இராச்சியங் கொடுத்தால் வாய்மைபிழைக்குமென்ற கைகேசிக்கு மாறாகப் பரதனுக்குக் கொடுத்தால் வாய்மை பிழையாதோ வென்றார் நகரத்தவ ரென்க. பி-ம்:—[1]நிருபர். [2]ஒன்றிலாத். [3]தன்மகற்கு, தனிமகற்கு. [4]தம்பியற்கு. (சoக)

ககா. கோதை வரிவிற் குமரற் கொடுத்தநில
மாதை யொருவர் [1]புணர்வராம் வஞ்சித்த
பேதை [2]சிறுவனைப் பின்பார்த்து [3]நிற்குமே
சீதை பிரியினுந் [4]தீராத் திருவென்பார்.

(இ ள்.) 'கோதை வரி வில் குமரன் கொடுத்த-வெற்றிமாலையைச்சூடிய கட்டமைந்த கோதண்டத்தைத்தாங்கிய ஸ்ரீராமனுக்குக் கொடுத்த, நிலம் மாதை - பூமிப்பிராட்டியை, ஒருவர் புணர்வர்ஆம்-வேறொருவர் சேர்வராம்; சீதை பிரியின்உம் - சீதாபிராட்டி பிரிந்தாலும் [காடுசென்றாலும்], தீரா-(தானும் அவ்வூரைவிட்டுப்) பிரிந்து செல்லாமல், திரு - இலக்குமி,—வஞ்சித்த பேதை சிறுவனை-வஞ்சனைசெய்த கைகேயியினது புத்திரனாகிய பரதனை,பின் பார்த்து நிற்குமே - அங்கீகரித்து நிற்பாளோ?[நிற்கமாட்டாள்],'என்பார்—.

சீதை பிரிந்ததனால்,திரு இவ்வூரில் தங்கா ளென்றன ரென்க.கோதைக் குமரனென இயையும்; கோதைவில்லென இயைத்து, நாணியையுடைய வில்லெனப்பொருள் கொள்ளவுமாம். புணர்வராம் என்பது, தகுதியின்மை

யைப் புலப்படுத்தும். குமரற்கென்னும் நான்கனுருபு, தொகுத்தல். இழித்தற்கண் ஒருவர்புணர்வரெனப்பன்மையாற்கூறியது. பின்பார்த்தல் - இலக்கணையால் அங்கீகரித்தற்கு வந்தது. தீரா-விகாரம். பி - ம்.—[1]புணர்வாராம், புணர்வரா. [2]சிறுவனையே. [3]நிற்குமா, நிற்குமோ. [4]தான்றீராடிருவென்பார், தீராதோ திருவென்பார், தீராடிருவென்பார். (சுகo)

ககச. உந்தாது நெய்[1]வார்த் [2]துதவாது காலெறிய
நந்தா விளக்கி னடுங்குகின்ற நங்கைமார்
செந்தா மரைத்[3]தடங்கட் செவ்வி யருணோக்க
மந்தோ பிரிதுமோ வாவிதியே யோவென்பார்.

(இ - ள்.) 'உந்தாது - தூண்டப்படாமல், நெய் வார்த்து உதவாது - நெய்வார்த்துத் துணைசெய்யப்படாமல், கால் எறிய - காற்று வீசுதலினால், நந்தா விளக்கின் - கெடாதவிளக்குப்போல, நடுங்குகின்ற நங்கைமார்-உடம்பு நடுங்குகின்ற மாதர்கள், செம் தாமரை தட கண்-(ஸ்ரீராமனது) செந்தாமரை மலர்போன்ற பெரியகண்களினது, செவ்வி-அழகினையுடைய, அருள் நோக்கம் - கிருபையோடுகூடிய பார்வையை, பிரிதும்ஓ - (நாம்) பிரிந்துஉயிர்வாழ்வோமோ? விதியே - தெய்வமே! அந்தோ ஆ ஓ—!!' என்பார்—; (எ - று.)

இங்கு நடுக்கம், பிரிவுப்பொருளாகப் பிறந்த அச்சத்தாற் றோன்றியது. மகளிர் நடுங்குவதற்கு, காற்றில் விளக்கு நடுங்குவதை உவமைகூறினார். இது - நகரத்தாருள் நங்கைமார்துயரத்தைக் குறிப்பது; ஆண்மக்களினும் மனம் மெல்லியராய் வருந்தும்இயல்பு பெண்மக்கட்கு மிகுதியாமென்ற கருத்தினால், தனியேஎடுத்துக்கூறினார்போலும். உந்துதல்-காற்று மீதுபடவொட்டாமல் மறைவையுண்டாக்குதலெனினும் அமையும். பி-ம்:—[1]வந்து. [2]உறையாது. [3]பெருங். (சுகக)

## வேறு.

ககரு.—கைகேயி ஸ்ரீராமனுக்கு முடிசூட்டுதலைத்தவிர்த்துக் காட்டிற்குச் செல்லச்செய்ததைக் கேள்வியுற்ற இலக்குவன் சினங்கொள்ளல்.

கேட்டா னிளையோன் கிளர்ஞாலம் வரத்தி னாலே
மீட்டா ளளித்தாள் வனந்[1]தம்முனை வெம்மை [2]முற்றத்
தீட்டாத வேற்கட் சிறுதாயென யாவ ராலு
மூட்டாத காலக் கனைத்தீ யெனமூண் டெழுந்தான்.

(இ-ள்.) (இங்ஙனம்நிகழாநிற்க), இளையோன்-இளையபெருமாள் [லக்ஷ்மணன்],-தீட்டாத வேல் கண - (நெருப்பிற்காய்ச்சித்) கூராக்காத [இயற்கையிற் கூர்மையுடைய] வேலாயுதம் போன்ற கண்களையுடைய, சிறு தாய்-கைகேயி,வெம்மை முற்ற-(மனத்திற்)கொடுமை மிக,கிளர் ஞாலம்-விளங்குகின்ற பூமியை, வரத்தினால் ஏ மீட்டாள் - (அரசன்கொடுத்த) வரத்தினாலே (தான்)

திருப்பிக்கொண்டாள்; தம்முனை - தமையனுக்கு, வனம் அளித்தாள் - காட்டைக்கொடுத்தாள்,' என கேட்டான்-என்றுகேள்விப்பட்டு,—யாவரால் உம் மூட்டாத-எவராலும் பற்றப்பண்ணாத, கடைகாலம் தீ என-பிரளயகாலத்து அக்கினிபோல, மூண்டு எழுந்தான் - கோபம்பெருகி யெழும்பினன்; (எ-று.)

இராமன் முடிசூடித் தன்னைப்புணர்வானென்று பூமிதேவி களித்திருந் தமை தோன்ற 'கிளர்ஞாலம்' என்றார். வரத்தினாலே என்பதனை அளித்தா ளென்பதனோடு கூட்டுக. ஊழித்தீயினும் இவன்கோபத்திற்கு வேற்றுமை தோன்ற,'மூட்டாத காலக்கடைத்தீ' என்றார். தம்முன்-அண்ணன். பி-ம்:—[1]தம்முனின். [2]மூற்றி. (௪௧௨)

**௧௧௩.—இதுவும் அது.**

கண்ணிற் கடைத்தீ யுக[1]நெற்றியிற் கற்றை நாற
விண்ணிற் [2]சுடரும் கெட மெய்யினி னீர் [3]விரிப்ப
வுண்ணிற்கு முயிர்ப்பெனு மூதை [4]பிறக்க நின்ற
வண்ணற் பெரியோன் றனதாதியின் [5]மூர்த்தி யொத்தான்.

(இ - ள்.) கடைக்கண்ணின் தீ உக - கண்களினுனியினின்றும் நெருப்பு வழியவும், நெற்றியில் கற்றை நாற - நுதலில் (புருவத்தின்) மயிர்த்தொகுதி தோன்றவும், விண்ணின் சுடர்உம் கெட - ஆகாயத்தில்விளங்கும் இளஞ்சூரியனும் (இவ்வுக்கிரத்துக்குமுன்னே) நிலைகெடவும், மெய்யினின் நீர் விரிப்ப- உடம்பினின்றும் வியர்வைநீர் பரவவும், உள் நிற்கும் - உள்ளேயிருக்கின்ற, உயிர்ப்பு எனும் ஊதை - மூச்சென்னுங் கடுங்காற்று, பிறக்க - வெளியில் தோன்றவும், நின்ற அண்ணல் பெரியோன்-(வெகுண்டு) நின்ற மிக்கபெருந் தன்மையையுடைய இலக்குமணன்,தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்-தனது முதல்ஸ்வரூபமாகிய ஆதிசேஷனை யொத்திருந்தான்; (எ - று.)

இலக்குமணன் ஆயிரந்தலையரவரசு சீறுமாபோற் சீறினு னென்க.இலக்குமணன் ஆதிசேஷனது திருவவதாரமாதலை"வளையொடுதிகிரியும்"என்னும் பாலகாண்டக் கவியா லுணர்க. திருவனந்தாழ்வான் திருமாலினிடத்துத் தான் கொண்டுள்ள பொங்கும்பரிவினால் எப்போதுஞ் சினந்தோன்ற விருப்ப னென்பதை "ஆங்காரவாரமது கேட்டழலுமிழும், பூங்காரரவு", "காய்ந் திருளைமாற்றிக் கதிரிலகுமாமணிக, ளேய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப" என்ற முதலாழ்வார் வாக்குக்கொண்டும் உணர்க. கண் தீப்பொறி புறப்படு வதுபோலத் தோன்றுவதும், புருவம் நெரிந்து நெற்றியிலேறுவதும், உடம் பில் வேர்வை மிகுதியாகத்தோன்றுவதும், உண்ணின்று உயிர்ப்புத்தோன்று வதும் - வெகுளியின் மெய்ப்பாடுகள். நெற்றியிற் கற்றைநாற என்பதற்கு - நெற்றியிற் கோபாக்கினியின் ஒளிவீசவும் எனக் கூறினருமுளர். பி-ம்:—[1]நெற்றியின் வேர்வைகால, நெற்றியிற்கற்றைகால, நெற்று விரிந்ததென்ன. [2]சுடர்தோன்ற மெய்ந்நீர், சுடர்தோன்றமெய்ந்நனீர். [3]விரிக்க. [4]பிறங்க. [5]மூர்த்தம். (௪௧௩)

கசஎ.—சினங்கொண்ட இலக்குமணன் கைகேயியின் செயலை இகழ்ந்து கூறுதல்.

சிங்கக் குருளைக் கிடு[1]தீஞ்சுவை யூனை நாயின்
வெங்கட் [2]சிறுகுட் டனையூட்ட [3]விரும்பி னாளா
னங்கைக் கறிவின் றிற நன்றிது நன்றி தென்னாக்
கங்கைக் கிறைவன் [4]கமலக்கை புடைத்து நக்கான்.

(இ - ள்.) 'சிங்கம் குருளைக்கு இடு - சிங்கக்குட்டிக்குவைத்தற்கு உரிய, தீம் சுவை ஊனை - இனிய உருசியையுடைய மாமிசத்தை, வெம் கண் சிறு நாயின் குட்டனை - கொடியகண்களையும் இழிவையுமுடைய நாய்க்குட்டியை, ஊட்ட - உண்பிக்க, விரும்பினாள் - (கைகேயி) இச்சித்தாள்; நங்கைக்கு - இந்தக்கைகேயியினுடைய, அறிவின் திறம் இது இது - இந்த இந்தப் புத்திவலிமை, நன்று நன்று - மிகநன்றாயுள்ளது நன்றாயுள்ளது,' என்னா - என்றுசொல்லி, கங்கைக்கு இறைவன் - இலக்குமணன், கமலம் கை புடைத்து - தாமரைமலர்போன்ற (தன்) கைகளைக் கொட்டி, நக்கான் - சிரித்தான்; (எ - று.)

சிங்கக்குட்டிக்கு இடுதற்கு உரிய ஊனை நாய்க்குட்டிக்கு இடுவது முறைமையாகாமையோடு எல்லோர்க்கும் இகழ்ச்சியையுந்தருவதுபோல இராமபிரான் ஆள்வதற்கு உரிய இராச்சியத்தைப் பரதனுக்குத் தருதல் முறைமையாகாமையோடு யாவர்க்கும் இகழ்ச்சியையுந் தருமென்பது,உவமைமுகத்தாற் பெறப்படும். இங்ஙனம் பொருத்தமற்றகாரியத்தைக் கைகேயி செய்ததைகுறித்து இகழ்ச்சிபற்றி இலக்குமணன் கைகொட்டிச் சிரித்தனனென்க. இச் செய்யுளில் முதலிரண்டடிகளிற்கூறிய உவமை, உவமேயத்தைக் காட்டிற்று: இது - **பிறிதுமொழிதலணி**: உபமானத்தினால் உபமேயத்தைப் பெறவைப்பது, இதன் இலக்கணம். இலக்குமணன் வசிக்கும்நாடாகிய கோசலதேசத்தினது எல்லை கங்காநதிவரையிலுமாதலால், அவனை 'கங்கைக்கிறைவன்' என்றார். சரயூநதிக்கு இராமகங்கையென்று ஒருபெயருள்ளதனாலேனும், கங்கையையெல்லாநதிக்கும் பொதுவாகவழங்கும் ஒருசாரார்வழக்குப்பற்றியேனும் சரயூநதிபாயப்பெற்ற கோசலநாட்டையுடையவனென்ற பொருளில் 'கங்கைக்கிறைவன்' என்றாருமாம். இனி, கங்கையைப் பூமிக்குக்கொணர்ந்த பகீரதசக்கரவர்த்தியினது வமிசத்திற் பிறந்தவ னென்பதுபற்றி இவ்வாறு கூறினாரெனினுமாம். இலக்குமணன் செயற்கு அரிய செய்யுந்திறமுடையனென்பதை விளக்க, தேவலோகத்தினின்று ஆகாயகங்கையைப் பூமிக்குக்கொணர்ந்த பகீரதசக்கரவர்த்தியின் பெயரால் அவ்விலக்குமணனைக் கவி குறித்தாரென்றலும் பொருந்தும். ஊனுணணும் விலங்குகட்கு அது சுவைக்கு மாதலால், 'தீஞ்சுவையூன்'என்றார். தீஞ்சுவையூன் என்றது-உபமேயத்தில் இராச்சியபாரத்தை. ஆல் - தேற்றம்.

''நாயேபன்றி'' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் 'ஆயுங்காலை' என்றதனால்,'சிங்கக்குருளை' என்றார். குட்டன்-குட்டியென்ற பொருளில்வரு

தலை, "தன்சிறுக்குட்டன்களைக், குடங்கைக்கொண்டு மந்திகள் கண்வளர்த் துங்கோவர்த்தனம்" என்ற பெரியாழ்வார்பாசுரத்திலுங் காண்க. [2]சிறுகுட்டி யை என்றபாடத்துக்கு, "குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்" என்றத னால் 'நாயின்குட்டி' என்றது. சிங்கம்-ஹிம்ஸ என்பதன் எழுத்து நிலை மாறி வந்த ஸிம்ஹஎன்ற வடசொல்லின் திரிபு. [2]கடுங்குட்டியை என்றபாடத் துக்கு, கடுமான் என்பதிற்போல விரைவுக்குறிப்புணர்த்தும் 'கடி' என்னும் உரிச்சொல் 'கடு' எனத்திரிந்து வந்ததெனக் கொள்க. நன்றிது நன்றிது - அடுக்கு, எள்ளல்பற்றிவந்தது. பி-ம்:—[1]தீன். [2]சிறுகுட்டனுக்கு. [3]விரும்பி னளோ, விரும்பினளே. [4]கடகக்கை. (சசச)

ககஅ.—இதுமுதல் மூன்றுகவிகள் - இலக்குமணன் போர்க்கோலம் பூண்டு நிற்றலைத் தெரிவிக்கும்.

சுற்றார் [1]மணியின் வடிவாள் புடைதோன்ற வார்த்து
விற்றாங்கி வாளிப் பெரும்புட்டில் புறத்து வீக்கிப்
பற்றார்ந்த செம்பொற் கவசப்[2]பணி மேரு வாங்கொர்
புற்றா மென[3]வோங்கிய தோளொடு மார்பு போர்க்க.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) சுற்று ஆர் மணியின் வடி வாள்-நான்குபக்கங்களிலும் இழை த்தமணிகளையுடைய கூர்செய்த கைவாளை, புடை தோன்ற ஆர்த்து - பக்கத் தில் விளங்கும்படி கட்டி, வில் தாங்கி-வில்லையேந்தி, பணி மேரு ஆங்கு ஓர் புற்று ஆம் என - குளிர்ந்தமேருமலையின்கணுள்ள ஒருபாம்புப்புற்றுப்போல, வாளி பெரு புட்டில் புறத்து வீக்கி - அம்பறாத்தூணியைப் பின்பக்கத்திற் கட்டி, பற்று ஆர்ந்த செம் பொன் கவசம்-பொருந்துள்ள செம்பொற்கவசம், ஓங்கிய தோளொடு-உயர்ந்தபுயங்களுடன், மார்பு போர்க்க - மார்பைமறைக்க வும்,—(எ - று.)

மணி-கைப்பிடியுமாம். அம்புகளின் கொடுமைபற்றிப் பாம்புப்புற்றெனப் பட்டது. மேரு தோளுக்கும், புற்று புட்டிலுக்கும் உவமை. இனி, மகாமேரு மலை ஒரு புற்றுமேடுபோற் சிறிதாகத்தோன்றும்படி யோங்கிய தோள் என்று மாம். பி-ம்:—[1]மணியார். [2]படர். [3]வீங்கிய. (சசரு)

ககக. அடியிற்சுடர் பொற்கழ லார்கலி நாண வார்ப்பப்
[1]பொடியிற் றடவுஞ்சிறு நாண்பெரும் பூச [2]லோசை
[3]யிடியிற் [4]றொடரக் கடலேழு [5]மடுத்திஞ் ஞால
[6]முடிவிற் [7]குமிறும் மழைமுட்டையின் மேன்மு ழங்க.

(இ-ள்.) அடியில் சுடர் பொன் கழல்-கால்களிற் (கட்டி) விளங்குகின்ற பொன்னாலாகிய கழல், ஆர்கலி நாண ஆர்ப்ப-சமுத்திரமும் வெட்கும்படி சப் திக்கவும், பொடியில் தடவும்-பூமியிற் படுகின்ற, சிறு நாண்-சிறியநாணினது, பெரு பூசல் ஓசை-மிக்க போர்க்குரிய ஒலியானது, இ ஞாலம் முடிவில் - இவ்வுலகம் முடியுங்காலத்தில், கடல் எழ்உம் மடுத்து-எழுசமுத்திரநீரையும்

உட்கொண்டு, இடியின் தொடர-இடிகளோடு பொருந்த, குமிறும் - ஒலிக்கின்ற, மழையின்மேல்-மேகங்களினும், மும்மை முழங்க மூன்று பங்கு(அதிகமாக) ஒலிக்கவும்;—(எ - று.)

விசையாக நடப்பதனால் வீரக்கழல்ஒலிப்ப, நாணைத்தெறிப்பதனாற் பேரொலி யுண்டாகின்ற தென்க. வீரக்கழல் கடல்போலொலிக்க, வில்நாணியினொலி இடியினும் மும்மடியொலித்தது. பொடி-ஆகுபெயர். பொடியிற்றடவு நாண்-பொடியோடுதடவும் நாணுமாம். இனி, நாணோசை கடலேழுந் தொடர மடுத்து, இஞ்ஞாலமுடிவிற் குமிறும் மழையிடியின்மேல் மும்மை முழங்க வென்றுமாம். பி-ம்:—[1]பிடியிற்றடவும், பொடிவிற்றிடவும், பொடியுற்றிடவும். [2]ஓதை. [3]கடிதில். [4]தொடராக். [5]எடுத்துஞாலம், நிமிர்ந்துஞாலம். [6]முடியில். [7]குமுறும். (சுகசு)

கஉ௦. வானுந் நிலனும் முத[1]லீறில் வரம்பில் [2]பூத
மேனின்று கீழ்காறும் [3]விரிந்தன வீழ்வ போலத்
தானுந் தனதம்முனு மல்லது மும்மை ஞாலத்
தூனும் முயிரும் முடையார்க [4]ளுடைந்தொ துங்க.

(இ-ள்) விரிந்தன - பரந்துள்ளனவான, வான்உம் நிலன்உம் முதல் - ஆகாயமும் பூமியும்முதலாகிய, ஈறு இல்-முடிவில்லாத, வரம்பு இல் பூதம் - அளவற்ற ஐம்பூதங்களும், மேல்நின்று கீழ்காறுஉம் - மேலேயிருந்து கீழ்வரையிலும், வீழ்வபோல-விழுவனபோல (நிலைத்து),—தான்உம் தன தம் முன்உம் அல்லது - தானும் தன்னுடைய தமையனாகிய ஸ்ரீராமனுந்தவிர, மும்மை ஞாலத்து - மூன்றுலோகங்களிலுமுள்ள, ஊன்உம் உயிர்உம் உடையார்கள்-சரீரமும் ஆத்துமாவுமுடையவர்கள், உடைந்து ஒதுங்க - அழிந்து விலகவும்,—(எ - று.)

கீழ்க்கூறியபடி வீரக்கழலினின்றும் வில்நாணியினின்றும் அப்போது தோன்றிய பேரொலியால், ஐம்பெரும்பூதங்களும் தலைகீழாய்மாறிவீழ்கின்றனவோ என்று கருதி எல்லாப்பிராணிகளும் மனமழிந்து ஒடுங்கினவென்க. உடையாரென்று சிறப்புப்பற்றி உயர்திணையாற் கூறினாரேனும், அஃறிணையான பிராணிகளையுங் கொள்க. ஐம்பெரும் பூதங்களுள் முதலதாகிய நிலத்தையும் ஈற்றதாகிய வானையுங் கூறினார். அவற்றுள் உற்பத்திக்கிரமம்பற்றி வான்முதலில் வைக்கப்பட்டது. பிரவாஹதோ [ஆற்றொழுக்குப்போல] நித்தியமாதலால், 'ஈறில் பூதம்' என்றார். 'ஊனுமுயிருமுடையார்கள்' என்றதனாற் சகல சராசரங்களையுங் கொள்க. பி-ம்:—[1]ஒன்றி. [2]ஏழும், ஒன்றன். [3]பிரிந்தன, விரித்தன. [4]உலைந்து. (சுகஎ)

கஉக.—இதுவும் அடுத்த கவியும் - எவர்வந்தாலும் வென்று கைகேயியின் கருத்தை நிறைவேற்றவொட்டேனென்று இலக்குமணன் வீரவாதங் கூறியதைத் தெரிவிக்கும்.

புவிப்பாவை பரங்கெடப் [1]போரில்வந் தோரை யெல்லா
மவிப்பானு [2]மின்றே யவித்தாக்கையை யண்ட முற்றக்
குவிப்பானு [3]மின்றே யென[4]கோலினைக் கொற்ற மௌலி
கவிப்பானு நின்றே னிதுகாக்குநர் [5]காமி னென்றான்.

(இ - ள்.) 'போரில் வந்தோரை எல்லாம் - (நான் இராமபிரானுக்கு முடிசூட்டுதலைநிகழ்த்துவிக்கையில் அதனைத்தடுக்குமாறு என்னோடு பொரும் பொருட்டு) முனைமுகத்தில் வந்தவரெல்லாரையும், புவிப்பாவை பரம் கெட—பூமிதேவிக்குப் பாரம் நீங்கும்படி, இன்றுஎ அவிப்பான்உம் - இன்றைக்கே அழிப்பவனும், அவித்து - அங்ஙனம் அழித்து, ஆக்கையை - அவருடலை, அண்டம் முற்ற - உலகம் நிறைய, குவிப்பான்உம் - குவியல்செய்பவனும், என கோவினை - எனது தலைவனாகிய ஸ்ரீராமனை, கொற்றம் மௌலி-வெற்றியையுடைய திருமுடியை, இன்றுஏ - இன்றைத்தினமே, கவிப்பான்உம் - சூட்டுபவனுமாக (உறுதிகொண்டு), நின்றேன்—; இது காக்குநர் - இதனைத் தடுக்கும் வலியுடையவர், காமின் - தடுங்கள்,' என்றான் - என்றுகூறினான், (இலக்குமணன்); (எ - று.)

இராமனுக்கு முடிசூட்டுதற்கு விரோதஞ்செய்யுமாறு எவர்வந்தாலும் அவரையெல்லாம் போரிற்கொன்று அவர்களின் உடம்புகளையெல்லாம் பெருங்குவியலாகக்குவித்துப் பிறகு வெற்றியினாற்கிடைத்த மகுடத்தை என் தலைவனாகிய ஸ்ரீராமனுக்குச் சூட்டுவேன்: என் செயலைத்தடுக்க எவர்வந்தாலும் வருக எனப் போர்க்கு அறைகூவுகின்றனன் இலக்குமணனென்க. தருமமூர்த்தியாகிய இராமபிரானுக்கு முடிசூட்டவொட்டாமற் செய்பவர் பூமிக்குப்பாரமேயாவரென்பதுதோன்ற, 'புவிப்பாவைபரங்கெட' என்றது. காக்குநர் காமின் - முன்னிலையிற்படர்க்கைவந்த இடவழுவமைதி. பி - ம்:—
[1]போருவந்தோரை. [2]அவித்தவர். [3]எனக்கொரு, நின்றெனுணக், இன்றே [4]யென. [1]கோனினை. [5]காக்க. (சுகஅ)

கஉஉ. விண்ணாட்டவர் [1]மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்று
மெண்ணாட்டவர் யாவரு நிற்கவோர் மூவ ராகி
மண்ணாட்டுநர் [2]காட்டுநர் வீட்டுநர் வந்த போதும்
[3]பெண்ணாட்ட மொட்டே [4]னினிப் [5]பேருல கத்து ளென்னா.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (பின்னும் இலக்குமணன்),—'விண் நாட்டவர் - தேவரும், மண்ணவர் - பூமியிலுள்ளவரும், விஞ்சையர்-வித்தியாதரரும், நாகர்-பாதாளவுலகத்தவரும், மற்றுஉம் எண் நாட்டவர் - இன்னும் எண்ணத்தக்க பலவாகிய இடங்களிலுள்ளவர்களுமாகிய, யாவர்உம் -, நிற்க - கிடக்கட்டும்; மண் நாட்டுநர் - பூமியைப்படைப்பவரும், காட்டுநர் - காப்பவரும், வீட்டுநர்-அழிப்பவரும் ஆகிய, ஓர் மூவர் - ஒப்பற்ற மும்மூர்த்திகளும், ஆகி-ஒன்றாகி, வந்த போதுஉம் - வந்து எதிர்த்தகாலத்திலும், இனி - இப்போது, பேர் உலகத்துள் - (இந்தப்) பெரிய உலகத்திற்குள், பெண் நாட்டம் - பெண்களின் நோக்கத்திற்கு, ஒட்டேன் - இடங்கொடேன்,' என்னா - என்றுகூறி,—(எ - று.)—"திரிகின்றவேலை" என அடுத்த கவியோடு தொடரும்.

'சாதாரணமான தேவர் மானுடர் விஞ்சையர் நாகர் முதலியோர் கிடக்கட்டும்: படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முததொழில்களைப் புரிபவரான திரிமூர்த்திகளே வந்து கைகேயியின்கருத்தை முற்றுவிப்பதாக என்னையெதிர்த்துநின்றாலும், கைகேயியின்கருத்தை நிறைவேறுமாறு விடேன்' என்று இலக்குமணன் சினங்கொண்டு கூறினனென்க. விண்ணுட்டவர்-சுவர்க்க நாட்டில் வசிப்பவர். விஞ்சையர்-பதினெண் தேவகணங்களுட் சேர்ந்தவர். நாகர் - படமும் வாலுமுடையரான ஒரு தேவசாதியார். எண்ணுட்டவர் என்றது - மற்றுங் கூறப்படாத சித்தர் கின்னரர் முதலிய தேவகணங்களை: எட்டுத்திக்கிலுமுள்ள மற்றையோரும் எனினுமாம். நிற்க என்பது - அவர்களைத் தான் ஒருபொருட்டாக மதிக்கவில்லை யென்பதைக் குறிப்பிக்கும்: வியங்கோள் முற்று. மூவர் - தொகைக்குறிப்பு. மண் என்றது - இலக்கணையால், உலகங்களை யுணர்த்திற்று. நாட்டம் - நாடியது: விரும்பியது: பெண் ஆட்டம் என்று பிரித்து உரைப்பினுமாம். பெண்நாட்டம் ஒட்டேன்-பெண்களே கண்ணிற் காண அருமையாம்படி செய்வேனென்பாருமுளர். பி-ம்:—[1]விஞ்சையர் மண்ணவர். [2]காக்குநராயவர், காக்குநர்வீட்டுநர், காக்குநர்நீக்குநர். [3]பெண்ணுட்டவொட்டேன். [4]நனி. [5]பேருலகத்தினென்றான், பேருலகத்து மன்றே. (௬௧௧)

கஉ௩.—வீரவாதஞ்செய்த இலக்குமணன் நகரின்நடுவே திரிதல்.

[1]காலைக் கதிரோ னடு[2]வுற்றதொர் வெம்மை [3]காட்டி
ஞாலத்தவர் கோமக [4]னந்நக ரத்து நாப்பண்
மாலை [5]சிகரத் தனிமந்தர [6]மேரு முந்தை
வேலைத் திரிகின்றது போற்றிரி கின்ற வேலை.

(இ - ள்.) காலை கதிரோன் - இளஞாயிறு, நடு உற்றது - உச்சியடைந்தாற்போன்ற, ஓர் வெம்மை - ஒரு கடுமையை, காட்டி—, ஞாலத்தவர் கோ மகன் - சக்ரவர்த்தியினது (இளைய) திருமகன் [லக்ஷ்மணன்], அ நகரத்து நாப்பண் - அவ்வயோத்தியின் நடுவில், மாலை சிகரம் தனி மந்தரம் மேரு - ஒழுங்காகிய முடிகளையுடைய ஒப்பற்ற மந்தர பருவதம், முந்தை - முற்காலத்தில், வேலை - திருப்பாற்கடலில், திரிகின்றதுபோல் - சுழன்றது போல, திரிகின்ற வேலை - சுழன்றுலாவுங் காலத்தில்,—(எ - று.)—"கேட்டான்" என அடுத்த கவியோடு முடியும்.

எவராவது போர்க்கு வருபவருண்டா?' என்று வீரவாதத்துடனே ஆர்ப்பாடஞ்செய்துகொண்டு இலக்குமணன் நகர்நடுவே திரிந்தானென்க. மேரு - மலைஎன்னும் மாத்திரையாய் நின்றது. முந்தை - கடைந்த காலத்தில் என்றபடி. திருமாலுக்கு இந்நகரம் இனிது தங்குமிடமாதலால் இதற்குப் பாற்கடலுவமையாயிற்று; பாலகாண்டத்து "மாயோன் மார்பினன்மணிகள் வைத்த பொற்பெட்டியோ" என்றார். பி-ம்:—[1]காலைக்கதிகோன், காலக்கதிரோன். [2]உற்றன, அற்றதொர். [3]கூட்டி, காட்ட. [4]நன்னகரத்து. [5]சிகரத்தணி. [6]ஏல.

கஉச.—இலக்குமணனது வில்லின் நாணொலி இராமனது செவியிற் படுதல்.

வேற்றுக் கொடியாள் [1]விளைவித்த வினைக்கு விம்மித்
தேற்றத் தெளியாதயர் சிற்றவை பாலி ருந்தா
[2]னாற்றற் றுணைத்தம்பிதன் [3]விற்புய லண்ட கோளங்
[4]கீற்றொத் துடையப்[5]படு நாணுரு மேறு [6]கேட்டான்.

(இ - ள்.) வேறு கொடியாள்-வேறாகிய கொடுமையையுடைய கைகேயி, விளைவித்த-உண்டாக்கின, வினைக்கு-கொடுந்தொழிலுக்கு, விம்மி - கலங்கி, தேற்ற தெளியாது - தேறப்பண்ணவும் தேறாமல், அயர் - வருந்துகின்ற, சிற்றவைபால்-சிறியதாயாகிய சுமித்திரையாரிடத்தில், இருந்தான் - இருந்த ஸ்ரீராமன்,—ஆற்றல் துணை தம்பி தன் - வல்லமையையுடைய (தனக்குத்) துணையாகிய லக்ஷ்மணனது, வில் புயல் - வில்லாகிய மேகத்தினின்று, அண்டகோளம் கீற்று ஒத்து உடைய - அண்டகோளம் பிளவுபட்டுத் தகரும்படி, படும்-உண்டாகிய, நாண் உரும் ஏறு - விந்நாணின் ஒலியாகிய இடியேற்றை, கேட்டான் - செவியுற்றான்; (எ - று.)

இலக்குமணன் நகரின்நடுவே திரிந்துகொண்டுசெய்த நாணொலியானது சுமித்திரையாரிடத்திருந்த இராமபிரானது செவியிற் பட்டதென்க. வேற்றுக்கொடியாள் என்றது-ஸ்ரீ கௌசலையாருக்குத் தன்சினைவாலே வேறாகுங் கொடியவளென்றபடி. ஸ்ரீபரதாழ்வான் நினைவுக்குப் பொருந்தாமையாலே வேறாந கொடியா ளென்றதாகவுமாம். எஞ்ஞான்றும் இராமனுடன் கூடவிருந்து கைங்கர்யஞ் செய்து வருதலால், 'துணைத்தம்பி' என்றார்; வல்லமையில் தனக் கொப்பாகிய தம்பியென்றுமாம். கீற்றொத்து - கீறுதலைப் பொருந்தி; பிளவுபட்டு. பி - ம்:—[1]முடிப்பித்த, முடிவித்த. [2]ஆற்றத்தனித், ஆற்றற்றனித். [3]விற்றொழில். [4]கீற்றுற்று, கீற்றற்று. [5]பொரு. [6]கேளா.(கூஉக)

கஉரு.—இராமன் இலக்குமணனுள்ள இடத்துக்கு வருதல்.

[1]வீறாக்கிய பொற்கலன் [2]வில்லிட வார மின்ன
மாறாத் [3]தனிச்சொற் றுளிமாரி [4]வழங்கி வந்தான்
காறாக்க நிமிர்ந்து [5]புகைந்து கனன்று பொங்கு
மாறாக் கனலாற்றுமொ ரஞ்சன மேக மென்ன.

(இ - ள்.) (கேட்ட அவ்விராமன்),—வீறு ஆக்கிய பொன் கலன் - வேறொன்றற்கில்லாத அழகையுண்டாக்குகின்ற பொன்னாலாகிய திருவாபரணங்கள், வில் இட - ஒளி வீசவும், ஆரம் மின்ன - முத்துமாலைகள் பிரகாசிக்கவும், கால் தாக்க - பெருங்காற்று வீசுதலினால், நிமிர்ந்து - வளர்ந்து, புகைந்து - எரிந்து, கனன்று - காய்ந்து, பொங்கும் - விளங்குகின்ற, ஆறா கனல் - தணியாத [பிரளயகாலத்] தீயை, ஆற்றும் - தணிவிக்கின்ற, ஓர் அஞ்சனமேகம் என்ன - ஒரு மைபோலுங்கரிய மேகம்போல, மாறா - தவிராத, தனி-ஒப்பற்ற, சொல் - வார்த்தைகளாகிற, மாரி துளி - மழைத்துளிகளை, வழங்கி வந்தான் சொல்லிக்கொண்டுவந்தான்; (எ - று.)

இராமபிரான் இலக்குமணனது சினத்தைத் தணிப்பிக்கக்கருதி அவனுள்ள இடத்திற்கு இன்சொற்களைச் சொல்லிக்கொண்டு வந்தனனென்க. காலக்கடைத்தீயெனக் கீழ்க்கூறியதனால், ஆருக்கனல் என்பதற்கு பிரளயகாலத்தீ எனப்பட்டது: இது தொழிலும் உருவும்பற்றிவந்தது. அஞ்சனமேகமென்றது, கார்காலத்துச் சூல்கொண்ட மேகத்தை. பி-ம்:—[1]வீறுகிய. [2]வில்லிட்ட. [3]தணி. [4]வழங்க. [5]கனன்றுபுகைந்து. (௬௨௨)

௧௨௬.—'போர்க்கோலம்பூண்டுஇருக்கக் காரணமேன்?' என்று இராமன் இலக்குமணனை வினவுதல்.

மின்னொத்த [1]சீற்றக் கனல்விட்டு விளங்க நின்ற
பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கை யானை
[2]யென்னத்த வென்னீ [3]யிறையேனு முனிந்தி லாதாய்
[4]சன்னத்த னாகித் தனுவேந்துதற் கேது வென்றான்.

(இ-ள்.) (ஸ்ரீராமன்). மின் ஒத்த-மின்னலைப்போன்ற, சீற்றம் கனல் - கோபாக்கினியை, விட்டு-வெளியே தோற்றுவித்துக்கொண்டு, விளங்கநின்ற-விளக்கமாக நின்ற, பொன் ஒத்த மேனி-பொன்போன்ற திருமேனியையும், புயல் ஒத்த தட கையானை-மேகம்போன்ற பெரிய கைகளையுடையனுமான இளையபெருமாளைநோக்கி, 'என் அத்த - எனது குழந்தாய்! இறை என்உம் முனிந்திலாதாய்-ஒரு நொடிப்பொழுதும் சினங்கொள்ளாதவனான, நீ—, சன்னத்தன் ஆகி - போருக்கு ஆயத்தமானவனாய், தனு ஏந்துதற்கு - விற்பிடித்தற்கு, ஏது-காரணம், என்-யாது?'', என்றான்-என்றுவினவினான்; (எ - று.)

என்குறிப்பை யுணர்ந்து அதன்படியே நடப்பதன்றி நீ தனியாகச் சிறிது சினங்கொள்வதும் எப்போதுங் கண்டதில்லையே; அங்ஙனமுள்ள நீ, இப்போது பெருஞ்சினங்கொண்டு யுத்தசன்னத்தனாகிநிற்கக் காரணம் என்? என்று இராமன் இலக்குமணனை வினவினனென்க. சன்னத்தன் = ஸந்நத்தன்: போர்க்கவசம் பூண்டவன். மின்னொத்த சீற்றக்கனலென்றதனால், வெகுளி தானுள்ளவளவு கணமேயெனக்கொள்க. இளையபெருமாளை மேல் ஆரணிய காண்டத்திலும் "சுவணவண்ணன்" என்பராதலால், பொன்உவமை நிறத்திற்கு. அப்புமாரியுதவுதலாகிய தொழில் பற்றி 'புயலொத்த தடக்கை' என்றார். [3]இமையோரை முனிந்திலாதாய் என்ற பாடத்துக்கு-தேவர்களின் வேண்டுகோளுக்குத் தாம் இரங்கி யவதரித்தமையைக்குறிப்பித்தற்கு இவ்வாறு கூறியதென்பர்: அன்றி இமை ஓரை-இமைப்பொழுது எனினுமாம். பி-ம்:—[1]சீற்றத்தனல். [2]என்னத்தனெண்ணி, என்னத்தனே நீ. [4]சின்னத்தனுவேந்துதற்கேதுவென்செப்புகென்றான். (௬௨௩)

௧௨௭.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: இலக்குமணன் இறுத்த விடை.

[1]மெய்யைச் சிதைவித்துநின் [2]மேன்முறை [3]நீத்த [4]நெஞ்ச
மையிற் [5]கரியாளெதிர் நின்னை [6]யம் மௌலி சூட்டல்
செய்யக் [7]கருதித் தடைசெய்குநர் தேவ[8]ரேனுந்
துய்யைச் சுடுவெங் கனலிற் சுடுவான் றுணிந்தேன்.

(இ - ள்.) (அதற்கு இலக்குமணன்), 'மெய்யை சிதைவித்து - சத்தியத்தைக் கெடச்செய்து, நின் மேல் முறை - உனக்குச் சிறப்பாகவுள்ள அரசு முறைமையை, நீத்த - நீக்கின, நெஞ்சம் மையில் கரியாள் எதிர்-மனம் மையினும் கரியளாகிய கைகேயியின் முன்னே, நின்னை - உன்னை, அ மௌலி சூட்டல் - அந்தக்கிரீடத்தைச சூட்டுதலை, செய்ய-செய்தற்கு, கருதி - (நான்) நினைந்து, தடை செய்குநர் - (அதற்குத்) தடைசெய்பவர், தேவர்ஏனும் - தேவர்களே யாயினும், (அவரை), துய்யை சுடு வெம் கனலின் - பஞ்சை யெரிக்கின்ற கொடிய தீப்போல, சுடுவான் - அழித்தற்கு, துணிந்தேன்-நிச்சயித்தேன்; (எ - று.)

இராமனுக்கு முடிசூட்டுகிறே னென்றுசொன்ன சக்ரவர்த்திடை அது செய்யாது தடுத்தலால், மெய்யைச் சிதைவித்ததாயிற்று. நீத்த-தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது. மனத்தில் வெகுளியையுடையவளென்பான் 'நெஞ்சம் மையிற்கரியாள்' என்றான். துய் - பஞ்சிற்றொடர்நுனி. கருதித் துணிந்தே னென முடிக்க. பி-ம்:—[1]மெய்ம்மை. [2]மெய்ம்முறை, மென்முறை. [3]நீத்து. [4]நெஞ்சின். [5]கொடியாள். [6]நன்மௌலி, நயமவுலி, மவுலி. [7]கருத்தித்தடை. [8]ஏயும். (௪௨௪)

௧௨௫. வலக்கார் முகமென்கைய தாகவவ் வானு ளோரும்
[1]விலக்கா ரவர்வந்து விலக்கினு மென்கை [2]வாளிக்
கிலக்கா வெரிவித் துலகேழினொ டேழு மன்னர்
குலக்கா வலுமின் றுனக்கியான் றரக்கோடி யென்றான்.

(இ - ள்.) வலம் கார்முகம்-வலியையுடைய வில்லானது, என் கையது ஆக-எனது கையிலுள்ளதாயிருக்க, அ வானுளோர் உம்-அத்தேவரும், விலக்கார் - (துணிந்து) தவிர்த்தல் செய்யார்; அவர் வந்து விலக்கின்உம் - அவர் (துணிந்து) வந்து தடுத்தாலும், என் கை வாளிக்கு - எனது கையிலுள்ள பாணத்துக்கு, இலக்கு ஆ (க)—லட்சியமாகும்படி, எரிவித்து-எரியச்செய்து, உலகு ஏழினொடு ஏழ்உம் - பதினான்குலோகங்களையும், மன்னர் குலம் காவல் உம் - அரசர்கூட்டத்தைக் காத்தற்றொழிலையும், இன்று - இப்பொழுது, உனக்கு—, யான் தர-நான் கொடுக்க, கோடி-பெற்றுக்கொள்க, என்றான்—.

இச்செய்யுளின் முன்னடிகள் கீழ்ச்செய்யுளின் அநுவாதம்: இவ்வநுவாதம் உலகேழினொடேழும் மன்னர்குலக்காவலும் யான் தரக்கோடிஎன்று விதித்தலின் பொருட்டு வந்ததென்க. இலக்கு - லக்ஷ்யம் என்பதன்திரிபு. உனக்கியான் - குற்றியலுகரம். பி-ம்:—[1]விலக்காரய. [2]வாளியிலக்கா. (௪௨௫)

**௧௨௬.—அதுகேட்ட இராமன் 'முறைக்கேடாக உனக்கு இப்படிச் சீற்றந் தோன்றக் காரணம் என்ன?' என்றல்.**

இளையா [1]னிது[2]கூற விராம[3]னியைந்த நீதி
வளையாவரு நன்னெறி[4]நின்னறி வாகு [5]மன்றே
யுளையா வறம் [6]வற்றிட வூழ்வழு [7]வுற்ற சீற்றம்
விளையாத நிலத்துனக் கெங்ஙன் விளைந்த தென்றான்.

(இ - ள்.) இளையான் இது கூற - இலக்குமணன் (தான் வில்லேந்திய காரணம்) இன்னதென்பதனைச் சொல்ல,— இராமன்—, 'இயைந்த நீதி வளையா வரும் நல் நெறி - (நூல்களிற்) கூறப்பட்டுள்ள நீதிமுறைக்கு மாறாகாமல் நடக்கின்ற நல்லமுறையிலேயே, நின் அறிவு - உனதுபுத்தி, ஆகும் அன்றே - பொருந்தியிருக்குமல்லவா? ஊழ் வழு உற்ற - நீதிமுறைக்குத் தவறுகவுள்ள, சீற்றம் - கோபம், விளையாத - (ஒருபோதும்) உண்டாயிராத, நிலத்து-இடமாகிய மனத்தில், உளையா அறம் வற்றிட-அழியாத தருமம் கெடும்படி, உனக்கு—, எங்ஙன்-எப்படி, விளைந்தது - தோன்றிற்று?' என்றான் - என்று வினவினான்; (எ - று.)

இலக்குமணன் சொல்லைக் கேட்டதும், இராமன் 'அப்பா இலட்சுமணா! உன்னுடைய அறிவு நீதிமுறைதவறாத நன்னெறியில்தான் செல்லவல்லது; அப்படியிருக்க, தருமதிற்குக் கேடு உண்டாகும்படி நீதிமுறைக்கு மாறாக உன்மனத்திலே இப்போது சினம் எவ்வாறு பிறந்தது?'என விணவினனென்பதாம். இது என்றது - இராமபிரானுக்கு மகுடம் புனைதற்கு மாறாகக் கைகேயிஎண்ணிய எண்ணத்தை நிறைவேற்றும்பொருட்டுத் தேவர் உதவினும் அவர்களையுங் கொன்றொழிப்பே னென்றதை.இலக்குமணன்புத்தி நீதிதவறா நன்னெறியிலேயே செல்லுமென்பான் 'நீதிவளையாவரு நன்னெறி நின்னறிவாகும்'என்றான்.தருமத்திற்கு அழிவு என்றும் உண்டாகாதென்ற நூற்கொள்கைபற்றி 'உளையாஅறம்' எனப்பட்டது. உளையா=உலையா: லகரத்துக்கு ளகரம் போலியாகவந்தது: போலியாகக்கொள்ளாமல், அறம்உளையா வற்றிட என்று இயைத்து-தருமதேவதை மனம்வருந்தியொடுங்க என்று உரைப்பினுமாம். இளையான் என்பதற்கு - தான் கொண்ட கருத்திற்சிறிதுந் தளராதவனாகி என்று உரைப்பாருமுளர். அறிவு + ஆகும்= அறிவாகும்: "முற்றுமற்றொரோவழி." பி-ம்:—[1]அது. [2]சொல்ல. [3]இசைந்த. [4]நின்னெறியாகும். [5]இன்றே. [6]அற்றிட, உற்றிட. [7]அற்ற. (௬௨௬)

**௩௩௦.—இலக்குமணன் யான் இப்போது சினங்கொள்ளாது எப்போது சினங்கொள்வதெனல்.**

நீண்டா[1]ன துரைத்தலு நித்திலந் [2]தோன்ற நக்குச்
சேண்டான் றொடர்மாநில [3]நின்னதென் றுந்தை செப்பப்
பூண்டாய் பகையா [4]லிழந்தேவனம் போதி [5]யென்றால்
[6]யாண்டோ வடியேற் கினிச்சீற்ற மடுப்ப [7]தென்றான்.

(இ - ள்.) நீண்டான்-ஸ்ரீராமன், அது உரைத்தலும்-அவ்வார்த்தையைச் சொன்னவிளவில்,—(இலக்குமணன்), 'நித்திலம் தோன்ற - பற்கள் வெளித்தோன்ற, நக்கு - சிரித்து, 'உந்தை - உன் தந்தை, சேண் தான் தொடர் மாநிலம்-அகலம்பொருந்திய பெரிய பூமி, நின்னது - உன்னுடையது', என்று செப்ப-என்று சொல்ல, பூண்டாய்-(அதனை) அங்கீகரித்தவனாகி,(பின்),பகையால் இழந்தன - சத்துருவினால் இழந்துபோய், வனம் போதி - காட்டிற்குச்

செல்வாய், என்றால்—, அடியேற்கு-எனக்கு, இனி—, சீற்றம் அடுப்பது - கோபம்வருவது, யாண்டுஓ-'இந்தவேளைதவிர) வேறு எப்பொழுதோ?' என்றான்—; (எ - று.)

அடியேனுக்கு இக்காலத்தில் கோபம் வருகிறது அதிசயமா? என்றபடி. நீண்டான் - மிக்ககுணங்களையுடையவன்: வாமனாவதாரத்தில் மாவலிபக்கல் மூவடிமண்வேண்டி நீண்டமைபற்றி, நீண்டானென்றானுமாம். பி - ம்:— [1]உரைசெய்தலும், அதுணர்த்தலும், அதுகூறலும். [2]தோற்க. [3]நின்னதுதாதை, நின்னதுன்றாதை. [4]இழந்தாய். [5]என்ன. [6]ஆண்டோ. [7]என்றோ.' (சஉஎ)

## கருக.—இதுவும் இலக்குமணன்மறுமொழி.

நின்கட் [1]பரிவில்லவர் நீள்வனத் துன்னை நீக்கப்
புன்கட் பொறியாக்கை பொறுத்துயிர் [2]போற்று கேனோ
வென்கட் [3]புல [4]முன் னுனக்கீந்துவைத் தில்லை யென்ற
வன்கட் புலந்தாங்கிய மன்னவன் [5]போல வென்றான்.

(இ - ள்.) 'என் கண் புலம் முன் - எனது கண்முன்னே, உனக்கு ஈந்து வைத்து - உனக்கு (இராச்சியத்தை வாயாற்) கொடுத்து வைத்து, இல்லை என்ற - பின்னரில்லையென்று சொல்லி (உன்னைக் காட்டுக்குஅனுப்பி மகிழ்ச்சியோடு பார்த்துக்கொண்டு) நின்ற, வன் கண் புலம் தாங்கிய-கொடுந் தன்மையைக்கொண்ட கட்புலனோடுகூடிய, மன்னவன்போல - அரசன் போல,—நின் கண் பரிவு இல்லவர் - உன்பக்கல் அன்பில்லாத தாய், நீள் வனத்து - நீண்ட காட்டில், உன்னை நீக்க - உன்னை அனுப்ப, (அதனைக் கண்டும்), புன் கண் பொறி யாக்கை பொறுத்து - துன்பத்தைத் தருகின்ற ஐம்பொறிகளையுடைய உடலைத் தாங்கி, உயிர் போற்றுகேன் ஓ - பிராணனைக் காப்பாற்றுவேனோ?' என்றான்-; (எ - று.)

இராமபிரானுக்கு அரசு தருகிறேனென்று தசரதன் கூறியது தனக்குத்தெரியுமென்பதையுணர்த்த, இலக்குமணன் 'என்கட்புலமுன்னுனக்கீந்து வைத்து' என்கிறான். உயிர்போற்றுகேனோ .வன்கட்புலந்தாங்கிய மன்னவன் போல - "பைந்தொடியொருத்தி சொற்கொண்டு யார்மகள், நைந்துயிர் நடுங்கவுநடத்திகானெனோ, வுய்ந்தனனிருந்தன னுண்மைகாவலன்" என்று பின்னும் இலக்குமணன் கூறுவது காண்க. வன்கண்மை - இரக்கமின்மை. பரிவில்லவர் - இழிப்பினாற் பன்மைவந்தது. பி - ம்:—[1]பரிவில்லவள், பரிவில்லவன். [2]போற்றுவேனோ [3]புலன். [4]உன்றனக்கு, நின்றனக்கு. [5]காண்கொல். (சஉஅ)

## கருஉ.—இலட்சுமணன்சொல்லைக்கேட்டு இராமன் கூறத்தொடங்குதல்.

என்றென் [1]றறிவித் திளையோனி தியம்பி டாமுன்
கன்றொன்று மாவிற் பலயோனியுங் காத்த நேமி
வன்றிண் சிலைக்கைம் மனுவென்னும் வயங்கு சீர்த்திக்
குன்றொன்று தோளான் மருமானிவை கூற லுற்றான்.

(இ - ள்.) இளையோன்-இலட்சுமணன், இது - (தான்) சினங்கொண்ட தன் காரணத்தை, என்று என்றுஅறிவித்து-, இயம்பிடாமுன் - சொல்லுவதற்கு முன்னம்,—கன்று ஒன்றும் ஆவின் - (தன்) கன்றினிடத்தேஅன்பு பொருந்திய பசுப்போல, (மிக்க அன்புகொண்டு), பல யோனிஉம் காத்த - பலவகைப் பிறவிகளிலும்பிறந்த பிராணிகளையெல்லாம் பாதுகாக்கின்ற, நேமி வல் திண் சிலை கை - ஆஞ்ஞாசக்கரத்தையும் மிகவும்வலிமைபெற்ற கோதண்டத்தையும் பூண்ட கையையுடையவனாகிய, மனுஎன்னும் வயங்கு சீர்த்தி குன்று ஒன்றுதோளான் மருமான்-மனுவென்கின்ற விளங்கும்பெரும் புகழைக்கொண்டவனாகி மலையையொத்த தோள்களையுடையவனது சந்ததியிற்பிறந்த ஸ்ரீராமன், இவை - இவ்வார்த்தையை, கூறல் உற்றான் - சொல்லததொடங்கினான்; (எ - று.)—அதனை மேலிரண்டுகவிகளிற் காண்க.

இச்செய்யுள் சில பிரதிகளில் மாத்திரம் காணப்படுவதாயினும், சந்தர்ப்பத்திற்கு ஒத்திருப்பதால்,உரையெழுதப்பட்டது. "சீர்த்தி மிகுபுகழ்"என்பது தொல்காப்பியம். தன் சீற்றம் தக்கதேயென்றுதெரிவித்தற்குப் பலமுறை கூறினனென்பார் 'என்றென்றறிவித்து'என்றார். பி-ம்:—[1]சீற்றத்து.(௬உகூ)

கஙங.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: சினங்கோள்ளுதல் கூடாதேன்பதற்கு இராமன் காரணங்காட்டுதலைத்தெரிவிக்கும்.

பின்குற்ற மன்னும் பயக்கும்மர சென்றல் பேணேன்
முன் [1]கொற்ற மன்னன் முடி[2]கொள்கெனக் கொள்ள[3]மூண்ட
தென்குற்ற [4]மன்றோ [5]இகல்மன்னவன் குற்றம் [6]யாதோ
மின்குற் றொளிரும் [7]வெயிறீக்கொ டமைந்த வேலோய்.

(இ - ள்.) மின் குற்று ஒளிரும் - மின்னலை வென்று விளங்குகின்ற, வெயில் தீ கொடு அமைந்த-சூரியகிரணத்தாலும் அக்கினியினாலுஞ் செய்தாற்போன்ற, வேலோய் - வேலாயுதத்தையுடையவனே! கொற்றம் மன்னன் - வெற்றியையுடைய சக்ரவர்த்தியானவன், முன் - முன்னே, முடி கொள்க என-கிரீடத்தைச் சூட்டிக்கொள்வாயாகவென்று சொல்ல, அரசு - இராச்சிய பாரம், பின்-பின்பு, குற்றம் - குற்றத்தை, மன்உம் பயக்கும்-மிகுதியும் உண்டாக்கும், என்றல் - என்பதை, பேணேன் - கருதாதவனாய், கொள்ள - (அதனைப்) பெற்றுக்கொள்வதற்கு, மூண்டது முயன்றதொழில்,என் குற்றம் அன்றோ-எனது பிழையன்றோ; இகல் மன்னவன் குற்றம் யாது ஓ - வெற்றியையுடைய சக்ரவர்த்தியின் பிழையெதுவோ?[ஒன்றுமில்லையென்றபடி];(எ-று.)

இராச்சியத்தை யாளுமாறு முதலில் ஒப்புக்கொண்டது என்மேற் பிழையாவதால், குற்றஞ் செய்தவரைத் தண்டிப்பதானால் என்னையே தண்டிக்கவேண்டுமென்றவாறு. உம்மை - இசைநிறை. பி ம்:—[1]சொற்ற. [2]கொள்ளென. [3]மூண்ட, [4]அன்றி, அன்றே. [5]இயல். [6]உண்டோ. [7]வெயிலிற்கொண்டு.

கா௩ச. நதியின் பிழையன்று நறும்[1]புன லின்மை [2]யற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப்[3]பு ரந்தாண்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்று [4]மைந்த
விதியின் பிழைநீ யிதற்[5]கென்னை [6]வெகுண்ட தென்றான்.

(இ - ள்.) 'நறு புனல் இன்மை-(சில ஆறுகளிற் சிலகாலங்களில்) நல்ல நீர்இல்லாமல்வற்றிப்போவது, நதியின் பிழை அன்று - அந்நதிகளின் குற்ற மன்று; (வானம் மழைபெய்யாத குற்றமேயாகும்); அற்றே-அதுபோலவே, (நான் அரசுபெறுமற் காட்டிற்குப்போவது), பதியின் பிழை அன்று-தந்தை யினது குற்றம் அன்று; பயந்து - பெற்று, நமை புரந்தாள் மதியின் பிழை அன்று - (இதுவரையில்) நம்மைப் போற்றிவந்தவளாகிய சிற்றன்னையினு டைய அறிவினது குற்றமுமன்று; மகன் பிழை அன்று - (அவ்வன்னையின்) புத்திரனாகிய பரதனது குற்றமுமன்று; (பின்னை யாருடைய பிழையினால் இது விளைந்ததென்றால்), மைந்த-இளையவனே! விதியின் பிழை-ஊழ்வினை யின் குற்றமேயாம்; இதற்கு-இதன்பொருட்டு, நீ—, வெகுண்டது - சினங் கொண்டது, என்னை-ஏன்?' என்றான்-என்று (இராமபிரான்) கூறினான்.

'ஊழ்வினையால் யான் முடிதுறந்து காட்டிற்குச் செல்லுமாறு நேர்ந் ததே தவிர,தந்தையார் முதலியோரிடத்து யாதுங் குற்றமில்லை;ஊழைவெல் லுதல் எவ்வளவு வலியுடையோர்க்கும் கூடாமையால், நீ வெகுண்டு யாது பயன்?' என்றுகூறி, இராமன் இலக்குமணனைச் சமாதானப்படுத்தப் பார்த் தனனென்க; உவமையணி. இதனால், அரசன் முதலியோரிடத்துக் குற் றங்கூறலாகாதெனத் தெளிவித்தவாறு. கைகேயியை 'பயந்து நமைப்புரந் தாள்' என்றது-அவள் நமக்குப் பிழைபுரியாளென்ற கருத்தை விளக்குதற்கு: **கருத்துடையடைகோளியணி.** பி-ம்:—[1]பெயல். [2]நந்தம். [3]புரந்தார், புரந் தான். [4]மைந்தா. [5]என்கொல். [6]வெருண்டது. (௩௩௧)

**கா௩௫.—இலக்குமணன் விதிக்கும் விதியாவே னெனல்.**

உதிக்கும் முலையுள்[1]ளுறு தீயென வூதை பொங்கக்
கொதிக்கும் மனமெங்ஙன [2]மாற்றுவென் கோ[3]ளி ழைத்தாண்
மதிக்கும் [4]மதியாய்முதல் [5]வானவர்க் கும்[6]வ லீஇதாம்
விதிக்கும் [7]விதியாகுமென் விற்றொழில் [8]காண்டி யென்றான்.

(இ-ள்.) (அங்ஙனம் இராமன் கூறியதற்கு இலக்குமணன்),—உதிக்கும் உலையுள் உறு தீ என - பருத்த உலைக்களத்துள்ளே பொருந்திய தீப்போல, ஊதை பொங்க-பெருமூச்சு (மிக்கவெப்பத்தோடு) பொங்கிவெளிவர, 'கொதி க்கும் மனம்-வெம்புகின்ற மனத்தை, எங்ஙனம் ஆற்றுவென் - எப்படி தணி யச்செய்வேன்? கோள் இழைத்தாள் மதிக்குஉம் மதிஆய் - (பட்டாபிஷேகத் திற்கு) இடையூறு செய்தவளாகிய கைகேயியின் அறிவுக்கும் அறிவூமூட்டுவ தாய், முதல் வானவர்க்குஉம் வலீஇது ஆம்-முதல்மூர்த்திகளாகிய திரிமூர்த் திகளின் வலிமைக்கும் அடங்காது மிக்குவலிமையுடையதாகிய, விதிக்குஉம்

*விதி ஆகும் என் வில் தொழில்*-(எல்லாரையும் வெல்லும்வலிமையையுடைய) ஊழ்வினையையும் வெல்லும் ஒரு ஊழ்வினைபோன்றுள்ள என் வில்லின் செயலை, *காண்டி* - காண்பாயாக,' *என்றான்* - என்று மறுமொழி கூறினன்; (எ - று.)

'ஊழ்வினையால் நேர்ந்ததற்கு நீ வெகுள்வது தகாது' என்று இராமன் கூறியது கேட்ட இலக்குமணன், மிகவும் வெப்பமாகப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு, 'சுவாமி! விதி என்வில்லின் வலிமைக்கு முன்னே என்செய்ய மாட்டும்? என் சினமோ தணிவதாயில்லை; கைகேயியின்கருத்தை முற்றுவிக்கும்படி திரிமூர்த்திகளே வந்தாலும் அவர்களையும் தோற்கடித்து, தனது சூழ்ச்சியினால் உமது பட்டாபிஷேகத்துக்குத் தடைசெய்தஅவளுக்குப் புத்தியுண்டாக்குவேன்: விதிக்கும் ஓர் விதிபோல்வதாகும் என் வில்லின்வலிமை; இது கொண்டு உமது பட்டாபிஷேகத்தை நிறைவேற்றிவைப்பேன்: இதைப் பாரும்' என்றானென்பதாம். 'விதிக்கும் விதியாகுமென் விற்றொழில்காண்டி' என்று கூறுவதனால், ஊழை ஓரிலட்சியமாகக்கொள்ளாமல் முயற்சியே வலிதென்ற கொள்கையினன் இலக்குமணனென்பது, பெறப்படும். விதிக்கும் விதி-"காலகாலன்" என்றாற்போலக்கொள்க. விதி தான் வலிதாய் யாவரையும் வெல்லும் வல்லமையுள்ளது; அவ்விதியினும் வலிதாய் அதன்செயலைப் பலிக்கவொட்டாது செய்யும் வல்லமை என் வில்லுக்கு உண்டு என்பது, 'விதிக்கும் விதியாகுமென்வில்' என்பதன் கருத்து. உலையில் உதிக்கும் தீ என இயைப்பினுமாம். ஊதை - காற்று. பொங்க என்றான் என: பொங்கக் கொதிக்கும் எனக் கூட்டுவாருமுளர். மனத்துயர்க்கு உலையுள்ளுறுதீ உவமை என்றாருமுளர். கோளிழைத்தாள் - மந்தரையென்பாருமுளர். முதல்வானவர் - முதன்மைபெற்ற வானவர்: முதல்வராகிய மும்மூர்த்திகள். வலீஇது=வலிது: செய்யுளோசைநிறைக்கவந்த உயிரளபெடை.

பி-ம்:—[1]எழு. [2]ஆறுமிக். [3]இழைத்தான். [4]மதியா. [5]வானவரும். [6]மற்றும். மற்றை. [7]விதியாமென. [8]காண்டிரென்றான், காண்டிவீர. (௩௯௨)

**௧௩௬.—இராமன் இலக்குமணனை நோக்கித் தந்தையார்மீது சினங்கொள்ளுதல் தகாதெனல்.**

[1]ஆய்தந்தவ னவ்வுரை கூறலு [2]மைய நின்றன்
[3]வாய்தந் தன [4]கூறு தியோமறை [5]தந்த [6]நாவா
னீதந்த தன்றே நெறியோர்க [7]ணிலாத தின்ற
[8]தாய்தந்தை யென்றா லவர்மேற் சலிக்கின்ற [9]தென்னே.

(இ-ள்.) *அவன்*-லக்ஷ்மணன், *ஆய்தந்து*-ஆராய்ந்து, *அ உரை கூறலும்*-அந்தவார்த்தையைச் சொன்ன வளவிலே,—(இராமன் இலக்குமணனை நோக்கி),—'*ஐய*-தம்பி! *மறை தந்த நாவால்* - வேதங்களின் பொருளையறிந்த (உன்)வாயினால், *நின் தன் வாய் தந்தன*-உன்வாயில்வந்தவைகளை, *கூறுதியோ*-சொல்லுகின்றாயோ? *நீ தந்தது* - நீ (இப்போது) சொன்ன தொழில்,

நெறியோர்கண் - நன்னெறியைக் கடைப்பிடித்து நடப்பவரிடத்தில், நிலாதது அன்றே—நிலவாத செயலல்லவா? (உனது விருப்பத்திற்குமாறாகநடப்பவர்), ஈன்ற தாய் தந்தை என்றால் - பெற்றதாயுந் தந்தையும் (ஆவர்) என்றால், அவர்மேல்-அவரிடத்தில், சலிக்கின்றது - கோபிப்பது, என்னே - எவ்வாறே?' (என்றான், ஸ்ரீராமன்); (எ - று.)

வேதத்தைக் கற்றுணர்ந்த நீ அவ்வாயால் வேதநெறிக்குமாறாகச் சொல்லுதல் தக்கதோ? நீ இப்போது சொல்வது, நன்னெறியோர் மேற்கொண்ட ஒழுக்கமல்லவே. தாய்தந்தையர் நம்மனத்துக்கு மாறாக நடப்பவரென்றால், அவரிடத்துப் பொறுமையைக் காட்டாது க்ஷத்திரியதருமத்தைக் காட்டுதல் தக்கதோ? என்று இராமபிரான் இலக்குமணனைநோக்கிக் கூறினானென்க. ஆய்தந்தவன் - ஒருசொல்லுமாம். மறைதந்த நாவால் சொல்லுதியோ - இப்போது நீ சொல்லும் பேச்சு வைதிகன்சொல்லுமதல்ல: அவைதிகமென்றபடி. நெறியோர் கண் இலாதது எனவும் பிரிக்கலாம்.பி-ம்:—[1]ஆய்தந்தனன். [2]ஐயனின்றான்,ஐயநின்றான். [3]வாய்தந்தது. [4]சொல்லுதியோ. [5]தந்து. [6]நாவாய். [7]இனத்தினின்று, அனைத்துமீன்ற, இனிதுநின்ற. [8]தாய்தந்தையரென்றிவர்மேல். [9]என்றான். (௧௩௬)

**௧௩௭.—இலக்குமணன் இராமனைநோக்கித் தான்மேற்கொண்ட செயலைச் செய்தே தீருவேனெனல்.**

நற்றா தையுநீ தனிநாயக னீவ யிற்றிற்
பெற்றாயு [1]நீயே பிறரில்லை பிறர்க்கு நல்கக்
கற்றாய் [2]யிதுகாணுதி யின்றெனக் [3]கைம்ம றித்தான்
முற்றா மதியம் மிலைந்தான் [4]முனிந்தானை [5]யன்னான்.

(இ-ள்.) முனிந்தான் - கோபித்தவனாகிய, முற்றா மதியம் மிலைந்தானை - (கலைகள்)நிரம்பாத இளம்பிறையைத் தலையிலணிந்த உருத்திரனை, அன்னான் - ஒத்தவனாகிய இலக்குமணன்,—(இராமனைநோக்கி), 'பிறர்க்கு நல்க கற்றாய் - (உனக்கேயுரியபொருள்களை)அயலார்க்குத் தானஞ்செய்யக் கற்றவனே! நல் தாதைஉம் நீ - சிறந்த தந்தையாவானும் நீயே; தனி நாயகன் நீ - ஒப்பற்ற தலைவனும் நீயே; வயிற்றில் பெற்றாய்உம் நீஏ - வயிற்றிலே (பத்துமாதங் கொண்டிருந்து பிறகு) பெற்றதாயாகுவாயும் நீயே; பிறர் இல்லை - (எனக்கு) வேறொருவருமில்லை; இன்று இது காணுதி - இப்போது (யான்) காட்டப்போகின்ற வில்லின்செயலைக் காண்பாயாக,' என-என்றுசொல்லி, கைமறித்தான் - (தன்) கையை மேலேதொழில்செய்யும்படி யசைத்தான்; (எ - று.)

எனக்குத் தந்தை முதலியோர் நீரேயாதலால் உமக்குத்தீமைசெய்யக் கருதிய கைகேயிமுதலியோரையும் பெற்றோரென மதியாது என்வில்லின் வலியைக் காட்டி, 'உமக்கு இவ்விராச்சியத்திற் பட்டாபிஷேகஞ்செய்தே தீருவேன்' என்று இலக்குமணன் தன் மனவுறுதியைக் கூறினானென்ப

தாம். கைம்மறித்தான் - அவன்வார்த்தையைத் தடுத்துக்கூறினு னென்று மாம். தயரதர் நற்றாதையல்லரென்பான் 'நற்றாதைநீ' என்றான். பெற்றாய் - பெற்றஆய் என்பதன் விகாரமுமாம். 'முனிந்தான் மதியம் மிலைந்தான்' எனவே, பிரளயகாலருத்திர னென்றவாறு. தாதைநீ நாயகன்நீ - முன்னிலை யிற் படர்க்கைவந்த இடவழுவமைதிகள். முனிந்தான் மிலைந்தானை - உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. முற்றாமதியம் - பிறைச்சந்திரன். மதிக்கப்படுவ தென்றாவது, மதுவை [அமுதத்தை] யுடையதென்றாவது, 'மதி' என்ற சொல்லுக்குக் காரணப்பொருளுரைப்பர். இனி,இச்செய்யுட்கு—அன்னான்- அந்த இராமபிரான்,—முற்றாமதியம் மிலைந்தான்முனிந்தானை - இளம்பிறைச் சந்திரனை முடியிற்சூடிய சிவபிரானைப்போன்றவனாய்ச் சினங்கொண்டிருந்த இலக்குமணனைப்பார்த்து, 'நல்தாதைஉம்நீ - சிறந்த தந்தையாவானும் நீயே; தனிநாயகன்நீ - ஒப்பற்ற தலைவனும்நீயே; வயிற்றில்பெற்றாய்உம்நீயே - (பத்துமாதகாலம்)வயிற்றிற்கொண்டிருந்து பெற்ற தாயும் நீயே;பிறர் இல்லை- (எனக்குப்)பிறர் இல்லை; பிறர்க்கு நல்க கற்றாய் - (முறைக்கேடான செயலைப் பிறர் நிகழ்த்தியபோது) அந்தப்பிறர்க்கு உபதேசிக்கக்கற்றவனே! இன்று இது காணுதி - இப்போது யான்சொல்லுகின்ற இதை (நன்மையாகக்) கொள்வாய்,' என்று - என்றுசொல்லி, கைமறித்தான் - (வில்தொழில்செய் யும்படி இலக்குமணன் முயல்வதைத் தடுக்குமாறு) கைச்செய்கையால் தடுத் தான் என்று இராமன்கூறியதாக உரைப்பாருமுளர். கைம்மறித்தல் விலக்கு தற்குக் குறிப்பாதலை, "கைம்மறித்த காந்தளந்தோ தகாதெனவே" என்ற சிந்தாமணியடியாலும் அறிக. பி - ம்:—[1]நீ பிறரில்லை. [2]இவை காணுதி நீயென. [3]கட்டுரைத்தான். [4]முனிவேயும். [5]ஒத்தான். (௧௩௪)

கஙஅ.—இதுவும் அடுத்தகவியும்-இலட்சுமணன் சினந்தணியாமையால் மீண்டும் அவன் மனத்திற்பதியுமாறு இராமன் சினங்கொள்ளுதல் தகாததெனக் காட்டுதலைத் தெரிவிக்கும்.

வரதன் பகர்வான் வரம்பெற்றவ ளாணிவ் வையஞ்
சரதம் உடையா ளவளென்றனித் [1]தாதை செப்பப்
பரதன் பெறுவா [2]னினியான் படைக்கின்ற செல்வம்
விரதம் [3]மிதினல்லது வேறினி யாவ தென்றான்.

(இ - ள்.) வரதன் பகர்வான் - ஸ்ரீராமன் சொல்லத் தொடங்கினன், 'வரம்பெற்றவள் - (தான்சாரத்தியஞ்செய்து) வரத்தைப்பெற்றகைகேயி, தான்-, இ வையம் சரதம் உடையாள் - இவ்விராச்சியத்தை மெய்யாகக் கேட் டுப்பெறுதற்கு உரிமையுடையளாவாள்; அவள் - அந்தக்கைகேசி, என் தனி தாதை செப்ப - எனது ஒப்பற்ற தந்தை சொல்ல, பரதன் பெறுவான்-(அவ் விராச்சியத்தைப்) பரதன் கைக்கொள்வான்; இனி—, யான் படைக்கின்ற செல்வம்-நான் பெறுகின்ற ஐசுவரியம், விரதம் - தவம்; இதின் நல்லது-இத னினும் நல்லது, வேறுயாவது இனி-வேறே யாது இனிமேல்?' என்றான்—.

இதின் = இதனின்: அன்சாரியை தொக்கு நின்றது. இதனினும் நல்லது வேறில்லையென்க. பி-ம்:—[1]தாயரன்றே. [2]நனி. [3]இதுநல்லதுவேறினி, இதன்மேலெனக்கொல்வது. (௬௩௫)

௬௩௬. ஆன்றான் [1]பகர்வான் [2]பினு மைய[3]விவ் வைய மையற்
றோன்றா நெறி[4]வாழ் துணைத்தம் பியைப்போர் தொலைத்தோ
சான்றோர் [5]புகழுந் தவத்தாதையை [6]வாகை கொண்டோ
வீன்றாளை வென்றோ வினியிக்கதந் தீர்வ தென்றான்.

(இ - ள்.) ஆன்றான்-ஸ்ரீராமன், பின்உம் பகர்வான்-பின்னுஞ் சொல்லத் தொடங்குபவனாகி, 'ஐய - தம்பீ! இ வையம் - இவ்வுலகத்தில், மையல் தோன்றா நெறி வாழ் - மயக்க மில்லாத சன்மார்க்கத்தில் வாழுகின்ற, துணை தம்பியை-துணையாகிய உடன்பிறந்தவனை, போர் தொலைத்துஓ - யுத்தத்தில் வென்றபின்போ, சான்றோர் புகழும்-பெரியவர் புகழ்கின்ற, தவம் தாதையை-பாக்கியத்தினையுடைய தந்தையை, வாகை கொண்டுஓ-வெற்றிகொண்ட பின்போ, ஈன்றாளை வென்றுஓ-பெற்றதாயைச் செயித்தபின்போ, இனி—, இ கதம் தீர்வது - இக்கோபம் நீங்குவது?' என்றான்—; (எ - று.)

எவ்வளவு சொல்லியும் இலட்சுமணன் தன் சினந்தணியாதது கண்டு, 'இராச்சியம்பெறும் பரதனைப் போரில் வென்றா? அல்லது, அவனுக்கு இராச்சியத்தைவரமாகஅளித்த தந்தையாரைப் போரில்வென்றா? அன்றி, வரம்கேட்டுப்பெற்ற கைகேயியைப் போருக்கு இழுத்து அவளைச்சயித்தா? என்ன செய்து நீ சினந்தணியப் போகிறாய்?' என்று இராமன் வினாவினனென்க. இலட்சுமணன் சினத்துக்குக் காரணமாகி இலக்காகக்கூடியவர்-தம்பியர் முதலிய மூவரே யாதல்பற்றி, இங்ஙனம் கூறியதென்க. இதனால் உன்கோபத்துக்கு இலக்காகுமவரை யாராய்ந்தால் சினங்கொள்ள வழியில்லையென்று காட்டியவாறு. ஆன்றான்-நற்குண நற்செய்கை நிரம்பியவன்: பொறுமையுள்ளவன். பகைவென்றவர் வாகைசூடுவரென்பது தமிழ்நூல் மரபாதலின், வாகையென்றசொல் - இலக்கணையால், வெற்றியைக்காட்டிற்று. பி-ம்:—[1]புகல்வான். [2]பகர். [3]ஓரையமெய்யில், இவ்வையமெங்கும். [4]ஆள். [5]புகழ்நற்றனித்தாதையை. [6]வாதை. இசசெய்யுள் சிலபிரதிகளில் "நன்சொற்கடந்தான்" என்னும் ௧௪௬௪-ஆம் செய்யுளுக்குப்பின் காணப்படுகின்றது. (௬௩௬)

௧௪௦—இராமன்சொல்லைக் கேட்டு இலக்குமணன் வெறுத்துக்கொண்டு தன்கோபம் ஒழிதல்.

[1]செல்லுஞ்சொல் வல்லானெதிர் தம்பியுந் தெவ்வர் சொல்லுஞ்
சொல்லுஞ் சுமந்தே னிருதோளெனச் சோம்பி [2]யோங்குங்
கல்லுஞ் [3]சுமந்தேன் கணைப்புட்டிலுங் [4]கட்ட மைந்த
வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டென்னை யென்றான்.

(இ-ள்.) செல்லும் சொல் வல்லான் எதிர் - (காரியத்தைக்) கைகூட்டு விக்கும் பேச்சுகளைப் பேசுவதில் வல்லவனான இராமனுக்கு எதிராக, தம்பி உம் - இலக்குமணனும்,—'தெவ்வர் சொல்லும் சொல்உம் சுமந்தேன் - பகைவர் புகழ்ந்துகூறுகின்ற புகழ்ச்சொல்லைத் தாங்கியிருந்தவனாகிய யான், (இப்போது), இரு தோள் என சோம்பி ஓங்கும் கல் உம் சுமந்தேன் - இரண்டு தோள்கள் (உள்ளன)என்றுசொல்லும்படி பயனின்றிவளர்ந்துள்ளமலைகளையும் சுமந்துநிற்கின்றேன்; கணை புட்டில்உம் கட்டு அமைந்த வில்உம் சுமக்க பிறந்தேன் - அம்பறாத்தூணியையும் உறுதிபொருந்திய வில்லையும் (வீணே) சுமக்கப்பிறந்தேன்; வெகுண்டு என்னை - (யான்) கோபித்துப் பயன்யாது?' என்றான் - என்று (வெறுத்துக்) கூறினான்; (எ - று.)

இங்ஙனம் இராமபிரான் கடுமையாகக்கூறியதைக் கேட்டதும், இலக்குமணன், தான் சினந்து செய்யத்தொடங்கிய செயலை நிறுத்திவிட்டு, 'இது வரையில் பகைவா புகழப் பெருஞ்சிறப்போடிருந்த யான் இப்போது வேண்டாதார்கண்ணெதிரில் என்வலிமையைக் காட்டமாட்டாது சோம்பிக்கிடக்கும் படியாயிற்றே! எனது அம்பறாத்தூணியும், வில்லும், தோளுக்கும் கைக்குஞ் சுமையாயிருப்பனவேயன்றிப் பகைவரையழிக்க உதவுகின்றிலவே! எனது கோபந்தான் என்ன பயனை விளைத்தது?' என்று தான் இராமபிரான் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ஒன்றுஞ்செய்யமாட்டாது நிற்கும் நிலையைக் குறித்து வெறுத்துக்கூறுகின்றனனென்க. பகைவரையழிக்கமாட்டாது சோம்பிக் கிடக்கும் எனது தோள் கல்லுப்போல் அசைவற்றுக்கிடந்து உடற்குப்பாரமாய்ச்சுமக்கும்படியிருப்பதல்லது ஒருபயனையும் விளைக்கவில்லையென்பான், 'தோளெனச்சோம்பியோங்குங் கல்லுஞ் சுமந்தேன்' என்கிறான். எங்கும் பயனைத் தவறாதுவிளைக்குஞ் சொல்லென்பது, 'செல்லுஞ்சொல்' என்பதன் கருத்து. கணைப்புட்டில்-அம்புகளைவைப்பதற்குஉரிய தூணீரம். 'இருதோளெனசசோம்பி யோங்கும் கல்'-அவநுதியணி. பி-ம்:—[1]சொல்லும். [2]ஏங்கும். [3]சுமந்தொண்கணைப். [4]கட்டிமைந்த, கட்டமைத்த. (சாரு௭)

கசசக—இராமன் பின்னும் இலட்சுமணனைச் சமாதானப்படுத்துதல்.

[1]நன்சொற் கடந்தாண் டெனைநாளும் வளர்த்த [2]தாதை
தன்சொற் கடந்[3]தெற் கரசாள்வது தக்க [4]தன்றா
லென்சொற் கடந்தா லுனக் [5]கியாதுள தீன மென்றான்
தென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லை [6]தேர்ந்தான்.

(இ - ள்.) தென் சொல் கடந்தான்-(பரதகண்டத்தின்) தென்பகுதியில் வழங்கும் பாஷையாகிய தமிழ்மொழிக்கடலைத் தாண்டினவனும் [தென்மொழியை முற்றுமுணர்ந்தவனும்], வடசொல் கலைக்கு எல்லை தேர்ந்தான்-ஸம்ஸ்க்ருதமொழியிலுள்ள சாத்திரங்களையெல்லாம் நன்குஅறிந்தவனுமாகிய ஸ்ரீராமன்,—(இலக்குமணனை நோக்கி),—'நல் சொற்கள் தந்து-இனியமொழிகளைக்

ூறி, எனை ஆண்டு-என்னைப் பாதுகாத்து, நாள்உம் வளர்த்த-இந்நாள்வரை
ிலும் வளர்த்துவந்த, தாதைதன்-தந்தையினுடைய, சொல் கடந்து-சொல்லை
ீறி, அரசு ஆள்வது - இராச்சியத்தை அரசாட்சிபுரிவதை மேற்கொள்வது,
ற்கு-எனக்கு, தக்கது அன்று—; (அங்ஙனமே), என் சொல் கடந்தால்-என்
னுடையசொல்லை அவமதித்து மீறுவதானால், உனக்கு யாது உளது-உனக்கு
ன்ன நன்மையிருக்கின்றது? [ஒன்றும் இல்லை]; (என்சொல்லை மீறுவதென்
து), ஈனம்-(உனக்கு) இழிவையே தரும்,' என்றான்-என்று கூறினான்; (எ-று.)

'என்னை இந்நாள்வரையிலும் அன்போடு பாதுகாத்துவளர்த்த தந்தை
யாகிய தசரதசக்ரவர்த்தியின் சொல்லை நான் மீறுவது தகுதியோ? தகுதியா
காது; அதுபோலவே, என்சொல்லைக் கடப்பதும் நினக்குத்தகாது. அதனால்
ழியே விளையும்' என்று இராமன் கூறினனென்க. நன்சொற்கள் என்
து-பெற்றோர் தம்மக்களுக்குக் கற்றுக்கொடுக்கும் இன்சொற்களை. ஆண்டு
னைநாளும் என்பதற்கு - அனேகவருஷகாலமென்று உரைப்பாருமுளர்.
இனிமை மகிமை தொன்றுதொட்டுவருகை முதலிய பல தன்மைகளிலும்
தென்மொழியும் வடமொழியும் ஒப்பனவாமென்பதும், இராமபிரான் உணர்
ந்தபாஷையென்றே இத்தமிழ்மொழியிலும் கம்பர் மதிப்பும் அன்பும் உடைய
வரென்பதும் ஈற்றடியில் தொனிக்குமென்பர். தென்சொற்கடந்தான் என்
றதுபோல, வடசொற்கடந்தானென்னுமல் 'வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்
தான்' என்று மிகுத்துக்கூறியதனால், தென்மொழியினும் வடமொழியிற் கலை
கள் மிக்கிருத்தலால் அவையெல்லாவற்றினும் வல்லவன் இராமன் எனக்
கூறியவாறு மென்பர். இனி, ஈற்றடிக்கு—தென்மொழி வடமொழி என்ற
இரண்டிற்கும் எட்டாதவன் எனக் கருத்துக்கொள்வாருமுளர். இனி, மூன்
றாமடியினீற்றிலுள்ள என்றான் என்பதற்கு முற்றெச்சமாக 'என்று' எனப்
பொருள்கொண்டு, தென்சொற்கள் தந்தான் - இனிமையான சொற்களைப்
பேசினானென உரைத்தாருமுளர். தாதைதன்சொற்கடந் தெற்கரசாள்வது
தக்கதன்று'—"தந்தைசொன்மிக்கமந்திரமில்லை" என்பது ஔவைமொழி.
'ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம: [தமையன் தந்தையோடொப்பான்]' என்ப
வாதலால், தமையனாகிய என்மொழியைக்கடத்தலும் நினக்குத் தகாதென்
றான். சொற்கள் + தந்து = சொற்கடந்து. ஈனம்-ஹீநம்: கலை = கலா; வட
சொற்கள். இனி, இச்செய்யுள்-சாஸ்திரநிதிற்குக் கட்டுப்பட்டு நடக்கவேணு
மென்று கருதுகிற எனக்குத தந்தைசொல்லைமீறி அரசாள்வதுதகாது; எதற்
கும் கட்டுப்படாமலிருக்கிற உனக்கோ என்சொற்கேளாமல் விட்டால் என்ன
ஊனம்? ஒன்றுமில்லையென்று இராமபிரான் நிட்டூரமாகக் கூறினனென்று
கருத்துக் கொள்ளுதல் ஏற்கும். பி-ம்:—[1]வன். [2]மேலோன். [3]ஆண்டு. [4]என்
றால். [5]யாதுளதூற்றம், ஈனமதாகும், யானுளதூற்றம். [6]கண்டான். (௩௩அ)

**௧௪௨.—இராமன்மொழியால் இலக்குமணன் சினந் தணிந்துநிற்றல்.**

சீற்றந் துறந்தா னெதிர்நின்று தெரிந்து செப்பு
மாற்றந் துறந்தான் மறைநான்கென வாங்கல் [1]செல்லா
நாற்றெண் டிரைவேலை[2]யி னம்பிதனாணை யாலே
யேற்றந் தொடங்காக் கடலிற் றணிவெய்தி நின்றான்.

(இ - ள்.) சீற்றம் துறந்தான்-(அப்போது) கோபத்தை அடியோடு விட்டவனான இலக்குமணன்,—மறை நான்கு என - நான்குவேதங்கள் போல, எதிர்-(அவ்விராமபிரானது) எதிரே, நின்று—, தெரிந்து செப்பும் மாற்றம் துறந்தான்-ஆராய்ந்து சொல்லுகின்ற வார்த்தைகளைப் பேசாதவனாய்,-வேலையின் ஏற்றம் தொடங்கா - (கடவுளாணைக்குக் கட்டுப்பட்டுக்) கரையினின்று பொங்கிப்பெருகப்பெறாத, தெள் திரை-தெளிவான அலைகளையுடைய, நால் கடலின்-நான்கு கடல்களைப்போல, வாங்கல் செல்லா - மீறிநடக்கக்கூடாத தான, நம்பிதன் ஆணையால் - ஸ்ரீராமனது கட்டளையினால், தணிவு எய்தி நின்றான் - ஆறுதலடைந்தவனானான்; (எ - று.)

நாற்றிசையிலும் பூமியைச் சூழ்ந்துநிற்குங் கடல் கடவுளாணைக்கு அஞ்சிக் கரைமீறாது நிற்றல்போல, இராமபிரானுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இலக்குமணன் ஆறித் தன்கோபத்தை அடியோடுவிட்டு மறுமாற்ற மொன்றுஞ்சொல்லாது மௌனமாயிருந்தா னென்பதாம். எம்பெருமானது புகழைக் கூறத்தொடங்கி அவனுக்கு முன்னேநின்று அக்குணங்களைக் கூற முடியாதொழிந்த வேதம்-இராமனுக்குமுன்னேநின்று பேசமுடியாமற்போன இலக்குமணனுக்கும், கடவுளாணையால் கரைமீறாது அமைந்துநிற்கும் அலை பொங்குங் கடல்-இராமபிரானது மொழியினால் மரியாதைகடவாது பொங்குஞ் சினம் அடங்கிய பெருவலிபெற்ற இலக்குமணனுக்கும் ஏற்றஉவமையாம்; **உவமையணி.** எம்பெருமான் திருவாணையாலே கடல் வேலையைக் கடவாதிருக்கு மென்பதை "நெடுங்கடனிற்பதும் நாயிறுகாய்வதும் நிற்றலுங் கால், ஒடுங்கி நடப்பதுந் தண்கார்பொழிவதும் ஊழிதனில், சுடுங்கனல் பற்றிச் சுடாதேயிருப்பதுந் தும்பைபுனைந்து, அடுங்கனலாழியரங்கேசர்தந் திருவாணையினே" என்பதனாலும் அறியலாம். இனி, வேதத்திற்சொல்லிய விதியைக் கடத்தல் கூடாதென்பார் 'மறைநான்கென வாங்கல்செல்லா நம்பிதனாணை' என்றாரெனினுமாம்: இப்பொருளில், கடத்தற்குக்கூடாமையினால் இராமபிரானாணைக்கு மறைநான்கும் அவ்விராமபிரானாணையை மீறாதிருந்ததனால் இலக்குமணனுக்கு வேலையை மீறாதிருந்த கடலும் உவம மென்க. இனி, தணிவெய்திநின்ற இலக்குமணனுக்கே மறைநான்கு நாற்கடல் என்ற இரண்டும் உவமை எனக்கொள்ளுவது பொருந்துமாயிற் கொள்க. ஆணை-ஆஜ்ஞா: வடசொல்திரிந்து வந்தது. பி-ம்:—[1]சொல்லா. [2]இந்நம்பி. (௬௩௩)

**௧௬௩.—இராமன் சினந்தணிந்த இலக்குமணனை யழைத்துக்கொண்டு சுமித்திரைகோயிலைச் சேர்தல்.**

அன்னான் றனை யையனு மாதியொ டந்த[1]மென்று
தன்னாலு மளப்பருந் தானுந் தன் [2]பாங்கர் நின்ற
பொன்[3]மா னுரியானுந் தழீஇயெனப் புல்லிப் [4]பின்னைச்
சொன்மாண்புடை யன்னை சுமித்திரை கோயில் புக்கான்.

(இ - ள்.) ஐயன்உம்-ஸ்ரீராமனும்,—ஆதியொடு அந்தம் என்று-முதலும் ஈறும் (இவை) என்று, தன்னல்உம் அளப்ப அரு - தன்னாலும் வரையறுக்கக்கூடாத, தான்உம்-விஷ்ணுரூபியாகிய தானும், தன் பாங்கர் நின்ற - தன் பக்கத்திலிருந்த, பொன் மான் உரியான்உம் - பொன்னிறமான மான்தோலையுடைய சிவனும், தழீஇ என-கட்டியணைத்தாற்போல, அன்னான்தனை - அவ்விலக்குமணனை, புல்லி - தழுவி, பின்னை - பின்பு, சொல் மாண்பு உடை - சொல்லின் மாட்சிமையையுடைய, அன்னை சுமித்திரை-தாயாகிய சுமித்திராதேவியினது, கோயில் - மாளிகையை, புக்கான் - அடைந்தான்; (எ - று.)

'தன்னாலுமளப்பரு' எனவே, பிறரால் அளத்தற்கு அருமை சொல்ல வேண்டாதாயிற்று. விஷ்ணுவின் அவதாரமாதலால், 'தான்' என்றார். சிற்றத்திற்கும், சிறத்திற்கும் அடிமையாய்ச்சிற்றற்கும் இலக்குமணனுக்குச் சிவபெருமான் உவமை. "புரவல, னுசமற்றிவடன்னைபுமாற்றியிச், சோகந்தீர்ப்பவள்" என்று முன் கூறினதற்கேற்ப, 'சொன்மாண்புடையன்னை' என்றார்.

சுமந்திரனால் அழைக்கப்பட்டுக் கைகேயியும் தசரதனும் உள்ளஇடத்துக்கு இராமன் சென்றபோது லக்ஷ்மணனும் உடன்சென்றிருந்தானாதலாற் கைகேயி வனத்துக்குப்போகுமாறு சொன்னதை அப்போதேயுணர்ந்தானாய், பிறகு ஸ்ரீராமன் கோசலையாரிடத்துங் கானகஞ் செல்ல நேர்ந்திருப்பதைத் தெரிவித்தற்காகச் செல்கையில் அப்பிரானுடனேசென்று, அவ்விராமனாற் செய்தியுணர்ந்து கௌசலை வருந்துகையில் அவளை அவ்விலட்சுமணன் சமாதானப்படுத்தி, 'மன்னவன் பேச்சைக்கேட்கவேண்டியதில்லை' என்று இராமனிடங் கூற, ஸ்ரீராமன், 'நான் சத்தியந்தவறக்கூடாது: நீ இப்போது கொண்டுள்ள இந்தப்புத்தியை யொழிக' என்று கூறிவிட்டுக் கௌசலையை விடைதருமாறு பலவகை நியாயமெடுத்துக்காட்டவும், தம்பியும் தாயும் சம்மதப்படாமலிருந்ததனால் ஸ்ரீராமன் தன்மனவுறுதியைத் தெரிவித்து லக்ஷ்மணனுக்குக் கைகேயியினிடம் பொங்கிவருகின்ற கோபத்தை யடக்குமாறு விதியின் வல்லமையை யெடுத்துக்கூற, 'பௌருஷத்துக்குமுன் விதி என்னசெய்யமாட்டும்? நீ கட்டளையிட்டால் பூமிமுழுவதையும் உன்னதீனமாக்கிவிடுகிறேன்: நான் உன்னுடைய அடியவன்'என்று இளையபெருமாள் கண்ணீர்விட்டுச்சொல்ல, இராமன் அந்த லக்ஷ்மணனது கண்ணீரைத் துடைத்து, 'லக்ஷ்மண! மென்மையான தன்மையுடையஉனக்கு இப்படிப்பட்ட சினம் எவ்வாறு வந்தது? நான் தந்தையாரின் கட்டளையை எள்ளளவும் மீறமாட்டேன். வசனபரிபாலனமே சன்மார்க்கம்' என்றான். தன்புதல்வனுடைய மனவுறுதியைக்கண்டு கௌசலை கொண்டாடித் தன்மனததில் வருத்தம்மிகுந்தும் அடக்கிக்கொண்டு ஆசிகூறி யனுப்பினாள்; அங்கிருந்து செய்தி தெரிவித்தற்காகச் சீதையினிடம் சென்றானென்பது, ஸ்ரீவான்மீகத்திலுள்ள கதைப்போக்கு. சுமித்திரையின் கோயிலுக்கு ஸ்ரீராமன்சென்றதாக முதனூலிற்கூறப்பட்டிலது. பி-ம்:—[1]என்றும். [2]பாகம். [3]மானுமுழவுந்த. [4]பின்னர்ச், (சசO)

கசசச.—தண்டகவனத்திற்குச் செல்லச் சித்தமாயிருக்குந் தன்மக்களைக் கண்டு சுமித்திரை வருந்துதல்.

கண்டாண் மகனும் மகனுந்தன கண்கள்போல்வார்
[1]தண்டா வனஞ்[2]சார் வதற்கே சமைந்தார்க டம்மைப்
புண்டாங்கு [3]நெஞ்சத் தினளாய்ப் [4]படிமேற் புரண்டா
ளுண்டாய துன்பக் கடற்கெல்லை யுணர்ந்தி லாதாள்.

(இ - ள்.) (அச்சுமித்திரை),-தண்டாவனம் சார்வதற்குஎ-தண்டகாரணியத்திற்குப் போவதற்கே, சமைந்தார்கள் - நிச்சயித்தவர்களும், தன கண்கள் போல்வார் - தன்னுடைய இருகண்களை யொத்தவர்களுமாகிய, மகன்உம் மகன்உம் தம்மை-ஸ்ரீராமன் லக்ஷ்மணன் என்னும் இருவரையும், கண்டாள் - பார்த்து, புண் தாங்கு நெஞ்சத்தினள் ஆய் - புண்பட்ட மனமுடையவளாகி, உண்டாய துன்பம் கடற்கு - (புதிதாகத் தனக்கு) உண்டாகிய துன்பமாகிய சமுத்திரத்திற்கு, எல்லை உணர்ந்திலாதாள் - முடிவை அறியாதவளாய், படிமேல் புரண்டாள் - பூமியின்மேற் புரண்டழுதாள்; (எ - று.)

இன்றியமையாமைபற்றி, 'கண்கள்போல்வார்' என்றார். தண்டவனம் என்பது, தண்டாவனமென்று விகாரப்பட்டது. தண்டாவனமென்றபெயர்க்குக் காரணம் வருமாறு:—சூரியகுலத்து இட்சுவாகுமன்னவனுடைய குமாரர்களுள் கடைப்பட்டவனை தண்டனென்றும் தண்டகனென்றும் பெயர் கொண்டவன் விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன்னுட்சிக்கு உரியதாக்கி மதுமந்தமென்கிற பட்டணத்தை யமைத்து அரசு புரிந்து வருகையில், ஒருநாள் தனது புரோகிதனை சுக்கிராசாரியனது ஆச்சிரமத்துட்சென்று அவன்மகளாகிய அரஜையென்பாளைக் காதலித்து வலியக்கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த சுக்கிராசாரியன் சினந்து 'ஏழுநாள்களில் இவன் குடும்பத்தோடும் பரிவாரத்தோடும் அழிந்துபோக, இவனது நாடு மண்மாரியால் யாதொருஜந்துவுமில்லாமல் பாழாகக்கடவது' என்று சபிக்க, அங்ஙனமே பாழான அவ்விடம் காடாகிவிட்டதென்பது: தண்டகன் நாடு காடாயினமைபற்றி, தண்டகவனமென்று பெயர்பெற்றதென்க: தண்டனென்று பெயருண்மையால் தண்டவனமென்றுஞ் சொல்லப்படும். புண - ஈண்டுத் துன்பம். பி - ம்:—[1]தண்டார்வனம். [2]சேர்வதற்கே, செல்வதற்கே. [3]நெஞ்சத்தனள். [4]பொடிமேல்விழுந்தாள், புரண்டாள்படிமேல், புரண்டாள் பொடிம்மேல். (சசக)

கசருடு.—இராமன் தான் வனஞ்செல்லாதிருக்கமுடியா தென நிரூபித்துக்காட்டல்.

சோர்வாளை [1]யடித்தொழு தேத்தினன் றுன்ப மென்னு
மீர்வாளை [2]வாங்க டனந்தேற்றுதற் கேற்ற செய்வான்
போர்வா [3]ளரசர்க்கிறைப் பொய்த்தன னாக்க கில்லேன்
கார்[4]வா னெடுங்கானிறை [5]கண்டிங்ங் னீள்வெ னென்றான்.

(இ - ள்.) சோர்வாளை - (அங்ஙனந்தளர்கின்ற) அச்சுமித்திரையை, அடி தொழுது—, ஏத்தினன் - துதித்து, (பிறகு), துன்பம் என்னும் - (அவளது) துயரமென்கின்ற, ஈர் வாளை - அறுக்கின்ற வாளாயுதத்தை, வாங்க - கழலும்படி, மனம் தேற்றுதற்கு - மனத்தைத் தெளியப்பண்ணுதற்கு, ஏற்ற - தக்க காரியங்களை, செய்வான் - செய்பவனாய், (ஸ்ரீராமன்), போர் வாள் அரசர்க்கு இறை-யுத்தஞ்செய்வதில் வல்ல ஆயுதத்தையுடைய சக்ரவர்த்தியை, பொய்த்தனன் ஆக்ககில்லேன்-பொய்கூறினவனாகச் செய்யமாட்டுவேனல்லேன்; (ஆதலால்), கார் வான் நெடு கான்-கரியமேகந்தவழ்கின்ற பெரியகாட்டை, இறை கண்டு - சற்றுப்பார்த்திட்டு, இ நன் மீள்வென் - இங்கே திரும்புவேன்,' என்றான்—; (எ - று.)

தாம் கானகஞ்செல்லப்போவதை யுணர்ந்ததனால் தம்மைக் கண்டதும் வருந்தி மனம்புண்ணாகிப் பூமியிற்புரண்டு தளருஞ் சுமித்திரையை, ஸ்ரீராமன், அடிதொழுது துதித்து, அவளை ஒருவாறு துயராற்றத்தருதி, 'நம்முடைய அரசரைச சத்தியசந்தராக்கவேண்டுவது நமதுகடமை யாதலால், காட்டையடைந்து கடவநாளைக்கழித்து ஒருநொடியிற்போல் மீண்டுவருவேன்' என்றனனென்க. சோகத்தைத் தணிப்பிக்கவேணுமெ கருத்தினனாதலின், கானிறை கண்டிஙன் மீள்வெனென்றான். இஙன்-இங்ஙன்: விகாரம். பி-ம்:—[1]ஓடித் தொழுதேத்தினன். [2]வாங்கா, வாங்கி. [3]அரசன்னரசன். [4]வாழ்நெடுங். [5]கண்டுடன், கண்டுபின், கண்டனர். (௪௪௨)

கச௩.—வனஞ்செல்வதில் இராமன் தனக்கு வருத்தமில்லையெனல்.

கான்புக் கிடினுங் கடல்புக் கிடினுங் கலிப்பேர்
வான்புக் கிடினும்மெனக் கன்னவை மாண யோத்தி
யான்புக்க தொக்கும் மெனையார் நலிகிற்கு மீட்டா
ரூன்புக் குயிர்புக் [1]குணர்புக் குலையற்க வென்றான்.

(இ-ள்.) (என்றுபின்னும்), 'யான்—, கான் புக்கிடின்உம் - காட்டையடைந்தாலும், கடல் புக்கிடின்உம் - சமுத்திரத்தையடைந்தாலும், கலி பேர் வான் புக்கிடின்உம் - ஆரவாரத்தையும் பெருமையையுமுடைய தேவலோகத்தை யடைந்தாலும், எனக்கு—, அன்னவை-அவை, மாண் அயோத்தி புக்கது ஒக்கும்-மாட்சிமையுடைய அயோத்தியை யடைந்ததனை யொக்கும்; யார் எனை நலிகிற்கும் ஈட்டார்-யாவர் என்னை வருத்தும் வலியுடையவர்? ஊன் புக்கு-உடல்வற்றி, உயிர் புக்கு - உயிர் தளர்ந்து, உணர் புக்கு - அறிவு அழிந்து, உலையற்க-வருந்தாதொழிக,' என்றான்—; (எ - று.)

'எந்நிலையிலிருந்தாலும் மனத்தில் மாறுபாடுகொள்ளாமல் ஒரேதன்மையாய்நிற்பவனாதலால், எனக்கு அயோத்தியோடு கான்முதலியவற்றோடு வேறுபாடுஇல்லை; மேலும் எஙகும் பிறரால் ஒருதீங்கும் நணுகாதபடி காத்துக்கொள்ளும் வல்லமையும் எனக்குஉண்டு: ஆதலால், ஒருவராலும் எனக்குத் தீங்கேனும் வருத்தமேனும் செய்யமுடியாது. இந்த என்னிலையைமனததிற் கொண்டு வருந்தாதிருப்பீராக' என்று சுமத்திரையைத் தேற்றினன் இராம

னென்க. ஆகாசம் சப்தத்தைக் குணமாகவுடையதாதலால், 'கலிப்பேர்வான்' எனப்பட்டது: கலிப்பேர் என்னும் அடையைக் கடலுக்குங் கூட்டலாம். மாணயோத்தி, மாண் - பெருமை; அதாவது - முத்திதரும் நகரங்களேழில் முதன்மையாயிருத்தல். புக்குஎன்னுஞ்சொல்லுக்கு, சந்தர்ப்பத்திற்கேற்பப் பொருளுரைக்கப்பட்டது. உணா - முதனிலைத்தொழிற்பெயர். பி-ம்:— [1]உணர்வுக்கு. (௪௪௩)

**௧௪௭.—அந்தக் கைகேயியின்தோழியர் மரவுரிகொண்டுவருதல்.**

தா[1]யாற்று கிலாடனை யாற்றுகின் றார்க டம்பாற்
[2]றீயாற்று கின்றாரெனச் சிந்தையி னின்று தேற்ற
[3]நோயாற்று கில்லா வுயிர்[4]போல நுடங்கி டையார்
மாயாப் பழியாடர வற்கலை யேந்தி வந்தார்.

(இ - ள்.) தீ ஆற்றுகின்றார் என - தீயையவிப்பவர்போல, சிந்தையில் நின்று தேற்ற - (அந்தச்சுமித்திரையை அவள் கொண்ட) கவலையினின்று (தவிருமாறு) தேற்றிக்கொண்டிருக்கையில்,—தாய் ஆற்றுகிலாள்தனை - துயரந்தீராத தாயாகிய சுமித்திரையை, ஆற்றுகின்றார்கள் தம்பால் - அவ்வாறு தணிக்கின்ற அவ்விராமலக்ஷ்மணர்களிடத்தில்,-நோய் ஆற்றுகில்லா-நோவைப் பொறுக்கமாட்டாத, உயிர் போல-சீவன்போல, நுடங்கு இடையார் - துவளுகின்ற இடையையுடைய மாதர்கள், மாயா பழியாள் தர-அழியாதநிந்தையையுடைய கைகேயி கொடுக்க, வற்கலை ஏந்தி வந்தார் - மரவுரியையெடுத்துக் கொண்டுவந்தார்; (எ - று.)

முடிசூட்டற்குத் தடைசெய்தமையால், கவி 'மாயாப்பழியாள்' என்று கைகேயிக்கு ஒருபெயரிட்டார். [2]தீயாற்றுகிலாத்தனிச்சிந்தையினின்றுசெற்ற நோயாற்றுகில்லாவுயிர் என்ற பாடத்துக்கு - தீமையைப்பொறுத துணையில்லாதமனத்தோடு பொருந்திக் கோபமாகிய நோயைப் பொறுக்கமாட்டாத உயிர்களென்ன உரைத்து,சினமாகிய நோய் அறிவில்லாத தனித்த தம் மனத்து மூள அதனால் பொறுக்கமாட்டாமல் தவிக்கின்ற உயிரை இடைக்குஉவமை கூறியதென்க. பி-ம்:—[1]ஆற்றுகில்லாடனை, ஆற்றகிலாடனை. [2]தீயாற்றுகிலார்தனி. [3]நோயாற்றுகிலா, நோயாற்றகிலா. [4]போனுடங்குமிடையார்.

**௧௪௮.—கைகேயியின்சேடியர் தாம் மரவுரிகொணர்ந்தமையைத் தெரிவித்தல்.**

கார்வான மொப்பான்றனைக் [1]காண்டொறுங் காண்டொறும் [2]போய்
நீரா[3]யுகக் கண்ணினு நெஞ்சழி[4]கின்ற நீரார்
போரா விடர்ப்பட் டயலா[5]ருறுபீழை கண்டுந்
தீரா மனத்தாடர [6]வந்தன சீர மென்றார்.

(இ-ள்.) (கைகேயியனுப்பிய சேடிமார்கள்), கார் வானம் ஒப்பான்தனை-காளமேகத்தையொத்த ஸ்ரீராமனை, காண்தொறுஉம் காண்தொறுஉம் - பார்க்கும்போதெல்லாம், கண்ணின்உம் - கண்களினும்மேலாக, நீர்ஆய் போய் உக-நீராகக்கரைந்துருகும்படி, நெஞ்சு அழிகின்ற நீரார்-மனம்வருந்துகின்ற தன்மையுடையவராய்,—'பேரா இடர் பட்டு அயலார் உறு பீழை-நீங்காத துன்பத்திலகப்பட்டு அயலார்படுகின்ற பெருந்துன்பத்தை, கண்டுஉம்-பார்த்தும், தீரா - (இராமபிரானைக்காட்டுக்குஅனுப்புவதென்ற தன்கொள்கையினின்று) நீங்காத, மனத்தாள்-மனத்தை யுடையளான கைகேயி, தர-கொடுத்தனுப்ப, வந்தன-வந்தனவாகிய, சீரம் - மரவுரியாகும் (இவை), என்றார்—; (எ - று.)

மரவுரிகொணர்ந்த அச்சேடியர், தாம் கைகேயியின்சேடியராயிருந்தும் இராமபிரானைக் காணும்போதெல்லாம் நெஞ்சம்நீராய்க்கரைந்துருகக் கண்களினின்று சோகக்கண்ணீர் தாரைதாரையாகப்பெருக நின்று, 'கல்நெஞ்சளாகிய கைகேயி தந்த மரவுரியைக் கொணர்ந்தோம்' என்று செய்தி தெரிவித்தனரென்க. போய் - (சேடியர் இராமனிடஞ்) சென்று எனினுமாம். பீழை-பீடாஎன்ற வடசொல்லின் திரிபென்பர். சீரம் - தற்சமவடசொல். [2]பொய் என்று படிப்பாரு முளர். பி-ம்:—[1]கண்டொறுங்கண்டொறும். [3]உருகண்ணினும். [4]நின்ற. [5]உயா, உறும். [6]வந்தனுஞ்சீரை, வந்தனசீரை. (௩௪௫)

௧௪௬.—மரவுரியைக்காட்டுமாறு இலக்குமணன் கூறுதல்.

வாணித் தில [1]வெண் ணகை யார்தர வள்ள றம்பி
யாணர்த் திருநா [2]டிழப்பித்தவ ரீந்த வெல்லாம்
பூணப் [3]பிறந்தானு நின்றா[4]னவை போர்வி லோடுங்
காணப் பிறந்தேனு நின்றே[4]னவை [5]காட்டு மென்றான்.

(இ - ள்.) வாள் நித்திலம் வெள் நகையார் - ஒளியினையுடைய முத்துப்போலும் வெள்ளிய பற்களையுடைய சேடிமார், தர - மரவுரிகொணர,—வள்ளல் தம்பி-லக்ஷ்மணன், 'யாணர் திருநாடு இழப்பித்தவர்-புதுமையையுடைய அழகிய நாட்டை யிழக்கும்படிசெய்த அந்தக்கைகேயியார், ஈந்த எல்லாம் - கொடுத்தவையனைத்தையும், பூண பிறந்தான்உம்-அணியப்பிறந்த இராமனும், நின்றான்-(இதோ)நின்றான்; அவை-அவற்றை, போர் விலோடுஉம்-பொருதலைச்செய்கின்ற வில்லுடன் (இருந்து), காண பிறந்தேன்உம்-பார்க்கப்பிறந்த நானும், நின்றேன்—; அவை-அவற்றை, காட்டும்—,' என்றான்—; (எ - று.)

வள்ளல்தம்பி - இராமன்பின்னவன். நாட்டையிழப்பித்த பெரியவராதலின் அவர் எதையீந்தாலும் பூணவேண்டியதே அவர்க்குக் கீழ்ப்படிந்தவர்க்குக்கடமையென்பான், 'அவரீந்தவெல்லாம் பூணப்பிறந்தான்' என்றும், என் கையில் வில்லிருந்தும் பயன்படவில்லையே யென்ற மனத்தாங்கல்தோன்ற, 'போர்விலோடுங் காணப்பிறந்தேனும்' என்றுங் கூறுகின்றான். பி - ம்:—[1]வெண்ணகையார்களை, நன்னகையார்களை. [2]இழந்தீந்தவரீந்தது. [3]பிறந்தோனும். [4]அது. [5]காட்டுகென்றான். (௩௪௬)

## கஙூ௦—சீரையை வாங்கிக்கொண்டு இலக்குமணன் தாயைக் கானேக விடைகேட்டல்.

அன்னா [1]னவர்தந்தன வாதரத் தோடு மேந்தி
யின்னா விடர்[2]தீர்ந் துடனேகென வெம்பி ராட்டி
[3]சொன்னா லதுவே துணையாமெனத் [4]தூய நங்கை
பொன்னா ரடிமேற் பணிந்தா னவளும் [5]புகன்றாள்.

(இ - ள்.) அன்னான் - அவ்விலக்குமணன், — அவர் தந்தன - அச்சேடியரால் கொடுக்கப்பட்டமரவுரிகளை, ஆதரத்தோடும் ஏந்தி - அன்போடு பெற்றுக்கொண்டு, 'இன்னா இடர் தீர்ந்து - இனியதல்லாத துன்பம்நீங்கி, உடன் ஏகு - உடனே போவாயாக, என - என்று, எம் பிராட்டி-எமது தலைவியாகிய நீ, சொன்னால் - சொல்லின், அதுவே துணை ஆம்-அவ்விடையே சகாயமாகும்,' என-என்று, தூய நங்கை - தூய்மையையுடைய சுமித்திரையினது, பொன்ஆர் அடிமேல் - பொன்னாலாகிய ஆபரணங்கள்பொருந்திய திருவடிகளில், பணிந்தான் - வணங்கினான்; அவள்உம் புகன்றாள் - அவளுஞ் சொன்னாள்; (எ - று.)—சொல்லியதை மேலிரண்டு கவிகளிற் காண்க.

பிராட்டி - பிரான் என்பதன் பெண்பால். இக்கவிக்கு வேறுரைப்பாருமுளர். பி - ம்:—[1]வயினம்மடவாரவையங்கை நல்கி, வயினம்மடவாரவையங்கைநல்க. [2]தீர்த்தனே, தீர்த்தென்னே. [3]சொன்னாள், சொன்னான். [4]தூய் நகையாள். [5]புகல்வாள். (௬௬௭)

## கஙக.—இதுவும் அடுத்த கவியும் - சுமித்திரை இலக்குமணனுக்குச் சில உபதேசமொழிகளைக்கூறி விடையீதலைத் தெரிவிக்கும்.

ஆகாத தன்றா லுனக் கவ்வன [1]மிவ்வ யோத்தி
மாகாத [2]லிராமனம் மன்னவன் வைய மீந்தும்
போகா [3]வுயிர்த்தாயர்நம் [4]பூங்குழற் சீதை யென்றே
யேகா யினியிவ்வயி னிற்றலு மேத மென்றாள்.

(இ - ள்.) (சுமித்திரை இலக்குமணனைநோக்கி, '(அவ்வனம்), உனக்கு ஆகாதது அன்று - அந்தக்காடு நீ செல்லுதற்குத் தகாததன்று; (இராமனுடன் காட்டுக்குச்செல்லுதலே உனக்குத்தகுதி); அ வனம் - (நீ செல்லுகின்ற) அந்தவனம், இ அயோத்தி - இந்த அயோத்திமாநகர்: மா காதல் இராமன் - (உன்னிடத்தில் மிக்கஅன்பையுடைய) அவ்விராமபிரானே, நம் மன்னவன் - நம்முடைய தயரதமன்னனாவன்: நம் பூங் குழல் சீதை - பூவையணிந்த கூந்தலையுடைய நமது சீதையே, வையம் ஈந்துஉம் - (இராமன் பூமியைப்) பரதனுக்குக்) கொடுத்திட்டு (க்காட்டிற்கு) ச்சென்ற பின்பும், உயிர் போகா-பிராணனையிழவாத [உயிரைவைத்துக்கொண்டிருக்கின்ற], தாயர் - தாயாவள்,' என்றே - என்று கருதியவண்ணமே, ஏகாய் - (இராமனுடன்) செல்வாயாக;

இனி—, இ வயின் நிற்றல்உம் - இவ்விடத்தில் நிற்பதும், ஏதம் - குற்ற முடையதாகும்,' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)

'நீ இராமபிரானுடன் காட்டுக்குச்செல்லும்போது அயோத்தியையும் பெற்றோரையும் பிரிந்து செல்லவேண்டுமே! என்று கருதவேண்டா: இராம பிரானுடன் வசித்தலால், அவ்வனமே அயோத்திபோலும்; இராமனும் சீதை யுமே பெற்றோராவர்என்று இவ்வண்ணங்கருதி, இராமனுடன் செல்வாயாக: இனி, இங்குத் தாழ்த்தலுந் தகாது' என்றன ளென்பதாம். 'இராமனுள்ள விடம் அயோத்தி' என்பது,பழமொழி. 'அக் வனம் இவ்வயோத்தி' என்ற தொடரில், இராமபிரான் பிரிந்து செல்வதனால் இவ்வயோத்தியாநகரம் பாழ் பட்டுத் தண்டகாரணியம்போலாய்விடுமென்பதும், இராமபிரான் சென்று சேர்வதனால் இதுவரையிற் பாழ்பட்டிருந்த அவ்வனம் பலவளங்களும் நிரம் பிச் செழித்துக் குளிர்ந்து வாழ்தற்கு இனிய இடமாகுமென்பதும் பெறப் படும். அம் மன்னவன் என்றும் பிரிக்கலாம். இச்செய்யுளில் அயோத்தி யென்பதற்குப் பரமபதமென்றும், மாகாதலிராமன் அம்மன்னவன் என்ப தற்கு - இலக்குமி விரும்புகின்ற ஸ்ரீராமபிரான் அகாரத்தினாற் குறிக்கப்படு கின்ற இறைவனுவன் என்றும், நம்பூங்குழற்சீதை—, வையம் ஈந்தும் போகு ஆ உயிர்தாயர் - வையத்தை இராமன் ஈந்தபின்பும் அவனுடன்போகின்ற அந்த எல்லாவுயிர்க்குந் தாயாகிய திருமாமகளாவள் என்றும் விசேடவுரை வகுத்தலு முண்டு. "ராமம் தசரதம்வித்தி மாம்வித்தி ஜநகாத்மஜாம் - அயோத் யாமடவீம்வித்தி கச்ச தாத யதாஸுகம்,' என்ற வான்மீகத்தின் பொருளைக் கொண்டது இச்செய்யுள்: காட்டிற்குச்செல் என்று விதிக்கவேண்டியது முக்கியமாதலின், 'ஆகாததன்றாலுனக்கவ்வனம்' என்று இச்செய்யுளில் அது முதலிற்கூறப்பட்டதென்க. வான்மீகி அருளிய அந்தச்லோகத்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை யருளிச்செய்த விசேஷப்பொருள்களை இந்தப்பாட்டிற்கும் ஏற்றபெற்றி ஏற்றிக் கூறுவதுமுண்டு: அவை விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

சனகமகாராசன் வேள்விச்சாலை யமைப்பதற்காகப் பூமியை யுழுத பொழுது கலப்பையுழுபடைச்சாலில் அகப்பட்டவளாதலால், சீதை என்று திருநாமம்; ஸீதா - உழுபடைச்சால். அவ்வனம் என்றது - **மத்திமதீபமாய்,** முன்னின்ற ஆகாததன்று என்றதனோடும், பின்னின்ற இவ்வயோத்தி யென்பதனோடும் இயையும். பி ம்:—[1]அய்யசெய்ய. [2]மன்னன்னிவன்வையக மீந்துவானிற், மன்னன்னிவன்மாகடலாயவைப்பிற், மன்னனிவன்வையக மீந்துமெய்யிற், மன்னனிவன்வையக மீந்து வானம். [3]இருதாயரும். [4]யாமெ னிற். (௩௩௮)

கருஉ. பின்னும் பகர்வாண் மகனேயிவன் பின்[1]செ றம்பி
யென்னும் படியன் றடியாரினி லேவல் செய்தி
[2]மன்னுந் [3]நகர்க்கே யிவன் [4]வந்திடின்வாவ தன்றேல்
முன்னம் முடியென்றனள் [5]வார்விழி சோர நின்றாள்.

(இ - ள்.) பின்உம் - மீண்டும், பகர்வாள் - (சுமித்திரை இலக்குமணனுக்கு உறுதிமொழிகளைக்) கூறுபவளாய், (அவனைநோக்கி, 'மகனே—! இவன் பின் செல் - இவ்விராமபிரானுக்குப் பின்னேபோ; அங்ஙனம்செல்லுமிடத்து), தம்பி என்னும்படி அன்று - (பார்ப்பவர் இவன்) தம்பியென்னும்படியல்லாமல், அடியாரினில் - அடிமையாயிருப்பவரைப்போல், ஏவல் செய்தி - (அவ்விராமபிரான்) ஏவுந் தொழிலைச் செய்வாய்; இவன் - இவ்விராமன், மன்னும் நகர்க்கு ஏ - (பலவளங்களும்) பொருந்திய நகரத்துக்கு, வந்திடின் - மீண்டு வந்தால், வா - கூடவா; அது அன்றுஏல் - அப்படியல்லாமற் போனால், முன்னம் முடி - (அவனுக்கு) முன்னமே உயிரைத்துறந்துவிடு,' என்றனள் - என்றுசொல்லி, வார் விழி - (தனது) நீண்ட கண்களினின்று, சோர - (கண்ணீர்) பெருக, நின்றாள்—; (எ - று.)

'நீ இராமபிரானது பின்னேசெல்லும்பொழுது ஓர் அரசகுமாரனென்றும் இராமபிரானதுதம்பியென்றும் கண்டவர் நினைக்கும்படி பெருமிதங் கொண்டு செல்லாமல், அவ்விராமனுக்கு வேண்டிய குற்றேவல்செய்வதே உனக்கு அழகாகும். ஒருகால் அவ்விராமனுக்கு ஏதேனும் ஆபத்து வருமெனத் தோன்றினாலும் அதனைத் தடுக்குமாறு உன்னுயிரையும் நீ ஈதல் தகுதி' என்று தனது புதல்வனாகிய இலக்குமணனுக்கு உபதேசித்துச் சோகத்தினால் சுமித்திரை கண்ணீரைப் பெருக்கிநின்றனளென்பதாம். கண்ணிற்குப்புலனாகாத அருவப்பொருளாகிய அன்பைக் காட்டுதற்குக் கண்களினின்று நீர் சோரல் அறிகுறியாமென்க. இராமபிரானுக்கு ஆபத்து நேருமாயின் என்று கூறுதற்குக் கூசி, 'அதன்றேல்' என்றாள். மன்னும் நகர் - மனுசக்ரவர்த்தி முதல் சூரியகுலத்து மன்னவரால் தலைமுறை தலைமுறையாக அரசாண்டு வந்த நகரமெனினுமாம். பின்செல்தம்பி என்னும்படி - பின்னேசெல்லுகின்ற தம்பியென்னும்படி என்று உரைப்பினுமாம். பி - ம்:—[1]செல்வநம்பி. [2]மன்னன். [3]நகர்க்கீண்டிவன். [4]வந்திடில். [5]பான்முலை. (௬௬௯)

வேறு.

கடுரு.—இராமலட்சுமணரிருவரும் வணங்கிச் சுமித்திரையிடம் விடைபெற்று, மரவுரிதரித்து வெளியே செல்லுதல்.

இருவருந் தொழுதன ரிரண்டு கன்றொரீஇ
வெருவரு [1]மாவினிற் றாயும் விம்மினாள்
பொருவருங் [2]குமரரும் போயி னார்[3]புறந்
திருவரை[4]த் துகிலொரீஇச் [5]சீரை [6]சாத்தியே.

(இ - ள்.) இருவர்உம் - இராமலட்சுமணரிரண்டுபேரும், தொழுதனர் - (காட்டிற்குச்செல்லுமாறு விடைபெற்றுச் சுமித்திரையை) வணங்கினார்கள்; அப்பொழுது), தாய்உம் - சுமித்திரையும், இரண்டு கன்று ஒரீஇ - (தனது) இரண்டு கன்றுகளை விட்டுநீங்கி, வெருவரும் - (அந்நீக்கத்திற்கு) அஞ்சுகின்ற, ஆவினில் விம்மினாள் - பசுவைப்போல மனங்கலங்கிப் புலம்பினாள்;

பொருவு அரு குமரர்உம்-(தமக்கு)உவமையில்லாத அம்மைந்தரும்,திரு அரை துகில்-(தமது) அழகிய அரையில்தரித்த பட்டாடைகளை, ஒரீஇ-நீக்கி, சீரை சாத்தி - மரவுரியையுடுத்துக்கொண்டு, புறம் போயினர்-வெளியே சென்றார்.

தாம் காட்டுக்குப்போவதைத் தெரிவித்து விடைபெற்ற இராமலட்சுமணர் தொழுதபோது, அவர்களைப் பிரியவேணுமேயென்று கன்றைப்பிரியும் பசுப்போற் சுமித்திரை யஞ்சி வருந்தினளாக, அப்போது அவ்விருவரும் தமது திருவரையிற்சாத்திய பட்டாடைகளைக் களைந்து மரவுரிகளைத் தரித்துக்கொண்டு சுமித்திரையின் மாளிகையினின்று வெளியேபோயின ரென்க. இராமலக்குமணரைப் பிரியுஞ்சுமித்திரைக்கு, இருகன்றுகளை ஒருவும் ஆ உவமை. ஒரீஇ என்ற செய்தெனெச்சத்தை ஒருவஎன்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு எனக் கொள்ளினுமாம். பி - ம்:—[1]தாயென. [2]குமரனும்போயினன். [3]பொனின், புனை. [4]தனிஒரு. [5]சீரம். [6]சாத்தவே. (சஙo)

கநூச.—இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்: மரவுரிதரித்த இலக்குமணனைநோக்கி,இராமன்'இங்குத்தானேயிரு'என்றலைத்தெரிவிக்கும்.

> தான்புனை சீரையைத் [1]தம்பி [2]சாத்திடத்
> தேன்புனை தெரியலான் [3]செய்கை நோக்கினான்
> வான்[4]புனை யிசையினாய் [5]மறுக்கி லாதுநீ
> யான்[6]புக லினையதோ ருறுதி கேளெனா.

(இ - ள்.) தான் புனை சீரையை - தான் உடுத்துக்கொண்டதுபோன்ற மரவுரியை, தம்பி சாத்திட - லக்ஷ்மணனுமுடுத்துக்கொள்ள,—தேன் புனை தெரியலான் -வண்டுகள் மொய்க்கின்ற மாலையையணிந்த ஸ்ரீராமன், செய்கை நோக்கினான் - (அவனது) தொழிலைப்பார்த்து, 'வான் புனை இசையினாய் - தேவலோகத்தையும் அலங்கரிக்கின்ற கீர்த்தியையுடையவனே! யான் புகல் - நான் சொல்வதாகிய, இனையது ஓர் உறுதி-இந்தச்சிறந்ததாகிய ஒரு நல்வார்த்தையை, நீ மறுக்கிலாது கேள் - நீ மறுக்காமற் கேட்பாயாக,' எனா - என்று சொல்லி,—(எ - று.)—"என்றான்" என அடுத்த கவியில் முடிபு காண்க.

தேன்புனை தெரியல்-மதுப்பொருந்திய மாலையுமாம். பி-ம்:—[1]தானும். [2]சாத்துமத், சுற்றுமத, சுற்றும். [3]தெரிய. [4]புகழ், புரை. [5]மறுக்கலாது. [6]புகற்கையதோர், புகல்வினையதோர், புகறகையதோர். ஈற்றடி 'யான் புக லுறுதியைக் கேளென் றோதுவான்' என்று சிலபிரதியி லுள்ளது. (சஙக)

கநூநு. அன்னைய ரனைவரு மாழி வேந்தனு
முன்னைய ரல்லர்வெந் துயரின் மூழ்கினா
ரென்னையும் பிரிந்தன ரீடரு முவகை
யுன்னைநீ யென்பொருட் டுதவுவா யென்றான்.

(இ-ள்.) 'அன்னையர் அனைவர்உம்-தாயர் யாவரும், ஆழி வேந்தன்உம் - சக்ரவர்த்தியும், முன்னையர் அல்லர் - முன்னிருந்த நிலைமையரல்லர்; வெம்

துயரில் மூழ்கினார்-கொடிய துன்பத்தி லழுந்தினார்; என்னை உம் பிரிந்தனர்-; இடர் உறு வகை - (அவர்) துன்பமடையாதபடி, நீ—, என்பொருட்டு—, உன்னை உதவுவாய்-உன்னை (அவர்க்குத்) துணையாகச் செய்வாய்,’என்றான்-.

அன்னையர் - கோசலையும் சுமித்திரையும்: இனி, சக்ரவர்த்திக்கு முன் சொன்ன மூவர் தவிர அறுபதினாயிரமனைவிய ருண்டாதலின், அவரையெல் லாங் குறிக்க ‘அனைவரும்’ என்று னென்பாருமுளர். துயரின் மூழ்கினா ரென்பதற்குக் காரணங்கூறுவான் ‘என்னையும்பிரிந்தனர்’ என்றான். என் னையுமென்ற எச்சவும்மை, பரதசத்துருக்கனர்களைப் பிரிந்ததே யன்றி யென் றது குறித்து நின்றது: இனி, கைகேயியின் கொடுமைக்கு இலக்கானமையே யன்றி, அதன் பயனாக என்னையும் பிரிந்தனர் எனக் கொள்ளலுமொன்று. இனி, என்னைப்பிரிந்தனராய்த் துயரின் மூழ்கினார்; அவர் அவ்விடருறுவகை உன்னையுதவுவாயென்றுமாம். அன்றி, இடர் என்றது, இலக்குமணனைப் பிரிவதனா லுண்டாந் துன்பத்தை யென்றலுமாம். (௬௫௨)

௬௫௩—இதுமுதல் ஐந்துகவிகள் - இலக்குமணன் மறுமொழி.

ஆண்டகை யம்மொழி பகர [1]வன்பனுந்
தூண்டகு திரள்புயந் [2]துளங்கத் [3]துண்ணென
மீண்டதோ [4]ருயிரிடை [5]விம்ம விம்முவா
னீண்டுனக் கடியனேன் பிழைத்த தியா[6]தென்றான்.

(இ - ள்) ஆண் தகை - ஆண்மைக்குணம் நிறைந்த ஸ்ரீராமன், அ மொழி யகர-அவ்வார்த்தையைச் சொல்ல, அன்பன் உம்-(அவனிடத்துப்) பக்தியை யுடைய லக்ஷ்மணனும்,—தூண் தகு திரள் புயம் துளங்க - தூணினையொத்த திரண்டதோள்கள் நடுங்கும்படி, துண்ணென-அஞ்சி,—மீண்டது ஓர் உயிர்- திரும்பிவந்ததாகிய ஒருசீவன், இடை விம்ம - நடுவிலே கலங்கும்படி, விம்மு வான்-அழுபவனாய், ‘ஈண்டு - இப்பொழுது, உனக்கு-தேவரீர்பக்கல், அடிய னேன் - அடியேன், பிழைத்தது - தவறுசெய்தது, யாது—?’ என்றான்—.

நான் உன்திறத்து யாதும் பிழை செய்யாதிருக்கவும், உன்னைவிட்டுப் பிரிந்து என்னை வசிக்குமாறு சொல்வது என்னோ என்கிறான், இலக்கும ணன். தூண் - திரட்சிக்கும் நீட்சிக்கு முவமை. தகு - உவமவுருபு. ஸ்ரீராமன் வனஞ்செல்வதுகேட்டு மிகக்கலங்கிப்பின் ஒருவாறுதெளிந்துள்ள இலக்கும ணன்விம்முவதனால்‘மீண்டதோருயிரிடைவிம்மவிம்முவான்’என்றது. பி-ம்:— [1]ஐயனும். [2]துளங்கி. [3]திண்ணென. [4]உயிரொடும். [5]விம்மி. [6]எனா. (௬௫௩)

௬௫௪. நீருள வெனினுள [1]மீனு நீலமும்
பாருள வெனினுள [2]யாவும் [3]பார்ப்புறி
னாருள தனுவுளாய் நானுஞ் சீதையு
மாருள ரெனினுளெ [4]மருளு வாயென்றான்.

(இ - ள்.) நார் உள தனு உளாய் - நாணினையுடைய கோதண்டத்தை யுடையவனே! பார்ப்புறின் - யோசித்துப்பார்த்தால், நீர் உள எனின் - நீர் இருக்குமானால், மீன்உம் - மீன்களும், நீலம்உம் - கருங்குவளைகளும், உள - இருக்கின்றன; பார் உள எனின்-உலகங்களிருக்குமானால், யாஉம் - எல்லாச் சீவகோடிகளும், உள - இருக்கின்றன; (அதுபோல), நான்உம் சீதைஉம் - அடியேனும் பிராட்டியும், ஆர் உளர் எனின்-யாரிருந்தால், உளேம் - இருப் பவராவேம்? அருளுவாய்-சொல்வாயாக,' என்றான்—; (எ - று.)

நீருள்ளவிடத்து மீனும் நீர்ப்பூவாகிய நீலமும் இருப்பதுபோலவும், பாருள்ளவிடத்துப் பல்வேறு சீவராசிகளும் இருப்பதுபோலவும், நீயுள்ளவிட த்து நானும் சீதையும் இருப்போமேயன்றி, நாங்களிருவரும் நின்னைப்பிரிந்து உயிர்வாழோமென்றனன் இலட்சுமண னென்க. "ந ச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபிராகவ-முஹூர்த்தமபிஜீவாவோஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" என்ற ஸ்ரீவால்மீகிராமாயண ஸ்லோகத்தின் கருத்தைக் கொண்டது, இச் செய்யுள். நீரிலிருந்து எடுக்கப்பட்ட மீன் நீர்ப்பசையுள்ளமட்டுமே பிழைத் திருப்பதுபோல,உன்னைப்பிரிந்த சீதையேனும்நானேனும் விரைவிற்கூடுவோ மென்ற கருத்து இருக்கும்வரையில்தான் பிழைத்திருப்போமே யன்றி அஃது அற்றால் உயிரோடிரோம் என்று இந்த ஸ்லோகத்துக்கு விசேஷப்பொருளு ரைப்பது,கவனித்தற்குஉரியது.நீரை உண்டென்னாது, உளவென்றல் "தகுதி யும்வழக்குந் தழீஇயினவொழுகும்,பகுதிக்கிளவி வரைநிலையிலவே"என்னுஞ் சூத்திரத்தானமைந்தது. அருளுவாய் என்பதற்கு உடன்வரும்படி கிருபை செய்வாயென்று முரைக்கலாம். பி-ம்:—[1]மீனினீடுயிர், மீனுமியாவையும், மீனுமாமையும். [2]பாரம், பார்ப்பு. [3]பொற்புற. [4]அருளுநீ. (௩௫௪)

௩௫௫. பைந்தொடி யொருத்திசொற் கொண்டு பார்மக
ளைந்துயிர் [1]நடுங்கவு நடத்தி கானெனு
வுய்ந்தன னிருந்தன னுண்மை காவலன்
மைந்தனென் றினையசொல் வழங்கி னையெனு.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) 'பைந் தொடி ஒருத்தி சொல் கொண்டு-பசும்பொன்னாலாகிய வளையல்களையணிந்த ஒருமனைவியினதுவார்த்தையால், பார்மகள்-பூமிப்பிரா ட்டி, நைந்து-வாடி, உயிர் நடுங்க—,கான் நடத்தி-காட்டிற்குச் செல்வாயாக, எனு உம்-என்று ஏவியும், உய்ந்தனன் இருந்தனன் - பிழைத்திருந்தவனாகிய, உண்மை காவலன் - மெய்யைக்காப்பவனான சக்ரவர்த்தியினது, மைந்தன் என்று - மகனென்று(என்னைஎண்ணியோ), இனைய சொல்-இத்தகையவார்த் தையை, வழங்கினாய் - சொன்னாய்?' எனு - என்றுசொல்லாநின்று,—(எ-று.)

தந்தைபோல்வான் தநயனாதலின், அச்சக்ரவர்த்திமகனாகிய யான் அவர் போலவே உன்னைப் பிரிந்திருந்துஉயிர்வாழ்வேனென்று கருதியோ இங்ங னங்கூறினாய்? என்றனனென்க. இச்செய்யுளின் கருத்தை "நின்கட்பரிவில்

லவர்" (௧௩௧) என்று இப்படலத்திற் கீழ்வந்த செய்யுளோடு ஒப்பிட்டுஅறிக. இனி இச்செய்யுட்கு-உன்னைக்காட்டுக்கு அனுப்பியும் உயிர்நீங்காத தசரதனது குமாரன் நீ என்றதற்குஏற்ப நீ இங்கேதானேயிரு என்று கொடிய சொல்வழங்கிறுயென்றுஉரைப்பது, சிறவாது. பி-ம்:—[1]ஒடுங்கவும். (௬௫௫)

௧௫௬. மாறினி யென்னைநீ வனங்கொள் வாயென
வேறின [1]வெகுளியை யாது [2]முற்றுற
வாறினை தவிர்கென வைய வாணையிற்
கூறிய மொழியினுங் [3]கொடிய தாமென்றான்.

(இ - ள்.) 'ஐய-சுவாமி! நீ வனம் கொள்வாய் என-நீ காட்டிற்புகுவாயென்று, ஏறின வெகுளியை-(யான்) கொண்ட கோபத்தை, 'யாதுஉம் முற்றுஉற-சிறிதுமில்லாதபடிஒழிய, ஆறினை-தணிந்தவனுய், இனி—, தவிர்க-நீங்குக',என-என்று, ஆணையின்-ஏவலாக, என்னை-என்னைக்குறித்து,மாறு-பிரதியாக, கூறிய—, மொழியின்உம்-வார்த்தையினும், கொடியது ஆம்-(நீ இங்கே தானேயிரு என்ற இச்சொல்) கொடுமையையுடையதாகும்,' என்றான்—.

உன்னைக் காட்டுக்குச்செல்லுமாறு விடுத்தற்காக யான் சினங்கொண்ட போது கோபத்தைத் தணியுமாறு என்னைக்குறித்துக் கூறிய சொல்லினும் நீ இங்குத்தானேயிரு என்றுசொல்லிய இச்சொல் மிகக் கொடியதாயுள்ளதென்றனனென்க. கோபமாறினுலும் உனக்குப்பணிவிடைசெய்துகொண்டு உடன் உறையலா மென்று கருதுதற்காவது வழியிருந்தது: இப்போது அங்ஙனங் கருதுதற்கும் இச்சொல் இடம் தராததனுற் கொடிதாகுமென்றன னென்க. முதலடிக்கு-நீ என்னை வனம்வருவா யென்பதுதோன்ற இருந்திட்டு, இப்போதாக மாறுதலையடைய என்ன காரணம்? எனக் கூறலாம். நான் உடன் வருதற்கு முன்னமேயிசைந்திருந்து இப்போது வேண்டாமென்கிறாயே என்ற பொருள்கொண்டதாய், ஸ்ரீவான்மீகிராமாயணத்தில் இலக்குமணன் கூற்றாக "அநுஜ்ஞாதஸ்ச பவதா பூர்வமேவ யதோஸ்ம்யஹம்-கிமிதாநீம் புநரிதம் க்ரியதே மேநிவாரணம் (௩௧,௭)"என்று வருவதும், "மகனும்மகனுந் தனகண்கள் போல்வார், தண்டாவனஞ் செல்வதற்கே சமைந்தார்"என்று கீழ்வந்த ௧௬௯-ஆஞ்செய்யுளும் இவ்வாறு பொருள்கொள்ளுதற் கேற்கு மென்பதை வலியுறுத்தும். பி-ம்:—[1]வெகுளித்தீ. [2]முற்றுறாது, இற்றிற, இற்றிராது. [3]கொடிதாம், கொடிதிதால். இச்செய்யுளை "மாறினை யென்னைநீ வனம் வரேலென, வேறியவெகுளி மற்றியாதிப்பார்வள, ஆறினைதவிர்கென வையனுணையிற், கூறியமொழியினுங் கொடியதாமென்றார்" என்று ஒதினுரும் உளர். இச்செய்யுள் சில பிரதியிலில்லை. (௬௫௬)

௧௫௦. [1]செய்துடைச் செல்வமோ யாதுந் தீர்ந்[2]தெமைக்
கைதுடைத் தேகவுங் கடவை யோவையா
நெய்துடைத் [3]தடையலர் நேய மாதர்கண்
மைதுடைத் துறைபுகும் [4]வயங்கொள் [5]வேலினாய்.

(இ - ள்.) நெய் துடைத்து-நெய் பூசப்பட்டு, அடையலர்-சத்துருக்களு டைய, நேயம் மாதர் - விருப்பத்தினையுடைய மனைவியரது, கண் - கண்களி லிட்ட, மை - அஞ்சனத்தை, துடைத்து - அழித்து, உறை புகும்-உறையை யடைகின்ற, வயம் கொள் வேலினாய் - வெற்றியைக்கொள்கின்ற வேலினை யுடையவனே! ஐயா - தலைவனே! (நீ), செய்து உடை செல்வம்ஓ யாதுஉம் தீர்ந்து - உனக்குரித்தாகவுடைய பாக்கிய மெல்லாவற்றையும் நீங்கி, எமை உம் - எம்மையும், கைதுடைத்து - கைவிட்டு, ஏக கடவைஓ - (காட்டிற்குப்) போகக்கடவாயோ? (என்றும் இலட்சுமணன் இராமனைநோக்கிக்கூறினான்).

செல்வம் ஈட்டுதற்குஉரிய தாதலின் 'செய்துடைச்செல்வம்' என்றான்: இனி,பரசுராமனை வென்றதுகண்டு தசரதமன்னவன்முதலியோர் இவனுக்கு அரசு தகு மென்று நினைத்துள்ளாரென்பது "வடிமழுவாளவற்கடந்த மைந் தற்கு, முடிபுனைமுதன்மைநாண் மொழியின்," "சேவகன் சேவகஞ்செகுத்த சேவகற், காவலிவ்வுலகம்" என்பவற்றால் விளங்குவதுபற்றி, செய்துடைச் செல்வம் என்பதற்கு - தன் வீரத்தாற் சம்பாதிக்கப்பட்டதாகவுடைய அரசச் செல்வம் என்று உரைத்தலுந் தகும். செல்வத்தைக்கைவிட்டுக் கானகஞ் செல்லுமாறு மன்னவ னேவியதுபற்றி, உன்னுடைமையான என்னையுங் கைவிட்டுச் செல்லவேண்டுவது கடமையெனக் கருதுகின்றாயோ? என்ற னன் இலக்குமண னென்க. கைதுடைத்தல் - இலக்கணையால், அறவே விட்டிடுதல் என்ற பொருளைக் காட்டிற்று. பி - ம்:—[1]செய்திடை. [2]எனை. [3]அடையலார். [4]மறம். [5]வாளினாய். (சகூஎ)

### ௧௬௩.—இராமன் மறுமொழி சொல்லமாட்டாதிருத்தல்.

உரைத்தபின் னிராமனொன் றுரைக்க [1]நேர்ந்திலன்
வரைத்தடந் தோளினான் வதன நோக்கினான்
விரைத்தடந் தாமரைக் [2]கண்ணின் [3]மிக்கநீர்
நிரைத்திடை யிடைவிழ நெடிது நிற்கின்றான்.

(இ - ள்.) உரைத்த பின் - (இவ்வாறு இலக்குமணன்) சொன்னபின்பு, இராமன் ஒன்று உரைக்க நேர்ந்திலன் - ஸ்ரீராமன் (அதற்கு எதிராக) ஒரு மொழியுஞ் சொல்லமுடியாதவனாகி, (அப்பொழுது), வரை தட தோளி னான் - மலைபோன்ற பெரிய தோள்களையுடைய லக்ஷ்மணனது, வதனம் நோக்கினான் - முகத்தைப் பார்த்தான்: (அங்ஙனம்பார்த்தகாலத்தில்), விரை தட தாமரை கண்ணின் - வாசனையையுடைய பெரியதாமரைமலர்போன்ற (தன்)கண்களில், மிக்க நீர்-பூரித்த நீர், நிரைத்து-ஒழுங்காய், இடை இடை - இடையிடையே, நெடிது விழ - விடாது சிந்தும்படி, நிற்கின்றான்-(இலக்கு மணன்) நின்றுகொண்டிருந்தான்; (எ - று.)

மறுமாற்றஞ் சொல்லமுடியாது ஸ்ரீராமன் லக்ஷ்மணன் முகத்தைப்பார் த்தான்: அப்பொழுது அவ்விலக்குமணன் கண்ணீர்பெருக்கிக்கொண்டிருப்ப

தைக் கண்டானென்க. இனி, இராமன் ஒன்றுஞ் சொல்லமுடியாதபோது இலக்குமணன் இராமன்முகத்தைப் பார்த்துக் கண்ணீர் வடித்துக்கொண்டு நிற்பவனாயினா னெனை உரைத்தலும் ஒன்று. பி - ம்:—[1]நோக்கிலன், நேர்க லன். [2]கண்ணோ. [3]மிக்கு. (சுறுஅ)

க௬௨ —அப்போது வசிட்டமுனிவன் அந்துவருதல்.

அவ்வயி னரசவை நின்று மன்பினை
னெவ்வமி [1]லிருந்தவ முனிவ னெய்தினான்
செவ்விய குமரருஞ் [2]சென்னி தாழ்ந்தனர்
[3]கவ்வையம் [4]பெருங்கடன் முனியுங் கால்வைத்தான்.

(இ - ள்.) அ வயின்-அப்பொழுது, அரசு அவை நின்றும்-ராஜசபையி னின்றும், அன்பினன் - (ஸ்ரீராமன் முதலியோரிடத்து) அன்பை யுடையவனாகிய, எவ்வம் இல் இரு தவம் முனிவன் - குற்றமில்லாத மிக்க தவத்தையுடைய வசிஷ்டன், எய்தினான் - எழுந்தருளினான்: செவ்விய குமரர்உம் - (உலகோர்விரும்பும்) அழகையுடைய சக்ரவர்த்தித்திருமகர்களும், சென்னி தாழ்ந்தனர் - தலையால் வணங்கினார்; முனிஉம் - அவ்வசிஷ்டனும், கவ்வை பெரு கடல் - துன்பமாகிய பெரியசமுத்திரத்தில், கால்வைத்தான் - மூழ்கத் தொடங்கினான்; (எ - று.)

"அரசிருந்தநல்லவையினானன்"(கூ௨)என்று கீழ்வந்தமையால்,அதனோடொட்ட 'அரசவைநின்றும்' என்றார். அப்போது வசிட்டமுனிவன் வந்து குமரரைக்கண்டு பெருந்துன்பமடைந்தன னென்பதாம். முனியும் - உலகப் பற்றில்லாதவனாதலால் எப்போதும் துன்பத்தைக் கண்டிராதவனான முனிவனும் என்க. கவ்வை....கால்வைத்தான் - "பரிந்தழுவ தற்கு அடியிட்டவாறு கண்டாய்" என்றாற்போன்ற வழக்கு. அம் - சாரியை. பி-ம்:—[1]அருந். [2]செங்கைகூப்பினார். [3]கவ்வையின். [4]கடலிடை. (சுறுக)

க௬௩.—வசிட்டமுனிவன் வருந்துதல்.

[1]அன்னவர் முகத்தினோ டகத்தை [2]நோக்கினான்
பொன்னரை[3]ச் சீரையின் பொலிவு நோக்கினா
னென்னினி யுணர்த்துவ தெடுத்த துன்பத்தாற்
றன்னையு முணர்ந்தில னுணருந் தன்மையான்.

(இ-ள்.) உணரும் தன்மையான்-(தத்துவ நெறிகளை யறிகின்ற) மெய்யுணர்வையுடைய அவ்வசிஷ்டமுனிவன், - அன்னவர் முகத்தினோடு அகத்தை நோக்கினான்-அவர்களுடைய முகத்தையும் மனத்தையும் பார்த்தான்; பொன் அரைசீரையின் பொலிவுஉம் நோக்கினான்-(பீதாம்பரத்தை யுடுக்குந்)திருவரையிற்சாத்திய மரவுரியினது அழகையும் பார்த்தான்;என் இனி உணர்த்துவது-இனிச் சொல்லவேண்டுவது யாது? எடுத்த துன்பத்தால்-உண்டாகியதுயரத்தினால், தன்னை உம் உணர்ந்திலன் - தன்னையும் மறந்தான்; (எ - று.)

முகத்தை ஊனக்கண்ணாலும், அகத்தை ஞானக்கண்ணாலும் நோக்கினானென்க. இனி, ஒடு என்னும் மூன்றனுருபு ஆல்எனப் பொருள்பட்டு, முகமாகிய கருவியால் அவர் கருதியவதனைக் கூறாமல்அறிந்தா னென்றுமாம். பி-ம்:—[1]அன்னவன். [2]நோக்குவான். [3]உரியும்பொற்சடையும். (௪௬௦)

௧௬௪.—வசிட்டன் ஊழ்விதியின்வலிமையை நினைந்துகூறுதல்.

வாழ்வினை நுதலிய மங்க லத்துநாட்
டாழ்வினை யதுவரச சீரை சாத்தினான்
சூழ்வினை நான்முகத் [1]தொருவற் சூழினு
மூழ்வினை யொருவரா [2]லொழிக்கற் பாலதோ.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள் - (கிரீடந் தரித்து வாழ்தற்குக் கூறிய சுபதினத்தில், தாழ் வினை அது வர - (அது) கழிதற்குரிய தீவினைவந்துசேர,சீரை சாத்தினான் (ஸ்ரீராமன் கிரீடம்புனைவதையொழிந்து) மரவுரியைத் தரித்தான்: சூழ் வினை - (விடாது தொடர்ந்து) சூழ்ந்திடுகின்ற தீவினைப்பயன், நான்முகத்து ஒருவன் சூழினும் - நான்குமுகங்களையுடைய ஒப்பற்ற பிரமதேவனைச் சூழ்ந்திட்டாலும், ஊழ்வினை - (செய்தவனையே சென்றடையுந் தன்மையுள்ள)அவ்வூழ்வினை, ஒருவரால் ஒழிக்கல்பாலது ஓ - ஒருவரால் நீக்குதற்குரிய தன்மையையுடையதோ?[அன்றுஎன்றபடி];(எ-று.)

படைக்குந் தொழிலைச் செய்கின்ற பிரமதேவனாலும் அவனையும் சூழ்ந்திட்டுத் தன்பயனைத் தரவல்ல ஊழ்வினைக்குள்ள முறைமை எவராலும் நீக்கவொண்ணாதாதலால், மகுடாபிஷேகஞ்செய்யும்படி நாளிட்ட இன்றைத் தினம் தீவினைப்பயனால் இராமபிரான் முடிபுனைதல் நீங்கி மரவுரியைத்தரிக்கும்படியாயிற்றே! என்று வசிட்டன் வருந்திக்கூறினனென்க. 'இராமன் சீரைசாத்தினான்' என்ற சிறப்புப்பொருளை, 'எப்படிப்பட்டவரை ஊழ்வினை சேர்ந்தாலும் அது எவராலும் தடுக்கக்கூடியதன்று' என்ற பொதுப்பொருள் சமர்த்தித்து நின்றதனால், இச்செய்யுள் - வேற்றுப்பொருள்வைப்பணியாம். விதித்தற்றொழிற்கு உரிய பிரமனைக் கூறினமையால், மற்றையோருடைய விதி ஒழித்தற்குரியதன்றென்பது தானே பெறப்படும். வாழ்வினை நுதலிய மஙகலத்து நாள் - இராமபிரானுக்குப்பட்டாபிஷேகஞ்செய்யும்படி நிச்சயித்த நாள்.சூழ்வினைஎன்றஇடத்துவினையென்றது,ஆதியிற்கொண்ட சஙகற்பத்தை யென்பது உள்ளுறை: உலகவழக்குப்பற்றி, இஙஙனங் கூறினான். பி-ம்:—[1]ஒருவன்றேன்றினும். [2]ஒழிக்கலாகுமோ. (௪௬௧)

௧௬௫—வசிட்டன் இராமனது வனவாசத்தைக்குறித்துத் தன்மனத்துட் கருதுதல்.

வெவ்வினை யவடர விளைந்த [1]தேயுமன்
றிவ்வினை யிவன்வயி னெய்தற் [2]பாற்றுமன்
றெவ்வினை நிகழ்ந்ததோ [3]வேவெ றெண்ணமே
[4]செவ்விதி னொருமுறை தெரியும் பின்[5]னென்றான்.

(இ - ள்.) வெவ் வினை - இக்கொடுந்தொழில், அவள் தர - அக்கைகேயி உண்டாக்கியதால்மாத்திரம், விளைந்தது ஏஉம் அன்று-உண்டானதும் அன்று; இ வினை - இத்தொழில், இவன் வயின்-இவனிடத்தில், எய்தல்பாற்றுஉம் - அடைதற்குரியதன்மையை யுடையதும், அன்று—; எ வினை நிகழ்ந்ததுஓ - எவ்வினையினால் நடந்ததோ? ஏவர் எணணம்ஓ-எவருடைய ஆலோசனையோ? பின்—, ஒருமுறை-ஒருவழியாக, செவ்விதின் தெரியும் - நன்றாய்த்தெரியும், என்றான் - என்று (மனத்திற்) கருதினான்; (எ - று.)

கைகேயி வியாஜமாத்திரமே: இராமனது தன்மையைப் பார்க்குமிடத்தும் காட்டிற்குப்போமாறு நேர்வது தக்கதன்று: இது எவரது எண்ணத்தால் நிகழ்ந்த விளைவோ? இவ்விஷயம் பிறகு நன்குவிளங்குமென்றான னென்க. 'தேவர்களின் சூழ்ச்சியால் நிகழ்ந்தது இது' எனப் பின்னர் விளங்குமென்பது, வசிட்டன் குறிப்பு. பி-ம்:—[1]ஏனுமற்று. [2]பாலதோ. [3]தேவர், மேலொர். [4]செவ்விதென்று. [5]எனு. (சகூ௨)

கசுசு.—வசிட்டன் இராமனைநோக்கி நீ சென்றால் மன்னவன் இறப்பானெனல்.

விற்றடந் தாமரைச் [1]செங்கண் வீரனை
யுற்றடைந் தையநீ [2]யொருவி யோங்கிய
கற்றடங் காணுதி யென்னிற் கண்ணகன்
மற்றடந் [3]தானையான் [4]வாழ்கி லானென்றான்.

(இ - ள்.) 'வில் - கோதண்டத்தையும், தட தாமரை செம் கண் - பெரிய தாமரைமலர்போன்ற சிவந்த திருக்கண்களையு முடைய, வீரனை-ஸ்ரீராமனை, உற்று அடைந்து - பொருந்தி யடைந்து, 'ஐய - குழந்தாய்! நீ—, ஒருவி - நீங்கி, ஓங்கிய கல் தடம - உயர்ந்த மலைகளையுடைய வனத்தை, காணுதி - காண்பாய்,' என்னின்-ஆனால், கண் அகல் மல் தட தானையான்-இடமகன்ற [மிக்க]வலிமையையுடைய பெரிய சேனையையுடைய சக்ரவர்த்தி,வாழ்கிலான்- உயிரோடு வாழ்ந்திரான்,' என்றான் - என்றுகூறினான் (வசிஷ்டன்;) (எ-று.)

அன்போடடைந்தென்பான் 'உற்றடைந்து'என்றும்,கொடிய வனமென்பான் 'ஓங்கிய கற்றடம்' என்றுங் கூறினான். "கள்ளிநிரைந்து தீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்கானம்" என்னும்படி காட்டின் கொடுமைதா னிருக்குமென்க. காணுதல் - இலக்கணையாய், அடைதற்பொருட்டாயிற்று. பி-ம்:—[1]செங்கை. [2]ஒருவனையகன். [3]தோளினன். [4]வாழ்விலான். (சகூ௩)

கசுஎ.—தன்கடமையும் முனிவன்கடமையும் இன்னவேன இராமன் கூறுதல்.

அன்னவன் பணிதலை யேந்தி யாற்றுத
லென்னது கடனவ னிடரை நீக்குத
னின்னது கடனிது நெறியு மென்றனன்
பன்னகப் [1]பாயலுட் பள்ளி நீங்கினான்.

(இ - ள்.) பன்னகம் பாயலுள்-ஆதிசேஷனுகிய திருவணையில், பள்ளி-ி துயிலே, நீங்கினுன் - நீங்கித் திருவவதரித்த ஸ்ரீராமன், 'அன்னவன் ரி-(பிதாவாகிய)சக்ரவர்த்தியினுடைய திருவாணையை, தலைஏந்தி-தலைமேல் ங்கி, ஆற்றுதல் - (அதன்படி) செய்தல், என்னது கடன் - (புத்திரனுகிய) ர்கடமையாகும்; அவன் இடரை நீக்குதல் - அவனது சோகத்தைப் போக் ல், நின்னது கடன்-(குலகுருவாகிய) தேவரீரது கடமையாகும்: நெறிஉம் து-நீதியும் இதுவே', என்றனன்—; (எ - று.) அவதரித்தற்குப்பயன் கான செல்வது என்பது தோன்ற ஸ்ரீராமனை, 'பன்னகப்பாயலுட்பள்ளிநீங்கி ன்' என்றூர். பி-ம்:—[1]பாயலிற். (சசுச)

சுஅ.—வசிட்டன் 'கானகஞ்செல்லுதல் மன்னவன் பணியன்று' எனல்.

[1]வெவ்வரம் பயில்சுரம் விரவென்றுனலன்
றெவ்வரம் பனையசொற் றீட்டி னுட்னைக்
கவ்வரம் பொருதவே லரச [2]னுய்கிலா
திவ்வரந் [3]தருவெனென் றேன்ற துண்[4]டென்றுன்.

(இ - ள்.) (அதுகேட்ட வசிஷ்டன்), 'வெம் அரம் பயில் சுரம்-கொடிய டீகள் பொருந்திய காட்டை, விரவு என்றுன் அலன் - சேர் என்று (சக்ர ர்த்தி) கட்டளை யிட்டானில்லை; அரம் பொருத வேல்-அரததினு லராவிக் ர்செய்த வேலினையுடைய, அ அரசன் - அச்சக்ரவர்த்தி, தெவ்வர் அம்பு னைய சொல் - பகைவரது கணையை யொத்த வார்த்தையை, தீட்டினுள் னக்கு-சொன்னவளாகிய கைகேயிக்கு, இ வரம் தருவென்-இவ்வரங்களைக் காடுப்பேன், என்று—, ஆய்கிலாது-ஆலோசியாது, ஏன்றது-சம்மதித்தது, உண்டு—,' என்றுன்—; (எ - று.)

'அன்னவன்பணிதலையேந்தி யாற்றுதல்என்னது கடன்'என்ற இராம னுக்கு, இதனுல், வசிட்டமுனிவன், கானகம்புகுமாறு மன்னவன் கட்டளை யிடவில்லையென்று கூறியவாறு. சொல்என்றது - முன் "ஆழிசூழுலகமெல் லாம்," "ஏயவரங்கள்" என்னுங் கவியிற்கூறியவற்றை. 'ஏன்றது'என்றது- "வரங்கொளவித்துணைமன்னுமல்ல லெய்தி, யிரங்கிடவேண்டுவதீவனேகொ ளென்பாற், பரங்கெட விப்பொழுதே பகர்ந்திடு" என்றதனை. அரம் - முள் ளுக்கு,இலக்கணை. [1]வெவ்வரம்பையில் என்றபாடத்தில் ஐகாரத்தைச் சாரியை யெனக்கொண்டு, வரம்பு இல்லாதவெம்சுரம் என்றுரு முளர். பி-ம்:--[1]வெவ் வரம்பனைய சம்பரனைவென்றநாள், வெவ்வரம்பனைய சொல்வீரன்வென்ற நாள். [2]ஆணையால். [3]தருவனுனென்றது. [4]என. (சசுரு)

கசுசூ.—இராமன் யான் கான்செல்வதைத் தடுப்பது முறையன்றெனல்.

[1]ஏன்றனனெந்தை[2]யிவ் [3]வரங்களோவினு
னீன்றவள் யானது சென்னி யேந்தினேன்
சான்றெனநின்றநீ தடுத்தி யோவென்றுன்
றோன்றிய நல்லற நிறுத்தத் தோன்றினுன்.

(இ-ள்.) தோன்றிய நல் அறம்-விளங்குகின்ற நல்ல தருமத்தை,நிறுத்த-நிலைநிறுத்துதற்கு, தோன்றினான்-அவதரித்த ஸ்ரீராமன்,—'எந்தை இ வரங்கள் என்றனன்-என்தந்தை (கைகேயிக்கு) இவ்வரங்களை(த்தருமாறு)சம்மதித்தார்; ஈன்றவள்-தாயாகிய கைகேயி, ஏவினாள் - (காட்டிற்குச் செல்லும்படி) எனக்குக் கட்டளையிட்டாள்; யான் அது சென்னி ஏந்தினேன் - நான் அதனைத் தலைமேற்கொண்டேன்; சான்று என நின்ற நீ - (எல்லாவற்றிற்குஞ்) சாட்சியென்று சொல்லும்படி நிற்கின்ற தேவரீர், தடுத்தியோ-(இதனை)விலக்குவீரோ? என்றான்—; (எ - று.)

அரசன் சம்மதித்ததைக் கைகேயி கூறியதனால், மன்னவன் சொல்லவில்லையென்று ஒருபோக்குச் சொல்லுவது சரியன்றென்றவாறு. அன்புடைமையற்றி 'ஈன்றவள்' என்றும், கீழ் "இப்பணிதலைமேற்கொண்டேன்"என்றதற்குஏற்ப 'சென்னியேந்தினேன்' என்றும், சகலசாஸ்திரங்களுமறிந்த நீ என்பான், 'சான்றென நின்ற நீ' என்றும், தடுத்தல் நெறியன்றென்பான், 'தடுத்தியோ' என்றுங் கூறினான். தோன்றியநல்லற நிறுத்தத்தோன்றினான் என்றது—தரும ஸம்ஸ்தாபநார்த்தமாகத் திருவவதரித்தவனென்றபடி: **கருத்துடையடைகோளி.** சான்று-பெருமைக்குணமுமாம். **பி-ம்:**—[1]ஏன்றவன், ஏன்றபின். [2]அவ். [3]வரத்தினையினாள். (௪௬௬)

**௧௭௦.—மேலே சொல்லமாட்டாது வசிட்டன் கண்ணீர்வடிக்க, இராமன் மன்னவனதுமாளிகைவாயிலை யடைதல்.**

[1]என்றபின் முனிவனொன் [2]றியம்ப நேர்ந்திலன்
னின்றனன் [3]னெடுங்கணீர் நிலத்து நீர்த்துகக்
குன்றனை [4]தோளவன் றொழுது கொற்றவன்
பொன்றிணி நெடுமதில் வாயில் போயினான்.

(இ - ள்.) என்ற பின்—, முனிவன்-வசிஷ்டன், ஒன்று இயம்ப நேர்ந்திலன்-ஒன்றுஞ் சொல்லமாட்டாதவனாய், நெடு கண் நீர்-மிக்க கண்ணீர், நிலத்து நீர்த்து உக-பூமியில் தாரையாய்ப் பெருகும்படி,-நின்றனன்-நின்றானாக,-குன்று அனை தோளவன்-மலையையொத்ததிருத்தோள்களையுடையஸ்ரீராமன், தொழுது-(அம்முனிவனை)வணங்கி, கொற்றவன்-சக்ரவர்த்தியினது, பொன் திணி நெடு மதில்-பொன்னாற்செய்த உயர்ந்த மதில்களையுடைய, வாயில் - வாயிலில், போயினான்-போய்ச்சேர்ந்தான்; (எ - று.)—**பி-ம்:**—[1]என்றனன். [2]இயம்பல், உரைக்க. [3]நிலத்துக்கண்கடிதுநீர்விழக் [4]தோள்வற்றொழுது. ()

**௧௭௧.—கவிக்கூற்று. இராமன்கோள்கையை யறிந்தவரின் துயரத்தைக் கூறுவோமெனல்.**

சுற்றிய சிறையன் [1]றொடர்ந்த தம்பியன்
முற்றிய வுவகையன் முளரிப் போதினுங்
குற்றமின் முகத்தினன் கொள்கை [2]கண்டவ
ருற்றதை யொருவகை யுணர்த்து வாமரோ.

(இ - ள்.) சுற்றிய சீரையன் - (திருவரையிற்) சாத்திய மரவுரியை யுடையவனும், தொடர்ந்த தம்பியன் - பின் செல்கின்ற இலட்சுமணனை யுடைய வனும், முற்றிய உவகையன் - முதிர்ந்த மகிழ்ச்சியையுடையவனும், முளரி போதின் உம் குற்றம் இல் முகத்தினன் - தாமரைமலரினும் (மேலாக)க் குறையில்லாதுவிளங்குகின்ற திருமுகத்தை யுடையவனுமாகிய ஸ்ரீராம னது, கொள்கை - கோட்பாட்டை, கண்டவர் - அறிந்த அந்நகரமாந்தர், உற் றதை - அடைந்த நிலைமையை, (முழுவதுமுணர்த்துத லரிதாயினும்), ஒரு வகை உணர்த்துவாம் - ஒருவாறு [சிறிது] கூறுவாம்; (எ - று.)

"இப்பொழுதெம்மனோரால்" என்னுங் கவியிற் கூறிய கருத்தை விளக் குமாறு 'முளரிப்போதினுங் குற்றமின் முகத்தினன்' என்றார். கொள்கை - வனவாசஞ் செய்யப்புகுங் கோட்பாடு. பி-ம்:—[1]தொடருந் தம்பியன், சடை யின் சும்மையன். [2]கொண்டவர். (சகூஅ)

களஉ.—அந்தணர் முதலியோரின் பெருவருத்தம்.

அந்தண [1]ரருந்தவ ரவனி காவலர்
நந்தலி [2]னகருளார் [3]நாட்டு ளார்கடஞ்
சிந்தையென் புகல்வது தேவ ருள்ளமும்
வெந்தனர் மேல்வரு முறுதி வேண்டலார்.

(இ - ள்) அந்தணர் - பார்ப்பனரும், அரு தவர் - அரியதவத்தினை யுடைய முனிவரும், அவனி காவலர் - அரசர்களும், நந்தல் இல் நகர் உளார் - கேடில் லாத அந்நகரத்துஜனங்களும், நாடு உளார்கள் தம் - அந்நாட்டிலுள்ளவர்களுமா கிய இவர்களது, சிந்தை என் புகல்வது - மனத்தைப்பற்றிச் சொல்வதுயாது? தேவர் உம் - (அரக்கர்கொடுமையைத்தீர்க்க வரம்வேண்டிய) தேவர்களும், மேல் வரும் உறுதி வேண்டலார் - (தமக்குப்பின்பு) இக்காரியத்தால் வரத்தக்க நன் மையையும் விரும்பாதவர்களாகி, உள்ளம் வெந்தனர் - மனம்வெதும்பினார்கள்.

வசிட்டன் சொல்லியும் தன் கோட்பாடு குன்றாதிருத்தலைக் கண்டபின் அரசர் முதலியோர் பெருவருத்தங்கொண்டன ரென்பதாம். தேவர்களும் தம்முறுதியையும் நாடாது இராமன் வனவாசஞ்செல்வதில் மனம்வெம்பின ரென்றால், மற்றையோர் இவ்வளவுவருந்தினரென்று எற்றுக்குப்புகல்வது? எனக் கைமுதிகநியாயமெனப்படும் தண்டாபூபிகாநியாயத்தாற் பொருளை விளக்கினமையால், இச்செய்யுள் - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி யாம். "ஐயனை" (களங) என்ற பாடலுக்குப்பின் சிலபிரதிகளில் இந்தப்பாடல் காணப்படுகின்றது: சிலபிரதிகளில் "நன்னெடு (கஅஅ)" என்று தொடங்கும் பாடலுக்குப் பின் உள்ளது: இங்ஙனமிருப்பது பொருத்தமாகத் தோன்று கின்றது. பி-ம்:—[1]அருமறைமுனிவன். [2]நகருளோர். [3]நாட்டுளோர்கடாம். ()

௧௪௩.—இதுமுதற் பதினைந்துகவிகள் - அந்நகரத்திற் பலரும் பலவாறுவருந்தப்பட்டமையைக் கூறும்.

ஐயனைக் காண்டலு [1]மணங்க னார்கடா
மொய்யிளந் [2]தளிர்களான் முளரி மேல்வீழு
[3]மையலின் மதுகரங் கடியு மாறெனக்
கைகளின் [4]மதர்நெடுங் [5]கண்க ளெற்றினார்.

(இ - ள்.) அணங்கு அனார்கள் - தெய்வமகளிரை யொத்த மாதர்கள், ஐயனை - ஸ்ரீராமனை, காண்டலும்—, முளரிமேல் வீழும் - தாமரைமலரின் மேல் வந்து மொய்க்கின்ற, மையலின் - மயக்கத்தையுடைய, மதுகரம் - வண்டுகளை, மொய் இள தளிர்களால்-நெருங்கிய இளந்துளிர்களால், கடியும் ஆறு என - ஓட்டுந் தன்மைபோல, கைகளின் - (தம்)கைகளால், மதர் நெடு கணகள் - களிப்பினையுடைய பெரிய (தம்) கண்களை, எற்றினார் - அறைந் தார்கள்; (எ - று.)—தாம் - அசை.

தளிர் - கைக்கும், முளரி - முகத்திற்கும், மதுகரம் - கண்களுக்கும் உவமை.கடிதல் - தழும்புபடச்செய்தலுமாம். கண்களாற் பார்க்க மனம்பொறாமையால், மகளிர் இவ்வாறு செய்தன ரென்க. இவை அரண்மனையைச் சார்ந்திருப்பவரின் வருத்தத்தைத் தெரிவிப்பனவென்னலாம். பி - ம்:— [1]அணங்கனாரெல்லாம், அணங்கனார்கடம். [2]தளிரினான். [3]மையரி, மையணை, மையிரி. [4]மாநெடுங். [5]கண்ணின். (௬௭௦)

௧௭௪. தம்மையு முணர்ந்திலர் [1]தணப்பி லன்பினா
லம்மையி னிருவினை [2]யகற்ற வோ [3]வன்றேல்
விம்மிய பேருயிர் மீண்[4]டி லாமைகொல்
[5]செம்மறன் றாதையிற் [6]சிலவர் முந்தினார்.

(இ - ள்.) சிலவர் - சிலர்,—தணப்பு இல் அன்பினால் - நீங்குதலில்லாத ஆசையினால், தம்மைஉம் உணர்ந்திலர்-தங்களையும் அறியாதவர்களாய், செம்மல் தன் தாதையின் - ஸ்ரீராமனது தந்தையினும், முந்தினார் - முற்பட்டுத் தேவலோகம்போய்ச் சேர்ந்தார்கள்; (அதற்குக்காரணம்), அம்மையின் - வரு பிறப்பில் (தொடர்தற்குரிய), இரு வினை - இரண்டுவினைகளையும், அகற்றவோ - போக்குதலினாலோ? அன்று எனல் - அஃதன்றென்றால், விம்மிய பேர் உயிர் - கலங்குகின்ற பெரிய பிராணன், மீண்டிலாமைகொல் - திரும்பாமையினாலோ? (எ - று.)

நகரமாந்தரிற் சிலர் பேரன்பினால் உயிர்துறந்ததை இருவகையாகக் குறிக்கின்றார். இருவினைநீத்தவர் மீளாவுலகஞ்சேர்வ ரென்பது நூற்கொள்கையாதலால், 'இருவினையகற்றவோ' என்றும், இராமனைப்பற்றிய உயிர் அங்குநின்றுமீண்டிட வில்லையோஎன்பார் 'பேருயிர் மீண்டிலாமைகொல்' என்றும் கூறுகின்றார். அகற்ற - அகற்றுதற்பொருட்டென்றுமாம். பி-ம்:— [1]தணிப்பில். [2]இயற்றவோ. [3]அன்றே. [4]இலாமையிற். [5]செம்மையின். [6]சிலரும்.

௧௭௫. விழுந்தனர் சிலர்சிலர் விம்மி விம்மிமே
லெழுந்தனர் சிலர்[1]முகத் திழிகண் ணீரிடை
யழுந்தினர் [2]சிலர்பதைத் தளக [3]வல்லியின்
[4]கொழுந்தெரி யுற்றெனத் துயரங் கூர்கின்றார்.

(இ-ள்.) சிலர் விழுந்தனர்—; சிலர்—, மேல் விம்மி விம்மி-மேன்மேலும் அழுதழுது, எழுந்தனர்—; சிலர்—, முகத்து இழி கண் நீரிடை - முகத்தினின்றும் பெருகுகின்ற கண்ணீரில், அழுந்தினர் - மறைந்தனர்; சிலர்—, பதைத்து-பதறி, அளகம் வல்லியின்-தலைமயிரில், எரி கொழுந்து உற்று என-நெருப்புப்பற்றினாற்போல, துயரம் கூர்கின்றார்-துன்பப்பட்டார்கள்; (எ-று.)

"அளகம் புனலும் மயிருமாகும்" என்ப வாதலால் அளகவல்லியென்பதற்கு-நீரில்தோன்றிய பூங்கொடிஎன்றலுமொன்று. பி ம்:—[1]சிலர். [2]பதைத்தனரளக, பதைத்தனரணிகொள். [3]வல்லிநீர். வல்லியார், வல்லியங். [4]கொழுங்கனல். (௪௭௨)

௧௭௬. கரும்பன [1]மொழியினர் கண்[2]ப னிக்கிலர்
வரம்பறு துயரினால் மயங்கி [3]யேகொலா
மிரும்பன [4]மனத்தின ரென்ன நின்றனர்
பெரும்பொரு ளிழந்தவர் போலும் பெற்றியார்.

(இ-ள்.) பெரு பொருள் இழந்தவர் போலும் பெற்றியார்-பெருஞ்செல்வத்தை யிழந்தவரைப்போன்ற தன்மையை [பெருந்துயரத்தை] யுடையவரும், கரும்பு அன மொழியினர் - கருப்பஞ்சாற்றையொத்த [மிகவினிய] சொற்களையுடையவருமாகியசிலர், கண் பனிக்கிலர் - கண்ணீர்விடாதவராய், இரும்பு அன மனத்தினர் என்ன - இரும்பையொத்த மனத்தையுடையவரென்று (கண்டோர்) சொல்லும்படி, நின்றனர் - திகைத்து நின்றார்கள்; (இங்ஙனம் அவர்கள் நின்றது), வரம்பு அறு துயரினால் - அளவற்ற துன்பத்தினால், மயங்கி ஏ கொல் ஆம் - அறிவு கலங்கியதனாற்போலும்; (எ - று.)

இராமபிரான் ஊரைவிட்டுச்செல்வதனால் துயர்மிகுந்து தமது நிதியத்தை இழந்தவர்போன்ற சில மங்கைமார், கண்களினின்று ஒரு சொட்டுநீரும் வெளிவராமல் இரும்புமனத்தவர்போலச் சலியாது நின்றனர்: இங்ஙனம் அவர்கள் ஆனதற்குக் காரணம், துயரமிகுந்து திகப்பிரமையடைந்ததனாலானதென நாம் ஊகித்து உணரவேண்டியதாயுள்ளதென்பதாம். 'வரம்பறுதுயரினால் மயங்கியேகொல்' என்றது-'கண்பனிக்கிலராய், இரும்பன மனத்தினரென்ன நின்றனர்' என்றதைச சமர்த்தித்து நின்ற **ஏதுத்தற்குறிப்பேற்றவணி**; கொல்-தற்குறிப்பேற்றவணியின் உருபு. வல்நெஞ்சிற்கு இரும்புஉவமை கூறப்படுதலை "இரும்புபோல் வலியநெஞ்சம்" என்ற பெரியார் பாசுரத்திலுங் காண்க. கண்பனித்திலாமையால், 'இரும்பன மனத்தினரென்ன நின்றனர்' என்றார். கரும்பனமொழியினரெனவே, பெண்பாலாரெனப்பட்டது: இனி, கரும்பையொத்த இன்சொல்லையுடையவரெனப் பொதுப்பாலாகக் கொள்ளினுமாம். பி-ம்:—[1]மொழியவர். [2]பனித்திலர். [3]எய்தலாம். [4]மனத்தவர். (௪௭௩)

௧௭௭. [1]நெக்கன வுடலுயிர் [2]நிலையி னின்றில
விக்கண மிக்கண மென்னுந் [3]தன்மையும்
புக்கன புறத்தன புண்ணிற் கண்மலர்
[4]ருக்கன நீர்வறந் துதிர வாரியே.

(இ - ள்.) புறத்தன-இன்னுஞ்சில ஜனங்கள்,—உடல் நெக்கன - சரீரம் தளர்ந்தன; உயிர் நிலையில் நின்றில-பிராணன் (தமது) நிலையில் நிற்கப்பெற்றனவில்லை: 'இக்கணம் இக்கணம்-இந்தக்ஷணமே (போய்விடும்),' என்னும் என்றுசொல்லும், தன்மைஉம்-இயல்பையும், புக்கன-அடைந்தனவாகி, கண் மலர்-தாமரைமலர்போலுங் கண்களில், நீர் வறந்து-தண்ணீர் வற்றிப்போய் புண்ணின் - விரணத்தினின்றும்போல, உதிரம் வாரி - இரத்தவெள்ளம் உக்கன - சிந்தப்பெற்றன; (எ - று.)

உயிர்நிலையில்நிற்றல்-உயிர்உடம்பில் நிற்றல். கண்களில் நீர்வற்றிவிட்ட புண்களிற்போல உதிரவெள்ளம் பெருகிற்றென்க. அறிவுகுன்றினமையால் கண் புண்ணாயின: அறிவுஇராதநிலையிற் கண் புண்ணுமென்பதை, "முகத் திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்" என நாயனார் கூறியிருத்தலாலுங் காண்க. பி - ம்:—[1]நெக்கனருயிருடல், நெக்கனவுயிருடல். [2]நிலையுணின் றிலாது. [3]தன்மைய. [4]உக்கநீர்வறந்தன. (௬௭௪

௧௭௮. இருகையிற் கரிநிக ரெண்[1]ணி றந்தவர்
[2]பெருகையிற் [3]பெயர்த்தனர் தலையைப் பேணல
ரொருகையிற் [4]கொண்டன [5]ருருட்டு கின்றனர்
சுரிகையிற் கண்மலர் [6]சூன்று நீக்கினர்.

(இ-ள்.) இரு கையின் கரி நிகர் - இரண்டு கைகளையுடைய யானையை யொத்த, எண் இறந்தவர்-அனேகர், தலையை-(தம்) சிரசை, பேணலர்-விரும்பாதவராய், பெருகு ஐயில் பெயர்த்தனர் பெரிய கைவாளாற் கொய்தவராய் ஒரு கையில் கொண்டனர்-ஒருகையில் வைத்துக்கொண்டு, உருட்டுகின்றனர் உருளச்செய்கின்றார்; (இன்னுஞ் சிலர்), கண் மலர்-மலர்போலுங் கண்களை சுரிகையின்-உடைவாளால், சூன்று-குடைந்து, நீக்கினர்-போக்கினர்; (எ-று.)

"இருகைவேழத்திராகவன்"என்றாற்போல, 'இருகையிற்கரிநிகரெண் ணிறந்தவர்' என்றார். ஐயில்-முதற்போலி. சுரிகை - க்ஷுரிகா என்னும் வடமொழிச்சிதைவு. தாம் உயிரோடிருக்கவேண்டாமென்று கருதித் தம் தலையைக் கொய்தபின்னும் முன் துவக்கின தொழிலின் தொடர்ச்சியால் பின்னும் தம் தலையை யுருட்டினாரென்க. உடல் துண்டிக்கப்பட்ட விடத்துப் வீரருடல் செயல்காட்டியாடுதல் அட்டையாடுதலெனப்படுவதும், கலிங்கத்துப் பரணியில், "அடிக்கழுத்தினெடுஞ்சிரத்தை யரிவராலோ வரிந்தசிர மணங்கின்கைக்கொடுப்பாரலோ, கொடுத்தசிரங் கொற்றவையைப் பரவுமலோ குறையுடலுங் கும்பிட்டு நிற்குமாலோ"என வருவதும் இங்குக் காண்க.

தக்கன. இராமன் காட்டிற்குச் செல்லுங்கோலத்தைக் காணப்பொறுமற் கண்ணைச் சூன்று நீக்கினுரென்க. சூன்று, சூல்-பகுதி. பி-ம்:—[1]இறந்தனர். [2]பொருகையிற். [3]பெயர்த்ததர். [4]கொண்டுடல். [5]உருளுகின்றனர். [6]சூழ்ந்து.

௧௭௯. சிந்தின [1]வணிமணி சிதறி வீழ்ந்தன
பைந்துணர் [2]மாலையிற் பரிந்த மேகலை
[3]நந்தினர் நகையொளி விளக்க நங்கைமார்
சுந்தர வதனமு [4]மதிக்குத் [5]தோற்றவே.

(இ - ள்.) அணி சிந்தின - (மகளிர்பூண்ட) ஆபரணங்கள் சிதறின;மணி சிதறி வீழ்ந்தன - (அவற்றிற்பதித்த) இரத்தினங்கள் சிந்தி விழுந்தன; பைந் துணர் மாலையின் - பசிய பூமாலையைப்போல, மேகலை-மேகலாபரணங்களும், பரிந்த - அறுந்தன; நங்கைமார் - மகளிர், நகை ஒளி விளக்கம் - சிரிப்பினது ஒளியின்தெளிவு, நந்தினர் - அழியப்பெற்றுர்; (அவரது), சுந்தரம் வதனம் உம் - அழகிய முகங்களும், மதிக்கு தோற்ற - சந்திரனுக்குத் தோல்வி யடைந்தன; (எ - று.)

பூமாலையும்,மேகலையும் அற்றுவிழுந்தன வென்றற்கு, 'பைந்துணர்மாலை யிற் பரிந்தமேகலை' என்ருர். நகை-ஆபரணமுமாம். முன், மதியைத்தோல்வி யுறுவித்த நங்கைமார்முகங்கள், இப்பொழுது விளக்கமின்மையால் அதற்குத் தோற்றன. பி-ம்:—[1]பணி.[2]மாலைகள்.[3]நந்தின.[4]மதிக்கும்.[5]தோற்றதே.(௬௭௬)

௧௮௦. அறுபதி [1]னுயிர ராசன் றேவியர்
மறுவறு கற்பினர் மழைக்கண் ணீரினர்
சிறுவனைத் தொடர்ந்தனர் திறந்த வாயின
ரெறிதிரைக் கடலென விரங்கி [2]யேங்கினுர்.

(இ - ள்.) மறு அறு கற்பினர் - குற்றமற்ற கற்பினையுடைய, அறுபதி னுயிரர்-அறுபதினுயிரவராகிய, அரசன் தேவியர்-சக்ரவர்த்தியினது மனைவி யர்,—மழை கண் நீரினர் - மழைபோன்ற கண்ணீரையுடையவராய், சிறு வனை தொடர்ந்தனர் - ஸ்ரீராமனைப் பின்தொடர்ந்து, திறந்த வாயினர் - வாய்திறந்தவராய்,எறி திரை கடல் என இரங்கி ஏங்கினுர் - வீசுகின்ற அலை களையுடைய சமுத்திரத்தினொலிபோலப் (பேரொலிபடப்) பரிதவித்தழுதார் கள்; (எ - று.)

முதனூலில் முந்நூற்றைம்பதின்மரென்று கூறப்பட்டிருக்கின்றது: தச ரதனது வாழ்நாள் அறுபதினுயிரமாயதுபோல, கம்பர், அமைச்சர் மனைவி யர்களையும் அறுபதினுயிரம்படப்பேசுவர். மூவரே, குலம்முதலிய பெருமை யும் பட்டத்துக்குரிமையும் உள்ளவர்கள். இதுமுதல் ஆறுகவிகள், அரசன் தேவியர் பட்ட வருத்தத்தைக் கூறுவன வென்னலாம். சிலபிரதிகளில் இது வும் அடுத்த கவியும் "இளையினும்" (௧௮௨) என்று தொடங்கும் பாடலுக்குப் பின்உள்ளன. பி-ம்:—[1]ஆயிரம். [2]ஏங்குவர், ஏங்குவார். (௬௭௭)

௧௩௭. கன்னிநன் மயில்களுங் குயிற்க ணங்களு
மன்னமுஞ் சிறை [1]யிழந் தவனி [2]சேர்ந்தன
வென்னவீழ்ந் [3]துழந்தன ரிராம னல்லது
மன்னுயிர்ப் [4]புதல்வரை மற்றும் பெற்றிலார்.

(இ-ள்.) இராமன் அல்லது - ஸ்ரீராமனல்லாமல், மற்றுஉம் - வேறு, மன் உயிர் புதல்வரை-நிலைபேறுள்ள பிராணனையொத்த புத்திரரை, பெற்றிலார்-பெறாத அம்மடவார்,— கன்னி நல் மயில்கள்உம் - இளமையையுடைய நல்ல மயில்களும், குயில் கணங்கள்உம் - குயிற்கூட்டங்களும், அன்னம்உம் - ஹம்ஸங்களும், சிறைஇழந்து-சிறகுபோய், அவனி சேர்ந்தன என்ன-பூமியை யடைந்தவைபோல, வீழ்ந்து உழந்தனர் - விழுந்து வருந்தினார்; (எ - று.)

'கன்னி நல்' என்னும் அடையைக்'குயிற்கும்,அன்னத்திற்கும்,' 'கணங்கள்' என்பதனை 'மயிற்கும், அன்னத்திற்கும்' கூட்டுக. இனி,கன்னி-பெடையுமாம். பி-ம்:—[1]கழிந்து [2]வீழ்ந்தென, வீழ்ந்தன, வீந்தன. [3]உலைந்தனர், உழைத்தனர், உழன்றனர். [4]புதல்வனை. (௩௭அ)

௧௩௨. கிளை[1]யினு நரம்பினு நிரம்புங் [2]கேழன
[3]வளவிறந் துயிர்க்கவிட் டரற்றுந் தன்மையாற்
றொளை[4]படு குழலினோ டி[5]யாழ்க்குத் தோற்றன
விளையவ ரமுதினு மினிய சொற்களே.

(இ-ள்.) இளையவர்-அத்தேவியரது, அமுதின்உம் இனிய சொற்கள்—, —தொளை படு குழலினோடு-துளைபொருந்திய குழலிசையோடு, கிளையின்உம் நரம்பின்உம் நிரம்பும் கேழன யாழ்க்கு-பண்ணிசையோடு தந்திரியில் நிறைந்த ஒளியினையுடையவாகிய யாழினிசைக்கு, அளவு இறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால் - அளவில்லாமற் பெருமூச்சுத்தோன்ற வாய்விட்டு அழும் இயல்பினால், தோற்றன - தோல்வியடைந்தன; (எ - று.)

முன் குழல்யாழ்களை வென்ற சொற்கள், இப்பொழுது அவற்றால் வெல்லப்பட்டன. ஒருபொருளினிடத்து முன்னிருந்தநிலை மாறி வேற்று நிலைவந்ததாகக் கூறியதனால், இது - முறையிற்படர்ச்சியணி யெனப்படும் பரியாயாலங்காரமாம். பி - ம்:—[1]எனும். [2]கேளென, கேழ்மைய, கேளன. [3]அளவறுந்துயரம்விட்டு, அளவறுந்துயர்க்கழிந்து. [4]பயில். [5]யாழ்க்குந்,யாழுந்.

௧௩௩. புகலிடங் கொடுவனம் [1]போது மென்றுதம்
மகன்வயி னிரங்குறு மகளிர் [2]வாய்களா
லகன்மதி னெடு[3]மனை யரத்த வாம்பல்கள்
பகலிடை மலர்ந்தவொத் [4]தபோன்றவே.

(இ-ள்.) 'புகல் இடம் கொடு வனம் போதும் - (நாங்கள் ஸ்ரீராமன் செல்லும்) காட்டையே புகுதற்குரிய இடமாகக்கொண்டுசெல்வோம்,' என்று - என்றெண்ணி, தம் மகன்வயின் - தமதுபுத்திரன்பக்கல், இரங்குறும் - பரி

தபிக்கின்ற, மகளிர்-அத்தேவியரது, வாய்களால்—, அகல் மதில் நெடு மனை-அகன்ற சுற்றுச்சுவரையுடைய பெரிய அந்தப் புரமாளிகைகள்,—அரத்தம் ஆம்பல்கள்-செவ்வல்லிகள், பகலிடை மலர்ந்தது-பகலில்மலரப்பெற்றதாகிய, ஓர் பழனம் - ஒருகழனியை, போன்ற—; (எ - று.)

[1]போலும் என்றபாடத்துக்கு ஒப்பில்போலியென்க. பகலிடை யாம்பல் மலர்ந்த தொர்பழனம் - இல்பொருளுவமை: தற்குறிப்பேற்றவணியென்னலாம். மனை பொலிவிழந்திருந்த தென்பதாம். "செங்கழுநீர்வாய்நெகிழ்ந்தாம்பல்வாய் கூம்பினகாண்" என்று விடியற்காலத்தைக் குறிப்பதாலும், ஆம்பல் பகலிற்கூம்பும்மலராதலை யறியலாம். இச்செய்யுள் சிலபிரதிகளில் தாயரும் (௧௮௬)என்று தொடங்கும் பாடலுக்குப் பின் உள்ளது பி-ம்:—[2]வாய்கடாம். [3]நகர். [4]போன்றதே. (௪௮௦)

௧௯௪. திடருடைக் குங்குமச் சேறுஞ் [1]சாந்தமு
மிடையிடை வண்டலிட் டார மீர்த்தன
[2]மிடை[3]முலைக் [4]குவடொரீஇ மேக லைத்தடங்
கடலிடைப் [5]புகுந்தகட் கலுழி யாறரோ.

(இ - ள்.) கண் கலுழி ஆறு-கண்ணினின்றுந்தோன்றிய கலங்கல்நீராகிய நதிகள்,—திடர் உடை குங்குமம் சேறுஉம்-மிகுதியையுடைய குங்குமக்குழம்பும், சாந்தம்உம் - செஞ்சாந்தும், இடைஇடை - நடுவில்நடுவில், வண்டல் இட்டு - சேருகப்பொருந்தப்பெற்று, ஆரம் ஈர்த்தன - (அவரது) முத்து மாலையை யிழுத்துக்கொண்டு, மிடை முலை குவடு ஒரீஇ - நெருங்கிய தனங்களாகிய மலைச்சிகரங்களினின்று நீங்கி, மேகலை தடம் கடலிடை - மேகலையையுடைய கடிதடமாகிய கடலினுள், புகுந்த - புக்குப்பாய்ந்தன; (எ - று.)

திடர் மேடு. உருவகவணி. ஆறும் மலையுச்சியினின்று கீழிறங்கிப் பின் மேகலையை [மேகலை-மலையின்தாழ்வரை] யடைந்து, பின்பு கடலைச் சேருமென்க: எனவே, மேகலை யென்பது-சிலேடை. அரோ-ஈற்றசை. பி-ம்:—[1]சந்தமும். [2]மிடல். [3]மலை. [4]கோட்டொரீஇ, குவட்டொரீஇ, குவட்டுடன். [5]பெயர்ந்தகட், பாய்ந்ததக், பரந்தகட், புகுந்ததக். சிலபிரதிகளில் இரண்டு மூன்றுமடிகள் 'மிடைமுலைக்குவடொரீஇ மேகலைத்தடத், திடையிடைவண்டலிட்டாரமீர்த்தன' என்று உள்ளன. (௪௮௧)

௧௯௫. தண்டலைக் கோசலைத் தலைவன் மாதரைக்
கண்டன னிரவியுங் கமல வாண்முகம்
[1]விண்டலத் துறையுநல் [2]வேந்தற் காயினு
முண்டிட ருற்றபோ தென்[3]னு ருதன.

(இ - ள்.) தண்டலை கோசலை தலைவன் - சோலைகளையுடைய உத்தர கோசலதேசத்தரசனாகிய தசரதனது, மாதரை - தேவியரை, கமலம் வாள் முகம் - தாமரைபோன்ற ஒளியினையுடைய முகத்தை, இரவிஉம்-(ஒருநாளுங்

காணாத) சூரியனும், கண்டனன்-பார்த்தனன்; விண் தலத்து உறையும்-தேவ லோகத்தில் வசிக்கின்ற, நல் வேந்தற்கு ஆயின்உம்-சிறந்த இந்திரனுக்கானாலும், இடர் - ஆபத்து, உண்டு - உளதாகி, உற்ற போது வந்தகாலத்தில், என் உறாதன - எவைதாம் வராதவை? (எ - று.)

இதுகாறும் ஒருநாளும் வெளிப்புறப்படாத தேவியர் இப்பொழுது ஸ்ரீராமனைத்தொடர்ந்து புறப்பட்டன ரென்க. உண்டு உறையும் என இயைத்து-அமிர்தத்தையுண்டு உறையும் வேந்தனென்றுமாம். வேந்தற்காயினும் என்றது-எத்துணைச் சிறந்தவர்க்காயினும் என்றபடி. வேற்றுப்பொருள்வைப்பணி. தண்தலை-சோலைக்குப் பண்புத்தொகையன்மொழி. வேந்தன்-தேவேந்த்ரனென்பதன் சிதைவென்பர். உண்டு - முற்றெச்சம். பி-ம்:—[1]விண்டலந் தூறையுள, விண்டலத்துறையுனர். [2]வேந்தர்க்கு. [3]உறுதவே. (௪௮௨)

௧௯௬. தாயருங் கிளைஞருஞ் சார்ந்து ளார்களுஞ்
சேயரு மணியருஞ் சிறந்த [1]மாதருங்
காயெரி யுற்றன ரனைய கவ்வையர்
வாயிலு முன்றிலு மறைய மொய்த்தனர்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) தாயர்உம்—, கிளைஞர்உம்-நெருங்கிய பந்துக்களும், சார்ந்துளார்கள்உம்-சேய்மைப்பந்துக்களும், சேயர்உம்-தூரத்திலுள்ளவரும், அணியர்உம் - சமீபத்திலுள்ளவருமான, சிறந்த மாதர்உம்—, காய் எரி உற்றனர் அனைய கவ்வையர்-எரிக்கின்றநெருப்பை யடைந்தவர்போன்ற துயரத்தையுடையவராய்,வாயில்உம்-வீட்டின்வாசலும்,முன்றில்உம்-முற்றமும்,மறைய-இடமின்றும்படி, மொய்த்தனர்-நெருங்கினராகி,—(எ-று.)—'இரைத்தனர்' என அடுத்த கவியோடு தொடரும்.

தாயரெனப்பொதுப்படக் கூறியதனால், ஐவகைத்தாயரையுங் கொள்க; தசரதன் மனைவியரைக்குறிக்கு மென்னலுமாம். தாயர் முதலியோர் பெருந்துயரோடு எங்கும் மொய்த்தன ரென்க. கவ்வை=கௌவை: போலி. இச்செய்யுள், "கன்னிநல்"(௧௮௧)என்றபாடலுக்குப்பின் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. இப்பாடலுக்குப் பின் பலபிரதிகளில் "மாந்தர்தம்" (௨௧௫) என்றபாடல் உள்ளது. பி-ம்:—[1]மாந்தரும். (௪௮௩)

### ௧௯௭.—இராமன் தன்மாளிகையை நோக்கிச்செல்லல்

இரைத்தன ரிரைத்தெழுந் தேங்கி யெங்கணுந்
திரைப்பெருங் கடலெனத் தொடர்ந்து பின்செல
வுரைப்பதை [1]யுணர்கில னுழிப்ப [2]தோர்கிலன்
வரைப்புயத் தண்ணறன் மனையை நோக்கினான்.

(இ - ள்.) இரைத்தனர் - கூவினார்கள்; இரைத்து எழுந்து ஏங்கி—, எங்கண்உம் - எல்லாவிடங்களிலும், திரை பெரு கடல் என - அலைகளை யுடைய பெரியகடல்போல, பின் தொடர்ந்து செல—, உரைப்பதை உணர் கிலன் - (அவர்களிடம்) சொல்வதை அறியாதவனாய், ஒழிப்பது ஓர்கிலன் - (அவரை) நீக்கும் வழியை அறியாதவனுமாகி, வரை புயத்து அண்ணல் - மலைபோலுந் தோள்களையுடைய இராமன், தன் மனையை நோக்கினான் - தனது மாளிகையை நோக்கிநடந்தான்; (எ - று.)

தாயரிடத்து விடைபெற்றுக்கொண்ட இராமன் சீதைக்குச்செய்தி தெரி விப்பதற்காகத் தன் மனைநோக்கிநடந்தா னென்க. இவன் சீதையைக்காணவே செல்கின்றானென்பது, "சானகியிருந்துழிச்சார்ந்தான் (உ௧௬)" என்று மேல் வருவதனாற் காண்க. மூன்றாமடிக்கு, பேரிரைச்சலாற் பிறர்சொல்வதைத் தான் உணராதவனாகியும், அவ்விரைச்சலை நீக்குமாற்றையோராதவனாகியு மென்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]உணர்ந்திலன். [2]ஓர்ந்திலன். (௬௮௪)

௧௮௫.—இதுவும் அது.

நன்னெடு [1]நளிர்முடி சூட நன்மணிப்
[2]பொன்னெடுந் [3]தேரொடும் பவனி போனவன்
[4]றன்னெடுஞ் [5]சீரையுஞ் [6]சுற்றி மீண்டுமப்
பொன்னெடுந் தெருவிடைப் போதன் [7]மேயினான்.

(இ - ள்.) (முன்), நல் - சிறந்த, நெடு - பெரிய, நளிர் - பெருமையை யுடைய, முடி - கிரீடத்தை, சூட - சூட்டிக்கொள்ளுதற்கு, நல் - நல்ல, மணி - நவரத்நங்களிழைத்த, பொன் - சுவர்ணமயமான, நெடு தேரொடு உம் - பெரிய தேருடன், பவனி போனவன் - உலாப்போன ஸ்ரீராமன்,— துன் நெடு சீரைஉம் - பொருந்திய பெரிய மரவுரியையும், சுற்றி - சாத்திக் கொண்டு, மீண்டுஉம் - மறுபடியும், அ பொன் நெடு தெரு இடை - அந்த அழகியபெரியவீதியில், போதல் மேயினான் - செல்வானாயினான்; (எ - று.)

முடிபுனைய உலாப்போனவன் அதனைப்பெறாமற் சடைபுனைந்து சீரை சாத்தி அத்தெருவிடையே போயினான் எனத் தததியின்மையணி யென் னும் விஷமாலங்காரந் தோன்றக் கூறியது காண்க மணிக்கு நன்மை - மறு வின்மை. பவனிபோனவன் என்றது-கீழ்க் கைகேசிசூழ்வினைப்படலத்தில் "தாரணி தேரிற்சென்றான்" (௮௨) என்று கூறியதனை. உம்மை - சிறப்பு; அசையுமாம். பி - ம்:—[1]மணிமுடி, தளிர்முடி. [2]பன். [3]தேரிடை. [4]துன்ன ருஞ். [5]சீரைகள், சீரையன். [6]சடையுஞ் சுற்றியப், சுற்றிமீண்டுற. [7]மேவி னான், நோக்கினர். இது அடுத்த பாடலின்பின் சில பிரதிகளி லுள்ளது. ()

௧௮௬.—இதுமுதல் முப்பதுகவிகளால், இராமன்தெருவிற் சென்றபோது கண்டவர் பட்ட வருத்தங் கூறப்படுகின்றது.

அஞ்சன மேனி[1]யிவ் வழகற் கெய்திய
வஞ்சனை கண்டபின் வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் [2]வலிதுயிர் நினைப்ப தென்[3]சில
நஞ்சினும் [4]வலியநந் நலமென் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—,—'அஞ்சனம் மேனி இ அழகற்கு-மைபோலுங் கரிய திருமேனியையும் இத்தகையஎழிலையுமுடைய ஸ்ரீராமனுக்கு, எய்திய - பொருந்திய, வஞ்சனை - பொல்லாஙகை, கண்ட பின்—, வகிர்ந்து-பிரிந்து, நீங்கலா - (உடலை) விட்டுப்போகாத, உயிர்—, நெஞ்சின்உம்—, வலிது—; சில நினைப்பது என் - சிலவற்றை யெண்ணுவதனாற் பயன் யாது? நம் நலம்-நமது நன்மைகள், நஞ்சின்உம் வலிய-விடத்தினுங் கொடியன,' என்றார்—.

வஞ்சனை-முன் நாடுதருவேனென்று கூறிப் பின் காடுதருதல். நெஞ்சும் உயிரும் வலியன வென்பார், 'நெஞ்சினு முயிர்வலிது' என்றா. தமது உயிர் போகாதுவருத்துதல் பற்றி, 'நந்நலம் நஞ்சினும் வலிய' என்றார். பி-ம்:— [1]அவ். [2]வலியினுன், வலிதுயாம், வலிதுயான், வலிதுரு. [3]கடு. [4]வலியது மனம், வலிதுநந்நலம், வலிது நம்மனம். (சஅகு)

ககூo. மண்கொடு வருமென [1]வழியி ருந்தயா
மெண்கொடு [2]சுடர்வனத் [3]தெய்தல் [4]காணவோ
பெண்கொடு வினைசெயப் பெற்ற [5]நாட்டினிற்
கண்கொடு பிறத்தலுங் கடை[6]யென் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—,—'மண் கொடு - அரசாட்சியைப் பெற்றுக்கொண்டு, வரும்-(ஸ்ரீராமன்) வருவான்,' என-என்று, எண்கொடு-நினைத்தல்கொண்டு, வழி - (வரும்) வழியில், இருந்த - எதிர்பார்த்துக்கொண்டிருந்த, யாம்—, சுடர் வனத்து-வெயிலையுடையகாட்டில்,எய்தல்-(அவன்)அடைதலை,காண உ-பார்க்கவோ? பெண் கொடு வினை செய பெற்ற - பெண் கொடியதொழிலைச் செய்யப் பொருந்திய, நாட்டினில் - இத்தேயத்தில், கண்கொடு - கண்களை யுடையோமாகி, பிறத்தல்உம்—, கடை - இழிவினையுடையது,' என்றார்—.

கணவன்வழி யொழுகற்பாலளாய இல்லாள் தன்வழியே அக்கணவனை யொழுகுவித்துத் தீவினைசெய்தற்கு இடமாகிய இந்நாட்டில் வாழ்ந்து, இராமன்வனத்தெய்தக் கண்ணுறப்பார்த்திருத்தல் இன்னா தென்பதாம்.மண் கொடு வரக்காண இருந்தவர்கருச் சுடர்வனத்தேகக் காண நேர்ந்தமைகூறியது - தகுதியின்மையணியாம். பி-ம்:—[1]வாழ்ந்திருந்த, வழியிருந்து, வழியிருந்தது. [2]துயர், தொடர். [3]ஏகல். [4]காணவா, காணவோர். [5]நாட்டினிக். [6]என்பார். ()

ககூக. முழுவதே பிறந்துல குடைய [1]மொய்ம்பினோ
னுழுவைசேர் கானகத் துறைவென் யானென
வெழுவதே யெழுதல்கண் டிருப்ப தேயிருந்
தழுவதே யழகி [2]திவ் வன்பென் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—, - 'பிறந்து - மூத்தவனாகப்பிறந்து, உலகு முழுவதுஎ உடைய மொய்ம்பினோன்-உலகமுழுவதையுந்தனதாகும்முறைமையையுடைய வலியினனாகிய இந்தராமன், உழுவை சேர் கானகத்து - புலிகள் பொருந்திய காட்டில், யான்—, உறைவென் - வசிப்பேன், என-என்று, எழுவதுஎ-புறப்

படுவதா? எழுதல் கண்டு - (அவ்வாறு) புறப்படுவதைப் பார்த்தும், இருப்பதுவ - (நாம் உயிரோடு) இருப்பதா? இருந்து - (இந்நாட்டில் உயிரோடு) இருந்துகொண்டு, அழுவதுவ - அழுவதா? இ அன்பு அழகிது-இந்த (நமது) அன்பு அழகினையுடையது!' என்றார்—; (எ - று.)

அழகிது - எதிர்மறையிலக்கணை. உழுவை - மற்றைக் கொடுவிலங்குகளுக்கும் உபலக்ஷணம். இ வன்பு எனவும் பிரிக்கலாம். பி-ம்:—[1]முன்பினேன். [2]எம்மனம், எம்மன்பு, இவ்வனம். சிலபிரதியில் "திருவரை" (கக௩) என்று தொடங்கும் பாடலுக்குப்பின் இதுவும், இதன்பின் "வலங்கடிந்து" என்று தொடங்கும்பாடலும் உள்ளன: சிலபிரதிகளில், இதுவும் அடுத்தபாடலும் மாத்திரம் முன்பின் மாறியுள்ளன. (சஅஅ)

ககஉ. வலங்கடிந் [1]தேழைய னாய மன்னனை
நலங்[2]கடிந் தறங்கெட [3]நயத்தி ரோவெனக்
குலங்[4]கடிந் தான்வலி கொண்ட கொண்டலை
நிலங்கடிந் தாளொடு நிகரென் றார்சிலர்.

(இ - ள்.) சிலர்—,—வலம் கடிந்து - வலியை விட்டு, ஏழையன் ஆய - அறிவீனனாய்விட்ட, மன்னனை - தசரதனைக்குறித்து, '(நீர்), நலம் கடிந்து - நன்மையைவிட்டு, அறம் கெட-தருமமழிய,நயத்திரோ (கைகேயியின்வரத்தைத்தர) விரும்பிநின்றீரோ? என - என்றுத, குலம் கடிந்தான் வலி கொண்ட கொண்டலை - (ராச) வமிசத்தைத் துணித்த பரசுராமனது பலத்தை வெற்றிகொண்ட நீலமேகச்யாமளனான ஸ்ரீராமனை, நிலம் - பூமியினின்று, கடிந்தாளொடு - நீக்கிய கைகேயியோடு, நிகர்-சமானமாவாய்,' என்றார்—; (எ - று.)

முதலில் இராச்சியத்தைத் தனக்குக் கொடுப்பதாக வாக்களித்துவிட்டுக் கைகேயியைக் கண்டவுடனே வலிகுன்றி அறிவிழந்துநின்ற மன்னனைப் பார்த்து, 'புண்ணியத்தைக் கைவிட்டுத் தருமத்திற்குவிரோதமாக நீர் நடக்கலாமோ?' என்று கண்டிததுச்சொல்லாத இந்தஇராமன், நமக்குவருத்தத்தையுண்டாக்குந் தன்மையிற் கைகேயிபோல்பவனே யாவ னென்று சிலர் கூறினாரென்க. 'வலங்கடிந்தேழையராயமன்னரை, நலங்கடிந் தறங்கெட நயக்கலீர்களும்'என்ற பாடத்துக்கு - தசரதன் சந்மார்க்கத்தைவிட்டுத் தருமத்துக்குமாறாக நடக்கவும் அவனைக் கண்டிக்கவிரும்புகின்றீரில்லை; நீவிர் இராமனைப் பூமியையாளவொட்டாதுசெய்த கைகேயியைப் போன்றவர்களாவீரென்று, தம்வலிமையால் இராமனுக்குப் பட்டங்கட்டமுயலாது வலியற்றவராய்விட்ட மன்னரைப்பார்த்துச் சொல்வாரென்க: நயக்கலீர்கள், கள் - அசை. பரசுராமனுக்கு,'குலங்கடிந்தான்' என்று ஒருபெயரிட்டார். கொண்டலென்றதனால், ஸ்ரீராமன்நீங்குகின்றநகரம் மழைநீங்குகின்ற நகரொக்குமென்றும், அவன்புகுகின்ற வனம் அது புகுந்துபெய்கின்ற வனமொக்கு மென்றுங் கொள்க. பி-ம்:—[1]ஏழையியையமன்னனும், ஏழையராயமன்னரும். [2]கடந்து.

[3]நயக்கிலீரகங், நயத்தியோவெனுக், நடந்தவன்கணுங், நயத்திஞேரினுங், நயத்திரோவெனுக், நடந்தமன்னர்தங். [4]கடிந்தவன்வலி, கடிந்திவ்வணம், கடிந்தவர்வலி. (சஅக)

**ககூ௩.** திருவரை [1]சுற்றிய சீரை யாடையன்
[2]பொருவருந் துயரினன் ளுெடர்ந்து போகின்ற
னிருவரைப் பயந்தவ ளீன்ற கான்முளை
யொருவனே யிவற்[3]கிவ்வூ ருறவென் ருர்சிலர்.

(இ - ள்.) சிலர்—,—'திரு அரை சுற்றிய சீரை ஆடையன் - அழகிய அரையிலுடுத்த மரவுரியாகிய உடையையுடையவனும், பொருவு அரு துயரினன் - ஒப்பற்ற துன்பத்தையுடையவனும், தொடர்ந்து போகின்றான் - (ஸ்ரீராமனைப்) பின்றொடர்ந்து செல்கின்றவனுமாகிய, இருவரை பயந்தவள் ஈன்ற கான் முளை ஒருவன் ஓ - இரட்டைப்பிள்ளைகளைப்பெற்றவள் [சுமித்திரை] பெற்ற பிள்ளை [லக்ஷ்மணன்] ஒருத்தன்தானே, இவற்கு - ஸ்ரீராமனுக்கு, இ ஊர் - இந்நகரத்தில், உறவு - சுற்றம்?' என்றார்—; (எ - று.)

இம்மாநகரில் இலக்குமணனொருவனே தானும் மரவுரிதரித்துப் பெருந்துயரத்தோடு இவ்விராமனைத் தொடர்ந்து செல்லுகின்றான்: இவனுக்கு இவ்வொருவன்தானு உற்றஉறவின னென்று சிலர் வருந்தினரென்க. ஒருவனே என்ற ஓகாரத்தைப் பிரிநிலையாக்கி,இராமனைத் தொடர்ந்து செல்வதால் இவனொருவன்தான் இவ்வூரில் உற்றஉறவினனென்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]உரியினன் சடையின் சென்னியன், சுற்றிய சீரவாடையன். [2]பொருவரு. [3]அவ்வூர். (சகல)

**ககூச.** முழுக்கலின் [1]வலியநம் மூரி நெஞ்சினை
மழுக்களிற் பிளத்துமென் றோடு வார்[2]வழி
யொழுக்கிய [3]கண்ணினிற் கலுழி யூற்றிடை
[4]யிழுக்கலில் [5]வழுக்கிவீழ்ந் திடருற் றார்சிலர்.

(இ - ள்.) சிலர்—,—'முழு க(ல்)லின் வலிய-பெரிய கற்பாறையினும் வலியதாகிய, நம் மூரி நெஞ்சினை - நமது கடுமனத்தை, மழுக்களின் பிளத்தும் - மழுவாற் பிளப்போம்,' என்று ஓடுவார் - என்று சொல்லி (மழுவைத் தேட) விரைந்து செல்பவராகி,—வழி-நெறியில், கண்ணினின் ஒழுக்கிய - கண்களினின்று பெருக்கிய, கலுழி ஊற்றிடை-கலங்கனீரூற்றாலாகிய, இழுக்கலில் - சேற்றில், வழுக்கி வீழ்ந்து சறுக்கிவிழுந்து, இடர் உற்றார் - துன்பமடைந்தார்; (எ - று.)

மழுக்களின், இன்-ஏதுப்பொருள்; ஏதுப்பொருள் கருவிக்க ணடங்கும். பி-ம்:—[1]வலியன. [2]வரித்து, வழித்து. [3]கலுழியாற்றிடைவிழுந்துயிர், கலுழியாற்றிடை விழுந்துயர், கலுழியாற்றிடையிழிந்திட. [4]ஒழுக்கலில். [5]இழுக்கி, இழுக்க. (சகக)

௧௧௫. பொன்னணி மணியணி மெய்யிற் போக்கினர்
மின்னென மின்னென [1]விளங்கு மெய்[2]யிறப்
பன்னிறத் [3]துகிலினைப் பறித்து [4]நீக்கினர்
சின்னநுண் [5]டுகிலினைப் புனைகின் றார்சிலர்.

(இ - ள்.) சிலர்-,-பொன் அணி-சுவர்ணாபரணங்களையும், மணி அணி-ரத்நாபரணங்களையும், மெய்யின் போக்கினர் - (தம்) உடம்பினின்று கழற்றி யெறிந்தவராகி, மின் என மின் என விளங்கும்-பல மின்னல்போல விளங்கு கின்ற, மெய் - (தம்)உடம்பினின்று, இற - கிழிந்துவிடும்படி, பல் நிறம் துகிலினை-பலவர்ணங்களையுடைய ஆடையை, பறித்து பிடித்திழுத்து, நீக்கினர்-அப்பால் வீசினவராகி, சின்ன நுண் துகிலினை-சிறிய நுண்ணிய ஆடையை, புனைகின்றார் - உடுக்கின்றார்; (எ - று.)

இராமபட்டாபிஷேகத்துக்காக நல்லணிகளை யணிந்தும் நற்பட்டாடை களையுடுத்து மிருந்த சிலர், இராமன் காடுசெல்வதையுணர்ந்து வெறுப்பினால் ஆடையாபரணங்களை அப்பாலெறிந்துவிட்டுத் தம் மானங்காத்தற்குவேண் டிய சிறுதுணியையுடுத்துக்கொண்டனரென்க. மின்னென மின்னென என் னும்அடுக்கு, பன்மைப்பொருளுணர்த்திற்று. சின்ன-சிறிய என்பதன் மரூஉ; சின்னமென்னும் வடசொற்றிரிபாகவுமாம். பி-ம்:—[1]விலக்கி. [2]விலைப். [3]துகி னை. [4]நீக்கியே. [5]துகிலரை. (௪௧௨)

௧௧௬. நிறைமக வுடையவர் நெறிசெ லைம்பொறிக்
குறை[1]மக குறையினுங் கொடுப்ப [2]ராருயிர்
முறைமகன் வனம்புக மொழியைக் [3]காக்கின்ற
விறைமகன் றிருமன மிரும்பென் றார்சிலர்.

(இ - ள்.) சிலர்—, 'நிறை மக உடையவர்-நிறைந்த[பல] புத்திரர்களை யுடையவரும்,—(அம்மகாருள்), நெறி செல் - ஐம்புலநெறியிற் செல்கின்ற, ஐம்பொறி குறை-ஐந்துபொறிகளில் ஒன்றுஇரண்டு குறைந்த, மக - பிள்ளை, குறையின்உம்-அழிந்தாலும், உயிர் கொடுப்பர்-(தமது) உயிரைப்போக்குவர்; ஆம்-இது உலகவழக்காகும்; (இங்ஙனமாக), முறை மகன்-முறைமைக்குரிய மூத்த திருமகன் [ஸ்ரீராமன்], வனம் புக - காட்டிற்குச் செல்ல, (அதனைத் தடுக்காது), மொழியை காக்கின்ற-(தன்) வாய்மையை யோம்புகின்ற, இறை மகன் - சக்ரவர்த்தியினது, திரு மனம் - அழகியமனம், இரும்பு - இரும்போ டொப்பாகும்', என்றார்—; (எ - று.)

பலமகவு தமக்கு இருப்பினும், ஐம்பொறிகளிற்குறைபாடுடைய மகவு ஒன்று கெட்டாலும் தம்முயிரையும் இழக்குந்தன்மையைக் கொண்ட இவ்வுல கத்தில், தன்வாய்மையைக் காப்பதென்ற வியாஜத்தால் இறைமைக்குணம் மிக்க தன்மகனைக் காட்டிற்குப்போக்கிய இந்தத்தசரதனது மனம் இரும்பே யென்றனரென்க. மக - ஆகுபெயர். உடையவரும் என்னுஞ் சிறப்பும்மை

தொக்கது. ஐம்பொறி குறைமக-ஐம்பொறி யுணர்விலுங் குறைவுபட்டமக்கள் அவை-ஊமுஞ் செவிடுங் குருடும் போல்வன. முறைமகன் என்றது-எவ்வாற் றானுங் குறைவுபடாத திருக்கல்யாணகுணகணங்களையுடையவனென்றபடி. பி-ம்:—[1]மகன். [2]தம்முயிர், ஆருயிர். [3]தாங்கிய. (௪௩௩)

௧௧௩௭. [1]வானமே யனையதோர் கருணை மாண்பலா
[2]லூனமீ்வே றிலானுட னுலகம் யாவையுங்
கானமே புகு[3]மெனிற் காதன் மைந்தனுந்
தானுமே யாளுங்கொ றரையென் றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—,—'வானம் ஏ அனையது ஓர் மாண்பு கருணை அலால் - மேகத்தையே ஒப்பாகக்கொண்ட வேறோருவமையற்ற சிறந்த கருணையென்ற நற்குணத்தையே வடிவாகக்கொண்டன்றி, வேறு ஊனம் இலானுடன் மாறு கச்சொல்லக்கூடிய கெட்டகுணமொன்றையும் பெறாதவனாகிய இராமபிரா னுடன், உலகம் யாவைஉம் - இவ்வுலகத்திலுள்ள ஜநங்களெல்லாம், கானம் ஏ புகும் எனின்-(அவன்செல்லுகின்ற) காட்டிற்கே சென்றுவிடுமாயின், (இந் தக்கைகேயி), தரை - இந்தப்பூமியை, காதல் மைந்தன்உம் தான்உம்ஏ - தன் னன்பிற்கு உரிய புதல்வனாகிய பரதனும் தானும்மாத்திரமாகஇருந்து, ஆளும் கொல்-அரசுபுரிவாளோ?' என்றார்—; (எ - று.)

இராமனைக் கானகம் புகுத்தியது கொடுமை யென்பதற்கு, அவனது குணங்களைப்பாராட்டி 'கருணைமாண்பலால் ஊனம்வேறிலான்' என்றனர். இச்செய்யுள், அச்சிட்ட பிரதிகளிலில்லை; சிலபிரதிகளில் "வாங்கிய"என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]மானமே. [2]ஊனமேவேறிலா, ஊன மேவேறிலான். [3]மையவும். [4]இனி. (௪௩௪)

௧௧௩௮. வாங்கிய [1]மருங்குலை வருத்துங் கொங்கையர்
பூங்கொடி பொதுங்குவ போ[2]லொ துங்கின
ரேங்கிய [3]குரலினர் [4]இணைந்த காந்தளிற்
றாங்கிய செங்கைதந் [5]தலைகண் மேலுளார்.

(இ - ள்.) வாங்கிய மருங்குலை வருத்தும் கொங்கையர்-வளைந்த இடை யை(த் தமதுபாரத்தால்)வருத்துகின்ற தனங்களையுடையவராகிய மகளிர்,— ஏங்கிய குரலினர்-அழுகின்ற குரலினையுடையவரும், இணைந்த காந்தளின் தம் தலைகள்மேல் தாங்கிய செம் கை உளார் - சேர்ந்த செங்காந்தண்மலர் போலத் தம்தலைமீதுவைத்த சிவந்த கைகளை யுடையவருமாகி, பூங் கொடி ஒதுங்குவ போல்—, ஒதுங்கினர்—; (எ - று.)

இரண்டுகைகளையும் தலைமேல்வைத்துக்கொண்டு அழுதவண்ணம் மக ளிர் ஒருபுறமாகச்சென்று கிடந்தனரென்க. பி-ம்:—[1]மருங்குலார் வைத்த கொங்கையார். [2]ஒதுங்கினார். [3]குரலினார். [4]இளைத்த. [5]தங்கண், தலையின். ()

௧௧௩௯. தலைக்குவட் டயன்மதி [1]தவழு மாளிகை
நிலைக்குவட் டிடையிடை நின்ற நங்கைமார்
முலைக்குவட் டிழிகணீ ராலி மொய்த்துக
மலைக்குவட் [2]டயர்வுறு மயிலின் மாழ்கினார்.

(இ - ள்.) தலை குவடு அயல் - சிகரத்துச்சியில், மதி தவழும்-சந்திரனூர்கின்ற, மாளிகை - வீடுகளினது, நிலை குவடு இடை இடை-மேல் நிலையாகிய உபரிகையிடங்கள்தோறும், நின்ற—,நங்கைமார்—,—முலை குவடு இழி-(தம்) தனங்களின்மேல் வழிகின்ற, கண் நீர் ஆலி-கண்ணீர்த்துளி, மொய்த்து உக-இடைவிடாது சிந்த, மலை குவடு அயர்வுறும்-பர்வதசிகரத்தில் வருந்துகின்ற, மயிலின் - மயிற்பேடைகள் போல, மாழ்கினர் - வருந்தினர்; (எ - று.)

கண்ணீர் பொழிய மாளிகைமேலிருந்து புலம்புகின்ற மகளிர், மழைநீர் பொழிய மலைமேல் அயர்வுறும் மயிலையொத்தனரென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]தழுவ, தழுவு [2]அகவுறு. இச்செய்யுள் சில பிரதியில் "நன்னெடு" (௨௦௧) என்ற பாடலுக்குப் பின் உள்ளது. (௪௯௬)

௨௦௦. [1]மஞ்சென வகிற்புகை வழங்கு மாளிகை
யெஞ்சலில் சாளரத் [2]திரங்கு [3]மின்சொலா
ரஞ்சனக் [4]கண்ணினீ ரருவி சோர்தரப்
பஞ்சரத் திருந்தழூங் கிளியிற் பன்னினார்.

(இ - ள்.) மஞ்சு என அகில் புகை வழங்கும் - மேகம்போல அகிற்புகை பொருந்திய, மாளிகை - உபரிகையிலுள்ள, எஞ்சல் இல் சாளரத்து-குறைதலில்லாத பலகணிவழியால், (கண்டு), இரங்கும் இன் சொலார் - வருந்துகின்ற இனிய சொல்லினையுடைய மகளிர், அஞ்சனம் கண்ணின்-மையுண்ட கண்களினின்று, நீர்—, அருவி சோர்தர - மலையருவிபோல வழிய, பஞ்சரத்து இருந்து அழும் கிளியின் - கூட்டிலிருந்து அழுகின்ற கிளிகள்போல, பன்னினார் - அழுதார்; (எ - று.)

சாளரத்திரங்கும் இன்சொலார்க்கு, பஞ்சரத்திலிருந்தழூங் கிளி உவமையாம். மாளிகைமேல்வழங்கு புகை, மலைமேல் தவழும் மஞ்சுஅன்னதாதல் காண்க. பி-ம்:—[1]மஞ்சன. [2]இயங்கும். [3]மென். [4]கண்கணீர். (௪௯௭)

௨௦௧. நன்னெடுங் கண்களி னின்ற நீர்த்துளி
தன்னெடுந் தாரைக [1]ளத்தின் [2]வீழ்தலான்
[3]மன்னெடுங் [4]குமரன்மாட் டழுங்கி மாடமும்
பொன்னெடுங் கண் [5]குழித் தழுவ போன்றவே.

(இ - ள்.) (மேன்மாடத்தினின்று இராமபிரான் செல்வதைக் காண்பவர்களுடைய), நல் நெடு கண்களின் - அழகிய பெரிய கண்களினின்று, நான்ற-வழிகின்ற, நீர் துளிதன் - நீர்த்திவலைகளுடைய, நெடு தாரைகள் - பெரிய தாரைகள், தளத்தின் வீழ்தலால் - உபரிகையினின்று பெருகுதலால்,—மாடம்உம் - மாளிகைகளும், மன் நெடு குமரன் மாட்டு - சக்ரவர்த்தித்திருமகன் விஷயத்தில், அழுங்கி - இரங்கி, பொன் நெடு கண் குழித்து-அழகிய பெரிய கண்களை [இடத்தை]க் குழியாக்கி, அழுவ போன்ற - அழுவனவற்றைப் போன்றன; (எ - று.)

இராமபிரான் மரவுரிதரித்து வீதியிற்செல்வதை மேன்மாளிகையி னின்று கண்ட சிலர் தமது கண்களினின்று நீரை ஆறுய்ப்பெருக்க அந்நீர் குழிவிழும்படி உபரிகையினின்று கீழேபெருகியது, மாடமே கண்குழித்து அழுவனபோலு மெனக் குறித்தார்: **அதிசயோக்தியணியை** யங்கமாகக் கொண்டுவந்த **தற்குறிப்பேற்றவணி.** இத்தற்குறிப்பேற்றத்திற்கு 'கண்குழி த்து' என்றவிடத்துள்ள சிலேடை அங்கமாய்நின்றது: கண் - நயனமும் இடமும் என இருபொருள்படுதல் காண்க. குழித்தல் - குளித்தல்: நீராட்டு தல் என்பாருமுளர். பி-ம்:—[1]தலத்தின், நிலத்து. [2]வீழ்த்தலால். [3]அந்நெடுங். [4]குமரர். [5]குழிந்து, குவித்து. இச்செய்யுள், "மக்களை" என்று தொடங்கும் அடுத்தபாடலுக்குப்பின் சில பிரதிகளி லுள்ளது. (௨௧௮)

௨0௨. மக்களை மறந்தனர் மாதர் தாயரைப்
புக்கிட [1]மறிந்திலர் புதல்வர் பூசலிட்
டுக்கன ருயங்கின ருருகிச் சோர்ந்தனர்
துக்க[2]நின் றறிவினைச் சூறை யாடவே.

(இ - ள்.) மாதர் மக்களை மறந்தனர் - மகளிர் (தம்) பிள்ளைகளை மறந்து விட்டார்கள்; புதல்வர் தாயர் புக்க இடத்தை அறிந்திலர்-புத்திரர் தாய்மார் சென்ற இடத்தை அறிந்தாரில்லை; (இங்ஙனம் அந்நகரமாந்தர்), பூசல் இட்டு-பெரிதொலித்து, உக்கனர் - நெஞ்சுளைந்தவராகியும், உயங்கினர் - மனந் தளர்ந்தவராகியும், துக்கம் நின்று அறிவினை சூறை ஆட - துயரம் நிலைத்து அறிவைக் கொள்ளையிட, உருகி சோர்ந்தனர்—; (எ - று.)

தாயர் புதல்வரையும், புதல்வர் தம் தாயரையும் அறிந்திலர்: இங்ஙன மானதற்குக் காரணம், அவர்களுடைய நெஞ்சு இராமனுக்குநேர்ந்த வனவாசத் தைக் கருதியதனால் உக்கு உயங்கியுருகியமையே யென்றவாறு. தாயரை, 'ஐ'-பிரித்துக்கூட்டப்பட்டது. பி-ம்:—[1]உணர்ந்திலர். [2]நின்றிருவினை. (௨௧௯)

௨0௩. காமரங் [1]கனிந்தெனக் கனிந்த மென்மொழி
மாமடந் தையரெலா [2]மறுகு சேர்தலாற்
றேமரு நறுங்குழற் [3]றிருவி னீங்கிய
தாமரை [4]யொத்தன தவள மாடமே.

(இ - ள்.) காமரம் கனிந்து என - காமரமென்னும் பண்ணிசை பழுத் தாற்போல, கனிந்த மெல் மொழி - இனிய மெல்லிய சொல்லினையுடைய, மா மடந்தையர் எலாம் - அழகிய மகளிர் யாவரும், மறுகு சேர்தலால் - வீதியை அடைந்ததனால், தவளம் மாடம் - (முன் அவர்களிருந்த) வெள்ளிய மாளிகைகள்,—தேன் மரு நறு குழல்-கட்கினிமையையும் மிக்கமணத்தையு முடைய கூந்தலையுடைய, திருவின் - திருமகளால், நீங்கிய - பிரியப்பெற்ற, தாமரை - தாமரைமலரை, ஒத்தன—; (எ - று.)

"திருப்புறக் கொடுத்த செம்பொற்றாமரைபோன்று கோயில்,புரிக்குழன் மடந்தை போகப் புலம்பொடுமடிந்ததன்றே" என்ற சீவகசிந்தாமணி இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. தேன்மரு-சூடிய மலரிலுள்ள மதுப்பொருந்திய, குழலென்றுமாம். தேன் + மரு = தேமரு: "தேன்மொழி"என்னுஞ் சூத்திரவிதி. திருவின், இன் - அசையுமாம். பி-ம்:—[1]கனிந்தன. [2]மறுகிற்சேர்தலால், மறுகினேகலால். [3]திருவை. [4]ஒததகத். இச்செய்யுள் "மழைக்குலம்" என்று தொடங்கும் அடுத்த பாடலுக்குப்பின் சில பிரதிகளிலுள்ளது.　　(௩00)

௨0௪. மழைக்குலம் [1]புரைகுழல் [2]விரிந்து மண்ணுறக்
குழைக்குல முகத்தியர் [3]குழாங்கொண் டேகின
ரிழைக்குலஞ் சிதறிட வேவுண் [4]டோய்வுறு
முழைக்குல முழைப்பன [5]வொத்தொர் [6]பாலெலாம்.

(இ - ள்.) ஓர் பால் எலாம்-ஒருபக்கத்திலெல்லாம்,-ஏ உண்டு - அம்பினாலடிக்கப்பட்டு, ஓய்வுறும் - தளர்கின்ற, உழை குலம் - பெண்மான்கூட்டம், உழைப்பன ஒத்து-வருந்துகின்றனவற்றைப் போன்று,-குலம் குழை முகத்தியர் - சிறந்த குண்டலத்தை யணிந்த காதினையுடைய மகளிர்,—மழை குலம் புரை குழல் - முகிற்குழாத்தை யொக்கின்ற கூந்தல், விரிந்து மண் உற - அவிழ்ந்து தரையிற் புரள, இழை குலம் சிதறிட - ஆபரணசமூகஞ் சிந்த, குழாம் கொண்டு - கூட்டமாகத்திரண்டு, ஏகினர் - போனார்கள்; (எ - று.)

மகளிர்பலராதலாற் கூந்தலும் பலவாதல்பற்றி, 'மழைக்குலம்' என்றார். குலக்குழையென மாறுக. முகம் - ஆகுபெயர். செறிப்பன, பூண்பன முதலாகப் பலவகைப்படுதலால்,இழைக்குலமென்றார்.மகளிர்க்கு-உழைக்குலமும், ஸ்ரீராமனைப் பிரிவதனாலுண்டாகிய துயரிற்கு - அம்பும் உவமை. எலாமென்றது, எஞ்சாமைப்பொருளது. பி-ம்:—[1]புரி. [2]விரித்து. [3]குழாங்களேங்கின, குழாங்கொண்டோங்கின, குழாங்கொண்டேங்கினர். [4]ஓய்தரும். [5]மொய்த்த, ஒத்த. [6]பாரெலாம்.　　(௩0௧)

௨0௫. கொடியடங் கினமனைக் குன்றங் கோமுரசு
இடியடங் கினமுழக் கிழந்த பல்லியம்
படியடங் கலுநிமிர் பசுங்கண் மாரியாற்
பொடியடங் கின [1]மதிற் புறத்து வீதியே.

(இ - ள்.) மனை குன்றம்-மலைபோன்ற மாளிகைகள்,-கொடி அடங்கின-கொடிகள் அடங்கப்பெற்றன; கோ முரசு இடி-மேன்மையையுடைய முரசவாத்தியங்களினொலி, அடங்கின—; பல் இயம் - பலவகை வாச்சியங்கள், முழக்கு இழந்த-ஒலியை இழந்தன; மதில் புறத்து வீதி - மதிலினதுவெளியிலுள்ள தெருக்கள், படி அடங்கலும் நிமிர்-நிலமுழுவதிலும் பெருகுகின்ற, பசு கண் மாரியால் - பசிய கண்ணீரால், பொடி அடங்கின-தூள் அடங்கப்பெற்றன; (எ - று.)

மாடங்கள் கொடியெடுத்துக்கட்டுதல் ஒழிந்து, மங்களவாச்சிய வொலிகளும் ஒலியாதிருக்க, வீதிகள் அழுகின்றவர்களின் கண்ணீர்வெள்ளத்தாற் புழுதியடங்கினவென்க. பசுமை-ஈண்டுக்கருமைமேற்று; இனி, புதுமை மேற்ருய், இதுகாறும் ஒருநாளுமில்லாத புதிய கண்ணீரென்றுமாம். பி-ம்:—[1]மதிள். (௫௦௨)

௨௦௯. அட்டிலு [1]மிழந்தன புகைய கிற்புகை
நெட்டிலு [1]மிழந்தன நிறைந்த [2]பால்கிளி
வட்டிலு [3]மிழந்தன [4]மகளிர் [5]வான்மணித்
தொட்டிலு [1]மிழந்தன மகவுஞ் [6]சோரவே.

(இ - ள்.) அட்டில்உம்-மடைப்பள்ளிகளும்; புகை-(சமைப்பல் செய்தலினு லுண்டாகிற) புகையை, இழந்தன—; நெடு இல்உம்-உயர்ந்த உபரிகைகளும், அகில் புகை-அகிற்கட்டையினு லுண்டாக்கப்படுகின்ற தூமத்தை, இழந்தன-; கிளிஉம்—, பால் நிறைந்த வட்டில் - பசுவின்பால் நிறைந்த வட்டிலை, இழந்தன—; வான் மணி தொட்டில்உம்-சிறந்த ரத்நமயமான தொட்டில்களும்,மகஉம் சோர - குழந்தைகளுந் தளர்ச்சியடைய, மகளிர் - மாதர்களினதுவரவை, இழந்தன—; (எ - று.)

சொற்பொருட்பின்வருநிலையணி: மேலும் இது காண்க. உண்ண வேணுமென்ற விருப்பம் இன்மையால் அட்டில் புகையிழந்தன; அகிற்புகை யூட்டுதல் உல்லாசகாலத்து நிகழ்வதாதலால், நெட்டிலும் அகிற்புகையையிழந்தன; கிளிப்பிள்ளைகட்குப் பாலூட்டுதலைச் செய்யாமையால், கிளியும் பால் நிறைந்த வட்டிலையிழந்தன;குழவிகளைத் தாய்மார் எடுத்துவிடவேணுமென்ற கருத்துக் கொள்ளாமலிருத்தலால், மகளிரை மணித்தொட்டிலு மிழந்தன வென்க. பி-ம்:—[1]மறந்தன. [2]பால்களின். [3]இழந்தனர், மறந்தன. [4]மருங்கு. [5]காழ், கால்சால். [6]சோர்ந்தவே. (௫௦௩)

௨௧௦. ஒளிதுறந் தன[1]முக முயிர்[2]து றந்தெனத்
துளிதுறந் தனமுகிற் றெருகையுந் [3]தூயநீர்த்
தளிதுறந் தன[4]பரி தான யானையுங்
களிதுறந் தனமலர்க் [5]கள்ளுண் வண்டினே.

(இ-ள்.) முகம்-(யாவருடைய) முகமும், உயிர் துறந்துஎன - உயிரைப் பிரிந்தாற் போல, ஒளி துறந்தன - காந்தியைவிட்டன; முகில் தொகைஉம் - மேகக்கூட்டமும், துளி துறந்தன - மழைத்துளியை விட்டன; பரி - குதிரைகளும், தூய நீர்-பரிசுத்தமாகிய நீரினையுடைய, தளி-சாலைகளை, துறந்தன—; தானம் யானைஉம் - மதயானைகளும், மலர் கள் உண் வண்டின் - பூக்களிலிருந்து மதுவைக் குடிக்கின்றவண்டுகள்போல, களிதுறந்தன-களிப்பைவிட்டன.

தூய நீர்மையை யுடைய தளி யென்று உரைத்தலும், தூய நீர்த்துளி யென இயைத்தலுமாம். தளி-கட்டுமிடம்; அரசன் கோயிலுமாம். பரிதுஆன

எனஎடுத்து - பருமையை யுடையதாகியவென யானைக்கு அடையுமாம். பி - ம்:—[1]உடல். [2]துறந்தன. [3]தூயவாம், தூயவர். [4]பலித்தானம்,பலிதானம், பரிதானே. [5]கண்ணின். (௩௦௪)

௨௦௫. நிழல்பிரிந் தனகுடை நெடுங்க ணேழையர்
குழல்பிரிந் தனமலர் குமரர் தாளிணை
கழல்பிரிந் தனசினக் [1]காமன் வாளியு
மழல்பிரிந் தனதுணை பிரிந்த [2]வன்னமே.

(இ - ள்.) குடை-சத்திரங்கள், நிழல் பிரிந்தன-நிழலை விட்டன; நெடு கண் ஏழையர் குழல்-நீண்ட கண்களையுடைய மகளிரது கூந்தல், மலர் பிரிந்தன - பூக்களைச்(சூடாது) விட்டன; குமரர் தாள் இணை-ஆடவர்களுடைய உபயபாதங்கள், கழல் பிரிந்தன-வீரக்கழலை விட்டன; சினம் காமன் வாளி உம் - கோபத்தையுடைய மன்மதனது பாணங்களும், அழல் பிரிந்தன வெப்பத்தைவிட்டன; அன்னம்-அன்னப் பறவைகள், துணை பிரிந்த - (தம்) பெடையைப்பிரிந்தன; (எ - று.)

'நிழல்பிரிந்தனகுடை' என்றதற்கு-யாவருங் குடைபிடித்துக்கொள்ளுதல் முதலியவற்றைக் கொண்டில ரென்றும், 'காமன்வாளியும் அழல்பிரிந்தன' என்றதற்கு-யாவரும் வேட்கையுற்றில ரென்றுங் கருத்துக்கொள்க. பி-ம்:—[1]காமவாளியும். [2]அன்றிலே. (௩௦௫)

௨௦௬. தாரொலி நீத்தன புரவி தண்ணுமை
வாரொலி நீத்தன மழையின் [1]விம்முறுந்
தேரொலி நீத்தன தெருவுந் தெண்டிரை
நீரொலி நீத்தன [2]நீத்தம் [3]போலுமே.

(இ-ள்.) புரவி-குதிரைகளின், தார் ஒலி-கிண்கிணிமாலையினோசையை, நீத்தன-விட்டனவும், தண்ணுமை-பேரிகைகளினது, வார்ஒலி-தோல்வாரின் ஒலியை, நீத்தன-நீத்தனவும்,மழையின் விம்முறும்-மேகம்போல ஒலிக்கின்ற, தேர் ஒலி-தேரோசையை, நீத்தன-விட்டனவுமாகிய, தெருஉம்—,—தெள் திரை நீர் ஒலி நீத்தன-தெளிந்த அலைகளையுடைய நீரினதுஒலியை விட்டனவாகிய, நீத்தம்-கடலை, போலும்—; (எ - று.)

தெருவும், உம்மை-கதைப்போக்கைத் தழுவிவந்தது: இறந்தது தழுவிய வெச்சவும்மையின்பாற்படும். தெரு-அரசர் தெரு. புரவித்தாரொலிமுதலியன நீங்கப்பெற்ற தெரு, தெண்டிரையொலி நீத்த கடலைப்போலுமென்க. நீத்தம்-கடலுக்கு; இலக்கணை. இனி, 'புரவி தாரொலி நீத்தன: தண்ணுமை வாரொலி நீத்தன: தெருவும் விம்முறுந் தேரொலி நீத்தன: (இவை), தெண்டிரை நீரொலி நீத்தன நீத்தம்போலும் என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]முத்துறத். [2]நீத்த. [3]போலவே. (௩௦௬)

உகo. முழவெழு மொலியில முறையின் [1]யாழ்நரம்
பெழவெழு மொலியில விமைப்பில் [2]கண்ணினர்
விழவெழு மொலியில வேறு மொன்றில
வழவெழு [3]மொலியல [4]தாச வீதியே.

(இ-ள்.) அரசவீதி-ராஜவீதிகளில், அழ எழும் ஒலி அலது - அழுதலா லுண்டாகிற ஒலியேயல்லாமல்,—முழவு எழும் ஒலி இல - வாச்சியங்களி னின்று உண்டாகின்ற ஒலி இல்லை; முறையின் - கிரமமாக, யாழ் நரம்பு - வீணையினது நரம்புகளினின்றும், எழ எழும் - மிகுதியாக உண்டாகின்ற, ஒலி-, இல—; இமைப்பு இல் கண்ணினர் - இமையாக்கண்ணராகிய தேவர் களின், விழவு - திருவிழாக்களில், எழும் - உண்டாகின்ற, ஒலி—, இல—; வேறு ஒன்றுஉம் இல—; (எ - று.)

[3]ஒலியில என்ற பாடத்துக்கு, மூர்ச்சித்தன ராதலால், அழவெழுமொலி யுமிலதாயிற் றென்க. இங்கே 'அரசவீதி' என வந்ததால், கீழ்ச்செய்யுளில் தெருஎன்றதும் அரசவீதியையே காட்டும். பி - ம்:—[1]ஆரணம். [2]கண்ணநீர். [3]ஒலியிலாது, ஒலியலால், ஒலியிலா, ஒலியெழும். [4]அரசர். (கூ௦எ)

உகக. தெள்ளொலிச் [1]சிலம்புகள் சிலம்பு பொன்மனை
நள்ளொலித் திலநளிர் கலையு[2]மன்னவே
புள்ளொலித் தில[3]புனல் பொழிலு [2]மன்னவே
கள்ளொலித் திலமலர் களிறு [2]மன்னவே.

(இ-ள்.) தெள் ஒலி சிலம்புகள்-தெள்ளிய ஒலியினையுடைய காற்சிலம்பு கள், சிலம்பு - ஒலிக்கின்ற, பொன் மனை - பொன்மயமான மாளிகைகள், நள் ஒலித்தில-நள்ளென் றுஒலித்தன வில்லை; நளிர் கலைஉம்-பெரிய மேகலா பரணங்களும், அன்னஏ-அத்தன்மையனவே; புனல்-நீரில், புள்-பறவைகள், ஒலித்தில—; பொழில்உம்-சோலைகளிலும், அன்னஏ—; மலர் - பூக்களில், கள்-வண்டுகள், ஒலித்தில—; களிறுஉம்-யானைகளும், அன்னவே—; (எ-று.)
பி ம்:—[1]சிலம்புதன். [2]அன்னதே. [3]பொழில்புனலும், புனற்பொழிலும். ()

உகஉ. செய்ம்மறந் தனபுனல் சிவந்த வாய்ச்சியர்
கைம்மறந் தன[1]பசுங் குழவி காந்தெரி
நெய்ம்[2]மற ந்தனநெறி யறிஞரி யாவரு
மெய்ம்மறந் தனரொலி மறந்த வேதமே.

(இ - ள்.) செய் - கழனிகள், புனல் மறந்தன - நீர் மறக்கப்பெற்றன; சிவந்த வாய்ச்சியர்-சிவந்த அதரத்தையுடைய மகளிரின், கை—, பசுங் குழவி- இளங்குழந்தைகளை, மறந்தன—; காந்து எரி - விளங்குகின்ற அக்கினிகள், நெய் மறந்தன-(ஆகுதிசெய்யும்) நெய்யை மறக்கப்பெற்றன; நெறி அறிஞர் யாவர்உம்-நன்னெறியை யறிந்த ஞானிகளனைவரும், மெய் - தத்துவஞானத் தை, மறந்தனர்—; வேதம் - மறைகள், ஒலி மறந்த - ஓசையை மறந்தன.

பசுமை - ஈண்டு, இளமை மேற்று. காருகபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணாக்கினி என மூவகைப்படுதலால், 'எரி மறந்தன' எனப் பன்மையாற் கூறினார். யாவரும் வேதபாராயணஞ் செய்திலரென்பது ஈற்றடியிற் கூறியபொருள். ஒலி-ஸ்வரமென்றுருருமுளர். பி-ம்:—[1]அருங். [2]மறந்தறநெறி. (௩௦௯)

௨௧௩. ஆடின ரழுதன ரமுத வேழிசை
பாடின ரழுதனர் [1]பரிந்த கோதைய
ரூடின ரழுதன ருயிரி னன்பரைக்
கூடின ரழுதனர் குழாங்[2]கு ழாங்கொடே.

(இ - ள்.) குழாம் குழாம் கொடு - கூட்டங்கூட்டமாகத்திரண்டு,—ஆடினர் - நர்த்தநஞ்செய்துகொண்டிருந்தவர், அழுதனர்—; அமுதம் ஏழ்இசை பாடினர் - அமிர்தம்போலினிய ஏழுசுரங்களைப் பாடிக்கொண்டிருந்தவர், அழுதனர்—; பரிந்த கோதையர் - நீக்கிய மாலையை யுடையவராய், ஊடினர்-(தங்)கணவரோடு ஊடினவர், அழுதனர்—; உயிரின் அன்பரை கூடினர்-(தம்) பிராணநாயகரைப்புணர்ந்தவரும், அழுதனர்—; (எ - று.)

ஆடுதல் முதலியன நிகழ்த்தியோரிடத்து அத்தொழில் நீங்கி அழுதல் தொழில் நிகழ்ந்ததாகக்கூறியது, முறைபிறழ்படர்ச்சியணியாம். குழாங்குழாங்கொடென்றதொடர் கடைநிலைத்தீவகமாகி, ஆடினர்முதலியவற்றோடியையும். பி-ம்:—[1]பரித்த. [2]குழாங்களாய். (௩௧௦)

௨௧௪. நீட்டில களிறுகை [1]நீரின் வாய்புதல்
பூட்டில புரவிகள் புள்ளும் பார்ப்பினுக்
கீட்டில விரைபுனிற் றீன்ற கன்றையு
[2]மூட்டில [3]கறவைகன் றுருகிச் [4]சோர்ந்தவே.

(இ - ள்.) களிறு - யானைகள், (பருகுமாறு), நீரின் - நீரில், கை நீட்டில - துதிக்கையை நீட்டினவில்லை; புரவிகள் - குதிரைகள், வாய்-வாயில், புதல் பூட்டில - புல் கொடுக்கப்பெற்றனவில்லை; புள்உம் - பறவைகளும், பார்ப்பினுக்கு - (தம்) குஞ்சுகளுக்கு, இரை ஈட்டில - உணவைச் சம்பாதித்தனவில்லை; கறவை - பசுக்கள், ஈன்ற புனிறு கன்றைஉம் - (தாம்) பெற்ற இளங்கன்றுகளையும், ஊட்டில - உண்பித்தனவில்லை; கன்று-அக்கன்றுகள், உருகி சோர்ந்த—; (எ - று.)

பார்ப்பு - இளமைப்பெயர்; "பார்ப்பும்பிள்ளையும் பறப்பவற்றிளமை." "புதல்புல்லென்பன புற்பிறப்பாகும்" என்பது, திவாகரம். பி-ம்:—[1]நிமிரு நீரின்வாய், நீரின்வாய்முகம், நீரினீரின்வாய். [2]ஊட்டிய. [3]கறவைசைந்து, கறவைநன்று, கறவைபால், கறவையும். [4]சோரவே. (௩௧௧)

௨௧௫. மாந்தர்த மொய்ம்பினின் மகளிர் கொங்கையா
மேந்திள நீர்களும் வறுமை யெய்தின
[1]சாந்தமம் மகிணர்த முடியிற் றையலார்
கூந்தலின் [2]வறுமைய மலரின் கூலமே.

(இ - ள்.) மாந்தர்தம் மொய்ம்பினின் - ஆடவரது மார்பில், மகளிர் கொங்கை ஆம் ஏந்து இள நீர்கள்உம் - மகளிரது தெங்கங்காயையொத்த தனங்களும், வறுமை எய்தின - இல்லாமையை யடைந்தன; மலரின் கூலம் - பூவினம், சாந்தம் அம் மகிழ்ணர் தம் முடியில் - சந்தனமணியுந்தன்மையரான அழகிய கணவரது குஞ்சியிலும், தையலார் கூந்தலின் - அம்மகளிரது குழலிலும், வறுமைய - இல்லாமையையடைந்தன; (எ - று.)

ஆடவரும்மகளிரும் மலர்சூடுதலைத் தவிர்ந்தன ரென்பது, பின்னிரண்டடிகளிற் கூறியபொருள்; முன்னிரண்டடிகள் - ஆடவர் மகளிரைப் புல்லி மகிழாமையைத் தெரிவிக்கும். இளநீர்கள் சாந்தத்தால் வறுமையெய்தின என்றலுமாம். மொய்ம்பு - ஆகுபெயர். தையல் - அழகு. சுட்டைத்தையலாரோடுங் கூட்டுக. மகிணர் = மகிழ்நர்: மரூஉ. பி-ம்:—[1]சாந்தயர்கடையவர் தார்பெய் குஞ்சியின், சாந்தயர்சடையவார்தார்பெய் குஞ்சியின். [2]வறுமையம். (௩௧௨)

வேறு.

௨௧௬. ஓடை நல்லணி முனிந்தன வுயர்களி றுச்சிச்
சூடை நல்லணி முனிந்தன [1]தொடர்மனை [2]கொடியி
னாடை நல்லணி முனிந்தன [3]வம்பொன்செ யிஞ்சி
பேடை நல்லணி முனிந்தன [4]மென்னடைப் புறவம்.

(இ - ள்.) உயர் களிறு - பெரியயானைகள், ஓடை - முகபடாத்தையும், நல் அணி - சிறந்தஆபரணங்களையும், முனிந்தன - வெறுத்தன; தொடர் மனை - நெருங்கிய மாளிகைகள், உச்சி சூடை - சிகரத்தி லணிதற்குரிய, நல் அணி - நல்ல அலங்காரங்களை, முனிந்தன—; கொடியின் ஆடை - துவசபடங்கள், நல் அணி - நல்லஅழகை, முனிந்தன—; அம் பொன் செய் இஞ்சி - அழகிய பொன்னாலாகிய மதில்கள், மெல் நடை புறவம் - மெல்லியநடையையுடைய புறாக்களும், பேடை - (அவற்றின்) பேடைகளும், (இவற்றாலான), நல் அணி - நல்லழகை, முனிந்தன—; (எ - று.)

"பேடையும்பெடையு நாடிஞென்றும்" என்றதனால், புறவத்திற்குப் பேடையென்ற பெண்மைப்பெயர் கூறினர். பி-ம்:—[1]சுடர். [2]கொடிகள். [3]சிறுவியரன்னம், செம்பொன்செயன்னம், செம்பொன்செயன்னப். [4]வெள்ளிடைப்பிறக்கம், வெள்ளடைப்பிறக்கம். (௩௧௩)

௨௧௭. திக்கு நோக்கிய தீவினைப் [1]பயனெனச் சிந்தை
நெக்கு [2]நோக்குவோர் நல்வினைப் [3]பயனென [4]நேர்வோர்
பக்க [5]நோக்கலென் [6]பருவர லின்ப[7]மென் [8]றிரண்டு
மொக்க நோக்கிய [9]யோகரு மருந்துய [10]ருழந்தார்.

(இ - ள்.) பருவரல் இன்பம் என்ற இரண்டுஉம் - இன்பதுன்பங்களிரண்டையும், ஒக்க நோக்கிய - சமமாக எண்ணுகின்ற, யோகர்உம் - யோகியரும், அரு துயர் - (போக்குதற்கு) அரிய துன்பத்தால், உழந்தார் - வருந்தினார்கள்: (என்றால்); (துன்பம் இன்பம் என்ற இவை நேரும்போது,) (முறையே), திக்கு நோக்கிய தீவினை பயன் என - (தாம்இருக்கும்) இடத்தை நாடிவந்த தீவினை

யின் பயனென்று, சிந்தை நெக்கு நோக்குவோர்-மனம்முறிந்து நோக்குபவரும், நல்வினை பயன் என-புண்ணியத்தின்பயனென்று, நேர்வோர் பக்கம் - மனத்திற்கொள்பவருமான இவ்வுலகத்தவரிடத்து, (மிகவும் வருந்தினானென்பதைப்பற்றி),நோக்கல் என்-ஆராய்ந்து பாராட்டிக் கூறவேண்டுவது என்ன?

இன்பம் நேர்ந்தபோதும் துன்பம் நேர்ந்தபோதும் அவற்றில் விருப்பு வெறுப்புக்கொள்ளாமல் ஒரேதன்மையராயுள்ள யோகியரும், இராமன்செல்வதுகுறித்து வருந்தினானென்றால், ஏதேனும் துன்பம் நேர்ந்தால் 'நாம் இருக்கும் இடத்தை நாடி நம்மைத் துன்பப்படுத்தவந்த தீவினையின் விளைவாகும் இது' என்று மனம் நெக்குத்தளர்வதும், ஏதேனும் இன்பம் நேர்ந்தால் 'நமது புண்ணியத்தின்பயன் இது' என்று மனங்களிப்பதுமாகவுள்ள உலகத்தவர் வருந்தினாரென்பதைக் குறித்துக் கூறவேண்டுமோ? என்பதாம். ஒருபொருளைக் கூறி அதனால் மற்றொருபொருள் எளிதில் சித்திக்கக்கூறியதனால், இச்செய்யுள்-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம். துன்பம் நேர்ந்தால் தீவினைப்பயனென்று மனம் வருந்துவதும், இன்பம்நேர்ந்தால் புண்ணியப்பயனென்று மனம் மகிழ்வதும் உலகத்தவரின்தன்மை யாதலால், அவரை 'திக்குநோக்கிய தீவினைப்பயனெனச் சிந்தை நெக்கு நோக்குவோர் நல்வினைப்பயனென நேர்வோர்' என்றார். இங்கு, தீவினையைப்பற்றி உலகத்தவர் வெறுக்குந்தன்மைவிளங்கக் கூறியமை, கருதத்தக்கது.

யோகம் - கடவுளிடத்து மனத்தைச்செலுத்தி நிற்பது; அதனையுடையவர்-யோகர். பி-ம்:—[1]பயமிது, பயனிது. [2]நோக்கிய, நோக்கியர், நோக்கலர். [3]பயம் [4]நேராப், நேர்ஞானப். [5]நோக்கிலேன், நோக்கிலர். [6]பருவரல்போகம். [7] ஒன்று. [8]ஒருங்க. [9]யோகியர். [10]உழன்றார். (௫௧)

௨௧௰. [1]ஓவி னல்லுயி [2]ருயிர்ப்பினோ டுடல்பதைத் துலைய
[3]மேவி [4]நல்[5]லழ கெழில்கெட விம்மனோய் [6]விம்மத்
தாவி லைம்பொறி [7]மறுகுறத் தயரத னென்ன
வாவி [8]நீக்கின்ற தொத்ததவ் வயோத்திமா நகரம்.

(இ - ள்.) அவ்வயோத்திமாநகரம்—, உடல்-(பிராணிகளினது) சரீரங்கள், உயிர்ப்பினோடு-பெருமூச்சுடன், ஓவுஇல் நல் உயிர் பதைத்து - நீங்குதலில்லாத இனிய சீவன் பதறப்பெற்று,உலைய-வருந்துதலை, மேவி-பொருந்தி, நல் அழகு எழில் கெட-சிறந்த அழகும் எழிலுங் கெடுதலாலும், விம்மல் நோய் விம்ம - கலக்கத்தைத்தருகின்ற துன்பம் மிகுதலாலும், தா இல் ஐம்பொறி மறுகுற - கெடுதலில்லாத பஞ்சேந்திரியங்கள் சுழற்சியடைதலாலும், தயரதன் என்ன-சக்ரவர்த்திபோல, ஆவி நீக்கின்றது-(ஸ்ரீராமனதுபிரிவிற்கு ஆற்றாது) உயிரை விடுகின்றதனை, ஒத்தது—; (எ - று.)

நகரம் ஆவி நீக்கின்றதொத்த தென்றாராயினும், நகரத்தவர் ஆவிநீக்கின்றனரொத்தன ரென்று கருத்துக்கொள்க. மன்னனெப்படி மன்னுயிரப்படியென்பவாகலான், 'தயரதனென்ன வாவி நீக்கின்றது' என்றார். "ஆவுமழு

த...அம்மன்னவனைமானவே" என்றார் கீழும். நீக்கின்றது, நீ - பகுதி.
பி-ம்:—[1]ஓவாநல்லுயிர், ஓவிநல்லுயிர். [2]உணர்விரேளுடு. [3]மேவு. [4]தொல்.
[5]உலகெழில். [6]விம்மி, உலகர். [7]மறுகுறுர். [8]நீக்கியது. (ருகரு)

**உகக.—இராமன் சீதையிருக்குமிடத்தைச் சேர்தல்.**

[1]உயங்கி யந்நக ருலைவுற [2]வொருங்குழை சுற்ற
மயங்கி [3]யேங்கினர் வயின்வயின் [4]வரம்பிலர் தொடர
வியங்கு பல்[5]லுயிர்க் கோருயி ரெனநின்ற விராமன்
றயங்கு பூண்முலைச் சானகி யிருந்துழிச் சார்ந்தான்.

(இ - ள்.) (இவ்வாறு), அ நகர்-அந்நகரத்தவர், உயங்கி உலைவுற-மனந் தளர்ந்து வருந்தவும், ஒருங்கு உழை சுற்ற - ஒருமிக்கப் பக்கத்திற் சூழவும், மயங்கி ஏங்கினர்-அறிவுகலங்கி அழுதவராய், வரம்பு இலர்-அநேகர், வயின் வயின்-இடந்தோறும், தொடர - பின்னே வரவும், இயங்கு பல் உயிர்க்கு - இயங்குகின்ற பலவகைப்பட்ட[எல்லா]வுயிர்களுக்கும், ஓர் உயிர் என நின்ற- ஒப்பற்ற சீவன்போல இருக்கின்ற, இராமன்—, தயங்கு பூண் முலை சானகி- விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய சீதை, இருந்த உழி-இருந்த விடத்தில், சார்ந்தான்-போனான்; (எ - று.)—மூன்றாமடி திரு மாலின் அந்தர்யாமித்வத்தைக் காட்டு மென்றலும் ஒன்று. பி-ம்:—[1]உயங்கு நன்னகர். [2]ஒருபுடைச். [3]ஏங்கின. [4]வரம்பில. [5]உயிற்குயிரெனநின்றவவ், உடற்கோருயிரெனநின்ற. (ருகசு)

**உஉ0.—தாயர்முதலியோர் அருகேபோரும, இராமன்வனவாசத்திற்குஉரிய கோலத்தோடுவருவதுகண்டு சீதை துணுக்குற்றெழுதல்.**

அழுது தாயரொ [1]டருந்தவ ரந்தண ரரசர்
புழுதி யாடிய மெய்யினர் புடைவந்து பொருமப்
[2]பழுது [3]சீரையி னுடையினன் வரும்படி [4]பாரா
வெழுது பாவையன் னாள்[5]மனத் துணுக்கமொ டெழுந்தாள்.

(இ - ள்.) தாயரொடு-தாய்மாரும், அரு தவர்-முனிவரும், அந்தணர் - வேதியரும், அரசர் - மன்னர்களும், அழுது —, புழுதி ஆடிய மெய்யினர் - (பூமியிற் புரளுதலால்) தூசி படிந்த உடலினையுடையராய், புடை வந்து பொரும-பக்கங்களில் வந்து வருந்த,—சீரையின் உடையினன்-மரவுரியாகிய ஆடையையுடையனாய், பழுது வரும் - பொல்லாங்காக (ஸ்ரீராமன்) வரு கின்ற, படி-வகையை, பாரா-கண்டு,—எழுது பாவை அன்னாள் - சித்திரப் பாவையை யொத்த சீதை,—மனம் துணுக்கமொடு - மனத்திலச்சத்துடன், எழுந்தாள்—; (எ - று.)

அருந்தவரென முன்னர்வந்ததனால், அந்தணரென்றது இல்லறத்தாரை.
பி-ம்:—[1]அந்தணர் முனிவரோடு, அந்தணர்முனிவர்கள், அருந்தவவந்தணர்.
[2]பழுதில். [3]சீரையன்சடையினன். [4]பார்த்தாள். [5]மனந், (ருகஎ)

உஉக.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: அப்போதுமாமிமார் முதலியோர் சீதையைத் தழுவிக்கொண்டு வருந்த, அன்னாள் இன்னதென்று உணராது கணவனை நிகழ்ந்ததை நயுணர்த்துமாறு வினவல்.

எழுந்த [1]நங்கையை மாமியர் தழுவின [2]ரேங்கிப்
பொழிந்த [3]வுண்கணீர்ப் புதுப்புன லாட்டினர் [4]புலம்ப
வழிந்த சிந்தைய [5]ளன்னமீ தின்னதென் றறியாள்
வழிந்த நீர்நெடுங் கண்ணினள் வள்ளலை [6]நோக்கி.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) எழுந்த நங்கையை - (அவ்வாறு) எழுந்த பிராட்டியை, மாமியர்—, தழுவினர்-தழுவிக்கொண்டு, ஏங்கி—, பொழிந்த உண் கண் நீர் புது புனல் - சிந்தின மையுண்டகண்களினின்று பெருகிய புதுநீரால், ஆட்டினர் - நீராட்டினவர்களாய், புலம்ப—,—அன்னம் - சானகி, அழிந்த சிந்தையள்-வருந்திய மனத்தளாய், ஈது இன்னது என்று அறியாள் - இதற்குக் காரணம் இன்னதென்றறியாதவளாய், நெடு கண் வழிந்த நீரினள் - பெரிய கண்களினின்று பெருகுகின்ற நீரினையுடையளாய், வள்ளலை நோக்கி - ஸ்ரீராமனைப் பார்த்து, —(எ - று.)—'இயம்பினாள்' என அடுத்த கவியோடு முடியும்.

மாமிமார் சீதையுள்ள இடத்துக்கு வந்ததாக முதனூலிற் கூறப்படவில்லை. மாமி - கணவன்றாய். இதுகாறுமில்லாத கண்ணீராதலின், புதுப்புனலென்றார். நெடுவகண்ணீரினளென விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. பி-ம்:—[1]மங்கையை. [2]ஏந்தி. [3]வெவ்கணீர்ப், வெங்கணீர்ப், புன்கணீர்ப். [4]புலம்பி. [5]அன்னமுமின்னதென்று, அன்னவதின்னதென்று, அன்னளின்னதென்று, அன்னமிதின்னதென்று, அன்னாள்மதியின்னதென்று. [6]நோக்கா. ()

வேறு.

உஉஉ. பொன்னை யுற்ற பொலங்கழ லோய்[1]புகழ்
மன்னை யுற்றதுண் டோ[2]மற்றிவ் வன்றுய
ரென்னை யுற்ற தியம்பென் றியம்பினாண்
மின்னை [3]யுற்ற [4]நடுக்கத்து மேனியாள்.

(இ - ள்.) மின்னை உற்ற - மின்னலையொத்த, நடுக்கத்து - நடுங்குதலையுடைய, மேனியாள்-திருமேனியையுடைய சீதை,—'பொன்னை உற்ற பொலம் கழலோய் - பொன்னாலாகிய அழகிய வீரக்கழலை யணிந்தவனே! இ வன் துயர்-இக்கொடுந்துன்பத்திற்குக் காரணம், புகழ் மன்னை-கீர்த்தியையுடைய சக்ரவர்த்திக்கு, உற்றது-நேரிட்டதீங்கு, உண்டோ—? என்னை உற்றது-யாது நேர்ந்தது? இயம்பு—,' என்று—, இயம்பினாள்—; (எ - று.)—மற்று-அசை.

மாமிமார் அழுவதுநோக்கிச் சக்ரவர்த்திக்கு ஏதேனும் தீங்கு நேரிட்டதோ என்று சீதை சங்கித்து வினவினளென்க. மன்னையென்பது முன்னிலை

யில்வந்த படர்க்கையெனக்கொண்டு, மன்னனுகிய உன்னை என உரைத்தலும் பொருந்தும் பொன்னே, ஐ - உருபுமயக்கம். பி - ம்:—[1]புகல். [2]வினைவன், அன்றிவான். [3]ஒத்த. [4]நடுவுற்ற. (௱௧௯)

௨௨௩.—இராமபிரான் செய்தி தெரிவித்தல்.

பொருவி லெம்பி புவிபுரப் பான்[1]புக
லிருவ ராணையு மேந்தினெ னின்றுபோய்க்
கருவி மாமழைக் [2]கற்றடங் [3]கண்டுநான்
வருவெ [4]னீண்டு வருந்தலை நீயென்றான்.

(இ - ள்.) (இராமன்சீதையைநோக்கி), 'பொருவு இல் எம்பி - ஒப்பற்ற என்தம்பி [பரதன்], புவி புரப்பான் - பூமியைக்காப்பவனாக, நான்—, புகல் இருவர் ஆணைஉம் ஏந்தினென் - தஞ்சமாகிய இருமுதுகுரவரது ஆஜ்ஞையையும் தாங்கினவனாகி, இன்று போய்—,கருவி மா மழை கல் தடம் - (உலகியல்நடாத்தற்குக்) காரணமாகிய பெருமைதங்கிய மேகங்களுள்ள வனத்தை, கண்டு—, ஈண்டு வருவென் - இங்கே வருவேன்; நீ வருந்தலை - நீ வருத்தமடையாதே,' என்றான்—; (எ - று.)

இத்தனைநாளென்று சொல்லாமல் கற்றடங்கண்டு நான் வருவேனென்று காட்டுக்குப் போய் உடனே வந்திடுபவன்போல இராமபிரான் சொல்லியது, சீதை வருந்தாதிருத்தற்பொருட்டு. காட்டை 'கற்றடம்' என்று சொல்லுதலை "கற்றடங்காணுதியென்னில்" என்று கீழ்வந்ததுகொண்டும் உணர்க. பொருந்தார்கைவேல் நுதிபோற்பாயும் பரற்களை யுடைமையால், 'கற்றடம்' என்னப்பட்டதென்னலாம். பி - ம்:—[1]புகழ். [2]கற்கடம். [3]கண்டுடன், கண்டுபின். [4]இன்று. (௱௨௦)

௨௨௪.—இராமபிரான் சொன்ன வகைக்குச் சீதை வருந்துதல்.

நாயகன் [1]வன நண்ண லுற்  றானென்று
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
ணீவ ருந்தலை [2]நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொற் செவிசுட[3]த் தேம்புவாள்.

(இ - ள்.) (சீதை), நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றுஉம் - கணவன் காட்டிற்குப்போகத்தொடங்கினனென்றேனும், மேய மண் இழந்தான் என்றுஉம் - ஆளுதற்குப் பொருந்திய இராச்சியத்தை யிழந்தானென்றேனும், விம்மலள் - வருந்தாதவளாய், 'நீ வருந்தலை யான் நீங்குவென்—', என்ற—, தீய வெம் சொல் - மிகக்கொடியசொல், செவி சுட - காதைச்சுட, தேம்புவாள் - வருந்துவாள்; (எ - று.)—பி - ம்:—[1]சுரம். [2]நீங்குவனுமென்ற. [3]விம்முவாள், விம்மினள். (௱௨௧)

௨௨௫.—சீதை துயரமடைந்ததுபற்றிய கவிக்கூற்று.

துறந்து போமெனச் சொற்றசொற் [1]றேறுமோ
வுறைந்த பாற்கடற் சேக்கை யுடனுறீஇ
யறந்தி றம்புமென் றைய னயோத்தியிற்
பிறந்த [2]பின்பும் [3]பிரிவில ளாயினாள்.

(இ - ள்.) உறைந்த - (தாம்) வசிப்பதற்கு இடமான, பாற்கடல் - திருப் பாற்கடலிலே, சேக்கை - (ஆதிசேஷனாகிய) படுக்கையில், உடன் - கூட (வசிப்பதை), ஒரீஇ - விட்டு, ஐயன் - இராமபிரான், அறம் திறம்பும் என்று அயோத்தியில் பிறந்த பின்புஉம் - ('நாம் அவதரித்துத் தருமத்துக்கு விரோதஞ்செய்பவரை யழிக்காவிட்டால்) தருமம் நிலைகெடுமே!' என்று கருதித் திருவயோத்தியில் திருவவதரித்தபின்பும், பிரிவு இலள் ஆயினாள் - (சீதை வடிவங்கொண்டு உடனுறைந்து) நீங்காதவளானவள், 'துறந்து போம்-(கணவன் தன்னைப்)பிரிந்து விட்டுப்போவான்,' என - என்று தான் கருதுமாறு, சொற்ற - சொன்ன, சொல்-வார்த்தைக்கு, தேறும்ஓ - ஆற்றுவளோ? (எ-று.)

உலகத்தில் அரக்கரால் நிலைகெடுவதாகஇருந்த அறத்தை நிலைநிறுத்தும்பொருட்டுத் திருப்பாற்கடலிலிருந்து வந்து திருமால் இராமனாகத் திருவவதரித்தபோது அவனைவிட்டுப் பிரியாதிருக்கவேணுமென்னுங் கருத்தினாலேயே தான் சீதையாகத் திருவவதரித்த இலக்குமி 'உன்னைவிட்டுப் பிரிந்துபோவேன்' என்ற சொல்லுக்கு ஆற்றுவளோ? ஆற்றமாட்டாளென்றவாறு. 'துறந்துபோமெனச்சொற்றசொல் தேறுமோ' என்பதைப் பின்மூன்றடிகள் சமர்த்தித்துநின்றது - **தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்.** திருப்பாற்கடலில் அனந்தன்மீது அறிதுயிலமரும் திருமால் தேவர்களின்வேண்டுகோளினால் அரக்கரால் உலகத்துக்குத்தோன்றியுள்ள துயரத்தை நீக்குமாறு தான் அவர்கட்கு உறுதியளித்துத் தசரதகுமாரனாய்த் திருவவதரித்தைதைக் கீழ்ப் பாலகாண்டத்துத் திருவவதாரப்படலத்தா லறிக. திருப்பாற்கட லிலுள்ள திருமாலின் வியூகமூர்த்தியே இராமகிருஷ்ணாதி யவதாரங்களுக்குக் காரணமாகு மென்ற நூற்கொள்கையும், இங்குக் கவனிக்கத்தக்கது. "சாதுக்களைக்காத்தற்காகவும், கொடுந்தொழில் புரிபவரையொழித்தற்காகவும், அறத்தை நிலைநாட்டுதற்காகவும் யுகந்தோறும் திருவவதரிக்கின்றேன்" என்று ஸ்ரீகீதையிற் கூறியதற்கேற்ப, 'அறந்திறம்புமென்று ஐயனயோத்தியிற்பிறந்த' என்றார். திருமால்இராமனாகும்போது திருமகள் சீதையாகவும், திருமால் கிருஷ்ணனாகத்திருவவதரிக்கும்போது இலக்குமி உருக்குமிணியாகவும் திருவவதரிப்பள் என்று பிறநூல்களிற் கூறுவது, இங்குக் கருதத்தக்கது. 'பாற்கடற்சேக்கையுடனொரீஇ' என்பதற்கு - பாற்கடலைச் சேக்கையாகிய ஆதிசேடனுடனே விட்டிட்டு [ஆதிசேடனென்பான் தனது தம்பியாக இருக்குமாறு அவனுடன் திருப்பாற்கடலை விட்டிட்டு] என்று விசேடப்பொருளுரைப்பர். பி-ம்:—[1]தேறுமே. [2]போதும. [3]பிரியலளாயினள், பிரியலனாயினன். (௫௨௨)

௨௨௩.—தன்னை 'உடன்வராது இரு'என்று இராமன் கூறியதை நினைந்துநினைந்து சீதை வருந்துதல்.

அன்ன தன்மைய [1]ளையனு மன்னையுஞ்
சொன்ன செய்யத் துணிந்தது தூயசீ
யென்னை யென்னை யிருத்தி'யென்று [3]யென
வுன்ன வுன்ன வுயிருயி ழாநின்றாள்.

(இ-ள்.) அன்ன தன்மையள்-அத்தன்மையையுடைய பிராட்டி, 'ஐயன் உம் அன்னை உம் - இருமுதுகுரவரும், சொன்ன - சொல்லியகாரியங்களை, செய்ய—, துணிந்தது - நிச்சயங்கொண்டது, தூயதுஎ - தூய்மையையுடையதே; என்னை - யாதுகாரணத்தால், என்னை இருத்தி என்றாய் - என்னைக் குறித்து(இங்கே)இரு என்று சொன்னாய்?' எனா-என்றுகூறி, உன்னஉன்ன-(அவ்விராமன் கூறியதை) நினைக்க நினைக்க, உயிர் உமிழாநின்றாள் - பெருமூச்சு விடுபவளானாள்; (எ-று.)—பி-ம்:—[1]அன்னையுந்தாதையும். [2]என்றான். [3]என்றாள், அருள். (௩௨௩)

௨௨௭.—இராமன் சீதையைநோக்கிக் கானகஞ் சுடுமெனல்.

வல்[1]ல ரக்கரின் மால்வரை [2]போய்விழுந்
தல்[3]ல ரக்கி னுருக்கழல் [4]காட்டயற்
கல்[5]ல ரக்குங் கடுமைய வல்லநின்
சில்ல ரக்குண்ட சேவடிப் போதென்றான்.

(இ - ள்.) (அது நோக்கி ஸ்ரீராமன்), 'நின் - உனது, சில் - குளிர்ந்த, அரக்கு உண்ட - செம்பஞ்சு ஊட்டிய, சே அடி போது - சிவந்த (மெல்லிய) அடித்தாமரைகள்,—வல்அரக்கரின் கொடிய ராக்ஷசர்போலத்தோன்றுகின்ற, மால் வரை - பெரிய மலையில், போய்—, விழுந்து-படிந்து, அல்-இரவிலும், அரக்கின் உருக்கு-அரக்கை உருக்கினதுபோன்ற, அழல்-வெப்பத்தை, காட்டு-காட்டுகின்ற, அயல் கல்-பக்கத்திலுள்ள கற்கள், அரக்கும்-தைத்தலைத்தாங்கற்குரிய, கடுமைய அல்ல - கடுமையையுடையனவல்ல,' என்றான்—; (எ - று.)

காட்டயற்கல் - வனத்தினிடத்துள்ள கல்லென்றுமாம். முதலடியில், அரக்கர் - ரக்ஷஸ்என்பது விகாரப்பட்டு 'அர்' விகுதிபெற்று வந்தது. இரண்டாமடியில், அரக்கு - ரக்தஎன்ற வடசொல்லின்திரிபு. நான்காமடியில் அரக்கு - லாக்ஷாஎன்ற வடசொல்லின்திரிபு. இச்செய்யுளில் முதலெழுத்து வேறுபட்டிருக்க, இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிப் பொருள் வேறுபட்டது, திரிபுஎன்னுஞ் சொல்லணியாம். பி-ம்:—[1]அரக்கர்திண். [2]ஊடெழுந்து, மேல் விழுந்து. [3]அரக்கினுருக்கெழில், அரக்கியுருக்கழற். [4]காட்டதர்க், காட்டெனும், காட்டியல். [5]அரக்கினும். (௩௨௪)

௨௨௮.—சீதை 'உமது பிரிவுத்துயரினும் காடு சுடாது' என்னுதல்.

பரி[1]வி கந்த [2]மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை யூழி யருக்கனு
மெரியு [3]மென்பது [4]யாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் [5]காடென்றாள்.

(இ - ள்.) (சீதை),—'பரிவு இகந்த மனத்தொடு-இரக்கம் நீங்கிய மனத்தோடு, பற்று இலாது-(என்னிடத்தில்) விருப்பமில்லாமல், ஒருவுகின்றனை-(என்னைவிட்டு) நீங்கிசசெல்லுவதாக இருக்கின்றாய்; ஊழி அருக்கன் உம் - பிரளயகாலத்துச் சூரியனும், எரியும் என்பது - சுடுவானென்பது, ஈண்டு -

(உன் பிரிவுத்துயரினால் நேரும்) இவ்வெப்பத்திற்குமுன்னே, யாண்டையது - எத்தன்மையுடையது? [நின்பிரிவுத்துயர் பிரளயகாலத்துச் சூரியனைக்காட்டிலும் சுடுமென்றபடி]; பெரு காடு - (நீ) செல்லப்போகின்ற பெரிய காடானது, நின் பிரிவின்உம் சுடும்ஓ - உனது பிரிவுத்துயரைக்காட்டிலும் சுடுந்தன்மையதோ? [அன்று என்றபடி],' என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

'என்னிடத்து இரக்கமும் பற்றும் இல்லாமல் நீர் என்னைவிட்டுச் செல்லுவதனால் எனக்கு நேரும் பிரிவுத்துயர் ஊழிக்காலத்துச் சூரியனும் மிகநல்லனென்னும்படி சுடுமே! இப்படிப்பட்ட பிரிவுத்துயரைவிடக் கானகஞ் சுடுந் தன்மையதோ? அன்று' என்றனளென்பதாம்: ஈண்டும் நின் பிரிவினும் என எடுத்து - (இப்போது) நெருங்கப்போகின்ற நின்பிரிவைவிட என்று உரைப்பினுமாம். உமக்கு என்னிடத்து இரக்கமும் விருப்பமும் இருக்குமாயின், என்னைவிட்டிட்டுச் செல்லமாட்டீரென்பாள் 'பரிவிகந்த மனத்தொடு பற்றிலா தொருவுகின்றனை' என்றாள். இச்செய்யுளால், 'பெருங்காடு உனது பாதத்திற்குச் சுடுமே' என்று இரக்கமுள்ளவன்போற் கூறிய இராமன் பேச்சை மறுத்துக்கூறியவாறு. பி - ம்:—[1]இழந்த. [2]மனத்தொரு. [3]என்பன. [4]யாண்டையவீண்டு, யாண்டையதின்று. [5]கான்.　　　　(௫௨௫)

### ௨௨௬.—சீதையின் மனவுறுதியைக் கண்டு இராமன் சிந்தைகோள்ளுதல்.

அண்ண லன்னசொற் கேட்டன னன்றியு
முண்ணி வந்த கருத்து முணர்ந்தனன்
கண்ணி னீர்க்கடல் கைவிட [1]நேர்கில
னெண்ணு கின்றன னென்செயற் பாற்றெனா.

(இ - ள்.) அண்ணல் - ஸ்ரீராமன், - அன்ன சொல் கேட்டனன் அன்றி உம் - அவ்வார்த்தையைக்கேட்டதுமல்லாமல், உள் நிவந்த கருத்துஉம்-(அவளுடைய)மனத்தில் தலையெடுத்த எண்ணத்தையும், உணர்ந்தனன் - அறிந்தவனாய்,—கண்ணின் நீர் கடல் - கண்ணீராகிய கடலை, கைவிட - (சீதை) பெருக்க, நேர்கிலன் - (அவளை விடுதற்கு) உடன்படாதவனாய், 'என் செயல் பாற்று - யாதுசெய்தற்குஉரியது?' எனா - என்று, எண்ணுகின்றனன் - சிந்திப்பானாயினான்; (எ - று.)—பி-ம்:—[1]நோக்கிலன்.　　　　(௫௨௬)

### ௨௬௦.—அப்போது சீதை மரவுரி புனைந்து இராமனயலில் நிற்றல்.

அனைய வேலை யகன்மனை [1]யெய்தினள்
புனையுஞ் [2]சீரந் துணிந்து புனைந்தனை
[3]வினையும் வள்ளல்பின் வந்[4]தய னின்றனள்
பனையி னீள்கரம் பற்றிய கையினாள்.

(இ - ள்.) அனைய வேலை - அப்பொழுது, (சீதை), அகல் மனை எய்தினள் - விசாலமான மாளிகையினுட்புகுந்து, புனையும் சீரம் - உடுத்தற்குஉரிய

மரவுரியை, துணிந்து—, புனைந்தனள் - உடுத்துக்கொண்டு, நினையும்-(என் செய்யலாமென்று) எண்ணமிட்டுக்கொண்டிருந்த, வள்ளல்பின் - ஸ்ரீராமனிடம், வந்து—, பனையின் நீள் கரம் பற்றிய கையினள் - பனைமரம்போல நீண்ட (அவனது) திருக்கையைப் பிடித்த கையினையுடையளாய், அயல் - பக்கத்தில், நின்றனள்—; (எ - று.)

சீதை உடன் வருவதற்கு நேர்தல்பற்றி, 'வள்ளல்' என்றார். இனி, [3]நினைவில் என்றபாடத்துக்கு, நினைவு இல் வள்ளல் - அழைத்துப்போக மனமில்லாத வள்ளலென்றும், ஆலோசனையிலிருக்கின்ற வள்ளலென்றுமாம். புனையும் சீரம் - இராமபிரான்புனைந்த சீரத்தை யெனினுமாம். பி - ம்:—[1]எய்தியப். [2]சிரை. [3]நினைவின். [4]அவணின்றனள். (௫௨௭)

௨௬௧.—சீதையின் செயலைக் கண்டவரின் பெருவருத்தம்.

ஏழை தன்செயல் [1]கண்டவர் யாவரும்
வீழு மண்ணிடை வீழ்ந்தனர் வீந்திலர்
வாழு நாளுள வென்றபின் மாள்வரோ
வூழி பேரினு முய்குந [2]ருய்வரே.

(இ - ள்.) ஏழைதன் செயல் - சீதையின் செய்கையை, கண்டவர் யாவர்உம்-பார்த்தவரனைவரும், வீழும் மண்ணிடை-இறத்தற்குஇடமாகவுள்ள நிலத்தில், வீழ்ந்தனர் - விழுந்தவராகியும், வீந்திலர் - இறந்தாரில்லை; வாழும் நாள் - ஆயுள்நாள், உள என்ற பின் - உள்ளன வென்றால், மாள்வர்ஓ - அழிவரோ? ஊழி பேரின்உம் - யுகமுடிந்து பிரளயம் வந்தாலும், உய்குநர் - பிழைப்பவர், உய்வர்—; (எ - று.)

யாவரும் மண்ணிடைவீழ்ந்தனர் வீந்திலர்என்பதைப் பின்னடிகள் சமர்த்தித்துநின்றன; பொதுப்பொருளாற் சிறப்புப்பொருளைச்சமர்த்தித்து நின்ற வேற்றுப்பொருள்வைப்பணி. ஏ - தேற்றம். பி - ம்:—[1]கண்டபின். [2]உய்குவார். (௫௨௮)

௨௬௨.—சீதையின்நிலையைக்கண்டோர் வருந்துதலும், இராமன் ஒன்றுசொல்லத் தொடங்குதலும்.

தாயர் தவ்வையர் தன்றுணைச் சேடிய
[1]ராய மன்னிய வன்பின ரென்றிவர்
தீயின் மூழ்கின ரொத்தனர் [2]செங்கணன்
றூய தையலை நோக்கினன் சொல்லுவான்.

(இ - ள்.) தன்-சீதையினது, தாயர் - தாய்மாரும், தவ்வையர்-தமக்கை முறையிலிருப்பவரும், துணை சேடியர் - துணையாகிய பாங்கியரும், ஆயம் மன்னிய அன்பினர்-மகளிர் கூட்டத்திற் பொருந்திய தோழியரும், என்ற—, இவர்—, தீயின் மூழ்கினர் ஒத்தனர் - நெருப்பில் அழுந்தினவரைப் போன்றனர்; செம் கணன் - ஸ்ரீராமன், தூய தையலை - குற்றமற்ற சீதையை, நோக்கினன் - நோக்கி, சொல்லுவான்—; (எ - று.)—அதனை மேல் காண்க. தாயர் - சீதையின் ஐவகைத்தாயர். இராமனுடன் வந்த தாயரெனக் கொள்ளல் ஏற்கும். பி - ம்:—[1]ஆயமன்னவர். [2]சேவகன். (௫௨௯)

௨௩௩.—இராமபிரான் 'நீ விளைவதறியாது உடன்வர உடன்பட்டதனால் எனக்குப் பெருந்துயரம் விளையு'மெனல்.

முல்லை யுங்கடன் [1]முத்து மெதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகை யாய்விளை [2]வுன்னுவா
யல்லை போத வமைந்தனை [3]யாதலி
னெல்லை [4]யற்ற விடர்தரு வாயென்றான்.

(இ - ள்.) முல்லைஉம் - முல்லைமலரும், கடல்முத்துஉம்-கடலில் தோன்றிய முத்தமும், எதிர்ப்பின்உம் - (வெல்லும்படி) எதிர்த்து நின்றனவாறுலும், வெல்லும் - (அவற்றை) வெல்லுகின்ற, வெள் நகையாய் - வெள்ளிய பற்களையுடையவளே! (நீ), விளைவு உன்னுவாய் அல்லை - (காட்டிற்கு வருதலால்) விளையக்கூடிய தீமையை நினைக்கின்றாயில்லை; போத - (என்னுடன்) வர, அமைந்தனை-சித்தமாக உள்ளாய்; ஆதலின்—, (எனக்கு), எல்லைஅற்ற-அளவில்லாத, இடர்-துன்பத்தை, தருவாய் - உண்டாக்குவாய்' என்றான்—.

'சீதையே! காட்டிற்கு என்னுடன் வருவதனால் விளையக்கூடிய தீமை இன்னதென்று சிறிதும் நினைததிட்டாயில்லை; அதனால், காட்டிற்கு உடன் வர உறுதிகொண்டாய்; நீ காட்டிற்கு உடன்வருவதனால், எனக்குப் பெருந் துயரமே விளையும்' என்று சீதையின் வரவைத் தடுக்கவேணுமென்ற கருத்தினால், சிறிது நொந்து கூறினன் இராமபிரானென்க. சீதை காட்டிற்கு வந்ததனால்இடர்விளைந்தவாறுங் காண்க. பற்களுக்கு - முத்து முல்லை மயிலிறகினடி இவை உவமை கூறப்படுமென்பதை, "முத்துத்தளவம் முருந் தெயிறும்" என்ற உவமானசங்கிரகத்தினாலு மறிக. யானைமருப்பு முதலிய பல இடங்களில் முத்துப் பிறக்குமென்று கூறப்பட்டிருப்பினும், கடலில் இப்பியில்தோன்றும் முத்தே சிறந்த தாதலால், 'கடல்முத்து' என்றார்.
**பி-ம்:**—[1]முத்தம். [2]எண்ணுவாய். [3]ஆமெனின். [4]இல்லா, தீர்ந்த. (௫௩௦)

௨௩௪.—அதுகேட்ட சீதை 'என்னைத்துறந்தபின்புதான் உமக்கு இன்பம்போலும்' எனச் சினந்து கூறுதல்.

கொற்ற வன்னது கூறலுங் கோகிலஞ்
[1]செற்ற தன்ன குதலையள் [2]சீறுவா
ளுற்று நின்ற துயரமி தொன்றுமே
யெற்று றந்தபி [3]னின்பங்கொ லாமென்றாள்.

(இ - ள்.) கொற்றவன் அது கூறலும்-அரசகுலத்தில் தோன்றினவனாகியஇராமபிரான்("போத அமைந்தனையாதலின் எல்லையற்ற இடர்தருவாய்" என்ற) அச்சொல்லைச் சொன்னவுடனே, (அதுகேட்ட), கோகிலம் செற்றது அன்ன குதலையள் - குயிலின்குரலை வென்றதுபோன்றுள்ள மழலைச் சொற்களையுடைய அசசீதை—, (இராமனைநோக்கி), சீறுவாள் - கோபிப்பவளாய், உற்று நின்ற துயரம்-(உம்மை)நெருங்கியுள்ள துன்பம், இது ஒன்றுஉம் ஏ -

நான் உடன்வருவது என்ற இஃது ஒன்றுதான்போலும்; என் துறந்த பின்-என்னைவிட்டுச் சென்றபின்பு, (காட்டிலே), இன்பம் கொல் ஆம்-இன்பமே யுண்டாகும்போலும்,' என்றாள்—; (எ - று.)

'நீ உடன்வருவதனால் எல்லையற்றதுன்பந்தருவாய்'என்ற சொல் சீதையின் செவியிலே புண்ணிற் கனல்நுழைந்தாற்போல விழுதலும், அச்சீதை மனம்பொறாதவளாய், 'உமக்குத் துயரமெல்லாம் என்னொருத்தியால்தான். என்னைத்துறந்து கானகஞ்செல்வீரானால் இன்பமே நுகர்வீர்' என்று நிஷ்டூரந்தோன்றக் கூறினளென்பதாம். கோகிலம் - அதன்குரலுக்கு, ஆகுபெயர். பின்னிரண்டடிக்கு, உற்றுநின்ற துயரம் இது ஒன்றுஉம்-(உன்னைப்)பொருந்திநின்ற இவ்வொருதுயரமும், என் துறந்த பின்-என்னைவிட்டபின்பு, இன்பம் ஆம் கொல் - இன்பமாகுமோ? என்றாள் என உரைத்தலுமாம். பி-ம்:—[1]செற்றவன்ன. [2]சீறுவான்,சொல்லுவாள். [3]இன்பங்கொலோ,இன்பங்களாம்.

## உ௬ரு.—மறுமாற்றஞ் சொல்லாமல் சீதையை யிட்டுக்கொண்டு இராமன் தெருவிலே செல்லுதல்.

பிறிதோர் மாற்றம் பெருந்தகை [1]பேசலன்
மறுகி [2]வீழ்ந்தெழு [3]மைந்தரு மாதருஞ்
[4]செறுவில் வீழ்ந்த நெடுந்தெருச் [5]சென்றன
னெறி[6]பெருமை [7]யரிதினி [8]னீங்குவான்.

(இ - ள்.) பெருந்தகை-பெருமைக்குணத்தையுடைய ஸ்ரீராமன், பிறிது ஓர் மாற்றம் பேசலன் - வேறொருவார்த்தையும் பேசாதவனாய்,—மறுகி வீழ்ந்து எழு - மனங்கலங்கி விழுந்து எழுகின்ற, மைந்தர் உம் - ஆடவரும், மாதர்உம் - மகளிரும், செறுவில் வீழ்ந்த - இடந்தோறும் விழுந்த, நெடுதெரு - பெரிய வீதியில், சென்றனன்-போனவனாய், நெறி பெருமை-வழியைப்பெருமையினால், அரிதினின் நீங்குவான்—; (எ - று.)

பாத்தியென்றுபொருளுள்ள'செறு'என்பது-இலக்கணையால்இடமென்றபொருளது.செறுவில்வீழ்ந்த நெடுந்தெரு என்பதற்கு-கண்ணீர்ப்பெருக்கினால் வயல்போலச்சேறுபட்டுக்கிடக்கின்ற பெருந்தெரு என்றுமாம். பி-ம்:—[1]பேசிலன். [2]வீழ்ந்தழ. [3]மாதரும்மைந்தரும். [4]நெறியின். [5]சென்றனர், சென்றெனை. [6]பெறுமல். [7]அரிதென. [8]நீங்குவார். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. ()

## உ௬௬.—இராமனுதியர் செல்வதுகண்ட ஊராரின்வருத்தம்.

சீரை சுற்றித் திருமகள் [1]முன்செல
மூரி விற்கை யிளையவன் [2]பின்செலக்
காரை யொத்தவன் போம்படி கண்டவவ்
வூரை யுற்ற துணர்த்தவு மொண்ணுமோ.

(இ-ள்.) திருமகள்-சீதை, சீரை சுற்றி-மரவுரியுடுத்து, முன் செல-முன்னே செல்லவும், மூரி வில் கை இளையவன் - வலியமைந்த வில்லைத்தாங்கிய கையையுடைய லக்ஷ்மணன், பின் செல - பின்னேபோகவும், காரை ஒத்தவன்-கார்மேகத்தையொத்த ஸ்ரீராமன், போம்படி-போகுமாற்றை, கண்டு—, அ ஊர் - அந்நகரத்தவர், உற்றது - அடைந்தவருத்தம், உணர்த்தஉம் ஒண்ணும்ஓ - சொல்லவும்முடியுமோ? (எ - று)—ஊரை, ஐ - சாரியை.

சீரைசுற்றி என்பதை முதனிலைத்தீவகமாக இளையவன் காரையொத்தவன் என்பவற்றினோடுங் கூட்டலாம். இனி, இளையவன் சீரைசுற்றித் திருமகள் பின் செலக் காரையொத்தவன் முன்செலப் போம்படியெனமாற்றியுரைத்தலுமொன்று. பி - ம்:—[1]பின். [2]முன். (௫௩௩)

உ௩௭.—யாவரும் இராமனுடன் காட்டுக்குச் செல்வோமெனப் போதல்.

ஆரும் பின்ன ரழுதவ லித்திலர்
சோருஞ் சிந்தையர் யாவருஞ் சூழ்ந்தனர்
வீரன் முன்வன மேவுதும் யாமெனப்
[1]போரென் றொல்லொலி கைம்மிகப் போயினர்.

(இ-ள்.) ஆர்உம் - எவரும், பின்னர்—, அழுது அவலித்திலர்-அமங்கலமாக அழுதாரில்லை; யாவர்உம் - எல்லோரும்,சோரும் சிந்தையர் - தளாகின்ற மனத்தையுடையவராய், சூழ்ந்தனர் - சூழ்ந்து, 'வீரன்முன் - ஸ்ரீராமனுக்கு முன்னே, யாம் வனம் மேவுதும் - நாம் காட்டையடைவோம்,' என - என்று, போரென்று ஒல்லு ஒலி கை மிக - போரென்றுபொருந்திய ஒலி அதிகரிக்க, போயினர்—; (எ - று.)

இச்செய்யுளில்- யாவரும் என்றது-பலருமென்னும் பொருட்டு; போரெனல் - ஒலிக்குறிப்பு. பி-ம்:—[1]போரொன்றொல்லொலி, போதுமென்றொலி.

உ௩௮.—ஸ்ரீராமன் தந்தையின் மாளிகையிலிருக்குந் தாய்மார்களைக் கண்டு கும்பிட்டு அரசனைப்பார்த்துக்கொள்ளச் சொல்லல்.

தாதை [1]வாயில் குறுகினன் சார்தலுங்
கோதை வேலவன் றாயரைக் கும்பிடா
வாதி மன்னனை யாற்றுமி னீரென்றான்
மாத ராரும் விழுந்து மயங்கினர்.

(இ - ள்.) கோதை வேலவன் - வெற்றிமாலையைச்சூடிய வேலினையுடைய ஸ்ரீராமன்,—தாதை - தமப்பனாரது, வாயில் - மாளிகை வாயிலை, குறுகினன் - சமீபித்து, சார்தலும் - சேர்ந்தவுடன், தாயரை கும்பிடா - (கூடவந்த)தாய்மாரைக் கைகூப்பித்தொழுது, 'ஆதி மன்னனை - சக்ரவர்த்தியை, நீர் ஆற்றுமின் - நீவிர் (இங்கேயிருந்து) தேற்றுங்கள்,' என்றான்-என்றானாக, மாதரார்உம் - அம்மாதர்களும், விழுந்து மயங்கினர்—; (எ - று.)—பி - ம்.—[1]கோயிலின் வாசலைச்சார்தலும. (௫௩௫)

உ௩௯.—தாய்மார்கள் இராமன்முதலியோரை வாழ்த்துதல்.

> [1]வாழ்த்தி னார்தம் மகனை மருகியை
> [2]யேத்தி னாரிளை யோனை வழுத்தினார்
> காத்து நல்குமின் றெய்வதங் காளென்றார்
> நாத்த ழும்ப வரற்றி நடுங்குவார்.

(இ - ள்.) (பின்), நா தழும்ப—, அரற்றி - கூவி, நடுங்குவார்-நடுங்குகின்ற அத்தாய்மார்,—தம் மகனை - ஸ்ரீராமனை, வாழ்த்தினார்—; மருகியை-மருமகளை, ஏத்தினார் - புகழ்ந்தார்கள்; இளையோனை - இலக்குவனை, வழுத்தினார் - துதித்தார்கள்; தெய்வதங்காள் - (எங்கள்) குலதெய்வங்களே! காத்து நல்குமின் - (இவர்களைக்) காத்தருளுங்கள், என்றார்—; (எ-று.)

இனி, மகனையும் மருகியையும் இளையோனையும் வாழ்த்தி ஏத்திவழுத்தித் தெய்வங்காள்! காத்துநல்குமினென்று அரற்றிநடுங்குவா ரென்றுமாம்.
பி - ம்:—[1]ஏத்தினார். [2]வாழ்த்தினார். (௫௩௬)

உ௪௦.—முனிவனை வணங்கிவிட்டு ஸ்ரீராமன் சீதையும் தம்பியுமாகத் தேர்மீது செல்லுதல்.

> அன்ன தாய ரரிதிற் பிரிந்தபின்
> முன்னர் நின்ற முனிவனைக் கைதொழாத்
> தன்ன தாருயிர்த் தம்பியுந் தாமரைப்
> பொன்னுந் தானுமொர் தேர்மிசைப் போயினான்.

(இ - ள்.) அன்ன தாயர் - அவ்வாறாகிய தாய்மார், அரிதின் பிரிந்தபின்—,முன்னர் நின்ற முனிவனை எதிரில்நின்ற வசிஷ்டபகவானை,கைதொழா-கையாற்றொழுது, (ஸ்ரீராமன்),—தன்னது அரு உயிர் தம்பிஉம் - தனது அரிய உயிர்போன்ற தம்பியாகிய இலக்குமணனும்,தாமரை பொன்உம்-சீதையும், தானும்—, ஓர் தேர்மிசை போயினான்-ஒருதேரின்மேலேறிச் சென்றான்.

தன்னது - விரித்தல், பொன் - திரு. தம்பியும் பொன்னும் தானும் போயினான் என்றதற்கு, கீழ் மந்திரப்படலத்து "ஆயதவ்வழி" என்னுங்கவியில்'தம்பியுந்தானும்***புக்கான்' என்றவிடத்துஉரைத்தாங்குரைக்க.(௫௩௭)

சீதை கானகத்துக்குஉடன் வருவதையே ஸ்ரீராமன் அரிதில் இசைந்தது கண்டு, 'தான் உடன்வருவதைக்குறித்து என்னசொல்லுவனோ?' என்ற சிந்தையுடன் இலக்குமணன் சீதையின்எதிரில் தன்தமையனாரது திருவடிகளைப் பிடித்துக்கொண்டு, 'நீர் கானகஞ்செல்வது எனக்குச் சம்மதமன்று. நீர் காடு செல்வதென்றுஉறுதியாய்ப்பிடித்தால் என்னையும்உடன்அழைத்துக்கொண்டு செல்க. கையும்வில்லுமாயிருந்து உமக்குக் குற்றேவல்புரிவேன். உம்மைவிட்டு மோக்ஷமும் எனக்கு வேண்டா' என்று தன்மனவுறுதியைத் தெரிவிக்க, இராமன் 'நீ என்னுடன்வருவது நலமேயெனினும், பெற்றோர்களைப் போஷித்துக்

கொண்டு இருப்பாயாக' என்ன, லக்ஷமணன் கௌசலையின் பெருமையைக்
கூறி 'தாய்மார்களை நான் காப்பாற்றவேண்டுமென்பதில்லை: கௌசலையே
பாதுகாத்துக்கொள்வாள்:என்னைப்பணியாளனாகச் செய்துகொள்ளும். உமக்கு
எல்லாவேளைகளிலும் நான் உபசரிப்பேன்: நீரோ வைதேகியுடன் விநோத
மாக இருக்கலாம். விபரீதமுண்டாகாது' என்று கெஞ்சிக்கேட்க, இலட்சும
ணனது மனத்திண்மையையறிந்து இசைந்து ஸ்ரீராமன் 'லக்ஷ்மணா! உன்னு
டைய சிநேகிதர்களிடத்திலெல்லாஞ்சொல்லி விடைபெற்றுக்கொண்டு வன
வாசகாலத்தில் நமக்குவேண்டிய படைக்கலங்கள் முதலியவற்றைப்புங் கொணர
ர்க' என்ன, லக்ஷ்மணனும் நண்பர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வசிட்ட
னது கிருகத்திலிருந்த உத்தமங்களாகிய ஆயுதங்களைக் கொணர, பிறகு
ஸ்ரீராமன் அரண்யத்திற்குப்போவதால் தன் சொத்துக்களையெல்லாம் தானஞ்
செய்யக்கருதிப் பிராமணோத்தமர்களையும் அடுத்து ஜீவிப்பவர்களையும் அழைத்
துக்கொண்டுவருமாறு சொல்ல, லட்சுமணன் ஸுயஜ்ஞர்முதலியோரை
அழைத்துக்கொண்டுவர, அவர்கட்குத் தன் பொருள்களையெல்லாம் தானஞ்
செய்தபின் மனைவியால் தூண்டப்பட்டு த்ரிஜடரென்கின்றமுனிவன் வேண்
டியபடி பசுக்குவியலை அவற்குத் தர, அவன் பெற்றுக்கொண்டு வாழ்த்திச்
சென்றனன்; இங்ஙனம் இராமன் லக்ஷ்மணனோடும் சீதாதேவியோடும்
இருந்து தானஞ்செய்தபின் சீதாலக்ஷ்மணருடனும் வனஞ்செல்ல அனுமதி
பெறுமாறு தசரதனுள்ளவிடத்துக்குப் போக, தசரதன் தன்மனைவிமார்க
ளுடன் இராமனைக் காண விரும்பி அவர்களையெல்லாம் வரவழைத்தபின்பு
இராமனை மனைவியோடும் லக்ஷ்மணனோடும் தன்னிடம்வரவிட்டு அவனை அம்
மன்னவன் எதிர்கொள்ளப்போய் வழியில் மூர்ச்சித்துவிழ, இராமலட்சும
ணர்கள் ஓடிவந்து எடுக்க, அப்போது மகளிர்களெல்லாம்புலம்ப, எங்குமொரே
அழுகைக்குரலாயிருந்தது. பிறகுராமலக்ஷ்மணரும் சீதையும் மன்னவனைப்
பிடித்துஎடுத்துவந்து படுக்கையில் உட்காரவைத்தனர். பிறகு அறிவில்தேறிய
மன்னவனை இராமன் தேற்றித் தங்கட்கு விடைதருமாறு கேட்டனன். அது
கேட்டமன்னவன் புதல்வனைத்தழுவி மூர்ச்சிக்க, அங்கிருந்த எல்லோரும்
சோகத்தில் மூழ்கினர். அப்போது சுமந்திரன் கைகேயியைப் பலபடியாகத்
திட்டி அவளுக்குத் தாய்மூலமாகவந்தது துர்க்குணமென்றதையும் சொல்லிப்
பழித்து இராமனது நற்குணங்களையும் அவனுக்குப்பட்டங்கட்டவேண்டுவது
முறையென்பதையும் சொல்லிமுடிக்க, கைகேயி சலியாதிருந்தனள். பிறகு
தசரதன் சதுரங்கசேனைகளுடன் இராமனை வனத்திற்கு அனுப்பவேணு
மென்றுகருதக் கைகேயி தடுத்தனள்: சித்தார்த்தரென்பவர் அவளுக்கு மதி
கூறியும் அவள் கேட்கவில்லை. சித்தார்த்தர் கூறியதைக் கைகேயி கேளாமை
யைக் கண்டு வருந்தும் மன்னவனைநோக்கி, இராமன் 'யாவற்றையுந்துறந்து
வனத்திற்குச்செல்லும் எனக்குச் சதுரங்கசேனை எற்றுக்கு?' என்று சமாதா
னஞ்சொல்லினன். பின்பு ராமலக்ஷ்மணர்களும் சீதையும் கைகேயி தந்த மர
வுரியை உடுத்துக்கொள்கையில் சீதை மரவுரியுடுப்பதைத் தடுத்து வசிஷ்ட

முனிவன் கைகேயியைச் சீதைக்கு மரவுரிதந்தது முறையன்றென்று பழித்துக்கூற, அப்பால் மன்னவன் 'சீதை மரவுரி யுடுத்துக்கொள்வாளாயினும் அவள் மரவுரிதரிக்குமாறு நான் வரம் தரவில்லை' என்று கைகேயியைக் கண்டித்தனன். துன்புறும் மன்னவனிடத்து ஸ்ரீராமன் தன்தாயைப் பார்த்துக் கொள்ளும்படி வேண்டினன். அப்பால் மன்னவன் பெருந்துயரோடு சுமந்திரனை நோக்கி 'இராமன் முதலியோரை யேற்றிச்செல்லும்படி இரதத்தைப் பூட்டிக்கொண்டுவருமாறு கட்டளையிட, அவன்தேரைக் கொணர்ந்ததும், தனத்யட்சனைக்கொண்டு சீதை கானகத்தில் வசிக்கும் பதினன்கு வருஷத்திற்கு வேண்டிய ஆடையாபரணங்களைத் தருமாறு செய்விக்க, சீதை அந்த ஆபரணங்களைப் பூண்டு விளங்கினளாக, அப்பொழுது கௌசல்யை சீதையைக்கட்டித் தழுவி உச்சிமோந்து நல்ல உபதேசமொழிகளைக் கூறச் சீதையும் தன்மனநிலையைத் தெரிவித்தாள். பிறகு இராமன் மற்றைத் தாய்மார்களையும் வணங்கி 'யான் ஏதேனும் தவறுசெய்திருப்பினும் பொறுக்க: எனக்கு அனுமதி தருக' என்று விடைபெற்றுக்கொண்டு தந்தையாரைவலம்வந்து, உடனிருந்து பெற்றோர்க்குஉபசரிக்க இயலாதிருப்பது பற்றிய மனவருத்தத்துடனே சீதாலக்ஷ்மணர்கட்கு மன்னவனிடம் விடைகொடுப்பிக்க, பின்பு மூவரும் கௌசலைக்கு நமஸ்காரஞ்செய்தனர். அப்பால் சுமித்திரையை இலட்சுமணன் வணங்கிநிற்க, அவள் அன்னனுக்கு நல்லுபதேசங்கள் மொழிந்து விடைகொடுத்தனுப்பினள். பிறகு சுமந்திரன் தான் வணக்கத்தோடு 'இரதம் சித்தமாயிருக்கிறது. ஏறுக' என்ன, சீதை முதலிலும் இராமலக்ஷ்மணர்கள் பின்புமாக இரதத்தில் ஏறிக்கொள்ள, சுமந்திரன் தேர்க்குதிரைகளை அதட்டியோட்டினன். அதுகண்ட ஜநங்கள் பெருந்துயரால் பலபடிகூற,நகரத்தவர்பலரும் உடன் தொடர்ந்துவரலானார்களென்பது, வான்மீகத்திற் கூறியுள்ள முறையாம்.

நகர்நீங்குபடலம் முற்றிற்று.

---

## ௫ - ஆவது தைலமாட்டுபடலம்.

(இராமன் காட்டிற்குச் சென்றுவிட்டா னென்று கேட்டு உயிர்துறந்த தசரதனுடம்பை, மாமனுவீட்டிற்குச் சென்றிருந்த பரதனும் சத்துருக்கினனும் வருமளவும் கெடாமலிருத்தற்பொருட்டுத், தைலத்தில்மூழ்குவித்துவைத்திருந்ததைக் கூறும் படலமென்பது, பொருள். இப்படலத்திற்கு இலம்பாட்டுப்படலமென்று பல ஏட்டுப்பிரதிகளிற் பெயர் காணப்படுகின்றது. அத்தொடர்க்கு-(தசரதசக்கரவர்த்திஇவ்வுலகததில் இல்லாமல்இறந்துபட்டதைக் கூறும் படல மென்று பொருள காண்க: தசரதனிறந்தானென்பதைக்கூறாது அவனுடலைத் தைலத்திலிட்டாரென்று கூறுவது விளங்காதாதலால், இலம்பாட்டுப்படல மென்ற பெயரே பொருத்தமானதென்றுதோன்றுகின்றது.

நகரத்துமாந்தர்பலரும் தொடர்ந்துவரத் தேரின்மீதுசென்ற இராமன் இரண்டுயோசனைதூரஞ்சென்று சூரியன்அத்தமிக்க இரவுவந்ததனால் அங்கு ஒருசோலையில் தங்கி முனிவரோடு வசிக்கலானான். உடன்வந்தவரும் அச்சோலையைச் சூழ்ந்துள்ள நதிக்கரை மணற்பரப்பு புற்றரைமுதலிய இடங்களில்தங்கி நள்ளிரவுஆனதனால் அயர்ந்துஉறங்கினார். அப்போது இராமபிரான் சுமந்திரனைவிளித்து 'இந்நகரத்தவரையெல்லாம் வனத்தில் உடனழைத்துக் கொண்டு சென்று காப்பாற்றுவது பெருவருத்தம்: இவர்களைத் திருப்பி யனுப்புவதும் எளிதுஅன்று: ஆதலால், நீ தேரினை அயோத்திக்குத்திருப்பி யோட்டிக்கொண்டுசெல்: சென்றால், இவர்கள் இரதச்சுவட்டைப்பற்றி நோக்கி இராமன் நகரத்திற்குத் திரும்பிவிட்டானென்று கருதி மீண்டு அயோத்திசெல்வார்: நீ இந்த உதவியைப் புரியவேணும்' என்று வேண்ட, சுமந்திரன் பிரிந்துசெல்வதற்கும் இராமனை வனத்துவிட்டுவந்தேனென்ற செய்தியைத் தசரதமன்னவனுக்குத் தெரிவித்தற்கும் மிகவருந்த, இராமன் நல்லுரைகளால் அவனைத்தேற்றி இசையச்செய்து, தசரதன்முதலியோர்க்குச் சொல்லவேண்டிய செய்தியையும் சொல்லினான். சீதையும் தன் மாமனார் முதலியோர்க்குச் செய்திசொல்லினள். இலட்சுமணனைச் செய்தி கூறுமாறு சுமந்திரன் வினவ, அவன் நிட்டூரமாகக்கூறினனாக, இராமபிரான் அவனைத் தணிவிக்க, பின்பு சுமந்திரன் விடைபெற்றுத் தேரின்மீது நகர்க்கு மீண்டான். இராமனும் சீதாலக்ஷ்மணருடன் அவ்விரவில்தானே நடந்து சூரியோதயமாவதற்குமுன் இரண்டுயோசனைதூரஞ்சென்றான். வெறுந்தேரோடு மனமழிந்து மீண்ட சுமந்திரன் இரண்டுமூன்றுநாழிகை நேரத்திற்குள் அயோத்தியடைந்து வசிட்டனையணுகி இராமன் சென்றிட்ட செய்தியைத் தெரிவிக்க, மேல் நிகழப்போவதையெல்லாம் ஞானக்கண்ணினா லுணர்ந்த அம்முனிவன் அச்சுமந்திரனோடு தசரதன்மாளிகையைச் சேர, சுமந்திரன் தேர்கொண்டுவந்தமையையறிந்து விரைந்துவந்த அமைச்சர் இராமன்வராமையையுணர்ந்து வருந்தாநிற்க, இரதம்வந்ததென்று கேள்வியுற்ற மன்னவனும் இராமன்வந்தானென்றுமயக்கந்தீர்ந்து கண்விழித்து வசிட்டனைக்கண்டு 'இராமன் வந்தானோ?' என்ன, மறுமாற்றஞ்சொல்லமாட்டாமல் அம்முனிவன் அப்பாற்சென்றுவிட, குறிப்பால் இராமன் வராமையையுணர்ந்த மன்னவன் சுமந்திரனைநோக்கி 'இராமன் சேயனோ? அணியனோ?' என்று வினவ, சுமந்திரன் 'தன்மனைவியோடும் தம்பியோடும் இராமன் கானகஞ்சென்றான்' என்ன, அப்போதே மன்னவனது பிராணன் போயிற்று: இந்திரன்முதலிய தேவர்கள் அவனுயிரை விமானமேற்றி மீளாவுலகத்து உய்த்தனர். மன்னவனதுஉடல் உயிர்ப்புமுதலியன இன்மையால் அவன் உயிர்நீங்கியதையுணர்ந்த கோசலை பலபடி பன்னிப் புலம்பியரற்ற, சுமித்திரையும் ஏங்கிச் சோர, மற்றைத்தேவியரும் வந்து கதறலானார்கள். அப்போது மன்னவன் இறந்தசெய்தியைச் சுமந்திரன் வசிட்டனுக்குத் தெரிவிக்க, வசிட்டன் அங்கு வந்து மற்றைமந்திரிமாரோடும் ஆலோசித்து 'உத்தரக்கிரியை செய்ய மக்கள்

எவரும் இங்கிலராதலால், கைகேயியின்புதல்வன் வந்தபின் ஈமக்கிரியை முடிப்போம்' எனத் தீர்மானிக்க, பிறகு தேவிமார்களை விலக்கி மந்திரிமார் மன்னவனுடலைத் தைலக்கடாரத்திலிட்டு வைத்தனர். வசிட்டமுனிவன் பரதனை யழைத்துவருமாறு மன்னவன்கட்டளையை யெழுதித் தூதுவரைக் கேகயநாட்டிற்குப் போக்கினன்: இது இங்ஙனமாக; இராமனுடன்சென்ற நகரத்தவர்கள் சூரியோதயமானவுடன் விழித்து எழுந்து இராமனைக் காணாது வருந்தித் தேர்ச்சுவட்டைப்பற்றி அதுவேறுநெறியாகச்செல்லாது அயோத்தி முகமாகச்செல்வதுகண்டு பெருமகிழ்ச்சியுற்று அயோத்திநகரம்வந்துசேர்ந்து, தசரதன் வான்புக்கதையும் இராமன் கான்புக்கதையும் உணர்ந்து பெருந் துயரமெய்த, வசிட்டன் பலபடிசொல்லி அவர்களைத் தேற்ற, அன்னார் ஒருவாறு துயரையடக்கிக்கொண்டன ரென்பது;இப்படலத்துக் கூறும்பொருள்.

வே று .

௧.—அங்ஙனஞ்சென்ற இராமனுடன் யாவருஞ் செல்லுதல்.

[1]ஏவிய குரிசில்பின் [2]யாவ ரேகிலார்
மாவிய [3]ருனையின் [4]மன்னை நீங்கலாத்
தேவியர் [5]தவிர்ந்தனர் [6]தெய்வ மாநக
ரோவிய [7]மொழிந்தன வுயிரி லாமையால்.

(இ - ள்.) மா இயல் தானையின் - பெருமைதங்கிய சேனையையுடைய, மன்னை - அந்தத்தசரதசக்கரவர்த்தியை, நீங்கலா - விட்டுப்பிரிதலில்லாத, தேவியர் - மனைவிமார்கள், தவிர்ந்தனர் - (பின்செல்லாது) நீங்கினர்; தெய்வம் மா நகர் ஓவியம் - தெய்வத்தன்மையுள்ள சிறந்த அந்த அயோத்தியா நகரத்திலுள்ள சித்திரங்கள், உயிர் இலாமையால்—, ஒழிந்தன-(உடன்செல்லுதலைத்) தவிர்ந்திருந்தன: (இவர்களையன்றி), ஏவிய குரிசில் பின் - (தந்தையினது) ஏவலைப்பெற்ற இராமபிரான்பின்னே, யாவர் ஏகிலார் - எவர் தான் உடன்செல்லவில்லை? (எ - று.)

தேவியர் மன்னனைவிட்டு நீங்கக் கூடாதாதலால்,உடன் செல்லவில்லை: உயிரில்லாமையால் ஓவியங்கள் உடன்செல்லவில்லை: இவர்களைத்தவிர்த்து அயோத்தியிலுள்ள யாவரும் உடன்சென்றன ரென்றவாறு. அயோத்தியிலுள்ளாரான உடன்செல்லக் கூடியவர்யாவரும் சென்றன ரென்பதை, இங்ஙனம் விளக்கினர். மன்னைநீங்கலா-கருத்துடையடைமொழி. செல்லுதற்குக் கூடிய யாவரும் சென்றன ரென்பதை உறுதிப்படுத்தக்கருதி, 'யாவர் ஏகிலார்' என எதிர்மறையும் வினவுமாக அமைத்துக்கூறின ரென்க. முத்தி தரும்நகரமேழனுள்முதலதும், திருமால் திருவவதரித்து வாழ்தற்கு இடமாயிருந்ததும்பற்றி 'தெய்வமாநகர்' எனப்பட்டது. பி-ம்:—[1]ஏகியல். [2]யாருமேகினர். [3]தானையம். [4]மன்னனன். [5]ஒழிந்தனர். [6]செல்வம். [7]ஒழித்தன. (ருஈஅ)

உ.—இராமபிரானது தேர் சென்றதின் வருணனை.

கைகணீர் [1]பரந்துகா றொடரக் [2]கண்ணுகும்
வெய்யநீர் வெள்ளத்து [3]மெள்ளச் சேறலா
லுய்யவே ழுலகு[4]மொன் றான நீருழ
றெய்வமீ னொத்ததச் செம்பொற் றேரரோ.

(இ - ள்.) அ செம் பொன் தேர் - (இராமபிரானேறிச்சென்ற) அந்தச் செம்பொன்னினாலியன்ற தேரானது, கைகள் நீர் பரந்து - (தனது) பக்கங்களிலெல்லாம் நீர் பெருகி, கால் தொடர - வாய்க்கால்போலத் தொடர்ந்து செல்லுமாறு, கண் உகும்-(எல்லாச்சனங்களின்) கண்களினின்று சிந்தியதனாலாகிய, வெய்ய நீர் வெள்ளத்து - வெப்பமுள்ள நீர்வெள்ளத்தில், மெள்ள சேறலால் - மெதுவாகச் செல்லுதலினால், ஏழ் உலகும் ஒன்று ஆன நீர் - ஏழுலகங்களிலும் ஒருபடிப்படப்பெருகிய பெருங்கடல்வெள்ளநீரில், உய்ய உழல்-(உலகத்து உயிர்கள்) உய்யுமாறு சஞ்சரித்த, தெய்வம் மீன்-மத்ஸ்யாவதாரமூர்த்தியாகிய திருமாலை, ஒத்தது—; (எ - று.)—அரோ-ஈற்றசை.

சக்ரவர்த்திதிருமகனாகிய இராமபிரான் பெருங்காட்டிற் செல்லுமாறு சேர்ந்ததுகுறித்துப் பெருந்துயருடனே அப்பிரானைத் தொடர்ந்துசெல்லும் மக்களினதுகண்களிலிருந்து பெருகுங் கண்ணீர பிரளயப்பெருங்கடல்வெள்ளம்போல் எங்கும் பாய்ந்துசெல்ல, அதனிடையேசென்ற தேர்,கடலிடையே சென்ற மத்ஸ்யாவதாரமூர்த்தியைப் போலுமெனக் குறித்தார்: **தற்குறிப்பேற்றவுவமையணி**: இவ்வணிக்கு 'கைகணீர்பரந்துகாறொடரக் கண்ணுகும் வெய்யநீர்வெள்ளத்து' என்றவிடத்துள்ள **தொடர்புயர்வுநவிற்சியணி** அங்கமாய்வந்தது. கால்தொடர, கால்-தமிழுபசருக்கம். துயரத்தினால் தோன்றுகின்ற கண்ணீர் வெப்பமாயிருக்குமாதலின், 'வெய்யநீர்'எனப்பட்டது.உலகத்தாரின் ஞானத்துக்குச் சிறந்த காரணமாகவுள்ள வேதத்தைப் பறித்துக்கொண்டுசென்ற அசுரனிடத்தினின்று அதனைமீட்கச்செய்த அவதாரமாதலின் 'ஏழுலகும் உய்ய வுழல் தெய்வமீன்' எனக் கூட்டினுமாம்.

ஏழுலகும் ஒன்றானநீருழல் தெய்வமீன் என்பதிலடங்கிய கதை:—முன்னொரு கல்பத்தின் அந்தத்திற் பிரமதேவன் துயிலுகையில் அவன்முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மகாபலசாலியும் நெடுங்காலந் தவஞ்செய்து பெருவரங்கள் பெற்றவனுமான சோமுகனென்னும் அசுரன் கவர்ந்துகொண்டு பிரளயவெள்ளத்தினுள் மறைந்துசெல்ல, அதனையுணர்ந்து திருமால் ஒருபெருமீனாகத் திருவவதரித்து அப்பெருங்கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப் பிடித்துக் கொன்று அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவற்றைப் பிரமனுக்குக் கொடுத்தருளினனென்பதாம். இவ்வசுரன் பெயர் சோமகனென்றலும், இவ்வரலாற்றை வேறுவகையாக விரித்துக்கூறுதலு முண்டு.

பி - ம்:—[1]வந்து. [2]கண்ணுறும். [3]மேவிச். [4]வந்தொதுங்க. (௫௩௧)

௩.—சூரியாத்தமன வருணனை.

[1]மீன்பொலி தரவெயி லொதுங்க மேதியோ
டான்புகக் கதிரவ னத்தம் புக்கனன்
கான்புகக் [2]காண்கில னென்று [3]கல்லிடைத்
தான்புக [4]முடுகின னென்னுந் தன்மையான்.

(இ - ள்.) கதிரவன் - ஆயிரங்கிரணங்களையுடையசூரியன்,—கான் புக காண்கிலன் என்று - (இராமபிரான்) காட்டிற் புகுவதைக் காணப்பொறேனென்ற காரணத்தினால், கல்இடை தான் புக முடுகினன் என்னும் தன்மையான்-கல்லிடையிலே தான் பதுங்குமாறு விரைந்தானென்று சொல்லத்தக்க தன்மையையுடையவனாய்,—மேதியோடு ஆன் புக-எருமைகளும் பசுக்களும் (மேய்புலத்தில்நின்று தமது தொழுவத்திற்) புகவும், வெயில் ஒதுங்க-வெயில் விலகிவிடவும், மீன் பொலிதர - நட்சத்திரங்கள் விளக்கமாகத்தோன்றவும், அத்தம் புக்கனன் - அத்தமலையைச் சார்ந்தான்; (எ - று.)

இராமபிரான் காடுநோக்கிச் செல்கையில் இயற்கையாகச் சூரியன் அத்தமித்தலை, கவி, இராமபிரான் காட்டிற்குப் புகுதலைக் காணப் பொறாமற் கல்லிடையில் ஒளித்துக்கொள்ள விரைந்ததாகக் காரணமல்லாததைக் காரணமாகக் கற்பித்துக் கூறினார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. தன் குலத்திற் பிறந்தோன்றலுக்குத் தோன்றுந் துயரத்தைக் காணப் பொறாமலிருத்தல் குலமுதல்வனுக்கு இயற்கை யாதலால், தன்குலத்திற்பிறந்தவனாகிய இராமபிரானுக்குக் கான்செல்லுமாறுநேர்ந்ததை அக்குலமுதல்வனாகிய சூரியன் காணப்பொறாதவனாயினனென்க. இங்ஙனம் சூரியன் அத்தமிக்கும்போது மேதியும் ஆனும் தொழுவத்திற் புகுதலும் வெயில் நீங்கிவிடுதலும் நட்சத்திரங்கள் விளங்குதலுமாகிய இயல்பை, 'வெயிலொதுங்க மேதியோடான்புக மீன் பொலிதர' என்பவற்றால் விளக்கினார். [1]மீன் புகழ்பெற என்றபாடத்திற்கு - நட்சத்திரம் தம்மொளியால்புகழ்பெற்றுநிற்கஎன்க. சூரியனது ஒளிக்குமுன் தாம் இருப்பதுதெரியாமற் கிடந்த நட்சத்திரங்கள் சூரியன் அத்தமித்தபிறகு தாம் ஒளிவிட்டுப்பிரகாசிக்குந் தன்மையனவாயிருத்தல்பற்றி, இங்ஙனங்கூறுதல் பொருந்தும். இனிச் சூரியன் அத்தமித்தபோது அவனது வெயில்மாத்திரம் விலகிவிட, எல்லாவொளிகளினும் சூரியன் மிக்குத்தோன்றுபவனென்ற புகழ்மாத்திரம் நிலைத்துநிற்றலால், 'மீன்புகழ்பெற அத்தம்புக்கனன்' என்றுரெனினுமாம்; இப்பொருளில் மீன்-மின்என்பதன்விகாரம். மின்புகழ் - ஒளியோடுகூடிய புகழ்எனினுமாம். சூரியன் மேற்கிற் காணாமற்போவதை அத்தமலையில் மறைவதாகவும், கிழக்கில் தோன்றுவதை உதயமலையில் தோன்றுவதாகவும் கூறுவது, கவிமரபு. தன்மையான்-முற்றெச்சம். அத்தம் - அஸ்தம் என்ற வடசொல்லின் விகாரம். பி-ம்:—[2]காண்கிலேன், [3]கல்லதர். [4]முடுகுவன், முழுகினன்,

(௩௪௦)

### ௪.—அப்போது தாமரைமலர்க்கூட்டம் குவிதலின்வருணனை.

பருத்தவான் மதிகொடு பதுமத் தண்ணலே
வருத்தவா ணுதலியர் வதன ராசிபோ
லுருத்த[1]கண் ணீரினி [2]லொளியு நீங்கின
முகிழ்த்[3]தழ கிழந்தன முளரி யீட்டமே.

(இ - ள்.) பருத்த வான் மதி கொடு - பகுக்கப்பட்ட சிறந்தசந்திரனைக்கொண்டு, பதுமத்து அண்ணல் ஏ வருத்த - தாமரைமலரில்தங்குபவனாகிய பிரமன் தானே சிருட்டித்த, வாள் நுதலியர் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய அந்நகரத்து மகளிரின், வதனம் ராசி போல் - முகங்களின் தொகுதிகள்போல,—முளரிஈட்டம் - தாமரைமலர்களின்கூட்டம்,—உகுத்த கண்ணீரினில் - சிந்திய கள்ளாகிய நீரோடு [கண்களிலிருந்து பெருகுகின்ற நீரோடு], ஒளிஉம் நீங்கின - நிறத்தையும் நீங்கினவாய், முகிழ்த்து - முகங்குவிந்து, அழகுஇழந்தன - அழகுகெட்டு நின்றன; (எ - று.)

சூரியனத்தமித்ததும் தாமரைமலர்கள் குவிதல், இயல்பு. கள்ளாகிய நீர்சிந்த நிறங்கெட்டு அழகிழந்து குவிந்த தாமரைமலர்க்கூட்டங்கட்கு, இராமபிரான் காட்டிற்குச்செல்லுந் துயரத்தாற் கண்களினின்று நீர்ஆறுய்ப்பெருகத் தம் நிறங்கெட்டு அழகிழந்து மலர்ச்சியின்றி அழுங்கிக் கிடக்கும் அந்நகரத்துமகளிரின் முகங்களை உவமைகூறினர்; இவ்வணிக்கு 'உகுத்தகண்ணீரினில் முகிழ்த்து' என்ற இடத்திலுள்ள **சிலேடையணி** அங்கமாய்நின்றது. மகளிரின் நெற்றியினழகை விளக்குவதற்காக, கவி, பிரமன் சந்திரனைப் பகுத்துக்கொண்டு அந்நகரத்துமகளிரின்நுதலை வகுத்தனனென்றமையால், முன்னிரண்டடி **உயர்வுநவிற்சியணி**யாம். பத்மம், வதநராஜி - வடசொற்கள். அண்ணலேஎன்றவிடத்துள்ள ஏகாரம் - உயர்வுசிறப்பு. ஒளியும்நீங்கின என்றவிடத்துள்ள உம்மை, அழகிழந்தனஎன்பதை நோக்குதலால், எதிரதுதழுவிய எச்சப்பொருளது. பருத்த வான் மதி என்பதற்கு-அட்டமிசந்திரன் என்றும் உரைக்கலாம். இனி, 'நுதலியர் வதனராசிபோன்றுள்ள முளரியீட்டம் ஒளிநீங்கி முகிழ்த்து அழகிழந்தன' என்று உரைப்பாருமுளர். முளரி - முள்ளாகியஅரியை [அரையை] யுடையதெனத் தாமரைக்குக் காரணக்குறி.
**பி - ம்:**—[1]கணணீரின, கண்ணீரன, கண்ணீரென. [2]ஒளிமயங்கின, ஒளியினீங்கின. [3]அழகொழிந்தன. (௫௪௧)

### ௫.—இருள்தோன்றுதலின் வருணனை.

அந்தியில் வெயிலொளி [1]யழிய வானக
நந்தலில் [2]கைகயன் பயந்த நங்கைதன்
மந்தரை யுரையெனுங் கடுவின் [3]மட்கிய
சிந்தையி னிருண்டது செம்மை [4]நீங்கியே.

(இ - ள்) வான் அகம் - ஆகாயத்தினிடம், - அந்தியில் - மாலைப்பொழுதில், வெயில் ஒளி அழிய - சூரியனொளிகெட்டதனால்,—நந்தல் இல் கைகயன் பயந்த நங்கைதன் - கெடுதலில்லாத கேகயவரசன் பெற்ற பெண்ணாகிய கைகேயியினது, மந்தரை உரை எனும் கடுவின் மட்கிய சிந்தையின் - மந்தரையினுடைய சொல்லாகிய விடத்தினால் நன்னிலைகெட்டுப்போகிய மனம்போல, செம்மை நீங்கி - செம்மைத்தன்மை நீங்கி, இருண்டது - இருளடைந்து விட்டது; (எ - று.)

சூரியனொளி நீங்கியதனால் ஒளிமழுங்கிய வானத்துக்கு, கூனியினுரையால் மழுங்கிப்போன கைகேயியின்சிந்தையை உவமை கூறினார். இவ்வுவமைக்கு 'செம்மைநீங்கி, இருண்டது' என்றவிடங்களிலுள்ள சிலேடை, அங்கமாய்நின்றது. வானத்திற்குச் செம்மை நீங்குதல்-செவ்வானம் நீங்குதல்: மனத்திற்குச்செம்மை நீங்குதல் - நேர்மையானநெறியைவிட்டு நீங்குதல்; வானத்துக்கு இருளுதல்-இருளால் மூடப்படுதல்: சிந்தைக்கு இருளுதல்-அறியாமை நிறைதல் எனக் காண்க. இருண்மையென்பது - இவ்விருபொருளிலும் வருதலை "கூழின்மலிமனம்போன்றிருளாநின்ற கோகிலமே" என்ற திருக்கோவையாரினாலும் அறிக. சிந்தைக்குச் செல்லும்போது செம்மை இருள் என்பன முறையே செப்பத்திலும் அறியாமையிலும் சென்றனவாயினும், செம்மை இருண்மை என்ற பண்பால் ஒத்தலின் இச்செய்யுளிற் கூறிய உவமை,பண்புவமையாம். இங்ஙனம் வருதலை "புறங்குன்றி"என்று தொடங்குந் திருக்குறளுக்குப் பரிமேலழகர்கூறிய உரையாலும் உணரலாம். கைகேயி தந்தையின்மரபால் தூயவளாதலின் இயற்கையில் நல்லமனத்தினளாயிருந்தனளென்பதும், இழிபிறப்பினளாகிய கூனியின் உரையினாலேயே அத்தூயமனந் திரிந்த தென்பதும் விளங்க, 'நந்தலில் கைகயன் பயந்த நங்கைதன் மந்தரையுரையெனுங் கடுவின் மட்கிய சிந்தை' என்றார். பி - ம்:— [1]அற்ற, அருக. [2]கேகயன். [3]வட்கிய. [4]இன்றியே. (ருசஉ)

சூ.—வானம் நட்சத்திரங்களால் விளங்குதல்.

பரந்துமீ னரும்பிய பசலை வானக
மரந்தையின் முனிவர னறைந்த சாபத்தா
னிரந்தர மிமைப்பிலா நெடுங்க [1]ணீண்டிய
புரந்தர னுருவெனப் பொலிந்த தெங்குமே.

(இ - ள்.) மீன் பரந்து அரும்பிய - நட்சத்திரங்கள் பரவித் தோன்றப்பெற்ற, பசலை வானகம் - பசுமைநிறமுள்ள ஆகாயம்,—முனிவரன்-இருடிச்சிரேட்டனான கௌதமன், அரந்தையின் - மனவருத்தத்தோடு, அறைந்த - கூறிய, சாபத்தால்—, நிரந்தரம் இமைப்பு இலா நெடு கண் ஈண்டிய - எப்பொழுதும் இமைத்தலில்லாத நீண்ட கண்கள் (உடம்பெங்கும்) நிறையப்பெற்ற, புரந்தரன் - தேவேந்திரனது, உரு என - உருவம்போல, எங்கும் பொலிந்தது - (தனது) எல்லாவிடத்திலும் விளங்கிற்று; (எ - று.)

தன்னிடமெங்கும் நட்சத்திரங்கள் விளங்கப்பெற்ற பசுநிறமுள்ளவானம், தன்னுடலெங்கும் இமையாக்கண்களைப் பெற்ற பசுநிறமுள்ள இந்திரனுக்கு ஏற்ற உவமையாம். தன்மனைவியாகிய அகலிகையை வஞ்சித்துப் புணர்ந்ததனால் அவ்விந்திரனது உடலெங்கும் ஆயிரம்பெண்குறிகள் தோன்றுமாறு கௌதமமுனிவன் சபித்தானென்பதையும், பிறகு அம்முனிவனது அநுக்கிரகத்தினால் அவை கண்களாயின என்பதையும் அகலிகைப்படலத்துக்காணலாம். "வரம்பில்பன் மீன்வயின் வயின்விலங்கிப், பரந்துமீதரும்பிய பசலை வானத்து" எனப் பெருங்கதையில் உஞ்சைக்காண்டத்து மாலைப்புலம்பலில் வருவதுகாணத்தக்கது. மின்னுவது மீன் என நட்சத்திரத்திற்குக் காரணக்குறி. நிரந்தரம், ஸாபம்-வடசொற்கள். சாபம்-நிறைமொழிமாந்தர்வெகுண்டு கூறும்மொழி. புரந்தரன் - (பகைவரது) உடலை அல்லது பட்டணத்தை அழிப்பவன். அரந்தைஇல்எனப்பிரித்து - பிறவித்துயரம் ஒழியப்பெற்ற, முனிவரன் என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1] நீடிய, நீட்டிய. (௫௪௩)

## எ.—இராமபிரான் ஒருசோலையை யடைந்து முனிவரோடு உறைதல்.

திருநகர்க் [1]கோசனை யிரண்டு சென்றொரு
விரைசெறி சோலையை விரைவி [2]னெய்தினன்
[3]னிரதநின் [4]றிழிந்தபி [5]னிராம னின்றுணை
யுரைசெறி முனிவரோ டுறையுங் [6]காலையே.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) இராமன்—, திரு நகர்க்கு - சிறந்த அயோத்தியாபுரியினின்று, ஓசனை இரண்டு விரைவின் சென்று - இரண்டுயோசனைதூரம் விரைவாகக் கடந்துபோய், விரை செறி ஒரு சோலையை - நறுமணம்நெருங்கிய ஒருபொழிலை, எய்தினன் - அடைந்தவனாய்,—இரதம்நின்று இழிந்த பின் - (ஏறிச்சென்ற) தேரினின்று கீழிறங்கியபிறகு, இன்துணை உரை செறி முனிவரோடு - (தனக்கு) இனிய நண்பராக அமைந்த புகழ்மிக்க இருடியர்களோடு, உறையும் காலை - வசிக்கும்பொழுது,—(எ-று.)— "சேனைவிட்டது" என அடுத்த கவியோடு தொடரும்.

உரைசெறிமுனிவர் என்பதற்கு - வேதமுணர்ந்த முனிவர் என உரைத்தலுமொன்று. முதல்நாள் அத்தமிக்குஞ்சமயத்தில் இராமபிரான் தமசையென்னும் நதியையடைந்து அதன்கரையில் தங்க, உடன்வந்த நகரமாந்தரும் ஆங்குள்ள மரங்களினடியிற் கிடந்துறங்கினார்களென்று முதனூல் கூறும். உரைசெறி முனிவர்என்றது - இடைவழியிற்சந்தித்து இராமபிரானை விடமாட்டாமையால் உடன்வந்த முனிவர்கள் என்றேனும், அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த முனிவர்களென்றேனுங் கொள்க. பி-ம்—[1] யோசனை. [2] எய்தினர். [3] இரதமும். [4] இழிந்து. [5] இராமன்றன். [6] காலையில். (௫௪௪)

௮.—இராமபிரானைப் பின்பற்றிவந்த மனிதரின்திரள் அச்சோலையின்புறத்தே தங்குதல்.

வட்ட[1]மோ ரோசனை வளைவிற் றாய்நடு
வெட்டனை [2]யிடவுமோ [3]ரிடமி லாவகை
[4]புட்டகு சோலையின் புறத்துப் [5]போர்த்தென
விட்டது குரிசிலை [6]விடாத சேனையே.

(இ - ள்.) குரிசிலை விடாத சேனை-இராமபிரானை விட்டுநீங்கமாட்டாத சனங்களின் தொகுதி,—ஓர் ஓசனை வட்டம் வளைவிற்று ஆய் - ஒருயோசனை தூரம் வட்டவடிவாகச்சூழ்ந்துகொண்டதாய், நடு எள் தனை இடவும் ஓர் இடம் இலா வகை - நடுவே ஓர் எள்ளையிடவேண்டுமென்றாலும் அதற்கேற்ற சிறிதுவெற்றிடமும் இல்லாதபடி, புள் தகு சோலையின் புறத்து-பறவைகள் விளங்குகின்ற(இராமபிரான்தங்கிய அந்தச்)சோலையின்வெளியிடத்தில்,போர்த்துஎன - (அந்தச்சோலையையே தாம்) போர்த்தாற்போல, விட்டது - தங்கியிருந்தது; (எ - று.)

இராமபிரான் தங்கிய அந்தச்சோலையின் வெளியே ஒருயோசனைதூரம் பரவினதாய் நடுவில்சிறிதுவெற்றிடமுமில்லாமல்மிகநெருங்கி அச்சோலையையேதாம் போர்த்தாற்போலவளைந்தவடிவாய் இராமபிரானுடன்சென்ற சனங்களின் தொகுதி தங்கிற்றென்க. அச்சோலையைச் சேனை வளைந்திருந்தமையைப் போர்த்தாற்போலுமெனக் குறித்தது, தற்குறிப்பேற்றவணி. சேனை - இலக்கணையால், மக்கள்தொகுதியைக் காட்டிற்று. போர்த்தென - போர்த்து என்கிற செய்தென்னும் வினையெச்சம் போர்த்தால்என்னும் செயினென்னும் வினையெச்சப் பொருளில்வந்ததென்றாவது, போர்த்தது என்னுந்தொழிற்பெயர் போர்த்து என்று விகாரப்பட்டுவந்தது என்றாவது கொள்க. பி-ம்:—
[1]ஏழ். [2]இடமும். [3]இடை. [4]புட்டிரள். [5]போர்த்தன. [6]விடாது. (௫௪௫)

௯.—அச்சனங்கள் அந்த மணற்பரப்பில் ஊணுறக்கமின்றிப் பெருந்துயரோடு தங்குதல்.

[1]குயின்றன குலமணி நதியின் கூலத்திற்
பயின்றுயர் வாலுகப் பரப்பிற் பைம்புலில்
வயின்றொறும் [2]வைகின ரொன்றும் வாய்மடுத்
தயின்றிலர் துயின்றில ரழுது விம்மினார்.

(இ-ள்.)(இராமபிரானுடன்சென்ற பெருந்திரளானசனங்கள் அப்பிரான் நகர்நீங்கியதனாலுண்டாகிய பெருந்துயரம் நிறைந்திருத்தலால்), ஒன்றும் வாய் மடுத்து அயின்றிலர் - (உண்ணுதற்குரிய) எந்தப்பொருளையும் வாயிற்கொண்டு உண்ணாதவரும், துயின்றிலர் - உறக்கம்பிடியாதவரும், அழுது விம்மினார்-(மனத்திற்குள்ளே) பொருமி வெளிப்பட அழுபவருமாய், குலம் மணி

குயின்றன நதியின் கூலத்தில் - சிறந்தனவான மணிகள் செறிந்துள்ள நதியின் கரையில், பயின்று உயர் வாலுகம் பரப்பில் - திரண்டுஉயர்ந்துள்ள மணற்பரப்பில், பைம் புலில் - பசும்புல்லிலே, வயின்தொறும் - (தங்குதற்குரிய) இடங்கள்தோறும், வைகினர் - தங்கினர்கள்; (எ - று.)

குலமணி, நதி, கூலம், வாலுகம் - வடசொற்கள். ஒன்றும், உம்மை - இழிவுசிறப்பு. குலமணிகுயின்றன நதியின்கூலம் என்பதற்கு-சிறந்தமணிகள் பதித்துச்செய்யப்பெற்ற நதிக்கரை யெனினுமாம். பி - ம்:—[1]குயின்றிய. வயின்ரொறும் வைகிஞரொன்றும், வயின்ரொறும் வைகிஞரரோ. (௫௬௬)

வேறு.

௧௦.—இதுமுதல் எட்டுக்கவிகள் - இராமனுடன்சென்ற பலரும் துயின்றதைக் கூறும்.

வாவிவிரி தாமரையின் [1]மாமலரின் வாசக்
காவிவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணா
ராவிவிரி பாலுரையி னாடையணை யாக
நாவிவிரி கூழையிள நவ்வியர் துயின்றார்.

(இ - ள்.) வாவி விரி தாமரையின் மா மலரின் - தடாகத்திற் பரந்து வளர்ந்த தாமரையினது சிறந்த மலர்க்குள், வாசம் விரி காவி நாள் மலர் முகிழ்த்து அனைய கண்ணார் - நறுமணம்பொருந்திய கருநகுவளையின் அன்று பூத்தமலர் மலரப்பெற்றாற்போன்ற கண்களையுடையராய், நாவி விரி கூழை இள நவ்வியர் - கஸ்தூரிமணம்விரிந்த கூந்தலையுடையராகிய மாதர்,—ஆவி விரி பால் நுரையின் ஆடை அணை ஆக - புகைவிரியப்பெற்ற பால்நுரையைப் போன்ற ஆடையை அணையாகக்கொண்டு, துயின்றார்-தூங்கினர்; (எ-று.)

பருவம் வந்த மகளிர் தமதுமெல்லியஆடை அணையாகத் துயின்றமை, இதனாற் கூறப்படுகின்றது. மகளிர்முகத்திலுள்ள கண்கள் தாமரைமலரிற் காவிமலர் முகிழ்த்தாற்போலு மென்றார்: இல்பொருளுவமை. ஆவிவிரிபாலுரையினாடை - "ஆன்படுபாலுலை, பொங்குபொங்கிய வாவியினாற்பொலிந்து,...மாடங்கள் .., பூந்துகில் புறம்போர்த்தன போன்றவே," "ஆவியந் துகிலார்", "பாலாராவிப்பைந்துகில்" என்பன காண்க. பி-ம்:—[1]நாண்மலரின், இன்மலரின். (௫௬௭)

௧௧. பெரும்பகல் வருந்தினர் பிறங்குமுலை தெங்கின்
குரும்பைகள் பொருஞ்செவிலி மங்கையர் குறங்கில்
[1]அரும்பனைய கொங்கையயி லம்பனைய [2]வுண்கட்
கரும்பனைய செஞ்சொனவில் கன்னியர் துயின்றார்.

(இ - ள்.) பிறங்கு முலை தெங்கின் குரும்பைகள் பொரும் செவிலி மங்கையர் - (தமது) விளங்குகின்ற முலைகள் தென்னங்குரும்பைகளை யொத்த செவிலித்தாயராகிய மாதரின், குறங்கில் - துடையிலே, பெரு பகல் வருந்தி

னர் - நீண்டபகற்பொழுதெல்லாம் (இராமனுக்கு நேர்ந்த வனவாசத்தைக் குறித்து) வருந்தினவராகிய, அரும்பு அனைய கொங்கை - தாமரைமலரி னரும்பையொத்த தனங்களையும், அயில் அம்பு அனைய உண் கண் - கூரிய அம்பையொத்தமையுண்ட கண்களையுமுடைய, கரும்பு அனைய செம் சொல் நவில் - கரும்பையொத்த இனியசொல்லைப்பேசுபவராகிய, கன்னியர் - இள மகளிர், துயின்றார்—; (எ - று.)

இதனால், இளமங்கையர் தமது செவிலித்தாயரின் தொடையில் உறங்கி னமை கூறப்பட்டது. பகல்முழுதும் வருந்திய சோர்வின் மிகுதியால் கன்னி மார் உடல்தெரியாது துயின்றன ரென்க. கன்னியர் - விவாகமாகாதமகளிர். வருத்தத்தோடு கழிந்த நாளாதலால் அது மிகவும் நெடுகிக் காணப்பட்டமை தோன்ற, 'பெரும்பகல்வருந்தினர்' என்றார். பொரும் - உவமவுருபு. பி-ம்:— [1]அரம்பையிணையங் கைபயிலம்பனையவுண்டே. [2]ஒண்கண். (௫௪அ)

௧௨. [1]பூவக நிறைந்த புளினத் [2]திரள்கடோறு
மாவகிரி [3]னுண்கணர் மடப்பிடியின் [4]வைகச்
சேவக [5]மமைந்தசிறு கட்கரிக ளென்னத்
தூ[6]வகலில் குந்தமற மைந்தர்க டுயின்றார்.

(இ - ள்.) பூஅகம் நிறைந்த புளினம் திரள்கள் தோறும் - பூமியில் நிறைந்து தோன்றுகிற மணற்குன்றுகளினிடங்கள்தோறும், தூஅகல் இல் குந்தம் மறம் மைந்தர்கள் - ஊன் நீங்குதலில்லாத குந்தமென்னும் படையை யேந்திய வீரத்தையுடைய குமாரர்கள், மா வகிரின் உண் கணர் மட பிடியின் வைக - மாவடுப்போன்ற மையுண்ட கண்களையுடையவராகிய (தமது) மனை வியர் இளையபெண்யானைகள்போல் தங்கியிருக்க, சேவகம் அமைந்த சிறு கண் கரிகள் என்ன - வீரமமைந்த சிறிய கண்களையுடைய ஆண்யானைகள் போல, துயின்றார்—; (எ - று.)

இதனால், புளினத்தடங்களில் தமதுமனைவியர் தங்கியிருக்க, ஆடவவீரர் துயின்றமை கூறப்பட்டது. அச்சோலையின் புறம்புள்ள பிரதேசம் மணல் நிரம்பியுள்ள தென்பது 'பூவகநிறைந்தபுளினம்' என்றதனாற் பெறப்பட்டது. பூவகம் - பூஎன்ற வடமொழித்திரிபாகியசொல் அகமென்னும் ஏழனுருபு பெற்றுவந்தது. இனி, பூவகம்நிறைந்தபுளினம் என்பதற்கு - மலர்கள் தம்மி டம்நிறைந்த புளினம் எனினுமாம். மாவகிர் - கண்ணிற்கு வடிவில்உவமை. சிறுகண்-கரிக்கு, இயற்கை அடைமொழி. புளிநம்,கரீ,குந்தம்—வடசொற்கள். பி-ம்:—[1]பூவகை. [2]திடர். [3]உண்கணின், ஒண்கணின். [4]வைகும். [5]அணைந்த. [6]அகலிலங்குமயின்மன்னர், அகமிருந்தமறமன்னர், அயலிருந்தமறமன்னர்.()

௧௩. தகவுமிகு தவமுமிவை தழுவவுயர் கொழுநர்
முகமுமவ ரருளு[1]நுகர் சிலர்கடுயர் மூடுக
வகவுமிள மயில்களுமி ரலசியன வனையார்
மகவுமுலை வருடவிள மகளிர்க டுயின்றார்.

(இ - ள்.) மிகு தகவுஉம் தவம்உம் இவை தழுவ உயர்-மிக்க நல்லகுணமும் கொண்டானது கொள்கையின்படியே நடக்கும் கொள்கையும் இவை பொருந்தியதனால் உயர்ந்துள்ள, கொழுநர் முகம்உம் அவர் அருள்உம் நுகர் - கொழுநருடைய முகத்தையும் அவருடைய கருணையையும் அனுபவிக்கின்ற, சிலர்கள் இளமகளிர்கள் - சில இளமகளிர்கள், துயர் மூழ்க - துன்பம் மிக்கதனால், அகவும் இள மயில்கள் உயிர் அலசியன அனையார்-ஆடுந்தன்மையுள்ள இளமயில்கள் உயிர்ஒடுங்கியவற்றை பொத்தவர்களாய், மகவு முலை வருட - (முலையுண்ணுங்) குழந்தை(மற்றொரு) முலைக்காம்பைநெருடிக்கொண்டிருக்க, துயின்றார்—; (எ - று.)

இதனால், மக்களைப்பெற்ற பதிவிரதைமகளிர் துயின்றமை கூறப்படுகின்றது. கணவருடைய இன்முகத்தையே காணுதலும் அவருடைய அருளை நாடிநுகருதலும், பதிவிரதையருக்கு இயல்பு. சிலர்கள் - விகுதிமேல் விகுதி. பதிவிரதையர்க்குக் கொழுநரதுகொள்கைப்படி நடப்பது தவிர வேறுதவமில்லையாதலால், தவமென்பதற்கு இங்ஙனம் பொருள் கொள்ளப்பட்டது. தகவு மிகுதவமும்தழுவவுயர் என்பதை மகளிர்க்கு அடைமொழியாக்காமல் கொழுநர்க்குஅடைமொழியாக்கின், தகவினாலும்தவத்தினாலும் உயர்ந்த கொழுநரது முகத்தையும்அருளையும்நுகர்கின்ற மகளிரென்க.குழந்தை தன்தாயின்ஒருமுலையிற்பால்குடிக்கும்போது மற்றொருமுலையின்காம்பை நெருடுதல், இயல்பு: இதனை "திருமலிந்ததிகழ்மார்புதேக்கவந்தென்னல்குலேறி, யொருமுலையை வாய்மடுத்தொருமுலையை நெருடிக்கொண், டிருமுலையுமுறைமுறையாலேங்கி யேங்கியிருந்துணையே" என்றபாசுரத்தாலும் அறிக. பி-ம்:—[1] நுகர்கிலர்துயரமுறுவோர், நுகர்கிலர்துயரமுறுவர், நுகர்கிலர் துயரின்மூழ்கி, நுகர்கிலர்கடுயர்முழுகி. சிலபிரதிகளில் இச்செய்யுள், "சம்பகநறும்பொழில்"(கரு)என்றுதொடங்கும் பாடலுக்குப் பின்னும்,சிலபிரதிகளில்"மாகமணி" (கச)என்றுதொடங்கும்பாடலுக்குப்பின்னும் 'வேறு' என்ற தலைப்போடு காணப்படுகின்றது.()

கச. மாகமணி வேதிகையின் மாதவிசெய் பந்தற்
கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார்
பூகவன மூடு[1]படு கர்ப்புளின முன்றிற்
றோகையிள வன்னநிரை யிற்சிலர் துயின்றார்.

(இ - ள்.) சிலர்-சிலமகளிர்,—மாதவி செய் பந்தல் - முல்லைக்கொடியாலமைக்கப்பட்ட பந்தலில், மாகம் மணி வேதிகையின் - வானத்தைப்போல் தோன்றுகின்ற நீலரத்நங்கள் பதிக்கப்பெற்ற திண்ணையில், கேகயம் நெடு குலம் என - மயிலின் பெருங்கூட்டம்போல, கிடந்தார் - படுத்திருந்தார்; சிலர் - சிலமகளிர்,—பூகம் வனம் ஊடு கமுகவனத்தின் நடுவிலுள்ள, படுகர்-மடுவைச் சார்ந்த, புளினம் முன்றில் - மணல்மேடுகளில், தோகை இள அன்னம் நிரையின்-தோகையையுடைய இளஅன்னங்களின் வரிசைகள் போல, துயின்றார்—; (எ - று.)

மாதவிப்பந்தலின் கீழமைந்த வேதிகையிற் சிலர் மயிற்குலம்போற்கிடந் துறங்க, சிலர் கமுகந்தோட்டத்திடையிலே மணற்குன்றுகளில் இளவன்னம் போல் துயின்றன ரென்க. வேதிகை - யாகஞ்செய்யும்பொருட்டு அமைக்கப் பட்ட திண்ணைபோல்மேடானஇடம். அந்நாட்டிற் பலரும் யாகஞ் செய்வோ ராதலின் அங்ஙனம் யாகஞ்செய்வதற்காக அமைக்கப்பட்ட வேதிகையின்மீது மாதவிக்கொடிகள் பந்தல்போற்படர்ந்தன வென்க. வீட்டின் முன்னிடம் என்றபொருளுள்ள 'முன்றில்' என்ற சொல் - இலக்கணையால், இங்கே இட மென்ற பொருளை யுணர்த்தியது. தோகை - விலங்குக்கு வால்போலப் பறவைகட்குப் பின்புறத்தில் நீண்டுவளர்வது: இது, பெரும்பாலும் மயிலுக் குக் கூறப்படும். மாகம் - மஹாகம் என்ற வடசொல்லின்திரிபு. மணிவேதிகா, மாதவீ, பூகவநம், ஹம்ஸம் என்ற வடசொற்கள் திரிந்துவந்தன. கேகயம், குலம், புளிநம்-தற்சமவடசொற்கள். மாகமணிவேதிகை என்றதொடருக்கு- ஆகாயத்தை அழகுசெய்கின்ற யாகவேதிகை என்று பொருள் கூறுவதிற் சிறப்புளதேற் கொள்க. பி-ம்:—[1]படுகாமர்புரை. (௫௩௧)

௬௫. சம்பக நறும்[1]பொழில் களிற்றருண வஞ்சிக்
கொம்[2]பழுதொ சிந்தன வெனச்சிலர் குழைந்தார்
வம்பளவு கொங்கையொடு வாலுகம் வளர்க்கு
மம்பவள வல்லிக ளெனச்சில [3]ரசைந்தார்.

(இ - ள்.) சிலர் - சிலமகளிர்,— சம்பகம் நறு பொழில்களில் - நறுமண முள்ள சண்பகச்சோலைகளிலே, தருணம் வஞ்சி கொம்பு அழுது ஒசிந்தன என-இளைய வஞ்சிக்கொடிகள் அழுது முறிந்து கீழ்விழுந்து கிடப்பனபோல, குழைந்தார் - சோர்வுடன்கிடந்து உறங்கினார்கள்; சிலர் - மற்றுஞ்சிலமாதர், —வம்பு அளவு கொங்கையொடு - கச்சையணிந்த தனங்களுடனே, வாலுகம் வளர்க்கும் அம் பவளம் வல்லிகள் என - மணற்குன்றுகளால் வளர்க்கப்படு கின்ற அழகிய பவளக்கொடிகள் போல, அசைந்தார் - மெய்ம்மறந்து துயின்றார்கள்; (எ - று.)

சிலமகளிர் சண்பகப்பொழிலிற் சோர்ந்து தூங்க, சிலமகளிர் மணற் குன்றுகளில் அயர்ந்து தூங்கினரென்பதாம். அழுதகண்ணீருடனே தளர்ந்து கிடந்து உறங்கும் மகளிரை - வஞ்சிக்கொம்பு அழுது ஒசிந்தனபோலுமென வும், மணற்குன்றுகளில் அயர்ந்துதூங்கும் மகளிரை - வாலுகத்தால் வளர்க் கப்பட்டு வம்பளவு கொங்கையைக்கொண்ட பவளவல்லிகள் போலுமென வும் குறித்தார்; இவை இரண்டும் - தற்குறிப்பேற்றவணிகள். சம்பகம், தரு ணம், வாலுகம் - தற்சமவடசொற்கள். வஞ்சுளம், ப்ரவாளவல்லீ என்ற வட சொற்கள் - வஞ்சி, பவளவல்லி எனத் திரிந்துவந்தன. பி-ம்:—[1]பொழிலி யல். [2]அழகு. [3]அயர்ந்தார். (௫௩௨)

௬௬. குங்கும [1]மலைக்குளிர் பனிக்[2]குழுமி [3]யென்னத்
தூங்க முலையிற்றுக ளுநச்சிலர் துயின்றா
ரங்கை யணையிற்பொலி வழுங்கமுக மெல்லாம்
பங்கய [4]முகிழ்த்தன வெனச்சிலர் படிந்தார்.

(இ-ள்.) சிலர்-சிலமாதர்கள்,-குங்குமம் மலை குளிர் பனி குழுமி என்ன-குங்குமப்பூநிறைந்துள்ள மலையிலே குளிர்ந்த பனி படிந்ததுபோல, தூங்கம் முலையில் துகள் உற-பருத்துள்ள தனங்களிலே புழுதி படிந்திருக்க, துயின் றார்—; சிலர்-, அம் கை அணையில்-அழகிய கையாகிற தலையணையிலேபொரு ந்தியுள்ள, முகம் எல்லாம்-(தமது) முகங்கள்யாவும்,பொலிவு அழுங்க-அழகு கெட்டிருத்தலால், பங்கயம் முகிழ்த்தன என - தாமரைமலர்கள் குவிந்துள் ளன என்று நினைக்குமாறு, படிந்தார் - கிடந்து உறங்கினார்கள்; (எ - று.)

இதனால், தம்முடம்பிற் புழுதிபடியவும் கைகளை அணையாக அமைய வும் சிற்சிலமகளிர் கிடந்து உறங்கியமையைக் கூறுகின்றார். தரையிற்படுத்து உறங்கும் மகளிரது தனங்களிற் படிந்த புழுதி,குங்கும மலையிற் பனிபடிந்தது போலுமெனக் குறித்தார்: தற்குறிப்பேற்றவணி. கையே அணையாக அமைய அவற்றில் மலர்சியற்ற மகளிரது முகங்கள், முகிழ்த்த பங்கயம்போலும் என் றது - உவமையணி. தனங்கள் குங்குமப்பூச்சு அமைந்தனவாதலால், அவை குங்குமமலை யெனப்பட்டன. குங்குமமலை-குங்குமத்தாலியன்ற மலை யெனி னுமாம். பி-ம்:—[1]முலைக்குளிர்மணல். [2]குமிழி. [3]அன்ன. [4]முகிழ்ப்பன.(௫௫௩)

௧௭. தொடுத்த[1]கல் லிடைச்சிலர் துவண்டனர் துயின்றா
ரடுத்த[2]வடை யிற்சில [3]ரழிந்தன ரயர்ந்தா
ருடுத்ததுகில் சுற்றொரு தலைச்சில ருறைந்தார்
படுத்ததளி ரிற்சிலர் [4]பசந்தன ரசந்தார்.

(இ - ள்.) சிலர்—,—துவண்டனர் - (வழிநடந்த இளைப்பினாலும் வருத் தத்தினாலும்) துவட்சியடைந்தவராய், தொடுத்த கல் இடை - (ஒன்றோடொ ன்று)தொடர்ந்துள்ள கல்லினிடத்திலே, துயின்றார்—; சிலர்—,—அடுத்த அடையில்-ஒன்றன்மீது ஒன்றாக விழுந்துள்ள இலையிலே, அழிந்தனர்-மனம் அழிந்தவராய், அயர்ந்தார் - மெய்ம்மறந்து தூங்கினார்கள்; சிலர்—,—உடுத்த துகில் சுற்றி - உடுத்த ஆடையில் ஒருபகுதியைமாத்திரம்உடுத்துக்கொண்டு, ஒருதலை-(அதனுடைய) விஞ்சிய பகுதியில், உறைந்தார் படுத்து உறங்கினார் கள்; சிலர்—,—படுத்த தளிரில் - பரப்பிய தளிரிலே, பசந்தனர் - (துயரத் தின் மிகுதியால்) நிறம் வேறுபட்டவராய், அசந்தார் - மெய்ம்மறந்து தூங் கினார்கள்; (எ - று.)

சிலரென்பதை மகளிர் என்றுமாத்திரங்கொள்ளாமல் ஆடவர் மகளிர் என்ற இருபாலாரைக் காட்டு மெனினுமாம். கல்லிடைச் சிலரும், இலையிற் சிலரும், தளிரிற் சிலரும், உடுத்தஉடையிற் சிலருமாகப் பலரும் அயர்ந்து தூங்கின ரென்க. அசந்தார் - அயர்ந்தார் என்பதன் போலி. சுற்றிஒருதலை என்பன,சுற்றொருதலை என விகாரப்பட்டுவந்தன. பி-ம்:—[1]மலரிற்சிலர், புரு வச்சிலை. [2]கலிடை. [3]அசைந்தனர், அறிந்தனர். [4]பதைத்தனர்திகைத்தார், படிந்தனர்பதைத்தார். இச்செய்யுள் சிலபிரதியிற் காணப்படவில்லை. (௫௫௪)

கஅ.—யாவரும் உறங்குகையில் இராமன் சுமந்திரனையழைத்து ஒன்று கூறத்தொடங்குதல்.

ஏனையரு மின்னண [1]மிறங்கின [2]ருறங்கா
மானவனு மந்திரிசு மந்திரனை வாவென்
றானமில் பெருங்குண மொருங்குடைய [3]வுன்னான்
மேனிகழ்வ துண்டவுரை கேளென விளம்பும்.

(இ - ள்.) இன்னணம்-இவ்வாறு, இறங்கினர் - (அசசோலைப்புறத்தே) தங்கினவராகிய, ஏனையர்உம்-யாவரும், உறங்கா - தூங்கிக்கொண்டிருக்க,— மானவன்உம் - வைவச்சுவதமனுவின் குலத்திற்றோன்றிய இராமபிரானும், மந்திரி சுமந்திரனை-மந்திரியாகிய சுமந்திரனென்பானை, வாஎன்று '(இங்கே) வருவாயாக' என்று அழைத்து, (அவனை நோக்கி), 'ஊனம் இல் பெருகுணம் ஒருங்கு உடைய உன்னால் - குற்றமற்ற சிறந்த குணங்களெல்லாவற்றையும் ஒருசேரக்கொண்டுள்ள உன்னாலே, மேல்-இனி, நிகழ்வது - நடக்க வேண்டியதொரு செயல், உண்டு—: அ உரை - அதனைப்பற்றிய பேச்சை, (யான்கூற), கேள்—கேட்பாயாக,' என-என்று சொல்லி, விளம்பும்-கூறலானான்; (எ - று.)—அதனை, மேற்கவியிற் காண்க.

[1]உறங்கினர்என்ற பாடத்துக்கு - யாவரும் இங்ஙனம் துயின்றார்கள்: (அப்போது), உறங்கா மானவனும் - தூக்கம்பிடியாதவனாகிய அவ்விராமனும் என்று உரைக்க. தன்னுடன் வந்த நகரமாந்தரைப் பின்னும் வருத்தத்திற்கு உட்படுத்தாமற் பிரியவேணுமென்னுங் கருத்தைக்கொண்ட இராமபிரான் இலட்சுமணனுடன் முன்னர் ஆலோசித்துப் பிறகு சுமந்திரனையழைத்துத் தன்கருத்தைக் கூறலாயினன் என இச்செய்யுளின் கருத்தை முதனூலிற் கேற்ப விரித்துரைக்கலாம். ஏனையரென்பது, ஏனையரென விகாரப்பட்டுவந்தது. இனி, கீழே மகளிர் பலரும் உறங்கியதைக் கூறிக்கொண்டுவந்தமையால், ஏனையர்-மற்றையோராகிய ஆடவரும், துயின்றனர் எனக் கூறலாமென்பர்: ஆயினும், கீழ்ச்சிலபாடல்களில் இருபாலாரும் துயின்றனரெனக் கொள்ளுதற்கு இடமிருத்தலாலும், பன்னிரண்டாஞ்செய்யுளில் "மறமைந்தர்கள் துயின்றார்"எனக் கூறியுள்ளதனாலும், அவ்வுரை சிறக்குமெனத் தோன்றவில்லை. பி-ம்:—[1]இரங்கினர். [2]உறங்க. [3]அன்னான். (ருருரு)

வேறு.

கக.—இராமன் சுமந்திரனைநோக்கி உடன்வந்தவர் திரும்பிச்செல்லுமாறு இரதத்தைத் திருப்பிக்கொண்டு செல்லச் சொல்லுதல்.

பூண்டபே ரன்பி னாரைப் போக்குவ தரிது போக்கா
தீண்டுநின் றேகல் பொல்லா தெந்தைநீ யிரத மின்னே
தூண்டினை [1]மீள நோக்கிச் [2]சுவட்டையோர்ந் தென்னை யங்கே
மீண்டன னென்ன மீள்வ [3]தீதுநின் வேண்டிற் றென்றான்.

(இ-ள்.) 'பூண்ட பேர் அன்பினாரை[பேரன்புபூண்டாரை]-(நம்மிடத்து) மிக்க அன்புகொண்ட இந்தச்சனங்களை, போக்குவது - திரும்பிச்செல்லுமாறு செய்வது, அரிது - முடியாது; போக்காது - (அவர்களை) அனுப்பிவிடாமல், ஈண்டு நின்று ஏகல் - இவ்விடத்தினின்று செல்லுதல், பொல்லாது - நல்ல தன்று; எந்தை - எனது தந்தை போன்றவனே! இன்னே - இப்பொழுதே, நீ—, இரதம் தூண்டினை மீள-இரதத்தைச் செலுத்தினவனாய் மீண்டுசெல்ல, (கண்விழித்தெழுந்த இவர்கள்), சுவட்டை நோக்கி - (தேர்சென்ற) அடையாளத்தைக்கண்டு, ஓர்ந்து - ஆராய்ந்து, என்னை அங்குஏ மீண்டனன் என்ன - என்னை அவ்வயோத்தியாநகரத்திற்கே திரும்பிவிட்டேனென்று நினைத்து, மீள்வர் - (தாமும்) திரும்பிச்செல்வார்கள்; (ஆகையால்), இது - இரதத்தைத் திருப்பிக்கொண்டு செல்லவேண்டுமென்ற இதுவே, நின்னை வேண்டிற்று - உன்னை வேண்டிக்கொள்வதாகும்,' என்றான்-என்று கூறினான், (இராமன்).

தன்கீழ்வாழுங் குடிமக்கட்கு மனவருத்தமுண்டாகும்பொழுது அரச குமாரர் அதைத் தாம் தீர்ப்பது தகுதியே யன்றித் தமது துயரத்தையும் அந் தப்பட்டணத்து ஜநங்கள் நுகருமாறுசெய்வது முறைமையன்று ஆதலாலும், 'நம்மையாவது நகரத்திற்குத்திருப்பி அழைத்துக்கொண்டு செல்லவேண்டும்; அல்லது, தாங்களாவது காட்டில் உடன்வரவேண்டும்' என்று பேரன்பினால் விடாப்பிடிகொண்டுள்ள இவர்களை நல்வார்த்தைசொல்லி நகரத்திற்குத் திருப்பியனுப்புவது முடியாதாதலாலும், மேலும் நாம் இவர்களைக் காட்டிற்கு உடன்அழைத்துச்சென்றால் அங்கு இவர்கட்கு ஏற்றபடி உணவு முதலியன அளித்தல் முடியாதாகையாலும், அன்றியும் அங்கு ஏதேனும் கொடியவிலங்கு முதலியவற்றால் இவர்கட்குத் தீங்குநேருமாயின் அத்தீவினையும் நம்மைச் சேருமாதலாலும், இவர்களை வஞ்சித்தாவது நகரத்திற்குமீளுமாறு செய்வது இப்போது செய்யத்தக்க காரியம் அதற்கேற்ப நீ இரதத்தைத் திருப் பிக்கொண்டு செல்வாயேயானால் தேர்ச்சுவட்டைக்கண்டு இதுவரையிலும் நான் இரதத்திலேறிவந்ததுபற்றி இப்போதும் இரதத்தின்மீதேறி வனவாசத் திற்கு அஞ்சி நகரத்திற்குத் திரும்பியதாக நினைத்துத் தாமும் நகரத்திற்குத் திரும்பிவிடுவர்: ஆகையால், இதுவே இப்பொழுது நீ செய்யவேண்டிய செயல் என்று சுமந்திரனை இராமபிரான் வேண்டினனென்க. தமசாநதிக் கரையில் நகரமாந்தர்யாவரும் உறங்குகையில், சுமந்திரனோடு இராமபிரானது குணங்களைச்சொல்லிக்கொண்டு இலக்குமணன் விழித்திருக்கையில் இலக்கு மண சுமந்திரர்களால் அமைக்கப்பட்ட இலைப்படுக்கையில்நின்றும் உறங்கி யெழுந்திருந்த இராமபிரான் தான் நகரசனங்களுடன் வனத்திற்குச்செல்லு தல் தகுதியன்றென்பதை ஆலோசித்துப் பிறகு சுமந்திரனைப்பார்த்து 'இந் நகரமாந்தர்க்குத் தெரியாதபடி வனத்திற்குச் செல்லவேண்டுமாதலால், இரத த்தைச் சித்தப்படுத்திக்கொண்டுவருக' என்ன, அவனும் அங்ஙனமேகொணர, ஸ்ரீராமன் இரதத்தின்மேலேறிக்கொண்டு தமசாநதியைக்கடந்து முள்கல் லில்லாத பெரியவழியைப்பிடித்துச் செல்லுகையிற் சுமந்திரனைப்பார்த்து

'நீ மாத்திரம் இருந்து கொண்டு இவ்விரதத்தை அயோத்திக்குத்திரும்பிவிட்டது போல் தோன்றுமாறு வடதிசைமுகமாக ஒரு முகூர்த்தகாலம் தேரை நடத்திச்சென்று பிறகு வேறுவழியாக ஜனங்களால் சுவடுதெரியமுடியாதபடி திருப்பிக்கொண்டுவருவாயாக' என்று கட்டளையிட,சுமந்திரனும் அங்ஙனமே செய்ய, இராமபிரான் தேரின்மேலேயே தேவசுருதி கோமதி என்னும் நதிகளைத் தாண்டிக் கோசலதேசத்தின் தென்னெல்லையைக் கடந்து,அங்கரதேவதையை வணங்கிவிட்டுக் கங்காதீரத்தையடைந்ததும், குகன் கொண்டுவந்த ஓடத்தின்மேலேறும்பொழுது சுமந்திரனிடம் தன்தாய்தந்தையர்க்கு வேண்டிய செய்திகளைச்சொல்லி அவனைத் திருப்பியனுப்பியதாக முதனூலிற் கூறியுள்ளது. வேண்டிற்று - இயல்பினால்நிகழ்காலம் இறந்தகாலமாக வந்த காலவழுவமைதி. எந்தை - அன்பினால் வந்த மரபுவழுவமைதி. இன்னே-இன்றேயென்பதன் விகாரமென்றுவது, இனியென்பது விகாரப்பட்டு ஏகாரவிடைச்சொல்பெற்று வந்ததென்றுவது கொள்க. பி-ம்:—[1]மீள்வதாகி. [2]சுவடுதேர்ந்து. [3]ஈதுன்னை, இதுவுன்னை, இதுவென்னை. (௫௫௬)

உ0.—இதுமுதல் ஆறுகவிகள் - சுமந்திரன் தான் வெறுந் தேருடன் திரும்பிச்சென்று, கேட்பவருக்கு யாதுகூறுவதென்று வருந்துவதைக் கூறும்.

செவ்விய குரிசில் கூறத் தேர்வலான் [1]செப்பு வானவ்
வெவ்விய தாயிற் றீய [2]விதியினின் மேலன் போலா
மிவ்வயி னின்னை [3]நீங்கி யின்னுயிர் [4]தீர்ந்தின் றேகி
யவ்வயி [5]னனைய காண்டற் [6]கமைந்தன [7]னடிய னென்றான்.

(இ - ள்.) செவ்விய குரிசில் - நற்குணங்களையேயுடைய தலைவனாகிய இராமபிரான், கூற-(இவ்வண்ணம்) சொல்ல,—தேர் வலான்-தேர்செலுத்துதலில் வல்லவனாகிய சுமந்திரன், செப்புவான் - சொல்லுவானாயினான்:—'(நான் நீ கூறியவண்ணமே வெறுந்தேரைக்கொண்டு திரும்பிச்செல்வேனானால்), 'இ வயின் - இவ்விடத்தினின்று, நின்னை நீங்கி - உன்னைவிட்டுப் பிரிந்து, இன் உயிர்-(எனது) இனிய பிராணனை,தீர்ந்து இன்று-நீங்கப்பெறாமல், ஏகி - மீண்டு சென்று, அ வயின்-அவ்வயோத்தியா நகரத்தில், அனைய - (இராமனின்றிச் செல்வதுகண்டு அவஸ்தைப்படுகின்ற அயோத்தியாபுரியின்) அந்த நிலைமைகளை, காண்டற்கு - காணுதற்கு, அமைந்தனன் - உடன்பட்டவனான, அடியன் - அடியவனாகிய யான்,—அ வெவ்விய தாயின் - (நீ காட்டிற்குச் செல்லவேணுமென்று வரம்வேண்டிய) கொடிய அந்தத் தாய்க்கும், தீய விதியினின் - (அங்ஙனம் காட்டிற்குச் செல்லுமாறு தூண்டிய) கொடிய விதிக்கும், மேலன் போல் ஆம் - (கொடுமையில்) மேம்பட்டவனேவேன் போலும்', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

கானகத்திற்கு நீ செல்லுமாறு தாய் வரம்வேண்டினாள்: விதி காட்டிற்குக் கொண்டுபோய்விட்டது; யானோ அவ்விருவர்செயலையும் நடப்பித்ததோடு ஒழியாமல் கல்லும்முள்ளும் நிறைந்த கானகத்திலே பொருந்தாரைவேல்நுதிபோல் பரல்பாய மெல்லடிக்கள் குருதிசோர வெயிலுறைப்பநடந்து செல்ல விட்டிட்டு 'ஒருகால் இராமன் நாட்டிற்குத் திரும்பிவந்தாலும் வருவனோ?' என்று ஒரெண்ணங்கொண்டு உடன் வரமுடியாமையால் நகரத்தில் தானே தங்கிய சிலர்க்கு அவ்வாசையெல்லாந் தீரச்செய்த கொடியவனாதலால் 'தாயின் வெவ்வியவிதியினின் மேலன்' என்கிறான், சுமந்திரன். [2]விதியினின் மேலென்போலாம் என்ற பாடத்திற்கு - விதியினும் மேலாக எதையொத்திருப்பேனென்க. தீர்ந்து-தீர்ந்தது என்ற தொழிற்பெயரின்விகாரம்.
பி-ம்:—[1]உணர்த்துவான். [2]விதியினிமேலென்பாலாம், விதியின்மேலோன்போலாம். [3]நீக்கி, நோக்கி. [4]தீராதேகி, ஈந்தின்றேகி, நீக்கென்றேகி. [5]முடிவு. [6]அமைதலால், ஆதலால். [7]அளியன். (௫௫௭)

வேறு.

௨௧. தேவியு மிளவலுந் தொடரச் செல்வனைப்
[1]பூவியற் கானகம் [2]புகவுய்த்தே னென்கோ
கோவினை யுடன்கொடு குறுகினே னென்கோ
யாவது கூறுகே [3]னிரும்பி னெஞ்சினேன்.

இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தேவிஉம் இளவல்உம் தொடர - மனைவியும் தம்பியும் உடன் தொடர்ந்து செல்ல, செல்வனை - செல்வக்குமாரனாகிய இராமபிரானை, பூ இயல் கானகம்-மலர்கள் பொருந்திய காட்டில், புக-செல்லுமாறு, உய்த்தேன் என்கோ - விட்டுவந்தேனென்று சொல்வேனோ? கோவினை - தலைவனாகிய இராமபிரானை, உடன் கொடு - உடன் அழைத்துக்கொண்டு, குறுகினேன் என்கோ-(நகரத்தைக்) கிட்டினேனென்று சொல்வேனோ? இரும்பின் நெஞ்சினேன் - இரும்பைப்போல்வலிய நெஞ்சையுடையவனாகிய யான், யாவது கூறுகேன் - யாது சொல்லக்கடவேன்? (எ - று.)

'கோவினையுடன்கொடுகுறுகினேன்'என்றுசொல்லுதல் பொருந்தாதது போலவே, பகைவர் கைவேல்நுதிபோற் பரல்பாயுங் காட்டிற் புகவுய்த்ததை 'பூவியற்கானகம் புகவுய்த்தேன்' எனக் கூறுதலும் தகாதாதலாலும், நுழைதற்கரிய கடுங்காட்டிற் கொண்டுபோய் விட்டுவந்தேனென்று கூறுதல் மிகவும் அநிஷ்டத்தைக் கூறியதாமாதலாலும் 'யாவதுகூறுகேன்' என்கிறான். காட்டில் விட்டுவந்தேனென்று எவ்வாறு கூறுவேனென்பது, சுமந்திரன் கருத்து. காட்டிலேகொண்டுபோய் விட்டுவந்த கொடுஞ்சொல்லைச் சொல்லும்படி தனக்கு ஏற்பட்டிருப்பதைப்பற்றி, தன்னை, 'இரும்பின்நெஞ்சினேன்'என்று பழித்துக்கூறுகின்றான். 'தேவியும் இளவலுந் தொடர' என்றதனால், தானும் அவர்களைப்போலப் பின்தொடர்ந்துசெல்லச் சுமந்திரன் விரும்புகின்

றுமென்பது தொனிக்கும். என்கு - தன்மையொருமையெதிர்கால வினைமுற்று. 'கூறுகேன்' என்பதில், ககரவொற்று—எதிர்காலங்காட்டும். பி - ம்:—
[1]பூவுயர். [2]போக்கினேன். [3]இரும்பு. (௫௫அ)

௨௨. தாருடை மலரினு மொதுங்கத் தக்கிலா
வாருடை முலையொடு மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன் பழைய நண்பினேன்
றேரிடை வந்தனன் றீதிலே னென்கோ.

(இ-ள்.) பழைய நண்பினேன்-முன்னோர்காலந்தொட்டு நண்பையுடையவனும், தீது இலேன் - குற்றமற்றவனுமாகிய யான், தார் உடை மலரின் உம்-மாலையாகத் தொடுத்தற்குரிய மலர்களிலும், ஒதுங்க - நடத்தற்கு, தக்கிலா-தகுதியில்லாத [மிகவும் சுகுமாரத்தன்மையமைந்த], வார் உடை முலையொடு-கச்சையணிந்த தனங்களையுடைய சீதையுடனே, மதுகை மைந்தரை-வலிமையமைந்த குமாரர்களை, பாரிடை - கடுந்தரையில், செலுத்தினேன் - செல்லுமாறுவிட்டவனும், தேரிடை வந்தனன் - (சொஸ்தமாக நான் அரசகுமாரன்போல்) தேரின்மீதுஏறிக்கொண்டுவந்தேன், என்கோ-? (எ - று.)

பூப்பட்டாலுங் கொப்பளிக்குந் தன்மையுள்ள சுகுமாரமான பாதங்களைக் கொண்ட அரசகுமாரியையும் மிகச் சுகுமாரரான அரசகுமாரர்களையும் கொடுவெங் காட்டிடை நடக்குமாறு விட்டுத் தான் தேரின்மீது ஏறிக்கொண்டு மீண்டுபோதல் செய்யத்தகாததாகித் தீவினையுள்ள செயலுமாமாதலால், குற்ற மற்றவனும் பழைய நண்பனும் பணியாளனுமாகிய நான் தகாத இத்தொழிலைச் செய்துவிட்டு இதனை எவ்வாறு தெரிவிப்பேனென்று சுமந்திரன் வருந்திக் கூறியவாறு. மாதரினடி மலரினும்மெல்லியதாகக் கூறப்படுதலை, "அனிச்சமுமன்னத்தின் றூவியுமாதர், ரடிக்குநெருஞ்சிப்பழம்" என்றதனாலும் அறிக. வாருடைமுலை - அடையடுத்த சினையாகுபெயர். இனி, வாருடைமுலையென்பதற்கு - கச்சையுடையச்செய்கின்ற முலைப்பெண்ணின், அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடராம். (௫௫௯)

௨௩. வன்புலக் [1]கன்மன மதியில் [2]வஞ்சனே
னென்புலப் புறவுடைந்திரங்கு மன்னன்பா
லுன்புலக் குரியசொ [3]லுணர்த்தச் [4]செல்கெனோ
தென்புலக் [5]கோமகன் றூதிற் செல்கெனோ.

(இ-ள்.) வன் புலம் கல் மனம்-வலியபுலனையும் கல்லைப்போன்ற மனத்தையுமுடைய, மதி இல்-நற்புத்தியில்லாத, வஞ்சனேன் - கொடிய யான், என்பு உலப்பு உற உடைந்து இரஙகும் மன்னன்பால் - உடம்புஅழியும்படி மனம்முறிந்துவருந்துகின்ற அரசனிடத்து, தென் புலம் கோமகன் தூதில் செல்கெனோ - தெற்குத்திக்குப்பாலகனாகிய இயமனது தூதுவன்போலச் செல்லக்கடவேனோ? உன் புலக்கு உரிய சொல் உணர்த்த செல்கெனோ - உனது நல்லறிவிற்கேற்ற சொல்லைத் தெரிவிக்குமாறு செல்லக்கடவேனோ?

நகரத்து மாந்தர்பலரும் உடன்சென்றிருத்தலால் எப்படியும் அவர்கள் அவ்விராகவகுமரனைத் திருப்பியழைத்துவருவரென்கிற ஓரெண்ணத்தினால் உயிரைச் சிறிதேதாங்கிக்கொண்டுள்ள மன்னவனிடத்திலே சொல்லுமாறு நீ காட்டிற்குச் செல்லும்பொழுது கூறுஞ் சொல்லை உணர்த்தச்செல்வேனானால், என்னுடையசெல்கை யமதூதரதுவரவுபோலாகி அவ்வரசனது உயிர் மாய்வதற்குக் காரணமா மாதலால், அங்ஙனஞ்செல்லுதல் எனக்குத் தகுதியோ? என்று சுமந்திரன் வருந்திக் கூறுகின்றானென்க. மனம் நைந்து அழிந்திடாமல் மனத்திட்பத்தோடு இராமபிரானது பிரிவை உணர்த்தவேண்டியவனாக இருத்தல்பற்றி, சுமந்திரன், 'கன்மன மதியில் வஞ்சனேன்' என்று தன்னைப் பழித்துக்கூறுகின்றான். யமன் தெற்குத்திக்கிற்குப் பாலகனாதலின், 'தென்புலக்கோமகன்' எனப்பட்டான். முதலடியில், புலம்-பொறிக்கு, இலக்கணை. புலன் - இங்குக் கொடுஞ்செய்தியைக் கூறவேண்டிய வாய் என்னலாம். என்பு - உடம்புக்கு, ஆகுபெயர். தூது - பண்பாகுபெயர். இச்செய்யுளில் திரிபுஎன்னுஞ் சொல்லணி காண்க: முதலெழுத்துத் தவிர இரண்டுமுதலியசிலஎழுத்துக்கள்ஒன்றியிருக்கப் பொருள்வேறுபடுவது, இவ்வணியின் இலக்கணம். பி-ம்:—[1]கன்மத்தின், கன்மகன். [2]நெஞ்சினேன். [3]உணர்த்தி. [4]செல்லும்யான். [5]கிழவன்றன். (௩௬0)

௨௪. நாற்றிசை மாந்தரு நகர மாக்களுந்
தேற்றினர் [1]கொணர்வருன் சிறுவன் றன்னையென்
றாற்றின வரசனை யைய வெய்ய[2]வென்
[3]கூற்றுறழ் சொல்லினாற் கொலைசெய் வேன்கொலோ.

(இ - ள்.) 'ஐய - தலைவனே! நால் திசை மாந்தர்உம் - நான்குதிக்கிலுமுள்ள மனிதரும், நகரம் மாக்கள்உம்-நகரத்திலுள்ள சனங்களும், உன் சிறுவன் தன்னை-உனதுபுதல்வனாகிய ஸ்ரீராமபிரானை, தேற்றினர் கொணர்வர் - (நீ நகரத்திற்குமீண்டுவருதலாற் குற்றமில்லையென்று) சமாதானஞ்சொல்லி அழைத்துவருவர்,' என்று—, ஆற்றின அரசனை - (உயிர் நீங்காவண்ணம் முன்பு)சாந்தப்படுத்திய தசரதமன்னவனை,(இப்போது),வெய்ய கூற்று உறழ் என் சொல்லினால் - (இராமபிரான்நகரத்திற்குத் திரும்பாமற் காட்டிற்கே சென்றிட்டான் என்ற) கொடியயமனையொத்த எனதுகடுஞ்சொல்லால், கொலைசெய்வேன் கொல் ஓ - உயிர் நீங்குமாறு செய்யக்கடவேனோ? (எ-று.)

கீழ்ச்செய்யுளின் கருத்தையே கவி இச்செய்யுளினால் வேறுவகையாக விரித்துக் கூறியுள்ளார். தசரதமன்னவன் உயிர்நீங்காதிருக்க வேணுமென்று முன்னர்ச் சமாதானப்படுத்தின யானே இப்போது அதற்குமாறாக அவனுயிர் நீங்குமாறு கடுஞ்சொல்லைக் கூறுவது தகுதியோ என்று சுமந்திரன் கூறுகின்றனனென்க; இதனால், சுமந்திரன் தசரதனைச் சமாதானப்படுத்தினனென்பதும் பெறப்படும். இனி,அருகிலிருப்பவர் சமாதானப்படுத்துவரெனக்கருதிக் கூறினனுமாம். இராமபிரான் ஒருகால் மீண்டுவரக்கூடுமென்கிற எண்ணத்தினால் உயிரைப் போக்காது வைத்திருக்கும் மன்னர்பிரான் 'எவ்வளவு சொல்லி

யும் இராமபிரான் கேளாமல் நகரத்துமாந்தர்முதலியோரையும் வஞ்சித்துக் காட்டிற்குச்சென்ருன்' என்ற கடுஞ்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் இறந்து படுவது திண்ண மென்பான் 'கொலைசெய்வேன் கொலோ' என்கிருன். நாற் றிசை மாந்தர் என்றது - கோசலநாட்டிலுள்ள மாந்தரை யென்னலாம். பி-ம்:—[1]உணர்விஞ ரென்சிறுவன் மீள்வனென்று. [2]எம். [3]கூற்றன. (௫௬௧)

௨௫. அங்கிமேல் வேள்விசெய் [1]தரிதிற் பெற்றநின்
சிங்கவே றகன்றதென் [2]றுணர்த்தச் [3]செல்கேஞே
வெங்கள் [4]கோ மகற்கினி [5]யென்னிற் [6]கேகய
னங்கைபே கடைமுறை நல்லள் போலுமால்.

(இ - ள்.) 'அங்கிமேல் வேள்வி செய்து - அக்கினியிலே (செய்தற்குரிய அசுவமேதயாகம் புத்திரகாமேட்டி முதலிய) யாகங்களைச் செய்து, அரிதில் பெற்ற - அருமையாகப் பெற்ற, நின் சிங்கம் ஏறு - உனது ஆண்சிங்கம் போன்ற இராமபிரான், அகன்றது -(காட்டிற்குச்)சென்றிட்டான்,' என்று—, உணர்த்த - அறிவிக்குமாறு, செல்கென்ஓ - செல்லக்கடவேனே? அங்ஙன் சோமகற்கு அறிவிக்கச்சென்ருல்), இனி—, எங்கள் கோமகற்கு - எங்களது அரசனுகிய தசரதசக்கரவர்த்திக்கு, என்னில் - (இராமபிரான் காட்டிற்குச் சென்றிட்ட கடுஞ்செய்தியைத் தெரிவிக்கும்) என்னைக்காட்டிலும், கடை முறை - இறுதியாகப்பார்க்குமிடத்து, கேகயன் நங்கை - கேகயவரசனது புதல்வியாகிய கைகேயியே, நல்லள் போலும் - நல்லவள் போலும்; (எ - று.) —ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

இராமபிரான் காட்டிற்குச்செல்லவேணுமென்று வரம்வேண்டித் தயரத மன்னவனுக்குப் பெருந்துயரத்தைக் கைகேயி விளைத்தா ளாயினும், உன் பிரிவைக்கூறி அவ்வரசர்பிரானது உயிரையே போமாறு செய்யும் என்னோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து அக்கைகேயியே நல்லவள்போலத் தோன்றுவா ளென்று சுமந்திரன் இரங்கிக்கூறின னென்க. பி-ம்: —[1]அரிதுநீபெற்ற. [2]உரைக்க. [3]செல்வேனே. [4]கோமன்னவற்கு. [5]எண்ணில். [6]கைகயன். (௫௬௨)

௨௬.—சுமந்திரன் இராமபிரானது தாளைப்பற்றிக்கொண்டு
பெருந்துயரோடு பூமியிற்புரண்டு பலகூறுதல்.

முடிவுற [1]வின்னன [2]மொழிந்த பின்னரு
மடியுற[3]த் தழுவின னழுங்கு போரரா
விடியுறத் [4]துவளுவ தென்னு மின்னலன்
படியுறப் புரண்டனன் [5]பலவும் [6]பன்னினன்.

(இ - ள்.) முடிவு உற-(தன் கருத்து இராமபிரானை மீட்டு அழைத்துச் செல்வதே என்று) முடிவாகத் தெரியும்படி, இன்னன-இப்படிப்பட்ட சொற் களை, மொழிந்த பின்னர்உம் - சொல்லியபின்பும், (இராமபிரான் நகரத்துக் குத் திரும்புவதென்ற எண்ணமில்லாதவ னென்றுதோன்றியதனல்), இடி

உற - இடியோசை கேட்டதனால், அழுங்கு - (அச்சத்தினால்) மனம்வருந்துந் தன்மையுள்ள, பேர் அரா - பெருஞ்சர்ப்பமானது, துவளுவது - துடித்துச் சோர்கின்றது, என்னும் - என்றுசொல்லத்தக்க, இன்னலன் - துன்பத்தை யுடையவனாய், அடி உற தழுவினன் - (அவ்விராமபிரானது) பாதங்களைச் செவ்வனே பற்றிக்கொண்டு, படி உற புரண்டனன் - பூமியிலே (தனதுஉடம்பு) படுமாறு புரண்டவனாய், பல உம் பன்னினான் - (அவ்விராமபிரான்நகரத்திற் குமீளுமாறு) பலவார்த்தைகளையுஞ் சொன்னான்; (எ - று.)

இராமபிரான் தான் பதினான்குவருடங்கள் வனவாசஞ்செய்யாது நகரத்திற்குமீள்வதில்லை யென்ற விடாப்பிடியுடனே நிற்கின்றா னென்பதை யறிந்தவுடன், இடியோசையால் நடுங்கும் பெருஞ்சருப்பம்போல் மனம் நடுங்கிய சுமந்திரன் பின்னும் இப்பிரானது பாதங்களைத் தழுவிக்கொண்டு பூமியில் விழுந்து புரண்டு பலகூறினா னென்பதாம். பி-ம்:—[1]இன்னணம். [2]மொழிந்து. [3]வணங்கிநின்றழுங்கும்பை, வணங்கிநின்றழுங்கிப்பை. [4]துவள்வதேயன்ன. [5]பின்னும், இன்ன. [6]பன்னுவான். (ருகூ௩)

உஎ.—அச்சுமந்திரனைக் கைகளாலெடுத்துக் கண்ணீரைப் போக்கி இராமபிரான் சில கூறுதல்.

தடக்கையா லெடுத்தவற் றழுவிக் [1]கண்ணநீர்
துடைத்துவே றிருத்தி[2]மற் றினைய சொல்லினா
னடக்கு[3]மைம் பொறியொடு கரணத் தப்புறங்
கடக்கும்[4]வா லுணர்வினுக் [5]கணுகுங் காட்சியான்.

(இ - ள்.) அடக்கும் ஐம் பொறியொடு - (தத்தம் புலன்களிற்செல்லவொட்டாது) தடுக்கவேண்டிய ஐம்பொறியுணர்வோடு, கரணத்து - மனத்துக்கும், அ புறம் கடக்கும் - அப்புறப்பட்டு நிற்பவனாய், வால் உணர்வினுக்கு - (தத்துவஞானிகளின்) பரிசுத்தமாகிய உண்மையறிவுக்கு, அணுகும் - புலனாகின்ற, காட்சியான் - தோற்றத்தையுடையவனாகிய ஸ்ரீராமபிரான்,—அவன் - அந்தச்சுமந்திரனை, தட கையால் எடுத்து தழுவி - (தனது) பெரிய கைகளினா லெடுத்துக் கட்டியணைத்து, கண்ணநீர் துடைத்து - கண்களிலிருந்து (வெள்ளம்போற்) பெருகுகின்ற நீரைத் துடைத்து, வேறு இருத்தி - வேறாகஇருக்க வைத்து, இனைய - இவ்வாறான சொற்களை, சொல்லினான்—; (எ - று.)—சொல்லியதை அடுத்த பதினொரு செய்யுள்களிற் காண்க. மற்று - வினைமாற்று.

ஐம்பொறிகட்கும் மனத்துக்கும் எட்டாது நிற்பவனாய் யோகிகளின் மெய்யுணர்வுக்கே புலப்படுபவனாகிய கடவுள் தான் கொண்ட மானுட வேடத்திற்கு ஏற்ப யாவரோடுங்கலந்து நட்புரிமைபூண்டு ஒழுகுகின்ற தன்மையிற் கவி ஈடுபட்டமை, இந்தச் செய்யுளில் தோன்றும். "புலனைந்துக்குஞ் சொலப்படா னுணர்வின் மூர்த்தி" என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் பகுதி, இந்தச்செய்யுளின் பின்னிரண்டடிகளிற் கருதத்தக்கது. பலரோடு மிருக்கை

யில் ஒருவர் தாம் சொல்லுவதைக் கேளாவிடின் அவரைத் தனியே யழைத்துக் கொண்டுபோய் இரகசியமாகவுரைத்து அவர் மனத்தைத் திருப்புகின்ற உலகவியற்கைக்கு ஏற்ப, இராமபிரானும் சீதாலட்சுமணர்களின் முன்னிலையினின்றும் அந்தச் சுமந்திரனைச் சிறிது அப்பால் இட்டுக்கொண்டுபோய்'தான் நகரத்திற்கு மீள்வது தகுதியன்று' என்பதையே அவன்கருத்திற் படுமாறு காரணங்காட்டி இரகசியமாக ஓதி ஒருவாறு அவனை யிசைவிக்கலாயினனென்க. வனவாசஞ்செய்வது இலட்சுமணனுக்குச சம்மதமன்று ஆதலால், அவனும் இச்சுமந்திரனோடு இப்போது சேர்ந்துகொள்வனோ என்ற கருத்தால் தனியே இட்டுக்கொண்டுபோய்க் கூறினு னெனினுமாம். பி-ம்:—[1]கணணினீர். [2]வைத்து. [3]மாண். [4]மன்னுணர்வினுக்கு. [5]உணரும். (ருகச)

உஅ.—இதுமுதல்ஐந்துகவிகள் - தான் நகர்க்கு மீண்டுவருவதுதகுதியன்று என்பதற்குஉரிய காரணங்களைச் சுமந்திரனுக்கு இராமன் காட்டுதலைத் தெரிவிக்கும்.

பிறத்த[1]லென் றுற்றபின் [2]பெறுவ யாவையுந்
திறத்துளி யுணர்வதோர் செம்மை யுள்ளத்தாய்
புறத்துறு பெரும்பழி [3]பொதுவின் [4]றெய்தலு
[5]மறத்திற மறத்தியோ வவல முண்டெனு.

இதுமுதற் பதினொருகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பிறத்தல் என்று உற்ற பின்-பிறவியென்பது உண்டானபிறகு, பெறுவ - (அந்தப்பிறவியிலே) நேரக்கூடியனவாகிய, யாவை உம் - (இன்பம் துன்பம் என்ற)எல்லாவற்றையும், திறத்து-முறைமையால், உளி-ஆராய்ந்து, உணர்வது - உணரவல்லதாகிய, ஓர் செம்மை உள்ளத்தாய்-ஒப்பற்ற நேர்மையான மனமுடையவனே! அவலம் உண்டு எனு - துன்பம் உண்டாகின்றதேயென்று கருதி, புறத்து உறு பெரும் பழி பொது இன்று எய்தல் உம் - வெளியே (யாவராலும் தூற்றிக்கூறுமாறு) பொருந்துவதாகிய பெரியபழியானது சாமானியமாகவன்றி [விசேடமாக] நேர்தலையும், அறம் திறம் (உம்)-தருமத்தின் கூறுபாட்டையும், மறத்தி ஓ - மறக்கக்கடவையோ? (எ - று.)

இப்புவியிலே பிறப்பென்பது உண்டானபோது அவசியம் அனுபவிக்கவேண்டிய நன்மையைப்போலவே தீவினைப்பயனையும் நுகர்ந்தே தீரவேண்டுமென்கின்ற முறைமையை ஆராய்ந்தறிந்த விவேகத்தையுடைய நீ, நான் கானகத்திற்குச் செல்லுவது உன்மனத்திற்குத் துயரத்தைத் தருவதாகுமென்கிற ஒருகாரணத்தை மாத்திரங்கொண்டு மீளவேணுமென்று கருதுகின்றாயே; அங்ஙனம் நான் செய்வேனாயின், 'தருமத்தைத் தவறாதுநடத்துபவன்போல வேடம்பூண்ட இராமன் தேவதையைப் போற் கொண்டு நடக்கவேண்டிய பிதாவின் சொல்லைத் தட்டினான்'என்ற பெரும்பழி எனக்கு நேராதோ? அன்றியும், அது அறத்திற்கு விரோதமான செயலென்பதையும் மறந்துவிட்டா

யோ ? என்றனன் இராமபிரா னென்க. முதலிரண்டடிகள் - துன்பம் நேர் வதைக்குறித்து மனம் மாறுபடத்தகாதவன் நீ என்ற கருத்தை உட்கொண் டிருத்தலால், கருத்துடையடைகோளியணியாம். உளி - உள்ளியென்பதன் தொகுத்தல்: இனி,"இயல்புளிக்கோலோச்சும் மன்னவன்" என்ற விடத்திற் போல, 'உளி' என்பது - மூன்றனுருபின் பொருளில் வந்தது எனக் கொள்ளலுமொன்று. இன்று - இன்றி யென்னும் வினையெச்சம் தொடர்பினுள் உகரமாய் வந்தது: "இன்றியென்னும் வினையெஞ் சிறுதி, நின்ற விகர முகர மாத, லொன்றியன் மருங்கிற்செய்யுளு ளுரித்தே" என்பது தொல்காப்பியம். [5]அறத்தினை என்ற பாடத்திற்கு - இராமனைக்கானகத்தில் விட்டுவந்தானெ ன்னும் பழிமொழி என்னைப்பற்றி யுண்டாகப் போகின்றதென்று அறத்தினை மறக்கலாமோ ? எனப் பொருள் காண்க. பி-ம்:—[1]ஒன்று. [2]பெறுவதியாவை யும். [3]பொதுவென்று, பொதுவின். [4]எய்தவும். (௫௬௫)

உகூ. முன்புநின் றிசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின் றுறுதியைப் பயக்கும் பேரற
மின்பம்வந் துறுமெனி [1]னினிய தாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற் [2]றுறக்க லாகுமோ.

(இ - ) பேர் அறம் - சிறந்ததருமம்,—முன்பு - முதலில், இசை நிறீஇ நின்று - (தன்னை மேற்கொண்டுநடப்பவனுக்கு இம்மையிற்) புகழை நிலை பெறுத்திநின்று,—முடிவு முற்றிய பின்புஉம - இறுதிக்காலத்தால் (உயிர்) உடம்பைவிட்டு நீங்கியபின்பும், நின்று - (தான்) அழியாதுநின்று, உறு தியை பயக்கும் - (தன்னையனுட்டித்தவர்க்கு) நல்லுலகத்தைத் தரும் ; (இப் படிப்பட்டபேரறத்தை மேற்கொண்டு நடக்கும்போது), இன்பம் வந்து உறும் எனின் - (அதனால் ஒருவனுக்கு) இன்பம் வந்து கூடுமாயின், இனியது - நன்மையாகத்தோற்றுகின்றது; அ இடை--அப்படிப்பட்ட பேரறத்தை மேற் கொண்டு நடக்குமிடத்தில்தானே, துன்பம் வந்து உறும் எனின் - மனவருத் தமானது வந்து மிகுதியாகத்தோன்றுமாயின், துறக்கல் ஆகும்ஓ-'துன்பம் வருகின்றது என்ற காரணத்தால் தான் மேற்கொண்ட அப்பேரறத்தைக்) கைவிடுதல் தகுமோ? (எ - று)

கீழ்ச்செய்யுளில் 'அறம் மறத்தியோ?' என்று சுமந்திரனுக்கு இடித்துக் கூறிய இராமபிரான், இதனால், அந்த அறத்தின் தன்மையைவெளியிடுகின் றனனென்க. ஒருவன் அறத்தை அனுட்டித்தானாயின், அவனுக்கு அந்த அறமானது இவ்வுலகத்திற் புகழையுண்டாக்கி மறுமையிலும் நற்கதியைத் தரும். அப்படிப்பட்ட தருமத்தை மேற்கொண்டொழுகும்போது இன்பந் தோன்றுமாயின் எங்ஙனம் மனமகிழ்ந்து அதனை அனுட்டிக்கவிரும்புகின் றோமோ, அங்ஙனமே அதனை மேற்கொண்டொழுகும்போது துன்பம் நேரி னும் அனுட்டித்துத் தீரவேண்டுமே யன்றிக் கைவிடுதல்தகுதி யன்றென்று கூறியவாறு. "நன்றாங்கானல்லவாக்காண்பவ ரன்றாங்கா, லல்லற் படுவ

தெவன்" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது. இச்செய்யுளில் முன்னிரண்டடிகளால் அறத்தினல் விளையும் பயனை விளக்கி, பின்னிரண்டடிகளால் அதனை எஞ்ஞான்றும் மேற்கொண்டேநடக்கவேண்டு மென்று வற்புறுத்திக் கூறியவாறு. கிறீஇ - சொல்லிசையளபெடை. உறுதி - அடைதற்குரிய நல்லுலகு. ஆயிடை - சுட்டுநீண்டு யகரவுடம்படுமெய் பெற்றது. பி-ம்:—[1]இயற்றியெல்லையில். [2]துறக்கற்பாலதோ. (௫௬௬)

௬௦. நிறப்பெரும் படைக்கல [1]நிறத்தி [2]னேருற
மறப்பயன் [3]விளைக்குறும் வன்மை யன்றரோ
[4]விறப்பினுந் திருவெலா மிழப்ப வெய்தினுந்
துறப்பில ரற[5]மெனல் சூர[6]ராவதே.

(இ - ள்.) சூரர் ஆவது - சூரர் என்று சொல்லுதற்குஉரிய வன்மையென்பது, - (பகைவனல் எறிப்பட்டதான), நிறம் பெரும் படைக்கலம் - ஒளிபொருந்திய சிறந்த ஆயுதம், நிறத்தின் நேர் உற - மார்பிற்குநேராக வரவும், (சிறிதும்பின்வாஙகாமல்), மறம் பயன் விளைக்குறும் - வீரச்செயலை மேன்மேலும் நடத்துகின்ற, வன்மை - வல்லமை, அன்று—; (பின்னைஎது எனில்), இறப்பின்இம் - சாவுநேர்வதாயினும், திரு எலாம் இழப்ப எய்தின் உம்-செல்வத்தையெல்லாம் இழந்துவிடுமாறு நேர்ந்தாலும், அறம் துறப்பிலர் எனல்-தருமத்தைக்கைவிடாதவர்என்று சொல்லப்படுமாறிருத்தலே; (எ-று.)

கீழ் அறத்தின்சிறப்பை யெடுத்துக்காட்டி அதனைக் கைவிடலாகாது என்று வற்புறுத்திய இராமபிரான், இதனல், அறத்தைக்கைவிடாதிருத்தலே வீரர்க்குரிய மறக்குண மெனக் கூறுகின்ருன் னென்க. பகைவனெறிந்த படைக்கலம் தன்மார்பில் நேரேவந்து பொத்தினலும் அதற்குப் பின்வாங்காது பொருவதாகிய வீரகுணததை வீரகுணம்அன்று என்று மறுத்து, எவ்வகைப்பட்ட இடார்நேர்ந்தாலும் அறத்தைக் கைவிடாத மனத்திண்மையே வீரகுணமென்று கூறியவாறு: அவநுதியணி. பெருஞ்செல்வரான மானிகள் போகூழால் தம் செல்வமெல்லாங் கெட்டவிடத்து உயிரையும் விடக் கருதுதலும் உளதாதலின் உயிரிழப்பதோடு செல்வமிழத்தலையுங் கூறினர். பி - ம்:—[1]நிறுத்தி. [2]எய்தவும். [3]விளைக்குமத்தன்மையென்பரே, துறப்பன வளவையன்றரோ. [4]இறப்பெருந். [5]எனும். [6]ஆதலே. (௫௬௭)

௬௧ கான்புறஞ் [1]சேறலி லருமை [2]காண்டலால்
வான்பிறங் கியபுகழ் மன்னர் தொல்குலம்
யான்பிறந் தறத்தினின் [3]றிழுக்கிற் [4]றென்னவோ
வூன்[5]றிறந் துயிர்குடித் [6]துழலும் வேலினய்.

(இ-ள்.) ஊன் திறந்து உயிர் குடித்து உழலும் வேலினய் - உடலைப் பிளந்து (அவ்வுடலிற்குள் புகுந்துகொண்டிருக்கும்) உயிரைப்போகுமாறு செய்துகொண்டு (போர்க்களத்திலே) திரியவல்ல வேலாயுதத்தையுடைய

வீரனே! கான் புறம் சேறலில் - காட்டிற் செல்வதில், அருமை காண்டலால் - வருத்தத்தை யாலோசித்து (நான் அங்ஙனம் காட்டிற் செல்வதைவிட்டு நகர்க்கு)த் திரும்புவேனாயின், வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல் குலம் - மேலுலகத்திலும் விளங்கிய புகழையுடையதாகி வைவஸ்வதமனுசக்கரவர்த்தி தொடங்கிவந்த பழைய இந்தச்சூரியகுலம், யான் பிறந்து அறத்தினின்று இழுக்கிற்று என்னஓ - யான் பிறந்ததனால் தருமத்தினின்று தவறியதென்று சொல்லுமாறு விடவோ?[அங்ஙனம் பழிச்சொல் தோன்றுமாறுவிடுவது தகுதியன்று]; (எ - று.)

இந்தச்சூரியகுலம் இதுவரையிலும் அறநெறிபிழையாமல் நடந்துவந்ததாதலால், இதிற் பிறந்த நான் தந்தையின் வசனத்தின்படி காட்டிற்செல்லாமல் நகரத்திலேயே யிருப்பேனாயின், அதனால் நான் தந்தைசொல்லைத் தவறுது செய்கை யென்கின்ற அறத்தைத் தவறியவனாவதோடு என்தந்தையையும் உண்மைதவறியவனென்ற பேருக்குஉள்ளாக்கவும் வேண்டிவருமாதலால், இங்ஙனம் யானொருவன் பிறந்ததனால் இருவருக்குமுள்ள நீங்காப்பழியை உலகத்தவர் தூற்றுமாறு செய்வது தகுதியோ? சுத்தவீரனாகிய நீ மனத்திடங்கொண்டு என்னை அறத்தையநுஷ்டிக்குமாறு தூண்டவேண்டுவதாயிருக்க, அதற்கு மாறாக நடக்கச் சொல்லுவது உனக்குத்தான் தகுதியோ? என்று இராமபிரான் இதனாற் சுமந்திரனது கொள்கையைக் கண்டித்துக்கூறுகின்றனனென்க. கீழ்ச் செய்யுளில் 'வீரகுணமென்பது எவ்வளவு வருத்தம் நேருவதாயினும் அறத்தைத் துறவாமையே' என்றுகட்டுரைத்த இராமபிரான், இங்கு 'ஊன்துறந்துயிர் குடித்துழலும் வேலினாய்' என்று சுமந்திரனைவிளித்தது - வீரனாகிய நீ வனவாசம் பெருந்துன்பம் விளைத்தலால் அதனை யான் நீக்கவேணுமென்று கருதுவது, உன் வீரகுணத்துக்குச் சேராது என்னுங் கருத்தைக் குறிப்பித்தலால், **கருத்துடையடைகொளியணியாம்.** "வான்றோய்குடி" என்றாற்போல, 'வான் பிறங்கியபுகழ்...குலம்' என்றார். புகழை மன்னர்க்கு அடைமொழியாக்கினுமாம். உயிர்குடித்துழலும் வேல் - குடித்தற்குஉரியதல்லாததைக் குடித்தற்கு உரியதாகக்கூறியமரபுவழுவமைதி: இதனை "உண்டற்குரியவல்லாப்பொருளை, யுண்டனபோலக்கூறலுமரபே" என்ற தொல்காப்பியத்துப் பொருளியற் சூத்திரத்தில் உம்மினால் அமைக்க. பிறந்து = பிறக்க: எச்சத்திரிபு. பி - ம்:— [1]சேறலின். [2]காண்டியால். [3]இழுக்குற்று. [4]என்பவோ. [5]துறந்து, பிறந்து. [6]ஒளிறும், ஊறும். (ருகூஅ)

௩௨. வினைக்கரு [1]மெய்ம்மையன் [2]வனத்துள் விட்டனன்
[3]மனைக்கரும் புதல்வனை யென்றன் மன்னவன்
றனைக்கருந் தவ[4]மறு தலைக்கொண் [5]டேகுத
லெனக்கருந் தவமிதற் கிரங்க லெந்தைநீ.

(இ-ள்.) வினைக்கு அரு மெய்ம்மையன் - (ஒழுக்கத்தால்) நடத்திக்காட்டுவதற்கு அருமையாகிய சத்தியத்தையுடைய தசரதமன்னவன், மனைக்கு - வீட்டினின்று, அரு புதல்வனை - (நோற்று) அருமையாகப் பெற்ற (தன்)

புத்திரனை, வனத்துள் விட்டனன் - காட்டிற் செல்லவிட்டான்,' என்றல் - என்று (உலகத்தவர்) புகழ்ந்து கூறுமாறு நிகழ்த்துவது,—மன்னவன் தனக்கு அரு தவம் - அந்தத் தசரதசக்கரவர்த்திக்கு அருமையான தவமாகும்; அது தலைக்கொண்டு ஏகுதல் - அந்தத் தசரதமன்னவனது சொல்லைத் தலையாலேற்று(க் காட்டிற்கு)ச் செல்லுதல், எனக்கு அரு தவம் - எனக்கு(ச் செய்தற்கு) அரிய தவமாகும்; (ஆதலால்), எந்தை - எனது தந்தைபோன்றவனே! நீ—, இதற்கு - (யான் காட்டிற்குச்செல்லுகின்ற) இச்செயற்கு, இரங்கல் - மனம் வருந்தாதே; (எ - று.)

அறந்தவறுதல் தகுதியன்று என்பதை வற்புறுத்திக்காட்டிய இராமபிரான், இதனால், 'யான் வனஞ்செல்வது எனக்கும் என்தந்தைக்கும் நன்மை பயக்குமாதலால், இவ்வாறு இருவர்க்கும் நன்மைதருஞ்செயலை யான் மேற்கொள்ளும்போது எம்மிடத்து அன்பையுடைய நீ அதற்கு மாறாக இரங்குதல் தகாது' என்று சுமந்திரனைத் தேற்றுகின்றனனென்க. "புறந்தூய்மை நீரானமையுமகந்தூய்மை, வாய்மையாற்காணப்படும்" என்றவாறு தவத்திற்குஇன்றியமையாததான(மனததூய்மையை வாய்மையே விளைக்குமாதலாலும், "ஸத்ய ஸௌசாத் பரந்தபः...நபூதோநபவிஷ்யதி [ஸத்யம் ஸௌசம் என்ற இவற்றைக்காட்டிலும் சிறந்த தவம் முன்னும்இல்லை, பின்னும்இல்லை]" என்பவாதலாலும், மன்னவனுக்கு வாய்மை தவறாமலிருப்பது தவமாமாறு காண்க. தெய்வத்தின் அருளை நாடுதலே தவம்புரிதலின் நோக்கமாதலாலும், பிதாவையே தெய்வமாக வேதமே விதித்தலாலும், தந்தைசொல்லைத் தலைமேற்கொண்டு நடப்பது மகனுக்குத் தவமாமென்க. நல்லது செய்யும்போது இரங்குவது தகுதியன்றென்க. சத்தியமென்பதை மேற்கொண்டுநடத்துமிடத்து மிகவும்வருத்தப்பட்டு நடத்தவேண்டுவதாயிருத்தலின் 'வினைக்கரு மெய்ம்மை' என்றான். மெய்ம்மையன் - சத்தியசந்தன். பி-ம்:—[1]மெய்ம்மையின், மென்மையன். [2]வனத்து. [3]மனக்கு. [4]இது. [5]ஏகலே.

(௫௩௩)

௩௩.—இதுமுதல் ஆறுகவிகள் - இராமன் தன் தந்தைமுதலியோரிடஞ் சொல்லுமாறு சுமந்திரனிடத்துக் கூறுவதைத் தெரிவிக்கும்.

[1]முந்தினை முனிவனை [2]யிறைஞ்சி முற்றுமென்
வந்தனை [3]முதலிய மாற்றங் [4]கூறினை
[5]யெந்தையை யவனொடு மெய்தி [6]யீண்டெனச்
[7]சிந்தனை யுணர்த்துதி யென்று [8]செப்புவாய்.

(இ - ள்.) முனிவனை - வசிட்டனை, முந்தினை இறைஞ்சி - முற்பட்டுச்சென்று வணங்கி, என் வந்தனை முதலிய மாற்றம் முற்றும் கூறினை - என்னுடைய வணக்கம்முதலிய சொற்களை(ஒன்றுவிடாமல்)முழுதுஞ்சொல்லி, அவனொடும் - அந்தவசிட்டமுனிவனுடனே, எந்தையை ஈண்டென எய்தி - என் தந்தையை விரைவாக அடைந்து, 'சிந்தனை உணர்த்துதி - என்கருத்தை (அவ்வரசனிடம்) தெரிவிப்பாய்,' என்று—, செப்புவாய் - சொல்லுவாய்; (எ - று.)

இராமன் மீண்டுவாராது காட்டுக்குச் சென்றானென்ற செய்தியை மன்னவனுயிர்போமாறு சொல்லவல்லேனல்லேனென்று பலபடியாகச் சுமந்திரன் கீழ்க்கூறியதனால், முனிவன்மூலமாகத் தன் சிந்தனையை மன்னவனிடத்து உணர்த்துமாறு அவ்விராமபிரான் இதனாற் கூறுகின்றனனென்க. முந்தினை, கூறினை - முற்றெச்சங்கள். [2]நுதலியமாற்றம் என்றபாடத்திற்கு - என்வந்தனையையும் (நான்) சொல்லிய சொல் எல்லாவற்றையுஞ் சொல்லி என்க. இது சிறக்கும். வந்தனை - வந்தநாஎன்ற வடசொல்லின் விகாரம். தசரதமன்னவன் என்பிரிவினால் மிகவும் வருந்துவனாதலின், அது ஒருவாறு தீருமாறு அவ்வரசனிடத்து விரைந்துசென்று சிந்தனை தெரிவிக்க வேண்டுமென்பான், 'ஈண்டெனச் சிந்தனையுணர்த்துதியென்று செப்புவாய்' என்றான். ஈண்டென - விரைவுகுறிக்கும் இடைச்சொல். [6]ஈண்டென சிந்தனை என்ற இயல்பான பாடத்திற்கு, ஈண்டு - இவ்வனவாசவிஷயத்தில், என - என்னுடைய, சிந்தனை - கருத்தையென்க. பி - ம்:—[1]முந்திநம். [3]தொழுது, குறுகி. [4]கூறிப்பின். [5]எந்தையால். [6]ஈண்டவென், ஆண்டென்றன். [7]சிந்தையை. [8]செப்பினான். (௫௭௦)

௫௪. முனிவனை யெம்பியை முறையி னின்றரும்
புனிதவே தியர்க்குமே லுறைபுத் தேளிர்க்கு
மினியன [1]விழைத்தியென் றியம்பி யெற்பிரி
தனிமையுந் தீர்த்தியென் [2]றுரைத்தி தன்மையால்.

(இ - ள்) முனிவனை - வசிட்டமுனிவனைக்கொண்டு, 'முறையில் நின்று - நெறியில்நின்று, அரு புனித வேதியர்க்குஉம் - அருமையாகப்பாராட்டுவதற்குரிய பரிசுத்தரான வேதம்வல்ல பிராமணர்க்கும், மேல் உறை புத்தேளிர்க்குஉம் - மேலுலகத்தில்வாழ்கின்ற தேவர்கட்கும், இனியன இழைத்தி - நன்மையான செயல்களையே செய்வாய்,' என்று—, 'எம்பியை இயம்பி-எனது தம்பியாகிய பரதனுக்குக் (கட்டுரை) கூறி, என் பிரி தனிமைஉம்-என்னைப்பிரிந்து தனித்திருத்தலாலாகிய வருத்தத்தையும், தன்மையால்-(உன்னுடைய) நன்னடத்தையால், தீர்த்தி - தீர்ப்பாய்,' என்று உரைத்தி - என்றும் (என்வார்த்தையாகச்) சொல்வாய்; (எ - று.)

மன்னவனுக்குத் தன்செய்தியைப் பக்குவமாக உணர்த்துமாறுகூறிய இராமபிரான், இதனால், வேதியர்க்கு இனியன இழைத்தல் முதலியன செய்யுமாறும், மன்னவனது தனிமைத் துயரத்தைப் போக்கும்படியும் பரதனிடமும் அம்முனிவனைக்கொண்டு சொல்லுமாறு சுமந்திரனிடஞ் சொல்லுகின்றனனென்க. பணியாளனைக்கொண்டு அரசகுமாரர்க்கு நன்மதி கூறுவித்தல் முறைமையன்றாதலாலும், வசிட்டன் குலகுருவாய் அவ்வப்போது ஏற்ற நன்மைகளைக் கூறி நல்வழிப்படுத்துதற்கு உரியவனாதலாலும், அவ்வசிட்டமுனிவனைக்கொண்டே பரதனுக்கும் செய்திசொல்லுமாறு இராமபிரான் கூறுகின்றனனென்க. வேதியர்க்கு இனியன - அவ்வப்போது வேதியர் வேண்டுகின்ற உதவிகள். புத்தேளிர்க்கு இனியன - தேவர்கட்கு

அரசர் செய்தற்குரிய நித்தியநைமித்திகவிழாமுதலியன. தனிமையைத்தீர்த்தல் - உரியசமயத்தில் என்னைப்போல இருந்து வேண்டியஉதவிகளைப்புரிதல் முதலியன. பி-ம்:—[1]இயற்றி, விளைத்தி. [2]உணர்த்திதன்மையாய். (௫௭௧)

௯௫. வெவ்விய தன்னையால் விளைந்த தீண்டொரு
கவ்வையென் றிறையுந்தன் கருத்தி [1]னோக்கல
னெவ்வரு ளென்வயின் [2]வைத்த தின்சொலா
லவ்வரு [3]ளவன்வயி [4]னருளு கென்றியால்.

(இ-ள்.) 'ஈண்டு - இப்போது, வெவ்விய தன்னையால்-கொடிய தந்தையினால், ஒரு கவ்வை - ஒருபழிப்பான காரியம், விளைந்தது - நேர்ந்திட்டது, என்று - என்பதை, இறைஉம் - சிறிதும், தன் கருத்தின் நோக்கலன் - தன் மனத்திற்கருதாதவனாகி,-என்வயின்வைத்தது எ அருள்-என்னிடம்வைத்தது எவ்வகையான அருளோ, அ அருள் - அவ்வகையான அருளை, இன்சொலால்-இன்சொல்லுடனே, அவன்வயின்-அவ்வரசனிடத்தும், அருளுக-செய்வாயாக,' என்றி - என்று (வசிட்டன் சொல்லாற்) சொல்வாயாக; (எ - று.)

எனது தந்தையினால் இராமனுக்கு வனவாசம்நேர்ந்ததென்று தன்மனத்து வெறுப்புக்கொள்ளாமல், என்னிடத்துக்கொண்டுள்ள அருளை அத்தசரதனிடத்தும் கொள்ளவேண்டுமென்று வசிட்டமுனிவனைக்கொண்டு பரதமன்னவற்குச் சொல்விக்கவேண்டுமென்று இராமபிரான் கூறுகின்றனனென்க. இனி, இச்செய்யுளுக்கு-வசிட்டமுனிவனைக்கொண்டு 'அரசனொருவன் புதல்வனைக் காட்டிற்குத் துரத்திவிட்டானென்று உலகத்திற் பழிச்சொல் நேர்ந்ததே'என்ற காரணத்தினால் கைகேயியின்மகனான பரதனிடத்து வெறுப்புக்கொள்ளாமல் இராமபிரானிடத்துப்போலவே அப்பரதனிடத்தும் கருணைகொண்டிருக்கவேண்டுமென்று அரசனிடம் சொல்லுமாறு இராமபிரான் செய்தி சொல்லியனுப்பியதாகக் கருத்து உரைப்பினுமாம். வெவ்வியது அன்னையால் என்று பிரித்து உரைப்பாருமுளர். பி-ம்:—[1]நோக்கலாது,ஓர்கலாது. [2]வைத்தவின்சொலால்,வைத்ததென் சொலால். [3]அவ்வயின். [4]அருளி.(௫௭௨)

௯௬. வேண்டின னிவ்வர மென்று மேலவ
னீண்டரு [1]ளெம்பிரா னிறுவி யே[2]கினை
பூண்டமா தவனொடுங் கோயில் [3]புக்கென
தாண்டகை வேந்தனை யவல மாற்றிப்பின்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) ஏகினை-(நீ இங்கிருந்துமீண்டு) சென்று, பூண்ட மாதவனொடு உம் - பெருந்தவஞ்செய்தலை மேற்கொண்டவனாகிய வசிட்டமுனிவனோடும், கோயில் புக்கு - அரண்மனையிற் போய், எனது ஆண்டகை வேந்தனை - என்னுடைய(தந்தையான) ஆண்மைக்குணமுள்ள தசரதசக்ரவர்த்தியை, அவலம் ஆற்றி - (என்னைப்பிரிதலால் அவன்கொண்ட) மனத்துயரத்தை (இன்சொற்களால்) தணிவித்து, பின் - பிறகு, இ வரம் வேண்டினன் என்று

மேலவன் ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி - (என்னிடத்து வைத்துள்ள அருளை என் தம்பியினிடத்து வைக்கவேண்டும் என்ற) இந்தவரத்தைத் தர வேணுமென்று வேண்டிக்கொண்டேனென்று சொல்லி யாவர்க்குந்தலைவனாகிய அத்தசரதசக்ரவர்த்தியின் நெருங்கிய அருளை என்தம்பியாகிய பரதனிடத்து நிற்குமாறு செய்து,—(எ - று.)—'தெருட்டுவாய்' என்று அடுத்த கவியோடு தொடரும்.

சுமந்திரனைத்தேற்றியபிறகு காட்டினின்று திரும்பி நாட்டையடைந்து செய்யவேண்டியதைக் கீழ் மூன்றுகவிகளாற் கூறிய இராமபிரான், இதனால், தொகுத்து அநுவாதமாகக் கூறி, அரசனிடத்து மேலுஞ்செய்யவேண்டியதைத் தெரிவிக்கின்றான். இங்ஙனம் விஷயம் விளங்குவதற்காக விரித்துக்கூறியதைத் தொகுத்து அநுவாதமாகக்கூறுவது, இயற்கையேயாம். அரசனென்பவன் திருமாலின்அமிசமாய் உலகத்தார்க்கெல்லாந் தலைவனாவனாதலின், அவனை 'மேலவன்' என்றார்: "வையத்திறையென்றுவைக்கப் படும்" என்றார் திருவள்ளுவரும். ஆண்டகை - பண்புத்தொகை. ஆணடகை வேந்தன் - வேற்றுமைத்தொகை: இருபெயரொட்டாகக்கொண்டுரைப்பினுமாம். அவலம் மாற்றிஎனப் பிரிக்கவும் இடமுண்டு. பி-ம்:—ரம்பிரான். [2]பினைப். [3]புக்குநீ, புக்கினிது. (௫௭௩)

௫௭. ஏழிரண் டாண்டுநீத் [1]தீண்ட வந்துனைத்
தாழ்குவன் [2]றிருவடி தளர லீண்[3]டெனச்
சூழிவெங் கடகளிற் றரசற் சொல்லிப்பின்
வாழிமா தவன்சொலான் மனந்தெ ருட்டுவாய்.

(இ - ள்.) பின்-பிறகு, 'ஏழ் இரண்டு ஆண்டு-பதினான்கு வருஷகாலத்தையும், நீத்து - (வெகுவிரைவிற்) கழித்து, ஈண்டு - இங்கே, ஈண்ட வந்து-திரும்பவந்து, உனை திருவடி தாழ்குவன்-(இராமபிரான்) உன் திருவடிகளை வணங்குவான்; தளரல்-மனம் வருந்தவேண்டா,' என - என்று, சூழி வெம் கடம் களிறு அரசன்-முகபடாத்தையுடைய கொடிய மதத்தையுடைய யானைச்சேனையைக்கொண்ட அரசனை, மாதவன் சொலால் சொல்லி - வசிட்டனுடைய சொல்லாற் சொல்லி, மனம் தெருட்டுவாய் - மனத்தைத் துயரத்தினின்று ஆற்றுவாய்; (எ - று.)

'இந்தப்பதினான்குவருடகாலமும் ஒருநிமிஷம்போற் கழிந்துவிட,மீண்டு வந்து உன் திருவடிகளில் இராமன் தண்டஞ்சமர்ப்பிப்பான்: ஆதலால், அவன்பிரிந்துசென்றானென்று வருந்தவேண்டா' என்று முனிவனைக்கொண்டு அரசனைத் தேற்றுமாறுங் கூறுகின்றனன் இராமபிரானென்க. சிலநாள் தான் என்று தோன்றுமாறு 'ஏழிரண்டாண்டு' என்கின்றான். ஈண்ட-விரைவாக எனினுமாம். 'ஏழிரண்டாண்டுநீத்து உனை ஈண்டவந்து திருவடி தாழ்குவன்: தளரல் ஈண்டு' என அரசற்குச் சொல்லிப் பின் மாதவன் சொல்லாலும் மனந்தெருட்டுவா யென உரை கூறுவாருமுளர். வாழி-அசை. பி-ம்:—[1]ஈண்டு. [2]திருவடித்தலத்தில். [3]எனு. (௫௭௪)

௫௭௫. முறைமையா லெற்பயந் தெடுத்த மூவர்க்கும்
[1]குறைவிலா வென்னெடு வணக்கங் கூறிப்பி
னிறைமகன் றுயர்துடைத் திருத்தி[2]மா டென்றான்
மறைகளை [3]மறைந்துபோய் வனத்துள் வைகுவான்.

(இ - ள்.) என் பயந்து எடுத்த மூவர்க்கும் - என்னைப் பெற்றெடுத்தவர்களான கோசலை சுமித்திரை கைகேயி என்ற மூன்று தாய்மார்களிடத்தும், முறைமையால் குறைவு இலா என் நெடு வணக்கம் கூறி-முறைமையிற் பிறழாத என்னுடைய நீண்டவணக்கத்தைத் தெரிவித்து, பின்—, இறைமகன் துயர் துடைத்து - அரசன் (வருத்தப்படும்போது தக்கமொழியினாலும் உபசாரத்தினாலும் அவனுடைய) வருத்தத்தைப் போக்கி, மாடு-அவன்பக்கத்திலேயே, இருத்தி-இருப்பாய், என்றான்—; (யாவனெனில்),—மறைகளை மறைந்து போய் வனத்துள் வைகுவான் - வேதங்கட்குஎட்டாமல் மறைந்திருந்து [அப்பாற்பட்டிருந்து] (தான் எடுத்த மானிடவடிவிற்கு ஏற்பச்) சென்று காட்டுள் தங்கியிருப்பவனாகிய இராமன்; (எ - று.)

தசரதனிடஞ் சொல்லவேண்டியதைக் கீழ்தெரிவித்த இராமபிரான், இதனால், தனது அன்னைமாரிடத்துச் சொல்லவேண்டியதையும், பிறகு தான் வருமளவும் அந்தச்சுமந்திரன் செய்யவேண்டியதையும் தெரிவிக்கின்றனனென்க. மறைகளைக்கடந்தவன் பித்ருவசனபரிபாலனமென்ற ஒருதருமத்திற்குக் கட்டுப்பட்டுக் கானகஞ்செல்பவனாவதே! என்றும், மறைகளுக்கு எட்டாதிருந்தவன் மானுடனாகத்திருவவதரித்த இப்போதும் யாவருங்கண்டு களிக்கும்படி நாட்டிலேயிராமல் நாட்டார்கணுக்குப் புலப்படாமல் ஞானவான்களாகிய மஹர்ஷிகள் கண்களுக்குப் புலனாகுமாறு வனத்திலேமறைந்து வாழுமாறு ஆவதே!என்றும் கவி கொண்ட ஈடுபாடு, ஈற்றடியில் தோன்றும். "அடக்குமைம்பொறியொடு கரணத்தப்புறங், கடக்கும் வாலுணர்வினுக்கு அணுகுங்காட்சியான்,*** இனையசொல்லினன் (௨௭)"என்றுதொடங்கியகவி, "மறைகளைமறைந்துபோய் வனத்துள்வைகுவான்,...என்றான்" என்றுமுடித்த நயம் காண்க. ஈற்றடி - முற்றுமோனை. நெடுவணக்கம் - தீர்க்கதண்டம். பி - ம்:—[1]குறையிலா. [2]ஆண்டு. [3]மறைததுப்போய், மறந்துபோய். (௫௭௫)

௫௬.—சுமந்திரன் இராமனை வணங்கிவிட்டுச் சானகியை நோக்குதல்.

ஆள்வினை [1]யாண்மையிற் றிறம்ப லன்[2]றெனத்
தாள்முதல் [3]வணங்கிப தனித்திண் டேர்வலா
[4]னூழ்வினை வருந்துயர் நிலையென் றுன்னுவான்
[5]வாள்விழி நோக்கியை வணங்கி நோக்கினான்.

(இ - ள்.) 'ஆள் வினை-பணியாளன் செய்யவேண்டிய செயல், ஆண்மையின் திறம்பல் அன்று-(தலைவனுக்குக் கீழ்ப்படிதலாகிய) அடிமைத்தொழிலினின்று மாறுபடுவது அன்று; (ஆகையால் பணியாளனாகிய நான் தலைவனு

கிய இந்த இராமன் கூறியபடி நகர்க்குத் திரும்பிச்செல்வதே கடமை),' என-என்று (நீதியை ஆலோசித்து), (தான் இராமபிரான் உரைத்ததற்கு இணங்கியதையும் அநுமதிபெறுவதையும் அறிவிக்குமாறு), தாள்முதல் வணங்கிய-(அப்பிரானது) தாள்களிலே வணங்கின, தனி திண் தேர்வலான் - ஒப்பற்ற வலிய தேரைச் செலுத்திவந்த சாரதியாகிய சுமந்திரன், - 'துயர் நிலை-துன்ப நிலைபானது, ஊழ்வினை வரும் - ஊழ்வினையால் தோன்றும்,' என்று—, உன்னுவான் - எண்ணுபவனாய்,-வாள் விழி நோக்கியை - வாட்படைபோன்ற கண்களையுடைய சானகியை, வணங்கி—, நோக்கினன்—; (எ - று.)

சானகியை வணங்கிநோக்கினது-நகரத்திலேயிருக்கின்ற கௌசலை முதலியவர்கட்குச் சொல்லவேண்டிய செய்தி யுளதாயின் திரும்பிச்செல்கிற என்னிடத்துக் கூறுக என்ற குறிப்பினால். தாள் முதல், முதல் - ஏழனுருபு. [4]ஊழ்வினை வசத்துயிர்நிலை என்றபாடத்திற்கு - 'இராமபிரானைப்பிரிந்து இருக்கவேண்டும் என்ற இப்போதும் என்னுயிர் உடம்பைவிட்டு நீங்கவில்லையே! இதற்குக்காரணம் இவ்வுலகத்து எத்தனைநாள் இருக்கவேண்டுமென்று விதியேற்பட்டிருக்கின்றதோ அத்தனை நாள் இருந்தேதீரவேண்டு மென்பதுவே' என்றுஉன்னினான் சுமந்திரனென்க. வசத்து - வசத்தது என்பதன் விகாரம். [5]வாழ்வினைநோக்கியை என்ற பாடத்துக்கு - இலக்குமியின் கடாட்சமே ஒருவனது நல்வாழ்வுக்குக் காரணமாதலாலும், சீதை இலக்குமியின் அமிசமாவளாதலாலும், அந்தச்சீதையை இங்ஙனங்கூறினனென்க. பி ம்:—[1]ஆணையில். [2]எனத. [3]வணங்கியத். (ருஎசு)

சo—சீதை சுமந்திரனிடத்துச் செய்திகூறுதல்.

அன்னவள் கூறுவா ளரசர்க் கத்தையர்க்
கென்னுடை [1]வணக்கமுன் னியம்பி யானுடைப்
பொன்னிறப் பூவையுங் கிளியும் [2]போற்றுகென்
[3]றன்னுமென் றங்கையர்க் [4]குணர்த்துவா யென்றாள்.

(இ - ள்.) அன்னவள்-அங்ஙனம் (சுமந்திரனால்) நோக்கப்பெற்ற சீதை, கூறுவாள் - (அச்சுமந்திரனிடம்) கூறுவாளானாள்:—அரசர்க்கு - (எனதுமாமனாராகிய) தசரதரிடத்தும், அத்தையர்க்கு-(எனது மாமிமார்களாகிய) கௌசலை முதலியவரிடத்தும், முன் - முதலில், என்னுடை வணக்கம் இயம்பி-என்னுடைய வணக்கத்தைச் சொல்லி, யானுடை-என்னுடைய, பொன் நிறம் பூவை உம் கிளி உம் - பொன்னின் தன்மையைக்கொண்ட [மிகவும் அருமையான] நாகணவாய்ப்புள்ளையும் கிளியையும், போற்றுக - பரிவோடுகாக்கவேண்டும், என்று—, உன்னும் - (என்னிடம்) அன்புள்ள, என் தங்கையர்க்கு - என் தங்கைமாரிடத்து, உணர்த்துவாய் - (யான் கூறியதாகத்) தெரிவிப்பாய், என்றாள்—; (எ - று.)

மகளிர்க்குத் தாம் வளர்க்கும் பறவைகளிடத்து அன்புமிகுதி யென்பது, இதனால் விளங்கும். அத்தைமைத்துனைப் பெண்பாலார் மணந்துகொள்

வது தமிழ்மக்கள் மரபென்பது, இங்குக் கவனிக்கத்தக்கது. கணவனுடைய தாயை அத்தையென்பது - இக்காலத்துவழக்கிலு முள்ளமை காண்க. தங்கையரென்றது - ஜநகனது புதல்வியாகிய ஊர்மிளையையும், ஜநகனது தம்பியான குசத்துவசனது புத்திரிகளாகிய மாண்டவி சுருதகீர்த்தி என்பவர்களையுமாகும். சீதைமுதலியோர் கூறியதாக முதனூலில் இல்லை. பொன்னிறம் என்பதைப் பூவைக்குமாத்திரம் கூட்டியுரைத் தலுமுண்டு. பூவை கிளிமுதலிய பறவைகளை மகளிர்வளர்த்தல், இயல்பு. பி-ம்:—[1]வணக்கமும். [2]போற்றுமென்று. [3]என்னுடை யெங்கையர்க்கு. [4]உணர்த்துவீர். (௫௭௭)

சக.—அதுகேட்டு, இராமபிரான் தேற்றவும் சுமந்திரன் பொருமி விம்முதல்.

தேர்வலா னவ்வுரை கேட்டுத் தீங்[1]குறின்
[2]யார்வலா ருயிர்துறப் பெளி' தன் றேயெனப்
போர்வலான் றடுக்கவும் பொருமி விம்மினன்
சோர்விலா [4]ளறிகிலாத் துயர்க்குச் சோர்கின்றான்.

(இ - ள்.) தேர்வலான்-தேரோட்டுதலில்வல்லசாரதியாகியசுமந்திரன்,—அ உரை கேட்டு - அந்த(ச் சீதைசொன்ன) வார்த்தையைக் கேட்டு, சோர்வு இலாள் - (தான் காட்டிற்குச் செல்வதற்காகச் சிறிதும்) தளர்ச்சி கொள்ளாதவளாகிய சீதை, அறிகிலா - (இதுவரையிலும்) அறியாததான, துயர்க்கு - (இப்போது வனவாசத்தாற் படக்கூடிய) துன்பத்தைக் குறித்து, சோர்கின்றான் - மனம் வருந்துபவனாய்,— 'தீங்கு உறின்-(ஊழ்வினையால்)தீங்குநேருமாயின், யார் - எவர்கள், வலார்-(தீர்க்க)வல்லவர்கள்? உயிர் துறப்பு-உயிரை நீக்குதலென்பதும், எளிது அன்றுஏ - எளிதாக முடிவதன்றே; [விதித்தகாலத்து உயிர் போவதன்றி மற்றைக்காலத்து உயிர்போவதென்பதும் கூடாததாயிருக்கின்றது],' என - என்றுசொல்லி, போர்வலான் தடுக்கஉம் - மகாவீரனாகிய இராமபிரான் (அழவேண்டா என்று) தடுத்துச்சொல்லவும், பொருமி விம்மினன் - (மனத்திற்குள்ளேயே முதலிற்) குமைந்து (பிறகு) வாய்விட்டுக் கதறினன்; (எ - று.)

தான் காட்டிற் புகுந்தால் நேரக்கூடிய வருத்தத்தைக் குறித்துச் சிறிதுங்கவலைகொள்ளாமல் தான் நாட்டில்விட்டுவந்த தன்னுடைய பூவை கிளிகளைக்குறித்துக் கவலைகொள்ளுகின்றாளே இச்சீதை! இது என்னபேதைமை யென்று அவளுடைய பேதைமைக்குணத்திற்கு மனந்தளர்ந்து, பிறகு 'இவ்வளவு சுகுமாரியான சீதைக்கு வனவாசம்நேர்ந்ததே! இவ்வருத்தத்தைக் கண்டும் உயிரை வைத்துக்கொண்டிருக்கின்றேனே!!' என்று சுமந்திரன் புலம்பலாயினனென்க. இராமபிரானுடன் செல்வதனாற் சிறிதும் மனவாட்டமின்றி மனமகிழ்ச்சி யுடனே செல்லுகின்றாளென்பார், அவளை, 'சோர்விலாள்' என்றார். பி-ம்:—[1]உறில், உறல், உற. [2]ஆர். [3]அன்றோ, என்றே. [4]அறிவிலாத்துயர்க்கு, அறிவிலாததற்கு. (௫௭௮)

௪௨.—இராமபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சுமந்திரன் 'கூற வேண்டிய செய்தி யாது ?' என்று இலக்குமணனை வினவுதல்.

ஆறினன் போற்சிறி தவல மவ்வழி
[1]வேறிலா [2]வன்பினான் விடை [3]தந் தீகென
வேறுசே வகற்றொழு திளைய மைந்தனைக்
கூறுவ தியாதென வினைய கூறினான்.

(இ - ள்.) வேறு இலா அன்பினான் - வேறுபடுதலில்லாத [என்றும் ஒரு வகையாயுள்ள] அன்பையுடையவனாகிய சுமந்திரன், அ வழி - அப்பொழுது, அவலம் சிறிது ஆறினன்போல் - (தான் கொண்ட) வருத்தம் சிறிது தணிந்தவன்போன்று, விடை தந்தீக என - 'விடைதருவாய்' என்றுசொல்லி (விடை பெற்றுக்கொண்டு), ஏறு சேவகன் தொழுது-மேன்மேற் பெருகுகின்ற வீரத் தன்மையையுடைய இராமபிரானைத் தொழுதுவிட்டு, இளைய மைந்தனை - இளையபெருமாளைப்பார்த்து,கூறுவது யாது என-'சொல்லவேண்டிய செய்தி யென்ன?' என்று வினவ,—(அவ்விலக்குமணன்), இனைய - இவ்வார்த்தைகளை, கூறினான்—; (எ - று.)—அவற்றை மேல் மூன்றுகவிகளிற் காண்க.

'ஆறினன் போல்' என்றமையால், இராமபிரான் தேற்றியமையால் ஆறினன்போலக் காணப்பட்டானேயன்றி உண்மையில் மனத்துயரம் ஆறவில்லை யென்க. தந்தீகென - தொகுத்தல். பி - ம்:—[1]வேறிலான். [2]அன்பினாய், வனப்பினாய். [3]தந்தீகென, தந்தேகென. (௫௪௯)

இதுவும் அடுத்தகவியும் - குளகம்: தசரதனைக்குறித்து இலக்குமணன் கூறிய நிட்டூரவார்த்தை.

[1]உரைசெய்தெங் கோமகற் [2]குதவிப் போக்கித
தரை[3]செறி செல்வத்தைத் தவிர மற்றொரு
விரைசெறி குழலிமாட் டளித்த மெய்யனை
யரசனென் றின்னமொன் [4]றறையற் பாலதோ.

(இ - ள்.) எம் கோமகற்கு - எமதுதலைவனாகிய இராமபிரானுக்கு, உரை செய்து உதவி போக்கிய-(நீ தான் இதனை யாளுதற்கு உரியவன்: இவ்விராச்சியத்தைப் பெற்றுக்கொள்க என்று) சொல்லிக்கொடுத்துவிட்ட, தரை செறி செல்வத்தை - பூமியோடு நிரம்பிய செல்வத்தை, தவிர - (அவ்விராமபிரான் ஆளாமல்) தவிரும்படி, மற்று - பின்னும், ஒரு விரை செறி குழலி மாட்டு அளித்த - நறுமணம்மிக்க கூந்தலையுடையவளான ஒரு பெண்ணுக்கு [கைகேயிக்கு]த் தந்திட்ட, மெய்யனை - சத்தியசந்தனான தசரதனை, அரசன் என்று- அரசனாக எண்ணி, இன்னம் - இன்னும், ஒன்று - ஒருசெய்தி, அறையல் - சொல்லுவது, பாலதோ - தகுதியையுடையதாகுமோ? (எ - று.)

இராமபிரானுக்கு இராச்சியத்தைக் கொடுப்பதாக வாக்களித்து அவ்வாக்குப்பிறழ்ந்து கைகேயிக்குக் கொடுத்தானே! அந்தத்தசரதமன்னவனை

ஒருபொருட்டாகக்கருதிச் செய்தியுஞ் சொல்லவேண்டுமோ? என்று, இலக்குமணன் செய்திசொல்லியனுப்புவதற்குத் தகாதவன் தசரதனென்று இதனாற் கூறுகின்றன னென்க. மெய்யனென்றது - பொய்யனென்றபடி. வாக்குக் கொடுத்துவிட்டுக் கொடுத்தவாக்கை நிறைவேற்றாமற்போவது மெய்யற்கு அழகு அல்ல வாதலால், இலக்குமணன் இங்ஙனங் கூறுகின்றான். இராமபிரானுக்கு அரசுகொடுப்பதாக நிச்சயித்துக்கூறிய காலத்துக்கு முன்பே வேண்டும்போது இரண்டுவரம் தருவதாகக் கைகேயிக்குத் தசரதமன்னவன் வாக்குக்கொடுத்திருந்தபடியால், அந்தவாக்குத்தத்தம் இராமபிரானுக்குக்கொடுத்த வாக்கினும் முற்பட்டு இதனை விலக்கிவிடுதலால், தசரதன்மீது குற்றமில்லை யென்பர். இங்ஙனமாயினும், இராமபிரானிடத்து இலக்குமணன் மிக்க பட்சமுடையவனாதலால், தசரதன் செய்கை இவனுக்குக் குற்றமாகவே படுகின்றதென்க. ஓகாரம் - வினாவகையால், எதிர்மறைகுறித்தது. பி - ம்:— [1]உரைசெய்யல். [2]உறுதிபாக்கிய, உதவிபோதிய, உதவிபோக்கிய, உதவியோங்கிய. [3]கெழு. [4]உரைக்கலாவதோ. உணர்த்தலாகுமோ. (௫௮௦)

௪௪. கானகம் பற்றி[1]நற் புதல்வன் காயுணப்
போனகம் [2]பற்றிய [3]பொய்யில் [4]மன்னர்க்கிங்
[5]கூனகம் பற்றிய [6]வுயிர்கொ டின்னும்போய்
வானகம் பற்றிலா வலிமை கூறென்றான்.

(இ - ள்.) (ஆயினும் அவ்வரசனுக்குச் செய்திசொல்லவேண்டு மென்பாயாயின்), நல் புதல்வன் - (தனது) மூத்தகுமாரன் [இராமபிரான்], கானகம் பற்றி - காட்டையடைந்து, காய் உண - (காட்டிற் கிடைக்கக்கூடிய) காயை உணவாகப் புசித்துக்கொண்டு நிற்க, (தான் நாட்டிலேயேயிருந்து), போனகம் பற்றிய - (நாட்டிற்கிடைக்கும்) அரசவுணவைப் புசித்துக்கொண்டிருக்கின்ற, பொய் இல் மன்னர்க்கு - பொய்ம்மையில்லாத [சத்தியசந்தரான] அரசரிடத்தில், இங்கு - இவ்வுலகில், ஊன் அகம் பற்றிய உயிர்கொடு - உடலிடத்துத்தங்கிய உயிரைக்கொண்டிருந்து, இன்னும் போய் வானகம் பற்றிலா - இன்னமும் இறந்துபோய் மேலுலகத்தையடையாத, வலிமை - (அவனுடைய) வலிமையை(ப்பாதுகாத்துக்கொள்ளுமாறு), கூறு - சொல்வாய், என்றான் —; (எ - று.)

தசரதனுக்கு யான் செய்திசொல்லவேண்டுவது அவசியமெனத் தோன்றினாற் சொல்லுகிறேன்; கேட்பாயாக; இராமபிரான் காட்டிற்சென்று அங்குக்கிடைக்குங் காய்கிழங்குகளைப் புசித்துக்கொண்டிருக்கத் தான் இறந்திடாமல் நாட்டிலேயேயிருந்து அறுசுவையுணவுகளைப் புசித்தவண்ணம் சத்தியசந்தனென்று சொல்லிக்கொண்டு வலியவனாயிருப்பானாக எனத் தசரதனிடம் கூறுவாயென்பதாம். இனி, இச்செய்யுட்கு - 'காட்டிற்குத் துரத்தினாலும், நாங்கள் இன்னும் உனக்கு மனத்திருத்தியுண்டாகும்படி இறந்துபோய் வானுலகஞ்சேராமல் உயிர்தாங்கி வலிமையோடு சஞ்சரிப்பவராகவே நிற்கின்றோம்' என்று தசரதனிடங்கூறுவாயாக என்று, இராமபிரானைக் காட்டிற்குச்செல்லு

மாறுசெய்ததுகுறித்துத் தசரதனிடத்துத் தான்கொண்டுள்ள மனவெறுப்புத் தோன்ற நிஷ்டூரமாகச் செய்திசொல்லியனுப்புகின்றனன் இலக்குமணனெ ன்று கொள்ளவுமாம். இராமபிரானைக் காட்டிற்கு அனுப்புவதனாற்றோன்றிய பெருந்துயரத்தில் தசரதமன்னவன் மூழ்கிக்கிடந்தாலும் தானும் இராமனு டனே காட்டிற்கு அப்போதே சென்றால்; குலமுறையாய்வந்த இராச்சியம் அராஜகமாய்ப்போக அதனால்விளையும்பாவம் தன்னைச் சேருமாதலாலும், பர தனை வரவழைத்துப் பட்டங்கட்டிப் பிறகு இராமபிரானை யனுப்புவதற்குக் கைகேயி உடன்படாளாதலாலும் இராமபிரானுடன் தசரதன் கானகஞ்சென் றிலன்போலும். பி-ம்:—[1]இப். [2]பற்றுமப். [3]பொருவின். [4]மன்னவர்க்கு. [5]யான். [6]உயிர்கொண்டு, உயிரோடு. (ருஅக)

௬ரு.—இதுவும் இலக்குமணன் வார்த்தை: இலக்குமணன் பரதனுக்குச் செய்திசொல்லியனுப்புதல்.

மின்னுடன் பிறந்தவாட் [1]பரத [2]வேந்தற்கென்
மன்னுடன் [3]பிறந்திலென் மண்கொண் [4]டாள்கின்ற
[5]தன்னுடன் [3]பிறந்திலென் றம்பி[6]முன்னலெ
னென்னுடன் [7]பிறந்தயான் [8]வலியெ னென்றியால்.

(இ - ள்.) மின் உடன் பிறந்த வாள் பரத வேந்தற்கு-ஒளியுடன்கூடிய வாட்படையையுடைய பரதராசனிடத்தில், 'என் மன்னுடன் பிறந்திலென்- அரசனாகவேண்டிய எனது இராமபிரானுடன் பிறந்தேனுமல்லேன்; மண் கொண்டு ஆள்கின்ற தன்னுடன் பிறந்திலென் - (இராமபிரானுக்குரிய) பூமி யை(த் தான் தாயின்மூலமாகக்கவர்ந்து) கொண்டு அரசாட்சிசெய்கின்ற அந் தப்பரதனுடனும் பிறந்திலேன்;தம்பி முன்னலென்-(சத்துருக்கனனைத்) தம்பி யென்றுங் கொள்ளேன்; என்னுடன் பிறந்த யான்-(வேறொருவரோடுபிறவா மல்) என்னோடு நானே பிறந்த [தனித்துப்பிறந்த] நான், வலியென்-வலிமை யில் யாதொருகுறையுமின்றியுள்ளேன்,' என்றி-என்று கூறுவாய்; (எ - று.)

இராச்சியத்தை உனக்குக்கொடுத்துவிட்டேனென்று முதலிற் சொல்லி யிருக்கவும் இராமபிரான் அதனைக் கைக்கொள்ளாமல் தந்தை காட்டிற்குச் செல்லச்சொன்னானென்று கானகஞ் சென்றகாரணம்பற்றி அவ்விராமபிரா னிடத்து உள்ள வெறுப்பினால் 'மன்னுடன் பிறந்திலென்' என்றும், மூத்த வற்குஉரிய இராச்சியத்தைத் தந்திரமாகக் கவர்ந்து ஆள்கின்றானென்றகார ணம்பற்றிப் பரதனிடத்துக்கொண்ட வெறுப்பினால் அவன்பெயரையுஞ் சொல்லவிருப்பில்லாமையால் 'மண்கொண்டாள்கின்ற தன்னுடன் பிறந்தி லென்' என்றும், பரதனை எப்போதும் ஒட்டி நடக்கின்ற தன்மைபற்றிச் சத்துருக்கனனிடமும் தான் வெறுப்புக்கொண்டமையால், 'தம்பிமுன்ன லென்' என்றும் கூறினான். 'யான் வலியென்' என்று கூறியது - ஒருகால் நீ காட்டிலும் எங்களை நிச்சிந்தையாக இருக்கவொட்டாமற் பொர வருவாயே யானால் உன்னையழிப்பதற்குஏற்ற வலிமையுடையேன் யானென்று பரதனை

மருட்டுதற்காகவும், 'மின்னுடன் பிறந்தவாள் பரதன்' என்று அடைமொழி கொடுத்தது-நீ ஒருகால் காட்டிலும் எங்களை யெதிர்க்கவருவாயேயானால் எதிர்க்கும் உன்னுடைய வாள் மின்னல்போல் ஒருநொடிப்பொழுதிற் காணப்படாம லொழிந்துவிடுமென்று குறிப்பித்தற்காகவும் என விசேடப்பொருளுரைப்பர். தம்பிமுன்னலென் - (அப்பரதனுக்கு நான்) தம்பிமுறையாவேனென்பதையுங் கருதகில்லேனென உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]பரதன். [2]வேந்தற்கு-மன். [3]பிறந்திலன். [4]ஆள்கின்றான். [5]தன்னொடும். [6]முன்னலன், முன்றிலே, முன்பலென். [7]பிறந்துநான். [8]வலியான். (நிஅ௨)

சசு.—இராமன் தம்பியையடக்க, சுமந்திரன்மீண்டுசெல்லச்சித்தனுதல்.

ஆரிய னிளவலை நோக்கி யைய[1]நீ
சீரிய வல்லன செப்ப லென்றபின்
பாரிடை வணங்கினன் [2]பரியு நெஞ்சினன்
றேரிடை வித்தகன் சேறன் மேயினான்.

(இ-ள்.) ஆரியன்-இராமபிரான், இளவலை-இளையபெருமாளை, நோக்கி-, 'ஐய-, நீ—,சீரிய அல்லன-சிறப்பற்ற பேச்சுக்களை, செப்பல்-சொல்லவேண்டா,' என்ற பின்-என்று அடக்கியபின்பு,—பரியும் நெஞ்சினன்-(இராமபிரானைப் பிரிந்துசெல்லுமாறு நேர்ந்ததுகுறித்து) மனம் வருந்துபவனாகி, வித்தகன் - (தேரோட்டுதொழிலில்) வல்லவனாகிய சுமந்திரன்,— பாரிடை வணங்கினன்-பூமியில் விழுந்து வணங்கி, தேர் இடை சேறல் மேயினான்-தேருள்ள இடத்துக்குச் செல்லலானான்; (எ - று.)

தந்தையாரைப்பற்றியும் பரதனைப்பற்றியும் இளையபெருமாள் நிஷ்டூரமாகச் சொல்லியவற்றைக் கேட்ட இராமபிரான், 'நீ இங்ஙனம் கூறுவது தகுதியன்று; இனிச் சொல்லாதிருப்பாயாக' என்று அவ்விலக்குமணனைக் கண்டிக்க, பிறகு சுமந்திரன் மனவருத்தத்தோடு இராமபிரானைவணங்கி மீண்டு செல்ல ஒருப்பட்டுத் தேர்நிறுத்திய இடத்துக்குச் சென்றனனென்பதாம். "கூட்டினன் தேர்ப்பொறி" என மேல்வருவதனால், தேரிடைஎன்பதற்கு - தேரைநிறுத்தியுள்ள இடத்துக்கு எனப் பொருள்கொள்ளப்பட்டது. பி - ம்:—[1]இச். [2]பதைக்கும். (நிஅ௩)

சஎ.—தேரைப்பூட்டிக்கொண்டு சுமந்திரன் அயோத்திக்கு மீளுதல்.

கூட்டினன் றேர்ப்பொறி [1]கூட்டிக் [2]கோன்முறை
பூட்டினன் [3]புரவியப் புரவிபோநெறி
காட்டினன் காட்டித்தன் கல்வி மாட்சியா
லோட்டினன் றொருவரு முணர்வு றமலே.

(இ - ள்.)(சுமந்திரன்),தேர் பொறி-இரதமாகிய பொறியை,கூட்டினன்-சித்தப்படுத்தினான்; கூட்டி-(அங்ஙனம்)சித்தப்படுத்தியபின், புரவி - குதிரைகளை; கோல் முறை பூட்டினன் - கோல்கொள்ளும்முறையில் [ஓட்டுதற்கு

இயையுமாறு](அத்தேரிலே) பூட்டினன்; அ புரவி போம் நெறி காட்டினன்- அந்தக்குதிரைசெல்லும்வழி (யாவர்க்கும் கண்விழித்துஎழுந்தால்) தோன்று மாறு (குதிரையைச்) செலுத்தினன்; காட்டி - அங்ஙனஞ்செய்துகொண்டே, தன் கல்வி மாட்சியால்-(குதிரைசெலுத்தும்)விச்சையில் தனக்குஏற்பட்டுள்ள வல்லமையால், ஒருவர் உம் உணர்வு உறுமல் ஏ ஓட்டினன்-ஒருவரும் தேர் செல்லும் ஒலியைக்கேட்டுக் கண்விழித்துக்கொள்ளாதபடி [ஒலியின்றித்தேர் செல்லும்படி] (அத்தேரைச்) செலுத்தினன்; (எ-று.)

தேரிடைச்சென்ற சுமந்திரன் அத்தேரிற் குதிரைகளைப்பூட்டிச் சென்ற வழி யாவர்க்கும் புலனாகும்படி சுவடுதோன்றுமாறு தேரைச்செலுத்தினனா யினும்,உறங்குபவர் விழித்தெழுந்திராதபடி அத்தேர்செல்லுவதாற் பேரொலி யுண்டாகாவண்ணம் தேர்ப்பாகுத்தொழிலில் தனக்குள்ளவல்லமையாற்செய் தனனென்பதாம்.இச்செய்யுளில் ஒருவாக்கியத்தினீற்றில்விட்டசொல்அடுத்த வாக்கியத்தின் முதலில்வர இங்ஙனம் பல வாக்கியங்கள் வந்தமை ஒற்றை மணிமாலையென்னும் ஏகாவளியலங்காரமாம். பி-ம்:—[1]கூடி. [2]கொண்முறை, மண்முறை. [3]புரவியும். (௫அச)

௪அ.—இராமபிரானும் அவ்விரவிற் பிரயாணமாதல்.

தையறன் கற்புந்தன் றகவுந் தம்பியு
மையறு கருணையு முணர்வும் வாய்மையுஞ்
செய்ய[1]தன் வில்லுமே சேம மாகக்கொண்
டையனும் போயின னல்லி னுப்பணே.

(இ-ள்.) தையல்தன் கற்பு உம்-சீதாபிராட்டியின் பதிவிரதாதருமமும், தன் தகவு உம் - தனது மேன்மைக்குணமும், மை அறு கருணை உம் - குற்ற மற்ற (தன்னுடைய) அருட்குணமும், உணர்வு உம்-நல்லறிவும், வாய்மை உம் - சத்தியமும், செய்ய தன் வில் உம்-செம்மைத்தன்மையையுடைய தனது தனு சும், தம்பி உம் ஏ-இளையபெருமாளுமே, (என்ற இவை), சேமம் ஆக கொண்டு- (தனக்குப்)பாதுகாவலாக அமையப்பெற்று,அல்லின் நாப்பண்-அந்த இரவின் நடுவில் [நடுராத்திரியில்], ஐயன் உம் - இராமபிரானும், போயினன் - செல்ல லானன்; (எ - று.)

தம்பி வில் என்ற உருவப்பொருளோடு கற்புமுதலிய அருவப்பொருளை யுஞ் சேர்த்துக் காவலெனக் கூறிய நயம் கருதத் தக்கது. பொருள்முறைக்கு ஏற்ப, தம்பிஎன்பது இறுதியிற் கூட்டப்பட்டது. தகவு என்பதில் கருணை முதலியன அடங்குமாயினும்,சிறப்புடைமையால்,குணங்களுட்சிறந்தனவான கருணைமுதலியவற்றைத் தனியே யெடுத்துக் காட்டினர். செய்ய வில்-கொடி யோரை நலிந்து நல்லோரைப் பாதுகாக்குந் தன்மை யமைந்த வில்: இனி, நாணிஏறிடாமையால் வளைந்திராமல் நேராக இருக்கும் வில் எனக் கூறலும் ஒன்று. பி - ம்:—[1]கை. (௫அ௫)

வேறு.

௪௬.—அப்போது இருள்சேறிந்திருக்க, சந்திரன் உதயமாதல்.

பொய்வினைக் குதவும் [1]வாழ்க்கை யரக்கரைப் பொருந்தி யன்னார்
செய்வினைக் குதவு [2]நட்பாற் செல்பவர்த் தடுப்ப [3]தேய்க்கு
மை[4]விளக் கியதே யன்ன [5]வயங்கிரு [6]டுரக்க வானங்
கைவிளக் கெடுத்த தென்ன வந்தது கடவுட் டிங்கள்.

(இ - ள்.) பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரை-வஞ்சகத்தொழிலைச் செய்வதற்குத் துணையாயிருக்கும் வாழ்வையுடைய இராக்கதரை, பொருந்தி - சேர்ந்திருந்து, அன்னார் செய் வினைக்கு - அந்தஅரக்கர் செய்கின்ற (கொலைமுதலிய) தீத்தொழிற்கு, உதவும் - துணைசெய்கின்ற, நட்பால் - சினேகருணத்தினால், செல்பவர் தடுப்பது ஏய்க்கும்-(அவ்வரக்கர்க்குப் பகையாகிச்) செல்கின்ற இராம விலக்குமணரைச் (செல்லவேண்டாஎன்று) தடைசெய்வதை ஒத்திருப்பதும், மை விளக்கியது ஏ அன்ன-அஞ்சனத்தின் தன்மையை விளங்கச்செய்வதுபோல்வதுமான, வயங்கு இருள் - (கருநிறத்தோடு) விளங்குகின்ற இருட்டை, துரக்க - ஓட்டிவிடும்படி, வானம்-ஆகாயமானது, கைவிளக்கு எடுத்தது என்ன - கையினாலேந்திக்காட்டும் விளக்கை(த் தான்) எடுத்துத்தாங்கியதென்று சொல்லும்படி, கடவுள் திங்கள்-தெய்வத்தன்மைவாய்ந்த சந்திரன், வந்தது - தோன்றிற்று; (எ - று.)

இருட்டானது தான் தன்கருநிறத்தால் அரக்கரையொத்திருந்து அவர் புரிகின்ற தீச்செயல்கட்கும் உதவியாயிருப்ப தாதலால், அவ்வரக்கரைச் சங்கரித்தற்பொருட்டே திருவவதரித்த மூர்த்தியாகிய இராமபிரான் தம்பியோடு அரக்கர்வாழுங் காட்டிற்குச் செல்லத்தொடங்கியபோது அவ்வரக்கரிடத்துள்ளநட்பினால் 'நீங்கள் இங்குவரவேண்டா' என்று இவர்களைத் தடுப்பது போன்றிருந்த தென, இருட்செறிவை முதலிரண்டடிகளினாற் குறித்தார். பிறகு அவ்விருள்நீங்கும்படிவானத்திற்சந்திரன் தோன்றியதை இராமபிரான் காட்டிற்குச்செல்லுகையில் வானம் கைவிளக்கையேந்திக் காட்டுவதுபோலுமெனப் பின்னடிகளினாற் குறித்தார். இவ்விரண்டும்-தன்மைத்தற்குறிப்பேற்றவணிகளாம். "எறனுற் றிருளைநீங்கக் கைவிளக்கேந்தியாங்கு, வீறுயர்மதியந் தோன்ற" என்ற சிந்தாமணிப்பகுதி இந்தச்செய்யுளின் பின்னிரண்டடிகளிற் காணத்தக்கது. அரக்கர் கொடியவிலங்குகள்போல இரவிற்சஞ்சரித்து முனிவர்முதலியோர்க்குத் தீங்குபுரிபவ ராதலால், இருள் அவ்வரக்கர் செய்யும்வினைக்கு உதவும் நட்பு ஆவதாகும். சந்திரன் தேவதைகளிற்சேர்ந்தவனென்பது, நூற்றுணிபு: ஆதலால், 'கடவுட்டிங்கள்' என்றார். மைவிளக்கியது அன்ன இருள்-மைபோல்தோன்றும்இருள். இனிஇச்செய்யுட்கு—வந்ததாகிய திங்கள் அரக்கர்க்குநட்பாய்ச் செல்பவரைத் தடுப்பதையேய்க்கும் என்று உரைப்பாருமுளர்: அவ்வுரை சிறவாது. பி - ம்:—[1]வாட்கை. [2]நட்பாய்ச் சேறற்பால், நட்பாற்செல்பவற். [3]ஒக்கும். [4]விளக்கியதேயென்ன, விளக்கிதேயென்ன, விளக்கிதேயன்ன. [5]மயஙகு. [6]துரப்ப. (௫௮௬)

ருo.—உதித்த சந்திரனது வருணனை.

[1]மருமத்துத் தன்னை யூன்றும் [2]மறக்கொடும் பாவந் தீர்க்கு
முருமொத்த சிலையி னானை யொருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை [3]யெண்ணிக் களிப்பொடுங் காண வந்த
தருமத்தின் வதன மென்னப் பொலிந்தது தனிவெண் டிங்கள்.

(இ - ள்.) தனி வெண் திங்கள் - (அப்போது உதித்த) ஒப்பற்ற வெண்ணிறத்தையுடைய சந்திரன்,—தன்னை மருமத்து ஊன்றும் மறம் கொடும் பாவம் - தன்னுடைய உயிர்நிலையிலே தாக்குவதான வீரத்தன்மையையுடைய கொடியபாவத்தை, தீர்க்கும் - ஒழிக்கவல்ல, உரும் ஒத்த சிலையினானை - இடியையொத்த [பேரொலிசெய்கின்ற] வில்லையுடைய இராமலக்குமணனை, ஒருப்படுத்து - (வனத்திற்கு வருமாறு) உடன்படுத்தி, உதவிநின்ற - (தனக்குத்) துணைபுரிந்த, கருமத்தின் விளைவை - (தனது) நல்வினைப்பயனை, எண்ணி -, களிப்பொடுஉம் - மனமகிழ்ச்சியுடனே, காண வந்த - தரிசிக்குமாறு (அங்கு) வந்த, தருமத்தின் - தருமதேவதையின், வதனம் என்ன - முகம்போல, பொலிந்தது - விளங்கிற்று; (எ - று.)

தன்னை உயிர்நிலையில் நலிகின்ற அதருமத்தை வேரோடு களையும்பொருட்டாக அரக்கரை யொழிக்குமாறு தனது நல்வினைப்பயனால் இராமலக்குமணர் வில்லை யேந்திக் கானகஞ்சேர்ந்தா ரென்று மகிழ்ச்சியினால் மலர்ந்த தருமதேவதையின் முகம்போலு மெனச் சந்திரனை வருணித்தார்; இதுவும் - தற்குறிப்பேற்றவணியே. மருமத்துத் தன்னை யூன்றுஞ் சிலையினானை என இயைத்து - தன்மனத்திலே தன்னையே [தருமத்தையே] எண்ணுகின்ற வில்லாளிகளை யென்னலுமாம்: இனி, (தருமதேவதையின்) நெஞ்சில் தன்னைப் பதியச்செய்யும் கொடும்பாவமெனக் கூறுவாருமுளர். [1]மருமத்துத் தன்னையூன்றி என்ற பாடத்துக்கு - மனத்தினால் தருமமாகிய தன்னையேகொண்டு என உரைக்க. பி - ம்:—[2]மாக். [3]உன்னி. (ருஅஎ)

ருக.—அப்போது மலர்கள்யாவும் குவிந்திருந்தல்.

காம்புயர் கானகஞ் செல்லுங் கரியவன் வறுமை நோக்கித்
தேம்பின குவிந்த போலுஞ் செங்கழு நீருஞ் சேரைப்
பாம்பின தலைய வாகிப் [1]பரிந்தன [2]குவிந்து [3]சாய்ந்த
வாம்பலு மென்ற போது நின்றபோ தலர்வ துண்டோ.

(இ - ள்.) காம்பு உயர் கானம் - மூங்கில்கள் ஓங்கிவளரப்பெற்ற காட்டிலே, செல்லும் - நடந்துசெல்கின்ற, கரியவன் - இராமபிரானது, வறுமை நோக்கி - தரித்திரன்போன்றுள்ளநிலையைப் பார்த்து, தேம்பின-மனம்வருந்தினவாய், செங்கழுநீர்உம் - செங்கழுநீர்மலரும், குவிந்தபோலும் - குவிந்தவற்றை யொத்துத்தோன்றும்; ஆம்பல்உம் -, சேரை பாம்பின தலைய ஆகி - சாரைப்பாம்பினுடையதலைபோன்ற தோற்றத்தையுடையனவாய், பரிந்தன-

மனம்வருந்தி, குவிந்து சாய்ந்த - வாய்குவிந்து சாய்ந்துகிடந்தன; என்ற போது - என்றால், நின்ற போது - மற்றை மலர்கள், அலர்வது உண்டு ஓ - மலர்ந்திருத்தல் உளவாகுமோ? (எ - று.)

இரவிற் கூம்புந்தன்மையவான செங்கழுநீர் அப்போது அங்கு இராமன் நிலையைக்கண்டு வருந்தினாற்போலக் குவிந்துகிடந்தன; அதுகிடக்கட்டும். சந்திரனைக்கண்டால்மலருந் தன்மையனவாகிய ஆம்பல்களோ இராமபிரான் ஒரு வறியவன்போற் கானகஞ்சேரநேர்ந்ததுகுறித்து இரங்கினவாய்க் குவிந்து கிடந்தன: இங்ஙனம் இரவிற் கூம்பும் மலரன்றி மலர்ந்தேநிற்கும் ஆம்பல் மலர்களும் குவிந்துகிடந்தனவென்றால், மற்றைமலர் குவிந்துகிடந்தன என்பது தானே பெறப்படு மென்பதாம். குமுதபாந்தவன் [ஆம்பலின்சுற்றம்] என்று சந்திரனுக்குப் பேருண்டாகுமாறு அவனைக்கண்டால் மலருந்தன்மை யுள்ளது ஆம்பல் என்ற பொருள் விளங்குதலால், ஆம்பலும் என்றவிடத்து உம்மை - உயர்வுசிறப்பு. கரியவன் வறுமை - இராமனுக்கு வறியவன்போலக் காட்டில் நடந்துசெல்ல வேண்டிவந்த தன்மை. ஓரறிவுயிரும் இராமனுக்கு நேர்ந்த நிலையையுணர்ந்து வருந்துமென்றால் அதனை உலகம் மெய்யாகக் கொள்ளாதாதலால், முதல்வாக்கியத்தில் 'போலும்' என்பதைப் பெய்து கூறினார். பி-ம்:—[1]பரந்தன. [2]குவிந்த. [3]சோர்ந்த. [4]அங்கம்புயம், போதெலாம்.

௫௨.—நிலவில் இராமன்முதலிய மூவரும் செல்லுதல்.

அஞ்சனக் குன்ற மன்ன வழகனு மழகன் [1]றன்னை
யெஞ்சலில் [2]பொன்போர்த் தன்ன விளவலு மிந்து வென்பான்
வெஞ்சிலைப் புருவத் தாடன் மெல்லடிக் கேற்ப வெண்ணூற்
பஞ்சிடைப்[3]படுத்த தென்ன வெண்ணிலாப் பரப்பப் போனார்.

(இ - ள்.) அஞ்சனம் குன்றம் அன்ன அழகன் உம்-பச்சைமாமலைபோல் அழகிய திருமேனியையுடைய இராமபிரானும், அழகன் தன்னை எஞ்சல் இல் பொன் போர்த்து அன்ன இளவல் உம் - இராமபிரானைக் குறைதலில்லாத [மாற்றுயர்ந்த] பொன்னைப் போர்த்து வைத்திருப்பதுபோன்ற வடிவத்தை யுடைய இளையபெருமாளும்,-இந்து என்பான் - சந்திரன், வெம் சிலை புருவத்தாள் தன் மெல் அடிக்கு ஏற்ப - கொடிய வில்லையொத்த புருவத்தைக் கொண்டவளான சீதாபிராட்டியின் மெல்லிய அடிகள் நடப்பதற்கு ஏற்குமாறு, வெள் நூல் பஞ்சு இடை படுத்தது என்ன-வெண்ணிறமான நூலுண்டாகும் பஞ்சை அக்காட்டினிடத்துப் பரப்பியதையொப்ப, வெள் நிலா பரப்ப - வெண்மை நிறமுள்ள நிலாவை (எங்கும்) பரவச்செய்யாநிற்கையில், போனார் - (அக்காட்டில்) நடந்து சென்றார்கள்; (எ - று.)

சந்திரன் வெண்ணிலவைக் காட்டினிடம்முழுதும்வீசியது, சீதை தன் மெல்லடியைக் கொடுங்கானத்தில் வைத்துநடந்தால் கல்முதலியன யுறுத்து ம யென்று அக்காட்டினிடம் முழுவதும் வெண்பஞ்சைப் பரப்பியதுபோலு

மெனப் பின்னிரண்டடிகளில் நிலாப்பரவியதைத் தற்குறிப்பேற்றவணியால் வருணித்தார். அங்ஙனம் பரந்த நிலாவில் இராமபிரான் முதலியோர் நடந்து சென்றன ரென்பதாம். இராமபிரான் வடிவமுழுதையும் பொன்னைக்கொண்டு போர்த்தால் எங்ஙனம் விளங்குமோ அங்ஙனம் விளங்குவது, இலக்குமணன் திருமேனியென்பது, 'அழகன் றன்னை யெஞ்சலில்பொன்போர்த்தன்ன விளவல்' என்பதன்கருத்து: இதனால், நிறத்திமாத்திரம் இராமனோடு இலக்குமணனுக்குவேறுபாடேதவிரச் சாயலிற் சிறிதும் வேறுபாடில்லை யெனக் கூறியவாறும். இனி, இலட்சுமணன் இராமனைவிடாதுதொடர்ந்துசெல்வத னால் இங்ஙனங்கூறியதென்பாருமுளர். பி-ம்:—[1]தன்மேல். [2]அன்புபோர்த்த. [3]படுத்தாலன்ன, படுத்தாலென்ன. (ருஅக)

## ருஅ.—சீதாபிராட்டியும் தன்மேல்லிய பாதங்களைத் தரையில்வைத்து நடந்ததைப் பற்றிய கவிக்கூற்று.

சிறு[1]விலை மருங்குல் கொங்கை[2]யேந்திய செல்வ மென்னு
[3]நெறியிருங் கூந்த னங்கை சீறடி நீர்க்கொப் பூழி
னறியன [4]தொடர்ந்து சென்று [5]நடந்தன ணவையி [6]னீங்கு
முறுவலி யன்பி[7]னூங்கொன் றுண்டென [8]நுவல்வ துண்டோ.

(இ-ள்.) சிறு விலை மருங்குல்-மிகவும் இளைத்த இடையுடன், கொங்கை-(பருத்த) தனங்களை, ஏந்திய-தாங்கியுள்ள, செல்வம் என்னும் - செல்வமக ளென்று சொல்லப்படுகின்ற, நெறி இரு கூந்தல் நங்கை-நெறித்த மிக்க கூந்த லையுடைய சீதாபிராட்டி,—சிறுஅடி-சிறியபாதங்கள், நீர் கொப்பூழின் நறி யன-நீரில்தோன்றுங் குமிழியைக்காட்டிலும் மிகமெல்லிய (ன;என்றுஅஃது) வற்றால், தொடர்ந்து சென்று-(இராமபிரானைப்) பின்பற்றிப்போய், நடந்த னள்—; நவையில் நீங்கும் உறு வலி அன்பின்-குற்றத்தினின்றுநீங்கிய மிக்க வலிமையுள்ள அன்பைவிட, ஊங்கு-மிக்க வலிமையுள்ளதாகிய, ஒன்று-ஒரு பொருள், உண்டு-(உலகத்தில்) உள்ளது, என - என்று, நுவல்வது-சொல்லு தற்குஉரியது, உண்டோ-உள்ளதோ? [இல்லை]; (எ-று.)

காற்றுச்சிறிதுபட்டாலும் உடையுந்தன்மையுள்ள நீர்க்குமிழியைவிட மெல்லிய தன்பாதங்களைக் கடுங்கானில் ஊன்றவைத்துச் சீதாபிராட்டியும் தன்கணவனுடைய பின்னே நடந்து சென்றனளே; இங்ஙனம் அவட்கு வலிமையைத் தந்தது அன்பேயன்றோ; ஆகவே, அந்தஅன்பைவிட வலியது ஒன்றும்இல்லை யென்றவாறு. இராமனிடத்துச் சீதைக்குஉள்ள அன்பே அவட்கு நடக்கும் வலிமையைத் தந்த தென்றபடி. சீதையும் தன்மெல்லிய பாதங்களைக் கடுநிலத்திலேவைத்து ஊன்றிக் கணவன்பின்னே சென்றாள் என்று முதல்மூன் றடிகளிற் கூறிய சிறப்புப்பொருளை, 'உறுவலி அன்பினூங் கொன்றுண்டென நுவல்வதுண்டோ' என்ற பொதுப்பொருள் சமர்த்தித்து நின்றது; வேற்றுப்பொருள்வைப்பணி. இதனை, வடநூலார் அர்த்தாந்தரந் யாஸமென்பர். சிறுவிலை பஞ்சம்; இளைத்தவயிறுஎன்று கூறுதற்காக 'க்ஷாமோ

தரம்' என்று வடமொழியிற் கூறுவதுபோல, நுண்ணியஇடையென்பதைத் தெரிவிக்க 'சிறுவிலைமருங்குல்'என்றது. சீதாபிராட்டி அருமையாகப் பாராட்டப்பட்டுவந்தனளென்பதுதோன்ற, 'செல்வமென்னும்நங்கை' என்றார். பி-ம்:—[1]நிலே. [2]இந்திர, இந்திரை. [3]செறி. [4]உளெந்துசோர. [5]நடாததலினவையுள், நடந்தெனினவையுள். [6]நீங்கி. [7]ஊநகின். [8]உணர்வதுண்டோ. (ருகO)

ருச.—கவிக்கூற்று: இராமபிரான் உதயகாலத்திற்குமுன் இரண்டுயோசனை சென்றனெனக்கூறிச் சுமந்திரன் செய்ததைச் சொல்வோமெனல்.

பரிதிவா னவனுங் கீழ்பாற் பருவரை பற்று முன்னந்
திருவினு யகனுந் தென்பால் யோசனை யிரண்டு சென்று
னருவிபாய் கண்ணும் புண்ணு யழிகின்ற மனமுந் தானுந்
[1]துரிதமான் றேரிற் [2]போனுன் செய்தது சொல்ல லுற்றும்.

(இ-ள்.) பரிதி வானவன் உம்-சூரியனும், கீழ்பால் பரு வரை பற்று முன்னம்-கிழக்குத்திக்கிலுள்ள பருத்தமலையை [உதயகிரியை] அடைவதற்கு முன்னம் [சூரியோதயத்துக்கு முன்னமே], திருவின் நாயகன் உம் - இலக்குமியின் கணவனுன ஸ்ரீராமபிரான், தென்பால்-தெற்குத்திக்கில், யோசனை இரண்டு சென்றுன்-இரண்டுயோசனைதூரம் நடந்து சென்றிட்டான்; (இனி), அருவிபாய் கண் உம்-அருவிவெள்ளம்போல (துயரக்கண்ணீரைச்)சொரிகின்ற கண்களும்,புண் ஆய் அழிகின்ற மனம் உம்-புண்பட்டுவருந்துகின்ற மனமும்,- தான்உம்-தானுமாகி, துரிதம் மான் தேரில் போனுன் - விரைந்து செல்லுகின்ற குதிரைபூட்டிய தேரின்மீது ஏறிக்கொண்டு திரும்பிச்சென்ற சுமந்திரன், செய்தது-செய்ததை, சொல்லல் உற்றும்-இனிச் சொல்வோம்; (எ-று.)

கண்ணும் மனமுந்தானும் போனுன்-திணைவிரவிச சிறப்பால் உயர்திணை முடிபேற்ற வழுவமைதி. பரிதிவானவனும், உம்மை - எதிரது தழுவியது. துரிதம்-த்வரிதம்: வடசொல். சொல்லலுற்றும் - கவிகட்குஉரிய தனித்தன்மைப்பன்மை. பி-ம்:—[1]தாகம். [2]சென்றுன். (ருகக)

ருரு.—சுமந்திரன் அயோத்திசேர்ந்து வசிட்டனிடஞ்செய்திதெரிவிக்க, அவர் வருந்துதல்.

கடிகை[1]யோ ரிரண்டு மூன்றிற் கடிமதி லயோத்தி கண்டா
னடியிணை தொழுதா னுதி முனிவனை யவனு முற்ற
படியெலாங் [2]கேட்டு நெஞ்சிற் பருவர லுழந்தான் [3]முன்னே
முடிவெலா [4]முணர்ந்தா னந்தோ முடிந்தனன் [5]மன்ன னென்றுன்.

(இ - ள்.) (சுமந்திரன்),—கடிகை ஓர் இரண்டு மூன்றில் - ஐந்துநாழிகைக்குள், கடி மதில் அயோத்தி-காவலாக அமைந்த மதிளேயுடைய அயோத்திமாநகரத்தை, கண்டான்-அடைந்து, ஆதி முனிவனை-குலகுருவாய்சசிறந்த வசிஷ்டமுனிவனை, அடி இணை தொழுதான் - உபயபாதங்களில் வணங்

கிறான்; அவன்உம் - அம்முனிவனும், உற்ற படி எலாம் கேட்டு - நிகழ்ந்த வகைமுழுவதையும் (அச்சுமந்திரனிடம்) கேட்டறிந்து, நெஞ்சில் - (தன்) மனத்தினுள்ளே, பருவரல் உழந்தான்-துன்பத்தால் வருந்தினான்; முன்னே முடிவு எலாம் உணர்ந்தான் - மேலே நிகழப்போவதையெல்லாம் அறிந்தவனாய், அந்தோ மன்னன் முடிந்தனன் என்றான் - ஐயோ! அரசன் இறந்துவிட்டானென்று கூறினான்; (எ - று.)

இராமபிரான் நகரத்துக்குத் திரும்பிவர ஒருப்படாமல் இரதத்தையும் திருப்பிவிட்டுத் தம்பியும் மனைவியுமாகக் காட்டிற்குப் போய்விட்டானென்ற செய்தியைக் கேட்டவுடனே, அரசன் இறப்பது நிச்சயமென்று வசிட்டமுனிவன் கூறினனென்பதாம். தெளிவுபற்றி, 'முடிந்தனன்' என இறந்தகாலத்தாற் கூறினார்: வழுவமைதி. இரண்டுமூன்று - உம்மைத்தொகை. இரண்டு அல்லதுமூன்றுஎனினுமாம். பண்புத்தொகையாகக் கொள்ளின், ஆறுஎன்று பொருள். பருவரல்-பரிவு வருதல்என்றுபொருளுள்ள பரி வா என்ற வினைச்சொற்கள் தொடர்ந்து விகாரப்பட்ட 'பருவா' என்பது பகுதியாக, அதனடியாகப்பிறந்த தொழிற்பெயர். முன்னேமுடிவெலாம் உணர்ந்தான் என்பதற்கு: முன்னமே தன் ஞானக்கண்ணினால் முடிவைக் கண்டறிந்தவனான வசிட்டனெனக் கொள்ளினுமாம். பி - ம்:—[1]ஒன்றிரண்டு. [2]கேட்டே, கேட்டான். [3]முன்னம். [4]உணர்ந்தே, உணர்ந்தேன். [5]அரசன். (ருகூஉ)

ருகூ.—வருந்தியவண்ணம் வசிட்டமுனிவன் சுமந்திரனோடும் அரண்மனையிற் புகுதல்.

நின்றுயர் பழியை யஞ்சி நேர்ந்திலன் றடுக்க வள்ள
லொன்றுநா னுரைத்த தோக்கான்[1]றருமத்திற் குறுதி பார்ப்பான்
வென்றவ [2]ருளரே [3]மேலை விதியினை [4]யென்று [5]விம்மி
பொன்றிணி மன்னன் கோயில் சுமந்திர னோடும் [6]புக்கான்.

(இ - ள்.) 'வள்ளல்-உதாரகுணமுடையவனாகிய தசரதன், நின்று உயர் பழியை அஞ்சி தடுக்க நேர்ந்திலன்-நிலைபெற்று வளரக்கூடிய பழிக்குப்பயப்பட்டு(இராமபிரான் காட்டிற்குச்செல்வதை)த் தடுத்தற்கு ஒருப்பட்டானில்லை: தருமத்திற்கு உறுதி பார்ப்பான் - தருமம் நிலைநிற்குந்தன்மையை நாடுபவனாகிய இராமபிரான், நான் உரைத்தல் ஒன்றுஉம் நோக்கான் நான் கூறியதைச் சிறிதும் கருதினானில்லை; மேலை விதியினை வென்றவர் உளர்ஏ - பழைய வினைக்கு(வயப்படாது அதனைக்)கடந்துநின்றவர் இவ்வுலகத்தில் எவரேனும் இருக்கின்றனரோ?' என்று-என்று சொல்லி, விம்மி-புலம்பிக்கொண்டு, சுமந்திரனோடுஉம்-சுமந்திரனென்பவனுடனே, பொன் திணி மன்னன் கோயில் - பொன்னாலியன்ற அரசமாளிகையினுள், புக்கான் - புகுந்தான்; (எ - று.)

நான்உரைத்தல்என்றது - "ஐயநீயொருவியோங்கிய, கற்றடங்காணுதியென்னிற்கண்ணகன், மற்றடந்தானையான் வாழ்கிலான்" என்று நகர்நீங்குபடலத்து வந்ததனை. அதனை அப்பிரான் நோக்காமையை "அன்னவன் பணி

தலை யேந்தியாற்றுதல்'' என்ற பாடலிற் காண்க. தரும ஸம்ஸ்தாபநஞ்செய்யத் திருவவதரித்தவனென்பான் இராமபிரானை 'தருமத்திற்குறுதிபார்ப்பான்' என்றான். ''சூழ்வினை நான்முகத்தொருவர்ச் சூழினும், ஊழ்வினையொருவரா லொழிக்கற்பாலதோ''என்று வசிட்டன் மொழியாக அங்குவந்தது ஒப்புநோக்குக. பி-ம்:—[1]தருமத்தின். [2]யாரே. [3]மேலவ். [4]என்ன. [5]விம்மா. [6]போனான். ()

## ருஎ.—தேர்கொண்டு வந்ததுகேட்டு அமைச்சர் விரைந்துவந்து சுமந்திரனிலைகண்டு தளர்தல்.

தேர்கொண்டு வள்ளல் வந்தா னென்றுதஞ் சிந்தை யுந்த
வூர்கொண்ட திங்க ளென்ன மன்னனை யுழையர் [1]சுற்றிக்
கார்கொண்ட மேனி யானைக் கண்டிலர் [2]கண்ணில் வற்றா
நீர்கொண்ட நெடுந்[3]தேர்ப் பாக னிலைகண்டே நிலையிற் றீர்ந்தார்.

(இ - ள்.) (தேர்வந்தசெய்தியை யறிந்தவுடனே),—உழையர் - மந்திரிமார்கள்,—தேர்கொண்டு வள்ளல் வந்தான் என்று தம் சிந்தை உந்த-'தேரின் மீது ஏறிக்கொண்டு இராமபிரான் திரும்பிவந்திட்டான்' என்பதனால் தமது எண்ணம் தூண்டிச்செலுத்த,—திங்கள் ஊர் கொண்ட(து)என்ன - சந்திரன் ஊர்கோளைக்கொண்டுள்ளதுபோல, மன்னனை சுற்றி - தசரத மன்னவனைச சுற்றிநின்று, கார் கொண்ட மேனியானை கண்டிலர்-கருநிறமுள்ள இராமபிரானைக் காணாதவர்களாய், கண்ணில் வற்றா நீர் கொண்ட நெடு தேர் பாகன் நிலை கண்டு - கண்களில் வற்றாத [மேன்மேற்சுரக்கின்ற] கண்ணீரைக் கொண்ட தேர்ப்பாகன் தன்மையைக்கண்டு, நிலையில் தீர்ந்தார் - (தமது) மனநிலை நீங்கப்பெற்றார்கள் [வருத்தமடைந்தார்கள்]; (எ - று.)

தேர்வந்ததுகேட்டு இராமபிரானே வந்திட்டானென்று துணிந்து மனமகிழ்ச்சியடைந்துவந்த மந்திரியர் தசரதமன்னவனைச் சூழ்ந்திருந்து, அங்கு இராமனையின்றிச் சுமந்திரன் கண்களில் நீர் தாரைதாரையாய்ப் பெருகிற்பது கண்டு தாம் கொண்ட மகிழ்ச்சிநீங்கி வருந்தின ரென்பதாம். அரசனைச் சூழ்ந்திருந்த உழையர் திங்களைச்சூழ்ந்த ஊர்கோட்கு உவமையாவர். கண்டே-செய்தி சொல்லாதிருக்கையிலேயே என்றபடி. பி - ம்:—[1]சுற்ற. [2]கண்ணீர். [3]தேரான்றன். (ருகசு)

## ருஅ.—இரதம்வந்ததென்னக்கேட்டுத் தசரதன் கண்விழித்து 'இராமன் வந்தானோ?' என்று வசிட்டனை வினவுதல்.

இரதம்வந் துற்ற தென்றாங் கியாவரு மியம்ப லோடும்
வரதன்வந் துற்றா [1]னென்ன மன்னனு மயக்கந் தீர்ந்தான்
புரைதபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான் வீரன்[2]வந் தானோ வென்றான்.

(இ - ள்.) இரதம் வந்து உற்றது என்று-(காட்டிற்குச்சென்ற) இரதமானது மீண்டுவந்து சேர்ந்ததென்று, ஆங்கு யாவர்உம் - அங்குள்ள எல்லாரும், இயம்பலோடுஉம்-சொல்லவே,—வரதன் வந்து உற்றான் என்ன மன்னன்உம்

மயக்கம் தீர்ந்தான் - இராமபிரான் வந்திட்டானென்றுகருதித் தசரதமன்னவனும் மனமயக்கந்தீர்ந்தவனாகி, புரை தபு கமலம் நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி-குற்றமற்ற தாமரைமலர்போன்ற (தன்) கண்களைச் சடக்கென விழித்துப்பார்த்து, (தன்எதிரேநின்ற), விரதம் மாதவனை கண்டான்-நோன்புகளை மேற்கொண்ட சிறந்ததவத்தினனாகிய வசிட்டமுனிவனைப் பார்த்து, வீரன் வந்தான்ஓ என்றான்-'மஹாவீரனாகிய இராமபிரான் திரும்பிவந்தானோ?' என்று வினவினான்; (எ - று.)

இராமன் வேண்டுவார் வேண்டும் வரங்களைக் கொடுப்பவனாதலால், நாட்டிற்குத்திரும்பவேணுமென்று உடன்தொடர்ந்துசென்ற நகரத்தவரின் வேண்டுகோட்கு இணங்கித் திரும்பிவந்தான்போலுமென்ற கருதினனாதலின், தசரதன் 'வரதன் வந்துற்றான்'என்று கருதினான்.பொருக்கென-விரைவுக்குறிப்பு. தவஞ்செய்கையில் மனத்தைப்புலன்வழிச்செலுத்தாமை உணவுவிலக்கல்முதலியபலவகைநியமங்களை மேற்கொண்டொழுகவேண்டுவதுஇன்றியமையாததா மாதலின்'விரதமாதவன்'என்றார். பி-ம்:-[1]என்னா.[2]வந்தனனோ.

ருகூ.—மறுமொழிசொல்லாமையால் இராமன்வாராமையுணர்ந்துமூர்ச்சித்த மன்னனது துயரைக் காணப்பொறாது முனிவன் அப்பாற்செல்லல்.

இல்லையென் [1]றுரைக்க [2]லாற்றா [3]னேங்கினன் முனிவ னின்றா
[4]னல்லவன் முகமே நம்பி [5]நடந்தில னென்னு மாற்றஞ்
சொல்லலு மரசன் சோர்ந்தான் றுய[6]ருறு முனிவ னானிவ்
வல்லல்காண் கில்லே னென்னா [7]வாண்டுநின் றகலப் போனான்.

(இ - ள்.) முனிவன் - வசிட்டமகாரிஷி,—இல்லை என்று உரைக்கல் ஆற்றான்-(இராமன்) வந்திலனென்று (தன்வாயினாற்) சொல்லப்பொறாமல், ஏங்கினன் நின்றான் - மனம்வருந்தி வாளாவிருந்தான்; நல்லவன் முகமே - நற்குணங்களையுடையவனாகிய வசிட்டமுனிவனுடைய முகமே, நம்பி நடந்திலன் என்னும் மாற்றம் சொல்லலும்-இராமபிரான் திரும்பிவந்திலனென்ற செய்தியைத் தெரிவிக்கவே,—அரசன் - தசரதன்,—சோர்ந்தான் - மூர்ச்சித்தான்; துயர் உறு முனிவன்-(மனத்தில்) துயரம் மிக்கவனான வசிட்டன்,—நான் இ அல்லல் காண்கில்லேன் என்னா - நான் இத்துயரத்தைக் கண்டு மனம்பொறேனென்றுசொல்லி, ஆண்டு நின்று-அவ்விடத்தினின்று, அகல போனான் - அப்பாற் சென்றான்; (எ - று.)

உயிர்க்குஉவப்புஉண்டாகும்போது மலர்ந்தும் துயர்நேரும்போது வாடியும்உள்ளக்கருத்தை முகம் தெரிவிக்குமாதலால், 'நல்லவன்முகமே நம்பிநடந்திலனென்னுமாற்றஞ்சொல்லலும்' எனப்பட்டது; "அடுத்ததுகாட்டும் பளிங்குபோல்நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்"என்றார், நாயனாரும். காய்தல் உவத்தலின்றி,மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்தையுடைய உரவோனாலும் ஆற்றமுடியாதாயிற்று, ஆண்டுத் தோன்றிய துயர மென்று துயரத்தின்மிகுதியை விளக்கியவாறு. பி-ம்:—

[1]உரைத்தல். [2]ஆற்றுது. [3]ஏங்கிமா. [4]வல்லவன். [5]நடந்தனன், வந்திலன். [6]பெறு. [7]ஆங்கு. (ருகூசு)

௬௦.—இராமன்முதலியோர் காட்டினிடம் சென்றமையைச்சுமந்திரன் தெரிவிக்க, மன்னவன் அத்துயரச்செய்தியா லாவியை யிழந்தல்.

நாயகன் பின்னுந் [1]தன்றேர்ப் பாகனை நோக்கி நம்பி
சேயனோ வணிய னோவென் றுரைத்தலு [2]மனையான் செய்ய
வேயுயர் [3]கானிற் றானுந் தம்பியு மிதிலைப் பொன்னும்
[4]போயின னென்றா னென்ற போழ்தத்தே யாவி போனான்.

(இ-ள்.) நாயகன் - தசரதமன்னவன், பின்உம் - மீண்டும், தன் தேர் பாகனை நோக்கி-தனக்குத்தேரோட்டுபவனாகிய சுமந்திரனைப் பார்த்து, நம்பி சேயன்ஓ அணியன்ஓ என்று உரைத்தலும் - 'இராமன் தூரத்திலுள்ளானோ? (அன்றிச்) சமீபத்திலுள்ளானோ?' என்று வினவுதலும்,—அனையான்-அந்தச் சுமந்திரன், செய்ய வேய் உயர் கானில்-நேராகவளருந்தன்மையுள்ள மூங்கில் கள் ஓங்கிவளரப்பெற்ற காட்டிலே, தான்உம்—, தம்பிஉம் மிதிலைபொன் உம்-இளையபெருமாளும் மிதிலாபுரியில் தோன்றிய இலக்குமிபோன்ற சீதை யுமாக, போயினன்—, என்றான்-என்று மறுமொழிகூறினான்; என்ற போழ் தத்துஏ-என்றுசொன்னபோதே, ஆவி போனான் - (தசரதன்) உயிர் நீங்கப் பெற்றான்; (எ - று.)

'இராமபிரான் தான் பட்டணத்திலிருந்துபுறப்பட்டதுமுதல் சுமந்திரன் புறப்படும்வரையில் இராமன்செய்த செயலையெல்லாங்கேட்டு அவற்றை நினைத்தாவது ஆறியிருக்கலாமோ?' என்ற ஓரெண்ணத்தினால் வினவ, அவ் விராமபிரான் கானகஞ்சேர்ந்தவரையிலும் நிகழ்ந்தசெய்தியைச் சொல்ல, 'காட்டில் இராமபிரான் புகுந்தான்' என்ற துயர்விளைக்குங்கடுஞ்சொல்லைக் கேட்டவுடனே தன்னையும்அறியாமல் பெருந்துயரம்பொங்க அதனால் உயி ரொழிந்தனன் தசரதன் என்று முதனூலைச் சிறிதுஒட்டிப் பொருள்விரித்து உரைத்துக்கொள்க. மிதிலைப்பொன்னுந்தம்பியுந்தானும் போயினன்-சிறப்பி னால்உயர்திணையாண்பால் முடிபேற்றது.

சுமந்திரன் இராமபிரானைவிட்டு அயோத்திக்குப்போனபோது அவனைக் கண்ட நகரத்துச் சனங்கள் மிகவருத்தமடைய,பின்பு அவன் தசரதனையணுகி இராமன்சொல்லியசெய்தியையும் சீதையின்நிலையையுந் தெரிவித்துஅயோத் தியிலுள்ளசராசரங்களெல்லாம் மனவருத்தமுற்றிருப்பதையுந் தெரிவிக்க, அத்தசரதன் மனங்கலங்கி மூர்ச்சித்தான்: கௌசலை 'பர்த்தாவுக்கும் தீங்கு நேருமோ?'என்று அஞ்சித் திகைத்துப் பின் அச்சுமந்திரன்சொல்லிய இராம னதுசெய்தியைக் கேட்டதனால் மிகவருந்தித்துயருறுகையில், அவளை அச்சும ந்திரன் 'இராமலட்சுமணசீதைகள் வனவாசத்தால்வருந்தார்'என்று எடுத்துக் காட்டித்தேற்ற,பிறகு அந்தக்கௌசலை இராமனைக் காட்டிற்குஅனுப்பியதைச்

சொல்லித் தசரதனிடம்புலம்ப,மீண்டும் அரசன்மனங்கலங்கிமூர்ச்சித்து வெகு நேரங்கழித்து மூர்ச்சைதெளிய, பின்பு அவ்வரசனிடத்துத் தான் சிறிது நிஷ்டூரமாகக் கூறியதைப் பொறுக்குமாறுவேண்டினள். அப்பால் மன்னவன் துயரமுற்றவண்ணமே துயில்கொண்டிருந்து பிறகுவிழித்துத் தான் பூர்வத்தில் இவ்வண்ணம் புத்திரசோகம்தோன்றுமாறு, நீர்மொள்ளும் இருடிகுமரனை நீர்பருகுகின்ற யானையென்றுமாறுகக்கருதிக் கொன்ற செய்தியைக் கௌசலையிடம் கூறித் தான் முன்செய்த அத்தீவினைக்கு இரங்குவதும் இராமனைக்குறித்துக் கதறுவதுமாக இருந்து, கைகேயியைப்பழித்தவண்ணம் கௌசலையையும்,சுமித்திரையையும் பார்த்துக்கொண்டே துயரத்தைத் தாங்க மாட்டாமல் ஆவிபோகப்பெற்றான்என்ற விஷயம் முதனூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பி-ம்:—[1]நற்றேர்ப். [2]தேர்வலானும் [3]கானம். [4]போயினர்.

சுக.—தசரதனை வானோர் மீளாவுலகத்திற் சேர்த்தல்.

இந்திரன் முதல்வ [1]ராய கடவுளர் யாரு மீண்டிச்
சந்திர [2]னனைய தாங்கோர் [3]மானத்தின் றலையிற் றூங்கி
வந்தன னெந்தை தந்தை யெனமனங் களித்து வள்ள
லுந்தியா னுலகி னும்பர் [4]மீள்கிலா வுலகத் துய்த்தார்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது அவ்விடத்து, இந்திரன் முதல்வர் ஆய கடவுளர் யார்உம் - தேவேந்திரன் முதலாகவுள்ள வானவர்யாவரும், ஈண்டி - திரண்டுவந்து, எந்தை தந்தை வந்தனன் என - எமதுதந்தையான திருமாலின் தந்தையாகிய தசரதன் (எம்மிடத்துக்கு) வந்திடலானுனென்று, மனம் களித்து - மனம்மகிழ்ந்து, சந்திரன் அனையது ஓர் மானத்தின்தலையில் தாங்கி - சந்திரனையொத்து [வெண்ணிறத்ததாக] உள்ள ஒப்பற்ற விமானத்திலே (அவனை யெழுந்தருளப்பண்ணித் தாங்கள் அதனைத்) தாங்கிக்கொண்டு,—வள்ளல் - அந்தத்தசரதனை, உந்தியான் உலகின் உம்பர் - (திருமாலினது) நாபிகமலத்தில் தோன்றியவனுகிய பிரமதேவனது உலகத்துக்கும் மேலேயுள்ள, மீள்கிலா உலகத்து - (தன்னையடைந்தவர்) மீளுதலில்லாத உலகத்தில், உய்த்தார் - கொண்டுசேர்த்தனர்; (எ - று.)

யாவருக்கும் புத்திமுத்திகளைத் தரவல்ல பரம்பொருளாகிய இராமபிரானைப் பெற்ற தந்தைக்குப் பரமபதங்கிடைப்பது திண்ணமென்னுங் கருத்தால், கம்பர் இவ்வாறு கூறினர்;இவ்விஷயம் முதனூலிற் காணப்படவில்லை. மானம் - முதற்குறைவிகாரம். 'மீள்கிலாவுலகத்துய்த்தார்' என்று இங்குக் கூறிவிட்டு,மேல்மீட்சிப்படலத்தில் இராவணனைவென்ற இராமபிரானை நான்முகன்முதலிய தேவர்கள்வந்து தொழுது போற்றினமையைச் சொல்லிய போது "மெய்யினுக்குயிரையீந்த வேந்தர்கோன் விமானத்தெய்த" என்று தசரதன் இராமனைக்காணுமாறு விமானத்தின்மீதுவந்தா னென்று கூறியது எங்ஙனம் பொருந்துமெனின்?—மீள்கிலா உலகம் என்பதற்குப்பொருள் - சுவர்க்கம் முதலிய நல்லுலகத்தைச் சேர்ந்தவர் அந்த நல்வினை தீர்ந்தபெர

மூது அங்குநின்று மீண்டுகருமவயத்தராகிப் பிறப்பது முதலிய துன்பங்கட்கு இடமாவதுபோலஅல்லாமல் தன்னையடைந்தவர் என்ஞான்றும் நிலையாக இருத்தற்கு உரிய உலகு என்பதேயாகும்; ஆதலால், தாம் எங்குச்செல்ல வேணுமென்றாலும் அங்குச் செல்லமுடியாது நிறைப்பட்டிருக்கும் உலகு என்பது பொருளல்ல: வைகுந்தம் புக்கவர் வினைவயத்தராய் உழலாமல் தாம் விரும்பிய வண்ணம் சேர வல்லமையுள்ளவரென்பதையும், அன்னார் இந்த உலகத்தைப்பார்த்து அருவருப்புக்கொள்வரென்பதையும், திருவேங்கடம் முதலிய திவ்யதேசங்களில் அர்ச்சாவதாரங்கொண்டுள்ள எம்பெருமான்களுடைய சௌலப்பியம் முதலிய குணங்களி லீடுபடுவரென்பதையும், விபவாவதாரங்களிலுள்ள சௌசீல்யம் முதலிய குணங்களிலீடுபடுவதுண்டு என்பதையும் நூல்களிற் காணலாம். பி-ம்:—[1]ஆன. [2]அனைய. [3]விமானத்தின். [4]பேர்நிலா, மீள்விலா. (ருகூஅ)

சுஉ.— கோசலை தசரதன் மாண்டமையையறிந்து வருந்துதல்.

[1]உயிர்ப்பிலன் [2]றுடிப்பு மில்ல [3]னென்றுணர்ந் துருவந் தீண்டி
யயிர்த்தன ணோக்கி மன்னற் காருயி ரின்மை தேறி
மயிற்குல மனைய நங்கை கோசலை மறுகி வீழ்ந்தாள்
வெயிற்சுடு கோடை தன்னி லென்பிலா வுயிரின் வேவாள்.

(இ-ள்.) குலம் மயில் அனைய நங்கை கோசலை-சிறந்த மயிற்பறவையை யொத்த சாயலையுடைய பெண்கள்நாயகமாகிய கௌசலைப்பிராட்டி,—அயிர்த்தனள்-(தசரதன்நிலையைக் கண்டு மனத்திற்) சந்தேகங்கொண்டவளாய், உருவம் தீண்டி நோக்கி-(அத்தசரதனது) உடம்பைத் தொட்டுப்பார்த்து,'உயிர்ப்பு இலன்-(மூக்கில்) சுவாசம் வரப்பெற்றிலன்; துடிப்புஉம் இல்லன்-(மார்புமுதலிய இடங்களில்)நாடி முதலியன அடித்துக்கொள்ளுதலும் இல்லாமலிருக்கிறான்,' என்று உணர்ந்து-என்றுகண்டறிந்து, மன்னற்கு ஆர் உயிர் இன்மை தேறி-தசரதமன்னவனுக்கு அருமையானஉயிர் நீங்கிவிட்டதென்பதை நிச்சயித்து, மறுகி - மனங்கலங்கி, வீழ்ந்தாள் - கீழ்வீழ்ந்து, வெயில் சுடு கோடை தன்னில் என்பு இலா உயிரின் வேவாள் - வெயில் கொளுத்துகின்ற முதுவேனிற்காலத்தில் (அவ்வெயிலிலே அகப்பட்ட) என்பில்லாத பிராணியைப் போல [புழுப்போல]த் துடிப்பவளானாள்; (எ - று.)

மரணமடைந்தநாள் விடியுங்காலத்தில் வந்தியர்முதலியோர் தோத்திரப் பாடல்களைப்பாடுதல்முதலிய அரசர்க்குஉரிய மரியாதைகளைச்செய்தும் தசரத மன்னவன் எழுந்துவராமலிருக்கவே, அந்தப்புரத்திருந்த மகளிர்கள் மெல்லியசொற்களால் எழுப்பியும் எழுந்திராததுகண்டு அரசனையணுகி நிதானித்துப்பார்த்து மூச்சுமுதலிய துயிலுக்குஉரிய குறிகள் ஒன்றும்இல்லாததுகண்டு மெல்லமெல்ல மன்னவன் மரணமடைந்திட்டானென்றே அறுதியிட்டு, துயரின்மிகுதியால் மெய்ம்மறந்து அயர்ந்துகிடக்குங் கௌசலையைப்பார்த்துக்கதறியழ,அந்தக்கோசலை அவ்வொலியாற் கண்விழித்தெழுந்து அரசனை உற்றுப்

பார்த்தும் பரிசித்துப்பார்த்தும் மன்னன் மரணமடைந்தானென்றே நிச்சயித்துக் கதறிக்கொண்டு புலம்பலாயின ளென்று முதனூலிற் கூறியுள்ளது. துயரத்தினால்வருந்துங் கௌசலைக்கு, நல்லவெயிற்காலத்திற் கடுவெயிலிலகப்பட்டுத் துடிக்கும் புழுவை உவமை கூறினர். மயிற்குலம் - மயிற்கூட்டமென்று சொல்வதிற் சிறப்பில்லை. பி-ம்:—[1]உயிர்த்திலன். [2]உணர்வுமில்லன், உணர்வுமில்லை. [3]என. (ருகூகூ)

கூரு.—கௌசலை புலம்பத்தொடங்குதல்.

இருந்தவந் தணனோ டெல்லா மீன்றவன் றன்னை [1]யீனப்
பெருந்தவஞ் செய்த நங்கை [2]கணவனிற் பிரிந்து தெய்வ
மருந்திழந் தவரின் விம்மி மணிபிரி யரவின் [3]மாந்தி
யருந்துணை [4]யிழந்த வன்றிற் பெடையென வரற்ற லுற்றாள்.

(இ - ள்.) இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன்தன்னை ஈன பெருந்தவம் செய்த நங்கை-என்றும் இருப்பவனாகிய பிரமதேவனோடு எல்லாவுலகங்களையும் தந்தருளியவனாகிய திருமாலைப் புதல்வனாகப்பெறுமாறு மிக்க தவஞ்செய்த பெண்களிற் சிறந்த கௌசலை, கணவனின் பிரிந்து-கணவனை நீங்கப்பெற்று, தெய்வம் மருந்து இழந்தவரின் விம்மி மணி பிரி அரவின் மாந்தி - தேவாமிருதத்தை யிழந்தவர்போன்று வருந்தியும் (தன்னுச்சியிலிருக்கும்) மாணிக்கத்தை யிழக்கப்பெற்ற சர்ப்பம்போல மயங்கியுமிருந்து, (பிறகு), அருந்துணை இழந்த அன்றில் பெடை என - (தன்னுடைய) அருமையான ஆணை யிழக்கப்பெற்ற பெண்ணன்றிற் பறவைபோல, அரற்றல் உற்றாள் - கதறத்தொடங்கினாள்; (எ-று.)—கதறுவதை மேல் ஆறுகவிகளிற் காண்க.

பர்த்தாவையே தனக்குப் போக்கியமாகவும் அலங்காரமாகவும் எல்லாமுமாகவும் பாராட்டித் தன்புதல்வனையும் பிரிந்திருந்த பதிவிரதாசிரோமணியாகிய கௌசலை, அந்தக் கணவனையும் இழக்க நேர்ந்ததனால், அரிதிற்பெற்றுத் தன்கைப்பட்ட தேவாமிருதம் கைவிஞ்சிப் போனதுபோலவும் அரவம் தன்னுச்சி மாணிக்கத்தையிழந்ததுபோலவும் மிகவும் வருந்தி, துணையையிழந்த அன்றிற் பேடுபோலக் கதறலாயின ளென்பதாம். மணியிழந்தநாகம் வருந்துவதனை "அருமணியிழந்தோர் நாக மலமருகின்றது" என்றவிடத்துங் காண்க. பிரமதேவன் புராணமுனி என்று கூறப்படுவனாதலால், அவனை 'இருந்தவந்தணன்' என்றார். எல்லாவற்றையும் ஈன்ற கடவுளைப் புதல்வனாகப் பெறுவது பெருந்தவத்தின் காரியமென்பது கூறாமலே விளங்கும். பி-ம்:—[1]ஈன்ற. [2]கணவனைப். [3]மாழ்கி. [4]பிறிந்த, பிரிந்த. (கூ௦௦)

வேறு.

கூச.—இதுமுதல்ஆறுகவிகள் - கணவனையிழந்த கோசலையின்புலம்பல்.

தானே தானே தஞ்சமி லாதான் [1]றகைவில்லான்
போனான் போனா னெங்களை [2]நீத்துப் பொழுதென்னா
வானீர் சுண்டி மண்ணற [3]வற்றி மறுகுற்ற
மீனே [4]யென்ன மெய்தடு மாறி [5]விழுகின்றாள்.

(இ-ள்.) 'தஞ்சம் இலாதான் - தாழ்வு இல்லாதவனும், தகை வில்லான்- பெருமைக்குணமுடைய வில்லையுடையவனுமாகிய மன்னவன், இப்பொழுது—, எங்களை நீத்து—, தானே தானே போனான் போனான் - ஒருவியாதியுமில்லாமலே தானேயிறந்திட்டான்,' என்னா - என்றுகூறி,—வான் நீர் சுண்டி - வானினின்று பெய்யும் மழைநீரும் இன்றி, மண் அற வற்றி - பூமியிலும் (தான்வாழும் நீரும்) அடியோடு வற்றியதனால், மறுகுற்ற-நிலைதடுமாறிய, மீன் ஏ என்ன - மச்சம் போல, மெய் தடுமாறி விழுகின்றாள் - உடம்பு தடுமாறி விழுகின்றவளானாள், (கௌசலை); (எ - று.)

நீர் வாழுயிரான மச்சத்துக்கு வானீரில்லாவிடினே நீர்வாழ்வது வருத்தமாயிருக்கும்; அவ்வானீரில்லாமையோடு தான் வாழ்கின்ற நீரும் மாறினால் நீர்வாழுயிரான அம்மீன் தடுமாறுவதுபோல, இராமபிரானைப் பிரிந்ததனால் ஏற்கவேவருத்தமுற்றிருந்த கௌசலை இப்போது தான் வாழிடமானகணவனையும் இழந்ததனால் மனங்கலங்கித் தடுமாறினளென்று உவமானப்பொருத்தங் காண்க. சுண்டி வற்றி என்ற செய்தெனெச்சங்கள், காரணப்பொருளன. முதலடியில் [1]தகவில்லான்என்ற பாடத்துக்கு-இராமனைக் காட்டிற்கு அனுப்பியதனால் தகுதியற்றவனாகிய மன்னவன், தஞ்சம் இலாதான் - தன்னைக் காப்பவர் இல்லாதவனாகி, தானே தானே போனான்போனான் - தானே தற்கொலைசெய்துகொண்டாற்போல இறந்திட்டான் என்று பொருள்காண்க. அவலத்தினால், தானேதானே போனான்போனான் என்ற அடுக்குகள் வந்தன. சிலபிரதிகளில் முறையே "வடித்தாழ்" (சுஎ) "நோயும்" (சுசு) என்ற பாடல்கள்இருக்க, அவற்றின்பின் இப்பாடல் காணப்படுகின்றது. பி-ம்:— [2]நீக்கி. [3]வற்றா, வற்ற. [4]போல. [5]மெலிகின்றாள். (சுOக)

சுஉ. [1]ஒன்றா நன்னாட் டுய்க்குவ ரிந்நாட் டுயிர்காப்பார்
[2]அன்றே மக்கட் பெற்றுயிர் வாழ்வார்க் [3]கவ[4]முண்டே
யின்றே வந்தீண் டஞ்ச [5]லெனாதெம் மகனென்பான்
கொன்றா [6]னன்றே தந்தையை யென்றாள் குலைகின்றாள்.

(இ - ள்.) இ நாட்டு உயிர் காப்பார் - இந்நாட்டிலே பிராணிகளைப் பாதுகாப்பவராகிய அரசர், ஒன்றுஆ - ஒருதலையாக, நல் நாடு - வானுலகத்து நாட்டிலும், உய்க்குவர்அன்றே - (அரசு) செலுத்துவார்களன்றோ; (மேலும்), மக்கள் பெற்று உயிர் வாழ்வார்க்கு-உயிருடன் வாழ்ந்திருந்து மக்களைப்பெற்ற மானுடர்க்கு, அவம் உண்டுஏ - நல்லுலகமில்லாதுபோவது நேர்படுமோ? [நேராதென்றபடி]; (ஆயினும்), எம்மகன் என்பான் - எமது மகன், இன்றுஏ ஈண்டு வந்து - (அரசன் உயிர்போவதாயிருந்த) இன்றைத்தினமே இங்கு வந்து, அஞ்சல் எனாது - '(யான்பிரிந்து சென்றிட்டேனென்று என் பிரிவுத் துயருக்கு) அஞ்சவேண்டா' (யான் வந்திட்டேன்) என்று சொல்லாமையால், தந்தையை - (தன்) தந்தையாரை, கொன்றான் அன்றே உயிர்நீங்குமாறு செய்தானன்றோ? என்றாள்-என்று (கௌசலை) வாய்விட்டுக் கதறுபவளாய், குலைகின்றாள் - (துயரத்தினால்) நடுங்குபவளானாள்; (எ - று.)

இந்தக்கோசலநாட்டில் அரசுபுரியும் மன்னவர் மறுமையில் வானுலகத்தும் அரசுபுரிவாரேயன்றித் தீக்கதிக்கட் செல்லார்;மேலும் புதல்வரைப்பெற்றோர்க்குத் தீக்கதியில்லை யென்பதும் நூல்களிற் பிரசித்தம்; ஆகவே, தசரத மன்னவர் நற்கதிசேர்ந்தாரோ இல்லையோ என்ற கவலையில்லை;ஆயினும், தீக்கதியிற் புகாது காப்பவனென்று பிரசித்தனான அந்தளனதுகுமாரன் மன்னர் பெருந்துயரடைந்து சாகின்றநிலையைச் சார்ந்தபோதுகிட்டிவந்து'அஞ்சாதே' என்று சொல்லாமல் அம்மன்னவரை உயிரொழியுமாறுசெய்தானே! இதுவே என் துயரத்தை மிகுவிக்கின்றதென்றுசொல்லிக் கௌசலைபுலம்பினளென்க. [1]ஒன்றோஎன்ற பாடத்தில், முன்னிரண்டடிகட்கு-(புத்திரராற்பெறும்) பயன் ஒன்றுதானோ? [ஒன்றன்று: பலவாகும்]; புத்திரர் தம்மைப்பெற்றோரை நற்கதியிற்சேர்ப்பார்: இம்மையிலும் (பெற்றோரிருக்குமளவும்) அவரைப்பாது காப்பாரன்றோ? ஆதலால், மக்களைப்பெற்றோர்க்கு அவமுண்டோ? என்றும் உரைக்கலாம். பி-ம்:—[1]ஒன்றோ, ஒன்றே. [2]அன்றேல். [3]அறம். [4]உண்டோ. [5]எனதே, எனதென். [6]என்றே, அந்தோ, அன்றோ. (சுOஉ)

சுசு. நோயும் [1]மின்றி நோன்கதிர் வாள்வே லிவை[2]யின்றி
மாயுந் [3]தன்மை மக்களி [4]னோலோ மறமன்ன
[5]னேயுஞ் [6]ஞெண்டு மிப்பியு மாகங் கனிவாழை
வேயும் போன்றா னென்று [7]மயங்கா விழுகின்றாள்.

(இ - ள்.) 'நோய் உம் இன்றி-(மரணமடைதற்குஏதுவான உடற்)பிணியால் இறத்தலும் இல்லாமல், நோன் கதிர் வாள் வேல் இவை இன்றி - சிறந்த ஒளியையுடைய வாட்படை வேற்படை என்ற இவைகளால் இறத்தலும் இல்லாமல், மாயும் தன்மை - மரணத்தையடையக்கூடியநிலை, மக்களினால் ஓ-பெற்ற புத்திரரால் நேர்வதோ? (இது என்ன அநியாயம்!!) மறம் மன்னன் - வலிமையையுடைய தசரதமன்னவன்,—ஏயும் ஞெண்டுஉம்-பொருந்திய நண்டும், இப்பியும்-முத்துச்சிப்பியும், ஆகம் கனி வாழை (உம்) - தன்னிடத்துக் கனியைக் கொண்ட வாழையும், வேய்உம்-மூங்கிலும், போன்றான்-(கொண்ட கருவினால் அழிவதுபோல) ஆனான்,' என்று—, மயங்கா - மயங்கி, விழுகின்றாள் - வீழ்பவளும் ஆனாள்; (எ - று.)

உலகத்திலே நோயால் இறப்பது என்பது, மாந்தர்கட்கு இயற்கை: மன்னவர்க்கோ முனைமுகத்துச்சென்று வில்வாள்முதலியபடைக்கலங்களால் இறத்தல் சிறந்ததாம்: இவ்விருவகையானும் அல்லாமல் தன்மகன்மூலமாக [மகனைப்பிரிந்த காரணமாக] இந்தத்தசரதமன்னவனுக்கு மரணம் நேர்ந்ததே! என்றுபுலம்பினளென்க. படைக்கலத்தால் இறந்துபடுதலே மன்னவர்க்குச் சிறப்பாதலால், அங்ஙனம் படைக்கலத்தால் இறவாது அரசகுலத்தவர் நோயால் ஒருகால் இறந்துபடினும் அம்மன்னவரை அந்தணர் தருப்பையிற்கிடத்தி வாளாற்போழ்ந்து 'போரிலிறந்தவர் புக்க உலகம் புகுக'என்று கூறுதலும் மரபாயிருந்த தென்பதை, "மன்னர், நோய்ப்பால்விளிந்தயாக்கைதழீஇக்,

காதன்மறந்தவர் தீதுமருங்கறுமா, றறம்புரிகொள்கை நான்மறைமுதல்வர், திறம்புரிபசும்புல் பரப்பினர்கிடத்தி, மறங்கந்தாக நல்லமர்வீழ்ந்த, நீள் கழன்மறவர் செல்வுழிச் செல்கென,வாள்போழ்ந்தடக்கலுமுய்ந்தனர்' என்ற புறநானூற்றாலும், "கொற்றங்கொண்டு குடிபுறங்காத்துச், செற்றத்தெவ்வர் தேயந்தமதாக்கியுந், தருப்பையிற்கிடத்தி வாளிற் போழ்ந்து, செருப்புகன் மன்னர் செல்வுழிச்செல்கென, மூத்துவிளித லிக்குடிப் பிறந்தோர்க்கு, நாப் புடைபெயராது நாணுத்தகவுடைத்தே" என்ற மணிமேகலையாலும் உணர்க. ஞெண்டுமுதலியவற்றினின்றுதோன்றுங் கரு அவற்றையழிக்கு மென்பது பிரசித்தம்; இதனை, "ஞெண்டுசிப்பிவேய்கதலி நாசமுறுங் காலத்துக், கொண்ட கருவழிக்குங்கொள்கைபோல்"என்றதனானும் அறியலாம். [5]காயும்புள்ளிக்கர்க் கடநாகங் கனிவாழை என்றபாடத்திற்கு-கர்க்கடமும்நாகமும்என்பவை கரு விஞற்சாதல் ஐதிகவுவமானமெனவும், வாழையும் வேயும் பிரதியட்சவுவமா னமெனவுங் கூறினருமுளர்; நாகம் கொண்ட கருவினல் இறத்தல் ஐதிக மாகவும் வழங்குவதாகத் தெரியவில்லை: ஆதலால், கனிவாழைநாகம் எனக் கூட்டிக் கனியாதற்குஉரிய வாழைமரமென்னலாம்: நாகம் - நகம் என்பதன் நீட்டல்: நகம் - மரமென்க. இனி, நாகம்-நாகம்போற் கொட்டப்பட்டார்க்கு வருத்தத்தை யுண்டாக்கக்கூடிய விருச்சிகமென்பாருமுளர். பி-ம்:—[1]அன் றேல், அன்றி. [2]அன்றி. [3]செல்வம். [4]ஆக, ஆம், ஆகி. [5]காயும். [6]புள்ளிக்கற் புடம், புள்ளிக்கற்றடி. [7]மயங்கி. (கூ௦௬)

கூ௭. வடித்தாழ் கூந்தற் கேகயன் மாதே மதியாலே
பிடித்தாய் வையம் பெற்றனை பேரா வரமின்னே
முடித்தா யன்றே மந்திர மென்றாண் முகில்வாய்மின்
றுடித்தா லென்ன மன்னவன் மார்பிற் றுவள்கின்றாள்.

(இ-ள்.)முகில்வாய் மின் துடித்தால் என்ன மன்னவன் மார்பில் துவள் கின்றாள் - முகிலினிடத்து மின்னல் துவள்வதுபோலத் தசரதமன்னவன் மார்பிலேகிடந்து (துயரத்தால் துவள்பவளாகிய கோசலை, (கைகேயியைப் பார்த்து), 'வடி தாழ் கூந்தல் கேகயன் மாதே-அழகுபெற்றுத் தொங்குகின்ற கூந்தலையுடைய கேகயவரசன் புதல்வியே! மதியாலே-(உன்) புத்திவல்லமை யாலே, வையம் பிடித்தாய் - பூமியைக் கைப்பற்றிக்கொண்டாய்; (அங்ஙனம் கைப்பற்றுமாறு), பேரா வரம் பெற்றனை-மாறு சொல்லமுடியாத வரத்தை யடைந்தாய்;இன்னே மந்திரம் முடித்தாய் அன்றே-இப்போதே உன் ஆலோ சனையை முடித்தாயல்லவா!' என்றாள்-என்றும் கூறினாள்; (எ - று.)

கௌசலை தசரதனதுமார்பில் வீழ்ந்து புரண்டுபுலம்பும்போது கைகேயி இருந்தாளைப் பார்த்து, 'அடி! கைகேயி! நீ நல்லதந்திரஞ்செய்து மாறு கூற முடியாத வரமென்ற ஒன்றைப்பற்றி இராச்சியத்தைக்கைப்பற்றி எடுத்தகாரி யத்தை நன்குமுடித்தாய்'என்று அரசன் இறப்பதற்குக்காரணம் அவளென்பது படக் குத்துப்பாடாகக் கூறினளென்க. வால்மீகிராமாயணத்தில் கௌசலை புலம்பும்போது மன்னவனது தலையைத் தன்மடிமேல் வைத்துக்கொண்டு

கைகேயியைநோக்கி"கைகேயி!உன்கருத்து நிறைவேறிற்று: கொடியதன்மை யுடையவளே! பிடிவாதமாக இருந்து உன்முயற்சியை நிறைவேற்றிக்கொண் டாயல்லவா! மன்னவனைப் போக்கினை. இராமனும், இல்லை. இனி இராச்சி யம் முழுவதையும் உன்தலையிற்றானே கட்டிக்கொண்டு அனுபவிப்பாய்' என் பது முதலாகக் கூறுமாற்றைக் காணலாம். வடிதல்-அழகுபெறுதலென்னும் பொருளதாதலை "வடுவின்று வடிந்தயாக்கையன்" என்ற புறநானூற்றாலும் றியலாம். (௬௦௪)

௬௪. அருந்தேரானைச் சம்பரனைப்பண் டமர்வென்றா
யிருந்தார் வானோ ருன்னரு ளாலே யினி[1]தன்னோர்
விருந்தா கின்றா யென்றன ளேழுத் தரசொன்றைப்
[2]பிரிந்தா ரன்பிற் [3]றாழ்பிடி யென்னப் [4]பிரிவுற்றாள்.

(இ-ள்.) வேழத்து அரசு ஒன்றை-ஒப்பற்ற அரசயானையை, பிரிந்து—, ஆர் அன்பில் தாழ்-நிறைந்த அன்பினால் மனந்தளர்கின்ற,பிடி என்ன-பெண் யானைபோல, பிரிவு உற்றாள்-(கணவனைப்) பிரிந்த கௌசலை,-அரு தேரானை சம்பரனை-(தன்னைத்தொடர்ந்து வெல்லுதற்குக்கூடாத)அருமையான தேரிற் சென்றுபொருத சம்பராசுரனை, பண்டு - முற்காலத்து, அமர் வென்றாய் - போரில் வென்றவனே! உன் அருளாலே வானோர் இனிது இருந்தார் - உன் னுடைய கருணையினாலே தேவர்கள் (அந்தச் சம்பராசுரனால் தமக்கு உண்டா யிருந்த வருத்தம்நீங்கிச்) சௌக்கியமாக (இப்போது) இருக்கின்றார்கள்; அன் னோர் விருந்து ஆகின்றாய் - (அப்படி உன்னாலே உபகாரம்பெற்ற) அத்தேவர் கட்கு விருந்தினனாகின்றாய்,' என்றனள் - என்றுங் கூறினாள்; (எ - று.)

வானவர்கள் உன்னால் நன்மையடைந்து தம்மரசு நிலைநிற்பதனால் தாம் தம்முடையஇடத்தில் இனிதாகஇருக்க, அத்தேவர்கட்கும் உதவும் வல்லமை யுள்ள நீ இவ்வுலகத்திற்றானே இனிதிராமல் அவ்வானுலகத்தார்க்கு விருந் தாகச் சென்றாயோ?என்று புலம்பினாள் கௌசலை யென்க. பி-ம்:—[1]இந்நாள். [2]பெருந்தாழன்பில். [3]சூழ். [5]புரள்கின்றாள். (௬௦௫)

௬௯. வேள்விச் செல்வந் துய்த்திகொன் மெய்ம்மைத் துணை[1]யின்
[2]சூழ்வுச் செல்வந் துய்த்திகொ லோவா மனு [3]நூலின் [மைச்
[4]வாழ்வுச் செல்வந் துய்த்திகொன் [5]முன்னென் றனள்வானோர்
கேள்விச் செல்வந் துய்க்க வயிற்றோர் [6]கிளைதந்தாள்.

(இ - ள்.) வானோர் - தேவர்களும், கேள்வி செல்வம் - வேதத்தின்செல் வமாகிய பரம்பொருளை,துய்க்க-(கண்ணாற் கண்டு)அனுபவிக்கும்படி,வயிற்று- (தன்) வயிற்றிலிருந்து, ஓர் கிளை-ஒப்பற்ற புதல்வனை, தந்தாள் - பெற்றவ ளாகிய கௌசலை,—(இறந்த மன்னவனைக்குறித்து),'முன்-முன்னே(நீ செய் துள்ள), வேள்வி செல்வம்-யாகங்களின்பயனை, துய்த்திகொல்-அநுபவிக்கச் சென்றாயோ? மெய்ம்மை - சத்தியத்தைமேற்கொண்டதனாலாகிய, துணை

இன்மை சூழ்வு செல்வம் - ஒப்பற்றதாய்ச் சூழ்தலையுடைய பயனை, துய்த்தி கொல் - அநுபவிக்கச்சென்றாயோ? தோலா மனு நூலின் வாழ்வு செல்வம் - இழிவுபடுதலில்லாத மனுதருமசாத்திரத்தின் முறைப்படியே வாழ்தலாலான பயனை, துய்த்தி கொல்-,' என்றனள் - என்று புலம்பலானாள்; (எ - று.)

வேள்விசெய்தல் சத்தியமேயுரைத்தல் மனுமுறைப்படியொழுகுதல் என்பவற்றை முன் மேற்கொண்டிருந்தாயாதலால், அந்த வேள்விப்பயனையோ, அல்லது சத்தியத்தின் பயனையோ, அன்றி மநுதருமசாஸ்திரப்படி நடந்ததன் பயனையோ அநுபவிக்குமாறு சென்றாய்போலு மெனப் புலம்பினள் கௌசலையென்க. "யாருஞ்செய்யாதயாக மிவன்செய்துமறந்த" என்று அரசியற்படலத்திற் கூறியதனால், தசரதசக்ரவர்த்தி பலவகையாகங்களையும் இயற்றியுள்ளா னென்பது, பெறப்படும். ஸ்ருதி என்று வேதத்திற்கு வடமொழியில் ஒருபெயராதலால், அச்சொல்லின் மொழிபெயர்ப்பாக 'கேள்வி' என்றார்: கேள்வி யென்பது வேதமென்ற பொருளில் வருதலை "கெடுவில் கேள்வியு ணடுவாகுதலும்" என்ற பரிபாடலிலும் காண்க. செல்வம் - பூமியினுள்ளே மறைந்துகிடக்கும் நிதிபோல வேதத்தின் உட்பொருளாய் மறைந்திருக்குங் கடவுள். கிளை என்ற சொல்-கிளைஞருள் ஒருவனாகிய மக னென்ற பொருளைத் தந்தது. பி-ம்:—[1]இன்பம். [2]சூழி, சூழ்வின். [3]நூலால். [4]வாழிச். [5]மன். [6]கிரி. (௬௦௬)

வேறு.

## ௭௦.—கோசலையும் சுமித்திரையும் புலம்புகையில் மற்றைத் தேவிமார் திரண்டுவந்து புலம்புதல்.

ஆழி வேந்தன் பெருந்தேவி [1]யன்ன பன்னி யழுதரற்றத்
தோழி யன்ன சுமித்திரையுந் துளங்கி யேங்கி யுயிர்சோர
வூழி [2]திரிவ தெனக்கோயி லுலையும் வேலை மற்றொழிந்த
மாழை [3]யுண்கட் டேவியரு மயிலின் குழாத்தின் வந்திரைத்தார்.

(இ - ள்.) ஆழி வேந்தன் பெரு தேவி - ஆஞ்ஞாசக்கரத்தைக்கொண்ட தசரதமன்னவனது தேவிமாருள் மூத்தவளாகிய கௌசலை,-அன்ன பன்னி- அவ்வாறான சொற்களைச் சொல்லி, அழுது அரற்ற - புலம்பிக் கதற,-(அப்போது), தோழி அன்ன சுமத்திரைஉம் - (அந்தக் கௌசலாதேவிக்குத் தோழிபோல்பவளான சுமத்திராதேவியும், துளங்கி ஏங்கி உயிர் சோர - மனம் வருந்திப் புலம்பி உயிர்தளர்ந்திருக்க [மூர்ச்சித்திருக்க],-ஊழி திரிவது என கோயில் உலையும் வேலை - யுகம்முடிவதுபோல அரண்மனை (நிலைமாறி) வருத்தமடைந்த அப்பொழுது,ஒழிந்த மாழை உண் கண் தேவியர் உம்-மற்றுமுள்ளவரான மாவடுவையொத்து மையுண்டகண்களையுடையதேவிமார்களும், மயிலின் குழாத்தின் வந்து - மயிற்பறவைகளின் கூட்டம்போலத் திரண்டு வந்து, இரைத்தார் - பேரொலியுண்டாகுமாறு அழுதார்கள்; (எ - று.)— மற்று - அசை.

கீழ்க் கோசலை புலம்பியதைக்கூறி, அவளுடனே சுமித்திரையும் தோழி போல் அழுது உயிர் சோர்ந்தாளெனச் சுமித்திரை கோசலையுடன் புலம்பியதை முன்னிரண்டடிகளாற் கூறினார். இதுவரையிற் பெருமகிழ்ச்சியுடனிருந்த மன்னவனதுகோயில் இப்போது அந்நிலைமாறியதனால், 'ஊழிதிரிவதெனக் கோயிலுலையும்வேலை' என்றது. பி-ம்:—[1]அனைய. [2]பேர்வது. [3]ஒண்.

## எக.—திரண்டதேவியர் சககமனஞ்செய்யுமாறு மனவுறுதிகொள்ளுதல்.

துஞ்சி னானைத் தம்முயிரின் றுணையை கண்டார் துணுக்கத்தா
னஞ்சு [1]நுகர்ந்தா ரென[2]வுடல [3]நடுங்கா நின்றா ரென்றாலு
மஞ்சி [4]யழுங்கி விழுந்திலரா லன்பிற் றறுகண் பிறிதுண்டோ
வஞ்ச மில்லா மனத்தானை வானிற் [5]றொடர்வான் மனம்வலித்தார்.

(இ - ள்.) (அங்ஙனம் அரற்றிய அம்மங்கைமார்),— துஞ்சினானை தம் உயிரின் துணையை-இறந்துபட்ட தமது உயிர்க்குத்துணைவனான [கணவனான] அத்தசரதமன்னவனை, கண்டார்-(கண்ணாற்) கண்டு, துணுக்கத்தால்-(மனத்தில் தோன்றிய) அச்சத்தினால், நஞ்சு நுகர்ந்தார் என-விஷத்தை யுண்டவர் போல, உடலம் நடுங்காநின்றார்-தம்முடம்பு நடுங்கப்பெற்றார்: என்றால்உம்—, வஞ்சம் இல்லா மனத்தானை-வஞ்சனைக்குணம் சிறிதும் இல்லாத [சுத்தமான] மனத்தையுடைய அந்தத்தசரதனை, வானில் தொடர்வான்-வானுலகத்திலும் தொடர்ந்துசெல்லும்படி, மனம் வலித்தார் - நெஞ்சிற்குள் உறுதிசெய்துகொண்டவராய், அஞ்சி அழுங்கி விழுந்திலர் - மேன்மேலும் அச்சமும் மனத்துயரமும் மிக்கு மூர்ச்சித்துவிழுந்திலர்; அன்பில் தறுகண் பிறிது உண்டுஓ - அன்பைக்காட்டிலும் கொடியது வேறொன்று உண்டோ?[இல்லையென்றபடி].

தம்கணவன் இறந்துவிட்டானென்பதைக கேள்வியுற்றதும் அரற்றிக்கொண்டு திரண்டு வந்தவரான அந்தத்தசரதனுடைய மற்றைததேவிமார் இறந்தகணவனைக் கண்ணாற் கண்டதும் முதலில் நஞ்சுண்டவர்போல் நடுக்கம் மிகப்பெற்றாராயினும், பிறகு சககமனஞ்செய்து கணவன்புக்கவுலகத்துக்குத் தாமும் போய்விடுவதாகத் தம்நெஞ்சில் உறுதி கொண்டதனாற் பின்னும் அஞ்சியழுங்கி மூர்ச்சியாதவராயின ரென்க. தம்கணவனை வானில் தொடருமாறு மனம் வலித்ததற்குக் காரணம்-தம்கணவனிடத்து அத்தேவியர் கொண்டிருந்தபேரன்பே யென்பார், 'அன்பிற்றறுகண் பிறிதுண்டோ' என்றார். தம்முயிரையும் விடுமாறு அன்பு தூண்டுவதனால், அந்த அன்பு தறுகண்மையுடையதாகும். 'வஞ்சமில்லாமனத்தானை வானிற்றொடர்வான் மனம் வலித்தார்' என்ற வாக்கியத்தை 'அன்பிற்றறுகண்பிறிதுண்டோ' என்ற வாக்கியஞ் சமர்த்தித்து நின்றது; தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். பி - ம்:—[1]கவர்ந்தாலென, கரந்தாலென, நுகாந்தாலென, நுகாந்தாரன்று. [2]உடலும். [3]நடுங்குகின்றார். [4]அஞ்சி. [5]தொடர்வாமெனுமனத்தார். (சுoஅ)

## எஉ.—இதுவும் அடுத்த கவியும் - மகளிர் அந்தத்தானே சூழ்ந்திருத்தலின் வருணனை.

அளங்கொ ளளக்க ரிரும்பரப்பி லண்ட [1]ருலகி லப்புறத்தில்
[2]விளங்கு மாதர் கற்பினு [3]ரிவரின் யாரே யெனநின்றார்
களங்க நீத்த [4]மதிமுகத்தார் [5]கான வெள்ளங் கால்கோப்பத்
துளங்க லில்லாத் தனிக்[6]குன்றிற் றொக்க மயிலிற் சூழ்ந்திருந்தார்.

(இ - ள்) 'அளம் கொள் அளக்கர் இரும் பரப்பில் - உப்பளத்தைக் கொண்ட கடலாற்சூழப்பட்ட பெரிய பூமிமுழுவதிலும், அண்டர் உலகில் - சுவர்க்கலோகத்திலும், அப்புறத்தில் - (அதற்கும்) அப்பாற்பட்ட மகர்லோகம் முதலிய இடங்களிலுமுள்ள, விளங்கும் மாதர் கற்பினர் [கற்புவிளங்கும் மாதரார்] - கற்புடன் விளங்குகின்ற மகளிர், இவரின்-இம்மங்கைமாரைக்காட்டிலும், யார் எ - யாவர்தாம் உளர்?' என - என்று சொல்லுமாறு, நின்றார் - (கற்பினால் மேம்பட்டு) இருப்பவராகிய, களங்கம் நீத்த மதி முகத்தார்-களங்கமற்ற சந்திரனையொத்த மகளிர், கானம் வெள்ளம் கால் கோப்ப - காட்டு நதியின்வெள்ளம் மலையினடிப்பகுதியெங்கும் கவிந்துகொள்ள, துளங்கல் இல்லா தனி குன்றில் - அசைதலில்லாத ஒப்பற்ற மலையிலே, தொக்க-கூடியிருந்த, மயிலின் - மயிற்பறவைகள்போல, சூழ்ந்திருந்தார் - (அவ்வரண்மனையில்) திரண்டிருந்தார்கள்; (எ - று.)

அத்தசரதனுடைய தேவிமார் கணவனைப்பிரிந்து இவ்வுலகிலிருக்க மனமில்லாமல் கணவனுடன் சகமனஞ்செய்து உயிர்துறக்கக் கருதியதனால், அம்மகளிர் இவ்வுலகிலும் மேலுலகத்தும் தம்மோடொத்தவர் எவருமில்லாத பெருங்கற்பினரெனப்பட்டார். அவர்கள் ஒருங்கே அவ்வரண்மனையில் திரண்டதற்கு, மலையிற்றொக்கமயிற்குழாத்தை உவமைகூறினார். மயில் தொகுதற்குக் காரணங் கற்பிக்கவேண்டி 'கானவெள்ளங் கால்கோப்ப' என்றார். தசரதமன்னவனைச் சூழ்ந்திருந்த மகளிர்க்கு மலையிற்றொக்க மயில் உவமையெனக் கொள்வாருமுளர். கானம் - காடு: கானவெள்ளமெனவே, காட்டியாற்றின் வெள்ளமாயிற்று. இனி, அவர்கள் புலம்புவதுபற்றி, கானவெள்ளங் கால்கோப்ப - பிழக்கான [பலாக்கண] ப்பாடல் எங்கும் நிறைய எனினுமாம். அளத்தற்கு அருமையானது என்ற காரணம்பற்றி, கடலுக்கு அளக்கரென்று பெயர். பி - ம்:—[1]உலகிற்கு. [2]இளங்கண். [3]இவரின் யாவரெனநின்றார், இவரினினியாரெனநின்றார், இவரில் யாரே யென்கின்றார், வினவில் யாவரென்கின்றார். [4]முகத்தினார். [5]கானை. [6]வரையில். (கூ0க)

எரு. கைத்த சொல்லா லுயிர்[1]பிழந்தும் புதல்வற் [2]பிரிந்தும் கடையோட, மெய்த்த வேந்தன் றிருவுடம்பைப் [3]பிரியாதழுது [4]விட்டிலராற், பித்த [5]மயக்காஞ் சுறவெறியும் பிறவிப் பெரிய கடல்கடக்க, வுய்த்து [6]மீண்ட நாவாயிற் றூழும் போவா ரொக்கின்றார்.

(இ - ள்.) புதல்வன் பிரிந்தும் - புதல்வனைப் பிரிந்தும், கைத்த சொல்லால் உயிர் இழந்தும்-மனம்வெறுக்குமாறு உள்ள(கொடிய)சொல்லினாலே (தன்) உயிரே நீங்கப்பெற்றும், கடையோட மெய்த்த - (தன்) இறுதிக்காலம் வரையிலும் சத்தியத்தையே மேற்கொண்ட, வேந்தன் - தசரதமன்னவனது, திருவுடம்பை - உடலை, பிரியாது-விட்டுப்பிரியாமல், அழுது விட்டிலர்-அழுதவண்ணம் பற்றிக்கொண்டிருந்தார்: (அவர்கள்),—பித்த மயக்கு ஆம் சுறவு எறியும் பிறவி பெரிய கடல் கடக்க உய்த்து-(மண் பொன் முதலியவற்றில்) பித்துக்கொள்வதற்குக் காரணமாகிய மாயையென்னுஞ் சுறாமீன்கள் சஞ்சரிக்

கின்ற பிறப்பாகிற பெரியகடலைக் கடக்குமாறு செலுத்தி, மீண்ட - மீண்டுள்ள, நாவாயில்-மரக்கலத்திலே, தாம்உம் போவார் - தாமும் போகப்போகின்றவர்களை, ஒக்கின்றார் - ஒத்திருந்தனர்; (எ -று.)

தான் உயிர்நீங்குமளவும் சத்தியந்தவறக்கூடாதென்ற நோன்பை மேற்கொண்டு அதனாற் கைகேயியின் வன்சொற்கேட்டுப் புதல்வனைப்பிரிந்து உயிரிழந்த மன்னவனென்பது, 'கைத்தசொல்லால்...மெய்த்த வேந்தன்'என்பதனால் விளக்கப்பட்டது. மயக்கு மாயையென்பன - பரியாயச் சொற்கள். நிலையற்றனவும் சாரமற்றனவுமான உலகத்துப்பொருள்களை நிலையுள்ளனவும் சாரமுள்ளனவும்போலத் தோற்றுவித்துப் பொருள்களைப் பெறவேணுமென்ற ஓர் பித்துத்தன்மையை நெஞ்சில் தோற்றுவித்தலால், மாயையை, 'பித்தமயக்கு'என்றார். பித்த-பித்துத்தன்மையைக் கொண்ட: குறிப்புப்பெயரெச்சம். கடலில் அகப்பட்டவரைச் சுறாமீன்கள் கொன்றுதின்பதுபோலப் பிறவியில் அகப்பட்ட ஆன்மாக்களை மாயையென்பது ஈடேறவொட்டாமல் அழிப்பதனால்,அம்மாயை 'சுறவு'என உருவகஞ் செய்யப்பட்டது.தசரதனது அவ்வுடல் அவன் பிறவியைக்கடந்து மீளாவுலகஞ்சேர்தற்குச் சாதனமாக இருந்ததனால், அது பிறவிக்கடலைக்கடக்கவுய்த்த நாவாயாக உருவகஞ்செய்யப்பட்டது. அவ்வுடலத்தைத்தழுவிச் சககமனஞ்செய்து அரசன்புக்கவுலகம் தாமும் புகப்போகின்றவராதலின், அம்மகளிரை 'நாவாயிற்றாமும்போவாரொக்கின்றார்' எனக்குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. இங்குக்கூறப்பட்டவர் பட்டமகிஷியரையொழிந்த மற்றையோராவர்.பி-ம்:—[1]இழந்து.[2]பிரிந்து. [3]பிரியார்பற்றி. [4]விட்டிலார். [5]மயக்கச், மயக்கிற். [6]நீண்ட நாவாயின்றாமே. ()

எச.—இங்ஙனம்இருக்கச் சுமந்திரனாற் செய்தியுணர்ந்து வந்த வசிட்டமுனிவன் வருந்தல்.

மாத ரார்க ளறு[1]பதினா யிரரு முள்ளம் வலித்திருப்பக்
கோதில் குணத்துக் கோசலையு மிளைய [2]மாதுங் குழைந்தேங்கச்
சோதி மணித்தேர்ச் சுமந்திரன்சென் றரசன் றன்மை சொலவந்த
வேத முனிவன் விதிசெய்த வினையை நோக்கி விம்முவான்.

(இ-ள்.) மாதரார்கள் அறுபதினாயிரர்உம்-(தசரதமன்னவனது மனைவிமார்களாகிய) அறுபதினாயிரம்மாதரார்களும், உள்ளம் வலித்து இருப்ப - (சககமனஞ்செய்வது என்று) மனத்தில்உறுதிகொண்டிருக்க,—கோது இல் குணத்து கோசலைஉம் இளைய மாதுஉம் குழைந்து ஏங்க - குற்றமற்ற குணத்தையுடைய கௌசல்யாதேவியும் இளையதேவியாகிய சுமித்திரையும் மனமிளகிச் சோர,—சோதி மணி தேர் சுமந்திரன் - ஒளிபொருந்திய மணிகள்பதிக்கப்பெற்ற தேரோட்டுஞ்சாரதியாகிய சுமந்திரன், சென்று—, அரசன் தன்மை சொல - தசரதமன்னவன் இறந்துபட்டநிலைமையைத் தெரிவிக்க, வந்த - (தன்னிருப்பிடத்தினின்று அரசன் இறந்துள்ள இடத்துக்கு) வந்த, வேதம்

முனிவன்-வேதம்வல்ல இருடியாகிய அந்த வசிஷ்ட முனிவன், விதி செய்த வினையை நோக்கி - ஊழ்வினைக்குரிய கடவுள் செய்த செயலைக் குறித்து, விம்முவான்-வருந்துவானானான்; (எ - று.)

சுமந்திரன் செய்திஅறிவிக்க,வசிட்டன் அங்குவந்து மன்னவனுக்கு நேர்ந்தநிலையைக்கண்கூடாகக்கண்டு தானும் மனம்வருந்தலானானென்க.இவ்விஷயம் ஸ்ரீவால்மீகத்திற் காணப்படவில்லை. பி-ம்:—[1]பதிநூயிரர்தம். [2]மானும்.

எரு —இதுவும் வசிஷ்டமுனிவன் வருந்துதலைக் கூறும்.

வந்த[1]முனிவன் வரங்கொடுத்து மகனை[2]நீத்த வன்கண்மை
யெந்தை [3]தீர்ந்தா னெனவுள்ளத் தெண்ணி யெண்ணி யிரங்குவா
னுந்து கடலிற் பெருங்கலமொன் [4]றுடையா நிற்கத் [5]தனிநாயக
னைந்து நீங்கச் செயலோரா மீகா மனைப்போ [6]னைவுற்றான்.

(இ-ள்.) வந்த முனிவன் - (தசரதன் இறந்தஇடத்துக்கு) வந்த வசிட்ட முனிவன்,வரம்கொடுத்து மகனை நீத்த வன்கண்மை எந்தை தீர்ந்தான் என- (கைகேயிக்கு இரண்டு) வரங்களைக்கொடுத்து (அதனால் தன்) புதல்வனைப் பிரிந்த கொடுமையையுடைய எம்மையன் தசரதன் இறந்துவிட்டானென்று, உள்ளத்து-(தன்)மனதிலே, எண்ணி எண்ணி - பலகால்நினைந்து, இரங்குவான்-மனந்தளர்பவனாய்,-உந்து கடலில் பெரு கலம் ஒன்று உடையாநிற்க- (அலை)மோதுகின்ற கடலிலே பெரிய மரக்கலமொன்று உடைந்துவிட, தனி நாயகன்-தனிப்பட்ட அம்மரக்கலத்துக்கு உரியவன்,நைந்துநீங்க-இறந்துபோக, செயல் ஓரா-(தான்) செய்வது இன்னதெனத் தெரியாமல் திகைக்கின்ற, மீகாமனை போல் - மாலுமியைப்போல, நைவுற்றான் - வருந்தினான்; (எ-று.)

மன்னவனுடலை மரக்கலமாகவும், மன்னவனை நாவாய்க்குஉரிய நாயகனாகவும், அம்மன்னவனை நன்னெறியிற் செலவுய்க்கும் வசிட்டனை மீகாமனாகவும் உருவகஞ்செய்தார். கலமுடைதல் - அரசன் உயிர்போதல். இந்தப் பாடல் அச்சுப்பிரதியிற் காணப்படாவிடினும் அனேக ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]முனியும். [2]இழந்த. [3]தீர்த்தான். [4]உலையாநிற்க. [5]தமியனாய். [6]நவையுற்றான். (சுகஉ)

எசு.—மன்னவனுடலைத் தைலத்தி லிடுதல்.

[1]செய்யக் கடவ செயற்குரிய [2]சிறுவ ரீண்டை யாரல்ல
[3]ரெய்தக் கடவ பொரு[4]ளெய்தா திகவா தென்ன வியல்[5]பென்ன
[6]மையற் கொடியாண் மகனீண்டு வந்தான் முடித்து மற்றென்னத்
தையற்[7]கடலிற் கிடந்தானைத் [8]தயிலக் கடலின் றலை[9]யுய்த்தார்.

(இ-ள்.) 'செய்ய கடவ-செய்தற்குஉரிய கடமைகளை, செயற்கு உரிய-செய்தற்குத்தக்கவரான, சிறுவர்-குமாரர்கள், ஈண்டையார் அல்லர் - இங்கேயிருப்பவராக இல்லை; எய்தக்கடவ பொருள் எய்தாது இகவாது-வரவேண்டி

யவை வாராது தீரா: இயல்புஎன்ன - (இப்போது செய்யவேண்டிய) இயல்பான செயல் யாது?' என்ன-என்று ஓராலோசனை(அவ்வரண்மனையில்)உண்டாக,(அமைச்சர்கள்),'மையல் கொடியாள்-மனமயக்கத்தைக்கொண்டகொடியவளான கைகேயியின், மகன்-புதல்வனான பரதன், ஈண்டு வந்தால்-இங்கே வந்துசேர்வனாயின்,(பிறகு), முடித்தும்-(அரசனது உத்தரக்கிரியைகளை அவனைக்கொண்டுசெய்து) முடிப்போம்,' என்ன-என்று நிச்சயித்து, தையல் கடலில் கிடந்தானை-மகளிரின்கடல்போன்ற கூட்டத்திற்கிடக்கின்ற தசரதனை, தயிலம் கடலின்தலை - கடல்போல் மிக்க தைலத்தில், உய்த்தார் - கொண்டு செலுத்தினார்கள்; (எ - று.)—மற்று-அசை: வினைமாற்றுமாம்.

அந்தஅரண்மனையில் அரசனுக்கு நாலுபுத்திரரிருந்தும் ஒருத்தரும் அருகிலில்லாமற்போயினமைபற்றி, 'நாம் வெறுமனேயிருத்தல் கூடாது: எப்படியாவது மன்னவனை ஸம்ஸ்காரஞ் செய்யவேண்டும்' என்று சிலர்க்கு எண்ணமுண்டாக,ஆங்குள்ளசுற்றத்தார்பலர்க்கும் புதல்வனில்லாமல் தஹநம்முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்வதில் எண்ணமில்லாமையை யுணர்ந்த மந்திரிமார் மன்னவனதுஉடல் கெடாமலிருக்கும்பொருட்டு அவ்வுடலை எண்ணெய்க்கிடாரத்திலிட்டுவைத்தார்களென்று முதனூலிற்கூறியுள்ளது. அதற்குஏற்ப இப்பாடலுக்கும் கருதது விரித்துக்கொள்க. ஒருகடலினின்று நீக்கக் கருதியவர் வேறொருகடலி லுய்த்தார்களென்ற ஈற்றடியில் அஸங்கத்யலங்காரமென்று வடமொழியிற்கூறப்படும் பொருந்தமின்மையணியிருத்தல் காண்க.

பி-ம்:—[1]செய்தற்குரிய. [2]சிறுவரவரண்டையர். [3]எய்தற்குரிய. [4]எய்தாதிகவாவென்ன, எய்தாரிகலாரென்ன, எய்தாவிபைவாரென்னும், எய்தாவிடராலென்னே. [5]என்ற. [6]மையிற். [7]கடனின்றெடுத்தவனை. [8]தைலக். [9]உய்த்தான்.

## ௭௭.—வசிட்டன் பரதனை யழைத்துவருமாறு தூதுவரை ஓலைகொடுத்துப் போக்குதல்.

தேவி மாரை யிவற்குரிமை செய்யு நாளிற் செந்தீயி
லாவி [1]நீத்தி ரெனநீக்கி யரிவை மார்க ளிருவரையுங் [கென்
தாவில் கோயிற் றலையிருத்தித் தண்டார்ப் பரதற் கொண்[2]டனை
றேவி னான்மன் னவனை [3]யெழுதி முடங்க [4]லெடுத்தோரை.

(இ - ள்.) தேவிமாரை - (அரசனுடலைவிடாமற் சூழ்ந்துகொண்டிருந்த அறுபதினாயிரம்) மனைவியரையும் நோக்கி, 'இவற்கு-இம்மன்னவற்கு,உரிமை செய்யும் நாளில் - உரிய ஈமக்கடனைச் செய்யும்போது, செந்தீயில் ஆவி நீத்திர்-செந்நிறத்தீயில் (இம்மன்னவனதுஉடலைத் தழுவிக்கொண்டு) உயிர்விடலாம்; (இப்போது விலகியிருங்கள்),' என நீக்கி - என்றுசொல்லி (அப்பாற்) போகச்செய்து,—அரிவைமார்கள் இருவரைஉம் - பட்டமகிஷிபரான (சுமித்திரை கௌசலைஎன்ற) இருவரையும், தா இல் கோயில் தலை இருத்தி-குற்றமற்ற (அவரவர்க்குஉரிய) அரண்மனையிலிருக்கவைத்து, 'தண் தார் பரதன்

கொண்டு அணைக என்று - 'குளிர்ச்சிபொருந்திய மாலைபைச்சூடிய பரதனை யழைத்துக்கொண்டு வருவீராக' என்று சொல்லி, முடங்கல் எடுத்தோரை - (மன்னவனுணையை எழுதிய)ஓலையையெடுத்துச் செல்பவராகிய தூதரை,மன் னவன் ஆணை எழுதி - அரசன் கட்டளையின்னதென்று எழுதிக்கொடுத்து, ஏவினான் - (பரதனை யழைத்துவருமாறு)அனுப்பினான், (வசிட்டமுனிவன்).

கீழ்ச்செய்யுளில் "தையற்கடலிற் கிடந்தானைத் தயிலக்கடலின் றலையுய்த் தார்" என்றுகூறிய கவி, தையற்கடலினின்று மன்னவனை மீட்டவகையை முதல்மூன்றடிகளால் விவரித்து, தைலக்கடலிலுய்த்ததற்குக் காரணத்தை 'தண்டார்ப்பரதற் கொண்டணைகென்றேவினான் மன்னவனுணை யெழுதி முடங்கலெடுத்தோரை' என்பதனால் விளக்குகின்றன ரென அறிக.மார்க்கண் டேயன் மௌத்கல்யன் வாமதேவன் காஸ்யபன் காத்யாயனன் கௌதமன் ஜாபாலி என்கின்ற பிராமணோத்தமர்களும் மந்திரிமாருங்கூடி யாலோசித்து வசிட்டமுனிவனைநோக்கி 'ராமலட்சுமணர்கள் காட்டுக்குப் போயிருக்கின்றார் கள்: பரதசத்துருக்கனர்களும் கேகயதேசத்தில் ராஜகிருஹமென்னும் நகரத் துக்குப் போயிருக்கிறார்கள். நாடு அராஜகமாக இருக்கவொண்ணாது' என்று கூறி அராஜகத்தால்விளையுந் தீங்குகளை விரிவாகஎடுத்துச்சொல்லி 'இட்சு வாகு குலத்திற்பிறந்த ஒருவனை அரசனுக்கவேண்டும்' என்ன, வசிட்டமுனி வனும்'தசரதன் பரதனுக்கு இராச்சியத்தைக் கொடுத்திருக்கின்றானாதலால், நாம் ஆராயவேண்டியசெயல் ஒன்றுமில்லை'என்றுகூறி,சித்தார்த்தன் விசயன் சயந்தன் அசோகன் என்னுந் தூதர்களை விளித்து'நீங்கள் விரைந்துசெல்லுங் குதிரைகளின்மீதுஏறிக்கொண்டு ராஜகிருஹநகரத்தை யடைந்து துயரத் தைசசிறிதுங்காட்டாமல், கேகயமன்னவனுக்கும் பரதனுக்கும் காணிக்கை பட்டுவஸ்திரம் முதலியவற்றையுங் கொடுத்து ஒருகாரியம் கைவிஞ்சிப்போவ தாயிருத்தலால் உடனேவருக என்றுசொல்லிப் பரதனை யழைத்துவருக' என்றுசொல்லியனுப்பின னென்று முதனூலிற் கூறியுள்ளது. பி - ம்:— [1]போக்கீர். [2]அணுகென்று. [3]எழுது. [4]கொடுத்தவரை. (கூகச)

எஅ.—கவிக் கூற்று.

போனா ரவருங் கேகயர்கோன் பொன்மா நகரம் புகவெய்த
வானா வறிவி னருந்தவனு மறமார் பள்ளி [1]யதுசேர்ந்தான்
சேனா பதியிற் [2]சுமந்திரனைச் செயற்பாற் குரிய செய்கென்னா
மேனாஞ் சொன்ன [3]மாந்தர்க்கு [4]விளைந்த பரிசு விளம்புவாம்.

(இ - ள்.) அவர்உம்-(வசிட்டர் அனுப்பிய)அத்தூதுவரும்,கேகயர்கோன் பொன் மா நகரம் புக எய்த போனார்-கேகயமன்னவனது அழகிய சிறந்தநக ரத்தைப் போய்ச்சேரும்படி சென்றார்கள்; ஆனா அறிவின் அரு தவன் உம் - (ஒருவர்க்கும்)அமையாத பேரறிவினையும் பிறர்க்குச்செய்தற்கு) அரியதவத்தை யுமுடையனாகிய வசிட்டனும், சேனாபதியில் சுமந்திரனைசெயற்பாற்கு உரிய செய்க என்னா - 'சேனாபதியரில் ஒருவனாகிய சுமந்திரனைநோக்கி அவ

சியமாய்நடக்கவேண்டிய இராச்சியகாரியங்களைச்செய்க’என்றுசொல்லிவிட்டு, அறம் ஆர் பள்ளிஅது சேர்ந்தான் - (தனது) குலதருமத்தை யநுட்டித்தற்கு உரிய தன்னிடத்தைப் போய்ச்சேர்ந்தான்; மேல் நாம் சொன்ன மாந்தர்க்கு - முன்பு (இராமனுடன் சென்று உறங்கிவிட்டனரெனக்) கூறிய மனிதர்களிடத்து, விளைந்த - நிகழ்ந்த, பரிசு - செய்தியை, விளம்புவாம்—; (எ - று.)

கீழ்த் தேவிமார்கள் செய்தியைக்கூறிய கவி, மற்றையோர் தத்தமிடத்துக்குப் போயினதையும் இராசசியம் அரசனில்லாக்காலத்து நிகழ்ந்தவகையையும் தெரிவித்து, மேற்சொல்லப்போவதையும் இன்னதெனக்கூறுகின்றார். பி-ம்:—[1]அறை. [2]சுமந்திரனே ..செய்கின்றான். [3]மாந்தர்கட்கு. [4]விளைந்ததினிநாம். (கூகரு)

எகூ.—சூரியோதயவருணனை.

[1]மீனீர் வேலை முரசியம்ப விண்ணோ ரேத்த மண்[2]ணிறைஞ்சத்
தூநீ[3]ரொளிவாள் புடையிலங்கச் சுடர்த்தே ரேறித் தோன்றினான்
வானே புக்கா னரும்புதல்வன் மக்க [4]ளகன்றார் வருமளவும்
யானே காப்ப னிவ்[5]வுலகை யென்பான் போல [6]வெறிகதிரோன்.

(இ - ள்.) மீன் நீர் வேலை - மீனை மிகுதியாகக்கொண்ட நீர்மயமான சமுத்திரம், முரசு இயம்ப - முரசவாத்தியம்போல் ஒலிக்கவும், விண்ணோர் ஏத்த - தேவர்கள் துதிக்கவும், மண் இறைஞ்ச - உலகத்திலுள்ளவர்(தன்னை) வணங்கவும், தூ நீர் ஒளி வாள் புடை இலங்க - பரிசுத்தமானதன்மையையுடைய ஒளியாகிய வாள் (தன்)புறத்தே விளங்கவும்,—எறி கதிரோன் - வீசுகின்ற ஆயிரங்கிரணங்களையுடையவனான சூரியன்,—‘அரு புதல்வன் வான் புக்கான் - (நமது குலத்துத்தோன்றிய) அரியகுணங்களையுடைய புதல்வனாகிய தசரதன் சுவர்க்கஞ் சேர்ந்திட்டான்; மக்கள் அகன்றார் - அவன் புதல்வர் நால்வருள் இராமலட்சுமணர்கள் காட்டிலும் பரதசத்துருக்கனர் கேகயதேசத்திலுமாக இந்நகரிலில்லாமல் அப்பாலிருக்கிறார்கள்; வரும் அளவு உம் - (அத்தசரதகுமாரர்களில் பரதசத்துருக்கினர் இங்கு) வந்து சேர்கின்ற வரையிலும், ‘இ உலகை—, யானே காப்பன்—,’ என்பான் போல-என்று கூறுபவன்போல, சுடர் தேர் ஏறி - ஒளியுள்ள தேரின்மீது ஏறிக்கொண்டு, தோன்றினான் - உதயமானான்; (எ - று.)

எறிகதிரோன் தோன்றினான் என இயையும். தன்னைச் சார்ந்தவரின் நாடு அராஜகமாகப் போகையில் அந்நாட்டிற்குஉரியவனும் வேறோரிடத்திலிருப்பவனுமாகிய மன்னவன் முரசுஇயம்பவும் பலரும் ஏத்தவும் வாளைப் புடை விசித்த கோலத்தோடு தேரேறிக்கொண்டு வருவதுபோல,தனது குலத்தவருடைய தேசம் அராஜகமாக இருக்கவொண்ணாதென்றகருத்தினாற் குல முதல்வனாகிய சூரியன் வேலை முரசியம்ப விண்ணோரும்மண்ணோரு மேத்த ஒளிவாள் புடையிலிலங்கத் தேரேறித் தோன்றினா னென வருணித்தார்; இயற்கையிற் சூரியனுதிப்பதற்கு ஒருகாரணத்தைக் கற்பித்துக்கூறியது,

**ஏதுத்தற்குறிப்பேற்றவணி:** இவ்வணிக்கு-வேலைமுரசியம்ப என்பது முதலிய இடத்துள்ள உருவகங்கள் அங்கமாய் நின்றன. இராமன் முதலியோர்,என்று புறப்பட்டனரோ அன்றை மாலைப்போதே நகரத்தைக்கடந்து ஒருசோலையில் தங்கி அற்றை நள்ளிரவில்தானே நகரத்தவரைப் பிரிந்து அவர்கட்குத் தெரியாது அப்பாற் செல்ல, சுமந்திரனும் அன்று விடிவதற்கு முன்னரே வந்து இராமன் கானகஞ்சேர்ந்த செய்தியை மன்னவனிடஞ்சொல்ல அவனும் அப்போதே ஆவிநீங்கினனாக, கேகயநகரத்துக்குத் தூதுவர்போய்ச்சேர மறுநாள் சூரிய னுதய மாயினன் என்பது, கம்பர்கருத்து.பி-ம்.—[1]மீனர். [2]இறைஞ்சித். [3]புடைவாளொளி. [4]பிரிந்தார். [5]உலகம். [6]விரி. (சுகசு)

அ௦.—மணல் முதலிய இடத்து உறங்கிய நகரத்துச்சனங்கள் கண்விழித்தெழுந்து இராமனைக் காணாது வருந்துதல்.

வருந்தா வண்ணம் [1]வருந்தினர் மறந்தார் தம்மை வள்ளலு [2]மாங், கிருந்தா னென்றே யிருந்தார்க ளெல்லா மெழுந்தா ரருளி ருக்கும், பெருந்தா மரைக்கட் கருமுகிலைப் பெயர்ந்தார் காணார் [3]பேதுற்றார்,பொருந்தா நயனம் பொருந்திநமைப் பொன்றச் [4]சூழ்ந்த வெனப் [5]புரண்டார்.

(இ - ள்.) வருந்தா வண்ணம் வருந்தினர்-(இதுவரையில்) எவரும்வருந்தியிராதவகையாக வருத்தமடைந்தவரும், தம்மை மறந்தார் - (துயரத்தாலும் வழிவந்த இளைப்பாலும்) தம்மையும் மறந்து உறக்கங்கொண்டவர்களும், வள்ளல்உம் ஆங்கு௨ இருந்தான் என்று இருந்தார்கள் - வரையாதுகொடுக்குந் தன்மையுடையவனாகிய இராமன் அவ்விடத்தில்தானே இருக்கின்றானென்றே யெண்ணியிருப்பவர்களுமாகிய, எல்லாம் - (இராமனைத்தொடர்ந்துவந்த நகரத்தவர்) எல்லாரும், எழுந்தார் - (கண்விழித்து)எழுந்து, பெயர்ந்தார்-(தம்மிடத்தை) விட்டுச்சென்று, (இராமபிரான் பள்ளிகொண்ட இடத்தைக்கிட்டிப்போய்ப்பார்த்து), அருள் இருக்கும் பெரு தாமரை கண் கரு முகிலை காணார்-அருள் (ஊற்றுப்போற் சுரக்கும்படி) குடியிருக்கின்ற பெரியதாமரை மலர்போலுந் திருக்கண்களையுடைய கருமுகில்போன்ற திருநிறத்தவனை ஸ்ரீராமபிரானைக் காணப்பெறாதவராய், பேது உற்றார்-மனக்கலக்கமடைந்து, பொருந்தா நயனம் - மூடாத (நமது) கண்கள், பொருந்தி - மூடி [உறக்கமடைந்து], நமை - நம்மை, பொன்ற - அழியும்படி, சூழ்ந்த - ஆலோசித்தன, என - என்றுசொல்லி, புரண்டார் - (துயரத்தின் மிகுதியால்) தரையில்விழுந்து புரளலானார்கள்; (எ - று.)

'வருந்தாவண்ணம் வருந்தினர்' என்றதொடர் - இராமனைத்தொடர்ந்து சென்றவர் துயில்கொள்ளுவதற்குமுன் அடைந்திருந்த நிலைமையை விளக்கும்: பின்னிரண்டடிகள் - உறக்கம் நீத்தபின்பு அவர் அடைந்த நிலையைத் தெரிவிப்பன. கருமுகில் - உவமவாகுபெயர். தாம் உறங்கினதே இராமபிரான் தம்மைவிட்டுப் பிரிந்து செல்வதற்கு ஏதுவாயினமையால்,

'பொருந்தாநயனம்பொருந்தி நமைப் பொன்றச்சூழ்ந்த' என்றுகூறி வருந்திப் புரண்டனர் அந்நகரத்துமாந்த ரென்க. தன்னைப்பிரிந்திருக்கமாட்டாமல் உடன்தொடர்ந்துவந்த நகரத்தவர் மிகவருந்தும்படி கருணையற்றவன்போலப் பிரிந்திட்ட இராமபிரானை, இங்கு 'அருளிருக்கும் பெருந்தாமரைக்கண் கருமுகில்' என்றது - இவன் நகரத்தவரைப் பிரிந்ததும் அருளின் காரியமே யென்பதைப் புலப்படுத்தற்பொருட்டாகும்; அது எங்ஙனே யெனில் - நகரத்தவர்க்கு என்றென்றும் தன்னுடன் வாழ்வது நேர்வதால் களிப்பு மிகவும்விஞ்சுவதுபற்றி அப்பெருங்களிப்பை அவர்கள் தாங்கவல்லவரல்லராதலால், விரணவைத்தியஞ் செய்யும்மருத்துவன் விரணத்தைக்கீறி ஆறச்செய்வதுபோல அவர்கள் தன்னையிடைவிடாமல் நுகர்வதை வனவாசமென்ற வியாசத்தினால் இடையறவுபடுத்திப் பெருமகிழ்ச்சியைத் தாங்கவல்ல உறுதியை அவர்களின் நெஞ்சத்திற்கு உண்டாக்கி மீண்டும் தன்னை யநுபவிக்கும் அநுபவத்தை மிகவுந்தருதற்பொருட்டே யாகுமாதலாலென்பர். இங்ஙனம் இவர்களுக்கு மனத்திட்பத்தைக்கொடுக்க வேண்டுமென்ற கருத்தைக்கொண்டதனால்தான் ஸ்ரீராமபிரான் ஏககாலத்தில் நகரத்தவர்யாவரையும் பொருந்தாநயனம் பொருந்துமாறு சூழ்ந்தனனென்க. அன்றியும், அவர்கள் தன்னுடன்வரின் தன்னுடைய தெய்வத்தன்மையாற் காத்தாலன்றி வேறுவகையாக அவர்கள்யாவரையும் பசி பிணிமுதலியன இன்றி வனத்திற் காத்தல் அரிதாகையாலும், தெய்வத்தன்மையை வெளிப்படுத்தாமலிருக்கவேணுமென்பதே அப்பிரான் திருவுள்ளமாதலாலும், அங்ஙனம் அவர்களைவருந்துமாறு விடுதல் அருளின்செயலாகாதாதலாலும், அவர்களைப்பிரிந்தது அருளின் செயலேயாதல் காண்க. பி-ம்:—[1]வருந்தினரை. [2]அங்கு. [3]வெய்துற்றார். [4]செய்தது, சூழ்ந்தது. [5]புகன்றார். (௬௭)

அக.—இராமனைக்காணாத நகரமாந்தர் செய்தவை.

எட்டுத் திசையு [1]மோடுவா னெழுவார் விழுவா ரிடர்க்கடலுள்
விட்டு[2]த் தீர்ந்தா [3]னமையென்பார் [4]வெய்ய னையன் வினையென்பா
[5]ரொட்டிப் படர்ந்த தண்டகமிவ் வுலகத் துளதன் றோவுணர்வைச்
[6]சுட்டிச் [7]சேரா[8]தாற்றுதுமோ [9]தொடர்துந் தேரின் சுவடென்பார்.

(இ - ள்.) எட்டு திசையும் ஓடுவான் எழுவார்-(இராமனைத் தேடும்பொருட்டு) எட்டுத்திக்கிலும் ஓடிப்போகுமாறு எழுந்திருப்பார்; விழுவார் - (துயரமிகுதியால் கால்நடைதாராமையால்) விழுந்திடுவார்; நமை இடர் கடலுள் விட்டு தீர்ந்தான் என்பார் - நம்மைத் துயர்க்கடலுள் அழுங்கவிட்டு அப்பாற் சென்றிட்டானென்பார்; ஐயன் வினை வெய்யன் [வெய்யவினையன்] என்பார் - நமது தலைவன் (நம்திறத்துக்) கொடியசெயலைச் செய்தனனென்பார்: 'ஒட்டி படர்ந்த தண்டகம் - பொருந்திப்பரவியுள்ள தண்டகவனம், இ உலகத்து உளது அன்றுஓ - இவ்வுலகத்திலிருப்பதொன்று அன்றோ? உணர்வை - (நம்முடைய) அறிவைக்கொண்டு, சுட்டி-ஆராய்ந்துஅறிந்து, சேராது-

(அதனைச்சேர்ந்து இராமபிரானை) அடைந்திடாமல், ஆற்றுதும் ஓ - ஆறியிருக்கவல்லமையுடையோமோ? தேரின் சுவடு - (அந்தத்தண்டகத்தைநோக்கிச் சென்றிருக்கவேண்டிய) இரதசக்கரதநின்வடுவை, தொடர்தும் - பற்றிச் செல்வோம், என்பார் - என்றுசொல்வார்கள்; (எ - று.)

ஸ்ரீராமனைப்பிரிந்த நகரத்துச்சனங்கள் பெருந்துயரமடைந்து எட்டுத் திசையிலும் தேட ஓடியெழுந்து கால்நடை தாராதுவிழுந்து'நம்மைத் துயரக் கடலுள் விட்டுச்சென்றானே!'என்றும் 'இராமன் கொடியவன்' என்றும் துயரத்தின்மிகுதியாற் பழித்து,'அந்த இராமன்சென்ற தண்டகாரணியம் பூமியில் தானே யிருக்கிறது; ஆகட்டும், விடுகிறோமா?'என்று சொல்லிச் சிறிதுதேறித் தேரின்சுவடு சென்றவழியைப் பற்றுவோ மென்று மனத்தில் ஓரெண்ணங் கொண்டார்க ளென்பதாம்; இராமனைப்பிரிந்த நகரத்துமாந்தர் பலவகைச் செயல் நிகழ்த்தியதாகக் கூறியது - வினைமுதல் விளக்கணியாம்: இதனை, வடநூலார் காரகதீபகாலங்காரமென்பார். 'வெய்யனையன் வினை' என்பதை விகுதிபிரித்துக் கூட்டாமல், "உயர்திணை தொடர்ந்தபொருள் முதலாறு, மதனொடு சார்த்தினத்திணைமுடிபின"என்ற சூத்திரத்தால் உயர்திணைதொடர்ந்த செயல் உயர்திணைமுடிபைக் கொண்டதாக அமைத்தலுமொன்று. பி-ம்:—[1]ஓடுவார். [2]நீத்தான். [3]நுமை. [4]வெய்யவையன். [5]ஒட்டுப். [6]சுட்டுச. [7]சேர்தல், சோராது. [8]ஆற்றுதுமேல். [9]தொடர்ந்த. (கூகஅ)

அஉ.—தேர்ச்சுவடு நகர்நோக்கிச்சென்றதுகண்டு யாவரும் மகிழ்ச்சிகொண்டு ஆரவாரித்தல்.

தேரின் சுவடு நோக்குவார் திருமா நகரின் [1]மிசைத்திரிய
ஊருந் திகிரிக் குறி[2]யொற்றி யுணர்ந்தா ரெல்லா முயிர்வந்தா
ராரு மஞ்ச லையன்போ யயோத்தி யடைந்தா [3]னென்றசனிக் [தார்.
காருங்கடலு [4]மொருவழிக்கொண் [5]டார்த்த வென்னக் [6]கடிதார்த்

(இ - ள்.) தேரின் சுவடு நோக்குவார் - தேரின்சக்கரவடுவைத் தேடிச் சென்ற நகரத்துமாந்தர்,—திரு மா நகரின்மிசை திரிய ஊரும் திகிரி குறி ஒற்றி - சிறந்த அயோத்திமாநகரத்தை நோக்கி மீண்டுசெல்லுந் தேர்ச்சக்கரத்தின் அடையாளத்தைக் கண்டு, உணர்ந்தார் - (தம்மறிவினால்) ஆராய்ந்து அறிந்தவராய், எல்லாம் - யாவரும், உயிர் வந்தார்-(போவதுபோன்றிருந்த தம்முடைய) உயிர (சரியான நிலைக்கு) வரப்பெற்றவராய், 'ஆர்உம்-எவரும், அஞ்சல் - அஞ்சவேண்டா; ஐயன் போய் அயோததி அடைந்தான் - இராமபிரான் மீண்டு சென்று திருவயோத்தியைச சேர்ந்திட்டான்,' என்று-என்று சொல்லி,—(பெருமகிழ்ச்சியடைந்து), 'அசனி கார்உம் கடல்உம்-பேரிடியையுடைய வானமும்(அலைமோதுதலையுடைய)சமுத்திரமும்,ஒரு வழி கொண்டு-ஓரிடத்துச் சேர்ந்து, ஆர்த்த - ஆரவாரித்தன,' என்ன - என்று (கண்டோர்) கருதும்படி, கடிது ஆர்த்தார் - மிகவும் ஆரவாரித்தார்கள்; (எ - று.)

தேரின்சுவட்டைப்பற்றி அதுசென்ற வழியே சென்று தண்டகைசேரலாமென்று கருதிய நகரத்தவர், தேரின்சுவடுசெல்லும்வழியைக்கண்டு அது தென்திசையாகச் செல்லாமல் வடதிசையாக ஊர்க்குச்சென்றிருந்ததுபற்றி, 'இராமன் நம்முடைய வேண்டுகோட்குஇணங்கி வனத்துவசித்தலுக்குப் பின்வாங்கி நகரதுக்கே திரும்பிச்சென்றிட்டான்' என்று அறுதியிட்டு, தங்களுடைய கருத்து நிறைவேறியதனாலான பெருமகிழ்ச்சியால் வானமும் கடலும் ஒருங்குசேர்ந்து ஒலித்தாலொப்பப் பேராரவாரமுண்டாகும்படி மகிழ்ச்சியினாற் கர்ச்சித்தனரென்பதாம். இதுவரையிற் பெருந்துயரத்தால் உயிர் சோர்ந்திருந்த நகரத்தவர் இப்போது அத்தளர்ச்சி நீங்கி மனக்கிளர்ச்சிகொண்டனரென்பது, 'எல்லாமுயிர்வந்தார்'என்றதன்பொருள். அஞ்சல் எதிர்மறை வியங்கோள்முற்று; "மகனெனல்"என்ற விடத்துப்போல. பி-ம்:—[1]திசைச் செல்ல, திறமறிய. [2]ஒற்ற, தோற்ற. [3]என. [4]ஒருழிக், ஒருமொழிக். [5]ஆர்த்தது. [6]கலித்து. (சுககூ)

அரு.—மகிழ்ச்சியடைந்த அந்நகரத்துமாந்தரின் வருணனை.

மான வரவின் வாய்த்[1]தீய வளைவான் றொளைவா ளெயிற்றின்[2]வழி
யானகடுவுக் கரு[3]மருந்தா வருந்து மமுதம் [4]பெற்றுய்ந்து
போன பொழுதிற் புகுந்தவுயிர் [5]பொறுத்தா ரொத்தார் பொருவரிய
வேனின் [6]மதனை மதனழித்தான் மீண்டா னென்ன [7]வாண்டையார்.

(இ - ள்.) ஆண்டையார் - அங்குஇருந்த நகரத்தவர்,—'பொரு அரிய வேனில் மதனை மதன் அழித்தான்-(அழகில்) ஒப்பற்றவனான வேனிற்காலத்துக்குஉரிய மன்மதனையும் (தன்னுடையபேரழகினால் நான் தான் அழகில் உயர்ந்தவனென்றுகொண்டிருந்த) செருக்கைப் போக்கினவனாகிய ஸ்ரீராமபிரான், மீண்டான்-(நகரத்துக்கே)திரும்பிவிட்டான்,'என்ன-என்று கருதியதனால்,-மானம் அரவின்-சிறுந்தன்மையைக்கொண்டுள்ள சர்ப்பத்தின், வாய்-வாயிலுள்ள, தீய வளை வான் தொளை வாள் எயிற்றின்வழி-கொடிய வளைந்த பெரிய தொளையைக்கொண்ட கூரிய விஷப்பற்களின் வழியாக, ஆன-(தம்மீது)பாய்ந்த, கடுவுக்கு-நஞ்சைப் போக்குவதற்கு, அரு மருந்து ஆ-அருமையான மருந்தாகிய, அருந்தும் அமுதம்-உண்ணுதற்குரிய தேவாமிருதத்தை, பெற்று - அடைந்து, உய்ந்து போன பொழுதில் - இறக்குந்தன்மைநீங்கிப் பிழைத்துவிட்டபொழுதில், புகுந்த உயிர் - (தம்முடையஉடம்பில்) மீண்டும் வந்துசேர்ந்த ஆன்மாவை, பொறுத்தார்-தாங்கியவரை, ஒத்தார்—; (எ - று.)

இராமபிரானுடன்சென்று அப்பிரானைப்பிரிந்த பிரிவுத்துயரத்தினால் உயிர்போகும் நிலையையடைந்து அவ்விராமபிரான் நகரத்திற்கேதிரும்பிவிட்டானென்ற உறுதியான எண்ணத்தை யடைந்ததனால் அத்துயர் நீங்கி உயிர் தளிர்க்கப்பெற்ற அயோத்திமாநகரத்துச் சனங்கட்கு, அரவுதீண்டிய நஞ்சின் வேகத்தால் உயிர்போகும் நிலையையடைந்து அந்நஞ்சைப் போக்கும் அருமருந்தாகிய தேவாமிருதத்தைப்பெற்று அதனால் உயிர் உடலில் மீண்டுவரப்

பெற்றவரை உவமைகூறினர்; உவமையணி. நாகத்திற்குக் காளன் காளாத்திரி யமன் யமதூதி என்ற நான்கு நச்சுப்பற்கள்உள்ளன என்றும், நாகம் பல்லாற்கடித்துத் தம்பற்களின்புரையிலுள்ள நஞ்சைக் கடித்த இடத்தின்வழியாக உடலிற் செலுத்தினல்தான் அவ்விஷம் இரத்தத்திற் கலந்து மாளச் செய்கின்றதென்றும் கூறுவர். மன்மதன் அழகுவிஞ்சியவ னென்பது, பிரசித்தம்: அவனினும்மிக்க அழகையுடையவன் இராம னென்பார், 'மதனை மதனழித்தான்'என்ருர். இனி இத்தொடர்க்கு-சிவபெருமான் என்று பொருளுரைத்து, இராமபிரான் கானம்புகுந்து பகைவரான அரக்கரைக் களையப் போவதனுல், அவனுக்குச் சிவபெருமானை உவமைகூறியது எனக் காட்டினரு முளர். பி ம்:—[1]தீயின். [2]வரவு. [3]நஞ்சமருந்து மமுது, மருந்தாமருந்து மமுதம், நஞ்சாமமிர்தமருந்து. [4]பெற்றுயர்ந்து, பெறலஞ்சி. [5]போர்த்தாரோத்தார். [6]மதனின்மிகமிக்கான், மதனை யெழிலழித்தான். [7]ஆண்டகையார், ஆண்டைஇயார். (சுஉ0)

அசு.—இராமனைத் தொடர்ந்துசென்றோர் நகரத்திற்கு மீளுதல்.

ஆறு செல்லச் செல்லத்தே ராழி கண்டா [1]ரயற்பால
வேறு சென்ற நெறிகாணுர் [2]விம்மா நின்ற [3]வுவகையராய்
மாறி யுலகம் வகுத்தநாள் வரம்பு கடந்து மண்முழுது
மேறி யொடுங்கு [4]மெறிகடல்போ [5]லெழின்மா நகர மெய்தினர்.

(இ - ள்.) ஆறு செல்ல செல்ல-வழி கடந்து போகப்போக, தேர் ஆழி கண்டார்-தேர்ச்சக்கரத்தின் வடுவைப் பார்த்த அவர்கள்,—அயல் பால வேறு சென்ற நெறி காணுர்-(நகரத்திற்குச் செல்வதன்றி) அயலான இடத்ததாய்த் (தேர்ச்சக்கரங்கள்) வேருகசென்ற வழி (எதையும்) காணுமல், விம்மா நின்ற உவகையர் ஆய்-மேன்மேல் விஞ்சித்தோன்றுகின்ற மகிழ்ச்சியையுடையவராய்,—மாறி-(பிரளயம்) தோன்றி,(பின்பு), உலகம் வகுத்த நாள்-உலகத்தைப் படைத்த காலத்தில், வரம்பு கடந்து மண் முழுதுஉம் ஏறி ஒடுங்கும் எறி கடல் போல் - எல்லையைமீறி உலகம் முழுதும்சென்று மீண்டும் தன்னெல்லையில் அடங்குகின்ற அலைவீசுங் கடல்போன்று, எழில் மா நகரம் எய்தினர் - அழகிய அயோத்தியாபுரியைச் சேர்ந்தார்கள்; (எ - று.)

தேர்ச்சுவட்டையே பற்றிச்சென்ற அந்நகரத்துமாந்தர் அச்சுவடு அயோத்திமாநகரத்துக்குச்செல்வதன்றி வேற்றிடத்துக்குச் செல்லவில்லையென்பதைத்திண்ணமாகத்தெளிந்து,'இராமபிரான் நகரத்திற்கே மீண்டனன்'என்று நம்பிப் பெருமகிழ்ச்சிகொண்டு நகரத்திற்கே மீண்டன ரென்பதாம். இராமபிரான் காட்டிற்குச் சென்றபோது பெருந்திரளாக அவனுடன் புறப்பட்ட நகரத்துமாந்தர் மீண்டுந் திரும்பிவந்து சேர்தற்கு, பிரளயகாலத்தில் தன் எல்லைகடந்து பொங்கி மண்முழுதும் பரவியகடல் உலகத்தைப்படைக்குங்காலத்தில் மீண்டு தன்எல்லையிலே யடங்குதலை உவமை கூறினர்; தற்குறிப்பேற்றவுவமையணி. இராமபிரான் கானஞ்செல்லும்போது திரண்டுபெருந்திரளாச்

சென்ற மாந்தர்க்கு உலகநிலைமாறும் பிரளயகாலத்தில் வரம்புகடந்து உலக மெங்குஞ் செல்லுங் கடலும், இராமன் மீண்டனனென்ற கருத்தினால் மீண்டு அயோத்தி சென்றுசேர்ந்த அம்மாந்தர்க்குத் தன்னிலையிலொடுங்கும் கடலும் உவமை யெனக் காண்க. மாறுதல் என்பது - ஏற்கனவேயுள்ள நிலை மைவேறுபடுதலாதலால், பிரளயத்தையடைவதைக் காட்டிற்று. பி - ம்:— [1]அயலப்பால், ஆயப்பால். [2]விம்மி. [3]உவகையான். [4]அலை. [5]எயில். (சுஉக)

அரு.—மீண்டுவந்தநகரத்தவர் அரசனிறந்ததையும் இராமபிரான் கானகஞ் சென்றதையு முணர்ந்து பெருந்துயருறுதல்.

புக்கா ரரசன் பொன்[1]னுலகம் போனா னென்னும் பொருள்கேட்டா
ருக்கார் நெஞ்ச முயிருகுத்தா ருற்ற தெம்மா லுரைப்பரிதா
றக்கான் போனான் வனமென்னுந் [2]தகையு முணர்ந்தார் [3]மிகையாவி
யக்கா லத்தே [4]யகலுமோ [5]வவதி யென்றொன் [6]றுளதானால்.

(இ - ள்.) புக்கார் - (அங்ஙனம் மீண்டு அயோத்திநகரைச்) சென்ற டைந்தவர்கள்,—அரசன் பொன் உலகம் போனான் என்னும் பொருள் கேட்டார் - 'தசரதமன்னவன் விண்ணுலகம் அடைந்தான்' என்ற செய்தியையும் கேட்டார்கள்; '(அங்ஙனம் அரசன் விண்ணையடைவதற்குக் காரணமாக), நக்கான் வனம் போனான் - பெருந்தகையாகிய இராமபிரான் வனத்திற்குச் சென்றான்,' என்னும் - என்கின்ற, தகைஉம் - செய்தியையும், உணர்ந்தார்- அறிந்தனர்: (இவ்விரண்டு துயரச்செய்தியால்), நெஞ்சம் உக்கார் - மனம் முறியப்பெற்றார்; உயிர் உகுத்தார் - உயிரொழிந்தவர்போல் மூர்ச்சையடைந் தார்; உற்றது - (அவர்கள்பட்ட) பெருந்துயரத்தை, எம்மால்—, உரைப்பு - சொல்வது, அரிது - முடியாதசெயலாகும்: (ஆனால், அவர்கள் உயிர் ஏன் நீங்கவில்லையென்னில்),—மிகை ஆவி-எஞ்சிநின்ற உயிர், அவதி என்று ஒன்று உளது ஆனால்-(உயிர்போவதற்கு விதியினால் ஏற்பட்ட) காலவெல்லையென்ப தொன்று இருக்குமானால் [உயிர் செல்லவேண்டியகாலம் இன்னதென்று ஒவ் வொருவர்க்கும் காலவெல்லை விதியினால் ஏற்பட்டிருத்தலா லென்றபடி], அ காலத்து ஏ அகலும் ஒ - அங்ஙனம் பெருந்துயரம் நேர்ந்தகாலத்து உயிர் உடம்பைவிட்டுச் செல்லுமோ? [செல்லாதென்றபடி]; (எ - று)

மீண்டுவந்த நகரத்தவர் இராமபிரான் திரும்பிவந்திடாது தங்களைவஞ் சித்து வனத்திற்கேசென்றன னென்பதையும் அத்துயரச்செய்தியைச் சுமந் திரனாலறிந்தவுடன் புத்திரசோகத்தினாற் பெருந்துயரடைந்து தசரதமன்னன் இறந்திட்டானென்பதையும் உணர்ந்து, இவர்களுயிரும்போய்விடு மென்று கருதுமாறு அவ்வளவு பெருந்துயரமடைந்தார்கள்: ஆனால், அகாலத்தில் உயிர்போகா ஆதலால், அவர்களின்உயிர் போகவில்லையென்பதே. இப்படி அவர்கள் பட்ட துயரத்தை நம்மால்எடுத்துச்சொல்லவும் முடியாதென்றவாறு. ஈற்றடி-முதன்மூன்றடிகளைச் சமர்த்தித்துநின்றது, தொடர்நிலைச் செய்யுட்

தூறியணி. இச்செய்யுளை நகர்நீங்குபடலத்தின் ௨௬௧—ஆஞ் செய்யுளோடு ஒப்பிடுக. பி - ம்:—[1]உலகில். [2]தகைமை. [3]மிகவாவி. [4]அழியுமோ. [5]உறுதி. [6]உள.

௮௬.—அங்ஙனம் வருந்திய நகரத்தவரின் வருத்தத்தை வசிட்டன் தணித்தல்.

*மன்னற் [1]கல்லார் வனம்[2]போன மைந்தற்[3]கல்லார் வாங்கரிய*
*வின்னற் சிறையி [4]னிடைப்பட்டா ரிருந்தார் நின்ற வருந்தவனு*
*முன்னற் கரிய பழிக்கஞ்சி யன்றோ வொழிந்த தியானென்று*
*பன்னற் [5]கரிய பலநெறியும் பகர்ந்து [6]பதைப்பை [7]நீக்கினான்.*

(இ - ள்.) மன்னற்கு அல்லார் - (நகரத்திலிருந்தபடியே) தசரதமன்னவனுக்கு உதவப்பெறாதவரும், வனம் போன மைந்தற்கு அல்லார் - காட்டிற்குச்சென்ற இராமபிரானுடனேயிருந்து அவனுக்கு உதவப்பெறாதவருமாகி, வாங்க அரிய இன்னல் சிறையினிடை பட்டார் - போக்குவதற்குக் கூடாத துன்பமாகிய சிறையிலே யகப்பட்டுக்கொண்டு தவிப்பவராய், இருந்தார் - (மீண்ட அந்நகரத்தவர்) இருந்தார்கள்; நின்ற அரு தவன் உம் - (அவர்களிடையே வந்து அவர்கள்படும் பெருந்துன்பத்தைப்பார்த்து) நின்ற அரிய தவத்தையுடைய வசிட்டமுனிவனும், 'உன்னற்கு அரிய பழிக்கு அஞ்சி அன்றோ யான் ஒழிந்தது - யானும் நினைத்தற்கும் அரிய [மிக்க] பழிக்குப் பயந்தன்றோ உயிர் நீங்காது இத்துயரத்தைக் கண்டுகொண்டிருந்தது,' என்று—, பன்னற்கு அரிய பல நெறிஉம் பகர்ந்து-சொல்லுதற்கும் அருமையான (துயராறுதற்குஉரிய) பலமுறைகளையும் சொல்லி, பதைப்பை-(அவர்கள் மனத்துக்கொண்ட) துடிப்பை, நீக்கினான்—; (எ - று.)

'நகரத்திலேயே இருந்து மன்னவனுக்குத்தேறுதல் முதலிய செயலைச் செய்தால் மன்னற்குஆனவராகலாம்; அன்றி, இராமபிரான் சென்றதையுணர்ந்து நகருக்குமீளாமல் அவனிருக்குமிடத்தைநாடி அவனைச்சேர்ந்திட்டால் அந்த இராமனுக்கு ஆனவராகலாம்: இப்படி இருவரில் எவற்கும் உதவாமல் ஏமாந்திட்டோமே! இப்படிப்பட்ட நம்முடையஉயிரை வைத்துக்கொண்டிருப்பது எற்றுக்கு?' என்று மிகவும்வருந்தித் துடிக்கின்ற அந்தச் சனங்களைப் பார்த்து, வசிட்டமுனிவன் 'எனக்கும் உங்களைப்போலவே மனவருத்தம் மிக்குள்ளதே; இந்தஉயிரையும் விட்டிடலாமென்ற கருத்தும் உண்டு; ஆயினும், அங்ஙனம் தற்கொலைசெய்துகொள்வது மறுமையிற் கொடுநரகத்தைத் தரும் பெரும்பாதகத்தை விளைக்கு மென்றே அங்ஙனஞ் செய்யாதொழிந்தேன்: மன்னவனோ விதிவசத்தாற் புத்திரசோகமென்ற ஒருவியாசத்தினாலிறந்திட்டான்: அங்ஙனம் எல்லார்க்கும் நேருமோ? விதியின்வழி யன்றோ யாவும் நிகழும்' என்றாற்போலத் தேறுதலையுண்டாக்கும் வசனங்கள் பலவற்றையும் போதித்துத் தேற்றி அவர்கள்பதைப்பைப் போக்கலாயின னென்பதாம். 'சாமானியரான மானுடர்யாவரும் இராமபிரான் காட்டிற்குச் செல்கின்றானென்றால் பின்தொடர்வதும் அவனைப்பிரியநேர்ந்ததற்காக உயிரைவிடுவோமென்பதாக மிகவருந்துவதுமாகையில்,வசிட்டன்மனம் கல்லோ?', அவனுக்கு

இராமனைப்பிரிந்ததில் அத்துணையாகவருத்தம் இல்லையோ?' என்று ஆசங்கை இந்தச சரித்திரத்தைப் படித்துச்செல்வோர்க்குத் தோன்றக்கூடுமாதலால், அதனையொழித்தற்காக, கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பர் "வசிட்டமுனிவன் மெய்யுணர்வினனாதலால் தனது வாலறிவால் மனத்தைத் தேற்றித் துயரத்தையடக்கிக் கொண்டிருந்தானே யன்றி அவனுக்குப்பெருந்துயரமில்லை யென்பது இல்லை" என்றப்பொருள் தோன்றுமாறு இராமபிரானுடன் சென்ற நகரத்தவரைத் தனது பலநிறப்பட்ட போதனையால் ஆற்றினு னென்று கூறினர்போலும். இவ்விஷயம் முதனூலிற் காணப்பட்டிலது. பி - ம்:—[1]அல்லர், அல்லால். [2]புகுந்த. [3]அல்லர், அல்லால், அல்லல். [4]இடர். [5]உரிய. [6]பதைப்பு. [7]விலக்கினன். (சஉகூ)

அஎ.—கவிக்கூற்று: இனி இராமன் சரிதை கூறுவோமெனல்.

வெள்ளத் திடைவாழ் வடவனலை யஞ்சி வேலை கடவாத
பள்ளக் கடலின் முனிபணியாற் பையு ணகரம் [1]வைகிடமேல்
வள்ளற் றாதை [2]பணி யென்னும் வானோர்[3]தவத்தால் வயங்கிருளி
னள்ளிற் போன வரிசிலைக்கை நம்பி செய்கை நடத்துவாம்.

(இ - ள்.) வெள்ளத்து இடை-(தனது) நீர்ப்பெருக்கின் நடுவில், வாழ்-தங்கியுள்ள, வட அனலை-வடவாக்கினிக்கு, அஞ்சி-பயந்து, வேலை கடவாத-(தன்) கரையை மீறிச்செல்லமாட்டாத, பள்ளம் கடலின் - ஆழமான கடல் போல, முனி பணியால்-வசிட்டமுனிவனது கட்டளையினால், பையுள் நகரம்-துன்பத்துஅழுந்திய நகரத்தவர், வைகிட - (தம்முயிரைப் போக்குவதென்ற கருத்தையொழித்து ஒருவாறு ஆறியிருக்க,—வள்ளல் தாதை பணி என்னும் வானோர் தவத்தால - உதாரகுணமுடைய தந்தையாகிய தசரதமன்னவனுடைய கட்டளையென்கின்ற வானோர் செய்த தவப்பயனால், வயங்கு இருளின் நள்ளில்-செறிந்த இராப்போதின் நடுவில், போன - (தன்னுடன் வந்த நகரத்தவரை வஞ்சித்துச்) சென்ற, வரி சிலை கை நம்பி - கட்டமைந்த வில்லையுடைய இராமபிரானது, செய்கை - செயலை, மேல் - இனி, நடத்துவாம் - கூறுவோம்; (எ - று.)

அயோத்திமாநகரத்துக்கு மீண்ட சனங்கள் வசிட்டனுபதேசத்தாற் கரைபுரண்டு பொஙகிவந்த தமது துயரக்கடல் தம்முள்ளேயடஙக ஒருவாறு அடஙகியிருந்தார்கள்: அயோததியின்செய்தி இவ்வாறிருக்க: நள்ளிரவில் தன்னுடன்வந்த நகரத்தவரை வஞ்சித்துச்சென்ற இராமபிரானது சரிதையை இனிச்சொல்வோ மென்பதாம். இராமபிரான் வனஞ்சென்றது தேவர்கட்கு இடையூறு இயற்றிவந்த இராவணன் இந்திரசித்து முதலிய அரக்கர் அழிந்தொழிதற்குப் பரம்பரையாய்க் காரணமாதலால், தந்தைபணி யென்று அப்பிரான் வனவாசஞ்செய்யினும் அது தேவர்கள்செய்த தவத்தின் பயனால் நிகழ்ந்ததேயென்பார், 'தாதைபணியென்னும் வானோர்தவம்' என்றார். சமுத்திரத்தின் இடையிலே ஒரு பெண்குதிரை யிருக்கின்றதென்பதும்,அது தன் வாயிலுள்ள அக்கினியினால மிககமழை யாறுகளின்பெரு வெள்ளம் என்பவற்

றால் கடலில் நீர் மிகும்போது அந்நீரைப் பருகிக் கடலை ஓரெல்லையில்தானே நிற்குமாறு செய்கின்றதென்பதும் நூற்கொள்கை: அந்தப் பெண்குதிரை 'படபா' எனப்படும்: அநலம் என்றால், அக்கினி; படபா அநல என்ற இரண்டு வடமொழிகள் ஒன்றுசேர்ந்து தீர்க்கசந்திபெற்ற தொடர்மொழியாகிய படபாநல என்பது தென்மொழியில் திரிந்து விகாரப்பட்டு 'வடவனல்' என்றாயிற்று: வடதிசையிலுள்ள அனல் என்று காரணப்பொருளுரைப்பாருமுளர். **பி-ம்:—** [1]பதைப்படங்க, வைகலுமேல், வைகமேல். [2]பணியினால், பணியானும். [3]வரத்தால். (கூஉ-ச)

தைலமாட்டுப்படலம் முற்றிற்று.

---

## கூ - ஆவது கங்கைப்படலம்.

கங்கையைப்பற்றிய படலமென்று விரியும். இராமபிரான் குகனை நண்பனாகக்கொண்டு அவனால் கங்கையைக்கடந்ததைத் தெரிவிக்கும்படலமென்பது, பொருள். இப்படலத்தின்பெயர் பலபிரதிகளில் '**குகப்படலம்**' என்று காணப்படுகிறது. இங்ஙனம்காணும் பிரதிகளில் இப்போது காணப்படும் கக-ஆம் படலமாகிய குகப்படலத்திற்குக் **கங்கைப்படலம்** என்று பெயர் காணப்படுகிறது. "ஏழையேதலன்கீழ்மகனென்னாதிரங்கிமற்றவற்கின்னருள்சுரந்து, மாழைமான் மடநோக்கி யுன்றோழி யும்பியெம்பி யென்றொழிந்திலையுகந்து, தோழனீயெனக்கிங்கொழியென்ற சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட, வாழியண்ணலே நின்னடியிணை யடைந்தேன்," "கூரணிந்தவேல் வலவன் குகனோடுங்கங்கைதன்னிற், சீரணிந்ததோழமைகொண்டதும்" என்று பெரியோரும் பாராட்டிக்கூறும்படி ஸ்ரீராமபிரான் குகனோடுதோழமை கொண்டதைத் தெரிவித்தல் முக்கியமாதலால் குகப்படலமென்ற இப்பெயரே இப்படலத்திற்கு ஏற்கும்.

சுமந்திரனை அயோத்தியாபட்டணத்துக்கு அனுப்பி நகரத்துச்சனங்கட்குத்தெரியாமல் நள்ளிருளில் நடந்த ஸ்ரீராமன்முதலிய மூவரும் மருதநிலங்களின் வளங்களைக் கண்ட வண்ணம் நாட்டைக் கடந்து கங்கைக்கரையையடைந்து அங்கேயுள்ள தவசியர்வந்து உபசரிக்கக் கங்கைநீராடிச செய்கடன்முடித்து அம்முனிவரிட்டகாய்கிழங்குமுதலியன உண்டு பர்ணசாலையில் மகிழ்ந்திருக்கையில், அந்தக் கங்கைக்கரையிலுள்ள சிருங்கபேரபுரத்துக்கு அரசனாகிய குகனென்பான் இராமபிரான் வந்துள்ளதைக் கேள்வியுற்றுக் காணிக்கைப்பொருள்களைக் கையிலேந்தித் தன்சேனையோடும் அங்கு வந்து இராமபிரானைக் காணவந்திருப்பதை இலக்குமணன் மூலமாக அறிவித்து அனுமதிபெற்றுத் தான்மாத்திரம் உட்புக்கு அடிவணங்கிக் காணிக்கைப்பொருளை யீய, இராமபிரான் 'காணிக்கைப் பொருளைப்பெற்றாற்போல் மகிழ்ந்தேன்: நீ இன்று உன் சுற்றத்தோடு ஊர்க்குப்போய் நாளைக் கங்கை கடக்குமாறு நாவாய் கொணர்க' என்ன, பிரிந்து செல்லுதற்கு அன்னான்

வருந்தியது கண்ட இராமபிரான், அன்றிரவுதன்னேடிருக்க அனுமதிதர, குகனும் இளையபெருமாளைப்போலவே இராமனை இரவிலே தன்சேனையோடும் காவல்புரிந்தனன். மறுநாள் பொழுதுபுலர்ந்ததும், நாட்கடன்முடித்த பின் ஸ்ரீராமன் 'விரைவில் நாவாய் கொணர்க' என்ன, குகன் மிகவும் வருந்தி 'வேண்டிய குற்றேவல்புரிவேன். இங்குத்தானே கழிக்கவேண்டிய நாட்களைக் கழிக்க'என்று வேண்ட, இராமபிரான் அதுகேட்டு 'நான் புண்ணியநதியாடிப் புனிதரை வழிபடவேண்டும்: அவைபுரிந்து சிலநாளில் வருவோம்' என்றான். குகனும் ஸ்ரீராமபிரான்கருத்தை யுணர்ந்து நாவாய் கொணர்ந்து 'ஏறுக' என்ன, இராமபிரான் சீதாலக்ஷ்மணரோடும் முனிவர் பக்கல் விடைபெற்றுக்கொண்டு நாவாயேற, நாவாய்கொண்டு கங்கையைக் கடத்தினான். பிறகு, ஸ்ரீராமன் 'சித்திரகூடஞ் செல்லும்வழியாது?'என்று அக்குகனை வினவ,குகன் 'நான் தேவரீரைவிட்டுப் பிரியேன்: என்சேனையோடும் உமக்கு வேண்டியதெல்லாம் புரிவேன்: உம்மோடு இருக்க அநுமதிதருக' என்று மிகவும் வேண்ட, அவன்வார்த்தையைக் கேட்டு ஸ்ரீராமன் அந்தக் குகனைநோக்கி, 'நீ என்னுயிரை யொத்தவன்: என்தம்பி உன்தம்பி: சீதை உன்தோழி: நாங்கள் தயரதர்க்கு நால்வர்புதல்வ ரிருந்தோம்: இப்போது ஐவரானோம்: இனி உன்சுற்றம் என்சுற்றமே: ஆதலால் சிருங்கபேரபுரத்தவரைப் பாதுகாப்பாயாக; அயோத்திக்கு மீளும்போது இங்குவருவோம். கோசலநாட்டைக் காத்தற்குப் பரதனை வைத்தோம். இங்குள்ளாரைப் பாதுகாக்க உன்னை வைத்திருக்கிறோம்.என்கிளைஞரான இவரைப் பாதுகாப்பாய்' என்று நட்புரிமைபாராட்டிச் சொல்ல, இட்டபணியைக் கடக்கமாட்டாமல் குகன் விடைபெற்றுக்கொள்ள, பிறகு இராமன்முதலியோர் காட்டுநெறியை நோக்கி நடந்துசென்றன ரென்பது இப்படலத்திற் கூறியபொருள்.

## வேறு.

### க.—இராமபிரான் இலக்குமணனோடுஞ் சீதையோடுஞ் செல்லுதல்.

வெய்யோனொளி தன்மேனியின் [1]விரிசோதியின் மறையப்
பொய்யோவெனு மிடையாளொடு [2]மிளையானொடும் போனான்
மையோமர கதமோ[3]மறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதொ ரழியாவழ குடையான்.

(இ - ள்.) 'இவன் வடிவு-இவனது திருமேனியின் நிறம், மையை-அஞ்சனத்தைப் போலுமோ? மரகதம் ஓ-மரகதவிரத்தினத்தைப் போலுமோ? மறிகடல் ஓ-(அலை) மடங்குந்தன்மையுள்ள கடலைப் போலுமோ? மழை முகில் ஓ-மழைபெய்யும்நிலையிலுள்ள வானத்தைப் போலுமோ? ஐயோ-!' என்பது-என்று சொல்லத்தக்க, அழியா ஒர் அழகு உடையான் - ஒப்பற்றுமாறுத அழகைப் படைத்தவனாகிய இராமபிரான்,-வெய்யோன் ஒளி தன் மேனியின் விரி சோதியின் மறைய-வெப்பமான கிரணங்களையுடைய சூரியனது ஒளி

தனது திருமேனியினின்று வெளிப்பட்டுப்பரவுகின்ற ஒளிக்குள் மறைந்திட, பொய் ஓ எனும் இடையாளொடு உம்-இல்லையென்று சொல்லுமாறு [மிக நுண்ணியதாக] உள்ள இடையைக்கொண்டவளான சீதாபிராட்டியோடும், இளையானொடு உம்-இளையபெருமாளுடனும், போனான் - செல்லலானான்.

மைமுதலியவை என்றும்மாறாது ஒருபடிப்பட அழகுடையனவல்ல வாதலாலும் ஞாயிற்றினொளியும் தம்முள் மறையும்படி பேரொளிபடைத்தன வல்லவாதலாலும் இராமபிரானது திருமேனிக்கு அவை ஒருபடியாக ஒப்பா வனவன்றி முற்றுவமையாகா வென்க: இங்ஙனம் அஞ்சனம்முதலியவற்றில் எதுவும் உவமையாகாமையால்தான், மையோ மரகதமோ மறிகடலோ மழை முகிலோ என ஐயப்படவேண்டிய தாயிற்று. ஐயோ - அதிசயமுறவிரங்கு தலைக் குறிப்பிக்கும் இடைச்சொல். "அச்சோவையோ, வென்னேயெற்றெவ னெனுஞ்சொ லதிசயமுறவிரங்கல்" என்பது, சூடாமணிநிகண்டு. வெய் யோன்ஒளி - சூரியனது ஒளிக்காக [சூரியனதுவெப்பத்துக்குஅஞ்சி], தன் - இராமபிரானின், விரி சோதியின் மறைய - பரந்தஒளிவடிவான திருமேனி நிழலிலொதுங்க;-(அங்ஙனம்மறைந்த), பொய்யோவெனும் இடையாளொடு என்று உரைகூறுவாருமுளர். பி-ம்:—[1]மிளிர். [2]இளையானொடு. [3]மழைமுகி லோ மறிகடலோ. (கூஉரு)

உ.—இதுமுதல் நான்குகவிகள் - இராமபிரான் சீதையுடனே தான் செல்லும் காட்டினில் திரியும் அன்னம்முதலியன காணுதலைக்கூறும்.

அளியன்னதொ [1]ரறறுன்னிய குழலாள்கட லமிழ்தின்
[2]றெளிவன்னதொர் மொழியாணிறை தவமன்னதொர் [3]செயலாள்
வெளியன்னதொ ரிடையாளொடும் விடையன்னதொர் நடையான்
களியன்னமு மடவன்னமு [4]முடனாடிவ கண்டான்.

(இ-ள்.) அளி அன்னது-வண்டினை யொத்ததாய், ஓர் அறல் துன்னிய-ஒப்பற்ற கருமணல் நெருங்கியிருப்பதுபோல நெருங்கியிருக்கின்ற, குழலாள்-கூந்தலையுடையவளும், கடல் அமிழ்தின் அன்னது தெளிவு ஓர் மொழியாள்-திருப்பாற்கடலினின்று தோன்றிய அமிருதத்தையொத்து [இனியவாய்] தெளிவான பேச்சுக்களையுடையவளும், நிறை தவம அன்னது ஓர் செயலாள்-நிறைந்ததவத்தையொத்துத் தூய்மையதான தொழிலையுடையவளும், வெளி அன்னது ஓர் இடையாளொடு உம் - ஆகாயத்தை யொத்ததான [கண்ணுக் குப் புலனாகாததான] இடையையுடையவளுமான சீதாபிராட்டியோடுங்கூட, விடை அன்னது ஓர் நடையான் - காளைமாட்டை யொத்த [கம்பீரமும் வலிமைச்செருக்குந் தோற்றுவதான] நடையையுடையவனான ஸ்ரீராமபிரான், களி அன்னம் உம்-மதக்களிப்பையுடைய அன்னமும், மடம் அன்னம் உம் - மடப்பத்தையுடைய பெண்ணன்னமும், உடன் ஆடுவ-சேர்ந்து உலாவுவதை, கண்டான்—; (எ - று.)

சீதையின் குழலுக்கு - அளியும் அறலும்; தெள்ளிய இனியமொழிக்கு - தெளிந்த இனிமை மிக்க அமுதமும், தூய்மையான செயலுக்கு - தவமும், கண்ணுக்குப் புலனாகாத இடைக்கு - ஆகாயமும் உவமையெனக் காண்க. அறல், நிறத்தோடு வடிவிலும் உவமை. விடையன்ன தொர்நடை - வ்ருஷப கதி. தூயசெயல் - கற்பொழுக்கம். அன்னம் என்ற பொதுப்பெயர் - 'களி,' 'மடம்' என்ற அடைமொழிகளைப்பெற்று, முறையேஆணையும் பெண்ணையுங் காட்டின. 'இடையாளொடும் விடையன்னதொர் நடையான் களியன்னமும் மடவன்னமு முடனாடுவ கண்டான்' என்றதனால், அவை சீதையும் தானும் உடன்செல்வதைப்போலு மென்ற குறிப்புடன் கண்டா னென்பது, பெறப்படும். பி ம்:—[1]அறல்பன்னிய. [2]தெளியன்னது. [3]பொறையாள். [4]நடமாடுவ, விளையாடுவ, விளையாடுதல். (௧௨௫)

௬. அஞ்சம்பையு மையன்[1]றன தலகம்பையு மளவா
நஞ்சங்களை [2]வெலலாகிய நயனங்களை யுடையா
[3]டுஞ்சுங்களி வரிவண்டுகள் குழலின் [4]படிசுழலுங்
கஞ்சங்களை [5]மஞ்சன்கழ னகுகின்றது கண்டாள்.

(இ - ள்.) அஞ்சு அம்பை உம் - (மன்மதனது) பஞ்சபாணங்களையும், ஐயன்தனது அலகு அம்பை உம் - இராமபிரானது கூர்மையான அம்பையும், அளவா - அளந்து [உவமையாற் கடந்து], நஞ்சங்களை வெலல் ஆகிய - விடத்தை வெல்லுகின்ற, நயனங்களை - கண்களை, உடையாள் - படைத்தவளான சீதை,—களி துஞ்சும் வரி வண்டுகள் - மதக்களிப்புத்தங்கிய இரேகைகளமைந்த வண்டுகள், குழலின் படி சுழலும் - வேய்ங்குழலின் தன்மையோடு [இன்னிசையோடு] வட்டமிடப்பெற்ற, கஞ்சங்களை - தாமரைமலர்களை, மஞ்சன் கழல் - இராமபிரானது திருவடிகள், நகுகின்றது - (தமக்கு இவை இணையாகா என்று) பரிகசிப்பதுபோன்றிருத்தலை, கண்டாள்—; (எ - று.)

சீதாபிராட்டி, வண்டுகள் சுழலப்பெற்றதும் மஞ்சன்கழல்நகுகின்றதுமான கஞ்சங்கள் தாம்செல்லும்வழியிடையே பூத்திருத்தலைக் கண்டாளென்றவாறு. அத்தாமரைமலர்கள் இராமபிரானது திருவடிகட்கு ஒப்பாகா என்றது - எதிர்நிலையணி. "அஸிதேக்ஷணா" என்று ஸ்ரீவான்மீகிபகவான் அருளிச்செய்யுமாறு கண்ணழகு விஞ்சியவளாதலால் 'அஞ்சம்பையும்......நயனங்களையுடையாள்' எனச் சீதாபிராட்டியைக் கண்ணழகுஉடையவளென்று பாராட்டிக்கூறினார். தமக்கு இலக்கானாரை வசப்படுத்துந்தன்மை அஞ்சம்புக்கும் இராமபிரானது அலகம்புக்கும் உளதாதல்பற்றி, அவை நயனங்கட்கு உவமையாயின. நஞ்சும் உண்டார்க்கே வேதனையுண்டாக்குவதாக இருக்க இந்தக் கண்கள் இலக்கானார்க்கும் வேதனையை விளைத்தலால், நயநம் நஞ்சங்களை வெல்வதாகும். இதனால், இராமபிரான் சீதாபிராட்டியின் கண்ணழகில் ஈடுபட்டுள்ளா னென்பது, விளங்கும். நஞ்சங்கள், கள் - அசை. அலகு - கூர்மைக்கு,

இலக்கணை. வண்டுகள் குழலின்படி சுழலும் என்னுமிடத்தில் "இருங்கட்டும்பி குழலாக" என்றது ஒப்புநோக்கத்தக்கது. களி துஞ்சும் வண்டுகள் குழலின்படி சுழலும்என்பதற்கு-களிப்புப்பொருந்தியவண்டுகள் நெய்கின்றகுழல் போலப் போவதும்வருவதுமாக இருக்கின்ற என உரைத்தாருமுளர். குழலின்படி-அளகத்திற் சுழல்வதுபோல என்று உரைத்தலும் ஒன்று. பி ம்:—[1]கையிலழகம்பை, தனதகலம்பை, கையிலகலம்பை. [2]வெல. [3]கொஞ்சுங்கிளி. [4]மிசைசுழலக். [5]அஞ்சங்களைநகுதன் கழல், மஞ்சன்கழனகுகின்றன. (கூஉஎ)

ச. மாகந்தமு மகரந்தமு மளகந்[1]தரு மதியின்
பாகந்தரு நுதலாளொடு பவளந்தரு மிதழான்
மேகந்தனி [2]வருகின்றது [3]மின்னோடென மிளிர்பூ
ணாகந்தனி வருகின்றது பிடியோடென நடவா.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) மா கந்தம் உம் - மிக்க நறுமணத்தையும், மகரந்தம் உம் - பூந்துகளையுங்கொண்ட, அளகம் - கூந்தல், தரு - பெற்ற, மதியின் பாகம் தரு- சந்திரனது துண்டத்தை [அஷ்டமீசந்திரனை] யொத்த, நுதலாளொடு-நெற்றியையுடையவளான சீதாபிராட்டியோடு, பவளம் தரும் இதழான் - பவழத்தையொத்த அதரத்தையுடையவனுகிய ஸ்ரீராமபிரான்,—மிளிர் பூண் - விளங்குகின்ற ஆபரணங்களையணிந்த, மேகம் மின்னோடு தனி வருகின்றது என- மழைமுகில் மின்னலோடுசேர்ந்து தனித்துவருகின்றதுபோலவும்,நாகம் பிடியோடு தனி வருகின்றது என - ஆண்யானை (தன்) பெட்டையோடு தனித்து வருகின்றதுபோலவும், நடவா-(தாளினால்) நடந்துசென்று,—(எ-று.) "குவளைத்தொகை கண்டான்" என அடுத்த செய்யுளோடு தொடர்ந்துமுடியும்.

மாகந்தம் மகரந்தம் என்பன, அளகத்துக்கு அடைமொழிகள். அளகம் - பெண்மயிர்: இது இப்பொருளதாதலை"அளகமோதியைம்பால்...பெண்மயிர்" என்ற பிங்கலந்தையாலும் அறிக. சீதாபிராட்டியின் கூந்தன்மயிரை யடுத்துத் தோன்றும் நெற்றியை 'அளகந்தரு மதியின் பாகந்தரு நுதல்' என வருணித்தார்; தரு - உவமவுருபு. நுதலாளொடு இதழான் வருவது - மேகம் மின்னோடு வருவதனையும், நாகம் பிடியோடு வருவதனையும் போலு மென்றார்; உவமையணி. மேகம்மின்னோடென்றது - வடிவத்திலும், நாகம் பிடியோடென்றது - நடையிலும் உவமையாம். மேகந்தனிவருகின்றது என்றது - இடியின்றி வருவதென்ற கருத்தினாலாகும். 'மிளிர்பூண்' என்ற அடைமொழி 'மேகம், நாகம்' என்ற இரண்டோடும் இயையத்தக்கது. நாகந்தனி வருகின்றது என்றது - யூதபதிஇனத்தோடும் வருவது இயல்பாதலால், அங்ஙனமின்றித் தனித்துவருகின்றதென்னும் பொருளை யுணர்த்தற்காக. நாகம்-நகத்தில்வாழ்வது என யானைக்குக் காரணக்குறி; நகம் - மலை. பி-ம்:—[1]தொடர், தர. [2]வருகின்றதொர். [3]வில்லோடென. (கூஉஅ)

ரு. தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை யமுதின்
கிளைகட்டிய கருவிக்கிள ரிசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்[1]கிளி விழிபோற்
களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத்தொகை [2]கண்டான்.

(இ-ள்.) தொளை கட்டிய கிளை முட்டிய சுருதி சுவை அமுதின்-தொளை பொருந்திய வேய்ங்குழலிலிருந்து (வாய்க்காற்றுத்) தாக்கியெழுப்பிய இசையாகிய (காதாற்)சுவைக்குந்தன்மையுள்ள அமுதம் போலவும்,கிளை கட்டிய கருவி கிளர் இசையின் - நரம்பு கட்டப்பெற்ற கருவியாகிய யாழினின்று எழுகின்ற இசைபோலவும், பசை நறவின் - பசுந்தேன்போலவும்,விளை கட்டியின் -(கருப்பஞ்சாற்றினின்று)உண்டாக்கப்படுகின்ற பாகுகட்டிபோலவும், மதுரித்து - இனிமையைப்பெற்று, எழு - உண்டாகின்ற, கிளவி - பேச்சையுடைய, கிளி-கிளிபோன்றவளான சீதாபிராட்டியின், விழி போல் - கண்களைப் போன்றுள்ள, களை கட்டவர் தளை விட்டு எறி குவளை தொகை-களைபிடுங்குபவர்வயலினின்று விட்டெறிகின்ற குவளைமலரின் தொகுதியை,கண்டான்-.

இராமபிரான் சீதையின் கண்களைப்போல் தோன்றுகின்ற குவளைமலர்த்தொகையைக் கண்டானென்க. சீதாபிராட்டியின் பேச்சு - இனிமையமைந்ததில் வேய்ங்குழலினிசையையும்,யாழினிசையையும், பசுந்தேனையும், கருப்புக்கட்டியையும் போலுமென்க. வேய்ங்குழலை வாசிப்போன் தன்வாயினின்று விடுத்த காற்று உட்புறத்துத் தாக்கித் திறந்த தொளைவழியே வெளிவருவதனாலேயே இசை பிறத்தலால், 'கிளைமுட்டிய சுருதி' என்றார். கிளை - வேய்ங்குழல்; "தண்ணுமையாழ் முழவங்கிளை" என்றதுங் காண்க. அமுதின் முதலிய இடங்களிலுள்ள இன்னே உவமப்பொரு வாக்காமல் உறழ்பொருவாக்கிச் சுருதிச் சுவையமுது முதலியவற்றைக் காட்டிலும் விஞ்சி மதுரித்தெழுகின்ற கிளவி என்று உரைத்தலும் பொருந்தும். கிளி - கிளிபோன்றவட்கு, ஆகுபெயர். பி-ம்:—[1]கிளர். [2]கண்டார். (சுஉகூ)

சு.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராமனுதியர் பலவகைக்காட்சிகளைக் கண்டவண்ணம் கோசலநாடுகடந்தமையைத் தெரிவிக்கும்.

அருப்பேந்திய கலசத்துணை யமுதேந்திய மதமா
மருப்[1]பேந்திய வெனலாமுலை மழையேந்திய குழலாள்
[2]கருப்பேந்திர முதலாயின கண்டாளிடர் காணுள்
பொருப்பேந்திய தோளாஞெடு விளையாடினள் [3]போனாள்.

(இ - ள்.) ஏந்திய - (இவள்)தாங்கியுள்ளவை,—அரும்பு ஏந்திய கலசம் துணை - அரும்பை(த் தன்மேலிடத்து)க்கொண்டுள்ள இரண்டு பொற்கலசங்களோ? (அன்றி), அமுது ஏந்திய மதம் மா மருப்பு - இனிமையை (த் தன்னிடத்து)க் கொண்டுள்ளனவும் மதயானையினிடத்துத்தோன்றியுள்ளனவுமான (இரட்டைத்)தந்தங்களோ? எனல்ஆம் - என்று சொல்லுதற்குத்தக்க,முலைதனங்களைக் கொண்டுள்ள, மழை ஏந்திய குழலாள் - மேகத்தை யொத்த கூந்தலையுடையவளாகிய சீதாபிராட்டி,— இடர் காணுள் - (தன் கணவனு

டன் செல்வதனால் வழிநடத்தலினாலுண்டாகிற) வருத்தத்தை (ச் சிறிதும்) அடையாதவளாய், பொருப்பு ஏந்திய தோளானொடு - மலையையொத்த தோளையுடைய இராமபிரானோடு, விளையாடினள்-மனம் மகிழ்ந்தவளாய், கரும்பு ஏந்திரம் முதல் ஆயின கண்டாள்-கரும்பாலை முதலியவற்றைக் கண்ட வண்ணம், போனாள்—;(எ - று.)

பலவகைக் காட்சிகளையும் கண்டுகொண்டே செல்வதனால் வழி நடந்த வருத்தம் சிறிதுந் தோன்றாமல், சீதை, மனமகிழ்ந்து இராமபிரானுடன் சென்றனளென்று கருத்துக் கூறுவாருமுளர். தனங்களுக்கு - அருப்பேந்திய கலசத்துணையும், அமுதேந்திய மாமருப்பும் உவமை. ஏந்திய ஏந்திரம்=யந்த் ரம்:வடசொல். 'மதமா ஏந்திய' என்பது, மருப்புக்கு இயற்கையடைமொழி. முன்னிரண்டடிகட்கு - அரும்பையேந்தியஎனவும் அமுதகலசத்துணையேந் திய எனவும் மதமா மருப்பேந்திய எனவுஞ்சொல்லுதற்குஉரிய முலையை யும் மழையேந்திய குழலையுமுடையவ ளெனக்கூறலுமாம். மூன்றாமடியில் தொடைமுரண்காண்க. ஏந்திய என்றசொல் பலமுறைவந்தது சொற்பொ ருட்பின்வருநிலையணியாம். பி-ம்:—[1]ஏந்தியது. [2]கருப்பேந்தியம். [3]போவாள்.

எ. [1]பன்னந்துக டாளந்தொகு படர்[2]பங்கய நன்னீ
ரன்னந்துயில் வதிதண்டலை [3]யயனந்துறை புளினஞ்
சின்னந்தரு மலர்[4]சிந்திய செறி[5]நந்தன வன[6]நன்
[7]பொன்னந்திய நதிகண்டுள [8]மகிழ்தந்தனர் [9]போனார்.

(இ - ள்.) பல் நந்துகள் தாளம் தொகு - பலசங்குகளினின்று தோன் றிய முத்துக்கள் சேரப்பெற்ற, படர் பங்கயம் நல் நீர்-படர்ந்துள்ள தாமரைக் கொடிகளையுடைய சிறந்த நீர்நிலைகளில், அன்னம் துயில் வதி-அன்னப்பற வைகள் தூங்குவதற்கு இடமான, தண்டலை - சோலைகளையும், அயல் நந்து உறை புளினம் - பக்கங்களில் சங்குப்பூச்சிகள் தங்கப்பெற்ற மணல்மேடுக ளையும், சின்னம் தரு மலர் சிந்திய செறி நந்தனவனம் - விடுபூவாக அணிதற் குரிய மலர்களைச் சிந்தியுள்ள பூஞ்செடிகளடர்ந்த நந்தவனங்களையும், நல் பொன் நந்திய நதி - சிறந்த பொன்னைக் கொழிக்கின்ற நதிகளையும், கண்டு —, உளம் மகிழ்தந்தனர் - மனமகிழ்ந்தவர்களாய், போனார் - (இராமன் முத லியவர்) சென்றார்; (எ - று.)

கால்நடையாகச்சென்ற இராமன்முதலியோர் தாம் செல்லும் வழியி டையேயுள்ள சோலைகளையும் புளினங்களையும் நந்தவனங்களையும் ஆறுகளை யும் கண்டு மனமகிழ்ந்தன ரென்பதாம். இராமபிரான் கோசலதேசத்தைக் கடந்து கங்கையைச் சேருமுன் தமசாநதிக்கரையில் தங்கியபின்பு தேவசுருதி கோமதி என்னும் நதிகளைக் கடந்தா னென்பது முதனூலால் விளங்கும். நந் திய - தோன்றிய எனினுமாம். பி-ம்:—[1]பன்னந்துகுதாளம். [2]பந்திகள்படுநீர், பந்துகள்படுநீர். [3]அயநந்துறை. [4]தந்தன, சிந்தின. [5]சந்தனவனம். [6]ஆம். [7]பொன்னுந்திய. [8]மகிழ்வுற்றனர். [9]போவார். (சூருக)

அ. கால்பாய்[1]வன முதுமேதிகள் கதிர்மேய்வன கடைவாய்ப்
பால்பாய்வன [2]நறைபாய்வன மலர்வாயளி படரச்
சேல்பாய்வன கயல்பாய்வன செங்கான்மட வன்னம்
போல்பாய்[3]புனன் மடவார்படி [4]நெடுநாடவை போனார்.

(இ - ள்.) முது மேதிகள் - முதிர்ந்த எருமைகள், கதிர் மேய்வன-நெற் கதிர்களை மேய்வனவாக,(அதனால்), கடைவாய் பால் பாய்வன-(தமது)வாய்க் கடையினின்று (மணிபிடியாத அக்கதிர்களின்) பாலொழுகப்பெற்றனவாய், கால்பாய்வன-(தமது)கால்களாற் பாயப்பெற்றனவும்,—நறை பாய்வன மலர் வாய் அளி படர - தேனொழுகப்பெற்றனவான நீர்மலர்களிலுள்ள வண்டுகள் மேலெழுந்து உலாவுமாறு, சேல் பாய்வன கயல் பாய்வன-சேல்மீன்களும் கயல்மீன்களும்(களிப்புக்கொண்டு)குதித்து மேலெழப்பெற்றனவுமான, பாய் புனல்-பாய்ந்து செல்லுந் தன்மையுள்ள நீர்களில், செம் கால் மடம் அன்னம் போல் - செந்நிறத்தாளைக்கொண்ட மடப்பத்தையுடைய அன்னப்பறவை போல, மடவார் படி - மகளிர் மூழ்குதற்குஇடமான, நெடு நாடு அவை - சிறந்த அந்தக்கோசலசநாட்டை, போனார்-(இராமன் முதலிய மூவரும்) கடந்து சென்றார்கள்: (எ - று.)

அந்தக்கோசலதேசம், எங்குப்பார்த்தாலும் பாய்ந்துசெல்லும் நீர்நிலைகளைப்பெற்றுள்ளது; அந்தநீர்நிலைகளில், சிற்சிலவிடத்து, நீரைக்கண்டால் மகிழ்ந்து செல்லும் எருமைகள் தம்வாயில் மேய்ந்த முற்றாதகதிரினின்று பால் பெருகிக் கொண்டிருக்கப் பாயும்: அன்றியும், அந்நீர்நிலைகள் கயல்மீன் களும் சேல்மீன்களும் துள்ளி விளையாடப்பெறும்: அங்ஙன் அம்மீன்கள் துள்ளிவிளையாடிக் குதிக்கும்போது அந்நீர்நிலைகளிலுள்ள தாமரைமலர்களின்மீது தாக்குவதனால் அம்மலர்களில் தேனைப் பருகுமாறு உள்ளே படிந்திருந்த வண்டுகள் மேலெழும். இங்ஙனமான நீர்நிலைகளில் தமக்கென்று ஏற்பட்ட துறைகளுள் மகளிர் மடவன்னம்போற் படிந்துமூழ்குவார்கள்: அவ்வாறு புனல்வளஞ் சிறந்த கோசலநாட்டை இராமன்முதலியோர் கடந்துசென்றன ரென்பதாம்.
பி-ம்:—[1]முலை, புனல். [2]பறை, புனல். [3]புனமடவார். [4]திருநாடு. (சுகூஉ)

மேறு.

கூ.—இராமன் முதலியோர் கங்கையை யடைதல்.

பரிதி பற்றிய பல்[1]கலன் [2]முற்றினர்
மருத வைப்பின் வளங்கெழு நாடொரீஇச்
சுருதி கற்றுயர் [3]தோமிலர் [4]சுற்றுறும்
விரிதி ரைப்புனற் கங்கையை [5]மேவினார்.

(இ - ள்.) பரிதி பற்றிய பல் கலன் முற்றினர்-சூரியன்போல விளங்குகின்ற பல ஆபரணங்களை நிரம்பஅணிந்த இராமன் முதலிய அம்மூவரும்,- மருதம் வைப்பின் வளம் கெழு நாடு ஒரீஇ-மருதநிலமாகிய வளப்பம்பொருந்திய கோசலநாட்டைக் கடந்து (பின்பு), சுருதி கற்று உயர் தோம் இலர் சுற்

றும் - வேதங்களைப்பயின்று மேம்பாடுற்ற குற்றமற்ற முனிவர் சூழ்ந்து தங் கப்பெற்ற, விரி திரை புனல் கங்கையை - பரவுகின்ற அலைநீரையுடைய கங் காநதியை, மேவினர் - சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)

தாம் செய்யவேண்டிய விரதநியமங்களைச் செய்துகொண்டு இனிது உறைதற்குஏற்ற தலமாதலாலும், தன்னையடைந்தாரது தீவினைகளைப்போக் குந் தெய்வநதி யாதலாலும், சுருதிகற்றுயர்தோமிலர் அதனைச்சுற்றி வாழ்வா ராயினர். பி-ம்:—[1]கனை. [2]முற்றிய. [3]தோமிலாச். [4]சுற்றுற. [5]மேவினன். (சுகூ)

கo.—கங்கைக்கரையில் வாழுந் தபோதனர் இராமனைக் காணவருதல்.

கங்கை யென்னுங் கடவுட் [1]டிருநதித்
தங்கி வைகுந் தபோதனர் யாவரு
மெங்கள் செல்கதி வந்ததென் றேமுறு
வங்க ணாயகற் காணவந் தண்மினார்.

(இ - ள்.) கங்கை என்னும் கடவுள் திரு நதி-கங்கையென்று சொல்லப் படுகின்ற தெய்வத்தன்மையுள்ள சிறந்த நதிக்கரையில், தங்கி வைகும்-தங்கி வாழ்கின்ற, தபோதனர் யாவர்உம்-இருடியரெல்லாரும், 'எங்கள் செல் கதி-யாம்(தவம் செய்து)அடையும் புகலிடமாகிய பரம்பொருள், வந்தது-(இங்கே) வந்திட்டது,' என்று-, ஏமுறு-மகிழ்ச்சியடைந்து, அம் கண் நாயகன்-அழகிய திருக்கண்களையுடைய இராமபிரானை, காண - தரிசிக்குமாறு, வந்து-, அண் மினார் - நெருங்கினார்கள்; (எ - று.)

தாங்கள் எந்தக்கடவுளை அடையவேணுமென்று தவஞ்செய்கின்றார், களோ அந்தக்கடவுளே மானிடவடிவந்தாங்கி வந்துள்ளதைத் தமது ஞானக் கண்ணினாலுணர்ந்து அக்கங்கைக்கரையில்வாழும் முனிவர்கள் 'எங்கள்செல் கதிவந்தது' என்று சொல்லிக்கொண்டு இராமபிரானை வந்தணுகின ரென்க. நாம் தேடிச்செல்லவேண்டிய பரம்பொருள் நாம்இருக்குமிடந்தேடி வந்ததே! இதுஎன்ன பெரும்பேறு என்றஈடுபாடு, 'செல்கதிவந்தது' என்றவிடத்துத் தோன்றும். தன்னில் ஒருகால் மூழ்கியவரது தீவினைகளையெல்லாம் போக் குந் தன்மையுடையது மாத்திரமேயன்றி, திரிவிக்கிரம மூர்த்தியாகிய திரு மால் திருவடியினின்று பிரமதேவனு லுண்டாக்கப்பெற்றுச சிவபிரானது சடையில்தங்கி இப்பூவுலகில் வருதலாலும், கங்கை 'கடவுணதி'என்று சொல் லத்தகும். பி - ம்:—[1]பெருநதி. (சுகூச)

கக.—வந்தமுனிவர்கள் இராமனைத் தரிசித்துமகிழ்தல்.

பெண்ணி [1]னோக்குஞ் சுவையிற் பிறர்[2]பிறர்க்
கெண்ணி [3]னோக்கி யியம்பரு மின்பத்தைப்
பண்ணி [4]னோக்கும் பராவமு தைப்பசுங்
கண்ணி னோக்கின ருள்ளங் களிக்கின்றார்.

(இ - ள்.) பிறர் பிறர்க்கு-(முனிவரினும்)மிகவும் வேறுபட்டவரான இல் லறத்தார்களால், பெண்ணின் நோக்கும் - பெண்பாலாரிடத்து (த் தாம்) அனு பவித்துக்காணப்படுகின்ற, சுவையின்-காமவின்பம்போல,-எண்ணில் நோக்கி

இயம்ப அரு இன்பத்தை-மனத்தினால் ஆராய்ந்துபார்த்து (வாயினாற்) சொல்லுவதற்கும் அருமையான இன்பத்தின் வடிவானவனும், பண்ணில் நோக்கும் பரா அமுதை - சுரவடிவமான வேதத்தினா லுணரவல்ல சிறந்த அமுதசொரூபியுமாகிய அந்த இராமபிரானை, (அம்முனிவர்), பசும் கண்ணின் நோக்கினர்-ஊனக்கண்களாற் காணப்பெற்றவராய், உள்ளம் களிக்கின்றார்—; (எ - று.)

இவ்வுலகத்தவர் பெண்பாலாரின் கலவியின்பத்தால் மனங்களிப்பது போல், பற்றற்ற யோகியராகிய அத்தபோதனர்கள் இன்பவடிவானவனும் வேதங்களா லுணரப்படும் அமுதம்போல்இனியனுமாகிய பரம்பொருளின் வடிவான அவ்விராமபிரானைக்கண்டு உள்ளங்களித்தனரென்க. இல்லறத்தார் காமசுகத்தைத்துய்த்து இன்பத்தையடைவதுபோல, முனிவர் எம்பெருமானைத் தியானித்து இன்பமடைகின்றனரென இன்பமடைதற்றிறத்தில்ஒப்புமையேயன்றி இன்பத்திறத்து ஒப்புமைகூறியதன்று: பேரின்பத்தைச் சிற்றின்பம் எள்ளளவும் ஒவ்வாதாகையா லென்க. பிறர்க்கு - உருபுமயக்கம். சுவையின் அமுதைக் கண்ணினோக்கினர் உள்ளங்களிக்கின்றார் என இயையும். இனி, சுவையின் என்பதை, 'இயம்பரு' என்பதனோடு இயைத்து, பரம்பொருளின் வடிவாகிய இராமபிரானைக் கண்டதனாலாகிய இன்பம் பெண்பாலாரை அனுபவித்தலால்அடைந்த இன்பம்போல் பிறர் எண்ணினால்நோக்கிப் பிறர்க்கு இயம்புதற்குஅரியது எனப் பொருள் கொள்ளினுமாம். பரவமுது பராவமுது: நீட்டல்விகாரம். பராவு அமுதுஎனப்பிரித்து உரைப்பினுமாம். பிறர் பிறர் என்றவிடத்து முதலதாகிய பிறர் - இல்வாழ்வாரையும், இரண்டாவது பிறர் - துறவறத்தாரையுங் காட்டு மென்றுரு முளர். பி-ம்:—[1]நோக்கின். [2]பெறற்கு, தமக்கு. [3]நோக்கவிளம்பரு, நோக்கிலியம்பரு. நோக்கு. (சுஙரு)

௪௨.—வந்த முனிவர்கள் இராமபிரானைப் புகழ்ந்து பாடி ஆடுதல்.

> [1]எதிர்கொ டேத்தின ரின்னிசை பாடினர்
> வெதிர்கொள் கோலின ராடினர் வீரனைக்
> கதிர்கொ டாமரைக் கண்ணனைக் கண்ணினான்
> மதுர வாரி யமுதென மாந்துவார்.

(இ-ள்.) வெதிர் கொள் கோலினர்-மூங்கில்களினாலியன்ற(திரி) தண்டத்தையேந்தியஅம்முனிவர்கள்,—வீரனை - மகாவீரனும், கதிர் கொள் தாமரை கண்ணனை - ஒளியைக்கொண்ட தாமரைமலர்போன்ற கண்களையுடையவனுமான இராமபிரானை, மதுரம் வாரி அமுது என-இன்சுவையுடைய பாற்கடலிற்றோன்றும் அமுதத்தை (வாயினால் முகந்துஉண்பது) போல, கண்ணினால் மாந்துவார்-கண்ணினாற் பருகியுண்பவராய், எதிர் கொடு - எதிர்கொண்டு, இன் இசை பாடினர் ஏத்தினர்-இனிய இசைகளைக்கொண்டு பாடித்துதித்து, ஆடினர் - ஆனந்தநர்த்தனஞ்செய்தார்கள்; (எ - று.)

இராமபிரானைக் கண்ணினாற்கண்ட களிப்பினால் அம்முனிவர்கள் ஏத்திப் பாடி ஆடினர்களென்க. தாம் உள்ளவிடத்திற்கு வரும் விருந்தினரை உபசரித்தற்குக் குறிப்பாக எதிர்கொள்ளுதல் முறைமை யாதலால் இம்முனிவரும்

எதிர்கொண்டன ரென்க. "நூலே கரகம் முக்கோல்மணையே, யாயுங்காலை யந்தணர்க்குரிய" என்ற தொல்காப்பியத்திற்கு ஏற்ப அவ்வந்தணர்களை 'வெதிர் கொள் கோலினர்' என்றார். கதிர் கொள் தாமரை என்பதற்கு-சூரியகிரணங் களை எதிர்கொள்கின்ற [சூரியகிரணங்களால் மலர்கின்ற] தாமரை எனினு மாம். வாரி - கடலுக்கு, இலக்கணை. பி-ம்:—[1]எதிர்கொண்டு. (கூசுசு)

கரு.—அம்முனிவர்கள் இராமபிரானைத் தம்மிருப்பிடத்திற்கு அழைத்துக்கொண்டு செல்லுதல்.

மனையி னீங்கிய மக்களை வைகலு
நினையு நெஞ்சினர் [1]கண்டில ர் நேடுவா
ரனையர் வந்துற வாண்[2]டெதிர்ந் தார்களி
[3]னினிய [4]மாதவப் பள்ளிகொண் [5]டெய்தினர்.

(இ - ள்.) மனையின் நீங்கிய மக்களை-(தமது) வீட்டினின்று நீங்கிய பிள் ளைகளை, வைகல்உம்-நாள்தோறும், நினையும் நெஞ்சினர்-எண்ணுகின்ற மனத் தையுடையவராய், கண்டிலர்-காணப்பெறாமல், நேடுவார் - தேடுபவர்களாகி, அனையர் வந்து உற-(காணாமற்போன)அந்தப்பிள்ளைகள் வந்துசேர,எதிர்ந்தார் களின்-எதிர்ப்படப்பெற்ற பெற்றோர்கள்போல, ஆண்டு-அப்பொழுது, (அம் முனிவர்கள் இராமபிரானைப் பேராதரத்தோடு எதிர்கொண்டு), இனிய மா தவம் பள்ளி - இனிய சிறந்த தவஞ்செய்தற்குரிய (தமது) வாழிடத்தில், கொண்டு - அழைத்துக்கொண்டு, எய்தினர் - போய்ச்சேர்ந்தார்; (எ - று.)

தமதுமக்கள் மனையினின்று காணாதுபோய்விட அவர்களைக் காண்போமா என்கின்ற கருத்தோடு தேடிக்கொண்டிருப்பவருக்கு அவர்கள்காணப்பட்டால் எங்ஙனம் பெருமகிழ்ச்சியுண்டாகுமோ அத்தனைப் பெருமகிழ்ச்சியுடனே, அம்முனிவர்கள்,தமது அஞ்ஞானத்தால்மனத்தைவிட்டகன்றபரம்பொருளைத் தேடிக்கொண்டிருக்கையில் கண்களாற்காணுமாறு நேரேவந்து கூடியதனாற் பெருமகிழ்ச்சியடைந்தனரென்றவாறு.கீழ் "பெண்ணிறேக்குஞ்சுவையின்" என்றசெய்யுளிற்பெண்களாற்பெறும் இன்பத்தைஉலகத்தவர்பெறுதல்போல் அம்முனிவர்கள் இராமபிரானைக்கண்டதனாற் களிப்படைந்தமையைக் கூறிய கவி,இச்செய்யுளால் உலகத்தவர் பிரிந்த மக்களைக் கண்டதனாற் பெறுங்களிப் பை முனிவர்கள் எய்தினமையைக் கூறின ரென்க.இதனால்,'சர்வேசுவரனே எல்லாவுறவுமுறையும்'என்று அம்முனிவர் கருதியமையைச் சிறிது புலப்படுத் தினவாறுயிற்று. பி-ம்:—[1]நீடினர்தேடுவார். [2]எதிர்ந்தார்கள்போல். [3]இனைய. [4]மாதவர். [5]ஏகினர். (கூசுஎ)

கசு.—முனிவர்கள் இராமபிரானது வழிவந்த வருத்தத்தைப் போக்குதல்.

பொழியுங் கண்ணிற் புதுப்புன லாட்டினர்
மொழியு மின்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்
[1]ரழிவி லன்பெனு மாரமிழ் தூட்டினர்
வழியின் வந்த [2]வருத்தந் தணியவே.

(இ - ள்.) (அம்முனிவர்கள்),—வழியின் வந்த வருத்தம் தணிய - வழி நடப்பினால்நேர்ந்த வருத்தம் (அவ்விராமபிரானுக்குத்) தணியுமாறு, கண்ணில் பொழியும் புது புனல் ஆட்டினர் - (தமது) கண்களினின்றும் (பெருகுகளிப்பினால்) வெளிவருகின்ற புதுநீரைக்கொண்டு திருமஞ்சனஞ்செய்து, மொழியும் இன் சொலின் - (தாம்) சொல்லுகின்ற இனிய சொல்லாகிய, மொய் மலர் - நெருக்கமாகத்தொடுக்கப்பட்ட மலர்மாலையை, சூட்டினர் - சூட்டி, அழிவு இல் அன்பு எனும் ஆர் அமிழ்து ஊட்டினர் - குறைதலில்லாத அன்பாகிய நிறைந்த உணவை உண்ணச்செய்தனர்; (எ - று.)

வெகுதூரம் நடந்துவந்து இளைத்துப் பசித்தவரை நீராட்டி உபசரித்து உண்பிப்பதுமுறை. அம்முனிவர்கள் தங்கண்களில் ஆனந்தக்கண்ணீர்பெருக்கி இன்சொல் சொல்லித் தமது அன்பைக் காட்டியபொழுது, நீராடியுண்டவன்போல் இராமபிரான் மனநிறைவுகொண்டனனென்றவாறு. "புனையுங் கண்ணி யெனதுடைய வாசகஞ்செய்மாலையே" என்ற பெரியார்பாசுரத்தை யொட்டி, 'மொழியுமின்சொலின் மொய்ம்மலர்சூட்டினர்' என்றார். கண்ணிற் புதுப்புனலாட்டினர் - "பொழிந்தவுண்கணீர்ப் புதுப்புனலாட்டினர்" என்றார் நகர்நீங்குபடலத்தும். உணவிடுவார்க்கு அன்பு இன்றியமையாது வேண்டுதலின், இங்கு, 'அன்பெனுமமுது' என்றார். பி-ம்:—[1]இழிவில்,விழியில். [2]வருத்தம்வருத்தவே, [3]வருத்தம்வருந்தவே, வருத்தத்தைவீட்டினர், ருத்தத்தை வாட்டினர். (௬௩அ)

கரு.—அம்முனிவர்கள் இராமபிரானை நீராடி அமுதுசெய்யுமாறு வேண்டுதல்.

> காயுங் [1]கானிற் கிழங்குங் கனிகளுந்
> தூய தேடிக் [2]கொணர்ந்தனர் தோன்றனீ
> யாய கங்கை யருட்புன [3]லாடினை
> [4]தீயை யோம்பினை செய்யமு தென்றனர்.

(இ - ள்.) (அம்முனிவர்கள்),—கானில் - காட்டினின்று, தூய - பரிசுத்தமான, காய்உம் - காய்களையும், கிழங்குஉம்-கிழங்குகளையும், கனிகள் உம்-பழங்களையும், தேடிக்கொணர்ந்தனர் - தேடிக்கொண்டுவந்தவர்களாய்,—(இராமபிரானைநோக்கி), 'தோன்றல் - (யாவரினுஞ்) சிறந்துவிளங்குபவனே! நீ—, ஆய கங்கை அரு புனல் ஆடினை - அருகிலுள்ள கங்கையின் அருமையான நீரில் மூழ்கி, தீயை ஓம்பினை - அக்கினியை வளர்த்தவனாய் [நாடோறுஞ்செய்யவேண்டிய அக்கினிஹோத்திரத்தைச் செய்துவிட்டுஎன்றபடி], (நாங்கள் கொணர்ந்த காய்கனிகிழங்குகளை), அமுது செய் - உண்பாயாக,' என்றனர் - என்று வேண்டிக்கொண்டார்கள்; (எ - று.)

கிருகஸ்தர்க்கு அக்கினிஹோத்திரஞ்செய்தல் இன்றியமையாததாதலின் 'தீயையோம்பினை' என்றார். "காடுகளூடுபோய்......வருகின்றதாமோதரா ...தூளிகாணுன்னுடம்பு,...ஆடிஅமுதுசெய்" என்ற பாசுரம் இங்கு நினை

விற்கு வருகின்றது. தாய - பெயர். தோன்றல் - ஆண்பாற்சிறப்புப்பெயர். பி-ம்:—[1]கானக். [2]கொணர்ந்தனம். [3]ஆடிமுத். [4]தீயுமோம்பினே, தீயையோம் பிப்பின், தீயையோம்பினீர். (சுஙக)

**கசு.—இராமபிரான் சீதையோடு கங்கையில் நீராடுதல்.**

மங்கை யர்க்கு விளக்கன்ன [1]மாதையுஞ்
செங்கை [2]பற்றினன் றேவருங் [3]கைதொழப்
பங்க யத்தயன் பண்டுதன் [4]பாதத்திற்
[5]கங்கை யிற்[6]றருங் கங்கையி னாடினான்.

(இ-ள்.) (இராமபிரான்),—மங்கையர்க்கு விளக்கு அன்ன மாதை உம்- பெண்பாலார்க்கெல்லாம்விளக்குப்போல்பவளாகிய சீதாபிராட்டியையும்,செம் கை பற்றினன் - சிவந்துள்ள (தன்) கையாற் பிடித்துக்கொண்டவனாய்,—தே வர்உம் கைதொழ - தேவர்களும் கைகூப்பித்தொழும்படி, பங்கயத்து அயன் - (திருமாலின்நாபீ) கமலத்தில் தோன்றியவனாகிய பிரமதேவன், பண்டு - முற் காலத்தில், தன் பாதத்தின் - (திரிவிக்கிரமனான) தன்னுடைய தாளினைக் கழுவிய, கம்-நீரினால், கையின்-கைம்மூலமாக, தரும் - உண்டாக்கிய, கங்கை யின் - கங்காநதியிலே, ஆடினான் - நீராடினான்; (எ - று.)

இராமபிரான் சீதாதேவியைக் கைப்பற்றிக்கொண்டுகங்கையில் நீராடின னென்பதாம். ஸ்ரீராமன் தனது ஸ்ரீபாததீர்த்தமாகிய கங்காநதியில் தான் கொண்ட மானுடவேடத்திற்கு ஏற்ப நீராடின னென்றவாறு. 'கைதொழ' என்பது 'தரும்' என்பதனோடு இயையும். பிரமதேவன் திரிவிக்கிரமனான திருமாலினது சீர்பாதங்களைக் கைக்கமண்டலநீரைக் கையாலெடுத்துவிளக்க அந்த ஸ்ரீபாததீர்த்தமே கங்கையாகத் திருவவதரித்த தாகையால்'கங்கையிற் றருங்கங்கை' என்று சமத்காரம்படப் பேசினார். இதனால்,கங்கையென்பதற்கு ஒரு காரணப்பொருள் கற்பித்தாற்போல நிருக்தியலங்காரமென்னும் பிறிதின் நவிற்சியணிபடக்கூறியவாறு காண்க. பி-ம்:—[1]மானை. [2]பற்றியத், பற்றிநற். [3]துன்பற, இன்புற, துன்புற. [4]பாதநீர். [5]அங்கையில். [6]தந்த. (சுசo)

**கஎ.—கங்கை இராமபிரானைப் புகழ்தல்.**

கன்னி நீக்கருங் கங்கையுங் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோ
ரென்னி [1]னீக்குவர் யானுமின் றெற்றந்த
வுன்னி [2]னீக்கினெ னுய்ந்தனெ [3]னென்றாள்.

(இ-ள்.) கன்னி நீக்கு அருங் கங்கைஉம்-அழியாத்தன்மையினின்று நீங் குதலில்லாத[ஜீவநதியான] அந்தக்கங்காநதியும்,—(இராமபிரானை), கைதொ ழா-கைகூப்பிவணங்கி,'பார் உளோர்-உலகத்தவர்,பன்னி நீக்க அரு பாதகம்- சொல்லி முடிக்கமுடியாத [மிகவும் அதிகமான] பாவத்தை, என்னின் நீக்கு

வர் - என்னிடத்து மூழ்குவதால் போக்கிக்கொள்வார்கள்; யானும்—, இன்று - இப்போது, (அந்தப்பாவங்களையெல்லாம்), என் தந்த உன்னின் - (திரிவிக்கிரமனாகி ஸ்ரீபாதத்தினின்று) என்னையுண்டாக்கிய உன்னாலே [நீ என்னிடத்து மூழ்கியதனால்], நீக்கினேன் -போக்கினவளாய், உய்ந்தனென்- நல்வாழ்வுபெற்றேன்,'என்றாள் - என்றுகூறினாள்;(எ-று.)—ஆல் - தேற்றம்.

உலகத்தாரெல்லாரும் என்னிடத்துமூழ்கிப் பெருந்திரளான தம்முடைய பாவத்தைப் போக்கிக்கொள்ள, நீ என்னில் மூழ்கியதனால், என்னிடத்துச் சேர்ந்த அத்தீவினைகள்யாவும் நீங்கப்பெற்று ஈடேறினே னென்றனள் கங்காநதியின் பெண்தெய்வமென்க. புண்ணியமூர்த்தியாகிய இராமபிரானிடத்துள்ள நன்மையால், பரிசுத்தமாகியகங்கையும் தீவினைநீங்கி உய்வுபெறுபவளாயினளென்றுகூறிய இதில், ஒருத்தருடைய குணத்தினால் மற்றொருவர்க்கு நன்மைவிளைதலாகிய அகமலர்ச்சியணி காண்க: இதனை, வடநூலார் உல்லாஸாலங்கார மென்பர். கன்னிநீக்கருங்கங்கை என்பதற்கு-கன்னித்தன்மை நீங்குதலில்லாத கங்கையென்று பொருளுரைப்பது பொருத்தமாயிற் கொள்க. பன்னி நீக்க அரும்பாதகம் என்பதற்கு - ஆராய்ந்து நீக்குவதற்குமுடியாத பெரும்பாதகமென உரைப்பாருமுளர். பி - ம்:—[1]நீக்கினர். [2]நீக்கினனுய்ந்தனன், நீக்கியுயர்ந்தனன். [3]யான். (கூ௪௯)

கஅ.—கங்கையில்முழுகும் இராமபிரானது தோற்றம்.

> வெங்க ணாகக் கரத்தினன் வெண்ணிறக்
> கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
> மங்கை காணநின் றாடுகின் றான்வகிர்த்
> திங்கள் சூடிய செல்வனிற் றோன்றினான்.

(இ-ள்.) வெம் கண் நாகம் கரத்தினன்-கொடுமைகண்ணையுடைய யானைத் துதிக்கைபோலுங் கையையுடையவனும், வெள் நிறம் கங்கை வார் சடை கற்றையன்-வெண்ணிறமுள்ள கங்கையின்நீர்ஒழுகப்பெற்ற சடைத்தொகுதியையுடையவனும், கற்புஉடை மங்கை காண நின்று ஆடுகின்றான் - கற்பையுடைய சீதாபிராட்டியென்னும் பெண் காணுமாறு நீராடுகின்றவனுமாகிய இராமபிரான், [வெம் கண் நாகம் கரத்தினன்-கொடுங்கண்ணையுடைய நாகத்தை (ஆபரணமாகக்) கையிற் பூண்டவனும், வெள் நிறம் கங்கை வார் சடை கற்றையன்—, கற்புஉடை மங்கை காணநின்று ஆடுகின்றான்-கற்பையுடைய பார்வதிதேவிகாணுமாறு நின்று கூத்தாடுகின்றவனுமான], வகிர் திங்கள் சூடிய செல்வனில்-பிறைச்சந்திரனைத் திருமுடியிற்றரித்த (அணிமாமுதலிய) அஷ்டைச்சுவரியங்களுக்கும் உரியவனான சிவபிரானைப்போல, தோன்றினான் - விளங்கினான்; (எ - று.)

இராமபிரானுக்கும் சிவபெருமானுக்கும் சிலேடை. இராமபிரான் கங்கையில் நீராடிஎழும்பொழுது தான் ஏற்றுக்கொண்டுள்ள தவவேடத்திற்குரிய சடையில்நின்றும் கங்கையின்நீர் பெருகிக்கொண்டிருக்குமாதலால், அவ்விராம

பிரானை 'கங்கைவார்சடைக் கற்றையன்' என்ற தென்க. சிவபிரானது சடையிலே தங்கிக் கங்கை மேழபெருகுகின்றது என்பது, பிரசித்தம். இராமபிரானைக் குறிக்குமிடத்து நாகக்கரத்தினனென்ற தொடர்-உவமைத்தொகையும், சிவபிரானைக்குறிக்குமிடத்து வேற்றுமைத்தொகையுமாம். இராமபிரானுக்குச்செல்லுமிடத்து ஆடுதல்-நீராடுதலும்,சிவபிரானுக்குச் செல்லுமிடத்து ஆடுதல் - அம்பலத்து ஆடுதலுமாம். (கூசஉ)

கக —இதுவும் அது.

தள்ளு [1]நீர்ப்பெருங் கங்கைத் தரங்கத்தால்
வள்ளி நுண்ணிடை மாமல ராளொடும்
வெள்ளி வெண்ணிறப் பாற்கடன் மேலைநாட்
பள்ளி நீங்கிய பான்மையிற் றேன்றினான்.

(இ - ள்.) (பின்னும் சீதாபிராட்டியோடுகூடிய அவ்விராமபிரான்), தள்ளும் நீர் பெரு கங்கை தரங்கத்தால் - மோதுந்தன்மையுள்ள நீரையுடைய சிறந்த கங்கையின் அலையினால்,—மேலை நாள் - முன்னாளில், வள்ளி நுண் இடை மா மலராளொடும் - கொடிபோலும் நுண்ணிய இடையையுடைய சிறந்த தாமரைமலரில் வசிப்பவளான இலக்குமியுடனே, வெள்ளி வெள் நிறம் பாற்கடல் - வெள்ளியைப்போலும் வெண்ணிறமுள்ள திருப்பாற்கடலிலே, பள்ளி நீங்கிய பான்மையின் - படுத்திருத்தலைவிட்டெழுந்துநின்ற தன்மைபோல், தோன்றினான்—; (எ - று.)

வெண்ணிறமுள்ள கங்காநதியின் அலைகளின்நடுவில் இராமபிரான் சீதாதேவியோடும் நின்றது-பாற்கடலிற் பள்ளிகொள்ளும்பரமனான திருமால் தான் பள்ளிகொண்டிருத்தலைவிட்டு இலக்குமிதேவியோடும் எழுந்து நிற்குந் தன்மையை யொக்கு மென்றார்:தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வள்ளி=வல்லீ: வடசொல்லின் விகாரம்: வள்ளிக்கொடியுமாம். பி-ம்:--[1]நீர்க்குரைக். ()

உ0.—சீதாபிராட்டி கங்கையில் நீராடுதல்.

வஞ்சி [1]நாண விடைக்கு மடநடைக்
கஞ்சி யன்ன மொதுங்க [2]வடியன்ன
கஞ்ச நீரி லொளிப்பக் [3]கயலுகப்
[4]பஞ்சி மெல்லடிப் பாவையு மாடினாள்.

(இ - ள்.) இடைக்கு-(தன்னுடைய)இடையழகுக்குத் தோற்று, வஞ்சி-வஞ்சிக்கொடி, நாண-வெட்கி(நீரில்)மறையவும்,—மட நடைக்கு (தன்னுடைய)இளமையான நடைக்கு, அஞ்சி-தோற்று, அன்னம்-அன்னப்பறவை, ஒதுங்க-அப்பாற்செல்லவும்,—அடி அன்ன கஞ்சம்-(மற்றைமாதரது)பாதத்திற்கு ஒப்பான தாமரை (தன்னுடைய பாதத்திற்கு ஒப்பாகாமல் வெள்கி), நீரில் ஒளிப்ப-நீரினுள் மறைந்துகொள்ளவும், கயல் உக-(தன் கண்ணுக்குஒப்பாகாமையால்) கயல் மீன்கள் அப்பாற்செல்லவும், பஞ்சி மெல் அடி பாவைஉம் - செம்பஞ்சு ஊட்டப்பெற்ற மெல்லியபாதங்களையுடைய சித்திரப்பதுமை போன்ற சீதாபிராட்டியும், ஆடினாள் - நீராடினாள்; (எ - று.)

நீராடும்பொழுது நீரிலுள்ள வஞ்சியும் கஞ்சமும் மறைதலும், அன்னமுங் கயலும் அப்பாற்செல்லுதலும் - இயல்பு; அவ்வியல்பின்படியே சீதாபிராட்டி நீராடும்பொழுதும் வஞ்சியும் கஞ்சமும் நீரில்மறைதல் முதலியன நிகழ, அவ் வஞ்சிக்கொடிமுதலியவை பிராட்டியின் இடைமுதலியவற்றிற்குத் தோற்றமை யால் அங்ஙனம் நிகழ்ந்தனவெனக் குறித்தார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இராம பிரான் நீராடியதை கசு-ஆங் கவியாற் கூறிய கவி இடைப்பிறவரலாகச் சில கூறி, இச்செய்யுளாற் சீதை நீராடியதைக் கூறுகின்றா ரென்க. பி-ம்:—[1]நாணி வணங்க, நாணிவணங்கி, நாணிமடங்க. [2]அடியினீன், அடியிணை, அடிக்குமென். [3]கயல்புக. [4]பஞ்சின். (கூசச)

உக.—சீதை நீராடியதாற் கங்கை நறுமணம்பெறுதல்.

[1]தேவ தேவன் செறிசடைக் கற்றையுட்
கோவை மாலை யெருக்கொடு கொன்றையின்
பூவு [2]நாறலள் பூங்குழற் [3]கூந்தலி
னாவி நாண்மலர் [4]கங்கையு நாறினாள்.

(இ - ள்.) தேவதேவன்-மகாதேவனென்னும் நாமம் படைத்த சிவபெரு மானுடைய, செறி சடை கற்றையுள் - அடர்ந்துள்ள சடைத்தொகுதி யினுள்ளே, கோவை மாலை எருக்கொடு கொன்றையின் பூஉம் நாறலள் - பலகோவையான மாலையாகத்தொடுக்கப்பட்ட எருக்கம்பூ கொன்றைப்பூ என்ற இவற்றின் மணம் வீசப்பெறாதவளான, கங்கைஉம்-கங்காநதியும், - பூ குழல் - அழகமைந்த கூந்தலையுடையவளான சீதாபிராட்டியின், கூந்தலின்- கூந்தலிலேயுள்ள, நாவி-கத்தூரிப்புழுகெண்ணெய்மணமும், நாள் மலர்-அன்ற லர்ந்த மலர்மணமும், நாறினாள் - (தன்னிடம்) வீசப்பெற்றாள்; (எ - று.)

கங்காதேவி சிவபெருமானது சடைமுடியிலே தங்கிப் பின் அங்குநின்று வீழ்பவளாயிருந்தும் அந்தப்பெருமான் தன்முடியிற்சூடிய எருக்கு கொன்றை இவற்றின் மலர்மாலைகளின் மணம் தன்னிடத்துப் பொருந்தினாளில்லை; அப் படிப்பட்ட கங்காதேவி சீதாபிராட்டி தன்னீரில் மூழ்கியதனால் அப்பிராட்டி யின் கூந்தலிற்றடவிய கத்தூரிப்புழுகெண்ணெயும் அப்பிராட்டி சூடிய மலரும் என்ற இவற்றின்மணம் தன்னிடங் கமழப்பெற்றன ளென்பதாம். இதனால், பெருநீரவெள்ளமாயிருந்த கங்கையின்பெருக்கும் மணம் நாறும்படி பிராட்டி கூந்தலில் மணம் விஞ்சியிருந்ததென்று வீறுகோளணி தொனித்தல் காண்க. நாவி நாண்மலர் கங்கையும் நாறினாள் - உயர்திணைதொடர்ந்தபொருள் உயர்திணைமுடிபேற்ற திணைவழுவமைதி. கங்கை - நதியின்பெண்தெய்வத் தைக்காட்டிய உயர்திணை. பி - ம்:—[1]தேவர்தேவன், தேவன்சென்னிச். [2]நாறிலள். [3]கற்றையின். [4]நங்கையும். (கூசரு)

உஉ.—சீதையின்மீது கங்கையின்திரை மோதுதலின் வருணனை.

நுரைக்கொ ழுந்தெழுந் தோங்கி நுடங்கலா
னரைத்த [1]கூந்தலி னங்கைமங் தாகினி
யுரைத்த சீதை [2]தனிமையை யுன்னுவா
டிரைக்கை நீட்டிச் செவிலியி னாட்டினாள்.

(இ-ள்.) நுரை கொழுந்து எழுந்து ஓங்கி நுடங்கலால் - நுரைகள் அலையின்மேலெழுந்து உயர்ந்து அசைவதால், நரைத்த கூந்தலின் - வெண்ணிறமான கூந்தலையுடைய, நங்கை - ஒருபெண்போற்காணப்படுகின்ற, மந்தாகினி - கங்காதேவியானவள்,—உரைத்த - (பதிவிரதாதருமத்தைப்பாராட்டி யாவராலும் எடுத்துக்) கூறப்படுகின்ற, சீதை தனிமையை - சீதாபிராட்டி (வேறொரு பெண்டிக்குஇல்லாமல்) தனித்திருப்பதை, உன்னுவாள் - நினைத்தவளாய், செவிலியின் - செவிலித்தாயைப்போல, திரை கை நீட்டி - அலையாகிய கையைநீட்டி, ஆட்டினாள் - நீராடச்செய்தாள்; (எ - று.)

மகள் நீர்நிலையில் நீராடும்போது செவிலித்தாய் தன்கையினால் நீராட்டுவித்தல்போல, கங்கை திரையாற் சீதாபிராட்டியை நீராட்டுவித்தனளென்றவாறு. சீதாபிராட்டி நீராடும்போது அவள்மீது கங்காநதியின்திரை படுவதனை, கவி, சீதை பெண்துணையின்றித் தனித்து நீராடுவதுநோக்கி அவள்மீது இரக்கங்கொண்டு மகளைத் தன்கையாற் செவிலி நீராட்டுவதுபோலக் கங்கை திரைக்கைநீட்டி ஆட்டினளென வருணித்ததிது - உருவகவணியையும் தற்குறிப்பேற்றவணியையும் அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. அலையில் எழுந்துஓங்கும் நுரை நரைத்த கூந்தல்போலு மென்க: இந்த நரைத்தகூந்தல் என்ற அடைமொழி கங்கையைச் செவிலித்தா யென்றற்கு உதவுதல் காண்க. விண்ணுலகத்துள்ள கங்காநதிக்குப் பெயராகிய மந்தாகினீ யென்பது, இங்கு கங்கை யென்ற மாத்திரமாய் நின்றது. பி-ம்:—[1]கூந்தலணங்கை. [2]தனிமைகண்டு. (சுசுசு)

உரு.—கங்கைநீர்வெள்ளத்தில் சீதாதேவியின்கூந்தல் தோன்றுதலின் வருணனை.

மங்கை வார்குழற் கற்றை மழைக்குலந்
[1]தங்கு நீரிடைத் தாழ்ந்து [2]குழைப்பது
கங்கை [3]யாற்றிடை யோடுங் கரியவள்
பொங்கு நீர்[4]ச்சுழி போவன [5]போன்றதே.

(இ - ள்.) மங்கை - சீதாபிராட்டியின், வார் குழல் கற்றை - நீண்ட கூந்தற்றொகுதியாகிய, மழை குலம் - மேகங்களின்கூட்டம், தாழ்ந்து - அவிழ்ந்து தொங்கி, தங்கு நீரிடை - (படியுந்துறையிற்) பொருந்திய நீரிலே, குழைப்பது - குழைந்துகாட்டுவது,—கங்கை யாற்றிடை - கங்கையாற்றின் நடுவிலே, ஓடும் - ஓடுகின்ற, கரியவள் - கருநிறமுடைய யமுனாநதியின், பொங்கு நீர் சுழி போவன - மிக்கநீர்ச்சுழிகள் செல்வனவற்றை, போன்றது - ஒத்துத்தோன்றிற்று; (எ - று.)

வெண்ணிறக்கங்கையிலே சீதாபிராட்டியின்கரியகூந்தல் தாழ்ந்துகுழைவது, கங்கையிலே யமுனாநதி கலந்து ஓடும்போது அதன்இடையே தோன்றும் நீர்ச்சுழியைப் போலு மென்பதாம்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. யமுனை கருநிறநீரையுடையதாகையால், அதனை 'கரியவள்' என்றார். யமுனை

கங்கையின் உபநதிகளுள் ஒன்று. பி-ம்:—[1]தங்கி. [2]குழைப்பன, தழைப்பன. [3]யாற்றுடனுடேகரியவள், யாற்றிடையாடுங்கரியவள், யாற்றொடுங்காளிந்தி தன்னொடும், யாற்றொடுங்காளிந்தியொடும். [4]நிழல். [5]போன்றவே. (௬௭)

௨௪.—சீதை கங்கையின் நீரில்மூழ்கியெழுதலின் வருணனை.

சுழிபட் [1]டோங்கிய தூங்கொலி யாற்றுத்தன்
விழியிற் [2]சேலுகள் வாணிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின் றாண்[3]முதற் பாற்கட
லழுவத் தன்றெழு வா[4]ளென லாயினாள்.

(இ - ள்.) சுழிபட்டு - சுழிகள் பொருந்தி, ஓங்கிய - (அலைகள்) ஓங்கப்பெற்ற, தூங்கு ஒலி - மிக்கவொலியையுடைய, ஆற்று-கங்காநதியினது, தன் விழியின் சேல் உகள் - தனது கண்விழிகள்போன்ற சேல்மீன்கள் துள்ளிக்குதிக்கப்பெற்ற, வால் நிறம் வெள்ளத்து-வெண்மைநிறத்தைக்கொண்ட வெள்ளத்திலே, முழுகி-நீராடி, தோன்றுகின்றாள்-வெளிப்படுகின்ற அந்தச் சீதாபிராட்டி,—முதல் பாற்கடல் அழுவத்து - சிறந்த திருப்பாற்கடலின் பெருக்கிலே, அன்று - (தேவர்கள்கடல்கடைந்த) அக்காலத்து, எழுவாள் - தோன்றியவளான இலக்குமி, எனல் - என்று சொல்லுதற்குஏற்குமாறு, ஆயினாள்—; (எ - று.)

வெண்ணிறமுள்ள கங்காநதிப்பெருக்கில் மூழ்கி வெளிப்படுஞ் சீதை, பாற்கடலைக்கடைந்தகாலத்து அதனினின்று வெளிவந்த இலக்குமியைப் போன்றன ளென்க: உவமையணி. விழியிற் சேலுகள் என்ற விடத்து எதிர் நிலையணி காண்க. கங்காநதியின்நீர் வெண்ணிறமுடைய தாதலால்,அதற்குப் பாற்கடல் உவமையாயிற்று.பி-ம்:-[1]ஓடிய. [2]சேலுக. [3]முறையாற்கடல். [4]என.

௨௫.—கவிக்கூற்று: இராமபிரான் நீராடியதனுற் கங்காநதிக்கு மகிமை விஞ்சியதாத மெனல்.

செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகந் [1]தீர்த்து [2]விளங்குவா
ளையன் மேனி யெலா[3]மளைந் தாளினி
வைய மாநர கத்திடை [4]வைகுமோ.

(இ-ள்.) பண்டு - முற்காலத்தில் [திருமால் திரிவிக்கிரமாவதாரஞ்செய்ய அப்பரமனது வலத்திருவடி சத்தியலோகத்திற் சென்றபோது], செய்ய தாமரை தாள்-செந்தாமரைமலர்போன்ற அப்பிரானது திருவடிகளை,தீண்டலால்-பரிசித்ததனால், வெய்ய பாதகம் - (தன்னில் மூழ்குபவரது) கொடிய பாவங்களை, தீர்த்து - போக்கிக்கொண்டு, விளங்குவாள் - விளங்குபவள், ஐயன் - இராமபிரானது, மேனி எலாம் - திருமேனிமுழுவதையும், அளைந்தாள்-பரிசிக்கப்பெற்றாள்; இனி-, வையம் - இவ்வுலகம், மா நரகத்திடை-பெரு நரகத்தில், வைகும் ஓ-தங்குமோ? [தங்காதென்றபடி]; (எ - று.)

கங்கை முன்பு திரிவிக்கிரமாவதாரஞ்செய்த திருமாலினது திருவடியை மாத்திரம் பரிசித்த காரணத்தினால் தன்னில்மூழ்கியவரது பெரும்பாவங்களை யே போக்குபவளாய் விளங்குபவளானாள்;இப்போதோ அந்தத்திருமாலினது திருவவதாரமாகிய ஸ்ரீராமபிரானது திருமேனிமுழுவதுமே தன்னிடத்துத் தோயப்பெற்றதனால் தன்காற்று மேலேபடப்பெற்றவர்களது பெரும்பாவத் தையும் போக்கும் பெருமையைப் பெறுவா ளாதலால், இவ்வுலகம் இனித் தீவினைப்பயனை நுகருமாறு வெந்நரகிற் சேரா தென்றவாறு. தன்னை நினைப் போரது பாவத்தையும் போக்கும் பெருமையைப் பெறுவாளாதலால் வையம் நரகிற்றங்கா தென்றுரென்றலுமாம். இந்தச்செய்யுளில், **தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி** காண்க. பி - ம்:—[1]தீர்ந்து. [2]விளங்கினள். [3]அளைந்தால். [4]வைகுமே. (சுசக)

உசு.—இராமபிரான் செய்கடனை முடித்துக்கொண்டு, முனிவர்கட்கு விருந்தினனாகி யுண்ணுதல்.

துறைந றும்புன லாடிச் சுருதியோ
ருறையு ளெய்தி [1]யுணர்வுடை யோருண
[2]ரிறைவற் கைதொழு [3]தேந்தெரி யோம்பிப்பி
னறிஞர் காதற் கமைவிருந் [4]தாகினன்.

(இ-ள்.) (இராமன்), துறை நறும் புனல் ஆடி-(முற்கூறியவாறு கங்கை யின்)நீராடுதுறையிலே புண்ணியதீர்த்தத்தில் மூழ்கி, சுருதியோர் உறையுள் எய்தி-வேதம்வல்ல அம்முனிவர்கள் வாழுமிடத்தைச் சேர்ந்து,உணர்வு உடை யோர் உணர் இறைவன் கைதொழுது-ஞானிகள் தியானிக்கின்ற பரம்பொ ருளை வணங்கிவிட்டு, ஏந்து எரி ஓம்பி - சுவலிக்கின்ற அக்கினியிற் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்துமுடித்து [அக்கினிஹோத்ரஞ்செய்து],பின்- பிறகு, அறிஞர்-அம்முனிவரின், காதற்கு-அன்புக்கு, அமை-ஏற்ற, விருந்து ஆகினன் - விருந்தினனாகி (அவர்கள் தந்த காய் கனி முதலியவற்றை)யுண் டான்; (எ - று.)

இதனால், இராமபிரான் தான் கொண்ட மானுடவேடத்திற்குஏற்ப வைதி கச்சடங்குகளில் சிறிதுந்தவறாது ஒழுகிவந்தவ னென்பதையும், வேதம்வல்ல வர்களும் கொண்டாடுமாறு நடப்பவ னென்பதையும் விளக்கியவாறு காண்க. நீராடுதல் இஷ்டதேவதையைத்தியானஞ்செய்தல் அக்கினிகாரியஞ்செய்தல் பிறகு உண்ணுதல் என்பன, பிராமண க்ஷத்திரியவைசிய ரென்னும் மூன்று வருணத்தார்க்கும் இன்றியமையாச செயலாகு மென்ப. 'உணர்வுடையோ ருணரிறைவற் கைதொழுது' என்றதிற் சந்தியாவந்தனஞ் செய்தமையும் அடங்கும். பி ம்:—[1]உணர்வுடைத்தம்பியோடு. [2]இறையைக் கைதொழுது, இறைவர்க்கைதொழுது, இறைவற்கேதொழுது. [3]எண்ணெரியோம்பினன், ஏந்தெரியோம்பினன். [4]ஆயினன். (சுருo)

உஎ.—முனிவர்கள் செய்த விருந்தினால் இராமபிரான் மனமகிழ்ந்திருத்தல்.

வருந்தித் தான்தர வந்த வமுதையு
மருந்து நீரென் றமரரை யூட்டினான்
[1]விருந்து மெல்லட குண்டு [2]விளங்கினான்
திருந்தி னார்வயிற் [3]செய்தது தேயுமோ.

(இ - ள்.) தான் வருந்தி - தான் மிகவுஞ் சிரமப்பட்டு, தர-உண்டாக்க, வந்த - தோன்றிய, அமுதைஉம்-அமிருதத்தையும், (தான் உண்ணாமல்), நீர் அருந்தும் என்று-'நீங்கள் உண்ணுங்கள்' என்று சொல்லி, அமரரை-தேவர்களை, ஊட்டினான்-உண்ணச்செய்தவனாகிய திருமாலின் அவதாரமாகிய அஃவிராமபிரான்,-விருந்து-(முனிவர்கள் தனக்கு) விருந்தாக இட்ட, மெல் அடகு-மெல்லியஇலையுணவை, உண்டு - புசித்து, விளங்கினான்-; (இது எங்ஙனம் பொருந்தும்? எனின்),—திருந்தினார்வயின் - மனஞ்செம்மைப் பட்டிருப்பவரிடத்து, செய்தது - செய்த செயல், தேயுமோ - குறைபடுமோ? [குறைபடாதன்றோ?] (எ-று.)—ஆதலால்தான், மனந்திருந்திய இராமன் முனிவர்களின் மெல்லடகை விருந்துண்டு விளங்கினனென்க.

'தானே வருந்தித்தேடியதும் சிறந்தஉணவுப்பொருட்கெல்லாந் தான் மேம்பட்டுஉவமையாவதுமான அமிருதத்தையும் இலட்சியஞ்செய்து உண்ணாது, "அமுதமமரர்கட்கீந்த நிமிர்சுடராழிநெடுமால், அமுதினுமாற்ற வினியன்" என்று பெரியாரும் பாராட்டியருளிச்செய்யும்படி தேவர்கட்கு ஈந்த திருமால்,முனிவர்கள் ஈந்த காய்கனிமுதலிய இலையுணவுகளை விரும்பிப் புசித்தானே; இது எங்ஙனம் நிகழ்ந்தது?' என்று தோன்றும் ஐயப்பாட்டை,'மனந்திருந்தினாரிடத்துப் பிறர்செய்தது எதுவும் தாழ்மைப்படாது சிறப்புற்றேயிருக்கும்' எனப் பொருள்கொண்ட 'திருந்தினார்வயிற் செய்ததுதேயுமோ?' என்றஈற்றடியாற் போக்கினார்:சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள்கொண்டு சமர்த்தித்த வேற்றுப்பொருள்வைப்பணி, இது. இதனால், அம்முனிவர்கள் இராமபிரானுக்கு ஈந்த இலையுணவு அமிழ்தினும்மிகச்சிறந்து அப்பிரானுக்கு மனவுவப்பை விளைத்ததென்பது, விளங்கும். ஈற்றடியில் திருந்தினார்வயிற் செய்தவந் தேயுமோ என்ற பாடத்துக்கு - மனந்திருந்தினவராகிய இருடியர்கள் மிக்கதவஞ்செய்துள்ளவராதலால் அத்தவத்தின்பயனால்அவர்களீந்த அடகுணவையும் அமுதத்தினுஞ் சிறந்ததாகக் கொண்டு இராமபிரான் உண்டனனெனக் கருத்துக்காண்க. பி ம்:—[1]விருந்தின். [2]விரும்பினான். [3]செய்தன, செய்வன. (சுகூக)

உஅ.—இதுமுதல்எட்டுக்கவிகள் - இராமபிரானைக் காணவரும் குகனது வருணனை.

ஆய காலையி னாயிர மம்பிக்கு
நாய கன்[1]போர்க் குகனெனு நாமத்தான்
றாய கங்கைத் துறை[2]விடுந் தொன்மையான்
காயும் வில்லினன் [3]கற்றிர டோளினான்.

இதுமுதல் ஒன்பதுகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஆய காலையின் - அப்போது,—ஆயிரம் அம்பிக்கு நாயகன் - ஆயிரம் மரக்கலங்கட்குத் தலைவனும், தூய கங்கை துறைவிடு தொன்மையான் [தூய கங்கை தொன்மை துறை விடுவோன்] - பரிசுத்தமான கங்கையின் துறையிலே பழமையாக(ப் படகு)விடுபவனும், காயும் வில்லினன் - (மாற்றலரைக்) கடியவல்ல வில்லாளியும், கல் திரள் தோளினான் - மலைபோல்திரண்ட தோள்களையுடையவனும், போர் - போர்த்தொழிலில்வல்ல, குகன் எனும் நாமத்தான் - குகனென்று பேர்பெற்றவனும்,—(எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'ஆய காலையில்' என்பது, "இருந்த வள்ளலைக் காண வந்தெய்தினான்" என்ற ௩௬ - ஆங் கவியிலுள்ள 'எய்தினான்' என்ற முற்றோடு முடியும்.

'விடு' என்ற வினைக்கு ஏற்ற செயப்படுபொருள் வருவித்து உரைக்கப் பட்டது. பி - ம்:—[1]பொற்குகன். [2]விடு. [3]கற்றிரண்மேனியான். (௧௫௨)

௨௯. துடிய னாயினன் றோற்செருப் [1]பார்த்தபே
ரடிய னல்[2]செறிந் தன்ன நிறத்தினா
னெடிய தானை [3]நெருங்கலி னீர்முகி
[4]லடியி னோடெழுந் தாலன்ன வீட்டினான்.

(இ - ள்.) துடியன் - துடியென்னும் பறையையுடையவனும், நாயினன் - (வேட்டை)நாய்களை யுடன்கொண்டிருப்பவனும், தோல் செருப்பு ஆர்த்த பேர் அடியன் - தோலினாலிழைத்த செருப்பை யணிந்த பெரிய கால்களையுடையவனும், அல் செறிந்து அன்ன நிறத்தினான் - இருளென்பது நெருங்கிஒருவடிவு படைத்தாற்போன்ற [மிகவுங்கரிய] நிறத்தையுடையவனும், நெடிய தானை நெருங்கலின் - (தன்னுடைய)மிகத்திரண்ட சேனை நெருங்கிவருதலினால், நீர் முகில் அடியினோடு எழுந்தால் அன்ன ஈட்டினான் - நீர்கொண்டமேகம் (தன்) அடிப்பகுதியோடும் கிளம்பி வந்தாலொத்த தன்மையைக்கொண்டவனும்,—

தன் கூட்டம்எல்லாவற்றோடும்வரும் குகனுக்குத் தன் அடியோடும்வரும் நீர்முகில் ஏற்ற உவமையாகும். அடியோடும்வரும் நீர்முகில் - சிறிதும்மிச்சமில்லாமல் ஒருங்கு திரண்டெழுந்துவரும் காளமேகமென்க. துடி - வேடர்கட்கு உரிய பறை. வேடனை வருணிக்குமிடத்துத் தோற்செருப்புப்பூண்டவனென்றும், கருநிறத்தவனென்றும் வருணித்தல் வழக்கமாதலை "தாழகமூட்டப்பட்ட காரிருட்டுணியுமொப்பான்," "தொடுமரைத்தோலன் வில்லன்" என்ற சிந்தாமணியிலும் காண்க. பி - ம்:—[1]ஆர்ந்த. [2]சிறந்தன்ன. [3]நெருக்கலின். [5]இடியினோடு. (௧௫௩)

௩0. [1]கொம்பு துந்துமி கொட்டு முறையையன்
பம்பை பம்பு படையினன் பல்லவத்
தம்ப னம்பிக்கு [2]நாத னழிகவுட்
டும்பி யீட்டம் புரை[3]கிளை [4]சுற்றத்தான்.

(இ-ள்.) கொம்பு - குறுந்தடியானது, துந்துமி-துந்துபியென்னப்படும் பறையை, கொட்டும் - அறைகின்ற, முறைமையன் - தன்மையையுடைய வனும், பம்பை-பம்பையென்னும்பறை, பம்பு-நிறைந்துள்ள, படையினன் - சேனையையுடையவனும், பல்லவத்து அம்பன் - தளிர்போலச்செந்நிறங் கொண்டுவிளங்குகின்ற அம்பியையுடையவனும், அம்பிக்கு நாதன் - (பல) ஓடங்கட்குத்தலைவனும், அழி கவுள் தும்பி ஈட்டம் புரை கிளை சுற்றத்தான் - (மதநீர்) பெருகுவதற்குக்காரணமான கன்னத்தையுடைய யானைக் கூட்டத்தை யொத்த [பெருவலிமையும் பெருந்தோற்றமும் படைத்த] கிளைக் கின்ற சுற்றத்தாரை யுடையவனும்,—(எ - று.)

கொட்டுதலென்பது வாசியத்தை யூதுத லென்ற பொருளிற் பயின்று வராமையால், [1]கொம்புதுத்தரிகொட்டும் என்ற பாடம் சிறவாது. துத்தரி - ஊதும்இசைக்கருவி. அம்பைப்பழுக்கக்காய்ச்சிவைத்துக்கொண்டிருத்தலால், தளிர்போல அம்பு செந்நிறத்தோடு விளங்கு மென்றார். உஅ - ஆம்பாடலில், "ஆயிரமம்பிக்கு நாயகன்"என்று கூறிய கவி,மீண்டும் இங்கு'அம்பிக்குநாதன்' என்றுகூறியது, இவன்அம்பிக்குநாயகனாயிருப்பது இராமபிரானுக்கு உதவுவ தற்குக் காரணமாதல்பற்றி அவனிடத்துத் தாம் மதிப்புக்கொண்டிருத்தலைப் லப்படுத்தும். அழிதல் - பெருகுதலென்னும்பொருள தாதலை "அழியும்புன ஞ்சனமாநதியே"என்றவிடத்து நச்சினார்க்கினியருரையால் தெளிக. பி-ம்:- [1]காம்பூ தித்துடிகொட்டும். [2]நாயகன். [3]கிளர், கிளைச். [4]சுற்றினன். (சுருக)

ருக. [1]காழ மிட்ட குறங்கினன் கங்கையி
னாழ மிட்ட [2]நெடுமையி னரைத்
தாழ விட்டசெந் தோலன் [3]றயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினான்.

(இ-ள்.) காழம் இட்ட குறங்கினன் - காழமென்னும் உடைவிசேடம் தங்கிய துடையையுடையவனும், கங்கையின் ஆழம் இட்ட நெடுமையினன்- கங்காநதியின் ஆழத்தைக் கண்டறிந்த பெருமையையுடையவனும், அரை தாழ விட்ட செம் தோலன்-அரையினின்று தொங்கவிட்ட செந்நிறத்தோலை யுடையவனும், தயங்கு உற சூழ விட்ட தொடு புலி வாலினான்-விளங்குமாறு (அரையைச்) சூழக்கட்டிய (ஒன்றோடொன்று)பிணைந்த புலிவாலையுடைய வனும்,—(எ - று.)

காழம்-அரையிலிருந்து தொடைவரையில் அணியுங் குறுங்காற்சட்டை; சல்லடவகை. ஆழங் கண்டறிய முடியாதபடி மிகவும் அகாதமான கங்காநதி யின் ஆழத்தையுங் கண்டறிந்தவனாதலால்,'கங்கையின் ஆழமிட்டநெடுமையி னன்' என்றார். அரையிலிருந்து துடைவரையுமணிந்த சல்லடத்தின்மீது செந்நிறத்தோலைத் தொங்கவிட்டுப் புலியின்வாலை அரைக்கச்சாகச் சுற்றிக் கட்டிக்கொண்டிருக்கின்றனன் அந்தக்குகனென்பது, பின்னிரண்டடிகளிற்

கூறிய விஷயம். குகனாகிய வேடன் செய்துகொண்டுள்ள கோலத்தை இனிது கூறியது, தன்மைநவிற்சியணி. கங்கையினாழமிட்ட நெடுமையினானென் பதற்கு - கங்காநதியாழ்ந்திருப்பதுபோல் ஆழ்ந்த மனமுடையவனென்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1]வேழமிட்ட...வேலையின். [2]பெருமையினாலாம். [3]தயங்கரைச். (௯௫௫)

௩௨. பற்[1]றொடுத் தன்ன பல்சூற் கவடியன்
கற்றொடுத் தன்ன போலுங் கழலினான்
அற்[2]றொடுத் தன்ன [3]குஞ்சியி னாள்கதிர்
[4]நெற்றொ டுத்து [5]நெரிந்த புருவத்தான்.

(இ - ள்.) பல் தொடுத்து அன்ன சூல் பல் கவடியன் - பற்களைத் தொடுத்தாற்போன்ற உட்குழிவுள்ள பல பலகறைகளாலியன்ற ஆரத்தைப்பூண்டவனும், கல் தொடுத்து அன்ன போலும் கழலினான் - கற்களைப் பொருத்திவைத்தாற்போலுந் தாள்களையுடையவனும், அல் தொடுத்து அன்ன குஞ்சியின் இருளை ஒன்றாகச்சேர்த்துக் கட்டினாற்போல்தோன்றுகின்ற மயிர் முடியிலே, நெல் ஆள் கதிர் தொடுத்து - நெல்லைக்கொண்டுள்ளகதிரைச்செருகிக் கொண்டு, நெரிந்த - ஏறிச்சாய்ந்துள்ள, புருவத்தான் - புருவத்தையுடையவனும்.

பலகறைகளைத்தொடுத்து அணியாகப்பூண்டுள்ளானென்பது, முதலடியின்கருத்து. அம்மனைத்தொடுத்த பலகறைமாலை பல்லைத்தொடுத்துவைத்தாற்போலு மென்றார். அந்தக்குகனது தாள் மிகவும்உரப்பா யிருத்தலால், அவை தொடுத்த கல்போலு மென்க. தொடுத்தன்ன, தொடுத்து - தொடுத்தால்; எச்சத்திரிபு; அன்றி, தொடுத்து அன்ன என்பவற்றின் தொகுத்தலென்றேனும், தொடுத்தன என்னும் வினையாலணையும்பெயரின் விரித்தலென்றேனும் கொள்ளலுமாம். கழல் - வீரக்கழல் எனினுமாம்; கருநிறமுள்ள இரும்பினாலியன்றுபூண்ட கழல், தொடுத்த கல்போலு மென்க. தனதுகருநிறக்கூந்தலில் நெற்கதிரை யணியாகச் செருகிக்கொண்டுள்ளான் அந்தக்குகனென்பது, பின்னடியிற்கூறியவிஷயம். மூன்றாமடியில் 'அற்றொடுத்தன்னகுஞ்சியனாளியின்' என்றபாடத்துக்கு - அல்லை [இரவை]த் தொடுத்தாற்போலும் மயிர்முடியையுடையவனும், சிங்கம்போல் (இயற்கைச்சினத்தால்) நெல்லைத்தொடுத்துவைத்தாற்போன்று நெரிந்துள்ள புருவத்தையுடையவனும்எனப் பொருள் கூறுக. புருவமயிர் மிகப்பரியனவாயிருத்தலால், அவை நெல்லைத் தொடுத்தாற்போலு மென்க. பி - ம்:—[1]தொடுத்தபல்பூண், தொடுத்தன்னபல்கு. [2]தொடுத்தமா. [3]குஞ்சியன். [4]நெற்றொடொத்து. [5]நிறைந்தபுருவத்தான், நெரிபுருவத்தினான். (௯௫௬)

௩௩. பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண [1]வன்மயிர் [2]வார்ந்துயர் முன்கையன்
கண்ண கன்[3]றட மார்பெனுங் கல்லின
னெண்ணெ யுண்ட விருள்புரை மேனியான்.

(இ - ள்.) பெண்ணை வல் செறும்பின் பிறங்கி செறி வண்ணம் வல் மயிர் வார்ந்து உயர் முன் கையன் - பனைமரத்தின் வலியசிறும்புபோல் விளங்கி நெருங்கியுள்ள அழகிய வலிய மயிர் நீண்டுஉயர்ந்துதோன்றுகின்ற முன்னங்கையையுடையவனும், கண் அகல் தட மார்பு எனும் கல்லினன் - இடம்பரந்து விசாலமாகவுள்ள மார்புஎன்கின்ற கல்லையுடையவனும், எண்ணெய் உண்ட இருள் புரை மேனியான் - எண்ணெயூட்டப்பெற்ற இருளை யொத்த உடம்பை யுடையவனும்,—(எ - று.)

முன்னங்கையில் முளைத்துள்ள மயிர் பனைமரச்சிறும்புபோலு மென்றார். அந்தக்குகனுடையமேனி கறுத்து நிகுநிகுத்துத்தோன்றுவதால், 'எண்ணெயுண்ட விருள்புரைமேனியான்' என்றது. கீழ் ௨௩ - ஆவது செய்யுளில் 'அந்தக்குகன் கருநிறத்தவன்' என்பதை "அற்செறிந்தன்ன நிறத்தினன்" என்பதனால் விளக்கி, இங்கு அவன்மேனியை உவமைமுகத்தால் விளக்குவது னைற் கூறியதுகூறலென்னுங்குற்றத்திற்கு இடமின்மை காண்க. பி - ம்:—[1]வான்மயிர். [2]வான்றனை. [3]கொடுமார்பு. (௩௰௭)

௩௪. கச்சொ டார்த்த கறைக்கதிர் வாளினன்
னஞ்[1]ச ராவு நடுக்குறு நோக்கினன்
பிச்ச ர[2]ன்ன பேச்சின னிந்திரன்
[3]வச்சி ராயுதம் போலு மருங்கினன்.

(இ - ள்.) கச்சொடு ஆர்த்த - அரைக்கச்சிலேகட்டிய, கறை கதிர் வாளினன் - இரத்தக்கறைபடிந்துள்ள ஒளியுள்ள வாளையுடையவனும், நஞ்சு அரா உம் நடுக்கு உறு நோக்கினன் - விஷமுள்ள சர்ப்பமும் நடுக்கமடைகின்ற[கொடிய] கண்பார்வையையுடையவனும், பிச்சர் அன்ன பேச்சினன்-பித்தர்போலப் (பொருத்தமற்ற) பேச்சுக்களையுடையவனும், இந்திரன் வச்சிராயுதம் போலும் மருங்கினன்-தேவேந்திரனது வச்சிரப்படைபோன்ற [மிகவும்உறுதியான] இடையையுடையவனும்,—(எ - று.)—ஆம் - அசை. வச்சிராயுதம், இடைக்கு நடுச்சிறுத்து இரண்டுபுறத்தும் பருத்திருத்தலிலும் உவமையென்னலாம். பி - ம்:—[1]அராவின். [2]என்ன. [3]வச்சிரம்புரைகின்ற. (௩௰௮)

௩௫. [1]ஊற்ற மேமிக வூனொடு மீனுகர்
நாற்ற [2]மேய நகையின் முகத்தினன்
சீற்ற மின்றியுந் தீயெழ நோக்குவான்
கூற்ற மஞ்சக் [3]குமிறுங் குரலினன்.

(இ-ள்.) ஊற்றம் ஏ மிக - (தன்) வலிமை மிகுமாறு, ஊனொடு மீன் நுகர்-(பிறபிராணிகளின்) இறைச்சிகளோடு மீனையும் நுகர்தலால், நாற்றம் - புலால் நாற்றம், மேய - பொருந்திய, நகை இல் - சிரிப்புஎன்பது இல்லாத, முகத்தினன்-வாயையுடையவனும், சீற்றம் இன்றிஉம் தீ எழ நோக்குவான்-(ஒருத்தர்மீது)கோபமென்பது இல்லாமலிருக்கையிலும் தீப்பொறிவெளிப்பட(க் கடுமையாக) விழித்துப்பார்ப்பவனும், கூற்றம் அஞ்ச குமிறும் குரலினன்-யமனும் நடுங்கும்படி அதிர்ந்துஒலிக்கின்ற குரலையுடையவனும்,—(எ - று.)

புலால்நாற்றம்வீசும்,வாயும் சீற்றமில்லாதிருக்கையிலும் கனலெழவிழித்துப்பார்க்குங் கொடும்பார்வையும், யமனும்அஞ்சும்படி குமிறியொலிக்கும் பெருங்குரலும் படைத்தவன், வந்த அந்தக் குகனென்க. பி - ம்:—[1]ஊற்றுமென்னற, ஊற்றுமெய்ந்நற, ஊற்றமென்ன, ஊற்றுமென்னறை. [2]மெய்யன். [3]குமுறும். இந்தச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளி லில்லை. (௭௫௧)

௧௪.—குகன் இராமபிரானைக் காணுமாறு வந்தல்.

[1]சிருங்கி பேர மெனத்[2]திரைக் கங்கையின்
மருங்கு தோன்று நக[3]ருடை வாழ்க்கையா
னொருங்கு தேனொடு மீ[4]னுப காரத்தி
னிருந்த வள்ளலைக் காணவந் தெய்தினான்.

(இ - ள்.) சிருங்கிபேரம் என - சிருங்கிபேரமென்று சொல்லப்பட்டு, திரை கங்கையின் மருங்கு தோன்று - பேரலைகள் படைத்த கங்காநதியின் பக்கத்திலே காணப்படுவதான, நகர்-நகரை, உடை வாழ்க்கையான் [வாழ்க்கைஉடையான்] - வாழுமிடமாக வுடையவனுமான அவன்,—இருந்த வள்ளலை-(முனிவருறையுளில்) தங்கியிருந்த அந்த இராமபிரானை, காண-காணுமாறு, ஒருங்கு-ஒருசேர, தேனொடு மீன் உபகாரத்தின்-தேன் மீன்என்ற இந்தக் காணிக்கைப்பொருளோடும், வந்து எய்தினான்-வந்து சேர்ந்தான்; (எ-று.)

கங்கைக்கரையிலுள்ள சிருங்கிபேரமென்ற நகரத்திற்குஅரசனாகிய குகனென்பவன், கோசலதேசாதிபதியாகிய தசரதசக்கரவர்த்தியின் குமாரனான ஸ்ரீராமபிரான் கங்கைக்கரையைச்சேர்ந்துள்ளா னென்பதைக் கேள்வியுற்று மீனையும் தேனையும் காணிக்கையாக ஏந்தி, தன் சுற்றத்தாரோடும் அவ்விராமபிரானெழுந்தருளியிருக்கும் இடத்தை விசாரித்துக்கொண்டு வந்துசேர்ந்தனனென்க. 'அரசன் தெய்வம் குரு என்ற இவர்களைக் காணச் செல்லும்போது வெறுங்கையோடு செல்லலாகாது' என்பது விதியாதலால், பூமண்டலத்துக்கெல்லாம் அதிபதியாகிய இட்சுவாகுகுலத்துதித்த அரசகுமாரனான இராமபிரானைக் காணவந்தபோது குகன் தன்கையிற்கிடைத்த ஊனையும் தேனையுமே காணிக்கையாகக்கொண்டு வந்தனனென்க. உபகாரம்=உபஹாரம்; காணிக்கைப்பொருளென்று பொருள்படும் வடசொல். இராமபிரான் தன்னுடன் வந்த ஜநங்களை வஞ்சித்துச்சென்று கோசலநாட்டைக்கடந்து அதன் தென்பாகத்திலுள்ள கங்காநதியைக்கண்டு அதன்கரையிலுள்ள இங்குதிமரத்தடியில் தங்கினனாக, அவ்விராமபிரான் வந்துள்ளதைக் கேள்வியுற்ற வேடர் தலைவனும் சிருங்கிபேரபுரத்துக்கு அரசனுமான குகன் மந்திரிகளுடனும் சுற்றத்தாருடனும் அவ்விராமனிடம் வருகையில், அஃதுணர்ந்த இராமபிரான் இலக்குமணனோடும் அவனை யெதிர்கொண்டு சந்தித்தன னென்று முதனூலிற் கூறியுள்ளது. பி - ம்:—[1]சிருங்கிவேரியெனத். [2]திருக், திகழ். [3]உறை. [4]உபகாரத்தன்.

ஆயகாலையின்,—அம்பிக்குநாயகன் தொன்மையான் வில்லினன் தோளி ஞன் (உஅ, துடியன் நாயினன் அடியன் நிறத்திஞன் ஈட்டிஞன் (உகூ), முறைமையன் படையினன் அம்பன் நாதன் (௩௦), குறங்கினன் நெடுமையி ஞன் தோலன் வாலிஞன் (௩௧), கவடியன் கழலிஞன் புருவத்தான் (௩உ), முன்னையன் கல்லினன் மேனியான் (௩௩), வாயினன் நோக்கினன் பேச் சினன் மருங்கிஞன் (௩௪), முகத்திஞன் நோக்குவான் குரலிஞன் (௩ரு), நக ருடை வாழ்க்கையான் (௩சு), குகனெனு நாமத்தான் (உஅ) அழிகவுள் தும்பியீட்டம் புரை சுற்றத்தான் (ஆகி) (௩௦), இருந்த வள்ளலைக் காண, உபகாரத்தின் வந்தெய்திஞன் (௩கூ) எனக் குளகச்செய்யுள்கட்கு முடிபு காண்க. (கூகூ௦)

௩எ.—இராமனை நாடிவந்த குகன் இராமபிரானிருந்த தவப்பள்ளியின் வாயிலைக் கிட்டுதல்.

சுற்ற மப்புற [1]நிற்கச் [2]சுடுகணை
விற்று றந்தரை வீக்கிய வாளொழித்
தற்ற நீத்தம னத்தின னன்பின
னற்ற வப்பள்ளி வாயிலை நண்ணிஞன்.

(இ - ள்.) சுற்றம்-(தனது) உறவினர், அ புறம் நிற்க-அப்பால் நிற்கவும், சுடு கணை வில் துறந்து - பழுக்கக்காய்ச்சிய அம்போடுகூடிய வில்லையும் (தன் கையிற்கொள்ளாமல்) விட்டிட்டு, அரை வீக்கிய வாள் ஒழித்து - அரையிற் கட்டிய வாளையும் நீக்கிவிட்டு, அற்றம் நீத்த மனத்தினன் - குற்றம் நீங்கிய மனத்தையுடையவனும், அன்பினன்-(இராமபிரானிடத்துப்) பெருங்காதல் கொண்டவனுமாகி, (அந்தக் குகன்),-(இராமபிரான் தங்கியிருந்த), நல் தவம் பள்ளி-சிறந்த தவத்திற்குஉரிய முனிவரது பர்ணசாலையின், வாயிலை—, நண் ணிஞன் - கிட்டிஞன்; (எ - று.)

தவசியரின் இருப்பிடத்தை நணுகும்போது மிகவும்அடக்கவொடுக்கத் துடன் செல்லவேண்டு மாதலால், சுற்றத்தையும் வெளியில் நிற்கச் சொல்லி, வில்லையும் வாளையும் ஒழித்து,அவற்றிற்குப்பதிலாக மனத்திற் குற் றம்நீங்க இராமபக்தி நிறைந்திருக்க, தவச்சாலையின்வாயிலை யடைந்தனன் குக னென்க. (கண்ணுவமுனிவரின் ஆச்சிரமத்துக்குச் செல்லும்போது தன் சேனைகளையெல்லாம் வெளியே நிறுத்திவிட்டுத் துஷ்யந்தராசன் சென்ற னென்று சாகுந்தலநாடகத்திற் காளிதாசமகாகவி கூறியுள்ளது இங்குக் கருதத்தக்கது.) பி-ம்:—[1]நீக்கி. [2]சுடுங். (கூகூக)

௩அ.—தவச்சாலைவாயிலையடைந்த குகன் தான் வந்துள்ளமையைத் தெரிவிக்கக்கூவுதல்.

நின்று னெஞ்சி னிரம்புறு மன்பா
லின்றே நின்பணி செய்திட விறைவா
நன்றே வந்தன [1]னடியே னென்னா

(இ - ள்.) எயினரின் இறையோன்-வேடர்கட்கு அரசனாகிய குகன்,— (தவப்பள்ளி வாயிலையடைந்து), நெஞ்சில் நிரம்புறும் அன்பால் நின்றான்-நெஞ்சில் நிரம்பிய அன்போடு நின்றவனாகி, (வாயிலிலிருந்தபடியே இராமனை நோக்கி), 'இறைவா - தலைவனே! நாய் அடியேன் யான்-நாய்போற் கடைப்பட்ட அடியவனாகிய நான், நின் பணி செய்திட - உமது கட்டளையைச் செய்திடுமாறு, இன்றே - இன்றைக்கே, நன்றாக - மிகப்பாங்காக, வந்தனன் - வந்துவிட்டேன்,' என்றே-, கூவினன்-(உள்ளேயிருப்பவர்க்குக் கேட்குமாறு) உரக்கக் கூறினான்; (எ - று.)

தான் அனுமதியின்றி உள்ளே செல்வது ஆகாது என்று வாயிலிலிருந்தபடியே கூவினனென்பதாம். 'இனி, இராமபிரானுடனேயிருந்து அவனுக்குப் பணிசெய்தலே தான் செய்யவேண்டுந்தொழில்' என்னும் மனப்பான்மையோடுள்ளானாதலால், குகன் 'இன்றே நின்பணி செய்திட நன்றேவந்தனன்' என்கிறான். இதுவரையில் உடலுக்குநதொண்டுபுரிந்த யான் இனிஈடேறுமாறு நின்பணிசெய்வேனென்கின்றானென்னலாம். பி - ம்: —[1]நாயகவென்றான். இந்தச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளிலுள்ளது. மேற்பாடலோடு இயைபுஉள்ளதனாற் கொள்ளத்தக்கதென்றே தோன்றுகின்றது. (சுகூஉ)

**கூசு.—வந்த குகனை இலக்குமணன் வினவியறிதல்.**

[1]கூவ முன்ன மிளையோன் குறுகிநீ
யாவன் யாதென வன்பி னிறைஞ்சினான்
றேவ நின்கழல் சேவிக்க [5]வந்தன
[6]னாவ வேட்டுவ னாயடி யேனென்றான்.

(இ - ள்.) கூவ-(தவப்பள்ளிவாயிலையடைந்த குகன்) கூப்பிட, முன்னம்-முதலில், இளையோன் - இளையபெருமாளாகிய இலக்குமணன், குறுகி - (அந்தக்குகனைக்) கிட்டி, 'நீ யாவன் - நீ யார்? யா - (வந்தகாரியம்) யாது?' என - என்றுவினவ,—(அந்தக்குகன் அவ்விளையபெருமாளை), அன்பின் இறைஞ்சினான்-அன்போடு வணங்கினவனாகி, 'தேவ-அரசே! நாய் அடியேன்-நாய்போல் அடிமைப்பட்டவனாகிய யான், நாவம் வேட்டுவன் - (கங்கைகடக்குமாறு) ஓடங்களைக் கொண்டுள்ள (குகனென்னும்) வேடுவனாவேன்; நின் கழல் சேவிக்க வந்தனன் - தேவரீரது திருவடிகளைத் [தேவரீர் தொழுகின்ற இராமபிரானது திருவடிகளை] தரிசிக்கும்பொருட்டு வந்தேன்,' என்றான் - என்று (தான் இன்னானென்பதையும் தான் வந்த காரணத்தையும்) தெரிவித்தான்; (எ - று.)

'நீ யாவன்? வந்தகாரியம் எது?' என்று வினவியவற்றிற்குஏற்ப, குகன் இரண்டுவிடைகூறினனென்க. நின்கழல்என்பதற்கு-தேவரீர் தொழுவதற்கு உரிய இராமபிரானது திருவடிகளென்று பொருள்கொள்ளாமல், உம்முடைய திருவடிகளென்றே பொருள்கூறின், மேல் இலக்குமணன் நீ இங்கேயேயிரு என்று குகனுக்குச்சொல்லி அந்தக்குகனது வருகையை இராமபிரானுக்கு அறிவித்ததற்கு இயைபு இன்றாம். நீயாவன் - இடவழுவமைதி. யா = யாது:

விகாரம். பி - ம்:—[1]கூவா முன்னமிளையோன், கூவுமுன்னமிளையோன், கூவுமுன்னிளையோனும், கூவாமுன்னிளையோனும். [2]வா. [3]ஆவானீயாரென, யாவாயாரென, யாவன்யாரென, ஆவான்யாரென. [4]சேவிப்ப. [5]வந்தேன், வந்தனென். [6]நாவாய். (௬௬௩)

வேறு.

௪௦ —இராமபிரானிடத்துக் குகன் வருகையை இலக்குமணன் தெரிவித்தல்.

நிற்றியீண் டென்று புக்கு நெடியவற் றொழுது[1]தம்பி
கொற்றவ நின்னைக் காணக் குறுகினன் [2]னிமிர்ந்த கூட்டச்
சுற்றமுந் தானு முள்ளந் தூயவன் றாயி னல்லா
னெற்றுநீர்க் கங்கை நாவாய் [3]க்கிறைகுக னொருவ னென்றான்.

(இ - ள்.) தம்பி-(இராமபிரானது) திருத்தம்பியாகிய இலக்குமணன்,— (குகனை நோக்கி), ஈண்டு நிற்றி என்று புக்கு - 'இங்கேயேயிருப்பாய்' என்று சொல்லி (த் தவச்சாலையின்) உள்ளேசென்று, நெடியவன் தொழுது- பெருமைபெற்ற (தமது) திருத்தமையனாரை வணங்கி, (அப்பரமனைநோக்கி), 'கொற்றவ - வெற்றிபொருந்தியவனே! உள்ளம் தூயவன் [தூய உள்ளத்தவன்] - பரிசுத்தமான மனத்தையுடையவனும், தாயின் நல்லான் - தாயைக் காட்டிலும் மிக்க அன்பையுடையவனும், எற்றும் நீர் கங்கை நாவாய்க்கு இறை - மோதுகின்ற நீரைக்கொண்ட கங்காநதியிற்செல்லும் பல மரக்கலங்களுக்குத் தலைவனுமாகிய, குகன் ஒருவன்-குகனென்ற ஒருத்தன்,—நின்னை காண - உன்னைக்காணும்பொருட்டு, நிமிர்ந்த கூட்டம் சுற்றம் உம் தான் உம்- பெருந்திரளாகத்திரண்டுள்ள சுற்றத்தாரும் தானுமாக, குறுகினன் - கிட்டியுள்ளான்', என்றான் - என்று (குகப்பெருமான் வந்துள்ளசெய்தியைத்)தெரிவித்தான்; (எ - று.)

அந்தக்குகனை அங்குத்தானே நிற்குமாறு சொல்லிவிட்டு, இளையபெருமாள் இராமபிரானுள்ள இடத்தைக் குறுகி, அப்பரமனிடம் 'குகப்பெருமான் தன் சுற்றததாரோடும் தேவரீரைத் தரிசிக்குமாறு வந்துள்ளான்' என்று தெரிவித்தனனென்க. குகனொருவன் சுற்றமுந் தானுங்குறுகினன் - திணைவிரவி, ஒருமை முடிபேற்ற திணைவழுவமைதி. சுற்றமுந்தானும் உள்ளந் தூயவனென்று இயைத்து உரைப்பினுமாம். பி-ம்:—[1]நம்பி. [2]நிமிரும். [3]நாயகன், இறையவன். (௬௬௪)

௪௧ —இராமபிரான் அநுமதியினால் இலக்குவன் அழைத்துச் செல்லக் குகன் அப்பிரானைச் கண்டு வணங்குதல்.

அண்ணலும் விரும்பி [1]யென்பா [2]லழைத்திநீ யவனை [3]யென்றான்
பண்ணவன் வருக [4]வென்னப் பரிவினன் விரைவிற் புக்கான்
கண்ணனைக் கண்ணி னோக்கிக் [5]கனித்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி [6]வளைத்துவாய் புதைத்து நின்றான்.

(இ - ள்.) அண்ணல் உம்-பெருமையிற் சிறந்தவனாகிய இராமபிரானும்,— விரும்பி - மனமுவந்து, 'நீ—, அவனை-அந்தக்குகனை, என்பால் அழைத்தி - என்னிடம் அழைத்துவருவாய்,' என்றான் - என்று கூறினான்; பண்ணவன் - நற்குணமுள்ளவனாகிய இலக்குமணன், (குகனைநோக்கி), 'வருக - (உள்ளே) வருவாயாக,' என்ன-என்று (இராமபிரானது கட்டளையைத்) தெரிவிக்க,— (அந்தக் குகனும்), பரிவினன் - (மனத்தில்) அன்புமிக்கவனாய், விரைவின் புக்கான் - விரைந்து உள்ளேபுகுந்து, கண்ணனை கண்ணில் நோக்கி களித்த னன்-கண்ணழகுடைய அந்தஇராமபிரானைக் கண்ணைப்படைத்தபயன்பெறத் தரிசித்து மனமகிழ்ந்து,இருண்ட குஞ்சி மண் உற பணிந்து-கறுத்தகூந்தலைக் கொண்ட சிரசு மண்மீதுபொருந்த [சாஷ்டாங்கமாக]ச் சேவித்து, மேனி வளைத்து - தன்னுடம்பை வணக்கிக்கொண்டு, வாய் புதைத்து - (கையால்) வாயை மூடியவண்ணம், நின்றான்—; (எ - று.)

பெரியோரை வணங்கி, பின் இறுமாப்புத்தோன்ற நிமிர்ந்து நில்லாமல் வணக்கந்தோன்ற உடம்பை வணக்கிக்கொண்டு கையால் வாயை மூடியவண்ணம் நிற்கும் முறைமையை ஈற்றடியிற் கூறினார். கண்ணன்என்பதைத் தமிழ்மொழியாகக்கொள்ளாமல் க்ருஷ்ணனென்ற வடமொழியின் திரிபாகக் கொண்டு, யாவருடைய மனத்தையுங்கவருந் தன்மையுடையவனென்று கூற லுமாம்: க்ருஷ்ணனென்பது அவதாரப்பெயராவதன்றி விஷ்ணுவுக்குஉரிய ஆயிரந்திருநாமங்களுளொன்றுதலை ஸ்ரீஸஹஸ்ரநாமத்தாலும் அறியலாம். குஞ்சி-சிரசுக்கு இலக்கணை. பி-ம்:—[1]எம். [2]அழைத்தியால். [3]என்னப். [4]என்றான். [5]களித்தனன். [6]வளைந்து. (கசுரு)

சுஉ.—இராமபிரான் 'இரு' என்ன, குகன் தான் கொணர்ந்த காணிக்கைப்பொருளைத் தெரிவித்தல்.

இருத்திநீ [1]யென்ன லோடு [2]மிருந்தில னெல்லை நீத்த
[3]வருத்தியன் றேனு மீனு [4]மமுதினுக் [5]கமைவ தாகத்
திருத்தினன் கொணர்ந்தே னென்கொ றிருவுள மென்ன [6]வீரன்
விருத்தமா தவரை நோக்கி முறுவலன் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) 'ஈண்டு-இங்கே, இருத்தி-உட்காருக,' என்னலோடும்-என்று (இராமபிரான்) கூறியவளவில்,—இருந்திலன்-(தான் இராமபிரானோடொப்ப உட்காருதல் தகுதியன்று என்ற கருத்தினால்) உட்காராதவனாய்,-எல்லை நீத்த அருத்தியன்-(இராமபிரானிடத்தில்) அளவுக்கு அடங்காத அன்பையுடைய அந்தக்குகன்,—(இராமபிரானை நோக்கி), 'அமுதினுக்கு அமைவது ஆக - (தேவரீருக்கு) உணவாக அமையும்படி, தேன்உம் மீன்உம் திருத்தினன் கொணர்ந்தேன் - தேனும் மீனும் ஆராய்ந்து கொண்டுவந்துள்ளேன்: திருவுளம் என்கொல் - (இவற்றையுட்கொள்வதில் தேவரீரது) மனக்கருத்து யாதோ?' என்ன - என்றுகூறி நிற்க,—வீரன் - இராமபிரான்,—விருத்தர் மா தவரை நோக்கி முறுவலன் - பருவஞ்சென்ற முதிய பெருந்தவசியரா

நோக்கி இளநகைசெய்தவனாய், விளம்பல் உற்றான் - சொல்லத் தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

'தவத்தோருறையும் இடத்திற்குத் தகாதனவான தேனையும் ஊனையும் தான் கொணர்ந்து அமுதினுக்கு அமைவதாகத் திருத்தினன் என்கின்றானே: இவனுடைய அறியாமை யிருந்தவாறு என்னே!' என்ற குறிப்புப்பட இராமபிரான் விருத்தமாதவரைநோக்கி இளநகைசெய்தன னென்க. பி-ம்:—[1]என்ற லோடும். [2]இருந்தனன். [3]அருத்தியின். [4]அமிர்தினுக்கு. [5]அமைந்தவாகத் திருத்தினென். [6]தீரன். (௪௧)

௪௨.—குகனைநோக்கி இராமபிரான் கூறிய மொழி.

அரியதா [1]முவப்ப வுள்ளத் தன்பினா [2]லமைந்த காதல்
தெரிதரக் [3]கொணர்ந்த வென்றா [4]லமிழ்தினுஞ் சீர்த்த வன்றே
[5]பரிவினிற் றழீஇய வென்னிற் பவித்திர மெம்ம னோர்க்கு
முரியன [6]வினிதி னாமு [7]முண்டனெ மன்றே வென்றான்.

(இ - ள்.) '(இந்தக் காணிக்கைப்பொருள்கள்), உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் - மனத்தினுள்ளேயிருக்கின்ற அன்பு முதிர்தலால் தோன்றுவதான பக்தியானது, தெரிதர - (யாவர்க்கும்) புலனாகும்படி, உவப்ப கொணர்ந்த - மனமுவப்பக் கொண்டுவந்தனவாகும்,' என்றால்—, அரிய - (இவை) மிகவுங்கிடைத்தற்கு அரியனவும், அமிழ்தின்உம் சீர்த்த அன்றே - அமுதத்தினுஞ் சிறந்தனவுமாகு மன்றோ! (கொண்டுவந்தபொருள்கள் எப்படிப்பட்டனவாக இருந்தாலும்), பரிவினில் தழீஇய என்னில் - அன்போடு பொருந்தியனவாயின், பவித்திரம் - (அவை) பரிசுத்தமானபொருள்களே; (அவை), எம்அனோர்க்குஉம் - எம்போலியர்க்கும், உரியன-(அங்கீகரித்தற்கு) உரியவை; (ஆதலால்), இனிதின் நாம்உம் உண்டனெம் அன்றே - இனிமையாக யாம் உண்டதற்குச் சமானமேயாகுமன்றோ!' என்றான்—; (எ - று.)

பக்தியென்பது அன்பின்முதிர்ந்த நிலை யாதலால், அதனை 'அன்பினலமைந்த காதல்' என்றான். பக்திவெளிப்பட மனவுவப்போடு கொண்டுவந்தவை மிகவும் அரியனவும் அமுதத்தினுஞ்சிறந்தனவுமா மாதலால், கொணர்ந்தபொருளின் தன்மையையாராயாது அவற்றைத் தூயபொருளாகவே யங்கீகரிப்போம்; இங்ஙனம் நாம் அவற்றை யங்கீகரித்தலால், நாம் சில காரணத்தால், நீ கொணர்ந்தவற்றை யுட்கொள்ளாவிட்டாலும் உண்டனபோலவே யாகு மென்று அந்தக்குகன் மனமுவக்குமாறு இராமபிரான் இன்மொழி கூறின னென்க. இராமபிரானிடத்து இன்சொல்கூறிய குகன் 'அப்பம் முதலிய பட்சணங்களும் அன்னங்களும் பானங்களும் ரஸாயநங்களுஞ் சித்தஞ் செய்து கொணர்ந்திருக்கின்றேன்; இவற்றை யமுதுசெய்க' என்ன, இராமபிரான் அவனைத்தழுவிஉசாவி 'நீ விருப்பத்தோடு சித்தஞ்செய்துகொணர்ந்த எல்லாவற்றையும் எனக்குச் செவ்வையாய் உபசாரஞ் செய்தாயென்று அங்கி

கரித்து உனக்கே திருப்பிக்கொடுக்கிறேன். நான் இப்போது பித்ருவாக்ய பரி பாலனத்திற்காகத் தாபதவேடம் பூண்டிருத்தலால் வனத்திலிருக்கும் பழம் முதலியவை எனக்கு உணவாவதன்றி நும்போலியரிடத்து இப்பொழுது பிரதிக்கிரகத்தை [உணவுப்பொருள்முதலிய வாங்கிக்கொள்ளுதலை] யொழிந் திருக்கின்றேன். என்தகப்பனுக்கு அன்பான இந்தத்தேர்க்குதிரைகளுக் குப் புல்லைத்தவிர வேறொன்றும் வேண்டியதில்லை; இவ்வளவுமாத்திரஞ் செய்தாயாயின், நீ என்னை நன்கு புஜிப்பித்தவனாவாய்' என்று மறுமொழி யுரைத்ததாக முதனூலால் தெரிகின்றது. தாம் - அசை. பி - ம்:—[1]உவப்ப துள்ளத்து. [2]அமைத்த. [3]நோணர்ந்தது. [4]அமுதினுஞ் சீர்த்தது. [5]பரிவினி னீந்தது. [6]என்றுவாங்கி. [7]உண்டனம். (௬௬௭)

௪௪.—'நீ இன்று சுற்றத்தாரோடும் உன்னிருப்பிடஞ் சேர்ந்து விடியற்காலை நாவாயோடு வருக' என்று இராமன் கூறுதல்.

சிங்கவே றனைய வீரன் பின்னரும் செப்பு வான்யா
மிங்[1]குறைந் தெறிநீர்க் கங்கை யேறுது நாளை யாணர்ப்
பொங்குநின் சுற்றத் தோடும் போயுவந் தினிதுன் னூரிற்
றங்கி[2]நீ நாவா யோடுஞ் சாருதி [3]விடிய லென்றான்.

(இ - ள்.) சிங்கம் ஏறு அனைய வீரன் - ஆண்சிங்கம்போன்றவனான இராமபிரான், பின்னர்உம்-மீண்டும், செப்புவான் - (பின்வருமாறு) சொல்ல லானான்:—'யாம்—, இங்கு உறைந்து - (இன்றைத்தினம்) இங்குத்தானே வசித்து, நாளை—, எறி நீர் கங்கை ஏறுதும் - (அலை) மோதுகின்ற நீரை யுடைய கங்காநதியைக் கடப்போம்; (ஆதலால்), நீ—, யாணர் பொங்கு நின் சுற்றத்தோடுஉம் போய் - அழகுமிகுந்த நின்னுடைய சுற்றத்தாரோடும் (இங் கிருந்து) போய், உன் ஊரில் உவந்து இனிது தங்கி - உன்னுடைய நகரத் திலே மனமுவப்போடும் இனிமையாகத்தங்கி, விடியல் - விடியுங்காலத்தில், நாவாயோடுஉம் - (நாங்கள் கங்கையைக் கடத்தற்கு ஏற்ற) மரக்கலத்தோடும், சாருதி - வந்து சேர்வாய்,' என்றான்—; (எ - று.)

'நாங்கள் இன்று இங்குத் தங்கி நாளைக்கங்கையைக் கடக்கக் கருதியுள் ளோமாதலால், நீ சுற்றத்தாரோடும் நின் ஊர்க்குமீண்டு, நாளைவிடியல் மரக் கலத்தோடும் வருக' என்றனன் இராமபிரானென்க. சீதையையும் இலக்கு மணனையும் உளப்படுத்தி, இராமன் 'யாம் ஏறுதும் நாளை' எனப் பன்மை யாற் கூறினான். பி - ம்:—[1]இருந்து. [2]நாவாயினோடும். [3]விடியவென்றான். ()

௪௫.—இராமனது தவக்கோலத்தைக் கண்டு வருந்திய குகன் நான் உன்னைப் பிரியாது அடிமைசெய்வேனெனல்.

கார்குலா நிறத்தான் கூறக் [1]காதல னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ [2]நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை
[3]யீர்கிலாக் [4]கள்வ னேன்யா [5]னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே [6]னான தைய [7]செய்குவெ னடிமை யென்றான்.

(இ - ள்.) கார் குலாம் நிறத்தான்-மேகம்போல் விளங்குகின்ற கருநிறத்தையுடைய இராமபிரான், கூற-'(இன்றுபோய் நாளை ஓடத்தோடும் வருக' என்று) சொல்ல,—காதலன்-(அவனிடத்து) அன்புள்ளவனாகிய அந்தக்குகன், உணர்த்துவான்-(பின்வருமாறு தன்கருத்தைத்)தெரிவிப்பானானான்;-'இ பார் குலாம் செல்வ-இந்தப்பூமிமுழுவதையும் விளங்குகின்ற(உன்னுடைய)செல்வமாகவுடையவனே! நின்னை - உன்னை, இங்ஙனம் - இவ்வண்ணம் [முனிவர் கோலத்தோடு], பார்த்த—, கண்ணை—, ஈர்கிலா - பிடுங்கியெறியமாட்டாத, கள்வனேன் யான்-(நின்னிடத்து அன்புடையவன்போலக்) கள்ளத்தன்மையால்நடிக்கின்றவனாகிய யான், இன்னலின் இருக்கை நோக்கி - (உனக்கு நேர்ந்துள்ள) துன்பத்தின் நிலையை நோக்கி, தீர்கிலேன் - (உன்னைவிட்டுப்) பிரிந்துசெல்லத்துணிந்திலேன்; ஐய—! ஆனது அடிமை செய்குவென்-என்னாலியன்ற அடிமைத்தொழிலை (உனக்குப்) புரிவேன்,' என்றான்—; (எ - று.)

அரசகுமாரனாகியஉன்னைப் பீதாம்பரமணிந்து மணிமுடியைப் புனைந்த கோலத்தோடும் தரிசிக்கவேண்டியதாயிருக்க, அங்ஙனஞ்சேவிக்கப்பெறாமல் மரவுரியணிந்து சடைமுடியைத்தரித்த கோலத்தோடு காண்கின்றேனே! இந் தத்தவக்கோலத்தைக்காணுமாறு நேர்ந்த தீவினைக்காக என்கண்களைப்பிடுங்கி எறிவேனாயின், நான் உன்னிடத்து மெய்யன்புடையவனென்று சொல்லலாம்; அங்ஙனஞ்செய்யமாட்டாத யான் உனக்கு அன்பனென்பது வேஷமே; உண்மையன்று. ஆயினும், உனக்கு நேர்ந்துள்ள நிலைமையைநோக்கி உன்னைப்பிரிந்து ஊர்க்குச்செல்ல மனந்துணிந்திலேன்: என்னாலியன்ற அடிமையைச்செய்ய விரும்புகின்றேனென்று குகப்பெருமான்கூறுகின்றனனென்க. இட்சுவாகுவமிசத்தார்க்கே பூமிமுழுவதும் உரியதாகுமென்பதும், மற்றையவர்கள் இவ்விட்சுவாகுகுலத்தார்க்குக் கீழ்ப்பட்டு அரசுஆளும் மன்னவராவரென்பதும் நூற்கொள்கையாதலால், 'பார்குலாஞ்செல்வ' என்றான். பி-ம்:—[1]காதலின். [2]உன்னை. [3]ஈர்கலாக். [4]கள்வனேனான். [5]நின்னயல், நின்னிபல். [6]ஆண்டு மீண்டுச். [7]செய்குவன். (௬௬௯)

௪௬.—இராமன் தம்முடன்அன்று இருக்கக் குகனுக்கு அனுமதிதருதல்.

கோதை[1]விற் குரிசி லன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கி[2]த் தம்பி திருமுக நோக்கித் தீராக்
காதல னாகு[3]மென்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினு மினிய [4]நண்ப விருத்தி[5]யீண் டெம்மொ டென்றான்.

(இ - ள்.) கோதை வில் குரிசில் - வெற்றிமாலைசூடிய கோதண்டமென்னும் வில்லையேந்திய ஆண்பாலிற் சிறந்தவனாகிய இராமபிரான், - அன்னான் கூறிய கொள்கை கேட்டான் - அந்தக்குகப்பெருமான் கூறிய (அவனுடைய) எண்ணத்தைக் கேட்டு, (பிறகு), சீதையை நோக்கி தம்பி திருமுகம் நோக்கி - சீதையின் திருமுகத்தைப்பார்த்தும்(தனது)திருத்தம்பியின்(திருவுள்ளத்தின்

கருத்தறிய அவ்விலக்குமணனது) திருமுகத்தைப் பார்த்தும், தீரா காதலன் ஆகும் என்று - '(இவன் நம்மிடத்து) நீங்காத பத்தியுடையவனுமவன்' என்ற காரணத்தால், கருணையின் மலர்ந்த கண்ணன் - (அந்தக் குகன் விஷயத்திற் கொண்ட)கருணையினால் மலர்ந்த கண்களையுடையவனாய்,'யாதினும் இனிய நண்ப - எல்லாப்பொருளினும் மேம்பட்ட நட்பாயிருப்பவனே! ஈண்டு - இவ்விடத்தில் [இன்றைத்தினம்], எம்மொடு இருத்தி - எம்முடனே யிருப்பாயாக,' என்றான்—; (எ - று.)

இந்தக்குகன் உங்களைப்போலவே என்பால் அன்புவைத்துள்ளா னென்பதைக் குறிப்பிக்குமாறு இராமபிரான் சீதையை நோக்கித் தம்பிதன் திருமுகத்தையும் நோக்கின னென்க. கோதை - நாணிப்பூமாம். பி ம்:—[1]வேல். [2]நம்பி. [3]என்னும். [4]நம்பி. [5]இன்று, ஈங்கு. (சுஎ0)

## சஎ.—தன்சேனையைக் காவல்புரியவேவித் குகன் தானும் பாதுகாத்திருத்தல்.

அடிதொழு துவகை [1]தூண்ட [2]வழைத்தன [3]னாழி [4]யன்ன
துடியுடைச் சேனை வெள்ளம் பள்ளியைச் சுற்ற வேவி
[5]வடிசிலை பிடித்து வாளும் வீக்கிவா யம்பு பற்றி
யிடியுடை [6]மேக மென்ன விணையடி [7]யேத்தி நின்றான்.

(இ - ள்.) (குகப்பெருமானுக்குத் தன்னுடன் அன்றுஉறையுமாறு இராமபிரான் அநுமதி தந்ததனால்), அடி தொழுது-(இராமபிரானது) திருவடிகளை வணங்கி, உவகை தூண்ட - மகிழ்ச்சி மேன்மேல் மிக,—ஆழி அன்ன துடி உடை சேனை வெள்ளம் - கடலையொத்துத்தோன்றுவதான துடியென்னும் பறையைக்கொண்டுள்ள (தனது) சேனைத்தொகுதியை, அழைத்தனன் - அழைத்து, பள்ளியை சுற்ற ஏவி - (இராமபிரான்தங்கியுள்ள) உறையுளைச் சுற்றியிருந்து காவல்புரியுமாறு பணித்து,—(பின்பு), வடி சிலை பிடித்து-(எய்வதற்குச்) சித்தமாயுள்ள வில்லைக் கையிற்பற்றி, வாள்உம் வீக்கி - (இடையிலே) வாளையும் செருகிக்கொண்டு, வாய் அம்பு பற்றி-(கொடுமை) வாய்ந்த அம்பை வில்லிலே பூட்டுதற்கு (க் கையிலே) சித்தமாகக்கொண்டு, இடிஉடை மேகம் என்ன-இடியைக் கொண்ட மேகம்போல (ப்பெருந்தொனியுண்டாக), இணை அடி ஏத்தி-(இராமபிரானது உபயபாதங்களைத்) துதித்துக்கொண்டே, நின்றான் - (அப்பிரானைப் பாதுகாக்குந்தொழிலிற் சித்தனாக)நின்றான், (அந்தக்குகன்); (எ-று.)

அன்று தன்னோடு உறையுமாறு இராமபிரான் அநுமதிதந்ததனால் மிக மகிழ்ந்து தன்சேனையைக்காவல்புரியுமாறு ஏவித் தானும் காத்துநின்றனன் குக னென்க. பி ம்:—[1]தூண்டி. [2]அமைத்தனன். [3]ஆளி. [4]என்னத். [5]அடு. [6]முகிலினென்ன. [7]தொழுது. இச்செய்யுள் அச்சிட்டமூலபிரதிகளிற் காணப்படவில்லையாயினும், பல ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது. (சுஎக)

சஅ.—நகர்நீங்கிவந்தகாரணத்தை இலக்குமணனிடம் வினவியறிந்து குகன் அவனுடன் இருத்தல்.

திருநகர் தீர்ந்த [1]வண்ண மானவ தெரித்தி யென்னப்
பருவர றம்பி கூறப் [2]பரிந்தவன் பையு ளெய்தி
யிருகணீ ரருவி சோரக் [3]குகனுமாண் டிருந்தா னென்னே
பெருநிலக் கிழத்தி [4]நோற்றும் பெற்றிலள் போலு [5]மென்றே.

(இ - ள்.) 'மானவ - மனுகுலத்தவனே! திரு நகர் தீர்ந்த வண்ணம்-அழகிய அயோத்தியாபுரியினின்று (நீவிர்) நீங்கிவந்த காரணத்தை, தெரித்தி - அறிவிப்பாய்,' என்ன - என்று (குகன்) வினவ,—பருவரல் தம்பி - (இராமபிரானுக்கும் இங்ஙனம்தவசிபோற் காட்டில்வசிக்கும்படி நேர்ந்ததே! என்று) மனம்வருந்துகின்ற இலக்குமணன், கூற - (வனவாசம்நேர்ந்த காரணத்தை விவரமாகச்) சொல்ல,-பரிந்தவன் குகன் உம் - (இராமபிரானிடத்துப்) பரிவு கொண்டுள்ளவனாகிய அந்தக்குகனும், பையுள் எய்தி-மிகவும்மனவருத்தமடைந்து, 'பெரு நிலம் கிழத்தி - பெரியநிலவுலகத்துக்குஉரியவளாகிய பூமிதேவி, நோற்று உம் - தவஞ்செய்தவளாயிருந்தும், பெற்றிலள் போலும் (அத்தவப்பயனை முழுதும்) பெற்றிலாள்போல்தோன்றுகின்றது: என்னே-இதுஎன்ன!' என்றே - என்றுசொல்லி, இரு கண் நீர் அருவி சோர-(தனது) இருகண்களினின்று (துயரத்தால் தாரைதாரையாகக்) கண்ணீர் பெருகிக்கொண்டிருக்க, ஆண்டு இருந்தான் - அங்கேயிருந்தான்; (எ - று.)

இராமபிரான் புவியில்திருவவதரிக்குமாறும் திருவடியால் தீண்டுமாறும் நேர்ந்ததனால் பூமிப்பிராட்டியை நோற்றவ ளென்னவேண்டியிருக்கிறதாயினும், அவ்விராமபிரான் தன்னையாளுமாறு ஏற்படாததனால் தவப்பயனைப் பெற்றிலளென்னவும் சொல்லவேண்டியிருக்கிறது என்ற கருத்துப்பட 'பெருநிலக்கிழத்திநோற்றும் பெற்றிலள்போலும்' என்றான். 'என்னே' என்பது - ஒருத்திக்கே இருநிலையேற்படுவதுபற்றிய வியப்பைக் குறிக்கும்: இரக்கக்குறிப்புமாம். பி-ம்:—[1]தன்மை. [2]பரிந்தனன். [3]குகனுமாடிரங்கிநைந்தான். [4]நோற்றுப். [5]என்றான். (சுஎஉ)

சகூ.—சூரியன் அத்தமித்தல்.

விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின்
றொருதனித் திகிரி யுந்தி யுயர்புகழ் நிறுவி நாளு
[1]மிருநிலத் தெவர்க்கு முள்ளத் [2]திருந்தருள் புரிந்துவீந்த
செரு [3]வலி வீர னென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.

(இ - ள்.) விரி இருள் பகையை ஓட்டி-பரவிய இருட்கூட்டம்போன்ற பகையை முதுகுகாட்டியோடச்செய்து [பரவியஇருளாகிய பகையையோடச்செய்து], திசைகளை வென்று - திக்குக்களையெல்லாந் தன்னுடையனவாகச் செய்து, மேல்நின்று - மேலிடத்திலிருந்து [வானத்திலிருந்து], ஒரு தனி

திகிரி உந்தி-ஒப்பற்ற (தனது) ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்தி, உயர் புகழ் நிறுவி - (அதனால் தன்னுடைய) சிறந்த கீர்த்தியை நிலைநாட்டி, நாள் உம் - (தான் அரசுபுரிந்த) காலமெல்லாம் [பகல்முழுவதும்], இரு நிலத்து-இந்தப் பெரியவுலகத்தில், எவர்க்குஉம் உள்ளத்து இருந்து - எல்லாருடைய மனத்திலும் (தன்னைப் பாராட்டும்படி) தங்கியிருந்து, அருள் புரிந்து - கருணை செய்து, வீழ்ந்த - இறந்துபோன, செரு வலி வீரன் என்ன-போர்செய்வதில் வல்லமையுடைய தசரதசக்கரவர்த்திபோல, செங் கதிர் செல்வன் - செந்நிறமுள்ள (ஆயிரம்) கிரணங்களையே (தன்) செல்வமாகவுடைய சூரியன், சென்றான் - அஸ்தமித்தான்; (எ - று)

சிலேடையையும் உருவகத்தையும் அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. பொருமாறு பத்துத்திக்கிலுஞ்சென்ற தேரையுடையனாய் அக்காரணம் பற்றியே தசரதனென்று நாமதேயம் படைத்தவனாதலின், அவனை 'செருவலிவீரன்' என்றார். சூரியனுக்குத் திசைகளை வெல்லுதல் - எல்லாத் திசைகளிலும் தன்னொளி செல்லுமாறு இருத்தல்: தனித்திகிரி யுந்துதல்-தன்மண்டலத்தைச்செலுத்துதல்: மற்றவை வெளிப்படை. நீதிநெறிதவறாத மன்னவனை அவனுடைய நற்குணம்பற்றிச சனங்கள் தம்மனத்திற்கொண்டு கொண்டாடுதல், இயல்பு. "சீரரசாண்டுதன் செங்கோற் சிலநாள்செலீஇக் கழிந்த, பாரரசொத்து மறைந்தது நாயிறு" என்ற பெரியார்பாசுரம் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. பி-ம்:—[1]இருநிலத்தவர்க்கும். [2]இருந்தன னென்ன. [3]மலி. (சஎங)

## ருo.—மாலை நியமம்முடித்து இராமன் பிராட்டியுடன் நாணலிற் படுக்க, இரவுமுழுவதும் இலக்குமணன் அவர்களைக் காத்திருத்தல்.

மாலைவாய் நியமஞ் செய்து [1]மரபுளி யியற்றி வைகல்
வேலைவா [2]யமுதன் னாளும் வீரனும் [3]விரித்த நாணல்
[4]மாலைவாய்ப் [5]பாரின் பாயல் [6]வைகினர் [7]வரிவி லேந்திக்
காலை[8]வா யளவுந் தம்பி [9]யிமைப்பிலன் காதது நின்றான்.

(இ - ள்.) மாலைவாய்-சாயங்காலத்தில், நியமம்-செய்யவேண்டியகடமைகளை, மரபுளி - செய்யவேண்டிய முறைப்படியே, இயற்றி செய்து - சிரத்தையோடுசெய்து, வைகல்-(அங்குத்) தங்குதலையுடைய, வீரன்உம் - இராமபிரானும், வேலைவாய் அமுது அன்னாள்உம் - பாற்கடலினின்று தோன்றிய அமுதத்தை யொத்தவளான சீதாபிராட்டியும்,—விரித்த - பரப்பியுள்ள, நாணல் மாலைவாய் - ஒழுங்காய்வளர்ந்துள்ள நாணற்புல்லிலே, பாரின் பாயல் - பூமியாகிய பாயலிலே, வைகினர் - தங்கினார்கள்; தம்பி - இளைய பெருமாள், வரி வில் ஏந்தி-கட்டமைந்த வில்லையேந்திக்கொண்டு, காலை வாய் அளவுஉம் - விடியற்காலந் தோன்றும்வரையிலும், இமைப்பு இலன் - கண்ணைக்கொட்டுதலும் இல்லாமல் [வெகு சாக்கிரதையுடன்], காத்துநின்றான்-.

மாலை நியமம்முடித்துப் பிறகு இராமன் நாணல்ஒழுங்காகவளர்ந்துள்ள பூமியிற் சீதையுடனே படுத்தானாக, இலக்குமணன் இரவுமுழுதும் கண்கொட்டாமல் துஷ்டஜந்துக்கள் முதலியவற்றால் யாதோரிடையூறும் உண்டா

காதவண்ணம் வில்லையேந்திப் பாதுகாத்துக்கொண்டிருந்தன னென்பதாம். பாரின் விரித்த நாணல்மாலைவாய்ப்பாயல் என்று அந்வயித்து உரைப்பினுமாம். இயற்றிச்செய்துஎன்று ஒருபொருட்பன்மொழி வந்தமையால், சிரத்தையோடுசெய்துஎன்று உரைக்கப்பட்டது. பி - ம்:—[1]மரபுளியிற்றி. [2]குளமன்றுளும். [3]இருந்தனுரன்று, விரித்தநாளம். [4]பாலவாம். [5]பள்ளிப். [6]வைகினன். [7]பரு. [8]காண்பளவும். [9]இமைத்திலன். (௬௭௪)

௫௧.—இதுவும் அடுத்த கவியும்-இலக்குமணன்நித்திரையைநீத்தமையை வருணனை வகையாற் கூறும்.

வெயில்விரி கனகக் குன்றத் தெழில்கெட [1]விலகு சோதிக்
கயில்வரி வயிரப் பைம்பூட் கடுந்திறன் மடங்க லன்னான்
றுயிலெனு மணங்கு வந்து தோன்றலு மவளை நாமே
யெயிலுடை யயோத்தி மூதூ ரெய்துநா ளெய்து மென்றான்.

(இ - ள்.) வெயில் விரி கனகம் குன்றத்து - சூரியனொளிபரவுதற்குக் காரணமான சுவர்ணமலையாகிய மேருவினது, எழில் கெட-அழகு கெடும்படி [மேருவினும்ஒளிபட], விலகு-விட்டுவிட்டுப்பிரகாசிக்கின்ற, சோதி-ஒளியையுடைய, கயில் வரி வயிரம் பைம் பூண் - கடைப்புணர்வுபொருந்திய வயிரமிழைத்துச்செய்யப்பட்ட பசும்பொன்னாபரணங்களைப் பூணுதற்குஉரியனான, கடு திறல் - மிக்கவலிமையையுடைய, மடங்கல் அன்னான்-சிங்கத்தையொத்தவனாகிய இலக்குமணன்,—(இரவுக்காலத்துவருதற்குஉரிய), துயில் எனும் அணங்கு-நித்திரையாகிய மாது, வந்து—, தோன்றலும் - தோன்றியவளவில் தானே, அவளை-அந்தமாதைநோக்கி, 'நாம்—, எயில் உடை அயோத்தி மூதூர்-மதிலையுடைய அயோத்தியென்னும் பழையநகரத்தை, எய்தும் - மீண்டுவந்துசேர்கின்ற, நாள்-காலத்தில், எய்தும் - (நீ) வந்துசேரும்,' என்றான்—.

இலக்குமணன் வனவாசந்தீர்ந்து அயோத்திமாநகரஞ்சேருமளவும் உறங்கவில்லையென்பதை இங்ஙனம் புனைந்துரையாக, நித்திரையென்னும் மாது வருகையில் அவளைநோக்கி 'அயோத்திநகரை நாம் அடையும்போது வந்து சேர்க' எனக் கூறியதாகக் கற்பித்துக் கூறினர். இலக்குமணன் கண்விழித்திருத்தலைப்பார்த்துக் குகப்பெருமான் 'யான் பாதுகாக்கின்றேன்: நீர் இனிது துயிலலாம்' என்ன, இலக்குமணன் அரசர்க்குரியபடுக்கையில் இனிதுதுயிலுதற்குஉரிய இராமன் புற்றரையிற்படுத்திருப்பதைக் காண நேர்கையில் உறங்கவும் விரகு உண்டோ?' என்று பலபடிவருந்திக்கூறினதாக முதனூலிலுள்ளது. சூரியன் மேருமலையைச்சுற்றிவருதலினால் பகலும்இரவும் தோன்றுகின்றன என்ற நூற்கொள்கைபற்றி, 'வெயில்விரிகனகக்குன்றத்து' என்றது. ஆபரணங்களின் பேரொளியைவிளக்க, 'கனகக்குன்றத்தெழில்கெடவிலகு சோதிப்பூண்' என்றார். நித்திரையை வடமொழியிற் பெண்பாலாற்கூறும்

மரபுபற்றி 'துயிலெனுமணங்கு' என்றது: இனி, துயிலுக்குஉரியதேவதையை இங்ஙனங் கூறினரெனக்கொள்ளுதலுமொன்று. இதுமுதல் மூன்றுகவிகள் பல பிரதிகளிலில்லை: ஒருகால் வெள்ளிப்பாட்டாயிருக்கலாம். பி-ம்:—[1]விளங்கு.

ருஉ. மறக்கண்வா ளிளைய வீர னாணையை மறுத்தல் செல்லாத்
துறக்கமா மாது மண்ண லுபயபங் கயங்கள் போற்றித்
துறக்கமா மென்ன லாய தூய்மதி லயோத்தி யெய்தி
யிருக்குநா ளெந்தை பாத மெய்துவ [1]னென்று போனாள்.

(இ - ள்.) மறம் கண் வாள் இளைய வீரன் - வீரத்தைத் தன்னிடத்தே கொண்ட வாட்படையையேந்திய இலக்குமணனது, ஆணையை - கட்டளையை, மறுத்தல் செல்லா - மறுக்க மாட்டாத, உறக்கம் மா மாது உம் - நித்திரையாகிய சிறந்த பெண்ணும், அண்ணல் - இலட்சுமணனது, உபயம் பங்கயங்கள் போற்றி - இரட்டைத்தாமரைமலர்போன்ற பாதங்களை (வணங்கித்) துதித்து, 'துறக்கம் ஆம் என்னல் ஆய தூய் மதில் அயோத்தி எய்தி - சுவர்க்கம்போலுமென்று சொல்லத்தக்க குற்றமற்ற மதிளாற்சூழப்பட்ட அயோத்திமாநகரையடைந்து, இருக்கும் - தங்குகின்ற, நாள் - நாளில், எந்தை பாதம் - உனது திருவடிகளை, எய்துவன் - வந்துகிட்டுவேன்,' என்று - என்றுசொல்லி, போனாள்—; (எ - று.)—பி-ம்:—[1]என்ன. (சுஎசு)

ருங.—இலட்சுமணன் கையும் வில்லுமாய்க் காத்திருத்தல்.

மற்றவ ளிறைஞ்சி யேக மாமலர்த் தவிசு நீங்காப்
பொற்றொடி யோடு மையன் றுயிறரும் புன்மை நோக்கி
யிற்றதோர் நெஞ்ச னாகி யிருகணீ ரருவி சோர
வுற்றதோ வியம தென்ன வொருசிலை யதனி னின்றான்.

(இ - ள்.) மற்றவள் - அந்தநித்திராதேவி, இறைஞ்சி ஏக - (கீழ்க்கூறிய வாறு இலக்குமணனை) வணங்கிச்சென்றாளாக,—மா மலர் தவிசு நீங்கா பொன் தொடியோடுஉம்-சிறந்த தாமரைமலராகிய ஆசனத்தைவிட்டு நீங்காத இலக்குமியின் அம்சமான சீதையுடனே, ஐயன் - ஸ்ரீராமன், துயில்தரும் - தூங்குகின்ற, புன்மை - சிறுமையை, நோக்கி—, இற்றது ஓர் நெஞ்சன் ஆகி - முறிந்தாற் போல் வருந்துகின்ற மனத்தையுடையவனாய், இரு கண நீர் அருவி சோர - (தனது) இருவிழிகளினின்று துயரத்தினாற் கண்ணீர் மலையருவிபோலப் பெருக, உற்றது ஓவியம் அது என்ன - துன்பநிலையோடுதோன்று கின்ற சித்திரம்போல (அசைவற்று), ஒரு சிலை அதனின் - (தனது) ஒப்பற்ற சிலையோடும், நின்றான் - (அந்தச்சீராமனைப் பாதுகாத்து) நின்றான்; (எ - று.)

ருச.—குகனும் தன்பரிவாரங்களுடன் ஸ்ரீராமனை இரவுமுழுவதும் காத்திருந்தல்.

தும்பியின் குழாத்திற் [1]சுற்றுஞ் சுற்றத்தன் றொடுத்த வில்லன்
வெம்பிவெந் [2]தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
றம்பி[3]நின் றானை நோக்கித் தலைமகன் [4]றன்மை [5]நோக்கி
யம்பியின் றலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றி னின்றான்.

(இ - ள்.) அம்பியின் தலைவன் - ஓடங்களை வைத்திருக்குந் தலைவனாகிய குகப்பெருமான், தும்பியின் குழாத்தில் சுற்றும் சுற்றத்தன்-யானைத்தொகுதி போற் சுற்றிக்கொண்டுள்ள இனத்தாரை யுடையவனாய்,--தொடுத்த வில்லன்- நாணேறிட்ட வில்லையுடையவனும், வெம்பி வெந்து அழியாநின்ற நெஞ்சினன் - வருந்திக்கொதித்து நிலைகுலைகின்ற மனத்தையுடையவனும், விழித்த கண்ணன்-(உறக்கமும் கண்கொட்டுதலுமின்றி) விழித்துக்கொண்டுள்ள கண்களையுடையவனுமாகி, தம்பி நின்றானை நோக்கி-நிற்கின்ற தம்பியைப்பார்த்து [தம்பிநிற்பதையும் பார்த்து], தலைமகன் தன்மை நோக்கி - அரசகுமாரனாகிய இராமன் (தரையிற்படுத்திருக்குந்) தன்மையையும் பார்த்து, கண்ணீர்-(தன்) கண்களினின்று(துயரத்தால்) வெளிப்படுகின்ற கண்ணீருடனே, அருவி சோர் குன்றின் - நீரருவி பெருகப்பெற்ற மலைபோல, நின்றான்—; (எ - று.)

பஞ்சசயனமெத்தையில் இனிதுபள்ளிபமரவேண்டியமகாசுகுமாரனாகிய ஸ்ரீராமபிரான் வெறுந்தரையில் தன்மனைவியோடு படுத்திருப்பதையும், மற்றோரரசகுமாரனாகிய இலக்குமணன் அப்பிரானுக்கு நேர்ந்த நிலையைநினைந்து மனம் வெம்பிக் கொதித்தழியக் கண்கொட்டுதலுமின்றிக் கையும்வில்லுமாய்ப் பாதுகாத்திருப்பதையும் கண்டபோது, துயரம்உள்ளடங்காமல் கண்களினின்று சோகக்கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகநின்றனன் குகப்பெருமானென்பதாம். அங்ஙனம் கண்ணீர்பெருகநின்ற குகப்பெருமானுக்கு, அருவி சோர்குன்று ஏற்றஉவமையாகும். இனி, அம்பியின்தலைவன் சுற்றத்தனும் தொடுத்தவில்லனும் வெம்பிவெந்தழியாநின்ற நெஞ்சினனும் விழித்தகண்ணனும் ஆகி என்று வில்லன்முதலியவற்றையும் குகனுக்கே அடையாக்கிக் கூறினுமாம். இப்பொருளில் தம்பிநின்றானை நோக்கித் தலைமகன்தனிமை நோக்கி அம்பியின்தலைவன் தொடுத்தவில்லனும் அழியாநின்ற நெஞ்சினனும் விழித்தகண்ணனுமாகி நின்றது - ஒருகால் இவ்விளையவனால் இப்பிரானுக்கு என்னதீங்கு நேருமோ? என்னுங் கருத்தினாலென்றும், குகன்சுற்றம் தும்பியின் குழாத்திற் சுற்றுவதற்குக் காரணம் - இந்தத்தம்பியினாலேனும், இந்தக் குகனாலேனும் இவ்விராமபிரானுக்கு என்ன தீங்குநேருமோ? என்னுங்கருத்தினாலென்றும் உரைப்பர்: இவ்வாறு உரைப்பது வைஷ்ணவசம்பிரதாயத்துப் பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கு ஏற்றதாகுமென்பதை "இளைய பெருமாளை ஸ்ரீகுஹப்பெருமாள் அதிஶங்கைபண்ண, இருவரையும் அதிஶங்கைபண்ணி ஸ்ரீகுகப்பெருமாள்பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே; ஒருநாள் முகத்திலேவிழித்தவர்களை வடிவழகு படுத்தும்பாடாயிற்று இது" என்கிற ஸ்ரீவசனபூஷணத்தையும், இந்தவாக்யத்துக்கு வ்யாக்யாநம் வகுக்குமிடத்து ஸ்ரீமணவாளமாமுனிகள் "இவ்விஷய வைலக்ஷண்யம் எல்லாரையும் மங்களாஶாஸநத்திலே மூட்டுமென்னுமிடத்துக்கு இன்னும் ஒரு உதாகரணங் காட்டுகிறார் 'இளையபெருமாளை' என்றுதொடங்கி: அதாவது-ஶ்ருங்கிபேரபுரத்திலேயெழுந்தருளி ஸ்ரீகுகப்பெருமாளை விஷயீகரித்த அன்று, பாங்கறிந்து இளையபெருமாள் படுத்துக்கொடுத்த பர்ணஶய்யையிலேபெருமாளும் பிராட்டி

யும் பள்ளிகொண்டருளாநிற்க, பால்யாத்ப்ரப்ருதி ஸம்ஸ்லிக்த ராகையாலே 'என்வருகிறதோ?' என்று அஞ்சி முதுகிலிட்ட அம்பறாத்தூணியும் கட்டின விரற்சரடும் நாணியேறிட்டு நடுநகோத்துப்பிடித்த வில்லும் தாமுமாய் நடையாடும் மதிள்போலே வளையவருகிற இளையபெருமாளைக்கண்டு, குகப்பெருமாள் 'ஒருதம்பி தாயைக்கொண்டு ராஜ்யத்தை வாங்கிக் கட்டின காப்போடே காட்டிலே தள்ளிவிட்டான்: இவனும் அவ்வோபாதி ஒருதம்பியன்றோ! தனியிடத்திலே என்செய்ய நினைத்து இப்படி ஆயத்தனாய் நிற்கின்றானென்று தெரியாது' என்று அதிஸங்கைபண்ணி, 'அப்படி ஏதேனும் ஒருதீங்கு நினைக்கில் இவன் றன்னைத் தீரக் காணக்கடவோம்' என்று வில்லுங்கோலுமாய்க்கொண்டு இவரிட்டஅடியிலே அடியிட்டுநிற்க, ஸ்ரீகுஹப்பெருமாள் ஏவல்தொழில் செய்துதிரியும் பரிகரம் 'அவன் ஜ்ஞாதி. இவன் குறும்பனான வந்யன்; [வந்யன் - காட்டுமனுஷ்யன்.] இவர்கள் இருவருமாக இவ்விஷயத்தை என்செய்யத் தேடுகிறார்களோ?' என்று இருவரையும் அதிஸங்கை பண்ணி, 'அப்படிச்செய்யில் இவர்களைபழியச் செய்து நாம் அத்தலையைநோக்கக்கடவோம்' என்று தனித்தனியே கையும்வில்லுமாய்க் கொண்டுபெருமாளை ரட்சித்ததிறே யென்கை'' என்று அருளிச்செய்திருத்தலையுங் காண்க. பி ம்:—[1]சுற்றஞ்சுற்றத் தான். [2]எரியாநின்ற. [3]தன்றன்மை. [4]தனிமை, தன்னை. [5]பார்த்த. (சஎஅ)

## ருரு.—சூரியோதய வருணனை.

துறக்கமே முதல [1]வாய தூயன யாவை யேனு
[2]மறக்குமா [3]நினைய லம்மா [4]வரம்பில [5]தோற்ற மாக்க
ளிறக்குமா றிதுவென் பான்போன் முன்னைநா ளிறந்தான் பின்னாட்
பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா வெய்யோன்.

(இ - ள்.) பிறவா வெய்யோன் - (உலகத்தார்போலப்) பிறத்தலென்பது இல்லாதவனான சூரியன்,—'துறக்கமே முதல ஆய-சுவர்க்கம் முதலாகவுள்ள, தூயன யாவை ஏனும் - (நரகத்தைக்காட்டிலும்) தூயனவாகத்தோன்றுகின்ற உலகங்களையும், மறக்கும் ஆ - மறந்துவிடும்படி, [பிறப்புஇறப்புக்களில்லாத மோட்சலோகத்தை அடையுமாறு], அ மா வரம்பு இல தோற்றம் மாக்கள்-அந்தச்சிறந்த அளவிறந்த பிறவியிற்பிறக்கின்றமானுடர்கள்யாவரும், நினையல்-நினைத்து (ஈடேறும்வழியை) நாடக்கடவர்; (ஏனெனில்), (அன்னார்), இறக்கும்ஆறு-இறந்துவிடுகின்ற வகை, இது-இதுவாகும்' என்பான்போல்-என்று (உலகத்துமானுடர்க்குப்) போதிப்பவன் போல, முன்னைநாள் இறந்தான்-முன்னாளில் அஸ்தமித்தவனாய், பின் நாள் - மறுநாள், பிறக்கும் ஆறு இது என்பான்போல்-பிறக்கும்வகை இவ்வாறு என்று கூறுபவன்போல, பிறந்தனன்-உதயமானான்; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: துறக்கம்முதலியவற்றையும்மறக்குமாறு வேறொன்றை [மோட்சத்தை] நினைக்கவேண்டியதாயிருத்தல்பற்றி வியந்தவாறு.

உலகத்தில் மிக்கசெல்வம்அறிவு முதலியவற்றால் மிகமேம்பட்டவர்க்கும் திடீரென்று இறப்புபிறப்புக்கள் அஸ்தமன உதயங்கள்போல மாறிமாறிவருந் தன்மையனவாதலால் பிறப்புஇறப்புக்களுக்கு இடமான துறக்கம் முதலிய உலகங்களையும் நாடாது என்றும் மீளாவுலகமாகிய முத்தியைச் சேருமாறு முயல்கவென்னும் மதியை உலகத்தோர்க்கு உண்டாக்குபவன்போலத் தனது ஆயிரங்கிரணங்களும் சுருங்குமாறு அஸ்தமித்துச் சூரியன் உதிக்கலாயினனென்பதாம். தன்னுடைய செய்கையால் பிறர்க்கு நன்மையையேனும் தீமையையேனும் போதிப்பதாகக் கூறுவது - காட்சியணியின்பாற்படுமென்பது, ஒருசார் அணிநூலார் கொள்கை. பிரகாசித்துக்கொண்டிருக்கிற சூரியன் அஸ்தமிப்பது திடீரென்று இறப்புநேருமென்றும், இருளாயிருந்தகாலத்துத் திடீரென்று சூரியன் தோன்றுவது பிறப்பும் அங்ஙனமே திடீரென்று நேருமென்றும் எண்ணத்தை உண்டாக்குதல் காண்க. வினையல்-உடன்பாட்டு வியங்கோள். பி-ம்:—[1]ஆன. [2]மறக்குவோம். [3]நினைவின். [4]வரம்பிலாத, வரம்பிலார். [5]தோன்றும், தோற்றும். (கூஎக)

ருகூ.—சூரியனைநோக்கித் தாமரை மலர்தல்.

செஞ்செவே சேற்றிற் றோன்றுந் தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி [1]நோக்கிய [2]விரிந்த [3]வேறோ
ரஞ்சன நாயிறன்ன வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந் [4]தாமரை மலர்ந்த தன்றே.

(இ-ள்.) செஞ்செவே - மிகவும் அழகாக, சேற்றில்-சேற்றிலே, தோன்றும்-முளைக்கின்ற, தாமரை - தாமரையின்மலர்கள்,—தேரில் தோன்றும் - தேரின்மேலேறிக்கொண்டு (உதயபருவதத்திற்) காணப்படுகின்ற, வெம் சுடர் செல்வன்-வெப்பமான கிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியனது, மேனி - மண்டலத்தை, நோக்கிய - பார்த்தனவாய், விரிந்த-மலர்ந்தன; (அங்ஙனமே),வேறு ஓர் அஞ்சனம் ஞாயிறு அன்ன ஐயனை-(சாதாரண சூரியனைக் காட்டிலும்)வேறுபட்டதான ஒருகருஞாயிறு இருந்தால் அவனை ஒப்பவனான ஸ்ரீராமனென்கிற (தன்) கணவனை, நோக்கி—, செய்ய வஞ்சி - அழகிய நீர் வஞ்சிக்கொடிபோன்ற சீதாபிராட்டியின், வாழ் வதனம் என்னும் தாமரை-வாழ்ச்சிபெற்ற முகமென்னுந் தாமரையும், மலர்ந்தது—; (எ-று.)—அன்றே-ஈற்றசை, தேற்றமுமாம்.

சூரியன் உதிக்க அக்கடவுளைக்கண்டு தாமரை மலர்ந்தன; ஸ்ரீராமபிரானாகிற கருஞாயிற்றைக்கண்டு சீதையின் முககமலமும் மலர்ந்த தென்பதாம். பொழுதுவிடிகையில் தாமரைகள்மலருமாறு சூரியன் உதிக்க, பிராட்டி எழுந்து தன்கணவனைக்காண்பதனால் முகமலர்ச்சிகொண்டு விளங்கினளென்க. சேற்றிற்றோன்றுவனவாயிருந்தும் அழகுடையனவாய்த்தோன்றுகின்ற தன்மையைப்பாராட்டிக் கூறுவார் 'செஞ்செவே சேற்றிற்றோன்றுந் தாமரை'என்றார்.நான்காம்அடி-உருவகவணி. இச்செய்யுள்-தொடர்முழுதுவமையணி.பிம்ப பிரதிபிம்பபாவமில்லாமையால் எடுத்துக்காட்டுவமையன்று. பி-ம்:—[1]நோக்கின, நோக்கினன். [2]விரிய. [3]வென்றோர், என்றோ. [4]அரவிந்தம். (கூஅ0)

௫௭.—இராமபிரான் நாவாய் கொணருமாறு குகனுக்குப் பணித்தல்.

நாண்முதற் கமைந்த யாவு [1]நயந்தன னியற்றி [2]நாமத்
தோண் [3]முதற் கமைந்த [4]வில்லான் மறையவர் தொடரப் [5]போனா
னாண்முதற் கமைந்த [6]கேண்மை யன்பனை நோக்கி [7]ஐய
கோண்முதற் கமைந்த நாவாய் கொணருதி விரைவி னென்றான்.

(இ - ள்.) நாமம் தோள் முதற்கு அமைந்த வில்லான் - (பகைவர்க்கு) அச்சந்தருகின்ற தோளினிடத்திற்குப் பொருந்திய வில்லையுடைய இராமன்,- நாள் முதற்கு அமைந்த யாஉம்-உதயகாலத்திற் செய்யவேண்டிய கடமைகள் எல்லாவற்றையும், நயந்தனன் இயற்றி-விரும்பிச்செய்து, மறையவர் தொடர போனான் - (கங்கைக்கரையில்வாழும்) வேதியர்கள் (தன்னைத்) தொடர்ந்து வரப் புறப்பட்டவனாய்,-ஆள் முதற்கு அமைந்த கேண்மை அன்பனைநோக்கி- அடிமைத்தன்மைக்கு முதலிலேயே [இராமனைக்கண்டபோதே] இசைந்த உரிமையும் அன்புமுடைய குகனைநோக்கி, 'ஐய—! கோள் முதற்கு அமைந்த நாவாய் - (எங்களைச்) சுமந்துகொண்டுபோதற்கு முதல்தரமாகச்சொல்வதற்குஏற்ற [உறுதியான] மரக்கலத்தை, விரைவின் கொணருதி - விரைவிற் கொணர்வாய்,' என்றான்—; (எ - று.)

வில்லான் என்றான் என இயையும். போனான்-முற்றெச்சம். நாளின் முதல் எனவே, உதயமாம். பி-ம்:—[1]நயந்தனர். [2]தாமத், ஏமத். [3]முதற்றொடர்ந்த. [4]வில்லார். [5]போனார். [6]கேள்வி. [7]ஐயன், அண்ணல். (௬௮௪)

வேறு.

௫௮.—குகன் ஒன்று கூறத்தொடங்குதல்.

ஏவிய மொழிகேளா விழிபுனல் [1]பொழிகண்ணா
னாவியு [2]முலைகின்றா னடியிணை [3]பிரிகல்லான்
காவியின் மலர் [4]காயாக் கடன்மழை யனையானைத்
தேவியொ டடிதாழாச் சிந்தனை யுரை [5]செய்வான்.

(இ ள்.) ஏவிய - (இராமபிரான்) கட்டளையிட்ட, மொழி - சொல்லை, கேளா - கேட்டு, (குகன்),—விழி புனல் பொழி கண்ணான் - (தன்) விழிகளினின்று நீரைச்சொரிகின்ற கண்களையுடையவனும், ஆவிஉம் உலைகின்றான்- தன்னுயிரும்வாடப்பெறுகின்றவனுமாகி,—அடி இணை பிரிகல்லான்-(இராமபிரானது) திருவடிகளை விட்டுப்பிரிய மனமில்லாதவனாய்,—தேவியொடு - (அப்பிரானது) மனைவியாகிய சீதாபிராட்டியுடனே,—காவியின் மலர்-கருங்குவளை மலரும், காயா-காயாம்பூவும், கடல்-சமுத்திரமும், மழை-நீர்கொண்ட மேகமும், ஆகிய இவற்றை),அனையானை-ஒத்தவனாகிய இராமபிரானை, அடி தாழா-திருவடிகளில்வணங்கி, சிந்தனை-(தன்)எண்ணத்தை,உரை செய்வான்- சொல்பவனானான்;(எ-று.)--அவற்றை அடுத்த நான்குகவிகளிற்காண்க.பி-ம்:— [1]சொரி. [2]அலைகின்றான், நைகின்றான். [3]பிரிகில்லான். [4]காசாக். [5]செய்தான்.

௫௯.—இதுமுதல் நான்குகவிகள் - தூதகம்: பலவகைச் சௌகரியங்களும் இருத்தலால் எம்நகரத்தில்தானே வசிக்கவேணுமென்று இராமபிரானைக் குகன் வேண்டுதல்.

பொய்ம்முறை [1]யலராவெம் புகலிடம் வனமேயாற்
கொய்ம்முறை [2]யுறு[3]தாராய் குறைவிலெம் வலியேமாற்
செய்ம்முறை குற்றேவல் [4]செய்குது மடியோமை
யிம்முறை யுற[5]வென்னு மினிதிரு நெடிதெம்மூர்.

(இ - ள்.) பொய் முறை அலரா - பொய்யான முறைமை தோன்றுத லில்லாத, எம் - எம்முடைய, புகல் இடம் - வசிக்கும் இடம், வனமே-காடேயாகும்; கொய் முறை உறு தாராய்-கொய்யப்பெற்று ஒழுங்காகத் தொடுக்கப்பட்ட மாலையையணிந்த இராமா! (நாங்கள்),-குறைவு இல் எம்வலியேம்-குறைதலில்லாதவலியுடையோம்; செய் முறை குறு ஏவல் செய்குதும்-செய்யவேண்டிய முறைப்படியே (உமது திருவடிவாரத்தில் நீர்) ஏவிய சிறுதொழிலையும் செய்வோம்; அடியோமை - எங்களை, இ முறை உறவு என்னு - இது உறவு முறையுள்ள சுற்றம் எனக்கருதி, நெடிது - நெடுங்காலம், இனிது - இனிமையாக, எம் ஊர் - எங்களுடைய ஊரில், இரு - தங்கியிருப்பாய்; (எ - று.)— ஆல் - தேற்றப்பொருளன.

நாங்கள் வனத்திலே வாழ்பவர்; மிக்கவலிமை படைத்தவர்: வனசரரேயாயினும் பொய்ம்மை எங்களிடத்துச் சிறிதும் இன்று; எங்களை உமதுசுற்றமாக எண்ணி இவ்வூரில் தானே உறைவீராயின் உமக்குவேண்டிய குற்றேவலைப் புரிவோமென்கின்றனன் குகனென்க. [1]இலரேம் என்றபாடத்துக்கு, இலமென்னும் தன்மைப்பன்மைக்குறிப்புமுற்று இடையில் 'அர்' சாரியை பெற்றுவந்ததென்க. பி-ம்:—[1]அவராவெம், இலதால், இலரால். [2]மலர். [3]தாரீர். [4]செய்குவம். [5]என்ன. (௯௮௩)

௯௦. தேனுள திணையுண்டா றேவரு நுகர்தற்கா
மூனுள துணைநாயே முயிருள விளையாடக்
கானுள புன[1]லாடக் கங்கையு முளதன்றோ
நானுள தனையு[2]நீ யினிதிரு [3]நடவெம்பால்.

(இ - ள்.) (எம்மிடத்தில்), தேன் உள - தேன் மிகுதியாகஇருக்கின்றது; திணை உண்டு - திணையும் மிகுதியாக இருக்கின்றது; தேவர்உம் நுகர்தற்கு ஆம்-தேவர்களும் உண்ணுதற்குஉரிய [மிக்கசுவையுள்ள], ஊன் உள-மாமிசமும் உள்ளது; துணை - (உமக்குத்) துணையாக, நாயேம் உயிர் உள-நாய்போற் கடைப்பட்டவரான எங்களுடையஉயிர்கள் உள்ளன; விளையாட - உல்லாசமாகத் திரிவதற்கு, கான் உள - காடுகள்உள்ளன; புனல் ஆட-நீராடுவதற்கு, கங்கைஉம் உளது அன்றோ - (எல்லாநதியினுஞ் சிறந்த) கங்காநதியும் இருக்கின்றதன்றோ? நான் உள தனை உம் - நான் உள்ளவரைக்கும், நீ—, இனிது இரு - (எங்களிடத்துத்தானே) இனிதாகத் தங்கியிருப்பாய்; எம்பால் - எங்களிடத்துக்கு, நட - எழுந்தருள்க; (எ - று.)

உமக்கு வேண்டியவைகளையெல்லாஞ் செய்துதர மிகப்பலராய்ப் பெருவலிய ரான நாங்களிருப்பதால் இங்குவசிக்கலாமென வேண்டிய குகன், நீராடி யுண்டு இனிதுபோதுபோக்குதற்கும் ஏற்றன இருக்கின்றன எனவுந் தெரி வித்துத் தம்மூரில் உறையும்படி இதனால் வேண்டுகின்றன னென்க. தேவர் களின்பொருட்டு வேட்டற்குஉரிய பிராணிகளின் ஊனும் கிடைக்குமென் பான் 'தேவருநுகர்தற்காமூனுள'என்று னெனினுமாம். ஆல்-அசை.பி-ம்:—[1]ஆடும். [2]நீரினிதிரும். [3]நாடெம்பால், நெடிதெம்பால், நட்பெம்பால், நெடி தெம்மூர். (சூஅசு)

சூக. தோலுள துகில்போலுஞ் [1]சுவையுள தொடர்மஞ்சம்
போலுள பரண் [2]வைகப் புரையுள கடிதோடுங்
காலுள சிலைபூணுங் கையுள கலிவானின்
மேலுள [3]பொருளேனும் விரைவொடு கொணர்வேமால்.

(இ-ள்.) (உடுத்துக்கொள்வதற்கு), துகில் போலும் - பட்டாடைபோல் மெல்லிய, தோல் உள - தோல்கள் உள்ளன; (உண்பதற்கு), சுவை உள - பலஇனியதின்பண்டங்கள் உள்ளன; (இனிதாகத்தூங்குவதற்கு), தொடர் மஞ்சம் போல் - (சங்கிலியாற்) பிணித்துத்தொங்கவிடப்பட்ட தூங்குமஞ்சம் போலுள்ள, பரண் - பரண்கள், உள—; வைக - தங்குவதற்கு, புரை-இடங் கள் [சிறுகுடிசைகள்], உள—; (அன்றியும்), கடிது ஓடும் கால் உள சிலை பூணும் கை உள - விரைந்துசெல்லவல்ல கால்களும் (வேண்டியபொருளைப் பெறவொட்டாமல் தடுப்பவரைத் தகர்க்கவும் ஓங்கிய இடத்திலுள்ளபொருளை அடித்துத்தள்ளவும் உதவுகின்ற)வில்லைப் பூணும் கையும்(எங்கட்கு)உள்ளன: (ஆதலால்), கலி வானின் மேல் உள பொருள் என்உம் - (நீவேண்டுவது), ஓசையைக்குணமாகக்கொண்ட வானத்தின்மீதுள்ள பொருளாகஇருந்தாலும், விரைவொடு கொணர்வேம் - விரைந்துகொண்டுவந்து தருவோம்; (எ - று.)

இனிது உண்டு உடுத்து இன்பத்தை யநுபவித்துச் சுகமாகப் பொழுது போக்கலா மென்ற குகன், அவற்றோடு உடுத்தல் தங்குதல் தூங்குதல் என்ப வற்றுக்கு ஏற்றஇடங்களும்,விரும்பியபொருளைக் கொணர்தற்குரிய கருவிகளு மெல்லாம் உடைமையை, இதனால் எடுத்துக்காட்டுகின்றன னென்க. தோல்- மிருகத்தின்தோல்: மரவுரியெனக் கொள்ளினுமாம். நாங்கள் கைகால்கள் படைத்தபயனைப் பெறுமாறு, நீ வேண்டியபொருள் எதுவாயினும் அந்தப் பொருளைக் கொணர்ந்து தரவல்லோ மென்பது, பின்னிரண்டடியிற் கூறிய தன்கருத்து. கைகால்முதலிய உறுப்புக்கள் கடவுளை யாராதித்தலின்பொருட் டேயென்ற வேதாந்தப்பொருளைத் தம்மொழுக்கத்தால் நடத்திக்காட்டுவதாகக் கூறுகின்றனன், குகப்பெருமா னென்க. "சப்தகுணகம் ஆகாசம் [ஒலியைத் தனக்குஉரியகுணமாகக்கொண்டது வானம்]" என்பது நூற்கொள்கை யாத லால், 'கலிவான்' என்றார். துகில் - துகூலமென்ற வடசொல்லின்சிதை வென்பர். சுவை - சுவையுள்ளபண்டங்கட்கு, ஆகுபெயர். 'உள' என்றசொல்

ஒருபொருளிற் பன்முறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணியாம். பி-ம்:—[1]துகளறு, சுகமுள. [2]வைகும். [3]பொருளானும். (௬௮௫)

௬௨. ஐயிரு பத்தோடைந் தாயிர ருளராணை
செய்குநர் சிலைவேடர் தேவரின் [1]வலியாரா
லுய்குது மடியேமெங் குடியிடை [2]யொருநாணீ
வைகுதி யெனின் [3]மேலோர் வாழ்விலை [4]பிறிதென்றான்.

(இ - ள்.) ஆணை செய்குநர்-(யான்) இட்டகட்டளையைச்செய்பவராகிய, சிலை வேடர்-வில்லையேந்திய வேட்டுவர், ஐயிருபத்தோடு ஐந்து ஆயிரர் - ஐந்நூறாயிரவர், உளர் - இருக்கின்றனர்: (அவர்கள்), தேவரின் வலியார்-விண்ணுலகத்தவரைக்காட்டிலும் வலிமைபடைத்தவர்; எம் குடில் இடை ஒரு நாள் நீ வைகுதி எனின் - எம்முடையகுடிசையில் ஒருநாள் நீ தங்கினையென்றாலும், அடியேம் உய்குதும் - நாங்கள் ஈடேறிவிடுவோம்; பிறிது - (இதைக் காட்டிலும்) வேறான, மேல் ஓர் வாழ்வு - மேம்பட்ட நல்வாழ்க்கை, இலை - (எங்கட்கு இல்லை,'என்றான்-என்று (தன்கருத்தைக் குகன்)கூறிமுடித்தான்.

"இனிதிரு நெடிதெம்மூர்" எனவும், "நானுனதனையும் இனிதிரு" எனவும் வேண்டிய குகப்பெருமான் 'பலநாள் எங்களுடையகுடிசையில் தங்குவதற்கு நீ விரும்பாவிடினும் ஒருநாளாவது தங்கினால், நாங்கள் உய்வுபெறுவோம்; நீ எங்கள் குடிசையில் எழுந்தருளப்பெறுகின்ற இதைக்காட்டிலும் மேம்பட்ட நற்பேறு எஙகட்குப் பிறிதில்லை'என்று ஒருநாளாவது தங்கள்குடிசையில்தங்கவேண்டுமென்று இராமனை இதனால் வேண்டுகின்றனனென்க. ஐயிருபது என்பது - நூறு: நூறோடைந்துஎன்றது நூறாற் பெருக்கிய ஐந்து என்றாய், ஐந்நூறுஎனக் கொள்ளப்பட்டது. ஐந்நூறாயிரவர்என்பது - ஐந்து லட்சம்பேரென்றபடி. இனி, ஐயிருபத்தோடைந்தாயிரரென்பதற்கு-நூற்றையாயிரவர் என்று உரைப்பாருமுளர். ஆல்-அசை.பி-ம்:—[1]வலியோரால், வலியேமால். [2]ஒருநாணீர்வைகுதிர். [3]மேலும். [4]பெரிது. (௬௮௬)

௬௩.—மீண்டு வரும்போது நும்மிடத்துக்குவருவோமென்று இராமன் கூறுதல்.

அண்ணலு மதுகேளா வகநிறை யருண்மிக்கான்
வெண்ணிற நகைசெய்தான் வீரநின் னுழையா[1]மப்
புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபாடுற்
றெண்ணிய [2]சிலநாளிற் குறுகுது மினிதென்றான்.

(இ - ள்.) அண்ணல்உம் - பெருமையிற்சிறந்த இராமபிரானும், அது கேளா-அந்தக்குகனது வேண்டுகோளைச் செவியேற்று,—அகம் நிறை அருள் மிக்கான்-(அவன்விஷயமாகத் தன்) மனத்திலே(இயற்கையாகவே)நிறைந்த கருணைமிகப்பெற்று, வெள் நிறம் நகை செய்தான்-வெண்மைநிறம் வெளித் தோன்றும்படி சிரித்தவனாய்,—(அவனைநோக்கி),-'வீர-! யாம் - நாங்கள், அ

புண்ணியம் நதி ஆடி-அந்தப்(பலவகைப்) புண்ணியநதிகளிலும் நீராடி, புனி தரை வழிபாடு உற்று - (ஆங்காங்குள்ள) பரிசுத்தரான பெரியோர்கட்குப் பணிவிடைசெய்து, எண்ணிய சில நாளில்-(நாங்கள்வனவாசஞ் செய்யும்படி) குறிப்பிட்ட சிலநாள்களில் [பதினான்குவருஷம் முடிவுபெறுகையில்], நின் உழை - உன்னிடத்திற்கு, இனிது குறுகுதும்-மனவுவப்போடு சேருவோம்,' என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

அண்ணலும் என்றான் என்க. அப்புண்ணியநதி என்ற இடத்திலுள்ள அகரம் - நெஞ்சறிசுட்டு. பதினான்காம் ஆண்டின் ஈற்றில் வருவோமென்றாற் குகன் வருந்தக்கூடுமென்று கருதி,'எண்ணியசிலநாளிற் குறுகுதும்'என்றான். மறுநாள் பொழுது புலர்ந்ததும் இலட்சுமணனைநோக்கி இராமபிரான் 'கங் கையைக் கடக்கவேண்டும்' என்ன, இலட்சுமணன் அவ்வாக்கியத்தின் பொருளை அருகிருந்த குகனுக்கு 'கங்கையைக்கடக்க நாவாய்வேண்டுமென்ற குறிப்பைக்கொண்டது இவ்வாக்கியம்' என்று தெரிவிக்க, குகன் மந்திரிமா ரைக்கொண்டு சிறந்தநாவாயொன்று சித்தஞ்செய்யுமாறு பணிக்க, அவரும் அங்ஙனமேஏற்பாடுசெய்து நாவாய்வந்திருப்பதைத் தெரிவித்தலும், அருகே யிருந்த சுமந்திரனுக்குச் சமாதானஞ் சொல்லித் தேற்றி விடைகொடுத்திட்டு, அங்குத்தானே இராமன் வசிக்கவேணுமென்ற குறிப்புடனேயிருந்த குகப் பெருமானிடத்து 'தான் ஜநசஞ்சாரம் மிக்குள்ள இங்கு வசித்திருக்கலாகாது: இருடியர்போல ஜடைபூண்டு புண்ணியப்புனலாடித் தவசியரோடு வசிக்க வேண்டும்; ஆதலால், தலைமயிரை ஜடையாக்கும்படி ஆலம்பால் கொணர்க' என்ன, அக்குகப்பெருமான் ஆலம்பால் தர, தானும் தன்தம்பியுமாகத் தலை யை ஜடையாக்கிக்கொண்டு இன்மொழிகூறிவிடைகொடுத்துக் குகனையனுப் பிவிட்டு அக்குகனது பணியாளன் ஓட்ட, கங்கையைக்கடந்து சென்றா னென்று முதனூலிற் கூறியுள்ளது. பி - ம்:—[1]இப். [2]சின்னாளில். (கூஅஎ)

கூஅ.—இதுவும் அடுத்த கவியும் - குளகம். இராமபிரான் சீதா லட்சுமணரோடு ஓடமேறி, குகன்விடக் கங்கையிற் செல்லுதல்

சிந்தனை யுணர்கிற்பான் சென்றனன் விரைவோடுந்
தந்தன னெடுநாவாய் [1]தாமரை நயனத்தா
னந்தணர் தமையெல்லா மருளுதிர் விடையென்னா
விந்துவி னுதலாளோ [2]டிளவலொ டினிதேறா.

(இ-ள்.) சிந்தனை உணர்கிற்பான் - (பிறருடைய) கருத்தைஅறியவல்ல வனாகிய குகன்,விரைவோடும் சென்றனன்-விரைந்துசென்று,நெடு நாவாய் தந்தனன் - நீண்ட மரக்கலமொன்றைக் கொணர்ந்தான்; தாமரை நயனத் தான் - தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடைய அவ்விராமபிரான்,அந்த ணர் தமை எல்லாம்- தன்னருகிலிருந்த) பிராமணர்களையெல்லாம் நோக்கி, விடை அருளுதிர் என்னா - '(எனக்கு) விடையளிப்பீராக' என்றுசொல்லி, (அம்முனிவர்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு), இந்துவின் நுதலா

ளோடு இளவலொடு இனிது ஏறு - பிறைச்சந்திரன்போன்ற நெற்றியை யுடைய சீதாபிராட்டியோடும் இளையபெருமாளோடும் (அவ்வோடத்தின்மீது) இனிதாக ஏறி,—(எ - று.)—'ஏறு' என்ற வினையெச்சம் 'விடுநதிகடி தென்றான்' என அடுத்த கவியில் தொடர்ந்து முடியும்.

இராமபிரானதுகருத்தை யுணர்ந்த குகன் அவன் விருப்பத்தின்படியே நாவாய்கொணர, அந்தணரிடம் விடைபெற்றுக்கொண்டு, இராமன் பிராட்டியோடும் தம்பியோடும் மனமுவந்துஏறின னென்க. பி - ம்:—[1]தாமலர். [2]இளவலும். (௬௮௮)

௬௫. விடு[1]நதி கடிதென்றான் மெய்யுயி ரனையானு
[2]முடுகின நெடுநாவாய் [3]முரிதிரை நெடுநீர்வாய்க்
கடிதினின் மடவன்னக் கதியது செலநின்றா
[4]ரிடருற மறையோரு மெரியுறு மெழுகானார்.

(இ - ள்.) மெய் உயிர் அனையான் உம் - உடம்பினுள்ளிருக்கும் உயிரை யொத்த அந்த இராமபிரானும், 'நதி - நதியிலே, கடிது - விரைவாக, விடு - (ஓடத்தைச்) செலுத்துவாய்,' என்றான் - என்று (குகனுக்குக்) கட்டளையிட்டான்; முரி திரை நெடு நீர்வாய் - மடங்குகின்ற அலைகளையுடைய (கங்காநதியின்) மிக்கநீரிலே, நெடு நாவாய் அது - அந்த(க் குகன்விட்ட) நீண்ட மரக்கலம், மடம் அன்னம் கதி-இளவன்னத்தின்நடைபோன்ற இயக்கத்தையுடையதாய், கடிதினின் முடுகின(து) - விரைவாக ஓடிற்று; செல - (அங்ஙனம் நாவாய் விரைந்து) செல்ல,—நின்றார் - (கரையில்தானே) தங்கியவராகிய, மறையோர்உம் - அந்தணர்களும், இடர் உற - (இராமனைப்பிரிகையால் தமது மனத்தில்) துயரந் தோன்ற, எரி உறு மெழுகு ஆனார் - அனலிற்பட்ட மெழுகுபோல மனமுருகினார்கள்; (எ - று.)

அந்நாவாய் விரைந்துசெல்ல,பிரிந்தமுனிவர் வருந்தின ரென்க. [2]முடுகினன் என்ற பாடத்துக்கு, மெய்யுயிரனையான் - இராமபிரானுக்கு உடம்பிலுள்ள பிராணனையொத்த குகன், முடுகினன் - விரையநாவாய்ச்செலுத்தினனென்க. 'அது' என்பது நாவாயோடு சேர்க்கப்பட்டது. பி - ம்:—[1]நனி. [3]மொய்ம்பொடுசெலநின்ற. [4]இடருறு. (௬௮௯)

௬௬.—நாவாய் கங்கையிற் கடிதுசெல்லுதல்.

பாலுடை மொழியாளும் பகலவ னனையானுஞ்
சேலுடை நெடுநன்னீர் சிந்தினர் [1]விளையாடத்
தோலுடை நிமிர்கோலிற் [2]றாழ்விய நெடுநாவாய்
காலுடை நெடுஞெண்டிற் சென்றது கடிதம்மா.

(இ - ள்.) பால்உடை மொழியாள் உம் - பாலைத் தோற்கச்செய்கின்ற (இன்) மொழியையுடைய சீதையும், பகலவன் அனையான்உம் - சூரியனை யொத்த இராமபிரானும், சேல்உடை நெடு நல் நீர் சிந்தினர் விளையாட - சேலென்னும்மீனைத் தன்னிடத்துக்கொண்ட (கங்காநதியின்) மிக்க புண்

ணியமுள்ள நீரை (க் கைகளால்) எடுத்துவீசியெறிந்து விளையாடிக்கொண்டே யிருக்க,—தோல் உடை கிமிர் கோலில் துழவிய நெடு நாவாய் - தன்னுந் தன்மையுடைய நீண்டகோல்களினுல் துழாவித்தள்ளப்படுகின்ற நீண்ட அந்த மரக்கலமானது, கால்உடை நெடு ஞெண்டின் - பலகால்களையுடைய பெரிய நண்டுபோல், கடிது சென்றது - விரைவாகச் சென்றது; (எ - று.)-அம்மா - ஆச்சரியம்: நாவாய் கடிதுசென்றதைப்பற்றி வியந்தவாறு.

ஓடமேறிச்சென்ற ஸ்ரீராமர்கள் ஓடத்திலிருந்தபடியே கைக்குஎட்டு கின்ற கங்கையின்நீரைஅள்ளியெடுத்து வீசியெறிந்து விளையாடியவண்ணம் இருக்க, அந்தக்குகன் செலுத்திய ஓடம் கடிதுசென்றதென்பதாம். கோல் - துடுப்புக்களைக் காட்டு மென்னலாம். இருமருங்கும் ஓடத்தைச் செலுத்து மாறு கங்கையின் நீரைத் துழாவும் துடுப்புக்கோல் கால்களையொத்திருக்க, ஓடம் ஞெண்டையொத்திருந்த தென்க; தற்குறிப்பேற்றவணி. தோல் - தன்னுதலென்னும்பொருளுள்ள தெலுங்குச்சொல். தோல் - சருமமெனக்கொள் வதிற் சிறப்பின்மை காண்க. பி - ம்:—[1]விளையாடி. [2]துழவிடவெழு, துழவினநெடு. (சுகo)

**சுஎ.—கங்கையை ஓடத்தாற்கடந்து அக்கரையேறுதல்.**

[1]சாந்தணி புளினத்தின் றடமுலை [2]யுயர்கங்கை
காந்தின டணி[3]மின்னக் கடிகமழ் [4]கமலத்தின்
சேந்தொளி விரியுந்தெண் டிரையெனு [5]கிமிர்கையா
லேந்தின ளொருதானே [6]யேற்றின ளினிதப்பால்.

(இ - ள்) சாந்து அணி - சந்தனக்கட்டைகளைக் கொண்டுள்ள [சந்த னத்தையணிந்துள்ள], புளினத்தின் தட முலை - மணற்குன்றுகளாகிய பெரிய தனங்களையுடைய, உயர் கங்கை - சிறந்த கங்காநதியானவள், காந்து இனம் மணி மின்ன - ஒளிவிடுகின்ற தொகுதியான இரத்தினங்கள் பளபள வென்று பிரகாசிக்க, கடி கமழ் கமலத்தின் சேந்த ஒளி விரியும் - (தன்னி டத்துத்தோன்றிய)நறுமணம்வீசுகின்ற தாமரைமலரின் செந்நிறவொளி பர வப்பெற்ற [தாமரைமலரைப்போன்றுசெவ்வியஒளி வீசப்பெற்ற], தெள் திரை எனும் கிமிர் கையால் - தெளிவானஅலையாகிற ஓங்கிய கையினுல், ஒரு தானே ஏந்தினள் - தானொருத்தியே(அவ்வோடத்தைத்)தாங்கியவளாய், இனிது - இனிதாக [இராமன் முதலியோர்க்கு யாதொருசிரமமு மில்லாமல்], அப்பால் ஏற்றினள் - அக்கரையிற் சேர்த்தாள்; (எ - று.)

அலைகள்மீது ஓடஞ்செல்வது, கங்கையாள் தன்கையால் தாங்குவது போன்றிருந்த தென்றார். அலையெனும் கையென்று உருவகஞ்செய்ததற்கு ஏற்ப, கைக்கும்இயையுமாறு 'கடிகமழ்கமலத்தின் சேந்தொளிவிரியும்' எனச் சிலேடையாகக் கூறினர். சேந்தொளி - தொகுத்தல். பி - ம்:—[1]சாந்தளை. [2]புரை. [3]மின்னும். [4]கரையல்குல். [5]நுரைக். [6]ஏறினனினிதன்பால், ஏற்றி னளினிதன்பால், (சுகக)

௬௮.—'இராமபிரான் சித்திரகூடத்திற்குச்செல்லும்நெறி எது?' என்று வினவ, குகன் தான் ஒன்றுகூறவேணுமென்றல்.

அத்திசை யுற்றைய னன்பனை முகநோக்கிச்
சித்திர கூடத்திற் சென்னெறி [1]பகரென்னப்
பத்தியி னுயிரீயும் பரிவின னடிதாழா
வுத்தம [3]வடிநாயே [4]னோதுவ துளதென்றான்.

(இ - ள்.) ஐயன் - இராமபிரான், அத்திசை உற்று - (கங்கையின்) அக்கரையை யடைந்து, அன்பனை - (தன்னிடத்து) அன்புள்ள குகனை, முகம் நோக்கி—,'சித்திரகூடத்தில்-சித்திரகூடமலையைக்குறித்து, செல்-போகின்ற, நெறி - வழியை, பகர் - சொல்வாயாக,' என்ன - என்றுவினவ,—பத்தியின் உயிர் ஈயும் பரிவினன்-பக்தியோடு தன்னுயிரையுந் தரவல்ல அன்பையுடைய அந்தக்குகன்,அடி தாழா-(இராமபிரானது) திருவடிகளில் வணங்கி, 'உத்தம-(யாவரினும்) மேம்பட்டோனே! அடி நாயேன்- நாய்போற்கடைப்பட்ட அடியனாகிய யான், ஓதுவது - (தேவரீரிடத்துக்) கூறவேண்டுவது, உளது-,' என்றான்—; (எ - று.)—குகன் ஓதுவதுளாது என்றதை, மேற்கூறுவன்.

உத்தமன் - இருளிற்கு அப்பாற்பட்டவனென்றலும் உண்டு. 'உத்தம' என்று விளியாகக்கொள்ளாமல் 'உத்தமன்' என்று எடுத்து, உத்தமனாகிய அடியேன் என்றலும் ஒன்று. பி-ம்:—[1]புகல். [2]என்ன. [3]அடியேனான். [4]கூறுவது. (௬௬௨)

௬௯.—இதுமுதல் நான்குகவிகள் - குளகம்: தன்னையும் உடன்வைத்துக்கொள்ள வேணுமென்று குகன் இராமனை வேண்டுதல்.

[1]நெறியிடு நெறிவல்லே [2]னேடினென் வழுவாம
னறியன [3]கனிகாயு நறவிவை தரவல்லே
னுறைவிட மமைவிப்பே [4]னொருநொடி வரையும்மைப்
[5]பிறிகிலெ னுடனேகப் பெறுகுவெ [6]னெனினாயேன்.

(இ - ள்.) நாயேன் - நாய்போற்கடைப்பட்டவனாகிய யான், உடன் ஏக பெறுகுவென் எனின்-உன்னுடனே வரும்பேற்றைப் பெறவேனேயானால்,— நெறி இடு நெறி வல்லேன் - (செல்லுவதற்கு அரிதான வழியில் இனிதாகச் செல்லுமாறு) வழியையுண்டாக்கும் முறைமையில் வல்லமையுடையேன்; நறியன - மிகவுஞ்சிறந்தனவாகிய, கனி காய் உம் - காய்கனிகளும், நறவு - தேனும் ஆகிய, இவை - இவைகளை, நேடினென் - தேடி, வழுவாமல்-தவறாமல், தர வல்லேன்—; உறைவு இடம் அமைவிப்பேன்-(அங்கங்கே செல்லும்போது அவ்வவ்விடத்தில் நீர்)வசிப்பதற்கு ஏற்றபடி உறைவிடம் அமைத்துத் தர வல்லேன்; ஒரு நொடி வரை-ஒருகணப்போதேனும், உம்மை - உங்களை, பிறிகிலென் - பிரிந்து வாழப்பொறேன்; (எ - று.)

இதுமுதல் நான்குகவிகளால், குகன் நான் உங்களைவிட்டுப் பிரிந்திருக்கப்போறேன்: இங்ஙனமுள்ள என்னை உடன் அழைத்துக்கொண்டு சென்றால், உங்கட்கு வேண்டிய பணிவிடைகள்பலவும்செய்யப்பெறுவேனென்று இராமபிரானிடத்துத் தன்கருத்தைத் தெரிவிக்கின்றனனென்க. நெறியிடுநெறி என்பது - நெறியும் [பெரியபாதையும்] நெறிக்குள்ளுள்ள நெறியும்: [கிளைப்பாதையும்] என்று உரைத்தலு முண்டு. பி - ம்:—[1]நெறியிடை. [2]நேடினை, நேடினன்,நெடியன. [3]கறி. [4]நொடிவரையளவு. [5]பிறியலென். [6]அடிநாயேன், இனியானே, இனிநாயேன். (சுகூங)

எ0. தீயன [1]வயமாவுந் திசைதிசை செலநூறித்
தூயன வுறைகானந் [2]துருவினென் வரவல்லேன்
மேயின பொருணாடித் தருகுவென் வினை[3]முற்று
மேயின [4]செயவல்லே னிருளினு நெறி[5]செல்வேன்.

(இ - ள்.) தீயன-கொடியனவாகிய,வய மா உம்-புலிகளையும்,திசைதிசை செல நூறி - (நீங்கள்வசிக்கும்) இடத்தைச்சுற்றியுள்ள இடங்களிலெல்லாம் இல்லாதவாறு அழித்தொழித்து, தூயன-பரிசுத்தமான(மான்களைப்போன்ற) பிராணிகள், உறை-வாழ்கின்ற, கானம்-காட்டினிடத்தை, துருவினென் வரவல்லேன் - தேடிக் கண்டுபிடித்துவரும் வல்லமையுடையேன்; மேயின பொருள் - (நீங்கள்) விரும்பிய பொருளை, நாடி தருகுவென்-தேடிக்கொணர்ந்துதருவேன்; ஏயின வினை முற்றுஉம் - (நீர்) கட்டளையிட்ட எந்தச்செயலையும், செய வல்லேன் -செய்துமுடிக்கும் வல்லமையுடையேன்; இருளின் உம் நெறி செல்வேன் - இரவிலும் வழிச்செல்லவல்லேன்; (எ - று.)

'இருளினும் நெறிசெல்வேன்' என்றது - இராப்போதில் வெளியே சென்று ஏதேனும் ஒருபொருள் கொணர்ந்துதரவேண்டுமென்றாலும் அங்ஙனமும் செய்யவல்லேனென்றவாறு. பி - ம்:—[1]அவையாவும், வகையாவும். [2]துருவினன். [3]மற்றும். [4]செல. [5]வல்லேன். (சுகூச)

எக. கல்லுவென் [1]மலைமேலுங் [2]கவலையின் முதல்யாவுஞ்
[3]செல்லுவெ னெறிதூரஞ் செறிபுன றரவல்லேன்
[4]வில்லின முளனொன்றும் வெருவலெ [5]னொருபோது
மல்லினு முயர்தோளாய் மலரடி [6]பிரியேனால்.

(இ - ள்.) கவலையின் முதல் யாவும்-கவலைக்கிழங்குமுதலிய எவ்வகைக்கிழங்குப்பொருளையும், மலைமேல்உம் கல்லுவென்-மலையின்மேலும் தோண்டியெடுத்துத்தரவல்லேன்; நெறி தூரம் செல்லுவென் - எவ்வளவுதூரம்போகவேண்டுமென்றாலும் போய், செறி புனல் தர வல்லேன்-(பிராணன்) தங்குவதற்குக்காரணமான நீரைக் கொணரவல்லேன்; வில் இனம் உளென் - தொகுதியான வில்லைக் கொண்டுள்ளேன்; ஒன்றுஉம் வெருவலென்-எதற்கும் அஞ்

சேன்; மல்லின் உம் உயர் தோளாய் - மற்போர்புரிவதிலும் மேம்பட்டுள்ள தோள்வலிமையை யுடையவனே! மலர் அடி ஒருபோது உம் பிரியேன் - (உனது) தாமரைமலர்போன்ற திருவடிகளை ஒருகாலும் விட்டுப்பிரியாதிருப் பேன்; (எ - று.)—ஆல் - தேற்றம்: ஈற்றசையுமாம். வில் இனம் - வில்லைக் கொண்ட திரளானசேனை யெனினுமாம். பி ம்:—[1]மலையேனும். [2]கயிலையின். [3]செல்குவென். [4]வில்லினுமுளதொன்றும். [5]இரு. [6]பிரியாதேன். (சுசுரு)

எஉ. திருவுள மெனின் மற்றென் சேனையு முடனேகொண்
டொருவலெ [1]னொருபோது முறைகுவெ னுளராஞர்
மருவல ரெனின் முன்னே [2]மாய்குவென் [3]வசையில்லேன்
பொருவரு மணிமார்பா போதுவெ னுடனென்றான்.

(இ - ள்.) பொரு அரு மணி மார்பா - ஒப்பற்ற அழகிய திருமார்பை யுடையவனே! திருவுளம் எனின் - (உமக்குத்) திருவுள்ளமிருந்தால், என் சேனை உம் உடனே கொண்டு - என்னுடைய சேனையையும் உடனழைத்துக் கொண்டு, ஒருபோது உம் ஒருவலென் - ஒருபொழுதும் (உம்மை) விட்டுப்பிரி தவனுப், உறைகுவென் - (எப்போதும் உம்முடனே) வசிப்பேன்; மருவலர் உளர் ஆனர் எனில் - (என்னாலும் வெல்லமுடியாது நமக்குத்தீங்குவிளைக்கும்) பகைவர் ஒருகால்உண்டாயினராஞல், முன்னே மாய்குவென் - (நுமக்கு ஒரு தீங்கு நேரும்) முன்னம்(நான்) என்னுயிரைமாய்த்துக்கொள்பவனுகி, வசை இல்லேன் - (தன்னிடத்து அதிதியாக வந்தவனை மாற்றார் கையிற்காட்டிக் கொடுத்தானென்ற)வசைச்சொல்லுக்கு இடனில்லாமற் செய்துகொள்வேன்; உடன் போதுவென் - உன்னோடு வருவேன், என்றான் - என்று (தன்கருத் தைக் கூறிமுடித்தான், (குகன்); (எ - று.)—மற்று - அசை.

'நீ உடன் வருகின்றேனென்கின்றாய்; நீ அங்ஙனம் வருவதோ என்னைப் பாதுகாத்தற்பொருட்டு: அது உனக்கு இசையாவிட்டால் நீ யாதுசெய்வாய்?' என்று இராமபிரான் வினவினதாகக்கொண்டு, இதனால் விடைகூறுகின்ற னன் குகனென்க. நான் என்சேனையுடனே உம்மோடுவசித்து உமக்குப்பிற ரால் தீங்குவராமற் பாதுகாப்பேன்; ஒருகால் பகைஞர் என்னினும்வலிமிகு சியவராய் என்னையும் அடக்கி உமக்குத தீங்குசெய்ய நெருங்குவராயின், என் பிராணன் போகும்வரையில் அவரை யெதிர்த்து நிற்பேனேயொழிய என் னுயிருள்ளவரையில் உம்மை அப்பகைவர் கையிற்காட்டிக்கொடுத்து வசைக் குஉள்ளாகேனென்றனனென்பதாம். பி - ம்:—[1]இருபோதும். [2]மாள்கு வென். [3]ஒழிகல்லேன், அழிகல்லேன், மிகையில்லேன். (சுசுசு)

எங.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: இராமபிரான் குகனோடு தோழமைபாராட்டி, அங்குத்தானேயிருக்குமாறு பணித்ததைத் தெரிவிக்கும்.

அன்னவ னுரைகேளா வமலனு முரை[1]நேர்வா
[2]னென்னுயி ரனையாய்நீ யிளவலு னிளையானிந்
நன்னுத லவணின்கே ளளிர்கட [3]னிலமெல்லா
முன்னுடை யதுநானுன் [4]றொழிலுரி மையினுள்ளேன்.

(இ - ள்.) அன்னவன் உரை கேளா - அந்தக்குகப்பெருமானது வார்த்தையைக்கேட்டு, அமலன் உம் - குற்றமற்றவனான இராமபிரானும், உரை நேர்வான் - மறுமொழிகூறுபவனாய்,—(குகனைநோக்கி),—நீ—, என் உயிர் அனையாய்-என்னுயிரையொத்தவன்: இளவல் - என் தம்பி, உன் இளையான்- உனக்குத்தம்பியாவன்: இ நல் நுதலவள் - அழகிய நெற்றியையுடையளான இந்தச்சீதை, நின் கேள் - உன்தோழியாவள்; நளிர் கடல் நிலம் எல்லாம் - குளிர்ந்தகடலாற்சூழப்பட்ட பூமிமுழுதும், உன் உடையது - உன்னுடைய சொத்தாகும்; நான் —,உன் தொழில் உரிமையின் - உன்னுடைய ஏவற்றொழிலிற் கட்டுப்படும் உரிமையில், உள்ளேன் - அடங்கியுள்ளேன்; (எ - று.)

இதனால், இராமபிரான் குகனிடத்துச் சகோதரவாஞ்சைவைத்தனனென்பது விளங்கும். இங்ஙனம் இராமபிரான் அக்குகனைப் பாராட்டியமை பற்றியே இவனைக் குகப்பெருமாள் என்று பெரியோர் வழங்கலாயினர். இழிகுலத்தவனான இந்தக்குகப்பெருமானிடத்தும் சகோதரவாஞ்சைவைத்தமையைப்பற்றி அப்பெருமானது கருணைத்திறத்தைவியந்து "ஏழையேதலன்கீழ் மகனென்னாதிரங்கிமற்றவற்கின்னருள் சுரந்து, மாழைமான்மடநோக்கியுன் றோழியும்பியெம்பியென்றொழிந்திலையுகந்து, தோழனீயெனக்கிங் கொழியென்றசொற்கள் வந்தடியேன்மனத்திருந்திட, வாழிவண்ணநின்னடியிணை யடைந்தே னணிபொழில்திருவரங்கத்தம்மானே" என்று திருமங்கைமன்னன் ஈடுபட்டு அருளிச்செய்தமை இங்குக் காணத்தக்கது. மிகவும் தாழ்ந்தவனோடு நட்புக்கொள்ளுதல் உபபாதகங்களுள்ஒன்றாகத் தருமசாஸ்திரத்திற் கூறியிருக்க, உயர்குலத்துதித்த மகாகுணவானான இராமன் தாழ்ந்த குலத்தவனான குகனோடு இங்ஙனம் நட்புக்கொள்ளுதல் பொருந்துமோ? என்னில்,—பிறப்பினால் எந்தக்குலத்தானாயினும் பகவானிடத்திற் பக்திகொண்டவனாதலால் இவன் அந்தணன்போன்றவனாய் மகாபாகவதனாவனாதலால் தாழ்குலத்துப் பிறந்தானென்ற குற்றம் இந்தக்குகப்பெருமானுக்கு இல்லையென்க. பி - ம்:—[1]செய்வான். [2]இன்னுயிரனையாயில். [3]உலகு. [4]உரிமையிலுளனென்றான். (சுகஎ)

எச. [1]துன்புள தெனி[2]னன்றோ [3]சுகமுள ததுவன்றிப்
பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்
[4]முன்புளெ மொருநால்வே முடிவுள தெனவுன்னா
[5]வன்புள வினிநாமோ ரைவர்க ளுளரானோம்.

(இ-ள்.) துன்பு உளது எனின் அன்றுஓ சுகம் உளது - துன்பம்உளதாயினல்லவா சுகம்உண்டாகும்; அது அன்றி - அவ்வாறு நினையாமல், 'பின்பு உளது - (உன்னைக் காண்பது) பின்னர்உண்டாகப்போகின்றது: (இன்பமாக இருக்கிற இக்காலத்திற்கும் இனிஉன்னையடையப்போகின்றகாலத்துக்கும), இடை நடுவிலே, மன் உம-மிகவும், பிரிவு-பிரிவுத்துயரானது,உளது—,'என- என்று, உன்னேல்-கருதியிருந்தாதே; முன்பு - (உன்னோடு தோழமைகொள்வதற்கு) முன்னம், ஒரு நால்வேம் உளெம் - (நாங்கள் உடன்பிறந்தவர்) நால்வ

ராக இருந்தோம்: முடிவு உளது என உன்னு - ஒருமுடிவுளதென்று கருது தற்குமுடியாத [எல்லையில்லாமலும் என்றும்நிலைத்துமுள்ள], அன்பு - அன்பை, உள-பரஸ்பரம்கொண்டுள்ள, நாம்—, இனி-இனிமேல், ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்-உடன்பிறந்தவரைவ‌ராய் விட்டோம்; (எ - று.)

வெயிலிலடிபட்டார்க்கே நிழலினருமைதெரிவதுபோலத் துன்பத்தையடைந்தால்தான் இன்பத்தின்நன்மை விளங்குமென்பது முதலடியின் கருத்து. இதனால், நீழ் உன்தொழிலுரிமையினுள்ளேன் என்றுகூறிய இராம பிரான் தான் பிரிந்துசெல்லுதல் நன்மைக்கேயெனக் காட்டுகின்றான். இருவரும்பிரிந்து அதனால் தோன்றும்வருத்தத்தை யநுபவித்தால்தான் நாம் பின்னர்க்கூடும்போது அது இனிதாகத்தோன்றுமென்றவாறு. "துன்பமுற்றவர்க்கலா,லின்பமில்லையாதலி,னன்பமற்றியானினைத், துன்பத்தாற்றுடக்கினேன்" என்ற சிந்தாமணிச்செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இனி, ஒருவர் துன்பப்பட்டால்தான் அதனால் பலர்க்குஇன்பமுண்டாகு மென்று இதற்குக் கருத்துக்கொண்டு, நீயும் நானும் பிரிந்து அப்பிரிவுத்துயரையநுபவித்தால்தான், இந்தச சிருங்கபேரத்திலுள்ளாரும் அரக்கராலிடர்ப்படும் உலகத்தாரும் இன்புறுவரென்பதை யுட்கோளாகக்கொண்டுகூறினான் என்ன உரைவகுத்தலு முண்டு. பி - ம்:—[1]துன்பெனிலது. [2]ஒன்றே. [3]சுகமெனிலதுவன்றே. [4]முன்புள. [5]அன்புளது, அன்புளம். (ருகூஅ)

௫௫. படருற வுளனும்பி கானுறை பகலெல்லா
[1]மிடருறு பகையாபோ யானென [2]வுரியாய்நீ
சுடருறு வடிவேலாய் சொன்முறை [3]கடவேன்யான்
வடதிசை வருமந்நா ளின்னுழை வருகின்றேன்.

(இ - ள்.) சுடர் உறு வடி வேலாய்-ஒளிபொருந்திய கூர்மையான வேற்படையையுடையவனே! கான் உறை பகல் எல்லாம்-(யான்) காட்டில் வசிக்கின்ற காலமெல்லாம், படர் உற - (எனக்கு) வருத்தம் (நேராமல்) தாங்குதற்கு, உம்பி - உன்தம்பியாகிய இலட்சுமணன், உளன் - கூடவேயிருக்கின்றான்; ஆதலால்), இடர் உறு பகை - (எனக்குத்) துன்பத்தையுண்டாக்குகின்ற பகையாகுபவை, யா - எவை? [எதுவும் இன்றுஎன்றபடி]; நீ—, போய் - (உன் இருப்பிடத்திற்குச்) சென்று, யான் என உரியாய் - என்னைப்போல் காத்தற்றொழிற்கு உரிமைபெற்றுநிற்பாயாக [உன் கீழ்வாழும் குடிமக்களைப் பாதுகாப்பாயாக]; வட திசை வரும் அ நாள் - வடக்கு [அயோத்தி] நோக்கி மீண்டு வருகின்ற அந்நாளில், நின் உழை வருகின்றேன் - நீ இருக்கும் இந்த இடத்திற்கு வந்து சேர்வேன; யான்—, சொல் முறை கடவேன் - சொல்லியபேசசுத் தவறேன்; (எ - று.)

'வடதிசைவருமந்நாள்' என்றது - பதினான்குவருஷங்களைக் காட்டிற் போக்கி நகருக்குத் திரும்புங்காலத்து என்றபடி. உம்பி என்பதற்கு - பரதனென்றும், யான்எனஉரியாய்நீ என்பதற்கு-(பரதனுக்குப் பகையுளதாயின்)

நீ சென்று என்னைப்போல உதவுதி என்றும் உரை வகுத்தாருமுளர்: இவ்வுரை முன்பின் சந்தர்ப்பங்கட்குப் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. பி-ம்:—[1]இடருறுதகையாயோய், இடருறறகையாயோய், இடருறுதகையாய் நீ. [2]உரியாயே. [3]கடவேல்யான், கடவேனுன். (சகக)

எசு. அங்குள கிளைகாவற் கமைதியி னுளனும்பி
யிங்குள கிளைகாவற் கியாருள [1]ரிசையாய்நீ
யுன்கிளை யெனதன்றோ வுறுதுய ருறலாமோ
வென்[2]கிளை யிதுகாவென் னேவலி [3]னினிதென்றான்.

(இ - ள்.) உம்பி-உன்தம்பியாகிய பரதன், அங்கு உள கிளை காவற்கு-அயோத்தியிலுள்ள சுற்றத்தாரெல்லாரையுங் காத்தற்கு,அமைதியின் உளன்-(அதற்கு ஏற்ற) குணவமைதியோடு இருக்கின்றான்; (நீ இந்த இடத்தின்று என்னுடன்வந்துவிட்டால்), இங்கு உள கிளை காவற்கு-இங்கேயுள்ள சுற்றத்தாரைப் பாதுகாத்தற்கு, யார் உளர்—? நீ—, இசையாய் - சொல்வாயாக; உன் கிளை எனது அன்றோ - உன்னுடைய சுற்றத்தார் என்சுற்றத்தாரல்லரோ? (அவர்கள் காப்பவரில்லாமல்), உறு துயர் உறல் ஆமோ-மிக்கவருத்தத்தையடையலாமோ? என் கிளை இது - இங்குஉள்ள என்சுற்றத்தாரை, என் ஏவலின்-எனது கட்டளையினால், இனிது கா-நன்றாகப் பாதுகாப்பாயாக,' என்றான் - என்று கூறிமுடித்தான், (ஸ்ரீராமன்); (எ - று.)

ஸ்ரீராமபிரான் குகனைத் தன்தம்பியாகக்கொண்டானாதலால், அவன் கிளைஞரைத் தன்கிளைஞராக எண்ணிப் பாதுகாக்குமாறு கட்டளையிட்டான். இராமன்தான் மூத்தவனாதலின், கட்டளையிடுத லேற்கும். பி-ம்:—[1]உரைசெய்யாய், உரைசெய்வாய். [2]கிளையது. [3]இன்று. (எOO)

## எஎ.—கட்டளைப்படியே குகன் நிற்க, ஸ்ரீராமன் முதலியோர் கானகத்துச் செல்லுதல்.

பணிமொழி கடவாதான் பருவர [1]லிகவாதான்
பிணியுடை [2]யவனென்னும் [3]பிரிவினன் விடைகொண்டா
னணியிழை [4]மயிலோடு மையனு மிளையோனுந்
திணிமர நிறைகானிற் [5]சேணுறு நெறிசென்றார்.

(இ-ள்.) (குகன்),பணி மொழி கடவாதான்-(ஸ்ரீராமனிட்ட)கட்டளையைக்கடக்கமாட்டாதவனும், பருவரல் இகவாதான்-(மனத்தில் இராமனைப்பிரிவதனால்தோன்றும்)துன்பம் நீங்கப்பெறாதவனுமாகி, பிணி உடையவன் என்னும் பிரிவினன்-(தன்னைக்கண்டார் இவன்ஏதோ பெருத்த)நோயைக்கொண்டுள்ளானென்று கருதுமாறு தோன்றுகின்ற பிரிவுத்துயரத்தைக் கொண்டவனாய்,—விடை கொண்டான் - (இராமபிரானிடத்து) விடைபெற்றுக்கொண்டான்; ஐயன்உம்-ஸ்ரீராமனும், இளையோன்உம்-இளையபெருமாளும், அணி இழை மயிலோடுஉம் - அழகிய ஆபரணங்களைப்பூண்ட சீதாபிராட்டியோடு,

திணி மரம் நிறை கானில் - இலைகளடர்ந்த மரங்களை நெருக்கமாகக் கொண் டுள்ள காட்டிலே, சேண் உறு - வெகுதூரமாகச் செல்லுகின்ற, நெறி-காட்டு வழியே, சென்றார்—; (எ - று.)

மேல் வனம்புகுபடலத்துக்குத் தோற்றுவாய் செய்யுமாறு 'திணிமர நிறைகானிற் சேணுறுநெறிசென்றார்' என்றார். பி-ம்:—[1]இகழாதான். [2]மனம். [3]பேரினன். [4]மகளோடும். [5]சேணுற. (எ௦க)

கங்கைப்படலம் முற்றிற்று.

---

## எ.—ஆவது வனம்புகு படலம்.

குகப்பெருமானாற் கங்காநதியைக் கடந்தேறிய ஸ்ரீராமன் சீதாலட்சும ணர்களுடனே வனத்திற்புகுந்த செய்தியைக் கூறும் பகுதி யென்பது, பொ ருள். கங்கையைக்கடந்துசென்றஇராமன் காடுநோக்கிச்செல்ல,அவ்விடமெல் லாம் சூரியன் நிலவேபோல்வீச, வானம் பனித்திவலைபோல்துளிக்கப் பயன் மரம் இன்னிழலைத்தர,இங்ஙனம் இனிய நெறியிலே பலவகைக்காட்சிகளைச் சீதாபிராட்டிக்குக் காட்டியவண்ணம் நடந்துசெல்கையில் அத்தமனகாலத் துக்குச் சித்திரகூடமலை தூரத்திற் கண்ணுக்குத்தெரிய, அக்காலத்துப் பெருந் தவசியாகிய பரத்துவாசனென்னும் முனிவன் அவ்விராமபிரானை யெதிர் கொள்ள வந்தான்: இராமபிரான் அம்முனிவனை வணங்க, முனிவன், இராம னது தவக்கோலத்தைக்கண்டு 'இக்கோலத்துடனோ காண்பது?' என்று கண் ணீருகுத்துத் தவவனத்திற்கு வந்த காரணத்தை வினவியறிந்து 'உன்னைக் கானகத்திற்கு அனுப்பித் தயரதன் எங்ஙனம் உய்ந்தான்?' என்று வருந்தி, பிறகு எல்லாம் விதியின் செயலாதலால் வருந்துவதிற் பயனில்லையென்று தேறித் தன்னுறையுளுக்கு அவ்விராமனை யிட்டுக்கொண்டுபோய்க் கனிகாய் களைத் தந்து உபசரிக்க, இராமன்முதலியோர் மகிழ்ந்திருந்து அன்றுஇரவு அங்குத்தானேதங்கி மறுநாள் பொழுதுபுலர்ந்தபின், முனிவன் 'இவ்விடம் கங்கையமுனைசரசுவதியென்னும்நதிகள் சேருகிற பிரயாகையென்னும் க்ஷேத் திரமாதலால் மிகச்சிறந்தது: இங்கு வசிப்பதற்குப் பலவகைச்சௌகரியமு முண்டு: இங்குத்தானே கானகத்துக் கழிக்கவேண்டிய நாளைக் கழிக்கலாம்' என்று கூற, இராமன் 'இது கோசலநாட்டிற்குச் சமீபித்திருத்தலால், பல ரும் வருவர்' என்ன, பரத்துவாசன் அதனையிசைந்து 'ஆயின், சித்திரகூட மென்னும்மலை பத்துக்காவதத்திற்கு அப்பால் உள்ளது: அது வசிப்பதற்கு இனியஇடம்' என்ன, முனிவனை வணங்கி விடைபெற்று இராமனாதியர் அங்குநின்று நடந்து சூரியனுச்சியையடையும் வேளையில் யமுனாநதியை யடைந்து இளையபெருமாள் மூங்கிற்கழிகளைக்கொண்டு தெப்பம் அமைக்க அத்தெப்பத்தால் அவ்யாற்றைக்கடந்து வெகுதூரம்நடந்து சென்று ஒருகடுஞ்

சுரத்தைச்சேர்ந்தனராக, இராமன் 'இதனைச் சனகிகடப்பது அருமை'என்று நினைக்கையில், அவர்கள் புகுந்ததால் அக்கடுஞ்சுரம் வெம்மை முதலியன நீங்கி இனிதாயிருக்க, அந்தப்பாலைவனத்தை மெல்லக்கடந்து சித்திரகூடத்தைக்கண்டன ரென்பது இப்படலத்துக் கூறிய விஷயம்.

க.—இராமன் வேனிற்காலத்தில்வனஞ்சேர, அவ்விடமெங்கும் ஆகாயத்திலே மழைக்குறிதோன்றுதல்.

பூரியர் புணர்மாதர் [1]பொதுமன [2]மெனமன்னு
மீரமு முளதில்லென் றறிவரு [3]மிளவேனி
லாரியன் வரலோடு மமுதள வியசீதக்
காருறு குறி[4]வானங் காட்டிய [5]தவணெங்கும்.

(இ - ள்.) பூரியர் புணர் - அறிவில்லாத கீழ்மக்கள் சேர்கின்ற, பொது மாதர் - விலைமகளிரின், மனம் என - மனம்போல, மன்னும் ஈரம் உம் உளது இல் என்று அறிவு அரு - பொருந்திய ஈரமும் உண்டோ இல்லையோ என்று அறிவதற்கும் அருமையான, இளவேனில் - இளவேனிற்பருவத்திலே, ஆரியன்-ஸ்ரீராமன், வரலோடுஉம் - (கானகநெறியில்) வந்துசேர்ந்தவளவிலே,— வானம் - ஆகாயமானது,—அமுது அளவிய சீதம் கார் உறு குறி - நீரோடு பொருந்திய குளிர்ந்த கருநிறமேகம்பொருந்தியகுறியை, அவண்எங்கும்-அவ் விடமெங்கும், காட்டியது—; (எ - று.)

இராமபிரான் வனத்திற்குவந்ததனால் அப்பரமனுக்கு வெப்பம்தோன்றா மலிருக்கும்படி அவ்விடமெங்கும் வானத்திலே மழைக்குறிகள் தோன்றின வென்க. வானத்தில் மழைக்குறிகள்தோன்றியதை, வனத்தின்செயலாக்கிக் கூறினார். வேனிற்பருவத்தில் நீர்கிடைப்பது அரிதாவது அன்றித் தரையில் ஈரமும்உண்டோ இல்லையோஎன்று கருதுமாறு நீர் வற்றிவிடுதலால், 'ஈரமு முளதில்லென் றறிவரும்வேனில்' என்றார். அங்ஙனமுள்ள வேனிற்பருவத்துக்குப் பொதுமகளிரின் மனத்தை யுவமைகூறினார். பொதுமகளிரின் மனம் வெளிக்கு ஈரமுள்ளதுபோலக்காட்டி உள்ளேபசையற்றிருத்தலால், ஈரமுளதிலதென்று அறிவு அரிதாகும். ஈரம்-அன்பும், நீர்க்கசிவும்: சிலேடை. ஈரமும், உம்மை - இழிவுசிறப்பு. பி-ம்:—[1]புலைமனம், புதுமனம், புதுமணம், [2]நலமென்னும். [3]முதுவேனில். [4]மானக், காணக். [5]வனமெஙகும். (எ0உ)

உ.—இனியகாட்டுவழியில் ஸ்ரீராமன்முதலியோர் செல்லுதல்.

வெயிலிள நிலவேபோல் விரிகதி ரிடைவீசப்
[1]பயின்மர நிழலீனப் பணிபுரை துளி[2]வானப்
புயறர விளமென்கால் பூ[3]வளி வியதெய்த
மயிலின நடமாடும் [4]வழியினி யனபோனார்.

(இ-ள்.) வெயில் - சூரியன், விரி கதிர் - பரவிய (தனது) கிரணங்களை, இள நிலவே போல் இடை வீச - இளநிலாவைப்போன்று [வெப்பமின்றி] இடையிடையே வீசிக்கொண்டிருக்கவும்,—பயில் மரம் - (ஆங்கு) நெருங்கி

யுள்ள மரங்கள், நிழல் ஈன - நிழலைத்தரவும்,—வானம் புயல்-வானத்திலே தோன்றிய மேகம், பனி புரை துளி தர - பனித்துளியைப்போன்ற சிறு நீர்த்திவலைகளை வீசவும்,—இள மெல் கால்-மென்மையாக வீசுகின்ற இளந் தென்றற்காற்று, பூ வளவியது எய்த - வளப்பமுள்ள பூவின்மணத்தை யடைந்துவீசவும்,—மயில் இனம் நடம் ஆடும் - மயிற்கூட்டங்கள் கூத்தாடு கின்ற, இனியன வழி - இனியனவான காட்டுவழிகளிலே, போனார் - (அவ் விராமபிரான் முதலியோர்) சென்றார்கள்; (எ - று.)

வானத்திற் புயல்நிறைந்து சிறுதிவலைகளைத் துளித்துக்கொண்டிருக்க வும், செறிந்தமரங்கள் நிழலைத் தந்துகொண்டிருக்கவும், இவ்விரண்டற்கும் இடையேஇடையே சூரியன் தனதுகிரணங்களை இளநிலாப்போல் இன்ப முண்டாகும்படி எறியவும், இளந்தென்றற்காற்று நறுமணமுள்ள மலர்களின் மணங்களை முகந்துகொண்டு மெல்லமெல்லத் தம்மீது வீசவும், மயில்கள் ஆங் காங்கு நடமாடவும்,இனியனவாகத்தோன்றுங் காட்டுவழிகளிலே அவ்விராம பிரான் முதலியோர் சென்றன ரென்பதாம். வழி இனியனவாதற்குக்கார ணம், வெயிலிளநிலவேபோல் வீசுதல் முதலியன. பூ - சாதியொருமை. வெயில்-சூரியனுக்கு, ஆகுபெயர். பி-ம்:—[1]பயன். [2]மேகம், மேகப், வானில். [3]வளவியகந்தம். [4]வழியினினியல். (எ௦ந)

ந.—இதுமுதற்பதினறுகவிகள் - இராமபிரான் சீதாபிராட்டிக்கு அவ்வனத்தின் பலவகைவளங்களைக் காட்டுதலைத் தெரிவிக்கும்.

மன்றலின் மலி[1]கோதாய் மயிலியன் [2]மடமானே
யின்றுயில் வதிகோபத் தினம்[3]விரி வனவெங்குங்
கொன்றைகள் சொரிபோதின் [4]குப்பைகள் [5]குலமாலை
பொன்றிணி மணிமானப் பொலிவன பலகாணாய்.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - குளகம்.

(இ - ள்.) மன்றலின் மலி கோதாய் - நறுமணத்தால் மிகுந்துள்ள மலர் மாலையையணிந்துள்ளவளே! மயில் இயல் மடம் மானே-மயில்போன்றசாய லைக்கொண்டமடப்பமுள்ள மான்போன்ற (பார்வையையுடைய)வளே! இன் துயில் வதி கோபத்து இனம் எங்குஉம் விரிவன - இனியதுயிலைச்செய்கின்ற இந்திரகோபப்பூச்சிகளின் கூட்டங்கள் எங்கும் பரவப்பெற்றனவான, கொன்றைகள் சொரி போதின் குப்பைகள்-கொன்றைமரங்கள் சிந்தியமலர்த் தொகுதிகள், பொன் திணி மணி குலம் பல மாலை மான-பொன்னிற் பதிக் கப்பெற்ற இரத்தினங்களினாலியன்ற பல சிறந்த இரத்தினஹாரங்களை யொத்திருப்ப, பொலிவன - விளங்குவனவற்றை, காணாய்—; (எ - று.)

கொன்றைமலர்கள் பொன்னிறமான மலர்களைச் சொரிந்துகிடக்க அவற் றின்மீது இந்திரகோபங்கள் ஆங்காங்குத் துயில்வனவாய்ப் பரவியுள்ளவை, பொன்னிற் பதுமராகவிரத்தினங்களைவைத்து இழைத்த பல இரத்தினஹார ங்கள் ஆங்காங்குக் கிடப்பனவற்றை யொத்திருக்கு மென்று குறித்தான்;

தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இந்திரகோபம் செந்நிறத்தனவாகிப் பதும ராகவிரத்தினத்தை யொத்திருக்க, எங்குஞ் சிந்திய கொன்றைமலர்கள் பொன்னை யொத்திருக்குமென்க.கோதை மயில் மான்மூன்றையும்-சீதைக்கு, உவமையாகக் கொண்டுகூறலுமாம். கோபம் இந்திரகோபமென்பதன் முதற் குறை. இதுமுதல் பதினெட்டாங்கவிவரையிலுமுள்ள 'காணாய், பாராய்' என்ற முற்றுக்களை ஒன்றுசேர்த்து, (சீதையைநோக்கி), 'காணாய், காணாய், பாராய்' என்றனன் - என்றுகூறி, "திரடோளான் நெறிபோயினன்" எனப் பத்தொன்பதாங்கவியில் முடிக்க. பி-ம்:—[1]கோதை. [2]இளமானே, மடமாதே. [3]அவிர்வன. [4]குப்பைகொள். [5]குவிமாமை. (எ௦௩)

ச. [1]பாணிள மிஞிறுகப் படு[2]மழை பணையாக
நாணின தொகு[3]பீலிக் [3]கோலின நடமாடல்
[4]பூணிய நினசாயல் [5]பொலிவது பலகண்ணிற்
காணிய வெனலாகுங் களி[6]மயி லிவைகாணாய்.

(இ - ள்.) நாணின-மனக்கூச்சங்கொண்டனவாய், தொகு பீலி - சுருக்கிக்கொண்ட தொகுதியான பீலிகளை(விரித்தவண்ணம்), இள மிஞிறு பாண் ஆக - இளவண்டுகள் (பாடல்பாடும்) பாணனாகவும், படு மழை-பொழிகின்ற மழை, பணை ஆக-பறையாகவுங் கொண்டு, கோலின நடம் ஆடல் பூணிய - (தாம்) கருதிய நர்த்தனத்தைச்செய்வதை மேற்கொண்டனவாகி,-நின சாயல் பொலிவது பல கணணில் காணிய எனல் ஆகும்-உன்னுடைய சாயல் (தம்மிடத்தே) விளங்குவதை (த் தம்முடைய) பல கண்களாற் காண்கின்றன என்று சொல்லுதற்கு ஏற்றுள்ள, களி மயில் இவை-களிப்போடுகூடிய இம் மயில்களை, காணாய்—; (எ - று.)

மயில்கள் தம்தோகையைத் தொகுத்துள்ளதைக் கூந்தலினழகு தம் தோகைக்கு இன்மையால் நாணத்தாற் சுருக்கிக்கொண்டனபோலுமென்பார் 'நாணின தொகுபீலி' என்றார். 'தொகு' என்பதற்கு இரட்டுறமொழிதலாக - சுருக்கிக்கொண்ட என்றும் தொகுதியான என்றும் பொருள்உரைக்கப்பட்டன. மயில்கள் தோகைவிரித்து நடமாடுவதற்கு - மிஞிற்றைப் பாணாகவும், மழையைப் பணையாகவும் கொண்டார்: மயிலை நர்த்தகியாகக்கூறுமையால், இஃது-ஏகதேசவுருவகவணி. மயில்கள் தோகையைவிரித்து நடமாடுகையில் அத்தோகையிற் பீலிக்கண்கள் தோன்றுவன-தம்மிடத்து உன்னுடைய சாயலுள்ளமையைத் தமது பலகண்களாற் காணுவதுபோல்வதைக் காண்பாயாக எனச் சீதையைநோக்கி இராமபிரான் காட்டுகின்றனனென்க. பி-ம்:—[1]பாணினமிஞிறு, பாணிநன்குமிறு. [2]பணைமழை. [3]தோகைசுணடமாடல். [4]பூணினநின, பூணியனின, பூணினசில. [5]பொலிவுறுவது, பொலிவுறுமது. [6]மயிலவை. (எ௦௫)

ரு. [1]சேந்தொளி விரிசெவ்வாய்ப் பைங்கிளி [2]செறிகோலக்
காந்தளின் மலரேறிப் [3]பொலிவது கவினூரு
மாந்தளிர் நறுமேனி மங்கைநின் [4]மணிமுன்கை
யேந்தின வெனலாகு மியல்பின விவைகாணாய்.

(இ - ள்.) சேர்ந்து ஒளி விரி-அழகுபெற்று ஒளி பரவுகின்ற, செவ் வாய் பைங் கிளி-செந்நிற வாயையும் பசியஉடல்நிறத்தையுமுடைய கிளிகள், கோலம் செறி காந்தளின் மலர் ஏறி - அழகுநிரம்பிய காந்தள்மலரின்மீது ஏறிக்கொண்டு, பொலிவது - விளங்குவது,—கவின் ஆரும் மா தளிர் நறு மேனி மங்கை - அழகுநிரம்பிய மாந்தளிரைப்போன்று இனியதாகத்தோன்றுகின்ற மேனிநிறத்தையுடைய நங்கையே! நின் மணி முன் கை ஏந்தின எனல் ஆகும்- உன்னுடைய அழகிய முன்னங்கையிலே யேந்தியுள்ளன வென்னத்தகும்: இயல்பின இவை - இத்தன்மையுள்ள இக்கிளிகளை, காணாய்—; (எ - று.)

காந்தளின்மீது ஏறி விளங்குங் கிளிகள், சீதையே! நின்முன்னங்கையிலேறி விளங்குங் கிளிகளைப் போலுமென இராமபிரான் காட்டுகின்றனனென்க. காந்தள்மலரைக் கைக்கு உவமையாகக் கூறுவது, கவிமரபு. பி-ம்:—[1]சேர்ந்தொளிர். [2]செங். [3]கோதுவ. [4]மட. இப்பாடல் சிலபிரதிகளில் "அருந்ததி" (அ) என்ற பாடலுக்குப்பின் காணப்படுகின்றது. (௭0௬)

௬. [1]நெய்ஞ்ஞிறை [2]நெடுவேலி னிழலுறு திறமுற்றிக்
[3]கைஞ்ஞிறை நிமிர்கண்ணாய் [4]கருதின வினமென்றே
மெய்ஞ்ஞிறை விரிசாயல் கண்டுநின் விழிகண்டு
[5]மஞ்ஞையு மடமானும் [6]வருவன பலகாணாய்.

(இ-ள்.) நெய் ஞிறை நெடு வேலின் நிழல் உறு திறம் முற்றி-நெய் நிரம்பப்பூசப்பெற்றுள்ள நீண்ட வேலின்சாயையும் மிக்கசாமர்த்தியமும் நிரம்பப்பெற்று, கை ஞிறை நிமிர் - கையளவிற்கு அடங்காது மிக்குள்ள, கண்ணாய்- கண்களையுடையவளே! மஞ்ஞைஉம் - மயிலும், மடம் மான் உம்-இளமையையுடைய மானும், (நின்) மெய் ஞிறை விரி சாயல் கண்டுஉம் நின் விழி கண்டு உம் - உனது உடம்பின் மிக்குப்பரவிய சாயலைக்கண்டும் உனதுவிழியைக் கண்டும், இனம் என்றுஏ கருதின - (தம்முடைய) இனமென்றே நினைத்தனவாய், பல வருவன - பலவருபவற்றை, காணாய்—; (எ - று.)

மஞ்ஞைகள் உன்னுடம்பில் தம்முடையசாயல் மிக்கிருத்தலால் உன்னைத் தம்மினமென்று கருதி வருகின்றன; அங்ஙனமே மான்கள் உன்விழியைக் கண்டு தம்முடையஇனமான மானின்விழி யென்று கருதி வருகின்றன: இங்ஙனம் பல வருவனவற்றைக் காண்பா யென்று இராமபிரான் காட்டுகின்றனனென்க. மஞ்ஞையும் மானும்இனமெனமயங்கியனவாகக்கூறியது - **மயக்கவணி.** கண்கள் வேற்படையின் வடிவுபடைத்திருப்பன வென்பதை 'வேலினிழல்முற்றி' என்றும், அவ்வடிவொப்புமையோடு நில்லாமல் தமக்கு இலக்கானோரைக் கொலைசெய்யுந் தன்மையும் வாய்ந்துள்ளன அக்கண்களென்பதை 'திறமுற்றி' என்றும் விளக்கினன். துருப்பிடியாம லிருக்கும்பொருட்டும் கூராக்குதற்பொருட்டும் படைகளில் நெய்பூசுதல், இயல்பு. 'மஞ்ஞையும் மடமானும்' என்பன, 'சாயல்கண்டும் விழிகண்டும்' என முறையேசென்று

இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். நிறை - போலி. மஞ்ஞை திசைச்சொல். பி-ம்:—[1]நெய்ந்நிறை. [2]நிறம். [3]கைம்முறை. [4]கருகின. [5]மைஞ்ஞை. [6]வருவனவவை, வருவனவிவை. (௭௦௭)

௭. பூவலர் [1]குரவோடும் [2]புடைதவழ் பிடவீனு
மாவலர் சொரிசூழற் றுயிலெழு மயிலொன்றின்
[3]றூவியின் மணம்நாறத் துணைபிரி பெடை [4]தானச்
சேவலொ டுறவூடித் திரிவத னியல்காணாய்.

(இ - ள்.) பூ அலர் குரவோடு உம் - அழகாக மலர் மலர்கின்ற குரவினுடனே, புடை தவழ்-பக்கங்களிலே தவழ்வதுபோற் பரவிவளர்கின்ற, பிடவு-பிடவமரம், ஈனும் - உண்டாக்கிய, மா அலர் - சிறந்த மலர்கள், சொரி - சொரிகின்ற, சூழல் - சூழ்ந்த இடங்களில், துயில் எழும்-உறங்கியெழுகின்ற, மயில் ஒன்றின் - ஓராண் மயிலின், தூவி - கலாபம், இன் மணம் நாற - இனியமணம்வீச, (அதுகண்ட), துணை பிரி பெடைதான்-(தன்கணவனாகிய) துணையைப் பிரிந்திருந்த பெண்மயில், அ சேவலொடு-அந்த ஆண்மயிலோடு, உற ஊடி - மிகவும் ஊடல்கொண்டு, திரிவதன் இயல் - திரிவதன் தன்மையை, காணாய்—; (எ - று.)

குராமலரும் பிடவமலருஞ் சிந்திய சூழலில் துயின்று எழுந்ததனால் அம்மலர்களின்மணம் படியப்பெற்ற ஆண்மயிலைக்கண்டு, பிரிந்திருந்த பெண்மயில் 'வேற்றுப்பெண்மயிலோடு கலந்ததனால்தான் இதற்கு இம்மணம் உண்டாயிற்று' என்றுமயங்கி அவ்வாண்மயிலோடு ஊடல்கொண்டு அச்சேவலுக்கு முகங்கொடாமல் ஊடிச்செல்வது காணாயெனக் காட்டுகின்றனன் இராமபிரானென்க. தூவியில் மணம்நாற என்று பிரித்தும் உரைக்கலாம். மலர்மணத்தால் மயிலின்கலாபம் மணம்நாறுவதுபற்றி, அச்சேவலை வேற்றுப்பேடையோடு புணர்ந்துவந்ததென மயங்கியதாகக் கூறியது - **மயக்கவணியாம்.**
பி-ம்:—[1]குரவோடு. [2]கிழலிட. [3]தூவியன்மணம். [4]காணச. (௭௦௮)

௮. அருந்ததி யனையாளே யமுதினு மினியாளே
செருந்தியின் மலர்[1]தாங்குஞ் செறி[2]யித ழினசோகம்
[3]பொருந்தின களிவண்டிற் [4]பொலிவன பொன்னூது
மிருந்தையி னெழுதீயொத் [5]தெழுவதொ ரியல்[6]காணாய்.

(இ - ள்.) அருந்ததி அனையாளே - அருந்ததியை யொத்தவளே! அமுதின் உம் இனியாளே - அமிருதத்தைக்காட்டிலும் இனிமையையுடையவளாகத் தோன்றுபவளே! செருந்தியின் மலர் தாங்கும் - செருந்திமலரைத் தாங்குகின்ற, செறி இதழின் அசோகம்-நெருங்கிய இதழையுடைய அசோக மலர்கள், பொருந்தின களி வண்டின் பொலிவன - (தம்மிடத்துப்) பொருந்திய மதர்த்த வண்டுகளோடு விளங்குவன,—பொன் ஊதும் - பொன்னை

மூடிவைத்து ஊதுகின்ற, இருந்தையின் - கரியிலே, எழு தீ ஒத்து - மேலெழுந்து எரிகின்ற நெருப்பைப் போன்று, எழுவது ஓர் இயல் - எழுந்து தோன்றுகின்ற ஒப்பற்ற தன்மையை, காணாய்—; (எ - று.)

அசோகமலரின் இடையிலே செருந்திமலர் தங்கியிருக்க, வண்டுகள் அவற்றின்மீது மொய்க்குங் காட்சி, நெருப்பிலே பொன்னைவைத்துக் கரியால் மூடி ஊதுகுழல்கொண்டு ஊதுகையில் அக்கரியின்இடைவழியாக நெருப்புச்சுவாலை வெளிவருவதுபோலு மென்க: **தற்குறிப்பேற்றவணி.** அசோகு-நெருப்புச்சுவாலைக்கும், செருந்திமலர் - பொன்னுக்கும், அவற்றின்மீது மொய்க்கும் வண்டுகள்-பொன்னைப் பொதிய வைக்குங் கரிக்கும் உவமையாமெனக்காண்க. செருந்தியைத் தெரியவொட்டாமல் வண்டுகள் அவற்றின்மீது மொய்க்க, இடையிடையே அசோகின் இதழ்கள் நெருப்புச்சுவாலைபோல் வெளித்தோன்றுமென்க. பி-ம்:—[1]தங்கி, தங்கும். [2]இதழ்வனசோகம், இதழனசோகம், இதழனகோங்கம், இதழ்புனைகோங்கம். [3]பொருந்திய. [4]பொழிவன, பொதிவன. [5]எழுவனவியல், எழுவனபல, எழுவனவவை. [6]பாராய். இப்பாடலுக்குப்பின் சிலபிரதிகளில் "கூடிய" (கங) என்ற பாடல் உள்ளது. (எ0க)

கூ. [1]ஏந்திள முலையாளே வெழுதரு மெழிலாளே
காந்தளின் முகைகண்ணிற் [2]கண்டொரு களிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக் கவ்விய படி[3]பாராத்
[4]தேந்தள வுகள்செய்யுஞ் [5]சிறுகுறு நகைகாணாய்.

(இ-ள்.) ஏந்து இள முலையாளே-(சாயாமல்) நிமிர்ந்தவண்ணமாகவுள்ள இளமுலையையுடையவளே! எழுத அரும் எழிலாளே-எழுதுவதற்குமுடியாத [மிக்க] அழகுடையவளே! ஒரு களி மஞ்ஞை - களிப்புக்கொண்ட ஒருமயிலானது, காந்தளின் முகை - காந்தளின் மொட்டை, கண்ணில் கண்டு - (தன்) கண்களாற் கருத்துடன் பார்த்து, இது பாந்தள் என உன்னி - இது பாம்பு என்று நினைத்து, கவ்விய - (அதனைத் தன்வாயாற்) கவ்விய, படி-வகையை, பாரா - பார்த்து, தேன் தளவுகள் செய்யும் - தேனையுடைய முல்லைமலர்கள் செய்கின்ற, சிறு குறு நகை-மிகச்சிறிய புன்சிரிப்பையும், காணாய்—; (எ-று.)

காந்தளின்முகையை அரவெனக்கருதி மயில் அதனைக் கவ்வுவதையும் முல்லைமலர்கள் மலர்வது அவ்வண்ணம் மஞ்ஞை மயங்கி ஏமாந்துகவ்வியது கண்டு பரிகாசச்சிரிப்புச் சிரிப்பதுபோல்வதையுங் காணு யென்று சீதைக்கு இராமபிரான் காட்டுகின்றன னென்க. தளவுகள்மலர்வது மஞ்ஞைகள் ஏமாந்ததுகுறித்து முல்லைக்கொடியென்னும் மாதரின் பரிகாசச்சிரிப்புப் போலு மென்னும்வருணனை தோன்றக் கூறியதனுல், ஈற்றடி - **தற்குறிப்பேற்றவணியாம்.** இதனில், தற்குறிப்பேற்றத்தைக்காட்டும் உருபுதொக்குவந்துள்ளதென்றறிக. காந்தள்மொட்டைப் பாந்தளென மயில்மயங்கியது-**மயக்க**

வணியாம். பி - ம்:—[1]ஏந்தின. [2]கண்டதொர். [3]பாராய். [4]தீர்தளவுகள், சேர்தளவுகள், தேர்தளவுகள். [5]சிறுநகைபல. இச்செய்யுள் ஒருபிரதியில் "குன்றுறை" (கo) என்னும் பாடலுக்குப்பின் உள்ளது. (எகo)

கo. குன்றுறை வயமாவின் குருளையு மிருள்சிந்திப்
பின்றின தெனலாகும் பிடிதரு சிறுமாவு
[1]மன்றில [2]பிரிவொல்லா வண்டர்த மனையாவின்
[3]கன்றொடு விளையாடுங் [4]களியன பலகாணாய்.

(இ - ள்.) குன்று உறை வய மாவின் குருளை உம் - மலையில்வாழுந்தன்மையுள்ள புலியின்குட்டியும், இருள் சிந்தி பின்றினது எனல் ஆகும் பிடி தரு சிறு மா உம் - இருளைவெளிப்படுத்திப் பின்னிவைத்துள்ளதென்னும்படியுள்ள பெண்யானை பெற்ற சிறிய யானைக்குழவிகளும், அண்டர்தம் மனை ஆவின் கன்றொடு - இடையர்வீட்டிலுள்ள பசுவின்கன்றுகளுடனே, அன்றில - பகைத்தலில்லாதனவும், பிரிவு ஒல்லா-(ஒன்றைவிட்டொன்று) பிரிந்து வாழ்வதற்கும் உடன்படாதனவுமாகி, விளையாடும் களியன பல - களித்து விளையாடுபவை பலவற்றை, காணாய்—; (எ - று.)

புலிக்குட்டியும் யானைக்கன்றும் பசுவின்கன்றுகளோடுசேர்ந்து பகைமையென்பது சிறிதும் இல்லாமல் ஒன்றைவிட்டொன்று பிரிவதற்கும் மனமில்லாது மிக்க மனவொற்றுமையோடும் பேரன்போடும்விளையாடுபவற்றைக் காணென்கின்றனனென்க. வயமாவின்குருளை - சிங்கக்குட்டியென்றலும் ஒன்று. வயமாவும் யானையும் பகைமைநீங்கிப் பசுவின்கன்றோடு விளையாடுதற்குக்காரணம், இராமபிரான் அவ்வனத்துவந்ததனாலென்றவாது, அவ்வனம் முனிவருறைவிடமாதலினாலென்றவாது கொள்க. பி - ம்:—[1]அன்றல. [2]பிரிகில்லா, பிறிவொல்லா. [3]கன்றொடுமுடனாடும். [4]களிபது. (எகக)

கக. அகில்[1]புனை குழல் [2]மாதே யணியிழை யெனலாகு
நகுமலர் நிறைமாலைக் [3]கொம்பர்க ணதிதோறுந்
துகில்புரை [4]நுரைநீரிற் றோய்வன துறையாடு
முகிழிள முலையாரின் மூழ்குவ பலகாணாய்.

(இ - ள்.) அகில் புனை குழல் மாதே-அகிற்புகையூட்டப்பெற்ற கூந்தலையுடைய மங்கையே! அணி இழை எனல் ஆகும் நிறை நகு மலர் மாலை கொம்பர்கள் பல - அலங்கரித்தற்குஉரிய ஆபரணமென்று சொல்லத்தக்க நிறைய மலர்ந்த மலர்த்தொகுதியையுடைய பூஞ்செடிக்கொம்புகள் பல, துறைஆடும் முகிழ் இளமுலையாரின் - நீர்த்துறையிலேநீராடுகின்ற அரும்பும் இளையமுலையையுடைய மகளிரைப்போல, நதிதோறும்-நதியினிடங்களிலெல்லாம், துகில் புரை நுரை நீரில் தோய்வன மூழ்குவ - வெண் பட்டாடையையொத்த நுரைமணமுள்ளநீரிலே படிந்துமூழ்குவனவற்றை, காணாய்—; (எ - று.)

காற்றினால் அசைக்கப்படுந்தோறும் நீரிற் பூஞ்செடிக்கொம்புகள் பல படிந்து மூழ்குவன, மகளிர் நீர்த்துறையிற்படிந்துமூழ்குபவரைப் போலு மென்றார்; தற்குறிப்பேற்றவுவமையணி. கொம்புகள் மகளிர்க்கும், அவற்றிற் பூத்துள்ள மலர்த்தொகுதிகள் - பல அணிகலன்களுக்கும் உவமை யெனக் காண்க. பி-ம்:—[1]புரை. [2]மானே. [3]கொம்புகள். [4]நறு, திரை. (எகஉ)

கஉ. முற்றுறு முகை[1]கிண்டி [2]முயல்கில [3]சிறுதும்பி
விற்றிரு நுதன்[4]மாதே யம்மலர் விரிகோங்கின்
சுற்றுறு மலரேறித் துயில்வன சுடர்மின்னும்
பொற்றக டுறு[6]நீலம் [7]புரைவன பலகாணாய்.

(இ - ள்.) வில் திரு நுதல் மாதே-வில்லைப்போன்ற அழகியநெற்றியை யுடைய பெண்ணே!—முற்றுறு முகை கிண்டி முயல்கில-முற்றிய மலர்களி னரும்புகளைக் குடைந்துகொண்டு (அவற்றினுள்ளே செல்ல) முயற்சிசெய்யா தனவான, சிறு தும்பி-சிறுவண்டுகள், அம் மலர் விரி கோங்கின் சுற்று உறு மலர் ஏறி-அழகிய மலர்கள்மலரப்பெற்ற கோங்கமரத்தின் சுற்றிலும்பொருந் திய மலர்களிலேறி, துயில்வன - (ஆங்குள்ளமதுவைப்பருகி) உறங்குவன வாய்,—சுடர் மின்னும் பொன் தகடு உறு நீலம் புரைவன - ஒளி விளங்கு கின்ற பொற்றகட்டிலே பொருந்திய நீலரத்தினங்களை யொப்பன, பல-பல வற்றை, காணாய்—; (எ - று.)

முற்றியஅரும்புகளைக் குடைந்துகொண்டு தேனைப்பருகும்முயற்சியற் றுக் கோங்குமரத்தைச்சுற்றி மலர்ந்த மலர்களிற் படிந்த சிறுவண்டுகள் பல, பொற்றகட்டிலழுத்தின நீலமணிகள்போலவிளங்குவதைக் காணென்கின் றானென்க. மலரும்பருவத்தையடைந்து முற்றிய முகைகளிற் குடைந்து சென்றுற் புதுத்தேனைப்பெறலாமாயினும் சிறுவண்டுகளாதலால் அங்ஙனஞ் செய்யாது ஏற்கவேமலர்ந்த கோங்கின்மலரிற் கிடைக்கும் பழந்தேனை நுகர் ந்து உறங்கினவென்க. 'சிறு' என்பது-கருத்துடையடைமொழியாம். பி-ம்:— [1]நீண்டி. [2]முரல்கில. [3]சில. [4]மானே. [5]இன்மலர். [6]சீலம். [7]பொருவன.(எகங)

கங. கூடிய நறைவாயிற் கொண்டன விழி[1]கொள்ளா
மூடிய [2]களி[3]மன்ன [4]முடுகின நெறிகாணா
வாடிய சிறைமாவண் [5]டந்தரி னிசை[6]முன்னாப்
பாடிய பெடை[7]கண்ணா வருவன பலகாணாய்.

(இ-ள்.) கூடிய நறை வாயில் கொண்டன-மிக்கதேனை வாயிற்கொண் டனவும், விழி கொள்ளா மூடிய களி மன்ன முடுகின நெறி காணா - (அங்ங னம் மதுவையுண்டமையாற்) கண்விழித்துப்பார்க்கமாட்டாமல் (கண்ணை) மூடிக்கொள்ளுமாறு பெருங்களிப்புப்பொருந்த விரைந்துசெல்லுதற்குஉரிய வழியைக்காணமாட்டாதனவுமான, ஆடிய சிறை மா வண்டு-ஆடிக்கொண்டு

செல்லுந்தன்மையுள்ள பெரிய ஆண்வண்டுகள், அந்தரின்-குருடரைப்போல, இசை முன் ஆ பாடிய பெடை கண் ஆ-இசைப்பாடலை முன்புறமாகப்பாடிய வண்ணஞ்சென்ற பெண்வண்டுகளைக் கண்ணாகக்கொண்டு, வருவன பல - பல வருவனவற்றை, காணாய்—; (எ - று.)

நறையைப் பருகிய களிப்பாற் செல்லும்நெறியைக் கண்விழித்துக்காண மாட்டாத ஆண்வண்டுகள் முன்புறத்தே பெண்வண்டுகள் பாடிக்கொண்டு செல்ல அந்தஇசையைப்பற்றியபடியே நெறியே செல்லலாயின வென்க. அந்தர், ஒலிபற்றிச்செல்லுதலில் உவமையாவர். பாடியவண்ணம் முன்செல் லும் பெண்வண்டு செல்லும்வழியையுணர்தற்குக் கருவியாயிருத்தலால், 'முன்னாப்பாடியபெடை கண்ணா' என்றார். மாவண்டு-கரியவண்டுமாம். பி-ம்:— [1]கொள்ள. [2]கிளி. [3]மன்னு. [4]முடுகிய. [5]அந்தரின்விசை. [6]முன்னம். [7]கண்ணாய்.

கச. கன்னிய ரணிகோலங் கற்றறி குந[1]ரென்னப்
பொன்னணி [2]நிறவேங்கைக் [3]கொம்பர்கள் புதுமென்பூ
வன்னமென் னடையாய்நின் [4]னளகநன் னுதலப்புஞ்
சின்ன[5]மென் மலர்மானச் சிந்துவ பலகாணாய்.

(இ - ள்.) அன்னம் மெல் நடையாய் - அன்னம்போல் மெல்லியநடை யையுடையவளே!—பொன் அணி நிறம் வேங்கை கொம்பர்கள் பல-பொன் னின்அழகியநிறம்வாய்ந்த (மலர்களோடுகூடிய) வேங்கைக்கிளைகள் பல,— கன்னியர் அணி கோலம்-கன்னிப்பெண்கள் அணிகின்ற கோலத்தை, கற்று அறிகுநர் என்ன-கற்றுப்பழகுபவர்போல, புது மெல் பூ-மெல்லிய புதுமலர் களை, நின் அளகம் நல் நுதல் - நின்னுடைய அளகத்தோடுகூடிய அழகிய நெற்றிக்குநேரே, அப்பும் மெல் சின்னம் மலர் மான-(நெற்றியிலே) அப்பு கின்ற மெல்லிய சின்னப்பூவை யொப்ப, சிந்துவ-சிந்துவனவற்றை, காணாய்-.

வேங்கைக்கொம்புகள் நின்னுடைய நெற்றிக்குநேராக மெல்லிய பொன் னிறப்பூவைச் சிந்துபவை, நின் நுதலில் அப்புஞ் சின்னப்பூவைச் சிந்து வனவற்றைப் போலு மென்க. அங்ஙனம் அப்புதற்குஉரிய சின்னப்பூவைச் சிந்துவதனால், வேங்கைக்கொம்புகளை 'கன்னியரணிகோலங் கற்றறிகுநரெ ன்ன' என்று குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]ஒப்ப. [2]நற வேங்கைக், நிறக்கொங்கைக். [3]கோங்குகள். [4]அளிவளரளகப்பூஞ். [5]நன். (௭௧௫)

கரு. மணங்கிளர் மலர்[1]வாச மாருதம் [2]வரவீசக்
கணங்கிளர் தருசுண்ணங் [3]கல்லுடை யன[4]கானத்
தணங்கினு மினியாயுன் னணிவட முலை[5]முன்றிற்
சுணங்கின மவைமானத் துறுவன [6]வவைகாணாய்.

(இ-ள்.) அணங்கினும் இனியாய்-தெய்வமகளிரைக் காட்டிலும் அழகு டன் தோன்றுபவளே! உன் வடம் அணி முலை முன்றில் சுணங்கு இனம் அவை மான-உன்னுடைய முத்தமாலையையணிந்த தனங்களின் முன்னிடத்

தேயுள்ள தேமலின் திரள்களை யொப்ப,—வாசம் மாருதம் வர வீச - நறுமண முள்ள காற்று மிக வீசுவதனால், மணம் கிளர் மலர்-வாசனை மிகுகின்ற மலர் களின், கணம் கிளர் தரு சுண்ணம்-கூட்டமாக விளங்குகின்ற மகரந்தப்பொடி கள், கல் உடையன கானத்து-கற்களைக்கொண்டனவான காட்டினிடத்தே, துறுவன அவை-நெருக்கமாகச் சிந்திக் கிடப்பனவற்றை, காணாய்—; (எ-று.)

காற்றுவீசுவதனால் மலர்களிலுள்ள மகரந்தப்பொடிகள் காட்டினிடையே யுள்ள கற்களின்மீது சிந்தி,தனங்களின்மீதுபடரும்தேமலினத்தை யொத்துத் தோன்றுமென்க. கற்களுக்குத் தனங்களும்,மகரந்தப்பொடிகட்குத் தேமலின மும் உவமையெனக்காண்க. **தற்குறிப்பேற்றவுவமையணி.** கல்லுடையன கானத்து என்றாரேனும் கானம் உடையன கல்லத்து என்க. காற்றுக்கு வடமொழியிலே கந்தவஹன் [நறுமணத்தைத்தாங்குவது] என்று ஒரு பெய ருள்ளதற்கேற்ப, 'வாச மாருதம்' என்றார். வடமணி யென்றது - முலைக்கு இயற்கையடைமொழி.தெய்வமகளிரும் விரும்புங் கட்டழகுடையா யென்பார் 'அணங்கினுமினியாய்!' என்றார். பி-ம்:—[1] வாரும். [2] அவிர்வாசக், அயர்வாசக். [3] கல்லிடையன, கள்ளுடையன. [4] கண்டாய். [5] முன்னர்ச். [6] பல. இச்செய்யுள், சில பிரதியில் "வாள்புரை" (௧௭) என்ற செய்யுளின் பின்னர்க் காணப்படு கின்றது; சிலபிரதியிற் காணப்படவில்லை. சிலபிரதியில் "கன்னியர்" (௧௯) என்பது இதன்பின் உள்ளது. (௭௧௬)

௧௬. அடியிணை [1]யுறைகல்லா வென்றுகொ லதரெங்கு
மிடை[2]யிடை மலர்சிந்து [3]மினமர மிவைகாணாய்
கொடியினொ டிளவாசக் [4]கொம்பர்கள் [5]குயிலேயுன்
றுடிபுரை யிடை[6]நாணித் துவள்வன [7]விவைகாணாய்.

(இ-ள்.) 'அடி இணை-உன்னுடைய பாதங்கள், உறை-(கற்கள்) உறுத்து வதை,கல்லா-கற்றறிந்தனவல்ல,' என்று கொல்-என்று கருதித்தானோ,அதர் எங்கும் - (நடந்துசெல்லவேண்டிய) வழிமுழுதும், இடை இடை - அவ்வவ் விடங்களில், மலர் சிந்தும் - புஷ்பங்களைச் சிந்தியுள்ளன வென்னுமாறுள்ள, இனம் மரம் இவை - தொகுதியாயுள்ள இம்மரங்களை, காணாய்—; குயிலே - குயில்போன்ற இனிய குரலையுடையவளே!—கொடியினொடு - கொடிகளு டனே, வாசம் இள கொம்பர்கள் இவை-(மலர்நிறைந்திருத்தலால்), நறுமணங் கொண்ட இந்த இளங் கொம்புகள், உன் துடி புரை இடை நாணி துவள் வன-உன்னுடைய உடுக்கையையொத்த இடைக்கு ஒப்பாகமாட்டாது வெள்கி த்துவள்வனவற்றை, காணாய்—; (எ - று.)

மலர்மரங்கள் செல்லும்வழியிடமுழுதும் மலர்களைச் சிந்தியிருப்பது, சீதையின்பாதங்கள் கற்கள் உறுத்த நடந்துசென்று பழகாதனவாதலால் அம் மங்கையின் பாதங்கட்கு இந்தக்கல்வழி யுறுத்தாதிருக்கவேண்டுமென்று புஷ் பங்களைப்பரப்பிவைத்தனபோலு மென்று, முன்னிரண்டடிகளிற் குறித்தார். மலர்கள் மிகுதியாகப் பூத்திருப்பதனால் அப்பாரத்தைத் தாங்கமாட்டாது துவள்கின்ற கொடிகளையும் பூங்கொம்பர்களையும் சீதையின் இடைக்குஉவமை

யாகமாட்டாமல் நாணித் துவள்வனபோலு மென்று பின்னிரண்டடிகளிற் குறித்தார்: இவையிரண்டும்-தற்குறிப்பேற்றவணிகளாம். பி-ம்:—[1]பொறை. [2]மிடை. [3]இள. [4]கொம்புகள். [5]குயிலாய். [6]நாண, மான. [7]அவை, பல. இச் செய்யுள் கஉ-ஆம்பாடலுக்குப் பின் சில பிரதியிற் காணப்படுகின்றது.(எகஎ)

கஎ. வாள்புரை விழியாயுன் [1]மலர்புரை யடிமானத்
தாள்புரை தளிர்வைகுந் தகைஞிமி றிவைகாணாய்
கோள்புரை யிருள்வாசக் குழல்புரை [3]மழைகாணாய்
தோள்புரை யிளவேயின் [4]றொகுதிக ளிவைகாணாய்.

(இ-ள்.) வாள் புரை விழியாய்-வாட்படையையொத்த கண்களையுடையவளே! உன் - உனது, மலர் புரை அடி - தாமரைமலரையொத்த பாதங்களிலும், மானம் தாள் புரை தளிர் - பெருமைபொருந்திய (உன்) பாதங்களையொத்த தளிர்களிலும், வைகும் - தங்குகின்ற, தகை - தன்மையையுடைய, ஞிமிறு இவை - இந்தவண்டுகளை, காணாய்—; கோள் புரை இருள் - (பண்டங்களைத் தெரியவொட்டாமற்) கொள்ளுந் தன்மையையுடைய மிக்கஇருளைக் கொண்ட, வாசம் குழல் - நறுமணமுள்ள கூந்தலை, புரை-ஒத்த, மழை-மேகங்களை, காணாய்—; தோள் புரை இள வேயின் தொகுதிகள் இவை-தோளையொத்த இந்த இளவேயின் தொகுதிகளை, காணாய்—; எ - று.)

மிஞிறு, மழை, வேயின்றொகுதி இவற்றைக் காட்டுகின்றா னென்க. தாள்புரைதளிர், குழல்புரைமழை, தோள்புரைவேய்-எதிர்நிலையுவமையணி. கோள்புரையிருள் - "கொள்கின்ற கோளிருள்" என்றார், ஆழ்வாரும். சில வேளைகளில் அடிகளை மலரெனமயங்கி ஞிமிறு அங்குவைகுந்தன்மையன வென்பார் 'மலர்புரையடிவைகும்ஞிமிறு' என்றார். இனி, மலரைப்புரையும் அடியையொப்பத் தாளோடுகூடிய தளிரென்றுபொருள்கூறின், தளிருக்கு உவமையாகக்கூறப்பட்டுள்ள அடிக்கு மலரை உவமைகூறியதா மாதலால், அது, அடுத்தியல்வரலுவமைஎன்னும் உவமைக்குற்றமாம். "அடுக்கிய தோற் றம் விடுத்தல் பண்பே" என்பதுதொல்காப்பியம். இனி,[1]மலரடி யணி என்ற பாடம் சிறக்குமென்க. பி - ம்:—[1]மலரடியவை. [2]மிஞிறிவை, ஞிமிறுவை. [3]மலர். [4]தொகுதிரளவை, தொகுதிகளவை. (எகஅ)

கஅ. பூநனை சினைதுன்றிப் புள்ளிடை யிடை[1]பம்பி
[2]நானிற நளிர்வல்லிக் கொடி[3]நவை யிலபல்கி
மானின மயின்மாலை குயிலினம் [4]வருகானந்
தீநிகர் தொழிலாடைத் திரை[5]பொரு வனபாராய்.

(இ - ள்.) மான் இனம்-மானின்கூட்டங்களும், மயில் மாலை - மயிலின் கூட்டங்களும், குயில் இனம்-குயிற்கூட்டங்களும், வரு - சஞ்சரிக்கப்பெற்ற, கானம் - இந்தக் காடானது,-பூ நனை சினை துன்றி - பூவரும்புகளையுடைய கிளைகளோடு நெருங்கி, புள் இடைஇடை பம்பி-பறவைகள் இடையிடையே நெருங்கி, நால் நிறம் நளிர் வல்லி கொடி நவை இல பல்கி - பலவகைநிற முள்ள குளிர்ந்த வல்லியெனப்படுங் கொடிகள் குற்றமில்லாதன மிகுந்து, தீ நிகர் தொழில் திரை ஆடை - தீயைநிகர்த்துப் பூத்தொழில்களமைந்த பல் வண்ணத்திரையாடையை, பொருவன - ஒத்திருப்பனவற்றை, பாராய்—.

சினைதுன்றிப் புள்பம்பிப் பலநிறக்கொடிகள்மல்கிய கானம் சித்திரத்தொழிலமைந்த பலவண்ணத்திரைச்சீலை பொருவுவதைக் காண்பா யென்கின்றன னென்க. 'மானினம் மயின்மாலை குயிலினம் வரு'என்பது-கானத்திற்கு இயற்கையடைமொழி; இனி, திரையாடையில் மானினம் முதலியனவும் சித்திரத்தொழிலாக அமைந்துள்ளதனுல் இங்ஙனம் கூறினு ரென்றலும் ஒன்று. கானத்து மரங்களிற் செந்தளிர் எங்கும் பரவியிருப்பதால், அந்தக் கானகத்தைத் தீங்கர் ஆடையென்றல் ஏற்கும். பி-ம்:—[1]கொம்பின், நம்பித். [2]தானளிர்வனவல்லிக். [3]பலபலதங்கி, அளவிலமல்கி, நவையிலமல்கி, நவையிலபகல். [4]வதி. [5]புரள்வன. (௭௧௯)

௧௯.—இராமன் பிராட்டிக்கு வனவாசத்தைக் காட்டியவண்ணம்செல்கையிற் சூரியன்அத்தமிக்க, அப்போதுபுலப்பட்ட சித்திரகூடமலையைக் காட்டல்.

> [1]என்றனன் மடவாளோ டினிதினின் விளையாடிப்
> பொன்றிணி திரடோளான் போயின னெறிபோதுஞ்
> சென்றது [2]குடபாலத் திருமலை யிதுவன்றே
> வென்றனன் வினைவென்றோர் மேவிட மெனலோடும்.

(இ - ள்.) மடவாளோடு-(தன் மனைவியாகிய) மடப்பமுள்ள சீதாதேவியுடனே, பொன் திணி திரள் தோளான்-பொன்னுபரணங்களை நெருங்கப் பூண்டுள்ள திரண்டதோளையுடையவனுன ஸ்ரீராமன், என்றனன் - என்று கூறி, இனிதினின் விளையாடி - இனிமைபாக விளையாடிக்கொண்டு, நெறி போயினன் - (சித்திரகூடத்தைநோக்கிச் செல்லும்) வழியைப் பிடித்துச் சென்றான்; (அப்போது), போதுஉம் குடபால் சென்றது - சூரியனும் மேற்றிசையைச்சேர்ந்தான் [அத்தமிக்கலாயினுன்]; (அக்காலத்துத் தான் செல்லக் கருதிய சித்திரகூடமலை கண்ணுக்குத் தூரத்திற் புலப்பட),—(இராமன்),— வினை வென்றோர் மேவு இடம்-இருவினையை(த் தம்முடையதவமகிமையால்) வென்றவராகிய முனிவர் வாழ்கின்றஇடமான, அ திருமலை - (நாம் செல்லக் கருதிய)அந்தச்சிறந்தசித்திரகூடமலை, இது அன்றே-(கண்ணுக்கு தெரிகின்ற) இதுவல்லவோ?என்றனன்—; எனலோடும்-என்றுகூறிக்கொண்டிருந்தவளவில்,-(எ-று.)—"பரத்துவனெனுநாமப்பரமுனிபவரோயின் மருத்துவனனையானைவரவெதிர்கொளவந்தான்" என அடுத்தகவியோடு தொடர்ந்துமுடியும்.

போது குடபால் சென்றதுஎன்றது - சூரியன் அத்தமித்தா னென்றவாறு. சூரியன் உதித்தானென்பதைச் சூரியன் கீழைத்திசையிற்சேர்ந்தானென்றும், அத்தமித்தலை மேலைத்திசையைச் சூரியன் சேர்ந்தானென்றும் கூறுவர் கவிஞர். கீழ்க் கங்கைப்படலத்தில் "சித்திரகூடத்துச்சென்னெறிபகர்" என்று வினவினதலால், இராமபிரான் அம்மலையை 'அத்திருமலையிதுவன்றே' என்கின்றுன். போது-போதினையுண்டாதற்கு முக்கியகருவியாயிருக்குஞ் சூரியனுக்கு, ஆகுபெயர்: "வாழ்நாட்கலகாவயங்கொளிமண்டிலம்" என்றார், பிறரும். பி-ம்:—[1]என்றுநன். [2]குடபாறை, குடபாலே. [3]என்றரு, என்றிரு. (௭௨0)

௨0—பரத்துவாசமுனிவன் இராமபிரானை எதிர்கொள்ள அங்குவருதல்.

அருத்தியி னகம்விம்மு [1]மன்பின னெடுநாளிற்
[2]றிருத்தின தவ[3]முற்றிற் றென்றுநற் றெரிகின்றான்
பரத்துவ னெனுநாமப் பரமுனி பவநோயின்
மருத்துவ னனையானை வரவெதிர் கொளவந்தான்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அருத்தியின் அகம் விம்மும் அன்பினன் - (இராமபிரானைக் காணப்போகின்றோமென்று மகிழ்ச்சியினால் மனம்பூரிக்கின்ற அன்பையுடையவனும், நெடு நாளில் திருத்தின தவம் முற்றிற்று என்று நல் தெரிகின்றான் - நெடுநாளாக நேர்மைபெறச்செய்த தவம் பயனைவிளைக்கும் பக்குவத்தையடைந்ததென்று (தன்மனத்தினுள்ளே) நன்றாக உணர்ந்தறிபவனுமாகிய, பரத்துவன் எனும் நாமம் பரமுனி - பரத்துவாசனென்ற பேரையுடைய அந்தச் சிறந்தமுனிவன், பவம் நோயின் மருத்துவன் அனையானை - பிறவி நோயைப் போக்குவதற்கு வைத்தியன்போன்றவனான அந்த இராமபிரானை, வரவு எதிர் கொள-வருகையை யெதிர்கொள்ளுமாறு, வந்தான்—; (எ - று.)

பரமுனி-வடசொற்றொடர்: யாரினும்பரனான [சிறந்தவனான] முனிஎன்க. பவநோயின் மருத்துவனனையான் - "எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்று, மொருத்தரு மிப்பிறவியென்னும் நோய்க்குமருந்தறிவாருமில்லை, மருத்துவனாய்நின்றமாமணிவண்ணா மறுபிறவிதவிரத், திருத்தியுன் கோயிற்கடைப்புகப்பெய்" என்பது, பெரியார் பாசுரம். மருத்துவன்-நோயைப் போக்க மருந்துதருபவன்; வைத்தியன். பரத்துவன் - பாரத்வாஜனென்பதன் திரிபு. ஸ்ரீராமன் முதலியோர் ஓடத்தினாற்கடந்து கங்கையின் தென்கரையைச் சேர்ந்ததும், காட்டுவழியாக நடந்து வத்ஸதேசத்தைச்சார்ந்து அன்றிரவு ஆங்குள்ளதொரு ஆலமரத்தினடியேதங்கி, விடிந்த பின்பு பயணமாகிப் பெரிய ஆரணியங்களில்நுழைந்து என்றும்பாராத பலவகைக் காட்சிகளைப் பார்த்த வண்ணம் கங்காயமுனாநதிகள் சேருவதாகிய பிரயாகையில் பரத்துவாசமுனிவனின் ஆச்சிரமத்தைநோக்கிநடந்து சாயங்காலம் அவ்வாச்சிரமத்தையடைந்து காத்திருந்து அக்கினிஹோத்திரஞ் செய்துவிட்டு வெளிவந்த பரத்துவாசமுனிவனைக்கண்டு பணிந்து தம்மையின்னாரென்று தெரிவிக்க, அம்முனிவன் அர்க்கியம் முதலியன அளித்து உபசரித்துக் காய்கிழங்காதிய உணவுகளையும் அளித்துத் தங்கியிருக்கஇடத்தையும் ஏற்படுத்திக்கொடுத்தனனென்று முதனூல் கூறும். பி - ம்:—[1]அன்பினின். [2]திருத்தியவினை. [3]முற்றிற்றின்றெனா, முற்றித்திருந்தனல், முற்றிற்றென்றனன். (எ௨௧)

௨௧.—இதுவும், அடுத்த கவியும் - பரத்துவாசமுனிவனது வருணனை.

குடையின னிமிர்கோலன் குண்டிகை யினன்மூரிச்
சடையின [1]னுரிமானின் சருமனன் மரநாரி
னுடையினன் மயிர்நாலு முருவின னெறிபேணு
நடையினன் மறைநாலு [2]நடவி றருநாவான்.

(இ - ள்.) குடையினன் - குடையைவைத்துக்கொண்டிருப்பவனும், நிமிர் கோலன் - ஓங்கிய தண்டத்தை யேந்திநிற்பவனும், குண்டிகையினன் - ஜலபாத்திரத்தைக் கொண்டிருப்பவனும், ஊரி சடையினன் - மிக்க சடைமுடியையுடையவனும், உரி மானின் சருமன் - உரிக்கப்பட்ட மான்றோலைப் போர்த்திருப்பவனும், நல் மரம் நாரின் உடையினன் - அழகிய மரநாராலியன்ற ஆடையையுடுத்துள்ளவனும், மயிர் நாலும் உருவினன் - மயிர்தொங்குகின்ற வடிவத்தையுடையவனும், நெறி பேணும் நடையினன் - வழியிற் (பிறவுயிர்கட்கு நலிவுநேராதபடி) கவனித்துச்செல்லும் நடையையுடையவனும், மறை நால் உம் நடம் நவில் தரு நாவான் - நான்குவேதங்களும் நர்த்தனஞ் செய்கின்ற நாவையுடையவனும்,—(எ - று.)

ஒருவனிடத்துச் செல்வம் மிகுதியாக இருப்பின், 'இவனிடத்து இலக்குமி தாண்டவமாடுகின்றாள்' எனவும், ஒருவனிடத்து விசஷை மிகுதியாக இருப்பின் 'இவன் நாவில் நாமகள் தாண்டவமாடுகின்றாள்' எனவும் கூறும் உலகவழக்குப்பற்றி, 'மறைநாலுநடநவிறருநாவான்' என்றார்: உலகவழக்கு நவிற்சியணி. "பரத்வாஜோஹ த்ரிபிராயுர்பிர் ப்ரஹ்மசர்யமுவாஸ [பரத்துவாசனென்பவன் முந்நூறுவருஷகாலம் பிரமசரியவிரதம் பூண்டுவசித்தான்]" என்று வேதங் கூறுதற்கு ஏற்ப, இங்குப் பரத்துவாசமுனிவனை வருணித்தனர் கவியென்னலாம். "நூலேகரகம் முக்கோன்மணையே, யாயுங்காலை யந்தணர்க்குரிய" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தைக்கொண்டு இசசெய்யுளைக் கவி யாரம்பித்திருக்கலாம். பி - ம்:—[1]உழையின்சான்மரையினன், உழையென்றேற்றறையினன், மானின்சான்மரையினன், உழைமானின்றோலினன், உழையின்றுசனன் மரையினனேரின். [2]நவின்றன. (எஉஉ)

உஉ. செந்தழல் [1]புரிசெல்வன் றிசைமுக முனிசெவ்வே
[2]தந்தன வுயிரெல்லாந் தன்னுயி ரெனநல்கு
மந்தண [3]னுலகேழு [4]மமைமெனி னமரேச
னுந்தியி னுதவாமே யுதவிடு தொழில்வல்லான்.

(இ - ள்.) செந்தழல் புரி செல்வன் - செந்நிறமுள்ள அக்கினியைத் தவறாமல் நாடோறும்வளர்க்கின்ற சீமானும், திசைமுகம் முனி செவ்வே தந்தன உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும் அந்தணன் - நான்குதிக்கைநோக்கிய நான்குமுகங்களையுடைய பிரமதேவன்படைத்த பிராணிகளையெல்லாம் தன்னுயிரைப்போலக்கருதிப் பாதுகாக்கின்ற அழகியகுளிர்ந்த அருளையுடையவனும், உலகு ஏழ் உம் அமை எனின் அமரேசன் உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான் - ஏழுலகங்களையும் படையென்றாலும் தேவாதிதேவனாகிய திருமால் (தன்) நாபீகமலத்தினின்று (அண்டங்களை) உண்டாக்காதிருக்கையிலும் (தான்) படைக்குந்தொழிலைச்செய்யவல்ல ஆற்றல்படைத்தவனுமாகிய,—(எ - று.)—"பரத்துவனெனுநாமப் பரமுனி * * * எதிர்கொளாவந்

தான்" என உ௦ - ஆங் கவியோடு முடியும். இனி "அம்முனி" என மேல் வருவதற்கு அடைமொழியாக்கி உரைத்தலும் உண்டு.

முதலிரண்டடி - பரத்துவாசமுனிவனுடைய பெருங்கருணையையும், பின்னிரண்டடி - அம்முனிவனுடைய பேராற்றலையும் விளக்கும். பின்னிரண்டடிகளில், அமரேசன் தன்னுந்தியினின்று அண்டங்களை யுதவ அதன்பிறகு படைப்புத்தொழிலைப் புரியும் பிரமதேவனினும் இந்தப்பரத்துவாசமுனிவனுக்கு ஏற்றத்தை விளக்கியது - வேற்றுமையணியின்பாற் படும். தீயோம்பல் அந்தணர்க்குச் செல்வமாகையால் 'செந்தழல் புரிசெல்வன்' என்றார். "முத்தீச்செல்வத்திருபிறப்பாளர்" என்ற திருமுருகாற்றுப்படையும் காண்க. பி-ம்:—[1]வரு, தரு. [2]நந்தலில். [3]உலகெல்லாம். [4]அமைதியின். (எஉங)

உங.—இராமபிரான் முனிவனை வணங்க, அம்முனிவன் இராமனது தாபசவேஷத்தைக் கண்டு வருந்துதல்.

> அம்முனி வரலோடு [1]மனகனு மலர்தூவி
> மும்முறை [2]தொழுதானம் [3]முதல்வனு மெதிர்புல்லி
> யிம்முறை யுருவோ[4]நா [5]மெய்துவ தெனவுள்ளம்
> விம்மின [6]னிழிகண்ணீர் விழிவழி யுகநின்றான்.

(இ - ள்.) அ முனி - அந்தப்பரத்துவாசமுனிவன், வரலோடுஉம்-வந்தவளவிலே,—அனகன் உம் - குற்றமற்றவனாகிய இராமபிரானும், மலர் தூவி - புஷ்பங்களைக்கொண்டு அருச்சித்து, மும் முறை தொழுதான்-மூன்றுமுறை வணங்கினான்; அ முதல்வன் உம் - முதன்மைபெற்ற அம்முனிவனும், எதிர் புல்லி - அவ்விராமபிரானெதிரே சென்று அணைத்து, 'நாம் எய்துவது இ முறை உருஒ - நீர் அடைவது இப்படிப்பட்ட தவசிவடிவோ?' என-என்று, இழி கண்ணீர் விழி வழி உக - இழிகின்ற கண்ணீர் விழிவழியே பெருக, உள்ளம் விம்மினன் - மனத்திற் றுயரமடைந்து, நின்றான்—; (எ - று.)

இராமன் வணங்கிநிற்க, அவனைக் கண்ட பரத்துவாசன் அப்பிரானைத் தழுவி அவன்தாபசவேஷத்துடன் இருப்பதற்காகக் கண்களினின்று சோகக் கண்ணீர்பெருக, 'இங்ஙனம் தாபசவேஷத்துடனிருக்கும்படி நேர்வதே!' என்று நொந்து மனத்துயரத்துடன் நின்றனனென்பதாம். நாம் - தன்மைப் பன்மை உயர்வுப்பொருளையுணர்த்த முன்னிலையிடத்து வந்தது. இது "ஓரிடம் பிறவிடந் தழுவலுமுளவே" என்றவாறு வருவதோர் இடவழுவமைதி. இங்ஙனம்வருதலை, "நாமரையாமத்தென்னோ வந்துவைகியதுவே"என்ற திருக்கோவையாருக்குப் பேராசிரியர் 'நாம் என்னும் தன்மையுளப்பாட்டுத் தன்மை உயர்வுதோன்ற முன்னிலைக்கண் வந்தது'என்று உரைத்தமையாலும் உணரலாம்; "நங்கைபிவரென நெருநலடைந்தவரோ நாமென்ன" என்பர், பின்னும். இங்ஙனம்வருதல் உலகவழக்கத்திலும் உண்மை காண்க. பி-ம்:—[1]அழகனும். [2]தொழுதானை. [3]முனிவனும். [4]நான். [5]காண்குவது. [6]அழி. (எஉச)

### உச.—'தாபசவேஷத்துடன் வருவதற்குக் காரணம் யாது?' என்று அம்முனிவன் வினவுதல்.

அகலிட நெடிதாளு மமைதியை யதுதீரப்
புகலிட மெமதாகும் புரையிடை [1]யிதுநாளிற்
[2]றகவில தவவேடந் தழுவினை வருவானே
னிகலடு சிலைவீர விளையவ னொடுமென்றான்.

(இ - ள்.) இகல் அடு சிலை வீர-பகைவரைக் கொல்லவல்ல வில்வீரனே! (நீ), இது நாளில்-இக்காலத்தில், அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை-பரந்த பூமியிடம்முழுவதையும் நீண்டகாலம் ஆளுதற்குஏற்ற தகுதியையுடையாய்;அது தீர-அத்தன்மைநீங்க, எமது புகல்இடம் ஆகும் புரையிடை-(முனிவர்களாகிய) நாங்கள் தங்கிவாழும்இடமாகிய தபோவனத்தில், தகவு இல தவம் வேடம் தழுவினை-(உனதுபருவத்துக்கு) ஏலாத தாபசவேடத்தைமேற்கொண்டவனாய், இளையவனொடும்-தம்பியாகிய இலக்குமணனுடனே, வருவான்-வருவது, ஏன் - என்ன காரணம்? என்றான் - என்றுவினவினான்.

முதுமைப்பருவத்திலே புத்திரரிடத்துஇராச்சியபாரத்தைவைத்துவிட்டுத்தாபசவேடம்பூண்டு தவஞ்செய்யுமாறு முனிவர்வசிக்குமிடங்களில் வருவது இட்சுவாகுகுலமன்னவர்க்கு வழக்கமுண்டு; நீ பாலியத்திலேயே இங்ஙனம் வந்திட்டாயே; இது என்னகாரணம்பற்றி?என்று முனிவன் வினவினான். ஒருகால் பகைவர் பொருது இராச்சியத்தை வலியக்கவர்ந்துகொள்ள நீ வந்திட்டாயோ என்று ஐயுறுவதற்கும் இடனில்லாத மகாவீரன் நீயென்பான், 'இகலடுசிலை வீர' என்று இராமபிரானை விளித்தான்; ஆகவே, இத்தொடர்மொழி - கருத்துடையடைகொளியணியாம். வருவான் - வானீற்றெச்சம் தொழிற்பெயர்ப்பொருளில் வந்தது. பி - ம்:—[1]இந்நாளில், எனநாளின். [2]தகவில்லை. (எஉரு)

### உரு.—வந்த காரணத்தை இராமபிரான் தெரிவிக்க, முனிவன் நொந்துகூறுதல்.

[1]உற்றுள பொருளெல்லா முணர்வுற வுரைசெய்தா
னற்றவ முனியந்தோ விதிதரு நவையென்பா
னிற்றது செயலுண்டோ வினியென விடர்கொண்டான்
பெற்றில டவமந்தோ பெருநில மக[2]ளென்றான்.

(இ - ள்.) உற்று உள பொருள்எல்லாம் நிகழ்ந்த செய்தி முழுவதையும், உணர்வு உற - (முனிவன்)நன்கு அறிந்து கொள்ளுமாறு, உரை செய்தான்-(இராமபிரான்) கூறினான்; (அது கேட்ட), நல் தவம் முனி - (மோட்சத்தையடைவதற்குஏற்ற) சிறந்த தவத்தையுடைய அந்தப் பரத்துவாசமுனிவன், 'இனி-இக்காலத்திலும், இற்றது-இப்படிப்பட்டதாகிய, செயல் - செய்கை (நிகழ்வது), உண்டோ—?' என என்று, இடர் கொண்டான் - பெருந்துன்பமடைந்து,—'(இது), அந்தோ-ஐயோ! விதி தரு நவை - ஊழ்வினைக்குஉரிய தெய்வம் செய்த பிழையாகும்', என்பான் - என்றுகூறுபவனாய்,—'பெரு

நிலமகள் - பெருமைபெற்ற நிலமடந்தை, தவம் பெற்றிலள் - (இக்காலத்து இராமபிரான் ஆட்சிபுரியத்) தவஞ் செய்திலள், அந்தோ—!' என்றான்-என்றுகூறினான்; (எ - று.)

இராமபிரானுற் செய்தியுணர்ந்த பரத்துவாசமுனிவன், தக்க மூத்தவனிருக்க இளையவனை யரசுபுரியுமாறு விட்டு,மூத்தவனைக் காட்டுக்குத்துரத்துவது தருமயுகங்களிற்சேர்ந்தஇக்காலத்துக்குஏற்குமோ?கலிகாலத்துச்செய்கையல்லவோ என்று முன்பு வருந்திப் பிறகு சிறிதுதேறி 'ஊழ்வினையின்கோளாறு' என்றும், 'பூமிதேவியின் தௌர்ப்பாக்கியம்' என்றுங் கூறினனென்க. பி-ம்:—[1]உற்றனை, உற்றுறு. [2]என்பான். (எஉசு)

### உசு.—பரத்துவாசமுனிவன் தயரதன்நிலையைப்பற்றிச் சிந்தித்தல்.

துப்புறழ் துவர்வாயின் றூய்மொழி [1]யவளோடு
மப்புறு கடன்ஞால மாளுதி கடிதென்று
[2]வொப்பறு [3]மகநின்னை யுயர்வன [4]முறவேகென்
றெப்பரி சுயிருய்ந்தா னென்றுணை யவனென்றான்.

(இ - ள்.) 'என் துணையவன் - எனதுநண்பனாகிய தசரதன்,—துப்பு உறழ் துவர் வாயின்-பவழத்தையொத்துச்செந்நிறமாகவுள்ள வாயையுடைய, தூய் மொழியவளோடுஉம்-இனியமொழியையுடையவளாகிய சீதையோடும், அப்பு உறு கடல் ஞாலம் - நீர்நிரம்பியகடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தை, கடிது - விரைவினில், ஆளுதி - ஆள்வாய்,' என்று - என்றுகூறிவிட்டு,—(பிறகு), 'ஒப்பு அறும் மக நின்னை-ஒப்பற்ற மகனாகிய நின்னை, உயர் வனம் உற ஏகு - பெருவனத்திற்சேருமாறு செல்வாய்,' என்று - என்றுகூறி, எ பரிசு-எவ்வண்ணம், உயிர் உய்ந்தான் - உயிருடன்வாழ்பவனானான்?' என்றான்-என்றுவினவினான்; (எ - று.)

'இராச்சியத்தை விரைவினி லாளுவாய்' என்ற வாயைக்கொண்டே 'பெருவனத்திற் சேருவாய்' என்று ஒப்பற்றநின்னைநோக்கி மொழிந்து உயிருடன் எங்ஙனம் அந்தத்தசரதனுல் வாழமுடியுமென்று சிந்தித்துக்கூறினன், பரத்துவாசமுனிவ னென்க. பி-ம்:—[1]மயிலோடும். [2]ஒப்பரு. [3]மகனுன்னை, அரசன்னை. [4]உறையேகென்று. (எஉஎ)

### உஎ.—முனிவன்தேறி இராமபிரானைத் தன்னிருப்பிடத்திற்கு அழைத்துக்கொண்டு சேர்தல்.

அல்லலு முளவின்ப மணுகலு [1]முளவன்றே
[2]நல்லவு முளசெய்யு நவைகளு [3]முளவன்றே
வில்லையொர் பயனு[4]னிவ் விடருறு [5]மிதினென்னாப்
புல்லின னுடனேகொண் டினி[6]துறை புரைபுக்கான்.

(இ - ள்.) அல்லல்உம் உள இன்பம் அணுகல்உம் உள அன்றே-துன்பமும் இன்பமும் மாறிமாறிவந்து கூடுதல் இயல்பேயன்றோ!செய்யும் நல்லஉம் உள நவைகள் உம் உள அன்றே-(இங்ஙனம் இன்பதுன்பங்கள் மாறிமாறி

உலகத்தில் விளைதற்குக்காரணம் அவரவர்) செய்யும் நல்வினைகளும் தீவினைகளும் உள்ளனவாதலன்றோ! (ஆதலால்), நான்—, இன்று - இப்போது, இடர் உறும் இதின் - வருத்தப்படுகின்ற இதனால், ஓர் பயன் இல்லை—; என்று - என்று (தன்மனத்தைத்) தேற்றிக்கொண்டு,— புல்லினன் - (இராமபிரானைத்) தழுவி, உடனே கொண்டு - தன்னுடனே யழைத்துக்கொண்டு, இனிது உறை புரை - இனிதாக வசித்தற்குஉரிய (தன்) வாழிடத்திலே, புக்கான் - போய்ச் சேர்ந்தான், (பரத்துவாசமுனிவன்); (எ - று.)

உலகத்தவர் புண்ணியபாவங்களைச் செய்வதனால் அவற்றின் காரியமாகிய இன்பதுன்பங்கள் விளைகின்றன: ஆதலால், தசரதன் தன்புதல்வனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவாழவேணுமென்று கருதி அது நிறைவேறப் பெறாமல் தன்மகனைக் கானகத்திற்குஅனுப்பி வருந்துமாறு நிகழ்ந்தது குறித்து நான் வருந்துவதிற் பயனில்லையென்று தன்மனத்தை முனிவன் சமாதானப்படுத்திக்கொண்டு, இராமன் முதலியோரைத் தன்வாழிடத்திற்கு அழைத்துக்கொண்டு போய்ச்சேர்ந்தனனென்பதாம். பி-ம்:—[1]உளவந்தோ. [2]நல்லனவுள, நல்வினையுள. [3]உளதன்றோ, உளவந்தோ, உளவென்றால். [4]இங்கு. [5]அதில். [6]உறையுளை. (எஉஅ)

அ.—தன்வாழிடத்துக்கு அழைத்துப்போன முனிவன் உண்டிஉறையுள் முதலியதந்து உபசரிக்க, இராமன்முதலியோர் மகிழ்தல்.

புக்குறை விடநல்கிப் பூசனை முறைபேணித்
தக்கன கனிகாயுந் தந்[1]துரை தருமன்பா
[2]றொக்கநன் முறைகூறித் தூயவ னுயிர்போலு
மக்களி னருளுற்றான் [3]மைந்தரு மகிழ்வுற்றார்.

(இ - ள்.) தூயவன் - பரிசுத்தகுணமுடைய பரத்துவாசமுனிவன்,— புக்கு - போய்ச்சேர்ந்து, உறைவு இடம் நல்கி - (இராமன் முதலியோர்க்கு) வசித்தற்குஉரிய இடத்தைத் தந்து, பூசனை முறை பேணி - (அதிதிகட்குச் செய்யவேண்டிய)பூசையை முறைப்படி புரிந்து, தக்கன கனி காய்உம் தந்து- (அவர்கள் உண்ணுதற்கு ஏற்ற காய்கனிகளையுந் தந்து, உரைதரும் அன்பால்- (யாவரும்பாராட்டிச்) சொல்லுதற்குஉரிய அன்போடு, தொக்க-பொருந்திய, நல் முறை கூறி-சிறந்த முகமனைச் சொல்லி, உயிர் போலும் மக்களின்-உயிர் போற்பாராட்டுதற்குஉரிய மக்களிடத்துப் (பிதா அருள்கொண்டு நடப்பது) போல, அருள் உற்றான்-அன்பு பொருந்தியிருந்தான்; (அதுகண்ட), மைந்தர் உம்-இராமலட்சுமணர்களும், மகிழ்வு உற்றார் - மகிழ்ச்சியடைந்தார்; (எ - று.)

மைந்தரைக் கூறியது - சீதைக்கும் உபலட்சணம். ஸ்ரீராமன்முதலியோர்க்குப் பரத்துவாசமுனிவன் அதிதிகட்குச்செய்யவேண்டிய முறைப்படியே உபசாரங்கள் புரிந்து, தந்தை மக்களிடத்து அன்புகொண்டிருப்பது போல அன்புகொண்டு நடப்பதுகண்டு அவ்விராமன்முதலியோர் மகிழ்ச்சியடைந்தன ரென்பதாம். 'தூயவனுயிர்போலு மக்களினருளுற்றான்' என்ப

தற்கு - பரத்துவாசமுனிவன் என்று எழுவாய் வருவித்து, பரிசுத்தகுண முடையவனாகிய தசரதமன்னவனது உயிரைப்போன்ற மக்களாகிய இராம லட்சுமணரின் அருளைப் பெற்றான் என்று உரைகூறுதலும் ஒன்று. பி-ம்:—[1]உறைதரும். [2]தொக்கன. [3]மைந்தனு மகிழ்வுற்றான். (எஉக)

உகூ.—பரத்துவாசன் இராமனைநோக்கி ஒன்றுகூறத் தொடங்குதல்.

[1]வைகின [2]ரினிதன்னா [3]ரவ்வழி மறையோனு
[4]முய்குவெ மிவனொடியா முடனுறை தலி[5]னென்பான்
[6]செய்தன னினிதெல்லாஞ் செல்வனை முகமுன்னாக்
கொய்[7]குல மலர்மார்ப கூறுவ துளதென்றான்.

(இ - ள்.) அ வழி - அந்த ஆச்சிரமத்தினிடத்தில், அன்னார் - (இராமன் முதலிய) அம்மூவரும், இனிது வைகினர் - இனிமையாகத் தங்கினார்கள்; (அப்போது), மறையோன்உம் - பரத்துவாசமுனிவனும், 'யாம் இவனொடு உடன் உறைதலின் - நாம் இந்த ஸ்ரீராமனோடு வசிப்பதனால், உய்குவெம் - நற்கதிபெறுவோம்,' என்பான் - என்றுகருதியவனாய்,—இனிது எல்லாம் செய்தனன் - (அவ்விராமனுக்கு) இனிமையானவற்றையெல்லாஞ் செய்தவனாகி, செல்வனை - சீமானாகிய இராமனை, முகம் முன்னா - முகம்நோக்கி,— கொய் குலம் மலர் மார்ப - 'கொய்யப்பெற்ற சிறந்த மலர்மாலைகளையணிந்த திருமார்பையுடையவனே! கூறுவது - (உன்னுடன்) சொல்லவேண்டுவது, உளது-ஒன்றுள்ளது, என்றான் - என்று (அதனைக்) கூறலானான்; (எ-று.)— பரத்துவாசன் கூறுவதை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க. பி-ம்:—[1]வைகினன். [2]இனிதன்னான், கதிர்நாளும். [3]அவ்வயின், அளவையின். [4]உய்குவெனிவனொடியான், உய்குவனுவனொடியான். [5]எனவந்தச். [6]செய்தவன், செய்குவான். [7]முறைமலர். (எகூ0)

வேறு.

கூ0.—இதுவும் அடுத்த கவியும் குளகம்: 'இங்குத்தானே வசிக்க' என்று இராமனைநோக்கிப் பரத்துவாசமுனிவன் கூறுதலைத் தெரிவிக்கும்.

[1]நிறையு நீர்மலர் நெடுங்கனி கிழங்குகாய் [2]நேர்ந்த
[3]குறையுந் தீயவை தூயவை குறைவில வெம்மோ
டுறையு மிவ்வழி [4]யொருங்கினி துயர்தவ முயல்வார்க்
கிறையு மீதலா தினியதோ ரிடமரி [5]தின்னும்.

(இ - ள்.) நீர் - நீரும், மலர் - மலரும், நெடு கனி கிழங்கு - மிக்க கனியும் கிழங்குகளும், காய் - காயும், நிறையும் - (இங்கு) நிரம்பியுள்ளன; நேர்ந்த தீயவை குறையும் - நேர்ந்துள்ள தீவினைகளும் போய்விடும்; தூயவை குறைவுஇல-புண்ணியங்கள் குறைதலில்லாமல் மேன்மேல்மிகும்;(ஆதலால்), இ வழி - இவ்விடத்தில்தானே, எம்மோடு ஒருங்கினில் - எம்மோடு ஒருசேர, உறையும் - (நீங்கள்) வாசஞ்செய்யுங்கள்; உயர் தவம் முயல்வார்க்கு - சிறந்த

தவத்தை முயன்றுசெய்பவர்க்கு, இறைஉம் - தங்குவதற்குஉரிய இடமும், ஈது அலாது - இவ்விடத்தையல்லாமல், இன்னும் இனியது ஓர் இடம் - இதனைக்காட்டிலும் இனியதாகிய ஓரிடம், அரிது - இல்லையாம்; (எ - று.)

'தவஞ்செய்வார்க்குவேண்டியநீர்முதலியன இங்குநிரம்பியிருத்தலோடு, இந்தக்ஷேத்திரமே தன்னிலுறைவாரது தீவினைகளையொழித்து நல்வினையைப் பெருக்கவல்லதாதலாலும், இதைப்போற் சிறந்தவேறோரிடம் இல்லாமையாலும்இங்குத்தானே வனவாசஞ்செய்யவேண்டியகாலத்தைக் கழிக்குமாறுதங்கியிருப்பீராக' என்று பரத்துவாசன் தன் வேண்டுகோளைத் தெரிவித்தனனென்க. பி - ம்:—[1]நிரையும். [2]கிடந்த. [3]குறையும். [4]உயர்தவமொருங்கினிமுயல்வார்க்கு, உயர்தவமுயலுவாரெனுமுக. [5]என்றும்.　　　　(எ௬௧)

௬௧. கங்கை யாளொடு கரியவ ளாமகள் கலந்த
சங்க மாதலிற் பிரியலன் றாமரை [1]வடித்த
[2]வங்க ணாயக [3]வயனுக்கு மருட்பெற றீர்த்த
மெங்கள் போலியர் தரத்ததன் [4]றிருத்தி[5]யீண் டென்றான்.

(இ - ள்.) (இவ்விடம்),-கங்கையாளொடு-கங்காநதியுடனே, கரியவள் - யமுனாநதியும், நாமகள் - சரசுவதிநதியும், கலந்த - ஒன்றுகூடிய, சங்கம் - சங்கமத்துறை, ஆதலின்—, பிரியலன் - (நான் இவ்விடத்தை விட்டுப்)பிரியாதிருக்கின்றேன்; தாமரை வடித்த அம் கண நாயக - செந்தாமரைமலரைத் திருத்திச்செய்தாற்போன்ற திருக்கண்களை யுடைய தலைவனே! (இந்தத் தீர்த்தம்), அயனுக்குஉம் அரு பெறல் தீர்த்தம் - பிரமதேவனுக்கும் பெறுதற்குஅரிய தீர்த்தமாகும்: எங்கள் போலியர் தரத்தது அன்று - எங்களைப் போன்றவர்கட்கு இப்படிப்பட்ட இடம் (எளிதிற்) கிடைத்தற்குஉரியது அன்று: ஈண்டு - (இப்படிப்பட்டசிறப்பையுடைய) இவ்விடத்தில், இருத்திர்- தங்கியிருப்பீராக, என்றான்-என்றுகூறினான்; (பரத்துவாசமுனிவன்);(எ-று.)

தீர்த்தமகிமையைக்கூறி,'இங்குத்தானே வாழ்க'என்று முனிவன் இராமபிரானை வேண்டுகின்றனனென்க. பரதத்துவாசன்கூறுகின்ற அவ்விடம் ப்ரயாகையென்றும், த்ரிவேணீசங்கமமென்றுங் கூறப்படும். சங்கம்=ஸங்கம்: சேர்க்கை: மூன்றுநதிகளின் சேர்க்கையையுடைய இடத்திற்கு, ஆகுபெயர். பி - ம்:—[1]செங்கண், போன்ற. [2]செங்கணாயக, செங்கணாயகன், அங்கணாயகன். [3]அவனுக்கும். [4]இருத்தி. [5]ஈங்கு.　　　　(எ௬௨)

௬௨.—அந்தத் தங்கிவாழ்வது தனக்குக் கூடாமைக்கு இராமன் காரணங் கூறுதல்.

பூண்ட மாதவ னவ்வழி விரும்பினன் [1]புகல
[2]நீண்ட தன்றிது நிறைபுன [3]னாட்டுக்கு நடுவா
மாண்ட [4]சிந்தைய [5]விவ்வழி வைகுவெ னென்றா
[6]லீண்ட யாவரு நெருங்குவ ரென்றன னிராமன்.

(இ - ள்.) பூண்ட மாதவன் - பெருந்தவம்புரிவதைமேற்கொண்டவனான பரத்துவாசமுனிவன், அ வழி விரும்பினன் புகல - அவ்வாறு விரும்பிச

சொல்ல,—இராமன்—, (முனிவனைநோக்கி), 'மாண்ட சிந்தைய-மாட்சிமைப் பட்ட மனத்தையுடையவனே! இது - இவ்விடம், நிறை புனல் நாட்டுக்கு - நிறைந்த நீரையுடைய கோசலநாட்டுக்கு, நீண்டது அன்று - மிக்கதூரத்தி லுள்ளதன்று, நடுஆம்-(மிக்கசமீபமானவிடத்திலிராவிட்டாலும்) நடுத்தரமான விடத்திலுள்ளது; இ வழி - இவ்விடத்தில், வைகுவென் என்றால் - வசிப்பே னேயானால், யாவர்உம்-(கோசலநாட்டிலுள்ள) ஜனங்களெல்லாரும், ஈண்ட- விரைவாக, நெருங்குவர்-வந்துசேர்ந்துவிடுவார்கள்,' என்றனன்—; (எ-று.)

பரத்துவாசமுனிவன் சொல்லியதைக் கேட்டு இராமன் 'இவ்விடம் கோசலதேசத்துக்குமிக்கஅருகிலில்லையாயினும்,மிக்கசேய்மையிலுள்ளதன்று: ஆகையால் நான் இங்கிருப்பதையுணர்ந்தால் கோசலநாட்டவர் யாவரும்இங்கு திரண்டுவரக் கூடும். இக்காரணம்பற்றியே இங்கு இருக்க விரும்புகின்றி லேன். எங்கட்குவசித்தற்கேற்ற இடத்தை யாராய்ந்து சொல்வாயாக' என் றனனென்க. பி - ம்:—[1]புனிதன், புனித. [2]நீண்டவன்னிது. [3]நாட்டுக்குநெடு நான், நாட்டிற்குநெடுநாள். [4]சிந்தையர். [5]இவ்வுழி. [6]ஈண்டி, ஈண்டை. [7]நெருக்குவர். (௭௩௩)

**௩௩.—பரத்துவாசமுனிவன் சித்திரகூடபருவதத்தில் தங்குமாறு கூறுதல்.**

ஆவ துள்ளதே யையகே ளையிரண் டமைந்த
[1]காவ தப்பொழிற் கப்புறங் [2]கழிந்தபின் [3]காண்டி
மேவு [4]காதலின் வைகுதி விண்ணினு மினிதாற்
றேவர் கைதொழுஞ் சித்திர கூட[5]மென் றுளதால்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) ஐய - ஐயனே! ஆவது-(நீ) கூறுவது, உள்ளதுஏ - உண்மை யானதே; கேள் - (யான் சொல்வதைக்) கேட்பாயாக: ஐ இரண்டு அமைந்த காவதம் பொழிற்கு - பத்துக்காததூரமுள்ள இச்சோலைக்கு, அ புறம் கழிந்த பின் - கடந்து அப்பாற் சென்றபிறகு, தேவர் கைதொழும் சித்திரகூடம் என்று உளது - தேவர்களும் கைகூப்பிதொழுகின்ற சித்திரகூடமென்று பெயர்பெற்ற ஓர்மலையிருக்கின்றது; காண்டி - (நீ அதனைக்) காண்பாய்; (அம்மலை), விண்ணின் உம் இனிது - சொர்க்கலோகத்தைக்காட்டிலும் இனி மையைத் தரக்கூடியது; (அவ்விடத்தில்), மேவு காதலின் வைகுதி-பொருந் திய அன்போடு [அன்புபொருந்தி] வாழ்வாய்; (எ - று.)

'ஆவதுஉள்ளதே' என்றதனால், இராமபிரான் கூறியதைப் பரத்துவாச முனிவன் அங்கீகரித்தவாறு. இவ்வாச்சிரமத்திற்கு அப்பால் பத்துக்காத தூரம் நடந்துசென்றால், தேவர்களும் கைதொழுவதும் சுவர்க்கத்தினும் மிக்க இன்பம்தருவதுமாகிய சித்திரகூடமென்னும்மலை கிட்டும்: அதுவே நீ வாழ்தற்கு ஏற்றஇடமாம். அங்குப்போய் நீ தங்கி வாழ்க என்று இராம னுக்குப் பரத்துவாசமுனிவன் சித்திரகூடத்திற்குச் செல்லுமாறு விடை யளித்தனனென்க. ஆல் இரண்டும் - தேற்றம். பி-ம்:—[1]கூவிடைப், காவி டைப், காவதர்ப். [2]போன. [3]குறுகி, குறுகு. [4]கானத்துனேகுதி, காதலைவெஃகுதி. [5]ஒன்றுளதே. (௭௩௪)

ருச.—இராமன்முதலியோர் சித்திரகூடத்தைநோக்கிப்புறப்பட்டு உச்சிவேளையில் யமுனையை யடைதல்.

என்று [1]காதலி னேயின னடிதொழு [2]தேத்திக்
கொன்றை வேய்ங்குழற் கோவலர் முல்லை[3]யங் குறிஞ்சி
சென்று செங்கதிர்ச் செல்வனு [4]நடுவுறச் சிறுமான்
கன்று [5]நீர்நுகர் [6]காளிந்தி யெனுநதி [7]கண்டார்.

(இ - ள்.) என்று—, காதலின் ஏயினன் - அன்போடு கட்டளையிட்டவனாகிய பரத்துவாசமுனிவனுடைய, அடி தொழுது ஏத்தி - திருவடிகளை வணங்கித் துதித்து, கொன்றை வேய் குழல் கோவலர்-கொன்றையினாலும் மூங்கிலினாலுஞ் செய்யப்பட்ட குழலையுடைய இடையர்களது, முல்லை-முல்லைநிலத்தையும், அம் குறிஞ்சி-அழகிய குறிஞ்சிநிலத்தையும், சென்று-கடந்துபோய்,-(இராமன்முதலியோர்),—செம் கதிர் செல்வன் உம் நடு உற - செந்நிறமான [வெப்பமான] கிரணங்களையுடைய சூரியனும் உச்சியைச் சேர, சிறுமான் கன்று நீர் நுகர் காளிந்தி எனும் நதி-சிறிய மான்கன்றுகள் நீரைப்பருகுகின்ற யமுனாநதியை, கண்டார்—; (எ - று.)

பரத்துவாசமுனிவனிடத்து விடைபெற்றுநடந்த இராமன்முதலியோர், அக்கானகத்திற்சென்று சூரியன் உச்சியையடைகையில் யமுனாநதியை யணுகிக்கண்டன ரென்பதாம். [3]அங்குடுமிஎன்ற பாடத்திற்கு-அம் குடுமி சென்று செங்கதிர்ச்செல்வன்உம் நடுவுற, முல்லை-முல்லைநிலத்திலே, காளிந்தியெனும் நதி கண்டாரென்று இயைத்து உரைக்க. கொன்றைக்குழல் - கொன்றைப் பழத்தைத் துருவித்தொளையிட்டுச்செய்யப்படும் ஊதுகருவி: "கொன்றை யந்தீங்குழல்," "கொன்றைப்பழக்குழல்" என்பன காண்க. கொன்றைக்குழலும் வேய்ங்குழலும் ஆயர்கள் ஊதுவன. பி-ம்:—[1]காதலன். [2]இறைஞ்சி. [4]முடிவுற. [5]நின்றுகள். [6]கரையுடைக்காளிந்தி. [7]கண்டான். இச்செய்யுளின் முதலடி 'என்றுமாமுனியியம்பலு மிருமையினிறைஞ்சி' என்றுசிலபிரதி. ()

ருரு.—இராமன்முதலியோர் நீராடிக் கனிகிழங்குகளை யருந்துதல்.

ஆறு கண்டன ரகமகிழ்ந் திறைஞ்சின [1]ரறிந்து
நீறு தோய்மணி மேனியர் நெடும்புனல் படிந்தா
ரூறு மென்கனி கிழங்கினோ டுண்டுநீ ருண்டா
ரேறி யேகுவ தெங்ஙன [2]மென்றலு மிளையோன்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) நீறு தோய் மணி மேனியர்-(வழிச்சென்றதனால்)புழுதிபடிந்த அழகியஉடம்பையுடைய அந்த இராமன் முதலியோர், ஆறு கண்டனர்-யமுனாநதியைக் கண்டு, அகம் மகிழ்ந்து - மனமகிழ்ச்சியடைந்து, இறைஞ்சினர் - வணங்கி, அறிந்து-(தாம்செய்யவேண்டுவதை) உணர்ந்து, நெடு புனல் படிந்தார்-ஆழ்ந்த அவ்யமுனாநதிநீரில் முழுகியவராய்,—ஊறு மெல் கனி கிழங்கினோடு உண்டு-கிழங்குடனே சுவையூறுகின்ற மெல்லிய பழங்களையும் புசித்து,

நீர் உண்டார்-(அவ்யமுனாநதியின்) நீரையும் பருகினார்கள்; (பின்பு இராமன்), ஏறி ஏகுவது எங்ஙனம் என்றலும்-(இந்நதியைக்) கடந்து அப்பாற் செல்வது எவ்வண்ணம்? என்று சொல்லவும், (உடனே), இளையோன்-இளையபெருமானாகிய இலக்குமணன்,—(எ-று.)—"வாங்கு வேய்ங்கழை துணித்தனன்" எனஅடுத்த கவியோடுதொடரும்.

அவ்யமுனாநதியில் மாத்யான்னிகஸ்நானஞ்செய்து கனி கிழங்குகளை அருந்தியபின் இராமனுக்கு 'இந்நதியைக்கடப்பதுஎவ்வண்ணம்?' என்று ஓர் சிந்தையுண்டாயிற்றென்க. பி-ம்:—[1]வணங்கி. [2]என்றிட. (எ௩௬)

**௩௬.—இலக்குமணன் தெப்பமமைத்துச் சீதாபிராட்டியுடன் இராமபிரானை அந்நதியைக் கடக்கச் செய்தல்.**

வாங்கு [1]வேய்ங்கழை [2]துணித்தனன் மாணையின் கொடியா
லோங்கு தெப்பமொன் [3]றமைத்ததி [4]னும்பரி னுலம்போல்
வீங்கு தோளண்ண றேவியோ டினிதுவீற் றிருப்ப
[5]நீங்கி னானந்த நெடுநதி யிருகையா னீந்தி.

(இ - ள்.) வாங்கு வேய் கழை துணித்தனன் - வளையுந்தன்மையுள்ள மூங்கிலின்கழிகளை வெட்டி, மாணையின் கொடியால் - மாணைக்கொடிகளைக் கொண்டு, (வெட்டிய அம்மூங்கிற்கழிகளைப் பிணைத்து), ஓங்கு தெப்பம்ஒன்று அமைத்து-சிறந்த தெப்பமொன்றைக் கட்டி, அதின் உம்பரின்-அத்தெப்பத்தின்மேலே, உலம் போல் வீங்கு தோள் அண்ணல் தேவியோடு இனிது வீற்றிருப்ப - திரண்ட கல்லைப்போற்பருத்துள்ள தோளையுடைய பெருமையிற்சிறந்த இராமபிரான் (தனது) மனைவியுடனே சுகமாகத் தங்கியிருக்க, இரு கையால் நீந்தி-(தனது) இரண்டுகரங்களாலும் நீந்துவதுபோல் (அந்நதி நீரைத்) தள்ளிக்கொண்டு, அந்த நெடு நதி-அந்தப்பெரியநதியை, நீங்கினான்-கடந்துசென்றான்; (எ - று.)

மூங்கிற்கழிகள்பலவற்றை அளவுபடவெட்டி, அவற்றை மாணைக்கொடியைக்கொண்டு ஓடம்போலக் கட்டி இங்ஙனம்தெப்பம்அமைத்தபின் அதன் மீது சீதாபிராட்டியுடனே இராமன்வீற்றிருப்ப, துடுப்புக்கொண்டு தெப்பத்தைச் செலுத்துவதுபோல் தன்கையால் நீரைத்தள்ளி இலக்குமணன் அத்தெப்பத்தைச் செலுத்தி யமுனாநதியைக் கடந்தனனென்க. தான் நீந்திய வண்ணமே தெப்பத்தைத்தள்ளிக்கொண்டு போனானெனினுமாம். பி-ம்:—[1]வேய்ங்கழி. [2]துமித்தனன். [3]அமைத்தனன், இழைத்தனன். [4]உம்பரின் மகம்போல், உம்பர்தம்பதிபோல், உம்பரினுலகம். [5]நீந்தினான்...திமிர.(எ௩எ)

**௩எ.—இலக்குமணன் தெப்பஞ்செல்லும்படி ஜலத்தைத் தள்ளியதன் வருணனை.**

ஆலை [1]பாய்வய லயோத்திய ராண்டகைக் கிளையான்
மாலை மால்வரைத் தோளெனு மந்தரந் திரிய
காலை வேலையைக் [2]கடந்தது கழிந்தநீர் கடிதின்
மேலை வேலையிற் [3]பாய்ந்தது மீண்டநீர் வெள்ளம்.

(இ - ள்.) ஆலை - கரும்பாலையிலிருந்து, பாய் - (கருப்பஞ்சாறு) பாயப்பெற்ற, வயல் - வயலைக்கொண்ட, அயோத்தியர் ஆண்தகைக்கு - அயோத்தியாபுரியிலுள்ளார்க்குத் தலைவனான ஆண்மைக்குணம்நிரம்பிய இராமபிரானுக்கு, இளையான் - தம்பியாகிய இலட்சுமணனுடைய, மாலை மால் வரை தோள் எனும் மந்தரம் - (வெற்றி) மாலையையணிந்த பெரிய மலைபோன்ற தோளாகிய மந்தரமலையானது, திரிய-மாறிமாறி (யமுனைஜலத்தைத்) தள்ள, கழிந்த நீர் - (அங்ஙனம் இலட்சுமணனது கையால்) தள்ளப்பட்ட நீரானது, காலைவேலையை கடிதின் கடந்தது - சூரியனுதிப்பதற்கு இடமான கிழக்குச் சமுத்திரத்தையும் விரைவிற் கடந்துசென்றது; மீண்ட நீர் வெள்ளம் - (அவ் விலக்குமணனால்தள்ளப்பட்ட தெப்பத்தினால்) மீண்டுசென்ற நீர் வெள்ளமானது, மேலைவேலையில் பாய்ந்தது-மேற்குச்சமுத்திரத்திற் பாய்ந்து சேர்ந்தது.

இலட்சுமணன் தன்கையால் நீரைத் தள்ளிப் புணையை மேலேநடத்தும்போது தள்ளப்பட்ட ஜலம் இவன்தள்ளிய வேகத்தாற் கீழ்கடலிற் போய்ச்சேர, இவன் செலுத்திய புணைவிசையால்மீண்ட நீர்வெள்ளம் மேல்சமுத்திரத்திற் பாய்ந்து சென்ற தென்பதாம்: **தொடர்புயர்வுநவிற்சியணி.** காலை - காலைவேளையை யுண்டாக்குஞ் சூரியன்: அவன் அங்ஙனம் தன்னுதயத்தாற் காலைவேளையை யுண்டாக்குவது கிழக்குச்சமுத்திரத்திலேயே யாதலால், அந்தக்கடலை 'காலைவேலை' என்றார். வரை - இரேகையுமாம். 'கடிதின்' என்பதை மத்திமதீபமாகக்கொண்டு, மேலைவேலையிற் பாய்ந்தது என்பதனோடும் இயைக்கலாம். பி ம்:—[1]ஏய். [2]உற்றது. [3]பரந்தது. (எரு அ)

### ரு அ —அந்நதியைக்கடந்த பின் ஸ்ரீராமன்முதலியோர் பாலைவனமொன்றைச் சார்தல்.

அனைய ரப்புன [1]லேறினா ரக்கரை [2]யணைந்தார்
புனையும் வற்கலைப் [3]பொற்பினர் நெடுநெறி போனார்
சினையு மூலமும் வேரும்வெந் திருநிலந் தீய்ந்து
நினையு [4]நெஞ்சமுஞ் சுடுவதோர் நெடு[5]ஞ்சுர நேர்ந்தார்.

(இ - ள்.) புனையும் வற்கலை பொற்பினர் - அணிந்த வற்கலையோடு கூடியும் [வற்கலையை யணிந்திருந்தும்] அழகையுடையவராகிய, அனையர் - அவ் விராமன்முதலியோர்,—அ புனல் ஏறினர்-அந்தயமுனாநதியின்நீரைக் கடந்து, அக்கரை அணைந்தார் - அக்கரையைச்சேர்ந்து, நெடு நெறி போனார் - பெரிய வழியிற் சென்றவராய்,—சினை உம் மூலம் உம் வேர் உம் வெந்து -கிளை கிழங்கு வேர் இவைகளெல்லாந் தீய்ந்துபோய், இரு நிலம் தீய்ந்து - பெரியதரையும் தீப்போன்ற வெப்பத்தையடைந்து, நினையும் நெஞ்சம் உம் சுடுவது-(தன்னை) எவரேனும் நினைத்தாலும் அவருடைய மனத்தையுஞ் சுடுவதாகிய [பெரு வெப்பமுள்ள], ஓர் நெடு சுரம் - ஒரு பெரியபாலைவனத்தை, நேர்ந்தார் - அடைந்தார்கள்; (எ - று.)

"விழுந்ததுளியந்தரத்தே வேமென்றும் வீழின், எழுந்துசுடர் சுடுமென் றேங்கிச் - செழுங்கொண்டல், பெய்யாத கானகத்தே" என்று பிறரும் நில வெம்மையைவருணித்திருத்தல் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. வற்கலை = வல்கலா: வடசொல். பி - ம்:—[1]கடந்தனர். [2]உற்றார். [3]கோலத்தர், பொறியினர். [4]நெஞ்சையும். [5]நெறிசேர்ந்தார், சுரஞ்சேர்ந்தார், நெறிநின்றார். (எகூக)

ருசு.—இவ்வெம்மையைச் சீதை தாங்கமாட்டாளோ என்று இராமபிரான் கருத, அவ்வனம் வெம்மைமாறியதை இதுமுதல் நான்குகவிகள் தெரிவிக்கும்.

நீங்க லாற்றலள் சனகியென் [1]றண்ண லு [2]நினைந்தான்
வோங்கு வெய்யவ னுடுபதி யெனக்கதி ருகுத்தான்
றாங்கு [3]வெங்கடத் துலவைகள் தழைகொண்டு [4]தழைத்த
பாங்கு [5]வெங்கனற் பங்கய [6]வனங்களாய்ப் பரந்த.

(இ - ள்.) 'சனகி - சீதையானவள், நீங்கல் - (இந்தவனத்தைக்) கடத்தற்கு, ஆற்றலள் - வல்லமையுடையவளல்லள்,' என்று—, அண்ணல்உம் - அந்த இராமபிரான், நினைந்தான்—; (அப்போது), ஓங்கு வெய்யவன் - வெப்பம்மிக்கவனாகிய சூரியன், உடுபதி என - நட்சத்திரங்கட்குத்தலைவனாகிய சந்திரன்போல (க்குளிர்ச்சியாக), கதிர் - (தன்) கிரணங்களை, உகுத்தான் - சொரிந்தான்: வெம் தாங்கு கடத்து - வெம்மையைத்தாங்கிய அவ்வனத்திலே, உலவைகள் - உலர்ந்துபோன மரங்கள், தழைகொண்டு தழைத்த - தளிர்த்தலைக்கொண்டுதழைத்தன; பாங்கு வெம் கனல் - அவ்விடங்களிலிருந்த கொடிய அக்கினி, பங்கயம் வனங்கள் ஆய் பரந்த - தாமரைக்காடுகளாகமாறிப் பரவியிருந்தன; (எ - று.)

'வெப்பமுள்ள இந்தவெஞ்சுரத்தைச் சானகி எங்ஙனங்கடப்பள்?'என்று இராமபிரான்கருதவே, சூரியன்முதலியோர் தம்நிலைமை மாறின ரென்க. சூரியன்முதலியோரிடத்து வெம்மைமுதலிய நிலைகள்மாறி உடுபதித்தன்மை முதலியன சேர்ந்தன வெனக் கூறியது - முறைபிறழ்படர்ச்சியணியின் பாற்படும். நாற்பத்திரண்டாஞ் செய்யுள்வரையில் இவ்வணி காணலாம். பி-ம்:— [1]அன்னவன், இராகவன், அன்னவர். [2]நினையா, நினைந்தார். [4]துலைத்த, தழைப்ப. [6]வனங்களாப். [3]வேங்கடத்து, [5]வேங்கனல் எனப் படித்தலுமுண்டு. (எசுo)

சுo. வறுத்து வித்திய வனையன [1]வல்லயிற் [2]பரற்கள்
பறித்து [3]வீழ்த்திய மலரெனக் குளிர்ந்தன பசைந்த
[4]விறுத்தெ றிந்தன வல்லிக ளிளந்தளி ரீன்ற
கறுத்த வாளர [5]வெயிற்றினு ளமுதுகக் கனித்த.

(இ - ள்.) வறுத்து வித்திய அனையன வல் அயில் பரற்கள் - வறுத்து வித்தப்பட்ட வித்துக்களைப்போன்றனவான வலிய கூரிய பரற்கற்கள், பறித்து வீழ்த்திய மலர் என குளிர்ந்தன பசைந்த - பறித்துக்கீழேவீழ்த்தப்பட்ட மலர்களைப்போன்று குளிர்ந்து பசையடைந்திருந்தன; இறுத்து எரிந்தன வல்லிகள் - அறுக்கப்பட்டும் எரிக்கப்பட்டும்போன கொடிகள், இளந் தளிர் ஈன்ற - இளமையான தளிரை வெளிவிட்டன; கறுத்த வாள் அரவு - சீறிவருந்தன்மையுள்ள வாள்போற்கொடிய சர்ப்பங்கள், எயிற்றினுள் - (தமது) நச்சுப்பற்களிலே, அமுது உக - அமுதம் வெளிப்படுவதனால், களித்த - (சீற்றம் நீங்கி) மகிழ்ச்சிகொண்டிருந்தன; (எ - று.)

கறுத்தவரவு-க்ருஷ்ணசர்ப்பமென்று கூறினுமாம். பி-ம்:—[1]வல்லியற். [2]பரல்கள். [3]நீங்கிய, வித்திய. [4]இறுத்தரக்கென, இறுத்தரித்தன. [5]எயிற்றினூடு. (௭௪௧)

௪௧. [1]குழுமி மேகங்கள் [2]குமுறின [3]குளிர்துளி கொணர்ந்த
முழுவில் வேடரு முனிவரின் முனிகில ருயிரைத்
தழுவி [4]நின்றன [5]பசியில [6]பகையில தணிந்த
வுழுவை யின்முலை மானிளங் கன்றுக ளுண்ட.

(இ - ள்.) மேகங்கள்-(வெண்மையான) மேகங்கள், (தாம் அந்நிலைமாறி), குழுமி - ஒன்று கூடி, குமுறின - முழங்கினவாகி, குளிர் துளி கொணர்ந்த- குளிர்ந்த நீர்த்துளிகளைக்கொண்டு பொழிந்தன; முழு வில் வேடர்உம் முனிவரின் உயிரை முனிகிலர்-(விலங்குகளை வேட்டையாடும் பொருட்டுப்)பழுது படாதவில்லைக்கொண்டுள்ள வேடர்களும் இருடியரைப்போலப்பிராணிகளின் மீது சினங்கொண்டு கொல்லாமற் சாந்தநிலையையடைந்தனர்;தழுவிநின்றன- (தமக்குஎதிர்ப்பட்டபிராணிகளைக் கொல்லுந்தன்மை நீங்கித்) தழுவுந்தன்மை வாய்ந்தனவும், பசி இல-(பிராணிகளைக்கொன்று தின்னும்) பசியற்றனவும், பகை இல தணிந்த - பகைமைக்குணம் நீங்கிச் சாந்தமான நிலையையடைந் தனவுமான, உழுவையின் - புலிகளின், முலை - முலைகளை, இள மான் கன்றுகள்-இளமையுள்ள மான்கன்றுகள், உண்ட-(ஊட்டிப்) பாலுண்டன; (எ-று.)

முன்பின்வந்துள்ளவற்றிற்கேற்ப 'மேகங்கள்' என்பதற்கு - வெண் மேகங்கள் என்று பொருள்உரைக்கப்பட்டது. பி-ம்:—[1]குழுவின். [2]குமிறின. [3]நறுந்துளி. [4]நின்றனர். [5]பகையில. [6]பசியிலதணிந்த, தணிந்தனதவறு. (௭௪௨)

௪௨. [1]கல்லளைக் கிடந்த கடுவெந் தயர்கின்ற கதழ்பாம்
பல்ல லுற்றில வலைபுனற் கிடந்தன வனைய
வல்லை யுற்றவேய் புற்றொடு மெரிவன [2]மணிவாழ்
புல்லெ யிற்றிளங் கன்னியர் [3]தோளெனப் பொலிந்த.

(இ - ள்.) கல் அளை கிடந்த கடு வெந்து அயர்கின்ற கதழ் பாம்பு - மலை முழையிலேதங்கி விஷத்தினால் வெந்துபோய்வருந்துகின்ற கொடுஞ்சினத்தை யுடைய பெரும்பாம்புகள், அல்லல் உற்றில - சீறுதலாகியதுயரையடையாதன

வாய்,அலை புனல் கிடந்தன அனைய-அலையுந்தன்மையுள்ள நீரிலே கிடந்தாற் போன்று வெம்மைநீங்கியிருந்தன;வல்லை உற்ற வேய் புற்றொடு உம் எரிவன-பெருங்காட்டில் முளைத்துள்ள மூங்கில்கள் (தாம்முளைத்துள்ள )புற்றோடும் எரிபவை,—(அங்ஙனம் எரியுந்தன்மைநீங்கிப் பசியனவாகி), மணி வாழ் புல் எயிறு இளங் கன்னியர் தோள் என பொலிந்த - முத்தங்கள் தங்கியிருப்பது போன்ற சிறியபற்களைக்கொண்ட இளமங்கையரின் தோள்போல் விளங்கின.

வல்லை - காடுஆதலை "வல்லை துருக்கம் காடெனப் புகல்வர்" என்ற பிங்கலந்தையாலும் அறியலாம். வல்லை எரிவன என்று இயைத்து, விரைவாக எரிபவையென்றல் சிறவாது. மணி - இங்கே, முத்து. பி - ம்:—[1]கல்லிடைக. [2]மணிவான், மணிவாய். [3]தோளொடும். (எ௩௩)

௪௩.— வெம்மைநீங்கிய அக்கானகத்தின் வருணனை.

படர்ந்தெ ழுந்த[1]புல் பசுநிறக் கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன [2]கேகயந் தோகைகள் [3]கிளர
மடந்தை மாரென நாடகம் வயின்றொறு [4]நவின்ற
[5]தொடர்ந்த பாணரிற் [6]பாங்கிசை முரன்றன தும்பி.

(இ - ள்.) படர்ந்து எழுந்த புல்—,—பசு நிறம் கம்பளம் பரப்பி கிடந்த போன்றன - பசுநிறமுள்ள கம்பளத்தைப் பரப்பிவைத்தாற்போலத் தோன்றின; கேகயம் - மயில்கள்,—தோகைகள் கிளர - (தமது) தோகை விரிந்து நிற்க, மடந்தைமார் என - மகளிர்போல, நாடகம் - கூத்துக்களை, வயின் தொறுஉம் - அவ்வவ்விடங்களில், நவின்ற - செய்தன; தும்பி - வண்டுகள், தொடர்ந்த பாணரின்-(நாடகமகளிர் நடிக்கும்போது அந்நடனத்துக்கு)ஏற்பப் பாடுகின்ற பாணரைப்போல, பாங்கு - பக்கங்களிலே, இசை முரன்றன - இனியசங்கீதப்பாடல்களைப் பாடின; (எ - று.)

அக்கானகத்திற் பசும்புற்பரந்தஇடத்தில் மயிலாட வண்டுபாடுவதை, கம்பளம்பரப்பிய இடத்தில் மங்கைமார் நாத்தனஞ்செய்யப்பாணர் பாடுவது, போன்றிருந்ததெனவருணித்தார். பி - ம்:—[1]புல்பாங்குறக், புற்பாங்குறக். [2]மஞ்ஞையத், மஞ்ஞையர், கேகையந். [3]கிளரா. [4]நடித்த. [5]தொடர்ந்து. [6]துளங்கிசை, தூங்கிசை. (எ௩௪)

௪௪.—அங்ஙனம் அவ்வனம் வெம்மைமாறியதுதறித்த கவிக்கூற்று.

கால மின்றியுங் கனிந்தன கனிநெடுங் கந்த
மூல [1]மின்றியு [2]முகிழ்த்தன [3]நிலனுற முழுதுங்
கோல மங்கைய ரொத்தன [4]கொம்பர்க ளின்பச்
சீல மன்றியுஞ் செய்தவம் வேறுமொன் றுளதோ.

(இ - ள்.) கனி-பழவர்க்கங்கள், காலம் இன்றிஉம்-(தமக்குஉரிய) காலம் இல்லாமலிருக்கவும், கனிந்தன - பக்குவப்பட்டுக் கிடைத்தன; நெடு கந்தம் - பெரியகிழங்குவர்க்கங்களும், மூலம் இன்றிஉம்-(தாம் தோன்றுவதற்கு உரிய) வேர்இல்லாமலிருக்கையிலும்,முகிழ்த்தன-தோன்றின; நிலன் உறமுழுதுஉம்-அந்நிலத்து ஓரிடமும் மிச்சமில்லாமல் முழுதும், கொம்பர்கள்-பூஞ்செடிகள், (தாம் நிரம்பப்பூத்து), கோலம் மங்கையர் ஒத்தன - அலங்கரிக்கப்பெற்ற மங்கை

மார்களையொத்திருந்தன; இன்பம் சீலம் அன்றிஉம்-(யாவர்க்கும்)இன்பத்தை விளைக்கக்கூடிய நற்குணத்தைத் தவிர்த்தும், செய் தவம் - செய்தற்குஉரிய தவம்,வேறுஉம் ஒன்று உளது ஓ-வேறேயும் ஒன்று இருக்கின்றதோ?(எ-று.)

'தவசியரின் மகிமையால் காலமின்றியுங் கனிதல்முதலியன நிகழ்தலுண்டு; இராமலட்சுமணர் அங்ஙனம் தவசியராக இல்லாமலிருக்கையிலும் கொடுஞ்சுரம் வெம்மைமாறி இன்பம்பயக்கும் உத்தியானவனம்போல் ஆயினமை எங்ஙனே?' என்று தோன்றும் ஐயத்தை யொழித்தற்பொருட்டு, 'சீலத்தைக்காட்டிலும் செய்தவம் வேறுளதோ?' என்றார்; இந்த நான்காமடி, முதல்மூன்றடிகளைச் சமர்த்தித்துநின்றது - **தொடர்நிலைச்செய்யுட்குறியணி** யாம். "நீங்கலாற்றலள்" (ருசு) என்று தொடங்கும் பாடல்முதல் இப்பாடல் வரையில் ஒவ்வொரு பாட்டிலும், இந்தச்செய்யுளின் ஈற்றடியைக்கூட்டி யுரைப்பாருமுளர்: அங்ஙனம் கூட்டிப்பொருள்காண்பது, காவியத்தின்போக்குக்குஏற்றதேயெனத் தோன்றுகின்றது. பி-ம்:—[1]அன்றியும். [2]முளைத்தன. [3]நெடுநீலம். [4]கொம்புகளின்பச், கொம்பர்களிம்பர், வளரிளங்கொம்பர். (எசரு)

**சஅ.—இதுவும் அடுத்த செய்யுளும் - பின்னும் அவ்வனத்தின் வருணனை.**

> எயினர் தங்கிட மிருடிக ளிருப்பிட [1]மெய்ந்த
> வயின்வ யின்றொறு மணிநிறக் [2]கோபங்கண் மலர்ந்த
> பயின்ம ரந்தொறும் [3]பரிந்தன [4]பேடையைப் பயிலுங்
> குயி[5]லி ரங்கின [6]குருந்தநின் றரும்பின முருந்தம்.

(இ-ள்.) எயினர் தங்கு இடம்-வேடர்கள் தங்குகின்ற எயினச்சேரியும், (அந்தஎயினர் யாவரும் சாந்தகுணத்தை மேற்கொண்டதனால்), இருடிகள் இருப்பிடம் ஏய்ந்த - இருடிபர் இருப்பிடம்போல ஆயின; வயின் வயின் தொறுஉம் - அவ்வவ்விடங்கள்தோறும், மணி நிறம் கோபங்கள் - மாணிக்க நிறத்தையுடைய இந்திரகோபப்பூச்சிகள், மலர்ந்த - பரவின; பயில் மரம் தொறுஉம்-நெருங்கியுள்ள விருட்சங்கள்தோறும், பரிந்தன பேடையை - (தம்மைப் பிரிதலால்) வருந்துகின்ற பெண்பறவைகளை, பயிலும் குயில்-இன்னோசையோடு கூவுந்தன்மையுள்ள ஆண்குயில்கள், இரங்கின-இரக்கங்கொண்டுகூடின; குருந்தம்-குருந்தமரங்கள், நின்று - பசுந்தன்மையைப்பெற்று, முருந்தம்-இளந்தளிர்கள், அரும்பின - தோன்றப்பெற்றன; (எ - று.)

"சீலமன்றியும் செய்தவம் வேறு மொன்றுளதோ" என்று கீழ்க்கவியிற் கூறியதற்குப் பின்னும் இங்கு உதாரணந் தருகின்றனரென்க. எயினர்-பாலைநிலமாக்கள். இந்திரகோபம் - மழைக்காலத்திற் பரவுந்தன்மையுள்ளதொரு பூச்சி. பி-ம்:—[1]வேய்ந்த. [2]கொம்பர்கள். [3]பரந்தன, பிரிந்தன. [4]பெடையுக. [5]அரங்கினம். [6]முருந்தினின் றரும்பின குருந்தம்,முருகுநின் றரும்பின குருந்தம்.

> சகூ. [1]பந்த ஞாட்புறு பாசறைப் பொருள்வயிற் பருவந்
> தந்த கேள்வரை [2]யுயிருறத் தழுவினர் பிரிந்த
> சுந்த வோதியர் [3]சிந்தையிற் [4]கொதிப்பதக் கழலோர்
> வந்த போதவர் மனமெனக் [5]குளிர்ந்ததவ் வனமே.

(இ-ள்.) ஞாட்பு - போரிலே, பந்தம் உறு - கட்டுதல் பொருந்திய, பாசறைப்பொருள்வயின்-படைவீடாகியபொருளின் பொருட்டாக, பருவம் தந்த-(இன்னபருவத்து வருவேனென்று) காலங்குறித்த, கேள்வரை - கணவரை, உயிர் உற தழுவினர்-உயிரையும் பொருந்துமாறு [இறுக] தழுவினவராய், பிரிந்த—, கந்தம் ஓதியர்-நறுமணம்வீசுங் கூந்தலையுடைய மடந்தைமாரின், சிந்தையின் - மனம்போல, கொதிப்பது - கொதிக்குந் தன்மைவாய்ந்த, அ வனம் - அந்தப்பாலைவனம், அ கழலோர் வந்த போது - வீரக்கழலையணிந்த அந்தக்கணவர்வந்த சமயத்தில், அவர் மனம் என குளிர்ந்தது-அந்த மடந்தைமார் மனம் குளிர்ச்சியடைவதுபோல (அவ்விராமலட்சுமணர்வந்தபோது) குளிர்ச்சியடைந்தது; (எ - று.)

கணவர் மனைவியரைப்பிரிதல், ஓதல் பகை தூது பொருள்செயல் காவல் பரத்தைமை என்பவற்றால் நிகழும்: இவற்றுள், பகைமேற்செலலாகிய பிரிவே இங்கே, 'பாசறைப்பொருள்' என்றதனாற் குறிக்கப்பட்டது. பாசறை என்றால் - படைவீடு என்றுபொருள். பகைமேற்செல்வார் பாசறையில் தங்கிப் பொரவேண்டியிருத்தலின் பகைமேற்சேறற்பிரிவை 'பாசறைப்பொருள் வயிற் பிரிந்த' என்றார். பிரிந்து செல்பவர் ஆண்பாலாரேயாயினும் பிரிவு இருவரிடத்து முள்ளமையால், பிரிந்த வோதியர் என்றது பொருந்தும். அங்ஙனம் பிரிபவர் போர்செய்தற்குரிய காலங்கழிந்ததும் மீண்டுவருவதாகத் தம்மனைவியரோடு காலங்குறித்துச் செல்லலாகு மாதலின், 'பருவம் தந்த கேள்வர்' என்றது. அங்ஙனம் தம் கணவர் பிரியும்போது பிராணாபாயமின்றிக் கணவன் மீண்டுவரவேணுமே என்ற கருத்தினால் பத்தினிமாரின் மனம் மிகவுங் கொதிக்குமாதலின், அம்மனத்தை மிகக்கொதிக்கும் வனத்திற்கு உவமைகூறி, பின் அது இராமபிரான் வருகையாற் குளிர்ந்ததற்கு அங்ஙனம் பிரிந்தமகளிரின் மனம் அக்கணவரைக் கூடப் பெற்றுக் குளிர்ச்சிபெறுவதை உவமையாகக் காட்டினார். இனி, பாசறை-பாசறைக்குச் செல்லும் பொருட்டாலேனும், பொருள்வயின்-பொருள்செய்யும் பொருட்டாலேனும், பிரிந்த, பருவந்தந்தகேள்வரை என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]பந்தருட்புரை. [2]உயிரெனத். [3]மனமெனக். [4]கொதித்தது. [5]குளிர்ந்தது வனமே. (எசஎ)

சஎ.—இராமன்முதலியோர் சித்திரகூடத்தைக் காணுதல்.

வெளிறு நீங்கிய [1]பாலையை மெல்லெனப் போனார்
[2]குளிறு வான்மதிக் குழவிதன் சூல்வயிற் [3]றொளிப்பப்
பிளிறு மேகத்தைப் பிடியெனப் பெரும்[4]பனைத் தடக்கைக்
களிறு [5]நீட்டுமச் சித்திர கூடத்தைக் கண்டார்.

(இ - ள்.) வெளிறு நீங்கிய-அஸாரத்தன்மை நீங்கிய, பாலையை-அந்தப் பாலைவனத்தில், மெல்லெனபோனார்-மெல்லச்சென்ற இராமன்முதலியோர் - குளிறும் வான் மதி குழவி - ஒலிக்குந்தன்மையுள்ள ஆகாயத்திலுள்ள இளஞ்சந்திரன், தன் சூல் வயிறு ஒளிப்ப - தனது கருக்கொண்ட வயிற்றினிடத்து மறைய, பிளிறும்-இடிக்கின்ற, மேகத்தை—, பிடி என-(தன்) பெண்யானையென்று மயங்கி, களிறு - ஆண்யானை, பெரும் பனை தட கை நீட்டும்-தனது பெரிய பனைமரம்போன்ற கையை நீட்டுதற்குஇடமான, அ சித்திர கூடத்தை - அந்தச்சித்திரகூடமலையை, (இராமனாதியர்), கண்டார்-; (எ-று.)

பிளிறுங் கருக்கொண்ட மேகத்தைத் தன்பிடியென்று மயங்கிக் களிறு கைக்நீட்டுஞ் சித்திரகூடமென்று மலைச்சிறப்புக் கூறியவாறு. மேகமண்டலம் வரையும் அம்மலை யோங்கியுள்ளதனால், மேகத்தைப் பிடியென்று கருதிக் களிறு கைநீட்டுவதாயிற் றென்க. இந்த மயக்கவணியால் மலையின் ஓக்கம் தொனிக்கும். போனர் - பெயர். பெண்யானைக்குத் தந்தமிராமை, இயல்பு. மதிக்குழவி ஒளியாதிருப்பின் மேகத்தைப் பிடியென மயங்காதென்பது பற்றி, 'மதிக்குழவிவயிற்றொளிப்ப' என்றது. [2]ஒளிருவான்மதிக்குழவிதன் சூல்வயிற்றுதிப்பப்பிளிறும் என்றபாடத்துக்கு - பிரகாசிக்கும் பிறைச்சந்திரன் கருக்கொண்ட தன்வயிற்றினின்று வெளிப்படும்போது முழங்குகின்ற என்று பொருள். சூல்வயிற்றுதிப்ப என்றது, கருமுகிலில் மறைந்த பிறைச் சந்திரன் வெளிப்படுவதை. இங்கு, பிறைச் சந்திரன் தன்வயிற்றில் வெளிப் பட மேகம் இடிக்கின்றது, பிடியானது கருக்கொண்ட தன்வயிற்றினின்று அக்கரு வெளிப்படும்போது வீறிடுவதை யொத்திருக்கு மென்ற உவமை தொனிக்கு மென்க. சித்ரகூடமென்ற வடசொல் - விசித்திரமான சிகரங் களையுடைய தெனக் காரணப்பொருள்படும். பி-ம்:—[1]பாலையின். [2]ஒளிறும். [3]உதைப்ப. [4]பணை. [5]நீட்டுறு. (எசஅ)

வனம்புகுபடலம் முற்றிற்று.

---

## அ - ஆவது சித்திரகூடப்படலம்.

சித்திரகூடபருவதத்தில் இராமபிரான் வசித்ததைத் தெரிவிக்கும் படல மென்பது, பொருள். சித்திரகூடத்தைக் கண்ட இராமபிரான், அம்மலையின் பல்வகை வளங்களையுஞ் சீதாபிராட்டிக்குக் காட்டிக்கொண்டே அம்மலைச் சாரலிற் போக, அங்கிருந்தமுனிவர் எதிர்கொண்டு அவர்களைத் தமது ஆச்சி ரமத்துக்குஇட்டுக்கொண்டுபோய் உபசரிக்க, அவர்களுடைய உபசாரத்தைப் பெற்றுக்கொண்டு, பிறகு மண் மூங்கில் முதலியவற்றால் இலக்குமணன் சாலை அமைக்க, அச்சாலையைக்கண்டு ஒருபுறம் வியப்புத்தோன்றினும் இராம பிரான் 'இலக்குமணனுக்கு வருத்தங்கொடுக்கும்படியாயிற்றே!' எனவருந்த, இளையபெருமாள் இராமபிரான் வருந்தியதுகண்டு நொந்துகூற, இராம பிரான் இலக்குமணனைச் சமாதானப்படுத்தி அந்தப்பர்ணசாலையிற்குடிபுகுந்து அந்தச்சித்திரகூடமலையில்தானே உறைந்தமை இந்தப்படலத்துக் கூறப்படு கின்ற விஷயம்.

### க.—இராமபிரான் சீதாபிராட்டிக்குச் சித்திரகூடமலையின் பலவகை இயற்கைவளங்களைக் காட்டத் தொடங்குதல்.

[1]நினையுந் தேவர்க்கு நமக்குமொத் தொரு[2]நெறி நின்ற
வனைக னங்கண னுயிரம் பெயருடை யமலன்
சனகன் [3]மாமட மயிற்கந்தச் சந்தனஞ் செறிந்த
கனகு மால்வரை [4]யியல்பெலாந் தெரிவுறக் காட்டும்.

(இ - ள்.) நினையும்-'நம்மாற் சிறப்புடையவரென்று' மதிக்கப்படுகின்ற, தேவர்க்குஉம் - தேவர்களின்திறத்தும், நமக்குஉம் - நம்திறத்தும், ஒத்து—, ஒரு நெறி நின்ற - ஒரேநிலையில் நிற்கின்ற, அனகன் - குற்றமற்றவனும், அம் கணன் - அழகிய [கருணையைப்பொழிகின்ற] கண்களையுடையவனும், ஆயிரம் பெயர் உடை அமலன் - ஆயிரந்திருப்பெயர்களைக்கொண்ட குற்றமற்றவனுமான திருமாலின் திருவவதாரமூர்த்தியாகிய இராமபிரான்,—சனகன் மா மடமயிற்கு-சனகனது புதல்வியாகிய சிறந்த மடப்பமுள்ள மயில்போன்ற சாயலையுடைய சீதாபிராட்டிக்கு, அந்த சந்தனம் செறிந்த கனகம் மால் வரை-சந்தனமரங்கள் நெருங்கிய பொன்னை (த் தன்னிடத்தேகொண்ட) பெரிய அந்தச்சித்திரகூடமலையினது, இயல்புஎலாம்-இயற்கைவளங்களையெல்லாம், தெரிவுஉற - தெரியும்படி, காட்டும் - காட்டலானான்; (எ - று.)

அனகன் மால்வரையியல்பெலாஞ் சானகிக்குக் காட்டுமென்க. நினையுந் தேவர்க்கும் நமக்கும் ஒத்து ஒருநெறிநின்ற அனகன் - மண்ணுலகத்தவராய் விசேஷமான அறிவைப்பெறாத நம்மால் எங்ஙனம் தன்தன்மைபுணர்வதற்கு அரியவனோ, அங்ஙனமே அறிவு ஆற்றல்களில் மிக்கவரென்று நம்மால் மதிக்கப்படுகின்ற தேவராலும் அறிதற்கு அரியவனாயிருப்பவனென்றபடி. இவ்வுலகத்தில் திருவவதரித்து உலகத்தார்போல இன்பமுந்துன்பமு முறுபவன் போன்று தோன்றினும் அப்பரமன் அவையெவையும் இல்லாதவனென்பார் 'அனகன்' என்றும், பிரகிருதிசம்பந்த மற்றவனென்பார் 'அமலன்' என்றுங் கூறினர். "கண்ணிற்கழகு கண்ணோட்டம்" என்றவாறு கருணையுடையவனென்பார், 'அங்கணன்' என்றார். காட்டும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்குவந்தது. இயல்பு - இயற்கையழகுக்கு, இலக்கணை. பி - ம்:—[1]நினைதல். [2]வழி. [3]மாமகடனக்கு. [4]அழகு. (எசுக)

உ.—இதுமுதல் முப்பத்தேழுகவிகள் - இராமபிரான் சீதாபிராட்டிக்குச் சித்திரகூடமலையின் அழகைக் காட்டுவதைத் தெரிவிக்கும்.

வாளும் வேலும்விட்[1] டளாயின வனையகண் மயிலே
தாளி [2]னேலமுந் தமாலமுஞ் [3]சுடர்தரு சார
[4]னீள மாலைய துயில்வன நீருண்ட கமஞ்சூற்
காள மேகமு நாகமுந் [5]தெரிகில காணாய்.

(இ - ள்.) வாள்உம் வேல்உம் விட்டு அளாயின அனைய கண் மயிலே - வாளையும் வேலையும் சேர்த்து ஒன்றாகக் கலந்துவைத்தாற்போன்ற கண்களையுடைய மயில்போன்ற சாயலையுடையவளே! தாளின் - (தன்) அடிப்பகுதியில், ஏலம்உம் தமாலம்உம் - ஏலக்கொடியும் பச்சிலைமரமும், சுடர்தரு-ஒளிவிடுகின்ற, சாரல் - தாழ்வரையிலே, நீளம் மாலைய - நீட்டமான தன்மையையுடையவாய், துயில்வன - உறங்குகின்றனவான, நீர் உண்ட கமஞ் சூல் காளமேகம்உம் - நீரையுட்கொண்ட நிறைந்த கருப்பத்தையுடைய காளமேகமும், நாகம்உம் - யானையும், தெரிகில - வேற்றுமை யுணரமுடியாதவாறு இருப்பவற்றை, காணாய்—; (எ - று.)

இம்மலைச்சாரலில் நீர்கொண்ட மேகமும் யானையும் வேறுபாடுதோன்று மற்படிந்திருப்பதை இராமபிரான் சீதாபிராட்டிக்குக் காட்டுகின்றனனென்க. இங்குக் கருமைநிறத்தின் ஒற்றுமையால், யானைக்கும் காளமேகத்துக்கும் வேற்றுமைதோன்றாமையைக் கூறியது - மறைவணியாம். வாளும்வேலும் விட்டனாயின அனைய கண் - இல்பொருளுவமை. பி-ம்:--[1]அளாவின. [2]ஏலமு மாலமும். [3]தழைதரு, தொடர்தரு, தழைதடஞ். [4]நீளமாமலை, நீளன்மாமலை. [5]தெரிவில. (எருo)

ரு. குருதி வாளெனச் [1]செவ்வரி பரந்தகட் குயிலே
[2]மருவி மால்வரை யும்பரிற் [3]குதிக்கின்ற வருடை
சுருதி [4]போற்சுடர் மரகதக் [5]கொழுஞ்சுடர் சுற்றப்
பருதி வானவன் பசும்பரி [6]புரைவன பாராய்.

(இ - ள்.) குருதி வாள் என செவ் வரி பரந்த கண் குயிலே - இரத்தக் கறைபடியப்பெற்ற வாட்படைபோன்று செவ்வரிபரந்த கண்களையுடைய குயில்போலினிய குரலையுடையவளே! மால் வரை உம்பரில் மருவி குதிக்கின்ற வருடை - பெரியமலைமீது பொருந்திக்குதிக்கின்ற மலையாடு, சுருதி போல் சுடர் மரகதம் கொழுஞ் சுடர் சுற்ற-வேதம்போல விளங்குகின்ற மரகதவிரத்தினத்தின் கொழுவிய ஒளி (தம்மைச்)சூழப்பெறுதலால், பருதி வானவன் பசும் பரி புரைவன-சூரிய பகவானது பச்சைநிறக் குதிரையை யொப்பனவற்றை, பாராய்—; (எ - று.)

மலைமீதுள்ள வரையாடுகள் மரகதவிரத்தினத்தின் ஒளியாற் சூழப்பெற்றுத் தாம் சூரியனது பச்சைக்குதிரைகள்போலத் தோன்றுகின்றவற்றைக் காட்டுகின்றனன் இராமனென்க. வருடை மரகதவிரத்தினத்தின்நிறம் பதிந்து பச்சைக்குதிரைபோன்றன என்ற இவ்வருணனையில் பிறிதின்குணம் பெறலணி காண்க. மரகதவண்ணத்தவனை திருமாலை வேதங்கள் உணர்த்துவனவாதலால் உணர்த்துவதும் உணர்த்தப்படுவதுமாகிய ஒற்றுமைநயம் பற்றி, 'சுருதிபோற் சுடர் கொழுஞ்சுடர்' என்றார். செவ்வரிபரந்த கண்களுக்கு, குருதிவாள் உவமை. பி-ம்:—[1]சேயரி. [2]அருவி. [3]பாய்கின்ற. [4]போற்றெளி, போலொளிர், போற்றொடர். [5]கொடுஞ். [6]நிகர்ப்பன. (எருக)

சு. வடங்கொள் பூண்முலை மட[1]மயி லேமதக் கதமா
வடங்கு [2]பேழ்வயிற் றரவுரி யமைதொறுந் தொடக்கித்
தடங்[3]க டோறுநின் றுலவ தண்டலை யயோத்தி
நுடங்கு மாளிகைத் துகிற்கொடி [4]நிகர்ப்பன நோக்காய்.

(இ - ள்.) வடம் பூண் கொள் முலை - ஆரமாகிய அணிகலனையணிந்த தனங்களையுடைய, மட மயிலே—! மதம் கதம் மா-மதத்தையும் வெறியையுமுடைய யானைகள், அடங்கு-அடங்கப்பெற்ற, பேழ் வயிறு-பிளவுபட்ட[பேரிடத்தைக்கொண்ட] வயிற்றையுடைய, அரவு-மலைப்பாம்புகளின், உரி - உட

வின்மேல்தோல், அமை தொறுஉம்-(இங்குள்ள)மூங்கில்தோறும், தொடக்கி-பிணித்து, தடங்கள் தோறுஉம்-மலைத்தாழ்வரை தோறும், நின்று - இருந்து கொண்டு, ஆடுவ - ஆடுகின்றவை,—தண் தலை அயோத்தி - சோலைகளாற் சூழப்பெற்ற அயோத்திமாநகரிலே, மாளிகை நுடங்கும்-மாளிகைகள்தோறும் அசைகின்ற, துகில் கொடி-வெண்ணிறச்சீலைத்துவசங்களை, நிகர்ப்பன-ஒப்பவற்றை, நோக்காய்—; (எ - று.)

யானைகளையும் விழுங்குமாறு அவ்வளவு பெரிய வயிற்றைக்கொண்ட மலைப்பாம்புகளென்பார் 'கதமாவடங்குபேழ்வயிற்றரவு' என்றார். அவ்வாறுள்ள பாம்புகள் உடற்றோலையுரிக்க, உரித்த அந்தச்சட்டைகள் மலைச்சாரலிலேயிருக்கும் மூங்கில்களில் தொடக்குண்டு காற்றில்அசைந்து, அயோத்தியிலுள்ள அரசமாளிகைகளிற் கட்டப்பட்டுக் காற்றினால் அசையும் வெண்ணிறத்துகிற்கொடிபோலும் என்று வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பாம்புகள் யானையையும்விழுங்கும் வல்லமையுடையனவென்பதை "குஞ்சரங்கோளிழைக்கும்பாம்பு" என்ற திருக்கோவையாராலு முணர்க. தண்டலை-பண்புத்தொகையன்மொழியாய்ச் சோலையை யுணர்த்தும்:குளிர்ந்த இட முள்ளது என்க. வடங்கொள்பூண்முலையென்பதற்கு - வடங்களையும் மற்றும்வேறு பூண்களையும்அணிந்த முலை யென்க. பி-ம்:—[1]மயிலேமழைமதமா. [2]பாழ். [3]கரேறும். [4]நிகர்வன. "சலந்தலை" (சு) என்றுதொடங்குவது ௪-ஆவது பாடலாகவும்,அதற்குப்பின் இந்தப்பாடலும்சிலபிரதிகளிலுள்ளன

ரு. உவரி வாயன்றிப் பாற்கட லுதவிய வமுதே
[1]துவரி னீண்மணித் தடந்தொறு மிடந்தொறுந் துவன்றிக்
கவரிப் [2]பானிற வால்புடை பெயர்வன கடிதிற்
[3]பவள மால்வரை யருவியைப் [4]பொருவன பாராய்.

(இ - ள்.) உவரி வாய் அன்றி-உப்புக்கடலிலல்லாமல், பாற்கடல்-திருப்பாற்கடல், உதவிய-தந்த, அமுதே - அமுதைப்போன்றவளே! துவரின் நீள் மணி தடம் தொறுஉம்-பவழமென்னுஞ் சிறந்த அரதனத்தினாலியன்ற தாழ்வரைதோறும், இடம் தொறுஉம்-அங்கங்கே, துவன்றி-நெருங்கி, கவரி-கவரிமான்களின், பால் நிறம் வால் - பால்போலும் வெண்ணிறத்தைக்கொண்ட வால்கள், புடை பெயர்வன-அசைபவை,—கடிதில்-விரைவாக, மால் பவளம் வரை அருவியை-பெரிய பவளமலையிலுள்ள நீரருவியை, பொருவன-ஒப்பனவற்றை, பாராய்—; (எ - று.)

பவளத்தாலியன்ற தடவரையில் தங்கிய கவரிமானின்வால், பவளவரையின் நீரருவியையொக்கு மென்க. உவரிக்கடலினன்றிப் பாற்கடலில்அமுது தோன்றியமை பிரசித்தமாகஇருக்கவும், இங்கு உவரிவாயன்றிப் பாற்கடலுதவியவமுது என்றுகூறியது-மறைபணியின்பாற்படும்: இதனால், அமுதத்தின்

சிறப்புப்பெறப்படும்: பாற்கடலுதவியவமுது-"அமுதில்வரும்பெண்ணமுது" என்றார், பரகாலனும். பி-ம்:—[1]கவரிநீள், சுவரினீள். [2]வானிறவால், மானிற வால். [3]பவருமாமலை, பவளமாமலை, பவளமாமணி, பருவமாமணி. [4]பொருவிய, பொருவின, நிகர்வன. (௭௫௩)

௬. சலந்த லைக்கொண்ட சீயத்தாற் றனிமதக் கதமா
வுலந்து [1]வீழ்தலிற் சிந்தின [2]வுதிரத்தின் மடவார்
புலந்த [3]காலையற் றுக்கன குங்குமப் பொதியிற்
கலந்த முத்தென வேழமுத் திமைப்பன காணாய்.

(இ - ள்.) சலம் தலைக்கொண்ட சீயத்தால் - கோபத்தை மிகுதியாகக் கொண்ட சிங்கத்தினால் (தாக்கப்பட்டு), தனி மதம் கதம் மா - ஒப்பற்றதான மதத்தையும் கோபத்தையுங்கொண்ட விலங்காகிய யானை, உலந்து வீழ்த லின் - உயிரற்றுக் கீழ்விழும்போது, உதிரத்தின் சிந்தின - இரத்தத்திற் சிந் தியனவான, வேழம் முத்து - அவ்யானையின் முத்துக்கள்,—மடவார் புலந்த காலை-மகளிர் (தம்கணவரோடு) ஊடல்கொண்ட காலத்து, அற்று-அறுபட்டு, உக்கன - கீழேசிந்தியனவாய், குங்குமம் பொதியில் - குங்குமக் குழம்பிலே, கலந்த-, முத்து என - முத்துக்கள்போல, இமைப்பன-விளங்குவனவற்றை, காணாய்—; (எ - று.)

சீயத்தாற்றாக்கப்பட்டு உயிரற்றுப்போன யானையின் முத்துக்கள் அந் தச்சீயம் தாக்கியபோது வெளிப்பட்ட இரத்தத்தில் வீழ்ந்து, தம்கணவரோடு ஊடிய மகளிரின்முத்துவடங்கள்அறுப்புண்டு முத்துக்கள் ஊடலற்றநிலையில ணிந்துகொள்ளுமாறு வைத்திருந்த குங்குமக்குழம்பில் வீழ்ந்தனவற்றையொ க்குமென்க: தற்குறிப்பேற்றவணி. ஊடல்கொண்டு செல்லும்போது மகளிரைத் தடுக்குமாறு கணவர் முத்தாரத்தைப் பற்றுகையில் அவர் அதனைக்கருதாது சென்றமையால் அது அறுந்ததென்றேனும், ஊடலால் மகளிரே முத்தா ரத்தையறுத்து எறிந்தாரென்றேனுங் கொள்க. பி-ம்:—[1]வீழையில்,வீழலில். [2]உதிர்த்தனமடவார், உயிர்த்தினமடவார். [3]காலையிலிற்றன,காலையிற்றுக்கன.

௭. நீண்ட மால்வரை மதியுற நெடுமுடி நிவந்த
தூண்டு மாமணிச் [1]சுடர்சடைக் [2]கற்றையிற் றோன்ற
மாண்ட வானிற [3]வருவியம் மழுவிடைப் பாகன்
[4]காண்ட குஞ்சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய்.

(இ - ள்.) மதிஉற - சந்திரன் வந்துபொருந்துமாறு, நிவந்த - ஓங்கிய தும், தூண்டும் மா மணி சுடர் - தூண்டியுண்டாக்கப்பட்டதுபோல மிக்குத் தோன்றுகின்ற சிறந்த பதுமராகக்கற்களின்ஒளியைக் கொண்டதுமான, நீண்ட மால்வரை - ஓங்கிய பெரிய இம்மலையினது, நெடு முடி - நீண்ட சிக ரம், சடைக்கற்றையின் தோன்ற - சடைத்தொகுதிபோல்தோன்ற,—மாண்ட வால் நிறம் அருவி - மாட்சிமைப்பட்ட வெண்ணிறத்தைக்கொண்ட இம்மலை

யருவி, அ மழ விடை பாகன் - அந்த இளமையுள்ள இடபத்தையேறிநடத்து பவனுகிய சிவபெருமானது, காண் தகும் சடை கங்கையை - காணத்தகுந்த [அழகிய] சடைமுடியிலுள்ள கங்காநதியை, நிகர்ப்பன-ஒத்திருப்பனவற்றை, காணாய்—; (எ - று.)

மணிச்சுடரைக்கொண்ட வரைமுடி - சிவபெருமானதுசடைக்கற்றை யையும், அவ்வரைமுடியில்தங்குஞ்சந்திரன் - அப்பிரானது முடிமீதுள்ள பிறைச்சந்திரனையும், அங்குஉள்ளவாணிறத்தைக்கொண்ட மலையருவி - கங்கையையும் ஒக்குமென்றார்: தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]சுடரதன், சுடர்க்கனற். [2]கற்றையசோரும், கற்றையிற்சொருக, கற்றையிற்சொருகி. [3]அருவிய. [4]காணடரும். (எருஉ)

அ. தொட்ட [1]மாசுணஞ் சுடரொளி மணியொடுந் தூவி
விட்ட சென்றன விடாமத மழை[2]யன வேழம்
வட்ட வேங்கையின் மலரொடுந் ததைந்தன வயங்கும்
[3]பட்ட நெற்றியிற் சுற்றிய போல்வன பாராய்.

(இ - ள்.) தொட்ட மாசுணம் - (யானையைப்) பற்றிய பாம்புகள், தூவி விட்ட சுடர் ஒளி மணியொடுஉம் சென்றன - தூவிவிட்ட ஒளிர்கின்ற சோதியைக்கொண்ட மாணிக்கத்துடனே சென்றன; (அப்போது), வட்டம் வேங்கையின் மலரொடுஉம் ததைந்தன - சிலவட்டத்திலே வேங்கைப்பூவோடும் (அம்மணிகள்) நெருங்கியனவாய், விடா மதம் மழையன - விடாத மதநீர் மழையைக் கொண்டனவான, வேழம் - அவ்யானைகளின், நெற்றியில்—, வயங்கும் பட்டம் சுற்றிய போல்வன - விளங்குகின்ற முகப்பட்டங்கள் சுற்றியன வொத்திருப்பவற்றை, பாராய்—; (எ - று.)

யானையை விழுங்குமாறு பற்றிய மலைப்பாம்புகள், அவ்யானை மதமழையைச்சொரிவதனாலும் தமதுமாணிக்கவொளி ஆங்கு ஒளிர்வதாலும் 'இது மழையோ?' என்றுஅஞ்சி அவ்வச்சத்தால் விழுங்கத்தொடங்கிய வேழத்தை விட்டதன்றித் தமதுமணிகளையுஞ் சிந்திவிட்டுச் சென்றனவாக,அங்குச் சிலவட்டத்திற் கிடக்கும் வேங்கைமலருடனே அந்த மாசுணத்துமணிகளும் மதநீரோடுகூடிய யானைகளின் நெற்றியிலொட்டிக்கொண்டு பொற்றகட்டில் மணிகள் பதித்த நெற்றிப்பட்டம்போல விளங்குமென்பதாம்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி: வேங்கைமலர் பொன்னிறமாக விருக்கும். தூவிவிட்ட மணியொடுஞ்சென்றன - வடமொழிநடை: மணியொடு, ஒடு-அடைமொழிப் பொருளது. இனி, விடாமதமழையனவாகிய வேழத்தைத்தொட்ட மாசுணம் மணியொடும்சுடரொளியை விட்டனவாய்ச் சென்றன: சிலவட்டங்களில் வேங்கைமலருடனே (அவ்வரவமணிகளும்) ததைந்தனவை, வயங்கும்பட்டம் யானை நெற்றியிற்சுற்றியனபோலுமெனினுமாம். இப்பொருளில் வட்டத்திற்கு யானைநெற்றியுவமை.வட்டமாகிய வேங்கைமலரென்பாருமுளர்.வானத்தின் இடிக்கு அரவு அஞ்சும். மலரொடும், உம்மை மணியைத் தழுவிற்று. பி - ம்:—[1]வார்சுனைச். [2]எழில், என. [3]பட்டஞ்சுற்றிய நெற்றியபோல்வன, பட்டஞ்சுற்றிய படியன பொலிவன, பட்டஞ்சுற்றியவனையவே போல்வன. சிலபிரதிகளில்''விடுங்கொணேக்கி''(ருஅ),''நெய்கொணீருண்டு''(ருஎ)என்ற பாடல்கள் முறையே அ, கூ - செய்யுளாக அமைய, அதன்பின் இச்செய்யுள் காணப்படுகின்றது. (எருச)

௯. இழைந்த [1]நூலிணை மணிக்குடஞ் [2]சுமக்கின்ற தென்னக்
குழைந்த நுண்ணிடைக் குவியிள வனமுலைக் கொம்பே
தழைந்த சந்தனச் சோலைதன் செலவினைத் தடுப்ப
நுழைந்து போகின்ற தொக்கின்ற மதியினை நோக்காய்.

(இ-ள்.) இழைந்த நூல்-ஓரிழையாயிருக்கின்ற நூலானது, இணை மணி குடம் சுமக்கின்றது என்ன-இரண்டு அரதனகும்பங்களைச் சுமக்கின்றதென்று சொல்லுமாறு, குழைந்த நுண் இடை-தளருமியல்புள்ள மெல்லிய இடையிலே, குவி இள வன(ப்பு)முலை - குவிந்துள்ள இளமையான அழகிய தனங்களைக் கொண்டுள்ள, கொம்பே-பூங்கொம்புபோன்றவளே! தழைந்த சந்தனம் சோலை-தழைந்துள்ள சந்தனச்சோலையானது, தன் செலவினை தடுப்ப-தான் வான வீதியிற்செல்வதைத்தடுப்பதுபோன்றிருக்க, நுழைந்து போகின்றது ஒக்கின்ற-அச்சோலைக்குள்ளே புகுந்துபோவதுபோலத் தோன்றுகின்ற, மதியினை-சந்திரனை, நோக்காய்—; (எ - று.)

சந்திரமண்டலத்தளவும் ஓங்கிய மலையின்மீது உயர்ந்து தழைந்துள்ள சந்தனச்சோலை யிருப்பதனால், வானவீதியிற்செல்லுஞ் சந்திரன் தன்வழியான அச்சந்தனச்சோலையினுள்ளாகச் செல்வது, தன் வழியைத் தகைவதனால் சந்தனச்சோலையுட் சந்திரன் புகுந்துசெல்வதுபோலு மெனக் குறித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இதனால், அம்மலையின் ஓக்கம் பெறப்படும்.

பி - ம்:—[1]நூலிடை, நூலினை, நூலிழை. [2]சுமக்கின்ற. (௭௬௭)

௧௦. உருகு காதலிற் றழைகொண்டு மழலைவண் டோச்சி
முருகு நாறுசெந் தேனினை முழை[1]நின்றும் வாங்கிப்
பெருகு சூலிளம் பிடிக்கொரு பிறைமருப் பியானை
பருக வாயினிற் கையினின் [2]றளிப்பது பாராய்.

(இ - ள்.) உருகு காதலின்-மனமுருகுந்தன்மைக்குக் காரணமான அன்போடு, தழைகொண்டு - மரத்தழையை யெடுத்து, மழலை வண்டு ஓச்சி - இன்குரலைக்கொண்ட வண்டுகள் மொய்ப்பதை யோட்டி, முருகு நாறு செம் தேனினை - நறுமணம் வீசுகின்ற செந்நிறமுள்ள தேனை, முழை நின்றும் வாங்கி - கல்முழைஞ்சிலிருந்து எடுத்து, பெருகு சூல் இள பிடிக்கு - முதிர்ந்த கருவைக்கொண்ட இளைய (தன்) பெண்யானைக்கு, பருக-குடிக்குமாறு, வாயினில் - வாயிலே, ஒரு பிறை மருப்பு யானை - பிறைச்சந்திரன் போன்ற தந்தங்களையுடைய ஒப்பற்ற ஆண்யானை, கையினின்று - (தனது) கையிலிருந்து, அளிப்பது - கொடுப்பதை, பாராய்—; (எ - று.)

ஆண்யானை தன் பெண்யானையின்மீதுள்ள அன்பினால் மலைமுழைஞ்சிலுள்ள தேன்கூட்டிலிருந்து அதில் மொய்க்கும்வண்டை யோட்டித் தேனைத் தன்கையாலெடுத்துப் பருகுவதற்குச் சிரமப்படுங் கடுஞ்சூல்கொண்ட அந்தப்பெண்யானையின் வாயிலே பருகுமாறு கொடுப்பதைக் காட்டுகின்றனன் இராமபிரானென்க. "பெருகுமதவேழம் மாப்பிடிக்குமுன்னின், றிருகணிள மூங்கில் வாங்கி - யருகிருந்த, தேன்கலந்து நீட்டுந்திருவேங்கடம்" என்ற பாசுரம் ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. பிறை - மருப்புக்குஉவமை. பிடிக்கு

எனவந்ததனால், யானை-அப்பிடியின் ஆண்யானையாயிற்று. பி-ம்:—[1]நின்று. [2]அளிப்பன. சில பிரதிகளில், "வீறு பஞ்சின்றி" (கரு) "அறைகழல்" (உஉ) "அடுத்த" (உங) "சீலமின்னது" (கசு) என்பவை இப்பாடலின் பின் முறையே உள்ளன. (எருஅ)

கக. அளிக்கு நாயகன் மாயைபுக் கடங்கின னெனினுங்
களிப்பி லிந்தியத் தி[1]யோகிபைக் [2]காக்கில னதுபோ
லொளித்து [3]நின்றுள ராயினு முருத்[4]தெரிக் கின்ற
பளிக்க றைச்சில [5]பரிமுக மாக்களைப் பாராய்.

(இ - ள்.) அளிக்கும் நாயகன் - காக்குங்கடவுளாகிய திருமால், மாயை புக்கு அடங்கினன் எனின் உம்-மாயையிற்புகுந்து(தன்னிலை பிறர்க்குத்தெரிய வொண்ணாதபடி) மறைந்து நின்றானென்றாலும், களிப்பு இல் இந்தியத்து - (புலன்வழியேசெலுத்திக்)களித்தலில்லாத இந்திரியங்களையுடைய,யோகிபை-யோகசித்தியுள்ளவர்க்கு, கரக்கிலன்-(தான்) ஒளித்து நிற்கமாட்டான்; அது போல்—, ஒளித்து நின்று உளர் ஆயின்உம்-ஒளித்து இருந்தார்களானாலும், உரு தெரிக்கின்ற பளிங்கு அறை - தன்னுள்ளே ஒளிந்திருப்பவரின் உருவத்தை வெளிக்காட்டுகின்ற பளிங்கறையிலே (தோன்றுகின்ற), சில பரிமுகம் மாக்களை - குதிரைமுகமுள்ளசில தெய்வமாக்களை, பாராய்—; (எ - று.)

திருமால் மாயையால் அறிதற்குஒண்ணாதவாறுஇருப்பினும் யோகியரால் உணரப்படுதல்போல, பரிமுகமாக்கள் கரக்கினும் பளிக்கறையில் தோன்றுகின்றனரென்க. கரக்கினும் தோன்றுவதில்,உவமைவந்தது.பளிக்கறையென்பதற்கு - பளிக்குப்பாறையெனப் பொருள்கொள்ளலுமாம்: இவ்வுரையில், யோகியருள்ளத்திலேதோன்றுவதுபோல,பரிமுகமாக்கள் பளிக்குப்பாறையில் தோன்றுவரென்று கருத்துக்காண்க. பி-ம்:—[1]யோகியர்க். [2]கரக்கிலாதது. [3]நின்றுள. [4]தெரிகின்ற. [5]பரிபுரமகளிரை. இப்படலத்தின் கக, கஉ, கங, கச - பாடல்கள் சிலபிரதிகளி லில்லை. (எருக)

கஉ. ஆடு கின்றமா மயிலினு மழகிய குயிலே
[1]கூடு கின்றிலர் கொடிச்சியர் தம்மனங் கொதிப்ப
வூடு கின்றனர் கொழுநரை [2]யுருகினர் நோக்கப்
பாடுகின்றன கின்னர மிதுனங்கள் பாராய்.

(இ-ள்.) ஆடுகின்ற—, மா மயிலின் உம்-சிறந்தமயிலைக்காட்டிலும், அழகிய - (சாயலால்) அழகாகத்தோன்றுகின்ற, குயிலே-குயில்போலும் இனிய குரலையுடையவளே! கொடிச்சியர் - குறிஞ்சிமகளிர், தம் மனம் கொதிப்ப ஊடுகின்றனர்-தமது மனத்தில்(அன்பினாற்) புலவிதோன்ற ஊடல்கொண்டவராய், கூடுகின்றிலர்-(கணவனைக்) கூடாதிருப்பவர், உருகினர் கொழுநரை நோக்க - (காமவேதனையால்) மனமுருகியவராய் (த் தம்) கணவரைத் தாமே நாடுமாறு, பாடுகின்றன-பாடுகின்றனவான, கின்னரம் மிதுனங்கள்-கின்னர மிதுனங்களை, பாராய்—; (எ - று.)

கின்னரமிதுனங்கள்பாடுகையில் அப்பாடலினொலி காமோத்தீபகமாகி ஊடலினாற்கூடாமற்பிரிந்த கொடிச்சியரைத் தாமே கணவரைநாடுமாறு செய்கின்றதென்க. கின்னரமிதுனம் - மானுடமுகமும் குதிரையுடலும்படைத்து ஆணும்பெண்ணுமாகியிருந்து கின்னரமென்னும் இசைக்கருவியைக்கொண்டு பாடுந்தன்மையுள்ள தேவசாதிவிசேடம். பி-ம்:—[1]கூடுகின்றிலாக். [2]உருகிமே: நோக்கிப். (எகூ௦)

௧௩. வில்லி வாங்கிய சிலையெனப் பொலிநுதல் விளக்கே
வல்லி [1]தாங்கமை [2]தாக்கலின் [3]வழிந்திழி பிரசங்
கொல்லி வாங்கிய [4]குன்றவர் கொடிநெடுங் கவலை
கல்லி வாங்கிய [5]குழிகளை நிறைப்பன காணாய்.

(இ-ள்.) வில்லி வாங்கிய சிலை என பொலி நுதல் விளக்கே-வில்வீரன் வளைத்த வில்போல (வளைந்து) விளங்குகின்ற நெற்றியையுடைய குலவிளக்கே! வல்லி தாங்கு அமை தாக்கலின்-கொடியைத் தாங்கிய மூங்கில் தாக்குவதனால், (தேன்கூடுஉடைந்து அந்தக்கூட்டினின்று), வழிந்து இழி பிரசம் - பெருகிக்கீழேவிழுகின்ற தேன், கொல்லி வாங்கிய குன்றவர் - அரிவாளைக் கைக்கொண்ட வேடர், நெடு கொடி கவலை-நீண்டகொடிகளைக்கொண்ட கவலைக்கிழங்கை, கல்லி வாங்கிய-தோண்டி யெடுத்ததனாலுண்டாகிய, குழிகளை—, நிறைப்பன - நிறைப்பனவற்றை, காணாய்—; (எ - று.)

வில்லி - ஒருசாதியானுமாம். கல்லின்மீதுகட்டிய தேனிறாலை மூங்கில் தாக்குவதனால் அதனினின்று தேன் பெருகிக் கவலைக்கிழங்குதோண்டிய குழியை நிரப்புமென்க. பி-ம்:—[1]தாங்கழை, வாஙகமை. [2]தாக்கலில். [3]வந்திழி. [4]குன்றுவர். [5]சுழிகளைநிகர்ப்பன. (எகூக)

௧௪. ஒருவில் [1]பெண்மையென் றுரைக்கின்ற வுடலினுக் குயிரே
மருவு காதலி னினிதுட னாடிய மந்தி
யருவி நீர் [2]கொடு வீசத்தா னப்புறத் தேறிக்
கருவி மாமழை [3]யுதிர்ப்பதோர் கடுவனைக் காணாய்.

(இ - ள்.) ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே - நீங்குதலில்லாத பெண்மையென்றுசொல்லப்படும் ஒருடலுக்கு உயிர் போல் முக்கியமானவளே! மருவு காதலின்-பொருந்திய அன்போடு, இனிது-மனமகிழ்ச்சியோடு, உடன்-(ஆண்குரங்காகிய) தன்னோடு, ஆடிய-நீராடிய, மந்தி - பெண்குரங்கானது, அருவி நீர் கொடு வீச - அருவிநீரைக்கொண்டு (தன்மீது) தூவ, தான்—, அ புறத்து ஏறி - மலையின் மற்றொருபக்கத்திலே யேறிப்போய், கருவி மா மழை-(உலகம் நடப்பதற்குக்) கருவியாகிய சிறந்த மேகத்தை, உதிர்ப்பது - (மழைத்துளிசிதறுமாறு) குலுக்குகின்றதாகிய, ஓர் கடுவனை-ஆண்குரங்கு ஒன்றை, காணாய்—; (எ - று.)

தன்னொடுபுனலாட்டயர்ந்த பெண்குரஙகு அருவிநீரைக்கொண்டு வீச, அதற்குமாறாக ஆண்குரங்கு மலையின் அப்புறத்துள்ள மேகத்தினின்று நீரை யுதிர்க்குமென்க; தொடர்புயர்வுநவிற்சியணி தோன்றக் கூறியவாறு.

பெண்மைக்குணம் முற்றிலுங் காணத்தக்கது சீதையினிடத்தில்தானென்பது, 'பெண்மையென் றுரைக்கின்ற வுடலினுக் குயிரே' என்பதன் கருத்து. பி-ம்:—[1]பெண்மையையுரைக்கின்ற. [2]கொண்டு. [3]உகுப்பது. சிலபிரதிகளில் "அறைகழல்" (உஉ) என்ற செய்யுளுக்குப்பின் இந்தச்செய்யுள் காணப்படுகின்றது. (எசுஉ)

கரு. வீ று [1]பஞ்சின்றி யமுதநெய் [2]மாட்டிய விளக்கே
சீறு வெங்கதிர் செறிந்தன பேர்கல [3]திரியா
[4]மாறின் மண்டில [5]நிரம்பிய மாணிக்க மணிக்கற்
பாறை மற்றொரு [6]பரிதியிற் பொலிவன பாராய்.

(இ - ள்.) வீறு பஞ்சு இன்றி அமுதம் நெய் மாட்டிய விளக்கே-சிறந்த பஞ்சுத்திரியில்லாமல் அமுதமயமான நெய்யைக்கொண்டு எரியச்செய்த விளக்குப்போல்பவளே! சீறு வெம் கதிர் செறிந்தன-(இருளைச்)சீறியொழிக்கின்ற வெயில்போன்ற ஒளி நெருங்கியனவும், பேர்கல திரியா-இடம்விட்டுப் பெயர்ந்துதிரியாதனவும், மாறுஇல் மண்டிலம் நிரம்பிய - மாறுபடுதல் [கோணுதல்] இல்லாத மண்டலத்தன்மைநிரம்பப்பெற்றனவுமாகிய, மாணிக்கம் மணி கல் பாறை-மாணிக்கமணியாலியன்ற கற்பாறைகள், மற்று ஒரு பரிதியின் பொலிவன-வெவ்வேறுசூரியன்போல் விளங்குவனவற்றை, பாராய்—.

அமுதத்தாலியன்றுற்போன்று கண்ணுக்குஅழகிய திருமேனிபடைத்து விளங்குதலால், சீதையை 'வீறுபஞ்சின்றி யமுதநெய்மாட்டிய விளக்கே' என்கிறான். இருளையோட்டுதல் வெயில்போன்றவொளிவீசுதல் மண்டிலமாயிருத்தல் என்ற தன்மைகளில் ஒத்திருந்தனவாயினும், சூரியனோடொப்பிட்டுப் பார்க்குமிடத்து மாணிக்கக்கற்பாறைகள் பேர்ந்துதிரியாமையாகிய வேறுபாடுடையன வென்றது-வேற்றுமையணியாம். பி-ம்:—[1]பஞ்சினில். [2]ஆட்டிய. [3]திரிய, திரிவ. [4]மாறி. [5]நிரப்பிய. [6]பரிதியைநிகர்ப்பன (எசுங)

கசா. சீல மின்னதென் றருந்ததிக் [1]கருளிய திருவே
நீல வண்டினம் படிந்தெழ [2]வளைந்துட [3]னிமிர்வ
[4]சோலை வேங்கையின் [5]கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
[6]காலி னிற்றொழு தெழுவன [7]நிகர்ப்பன காணாய்.

(இ - ள்.) சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே - (உன் நடத்தையால்) நல்லொழுக்கம் இன்னதென்று அருந்ததிதேவிக்கும் காட்டியருளிய இலக்குமிபோன்ற கட்டழகியே! நீலம் வண்டு இனம் படிந்து எழ - கருநிறமுள்ளவண்டுகள் மொய்த்தது மேலேசெல்வதனால், வளைந்து உடன் நிமிர்வ - வளைவுபெற்று உடனே மேலோங்குவனவாகிய, சோலை வேங்கையின் கொம்பர்கள் - (இம்மலைச்) சோலையிலுள்ள வேங்கைமரத்தின் சிறுகிளைகள், பொன் மலர் தூவி-சுவர்ணபுஷ்பங்களை யிறைத்து, காலினில் தொழுது - பாதங்களிலே வணங்கி, எழுவன - எழுந்திருப்பவைகளை, நிகர்ப்பன - ஒத்திருப்பனவற்றை, காணாய்—; (எ - று.)

வேங்கைக்கொம்புகளிற் கருவண்டுகள் மொய்க்குந்தோறும் அந்தப் பாரத்தைத் தாங்கமாட்டாது தமதுமலரைச் சிதறியவண்ணம் அக்கிளைகள் விரைந்துதாழ்ந்தமையால் அவற்றினின்று அவ்வண்டுகள் மேலெழுந்தனவாக, அக்கிளைகளும் மேலெழுந்து செல்பவை - உன்னைக்கண்டு மலர்களைத் தூவித் தாளில்வீழ்ந்து எழுந்திருப்பவரை யொத்திருக்கு மெனச் சீதைக்கு இராமபிரான் காட்டுகின்றனனென்க. வேங்கையின்மலர் பொன்போன்ற நிறமுடையதாக இருக்குமாதலால், 'பொன்மலர் சிதறி' என்றார்: பொன்மலர் என்றதொடர்-பொன்னாலியன்றமலரெனவும் ஒருபொருள்தோன்றநின்றது. படிதலால்வளைந்து எழுதலால்நிமிர்வன என்று முறையே சென்றுஇயைந்து பொருளைத்தந்ததனால், 'படிந்தெழவளைந்துடனிமிர்வ' என்றதொடர் - முறை நிரனிறைப்பொருள்கோளாம். பி - ம்:—[1]உதவிய. [2]வளைந்தன. [3]நிமிர்ந்த, நிமிர்த்த. [4]கோல. [5]கொம்புகள். [6]காலின்வீழ்ந்தன. [7]நிகர்வன, நிகர்ப்பது. ()

கஎ. விற்கொள் வாணுதல் விளங்கிழை யிளந்தளிர்க் கொழுந்தே
வெற்கொண் மால்வரை [1]யும்பரி னிரும்புனங் காக்குங்
கொற்கொள் வேற்கணார் குரீஇயினத் [2]தெறிகுரு விந்தக்
கற்கள் வானிடை [3]மீனென [4]வீழ்வன காணாய்.

(இ - ள்.) வில் கொள் வாள் நுதல் - வில்லைக் கொண்டாற்போன்றுள்ள [புருவத்தைக்கொண்ட] ஒளிபொருந்திய நெற்றியையும், விளங்கு இழை - விளங்குகின்ற ஆபரணங்களையுமுடைய, இள தளிர் கொழுந்தே - இளமையுள்ள தளிர்க்கொழுந்துபோன்றவளே! எல் கொள் மால் வரை உம்பரின் - சூரியன்தவழப்பெற்ற ஓங்கிய மலையின்மேலே, இரு புனம் காக்கும் - பரவிய தினைக்கொல்லையைப் பாதுகாக்கின்ற, கொல் கொள் வேல் கணார் - கொல்லனாலராவிச்செய்யப்பட்டவேற்படைபோன்ற கண்களையுடைய மாதரார், குரீஇ இனத்து எறி - குருவியினத்தின்மேல் வீசியெறிகின்ற, குருவிந்தம் கற்கள் - குருவிந்தமணிகள், வானிடை - ஆகாயத்தில், மீன் என - நட்சத்திரங்கள்போல, வீழ்வன - விழுவனவற்றை, காணாய்—; (எ - று.)

குருவிந்தம் - ஒருவகைமாணிக்கம்: இதனை "பதுமநீலமும் விந்தமும் படிதமும்" என்ற சிலப்பதிகாரஅடியினுலும், 'விந்தம் - குருவிந்தம்: இரத்தவிந்துஎன்பதுமது;...திலகமுலோத்திரஞ்செம்பருத்திப்பூக், கவிர்மலர் குன்றி முயலுதிரம்மே, சிந்துரங்குக்கிற்கண்ணெனவெட்டு, மெண்ணிய குருவிந்த மெண்ணியநிறமே' என்ற உரைப்பகுதியாலும் உணர்க. இனி, குருவிந்தம் - காவிக்கல் என்று கொண்டாருமுளர்: அதிற் சிறப்பின்மை யறிக. கொல் கொள் - கொல்லனது தொழிலைக்கொண்ட என்க. எல் - சூரியனுக்கு, ஆகுபெயர். பி - ம்:—[1]உம்பர்நின்று. [2]எறிதரக்குவிந்த, எறிதரக்குறித்த. [3]மின்னென. [4]விழுவன, விழைவன. (எசுரு)

கரு. [1]வரிகொ [2]ளொண்சிலை வயவர்தங் கணிச்சியின் [3]மறிந்த
பரிய கா[4]ரகில் சுடநிமிர் [5]பசும்புகைப் படல
மரிய வேதிய ராகுதி[6]ப் புகையொடு [7]மளாவிக்
கரிய மால்வரைக் கொழுந்தெனப் படர்வன காணாய்.

(இ - ள்.) வரி கொள் ஒண் சிலை வயவர்தம் - கட்டமைந்த ஒள்ளிய [வலிய] வில்லை யேந்திய (வேட்டுவ)வீரருடைய, கணிச்சியின் - கோடாலிப் படையால், மறிந்த - வெட்டப்பட்டு வீழ்ந்த, பரிய கார் அகில் - பருத்த கருநிறமுள்ள அகிற்கட்டையை, சுட - எரிப்பதனால், நிமிர் - (வானத்து) ஓங்கிய, பசு புகைப் படலம் - தாமிரவர்ணத்தையுடைய புகைத்தொகுதி யானது,—அரிய வேதியர் ஆகுதி புகையொடும் - அரியரான [மிக்கமகிமை யுள்ள] வேதம்வல்லஅந்தணர்கள் அக்கினியிற்செய்த ஓமத்திலேதோன்றிய புகையுடனே, அளாவி-ஒன்றுசேர்ந்து,—கரிய மால் வரை கொழுந்து என- கருநிறமுள்ள பெரியமலையின் சிகரம்போல, படர்வன - பரந்திருப்பன வற்றை, காணாய்—; (எ - று.)

ஆகுதி - வேள்வித்தீயிலிடும்பொருள். மறத்துறையோரது புகையும் அறத்துறையோரது புகையும் மயங்கு மென்றார். பி - ம்:—[1]வரிக்கொள். [2]னோன். [3]மடிந்த, மடித்த. [4]அகிற்சுடர். [5]பைங்கதிர், பசுங்கதிர், பசுஞ்சுடர். [6]தீப்புகை. [7]அளவி, மருவி. சிலபிரதிகளில் இப்பாடலுக்குப்பின் "இலவு" (உ௫) என்றபாடலும், "நானநாண்"(கக)"என்ற பாடலும் உள்ளன. சிலபிரதியில் "நானநாண்" என்பதன்பின் இச்செய்யுள்உள்ளது. (உசுசு)

கக. நான நாண்மலர் நறையகி [1]லாவிதே னறுஞ்
சோனை வார்குழற் [2]சுமைபொறு திநுங்கிடைத் தோகாய்
[3]வான யாற்றுமீன் மலர்ந்தன வெனப்புனல் வறந்த
கான யாறுகள் [4]கணமணி யிமைப்பன காணாய்.

(இ - ள்.) நானம் - நானப்புகையாலும், நாள் மலர் - (சூடிய) புதுமல ராலும், நறை அகில் - நறைக்கொடி அகிற்கட்டை என்பவற்றின், ஆவி - புகையினாலும், தேன் நாறும் - இனியமணம் வீசுகின்ற, சோனை வார் குழல்- விடாமழைபொழியும் மேகம்போற்கறுத்த நீண்டகூந்தலின், சுமை-பாரத்தை, பொறுது - தாங்கமாட்டாமல், இநுகு - ஒடுங்குகின்ற [மிகநுண்ணிய], இடை - இடையையுடைய, தோகாய்-மயில்போலுஞ் சாயலையுடையவளே! வானம் யாறு - ஆகாயமாகிய யாற்றிலே, மீன் - நட்சத்திரங்களாகிய மீன்கள், மலர்ந்தன என - தோன்றின என்று, புனல் வறந்த கானம் யாறுகள் - (தம்மிடத்து மீன் தங்கமுடியாதபடி) நீர்வற்றிய காட்டாறுகளும், கணம் மணி - தொகுதியாகிய இரத்தினங்களை, இமைப்பன - (தம்மிடத்துப்) பிரகாசிக்கச் செய்பவற்றை, காணாய்—; (எ - று.)

நீர்வறந்த கான்யாற்றில் தோன்றும் மணிகள், வானயாறு மீன்இமைப் பதுகண்டு தாம் அவ்வானயாற்றோடு இகலிக் கணமணி யிமைப்பன போலு

மெனக் குறித்தார்: தற்குறிப்பேற்றவணி: வானயாறு-உருவகம்: மீன்-நட்சத்திரம் மதஸ்யம் என்னும் இருபொருளையும் ஒருங்கே உணர்த்திற்று:சிலேடையுருவகம். நறை-புகைக்கும் ஒருவகைக்கொடி. நானம்-எரிக்கும் ஒரு வகைப் புழுகு: "நறையு நானமு நாறு நறும்புகை" என்றது காண்க. [1]நாவி என்ற பாடத்திற்கு,நாவி-கத்தூரிப்புழுகெண்ணெய்:"நாவியுங் காரகிலாவியுந்தோய் குழல்"என்ற தஞ்சைவாணன் கோவையையுங் காண்க.பி-ம்:—[1]நாவி தேனூறும். [2]சுமந்திறுமிறுமிடை, சுமைபெருத்துடியிடை, சுமைபெருதிடுகிடை, சுமைபொருதிறுமிடை, சுமைபொருதிறுகிடை. [3]வானயாறுமீன், வானயாற்றுமீன். [4]கதிர், கனம். இப்பாடலுக்குப்பின் "வடுவின்" (ங0) என்ற பாடல் சிலபிரதியி லுள்ளது. (எசுஎ)

உ0. மஞ்ச ளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ
செஞ்செ வேநெடு மரகதப் பாறையிற் றெரிவ
விஞ்சை நாடியர் கொழுநரோ [1]டூடிய விமலப்
பஞ்ச ளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்.

(இ - ள்.) மஞ்சு அளாவிய மாணிக்கம் பாறையில் - மேகங்களையளாவியுள்ள(இம்மலையின்)மாணிக்கப்பாறையிலே,மறைவ-(வேற்றுமைதோன்றாது) மறைவனவும், நெடு மரகதம் பாறையில் செஞ்செவே தெரிவ-நீண்ட மரகதப் பாறையிற்செவ்வனே தெரிவனவுமான,கொழுநரோடு ஊடிய விஞ்சை நாடியர் விமலம் பஞ்சு அளாவிய சிறு அடி சுவடுகள் - (தம்) கணவரோடு ஊடல் கொண்ட வித்தியாதரமகளிருடைய குற்றமற்ற செம்பஞ்சுதீற்றிய சிறிய பாதங்கள் வைத்துநடந்த அடிவைப்புக்களை, பாராய்—; (எ-று.)

ஊடலாவது-தம்கணவரோடு சினத்தற்குஉரிய காரணம் இல்லாதபொழுதும் ஏதேனும் ஒன்றைக்காரணமாகக்கொண்டு அவரொடு சினந்துசெல்லுதல். ஊடல் காமத்திற்கு இன்பமாதலால்,இதனை மேற்கொள்வாராயினர், விஞ்சை நாடியரென்க. விஞ்சைமகளிர் தம்கணவரோடு ஊடி இம்மலைமேல் நடந்து செல்ல,அம்மகளிரின் செம்பஞ்சூட்டிய பாதங்களின் அடிச்சுவடுகள் நிறவேற்றுமையின்மையால் மாணிக்கக்கற்பாறையில் மறைந்து, மாற்றுநிறமுண்மையால் மரகதப்பாறையிற்செவ்வனே தோன்று மென்க.பி-ம்:-[1]ஊடினர்,ஆடிய.

உக. சுழித்த செம்பொனின் றொளை[1]புரை யுந்தி[2]யின் றுணையே
கொழித்த மாமணி[3] யருவியோ டிழிவன கோல
மழித்து மேவிய வரம்பைய ரறல்புரை [4]கூந்தற்
கழித்து [5]நீக்கிய கற்பக [6]நறுமலர் காணாய்.

(இ - ள்.) சுழித்த செம் பொனின் தொளை புரை உந்தி - சுழிக்கப்பட்ட செம்பொனுலியன்ற தொளையையொத்த கொப்பூழ்ச்சுழியையுடைய, இன் துணையே-(எனக்கு) இனிய இல்லறவாழ்க்கைத் துணைவியே! கொழித்த மா மணி அருவியோடு இழிவன-கொழித்துக்கொண்டுவருகின்ற சிறந்த இரத்தி

ணங்களையுடைய மலையருவியோடு இழிவனவும்,மேவிய அரம்பையர் கோலம் அழித்து அறல் புரை கூந்தல் கழித்து நீக்கிய-(நீராட) நாடிவந்த தேவமாதர் (தமது) அலங்காரங்களைக் களைதலாற் கருமணலையொத்த (தமது) மயிர்முடியினின்று கழற்றி அப்பாலெறிந்தனவுமான,கற்பகம் நறுமலர்-கற்பகமரத்தின் நறுமணமுள்ள மலர்களை, காணாய்—; (எ - று.)

அரம்பையர் இந்தமலையினருவியில்நீராடும்போது தாம்புனைந்தகோலத்தை யழிக்கையில் தமதுகூந்தலிற் சூடிய கற்பகமலரை அப்பால்எறிய, அவைகள் மலையருவிகொழித்துக் கொண்டுவரும் மணிகளோடு கலந்திழியுமென்க. தேவமாது ஒருத்தியின் பெயராகிய ரம்பாஎன்ற வடசொல்லின் திரிபான அரம்பையென்பது பொதுவாய் தேவமாதுஎன்னும் பொருளையுணர்த்தி, அர் விகுதிபெற்றுப் பன்மைப்பொருளைக் காட்டிற்று. மேவிய - யாவரும் விரும்புவதற்குக்காரணமான எனப்பொருள்கொண்டு,மலையோங்கியிருத்தலால் தேவமாதர்கழற்றியெறிந்த மாலைகளை அருவியடித்துக்கொண்டு வரலாயிற்றென்றலு மொன்று. பி - ம்:—[1]புரி. [2]என். [3]அருவிகள் பொழிவன, அருவியூடிழிவன. [4]ஓதி. [5]நீங்கிய. [6]மலரிவை. சிலபிரதிகளில் "இலவும்" (௨௫)என்ற பாடல் இப்பாடலையடுத்து உள்ளது: சிலபிரதிகளில் "செம்பொனால்" (௨௬) என்ற பாடல் உள்ளது. (௭௬௯)

௨௨. அறைகழற் [1]சிலைக் [2]குன்றவ ரகன்புனங் காவற்
பறையெடுத்தொரு கடுவனின் றடிப்பது பாராய்
பிறையை யெட்டினள் பிடித்திதற் கிதுபிழை [3]யென்னாக்
கறை[4]து டைக்குறு பேதையோர் கொடிச்சியைக் காணாய்.

(இ-ள்.) அறை கழல்-ஒலிக்கின்ற வீரக்கழலையும்,சிலை-வில்லையுமுடைய, குன்றவர்-மலைநிலத்தவரான வேடரின், அகல் புனம் காவல் பறை-அகன்ற புனத்தைக் காப்பதற்காகவைத்துள்ள பறையை, எடுத்து-, ஒரு கடுவன்-ஒரு ஆண்குரங்கு, நின்று - நின்றுகொண்டு, அடிப்பது-கொட்டுவதை, பாராய்—; பிறையை - பிறைச்சந்திரனை,-எட்டினள் பிடித்து-எட்டிப்பிடித்து, 'இதற்கு இது பிழை - இந்தச்சந்திரனுக்கு இந்தமறு குற்றமாகும்,' என்னா - என்று கருதி, கறை துடைக்குறு-அந்தக்கறையைப் போக்கக்கருதித் துடைக்கின்ற, பேதை - அறியாமைக்குணமுள்ள, ஓர் கொடிச்சியை - குறிஞ்சிநிலப்பெண்ணொருத்தியை, காணாய்—; (எ - று.)

தழல் தட்டைமுதலியனவற்றால் ஓசையெழுப்பிக் கிளிமுதலியபறவைகளை யோட்டுதல்போல, பறைமுழக்கியும் பறவைகளை யோட்டுவரென்க. போக்கமுடியாதசந்திரனுடைய கறையைப் போக்க முயலுதலாற் கொடிச்சியை 'பேதை' என்றான்.பி-ம்:—[1]சினக். [2]குன்றுவர். [3]என்னக். [4]துடக்குறு. சிலபிரதிகளில் இதுவும் அடுத்த கவியும் "வீறுபஞ்சின்றி" (௧௫) என்றபாடலுக்குப்பின் முறையே உள்ளன. (௭௭௦)

உஙூ. அடுத்த பற்பக [1]லன்பரைப் [2]பிரிந்தவ ரென்ப
தெடுத்து நந்தமக் [3]கியம்புவ வெனக்கரிந் திருண்ட
தொடுத்த மாதவிச் சூழலிற் சூரர மகளிர்
படுத்து [4]வைகிய [5]பல்லவச் சயனங்கள் பாராய்.

(இ - ள்.) தொடுத்த மாதவி சூழலில்-(உள்ளே சூரியசந்திரகிரணங்கள் புகாதவாறு) அடர்த்தியாகவுள்ள மாதவிப்பந்தரினிடையே, சூர் அர மகளிர் படுத்து வைகிய-(பிரிந்த) தேவமகளிர் படுத்துத்தங்கியனவும்,—அடுத்த பல் பகல்-(ஒருசேர) அடுத்துள்ள பல நாள்களில், அன்பரை பிரிந்தவர் என்பது-(தமது) கணவரைப் பிரிந்திருந்தவர் (அத்தேவமங்கையர்) என்பதை, நம் தமக்கு எடுத்து இயம்புவ என - நமக்கு எடுத்துச்சொல்வனபோல, கரிந்து இருண்ட-(அவர்களின் மேனிவெம்மையினால்) கரிந்துபோய் இருளின் வடிவு படைத்தனவுமான, பல்லவம் சயனங்கள்-தளிர்ப்படுக்கைகளை, பாராய்-.

மாதவிப்பந்தர் - குருக்கத்திக்கொடிபடர்ந்த பந்தல். சூர் அரமகளிர்-சுர அமரமகளிர்: தெய்வத்தன்மையுடனேசிறக்கும் அமரமகளிர். மாதவிச்சூழலிற் கிடந்த பல்லவச்சயனங்கள் கரிந்திருண்டிருத்தலால், அமரமகளிர் அடுத்த பற் பகலில் அன்பரைப்பிரிந்திருந்தன ரென்பதை விளக்கு மென்க. எனக் கரிந் திருண்ட பல்லவச்சயனங்கள் எனவும், படுத்துவைகிய பல்லவச்சயனங்கள் எனவும் இயையும். பி-ம்:—[1]அன்பரில். [2]பிரிந்தனர். [3]இயம்புவது. [4]உலர்ந் தன. [5]பல்லவசயனங்கள். (எஎக)

உச. நினைந்த போதினு மமிழ்தொக்கு [1]நேரிழை [2]நிறைதேன்
வனைந்த வேங்கையிற் கோங்கினில் வயின்[3]றொறுந் தொடுத்து
குனிந்த வூசலிற் கொடிச்சிய ரெடுத்த[4]வின் குறிஞ்சிக்
கனிந்த [5]பாடல்கேட் டசுணமா வருவன காணாய்.

(இ - ள்.) நினைந்த போதின் உம் அமிழ்து ஒக்கும் நேர் இழை-(மனத்தி னால்) நினைக்கும்போதும் அமிருதத்தையுண்டாற்போல மகிழ்ச்சியைத்தரு கின்ற அழகிய அணிகலம்பூண்டவளே! நிறை தேன் வனைந்த வேங்கையில் - நிறைந்த தேனைக்கொண்ட அழகிய வேங்கைமரத்திலும், கோங்கினில்-கோங் கமரத்திலும், வயின் தொறும்-(மற்றுமுள்ளமரங்களின்) இடத்திலும், தொடுத் து-கட்டப்பட்டு, குனிந்த-வளைந்தாடுந்தன்மையுள்ள, ஊசலில்-ஊஞ்சலிலிரு ந்து, கொடிச்சியர்-குறிஞ்சிநிலத்துப்பெண்கள், எடுத்த-எடுத்துப்பாடிய, இன் குறிஞ்சி-இனிய குறிஞ்சிப்பண், கனிந்த-சுவைமுதிர்ந்துள்ள, பாடல்-பாடலை, கேட்டு-செவியேற்று, அசுணம்மா-அசுணமாக்கள், வருவன-வருவனவற்றை, காணாய்—; (எ - று.)

வேங்கைமுதலிய மரங்களிற் றொடுத்த ஊஞ்சலிலிருந்து கொடிச்சியர் குறிஞ்சிப்பண்ணோடு கூடிய பாடலைப் பாட, அப்பாடலைக்கேட்குமாறு அசுண மா வருமென்க. அசுணம் - இசையறிபறவை. இது, இனிய யாழோசை

கேட்டு இன்புறுதலும், பறையொலிகேட்டு உயிர்நீப்பதுமான தன்மையுள்ளதென்பதை "இன்னளிக்குரல் கேட்ட வசுணமா, வன்னளாய்", "பறைபடவாழா வசுணமா" என்பவற்றாலறிக. இதனை, இசையறிபறவையென்பர், பிங்கலந்தையார். பி-ம்:—[1]நேரிழாய். [2]நின்ற. [3]கொளத். [4]விண்குறிஞ்சி. [5]பாடலின். (எஎஉ)

உரு. இலவு மிந்திர கோபமும் புரையித [1]ழினியா
[2]யலவு தண்டுளி யருவிநீ ரரம்பைய ராடக்
கலவை சாந்துசெங் குங்குமங் கற்பகங் கொடுத்த
பலவுந் தோய்தலிற் பரிமளங் கமழ்வன பாராய்.

(இ - ள்.) இலவுஉம்-கோங்கிலவமலரையும், இந்திரகோபம்உம்-பட்டுப்பூச்சியையும், புரை-ஒத்த, இதழ் - உதட்டையுடைய, இனியாய் - கட்டழகியே! அலவு தண் துளி அருவி நீர் - அசையுந்தன்மையுள்ள குளிர்ந்த பல நீர்த்துளிவடிவான (இம்மலையின்) அருவிநீர்கள், அரம்பையர் ஆட-தேவமகளிர்குடைந்தாடியதனால், (அவர்கள் தம்முடம்பிலணிந்த,) கலவை சாந்து - கலவைச்சாந்தும், செம் குங்குமம்-செந்நிறமுள்ள குங்குமக்குழம்பும், கற்பகம் கொடுத்த பலஉம்-கற்பகவிருட்சங்கொடுத்த மற்றுமுள்ள நறுமணப்பொருள்களும், தோய்தலின் - (தம்மிடத்துப்) படிவதனால், பரிமளம் கமழ்வன - நறுமணம்வீசுவனவற்றை, பாராய்—; (எ - று.)

அரம்பையராடுகையில் அவரணிந்த சாந்துமுதலியன தோய்ந்து அருவிநீர் நறுமணங் கமழு மென்க. நிறத்தால் இலவும் இந்திரகோபமும் இதழையொக்கும். அலவுதல்-சிந்துதலுமாம். பி-ம்:—[1]இனியோய். [2]அலவனுண்டுளி, அலவுநுண்டுளி. சிலபிரதிகளில் இப்பாடல் "வரிகொள்" (கஅ) என்பதன் பின்னும், அப்பாடலுக்குப்பின் "நான நாண்மலர்" (ககூ) என்றபாடலும், அதன்பின் "மஞ்சளாவிய" (உ௦) என்றபாடலும், அதன்பின், "சுழித்த" (உக) என்ற பாடலும் அதன்பின் "செம்பொனால்" (உசு) என்ற பாடலும் உள்ளன. (எஎஙு)

உசு. செம்பொ னாற்செய்து குலிக[1]மிட் டெழுதிய செப்போர்
[2]கொம்பர் தாங்கிய தெனப்பொலி வனமுலைக் கொடியே
யம்பொன் மால்வரை [3]யலர்கதி ருச்சிசென் [4]றணையப்
பைம்பொன் மாமுடி மிலைச்சிய [5]தொப்பது பாராய்.

(இ - ள்.) செம் பொனால் செய்து-சிறந்தபொன்னினாற் செய்யப்பட்டு, குலிகம் இட்டு எழுதிய இங்குலிகத்தைக்கொண்டு தொய்யிலெழுதப் பெற்ற, செப்பு-சிமிழை, ஓர் கொம்பர் தாங்கியது-ஒரு கொம்பு தாங்குகின்றது, என-என்று (கண்டோர்) சொல்லுமாறு, பொலி - விளங்குகின்ற, வன முலைகொடியே - அழகிய தனங்களைக்கொண்ட பூங்கொடி போன்றவளே! அம்பொன் மால் வரை-அழகிய பொன்மயமான பெரியவிம்மலைச்சிகரத்தை, அலர் கதிர்-

பரவிய [ஆயிரமாகிய] கிரணங்களையுடைய சூரியன், உச்சி - உச்சிப்போதில், சென்று அணைப - சென்றுசேர, பைம் பொன் மா முடி மிலைச்சியது - பசும்பொன்னினாலியன்ற பெரிய கிரீடத்தை யணிந்ததை, ஒப்பது - ஒத்திருப்பதை, பாராய்—; (எ - று.)

சூரியன் உச்சிப்போதில் இம்மலையுச்சியில்வந்து அணைய, இம்மலை கிரீடத்தைச் சூடியது போலு மென்க. தொய்யிலெழுதிய கொங்கை - குலிக மெழுதிய செம்பொற்செப்பை யொக்கு மென்பது, முதலடியிற்கூறிய பொருள்: இல்பொருளுவமை. வனப்புமுலையென்பது வனமுலையென விகாரப்பட்டது. இனி, வனம் - வனத்திலுள்ள, முலை கொடியே - முல்லைக் கொடிபோல்பவளே என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]மீது. [2]கொம்பு. [3]அலை. [4]அணுக. [5]ஒப்பன. சிலபிரதிகளில் இப்பாடலை யடுத்து "குழுவு நுண் டொளை" (உஅ) என்ற பாடலுள்ளது. (எஎச)

உஎ. மடந்தை மார்களிற் றிலதமே மணிநிறத் திணிக
றொடர்ந்த பாறையில் வேயினஞ் சொரி[1]கதிர் முத்த
மிடந்தொ றுங்கிடந் [2]திமைப்பன [3]வெக்கிளஞ் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை [4]நிகர்ப்பன பாராய்.

(இ - ள்.) மடந்தைமார்களில் திலதமே - மகளிருக்குத் திலகம்போலச் சிறந்து தோன்றுபவளே! மணி நிறம் திணி கல் தொடர்ந்த பாறையில் - மாணிக்கமாகிய சிறந்த நிறத்தைக்கொண்ட வலிய கற்கள் தொடர்ந்த பாறைகளிலே, வேய் இனம் சொரி - மூங்கிற்குவியல் சொரிந்த, கதிர் முத்தம் - ஒளியைக்கொண்டுள்ள முத்துக்கள், இடம் தொறும் கிடந்து இமைப்பன - ஆங்காங்குஇருந்து ஒளிவீசுபவை, எக்கு இள செக்கர்-மிகவும் இளமைபொருந்திய செவ்வானம், படர்ந்த-பரவியுள்ள, வானிடை-ஆகாசத்தினிடத்திலே, தாரகை நிகர்ப்பன-நட்சத்திரங்களையொத்திருப்பவற்றை, பாராய்—;(எ-று.)

மணிநிறகற்பாறையில் வேயினம் சொரிந்த முத்துக்கள், செக்கர்வானத்துத் தாரகை விளங்குவனபோலு மென்க. முத்துப்பிறக்குமிடங்கள் பலவற்றுள் வேயும் ஒன்றாதல் காண்க. பி-ம்:—[1]மணி. [2]இமைப்பினில். [3]வெம்மி கிளஞ், வெருளறச், எரிகதிர்ச். [4]புரைவன. (எஎரு)

உஅ. [1]குழுவு நுண்டொளை [2]வேயினுங் குறிநரம் [3]பெறிவுற்
றெழுவு தண்டமிழ் யாழினு மினியசொற் கிளியே
முழுவ தும்மலர் [4]விரிந்தன முருக்கிடை [5]மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய [6]தொப்பது பாராய்.

(இ-ள்.) நுண் தொளை குழுவு வேயின் உம்-நுண்ணிய தொளைபொருந்திய புல்லாங்குழலோசையினும், குறி நரம்பு எறிவு உற்று எழுவு தண் தமிழ் யாழின்உம் - ஓசையையெழுப்பவல்ல நரம்பை (க் கைவிரல்களால்தடவி) யெறிந்து உண்டாக்குகின்ற குளிர்ந்த இனியயாழிசையினும், இனிய - இனி

மையாகத்தோன்றுகின்ற, சொல் - சொற்களையுடைய, கிளியே - கிளிபோன்றவளே! முழுவதூஉம் மலர் விரிந்தன முருக்கு - (தம்மிடம்) முழுவதிலும் செம்மலர் மலரப்பெற்றனவாகிய பலாசமரங்கள், இடை மிடைந்த பழுவம் - (தம்) நடுவிலே நெருங்கப்பெற்ற சோலை, வெம் கனல் கதுவியது ஒப்பது - வெம்மையுள்ள அக்கினி பற்றியெரிவதையொப்பதை, பாராய்—; (எ - று.)

சோலையினிடையிலே முழுவதும் பூத்த பலாசமரங்கள் இருப்பது, சோலையின்நடுவே நெருப்புப்பற்றியெரிவது போலுமென்க: **தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:**—[1]குழுவின். [2]மேய்ங்குழலேழ். [3]எழுவுற்று. [4]விரியநாள், விரிந்தாள். [5]இடைந்த. [6]ஒப்பன. (எஎசு)

உகூ. வளைகள் காந்தளிற் பெய்தன வனையகைம் மயிலே
தொளைகொ டாழ்தடக் கை[1]யெனுந் துருத்தியிற் றூக்கி
யளவில் மூப்பின ரருந்தவர்க் கருவிநீர் கொணர்ந்து
களப மால்கரி [2]குண்டிகைச் சொரிவன காணாய்.

(இ - ள்.) வளைகள் காந்தளில் பெய்தன அனைய கை மயிலே - வளைகளைக் காந்தள்மலரிலிட்டு வைத்தனவற்றையொத்த [வளைபூண்ட] கையைக்கொண்ட மயில்போலுஞ் சாயலையுடையவளே! அளவு இல் மூப்பினர் அருதவர்க்கு - அளவில்லாத [மிக்க] மூப்பைக்கொண்டவராய்'ப் பிறர்க்குச் செய்தற்கு) அரியதவத்தைச் செய்தவரான இருடியர்க்கு, அருவி நீர் - மலையருவிநீரை, மால் கரி களபம் - பெரிய யானைக்குட்டிகள், தொளை கொள் தாழ் தட கை எனும் துருத்தியில் தூக்கி - (நுனியில்) தொளையையுடைய தொங்குகின்ற நீண்ட தும்பிக்கையாகிற தோற்பையிலே முகந்துகொண்டு, கொணர்ந்து—, குண்டிகை - (அம்முனிவரது) கமண்டலத்தில், சொரிவன - ஊற்றுபவற்றை, காணாய்—; (எ - று.)

இந்தச்சித்திரகூடமலையில் அஃறிணைப்பொருளாகிய யானைக்கன்றுகளும் நல்லறிவுபெற்றுத் தமது தும்பிக்கையால் அருவிநீரை முகந்துகொண்டு வந்து முதிய தவசியர்க்கு அவரது கமண்டலத்திற் சொரிந்து உதவுவதைக் காட்டுகின்றனனென்க. காந்தள், கைக்கு உவமை. களபம் - முப்பதுவயதுள்ள யானைக்கன்று. கரி - தும்பிக்கையையுடையவிலங்கு என யானைக்குக் காரணப்பெயர். **பி-ம்:**—[1]நெடுக். [2]குண்டிகை சொரிவன. (எஎஎ)

ஈ0. வடுவின் [1]மாவகி ரிவையெனப் பொலிந்தகண் மயிலே
யிடுகு கண்ணின ரிடருறு மூப்பின [2]ரேக
நெடுகு [3]கூனல்வா னீட்டின [4]வுருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க் கருநெறி காட்டுவ காணாய்.

(இ - ள்.) 'இவை—, வடு இல் மா வகிர்-குற்றமற்ற மாவடுவாகும்,' என- என்று சொல்லுமாறு, பொலிந்த - விளங்குகின்ற, கண் - கண்களையுடைய, மயிலே - மயில் போன்றவளே! நெடுகு கூனல் வால் நீட்டின - மிக்ககூனையுடைய வாலை நீட்டிக்கொண்டிருப்பனவான, உருகுறு நெஞ்சம் கடுவன் -(அன்

பால்) உருகுகின்ற மனத்தைக்கொண்டுள்ள ஆண் குரங்குகள், இடுகு கண்ணி னர் இடர் உறு மூப்பினர் மாதவர்க்கு - இடுகிய கண்களையுடையவரும் மனத் துன்பமுண்டாவதற்குக்காரணமான மூப்பை யுடையவருமான பெருந்தவசி· யர்க்கு, ஏக - செல்லுமாறு, அரு நெறி - (செல்வதற்கு) அரிய வழியை, காட்டுவ - காட்டுவனவற்றை, காணாய்—; (எ - று.)

இம்மலையிலுள்ள கடுவன்குரங்குகள், மூப்பையடைந்து கண்ணிடுகிப் போய் வழியறிந்துசெல்லமுடியாமல் வருந்துகின்ற பெருந்தவசியரிடத்துப் பேரன்புபூண்டு அவர்கள் செல்லுதற்குஉரிய அருநெறியைக் காட்டுமென்க. பி - ம்:—[1]மாவடுவகிரென. [2]என்ன. [3]கூலவால், கூனவால், கோலவால். [4]அருகுறுநெஞ்சக், உருகின நெஞ்சிற், உருகின நெஞ்சக்.　　　(எஎஅ)

ருக. பாந்த டேரிவை பழிபடப் பரந்த[1]பே ரல்குு
லேந்து நூன்மணி மார்பின ராகுதிக் [2]கியைந்த
கூந்தன் மென்மயில் குறுகின நெடுஞ்சிறை கோலிக்
காந்து [3]குண்டத்தின் வயங்கெரி யெழுப்புவ காணாய்.

(இ - ள்.) பாந்தள் - பாம்பின்படமும், தேர் - தேர்த்தட்டும், இவை - (என்ற) இவைகள், பழிபட - (உவமையாகாமற்) பழிப்பையடைய, பரந்த - பரவிய, பேர் அல்குல் - பெரியஅல்குலையுடையவளே! கூந்தல் மெல் மயில் - தோகையையுடைய மெல்லிய மயிற்பறவைகள்,குறுகின-நெருங்கியனவாய்,- நூல் ஏந்து மணி மார்பினர் ஆகுதிக்கு இயைந்த - பூணூலைத்தரித்த அழகிய மார்பையுடையவராகிய அந்தணர்கள் ஓமஞ்செய்வதற்குப் பொருந்தியன வான, காந்து குண்டத்தின் வயங்கு எரி - வெம்மை வீசுகின்ற குண்டங்களி னுள்ளே பொருந்திய அக்கினியை, நெடு சிறை கோலி - (தமது) நீண்ட சிற கைப்பிரித்து விரித்து, எழுப்புவ - ஜ்வலிக்கசசெய்பவற்றை, காணாய்—.

சித்திரகூடமலையிலுள்ள மயில்கள் அந்தணர்ஓமஞ்செய்யுமாறு குண்டத் திலுள்ள அக்கினியைத் தஞ்சிறகைமூடிமூடி விரித்து விரித்து விசிறியாற்காற் றையுண்டாக்குவதுபோற் காற்றையுண்டாக்கி எரியச்செய்யுமென்க. ஜ்வலிக் கும்போதுதான் அக்கினியில் ஓமஞ்செய்யவேண்டு மென்பது, நூற்றுணிபு. குண்டம்-தீவளர்க்குமாறுஅமைக்கப்படுவது. அல்குலுக்குப் பாந்தட்படமும் தேர்த்தட்டும் உவமைகூறப்படும். பி - ம்.—[1]பொற்குயிலே. [2]இயைய. [3]குண் டதிலங்கெரி, குண்டத்திலடங்கெரி, குண்டத்தினங்கெரி.　　　(எஎகூ)

ருஉ. அலம்பு வார்குழ லாய்[1]மயிற்பெண் [2]ணருங் கலமே
நலம்பெய் வேதியர் [3]மார்பினுக் [4]கியைவுற நாடி
சிலம்பி [5]பஞ்சினிற் [6]சிக்கறத் [7]தெரிந்தநூ [8]றேமாம்
[9]பலம்பெய் [10]மந்திக ளுடன்வந்து கொடுப்பன பாராய்.

(இ - ள்.) அலம்பு வார் குழல்-அசைகின்ற நீண்ட கூந்தலையுடைய,ஆய் மயில் - அழகிய மயில்போலுஞ் சாயலைக்கொண்ட, பெண் அரு கலமே-அரு மையாகிய ஆபரணம்போல் விளக்கம்பொருந்திய பெண்ணே! நலம் பெய்

வேதியர்-(தம்முடைய நல்லொழுக்கத்தால் உலகத்தார்க்கு)நன்மையைச் செய்கின்ற வேதம்வல்ல அந்தணர்கள், மார்பினுக்கு-மார்பிற்பூண்பதற்கு, இயைவு உற - பொருந்த, நாடி - ஆராய்ந்து, சிலம்பி பஞ்சினில் - பட்டுப்பூச்சிக்கூடு பருத்திப்பஞ்சு என்ற இவற்றினின்று, சிக்கு அற தெரிந்த - சிக்கில்லாதபடி ஆராய்ந்துகொணர்ந்த, நூல் - நூல்களை, தேமா பலம் பெய் மந்திகள்-தேமா மரத்தினின்று கனியை யுகுக்குந் தன்மையனவாகிய குரங்குகள், உடன் வந்து - ஒருசேரவந்து, கொடுப்பன - கொடுப்பவற்றை, பாராய்—; (எ-று.)

அந்தணர் பூணும் யஜ்ஞோபவீதத்திற்கு உதவுமாறு மந்திகள் சிலம்பி நூல் பஞ்சுநூல்களைத் தெரிந்துகொடுக்கு மென்க. வேதச்சடங்குசெய்கையில் மறையவர் ஆடையை யஜ்ஞோபவீதமாகப் பூணவேண்டு மென்பது, நூற் கொள்கை: ஆகவே, சிலம்பிநூல் அவ்வண்ணம்பூணும் ஆடையை நெய்வதற்கு உதவு மென்க. பருத்தியினலியன்ற நூல்கொண்டு முறுக்கிய பூணூலைப் பூணுதல், பிரசித்தம். சிலம்பிபஞ்சுஎன்று பருத்தியைச் சுட்டுவதாகக் கொள்ளுதல் பொருந்தாது. அலம்பு-(வண்டுகள்) ஒலிக்கின்ற எனினுமாம். பி - ம்:—[1]வலை. [2]இருங். [3]ஆகுதிக்கு. [4]இசைவுற, இசைவன, இயைவன. [5]பஞ்சினூல். [6]சிக்குறத். [7]திரித்தன, திரித்தநூல், தெருட்டுநூல். [8]தேமாப். [9]பலங்கள். [10]மந்தியொடு. (எ௮௦)

ருகூ. [1]தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே
பெரிய [2]மாக்களிற் பலாக்களிற் பிறங்கிய வாழை
யரிய மாக்கனி [3]கடுவன்க ளன்புகொண் டளிப்பக்
கரிய [4]மாகிழங் ககழ்ந்தன கொணர்வன காணாய்.

(இ - ள்.) தெரிவைமார்க்கு - தெரிவைமாரைப்படைத்தற்கு, ஒரு கட்டளை என செய்த - ஒருகட்டளைக்கருவியைப்போலப் படைக்கப்பட்டுள்ள, திருவே - இலக்குமிபோன்றவளே! பெரிய மாக்களில் - பெரியமாமரங்களிலும், பலாக்களில் - பலாமரங்களிலும், பிறங்கிய வாழை - விளங்கிய வாழைமரங்களிலுமுள்ள, அரிய மா கனி - மிகவினிய சிறந்தபழங்களை, கடுவன்கள்-ஆண்குரங்குகள், அன்பு கொண்டு - (முனிவர்களிடத்துப்)பக்தியுடனே, அளிப்ப - கொண்டுதர, கரிய மா - பன்றிகள், கிழங்கு அகழ்ந்தன - (கவலை வள்ளி முதலியவற்றின்) கிழங்குகளைத் தோண்டினவையாய், கொணர்வன - (அம்முனிவர்கட்குக்) கொண்டுவந்து தருவனவற்றை, காணாய்—; (எ - று.)

கட்டளை-உருவமமைத்தற்கு ஏற்படுத்திய மாதிரியுருவம். அழகிய மகளிரைப்படைத்தற்குக் கட்டளையாக உன்னைக் கொள்ளும்படி பேரழகு படைத்தவளே!என்பது,முதலடியின்கருத்து. மாதர்கற்பிற்கு உரைகல்லொப்பவளாதலின், 'தெரிவைமார்க்கொருகட்டளையெனச்செய்த திருவே' என்று உரைத்தலுமொன்று: கட்டளை - உரைகல். கடுவன்கள் மாக்கனிமுதலியவற்றையும், பன்றிகள் கிழங்குகளையும் முனிவர்க்குக் கொணர்ந்துதரு மென்க. முன்னும் பின்னுமுள்ள பாடல்கள் முனிவர்க்கு விலங்குகள் உதவுவனவற்றைக் கூறுத

லால், இச்செய்யுட்கும் அங்ஙனமே கருத்துக்காண்க. பி-ம்:—[1]தெரிவையர்க்கு. [2]மாக்கனிபலாக்கனி. [3]கடுவன்கள்கடிது, கடுவனுண்டினிது. [4]மாகிழங்கசழ்ந்தவர்க்கருள்வன, மாக்கள்கிழங்ககழ்ந்தனகொடுப்பன. (எ௮௧)

௩௪. ஐவ னக்குர [1]றிணைக்கதி ரிறுங்கவை யவரை
மெய்[2]வ ணக்குறு [3]வேயின மீன்றமெல் லரிசி
பொய்[4]வ ணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணாய்.

(இ - ள்.) ஐவனம் குரல்-மலைநெல்லின் கதிரையும், தினை கதிர்-தினைப் பயிரின் கதிரையும், இறுங்கு அவை-சோளத்தின் கதிரையும், அவரை-அவரைகளையும், மெய் வணக்குறு வேய் இனம் ஈன்ற மெல் அரிசி - தம்முடலை வணங்குந்தன்மையுள்ள மூங்கிற்குழாங்களினின்று தோன்றிய அரிசிகளையும், உன் கை வணத்த வாய் கிள்ளை-உன்னுடைய கையின்தன்மைபோன்ற செவ்வாயையுடைய கிளிகள், பொய் வணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்து-பொய்யை யோட்டிய பெருந்தவசியரின் ஆச்சிரமங்கள்தோறும்போய், தந்து அளிப்பன-அன்போடு கொடுப்பவற்றை, காணாய்—; (எ - று.)

இறுங்கவைஎன்ற இடத்துள்ள அவை யென்னுஞ் சுட்டு,ஐவனம் தினை என்பவற்றில்வந்த 'குரல், கதிர்'என்பவற்றின்பொருளைசசுட்டிற்று.வணக்கிய என்ற சொல் இலக்கணையால்,வென்ற என்ற பொருளைக் காட்டிற்று.பி-ம்:—ஏனலின்கதிரிறுங்கவரை. [2]வணக்குற. [3]வேழநின்றீன்ற, வேழநின்றளித்த. வணக்கில. (எ௮௨)

௩௫. இடிகொள் வேழத்தை [1]யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்
[2]கடிய மாசுணங் கற்றறிந் தவரென [3]வடங்கிச் [குங்
சடைகொள் சென்னியர் [4]தாழ்விலர் தா[5]மிதித் தேறப்
[6]படிக ளாமெனத் தாழ்வரைக் கிடப்பன பாராய்.

(இ - ள்.) இடி கொள் வேழத்தை - பிளிறுதலைக்கொண்ட யானையை, எடுத்து-, எயிற்றொடும்-(அவற்றின்) தந்தங்களோடும், உடன் விழுங்கும் - ஒருசேரவிழுங்குகின்ற, கடிய மாசுணம் - கொடிய மலைப்பாம்புகள், கற்று அறிந்தவர் என அடங்கி - கற்றறிந்தபெரியோர்போல அடக்கத்தை மேற்கொண்டு, தாழ்வு இலர் சடை கொள் சென்னியர்-குற்றமற்றவராய்ச் சடை பூண்ட முடியைக்கொண்ட தவசியர்,தாம் மிதித்து ஏற—, படிகள் ஆம் என-படிகள்போல, தாழ் வரை - மலையடிவாரங்களில், கிடப்பன-இருப்பவற்றை, பாராய்—; (எ - று.)

யானையைத் தந்தங்களோடும் விழுங்குங்கொடுமையையுடைய மலைப் பாம்புகட்கு இம்முனிவரை விழுங்குவது ஒருபெரியதொழிலன்றாயினும், அவை தலமகிமையால் அக்கொடுமைதீர்ந்து படிபோலத் தம்மீது அம்முனி

வர்கள் கால்வைத்துஏறுமாறு உதவுகின்றனவென்க. "மதக்கதமாஅடங்கு பேழ்வயிற்றரவு" (ச) என்றார், கீழும். பி-ம்:—[1]எடுத்துடனெயிற்றெருடுவிழுங் கும். [2]கடிகொண். [3]வணங்கிச். [4]தாவிலர்தாம், தாழ்விலாதவர், தளர்விலராய். [5]பிடித்தேற. [6]படிகடாம். (எஅரு)

ருசுா. அசும்பு பாய்வரை யருந்தவ முடித்தவர் [1]துணைக்கட்
டசும்பு [2]வேய்ந்தவ ரொத்தவர் தமக்குவிண் டருவான்
விசும்பு [3]தூர்ப்பன வாமென [4]வெயிலுக [5]விளங்கும்
பசும்பொன் மானங்கள் போவன வருவன பாராய்.

(இ - ள்.) 'அசும்பு பாய் வரை - ஊற்றுப்பெருக்குப் பாயப்பெற்ற இம் மலையிலே, அரு தவம் முடித்தவர் - (பிறராற்செய்தற்கு) அரிய தவத்தைச செய்துமுடித்தவரான, துணை கண் தசும்பு வேய்ந்தவர் ஒததவர்தமக்கு-(தமது) இரண்டு கண்களினுலும் நீர்க்குடத்தைக் கவிழ்த்தவர்போல நீரைப்பெருக்குகி ன்றவர்க்கு, விண் தருவான்-மோட்சலோகத்தைத் தரும்பொருட்டு, விசும்பு தூர்ப்பன ஆம் - ஆகாயத்தை நிரப்புவனவாகும்,' என - என்று கருதுமாறு, வெயில் உக விளங்கும் - சூரியனதுகிரணமும் கீழ்ப்படுமாறு மிக்கவொளி கொண்டுதோன்றுகின்ற, பசும் பொன் மானங்கள் - பைம்பொன்னினுலியன்ற விமானங்கள், போவன வருவன - போவனவும் வருவனவுமாகியிருப்பவற் றை, பாராய்—; (எ - று.)

தேவர்கள் சஞ்சரிக்குமிட மாதலால், அவர்கள் விமானங்களி லேறிப் போவதும் வருவதுமாக இருக்க, அவ்விமானங்களை, இங்குள்ள பெருந்தவசி யரை விண்ணுலகத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப் போவனவும் வருவன வுமாக நிற்கும் விமானம்போலு மெனக் குறித்தார். அங்குள்ள மாதவர்கள் கடவுளைத் தியானிப்பதாற் பெருமகிழ்ச்சிமிக அம்மகிழ்ச்சிமேலீட்டினுல் தம் இருகண்களினும் தாரை தாரையாகக் *கண்ணீர் வாரநிற்ப ராதலால் அப்படிப்பட்டவரை 'துணைக்கட் டசும்புவேய்ந்தவ ரொத்தவர்' என்றார். தசும்பு - குடம். மூடுதலென்றுபொருளுள்ள வேய்தலென்பது - இலக்க ணையால், கவிழ்த்தலென்ற பொருளைத்தந்தது. இனி, இத்தொட ர்க்கு - இரண்டு துவாரத்தைக்கொண்டதொரு குடத்தைக் கவித்துக் கொண்டவர்போன்றவ ரெனப் பொருளுரைத்து, அம்மாதவரின் சடைமுடி தசும்பு [குடம்] போன்றிருத்தலால் இரு கண்களுடன் சடைமுடியையுடைய அம்முனிவரை 'தசும்புவேய்ந்தவரொத்தவர்' எனக் கூறிய தெனப் பொருள்

*"ஆஹ்லாதசீத நேத்ராம்பு:புளகீக்ருதகாத்ரவாந் ஸதா பரகுணாவிஷ்ட: த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி: [எப்போதும் பரம்பொருளின் குணங்களா லேயே புகப்பெற்றவனும் கடவுளின்தியானத்தினு லான மகிழ்ச்சியாற் குளிர்ந்த கண்ணீர்ப்பெருக்கைக்கொண்டவனும் உடம்புமுழுதும் மயிர்க் கூச்சு எறியப்பெற்றவனுமான உத்தமன் யாவராலும் தரிசித்தற்கு உரியன்" என்றவிடத்துக் கடவுளையே தியானிப்பார்க்கு ஆனந்தக்கண்ணீர் இரு கண் களினின்று தாரைதாரையாய்ப் பெருகுமெனக் கூறியதை இங்குக்காண்க.

கண்டாருமுளர். வெயில் என்பதை ஆகுபெயராற் சூரியனையுணர்த்திற்றாகக் கொண்டு, பேரொளியுள்ள சூரியன் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாக இருத்த லாற் போவனவும் வருவனவுமாகவுள்ள விமானங்கட்கு அச்சூரியன் உவமை யாவனெனப் பொருளுரைப்பது முண்டு. பி-ம்:—[1]அணைந்த,அனைய. [2]வேய்ந் தன. [3]தூர்த்தன. [4]வெயிலென. [5]வீசும். (எஅச)

ருஎ. [1]நெய்கொ ணீருண்டு நெருப்புண்டு [2]நீண்டமைந் நிறைந்த
வைகொள் வேலெனக் காலனு மறுகுறுங் கண்ணாய்
மெய்க ணோகின்ற பிடிகளை விரும்பிய வேழங்
கைக [3]ணோகில தாங்கின நிற்பன காணாய்.

(இ - ள்.) நெருப்பு உண்டு - (காய்ச்சியடிக்குமாறு) நெருப்பிற்கிடந்து, நீர் கொள் நெய் உண்டு-திரவரூபத்தைக்கொண்ட நெய்யைத் (துருப்பிடியாம லிருப்பதற்காகப்) பூசப்பெற்று, நீண்ட—, மை நிறைந்த-அஞ்சனம்நிரம்பிய, வை கொள் - கூர்மையைக்கொண்ட, வேல் என-வேற்படைபோல, காலன் உம் மறுகுறும் கண்ணாய்-யமனுங் கலங்குமாறுள்ள கண்களைப்படைத்தவளே! மெய்கள் நோகின்ற பிடிகளை - (கன்றை ஈனுமாறு) உடம்புநோவப்பெற்ற பெண்யானைகளை, விரும்பிய வேழம்-விருப்பங்கொண்டுள்ள ஆண்யானைகள், கைகள் நோகில தாங்கின நிற்பன-(தம்) கைகள் நோவப்பெறாமல் தாங்கிநிற் பவற்றை, காணாய்—; (எ - று.)

இதனால்,ஈனுமாறு பிரசவநோயையடைந்துள்ள பெண்யானையை ஆண் யானை தம்கைகளால் தாங்குவதைச் சீதைக்குக் காட்டுகின்றான் மைந்நிறைந்த வேல் - கண்கட்கு இல்பொருளுவமை. நீருண்டுஎன்பதற்கு - நீரையுட் கொண்டு நெய்கொள் வேல் என இயைத்து உரைப்பினுமாம்; கண்கள் நீரை யுட்கொண்டுள்ளன என்பது, யாவரும் உணர்ந்ததே. நீருண்டுஎன்பது - துவைத்தலெனப்படும் நீரில்தோய்த்தலைக்காட்டுமெனக்கொள்ளுதல், ஏற் கும். பி - ம்:—[1]நெய்களுண்டு நீருண்டு வெங். [2]நெருப்பெனநிறத்த, நெருப் பெனநிற்க, நீண்டகை நிறைந்த, நீண்டகநிறைந்த. [3]நோக்கில. (எஅரு)

ருஅ. விடங்கொ ணோக்கிநின் னிடையினை மின்னென வெருவிப்
படங்கொ ணாகங்கண் முழை[1]புகப் பதைப்பன பாராய்
மடங்க [2]லாளிக ளெனக்கொடு [3]மழையின [4]முழங்கக்
கடங்கொள் கார்மதக் கைம்மலை [5]பிரிவன காணாய்.

(இ - ள்.) விடம் கொள் நோக்கி - நஞ்சுத்தன்மையைக்கொண்ட கண் களையுடையவளே! மின் இடையினை-உனது மருங்குலை, மின் என வெருவி- மின்னலென்றுகருதி அஞ்சி, படம் கொள் நாகங்கள்-படத்தைகொண்டுள்ள பாம்புகள், முழை புக - புற்றிலே புகுவதற்காக, பதைப்பன - துடிப்பன வற்றை, பாராய்—; கடம் கார் மதம் கொள் கைம்மலை - கன்னத்திற் கருநிற மதநீர் பெருகப்பெற்ற யானைகள், மழை இனம் முழங்க - மழைக்குலம் கர்ச் சிக்க, (அவ்வொலியை), மடங்கல் ஆளிகள் என கொடு-(பிடரிமயிர்) மடங்கப்

பெற்ற சிங்கங்களினொலியெனக் கருதி, இரிவன-நிலைகெட்டு ஓடுவனவற்றை, காணாய்—; (எ - று.)

நாகங்கள் இடையை மின்னலெனமயங்கியனவென்றும், யானைகள் மழையினத்தின் முழக்கத்தை ஆளியின் முழக்கமென மயங்கினவென்றுங் கூறியது மயக்கவணியாம். பி-ம்:—[1]புகைப்புதைப்பன, புக்குப்பதைப்பன. [2]வாளரியெனக்கொண்டு, யாளிகடனைக்கண்டு. [3]மழையினின், மழையுடன். [4]முழங்கி. [5]பிரிவன. (எஅரு)

ருகூ. இனைய யாவையு மேந்திழைக் கியம்பினன் காட்டி
யனைய மால்வரை யருந்தவ [1]ரெதிர்வர வணங்கி
வினையி னீங்கிய வேதியர் விருந்தின னானன்
மனையின் மெய்யெனு மாதவம் புரிந்தவன் [2]மைந்தன்.

(இ-ள்.) மனையில் மெய் எனும் மாதவம் புரிந்தவன் மைந்தன்-இல்லறத்தி லிருந்தபடியே சத்தியமென்கின்ற பெருந்தவத்தைச் செய்தவனான சக்கரவர்த்தி யின் திருக்குமாரனான ஸ்ரீராமன்,—ஏந்து இழைக்கு-தரித்த ஆபரணங்களை யுடைய சீதாபிராட்டிக்கு, இனைய யாவைஉம்-இத்தன்மையனவான பலவளங் களையும், இயம்பினன் காட்டி-சொல்லிக்காட்டி, அனைய மால் வரை அரு தவர் எதிர் வர வணங்கி - அந்த மலையில் தவசியர் தன்னெதிரேவர அவர்களை வணங்கி, வினையின் நீங்கிய வேதியர்-தீவினை நீங்கிய (அந்த) மறையவர்கட்கு விருந்தினன் ஆனான் - விருந்தினனாகஆனான்; (எ - று.)

இங்ஙனம் மலைவளத்தைச் சீதாபிராட்டிக்கு ஸ்ரீராமன் காட்டிக்கொண் டிருக்கையில் அம்மலையில்வாழுந் தவசியர் எதிர்கொள்ள, அவர்களை வணங்கி அவர்கட்கு விருந்தினனாயின னென்பதாம். வனத்திலிருந்து தவஞ்செய்வாரி னும் வேறுபாடு விளங்க, 'மனையின் மெய்யெனு மாதவம் புரிந்தவன்' என் றார். முதனூலையொட்டி வேதியரென்பது - வான்மீகிமுனிவரைக் காட்டு மென்னலாம். பி-ம்:—[1]எதிர்கொள. [2]அமைந்தான். (எஅஎ)

## வேறு.

### சுo.—சூரியன் அத்தமித்தல்.

மாவிய லுதயமாந் [1]துளப வானவன்
மேவிய பகையிரு ளவுணர் [2]வீய்ந்துகக்
கா[3]வியல் குடவரைக் கால நேமிமே
லேவிய [4]திகிரிபோ லிரவி [5]யேகினான்.

(இ - ள்.) மா இயல் உதயம் ஆம் துளபம் வானவன்-பெருமைபொருந் திய தோற்றத்தைக்கொண்ட திருத்துழாய்மாலையையணிந்த கடவுளாகியதிரு மால், மேவிய பகை இருள் அவுணர் வீய்ந்து உக-பொருந்திய பகைமையைக் கொண்ட இருள்நிறம்படைத்த அவுணர் இறந்தொழியக்கருதி, (அவ்வவுணரில் மிகக்கொடியவொருத்தனான), காலநேமி மேல் - காலநேமிமீது, ஏவிய-செலுத் திய, திகிரி போல் - சக்கரப்படைபோல, கா இயல் குட வரை - சோலைகள் பொருந்திய அத்தகிரியில், இரவி ஏகினான்-சூரியன்போய்ச்சேர்ந்தான்; (எ-று.

சூரியன் குடவரைசேர்ந்தது - அசுரர்மீது பகைமைகொண்டு பொருது ஒழிக்குந்தன்மையுள்ள திருமால் காலநேமியென்னும் அசுரன்மீது தன்சக்கரப் படையை வீசியெறிந்ததுபோலு மென்றவாறு: **தன்மைந்தற்றுறிப்பேற்ற வணி.** திருமாலின் திருவவதாரம்யாவும் மற்றையோரின் பிறவிபோலக் கரும வசத்தினால் நிகழ்வதன்றித் தன்னிச்சையால் நிகழ்ந்து அப்பெருமானுக்குப் பேரொளியை விளைத்தலால், 'மாவியலுதயமாந்துளபவானவன்'என்றார். கட வுட்கு எவரிடத்தும் இயற்கையாகப் பகை நண்புஎன்பன இல்லையாயினும், தன் தன்மையையுணர்ந்து வழிபடுந் தன்னடியாரை உயிர்போலப் பாராட்டுந் தன்மையனாதலின், அன்னாரை நலிபவரைப் பகையாகக் கருதுவ னென்க.

**காலநேமிமேலேவிய திகிரி என்பதிலடங்கிய சரிதம் வருமாறு:—** நரசிங்காவதாரஞ்செய்த திருமாலாற் கொல்லப்பட்ட இரணியாசுரனுக்குப் புத்திரனான நூறுதலைகளையும் நூறுகைகளையும்படைத்த காலநேமியென்பவன் தேவாசுரயுத்தத்தில் முதுகிட்ட அசுரர்களின்பக்கத்திலேவந்து தேவர்களியாவரையுஞ்சயித்துச் சத்தியலோகத்திற்சென்று பிரமனைத் தேவர்கள் துதிப்பதுபோல அசுரர்யாவரும் தன்னை வணங்கித் துதிக்கும்படி வீற்றிருந்து, பிறகு பின்னுஞ்செருக்குக்கொண்டு தன்தகப்பனை [இரணியனை]க் கொன்ற திருமாலினிடத்துச் சென்று பகைமைபாராட்டிப் போர்செய்யத் தொடங்க, திருமால் தனதுசக்கரப்படையால் அவ்வசுரனது நூறுதலைகளையும் நூறுகைகளையும் அறுத்துத்தள்ளினு னென்பது. பி - ம்:—[1]துளவவானவன், துளபவாவினன், துளதிவானவன், துளவமாதவன். [2]வீங்கிய. [3]உயர். [4]நேமிபோல், திகிரியின். [5]எய்தினன். (எஅஅ)

**சஎ.—செவ்வானம் சந்திரோதயம் இவற்றின் வருணனை.**

சக்கரந் தானவ னுடலிற் றாக்குற
வெக்கிய [1]சோரியிற் [2]பரந்த தெங்கணுஞ்
செக்கரத் [3]தீயவன் வாயின் நீர்ந்து[4]போ
யுக்கவான் றனியெயி றொத்த [5]திந்துவே.

(இ - ள்.) சக்கரம் - (திருமாலின்) சக்கரப்படை, தானவன்-(காலநேமி யென்னும்) அசுரனது, உடலில் - உடம்பிலே, தாக்குஉற - தாக்கியபோது, எக்கிய-(அவ்வுடலிலிருந்து)மிகுதியாக வெளிப்பட்ட, சோரியின் - இரத்தம் போல,செக்கர்-செவ்வானம், எங்கண் உம் பரந்தது-எங்கும் பரவியது;இந்து-(அப்போது வானத்துத்தோன்றிய) பிறைச்சந்திரனே, அ தீயவன் வாயில் நீர்ந்து போய் - அந்தக் கொடிய காலநேமியினது வாயினின்று வெளிப்பட்டுப்போய், உக்க - சிந்திய, வான் தனி எயிறு - பெரிய ஒற்றைக் கோரப் பல்லை, ஒத்தது—; (எ - று.)

அப்போது தோன்றிய செவ்வானம் காலநேமியைச் சக்கரப்படையறுக்கும்போது அவனுடம்பினின்று எங்கும்பரவிய குருதியையும் பிறைச்சந்தி

ரன் அவ்வசுரனதுவாயினின்று உக்க ஒற்றைக்கோரப்பல்லையும் போன்றன வென்க. எக்குதல்-மிகுதலெனப்பொருளைக்காட்டிய திசைச்சொல். தற்குறிப் பேற்றவணி. பி-ம்:—[1]குருதியிற்.[2]பரந்த. [3]தீயன்.[4]வேறு.[5]மீனெலாம். (எஅகூ)

சஉ.—இதுவும் அடுத்த கவியும் - மாலைக்காலவருணனை.

ஆனன மகளிருக் களித்த தாமரைப்
பூநனி முகிழ்த்தன [1]புலரி போனபின்
மீனென விளங்கிய வெள்ளி [2]யாம்பல்வீ
வானென மணித்தட [3]மலர்ந்த வெங்குமே.

(இ - ள்.) புலரி போன பின் - சூரியன் அத்தமித்தபின்பு, மகளிருக்கு- பெண்பாலார்க்கு, ஆனனம் - முகப்பொலிவை, அளித்த - தந்தனவாய், தாம ரைப்பூ - தாமரைமலர்கள், நனி முகிழ்த்தன - மிகவும் குவிந்தன; வான் என மணி தடம்-வானத்தைப்போல(உள்ள)அழகிய நீர்நிலையின்,எங்குஉம்மலர்ந்த- எல்லாவிடத்தும் மலர்ந்தனவாகிய, வெள்ளி ஆம்பல் வீ - வெண்ணிறமுள்ள ஆம்பல்மலர்கள், மீன் என விளங்கிய - (அவ்வாகாயத்தில்) நட்சத்திரங்கள் (விளங்குவதுபோல) விளங்கலாயின; (எ - று.)

தாமரைமலர் மலர்ந்திருந்த காலத்தில் தம்மைப்போல் வேறொன்று இருந்தமைபற்றி மலராதிருந்த மகளிர்முகம் தமக்குஇணையின்றி அம்முகம் மலர்ச்சியுறும்படி தாமரை குவிந்தன என்பது 'ஆனனமகளிருக்களித்த தாம ரைப்பூ நனிமுகிழ்த்தன' என்பதன் பொருள். வானத்து மீன் விளங்குவது போல நீர்த்தடத்து வெண்ணிறவாம்பல் மலர்ந்துவிளங்கின என்பது, பின் னிரண்டடிகளிற் கூறிய பொருள். பி - ம்:—[1]அலரி. [2]ஆம்பல்கள். [3]மலர்ந்த தெங்குமே, மலர்ந்ததொக்குமே. (எகூo)

சங. மந்தியுங் கடுவனு மரங்க ணோக்கின
தந்தியும் பிடிகளுந் [1]தடங்க ணோக்கின
நிந்தையில் [2]சகுந்தங்க ணீள நோக்கின
வந்தியை நோக்கின னறிவை நோக்கினான்.

(இ - ள்.) (அப்போது), மந்தி உம் கடுவன் உம் மரங்கள் நோக்கின - ஆண்குரங்குகளும் பெண்குரங்குகளும் (இராப்போதில் தங்கியிருக்குமாறு) மரங்களை நாடிச்சென்றன; தந்திஉம் பிடிகள்உம் - (பகலிற் காடுகளிலெல் லாந்திரிந்த) ஆண்யானைகளும் பெண்யானைகளும், தடங்கள் நோக்கின - (தாம்பதுங்கிவாழ்தற்குஉரிய) மலையடியை நாடிச்சென்றன; நிந்தை இல் சகுந்தங்கள் - குற்றமற்ற பறவைகள், நீளம் நோக்கின - (தமது) கூட்டை நாடிச்சென்றன; அறிவை நோக்கினான் - தத்துவஞானத்தினாலேயே யறி தற்கு உரியவனான இராமபிரான், (தான் கொண்ட யாதுடவேஷத்திற்கு ஏற்ப), அந்தியை நோக்கினான் - மாலைக்காலத்திற் செய்தற்கு உரிய கட மையை நாடிச்செய்யலானான்; (எ - று.)

தடம்-மலையடி: வடசொல். நீளம் - நீடம்என்ற வடசொல்லின் சிதைவு. பி - ம்: —[1]தட்டம். [2]சகுந்தமுநீடம், நியமமுநீடல். (எகூக)

சச.—இராமன்முதலியோர் குலதேவதையைத் தியானித்தல்.

மொய்[1]யுறு நறுமலர் [2]முகிழ்த்த வாஞ்சில
மை[3]யறு நறுமலர் [4]மலர்ந்த வாஞ்சில
வையனோ [5]டிளவற்கு [6]மமிழ்த னாளுக்குங்
கைகளுங் [7]கண்களுங் கமலம் [8]போன்றவே.

(இ - ள்.) மொய் உறு - (இதழ்கள்) நெருங்கிய, நறு மலர் சில-நறுமணமுள்ள மலர்களிற் சில, முகிழ்த்த-கூம்பின; மை அறு நறு மலர் சில - குற்றமற்ற நறுமணமுள்ள மலர்களிற்சில, மலர்ந்த-அலர்ந்தன; (அப்போது), ஐயனோடு - இராமபிரானுக்கும், இளவற்கு உம்-இளையபெருமாளுக்கும், அமிழ்து அனாளுக்கு உம்-அமுதத்தையொத்தவளான சீதாபிராட்டிக்கும், கைகள் உம் கண்கள் உம்—, கமலம் போன்ற - தாமரைமலரை யொத்துக் குவிந்துகிடந்தன; (எ - று.)—ஆம் - அசைகள்.

மாலைக்காலத்திற் சிலமலர்கள் குவிவனவும் சிலமலர்கள் அலர்வனவுமாக, அப்போது இராமனும் இளையபெருமாளும் சீதையும் கைகளைக்குவித்துக் கண்களை மூடியவண்ணம் தமதுகுலதெய்வத்தைத் தியானித்தனரென்பதாம். இனி, உறங்கினரெனக் கொள்ளின், இலக்குமணன் வனவாசகாலமெல்லாம் உறங்கிலனென்பதனோடும், மேல் "சாலைவந்தெய்தினான்" என்பதனோடும் மாறுபடுமென்க. பி-ம்:—[1]குழை, கிளர். [2]முகிழ்த்தது. [3]உறு. [4]மலர்ந்தது. [5]இளவலுக்கு,இளவலும். [6]அணங்கனாளுக்கும்,அமிழ்தனாட்கிருங். [7]முகங்களும். [8]போன்றதே. (எகஉ)

சரு.—தம்பி வகுத்த பர்ணசாலையை ஸ்ரீராமன் வந்தடைதல்.

மாலைவந் தகன்றபின் மருங்கி லாளொடு
மேலவ னிருந்திட விரும்பி யேமனங்
கோலிநற் குணத்திளங் குரிசி லாங்கொரு
சாலையை வகுத்தமை சாற்று வாமரோ.

(இ - ள்.) நல் குணத்து இளங் குரிசில் - சிறந்த குணமுள்ள இளையபெருமாள்,— மாலை வந்து அகன்ற பின் - மாலைக்காலந்தோன்றி நீங்கிய போது [இராக்காலம் வந்திட்டபின்பு], மருங்கு இலாளொடுஉம் - நுண்ணிய இடையையுடைய சீதாபிராட்டியுடனே,மேலவன்-சிறப்புற்ற இராமபிரான், இருந்திட - தங்கியிருக்கும்படி, விரும்பி - விருப்பங்கொண்டு, மனம் கோலி-மனத்தினாற் சிந்தித்து, ஆங்கு - அங்கே, ஒரு சாலையை-ஒருபர்ணசாலையை, வகுத்தமை - செய்தமையை, சாற்றுவாம் - இனிச்சொல்லுவோம்; (எ - று.) அரோ - ஈற்றசை. சாலைவகுத்தமை சாற்றப்படுவதை மேல் நான்குகவிகளிற் காண்க.

மருங்கிலாள், இன்மை - நுண்மைகுறித்தது. இச்செய்யுளின்பின் மூன்றடிகள் அச்சிட்டபிரதிகளிலும் சிலஏட்டுப்பிரதிகளிலும் பின்வருமாறு காணப்படுகின்றன:— "வேலைவந் துறைவிட மேய தாமெனக், கோலைவந் துமிழ்சிலைத் தம்பி கோலிய, சாலைவந் தெய்தினான் றவத்தி னெய்தினான்." இந்தப்

பாடத்தில், மூன்றாமடியில், 'வந்து'—சொல்விழுக்காட்டால்வந்தது: இனி, வந்து - காற்றுப்போல் விரைந்துசெல்லுகின்ற, கோலை உமிழ் சிலை என்றுமாம். தவத்தினெய்தினான் - தவத்தினாலடையப்படும் பரம்பொருளானவன் [ஸ்ரீராமன்]; மேயதாமென எய்தினான் என இயையும். (௭௬)

௪௬.—௫௦.—ஐந்துகவிகள் - ஒருதொடர்: இலக்ஷ்மணன் சாலை அமைத்ததையும், அந்தச்சாலையில் ஸ்ரீராமன் குடிபுக்கதையும் தெரிவிக்கும்.

தொடரான ஐந்துபாடலுக்கு ஒருங்கே பொருளுரைக்கப்படும்.

௪௬. நெடுங்கழைக் குறுந்[1]துணி நிறுவி மேனிரைத்
தொடுங்கலி னெடுமுக டொழுக்கி [2]யூழுற
[3]விடுங்கலில் கை[4]விசித் தேற்றி யெங்கணு
முடங்கலில் [5]வரிச்சுமேல் [6]விரிச்சு மூட்டியே.

௪௭. தேக்கடைப் [1]படலையிற் [2]கூரை [3]செய்துபின்
பூக்கிளர் நாணலிற் [4]புல்லு வேய்ந்து[5]கீழ்த்
தூக்கிய [6]வேய்களிற் சுவருஞ் சுற்றுறப்
போக்கிமண் ணெறிந்தவை புனலிற் றீற்றியே.

௪௮. வேறிடம் [1]வீரற்கு மிதிலை நாடிக்குங்
[2]கூறின [3]நெறிமுறை குயிற்றிக் குங்குமச்
சேறுகொண் டழகுறத் திருத்தித் திண்சுவ
ராறிடு [4]மணியொடுந் [5]தரள மப்பியே.

௪௯. மயிலுடைப் [1]பீலியின் விதான மேல்வகுத்
தயிலுடைச் சுரிகையா லருகு [2]தூக்கறுத்
தெயி[3]லிளங் [4]கழைகளா லியற்றி யாறிடு
[5]செயலுடைப் [6]புதுமலர் [7]பொற்பச் சிந்தியே.

௫௦. [1]இன்னண மிளையவ னிழைத்த சாலையிற்
[2]பொன்னிறத் திருவொடுங் குடிபுக் கானரோ
நன்னெடுந் திசைமுக னகத்து [3]நம்மனோர்க்
குன்னரு முயிருறு [4]மொக்க வைகுவான்.

(இ-ள்.) (௪௬) நெடுங் கழை குறு துணி நிறுவி மேல் நிரைத்து-நீண்ட மூங்கில்களின் குறியதுண்டுகளைநிறுத்தி மேலே வரிசைப்படுத்தி, ஒடுங்கல் இல் நெடுமுகடு ஒழுக்கி-ஒடுங்குதலில்லாத நீண்ட தூலத்தை நேரேவைத்து, ஊழ் உறஇடுங்கல்இல் கை ஏற்றி விசித்து - முறைமைபொருந்தச்சாக்காடில்லாத [கெட்டியான] வரிச்சுக்களை யேற்றிக்கட்டி, வரிச்சுமேல் (அப்படிக்கட்டிய) வரிச்சுக்களின்மேலே, எங்கண் உம் எல்லாவிடங்களிலும், முடங்கலில்-ஓலைக் கொத்துக்களைக்கொண்டு, விரிச்சு மூட்டி - பரப்பிமூடி, (௪௭) தேக்கு அடை படலையில் கூரைசெய்து - தேக்கிலைகொண்டுசெய்த பரப்பினால் கூரைமேற்

யைச்செய்து,பின்-,பூ கிளர் நாணலின் புல்லு வேய்ந்து-பொலிவுடன்விளங்குகின்ற நாணற்புல்லினால் அக்கூரையின்மேல்வேய்ந்து, கீழ் - கீழ்ப்புறத்தில், தூக்கிய வேய்களில்-மேலோங்க நிறுத்திய மூங்கில்களால்,சுவர் உம் சுற்று உற போக்கி-சுவரையும் சுற்றிலும்பொருந்த அமைத்து,(மேலோங்கநிறுத்திய மூங்கில்கட்கு இடையிடையே), மண் எறிந்து அவை புனலில் தீற்றி - மண்ணைப் பிசைந்து எறிந்து நிறுத்தி(ப்பின்) அவை (சமனும்படி) நீரைத்தெளித்துமணியாசுக்கட்டையால்தேய்த்துஒழுங்குபடுத்தி--,(௪௮)வீரற்குஉம் மிதிலைநாடிக்குஉம் - இராமபிரானுக்கும் மிதிலைநாட்டிற்பிறந்தவளான சீதாபிராட்டிக்கும், கூறின நெறி முறை - (மனையடிசாத்திரத்திற்) கூறிய ஒழுங்குமுறையேயமைய, வேறு இடம் குயிற்றி-வெவ்வேறு இடம் ஏற்படுத்தி, (உட்புறத்து), குங்குமம் சேறு கொண்டு அழகுஉற திருத்தி - குங்குமம்போன்ற சேற்றைக்கொண்டு அழகுபொருந்தப் பூசி, திண் சுவர் - வலிய உட்புறத்துச்சுவரிலே, ஆறு இடு மணியொடுஉம்-ஆற்றில்தோன்றிய ரத்நங்களுடனே,தாளம் அப்பி-(அவ்யாறுகளிற்கிடைத்த) முத்துக்களையும் பதியவைத்து, (௪௯) மயில்உடை பீலியின் விதானம் மேல் வகுத்து - மயிலினுடைய பீலியினாலியற்றிய மேற்கட்டியை மேலேகட்டி, அயில் உடை சுரிகையால் அருகு தூக்கு அறுத்து - கூர்மையையுடையஉடைவாள்களைக்கொண்டு அருகேதொங்கல்களைக்கொய்தமைத்து, எயில் யாறு இடு இள கழைகளால் இயற்றி-(அந்தச்சாலைக்கு) மதிலையும் [வேலியையும்] ஆற்றங்கரையிற்றோன்றிய இளைய மூங்கில்களைக்கொண்டேயமைத்து,செயல் உடை புது மலர் பொற்ப சிந்தி-அழகுள்ள புதிய மலரை இனிதாகச்சிந்தி, (௫௦) இன்னணம் இங்ஙனம், இளையவன்-இலக்குமணன், இழைதத - செய்தமைத்த, சாலையில் - பர்ணசாலையிலே,—நல் நெடு திசை முகன் அகத்துஉம் - மிக்க பெருமைபெற்ற பிரமதேவனுள்ளிலும், நம் அனோர்க்கு உன்ன அரு உயிருள் உம்-நம்மைப்போன்ற அஞ்ஞானிகளுடைய அறிவதற்குஅரிய உயிர்களிலும், ஒக்க-ஒருசேர [வேறுபாடில்லாமல்], வைகுவான்-தங்குபவனாகிய ஸ்ரீராமன், பொன் நிறம் திருவொடுஉம்-பொன்னிறத்தவளாகிய இலக்குமியின் அமிசமான சீதாபிராட்டியோடும்,குடி புக்கான்—; (எ - று.)—அரோ - ஈற்றசை.

முதல்நான்குபாடல்களால் இலக்குமணன் சாலையையமைத்தவகையைக் கூறி, ஐந்தாவதுபாடலால் அப்படிப்பட்ட பர்ணசாலையில் இராமபிரான் குடிபுக்கமையைக் கூறுகின்றனரென்க. இந்த ஐந்துபாடல்களுள் இரண்டாவது பாடலின் பின்னிரண்டடிகள் - சுவரெழுப்பிய வகையையும், முதற்பாடலும் அடுத்தபாடலின் முன்னிரண்டடிகளும்-மேலே மூங்கிற்சிறுதுண்டுகள் ஏணிபோல்அமையவைத்து,அதன்மேலே உத்தரத்தையமைத்து,அவ்வுத்திரத்தின்மேல் ஓலை புல் தேக்கிலைகளை ஒன்றன்மேலொன்றாகக் கூரையாக வேய்ந்த வகையையும் கூறும். விரிச்சுமூட்டி - விரிச்சுக்கொடிகளாற் கட்டியென்றுரு முள்ர். பகற்போது இராமன் தங்கியிருக்கையில் முனிவர்முதலியோர் காணவரின் சீதையும் உடன் உட்கார்ந்திருப்பது மரியாதையன்று ஆதலால், மூன்

றுவது செய்யுள் - வீரற்கும் மிதிலைநாடிக்கும் வெவ்வேறிடம் குயிற்றின மையைத் தெரிவிக்கும். இலக்குமணன் அமைத்த சாலை சிற்பநூலின்முறைக் குப்பொருந்தவிருந்ததென்பார் 'கூறியநெறிமுறைகுயிற்றி' என்றார். நான்காம் பாடலில் இராமன் தங்கியிருக்குமிடத்திற்கு நேரோராஜோபசாரமாகமேற்கட்டு அமைத்த வகையை முன்னிரண்டடிகளாற் கூறுகின்றனர். அலங்காரமாகப் பூக்களைச் சிந்தியதென்க. ஐந்தாம்பாடலில் 'நன்னெடுந்திசைமுகனகத்தும்... ஒக்கவைகுவான்' என்றதொடர்-திருவயோத்தியில் அரண்மனையில் வாழ்ந்தது போலவேசித்திரகூடத்துப் பர்ணசாலையிலும்மிக்கமனவுவப்போடு வாழ்தற்கு உரியவன் இராமனென்ற கருத்தைப் புலப்படுத்தும். பி-ம்.—(சகு) [1]தறி. [2]ஊடு. [3]அடுக்கலில், விழுங்கலில். [4]விரித்து. [5]வரிந்து, வலித்து. [6]விரித்து. (சஎ)[1]படலையாற். [2]செறிவு. [3]செய்த. [4]புல்லுமேய்ந்து, புல்லின்மேய்ந்து. [5]நீடுநீக் கிய. [6]வேயினில். (சஅ) [1]இயற்றினன். [2]கூறிய. [3]முறைநெறி. [4]மணலொடும். [5]கனகம், கனகம். (சகூ) [1]பீலிபால். [2]தூக்குறுத்து. [3]உடைக். [4]தழைகளின். [5]புயலுடைப், புயன்மணற். [6]படுமணற், பொழின்மலர், பரப்பிமேற். [7]பூவுஞ். (ருo) [1]இன்னன. [2]பொன்னியல். [3]நம்பினோர்க்கு, நம்மனோர். [4]ஒத்து. (எகூச-எகூஅ)

ருக.—சாலையில் இராமன் உவந்திருத்தல்.

[1]மாய நீங்கிய சிந்தனை [2]மாமறை
தூய பாற்கடல் வைகுந்தஞ் சொல்லலா
மாய சாலை யரும்பெற [3]லன்பின
னேய நெஞ்சின் [4]விரும்பி [5]நிரம்பினான்.

(இ - ள்.) மாயம் நீங்கிய சிந்தனை - அவிச்சைநீங்கிய [தத்துவஞானத் தைக்கொண்ட] (ஞானிகளுடைய) மனமும், மா மறை - பெருமைபெற்ற வேதமும், தூய பாற்கடல் - பரிசுத்தமாகிய திருப்பாற்கடலும், வைகுந்தம் - வைகுந்தமும், (என்று), சொல்லல் ஆம் - சொல்லுதற்கு உரிய, ஆய சாலை - (இளையபெருமாள்) அமைத்த அந்தப்பர்ணசாலையில், அரும் பெறல் அன்பி னன் - அருமையான அன்பினைப் பெறுதற்குஉரியவனான அவ்விராமபிரான், நேயம்நெஞ்சின் விரும்பி-நேசம்மிக்க திருவுள்ளத்தால் மகிழ்ந்து, நிரம்பினான்- திருப்தி யடைந்திருந்தான்; (எ - று.)

திருமாலுக்கு வாழிடமானமை பற்றி, அச்சாலை மாயநீங்கியசிந்தனை முத லியவாகச் சொல்லுதற்கு ஏற்றதாயிற்று. அரும் பெறலன்பினன் - அரு அன் பின் பெறலினன் எனப் பிரித்துக் கூட்டப்பட்டது: இனி, இங்ஙனம் கூறாது பெறுதற்கு அரிய [மிக்க] அன்பினனாய் என்று கூறின், நேயநெஞ்சின் என மேல்வருவது சிறவாது. இனி, [3]அன்பினர் என்ற பாடத்தைக் கொள்ளின், பெறவரும்அன்பினராகிய பக்தர்களின் நேசமுள்ள நெஞ்சிற்போல அந்தச் சாலையை விரும்பி நிரம்பினானென்க. பி-ம்:—[1]மாயை. [2]நால் [3]அன்பினல். [4]விரும்ப. [5]நிரம்பினன், நிரப்பினர். (எகூகூ)

ருஉ.—இலக்குமணன்பர்ணசாலைசமைத்ததைக் குறித்து இராமனது கொண்டாட்டமொழி.

மேவு[1]கான மிதிலையர் [2]கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவி லெம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதுமி லார்க்[3]கியை யாதவே.

(இ - ள்.) மிதிலையர் கோன் மகள்-சீதாபிராட்டியின், பூவின் மெல்லிய பாதம்உம்-தாமரைப்பூவைக்காட்டிலும் மென்மையைக்கொண்ட தாள்களும், மேவு கானம் போந்தன-(கல்லும்முள்ளும்) அடர்ந்துள்ள காட்டிலே நடந்து சென்றன; தா இல் எம்பி கை - குற்றமற்ற என்தம்பியினுடைய கைகள், சாலை சமைத்தன-பர்ணசாலைஅமைத்தன; யாதும் இலார்க்கு-எந்தத்துணையும் இல்லாதவர்க்கு, இயையாத-அமையாதவை, யாவை—? [எவையுமில்லை].

துணையில்லாதவர்க்குக் காலத்துக்கு ஏற்ப உடனிருப்பவையே வேண்டியவற்றைச் செய்யுந் தன்மையனவாகு மென்ற பொதுப்பொருளை யுணர்த்தும்ஈற்றடி, முதல் மூன்றடிகளைச் சமர்த்தித்துநின்றது; வேற்றுப்பொருள் வைப்பணி. "அறவிக்குத் தெய்வந்துணை" என்ற பழமொழி, ஈற்றடியிற் கருதத்தக்கது. இலட்சுமணன் சாலைசமைத்ததைக் கொண்டாடுவான், சீதை கானில் நடந்துவந்ததையும் உடன்கொண்டாடுகின்றான். பி-ம்:—[1]காதல். [2]கோமளம். [3]இசையாததே. (அOO)

எய்த வின்னல் வந்த போதி யாவ ரேனும் யாவையுஞ்
செய்ய வல்ல ரென்று கொள்க சேணெ றிக்க ணீங்கிட
மைய கண்ணி செய்ய பாதம் வல்ல வாய [1]வெம்பிதன்
கைக ளின்று பன்ன சாலை [2]கட்ட வல்ல வாயவே.

என்னுஞ் செய்யுள் "மேவுகானம்"என்ற பாடலுக்குப்பின் சிலபிரதியிற் காணப்படுகின்றது. இது, புறத்திரட்டு என்னுந் தொகைநூலில் இடுக்கணழியாமை என்னும் அதிகாரத்தில் எடுத்துக்காட்டப்பட் டிருக்கிறதென்று கூறுகின்றனர். ஆயினும், முன்பின்வரும் பாடலின்விருத்தம் ஒத்திருக்க இது வேறுபட்டிருத்தலாலும், யாம் கண்ட ஏட்டுப்பிரதிகளுள் பலவற்றிற் காணப்படாமையாலும், "மேவுகானம்" என்ற செய்யுளின் கருத்தையே பெரும்பாலும் ஒட்டி வருதலாலும், இது கம்பராமாயணத்தைச் சேர்ந்ததாக இராதென்றும், வேறு இராமாயணத்துசசெய்யுளாக இருக்கக்கூடுமென்றும் தோன்றுகின்றது. ஒருகால் வெள்ளிப்பாட்டாயிருக்கலாம். பி - ம்:— [1]மற்றிவன். [2]கட்டும்வண்ணம்.

ருங.—இதுவும் அடுத்த கவியும் - இலக்குமணன் பர்ணசாலையைச் சமைக்கும்படி நேர்ந்ததுகுறித்து இராமன் வருந்துதல்.

என்று சிந்தித் திளையவற் பார்த்திரு
[1]குன்று போலக் [2]குலவிய தோளினு
யென்று [3]கற்றனை நீயிது போ[4]லெனுத்
துன்று தாபரைக் கண்பனி சோர்கின்றான்.

(இ - ள்.) என்று—, சிந்தித்து-(தன்) மனத்தினுள்ளே எண்ணி,(இராம பிரான்),—இளையவன் பார்த்து - (தன்) தம்பியாகிய இலக்குமணனைப் பார்த்து, இரு குன்று போல குலவிய தோளினாய் - இரண்டு மலைகள்போல விளங்குகின்ற தோளுடையவனே! நீ—, இது போல்-இங்ஙனம் பர்ணசாலை யமைத்தற்கு, என்று கற்றனை-எப்போது கற்றுக்கொண்டாய்! எனா - என்று கூறி, துன்று தாமரை கண்-(அழகு) நிரம்பிய தாமரைமலர்போன்ற (தன்) கண்களினின்று, பனி-நீர்த்துளிகள், சோர்கின்றான்-சிந்தப்பெற்றவனானான்.

கண்பனி சோர்ந்தது, ஓர் அரசகுமாரன் பணியாள்போலத் தொழில் செய்ய நேர்ந்தமையைக் கருதியதனால்: இனிது தொழில் செய்தமையைக் கருதிய வியப்பினாலாகு மென்பாரு முளர்; மேற்கவிகை நோக்க அது பொருந்தாதெனத் தோன்றுகின்றது. பி-ம்:—[1]குன்றம். [2]குவவிய. [3]கற்றனை யிதுபோய். [4]என்றான். (அ௦க)

ருச அடருஞ் [1]செல்வ மளித்தவ னாணையாற்
படரு நல்லறம் பாலித் திரவியிற்
சுடரு மெய்ப்புகழ் சூடினெ னென்பதெ
னிடரு னக்கிழைத் தேனெடு நாளென்றான்.

(இ - ள்.) (பின்னும்), 'அடரும்-நெருங்கிய, செல்வம்-இராச்சிய சம்பத்தை, அளித்தவன்-(பரதனுக்குக்) கொடுத்தவனாகிய தசரதனது, ஆணையால்-கட்டளையால், படரும்-(காட்டிற்குச்) செல்வதாகிய, நல் அறம்-சிறந்த தருமத்தை, பாலித்து-செய்வதாக மேற்கொண்டு, இரவியின் சுடரும்-சூரியன்போல் விளங்குகின்ற, மெய் புகழ்-உண்மையான புகழை, சூடினன் - நான் பூண்டேன், என்பது என்று சொல்வது. என் - யாது? நெடு நாள் - பல நாள், உனக்கு—, இடர்-துன்பத்தை, இழைத்தேன்-உண்டாக்கினேன்',என்றான்-என்று வருந்திக்கூறினான், (இராமன்); (எ - று.)

நான் காட்டிற்குச் சென்று பித்ருவசனபரிபாலன மாகிய தருமத்தை நடத்துவது, உனக்கு மிக்க இடருக்கே இடமா யுள்ளதென இராமன் வருந்தியவாறு. பிறருக்கு வருத்தத்தை யுண்டாக்காமல் அறத்தையனுஷ்டிப்பது,உசிதமாகும்: பிறருக்குத துன்பத்தை விளைத்து நான் எனக்குப் புகழுண்டாகத் தருமத்தைஅநுஷ்டிப்பது தருமாநுஷ்டானமாகா தென்றகருத்து, இதில் தோன்றும். பி-ம்:—[1]செல்வத்தனெந்தைதன், செல்வனெந்தைதன்.

ருரு.—இலக்குமணன் மறுமொழி.

அந்த வாய்மொழி யைய னியம்பலு
நொந்த சிந்தை யிளையவ [1]னோக்கினா
னெந்தை காண்டி யிடரினுக் கங்குர
முந்தி வந்து முளைத்ததன் றோவென்றான்.

(இ-ள்.) ஐயன் - இராமன், அந்த வாய்மொழி இயம்பலும்-அந்த வார்த்தையைக் கூறியவுடனே,-இளையவன்-இலட்சுமணன், நொந்த சிந்தை-வருந்திய மனத்துடனே, நோக்கினன்-(இராமனைப்) பார்த்தவனாய், 'எந்தை-என் தந்தைபோல்பவனே! காண்டி-(நான் சொல்வதையாராய்ந்து) காண்பாயாக: இடரினுக்கு-(உனது) துன்பத்துக்கு,அங்குரம்-முளையானது,முந்தி-முன்னே [கைகேயிக்கு வரம் ஈவதை மன்னவர் ஒருப்பட்டவுடனே],வந்து முளைத்தது அன்றோ - வந்துதோன்றிற்றன்றோ?" என்றான்-என்றுகூறினன்; (எ - று.)

இராமபிரானுக்குத் துணையாவார் ஒருவரும் இன்றித் தனிப்பட்டிருக்கும் இவ்வனவாசகாலத்தில் எல்லாவகைப் பணிவிடைகளையும் செய்யவேணுமென்று பேருவப்புடனே இராமபிரானது திருவுளத்துக்கு நமதுசெய்கை உவப்பாயிருக்கவேணுமென்ற கருத்தோடு அடிமைசெய்ய, அக்கருத்து நிறைவேறாமையாற் சிந்தைநொந்த இளையபெருமாள் உனக்கு இடர் இழைத்தேனென்றுவருந்துகிற இராமபிரானைநோக்கி, 'நீர் இப்போது வருந்துவது சரியன்று; நான் பணிசெய்வது எனக்குமனமகிழ்ச்சியே விளைத்தலால் எனக்கு இடர்தந்தவராகமாட்டீர்: ஆனால். என்று மன்னவர் கைகேசிக்கு வரந் தந்திட்டாரோ, அன்றே எனதுஇடர்க்கு அங்குரம் இட்டாற்போலாயிற்று' என்றனனென்க. சுகுமாரரான உமக்கு வனவாசம்நோர்ந்திருப்பதுகுறித்து எனக்குப் பேரிடரேதவிர, உமக்குப்பணிசெய்வது எனக்கு இடர்தராது; பேருவப்பையேதருமென்றவாறு. [1]நோக்கினுல் என்றபாடத்துக்கு - வாயினாற் கூறாமற் கண்சாடையினாலேயே கூறினன் இலக்குமண னென்க.　　　(௮௦௩.)

.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: இராமபிரான் தன்மனத்தினுள் ஆராய்ந்து இலட்சுமணனைத் தேற்றுதல்.

[1]ஆக [2]செய்தக்க தில்லை யறத்தினின்
றேக லென்ப தரிதென் றுமெண்ணினா
னோகை [3]கொண்டவ [4]னுள்ளிடர் [5]நோக்கினன்
சோக [6]பங்கந் துடைப்பரி தா[7]லெனா.

(இ-ள்.) 'ஆக - இருக்கட்டும்:-செய்தக்கது - (இப்போது இங்குத்தோன்றிய இடர்க்குப் பரிகாரமாகச்) செய்யக்கூடியது, இல்லை-; அறத்தினின்று - தருமத்தைவிட்டு, ஏகல் என்பது - கடந்துசெல்லுதென்பது, அரிது - (நம்மனோர் செய்தற்கு)உரியதன்று', என்றுஉம்-,எண்ணினன்-(தன்)மனத்திற்குள்ளேயே யாராய்ந்தவனாய்,—ஓகை கொண்டவன் - (தனக்குப் பணிசெய்ய நேர்ந்தது குறித்து) மனமகிழ்ச்சிகொண்டவனாகிய இளையபெருமாளின், உள் இடர் - (சுகுமாரனை இராமன் கடுங்காட்டில்வசிக்கும்படி நேர்ந்ததே என்று சிந்தித்து) மனத்திற்குள் வருந்துவதை, நோக்கினன் - பார்த்தவனாய், 'சோக பங்கம் - (இவ்விலக்குமணனது) துயரமாகிய சேறு, துடைப்பு - போக்குவது, அரிது - அருமையானது,' எனா - என்றுகருதி,—(எ - று.)—'என்றான்' என அடுத்த கவியோடு தொடரும். ஆல் - அசை: தேற்றமுமாம்.

ஆக-வார்த்தைப்பாடு. மனத்தை மாசுபடுத்துவதனால்,சோகத்தைப் பங்க மாகக் கூறினான். பேராகபங்கம்-வடசொற்றொடர். பி-ம்:—[1]ஆகச். [2]செய்கதக்க தில்லை. [3]கொண்டிலன். [4]உன்னிடா். [5]நோக்கியென். [6]பந்தம். [7]என்றான். ()

ருஎ. பின்னுந் தம்பியை நோக்கிப் பெரியவன்
மன்னுஞ் செல்வத்திற் குண்டுவ ரம்பிதற்
கென்ன கேடுண்டிவ் வெல்லையி லின்பத்தை
யுன்னு மேல்வரு மூதியத் தோடென்றான்.

(இ - ள்.) பின் உம்—, பெரியவன் - மூத்தவனாகிய இராமன், தம்பியை நோக்கி—, மன்னும் செல்வத்திற்கு - (உலகத்திற்) பெறுகின்ற பொருட்செல் வத்துக்கு, வரம்பு உண்டு - முடிவு [அழிவு] உண்டு: வரும் ஊதியத்தோடு இ எல்லை இல் இன்பத்தை உன்னும ஏல் - மேலேவிளையக்கூடிய நற்கதியா கிய இலாபத்தோடுகூடிய இந்த எல்லையில்லாத இன்பத்தை ஒருவன் நினைத் துப்பார்த்தால், இதற்கு என்ன கேடு உண்டு-இதற்குஎன்ன குறைவுள்ளது? என்றான் - என்று (இலட்சுமணனுக்குச் சமாதானமுண்டாகக்) கூறினான்.

இராச்சியமென்பதோ எப்போதும் சாசுவதமானதன்று; பகைவர்முதலி யோரால் கவர்தற்கு உரியது; மேலும் பேரின்பத்தை விளைக்கக்கூடியதன்று; இப்போது தவக்கோலங்கொண்டு வனத்தில்வசிக்கின்ற இந்தவாழ்க்கையோ நாமே கைவிட்டாலன்றி இராச்சியம்போலப் பிறராற்கவர்தற்குஉரியதன்று; மேலும்,இதனால் எல்லையில்லாத இன்பத்தைப் பெறலாம்: ஆதலாற் பேரூதிய மும் உண்டு: ஆகவே, இராச்சியம்பெற்று வாழ்வதைவிட, இவ்வனவாசமாகிய வாழ்க்கையேசிறந்ததென்று இராமபிரான் இலட்சுமணனைநோக்கிக் கூறின னென்க. மேல்வரும் ஊதியத்தோடு, உன்னு-ஆராய்ந்துபார் எனினுமாம்

**ருஅ.—கவிக்கூற்று: இராமபிரான் செய்தியைமுடித்துவிட்டு,கேகய நாட்டிற்கு வசிட்டனனுப்பிய தூதுவரின் செய்தியைச்சொல்வோமே னல்**

தேற்றித் தம்பியைத் தேவருங் கைதொழ
நோற்றி ருந்தன னோனசிலை யோனிப்பா
[1]லாற்றன் மாதவ னாணையிற் [2]போனவர்
கூற்றி னுற்றது கூறலுற் றாமரோ.

(இ - ள்.) நோன் சிலையோன் - வலியவில்லையுடையவனாகிய ஸ்ரீராமன் (இவ்வண்ணம் கூறி), தமபியை தேற்றி—, தேவர் உம் கைதொழ - தேவா களும் வணங்கிநிற்க, நோற்று இருந்தனன் - (தன்னுருவத்தைத் தானே மனத்திற்கொண்டவண்ணம்) நோன்புநோற்றிருந்தான்; இப்பால்-இனி, ஆ[illegible] றல் மாதவன் ஆணையின் போனவர் கூற்றின் - வலிமைபொருந்திய பெரு[illegible] தவசியாகிய வசிட்டமுனிவனது கட்டளையினாற்சென்றதூதுவர்விஷயத்தில் உற்றது - நிகழ்ந்தசெய்தியை, கூறல் உற்றாம் - சொலலத்தொடங்கினோம்.

இராமபிரான்செய்தியைச் சித்திரகூடத்திலினிதிருந்தானென்று முடி[illegible] துக்கொண்டு,இனி அயோத்திசெய்தியைக் கூறக்கருதித் தைலமாட்டுபடல[illegible] தினீற்றில்"முடங்கல்கொடுத்தவரைப் போக்கினான்"என்றுகூறிநிறுத்தியிரு[illegible]

குஞ் செய்தியைக் கூறுவோ மென்கின்றார். இராமபிரானைக் கங்கைக்கரை வரையில் சுமந்திரன் தேரிலிட்டுக்கொண்டு போய்விட,அடுத்தநாள் இராமன் முதலியோர் கங்கையைத் தாண்டி ஒருமரத்தடியில்தங்கி வாசஞ்செய்தலும், அதற்கு அடுத்தநாள் பரத்துவாசாச்சிரமத்தில் வசித்தலும்,அதற்குஅடுத்த நாள் பரத்துவாசன் கூறிய வழிபிடித்துச் சித்திரகூடத்துக்குப் பயணமாகி யமுனையைக்கடந்து அதன் கரையில் இருத்தலும், அதற்கு அடுத்தநாள் சித்திரகூடத்தைச் சேர்தலு மாக, இராமன்முதலியோர் போய்ச்சேர்ந்ததை வந்து குகனனுசாரர்கள் உணர்த்த, அதன்பிறகே சுமந்திரன் சிருங்கிபேரபுரத்தினின்று திரும்பி ஆறாவதுநாள் சாயங்காலத்தில் அயோத்திசேர்ந்து தசரதனுக்கு இராமன்வனஞ்சென்றசெய்தியை யுணர்த்த,அத்தசரதன் ஆவிநீங்கினானென்று முதனூலில் உள்ளது. பி-ம்:—[1]ஆற்ற, ஆற்றி.[2]போயவர். (அ0கூ)

சித்திரகூடப்படலம் முற்றிற்று.



## கூ-ஆவது பள்ளிபடைப்படலம்.

தசரதமன்னவனைப் பள்ளிபடுத்த செய்தியை யுணர்த்தும் படல மென்பது பொருள். பள்ளிபடுத்தல் - இறந்தவுடலை யெரிக்குமாறு ஈமவிறகினாலியன்ற படுக்கையிற் கிடத்துதல். பள்ளிபடுத்தலென்பது-இப்பொருளில் வருதலை, "செந்தீக்" என்று தொடங்குஞ் சிந்தாமணிச்செய்யுளில்"எந்தாய்வெறுநிலத்துச் சேர்தியோ வென்றினைந்திரங்கிப் பள்ளிபடுத்தார்களே" என்று வருதல்கொண்டும் உணர்க. பள்ளிபடுத்தல்என்பது பெரியோர்களை ஈமவிறகில்வைத்தலென்றபொருளிலும்,சன்னியாசிகளைச் சமாதியில்வைத்தலென்ற பொருளிலும் பின்பழகியபெருமாள்சீயர்அருளிச்செய்தகுருபரம்பராப்ரபாவத்திற் பலவிடங்களில் வந்துள்ளது. இந்தப்படலத்துக்குப் பள்ளிபடைப்படல மென்ற பெயர், அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையில் அயோத்தியா காண்டமுள்ள பிரதிகளைந்தனுள் ஒன்றிற் காணப்பட்டது. பள்ளிபடையென்னுஞ் சொல், பள்ளிப்படையென்றும் வழங்குவது உண்டு: அங்ஙனம் வருதலைக் கல்வெட்டுக்களிற் காணலாம். பள்ளிப்படைப்படலமென்பதனுள் கூட்டெழுத்தாக எழுதப்பட்ட 'ப்ப' என்பதனை 'ய' என்ற எழுத்தாகத் தவறாகப்படித்த பிழையினாலேயே இப்படலத்துக்குப் பள்ளியடைப்படலம் என்றுபெயர்வழங்கலாயிற்றென்றுதோன்றுகின்றது.அங்ஙனந்தவறாகப்படிக்கப்பட்ட பள்ளியடைஎன்பதற்கு-பரதன் அரண்மனையையடைதலென்றுஒருசாரார் பொருள்கூறுகின்றனர். கீழ் ரு-ஆவது படலத்தில் தசரதன் இறந்த செய்தியைக் கூறிய கவி, இப்படலத்தினால் இறந்த அம்மன்னவனைத் திருப்பள்ளிபடுத்தியதைக் கூறுகின்றா ரென்பதே பொருத்த மாதலின், பள்ளிபடைப்படலமென்றாவது பள்ளிப்படைப்படலமென்றாவதுஇந்தப்படலத்துக்குப்பெயரென்பதுகொள்ளுவதே பொருத்தம். "எய்திநூலுளோர்மொழிந்த

யாவையுஞ், செய்து நீக்கலந்திருத்திச் செல்வனே, வெய்தினேற்றினர்'' (கஙுக) என்று இப்படலத்தினீற்றில் மன்னவனை ஈமப்பள்ளியிலேற்றியமை கூறப்பட்டுள்ளதுகாண்க. இனி, மற்றொருசாரார் பள்ளியடைஎன்பதற்கே ஈமப்பள்ளியிலடைவித்தலென்று நலிந்து பொருளுரைப்பர்.

இராமன் சித்திரகூடத்திலினிதிருந்தானாக, வசிட்டமுனிவனால் அனுப்பப்பட்டதூதர்கள் கேகயநாட்டையடைந்து ஓலையைக்கொடுத்துநிற்க,அதைக் கண்டதும்பரதன் ஸ்ரீராமனது திருவடியைத்தரிசிக்கலாமென்னும்பெருவிருப்புடனே, சேனையைத்திரட்டிக்கொண்டு நாளும்பாராமற் சத்துருக்கனனோடு புறப்பட்டுஏழாநாளிற் கோசலநாடுசேர்ந்து அந்நாட்டில்யாவரும்தத்தம் தொழிலைச் செய்யாமலும் களிப்பற்றும் இருப்பதையும் அந்நகரம் அலங்காரமற்றுப் பொலிவிழந்திருப்பதையுங்கண்டு மனத்திற் சங்கைகொண்டு சத்துருக்கனனுக்குக் காட்ட, அவனும் 'பெருந்துயரம் நேர்ந்துள்ளதுபோலவும், திருவே இந்நகரைவிட்டு நீங்கினள்போலவுங் காண்கின்றது' என்ன, அங்ஙனம் பேச்சு நிகழ்கையில் விரைவில் பரதன் அரண்மனையை யடைந்து தந்தையிருக்கு மிடங்களிலெல்லாம் அவனைக் காணாமல் ஐயுறவெய்தி நிற்கையில், அப்பரதனை யொருத்தி யணுகி 'தாய் அழைக்கின்றாள்' என்று தெரிவிக்க, அந்தப்பரதன் தாயையணுகித் தொழ,அவள் கேகயநாட்டிலுள்ளதந்தைமுதலியோரின்சேமத்தை வினவுதலும், பரதன் 'தந்தையைக்காணவேண்டும்: அவர் எங்கே?' என்றுவினவ, 'வானவர்கைதொழ மன்னவர் வானம்வைகினர்:வருந்தாதே,'என்ன,அதுகேட்டபரதன் மிகவும்வருந்தி அவள்சொன்ன ரீதிக்காக 'தீயசொல்லை இங்ஙன் நீயலது உரைப்பரோ?' என்று அவளைப்பழித்துத் தந்தையைக்குறித்துப் பலபடி பிரலாபித்துத் தானேதேறி,'எனக்குத் தந்தைமுதலியஎல்லாவுறவும்இராமனேயாதலால் அவன்கழலை வந்தித்தாலல்லாமல்என் துயர் தீராது' என்றனனாக, கைகேயி 'இராமன் தேவிதம்பியரோடு கானகத்தான்'என்றாள். அதுகேட்டலும் நெருப்புண்டவன்போலப் பரதன் துடிதுடித்து'இன்னும் எத்துணைத் துன்பம் கேட்பனஉளவோ?'என்று நடுங்கி இராமபிரான் கானகஞ் சென்ற காரணத்தை வினவி யறிந்து கீழே விழுந்து புரண்டு பிரலாபித்துத் தனக்கு இராச்சியம்வேணுமென்று தன்தாய் செய்த தீமைக்காக அவளைப் பலபடிபழித்துத் தன்னையும் வெறுத்துக்கொண்டு, எதைச்சொல்லவும் தன்மனநிலைமாறாது நிற்குந் தன்தாய்முன்னேநிற்றற்கும் பிடியாமல் அந்தப்பரதன்கோசலையாரின்திருவடிதொழுவேனென்றுசொல்லி அன்னாளையணுகி அவளதுபாதங்களில் விழுந்து பலபடிபுலம்ப, அதுகண்டு கோசலை 'இவன் மனந்தூயன்' என்றுதேர்ந்து, 'ஐயனே! கேகையர்கோன் மகளிழைத்த கைதவம் நீ அறிந்திலைபோலும்'என்றனளாக,பரதன் தான் சிறிதும் அதனையறிந்தவ னல்ல னென்பது அவள்மனத்திற் படுமாறு பலவகைச் சபதங்களைச் செய்ய,அந்தத்தேவி பரதனது தன்மையை வியக்க,சத்துருக்கினனும் அந்தக்கோசலையைத் தொழுது மாழ்கினனாக, அப்போது வசிட்டமுனி

வன் வந்து பரதனைநோக்கி 'இறந்தவர்க்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்யவேண்டும்'என்ன, கோசலை யநுமதிதர, பிறகு பரதன் வசிட்டமாமுனி வனைவணங்கி, அவனோடும்போய்த் தந்தையினுடலைக்கண்டு புலம்ப, பின்னர் நான்மறையாளர் மன்னவனுடலை விமானத்திலேற்றி நகரத்தவரும் மன்ன வரும் கண்ணீருடனே சூழ்ந்திருக்க, யானையின்மீதுவைத்துச் சங்குபேரி முதலியன ஒலிக்கச் சரயுவுக்குக்கொண்டுபோய்ச் சேர்த்து, 'வீர! ஈமக்கட னைச்செய்க' என்றனராக, அப்போது, ஈமக்கடன்செய்யுமாறுவந்த பரதனை வசிட்டன் 'அன்னை தீமையால் உன்னை மன்னன் துறந்தான்: நீ அந்திமக் கிரியைசெய்யவுரியனல்லை' என்று தடுக்க, பரதன் தன்நிலைமைக்கு மிக வும்வருந்திநிற்க, பின்பு முனிவன் சத்துருக்கனனைக்கொண்டு ஈமக்கடனைச் செய்வித்தான். கோசலைமுதலிய மூவரையொழிந்த மற்றைத்தேவிமார் சக கமனஞ்செய்து புண்ணியலோகம் புக்கனர். அப்பால் மனைக்குத்திரும்பிப் பரதன் பத்துநாளும் ஆசௌசமிருந்து பின்னுஞ் செய்யவேண்டிய கிரியை களையெல்லாம் செய்துமுடிக்க, பிறகு மன்னரின்றி வையம்வைகல் தொன் மையன்றெனத்துணியும் நெஞ்சினராய் மந்த்ரக்கிழவரும் அந்நாட்டவரும் வசிட்டமுனிவனும் பரதனைக் கூடினார்க ளென்பது, இப்படலத்திற் கூறிய விஷயம்.

க.—சென்ற தூதுவர் பரதன்மாளிகையையடைந்து தம்வரவைப் பரதனுக்குச் சொல்லுமாறு வாயில்காவலரிடத்துச் சொல்லுதல்.

பொருவி றூதுவர் போயினர் பொய்யிலா
ரிரவு நன்பக லுங்கடி தேகினார்
பரதன் கோயிலுற் றார்[1]படி காரிரெம்
வரவு [2]சொல்லுதிர் [3]மன்னவற் கேயென்றார்.

(இ - ள்.) பொய் இலார் - பொய்யொழுக்கமில்லாதவர்களான, பொரு இல் தூதுவர்-ஒப்பற்ற தூதர்கள், போயினர் - (அயோத்தியினின்று பரதனை யழைத்துவருதற்காகச்) சென்றவர்களாய், இரவுஉம் நல் பகல் உம் கடிது ஏகினார் - இரவிலும் பகலிலும் (ஓயாமல்) விரைந்து நடந்து, பரதன் கோயில் உற்றார் - பரதன்தங்கியுள்ள அரண்மனையையடைந்து, (வாயில்காவலரை நோக்கி), 'படிகாரிர் - வாயில்காவலரே! மன்னவற்கு-பரதராசரிடத்து, எம் வரவு-எம்முடைய வருகையை [அயோத்தியினின்று தூதுவர் வந்துள்ளா ரென்பதை], சொல்லுதிர்-சொல்லுங்கள்,' என்றார்—; (எ - று.)

குற்றந்தீர்ந்தநன்மையைப் பயவாத சொல் பொய்யா மாதலாலும், இத் தூதுவர் காலம் இடன்முதலியவற்றை யறிந்து நன்மைபயவாச் சொல்லைப் பேசுதலொழித்து நன்மைபயக்குஞ்சொல்லையே பேசுவதில் வல்லவராதலா லும், இவர்களை'பொருவிறூதுவர் பொய்யிலார்' என்றார். படிகாரிர்-ப்ரதீஹா ரர்என்னும் வடசொல் திரிந்து விளியேற்றுவந்தது. அரசமாளிகையில் வாயில்காவலிருத்தலும், அரசனைக் காண விரும்புவோர் அவர்மூலமாகத் தம்

வருகையைத் தெரிவித்து அரசன் அநுமதிபெற்றபின்பு அரசனைக்காணுதலும் முறையாதல் அறிக. மன்னவற்கே, ஏகாரம்-அசை. பி-ம்:—[1]படிகாரர். [2]சொல்லுமின். [3]மன்னவற் கென்கின்றார். (அ௦எ)

### ௨.—அநுமதிபெற்று உள்ளேவந்த தூதுவரிடத்துப் பரதன் தந்தையின்சேமத்தை விசாரித்தல்.

[1]தூதர் வந்தன ருந்தைசொல் லோ[2]டெனக்
காதன் முந்திக் களிக்கின்ற சிந்தையான்
[3]போது ஈங்கெனப் [4]புக்கவர் [5]கைதொழத்
தீதி லன்கொல் திருமுடி யோனென்றான்.

(இ - ள்.) உந்தை சொல்லோடு தூதர் வந்தனர் என-உமதுதாதையின் சொல்லுடனே தூதர் வந்துள்ளாரென்று (வாயில்காவலாளர்) கூற, களிக்கின்ற சிந்தையான்-மகிழ்கின்ற மனமுடையவனாய், காதல் முந்தி - (தந்தை சொல்லைக் கேட்க) ஆவல் விஞ்சி, போதுக ஈங்கு என - இங்கு வருக என்று (பரதன்) சொல்ல,—அவர் - அத்தூதுவர், புக்கு - (உள்ளே) புகுந்து, கைதொழ-வணங்கிநிற்க,—(பரதன் அவர்களை நோக்கி),—'திரு முடியோன்-கிரீடம் கவித்த சக்கரவர்த்தியாகிய தசரதன், தீது இலன் கொல்-யாதொரு தீமையும் இல்லாதிருக்கின்றானோ?' என்றான்-என்று வினவினான்; (எ - று.)

உடம்பு நோயின்றியுறைதல் நாட்டிற்சேமக்குறைவின்றியிருத்தல் முதலிய யாவும் அடங்க, 'தீதிலன்கொல்' என்று வினவினான். உந்தை-உன் தந்தையென்பதன் மரூஉ. சொல்லென்றது - திருமுகத்தை. போது ஈங்கு - தொகுத்தல். [3]போதுகென்னென என்ற பாடத்திற்கு, போதுக - (இங்கு) நீவிர்வருக, என் - (ஊரினின்றுஇங்குவந்ததற்கு) யாதுகாரணம்? என்று பொருளுரைக்க. பி-ம்:—[1]தூது. [2]எனாக். [3]போதுகென்கென, போதுகென்றனன். [4]புக்கனர். [5]கைதொழாக். (அ௦அ)

### ௩.—தந்தையின் சேமங்கேட்டுக் களிப்புற்றபரதன் இராமலட்சுமணரின் சேமத்தை விசாரித்து அவர்களைத் திசைநோக்கி வணங்குதல்.

வலிய னென்றவர் கூற மகிழ்ந்தன
னிலைகொள் பூ[1]ணிளங் கோவெம் பிரானொடு
முலைவில் செல்வத்த னோவென வுண்டெனத்
தலையி னேந்தினன் [2]றாழ்தடக் கைகளே.

(இ - ள்.) அவர் - அந்தத்தூதுவர், வலியன் என்று கூற - (யாதொரு தீங்குமின்றி நுமது தந்தை) வலிமைபெற்றுள்ளானென்றுகூற, மகிழ்ந்தனன் - மகிழ்ச்சியடைந்தவனாகி, (பரதன்),—எம்பிரானொடும் - எமது தலைவனாகிய இராமபிரானுடனே, இலை கொள் பூண் இளங்கோ - இலைத்தொழிலமைந்த ஆபரணங்களையணிந்த இளையபெருமாள், உலைவு இல் செல்வத்தன் ஓ - குறைவற்ற செல்வமுடையவனா யிருக்கின்றானோ? என - என்று வினவ,—(அத்தூதுவர்), உண்டு என - 'நீர் கருதியபடியே அவர்கட்கு யாதொரு

குறையுமில்லாமை) உள்ளது என்று கூற, தாழ் தட கைகள் - (முழந்தாளளவுந்) தொங்குகின்ற நீண்ட (தன்) கைகளை, தலையின் ஏந்தினன் - (அவர்களுள்ள திசையை நோக்கித்) தலைமேல்வைத்து வணங்கினன்; (எ - று.)

வலியன் - நோயின்றிச சுகமாகவாழ்ந்துள்ளா னென்றவாறு: "மல்லுயர்தோளினுன் வலியனோவென்ருன்" எனத் திருவடிசூட்டுபடலத்து வருவதுகாண்க. நோயற்றவாழ்வே குறைவற்ற பெருஞ்செல்வ மென்ற கருத்தினல்,'உலகில் செல்வத்தனோ?'என்று வினவின னென்க. உண்டு என்பது - அங்கீகாரவார்த்தை.பி - ம்:—[1]இளங்கோன். [2]தாமரைக்கையினுன். (அ௦க)

ச'—'கொற்றவன் திருமுகங்கொள்க' என்று தூதுவர் கூறுதல்.

மற்றுஞ் சுற்றத்து ளார்க்கும் வரன்முறை
யுற்ற தன்மை [1]வினவி [2]யுவந்தபி
னிற்ற தாகு [3]மெழுதரு மேனியாய்
[4]கொற்ற வன்றன் றிருமுகங் [5]கொள்கென்ருர்.

(இ - ள்.) மற்றும் - பின்னும், சுற்றத்து உளார்க்கும் - பந்துக்களாக உள்ளவரைப்பற்றியும், வரல் முறை-கேட்கவேண்டிய முறைப்படியே, உற்ற தன்மை - நேர்ந்துள்ள யோகக்ஷேமங்களை, வினவி - கேட்டறிந்து, உவந்த பின் - (பரதன்) மகிழ்ந்திருந்த பின்பு,—(அந்தப்பரதனை நோக்கி அத்தூதுவர்),—'எழுது அரு மேனியாய்-எழுதமுடியாதபடி பேரழகுபடைத்தவனே! கொற்றவன்தன் திருமுகம் - (தசரத) மன்னவன்விடுத்த திருமுகம், இற்றது ஆகும்-இதுவாம்; கொள்க - (இதனை) வாங்கிக்கொள்க,' என்ருர்—; (எ-று.)

பரதன்உவப்ப எல்லாருடைய க்ஷேமத்தையும் தெரிவித்தபின்பு, அரசனதுதிருமுகத்தைத் தூதுவர் தந்தன ரென்க. ஓலையைத் திருமுகமென்றது - மங்கலவழக்கு. பி - ம்:—[1]விராவி. [2]உவந்தவற்கு, உவந்துபின், உவந்தனன். [3]எழிறருமேனியாய், என்றெண்ணியராயவர். [4]கொற்றமன்னவன்.[5]கொள். ()

ரு.—பரதன் தந்தையின்திருமுகத்தை வாங்கிப் பக்தியோடு தன்சிரமீது கொள்ளுதல்.

என்று கூறலு மேத்தி யிறைஞ்சினுன்
பொன்றி ணிந்த பொருவி றடக்கையா
னின்று வாங்கி யுருகிய நெஞ்சினுன்
றன்று [1]நாண்மலர்ச் சென்னியிற் சூடினுன்.

(இ - ள்.) என்று கூறலும் - என்று (தூதர்கள்) கூறியவுடனே,—(பரதன்), ஏத்தி இறைஞ்சினுன் - கொண்டாடி (அத்திருமுகத்தை) வணங்கி, பொன் திணிந்த பொரு இல் தட கையால் - பொன்னுபரணம்அணிந்த ஒப்பற்ற நீண்ட (தன்) கைகளால், நின்று வாங்கி - எழுந்துநின்று வாங்கிக்கொண்டு, உருகிய நெஞ்சினுன்-(அன்பினுல்) உருகுகின்ற மனத்தையுடைய

வனாய், நாள் மலர் துன்று சென்னியில் - அன்றுஅலர்ந்த மலர்களையணிந்த (தன்) சிரசின்மீது, சூடினான்-பூண்டான்; (எ - று.)—பி-ம்:—[1]தார். (௬௧௧)

௬ —திருமுகங்கொணர்ந்த தூதர்க்குப் பரதன் பெருநிதியம் ஈதல்.

சூடிச் [1]சந்தனந் தோய்த்துடைச் சுற்றுமண்
[2]மூடு தோட்டின் முடங்க [3]னிமிர்த்தன
னீடு நோக்கிவந் தெய்திய தூதர்க்குக்
கோடி [4]மேலு நிதியங் கொடுத்தனன்.

(இ - ள்.) சூடி-(திருமுகத்தைச் சிரசிற்) சூடிய பின்பு, சந்தனம் தோய்த்து-(மேற்புறத்திற்) சந்தனம் பூசப்பெற்றும், சுற்று உடை மண் மூடு-சுருட்டு தலையுடையதாகி(வாய்ப்புறத்து) மண்ணைத்து மூடி முத்திரையிடப்பட்டுமுள்ள,தோட்டின் முடங்கல்-பனையோலையின் சுருளை, நிமிர்த்தனன் - பிரித்துப் பார்த்தவனாய்,—ஈடு நோக்கி - (அத்திருமுகத்தில்) எழுதியிருந்த விஷயத்தைப்பார்த்து, வந்து எய்திய தூதர்க்கு - (அதனைக்கொண்டு) வந்து சேர்ந்த தூதர்களுக்கு, கோடி மேல்உம் - கோடியென்னும் அளவுக்குமேலாக, நிதியம் - பொருளை, கொடுத்தனன் - (பரதன்) கொடுத்தான்; (எ - று.)

அத்திருமுகத்தில், 'கைவிஞ்சிப்போகின்ற காரியம் ஒன்று நேர்பட்டுள்ளதனால் இதுகண்டவுடன் வருக' என்று எழுதியிருந்ததுபற்றி, இராமன் முதலியோரை விரைவிற் காணுதற்கு இத்திருமுகம் வந்தது காரணமாகுமென்ற உவப்பினாற் பரதன் அத்திருமுகத்தைக் கொணர்ந்தோர்க்குக் கோடியினும் மிக்க திரவியங் கொடுத்தன னென்க. சுபசூசகமாக அம்முடங்கலிற் சந்தனம் தோய்த்திருந்தது. மன்னவர்கள் பனையோலையிற் செய்தி யெழுதிச் சுருளாகச் சுருட்டிச் சுற்றிய ஓலையின் வாய்முகத்தில் மண்ணையிட்டு இராச முத்திரையை வைத்து அனுப்புதல், முற்காலத்து மரபு. முடங்கல் - சுற்றியுள்ள ஓலைச்சுருள்; முடங்குதல் - சுருண்டிருத்தல்: அல் - பெயர்விகுதி. ஈடு - இடப்பட்டுள்ள [எழுதப்பட்டுள்ள] விஷயம். சந்தனந்தோய்த்துள்ள சுற்றும் மண்மூடிய முடங்கல் எனினுமாம்.பி-ம்:—[1]சாதனச்சொற்றொடைச், சாதனந்தோலுடை. [2]மூடல். [3]நிமிர்த்ததன்.[4]மேனிதியங்கொடுத்தானரோ. ()

எ.—இராமனைக் காணலாமென்ற ஆசையாற் பேரன்புகொண்டு பரதன் மலர்களைத் தூவுதல்.

வாணி லாநகை தோன்ற [1]மயிர்புறம்
[2]பூண வானுயர் காதலிற் [3]பொங்கினான்
றூணி லாமலர் தூவினன் றம்முனைக்
காண லாமெனு மாசை கடாவவே.

(இ - ள்.) (அப்போது பரதன்),—வாள் நிலா நகை தோன்ற - வெள்ளொளிபரவுகின்ற மகிழ்ச்சிச்சிரிப்புத் தோன்றவும், மயிர் புறம் பூண-மயிர்க்கூச்சு(த் தன்) உடம்பின்மீது அலங்காரமாகவுண்டாகவும், வான் உயர் காத

லின் பொங்கினுன் - மிகவும் அதிகமாகிய அன்பினுல் விஞ்சப்பெற்றவனுய், தம்முனே காணல் ஆம் எனும் ஆசை கடாவ - தனது முன்பிறந்தவனுகிய இராமபிரானை (நாம்) காணக்கூடுமென்ற ஆசை தூண்டுவதனுல், தாள் நிலா மலர் தூவினன் - காம்பில் இராத [அப்போதுதான் பறித்துக்கொணரப் பட்ட] புஷ்பங்களை (அம்முடங்கலின் மீது) தூவினுன்; (எ - று.)

வாயிலே சிரிப்பும், உடம்பில் மயிர்க்கூச்சும் தோன்ற இராமனைப் பார்க்க வேணுமென்னும் ஆவல் பொங்கிக்கொண்டிருக்க, பரதன் விரைவில் இராம னைக் காணப்போகின்றுமென்ற களிப்புடனே அம்முடங்கலிற் புஷ்பங்களை யிட்டு அருச்சித்தனனென்க. நிலா நகை - வினைத்தொகை. நிலா மலர்-எதிர் மறைப் பெயரெச்சத்தொடர். தாள்நிலா(வ) - தாளிலேபொருந்த மலர்தூவி னன் என்று உரைத்தாருமுளர். பி-ம்:—[1]மயிர்ப். [2]பூணும். [3]பொங்கினன். ()

அ.—பரதன் சத்துருக்கனனேடு உடனே புறப்படுதல்.

எழுக சேனையென் றேவின னெய்தினன்
றெழுது கேகயர் [1]கோமகன் சொல்லொடுந்
தழுவு தேரிடைத் தம்பியொ டேறினுன்
பொழுது நாளுங் குறித்திலன் [2]போயினுன்.

(இ - ள்.) (உடனேபரதன்),—எய்தினன்-(தான் புறப்படக்) கருதியவ னுய், 'சேனை எழுக - (யான் அயோத்திக்குப் புறப்படுவதனுல் எனது) பரி வாரச்சேனைகள் உடனேபுறப்படுக', என்று—, ஏவினன் - கட்டளையிட்டு, தொழுது - (கேகயர்கோனை) வணங்கி (விடைபெற்று), கேகயர் கோமகன் சொல்லொடுஉம் - கேகயதேசத்தரசகுமாரனுகிய அந்தயுதாசித்தின் அநுமதி யுடனே, தழுவு தேரிடை-(குதிரைகள்) பூட்டப்பெற்றுச் சித்தமாகவந்துநின்ற தேரின்மீது, தம்பியொடு ஏறினுன் - (தன்) தம்பியானசத்துருக்கனனுடன் ஏறி, பொழுதுஉம் நாள்உம் குறித்திலன்-புறப்படுதற்குஏற்றமுகூர்த்தந்தானு புறப்படுதற்குஏற்ற நாள்தானு என்று இதுஒன்றையும் கவனிக்காமலே, போ யினுன் - (அயோத்திமாநகரத்தை நோக்கிப்) பயணமானுன்; (எ - று.)

தனக்கு எல்லாவுறவுமுறையுமாக நினைத்திருக்கும் இராமபிரானைக் காண்பதிலுள்ள பேரவாவினுல் நாள்பொழுதுகளையும் கவனியாமல் சத்துருக் கினனேடும் பரதன் உடனே புறப்பட்டன னென்க. சொல்லொடும் தேரி டையேறினுன் என்றதொடர்க்கு-தான் பயணமாவதை அந்தக்கேகையர்கோ மகனிடஞ் சொல்லிவிட்டு, 'அவன்விடைகொடுத்தானு?' என்பதையும் பாரா மல் தேரின்மீது ஏறின னென்று கருத்தாகலாம். கடவுளிடத்துச் செல்லப் புறப்படுமிடத்து நாள்முதலியன கவனிக்கவேண்டிய தில்லை யென்பது, 'பொழுதுநாளுங்குறித்திலன்'என்றவிடத்துப் பெறப்படுதல் அறிக. பிறமதத் தவரும் "வேயுறுதோளி" என்னும் பதிகத்தில் இக்கருத்தை வெளியிட்டிருத் தல், இங்குக் கருதத்தக்கது. பி-ம்:—[1]கோன்மகன். [2]போகின்றுன். (அகசுஉ)

௬.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - பரதன் புறப்பட்டபோது அரச சின்னங்கள் திரண்டு உடன்வந்ததைக் கூறும்.

[1]யானை சுற்றின தேரிரைத் தீண்டின
மான வேந்தர் [2]குழுமினர் வாளுடைத்
தானை [3]சூழ்ந்தன [4]சங்க முரன்றன
மீன வேலையின் விம்மின பேரியே.

(இ - ள்.) (பரதன் புறப்பட்டுச்சென்றபோது), யானை சுற்றின-யானைகள் சூழ்ந்துவந்தன; தேர் இரைத்து ஈண்டின - இரதங்கள் ஆரவாரஞ் செய்து கொண்டு நெருங்கின; மானம் வேந்தர் குழுமினர் - பெருமைபொருந்திய அரசகுமாரர்கள் திரண்டுவந்தார்கள்; வாள் உடை தானை சூழ்ந்தன - படைக்கலம் பூண்ட காலாட்படைகள் சூழ்ந்துவந்தன; சங்கம் முரன்றன - சங்கவாத்தியங்கள்சப்தித்தன; பேரி - பேரிகைகள், மீனம் வேலையின் விம்மின-(பலவகை)மீன்கட்கு இருப்பிடமான கடல்போலப் பேரொலிசெய்தன; (எ - று.)—வாள் - மற்றையாயுதங்கட்கும் உபலட்சணம். பி - ம்:—[1]சேனை. [2]குழுவினர். [3]சூழ்ந்தது. [4]சங்கு. (௮௧௫)

௧௦. கொடி[1]நெருங்கின தொங்கல் [2]குழுமின
வடிநெடுங்கண் மடந்தையரூர்மடப்
பிடிதுவன்றின பூணொளி போர்ந்தன
விடி[3]துவன்றின மின்னென [4]வெங்குமே.

(இ-ள்.) (பரதன் செல்லுகின்ற அவ்விடமெங்கும்),—கொடி நெருங்கின- துவசங்கள் நெருக்கமாகவந்தன; தொங்கல் - தொங்கலெனப்படும் அரசசின்னம், குழுமின - திரண்டுவந்தன; வடி நெடு கண் மடந்தையர் ஊர் மடம் பிடி துவன்றின-மாவடுப்போன்ற நீண்டகண்களையுடைய மகளிர் ஏறிச்செல்லும் இளமையுள்ளபெண்யானைகள் நெருங்கிவந்தன; இடி துவன்றின மின் எனஎங்கும் பூண் ஒளி போர்ந்தன - வானம்இடிக்கும்போதுதோன்றுகிற மின்னல்போல அவ்விடமெங்கும்ஆபரணவொளி விட்டுவிட்டுப்பிரகாசித்தன.

அரசர்வருகையில் அவர்தேவிமார் பிடிமீதுவந்தனரென்றுகூறுதல் ஏற்கும். இனி, அரசகுமாரர்கட்குச் சிலவகைப்பணிவிடைகளை மடந்தைமார் புரிவதாகக்கூறுதல், கவிமரபு; அங்ஙனம் பணிவிடைபுரியும்மகளிர் பிடியின் மீது ஏறிவந்தனரென்க. சேனாவீரரின்மனைவியர் பிடியானைமீது ஏறிவந்தன ரென்றலும் ஒன்று. அரசகுமாரர்முதலியோர் அணிந்துள்ள பூண்களினொளி, மின்னலைப்போல விட்டுவிட்டுப் பிரகாசிப்பனவாகும். இடி-இலக்கணையால், மேகமெனக் கொள்ளலுமாம். பி - ம்:—[1]நிறைந்தன. [2]குழீஇயின. [3]தொடங்கின, துடங்கிய. [4]எங்கணும். (௮௧௬)

கக. [1]பண்டி யெங்கும் பரந்தன பல்லியங்
கொண்டி யம்பின [2]கோதையர் கோதையில்
வண்[3]டி யம்பின வாளியின் வாவுறுஞ்
செண்டி யங்கு பரியுஞ் செறிந்தவே.

(இ - ள்) பல் இயம்-பலவகைவாச்சியங்கள், பண்டி எங்கும்-பலபண்டிகளிலும், கொண்டு-ஏற்றப்பட்டு, பரந்தன-பாவினவாகி, இயம்பின-பேரொலி செய்தன; கோதையர் கோதையில்-(அங்குச் சென்ற) மடவார்கள் (அணிந்துள்ள) மலர்மாலைகளில், வண்டு இயம்பின - (தேனுண்ணும்) வண்டுகள் ரீங்காரஞ்செய்தன; வாளியின் வாவுறும் - அம்புபோல விரைந்து செல்லுகின்ற, செண்டு இயங்கு - செண்டுவெளியிலுலாவுகின்ற, பரிஉம்-குதிரையும், செறிந்த - நெருங்கின; (எ - று.)

பரியின் விரைந்தநடையை விளக்கும்பொருட்டு 'வாளியின் வாவுறும் பரி' என்றார். கீழ் ஒன்பதாஞ்செய்யுளில், கசம் இரதம் பதாதி என்ற மூவகைப்படை போந்ததனை யுணர்த்திய கவி, இதனாலும் அடுத்த செய்யுளாலும் குதிரை உடன் போந்தமையை யுணர்த்துகின்றன வென்க. படைகள் இப்போது வெகுதூரஞ் செல்லவேண்டியிருத்தலின் வண்டிகளிற் பலவகை இயங்கள் ஏற்றப்பட்டு ஒலிசெய்துகொண்டு உடன்சென்றமையையும் இங்குக் கூறுகின்றார். அங்ஙனம் பல்லியங்கள் ஒலிசெய்யுமிடத்து வண்டுகள் சுருதிகொடுப்பதுபோல ரீங்காரஞ்செய்துகொண்டிருந்ததை யெடுத்துக் கூறினர். செண்டுவெளி-வையாளிவீதி. பி - ம்:—[1]பண்டியங்கள். [2]கொண்டலிற் கோதையில். [3]அலம்பின. (கக)

கஉ. கிளை[1]முகத்திற் [2]கிளரிசை [3]விம்மின
[4]வுளைமு கத்தின வும்பரி னேவிடில்
[5]விளைமு கத்தன வேலையின் மீதுசெல்
[6]வளைமு கத்தன வாசியும் வந்தவே.

(இ-ள்.) கிளை முகத்தில் - வேய்ங்குழலின்மூலமாக, கிளர் - விளங்குகின்ற, இசை-(இசைபோன்ற) இசையை, விம்மின-வெளிவிடுவனவும், உளை முகத்தின - தலையாட்டமென்னும் அணியை(த் தம்) முகத்திற் கொண்டனவும், உம்பரின் - வானில், ஏவிடில் - (செல்லுமாறு) தூண்டினாலும், விளை முகத்தன-(அச்செயலை) முடிக்கவல்ல தன்மையைக்கொண்டனவுமாகி, வேலையின்மீது செல் - (இத்தனைநாழிகைக்குள் இவ்வளவுதூரஞ்செல்லவேணுமென்று பொழுதுகுறித்துக்கொண்டு ஓட்டினால்) அந்தப்போதினுட்செல்லவல்ல, வளைமுகத்தன - வளைந்தமுகத்தைக்கொண்ட, வாசிஉம்-குதிரைகளும், வந்த - (உடன்)வரலாயின; (எ - று.)

கீழ்ச் செண்டியங்கும் பரி என்று கூறியது-பந்தயக்குதிரைகள் வந்தமையைக்குறிக்குமென்றும், இச்செய்யுளிற் கூறியது-இவர்ந்துசெல்லுங் குதிரை

யைக் குறிக்குமென்றுங் கூறுவர் ஒருசாரார்: மற்றொருசாரார் குதிரையின் மிகுதியைக் குறிக்கவேண்டி ஒருபாடலோடு ஒழியாமல் இரண்டுபாடல்களி னாற் கூறுகின்றனர்போலு மென்ப. குதிரைகளின் மூக்கின்றுளையினின்றும் வெளிவரும் ஒலி இன்னோசையா யுள்ளதென்பார் 'கிளைமுகத்திற்கிளரிசைம் மின' என்றார். (மதுகைடபர்கள்கவர்ந்த வேதத்தை மீட்டுக்கொண்டு வரு மாறு திருமால் ஹயக்கிரீவாவதாரஞ்செய்து இன்னோசையுண்டாகப்பாடினா ரென்று ஹரிவம்சத்திற்கூறியிருப்பது இங்குக் கருதத்தக்கது.) [4]இளைமுகத் தினனும்பரினேகிட என்றபாடத்திற்கு,இளை முகத்து இனன் உம்பரின் ஏகி டஎன்றுபிரித்து - இளஞாயிறு ஆகாயத்தினிடமாகச்செல்ல என்றும், இளை முகத்தினன் உம்பரின்ஏகிடஎனப்பிரித்து - இளைத்தமுகத்தையுடைய அர சன் விண்ணுலகம்புக்கானாகஎன்றும் உரைகூறுவாருமுளர். மூன்றாமடியில் [5]விளைமுகத்தனல் என்றபாடத்தைக்கொண்டு - வடவைக்கனலைக்கொண்ட கடலின் மீதுஞ் செல்லுகின்ற வாசிக ளென்று உரைத்தலுமாம்: வடவைக் கனலைத் தன்னிடத்தேகொண்ட கடலினும் மேற்பட்டுச் செல்லுகின்ற வளை முகத்தவாசிகள் என்றுபொருளுரைத்து,கடலினும் வேகமாகச் செல்லுகின்ற வளைமுகத்தையுடையவாசிகள்என்று உரைத்தாருமுளர். பி-ம்:—[1]நுகத்தில். [2]துருதம். [3]விளக்கின. [4]இளைமுகத்தின வும்பரிற்றேவரில். [6]வளைமுகத்தநல் வாசியுவந்தவே. முதலிரண்டடிகள் "துளைமுகத்திற் சுருதிவிளம்பின, இளை முகத்தினிதும்பரினேவிடில்" என்று அச்சுப்பிரதிகளிற் காணப்படுகின் றன. இந்தப்பாடத்திற்கு, சுருதி-இன்னோசை, இளை-பூமிஎன்க. (அகஅ)

கஈ. வில்லின் வேதியர் வாள்[1]செறி வித்தகர்
மல்லின் [2]வல்லர் சுரிகையின் வல்லவர்
[3]கொல்லும் வேல்குந்தங் கற்றுயர் கொற்றவர்
தொல்லை வாரணப் [4]பாகருஞ் [5]சுற்றினார்.

(இ - ள்.) வில்லின் வேதியர்-வில்வேதத்தில் வல்லவரும், வாள் செற வித்தகர்-வாட்போர்புரிவதில் நிரம்பிய வல்லமைபெற்றவரும், மல்லின் வல் லர்-மற்போரில் வல்லவரும், சுரிகையின் வல்லவர் - கத்திவீசுதலில் வல்ல வரும், கொல்லும்-உயிரைக் கவரவல்ல, வேல் - வேற்படையிலும், குந்தம் - ஈட்டியிலும், கற்று - பயின்று, உயர் - மிக்க திறமைபெற்ற, கொற்றவர் வெல்லுந்தன்மைவாய்ந்த வீரர்களும், தொல்லை வாரணம் பாகர்உம் - பழமை யான [அனுபவம்வாய்ந்த] யானைப்பாகரும், சுற்றினார் - சூழ்ந்து வந்தார்கள் (எ - று.)—உபவேதம் நான்கனுள்ஒன்றாய்த் தநுர்வேதமென்னப்படுதலின் அத்தொழிலில் வல்லவரை 'வில்லின் வேதியர்' என்றார். கொல்லும்வேல் உபசாரவழக்கு. பி-ம்:—[1]நிறை. [2]மல்லர். [3]கல்லும். [4]பாகர்கள்.[5]துன்னினார்

கச. எறிப கட்டின மாடுக [1]ளேற்றைமா
குறிகொள் கோழி சிவல்[2]குறும் பூழ்நெடும்
பொறிம யிர்க்கவு தாரிகள் [3]போற்றுறு
[4]நெறியின் மாக்களு முந்தி நெருங்கினார்.

(இ - ள்.) ஏறி பகடு இனம்-(ஒன்றையொன்று) மோதுகின்ற எருமைக் கடாக்களின் தொகுதியும், ஏற்றை மாஆடுகள்-யாட்டுக்கடாக்களும், குறிகொள் கோழி - இரத்தக்கறையைக்கண்டு பொருந்தன்மையுள்ள கோழியும், சிவல்-சிவலும், குறும்பூழ் - குறும்பூழும், பொறி நெடு மயிர் கவுதாரிகள் - (உடலிற்)புள்ளிகளமைந்த நீண்ட மயிரையுடைய கவுதாரிகளும், (என்ற இவற்றை), போற்றுறும்-பாராட்டி வளர்க்கின்ற, நெறி இல் மாக்கள்உம்-நன்னெறியில்லாதமானிடரும், முந்தி - முற்பட்டு, நெருங்கினர்—; (எ - று.)

எருமைக்கடாச்சண்டை முதலியவற்றிலேயே பயில்பவராய் நன்னெறி கற்றறிதலிலரான மானிடரும் உடன்திரண்டுவந்தன ரென்க. நல்ல அறிவு இல்லாதவ ராதலின், 'மாக்கள்' என்றார். மா குறிகொள் கோழிஎன எடுத்து-பெருங்குறியை நாடிப் பொருகின்ற கோழிஎன்றுருருமுளர். போற்று றும் என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[1]ஏற்றைமாக், ஏற்றினங், ஏற்றினர், ஏனமாக். [2]குறும்பூணொடும், குறும்பூழொடும். [3]போற்றிடு, போற்றுவ. [4]நெறியும்.

கரு. நிறைந்த [1]மாந்தர் [2]நெருங்கினர் நெஞ்சினிற்
பறந்து போதுங்கொ லென்று பதைக்கின்றார்
[3]பிறந்து தேவ ருணர்ந்து [4]பெயர்ந்துமு
[5]னுறைந்த [6]வானுறு வார்களை யொக்கின்றார்.

(இ-ள்.) நிறைந்த மாந்தர்-(கல்விகேள்விகளால்) நிரம்பிய மனிதர் பலர், பறந்து போதும் கொல் - (பரதன்) விரைந்து சென்று விடுவானோ? என்று-, நெஞ்சினில் பதைக்கின்றார் - மனத்திற் பதைப்புக்கொண்டவராய், நெருங்கினர் - திரண்டுவந்தவர்கள்,—தேவர்-தேவர்களாயிருப்பவர், பிறந்து-(சாபத்தினால் இவ்வுலகத்திற்) பிறவியையடைந்து, உணர்ந்து - (சாபவிமோசனத்திற்குஏற்ற) நல்லறிவைப்பெற்று, பெயர்ந்து முன் உறைந்த வான் உறுவார்களை - (இவ்வுலகை) விட்டு முன்பு தாங்கள்வாழ்ந்த துறக்கத்தை யடையப் போகின்றவர்களை, ஒக்கின்றார் - ஒப்பவரானார்கள்; (எ - று.)

சாபவசத்தால் இங்குப் பிறவியையடைந்து பூர்வஜந்மத்தின்அறிவைப் பெற்றுமீண்டு இப்பிறவியை நீத்துத் தம்முலகைப் பெற இருக்கின்ற தேவர்க்குத் தம்முன்னையநிலையை யிழந்திருத்தல்பற்றி வருத்தமும் விரைவில் தம்முலகம்கிடைக்குமென்பதுபற்றிப் பெருமகிழ்ச்சியும் இருக்குமாதலால், அவர்கள், பறந்துபோதுங்கொலென்ற சிந்தையாற் பதைப்பும் பரதனை நெருங்குவது பற்றி மகிழ்ச்சியுமுள்ள மாந்தர்க்குஉவமை. போதும்=போகும். இனி, இப்பாடலுக்கு - (பரதனுடன்வந்தவரான) நிறைந்த மாந்தர் நெருங்கினராய், (நாம்) பறந்து-விரைவாக, (அயோத்திக்குப்) போதும்கொல் - போய்ச் சேருவோமா? என்றுநெஞ்சிற்பதைக்கின்றவராய், பூமிக்குச்சாபத்தினால் வந்த தேவர்கள்நல்லுணர்வுபெற்றவராய்த்திரும்பத் தேவலோகத்திற்குவிரைந்து செல்பவர்

போல அயோத்திக்கு மீண்டு செல்ல விரையலானார்க ளென்று உரைப்பினு மாம். பி-ம்:—[1]மாதர். [2]நெருங்கின. [3]பிறந்த. [4]பெயர்த்தும்போய், பெயர்ந்து போய். [5]உறைந்து. [6]வானுறைவார்களை. (அஉக)

கசா. ஊ[1]ன ளைந்த வுடற்குயி ராமெனத்
தா[2]ன ளைந்து தழுவின தண்ணுமை
தே[2]ன ளைந்து செவியுற வார்த்தென
வா[3]ன ளைந்தன மாகதர் பாடலே.

(இ - ள்) மாகதர் பாடல் - மாகதர்களின் பாடல்கள், தேன் அளைந்து - தேனின் இனிமையை(த் தான்)கொண்டு,செவி உற வார்த்து என-காதினுள்ளே சொரிந்தாற்போல [மிகவும் செவிக்கு இனிமையாய்], வான் அளைந்தன - வானுலகம்வரையும் பரவியன;(அந்தமாகதர் பாடலை),ஊன் அளைந்த உடற்கு - மாமிசத்தாலான உடலுக்கு, உயிர் ஆம் என - உயிர் அமைந்திருத்தல்போல, தண்ணுமை - மத்தளவொலிகள், அளைந்து தழுவின - முழுதும் கலந்து தழுவி யிருந்தன; (எ - று.)—தான் - அசை.

உயிரானது தனக்கு உரிய உணர்வால் உடல்முழுதும் தழுவிநிற்பது போல, தண்ணுமையொலி மாகதர் பாடலைத் தழுவிநின்ற தென்றார். அந்த மாகதர் பாடலின் செவிக்கு இனிதாக ஒலித்தலை விளக்குவார் 'தேனளைந்து செவியுற வார்த்தென' என்றார். மாகதர் - அரசரின்முன்னேயிருந்து அவர் புகழ்பாடுவோர். தண்ணுமை - அதன் ஒலிக்கு, இலக்கணை. பி-ம்:—[1]அளைந்த. [2]அளைந்து. [3]அளைந்தன, அளைந்தது. (அஉஉ)

கஎ. ஊறு கொண்ட முர[1]சுமி [2]ழோதையை
[3]வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி
யேறு [4]கொண்டெழு மல்ல ரிடிப்பினை
மாறு கொண்டன [5]வந்திக ளேத்தரோ.

(இ - ள்.) ஊறு கொண்ட - (குணிலால்) அறையப்படுகின்ற, முரசு - முரசவாத்தியம், உமிழ்-(தான்) வெளிப்படுத்துகின்ற, ஓதையை - ஓசையை, வேதியர் வாழ்த்து ஒலி - வேதம்வல்ல பிராமணர்கள் (பரதனை) வாழ்த்துகின்ற ஒலியானது, வீறுகொண்டன-மேம்பட்டு ஒலித்தன; ஏறு கொண்டு எழு மல்லர் - காளையைப்போன்று வீரகுணத்தோடு புறப்படுகின்ற மல்லர்களின், இடிப்பினை-(தமது வீரந்தோன்றச்செய்யும்) கர்ச்சனையை, வந்திகள் ஏத்து-துதிபாடகர் (அரசனைத்) துதிக்கிறபாடலினொலி,மாறுகொண்டன-.

ஒலிமாறு கொள்ளுதல் - மற்றையோசையினும் தம்மோசையே விஞ்சியிருத்தல். பி-ம்:—[1]இமிழ். [2]ஓதையின். [3]மாறு. [4]கொண்டன. [5]வந்திகரேத்தரோ, வந்திவழுத்தரோ. (அஉங)

### கஅ.—பரதன் கோசலைநாட்டை யடைதல்.

ஆறுங் [1]கானு மகன்மலை யுங்கடந்
தேறி யேழ்பக [2]னீந்திப்பி னெந்திரத்
[3]தூறு பாகு மடையுடைத் தொண்முளை
நாறு பாய்[4]வயற் [5]கோசல [6]நண்ணினான்.

(இ - ள்.) (பரதன்),—ஏழ் பகல் நீந்தி - ஏழுநாள் வழி நடந்து, (அந் நாள்களில்), ஆறுஉம் - நதிகளையும், கான் உம் - காடுகளையும், அகல் மலைஉம் - பரவியுள்ள மலைகளையும், கடந்து ஏறி - தாண்டிச்சென்று, பின் - பிறகு [எட்டாநாள்]. எந்திரத்து ஊறு பாகு - கரும்பாலையிலே (கருப்பஙகழியி னின்று) வெளிப்படுகின்ற சாறு, (அக்கரும்பாலையி லடங்காமல் மிகுந்து), மடை உடைத்து - (நீர் பாய்வதற்காக ஏற்பட்டுள்ள வாய்க்காலின் வழியே போய்) நீர்மடைகளை யுடைத்துக்கொண்டு, ஒள் முளை நாறு வயல் பாய் - ஒள்ளிய முளைதோன்றுகின்ற வயலிலே பாயப்பெற்ற, கோசலம் - கோசல நாட்டை, நண்ணினான் - சேர்ந்தான்; (எ - று.)

பரதன் ஏழுநாள் வழிநடந்து சென்று யாறுமுதலியவற்றைக்கடந்து எட்டாவதுநாளில் கோசலநாட்டைச் சேர்ந்தன னென்க. பாகு - கருப்பஞ் சாற்றுக்கு இலக்கணை. எந்திரம் - யந்த்ரம். பி - ம்:—[1]குன்றுமகன், குன்றுங கல். [2]நீத்த, நீங்கிப். [3]ஆறு. [4]நெடுங. [5]கோசலை [6]நண்ணினர். (அஉச)

### கக.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - பரதன்சென்றபோது கோசலநாடு இருந்த நிலைமையைக் கூறும்.

ஏர்து றந்த வயலிள மைந்தர்தோ
டார்து றந்தன தண்டலை நெல்லினு
நீர்து றந்தன தாமரை [1]நீத்தெனப்
பார்து றந்தனள் பங்கயச் செல்வியே.

(இ-ள்.) (பரதன் சென்ற அப்போது),—வயல் - வயல்கள், ஏர் துறந்த - ஏரை நீங்கியிருந்தன; இள மைந்தர் தோள் - இளமைவாய்ந்த ஆடவரின் தோள்கள், தார் துறந்தன - பூமாலைகளை நீங்கியிருந்தன; நீர் - ஜலங்கள், தண்தலை - குளிர்ந்த இடத்தையுடைய வயல்களிலுள்ள, நெல்லின்உம் - நெற்பயிரிலும், துறந்தன - நீங்கியிருந்தன; பங்கயம் செல்வி-தாமரைமலரில் வாழ்கின்றவளாய்ச் செல்வத்திற்குஉரியவளான ஸ்ரீதேவி, தாமரை நீத்தென - (அந்நாட்டிலுள்ள) தாமரைமலரில்வாழ்வதைவிட்டு, பார் துறந்தனள் - (அந்தக்கோசல) நாட்டையே விட்டிட்டனள்; (எ - று.)

கோசலநாட்டையாண்ட தசரதசக்கரவர்த்தி இறந்துபட்டதனாலும், அந் நாட்டையாளுதற்குஉரிய ஸ்ரீராமன் கானகஞ் சென்றதனாலும், வயல்முதலி யன ஏர்முதலியனநீங்க அந்நாடு பொலிவை யிழந்திருந்த தென்க. மேல் எட்

டுச்செய்யுட்கும் இங்ஙனமே கருத்துக்காண்க. வயல் ஏர் துறந்தன-வயல்கள் ஏரடிப்பாரின்றித் தரிசாய்க்கிடந்தன என்றவாறு; ஏர் - அழகுமாம். நீத்தென - செய்தென என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது - செய்தென்ற வினையெச்சப் பொருளில் வந்தது. பார் - இலக்கணையால், பூமியின் ஏகதேசமாகிய நாட்டினையுணர்த்திற்று; "மாயோன் மேயகாடுறையுலகமும்" என்று இடத்து 'உலகம்' என்பதுபோல. பி - ம்:—[1]நீர்த்தென. (அஉரு)

உ0. [1]பிதிர்ந்த சாறு பெருந்துறை மண்டிடச்
[2]சிதர்ந்து [3]சிந்தி யழிந்தன தேங்கனி
[4]முதிர்ந்து [5]கொய்யுந ரின்மையின் [6]மூக்கவிழ்ந்
துதிர்ந்து லர்ந்தன வொண்மல ரீட்டமே.

(இ - ள்.) தேம் கனி - இனிய பழங்கள்,—(கொய்யுநர் இன்மையின்), பிதிர்ந்த சாறு - (தம்மிடத்தினின்று) வெளிப்பட்ட ரஸங்கள், பெரு துறை மண்டிட - பெரிய நீர்த்துறைகளிலே நெருங்கிப்பாய, சிதர்ந்து சிந்தி அழிந்தன - நாற்புறமுஞ் சிதறி யழிவுற்றன; ஒள் மலர் ஈட்டம் - அழகிய மலர்த்தொகுதிகள், கொய்யுநர் இன்மையின் - (தம்மைப்) பறிப்பவர் இல்லாமையால், முதிர்ந்து - முற்றி, மூக்கு அவிழ்ந்து - காம்புகளினின்று விண்டு, உதிர்ந்து-, உலர்ந்தன - வாடிக்கிடந்தன; (எ - று.)

'கொய்யுநரின்மையின்' என்பது - மத்திமதீபமாய், தேங்கனியென்பதனோடும் இயையும். அந்நாட்டவர் துயரமிகுதியால் தஞ்செயலை யொழிந்திருந்தனரென்க. பி - ம்:—[1]பிதிர்ந்து. [2]சிதிர்ந்து. [3]சிந்திரைமுந்திய. [4]முதிர்ந்த. [5]கொய்குநர். [6]மூக்குமிழ்த்து, மூக்குவித்து. (அஉசு)

உக. ஏய்ந்த கால மிதுவிதற் காமென
[1]வாய்ந்து மள்ள ரரிகுந ரின்மையாற்
பாய்ந்த சூதப் பசுநறுந் [2]தேறலாற்
சாய்ந்தொ சிந்து முளைத்தன சாலியே.

(இ - ள்.) இதற்கு ஏய்ந்த காலம் இது ஆம் என - இப்பயிரை யறுப்பதற்குப் பக்குவமான காலம் இதுவாகுமென்று, ஆய்ந்து - ஆராய்ந்து, அரிகுநர் - அரிகின்றவராகிய, மள்ளர் - பயிர்த்தொழிலாளர், இன்மையால்-இல்லாமையால், சாலி - செந்நெற்பயிர்கள்,—பாய்ந்த - (கனியைப் பறிப்பாரின்மையாற் சிந்தியழிந்த மாங்கனிகளினின்று) வெளிப்பட்டுப்பாய்ந்த, சூதம் பசு நறு தேறலால் - மாம்பழத்தின் புதிய இனிய சாற்றினால், சாய்ந்து - தலை சாய்ந்து, ஒசிந்து - அடிமுறிந்து, முளைத்தன - (தாம் ஈன்ற தானியங்கள் பூமியிற் சிந்தி) முளைக்கப்பெற்றன; (எ - று.)

அரிகுநரில்லாமையாலே விளைந்தபயிர் மாங்கனித்தேறலினால் மீண்டும் முளைத்தனவென்க. தேறல்-மது: இச்சொல்-இங்கு இலக்கணையால், இனிய சாற்றினை யுணர்த்திற்று. பக்குவமானநிலையைக் கண்டறிந்து மள்ளர் விளைந்த தானியத்தை யறுப்பது, முறை. பி-ம்:—[1]ஆய்ந்த. [2]தேறலில். (அஉஎ)

உரு. எட்கு லாமல [1]ரேசிய நாசியர்
[2]புட்கு லாவயற் பூசற் கடைசியர்
கட்கி லார்களை காதற் கொழுநரோ
[3]டுட்க லாமுடை யாரி [4]னுயங்கினர்.

(இ - ள்.) எள் குலாம் மலர் ஏசிய நாசியர்-எள்ளின் விளங்குகின்ற மலரை(த் தமக்கு உவமையாகாமைபால்) பழிக்கின்ற [எள்ளுப்பூவினும் அழகிய] மூக்கையுடையவராகிய, புள் குலா வயல் பூசல் கடைசியர்-பறவைகள் மகிழ்ந்துசஞ்சரிக்கின்ற வயலிலே தொழில்செய்யுங் கடைசியர்கள்,—காதல் கொழுநரோடு உள் கலாம் உடையாரின் - (தமது) அன்பிற்கு உரிய கணவரோடு ஊடல்கொண்டவர்போல, களை கட்கிலார் - களைபிடுங்குதல்தொழிலையொழிந்தவராய், உயங்கினர் - வருந்திக்கிடந்தார்கள்; (எ - று.)

கணவரோடு ஊடல்கொண்டமகளிர் தஞ்செயலையொழிந்து வருந்திக்கிடப்பதுபோல, கடைசியர் தஞ்செயலாகிய களைகட்டலை யொழிந்து உயங்கிக்கிடந்தன ரென்க. எள்மலரேசிய நாசியர் - எதிர்நிலையுவமையணி.
பி-ம்:—[1]எய்திய. [2]புக்குலா. [3]உட்குலாமுடையாரின். [4]ஒதுங்கினர். சிலபிரதிகளில் இப்பாடலுக்குப்பின் "அலர்ந்தபைங்கூழ்" (உசு) என்ற பாடல் காணப்படுகின்றது. (அஉஅ)

உஉ. ஓது கின்றில கிள்ளையு மோதியர்
தூது [1]சென்றவர் வந்திலர் தோழர்பான்
மோது கின்றில பேரி [2]முழவிழாப்
[3]போது கின்றில[4]பொன்னணி வீதியே.

(இ - ள்.) கிள்ளை உம்-கிளியும், ஓதுகின்றில - பேசுதலை யொழிந்தன; ஓதியர் - கூந்தலையுடைய மகளிர், தோழர்பால் தூதுசென்றவர் வந்திலர் - (தமதுபாங்கியர்க்குத்) தூதாக(த் தாம் அவருடைய) கணவரிடத்துச்சென்று வருதலைத் தவிர்ந்தனர்; பேரி முழ மோதுகின்றில - பேரியெனப்படுகின்ற முழக்கும்வாச்சியமும் முழக்கப்படாதொழிந்தன; பொன் அணி வீதி-பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற வீதியில், விழா போதுகின்றில-கலியாண ஊர்கோலம்முதலியன செல்லாதொழிந்தன: (எ - று.)

ஓதுகின்றில - வேதஞ்சொல்லுதலையொழிந்தன என்றுமாம்: கிளி வேதமோது மென்பதை "வளைவாயகிள்ளைமறைபாடுநாங்கூர்", "வளைவாய்க்கிள்ளை மறைவிளிபயிற்றும்" என்பவற்றாலும் அறியலாம். முழ-முழாவென்னுங் குறியதன்கீழ் ஆகாரங் குறுகிற்று. பேரி முழ - ஒருபொருட்பன்மொழி.
பி - ம்:—[1]சென்றவர் சொல்லலர் கொண்கர்பால், சென்றிலவந்திலதோழர்பால், சென்றில சொல்லில கொண்கர்பால். [2]முழாவிழா. [3]போதுகின்றிலர். [4]பொன்னகர். (அஉக)

உச. பாட னீத்தன [1]பண்டொடர் பண்குழ
லாட னீத்தன வரங்கொ டகன்புனல்
சூட னீத்தன சூடிகை [2]சூளிகை
மாட னீத்தன மங்கல வள்ளையே.

(இ-ள்.) பண் தொடர் பண் குழல்-பண்ணுறத் தொடரப்பட்ட (மூங்கில் முதலியனகொண்டு) இயற்றப்படுங் குழலென்னும் வாச்சியம், பாடல் நீத்தன-இசை பாடுதலைத் தவிர்ந்திருந்தன; அரங்கொடு-நர்த்தனசாலையுடனே, அகல் புனல்-பரவிய நீர்நிலைகள், ஆடல் நீத்த - ஆடுதலைத் தவிரப்பெற்றன; சூடிகை-சிரசுகள், சூடல் நீத்தன-மலர்சூடுதலைத் தவிர்ந்தன; சூளிகை மாடம்-இடிதாங்கியைக்கொண்ட மாளிகைகள், மங்கலம் வள்ளை - மங்களகரமான வள்ளைப்பாடல்களை, நீத்தன - நீங்கப்பெற்றன; (எ - று.)

புனல் - நீர்நிலைக்கு இலக்கணை. ஆடல் - சிலேடையால், நர்த்தனஞ் செய்தல் நீராடுதல்என்ற இருபொருளைக் காட்டிற்று. சூடிகை - சூடாஎன்ற வடசொல், 'க' ப்ரத்யயம்பெற்று வந்ததென்க. சூளிகை=சூலிகை. சூளிகை-உச்சியுமாம். பி - ம்:—[1]வண்டொடு பாணர்கள், பண்டொடர்பாண்குழல், வண்டொடுபாண்குழல். [2]சூலிகை. (அஙo)

உரு. நகையி ழந்தன வாண்[1]முக நாறகிற்
புகையி ழந்தன மாளிகை பொங்கழற்
சிகையி ழந்தன தீவிகை தேமலர்த்
தொகையி ழந்தன தோகைய ரோதியே.

(இ - ள்.) வாள் முகம்-(அந்நாட்டிலுள்ளவரது) ஒளிபொருந்திய முகங்கள், நகை இழந்தன - சிரிப்பு நீங்கப்பெற்றன; மாளிகை-(அந்நாட்டு) மனைகள், நாறு அகில் புகை இழந்தன-நறுமணம்வீசுகின்ற அகிலின்புகை நீங்கப்பெற்றன; தீவிகை - (அந்நாட்டிலேற்றப்படும்) விளக்குக்கள், பொங்கு அழல் சிகை இழந்தன-மிக்க அக்கினிச்சுவாலையை யிழந்தனவாய் மங்கிக் கிடந்தன; தோகையர் ஓதி - (அந்நாட்டு) மகளிரின் கூந்தல், தேன் மலர் தொகை இழந்தன-தேனையுடைய மலரின் தொகுதிகளை யிழந்தன; (எ-று.) —**சொற்பொருட்பின்வருநிலையணி.** தீவிகை - தீபிகா: வடசொல். அழற்சிகை - எரிகின்ற நெருப்புப்பிழம்பு. பி-ம்:—[1]முகன். (அஙக)

உசு. அலர்ந்த பைங்கூ ழகன்குளக் [1]கீழன
மலர்ந்த வாயிற் புனல்வழங் காமையா
[2]லுலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலை
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே.

(இ-ள்.) அலர்ந்த பை கூழ் - வளமாகவளர்ந்த பசிய பயிர்கள்,—அகல் குளம் கீழன மலர்ந்த வாயில் புனல் வழங்காமையால் - பரவிய ஏரியினிடத்துள்ள (புனல் வெளிப்படுமாறு) திறக்கப்பட்டுள்ள மதகுவழியாக நீரைத் தராமையால் [ஏரி மதகு வாய்திறக்கப்பெற்று நீர் பாயப்பெறாமையால்], வன்கண் உலோபர் கடைத்தலை புலர்ந்து நிற்கும் பரிசிலர் போல-கொடுமையையுடைய [கருணையற்ற] உலோபிகளின் தலைவாசலிலே வாடிக்கிடக்கின்ற பரிசுபெற வந்தவர்கள்போல, உலர்ந்த-உலர்ந்து கிடந்தன; (எ - று.)

புலவர் பரிசுபெறவேண்டி உலோபிகளின் தலைவாயிலை யடையின் பரிசு பெறுமையால் எங்ஙனம் வாடிக்கிடப்பரோ, அவ்வாறு ஏரிநீர் மதகுவழியாகப் பாயப்பெறுமையால் பைங்கூழ்கள் வாடிக்கிடந்தன வென்க. கடைத்தலை-இலக்கணப்போலி. பி-ம்:—[1]கீழ்மடை. [2]உலர்ந்துநிற்ப. (அஙஉ)

உஎ. [1]நாவி னீத்தரு [2]நல்வளந் துன்னிய
[3]பூவி நீத்தென நாடு பொலிவொரீஇத்
[4]தேவு [5]நீத்தருஞ் சேணெறி [6]தாவிட
வாவி நீத்த வுடலென லாயதே.

(இ - ள்.) துன்னிய பூவி - (பலவளங்களும்) நெருங்கிய கோசலநாட்டில், தேவுஉம் நீத்து அரு சேண் நெறி தாவிட - தெய்வங்களும் நீங்கிச் (செல்லுதற்கு) அரிய வெகுதூரவழியே சென்றிட,—நாவின் நீந்த அரு நல் வளம் நீத்தென - நாவினாற் சொல்லிமுடித்தற்குங் கூடாத [மிக்க] (தனது) நல்லவளத்தை இழந்ததனால், நாடு - அந்தக்கோசலநாடு, பொலிவு ஒரீஇ - (தன்) அழகையிழந்து, ஆவி நீத்த உடல் என ஆயது-உயிரையொழிந்த உடல்போல இருந்தது; (எ - று.)—நீத்தரு - வலித்தல்.

தேவும் நீங்கிப் பலவளங்களும் ஒழிந்த கோசலநாடு, உயிரைநீங்கிய உடலைப்போலப் பொலிவழிந்து கிடந்ததென்பதாம். கொண்டாடுவதற்கு உரியவனுய்ச் சிறந்த அரசன் இல்லாமையால், தேவும் நீங்கிற் றென்க. [4]தேவிஎன்ற பாடத்திற்கு-நாட்டிற்குஉரியதேவதை யென்னலாம். பி-ம்:—[1]நாவிநீத்தரு, நாவிநீத்தன, நாவினீத்தன. [2]நல்லவந்துன்னிய, நல்வளந்துன்னிசை. [3]பூவு நீத்தரு, பூவினீத்தென, பூவினீத்தனன். [5]நீத்தகன். [6]தாவிடா. (அஙங)

உஅ.—பொலிவிழந்த நாட்டைநோக்கிப் பரதன் நெட்டுயிர்த்தல்.

என்ற நாட்டினை நோக்கி யிடருழந்
தொன்று முற்ற துணர்ந்தில னுன்னுவான்
சென்று கேட்பதொர் தீங்[1]குள தாமெனு
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

(இ - ள்.) என்ற-கீழ்க்கூறியவாறுள்ள, நாட்டினை - கோசலதேசத்தை, (பரதன்,)—நோக்கி-பார்த்து, இடர் உழந்து - பெருந்துன்பமடைந்து, உற்றது ஒன்றுஉம் உணர்ந்திலன் - நிகழ்ந்தசெய்தியை யாதொன்றும் உணராதவனுய், உன்னுவான்-சிந்தைகொண்டு, சென்று கேட்பது ஓர் தீங்கு உளது ஆம் எனு-(நாம்) போய்க் கேட்கப்போகின்ற தீமையான செய்தியொன்று இப்போது நேர்ந்துள்ளதென்று ஊகித்து,நின்று நின்று நெடிது உயிர்த்தான்-தயங்கித்தயங்கிக்கிடந்து பெருமூச்செறிந்தான்; (எ-று.)—அரோ-ஈற்றசை.

ஒன்றும், உம்மை - இழிவுசிறப்பு. நின்றுநின்று - அடுக்கு, விரைந்து செல்லாமைத் தயங்கிக்கிடந்தமையை யுணர்த்தும். பி-ம்:—[1]உளவாமெனு.

உகூ.—பரதன் நகரைக் காணுதல்.

மீண்டு [1]மேகியம் மெய்யெனு நல்லணி
பூண்ட வேந்தன் றிருமகன் [2]புந்திதான்
தூண்டு தேரினு முந்துறத் [3]தூண்டுவா
னீண்ட வாயி னெடுநகர் நோக்கினான்.

(இ-ள்.) மீண்டுஉம் ஏகி - பின்னும் சென்று, மெய் எனும் நல் அணி பூண்ட அ வேந்தன் - சத்தியமென்னப்படுகின்ற சிறந்த ஆபரணத்தையணிந்த அந்தத் தசரதமன்னவனுடைய, திருமகன் - சிறந்த புதல்வனாகிய அந்தப் பரதன், தூண்டு தேரின் உம் முந்துற புந்தி தூண்டுவான் - (குதிரைகளைத்) தூண்டிச் செலுத்தப்படுகின்ற தேரைக்காட்டிலும் முற்பட(த் தன்)புத்தியை விரைவாகச் செலுத்தி ஆராய்பவனாகி, நீண்ட வாயில் நெடு நகர் நோக்கினான் - நீண்ட வாசலையுடைய சிறந்த அயோத்தியாநகரத்தைக் கண்டான்; (எ - று.)

மிகவும் விரைந்து ஆராயும் ஆராய்ச்சியுடனே அயோத்திமாநகரைப் பரதன் கண்டனனென்க. பரதன் கேகயநாட்டினின்று வந்த இப்போது கண்டது அயோத்திமாநகரத்தின் வைஜயந்தமென்ற பெயருள்ள மேற்கு வாயிலாமென்பது, முதனூல்கொண்டு உணரலாகும். இருக்கவேண்டிய நிலை மாறிப் பொலிவழிந்திருந்தமையால், மனத்திற்றோன்றிய ஆராய்ச்சிப் பின்னும் பெருகிக்கொண்டிருந்த தென்பதை மூன்றாமடி விளக்கும். தான்-அசை. [3]தூங்குவான் என்ற பாடத்திற்கு-மனவெழுச்சிகுன்றியவனு யென்க. பி-ம்:— [1]எய்தி. [2]புந்தியால். (அ௩௫)

௩0.—இதுமுதல் ஆறுகவிகள் - அயோத்தி முன்னை நிலைமாறி அழகு அழிந்திருந்ததைப் பரதன் கண்டதனைக் கூறும்.

அண்ட [1]முற்றுந் திரிந்தயர்ந் தா[2]யமு
துண்டு போதியென் [3]றொண்கதிர்ச் செல்வனை
விண்டொ டர்ந்து விலக்குவ [4]போல்வன
கண்டி லன்கொடி யின்னெடுங் கானமே.

(இ - ள்.) (அந்தப்பரதன்),—ஒள் கதிர் செல்வனை - ஒளிபொருந்திய ஆயிரங்கிரணங்களை (த் தனது) செல்வமாகப்படைத்துள்ள சூரியபகவானை நோக்கி, 'அண்டம் முற்றுஉம் திரிந்து அயர்ந்தாய் - இந்தப்பூமிமுழுவதும் அலைந்து சோர்ந்தாய்: அமுது உண்டு போதி-(இங்குத்தங்கி) உணவருந்திச் செல்வாயாக,' என்று - என்றுசொல்லி, விண் தொடர்ந்து விலக்குவ போல்வன - (அந்தச்சூரியன் செல்லுகின்ற) வானத்திற் றொடர்ந்துசென்று அக்கடவுளை விலக்குவனபோன்றுள்ளனவாகிய, நெடு கொடியின் கானம்-நீண்ட கொடிச் சீலைகளின் தொகுதிகளை, கண்டிலன்-கண்டானில்லை; (எ - று.)

அந்நகரத்துப் பலவிடத்தும் கொடிபறத்தல் தவிர்ந்திருந்தமையைப் பரதன் கண்டமை, இந்நூற் கூறப்பட்டது. வானளவும் கொடிகள் ஓங்கியிருப்பது-சூரியபகவானை அமுது அருந்தாது அப்பாற் செல்லலாகாதெனத் தடுப்பதுபோலு மெனக் குறித்தார்; **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** கானம் - தொகுதியென்ற பொருளில் வந்தது: "தாமரைக்காடு" என்ற விடத்து 'காடு' என்பதுபோல. **பி-ம்:**—[1]முற்றத். [2]அமிர்து. [3]ஓங்குமருக்கனே. [4]போயெனக்.

௩௧. ஈட்டு நன்[1]புகழ்க் கீட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்தெனக்
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன
கேட்டி லன்முர சின்கிள ரோதையே.

(இ - ள்.) ஈட்டிய யாவைஉம்-(நீதிநெறியால்) தேடிய செல்வம் எல்லாவற்றையும், ஈட்டும் நல் புகழ்க்கு - தேடுதற்குஉரிய சிறந்தபுகழைப் பெறுமாறு,—'வேட்டவர்-(பொருள்வேணுமென்று) விரும்பியவர், வேட்ட-(தாம்) வேண்டியபொருள்களை, விரைந்து கொண்மின் - விரைவாகவந்து பெற்றுக்கொள்ளுங்கள்,' என - என்று, கோட்டி மாக்களை - பெருந்திரளாகவுள்ள ஜநங்களை, கூவுவ போல்வன - கூவுவனபோலுள்ளனவான, முரசின் - கொடைமுரசினது, கிளர் ஓதை - (எங்கும்) பரவுகின்ற ஓசையை, கேட்டிலன் - (செவியாற்) கேட்டலு மில்லாதவனுயினன், (பரதன்); (எ - று.)

கொடைமுரசு ஒலிப்பது, வேட்டவர் வேட்டவற்றைக் கொண்மினென்று கோட்டிமாக்களைக் கூவுவதுபோலு மெனக் குறித்தார்; **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** புகழ்க்குக் கூவுவ என இயையும். கோட்டி - கோஷ்டீ என்ற வடசொல்லின் சிதைவு. **பி - ம்:**—[1]புகழீஇயுமென்றியாவையும், பொருளியாவையுமீட்டியே, புகழீயுமென்றியாவையும், புகழீட்டியும் யாவையும், புகழீஇயுமின்யாவையும். (அ௩எ)

௩௨. கள்ளை மாக்கவர் கண்ணியன் கண்டிலன்
பிள்ளை மாக்களி றும்பிடி யீட்டமும்
வள்ளை மாக்க ணிதியும் வயிரியர்
கொள்ளை மாக்களிற் கொண்டன ரேகவே.

(இ - ள்.) வள்ளை மாக்கள்-(தம்மனையில்) மங்கலவள்ளைப்பாடல்பாடப்பெற்றசெல்வரிடத்தினின்று,-வயிரியர்-பாடகர், பிள்ளை மா களிறுஉம்-இளமையைக்கொண்ட சிறந்தஆண்யானைகளையும், பிடி ஈட்டம்உம்-பெண்யானைகளின் கூட்டத்தையும்,நிதிஉம்-மற்றைச்செல்வத்தையும்,கொள்ளை மாக்களின் கொண்டனர் ஏக - கொள்ளையடிப்பவர்போலப் பரிசிலாகப் பெற்றுக் கொண்டனராய்ச்செல்ல, மா கள்ளை கவர் கண்ணியன் - வண்டுகள் கள்ளையுண்கின்ற பூமாலையை யணிந்தவனுகிய பரதன், கண்டிலன்—; (எ - று.)

வயிரியர் கொள்ளைகொள்பவர்போலக் களிறுமுதலியவற்றை மிகுதியா கப்பெற்றுச் செல்லக் கண்டிலன் பரத னென்க. வள்ளைமாக்கள் - மங்கல பாடகரும், வயிரியர் - துதிபாடகரும் என்றலு முண்டு. (அஙஅ)

ஙங. காவன் மன்னவன் கான்முளை கண்டில
ஞவு மாவு மழிகவுள் வேழமு
மேவு காத [1]னிதியின் வெறுக்கையும்
பூவின் வானவர் [2]கொண்டனர் போகவே.

(இ - ள்.) ஆஉம் - பசுக்களையும், மாஉம் - குதிரைகளையும், அழி கவுள் வேழம்உம்-(மதநீர்ப்) பெருகுகின்ற கன்னத்தையுடைய யானையையும்,காதல் மேவு நிதியின் வெறுக்கைஉம் - (யாவரும்) விரும்புதலைச்செய்கின்ற பெருஞ் செல்வத்தின் பெருந்திரளையும், பூவின் வானவர்-பூலோகத்துத் தேவர்களா கிய பிராமணர்கள், கொண்டனர் போக - (தானமாகப்) பெற்றுக்கொண்டு செல்ல,—காவல் மன்னவன் கான்முளை - (உலகத்தைப்) பாதுகாத்தலைச் செய்த தசரதமன்னவனது புதல்வனாகிய பரதன், கண்டிலன்—; (எ - று.)

பிராமணர்க்குப் பசு குதிரை முதலியவற்றை ஈதல் மரபு: ஆதலால், பர தன் அங்ஙனம் அவ்வந்தணர்பெற்றுச் செல்லுதலைக் கண்டிலனென்றார். வெறுக்கை - வெறுக்குமாறு பெருந்திரளாகவுள்ளது: ஒருபொருளை மிகுதியா கக்கண்டால் அதன்மீது வெறுப்புத்தோன்றுதல் இயல்பாதலின், பெருந் திரளை, இங்கு 'வெறுக்கை' என்றார். விண்ணுலகத்துத் தேவர்போலப் பூமி யிற் சிறந்து விளங்குதலால், பிராமணரை 'பூவின்வானவர்' என்றது. பூ - வடசொல். பி - ம்:—[1]நிதியும். [2]கொண்டவர். (அஙகூ)

ஙச. சூழ மைந்த [1]சுரும்பு நரம்புந்த
மேழ மைந்த விசையிசை யாமையான்
மாழை [2]யுண்கண் [3]மயிலெனுஞ் சாயலார்
கூழை போன்ற பொருநர் குழாங்களே.

(இ-ள்.) பொருநர் குழாங்கள்-பொருநரின் வர்க்கங்களிடத்துள்ள, சூழ் அமைந்த சுரும்புஉம் - (மணமுள்ளவிடத்தே) சூழுந்தன்மையுள்ள வண்டுக ளும், நரம்புஉம் - நரப்புக்கருவிகளாகிய யாழ்முதலியனவும்,—தம் - தமக்கு உரிய, ஏழ் அமைந்த இசை - ஏழாகப் பொருந்திய சுவரங்களை, இசையாமை யால் - இனிதாக ஒலிக்காமையினால், மாழை உண் கண் மயில் எனும் சாய லார் - மாவடுப்போன்று மையுண்ட கண்களோடு கூடிய மயிலென்று சொல் லத்தக்க சாயலமைந்த மகளிரின், கூழை-தலைமயிரை, போன்ற-நிகர்த்தன.

கருநிறங்கொண்டு மெல்லியநரம்புபோல் தோன்றினும் ஏழிசைகளைத் தோற்றுவிக்கின்ற தன்மை மகளிர்கூழைக்கு இல்லாமையால், இசைத்தலில் லாத சுரும்பும் நரம்புகளும் மயிலெனுஞ்சாயலாரின் கூழைபோலு மென்றார்: இசையிசையாமையாகிய பொதுத்தன்மைபற்றி, இவ்வுவமை கூறியது.

பொருநரும் இசைபாடுதலில் வல்லவராதலால், அங்ஙனம் இசைக்குந்தன்மையமைந்த சுரும்பு நரம்புகள் 'பொருநர்குழாங்கள்' எனப்பட்டன. பொருநர் - களம்பாடுவோர். சுரும்பும் நரம்புஉம்என்பதற்கு - சுரும்புபோல இன்னோசையுண்டாக்குகின்றயாழும் என்று உரைத்தலு முண்டு. பி-ம்:—[1]நரம்புஞ் சுரும்பும். [2]ஒண். [3]மயினெடுஞ். (௮௬௦)

௩௫. தேரு மாவுங் களிறுஞ் சிவிகையு
மூரும் பண்டியு மூருந ரின்மையால்
யாரு மின்றி யெழி[1]லழி வீதிகள்
வாரி [2]யின்றிய வாலுக வாற்றினே.

(இ - ள்.) தேர் உம் - இரதங்களையும், மா உம் - குதிரைகளையும், களிறு உம் - யானைகளையும், சிவிகை உம் - பல்லக்குகளையும், ஊரும் பண்டி உம் - தரையிலூர்ந்துசெல்லுந்தன்மையுள்ள பண்டிகளையும், ஊருநர் இன்மையால்- ஏறிச்செலுத்துபவரில்லாமையினால், யார் உம் இன்றி எழில் அழி வீதிகள் - (தேர்முதலியவற்றில் ஏறிச்செல்வார்) எவரையும் இல்லாமல் அழகழிந்த அயோத்திமாநகரின் தெருக்கள், வாரி இன்றிய வாலுகம் ஆற்றின்-நீர்வற்றிவிட்ட மணல்நிரம்பிய ஆறுபோல (இருந்தன); (எ - று.)

வினைமுற்று, வருவித்து உரைக்கப்பட்டது. இதற்கு முந்தியெல்லாம் தேரூர்ந்துசெல்பவர் மாவேறிச்செல்பவர் முதலியோரால் பொலிவுபெற்றிருந்த அயோத்திமாநகரின் வீதிகள், அப்போது தேர் முதலியவற்றிலேறிச்செல்பவர் எவரும் இல்லாமையால் நீரற்ற நதிபோல அழகின்றிக்கிடந்தன வென்றவாறு: உவமையணி. வாலுகம் - தற்சமவடசொல். சிவிகை-ஶிபிகா: வடசொல். பி-ம்:—[1]இல. [2]இன்றியல். (௮௬௧)

௩௬.—இதுவும் அடுத்த கவியும் - நகரின் பொலிவழிந்தநிலையைப் பரதன் சத்துருக்கனனுக்குக் காட்டுதலைக் கூறும்.

அன்ன தன்மை யகநகர் [1]நோக்கினன்
[2]பின்னை யப்[3]பெரி யோர்தம் பெருந்தகை
[4]மன்னன் வைகும் வளநகர் போலுமீ
தென்ன தன்மை யிளையவ னேயென்றான்.

(இ-ள்.) அ பெரியோர்தம் பெருந்தகை-அறிவுஒழுக்கங்களாற் பெரியோர் பாராட்டும் பெருமைக்குணமுடைய அப்பரதன்,—அன்ன தன்மை அகம் நகர் நோக்கினன்-அங்ஙனம்முன்னைநிலைமாறியிருந்த நகரத்தினுட்புறத்தைப்பார்த்தவனாய், பின்னை-பின்பு, (சத்துருக்கினனைநோக்கி), 'இளையவனே—! மன்னன் வைகும் வளம் நகர் - (நமதுதந்தையாகிய) அரசர் தங்குகின்ற வளப்பமுள்ள இந்த நகரில், ஈது - (நிலைமாறிய) இத்தன்மை, என்ன தன்மை போலும் - எந்தத்தன்மையினையொத்துள்ளது? என்றான்-என்றுவினாவினான்.

அன்னதன்மையகநகர் என்றது - கொடித்தொகுதிகாணப்படாமை, கொடைமுரசினொலி கேட்கப்படாமை முதலியவற்றைக் கொண்ட நகரினுட் புறத்தை. இதுஎன்னதன்மைபோலுமென்றது-இவ்வனம்நிலைமாறித்தோன்று வது-அரசன் உயிருடனிருக்கும் நகருக்கு நேருமோ? அரசனில்லாத நகரத்தின் நிலைமையல்லவோ இது? என்றவாறு. பி-ம்:—[1]நோக்கித்தன். [2]பின்னிலைக, பின்னிலைப், பின்னையே. [3]பெரிதப், பெரியோர்க்கு. [1]மன்னரின்றியமா. ()

௩௭. வேற்ற டங்கலர் [1]விண்ணுற வென்றிடும்
[2]சூற்ற டங்கருங் கார்புரை தோளினாய்
சேற்ற டங்கட் டிருவொடு நீங்கிய
பாற்ற டங்கட லொத்தது பாரென்றான்.

(இ-ள்.)(பின்னும் பரதன் சத்துருக்கனனை நோக்கி),--'வேறு அடங்கலர் விண் உற-(மனமொன்றுதலின்றி) வேறுபட்டவரான பகைவர் வீரசுவர்க்கம் அடையும்படி, வென்றிடும் - வெல்லுகின்றனவும், சூல் தட கரு கார் புரை - (நீராகிய) கருவைக்கொண்ட விசாலமான கருநிற மேகத்தை யொப்பனவு மான, தோளினாய்-கைகளையுடையவனே! (இவ்வயோத்திமாநகரம்),—சேல் தட கண் திருவொடு நீங்கிய தட பாற்கடல் ஒத்தது - சேலென்னும் மீனை யொத்த பெரியகண்களைக்கொண்ட இலக்குமியை நீங்கப்பெற்ற பெரிய திருப்பாற்கடலை யொத்துள்ளது; பார்-(இதனைக்) காண்பாயாக', என்றான்-என்று கூறினான்; (எ - று.)

வீரத்தையும் கொடையையுங் கொண்ட தோள்களையுடையவனே! என்பது,முன்னிரண்டடியின் பொருள். திருவொடு-உருபுமயக்கம். திருவைநீங்கிய பாற்கடல் பொலிவழிந்து தோன்றியதுபோல இந்நகர் இப்போது பொலி வழிந்து தோன்றுவதைக் காண்பாயென்கின்றான். பகைவரைப் போரில் தொலைத்தலால் அவர் வீரசுவர்க்கமுறுவரென்பது பற்றி, 'அடங்கலர் விண் ணுற வென்றிடும்...தோள்' என்றார். தோள் கையாதலை "தோளுற்றொரர் தெய்வம்" என்றஇடத்துங் காண்க. பி-ம்:—[1]விண்ணுறவெற்றிடும்,ஊரெண மெல்லிதால். [2]கூற்றடங்கப்பொரு நெடுங் கோளினாய், சூற்றடங்கருங்கார் புரைதோற்றத்தான், கூற்றடங்கல்புரை நெடுந்தோளினான். (அ௪௩)

௩அ.—சத்துருக்கனன் கூறுவது.

குருமணிப்பூ ணரசிளங் கோளரி
யிருகை கூப்பி யிறைஞ்சின [1]னெய்திய
தொருவ கைத்தன் றுறுதுய ரூழிவாழ்
திருந கர்த்திரு தீர்ந்தன ளாமென்றான்.

(இ-ள்.) குரு மணி பூண் அரசு இள கோள் அரி-சிறந்த இரத்தினங்கள் பதித்துச்செய்யப்பட்டஅணிகலங்களையணிந்தகொல்லுந்தன்மையுள்ளசிங்கம் போன்ற இளையதம்பியாகிய சத்துருக்கனன்,இரு கை கூப்பி இறைஞ்சினன் - (தனது) இரண்டுகைகளையும் கூப்பி(ப் பரதனை) வணங்கியவண்ணம், "(இப்

போது இந்நகர் தோன்றுவதைப்பார்த்தால்), எய்தியது உறு துயர் - இப்போதுநேர்ந்துள்ள மிக்க துயரமான செய்தி, ஒருவகைத்து அன்று-ஒருதன்மைப்பட்டதல்ல; (அன்றியும்', ஊழி வாழ் - கற்பாந்தகாலமளவும் அழியாது வாழ்வதான, திரு நகர்-சிறந்த இந்தநகரத்தைவிட்டு, திரு-இலக்குமி, தீர்ந்தனள் ஆம் - நீங்கினாள்போலும்,' என்றான்-என்றுகூறினான்; (எ - று.)

இந்நகரத்தைப்பார்த்தால் பெருந்துயரச்செய்தி பலநிகழ்ந்துள்ளனவாகவும், இலட்சுமியே ஊரைவிட்டுச்சென்றுவிட்டதாகவும் தோன்றுகின்றதென்று சத்துருக்கனன் பரதனிடங் கூறினனென்க. உறு-மிகுதிப்பொருளுணர்த்தும் உரிச்சொல். பி-ம்:—[1]எய்திய. (அசச)

## கசு.—பரதன் அரண்மனையில் தந்தைவாழிடத்தை யடைதல்.

அனைய [1]வேலை [2]யரசுடைத் தோரண
மனையி [3]னீநெடு மங்கல வாயிலை
நினையு [4]மாத்திரத் [5]தேகிய நேமியான்
றனய னுந்தந்தை சார்விட மேவினான்.

(இ - ள்.) அனைய வேலை-அங்ஙனம் பேச்சுநிகழுஞ் சமயத்தில், நினையும் மாத்திரத்து-நினைக்கும் பொழுதிற்குள், அரசு உடை தோரணம் மனையின் நீள் நெடு மங்கலம் வாயிலை-அரசன்வாழ்கின்ற தோரணத்தைக்கொண்டமாளிகையின் மிகவோங்கியுள்ள மங்கலமானவாசலை, ஏகிய-சென்று சேர்ந்த, நேமியான் தனயன் உம் - அரசகுமாரனாகிய பரதனும், தந்தை சார்வு இடம் மேவினான் - (தனது) தந்தையார் (வழக்கமாகத்) தங்கியிருக்கும் இடத்தைப் போய்சசேர்ந்தான்; (எ - று.)

பரதன் தான் கண்ட நகரின்நிலை 'தந்தையார் சௌக்கியமாக இருக்கின்றாரோ, இல்லையோ?' என்ற ஐயத்தை விளைத்ததனால், அரண்மனையைச் சார்ந்ததும் முந்துறமுன்னம் அரசன் சார்விடத்தை மேவினானென்க. நேமியான்-ஆஜ்ஞாசக்கரத்தையுடையவன்: எனவே, அரசனென்றதாயிற்று. பி-ம்:—[1]வேலையில். [2]அக்கடைத்தோரணம், அச்சுடைத்தேரணி, அச்சுடர்த்தோரணம். [3]மாதிரமங்கலவீதிகள், நீணெடுமங்கலவீதிகள், நீணெடுமங்கலமயில்கள். [4]மாத்திரம். [5]எய்தினன், எய்தலும். (அசரு)

## சo.—அரசனை அங்குக் காணாமையால் பரதன் ஐயுறவுகொள்ளுதல்.

விருப்பி [1]னெய்தினன் வெந்திறல் [2]வேந்தனை
யிருப்பு நல்லிட மெங்கணுங் கண்டிலன்
ஒருப்ப மன்றிதென் றையுற வெய்தினான்
பொருப்பு நாண [3]வுயர்ந்த [4]புயத்தினான்.

(இ - ள்.) பொருப்புஉம் நாண உயர்ந்த புயத்தினான்-மலைகளும்வெள்கும்படி மிகவோங்கிய தோள்களையுடையவனான பரதன்,—'விருப்பின் எய்தினன்-(அரசனைக் காணவேணுமென்னும்) பெருவிருப்பத்தோடு போய், வெந்திறல் வேந்தனை - மிக்கபராக்கிரமத்தையுடைய தசரதமன்னவனை, இருப்பு

நல் இடம் எங்கண் உம் கண்டிலன்-(அவன்) வழக்கமாக இருக்கின்ற சிறந்த இடத்தில் எங்கும் அம்மன்னவனைக் காணாதவனாய், இது - அரசன்காணாமலிருப்பது, அருப்பம் அன்று - அற்பமானகாரணத்தையுடையது அன்று, (அரசனே ஒருகால் இறந்திட்டானோ?),' என்று—, ஐயுறவு - சந்தேகத்தை, எய்தினான் - அடைந்தான்; (எ - று.)

அரசன்இருக்கும்இடம் எவ்விடத்திலும் அவனைக் காணாமையால், பரதன் மனத்திலே 'இங்ஙனம் அரசன் காணப்படாமைக்குக் காரணம் ஒருகால் அரசனே இறந்திட்டதனாலோ?' என்று ஓர்ஐயமுண்டாயிற் றென்பதாம். அருப்பம் = அல்பம்: வடசொல். பி-ம்:—[1]எய்திய. [2]வேந்தினை. [3]வளர்ந்த. [4]பொற்றேரினான். (அசகூ)

சக.—அப்போது தாய் அழைப்பதாக ஒருத்தி பரதனிடங் கூறுதல்.

ஆய [1]காலையி லையனை நாடித்தன்
றூய [2]கையிற் றொழுதுறு வான்றனை
கூய ளன்னை குறுகுதி [3]ரீண்டெனா
வேய்கொ டோளி [4]யொருத்தி விளம்பினாள்.

(இ-ள்.) ஆய காலையில்-அப்போது, ஐயனை நாடி - தலைவனாகிய தசரதனைத் தேடி, தன் தூய கையில் தொழுதல் உறுவான்தனை-தனது பரிசுத்தமான கையினால் தொழப்பார்ப்பவனாகிய பரதனைநோக்கி,—வேய் கொள் தோளி ஒருத்தி-மூங்கிலையொத்த தோளையுடையளான (கைகேயியின்)தாதி ஒருத்தி, 'அன்னை கூயள் - தாய் அழைத்தாள். ஈண்டு குறுகுதிர்-இங்கு வருக,' என-என்று, விளம்பினாள் - கூறினாள்; (எ - று.)

தூய கை - இராமபிரானைத்தொழுங் கையென்னலாம். கூயள் - உயர்திணைப்பெண்பா லிறந்தகாலவினைமுற்று. குறுகுதிர் - ஒருவரைக்கூறும் பன்மை. பி - ம்:—[1]காதற்றனையனைத்தந்தவத், காலையிலையனைத்தந்தவத். [2]தாயைத். [3]ஆண்டெனா, என்றொரு. [4]தொழுது. (அசஎ)

சஉ.—தன் தந்தைமுதலியோரின் சேமத்தைக் குறித்துக் கைகேயி பரதனை வினவி யறிதல்.

வந்து தாயை யடியில் வணங்கலுஞ்
சிந்தை யாரத் தழுவின ளெந்தை
யென்னை யென்னைய [1]ரேனைய [2]ரென்றனை
ளெந்த மில்குணத் தானுமதாமென்றான்.

(இ-ள்.) (பரதன்), வந்து—, தாயை-(தன்)தாயான கைகேசியை, அடியில் வணங்கலும் - பாதங்களில் வணங்கியவுடனே, (கைகேசி), சிந்தை ஆர தழுவினள்-மனமாரத் தழுவிநின்று, 'எந்தை-எனதுதந்தையும், என்னையர் - எனதுதாய்மார்களும், ஏனையர் - மற்றுமுள்ள எனது உடன்பிறந்தோர்முதல்

யோர்களும், தீது இலர் - யாதொருதீமையுமின்றிச் சேமமாக இருக்கின்றனரா?' என்றனள்-என்றுவிசாரித்தாள்; அந்தம் இல் குணத்தான் உம்-எல்லையில்லாத குணத்தையுடையவனாகிய பரதனும், அது ஆம் என்றான் - (அவர்களின் தீதில்லாத) அத்தன்மை உளதேயாமென்று மறுமொழிகூறினான்;(எ-று.)

இராமபிரானுக்குப் பரதந்திரனாகஇருக்கை யாகிற சிறந்தகுணத்தையுடையவனாதலின், பரதனை 'அந்தமில்குணத்தான்' என்றார். பி-ம்:—[1]எங்கையர். [2]என்றலும். (அசஅ)

வேறு.

சங.—'தசரதமன்னவன் எங்குஉள்ளான்?' என்று கைகேயியைப் பரதன் வினவுதல்.

> மூண்டெழு [1]காதலான் முளரித் தாடொழ
> வேண்டினெ னெய்தினெ னுள்ளம் விம்முமா
> லாண்டகை நெடுமுடி யரசர் கோமகன்
> யாண்டையான் [2]பணித்திரென் றிருகை கூப்பினான்.

(இ-ள்.) (அப்போது பரதன் கைகேயியைநோக்கி),—'மூண்டு எழு காதலான் முளரி தாள் தொழ - (என்மீது) கிளர்ந்தெழுகின்ற அன்பையுடையவனான தசரதமன்னவரது தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்குதற்கு, வேண்டினென் - (யான்) விரும்பி, எய்தினென் - வந்துள்ளேன்; உள்ளம் விம்மும் - (அம்மன்னவனைக் காண்பதற்கு என்) மனம் துரிதப்படாநிற்கும்; ஆண்தகை நெடு முடி அரசர் கோமகன் - ஆண்மைக்குணத்தையும் நீண்ட கிரீடத்தையும்பூண்ட அரசர்க்கரசனாகிய அந்தத்தசரதன், யாண்டையான் - எங்குஉள்ளான்? பணித்திர் - சொல்லுங்கள்,' என்று—, இரு கை கூப்பினான் - (தனது) இரண்டுகைகளையுங் கொண்டு அஞ்சலிசெய்தான்; (எ - று.)

தசரதனை நாடிக் கண்டிலனாதலாலும், அருப்பமன்றிது என்று ஐயுறுபவனாதலாலும், 'காதலான் முளரித்தாடொழ வேண்டினெ னெய்தினெனுள்ளம் விம்மும், கோமகன்யாண்டையான்?'என்கின்றான், பரதன். பணித்திரென்பது - ஒருவரைக்கூறும் பன்மை. அறுபதினாயிரமாண்டு மலடாக இருந்து யாகாதிகருமங்களைச் செய்து அருமையாகப்பெற்றெடுத்த பிள்ளைகளிடத்துப் பெற்றோருக்கு அன்பு விஞ்சியிருத்தல் இயல்பாதலால், தசரதனை 'மூண்டெழுகாதலான்' என்றான். பி - ம்:—[1]காதலின். [2]பணித்தியென்றங்கை. (அசகூ)

சச.—தசரதன் வானகஞ்சென்ற செய்தியைக் கைகேயி சொல்லி நீ வருந்தாதேயெனல்.

> ஆனவ னுரைசெய வழிவில் சிந்தையா
> டானவர் வலி[1]தப நிமிர்ந்த தானையத்
> தேனமர் தெரியலான் றேவர் கைதொழ
> வானக மெய்தினன் வருந்த லீயென்றாள்.

(இ - ள்.) ஆனவன் உரை செய - அந்தப்பரதன் வினவ,—அழிவு இல் சிந்தையாள் - (எதற்கும்) வருந்துதலில்லாத மனமுடைய கைகேசி, 'தானவர் வலி தப - அசுரரது வலிமை யழியும்படி, திமிர்ந்த - ஓங்கிய, தானை - சேனையையுடைய, அ தேன் அமர் தெரியலான் - வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலையையணிந்த அந்தத்தசரதன், தேவர் கைதொழ - தேவர்கள் கைகூப்பி வணங்கும்படி, வானகம் எய்தினன் - விண்ணுலக மடைந்தான்; நீ வருந்தல் - நீ வருந்தாதே,' என்றாள்—; (எ - று.)

தன்கணவன் இறந்துவிட்ட செய்தியைத் தன் பெற்றபிள்ளையிடத்துக் கூறும்போதும் சிறிதும்மனக்கவற்சியின்றிக் கூறி 'நீ வருந்தல்'எனவும் கூறிய கல்நெஞ்ச ளாதலின்,கைகேசியை, 'அழிவில் சிந்தையாள்'என்றார். மண்ணுலகினின்று தம்முலகத்து வந்தவரைக் கௌரவிப்பது வானுலகத்தார்க்கு இயற்கை யாதலின், 'தெரியலான் தேவர்கைதொழ வானகமெய்தினன்' என்றாள்: சம்பராசுரனைக் கொன்று தேவேந்திரனுக்குச சுவர்க்கநாட்டை யளித்தமைபற்றித் தேவர் கைதொழலாயின ரென்றலும் ஒன்று. தேன் - மதுவுமாம். ஆனவன்-அகரச்சுட்டடியாகப் பிறந்த பெயர்; இனி, யாவர்க்கும் நல்லனென்ற பொருளில் 'ஆனவன்' என்றுருமாம். பி-ம்:—[1]தவ, கெட. (அ௩௦)

### ௪௫.—அதுகேட்ட பரதன் பெருந்துயரமடைதல்.

எறிந்தன கடியசொல் [1]செவியு ளெய்தலு
[2]நெறிந்தலர் குஞ்சியா னெடிது வீழ்ந்தன
னறிந்தில னுயிர்த்தில னசனி யேற்றினன்
மறிந்துயர் மராமர மண்ணுற் றென்னவே.

(இ - ள்.) எறிந்து அன கடிய சொல்-(இடி) எறிந்தாற்போன்ற அந்தக் (கைகேயியின்) கொடுஞ்சொல், செவியுள் எய்தலும் - காதிற் பட்டவுடனே, நெறிந்து அலர் குஞ்சியான் - நெறிப்புக்கொண்டு பரந்த தலைமயிரையுடைய அந்தப்பரதன்,-நெடிது-வெகுநேரம்,உயர் மராமரம் அசனி ஏற்றினால் மறிந்து மண் உற்று என்ன - ஓங்கிவளர்ந்த மராமரமானது பேரிடியினால் தலைமடிந்து பூமியில் விழுந்தாற்போல, வீழ்ந்தனன் - கீழ்வீழ்ந்து, அறிந்திலன்-ஸ்மரணை தப்பிப்போய், உயிர்த்திலன் - உயிர்ப்பும் அற்றவனாய்க் கிடந்தான்; (எ - று.)

தன்தந்தையிறந்த செய்தியைக் கைகேயியினாற் கேட்டவுடனே பரதன் பிரஞ்ஞைதப்பி உயிர்ப்புமின்றி மூர்ச்சித்துக் கிடந்தா னென்பதாம். அங்ஙனங்கிடந்த நிலைக்கு, இடியேறுண்ட மராமரத்தை யுவமை கூறினர். பி-ம்:—[1]செவியின். [2]நெறிந்தன. (அ௩௧)

### ௪௬.—பரதன் தன்தாயைக் கடிந்துகூறுதல்.

வாயொளி [1]மழுங்கத்தன் மலர்ந்த தாமரை
[2]யாயலர் நயனங்க ளருவி சோர்தரத்
தீயெரி செவியில்வைத் தனைய [3]தீயசொ
னீயல துரைசெய நினைப்ப ரோ'வென்றான்.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (அப்பால் பரதன்), (சிறிது தெளிந்து), 'வாய் ஒளி மழுங்க - முகவொளி மழுக்கமடையவும், மலர்ந்த தாமரை ஆய் அலர் தன் நயனங்கள் அருவி சோர்தர - மலர்ந்த தாமரைமலர்போல் அழகிய பரந்த தனது கண்களினின்று சோகக்கண்ணீர் பெருகவும், (தன் தாயைநோக்கி), தீ எரி செவியில் வைத்து அனைய தீய சொல்-நெருப்புச் சுவாலையைக் காதினுள்ளே வைத்தாற்போன்ற கொடுஞ்சொல்லை, உரைசெய-சொல்லுதற்கு, நீ அலது - உன்னையல்லாமல், (பிறர்), நினைப்பர் ஓ - மனத்தினாலேனும் கருதுவாரோ?' என்றான் - என்று கூறினான்;—(எ - று.)

தன்கணவன் இறந்தசெய்தியை 'தேவர்கைதொழ வானகமெய்தினான் வருந்தல்நீ' என்று இங்ஙனம் மனவொடுக்கமின்றி எவருங் கூறாரே! உன் கல்நெஞ்சு இருந்தபடி என்னே!!' என்று பரதன் தன்தாயைப் பழித்தன னென்க. பி-ம்:—[1]மழுங்கி. [2]ஆய்மலர். [3]தீச்சொல்லை. [4]என்றூ. (அ௬௨)

௪௭.—பின்னும் பரதன்கொண்ட துயரம்.

எழுந்தன னேங்கின னிரங்கிப் பின்னரும்
விழுந்தனன் விம்மினன் வெய்து யிர்த்தன
னழிந்தன னரற்றின னரற்றி யின்னன
மொழிந்தனன் பின்னரு [1]முருகிற் செவ்வியான்.

(இ - ள்.) முருகின் செவ்வியான் - முருகக்கடவுளைக் காட்டிலும் அழகு வாய்ந்தவனான பரதன்,—ஏங்கினன் எழுந்தனன்-(தான்வீழ்ந்துகிடந்த தரையினின்று) ஏக்கங்கொண்டு எழுந்து, இரங்கி - மனம்வருந்தி, பின்னர்உம் விழுந்தனன் - மீண்டும் கீழ்விழுந்து, விம்மினன் - மனம்பொருமி, வெய்து உயிர்த்தனன் - வெம்மையாகப் பெருமூச்சுவிட்டு, அழிந்தனன் - மனநிலை குன்றி, அரற்றினன் - புலம்பலானான்; அரற்றி - புலம்பி, பின்னர்உம்-பின்னும், இன்னன மொழிந்தனன் - இவ்வாறான சொற்களைச் சொல்லலானான்.

எழுந்தனன் முதலியன - முற்றெச்சங்கள். முருகு - ஆகுபெயரால், முருகக்கடவுளை யுணர்த்திற்று. இன்னன என்பவற்றை மேல் ஒன்பதுகவிக ளால் விளக்குவர். பி-ம்:—[1]முருகற்செவ்வியான். (அ௬௩)

௪௮.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - பரதன் அரற்றுதலைக் கூறும்.

அறந்தனை வேரறுத் தருளைக் [1]கொன்றுயர்
சிறந்தநின் றண்ணளித் திருவைத் தேசழித்
திறந்தனை யாமெனி னிறைவ நீதியை
மறந்தனை [2]யுனக்கினி மாசு [3]மேலுண்டோ.

பத்துக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அறந்தனை வேர் அறுத்து - தருமத்தை வேரோடேயழித்து, அருளை கொன்று - தயையைச் சிதைத்து, உயர் சிறந்த நின் தண் அளி திருவை தேசு அழித்து - உயர்ந்துசிறந்த நின்னுடைய குளிர்ந்த அருளாகிய

செல்வத்தை ஒளிகெடுத்து, இறந்தனை - மாண்டொழிந்தாய், எனில் - என்ருல், இறைவ - அரசனே! நீதியை மறந்தனை - நீதியை மறந்தாயாவாய்: உனக்கு—, இதின்மேல்-இதனைக்காட்டிலும் மேலாக,மாசு-குற்றம்,உண்டுஓ-உளதோ? (எ - று.)—ஆம் - அசை.

நீ இப்போது இறந்ததனுல் உலகத்தில் தருமத்தைப் பாதுகாப்பாரின்மையால் தருமம் வேர்பறிந்ததே! அருள்கொண்டு காவாமல் இறந்தொழிந்ததனுல் பாதுகாப்பாரின்றிச் சனங்கள் தத்தளிக்கின்றனரே: இவ்வண்ணம் உலகத்து நீதிகெட நீ இறந்தொழிந்தாயே; இங்ஙனம் நீதிகெட நீ இறந்தொழிந்ததனுல் உனதுதேசுக்கு இழுக்கன்றே! என்று பரதன் அரற்றினனென்க. தொடர்புபற்ருதேவருவது - அருளென்றும், தொடர்புபற்றி வருவது அளியென்றும் வேறுபாடு காண்க. "அருட்செல்வம்" என்ருற்போல,'அளித்திரு' என்ருர். தண்ணளித்திரு - இராமனென்பாரு முளர். பரதன் அரற்றுதலில் தசரதமன்னவனைப் பழித்தாற்போலத் தோன்றினும், அவனது ஆட்சியில் அறம்முதலியன நிலைத்திருந்தன வென்பது பெறப்படுதல் காண்க. தேசு - தேஜஸ். பி - ம்:—[1]கொன்றனை, கொன்றுயிர், கொன்றயற். [2]உனக்கினி. [3]வேறுண்டோ, வேண்டுமோ. (அ௫௪)

௪௯. சினக்குறும் பெறிந்தெழு காமத் தீயவித்
[1]தினக்குறும் பியாவையு மெற்றி யாவர்க்கு
மனக்[2]குறு நெறி[3]செலும் வள்ளி யோய்[4]மறந்
[5]துனக்குறு [6]நெறிசெல [7]லொ[8]ழுக்கின் பாலதோ.

(இ - ள்.) சினம் குறும்பு எறிந்து - வெகுளியாகிய குறும்பைத் தள்ளி, எழு காமம் தீ அவித்து - (மனத்தில்) தோன்றுகின்ற காமமாகிய தீயை யவியச்செய்து, இனம் குறும்பு யாவைஉம் எற்றி-தொகுதியாயுள்ள குறும்பாகிய உலோபம்முதலியவற்றையெல்லாம் அழித்துப்போட்டு,யாவர்க்குஉம் மனக்கு உறு நெறி செலும் வள்ளியோய்-எல்லாருடைய மனத்துக்கும் ஏற்ற வழியிலே நடக்கும் உதாரகுணமுடையோனே!மறந்து-(பிறர்மனத்துக்குஉற்ற நெறியிற் செல்வதை)மறந்திட்டு,உனக்கு உறு நெறி செலல்-உனக்குஏற்றவழியில் நடப்பது, ஒழுக்கின் பாலது ஓ - நல்லொழுக்கத்திற் சேர்ந்ததாகுமோ? (எ - று.)

நீ வானுலகத்திற்குச் சென்றது, பிறர்மனத்துக்கு ஏலாத செயல்: பிறர் மனத்தின்படியே செல்பவனுகிய நீ பிறர்மனத்தையனுசரித்து நடப்பதை விட்டு உன்மனத்திற்கு இசைந்தவண்ணம் வானுலகத்திற்குச் சென்றனையே! இது, நீ மேற்கொண்ட ஒழுக்கத்துக்கு மாருகாதோ? என்று பரதன் அரற்றினனென்க. இதனுல், தசரதமன்னவன் சனங்களின் மனத்தின்படி அரசுபுரியும் நல்லொழுக்கமுடையானென்பது,பெறப்படும்.அரிஷட்வர்க்கங்களுள் காமக்குரோதங்களைத் தவிர்ந்தமையை முதலடியிற் கூறினமையால், 'இனக்குறும்பியாவையுமெற்றி' என்றது - மற்றை லோபம் மோஹம் மதம் மாற்சரியம் என்பவற்றைத் தவிர்ந்தமையை விளக்கும்: முதலடியிற் காமவெகுளிகளை விலக்கியமையைக் கூறினமையால், இனக்குறும்பியாவையும் என்றது-மயக்

கத்தினைக் காட்டுமென்பாருமுளர். பி-ம்:—[1]எனக்குறையுரிமையுமெற்றி. இனக்குறும்புலோபையுமாற்றி. [2]குறி. [3]சொலும். [4]மனத்து, மனக். [5]தனக்கு. [6]கதி. [7]தவத்தின்பாலதோ. (அருரு)

ருo. [1]முதலவன் முதலிய முந்தை யோர்பழங்
கதையையும் புதுக்கிய [2]தலைவன் கண்ணுடை
நுதலவன் [3]சிலைவிலி னோன்மை நூறிய
புதல்வனை யெங்ஙனம் பிரிந்து [4]போயினாய்.

(இ-ள்.) முதலவன் முதலிய முந்தையோர்-(குலத்திற்கு) முதல்வனாகிய ஆதித்தன்முதலிய இக்குலத்துப் பூர்வபுருஷரின், பழங் கதையை உம் - பழமையான வீரசரிதத்தையும், புதுக்கிய - (உன் வீரச்செயலாற்) புதுப்பித்துக் காட்டிய, தலைவன்-தலைவனே! கண் உடை நுதலவன் - கண்ணைக்கொண்ட நெற்றியையுடையவனாகிய சிவபிரானது, சிலை விலின் - மேருமலையினமிசமான வில்லின், நோன்மை-வலிமையை, நூறிய - அழித்திட்ட [மகாபராக்கிரமசாலியான], புதல்வனை-இராமபிரானை, எங்ஙனம் பிரிந்து போயினாய் - எவ்வண்ணம் பிரிந்துசென்றிட்டாய்? (எ - று.)

'இராமபிரானைப் பிரிந்து ஒரு நொடிப்போதும் தரித்திருக்கமாட்டாயே. அப்படிப்பட்ட நீ அப்புதல்வனைப் பிரிந்து எங்ஙனம் வானுலகஞ் சென்றிட்டாய்!' என்று பரதன் அரற்றுதலானெனென்க. 'தசரதனது பூர்வீகர் மகா பராக்கிரமசாலிகள்' என்று முன்னையோரது வீரசரிதையை உலகத்தவர் சொல்லிக்கொள்வதனோடு நில்லாமல் அம்முன்னையோர்கள் செய்தாற்போன்ற வீரச்செயலைக் கண்கூடாகக் காணும்படி தான் செய்துகாட்டியவன் தசரதனென்பது, 'முதல்வன்முதலிய முந்தையோர் பழங்கதையைப் புதுக்கிய தலைவன்' என்பதன் பொருள். தலைவனாகிய புதல்வனை என்று கூட்டி உரைப்பாருமுளர். சிலைவில் - ஒலிக்கின்ற வில்லுமாம்: இனி, சிலைவிலின் - சிலையென்னும்மரத்தினாற் செய்யப்பெற்ற வில்லின்என்று உரைத்தலுமாம். சிலையென்ற மரத்தினால் வில் செய்யப்படுமென்பதை, "அரிமானிடித்தன்ன வஞ்சிலைவில்" என்றுவரூஉங் கலித்தொகையடிக்கு உரைகூறிய நச்சினார்க்கினியர் 'அழகியசிலைமரத்தாற்செய்த வில்லை' என்றுளஎழுதியிருப்பதனாலும் தெளியலாம். முதல்வன் - வைவஸ்வதமனுவென்றும், இட்சுவாகுவென்றும், இரகுவென்றும் கூறுதலுமுண்டு. தலைவன்-அண்மைவிளி. பி-ம்:—[1]முதல்வனை. [2]தலைவ. [3]மலை. [4]போயினான். (அருசு)

ருக. செவ்வழி யுருட்டிய திகிரி மன்னவ
வெவ்வழி [1]மரபினு மிரவ லாளர்[2]மற்
றிவ்வழி யுலகினி [3]லின்மை நண்பினோ
ரவ்வழி [4]யுலகினு ளுளர்கொ லோவய்யா.

(இ-ள்.) அய்யா-ஐயனே! செவ் வழி திகிரி உருட்டிய மன்னவ-நேர்மையான [நீதிதவறாத] வகையினால் ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்திய மன்னவனே! இ வழி உலகினில்-இந்தப் பூலோகத்தில், எ வழி மரபின்உம் - எந்த இடத்திலுள்ளவமிசத்திலுள்ளவரும், இரவலாளர்-(உன்னிடத்து) இரப்பாளராயிருந்தவரே: மற்று இன்மை-வேறு இல்லாமையால், அ வழி உலகினுள் -

அவ்விடத்துள்ள உலகத்தில் [சுவர்க்கலோகத்தில்], நண்பினோர் உளர்கொல் ஓ - (இரவலராகவாகாமல் உன்னோடு) நட்புக்கொள்ளஉரியர் இருக்கின்றன ரென்று கருதிச்சென்றாயோ? (எ - று.)

"மொய்யார்கலிசூழ் முதுபாரின் முகந்துதானக், கையார் புனலானனே யாதனகையுமில்லை" என்றபடி இவ்வுலகத்திலுள்ளார் யாவரும் உன்னிடத்து இரப்பாளராய் நண்பினராகப் பழகுவதற்கு ஏற்றவரல்லாமற் போயினமை பற்றி, சுவர்க்கலோகத்தில் நண்பினராகப் பழகுவதற்கு உரியார் இருக்கின் றாரென்றுகருதி நீ இவ்வுலகத்தைநீத்து மேலுலகத்துச் சென்றனையோ? என்றவாறு. இந்தவினாவில், அந்தத் துறக்கத்தவரும் சம்பராசுரனால் தமது இராச்சியம் பறியுண்டு நின்னிடத்து இரப்பாளராய் இழந்த இராச்சியத்தைப் பெற்றுச்சென்றவ ராதலால், அவரும் உன்னிடத்து இரப்பாளரேயன்றி ஏற்ற நண்பினராகப்பாவித்தற்குஉரியாரல்ல ரென்பது, பெறப்படும். இவ் வுலகில் யாவரும் உன்னிடத்துச் செல்வம்பெற்றுச் செல்வராய்விட்டதனால் மற்றும் இரப்பாளராகிய நண்பர் இங்குக்கிடையாமையால் அவ்வகைநண்பர் வானுலகிற் கிடைப்பாரென்றுகருதி அங்குச் சென்றாயோ என இச்செய்யு ளுக்குப் பொருள்கூறினுமாம்: இப்பொருளில், கொடையாளிகட்கு இரப்பா ளரே நண்பராதலால், அவ்விரப்பாளரை 'நண்பினோர்' என்றதென்க. பி-ம்:-- [1]மருங்கினும், மன்னரும். [2]தாம், உம், ஆம். [3]இனிய. [4]உலகினும். சிலபிரதிக ளில் இச்செய்யுளுக்குப்பின் "இயங்கெழு" (ருச) "எழுயர்" (ருரு) என்ற பாடல்களும் அவற்றின்பின் "பற்பகல்" ருஉ முதலியனவும் உள்ளன. ()

ருஉ. பற்பக னிழற்றுநின் கவிகை [1]பாய்நிழ
னிற்பன பல்லுயி ருணங்க [2]நீநெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ
மற்பக மலர்ந்ததோண் மன்னர் மன்னனே.

(இ-ள்.) மல் பக மலர்ந்த தோள் மன்னர் மன்னனே - மல் தொழில் வெளிப்படும்படி அகன்றுள்ள தோளையுடைய அரசர்க்கரசனே! பல் பகல் நிழற்றும் நின் கவிகை பாய் நிழல் - பலநாளாக நிழலைச்செய்யும் நினது வெண்கொற்றக் குடையினின்று பரவிவருகின்ற நிழலில், நிற்பன-தங்கியுள் ளனவாகிய, பல் உயிர-பலவகைப்பட்ட பிராணிகளும், உணங்க-(தாம் தங்கி யிருந்த குடைநிழல் போய்விட்டதனால்) வாட்டமடைந்து நிற்க, நீ—, நெடு கற்பகம் நறு நிழல் காதலித்தி ஓ-மிகப்பரவிய கற்பகமரத்தின் நறுமணமுள்ள நிழலிடத்திற் றங்கியிருக்க விரும்பினையோ? (எ - று.)

நீ ஆண்ட சனஙகள் தாம் தங்கியிருந்த உனது வெண்கொற்றக் குடை நிழல்அற்றமையால்வாடிநிற்க,நீமாத்திரம் கற்பகநிழலில் தங்கியிருக்கவிரும்பி விண்ணுலகஞ்சென்றாயோ? இங்ஙனம் தன்னாற் காக்கப்படவேண்டியவர்களை க்கைவிட்டிட்டுத் தான் இன்பத்தைநாடுவது மன்னவர்க்குமுறையாகுமோ?

என்று அரற்றியவாறு. நிழல்-நிழலான இடம். கற்பகநிழலில் மணப்பது இயல்பேயாதலால், 'நறுநிழல்' என்றார். பற்பகலென்றது - அறுபதினாயிரம் வருடத்தை. உயிர் - பிராணிகட்கு, இலக்கணை. 'பல்லுயிர்' என்றவிடத்து, முற்றும்மை விகாரத்தால் தொக்கது. பி-ம்:—[1]பார்நிழல், பானிழல். [2]நீணெடுங்.

௫௫. இம்பர்நின் றேகினை யிருக்குஞ் சார்பிழந்
தும்பர்வந் துன்கழ [1]லொதுங்கி னார்கொலாஞ்
சம்பர [2]னனையவத் தானைத் தானவ
ரம்பரத் தின்னமு முளர் [3]கொ லாமையா.

(இ - ள்.) ஐயா - ஐயனே! சம்பரன் அனைய அ தானை தானவர்-சம்பராசுரனைப்போன்ற அப்படிப்பட்ட சேனையையுடைய அசுரர், அம்பரத்து-ஆகாயத்திலே, இன்னம்உம்—, உளர்கொல்-இருக்கின்றனரோ?(அங்ஙனம் இருப்பதுபற்றி), உம்பர் - தேவர்கள், இருக்கும் - (தாம்) வசிக்கின்ற, சார்பு-இருப்பிடத்தை, இழந்து வந்து—, உன் கழல் - உனதுபாதங்களில், ஒதுங்கினார் கொல் - சரணமாகவடைந்தாரோ? (அதுகுறித்துத் தான்), இம்பர் நின்று - இவ்வுலகத்திலிருந்து, ஏகினை - சென்றாயோ? (எ - று.)—ஆம் - அசைகள்.

ஒருகால் இன்னம்சம்பராசுரன்போன்ற கொடியஅசுராகள் தேவர்களின் இருப்பிடத்தைக் கவர்ந்துகொள்ள, இருக்கையிழந்த அத்தேவர்கள் முன்னைத் தம்பகைவனையொழித்த காரணம்பற்றி இப்போதும் உன்னைச் சரணமாக அடைந்ததனால் அவ்வசுரர்களையொழித்துத் தேவர்களுக்கு வாழுமிடத்தை மீட்டுத்தருதற்காக விண்ணுலகஞ் சென்றாயோ? என்று பரதன் அரற்றினனென்க. பி - ம்:—[1]எய்தினார்கொலாம், எய்தினார்களோ. [2]அனையவர். [3]கொலோ.

(அ௫௯)

௫௬. [1]இயங்கெழு [2]தானைய ரிறுத்த மாத்திறை
யுயங்கலின் மறையவர்க் குதவி யும்பரி
னயங்கெழு வேள்வியோ [3]டரசர்க் கோதிய
வயங்கெரி [4]வளர்த்தனை [5]வைக வல்லையோ.

(இ - ள்.) இயம் கெழு தானையர் - வாச்சியங்கள்முழங்குகின்ற சேனையைக் கொண்டவரான மாற்றரசர்கள், (தோற்று), இறுத்த - செலுத்திய, மா திறை - மிக்க திறைப்பொருளை, உயங்கல் இல் மறையவர்க்கு உதவி - வருந்துதலில்லாத வேதம்வல்ல அந்தணாளர்க்குக்கொடுத்து, உம்பரின்-தேவர்களின்பொருட்டாகச்செய்யப்படுகின்ற, அரசர்க்கு ஓதிய - அரசர்கள் நாடோறும் அநுஷ்டிக்கவேண்டுமென்று நூல்களிற்கூறியுள்ள, அயம் கெழு வேள்வியோடு - குதிரையைக்கொண்டு செய்யப்படுகின்ற விளங்குகின்ற யாகத்துடனே [அசுவமேதயாகத்துடனே], வயங்கு எரி-விளங்குகின்ற காருகபத்தியாக்கினியையும், வளர்த்தனை-ஓம்பிவந்தாய்; (அப்படிப்பட்ட நீ இப்போது), வைக வல்லை ஓ - (அவ்வாறு அக்கினிகளை யோம்பாது வாளா விண்ணுலகத்துத்) தங்கவல்லாயோ? (எ - று.)

அந்தணர்க்கு உதவாமலும் வேள்விகளையும் நித்தியாக்கினியையும் ஓம்பாமலும் விண்ணுலகில் நீ வாளாதங்கியிருப்பது, உனது சீலத்துக்கு ஏற்றதன்றே! என்று புலம்பியவாறு. ஹயம் = அயம்: குதிரை. பி-ம்:—[1]இயங்கெழுந். [2]தானையவ்விறுத்தமாத்திறை, தானையர்க்கிறைவநீணிதி, தானையரிறுத்தமாத்திரை. [3]அமரர்க்காக்கிய. [4]வளர்க்கலை, வளர்த்திலை. [5]மறக்க, மறத்தல். (அசுO)

ருரு. ஏழுயர் மதக்களிற் றிறைவ வேகினை
[1]வாழிய கரியவன் வறியன் கையெனப்
பாழியம் புயத்துநின் பணியி னீங்கலா
வாழியை யினியவற் களிக்க வெண்ணியோ.

(இ-ள்.) ஏழ் உயர் மதம் களிறு இறைவ-ஏழுமுழம் உயர்ந்து மதம்பெருகும்ஆண்யானையையுடைய தலைவனே! 'கரியவன்-இராமபிரான், கை-திருக்கை, வறியன் - (தான் தாங்கவேண்டிய ஆழியையேந்தாமல்) வெறுங்கையனாயிருக்கின்றான்,' என - என்றகாரணத்தால், பாழி அம் புயத்து - வலிய அழகிய (உன்) கையிலிருந்து, நின் பணியின் நீங்கலா ஆழியை - உனது கட்டளையினின்று வழுவாத சக்கரத்தை, இனி-இனிமேல், அவற்கு-அந்தக் கரியவனாகிய இராமனுக்கு, அளிக்க எண்ணி ஓ - கொடுக்கஎண்ணியதனால் தானோ, ஏகினை-(இவ்வுலகததைவிட்டுச்) சென்றாய்! (எ-று.)

இராமன் தான் ஏந்தவேண்டிய ஆழியை ஏந்தாது வெறுங்கையனாயிருத்தல்கருதி, இனி'இவன் ஆழியை ஏந்துக'என்று கருதியதனால் விண்ணுலகஞ் சென்றாயோ?என்று அரற்றினன் பரத னென்க. தசரதன் விண்ணுலகம் புக்கால் அவனது ஆஜ்ஞாசக்கரம் இராமனைச் சேருமென்ற கருத்துடையனாதலால், 'இராமன் ஆழியின்றி வெறுங்கையனாயிருத்தல் தகாதென்று கருதித் தான் நீ விண்ணுலகு சென்றிட்டாயோ?' என்று தசரதன் விணபுக்கதற்குப் பரதன் தற்குறிப்பாற் காரணங்கற்பித்தான். இனி இப்பாடலுக்கு, கையென் பதனை கரியவன் என்பதனோடுங் கூட்டி-கரியவனுடைய கையானது வறியவன் கைபோல (உன்னிடத்துநின்று பெறும்படி) ஆழியை இனி அவற்கு அளிக்கஎண்ணி ஏகினையோ? என்று உரைப்பாருமுளர். வாழிய - அசை: வாழ்ச்சியுடைய எனினுமாம். ஏழுமுழம் உயர்ந்திருப்பது அரசுவாவின் இலக்கணம்: இதனை "காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும், வாலுறுப்போடேழுமா நிலந்தோய்வதும், பாலுஞ்சங்கும்போலுங் காலுகிர், காலினுந்தன் றனிக் கையினுமெய்யினும், வாலினு மருப்பினுங் கோறல்வல்லதுவா, யேழ் முழமுயர்ந் தொன்பான்முழ நீண்டு,பதின்மூன்று முழஞ் சுற்றுடைத்தாகித், தீயுமிழ் சிறுகண்ணுஞ் செம்புகருமுடைத்தாய், முன்ன் புயர்ந்துபின்ன் பணித்தாய, தியானை யரசுவாவா குமென்ப" என்பதனாலு முணர்க. பி-ம்:—[1]வாழியாய். (அசுக)

ருசு. [1]பற்றிலை தவத்தினிற் பயந்த மைந்தற்கு
முற்றுல [2]களித்தது முறையி னெய்திய
[3]கொற்றநன் [4]முடிமணக் கோலங் காணவும்
பெற்றிலை போலுநின் பெரிய கண்களால்.

(இ - ள்.) தவத்தினில் பற்று இலை - தவத்திற்பற்றில்லாமையினுலல்லவா, பயந்த மைந்தற்கு - (தவத்தின்பயனுகப்) பெற்ற ஸ்ரீராமனுக்கு, நீ—, உலகு முற்று அளித்தது - உலகம்முழுவதையுந் தந்ததனுல், முறையின் எய்திய - (வைவச்சுவதமனுமுதல்) தலைமுறைதலைமுறையாக அணிந்துவந்த, கொற்ற நல் முடி - வெற்றிபொருந்திய சிறந்தகிரீடத்தைச் சூடுகின்ற, மணம் கோலம் - பட்டாபிஷேகக் கோலத்தை, நின் பெரிய கண்களால் - உனது பரந்த கண்களைக்கொண்டு, காண உம் - தரிசிக்கும்பாக்கியத்தையடையவும், பெற்றிலைபோலும் - அடைந்தாயில்லைபோலும்; (எ - று.)

'தவத்திற் பற்றுள்ளதாயின் நீ அறுபதினுயிரமாண்டு உயிர்த்திருந்தும், அரிதில் நோற்றுப்பெற்ற ஸ்ரீராமனுகிய புதல்வனுக்கு, நீ ஆண்ட இராச்சியத்தைத் தந்து முடிசூட்டுதலைக் காணுமலும் செல்வாயோ?' என்று இரங்கிக் கூறினன் பரதனென்க. [1]பற்றுறு என்ற பாடத்தைக்கொள்ளின், விருப்பத்தோடுசெய்த தவத்தின்பயனுகப்பெற்ற மைந்தற்கு முடிசூட்டுதலாகிய ஓர் நன்மையையெய்துவிக்காமற் சுவர்க்கஞ் செல்லக்கடவாயோ? என்று பொருள் காண்க. பி - ம்:—[2]அளித்துநீ. [3]கொற்றவன். [4]மணிமுடிக்.　　　　(அகூஉ)

ருஎ.—அரற்றிப்பின்பு பரதன் தன்னைத்தானே தேற்றிக்கொள்ளுதல்.

[1]ஆற்றல னின்னன பன்னி யாவலித்
தூற்றுறு கண்ணின னுருகு வான்றனைத்
[2]தேற்றின னொருவகைச் சிறிது [3]தேறிய
[4]கூற்றுறழ் வரிசிலைக் குரிசில் கூறுவான்.

(இ - ள்.) ஆற்றலன் - (தந்தையிறந்த துக்கத்தைப்) பொறுக்கமாட்டாதவனுய், இன்னன பன்னி - இவ்வாருனவார்த்தைகளைச் சொல்லி, ஆவலித்து - இரங்கி, ஊற்று உறு கண்ணினன் உருகுவான் - ஊற்றுப்பொருந்தியகண்களையுடையவனுய்க் கரையுந்தன்மையனுயிருந்தவனுன பரதன்,— தனை ஒருவகை தேற்றினன் - தன்னை(த் தானே)ஒருவகையாகத் தேறுதல்செய்துகொண்டான்; சிறிது தேறிய - சிறிதுதேறுதலடைந்த, கூற்று உறழ் வரி சிலை குரிசில் - யமனையொத்த கட்டமைந்தவில்லையுடைய ஆண்மக்களிற் சிறந்த அந்தப்பரதன், கூறுவான் - (பின்னும்) சொல்வானுனன்; (எ-று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க.

பரதன் இங்ஙனம்அரற்றியது-தந்தையையிழந்த சோகத்தை யாற்ருமையாலாகுமென்பார், 'ஆற்றலனின்னனபன்னி' என்ருர். இன்னனபன்னியென்றது - "அறந்தனைவேரறுத்து" (சஅ) என்பதுமுதல் "பற்றிலைதவத்தினில்" (ருகூ) என்னும் பாடலீருகக் கூறியவற்றைக் காட்டும். ஆவலித்து - அவலித்து என்பதன் நீட்டல். அவலித்து-அவலமென்றபெயர்ச்சொல்லினடியாகப் பிறந்த வினையெச்சம். பி - ம்:—[1]ஆற்றிலன், ஆற்றலின். [2]தேற்றினனன்னைதான், தேற்றினரொருவகை. [3]தேறியக். [4]கூற்றுறு,கூற்றுற.(அகூ௩)

## ரு௮.—பரதன் 'இராமனை வணங்கினாலன்றி என்மனத்துயர் போகாது' என்றல்.

[1]எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனு
மந்தமில் பெருங்குணத் திராம னாதலால்
வந்தனை யவன்கழல் வைத்த போதலாற்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாதென்றான்.

(இ - ள்.) 'எந்தை உம் - என்தந்தையும், யாய் உம் - என்தாயும், எம்பிரான் உம் - எமதுகடவுளும், எம்முன் உம் - எமதுஅண்ணனும், அந்தம் இல் பெரு குணத்து இராமன் - எல்லையில்லாதமிக்ககுணத்தையுடைய இராமனேயாவன்; ஆதலால்—, அவன் கழல் வந்தனை வைத்த போது அலால் - அவ்விராமபிரானுடைய திருவடியின்கண் வணங்குவதைச்செய்தபோது அல்லாமல், சிந்தை - (என்) மனத்தில் (இப்போது) உள்ள, வெம் கொடு துயர் - மிகக்கொடிய துன்பமானது, தீர்கலாது - நீங்காது,' என்றான் - என்று கூறினான், (பரதன்); (எ - று.)

தந்தை விண்ணுலகஞ்சென்றானென்பதைக் கேள்வியுற்றதனால், என் மனத்திடத்துத் தோன்றிய கொடுந்துயர், எனக்குத் தந்தைமுதலியயாவுமாக நிற்கும் இராமபிரானைக் கண்டு வணங்கினால்தான் தீரு மென்று பரதன் கூறினனென்க. வெங்கொடு - ஒருபொருட்பன்மொழி. "தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லான், மனக்கவலைமாற்றலரிது" என்ற குறளின்கருத்து இந்தப்பாசுரத்தில் வந்திருத்தல் காண்க. இப்பிறவியில்தோன்றிய பெருந்துயர்க்கடலைக் கடப்பதற்கு இறைவனடியே புணையாகு மென்க. பெற்றோர்சொல்கடவாமை, அடைந்தாரையாதரித்தல், எளியோரிடத்து இரக்கம், பெரியாரைத்துணைக்கோடல், வாய்மை, பொறுமை முதலிய பெருங்குணங்கள்யாவும் நிரம்பியிருத்தல்பற்றி 'அந்தமில்பெருங்குணத்திராமன்' என்றான். பி-ம்:—[1]எந்தையுமியாவும். (௮௬௭)

## ரு௯.— இராமபிரான் கானகஞ்சென்ற செய்தியைப் பரதனுக்குக் கைகேயி தெரிவித்தல்.

அவ்வுரை கேட்டலு மசனி [1]யேறென
வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவா
டெவ்வடு சிலையினாய் தேவி தம்பியென்
[2]றிவ்விரு வோரொடுங் [3]கானத் தானென்றாள்.

(இ-ள்.) அ உரை கேட்டலும் - (பரதன் கூறிய) அச்சொல்லைக் கேட்டவுடனே,அசனி ஏறு என வெவ் உரை வல்லவள்-பேரிடி(தாக்கினாற்)போலக் கடுஞ்சொல்கூறுவதில் வல்லவளான கைகேயி,—மீட்டுஉம் கூறுவாள்-மறுபடியும் கூறத்தொடங்கினவளாய்,—'தெவ் அடு சிலையினாய்-பகைவரைக்கொல்ல

வல்ல விற்படையையுடையவனே! தேவி தம்பி என்ற இ இருவோரொடு உம்-மனைவி தம்பி என்ற இந்த இருவருடன் கூட, கானத்தான் - (இராமன்) காட்டிலுள்ளான்,' என்றாள்—; (எ - று.)

அவ்வுரைஎன்றது-'வந்தனையவன்கழல்வைத்தபோதலாற் சிந்தைவெங் கொடுந்துயர்தீர்கலாது'என்று பரத னுரைத்ததை. "தானவர்வலிதபநிமிர்ந்த தானையத், தேனமர்தெரியலான் தேவர்கைதொழ, வானகமெய்தினன் வருந் தனீ"என்று தன்கணவன் இறந்தசெய்தியையும்,'தேவிதம்பியென், றிவ்விரு வோரொடுங்கானத்தான்' என்று இராமன் சீதாலட்சுமணருடனே வனம் புகுந்தசெய்தியையும் வாய்கூசாமல் மனத்திட்பத்துடனே தன்னியல்புட னிருந்து கூறுபவ ளாதலின், கைகேயியை 'அசனியேறெனை வெவ்வுரை வல்லவள்' என்றார். பி-ம்:—[1]ஏறன்ன. [2]இவ்வவரொடுநெடுங், இவ்வவரோ டும்போய்க், இவ்விருவரோடுவெங். [3]கானத்தேகினன், கானத்தெய்தினன்.

கூ०.—பரதன், இன்னும் என்னதுன்பச்செய்தியைக் கேட்கநேருமோ?' என்று தன்னுள் அஞ்சுதல்.

வனத்தின னென்றவ ளிசைத்த மாற்றத்தை
நினைத்தன னிருந்தன னெருப்புண் டானென
வினைத்திறம் யாதினி [1]விளைப்ப தின்னமு
மெனைத்துள கேட்பன துன்பம் [2]யானென்றான்.

(இ-ள்.) 'வனத்தினன்-(இராமன்) காட்டிலுள்ளான்,' என்று—,அவள் இசைத்த-அந்தக்கைகேசி சொன்ன, மாற்றத்தை-சொல்லை, நினைத்தனன் - (மனத்தினால்) எண்ணியெண்ணிப்பார்த்து, நெருப்புஉண்டான் என - அக்கி னியை யுட்கொண்டவன்போல, இருந்தனன் - மிக்க பெருந்துன்பங்கொண் டிருந்து, 'வினை திறம்-(எனது) தீவினையின் கூறுபாடு, இனி - இனியும், விளைப்பது - உண்டாக்குந்தீமை, யாது - எதுவோ? யான் இன்னம்உம் கேட்பன துன்பம் - நான் இன்னும் கேட்கவேண்டுவனவாயுள்ள துன்பத் தைவிளைக்குஞ் செய்திகள், எனைத்து உள - எத்துணையுள்ளனவோ?' என் றான்-என்று அஞ்சிக்கூறினான், (பரதன்); (எ - று.)

நகரத்தின் அலங்கோலநிலையைக் கண்டு சங்கைகொண்டுவந்துள்ள பர தன், தந்தையிறந்தமை இராமபிரான்காட்டுக்குப்போந்தமை என்ற பெருந் துயரத்தை விளைக்கும் இரண்டு செய்திகளைக் கேட்டதனால், 'பின்னும் என் னென்ன கேட்குமாறு கொடிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளனவோ?' என்று அஞ்சினா னென்க. [1]விளைவது என்ற பாடத்துக்கு, இனி விளைவது - இனி விளையப்போவதாகிய, வினைத்திறம்-தீவினைப்பயன், யாது-எதுவோ?என்று பொருள் காண்க. யாதினி விளைவது என்றதனால்—'இனி என்னதுன்பம் நேருமோ?' என்றும்,இன்னமும் எனைத்துள கேட்பன துன்பம் என்றதனால்- 'ஏற்கவே நிகழ்ந்து இதுவரை எனதுசெவிப்படாமையுள்ள துன்பச்செய்தி என்னென்ன விருக்குமோ?' என்றும் சங்கித்தவாறு. பி-ம்:—[2]யாது, யாம்.

சுக.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: இராமன் காடுசெல்லக்காரணம் யாது? அது தந்தை யிறப்பதற்கு முன்னே பின்னே? என்று பரதன் வினவுதல்.

[1]ஏங்கினன் விம்மலோ டிருந்த வேந்தலப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது
தீங்கிழைத் ததனினோ [2]தெய்வஞ் சீறியோ
வோங்கிய விதியினோ யாதி னோ[3]வெனா.

(இ - ள்.) ஏங்கினன்-ஏக்கங்கொண்டவனாய், விம்மலோடு இருந்த-மன வருத்தத்தோடிருந்த, ஏந்தல்-ஆண்களிற்சிறந்தவனாகிய பரதன், 'அ பூ கழல் கால்அவன் வனத்து போயது - வீரக்கழலையணிந்த தாமரைமலர்போன்ற கால்களையுடைய அந்த இராமபிரான் காட்டிற்குச் சென்றது,—தீங்கு இழைத்ததனின் ஓ - தீசெயலைச் செய்ததினாலோ? தெய்வம் சீறி ஓ - தெய்வங் கோபித்ததனாலோ? ஓங்கிய விதியின் ஓ-(யாவற்றினும்) மேம்பட்ட ஊழ்வினை ப்பயத்தினாலோ? யாதின் ஓ-வேறு எந்தக்காரணத்தினாலோ?' எனா - என்று வினவி,— (எ - று.)—'என்றான்' என அடுத்த கவியோடு முடியும்.

"கானத்தான்" என்ற கடுஞ்சொல்லைக் கேட்டதனால் துயருழந்த பரதன், இதனால், இராமன் காட்டிற்குச்சென்ற காரணத்தை வினவுகின்றனனென்க. தீத்தொழில் புரிந்த அரசகுமாரரைக் கானகத்துக்குஓட்டுதல் சூரியகுலத்தாரின் செயலாவதை அசமஞ்சனென்ற குமாரனைக் காட்டிற்கு ஓட்டிய இடத்துங் காணலாம். இங்குத்தீங்குஎன்றது - உலகத்தவரை இமிசித்தலும், குருக்களையிகழ்தல் போல்வனவும். தெய்வஞ்சீறுதலாவது-நல்ல நிலையிலிருக்கத் தெய்வக்குற்றத்தால் மனத்தில் மாறுபாட்டுந்தோன்றிப் பித்துக்கொள்ளுத லென்னலாம். ஓங்கியவிதி என்றது - செருக்குக்கொண்டு அடங்காத்தன்மையாற் பிறரோடு பொருது தோற்று ஓடச் செய்யுந் தீவினை. மேல் அறுபத்துமூன்றாங்கவியில் "குருக்களையிகழ்தலினன்று" என்பது முதலாக இம்மூன்றுமே கைகேயி மறுத்து விவரித்தலிலும், "குற்றமொன்றில்லையேல்"(சுச)என்று பரதன் அநுவதித்துக் கூறுதலிலும் காணத்தக்கன.

பி-ம்:—[1]ஏஙகின. [2]தேவர்மாயமோ, தெய்வஞ்சீறிலோ. [3]என்றான். (அசுஎ)

சுஉ. தீயன விராமனே செய்யு மேலவை
தாய்செய லல்லவோ [1]தலத்து ளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க பின்னரோ
வாயதன் முன்னரோ [2]வருளு வீரென்றான்.

(இ - ள்.) தீயன - தீயசெயல்களை, இராமன் ஏ செய்யும் ஏல் - இராமபிரானே செய்வானேயானால், அவை - அச்செயல்கள், தலத்துஉள்ளோர்க்கு எலாம் - இவ்வுலகத்தவர்க்கெல்லாம், தாய் செயல் அல்ல ஓ - (குழந்தை

யைக் கைகால்களை யமுக்கிவாயிற்பாலெடையைவைத்து எண்ணெய்போன்ற மருந்துகளைப் புகட்டுகின்ற)தாயின்செய்கைபோல்நன்மையைத் தருவனவாகு மல்லவோ? போயது-(இராமபிரான் வனத்துக்கு) ஏகினது, தாதை - தந்தையாரான தசரதசக்கரவர்த்தி, விண் புக்க பின்னர் ஓ - சுவர்க்கஞ்சேர்ந்த பின்போ? ஆயதன் முன்னர் ஓ - அந்தச்செயல் நிகழ்வதற்கு முன்னமோ? அருளுவீர் - அருளிச்செய்வீர், என்றான்—; (எ - று.)

தீங்கிழைத்ததனிறோ என்று இராமபிரான்திறத்துச் சங்கிப்பதும் தவறாகு மெனக் கருதிய பரதன், இராமபிரானது செய்கையை உலகத்தார் ஒருகால் தீங்காகக் கருதினும், தாய் குழந்தையைக் கைகால்களை யமுக்கி நெரித்து வாயில் மருந்தூட்டுதல் அக்குழவிக்கு நன்மையே பயக்குமதுபோல, "உயிர்க்கெல்லாந் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" ஆன இராமபிரானது செயலும் உலகத்தாரின் நன்மையின்பொருட்டே யாகு மெனச் சமாதானங்கூறி,தீயனவிழைத்தா னென்ற குற்றம் இராமன்மீது எவ்வாற்றானும் வாராமை பரிகரித்தனனென்க. தீயவற்றை இராமபிரான் செய்யானென்ற குறிப்பினால் 'தீயனவிராமனே செய்யுமேல்'என்றது. கைகேயியை நோக்கி 'அருளுவீர்' என்றது - இருகடுஞ்செய்தியைக் கூறிய நீர் இதையும் அருள்கொண்டு கூறுக என்று நிஷ்டூரமாகக் கூறியதென்னலாம். பி-ம்:— தவத்து. [2]அருளுவாய். (அ௬௮)

**௬௯.—கைகேயி 'நீ சங்கித்தவைஒன்றும் இராமன்வனஞ் சென்றமைக்குக் காரணம் அன்று: அரசனிருக்கும்போதே கானகஞ்சென்றது' என்றுகூறல்.**

குருக்களை யிகழ்தலி னன்று [1]கூறிய
செருக்கினா லன்றொரு தெய்வத் தாலுமன்
றருக்கனே யனைய[2]வவ் வரசர் கோமக
னிருக்கவே [3]வனத்தவ னேகி னானென்றாள்.

(இ-ள்.) '(இராமன் வனத்துக்குச்சென்றது),—குருக்களை இகழ்தலின் அன்று - பெரியோரைப் பழித்த குற்றத்தினாலு மன்று; கூறிய செருக்கினால் அன்று -(நீ)சொன்ன கருவச்செயலினாலும் அன்று; ஒரு தெய்வத்தால்உம் - அன்று-ஒரு தெய்வஞ் சீறியதனாலும் அன்று; அருக்கன் ஏ அனைய அ அரசர் கோமகன்-சூரியனையேயொத்தஅரசவமிசத்துஉதித்த அந்தத்தசரதன்,இருக்க ஏ - உயிருடன் இருந்தபோதே, அவன்-அவ்விராமன், வனத்து-காட்டிற்கு, ஏகினான்-சென்றான்,' என்றாள்-என்று(கைகேசி)மறுமொழிகூறினாள்; (எ-று.)

'தீயனவிராமனேசெய்யுமேல் அவைதாய்செயலல்லவோ என்று இராமபிரான்மீது தீங்குசெய்தானென்ற குற்றம் வாராது' எனப் பரதன் விலக்கினானேனும், பெரியோரையிகழ்தல் போன்ற தீங்கும் உளதாகக்கூடு மாதலின் அத்தகைத்தீங்கும் இராமபிரானிடத்து இலது என்பாள் 'குருக்களையிகழ்தலினன்று' என்றாள். இராமபிரான் வனஞ்சென்றது நீ சங்கித்த காரணம் ஒன்

றாலும் அன்று என்றும்,தசரதன் உயிரோடிருக்கும்போதே யென்றும் விடையிறுத்தனள் கைகேசியென்க.வாய்மை தவறாதவன் அரச னென்பாள்'அருக்கனேயனையவவ்வரசர்கோமகன்' என்றாள். வாய்மைதவறாமைக்கு அருக்கனை உவமைகூறுதலை "ஞாயிறன்னவாய்மை" என்ற இடத்துங் காண்க. பி-ம்:— [1]குன்றிய. [2]நம்மரசர். [3]அவன்வனத்து, வனத்ததின், வனத்தினின். (அசுக)

சுஈ.—'ஆயின், இராமன் வனஞ்சேல்லவும், தசரதன் விண்புகவும் காரணம் என்?' என்று பரதன் வினவுதல்.

குற்றமொன் றில்லையேற் கொதித்து வேறுளோர்
[1]செற்றது மில்லையேற் றெய்வத் தாலன்றேற்
பெற்றவ னிருக்கவே [2]பிள்ளை கான்புக
வுற்றதென் [3]பின்னவ னுலந்ததென் னென்றான்.

(இ - ள்.) குற்றம் ஒன்று இல்லை ஏல்-(இராமபிரான் செய்த)தீங்கு ஒன்றும் இல்லையாகுமானால்,வேறு உளோர் கொதித்து செற்றதுஉம் இல்லை ஏல்-மாறாகவுள்ளவர் [பகைவர்] மனம்வெம்பி வலியழித்ததும் இல்லையாயின், தெய்வத்தால் அன்று ஏல் - தெய்வக்குற்றத்தினாலும் (இராமன் காட்டுக்குச் சென்ற இது) விளைந்த தன்றாயின், பெற்றவன் இருக்கவ - பெற்றதமப்பன் இருக்கையில்தானே, பிள்ளை - புதல்வன், கான் புக உற்றது - காட்டுக்குச் செல்லுமாறு நேர்ந்தது, என் - என்ன காரணம்பற்றி? பின் - பின்பு,அவன்-அந்தத்தசரதன், உலந்தது-உயிர்நீங்கியது, என்-என்னகாரணம்? என்றான்-என்று வினவினான், (பரதன்); (எ - று.)

காட்டிற்புகுதற்குப் பிரசித்தமாக உள்ள காரணங்கள் மூன்று; அவை யொன்றும் இன்றி,இராமன் காட்டிற்குச்சென்றமை எங்ஙனம்?தசரதமன்னவன் இராமன்காட்டிற்குச்சென்றவுடன் இறக்கத் தான் யாதுகாரணம்?இவை என்றால் அறியக்கூடாமலிருக்கின்றன; இவற்றை விவரிக்கவேண்டுமெனக் கைகேயியைநோக்கி வினவினன் பரத னென்க.பி-ம்:—[1]செற்றமும்.[2]பிரிந்து. [3]மன்னவனுலந்ததென், தெரிதரவுரைசெய்வீர், தெரிதரவுரைசெயீர். (அஎ0)

சுரு.—'இராமன் வனஞ்சேன்றமை, தசரதன் உயிர்நீங்கினமை' என்ற இவற்றின் காரணத்தைக் கைகேயி கூறுதல்.

வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனக்
காக்கினே [1]னவனது பொறுக்க லாமையா
னீக்கினான் றன்னுயிர் நேமி [2]வேந்தென்றாள்.

(இ - ள்.) 'வாக்கினால்-(மன்னவன் தன்) வாயினால், வரம் தர-இரண்டு வரங்களைத்தர,கொண்டு-(அவற்றைப்)பெற்றுக்கொண்டு,(அதனால்,)மைந்தனை வனத்திடை போக்கினேன்-இளம்பிராயமுள்ளஇராமனைவனத்திற்குஅனுப்பினேன்; போக்கி - அனுப்பிவிட்டு, பார் உனக்கு ஆக்கினேன்-பூமியை உனக்

காக வைத்துள்ளேன்; நேமி வேந்து அவன் - ஆஞ்ஞாசக்கரத்தையுடைய அந்தத் தசரதமன்னவன், அது பொறுக்கலாமையால் - (மைந்தனைப்பிரிந்த) அந்தத் துயரத்தைத் தாங்கமாட்டாமையால், தன் உயிர் நீக்கினன் - தன்னுயிரைப் போக்கினன்', என்றாள்-என்று (நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கைகேயி) தெரிவித்தாள்; (எ - று.)

'இராமபிரான் தந்தையின்வாக்கை நிறைவேற்றுதலின் பொருட்டே கானகஞ்சென்றான்' என்றும், 'அரசன் நோய்முதலியவற்றால் இறந்திலன்: சத்தியத்தை நிறைவேற்றிப் புத்திரசோகத்தால் இறந்தனன்'என்றும் விடையிறுத்தவாறு. நேமிவேந்து - சக்கரவர்த்தி, வேந்து - சொல்லானஃறிணையும் பொருளான்உயர்திணையுமான சொல். பி - ம்:—[1]அன்னது. [2]வேந்தனே.()

சாசா.—இதுமுதல் நான்குகவிகள் - பரதனது சினத்தின் செய்கையைத் தெரிவிக்கும்.

[1]சூடின [2]மலர்க்கரஞ் சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் [3]குனித்துக் கூத்துநின்
றாடின [4]வுயிர்ப்பிடை [5]யனற்கொ ழுந்துக
ளோடின [6]வுமிழ்ந்தன வுதிரங் கண்களே.

(இ - ள்.) சூடின மலர் கரம் - (வணங்கும்போது சிரசிற்) குவித்திருந்த தாமரைமலர்போன்ற (பரதனது) கைகள், சொல்லின்முன் - (அந்தக்கைகேயி கூறிய அக் கடுஞ்)சொல் செவிப்படுதன்முன், செவி கூடின - காதிற் சேர்ந்தன: புருவங்கள் குனித்து கூத்து நின்று ஆடின - (அவனது) புருவங்கள் நெரிப்புக்கொண்டு மேலுங்கீழுஞ் சென்றன; உயிர்ப்பிடை அனல் கொழுந்துகள் ஓடின - (தோன்றிய) பெருமூச்சுகளினிடையிலே நெருப்புச் சுவாலைகள் விரைந்து வெளிப்பட்டுவந்தன: கண்கள் உதிரம் உமிழ்ந்தன - (அவனது) கண்கள் இரத்தத்தை வெளிவிட்டன; (எ - று.)

கைகேயிசொல்லிய கடுஞ்சொல்லைக் கேட்கப்பிடியாமல், பரதன் காதிற் கையைவைத்து மூடினனென்பது,'கரம் சொல்லின்முன் செவிகூடின' என்பதன் கருத்து. புருவங் குனித்துக் கூத்தாடுதல் முதலியன - சினக்குறிகளாகும். பி - ம்:—[1]சூடினன். [2]கரதலம். [3]குதித்து. [4]உயிர்ப்புடன், உயிர்ப்புடை. [5]அழல். [6]உதித்தன. (அஎஉ)

சாஎ. துடித்தன கபோலங்கள் சுற்றுந் [1]தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும் [2]போர்த்தது
மடித்தது வாய்[3]நெடு மழைக்கை மண்[4]பக
வடித்தன வொன்றொடொன் றசனி [5]யஞ்சவே.

(இ - ள்.) கபோலங்கள் - கன்னங்கள், துடித்தன - துடித்துக்கொண்டிருந்தன; மயிர் தொளை - மயிர்த்துவாரம், சுற்றும் - நாற்புறமும், தீச்சுடர் - அனற்கொழுந்துகளை, பொடித்தன - அரும்பின; புகைஉம் போர்த்

தது - புகையும் நாற்புறமும் பரவியது; வாய் மடித்தது - வாய் மடித்துக் கொண்டது; மழை நெடு கை - மேகம்போலவண்மைக்குணத்தைக்கொண்ட நீண்ட கைகள், அசனி அஞ்ச-இடியும் அஞ்சும்படி (பேரொலி பிறவாநிற்க), மண் பக ஒன்றொடொன்று அடித்தன - பூமிபிளக்கும்படி இரண்டுகைகளும் மோதின; (எ - று.)

கை ஒன்றோடொன்று அடித்தன - சினத்தினாற் கையைத் தட்டினு னென்றுருமுளர். பி - ம்:—[1]தீச்சுடப். [2]போர்த்தன. [3]நெடுந்தடக்கை. [4]புக. [5]எஞ்சவே, அன்னவே. (அஎரு)

சுஅ. பாதங்கள் பெயர்தொறும் பாரு மேருவும்
[1]போதங்கொ ணெடுந்தனிப் பொருவில் கூம்பொடு
மாதங்கம் வரு[2]கல மறுகிக் கால்பொர
வோதங்கொள் கடலினின் றுலைவ போன்றவே.

(இ - ள்.) பாதங்கள் பெயர் தொறுஉம் - (அக்காலையில் பரதன்) தன் பாதங்களைமாற்றிமாற்றி வைக்குந்தோறும், பார்உம் மேருஉம் - பூமியும் மேரு மலையும், மாதங்கம் வரு கலம் - யானையை யேற்றிக்கொண்டு வருகின்ற மரக் கலம்,கால் மறுகி பொர-காற்றுச்சுழன்று வீசுவதனால், போதம் கொள் நெடுந் தனி பொருஇல் கூம்பொடு-புத்திக்கு முதலிற்படுகின்ற நீண்ட தனியான ஒப் பற்ற பாய்மரத்துடனே,ஓதம் கொள் கடலினின்று-நீர்ப்பெருக்கைக்கொண்ட சமுத்திரத்தினிடையில், உலைவ போன்ற - வருந்துவதையொத்தன; (எ-று.)

சினங்கொண்ட பரதன் தன்பாதங்களை வைக்குந்தோறும் மேருவுடன் பார் உலைந்ததன்மை மாதங்கத்துடன் வரு கலம் உலைவதை யொக்குமென்க; **தற்குறிப்பேற்றவுவமையணி.** இங்கு, "பாரிடையழுந்துகின்ற படர்நெடும் பனிமாக்குன்றங், கூருகிர்க்குவவுத்தோளான் கூம்பெனக்குமிழிபொங்க,வார் கலியழுவத்தாழுங் கலமெனலாயிற்றன்றே" என்ற சுந்தரகாண்டச் செய்யுள் காணத்தக்கது. பாரை மரக்கலமாகவும், மேருவை மாதங்கமாகவும் கருதுக. பரதனது பாதத்தைக் கூம்பாகக் கொள்ளலாம். போதம்-அந்தமரக்கலமென்று சுட்டாகவுமாம்.பி-ம்:—[1]போதகநெடுந்திசைப் பொறுத்தபாரொடு,பூதங்கொள் கடலெனப் பொருவில்கூம்பொடு, போதககணெடுங்...கூம்பொடு. [2]தலம். ()

சுகூ. அஞ்சினர் வானவ ரவுண ரச்சத்தாற்
றுஞ்சின [1]ரனைப்பல சொரிம தத்தொளை
யெஞ்சின [2]திசைக்கரி யிரவி மீண்டனன்
வெஞ்சினக் கூற்றுந்தன் விழி[3]பு தைத்ததே.

(இ-ள்.)(பரதனது பெருஞ்சினத்தாற் பாரும் மேருவும்உலைந்ததுகண்டு), வானவர் - தேவர்கள், அஞ்சினர் - பயந்தார்கள்: அவுணர் - அசுரர்கள், அச் சத்தால் - பெரும்பயத்தினால், துஞ்சினர் - இறந்தொழிந்தனர்: திசை கரி - திக்கஜங்கள், எனை பல மதம் சொரி தொளை எஞ்சின- மதஞ்சொரிகின்ற

மிகப்பலவான தொளைகள் தூர்ந்துவிட்டன: இரவி மீண்டனன் - சூரியனும் அஸ்தமித்துவிட்டனன்: வெம் சினம் கூற்றும்-கொடுங்கோபத்தையுடைய யமனும், தன் விழி புதைத்தது - தன்கண்ணை மூடிக்கொண்டது; (எ - று.)

பரதனது பெருஞ்சினத்தோற்றத்தைக் கண்டு வானவரஞ்சுதல் முதலின நிகழ்ந்தனவாகக் கூறியது - தொடர்புயர்வுநவிற்சியணியாம். அமுதினையுண்டவராதலால் வானவர் அஞ்சினமாத்திரத்தோடு நிற்க, அமுதினையுண்ணுதவராதலால் அவுணர் துஞ்சின ரென்க. துஞ்சினர் - மங்கலவழக்கு. பரச்சம் நிகழ்ந்ததனுல், திசையானைகள் மதப்பெருக்கு அற்றனவாகித் தம் தஞ்சொரிதொளை தூர்ந்தன வென்க. பி-ம்:—[1]ஏனைப்பலர்துளைக்கையானையும்,ஏனையர்துளைக்கையானையும். [2]திசைகளின், திசைக்களிறு. [3]புதைத்தவே.

எ0.—பரதன் இராமபிரானுக்குஅஞ்சித் தன்தாயைக்கொல்லாது கடிந்துகூறத் தொடங்குதல்.

கொடியவெங் கோபத்தாற் கொதித்த கோளரி
கடியவ டாயெனக் [1]கருது கின்றில
னெடியவன் முனியுமென் றஞ்சி நின்றன
னிடியுரு [2]மனையவெம் மொழி[3]யி யம்புவான்.

(இ - ள்.) கொடிய வெம் கோபத்தால்-(பொங்கியெழுந்த) மிகக்கொடிய சினத்தினுல், கொதித்த-(மனம்) வெதும்பிய, கோள் அரி - வலிய ஆண்சிங்கத்தையொத்த பரதன்,—கடியவள்-கொடுஞ் செயலைச் செய்தவளான அந்தக் கைகேசியை, தாய் என கருதுகின்றிலன் - தாயென்று நினைத்திலன்: (ஆயினும்), '(இவளைக் கொன்ருல்), நெடியவன் - பெருமையையுடையவனுகிய இராமன், முனியும்-கோபிப்பான்,' என்று - என்றகாரணத்தினுல், அஞ்சி - பயந்து, நின்றனன் - (அவளைக்) கொல்லாமல் விட்டிட்டவனுய், (அவளை நோக்கி), இடி உரும் அனைய வெம் மொழி-பேரிடியையொத்த கடுஞ்சொற்களை,இயம்புவான்-சொல்லுவானுனன்; (எ-று.)—அவற்றை மேல் பதினேழு கவிகளிற் காண்க.

பரதன் கைகேயியைத் தாயென்றுகருதி உயிரோடு விட்டானல்லன்: இவளைக் கொன்ருல் பிறகு இராமன் சினங்கொள்வானே யென்று அவளைக் கொல்லாது உயிரோடுவிட்டு, கடுஞ்சொல்லால் இடித்துக் கூறுவானுயினனென்க: 'மாத்ருதேவோ பவ [தாயைத் தெய்வமாகப்பேண்]' என்று சுருதி கூறினுலும், கடுஞ்செயலைச்செய்த தாயைத் தாயென்று கருதாமையும் முறையேயென்பது, இந்தப்பரதனது ஒழுக்கத்தினுல் வெளியாகின்றது. இடியுரும் - ஒருபொருட்பன்மொழி. முதலடி - முற்றுமோனை. பி-ம்:—[1]கருதுகின்றிலேன். [2]அனையன. [3]இயம்பினுன்· (அஎகூ)

எக.—இதுமுதற் பதினேழுகவிகள் ஒரு தொடர்: பரதன் தன்னையும் கைகேயியையும் பழித்துக்கூறுதலைத் தெரிவிக்கும்.

மாண்டன னெந்தை[1]யென் றம்முன் மாதவம்
[2]பூண்டன னின்கொடும் புணர்ப்பி னாலென்றாற்
கீண்டிலென் [3]வாயது கேட்டு நின்றயா
[4]னாண்டன னேயன்றோ வரசை யாசையால்.

(இ - ள்.) நின் கொடு புணர்ப்பினால் - உன்னுடைய கொடுமையான ஆலோசனையினால், எந்தை - எனது தந்தை, மாண்டனன் - இறந்திட்டான்: என் தம்முன் - எனது தமையன், மா தவம் பூண்டனன் - பெருந்தவத்தை மேற்கொண்டு (காட்டுக்குச்) சென்றான்: என்றால்—, (இங்ஙனம் என்தந்தை இறக்கவும் தமையன் வனத்தில் தவம்புரியவும் வரத்தைக் கேட்ட), வாய் - (உன்னுடைய)வாயை, கீண்டிலென்-கிழித்துவிடாமல், அது-(நீவரம்பெற்றாயென்ற) அந்தச்சொல்லை, கேட்டு நின்ற - (என்) காதினாற்கேட்டுக்கொண்டிருந்த, யான்—, அரசை-இராச்சியத்தை, ஆசையால் ஆண்டனன் ஏ அன்றோ - பேராசையினால் ஆட்சிபுரிபவனேயாவ னன்றோ? (எ - று.)

நான் உன்பொருட்டு வரமாக இராச்சியத்தைப் பெற்றுவைத்துள்ளேனென்று நீ சொல்லவும், அக்கடுஞ்சொல்லைக் கூறிய உன்வாயைக் கிளாமையால் "அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி[மறுக்காதது உடன்பட்டதேயாகும்]" என்றமுறைமைப்படி, இராச்சியத்தை யாளுவதிலுள்ள ஆசையால் உன் செயலை உடன்பட்டவனாகவே உலகத்தாராற் கருதப்படுவே னென்று, இதனால், பரதன் தன்னைப் பழித்துக்கூறி அவ்வழியால் தன் தாயின் செயலைக் கடிகின்றனன். பி-ம்:—[1]என்றெம்முன். [2]பூண்டதுநின்னது. [3]வாயிது. [4]ஆண்டனனும். (அஎஎ)

எஉ. நீயினை யிருந்தனை [1]யானு நின்றனெ
னேயெனு மாத்திரத் [2]தெற்று கின்றிலெ
[3]னாயவன் முனியுமென் றஞ்சி னேனலாற்
றாயெனும் [4]பெயரெனைத் [5]தடுக்கற் பாலதோ.

(இ - ள்.) நீ இனம் இருந்தனை - (எந்தையையும் எம்முனையும் அகலுமாறுவரங்கொண்ட)நீயும் இங்கே நிற்கின்றாய்: யான்உம் நின்றனென் - (நீ அவ்வாறுசெய்ய அச்செயலையெல்லாங் கண்டுகொண்டு) யானும் இங்குநின்றுள்ளேன்: (இங்ஙனம் இருக்கவும்), ஏ எனும் மாத்திரத்து-ஏயென்று சொல்லக்கூடிய காலத்திற்குள்,எற்றுகின்றிலென்-(உன்னை)அடித்துவீழ்த்திலேன்: (இதற்குக்காரணம்), ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் - உலகத்துக்கெல்லாந் தாய்போன்றவனான அந்த இராமன் (உன்னைக்கொன்றால் என்மீது)கோபிப்பானென்று அச்சங்கொண்டுள்ளேன்: அலால்-இது வல்லாமல், தாய் எனும் பெயர்-தாயென்று நீ வைத்துக்கொண்டிருக்கும் பெயர், எனை - என்னை,தடுக்கற்பாலது ஓ - (உன்னைக்கொல்லாமலிருக்கத்) தடுத்தற்கு உரியதோ? (எ - று.)

பிழைசெய்த நீயும் தண்டஞ்செய்தற்குஉரிய யானும் இருக்கவும், ஏற்ற தண்டனை உன்னைக்கொன்றொழிப்பதேயாகவும், நான் அதனைச் செய்யாமலிருப்பது-தாய்போன்றவனை இராமபிரானுக்கு என்செய்கை சினம்விளைக்குமென்பதேயன்றி, நீ தாயென்று பெயர்வைத்துக்கொண்டிருப்பதைப்பற்றியன்று என்று பரதன் கைகேசியை யேசின னென்க. 'தாயெனும்பெயர்' என்றமையால்,உண்மையில் தாயின்செய்கை கைகேயியினிடத்தில்லையென்பதும், பூதனை தாயின்வடிவைக்கொண்டுவந்தபோதிலும் க்ருஷ்ணபரமாத்மாவினுற் கொல்லத்தக்கவளாயினாற்போலக் கைகேயி தாயென்றுபெயர்வைத்துக் கொண்டாலும் பரதனுற் கொல்லத்தக்கவளேயென்பதும், தொனிக்கும். இராமனே தாய்: கைகேயிதாயல்லளென்றுபரதன் கொண்டுள்ள குறிப்புப் பின்னிரண்டடிகளில் வெளியாம். பி - ம்:—[1]நானும். [2]எற்றுகிற்றிலென். [3]ஆயகன், நாயகன். [4]பொருளெனே. [5]தடுக்கலாற்றுமோ, தடுக்கத்தக்கதோ, தடுக்கவல்லவோ. (அஎஅ)

எகூ. மாளவு முளனொரு [1]மன்னன் வன்[2]சொலான்
மீளவு [3]முளனொரு வீரன் [4]மேயபா
ராளவு முளனொரு பரத [5]னுயினுற்
[6]கோளல தறநெறி [7]குறையுண் டாகுமோ.

(இ - ள்.) ஒரு மன்னன் - ஓரரசன், வல் சொலால் - கொடுஞ்சொல்லினுல், மாள உம் - தன்னுயிரை விட்டிடவும், உளன் - இருக்கிறுன்: ஒரு வீரன்—,மீள உம்-(தான் ஆளவேண்டிய இராச்சியத்தை) விட்டிட்டு(க் கானகஞ்) செல்லவும், உளன்—; மேய - (தன்தாய்) விரும்பித்தேடிய, பார் - பூமியை, ஆளவும்-ஆட்சிபுரியவும், ஒரு பரதன்-பரதனென்றஒருத்தன், உளன்-: ஆயினுல் - இவ்வாறுனுல், அறம் நெறி - தருமமார்க்கம், கோள் அலது - மாறுகக்கொள்ளத்தக்கதேயாகு மன்றி, குறை உண்டாகும் ஓ - வேண்டத்தக்கதாக இருக்குமோ? (எ - று.)

தசரதன் வரத்திற்குக்கட்டுப்பட்டுத் தன்னுயிரைநீத்ததும் இராமன் தான் ஆளவேண்டிய இராச்சியத்தைவிட்டிட்டுக் காடுசென்றதும் நேர, பரதனென்ற யான் அந்தஇராச்சியததைக் கைப்பற்றியாள்வது அறநெறியாகுமாறுல், அப்படிப்பட்ட அறநெறி எமக்குவேண்டுவதில்லை யென்றனன் பரதனென்க. குறை என்பது வேண்டத்தக்கபொருளென்ற அருத்தத்தில் வருவதனை "ஏருளும்" என்று தொடங்குந் திருவாய்மொழிப்பதிகத்துப்பாடல் தோறும் ஈற்றிற் காணலாம். இனி, ஈற்றடிக்கு, கோள்அலது - விதியின் கோளாறேயன்றி, அறநெறி - தருமமார்க்கம், குறைஉண்டாகுமோ - குறைபடுவதாகுமோ? என்று கூறுவதும் உண்டு. பி-ம்:—[1]மன்னவன். [2]செல்கான். [3]முன். [4]வெய்ய. [5]ஆகினுல். [6]கோளிலது. [7]குறைவுண்டாகுமோ, குறைதற்பாலதோ. இப்பாடல் சிலபிரதியில் "கவ்வரவது" (எ௫) என்ற பாடலுக்குப் பின் உள்ளது. (அஎகூ)

எச. சுழியுடைத் [1]தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்
வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்தொரு
பழியுடைத் தாக்கினன் பரதன் பண்டெனு
மொழியுடைத் தாக்கலின் முறைமை [2]வேறுண்டோ.

(இ - ள்.) 'சுழி உடை - வஞ்சனையுள்ள, தாயுடை - தாயினுடைய, கொடிய சூழ்ச்சியால்-தீய ஆலோசனையினால், வழி உடைத்து ஆய் வரும் மரபை - தொன்றுதொட்டுவருகின்ற சூரியகுலத்தின் பெருமையை, மாய்த்து - கெடுத்து, பரதன்—, ஒரு பழி உடைத்து - ஒப்பற்ற பழியைப்பூண்டதாக, பண்டு - முற்காலத்தில், ஆக்கினன்-செய்திட்டான்,' எனும்-என்ற, மொழி-பழிச்சொல், உடைத்து - (பிற்காலத்திலே) கொண்டதாக, (இக்குலத்தை), ஆக்கலின் - செய்திடுவதைக்காட்டிலும், வேறு முறைமை-மாறானமுறைமை, உண்டு ஓ - உள்ளதோ? (எ - று.)

சூரியகுலத்தில் மூத்தவன் அரசாளுதல் மரபு என்பது கெடும்வண்ணம் நான் அரசுசெய்தால்,அதனால் அந்தச் சூரியகுலத்துக்குப் பெருவசையுண்டாகுமே?இங்ஙன் வசைச்சொல் பிற்காலத்து நிலைத்துநிற்குமாறுபுரிவது தகுதியுடையதாகுமோ? என்றனன் பரத னென்க. வழியுடைத்தாய் வரும் மரபு - தொன்று தொட்டுவந்த குலவொழுக்க மெனினுமாம். பி-ம்:—[1]தாய்தரு. [2]வேண்டுமோ. (அ௮௦)

எரு. [1]கவ்வர வதுவென விருத்திர் [2]கற்பெனு
மவ்வரம் பழித்துமை யகத்து ளேவைத்த
வெவ்வரம் [3]பொருதவே லரசை வேரறுத்
திவ்வரங் [4]கொண்டநீ ரினியென் கோடிரோ.

(இ-ள்.)கற்பு எனும்-கற்புஎன்று சொல்லப்படுகின்ற,அ வரம்பு அழித்து-அந்தத்தருமமுறைமையையொழித்து,—உமை அகத்து உளே வைத்த - உம்மைவீட்டிற்குள்ளே சேர்த்த, வெவ் அரம் பொருத வேல் அரசை - கொடிய அரத்தினாலராவப்பட்ட வேற்படையைக் கொண்டவரான மன்னவரை, வேர் அறுத்து - அடியோடு ஒழித்து,—இ வரம் கொண்ட - (இராமபிரான் காட்டிற்குச்செல்லவும் யான் நாடுஆளவும்வேணும் என்ற) இந்தவரத்தைப் பெற்ற, நீர்—,கவ்வு அரவுஅதுஎன - கவ்வுந்தன்மையுள்ள பாம்புபோல, இருத்திர்—; இனி - இனியும், என் கோடிர்ஓ-எதனைக் கொள்ளப்பார்க்கின்றீரோ? (எ - று.)

வரமென்ற ஓருபாயத்தைத் தேடிக் குலமாதரின் கற்பொழுக்கத்திற்கு மாறாகக் கணவன்உயிரையேகொள்ளைகொண்ட நீர் இன்னும் எதனைக் கொள்ளப்போகின்றீரோ?என்று பரதன் வெறுப்பினாற் கைகேயியைக்கடிந்து கூறலாயின னென்க. கணவனுயிரைக் கொண்டமைபற்றி 'கவ்வரவதுவென விருத்திர்' என்றது. நஞ்சுள்ளபாம்பை வீட்டினு ளிருக்க விடலாகாதவாறு

போல உம்மையும்வீட்டிலிருக்கவிடலாகாதென்பதனை யோராமல் தசரதமன்னவர் வீட்டில்வைத்துக்கொண்டதனால் அவருயிரே போகும் நிலைமைநேர்ந்ததென்னுங் கருத்துப்பட 'உமை யகததுளேவைத்த வெவ்வரம்பொருதவேலரசை வேரறுத் திவ்வரங்கொண்ட' என்றான். அழித்தமை-தொடுத்தல். பி-ம்:—[1]கவ்வரவிது, கவ்வரம்பிது. [2]கட்டிய. [3]பொருதலால். [4]கொண்டனிர். இசசெய்யுள் அச்சிட்டபிரதிகளிலில்லையாயினும், பலஏட்டுப்பிரதிகளில் உள்ளது. ()

வேறு.

எசு. நோயீ ரல்லீர் நுங்கண வன்றன் னுயிருண்டீர்
[1]பேயீ ரேநீ ரின்ன மிருக்கப் பெறுவீரே
[2]மாயீர் மாயா வன்பழி தந்தீர் முலைதந்தீர்
தாயீ ரேநீ ரின்னு மெனக்கென் றருவீரே.

(இ - ள்.) நும் கணவன் தன் உயிர் உண்டீர்-உமது கணவனது உயிரை யொழித்திட்டீர் (என்றாலும்), நோயீர் அல்லீர் - நோய்போல்வீ ரல்லீர்: நீர் பேயீரே - நீர்பேய்போன்றவரே; (இப்படிப்பட்ட நீர்), இன்னம்-இன்னும், இருக்க பெறுவீரே - உயிருடனிருக்கத் தக்கீ ராவீரோ? [உயிருடனிருக்கத் தக்கவரல்லீர்]; (ஆதலால்), மாயீர் - இறந்துவிடுவீராக; முலை தந்தீர் - (பாலியத்தில்) முலைகொடுத்து வளர்த்தீர்:மாயா வன் பழி தந்தீர்-(இப்போது)அழியாத கொடும்பழியையும் விளைத்தீர்: தாயீரே நீர் - தாயாராகிய நீர், இன்னும்—, எனக்கு—, என் தருவீரே - என்ன தரப்போகின்றீரோ? (எ - று.)

நோயென்பது சிறிதுகாலந் தொடர்ந்தரவுசெய்து உயிர்கொள்ளும்: அங்ஙனமின்றித் திடீரென்று அறைந்து உயிரைக்கொள்வது பேயே யாதலால், 'நுங்கணவன் றன்னுயிருண்டீர் நோயீரல்லீர் பேயீரேநீர்' என்றும், இங்ஙனம் உயிரைக்கொல்லுங் கொடியர் உயிரோடிருத்தல் தகா தென்பான் 'இன்னுமிருக்கப் பெறுவீரே' என்றும், முலைதந்ததனால் எனக்குத் தாயேயாயினும், இராமனைக் கான்புகச்செய்து எனக்குக் கொடும்பழியை விளைத்திட்ட நீர் இன்னும் எவ்வகைத்தீமையை விளைப்பீரோஎன்று அக்கைகேயியைக் கண்டு தான் அஞ்சுவதனை வெளிப்படுத்துவான் 'முலைதந்தீர் தாயீரேநீர் மாயாவன் பழி தந்தீர் இன்னு மெனக்கென்றருவீரே' என்றும் கூறினான். செறலினால், 'நோயீரல்லீர்' முதலாகப் பன்மைப்பாலாற் கூறியது. பி-ம்:—[1]பேயீரல்லீர். [2]மாயா. (அஅஉ)

எஎ. ஒன்றும் பொய்யா மன்னனை வாயா [1]லுயிரோடுந்
தின்றுந் தீரா வன்பழி [2]கொண்டுந் திருவெய்தி
யென்றுந் நீரே [3]வாழ [4]வுவந்தீ [5]ரவனைக்
கன்றுந் தாயும் [6]போல்வது [7]கண்டுங் [8]கழியீரே.

(இ - ள்.) ஒன்றுஉம் பொய்யா மன்னனை - சிறிதும் மெய்ம்மைதவறுதலில்லாத அரசனை, வாயால் - வாய்ச்சொல்லாகிய வரத்தால், உயிரோடுஉம் தின்று உம் - உயிருடனே யழித்தும்; (அதனால்), தீரா வன் பழி கொண்டு

உம் - நீங்காத கொடும்பழியைப் பெற்றும், திரு எய்தி - இராச்சியத்தைப் பெற்று, என்றுஉம் நீர் ஏ வாழ - என்றைக்கும் நீரே வாழ்ச்சியடையும்படி, உவந்தீர்-மனமகிழ்ந்தீர்: அவன் ஏக-அந்த இராமபிரான் (ஊரைவிட்டுக் காட்டுக்குச்) செல்கையில், கன்றுஉம் தாய்உம் போல்வது கண்டுஉம்-(நகரத்தாரும் இராமபிரானும்) கன்றுகளேயும் அவற்றின்தாயையும் போல்வதைக் கண்டும், கழியீர் - (உமதுமனநிலே) மாறுகின்றிலீர்; (எ - று)—ஏ - இரக்கம்.

'யார் எப்படிப்போனாலும் போகட்டும்:நமக்கு நல்வாழ்ச்சி யிருந்தாற்போதும்' என்று கருதினீர்: நம்மிடத்து உலகத்தவர் அன்புகொண்டிருந்தாலல்லவோ நமக்கு நல்வாழ்ச்சி கைகூடும்? இராமன் வனஞ்செல்லத் தாய்நாடுகன்றேபோல இந்நகரத்தவர் இருப்பதைக் கண்கூடாகக்கண்டிருந்தும் நீர் நுமது தீக்குணம் மாறப்பெற்றிலீர்: இது என்ன பேதைமை? என்றனன் பரதனென்க. சொன்னசொல் தவறுமையால் அரசனே 'ஒன்றும் பொய்யா மன்னன்' என்றும், வரத்தினால் உலகுள்ளவளவும் நீங்காத பழியைப் படைத்ததனுல் 'தீராவன்பழிகொண்டும்' என்றும், நீர் ஒருத்தரே வாழ்ந்தால் வாழலாமேதவிர நாட்டாரோடுசேர்ந்து வாழ்தல் இயலா தென்பான்,'திருவெய்தி என்றும் நீரேவாழவுவந்தீர்' என்றுங் கூறினன். அரசனே வரத்தாற்கொன்ற கொடுமையை விளக்க, 'உயிரோடுந் தின்றும்' என்று பிரித்துக்கூறியது. ஒன்றும், உம்மை - இழிவுசிறப்பு. கன்றுந் தாயும்போவனகண்டும் கழியீரே என்ற பாடத்துக்கு - தாயும் கன்றுஞ் சேர்ந்து போவதுபோல உலகத்தவர் இராமபிரானுடனே சேர்ந்திருத்தலே முறையாயிருக்கக் கன்றைவிட்டுத் தாயைப்பிரிப்பதுபோல இந்நகரத்தவரை இராமபிரானேவிட்டுப்பிரியச்செய்தது முறையல்ல என்று கருத்துக் காணலுமாம். பி - ம்:—[1]உரையோடும். [2]கொண்டீர். [3]ஆள. [4]உகந்தீர். [5]மிகநன்றே. [6]போல்வன, போவன. [7]கண்டீர். [8]கழியீரோ. (அஅ௩)

௭௯. இறந்தான் றந்தை [1]யீந்த வரத்துக் [2]கிழிவெண்ணு
வறந்தா [3]னீதென் றன்னவன் மைந்த னரசெல்லாந்
துறந்தான் [4]றாயின் சூழ்ச்சியின் ஞால [5]மவனேடும்
பிறந்தா னண்டா னென்னுமி [6]தென்றாற் [7]பெறலாமே.

(இ - ள்.) தந்தை - தசரதன், ஈந்த வரத்துக்கு இழிவு எண்ணு(து) - (தான்) கொடுத்த வரத்துக்குக் குறைவையெண்ணுமல் [முன்னீந்தவரத்தைக் கொடுக்கமாட்டேனென்றுசொல்லாமல்], இறந்தான் - உயிரொழிந்தான்; ஈது - (தந்தைசொல்லின்படி நடப்பதாகிய) இது, அறம்தான் - (புதல்வர் நடக்கவேண்டிய) தருமமுறையாகும், என்று - எனக் கருதி, அன்னவன் மைந்தன் - சக்கரவர்த்தியின் திருமகன், அரசு எல்லாம் துறந்தான் - இராச்சியத்தை முற்றுந் துறந்திட்டான்; (இங்ஙனமிருக்க), அவனேடுஉம் பிறந்தான் - அந்த இராமனேடும் பிறந்தவனன பரதன், தாயின் சூழ்ச்சியின்-தாயினுடைய தந்திரத்தால், ஞாலம் ஆண்டான் - இராச்சியத்தை அரசுபுரிவதாயினன், என்னும் - என்று (உலகத்தார் எள்ளனமாகக்) கூறுகிற, இது-இப்பழிச்சொல், என்றால்—, பெறல்ஆம் ஏ - பெறுதற்கு உரியதோ? (எ - று.)

இராமபிரான் தந்தையை யநுசரித்து நடக்க, அத்தசரதனது மற்றொரு புதல்வனான நான் உலகத்தோர் பழிக்கும்படி அரசை மேற்கொள்வது முறையோ? அன்று என்றபடி. 'வரத்துக்கிழிவெண்ணு' என்பதை மத்திமதீப மாகக்கொண்டு, 'அறந்தானீதென்று அன்னவன்மைந்த னரசெல்லாந் துறந்தான்' என்ற வாக்கியத்தோடு இயைத்து உரைத்தலுமொன்று. பி-ம்:—[1]எய்ந்த. [2]இழிவென்னு, அழிவென்னு, அழிவெண்ணு. [3]ஈதேயென்று. [4]தாயார். [5]அவனேடே. [6]என்னில். [7]பெறலாமால். (அஅச)

எகூ. மாளும் மென்றே [1]தந்தையை [2]யுன்னான் [3]வசைகொண்டாள்
கோளும் மென்னு லேயெனல் கொண்டா [4]னது [5]வன்றேன்
மீளும் [6]டன்றே யென்னையு மெய்யே யுலகெல்லா
மாளும் மென்றே போயின னன்றோ வரசாள்வான்.

(இ - ள்.) அரசு ஆள்வான்-இராச்சியத்தை யாளுதற்கு உரிய முறைமையையுடையவனாகிய ஸ்ரீராமன்,—மாளும் என்றுஏ தந்தையை உன்னான் - (தான் காட்டிற்குச்சென்றால்) தந்தை இறந்துபடுவா னென்று கருதாதவனும், வசை கொண்டாள் கோள் உம் என்னால் ஏ எனல்கொண்டான்-('கணவனைக்கொன்ற கடும்பாவி,'புதல்வனைக் காட்டிற்கு வெருட்டிய பெரும்பாவி' என்று) பழிச்சொல்லைக் கொண்டவளான கைகேயியின் மாறுபாடான எண்ணமும் என்னாலேதான் விளைந்ததென்று கருதுபவனுமாகி, என்னைஉம் மெய் ஏ உலகுஎல்லாம் ஆளும் என்றுஏ போயினன் அன்று ஓ-(தன்னுடைய அடிமையாய்க்கிடக்கும்) என்னைப்பற்றியும் திண்ணமாக (இவன்) உலகத்தை யாட்சிபுரிவானென்று நம்பியே கானகத்துக்குச் சென்றானல்லவோ? அது அன்று ஏல்-அங்ஙனம் அப்பிரான் கருதாமலிருப்பின், மீளும் அன்றே-(கானகத்துக்குச் செல்வதென்ற எண்ணத்தை) ஒழிந்திருப்பா னல்லவா? (எ-று.)

என்னுடைய தூண்டுதலினாலேயே என்தாய் இராச்சியத்தை வரமாகப் பெற்றாளென்றும், நான் இராச்சியத்தையாள்வது திண்ணமென்றுங் கருதினானதலால்தான், ஸ்ரீராமன் தந்தையிறந்துபடுவா னென்பதைப் பொருட்படுத்தாமற் கானகஞ் சென்றான்: அங்ஙனமன்றாயின் அப்பிரான் காட்டிற்குச் செல்வதென்ற எண்ணத்தைத் தவிர்த்திருப்ப னென்பதாம். மீளும் அன்றே என்பதற்கு-தசரதன் இறந்தவன்றே மீண்டிருப்பான்(இராமன்) என்று கூறுவாருமுளர். [2]உன்னு என்றபாடத்துக்கு இவ்வினையெச்சத்தைக்கொண்டாள் என்பதோடுகூட்டி யுரைக்கலாம். அக்கைகேயி கொண்ட எண்ணம் நிறைவேறாது பழியே மிச்சமாய்நின்றதென்பான், 'வசைகொண்டாள்'என்றான். பி-ம்:—[1]தந்தையும். [2]என்னால். [3]வசைகொண்டான், வசைபாரான். [4]இது. [5]அன்றே. [6]இன்றே. (அஅரு)

அ௦. ஓதா நின்ற [1]தொல்குல மன்ன [2]னுணர்வப்பால்
[3]யாதா னுந்தா னாகவெ னக்கே [4]பணிசெய்வான்
[5]றீதா நின்ற சிந்தனை செய்தா னவனென்னப்
போதா தோவென் றா[6]யிவள் கொண்ட [7]பொருளம்மா.

(இ - ள்.) ஓதாநின்ற தொல் குலம் மன்னன்-(யாவராலும்) கொண்டாடப்படுகின்ற பழமையாகிய இந்தச் சூரியகுலத்தில் தோன்றிய அரசனாகிய தசரதனது, உணர்வு-எண்ணம், அப்பால்-பிறகு, யாது ஆன் உம் தான் ஆக-(இராமனைக்காட்டுக்கு அனுப்புவது முதலியனகுறித்து) எதுவாகத்தான் ஆகட்டும்: 'எனக்குஏ பணிசெய்வான் அவன் - எனக்குப் பணிசெய்தலையே (தன்)பணியாகக் கொண்டிருந்த அந்தப்பரதன், தீதுஆ நின்ற சிந்தனை செய்தான்-கொடியதாகவுள்ள எண்ணத்தைக் கொண்டிட்டான்,' என்ன - என்று (ஸ்ரீராமன்) கருதுதற்கு, என் தாய் இவள் கொண்ட பொருள்-என்தாயாகிய இந்தக்கைகேயி வரத்தாற்கொண்ட இராச்சியப்பொருள், போதாதுஓ-போதாதா? (எ - று.)—அம்மா - இரக்கக்குறிப்பிடைச்சொல்.

தசரதன் என்னைப்பற்றி எங்ஙனங்கருதினாலுங் கருதட்டும்: அதைப்பற்றிச் சிந்தையில்லை; 'இதுவரையிலும் எனக்குப் பணிசெய்தலையே தன்தொழிலாகக்கொண்ட பரதன் சிந்தனை மாறுபட்டான்'என்று இராமன் கருதுதற்கு என்தாய் வரத்தால் இராச்சியத்தைக் கொண்டதே போதியதாகுமென்றுவருந்தினன் பரதனென்க. என்தாய் இவள் கொண்ட பொருள் போதாதோ என்பதற்கு-என்தாயாகிய இந்தக்கைகேயியால் யான் அடைந்தபழியாகியபொருள் எனக்குப் போதாதோ? இதைக்காட்டிலும் எனக்குப் பொல்லாங்கு விளைக்க வேறொன்றுவேணுமோ? என உரைப்பினுமாம். பி-ம்:—[1] திண்குணாநன்னூல். [2] உரை. [3] ஏதேனும். [4] பழி. [5] தீதாய். [6] அவள். [7] புகழ். இரண்டாமடி ஒருபிரதியில், 'ஏதாமென்னுத்தாதையெனக்கே பணிசெய்தான்' என்று காண்கிறது.

ருக. உய்யா நின்றே னின்னமு மென்முன் னுடன்வந்தான்
கையார் கல்லைப் புல்லட குண்ணக் கல[1]மேந்தி
[2]வெய்யோ னானின் சாலியின் வெண்சோ றமு[3]தென்ன
நெய்யோ [4]டுண்ண நின்றது நின்றார் நினையாரோ.

(இ - ள்.) என்முன் உடன் வந்தான் - எனக்கு மூத்த சகோதரனாகிய ஸ்ரீராமன், கை ஆர் கல்லை-(தன்) கையாகிய கலத்தில், புல் அடகு உண்ண-(கிழங்கு பழம்)முதலிய இலையுணவை யுண்டுகொண்டிருக்க, இன்னம்உம்-, வெய்யோன் நான்-கொடியவனாகிய நான், உய்யாநின்றேன்-உயிர் பிழைத்திருப்பவனாய், கலம்-(சிறந்த பொன்முதலியவற்றாலியன்ற) உண்கலத்திலே, இன் சாலியின் வெண் சோறு-இனிய சம்பாநெல்லரிசியாற்சமைத்த வெண்ணிறமுள்ளசோற்றை, ஏந்தி-பெய்துகொண்டு, அமுது என்ன-தேவாமிருதமென்னும்படி, நெய்யோடு - நெய்யுடனே, உண்ணநின்றது-உண்டுகொண்டு நிற்பதை,நின்றார்-(கண்டுகொண்டு)நிற்கும் உலகத்தவர், நினையார்ஓ-(என்னை இழிவாகக் கருதமாட்டாரோ? (எ - று.)

இராமன் காட்டிற்குச்சென்றதையறிந்தபின்பு நான் உயிருடனிருப்பதே மிகை: அதற்குமேல் அப்பிரான் காட்டிலே கையே கலனாகச் சாகபட்சணஞ் செய்து உயிர்தாங்கியிருப்பதை யறிந்தபின்பும், இந்நாட்டிலே சாலியரிசிச்

சோற்றைப் புத்துருக்குநெய்யோடு பொற்கலத்திலிட்டு இன்னமுதென உண்டுகொண்டிருந்தால், என்னை இவ்வுலகத்தோர் ஏசாரோ? என்று வருந்தினன் பரதனென்க. பி - ம்:—[1]ஏற்றி, ஏற்று, ஏற, ஏறி. [2]அய்யோநான், ஐயோநான், ஐபாநான். [3]உண்ண. [4]உண்ணுகின்றது. (அஅஎ)

அஉ. வில்லார் தோளான் மேவினன் வெங்கா னகமென்ன
நல்லா [1]னையன் றுஞ்சின னஞ்சே யனையாளைக்
கொல்லேன் மாயேன் வன்பழி யாலே [2]குறைவற்றே
னல்லே னோ[3]யா னன்புடை யார்போ லழுகின்றேன்.

(இ - ள்.) வில் ஆர் தோளான் வெம் கானகம் மேவினன் என்ன - விற்பூண்ட தோளையுடையவனான ஸ்ரீராமன் கொடுங் கானகத்துச் சென்றானென்றுசொல்ல, (கேள்வியுற்று), நல்லான் ஐயன் - சிறந்த தலைவனாகிய தசரதசக்கரவர்த்தி, துஞ்சினன் - (அத்துபரத்தைத் தாங்கமாட்டாது) உயிர் நீங்கினான்;(இராமபிரானைக் காட்டிற்கு அனுப்பியவள் என்தாயாகிய கைகேயியாவளென்பதை யறிந்தும்), நஞ்சு ஏ அனையாளை - விஷம்போற் கொடியவளான அவளை, கொல்லேன் - கொன்றிடாமலும், மாயேன் - (இத்தீமைக்கெல்லாங் காரணமாயிருந்த என்னை)மாய்த்துக்கொள்ளாமலுமிருப்பவனாகிய, யான்-, அன்புஉடையார்போல் அழுகின்றேன் - (இராமபிரானிடத்து) அன்புடையாரைப்போலப் பாவித்துக் கண்ணீர்வடிக்கின்றேன்; வன் பழியால் ஏ குறைவு அற்றேன் அல்லேன்ஓ - ('இவன் இராமனிடத்து அன்பு இல்லாதிருக்கையில் அன்புடையார்போல நடிக்கும் வேஷக்காரன்: இராமனைக் காட்டிற்குத் துரத்தக் காரணமாயிருந்தவன்' என்று உலகத்தார் தூற்றும்) கொடிய பழி நிரம்பியிருக்கப்பெற்றவனல்லேனோ? (எ - று.)

யான் இராமன்விஷயத்தில் கண்ணீர்வடித்தாலும்,நிகழ்ந்த நிகழ்ச்சியை நோக்குமிடத்து உலகத்தார் கூறும் பழிக்குப் பெரும்பாத்திரனாகும்படியாயிற்று என்நிலையெனப் பரதன் வருந்துகின்றனனென்க. இறந்ததனால் அத்தசரதனது நன்மை வெளியாயிற்றென்பான் 'நல்லா னையன் றுஞ்சினன்' என்றான். பி - ம்:—[1]அன்றே. [2]குறைகின்றேன். [3]நான். (அஅஅ)

அங. பாரோர் கொள்ளார் யானுயிர் பேணிப் பழி[1]பூணேன்
[2]தீரா தொன்று னும்பழி யூரிற் றிருவில்லா
ளாரோ டெண்ணிற் றுரை [3]தந்தா ரறமெல்லாம்
வேரோ டுங்கே டாக முடித்தென் [4]வினைவித்தாய்.

(இ ள்.) (யான் அரசுபுரிவதை), பாரோர் கொள்ளார்-உலகத்தவர் (சரியென்று) ஒப்புக்கொள்ளமாட்டார்; யான்—, உயிர் பேணி-(அரசச்செல்வத்தோடு வாழும்) உயிர்வாழ்க்கையை விரும்பி, பழி பூணேன் - (தமையனைக் காட்டிற்குத் துரத்திவிட்டுத் தம்பி அரசுபுரிகின்றானென்று உலகோர் கூறும்) பழிமொழியை மேற்கொள்ள உடன்படேன்; (யான் அரசை யேற்கொண்

டால்), ஒன்ருன்உம் பழி தீராது-ஒருவகையாலும் பழி நீங்காது; ஊரில் திரு நில்லாள்-(இராமன் கானகஞ்சென்றுள்ளதனால் முறைதிறம்பிய) இவ்வூரில் (இனி) இலக்குமியும் வாழாள்; (இங்ஙனம் யாவும் விபரீதமாவதைச் சிறிதுங் கருதாத கைகேயியே!) எண்ணிற்று ஆரோடு-(நீ) ஆலோசனைசெய்தது யாவ ரோடு? உரைதந்தார் ஆர்-(உனக்கு) ஆலோசனைசொல்லியவர் யாவர்? அறம் எல்லாம் வேரோடுஉம் கேடு ஆக முடித்து என் விளைவித்தாய்-தருமமெல்லாம் அடியோடு கெடும்படியாகத் தொழிலைச்செய்திட்டு என்னபயனைக் கண்டாய்?

கணவனைக் கொல்லுதல், மூத்தவனிருக்க இளையவனுக்குமுடிசூட்டக் கருதுதல், யாதொருபிழையுமில்லாது மகாகுணவானுனபுதல்வனைக் காட் டிற்குச் செலுத்துதல், வசிட்டர்முதலியபெரியோர்மொழியைக்கேளாமை முதலியனயாவும் அறத்திற்குமாருன செயலா மாதலால், 'அறமெல்லாம் வேரோடுங் கேடாகமுடித்து' என்ருன். பி-ம்:—[1]பூண்டால். [2]தீராதொன்ரு னின்பழி, தீராதொன்றேதுன்புமிவ், தீராதொன்றேதுன்பமிவ். [3]கொண் டாய், தந்தாய். [4]வினையேனே (அஅகூ)

அச. கொன்றே னுனென் [1]றந்தையை மற்[2]றுன் கொலைவாயா
லொன்ரு கானத் தண்ணலை [3]யுய்த்தே னுலகாள்வா
னின்றே னென்ரு னின்பிழை யுண்டோ பழியுண்டோ
வென்றே னுந்தா னென்[4]பழி மாயு [5]மிடமுண்டோ.

(இ-ள்.) உன் கொலை வாயால் - உன்னுடைய கொல்லுந்தன்மையுள்ள வாயைக்கொண்டு, நான்—, என் தந்தையை கொன்றேன்—; ஒன்று ஓ-இது மாத்திரந்தானே? மற்று - பின்னும், கானத்து - காட்டில், அண்ணலை - பெருமையிற்சிறந்தவனுகிய இராமபிரானை, உய்த்தேன் - செலுத்தினேன்: (இவையெல்லாம் வேற்றிடத்தில் மறைவாகஇருந்து செய்துவிட்டு), உலகு ஆள்வான் நின்றேன் - இவ்வுலகத்தை அரசுபுரியும்படி வந்தும் உள்ளேன்; என்ருல்-(விஷயம் நடந்தவகை) இப்படியுள்ளதானல், நின் பிழைஉண்டுஓ - உன்மீது சொல்லக்கூடிய குற்றம் உள்ளதோ? பழிஉண்டுஓ - (உலகத்தோர் தூற்றுதற்குஉரிய) பழிமொழி (உனக்கு) உண்டாகுமோ? என்று ஏன் உம் என் பழி மாயும் இடம் தான் உண்டு ஓ - என்றைக்காவது என்பழி நீங்கக் கூடியவழி தான் உள்ளதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

இராமன் காட்டிற்குப்போனதையும்,தசரதமன்னவன் இறந்துபட்டதை யும் அறிந்தபின்பும் யான் உன்னைக்கொல்லாமலும் உயிரோடுஇனிதுஉண்டு வாழ்ந்து மிருத்தலால், நான் உன்னைக்கொண்டு இராச்சியத்தை எனக்குத் தருமாறு செய்து மன்னவன் உயிரொழியும்படியும் ஸ்ரீராமபிரான் கானகஞ் செல்லும்படியுஞ் செய்தேனென்றே உலகத்தார் நினைக்கும்படி யுள்ளது:ஆக வே,குற்றமும் பழியும் எனக்கே: உனக்குச் சிறிதும்இல்லை: இப்பழியை யான் போக்கிக்கொள்ள வழியில்லையே! என்று வருந்துகின்றனன் பரத னென்க. ஒருவர் ஒரு தீக்காரியத்தைச் செய்யாமலிருப்பினும் அத் தீக்காரியத்தைச் செய்தவரென அபவாதம் தோன்றினாலும் அதனையுந் தீர்த்துக்கொள்ளவேணு

மென்ற நூற்கொள்கை இங்கு அறியத்தக்கது. நான்காமடியில், பழியைக் கூறியது பிழைக்கும் உபலட்சணம். பி - ம்:—[1]தாதையை. [2]என் கொலை வாளால். [3]உய்த்தே. [4]புகழ். [5]இடை. (அகூ0)

அரு. கண்ணு லேயென் செய்வினை [1]யின்னுஞ் [2]சிலர்காண
[3]மண்ணோர் பாரா [4]தெள்ளுவர் [5]வாளா பழி[6]பூண்டா
யுண்ணு நஞ்சங் [7]கொல்கில தென்னு [8]முரையுண்டென்
றெண்ணு கின்றே [9]னன்றி யிரேனென் னுயிரோடே.

(இ-ள்.)என் செய்வினை-யான் செய்யப்போகின்ற தொழிலை, இன்னும்-இனியும்,சிலர்-(என் கருத்தையுணராத)சிலரும்,கண்ணால் ஏ—,காண-காணட்டும்: மண்ணோர்-இம்மண்ணுலகத்தவர், பாராது - (நான் இராமனிடத்து அன்புள்ளவனென்பதை என்செயலாற்) காணாமலிருக்கும்வரையும், எள்ளுவர் - (என்னைப்)பழிப்பார்கள்; (உன்கருத்து நிறைவேறாமையால்), (கைகேயியே!) வாளா பழி பூண்டாய் - வீணே பழிக்கு ஆளானாய்; உண்ணு நஞ்சம் கொல்கிலது என்னும் உரை உண்டு என்று எண்ணுகின்றேன் - உண்ணாமல் விஷம் கொல்லாது என்னும் பழமொழி இருக்கின்றதென்று எண்ணுபவனாகின்றேன்; (இதுவே யான் உயிரைப் போக்காமல் வைத்திருத்தற்குக் காரணம்); அன்றி-அல்லாவிட்டால், என் உயிரோடு இரேன்—; (எ - று.)

உலகத்தவர் இப்போது என்னை இகழ்ந்தாலும், யான் இனிச் செய்யுஞ் செயலைக் கண்டால் என்னைப் பின்இகழாரென்று கருதுகின்றேன்: அரசுபுரிவதை யான் ஏற்றுக்கொண்டால்தான் எனக்குப் பழி நிலைத்துவிடுமேதவிர, யான் ஏற்றுக்கொள்ளாது விடுவேனாயின் உண்ணாநஞ்சு கொல்லாதவாறு போல எனக்குப் பழியுண்டாகாது: இந்த நம்பிக்கையே யான் உயிரோடுவாழ்வதற்குக்காரணம் என்று சிறிதுதேறிப் பரதன் கூறினனென்க. நீ பழிபூண்டதுமிச்சமேயன்றி உன்னெண்ணம் பலியாது என்பான் 'வாளாபழிபூண்டாய்' என்கின்றான். உண்ணாநஞ்சங்கொல்கிலது - "உண்ணாதேயுயிருண்ணாதொருநஞ்சு" என்று இராவணன்வதைப்படலத்தும் வருகின்றது. நின்பழியுண்டோஎன்று கீழ்க்கூறியவன் இங்கு இவ்வாறு கூறுவது - என்பழி நீங்கினால் பிறகு உன்பழி நிலைத்திருக்குமென்றும், அது நீங்கவழியில்லையென்றும் குறிப்பித்தற்காகும். கீழ்ச்செய்யுளில் பிழையும் பழியும் உண்டாகியதே: இவைதீரும்வகை நாணேனே என்று வருந்திய பரதன், பழிதீரும் வகையை இதனாலும், பிழைதீரும்வகையை அடுத்தசெய்யுளாலும் தெரிவிக்கின்றனனென்க. பி-ம்:—[1]பின்னம். [2]சிலர்காண்பார், சிலகாண்பார். [3]மண்ணோர்காணாது,விண்ணோர் மண்ணோர். [4]எள்ளலர், கொள்ளலர். [5]மாளா, வீணே. [6]பூண்டேன், பூட்டார். [7]கொல்லலது. [8]முறை. [9]என்றுமிருந்தேனுயிரோடே. ()

அசு. என்றான் பாவிக் கும்பி வயிற்றினி னிடைவைகித்
தோன்றுந் [1]தீராப் பாதக [2]மற்றென் றுயர்தீரச்
சான்றுந் தானே நல்லற மாகத் தகைநால
மூன்றுங் காணா மாதவம் யானே முயல்கின்றேன்.

(இ-ள்.) பாவி உன்-பாவியாகியஉன்னுடைய, கும்பி வயிற்றின்னிடை-நரகம்போன்ற வயிற்றிலே, என்று - இசைந்து, வைகி-தங்கியிருந்ததனால், தோன்றும்-உண்டாகிய, தீரா பாதகம்-போக்குதற்கு அரிய பாவம், அற்று-நீங்கி, என் துயர் தீர - என் துன்பமெல்லாம் ஒழியும்படி, நல் அறம் தான் ஏ சான்றுஉம் ஆக-நல்லதருமமே சாட்சியாக அமைய, தகை ஞாலம் மூன்று உம் காண - பெருமையையுடைய மூவுலகத்தோரும் காணும்படி, யான் ஏ மாதவம் முயல்கின்றேன் - நான் பெருந்தவஞ்செய்வேன்; (எ - று.)

இராமன் காட்டிற்குச்செல்லுதற்குப் பரதன் உடந்தையென்று உலகத்தில்தோன்றும் அபவாதமொழிக்கு மூலம் உன்வயிற்றிற்பிறப்பே யாதலால், அந்தவயிற்றில்தங்கிய பாதகமும், உலகத்தார் பழிக்குஆளானேனே என்றதனால் தோன்றிய மனத்துயரமுந் தீருமாறு மூவுலகத்தோரும் காண யான் தவம்புரிவே னென்று பரதன் கூறுகின்றனனென்க. இதனால், தன்பிழை தீருமாறு கூறப்பட்டது. சான்றுந் தானே நல்லறமாக என்றது-தான்செய்யுந் தவம் மனப்பூர்வமான தென்பதை விளக்கும். பி-ம்:—[1]பாரா, பாரப். [2]உற்று. (அகூஉ)

அஎ. சிறந்தார் சொல்லு நல்லுரை சொன்னேன் செயலெல்லா
மறந்தாய் செய்தா [1]யாகுதி மாயா வுயிர்தன்னைத்
துறந்தா யாகிற் [2]றூயையு மாதி யுலகத்தே
பிறந்தா யாதி யீதல தில்லைப் பிறிதென்றான்.

(இ-ள்.) சிறந்தார்-அறிவுமிக்க பெரியோர், சொல்லும்-சொல்லுகின்ற, நல் உரை - சிறந்தவார்த்தைகளை, சொன்னேன்—; மாயா உயிர் தன்னை-(இன்னும்) மாயாதிருக்கின்ற (உன்) பிராணனை, துறந்தாய் ஆகில்-விட்டிட்டாயானால், செயல் எல்லாம் மறந்தாய் செய்தாய் ஆகுதி-நீ செய்த கொடிய செய்கைகளையெல்லாம் (புத்திபூர்வமாகவல்லாமல்) நினைவின்றியே செய்தவளாவாய்; தூயைஉம் ஆதி - (பாவம்நீங்கிப்) பரிசுத்தமானவளும் ஆவாய்; உலகத்து ஏ பிறந்தாய் ஆதி - உலகத்திற் பிறந்ததனாற் பெறலாகும்பயனைப் பெற்றவளும் ஆவாய்; (நீ பழிநீங்கி நன்மையடைதற்கு உரிய வழி), ஈது அலது - இதுவல்லாமல், பிறிது-வேறொன்று, இல்லை—, என்றான்-என்று கூறிமுடித்தான், (பரதன்); (எ - று.)

சிறந்தார்-அறிவுஒழுக்கங்களிற்சிறந்தவர். சிறந்தார் சொல்லும் நல்லுரை என்றது - 'மாயாவுயிர்தன்னைத்துற' என்பது. சொன்னேன்என்று இறந்தகாலத்தாற் கூறியது,இயல்புபற்றி. கீழ்த் தன்பாவமும் பழியும் நீங்கும்வகை கூறிய பரதன்,இதனால், தன்தாய்க்குப் பழி நீங்குதற்கு வகை கூறுகின்றான். நீ உன்னுயிரைத் துறத்தலே பழிநீங்கும்வழி யென்றன னென்க. "தோன்றிற் புகழொடுதோன்றுக" என்றபடி உலகத்தில்தோன்றுபவர் புகழுடன்நிற்க வேண்டு மாதலாலும், அதற்குமாறான பழியைப் பெற்றவர் உலகத்துப்பிறந்த

பயனைப் பெறாமற் போவதால் அவர் பிறந்தும் பிறவாதவர்போலாவ ராதலா லும், நீ உயிர்தன்னைத்துறந்தால் பழிநீங்கிப் புகழ்பெறுதல் கூடுமென்பான், 'தூயையுமாதி யுலகத்தே பிறந்தாயாதி' என்கின்றான். உயிர் நித்த மென்ற கொள்கைபற்றி, 'மாயாவுயிர்' என்றானுமாம். பி ம்:—[1]ஆதியுன். [2]தூய்மையு மாயிவ். (அ௬௩)

வேறு.

அஅ.—பரதன் கைகேயியினருகிலிருக்கப் பிடியாமல் கோசலையுள்ளவிடத்துக்குச் செல்லுதல்.

இன்னணம் [1]இளையவன் விளம்பி யா[2]னுமிப்
பன்னருங் கொடுமனப் பாவி பாடிரேன்
றுன்னருந் துயர்கெடத் தூய கோசலை
பொன்னடி தொழுவனென் றெழுந்துபோயினான்.

(இ - ள்.) இளையவன்-(இராமபிரானுக்கு அடுத்த) தம்பியாகிய பரதன், இன்னணம் விளம்பி - இவ்வாறு கூறிவிட்டு, 'யான்உம்-நானும், பன்ன அரு கொடு மனம் இ பாவி பாடு-சொல்லொணாத கொடுமையைக்கொண்ட மனத் தோடுகூடிய இந்தப் பாவியினிடம், இரேன்—; துன்ன அரு துயர் கெட - இங்குஇருத்தலால் தோன்றுகின்ற) கிட்டுதற்குஅரிய மனத்துயர் போம்படி, தூய கோசலை - பரிசுத்தகுணமுடைய கௌசலையின், பொன் அடி தொழு வன்-சீர்பாதங்களை வணங்குவேன்,'என்று—, எழுந்துபோயினான்—;(எ-று.)

இவ்வளவு தூரம்தன்மனவருத்தத்தைச் சொல்லியும்,அந்தக்கைகேயியின் கொடுஞ்செயலைசசுட்டிக்காட்டி அதற்குப் பரிகாரத்தை யெடுத்துச்சொல்லி யும் அந்தக்கைகேயி மனநெகிழ்ச்சிகூடக்கொள்ளாமல் முன்போலவேயிருப் பது கண்ட பரதன், அங்கு இருத்தற்கும் மனங்கொள்ளாமல் கோசலையா ருள்ள இடத்துக்குச் செல்வே னென்று எழுந்துபோயின னென்க. இரேன்- தன்மையொருமை யெதிர்மறைவினைமுற்று; எதிர்மறையாகாரம் புணர்ந்து கெட்டது. இன்னணம் - இன்னவண்ணம்: மரூஉ. கைகேயியை மிக்ககடு மையாகப் பழித்துத் தரையில் நெடுநேரம் ப்ரஜ்ஞையற்றுப் பின் உணர்வு வரப்பெற்றவனாய், பரதன், தன்அருகையையறிந்து அங்கேவந்திருந்த சுமந் திரன்முதலிய மந்திரிகள் தன்கருத்தை யுணரும்பொருட்டு மீளவும்அந்தக்கை கேயியை நிந்திக்கத்தொடங்கித் தான் இராச்சியத்தைப்பெறுமாறு தாயுடன் கலந்து ஆலோசியாமையையும் இராமன்முதலியோர்க்கு வனவாசம் ஏற்பட் டது முதலியனவும் தனக்குத்தெரியாமையையு முணர்த்தினா னாக,அப்போது பரதனது புலம்பலொலியைக்கேட்டுக் கோசலை சுமித்திரையைப்பார்த்து, 'மகாபுத்திமானாகிய பரதன் வந்திருத்தலால் அவனைக் காண விரும்புகிறேன்' என்றுசொல்லிச் சுமித்திரையுடன் பரதனிருக்குமிடத்திற்குப் புறப்பட்டன ளாக,அவ்வேளையிற் பரதன் சத்துருக்கினனுடன் கௌசலையிருக்குங் கிருகத் திற்குவந்தா னென்று முதனூலி லுள்ளது.பி-ம்:—[1]இளையனு,பலபல.[2]இனி.

அ௯.—பரதன் கோசலையைச் சார்ந்து அவள்பாதங்களைப் பிடித்துக்கொண்டு புலம்புதல்.

ஆண்டகை கோசலை [1]யருக ரெய்தினன்
[2]மீண்டுமண் [3]கிழிதர வீழ்ந்து கேழ்கிளர்
காண்டகு தடக்கையிற் கமலச் சீறடி
பூண்டனன் [4]கிடந்தனன் புலம்பி னானரோ.

(இ - ள்.) மீண்டு-(கைகேயியிருந்த அவ்விடத்தினின்று) போய், ஆண் தகை - ஆண்மைக்குணமுள்ள பரதன், கோசலை அருகர் எய்தினன் - கௌசலையின் சமீபத்தைச் சேர்ந்து, மண் கிழிதர வீழ்ந்து - தரை கிழிந்துபோம் படி (சரேலெனக்) கீழேவிழுந்து, கேழ் கிளர் காண்தகு தட கையின் - ஒளி விளங்குகின்ற காணத்தக்க [அழகையுடைய] (தனது) பெரிய கைகளால், கமலம் சிறு அடி பூண்டனன்-தாமரைமலர்போன்ற (அவளது) சிறியபாதங் களை யணிந்தவனாய், [தன் கைகளால் அந்தக் கோசலையாரின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு], கிடந்தனன்-கிடந்தபடியே, புலம்பினான்-புலம்பலானான்; (எ - று.)—புலம்பியதை, மேல் ஐந்துகவிகளிற் காண்க. அரோ - ஈற்றசை.

கௌசலையைச் சார்ந்ததும் பரதன் கீழ்வீழ்ந்து அவளது பாதங்களைப் பற்றியவண்ணம் தரையிற்கிடந்தபடியே புலம்பலாயின னென்க. அருகர் - போலி. பி-ம்:—[1]அருகின். [2]கீண்டு. [3]கிழிபட. [4]கிடந்திடைப். (அ௯)

௯௦.—இதுமுதல்ஐந்துகவிகள் - பரதன் புலம்புதலைத் தெரிவிக்கும்.

எந்தையெவ் வுலகுளா னெம்முன் யாண்டையான்
வந்தது தமியெனிம் மறுக்கங் காணவோ
சிந்தையி னுறுதுயர் தீர்த்தி ரா'லெனு
மந்தரத் தமராரு மழுது சோரவே.

(இ - ள்.) (அப்போது பரதன்),—அந்தரத்து அமரர்உம் அழுது சோர- (தான் புலம்பும்நிலையைக்கண்டு) வானத்துள்ளார் தேவரும் அழுது சோரு மாறு,'எந்தை எ உலகு உளான்-என்தந்தை எந்தவுலகத்தே சென்றிட்டான்! எம்முன் யாண்டையான் - என்அண்ணன் எங்கே போய்விட்டான்! தமி யென் - (தந்தையுடனும் அண்ணனுடனும் சேர்ந்துஇருக்கும் பாக்கியததைப் பெறாமல்இப்போது) தனிப்பட்ட யான், வந்தது - (என் பாட்டனார்வீட்டி லிருந்து) வந்தது, இ மறுக்கம் காண ஓ - இந்தக் கலக்கமான நிலையைக் காண்பதற்காகவோ? சிந்தையின்-(என்) நெஞ்சில், உறு-பொருந்திய, துயர் - துன்பத்தை, தீர்த்திர் - போக்குங்கள்', எனும் - என்பான்; (எ - று.)

இராமபிரான் கானகஞ்சென்றானென்பதும் தசரதமன்னவன் இறந் திட்டானென்பதும் பரதனுக்குத் தெரியுமாதலால், 'எந்தையெவ்வுலகுளான் எம்முன்யாண்டையான்' என்பன-வினாக்களல்ல:யான் பாட்டனூரிலிருந்து வருதற்குள் இராமபிரான் காட்டிற்குஏகவும் தசரதன்இறந்துபடவும் நேர்ந்

தனவே!என்ற இரக்கத்தைக் காட்டும்: அதனையே'வந்தது இம்மறுக்கம் காணவோ' என்பதனால் தெரிவிக்கின்றனன். தீர்த்திர் என்ற முற்றுக்கு எழுவாய், துயரத்திற்கு விஷயமாய் மனத்தில்தோன்றுகின்ற தசரதனும்இராமனுமாவர்: கௌசலையாரெனினுமாம். தேவர்கட்கு இராவணாதியர் செய்யுங் கொடுமையினால் விளைந்த மனத்துயரத்தினும் பரதனுடைய புலம்பலால் தோன்றுந் துயரம் மிக்கதென்பது, ஈற்றடியாற் பெறப்படும். அமரரும், உம் - உயர்வுசிறப்பு: இராமபிரான் கானகஞ்செல்லவேணு மென்ற தேவரு மென்க. ஆல் அசை, இரக்கக்குறிப்புமாம். பி - ம்:—[1]என்றான். (அகூகூ)

கூக. அடித்தலங் கண்டிலென் யானெ னையனைப்
[1]படித்தலங் காவலன் [2]பெயரற் பாலனோ
பிடித்திலிர் போலுநீர் பிழைத்தி ர[3]லெனும்
பொடித்தலந் தோளுறப் புரண்டு [4]சோர்கின்றான்.

(இ-ள்.) (பின்னும் பரதன்),—பொடி தலம் தோள் உற புரண்டு சோர்கின்றான் - புழுதிமண் தோளிற்படும்படி (நிலத்திலே) புரண்டவண்ணம் மனஞ் சோர்பவனாய்,—'யான்—, என் ஐயனை-எனது தலைவனாகிய ஸ்ரீராமபிரானது, அடித்தலம் - திருவடித்தலத்தை, கண்டிலென் - காணப்பெற்றிலேன்; காவலன் - இப்பூமிக்குப்பதியாகிய அந்த இராமபிரான், படித்தலம் பெயரல் பாலனோ - இந்தக் கோசலநாட்டைவிட்டு (க் கானகஞ்) செல்லுதற்குத் தக்கவனோ? நீர்-, பிடித்திலிர் போலும்-(இராமபிரான் காட்டிற்குச்செல்கையில் அப்பிரானைப் போகவிடாது) தடுத்தல் செய்திலீர் போலும்; பிழைத்திர் - (அங்ஙனம் தடுக்காமையால்) பிழைசெய்தீர்', எனும் - என்பான்; எ - று.)—ஆல் - இரக்கத்தைக் குறிப்பிக்கும்.

படித்தலங்காவலன் பெயரற்பாலனோ என்ற தொடர் - இராமபிரான் பூமியின்மீது தன் தாளால் நடந்துசெல்லுதற்கு உரியவனோஎனவும் பொருள்படும். 'நீர்' என்று கோசலையை முன்னிலைப்படுத்தியவாறு. பி - ம்:—[1]பிடித்திலன். [2]பிரியல். [3]எனப். [4]சோருமால். (அகூஎ)

கூஉ. கொடியவர் [1]யாவருங் குலங்கள் [2]வேரற
[3]நொடிகிலர் யா[4]னது நுவல்வ தெங்ஙனங்
கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்
[5]முடிகுவ னருந்துயர் முடிய வென்னுமால்.

(இ - ள்.) கொடியவர் யாவர்உம்-(இராமபிரான் கானகஞ்செல்லுமாறு) கொடுமைசெய்த எல்லாரும், குலங்கள் வேர் அற - குலத்தோடு நிர்மூலமாய் விடும்படி, நொடிகிலர் - அழிந்திட்டாரில்லை: யான்-, அது - அதைப்பற்றி, நுவல்வது - சொல்வது, எங்ஙனம் - எவ்வண்ணம்? கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன் - கொடியவளாகிய கைகேயியினது வயிற்றிலேபிறந்த வஞ்சனைக்குணத்தையுடைய நான், அரு துயர் முடிய - (போக்குவதற்கு) அரிய (என்) மனத்துயரம் தீருமாறு, முடிகுவன் - உயிர் நீங்குவேன்', என்னும் - என்று வருந்திக்கூறுவான்; (எ - று.)

இராமபிரானைக் காட்டிற்குச்செல்லுமாறு சூழ்ச்சிசெய்தார் யாவரும் நிர்மூலமாக ஒழிந்திடவேணும்: அங்ஙனம் ஒழிந்திட்டாரில்லை: இத்தீய செயற்கு முதற்காரணமாயிருந்தவளின் வயிற்றிற் பிறந்தவனாதலால் இவ்விஷயத்தை யான் சொல்லுதற்குந் தகுதியுடையேனல்லேன்: ஆதலால், இதைப்பற்றி யாதொன்றுஞ் சொல்லாது என்னுயிரைப்போக்குவதே தகுதி யெனப் புலம்பினன் பரதனென்க. [3]நொடிகிலாஎன்று படித்து [5]முடிகிலன் என்ற பாடங்கொள்ளின் - இராமபிரானிடத்துப் பேரன்பிருந்தால் அவனுக்குத் தீங்கு செய்தவர் நிர்மூலமாக அழியும்படி செய்திருக்கவேணும்; அதுவும் செய்திலேன். இனி என் உயிர் நீங்கப்பெற்றிருப்பேனாயின் என் துயரமாவதுநீங்கியிருக்கும்: அதுவும் செய்திலேன்: இவ்விரண்டுஞ் செய்யாத யான் இராமனிடத்து அன்புள்ளேனென்பதுஎப்படி ? என வருந்திக்கூறினன் பரதனென்க. அதுஎன்பது - தன் மனத்துள்ள இராமனிடத்து அன்பைச் சுட்டுமெனினுமாம். பி - ம்:—[1]அயாவரக். யாரையுங். [2]வேரறும். [3]நொடிவரின், நொடிகுவன், நொடியினில். [4]இது. (அகூஅ)

கூஙு. இரதமொன் றூர்ந்துபா ரிருளை [1]நீக்குமவ்
வரதனி லொளிபெற [2]மலர்ந்த தொல்குலம்
பரதனென் றொருபழி படைத்த தென்னுமான்
மரகத மலையென வளர்ந்த தோளினான்.

(இ - ள்.) மரகதம் மலை என வளர்ந்த தோளினான் - மரகதமலைபோல வளர்ந்துள்ள தோளையுடையவனான பரதன்,—'இரதம் ஒன்று ஊர்ந்து-(ஒற்றைச்சக்கரமுள்ள ஸம்வத்ஸரரூபமான) ஒருதேரின்மே லேறிவந்து, பார் இருளை நீக்கும் - உலகத்துத் தோன்றிய இருளைப் போக்குகின்ற, அ வரதனில் - அந்தச்சூரியன்தொடங்கி, ஒளி பெற மலர்ந்த - ஒளியையடையுமாறு மலர்ந்துள்ள, தொல் குலம் - பழமையாகிய இந்த அரசவமிசமானது, பரதன் என்ற ஒரு பழி - பரதனென்று கூறப்படுகின்ற ஒரு பழியுடைப்பொருளை, படைத்தது - பெற்றிட்டது', என்னும் - என்று கூறுவான்; (எ - று.)

சூரியன்தொடங்கி உலகத்துக்கு நன்மையேசெய்வதனால் ஒளிபெற்று மலர்ந்திருந்த இந்தக்குலம்,பரதனென்ற என்னால் பழிபடைத்துக் குவியும்படியாயிற்றேயென்று வருந்தினானென்க. பரதன்என்று தன்னைப் பிறன்போலக் கூறுகின்றான். சூரியநமஸ்காரஞ்செய்வார்க்குச் சூரியன் ஆரோக்கியத்தைக் கொடுப்பவனென்பது பிரசித்தமாதலாலும்,சூரியமண்டலமத்தியவர்த்தியான ஸ்ரீமந்நாராயணன் உபாஸித்தார்க்கு மோட்சம்அளிப்பானென்பது வேதத்தாற் பெறப்படுதலாலும், பகலவனை 'வரதன்' என்றான். [2]வளர்ந்த என்ற பாடத்திற்கு, வரதனில்என்பதைவளர்ந்த என்பதனோடு இயைக்காமல் ஒளி பெற என்பதனோடு இயைத்து,வரதனைப்போல் என்று ஒப்புப்பொருவாகவும் வரதனைக்காட்டிலும் என்று உறழ்பொருவாகவும் உரைப்பினுமாம். பழிக்குக் காரணமான தன்னைப் பழியென்றே கூறுகின்றான். 'என்ற' என்னும் பெயரெச்சத்தின் அகரம்தொக்கது. பி ம்:—[1]நீக்கிய,நீக்குநம். சிலபிரதிகளில்''வாடொடு''என்று தொடங்கும் அடுத்தபாடலுக்குப் பின் இச்செய்யுள் உள்ளது.

௩௪. [1]வாடொடு தானையான் வானில் வைகிடக்
காடொரு தலைமக னெய்தக் [2]கண்ணிலா
நாடொரு துயரிடை [3]நைவ தேயெனுந்
தாடொடு தடக்கையத் தரும மேயனான்.

(இ-ள்.) தாள் தொடு தட கை அ தருமம் ஏ அனான்-முழந்தாளைப் பரிசிக்குமாறு நீண்ட கைகளைப்படைத்தவனான தருமம்வடிவெடுத்தாற்போன்ற அந்தப்பரதன்,-'வாள் தொடு தானையான் வானில் வைகிட - வாளையேந்திய சேனைகளைக்கொண்டவனான தசரதன் வானுலகஞ் சேரவும்,-ஒரு தலைமகன் காடு எய்த-(அவ்வரசனது) ஒப்பற்ற மூத்தகுமாரன் காட்டைச் சேரவும்,(இப்படி அரசுபுரிந்தவனும் அரசுபெறுதற்கு உரியவனும் இல்லாமையால்), கண் இலா - கண்களனையவரைப் பெறாத, நாடு-இந்தக் கோசலதேசம், ஒரு துயரிடை - ஒப்பற்ற துன்பத்தினால், நைவது ஏ - வருந்தும்படியாவதே!' எனும்-என்பான்; (எ - று.)

கண் - கண்களனையவர்: இரட்சிப்பவ ரென்றபடி. இனி, தசரதனும் இராமனும் நாட்டிற்குக் கண்போல்பவரானதனால், அவ்விருவரையும் இழந்த நாட்டை 'கண்ணிலாநாடு' என்றா னெனினும் பொருந்தும். ஏ - இரக்கம்.
பி-ம்:—[1]வாடொகு. [2]காண்கிலா,காண்கிலான். [3]நையவோவெனும்,நைவதோ வெனும், நடப்பதோவெனும், நலிவதோவெனும். (௩௦௦)

௩௫.—பரதன் குற்றமற்றவனென்று தெரிந்த கோசலை கூறத் தொடங்குதல்.

புலம்புறு குரிசிறன் [1]புலர்வு நோக்கினள்
குலம்பொறை கற்[2]பிவை சுமந்த கோசலை
நிலம்பொறை யாற்றல னெஞ்சந் தூய்தெனாச்
சலம்பிறி துறமனந் தளர்ந்து கூறுவாள்.

(இ - ள்.) குலம் - உயர்குடிப்பிறப்பும், பொறை-பொறுமையும், கற்பு-பதிவிரதா தருமமும், இவை - (என்ற) இக்குணங்களை, சுமந்த - (தன்னிடத்துக்) கொண்டுள்ள, கோசலை-கௌசல்யையானவள்,—புலம்புறு-(அழுகை) புலம்புகின்ற, குரிசில்தன் - ஆண்களிற் சிறந்தோனாகிய பரதனது, புலர்வு - மனத்துயரை, நோக்கினள்-பிரதியட்சமாகக் கண்டவளாய், '(இந்தப்பரதன்), நிலம் பொறைஆற்றலன்-இராச்சியபாரஞ்செய்ய விரும்பினவனல்லன்;நெஞ்சம் தூய்து-இவன்மனம் களங்கமற்றது', எனா-என்று உணர்ந்து,சலம் பிறிது உற-(பரதனும் இராச்சியத்தைப்பெற உடந்தையானவனென்ற ஒரு கருத்தினால் தன்மனத்து முன்னிருந்த) சீற்றம் வேறுபட [நீங்க], மனம் தளர்ந்து-, கூறுவாள் - சொல்பவளானாள்; (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

பொறையாற்றுதல் - பாரத்தைச்சுமத்தல். சலம் வடசொல். பி-ம்:—
[1]புலம்பல். [2]அவை. (௩௦௧)

## ௬௬.—கைகேயியின்வஞ்சனை உனக்குத் தெரியாதுபோலுமென்று கோசலை கூறுதல்.

மையறு மனத்தொரு மாசு ளானலன்
செய்யனே யென்பது [1]தேருஞ் சிந்தையாள்
கைகயர் [2]கோன்மக ளிழைத்த கைதவ
மையநீ [3]யறிந்திலை போலு மாலென்றாள்.

(இ-ள்.) '(இந்தப்பரதன்), மை அறு-(இயற்கையிற்) களங்கமற்றதான, மனத்து-(தன்) மனத்திலே, ஒரு மாசு உளான் அலன்-(செயற்கையாகவும்) ஒரு குற்றமுமுடையவனல்லன்: செய்யன் ஏ - நேர்மையுடையவனே', என் பது-என்பதனை, தேரும்-ஆராய்ந்துணர்ந்த, சிந்தையாள்-மனத்தையுடையவ ளாய்,-(அக்கோசலை),-'ஐய-ஐயனே! நீ-,கைகயர் கோன் மகள் இழைத்த கை தவம்-கேகயநாட்டார்க்கு அதிபதியாகிய அசுவபதியினதுமகளாகிய கைகேயி செய்த வஞ்சகச்செயலை, அறிந்திலை போலும் - (முன்னமே) தெரிந்தில்லாய் போலும்,' என்றாள்—; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

ஐய-அன்புபற்றியமரபுவழுவமைதி. பி-ம்:—[1]தெரியும். [2]கோ. [3]அறிகிலை.

## ௬௭.—பரதன் அச்சொல்லைக் கேட்டுச் சபதஞ்செய்யத் தொடங்குதல்.

தாளுறு குரிசிலத் தாய்சொற் கேட்டலுங்
கோளுறு மடங்கலிற் [1]குமுறி விம்முவா
னாளுறு நல்லற நடுங்க நாவினாற்
சூளுறு கட்டுரை சொல்லன் மேயினான்.

(இ - ள்.) தாள் உறு குரிசில்-(கோசலையின்) கால்களில் விழுந்து கிடக் கின்ற பரதன், அ தாய் சொல் கேட்டலும்-கோசலைசொன்ன அச்சொல்லைக் கேட்டவுடனே, கோள் உறு மடங்கலின் - (பொறிகொண்டு) பிடிக்கப்பட்ட சிங்கம்போல, குமுறி-பேராரவாரந்தோன்ற ஒலிசெய்து, விம்முவான் - அழு பவனாய்,-நாள் உறு நல் அறம் நடுங்க-நாடோறும் மேற்கொண்டுநடத்துகின்ற தருமத்திற்குஉரிய தேவதையும் நடுக்கமடையும்படி, நாவினால்-(தனது) நாவி னால், சூள் உறு கட்டுரை-சபதமாகச் சொல்லப்படும்உறுதிமொழிகளை, சொல் லல்-சொல்லுதற்கு, மேயினான்-தொடங்கினான்; (எ - று.)—அச்சூளுரைகளை மேல் ௨௦-கவிகளிற் காண்க.

"கமலச்சீறடி,பூண்டனன் கிடந்தனன் புலம்பினனரோ"எனக் கீழ்வந்த தனால்,'தாளுறு குரிசில்'என்றார்.'கைகயர்கோன்மக ளிழைத்த கைதவம் ஐயநீ யறிந்திலைபோலும்' என்ற சொல்லில், கோசலை 'பரதனும் அறிந்தே கைகேயி இக்கைதவத்தைச் செய்தாள்'என்று ஐயங்கொண்டிருந்தன ளென்றது புலப் படுதலால்,அவ்வையம் நீங்குதற்குச் சபதஞ்செய்யலாயினன் பரத னென்க. சத்துருக்கனனுடனே பரதன் சென்று பிரஞ்ஞையின்றி அழுதுகொண்டிருக்

கும் கோசலையின் அருகிற்சார்ந்து அவளைப்பார்த்து இருவரும்கதறிக்கொண்டே அவளைக்கட்டிக்கொள்ள, அப்போது அக்கௌசலை பெருந்துயரத்தோடு பரதனைப்பார்த்து 'இராச்சியத்தின்பொருட்டு ஆசைப்பட்டுக்கொண்டிருந்த உனக்கு உன்தாய் இராச்சியத்தை வாங்கிவைத்திருக்கிறாள்: நீ இனிது ஆளலாம்: என்னை இராமனுள்ளகாட்டகத்திற் கொண்டுவிடுக' என்பவைமுதலியவாகச் சிலகூற, அவளுடையமனத்தைத் தெளிவிக்கும்பொருட்டுப் பரதன் பலசபதமொழிகள்கூறினனென்று முதனூலில் வருகிறது. கடுஞ்சபதஞ்செய்யக்கேட்டோர்க்கு மனம்நடுங்குதல் இயல்பு ஆதலால், தருமத்தின்மேல்வைத்துப் பலவகைச்சபதஞ்செய்தபோது அத்தருமதேவதை நடுங்கிற்றென்க. நாடுறு என்பது டகரத்துக்குளகரத்தைப் போலியாகப் பெற்றுவந்ததெனக்கொண்டு, நாளுறுநல்லறம் என்பதற்கு-நாடிச்செய்கின்ற சிறந்ததருமத்திற்கு உரியதேவதை என்பாருமுளர். பி-ம்:—[1]குழறி.　　　(கூ0ரு)

கூஅ.—இதுமுதல் இருபதுகவிகள் - பரதன்செய்த பலவகைச் சபதங்களைத் தெரிவிக்கும்.

அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினன்
பிறன்கடை நின்றவன் [1]பிறரைச் சீறினோன்
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
றுறந்தமா தவர்க்கருந் துயரஞ் சூழ்ந்துளோன்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அறம் கெட முயன்றவன்-(பிறர்செய்த) தருமச்செயல் கெட்டழியும்படி முயற்சிசெய்தவனும், அருள் இல் நெஞ்சினன்-இரக்கமென்பது சிறிதும் இல்லாத நெஞ்சையுடையவனும், பிறன் கடை நின்றவன்-அயலார் தலைவாயிலில் நின்றவனும், பிறரை சீறினோன்-(காரணமின்றி) அயலார்மீது கோபங்கொண்டவனும், மறம் கொடு மன் உயிர் கொன்று வாழ்ந்தவன் - மனக்கொடுமையால் நிலைபெற்ற பிராணிகளைக் கொன்று அந்தமூலமாகச் சீவனஞ் செய்பவனும், துறந்த மாதவர்க்கு அரு துயரம் சூழ்ந்து உளோன்-(அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப்பற்றுக்களையுந்) துறந்த பெருந்தவசியர்திறத்தில் (அவர்க்குக்) கொடுந்துன்பமுண்டாகுஞ்செயலை வேணுமென்று செய்பவனும்,—(எ-று.)—குளகமாகவந்த செய்யுள்கட்கு "நண்ணுமத், தீயெரிநரகத்துக் கடிதுசெல்கயான்" (கoக) என முடிபு காண்க.

எனக்குத் தெரிந்து இராமனைக்காட்டிற்குச்செலுத்துதலென்பதுநிகழ்ந்திருக்குமாயின், அப்போது அறங்கெடமுயன்றவன் முதலானோர்க்குக்கிடைக்கும் நரகம் எனக்கும் கிடைக்கட்டும் என்று பரதன் சபதஞ் செய்தானென்க. மேல்வரும் பாடல்கட்கெல்லாம் இங்ஙனமே பொருள் காண்க. வால்மீகரைப்போலவே கம்பரென்ற பெரும்புலவரும் பரதன் சபதஞ்செய்வதை வியாஜமாகவைத்து உலகத்தோர்க்கு அருமையான்சிலஅறங்களைத் தெரி

விக்கின்றன ரென்க. பிறன்கடைநிற்றல்-அவர்பொருளைச் சமயம்வாய்க்கும்
போது கவர்தற்கு என்னலாம்;அயலார்மனைவியைத் தன் பெண்டாகக்கொள்
ளுதற்கு என்று உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]பிறர்கடை, பிறப்பைச். (௯௦௪)

௯௯. [1]குரவலர் குழலியை வாளிற் கொன்றுளோன்
புரவலன் [2]றன்னொடு மமரிற் புக்குடன்
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோ
[3]னிரவல [4]ரிருநிதி யெறிந்து வௌவினேன்.

(இ-ள்.) குரவு அலர் குழலியை வாளில் கொன்று உளோன்-குராமலர்
மலரப்பெற்ற கூந்தலையுடைய பெண்ணை வாளினாற் கொன்றவனும்,—புரவ
லன் தன்னொடும் அமரில் உடன்புக்கு - (தன்)அரச(னுக்குத்துணையாகப்
பொருமாறு அவ)னோடும் முனைமுகத்தில் ஒருங்கு புகுந்து, (பிறகு அஞ்சி),
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுஉளோன் - பகைவர் (தன்) முதுகைக்
காணுமாறு (முதுகுகொடுத்து) ஓடிவந்தவனும், இரவலர் இரு நிதி எறிந்து
வௌவினேன்-பிச்சையெடுத்துக் கையிற்சொற்பப்பொருளைப்பெரும்பொரு
ளாக எண்ணிவைத்திருப்பவருடைய அப்பொருளை வலிந்துகவர்ந்தவனும்,—
(எ - று.)—பி-ம்:—[1]குரவரைமகளிரை. [2]உறுபொருள்புனைவில் வாரினேன்.
[3]இரவலன். [4]அரு. (௯௦௫)

௧௦௦. தழைத்ததண் [1]டுளவினோன் றலைவ னல்லனென்
[2]றழைத்தவ னறநெறி யந்த ணாளரிற்
[3]பிழைத்தவன் [4]பிழைப்பிலா மறையைப் பின்னிநின்
றிழைத்தவ ருளரென விழுதை [5]நெஞ்சினேன்.

(இ-ள்.) தழைத்த தண் துளவினோன் தலைவன் அல்லன் என்று அழை
த்தவன்-செழித்துள்ள குளிர்ந்த திருத்துழாய்மாலையையணிந்துள்ள திருமால்
பரம்பொருளல்லனென்று சொல்பவனும், அறம் நெறி அந்தணாளரில் பிழைத்
தவன்-தருமநெறிதவறாத பிராமணர்திறத்திற் பிழைசெய்தவனும், பிழைப்பு
இலா மறையை-(மனிதரால்செய்யப்பட்டதென்னும்)குற்றமில்லாத [அபௌ
ருஷேயமான] வேதத்தை, பின்னி நின்று இழைத்தவர் உளர் எனும்-(புதிது
புதிதாக)முடைந்துகொண்டுசெய்தவர் உள்ளாரென்று சொல்லுகிற,இழுதை
நெஞ்சினேன்-அறிவின்மைகொண்ட நெஞ்சையுடையவனும்,—(எ - று.)

கவி தாம் வைணவரென்பது தோன்றுமாறு, தழைத்ததண்டுளவினோன்
தலைவனல்லனென்றழைத்தவன் நரகெய்துவா னென்றார். வேதம்.அபௌரு
ஷேயமாயிருக்க, அந்தவேதத்தைக் குறித்துப் பலருங்கற்பித்து முடைந்து
சேர்த்ததனால்தோன்றியன இந்தவேதங்க ளென்றுகூறும் பழுதுபட்ட கருத்
துடையவன் நரகெய்துவானென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து.
பி-ம்:-[1]துளநினேன். [2]அழைத்தவர். [3]பிழைத்தவர். [4]பிழைப்பிலாமறையைப்
பேணலா-திழைத்தவன்பொய்யெனும், பிழைப்பிலாமறையைப் பின்னவர்க்-

கிழைத்தவரிலனெனும், அன்பிலாமறையைப்பேணலா-திழைத்தவன் பொய்யெனும். [5]நெஞ்சினோ. சிலபிரதிகளில் இச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் முன்பின்னாக மாறியுள்ளன. (௬௦௬)

௧௦௭. தாய்பசி யுழந்துயிர் தளரத் தான்[1]றனிப்
பாய்பெரும் பாழ்வயி றளிக்கும் பாவியு
நாயகன் [2]படநடந் தவனு நண்ணுமத்
தீயெரி நரகத்துக் கடிது செல்கயான்.

(இ - ள்.) தாய் பசி உழந்து உயிர் தளர-(தன்) தாய் பசியினால் வருந்தி உயிர்சோர்ந்திருக்கவும், (அவளுக்குப் பசி நீங்க அன்னமிடாது), தான்—, தனி பாய் பெரு பாழ் வயிறு அளிக்கும் பாவி உம் - தனியே பரந்த பெரிய பாழ்வயிற்றினை (அன்னமிட்டு) ஓம்புகின்ற பாவியும், நாயகன் பட நடந்தவன் உம் - (தன்) தலைவன் களத்திலேயிறக்கும்படி அவனைக் கைவிட்டுச் சென்றவனும், நண்ணும் - சேர்கின்ற, அ தீ எரி நரகத்து - அந்தநெருப்புப் பற்றியெரிகின்ற நரகத்திலே, (இராமபிரான் காடுசெல்ல உடந்தையாயின்),-யான் கடிது செல்க-யான்விரைந்துசெல்லக் கடவேன்; (எ - று. —தீயெரி நரகம் - நரகவிசேடத்தொன்று. பி-ம்:—[1]அனம். [2]களப்படத்தவ றாநண்ணும், களப்படத்தவ்வாநண்ணும். (௬௦௭)

௧௦௨. [1]தாளினி லடைந்தவர் தம்மைத் [2]தற்கொரு
கோளுற [3]வஞ்சினன் கொடுத்த பேதையு
நாளினு [4]மறமறந் தவனு [5]நண்ணுறு
மீளரு [6]நரகிடைக் [7]கடிது வீழ்கயான்.

(இ ள்.)(நான் அறிந்து இராமபிரான் கானகஞ்சென்றிருந்தானானால்),— தாளினில் அடைந்தவர்தம்மை தற்கு ஒரு கோள் உற அஞ்சினன் கொடுத்த பேதைஉம் - (என்னைப் பாதுகாக்கவேணுமென்று சொல்லித் தன்) பாதங்களில் அடைக்கலம்புகுந்தோரைத் தான் பாதுகாப்பின் அதனால்) தனக்கு ஒரு தீமை நேருவதற்கு அஞ்சிப் பாதுகாவாமல் (எதிராளிகையிற்காட்டிக்) கொடுத்திட்ட நல்லறிவில்லாதவனும், நாளின்உம் அறம் மறந்தவன்உம்-எந்நாளும்அறத்தைமறந்துநடப்பவனும், நண்ணுறும்-அடைகின்ற, மீள அரு நரகிடை-மீளா [பலநாள்கிடக்கவேண்டிய] நரகத்திலே, கடிது யான் வீழ்க—.

தன்னுயிர்க்குத்தீங்குநேர்வதாயினும் அடைக்கலமடைந்தோரைக் கைவிடலாகாது: கைவிட்டால் அவர்க்குப் பெருநரகம் கிடைக்கு மென்க. கடிது வீழ்கஎன்பதற்கு முன் "தீயனகொடியவள்செய்த செய்கையை நாயினேனுணரின்" (௧௧௭)என்பதைக் கூட்டிப்பொருள்காண்க: ௧௧௬-ஆங்கவிவரையில் இத்தொடரைக் கூட்டிக்கொள்க. அஞ்சினன் - முற்றெச்சம். பி-ம்:—[1]தாணிழலடைந்தவர், தாளடைந்துறைபவர், தாளுறவடைந்தவர். [2]தாமொரு. [3]அஞ்சியே, வருதலிற். [4]நறைநுகர்பவனும், நன்கிலாதவனும். [5]நண்ணிய. [6]நரகத்துக். [7]விரைவின். (௬௦௮)

௧௦௯. பொய்க்கரி [1]கூறினேன் [2]போருக் [3]கஞ்சினேன்
[4]கைக்கொளு மடைக்கலங் கரந்து [5]வவ்வினே
னெய்த்திடத் திடர்செய்தோ னென்றிந் னோர்புகு
மெய்க்கொடு [6]நரகிடை [7]விரைவின் வீழ்கயான்.

(இ-ள்.) (என்னுடன்தையால் இராமபிரான் காட்டிற்கு அனுப்பப்பட்டிருப்பின்),-பொய் கரி கூறினேன்-(நியாயசபையிற் சென்று) பொய்ச்சாட்சி சொன்னவனும், போருக்கு அஞ்சினேன் கைக்கொளும் அடைக்கலம் கரந்து வவ்வினேன்-போர்புரிதற்கு அஞ்சிநின்றவன் கையிற்கொண்டுள்ள அடைக்கலப்பொருளை மறைந்துநின்று பறித்துக்கொண்டு சென்றவனும், எய்த்த இடத்து இடர் செய்தோன்-(ஒருவர் தமக்கு)ஆபத்துநேரிட்டு வருந்துகையில் (பின்னும்) அவர்க்குத் துன்பத்தை விளைத்தவனும், என்ற இன்னோர் - என்கின்ற இவர், புகும் - அடைகின்ற, கொடு மெய் நரகிடை - கொடுந்தன்மையைக்கொண்ட நரகத்தில், விரைவின் யான் வீழ்க—; (எ - று.)

போருக்கஞ்சினேன் என்பதைத் தனியே எடுப்பின் - முனைமுகத்துச் சென்று மனத்திடமின்றிப் போர்புரிதற்கு அஞ்சிப் பின்னிட்டவனென்று பொருளாம்: ஆயினும், "விரவலர் வெரிநிடை விழிக்கமீண்டுளோன் (கக), நாயகன் படநடந்தவன்(கoக)"என்ற தொடர்களால்,போருக்கு அஞ்சியவன் நரகம்புகுதல் கூறப்பட்டமையான் கூறியதுகூறலா மாகுதலால், அப்பொருள் சிறவாது எய்த்திடத்து - தொகுத்தல். பி - ம்:—[1]கூறினோர், கூறினன். [2]போரில், போரின். [3]அஞ்சினர், அஞ்சினன். [4]கைப்படுத்தடைக்கலம். [5]வவ்வினோர். [6]நரகத்துக். [7]கடிதுவீழ்கயான், வீழ்கயானுமே. சிலபிரதிகளில் இச்செய்யுள் இல்லை: இவ்விடத்து கoடு - வது செய்யுளாகவுள்ள "கன்றுயிரோய்ந்துக" என்ற செய்யுள் உள்ளது. (கoக)

கoச. அந்தண ருறையுளை [1]யனலி [2]யூட்டினேன்
[3]மைந்தரைக் கொன்றுளோன் வழக்கிற் [4]பொய்த்துளோன்
நிந்தனை [5]தேவரை [6]நிகழ்த்தி னேன்புகும்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே.

(இ-ள்.) (என்னுடன்தையால் இராமபிரான் காட்டிற்கு அனுப்பப்பட்டிருப்பின்),—அந்தணர் உறையுளை அனலி ஊட்டினேன்-பிராமணர்கள் வசிக்கின்ற இடத்தில் தீப்பற்றவைத்தவனும், மைந்தரை கொன்றுளோன் - சிறுவரைக் கொன்றவனும், வழக்கில் பொய்த்து உளோன்-(தான் நியாயாதிபதியாயிருந்து) வியாச்சியத்தில் தவறாக நியாயத்தைத் தீர்த்தவனும், தேவரை நிந்தனை நிகழ்த்தினேன்-தேவதைகளை(க்காரணமின்றி)ப்பழித்தவனும்,புகும்-அடைகின்ற, வெம் துயர் நரகத்து - கொடிய துக்கத்தை யுண்டாக்கக்கூடிய நரகத்தில், யான்உம் வீழ்க—; (எ - று.)

வாழ்கின்றஇல்லில் தீயூட்டுதலே நரகிற்குக் காரணம்: அதிலும் அந்தணர் வாழிடத்தில்தீயூட்டுதல் பெருநரகத்தை விளைக்கு மாதலால்,அதனைத் தனியேயெடுத்துக்கூறினார். மைந்தரைக் கொல்லுதல் - பெற்றபிள்ளையைக் கொல்லுதல்: அன்றி, சிறுகுழந்தைகளைக் கொல்லுதலுமாம். குழந்தைகளைக் கொல்லுதல் 'சிசுஹத்யா' எனப்படும். பொய்ச்சாட்சிகூறினவன் பொய்க்கரி கூறினேன் என்று கீழ்க்கூறப்பட்டதனால், வழக்கிற்பொய்த்துளோன் என்ப

தற்கு - தானறிந்து பொய்த்தீர்ப்புச்சொன்னவன் என உரைக்கப்பட்டது. இனி, பொய்வழக்குக் கூறியவன் [தப்புவியாச்சியந் தொடுத்தவன்] எனினு மாம்.காரணமின்றிக் கடவுளரைப்பழித்தல் பாதகமாதலால்,'நிந்தனைதேவரை நிகழ்த்திஞேன்'என்ருர். பி-ம்:—[1]அனலில்,அனலின். [2]ஊட்டிஞேர். [3]மைந் தனைக்கொன்றுளோர், மைந்தனை நோக்கிலோன், வந்தனை நோக்கிலார், வந் தனைநோக்கிலோன். [4]பொய்த்துளோர். [5]தேவரின். [6]நிகழ்த்திஞேர். இது "எஃகெறி" (கoஎ) என்றபாடலுக்குப்பின் சிலபிரதியிலுள்ளது. (கூ௯o)

கoரு. கன்றுயி ரோய்ந்துசக் கறந்து பாலுண்டோன்
மன்றிடைப் பிறர்பொருண் மறைத்து வவ்விஞே
னன்றியை [1]மறந்திடு நயமி ஞவிஞே
னென்றிவ ருறு[2]நர கென்ன தாகவே.

(இ - ள்.) (என்னுடந்தையினுல் என்தாய் வரங்கேட்டு இராமனைக் காட் டிற்கு அனுப்பியிருப்பின்),-கன்று உயிர் ஓய்ந்துஉக கறந்து பால் உண்டோன்- கன்று (பாலுண்ணுமையால்)உயிரோய்ந்து வருந்தாநிற்க (அந்தக் கன்றுக்குப் பால்விடாது) கறந்து உண்டவனும்,மன்றிடை பிறர் பொருள் மறைத்து வவ் விஞேன் - (பலர் கூடிய) சபையிற் பிறர் பொருளை (உடையவரறியாதபடி) ஒளித்துக் கவர்ந்தவனும், நன்றியை மறந்திடும் நயம் இல் நாவிஞேன்-பிறர் செய்த உபகாரத்தை மறந்து(தனக்குஉபகாரஞ் செய்த அவரைத்)திட்டுகின்ற நீதியற்ற நாவையுடையவனும், என்ற இவர்—, உறும்-அடைகிற, நரகு—, —என்னதுஆக - எனக்குஉரியதாகுக; (எ-று.) பி-ம்:—[1]மாய்த்தறமறந்த. [2]கதி.

கoசு. ஆறுதன் னுடன்வரு மஞ்சொன் [1]மாதரை
யூறுகொண் டலைக்கத் [2]தன் னுயிர்கொண் [3]டேகிஞேன்
சோறுதன் னய[4]லுளோர் பசிக்கத் [5]துய்த்துளோ
[6]னேறுமக் கதியிடை [7]யானு மேறவே.

(இ - ள்.) (என்னுடந்தையினுல் என்தாய் வரங்கேட்டு இராமனைக் காட் டிற்கு அனுப்பியிருப்பின்),—ஆறு தன்னுடன் வரும் அம் சொல் மாதரை ஊறு கொண்டு அலைக்க தன் உயிர்கொண்டு ஏகிஞேன்-(செல்லும்) வழியிலே தன்னுடனே வருகின்ற அழகிய சொல்லையுடைய மடந்தையை (வழிபறிப் போர்) துன்பத்தை யுண்டாக்கிக்கொண்டு வருத்த (அம்மடந்தையைக் காக்க முயலாமல்) தன்னுயிரைத் தப்புவித்துக்கொண்டு சென்றவனும், தன் அயல் உளோர் பசிக்க சோறு துய்த்து உளோன் - தன்னருகிலிருப்பவர் பசித்தி ருக்க (அவர்கள் பசிதீர்க்க முயலாமல் தான் தனியே) சோற்றையுண்டு தன் பசி யாறியவனும், ஏறும் - அடைகின்ற, அ கதியிடை - (அந்தத்)தீக்கதியில், யான் உம்—, ஏற-சென்றுசேர்க; (எ - று.)

ஏற - வியங்கோள்முற்று. பி - ம்:—[1]மாதரைக்கூறை. [2]தான். [3]ஓடி ஞேன், ஓடிஞேர். [4]சிலர்பசிக்கத், சிலர்பதைக்கத். [5]துய்த்தவர். [6]ஏறியகதி யிடை, ஏறியதீக்கதி. [7]என்னதாகவே. (கூகஉ)

கoஎ. எஃகெறி செருமுகத் தேற்ற தெவ்வருக்
[1]கொஃகின னுயிர்வளர்த் துண்ணு [2]மாசையா
னஃகலி லறநெறி [3]யகற்றி யொண்பொருள்
வெஃகிய மன்னன்வீழ் நரகில் வீழ்கயான்.

(இ - ள்.) (என்னுடன்தையினல் என்தாய் வரங்கேட்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பியிருப்பின்),—உயிர் வளர்த்து உண்ணும் ஆசையான் - (தன்) உயிரைப் பாதுகாக்கவேணுமென்னும் விருப்பத்தைக்கொண்டு, எஃகு எறி செரு முகத்து ஏற்ற தெவ்வருக்கு ஒஃகினன் - படைக்கலங்கொண்டு செய்யப்படுகின்ற போரில் எதிர்த்துநின்ற பகைவருக்கு முன்னின்று பொரமுடியாமல் வணங்கிவிட்டவனும்,-அஃகல் இல் அறம் நெறி அகற்றி ஒள் பொருள் வெஃகிய மன்னன் - சுருங்குதலில்லாத தருமமார்க்கத்தைத் தவிர்த்துச் சிறந்த பொருளைக் கவர்ந்த மன்னவனும், வீழ் - வீழ்கின்ற, நரகில் - நரகத்தில், யான் வீழ்க - ; (எ - று.)

வருவாயில் ஆறிலொன்று அரசிறையென்று தருமநூல்களினல் ஏற்பட்டிருக்கவும்,அவ்வரம்பை மீறித் தன்னாற் பாதுகாக்கப்படும் மக்களிடத்து மிக்க இறையை வாங்குதல் மன்னவனுக்கு அதிபாதக மாதலால்,'அறநெறியகற்றி யொண்பொருள் வெஃகிய மன்னன்' என்றார். 'உயிர்வளர்த்துண்ணுமாசையான்' என்பதை, பொருள் வெஃகிய மன்னனேடு இயைத்து உரைப்பாருமுளர்.ஆசையான்என்பதை மூன்றனுருபுஏற்றபெயராகக் கொள்ளாது ஆசையென்னும் பெயரினடியாகப்பிறந்த பெயர்ப்பகுபதமாகக்கொண்டு,உயிர்வளர்த்து உண்ணும் ஆசையான் - எப்படியாவது நம்முயிரைக் காக்கவேணுமென்று விரும்பியவனுகித் தீயவழியாலாயினும் பொருளையீட்டித்தன்னுயிரையோம்புபவன்எனக் கூறுதலும் ஒன்று.தெவ்வருக்கு ஒஃகினன் என்பதற்கு-பகைவர்க்குப்புறங்கொடுத்தோடினவன் என்றுபொருள்கூறின்,கூறியதுகூறலாமாதலால், பகைவருக்கு இறைஞ்சியவன் என்று பொருள் கூறப்பட்டது.

பி-ம்:—[1]ஒல்கினன். [2]ஆசையால், ஆசையாா. [3]ஆக்கியோன். (கூகங)

கoஅ. அழிவரு மரசிய [1]லெய்தி [2]யாகுமென்
றிழிவரு சிறுதொழி லியற்றி [3]யாண்டுதன்
வழிவரு தருமத்தை மறந்து மற்றொரு
பழிவரு நெறிபடர் பதக னுகயான்.

(இ-ள்.)(நான் இராமபிரான் கானகஞ்சென்றதற்கு உடன்தையாயின்),—அழிவு அரும் அரசு இயல் - கெடுதலில்லாத அரசாட்சியை, எய்தி - (தான்) அடைந்து, (பிறகு), ஆகும் என்று - (நாம் யாவர்க்கும் அரசனுதலால் எதைச் செய்தாலும்) செய்யலாமென்றுகருதி, இழி வரு சிறுதொழில் இயற்றி - இழிவான சிறிய தொழில்களைச்செய்து,ஆண்டு-அரசுபுரிந்து,தன் வழி வரு தருமத்

தை மறந்து தனக்குக் குலமுறையாகவுள்ள தருமத்தை மறந்துவிட்டு, மற்று ஒரு பழி வரு நெறி படர்-(அரசதருமத்தினும்) வேறான ஒரு பழிப்பை யுண்டாக்கும் வழியிற் செல்லுகின்ற, பதகன்-பாவியாக, யான்—, ஆக - ஆகுக.

யான் இராமனைக் காட்டிற்குத் துரத்த உடந்தையாயிருந்தேனாயின், அரசன் தன் குடிமக்களிடத்து ஆறில் ஒன்று அரசிறை வாங்கி அப்பொருளைக் கொண்டு அம்மக்களைப் பாதுகாக்கவேண்டுவது முறையாதலின், நாம் அரசனாதலால் நம்மைக் கேட்பாரில்லையென்று கருதி மிகுதியாகவரிவிதித்தல் தன்கருத்தைப் பாதுகாப்பதிற்செலுத்தாது பொருளீட்டும்வழியிலேயேசெலுத்துதல்முதலிய க்ஷத்திரியதருமத்திற்கு மாறான செயலைச் செய்யுங் கொடிய கோன்மன்னன் புகுந் தீக்கதி எனக்கு வருக என்று பரதன் சபதஞ்செய்தனனென்க. பி-ம்:—[1]அகற்றி. [2]யார்க்குமின்றி, ஆக்குமின்று. [3]ஆண்டுந்தன், ஆண்டதின். (கூகஅ)

கoகூ. தஞ்சென வொதுங்கினோர் தனது [1]பாருளோா
[2]ரெஞ்சலின் [3]மறுக்கினோ டிரியல் போயுற
வஞ்சிசென் றிறுத்தவன் வாகை மீக்கொள
வஞ்சின [4]மன்னவ னாக யானுமே.

(இ - ள்.) (இராமன் காட்டிற்குச்சென்றதற்கு உடந்தையாயின்), யான் உம்-நான்,—தஞ்சு என ஒதுங்கினோர் தனது பார் உளோர் - (நீ தான் இந்த ஆபத்துக்காலத்து எம்முடைய பொருள் யாதும் அழியாது) காக்கவேண்டியவன்என்று (தன்னைச்)சரணமாகச்சார்ந்தவரான தன்நாட்டவர், எஞ்சல் இல் மறுக்கினோடு இரியல் போய்உற - குறைதலில்லாத [மிக்க] மனக்கலக்கத்தோடு நிலைகெட்டு ஓடிப்போய்விடுமாறும்,வஞ்சி சென்று இறுத்தவன் வாகை மீக்கொள - வஞ்சிமாலை புனைந்துவந்து நிலையாகநின்றஎதிர்த்த பகைவன் (வெற்றிக்கு அறிகுறியாக) வாகைமாலையைப் புனையுமாறும்,அஞ்சின-(அந்தப் பகைவனோடு தன்னுயிருள்ளவரையும் தன்னாலியன்றவளவும் எதிர்த்துப் பொராமல்) அஞ்சியோடிப்போன, மன்னவன்-மன்னவனைப்போல, ஆக - (தீக்கதியிற்) சேர்வேனாக; (எ - று.)

வஞ்சி - பகைமேற்செல்வோர் புனையும் மாலை; அதனைச் சூடிப் பகைவன் எதிர்த்தால் தன் கீழ்வாழுயிர்கட்கு வேண்டிய பாதுகாப்பை யளித்துத் தானும் எதிர்த்தமன்னவனைத் தன்னாலியன்றவரை எதிர்த்துப்பொரவேண்டுவது முறைமையேதவிர, 'நம்முயிர் எஞ்சினாற் போதும்; நம் கீழ்வாழுயிர்கள் எக்கேடாவது கெடட்டும்' என்று கருதி அஞ்சியோடுவது முறையன்றாதல், இச்சூளுரையால் விளக்கப்பட்டது. வாகை-பகைவென்றோர் சூடும் மாலை. பி - ம்:—[1]போருளோர். [2]எஞ்சினர், எஞ்சிட. [3]மறுகினோடு, மனத்தினோடு. [4]மன்னவனுமாகயான். சிலபிரதிகளில் "அழிவரும்" (கoஅ) என்ற பாடலுக்

குப்பின் "கன்னியை" (ககO) என்பதும், அதன்பின் இச்செய்யுளும், இதன் பின் "மறுவிருெல்" (ககஉ) என்றபாடலும், அதன்பின் "ஊணல" (ககக) என்ற பாடலும் உள்ளன. (சுகரு)

ககO. கன்னியை [1]யழிசெயக் கருதி னேன்குரு
பன்னியை நோக்கினேன் பருகி னேனறை
பொன்[2]னிகழ் [3]களவினிற் பொருந்தி னே[4]னெனு
மின்னவ ருறுகதி யென்ன தாகவே.

(இ - ள்.) (யான் இராமனைக் காட்டிற்குத் துரத்தஉடந்தையாயின்),— கன்னியை அழி செய கருதினேன் - விவாகமாகாதபெண்ணைக் கற்பழிக்கக் கருதினவனும், குரு பன்னியை நோக்கினேன்-ஆசிரியன்மனைவியைத் தீய கருத்தோடு பார்த்தவனும், நறை பருகினேன்-மதுபானஞ்செய்தவனும், இகழ் களவினில் பொன் பொருந்தினேன் - இழிவாகக் கூறப்படுகின்ற களவினால் பொருளைத் தேடியவனும், எனும்-என்கின்ற, இன்னவர்-இவர்கள், உறு- அடைகின்ற, கதி-நீக்கதி, என்னது-எனக்கு உரியதாக, ஆக-ஆகுக; (எ-று.)

கன்னி, குருபன்னி—கந்யா, குருபத்நீ வடசொற்கள். கதியென்ற வடசொல் திரிந்துவந்தது. கன்னிஎன்பதற்கு-பூப்பையெய்தாத பெண்என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]கட்டழித்தேகினேன், கட்டழித்தெய்தினேன், கடியழித்தேகினேன். [2]இருள். [3]களவிடைப். [4]என. (சுகசு)

ககக. ஊணல [1]வுண்வழி நாயி [2]னுண்டவ
னாணலன் பெண்ணல னார்கொ லாமென
நாணல னரகமுண் டென்னு நல்லுரை
பேணலன் பிறர்பழி பிதற்றி [3]யாகயான்.

(இ - ள்.) (இராமனை வனஞ்செலுத்த உடந்தையாயின்), யான்—, நல ஊண்-சிறந்த உணவை, உண் வழி-உண்ணுமிடத்து, நாயின்-நாய்போல, உண்டவன் - (தானே தனியாக) புசித்தவனும், ஆண் அலன் பெண் அலன் ஆர் கொல் ஆம் என நாணலன் - '(இவன்) ஆணதன்மையுடையானுமல்லனாகிப் பெண்தன்மை யுடையானுமல்லனாகி இவ்விரண்டினத்தையுஞ் சேராதவன் யாவனோ?' என்று பழித்துச் சொல்லவும் வெட்கமற்றுத் தன்தொழிலே புரிபவனும், நரகம் உண்டு என்னும் நல் உரை பேணலன் - (தீத்தொழில் புரிந்தால் பின் சேருமாறு) நரகமுள்ளதுஎன்று சொல்லுகின்ற பெரியோரின் சிறந்த வசனத்தை இலட்சியஞ்செய்யாது தீத்தொழிலே புரிபவனும், பிறர் பழி பிதற்றி-எப்போதும் அயலாரைப்பற்றிய பழிப்புச்சொற்களையே பிதற்றுபவனும், ஆக - சேர்கின்ற தீக்கதியை அடைபவனாக; (எ - று.)

ஊண் அல என்று பிரித்து - உண்ணத்தகாதபொருள் என்று உரைத்தலும் ஒன்று. பிறப்பினாற் பெண்ணுயிராமையாற் பெண்ணல்லனென்றும், ஆண்மக்கட்குஉரிய தைரியம்முதலிய குணங்கள் இல்லாமையால் ஆணல்ல

னென்றும் சொல்லுகின்றாராதலின், 'ஆணோ? பெண்ணோ?' என்றுஐயுற்றுத் துணிந்தவழிக் கிளத்தற்குரிய முறையைத் தெரிவிக்கின்ற "தன்மைசுட்டலு முரித்தென மொழிப, வன்மைக் கிளவிவேறிடத்தான" என்ற சூத்திரத்திற்கு இங்கு இடனின்மை யுணர்க. வீரனென்று பேரிட்டுக்கொண்டு போருக்கு அஞ்சிஓடும் நாணிலியை 'நாணலன்' என்றார். பிதற்றி-பிதற்றுபவன்: பெயர். பி-ம்:—[1]உள, உணல். [2]உண்டியன். [3]வாழ்க.　　　(கூகஎ)

கககஉ. [1]மறுவிறொல் குலங்களை மாசிட் டேற்றினோன்
சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினோ
[2]னறியன வயலவர் நாவி னீர்வர
வுறுபத நுங்கிய வொருவ னாகயான்.

(இ-ள்.) (இராமனைக் காட்டிற்குத் துரத்த உடந்தையாயின்),—யான்—, மறு இல் தொல் குலங்களை - குற்றமற்ற பழமையானகுலங்களை, மாசு இட்டு ஏற்றினோன்-குற்றமுள்ளனவென்று(அவைகட்குக் குற்றங்களைக்) கற்பித்துச் சொல்பவனும், சிறுவிலை எளியவர் உணவு சிந்தினோன்-க்ஷாமகாலத்தில் எளியவர் கைக்கொண்டு உண்கின்ற உணவைக் கீழேசிந்துமாறு செய்தவனும், நறியன உறு பதம் அயலவர் நாவின் நீர் வர நுங்கிய ஒருவன் - நறுமணமுள்ளனவாகி (உண்பதற்குத) தக்க உணவை அருகேபார்த்திருப்பவர் நாவில் நீர் சுரக்குமாறு (அவர்கட்கு ஈயாமலே) உண்ட ஒருத்தனும், ஆக - ஒத்திருக்க [சேருங்கதியிற் சேர்க]; (எ - று.)

உணவைச் சிந்துதலே பாதகமானது: பிறருண்ணும் உணவைச் சிந்துவது பின்னும் பாதகமானது: எளியவருணவைச் சிறுவிலைக்காலத்துச் சிந்துவதோ மிகவும் பாதகத்தைப் பயப்பதென்க.உருசியுள்ள பண்டங்களைத் தான் தனியே யுண்ணாது பிறர்க்குத் தந்து உண்ணவேணு மென்பது நூற்கொள்கை யாதலால், பிறர்வாயில் நீர்வருமாறு அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர்கட்குத் தராது தனியே யுண்ணுதல், தீங்காதலறிக. பி-ம்:—[1]மறுவில, மறுவிலாக். [2]நறியவென்று, நறியவன்று.　　　(கூகஅ)

கககரு. வில்லினும் வாளினும் விரிந்த [1]வாண்டொழில்
புல்லிடை [2]யுகுத்தனன் பொய்ம்மை யாக்கையைச்
சில்பக லோம்புவான் செறுநர் [3]சீறிய
வில்லிடை யிடுபத [4]மேற்க வென்கையால்.

(இ - ள்.) (இராமனைக் காட்டிற்குத்துரத்த உடந்தையானவனாயின்), (யான்), - வில்லின்உம் வாளின்உம் விரிந்த ஆண்தொழில் புல்லிடை உகுத்தனன்-வில்லினாலும் வாளினாலும் பரவித்தோன்றுகின்ற பராக்கிரமச்செயலை (மேற்கொள்ளாது) வீணாக்கிவிட்டவனாகி, பொய்ம்மை யாக்கையை சில் பகல் ஓம்புவான்,-நிலையில்லாத உடம்பைச் சிலகாலம் பாதுகாக்கவிரும்பி, சீறிய செறுநர் இல்லிடை இடு பதம்-கோபித்துக்காண்கின்றபகைவர்வீட்டில் அவர் கொடுக்கின்ற உணவை, என் கையால் ஏற்க - என்கையாலேயிரந்து பெறும் பாவத்தைப் பெறுக; (எ - று.)

இராமனது வனவாசத்துக்கு யான் உடந்தையாயின், வீரத்தையேபார்க்க வேண்டுவது அரசரின் அறமாகஇருக்கவும் அங்ஙனம் வீரத்தன்மையை மேற்கொள்ளாதுவிட்டு, மானமற்று உயிர்தங்கியிருந்தாற்போது மென்று கருதி, தன்னைச்சீறிய பகைவரின் எல்லையையடைந்து அவர் ஈயும் உணவை யிரந்து பெறும் பாதகம் எனக்குஉண்டாகுக என்று னென்க.புல்லிடை யுகுத்தல்-விழலுக்கு இறைத்தநீர்போலவும், புல்லிற்சிந்திய அமுதம்போலவும் பயனின்றிவிடுதல்: இத்தொடர் - பயனின்மையைக்காட்டியது, இலக்கணை வழக்கு. பி-ம்:—[1]ஒண்டொழில். [2]உகுத்தனென், உகுத்தவன். [3]சீரிய. [4]மொக்க. (௬௧௯)

௬௨௦. ஏற்றவற் கொருபொரு ளுள்ள [1]தின்றென்று
மாற்றல னுதவலன் வரம்பில் பல்பக
[2]லாற்றின னுழற்றுமோ ராத னெய்துமக்
[3]கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான்.

(இ - ள்.)(இராமபிரானைக் காட்டிற்குத்துரத்த நான் உடந்தையாயின்),- ஒரு பொருள் ஏற்றவற்கு-(தன்னிடம்வந்து) ஒருபொருளை இரந்தவற்கு, உள்ளது (என்று) உதவலன் - (தன்னிடத்தில்) இருக்கின்றதென்று சொல்லிக் கொடாமலும், இன்று என்று மாற்றலன்-இல்லையென்றுசொல்லி (அவ்விரப்பாளனை வரவேண்டாமென்று) தவிர்க்காமலும், வரம்பு இல் பல் பகல் ஆற்றினன் - எல்லையில்லாதபலநாள்களும் (அவ்விரப்பாளனை வரச்சொல்லிப்) போக்கியவனாய், உழற்றும்-வீணே அலைக்கழிக்கிற, ஓர் ஆதன்-அறிவில்லாத மூடன், எய்தும் - அடைகின்ற, அ கூற்று உறு நரகின் ஓர் கூறு - அந்தயமதருமராசனது ஆட்சிக்குஉட்பட்ட நரகத்தின் ஒருபகுதியை, யான் கொள்க - யான் அடைவேனாக; (எ - று.)

இரப்பாளன் ஒருத்தன் வந்து ஒருபொருளை இரக்கும்போது, தன்னிடத்திருந்தால் தரவேணும்; இல்லாவிட்டால் தன்னிடத்துக்கிடைக்காது என்றுசொல்லி அவனை வேற்றிடத்திற்குச செல்லுமாறு செய்யவேண்டும்: இவ்விருவகையுள் எதையும் மேற்கொள்ளாது, தன்னால் அப்பொருள் தரமுடியும் முடியாது என்பதையும் கூடக் கருதாமலே அவ்விரப்பாளன் நசையற்றொழியுமளவும் மிகப்பலநாள் அவனை வரச்சொல்லி அலைக்கழிக்கும் மூடன் சேரும் நரகம் எனக்கு உண்டாகுக என்கின்றான். ஒருபயனுமின்றி வீணே அலைக்கழித்தலால், அப்படிப்பட்டவனை 'ஆதன்' என்கின்றார்; ஆதன்-பசுப்போன்றவன்: அறிவீனன். உள்ளதின்றென்றுமாற்றல னுதவலன் என்ற தொடர் - உள்ளதென்று உதவலன் இன்றென்றுமாற்றலன் என முறையே மாறிச் சென்று இயைவதால் - எதிர்நிரனிறைப்பொருள்கோள். கூற்றுஉறு-கூறுபாடுபொருந்திய என உரைத்தலுமொன்று. பி-ம்:—[1]இல்லென, என்றுபின். [2]ஆற்றிலன், ஆற்றலின், ஆற்றினல். [3]கூற்றுள. கூற்றுறழ். (௬௨௦)

கககரு. பிணிக்குறு முடையுடல் பேணிப் [1]பேணலார்த்
துணிக்குறு வயிர[2]வாட் டடக்கை தூக்கிப்போய்
மணிக்குறு நகையிள மங்கை மார்கண்முன்
றணிக்குறு பகைஞரைத் தாழ்க வென்றலை.

(இ - ள்.) (இராமனது வனவாசத்துக்கு யான் உடைந்தையாயின்) ,- பேணலார் துணிக்குறு வயிரம் வாள் - பகைவரைத் துணிக்குந்தன்மையுள்ள உறுதியான வாட்படையை, தட கை தூக்கி போய்-நீண்டகைகளில் (போருக்காக) எடுத்துச்சென்று, (பின்பு அப்பகைஞரை வெல்லமுடியாதுபோக), பிணி குறு முடை உடல் பேணி-வியாதிக்கு இருப்பிடமாகி அற்பமாய் முடைநாற்றத்தைக்கொண்ட உடம்பைப் பாதுகாக்கவிரும்பி, மணி குறு நகை இள மங்கைமார் கண் முன் - முத்துப்போன்றனவாய்ச் சிறிய பற்களையுடைய இளையமகளிர் பார்த்துக்கொண்டிருக்கையில், தணிக்க உறு பகைஞரை - அடக்கவேண்டிய அப்பகைவரை, என் தலை தாழ்க-என்தலை வணங்குவதாக.

மகளிர் பார்த்துச்சிரிக்கப் பகைஞரைத் தலைவணங்கும் பாவம் எனக்கு உண்டாகுக என்கிறான். முடை பிணிக்குறு என இயைத்து - முடைநாற்றத்தைத் தன்னுட் பிணித்துக்கொண்டுள்ள என்று உரைத்தலும் ஒன்று. தணிக்குறு—தொகுத்தல். பி - ம்:—[1]பேணலர்த், பேணலர், பேணலாற். [2]வாடடக்கை. (௬௨௧)

கககசு. கரும்பலர் செந்நெலங் கழனிக் [1]கானநா
டரும்பகை கவர்ந்துண வாவி [2]பேணினே
னிரும்பலர் நெடுந்[3]தளை [4]யீர்த்த காலொடும்
விரும்பலர் [5]முகத்தெதிர் விழித்து [6]நிற்கயான்.

(இ - ள்.) அலர் கரும்பு செந்நெல் அம் கழனி கானம் நாடு - பரந்த கரும்பையும் செந்நெற்பயிரையுங்கொண்டுள்ள அழகிய கழனிகளின்கூட்டத்தைக்கொண்ட தேசத்தை, அரு பகை கவர்ந்து உண - போக்குதற்கு அரிய பகைவன் பறித்துக்கொண்டு அனுபவிக்க, ஆவி பேணினேன் - (இங்ஙனம் மானம்போனபின்பும்) உயிரைப் பாதுகாக்க விரும்பினவனாய், இரும்பு அலர் நெடு தளை ஈர்த்த காலொடும் - இரும்பினாலியன்ற நீண்ட விலங்கை யிழுத்துக்கொண்டுசெல்லுகின்ற காலுடனே, விரும்பலர் முகத்து எதிர் - பகைவரின்முகத்திலே, யான் விழித்து நிற்க—; (எ - று.)

பகைவரது முன்னிலையில் விலங்கிட்ட காலோடு செல்வது மிக்க அவமானத்தைத் தருவ தாதலால், அப்பாவம், இராமனது வனவாசத்துக்கு உடந்தையாயிருந்தால் தனக்கு உண்டாகுக என்கிறான். பி-ம்:—[1]கானநாட்டு. [2]பேணிநின்று. [3]தொடர். [4]ஈர்ந்த. [5]முகத்திடை. [6]நிற்கவே. (௬௨௨)

௧௧எ. தீயன கொடியவள் செய்த செய்கையை
நாயினே னுணரினன் னெறியி னீங்கலாத்
தூயவர்க் கிடரிழைத் துழலுந் தோமுடை
யாயவர் வீழ்கதி யதனின் வீழ்கயான்.

(இ - ள்.) கொடியவள் செய்த தீயன செய்கையை - கொடிய கைகேயி செய்த தீங்குதருந் தொழிலை [இராமனைக் காட்டிற்கு அனுப்புமாறு வரங்கேட்டதை], உணரின் - அறிந்திருந்தேனானால், நாயினேன்-நாய்போற் கடைப்பட்டவனான, யான்—, நல் நெறியில் நீங்கலா தூயவர்க்கு - சிறந்த தருமவழியினின்று நீங்காத [நல்லொழுக்கமுடைய] குற்றமற்றபெரியோர்க்கு, இடர் இழைத்து - துன்பத்தை உண்டாக்கி, உழலும் - திரிகின்ற, தோம் உடை ஆயவர்-குற்றமுள்ள அவர்கள், வீழ்-விழுகின்ற, கதியதனின்-தீயகதியில் [நரகத்தில்], வீழ்க - வீழக்கடவேன்; (எ - று.)

நரகமென்பது மேல்நிலையிலிருப்பவர் தாம் செய்த தீவினைப்பயனை நுகருமாறு போய்ச் சேரும் இடமாதலால், அதனை வீழ்கதி என்றார். நன்னெறியில் நிற்குந் தூயோர்க்குத் தீமைவிளைத்தல் மிக்கதீக்கதியை விளைக்குமாதலால், அதனை யெடுத்துக்கூறினான். இச்செய்யுள் பலபிரதிகளி லில்லை; வெள்ளிப்பாட்டென்கின்றனர். (௬௨௩)

வே று.

௧௧அ.—பரதன்சொல்லியது கேட்டுத் தெளிந்து கோசலை அழுதவண்ணம் அவனைப் புல்லுதல்.

தூய வாசகஞ் சொன்ன தோன்றலைத்
தீய கானகந் திருவி னீங்கிமுன்
போயி னான்வரக் கண்ட பொம்மலா
ளாய [1]வன்பினா லழுது [2]புல்லினாள்.

(இ - ள்.) தூய வாசகம் - தான் மனந்தூயவனென்பதை வற்புறுத்தும் வார்த்தையை, சொன்ன—, தோன்றலை - பரதனை,—திருவின் நீங்கி-அரச சம்பத்தையிழந்து, தீய கானகம் - கொடியகாட்டை, முன் போயினான் - முன்னேசென்ற ஸ்ரீராமபிரான், வர - திரும்பிவர, கண்ட - பார்த்தாற் போன்ற, பொம்மலாள் - மகிழ்ச்சியையுடையவளாய், (கோசலை),—அழுது-கண்ணீர்விட்டு, ஆய அன்பினால் - (அப்பரதனிடதுத்) தோன்றிய அன்பினாலே, புல்லினாள் - (அவனைத்) தழுவிக்கொண்டாள்; (எ - று.)

தூரதேசம்போனவர் திரும்பிவந்தால் அவரைக் கண்டவிடத்துக் கண்ணீர் தோன்றுதல் இயல்பாதலால், பரதனது தன்மையைக் கண்டு இராமனே வந்தாற்போலக் கருதியதனாற் கோசலைக்குக் கண்ணீர் வடிந்ததென்க.

பி-ம்:—[1]காதலால். [2]புல்கினாள். (௬௨௪)

கக௯.—இதுவும் அது.

செம்மை நன்மனத் தண்ணல் செய்கையு
மம்மை தீமையு மறிதறேற்றினாள்
கொம்மை வெம்முலைக் [1]குமுறு பாலுக
[2]விம்மல் விம்மநின் றழுது [3]வீங்கினாள்.

(இ - ள்.) செம்மை நல் மனத்து அண்ணல் செய்கை உம் - நேர்மையான சிறந்தமனத்தையுடைய பரதனது செயலையும், அம்மை தீமை உம் - (அப்பரதனது) தாயின் தீமையையும், அறிதல் தேற்றினாள் - அறிந்தவளாகிய கோசலை,- கொம்மை வெம் முலை குமுற பால் உக - பருத்த வெவ்விய தனங்களிலிருந்து பீரிட்டுப் பால் சிந்த, விம்மல் விம்ம நின்று - சோகத்தினாற் பொருமிநின்று, அழுது வீங்கினாள் - முகம்வீங்க அழுதாள்; (எ - று.)

தன்மகனைக் கண்டாற்போன்ற கருத்து நிகழ்ந்ததனாற் கோசலையின் தனங்களிற் பால் சிந்துவதாயிற்று. செம்மைநன்மனத்தண்ணல்செய்கை என்பதற்கு - குற்றமற்ற நன்மனத்தையுடைய அரசனது செய்கையென்று கூறினாரு முளர்: அது பொருந்தாது: அரசன் குற்றமற்றவனென்று கோசலையுணர்ந்தாளென்பதை "மாற்றாள்செயலாமென்றுங் கணவன் வரமீந்துள்ள, மாற்றாதயர்ந்தானென்றும் அறிந்தாள்" என்று கீழ் நகர்நீங்குபடலத்தில் வந்திட்டதனா லறிக. ஆயின், 'அம்மை தீமையும்' எனக் கூறவேண்டுமோ? எனின்,—கைகேயி மனம்படைத்து வரங்கேட்டது பரதன் தூண்டுதலினாலிருக்குமோ? என்ற ஓர் ஆசங்கை கோசலைக்குச் சிறிது இருந்ததனால், பரதனுடைய சூளுரையால் அவ்வையமும் நீங்கிக் கைகேயியின் திரிந்த மனத்தாலேயே இராமனது வனவாசம் நிகழ்ந்த தென்று நிச்சயித்தா ளென்பதற்கு இங்கு மீண்டுங் கூறினார். பி - ம்:—[1]குமிறு. [2]விம்மிவிம்மி. [3]வீங்கினான். இச் செய்யுள் சிலபிரதியி லில்லை. (௯௨௫)

க௨௦.—பரதனது நிலையைக் கோசலை கொண்டாடுதல்.

முன்னை நுங்குல முதலு ளோர்கடா
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்
மன்னர் மன்னவா வென்று வாழ்த்தினா
[1]ளுன்ன வுன்னநைந் துருகி [2]விம்முவாள்.

(இ - ள்.) உன்ன உன்ன - (பரதனது குணச்சிறப்பை) எண்ணுந்தோறும், நைந்து - மனமிளகி, உருகி—, விம்முவாள்-அழுபவளான கோசலை,—(பரதனை நோக்கி),—'மன்னர் மன்னவா-ராஜாதி ராஜனே! முன்னை-அனாதியான, நும் குலம்-உமது குலத்துக்கு, முதல் உளோர்கள் தாம் - பூர்வபுருஷர்களாகிய மனுமுதலியோரில், நின்னை நிகர்க்கும் நீர்மையார்-உன்னையொத்த தன்மையுடையவர், யாவர் ஏ-எவர்தாம்?' என்று—, வாழ்த்தினாள்—;(எ-று.)

வரத்தினால் இராச்சியத்தைப் பெற்றவனாதலின், 'மன்னர் மன்னவா' என்றாள். 'நமக்கு இராச்சியம் வந்திட்டது. இனி நாம் பிரபு: இனிது அரசு புரியலாம்' என்று மகிழ்ந்திருக்கவேண்டிய நிலையில் மிகவுந் துன்பத்தை யடைந்ததனோடு நில்லாமல் 'தன்னைப் பிறர் மாறாகநினைத்தலுங் கூடாது' என்று கருதிச் செய்தற்கு அரிய சபதங்களைச் செய்ததுபற்றி, 'முன்னை நுங் குலமுதலுளோர் நின்னையாவரே நிகர்க்கும் நீர்மையார்' என்று கோசலை கொண்டாடினாளென்க. [2]விம்முவான் என்றபாடத்துக்கு - மன்னர்மன்னவா என்று கோசலைவாழ்த்தியதைக் கேட்கவே, 'இராமபிரானைச் சொல்லவேண்டியசொல் அவனது தாயான கோசலையால் என்னைக்குறித்துச் சொல்லும்படியாவதே! அடியவனே என்று சொல்லவேண்டிய சொல்லானது போய் என்னுடைய அடிமைத்தன்மைக்கு மாறான ஸ்வாதந்திரியத்தைக் காட்டுஞ் சொல்லைக் கொண்டு சொல்லுவதே! என் தீவினை யிருந்தபடியென்னே!' என்று பரதன் பெருந்துயரினனாய் உன்னியுன்னி நைந்துஉருகி விம்முவானாயினனென்க. ''ராஜந்'' என்று கைகேயி பரதனை விளித்தவிடத்து அச்சொல்லைக் கேட்டதும் பரதன் பெருந்துடிதுடித்தானென்று பெரியோர் அருளிச்செய்திருப்பது இங்குக் காணத்தக்கது. முதல் மூன்றடிகள் தசரதமன்னவனைக் குறித்துக் கோசலை கூறியனவென்று உரைப்பாருமுளர்: அஃது சிறக்குமேற்கொள்க. பி - ம்:—[1]உன்னியுன்னிநைந்து, உன்னிநைந்துநைந்து, உன்னிநின்றுநைந்து, உன்னிநெஞ்சுநைந்து. [2]ஏங்குவாள். (௬௨௬)

## ௬௨௭.—சத்துருக்கனன் கோசலையை வணங்குவதும், அப்போது வசிட்டமுனிவன் அங்கு வருவதும்.

> உன்ன [1]வுன்னநைந் துருகு மன்புகூ
> ரன்னை தாளின்வீழ்ந் திளைய வண்ணலுஞ்
> சொன்ன [2]நீர்மையாற் றொழுது மாழ்கினா
> னின்ன வேலைவாய் முனிவ னெய்தினான்.

(இ - ள்.) இளைய அண்ணல்உம் - சத்துருக்கினனும்,—உன்ன உன்ன நைந்து உருகும் அன்பு கூர் அன்னை - (பரதனது உயர்குணங்களை) நினைக்குந்தோறும் (மனம்) நைந்து உருகுமாறு அன்புமிக்க தாயான கோசலையின், தாளின் - பாதங்களிலே, வீழ்ந்து - (நிலத்தில் தன்னுறுப்புக்களெல்லாம் படும்படி) படிந்து, சொன்ன நீர்மையால் தொழுது - (தண்டனிடவேண்டிய வகையைப்பற்றி நூலிற்) கூறியுள்ள முறையால் வணங்கி, மாழ்கினான் - மனங்கலங்கிநின்றான்; இன்ன வேலைவாய் - இங்ஙனம் நிகழ்ந்தபோது, முனிவன் - வசிட்டமுனிவன், எய்தினான் - (அங்கு) வந்து சேர்ந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]நைந்துளைந்துருகி. [2]நீர்மையில், (௬௨௭)

௬௨௨.—பரதன் தந்தை எங்குள்ளானென்று அம்முனிவனை வினவ, முனிவர் துயர்மிகுதியா லழுதல்.

வந்த மாதவன் றாளில் [1]வள்ளல்வீழ்ந்
தெந்தை யாண்டையா னியம்பு வீரெனா
நொந்து மாழ்கினா னுவல்வ [2]தோர்கிலா
வந்த மாதவ னழுது புல்லினான்.

(இ - ள்.) வள்ளல்-பரதன், வந்த மாதவன் தாளில் வீழ்ந்து-அங்குவந்த பெருந்தவசியான வசிட்டனது பாதங்களில் விழுந்து வணங்கி, 'எந்தை-என் தந்தை, யாண்டையான் - எங்கேயுள்ளான்? இயம்புவீர்-(நீர்) சொல்வீராக,' எனா-என்றுவினவ,—அந்த மாதவன் - வசிட்டன், நொந்து மாழ்கினான் - வருந்தி மனங்கலங்கினவனாய், நுவல்வது ஓர்கிலா - (அத்துயரமிகுதியால்) உத்தரஞ்சொல்லமுடியாமல், அழுது - கண்ணீரைப்பெருக்கிக்கொண்டு, புல்லினான் - (அப்பரதனைத்) தழுவிக்கொண்டான்; (எ - று.)

எந்தையாண்டையான்-எனதுதந்தையின்உடல் எங்கேயுள்ளது? என்று வினவியவாறு. இவ்வாறு உரைப்பின், 'இறுதியெய்திநாளேழிறந்தன'என்று கூறியது விடைவழு வாகாதோவெனின்;-'எந்தையாண்டுளான்' என்று வினவிய பரதனுக்கு, வசிட்டன் முதலில் துயரமிகுதியால் ஒன்றும் உத்தரஞ் சொல்லமாட்டாது நின்று சிறிதுதேறியபின், இறந்து நாள்பலகழிந்தனவாதலால் மன்னவனுக்கு ஈமக்கடன்செய்யவேணுமென்று அம்மன்னவனுடல் இருக்குமிடத்து அப்பரதனைக் கூட்டிக்கொண்டுபோன செய்கையே விடையாமாறு அறிக. இனி, 'இறுதியெய்திநாளேழிறந்தன' என வருதற்குஏற்ப, இப்போது என்தந்தையார் எங்கே? என்றேவினவியதாகக் கூறுவதும்உண்டு: பரதன் தன்தந்தையார் இறந்திட்டன ரென்று தெரிந்திருக்கவும், 'எந்தை யாண்டுளான்?' என்று வினவியது—"எந்தையாண்டையானியம்புவீரெனா" (திருவடிசூட்டு ௩0) என்று இந்தக்காண்டத்தின் இறுதிப்படலத்து இராமன் வினவியதுபோலு மென்க. பி-ம்:—[1]மன்னன். [2]ஓர்கிலான். (௬௨அ)

௬௨௩.—பரதனை தசரதனுடலுள்ள இடத்துக்கு வசிட்டன் இட்டுக்கொண்டு போதல்.

மறுவின் மைந்தனே வள்ள லுந்தையா
ரிறுதி [1]யெய்திநா ளேழிறந்தன
சிறுவர் செய்கடன் செய்து [2]தீர்த்தியென்
[3]றுறுதன் [4]மேயினா னுரையின் மேயினான்.

(இ-ள்.) 'மறு இல் மைந்தனே - குற்றமற்ற குமரனே! வள்ளல் உந்தையார்-வரையாதுகொடுக்குந்தன்மையுள்ள உனதுதப்பனார், இறுதி எய்தி - மரணமடைந்து, ஏழ் நாள் இறந்தன-ஏழுதினங்கள் கடந்தன; சிறுவர் செய் கடன் புத்திரர்செய்யவேண்டிய கடமையை, செய்து தீர்த்தி-முற்றுறச்செய்

குவாய்,'என்று—, உரையின் மேயினுன்-சொல்பவனாக,—உறுதல்-(தசரதன் சரீரங் கிடக்கும் இடத்துக்குப்) போதற்கு, மேயினுள் - கோசலை அனுமதி கொடுத்தாள்; (எ - று.)

வான்மீகத்தின்படி அரசன் இறந்த மறுநாள் வசிட்டன் கேகயநாட்டிற்குத் தூதுவரையனுப்பினனாக,அவர்கள் அன்றையிரவு விடிவதற்குமுன்னமே கேகயநகரஞ் சேர்ந்தன ரென்றும், பரதன் சத்ருக்கனனுடன் தூதர்வந்து சேர்ந்த நாளைக்கு அடுத்த நாளே புறப்பட்டு ஏழுநாள் வழிப்பிரயாணஞ்செய்து எட்டாநாள் வந்துசேர்ந்தா னென்றும் ஏற்படுவதனல், அரசன் இறந்தபத்தா நாளாகும் பரதன் வந்துசேர்ந்தது: பரதன் வந்துசேர்ந்த மறுநாள் வசிட்டன் ஈமக்கடன்செய்யுமாறு பரதனுக்குக் கூறுவதனல் அன்று பதினோராநாளெ ன்க. பி-ம்:—[1]எய்துநாளேழிறந்தன, எய்தியீரேழிறந்தன,எய்தினுளேழிரண்டின, எய்தியீரேழிறந்தநாள். [2]போதி. [3]உறுவல். [4]மேயினுன். (கூஉக

கஉச.—தசரதனதுசரீரம்வைத்திருக்குமிடத்துக்குப் போய்ப் பரதன் அவ்வுடலைக் காணுதல்.

அன்னை யேவினு ளடியி றைஞ்சினுன்
பொன்னின் வார்சடைப் புனித னேடும்போய்த்
தன்னை [1]நல்கியத் தரும நல்கினுன்
பன்னு தொல்லறப் படிவ நோக்கினுன்.

(இ - ள்.) ஏவினுள்-(அரசன்சரீரத்தைக் காணுமாறு) அநுமதிகொடுத்தவளான, அன்னை-கோசலையினுடைய, அடி - பாதங்களை, இறைஞ்சினுன் வணங்கினவனாகி, (பரதன்),—பொன்னின் வார் சடை புனிதனேடு உடபோய்-அழகிய நீண்ட ஜடையையுடைய பரிசுத்தனான வசிட்டமுனிவனோடுஞ்சென்று, தன்னை நல்கி அ தருமம் நல்கினுன்-தன்னுயிரையேகொடுத்து அப்படிப்பட்ட [மிகச்சிறந்த] தருமத்தைப்பாதுகாத்தவனாகிய தசரதமன்னவனது, பன்னு தொல் அறம் படிவம்-சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற பழமையாகிய தருமத்தின்வடிவம்போன்ற உடலை, நோக்கினுன்-கண்டான்; (எ-று.

எண்ணெய்க்கடாரத்தி லிட்டிருந்த மன்னவனதுமேனியை யெடுத்து வசிட்டன் வெளியே மஞ்சத்தின்மேல்வைக்கப் பரதன் கண்டன னென்க. தருமத்திற்காக உயிரை விட்டவன் தசரத னென்பது, மூன்றுமடியின் கருத்து. பி-ம்:—[1]நல்கிய. (கூஉ

கஉரு.—பரதன் அச்சரீரத்தைக் கண்டு கண்ணீர்வடித்தல்.

மண்ணின் மேல்விழுந் தலறி மாழ்குவா
னண்ண லாழியா னவனி [1]காவலா
னெண்ணெ யுண்டபொன் னெழில்கொண் மேனியைக்
[2]கண்ண நீரினுற் கழுவி யாட்டினுன்.

(இ-ள்.) (பரதன்), (உடனே), மண்ணின் மேல் விழுந்து அலறி மாழ்குவான் - பூமியில்விழுந்து கதறிக்கொண்டு மனங்கலங்கியவனாகி,—அண்ணல் ஆழியான் அவனி காவலான் - பெருமையிற்சிறந்த ஆக்கியாசக்கரத்தைக் கொண்டவனாகிப் பூமியையரசாண்ட தசரதமன்னவனது, எண்ணெய் உண்ட பொன் எழில் கொள் மேனியை - எண்ணெய்க்கடாரத்திலிட்டதுபற்றிப் பொன்வர்ணம்படைத்திருந்த அந்தமேனியை, கண்ண நீரினால் - (தன்) கண்களிலிருந்துபெருகின நீரினாலே, கழுவி ஆட்டினான்-கழுவி மூழ்குவித்தான்.

இதுவரை எண்ணெயாலாட்டப்பட்டிருந்தமேனியைக் கண்ணநீரினாலாட்டினானெனச சமத்காரந்தோன்றக் கூறியுள்ளது காண்க. தசரதனது மேனியைக் கண்டதும் தன்கண்களிலிருந்து கண்ணநீர் பெருவெள்ளமாகப் பெருகப் புலம்பினனென்க.பொன்னெழில்கொள்மேனி என்பதற்கு-முதனூலுக்கு ஏற்பப் பொருளுரைக்கப்பட்டது;இனி,எண்ணெயுண்டமேனி பொன்னெழில்கொள்மேனி எனத் தனித்தனிக் கூட்டி யுரைப்பாரு முளர். பி-ம்:—[1]காவலன். [2]கண்ணினீரினால். (கூ௩க)

கஉக.—நான்மறையோர் அரசனுடலை விமானத்தின்மே லேற்றுதல்.

பற்றி [1]யவ்வயின் பரிவின் வாங்கினார்
[2]சுற்று நான்மறைத் துறை[3]செல் கேள்வியார்
கொற்ற [4]மண்கணை [5]குமுற மன்னனை
மற்றோர் பொன்னின்மா [6]மான மேற்றினார்.

(இ - ள்.) நால் மறை துறை செல் கேள்வியார் - நான்குவேதங்களின் துறைகளிலும் பயின்ற நூற்கேள்வியையுடைய அந்தணர், பரிவின் - மனப்பரிவோடு, மன்னனை - தசரதனதுஉடலை, அ வயின் - அவ்விடத்தினின்று, சுற்றும் பற்றி வாங்கினார் - சுற்றுமிருந்து (தம்) கையாற்றூக்கியெடுத்து, கொற்றம் மண் கணை குமுற-(இறந்த) அரசுக்குஉரியதாகி மார்ச்சனையமைந்த திரண்டமுரசு ஒலிக்க,மற்று ஓர் பொன்னின் மா மானம் ஏற்றினார்-மற்றொரு பொன்னினாலியன்ற விமானத்தில் வைத்திட்டார்கள்; (எ - று.)—கொற்றம்-கொற்றவர்க்குரியது. பி - ம்:—[1]வல்லையிற். [2]சுற்ற. [3]செய். [4]மங்கலம். [5]குமிற. [6]விமானம். (கூ௩உ)

கஉஎ.—மன்னவனுடலை யானையின்மீதுவைத்துக்கொண்டு செல்லுதல்.

கரைசெய் வேலைபோ னகரி கையெடுத்
துரைசெய் [1]பூசலிட் டுயிர்[2]துளங்குற
[3]வரசர் வேலைசூழ்ந் தழுது கைதொழப்
புரசை யானையிற் கொண்டு போயினார்.

(இ - ள்.) நகரி-நகரியிலுள்ளார்,-கரை செய் வேலைபோல்-கரைபொருந்திய சமுத்திரம்போன்று, கையெடுத்து உரை செய் பூசல் இட்டு-மிகுதியாகப் புலம்பலொலியால் தோன்றுகின்ற ஆரவாரத்தைச் செய்துகொண்டு, உயிர்

துளங்குற - தம்முயிர் வருந்திநிற்கவும்,—அரசர் வேலை சூழ்ந்து - அரசர்களின் தொகுதி சுற்றிக்கொண்டு, அழுது-அழுதவண்ணம், கை தொழ - கைகுவித்துநிற்கவும், புரசை யானையில் - கழுத்திடுகயிற்றையுடைய யானையின் மீது, கொண்டு - (தசரதனது உடலை) வைத்துக்கொண்டு, போயினர்—.

போயினர் என்பதற்கு - கீழ்க்கவியிலுள்ள 'நான்மறைத்துறைசெல் கேள்வியார்' என்பதை எழுவாயென்னலாம். பி-ம்:—[1]பூசல்போய். [2]துள்ங்குவார். [3]அரசவேலை. (௬௩௫)

### ௧௨௮.—தேர்வலான்முதலியோர் அழுதுமாழ்குதல்.

உந்து பொற்றடந் தேர்வ லானொடு
மந்தி ரப்பெருந் தலைவர் மற்றுளோர்
தந்தி ரத்தனித் தலைவர் நண்பினோர்
[1]வந்து சுற்றுமுற் றழுது மாழ்கினர்.

(இ-ள்.) உந்து பொன் தடதேர்வலானொடு-செலுததுதற்குஉரிய அழகிய பெரியதேரைச் செலுத்தவல்லவனை சுமந்திரனொடு,மந்திரம் பெருந்தலைவர்-ஆலோசனைக்குரிய சிறந்ததலைவர்களும் [பெருமைபெற்ற மந்திரிமார்களும்], தந்திரம் தனி தலைவர்-சேனையின் ஒப்பற்றதலைவரும் [சேனாபதிகளும்],நண்பினோர் - சினேகிதர்களும், மற்றுஉளோர் - மற்றும்உள்ளவர்களும், வந்து—, சுற்றுஉம் உற்று - சுற்றிலும் பொருந்தி, அழுது மாழ்கினர் - கண்ணீர் வடித்துக் கலங்கினின்றனர்; (எ - று.)

[1]வந்துசுற்றமுற்று என்றபாடத்துக்கு, சுற்றம் - சுற்றத்தவரும், வந்து உற்று-வந்து பொருந்தி யென்க.இச்செய்யுள் பல ஏட்டுப்பிரதிகளிலு மில்லை; வெள்ளிப்பாட்டாயிருக்கலாம். (௬௩௬)

### ௧௨௯.—சாப்பறை முதலியன ஒலித்தலின் வருணனை.

சங்கு பேரியுந் [1]தழுவு சின்னமு
மெங்கு மெங்குநின் றிரங்கி யேங்குவ
மங்கு றோய்நகர் [2]மகளி ராமெனப்
பொங்கு [3]கண்புடைத் தழுவ போன்றவே.

(இ - ள்.) சங்கு - சங்குகளும், பேரிஉம்-சாப்பறையும், தழுவு சின்னம் உம் - (இறந்தவர்க்கு) ஊதப்படுகின்ற சின்னமென்னும் ஊதுகருவியும், எங்குஉம் எங்குஉம் நின்று - பலவிடங்களிலும் இருந்து, இரங்கி ஏங்குவ - (கேட்பார்க்கு) மனப்பரிவுதோன்றுமாறு ஒலிப்பவை,—மங்குல் தோய் நகர் - மேகம்வந்து படியப்பெற்ற (மிகவோங்கிய மாளிகைகளைக்கொண்ட) நகரத்திலுள்ள, மகளிர் என - மகளிரைப்போல, பொங்கு கண்புடைத்து - துயரம் பொங்குகின்ற கண்களி லறைந்துகொண்டு, அழுவ-அழுபவற்றை,போன்ற-;

சாப்பறைகள் குறுந்தடிகொண்டு கண்களில் மோதப்பட்டுச் சங்குமுதலியவற்றினொலியோடு சேர்ந்து கேட்போர்க்கு இரக்கமுண்டாகுமாறு ஒலிப்பவை, அந்நகரமகளிர் கண்புடைத்தழுவதை யொத்திருந்தன வென்றார்.

உவமைசிலேடைகளை யங்கமாகக்கொண்டுவந்த தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. கண் - குணில்கொண்டு அடிக்குமிடமும், நேத்திரமும். மகளிராமெனை என்ற இடத்து 'என' என்பது-உவமவுருபு. போன்ற என்பது-தற்குறிப்பேற்றவுருபு. இச்செய்யுளின் கருத்தை "நன்னெடுங் கண்களி னுன்ற நீர்த்துளி, தன்னெடுந்தாரைக ளத்தின்வீழ்தலா, னந்நெடுங்குமரன்மாட் டழுங்கி மாடமும், பொன்னெடுங்கண்குழித் தழுவபோன்றவே" என்றதனோடு ஒப்பிடுக. பி - ம்:—[1]தாளமும். [2]மகளிராலெனை. [3]கையெடுத்து. (௬௩௫)

௧௩௦.—பிரேதத்தோடு சரயுவை யடைதல்.

மாவும் யானையும் வயங்கு தேர்களுங்
கோவு நான்மறைக் குழுவு முன்செலத்
தேவி மாரொடுங் கொண்டு தெண்டிரை
தாவு வார்புனற் சரயு வெய்தினார்.

(இ - ள்.) மாஉம் - குதிரைகளும், யானைஉம்-, வயங்கு தேர்கள்உம் - விளங்குகின்ற தேர்களும், கோஉம் - மன்னவர்களும், நால்மறை குழுஉம் - நால்வேதம்வல்ல (அந்தணர்) கூட்டமும், முன் செல - முன்னேபோக, கொண்டு - (மன்னவனது பிரேதத்தை) எடுத்துக்கொண்டு, தேவிமாரொடு உம்-(அந்த மன்னவனது) மனைவிமாருடனே, தெண் திரை தாவு வார் புனல் சரயு - தெளிவான அலைகள் தாவிவிழப்பெற்ற மிக்க நீரையுடைய சரயு நதியை, எய்தினார் - அடைந்தார்கள்; (எ - று.)

புரசையானையிற் கொண்டுபோனவர், சரயுவை யெய்தினரென்க. தேவிமார் - மாதரார்களறுபதினாயிரர் என்று குறிக்கப்பட்ட அரசனது மனைவிமார். (௬௩௬)

௧௩௧.—மன்னவனுடலைச் சிதையி லேற்றி, தந்தைக்குச் செய்யவேண்டிய கடனைச் செய்க வெனல்.

எய்தி நூலுளோர் மொழிந்த யாவையுஞ்
செய்து [1]தீத்தலந் [2]திருத்திச் செல்வனை
வெய்தி னேற்றினார் [3]வீர நுந்தைபாற்
பொய்யின் மாக்கடன் கழித்தி [4]போந்தென்றார்.

(இ - ள்.) எய்தி - (சரயுநதியின் கரையை) அடைந்து, நூல் உளோர் - நூல்வல்லார், மொழிந்த யாவைஉம் செய்து - (பிரேதத்திற்குச் செய்யவேண்டியவையெனக்) கூறிய கருமங்களையெல்லாஞ் செய்து, தீத் தலம் திருத்தி - நெருப்பிடவேண்டிய ஈமப்பள்ளியும் செவ்வனேயமைத்து, செல்வனை - தசரதனது உடலை, வெய்தின் - விரைவாக, ஏற்றினார் - (அந்தஈமப்பள்ளியிற்) சேர்த்து, 'வீர - வீரனே! போந்து - வந்து, நுந்தைபால் - உன்தந்தைக்கு, பொய் இல் மா கடன் - சாஸ்திரமுறை பிழையாதபடியுள்ள ஈமக்கடனை, கழித்தி - செய்து தீர்ப்பாய்;' என்றார்—; (எ - று.)

நூலுளோர் என்பதை யெழுவாயாக்கி, நூலுளோர் என்றார் எனக் கூட்டி யுரைப்பினுமாம். பி-ம்:—[1]தீக்கலம். [2]செலுத்தி. [3]வீரன். [4]போய். ()

௧௩௨.—ஈமக்கடன் செய்யவந்த பரதனைத் தந்தையின் கட்டளையைத் தெரிவித்து வசிட்டன் தடுத்தல்.

என்னும் [1]வேலையி லெழுந்த வீரனை
யன்னை தீமையா லரச னின்னையுந்
துன்னு துன்பத்தாற் றுறந்து போயினான்
முன்ன ரேயெனு முனிவன் கூறினான்.

(இ - ள்.) என்னும் வேலையில்-என்று சொன்னபோது, எழுந்த - (ஈமச் சடங்குபுரியுமாறு) எழுந்துவந்த, வீரனை-பரதனை நோக்கி,—முனிவன்-வசிட்டன்,—'(பரதனே!) அரசன் - தசரதமகாராசன், அன்னை தீமையால்-(உன்) தாயின் தீயகுணத்தால், துன்னு-(மனத்து) உண்டான, துன்பத்தால் - பெரு வருத்தத்தினால், முன்னரே - முன்னமே, நின்னைஉம் துறந்து போயினான் - (உரிமை செய்யத்தக்கவனல்லையென்று) அந்தக் கைகேயியின் குமாரனை உன்னுறவையும்ஒழித்திட்டு இறந்தான்,' என-என்று, கூறினான்—; (எ-று.)

நின்னையும் என்ற உம்மை-கைகேயியையுந் தழுவிற்று. அரசன் கைகேயியையும் பரதனையும் வசிட்டனைச்சாட்சியாகக்கொண்டு உறவு துறந்தமையை "இன்னேபலவும்பகர்வா னிரங்காதானைநோக்கிச், சொன்னேனின்றே யிவ ளென் றாரமல்லள்துறந்தேன், மன்னேயாவான்வரு மப்பரதன்றனையும் மக னென், றுன்னேன் முனிவா வவனும்மாகா னுரிமைக்கென்றான்" என நகர் நீங்குபடலத்து வந்ததுகொண்டு அறிக. வசிட்டனைச் சாட்சியாகக்கொண்டு மன்னவன் சொல்லினமையால், பரதன் ஈமக்கடன்செய்வதை வசிட்டமுனிவன் தடுத்தான். பி - ம்:—[1]எல்லையில்.

(௬௩அ)

௧௩௩.—பரதன் திடுக்கிட்டு நிலைமாறியதன் வருணனை.

துறந்து போயினா [1]னெனவே தோன்றனீ
பிறந்து பேறறம் பிழைத்த [2]தென்றல்போ
லிறந்து போயினா னிருந்த தாண்டது
மறந்து வேறொரு [3]மைந்த னுங்கொலாம்.

(இ - ள்.) 'தோன்றல்-சிறந்துவிளங்குகின்ற குமாரனே! நீ பிறந்து பேர் அறம் பிழைத்தது - நீ பிறந்ததனால் தொன்றுதொட்டுவந்த (மூத்தவன் அரசு புரிதலாகிய) தருமம் மாறுபட்டது, என்றல்போல் - என்று தெரிவிப்பது போல, துறந்துபோயினான்-(உன்தந்தையார் உன்னைத்) துறந்துவிட்டுச் சென்றான்,' எனவ-என்றுதெரிவிக்கவே,—(அச்சொல்லைக்கேட்டு மனம்பொறாமல் பரதன்), இறந்துபோயினான் - இறந்து போயினவன்போலாய்விட்டான்;

(ஆனால்), ஆண்டு இருந்தது அது-அங்கே (பரதன்)இருப்பதுபோலப்பட்டது (எவ்வாறெனில்),—மறந்து - தனது இயற்கைநிலைமாறி, வேறு ஒரு மைந்தன் ஆம் கொல் - வேறொருமைந்தனாகிப்போலும்; (எ - று.)

வசிட்டமுனிவனதுசொல்லைக் கேட்டவுடனே பரதன் தன்னுயிரொடுங்கிமூர்ச்சித்துத் தெளிந்தபிறகு 'இவன் முன்னையபரதனல்லன்; வேறொருவன்போலும்'என்று கண்டோர் கருதுமாறு நிலைமாறிக்கிடந்தன னென்பதாம். நீ உரிமைக்கு ஆகாய் என்றது-'நீ உரிமைசெய்வதற்கு அருகனல்லை. முன்னையோர்நிலைக்கு மாறாயவன்' என்ற கருத்தை விளக்குதலால்,நீபிறந்து பேரறம்பிழைத்ததுஎன்று சொல்லியது போலாத லறிக. இனி, இருந்தது ஆண்டதுமறந்து - இங்ஙன மிருந்ததனால் ஈமக்கடன் செய்வதை மனத்திற் கொள்ளாமல் மறந்திருக்க, வேறு ஒரு மைந்தன் ஆம்கொல்-வேறொருமைந்தனாகிய சத்துருக்கன் ஈமக்கடனைச் செய்பவனாவான்போலும் என வசிட்டர் கூறியதாக உரைப்பதுமுண்டு. [1]உந்தை, [2]மன்னனும் கொலாம் என்றபாடத்திற்கு—தோன்றல்-! நீ பிறந்து பேர் அறம் பிழைத்தது என்றல் போல் - நீ பிறந்ததனால் தொன்றுதொட்டுவந்த அரசதருமம் தவறியது என்று நினைத்தான்போல, துறந்து போயினன்-(உன்னைத்) துறந்திட்டவனாகிய, உந்தை-உன் தந்தை, இறந்துபோயினன்-இறந்திட்டான்; ஆண்டு இருந்தது அது - அப்போது அச்சொல்லைக் கூறியிட்ட அது, மறந்து-(உன்குணத்தை)மறந்து, வேறு ஒருமன்னன் ஆய் கொல்-வேறொரு அரசனாயிருந்தோ?எனப் பொருள் கூறி, பெருங்குணவானான உன்குணத்தை மன்னவன்மனத்திற்கொள்ளாது உன்னையும் உன் தாயுடனே துறந்திட்டேனென்று கூறியது-பெருந்துன்பவயத்தனாகித் தன்னியற்கையறிவு அழிந்ததனாலாகு மெனப் பரதனைத் தசரதன் துறந்ததற்குக் காரணத்தை ஒருவாறு இதனாற் கூறுகின்றான் வசிட்டமுனிவனென்க. பி-ம்:—[2]என்றபோது. (௬௩௩)

**௧௩௪.—பரதன் தனக்கு நேர்ந்துள்ள இழிதகைமைக்கு வருந்துதலை இதுவும் அடுத்த கவியும் கூறும்.**

என்று கொண்டுமா தவனி யம்பலு
நின்று நின்றுதா னெடிது யிர்த்தலு
நன்று நன்றெனா நகைமு கிழ்த்தனன்
குன்று குன்றறக் குலவு தோளினான்.

(இ - ள்.) என்று மாதவன் இயம்பலும் நின்று நின்று தான் நெடிது உயிர்த்தலும் - இவ்வாறு பெருந்தவசியாகிய வசிட்டமுனிவன் சொன்னவுடனே ஒன்றுந்தோன்றாது நின்று அம்முனிவன் பெருமூச்செறிந்தவளவில்,—குன்று குன்றுற குலவு தோளினான்-மலையையும் (உவமையாகாமற் பின்வாங்குமாறு விளங்குகின்ற தோளையுடையவனான அப்பரதன், நன்று நன்று எனா நகை முகிழ்த்தனன்-(தன்தந்தைக்கு ஈமக்கடனைச் செய்வதற்கு

தகுதியற்றவாறு தனக்கு நேர்ந்த இழிதகைமையைப்பற்றி 'என்னிலைமை) நன்றாயுள்ளது, நன்றாயுள்ளது' என்று சொல்லிச் சிரித்தான்; (எ - று.)

பரதனது நகை, எள்ளல்பற்றியது. தான் பரதன்எனக்கொண்டு, முனி சொன்னவுடன் பரதன் பெருமூச்சுவிட்டு நகைத்தானெனக்கூறலுமொன்று. கொண்டு—அசை. இச்செய்யுள் அச்சிட்ட பிரதிகளிலும் பல ஏட்டுப்பிரதிகளிலும் காணப்படவில்லை. ஆயினும், சில பிரதிகளிலிருத்தலாலும், கதைத் தொடர்ச்சிக்கு ஒருவாறு ஒத்திருத்தலாலும் உரை எழுதப்பட்டது. (௬௪0)

௬௩௫. [1]இடிக்கு வாளரா [2]விடைந்த தாமெனாப்
படிக்கண் வீழ்ந்தகம் பதைக்கு நெஞ்சினன்
றடுக்க லாகலாத் துயரந் தன்னுளே
துடிக்க [3]விம்மிநின் றழுது சொல்லுவான்.

(இ - ள்.) (பரதன்),—வாள் அரா-கொடிய பாம்பானது, இடிக்கு—, இடைந்தது ஆம் என-அஞ்சிநடுங்கியதுபோல, (வசிட்டமுனிவன் சொல்லைக் கேட்டு நடுங்கி), படிக்கண் வீழ்ந்து-பூமியில் விழுந்து, அகம் பதைக்கும் நெஞ்சினன்-உள்ளேயே துடிக்கின்ற மனத்தையுடையவனாய், தடுக்கல் ஆகலா துயரம் தன்னுள்ள துடிக்க-வெளிக்குக்காட்டாமல் தடுக்கவேண்டுமென்றாலும் தடுக்கமுடியாத துயரம் தன்மனத்தினுள்ளிருந்து வருத்த, விம்மிநின்று-பொருமியிருந்து, அழுது—, சொல்லுவான்-சொல்லலானான்; (எ - று.)

துயரம் உள்ளடங்காமையாற் பரதன் சில கூறலானானென்க. அவற்றை மேல் அடுத்த மூன்றுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]இடிக்கண். [2]இடைவது. [3]விம்மினன். (௬௪௧)

**௬௩௬.—இதுமுதல் மூன்றுகவிகள் - பரதன் அழுதுகூறும் வார்த்தை.**

உரைசெய் [1]மன்னன்மற் [2]றென்னின் யாவரே
யிரவி தன்குலத் தெந்தை முந்தையோர்
[3]பிரேத பூசனைக் குரிய பேறிலே
னரசு செய்யவோ [4]வமைவ தாயினேன்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பிரேத பூசனைக்கு-பிரேதத்திற்குச்செய்யுஞ் சடங்கைச் செய்வதற்கு, உரிய-ஏற்ற, பேறு-பாக்கியத்தை, இலேன்-பெறாத யான்—, அரசு செய்யவோ-அரசனாகஇருந்து இராச்சியத்தை யாள்வதற்கோ, அமைவது ஆயினேன்-தகுதியுடையவனாயினேன்! இரவிதன் குலத்து எந்தை முந்தையோர்-சூரியகுலத்து உதித்த எனதுதந்தையின் முன்னோர்களில், உரை செய் மன்னன் - கீர்த்திபெற்ற அரசன், என்னில் மற்று யாவர் ஏ - என்னைக்காட்டிலும் வேறு யாவருளர்? (எ - று.)

இராச்சியத்தை ஆட்சிபுரியத் தகுதிபெற்றும் பிரேதபூசனை செய்யத் தகுதிபெறாமலும் இப்படி எவரேனும் எமது சூரியகுலத்தில் முன்பு உதித்தவரில் இருந்தோருண்டோ? எவர்க்கும் இல்லாச்சிறப்பு எனக்குக்கிடைத்த

லால் என்னைப்போற் கீர்த்திபெற்றவரில்லையென்று, பரதன் பிறகுறிப்பு வகையால் தனக்கு நேர்ந்துள்ள இழிதகைமைக்கு வருந்திக் கூறுகின்றானென்க. பி-ம்:—[1]மன்னன். [2]என்னில்யாருளார், உன்னிலென்னில்யார். [3]பிரதபூசனை. [4]ஆவது. (கூசஉ)

கடுஎ. பூவி னான்முகன் [1]புதல்வ னாதியாந்
தாவின் மன்னர்தந் தரும நீதியாற்
றேவ ராயினார் [2]சிறுவ னாகியே
[3]யாவ நான்பிறந் [4]தவத்த [5]னானவா.

(இ - ள்.) பூவில் நான்முகன் புதல்வன் - திருமாலின் உந்தித்தாமரைப் பூவில் தோன்றிய நான்குமுகங்களையுடைய பிரமதேவனது புதல்வனே! ஆதி ஆம் தா இல் மன்னர்-(எம்குலத்துத்) தொன்றுதொட்டுள்ள குற்றமற்ற பூர்விக வரசர்கள், தம் தருமம் நீதியால் - தருமசாஸ்திரத்திற்கு முரணாகாத தமது ஒழுக்கத்தினால், தேவர் ஆயினார் - விண்ணுலகத்தை யடைந்தவராயினார்; நான் பிறந்து சிறுவன் ஆகியே-நான் பிறந்து சிறுவனாகஇருக்கும் பொழுதே, அவத்தன் ஆன ஆ-வீண்பட்டவனானபடி என்னே! ஆவ-ஐயோ!!(எ-று.)

'என்குலத்தோர் யாவரும் வெகுநாள் அரசுபுரிந்தும் நீதிநெறிதவறாத ஒழுக்கத்தினால் வானுலகத்தை யடைந்தனர்: யானோ சிறுவனாயிருக்கும் பொழுதே அனர்த்தத்துக்கு உள்ளானேனே!' என்று மனம்நொந்து பரதன் கூறுகின்றனனென்க. 'பூவினான்முகன்புதல்வன்'என்பது - வசிட்டமுனிவனைநோக்கிய அண்மைவிளி. பிரமபுத்திரரானவர் இப்பரதனது குலத்துப் பூருவபுருஷராகி அரசுபுரியாமையால், பூவினான்முகன்புதல்வன் என்ற இத்தொடரை, 'ஆதியாம்' என்பதனோடு சேர்த்து உரைகூறுதல் பொருந்தாது. இவ்வளவு சிறுபிராயத்திற்குள் தனக்கு இஙஙனம் நேர்ந்ததே! என்ற வருத்தந்தோன்ற, 'சிறுவனாகியே' என்றான். ஆவ என்பது இரக்கப்பொருளில் வருதலை "நாயினேனை யாவ வென்றருளு நீ" என்ற திருக்கோவையாரிலுங் காண்க. அவத்தன் - அவமானவன்: பயனற்றவன். பி-ம்:—[1]புதல்வராதியாய். [2]சிறுவராலெனா. [3]ஆவியான். [4]அவத்தம். [5]ஆயினேன். (கூசந)

கடுஅ. துன்னு தாள்வளஞ் சுமந்த தாழையிற்
பன்னு வான்குலைப் பதடி யாயினே
னென்னை யென்னையே யீன்று [1]காத்த [2]வென்
னன்னை யா [3]ரெனக் கழகு செய்தவா.

(இ-ள்.) துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்-நெருங்கிய தாள் வளத்தைக்கொண்ட தென்னையின், பன்னு வான் குலை-சிறப்பித்துக் கூறப்படுகிற சிறந்த குலையினிடையிலேயுள்ள, பதடி ஆயினேன்-(ஊமைக்காய்)போலாயினேன்; என்னை ஈன்று காத்த என் அன்னையார் - என்னைப் பெற்றுப் பாதுகாத்த என்தாயார், எனக்கு அழகு செய்த ஆ - எனக்கு நன்மைசெய்தவகை, என்னையே - எஙஙனம் உள்ளது! (எ - று.)

என்தாய் என்னைப்பெற்றுப் பாதுகாவாம லொழிந்திருப்பின் எனக்கு நன்மையுண்டாயிருக்குமென்பது குறிப்பு. தேங்காய்க்குலையி னிடையிலே யுள்ளதும் வெளியிலே யெறிந்துவிடப்படுவதுமான ஊமைக்காய்போல, சிறந்த நற்குணமுடையார் தோன்றிய் இந்தச்சூரியகுலத்தில் நான் தோன்றியதென்கின்றான், பரதன். வருத்தத்தினால் அடுக்கி, 'என்னை என்னையே' என்று கூறுகின்றா னெனினுமாம். குலையென்பதற்குத் தாழம்பூக்குலையென்று கூறுவாரும், உளர்: அவ்வுரைக்குப் பதடியென்பது - பூக்குலையினிடையிலுள்ள சோற்றைக் குறிக்கும். பி-ம்:—[1]காத்தல். [2]எம். [3]எமக்கு. (௲௩௯)

## ௧௩௯.—வசிட்டன் சத்துருக்கினனைக்கொண்டு மன்னவனுக்கு ஈமக்கடனை முடித்தல்.

என்று கூறி[1]நின் றிடரின் மூழ்குமத்
துன்று தாரவற் கிளைய தோன்றலா
லன்று [2]நேர்கட னமைவ தாக்கினா
னின்று நான்மறை நெறி[3]செ னீர்மையான்.

(இ - ள்.) நால் மறை நெறி நின்று செல் நீர்மையான் - நான்குவகைப்பட்ட வேதங்களிற்கூறிய முறைப்படியே நின்று சடங்குகளைநடத்துந்தன்மையுள்ள அந்தவசிட்டன்,—என்று—, கூறிநின்று-, இடரில் மூழ்கும்-துன்பத்துளழுந்திய, அ துன்று தாரவற்கு-(மலர்கள்) நெருங்கிய மாலைசூடிய அந்தப்பரதனுக்கு, இளைய தோன்றலால்-பின்பிறந்தவனான சத்துருக்கினனைக் கொண்டு, அன்று - அப்பொழுது, நேர் - செய்யவேண்டிய, கடன் - ஈமக்கடனை, அமைவது ஆக்கினான் - முறைப்படியேநடத்தினான்; (எ - று.)— பி-ம்:—[1]நொந்து. [2]கோக்கடன். [3]செய்ந்நீர்மையான். (௲௪௫)

## ௧௪௦.—பட்டமஹிஷியரை யொழிந்த மன்னன்தேவிமார் சககமனஞ்செய்தல்.

இழையு மாரமு மிடையு [1]மின்னிடக்
குழையு [2]மாமலர்க் [3]கொம்ப னார்கடாந்
[4]தழையின் முண்டகந் தழுவு கானிடை
[5]முழையின் மஞ்ஞைபோ லெரியின் மூழ்கினார்.

(இ - ள்.) குழையும் மா மலர் கொம்பு அனார்கள்தாம் - ஒல்கியொசியுந்தன்மையுள்ள சிறந்த பூங்கொடிபோன்ற மன்னன்தேவிமார்,—ஆரம் உம் இழைஉம் இடைஉம் மின்னிட-(தாம் பூண்ட முத்துமாலை முதலிய) வடங்களும் மற்றுமுள்ள அணிகலங்களும்(தமது)இடையும் விளங்கித்தோன்ற,தழைஇல் முண்டகம் தழுவு கானிடை - இலையில்லாத தாமரைமலர்நிரம்பியுள்ள இடத்து, முழையில் மஞ்ஞை போல் - மலைக்குகையில் வாழும் மயிலினம் புகுவதுபோல, எரியில் மூழ்கினார் - தீயிற் குளித்தார்கள்; (எ - று.)

பத்தினிப்பெண்டிர் தாமரைப்பொய்கையிற் குளிப்பதுபோற் கணவனோடு ஈமப்பள்ளியிற் புகுந்து மனங்குளிர்ந்து நல்லுலகம்புகுவரென்று பிறநூல்க ளிற் கூறுவது, இங்குக் காணத்தக்கது. இராமன்முதலிய புதல்வரைப்பெற்ற கோசலை முதலியோரைத் தவிர்ந்து,மற்றைத்தேவிமார் புதல்வரைப்பெறாதோ ராகையால் மேலுலகம்புகுமாறு கணவனுடனே ஈமப்பள்ளித்தீயிற் குதித்து, உயிர்நீத்தமை இதனாற் கூறப்பட்டது. பி - ம்:—[1]மன்னிடைக், மின்னிடைக். [2]நாள். [3]கொம்பனார்களும். [4]தழையின்முள்ளியதழுவு, தழையுமுள்ளிலவுலவு, தழையுமுள்ளியுந்தழுவு. [5]நுழையும். (கசுசு)

கசுஎ.—தீக்குளித்த மங்கைமார் நற்கதிசேர்தல்.

அங்கி நீரினுங் குளிர வம்புயத்
திங்கள் வாண்முகந் திரு[1]வி ளங்குறச்
சங்கை [2]தீர்ந்துதங் கணவர் பின்செலு
[3]நங்கை மார்புகு முலக நண்ணினார்.

(இ - ள்.) அம்புயம் திங்கள் வாள் முகம் திரு விளங்குற - தாமரைமலர் போலவும் சந்திரன்போலவும் ஒளிவிளங்குகின்ற (தம்)முகம்) பின்னும்) ஒளி பெற்றுத்தோன்ற, அங்கி நீரின் உம் குளிர-(தாம் குளித்த) அக்கினியும் (தம் கணவனது மேனியைத் தழுவுதலால்) நீரைக்காட்டிலுங் குளிர்ந்துதோன்ற, சங்கை தீர்ந்து-மனதுயரம் நீங்கி,—தம் கணவர் பின் செலும் நங்கைமார் புகும் உலகம் - தம் கணவனுடனே உயிர்நீக்கும் கற்புடையார் புகுகின்ற நற் கதியை, (தீக்குளித்தமகளிர்), நண்ணினார் - சேர்ந்தார்; (எ - று.)

மனத்தில் மகிழ்ச்சியுடனே தீக்குளித்தமையும், கற்புடையார்க்கு அக் கினிக்கடவுள் சுடானென்பதுந் தோன்ற, 'அங்கிநீரினுங் குளிர...முகந் திரு விளங்குகிற' என்றார். பி-ம்:—[1]விளங்கிடச், விளக்குறச். [2]தீர்தரத்தழுவுகற் புடை, தீர்தரத்தழுவுகற்பிணை. [3]மங்கைமார்களுமரசைமன்னினார். (கசுஎ)

கசுஅ.—ஈமக்கடன்முடிந்தபின் பரதன் மனைசேர்தல்.

அனைய [1]செய்கையா வரசர் கோமகற்
கினைய தன்மையா லியைவ [2]செய்துபின்
மனையி னெய்தினான் மரபின் வாழ்வினை
வினையி னெய்துமோர் பிணியின் வேலையான்.

(இ - ள்.) அனைய செய்கை ஆ-அவ்வாறானசெய்கை நிகழ்ந்ததாக [மன் னவன் தேவியர் தீக்குளித்தாராக],—இனைய தன்மையால்-இவ்வாறானதன் மையினால், (சத்துருக்கினனைக்கொண்டு), அரசர்கோமகற்கு-(இறந்த) தசரத சக்கரவர்த்திக்கு,இயைவ செய்து-செய்யக்கடவ ஈமக்கடன்களைச் செய்து,— மரபின் வாழ்வினை - க்ஷத்திரியவமிசத்துக்குஉரிய அரசவாழ்க்கையை, வினை யின் - (தாயின்) தீச்செய்கையால், எய்தும் - அடைதற்குஉரிய, ஓர் பிணி யின் வேலையான் - ஒப்பில்லாத மனத்துயரமாகிற கடலைக்கொண்டவனான பரதன், பின் - பிறகு, மனையின் எய்தினான் - வீட்டைச்சேர்ந்தான்; (எ-று.)

இதனால், தஹநஸம்ஸ்காரம் நிகழ்த்தியபின், பரதன்மனையை யடைந் தமை கூறப்பட்டது. பி - ம்:—[1]செய்கையால். [2]செய்தபின். (௬௪௮)

௧௪௩.—தசரதனது ஈமக்கிரியைச் சடங்கு நிகழ்த்தியமை.

ஐந்து மைந்துநா ளூழி யாமென
மைந்தன் வெந்துயர்க் கடலின் வைகினான்
றந்தை தன்வயிற் றரும மியாவையு
முந்து நூலுளோர் முறையின் முற்றினான்.

(இ - ள்.) மைந்தன் - பரதன்,—ஐந்துஉம் ஐந்துநாள் உம் - பத்துநாள் களும், ஊழி ஆம் என - ஒரு யுகம்போலத்தோன்ற [மிகவும் அரிதிற்கழிய], (அந்நாள்களில்), வெம் துயர் கடலின் வைகினான் - கொடிய துன்பக்கட லுள் தங்கியவனாய், தந்தைதன் வயின் தருமம் யாவைஉம் - தந்தைதிறத்துச் செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம், முந்து நூல்உளோர் முறையின் - பழமையான தருமசாத்திரத்தவர் கூறும் முறைப்படி, முற்றினான் - செய்து முடித்தான்;(எ - று.)—மைந்தன் - சத்துருக்கினன் என்றலுமுண்டு. பத்து நாள் தீட்டுக்காத்தமை,முன்னிரண்டடிகளாற் கூறப்பட்டது. (௬௪௯)

௧௪௪.—மன்னவனது கிரியையாவும் முடிந்தபின் வசிட்டன் இராச்சியத்தை நடப்பிக்குமாறு ஆலோசிக்கப் பரதனை வந்துசேர்தல்.

முற்று முற்றுவித் துதவி [1]மும்மைநூற்
[2]சுற்றம் [3]யாவருந் தொடரத் தோன்றினான்
வெற்றி மாதவன் வினை[4]மு டித்தவன்
[5]கொற்ற வேனெடுங் குமரற் [6]கூடினான்.

(இ - ள்.) முற்றுஉம் உதவி முற்றுவித்து - சடங்குகளையெல்ல னிருந்து முடிப்பித்து,—வினை முடித்தவன்-வினையினின்று நீங்கினவ வெற்றி மாதவன் - வெற்றிபெற்ற பெருந்தவத்தை யுடையவனான வசிட்ட முனிவன், மும்மை நூல் சுற்றம் யாவர்உம் தொடர - முப்புரிநூலாயமைந்த யஞ்ஞோபவீதத்தை யணிந்த இனத்தவரான அந்தணர்யாவரும் (தன் னைத்) தொடர்ந்துவர, தோன்றினான் - (தன்னிருக்கையினின்று) வெளிப் பட்டு, கொற்றம் வேல் நெடு குமரன் - வெற்றிபெற்ற வேற்படையைக் கொண்ட குமாரனாகிய பரதனை, கூடினான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

வசிட்டன் பரதனைக்கூடியது - இராசசியத்தை நடத்தவேண்டிய ஏற் பாட்டைச் செய்தலின்பொருட்டாகும். 'பிரமதேஜசுக்கு முன்னே க்ஷத்திரிய பலம் நிற்காது'என்றுசொல்லி நிரூபித்து அரசததன்மையைநீத்து அந்தணத் தன்மையை மேற்கொள்ளுமாறு விசுவாமித்திரனை செய்வித்த தவமகிமையை யுடையவனாதலின், வசிட்டமுனிவனை, 'வெற்றிமாதவன்' என்றார். மாதவன் முற்றுவித்துக் கூடினான்என்க. பி - ம்:—[1]முற்றுநூற். [2]சுற்றும். [3]யாவையும். [4]முடித்தவக். [5]கொற்றவன். [6]கூறினான், கூறுவான். (௬௫௦)

கசறு.—அறிஞருடனே மந்திரிமார்களும், இராச்சியம் அரசின்றியிருப்பதுபற்றி ஆலோசிக்கவருதல்.

மன்ன ரின்றியே [1]வையம் வைகருந்
றொன்மை யன்றெனத் துணியு நெஞ்சின
ரன்ன மாநிலத் தறிஞர் தம்மொடு
முன்னை மந்திரக் கிழவர் முந்தினார்.

(இ - ள்.) முன்னை மந்திரம் கிழவர் - தொன்றுதொட்ட ஆலோசனைக் குரிய மந்திரிமார், 'வையம் - இந்த இராச்சியம், மன்னர் இன்றியே-அரசனைப் பெற்றிராமல், வைகல் - இருப்பது, தொன்மை அன்று - பழமையாய்வந்த முறைமையன்று', என - என்றகாரணத்தால், துணியும் - (மன்னனையேற் படுத்தவேணும் என்று) உறுதியாகவுணர்ந்த, நெஞ்சினர் - மனத்தையுடைய வர்களாய்,—அன்ன மா நிலத்து அறிஞர் தம்மொடுஉம்-அந்தப் பெரிய இராச் சியத்திலுள்ள அறிவுள்ள பெரியோர்களுடனே, முந்தினார் - முற்பட்டுவந் தனர்; (எ - று.)

பழமையான மந்திரியரும் அங்கு அவ்வூரறிஞருடனே அரசனை யேற் படுத்தவேண்டுவது முக்கிய மென்ற கருத்துடனே வந்து சேர்ந்தன ரென்ப தாம். அராஜகமான ஜநபதத்தில் [நாட்டில்] விளையுந் தீங்குகளை ஸ்ரீவான் மீகிமுனிவர் ஒருஸர்க்கத்தாற் கூறியுள்ளார். தான் - அசை. பி - ம்:— [1]வைகும்வையகம், வைகும்வையமுன். (கஅக)

பள்ளிபடைப்படலம் முற்றிற்று.

---

## க0-ஆவது ஆறுசெல்படலம்.

பரதன் சித்திரகூடத்துக்குப் பயணப்பட்டுச்சென்ற கதையைச் சொல் லும் படல மென்பது பொருள்: ஆறு-வழி. அச்சிட்டபிரதியில் ஆற்றுப்படல மென்று இப்படலத்துக்குப் பெயர் காணப்படினும், பல ஏட்டுப்பிரதியிற் காணப்பட்டதாலும் விளக்கமாக இருப்பதாலும், இப்பெயர் கொள்ளப் பட்டது.

வசிட்டமுனிவனும் பரதனருகிலுள்ளானென்று வந்துசேர்ந்த மந்திரி மார் முதலியோர் பரதனை வணங்கிச் சூழ்ந்திருக்க, சுமந்திரன் குறிப்போடு வசிட்டனதுமுகத்தை நோக்க, நோக்கினைக் குறிப்புணர்ந்த வசிட்டன் 'உலகு காக்குதி: இது நின்கடன்: அரசின்றி இங்கும் மேலும் எங்குமில்லை: தருமம் அரசினால்தான் நிற்கும். அரசனாகிய உந்தை யிறந்தனன்: உம்முன் வனஞ் சென்றான்: வரத்தினால்வந்த பேரரசைக் காப்பாய்: இதுகுறித்தே யாம் இங் குத் திரண்டது' என்று தம்மனக்கருத்தைச் சொல்ல, அதுகேட்ட பரதன் நஞ்சுநுகர்ந்தான்போல் நடுநடுங்கி,நாக்குழறக் கண்ணீர் அருவிபோற்பொழிய மூர்ச்சித்துப் பின்தெளிந்து'மூன்றுலகினுக்கும்முதல்வனாய்முன்தோன்றியவ னிருக்க, யான் மகுடஞ்சூடுதல் தரும மென்று சான்றவரும் சொல்லலர்

யிற்றே: இது கலிகாலமோ? எங்கேனும் மூத்தவனிருக்க இளையவன் அரசு புரிதல் உண்டாயிற் காட்டுக: ஒருகால், நான் அரசுபுரிவது நன்னெறியே யென்று நிரூபித்தாலும், இவ்வரசை ஏற்று வாழேன்: இராமபிரானை யழைத்துவந்து முடிசூட்டமுயல்வேன்: அன்னவன் இணங்காவிடின் அவனுடன் கானகத்து வசிப்பேன்: மாறுகூறின், உயிர்துறப்பேன்' என்று உறுதியாகக் கூற, கேட்ட சபையோர் பரதனது நிலைமையை வியந்துநிற்க, பரதன் இளையோனையழைத்து, 'ஸ்ரீராமபிரானை அழைத்துவருவதனை முரசறைந்துசாற்றி, தானையையும் விரைவினிலெழுக என்று கூறுவாய்'என்ன, அவனும் அங்ஙனமே செய்ய, யாவரும் இராமனையழைத்துவர மனக்கிளர்ச்சிகொண்டுபுறப்பட்டனர். அறிஞர்முதல் சிறியர்வரை யாவரும் புறப்பட்டுவிட்டதால் அயோத்தியே வெறிச்சென்றுபோயிற்று. இங்ஙனம் சேனையும் நகரத்தாரும் செல்ல, பரதன் தன்னரையிற் சீரைசாத்தி முனிவர்கோலத்துடனே தம்பியும் உடன்வர, தாயரும் தவத்தவரும் மந்திரியரும் அளவில்சுற்றமும் அந்தணரும் தொடர்ந்துவர, தேரின்மீது சென்று புரசைவாயிலிற் போக, மந்தரையென்னுங்கூனியும் அத்திரளில் உந்திப்போதலைச் சத்துருக்கினன் கண்டு அந்தரத்துஏற்றுவான் பற்றலும், பரதன் தடுத்து, 'முன்னையர் முறைமையைக்கெடுத்த பாவியாகிய என்னன்னையைச் சின்னபின்னஞ் செய்திருப்பேன்:என்னையன் முனியுமென்று விட்டிட்டேன்: கூனியின்மீது வெகுண்டோமாயினும் ஐயன் முனியுமென்று இவளையும் விட்டிடு:நாம்போதும்' என்ன, சத்துருக்கினனும் விட்டிட்டான். பிறகு பரதன் யாவரோடும் புறப்பட்டுச்சென்று இராமன்தங்கியசோலையில் தங்கிக் கண்ணீரருவியின்மூழ்கி வீரன் வைகியபுல்லணைமருங்கில் தானும் பொடியில் வைகி, அங்குநின்று இராமன் காவினால் நடந்து சென்றானென்று தானும் சேனைமுதலியதொடர நடந்துசென்றனனென்பது, இப்படலத்துக் கூறிய பொருள்.

வேறு.

க.—அறிஞரோடுமுந்திய மந்திரிமாரும் அங்கு வந்துநெருங்குதல்.

வரன்முறை தெரிந்துணர் [1]மறையின் மாதவத்
தருமறை [2]முனிவனு [3]மாண்டை யானென
விரைவின்வந் தீண்டினர் விரகி னெய்தினர்
பரதனை வணங்கினர் [4]பரியு நெஞ்சினர்.

(இ - ள்.) பரியும் நெஞ்சினர்-அன்புகொண்ட மனத்தையுடையவராகி, விரகின் எய்தினர்-சூழ்ச்சித்திறனோடு பொருந்தியவரான மந்திரக்கிழவர்,— 'வரல் முறை தெரிந்து உணர் மறையின் - வரலாற்று முறைமையினாலாராய்ந்து அறிந்த வேதங்களையுடைய, மா தவத்து அரு மறை - பெருந்தவத்தின் அருமையான இரகசியங்களை யறிந்த, முனிவன்உம் - வசிட்டனும், ஆண்டையான் - அந்த இராசசபையிலிருக்கின்றான்', என-என்று, விரைவின் வந்து ஈண்டினர் - விரைந்து (அந்த இராசசபையை) வந்துசேர்ந்து, பரதனை வணங்கினர்—; (எ - று.)

கீழ்க்கவியில், 'மந்திரக்கிழவர் முந்தினார்' என்று கூறிய கவி, இதனால், அவர்கள் வந்துசேர்ந்து பரதனை வணங்கியமையைக் கூறுகின்றார். விரகு - ஆலோசிக்குந் திறம்; அதனோடுபொருந்தியவ ரெனவே, 'விரகினெய்தினார்' என்ற தொடர் - மந்திரிமாரைக் காட்டிற்று. சூரியகுலத்தாராண்டுவந்த கோசலதேசம் அரசனின்றிப் பாழ்த்துப்போகக்கூடா தென்ற கருத்துடைய வர் அம்மந்திரிமா ரென்பார் 'பரியுநெஞ்சினர்' என்றார். "அடியளந்தான்" என்றவிடத்துப்போல 'அருமறைமுனிவன்' என்ற தொடர் வசிட்டமுனிவ னுக்கு வாளாபெயராய்நின்ற தென்பாருமுளர். ஈண்டினர் - முற்றெச்சம். பி - ம்:—[1]மரபின். [2]முனிவரும். [3]ஆண்டையார்களும். [4]நெஞ்சினர். (௬௫௨)

உ.—வந்தவர் யாவரும் பரதனைச் சூழ்ந்திருத்தல்.

மந்திரக் கிழவரு நகர மாந்தருந்
தந்திரத் தலைவருந் [1]தரணி பாலரு
மந்தர முனிவரோ டறிஞர் யாவருஞ்
சுந்தரக் குரிசிலை [2]மரபிற் சுற்றினார்.

(இ - ள்.) அந்தரம் முனிவரோடு - (தவவலிமையால்) ஆகாயத்திலுஞ் சஞ்சரிக்குஞ் சித்திபெற்ற முனிவர்களுடனே, மந்திரம் கிழவர்உம் - மந்திரி மார்களும், நகரம் மாந்தர் உம் - நகரத்திலுள்ளபிரதானஜநங்களும், தந்திரம் தலைவர்உம் - சேனாதிபதிகளும், தரணிபாலர்உம் - மன்னவர்களுமாகிய, அறி ஞர் யாவர்உம் - புத்திமான்களெல்லோரும், சுந்தரம் குரிசிலை - அழகுள்ள சிறந்த ஆண்குமரனான பரதனை, மரபின் - முறைமையினால், சுற்றினார் - சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)

நகரமாந்தர் முதலியோர் பரதனை நெருங்கிச் சேர்ந்தன ரென்றவாறு. சென்ற படலத்தின் ஈற்றுச் செய்யுளில் "அன்னமாநிலத் தறிஞர்தம்மொ டும், முன்னைமந்திரக் கிழவர் முந்தினார்" என்று கூறிய கவி, இப்படலத்தின் முதற்செய்யுளால் மந்திரிமார் நெருங்கியமையையே கூறி, இந்தச் செய்யு ளால் மற்றையோர் நெருங்கியமையைக் கூறக் கருதி மந்திரிமார்நெருங்கிய மையையும் அனுவாதமுகத்தாற் கூறின ரென்க. பி - ம்:—[1]தரணிவாணரும், தரணிவாணரோடு. [2]முறையிற். (௬௫௩)

௩.—பரதனை இராச்சியம்ஆளும்படிகூறவேணுமென்ற குறிப்புடனே சுமந்திரன் வசிட்டமுனிவனை நோக்குதல்.

சுற்றின ரிருந்துழிச் சுமந்தி ரப்பெயர்ப்
பொற்றடந் தேர்வலான் புலமை யுள்ளத்தான்
[1]கொற்றவற் குறுபொருள் குறித்த கொள்கையான்
முற்றுணர் [2]முனிவனை முகத்து நோக்கினான்.

(இ - ள்.) சுற்றினர் இருந்த உழி - (மந்திரக்கிழவர் முதலியோர் கீழ்க் கூறியவாறு) சூழ்ந்திருந்தபோது, புலமை உள்ளத்தான் - அறிவுமிக்க மனமுடையவனும், சுமந்திரன் பெயர் பொன் தட தேர்வலான் - அழகியபெரிய தேரையோட்டுதலில் வல்லவனுமான சுமந்திரனென்பவன்,—கொற்றவற்கு உறு பொருள் குறித்த கொள்கையான் - வெற்றி பொருந்திய மன்னவகுமாரனாகிய பரதனுக்கு (மனத்தினுள்ளே) பொருந்திய எண்ணத்தைக் குறிப்பினாலுணர்ந்த கொள்கையையுடையவனாய், (அக்கருத்தைப் பலருக்குந் தெரிவிக்குமாறு அப்பரதன் வாய்மூலமாகவே வெளிப்படுத்தும் பொருட்டு), முற்று உணர் முனிவனை - முழுதும் அறிந்த முனிவனாகிய வசிட்டனை, முகத்து நோக்கினன் - (பரதனை இராசசியத்தை யங்கீகரிக்கும்படி சொல்லவேண்டுமென்ற குறிப்புடனே) முகத்தைப் பார்த்தான்; (எ - று.)

பரதனை அரசுபுரியுமாறு சொல்லவேண்டுமென்பது சுமந்திரனுடைய கருத்தாதல் மேற்செய்யுளில் விளங்கும். [1]கொற்றவக் குரிசிலைக்குறித்த கொள்கையான் என்ற பாடத்துக்கு - வெற்றிபொருந்திய அந்தப்பரதனை இராச்சியாதிபதியாகுமாறு சொல்லவேண்டுமென்று கருதிய எண்ணத்தையுடையவனாய் என்று பொருள் காண்க. காலதேசவர்த்தமானங்களையறிந்து சொல்லவல்லவன் வசிட்டனென்பார் 'முற்றுணர்முனிவன்' என்றார். பொற்றடந்தேர்வல் சுமந்திரப்பெயரினன் என விகுதிபிரித்துக் கூட்டுக.
பி - ம்:—[1]கொற்றவற்குறுபொருளுணர்ந்த. [2]முனிவரன். (௬௫௪)

**௪.—சுமந்திரன்கருத்தை யறிந்த வசிட்டன் பரதனை உலகத்தையாளுமாறு சொல்லத் தொடங்குதல்.**

> [1]நோக்கினாற் சுமந்திர னுவல லுற்றதை
> வாக்கினா லன்றியே யுணர்ந்த மாதவன்
> காக்குதி [2]யுலகநின் [3]கடனி தாமெனக்
> கோக்குமர னுக்கது தெரியக் [4]கூறுவான்.

(இ - ள்.) சுமந்திரன்—,—நோக்கினால் - கண்சைகையினால், நுவலல் உற்றதை - சொல்லுவதற்குப் பொருந்தியதை [சொல்லியதை], வாக்கினால் அன்றியே - வாயினாற் சொல்லுதலில்லாமலே, உணர்ந்த - தெரிந்துகொண்ட, மா தவன் - பெருந்தவத்தினனாகிய வசிட்டமுனிவன், 'உலகம் காக்குதி - இராச்சியத்தைப் பாதுகாப்பாய்; இது - இச்செய்கை, நின் கடன் - நீ செய்யவேண்டிய செயலாம்,' என - என்று, கோ குமரனுக்கு - அரசகுமாரனாகிய பரதனுக்கு, அது - அவ்விஷயத்தை, தெரிய - விளங்குமாறு, கூறுவான் - சொல்லுவானானான்; (எ - று.)—அதனை, மேல் எழுகவிகளிற் காண்க.

ஆம் - அசை. பி - ம்:—[1]நோக்கினன், நோக்கிய. [2]உலகிது, உலகநின். [3]கடனது. [4]கூறினன். (௬௫௫)

ரு.—இதுமுதல் ஏழுகவிகள் ஒருதொடர்: வசிட்டமுனிவன் வார்த்தை.

வேதிய ரருந்தவர் [1]விருத்தர் வேந்தர்க
[2]ளாதியர் நின்வயி னடைந்த காரிய
நீதியுந் தருமமு [3]நிறுவ நீயிது
கோதறு [4]குணத்தினாய் [5]மனத்துக் கோடியால்.

(இ-ள்.) (பரதனைநோக்கி வசிட்டமுனிவன் கூறுவான்:)—கோது அறு குணத்தினாய் - குற்றமற்ற குணத்தையுடையவனே! வேதியர் - வேதம்வல்ல பிராமணர்களும், அரு தவர் -(பிறர்செய்தற்கு) அரிய தவத்தைச்செய்யும் முனிவர்களும், விருத்தர் - வயசுசென்றவரான (இந்நகரத்துப்) பெரியோர்களும், வேந்தர்கள் - அரசர்களும், ஆதியர் - முதலியவர்கள், நின்வயின் - உன்னிடத்து, அடைந்த - வந்துசேர்ந்த, காரியம்—, (என்னவெனில்),—(இப்போது அரச னில்லாமையாற் கெடப்போவனவாகவுள்ள), நீதிஉம் - நியாயமும், தருமம்உம் - குலாசாரங்களும், நிறுவ - நிலைநிறுத்துதலின்பொருட்டேயாகும்; நீ—, இது - இதனை, மனத்து கோடி - நெஞ்சிலேகொண்டு ஆராய்வாயாக; (எ - று.)

நீதி - சிறியோரைப் பெரியோர் நலியாமைமுதலியன. பி-ம்:—[1]விருத்த வேந்தர்கள். [2]ஆதியாய். [3]நிறுத்தி, நிறுவி. [4]மனத்தினாய். [5]மனத்தூட். (கூருகூ)

கூ. [1]தருமமென் றொருபொரு [2]டந்து நாட்டுத
லருமையென் பது[3]பெரி தறிதி யையநீ
யிருமையுந் தருவதற் [4]கியைவ [5]தீண்டிது
[6]தெருண்மனத் தார்செயுஞ் செயலி தாகுமால்.

(இ - ள்.) 'தருமம் என்ற ஒரு பொருள் - தருமமென்கின்ற ஒப்பற்ற பொருளை, தந்து - (யாவரையும்) அநுஷ்டிக்கச்செய்து, நாட்டுதல் - நிலை நிறுத்துவது, அருமை - அருமையானசெயலாகும்,' என்பது - என்ற இவ்விஷயத்தை, ஐய - ஐயனே! நீ—, பெரிது அறிதி - நன்கு உணர்வாய்: ஈண்டு - இப்போது, இது - (இராச்சியத்தைமேற்கொள்வதாகிய) இத்தருமம், இருமை உம் - இம்மைமறுமைஎன்ற இரண்டையும், தருவதற்கு—, இயைவது - பொருந்தியதாகும்; இது - இந்தத்தருமம், தெருள் மனத்தார் செயும் - தெளிந்த மனத்தையுடையவர் அநுஷ்டிக்கவேண்டிய, செயல் ஆகும்—; (எ - று.)— ஆல் - ஈற்றசை: தேற்றமுமாம்.

கீழ்ச்செய்யுளில் நீதியையும் தருமத்தையும் நிறுவவேண்டுமென்றுகூறிய வசிட்டமுனிவன், இதனால் அந்தத்தருமத்தின்சிறப்பையும், தெள்ளறிவினர் தவறாமல் அந்தத்தருமத்தை மேற்கொண்டொழுகுவ ரென்பதையுங் கூறு கின்றான். பி-ம்:—[1]கருமம். [2]எடுத்துக்காட்டுதல். [3]பிறிது. [4]இசைவது. [5]ஈண்டது. [6]திருமனந்தனிலிவைதெரிதியாலையா, தெருமருந்தனக்கதுசேர்விலாமையால், தெருண்மனத்துனக்கது சேர்விலாமையால், தெருண்மனந்தனக்கொரு செறிவிலாமையே, தெருண்மனத்தார்க்கலாற் றெரிதற் பாலதோ.

எ. [1]வள்ளுறு வயிரவா ளரசில் [2]வையக
நள்ளுறு கதிரிலாப் பகலு [3]நாளொடுந்
தெள்ளுறு மதியிலா விரவுந் [4]தேர்தரி
[5]னுள்ளுறை யுயிரிலா [6]வுடலு [7]மொக்குமே.

(இ - ள்.) தேர்தரின் - ஆராயுமிடத்து,—வள் உறு வயிரம் வாள் அரசு இல்-உறையிற்பொருந்துந்தன்மையுள்ள உறுதியான வாட்படையைப் பூண்டுள்ள அரசனைப் பெற்றிராத, வையகம்-உலகமானது,—நள் உறு கதிர் இலா பகல்உம்-(யாவரும்)விரும்புகின்ற சூரியனைப் பெற்றிராத பகலையும்,நாளொடு உம் தெள் உறு மதி இலா இரவுஉம்-நட்சத்திரங்களுடனே தெளிவுபொருந்திய [குளிர்ந்தகிரணங்களையுடைய] சந்திரனைப்பெற்றிராத இராத்திரியையும், உள் உறை உயிர் இலா உடல்உம் - உள்ளேபொருந்திய உயிரைப்பெற்றிராத [உயிர்நீங்கிய] உடலையும், ஒக்கும்—; (எ - று.)

இதனால், தருமத்தை நிலைநாட்டுகின்ற அரசன் உலகத்திற்கு இன்றியமையாதவ னென்பதை உபமானமுகத்தால் எடுத்துக்காட்டியவாறு. வள்-கூர்மையுமாம். நள் உறு கதிர் என்பதற்கு - (எல்லாக்கிரகங்களுந் தன்னைச் சூழத் தான்)நடுவில் உறுகின்ற சூரியன் எனினுமாம். ஈற்றடி-முற்றுமோனை.
பி-ம்:—[1]வள்ளுறை. [2]வையமும். [3]நாடொறும், நாளிலும். [4]தேர்வரும், தேர்ந்திடின், தேர்ந்திடல், தேரரும், தேவுடன். [5]உள்ளுறும். [6]உடம்பும். [7]ஒக்குமால்.

அ. தேவர்த முலகினுந் தீமை செய்துழன்
டாவலி யவுணர்கள் வைகு நாட்டினு
[1]மேவெவை யுலகமென் [2]றிசைக்கு [3]மன்னவை
காவல்செய் தலைவரை யின்மை [4]கண்டிலம்.

(இ - ள்.) தேவர்தம் உலகின்உம்-தேவலோகத்திலும், தீமை செய்து உழல் மா வலி அவுணர்கள் வைகும் நாட்டின்உம் - (பிறருக்குக்) கொடுமை செய்துதிரிகின்ற பெருவலிபடைத்துள்ள அசுரர்கள் வாழ்கின்ற நாட்டிலும், (மற்றும்), ஏவை ஏவை உலகம் என்று இசைக்கும் அன்னவை-எவ்வெவைகள் உலகமென்று சொல்லப்படுமோ அவைகளெல்லாவற்றிலும், காவல் செய் தலைவரை இன்மை-பாதுகாக்குந்தொழிலைச் செய்கின்ற மன்னவரின்றியிருத்தலை, கண்டிலம் - பார்த்திலோம்; (எ - று.)

அரசனில்லாத வையகத்தின் சிறப்பின்மையைக் கீழ்க்கவியிற் கூறிய வசிட்டன், இதனால் அரசனில்லாத உலகமே எங்குங் காணப்பட்டதில்லை யென்கின்றான். 'நல்லோர்வசிக்கிற இடத்திற்கும் அரசன் உண்டு, தீயோர் வசிக்கிற இடத்திற்கும் அரசனுண்டு' என்பதற்காக, 'தேவர் தம்முலகினும் தீமைசெய்துழல் மாவலியவுணர்கள் வைகுநாட்டினும்' என்றது நாடுஎன்பதற்கு அடையாளம், மன்னவனைப் பெற்றிருப்பதே யென்றவாறு. ஏவை

எவை என்பன் - எவெவையெனச் சிதைந்து வந்தன. பி-ம்:—[1]எவையும், யாவதும். [2]இசைக்கில், இசைப்பின், இருக்கும், இருப்பின். [3]என்னவை, என்னது. [4]காண்டியால், காட்டியால். (௬௫௯)

௬௬. முறைதெரிந் தொருவகை முடிய நோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந் [1]தன்மையி னிற்ப செல்வன
[2]விறைவரை யில்லன [3]யாவுங் [4]காண்கிலம்.

(இ - ள்.) முறை தெரிந்து-முறைமையை யுணர்ந்து, ஒரு வகை முடிய நோக்குறின் - ஒருவாறு முடிய ஆராயுமிடத்து, மறையவன் வகுத்தன-பிரமதேவனாற் படைக்கப்பட்டனவாய், மண்ணில் வானிடை - நிலவுலகத்திலும் மேலுலகத்திலும் வாழ்கின்ற, நிறை பெரு தன்மையில் நிற்ப செல்வன - நிறைந்த பெருந்தன்மையோடு நிற்பனவும் செல்வனவுமான சராசரங்களெல்லாம், இறைவரை இல்லன - தலைவரைப் பெற்றிராதனவாக, யாஉம்-எவற்றையும், காண்கிலம்—; (எ - று.)

எந்தவுலகத்திலும் நிற்பனவும் செல்வனவுமான எல்லாவுயிர்களும் தம்மைப் பாதுகாக்கின்ற.ஒரு தலைவனைப் பெற்றிருக்கின்றனவே யன்றி, தலைவரில்லாப்பொருளை எங்கும் கண்டிலோ மென்பதாம். கீழ்க்கூறிய பொருளையே வற்புறுத்துதற்பொருட்டு, இக்கவியில் வேறுவாய்பாட்டாற் கூறினனென்க. 'மண்' என்பது-கீழுலகங்கட்கெல்லாமும், 'வான்' என்பது-மேலுலகங்கட்கெல்லாமும் உபலட்சணம். பி-ம்:—[1]தனிமையில். [2]இறைகளை, இறைவனை. [3]யாவை. [4]காண்கிலேம், காண்கிலோம். (௬௬0)

௬0. பூத்தநாண் மலரயன் [1]முதல புண்ணிய
[2]ரேத்துவான் புகழின ரின்று [3]காறுங்கூக்
காத்தனர் பின்னொரு களைக ணின்மையா
னீத்தநீ ருடைகல நீர தாகுமால்.

(இ - ள்.) பூத்த - (திருமாலினது) நாபியிலுண்டான, நாள் மலர்-(எப்போதும்) அன்றலர்ந்ததுபோன்ற தாமரைமலரிலே தோன்றிய, அயன்-பிரமதேவனை, முதல - முதலாகவுள்ள, புண்ணியர்-புண்ணியவான்களும், ஏத்து-கொண்டாடுகின்ற, வான் புகழினர்-சிறந்த கீர்த்திியைப்பெற்ற(உன் குலத்த)வர், இன்றுகாறுஉம் - இன்றைவரையிலும், கூ-இவ்வுலகத்தை; காத்தனர் - (தாம் அரசு பூண்டு நீதி தருமங்கள் தவறாதபடி) பாதுகாத்தார்கள்; (இப்போது நீ இவ்விராச்சியத்தை யரசுபூண்டு பாதுகாவாவிடினோ), பின்-இனி, ஒரு களைகண் இன்மையால் - ஒப்பற்ற பாதுகாப்பு இல்லாமையால், (இவ்வுலகம்), நீத்தம் நீர் - வெள்ளமான நீரையுடைய கடலிலே, உடை - உடைந்துபோய்விட்ட, கலம் - மரக்கலத்தின், நீரது - தன்மையை யுடையதாக, ஆகும்—; (எ - று.)—ஆல் - ஈற்றசை: தேற்றமுமாம்.

பரதனே! நீ அரசை மேற்கொள்ளாவிடின், வையகத்துக்குப் பெருவருத்தந் தோன்று மென்பது, இதனாற் கூறப்பட்டது. கூ - கு என்ற வடசொல்லின் விகாரம்.பி-ம்:—[1]ஆதிப். [2]ஏத்துவாரன்றளவு. [3]காறுமுன்.(௬௬௧)

௧௧. உந்தை [1]யோ விறந்தன னும்மு [2]னீத்தனன்
வந்தது மன்னைதன் [3]வரத்தின் மைந்தநீ
யந்தமில் பேரர [4]சளித்தி யன்னது
சிந்தனை யெமக்கெனத் [5]தெரிந்து கூறினான்.

(இ - ள்.) மைந்த - சிறுவனே! உந்தை ஓ இறந்தனன் - உனது தந்தையாரோ இறந்துபட்டனன்: உம்முன் நீத்தனன் - உனது முன் பிறந்தவனான இராமனோ (தசரதனது வசனத்துக்குக் கட்டுப்பட்டு இராச்சியத்தை) விட்டிட்டுச் சென்றான்; அன்னைதன் வரத்தின் வந்ததுஉம்-உனது தாயான கைகேயியின் வரத்தினால் (உனக்கு க்)கிடைத்திருப்பதுவும், அந்தம் இல் பேர் அரசு - எல்லையில்லாத பெருமைபெற்ற இராசசியமாகும்: அன்னது - அந்த இராச்சியத்தை, நீ—, அளித்தி - பாதுகாப்பாய்: எமக்கு சிந்தனை - (இதுவே இங்குக்கூடிய) எமது எண்ணம், என—, தெரிந்து கூறினான் - ஆலோசித்து (வசிட்டமுனிவன்) சொல்லி முடித்தான்; (எ - று.)

ஐயனே! தசரதமன்னவன் சத்தியந் தவறாமலிருக்கும்பொருட்டுத் தனதானியங்களாற்செழித்துள்ள இந்தப்பூமியை உனக்குக் கொடுத்துச் சுவர்க்கஞ் சென்றான்; வாய்மையில் ஊற்றமுடைய ஸ்ரீராமனும் அம்மன்னவன் போலவே பெரியோரின் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்துத் தந்தையின் கட்டளையைத் தவறாமல் கானகஞ் சென்றான்; உன்தந்தையும் உன்தமையனும் உனக்குக்கொடுத்த இராச்சியத்தை நீ அனுபவிப்பாயாக; எமதுகருத்து இதுவே என்று வசிட்டன் தங்கருத்தைக் கூறிமுடித்தனன். தொன்றுதொட்டு வந்த தென்பான் 'அந்தமிலரசு' என்றானெனினுமாம். வந்ததும், உம்மை - கதைப்போக்குப்பற்றிய இறந்ததுதழுவியது. பி-ம்:—[1]முன்னிறந்தனன். [2]நீங்கினன். [3]வாக்கின், வரதது, [4]அளித்தல். [5]தெரியக். (௬௯௨)

௬௨.—வசிட்டன் சொல்லைக் கேட்டுப் பரதன் மிக வருந்துதல்.

தஞ்சமிவ் [1]வுலகநீ தாங்கு வாயெனச்
செஞ்செவே முனிவரன் செப்பக் [2]கேட்டலு
நஞ்சினை நுகரென நடுங்கு வாரினு
மஞ்சின னயர்ந்தன னருவிக் கண்ணினான்.

(இ - ள்.) 'இ உலகம்-இந்த இராச்சியத்தை, தஞ்சம்-இரட்சகனாக, நீ-, தாங்குவாய் - பாதுகாப்பாய்,' என-என்று, முனிவரன்-இருடியரிற் சிறந்தவனாகிய வசிட்டன், செஞ்செவே - (குறிப்பாகவன்றி) வெளிப்படையாக, செப்ப-சொல்ல, கேட்டலும் - (அதனைச்) செவியேற்றவுடனே,-(பரதன்),— அருவி கண்ணினன்-அருவிபோல நீரைப்பெருக்குகின்ற கண்களையுடையவனாய், நஞ்சினை நுகர் என-'(நீ) விஷத்தையுண்பாய்' என்று பலவந்தப்படுத்த, (அப்போது), நடுங்குவாரின் உம் - (அச்சத்தினால் மனம்) நடுங்குபவரைக் காட்டிலும் (மிகுதியாக), அஞ்சினன் அயர்ந்தனன் - (மனத்தில்) அச்சங்கொண்டு சோர்ந்தான்; (எ - று.)

முதலடியில் "மாநிலந்தஞ்சமாக நீ தாங்கு" என்று நகர்நீங்குபடலத்து வருவதும், இரண்டாமடியில் "நஞ்சு நுகர்ந்தா ரென வுடல நடுங்கா நின்று ரென்றாலும்" என்று தைலமாட்டுபடலத்தில் வருவதும் ஒப்புநோக்கத்தக்கன. பி-ம்:—[1]உலகை, உலகு. [2]கேட்டதும். (கூகூக)

**கங.—சபையோர்முன்னிலையிற் பரதன் தன் கருத்தைக் கூறத் தொடங்குதல்.**

நடுங்கின னாத்தடு மாறி நாட்டமு
மிடுங்கினன் மகளிரி னிரங்கு நெஞ்சின
னொடுங்கிய வுயிரின னுணர்வு [1]கைதரத்
தொடங்கின னரசவைக் குள்ளஞ் சொல்லுவான்.

(இ - ள்.) (பரதன்),—நடுங்கினன் - (இராச்சியத்தை அரசுபுரியுமாறு வசிட்டமுனிவன் சொன்னதைக் கேட்டு) மனநடுக்கமுற்றவனாய், நா தடுமாறி - நாக்குத் தழுதழுத்து, நாட்டம்உம் இடுங்கினன் - கண்களும் (மலர்தலின்றி) இடுங்கப்பெற்று, மகளிரின் இரங்கும் நெஞ்சினன் - பெண்மக்களைப் போலப் புலம்புங் கருத்துக்கொண்டு, ஒடுங்கிய உயிரினன் - உயிரும் ஒடுங்கப்பெற்று [மூர்ச்சையடைந்து], (பின்பு), உணர்வு கைதர - (தவறிய) பிரஞ்ஞை மீண்டும்வர, அரசு அவைக்கு - அந்தராஜசபையிலுள்ளார்க்கு, உள்ளம் சொல்லுவான் - (தன்) மனக்கருத்தைத் தெரிவிக்க, தொடங்கினன்—; (எ - று.)—அதனை மேல்ஐந்துகவிகளிற் காண்க.

பரதன் நடுங்கித் துயரமிகுதியால் நாத் தழுதழுக்கக் கண்ணிடுங்க,மகளிரைப்போலப் புலம்பி மூர்ச்சையடைந்து பிறகுதெளிவுபெற்றுச் சபையிலுள்ளார்க்குத் தன்கருத்தைத் தெரிவிக்கலாயின னென்க. பி-ம்:—[1]கைதொழத்.

**கச.—இதுமுதல் ஐந்துகவிகள் - பரதன் சபையோர்க்குத் தன்னுள்ளக்கருத்தை யுணர்த்துதலைத் தெரிவிக்கும்.**

மூன்[1]றுல கினுக்கொரு முதல்வ னாய்முதற்
றோன்றின [2]னிருக்கயான் மகுடஞ் சூடுதல்
சான்றவ [3]ருரைசெயத் தரும [4]மாயதே
யீன்றவள் [5]செய்கையி னிழுக்குண் டாகுமோ.

ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மூன்று உலகினுக்கு - (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும்) மூன்றிடத்திலுமுள்ள எல்லாவுலகங்கட்கும், ஒரு முதல்வன் ஆய் - ஒப்பற்ற முதற்காரணனாகி, முதல் தோன்றினன் - (எனக்கு) முன்னே பிறந்தவனாகிய ஸ்ரீராமன், இருக்க - இருக்கையில், யான் மகுடம் சூடுதல் - நான் கிரீடந்தரித்து அரசுபுரிவது,—சான்றவர் உரைசெய - பெரியோர் சொல்லுமாறு, தருமம் ஆயது ஏ-தருமமாகிவிட்டதே! (இங்ஙனமாயின்), ஈன்றவள் - (என்னைப்) பெற்றதாயான கைகேயியினது, செய்கையின் - தொழிலில், இழுக்கு - குற்றம், உண்டு ஆகும் ஓ - உளதாகுமோ? (எ - று.)

'மூத்தவனிருக்கையில் இளையவனாகிய யான் முடிபுனைதல் தருமமே' என்று இந்தவசிட்டமுனிவன் சொல்வானாகில், அப்போது எனதுதாயின் செயலும் தவறானதாகாது' எனப் பரதன் கூறுகின்றானென்க; என்றது - என்தாயின்செய்கை தவறானதேஆதலால், இந்தவசிட்டன்மொழியும் தரும த்திற்குமாறானதே யாகு மென்று வசிட்டனைப் பழித்தவாறு. "விலலாப ஸபாமத்யே ஜகர்ஹேச புரோஹிதம் - [(பரதன்) சபையினிடையிற்புலம்பி(த் தன்னை அரசுபுரியுமாறுகூறும்) புரோகிதனானவசிட்டனையும் பழித்தான்]" என்று முதனூலிற் கூறியுள்ளதுங் காண்க. "தமையனது இராச்சியத்தைக் கவர்ந்து அரசாளுகின்ற யான் இராமனைப் பிரிந்ததனால் தன்னுயிரைநீத்த தசரதனுக்குப் பிறந்தவனாகஆவேனோ? இராச்சியமும் நானும் இராமனுடை மை: அப்படியிருக்க, உடைமையாகிய ஒன்று மற்றொருஉடைமையை ஆளுவ தென்பது எங்கேனும் கண்டதுண்டோ? அஙஙனம் உண்டாயின் இராச்சியந் தான் என்னையாளட்டுமே"என்னுங்கருத்துப்படப் பரதன்கூறியதாகவும் முத னூலில் வந்துள்ளது. 'சான்றவர்' என முன்னிலையான வசிட்டனைப் படர்க் கையாற் கூறினன். சபையோர் யாவருடையசம்மதத்தையுமே வசிட்டன் கூறுதலால், சான்றவர்-சபையோரெனினுமாம். பி-ம்:—[1]உலகினுக்குமோர். [2]நிற்க. [4]ஆகியது,ஆதலால். [5]செய்கையில். [7]உரைசெய்த. என்றும்படிக்கலாம்.

கரு. அடைவருங் கொடுமையென் னன்னை செய்கையை
[1]நடைவருந் தன்மைநீர் [2]நன்றி தென்றலி
னிடைவருங் காலமீண் டிரண்டு நீத்[3]திது
கடைவருந் [4]தீநெறிக் கலியி [5]னாட்சியோ.

(இ-ள்.) கொடுமை அடைவரும்-கொடுமை பொருந்திய, என் அன்னை- எனதுதாயான கைகேசியின், செய்கையை-(இராமன் காட்டிற்குச்செல்லவும் நான் முடிசூடவும் வரம்வேண்டிய) செயலைக்குறித்து, நடை வரும் தன்மை- நல்லொழுக்கத்திற் செல்லுந் தன்மையையுடைய, நீர்-(சபையீரான) நீங்கள், 'இது நன்று' என்றலின் - இது சரியானதே என்றுசொல்வதனால்,— ஈண்டு இது - இப்போதுள்ள இந்தக்காலம், இடை வரும் காலம் இரண்டு உம் நீத்து - (கிருதயுகம் கலியுகம்என்னும் இரண்டுகாலத்துக்கும்) இடையே வரும் இரண்டுயுகங்களும் கழிந்திட்டு, கடைவரும் - கடைசியிலே [நான்காவ தாக] வருகிற, தீ நெறி - தீயவொழுக்கத்தைக் கொண்ட, கலியின் ஆட்சிஓ- கலிபுருஷனது ஆட்சியையுடையகாலமோ? (என்று ஐயுறவேண்டியதாக வுள்ளது); (எ - று.)

எனதுதாயின்கொடுஞ்செயலையும் நீங்கள் நன்றென்றுஅங்கீகரித்திட்டு என்னை அரசுபுரியுமாறு கூறுதலால்,இது இரண்டாவதுயுகமாகிய திரேதாயுக மன்று;கலிபுருஷனது ஆட்சியைக்கொண்ட தீயவொழுக்கத்தையுடைய நான் காவதுயுகமான கலியுகமேஎன்று கருதவேண்டியதாக இருக்கின்றதெனப் பர தன் கூறுகின்றனனென்க. தருமதிற்கு மாறானசெயல் கலியுகத்தினியல்பி

ஞல் நிகழ்வதாகக் கூறுவதை "ஒலிகட லுலகந்தன்னு ளுறைதரு குரங்கின் மாட்டே, கலியது காலம்வந்து பரந்ததோ"என மேல் கிட்கிந்தாகாண்டத்து வாலிகூற்றாக வருவதிலும் காண்க. கலிகாலத்தில் தருமம் முதலியன கெடு மென்பதை "தருமந் தவிர்ந்து பொறைகெட்டுச் சத்தியஞ்சாய்ந்து தயை, தெருமந்து தன்பூசனை முழுதுஞ் சிதையக் கலியே, பொருமந்தக்காலம்"எனப் பிள்ளைப்பெருமாளையங்கார் சுருக்கமாகக் கூறியுள்ளார்; மகாபாரதம் ஸ்ரீவிஷ் ணுபுராணம் முதலியவைகளில் எதிர்காலவரலாற்றிற் கலியின்தன்மையைக் கூறுமிடத்துப் பரக்கக்காணலாம். நீரென்பது - வசிட்டனையே குறிக்கு மெனக் கொள்ளலுமாம். பி-ம்:—[1]நடைதரு. [2]நன்றன்றென்றிலீர், நன்றி தென்றிரேல். [3]அது. [4]காலத்துக், காலத்தின். [5]மாட்சியோ. (கூசகூ)

கசு. வேத்தவை யிருந்தநீர் விமல னுந்தியிற்
பூத்தவன் [1]முதலினர் [2]புவியுட் டோன்றிஞர்
[3]மூத்தவ ரிருக்கவே முறைமை யானிலங்
காத்தவ ருளரெனிற் [4]காட்டிக் காண்டிரால்.

(இ - ள்.) வேந்து அவை இருந்த நீர் - இராசசபையிலிருந்த நீங்கள், விமலன் உந்தியில் பூத்தவன் முதலினர் புவியுள் தோன்றிஞர் - குற்றமற்ற திருமாலினது உந்தியினின்று தோன்றிய பிரமதேவன்முதலினோராகிய உல கத்துத் தோன்றினோரில், மூத்தவர் இருக்க - மூத்தவரிருக்கையில், நிலம் முறைமையால் காத்தவர்-பூமியை (மகுடாபிஷேகம்பெற்று) முறைதவருமற் காத்தவர், உளர் எனில் - இருப்பாராஞல், (அவரை), காட்டிக்காண்டிர் - நிரூபித்துக் காட்டுங்கள்; (எ - று.)—ஏ, ஆல்-அசைகள்.

மூத்தவரிருக்கப் பின்னோர் அரசை மேற்கொள்வது,திருமால்தொடங்கி இன்றுவரையிலு முள்ள காவலரில் ஆராய்ந்துபார்த்தால் எங்குங் காணக் கிடையாது. ஆகவே, தொன்றுதொட்டுவந்த அம்முறைமைக்கு முரணுக என்னை அரசுபுரியுமாறு சொல்லுவது முறைகேடே யென்றவாறு. திரிமூர்த் திகளிலும் திருமாலே முந்தியவ ராதலால், அவரே காத்தல்தொழிலை மேற் கொண்டுள்ளாரென்றுகூறியது, குறித்துக்காணத்தக்கது. நிரூபித்துக்காண் என்றபொருளில் திருக்கோவையாரில் "குவளை...நின்கண்ணுக்குமேற் கண்டுகாண்" என்றாற்போல, நிரூபித்துக்காட்டுமின் என்ற பொருளில் 'காட்டிக்காண்டிர்' என்ருர். பி-ம்:—[1]முதலிய. [2]புவியிற்றோன்றினோர். [3]மூத் தவன். [4]காட்டிர். (கூசுஎ)

கஎ. நன்னெறி யென்னினு நானிந் நானில
[1]மன்னுயிர்ப் பொறைசுமந் [2]திருந்து வாழ்கிலே
னன்னவன் றனைக்கொணர்ந் தலங்கன் மாமுடி
[3]தொன்னெறி முறைமையிற் [4]சூட்டல் காண்டிரால்.

(இ-ள்.) நல் நெறி என்னின் உம்-(நான் அரசுபுரிவது)நீதிதவருதநெறி யாகு மென்று (ஒருகால் நீங்கள்) நிரூபித்துக் காட்டினுலும், நான்—, இ

நானிலம் மன் உயிர் பொறை சுமந்து-இந்தப்பூமியிலே பொருந்திய பிராணி களைப்பாதுகாக்கையாகிய பாரத்தைத் தாங்கிக்கொண்டு, இருந்து - (இங்குத் தானே இருந்து, வாழ்கிலேன் - வாழ உடன்படேன்; (பின்னை யான் செய்யப்போவது என்னெனில்),—அன்னவன் தனை - அந்த ஸ்ரீராமபிரானை, கொணர்ந்து-(காட்டினின்று மீட்டு இங்கே)அழைத்துக்கொண்டுவந்து, அலங்கல் மா முடி-பூமாலையோடுகூடிய சிறந்தகிரீடத்தை, தொல் நெறி முறைமையின்-தொன்றுதொட்டுவந்த நியாயமுறைப்படியே, சூட்டல் - சூட்டுவதை, காண்டிர் - காணுங்கள்; (எ - று.)

சபையோர்கூறுவது முறைமையன்று என்று எடுத்துக்காட்டிய பரதன் ஒருகால் நீங்கள் உங்கள்கொள்கையை உங்கட்குஉள்ள சொல்வன்மையால் நிலைநாட்டினும், யான் அதற்கு உடன்படேன்; இராமனை மீட்டு அழைத்து வந்து இராச்சியத்தில் அவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வதையே யான் கருதியிருக்கின்றே னென்று தன் கொள்கையை வெளிப்படையாகக் கூறினனென்க. பி - ம்:—[1]இன்னுயிர்ப். [2]இருக்க. [3]சொன்னநன். [4]சூட்டக், சூட்டிக். (கூசுஅ)

கஅ. அன்றெனி லவனொடு மரிய கானிடை
[1]நின்றினி தருந்தவ நெறியி னாற்றுவெ
னொன்றினி யுரைப்பினென் னுயிரை நீக்குவெ
னென்றன [2]னென்றபோ திருந்த பேரவை.

(இ-ள்.) அன்று எனில்-(அங்ஙனம் இராமனை மீட்டுக்கொணர்ந்து பட்டாபிஷேகஞ்செய்வித்தல்) கைகூடவில்லையானால், (நான்), அவனொடு உம் - அவ்விராமபிரானுடனே, அரிய கானிடை - செல்லுதற்கு அரிய காட்டிலே, நின்று-இருந்து, அரு தவம் - (செய்வதற்கு) அரிய தவத்தை, நெறியின் - முறைமைப்படி, இனிது-மகிழ்ச்சியோடு, ஆற்றுவென்-செய்வேன்; இனி—, ஒன்று - (இந்த எனது கொள்கைக்குமாறாகிய) ஒன்றை, உரைப்பின் - சொல்லி (என்னைக்) கட்டுப்படுத்தமுயன்றால், (நான் அப்போது), என் உயிரை நீக்குவென்-என்னுயிரை மாய்த்துக்கொள்வேன், என்றனன்-என்று (பரதன் தன்கொள்கையைக்) கூறிமுடித்தான்: என்றபோது—, இருந்த பேர் அவை - அங்கிருந்த பெரிய சபையிலுள்ளோர்,—(எ - று.)—'என்று வாழ்த்தினர்' என இருபதாங் கவியோடு முடியும். அவை-அவையிலுள்ளார்க்கு ஆகுபெயர். பி ம்:—[1]நின்றுநானிருந், நின்றினிதிருந். [2]என்றலும்.(கூசுகூ)

ககூ.—இதுவும் அடுத்த கவியும் - பரதனைச் சபையோர் புகழ்தல்.

ஆன்றபே ரரசனு மிருப்ப வையனு
மேன்றனன் [1]மணிமுடி [2]யேந்தல் [3]வேந்தநீ
வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளர் நின்னிற் றோன்றினார்.

(இ-ள்.) ஆன்ற பேர் அரசன் உம் இருப்ப-பெருமைமிக்க பேரரசனும் [தசரதனும்] உயிரோடிருக்கையில்தானே, ஐயன் உம் - ஸ்ரீராமனும், மணி முடி-இரத்தினம் பதித்துச் செய்யப்பட்ட மகுடம்பூணுதலை, ஏன்றனன் - ஏற்றுக்கொண்டான்; ஏந்தல் வேந்த - பெருமைபெற்ற பரதராசனே!—நீ—, வான் தொடர் திருவினை - (பேரரசன்) சுவர்க்கஞ்சென்றதனால் நேரிட்ட இராச்சியசம்பத்தை, மறுத்தி - (வேண்டா மென்று)மறுத்துக்கூறுகின்றாய்; மன் இள தோன்றல்கள் - அரசகுலத்துத் தோன்றிய இளங்குமாரர்களுள், நின்னில் தோன்றினர்-உன்னைப்போற் புகழொடு தோன்றியவர்,யார்உளர்-? [எவரும் இல்லை]; (எ - று.)

இதனால், மன்னவன் உயிரோடிருக்கையில் அவனருகில்தானே 'பெரியோரிருக்கச் சிறுவனாகிய எனக்கு இந்த இராசசியம் எற்றுக்கு?' என்னாமல் மன்னவன்கட்டளையென்று அதனை யேற்றுக்கொள்ளுமாறு உடன்பட்ட இராமனைக்காட்டிலும், மன்னவன் அனுமதியளித்திட்டு வானுலகஞ்சென்றானாகவும் தாயின்வரத்தால் வலியக்கிடைத்துள்ள இந்த இராச்சியத்தைவேண்டாமென்று மறுத்துரைக்கும் நீ மிகவும் மேம்பட்ட புகழ் படைத்தவனென்று கூறியவாறு. வான்தொடர் திரு - மிகப்பெரிய சம்பத்து என்றலும் ஒன்று. பி-ம்:—[1]இருநிலம். [2]இகந்த. [3]ஏந்தனீ. (கூ௭௦)

௨௦. ஆழியை யுருட்டியு [1]மறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
வேழினொ டேழெனு [2]முலகு மெஞ்சினும்
[3]வாழிய நின்புக ழென்று வாழ்த்தினார்.

(இ-ள்.) ஆழியை உருட்டி உம்-(நியாயமுறை தவறாமல்) ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்தியும், அறங்கள் போற்றிஉம் - தருமத்தைப் பாதுகாத்தும், வேள்வியை இயற்றிஉம்-(பலவகை) யாகங்களைச்செய்தும், வளர்க்க வேண்டும்ஓ - (புகழைப்) பெருக்கவேண்டுமென்பது (உனக்கு) வேண்டுமோ? ஏழினொடு ஏழ் எனும் உலகம் எஞ்சின் உம்-இந்தப்பதினான்குஉலகம் அழிந்திட்டாலும், நின் புகழ் - உனது (இயற்கை நற்குணத்தினால் தோன்றியுள்ள) பெரும்புகழ், வாழிய-வாழ்ந்திடுக', என்று—, வாழ்த்தினார் - வாழ்த்துக்கூறினார்கள்; (எ - று.)

'வாழ்த்தினார்' என்பதற்குப் பதினெட்டாங்கவியிலுள்ள 'பேரவை'என்பது எழுவாயாகும். செயற்கையால் விளையும் புகழினும், இயற்கையான நற்குணத்தினால் விளையும் புகழே மேம்பட்டதென்க. பி-ம்:—[1]அவனிதாங்கியும். [2]உலகும். [3]வாழியாய். (கூ௭௧)

௨௧.—இராமனைமீட்டுவரப் பயணமாவதை நகர்க்கு அறிவித்துச் சேனையெழுகெனப் பணிக்குமாறு பரதன் சத்துருக்கனிடங் கூறல்.

குரிசிலுந் தம்பியைக் கூவிக் கொண்டலின்
முரசறைந் திந்நகர் முறைமை வேந்தனைத்
தருதுமீண் டென்பது சாற்றித் தானையை
விரைவினி லெழுகென விளம்பு வா[1]யென்றான்.

(இ-ள்.) குரிசில் உம் - பரதனும்,—தம்பியை கூவி - (தன்) தம்பியான சத்துருக்கினனை யழைத்து,—'கொண்டலின் முரசு அறைந்து-மேகம் இடிப்பதுபோலப் (பேரொலியுண்டாகுமாறு) பேரிகையை யறைவித்து,—இ நகர் முறைமை வேந்தனை - இந்நகரத்திற்கு முறைமைப்படி அரசனாகவேண்டிய ஸ்ரீராமனை, மீண்டு தருதும்-மீட்டுக்கொணரப்போகின்றோம்,என்பது சாற்றி-என்றுசொல்லி, தானையை - (நமது) சைனியங்களைநோக்கி, விரைவினில் எழுக-(இராமபிரானை மீட்டுக்கொணர்தற்கு விரைவினிற்) புறப்படுக, என-என்று, விளம்புவாய்-சொல்லுவாய்,' என்றான்-என்றுபணித்தான்; (எ - று.)

சுமந்திரனைக் கூப்பிட்டு அவனிடத்துச் சேனையை யழைத்துவருமாறு பரதன் பணித்ததாக முதனூலி லுள்ளது. தருதும் ஈண்டுஎன்றும் பிரிக்கலாம். எழுகென - விகாரம். நான்ஒருத்தனே 'இராமபிரானை மீட்டுவருமாறு சென்றால் ஏதேனும் போக்குச்சொல்லி என்னைத் திருப்பியனுப்பினாலும் அனுப்பக்கூடும். தன்னுடைய பிரிவினால் வருந்திக் கண்ணும் கண்ணநீருமாயுள்ள இத்தனைபேரைக் கண்டால் கருணாமூர்த்தியாகிய அவ்விராமபிரான் மீண்டு வருவன்' என்ற கருத்தினால் இராமனை மீட்டுஅழைத்துக்கொண்டு வரவிருப்பமுள்ளவரெல்லாம் வரட்டும் என்று யாவர்க்குஞ் செய்தியைச் சாற்றுமாறு கூறினன்: அன்றியும், இராமபிரானை வெகுசம்பிரமமாக ஊர்க்குத் திருப்பியழைத்துவரவேணு மென்னுங் கருத்தும் பரதனுக்கு இருத்தல்கூடு மென்க. பி - ம்:—[1]என்றார். (௬௭௨)

### ௨௨.—சத்துருக்கினன் கூறிய செய்தியால் நகரத்தவர் மகிழ்ந்து பேராரவாரஞ்செய்தல்.

நல்லவ னுரைசெய நம்பி கூறலு
மல்லலி [1]னழுந்திய [2]வளவின் மாநக
ரொல்லென [3]விரைத்த[4]தா லுயிரில் யாக்கையைச்
சொல்லெனு [5]மமிழ்தினாற் றுளித்த தென்னவே.

(இ-ள்.) நல்லவன் உரை செய-நற்குணமுடையோனான பரதன் பணித்ததனால், நம்பி-குணம்நிரம்பிய சத்துருக்கினன், கூறலும் - (அந்தப்பரதனது மொழியை நகரத்தார்க்குத்)தெரிவித்தவுடனே, அல்லலின் அழுந்திய அளவு இல் மா நகர் - (இராமபிரானைப்பிரிந்து) துயரத்தில் அழுந்தியிருக்கின்ற எல்லையில்லாத நகரத்து மகாசனங்கள், உயிர் இல் யாக்கையை-உயிரில்லாத வுடலை, சொல் எனும் அமிழ்தினால்-சொல்லென்கிற அமிழ்தத்தைக்கொண்டு, துளித்தது என்ன-துளித்ததுபோல, ஒல்லென இரைத்தது-(பெருமகிழ்ச்சியினால்)ஒல்லென்னும் ஒலிதோன்றும்படி பேராரவாரஞ்செய்தது; (எ - று.)— ஆல் - அசை; வியப்புமாம்.

அல்லலிலழுந்தியதனால் உயிரற்றயாக்கைபோன்றிருந்த அயோத்திநகர், 'வேந்தனைத்தருது மீண்டு'என்ற சத்துருக்கினனது சொல்லாகிய அமுதத்தினாற்றுளிக்கப்பட்டு உயிர்பெற்றாற்போல மகிழ்ச்சியினாற் பேராரவாரஞ்செய்த

தென்க. உவமையணியும் உருவகவணியுங் கலந்துவந்த கலவையணி. சத்துருக்கினழ்வான் 'பகவானிடத்துப் பக்திசெலுத்துவதைக்காட்டிலும் அவனுடைய பக்தரிடத்தே பக்திசெலுத்துவது சிறந்தது' என்னும் பாகவதநிஷ்டையை மேற்பூண்டு ஸ்ரீராமபக்தனான பரதனிடத்துப் பக்திகொண்டு அவனை எப்போதும் விட்டுப்பிரியாது அவன்கருத்தின்படியே நடப்பவனாதலால், குணபூர்த்தியையுடையா னென்னும் பொருளுள்ள 'நம்பி' என்ற சொல்லால் அவனைக் குறித்தார். பி - ம்:—[1]அழுங்கிய. [2]அன்பின். [3]ஒலித்தது. [4]அவ்வுயிரிலாக்கையை. [5]அமிர்தினூற்றுளிர்த்தது. (கஎங)

உங.—யாவரும் மகிழ்ச்சிகொண்டதனைப்பற்றிய கவிக்கூற்று.

அவித்தவைம் புலத்தவ ராதி யாயுள
புவித்தலை யுயிரெலா மிராமன் பொன்முடி
[1]கவிக்குமென் [2]றுரைக்கவே களித்த தாலது
செவிப்புல [3]நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்.

(இ - ள்.) அவித்த ஐம் புலத்தவர் ஆதி ஆய் உள-ஐம்புலவழியில் (நெஞ்சைச்) செல்லவிடாதவராகிய முனிவர்களை முதலாகவுள்ள, புவித்தலை உயிர் எலாம் - பூமியிலுள்ள பிராணிவர்க்கமெல்லாம், 'இராமன் பொன் முடி கவிக்கும் - (பரதனால் மீட்டு அழைத்துவரப்பெற்று) இராமபிரான் பொன்முடி சூடப்போகின்றான்,' என்று உரைக்க ஏ - என்றுபறையறைந்து சாற்றவே, களித்தது - பெருமகிழ்ச்சியடைந்தன; அது - (இராமபிரானை மீட்டுவந்து முடிசூட்டுவதென்று சொன்ன) அந்தச்செய்தி, செவி புலம் நுகர்வது ஓர் தெய்வம் தேன்கொல் - செவிப்பொறியால் நுகரக்கூடிய ஒப்பற்ற தெய்வத் தன்மையுள்ள தேனோ? (எ - று.)—ஆல், ஆம் - அசைகள்.

ஒன்றிலும்பற்றில்லாத முனிவருள்பட எல்லாப்பிராணிகளும் இராமன் மீண்டுவந்து முடிசூடப்போகின்றா னென்ற செய்தியைக் கேள்விப்பட்டதனாற் பெருமகிழ்ச்சியடைந்தது பற்றி, அச்சொல்லை 'செவிப்புலநுகர்வதோர் தெய்வததேன்கொல்' என்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. அவித்தவைம்புலத்தவர் - வடமொழிநடை: ஐம்புலமவித்தவரென்பது, தென்மொழிநடை. ஐம்புலன்அவித்தல் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்பொறிகளின்விஷயங்களில் மனத்தைச் செல்லவிடாதிருத்தல். நான்காமடியில், புலம் - பொறிக்கு, இலக்கணை. உயிரெலாங் களித்தது - ஒருமைப் பன்மைமயக்கம். பி-ம்:—[1]கவிக்க. [2]உணர்த்தவே. [3]கவர்வது. (கஎச)

உச.—இதுவும் அது.

படுமுர [1]சறைந்தனர் பரதன் றம்முனைக்
கொடி[2]நகர்த் தருமவற் கொணரச் [3]சேனையு
[4]முடுகுக வென்றசொன் மூரி [5]மாநக
ருடுபதி வேலையி னுதயம் போன்றதே.

(இ - ள்.) 'பரதன்—, தம்முனை-தனது அண்ணனாகிய இராமபிரானை, கொடி நகர் - துவசங்களாலலங்கரிக்கப்பட்டுள்ள நகரத்திலே, தரும் - அழைத்துவரப்போகிறான்; அவன் கொணர - அவ்விராமபிரானை மீட்டுஅழைத்து வரும்பொருட்டு, சேனை உம் - சேனைகளும், முடுகுக - விரைக,' என்ற—, படு முரசு அறைந்தனர் சொல்-(ஓசை)தோன்றுகின்ற பேரிகைவாச்சியங்களை யறைகின்றவருடைய சொல்லானது,—மூரி மா நகர் வேலையின் - பெருமை பொருந்திய சிறந்த அயோத்திமாநகராகிய சமுத்திரத்திலே, உடுபதி உதயம்-சந்திரனதுஉதயத்தை, போன்றது—; (எ - று.)

சேனை முடுகுமாறு பறையறைந்து சாற்றியவரின் சொல்லைக் கேட்ட வுடனே, அயோததிமாநகரத்து மக்களெல்லாம் சந்திரோதயத்தைக்கண்ட கடல்போலப் பெருமகிழ்ச்சியினாற் பொங்கிக்கிளர்ந்தன ரென்க: **உருவகவணியை அங்கமாகக்கொண்டுவந்த உவமையணி.** முத்திதரும்நகரமேழனுள் முன்வைத்து எண்ணத்தக்க சிறப்புவாய்ந்த தாகலின், அயோத்திமாநகரை 'மூரிமாநகர்' என்றார். நகர் - நகரத்தவர்க்கு இலக்கணை. பி - ம்:—[1]அறைதலும். [2]நகர்தரும். [3]சேனையை. [4]முடுகவென்றறைந்தசொல், முடுகவென்றமைந்தசொல், முடுகுகவென்றலும். [5]மாநகர்க்கு. (கஎரு)

உரு.—இராமனை யழைத்துவருமாறு சேனை யெழ,
கைகேயியின் ஆசையொழிதல்.

எழுந்தது பெரும்படை யேழு [1]வேலையின்
[2]மொழிந்தபே ரூழியின் முழுங்கி முந்தெழ
வழிந்தது கேகயன் மடந்தை யாசை[3]போய்க்
கழிந்தது [4]துயர்நெடுங் காத றூண்டவே.

(இ - ள்.) பெரு படை - பெரிய அச்சேனையானது,—மொழிந்த பேர் ஊழியில்-(நூல்களிற்) கூறப்பட்ட கற்பாந்தகாலத்திலே (பொங்கிவருகின்ற), ஏழு வேலையின் - ஏழுசமுத்திரங்கள்போல, எழுந்தது - கிளர்ந்தெழுந்தது; முழங்கி - பேராரவாரஞ்செய்துகொண்டு, (அந்தசேனை), முந்து எழ-முன்னாகப் புறப்படவே, கேகயன் மடந்தை ஆசை - கைகேயியின் ஆசையானது, போய் அழிந்தது - நிலையழிந்து போயிற்று; நெடு காதல் - இராமபிரானிடத்துள்ள மிக்கஅன்பானது, தூண்ட - தூண்டியதனால், துயர் - (அந்நகரத்தார் கொண்டிருந்த) துயரமும், கழிந்தது - நீங்கிவிட்டது; (எ - று.)

இராமபிரானைஅழைத்துவருமாறு பரதன் போகப்போவதையும் சேனைகள் ஊழிக்காலத்துக்கடல்போற் பொங்கிப்புறப்பட்டுவிட்டதையும் உணர்ந்த கைகேயி தனதுபுதல்வன்அரசனாவதைக்காணலாமென்றுதான்கொண்டிருந்த எண்ணம் ஒழியப்பெற்றாளாக, அப்போது நகரமாந்தர் இராமபிரானைக் காண்பதிலுள்ள காதல்தூண்டுவதனால்,இராமனைப் பிரிந்ததனால் தாம்கொண்டிருந்த துயரம் ஒழியப்பெற்றார்க ளென்பதாம். இனி, ஈற்றடிக்கு—நெடுங் காதல் -

(தன் புதல்வனை யரசனாகக்காணவேணுமென்று கைகேயி தான் கொண்டிருந்த) பெருவிருப்பம், தூண்டவே - தூண்டியதனால், (அவள்மனத்திலே), துயர் - வருத்தமானது, போய் கழிந்தது - மிகுதியாகத்தோன்றிற்று என்று உரைத்தாருமுளர். இப்பொருளில், போய்க்கழிதல்-மிகவும் அதிகமாதல். யாவரும் புறப்படும்பொழுது கைகேயியும்தான் செய்த செயலுக்குக் கழிவிரக்கங்கொண்டு இராமனை மீட்டுஅழைத்து வருவதற்குத் தான் முந்துறமுன்னம் சென்றனளென்று முதனூலால் அறியப்படுகின்றது. கழிந்தது துயர்-(இராமனைப் பிரிந்திருத்தலாலாகிய) மிக்கதுயரத்தை விளைக்கின்ற, நெடுங் காதல்-(அப்பிரானிடத்துக்கொண்ட) பேரன்பு, தூண்ட - தூண்டுவதனால், கேகயன் மடந்தை ஆசை போய்க்கழிந்தது எனினுமாம். பேரூழியின் முழங்கி முந்தெழ என இயைத்து உரைப்பினுமாம்.பி-ம்:—[1]வேலையும். [2]மொழிந்தன. [3]போற். [4]துயரெனும், துயரமும். (கஎசு)

உசு.—இதுவும் அடுத்த கவியும்-சேனையெழுந்துசென்றதன் வருணனை.

[1]பண்ணின [2]பகடுதேர் புரவி பண்டியு
மண்ணினை மறைத்தன [3]மலிந்த மாக்கொடி
விண்ணினை [4]மறைத்தன விரிந்த மாத்துகள்
கண்ணினை [5]மறைத்தது கமலத் தோனையே.

(இ - ள்.) பண்ணின-அலங்காரஞ்செய்யப்பட்டனவாகிய, பகடு-யானைகளும், தேர் - தேர்களும், புரவி - குதிரைகளும், பண்டிஉம்—, மண்ணினை மறைத்தன-இந்தப்பூலோகத்தை (வெற்றிடமில்லாதபடி) மறைத்துக்கொண்டிருந்தன; மலிந்த மா கொடி - (சேனையிற்பிடிக்கப்பட்ட) மிக்க பெரிய கொடிகள், விண்ணினை மறைத்தன - ஆகாயத்தையெல்லாம் மறைத்துக்கொண்டிருந்தன; விரிந்த மா துகள்-(அச்சேனைத்தொகுதி செல்லும்போது) மேலெழுந்த பெருந்தூளிப்படலம், கமலத்தோனை-(சத்தியலோகத்தில் வாழ்பவனாகிய திருமாலின் நாபீ) கமலத்தில்தோன்றிய பிரமதேவனையும், கண்ணினை மறைத்தது - கண்ணைப் பார்க்கவொட்டாமல்தடைசெய்தது; (எ-று.)

இந்தத் தொடர்புயர்வுநவிற்சியணியால், சேனையின்மிகுதி தொனிக்கும். கமலத்தோனைக் கண்ணினை மறைத்தது - இரண்டு செயப்படுபொருள் வந்த வினை: த்விகர்மகர்த்தரிப்ரயோகமென்பர் வடநூலார். கமலத்தோனையும் என்று இருக்கவேண்டிய உயர்வுசிறப்பும்மை தொக்கது. பி-ம்:—[1]பண்ணியல். [2]புரவித்தேர்பகடும். [3]வளர்ந்த. [4]மறைத்தது. [5]மறைத்தன. (கஎஎ)

உஎ. ஈசனில் [1]வுலகினை யழிக்கு [2]நாளெழு
மோசையி னிமிர்ந்துள தொல்லென் பேரொலி
காசையில் கரியவற் காண மூண்டெழு
மாசையி னிமிர்ந்ததம் வணிக ராகிபே.

(இ - ள்.) ஈசன் - (அழித்தற்கடவுளாகிய) உருத்திரமூர்த்தி, இ உலகினை - இந்த உலகங்களையெல்லாம், அழிக்கும் நாள்-அழிக்கின்ற காலத்தில் [சர்வசங்காரகாலத்தில்], எழும்-தோன்றுகின்ற, ஓசையின் - ஒலியைக்காட்டிலும், ஒல்லென் பேர் ஒலி - ஒல்லென்றுஒலிக்கின்ற பேரொலியானது, (அப்போது), மிமிர்ந்து உளது - மிக்குத்தோன்றியது; காசை இல் கரியவன்-குற்ற மற்ற இராமபிரானை, காண - (சென்று)காணவேணுமென்று, மூண்டு எழும்-(அந்நகரத்தவர் ஒவ்வொருவரின் மனத்திலும்) மூண்டுதோன்றுகின்ற, ஆசையின் - ஆசையைக்காட்டிலும், அ அனிகராசி - அந்தச் சேனையின் தொகுதி, மிமிர்ந்தது - மிக்குஎழுவதாயிற்று; (எ - று.)

இதனால், சேனையின் ஆரவாரமிகுதியை விளக்கினார். ஓசையின், ஆசையின்-உறழ்பொரு. பி-ம்:—[1]உலகழித்திழைக்கும், உலகிழைத்தழிக்கும், உலகிழைத்தொழிக்கும். [2]நாண் மழை. (கஎஅ)

உஅ.—பிடியோடு நடந்த வேழங்களின் வருணனை.

படியொடு திருநகர் துறந்து பன்[1]மரஞ்
செடியொடு [2]தொடர்வன நோக்கிச் சீதையாங்
கொடியொடு [3]நடந்தவக் கொண்ட லாமெனப்
பிடியொடு [4]நடந்தன பெருங்கை வேழமே.

(இ - ள்.) 'படியொடு திரு நகர் துறந்து - இராச்சியத்தை வேண்டாமென்றுவிட்டதுபோலவே (வாழ்ந்துவந்த) சிறந்த அயோத்திநகரத்தையும் விட்டிட்டு, (பல்) செடியொடு பல் மரம் தொடர் வனம் நோக்கி - பலவகைச் செடிகளுடனே பலவகைமரங்களும் பொருந்தியுள்ள காட்டைக்குறித்து, சீதை ஆம் கொடியொடு நடந்த - சீதையென்கிற என்றும்நிலைத்திருக்கிற (மின்னற்) கொடியோடு நடந்து சென்ற, அ கொண்டல் - இராமபிரானாகிய மேகம், ஆம் - (தனக்கு) ஒப்பாகும்,' என -என்று (கண்டவர் உவமை) கூறும்படி, பெரு கை வேழம் பிடியொடு நடந்தன - (அந்தச்சைனியத்தைச் சார்ந்தனவான) பெரிய துதிக்கைகளையுடைய ஆண்யானை பெண்யானையோடு நடந்து சென்றன; (எ - று.)

அந்தச் சேனையில் பெண்யானைகள் தொடர்ந்துவர ஆண்யானைகள் சென்றவை, சீதை தொடர்ந்துவரக் கான்கஞ்சென்ற இராமபிரானை யொக்குமெனக் கூறினார். நிறத்தினால் மாத்திரமேயன்றி, தம்மையடைந்தோர்க்குப் பிறவியினால் நேருந் தாபத்தைப் போக்குதலாலும் இராமனுக்குக் கொண்டல் உவமையாகும்: இங்கு இராமனைக் கொண்டலென்றது - உருவகம் பற்றி. இராமனைக் கொண்டலென்றதற்கு ஏற்ப, சீதையாங்கொடி என்றவிடத்து, கொடி - மின்னற்கொடியெனப் பட்டது. கொண்டல் - நீர்கொண்ட மேகம். பி-ம்:—[1]மலர். [2]கோடுவனம். [3]கடந்த. [4]நடந்தும். (கஎகூ)

உகூ.—மகளிரைச் சுமந்துசெல்லும் பெண்யானைகளின் வருணனை.

சேற்றிள மரைமலர் [1]சிதைந்த வா[2]மெனக்
[3]காற்றளம் பொலிதரு கன்னி மாரொடு
[4]மேற்றிளம் பிடிக்குல [5]மிகலி [6]யின்னடை
[7]தோற்றன மகளிரைச் சுமப்ப [8]போன்றவே.

(இ - ள்.) 'சேறு - சேற்றில் தோன்றுவதாகிய, இள மரை மலர் - இளமையான [அன்றலர்ந்த] தாமரைமலர், சிதைந்த ஆம் - (தமக்குமுன்னே அழகு) கெட்டனவாகும்,' என - என்றுசொல்லும்படி [தாமரைமலரினும் அழகியனவாக],கால் தளம் பொலிதரு-பாததலங்கள்விளங்கப்பெற்ற,கன்னி மாரொடுஉம் - இளமகளிருடனே, ஏறுஇளம் பிடி குலம் - ஆண்யானைகளின் இளைய பெண்யானைக்கூட்டம், இகலி-மாறுபட்டு, (அம்மாறுபாட்டில்), இன் நடை - (அம்மகளிரின்) மெல்லியநடைக்கு, தோற்றன - தோல்வியடைந்தன வாய், (தோல்விக்குஅறிகுறியாக), மகளிரை-(தம்மைவென்ற) அந்த மடந்தையரை, சுமப்ப - சுமப்பனவற்றை, போன்ற - ஒத்திருந்தன; (எ - று.)

சிலவிளையாடல்களில் தோற்றுப்போனவர் தம்மைவென்றவரைச் சுமந்து செல்லுவது முறை: பிடிக்குலம் மடவாரொடு நடையில்இகலித்தோற்றதனால் வென்றவரைச் சுமந்துசெல்வதுபோல மகளிரைச் சுமந்தன என்றார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]சிறந்தவாம், சிறந்ததாம். [2]மன்னக். [3]காற்றளம் பொழிலெனக் கதவிச்சென்றன, காற்றளம்பொலிதருகவினச் சென்றன. [4]ஏற்றினம். [5]இகலில். [6]மென்னடை. [7]தோற்றிள. [8]போன்றன, போன்றதே. (கூஅ0)

கூ0.—கொடிகள்பல செல்லுதல்.

வேதனை வெயிற்கதிர் தணிக்க மென்மழைச்
சீத[1]நீர் கொடுநெடுங் கொடியுஞ் சென்றன
கோதைவெஞ் சிலையவன் கோலங் காண்கிலா
மாதரி னுடங்குவ வரம்பில் கோடியே.

(இ - ள்.) வேதனை - வருத்தத்தை யுண்டாக்குகின்ற, வெயில் கதிர் - சூரியகிரணங்களின் வெம்மையை, தணிக்க-தணிக்கும்படி, மெல் மழை சீதம் நீர் கொடு - மெல்லிய மழையிலுள்ள குளிர்ந்தநீரை(த் துளித்து)க்கொண்டு, சென்றன - சென்றனவாகிய, வரம்பு இல் கோடி - எல்லையில்லாத கோடிக் கணக்கான, நெடு கொடிஉம் - பெருந்துவசங்களும்,—கோதை வெம் சிலையவன் - வெற்றிமாலைசூடிய கொடிய வில்லையேந்திய இராமபிரானுடைய, கோலம் - மகுடாபிஷேகக்கோலத்தை, காண்கிலா - காணாமையால்வருந்துகின்ற, மாதரின் - மகளிரைப்போல, நுடங்குவ-(அப்போது அச்சேனையில்) அசைவனவாயின; (எ - று.)

சேனையுடன்சென்ற கொடிகள் வானத்தையளாவி மழைத்துளி துளிக்குமாறு செய்வது, வெயிலின்வெம்மையானது இராமனையழைத்துவருமாறு

செல்கின்ற சேனையிலுள்ளார்க்கு வேதனைசெய்யாமலிருக்கும்பொருட்டுச் சீதநீரைத் தெளிப்பதுபோலு மெனத் தற்குறிப்பேற்றவணியை யுட்கொண்டு 'வேதனை வெயிற்கதிர் தணிக்க மென்மழைச் சீதநீரொடு நெடுங்கொடியுஞ் சென்றன' என்றார். அங்ஙனம்வந்த நுடங்குகின்ற கொடிகள் பலவற்றிற்கு, இராமனது முடிபுனைகோலங் காண்கிலாமையால் நுடங்குகின்ற மாதரை உவமைகூறினர்; இராமனைக் காணாத துயரால் கண்ணீர்துளித்தவண்ணஞ் சோர்ந்திருப்பவராதலின், மழைநீரைத்துளித்துச் சோர்ந்திருக்குங் கொடிகள் உவமையாயின. வேதனை = வேதநா: வடசொல். பி-ம்:—[1]நீரொடு, நீர்தொடு.

௩௧.—மன்னவர்பலர் களிற்றின்மீது செல்லுதலின் வருணனை.

வெண்மதி மீச்செல மேக மூர்ந்தென
வண்ணல்வெங் கதிரவ னளவின் மூர்த்தியாய்
மண்ணிடை யிழிந்தொரு [1]வழிக்கொண் டாலென
வெண்ணரு மன்னவர் களிற்றி னேகினர்.

(இ - ள்.) அண்ணல் வெம் கதிரவன்-பெருமையிற்சிறந்தவனான வெப்ப முள்ள (ஆயிரங்) கிரணங்களையுடையவனான சூரியன், அளவு இல் மூர்த்தி ஆய் - கணக்கில்லாத [மிகப்பல] வடிவத்தைக்கொண்டவனாய், மீ வெண் மதி செல - தன்மீது வெண்ணிறமுள்ள சந்திரன் உடனேவந்துகொண்டிருக்க, மேகம் ஊர்ந்தென-மேகத்தையூர்ந்து, மண்ணிடை இழிந்து-பூமியிலேஇறங்கி, ஒருவழி கொண்டால் என - ஒருமுகமாகப் பிரயாணமானாற்போல, எண்ண அரு மன்னவர்-எண்ணுதற்குமுடியாத [மிகப்பலரான] அரசர்கள், களிற்றின் ஏகினர் - யானைமீது (ஏறி வெண்கொற்றக்குடைநிழற்றச்) சென்றார்கள்.

பலமன்னவர் வெண்கொற்றக்குடைநிழற்ற யானைமீது ஏறிச்சென்றது —சூரியன் பலவடிவத்தைக்கொண்டு வெண்மதி உடன்வர மேகத்தை யூர்ந்து மண்ணிடைச்சென்றதை யொக்கு மென வருணித்தார்; தன்மைத்தற்குறிப் பேற்றவணி. ஊர்ந்தென - செய்தென என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பி-ம்:—[1]வழிக்கொண்டானென, வழிச்செல்வானென. (௩அ௨)

௩௨.—சதுரங்கசேனை செல்லுதலின் வருணனை.

தேர்மிசைச் சென்றதோர் [1]சிந்து செம்முகக்
கார்மிசை[2]க் கழிந்ததார் கலியொர் கார்க்கட
லோர்[3]மிசை யிவுளிமே லேகிற் றெங்கணும்
பார்மிசை[4]ப் படர்ந்தது பதாதி[5]ப் பௌவமே.

(இ-ள்.) ஓர் சிந்து-(தேர்வீரரின் சேனையாகிய)ஒப்பற்ற கடல்,தேர்மிசை சென்றது - தேர்களின்மீது ஏறிச்சென்றது; ஆர்கலி - (யானைவீரர்சேனையாகிய) மற்றொரு சமுத்திரம், செம் முகம் கார்மிசை கழிந்தது - செம்புள்ளியைக்கொண்ட முகத்தையுடைய மேகம்போன்ற யானைகளின்மீதுசென்றது;

ஓர் கார் கடல்-(குதிரைவீரர்சேனையாகிய)மற்றொருகரிய சமுத்திரம்,ஏர்மிசை இவுளிமேல் ஏகிற்று - அழகுநிரம்பிய குதிரைகளின்மீது சென்றது; பதாதி பௌவம்-காலாட்படையாகிய கடல், பார்மிசை எங்கண்உம் படர்ந்தது-பூமியின்மீது எங்கும் நடந்துசென்றது; (எ - று.)

தேர்வீரர் யானைவீரர் குதிரைவீரர் காலாள்வீரர் ஆகிய இவர்களால் தனித்தனியியன்ற சேனைசமுத்திரங்கள் செல்லலாயின வென்றவாறு. 'பதாதிப்பௌவம்'என வந்ததற்குஏற்ப, சிந்துமுதலியவற்றைத் தேர்வீரர் சேனையாகிய சமுத்திரம் முதலியன எனக் கொள்க.தேர்முதலியவற்றின்மீது சிந்துமுதலியன சென்றன என உருவகவுயர்வுநவிற்சியணிபடக் கூறினார்.பதாதிப்பௌவம்-உருவகம். இச்செய்யுளில், நான்கடிகளிலும் முற்றுமோனை காண்க. பி-ம்:—[1]பரவை. [2]சென்றதோருவரி. [3]முகப்பரிமிசை. [4]சென்றது. [5]வேலையே.

௩௩.—பல்லியங்கள் முழங்காமையின் வருணனை.

தாரையுஞ் சங்கமுந் [1]தாளங் கொம்பொடு
வார்மிசைப் பம்பையுந் துடியு மற்றவும்
பேரியு மியம்பல சென்ற பேதைமைப்
பூரியர் குழாத்திடை [2]யறிஞர் போலவே.

(இ - ள்.) தாரைஉம்-தாரையென்னும் ஊதுகருவியும், சங்கம்உம்-சங்கவாச்சியமும், தாளம் - தாளமும், கொம்பொடு - ஊதுகொம்பும், வார் மிசை பம்பைஉம் - வாரினாற்கட்டப்படுதலைக்கொண்ட பம்பையென்னும்பறையும், துடிஉம்-உடுக்கையென்னும்பறையும், பேரிஉம் - பேரிகைகளும், மற்றஉம் - மற்றுமுள்ள வாச்சியங்களும், (ஆகியவெல்லாம்),—பேதைமை பூரியர் குழாத்திடை அறிஞர் போல - அறியாமைக்குணம்மிகுந்த கீழோரின்கூட்டத்திலே அறிவுடைய பெரியோர் பேசாமலிருப்பதுபோல, இயம்பல-ஒலியாதனவாய், சென்ற - சென்றன; (எ - று.)

இராமனைப்பிரிந்துள்ள துயரத்தினாலும் அரசன்இறந்துபட்டதனாலும் மகிழ்ச்சியையும் மங்கலத்தையும் தெரிவிப்பனவான தாரைமுதலியன இயம்பாமற் சென்றன; அங்ஙனஞ்சென்ற அவற்றிற்குப் பூரியர்குழாத்திடை அறிஞர் பேசாமல் மௌனமாகஇருப்பதை உவமைகூறினார்; உவமையணி. சென்ற-'அன்' சாரியை பெறாத முற்று. பி-ம்:—[1]தாளவீட்டமும், தாளங்கொம்புகள். [2]வறிஞர்.　　(௬௪௪)

௩௪.—மகளிர் ஆபரணம் பூணுதலின்றிச் செல்லுதலின் வருணனை.

தாவரு நாண்[1]முத லணிய லாற்[2]றகை
மேவரு கலங்களை வெறுத்த மேனியர்
தேவரு மருள்கொளத் தெரியுங் காட்சியர்
பூவுதிர் கொம்பென மகளிர் போயினார்.

(இ - ள்.) தா அரு-அழிதலில்லாத, நாண் முதல் - நாணம் முதலான குணங்களாகிய, அணி அலால்-அணிகலன்களை யல்லாமல், தகை மேவரு - தகுதிபொருந்திய [பெருவிலையுள்ள], கலங்களை - ஆபரணங்களையணிதலை, வெறுத்த-வெறுப்புக்கொண்டு (நீக்கி) விட்ட, மேனியர் - உடம்பையுடைய வரும், (அங்ஙனம் ஆபரணங்களை யணியாத நிலையிலும்), தேவர்உம் மருள் கொள தெரியும் காட்சியர்-தேவர்களும் (இவர்கள் தேவமடந்தையர் தாமோ? என்று) திகைப்புக்கொள்ளுமாறு (பேரழகுடன்)விளங்குகிற இனியதோற்ற முள்ளவருமான, மகளிர்—, பூ உதிர் கொம்பு என - மலர்கள் சிந்தப்பெற்ற பூங்கொம்புபோல, போயினர்—; (எ - று.)

சீராமன் முடிபுனைந்து அரசுபுரியாது கானகஞ்சென்றுள்ளதனால் தாம் கொண்டுள்ள துயரம் புலனாகுமாறு மகளிர் அணிகலங்களைப் பூணாராயினரென்க: இவ்விஷயம் மேல் ௩௭-ஆஞ் செய்யுள் முதலியவற்றில் விளங்கும். அங்ஙனம் அணிகலங்களைப் பூணாராயினும் தமக்கு இயற்கையில் அழகைச் செய்வனவான நாண்முதலிய மகடூஉக்குணங்கள் நிரம்பியவர் அம்மகளிரென்பார் 'தாவருநாண்முதலணியலாற் றகைமேவரு கலங்களை வெறுத்த மேனியர்' என்றார்: "ஏணபாலோவா நாண் மடமச்சமிவையே தம், பூண்பாலாகக் காண்பவர் நல்லார்" என்றார் கீழ்க் கைகேசிசூழ்வினைப்படலத்தும். அணிகலனை நீத்த நல்லார்க்குப் பூவுதிர்ந்தகொம்பு உவமையாதலை, "தாவின் மா மணிக்கலன் முற்றுந் தனித்தனிச்சிதறி..., பூவுதிர்ந்ததோர்கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள்"என்று கீழ் மந்தரைசூழ்ச்சிப்படலத்துங் காண்க. பி-ம்:—[1]மலர்க்கைகளாற், முதற்றணியலால். [2]ததை. (௬௮)

௩௫.—சக்கரவர்த்தியின் வெண்கொற்றக்குடையின்றி மற்றையோரின் கவிகையைக் கொண்ட சேனையின் வருணனை.

அதிர்கடல் வையக மனைத்துங் காத்தவன்
[1]விதிவருந் [2]தனிக்குடை மீதி லாப்படை
[3]பொதிபல [4]கவிகைமீன் பூத்த தாகினுங்
கதிர்மதி நீங்கிய கங்குல் [5]போன்றதே.

(இ-ள்.) அதிர் கடல் வையகம் அனைத்துஉம்-ஒலிக்கின்ற கடலாற்சூழப் பட்ட பூமிமுழுவதையும், காத்தவன் - காத்த சக்கரவர்த்தி பிடித்துக்கொள்கின்ற, விதி வரும் தனி குடை-முறைப்படியே (வமிசபரம்பரையாக) வந்த ஒப்பற்ற சூரியகுலத்தாரின்(பெரிய)வெண்கொற்றக்குடை,மீது இலா-மேலே பிடிக்கப்படாமலுள்ள, படை-அச்சேனையானது,—பொதி பல கவிகை மீன் பூத்தது ஆகில்உம்-நெருங்கிய (மற்றைமன்னவரின்) பல சிறுவெண்கொற்றக்குடையாகிய நட்சத்திரங்கள் தோன்றப்பெற்றதாயினும், கதிர் மதி நீங்கிய கங்குல்-கலைகள்நிரம்பிய சந்திரனைப் பெற்றிராத இரவை, போன்றது—,

மற்றைமன்னவரின் வெண்கவிகைகள் நட்சத்திரங்கள்போல விளங்கி னும், பிரதானமன்னவனுடைய பெருவெண்கொற்றக்குடையைப் பெற்றி ராத சேனை, நட்சத்திரங்களெல்லாம் விளங்கவும் சந்திரனைப் பெற்றிராத இரவுபோன்று மழுங்கிக்கிடந்த தென்றவாறு. உருவகவணியை யங்கமாகக் கொண்டு வந்த உவமையணி. சூரியவமிசத்து முதலரசனாகிய வைவச்சுவதமநு முதற்கொண்டு பட்டாபிஷேகம்பெற்ற அரசர்களால் தம்முடிமீது பிடிக்கப் பெற்று ஒப்பற்றுவிளங்கும் பெரியவெண்கொற்றக்குடையென்பார் 'விதி வருந்தனிக்குடை' என்றார். பி - ம்:—[1]விதிதரு. [2]மதி. [3]பொதிதரு, பொதி வரு, பொதிமலர். [4]கவிகைகள், கவிகைமீப். [5]போன்றவே. (கூஅசு)

நகூ.—சேனைமிகுதியின் வருணனை.

செல்லிய [1]செலவினாற் [2]சிறிய திக்கெனச்
சொல்லிய சேனையைச் சுமந்த தேயெனி
[3]லொல்லொலி வேலைநீ ருடுத்த பாரையோர்
மெல்லிய லென்றவர் [4]மெய்ய ரேகொலாம்.

(இ - ள்.) செல்லிய செலவினால் - சென்ற நடையினால், திக்கு சிறிய- திக்குக்கள் (தமக்குப்) போதுமான விசாலமுள்ளனவல்ல, என - என்று, சொல்லிய - தெரிவிக்கின்ற, சேனையை—, சுமந்தது எனில் - தாங்கிற்றென் றால்,—ஒல் ஒலி வேலை நீர் உடுத்த பாரை-ஒல்லென்னும்ஒலியையுடைய கட லின்நீரினாற் சூழப்பட்டுள்ள பூமியை, ஓர்மெல்லியல் என்றவர் - பெண்பாலா கக் கருதிச்சொன்னவர், மெய்யர்ஏகொல் - உண்மை கூறியவராவரோ?

மெல்லியல் பெரும்பாரத்தைப் பொறாளாதலாலும் சேனாசமுத்திரத் தைப் பூமிதேவி தாங்கியதனாலும் பூமியை மெல்லியலென்றல், உண்மை யாகா தென்றவாறு. இதனால், சேனையின் மிகுதி புலப்படுதல் காண்க. பாரை மெல்லியலென்றவரை மெய்யரேகொலென்று பழித்ததனால், சேனையின்பரந் திருக்குந்தன்மை பெறப்படுவது, அகமலர்ச்சியணியின்பாற்படும். பெருந் திரளான சேனை செல்லுதற்கு ஏற்ற பரப்பு திக்குக்களுக்குஇல்லை யென் பது, 'செல்லிய செலவினாற் சிறிய திக்கெனச சொல்லிய சேனை' என் பதன் கருத்து. ஏகாரம் - ஈற்றசை. வடமொழியில் பூமிக்குள்ள பெயர்கள் பெண்பாலாக இருத்தல் பற்றிப் பெண்ணாகக்கூறுபவரை, 'பாரையோர்மெல் லியலென்றவர்' என்றது. பி-ம்:—[1]செலவினில். [2]சிறியதிங்கெனச். [3]ஒல்லி யல். [4]மெலியரே, மெய்யரோ. (கூஅஎ)

நஎ.—மகளிரின் தனங்களுடைய வருணனை.

தங்கு[1]தண் [2]சாந்தகில் கலவை [3]சார்கில
குங்குமங் [4]கோட்டில கோவை முத்தில
பொங்கிளங் கொங்கைகள் புதுமை வேறில
தெங்கிள நீரெனத் தெரிந்த [5]காட்சிய.

(இ - ள்.) தண் தங்கு சாந்து-குளிர்ச்சிபொருந்திய சந்தனமும், அகில் - தேய்வையும், கலவை - கலவைச்சாந்தும், சார்கில-பூசப்பெறாதனவும்;

குங்குமம் கோட்டில-குங்குமக்குழம்பு அணியப்பெருதனவும்,முத்து கோவை இல - முத்துவடங்களை யணியாதனவுமான, பொங்கு இள கொங்கைகள் - பருக்குர்தன்மையுள்ள இளமையான (மகளிரின்) தனங்கள்,—வேறு புதுமை இல - வேறு எவ்வகையணியும் இல்லாதனவாய், தெங்கு இள நீர் என தெரிந்த காட்சிய - தென்னமரத்துக்காய்த்துள்ள இளநீர்த்தேஙகாய்போலத் தோன்றுகின்ற தோற்றத்தை யுடையனவாயின; (எ - று.)

மகளிரின் கொங்கைகள், சாந்துமுதலியவற்றைப் பெற்றிராமையால் தெங்கிளநீர்போலவே தோன்றின வென்றவாறு. மகளிரின்கொங்கைகள் சாந்துமுதலியன அணியாமைக்குக் காரணம், கீழ்க்கூறப்பட்டது. பி-ம்:—[1]செஞ். [2]சாந்தில. [3]சாத்தில. [4]கோட்டிய, கொட்டில, கொட்டல. [5]காட்சியே.

## ௩அ.—ஆடவர் தோள்களின் வருணனை.

இன்[1]றுணை வியர்முலை யெழுது [2]சாந்தினு
மன்றலந் தாரினு மறைந்தி லாமையாற்
றுன்றிளங் [3]கொடிமுதற் றூறு நீங்கிய
குன்றெனப் பொலிந்தன குவவுத் தோள்களே.

(இ - ள்.) இன் துணைவியர் முலை எழுது சாந்தின் உம் - இனிய மனைவியரின் தனங்களிலே யெழுதிய தொய்யற் சந்தனத்திறுைம், மன்றல் அம் தாரின் உம் - நறுமணமுள்ள அழகிய பூமாலைகளிறுைம், மறைந்து இலாமையால் - மறைக்கப்படாமலிருந்ததனுல்,—துன்று இள கொடி முதல் - நெருஙகிய இளஙகொடிமுதலிய, தூறு - புதர்கள், நீங்கிய - நீங்கப் பெற்ற, குன்று என-மலைபோல, குவவு தோள்கள்-(ஆடவரது) திரண்டுள்ள தோள்கள், பொலிந்தன - விளங்கின; (எ - று.)

மகளிர் கணவரைத்தழுவுதலை நீங்கியமையால், ஆடவரின் தோள்கள் துணைவியர்முலையெழுது சாந்து இலவாயின. இல்லறம் நடத்துதற்கு அமைந்த துணைவியரென்பார் 'இன்றுணையவர்' என்றுர்.சாந்து தார் இவைகளால் அணியப்பெருமையால், கொடிமுதற் றூறு நீங்கிய குன்றெனத் தோள்கள் பொலிந்தன வென்க. பி-ம்:—[1]துணையவர். [2]சாந்தினம். [3]கொடிமுகிற்றூசு.

## ௩௯.—மகளிரின் அஞ்சனமணியாத கண்களின் வருணனை.

[1]நறையறு கோதையர் நாட்செய் [2]கோலத்தின்
[3]றுறையற வஞ்சனந் துறந்த [4]நாட்டங்கள்
[5]குறைவற நிகர்த்தன கொற்ற முற்றுவான்
கறையறக் [6]கழுவிய கால [7]வேலையே.

(இ - ள்.) நறை அறு கோதையர்-வாசனைப்புகை யூட்டப்பெருத மயிர்முடியையுடைய மடந்தையர், நாள் செய் கோலத்தின் துறை அற - தினந்தோறுஞ் செய்யப்படுகின்றஅலங்காரத்தின்துறையினின்று நீங்கினமையால், அஞ்சனம் துறந்த-மைதீட்டுதலொழிந்த, நாட்டங்கள்-(ஒளிபொருந்திய அவ

ரது) கண்கள்,—கொற்றம் முற்றுவான்-வெற்றியைமுடித்த ஒருவன், கறை அற கழுவிய - (போர்செய்தகாலத்திற் படிந்த) இரத்தக்கறை போம்படி கழுவின, காலன்வேலை - காலன்போல் வருத்தந்தரும் வேற்படையை, குறைவு அற நிகர்த்தன - குறைவில்லாமலொத்தன [முற்றுவமையாகப் பெற்றன].

அஞ்சனமெழுதப்பெறாத கண்களுக்கு, கறைகழுவின வேற்படை ஏற்ற உவமையாகும். துயர்க்காலத்திற் கோலத்தின் துறையறுதல், இயல்பு. முற்றுவான் - பெயர். கொற்றம்முற்றுவான் என்பதற்கு - வெற்றியை முற்றும் பொருட்டு என்று கூறுவதிற் சிறப்பின்மை காண்க. நறையறுகோதையர் என்பதற்கு- புதியமலர்மாலையைத்தரித்தலில்லாமையால்) தேன்நீங்கிய மாலையையணிந்தவரெனப்பொருள்கூறுவாருமுளர். பி - ம்:—[1]நறையகிற். [2]கோலத்திற். [3]துறையறி. [4]வாட்கண்கள். [5]குறையற. [6]கழுவில. [7]வேலினே (௬௬௦)

சo.—மடந்தைமாரின் மேகலையணியாவல்குல் பரிபுரமணியாதஅடி இவைகளின் வருணனை.

விரிமணி மேகலை [1]விரவி யார்த்தில
தெரிவைய ரல்குறு ரொலியி றேரெனப்
பரிபுர [2]மார்க்கில பவளச் சீறடி
யரியின [3]மார்க்கிலாக் கமல [4]மென்னவே.

(இ - ள்) தார் ஒலி இல் தேர் என - கிண்கிணி யென்னுஞ் சிறுமணிகளின் ஒலியைப் பெறாத தேர்போல, தெரிவையர் அல்குல் - மகளிரின் இடைத்தானம், மணி விரி மேகலை விரவி ஆர்த்தில - மணிகள் பரவிப் பதிக்கப்பெற்ற மேகலையைப்பூண்டு ஒலித்தல் இலவாயின; அரி இனம் ஆர்க்கிலா கமலம் என்ன-வண்டுகளின்கூட்டங்கள் ஒலிக்கப்பெறாத தாமரைமலர்போல, (தெரிவையர்) பவளம் சிறு அடி - (மடந்தைமாரின்) பவளம்போற் செந்நிறமான சிறியபாதங்கள், பரிபுரம் ஆர்க்கில - சிலம்புகள் (தம்மிடத்து) ஒலிக்கப் பெறாதிருந்தன; (எ - று.)

மேகலையார்க்கப்பெறாத அல்குலுக்கு - தாரொலியில்லாத்தேரும், பரிபுரம் ஆர்க்கப்பெறாத பவளச்சீறடிக்கு - அரியினம் ஆர்க்கப்பெறாத கமலமும் ஏற்ற உவமையாகும். பி - ம்:—[1]விரகினார்த்தில, விரைவினார்க்கில, விரவியார்க்கில. [2]ஆர்த்தில, ஆர்க்கிலாப். [3]ஆர்த்திலாக். [4]அன்னவே. (௬௬௧)

சக.—மகளிர் அணிபூணாமைக்குக் காரணம்.

மல்கிய கேகயன் மடந்தை வாசக
நல்கிய தரிவையர் [1]நடுவிற் கேகொளாம்
புல்கிய [2]மணிவடம் பூண்கி லாமையா
[3]லொல்கிய வொருவகைப் பொறை[4]யுயிர்த்தவே.

(இ - ள்.) புல்கிய மணி வடம் பூண்கிலாமையால் - (மகளிர்யாவரும் எப்பொழுதும்) அணியுந்தன்மையனவான முத்தவாரங்களை யணிந்துகொள்ளாமையால், ஒல்கிய - ஒசியுந்தன்மையனவாகிய(அம்மகளிரின்)இடைகள், ஒருவகை பொறை உயிர்த்த - ஒருவகையாக (ப் பாரமின்றி) இளைப்பாறின; (இதற்குக்

காரணம்), கேகயன் மடந்தை மல்கிய வாசகம் - கேகயவரசன் மகளான கைகேயியினது துயரமிகுவதற்குக் காரணமான வரம், நல்கியது - அருள் செய்தது,—அரிவையர் நடுவிற்கு ஏ கொல் - மகளிரின் இடை யொன்றுக்கு மாத்திரமே போலும்; (எ - று.)

கைகேயியின் வரச்சொல்லால் இராமன் கானகஞ்சென்ற துயரச்செய்தியினால் மகளிர்யாவரும் மணிவடந் துறந்திருந்தன ரென்றவாறு. மணிவடம் பூணுதலை மகளிர்ஒழிந்தமையால், மகளிரின் இடை, முலைப்பாரம்தவிர மணிவடத்தைப் பொறுக்கும் பாரம் குறையப்பெற்று இளைப்பாறலாயிற் றென்றார்; முலைப்பாரம் நீங்காமையால் 'ஒருவகைப்பொறையுயிர்த்த' என்றது. யாவரும் வருந்த இடையொன்றுமாத்திரம் பொறையுயிர்த்தலால், 'நடுவிற்கே' எனப் பிரிநிலையேகாரங்கொடுத்துக்கூறினார். தற்குறிப்பேற்றவணி. ஒல்கிய - பெயர். பி - ம்:—[1]நடுவினுக்கெலாம், நடுவினிற்கெலாம். [2]மலர்வடம். [3]ஒல்கியது. [4]உயிர்க்கவோ. (௬௬௨)

## ௬௨.—சேனையானது பொலிவும் களிப்பும் அற்றிருந்தமை.

கோமகன் பிரிதலிற் கோல [1]நீத்துள  
தாமரைச் செல்வியுந் தவத்தை மேவினாள்  
காமனு மருந்துயர்க் கடலின் மூழ்கினா  
னாமென [2]நிகழ்ந்ததவ் வளவில் சேனையே.

(இ-ள்.) கோமகன் பிரிதலின்-இராசகுமாரனாகிய இராமன் (நகரத்தை) விட்டு (க் காட்டுக்குச்) சென்றதனால், கோலம் நீத்துஉள தாமரை செல்வி உம் - (தன்) அழகுகெட்டுள்ள தாமரைமலரில் வசிப்பவளான இலக்குமியும், தவத்தை மேவினாள் (ஆம் என) - தவஞ்செய்யவிரும்பி அப்பாற்சென்றிட்டாளெனவும்,—காமன் உம் - (மகளிர்க்கும் ஆடவர்க்கும் ஆசைநோயை விளைக்க வல்ல) மன்மதனும், அரு துயர் கடலில் மூழ்கினன் ஆம் என - கடப்பதற்கு அரிய துன்பக்கடலிலே அமிழ்ந்து நிற்கின்றானாகு மெனவும், (கண்டோர்கருதும்படி), அ அளவு இல் சேனை - எல்லையற்ற அந்தப்பரதன் சேனையானது, நிகழ்ந்தது - (பொலிவும் மனக்களிப்பும் அற்றதாக) இருந்தது; (எ - று.)

செல்வச்சிறப்பும் மாதரும்ஆடவரும்கூடிக்களித்தலும் இன்றி, அச்சேனை யிருந்தமையின், இவ்வாறு வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. தசரதன் இறந்து பட்டதனாலும் இராமன் கானகஞ்சென்றதனாலும் அரசியல் நடவாமையால், 'தாமரைச்செல்வியும் தவத்தைமேவினாள்' என்று கூறியதாக உரைவகுத்தலு முண்டு. பி - ம்:—[1]நீத்தன. [2]நிகழ்த்தது. (௬௬௩)

## ௬௩.—சேனையின் மிகுதி.

மண்ணையும் வானையும் [1]வயங்கு திக்கையு  
[2]முண்ணிய நிமிர்கட லொக்கு மென்பதென்  
கண்ணினு [3]மனத்தினுங் கமலத் தண்ணற  
னெண்ணினு நெடிதவ னெழுந்த சேனையே.

(இ - ள்.) மண்ணை உம் - பூமியையும், வானை உம் - ஆகாயத்தையும், வயங்கு திக்கை உம்-விளங்கிய திக்குக்களையும், உண்ணிய - தன்னுட்கொள்ளும்பொருட்டு, நிமிர் - பொங்கியெழுந்த, கடல்-(ஊழிக்காலத்துக்) கடலை, ஒக்கும்-(இந்தச்சேனை) ஒத்திருக்கும், என்பது-என்று சொல்லுவது, என் - எவ்வாறு? [யுகாந்தகாலத்துக்கடலை யுவமைகூறுவதும் பொருத்தமற்றதாகுமென்றபடி]; எண்ணின் உம்-(நாம் அச்சேனையின்அளவைப்பற்றி எவ்வளவு) எண்ணினாலும், அவண் எழுந்த சேனை-அப்போது (பரதனுடன்செல்லுமாறு) புறப்பட்ட சேனையானது,—கமலத்து அண்ணல் தன்-கமலத்தில்தோன்றிய (அந்தக்கடலைப்படைத்த கடவுளான) பிரமதேவனது, கணணின் உம் - (படைத்தபொருளைக் காண்கின்ற) கண்களைக்காட்டிலும், மனத்தின் உம் - (படைக்குமாறு கருதுகின்ற) மனத்தைக்காட்டிலும், நெடிது - மிக்கதாகும்.

சேனையைப்பற்றி இவ்வளவென்று கூறவேணுமெனக் கருதினாலும், படைத்தற்கடவுளின் கண்களாலும் மனத்தாலுங் காணமுடியாதவாறு மிக்குள்ளது அச்சேனை யென்ற இதுதான் நம்மாற் கூறமுடிகின்றது; இப்படிப்பட்ட பெருஞ்சேனைகளுக்கு, மண்ணையும் விண்ணையும் திக்குக்களையும் அகப்படுத்திக்கொள்ளும் ஊழிக்கடலும் பிரமனாற்படைத்தபொருளாதலால்உவமையாகாதென்றவாறு. உண்ணிய-செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். பி-ம்:-[1]வாங்கு. [2]உண்ணியரே, உண்ணியநீர்க். [3]அகத்தினும், முகத்தினும். ()

சச.—சேனையின் வருணனை.

[1]அலைநெடும் புனலறக் குடித்த லாலக
[2]நிலைபெற நிலைநெறி நிறுத்த லானெடு
[3]மலையினை மண்ணுற வழுத்த லாற்[4]றமிழ்த்
தலைவனை [5]நிகர்த்ததத் தயங்கு [6]தானையே.

(இ - ள்.) அலை நெடு புனல் அற குடித்தலால்-அலைகளையுடைய கடலினது மிக்கநீரை முழுதும் இல்லையாம்படி குடித்ததாலும், [(செல்லும்வழியிடையேயுள்ள) அலைகளையுடைய பெரிய நதி முதலியவற்றின்மிக்கநீரைக் குடித்தலாலும்], அகம் நிலை பெற நிலை நெறி நிறுத்தலான்-பூமி(ஒருபுறந்தாக்காது)நிலைபெறும்படி நிலையான முறைமையில் நிற்கச்செய்வதாலும் [பூமி நிலைபெறும்படி நிலையாக ஓர்நெறியில் நிறுத்துதலாலும்], நெடு மலையினை மண் உற அழுத்தலால்-(வானத்தளவும்) ஓங்கியிருந்த விந்தியமலையைப் பூமியினுள்ளாகுமாறு அழுந்தச்செய்ததனாலும் [தான் செல்லும் வழியிலேயுள்ள மலைகளைத் தன்னுடைய பாரமிகுதியாற் பூமிக்குள்ளே அழுந்தும்படிசெய்தலினாலும்],தமிழ் தலைவனை-தமிழுக்கு (இலக்கணத்தைமுதலிற்செய்து)தலைமை பூண்டிருந்த அகத்தியமுனிவனை, அ தயங்கு தானை - விளங்குகின்ற அச்சேனையானது, நிகர்த்தது-ஒத்தது; (எ - று.)

அலைப்புனலைக்குடித்தல், அகம்நிலைபெற நிலைநெறிநிறுத்தல், மலையினை மண்ணுறஅழுத்தல் என்ற தன்மைகளால், அச்சேனை அகத்தியமுனி

வனை யொக்கு மென்றார்; சிலேடைபற்றிவந்த உவமையணி. மாற்றார் வசப் படாது சூரியகுலத்தரசரிடத்தே பூமி நிலைபெறுமாறு செய்வது அச்சேனையே யாதலால், அதனை 'நிலை நெறி அகம் நிலைபெற நிறுத்தலால்' என்றது. இனி, தம்மனத்தைப் புலன்களிற்செலுத்தாது ஜிதேந்திரியத் தன்மைகொண்டிருத் தலாற் சேனையை இங்ஙனங் கூறிய தென்றலும்ஒன்று. அகம் என்ற சொல்- பூமிமனம்முதலிய பல பொருள்களுள்ளதாதலை "மனமுமுள்ளு மனையும்பாவ மும்; புவியும் மரப்பொதுப்பெயரு மகமே" என்ற பிங்கலந்தையினாலும் அறிக.

பூர்வத்தில் முனிவர்களெல்லாம் சேர்ந்து ஸம்ஸ்க்ருதபாஷையை அபி விருத்திசெய்து காசியில் வடமொழிச்சங்கமொன்று ஏற்படுத்த, அச்சங்கப் புலவருள் ஒருவனாகிய அகத்தியமுனிவன் மற்றைப்புலவர்களோடு பலகாலுந் தர்க்கஞ்செய்துகொண்டுவந்து ஒருநாள் அவர்களோடுமாறுபட்டு அவர்க ளிறுமாப்பை யடக்கும்பொருட்டுச் சிவபெருமானிடஞ் சென்று தனது கருத்தை வெளியிட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கையில், தான் நின்ற மண்டபமுழுதும் திவ்வியபரிமளமொன்று வீச, அகத்தியன் பரமசிவனை நோக்கி, 'சுவாமி! இவ்வாசனை ஏது?' என்றுவினவ, பரமசிவன் அவனை அம் மண்டபத்தின் ஓர் மூலைக்கு அழைத்துக்கொண்டுபோய்க் குவியலாய்ப்போ கட்டிருந்த சில ஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்டமாத்திரத் தில் அகத்தியன் மதுரமென்று அருத்தங்கொள்ளும் 'தமிழ்' என்னும் இன்ப மான பெயரைச் சொல்ல, உடனே பரமசிவன் அந்தப்பாஷைக்கு ஆதார விதிகள் இவ்வேட்டுப்பிரதியிலுள்ளனவென்று எடுத்துக்கொடுத்து உபதே சிக்க, அப்போதே தட்சிணத்திலுள்ள பொதியமலைக்குப் போய்த் தனியே வாசஞ்செய்து அவ்விதிகளைக்கொண்டு பேரகத்தியம் சிற்றகத்தியமென்னும் இலக்கணநூல்களையியற்றி அவற்றைத் தன்மாணாக்கராகிய தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத தழைத்தோங் கச்செய்தா னென்பது வரலாறுதலால், அகத்தியமுனிவனை 'தமிழ்த்தலை வன்' என்றார். பி-ம்:—[1]அலைகடனெடும்புனலறக்குடித்தலான், அலைநெடும் புனலறக்குடிக்கையாலகம். [2]நிலைபெற நிலநெறி நிறுத்தலால். [3]மலைகளை. [4]தமிட்டலைவனை. [5]ஒத்தது. [6]சேனையே.

கடல் நெடும்புனல் குடித்த வரலாறு:-தம்பகைவனாகிய விருத்திராசுரன் மற்றும்பல அசுரர்களுடனே கடலில்ஒளித்துக்கொண்டபோது இந்திரன் முதலிய தேவர்கள் அகத்தியமகாமுனிவனை வந்துபிரார்த்திக்க, அவன் அக் கடலினீரைத் தனது ஒருகையால் முற்றும்முகந்து பருகியருளி, உடனே ஒளித்திருந்த அவ்வசுரனை இந்திரன் கொன்றபின், அவன் வேண்டுகோளின் படி மீண்டும் உமிழ்ந்தன னென்பதாம். அகம்நிலைபெறநிறுத்திய வரலாறு:— முன்னொருகாலத்தில், பரமசிவன் முதலிய தேவர்யாவருங் கூடி 'யாம் சேர இருத்தலால் வடதிசைதாழ்ந்து தென்திசை யுயர்ந்தது: இதற்கு அகத்தியனு ரே தெற்கில்இருத்தற்குஉரியவர்'என்று அவனை வேண்டிக்கொள்ள, அவனும்

தென்திசைக்கட்போந்து இருதிசையுமொப்ப நிலைபரம்பெற்று நடுவுநிலையடையும்படி பொதியிலின்கண் இருந்தருளினு னென்பதாம். மலையினை மண்ணுற அழுத்திய வரலாறு:—முன்னொருகாலத்தில் விந்தியமலை, மேருமலைமுதலிய எல்லாமலைகளினும் தான் உயரவேண்டுமென்று கருதி ஆகாயத்தையளாவி யுயர்ந்து சூரியன்முதலிய கிரகங்களும் நட்சத்திரங்களும் செல்லுகின்ற வழியையெல்லாம் மறைத்துநின்றபொழுது தேவர் முனிவர்யாவரும் வந்து அதையடக்கியருளவேண்டு மென்று அகஸ்தியனைப் பிரார்த்திக்க, அவன் அங்கு எழுந்தருளி அப்பொழுது தன்னைக்கண்டுவணங்கிநின்ற அம்மலையை 'இனி யான் வடதிசையிலிருந்து தென்திசைக்கட்சென்று மீண்டுவருமளவும் இவ்வாறே தாழ்ந்துகிடப்பாய்'என்று சொல்லி யடக்கியருளி அம்மலையின்மேலேறி அப்பாற்சென்றனை னென்பதாம். (௬௬௫)

௪௫.—சனங்கள் யாவரும் நீங்கிய அயோத்திமாநகரின் வருணனை.

அறிஞருஞ் [1]சிறிஞரு மாதி [2]யந்தமாச்
செறிபெருந் தானையுந் திருவு நீங்கலாற்
குறியவன் புனலெலாம் வயிற்றிற் கொண்டநாண்
மறிகட லொத்ததவ் வயோத்தி மாநகர்.

(இ - ள்.) அறிஞர் உம் சிறிஞர் உம் ஆதி அந்தம் ஆ - அறிவுள்ள பெரியோர்முதல் இளைஞர் முடிவாக, செறி - (சனங்கள்) நெருங்கியுள்ள, பெரு தானை உம்-பெருஞ்சேனையும், திரு உம் - இலக்குமியும், நீங்கலால் - நீங்கியதனால்,—அ அயோத்தி மாநகர்-அந்த அயோத்தியா பட்டணமானது,—குறியவன் புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள்-குறுமுனிவனுகிய அகத்தியன் (கடலின்) நீரையெல்லாம் பருகி வயிற்றினுட் கொண்டபோது, மறி கடல்-(அலை) மடங்குந்தன்மையுள்ள (அக்) கடலை, ஒத்தது—; (எ - று.)

சேனையும் திருவும் நீங்கியதனல் வெறிச்சென்றிருந்த அயோத்திமாநகர்க்கு,அகத்தியன்பருகியதனுல் அவ்வாறுன கடல் உவமையாம். திரு நீங்குதல் - நகரத்தின் ஒளிகெடுதல்; சீதை சென்றதைக் குறிக்கு மெனினுமாம். சிறிஞர் - 'வறிஞர்' என்பதிற்போல ஞகரம் - பெயரிடைநிலை. பி - ம்:— [1]சிறியரும், செறிஞரும். [2]அந்தமாம், அந்தமாய்ச். (௬௬௬)

௪௬.—படைசென்ற வழியின் வருணனை.

பெருந்திரை நதிகளும் வயலும்[1]பெட்புறு
மரங்களு [2]மலைகளு மண்ணுங் கண்ணுறத்
[3]திருந்தலி லயோத்தியாந் [4]தெய்வ மாநக
ரருந்தெரு வொத்ததப் படைசெ லாறரோ.

(இ - ள்.) பெரு திரை நதிகள் உம்-பேரலைகளைக்கொண்ட யாறுகளும், வயல்உம்—, பெட்பு உறு மரங்கள்உம் - விரும்பத்தக்க மரங்களும், மலைகள் உம்—, மண்உம்—, கண்உற - கண்ணுக்குப்புலனுக, (அவற்றைப்பார்த்துக்

கொண்டு), அ படை-அந்த(த் தசரதன்) சேனை, செல்-சென்ற, ஆறு-வழியானது,—திருந்தல்இல் அயோத்தி ஆம் தெய்வம் மா நகர் அரு தெரு ஒத்தது-திருத்தப்படாத அயோத்தியென்னுந் தெய்வீக நகரத்தின் தெருவை யொத்திருந்தது; (எ - று.)

அயோத்திமாநகரின் வீதியே தசரதன்படை செல்லப்பெற்றிருக்குமாதலால், படை சென்ற வழி, அயோத்திவீதியைப் போன்றதென்றார்: கீழ் அயோத்திமாநகரம் வெறுவியதானமையைக் கூறிய கவி, இதனால், படை சென்றவழி அயோத்திவீதிபோற் பொலிவுபெற்றதென்று வருணிக்கின்றாரென்க. நகரவீதிபோலச் செவ்வனே படைசெல்லும்வழி யிராதாதலால், அயோத்தியின் தெருவுக்கு 'திருந்தலில்' என அடைமொழிகொடுத்தார். இனி, நதியென்றும் வயலென்றும் மரமென்றும் மண்ணென்றும் காணுதல் முடியாதபடி செல்லும்போதுபடை பரந்திருத்தலால், பரந்துள்ள அயோத்தி வீதியைச் சேனையொக்கு மென்றகூறவுமாம். 'பெட்புறும்' என்பதை, நதிகள் முதலியவற்றிற்கும் அடைமொழியாக்கலாம். பி-ம்:—[1]பெட்புற. [2]செடிகளும். [3]திருந்துற. [4]செல்வ, தேவ. (௬௬எ)

### ௬எ.—அச்சேனையில் யானையின் மதமணமன்றி வேறுமணம் இல்லாதிருத்தல்.

[1]தார்கடாங் [2]கோதைதாஞ் [3]சாந்தந் தாந்தகை
[4]யேர்கடாங் [5]கலவைதாங் [6]கமழ்ந்த தின்றென்பார்
கார்[7]கடா மெனமிகக் கடுத்த கைம்மலை
வார்கடா [8]மல்லதம் [9]மன்னன் சேனையே.

(இ - ள்.) கார்கள் தாம் என மிக கடுத்த - (இவைகள்) மேகங்களாகுமென்று சொல்லுமாறு முற்றுவமையாயமைந்த, கைம்மலை - யானைகளின், வார் கடாம் அல்லது-நீண்ட மதப்பெருக்கின் மணங் கமழ்வதன்றி, அ மன்னன் சேனை - அந்தத் தசரதமன்னவனது சேனையில், தார்கள்தாம்-(மார்பில் அணியும்) பூமாலைகளோ, கோதை தாம் - (மயிர்முடியிற் சூடும்) மாலைகளோ, சாந்தம் தாம் - (மார்பிற் பூசிக்கொள்ளுஞ்) சந்தனமோ, தகை ஏர் கடாம் கலவை தாம் - சிறப்புள்ள அழகமைந்த கலவைப்பூச்சுகளோ, கமழ்ந்தது இன்று-மணம் வீசியதில்லை, என்பார்—; (எ - று.)—ஆல் - தேற்றம்.

'என்பார்' என்பதையும் அசையாகக்கொள்ளுதலுமாம். யானைகளின் மதமணம்தவிர, வேறு சந்தனம் மலர் இவற்றின்மணம் அந்தச்சேனையிற்கமழவில்லையென்றவாறு. அங்ஙனம் அச்சேனை சாந்து மலர் என்ற இவைகளைத் துறந்தமைக்குக் காரணம், இராமனைப் பிரிந்த துயராகு மென்பது, முன்னமே கூறப்பட்டது. கார்கடாமென என்ற இடத்திலுள்ள என என்னுஞ் சொல்லுக்குப்பின் 'உள்ள' என ஒருசொல் வருவித்து, கார்கள்தாம்என உள்ள யானை, மிகக்கடுத்த - மிகவுஞ் சினமுள்ள யானை யென்பாரு முளர். கைம்

மலையென்ற உவமையாகுபெயரில், மலையென்றது கையென்றகுறிப்பால், யானையைக் காட்டிற்று. பி - ம்:—[1]தார்கடான். [2]கோதைதான். [3]தாமந்தாந் தகை, தாமந்தான்றகை, சாந்தன்றான்றகை, சார்ந்திலாவகை. [4]ஏர்கடான், போர்கடாம். [5]கலவைதான். [6]கமழ்ந்தின்றெனபரால், அமைந்ததின்றெனக். [7]கடாமெனமுகங்கடுத்த, கடாங்கடந்தனவனைய, கடாஙகார்த்தனவனைய, டாத்தனவனைய, கடாங்கடத்தனவனைய. [8]இல்லது, மணந்தரு. [9]மன்னர்.()

சஅ.—ஆடவர் குண்டலம் பூணுதிருந்தல்.

ஆளுலாங் கடலினு மகன்ற [1]வக்கட
றோளுலாங் குண்டல முதல [2]தொல்லணி
கேளுலா மின்னொளி கிளர்ந்த தில்லையால்
வாளுலா நுதலியர் [3]மருங்குல் [4]லல்லதே.

(இ - ள்.) ஆள் உலாம் கடலின்உம் அகன்ற அ கடல் - மானுடர் (மரக் கலமேறிச்) செல்லுந்தன்மையுள்ள உவர்க்கடலைக்காட்டிலும் பரந்துள்ள அந் தச் சேனைசமுத்திரத்திலே, - வாள் உலாம் நுதலியர்-ஒளிவிளங்குகின்ற நெற் றியையுடையமகளிரின், மருங்குல் அல்லது-இடையானது (மின்னல்போல் விளங்கியதே) அல்லாமல், தோள் உலாம் குண்டலம் முதல தொல் அணி - தோளிலசைந்தாடுந் தன்மையுள்ள குண்டலம் முதலிய பழமையான அணி கலன்களின், கேள் உலாம் மின் ஒளி கிளர்ந்தது இல்லை-நிறம் விளங்குகின்ற மின்னல்போன்ற ஒளி விலகிவிலகியொளிர்தல் இல்லையாயிற்று; (எ - று.)

சேனையில் யானைமதமணமல்லது வேறு மலர்ச்சாந்துகளின் மணமில்லை யென்று கூறினாற்போல, இங்கு, மகளிரின்இடை மின்னல்போல் விளங்கிய தன்றி, அச்சேனையிலுள்ளார் பூணாமையால் பூண்ட அணிகலன்களினொளி மின்னல்போல விளஙகவில்லை யென்கிறார். ஒழித்துக்காட்டணி. 'வாணுதல்' என்பதுபோல, 'வாளுலாநுதல்' என்றார். கேள்=கேழ். ழகரத்துக்கு ளகரம் போலியாகவந்தது. [3]மருஙகுல்போலவே என்ற பாடத்துக்கு - மருங்குல் விளங்குவதுபோல அணியின்மின்னொளி விளங்கவில்லையென்க. ஆல் - தேற்றம்: ஈற்றசையுமாம். பி-ம்:—[1]இக். [2]சொல். [3]மருங்கின். [4]அன்னதே.()

சகூ.—மத்தளம் முதலியன ஒலியாதிருக்தும்படையின்வருணனை.

மத்தள முதலிய வயங்கு பல்லிய
மொத்தன சேறலி [1]னுரையி லாமையிற்
[2]சித்திரச் சுவர்நெடுஞ் சேனை [3]தீட்டிய
பத்தியை [4]நிகர்த்ததப் படையி னீட்டமே.

(இ - ள்.) வயங்கு மத்தளம் முதலிய பல்இயம்-(ஒலி) விளங்குந்தன்மை யுள்ள மத்தளம்முதலிய பலவாச்சியங்கள், உரை இலாமையின் ஒத்தன சேற லின் - ஒலித்தல் இல்லாமையால் (பல்லியமென்ற பேர்மாத்திரம்) பொருந்தி

யனவாய் (அந்தப்படையிற்) செல்வதனால்,—அ படையின் ஈட்டம் - (பரத னுடன் சென்ற) அந்தச்சேனையின் கூட்டம், நெடு சுவர் சித்திரம் தீட்டிய சேனை பத்தியை - நீண்டசுவரிலே சித்திரமாக எழுதப்பட்ட சேனையின் தொகுதியை, நிகர்த்தது - ஒத்திருந்தது; (எ - று.)

சேனைகள் செல்லும்போது பலவகை வாச்சியங்களை யொலித்துக்கொண்டு செல்லுதல், வழக்கம்: பரதனுடன் சென்ற சேனை அங்ஙனம் வாச்சியங்களை யொலித்தலின்றி நிச்சப்தமாகச் சென்றதனால், சித்திரத்தில் தீட்டிய சேனைபோன் றிருந்த தென்றார். கீழ் "தாரையுஞ் சங்கமும்" (௩௩) என்ற பாடலிற் பல்லியம் ஒலியாமையைக் கூறின கவி, இச்செய்யுளாற் பல்லியம் ஒலிக்கப்பெறாத படையை வருணிக்கின்றா ரென் றறிக. பி - ம்:—[1]உரையிலாமையாற். [2]சித்திரத்தவர். [3]தீண்டிய. [4]நிகர்த்த. (௧000)

௫௦—ஆடவர் மடவார்மீது காதலொழிந்திருத்தல்.

[1]ஏடறு கோதையர் விழியி னெய்தகோ
லூடுற வுரந்தொளைத் துயிரு ணுவகை
யாடவர்க் கரும்பெருங் கவச மாயது
காடுறை [2]வாழ்க்கையைக் கண்ண னண்ணவே.

(இ-ள்.) கண்ணன்-திருமாலின் அம்சாவதாரமூர்த்தியாகிய ஸ்ரீராமன், காடு உறை வாழ்க்கையை-காட்டிலே வசித்தலாகிய வாழ்க்கையை, நண்ண-பொருந்தியதனால், (அச்செயல்),—ஏடு அறு கோதையர் - பறவிதழ் நீக்கிய மலர்கொண்டு தொடுக்கப்பட்ட மாலையைச்சூடிய மகளிர், விழியின் - கண்களினின்று, எய்த—, கோல்-(பார்வையாகிற) அம்பானது, உரம் ஊடு உற தொளைத்து - மார்பினை யூடுருவுமாறு தொளைசெய்துகொண்டு, உயிர் உணு வகை - (ஆசைநோயால் தம்) உயிரை யுண்ணுதவாறு, ஆடவர்க்கு - புருஷர்கட்கு, அரு பெரு கவசம் ஆயது-பெறுதற்குஅரிய பெரியகவசமாயிற்று;(எ-று.)

ஸ்ரீராமன் காட்டிற்குச்சென்றதனால் தோன்றிய துயர், ஆடவர்க்கெல்லாம் மனத்திற்பொங்குதலால் அந்தஆடவர்யாவரும் மகளிரின் கண்ணோக்காகியஅம்புக்கு இலக்காகியும் காதல்கொள்ளாராயின ரென்க.காடுறைவாழ்க்கையை நண்ணியதானது, மடவாரவிழிக்கோலையூடுருவவொட்டாது ஆடவர்க்குக் கவசமாயிற் றென்று வருணித்தார். பி - ம்:—[1]ஏடுறை. [2]வாழ்க்கையக். ()

௫௧.—இதுவும் அது.

கனங்குழைக் [1]கேகயன் மகளிற் கண்ணிய
சினங்கிடந் தெரிதலிற் [2]றீர்ந்த வேகொலா
மனங்களைங் [3]கடுங்கணை [4]யடரு [5]மாடவர்
முனங்கிடந் [6]துண்கில மகளிர் கொங்கையே.

. (இ - ள்.) 'அனங்கன் ஐ கடு கணை அடரும் ஆடவர் மனம் - மன்மதனது ஐந்தாகிய கொடிய அம்புகளால் (இராமன் வனஞ்செல்வதற்கு முன்னெல்லாம்) நெருக்கப்பட்ட ஆடவரின் மனமானது, மகளிர் கொங்கை கிடந்து - மகளிரின் தனங்களிலே தங்கி, உண்கில - (அவற்றை) அநுபவியாதொழிந்தன: (இதற்குக்காரணம்),—கனம் குழை கேகயன் மகளின்-பொன்னாலியன்ற குழையென்னுங் காதணியையணிந்த கைகேயியினிடத்தில், கண்ணிய சினம் - மூண்டசினமாகிய நெருப்பு, கிடந்து - (மடவாரின்) நெஞ்சினுள்) நிலைத்திருந்து,எரிதலின்-மிகுந்து தோன்றுதலால், (அக்கொங்கை சுடுமென்று அஞ்சி), தீர்ந்த ஏ கொல் - (அநினின்று) மீண்டனவோ? (எ-று.)

ஆடவர்மனம் மகளிரின் கொங்கையிற்சென்று காதல்கொண்டு அவற்றை நுகராமைக்குக் காரணம், மகளிர்மனத்திலே கைகேயிசெய்த கொடுந்தொழிலுக்காக அவளிடத்துச் சினம்மூண்டு எப்போதும் பற்றியெரிதலால் அவர்களின் தனங்களுஞ் சுடுமென்ற அச்சந்தானே என்று வருணித்தார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]கைகயன். [2]தீய்ந்த. [3]கொடுங்கணை, கொடுங்கணைக்கு, தொடுங்கணை. [4]கடந்த, இடைந்த, கிடைத்த, மிடைந்த. [5]மாதவர். [6]உறைந்தில, உணங்கில, உணங்கிய. (௧௦௦௨)

௫௨.—சேனை செல்ல, பரதன் சத்துருக்கனனுடன் போதல்.

இன்னண நெடும்படை யேக வேந்தனுந்
தன்னுடை[1]த் திருவரைச் [2]சீரை சாத்தினன்
பின்னிளை யவனொடும் பிறந்த துன்பொடு
நன்னெடுந் தேர்மிசை நடத்தன் மேயினன்.

(இ - ள்.) இன்னணம் - இப்படி, நெடு படை-அப்பெருஞ்சேனை, ஏக - செல்ல,—ஏந்தல் உம் - பெருமையிற் சிறந்தோனாகிய பரதனும், தன்னுடை திரு அரை சீரை சாத்தினன் - தன்னுடைய அழகிய அரையிலே மரவுரியைத் தரித்தவனாகி, பின் - (தன்) பின்னே (தொடர்ந்துவருகிற), இளையவனொடுஉம்-தம்பியாகிய சத்துருக்கினனுடனே, நல் நெடு தேர் மிசை - அழகிய பெரிய தேரின்மீது, பிறந்த துன்பொடுஉம்-(மனத்துத்) தோன்றிய துயரத்துடனே, நடத்தல் மேயினன் - செல்லத்தொடங்கினான்; (எ - று.)

சேனையைத் தொடர்ந்து தம்பியோடு பரதன் செல்லலாயினனென்க. அங்ஙனஞ்செல்லும்போது தன்பொருட்டாக இராமபிரானுக்கு வனவாழ்க்கை நேர்ந்திருப்பது குறித்து அந்தப்பரதனுக்கு நெஞ்சில் துயரம் பொங்கிற்றென்க. இளையவனொடும் துன்பொடுந் தேர்மிசை நடத்தன்மேயினன் - உடனவிற்சியணி: வடநூலார் ஸஹோக்தியென்பர். பி-ம்:—[1]நெடுவரை, அரையினில். [2]சீரஞ். (௧௦௦௩)

**௫௩.—பரதன் தாய்மார்முதலியவரோடு நகரவாசலை யடைதல்.**

தாயரு மருந்தவத் தவருந் [1]தந்தையி
னாயமந் திரியரு மளவில் சுற்றமுந்
தூயவந் தணர்களுந் தொடர்ந்து [2]சூழ்வரப்
போயினன் றிருநகர்ப் [3]புரிசை [4]வாயிலே.

(இ - ள்.) தாயர்உம் - தாய்மார்களும், அரு தவத்தவர் உம்-(செய்தற்கு) அரிய தவத்தைச்செய்பவராகிய முனிவர்களும், தந்தையின் ஆய மந்திரியர் உம் - (தனக்குத்) தந்தைபோற் கௌரவம் பாராட்டத்தக்கவராகிய மந்திரி மார்களும், அளவு இல் சுற்றம் உம் - அளவிடப்படாத [மிகப்பலரான] சுற் றத்தவரும், தூய அந்தணர்கள்உம் - பரிசுத்தகுணமுள்ளவரான பிராமணர் களும், தொடர்ந்து—, சூழ்வர - சுற்றிலும்வர, திரு நகர் புரிசை வாயில் - அவ்வயோத்திமாநகரின் மதில்வாயிலில், போயினன் - போனான்; (எ - று.)

தந்தைபோலத் தனதுநன்மையை நாடுபவ ராதலின், 'தந்தையினாய மந்திரியர்' என்றது. பி - ம்:—[1]தன்கிளை. [2]சூழ்தரப். [3]புறத்து. [4]வாயினே.()

**௫௪.—மந்தரைவருதல்கண்டு சத்துருக்கினன் அவளைப் பற்ற, பரதன் விலக்கிச் சொல்லத்தொடங்குதல்.**

மந்தரைக் கூற்றமும் வழிச்[1]செல் வாரொடு
[2]முந்தியே போதல்கண் டிளவ லோடி[3]யார்த்
தந்தரத் [4]தேற்றுவா னழன்று [5]பற்றலுஞ்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்.

(இ - ள்.) மந்தரை கூற்றம் உம்-மந்தரையென்னும் யமனும், வழி செல் வாரொடு உம் - பயணப்பட்டுப் போகுபவருடனே, உந்திஎ போதல் கண்டு - தள்ளிக்கொண்டு தானும் போவதுகண்டு,—இளவல் - (தசரதகுமாரர் நால் வருள்) இளையவனாகிய சத்துருக்கினன், அழன்று - மனங்கொதித்து, ஓடி - (அவளைப் பற்றுமாறு) ஓடிச்சென்று, ஆர்த்து - ஆரவாரித்து, அந்தரத்து ஏற்றுவான் - ஆகாயத்திற் செலுத்துமாறு, பற்றலும் - (கையாற்) பிடித்துக் கொள்ளுதலும்,—சுந்தரம் தோள் அவன் - அழகிய தோள்களையுடையவனா கிய பரதன், விலக்கி-(அவன்செயலைத்) தடுத்து, சொல்லுவான் - (பின்வரு மாறு) கூறுவானாயினன்; (எ - று.)—அதை மேல் இரண்டுகவிகளிற் காண்க.

தசரதனுடையஉயிர்போவதற்கு மந்தரையின் கலகமே முக்கியகாரண மாதலால், 'மந்தரைக் கூற்றம்' என்றார். கூற்றமும், உம்மை-இழிவுசிறப்பு: இராமனைக்காட்டிற்கு அனுப்புமாறு தூண்டியபாவியும் அப்போது பயணப் பட்டாளென்பதை விளக்கும். அபரகிரியைகளை நிறைவேற்றியபின்பு, இராம னிடஞ்செல்ல முயலும் பரதனைப்பார்த்துச் சத்துருக்கினன் 'தன்னைக்காத் துக்கொள்ளும் வல்லமைவாய்ந்த இராமன் ஒருபெண்பிள்ளையாற் காட்டிற் குத் துரத்தப்பட்டானே! இது என்னவிசித்ரம்! தந்தைக்குப் பராதீனனான

இராமன் என்செய்வானென்பாயோ; சரி: இலட்சுமணனுவது தந்தையைத் தடுத்து இராமனை வனவாசஞ்செய்யவொட்டாது ஏன் செய்யவில்லை? பெண்ணொருத்திக்கு வசப்பட்டு நியாயாநியாயம் தெரியாத மன்னவனை நியாயத்தை யாராய்ந்து முன்னமே சிட்சிக்கவேண்டும்' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், கூனியாகிய மந்தரை தான் விரும்பின பரதாபிஷேகத்தை எதிர் பார்த்தவளாய்ப் பலவகையணிகலங்களையணிந்து அந்தப்பக்கமாகவர, வாயில் காவலர் அவளைப்பிடித்துச் சத்துருக்கனனிடம் கொண்டுவந்து 'இவ்வளவு குழப்பத்துக்குங்காரணம் இந்தப்பாபிஷ்டையே: இவளை உமது இஷ்டப்படி சிட்சிக்கலாம்' என்று விட, சத்துருக்கினன் இவள் தான் செய்த தீமையின் பயனை யனுபவிக்கட்டுமென்று சொல்லி அவளது சகிசனங்கள் அஞ்சிநடுநடுங்கும்படி அவளைக் கீழேதள்ளி யிழுத்துக்கொண்டு செல்ல, கைகேயி அவளை விடுவிக்குமாறு வர, அவளையும் சத்துருக்கினன் அதட்டிக் கோபமுற்றிருக்க, பரதன் நியாயஞ்சொல்லி விடுவித்தானென்று முதனூலிலுள்ளது. பி-ம்:— [1]செல்வாருடன். [2]உந்தினள். [3]போய். [5]பார்த்தலும். [4]எற்றுவான் என்றும் படிக்கலாம். (௪0௫)

௫௫.—இதுவும் அடுத்த கவியும் - பரதன் சத்துருக்கினனைச் சமாதானப்படுத்தி இட்டுக்கொண்டுபோதலைத் தெரிவிக்கும்.

முன்னையர் முறைகெட முடித்த பாவியைச்
சின்னபின் னஞ்[1]செய்தென் சினத்தைத் [2]தீர்வனு
னென்னை[3]யின் றென்னையன் றுறக்கு [4]மென்றலா
லன்னையென் றுணர்ந்தில [5]னைய னேயென்றான்.

(இ - ள்.) முன்னையர் முறைகெட - முன்னையோரின் முறைமை மாறுபட, முடித்த - (தான் மனத்துக்கொண்ட துராசையை வரத்தின்மூலமாகத்) தீர்த்துக்கொண்ட, பாவியை - தீவினையையுடைய (என்) தாயை, நான்—, சின்னபின்னம் செய்து - கண்டதுண்டமாக்கி, என் சினத்தை தீர்வன்-என் கோபத்தைத் தீர்த்துக்கொண்டிருப்பேன்; (ஆயினும் நான் அவ்வாறுசெய்யாது ஒழிந்தது), ஐயனே—! (நான் அவ்வாறு என்தாயைக் கொன்றேனேயானல்), என்னை—, இன்று—, என் ஐயன் - என்தலைவனுன இராமபிரான், துறக்கும்-(தாயைக்கொன்ற நீ என்தம்பியாக இருத்தற்கு உரியவனல்லையென்று சொல்லித்) துறந்துவிடுவான், என்று - என்ற இக்காரணம் பற்றியேயாகும்: அலால் - இது அல்லாமல், அன்னை என்று உணர்ந்திலன்-என்தாயென்று கருதினேனல்லேன், என்றான் - என்று கூறினுன்; (எ - று.)

கூனியைப்போல் நிமித்தகாரணமாகவன்றி இராமன் கானகஞ் செல்லுதற்குப் பிரதானகாரணமாயிருந்த என்தாயை, தாயென்றகௌரவத்தாற் கொல்லாது விட்டிட்டேனல்லேன்; பின்னை யாது காரணம்பற்றியெனில், நான்என் தாயைக் கொன்றிட்டேனே யானல், அது இராமனது திருவுளத்துக்கு என்மீது சினத்தைமூட்டுவிக்குமென்பது பற்றியேயென்றனனென்க.

பி-ம்:—[1]செய்து சினத்தைத். [2]தீர்வெனேல். [3]அன்று. [4]ஆதலால். [5]ஐயநான். இதுவும் அடுத்தகவியும் சிலபிரதியில் இல்லை: சிலபிரதியில் "அல்லணை" (ருஅ) என்று தொடங்கும் பாடலுக்குப்பின் இது உள்ளது. (கசOO௬)

ருசு. ஆதலான் முனியுமென் றைய னந்தமில்
வேதனைக் கூனியை வெகுண்டு மென்னினுங்
கோதிலா வருமறைக் குலவு நூல்வலாய்
போதுநா மென்றுகொண் டரிதிற் போயினான்.

(இ-ள்.) ஆதலால்-(என்னை இராமன் துறப்பானென்றே கைகேயியைக் கொல்லாது விட்டேன்) ஆகையால், கோது இலா அரு மறை குலவு நூல் வலாய் - குற்றமற்ற அரும்பொருளையுடைய வேதமாகிய விளங்குகின்ற சாஸ் திரத்தில் வல்லவனே! ஐயன் முனியும் என்று - இராமபிரான் சினப்பானெ ன்ற காரணத்தினாலேயே, அந்தம் இல் வேதனை கூனியை - எல்லையில்லாத வருத்தத்தை (உலகத்தோர்க்கெல்லாம்) உண்டாக்கிய கூனியென்பவள்மீது, வெகுண்டுஉம் என்னின்உம் - சினங்கொண்டுள்ளோமாயினும், நாம்—, போதும் - விட்டிட்டுச் செல்வோம், என்று - எனச்சொல்லி, அரிதில் கொண்டு- சிரமப்பட்டு (ச் சத்துருக்கினனை) உடன்அழைத்துக்கொண்டு, போயினான் - பயணமாயினான்; (எ - று.)

'கோதிலா வருமறைக் குலவுநூல்வலாய்' என்ற விளி - வேதநூலில் வல்ல நீ ஒருஸ்திரீயின்பொருட்டு இங்ஙனஞ் சினங்கொண்டுசிற்பது தகுதி யன்று என்ற பொருளைக் குறிப்பிக்கும். (கசOOஎ)

ருஎ.—பயணப்பட்ட முதனாளில் இராமன் தங்கிய சோலையிற் பரதன் சேனைமுதலியவற்றோடு தங்குதல்.

மொய்பெருஞ் சேனையு மூரி [1]மாக்களுங்
[2]கைகலந் தயலொரு கடலிற் சுற்றிட
வையனுந் தேவியு மிளைய [3]வாளியும்
வைகிய சோலையிற் றானும் வைகினான்.

(இ - ள்) மொய் பெரு சேனைஉம் - திரண்ட மிக்க படைகளும், [யானை குதிரைகளும்], மூரி மாக்கள் உம் - வலிமையமைந்த காலாட்படையும், கை கலந்து-ஒழுங்காகத் திரண்டு, அயல்-(தன்) பக்கத்திலே, ஒரு கடலில் சுற்றிட- ஒருகடல்போற் சூழ்ந்திருக்க, ஐயன்உம் தேவிஉம் இளைய ஆளிஉம் - இராம பிரானும் சீதாதேவியும் யாளிபோல்பவனாகிய இளையபெருமாளும், வைகிய - (முதனாளில்) தங்கிய, சோலையில்-, தான்உம்—, வைகினான் - தங்கினான்.

இராமன்தங்கின இடம் என்ற காரணததினால் அன்புபாராட்டிப் பரதன் தங்கினா னென்பது, தோன்றும். பி - ம்:—[1]ஞாலமும். [2]கைபரந்தயலொரு, ஒகைதயள் தனயனோர். [3]யாளியும், யானையும். (கசOOஅ)

௫௮.—இராமன் வைகிய புல்லில் மக்ஷணில்தானே
பரதன் தங்கியிருத்தல்.

அல்லணை நெடுங்கணீ ரருவி யாடினன்
கல்லணை கிழங்கொடு [1]கனியு [2]முண்டனன்
வில்லணை[3]த் துயர்ந்ததோள் வீரன் வைகிய
புல்லணை மருங்கிற்றான் பொடியின் வைகினான்.

(இ - ள்.) அல் - அவ்விரவில், நெடு கண் அணை - பெரியகண்களிற் பொருந்திய [கண்களினின்று பெருகிய], நீர் அருவி - கண்ணீராகிய அருவியிலே, ஆடினன்-மூழ்கி, கல் அணை கிழங்கொடு - மலையில்தோன்றும் கிழங்குகளுடனே, கனிஉம்-பழங்களையுமே, உண்டனன் - உணவாகக்கொண்டவனாய்,—வில் அணைத்து உயர்ந்த தோள்-வில்லை அணைத்திருப்பதனாற் (வாழ்ப்புக்கொண்டு)சிறந்துதோன்றுகின்ற தோள்களையுடைய,வீரன்-இராமபிரான், வைகிய-தங்கியிருந்த, பொடியின் - புழுதியிலே, புல் அணை மருங்கில் - புற்படுக்கையினிடத்து, வைகினான் - தங்கினான், (பரதன்); (எ - று.)—தான் - அசை. பி-ம்:—[1]காயும்.[2]உண்டிலன்.[3]மருங்குறன், மருங்கிற்றன்,மருங்குலின்.

௫௯.—அங்கிருந்து காலினாலேயே பரதன் நடந்து செல்லுதல்.

ஆண்டுநின் றாண்டகை யடியி னேகினா
னீண்டிய நெறியெனத் தானு மேகினான்
[1]றாண்டிடு தேர்களுந் [2]துரக ராசியுங்
காண்டகு கரிகளுந் தொடரக் காலினே.

(இ - ள்.) 'ஆண்டு நின்று-அவ்விடத்திலிருந்து, ஆண்தகை-ஆண்மைக்குணமுடைய இராமபிரான், ஈண்டிய நெறி-நெருங்கிய வழியிலே, அடியின் ஏகினான்-காலினாலேயே நடந்துசென்றான்,' என - என்ற காரணத்தினால், தூண்டிடு தேர்கள்உம் - தூண்டிச்செலுத்தப்படுந் தேர்களும், துரகராசிஉம் - குதிரைத்தொகுதிகளும், காண்தகு கரிகள்உம் - காணுதற்குஇனிய யானைகளும், தொடர-(பின்னே) தொடர்ந்துவர, தான்உம்-பரதனும், காலின் ஏ - (தன்) காலினாலேயே, ஏகினான் - நடந்துசென்றான்; (எ - று.)

இராமபிரான் காலினால் நடந்துசென்றிருக்க, அவ்விடத்துத் தேரின்மீது செல்லுவது தன்நிலைக்குத் தகாது என்று பரதன் அந்தச்சோலைக்கு அப்பாற் காலினாலேயே நடந்துசெல்லலாயின னென்க. "படைதனக்கி யானை வனப்பாகும்," "யானையுடைய படைகாண்டல் முன்னினிதே" என்பவாதலால், 'காண்டகு கரிகள்' என்றார். பி-ம்:—[1]தூண்டிய. [2]துரகவெள்ளமும்.

ஆறுசெல்படலம் முற்றிற்று.



## கக - ஆவது குகப்படலம்.

*இராமனைக் கானகத்தினின்று மீட்டுக்கொண்டுவருமாறு பயணப்பட்ட பரதாழ்வான் குகப்பெருமானைச் சேர்ந்ததைத் தெரிவிக்கும் படல மென்பது, பொருள். குஹனென்ற வடசொல்லுக்கு - அஜ்ஞாநவிருளைப் போக்கியவ னென்பதுபொருள். இனி, பகைவர் படையினின்று தன்படையைக் காத் துக்கொள்பவனென்றும் பொருள்கூறலாம். இது-முதலில் முருகக்கடவுட் குப்பெயராய், பின்பு அவனைப்போன்ற பலபராக்கிரமங்களைக்கொண்ட வேடர்பிரானுக்கு ஆயிற்று. சிலபிரதிகளில் இப்படலத்துக்குப்பெயர்* **கங்கை காண்படலம்**-*என்றும், சில பிரதிகளில்* **கங்கைப்படலம்** *என்றுங் காணப்படு கின்றது; இவ்விரண்டனுள் எப்பெயரேனும் ஏற்கும்; இராமனை மீட்டுக் கொணருமாறு சென்ற பரதன் கங்கையைக்கண்டுகடந்ததைத் தெரிவிக் கின்ற படல மெனப் பொருள் காண்க.*

*காலினல்நடந்துசென்ற பரதன் தன்கோசலநாட்டைக்கடந்து கங்கைக் கரையையடைந்தானாக, சேனைகள் கங்கைநீரைக் கலக்கலாயின. அப்போது சிருங்கபேரபுரத் தரசனான குகன் சேனையோடு பரதன் வருவதுகண்டு 'இவன் நமதுதலைவனான இராமனைக் காட்டுக்குத் துரத்தியதோடு அமையாமல் இங் குந் துரத்த வருகிறான்போல் தோன்றுகின்றது' என்றுகருதிச் சினம்பொங்க யுத்தசன்னத்தனாகித் தென்கரைவந்து புளினரைநோக்கி 'தந்திரமாக வந் துள்ள இச்சேனையை வானேற்றி, என்னுயிர்த்துணைவற்குப் பேரரசு ஈகு வான் நின்றனன்: நீவிரும் அமைக: அம்பிகள்யாதும் ஓட்டலிர்' என்று கட் டளையிட்டு, 'கங்கையின் கரை வந்தோர்களைப் பிடி, படை எறி' என்றுசொல்லி மீண்டும் 'நான் எளிதில் இவர்களை விட்டுவிடுவேனோ? கங்கையைக் கடந்தல் லவோ இவர்கள் போகவேண்டும்! ஒருகை பார்த்துவிடுகிறேன்; என்னுயி ருள்ளவரையில் இவரது தீக்கருத்தை நிறைவேறவொட்டேன்' என்று நின் றனனாக, அப்போது சுமந்திரன் வழியில்நிற்குங் குகனைச் சேய்மையிற்கண்டு பரதனுக்குக் குகன் வந்துநின்றிருப்பதைத் தெரிவிக்க, பரதன் 'நானே அவ னைக் காணச்செல்வேன்' என்றுசெல்ல, வரும் பரதனது நிலையைக்கண்டு குகன் திடுக்கிட்டு 'நாம் தவறாக இவனைப்பற்றி நினைத்ததாகத் தோன்றுகின் றது. உண்மையறிவேன்: வழிகாத்திருங்கள்' என்றுசொல்லி ஒருதனியே தான் நாவாயில்வந்து பரதனை யணுகி வணங்க,பரதன் குகனைத் தழுவ,குகன் பரதனை வந்த காரணம் வினவ, பரதன் 'தந்தை முந்தைமுறை வழுவினன்: அதனை நீக்க மன்னனைக் கொணர்வான் வந்தேன்' என்றனன். அதுகேட்ட குகன் பரதன்தன்மையைக்கொண்டாடிப் பாராட்ட, அப்பரதன் தென்திசை நோக்கிக் கைகுவித்து,இராமன் இங்கு எங்கே உறைந்தான்?' என்ன, 'நானே காட்டுவன்' என்று எழுந்து காட்ட, வள்ளல் வைகிய பள்ளிகண்டு பரதன் பதைத்துவீழ்ந்து தன்னைப்பழித்துக்கொண்டு பின்பு 'இலக்குமணன் செய் தது என்?' என்ன, 'வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும்*

கங்குல் எல்லைகாண்பளவும் கண்ணிமைப்பின்றிக் காத்துநின்றான்' என்ன, பரதன் 'நான் துன்பத்துக்கு ஏதுவானேன்: அவன் அது துடைக்கநின்றான்' என்றுகூறி வருந்தி அன்று தரையில்தானே வைகி, 'எம்மைக் கங்கைகடத்தினையாயின் இடர்க்கடலினின்று கரையேற்றினவனுவாய்' என்ன, புளிஞர்கோன் 'நன்று' என்றுசொல்லி, 'தமரை நாவாய் தருக' என்ன, பல்வகை நாவாய்களும் வந்தன: முனிவர் வானவழியாய்த் தம் தவவலிமையாற் கங்கையைக் கடக்க, யானைகள்நீந்தி அக்கரைசேர, மற்றைச்சேனைகளும் நகரத்துச்சனங்கள் யாவரும் படகுமூலமாய் அக்கரை சேர்ந்தனராக, பரதன் தன் தாய்மார் தம்பி சுமந்திரன் குகன் இவர்களுடனே ஒரு படகில்ஏற, அப்படகு செல்கையில் குகன் கோசலையை வினவியறிந்துவணங்க, அவள் 'வீரர் நாடு விட்டுக் காடுசென்றதுவும் நலமாயிற்று: முன் நால்வராகஇருந்த நீங்கள் ஐவீராக இருந்து அரசுபுரிக' என்ன, மற்றைத்தாய்மாரையும் குகப்பெருமான் வினவியறிந்து வணங்கிப் பின்பு அக்கரைசேர, தாய்மார் சிவிகையிற்செல்ல, பரதன் முதலியோர் பலகாவதம் காலினால்நடந்து பரத்துவாசனிருக்குமிடம் நோக்கிச்செல்ல, அவனும் எதிர்கொள்ளலாயினனென்பது, இப்படலத்துக் கூறிய விஷயம்.

க.—இராமனை நாடப் புறப்பட்ட பரதன் தன்சேனையோடு கங்கையின் கரையை யடைதல்.

பூவிரி [1]பொலன்கழற் [2]பொருவி றானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை [3]யெய்தினான்.

(இ - ள்.) பூ விரி - அழகுமிக்க, பொலன் கழல் - பொன்னாலாகிய வீரக்கழலையும், பொரு இல் தானையான் - ஒப்பில்லாத சேனையையுமுடைய பரதாழ்வான்,—காவிரி நாடு அன்ன - காவேரிபாயுஞ் சோழநாட்டை யொத்த, கழனி நாடு - கழனிகளையுடைய (தனது) கோசலதேசத்தை, ஒரீஇ - விட்டு நீங்கி,—தாவரம் சங்கமம் என்னும் தன்மைய யாவைஉம் - நிலையியற்பொருள் இயங்கியற்பொருள் என இருவகைத் தோற்றமாகப் பகுக்கப்படுந்தன்மையையுடைய எல்லாவுயிர்களும், இரங்கிட - (தனதுநிலைமையை நோக்கிப்) பரிதவிக்க,—கங்கை எய்தினான் - கங்கையின்கரையை அடைந்தான்; (எ-று.)

அரசகுமாரனானபரதன் தான் அரசனாகி இராச்சியத்தையாளவேண்டிய காலத்து அங்ஙனஞ்செய்யாமல் ஒருமுனிகுமாரன்போல் மரவுரிபுனைந்து சடைமுடித்து இராமனைப்பிரிந்த துயரெல்லாம் தன்முகத்திலேதோன்றுமாறு செல்வதனால், வழியிடையேகண்ட சராசரம்யாவையும் இரக்கமெய்திற்றென்க. பூ - பொலிவு. பொலம்என்றசொல், போலிபெற்றுவந்தது. கவி, தமது நாடுஆதலால், காவிரிநாட்டைக் கோசலதேசத்துக்கு உவமைகூறினார்; இதனால், கவியினது தேசாபிமானம் விளங்கும். காலந்தவறாது வெள்ளம்

பெருகுவதும் வேண்டியஅளவினும் மிக்கநீர்பெருகுவதுமாகிய காவிரிநதி பாய்தலால் 'புனல்நாடு' என்னும்படி நீர்வளப்பம்மிக்கு அதனால் "சோழவளநாடு சோறுடைத்து" என்னுமாறு நிலவளப்பஞ்சிறந்த சோழநாடு, மற்றைநாடுகளுக்கு உவமையாதற்கு மிகஏற்கும். காவிரி - காவேரீயென்னும் வடசொல்லின் திரிபு; கவேரனென்னும் அரசனது மகளென்று பொருள். 'கழனிநாடு' என்றதனால், கோசலதேசத்திற் பயிரில்லாத வெற்றிடம் சிறிதுமில்லையென நிலவளம் விளங்கும். ஸ்தாவரஜங்கமம் - உம்மைத்தொகை, வடநூல்முடிபு. பி-ம்:—[1]பொலங். [2]புனைவிருனையான், பொருவிற்றுனையான், புனைவிருளினன், புனைவிரேளினன்' பொருவிரேளினன். [3]ஏகினன். (கoகக)

உ.—பரதனுடன்சென்ற யானைச்சேனையின் வருணனை.

> எண்ணருஞ் [1]சுரும்பு[2]தம் மினத்துக் கல்லது
> கண்ணகன் பெரும்புனற் கங்கை யெங்கணு
> மண்ணல்வெங் கரிமதத் தருவி பாய்தலா
> லுண்ணவுங் குடையவு முரித்தன் றாயதே.

(இ - ள்.) கண் அகல் - இடமகன்ற, பெரு புனல்-மிக்க நீரையுடைய, கங்கை - கங்காநதியில், எங்கண் உம் - எல்லாவிடங்களிலும், அண்ணல் வெம் கரி - பெருமையையுடைய வெவ்விய யானையினது, மதத்து அருவி - மதநீர்ப்பெருக்கு, பாய்தலால் - பெருகுதலால்,—(அவ்வாற்றுநீர்),—எண்ண அரு சுரும்பு தம் இனத்துக்கு அல்லது - எண்ணியளவிடுதற்கு அரிய [மிகப் பலவான] வண்டுகளின் கூட்டத்துக்கு அன்றி, (மற்றைமனிதர் முதலியோர்க்கு), உண்ண உம் - குடிக்கவும், குடைய உம் - நீராட்டஞ்செய்யவும், உரித்து அன்று ஆயது - உரிமையுடைய தல்லாததாயிற்று; (எ - று.)

கங்கைக்கரையைப் பரதன் சேர்கையில் அவனதுசேனையான ய...... களினின்று பெருகிய மதநீரருவி அந்தக்கங்கையாற்றிற் பாய்ந்து எங்கும் மதநீரேயாகும்படி செய்ததனால், அப்போது அந்தக்கங்கைநீர் மனிதர் முதலியோர் பருகவும் நீராடவும் பயன்படாததாயிற்றென்பதாம்; **வீறுகோளணி:** இதனால், யானைப்படையின் மிகுதி கூறியவாறு. யானையின்மதநீரை வண்டுகளல்லது மற்றையுயிர்கள் பருகாவென்ப. மதத்தை அருவியென்றுஉருவகஞ் செய்ததற்கு ஏற்ப, யானையை மலையென்க. உண்டல், பொதுவினையாகவும் வரும். சுரும்புஎன்ற சிறப்புப்பெயர், பொதுவாக வண்டுச்சாதிகளெல்லாவற்றையும் உணர்த்துவதுண்டு. யானை மதித்திருக்கும்போது அதனுடல் வெம்மையாகஇருக்குமாதலால், 'வெங்கரி' என்றார்; இனி, கொடுஞ்சினத்தையுடைய கரியெனினுமாம். பி - ம்:—[1]சுரும்புந். [2]தன். (கoகஉ)

ங.—குதிரைச் சேனையின் வருணனை.

> அடிமிசைத் தூளிபுக் கடைந்த தேவர்த
> முடி[1]மிசைப் [2]படர்வதோர் முறைமை [3]தேர்ந்திலெ
> னெடிதுயிர்த் [4]துண்டவு [5]நீந்த [6]நின்றவும்
> பொடிமிசைப் [7]புரண்டவும் புரவி யீட்டமே.

(இ - ள்.) அடிமிசை தூளி - (குதிரைகளின்) கால்களினுலெழுப்பப் பட்ட தூளிகள், புக்கு அடைந்த-(வானிற்) போய்ச்சேரப்பெற்றவை, தேவர் தம் முடிமிசை படர்வது - தேவர்களின் சிரசின்மீது சென்று சேர்ந்ததாகிய, ஓர் முறைமை-ஒப்பற்றமுறைமையை, தேர்ந்திலென் - (மானுடனான நான்) அறிந்தேனில்லை; நெடிது உயிர்த்து - பெருமூச்சுவிட்டுக்கொண்டு, உண்ட உம் - நீரைப்பருகியனவும், நீந்த நின்றஉம் - (நீரில்) நீந்தியபடி நின்றனவும், பொடி மிசை புரண்டஉம் - பூமியின்மீது புரண்டவைகளும், புரவி ஈட்டம் ஏ - குதிரைக்கூட்டமேயாகும்; (எ - று.)

பெருந்தூளி மேலேபரந்து மிகுதியாகச் சென்றதனால் அப்புழுதிகள் தேவர் சிரசின்மீதுபடிந்து அவரதுசிரசினையும் அலங்கரித்திருக்குமென்று அனுமானவகையாற் கூறலாமேயன்றி,மானுடரான நம்மால் அதனைக் கண்கூடாகக் கண்டு சொல்லமுடியாதென்பது முன்னிரண்டடிகளிற்கூறிய பொருள். எங்குப்பார்த்தாலும் குதிரையே கண்ணுக்குப் புலனும்படி யிருந்தனவென்பது, பின்னிரண்டடிகளிற் கூறியபொருள். இவ்வருணனையிற் குதிரையின மிகுதி தொனிக்கும். பி - ம்:—[1]உறப். [2]புனைந்ததொர், புலர்ந்ததொர், பரந்ததொர். [3]தேர்ந்துதாவ, நேர்ந்துதான், நேர்தர, நோக்கித்தான், தோய்ந்தில. [4]உண்டியும். [5]நீக்கி. [6]நின்றவை, நின்றவப். [7]புரண்டவப்,புரண்டதப்.　　　(௧௦௩௩)

௬.—பரதனதுசேனை கங்கையில் வியாபித்தல்.

பாலையேய் நிறத்தொடு பண்டு தான்பட
[1]ரோலையேய் [2]நெடுங்கட லோடிற் றில்லையான்
மாலையேய் நெடுமுடி [3]மன்னன் [4]சேனையாம்
வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.

(இ - ள்.) அ கங்கை வெள்ளம் - அந்தக்கங்காநதியின் பெருக்கானது, பாலை ஏய் நிறத்தொடு - பாலையொத்த [வெள்ளிய] நிறத்துடனே, தான் பண்டு படர் - தான் முன்னே சென்றடைந்துவந்த, ஓலை ஏய் நெடு கடல் - ஆரவாரத்தைக் கொண்ட பெரிய கடலில், ஓடிற்று இல்லை-விரைந்து சென்றடைய வில்லை; மாலை ஏய் நெடு முடி மன்னன் சேனைஆம்-பூமாலையைச்சூடிய நீண்ட கிரீடத்தையணிந்த பரதாழ்வானது சேனையாகிய, வேலை ஏ - சமுத்திரமே, மடுத்தது - (அந்தக்கங்கையின் பெருக்கை) உண்டுவிட்டது; (எ-று.)

பரதனது சேனுசமுத்திரம் வழிவந்த இளைப்பினால் கங்கையின் பெருவெள்ளத்தைப் பருகியதனால் கடலிற் சென்றுசேரும் நதியாகிய கங்கையும் கடலில் ஓடவில்லையென்றார்: தொடர்புயர்வுநவிற்சியணி; இதனாற் சேனை மிகுதி தொனிக்கும். இனி, 'பாலையேய் நிறத்தொடு ஓடிற்றில்லை' என்றதனால், சேனைக்கடல் தண்ணீரை மிகவும் பருகியதனால் கங்கைநீர் எஞ்சியதனாலும் யானையின் மதநீர் மிகுதியாகக்கலந்ததனாலும் தனதுபால்நிறம்மாறிவேற்றுருவத்தையடைந்து கடலிலோடிற்று என உரை காணலுமொன்று. இனி

கீழிரண்டுபாடல்கள் யானைகுதிரைப்படைகளை வருணித்துக்கூறியன ஆத லால், இந்தப்பாடல் - காலாட்படைமிகுதியை வருணிக்கவந்ததென உரை காண்டலும் ஒன்று. மன்னன் - தசரதன் என்று கொள்ளலுமாம். பி - ம்:—[1]நீலே. [2]திறத்தொடுநீடிற்று. [3]வரதன். [4]சேனையின். (௪0௧௪)

ரு.—பரதனைத் தொடர்ந்துசென்ற சேனையின் அளவு.

[1]கான்றலை நண்ணிய காளை பின்[2]படர்
தோன்றலை யவ்வழித் தொடர்ந்து [3]சென்றன
வான்றவ ருணர்த்திய வக்கு ரோணிகண்
மூன்றுபத் [4]தாயிரத் திரட்டி முற்றுமே.

(இ - ள்.) கான்தலை நண்ணிய - காட்டிற்சென்ற, காளை பின் - இராம பிரான்பின்னே, [இராமபிரானைநாடிஎன்றபடி], படர் - புறப்பட்ட, தோன் றலை-பரதனை, அ வழி - அப்பொழுது [அல்லது அவ்விடத்தில்], தொடர்ந்து சென்றன-பின்தொடர்ந்துசென்ற சேனைகள்,—முற்றும்-முழுவதும், ஆன்ற வர் உணர்த்திய - பெரியோர்களால் தொகைகூறப்பட்ட, மூன்று பத்து ஆயி ரத்து இரட்டி அக்குரோணிகள்-அறுபதினாயிரம் அக்ஷௌகிணிகளாம்;(எ-று.)

கான், அக்குரோணி-கானநம், அக்ஷௌஹிணீ என்னும் வடசொற்களின் சிதைவு. காளையின் பின்படர் தோன்றல் - இராமபிரானதுபின்னே பிறந்த ஆண்மகனெனினுமாம்; இராமனுக்கு அடுத்த தம்பி, பரதனாதல் காண்க. அக் குரோணி - யானை இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது, தேர் இருபத் தோராயிரத் தெண்ணூற்றெழுபது, குதிரை அறுபத்தையாயிரத்து அறுநூற் றப்பத்து, காலாள் லக்ஷத்தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது; ஆக, இர ண்டுலட்சத்துப் பதினெண்ணாயிரத்தெழுநூறு கொண்டது. மூன்று பத்து ஆயி ரம்-முப்பதினாயிரம்;பண்புத்தொகைப் பன்மொழித்தொடர்;அதனது இரட்டி யென்க. இரட்டி - இரண்டாதலுடையதெனக் காரணப்பெயர். பி - ம்:—[1]கான்றனின், கான்றனை. [2]தொடர். [3]சென்றழி. [4]இரட்டியாயிரத்தின். ()

சு.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்: பரதன் சேனையோடுவருதலைக் கண்டு ஐயுற்ற குகன் தன்சேனையோடு கங்கையின் தென்கரையை யடைந்தமையைத் தெரிவிக்கும்.

அப்படை கங்கையை யடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
யொப்புடை யண்ணலோ [1]டுடற்ற வேகொலா
மிப்படை [2]யெடுத்ததென் றெடுத்த சீற்றத்தான்.

(இ - ள்.) அ படை - அந்தச்சேனை, கங்கையை அடைந்த-கங்கையைச் சேர்ந்த, ஆயிடை-அச்சமயத்தில்,—(அதனைக்கண்டு),-'துப்பு உடை கடலின்- வலிமையையுடைய கடலினது, நீர்-நீரை, சுமந்த- பருகி மிகுதியாகத்தரித்துச்)

சூல்கொண்ட, மேகத்தை - காளமேகத்தை, ஒப்பு உடை - உவமையாக வுடைய [ஒத்த என்றபடி], அண்ணலோடு-ஸ்ரீராமபிரானுடனே, உடற்ற எ கொல் ஆம் - போர்செய்தற்காகவேயோ, இ படை எடுத்தது - இந்தச்சேனை எழுந்தது,' என்று-என்றஎண்ணி, எடுத்த சீற்றத்தான்-மிகுதியாகக்கொண்ட கோபமுடையவனும், (எ-று.)—"குகனெனப் பெயரிய கூற்றினாற்றலான்" (எ) "மருங்கடை தென்கரைவந்து தோன்றினன்" (கக) என இயையும்.

பரதன் சேனையோடு கங்கையின் வடகரையை யடையவும், அந்தச் சேனையைக்கண்ட குகன் 'இராமபிரானுடன் போர்செய்தற்காகத்தான் இந் தச்சேனைவந்துள்ளதோ?'என்று ஒருசந்தேகந் தோன்றினதாற் சினங்கொண் டனனென்றவாறு. இப்படை எடுத்தது-பரதன் இச்சேனையை எழுப்பியது என்பாரும் உளர். கடலுக்கு வலிமை-முத்தொழிலையும் நிகழ்த்தும் உரிமை; அத்தன்மையை 'முந்நீர்'என்ற பெயராலுங் காண்க. கடலினீர் சுமந்தமேகத் தை ஒப்புடையண்ணல் என்பதற்கு - கடலையும் நீர்கொண்ட மேகத்தையும் ஒத்த அண்ணலெனினும் அமையும்; இரண்டும்-கரியதிருமேனிநிறத்துக்கும், தண்மைக்கும் உவமை. கடல் - காம்பீரியத்திற்கும், மேகம்-கைம்மாறுகருதா மைக்கும் உவமையுமாம். 'துப்புடை'—பவழத்தையுடைய எனப் பொருள் கொண்டால், அது-இராமனது அதரத்துக்கு உவமையாம். பி-ம்:—[1]உற்றவே, அமருக்கே, உருத்தவே. [2]எனமனத்து. (௧௦௬௬)

எ. குக[1]னெனப் [2]பெயரிய கூற்றி னாற்றலான்
றொகைமுரட் சேனையைத் துகளி [3]னோக்குவா
னகை[4]மிகக் கண்கடீ நாற நாசியிற்
புகை[5]யுறக் குனிப்புறும் [6]புருவப் போர்விலான்.

(இ-ள்.) குகன் என பெயரிய-குகனென்று பெயரையுடைய, கூற்றின் ஆற்றலான் - யமன்போலும் வலிமையையுடைய வேடர்கோன்,—தொகை முரண் சேனையை-தொகுதியாகவுள்ள வலிமையையுடைய அச்சேனையை, துகளின் நோக்குவான்-(அதனால்மேலெழுப்பப்பட்ட)புழுதியாற் பார்த்தறிந் தவனும், நகை மிக-சிரிப்பு அதிகப்படவும், கண்கள் தீ நாற-கண்களினின்று தீப்பொறி பறக்கவும், நாசியின் புகை உற-மூக்கினின்று புகை மிக்குக்கிளம் பவும், குனிப்பு உறும் புருவம் போர் விலான் - வளைத்த புருவமாகிய போர் செய்யும்வில்லை யுடையவனும்,—(எ - று.)

குகன் படைவருகையை யுணர்ந்து சீற்றங்கொண்டதற்குக்காரணத்தை இதனாற் கூறுகின்றனர். புகையைக்கண்டு நெருப்புண்டென்று உணருமாறு போலத் துகளைக்கண்டு படைவருகையை உணர்ந்தான் குகன் என்க. சேனை யைத் துகளின் நோக்குவான் - சேனையைத் தூளிபோல எளிதாக நினைப் பவன் என்றலுமொன்று. இங்கே, நகை-வீரத்துஎழுந்த வெகுளிநகை; இது - "எள்ள லிளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட நகை நான் கென்ப"

என்றதில் பிறரை எள்ளி [இகழ்ந்து] நகுதலில் அடங்கும். நாசியிற்புகையுறு தல்-மூச்சுவிடுந்தோறும் புகை உடனெழுதல். புருவத்துக்கு வில் உவமை, வளைவுபற்றி. புருவத்தைப் போர்வில் என்றதனால், இவன் புருவத்தைநெறித் தல்மாத்திரமே பகைவரஞ்சக் காரணமாமென்பது குறிப்பிக்கப்படும். 'குனிப் புறும் புருவப்போர்விலான்' என்றதனால், புருவத்தை வளைத்தலோடு வில்லை யும்வளைத்தா னென்றுங் கொள்ளலாம்; புருவத்தை வளைத்தல் - நெற்றிமே லேறநெறித்தல்: வில்லை வளைத்தல்-வளைத்து நாணேற்றுதல்: உடனவிற்சி யணி. பி ம்:—[1]எனும். [2]பெயரினன், பெயரினன். [3]நோக்கினன். [4]முகக். [5]உகக், மிகக், பெறக். [6]புருவக்கோளினன், புருவக்கோளனன், புருவக்கோணினன்.

௮. [1]மையுற வுயிரெலா மிறுதி வாங்குவான்
[2]கையுறு கவரயில் [3]பிடித்த காலன்றா
[4]னையைந்நூ றாயிர முருவ மாயின
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்

(இ-ள்.) மை உற-குற்றமுண்டாக, உயிர் எலாம் இறுதி வாங்குவான் - பிராணன்களையெல்லாம் முடிவுண்டாகும்படி (உடலினின்று) நீக்குதற்கு, கை-கையிலே, உறு-பொருந்திய, கவர் அயில் - முத்தலைவேலை, பிடித்த—, காலன் தான் - யமனே, ஐ ஐ நூறு ஆயிரம் உருவம் ஆயின-அழகிய ஐந்து லட்சம் வடிவையெடுத்தா லொத்த, மெய் உறு தானையான் - மெய்வலியை யுடைய சேனையையுடையவனும், வில்லின் கல்வியான் - வில்வித்தையில் வல்லவனும்,—(எ - று.)

சேனையில் ஒவ்வொருவரும் யமனையொத்த ஐந்துலட்சம் பதாதிச்சேனை யையுடையவன் தநுர்வித்தையில்வல்ல அந்தக் குகனென்றவாறு. வாங்கு வான் பிடித்தஎன இயையும். காலன்தான் வாங்குவான் உருவமாயின தானை என இயைப்பினுமாம். கீழ் கங்கைப்படலத்தில் "ஐயிருபததோடைந்தாயிர ருளராணை, செய்குநர்" என வந்ததற்கு ஏற்ப, ஐயைந்நூறாயிரம்தானை என்ப தற்குப் பொருளுரைக்கப்பட்டது. பி-ம்:—[1]மையற. [2]கையுறை. [3]காலனென் னும்பேர். [4]ஐயிருபத்துநூறாயிரம் பெயர், ஐயுறுமாறுதானுருவமாயினன். ()

௯. கட்டிய சுரிகையன் [1]கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் [2]விழிக்கட் டீயினன்
கொட்டிய துடியினன் குறிக்குங் கொம்பினன்
கிட்டிய தமரெனக் [3]கிளர்ந்த [4]தோளினன்.

(இ - ள்.) கட்டிய - (அரைப்பட்டிகையிற்) கட்டின, சுரிகையன்-உடை வாளையுடையவனும், கடித்த வாயினன் - கடித்த உதட்டையுடையவனும், வெட்டிய மொழியினன்-கடிந்துபேசுகிற சொற்களை யுடையவனும், விழி கண் தீயினன்-விழித்துப்பார்த்தலையுடைய கண்களில் தீப்பொறி கொண்டவனும்,

கொட்டிய துடியினன்-அடித்த உடுக்கையென்னும் பறையையுடையவனும், குறிக்கும் கொம்பினன் - ஒலிக்கிற ஊதுகொம்பையுடையவனும், அமர் கிட்டியது என கிளர்ந்த தோளினன் - போர் சமீபித்ததென்று (மகிழ்ச்சியாற்) பூரித்த தோள்களையுடையவனும்,—(எ - று.)

இனி, சினங்கொண்ட குகன் செய்யப்போவதைக் கூறத்தொடங்கி யுத்தசன்னத்தனமையை இதனாற் கூறுகின்றன ரென்க. "போரின்றி வாடும் பொருநர்சீர்," "விழுப்புண்படாதநாளெல்லாம் வழுக்கினுள், வைக்குந் தன்னாளையெடுத்து" என்பன சுத்தவீரரிலக்கண மாதலால், அமர்கிட்டியதென்று தோள்கிளர்பவனானன்; இதனால், போரில் அவனுக்கு உள்ள உற்சாகமிகுதி விளங்கும். "எய்யென வெழுபகை யெங்குமின்மையால், மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்" என்றதையுங் காண்க. வெட்டிய மொழி யென்றதனால், சொல்லின்கொடுமை விளங்கும். துடி, கொம்பு-குறிஞ்சிநிலத்துவாச்சியங்கள். 'குறிக்குங்கொம்பினன்' என்பதற்கு-கொம்பினால் சுட்டிக்காட்டுபவனென்று உரைப்பாருமுளர். இனி, கிட்டிய தமர் என என்று பிரித்து-நெருங்கிய உறவினர்போல விளங்கிய, தோள்களை [கைகளை] யுடையான் என உரைப்பினும் அமையும்: துன்பம்வந்தபொழுது முற்பட்டு விரைந்துசென்று உதவி அத்துன்பத்தைக் களைதலின், தமரோடு தோளுக்கு உவமை; "உடுக்கையிழந்தவன் கைபோலவாங்கே, யிடுக்கண் களைவதா நட்பு" என்றதுங் காண்க. சுரிகை - க்ஷுரிகா: வடசொல். பி - ம்:—[1]கறித்த. [2]விழிகள், விரிக்குந். [3]கிளரும், கிளக்கும். [4]தோளினன். (௧௦௧௧)

௧௦. எலியெலா மிப்படை யரவம் யானெனா
வொலியுலாஞ் சேனையை [1]யுவந்து கூவினன்
[2]வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவழிப் [3]புகுந்த [4]போலவே.

(இ - ள்.) 'இ படை எலாம் எலி - இந்தச்சேனைமுழுவதும் எலிகளாம்; யான் அரவம் - (இவற்றை யழித்தற்கு) யான் பாம்பாவேன்,' எனா - என்று வீரவாதங்கூறி, உலகினில் வாழும் வலி உலாம் வள் உகிர் புலி எலாம் ஒரு வழி புகுந்த போல - உலகத்தில் வாழ்கிற வலிமைமிக்க கூரிய நகங்களையுடைய புலிகளெல்லாம் வந்து ஓரிடத்தில் திரண்டனபோல (த் தன்பக்கத்தில் ஒருங்குவந்து கூடும்படி), ஒலி உலாம் சேனையை உவந்து கூவினன் - ஆரவாரம்மிக்க(தன்)சேனையை மகிழ்ந்து கூவியழைத்தவனுமாய்,--(எ-று.)— மருங்கடை தென்கரைவந்து தோன்றினன் "என அடுத்தகவியோடுமுடிக்க.

இப்படையென்றது - பரதன்சேனையை. இதனால், குகன் வீரவாதமாகத் தனக்குள் பேசி மகிழ்ந்து தன் படையைக் கூவியழைத்தமை கூறப்படுகின்றது. 'படை எலிபோலும், யான் அரவம்போல்வேன்' என்றதாம்: முதலடியின் கருத்து - வீரரல்லாதார் பலர் திரண்டு ஆர்த்தால், அதற்கு வீரனாகிய யான் அஞ்சேன்: யான் ஒருவன் போர்க்கு எழுந்தமாத்திரத்தால் அவர்

அனைவரும் கெடுவர் என்றவாறு. இங்கே, "ஒலித்தக்காலென்னு முவரி யெலிப்பகை,நாக முயிர்ப்பக் கெடும்" என்ற திருக்குறளையும், "உரககன்னி, யருளுடைமைந்தனெண்ணி லாயிர முருவமாகி,யிருபுடையினும் போர்வேந்த ரெலிகள்போ லேஙகியம்பாற், பொருபடையுருணடுபோகப் பொருவில்வெம் பூசல் செய்தான்"என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தையுங் காண்க. புலி, பராக் கிரமத்துக்கு உவமை. 'வள்ளுகிர்ப் புலி' என்றதனால், கூரியபடை கைக் கொண்ட வீர ரென்பது புலப்படும். வலியுலாம்புலி யென்றும் இயைக்சலாம். புகுந்தபோல என்பதை, அடுத்தகவியில் "கலந்துசூழ" என்பதனோடு கூட்டி யுரைக்கவும் இடமுண்டு. பி-ம்:—[1]ஒல்லை, உழையிற். [2]வலியிலாம். புகுந்தது. 'என்னவே, போன்றவே'. (கOஉO)

கக. [1]மருங்கடை தென்கரை வந்து தோன்றினு
னொருங்கடை நெடும்படை யொல்லெ [2]னார்ப்பினோ
டருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து [3]சூழவே.

(இ-ள்.) ஒருங்கு அடை நெடு படை-ஒருமிக்கக்கூடிநின்றபெரிய (தன்) சேனைகள், ஒல் என் ஆர்ப்பினோடு - ஒல்லெனவொலிக்கின்ற ஆரவாரத் துடனே,அரு கடை யுகந்தனில்-(பிராணிகள் பிழைத்தற்கு) அரிய கல்பாந்த காலத்தில், அசனி மா மழை-இடியையுடைய பெரிய மேகங்களும்,கரு கடல்-பெரியகடல்களும், கிளர்ந்து என - மிக்கெழுந்தாற்போல, கலந்து சூழ - (தம் மில்) திரண்டு தன்னைச் சுற்றிவர,மருங்கு அடை தென் கரை வந்து தோன்றி னன் - அருகிலுள்ள கங்கையின் தென்கரையில் வந்து சேர்ந்தான்; (எ - று.)

கூவியழைத்தமாத்திரத்திற் சேனைகள் திரண்டு தன்னைச்சுற்றிநிற்க குகப்பெருமான் கங்கையின் வடகரையில் பரதன்சேனை வந்தடைந்த இடத் துக்கு நேரெதிரில் தென்கரையில் வந்துநின்றன னென்க. இச்செய்யுளி லுள்ள 'தென்கரைவந்து தோன்றினன்' என்பதற்கு எழுவாய், ஏழாஞ்செய் யுளிலுள்ள"குகனெனப்பெயரிய கூற்றினாற்றலான்"என்பது. ஒல்லெனல்- அநுகரணம்; ஒலிக் குறிப்பு. கடையுகம் - யுகக்கடை: இலக்கணப்போலி. யுகம் - ஒருகாலத்தின் அளவு; இங்கே, இலக்கணையாய்க் கற்பத்தை உணர்த் திற்று. கற்பம் - பிரமனுயுள்நாள்; அதனிறுதியிலே பிரளய முண்டா மென நூல்கள் கூறும். யுகம், அசனி - வடசொற்கள். மாமழை - கரியமேகமும், கருங்கடல் - கரியகடலுமாம். எண்ணும்மைகள், தொக்குநின்றன. பி-ம்:— [1]மருங்குடைத். [2]ஆர்ப்பினல். [3]சுற்றவே. (கOஉக)

கஉ.—இதுவும் அடுத்தகவியும்-குகன் தன் படைத்துணைவரான வேடருக்கு இட்ட கட்டளையைத் தெரிவிக்கும்.

தோன்றிய [1]புளினரை நோக்கிச் [2]சூழ்ச்சியி
னூன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவா
னென்றபே ரரசுமீ ரமைதி [3]ராமென்றான்.

(இ - ள்.) (இங்ஙனம் வந்துதோன்றிய குகன்), தோன்றிய புளிஞரை நோக்கி-(தன்னைச்சுற்றிலும் வந்து) தோன்றிய வேடர்களைப்பார்த்து, 'சூழ்ச்சியின் ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு-(இராமனைவெல்லும்) ஆலோசனையோடு(எதிரில்)நிலைநின்ற (பரதன்) சேனையை(க் கொன்று) வீரசுவர்க்கமேறச்செய்தற்கும், ஆன்ற பேர் அரசு-சிறந்த பெரிய இராச்சியத்தை, என் உயிர் துணைவற்கு ஈகுவான் - எனது பிராணசிநேகிதனான இராமனுக்குக் கொடுத்தற்கும், ஏன்றனென் - தொடங்கியுள்ளேன்; நீர் அமைநிர் - நீங்களும் சம்மதிப்பீர்களாக,' என்றான்—; (எ - று.)—ஆம் - அசை.

இதனால், குகப்பெருமான் தன்படைத்துணைவரைநோக்கி, இராமனை வெல்லுமாறு சூழ்ந்துவந்துள்ள இந்தச்சேனையை யொழித்து இராச்சியத்தை உயிர்த்துணைவனான இராமற்கு மீட்டுத்தரும்படி தான் முயல்வதற்கு உதவியாயிருக்குமாறு மற்றைப்புளிஞரைநோக்கிக் கூறுகின்றனனென்க. புளிஞர் - புளிந்தர் என்னும் வடசொல்லின் திரிபு. உம்பர் - மேலிடம்; இங்கே, சுவர்க்கம்.போரிற் புறங்கொடாது பகைவராலிறந்தவர் வீரசுவர்க்கம்பெறுவரென்பது நூல்துணிபு. எண்ணும்மைகளிரண்டும் தொக்குநின்றன. உயிர்த் துணைவன் - உயிர்போன்ற நண்பன்: அல்லது, உயிர்க்கு உதவியாகுபவன் எனினுமாம். பி - ம்:—[1]புளினரை. [2]சுட்டினன். [3]போர்க்கென்றான், போர்க்கென.  (கO௨௨)

௧௩. துடி[1]யெறி நெறிகளுந் துறையுஞ் [2]சுற்றுற
வொடியெறி யம்பிகள் [3]யாது மோட்டலிர்
கடியெறி [4]கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடியெறி படவெனப் [5]பெயர்த்துங் [6]கூறுவான்.

(இ-ள்.) (என்றுகூறிய குகன்), 'துடி எறி-பறைகளையடி; நெறிகள்உம்-வழிகளையும், துறைஉம்-நீரிலிறங்குதுறைகளையும், சுற்றுஉற-எல்லாப்பக்கங்களிலும் [முழுவதும் என்றபடி], ஒடி-அழித்துவிடு; எறி - குத்து; அம்பிகள் யாதுஉம் ஓட்டலிர் - தோணிகளுள் ஒன்றையும் (அவர்கள் ஆறுகடத்தற்கு நீரில்விட்டு) ஓட்டாதிருங்கள்; கடி எறி கங்கையின் கரை வந்தோர்களை-நறுமணம்வீசுகிற கங்கையாற்றின் கரையில் வருமவர்களை, பிடி-பற்று; பட - அழியும்படி, எறி-வெட்டு,' என-என்றுசொல்லி, பெயர்த்துஉம் கூறுவான் - மீண்டும் சொல்பவனானான்; (எ-று.)-அதனை அடுத்த பத்துக்கவிகளிற் காண்க.

துடி - உடுக்கை; இது, இங்கு - குறிஞ்சிநிலப்பறைகளுக்கெல்லாம் பொதுப்பெயராக நின்றது. இப்பாட்டில், ஒடி என்பது முதலிய முன்னிலை யொருமையேவல்கள் - தன் படைவீரரைத் தனித்தனிநோக்கியவை யென்றும், ஓட்டலிர் என்ற முன்னிலைப்பன்மைவினைமுற்று- அவர்களைத் தொகுதியாகநோக்கிய தென்றும் அறிக; எனவே, இது - ஒருமைப்பன்மைமயக்கத் தின்பாற்படும். நெறிகளை ஒடி, துறைகளை எறி என முறைநிரனிறைப்

பொருள்கோளாக உரைக்க அமையும். 'கடியெறி' என்ற அடைமொழி, கங்கைக்கும் கரைக்கும் அமையும். கடி-விளக்கமும், காவலுமாம். இனி, வழிகளிலும், நீர்த்துறைகளிலும், ஒடி - கவண்கற்களை, எறி என்றுமாம்; ஒடி - வலையென்பாருமுளர். பிடி எறி - பிடித்து (ஆற்றில்) எறி எனினுமாம். இனி இச்செய்யுளுக்கு—துடி எறி நெறிகளும்-துடி எறியப்படுகின்ற வழிகளிலும், துறையும் - நீர்த்துறைகளிலும், ஒடி எறி அம்பிகள்-(நீரை)ஒடித்துக் கொண்டு [பிளந்து கொண்டு] செல்லுகின்ற ஓடங்களையும், யாதுஉம்-மற்றும் ஓட்டக்கூடிய வண்டி முதலிய எதனையும், ஓட்டலிர்—,' எனு-என்று (தன் படைத்துணைவரான வேடருக்குக்) கட்டளையிட்டு,—'கங்கையின் கரை வந்தோர்களைப்பிடி படஎறி' என்று அதட்டிக் கொண்டே, குகன் பெயர்த்துங் கூறுவான் எனப் பொருளுரைத்தல் ஏற்கும். துறையில் அம்பிகளையும், நெறிகளில் யாதையும் ஓட்டலிர் என்று மாறியியைக்க. பி-ம்:—[1]அறை. [2]சுற்றிட. [3]யாவும். [4]கடலுளிக். [5]பெயர்ந்து. [6]கூறினன். (கoஉ௬)

வேறு.

கசு —இதுமுதல்பத்துக்கவிகள் - குகன்தன்னினத்தவரான வேடர்முன் கூறியவற்றைத் தெரிவிக்கும்.

அஞ்சன வண்ணனென் னாருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலரசு எய்திய மன்னரும் [1]வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
வுஞ்சிவர் போய்விடி [2]னாய்க்குக னென்றெனை யோதாரே.

பதினொருகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என் ஆர் உயிர் நாயகன் - எனது அருமையான உயிருக்குத் தலைவனாகிய, அஞ்சனம் வண்ணன்-மைபோலும் கரியதிருநிறத்தையுடைய ஸ்ரீராமன், ஆளாமே-அரசாட்சி செய்யாமலிருக்கும்படி, வஞ்சனையால் அரசு எய்திய - வஞ்சனையினால் இராச்சியத்தை யடைந்த, மன்னர்உம் - அரசரும் [பரதரும்], வந்தார்ஏ-(அருகில்) வந்தனரன்றோ? தீ உமிழ்கின்றன - நெருப்பை வெளிச்சொரியுந்தன்மையனவான, செம் சரம் என்பன-(எனது)சிவந்த அம்பெனப்படுபவை, செல்லாஓ-(இவர்மேற்) செல்ல மாட்டாவோ?இவர்—, உஞ்சு போய்விடின்-(எனது அம்புக்குத்) தப்பிப் பிழைத்துப்போய்விட்டால், நாய் குகன் என்று எனை ஓதார்ஏ - நாய்போன்ற [எளியதன்மையுடைய] குகனென்று என்னை (உலகத்தார் இகழ்ந்து) பேசமாட்டார்களோ?(எ - று.)

எனது பிராணசிநேகிதனாகிய இராமபிரானை யரசாளவொட்டாமல் தன் தாயின்மூலமாக இராச்சியத்தைத்தந்திரமாகக் கவர்ந்துகொண்டுஅப்பிரானைக் காட்டிற்குஓட்டிய பரதன் அவ்வளவோடு திருப்தியடையாமல் இங்கும் அந்த ஸ்ரீராமபிரானுக்குத் தீங்குபுரியுமாறு தன்சேனையோடுவந்துள்ளதனால் அந்தப் பரதனை என் அம்பினால் உயிரொழிக்கவேண்டுவது எனதுகடமை; இராமபிரா

னது பிராணசினேகிதனென்று பேர்வைத்துக்கொண்டுள்ள நான் அவ்வாறு செய்யத் தவறினேனாயின், எனக்குத் தீராப்பெரும்பழிகிடைக்குமென்றன னென்பதாம்.

உயிர்நாயகன் - உயிர்போன்ற தலைவனெனினுமாம். வஞ்சனையென்றது - மூத்தமகன் அரசாளுதலென்ற மனுநீதிமுறைமைக்கு மாறாகத் தசரதன் நடத்தியேதீரும்படி கைகேயி சம்பராசுரயுத்தத்தில் தனக்கு வாக்குத்தத்தஞ்செய்திருந்த இரண்டுவரங்களுள் ஒன்றற்குப் பயன் இராமன் காடாள்வதாகவும், மற்றொன்றற்குப் பயன் பரதன் நாடாள்வதாகவும் கேட்டதனை. பரதனும் தாயோடுஉடன்பட்டவனென்று கருதி 'வஞ்சனையாலரசெய்திய மன்னர்' என்றான். மன்னரெனப் பன்மையாற் கூறினது, இகழ்ச்சி; "ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியும்" என்ற தொல்காப்பியசூத்திரத்தால், ஒருவனைச்சொல்லும் பன்மைச்சொல் உயர்த்துசசொல்லுஞ் சொல்லன்றோ வெனின்,—'தாம்வந்தார் தொண்டனார்' என்றவிடத்துப் போல உயர்சொல்தானே குறிப்புநிலையால் இங்கு இழிவுவிளக்கிற்று என்க. இனி, சத்துருக்கினனையும் உளப்படுத்தி 'மன்னர்' எனப்பன்மையாக்கூறினா னெனினும் அமையும். உம்மை - இழிவுசிறப்பு. வந்தாரே என்றது, தாம் துரத்தியனுப்பிய காட்டினிடத்தும் அவற்குத் தீங்கு செய்ய வந்துவிட்டனர் என்றதாம். முன்பு பலபகைவர்களது இரத்தந் தோய்ந்திருத்தலால், 'செஞ்சரம்' எனப்பட்டது; அல்லது, கோணலில்லாமல் நேர்மையையுடைய அம்பென்றுமாம்.

வண்ணம் - வர்ணமென்ற வடசொல்லின் திரிபு: இது, தமிழ்ச்சொல்லேயாமென்பதும், வருணமென்பது வடமொழித்திரிபாமென்பதும் நச்சினார்க்கினியர்கொள்கை. ஆளாமே - 'மே' ஈற்று எதிர்மறைவினையெச்சம். ஶரம், அஞ்ஜநம், வஞ்சநா - வடசொற்கள். உஞ்சு - உய்ந்துஎன்பதன் போலி. ஒகாரம் இரண்டும் - எதிர்மறை. என்பன - பலவின்பாலைக்காட்டும் முதல்வேற்றுமைச்சொல்லுருபு. செல்லாவோ, ஓதாரோ - இரண்டுஎதிர்மறை ஒருடன்பாட்டை வற்புறுத்தும்: செல்லவே செல்லும், ஓதவேஓதுவர் என்க. பி-ம்:— [1]வந்தாரோ. [2]நாயெனவென்னையுமோதாரோ. (௧௦௨௪)

௨௫. ஆழ நெடுந்[1]திரை யாறு கடந்திவர் [2]போவாரோ
வேழ நெடும்படை கண்டு [3]விலங்கிடும் [4]வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்[5]லன்றோ
வேழமை வேட னிறந்தில னென்[6]றெனை யேசாரோ.

(இ - ள்.) இவர்—, ஆழம் - ஆழத்தையும், நெடு - நீட்சியையும், திரை - அலைகளையுமுடைய, ஆறு - இக்கங்கையாற்றை, கடந்து போவார்ஓ-(எனது உதவியில்லாமல்) தாண்டிப்போகமாட்டுவரோ? வேழம் நெடு படை - யானைகளையுடைய பெரிய சேனையை, கண்டு-பார்த்து, விலங்கிடும்-(அஞ்சி) ஒதுங்கிப்போகிற, வில் ஆள்ஓ - வில்வீரனோ (நான்)? தோழமை என்று அவர்

சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ - '(உனக்கும் எனக்கும்) சினேகம் (இருக்கட்டும்)' என்று (என்னைநோக்கி) அவ்விராமபிரான் சொல்லிய வார்த்தை (நன்குமதிக்கத்தக்க) ஒருவார்த்தையன்றோ? (அந்நட்புக்கு ஏற்ப யான் நடவாவிட்டால்),—ஏழைமை வேடன் இறந்திலன் என்று எனை ஏசாரோ - 'எளிமையையுடைய இவ்வேடன் (இங்ஙனம் மானங்கெட வாழ்தலினும்) இறந்திருக்கலாகாதா?' என்று என்னை (உலகத்தார்) பழிக்கமாட்டாரோ?

எனது உதவி யில்லாமல் இந்தக்கங்கையாற்றைக் கடந்து செல்வதென்பது, இந்தப்பரதனால் முடியாத காரியம்: இனி இந்தப்பரதன் தனது படைவலிமையால் என்னைப் பயமுறுத்தி இந்தக்கங்கையைக் கடப்பதென்பதும் அசாத்தியமே: ஏனெனில், அவ்வளவு எளிமையாக நான் இவனிடத்து அஞ்சுபவனுமல்லேன்: இனி 'இழிகுலத்தவன் இவன்' என்று என்னை அவமதியாது தனக்குச் சரிசமானமாக மதித்து என்னோடு தோழமை கொண்ட அந்த ஸ்ரீராமபிரானுக்கு இந்தப்பரதனால் யாதொருதீங்கும் நேராதவாறு எனது வில்வலிகொண்டு என்னுயிருள்ளவளவும் முயல்வேன்: அவ்வாறு செய்யேனாயின், உலகத்தவர் என்னை யேசுவ ரென்பதாம். 'தோழமையென்றவர் சொல்லிய சொல்' என்றது - கீழ்க் கங்கைப்படலத்தில், "யாதினுமினியநண்ப விருத்தியீண்டெம்மோடு" என்றும், "என்னுயிரனையாய் நீ இளவல் உன் இளையான் இந், நன்னுதலவள் நின்கேள் நளிர்கடல்நிலமெல்லாம், உன்னுடையது நான் உன்தொழிலுரிமையினுள்ளேன்" என்றுங் கூறிய அதனை. 'தோழமையென்று' என்பதற்கு-நீ தோழ னென்று என்றும் உரைக்கலாம்; தோழமை - பண்பாகுபெயர். ஒரு சொல் அன்றோ - சத்திய மன்றோ என்னவுமாம். இப்பாட்டின் ஈற்றடியால், நட்புரிமையைப் பாதுகாவாத பிறவி பயனற்றது என்பது பெறப்படும். இனி, இறந்திலன் என்பதற்கு - பரதனோடுபொருது அப்போரில் வெல்லும் ஆற்றல் இலனாயினும் இறந்தானுமில்லை யென்றலும் ஒன்று.

வேழம் - சதுரங்கங்களுள் மற்றைக் குதிரை தேர் காலாள்களுக்கும் உபலக்ஷணம். நால்வகைப் படையுள்ளும் மதத்தாற் கதஞ்சிறந்து தானும் போர் செய்யும் யானை சிறத்தலால், அதனையே தலைமையாகக் குறித்துக் கூறினர். ஏழைமை - அறிவின்மையுமாம். வேடு - மிருகபட்சிகளைப் பிடித்துக்கொன்று வருத்துந்தொழில்; அதனையுடையான், வேடன். பி-ம்:—[1]புனற்கங்கை. [2]போவாராம். [3]நடுங்குமவ், நடுங்கிடும். [4]வில்லாரோ, வில்லாளர், வில்லீரோ. [5]உண்டே. [6]எமை. (கoஉரு)

கசு. முன்னவ னென்று நினைந்திலன் [1]மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றன [2]னென்றில னன்னவை [3]பேசானே
லென்[4]னிவ னென்னை யிகழ்ந்ததிவ் [5]வெல்லை [6]கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம் [7]வாயாவோ.

(இ-ள்.) இவன்-இப்பரதன், முன்னவன் என்று நினைந்திலன்-(இராமபிரானைக்குறித்துத் தனது) தமைய னென்று எண்ணினானில்லை; மொய் புலி

அன்னான் ஓர் பின்னவன் நின்றனன் என்றிலன்-(இலக்குமணனைக்குறித்து) வலிமைகொண்ட புலியை யொத்தவ னொருதம்பி உடனுள்ளானென்று நினைத்தானுமில்லை; அன்னவை பேசான் ஏல் - அவற்றைக்குறித்து எண்ணானாயினும், என்னை இகழ்ந்தது என் - (நடுவில்நின்ற) என்னையும் (ஒருபொருளாக மதியாமல்) இகழ்ச்சியாக நினைத்தது யாதுகாரணத்தால்? இ எல்லை கடந்து அன்றோ - (இவன் வல்லமையெல்லாம்) இந்த (எனது) எல்லையைக் கடந்தாலன்றோ (நிலைநிற்கும்)? வேடர் விடும் சரம்-வேடர்எய்யும் அம்புகள், மன்னவர் நெஞ்சினில் வாயாஓ-அரசர்மார்பில் தைத்துப் பொருந்தமாட்டாவோ?(எ-று.)

'வனத்தில் வசிக்கின்ற ஸ்ரீராமன் தந்தையோடொப்பாக மதிக்கத்தக்க அண்ணனாயிற்றே' என்றாவது இந்தப்பரதன் நினைக்கவேண்டும்; அவ்வாறு எண்ணாவிட்டாலும், 'மகாவீரதீரனான இலக்குமணன் ஒழிவில்காலமெல்லாம் உடனாய்நின்று காவல்புரிகின்றானே' என்றாவது நினைக்கவேண்டும்: இவ்விருவகைநினைவும் இந்தப்பரதனுக்கு இல்லாமற்போனாலும் போகட்டும்: இந்தக் கங்கையாற்றைக் கடத்தற்கு என்னுடைய உதவி இவனுக்கு இன்றியமையாததன்றோ? இவன் என்னை ஒருபொருளாக மதிப்பதாகவும் தோன்றவில்லையே. இவன் இப்படி அலட்சியமாக இருப்பது, 'இந்த வேடர்களின் அம்புகள் நம்மை என்ன செய்யமாட்டும்?' என்ற இறுமாப்போ? என்று குகன் சிந்தித்தனனென்பதாம். 'இவ்வெல்லைகடந்தன்றோ' என்றதனால், தனக்குத்தப்பி உய்ந்து கடக்கலாகாமை விளங்கும். ஒருகால் இராமலட்சுமணரிருவரும் விட்டிடுவதாயிருந்தாலும் பரதனை நான் விடேனென்று குகன் கருதியமை, பின்னிரண்டடிகளில்வெளியாம். இலக்குமணனுக்குப் புலியுவமை, வீரத்திலும் தவறாது பகையழித்தலிலும். வேடர்களுக்கு மன்னவரை யடர்க்கும் வலிமையுண்டென்பது, ஈற்றடியின்கருத்து. பேசுத லென்றது-எண்ணுதலென்ற பொருளில் வந்தது; பண்பு புலன் மாறிவந்த உபசாரவழக்கு; "பொருளுறு பண்பு புலனிவைமாறியுஞ் சேர்ந்திடுமே" என்பது பிரயோகவிவேகம்; "நாற்றங்கேட்டலுந் தின்னநயப்பது" என்றாற்போல வருவனவும் இது: "செவிகைப்பச்சொற்பொறுக்கும்" என்ற திருக்குறளின் உரையில், பரிமேலழகர் 'நாவின்புலத்தைச் செவிமேலேற்றிக் கைப்ப வென்றார்' என்றது காண்க. பி-ம்:—[1]மொய்ம்புலி. [2]என்றவனன்னது, என்றெனைநல்லது, என்றிலனன்னது. [3]பேசாரோ. [4]அவன். [5]வேலை. [6]கடந்தானென். [7]வாயாதோ. (கூ0உசு)

கள. பாவமு நின்ற பெரும்பழி யும்பகை நண்போடு
மேவமு மென்பவை மண்ணுல காள்பவ [1]ரெண்ணாரோ
[2]வாவது போகவென் [3]னுருயிர்த் தோழமை தந்தான்மேற்
போவது சேனை[4]யு மாருயி ருங்கொடு போயன்றோ.

(இ - ள்.) பாவம்உம் - தீவினையும், நின்ற - நிலைபெற்ற, பெரு பழி உம் - பெரியபழிப்புச்சொல்லும், பகை நண்போடுஉம் ஏவம்உம் - (இன்னார்) பகைவரென்பதும் (இன்னார்) நண்பரென்பதும் (இன்னது பிறர்க்குத்) துன்

பத்தை விளைப்பது என்பதும், என்பவை - என்னும் இவற்றை, மண் உலகு ஆள்பவர் எண்ணார்ஓ - நிலவுலகத்தையாளும் அரசர் நினைக்கமாட்டாரோ? ஆவது போக-ஆகக்கடவது ஆகுக; என் ஆர் உயிர் தோழமை தந்தான்மேல் போவது-எனக்குஅரிய உயிரோடொத்த சினேகத்தைச் செய்தளித்த ஸ்ரீராமன்மேல் (இவர் போர்செய்து அழிக்கச்) செல்வது, சேனைஉம் ஆர் உயிர்உம் கொடு போய் அன்றுஓ - (தம்)சேனையையும்(தமது)அருமையான உயிரையும் (என் கையம்புக்குத் தப்பி) உடன்கொண்டுபோனபின்புஅன்றே? (எ - று.)

மண்ணுலகையாள்கின்ற மன்னவர் மண்ணாள்வதை முக்கியமாகக் கருதுவரேயன்றிப் பழி பாவம் முதலியவற்றை ஒருசிறிதும் எண்ணார்போலும்; அதனால்தான் இந்தப்பரதன் இந்தக்கானகத்திலும் ஸ்ரீராமபிரானை இருக்கவொட்டாது அடித்துத்துரத்த வந்துள்ளான்; இருக்கட்டும்: இராமபிரான் என்னிடத்து இன்னுயிர்த்தோழமை கொண்டுள்ளதனால், யான் இந்தப்பரதனைச் சேனையை உடன்கொண்டுபோகுமாறு உயிரோடுவிடேனென்றனனென்பதாம். முன்னிரண்டடிகளால்,முன்பிறந்தவனை முடிசூடவொட்டாது வனம் புகுத்தினது மன்றி இங்கும் போர்செய்து அழிக்கவருதல், மிக்க பாவமும் பெரும்பழியும் அறியாமையுமா மென்றவாறு. பாவம் முதலியவற்றை எண்ணுவராயின், இங்ஙனம் எதிர்த்துவர ஏதுவில்லையென்க. பின் இரண்டடிகளுக்கு-என்கைக்குத் தப்பி உய்ந்துபோத லரிதென்பது கருத்து. பாவம்போலத் தீப்பயனனுபவிக்கிறவளவுமாத்திரமேயன்றி உலகமுள்ளவளவும் அழியாமல் நிலைநிற்றலால் 'நின்ற பெரும்பழி' எனவும், உயிரினும் அரியது வேறின்றாதலால், 'ஆருயிர்' எனவும் கூறினான். 'சேனையும் ஆருயிரும் கொடுபோயன்றே' என்பதற்கு - எனது சேனையையும் அரிய உயிரையுங் கவர்ந்துகொண்டுபோன பின்பன்றே என்றும் உரைக்கலாம். ஆருயிர் - பண்புத்தொகை; நிறைந்தவுயிரென வினைத்தொகையாகக் கொள்ளின், பஞ்சபிராணன்களென்றபடியாம். ஆவதுபோக - அதுகிடக்கஎன்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]என்னாரோ. [2]தாவது. [3]ஆள்வினை. [4]என்னார். (௧௦௨௭)

௪௮. அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானோ
[1]மருந்தெனி னன்[2]றுயிர் வண்புகழ் [3]கொண்டுபின் மாயேனோ
பொருந்திய [4]கேண்மை யுகந்தவர் தம்மொடு [5]போகாதே
யிருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றேயே.

(இ-ள்.) என் துணை-எனது நண்பனான இராமபிரான், அரு தவம் ஆள-(வனத்திற்சென்று) செய்தற்கரிய தவத்தைச் செய்துகொண்டிருக்க, இவன்-இந்தப் பரதன், புவி ஆள்வான் ஓ-பூமியை அரசாள்வனோ? உயிர் - (எனது) உயிர், மருந்து எனின் - (கிடைத்தற்கரிய) தேவாமிருதமோ வென்றால், அன்று—;வண் புகழ் கொண்டு-(இராமனுக்கு உதவியாய்ப் பரதனை எதிர்த்து அதனால்) சிறந்த கீர்த்தியைப் பெற்று, பின் மாயேன் ஓ - பின்பு இறக்கமாட்

டேனோ? பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாது இருந்தது ஏ நன்று - (என்னோடு) பொருந்தின சிநேகத்தை விரும்பியருளின இராமபிரானுடன் (நான்) செல்லாமல் இங்கு இருந்ததுவே நல்லதாயிற்று; என் கடன்- எனது கடமையை, இன்றேடு ஏ கழிக்குவென் - இன்றைக்கே கழிப்பேன்.

மூத்தவனாகிய ஸ்ரீராமன் காட்டில்வருந்தித் தவசிபோலக் கிடக்க, அவனுக்குப் பின்பிறந்தவனாகிய இந்தப்பரதன் அரசுபூண்டொழுகுவது முறைமையோ? இவ்வாறு முறைகேடான தொழிலைச் செய்யும் இந்தப்பரதனால் இராமபிரானுக்கு யாதொரு தீங்கும் நேரவொட்டாது அருமையான எனது உயிர் போவதாயிருந்தாலும் அதனையும் பொருள்செய்யாது துணிந்து தடுத்து நிற்பேன்; இவ்வாறு இராமபிரானுக்கு இடுக்கண்வரவொட்டாது தடுத்தற்குக்காரணமாய் நிற்றலால், யான் அப்பிரானோடு செல்லாது இங்கு நின்றதே நன்மையாயிற் றென்றனன் குக னென்பதாம்.

'என் துணை' என்பதற்கு-எனது தமையனென்றும் உரைக்கலாம். இராமனுக்கும் குகனுக்கும் அண்ணன்தம்பிமுறைமை அமைந்ததாதலின்: அதனைக் கீழ்க் கங்கைப்படலத்தில் "முன்புளெ மொருநால்வே முடிவுளதென வுன்னு, வன்புள வினிநாமோ ரைவர்களுளராளேம்" என்றது கொண்டும் அறிக. 'புவியாள்வானோ' என்றதனால், ஆளுதற்குத் தக்கவனல்லனென்றும், - ஆளாதபடி செய்துவிடுகிறே னென்றும், விண்ணுளவைக்கின்றேனென்றுங் கூறியவாறு. இங்கே, 'தவம்' என்றது, மரவுரியுடுத்துச் சடைமுடிதரித்து நகரத்தைநீத்து வனத்தில்வதிந்து காய் கனி கிழங்கு சருகுகளைப் புசித்துக் கொண்டு குளிர் வெப்பம் முதலிய துன்பங்களைப் பொறுத்துப் பெரும்பாலும் வானப்பிரஸ்தாச்சிரமத்துக்கு ஏற்ற விரதங்களைக்கொண்டு ஒழுகுதலை. இரண்டாம் அடியால், உயிர் உடம்பில் என்றும் அழியாது நிலைநிற்பதன்று; அங்ஙனம் ஓரிடத்து நிலையில்லாத உயிரைக் கொடுத்தாயினும் எங்குமென்றும் நிலைநிற்பதான புகழைப் பெறுவேனென்றபடி. 'இங்கு இருந்தது நன்று' என்றது, இடைவழியிலேயே பகைவனைத் தொலைத்து நண்பனைக் காக்க உதவுதலால். 'என்கடன்' என்றது, இடுக்கண் களைதலை. மருந்து - மிருதஸஞ்சீவிபோன்ற திவ்வியஔஷத மெனினுமாம். பி - ம்:—[1]மருந்தெனவின்று, மருந்தெனிலன்று. [2]உயர். [3]கொண்டது, கொண்டுயிர். [4]கேண்மையும் வந்தவர். [5]போக்காதே. சிலபிரதிகளில் "நின்ற கொடை" (உக) என்றபாடல் கஅ - ஆவது பாடலாகவுள்ளது. (க0உஅ)

கக. தும்பியு மாவு மிடைந்த பெரும்படை [1]சூழ்வாரும்
வம்பிய ருரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ
வெம்பிய வேட ருளீர்துறை யோடம் விலக்கீரோ
நம்பிமுன் னேயினி நம்முயிர் [2]மாய்வது நன்றன்றோ.

(இ - ள்.) தும்பிஉம் - யானைகளும், மாஉம் - குதிரைகளும், மிடைந்த - நெருங்கிய, பெரு படை - பெரியசேனையினால், சூழ்வு ஆரும் - சூழப்படுதல்

பொருந்திய, வம்பு இயல் தார் இவர்-வாசனைபொருந்திய பூமாலையையுடைய இப்பரதனது, வாள் வலி - ஆயுதபலம், கங்கை கடந்து அன்றோ-இக்கங்கை யாற்றைத் தாண்டியபின்பு அல்லவோ (உதவும்? வெம்பிய வேடர் உளீர் - உக்கிரமான வேடர்களாக வுள்ளவர்களே! துறை ஓடம் விலக்கீர்ஓ - நீர்த் துறையிலே (இவர்களுக்கு) ஓடம்விடுதலை ஒழிவீராக; (பரதனும் பரதன் சேனையும் நம்மினும் வலியராயினும்), இனி நம்பி முன் ஏ நம் உயிர் மாய்வதுஉம் நன்று அன்றுஓ-இனிமேல் (அவர்களால்) இராமனழிதற்குமுன்னே நமது உயிர் (போரில்) அழிந்துபோவதும் நல்லதன்றோ? (எ - று.)

இந்தச்செய்யுள் குகப்பெருமாள் தன்னிடத்து ஓடம்விடுகின்றஏவலாளரை நோக்கிக் கூறுவது. இந்தப்பரதனும் இவனைச் சேர்ந்தாரும் தமது வாள்வலிகொண்டு ஸ்ரீராமபிரானுக்குத் துன்பத்தைவிளைப்பதென்பது, இந்தக் கங்கைப்பேரியாற்றைக் கடந்தபின்னரே நிகழக்கூடியதாதலால், இவர்கள் இந்தக்கங்கையைக கடந்து அப்பாற்செல்லமுடியாதவாறு ஓடத்தை விலக்குங்கள்; 'இவர் நம்மினும் வலியராயிருந்து நம்மை எதிர்த்துக் கொன்றிட்டால் என்செய்வது?' என்று நீவிர் அஞ்சவேண்டா; அப்போதும் நமது உயிர்நண்பரான ஸ்ரீராமனுக்கு இவர்களால் தீங்குநேர்வதற்குமுன்னே இவர்களோடு போர்செய்து நமதுஉயிரையொழிப்பது நன்றேயாகு மென்றனனென்பதாம். நாம் ஓடம்விட்டு உதவாவிட்டால் இவர்களாற் கங்கை கடக்க முடியாதென்பது, மூன்றாம்அடியின் கருத்து. 'துறையோடம்விலக்கீரோ' என்பதற்கு - நீர்த்துறையிலுள்ள ஓடத்தை அப்பாற்படுத்தமாட்டீர்களோ? என்றும் உரைக்கலாம்; அங்குத்தானே ஓடம்நின்றால் ஒருகால் இந்தப்பரதனைச் சார்ந்தோர் வலிய அவ்வோடங்களைக் கைப்பற்றிக்கொண்டு கங்கையைக்கடத்தலுங் கூடுமாதலால், அங்ஙனம் அவர்களாற் செய்யமுடியாதவாறு ஓடத்தைத் துறையினின்றும் அப்புறப்படுத்துங்களெனத் தனது பணியாளர்க்குக் குகப்பெருமாள் கட்டளையிட்டனனெனக் கருத்துக் காண்க. போரில் வெற்றி தோல்விகள் ஒருதலையல்லவாதலாலும், தான் வெல்லும் உபாயத்தைச்சிந்தித்தலோடு தனக்குவரும் அபாயத்தையுஞ் சிந்திக்கவேண்டுவது அறிஞர்க்கு இயல்பாதலாலும், 'நம்பிமுன்னே யினி நம்முயிர் மாய்வது நன்று' என்றான்; "உளரானார், மருவலரெனின் முன்னே மாள்குவென் வசையில்லேன்" என்றான்,முன் கங்கைப்படலத்தும். இங்கு 'நம்பிமுன்னே' என்றதனால், நம்மை யனைவரையும் இவர் போரில் அழித்துவிடின் இராமபிரானையும் அழித்தல் கூடுமெனக் கருதினனென்பது தெளிவாம். தார் - அடையாளப்பூமாலையும், போர்ப்பூமாலையும். வாள் - ஆயுதப்பொதுப்பெயராய் நின்றது; அன்றி, மற்றை ஆயுதங்களுக்கு உபலட்சணமுமாம். விலக்கீர் என்பதை முன்னிலை எதிர்மறைப்பன்மை முற்றென்றும், ஓகாரத்தை வினா என்றும் அறிக.ஓ வேடருளீர் என ஓகாரத்தை எடுத்து விளியோடுசேர்த்தலுமாம். 'வலி' என்ற எழுவாய்க்கு ஏற்ற பயனிலை வருவித்து உரைக்கப்பட்டது. பி - ம்:—[1]சூழ்வாரா. [2]போவது. (௪0௨௬)

௨௦. போன படைத்தலை வீரர் தமக்கிரை [1]போதாவிச்
சேனை [2]கிடக்கிடு தேவர் [3]வரிற்சிலை மாமேகஞ்
சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடுந்
தானை படத்தனி யானை பட[4]த்திரள் சாயேனோ.

(இ - ள்.) போன - (நம்முடன்) வந்த, தலை படை வீரர்தமக்கு-சிறந்த சேனைவீரர்களுக்கு, இரை போதா - ஒருவேளைப்போருக்காயினும் பற்றாத, இ சேனை - இந்தப்பரதன்சேனை, கிடக்கிடு - இருக்கட்டும்; தேவர் வரின் - தேவர்களே (திரண்டு எதிர்த்து) வந்தாலும், சிலை மா மேகம் சோனை பட - (என்) கைவில்லாகிய காளமேகம் இடைவிடாது அம்புமழையைப் பொழிய வும், குடர் சூறை பட - (எதிர்த்த அவர்களது) குடல் அலைபடவும், சுடர் வாளோடுஉம் - விளங்குகின்ற ஆயுதங்களுடனே, தானை பட - (மற்றைச்) சேனைகள் அழியவும், தனி யானை பட - ஒப்பற்ற யானைச்சேனை அழியவும், திரள் சாயேன்ஓ-அக்கூட்டத்தை நிலைகுலைக்காமலிருப்பேனோ? (எ - று.)

இராமபிரானுக்குத் தீங்குபுரிதற்காகச் சேனையோடு வந்துள்ள இந்தப் பரதனேயன்றி, தேவர்களே சதுரங்கபலங்கொண்டு திரண்டு என்னை யெதிர்த்துநின்றாலும், நான் அவர்களையும் எனது வில்வலியால் வெல்ல வல்லேனென்றனனென்பதாம். போன படைத்தலைவீரர்-இராமலக்குமணர் என்பாரும் உளர். தலை-சிறப்புகுறு, இலக்கணை. படைத்தலை - சேனையிடத்தி லுள்ள எனக்கொண்டால், தலை-ஏழனுருபு. கிடக்கிடு - கிடக்கிடுக என்பதன் விகாரம். தேவர்வரின் என்றவிடத்து உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; இது, ஒருசொல்விழுக்காடு. சூறைபடுதல் - கொள்ளையிடப்படு தல்; அல்லது, சுழல்பெருங்காற்றில் அகப்படுதல். பின்னே 'யானை' என வருதலால், முன்னே 'தானை' என்றது, சதுரங்கங்களுள் மற்றைத் தேர் குதிரைகாலாட்களைக் குறிக்கும். பி-ம்:—[1]போதாது. [2]கடக்குறு. [3]வரிச்சிலை. [4]கடை, தனி. (௧௦௩௦)

௨௧. நின்ற [1]கொடைக்கையெ னன்ப [2]னுடுக்க நெடுஞ்[3]சீர
மன்று கொடுத்தவண் மைந்தர் பலத்தையெ னம்பாலே [த்
கொன்று [4]குவித்த [5]நிணங்கொள் பிணக்குவை கொண் [6]டோடி
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ.

(இ-ள்.) 'அன்று - (பட்டாபிஷேகம் பண்ண யத்தனித்த) அந்நாளில், நின்ற-(விரதம்முதலியன முடிதது முடிசூட)நின்ற, கொடை கை என் அன் பன்-ஈகைக்குணம்நிறைந்த கையையுடைய என்அன்பிற்குரியவனான இரா மன், உடுக்க - (அரையில்) தரிக்கும்படி, நெடு சீரம் - பெரிய மரவுரியை, கொடுத்தவள்-(அவனுக்குக்) கொடுத்தவளாகிய கைகேயியின், மைந்தர் புத்திர ரான பரதரது, பலத்தை - சேனையை, என் அம்பால் கொன்று குவித்த - எனதுபாணங்களால் கொன்று (தொகுதியாகக்) குவித்த, நிணம் கொள்

பிணம் குவை-கொழுப்பு (வெளிப்படுதலை)க்கொண்ட பிணங்களின்குவியலை, கங்கை-இந்தக் கங்காநதி, கொண்டு - இழுத்துக்கொண்டு, ஓடி - விரைந்து சென்று, துன்று திரை கடல் மடுத்து-நெருங்கிய அலைகளையுடைய கடலில் (அவற்றைச்) சேர்த்துநிறைத்து, இடை தூராது ஒ-அதனிடத்தைத் தூர்த்து விடாதோ? [தூர்க்கும் என்றபடி]: (எ - று.)

இராமபிரான் பீதாம்பரம் தரித்து முடிசூடி இராச்சியத்திற் சுகமாக இருந்து அரசுபுரியவேண்டியதாயிருக்க, அங்ஙனஞ் செய்யவொட்டாது அப் பிரான் மரவுரியுடுத்துச் சடைமுடிதரித்துக் காட்டில் வசிக்குமாறு கைகேயி கொடுமைபுரிந்தா ளன்றே! அப்படிப்பட்ட கொடிய அவளதுபுத்திரனை இந்தப்பரதனுடைய சேனையெல்லாம் நாசமாகிக் கங்கைவெள்ளத்தால் இழுத் துச்செல்லப்பெற்றுக் கடலிற்போய்ச் சேருமாறு செய்வே னென்றனனென் பதாம். பிணக்குவை தூராதோ என்க. சீரைகொடுத்தமை, நகர்நீங்குபடலத் திற் கூறப்பட்டுள்ளது. பி-ம்:—[1]படை. [2]உடுத்த. [3]சீரை. [4]குவித்து. [5]பிணங் கள். [6]ஓட. (௧௦௩௬)

௨௨. ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு [1]மிப்புகழ் [2]மேவீரோ
நாடு [3]கொடுத்தவென் னாயக னுக்[4]கிவர் [5]நாமாளுங்
காடு [6]கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ.

(இ-ள்.) 'ஆடு-அசைகின்ற, கொடி-துவசங்களையுடைய, படை-(பரதன்) சேனையை, சாடி-மோதியழித்து, அறத்தவர் ஏ ஆள - தருமசொரூபியான இராமபிரானே அரசாளும்படி, வேடு பார் கொடுத்தது - (அப்பிரானுக்கு) வேடர்கூட்டம் இராச்சியத்தைக் கொடுத்தது,' எனும்-என்ற, இ புகழ் - இந் தக்கீர்த்தியை, மேவீர் ஓ - அடையமாட்டீர்களோ? [அடையவேண்டும் என்ற படி]; நாடு - (முறைப்படி தன்னுடையதான) இராச்சியத்தை, கொடுத்த - (மனமகிழ்ந்து) கொடுத்துவிட்ட, என் நாயகனுக்கு - எனது தலைவனாகிய ஸ்ரீராமனுக்கு, இவர்-இப்பரதர், நாம் ஆளும் காடு கொடுக்கிலர் ஆகி - நாம் வசிக்கிற காட்டையுங்கொடுக்கச் சம்மதப்படாதவராய், எடுத்தது-(போர்க்குப்) படையெடுத்துவந்ததை, காணீர் ஓ - பார்த்தீர்களா? (எ - று.)

ஸ்ரீராமபிரான் தமக்குஉரிய இராச்சியத்தைத் தாம்ஆள்வதைத்தவிர்ந்து 'எனது தம்பியாகிய பரதனே இராச்சியத்தை ஆளுக'என்றுசொல்லிஅந்நாட் டையே விட்டு நம்போல்வார் வசித்தற்குஉரிய காட்டில்வந்து வசிக்கையில், இதனையும் பொறாமல் இங்கும் அப்பிரானுக்குத் தீமைபுரியத் தனது சேனை யோடு பரதன் வந்துள்ளா னாதலால், வேடர்களே! இப்போது நாம் நமது முழுவலிகொண்டு இந்தப்பரதனைச் சேனையோடும் முறியடித்து ஸ்ரீராமபிரா னது நாட்டை அப்பிரானே அரசுபுரியுமாறுசெய்து பெரும்புகழ் பெறவேண்டு மென்று குகன் தனது இனத்தவரான வேடரைநோக்கிக் கூறுகின்றனன

னென்க. இராமனுக்குஉரிய பொருளைக் கவர்ந்ததோடு அமையாது அவன் பிறர்க்குரியவிடத்தில் வசித்தலையும் உடன்படான் பரதன் என்ற கொடுமைவிளங்க, 'நாம் ஆளுங் காடு கொடுக்கிலராகி' என்றான். அறத்தவர் - உயர்வுப்பன்மை; இலக்குமணனை உளப்படுத்தியதெனக் கொள்ளினும் அமையும். வேடு - இங்கே, சாதிப்பெயர். இது - பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணை யாதலால், 'கொடுத்தது' என அஃறிணைமுடிபு கொடுத்துக் கூறினர். பி - ம்:—[1]மெய்ப்புகழ். [2]மேவேனோ. [3]கொடுத்தது. [4]இனி, இவன். [5]தாமாளக். [6]கொடுத்ததுவாகுமிவர்க்கது, கொடுத்திலனாகி லெடுத்தது, கொடுத்திலனாகியெடுப்பது. (கoரு உ)

உரு. மாமுனி வர்க்குற [1]வாகி வனத்திடை யேவாழுங்
கோமுனி யத்தகு மென்று [2]மனத்திறை [3]கொள்ளாதே
யேமுனை [4]யுற்றிடி லேழு கடற்படை யென்றாலு
மாமுனை யிற்சிறு கூழென விப்பொழு தாகாதோ.

(இ - ள்.) 'மா முனிவர்க்கு - சிறந்த முனிவர்களுக்கு, உறவு ஆகி - சுற்றத்தவனாய், வனத்திடைஏ வாழும் - காட்டிலே வசிக்கிற, கோ-(என்) தலைவனான இராமன், முனிய தகும் - (தன் தம்பியான பரதனை நான் எதிர்த்தால் என்னைக்) கோபிக்கக்கூடும்,' என்று—, மனத்து இறை கொள்ளாதுஏ-மனத்திற் சிறிதும்எண்ணாமலே, முனை உற்று போர்செய்தலையடைந்து, ஏ இடில்-(நான்) அம்புகளை யெய்தால், ஏழு கடல் படை என்றால்உம் - (எதிர்த்துநிற்பது) ஏழுகடல்போன்ற பெருஞ்சேனையேயானாலும்,(அது),இப்பொழுது—, ஆ முனையின் சிறு கூழ் என - பசு (மேய) முனைந்தால் அதன்முன் சிறிய இளம் பயிர் (அழிதல்) போல, ஆகாதுஓ - அழிவடையாதோ? (எ - று.)

'நான் பரதனை எதிர்த்தால் அது ஒருகால் ஸ்ரீராமனுக்குச் சீற்றத்தை யுண்டாக்குமோ?' என்று சிறிதுஞ் சங்கைகொள்ளாமல் போர்புரிவேனாயின், அப்பரதனைச் சேனையோடும் வென்றுவிடுவது மிகவும் எளிய செயலாகுமென்றன னென்பதாம். முனிவர்க்குரிய வேடத்தைத் தரித்ததனாலும், அவர்களது துன்பந்தீர்த்தற்கு உதவுதலாலும், 'முனிவர்க்குறவாகி' என்றது.கோ முனியததகுமென்று மனதது இறைகொள்ளாதே ஏ முனை உற்றிடில் - இராமன் வெறுக்கக்கூடுமென்று மனத்திற் சிறிதுங்கொள்ளாமல் (பரதன் அவனுக்குப் பகையாய்) அம்புகளாற் பெரும்போரில் நெருங்கிவந்தால் என்றும் உரைக்கலாம். பசு சிறியபயிரைமேய்ந்து அடியோடு அழித்தல்போல, யான் பெருஞ்சேனையைப் பொருது அடியோடு அழிப்பேன் என்பது, ஈற்றடியின் பொருள். ஏழுகடல் - உப்பு கருப்பஞ்சாறு கள் நெய் தயிர் பால் சுத்தநீர் இவற்றின் மயமானவை. படைக்கு ஏழுகடல் உவமை - பரப்பிலும் அணியணியாக வருதலிலும் என்க. பி-ம்:—[1]ஆகு. [2]மனத்திடை. [3]கொள்ளாமே, கொள்ளானேல், கொள்ளேமால், கொள்ளேனேல். [4]உற்றிவண். (கoருரு)

உச.—குகன் போர்செய்யும் எண்ணத்தோடு தன்னினத்தாரிடையில் தங்க, சுமந்திரன் பரதனிடஞ் சில சொல்லத் தொடங்குதல்.

என்பன சொல்லி யிரும்பன [1]மேனிய ரேனோர்முன்
வன்பணை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்
[2]கன்பனு நின்றன னின்றது கண்டரி யே[3]றன்ன
முன்பனில் வந்து மொழிந்தனன் மூரிய தேர்வல்லான்.

(இ - ள்.) வல் பணை வில்லினன் - வலிய பெரிய வில்லையுடையவனும், மல் உயர் தோளினன் - மற்போரிற்சிறந்த தோள்களையுடையவனும், வாள் வீரற்கு அன்பன் உம் - வாட்போரிற்சிறந்த வீரனான இராமனுக்கு அன்புபூண்டவனுமாகிய குகனும், இரும்பு அன மேனியர் ஏனோர் முன் - இரும்பை யொத்த [மிக வலிய] உடம்பையுடையவரான மற்றை வேடர்களின் முன்னிலையில், என்பன சொல்லி - என்ற இவ்வார்த்தைகளைச் சொல்லி, நின்றனன் - (கங்கையின் தென்கரையில்) நின்றான்; நின்றது கண்டு - (அவன்) நின்றதனைப் பார்த்து, மூரிய தேர் வல்லான் - வலிமையையுடைய தேரைச் செலுத்துவதில் வல்லவனான சுமந்திரன், அரி ஏறு அன்ன முன்பனில் வந்து - ஆண்சிங்கத்தை யொத்த வலிமையையுடைய பரதனிடத்தில் வந்து, மொழிந்தனன் - சிலசொல்பவனானான்; (எ - று.)—அதனை மேல் இரண்டு கவிகளிற் காண்க.

'பரதன் ஸ்ரீராமபிரானைக் காட்டினிடத்தும் இனிதிருக்கவொட்டாது துன்புறுத்த வருகின்றானாதலால், அவனைச் சேனையோடும் தொலைக்கவேணும்' என்று குகன் தனது இனத்தார்முன்னிலையிற் பலபடியாகச் சொல்லி அங்குத் தங்கினனாக, அப்பொழுது பரதனுடன் வந்தவனான இரகுகுலத்தார்க்குத்தேர்ப்பாகனாகிய சுமந்திரன் குகன் தென்கரையில் நிற்பதுகண்டு, பரதனைக்கிட்டி அக் குகனைக்குறித்துக் கூறலாயினனென்க. பரதனது தன்மையை உள்ளபடி யுணராமல் 'இராமபிரானுக்கு இந்தக்காட்டிலும் தீங்கு புரிவதற்காகவே இன்னான் வந்துள்ளான்போலும்' என்று எண்ணிக் குகப்பெருமான் கூறிய சொற்களெல்லாம் அவன் ஸ்ரீராமபிரானிடத்துக் கொண்டுள்ள பொங்கும் பரிவின் செயலென்பார் 'என்பனசொல்லி. ....வாள்வீரற் கன்பனும் நின்றனன்' என்றார்; "அதிஸ்நேஹ: பாபஶங்கீ [பொங்கும்பரிவு (எப்போதும் நேரக்கூடிய) தீமையையே கருதும்]" என்ற வசனம் இங்குக் கருதத்தக்கது. பரதன் தீங்குசெய்யத்தொடங்கினால் உடனே அதனைத் தவிர்க்குமாறு குகன் கையும் வில்லுமாயிருந்தன னென்பார் 'வன்பணை வில்லினன்' என்றாரென்க. பரதனை முதலிற் சங்கித்த குகன் 'பரதன் நல்லகருத்தினனானால் அவனுக்கு வேண்டிய உதவிசெய்வோம்; இராமனுக்குத் தீங்கு நினைந்து வந்தானாயின் அவனைச் சேனையோடும் ஒறுப்போம்; சாக்கிரதையாக இருங்கள்'என்று தன் பரிவாரசனங்கட்கெல்லாஞ் சித்தமாக இருக்கும்படி கட்டளையிட்டு,பரதனைக்காணத் தானே வடகரைக்குச் சென்றானென்று

முதனூலிற்கூறியுள்ளது. சுமந்திரன் இரகுகுலத்தரசர்க்குத் தொன்று தொட்டுத் தேர்ப்பாகனுதலால், மூரிய தேர்வல்லான்-பழமையானசாரதி யெனினுமாம். பி-ம்:—[1]மேனியனுனும். [2]அன்புற. [3]அன்னுன், ஆனு, ஆனும். (௬௦௩-௪)

வேறு.

உ௫.—இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்: சுமந்திரன் பரதனுக்குக் குகப்பெருமானைத் தெரிவிப்பதைக் கூறும்.

கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயா
னுங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த [1]வேலையினுன்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங் [2]குறியுடையான்.

(இ - ள்.) கங்கை இரு கரை உடையான்-கங்காநதியின் இரண்டுகரைகளையும் (தனக்குச் சொந்தமாக)உடையவனும், கணக்கு இறந்த நாவாயான்-அளவில்லாத படகுகளை யுடையவனும், உங்கள் குலம் தனி நாதற்கு உயிர் துணைவன்-உங்கள்குலத்தில் திருவவதரித்த ஒப்பற்ற தலைவனுன இராமபிரானுக்குப் பிராணசிநேகிதனும், உயர் தோளான்-உயர்ந்த தோள்களையுடையவனும், வெம் கரியின் ஏறு அனையான்-(மதத்தால்)வெவ்விய ஆண்யானையை ஒத்தவனும், வில் பிடித்த வேலையினுன் - வில்லைத்தரித்த (சேனு) சமுத்திரத்தை யுடையவனும், கொங்கு அலரும் - தேன்சொரிகிற, நறு - பரிமளம் வீசுகின்ற, தண்-குளிர்ந்த, தார்-மாலையையுடைய, குகன் என்னும் குறி உடையான் - குகனென்னும் பெயரையுடையவனுமாகிய வேடன்,—(எ - று.)— "நிற்கானுமுள்ளத்தான் ... நின்றனன்" என அடுத்தகவியுடன்முடிபு காண்க.

நமக்கு எதிரில் தோன்றுகின்றுனே: இவன் கங்கையின் இருகரையையும் தனக்குஉரிமையாகவுடையவன்; எண்ணிறந்த மரக்கலங்களையுடையவன்: இராமபிரானுக்கு உயிர்த்தோழன்; உயர்ந்ததோள்களையுடையவன்; மதயானைபோன்றவன்; விற்படைவீரர் பலரையுடையவன்; இவன்பெயர் குகனென்பதாகு மென்றனன் சுமந்திர னென்க. கங்கையில்தோன்றியவன், (சாதாரணமாக யாவருக்கும் இருக்கின்ற) கணக்கைக்கடந்த [ஆறு] நாவையுடையவன், இராமனுக்கு அன்பன், உயர்தோளான், கரியேறனையான், வில்லுக்குப்பதிலாக வேலைப்பிடித்தவன், குகனென்ற திருநாமமுடையவனென்று வேறு பொருள் தோன்றிச சுப்பிரமணிய சுவாமியோடு இந்தக் குகனுக்கு உவமைதோன்று மென்பர்.

வனத்துக்கு இராமபிரான் பயணப்பட்டுச் சென்றபோது அயோத்தியினின்று யோசனை யிரண்டுசென்றதும் விரைசெறிசோலையை யெய்தியபின், சுமந்திரன் இராமனனுமதியினுல் அப்பிரானைவிட்டு வெறுந்தேரை யோட்டிக்கொண்டு மீண்டுவந்தா னென்று கம்பர் கூறியிருத்தலால், இங்கே இராமபிரான் குகனேடு நட்புக்கொள்கையில் உடனிருந்தவன்போலச் சுமந்திரன் 'உங்கள் குலத்தனிநாதற் குயிர்த்துணைவன்' என்பது முதலவா

கக் கூறுவது எங்ஙனம் பொருந்துமெனின்?—சுமந்திரன் காலங்கண்ட பாகனுதலால், குகன் முன்னர்ச் சந்திக்கையில் அன்னுன் இராமபிரானது குணங்களைச் செவியேற்று அப்பிரானிடத்து மெய்யன்பு பூண்டிருத்தலைக் கண்டறிந்திருந்ததனுல் இங்ஙனங் கூறுகின்ரு னென்னலாம். அவ்வண்ணம் அந்தக்குகன் இராமபிரானிடத்து ஈடுபட்டிருந்தன னென்பதை, இராமன் கங்கைக்கரை வந்துசேர்ந்ததைக் கேள்வியுற்றதும் குகப்பெருமான் தேனெடு மீனுபகாரத்தன் அற்றநீத்த மனத்தினன் அன்பினுகி நற்றவப்பள்ளி வாயிலை நண்ணி அன்பினிறைஞ்சி 'தேவா! நின்கழல் சேவிக்க வந்தனன்' என்று கூறியதனுல் அறியலாம்: வான்மீகமுனிவர் குகனேடு சுமந்திரன் சிலநாள் உடனிருந்து பிறகே வெறுந்தேருடன் மீண்டானென்று கூறுவது இங்குக் கருதத்தக்கது. நாவாய்-நௌ: என்னும் வடசொல்லின் விகார மென்பர். 'உங்கள்குலம்' என்றது, சூரியவமிசத்தை. 'கரியின் ஏறு அனை யான்' என்பதற்கு - யானைக்கூட்டத்தையழிக்குஞ் சிங்கம்போன்றவனென் றும் பொருள்கொள்ளலாம். 'விற்பிடித்த' என்ற அடைமொழியால் இங்கே, வேலை - சேனையென்பது விளங்கும். பி ம்:—[1]வேளனையான், வேலையான். [2]பெயருடையான். (கoகூரு)

உசு. கற்காணுந் திண்மையான் கரைகாணுக் காதலா
னற்காணிற் கண்டனைய வழகமைந்த மேனியான்
மற்காணுந் [1]திருநெடுந்தோண் மழைகாணு மணி[2]நிறத் தாய்
நிற்காணு முள்ளத்தா னெறியெதிர்நின் றனனென்ருன்.

(இ - ள்.) மல் காணும்-வலிமையை எல்லைகண்ட[மிகவலிய], திரு நெடு தோள் - அழகிய பெரிய புயங்களையும், மழை காணும் நீலமேகத்தைக் கண் டாலொத்த, மணி நிறத்தாய் அழகிய நிறத்தையுமுடையவனே!-கல் காணுந் திண்மையான்-மலையைக்கண்டாலொத்த வலிமையையுடையவனும், கரை காணு காதலான்-(இராமன்பக்கல்)எல்லைகாணுத அன்புடையவனும்,காணில்- (வடிவத்தை) நோக்குமிடத்து, அல் கண்டு அனைய-இரவைக் கண்டாற் போன்ற [மிகக்கரிய], அழகு அமைந்த மேனியான் - அழகு பொருந்திய உடம்பையுடையவனுமாகிய அவன், நெறி எதிர் நின்றனன் - வழியெதிரே வந்துநின்றுள்ளான்; நின் காணும் உள்ளத்தான்-உன்னைப் பார்க்கவேண்டு மென்னும்மனக்கருத்துடையான் (போலும்), என்ருன் - என்றுசொன்னுன்; (சுமந்திரன்); (எ - று.)

மலைபோன்ற வலிமையையும் இருள்போன்ற கருநிறத்தையு முடைய வனுய் ஸ்ரீராமனிடத்துப் பக்திப்பேரன்புபூண்டவனுன இந்தக்குகன் வழி யிடையில் நிற்றலால், இவன் உம்மைக் காண்பதற்கே நிற்கின்றனன்போலு மென்று பரதனிடத்துச் சுமந்திரன் கூறின னென்க.மல்-ஆயுதமின்றி உடல் வலிமைகொண்டு செய்யும் போர் எனினுமாம். பரதனது திருமேனி நிறம் கரியதாதலை "பரதனெனும் பெயரானை,யெள்ளரிய குணத்தாலு மெழிலாலு மிவ்விருந்த, வள்ளலையே யனையானைக் கேகயர்கோன்மகள் பயந்தாள்"

என்றதனுலும் அறிக. 'நிற்காணும் உள்ளத்தான்' என்றது, ஊகம். கண்டு=கண்டால்: எச்சத்திரிபு; கண்டதுஎன்பதன் விகாரமுமாம். பி-ம்:—[1] திரடிண்டோள். [2] நிறத்தான். (கΟகசு)

உஎ.—சுமந்திரன் சொல்லைக்கேட்ட பரதன் அக்குகனைக் காணுமாறு தான் புறப்படுதல்.

தன்முன்னே யவன்றன்மை [1] தந்தைதுணை முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திரு[2]மனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனே
லென்முன்னே யவற்காண்பென் யானேசென் றெனவெழுந்தான்.

(இ - ள்.) தன் முன்னே - தனது எதிரில், அவன் தன்மை-அந்தக்குகனது தன்மையை, தந்தை துணை - (தன்) தந்தை நண்பனுன சுமந்திரன், முந்து உரைத்த-முன்பு சொன்ன, சொல் முன்னே - சொல்லைக் கேட்டலினும் விரைவாக [சொல்லைக் கேட்டவுடனே என்றபடி], உவக்கின்ற - மகிழ்கின்ற, துரிசு இலா திரு மனத்தான் -களங்கமில்லாத சிறந்தமனத்தையுடைய பரதன்,—'மன்-(நமது தலைவனுன) இராமனே, முன்னே தழீஇ கொண்ட-முன்னமே சிநேகஞ்செய்துகொண்டுள்ள, மனக்கு இனிய துணைவன் எல்-(அவன்) மனத்துக்கு இனிய சிநேகிதனுனுல், என் முன்னே-என்னை (அக்குகன்வந்து) காண்பதற்கு முன்னமே, யான் ஏ சென்று அவன் காண்பென்-நானே போய் அவனைப் பார்ப்பேன்,' என-என்றுசொல்லி, எழுந்தான்-புறப்பட்டான்; (எ - று.)

சுமந்திரனது சொல்லைக் கேட்ட பரதன், குகன் இராமபிரானிடத்துப் பேரன்புபூண்டுள்ளா னென்பதனை யுணர்ந்து, இராமதாசனுன அவன் தன்னைக்காணுமாறு வருவதனினும் மகாபாகவதனுனஅவனைத் தானே அவனிடஞ் சென்று காண்பது நல்ல தென்று கருதி, அவனைக் காணுமாறு புறப்பட்டன னென்பதாம். குகன் வந்துள்ளா னென்பதைச் சுமந்திரனு லறிந்த பரதன் தமையனதுநண்ப னென்று மனமுவந்து காட்சியளித்தன னென்று முதனூல் கூறும். சுமந்திரன் தசரதனுக்கு நண்பனுனதனுல் 'தந்தைதுணை' என்றுர்; மேல் சஎ-ஆஞ் செய்யுளில் 'எந்தை' என்று பரதன் இவனைவிளித்தலும் இதுபற்றியே. மனக்கு இனிய - (நமது) மனத்திற்குப்பிடித்த எனினுமாம். குகன் நினைத்தபடி குற்றஞ்சிறிதுமில்லாதது பரதனது திருவுளமென்பதை விளக்க, 'துரிசிலாத் திருமனம்' என்றுர். பி-ம்:—[1] தன்றுணைவன், தந்ததுணை. [2] முகத்தான். (கΟகஎ)

உஅ.—இதுவும் அடுத்த கவியும் - பரதன்நிலையைக்கண்டு குகன் திடுக்கிடுதலைக் கூறும்.

[1] என்றெழுந்து தம்பியொடு மெழுகின்ற காதலொடுங்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினுன் திருமேனி நிலையுணர்ந்தான்
றுன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றுன்.

(இ-ள்.) என்று எழுந்து—, தம்பியொடுஉம்-சத்துருக்கினனோடும், எழுகின்ற காதலொடுஉம் - மேன்மேலுண்டாகின்ற அன்பினோடும், குன்று-மலையானது, எழுந்து சென்றது என - எழுந்து நடந்தாற்போல, குளிர் கங்கை கரை குறுகி - குளிர்ச்சிபொருந்திய கங்காதீரத்தை யடைந்து, நின்றவனை - வந்துநின்ற பரதனை, துன்று-நெருங்கிய, கரு-கருமையாகிய, நறு குஞ்சி-நறு மணமுள்ள தலைமயிரையுடைய, எயினர் கோன் - குகப்பெருமாள், நோக்கினன்-பார்த்து, திருமேனி நிலை உணர்ந்தான் - (அவனது) உடம்பினிலையையும்நோக்கி, துண்ணென்றான் - திடுக்கிட்டான்; (எ - று.)

தான் பரதனைப்பற்றி எண்ணியதற்கும் அவன்நிலைமைக்கும் மாறுபாடாயிருந்தமைபற்றி, எயினர்கோன் துண்ணென்றானென்க. தம்பியொடும் எழுகின்ற காதலொடும் என்ற சேர்க்கையால், தன்கட்டளையில்லாமல்தானே சத்துருக்கினன் தன்னுடன்எழுந்ததுபோலவே, தன்னையறியாமலே பரதனுக்குக்காத லெழுந்த தென்க. உடன்நிகழ்ந்தனவாகக்கூறிய எழுந்ததம்பியொடும் எழுகின்றகாதலொடும் என்ற இடத்து, உடனவிற்சியணி காண்க. [1]என்றெழுந்த என்ற பாடத்துக்கு, என்று-என்றுசொல்லி, எழுந்த-தன்னுடனே எழுந்த, தம்பியொடும் என்க. (௧௦௩௮)

௨௯. வற்கலையி னுடையானை மாசடைந்த [1]மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

(இ - ள்.) வற்கலையின் உடையானை - மரவுரியை ஆடையாக வுடுத்தவனும், மாசு அடைந்த மெய்யானை-புழுதிபடிந்த உடம்பையுடையவனும், நல் கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தானை-அழகிய கலைகளில்லாத சந்திரன்போல ஒளியிழந்த முகத்தையுடையவனும், கல் கனிய கனிகின்ற துயரானை-(காண்கின்ற) கல்லும் குழைந்துருகும்படி மிகுகிற துன்பத்தையுடையவனுமாகிய பரதனை, கண்ணுற்றான்-பார்த்து, (குகன்), கையினின்று வில் இடை வீழ-(தன்) கையினின்று வில் நழுவிக் கீழேவிழும்படி, விம்முற்று நின்றுஒழிந்தான்-கலங்கிச செயலற்று நின்றிட்டான்; (எ - று.)

திருமேனிநிலைமையை இங்கு விவரிக்கின்றனரென்க.மரவுரிதரித்தலும் உடம்புமாசுபடிந்திருத்தலும் முகம்ஒளிகுறைந்துவாட்டமுற்றிருத்தலும் கல்லுங் கரையும்படி பெருந்துயரததுடனிருததலுமாகிய பரதனதுசெயல் 'இவன் வனவாசஞ்சென்ற இராமனிடத்துப் பேரன்புபடைத்தவன்' என்பதை விளக்குவதனால், அவற்றைக் கண்ட குகப்பெருமான் எதிர்த்துவருபவரோடு போர்செய்தற்கென்றுஉறுதியாகத் தன்கையிற்பிடித்த வில்லுஞ் சோர்ந்து விழக் கலங்கிச செயலற்றுநின்றனனென்பதாம். நகை-புன்சிரிப்புமாம். இடை - கீழிடம். பி-ம்:—[1]உடலானை. (௧௦௩௯)

௩௦.—குகப்பெருமான் பரதசத்துருக்கினரின் நிலையைக் கருதுதல்.

[1]நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்
றம்பியையு மொக்கின்றான் றவவேடந் [2]தலைக்கொண்டான்
றுன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றா
னெம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பென்றான்.

(இ - ள்.) 'நம்பிஉம் - ஆடவரிற்சிறந்த இப்பரதனும், என் நாயகனை ஒக்கின்றான் - எனது தலைவனாகிய இராமபிரானை ஒத்திருக்கிறான்; அயல் நின்றான்உம் - அருகில்நின்றவனும் [சத்துருக்கினனும்], தம்பியை ஒக்கின்றான் - இராமன்தம்பியான இலக்குமணனை ஒத்திருக்கின்றான்; தவம் வேடம் தலைக்கொண்டான் - (இந்தப் பரதன்) தவத்துக்குரிய வேஷத்தை மேற்கொண்டுள்ளான்; துன்பம் ஒரு முடிவு இல்லை - (இவன்படுகிற) துன்பத்துக்கோ ஓரெல்லையில்லை; திசை நோக்கி தொழுகின்றான்-(இராமன்சென்ற தென்) திசையை நோக்கி வணங்குகின்றான்; எம் பெருமான் பின் பிறந்தார் பிழைப்பு இழைப்பர் ஓ - இராமன்தம்பியர் பிழைசெய்வரோ? [செய்யார்],' என்றான் - என்று கருதினான், (குகன்); (எ - று.)

இராமலக்குமணரோடு பரதசத்துருக்கினர் முறையே ஒப்பாவரென்க. பரதன் இராமனுக்குத் துரோகஞ்செய்யுஞ் சிந்தை சிறிதுமில்லாதவனென்ற பொருளை 'எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பு' என்று விளக்கினார்; தொடர்நிலைச்செய்யுட்குறியணி. சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள் சமர்த்தித்த தாகா தாதலால், இது வேற்றுப்பொருள்வைப்பணியல்ல. திக்குநோக்கித் தொழுதுகொண்டிருத்தல், பேரன்பின் செயலாகும். எம்பெருமான் - எமது தலைவன்: இராமன். தலைக்கொண்டான், தலை - தமிழுபசருக்கம். பி-ம்:—[1]நம்பியிவன். [2]தலைநின்றான், தலைநின்றார். (௧௦௭௦)

௩௧.—குகப்பெருமான் பரதனிருந்த இடத்திற்கு ஓர் ஓடத்தில் வருதல்.

உண்டிடுக்க ணொன்றுடையா [1]னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் [2]குறிப்பெல்லாங்
கண்டுணர்ந்து [3]பெயர்கின்றேன் [4]காமின்க ணெறியென்னாத்
[5]தண்டுறையோர் நாவாயி லொரு[6]தனியே தான்வந்தான்.

(இ - ள்.) 'உண்டு இடுக்கண் ஒன்று உடையான் - உளதாகிய ஒரு துன்பத்தையுடையவனும், உலையாத அன்பு உடையான் - (இராமபிரானிடத்து) நீங்காத அன்புடையவனும், கொண்ட தவம் வேடம் ஏ கொண்டு இருந்தான்- (அவ்விராமபிரான்)தரித்துக்கொண்டுள்ள தவவேஷத்தையே(தானுங்)கொண்டுள்ளவனுமாகிய இப்பரதனது, குறிப்பு எல்லாம் - மனக்கருத்துமுழுவதையும், கண்டு உணர்ந்து பெயர்கின்றேன்-(அருகிற்சென்று அவனைப்) பார்த்து அறிந்து மீண்டுவருகிறேன்; நெறி காமின்கள் - (நீங்கள் அதுவரையில்) வழி

யைப் பாதுகாத்திருங்கள்,' என்னு - என்று (தன் சேனைவீரரை நோக்கிச்) சொல்லி, தண் துறை - குளிர்ந்த கங்கைத்துறையில், ஓர் நாவாயில் ஒரு தனியே தான் வந்தான் - ஒருதோணியில் (ஏறிக்கொண்டு வேறு துணையில்லாமல்) தன்னந்தனியனாய்க் குகன் தான் (பரதனிடம்) வந்தான்; (எ - று.)

கங்கையின் வடகரையிற் சார்ந்த ஸ்ரீபரதனைத் தூரத்திற் கண்டதுமே அவனது தவவேஷத்தாலும் முகத்தோற்றத்தாலும் அவனைக் குற்றமற்றவனென்று உணர்ந்து, குகப்பெருமான் தன்னினத்தாரைநோக்கி,'இதோ வந்து கங்கைக்கரையில் தங்கிநிற்கின்ற பரதன் குற்றமற்றவனெனத் தோன்றுவதனால், நான் தனியே சென்று அவனது மனக்கருத்தை முற்றிலும் அறிந்து வருகின்றேன்; நீவிர் இந்தத் தென்கரையில்தானே ஜாக்கிரதையாக இருங்கள்' என்று கட்டளையிட்டுத் தான்மாத்திரம் ஓர்மரக்கலத்தில் ஏறிக்கொண்டு பரதனுள்ள வடகரையைநோக்கி வந்தனனென்பதாம். இடுக்கண் என்பது - இடுங்குகண் என்பதன் விகாரமாய், கண்மலர்ச்சி யில்லையாம்படி வருகிற துன்பத்துக்குக் காரணக்குறியாம். 'உலையாதஅன்புடையான்' என்பது - இராமபிரானைக் குறிப்பதாகப் பொருளுரைப்பினுமாம். தவவேடம்=தபோவேஷம்: வடமொழித்தொடர். பெயர்கின்றேன் - விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. பி-ம்:—[1]உலையாவனப்புடையான்முன். [2]குறியெல்லாம். [3]மீள்கின்றேன், வருகின்றேன். [4]காண்மின்கள். [5]தணடுறையின், தண்ணுறைய. [6]தமியே. (கoசக)

## கூஉ.—குகப்பெருமான் பரதனை வணங்க, அந்தப்பரதன் குகனைத் தழுவுதல்.

வந்தெதிரே [1]தொழுதானை வணங்கினன் மலரிருந்த
வந்தணனுந் [2]தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
றந்தையினுங் களிகூரத் தழுவினன் றகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

(இ-ள்.) (தனியனாய் ஓடத்தின் மூலமாகக் கங்கையின்வடகரைசேர்ந்த குகன்),—எதிரே வந்து - எதிரிலே வந்து, தொழுதானை - (இராமனைத் திசைநோக்கித்) தொழுகிற பரதனை, வணங்கினன் - நமஸ்கரித்தான்; (அவ்வளவில்), தகவு உடையோர் சிந்தையின்உம் சென்னியின்உம் வீற்றிருக்கும் சீர்த்தியான் - பெருமைக்குணத்தையுடையவர்களது மனத்திலும் தலையின் மேலுஞ் சிறப்பாகத்தங்குகிற பெரும்புகழையுடையவனாகிய, மலர் இருந்த அந்தணன் உம் தனை வணங்குமவன் உம் - (திருமாலின் நாபித்) தாமரைமலரிலே வீற்றிருக்கிற அழகிய அருளையுடைய பிரமனுந் தன்னைவணங்கத்தக்க பரதனும், அவன் அடி வீழ்ந்தான் - அவனது [தனது] பாதங்களில் விழுந்து நமஸ்கரித்த குகனை, தந்தையின்உம் களிகூர தழுவினன் - (மைந்தனைக் கண்டபொழுது) தந்தைக்குஉள்ள களிப்பினும் தன்களிப்புமிக அணைத்துக் கொண்டான்; (எ - று.)

'தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்'—பெரியோர் எப்பொழுதும் மனத்திற்சிந்தித்துத் தலைமேற்கொண்டு கொண்டாடுஞ் சிறந்த புகழையுடையவன் என்றபடி. முயற்சியில்லாமல் எளிதில் தனக்குக்கிடைத்த இராச்சியத்தைத் தான் ஏற்றுக்கொள்ளாதொழிந்து, அதனை மூத்தோனுக்குக்கொடுத்து அவனை மீட்டுக்கொண்டுசெல்ல வருகின்ற குணவானான பரதன் தன்னைஒப்பாரும் மிக்காரும் உலகத்தில் இல்லையாம்படி நிலைபெற்ற நெடுங்கீர்த்தி பெறுதலால், இங்ஙனம் கூறப்பட்டான். பரதன் இராமனுள்ள திசையை நோக்கி அஞ்சலிசெய்து வருதலைக் கீழ் ''திசைநோக்கித் தொழுகின்றான்'' என்றதனாலும் அறிக. 'எதிரேவந்து' என்பதைத் தொழுதுநின்ற பரதனுக்குக் கூட்டினும் அமையும். பரதன் திருமாலின் அமிச மென்பது தோன்ற, 'மலரிருந்தவர்க்கணானுந் தனை வணங்குமவன்' என்றார். தந்தைக்கு மைந்தனிடத்து அன்பு சிறத்தலால், 'தந்தையினுங் களிகூர' என்றது. இப்பாடலின் முன்னிரண்டடிகட்கு-(இராமனுக்கு நண்பனானதனால்) பிரமனும் வணங்கத்தக்க பெருந்தன்மையையுடையவனாகிய குகனும் எதிரிலேவந்து (இராமனைத் திசைநோக்கித்) தொழுதுநின்ற பரதனை வணங்கி அவனதுபாதங்களில் விழுந்தான் என்றும், பின்னிரண்டடிகட்கு - பரதன் குகனைத் தழுவினனென்றும் பதவுரை கூறினாலும் கருத்து இதுவே. இனி, இப்பாட்டின் சொற்போக்கை நோக்குமிடத்து, (குகனும், பரதனுக்கு) எதிரேவந்து, தொழுதானை - இராமனைத் தொழுபவனான பரதனை, வணங்கினான்; சீர்த்தியானாகிய அந்தணனுந் தனைவணங்குமவனும் [பரதனும்] அந்தக்குகனது அடியில் வீழ்ந்தான் எனப் பொருள்கொள்ளுதல், நேராம்; ஆயினும், அது முதனூலாகிய ஸ்ரீவால்மீகிராமாயணத்தோடு ஒவ்வாமையால், அங்ஙனம் உரை கூறப்படவில்லை யென அறிக. வந்து எதிரே தொழுதானை என்பதற்கு-குகனையென்றால்.குகன்தொழுதானென்பது கீழே சொல்லப்படாமையாலும் அவனடிவீழ்ந்தானென்று குகன் வணங்கியமை இங்குத்தான் சொல்லப்படுதலாலும் பொருந்தாமை காண்க. ''சீர்த்தி மிகு புகழ்'' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் சீர்த்தியென்பது-பெரும்புகழை யுணர்த்துவதோர் உரிச்சொல்லாமென்றும், புகழ்மாத்திரத்தையுணர்த்துங் கீர்த்தியென்னும் வடசொல்லின் திரிபன்றென்றும் அறிக. பி-ம்:—[1]தொழுவானை. [2]தலை.　　　　(க0சஉ)

வேறு.

கூ.—குகப்பெருமான் பரதனை வந்த செய்தியை வினவ, அவன் அதனைத் தெரிவித்தல்.

[1]தழுவின புளினர் வேந்தன் றாமரைச் செங்க ணானை
யெழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை யென்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர் [2]முறையி னின்றும்
வழுவின னதனை [3]நீக்க மன்னனைக் [4]கொணர்வா [5]னென்றான்.

(இ - ள்.) தழுவின-(அங்ஙனம் பரதனால்) தழுவப்பட்ட, புளினர் வேந்தன் - வேடர்க்கரசனான குகன், தாமரை செம் கணானை - செந்தாமரை மலர் போலுந் திருக்கண்களையுடைய பரதனை (நோக்கி), 'எழுவின்உம் உயர்ந்த தோளாய்-(திரண்ட) கல்தூணினுஞ் சிறந்த தோள்களையுடையவனே! எய்தியது என்னை-(இங்கு நீ) வந்தது யாதுகாரணத்தால்?' என்ன-என்று கேட்க, (அதற்குப்பரதன்), 'முழுது உலகு அளித்த தந்தை - உலகமுழுவதையும் அரசாண்ட எங்கள் தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி, முந்தையோர் முறையினின்றுஉம் வழுவினன் - முன்புள்ள அரசரது நீதியினின்றும் தவறிவிட்டான்: அதனை நீக்க - அவ்வநீதியை நீக்கும் பொருட்டு, மன்னனை கொணர்வான்-இராமபிரானை அழைத்துக்கொண்டுபோதற்கு (வந்தேன்)', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

அப்போது குகப்பெருமான் ஸ்ரீபரதாழ்வானை நோக்கி, 'நீர் இந்தக் கானகத்தில் வருவதற்கு யாதுகாரணம்?' என்று வினவ, அதற்கு அந்தப் பரதாழ்வான் 'எனது தந்தை முறைக்கேடாக இளையவனான எனக்கு இராச்சியத்தைக்கொடுத்து எனது தமையனாரைக் கானகத்திற்கு அனுப்பினார். இந்த முறைக்கேட்டைப் போக்கும்படி எனது அண்ணனாரைக் கானகத்தினின்று மீட்டுவருமாறு செல்கின்றேன்' என்று தான் வந்த காரணத்தைக் குகப்பெருமானிடத்துக் கூறினனென்பதாம். முந்தையோர் முறையினின்றும் வழுவினது - மூத்தகுமாரனிருக்க இளையமகனுக்கு அரசுகொடுத்தது.
பி-ம்:—[1]தழுவினன். [2]முறையினீண்டு, முறைமைமீண்டு. [3]நீக்கி. [4]கொணர, கொணர்க. [5]வந்தேன். (௧௦௪௩)

## ௩௪.—பரதனது பெருந்தகைமையை யுணர்ந்து அவனைக் குகப்பெருமான் மறுபடியும் தண்டனிடுதல்.

கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு [1]முயிர்ப்ப னாகி
மீட்டு[2]மண் ணதனில் வீழ்ந்தான் விம்மின னுவகை [3]பொங்கத்
திட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் [4]பூவிற்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தான் புகல லுற்றான்.

(இ - ள்.) பொய் இல் உள்ளத்தான் - பொய்ம்மையில்லாத கருத்தையுடையவனாகிய, கிராதர் வேந்தன்-வேடர்தலைவனான குகன்,—கேட்டனன்-(அவ்வார்த்தையைக்) கேட்டு, கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி - மிகுதியாகத் தோன்றுகின்ற பெருமூச்சையுடையவனாய், உவகை பொங்க - களிப்புமிக, விம்மினன் - உடம்புபூரித்து, மீட்டுஉம் மண்அதனில் வீழ்ந்தான் - மறுபடியும் தரையில்விழுந்து, தீட்டு அரு மேனி மைந்தன் சே அடி கமலம் பூவில் பூட்டிய கையன் - சித்திரத்திலெழுதுதற்கும் அருமையான [மிக அழகிய] திருமேனியையுடைய பரதனது சிவந்த திருவடித்தாமரைமலர்களித்

சேர்த்தின கைகளையுடையவனாய், [பரதனைச் சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு], புகலல் உற்றான் - (சில) கூறத்தொடங்கினான்; (எ-று.)—அவற்றை மேலிரண்டுகவிகளிற் காண்க.

பரதனதுசெயல் இன்னதென்பதை அவன்வார்த்தையினால் தெளிந்த குகப்பெருமான் நிகழ்ந்தவற்றைக் கருதியதனாற் பெருமூச்சுவிட்டு, பிறகு, அவனது பெருந்தன்மையைக் கண்டு மனத்திலடங்காதபெருமகிழ்ச்சியடைந்து, அவனதுபெருந்தகவுக்காகச் சாஷ்டாங்கமாக அவனை நமஸ்கரித்துப் பின்வருமாறு கூறலாயினனென்க. கிராதர் - வடசொல். பி-ம்:—[1]உயிரன். [2]பொன்னடியின். [3]வீங்கி, வீங்க. [4]பூமேல். (௧0௪௪)

௬௫.—இதுவும் அடுத்த கவியும் - குகன் பரதனைப் புகழ்ந்தமையைக் கூறும்.

தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன [1]நீத்துச் சிந்தனை முகத்திற் [2]றேக்கிப்
[3]போயினை யென்ற போழ்து [4]புகழினோய் தன்மை கண்டா
லாயிர மிராமர் நின்[5]கே ழாவரோ [6]தெரியி னம்மா.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) 'புகழினோய் - கீர்த்தியையுடையவனே! தாய் உரைகொண்டு - (உனது) தாயாகிய கைகேயியின் வார்த்தையைக் கேட்டு, தாதை உதவிய - (உனது) தந்தையாகிய தசரதன் (உனக்குக்) கொடுத்த, தரணிதன்னை-இராச்சியத்தை, தீவினை என்ன நீத்து - கொடுந்தொழிலை விடுவதுபோல விட்டு, சிந்தனை முகத்தில் தேக்கி - கவலையை முகத்தில் நிறைத்து, போயினை - (இங்கு) வந்தாய்,' என்ற போழ்து - என்றபொழுது [என்றகாரணத்தால் என்றபடி], தன்மை கண்டால் - (உனது) தன்மையைப்பார்த்தால், தெரியின்-ஆலோசிக்குமிடத்து, ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவர் ஓ-ஆயிரம் ஸ்ரீராமர் உளரானாலும் உன்னொருத்தனுக்கு ஒப்பாவரோ? (எ - று.)

இராமபிரானோ நாட்டாரது அநுமதியின்மீது தனதுதந்தை இராச்சியத்தைக்கொடுக்க அதனை ஏற்றுக்கொண்டான்; நீயோ உனதுதாயின் வரத்தின்மூலமாகத் தந்தை இராச்சியத்தை உனக்குக்கொடுக்க அதனை வேண்டாமென்கிறாய். வேணுமென்ற இராமன் சிறந்தவனோ? வேண்டாமென்ற நீ சிறந்தவனோ? விருப்பமின்மையைக்கொண்ட நீயே அந்த இராமபிரானைவிட மேம்பட்டவனென்று கூறியவாறு. இங்கு இவ்வாறு பரதனை இராமபிரானைவிட மேம்பட்டவனாகக்கூறியது, இராமபிரானைக் குறைத்துக் கூறவேணுமென்ற கருத்தினாலன்று; பரதனது விருப்பின்மையென்ற குணத்தைப் பாராட்டுதற்பொருட்டென்க. தரணிதன்னைத் தீவினையென்ன நீத்து - அவ்விராச்சியத்தை ஏற்றுக்கொள்வது பாவமென்று கருதிக் கைவிட்டு என்றும் உரைக்கலாம். "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும்முகம்" என்றபடி மனத்தின் துன்பமிகுதி முகத்தில் வெளிப்படுதலால்,

'சிந்தனைமுகத்தில் தேக்கி' என்றான். யாவர்மனத்தையும் களிப்பிக்கிற இராமனது குணநிசயங்கள் பலவற்றினும், உனது விருப்பின்மையென்ற இந்த ஒருகுணமே ஆயிரமடங்கு சிறப்புடையதானெக் குகன் பரதனைப் புகழ்ந்தவாறு. பி-ம்:—[1]நீத்த, நீக்குஞ். [2]தேக்கப், தீரப், கற்பப். [3]போயினன். [4]புகழினும். [5]கேள், நேர், போல். [6]தெரிப்பின். (க0௬௫)

௩௬. என்புகழ் கின்ற தேழை [1]யெயினனே னிரவி யென்பான்
றன்[2]புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை [3]நுங்கண் மரபினோர் [4]புகழ்க ளெல்லா
முன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்.

(இ - ள்.) உயர் குணத்து உரவு தோளாய்-உத்தமமான குணங்களையும் வலிமையையுடைய தோள்களையு முடையவனே! ஏழை எயினனேன்-அறிவில்லாத வேடனாகிய யான், புகழ்கின்றது என் - (உன்னைப்) புகழ்வது எவ்வாறு? இரவி என்பான்-சூரியனென்று சிறப்பித்துக் கூறப்படுபவன், தன் புகழ் கற்றை - தனது கிரணசமூகத்தால், மற்றை ஒளிகளை தவிர்க்கும் ஆ போல் - மற்றை (ச் சந்திரன் முதலியோரது) ஒளிகளை அடக்கும் விதம்போல,—மன் புகழ் பெருமை நுமகள் மரபினோர் புகழ்கள் எல்லாம் - அரசர்கள் கொண்டாடும் மகிமையையுடைய உங்கள் குலத்தாரது கீர்த்திகளை யெல்லாம், உன் புகழ் ஆக்கிக்கொண்டாய் - உனதுகீர்த்திக்குள் அடங்குமாறு செய்துகொண்டாய்.

எல்லாவரசரும் கொண்டாடத்தக்க உங்கள்குலத்துச் சக்கரவர்த்திகளது புகழ்களனைத்தும் உன்புகழுக்கு ஈடாகாது என்றவாறு. உவமையின்பொருத்தம் ஊன்றியுணர்தற்பாற்று. 'ஏழையெயினனேன்'என்றது, குகப்பெருமான் அவையடக்கத்தாற் கூறியது. பி - ம்:—[1]எயினரோம், எயினரேம். [2]சுடர்க், கதிர்க். [3]உங்கள். [4]புகழை, பெருமை. (க0௬௬)

## ௧எ.—குகப்பெருமான் பரதாழ்வானிடத்து [1]அன்பு பூணுதல்.

எனவிவை [1]யன்ன மாற்ற [2]மியைவன பலவுங் கூறிப்
புனை[3]கழற் புலவு வேற்கைப் [4]புளிஞர்கோன் [5]பொருவில் காத
லனையவற் [6]கமைவிற் [7]செய்தா [8]னவற் கன்பி லாதார்
நினைவருங் [9]குணங்கொ டன்றோ விராமன்மே [10]னிமிர்ந்த காதல்.

(இ - ள்.) புனை கழல் - அணிந்த வீரக்கழலையும், புலவு வேல் கை - புலால்நாற்றம் நாறுகிற வேலாயுதத்தைத் தரித்த கையையுமுடைய, புளிஞர் கோன் - வேடர்தலைவனான குகன், என இவை அன்ன - என்ற இவ்வார்த்தைகள்போன்ற, இயைவன மாற்றம் பலஉம்-பொருத்தமுள்ள வார்த்தைகள் பலவற்றையும், கூறி-சொல்லி,—அனையவற்கு-அப்பரதனிடத்தில், பொருவு இல் காதல் - ஒப்பில்லாத அன்பினை, அமைவில் செய்தான் - தகுதியாகச் செய்தான்; அவற்கு அன்பு இலாதார் ஆர் - அப்பரதனிடத்தில் அன்பு வைக்காதவர் யார் உளர்? [எவருமில்லை யென்றபடி]; நினைவு அரு குணம் கொடு

அன்றோ - மனத்தினாற் சிந்தித்தற்கும் முடியாத நற்குணங்கள் காரணமாக வன்றோ, இராமன்மேல் காதல் நிமிர்ந்த (து)-இராமபிரானிடத்தும் (முன்பு அக்குகனுக்கு) அன்பு மிக்கது? (எ - று.)

இராமனது குணாதிசயங்களை நோக்கி முன்பு எப்படிக் குகனுக்கு அவன் பக்கல் அன்பு உளதாயிற்றோ, அப்படியே, இப்பொழுது பரதனது குணாதி சயங்களை நோக்கி அவன்பக்கலிலும் அக்குகனுக்கு அன்பு உளதாயிற்றென்ப தாம். புளிஞர்கோன் காதல் அனையவற்கு அமைவிற்செய்தான் என்பதை- 'குணங்கொடன்றோ இராமன்மேனிமிர்ந்த காதல்' என்ற தொடரும், 'ஆர வற்கன்பிலாதார்' என்ற தொடருஞ் சமர்த்தித்து நின்றன: தொடர்நிலைச் செய்யுட்குறியணியின்பாற் படும். உத்தமகுணங்களையுடையாரிடத்து அன்பு கொள்ளாதார் உலகத்தில் இல்லை யென்பது, 'ஆரவற்கன்பிலாதார்' என்பத னாற் போதரும். புலவு - மாமிசத்தின் துர்க்கந்தம்; இது, வேலுக்குப் பகை வருடம்பில் முன்பு ஊன்றியபொழுது ஒட்டிய தசையினாலாகியது. பி-ம்:— [1]இன்ன, இனி. [2]என்பன. [3]புகழ். [4]புளினர். [5]பொதுவில். [6]அன்பில், அன்பு. [7]செய்தல். [8]ஆயவற்கு. [9]குணங்கடம்மால். [10]நிமிர்ந்ததாதல். (கஒஎ)

## ௩அ—பரதனது வினவும், குகனது விடையும்.

அவ்வழி யவனை நோக்கி யருடரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண றென்றிசைச் செங்கை கூப்பி
யெவ்வழி [1]யுறைந்தா னம்மு னென்றலு மெயினர் வேந்த
னிவ்வழி [2]வீர யானே [3]காட்டுவ [4]லெழுக வென்றான்.

(இ-ள்.) அருள் தரு வாரி அன்ன - கருணைநிரம்பிய கடல்போன்ற, செவ் வழி உள்ளத்து அண்ணல் - நல்வழியிற்செல்லும் மனத்தையுடைய பரதன், அ வழி-அப்பொழுது [அவ்விடத்து], அவனை நோக்கி-அக்குகனைப் பார்த்து, தென் திசை செம் கை கூப்பி - தெற்குத்திக்கைநோக்கி (த் தன்) சிவந்த கைகளைக்கூப்பி [அஞ்சலிசெய்து], 'நம் முன் - நமது தமையனான ஸ்ரீராமன், எ வழி உறைந்தான் - எவ்விடத்தில் (இங்கு முன்பு) தங்கியிருந் தான்?' என்றலும் - என்று வினவியவுடனே,—எயினர் வேந்தன் - வேடர் தலைவனான குகன், 'வீர-வீரனே! யான் ஏ காட்டுவல் - நானே (அவ்விடத் தைக்) காண்பிப்பேன்: எழுக - (என்னுடன்) புறப்பட்டுவருவாயாக; இ வழி - (அவன் தங்கினது) இந்த இடமாகும்,' என்றான் - என்று சொல்லிச் சுட்டிக்காட்டினான்; (எ - று.)

பரதன் இராமபிரானுள்ள இடமாகிய தெற்குத்திக்கைநோக்கிக் கூப்பிய கையனாய் அந்தக் கங்கைக்கரையில் இராமன் தங்கிய இடத்தை வினவின னாக, உடனே குகன் அதனைத் தானே காட்டுவதாகச்சொல்லி உடனழைத் துப்போய் அவ்விடத்தைக் காட்டலாயின னென்பதாம். திக்குநோக்கித்தண்ட னிடுதல், தான் அவனிடங்கொண்ட கௌரவாதிசயத்தைக் காட்டும். வாரி -

வடசொல்: நீர்; இங்கே, கடலுக்கு இலக்கணை. நம் - குகனை உளப்படுத்திய தன்மைப்பன்மை. முன் - முன்பிறந்தவனுக்குக் காலவாகுபெயர். பி-ம்:— [1]உறைந்ததெம்முன். [2]விரைவின். [3]காட்டுவன். [4]எழுதி, இனிதின். (௧0௪அ)

௩௯.—இராமன் பள்ளிகொண்ட புற்படுக்கையைக் கண்டு பரதன் பெருஞ்சோக மடைதல்.

காரெனக் கடிது [1]சென்றான் கல்லிடை[2]ப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணான்.

(இ-ள்.) (என்றவுடனே பரதன்), கார் என கடிது சென்றான் - மேகம் போல விரைவாக (க் குகனுடன்) சென்று, (அவனாற் சுட்டிக்காட்டப்பட்ட), வார் சிலை தட கை வள்ளல் வைகிய-நீண்ட வில்லையேந்திய பெரிய கையை யுடைய வரையாதருளுந் தன்மையைக்கொண்ட ஸ்ரீராமபிரான் (முன்பு)தங்கிய, கல்லிடை படுத்த புல்லின் பள்ளி-கல்லினிடையே பரப்பிய புல்லினாலாகியபடுக்கையை, கண்டான் - பார்த்து, (வருத்தம்பொறுக்கமாட்டாமல்), பதைத்து பார்மிசை வீழ்ந்தான்-துடித்துத் தரையிலே விழுந்து, வார் மணி புனலால் மண்ணை மண்ணும் நீர் ஆட்டும் கண்ணான் - பெருகுகிற முத்துப் போன்ற கண்ணீரினால் தரையைச் சுத்தஜலஸ்நாநஞ்செய்விக்கிற கண்களை யுடையவனாய், பருவரல் பரவை புக்கான்-சோகக்கடலில் மூழ்கினான்;(எ-று.)

குகன் முன்னேசெல்லப் பரதன் அவன்பின்னே மிகவும்விரைந்து சென்று, இராமன் பள்ளிகொண்ட புற்படுக்கையைக் குகன் காட்ட அதனைக்கண்டவுடனே மனம்பதைபதைத்துத் தரையில்விழுந்து கண்களில் நீர் தாரைதாரையாய்ப்பெருகச் சோகக்கடலி லாழ்ந்தன னென்பதாம். மண்ணை மண்ணுநீ ராட்டுங்கண்ணான்-"மண்ணக மடந்தையை மண்ணுநீராட்டி" என்பது, பெருங்கதை. காளமேகம், விரைவோடு நிறத்துக்கும் உவமையாம். பி-ம்:—[1]சென்று. [2]அடுத்த. (௧0௪௯)

௪0.—சோகக்கடலில்மூழ்கிய பரதன் தன்னைத் தானே வெறுத்துக்கூறுவது.

இயன்றதென் [1]பொருட்டி னாலிவ் விடரெனக் கென்ற போழ்து
மயின்றனை கிழங்குங் காயு மமிழ்தென [2]வலிய புல்லிற்
றுயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடரும் [3]காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் [4]கொள்வென் யானே.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) 'என் பொருட்டினால்-(கைகேயியின் மகனை)எனது நிமித்தமாக, உனக்கு—, இ இடர்-இத்தன்மையதான துன்பம் [வனவாசம்], இயன்றது நேர்ந்தது,' என்ற போழ்துஉம்-என்று (முன் கைகேயியினால்) அறிந்த

அப்பொழுதும், 'கிழங்கும் காயும்-கிழங்குகளையுங் காய்களையும், அமிழ்து என அயின்றனை - அமிருதம்போலக் கருதிப் புசித்தாய்; வலிய புல்லில் - உறுத்துந்தன்மையுள்ள புல்லிலே, துயின்றனை - நித்திரை செய்தாய்,' எனவும் - என்று அறிந்த இப்பொழுதும், யான்—, ஆவி துறந்திலென் - உயிர் நீங்கினேனில்லை; (ஆதலால்), சுடரும் காசு குயின்று - பிரகாசிக்கிற இரத்தினங்கள் பதித்து, உயர் - விலையுயர்ந்த, மகுடம் - கிரீடத்தை, சூடும் - தரித்தலாகிய, செல்வமும் - சிறப்பையும், கொள்வென் - (ஏற்றுக்கொள்ள) அமைவேன்போலும், (என்றுகூறி),—(எ - று.) 'பின்னருஞ் சொல்வான்' என அடுத்த கவியோடு தொடரும்.

உனக்கு 'வனவாசம் நேர்வதற்கு நானே காரணம்' என்று எப்போது அறிந்தேனோ, அப்போதே என்னுயிரை மாய்த்துக்கொண்டிருக்கவேண்டும்; அது கிடக்கட்டும்: அறுசுவையுண்டிகளை யுண்டு அரண்மனையிற் பஞ்சசயனத்தில் அதிசுகுமாரமாகப் பள்ளிகொள்ளவேண்டிய நீ காய்கிழங்குகளைத் தின்று கடுங்காட்டிற் கல்லின்மேல் வலியபுல்லணையிற் பள்ளிகொண்டதை யறிந்த இப்போதாவது என்னுயிர்போயிருக்கவேணும்: இப்போதும் எனது உயிர் கெட்டொழியாது இருத்தலால், நான் உன்னிடத்துப் பேரன்புகொண்டவனென்பது முழுப்பொய்போலும்; அவ்வாறு கல்நெஞ்சனான யான் முடிசூடி உனது இராச்சியத்தை யாளுதலுஞ் செய்வேனெனப் பரதன் தன்னை வெறுத்துக்கூறினனென்பதாம். படர்க்கையாயுள்ள இராமனை இங்கு முன்னிலைப்படுத்துப் பரதன் இவ்வாறு கூறுகின்றனனென்க. பரதனுக்கு அரசுகொடுக்கும்பொருட்டே கைகேயி இராமனை வனம்புகுத்தியதனால், 'இயன்றதென் பொருட்டினா லிவ்விடருனக்கு' என்றது; "வாக்கினால் வரந்தரக்கொண்டு மைந்தனைப், போக்கினேன் வனத்திடைப் போக்கிப்பாருனக், காக்கினேன்" எனக் கீழ்ப் பள்ளிபடைப்படலத்திற் கைகேயி கூறியதுங் காண்க. இனி, யானேகொள்வேன் - பிறர்தூண்டவாவது கொடுக்கவாவது வேண்டுவதில்லையென்று கருத்துக்கொள்ளினுமாம். பி - ம்:—[1]பொருட்டினாலே. [2]ஆய. [3]செம்பொன். [4]கொள்வனேயான். (கo௰o)

சுக.—இலக்குமணன் இராப்பொழுது கழித்த இடத்தைப் பரதன் வினவுதல்.

தூண்டர நிவந்த தோளான் [1]பின்னருஞ் சொல்லு வானந்
நீண்டவன் றுயின்ற சூழ [2]லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் றொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த[லான்].
திடாண்டெனை வினிது [3]கேட்டா னெயினர்கோ னிதனைச் [4]சொன்

(இ - ள்.) தூண் தர - தூணை யொப்ப, நிவந்த-சிறந்துள்ள, தோளான் - தோள்களையுடைய பரதன், பின்னர்உம் சொல்லுவான் - மீண்டும் (குகனை நோக்கிக்) கூறுவான்: 'அ நீண்டவன் துயின்ற சூழல் - பெரியவனாகிய அவ்விராமன் நித்திரைசெய்த இடம், இது எனின்-இதுவானால், நிமிர்ந்த நேயம்

பூண்டவன்-(அவனிடத்து) மிக்க அன்பைக்கொண்டவனாய்.பின்னே தொடர்ந்து போந்தவன் - (அவனை வனவாசத்திலும்) பின்தொடர்ந்து வந்தவனான இலக்குமணன், பொழுது நீத்தது - இராப்பொழுதைக் கழித்தது, யாண்டு - எவ்விடத்தில்?' என-என்று, இனிது கேட்டான்-இனிமையாக [அன்போடு இன்சொற்களால்] வினாவினான்; (அதற்கு), எயினர் கோன் இதனை சொன்னான் - வேடர்தலைவனான குகன் இவ்வுத்தரத்தைக் கூறினன்; (எ - று.)—அதனை மேற்கவியிற் கூறுகின்றார்.

அப்போது பரதன் குகனைநோக்கி 'உனதுவார்த்தையால் இராமபிரான் இங்கு இரவைப்போக்கிய இடம் முதலியன தெரியலானேன்; அவ்விராமனை ஒருநொடிப்பொழுதேனும் பிரிந்திருக்கமாட்டாமையால் அவ்விராமபிரானோடு கூடவே காட்டகத்திற்கு வந்த இலக்குமணன் இங்கு இராப்பொழுதை எங்கு எவ்வாறு கழித்தான்?' என வினாவினனாக, குகப்பெருமான் அதற்கு விடைகூறலாயினனென்பதாம். தர-உவமவுருபு. நீண்டவன் - திரிவிக்கிரமனான திருமாலினது அமிசமான இராமன் எனினுமாம். பி - ம்:—[1]பின்னையுஞ். [2]இதுவென நிமிர்ந்த. [3]காட்டி. [4]சொல்வான். (௬௦ ௩க)

சஉ.—குகனது விடை.

அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த [1]தோளாய் கண்கணீர் [2]சொரியக் கங்கு
லெல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயன மென்றான்.

(இ - ள்.) 'கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய் - மலையையொத்த உயர்ந்துள்ள தோள்களையுடையவனே! அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகன் உம் - இருளையொத்துப் பொருந்திய [கரிய திருமேனியையுடைய] அழகு நிறைந்த இராமபிரானும், அவள் உம் - அவன்மனைவியான சீதாதேவியும், துஞ்ச-நித்திரைசெய்ய,—வீரன்-இலக்குமணன், வில்லை ஊன்றிய கையோடு உம் - வில்லைத்தரித்த கையுடனும், வெய்து உயிர்ப்போடு உம் - வெம்மையுடையதான பெருமூச்சுடனும், கண்கள் நீர் சொரிய—, கங்குல் எல்லை காண்பு அளவு உம் - இராப்பொழுதின் முடிவெல்லையைக் காண்கிறவரையிலும் [பொழுதுவிடியுமளவும்], நயனம் இமைப்பிலன் - கண் மூடாதவனாய் [சிறிதும் துயில்கொள்ளாமல்], நின்றான் - (காவல்செய்து) நின்றான்,' என்றான் - என்று (பரதனுக்குக் குகன்) கூறினான்; (எ - று.)

இராப்பொழுதை இலக்குமணன் கழித்த இடத்தை வினாவிய பரதனுக்கு, குகன் சீதாராமர்கள் துயில்கையில் அவர்களைவிட்டுத் தான் தனியே பிரிந்து சென்று துயில்வதற்கு மனமில்லாமல், இலக்குமணன் வில்லும் கையுமாய் அவர்கட்கு யாதொருதீங்கும்நேராமற் பாதுகாத்துக்கொண்டு மனக்கவலையோடு கண்களில் நீர் தாரைதாரையாய்ப் பெருகப் பெருமூச்

செறிந்துகொண்டு இராமுழுதும் இங்குத்தானே இருந்தனனென இலக்கு மணன்செயலைப் பரதன் நன்குஉணருமாறு கூறினனென்பதாம். அவள் - நெஞ்சறிசுட்டு. வெய்துயிர்ப்புக்கும் கண்ணீர்சொரிதற்குங் காரணம் - இராம பிரானுக்கு நேர்ந்த வனவாசவருத்தத்தைக் கருதியதனாலாகிய துயரம். நய னம் இமைப்பு இலன் - சினைவினை முதலொடு முடிந்தது. பி - ம்:—[1]தோ ளான். [2]சோர. (க0ருஉ)

சங.—பரதன் தன்னை நோதல்.

என்பத்தைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா [1]ரென்று
முன்பொத்த [2]தோற்றத் தேமில் யானென்று முடிவி லாத
துன்பத்துக் கேது வானே னவனது [3]துடைக்க நின்று
னன்பத்துக் கெல்லையுண்டே யழகிதென் னடிமை யென்றான்.

(இ - ள்.) என்பத்தை - என்று (குகன்) சொன்னதை, கேட்ட—, மைந் தன் - வீரனான பரதன், இராமனுக்கு இளையார் என்று - இராமனுக்குத் தம்பிமாரென்று, முன்பு ஒத்த - முன்னம் (பிறப்பில்) ஒத்துள்ள, தோற்றத் தேமில்-உற்பத்தியையுடைய எங்களுள், யான்—, என்றுஉம் முடிவு இலாத துன்பத்துக்கு - எப்பொழுதும் முடிதலில்லாத (இராமனது) துன்பத்துக்கு, ஏது ஆனேன் - காரணமாயினேன்: அவன் - அவ்விலக்குமணன், அது துடைக்க நின்றான் - அத்துன்பத்தை நீக்கத் துணைநின்றான்; அன்பத்துக்கு எல்லை உண்டுஏ-அன்புக்கு ஒருவரையறை உள்ளதோ? [இல்லையென்றபடி]; என் அடிமை அழகிது - என் அடிமைத்திறம் அழகுள்ளதாயிருந்தது!' என் றான் - என்று கூறினான்; (எ - று.)

இராமனுக்குத் தம்பியென்றமுறையில் நானும் இலக்குமணனும் ஒத்த வர்களே; ஆனால், இராமன் காட்டில்திரிந்துஅலைவதற்குக் காரணமானவன் யான்: இலக்குமணனோ காட்டில்வசித்தலால் அவ்விராமபிரானுக்கு யாதொரு வருத்தமும் நிகழாதிருக்குமாறு தன்னாலியன்றவளவும் முயன்று காத்துவரு கிறான்; அவன் அவ்வாறுசெய்வது அன்பின் செயலாம்; இராமனதுதம்பி யெனப் பெயர்பூண்டு அவனைக் காட்டிற்குத் துரததக் காரணமான என்னடி மை மிகஅழகியது என்று தன்னைப் பரதன் வெறுத்துக்கூறலாயினனென்க. பரதன் 'யான் என்றும்முடிவிலாததுன்பத்துக்கு ஏதுவானேன்' என்றது, கைகேயி தன்பொருட்டே இராச்சியத்தைக் கேட்டதனால். முன்பு - சிறப்பு மாம். அழகிது என் அடிமை - பிறதுறிப்பால், அழகியதன்று என்றவாறும். பி-ம்:—[1]என்ற, என்றான், என்றல். [2]கொற்றத்தேமேல், கொற்றத்தோன் மேல். [3]துடைத்து. (க0ருங)

சச.—இராமன்தங்கினஇடத்தில்தானே பரதன் அன்றிரவுதங்கி, மறுநாட் காலையிற் கங்கையின் அக்கரையைச்சேர்க்குமாறு குகனைவேண்டுதல்.

அவ்விடை யண்ண றானு மன்றநும் பொடியின் வைகித்
தெவ்விடை தரநின் றார்க்குஞ் [1]செறிகழற் புளினர் [2]கோமா னு
னிவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினை [3]யாயி னெம்மை
[4]வெவ்விடர்க் கடனின் றேற்றி [5]வேந்தன்பால் [6]விடுத்த தென்றான்.

(இ - ள்.) (என்று சொன்னபின்), அண்ணல் தான்உம் - பரதனும், அ இடை-அவ்விடத்திலே, அன்று - அன்றையிரவில், அரு பொடியின் வைகி - படுக்கவொண்ணாத புழுதியிலே படுத்திருந்து, (பொழுதுவிடிந்தபின் குகனை நோக்கி), 'தெவ் இடை தர - பகைவர்கள் பின்னிடையும்படி, நின்று ஆர்க்கும் - நிலைபெற்று ஒலிக்கிற, செறி கழல் - நெருங்கிய வீரக்கழலையுடைய, புளிஞர் கோமாஅன் - வேடர்தலைவனே! இ இடை - இப்பொழுது, எம்மை கங்கை ஆற்றின் ஏற்றினை ஆயின் - எங்களைக் கங்காநதியினின்று கரையேற்றினையானால், (அசசெய்கை), வெவ் இடர் கடல்நின்று ஏற்றி - கொடிய துக்கசாகரத்தினின்று கரையேற்றி, வேந்தன்பால் விடுத்தது - இராமபிரானிடஞ் சேர்த்ததாகும்,' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

கங்கையைக்கடக்கச்செய்தால் இராமபிரானைக்கண்டுதுயரமாறுவோமெனப் பரதன் கூறியவாறு. கங்கையாற்றின் ஏற்றுதல் - கங்கையைக்கடந்து அக்கரையிலேறச்செய்தல். பி-ம்.—[1]செருவிடைப். [2]கோவே. [3]ஆகில், ஆகி, ஏக. [4]வெவ்வினைக். [5]இராமன்பால், வீரன்பால். [6]விடுத்தி, விடுத்திடு.(கoடுச)

சரு.—குகன்கட்டளையாற் பலநாவாய்கள் வருதல்.

நன்றெனப் புளிஞர் வேந்த னண்ணினன் றமரை நாவாய்
[1]சென்றுநீர் தருதி ரென்ன [2]வந்தன சிவன்சேர் வெள்ளிக்
குன்றெனக் [3]குனிக்கு [4]மம்பொற் குவடெனக் குபேரன் மான
மொன்றென நாணிப் பல்வே றுருவுகொண் டனைய வான.

(இ - ள்.) (அதுகேட்டு), புளிஞர் வேந்தன் - குகன், நன்றுஎன - நல்லதென்று (அங்கீகாரமாகச்) சொல்லி, தமரை நண்ணினன்-தன்இனத்தாரைச் சேர்ந்து, (அவர்களைநோக்கி), 'நீர், சென்று நாவாய் தருதிர்-('நீங்கள்')போய் ஓடங்களைக் கொண்டுவாருங்கள்', என்ன - என்று சொல்ல, (உடனே அவர்களாற் செலுத்தப்பட்டனவாய்), சிவன் சேர் வெள்ளி குன்று என - சிவபிரான் எழுந்தருளியுள்ள வெள்ளிமலையான கைலாசமும், குனிக்கும் அம் பொன் குவடு என - (அப்பெருமான் வில்லாக) வளைத்த அழகியபொன்மலையானமேருவும், குபேரன் மானம் என - குபேரனது புஷ்பகவிமானமும், ஒன்று நாணி - (தாம்) ஒன்றாயிருத்தலைநோக்கி வெள்கி, பல் வேறு உருவு கொண்டு அனைய ஆன - பலவகைப்பட்டவடிவங்களைக் கொண்டாற்போன்ற தன்மையுடையனவாகிய ஓடங்கள், வந்தன - வந்துசேர்ந்தன; (எ - று.)

கைலாசம் மேரு புஷ்பகம் என்னும் இவைகள் தாம்ஒற்றையாயிருத்தற்கு நாணி ஒவ்வொன்றும் பலவடிவங்கொண்டுவந்தாற்போன்ற பலநாவாய்கள் வந்தன என்க: தற்குறிப்பேற்றவுவமையணி. இவ்வுவமையால், வந்தநாவாய்கள் சில வெண்ணிறத்தனவும், சிலபொன்னிறத்தனவும், சிலவிசித்திரநிறத்தனவுமாகிப் பெருந்தோற்றமுடையனவாய்ப் பலருந் தங்குதற்கு ஏற்ற இடமுடையனவாயிருந்தன என்பது பெறப்படும். குபேரன்—கு - குற்சித

மாகிய [ஒருகண்பழுதுபட்ட], பேரன்-உடம்புடையவன் எனக் காரணப் பொருள்காண்க. மானம்-விமானம் என்பதன் முதற்குறை. குவடு—மலைச்சிகரம்: மலைக்கு, சினையாகுபெயர். குன்றென, குவடென, மானமென என்றவற்றில், 'என'—எண்ணிடைச்சொல்; இது, இங்கே தொகைபெறுதுவந்தது: "உம்மை என்று என ஒடு, இந்நான்கெண்ணுமஃதின்றியுமியலும்". 'ஒன்றெனநாணி' என்பதற்கு - ஒன்றெனப்படுதற்கு நாணங்கொண்டு என்று உரைத்தால், குபேரன்மானம் என்பதன்பின் 'என' என்னும் எண்ணிடைச்சொல்லை எடுத்துக்கூட்டவேண்டும்; "என்று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண்பொருடோறு நேரும்". ஆன-பெயர். பி-ம்:—[1]சென்றினித்தருதிர், சென்றுநீர்கொணர்திர். [2]வந்தது. [3]குனிக்கும். [4]மேருக்குழுவெனக். (சஂ௫)

சசு.—வந்த நாவாய்களின் வருணனை.

நங்கையர் நடையி னன்ன நாணுறு செலவி னுவாய்
கங்கையு [1]மிடமி லாமை [2]மிடைந்தன [3]கலந்த வெங்கு
மங்கொடிங் கிழித்தி யேற்று [4]மமைதியி னமரர் வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்ன லான.

(இ - ள்.) அங்கொடு இங்கு இழித்தி ஏற்றும் அமைதியின்-அக்கரையிலுள்ளாரை இக்கரையிலும் இக்கரையிலுள்ளாரை அக்கரையிலுமாக ஏற்றியிறக்குகிற தன்மையினால், அமரர் வையத்து இஙகொடு அங்கு இழித்தி ஏற்றும் இரு வினை என்னல் ஆன-தேவலோகத்திலுள்ளாரை இவ்வுலகத்திலும் (இவ்வுலகத்திலுள்ளாரை) அவ்வுலகத்திலுமாக இறக்கியேற்றுதல் செய்கிற புண்ணியபாபரூபமான கருமங்கள்போலு மென்று உவமைசொல்லத்தக்கவையான, நங்கையர் நடையின் அன்னம் நாணுறு செலவின் நாவாய்-பெண்கள் நடைபோன்ற நடையையும் அன்னப்பறவைகள் நாணமடையும்படியான நடையையு முடைய மரக்கலங்கள், கங்கைஉம் இடம் இலாமை-அக்கங்காநதி முழுவதும் வெற்றிடமில்லையாம்படி, எங்குஉம் மிடைந்தன கலந்து - எங்கும் நெருங்கிச் சேர்ந்தன; (எ - று.)

அங்கு இருப்பவரை இங்கும் இங்கு இருப்பவரை அங்குமாக இழித்தியும்ஏற்றியும் நிற்குந் தன்மையில் நாவாய்க்கு இருவினை உவமையாயிற்று. நாவாய்க்குச் சேரும் அங்கு இங்குஎன்பன-அக்கரை இக்கரைகளையும், இருவினைக்குச்சேரும் அங்கு இங்கு என்பன-மேலுலகம் கீழுலகங்களையும் காட்டின. நாவாய்க்கு,மகளிர்நடையும் அன்னநடையும் உவமை-மெல்ல அசைந்து அசைந்து நடத்தலிலென்க. பி-ம்:—[1]இடையிலாமை. [2]மிடைவன. [3]வந்தது. [4]அமைதியால். (சஂ௬)

சஎ.—நாவாய்வந்தமையைக் குகன் தெரிவிக்க, பரதன் சுமந்திரனை நோக்கிச் சேனைகளை அவைகளி லேற்றச்சொல்லுதல்.

வந்தன வரம்பி னாவாய் வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவ தென்று [1]சிருங்கிபே ரியர்கோன் செப்பச்
சுந்தர வரிவில் லானுஞ் சுமந்திரன் றன்னை [2]நோக்கி
யெந்தையித் தானை தன்னை யேற்றுதி விரைவி னென்றான்.

(இ-ள்.) (அநமனம் நாவாய்கள் வந்துநிறைந்தபின்),—சிருங்கிபேரியர்கோன் - சிருங்கிபேரமென்னும் ஊரிலுள்ளார்க்குத் தலைவனாகிய குகன், (பரதனை நோக்கி), 'வரி சிலை குரிசில் மைந்த - கட்டமைந்தவில்வில்வல்ல ஆடவரிற்சிறந்த தசரதசக்கரவர்த்தியின்குமாரனே! வரம்பு இல் நாவாய் வந்தன-அளவிறந்த மரக்கலங்கள் வந்திட்டன; சிந்தனையாவது - (இனி உன்) கருத்துஎன்?' என்று செப்ப-என்றுவின்வ,—சுந்தரம் வரி விலான்உம்-அழகியகட்டமைந்த வில்லையுடைய பரதனும், சுமந்திரன் தன்னை நோக்கி-சுமந்திரனைப்பார்த்து, 'எந்தை-என்தந்தைபோன்றவனே! இ தானை தன்னை விரைவின் ஏற்றுதி-இச்சேனையை விரைவில் மரக்கலங்களிலேற்றி அக்கரைசேர்த்துவாய்', என்றான் - என்றுசொன்னான்: (எ - று.)

யாவது - யாது என்பதன் விரித்தல். தூரத்தி லுள்ளாரை 'தூரியர்' என்பதுபோலச் சிருங்கிபேரத்திலுள்ளாரை 'சிருங்கிபேரியர்' என்றது. சிருங்கி பேரம் - குகனென்னும் வேட்டுவராசனது இராசதானி. சுமந்திரன் என்றசொல் - நல்ல ஆலோசனையுடையானென்று பொருள்படும்: இவன், இக்ஷ்வாகுகுலத்தரசர்க்குத் தொன்றுதொட்டு அமைச்சனும் பாகனுமாயுள்ளவன்: தசரதனுக்கு உற்றதுணைவனாதலால், 'எந்தை' என விளிக்கப்பட்டான். எந்தை - அண்மைவிளி. தன் இரண்டும் - சாரியை. பி-ம்:—[1]சிருங்கிவேரியர். [2]ஏற்று. (கஂ௫௭)

சஅ.—சுமந்திரன் நாவாய்களிலேற்றச் சேனைகள்யாவும் கங்கையைக் கடத்தல்.

குரிசில தேவ லாலக் குரகதத் தேர்வ லானும்
வரிசையின் வழாமை நோக்கி மரபுளி வகையி [1]னேற்றக்
கரிபரி யிரதங் காலாள் [2]கணக்கறு கரையில் [3]வேலை
யெரிமணி [4]திரையின் வீசுங் கங்கையா றேறிற் றன்றே.

(இ-ள்.) குரிசிலது ஏவலால்-(அப்படிச் சொன்ன) பரதனது கட்டளையால், அ குரகதம் தேர் வலான்உம் - குதிரைகள்பூட்டிய தேரைச் செலுத்த வல்ல பாகனான அச்சுமந்திரனும், வரிசையின் வழாமை நோக்கி-ஒழுங்குதவறாமற்பார்த்து, மரபு உளி வகையின் ஏற்ற - முறைமையாக இனம்பகுத்து ஏற்ற,கரி பரி இரதம் காலாள்-யானைகளும் குதிரைகளும் தேர்களும் காலாட்

களுமாகிய, கணக்கு அறு - கணக்கில்லாதனவான, கரை இல் வேலை - கரையற்ற சேனாசமுத்திரமானது,எரி மணி திரையின் வீசும் கங்கை ஆறு ஏறிற்று-விளங்குகிற இரத்தினங்களை அலைகளால் எறிகிற கங்காநதியின்மேற் சென்று கரையேறிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே என்றுமாம்.

சுமந்திரன் சேனைகளில் எதெதை எங்குஎங்குஏற்றினால் ஏற்குமென்று ஆராய்ந்து அததன் தகுதிக்கு ஏற்ப முறைபிறழாமல் ஏற்ற, படைகள்யாவும் நாவாய்களிலேறிக் கங்கையைக் கடந்தனவென்க. 'கணக்கறு', 'கரையில்' என்ற அடைமொழிகள் - முறையே, கரிமுதலிய சதுரங்கசேனைகளில் ஒவ்வொன்றும் கணக்கற்றிருந்தமையையும், எல்லாந்திரண்ட சேனாசமுத்திரம் கரையற்றிருந்தமையையுங் காட்டும். ஏற்ற ஏறிற்றென்க. கடல், யாற்றின் மேல் ஏறிற்று எனச் சமத்காரந் தோன்றக் கவி கூறினர். தூரகதம் - குளம்புகளாற் செல்வது: வடசொல். மரபுளி, உளி - மூன்றாம்வேற்றுமைச் சொல்லுருபு. பி - ம்:—[1]ஏற்றி. [2]கணக்கில. [3]சேனே. [4]திரைகள். (கoருஅ)

சகூ.—யானைகள் நீந்திச் சென்றவற்றின் வருணனை.

இடிபடு முழக்கம் [1]பொங்க வினமழை மகரநீரை
முடிவுற முகப்ப வூழி யிறுதியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் [2]வேலை கூம்பொடு படர்வ போல
நெடியகை யெடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை [3]வேழம்.

(இ - ள்.) இனம் மழை - கூட்டமாகிய மேகங்கள், இடி படு முழக்கம் பொங்க - ஒன்றோடொன்று தாக்குதலாலுண்டாகிற முழக்கம் அதிகரிக்க, ஊழி இறுதியில்-யுகமுடிவில், மகரம் நீரை - கடல் நீரை, முடிவு உற முகப்ப-முழுதும் மொள்வனவாகி, மொய்ப்ப போல - நெருங்குவனபோலவும்,—கொடியொடு-கொடியோடுகூடிய, வங்கம் - மரக்கலங்கள், வேலை - கடலில், கூம்பொடு படர்வ போல - பாய்மரத்தோடு நடப்பனபோலவும், நெடு கை வேழம் - நீண்ட துதிக்கையையுடைய யானைகள், நெடிய கை எடுத்து நீட்டி - நெடிதாகிய துதிக்கையை உயரவெடுத்து, நீந்தின - (அந்தநதியில்) நீந்திச் சென்றன; (எ - று.)

யானைத்திரள் மிகுதியாகக் கங்கையில்நீந்தும்போது, பிரளயகாலத்து மேகங்கள் கடலில்தோய்ந்தது போன்ற தென்பது, முன்னிரண்டடியிற் கூறிய பொருள். கைகளைத்தூக்கிக்கொண்டு நீரிற் செல்லுந் தமது இயல்பின்படி யானைகள் சென்றது-கடலிற் கூம்புடனே மரக்கலஞ்செல்வதை யொத்திருந்ததென்றார்: இவையிரண்டுந் தற்குறிப்பேற்றவணிகளாம். யானையின் பிளிறலொலி, இடியோசைக்கு உவமம். மகரநீர் - மகரத்தைக்கொண்டநீர்: எனவே, கடனீராயிற்று. பி-ம்:—[1]ஏங்க, பொங்கி. [2]வேலைக். [3]யானை. ()

ருo.—இதுவும் அது.

*சங்கமு மகர மீனுந் தரளமு மணியுந் தள்ளி*
*வங்கநீர்க் கடலும் வந்து தன்வழிப் [1]படர மானப்*
*பொங்குவெங் களிறு நூக்கக் கரையொரீஇப் போயிற் றம்மா*
*கங்கையு மிராமற் [2]காணுங் [3]காதல தென்ன மாதோ.*

(இ - ள்.) மானம் - பெருமைபொருந்திய, பொங்கு - விளங்குகின்ற, வெம் களிறு - வெவ்விய யானைகள், நூக்க - தள்ளுதலால்,—சங்கம்உம் - சங்குகளையும், மகரம்மீன்உம் - சுறுமீன்களையும், தரளம்உம் - முத்துக்களையும், மணிஉம் - மற்ற இரத்தினங்களையும், தள்ளி—, வங்கம் - மரக்கலங்களோடுதற்கிடனாகிய, நீர் - நீரையுடைய, கடல்உம் - சமுத்திரமும், தன் வழி வந்து படர - தன்னிடத்துவந்து பரவும்படி, கங்கைஉம்-அந்தக்கங்காநதியும், இராமன் காணும்-ஸ்ரீராமபிரானைக் காணவேண்டுமென்கிற, காதலது என்ன-விருப்பத்தையுடையது என்று சொல்லும்படி, கரை ஒரீஇ - கரையை நீங்கி, போயிற்று - சென்றது; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: கங்கையென்னும்பெருநதியும் கரைகடந்தமையைப்பற்றி வியந்தவாறு.

யானைகள் தென்திசைமுகம் நீந்திச்செல்லும்போது கங்கைநீர் தென் திசையாக முந்திச்செல்வது, சித்திரகூடத்திலிருக்கும் இராமபிரானைக் காணத் தான் முந்திச்சென்றதுபோலுமென்று குறித்தார்; **தற்குறிப்பேற்றவணி.** கங்கையினீர் அப்பாற்சென்றுவிட்டதனாற் பள்ளமான அந்தக்கங்கையினிடத்தைக் கடலினீர் நிரப்பு மென்க. பி - ம்:—[1]படர்வ. [2]காணக். [3]காதலித்தென்ன, காதலினென்ன. (கoசுo)

ருக.—தேர்கள் நாவாயிற் சென்ற வகை.

*கொடிஞ்சொடு தட்டு மச்சு மாழியுங் கோத்த மொட்டு*
*நெடுஞ்[1]சுவர்க் கொடியும் யாவு நெறிவரு முறையி னீக்கி*
*விடுஞ்[2]சுவற் புரவி யோடும் வேறுவே றேற்றிச் சென்ற*
*மடிஞ்சபி [3]னுடம்பு [4]கூட்டும் வினையென வயிரத் தேர்கள்.*

(இ - ள்.) வயிரம் தேர்கள்-உறுதியாகிய இரதங்கள்,—கொடிஞ்சொடு - கொடிஞ்சியுடனே, தட்டுஉம் - தட்டையும், அச்சுஉம்-அச்சையும், ஆழிஉம்-சக்கரத்தையும், கோத்த மொட்டுஉம் - கோக்கப்பட்ட மொட்டையும், நெடு சுவர் கொடிஉம் - நெடுமையாகிய இருபுறசுவர்களின் மேற்கட்டிய துவசத்தையும், யாஉம்-மற்றெல்லாவுறுப்புக்களையும், நெறி வரும் முறையின் நீக்கி-நெறியாகவருகிற [முன்பூட்டிய] முறையே கழற்றி,—விடும் சுவல் - (கத்தரியாது) விட்டுவளர்த்த பிடரிமயிரையுடைய, புரவியோடுஉம் - குதிரைகளுடன்,—மடிஞ்சபின் - இறந்தபிறகு, உடம்பு கூட்டும் - (உயிரை வெவ்வேறு) சரீரங்களிற் சேர்க்கின்ற, வினை என - வினைகள்போல, வேறு வேறு ஏற்றி சென்ற - வெவ்வேறு கலங்களி லேற்றப்பட்டுப் போயின; (எ - று.)

தேர்களை அங்ஙனமே நாவாயிலேற்றுதல் முடியாதாகையால்,அவற்றின் ஒவ்வோருறுப்பினையும் தனித்தனியே பிரித்து வெவ்வேறு கலங்களிலேற்ற, அவைகளைச் சுமந்துகொண்டு அந்நாவாய்கள் சென்றன என்றவாறு. உயிர் நீங்குவதற்குக் காரணமாகிய வினையால் மரணம் நிகழ்ந்தபின் பிறப்பதற்குக் காரணமாகிய வினை இறந்தஅவ்வுயிர்களை வெவ்வேறு வகையாயுள்ள எழுபிறப்பினுஞ் சேர்ப்பதுபோல்,தேருறுப்புகள் வெவ்வேறு நாவாய்களிலேற்றப் பட்டன என உவமப்பொருத்தங் காண்க. வெவ்வேறிடத்துச் சேர்ப்பிக்கப் படுதல், தேருறுப்புக்களுக்கும் உயிர்கட்கு முள்ள பொதுத்தன்மை. வினைத்தானத்தில் பிரித்த தேருறுப்புக்களையேற்றும் பணியாளரும், நாவாய்களின் தானத்தில் எழுவகைத்தோற்றமான உடலு மெனக் காண்க. கொடிஞ்சு - தேர் முன்னே தாமரைவடிவாக நடப்படும் உறுப்பு. தட்டு என்றது - தேர்க்குரிய தலைவன் உட்காருமிடம்: மேற்பகுதி யென்பாருமுளர். அச்சு-உருளை கோக்கும் மரம். சுவர் - உள்ளிருப்பவரை மறைத்து நிற்கும் உறுப்பு. நெறிவரும் முறையின் நீக்கி - தேருறுப்புக்களைச் செய்து எங்ஙனம் முன்பு சேர்த்தார்களோ, அவ்வகையாகவே பிரித்து என்றபடி. தேரின் கொடிஞ்சி முதலிய உறுப்புக்கள் தனித்தனி நாவாய்களிற் பிரித்துச் சேர்க்கப்பட்டதற்கு, உடம்பைக் கூட்டும் வினை உறுப்புக்களைத் தனித்தனிச் சேர்த்தலை யுவமை கூறினர் என்பாருமுளர்: இப்பொருளில், உடம்பைக் கூட்டும் வினை-ஸந்தாநகரணியென்னும் அற்றவுறுப்புக்களை மீண்டும் ஒட்டவல்ல விச்சை: அவ்விச்சைவல்லான் வெட்டப்பட்ட உடலுறுப்புக்களை யொட்டுதலின்பொருட்டு ஓரிடத்துச் சேர்த்தல் நிகழு மென்பது அறிக. அற்ற உடலைச் சேர்ப்பவன் சேதநனே யாயினும், சேர்த்தற்கு முக்கியகாரணம் அவ்விச்சையே யாதலால், அதன்மேலேற்றி 'வினையென' எனப்பட்டது. இனி, இறந்தபிறகு மீண்டும் பிறக்குமாறு கை கால் முதலிய உறுப்புக்களைப் பிறத்தற்குஏதுவாகியவினையானது உயிரின்பொருட்டுச் சேர்ப்பிப்பதுபோல, நாவாய்களில் தேரின் உறுப்புக்களையேற்ற அவை சென்றன என்பாருமுளர்: இப்பொருளில் ஸந்தாநகரணி என்னும் விச்சைவல்லாரிடத்துப்போலத் தனித்தனியே கை கால் முதலிய உறுப்புக்கள் ஆங்குக் காண வியலா தாதலால், உவமம் பொருந்து மென்று தோன்றவில்லை. இனி, பரகாய பிரவேசத்தொழில் என்று கூறுவதிலும் இயைபின்மை யறிக.பி-ம்:—[1]சுடர்க். [2]சுடர்ப். [3]உயிர்கள். [4]கூடும்.(கoசுக)

## டுஉ.—குதிரைகள் நாவாய்களிற் சென்றமை.

நாலிரண் டாய கோடி [1]நவையினு வாய்கண் மீதாச்
சேறிரண் டனைய வாய [2]கதியொடு நதியிற் சென்ற
பாறிரண் டனைய மெய்ய பயந்திரண் டனைய நெஞ்ச
காறிரண் டனைய கால கடுநடைக் கலினப் பாய்மா.

(இ - ள்.) பால் திரண்டு அனைய மெய்ய-பால் திரண்டாற்போன்ற சரீரத்தையுடையனவும், பயம் திரண்டு அனைய நெஞ்ச - அச்சம் திரண்டாற்

போன்ற மனத்தையுடையனவும், கால் திரண்டு அனைய கால-காற்றுத் திரண்டாற்போன்ற கால்களையுடையனவுமாகிய, கடு நடை கலினம்-மிக்க வேகமாகிய நடையோடுகூடிய கடிவாளம் பூண்ட, நால் இரண்டு ஆய கோடி பாய்மா-எட்டுக்கோடிக் குதிரைகள்,—சேல் திரண்டு அனைய ஆய கதியொடு-சேல் மீன்கள் திரண்டாற் போன்ற விரைந்த நடையுடன் கூடிய, நவை இல்-குற்றமற்ற, நாவாய்கள்-நாவாய்களின், மீது ஆ-மேலேற்றப்பட்டு, நதியில் சென்ற - அந்தக் கங்காநதியிற் சென்றன; (எ - று.)

வெண்மைநிறமுடையவை உத்தமக்குதிரைக ளாதலால் 'பால்திரண்டனைய மெய்ய' என்றும், புதிய இடத்தைக் கண்டவிடத்து மருளுதல் குதிரைகளுக்கு இயல்பு ஆதலால், 'பயந் திரண்டனைய நெஞ்ச' என்றும், காற்றுய்ப்பறந்து செல்லவல்ல கால்களையுடையனவாதலால், 'கால் திரண்டனையகால' என்றும் கூறினா. கங்கைப்படலத்தில் "ஆயிரமம்பிக்கு நாயகன்" எனக் கூறியமையால், நாலிரண்டாய கோடியைக் குதிரைக்கு அடையாக்கப்பட்டது. இனி, அங்கு ஆயிரமென்பது-பல என்னும்பொருட்டு எனக் கொள்ளின், நாவாய்க்கே நாலிருகோடியை அடைமொழியாக்கலாம். பி-ம்:—[1]நவையில நாவாய் நன்னீர்ச், நவையில நாவாய் தண்ணீர்ச், நவையிலவாய தண்ணீர்ச். [2]கதியெனநிமிரச. (க௦சுஉ)

ருந.—நாவாயில் மங்கைமாரின்தோற்றம்.

ஊடுற [1]நெருக்கி யோடத் தொருவர்[2]முன் னொருவர் கிட்டிச்
சூடகத் தளிர்க்கைம் மாதர் [3]குழுமினர் துவன்றித் தோன்றப்
[4]பாடியல் களி[5]நல்[6]யானைப் பந்தி[7]யங் கடையிற் குத்தக்
கோடுகண் [8]மிடைந்த வென்ன மிடைந்தன குவவுக் கொங்கை.

(இ - ள்.) சூடகம் - வளையல்களணிந்த, தளிர் கை மாதர்-தளிர்போன்ற கைகளையுடைய மாதர்கள், ஊடு உற நெருக்கி-இடையே மிகவும் நெருக்கி, ஓடத்து-நாவாய்களில், ஒருவர் முன் ஒருவர் கிட்டி-ஒருவர்முன்னே ஒருவர் சமீபித்து, குழுமினர்-திரண்டு, துவன்றி தோன்ற - நெருங்கித் தோன்றுதலால்,—பாடு இயல்-பெருமையமைந்த, களி-களிப்பையுடைய, நல் யானை பந்தி-உத்தமவிலக்கணமமைந்த யானைகளின் வரிசையில், அம் - அழகாகிய, கடையின்-முனைகளால், குத்த-குத்துமாறு, கோடுகள் மிடைந்த என்ன - (அவற்றின்)கொம்புகள் நெருங்கினவென்று சொல்லும்படி. குவவு கொங்கை-(அம்மாதராரின்) திரட்சியாகிய தனங்கள், மிடைந்தன-நெருங்கின; (எ - று.)

எதிரெதிராகநிற்கிற யானைப்பந்திகளில் அவற்றின் தந்தங்கள் ஒன்றோடொன்று குத்துமாறு நெருங்குவதுபோல, ஓடத்தினுள் எதிரெதிராகநிற்கின்ற மகளிர்குழாத்தில் அவர்களின் தனங்கள் மிடைந்தனவென்க. பி-ம்:—[1]நெருங்கி. [2]முன்பு. [3]தழுவினர். [4]வாடிளங், மாடிளங். [5]மால், மா. [6]யானையத்தி. [7]அங்கெதிர்ந்துகுத்தக். [8]மிடைந்தது. (க௦சுந)

ருச.—கங்கையில்நீந்தும் யானைகளின்கும்பங்களது காட்சி.

[1]பாங்கினுத் தரிய மானப் படர்திரை தவழப் பாரின்
வீங்குநீ ரழுவந் தன்னுள் [2]விழுமதக் கலுழி வெள்ளத்
தோங்கல்க டலைக டோன்ற வொளித்தவ ணுயர்ந்த கும்பம்
பூங்[3]குழற் கங்கை நங்கை முலையெனப் பொலிந்த [4]மாதோ.

(இ - ள்.) பாங்கின் - அழகினையுடைய, உத்தரியம் மான - உத்தரியத்தைப்போல, படர் திரை தவழ - பரந்த அலைகள் தவழ, பாரின் - நிலத்தில், வீங்கு நீர் அழுவம்தன்னுள் - மிகுந்த நீரையுடைய யாற்றில், விழும் - ஒழுகாநின்ற, மதம் கலுழி வெள்ளத்து - மதமாகிய கலங்கனீர்ப்பெருக்கையுடைய, ஓங்கல்கள் - மலைபோன்ற யானைகள், தலைகள் தோன்ற - (தம்) தலைகள் (யாற்றின்மீது) காணப்பட, ஒளித்த - (உடல்முழுதையும்) மறைத்துள்ள, அவண்-அந்தக்கங்கையாற்றுப்பெருக்கில், உயர்ந்த-உயர்ந்து தோன்றுகின்ற, கும்பம்-மஸ்தகங்கள்,—பூ குழல்-அழகாகிய கூந்தலையுடைய, கங்கை நங்கை-கங்கா தேவியின், முலை என-தனங்கள்போல, பொலிந்த-விளங்கின; (எ-று.)

கங்கையாற்றுத்திரையினிடையில் யானைகளின் மத்தகங்கள் மாத்திரந் தோன்றுபவை, கங்காதேவியின் கொங்கைகள் தோன்றுவதுபோலு மெனக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மாது ஓ-ஈற்றசை. ஒளித்தவண்-தொகுத்தல். பி-ம்:—[1]பாங்கினுத்தரிகம், பாங்கினிற்கினிய. [2]வீழ்மதக், வீழ்வதக். [3]கமழ். [4]அன்றே, அம்மா. (க௦௬௪)

ருரு.—செல்லும்நாவாய்கள் ஒன்றோடொன்று தாக்கும்போது மடவாரின் மருண்ட நோக்கின் வருணனை.

பொலங்குழை மகளிர் நாவாய் போக்கினொன் றொன்று தாக்க
மலங்கின ரிரண்டு பாலு [1]மறுகினர் வெருவி நோக்க
[2]வலங்குநீர் வெள்ளந் [3]தள்ளி யழிதர வங்கு மிங்குங்
[4]கலங்கலின் வெருவிப் பாயுங் கயற்குல [5]நிகர்த்த கண்கள்.

(இ - ள்.) நாவாய் - மரக்கலங்கள், போக்கின் - செல்லும் வேகத்தில், ஒன்று ஒன்று தாக்க - ஒன்று மற்றொன்றை மோத, (அவற்றின் மீதேறி யிருந்த), பொலம குழை மகளிர் - பொற்குழைகளையணிந்த மாதர்கள், மலங்கினர் மறுகினர் வெருவி - மனங்கலங்கி மயங்கிப் பயந்து, இரண்டு பால்உம் நோக்க - இருபக்கங்களிலும் பார்க்க,-கண்கள்-(அவர்களுடைய) கண்கள்,—அலங்கும் - அசைகின்ற, நீர் வெள்ளம் தள்ளி - நீர்ப்பெருக்கினால் தள்ளப் படுதலால், அழிதர-நிலையழிய, அங்குஉம் இங்குஉம்-அங்குமிங்குமாக, கலங்கலின் - கலங்குவதனால்,—வெருவி பாயும்-பயந்து குதிக்கின்ற, கயல் குலம் நிகர்த்த - கயல்மீன்களின்தொகுதியை யொத்திருந்தன; (எ - று.)

நாவாய் ஒன்றோடொன்றுபடுவதால் அஞ்சி மருண்டுநோக்கும் மங்கைமார்கண்கள், நீர்ப்பெருக்குத் தள்ள நிலைகெட்டு கலங்குதலால் வெருவிப்பாயுங் கயல்மீனினத்தை யொக்கு மென்க. உவமையணி. பி-ம்:—[1]மயங்கினர். [2]அலங்கனீர், இலங்குநீர். [3]தன்னிலழிதர, தள்ளியெழுதலால், தன்னிலமூழ்ந்தலால், தன்னுளாழுந்தலால். [4]கலஙகின. [5]நிகர்ப்ப. (கoசுரு)

**ருசு.—எயினர் நாவாயைத் துடுப்புக்கொண்டுசெலுத்த, நீர்த்திவலையால் மடவாரின் ஆடைகள் நனைதல்.**

இயல்வுறு செலவி னாவா யிருகையு மெயினர் தூண்டத்
[1]துயல்வன [2]துடுப்பு வீசுந் துவலைகண் [3]மகளிர் மென்றூ
[4]சுயல்வுறு பரவை யல்கு [5]லொளிபுறத் தளிப்ப வுள்ளத்
தயர்வுறு மதுகை [6]மைந்தர்க் [7]கயாவுயிர்ப் பளித்த தம்மா.

(இ - ள்.) இயல்வுஉறு செலவின் நாவாய் - பொருந்திய மிகுவேகத்தையுடைய நாவாய்களின், இரு கைஉம் - இருபக்கத்தும், எயினர் தூண்ட - வேடர் உந்துதலால், துயல்வன - அசைவனவாகிய, துடுப்பு-துடுப்புகளால், வீசும் - எறியப்படுவனவாகிய, துவலைகள் - நீர்த்துளிகள், மகளிர் - மாதர்களுடைய, மெல் தூசு - மெல்லிய ஆடையில், உயல்வு உறு - தங்கிமறைகின்ற, பரவை - பரந்திருத்தலைக்கொண்ட, அல்குல் - அல்குலினது, ஒளி - ஒளியை, புறத்து அளிப்ப - வெளியே தோற்றுவிக்க, (அது), உள்ளத்து அயர்வு உறும்-மனததளர்சசியடைந்திருக்கிற, மதுகை மைந்தர்க்கு-வலிமையுள்ள வீரர்களுக்கு, அயாஉயிர்ப்பு-துன்ப நீக்கத்தை, அளிததது - உண்டாக்கிற்று; (எ - று.)

எயினர் நாவாயின் இருபக்கத்தும் உந்துந் துடுப்புக்கள் நீர்த்திவலைகளை வீசி மடவாரின் ஆடைகளை நனைக்க, அப்போது அம்மடவாரின் அல்குல் வீரர்க்குக் காணப்பட்டு மனக்களிப்பை விளைத்ததென்றவாறு. பரவையல்குல் - பரவைபோன்ற அல்குலுமாம். அம்மா-வியப்பிடைச்சொல். பி-ம்:—[1]துயல்வரு. [2]துடுப்பின். [3]மிளிரும் [4]உயலுறு, உயப்பெறு, இயல்வுறு. [5]ஒளிப்புறவொளிர்ப, ஒளிப்புகுந்தொளிப்ப, ஒளிப்புகுந்தொளிர, ஒளிர்ப்பறவொளிப்ப, ஒளிப்புறத்தளிர்ப்ப, ஒளிபுகுந்தொளிப்ப. [6]மைந்தர். [7]அயர்வுயிர்ப்பளித்ததன்றே, அயர்வுயிர்ப்பளித்ததம்மா, அயாவுயிர்ப்பொழிந்ததன்றே, அயாவுயிர்ப்பொழிந்தவன்றே. (கoசுசு)

**ருஎ.—ஏறிய சேனைகளை யிறக்கிவிட்டு, மீண்டுவருகிற நாவாய்களின் வருணனை.**

இக்கரை யிரைத்த சேனை யெறிகடன் [1]முகந்து வெஃகி
யக்கரை யடைய வீசி [2]வறியன வணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர் பொறுத்தன [3]போக்கிப் போக்கி
[4]யக்கணத் துவரி மீளு [5]மகன்மழை [6]நிகர்த்த [7]வம்மா.

(இ-ள்.) இ கரை - இக்கரையிலேயுள்ள, இரைத்த சேனை - ஆரவாரிக்கிற சேனைகளாகிய, எறி கடல் - (கரையை) மோதுகிற கடலை, வெஃகி முகந்து - விரும்பி யேற்றிக்கொண்டு, அ கரை அடைய வீசி - அக்கரையிற் சேரும்படி விரைவிற்செலுத்தி, வறியன அணுகும் - ஒருபொருளுமில்லாதனவாய் மீண்டுவருகிற, நாவாய் - மரக்கலங்கள்,—அலை ஆழி புக்கு - அலைகளையுடைய கடலிற் சேர்ந்து, நல் நீர் - (அதன்) சிறந்த நீரை, பொறுத்தன-மொண்டு எடுத்துக்கொண்டவையாய், போக்கி போக்கி - (அதனை) முற்றுஞ் சொரிந்துவிட்டு, அ கணத்து உவரி மீளும் - அந்தக்கணத்திலே (மீண்டும் நீர் முகந்துகொள்ளுதற்குக்) கடலைநோக்கித் திரும்பிவருகிற, அகல் மழை-பரந்த மேகங்களை, நிகர்த்த - ஒத்தன; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்.

தற்குறிப்பேற்றவுவமையணி. நாவாய் செலுத்துபவரது விருப்பத்தை நாவாயின்மேலேற்றி, 'வெஃகிமுகந்து' என்றார். கடலின் உவர்நீரை மேகம் நல்லநீராக்குவது தோன்ற, 'நன்னீர்' எனப்பட்டது. பி - ம்:—[1]முகந்த மேகம், இனிதினேற்றி, முகந்தாலேறி, முகந்தவேகி. [2]அறிவென. [3]பொங்கிக்கக்கி, பொங்கியேங்கி, பொங்கிப்பொங்கி. [4]அக்கணம். [5]கனமழை. [6]நிகர்த்தது. [7]மாதோ. (கoகுஎ)

ருஅ.—நாவாயில் தண்டங்களில்விளங்குங் கோடிகளின்வருணனை.

அகிலிடு தூப மன்ன வாய்மயிற் பீலி யார்த்த
[1]முகிழுடை முரண்மாத் தண்டு கூம்பென முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொற் [2]றட்டிடைத் தொடுத்த மு
நகுகொடி நெடிய பாயி [3]னினமெனச் சென்ற நாவாய். [த்த

(இ - ள்.) அகில் இடு தூபம் அன்ன - அகிற்கட்டையாற் புகைத்த புகையையொத்த, ஆய் மயில் பீலி - ஆராய்ந்தெடுத்த மயிற்பீலி, ஆர்த்த-கட்டப்பட்டனவாகி, முகிழ் உடை - கூம்புதலைக்கொண்ட, முரண் மா தண்டு - வலிய பெரியதண்டுகள், கூம்புஎன - பாய்மரம்போல் தோன்ற,—முகிலின் வண்ணம் துகிலொடு தொடுத்த-மேகத்தின் நிறத்தைக்கொண்ட சீலைகளால் தொடுக்கப்பட்டனவும், செம்பொன் தட்டிடை தொடுத்த - செம்பொற்றட்டினிடையே நடப்பட்டனவுமாகிய, முத்தம் நகு - முத்துக்களுடன் விளங்குகின்ற, கொடி - (தண்டஙகளோடு தோன்றுங்) கொடிகள், நெடிய பாயின் இனம் என-நீண்ட மரக்கலப்பாய்கள்போலத்தோன்ற, நாவாய் - அந்நாவாய்கள், சென்ற - கங்கையாற்றிற்சென்றன; (எ - று.)

துவசங்கட்டிய தண்டமும் துவசங்களும் - பாயும் பாய்மரமும்போலத் தோன்ற, நாவாய் சென்றனவென்க. [3]நவ்வென என்றபாடத்துக்கு-நவ்வு - பெரியமரக்கலமென்றும், நாவாய் - சிறியமரக்கலமென்றும் இங்ஙனம் வேறுபாடுகொண்டு, ஒன்றற்குஒன்றை உவமைகூறிய தென்பர். பி ம்:—[1]முகுளிடு, முகிலுடு, முகிழிடு. [2]தகட்டிடை. (கoகுஅ)

௫௯.—மகளிரேறிச்சென்ற நாவாய்களின் வருணனை.

[1]ஆனனங் [2]கமலத் [3]தன்ன மின்னன்ன வமிழ்தச் செவ்வாய்த்
தே[4]னனை குழலா ரேறு மம்பிகள் [5]சிந்து முத்த
மீனென விரிந்த கங்கை விண்ணெனப் பண்ணை முற்றி
வானவர் மகளி ரூரு மானமே நிகர்த்த மாதோ.

(இ - ள்.) விரிந்த கங்கை - விசாலமான கங்காநதி, விண் என - ஆகாயம்போலிருக்கவும்,—சிந்தும் முத்தம்-(அந்நதியிற்) சிந்துகின்ற முத்துக்கள், மீன் என - (ஆகாயததில் விளங்குகிற) நட்சத்திரங்கள்போலிருக்கவும்,—கமலத்து அன்ன ஆனனம்-செந்தாமரைமலரையொத்த முகத்தையும், அமிழ்தம் செவ் வாய் - அமிர்தம்போல (இனிமைமிக்க) சிவந்த வாயையுமுடைய, மின் அன்ன தேன் நனை குழலார் - தேனினால் நனைந்த கூந்தலையுடையமின்னலையொத்த மகளிர், ஏறும் - ஏறிய, அம்பிகள் - நாவாய்கள்,—பண்ணை முற்றி- நீர்விளையாட்டை முடித்து, வானவர் மகளிர் ஊரும் - தேவமாதர் ஏறிச்செல்லுகிற, மானமே நிகர்த்த - விமானங்களையே ஒத்தன; (எ - று.)

கங்காநதி வானத்தைப்போலவும், அதிற் சிந்தும் முத்துக்கள் நட்சத்திரங்கள்போலவுமிருக்க,மகளிரேறிச் செல்லும் நாவாய் அவ்விண்ணிற் செல்லும் விமானம்போலுமென்றார். தற்குறிப்பேற்றவுவமையணி. சிந்தும் முத்தம் - கொழிக்கின்ற முத்துக்கள். மகளிர்க்குத் தேவமாதரை உவமை கூறியதனால், அவர்களது அழகுமிகுதியும் செல்வச்சிறப்பும் இன்பக்களிப்பும் விளங்கும். மகளிர்க்கு மின்ன லுவமை, உடம்பிெனாளிக்கு. தேன் - சூடிய பூக்களில் உள்ளது. பண்ணை - மகளிராடல். பண்ணைமுற்றி - தோழியர் கூட்டத்தாற் சூழப்பட்டு என்பாரும் உளர். பி-ம்:—[1]ஆனபொற். [2]கமலம். [3]அன்னத்தினமென, அன்னவினமென. [4]அலர். [5]சிதறும். (கOசுக)

௬௦.—துடுப்புக்கோண்டுள்ள நாவாய்கள் சென்ற வருணனை.

துளிபடத் துழாவு திண்கோற் றுடுப்பிரு காலிற் றோன்ற
நளிர்புனற் கங்கை யாற்றி [1]னடந்தெனச் செல்லு நாவாய்
களியுடை மஞ்ஞை யன்ன கனங்குழை கயற்கண் மாத
ரொளிரடிக் கமலந் தீண்ட வுயிர்படைத் தனவே யொத்த.

(இ-ள்.)துளி பட துழாவு-துளிகளெழும்படி துழாவுகின்ற,திண் துடுப்பு கோல்-திடமான துடுப்புக்கொம்புகள், இரு காலின் தோன்ற - இரண்டுகால்களைப்போலக் காணப்பட,நளிர் புனல்-குளிர்ந்த நீரையுடைய,கங்கைஆற்றில்- கங்காநதியில், நடந்துஎன-நடந்தாற்போல, செல்லும் - போகின்ற, நாவாய் - ஓடங்கள்,—(சாயலால்),களிஉடை-களிப்பையுடைய,மஞ்ஞை அன்ன-மயிலையொத்த,கனம்குழை-கனவியகுழையையுடைய,கயல் கண்-சேல்மீன்போன்ற

கண்களைக்கொண்ட, மாதர் - மாதர்களுடைய, ஒளிர் - விளங்குகின்ற, அடி கமலம் தீண்ட - பாததாமரைகள் படுதலால், உயிர் படைத்தன ஒத்த-உயிர் பெற்றனவே யொத்திருந்தன; (எ - று.)

மகளிர் தமதுபாதங்களைவைத்து ஏறியபிறகு துடுப்புக்களால் தள்ளப் பட நாவாய் கங்கையாற்றின்மீது செல்வதை, மகளிர் பாதந்தீண்டப்பெற்ற தால் நாவாயும் உயிர் படைத்துக் காலாற்செல்வதை யொத்திருந்தனவெனக் குறித்தார்; **தற்குறிப்பேற்றவணி.** மஞ்ஞையன்னமாதரென்க. **பி - ம்:—** [1]கண்டெனச். (௩0௭0)

**௬௧.—முனிவர் தவவலிமையால் ஆகாயமார்க்கமாகக் கங்கைகடத்தல்.**

மையறு விசும்பின் மண்ணின் [1]மற்றுமோ ருலகின் முற்று
மெய்வினை தவமே யன்றி [2]வேறுமொன் றுளதோ கீழோர்
செய்வினை நாவா யேறித் [3]தீண்டலர் மனத்திற் செல்லு
மொய்[4]விசும் போட மாகத் தேவரின் முனிவர் போனார்.

(இ - ள்.) (இங்ஙனம் படைவீரர் முதலியோர் நாவாயேறிச்செல்ல), முனிவர்-இருடிகள்,—கீழோர் செய் வினை நாவாய் ஏறி தீண்டலர்-கீழ்ப்பட்ட சாதியாரால் செய்யப்பட்ட ஓட்டுதற்றொழி லமைந்த ஓடங்களைத்தீண்டியேறா தவர்களாய், மனத்தில் செல்லும் மொய் விசும்பு - மனத்தில் (இச்சித்தமாத்தி ரத்திற்) செல்லுகிற பொருந்திய ஆகாயசஞ்சாரத்தையே, ஓடம் ஆக - ஓடத் திலேறிச்செல்வதாகக்கொண்டு, தேவரின் - (விமானங்களிலேறி ஆகாயமார் க்கமாகச் செல்லுகிற) தேவர்கள்போல, போனார் - (அக்கரை) சென்றார்கள்; மை அறு விசும்பில் - குற்றமில்லாத விண்ணுலகத்திலும், மண்ணில் - மண் ணுலகத்திலும், மற்றுஉம் ஓர் உலகில் - வேறோருலகமாகிய கீழுலகத்திலும், முற்றுஉம்-(ஆக) எல்லாவுலகங்களிலும், மெய் வினை-உண்மையாக[த் தவறு மற் பலிக்கிற] தொழில், தவம் ஏ அன்றி-தவமேயல்லாமல், வேறுஉம் ஒன்று உளதுஓ - வேறேயும்ஒன்று இருக்கின்றதோ? (எ - று.)

இரகுகுலபுரோகிதனான வசிஷ்டன் முதலிய முனிவர்கள் தவத்தாற் சித்திபெற்றவர்க ளாதலால், மனத்திற் சங்கற்பித்தமாத்திரத்தால் ஆகாய மார்க்கமாக யாற்றைக் கடந்து சென்றார்க ளென்ற சிறப்புப்பொருளை 'வேண்டிய வேண்டியாங்கு எய்தற்பயத்ததாய தவத்திற் சிறந்தது எவ்வுலகத் திலும் எதுவுமில்லை' என்ற பொதுப்பொருளாற் சாதித்ததனால், **வேற்றுப் பொருள்வைப்பணி.** ஏறிததீண்டலர் - தீண்டிஏறலர் என விகுதி பிரித்துக் கூட்டுக. ஓடுவது - ஓடம்: காரணக்குறியென்ப. 'கீழோர் செய்வினை நாவா யேறித்தீண்டலர்' என, முனிவரது ஆசாரமிகுதி விளக்கியவாறு. **பி - ம்:—** [1]மாறும். [2]மேலும். [3]தீண்டிலர் [4]விசும்பூடே. (௩0௭௧)

**வேறு.**

**௬௨.—சேனைகள்யாவுங் கங்கையைக் கடத்தல்.**

அறுபதி னுயிர பக்கு ரோணியென்
றிறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு [1]மாந்தரு மகளிர் வெள்ளமுஞ்
செறிதிரைக் கங்கையின் கிடக்கச் [2]சென்றவே.

(இ - ள்.) அறுபதினாயிரம் அக்குரோணி என்று - அறுபதினாயிரம் அக்ஷௌகிணிகள் என்று, இறுதி செய் - (கணக்கு) முடிவுசெய்யப்பட்ட, சேனை உம் - சேனைகளும், நகர் - பட்டணத்திலுள்ள, மறு அறு - குற்றமற்ற, எல்லை தீர் மாந்தர் உம் - அளவுகடந்த பிரஜைகளும், மகளிர் வெள்ளம் உம் - மாதர்கூட்டமும், செறி திரை கங்கை - நெருங்கிய அலைகளையுடைய கங்கா நதி, பின் கிடக்க-பின்னிடும்படி, சென்ற-போயின; (எ - று.) பி-ம்:—[1]மாக்களும். [2]சென்றதே. (கஎ௨)

சுரு.—சேனைகள்யாவுங் கடந்தபின் பரதன் ஓடமேறுதல்.

சுழித்துநீர் [1]வருதுறை யாற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக் கள்ள வாசையை
யழித்து[2]வே றவனிபண் டாண்ட வேந்தரை
யிழித்துமே லேறினான் றானு மேறினான்.

(இ - ள்.) சூழ் படை - (தன்னைச்) சூழ்ந்துவந்த சேனை, சுழித்து நீர் வரு - சுழிகளோடுகூடி நீர் பெருகப்பெற்ற, துறை - பலஇறங்குதுறைகளையுடைய, யாற்றை - கங்கைநதியை, கழித்து நீங்கியது என-கடந்து சென்றதாக,—(அதன்பின்),—கள்ளம் ஆசையை அழித்து - வஞ்சனையோடுகூடின பொருளாசையை நீக்கி, (அதனால்), அவனி பண்டு ஆண்ட வேறுவேந்தரை இழித்து - பூமியைப் பழமையாக அரசாண்ட மற்றையரசர்களைக் கீழ்ப்படுத்தி, மேல் ஏறினான் தான் உம் - (அவ்வரசர்களெல்லோரினும்) மேன்மையையடைந்தவனான பரதனும், ஏறினான் - (ஓடத்தில்) ஏறினான்; (எ - று.)

'கழித்துநீங்கிய தென' என்பதற்கு - கடந்துசென்றதென்று (வேடர்) சொல்ல(க்கேட்டு)என்றும், கடந்துசென்றதென்று அறிந்து என்றும் உரைப்பினும் அமையும். தனக்கு வலியக்கிடைத்த இராச்சியத்தை யாளுதலில் ஆசையில்லாமல் அதனைத் தமையனுக்கே கொடுக்க வந்ததனால் பரதனுக்கு ஒப்புஉயர்வு இல்லாதசிறப்பு உளதான தன்மை, கீழ் ௬௦, ௬௪ - ஆங் கவிகளிலும் விளக்கப்பட்டது. பி - ம்:—[1]வருங். [2]வென்று. (கஎ௩)

சுச.—சத்துருக்கினன் தாய்மார்மூவர் சுமந்திரன் குகன் என்ற இவர்கள் ஏறியதும், பரதனேறிய ஓடஞ் செல்லுதல்.

தன்னன தம்பியுந் தாயர் மூவருஞ்
சொன்னதேர் வலவனுந் தூய தோழனுந்
துன்னின ரேறலுந் துழாது டுப்பெனு
நன்னயக் காலினா னடத்தன் மேயினான்.

(இ - ள்.) தன் அன தம்பி உம்-தன்னைத் தானேயொத்த [வேறு உவமை பெறாத] தம்பியான சத்துருக்கினனும், தாயர் மூவர் உம் - (கௌசலியை கைகேயி சுமித்திரை யென்னும்) தாய்மார் மூன்றுபேரும், சொன்ன தேர் வலவன் உம்-சிறப்பித்துச்சொல்லப்படுகிற தேர்ப்பாகனான சுமந்திரனும், தூய தோழன் உம் - பரிசுத்தியையுடைய தோழனான குகனும், (ஆக இவர்கள்),

துன்னினர்ஏறலும்-(பரதனேறின ஓடத்தில்)நெருங்கியேறின வளவிலே,—துழா துடுப்பு எனும் நல் நயம் காலினால்-துழாவுகிற துடுப்புக்கோல்களென்கிற சிறந்த அழகிய கால்களினால்,நடத்தல் மேயினான்-(நாவாயாகிய புருஷன்) செல்லத்தொடங்கினான்; (எ - று.)

நாவாயென்பது, இச்செய்யுளுக்குத் தோன்றாஎழுவாய். வடமொழியில் 'நௌ:' என்னும் நாவாயின்பெயர் ஆண்பாற்சொல்லாதலாலும், இருபுறமுந் துழாவும் இரண்டுதுடுப்புக்கால்களை யுடைமையாலும், நாவாயைப் புருஷனாகக்குறித்தார். உத்தமகுணத்துக்கு வரம்பாகிய பாகவதஸேஷத்வம் தலையெடுத்தவனாதலால், சத்துருக்கினனுக்கு வேறுஉவமையில்லை யாயிற்று. தன் அன-பரதனையொத்த என்றுமாம். சொன்ன - (குகனது தன்மையைக் கீழ்ப் பரதனுக்குக்) கூறின என்றும், (சமயத்துக்கேற்ற ஆலோசனைகளைச்) சொல்லுந்தன்மையுள்ள என்றுமாம். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. (கoஎச)

வேறு.

கூரு.—அங்ஙனம் யாவரும் ஒருங்குநாவாயேறிச் செல்லுகையில்,
கோசலையைச் சுட்டி இவர்யாரென்று குகன் வினவ, அதற்குப்
பரதன் விடைகூறுதல்.

சுற்றத்தார் தேவரொடுந் [1]தொழநின்ற கோசலையைத் தொழுது நோக்கிக், [2]கொற்றத்தார்க் குரிசிலிவ ராரென்று குகன் வினவக் [3]கோக்கள் வைகு, முற்றத்தான் முதற்றேவி மூன்[4]றுலகு மீன்றானை முன்னீன் றானைப், பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான்பிறத்த லாற்றுறந்த பெரியா ளென்றான்.

(இ - ள்.) சுற்றத்தார் - உறவினர்களும், தேவரொடுஉம் - தேவர்களும், தொழ-வணங்கும்படி, நின்ற-(சிறப்புற்று)நின்ற, கோசலையை-கௌசலையை, நோக்கி - பார்த்து, குகன்—, 'கொற்றம் தார் குரிசில் - வெற்றிமாலையை யுடைய அரசனே! இவர் ஆர்—?' என்று—, தொழுது வினவ - (பரதனை) வணங்கிக்கேட்க,—(அதற்குப் பரதன்),—'(இவள்), கோக்கள் வைகும் முற்றத்தான் முதல் தேவி-அரசர்கள் தங்கியிருக்கப்பெற்ற தலைவாயிலையுடைய தசரதனது மூத்தமனைவி: மூன்று உலகுஉம் ஈன்றானை முன் ஈன்றானை - மூவகைப்பட்ட உலகங்களையும் படைத்த பிரமனை முன்பு படைத்த திருமாலாகிய இராமபிரானை, பெற்றத்தால்-(தான் மகனாக) ஈன்றதனால், பெறும் - அடைதற்கு உரிய, செல்வம்-பாக்கியத்தை,யான் பிறத்தலால்-நான் பிறந்ததனால், துறந்த-இழந்த, பெரியாள் - பெருமையையுடையவள்,' என்றான்—.

இராமனென்ற மூத்தமகனைப் பெற்றதனால் இந்த அரசச்செல்வமெல்லாம் அவ்விராமபிரானுக்கே உரியதாகு மாதலால்,இவள், அரசன்தாய் என்ற பெருஞ்சிறப்போடு இருத்தற்கு உரியள்; என்மாதாவான கைகேயி என்பொருட்டு இராச்சியத்தை வரமாக வாங்கின ளாதலால், அவ்வகைச்சிறப்பு இவ

ருக்கு நீங்கிற்று;இவ்வாறு பிறர்க்கு இன்றியமையாத சிறப்புக்களையெல்லாம் தவிர்க்குமாறு நேர்ந்துள்ளது எனக்கு இந்தப்பாழ்ஞ்சன்மம் என்றுவெறுப்புத் தோன்றப் பரதன் விடைகூறுகின்றன னென்க. சுற்றத்தார்தொழுதல்-சக்ர வர்த்தியின் பட்டமகிஷியாதலாலும், தேவர் தொழுதல் - தேவகாரியநிமித்த மாகத் திருமால் அவதரிக்கப்பெற்ற திருவயிற்றினளாதலாலும் என்க. சுற்றத் தார் தொழுதற்குச் செல்வச்சிறப்பும், தேவர்தொழுதற்குக் கற்புச்சிறப்பும் காரணமாதலு மாம். கோக்கள் - சக்கரவர்த்தியைக் காணவும் வணங்கவும் திறைசெலுத்தவும் வந்து அரண்மனையினுட்செல்ல இடம்பெறாது வெளியிற காத்திருப்பவர். கோசலை முதலியோரைக் கண்டபோது மன்னவன் தேவிய ரென்று தெரிந்த தன்றி, இன்னாரின்னாரென வுணரப்படாமையால், அதனை யறியும்பொருட்டுக் குகன் வினவ, பரதன் விடைகூறுகின்றன னென்க.

கோசலை-வடசொல்திரிபு; கோசலதேசத்தரசன் மகளென்று பொருள்: தக்ஷிணகோசலத்தரசன்மகள் இவள். உத்தரகோசலம்-தசரதர்நாடு. கோஸலம் என்னும் வடசொல்-க உஸல எனப் பிரிக்கப்பட்டு, படைத்தற்கடவுளான பிரமனும் உல்லாசப்படத்தக்க தென்னும் பொருளைத் தரும். மூன்று உலகு- மேல் கீழ் நடு என்பன. இனி, கிருதகம் அகிருதகம் கிருதகாகிருதகம் என்று மூவகைப்பட்ட உலகம் என்றலும் ஒன்று. (கிருதகம்-அவாந்தர பிரளயத்தில் அழிவனவான கீழேழுலகமும், பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் என்ற மேல்மூன்றுலோகங்களும்: அகிருதகம் - அவ்வாறு அவாந்தர பிரளயத்தில் அழியாதனவான ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மூன்று உலகங்கள்: கிருதகாகிருதகம்-அவ்வாறான பிரளயத்தில் பாதியழிந்தும் பாதி யழியாமலும் இருப்பதான மஹர்லோகம்.) பெற்றத்தால் - பெற்றதால் என்பதன் எதுகைநோக்கிய விரித்தல்விகாரம். தேவர்-விண்ணுலகத்து வாழ் கின்றவரென்று காரணப்பொருள் படும். பி-ம்:—[1]தொழாநின்ற, தொழு கின்ற. [2]வெற்றித். [3]வேந்தர். [4]உலகம். (சு0எரு)

**சுசு.—அப்போது குகன் வருத்தத்தோடு கோசலையை வணங்க, அவள் வினவிக் குகனைத் தெரிதல்.**

என்றலுமே யடியின்மிசை [1]நெடிதுவிழுந் தழுவானை யிவன்யா
[2]ரென்று, கன்றுபிரி காராவின் றயருடைய கோடியினவக் கழற்
கான் மைந்த, நின்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்கு மிளையவற்கு
மெனக்கு மூத்தான், குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா
[4]னிந்நின்ற குரிசி லென்றான்.

(இ - ள்.) என்றலும்-என்று (பரதன்) சொன்னவளவிலே,—அடியின் மிசை நெடிது விழுந்து அழுவானை-(கௌசலியாதேவியின்) திருவடிகளின் மேல் நன்றாகவிழுந்து அழுபவனை குகனைக் குறித்து, கன்று பிரி கார் ஆவின் துயர் உடைய கொடி-கன்றைப்பிரிந்த காராம்பசுவின் துன்பம்போன்ற புத்

நிரவிரகத்துன்பத்தையுடைய பூங்கொடிபோன்ற கௌசலை, இவன் யார்? என்று வினவ—,—கழல் கால் மைந்தன் - வீரக்கழலையணிந்த பாதத்தை யுடைய குமாரனான பரதன், 'இ நின்ற குரிசில் - அருகில்நின்ற இவ்வாண் மகன், இராகவனுக்கு இன் துணைவன் - இராமபிரானுக்கு இனிய தோழன்; இலக்குவற்கும் - லக்ஷ்மணனுக்கும், இளையவற்கும்-தம்பியான சத்துருக் னனுக்கும், எனக்கும்—, மூத்தான்-தமையனாந்தகுதியுடையவன்; குன்று அனைய திரு நெடு தோள் குகன் என்பான் - மலையையொத்த அழகிய பெரிய புயங்களையுடைய குகனென்னும் பெயருடையான்,' என்றான்—; (எ - று.)

கௌசலாதேவியை இன்னாளென்று பரதன் தெரிவித்தவுடனே, இராம னுக்கு நேர்ந்துள்ள வனவாசம் காரணமாகக் குகனுக்கு மனத்திற் பொங்கு கின்ற சோகம் உள்ளடங்காது வெளிப்பட, பேரழுகையோடு அந்தக்குகன் கோசலையை வணங்கிநிற்க, அவள் அவனை இன்னானென்று தெரிவிக்கும்படி பரதனைக் கேட்க, அந்தப்பரதனும் அவ்வாறே தெரிவித்தனனென்பதாம். பரதன் குகனுடைய ராமபக்தியை மெச்சி அதனால் அவனிடத்துக்கொண்ட நன்குமதிப்பை 'இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்' என் றான். காராவை உவமைகூறினது, தூய்மைக்கு. ராகவன் - வடசொல்; ரகு வென்னும் அரசனது குலத்தில் அவதரித்தவன்: ரகுவென்பவன், தசரத னுக்கு மூதாதை. ரகுமகாராசன், எல்லாத் தேசத்தையும் வென்று விசுவஜித் என்னும் வேள்வியைச் செய்து அதில் எல்லாப்பொருளையும் வழங்கிவிட்டு வறுங்கையனாயிருக்கையில், கௌத்ஸனென்னும் முனிவன் தனது ஆசிரிய னாகிய வரதந்துமகாமுனிவனுக்குக் குருதக்ஷிணைகொடுத்தற்பொருட்டு வந்து யாசிக்க, குபேரனிடத்திலிருந்து வேண்டும்பொருளை யழைப்பித்து அந்தக் கௌத்ஸனுக்குக் கொடுத்து மிக்க வீரமும் கொடையும் நிலைநாட்டிய சிறப் புடையானாதலால், இராமபிரான் அவன்குலத்துப்பிறந்தவனென்ன 'ராக வன்' என்றார். இலக்குவன் - வடசொல்திரிபு: லக்ஷ்மணன் என்னும் வட சொல்லுக்கு - சகலவுத்தமலக்ஷணங்களோடு கூடினவனென்று பொருள்; பக வத்கைங்கரிய லக்ஷ்மியோடுகூடினவனென்றும் உரைப்பர். நெடிதுவிழுதல் - ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல். பி - ம்:—[1]நெடிதின். [2]என்ன [3]உழந்த. [4]நீரின்ற. (கஓஎகூ)

௬எ —கோசல்யை வருந்துகின்ற குகனையும் பரதனையும் தேற்றுதல்.

நைவிர லீர்[1]மைந்தி ரினித்துயரா லு[2]டிறந்து காடு நோக்கி,
மெய்வீரர் [3]பெயர்ந்ததுவு நலமாயிற் றுமன்றே விலங்கற் றிண்
டோட், கைவீரக் களிறனைய காளையிவன் [4]றன்னோடுங் கலந்து
[5]நீவிர், ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால மளித்தி
ரென்றாள்.

(இ - ள்.) (அதுகேட்ட கௌசலை அவர்களை நோக்கி),—'மைந்தீர் - புத்திரர்களே! இனி துயரால் நைவீர் அலீர்-இனிமேல் நீங்கள் துன்பத்தால்

வருந்தாதீர்; மெய் வீரர் - தவறாத பராக்கிரமத்தையுடைய இராமலக்ஷ்மணர், நாடு இறந்து காடு நோக்கி பெயர்ந்ததும்-நாட்டைவிட்டுக் காட்டை நோக்கிப் புறப்பட்டுச்சென்றதும், நலம் ஆயிற்று ஆம் அன்றே - (இப்படிப்பட்ட நல்ல தோழனைப் பெறுதலால்) நன்மைக்கே காரணமாயிற்றுமன்றோ: (இனி), விலங்கல் திண் தோள் - மலைபோன்ற வலிய தோளையுடைய, கை வீரம் களிறு அனைய - துதிக்கையாற்செய்யும் பராக்கிரமத்தொழிலையுடைய ஆண் யானையை யொத்த, காளை இவன் தன்னோடும் - (குகனென்னும்) இவ்வாண் மகனுடனே, கலந்து - கூடி, நீவிர் ஐவீர்உம் - நீங்கள் ஐந்துபேரும், ஒருவீர் ஆய் - ஒற்றுமையுடையவர்களாய், அகல் இடத்தை நெடு காலம் அளித்திர் - பரந்த நிலவுலகத்தை வெகுகாலம் பாதுகாப்பீர்,' என்றாள் - என்று (ஆசீர் வாதமாகக்) கூறினாள்; (எ - று.)

'இராமபிரான் நாட்டிலேயே யிருந்தால் இத்துணைச்சிறந்த தோழன் கிடைப்பது அரிதாதலால், இவ்வாறு சிறந்ததோழன் கிடைப்பதற்குக் காரணமாயிருந்த ஒரு பெருநன்மையைக் கருதி, இராமனுக்கு நேர்ந்த வனவாசத்தைக்குறித்துச் சிறிதுங் கவலைப்படாது, நால்வராய்ப்பிறந்த நாம் ஐவராய் விட்டோமேயென்று பெருமகிழ்ச்சிகொண்டு, நீங்கள் ஒற்றுமையோடு இந் நிலவுலகமுழுவதையும் நெடுநாள் போற்றிவரவேண்டும்' என்று கௌசலை வருந்துகின்ற பரதனையும் குகனையும் தேற்றி ஆசீர்வதித்தன ளென்பதாம். "முன்புளெ மொருநால்வே முடிவுள தெனவுன்னு, வன்புள வினிநாமோ ரைவர்க ளுளரானேம்" எனக் கீழ் இராமன் கூறினதுங் காண்க. இங்கே கோசலை பரதனையும் குகனையும் 'மைந்தீர்' என விளித்ததனால், அந்தத்தேவி அவர்களிடத்துக்கொண்டுள்ள புத்திரவாற்சலியந் தோன்றும். பி - ம்:—
[1]மைந்தர். [2]இழந்து. [3]போந்ததுவும். [4]தன்னோடு. [5]நீங்கள், நீங்காது. [6]போல்.

### சூஅ.—சுமித்திரையை யாவளென்று குகன் வினவப் பரதன் தெரிவித்தல்

அறந்தானே [1]யென்கின்ற வயனின்றா ளைநோக்கி யைய
வன்பி, [2]னிறைந்தாளை யுரையென்ன நெறிதிறம்பாத் [3]தன்மெய்யை
நிற்ப தாக்கி, யிறந்தான்ற [4]னிளந்தேவி யாவர்க்குந் தொழுகுல
டா மிராமன் பின்பு, [5]பிறந்தானு [6]முளனென்னப் பிரியாதான்
றனைப்பயந்த பெரியா ளென்றான்.

(இ - ள்.) (பின்பு), அறம் தானே என்கின்ற-தருமதேவதையேயென்று சொல்லத்தக்க, அயல் நின்றாள்தனை நோக்கி - கோசலையருகில்நின்ற சுமித்திரையைப்பார்த்து, (குகன் பரதனிடத்து), 'ஐய—! அன்பின் நிறைந்தாளை - அன்பினால் நிறைந்துவிளங்குகிறவளான இவளை, உரை - (இன்னளென்று) சொல்,' என்ன-என்றுகேட்க,—(அதற்குப் பரதன்), 'நெறி திறம்பா-நல்வழி தவறாமல், தன் மெய்யை நிற்பது ஆக்கி - தனது சத்தியத்தை என்றும் அழியாது நிலைத்துநிற்பதாகச் செய்துவிட்டு, இறந்தான்தன் - உயிர் நீத்த

தசரதசக்கரவர்த்தியின், இள தேவி - இளையமனைவி; யாவர்க்கும் தொழு குலம் ஆம் இராமன் பின்பு - எல்லார்க்கும் வணங்கத்தக்க குலதெய்வமாகிய இராமனது பின்னே, பிறந்தான்உம்-பிறந்த தம்பியும், உளன் - (ஒருவன்) உளன், என்ன-என்று (யாவரும் அறியும்படி), பிரியாதான்தனை - (அவனை விட்டு) நீங்காத இலக்குமணனை, பயந்த-பெற்ற, பெரியாள்-பெருமையுடையவள்,' என்றான்-என்றுகூறினான்; (எ - று.)

இராமனுக்குத் தம்பியாகப்பிறந்தவர் மூவர் இருப்பினும், அப்பிரான் கானகஞ்சென்றபோது உலகோர்க்கெல்லாம் 'இராமன்தம்பி' என்று தெரியுமாறு உடன்சென்று எல்லாவடிமைகளையும் அப்பிரானுக்குச் செய்பவனாதலால், இலக்குமணனை 'இராமன்பின்பு பிறந்தானு முளனென்னப் பிரியாதான்' என்றான். 'இராமன் கானகத்திற்குப் போனாற் போகட்டும்: எனது புத்திரன் இனிதாக நகரத்தில்தானே இருக்கட்டும்' என்று நினையாது, அவனைநோக்கி "ஆகாததன்றாலுனக்கவ்வன மிவ்வயோத்தி, மாகாதலிராமனம்மன்னவன் வையமீந்தும், போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழற்சீதை யென்றே, யேகாயினி யிவ்வயினிற்றலுமேதம்," "மகனே இவன்பின் செல்தம்பி, யென்னும்படியன்றடியாரினிலேவல்செய்தி, மன்னுந்நகர்க்கே யிவன்வந்திடின் வா வதன்றேல்,முன்னம் முடி"என்ற ளாதலால்,அவள் 'அறந்தானே யென்கின்ற வயல்நின்றாள்' எனப்பட்டாள். அன்பு - இராமபிரானிடத்துப் பக்தி. முன் கைகேயிக்கு இரண்டுவரங்கொடுத்திருந்த சத்தியந் தவறமாட்டாமையானது இராமனதுவனவாசத்துக்கும், அவ்விராமவிரகம் தனது மரணத்துக்கும் காரணமாய்முடிந்ததனால், 'நெறிதிறம்பாத் தன்மெய்யை நிற்பதாக்கியிறந்தான்' என்றது. குலம்-குலதெய்வத்துக்கு ஆகுபெயர். பி-ம்:—[1]எனநின்ற, என்கின்றாள். [2]இறந்தானை, நிறைந்தானை. [3]தன்மெய்ம்மை, தன்மையுண்மை. [4]பெருந். [5]பிறந்தாரும். [6]உளர். (கo௭அ)

**ஙகூ.—பரதன் கைகேயியைச் சுட்டிக்காட்டி அவளை இன்னாரென்று கூறந்தொடங்குதல்.**

சுடுமயா னத்திடைத்தன் றுணை[1]யேகத் தோன்றறுயர்க்
கடலி னேகக், கடுமையார் [2]கானகத்துக் கருணையார் கலி[3]யேகக்
கழற்கான் மாய, னெடுமையா [4]லன்றளந்த வுல[5]கெல்லாந் தன்[6]மன
த்தே நினைந்து [7]செய்யுங், கொடுமையா ளளந்தாளை யாரிவரென்
றுரை[8]யென்னக் குரிசில் கூறும்.

(இ - ள்.) (அதுகேட்டு அவளையும் நமஸ்கரித்தபின்பு), தன் துணை - தனது கணவனை தசரதசக்கரவர்த்தி, சுடு மயானத்திடை ஏக - (இறந்தவரைச்) சுட்டெரிக்குமிடமான மயானத்திற் செல்லும்படியும், தோன்றல் - தன்புத்திரன் [பரதன்], துயர் கடலின் ஏக-துன்பக்கடலில் மூழ்கும்படியும், கருணை ஆர்கலி - கருணைநிரம்பிய கடல்போன்ற இராமமூர்த்தி, கடுமை ஆர்

கானகத்து - கொடுமைமிக்க காட்டிலே, ஏக - செல்லும்படியும், கழல் கால் மாயன் நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம் - வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய திருமால் நீண்ட திரிவிக்கிரமவடிவங்கொண்டு அக்காலத்தில் அளவிட்ட உலகங்களையெல்லாம், தன் மனத்துஏ நினைந்து செய்யும் கொடுமையால் அளந்தாளை - தன்மனத்தில் எண்ணிச் செய்கிற கொடுமையினால் அளவிட்டவளான கைகேயியைப்பற்றி, இவர் யார் என்று உரை என்ன-இவர் யாரென்று (குகன் பரதனைநோக்கி) வினவ,—குரிசில் கூறும்-பரதன் கூறுவான்; (எ - று.)

கைகேயி கேட்ட வரம் தசரதனது மரணத்துக்குக் காரண மானதனால், 'சுடுமயானத்திடைத் தன் றுணையேக' என்றது. 'கானகத்துக் கருணையார் கலியேக' என்றவிடத்து கடல் காடு சென்றதெனு ஒருசமத்காரந்தோன் றும். கவி தமக்கு இராமபிரானிடத்துள்ள பக்தியால் அப்பரமனைக் காட்டுக்கு ஓட்டின கொடும்பாவி கைகேயி யென்று திட்டுவார் 'சுடுமயானத்திடை...... கொடுமையாலளந்தாளை' என்கின்றார். ஸர்வஶக்தியான திருமால் முயன்று பிறந்து வளர்ந்து இரந்து வாங்கி யளந்த உலகத்தை இந்தக்கைகேயி இருந்த விடத்தே யிருந்தபடியே தன்நினைவினால் முடித்தனளே இவள்திறமை யென்னே! என்று பரதன் எண்ணியமைபுலப்படும். துயர்க்கடல், கருணையார்கலி - உருவகம். உலகெல்லாந் தன்கொடுமையா லளத்தல் - உலகமுழுவதும் தன் கொடுமை பரவும்படி அதனை மிகுதியாகச் செய்துவைத்தல். நினைவில்லாது தற்செயலாகச் செய்யுங்கொடுமையன் றென்பார், 'தன்மனத்தேநினைந்து செய்யுங் கொடுமை' என்றார். மயானம் - ஶ்மஶாநம்: வடசொல். ஆர்கலி - நிறைந்த ஓசையையுடையது; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பி - ம்:—[1]போக. [2]கானத்து. [3]எய்த. [4]நின்று. [5]எலாம். [6]மனத்தான், வயமாய். [7]செய்த. [8]செய்ய. (க0எக)

### எO.—பரதன் குகனுக்குத் நற்தாயைத் தெரிவித்தல்.

பட[1]ரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலியைத்தன்
பாழ்த்த பாவிக், குடரிலே நெடுங்காலங் கிடந்ததேற்கு முயிர்ப்பாரங்
குறைந்து தேய, வுடரெலா [2]முயிரில்லா வெனத்[3]தோன்று முலகத்தே
யொருத்தி [4]யன்றே, யிடரிலா முகத்தாளை [5]யறிந்திலையே
லிந் நின்றா ளென்னை யீன்றாள்.

(இ - ள்.) படர் எலாம் படைத்தாளை - துன்பங்களையெல்லாம் உண்டாக்கினவளும், பழி வளர்க்கும் செவிலியை - உலகநிந்தையாகிய குழந்தையை வளர்க்கும் தாயானவளும், தன் பாழ்த்த பாவி குடரிலே - தனது பாழாகிய தீவினையுடையதான வயிற்றினுள்ளே, நெடு காலம் கிடந்ததேற்கும்- வெகுநாள் தங்கியிருந்த எனக்கும், உயிர் பாரம் குறைந்து தேய - உயிராகிய சுமை குறைந்து தேய்வடைய, உடர் எலாம் உயிர் இலா என தோன்றும் -

(பிராணிகளின்) உடம்புகளெல்லாமும் உயிரில்லாதனபோலக் காணப்படுகிற, உலகத்தே - இவ்வுலகத்தில், (இப்பொழுது), ஒருத்தி அன்றே இடர் இலா முகத்தாளை-தாளொருத்திமாத்திரமே துன்பக்குறிப்பில்லாத முகத்தையுடைய வளுமான இவளை, அறிந்திலே எல்-(இன்னுளென்று நீ குறிப்பினுல்) அறியாயாயின், (வெளிப்படையாகச் சொல்வேன்): இ நின்றாள் என்னை ஈன்றாள்- இங்குநின்ற இவள் என்னைப்பெற்றவளான கைகேயி; (எ - று.)

இராமவிரகத்தால் உலகமெல்லாம் துன்பப்படும்படி செய்தாளாதலால் 'படரெலாம் படைத்தாள்'என்றும், 'இராமனைக் காட்டுக்கு ஓட்டிய மா பாவி, கணவனைக்கொன்ற கடும்பாவி, தயாதாட்சிணியமில்லாத கொடியாள்' என்றாற்போல உலகத்தார்கூறும் வசைச்சொற்களுக்கெல்லாம் பாத்திரமாய்நிற்றலால் 'பழிவளர்க்குஞ்செவிலி' என்றும் கைகேயி கூறப்பட்டாள். பழிவளர்க்குஞ் செவிலி - ஏகதேசவுருவகம். இராமன் வனஞ்செல்லுதற்கு ஒருவாறு காரணமாகிய தன்னைப் பெற்ற வயி றென்பான், கைகேயியின்வயிற்றை 'பாழ்த்தபாவிக்குடர்' எனப் பழித்தான். கீழ்ப் பள்ளிபடைப்படலத்தில் "நோயீரல்லீர் நுங்கணவன் றன்னுயிருண்டீர், பேயீரே நீ ரின்னமிருக்கப் பெறுவீரே, மாயீர் மாயாவன்பழி தந்தீர்" என்றும், "என்றுன் பாவிக்கும்பி வயிற்றி னிடைவைகித், தோன்றுந் தீராப் பாதகம்" என்றும் பரதன் கைகேயியைக் கூறியவற்றை இங்கே அறிக. 'நெடுங்காலம்' என்றது, ஒருவருஷ காலம் என்றபடி; தசரதன் மனைவியர் மூவரும் பன்னிரண்டுமாசங் கருக்கொண்டிருந்ததை"ததஶ்ச த்வாதஶேமாஸே" என்ற வால்மீகத்தால் அறிக. இராமவிரகத்தால் மிகவருந்திய தனக்கு உயிர்நீங்காதிருத்தல் பெருஞ்சுமையாகத் தோன்றுதலால், 'உயிர்ப்பாரம்' என்றது. அதற்குக் குறைந்து தேய்தல் - உற்சாகமொடுங்குதல். "மன்ன னுயிர்த்தே மலர்தலையுலகம்" ஆதலாலும், சகலஜீவாத்மாக்களுக்கும் திருமால் அந்தராத்மாவாதலாலும், தசரதனையும் இராமனையும் பிரிந்த உலகம் 'உடரெலா முயிரிலாவெனத் தோன்றுமுலகம்' எனப்பட்டது. தேயஎன்பது இலாஎன்பதனோடுஇயையும். பி-ம்:— [1]எல்லாம். [2]உயிரிழந்தது, உயிரிழந்த. [3]குன்றும். [4]அன்றோ, என்றே. [5]அறிந்திலேயோ, உணர்ந்திலேயோ. (கo அ௦)

எக.—கைகேயியையும் குகன் வணங்க, நாவாய் அக்கரைசேர்தல்.

என்னக் கேட்டவ் விரக்க மிலாளையுந்
தன்னற் கையின் வணங்கினன் றாயென
[1]வன்னப் பேடை [2]சிறையில [3]தாய்க்கரை
துன்னிற் [4]றென்னவும் வந்தது தோணியே.

(இ - ள்.) என்ன - என்று (பரதன்) சொல்ல, (குகன்), கேட்டு—, அ இரக்கம் இலாளைஉம் - மனவிரக்கமற்றவளான அக்கைகேயியையும், தாய் என - தாயென்றுகருதி, தன் நல் கையின் வணங்கினன் - தனது அழகிய கைகளைக் குவித்து நமஸ்கரித்தான்; (அப்பொழுது), அன்னம் பேடை

சிறை இலது ஆய் கரை துன்னிற்று என்ன - பெட்டையன்னப்பறவை யொன்று சிறகில்லாததாய் (நீந்திக்) கரையடைந்ததுபோல, தோணிஉம் வந்தது - அவ்வோடமும் அக்கரைசேர்ந்தது; (எ - று.)

தோணிக்குச் சிறையில்லாமைபற்றி, உபமானமாகிய அன்னப்பேட்டிற்கு 'சிறையிலதாய்' என்றார்: "மடவன்னக்கதியதுசெல" என்றார், கீழும். பி - ம்:—[1]அன்னபோது, அன்னப்பேடு. [2]சிறையில. [3]வான். [4]என்னவுஞ்சென்றது தோணியே, அப்புறந்தோமறுமாக்களே. சில பிரதியிற் பின்னிரண்டடிகள் 'வன்னப்போது சிறையின் †வன்பாற்றுறத், துன்னிற்றப்புறந் தோமுறுமாக்களே' எனக் காணப்படுகின்றது. (கoஅக)

எஉ.—யாவரும் கங்கையைக் கடந்தபிறகு தாய்மார் சிவிகையிற் செல்ல, பரதன்முதலியோர் பலகாவததூரம் நடந்து செல்லுதல்.

இழிந்த தாயர் சிவிகையி [1]னேறத்தான்
பொழிந்த [2]கண்ணிற் புதுப்புனல் போயினு
னொழிந்தி லன்குக னும்முட னேகினன்
கழிந்த னன்பல காவதங் காலினே.

(இ - ள்.) இழிந்த - (தோணியைவிட்டுக் கரையில்) இறங்கின, தாயர்- தாய்மார், சிவிகையின் ஏற-சிவிகைமேலேறிசெல்ல,—தான் - பரதன், புது புனல் பொழிந்த கண்ணின் போயினன் - வெள்ளத்தைச்சொரிந்த கண்களோடு சென்று, பல காவதம் - அனேககாதவழியை, காலின்ஏ - காலினாற்றானே, கழிந்தனன் - கடந்தான்; குகன் உம்-குகப்பெருமானும், ஒழிந்திலன்- விட்டு நீங்காதவனாய், உடன் ஏகினன் - கூடச்சென்றான்; (எ - று.)

அரசன்தேவிமார் சிவிகையிற் செல்ல, பரதன் கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருகக் காலினால்தானே பலகாவதம் நடந்துசெல்லக் குகனும் உடன் சென்றன னென்பதாம். குகனைக்கூறியது - மற்றையோர்க்கும் உபலட்சணம். பரதன் கண்ணீரைப்பொழிந்தது-இராமனைக் காணப்போகின்றோமென்ற பெருமகிழ்ச்சியினாலென்க. பி-ம்:—[1]ஏக. [2]கண்ணீர்ப். (கoஅஉ)

எங.—யாவரும் பரத்துவாஜாச்சிரமஞ் சேர, அம்முனிவன் எதிர்கொள்ளுதல்.

[1]பரத்தி னீங்கும் பரத்துவ னென்னும்[2]பேர்
[3]வரத்தின் [4]மிக்குயர் மாதவன் [5]வைகிட
மருத்தி கூர வணுகின னண்டவன்
[6]விருத்த [7]வேதிய ரோடெதிர் மேவினன்.

(இ - ள்.) (பின்பு பரதன்), பரத்தின் நீங்கும் - கருமச்சுமையினின்று விலகிய, பரத்துவன் என்னும் பேர் - பரத்வாஜனென்னுந் திருநாமத்தையுடைய, வரத்தின் மிக்கு உயர்-(பல) வரங்கள்பெற்றுள்ளதனால் மிகச்சிறந்த,

† வன்பாற்றுறந், துன்னிற்று எனவுங் காணப்படுகிறது.

மா தவன்-பெருந்தவமுடைய மகாமுனிவன், வைகு - எழுந்தருளியிருக்கிற, இடம்-ஆச்சிரமத்தை, அருத்தி கூர-அன்பு மிக, அணுகினன் - சேர்ந்தான்; ஆண்டு - அப்பொழுது [அவ்விடத்தில்], அவன் - அம்முனிவன், விருத்த வேதியரோடு-முதிர்ந்தமுனிவர்களுடனே, எதிர் மேவினன் - எதிர்கொண்டு வந்தான்; (எ - று.)

இராமபிரான் சென்ற இடமானதனாலும் பரத்துவாசன் பெருந்தவ சியாதலாலும் அன்புகொண்டு அம்முனிவனாச்சிரமத்தை யணுகினன் பரத னென்க. பெருந்தவஞ்செய்து பரமனருள்பெற்று ஊழ்வினை யொழித் ததனால், 'பரத்தினீங்கும்பரத்துவன்' எனப்பட்டான். பரத்துவன்-வடசொற் றிரிபு. வரத்தின் மிக்குஉயர்-வேண்டுவார்க்கு வேண்டினவரங்களைக் கொடுத் தலின் மிகச்சிறந்த வெனினுமாம். வ்ருத்தர் - வடசொல். விருத்தவேதியரெ ன்றதொடர் - வயோவ்ருத்தரன்றிக்கே ஞானவ்ருத்த சீலவ்ருத்தரான அந்த ணரைக்காட்டு மென்னலாம். [6]விருத்திவேதியரென்றபாடத்துக்கு, விருத்தி என்றது ஓதல்,ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழில்களை. இனி, விருத்தி வேதியர்-(தன்னையடுத்தவர்களை) விருத்தி செய்வித்தற்குரிய வேதியரென்றுங் கொள்ளலாம். பி-ம்:--[1]பரத்தினோங்கும், பரத்தினிற்கும். [2]அவ். [3]வரத்தன். [4]மேதகு. [5]வைகிட. [7]வேதியரோடுடன். ()

குகப்படலம் முற்றிற்று.

## கஉ-ஆவது திருவடி சூட்டுபடலம்.

இராமபிரானைக் கானகத்தினின்று மீட்டுக்கொணரவேணுமென்ற கருத் துடனே பரதன் தன்தம்பியோடும் தாய்மார் மந்திரிமார் புரோகிதர் தானைத் தலைவர் நகரத்தவர்முதலிய பலரோடும் அயோத்தியினின்று புறப்பட்டுச் சித் திரகூடமலையைச் சார்ந்து இராமபிரானை மீண்டுவரவேணுமென்று பிரார்த் திக்கவும், அப்பிரான் தந்தைசொல்லின்படி வனவாசஞ்செய்யாது மீண்டு வந்துவிடுவது தகுதியன்றென்பதை வற்புறுத்தப் பிறகு பரதன், இராமபிரா னது திருவடியை இரந்துபெற்று முடிக்கு அணியாகச் சூட்டிக்கொண்டு மீண் டதைத்தெரிவிக்கும் படல மென்பதுபொருள்: பரதன் முடிக்கு அணியாகப் பாதுகத்தைக் கொண்டா னென்பதை, "பாதுகந்தலைக்கொடு பரதன்பைம் புனல், மோதுகங்கையின் கரைகடந்துமுந்தினன்" என்று இப்படலத்தின் ஈற்று வருவதனாலறிக. இனி, இத்தொடர்க்கு-திருவடிக்கு இராச்சியத்தைச் சூட்டியதை [பாதுகாபட்டாபிஷேகஞ்செய்ததை] த் தெரிவிக்கும் படல மெனக் கூறுதல் நேராம்: "நந்தியம் பதியிடை நாதன் பாதுகஞ், செந்தனிக் கோன்முறை செலுத்துஞ் சிந்தையான்"என வருவது காண்க. திருவடிநிலை யைத் திருவடியென்றது - உபசாரவழக்கு. அச்சிட்டபிரதிகளிலும் சில ஏட் டுப்பிரதிகளிலும் இந்தப்படலத்திற்கு 'கிளைகண்டுநீங்குபடலம்'எனப் பெயர் காணப்படுகின்றது: அத்தொடர்க்கு - இராமபிரானது கிளைஞரான பரதன் முதலியோர் (இராமபிரானைக்)கண்டு மீளுஞ்செய்தியைக் கூறும் படல மென்

ருவது, "அத்தனுகியன்னையாகி யாளுமெம்பிரானுமாய்" என்பது முதலிய வாகச் சான்ருேர் அருளிச்செய்திருத்தற்கு ஏற்ப எவ்வகைக்கிளையுமாகி யாவர்க்கும் உதவுபவனுன ஸ்ரீராமனை (ப் பரதன்முதலியோர்) கண்டுமீண்ட செய்தியைக்கூறும் படலமென்ருவது பொருளாகும். கிளைகண்டுநீங்குபடலம் திருவடிசூட்டுபடலம் என்ற இவ்விரண்டனுள் நூலைப்பயில்வோர்க்குத் திருவடிசூட்டுபடலம் என்ற பெயர் சொல்லும்போதே கதைப்போக்கைப் புலப்படுத்துவதுபோலக் கிளைகண்டுநீங்குபடலமென்பது புலப்படுத்தாமையாலும், மரவடியைவைத்துப் பரதன் அரசுபுரியலானுனென்று அயோத்தியாகாண்டத்தை மங்கலமாக முடிக்கின்ருரென்பதைப் புலப்படுத்துவதாலும் திருவடிசூட்டுபடலம் என்ற பெயரைக் கொள்ளுதலே மிகவும் பொருத்தமெனத் தோன்றுகின்றது.

பரதன் எதிர்கொண்டுவந்த பரத்துவாசமுனிவனை வணங்கி ஆசிபெற்ற பின், முனிவன் 'முடிசூடி அரசுபுரியாமல் மரவுரியுடுத்துச் சடைதரித்து வனத்தில்வரக் காரணம் யாது?' என்ன, பரதன் சினம்பொங்க மனக்கடுப்போடு அந்தப் பரத்துவாசமுனிவனைப்பார்த்து, 'நீர் கூறியது எனக்கு அடுத்ததும் அன்று: உமக்கு அடுத்ததும் அன்று: இராமனுக்குத் தம்பியாகப்பிறந்த நான் அவனது இராச்சியத்தைக் கொள்ளேன்:நான் அவ்விராமனை வேண்ட, அன்னுன் அரசைக் கைக்கொள்ளாவிடின் அவனுடனே கானகத்தில் உறைவேன்'என்று தன்மனவுறுதியைக் கூற, அவ்வாசகத்தைக் கேட்டவுடனே பரத்துவாசனுக்கும் மற்றுமுள்ள இருடியர்க்கும் உள்ளும்புறம்பும் குளிர்ந்தது. பிறகு, முனிவன் பரதனைச் சேனையோடும் ஆச்சிரமத்துக்குஇட்டுக்கொண்டு போய் ஓமஞ்செய்து சுவர்க்கத்தையேவரவழைத்துப் பரதன்சேனைக்கெல்லாம் பல்வகையுபசாரங்களோடு திவ்வியமான விருந்து செய்வித்தான். பரதனே காய்கிழங்கையேயுண்டு தரையிற்றுனே கிடந்தான். அச்சேனை இரவெல்லாம் பரமானந்தத்தில்மூழ்கியிருந்து மறுநாள்பொழுதுவிடிகையில் அவ்வாழ்ச்சி மாற மூன்னிலையை யடைந்தது. பின்னர்ப் பரதன் தானைசூழச் சித்திரகூடம் புறப்பட்டு, இடைவழியிலிருந்த பாலைவனம் தாம் புக்கதாற் குளிர்ந்திருக்க அதனைக்கடந்துசெல்கையில் அவ்வாரவாரத்தைக்கேட்டு இலக்குமணன் மலையுச்சியிலேறிப் பார்த்துப் பரதன் சேனையுடன் வருவதுகண்டு 'இராமனுடன் பொருதற்கே பரதன் வருகிருன்' என்று கருதி யுத்தசன்னத்தனுகி இராமனிடம்விரைந்துவந்து 'பரதன் இங்கும்இருக்கவொட்டாமல் நம்மை ஓட்ட வருகிருன்: அவனையும் அவன்சேனையையும் நொடிப்போதில் ஒழித்துவிடுகிறேன்' என்றுனுக, இராமன் 'இலக்குவ! உன்னுற் செய்யமுடியாதது ஒன்றுமில்லை. ஆயினும், நான் புகல்வது கேள்: நங்குலத்தவர் தருமம் நீங்கினுர் எவரும் இலர்: பரதன் இராச்சியத்தை நமக்குக்கொடுத்தற்காகவே இங்கு வருகிருன்' என்று சொல்லி அடக்கினுர். அவ்வளவிற் பரதன் சித்திரகூடஞ்சேர்ந்ததும் தன்சேனையை நிறுத்தித் தானும் தன்தம்பி சத்துருக்கினனுமாக முன்வருகையில் இராமபிரான் தொழுத

கையனும் துவண்டமேனியனும் அழுதகண்ணினனும் அவலம் ஈதென்று கண்டோர்கருதுமாறு எழுதியபடிவமொத்தவனுமான பரதனை முடிய நோக்கி, 'பரதனதுபோர்க்கோலத்தைக் காண்க' என்று இலக்குமணனுக்குக் காட்ட, இலட்சுமணன் நாணத்தினால் முகங் கவிழ்ந்துநின்றான். அங்ஙனம் பெருவருத்தந்தோன்றக் கண்ணுங் கண்ணீருமாய்வந்த பரதன் இராமனைக் கிட்டியதுங் கீழ்வீழ்ந்தனனாக, அவ்வண்ணம் கீழ்வீழ்ந்து நிற்கும் பரதனை ஸ்ரீராமன்எடுத்துப் புல்லி, அவன் புனைந்த வேடத்தைப் பன்முறைநோக்கி, 'தந்தைவலியனோ?'என்ன, தந்தை வானுலகஞ்சென்ற செய்தியை அன்னான் தெரிவிக்க, கேட்டு இராமபிரான் மனம்வருந்தி மண்ணிடைவிழுந்து பலபடி புலம்பித் தம்பிமார்முதலியோரால் தாங்கப்பட்டு வசிஷ்டன் தேற்றத் தேறித் தம்பியுந்தானும் நீராடித் தந்தையாருக்குத் தர்ப்பணங்கொடுத்து வருந்தி யிருக்க, சீதாதேவியிருக்குமிடத்தையணுகிப் பரதன் புலம்ப, அவனை இராம பிரான் றூங்கித் தந்தையார் இறந்திட்ட செய்தியைச் சீதைக்குத் தெரிவிக்க, அவள் மிகவும் வருந்திப் பின் முனிவர்பன்னிமாரால் நீராட்டப்பெற்று நாய கனைச் சேர்ந்தனள். அப்பால் தாய்மார் சுமந்திரனழைத்துவரப்பெற்று வந்துசேர, இராமபிரான் அவர்களை வணங்கிநிற்க, அன்னார் வருந்திநின்றார் கள். இங்ஙனம் அங்கு யாவரும் வந்துசேர, அன்று சூரியன் அத்தமித்தான். மறுநாள் பொழுது புலர்ந்தபின் யாவருஞ்சூழவீற்றிருந்த இராமபிரான் பர தனைநோக்கி 'மன்னவன் துஞ்சினான்: நாடோ நின்னது; நீ மகுடந்தாங்காது விரதவேடம் பூண்டதுஎன்?' என்ன, பரதன், பதைபதைத்துத் தன்தாயின் செயலை வெறுத்துத் தன்னையும்நொந்து 'நீர் மீண்டு அரசுசெய்க' என்று வேண்ட, இராமன் பரதன்மனக்கருத்தை நன்குணர்ந்து தருமம்முதலியன இறைவரேவலால் நடப்பனவாகும்: கேள்விமுதலியனநிரம்புவது குரவர் சொல்லைக் கேட்டலால்தான். குரவரும் பெற்றோர்களே: தாய்தந்தையரென் னுங் குரவரின் சொற்படி நான் காட்டில் வசிக்க நீ அரசுபுரிவதே தக்கது: பெற்றோரை மெய்யராக்குவதல்லவோ புதல்வர்கடமை?வரமாகத்தந்தை உன க்கு அளித்த பாரை நீ அரசுபுரிதலே செயலாகும்'என்ன,பரதன்'அரசுஎன்ன தாகில், அரசை யான் உமக்குத் தந்திட்டேன்; மீண்டு மகுடஞ் சூடுக; உலகம் வருந்த நீர்மனத்துத் தோன்றியபடி திரிவது நீதியோ?போந்து காத்திர்' என்று அப்பிரானது தாளைமுடியிற்பூண்டு வேண்டினான்: வேண்டவும், இராமபிரான் 'நீ என்னிடம் அன்பினால் இராச்சியத்தை என்வசஞ்செய்தால் தந்தையாரிடம் இசைந்த ஆண்டு இன்று முற்றுமோ? வாய்மைக்குமாறாக எவரும் நடத்தல் கூடாதாகையால் பதினான்குவருடம் நான் வனத்திலுறை ந்தேதீரவேணும்: அதுவரை என்பணியால் அரசுபுரிக: தந்தைசொல்லை மறு க்கஅஞ்சியல்லவா நான் இராச்சியத்தைத் தாங்குவதாக முதலில் இசைந் தது; அதுபோலவே என்சொல்லைத்தட்டாது நீயும் அரசுபுரிக' என்றான். இராமபிரான் தன்வேண்டுகோட்கு இயையாமல் மறுத்துக்கூறியதனால் மேலும் உரைக்கலுற்ற பரதனை வசிட்டமுனிவன் விலக்கி, சிருஷ்டிகாலம்

தொடங்கிச் சூரியகுலத்து முறைமையை எடுத்துக்காட்டி 'யான் கூறுகின்றேன்; குரவர்வாசகம் தட்டக்கூடா தாகையால் முந்தையோரின் முறை முரணாமல் அரசு கைக்கொண்டு இராச்சியத்தை யளிப்பாய்' என்ன, இராமன் 'பிரமகுமாரரே! ஒருவரிடத்து ஒன்று செய்வதாக என்றபின் அதனை மறுத்தல் முறையல்ல; நீவிர் குரவருட் சிறந்தவரே: ஆயினும், முன்னே பெற்றோர்க்கு அவர்சொல்லியதைச் செய்வதாக வாக்களித்துவிட்டேன்: நீவிர் பின்னுறப்பணித்தீர்: யான் செய்யத்தக்கது எது? நீரே உரைப்பீர்' என்ன, முனிவன் மறுமாற்றஞ்சொல்ல முடியாது நின்றிட்டனன். பரதன் 'அப்படியானால், நாடுஆள்பவர் ஆள்க: நான் உடன் காடுபடர்வேன்' என்றான். அப்போது தேவர்கள்கூடிப் பரதனை நோக்கி 'பதினான்குவருடம் புவி காத்தல் நின்கடன்: தந்தைசொல்லைப் பாதுகாப்பது இராமன்கடன்' என்றாராக, அப்பால் இராமபிரான் 'வானவர் சொல்லைமறுத்தல் தகாதென்று நான் உன்னை வேண்டிக்கொள்கிறேன்; பதினான்குவருடம் அரசுபுரிக' என்ன, பரதன் வேறுவழி யில்லாமையால் அரிதில் இசைந்து 'பதினான்குவருடம் கழிந்ததும் நீர் அயோத்தி வாராவிடின் நான் எரிபுகுந்து உயிர்மாய்வேன்; இது திண்ணம்' என்ன, இராமபிரான் அதற்கு இசைய, பரதன் 'திருவடித்தலந் தந்தீக' என்ன, அங்ஙனமே இராமபிரான் தர, அவற்றைப் பரதன் 'முடித்தலம் இவை' எனச் சூடிச்செல்ல, உடன்வந்தவர்யாவருஞ் சென்றனர்: பாதுகந் தலைக்கொண்ட பரதன் கங்கைகடந்து பின் அயோத்தியிற் புகாமல் நந்தியம்பதியைச்சேர்ந்து பாதுகஞ் செங்கோல் செலுத்த அந்தியும் பகலும் நீரருக்கண்ணினனாய் இந்தியங்களை யவித்திருந்தான்: பலரும்நேயத்தால் இங்கு வருவரென்று கருதி இராமன் சித்திரகூடத்தினின்று தென்றிசைசேறன் மேயினனென்பது இப்படலத்துக் கூறிய பொருள்.

**க.—பரதன் பரத்துவாசமுனிவனை வணங்க, முனிவன் ஆசிகூறுதல்.**

வந்த மாதவத் தோனை[1]யம் மைந்தனுந்
தந்தை யாமெனத் தாழ்ந்து வணங்கினா
னிந்து [2]மோலி[3]யன் னானு மிரங்கினா
னந்த மின்[4]னலத் தாசிகள் கூறினான்.

(இ - ள்.) வந்த - (எதிர்கொண்டு) வந்த, மா தவத்தோனை - பெருந்தவமுடைய பரத்துவாசமுனிவனை, அ மைந்தன் உம் - அந்தப்பரதனும், தந்தை ஆம் என - தந்தையைப்போல நினைத்து, தாழ்ந்து வணங்கினான் - விநயத்தோடு விழுந்துநமஸ்கரித்தான்; (நமஸ்கரிக்க), இந்து மோலி அன்னான் உம் - சந்திரனை முடியிலுடைய சிவபிரானை யொத்த அம்முனிவனும், இரங்கினான்-(பரதன்பக்கல்) அன்புகொண்டவனாய், அந்தம் இல் நலத்து ஆசிகள் கூறினான்-அளவில்லாத நன்மைகளை விளைக்கக்கூடிய வாழ்த்துமொழிகளைச் சொல்லியருளினான்; (எ - று.)

இந்துமோலி - வடசொற்றொடர்: வேற்றுமைத்தொகை யன்மொழி: முனிவனுக்குச் சிவபிரானை உவமைகூறியது, தவவொழுக்கமும் மதனனைக் காய்தலும் சடைமுடியு முடைமைக்காக. பி-ம்:—[1]அவ்வள்ளலும். [2]மௌலி. [3]அனுனும். [4]குணத்து. (கoஅச)

உ.—'அரசுபுரியாது சடைமுடியுடன் வரக் காரணம் யாது?' என பரத்துவாச முனிவன் பரதனை வினவுதல்.

எடுத்த மாமுடி சூடிநின் பாலியைந்
தடுத்த பேரர சாண்டிலை யையநீ
முடித்த வார்[1]சடை யோடு முனிவர்தூ
சுடுத்து நண்ணுதற் குற்[2]றுளதி யாதென்றான்.

(இ - ள்.) (பின்பு பரத்துவாசன் பரதனை நோக்கி), 'ஐய—! நின்பால் இயைந்து அடுத்த பேர் அரசு - உன்னிடத்து வந்துபொருந்திய பெரிய இராச்சியத்தை, நீ—, எடுத்த மா முடி சூடி - உயர்ந்தபெரிய கிரீடத்தைத் தரித்துக்கொண்டு, ஆண்டிலை - ஆளாமல், முடித்த வார் சடையோடு-தரித்த நீண்ட சடைத்தொகுதியுடனே, முனிவர் தூசு உடுத்து - இருடியர்தரிக்கும் மரவுரியாடையை யுடுத்துக்கொண்டு, நண்ணுதற்கு - (இவ்வனத்தைச்) சேர்தற்கு, உற்று உளது - பொருந்தியுள்ளதான காரணம், யாது—?' என்றான்- என்றுவினவினான்; (எ - று.)

இயைந்து அடுத்த - அடுத்துஇயைந்த என மாறுக. எடுத்த - உனக்கென்று கைகேயி அமைத்துவைத்திருக்கிற எனினுமாம். முடித்தல்-திரித்து விடுதல். பி-ம்:—[1]சடைக்கற்றையைமூசுதூசு, சடைக்கற்றையை மூரித்தூசு. [2]உளதியாவதோ. (கoஅரு)

ந.—இதுவும் அடுத்த கவியும்-குளகம்: முனிவன் வினவிய வகையைக் கண்டித்துப் பரதன் தான் வருங் காரணங் கூறுதல்.

சினக்[1]கொ டுந்திறற் சீற்றவெந் தீயினான்
மனக்க டுப்பினன் மாதவத் தோங்கலை
[2]யெனக்க டுத்தது செய்திலெ னென்றசொ
[3]லுனக்க டுப்பதன் றுரவோ[4]யெனா.

(இ - ள்.) (அதுகேட்ட பரதன்), கொடு - கொடிய, திறல்-வலிமையை யுடைய, சினம் சீற்றம் - மிக்ககோபமாகிய, வெம் தீயினான் - கொடியதீயை யுடையவனும், மனம் கடுப்பினன் - மனக்கொதிப்பையுடையவனுமாய், மா தவத்து ஓங்கலை-மிக்கதவத்தையுடைய மலைபோன்ற அம்முனிவனை (நோக்கி), 'உரவோய் - அறிவையுடையவனே! (நீ), எனக்கு - என்னைக்குறித்து, அடுத்தது செய்திலென் - தக்கதை நான் செய்யவில்லை, என்ற - என்றகருத்துப் படவினவிய, சொல் - சொல்லானது, உனக்கு - (தவசியாய் நியாயாநியாயங் களை யுணர்ந்த) உன் தகைமைக்கு, அடுப்பது அன்று-தக்கது ஆகாது,' எனா- என்று கூறி,—(எ - று.)—'என்றான்' என அடுத்த கவியோடு முடியும்.

நியாயாநியாயங்களையுணர்ந்த நீ மூத்தவன் காட்டகத்தானாக, இளையவனாகிய என்னை 'அரசுபுரியாமல் முனிவர்வேடத்துடனே இங்குவருவானேன்?' என வினாவுதல் தக்கதன்று என்றவாறு. இந்தப்பரதனது மனநிலையை உலகத்தார்க்கு வெளிப்படுத்தவேண்டியே இங்ஙனம் முனிவன் வினாவியதென்பர். சினம், சீற்றம்-ஒருபொருட்பன்மொழி. "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி" என்பவாதலால், கோபம் 'வெந்தீ' எனப்பட்டது. தவவொழுக்கத்தில் என்றுஞ் சிறிதுஞ்சலிப்பில்லாதவனென்பார் 'மாதவத்தோங்கல்' என்றார். உரம் அறிவாதலை, "உரனென்னுந் தோட்டியான்," "உரமொருவற்குள்ளவெறுக்கை" எனத் திருக்குறளிலுங் காண்க. இனி, உரம் - மனோபலமும், தபோபலமுமாம். பி - ம்:—[1]கடுப்பினச், கடுந்திறற், கடுத்தவச், கடுப்பின்வெஞ். [2]எனக்கடுத்ததியம்பிலை நீயென்றான், எனக்கடுத்ததுசொல்லலை நீயென்றான், நினக்கடுப்பது செய்திலை நீயெனல். [3]உனக்கடுத்ததுமன்றுரவோய், உனக்கடுப்பதுநன்றுளவோ, உனக்கடுத்ததன்றாலுரவோய். [4]என்றான். (௧௦௮௬)

சு. மறையின் கேள்வற்கு மன்னிளந் தோன்றல்பின்
முறையி [1]னீங்கி [2]முதுநிலங் கொள்கிலே
னிறைவன் [3]கொள்கில னாமெனின் யாண்டெலா
முறைவென் கானத் தொருங்குட னேயென்றான்.

(இ - ள்.) மறையின் கேள்வற்கு - வேதங்களுக்குத்தலைவனான ஸ்ரீராமபிரானுக்கு, மன் இள தோன்றல் - பொருந்தின தம்பியான பரதன்,—பின்-பின்னும், 'முறையின் நீங்கி - (மூத்தமகனுக்கு அரசுஉரியது என்ற) நீதியினின்று தவறி, முது நிலம் கொள்கிலேன் - தொன்றுதொட்டுவந்த இ[illegible]யத்தை (அரசாளும்படி) ஏற்றுக்கொள்வேனல்லேன்: இறைவன் கொள்கிலன் ஆம் எனின் - தலைவனான இராமன் (மீண்டு வந்து இராச்சியத்தை) ஏற்றுக்கொள்ளாதொழிவானாயின், (யான்), யாண்டு எலாம் - (வனவாசத்துக்கு என்று நியமித்த) வருடங்களெல்லாம், ஒருங்கு - ஒருசேர, உடனே - அவ்விராமபிரானுடனே, கானத்து உறைவென் - காட்டில் வசிப்பேன்', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

இராமபிரானையே இராச்சியத்தைக் கைக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்ளவந்தேன்: ஒருகால் அவன் அங்கீகரியாவிடின் அவனுடனே வனத்தில் வாழ்வேனென்று தான் வந்த காரணமும் தனதுநிலைமை யின்னதென்பதும் விளங்கப் பரதன் மறுமொழிகூறுகின்றானென்க. மறையின்கேள்வன் - "பூதநாயகன் புவிமகணாயகன் புனித, வேதநாயகன்" என்றார், கீழ் அகலிகைப் படலத்தும். இனி, 'மறையின் கேள்வற்கு' என்பதற்கு - பரத்துவாசமுனிவனிடம் என்று உரைத்து; 'என்றான்' என்பதனோடு இயைத்தலும் ஒன்று: இங்ஙனம் உரைக்குமிடத்து, மன்-இராமன் என்க. 'பின்முறையின்' என எடுத்து, பின்பிறந்தவனுக்குஉரிய முறைமையினின்று எனினும் அமையும். பி-ம்:—[1]நீங்க. [2]முழு. [3]காக்கிலன். (௧௦௮௭)

ரு.—பரதன்மொழியைக்கேட்டு முனிவர்கள் மனங்குளிர்தல்.

உரைத்த வாசகங் கேட்டலு முள்ளெழுந்
திரைத்த காத லிருந்தவத் தோர்க்கெலாங்
குரைத்த மேனியொ டுள்ளங் [1]குளிர்ந்ததா
லரைத்த சாந்து [2]கொ [3]டப்பிய தென்னவே.

(இ - ள்.) உரைத்த-(இவ்வாறு பரதன்) சொன்ன, வாசகம்-வார்த்தையை, கேட்டலும் - கேட்டவளவிலே, உள் எழுந்து இரைத்த காதல் இரு தவத்தோர்க்கு எலாம் - (ஸ்ரீராமவிஷயத்தில்) மனத்தில் தோன்றி மிக்குப் பொங்கிய அன்பையுடைய மிக்கதவத்தையுடையரான முனிவர்களெல்லோர்க்கும், குரைத்த மேனியொடு உள்ளம் - பூரித்த உடம்பும் மனமும், அரைத்த சாந்து கொடு அப்பியது என்ன-அரைத்த சந்தனத்தால் அப்பியது போல, குளிர்ந்தது - (தனித்தனி) குளிர்ச்சியடைந்தது; (எ - று.)— ஆல், ஏ - ஈற்றசைகள்.

தவத்தோர் - பரத்துவாசனும், அவனுடன்மேவிய விருத்தவேதியரும். சாந்து புறத்தைமாத்திரம் குளிர்விக்கும்: பரதன்சொல்லோ உள்ளும்புறமும் குளிர்வித்த தென்பார் 'மேனியொடுள்ளஞ் சாந்து கொடப்பிய தென்னக் குளிர்ந்தது' என்றார். ஒலித்தலென்னும்பொருள்தரும் இரைத்தல் குரைத்தல் என்னும் வினைகள் - இங்கு இலக்கணையாய்ப் பிறிதுபொருளுணர்த்தின.
பி - ம்:—[1]குளிர்ந்தவால். [2]கொண்டு. [3]அப்பிய. (க0அஅ)

சு.—பரதனை முனிவன் தன்னுறைவிடம் இட்டுக்கொண்டுபோய்ச் சேனைக்கு விருந்தமைப்பேனென்று ஓமஞ்செய்தல்.

ஆய [1]காதலொ டையனைக் கொண்டுதன்
[2]றூய சாலை யுறைவிடந் துன்னினான்
மேய சேனைக் கமைப்பென் விருந்தெனாத்
தீயி னாவுதி செங்கையி [3]னீக்கினான்.

(இ-ள்.) (பரத்துவாசன்), ஆய காதலொடு-(அங்ஙனம் உடம்பும் உள்ளமும் குளிர) உண்டாகிய அன்புடனே, ஐயனை கொண்டு - பரதனை அழைத்துக்கொண்டு, தன் தூய சாலை உறைவு இடம் துன்னினான்-தனது பரிசுத்தமான பர்ணசாலையாகிய இருப்பிடத்தை யடைந்து, மேய சேனைக்கு விருந்து அமைப்பென் எனா - 'வந்த (இப்பரதனுடைய)சேனைக்கு யான் விருந்துசெய்வேன்' என்று கருதி, (அதற்காக), செம் கையின் தீயின் ஆவுதி நீக்கினான் - சிவந்ததன்கைகளால் ஓமத்தீயில் (சில) ஆகுதிகளைப் பெய்திட்டான்; (எ-று.)

அங்கியில் ஓமஞ்செய்து ஆஹ்வாந[தேவர்களைக்கூப்பிடுவதான] மந்திரத்தை உச்சரிக்க, விசுவகருமா ஐந்துயோசனைதூரம் மேடுபள்ளமில்லாமற் சமமாகப் புற்றரைகளையும் அவரவர் தங்குவதற்கு ஏற்ப மாடமாளிகைகளையும் நிருமிக்க,யமன் குபேரன் வருணன் இந்திரன் சந்திரன் முதலியதேவர்களைக்

குறித்து ஓமஞ்செய்து பலவகை உணவுப்பொருள்களையும் நிருத்தகீதம் முதலியவற்றையும் பலவகையுபசாரங்களையுஞ் செய்யும் தேவமாதரையும் ஆங்கு வரச்செய்தனனென முதனூலால் தெளிக. ஆவுதி-ஆஹுதி யென்னும் வடசொல்லின் திரிபு. இப்பாட்டின் நான்காம்அடிக்கு - நித்தியஹோமமுடித்தானென்று உரைப்பாரும் உளர். பி ம்:—[1]காலையில். [2]தூயசாரல், தூயதாய. [3]ஆக்கினுன், ஒக்கினுன், ஓச்சினுன். சிலபிரதிகளில் 'தீயினுகுதிச்செல்வனுஞ் சிந்தித்தான்' என்று நான்காமடி. (கO௮க)

எ.—முனிவனது நினைவின்படி சுவர்க்கம் அங்குவர, சேனையோர் தம் முன்னை நிலைமைமறந்து பெருமகிழ்ச்சியில் மூழ்கியிருத்தல்.

துறந்த செல்வ னினையத் துறக்கந்தான்
பறந்து வந்து படிந்தது பல்[1]சனர்
பிறந்து வேறொ ருலகுபெற் றாரென
மறந்து [2]வைகினர் [3]முன்னைத்தம் வாழ்வெலாம்.

(இ-ள்.) துறந்த செல்வன் - (இருவகைப்பற்றுக்களையும்) விட்ட தவச்செல்வத்தையுடைய பரத்துவாசன், நினைய - (இங்ஙனம் ஆகுதிமுடித்து விருந்திட) நினைத்தவளவில்,—துறக்கம் - சுவர்க்கலோகம், பறந்துவந்து படிந்தது-விரைந்துவந்து (அங்குச்) சேர்ந்துநின்றது: (நிற்கவே), பல் சனர்-(அச்சேனையிலுள்ள)பலசனங்களும், பிறந்து வேறு ஓர் உலகு பெற்றார் என-மறுபிறப்பெடுத்து மற்றோருலகத்தை அடைந்தவர்போல,முன்னை தம் வாழ்வு எலாம் மறந்து வைகினர்-முன்பு இருந்த தம்முடைய வாழ்க்கைகளையெல்லாம் மறந்து (ஆனந்தத்தில்) நிலைநின்றார்கள்; (எ - று.)—தான் -அசை.

முனிவன் ஓமஞ்செய்து நினைத்தமாத்திரத்திற் சுவர்க்கலோகத்தனவான உணவு முதலியயாவும் அந்த ஆச்சிரமத்தினிடம் வர, அவற்றைநுகர்ந்த சேனையிலுள்ளோர்யாவரும் தாம் வேறொருபிறவியையடைந்து சுவர்க்கலோகத்தைச்சேர்ந்தாரையொத்துத் தம் முன்னைநிலையைமறந்து பெருங்களிப்பில் மூழ்கினரென்பதாம். வேறோருலகு - துறக்கம். செல்வன்-தபோதனன்.நினைய-சங்கற்பித்தமாத்திரத்தில். துறக்கம்-இவ்வுலகத்தைத் துறந்து அடையும் இட மெனக் காரணப்பெயர். பி-ம்:—[1]சனம். [2]வைகுநர். [3]முன்னர்த். (கOகO)

அ.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - பரதனுடைய சேனையோர் இன்பம் நுகர்ந்தவகையைத் தெரிவிக்கும்.

நந்த வில்லற [1]நந்தின ராமென
வந்த ரத்தி னரம்பைய ரன்பினர்
வந்து வந்தெதி [2]ரேத்தினர் மைந்தரை
யிந்து விற்சுடர் கோயில்கொண் [3]டேகினார்.

(இ - ள்.) அந்தரத்தின் அரம்பையர் - விண்ணுலகத்தில்வாழ்கிற தேவ மாதர்கள், நந்தல் இல் அறம் நந்தினர் என - கெடுதலில்லாத தருமப் பயன் செழித்தவர்கள் இவரென்றுகருதி, மைந்தரை-(அச்சேனையிலுள்ள) ஆடவர் களை, அன்பினர் - அன்புடையவர்களாய், எதிர் வந்து வந்து ஏத்தினர்-எதிர் கொண்டுவந்துவந்து கொண்டாடினவர்களாய், இந்துவின் சுடர் கோயில் கொண்டு ஏகினர் - சந்திரமண்டலம்போல விளங்குகிற (தமது) மாளிகைக்கு அழைத்துக்கொண்டுபோனார்கள்; (எ - று.)—ஆம் - அசை.

இதுமுதல் நான்குகவிகள் ஒருதொடராய், அரம்பையரால் சேனையி லுள்ள மாந்தர் உபசரிக்கப்பட்டமையைக் கூறும். இம்மையில் அறம்முற்றி மறுமையில் மேலுலகம் புக்கவரை ஆதரிப்பதுபோல, பரதன் சேனையாரைத் தெய்வமகளிர் உபசரித்தன ரென்பார், 'நந்தலில்லறம் நந்தினராமென' என் றார். கோயிலும் அங்குத்தானே வந்திருக்க, ஆங்கு அரம்பையர் கொண்டே கினரென்க. நந்துதல்என்பது, கேடு வளர்ச்சி என்ற இருபொருளையு முடை யது. மூன்றாமடியில், வந்து உவந்து எனப் பிரித்தலுமாம்.பி-ம்:—[1]தந்தனர். [2]ஏத்தின. [3]எய்தினர். (கO௬௧)

கூ. நான நன்குரைத் தார்நளிர் வானிடை
யான கங்கை [1]யருப்புன லாட்டினார்
[2]கான மாமணிக் கற்பகந் தாங்கிய
வூன மின்மல ராடை யுடுத்தினார்.

(இ - ள்.) (தேவமாதர் பரதனுடன்வந்த ஆடவர்க்கு), நானம் நன்கு உரைத்தார் - வாசனைப்பொடியை(உடம்பில்)நன்றாகத்தேய்த்தார்கள்; நளிர் - குளிர்ந்த, வானிடை ஆன கங்கை - ஆகாசத்திற்பொருந்திய தேவகங்காநதி யின், அரு புனல் - கிடைத்தற்கரிய நீரினால், ஆட்டினார் - ஸ்நாநஞ்செய்வித் தார்கள்; கான-நறுமணங்கொண்ட, மா - பெரிய, மணி - அழகிய, கற்பகம் - கல்பகவிருக்ஷங்கள், தாங்கிய - ஏந்திநின்ற, ஊனம் இல் - குற்றமில்லாத, மலர் ஆடை-பூப்போல்மெல்லிய பட்டாடையையும், உடுத்தினார்—; (எ - று.)

இப்பாட்டிலுள்ள முற்றுக்களை எச்சப்பொருளனவாக்கியும் உரைக்கலாம்; அடுத்தகவியிலும் இப்படியே. நானம்-ஸ்நாநத்துக்குரிய வாசனைப் பூச்சுக்கள் என்னவுமாம். [2]தானமாமணிகற்பகந்தாங்கியஎன்ற பாடத்திற்கு-வணமைக்கு ணமுடைய சிறந்த சிந்தாமணியும் கல்பகவிருக்ஷமும் ஏந்திய என்று உரைக் கலாம்.மலராடை-பூத்தொழிலைக்கொண்ட ஆடையென்றும்,மலரையும் ஆடை யையு மென்றும் உரைத்தலும் உண்டு. கான-கான் என்ற பகுதியினடியாப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். பி-ம்:—[1]அகன்புனல். (கO௬௨)

கO. கொப்பி னின்று நுடங்குறு கொள்கையார்
செப்பொ னின்கல ராசி திருத்தினா
ரம்ப ரத்தி னரம்பைய [1]ரன்பொடு
மும்பர் [2]கோனுக ரின்னமிழ் தூட்டினார்.

(இ - ள்.) கொம்பின்-பூங்கொம்புபோல, நின்று நுடங்குறு-ஒல்கியொசிந்து நிற்கிற, கொள்கையார் - உடம்பின் தோற்றத்தை யுடையவர்களான, அம்பரத்தின் அரம்பையர் - விண்ணுலகத்துத் தேவமகளிர், (பரதனுடன் வந்த ஆடவர்க்கு), செம் பொன் இன் கலம் ராசி திருத்தினர்-சிவந்த பொன்னினாலாகிய கண்ணுக்கினிய ஆபரணங்களின் கூட்டத்தைத் திருத்தமாக அணிந்து, அன்பொடும் - அன்புடனே, உம்பர் கோன் நுகர் இன் அமிழ்து ஊட்டினர் - தேவராசனான இந்திரன் உண்ணும் இனிய அமிருதம்போன்ற நற்சுவை யுணவை உண்பித்தார்கள்; (எ - று.)

அம்பரம் - வடசொல்: ஆகாயம். கலம் - உண்கலமெனினும் பொருந்தும். பி - ம்:—[1]அன்பினர், அன்னவர். [2]கோனகர். (கoகூ)

கக. அஞ்ச டுத்த வமளி யலத்தகப்
பஞ்ச டுத்த பரிபுரப் பல்லவ
நஞ்ச டுத்த நயனியர் நவ்வியிற்
றுஞ்ச வத்தனை மைந்தருந் துஞ்சினர்.

(இ - ள்.) அலத்தகம் பஞ்சு அடுத்த-செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பெற்ற, பரிபுரம் பல்லவம் - சிலம்பணியையணிந்த தளிர்போன்ற பாதங்களையும், நஞ்சு அடுத்த நயனியர்-விஷத்தையொத்த கண்களையுமுடைய தேவமகளிர், அஞ்சு அடுத்த அமளி - ஐந்துபொருள்களை யுள்ளமைக்கப்பெற்ற படுக்கை மெத்தையிலே, நவ்வியின் துஞ்ச - பெண்மான்கள்போல (அருகிற்) படுக்க, அத்தனை மைந்தர்உம் துஞ்சினர் - (பரதன் சேனையிலுள்ள) ஆடவர்களனைவரும் நித்திரைசெய்தார்கள்; (எ - று.)

வந்த அந்த நஞ்சுடுத்தநயனியரான தெய்வமகளிர் சேனையிலுள்ள ஆடவரையெத்தி அங்குச் சமைந்தகோயிலினுட்கொண்டு, ஆட்டி ஆடையுடுத்துக் கலராசிதிருத்தி இன்னமிழ்தூட்டியபின் அஞ்சடுத்த அமளிப்பள்ளியில்துஞ்ச, மைந்தரும் அம்மகளிரோடு இனிதுஉறங்கினரென்க. எனவே, "நந்தலில்" என்ற பாடல் முதல் இந்தப்பாடல்வரையில் ஒருதொடராகும். 'அஞ்சடுத்த வமளி நயனியர்துஞ்ச' என்று போகநுகர்ந்தமையைக் குறிப்பித்தவாறு. அஞ்சு-ஐந்து என்பதன் போலி. அஞ்சடுத்த அமளி-பஞ்சசயன மெனவும்படும்; அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, மயில்தூவி, வெண்பஞ்சு என்னும் இவ்வைந்து பொருளாற் செய்யப்பட்ட மெத்தை. "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சுசேண, முறுதூவி சய்யை யோரைந்து" என்றார் முன்னோரும். இனி, திருப்பாவையில், "மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி" என்றவிடத்து, பஞ்சவிதமான படுக்கையாவது - அழகு குளிர்த்தி மார்த்தவம் பரிமளம் தாவள்யம் ஆக இவை; அஞ்சு உருவிட்டுச்செய்த படுக்கையென்றுமாம்' என்று ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான மிட்டருளியிருத்தல் காண்க. அலத்தகம்=அலக்தகம்: வடசொல்; செம்பஞ்சென்று பொருள்.

்ன்னே 'பஞ்சு' என வருதலால், இங்கு அலத்தகம் என்றது-செம்மைமாத் ்ரத்தை யுணர்த்தும். அலத்தகப்பஞ்சடுத்த, பரிபுரம்-உபமேயத்துக்கு ஏற்ற ுடைமொழிகள். கண்ணுக்கு நஞ்சு உவமை-கருமைக்கும், ஆசைநோயால் ்ன்பம்விளைத்தற்கும்என்க.நயனியர்-அவரவர்க்குரியமனைவியராகிய மானிட களிருமாம். (க௦௬௪)

கஉ. ஏந்து செல்வத் திமையவ ராமெனக்
கூந்த [1]றெய்வ மகளிர்கொண் டாடினார்
வேந்த ராதி சிவிகையின் வீங்குதோண்
மாந்தர் காறும் [2]வரிசை வழாமலே.

(இ - ள்.) வேந்தர் ஆதி - (அசசேனையிலுள்ள) அரசர்முதலாக, சிவிகை யின் வீங்கு தோள் மாந்தர் காறுஉம்-தண்டிகை சுமத்தலால் வீங்கிய தோளை யுடைய மனிதர்க ளிறுதியாக [எல்லோரையும்], வரிசை வழாமல்-முறைமை தவறாமல், கூந்தல் தெய்வம் மகளிர்-கூந்தலழகையுடைய தேவமாதர், ஏந்து செல்வத்து இமையவர் ஆம் என - மிக்க செல்வத்தையுடைய தேவர்களைக் கொண்டாடுவதுபோல, கொண்டாடினார்-பாராட்டி யுபசரித்தார்கள்; (எ-று.)

கீழ்ச்செய்யுள்வரை நான்குசெய்யுளால் சேனையிலுள்ளார் இன்பம்நுகர் ந்தவகையை விவரித்துக்கூறிய கவி, இச்செய்யுளால், அங்ஙனம் இன்பம் நுகர்ந்தவர் இன்னார் இனையாரென்பதின்றி மேலோர்முதல் கீழோர்காறும் ஒருநிகரேயாவ ரெனக் காட்டுகின்றார்; "சிவிகை, பொறுத்தானோடூர்ந்தா னிடை" எனத் திருக்குறளிலும் சிவிகைகாவுவானைக் கீழ்மைக்கு எடுத்துக் கூறியவாறு உணர்க. உத்தமஅங்கமாகிய தலையின் மயிரழகை எடுத்துக் கூறியது - மற்றையவயவங்களின் அழகுக்கும் உபலக்ஷணம்; "குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்," "மயிர்வனப்புங் கண்கவருமார்பின் வனப் பும்" எனப் பிறவிடங்களிலும் மயிர்முடியழகு தலைமையாகக் கூறப்பட்டிருத் தல் காண்க. வீங்குதோள் - தழும்பேறிய தோள். இமையவர் - கண் இமை யாதவர்: இமையில் (மூடாமையாகிய) விசேடமுடையவர்: இமயமலையில் வாழ்பவர். பி - ம்:—[1]ஏழை. [2]அவரின். (க௦௬௫)

கங. [1]மாதர் யாவரும் வானவர் தேவியர்
கோதில் செல்வத்து வைகினர் கொவ்வைவாய்த்
தீதில் [2]செல்வ மடந்தையர் சேடியர்
தாதி மாரெனத் தம்பணி கேட்பவே.

(இ - ள்.) கொவ்வை வாய்-கோவைப்பழம்போற்சிவந்த வாயையுடைய, தீது இல் செல்வம் மடந்தையர் - குற்றமில்லாத செல்வச் சிறப்பையுடைய தேவமாதர், சேடியர் தாதிமார் என-தோழிகளும் வேலைக்காரிகளும் போல, தம் பணி கேட்ப - தமதுகட்டளைகளைக்கேட்டு அவ்வாறே யொழுக, மாதர் யாவர்உம்-(பரதனுடன்வந்த) மகளிரெல்லோரும், வானவர் தேவியர் கோது இல் செல்வத்து வைகினர்-தேவமகளிர்க்கு உரிய குற்றமில்லாத போகத்தில் தங்கினார்கள்; (எ - று.)

கீழ் ஐந்து கவிகளால் மைந்தர் துறக்கவின்பம் நுகர்ந்தமையைக் கூறிய கவி, இதனுல், பரதனுடன்சென்ற மகளிர் சுவர்க்கலோகபோகம் அனுபவித்தமையைக் கூறுகின்ருர். பி-ம்:—[1]மாதரியாவரும், மாந்தரியாவரும். [2]தெய்வ, தேவர். பலபிரதிகளில் "நரகதர்க்கு" (கசு) என்று தொடங்கும் பாடலுக்குப்பின் இந்தச்செய்யுள் உள்ளது. (கoகசு)

கச. நந்த நந்த வனங்களி ஞண்மலர்க்
கந்த முந்திய கற்பகக் [1]காவினின்
றந்தர் வந்தென வந்திதன் கைதர
மந்த [2]மந்த [3]மணந்தது வாடையே.

(இ-ள்.) நந்தவனங்களின்-(அங்குப் பல) பூந்தோட்டங்களாக அமைந்த, நாள் மலர் கந்தம் நந்த முந்திய கற்பகம் காவினின்று-அன்றலர்ந்த பூக்களின் பரிமளம் பெருகும்படி செழித்துள்ள கற்பகச்சோலையினின்று, அந்தி தன் கை தர - அந்திமாலைப்பொழுது (தன்) கைகொடுத்து உதவ, அந்தர் வந்து என - குருடர் (தள்ளாடி மெல்ல) வந்தாற்போல,வாடை - தென்றற்காற்று, மந்தம் மந்தம் மணந்தது - மெல்லமெல்ல மணம்வீசிவந்தது; (எ - று.)

அந்திப்பொழுதில் இளந்தென்றற்காற்று மெல்லமெல்ல வீசியது, அந்திப்பொழுது கைகொடுத்து அழைத்துவரக் குருடர் மெல்லமெல்லவந்தாற்போன்றது என வருணித்தார்; **தற்குறிப்பேற்றவுவமையணி.** இரண்டாம் அடியில், உந்திய எனப்பிரித்து - வீசிய எனினுமாம். நந்தவநம், கந்தம், அந்தர், மந்தம்மந்தம் - வடசொற்கள். நந்தவனம் - மகிழ்ச்சியைத்தருஞ் சோலை. கற்பகம்=கல்பகம்; வேண்டுவார்க்கு வேண்டினபொருள்களைக் கற்பிப்பது; கல்பித்தல் - உண்டாக்குதல். அந்தி-ஸந்த்யா என்னும் வடசொல்லின் திரிபு; இது - இங்கே, சிறப்பாய், மாலைச்சந்தியை உணர்த்திற்று. மந்தம் மந்தம் - அடுக்கு, மிகுதிபற்றியது. வாடை - வடக்கிற்செல்வது: எனவே, தென்றல். பி - ம்:—[1]காவினில். [2]முந்த. [3]நடந்தது. (கoகஎ)

கரு. மான்ற ளிக்குல [1]நன்மதம் [2]வந்துணத்
தேன்ற ளிர்த்த கவளமுஞ் [3]செங்கதிர்
கான்ற நெற்றழைக் கற்றையுங் கர்பக
[4]மீன்ற ளிக்க நுகர்ந்தன [5]யானையே.

(இ - ள்.) தேன் தளிர்த்த - தேனை மிகுதியாகக்கலக்கப்பெற்ற, கவளம் உம் - உணவுத்திரளையையும், செம் கதிர் கான்ற நெல் தழை கற்றைஉம் - சிவந்தகதிர்களையீன்ற செந்நெற்பயிர்த்தழைகளின் தொகுதியையும், கற்பகம் - கல்பகதருக்கள், ஈன்று அளிக்க - உண்டாக்கிக்கொடுக்க, (அவற்றை), யானை - யானைகள், அளி குலம் வந்து நல் மதம் மான்று உண - வண்டுக்கூட்டங்கள்வந்து (தமது) சிறந்தமதநீரைப் பருகி மயக்கமுடையனவாக, நுகர்ந்தன - (தாம்) உண்டன; (எ - று.)

இதுவரை ஆடவரும் மகளிரும் இனிது உண்டுசுகித்ததைக் கூறிய கவி, இச்செய்யுளாலும் அடுத்த செய்யுளாலும் அஃறிணையான யானைகளும் குதிரைகளும் உண்டு சுகித்தமையைக் கூறுகின்றார். மான்றுஉண = உண்டு மால: விகுதிபிரித்துக்கூட்டல். மான்று - மால் என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். கபளம்-வடசொல். பி-ம்:—[1]மான்மதம். [2]வந்துறத். [3]செந்தளிர். [4]ஆன்று. [5]ஆனையே. (கoகூஅ)

கசு. [1]நரக தார்க்கற [2]நல்கு நலத்தநீர்
கரக தக்கரி கா[3]னிமிர்த் துண்டன
மரக தத்தின் கொழுந்தென வார்ந்தபுல்
குரக தத்தின் குழாங்களுங் கொண்டவே.

(இ-ள்.) நரகம் தார்க்கு அற-(தன்னில் மூழ்கினவர்க்கு) நரகக்கொடுமை நீங்க, நல்கும்-உதவுகிற, நலத்த-நன்மையையுடைய, நீர்-(தேவகங்காநதியின்) நீரை, கரம் கதம் கரி - துதிக்கையையும் கோபத்தையுமுடைய யானைகள், கால் நிமிர்த்து உண்டன - கால்களை நிமிரவைத்துநின்று பருகின; மரகதத்தின் கொழுந்து என - மரகதரத்தினத்தின் இள வொளிபோல, வார்ந்த - (மிகப்பசுமையாய் அங்குநீண்டு) வளர்ந்த, புல்-புற்களை, குரகதத்தின் குழாங்கள் உம் கொண்ட-குதிரைக்கூட்டங்களும் உட்கொண்டன; (எ - று.)

தார்க்கு - தருக்கு என்பதன் விகாரம். இனி, நரகு அதர்க்கு அறம் நல்கும் எனப் பிரித்து, நரகவழிக்குத்தடையாக நல்வினையை விளைக்கிற எனக் கொள்ளலுமாம்; அதர்-அருநெறி. கரம் என அடைமொழி வந்ததனால், கரி என்றது - காரணஇடுகுறிப்பொதுப் பெயராய் நின்றது. பி-ம்:—[1]நரகதற்கு. [2]நல்கின நீத்தநீர். [3]நிமிர்ந்து. (கoகக)

கஎ.—பரதனது அப்போதைய நிலை

இன்ன ரின்னணம் யாவரு மிந்திரன்
றுன்னு போகங்க டுய்த்தனர் தோன்றறு
னன்ன காயுங் கிழங்கு [1]முண் டப்பகல்
பொன்னின் மேனி பொடியுறப் போக்கினான்.

(இ-ள்.) யாவர்உம்-எல்லோரும், இன்னர் - இத்தன்மையராய், இன்னணம்-இவ்வாறு, இந்திரன் துன்னு போகங்கள் - தேவேந்திரனுக்குப்பொருந்திய இன்பங்களை, துய்த்தனர் - அனுபவித்தார்கள்; தோன்றல் - பரதன், தான்—, அன்ன காய்உம் கிழங்குஉம் உண்டு-அத்தன்மையனவான காய்களையும் கிழங்குகளையும் புசித்து, பொன்னின் மேனி பொடிஉற-(தனது) பொன் போலரிய திருமேனி புழுதியிலே பொருந்த [வெறுந்தரையிற் படுத்து], அ பகல் போக்கினான்-அத்தினத்தைக் கழித்தான்; (எ - று.)

இப்பாட்டின் பிந்தினவாக்கியத்தால், இராமவிரகத்தாற் சோகமுற்ற பரதனது தவமுதவிரதவொழுக்கம் விளக்கப்பட்டது. பரதனது நிலையைப் பரீட்சித்தற்காகவும் அவனதுமனநிலையைத் திடப்படுத்தற்காகவும் பரத்து

வாசமுனிவன் ராஜோபசாரத்தினும் மேம்பட்டு உபசரிக்கவும் பரதன் எதை யும் அங்கீகரியாமல் முனிவர்நிலையை மேற்கொண்டிருந்தனனென்க. அன்ன-கற்பக தருக்களால் அளிக்கப்பட்ட தெய்வத்தன்மையுடைய என்ற படி. இராமபிரான் வந்தபோது அவனுக்கு முனிவர்க்குஉரியஉணவுகளை யுதவிய பரத்துவாசன் பரதனுடன் வந்தோர்க்கெல்லாம் இங்ஙனம் பெரு விருந்துஅளித்து மகிழ்வித்ததனால், பகவானது அடியாரை [பாகவதரை] உபசரித்தலால், பகவானது திருவுள்ளம் உவப்படையுமென்ற நூற்கொள் கையை வெளியிட்டானென்க. பி - ம்:—[1]கொண்டு. (கக00)

கஅ.—சூரியன் உதித்தல்.

நீல [1]வல்லிரு ணீங்கலு [2]நீங்குமம்
மூல மில்கன விற்றிரு [3]முற்றுற
[4]வேலு நல்வினை துய்ப்பவர்க் கீறுசெல்
கால மென்னக் கதிரவன் றோன்றினான்.

(இ - ள்.) நீலம் - நீலநிறமுள்ள, வல்-வலிய[நீங்குதற்கரிய], இருள்— நீங்கலும்-நீங்கியவளவிலே, நீங்கும்-நீங்கிவிடுகிற, மூலம் இல் கனவில்-ஆதா மில்லாத கனுப்போல, அ திரு முற்றுற - (பரதனுடன்வந்தார் அனுபவித்த) அச்செல்வப்போகம் முடிந்துவிட, ஏலும் நல் வினை துய்ப்பவர்க்கு ஈறு செல் காலம் என்ன - பொருந்தினபுண்ணியப்பயனை அனுபவிப்பவர்க்குவருகிற அவ்வனுபவமுடிவுகாலம்போல, கதிரவன் தோன்றினான் - சூரியன் உதித்தான்; (எ - று.)

கங்குற்பொழுது நீங்கக் கதிரவன் தோன்றியவளவிலே, முனபு முனி வனது ஆற்றலாலுண்டான தேவபோகமெல்லாம் கனுத்தோற்றம்போலஒழிந் தன என்பதாம். சூரியோதயகாலம் அவ்வின்பநுகர்ச்சிக்கு முடிவுகாலமானத னால், அதனை 'ஏலுநல்வினை துய்ப்பவர்க் கீறுசெல் காலம்' என்றார். மூலம் இல்கனவு - தோற்றத்திற்காணப்படும் பொருள்கள் மெய்ம்மையாக நிலை பெறாது பொய்ம்மைப்பட்டொழியுங் கனவு. முற்றுற - நீங்கவென்றபடி. பி-ம்:—[1]நல். [2]நீங்குறும். [3]முந்துற, முற்றுறல். [4]ஏல. (கக0க)

ககூ. ஆறி நின்றற [1]மாற்றலர் வாழ்வெனப்
பாறி வீந்தது செல்வம் பரிந்திலர்
தேறி முந்தைத்தஞ் சிந்தைய ராயினர்
மாறி வந்து [2]பிறந்தன்ன மாட்சியார்.

(இ - ள்.) ஆறி நின்று - (மனமொழிமெய்கள்) அடங்கிநின்று, அறம் - தருமததை, ஆற்றலர் - (கடைபோகச்)செய்யாதவர்களுடைய, வாழ்வு என -(மறு மையுலகத்துச்)செல்வபோகம்(இடையில் அழிதல்)போல, செல்வம் பாறி வீந் தது - (பரதனுடன்வந்தார் அனுபவித்த)செல்வம் நிலைகெட்டொழிந்தது; (பின் அச்சேனைச்சனங்கள்), மாறி வந்து பிறந்து அன்ன மாட்சியார் -(தேவசரீரம்)

நீங்கி (மண்ணுலகத்தில்) வந்துபிறந்தாற்போன்ற தன்மையையுடையவர்களாய், பரிந்திலர் தேறி - (அப்போகநீக்கத்தைக் குறித்து) வருந்தாது மனந்தெளிந்து, முந்தை தம் சிந்தையர் ஆயினர் - முன்புதமக்குள்ள எண்ணத்தையுடையவரானார்கள்; (எ - று.)

கீழ் ஏழாங்கவியில், "பல்சனர்பிறந்துவேறோ ருலகு பெற்றாரென, மறந்துவைகினர் முன்னைத்தம்வாழ்வெலாம்" என்று கூறிய நிலைமை பின்பு மாறியதன்மையை இங்குக் குறித்தார். ஆறிநின்று - இந்நல்வினை போதுமென்று நிறுத்திவிடாமல் பொறுத்துநின்று என்றுங் கொள்ளலாம். பி-ம்:— [1]ஆற்றலன். [2]பரித்திலர். [3]பிறந்தன. (ககOஉ)

வேறு.

உO—சேனை புறப்பட்டுப் பாலைவனஞ்சேர்தல்.

காலை[1]யன் றெழுந்தது [2]கண்டு வானவர்
வேலையன் [3]றனிகமே யென்று [4]விம்மறச்
சோலையுங் கிரிகளுஞ் சுண்ண [5]மாயெழப்
பாலைசென் றடைந்தது பரதன் சேனையே.

(இ - ள்.) அன்று காலை - அந்நாளுதயத்தில், (சேனையாவும்), எழுந்தது கண்டு - துயிலொழிந்துபுறப்பட்டுச் செல்லுந்தன்மையைப் பார்த்து, வானவர் - தேவர்கள், 'வேலை அன்று - (இது) கடலன்று, அனிகம்ஏ-சேனையே', என்று - என்று நிச்சயித்து, விம்மு அற - (தாம் கொணடிருந்த) ஐயம் நீங்க, பரதன் சேனை—, சோலைஉம் கிரிகள்உம் சுணணம் ஆய் எழ - (வழியிடையுள்ள) சோலைகளும் மலைகளும் புழுதியாய் மேலெழும்படி, (அவற்றைப் பொடிசெய்துகொணடு), பாலை சென்று அடைந்தது (அப்பால்) பாலைவனத்தைப் போய்ச்சேர்ந்தது; (எ - று.)—பி - ம்:—[1]என்று. [2]கண்ட. [3]அனீகமே. [4]விம்முறச். [5]ஆர்ப்புற. (கக0ங)

உக.—அப்பொழுது பாலைநிலத்தின்கொடுமை தோன்றாத தன்மையை இதுமுதல் மூன்றுபாடல்களிற் கூறுகிறார்.

எழுந்தது துகளதி னெரியும் வெய்யவ
னழுந்தின னவிப்பரும் வெம்மை [1]யாறினன்
பொழிந்தன கரிமதம பொடிவெங் கானக
மிழிந்தன [2]வழிநடந் தேகொ ணாமையே.

(இ - ள்.) எழுந்தது துகளதின் அழுந்தினன் - (சேனைகள் செல்லுதலால்) மேலெழுந்த புழுதியில் மறைந்தவனாய், எரியும் வெய்யவன் - கொதிக்குந் தன்மையுள்ள சூரியன், அவிப்பு அரு வெம்மை ஆறினன் - தணித்தற்கரிய வெப்பந்தணிந்தா ; கரி பொழிந்தன மதம் - யானைகள் சொரிந்தனவான மதசலங்கள், வழி நடந்து ஏறு ஒணாமை - வழிநடந்துசெல்லவொண்ணாதபடி [வழுக்கலுண்டாம்படி], பொடி வெம் கானகம் இழிந்தன - புழுதிகளையுடைய வெவ்விய அப்பாலைவனத்திற் பெருகின; (எ - று.)

எரிக்குஞ் சூரியன் புழுதியில் மறைய, அக்கதிரவன் காய்ந்ததனால் வெம்மையடைந்த பூமி குளிரும்படி யானைகளின்மதநீர் பெருகிப் புழுதி மண்ணைச் சேறாக்கிற்றென்க. பி - ம்:—[1]ஆற்றினான். [2]அடிநடந்து. (கக0ச)

உஉ. [1]வடியுடை யயிற்படை மன்னர் வெண்குடை
செடி[2]யுடை நெடுநிழல் [3]செய்த தீப்[4]பொதி
படி[2]யுடைப் பர[5]லுறைப் பாலை மேலுயர்
கொடி[2]யுடைப் பந்தரிற் குளிர்ந்த தெங்குமே.

(இ - ள்.) வடி உடை - கூர்மையையுடைய, அயில் படை - வேலாயுதத்தையுடைய, மன்னர் - அரசர்களது, வெள் குடை - வெண்ணிறமான குடைகள், செடி உடை நெடு நிழல் செய்த - மரங்களினுடைய நீண்ட நிழல் போன்ற நிழலைச் செய்தன: (ஆதலால்), தீ பொதி படி உடை பரல்உறை பாலை - அனலின்தன்மை நிறைந்த இடத்தையுடையதும் பருக்கைக்கற்கள் உறுத்துந்தன்மையதுமாகிய அப்பாலைவனம், மேல் உயர் கொடி உடை பந்தரின் - மேலேஉயர்ந்துபடர்ந்த கொடிகளையுடைய பந்தல்போல, எங்கும் குளிர்ந்தது - எவ்விடமும் குளிர்ச்சிபெற்றது; (எ - று.)

மன்னர்வெண்குடை நிழல்செய்யப் பாலைவனம் எங்கும் பந்தரிட்டாற்போற் குளிர்ந்திருந்த தென்க.கொடிப்பந்தர்-படர்கொடிகளாலமைந்த பந்தல்; வடமொழியில் 'லதாக்ருஹம்' எனப்படும். இனி, 'மேலுயர்கொடியுடைப்பந்தரின்' என்பதற்கு - மேலேஉயர்ந்த துவசங்களாலாகிய பந்தலினால் என்று உரைப்பினும் அமையும். பந்தர் - இறுதிப்போலி. பி - ம்:—[1]வடிவுடை. [2]மிடை. [3]செய்ய. [4]பொறி. [5]உடைப். (கக0ரு)

உ௩. பெருகிய செல்வநீ பிடியென் றாள்வயிற்
[1]றிருகிய சீற்றத்தாற் [2]செம்மை யாய்நிறங்
கருகிய வண்ணலைக் கண்டு காதலி
[3]னுருகிய தளிர்த்தன வுலவை யீட்டமே.

(இ - ள்.) 'பெருகிய செல்வம் - மிக்க அரசாட்சிச்செல்வத்தை, நீ பிடி - நீ ஏற்றுக்கொள்', என்றாள்வயின் - என்று (தன்னை நோக்கிக்) கூறின தாயாகிய கைகேயியினிடத்தில், திருகிய சீற்றத்தால் - மனம்மாறுபட்டதனாலான கோபத்தினால், செம்மை ஆய் - முகம்சிவந்து, நிறம் கருகிய - திருமேனி நிறம் (இயல்பிற்) கறுத்துள்ள, அண்ணலை - பரதனை, கண்டு - பார்த்து, காதலின் - (அவன்பாற்கொண்ட) அன்பினால், உருகிய - நெகிழ்ந்தவையாய், உலவை ஈட்டம் - (பாலைவனத்திற்) பட்டுப்போன மரங்களின் தொகுதிகள், - தளிர்த்தன - துளிர்த்துச்செழித்தன; (எ - று.)

அப்பொழுதைய பரதனதுநிலைமை மரங்களும் இரங்கும்வகையிருந்தது என்பது, இதனாற் போதரும்; கீழ் "தாவரசங்கமமென்னுந் தன்மைய,

யாவையுமிரங்கிட...எய்தினன்" என்றும், "கற்கனியக் கனிகின்ற துய ரான்" என்றும் வந்தன காண்க. பி-ம்:—[1]திருகினசீற்றத்தான். [2]செம்மை யானிறம், செம்மைசேருளம், செம்மையாழுளம். [3]உருகின. (ககoசு)

உச.—பரதனுடன்வந்தசேனை பாலையை எளிதிற் கடந்து சித்திரகூடஞ் சேர்தல்.

வன்றெறு பாலையை மருத மாமெனச்
சென்றது சித்திர கூடஞ் [1]சேர்ந்ததா
லொன்றுரைத் துயிரினு மொழுக்க நன்றெனப்
[2]பொன்றிய புரவலன் பொருவில் சேனையே.

(இ - ள்.) உயிரின்உம் ஒழுக்கம் நன்று என - உயிரைக்காட்டிலும் நல் லொழுக்கமே சிறந்ததென்று கருதி, ஒன்று உரைத்து பொன்றிய - சத்திய மொன்றையே பேசி யிறந்த, புரவலன் - காத்தலில்வல்ல தசரதசக்கரவர்த் தியினது, பொருவு இல் சேனை - ஒப்பில்லாத சேனை,—வல் - கொடிய, தெறு - (தன்னிடஞ் சேர்ந்தாரை) வருத்துந்தன்மையுள்ள, பாலையை-பாலை நிலத்தை, மருதம் ஆம் என -(கீழ்க்கூறியவாறு நீரும் நிழலும் பெற்றுக்குளிர்ந் ததனால்) மருதநிலத்தைப்போல, சென்றது-எளிதிற் கடந்துசென்று, சித்திர கூடம் சேர்ந்தது - சித்திரகூடபருவதத்தை யடைந்தது; (எ - று.)

பாலைவனத்தை வருத்தமின்றி எளிதிற் கடந்ததென்பார் 'பாலையை மருதமாமெனச் சென்றது' என்றார். மருதம்ஆம்என-மருதநிலமென்னுமாறு (செய்து) என்றலும்உண்டு. மருதம் - நாடும் நாடுசார்ந்த இடமும். "ஒழுக்கம் விழுப்பந்தரலா னொழுக்க, முயிரினு மோம்பப் படும்" என்பவாதலால், 'உயி ரினுமொழுக்க நன்று' எனப்பட்டது. உயிர் எல்லாப்பொருளினுஞ்சிறந்த தாயினும் ஒழுக்கமிருந்தாலன்றி இம்மை மறுமை வீடுகளிற் பயன்பெறுமை யால், உயிரினும் ஒழுக்கம் நன்றாயிற்று. பி - ம்:—[1]சேர்ந்தது, சேர்ந்தவால். [2]போன்றின. (ககoஎ)

உரு.—இதுவும் மேற்கவியும் - குளகம்: ஆரவாரத்தைக்கேட்டு இளையபெருமாள் மலைச்சிகரத்தின்மீதுஏறிச் சேனாசமுத்திரத்தை நோக்குதலைக் கூறும்.

தூளியின் படலையுந் [1]துரகந் தேரொடு
மூளிருஞ் சினக்கரி முழங்கு மோதையு
[2]மாளிருங் [3]குழுவின ரார வாரமுங்
கோளிரும் படையிதென் றுணரக் கூறவே.

(இ - ள்.) (இங்ஙனம் சேனை சேர்ந்தபொழுது), தூளியின் படலைஉம் - (மேலெழுந்த) புழுதியின்திரளும், துரகம் தேரொடு மூள் இரு சினம் கரி முழங்கும் ஓதைஉம் - குதிரைகளும் தேர்களும் அடங்காதெழுகிற பெருங் கோபத்தையுடைய யானைகளும் ஒலிக்கிற முழக்கமும், இரு ஆள் குழுவினர்

ஆரவாரம்உம் - பெரியகாலாட்களின் கூட்டத்தாருடைய பேரொலியும், இது கோள் இரு படை என்று - 'இது வலிமையையுடைய பெரிய சேனை (வருவது)' என்று, உணர கூற-(முன்னே) அறியும்படி சொல்ல,—(எ - று.)— 'இளையவன் எழுந்தனன்' என வரும் கவியோடு இயையும்.

தூளிப்படலமும் ஆரவாரமும் சேனை வருவதுஎன்று ஊகித்தறிய ஏதுவாயிருந்தனவென்க. படலை - படலமென்னும் வடசொல் ஈறுதிரிந்தது. பி-ம்:—[1]துரகத்தோதையும், துரகதத்தேரொடு, துரகத்தோசையும். [2]ஆளியின். [3]குழுவினோர். (கக0அ)

உகூ. எழுந்தன னிளையவ னேறி னுனிலங்
கொழுந்துயர்ந் தனையதோர் [1]நெடிய குன்றின்மேற்
செழுந்திரைப் [2]பரவையைச் சிறுமை [3]பேசிய
கழுந்துடை வரிசிலைக் கடலை நோக்கினான்.

(இ - ள்.) (அங்ஙனம் படையெழுச்சியைக் குறிப்பாலுணர்ந்தவளவில்), இளையவன் - இலக்குமணன், எழுந்தனன் - எழுந்து,—நிலம் கொழுந்து உயர்ந்து அனையது - நிலவுலகம் கொழுந்துவிட்டு உயர்ந்தாற்போன்றதான, ஓர் - ஒப்பற்ற, நெடிய குன்றின்மேல் - பெரிய அம்மலைச்சிகரத்தின்மேல், ஏறினான் - ஏறி,—செழு திரை பரவையை - செழித்த அலைகளையுடைய கடலை, சிறுமை பேசிய-சிறியதாகச் சொல்லத்தக்க, கழுந்து உடை வரி சிலை கடலை - வலிமைமிக்க கட்டமைந்த வில்லையேந்திய சேனாசமுத்திரத்தை, நோக்கினான் - பார்த்தான்; (எ - று.)

இளையவன் - இளையபெருமாள். கழுந்து - வலிமையாதலை "கழுந்தாரு யுனகழல்பணியாதவர்" என்றவிடத்துங் காண்க. "கழுந்தோடும் வரிசிலைக் கைக் கடற்றானை" என்றார் கீழ்ப் பாலகாண்டத்தும். கழுந்து - உறுதியுமாம். இனி, கழுந்து - (வில்லின்) தண்டுமாம். 'கழுந்து - கையிலேந்துதலால் தேய்ந்து வழுவழுப்படைதல்' என்பாரும் உளர். பி-ம்:—[1]நெடியன். [2]பரவையும். [3]செய்தவக், செய்திடுங், எய்தவிக். (கக0கூ)

உஎ.—இதுவும் மேற்கவியும் - குளகம்: சேனையைக்கண்ட இலட்சுமணன் பரதனே கானிலும் போர்வருகின்றனனென்று கருதிச் சீற்றங்கொண்டு அதனை இராமபிரானிடம் தெரிவித்தலைக் கூறும்.

பரதனிப் படைகொடு பார்[1]கொண் டாண் மறங்
கருதியுட் கிடந்ததோர் கறுவு [2]காதலால்
விரதமுற் றிருந்தவன் மேல்வந் தா[3]னிது
சரதமற் றிலதெனத் தழங்கு சீற்றத்தான்.

(இ-ள்.) (நோக்கிய இலக்குமணன்), 'பார் கொண்டு-பூமிமுழுவதையும் (என்றும் தன்னுடையதாக்கிக்)கொண்டு, ஆள் - (தான்) அரசாளவேண்டுமென்ற, மறம்-கொடியதொழிலை, கருதி-எண்ணி, உள் கிடந்தது ஓர் கறுவு

காதலால் - மனத்திலடங்கிக்கிடந்ததொரு கறுவோடுகூடிய பேராசையால், பரதன்—, இ படை கொடு - இந்தச்சேனையைக் கூட்டிக்கொண்டு, விரதம் உற்று இருந்தவன் மேல் வந்தான் - (பிதிருவாக்கியபரிபாலநமாகிய) விரதத்தைப் பொருந்தியுள்ள இராமன்மேல் (போருக்கு எழுந்து) வந்தான்: இது சரதம் - இது உண்மையாம்; மற்று இலது-வேறொன்றுமில்லை,' என-என்று எண்ணி, தழங்கு சீற்றத்தான் - மிக்க கோபமுடையவனாய்,—(எ - று.)— 'குதித்தனன்' என வரும் கவியோடு தொடரும்.

தாய்வேண்டிய வரத்தாற் பதினான்குவருஷகாலங் கிடைத்த அரசாட்சி போதாதென்று பரதன் அதிருப்திப்பட்டுச் சேனையோடு வளைந்து போர் செய்து இராமனை வென்று அவனரசு கைக்கொண்டு என்றும் ஆளக்கருதி இங்குவந்தனன் என்றபடி. இனி, பார் கொண்டாள் மறம் கருதி என எடுத்து, (இராமனது) அரசியலைக் கவர்ந்துகொண்ட கைகேயியின் கொடுமையையே தானும் உட்கொண்டு என்றுமாம். கறு - உள்ளே தணியாத கோபம்; உ - சாரியை. பி-ம்:—[1]கொண்டான். [2]காந்தலான். [3]இதிற். (ககக0)

உ௮. குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தன னிராமனை விரைவி னெய்தினான்
மதித்திலன் பரதனின் மேல்வந் தான்[1]மதிற்
பதிப்பெருஞ் சேனையின் பரப்பி னா[2]னென்றான்.

(இ - ள்.) (இங்ஙனம் எண்ணிச் சீறி இலக்குமணன்), குவடு நீறு எழ மிதித்தனன் - அம்மலைச்சிகரம் பொடிபடும்படி (கொடியவிசையோடு) மிதித்து, பாரிடை குதித்தனன் - கீழே குதித்து, விரைவின் இராமனை எய்தினான் - விரைவாகவந்து இராமனை அடைந்து, (அவனைநோக்கி), 'பரதன்—, மதித்திலன்-(உனது பெருமையைச் சிறிதும்) மதிக்காமல், மதில் பதி பெரு சேனையின் பரப்பினான்-மதில்சூழ்ந்த அயோத்திநகரத்திலுள்ள பெரியசேனையின் தொகுதியையுடையவனாய், நின்மேல் வந்தான்-உன்மேல் (போருக்கு) வந்தான்', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

பரப்பினான் - பரப்பினுடனே என்றுமாம். பி-ம்:—[1]மதிட், இதின். [2]என. ஒருபிரதியில் இப்பாடல் காணப்படவில்லை. (கககக)

உகூ.—அப்போது இலட்சுமணன் யுத்தசன்னத்தனாய் இராமனிடம் கூறத்தொடங்குதல்.

கட்டினன் சுரிகையுங் கழலும் பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன் கவசம் பூட்டமைத்
திட்டன னெடுத்தனன் வரிவி லேந்தலைத்
தொட்டடி வணங்கிநின் றினைய [1]சொல்லினான்.

(இ - ள்.) (என்றுகூறியதுமன்றி இலக்குமணன்), சுரிகைஉம் கழல்உம் கட்டினன்-(இடையில்) உடைவாளையும் (பாதத்தில்) வீரக்கழலையும் கட்டிக்

கொண்டு, பல் கணை புட்டில்உம் பொறுத்தனன்-பல அம்புகளையுடைய (அம்பறாத) தூணியையும் தாங்கி, கவசம் பூட்டு அமைத்திட்டனன் - போர்க் கவசத்தை (உடம்பிற்) பூட்டிக்கொண்டு, வரி வில் எடுத்தனன்--கட்டமைந்த வில்லை (க் கையில்) எடுத்துக்கொண்டு, ஏந்தலை அடி தொட்டு வணங்கி நின்று-இராமபிரானைத் திருவடிதொட்டு நமஸ்கரித்து (எழுந்து) நின்று, இனைய சொல்லினன் - இவ்வார்த்தைகளைச் சொன்னான்; (எ-று.)—அவற்றை மேற் பன்னிரண்டுகவிகளிற் காண்க.

ஏந்தல் - ஆண்பாற்சிறப்புப்பெயர்; உயர்ந்தவனென்று காரணப்பொருள்: தொழிலாகுபெயரென்றுவது, அல் - கருத்தாப்பொருள்விகுதியென்றுவது இலக்கணங் கூறுக. தொடுதல் - கைகளாற் பரிசித்தல். பி-ம்:—[1]சொல்லுவான். (கககஉ)

௩௦.—இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - ஒருதொடர்: இளையபெருமாள் வீரவாதமாகக் கூறுவன.

இருமையு [1]மிழந்தவப் பரத னேந்துதோட்
பருமையு [2]மன்னவன் படைத்த சேனையின்
பெருமையு [3]நின்னொரு பின்பு [4]வந்தவென்
னொருமையுங் கண்[5]டினி யுவத்தி யுள்ளநீ.

(இ - ள்.) இருமைஉம் இழந்த - இம்மை மறுமையென்னும் இரண்டின் இன்பங்களையும் ஒருங்கேயிழந்த, அ பரதன்-அந்தப்பரதனது, ஏந்து தோள்-உயர்ந்ததோள்களின், பருமைஉம் - பருத்திருக்குந்தன்மையையும், அன்னவன் படைத்த - அவன் (தன்னுடையதாகப்) பெற்ற, சேனையின் - சேனையினது, பெருமைஉம் - பெருமையையும், நின் பின்பு வந்த - உன்பின்னே பிறந்த, ஒரு - தனியனான, என் - எனது, ஒருமைஉம் - ஒப்பின்மையையும், இனி - இப்பொழுது, கண்டு - பார்த்து, நீ—, உள்ளம் உவத்தி - மனம் மகிழ்வாய்; (எ - று.)

பரதனது தோள்களின் பூரிப்பும் அவன்சேனையின் பெருந்தொகையும் சிறிதும் பயனில்லாதனவாம்படி யானொருவனே அவற்றை அழித்திடுவேனென்பதாம். பரதன் தமையனுக்குத் தீங்குசெய்யப்புக்கதாகவும், அதுகாரணமாக அவனைத் தான் அழித்துவிடுவதாகவுங் கருதினனாதலால், இலக்குமணன் பரதனை 'இருமையுமிழந்தவன்' என்றான். "இருமைவகைதெரிந்து" என்ற திருக்குறளிற்போல 'இருமை' என்றது - ரண்டு எண்ணின்கண் நின்றது. ஒருமை - ஒற்றுமையுமாம். பி-ம்:—[1]இகழ்ந்த. [2]அன்னவர். [3]உன்னொரு, நின்னொடும். [4]நின்ற. [5]இனிது. (கககங)

௩௧. படரெலாம் [1]படப்படும் பரும யானையின்
றிடரெலா முருட்டின தேரு மீர்த்தன
குடரெலாந் திரைத்தன குருதி யாறுகள்
கடரெலா [2]மடுப்பன பலவுங் காண்டியால்.

(இ - ள்.) படர் எலாம் பட-பலவகைத்துன்பங்களும் உண்டாக, படும்-இறக்கிற, பருமம் யானையின் - பருமையையுடைய யானைகளாகிய, திடர் எலாம்-மேடுகளையெல்லாம், உருட்டின - உருட்டினவையாகியும், தேர்உம் - தேர்களையும், ஈர்த்தன - இழுத்துக்கொண்டனவாகியும், குடர் எலாம் திரைத்தன - குடல்களையெல்லாம் அலைத்துத்தள்ளுபவையாகியும், கடர் எலாம் மடுப்பன-கடல்முழுவதும் பாய்வனவாகிய, குருதி யாறுகள் பலஉம்-இரத்தநதிகள்பலவற்றையும், காண்டி - (என்னாலுண்டாக இப்பொழுதே) பார்ப்பாய்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

யானைமுதலியவற்றைக் கொன்று விழுத்தலாற் குருதிப் பேராறுகள் பலதோன்றுமாறு யானொருத்தனே செய்வே னென்கின்றனன் இலக்குமணன். படரெலாம் பட-ஆட்களெல்லாரும் இறக்க என்றுங்கொள்ளலாம்: ஆட்கள்-பாகரும், பரிக்கோற்காரரும்; இவ்வுரைக்கு, படர் வடசொல். பருமம்-அலங்காரமும், முதுகின்மேலிடுந் தவிசுமாம். குடர், கடர்-ஈற்றுப்போலிகள். அடுப்பன என்றும் பதம்பிரிக்கலாம். பி-ம்:—[1]படிபட, அடிப்பட. [2]திரைப்பன, நிறைப்பன, இரைப்பன. (கககச)

௩உ. கருவியுங் கைகளுங் கவச மார்பமு
முருவின வுயிரினோ டுதிரந் தோய்வில
[1]திரிவன சுடர்க்கணை [2]திசைக்கை யானைகள்
வெருவரச் [3]செய்வன காண்டி வீரநீ.

(இ - ள்.) சுடர் கணை-ஒளியையுடைய (எனது) அம்புகள், கருவிஉம் - (எதிரிகளது) ஆயுதங்களையும், கைகள்உம்-கைகளையும், கவசம் மார்பம்உம் - கவசத்தைத்தரித்த மார்பையும், உயிரினோடு-(அவரவர்) உயிருடனே, உருவின-ஊடுருவிச்சென்றவையும், உதிரம் தோய்வில திரிவன - (அதிவேகத்தால் அவர்கள்) இரத்தமும் படிதலில்லாதபடி (எப்புறத்துஞ்) செல்வனவுமாய்,—கை-துதிக்கையையுடைய, திசை யானைகள்-(அஷ்ட)திக்கஜங்களும், வெருவர-அஞ்சும்படி, செய்வன-(கொடும்போர்) செய்பவற்றை, வீர - ரகுகுலவீரனே! நீ—, காண்டி-பார்ப்பாய்; (எ - று.)

நானொருத்தனேயாக, என்னம்புகள் எதிரிகளது ஆயுதத்தையும் கைகளையும் அறுத்துத்தள்ளுவனவும் மார்பின்கவசத்தைப்பிளந்து ஊடுருவிச் செல்வனவுமாகி இரத்தமும்படியாமல் அத்துணைஇலகுவாகத் தொழில்செய்வதைக் காண்பாயாக என்கின்றனன் இலட்சுமணன். பி-ம்:—[1]தெரிவன. [2]திசைக்கண். [3]செல்வன, செல்வது. (கககரு)

௩௩. கோடகத் தேர்படு குதிரை தாவிய
வாடகத்[1] தட்டிடை யலகை யற்றுகு
கேடகத் தடக்கைகள் கவ்விக் [2]கீதத்தி
னூடக நடிப்பன காண்டி நாதநீ.

(இ-ள்.) தாவிய குதிரை படு-தாவிச்செல்லுந்தன்மையுடைய குதிரைக ளழியப்பெற்ற, கோடகம் தேர் - புதுமையான தேர்களின், ஆடகம் தட்டிடை - பொன்னினாலாகிய தட்டின்மேல், அலகை - பேய்கள், அற்று உகு கேடகம் தட கைகள் கவ்வி - அறுந்துவிழுந்த கேடகமென்னும் ஆயுதத்தை யேந்திய பெரிய (வீரர்களின்) கைகளைத் தம்கைகளில்) எடுத்துக்கொண்டு, (அவற்றால்தாளமிட்டவண்ணம்),கீதத்தின்-இசைபாடுதலோடு, நாடகம் நடிப்பன-கூத்தாடுவனவற்றை, நாத-தலைவனே! நீ—, காண்டி-பார்ப்பாய்; (எ - று.)

என்றாற்கொல்லப்பட்டு இறந்துவீழ்ந்த வீரர்களின்கையிலுள்ளகேடகங்களை யெடுத்துத் தாளமிட்டவண்ணம் பேய்கள் தேர்த்தட்டில் கூத்தாடுமாறு செய்யப்போகின்றேன்: நீ காண் என்கின்றனன் இலக்குமண னென்க. கோடகம் புதுமையாதலை "குதிரையும் புதுமையும்முடியுறுப்புங்கோடகம்" என்றபிங்கலந்தையாலும் அறிக. கோடகம்-கோஷ்டமாம். கோடு அகம் தேர் எனப்பிரித்து, வளைந்த இடத்தையுடைய தேர் எனினும் அமையும். கேடகம்-எதிரிகள் எறியும்படைக்கலங்களைத் தம்மேற்படவொட்டாது தடுக்குங் கருவி. பி - ம்:—[1]தகட்டிடை. [2]கித்திடு, கிதிம. (கககக)

௩௪. பண்[1]முதிர் களிற்றொடு [2]பரதன் சேனையி
னெண்முத லறுத்துநா னிமைப்பி னீக்கலால்
விண்முது குளுக்கவும் வேலை [3]யாடையின்
மண்முது காறவுங் காண்டி வள்ளனீ.

(இ - ள்.) பண் முதிர்-அலங்காரம் மிக்க, களிற்றொடு - யானைகளோடு கூடிய, பரதன் சேனையின்-பரதனது சேனையினுடைய, எண்-தொகுதியை, முதல் - வேருடனே, நான்—, இமைப்பின் - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே, அறுத்து நீக்கலால்-அறுத்து ஒழித்தலால், விண் முதுகு உளுக்கவும்-(பாரமிகுதிபற்றி) வீரசுவர்க்கம் முதுகு நெளிக்கவும், வேலை ஆடையின் மண் - கடலை யாடையாகவுடைய நிலவுலகம், முதுகு ஆறஉம் - (சுமையொழிந்து) முதுகை இளைப்பாற்றிக்கொள்ளவும், வள்ளல்-வரையாதருளுங் குணமுடையவனே! நீ—, காண்டி - பார்ப்பாய்; (எ - று.)

இப்பூலோகத்துப்பெருந்திரளாகவுள்ள சேனை கொல்லப்பட்டு வானுலகஞ் சேர்தலால், அவ்வானுலகம் சுமைமிகுதியால் முதுகுஉளுக்க, மண்ணுலகம் பாரம்நீங்கி இளைப்பாறு மென்க. போரிலிறந்தவர் வீரசுவர்க்கம் புகுவரென்பது, நூற்றுணிபு. பரதன்சேனையின் எண் - "அறுபதினாயிரம் அக்குரோணி." இமைப்பு-இமைப்பொழுதுக்குத்தொழிலாகுபெயர். வேலையாடையின்மண் - கடல்சூழ்ந்த பூமி. பி - ம்:—[1]முது. [2]பரந்த. [3]ஆடையிம். (கககஎ)

௩௫. நிவந்தவான் குருதியி னீத்த நீந்திமெய்
சிவந்த[1]சா தகரொடு சிறுகட் கூளியுங்
கவந்தமு [2]மலகையின் கைய தாயதென்
றுவந்தன குனிப்பன காண்டி யும்பர்போல்.

(இ - ள்.) நிவந்த - வழிந்தொழுகிய, வான் குருதியின் நீத்தம் - பெரிய இரத்தவெள்ளத்திலே, நீந்தி - நீந்துதலால், மெய் சிவந்த - உடம்பு செந்நிறமடைந்த, சாதகரொடு பூதகணங்களுடனே, சிறு கண் கூளிஉம்-சிறியகண்களையுடைய பேய்களும், கவந்தமஉம்-தலையற்ற உடற்குறைகளும்,—உலகம் நின் கையது ஆயது என்று 'நிலவுலகம்முழுவதும் உன்கைவசப்பட்டதாய்விட்டது' என்று, உம்பர் போல் - தேவர்கள் (மகிழ்தல்) போல, உவந்தன-மகிழ்ந்தனவாய், குனிப்பன - கூத்தாடுவனவற்றை, காண்டி - (நீ) பார்ப்பாய்; (எ - று.)

நிவந்த - மேலெழுந்த, அதிகப்பட்ட. சாதகரொடு என ஒரு உயர்திணையும், கூளியும் கவந்தமும் என இரண்டு அஃறிணைகளும் விரவி மிகுதியால் 'உவந்தன குனிப்பன'என்ற அஃறிணைமுடிபு ஏற்றன. சிறுகண்-உடம்பினளவுக்கு ஒவ்வாத கண். கூளி - பெருங்கழுகுமாம். கவந்தம் - கபந்தமென்னும் வடசொல்லின் திரிபு; 'தொழிலுடன்கூடின தலையற்ற உடல்' என்று பொருள். 'கவந்தங் குனிப்பன' என்றது, கோபாவேசத்தோடு விரைந்து போர்செய்து நின்ற வீரர்களது உடல்கள் பகைவரால் தலையறுபட்டபின்பும் சிறிதுநேரம் கீழ்விழாது நின்றவாறே பதைபதைத்துக் கைகால்கள் துடிப்பனவற்றை; இனி, "பேரொத்தவாயிரம் பேர்மடிந்தாற்பிறக்குங்கவந்த நரொத்தவாடும்", "ஆனையாயிரந் தேர்பதினாயிர மடர்பரியொருகோடி, சேனைகாவலராயிரம் பேர்படிற்கவந்த மொன்றாடும்", "அநேகமாயிரம்பேர் படக் கவந்தமொன்றாடும்" என்றபடி சேனையில் மிகப்பலவுயிர் இறந்தபொழுது ஒரு கவந்தம் எழுந்துநின்று ஆடு மென்பதை இங்குக்குறித்ததாகவுங் கொள்ளலாம். 'உலகம் நின்கையதாயது என்றுஉவந்தன' என்றது - தற்குறிப்பேற்றம்.நற்காரியத்துக்குத் தேவர் களித்தல், இயல்பு.பி-ம்:—[1]சாதகத்தொடு, சாரதரொடு. [2]உலகும். (ககக அ)

ருகு. சூழிவெங் கடகரி துரக ராசிகள்
பாழிவன் புயத்திகல் வயவர் பட்டற
[1]வாழிவெங் குருதியா [2]லலைந்து வேலைக
ளேழுமொன் றாகிநின் [3]றிரைப்பக் காண்டியால்.

(இ-ள்.) சூழி - முகபடாத்தையணிந்த, வெம் - வெவ்விய, கடம் கரி - மதயானைகளும், துரக ராசிகள்-குதிரைக்கூட்டங்களும், பாழி வல் புயத்து - பெருமையையுடைய வலிய தோள்களையுடைய, இகல் வயவர்-போர்வீரரும், பட்டு அற-இறந்தொழிய,—ஆழி வெம் குருதியால்-(அவற்றினுடம்பினின்று பெருகிய) சமுத்திரம்போன்ற வெம்மையான இரத்தவெள்ளத்தால், அலைந்து - கலக்கப்பெற்று, வேலைகள் ஏழ்உம் ஒன்றுஆகிநின்று - ஏழுகடல்களும் ஒன்றுகூடி, இரைப்ப - ஒலிக்க, காண்டி - (நீ) பார்ப்பாய்; (எ - று.)

நான் சதுரங்கசேனைகளை வெட்டிவீழ்த்தலால் இரத்தக்கடல் தோன்றி எழுகடலையும் ஒன்றாக்கிப் பேராரவாரஞ்செய்வதைக் காண்பா யென்கின்றனனென்க. [1]வீழி என்றபாடத்திற்கு - வீழிப்பழம்போன்ற என்றும், வீழ்தலை

யுடைய என்றும் உரைக்கலாம். [2] அலைந்தஎன்ற பாடத்திற்கு-அலையைப்பெற்ற என்று உரைக்க. பி-ம்:—[2] அழிந்த. [3] இரைக்கக். (ககககூ)

ஙஎ. ஆளற [1] வலங்குதே ரழிய வாடவர்
வாளற வரிசிலை துணிய [2] மாக்கரி
தாளறத் தலையறப் புரவி [3] தாளொடுந்
தோளற [4] வடிக்கணை தொடுப்பக் காண்டியால்.

(இ-ள்.) ஆள் அற-காலாள்வீரர்கள் அறுபடவும், அலங்கு தேர் அழிய - அசைகின்ற தேர்கள் அழியவும், ஆடவர் வாள் அற-(அவற்றில் ஏறிய) வீரர்களது வாளாயுதங்கள் துணிபடவும், வரி சிலை துணிய-கட்டமைந்த விற்கள் அறுபடவும், மா கரி புரவி தாள் அற தலை அற - பெரியயானைகளும் குதிரைகளும் கால்கள்அறுபடவும் தலைகள்அறுபடவும், தாளொடுஉம் தோள் அற - (அவற்றில்ஏறியவீரர்களது) கால்களும் தோள்களும் அறுபடவும், வடி கணை தொடுப்ப-கூரிய அம்புகளை (நான்) பிரயோகிக்க, காண்டி-பார்ப்பாய்;(எ று.)

'ஆடவர்' என்பதை மீண்டும்எடுத்து 'தாளொடுந் தோளற' என்பதனோடுங் கூட்டுக. பி - ம்:—[1] வயங்கு. [2] மாதலி. [3] த்தா ரொடுந், தன்னொடுந். [4] வடிகணை. இச்செய்யுள் "தழைத்த" என்ற அடுத்த பாடலுக்குப்பின் சில பிரதியிற் காணப்படுகின்றது; சிலபிரதியி லில்லை. (ககஉ0)

ஙஅ. [1] தழைத்தவான் [2] சிறையன தசையுங் கவ்வின
வழைத்தவான் பறவைக ளலங்கு பொன்வடிம்
பிழைத்தவான் பகழிபுக் [3] கிருவர் மார்பிடைப்
புழைத்தவான் பெருவழி [4] போகக் காண்டியால்.

(இ - ள்.) தழைத்த வான் சிறையன-செழித்த பெரிய இறகுகளையுடையனவும், அலங்கு பொன் வடிம்பு இழைத்த-அசைந்து ஒளிசெய்கிற பொன்னினால் விளிம்புஅமைக்கப்பெற்றவையும் ஆகிய, வான் பகழி-சிறந்த (என்) பாணங்கள், இருவர் மார்பிடை - (பரதன் சத்துருக்கினன் என்னும்) அவ்விரண்டுபேரது மார்பிலே, புக்கு - தைத்து, தசைஉம் கவ்வின - சதையைக் கௌவிக்கொண்டவையும், வான் பறவைகள் அழைத்த - ஆகாயத்திற்செல்லும் (கழுகுமுதலிய) பறவைகளை (விருந்துண்ண) அழைத்தவையுமாய், புழைத்த வான் பெரு வழி - (தாம் புக்குத்) துளைத்துண்டாக்கின மிகப்பெரு வழியாக, போக - ஊடுருவிசசெல்ல, காண்டி - பார்ப்பாய்; (எ - று.)

பாணங்கள் பரதசத்துருக்கினர்களின்மார்புகளைத் துளைத்து வழியுண்டாக்கிக் கழுகுமுதலிய தசையுண்ணும் விலங்குகளை யழைப்பனபோலப் பேரொலிசெய்தவண்ணம் உருவிசசெல்வதைக் காண்பாயாக என்கின்றனன் இலட்சுமண னென்க. விசையொடு செல்லுதற்காக அம்புகளுக்கு இறகுகட்டுதல் இயல்பாதலால், 'தழைத்த வான்சிறையன' எனப்பட்டது. இனி இப்பாட்டுக்கு - நன்கு பரப்பிய பெரியசிறகுகளையுடையவையும் தம் மினத்

தைக்கூவி யழைத்தலையுமாகிய பெரிய (கழுகுமுதலிய) பறவைகள் என் அம்புகள் இருவர் மார்பிடையிலே புக்குத் துளைத்த பெருவழியில் நுழைந்து தசைகவ்வினவாய்ச் செல்லக் காண்பாய் என உரைப்பினும் அமையும். தசை-இலக்கணப்போலி. இருவர் - தொகைக்குறிப்பு. பரதனுக்குத் துணையாய் உடன்நின்றதுபற்றி, சத்துருக்கினன்மேலும் பகைமை பாராட்டப்பட்டது. வான் பெரு - ஒருபொருட்பன்மொழி. பி-ம்:—[1]தழைத்தன. [2]சிறையின. [3]ஈரும். [4]போவக், போல்வ. (ககஉக)

ஙகூ. ஒரு[1]மகள் காதலி னுலகை நோய்செய்த
பெரு[2]மக னேவலிற் பரதன் றான்பெறு
மிருநில மாள்கைவிட் டின்றென் னேவலா
லருநர காள்வது காண்டி யாழியாய்.

(இ - ள்.) ஒரு மகள் காதலின் - (கைகேயியென்னும்) ஒரு பெண்ணினிடத்து ஆசையால், உலகை நோய் செய்த - உலகமுழுவதையும் வருத்திய, பெருமகன்-தசரதசக்கரவர்த்தியினது, ஏவலின்-கட்டளையினால், பரதன்—, தான் பெறும்-தான் பெற்ற, இரு நிலம் - பெரியபூமியை, ஆள்கை-ஆளுதலை, விட்டு - நீங்கி, இன்று - இப்பொழுது, என் ஏவலால்-எனது கட்டளையால், அரு நரகு ஆள்வது-மீளுதற்கரிய நரகலோகத்தை அடையப்போவதை, ஆழியாய் - ஆஜ்ஞாசக்கரமுடையவனே! காண்டி - பார்ப்பாய்; (எ - று.)

பரதனைத் தமையனுக்குத் துரோகஞ்செய்யவந்தவனென்று கருதியதுபற்றி, இலக்குமணன் 'அருநரகாள்வது' என்கிறான். பி-ம்:—[1]மகன். [2]மகள்.

சo. வையகந் துறந்துவந் தடவி வைகுத
லெய்திய துனக்கென [1]நின்னை யீன்றவ
ணைதல்கண் டுவந்தவ [2]ணகையி னோங்கிய
கைகயன் மகள்விழுந் [3]தரற்றக் காண்டியால்.

(இ - ள்.) 'வையகம் துறந்து - இராச்சியத்தை விட்டு, அடவி வந்து வைகுதல்-வனத்தில் வந்துதங்குதல், உனக்கு எய்தியது-உனக்குநேர்ந்ததே,' என - என்று, நின்னை ஈன்றவள் நைதல் - உன்னைப்பெற்றவளான கௌசலியை வருந்துதலை, கண்டு - பார்த்து, உவந்தவள் - மகிழ்ந்தவளான, நகையின் ஓங்கிய கைகயன்மகள் - பழியில் மிக்க கைகேயி, விழுந்து அரற்ற - (அம்மகிழ்ச்சி யொழிந்து புத்திரசோகத்தால்) கீழ்விழுந்து கதற, காண்டி - பார்ப்பாய்; (எ-று.)—பி-ம்:—[1]உன்னை. [2]நகையினேக்கிய, நன்மை நோக்கிய. [3]அலறக். (ககஉரு)

சக. அரஞ்சுட [1]வழனிமி ரலங்கல் வேலினாய்
விரஞ்சொரு [2]நொடியிலிவ் வனிக வேலையை
யுரஞ்சுடு வடிக்கணை யொன்றில் வென்றமுப்
புரஞ்சுடு மொருவனிற் பொலிவென் யானென்றான்.

(இ-ள்.) அரம் சுட - அரமென்னுங்கருவி (அராவி) வருத்திக் கூர்செய்த லால், அழல் நிமிர் - நெருப்பின்தன்மை [கொடுமை] மிக்க, அலங்கல் வேலி னாய் - வெற்றிமாலையைத்தரித்த வேலாயுதத்தையுடையவனே! விரஞ்சு - விரைந்து, ஒருநொடியில் - ஒருமாத்திரைப்பொழுதிலே, இ அனிகம் வேலை யை - இந்தச்சேனாசமுத்திரத்தை, உரம் சுடு வடி கணை ஒன்றில் - (பகைவர் களது) வலிமையை அழிக்குந்தன்மையுள்ள கூரியதோ ரம்பினால், யான்—, வென்று - சயித்து, மு புரம் சுடும் ஒருவனின் - திரிபுரத்தை எரித்தழித்த ஒப்பற்ற உருத்திரமூர்த்திபோல, பொலிவென் - விளங்குவேன், என்றான் - என்றுகூறினான், (இலக்குமணன்); (எ - று.)

அரம் - வாள்விசேடம்; "வாளரந் துடைத்தவை.வேல்" என்றார், சிந்தா மணியாரும். சுடுதல்-வருத்துதலாதலை "ஒளிவிடுந் துன்பஞ், சுடச்சுட நோற் கிற்பவர்க்கு" எனத் திருக்குறளிலுங் காண்க. சுடஎன்றதற்கேற்ப 'அழல் நிமிர்' என்றார். அலங்கல் - அசைதல்; மாலைக்கு ஆகுபெயர். விரஞ்சு - விரை ந்து: போலி. முப்புரஞ்சுடுமோருவன் என்பதில் அடங்கிய கதை:—தாரகா சுரனது புத்திரர்களாகிய வித்யுன்மாலி தாரகாட்சன் கமலாட்சன்என்ற அசு ரர்கள் மூவரும் அரும்பெருந்தவஞ்செய்து பெருவரங்கள் பெற்று மயனென் பவனால் சுவர்க்கம் மத்தியம் பாதாளம்என்ற மூவுலகங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன் என்ற இவற்றால் அரண் வகுக்கப் பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுடைய மூன்றுபட்டணங் களைப்பெற்று மற்றும் பல அசுரர்களோடும் அரக்கர்களுடனே நினைத்த விடங்களிற் பறந்துசென்று பாழாக்கி வருகையில், அவ்வுபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாத தேவர்முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவ பெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாக வும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும்,[1] பிரமனைச் சாரதியாகவும், பொன்மயமான மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகுஅமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக் கொண்டு யுத்தசன்னத்தனாகிச் சென்று போர்செய்கையில், தேவர்கள் இறு மாப்புக்கொள்ள, அதனையுணர்ந்த சிவபெருமான் சினந்துபுன்னகைசெய்து அவர்களைப் பட்டணங்களோடு எரித்திட்டன னென்பதாம். பி-ம்:—[1]எழு. [2]நொடியினில். (கக௨சு)

சஉ.—இதுமுதல் ஆறுகவிகள் - கடுஞ்சீற்றங்கொண்ட இலக்குமணனுக்கு இராமன் சமாதானங் கூறுவன.

இலக்குவ வுலகமோ ரேழு மேழுநீ
கலக்குவ னென்பது கருதி னலது
விலக்குவ [1]தரிதது விளம்பல் வேண்டுமோ
[2]புலக்குரித் தொருபொருள் புகலக் கேட்டியால்.

ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இலக்குவ - லக்ஷ்மணனே! நீ—, உலகம் ஓர் ஏழ்உம் ஏழ்உம்- உலகம் பதினான்கையும், கலக்குவன் என்பது - கலங்கச்செய்வேனென்ற எண்ணத்தை, கருதினால் - எண்ணினால், அது விலக்குவது அரிது - அத் தொழில் (யாவர்க்கும்) தடுத்தற்கு அரியதாம்; அது விளம்பல் வேண்டும்ஓ - அதைப்பற்றிக் கூறவேண்டுவதுண்டோ? [கூறாமலே யார்க்கும் பிரசித்த மாகத் தெரியும் என்றபடி]; (அது நிற்க: இப்பொழுது), புலக்கு உரித்து ஒரு பொருள் - அறிவுக்கு ஏற்றதொரு செய்தியை, புகல - (யான்) சொல்ல, கேட்டி -(நீ) கேட்பாய்; (எ - று.)—ஆல் - அசை.

'புலத்துக்கு' என்பது அத்துச்சாரியைதொக்கு 'புலக்கு'என நின்றது; "கல்லார்ப்பிணிக்கும்" என்ற திருக்குறளில் 'நிலக்கு என்பது - செய்யுள் விகாரம்' என்றார் பரிமேலழகரும். பி-ம்:—[1]அரிதுஈ, அருமையாம். [2]புலக் குரித்தோர், புலக்குரி. (ககஉரு)

சரு. நங்குலத் துதித்தவர் [1]நவையு ணீங்கின
ரெங்குலப் புறுவர்க ளெண்ணின் யாவரே
தங்குலத் [2]தொருவருந் தரும [3]நீங்கினர்
பொங்குலத் [4]திரளொடும் பொருத தோளினாய்.

(இ-ள்.) பொங்கு-விளங்குகிற, திரள் உலத்தொடுஉம் - திரண்ட கற்றூணுடனே, பொருத-மாறுபட்ட [ஒத்த என்றபடி], தோளினாய் - தோள்களை யுடையவனே! நம் குலத்து உதித்தவர் - நமதுகுலத்திற் பிறந்தவர்களாகிய, நவையுள் நீங்கினர்-குற்றத்தின்நீங்கிய அரசர்கள், எங்கு உலப்பு உறுவர்கள்- எவ்வாறு அளவிட்டுமுடிக்கப்படுவர்? [அளவிறந்தவர் என்றபடி]; (அவர் களுள்], எண்ணின்-ஆலோசிக்குமிடத்து, தம் குலத்து ஒருவு அரு தருமம் நீங்கினர் - தமதுகுலத்திற்கு நீங்கவொண்ணாத அறத்தினின்று நீங்கினவர், யாவர்ஏ - யார் (உளர்)? [எவரும் இல்லை என்றபடி]; (எ - று.)

நங்குலத்தவர் எவரும் அறத்திற்குமாறான நெறியிற்செல்லாரென்று ஸ்ரீராமன் பொதுவாகக்கூறுகின்றான். "நமகுலக்குரவர்கள் நவையினீங்கி னார்,.........எமகுலப்புறவரென்றெண்ணி நோக்குகேன்" எனத் தசரதன் வார்த்தையிலும் (கீழ் மந்திரப்படலத்தில்) வந்துள்ளது. 'உலத்திரளொடும்' என்பது, மாற்றப்பட்டது. பி - ம்:—[1]நவைக்கண். [2]ஒருவரு. [3]நீங்கிலார். [4]திர ளொடு. (ககஉசு)

சச. எனைத்துள மறையவை யியம்பற் [1]பாலன
பனைத்திரள் [2]கரக்கரிப் பரதன் செய்கையே
[3]யனைத்திற [4]மல்லன [5]வல்ல [6]வன்னது
நினைத்திலை யென்வயி [7]னேய நெஞ்சினால்.

(இ - ள்.) பனை திரள் கரம்-பனைமரம்போன்ற திரண்ட துதிக்கையை யுடைய, கரி யானைச்சேனையையுடைய, பரதன் - பரதனது, செய்கைஏ - செயல்களே, மறை எனைத்து உள அவை இயம்பற்பாலன - வேதங்கள் எவ்வளவு உள்ளனவோ அவையெல்லாஞ் சொல்லத்தக்க தன்மையுள்ளன ;ஆனை

திறம் அல்லன அல்ல - (நீசொல்லும்) அத்தன்மையனவான தகுதியற்றகாரி யங்கள் அல்ல; அன்னது - அவ்வுண்மையை, என்வயின் நேயம் நெஞ்சினல் நினைத்திலை-என்னிடத்து அன்புமிகுதியையுடைய மனத்தினல் (நீ) எண்ணி யறிந்தாயில்லை; (எ - று.)

உலகத்துக்கெல்லாம் ஒழுக்கம் வரையறுத்துக்கூறுகிற வேதங்கள்எடுத் துக்காட்டத்தக்கவை பரதனெழுக்கங்களென அவற்றைச்சிறப்பித்துக் கூறிய வாறு: இதனல், வேதத்தின்கொள்கைக்கு மாருன செயல் பரதனிடம் இரா தென்று எடுத்துக்கூறினன் இராமனென்க. ஏ - தேற்றம். அனே - அகரச் சுட்டின் மரூஉவென்பர்; தொல்காப்பியத்தில்"அனை நிலைவகையோடு"என்ற விடத்து, 'அனை என்றது-சுட்டு நிலை'என வுரைத்தார் நச்சினர்க்கினியரும். பி ம்:—[1]பாலவோ. [2]கைக். [3]அனைத்தறம். [4]வல்லன. [5]துய்ய, ஐய. [6]நின்னது, [7]நேச. (ககஉஎ)

சரு. பெருமக [1]னென்வயிற் பிறந்த காதலின்
வருமென [2]நினைகையு மண்ணை யென்வயிற்
றருமென [2]நினைகையுந் [3]தவிரத் தானையாற்
பொருமென நினைகையும் புலமைப் பாலதோ.

(இ - ள்.) '(பரதன்), பெருமகன் என்வயின் பிறந்த காதலின் - தலை மகனை என்னிடத்து உண்டான அன்பினல்,வரும்-(இங்கு) வருவான்,'என- என்று, நினைகைஉம்-எண்ணுதலும், 'மண்ணை-இராச்சியத்தை, என்வயின் - என்னிடத்து, தரும்-கொடுப்பான்,' என-என்று, நினைகைஉம்-எண்ணுதலும் தவிர-ஒழிய, 'தானையால் - சேனைகளோடு, பொரும் - (என்னுடன்) போர் செய்வான்,' என-என்று, நினைகைஉம் - எண்ணுதலும், புலமை பால் - அறிவின்பாற்பட்டதாகுமோ? [அன்று என்றபடி]; (எ - று.)

பரதன் இப்பொழுது வருதலை என்னிடத்து அன்பால் வருவதாகவும் இராச்சியத்தை எனக்குக்கொடுக்கவருவதாகவும் கருதுவது அழகேயொழிய, போர்செய்யவருவதாகக் கருதுதல் அறிவுடைமைக்குச் சிறிதும் ஏற்றதன் றென்பதாம். பெருமகன்-சக்கரவர்த்தி குமாரனன பரதன்; அரசாளும் பெரு மைக்குஉரியனன பரதன், பெருமைக்குணமுடையனய பரதன் என்னவு மாம். பி ம்:—[1]ஏவலின். [2]நினைக்கையும். [3]தவிர்ந்து, தவிர்த்துத். (ககஉஅ)

சசு. பொன்னெடும் பொருகழற் பரதன் [1]போந்தன
னன்னெடும் [2]பெரும்படை நல்க [3]லன்றியே
யென்னெடும் பொருமென வியம்பற் பாலதோ
மின்னெடும் பொருவுற [4]விளங்கும் வேலினய்.

(இ - ள்.) மின்னெடுஉம் பொருவு உற-மின்னலோடு ஒப்ப, விளங்கும்- பிரகாசிக்கிற, வேலினய் - வேற்படையையுடையவனே! பொரு கழல் - போருக்குரிய [வீரத்தை விளக்குகிற] கழலென்னும் காலணியையுடைய,

பரதன்—, போந்தனன் - (இங்கு) வந்து, நல் நெடு பெரு படை - சிறந்த மிகப்பெரியசேனையை, பொன்னொடும் - அரசாட்சிச்செல்வத்துடனே, நல்கல் அன்றி - (எனக்குக்) கொடுப்பதல்லாமல், என்னொடும் பொரும் என - என்னோடு போர்செய்வானென்பது,இயம்பற்பாலது ஓ-சொல்லத்தக்க தகுதியுடையதோ? [அன்று என்றபடி]; (எ-று.)

பரதன் பொருமெனநினைகையும் புலமைப்பாலதன்று எனக்கீழ்க் கூறியதனால்,அப்படிப்பட்டசெயலை வாயினாற்சொல்லுவதுஎங்ஙனம்தகுமென்கின்றான் இராமனென்க. பொன்னொடும் பொரு கழல் என எடுத்து, பொன்னினாற் பொருந்திய வீரக்கழலென்பாரும் உளர்; இவ்வுரைக்கு, 'ஒடு' உருபு - 'ஆல்' உருபின்பொருளது: உம் - இசைநிறை. போந்தனன் - புகுந்தனன் என்பதன் மரூஉ. பி - ம்:—[1]போந்துதன், போந்துதான், போகத்தான். [2]படைநிலம். [3]இன்றியே. [4]விளங்கு, இலங்கு.　　(ககஉகூ)

சஎ. சேணுயர் தருமத்தின் [1]தேவைச் செம்மையி
னாணியை யன்னது நினைக்க [2]லாகுமே
பூணியன் மொய்ம்பினாய் போந்த தீண்டெனைக்
காணிய [3]வீது [4]பின்னுங் காண்டியால்.

(இ-ள்.) பூண் இயல் மொய்ம்பினாய் - ஆபரணம்பொருந்திய தோள்களையுடையவனே! சேண் உயர் தருமத்தின் தேவை - மிகச்சிறந்த தருமத்துக்கு உரிய தெய்வத்தின் வடிவமானவனும், செம்மையின் ஆணியை - நன்மைக்குணமாகியதேரை நிலைநிறுத்தும் அச்சாணிபோ லுள்ளவனுமாகிய பரதனைப் பற்றி, அன்னது நினைக்கல் ஆகுமே - (நீ குறித்த) அவ்விதமாக நினைத்தல் தகுதியாமோ? [ஆகாது]: ஈண்டு போந்தது - (அவன்) இங்குவந்தது, எனை காணிய-என்னைப் பார்க்கும்பொருட்டாம்; இது நீ பின்உம் காண்டி - இதனை நீ பின்பும் (கண்கூடாகப்) பார்ப்பாய்; (எ-று.)—ஆல்-தேற்றம்: அசையுமாம்.

'தருமத்தின்தேவு செம்மையினாணி' எனப் பரதனைக் குறிக்குஞ் சொற்கள், அந்தப்பரதன் தருமத்திற்குமாறாக நம்மீதுபடையெடுத்துவரானென்ற பொருளைநிலைநிறுத்தும்: கருத்துடையடைகோளி. தருமத்தின்தேவு-தருமதேவதை. தேவு-'தேவ' என்னும் வடசொல்லின் திரிபு: இது தமிழ்மொழியென்பது, நச்சினார்க்கினியர்கருத்து. செம்மையின் ஆணி - ஏகதேசவுருவகம்; இனி, நடுவுநிலைமையைத் தாங்குபவ னென்றும் பொருள்கொள்ளலாம். ஆணி - உரையாணி யென்றுருமுளர். ஏ - எதிர்மறை. பூணியன்மொய்ம்பினாய் - அணிகலமாகப்பொருந்திய வலிமையையுடையவனே என்றுங் கொள்ளலாம். காணிய - எதிர்காலவினையெச்சம். பி - ம்:—[1]கோவை, அறிவை, சேர்வை. [2]ஆகுமோ. [3]அது. [4]பின்னைக்.　　(ககங0)

சஅ.—அப்போது சேனையைநிறுத்திவிட்டுப் பரதன் தம்பியுடன் இராமனை யணுகுதல்.

என்றன னிளவலை நோக்கி யேந்தலு
நின்றனன் பரதனு நிமிர்ந்த [1]சேனையைப்
பின்றரு கென்றுதன் [2]பிரிவில் காதலிற்
றன்றுணைத் தம்பியுந் தானு முந்தினான்.

(இ - ள்.) ஏந்தல்உம் - ஸ்ரீராமனும், இளவலை நோக்கி - தம்பியாகிய இலக்குமணனைப் பார்த்து, என்றனன்-என்று (இவ்வாறு) சொல்லி, நின்றனன் - (பரதன்வருகையை எதிர்பார்த்து) நின்றான்; பரதன்உம்—, நிமிர்ந்த சேனையை - மிகுந்த (தனது) சேனையை, பின் தருக என்று - பிறகு வரட்டுமென்று கட்டளையிட்டு, தன் பிரிவு இல் காதலின்-தன்னினின்றும்பிரிதலில்லாத அன்பையுடைய, தன் துணை தம்பிஉம்-தனக்குத துணைவனான தம்பியாகிய சத்துருக்கினனும், தான்உம்-தானுமாக, முந்தினான்-முற்பட்டுவந்தான்.

பெரியோர்சன்னிதானத்தில் ஆடம்பரத்தோடு செல்லுதல் முறையன்றாதலால், சேனையைநிறுத்திவிட்டுத் தம்பியுடன் பரதன் சென்றன னென்க. பின்தருகென்று-பின்கொணர்வாயாகவென்று (படைத்தலைவனுக்கு அல்லது சுமந்திரனுக்கு) நியமித்து என்றபடி. இனி, பின்தருதல் - பிற்படுதலெனக்கொண்டு, பின்தருக - பின்னேநிற்கட்டுமெனக் கூறுதலும் ஒன்று. முதலடிக்கு-இளவலை நோக்கியேந்தலும், என்றனனாய் நின்றனன் - பேச்சைநிறுத்திநின்றா னென்னனுமாம். தம்பியும் தானும் முந்தினான் - பால்விரவாது எண்ணிச் சிறப்பினால் ஒருமுடிபுபெற்றது. பி-ம்:—[1]தானையை. [2]பிரிவுக்.(ககஙக)

சசு.—இராமன் பரதனுருவத்தை முடியநோக்குதல்.

தொழுதுயர் கையினன் றுவண்ட மேனிய
னழு[1]தழி கண்ணின னவல மீதென
வெழுதிய படிவமொத் தெய்து வான்றனை
முழு[2]துணர் சிந்தையான் முடிய நோக்கினான்.

(இ ள்.) தொழுது உயர் கையினன்-அஞ்சலிசெய்துகொண்டு (அதனால்) மேன்மைபெற்ற கைகளையுடையவனும், துவண்ட மேனியன்-தளர்ந்தஉடம்பையுடையவனும், அழுது அழி கண்ணினன்-புலம்புதலாற்பொலிவழிந்த கண்களையுடையவனும், அவலம் ஈது என- துன்பத்தின்வடிவம் இதுதானென்று, எழுதிய - எழுதிக்காட்டின, படிவம் - உருவத்தை, ஒத்து—, எய்துவான்தனை - வருபவனுமான பரதனை, முழுது உணர் சிந்தையான் - எல்லாவற்றையுமறிந்த திருவுள்ளத்தையுடைய இராமபிரான், முடிய நோக்கினான் - முழுவதும் நன்றாகப்பார்த்தான்; (எ - று.)

அவலமீதென எழுதியபடிவமொத்தெய்துவான் என்றதை "பிரிவெனுந் துயருருவுகொண்டாலனபிணியாள்" என்று காட்சிப்படலத்துவருவதனோடு ஒப்பிடுக. கண்ணாற் காணுதற்குமுன்னமே அந்தப்பரதனது கருத்தை இப்படிப்பட்டதென்று அறிந்தவனென்பார் 'முழுதுணர்சிந்தையான்' என்றும், தான் மனத்தினாற் கண்டறிந்து கூறியபடியே பரதன்நிலையுள்ளதென்பதனைக் கண்ணினாற் காணலானா னென்பார் 'முடியநோக்கினான்' என்றுங் கூறினார்.தொழுது உயர்கை-தலைமேற்கூப்பிய கையெனினுமாம். முழுதுணர் சிந்தையான்-ஸர்வஜ்ஞன், திரிகாலஞானி. பி - ம்:—[1]இழி. [2]உயர். (ககஙஉ)

ருo.—இராமன் இலக்குமணனை நோக்கி 'பரதனது போர்க்கோலத்தைக் காண்' என்று பரிகாசமாகச் சொல்லுதல்.

கார்ப்பொரு [1]மேனியக் [2]கண்ணன் காட்டினு
னார்ப்புறு வரிசிலை யிளைய [3]வையநீ
தேர்ப்பெருந் தானையப் பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த [4]நோக்கெனு.

(இ - ள்.) (அங்ஙனம் நோக்கின), கார் பொரு மேனி அ கண்ணன் - காளமேகத்தையொத்த திருமேனியையுடைய அவ்விராமபிரான்,—(இலக்குமணனை நோக்கி), 'ஆர்ப்பு உறு வரி சிலை - ஆரவாரித்தல்மிக்க கட்டமைந்த வில்லையுடைய, இளைய - தம்பியே! ஐய—! தேர் பெரு தானை - தேர்முதலிய பெரியசேனையையுடைய, அ பரதன்—, சீறிய - (நம்மேற்) கோபித்து வந்த, போர் பெரு கோலத்தை - போருக்குரிய பெருமிதத்தோடுகூடிய வடிவத்தை, நீ—, பொருந்த நோக்கு - நன்றாகப் பார்,' எனு - என்று சொல்லி, காட்டினான்—; (எ - று.)

பொருந்தநோக்கு என்றது - பொருந்தாநோக்கால் மாறிநினைத்தாய்: பொருந்தநோக்கினுல் உண்மைநிலை வெளிப்படையாகப்புலனு மென்ற கருத்தைக் காட்டும். கரியோ னென்னும் பொருளதாகிய கிருஷ்ண னென்னும் வடமொழி, பிராகிருதமாய், 'கண்ணன்' எனச் சிதைந்துவந்தது; இது - இங்கே அவதாரப்பெயரன்றிவந்த காரணப்பெயர்; ''கண்ணனைக் கண்ணினுேக்கிக் கனிந்தனன்'' எனக் கீழ்க் கங்கைப்படலத்தும், ''சுவணவண்ணனெடு கண்ணனுறைதோளன்'' என மேல் விராதன்வதைப்படலத்தும் இராமனைக் கண்ணனென்னுதல் காண்க; ராமனென்னும் (வடமொழித்) திருநாமத்துக்கு - கருநிறமுடையவனென்றும் ஒருபொருளுள்ள தாதலால், அதற்குக் கண்ணன் என்பது பரியாயப்பெயராகவுந் தட்டில்லை. பி - ம்:— [1]மேனியன். [2]கண்ணில். [3]ஐயனே. [4]நோக்கென்றான். (ககஙரு.)

ருக.—இலட்சுமணன் நிலைமாறி நிற்றல்.

எல்லொடுங் கியமுகத் திளவ னின்றனன்
மல்லொடுங் கியபுயத் தவனை வைதெழுஞ்
சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வு சோர்தர
வில்லொடுங் [1]கண்ணநீர் [2]நிலத்து வீழவே.

(இ - ள்.) (அங்ஙனம் இராமன் குறிப்பிட்டுச்சொல்லிக்காட்டியவளவில்), இளவல் - (உய்த்துநோக்கிய) இலக்குமணன்,—மல் ஒடுங்கிய புயத்தவனை - வலிமைகுன்றிய தோள்களையுடைய பரதனை, வைது எழும்-(முன்பு) நிந்தித்துவெளிப்பட்ட, சொல்லொடும் - சொற்களும், சினத்தொடும் -

(அங்ஙன்பழிச்சொல்தோன்றுமாறு அவன்மீது உண்டான) கோபமும், உணர்வு - (தனது) அறிவும், சோர்தர - தளர்ந்தொழியவும்,—வில்லொடு உம் - (பரதனை யெதிர்க்குமாறு தன் கையிலெடுத்த) வில்லும், கண்ண நீர் - (பாகவதோத்தமனான பரதன்திறத்துத் தீங்குநினைத்தோமே என்ற இரக்கத்தால் வெளிப்படுகின்ற) கண்ணீரும், நிலத்து வீழ-பூமியில் விழவும்,—எல் ஒடுங்கிய முகத்து - ஒளிமழுங்கிய முகத்துடனே, நின்றனன்—; (எ - று.)

பரதனைப்பழித்த சொல்லும் சினமும் நீங்கவும், அறிவு அழியவும், வில் நழுவவும், கண்ணீர் வழியவும் இளையபெருமாள் நின்றனனென்க. 'வைதெழுஞ் சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வுசோர்தர,' 'வில்லொடுங்கண்ணநீர் நிலத்துவீழ' என்ற இடங்களில், அறிஞர்அகமகிழுமாறு சோர்தல்தொழிலுக்கும் வீழ்தல்தொழிற்கும் தனித்தனி உடனிகழ்ச்சிகூறியது-உடனவிற்சியணிகளின்பாற்படும். எல்-இடைச்சொல்;இது, தொல்காப்பியமுடையார்கருத்து. மல்ஒடுங்கிய-வலிமைதங்கிய எனினுமாம். பி-ம்:—[1]கண்ணினீர். [2]நிலத்தின்.

ருஉ.—அங்குத்தோன்றிய பரதன் வருணனை.

கோதறத் தவஞ்செய்து குறிப்பி னெய்திய
நாதனைப் [1]பிரிந்தன [2]ணலத்து [3]நீங்கினாள்
[4]வேதனைத் திருமகண் மெலிகின் றாள்[5]விடு
தூதெனப் பரதனுந் தொழுது [6]தோன்றினான்.

(இ - ள்.) கோது அற - குற்றமில்லாமல், தவம் செய்து—, குறிப்பின் எய்திய - (தன்) கருத்தின்படி அடைவதாயிருந்த, நாதனை - கணவனான ஸ்ரீராமனை, பிரிந்தனள் - (தவம் முற்றுப்பெறுக்குறையால்) நீங்கி, நலத்து நீங்கினாள் - (அதனால்) எல்லாநன்மைகளினின்றும் நீங்கினவளாய், வேதனை மெலிகின்றாள் - துன்பத்தால் வாடுகின்றவளான, திருமகள் - இராச்சியலக்ஷ்மி, விடு - (அத்தலைமகனிடம்) அனுப்பின, தூது என - தூதன்போல, பரதன் உம்—, தொழுது - அஞ்சலிசெய்துகொண்டு, தோன்றினான் - (இராமனது முன்னே) காணப்பட்டான்; (எ - று.)

பரதன் இராமபிரானை இராச்சியத்தையாளுமாறு மீட்டு அழைத்துக்கொண்டுசெல்லவேணுமென்ற கருத்துடனே வந்துள்ளானாதலின், அவனை, 'நாதனைப்பிரிந்து நலத்துநீங்கி வேதனைப்பட்டு மெலியும் இராச்சியலட்சுமியின் தூதுவன்போல்வான்' என வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இராமனைப்போன்றவர் ஆளுபவராக அமைவது தவத்தின்பயனாலன்றி நிகழாதென்பது, 'தவஞ்செய்து குறிப்பினெய்திய நாதன்'என்பதனாற் பெறப்படும். நாதனைப்பிரிந்த மடந்தை நலநீங்கி வேதனைப்படுதல்,இயல்பு. பி-ம்:—[1]பிரிந்துதன். [2]நலத்தின். [3]நீங்கிய. [4]மேதினித்திருமகள், வேதனைப்புவிமகள், வேதனைப்பூமகள். [5]விடுச். [6]முன்சென்றான். (ககருரு)

ரு௩.—இராச்சியத்தை விட்டுவந்தது குறித்து இராமனைவெறுத்தவண்ணம் பரதன் அப்பிரானது திருவடிகளில் வீழ்தல்.

அறந்தனை நினைந்திலை [1]யருளை நீத்தனை
துறந்தனை [2]முறைமையை [3]யென்னுஞ் சொல்லினான்
மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தன
[4]னிறந்ததன் றாதையை [5]யெதிர்கண் டென்னவே.

(இ - ள்.) வந்து-(அருகில்)வந்து, இறந்த தன் தாதையை எதிர் கண்டு என்ன-இறந்துபோன தனது தந்தையை எதிரிற்கண்டாற்போல (அன்புமிக இராமனைக்கண்டு), 'அறம்தனை நினைந்திலை - தருமத்தை நினைந்தாயில்லை; அருளை நீத்தனை-கருணையை ஒழித்தாய்;முறைமையை துறந்தனை - நீதியை யொழிந்தாய்,' என்னும் சொல்லினான்-என்றுசொல்லுஞ் சொல்லையுடைய வனாய்,—மறந்தனன்-மெய்ம்மறந்து, மலர் அடி வீழ்ந்தனன்-(ஸ்ரீராமனது) தாமரைமலர்போன்ற திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்தான்; (எ - று.)

அறம்-அரசாளுகை க்ஷத்திரியர்க்குச் சாதிதருமமாதல். குடிகளை யோம்பாது வனம்புகுந்ததை, அருளைநீத்தலாகக் குறித்தான். முறைமை-மூத்தான் அரசாளுதல். மறத்தல்-தன்னையும் மறக்குமாறு தேகம் பரவசமாதல். கீழ்ப் பள்ளிபடைப்படலத்தில் தசரதனைப்பற்றிப் புலம்பும்போது பரதன் "அறந்தனைவேராறுத் தருளைக்கொன்றனை,சிறந்தநின்றண்ணளித்திருவைத்தேசழித், திறந்தனை...நீதியை, மறந்தனையுனக்கிதின் மாசுமேலுண்டோ" என்று கூறியது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. முன்னிரண்டடிகளில் 'அறந்தனை நினைந்திலே னருளுநீத்தனன், றுறந்தனன் முறைமையையென்னுஞ் சொல்லினன்'என்றபாடம்-(நான் தாயின்வரத்தால் உன்னைக் கானகத்துக்குத்துரத்தி இராச்சியத்தைப்பெற்றதனால்) அறத்தை நினையாதவனும் அருளைநீத்தவனும் (மூத்தவனரசுபுரிதலென்ற) முறைமையைக் கெடுத்தவனும் ஆவே னென்று தன்னைப்பழித்துச்சொல்பவனாய் எனப் பொருள்பட்டுச் சிறக்கும். தம்பி தமையனைத் தந்தைக்குநிகராகக் கருதவேண்டுவது முறைமை யாதலால், 'தாதையை எதிர்கண்டென்ன' என்றார். பி-ம்.—[1]அருளும். [2]முறைமையும். [3]என்றுஞ். [4]இறந்தனன். [5]எதிர்கொண்டு. (கக௩௬)

ரு௪.—இராமன் பரதனைக்கண்டு கண்ணீர் பெருக்குதல்.

உண்டுகொ லுயிரென வொடுங்கி னானுருக்
கண்டன னின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனல வன்[1]சடா
மண்டல நிறைந்துபோய் வழிந்து [2]சோரவே.

(இ - ள்.) உயிர் உண்டு கொல் என-உயிருள்ளதோவென்று சங்கிக்கும் படி, ஒடுங்கினான்-மெலிந்துநின்ற பரதனது, உரு-வடிவத்தை, கண்டனன்-பார்த்தவனாய், கண்ணன் இராமன்,—கண் எனும் புண்டரீகம் பொழி புனல்-(தனது)கண்களென்கிற தாமரைமலர்கள் சொரிகின்ற நீர், அவன் சடாமண்

டலம் போய் நிறைந்து வழிந்து சோர - (தன் அடியில்வீழ்ந்து வணங்கின) அப்பரதனது சடைமுடியிற்போய் நிரம்பிப் பெருகி யொழுக, நின்றனன் - (கண்ணீர்சொரிந்து) நின்றான்; (எ - று.)

வெகுநாளாய்ப் பிரிந்திருந்தவனைக் கண்டதனாலும், பரதனது உருவம் ஒடுங்கியிருக்கக் காண்பதாலும் இராமனுடைய கண்கள் புனலைப் பொழிந்தன வென்க. கண்ணெனும்புண்டரீகம்பொழிபுனல் சடாமண்டல நிறைந்துபோய் வழிந்துசோரஎன்ற தொடரில்-தன்தாளினின்று கங்கையுண்டாகப் பெற்றவன் தன்கண்களினின்று மற்றொரு கங்கையை யுண்டாக்கினானோஎன்று கருதுமாறு கண்ணீர்பெருக்கினான் என்ற கருத்தும், அக்கங்கைநீர் சிவபெருமானது சடைமுடியிற் சேர்ந்து பெருகிவழிந்தாற்போலக் கண்ணீரும் பரதனதுசடையில் நிரம்பிப் பெருகலாயிற்றென்ற கருத்துத் தோன்றுமென்பர். சொல்-ஐயவினை.புண்டரீகம் - வடசொல்; வெண்டாமரையின் பெயர் இங்கே செந்தாமரையைக் குறித்தது: 'புண்டரீகாக்ஷன்' என்றவிடத்திலுங் காண்க. ஜடாமண்டலம் - வட்டமான ஜடையின்தொகுதி. பி-ம்:—[1]சடைமண்டிலம். [2]சேரவே. (ககநஎ)

ருரு.—இராமன் பரதனைத் தழுவுதல்.

அயாவுயிர்த் தழுகணீ ரருவி மார்பிடை
யுயாவுறத் [1]திருவுள [2]முருகப் புல்லினா
னியாயமத் தனைக்குமோர் நிலய [3]மாயினான்
றயாமுத லறத்தினைத் [4]தழுவி யென்னவே.

(இ ள்.) தயா முதல்-அருளையுடைய முதற்கடவுள், அறத்தினை தழுவி என்ன - தருமதேவதையைத் தழுவினாற்போல, நியாயம் அத்தனைக்குஉம் ஓர் நிலயம் ஆயினான்-எல்லாநீதிகளுக்கும் ஓரிருப்பிடமாகிய ஸ்ரீராமன்,— அயாவுயிர்த்து-பெருமூச்சுவிட்டு, அழு கண் நீர் அருவி மார்பிடை உயாவுற அழுதலாலாகிய கண்ணீர்ப்பெருக்கு மார்பிற் பெருகவும், திரு உள்ம் உருக மனங் கரையவும், புல்லினான்-(பரதனைத்) தழுவினான்; (எ - று.)

பரதனை இராமன் தழுவியது, கருணாநிதியான கடவுள் அறத்தினைத் தழுவியதுபோலுமென்றார்; உவமையணி. அயாவுயிர்த்தல்-சிறிதுசோகந் தணிதலுமாம். கண்ணீரை அருவி என்றதற்கேற்க, மார்பை மலையென்க. ந்யாயம், நிலயம், தயா - வடசொற்கள். உயாவுற=உசாவுற: வினாவஎன்ற பொருளுள்ளஇச்சொல்இலக்கணையால், பெருக என்ற பொருளைத் தந்தது. தயா - ஈறுதிரியாதுநின்றது. பி - ம்:—[1]திருமனம். [2]உருகி. [3]ஆகினான் [4]தழீஇயது. (ககநஅ)

ருசு.—பரதனது வடிவுகண்டு ஐயுற்ற இராமன் தந்தையின்சேமத்தை விசாரித்தல்.

புல்லின [1]னின்றவன் புனைந்த வேடத்தைப்
[2]பன்முறை [3]நோக்கினான் பலவு [4]முன்னினா
னல்லலி [5]னழுங்கினை யைய வாளுடை
மல்லுயர் [6]தோளினான் [7]வலிய னோவென்றான்.

(இ - ள்.) (இராமன் பரதனை), புல்லினன் நின்று - தழுவி நின்று, அவன் புனைந்த வேடத்தை - அப்பரதன் தரித்திருந்த தவவேஷத்தை, பல் முறை நோக்கினான் - பலமுறை உற்றுநோக்கி, பலஉம் உன்னினான்-பலபடியாகக் கருதினவனாய், 'ஐய—! அல்லலின் அழுங்கினை - துன்பக்கடலில் மூழ்கியுள்ளாய்; ஆள் உடை-(உலகத்தை) ஆளுதலுடைய, மல் உயர் தோளினான் - மற்போரிற் சிறந்த தோள்களையுடைய தந்தை [தசரதசக்கரவர்த்தி], வலியன்ஓ - திடமா [சுகமா] யிருக்கின்றனனோ?'' என்றான் - என்றுவினவினான்; (எ - று.)

பலவுமுன்னுதல்-'இப்பரதன் வருதற்குமுன்னமே அரசன் இறக்கப் பிறர் யாரேனும் நாட்டைக் கைப்பற்றியதனாலோ, அன்றேல் பரதனுக்குப் பட்டங்கட்டியபின் மாற்றார் வந்துஎதிர்த்து அரசைப் பறித்துக்கொண்டதனாலோ, அல்லாக்கால் தசரதனிறந்துவிடத் தான் இராச்சியத்தை யாளக்கருதாது நான் வனவாசஞ்செய்வதையுணர்ந்து தானும் எனக்குஉரிய அக்கோலத்தைக் கைப்பற்றியதனாலோ, எதனால் இவனுக்கு இந்நிலைநேர்ந்தது?'' என்று கருதுதல். பன்முறைநோக்கியது-'இவன் பரதன்தானோ?அன்றி வேறொருத்தனோ? இவனுக்கு இவ்வேடம் இப்போதைக்குத் தக்கதோ?'' என்ற கருத்தினாலாகும். வலியனென்றது - க்ஷேமமாக இருக்கிறானென்ற பொருள்தருதலை 'வலியனென்றவர்கூற'' என்ற பள்ளிபடைப்படலத்துங் காண்க. மூன்றாமடி-முற்றுமோனை.வாள் உடை எனப்பிரித்து,வாட்படையையுடைய என்றலுமொன்று. பி-ம்:—[1]நின்றனன். [2]பல்விதம். [3]நோக்குவான். [4]முன்னுவான். [5]ஒடுங்கினை, அழுந்தினை. [6]தோளவன். [7]வலியனே. (ககாடகூ)

ருஎ.—தசரதன் இறந்தசெய்தியைப் பரதன் தெரிவித்தல்.

அரியவ னுரைசெயப் பரத னையநிற்
பிரிவெனும் [1]பிணியினா லென்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் [2]கால னாற்றனக்
குரியமெய்ந் நிறுவிப்போ யும்ப ரானென்றான்.

(இ - ள்.) அரியவன் - (உணர்தற்கு) அரியவனான ஸ்ரீராமன், உரைசெய-(இவ்வாறு) சொல்ல, (அதற்கு), பரதன்—, 'ஐய—! நின் பிரிவு எனும் பிணியினால்-உனதுபிரிவென்கிற நோயினாலும், என்னை பெற்ற அ கரியவள் வரம் எனும் காலனால் - என்னைப்பெற்ற அந்தக்கைகேயியின் வரமென்கிற யமனாலும், தனக்கு உரிய மெய் நிறுவி போய் உம்பரான்-தனக்குஉரிய சத்தியத்தை (இவ்வுலகில்) நிலைநிறுத்திச் சென்று மேலுலகத்தையுடையனானான்,' என்றான்—; (எ - று.)

பெரும்பாலும் பிணியை வியாசமாகக்கொண்டு காலன் உயிரைக்-கொண்டுசெல்வ னென்னும் வழக்குப்பற்றி 'பிரிவெனும் பிணியினால், வரமெனுங்காலனால்' என்றான்: இவ்விரண்டும்-உருவகவணியாம். கரியவள்-கருநிறமுடையவள்; மூதேவிக்குரியஇப்பெயர், கைகேயியின்கொடுமையாலும்,

பரதனதுவெகுளியாலும், கைகேயிக்கு உபயோகிக்கப்பட்டது. இனி, கரிய வள்-மனமிருண்டவள், அறிவில்லாதவள், நெஞ்சிற் களங்கமுடையவள் என் றுங் கொள்ளலாம். அரியவன் - பகைவரால் வெல்லுதற்கு அரியவனுமாம்; அரி அவன் எனக்கொள்ளின், திருமாலாகிய அவ னெனப் பொருளாம். மெய்-உடம்புமாம்: தனக்குரியமெய் - புகழுடம்பு என்க. பி-ம்:—[1]துயரினால். [2]காலனுறனக்கு, காலனுறமக்கு, காலனுற்றமக்கு. (கககூ)

ருஅ.—தந்தையின்மரணங்கேட்டு இராமன் தரையில் விழுந்திடுதல்.

விண்ணிடை யடைந்தன னென்ற வெய்யசொற்
[1]புண்ணிடை யயிலெனச் செவிபு காமுனங்
கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு [2]போலவாய்
மண்ணிடை விழுந்தனன் வானி னும்பரான்.

(இ - ள்.) 'விண்ணிடை அடைந்தனன்-(தந்தை) பரலோகத்திற் சேர் தான்,' என்ற-என்று (பரதன்) சொன்ன, வெய்ய சொல்-கொடியவார்த்தை, புண்ணிடை அயில் என-புண்ணில் வேல் (நுழைந்தாற்) போல [மிக்கவருத் தம்விளைத்து], செவி புகா முனம் - காதில் நுழையுமுன்னே [கேட்ட வுடனே என்றபடி],—வானின் உம்பரான் - விண்ணுலகத்தினும் மேலுள்ள பரமபதத்துக்கு உரியவனான ஸ்ரீராமன்,—கண்ணொடு மனம் சுழல் கறங்கு போல ஆய் - கண்ணும் மனமும் சுழல்கிற காற்றாடிபோலச் சுழலப்பெற்று, மண்ணிடை விழுந்தனன்—; (எ - று.)

பரதனது தவவேடத்தை நோக்கியதனாலாகிய வருத்தத்தின்மேல் வருத் தந்தருவது, இச்சொல் கேட்டது என்க. புண்ணிடை அயில் - வருத்தத்தின் மேல் வருத்தந் தருதற்கு உவமை. வானினும்பரானாயினும் தான் கொண்ட மானுடவேடத்துக்கு ஏற்பத் துயரங்கொண்டாடின னென்கின்றார். பி-ம்:— [1]புண்ணுழை. [2]போலவன். (கககக)

ருகூ.—சிறிதுதெளிவடைந்து இராமன் புலம்பத்தொடங்குதல்.

இருநிலஞ் [1]சேர்ந்தன னிறையு யிர்த்திலன்
[2]னுருமின [3]யரவென [4]வுணர்வு [5]நீங்கினா
னருமையி னுயிர்வர [6]வயர்வு யிர்த்தகம்
பொருமினன் பன்முறைப் புலம்பி னானரோ.

(இ - ள்.) இறை - (யாவர்க்குந்) தலைவனான ஸ்ரீராமன்,—இரு நிலம் சேர்ந்தனன் - பெரியபூமியில் விழுந்து, உயிர்த்திலன் - மூச்சடங்கி, உரும் இனை அரவு என-இடியினால் வருந்துகிற பாம்புபோல, உணர்வு நீங்கினான் - அறிவிழந்து, அருமையின் உயிர் வர-(பின்பு) அருமையாக உயிர் மீள, அயர் வுயிர்த்து - பெருமூச்சுவிட்டுக்கொண்டு, அகம் பொருமினன்-மனங்கலங்கி, பல் முறை புலம்பினான்-பலவகையாகப் பிரலாபித்தான்; (எ - று.)—அதனை மேல் எழுகவிகளிற் காண்க.

இறை உயிர்த்திலன் - சிறிதும்மூச்சுவிடாமல் என்றுமாம். உருமின்னை எனப் பிரித்தாலும் பொருள் இதுவே. இடியினால் அரவு வருந்து மென்பது, நூல்துணிபு. பி-ம்:—[1]சேர்ந்தவன்,சேர்ந்திவன். [2]உருமுனே, உருமெறி. [3]உயிரென. [4]உணர்வின்.[5]நீக்கினான். [6]அயாவுயிர்த்து என்றும் படிக்கலாம்.(ககசு௨)

வே று.

கூ௦.—இதுமுதல் ஏழுகவிகள்-இராமன் புலம்புதலைத் தெரிவிக்கும்.

நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் றாயே தயாநிலையே
யெந்தா யிகல்வேந்த ரேறே [1]யிறந்தனையே
யந்தோ வினிவாய்மைக் [2]காருளரோ [3]மெய்யுற்றார்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நந்தா விளக்கு அனைய - அவியாததொரு விளக்கை யொத்த, நாயகனே - தலைவனே! நால் நிலத்தோர் தந்தாய் - பூமியிலுள்ளார்க்குத் தந்தைபோல்பவனே! தனி அறத்தின் தாயே - ஒப்பில்லாத தருமத்துக்குத் தாயானவனே! தயா நிலையே - அருளுக்கு இருப்பிடமே! எந்தாய் - என் தந்தையே! இகல் வேந்தர் ஏறே - பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கம்போன்றவனே! இறந்தனை ஏ - (நீ) மடிந்துபோயினையே! இனி—, வாய்மைக்கு - சத்தியத்துக்கு, அந்தோ - ஐயோ! மெய் உற்றார் - உண்மையான உறவாகுபவர், (உன்போல), ஆர் உளர் ஓ-வேறுயாவர் உள்ளாரோ?(எ-று.)—ஓகாரமும் ஏகாரமும் - இரக்கப்பொருளன.

நற்குணநற்செய்கைகளாலும் புகழாலும் குலத்தை விளங்கச்செய்தல் பற்றி 'நந்தாவிளக்கனைய நாயகன்' என்றும், மக்களுக்குத் தந்தை அன்போடு வேண்டிய நன்மைகளைச் செய்தல்போலக் குடிகளுக்குப் பலநன்மைகளுஞ் செய்தலால் 'நானிலத்தோர் தந்தை' என்றும், தருமத்தையுண்டாக்கி வளர்த்தலால் 'அறத்தின்தாய்' என்றும் தசரதன் கூறப்பட்டான். நந்தாவிளக்கு - தூண்டவேண்டாத இரத்தினதீபமுமாம். நால்நிலம்-முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்குநிலங்களையுடையது; பண்புத்தொகையன்மொழி: பாலைக்கு நிலமில்லை யென்பர். 'தந்தாய் தனியறத்தின் தாயே'என்பது-சிறப்பினால், ஆண்பால் பெண்பாலாயிற்று; "தாதாய் மூவேழுலகுக்குந் தாயே" என்றதோடு ஒப்பிடுக: [நன் - பொது - உஅ.] "உருவகவுவமையிற் றிணை சினை முதல்கள், பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே" என்றதில், 'பிறவும்' என்றதனால், உருவகத்திலும் உவமையிலும் பால்மயங்கக்கூறுதல் அமைக்கப்பட்டது; இங்கு உருவகம். இகல் வேந்தரேறு - ஏகதேசவுருவகம். அந்தோ-ஹந்த என்ற வடசொல்லின் திரிபென்பர்: இரக்கக்குறிப்பாகவரும். பி - ம்:—[1]இறந்தனையோ. [2]ஆருளரே. மற்றெஎன்றான். (ககசுஙூ)

சூக. சொற்பெற்ற [1]நோன்பின் றுறையோ னருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவை[2]நீங்க நீயியற்றி
யெற்[3]பெற்று நீபெற்ற [4]தின்னுயிர்போய் [5]நீங்கலோ
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய்.

(இ-ள்.) கொன் பெற்ற-(பகைவர்க்கு) அச்சம் (தருதலைப்) பெற்றதும், வெற்றி கொலை பெற்ற - வெல்லுதல்தொழிலையும் கொல்லுதல்தொழிலையுங் கொண்டதுமான, கூர் வேலோய் - கூர்மையான வேலாயுதத்தையுடையவனே! சொல் பெற்ற-புகழ்பெற்ற, நோன்பின் துறையோன்-தவத்துறையில் தேர்ந்த கலைக்கோட்டுமுனிவனது, அருள் - கருணையை, வேண்டி-விரும்பிப் பெற்று, (அம்முனிவனைக்கொண்டு), நல் பெற்ற வேள்வி - நன்மைபெற்ற யாகத்தை, நவை நீங்க-குற்றமில்லாமல், நீ—, இயற்றி-செய்து,என் பெற்று-என்னை (ப்புத்திரனாக) ப்பெற்று, நீ பெற்றது-(அதனால்) நீ அடைந்த பயன், இன் உயிர் போய் நீங்கலோ - இனிய உயிர்நீங்கிப் போதல்தானோ? (எ - று.)

அறுபதினாயிரம் வருஷகாலமாக உயிர்வாழ்ந்து உலகாண்டுவந்த சக்கரவர்த்தி பின்பு மக்களை அரிதிற்பெற்று அவர்களுள் ஒருவனைப் பிரிந்த சோகத்தால் உயிர்நீங்கினதனால், இங்ஙனங் கூறப்பட்டது. சொல் - புகழ்; "சொல் மாண்பமைந்த குழு" என்பது சிந்தாமணி. இனி, சாபாநுக்கிரகவார்த்தைகளைக்கொண்ட என்றும், வேதவாக்கியங்களாற் பெறப்பட்ட என்றும் உரைக்கலாம்; இரண்டாம்உரையில், இது - நோன்புக்கு அடைமொழி. நோன்பின் துறை - விரதவொழுக்கநெறி. நோன்பின்துறையோன்-வசிஷ்டனென்றல் பொருந்தாது; வமிசபுரோகிதனை அவனருளைத் தொன்றுதொட்டு இயல்பிற்பெற்றதன்றிப் புதிதாக இவ்வேள்விக்கென்று வேண்டிப் பெறுமையின். வேள்வி - அசுவமேதயாகமும், புத்திரகாமேஷ்டியும். நவை நீங்க - மந்திரலோபம், கிரியாலோபம், திரவியலோபம் முதலிய குறைகள் இல்லாதனவாக; இனி, புத்திரோற்பத்திக்குத் தடையான பாவம் ஒழிய எனினுமாம். கொன் - இடைச்சொல்; பெருமையுமாம். கொல் பெற்ற எனப்பிரித்து, கொல்லனாற் செய்யப்பெற்ற என்னலுமாம்; கொல்-கொல்லனுக்குத் தொழிலாகுபெயர்; கொல்லன் - கருமான். பி - ம்:—[1]நோன்பிற். [2]அறநின்கண்ணியற்றி, தீர்தவமியற்றி. [3]பெற்ற. [4]உன். [5]நீங்கவோ. (ககஉச)

சூஉ. மன்னுயிர்க்கு [1]நல்குரிமை [2]மண்பார நான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந் தாரோய் பொறையுயிர்த்த வாறிதுவோ
வுன்னுயிர்க்குங் கூற்று [3]யுலகாள வுற்றேனோ
மின்னுயிர்க்குந் தீவாய் வெயிலுயிர்க்கும் [4]வெள்வேலோய்.

(இ - ள்.) பொன் உயிர்க்கும் தாரோய் - பொன்னிறமான மகரந்தப்பொடிகளை வெளிச்சிந்துகிற பூமாலையையுடையவனே! மின் உயிர்க்கும் - ஒளியை வீசுகிற, தீ வாய் - வெப்பம் அமைந்த, வெயில் - சூரியகிர

ணம்போன்ற காந்தியை, உயிர்க்கும்-வீசுகிற, வெள் வேலோய் - வெள்ளிய வேலாயுதத்தையுடையவனே! மன் உயிர்க்கு-(ஆளுகையின்கீழ்) நிலைபெற்ற பிராணிகளுக்கு, நல்கு - அருள்செய்கிற, உரிமை - உரிமையையுடைய, மண் பாரம்-(உனது) அரசாட்சியை, நான் சுமக்க - நான் ஏற்றுக்கொள்ள, பொறை உயிர்த்த ஆறு-(நீ அப்பூமிபாரம்நீங்கி) இளைப்பாறியவிதம், இதுஓ- இதுதானோ? உன் உயிர்க்குஉம் கூற்று ஆய் - (வேண்டிப்பெற்று வளர்த்த) உனது உயிருக்கும் யமன்போல் அழிவுசெய்பவனாய் [உன்னைக்கொன்ற பின்பு], உலகு ஆள உற்றேன்ஓ - (பின்பு) உலகத்தை யாளப்பொருந்தி னேனோ? (எ - று.)

அரசர்கள் பிராயம்முதிர்ந்தகாலத்தில் தம்மகனிடம் இராச்சியபார த்தை ஒப்பித்துவிட்டுச் சிறிதுகாலம் இளைப்பாறி மறுமையின்பந்தரும் தவ வொழுக்கத்தைப் புரிந்து உய்வுபெறுந்தன்மை இத்தசரதனிடம் இல்லாமற் போனதைப்பற்றி இரங்கினவாறு. பொன்-உவமவாகுபெயர். பொன் உயிர்க் கும் தார்-பொற்பொடிகளைச்சிந்துகிற ஆரமுமாம்; பொன் உயிர்க்குதல்-அழகு விளங்குதலுமாம். பொறையுயிர்த்த - மகப்பெற்றஎன்றலும்ஒன்று. [5]வென் வேல் என்ற பாடத்துக்கு-வெற்றியைத்தரும் வேல் என்க. பி-ம்:—[1]நன்குரி மை, நல்லுரிமை. [2]வன். [3]அரசாள. [4]வெவ்வேலாய். (ககசரு)

சுகூ. [1]எம்பரத்த தாக்கி யரசுரிமை யிந்திரியங்க
[2]டம்பரத்த தாக்கித் தவமிழைத்த வாறிதுவோ
சம்பரப்பேர்த் தானவனைத் தள்ளிச் [3]சதமகன்ற
னம்பரத்தி னீங்கா [4]வரசளித்த வாழியாய்.

(இ - ள்.) சம்பரன் பேர் தானவனை-சம்பரனென்னும் பெயரையுடைய அசுரனை, தள்ளி-அழித்து, சதமகன்தன் - தேவேந்திரனது, அம்பரத்தின் நீங்கா அரசு - விண்ணுலகத்தினின்று நீங்காத அரசாட்சியை, அளித்த - (அவ்விந்திரனுக்குக்) கொடுத்தருளிய, ஆழியாய் - சக்கரவர்த்தியே! அரசு உரிமை-(உனது) அரசாளும் அதிகாரத்தை, எம் பரத்தது ஆக்கி - எம்வசமா கச் செய்துவிட்டு, இந்தியங்கள்-(உனது) பஞ்சேந்திரியங்கள், தம் பரத்தது ஆக்கி - தமது அதீனத்திலிருக்குமாறு செய்து [பஞ்சேந்திரியங்களையடக்கி], தவம் இழைத்த ஆறு-(நீ) தவஞ்செய்த விதம், இதுஓ—? (எ - று.)

எனக்கு அரசையீந்து இந்திரியங்களையடக்கித் தவஞ்செய்யப்போகின் றேனென்றாயே; தவஞ்செய்தது இதுதானோ என்று, தசரதன் தவஞ்செய்யச் செல்லாது இறந்ததுகுறித்து, இராமபிரான் இரங்கிக் கூறுகின்றனனென்க. எம்பரத்தது ஆக்கி - எம்பாரமாக இறக்கிவிட்டு எனினுமாம். முன்னிலையாக உம்பரத்ததாக்கி எனச் சொல்லவேண்டிய இடத்து, தம்பரத்ததாக்கிஎன்றது- முன்னிலையிற் படர்க்கைவந்த வழுவமைதி. இந்த்ரியம் என்ற வடசொல் திரிந்தது. [2]வெம்பவத்தின் வீயத் தவம்விளைத்த என்றபாடத்துக்கு, இந்தியங்

கள்-இந்திரியங்களைக்கொண்டு,வெம் பவத்தின் வீய-கொடிய பிறவியினின்று நீங்க, தவம்விளைத்த என்க. தாநவன்-(காசியபர்மனைவிகளுள்) தநுவின் மகன். மேதமகன்-நூறு (அசுவமேத) யாகஞ்செய்தவன். பி-ம்:—[1]என். [2]வெம்பவத்தில்வீழாத், வெம்பாதநீவீய, வெம்பருத்திவீழ. [3]சததமகற்கன்று. [4]அரசிந்த.()

௬௪. [1]வேண்டுந் திறத்தாரும் வேண்ட வரசாட்சி
பூண்டிவ் வுலகுக் கிடர்[2]கொடுத்த புல்லனேன்
மாண்டு [3]முடிவதல்லான் [4]மாயா வுடம்பிதுகொண்
டாண்டு வருவதினி யார்[5]முகத்தே நோக்கவோ.

(இ - ள்.) வேண்டும் திறத்து-(யாவராலும்) வேண்டப்படுந் தன்மையையுடைய, அரசுஆட்சி - அரசுபுரிதலை, ஆர்உம் வேண்ட - எப்படிப்பட்ட பெருந்தகையாளரும் (தமது குறையைக்கூறிப்) பிரார்த்திக்க, பூண்டு - மேற்கொண்டு, இ உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்-(நீ இறத்தற்குக்காரணமாய்) இவ்வுலகமுழுவதுக்குந் துன்பந்தந்த அற்பனான நான், மாண்டு முடிவது அல்லால்-இறந்தொழிவதல்லாமல், மாயா உடம்பு இது கொண்டு-உயிர் நீங்காத இவ்வுடம்பைக்கொண்டு, ஆண்டு வருவது-ஆட்சிசெய்து வருவேனாயின் அது, இனி யார்முகத்தே நோக்கஓ-இனி யார்முகத்தில் விழிக்கவோ?

யாவரின் குறையையும் போக்குவதே அரசுபுரிதலின் பயனாயிருக்கவும், அங்ஙனம் பிறர்குறையைப்போக்க முயலாது உலகுக்கெல்லாந் துயர்கொடுத்ததால், தன்னை இராமன் புல்லனெனப் பழித்துக்கூறுகின்றான். இப்படிப்பட்ட நான் எவர்முகத்தில் விழித்தற்குந் தகுதியற்றவனாதலால், இவ்வுடம்பைவைத்துக்கொண்டிராமல் போக்குவதே முறையாகுமென்கின்றானென்க. [1]வேண்டுந்திறத்தாரும் வேண்டா என்ற பாடத்திற்கு - எல்லாப் பொருளையும் தமக்குவேண்டுமென்கின்ற தன்மையையுடையோரும் விரும்பாத என்று பொருள்கூறி, அரசுபுரிகையிலுள்ள சிரமமிகுதியை இங்ஙனங் கூறியதென்க. தந்தைக்குச் சிரமபரிகாரஞ்செய்து மகிழ்வித்தற்கு உதவாத என் அரசாட்சி பயனற்றது என்றவாறு. பி-ம்:—[2]இழைத்த. [3]மடிவது. [4]மாயவுடம்பு. [5]முகததை. (௧௧௭௭)

௬௫. தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ
வானடைந்தா யின்ன [1]மிருந்தேனுன் வாழ்வுகந்தே
யூனடைந்த தெவ்வ ருயிரடைந்த [2]வொள்வேலாய்.

(இ-ள்.) ஊன் அடைந்த-உடற்கொழுப்பையடைந்த, தெவ்வர் - பகைவர்களது, உயிர்-உயிரை, அடைந்த - கவர்ந்த, ஒள் வேலோய் - விளங்குகிற வேலாயுதத்தையுடையவனே! (யான்), தேன் அடைந்த சோலை திரு நாடு கைவிட்டு-தேன்பொருந்தின சோலைகள் சூழ்ந்த அழகிய (கோசல) நாட்டை நீங்கி, கான் அடைந்தேன்-வனத்தைச்சேர்ந்தேன், என்ன-என்றதை அறிந்த

மாத்திரத்தில், காவல - அரசனே! நீ—, தரியாது - (என்னைப்பிரிந்த துயரத்தைப்) பொறுக்கமுடியாமல், வான் அடைந்தாய் - பரலோகஞ்சென்றாய்; (நீ அங்ஙனஞ்சென்றதை அறிந்தவளவில் இறவாமல்), நான்—, வாழ்வு உகந்து ஏ இன்னம் இருந்தேன் - இவ்வுலகவாழ்க்கையை விரும்பியே இன்னமும் பிழைத்திருந்தேன்; [இது என்ன இரக்கமின்மை! என்றபடி]; (எ - று.)

இவ்வுலகத்தில் நான் உள்ள இடம்விட்டு வேற்றிடஞ் சென்றவளவில், நீ உயிர்நீங்கினாய்; நீ இவ்வுலகம்விட்டு வேற்றுலகஞ்செல்லவும் யானோ இறவாது உயிர்வாழ்ந்து நின்றேன்; இது என்ன கொடுமை! என்பதாம். அன்பு சிறிதும் இல்லாத என்னிடத்து நீ அன்புவைத்தாயே என இரங்கியவாறு. உயிர் அடைந்த வேல்-அருவப்பொருள்மேலுஞ் செல்வதென வேலின்சிறப்பு விளங்கும். பி-ம்:—[1]உயிர்சுமந்துவாழ்வுகந்தேன். [2]வெவ்வேலாய். (கககஅ)

கூகூ. வண்மைஇயு [1]மானமுமேல் வானவர்க்கும் [2]பேர்க்ககிலாத்
திண்மைஇயுஞ் செங்கோ னெறியுந் திறம்பாத
வுண்மைஇயு மெல்லா முடனேகொண் [3]டேகினையே
தண்மைஇ தகைமதிக்கு மீந்த தனிக்குடையோய்.

(இ - ள்) தகை மதிக்குஉம் - பெருமையையுடைய (பூர்ண) சந்திரனுக்கும், தணமை ஈந்த-குளிர்ச்சியைக் கொடுக்கும்படியான, தனி குடையோய் - ஒப்பற்ற குடையையுடையவனே! (உனது), வண்மைஉம்-ஈகைக்குணத்தையும், மானம்உம்-மானத்தையும், மேல் வானவர்க்குஉம் பேர்க்ககிலா திண்மைஉம் - மேலுலகத்திலுள்ள தேவர்களுக்கும் (எதிர்த்து) அழிக்கமுடியாத வலிமையையும், செஙகோல் நெறிஉம் - நீதிதவறாத அரசாட்சிமுறைமையையும், திறம்பாத உண்மைஉம்-தவறாத சத்தியத்தையும், எல்லாம்-(மற்றும்) எல்லா நற்குணங்களையும், உடனே கொண்டு ஏகினை ஏ - கூடவே எடுத்துக்கொண்டு (இவ்வுலகத்தினின்று) சென்றாயே! (எ - று.)

உனக்கு இருந்த வண்மை முதலியன போன்ற உயர்குணங்கள் இனி உலகத்தில் எவர்க்கும் இல்லையென்பதாம். வண்மை - ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். மானம்-எப்பொழுதும் தம்நிலையில் தாழாமையும்,ஊழ்வினையால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். உலகமுழுவதுக்கும் தண்ணிழல் செய்கிற சந்திரன் அத்தண்மையைப்பெற்றது இக்குடையினிடத்தேயென்னுமாறு அவ்வளவு குளிர்ச்சியை உலகோர்க்குத் தருவதென்பது, 'தண்மை தகைமதிக்கு மீந்த தனிக்குடை' என்பதன் கருத்து. தனிக்குடை என்றது, தனியரசாட்சியை; அதற்குத் தண்மை - குடிகளுக்கு இன்பஞ்செய்தல். நான் கடியிலும் உயிரளபெடைகள் - ஓசையின்பம் பயக்க வந்தன; இது - அடியார புத்தொடை யெனப்படும். அளபெடையில்லாத பாடமும் பொருந்தும்; கொச்சக மாதலின். பி-ம்: —[1]மானமும் வானவர்க்கும், மேல்மானவர்க்கும். [2]போக்ககிலாத், பேர்க்கொணுதை. [3]ஏகினையோ. (கககக)

கூஎ.—இரங்கும் இராமனைத் தம்பிமார்முதலியோர் தாங்க, வசிட்டன் தேற்றுதல்.

என்றெடுத்துப் பற்பலவும் பன்னி யிடருழக்குங்
குன்றெடுத்த [1]போலுங் குவவுத்தோட் கோளரியை
வன்றடக்கைத் தம்பியரும் [2]வந்தடைந்த மன்னவருஞ்
சென்றெடுத்துத் தாங்கினார் [3]மா[4]வதிட்டன் றேற்றினான்.

(இ - ள்.) என்று எடுத்து பற்பலஉம் பன்னி-என்று குரலெடுத்து மிகப் பலவார்த்தைகளை விடாதுகூறி, இடர் உழக்கும் - துன்பத்தில் மூழ்குகிற, குன்று எடுத்த போலும் குவவு தோள் கோள் அரியை-மலைகள் திரண்டு வடிவெடுத்தவற்றை யொக்கின்ற திரண்ட தோள்களையுடைய வலிய சிங்கம் போன்ற ஸ்ரீராமனை, வல் தட கை தம்பியர்உம்-வலியபெரியகைகளையுடைய தம்பிமார்மூவரும், வந்து அடைந்த மன்னவர்உம் -(அப்போது அங்கு) வந்து சேர்ந்த அரசர்களும், சென்று எடுத்து தாங்கினார் - அருகிற்போய் எடுத்து அணைத்தார்கள்; மா வதிட்டன் தேற்றினான் - பெருமைபொருந்திய வசிஷ்ட முனிவன் தேறுதல் கூறுபவனானான்; (எ - று.)—அதனை, மேல் எ௦ - ஆங் கவிமுதல் பத்துக்கவிகளிற் காண்க.

கோளரி - ஆண்சிங்கம். வஸிஷ்டன் என்ற வடசொல்லுக்கு - (இந்திரியங்களை) வசப்படுத்தியவ னென்றும், ஞானத்திற் குடிகொண்டவனென்று, பிரமதேஜசுமிக்கவ ரென்றும் காரணப்பொரு ளுரைப்பார். பரதன் முன்னதாகத தம்பியுடன் தனியே இராமனை வந்துசேர்ந்ததனால், பிறகு மற்றையோர் வரலாயின ரென்பதைக்குறிப்பிக்க, 'வந்தடைந்த மன்னவர்' என்றது.

பி - ம்:—[1]ஒக்கும். [2]மற்றுள்ள. [3]திரு. [4]வசிட்டன். (ககரு௦)

கூஅ.—பரத்துவாசன் தோடக்கமானஇருடியர் முதலிய பலரும் அந்த வந்துசேர்ந்தமை.

பன்னரிய [1]நோன்பிற் பரத்துவனே [2]யாதியாம்
[3]பின்னு சடையோரும் பேருலக மோரேழின்
மன்னவரு மந்திரிய ரெல்லாரும் வந்தடைந்தார்
தன்[4]னுரிமைச் சேனைத் தலைவோருந் [5]தாமடைந்தார்.

(இ - ள்.) (அப்பொழுது), பன் அரிய நோன்பின் - சொல்லுதற்கரிய தவத்தையுடைய, பரத்துவன்ஏ ஆதி ஆம்-பரத்துவாசன் முதலான, பின்னு சடையோர்உம்-திரித்துவிட்ட சடையையுடைய முனிவர்களும், பேர் உலகம் ஓர் ஏழின் மன்னவர்உம்-ஏழுதீவுகளாகவுள்ள பூமியிலுள்ள அரசர்களும், மந்திரியர் எல்லார்உம் - எல்லாமந்திரிகளும், வந்து அடைந்தார் - அருகில்வந்து சேர்ந்தார்கள்; தன் உரிமை சேனை தலைவோர்உம் தாம் அடைந்தார் - சக்கரவர்த்திக்கு உரிய சேனையின் தலைவர்களும் வந்து சேர்ந்தார்கள்; (எ - று.)

கீழ் 'வந்தடைந்தமன்னவர்' என்று குறிப்பித்த பரதனுடன் புறப்பட்டவர் வந்துசேர்ந்தமையை விவரித்துக்கூறுகின்றனரென்க. பேருலகமோரேழின் மன்னவர் - ஏழுதீவுகளிலுமுள்ள அரசர்கள். மந்திரம் - ஆலோசனை: அதனையுடையவன், மந்திரி. பி-ம்:—[1]னோன்பின். [2]ஆதியாய்ப். [3]பின்னுஞ். [4]உரிய. [5]தான், வந்து. (ககடுசு)

சுகூ.—யாவரும்வந்துசூழ்ந்தபின், வசிஷ்டன் ஸ்ரீராமனைநோக்கிக் கூறத் தொடங்குதல்.

மற்றும் வரற்பால ரெல்லாரும் வந்[1]தடைந்து
சுற்று [2]மிருந்த வமைதியினிற் றுன்புழக்குங்
கொற்றக் குரிசின் முகநோக்கிக் கோமலரோன்
பெற்ற பெருமைத் [3]தவமுனிவன் பேசுவான்.

(இ - ள்.) மற்றுஉம்-இன்னும், வரல் பாலர் எல்லார்உம் - வரத்தக்க (அந்தணர் முதலியோர்) யாவரும், வந்து அடைந்து-வந்து சேர்ந்து, சுற்று உம் இருந்த அமைதியினில் - சுற்றிலுமிருந்த சமயத்தில், துன்பு உழக்கும் கொற்றம் குரிசில் முகம் நோக்கி - துன்பத்திலழுந்திய வெற்றியையுடைய புருஷோத்தமனான ஸ்ரீராமனது திருமுகத்தைப் பார்த்து, கோ மலரோன் பெற்ற பெருமை தவம் முனிவன் -(எல்லாமலர்களினுஞ்) சிறந்த தாமரையில் வீற்றிருக்கிற பிரமன் பெற்ற (புதல்வனான) மகிமையையுந் தவத்தையுமுடைய வசிஷ்டமகாமுனிவன், பேசுவான்-(தேறுதல்) கூறுபவனானான்; (எ - று.)

கீழ் சுஎ-ஆம் கவியில் "வந்தடைந்தமன்னவருஞ் சென்றெடுத்துத் தாங்கினர் மாவசிட்டன் றேற்றினான்" என்று சுருக்கமாகக் கூறிய கவி, யாவரும் வந்தமையைவிவரித்துப் பிறகு வசிட்டன்தேற்றிய வகையை விவரிப்பதற்காக 'தவமுனிவன்பேசுவான்' என்கின்றாராதலால், இது 'கூறியதுகூறல்' என்னுங் குற்றமாகாது. இங்ஙனம் சுருக்கமாக முதலிற்கூறிப் பின் விவரித்துக்கூறுவது இக்கவியின் வழக்கமாதல், நுண்ணிதி னோக்கினுற் புலனாகும். வசிஷ்டன்-பிரமனது அகத்திற் பிறந்தவன்; "உகிரில் வசிட்டனுந் தூலங்கியங் கெழுந்தான்" என்பது, பாகவதம். பி - ம்:—[1]அடைந்தார். [2]இருக்கும். [3]திரு. (ககடு௨)

வேறு.

எ௦.—இதுமுதற் பத்துக்கவிகள் - வசிஷ்டன் தேறுதல்கூறி, செய்யவேண்டிய நீர்க்கடனைச் செய்யுமாறு கூறுவதைத் தெரிவிக்கும்.

துறத்தலு நல்லறத் [1]துறையு மல்லது
புறத்தொரு [2]துணையிலை பொருந்து [3]மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ.

ஒன்பதுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'துறத்தல்உம் - (இல்லறவொழுக்கத்தைத்) துறந்து செல்லு தலும், நல் அறம் துறைஉம்-(இல்லறத்தி லிருந்த காலத்தும்) நல்லதருமவழி யிற் செல்லுதலும், அல்லது - (இவ்விரண்டும்) அன்றி, பொருந்தும் மன் உயிர்க்கு - (உலகவாழ்க்கையிற்) பொருந்தின நிலைபெற்ற உயிர்களுக்கு, புறத்து ஒரு துணை இலை-வேறு ஒருதுணையும் இல்லை: (அவ்வுயிர்களுக்கு), இறத்தல்உம் பிறத்தல்உம் இயற்கை-மரணமும் சனனமும் இயல்பே,' என் பதை—, மறைகளின் வரம்பு கண்ட நீ - வேதங்களின் எல்லையை அளவிட் டறிந்த நீ, மறத்திஓ - மறந்தாயோ? (எ - று.)

மறந்திலையாயின், உன்தந்தை நல்லறத்துறையில் நெடுங்காலம் நின்ற பின்பு இறந்ததற்கு இரங்கக் காரணமில்லை யென்க. வீடுபேற்றிற்குச் சிறந்த வழி யாதலின், துறத்தல் முன் கூறப்பட்டது. பி-ம்:—[1]தொழிலும். [2]பொருள். [3]மன்னுயிர். (ககருரு)

எக. [1]உண்மையில் பிறவிக ளுலப்பில் கோடிக
டண்மையில் வெம்மையிற் [2]றழுவி னவ்வெனும்
வண்மையை [3]நோக்கியவ் [4]வறிய கூற்றின்பாற்
கண்மையு [5]முளதெனக் கருத [6]லாகுமோ.

(இ-ள்.) '(உயிர்களுக்கு), உண்மை இல் பிறவிகள் - நிலையில்லாதனவா கிய பிறப்புக்கள், உலப்பு இல் கோடிகள்-அளவில்லாத கோடிக்கணக்கான வை: (அவை), தண்மையில் வெம்மையில் தழுவின இன்பத்தாலும் துன்பத் தாலும் தழுவப்பெற்றவை,' எனும்-என்ற, வண்மையை-(நூல்களில்) மிகுதி யாகக் கூறியதன்மையை, நோக்கி - அறிந்தபின்பு, அ வறிய கூற்றின்பால் கண்மைஉளது என கருதல்உம்-அந்தக்கொடிய யமனிடத்துக் கண்ணோட்ட முள்ளதென்று நினைத்தலும்,ஆகும்ஓ-கூடுமோ? [கூடாது என்றபடி]; (எ-று.)

உயிர்க்குப் பலபிறவிகளுள்ளனவென்பதையும் அப்பிறவிகள் நன்மை தீமைகள் கலந்தேநிற்குமென்பதையும் உணர்ந்தபின்,பிறந்தஉயிரைக் காலன் இரக்கமின்றிக் கொண்டு செல்வா னென்பதைத் தெற்றெனவுணரலாமாத லால்,தசரதன் காலவயத்தனானதற்கு இரங்குதல் தகாதென்று கூறியவாறு. உண்மையில் பிறவி - தோன்றியழியுந்தன்மையவான பிறப்பு. தண்மையில் வெம்மையில் தழுவின-நல்வினையாலுந் தீவினையாலுந் தொடரப்பட்டவை யென்றுங் கொள்ளலாம். வறுமை-இங்கே, இரக்க மின்மை. [4]அரியகூற்று என்ற பாடம், மோனைத்தொடைக்கு முரணும். கண்மை-கண்ணின்தன்மை; "கண்ணுடையார், கண்ணோட்டமின்மையுமில்" எனத் திருக்குறளிற் கூறிய தனால், கண்ணோட்டம் கண்ணின்தன்மையாதல் அறிக. "தவத்துறைமாக்கள் மிகப்பெருஞ்செல்வர், ஈற்றிளம்பெண்டி ராற்றுப்பாலகர், முதியோரென்னு னிளையோரென்னான், கொடுந்தொழிலாளன் கொன்றனன் குவிப்ப"என்று யமனது தயையில்லாத்தன்மையைக் கூறியிருத்தல் காண்க. தழுவினவ்வெ னும் - விரித்தல். பி-ம்:—[1]உண்மையிற். [2]தழுவினார். [3]நோக்கிடா. [4]வலிய. [5]உண்டெனக். [6]பாலதோ. (ககருசு)

எஉ. பெறுவதன் முன்னுயிர் பிரிதல் காண்டியான்
மறுவறு[1] கற்பினில் வையம் யாவையு
மறுபதி [2]னுயிர மாண்டு மாண்டவ
னிறுவது [3]கண்டவற் [4]கிரங்கல் வேண்டுமோ.

(இ - ள்.) பெறுவதன் முன் - (தாய்) பெறுவதற்கு முன்னமே, உயிர் பிரிதல்-(சிலபிராணிகள்) உயிர்நீங்குதலை, காண்டி ஆல் - (உலகத்தில்) பார்க்கின்றாயன்றோ? (அங்ஙனமிருக்க), மறு அறு கற்பினில் குற்றமில்லாத கல்வியினால், வையம் யாவைஉம் - உலகமுழுவதையும், அறுபதினாயிரம் ஆண்டுஉம் ஆண்டவன் - அறுபதினாயிரம் வருஷகாலம் அரசாண்ட சக்கரவர்த்தி, இறுவது-இறத்தலை, கண்டு - அறிந்து, அவற்கு - அவன்பொருட்டாக, இரங்கல் வேண்டும்ஓ - மனம்வருந்துதல் தகுதியோ? [அன்று என்றபடி]; (எ - று.)

பிறந்ததும் பிறவாததுமாகஇருக்கையில்தானே இறப்பு நேர்வதையும் நாம் கண்கூடாகக்கண்டுகொண்டிருக்க, வருஷம் அறுபதினாயிரம் அரசுபுரிந்து பின் இறந்த மன்னவன்திறத்து இரங்குதல் தகுதியன் றென்றவாறு. "பீட் பிதுக்கிப், பிள்ளையைத் தாயலறக்கோடலான்" என்றார் நாலடியாரிலும். காண்டியால், ஆல் - தேற்றம். கற்பு - தொழிற்பெயர். இரண்டாம் அடிக்கு- குற்றமில்லாத பதிவிரதாதருமத்தையுடைய பூமிமுழுவதையும் என்றும் உரைக்கலாம்; இங்கே, பூமிக்குக் கற்பு - பல அரசர்களுக்குப் பொதுவாகாமல் தசரதனொருவனுக்கே உரியதாதல். பி ம்.—[1]சிறப்பினில், சிறப்பினிவ், பிறப்பினில். [2]ஆயிரத்து. [3]கண்டதற்கு, கண்டிதற்கு. [4]இரங்கவொண்ணுமோ, இரங்கவேண்டுமோ. (ககருரு)

எங. சீலமுந் தருமமுஞ் சிதைவில் [1]செய்கையுஞ்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் [2]தாங்கிய
மூலம்வந் துதவிய [3]மூவர்க் காயினுங்
காலமென் றொரு[4]வலை [5]கடக்க லாகுமோ.

(இ - ள்.) சீலம்உம் - தவவொழுக்கத்தையும், தருமம்உம்-அறத்தையும், சிதைவு இல் செய்கைஉம்-அழிதலில்லாத படைத்தற்றொழிலையும், சூலம்உம்- சூலாயுதத்தையும், திகிரிஉம் - சக்கராயுதத்தையும், சொல்லும் - சரசுவதியையும், தாங்கிய - தரித்த, மூலம் வந்து உதவிய - (எல்லாப்பொருள்களுக்கும்) முதற்பொருளாய்ப் பொருந்தி யருள்செய்கிற, மூவர்க்கு ஆயின்உம் - திரிமூர்த்திகளுக்கானாலும், காலம் என்ற ஒரு வலை கடக்கல் ஆகும்ஓ-காலமென்கிற ஒருவலையினின்று தப்புதல் கூடுமோ? [கூடாதென்றபடி]; (எ - று.)

சீலமும் சூலமும் தாங்கிய உருத்திரன், தருமமும் திகிரியும் தாங்கிய திருமால், சிதைவில்செய்கையும் சொல்லும் தாங்கிய பிரமன் என முறைநிரனிறைப்பொருள்கோள்படக் கூறியவாறு. இங்கே 'சொல்' என்பதற்கு - கலைமகளென்றே பொருள்கொள்ளுதல் தகுதி யென்பதைக் கீழ் மந்தரை சூழ்ச்சிப்படலத்தில் "உருளுநேமியு மொண்கவ ரெஃகமு, மருளில் வாணியும்

வல்லவர் மூவர்க்கும்'' என்றதனோடு ஒப்பிட்டு அறிக. சூலம் திகிரி என்ற ஆயுதங்களோடு சொல்லை உடன்நிறுத்தியது, சொல் சாபாநுக்கிரக மூலமாகக்கருதிய பயனைத் தவறாமல்தந்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்துக்குக் கருவியாகுதலால். இனி, சொல் தாங்குதல்-வேதத்தை எப்பொழுதும் வாயாலோதுதலும், புகழ்பெறுதலும் என்பாரும் உளர். உருத்திரனுக்குச் சீலம் - சடைமுடியும் தோலுடையுந் தரித்து யோகுசெய்துநிற்றல். திருமால் காத்தல் தொழிற்கடவுளாதலால், தருமந்தாங்குகிறவனானவன். சிதைவில் செய்கை - படைத்தற்றொழில். மூலம்வந்து உதவிய மூவர்என்பதற்கு - மூலப்பொருளாகிய பரம்பொருள் உட்புகுந்து உதவப்பெற்ற மும்மூர்த்திகளெனக்கூறி, பரம்பொருள் உட்புகுந்திருத்தலால், அழித்தற்றொழிலைச்செய்யுந் திறனைப் பெற்ற உருத்திரமூர்த்தியும், காக்குந்தொழில் கைவரப்பெற்ற உபேந்திரமூர்த்தியும், படைக்குந்தொழிலில் வல்லமைபெற்ற பிரமனும் என்று கூறுவாருமுளர். என்றொருவு - விகாரம். பி-ம்:—[1]செய்கையாய். [2]தாங்கினர். [3]முதல்வர்க்கு. [4]பொருள், வரை. [5]கடக்கவொண்ணுமோ. (௧௧௫௬)

எச. கண்முதற் காட்சிய கரை[1]யி னீளத்த
வுண்முதற் பொருட்கெலா மூற்ற [2]மாவன
மண்முதற் பூதங்கண் மாயு மென்றபோ
தெண்முத [3]லுயிர்க்குநீ [4]யிரங்கல் வேண்டுமோ.

(இ - ள்.) கண் முதல் காட்சிய - கண்முதலிய பொறிகளின் காட்சி முதலிய புலங்களுக்குக் காரணமாகுபவையும், கரை இல் நீளத்த - எல்லையில்லாத நீட்சியையுடையவையும், உள் முதல் பொருட்கு எலாம் ஊற்றம் ஆவன-பிரபஞ்சத்தினுட்பட்ட பிரதானமான பொருள்களெல்லாவற்றிற்கும் உற்பத்திஸ்தானமாகுபவையும் (ஆகிய),மண் முதல் பூதங்கள்-பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களும், மாயும்-அழியும், என்றபோது - என்றால், உயிர்க்கு - (ஒரு சாதாரணமான) உயிரின்பொருட்டாக, எண்முதல் - மனத்தில், நீ—, இரங்கல் - வருந்துதல், வேண்டும்ஓ தகுதியோ? [அன்று என்றபடி]; (எ - று.)

'கண்முதற்காட்சிய...ஊற்றமாவன' என்றதன்கருத்தை விளங்கவுணர்தற்கு அடியில் வருவதை அறிக:—' "மெய் வாய் கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற, ஐவாயுமாயவற்றின்மீதடுத்துத் - துய்ய, சுவை யொளி யூறோசை நாற்றமென்றைந்தால், அவை முதற் புற்கலமாம்'' என்பது, பூதங்கள் பரிணமித்து உடம்பாமாறு கூறுகின்றது; பூதங்களைந்தும் தத்தம் தன்மை நீங்கி மண் உடம்பாயும், நீர்வாயாயும், தீக் கண்ணாயும், காற்று மூக்காயும், ஆகாயம் செவியாயும் நின்று உடம்பாம். பொறிகள்தோறும் விநியோகப்பட்ட புலன், சுவை முதல் ஐந்துவகைப்படும்; இவ்வைந்தும் பொறியைந்தினுமேறி மண்ணால் உடம்பு ஊறாயும், நீரால் வாய் சுவையாயும், தீயால் கண் ஒளியாயும், காற்றால் மூக்கு நாற்றமாயும், வானால் செவி ஓசையாயும் வந்து உடம்பாம்.' இனி, கண்முதற்காட்சிய என்பதற்கு - பஞ்சேந்திரியங்களின் உணர்வுக்கு

இலக்காகுபவை யென்றலுமொன்று, நீளம் - தொழிற்பெயர். பஞ்சீகரண மெனப்படுகிற பஞ்சபூதங்களின் சேர்க்கையினாலேயே பொருளனைத்தும் உண்டாவதால், 'உண்முதற்பொருட்கெலாமூற்றமாவன' என்றது. பஞ்சீகரணமாவது - பிருதிவியில் ஒருபாதி பிருதிவியும், மற்றைப்பாதி அப்பு தேயு வாயு ஆகாசஙகளும், இவ்வாறே மற்றைப்பூதங்களிலும் பாதி அதுவும் பாதி மற்றைநான்குமாகக் கலத்தல்; இப்படி அந்யோந்யமாகக் கலந்தாலொழியப் பிரமாண்டம் உண்டாகாது. 'இவை கூடினாலல்லது காரிய கரமல்லாமையாலே மண்ணையும் மணலையும் நீரையுஞ்சேர்த்து ஒரு த்ரவ்யமாக்கிச் சுவரிடுவாரைப்போலே, ஈஶ்வரன் இவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்து ஒரு அண்டமாக்கி' என்றார், பிள்ளைலோகாசார்யரும். இனி, உள்முதற்பொருட்கெலாம் என்பதற்கு - உலகத்திலுள்ள எல்லாப் பொருள்கட்கும் எனினுமாம். உண் முதற்பொருட்கு எலாம் என்று கொண்டு - உண்ணுதல் முதலிய நுகர்ச்சிக்குரிய பொருள்களுக்கெல்லாம் என்பாரும் உளர். ஊற்றம் - ஊறுமிடம்; எனவே, காரணமாயிற்று. எண் முதல்—முதல்-எழுனுருபு; "சுரன்முதல் வந்த வுரன்மாய்மாலை" என்றவிடத்துப்போல. இனி, 'எண்முதலுயிர்க்கு' என்பதற்கு - எளிமையையுடைய தந்தையின் உயிருக்கு என்பாரும் உளர். எண்முதல் - நன்கு மதிக்கப்படுகிற முதற்கடவுளே! என்னவுமாம். பி-ம்:—[1]இலாதன. [2]ஆயின. [3]உயிர்க்கெலாம், உயிர்க்கினி, அவற்குநீ. [4]இயம்ப, இரங்க. (ககநூஎ)

எடு. புண்ணிய [1]நறுநெயிற் பொருவில் காலமாந்
திண்ணிய திரியினில் [2]விதியென் [3]றீயினி
லெண்ணிய [4]விளக்கவை யிரண்டு மெஞ்சினா
லண்ணலே[5]யவிவதற் கையம் [6]யாவதோ.

(இ - ள்.) அண்ணலே-சிறந்தவனே! புண்ணியம் - நல்வினையாகிய, நறு நெயில்-நறுமணம்பொருந்திய நெய்யிலே, பொருவு இல் காலம் ஆம்-ஒப்பில்லாத காலமாகிய, திண்ணிய திரியினில் - வலிய திரியிலே, விதி என் தீயினில் - ஊழென்கிற நெருப்பினால், எண்ணிய - கருத்தோடுஏற்றப்பட்ட, விளக்கு - (உயிர்வாழ்க்கையாகிய) தீபம், அவை இரண்டுஉம் எஞ்சினால் - (நெய்யும் திரியுமாகிய) அக்காரணங்கள் இரண்டும் ஒழிந்தால், அவிவதற்கு - அவிந்துபோவதற்கு, ஐயம் யாவதோ - சந்தேகம் என்னோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

நல்வினையும் நியமித்தகாலமும் முடிந்தபொழுதே உயிர்வாழ்க்கை ஒழியுமென்க. சக்ரவர்த்தி நல்வினைப்பயனையே பெரும்பாலும் நுகர்ந்ததனால், இங்கு 'புண்ணியநறுநெயில்' எனப்பட்டது. விதி - இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கு உரிய நியதி. எண்ணிய - காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. புண்ணியமிருப்பினும் நுகர்தற்கு உரிய காலத்தின் வழியே உயிர்வாழ்க்கை யேற்படுவதால், காலத்தைத் திரியாக உருவகித்தார்:

உயிர்வாழ்க்கையை விளக்குஎன்றார்: உருவகவணி. பி - ம்:—[1]நெய்யினில். [2]விதிதன். [3]சிந்தையின். [4]விளக்கினை. [5]வீவதற்கு, வீழ்வதற்கு. [6]ஆவதோ. ()

எகு. இவ்வுல கத்தினு [1]மிடரி னேகிடந்
தவ்[2]வுல கத்தினு நரகி னாழ்ந்து[3]பின்
வெவ்வினை [4]துய்ப்பன விரிந்த யோனிக
[5]ளெவ்வள விற்செல [6]வெண்ண லாகுமே.

(இ - ள்.) (உயிர்), இ உலகத்தின்உம் - இம்மையிலும், இடரின்ஏ கிடந்து - துன்பத்திலேயே அழுந்தியிருந்து, அ உலகத்தின்உம்-மறுமையிலும், நரகின் ஆழ்ந்து - நரகத்தில் அழுந்தி, பின்-மறுபிறப்பில், வெம் வினை துய்ப்பன - கொடிய வினைப்பயன்களை அனுபவித்தற்குஇடமான, விரிந்த யோனிகள் - பலவகைப்பட்ட பிறப்புவகைகள், எ அளவில் செல எண்ணல் ஆகும் - எந்தக்கணக்கில் அடஙக எண்ணுதல் கூடும்? (எ - று.)—ஏ - ஈற்றசை.

ஒருவாற்றாலும் அளவிடப்படாதபடி அநந்தமானயோனிபேதங்கள் உலகத்தில் உயிர்த்தோற்றத்துக்கு உடலாக அமைந்துள்ளன என்பதாம்: இதனால், கருமவசத்தால் உயிர் ஒருசரீரததைவிட்டு மறுசரீரத்தில் புகுதல், இரங்கத்தக்கதன்று என்றவாறு. பி-ம்:—[1]இடரிலே, இடருளே. [2]உலகத்தரு. [3]தம். [4]அறுப்பன. [5]எவ்வுலகில், அவ்வளவில். [6]என்னல். (கசு௲கூ)

எஎ. உண்டுகொ லிதுவல துதவி நீசெய்வ
[1]தெண்டகு [2]குணத்தினாய் தாதை [3]யென்றலாற்
புண்டரீ கத்தனி முதற்கும் போக்கரு
விண்டுவி னுலகிடை [4]விளங்கி னனரோ.

(இ - ள்.) எண் தகு குணத்தினாய் - (யாவராலும்) நன்கு மதிக்கத்தக்க நற்குணங்களை யுடையவனே! தாதை என்றலால் - (தசரதன் உனக்குத்) தந்தை யென்ற காரணத்தால், புண்டரீகம் தனி முதற்கும் போக்கு அரு - தாமரைமலரில் தோன்றிய ஒப்பற்ற படைத்தற்கடவுளான பிரமனுக்குஞ் செல்லுதற்கரிய, விண்டுவின் உலகிடை-விஷ்ணுலோகத்தில், விளங்கினான்-(சென்றுசேர்ந்து) விளக்கமடைந்தான்; இது அலது - இதுவன்றி, நீ செய்வது உதவி உண்டு கொல் - நீ (தந்தைக்குச்) செய்யத்தக்க உதவி (வேறு) உண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)—அரோ - ஈற்றசை.

எண்தகு குணம் - தியானிக்கத்தக்க திருக்கலியாணகுணங்க ளெனவுமாம். தந்தையை நற்கதியிற் சேர்த்தலே மைந்தரதுகடமையாதலாலும், உன்னைப்பெற்றதன்பயனாக உன்தந்தை மீளாவுலகிடைச் சேர்ந்திட்டானாதலாலும்,மகனைப் பெறவேண்டியதைப் பெற்ற உன்தந்தையைக் குறித்து இரங்குதல் தகுதியன்றென்பதாம். என்றல் என்ற தொழிற்பெயர், மூன்றனுருபு ஏற்று வந்தது. எண்தகு குணம் - எட்டுத் தக்கருணங்களுமாம். விளங்குதல் - ஒளிமயமான சரீரம்பெறுதல். பி-ம்:—[1]எண்டரும். [2]குணத்தினன். [3]என்றுான். [4]மேவினன்.

(கசுஎ0)

எஅ. ஐயநீ யாதொன்று மவலிப் பாயலை
யுய்திற மவற்கினி யிதனி [1]னூங்குண்டோ
செய்வன வரன்முறை திருத்திச் [2]சேந்தநின்
[3]கையினு லொழுக்குதி கடனெ லாமென்றான்.

(இ - ள்.) ஐய—! நீ—, யாது ஒன்றுஉம் அவலிப்பாய் அலை - சிறிதுந் துன்பமடையவேண்டா; இனி—, அவற்கு-அத்தசரதனுக்கு, இதனின் ஊங்கு-(விஷ்ணுலோகத்தையடைதலென்ற) இதைக்காட்டிலும்மிக்கதான, உய்திறம்-ஈடேறும்வகை, உண்டுஓ-(வேறு) உள்ளதோ? [இல்லை]; (ஆகையால்),— செய்வன - (நீ தந்தைக்குச) செய்யவேண்டிய அந்திமக்கிரியைகளை, வரல் முறை - (நூல்களிற்கூறப்பட்டு அநுட்டானத்தில்) வந்த முறைப்படியே, திருத்தி-செவ்விதாகச்செய்து, சேந்த நின் கையினுல் - சிவந்த உனது கைகளால், கடன் எலாம் ஒழுக்குதி - நீர்க்கடன்களையெல்லாம் செலுத்துவாய், என்றான்-என்று (வசிட்டன்) கூறினன்; (எ - று.)

உத்தமகதியை மன்னவ னடைந்திட்டா னுதலால், அவனைப்பற்றி அவலித்தல் தக்கதன்று: மேலோர் நூல்களிற்கூறிய முறையையொட்டிச் செய்ய வேண்டிய முறைகளைச்செய்து நீர்க்கடனைச செலுத்துவாயாக என்றனனென்பதாம். இறந்தோரைக்கருதிச் செய்யும் நீர்க்கடன் பிதிருதேவதைகளைச் சேருவதால், உத்தமகதியடைந்தாரைக் கருதியும் நீர்க்கடன்செய்ய வேண்டு மென்பர். நீர்க்கடன்-தருப்பணம். பி-ம்:—[1]வேறு, மேல். [2]செய்க. [3]கைகளாலோம்புதி. (கககூக)

எகூ. [1]விண்ணுநீர் மொக்குளின் விளியும் [2]யாக்கையை
யெண்ணிநீ [3]யழுங்குத லிழுதைப் பாலதாற்
கண்ணினீ ருகுத்தலிற் கண்ட [4]தில்லைபோய்
[5]மண்ணுநீ ருகுத்தி [6]தா மரைக்கையா லென்றான்.

(இ - ள்.) விண்ணு நீர் மொக்குளின் - மேகத்தினின்று விழுகிற நீரில் தோன்றுங் குமிழிபோல, விளியும்-(நிலையில்லாமல்) அழிகிற, யாக்கையை-உடம்பைக்குறித்து, நீ—, எண்ணி அழுங்குதல் - சிந்தித்துவருந்துதல், இழுதைப்பாலது - பேதைமையின்பாற்படுவதாம்; கண்ணின் நீர் உகுத்தலில் கண்டது இல்லை - கண்ணீர்சொரிதலால் அடையும்பய னொன்றுமில்லை: (ஆதலால், அதனையொழித்து இனி), போய்—, தாமரை கையால் - செந்தாமரைமலர்போன்ற கைகளினுல், மண்ணு நீர் உகுத்தி - (பாவத்தைப்) போக்கிச் சுத்தஞ்செய்கிற தர்ப்பணநீரைச் சொரிவாய், என்றான் - என்று (மீண்டும்வசிட்டன்) கூறினன்; (எ - று.)

வசிட்டன் தேற்றி நீர்க்கடன்செய்யுமாறு கூறியும், ஸ்ரீராமன் துயர மிகுதியால் எழாதிருந்ததுகண்டு மீண்டும் தேறுதல்கூறி நீர்க்கடன்கழிக்கச் செல்லுமாறுகூறியதைத் தெரிவிப்பது இச்செய்யுளென்க. இறந்தவரைக்குறித்து இரங்குவதிற் பயனில்லையாதலால், செய்யவேண்டிய தர்ப்பணாதிகளைச் செய்க என்றபடி. விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கை - "படுமழை மொக்குளிற் பல்காலுந்தோன்றிக், கெடுமிதோர்யாக்கை" என்ற நாலடியார்

ரோடும், "மாரிமொக்குளின்மாய்ந்து" என்ற சிந்தாமணியோடும் ஒப்பிடுக. விண் - மேகத்துக்கு ஆகுபெயர்; உ - சாரியை. யாக்கை - எழுவகைத்தாதுக்களால் யாக்கப்படுவது. கண்டது இல்லை - இறந்த தந்தையை மீண்டுங்காணுதலில்லை யெனினுமாம்; "ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலு, மாண்டார் வருவரோ மாநிலத்தீர் - வேண்டா" என்றாற்போல. பி - ம்:—[1]விண்ணினீர். [2]வாழ்க்கையை. [3]அழுந்துதல். [4]இல்லைப்போய், இல்லையால். [5]மண்ணினீர். [6]நின்மலர்க், உன்மலர்க், நீமலர்க். (கககூஉ)

அ௦.—வசிட்டன் தேற்றியபின் இராமன் நீர்க்கடன்செய்யச் செல்லுதல்.

என்றபி [1]னேந்தலு மெழுந்து நான்மறைப்
பொன்றிணிந் தனசடைப் புனித னோடும்போய்ச்
[2]சென்றனன் [3]செறிதிரைப் புனலிற் செய்கென
[4]நின்றன னிராமனு நெறியை நோக்கினான்.

(இ-ள்.) என்ற பின்-என்று (முனிவன்)கூறியபின், ஏந்தல்உம்-ஸ்ரீராமனும், எழுந்து-(இருப்பிடத்தினின்று) புறப்பட்டெழுந்து, நால் மறை பொன் திணிந்து அன சடை புனிதனோடுஉம் - நான்குவேதங்களிலும் வல்ல (உருக்கிய) பொன் இறுகினாற்போன்ற செஞ்சடையையுடைய பரிசுத்தனான வசிஷ்டனுடனே, போய்—, செறி திரை புனலில் சென்றனன்-நெருங்கிய அலைகளையுடைய கங்கைநீரினிடத்திற் சேர்ந்தான்: (அப்போது,) செய்க என-(செய்யுங்கடமைகளைச்) செய்வாயென்று (வசிட்டன்)சொல்ல, நின்றனன்-(மந்தாகினிக்கரையையடைந்து) நின்றவனாகிய, இராமன்உம்—, நெறியை நோக்கினான்-(துக்கந்தணிந்துசெய்யவேண்டும்) முறைமையைக் கருதினான்; (எ - று.)—பி - ம்:—[1]ஏந்தலேயேந்திவேந்தரும். [2]சென்றனர். [3]திரைசெறி. [4]நின்றனர். (கககூங)

அக.—இராமபிரான் இறந்த மன்னனுக்குத் தர்ப்பணஞ்செய்தல்.

புக்கனன் [1]புனலிடை முழுகிப் போந்தனன்
றக்கநன் மறையவன் சடங்கு காட்டத்தான்
[2]முக்கையி னீர்விதி முறையி னீந்தன
னொக்கநின் றுயிர்தொறு [3]முணர்வு நல்குவான்.

(இ - ள்.) உயிர்தொறுஉம்-எல்லாசீவாத்துமாக்களினிடத்தும், ஒக்க-ஒருதன்மையாக, நின்று-(அந்தராத்மாவாய்) நின்று, உணர்வு நல்குவான் - (அவற்றிற்கு) அறிவை அருள்பவனாகிய திருமால் [ஸ்ரீராமன்],—புனலிடை புக்கனன்-நீரில் இறங்கி, முழுகி போந்தனன்-ஸ்நாநஞ்செய்துவந்து, தக்க நல் மறையவன் சடங்கு காட்ட-ஒத்ததக்க சிறந்தவேதங்களை யுணர்ந்த (புரோகிதனான) வசிஷ்டன் (செய்யவேண்டுஞ்) சடங்கை அறிவிக்க, தான்—, முக்கையின் நீர்-கைகளால் மூன்றுதரம் எடுத்துவிடப்படுகிற தர்ப்பணநீரை, விதி முறையின் ஈந்தனன்-(சாஸ்திரங்களில்) விதித்த முறைமைப்படி (இறந்த தன் தந்தையை யுத்தேசித்துக்) கொடுத்தான்; (எ - று.)

யாவர்க்கும் உணர்வை நல்குங் கடவுளின் அவதாரமூர்த்தியான இராம பிரான் தான் கொண்ட மானுடவேடத்திற்கு ஏற்ப மறையவன் சடங்குகாட்டத் தர்ப்பணஞ்செய்தா னென்றவாறு. சடங்கு - ஷடங்க மென்னும் வடசொல்லின் சிதைவென்பர். பி - ம்:—[1]புனலினின். [2]முக்கைநீர்விதியது, முக்கைநன்னீர்விதி. [3]உணர்வை நல்குவான், உணர்வுநண்ணுவான். (ககசுச)

அஉ.—தர்ப்பணஞ்செய்தபின் இராமன் பர்ணசாலைக்குமீளுதல்.

ஆனவன் [1]பிறவுள யாவு [2]மாற்றிப்பின்
[3]மானமந் திரத்தவர் மன்னர் மாதவ
ரேனையர் பிறர்களுஞ் சுற்ற வேகினன்
சானகி யிருந்த[4]வச் சாலை யெய்தினான்.

(இ - ள்.) ஆனவன் - (அங்ஙனந் தர்ப்பணஞ்செய்தவன்) ஆன ஸ்ரீராமன், பிற உள யாஉம் ஆற்றி - மற்றுமுள்ள எல்லாக்கிரியைகளையுஞ் செய்து முடித்து, பின் - பின்பு, மானம் - பெருமையையுடைய, மந்திரத்தவர் - மந்திரிகளும், மன்னர் - அரசர்களும், மா தவர் - முனிவர்களும், ஏனையர் பிறர்கள்உம்-மற்றையோர் எல்லோரும், சுற்ற - சூழ, ஏகினன் -சென்று, சானகி இருந்த அ சாலை எய்தினன் - சீதாபிராட்டி தங்கியிருந்த அந்த (த் தனது) பர்ணசாலையினிடத்தை யடைந்தான்; (எ - று.)

பிறவுளயாவுமென்றது-இலந்தைப்பழத்துடன் சேர்த்து இங்குதிப்பிண்ணாக்கைக் கொண்டுசெய்த பிண்டத்தைக் காட்டு மென்பது, முதனூலால் துணியப்படும். பரதன் தன்சேனையிறங்கிய இடத்திலுள்ள தாய்மார்களை யழைத்துவர வசிட்டரை யனுப்பி, சத்துருக்கினன் சுமந்திரன் குகன் மந்திரிமார்கள் இவர்களுடன் இராமாச்சிரமத்தையடைந்து துக்கம்பொங்கப் புலம்பி வணங்க, இராமபிரான் க்ஷேமம் வினவித் தந்தையிறந்ததைக் கேட்டுப் புலம்பிச சீதாலக்ஷ்மணர்க்குஞ் சொல்லி வருந்தத் தம்பிமார்தேற்றித் தர்ப்பணம் முதலிய சடங்கைச் செய்யச்சொல்ல, இலட்சுமண சீதைகளுடன் சென்று மூழ்கிச் சடங்கியற்றினனென்று முதனூல்கூறும். கீழ் மந்திரப்படலத்தில் "மானநோக்கிற் கவரிமாவனைய நீரார்" என்றதற்கேற்ப, 'மானமந்திரதவர்' என்றார். ஏனையர் என்பதில், பகுதியாகிய ஏனையென்பது எத்தனையென்பதன் மரூஉவான எனையென்பதன் நீட்டல்: பிறிதென்னும் பொருள் தரும் 'ஏனை' என்னும் இடைச்சொல்லன்று: பின்னே 'பிறர்' என வந்ததனால்; இனி, 'ஏனையர்பிறர்' என்றவற்றை ஒருபொருட் பன்மொழி யென்பாரும் உளர். சாநகி - ஜநகராசன்மகள்; தத்திதாந்தநாமம். இரு தவம் சாலை எனப் பதம்பிரித்து உரைத்தல் சிறப்பன்று.பி-ம்:—[1]செய்கடன்பிறவும். [2]ஆற்றினன். [3]மானவன் மந்திரத்தலைவர்மன்னவர். [4]நற். (ககசுரு)

அரு.—பரதன் சீதையின்பாதங்களில் வீழ்ந்து அரற்றுதல்.

எய்திய வேலையிற் [1]றமிய [2]ளெய்திய
தையலை [3]நோக்கினன் சாலை நோக்கினன்
கைகளிற் கண்மலர் புடைத்துக் கான்மிசை
யையனப் பரதன்வீழ்ந் தரற்றி னனரோ.

(இ - ள்.) எய்திய வேலையில் - (அப்பர்ணசாலையை) அடைந்த காலத்தில், ஐயன் அ பரதன் - சிறப்புடையனான அந்தப்பரதன், தமியள் எய்திய- (அங்குத்) தனியளாயிருந்த, தையலை - சீதாபிராட்டியை, நோக்கினன் - பார்த்து, சாலை நோக்கினன்-அத்தழைக்குடிசையையும் பார்த்து, (மிகஇரக்கமுற்று), கண் மலர் கைகளின் புடைத்து - தாமரைமலர்போலும் (தன்) கண்களைக் கைகளால் மோதிக்கொண்டு, கால்மிசை வீழ்ந்து அரற்றினன் - (அப்பிராட்டியின்) திருவடிகளில் விழுந்து அழுதான்; (எ-று.)—அரோ-ஈற்றசை.

பாங்கியர்பலர் இடைவிடாது சூழ்ந்து பணிவிடைபுரிய அரண்மனையந்தப்புரத்தில் அரசியாய்வீற்றிருத்தற்குஉரியவள் காட்டில் ஓராச்சிரமத்தில் தனியேயிருத்தலை நோக்கும்படி நேர்ந்தமைக்கு வருந்திக் கண்களைப் புடைத்துக்கொண்டு கதறிப்புலம்புவனானான் பரதனென்க. தையல் - அழகுடையவள். கான்மிசை எனஎடுத்து - அவ்வனத்திலே என்னவும் இடமுண்டு.
பி - ம்:—[1]தமியன். [2]எய்தியத். [3]நோக்கியச். (கக௯௬)

அச.—பரதனது துயரம்.

வெந்துயர் [1]தொடர்தர [2]விம்மி விம்மிநீ
[3]ருந்திய நிரந்தர மூற்று [4]மாறில
[5]சிந்திய [6]குரிசிலச் செம்மல் சேந்தகண்
ணிந்தியங் களிலெறி கடலுண் டென்னவே.

(இ - ள்.) 'இந்தியங்களில் - பொறிகளிலே, எறி கடல் உண்டு - அலைவீசுகிற கடல் உள்ளது,' என்ன - என்றுசொல்லும்படி, குரிசில் அ செம்மல்- பெருமையிற்சிறந்த அரசனாகிய அப்பரதனது, சேந்த கண்-சிவந்தகண்கள்,— வெம் துயர் தொடர்தர - கொடியசோகம் பற்றுதலால், விம்மி விம்மி - மிகப் புலம்பி, நீர் - நீரை, உந்திய - வெளிச்செலுத்தினவையாய், நிரந்தரம் ஊற்று மாறில-இடைவிடாமல் சுரத்தல் மாறுதனவாகி, சிந்திய - (நீரைச்) சொரிந்த வண்ணமிருந்தன; (எ - று.)

கடலிற்போலப் பரதனது கண்களில் நீர் மிக்கிருந்ததனால், கண்டோரால் 'பூமியிற்கடலிருத்தல்போல இந்தியங்களிலெறி கடலுண்டு'என்றுகருதுமாறு ஆயிற்றென்றார்: இது தன்மைத்தற்குறிப்பேற்றவணி. உந்திய,மாறில-

பலவின்பால் முற்றெச்சம். சிந்திய - முற்று. சிரந்தரம் - வடசொல். பி-ம்:—
[1]தொடர்ந்தெழ. [2]விம்மல், விம்ம. [3]உந்தினன். [4]வற்றில, மாற்றில, மாற்றல, மாறினன். [5]சிந்தின. [6]குருதியைச். (ககக௱)

அரு.—பரதனைக் கைகளால்தாங்கித் தந்தையிறந்தமையைச் சீதைக்கு இராமன் தெரிவித்தல்.

அந்நெடுந் துயருறு மரிய வீரனைத்
தன்னெடுங் [1]கரத்தினு லிராமன் றாங்கினு
னன்னெடுங் கூந்தலை நோக்கி நாயக
னென்னெடும் [2]பிரிவினிற் [3]றுஞ்சினு னென்றான்.

(இ - ள்.) அ நெடு துயர் உறும்-அப்படிப்பட்ட பெருந்துன்ப மடைந்த, அரிய வீரனை - அருமையான வீரத்தன்மையுள்ள பரதனை, இராமன்—,—தன் நெடு கரத்தினால் - தனது நீண்ட கைகளால், தாங்கினான் - எடுத்து அணைத்துக்கொண்டு, நல் நெடு கூந்தலை நோக்கி - அழகிய நீண்ட கூந்தலையுடைய சீதையைப் பார்த்து, 'நாயகன் - (நம்) தலைவனான தசரதசக்கரவர்த்தி, என் நெடு பிரிவினில் துஞ்சினான்-என்னுடைய நீண்டகாலத்துப் பிரிய நிகழ்ந்த சோகத்தால் இறந்தான்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

சக்கரவர்த்திகுமாரனுக்கு உலகத்தில் தந்தையொழிய அரசருளொருவனும் தலைவனல்லனாதலால், இங்கே, தந்தை 'நாயகன்' எனப்பட்டான். பதினாலுவருஷகாலம் பிரிவதாக நிச்சயித்த தாதலாலும், பிரிந்தார்க்கு ஒவ்வொரு கணமும் ஒருயுகமாகத்தோன்று மாதலாலும், 'நெடும்பிரிவு' எனப்பட்டது. நெடுங்கரம் - ஆஜாநுபாஹு. நன்னெடுங்கூந்தல்-பண்புத்தொகையன்மொழி. நன்மை - கூந்தலுடையாளுக்கு அடைமொழியாகவுமாம். துஞ்சினான்-மங்கலவழக்கு. பி-ம்:—[1]தடக்கையால். [2]பிரிவினால். [3]இறந்திட்டான்.

அகூ.—சீதை புலம்பத்தொடங்குதல்.

துண்ணெனு நெஞ்சினு [1]டுளங்கி னுடிணைக்
கண்ணெனு [2]நெடுங்கடல் கலுழி கான்றிட
மண்ணெனுஞ் [3]செவிலிமேல் வைத்த கையினாள்
பண்ணெனுங் கிளவியாற் பன்னி யேங்கினாள்.

(இ - ள்.) (அதுகேட்ட சீதை),—துண்ணெனும் நெஞ்சினாள்-திடுக்கிட்ட மனமுடையவளாய், துளங்கினாள் - நடுங்கி, துணை கண் எனும் நெடு கடல் கலுழி கான்றிட - (தனது) இரண்டு கண்களென்கிற பெரிய கடல் கலங்கல் நீரைச் சொரிய, மண் எனும் செவிலிமேல் வைத்த கையினாள் - பூமிதேவியென்கிற செவிலித்தாயின்மேல் வைத்த கைகளையுடையவளாய், பண் எனும் கிளவியால்-இசைப்பாட்டென்று சொல்லத்தக்க இன்சொற்களால், பன்னி - பலவாறுசொல்லி, ஏங்கினாள் - புலம்பினாள்; (எ - று.)

செவிலி-வளர்க்குந்தாய். திருமகளின் அமிசமாய் அயோநிஜையாக அவதரித்த பிராட்டியைப் பூமிதேவி பாதுகாத்துச சநகமகாராசனிடம் ஒப்பித்ததனால், 'மண்ணெனுஞ்செவிலி' என்றார். தரையிற் கைகளை யூன்றிக்கொண்டு என்பது மூன்றும் அடியின் கருத்து. கடல் - கண்ணுக்கு, நீர்சொரிதற்கேயன்றிப் பரந்திருத்தற்கும் உவமையாம். களவி - களக்கப்படுவது; களத்தல் - சொல்லுதல், இ - செயப்படுபொருள்விகுதி. பி-ம்:—[1]தளங்கிமைத்துணைக். [2]கடனெடுங், கயனெடுங், நெடுங்கயல். [3]செல்விமேல். (௧௧௬௯)

அஎ.—சீதையின் வருத்தம்.

கன்னகு திரள்புயக் கணவன் பின்செல
நன்னக ரொத்தது நடந்த கானமு
மன்னவன் [1]றுஞ்சின [2]னென்ற [3]மாற்றத்தா
லன்னமுந் துயர்க்கட லடிவைத் தாளரோ.

(இ - ள்.) கல் நகு - மலையை (த் தனக்கு நிகராகாதென்று) பரிகசிக்கிற, திரள் புயம் - திரண்டதோள்களையுடைய, கணவன் பின் செல - தன்கணவனுன ஸ்ரீராமபிரானது பின்னே செல்லுதலால், நடந்த - (கால்களாற்) சென்ற, கானமும் - காடும், நல் நகர் ஒத்தது - (சீதைக்கு வருத்தந் தராமல்) அழகிய அயோத்தியாநகரம்போலவே யிருந்தது: (பின்பு), மன்னவன் துஞ்சினன் என்ற மாற்றத்தால் - சக்கரவர்த்தி இறந்தானென்ற வார்த்தைை கேட்டதனால், அன்னம் - அன்னப்பேடுபோன்ற அச்சீதையும், துயர் கடல் அடி வைத்தாள் - துன்பமாகியகடலில் கால்வைத்தாள்; (எ-று.)

நகரத்து அரசச்செல்வத்தைத் துறந்து வனம்புகுந்தபொழுதுந் துன்பமறியாத சீதை தசரதன் இறந்தானென்றதனால் துன்பத்தையறிந்தாளென்பது, இப்பாட்டின்கருத்து. முதலிரண்டடிகளால், கணவனுடன் செல்லுமிடம் காடாயினும் அதனைப் பிராட்டி நகராகவே கருதினளெனக் கற்பின் சிறப்பு உணர்த்தப்பட்டது. முதலடியில், நகு - உவமவுருபுமாம்; மலைபோல் விளங்குகிற எனினுமாம். துயர்க்கடலில் அடிவைத்தாள்-துன்பமனுபவிக்கத் தொடங்கினள் என்றபடி. இனி, தண்டகாரணியஞ்செல்லுதல், இராமனைப் பிரிதல், இலங்கையில் வசித்தல் முதலாகப் பலபெருந்துன்பங்களை யடைவதை நோக்கி இங்ஙனங்கூறினரெனினுமாம்; "கவ்வையம் பெருங்கடலின் முனியுங் கால்வைத்தான்" என்றார், நகர்நீங்குபடலத்தும். பி-ம்:—[1]துஞ்சினன். [2]என்னும். [3]கிளவியால். (௧௧௭௦)

அஅ.—முனிபத்தினியர் சீதையைக் கங்கையில் மூழ்குவித்து இராமனிடஞ் சேர்த்தல்.

ஆயவ டன்னைநேர்ந் தங்கை யேந்தினர்
தாயரின் முனிவர்தந் தருமப் பன்னியர்
தூயநீ ராட்டினர் துயர நீக்கினர்
நாயகற் [1]சேர்த்தினர் [2]நவையு [3]ணீங்கினர்.

(இ - ள்.) (அப்பொழுது), நவையுள் நீங்கினர்-குற்றங்களினின்று நீங்கினவர்களான, முனிவர்தம் தருமம் பன்னியர்-இருடிகளுடைய தருமபத்திநிகள், தாயரின்-தாய்மார்போல, (பிராட்டியினிடம் மிக்க அன்புடையவர்களாய்), நேர்ந்து-அருகிற்சென்று, ஆயவள்தன்னை-அச்சீதையை, அம் கைநந்தினர்-அழகிய கைகளால் தாங்கி (அழைத்துக்கொண்டுபோய், தூய நீர் ஆட்டினர்-பரிசுத்தியுள்ள கங்கைநீரிலே ஸ்நாநஞ்செய்வித்து, துயரம் நீக்கினர்-(அவள்) சோகத்தைத் தணித்து, நாயகன் சேர்த்தினர் - கொழுநனான இராமனை அடைவித்தார்கள்; (எ - று.)

ஆயவள்-கீழ்க்கூறியவாறு ஆகியவள். தருமப்பன்னி-தர்மபத்நீ என்னும் வடசொல்லின் சிதைவு. துயரம்நீக்குதல் - தேறுதல்கூறுதல். நான்காம் அடிக்கு-கணவனைச் சேர்த்தித் தாம் துன்பம் நீங்கினர் என்பாரும் உளர்: அவ்வுரைக்கு, துன்பம்-சீதைபடுந்துன்பத்தை நோக்கியதா லாயது. பி-ம்:—[1]சேர்த்தினர். [2]நவையில், நவையும். [3]நீக்கினர். (கக௭க)

அகூ.—சுமந்திரன் தாய்மாரோடும் சான்றவரோடும் இராமனிடம் வருதல்.

தேன்றருந் தெரியலச் செம்மல் நால்வரை
[1]யீன்றவர் மூவரோ டிருமை நோக்குறுஞ்
சான்றவர் குழாத்தொடுந் தரும [2]நோக்கிய
தோன்றல்பாற் சுமந்திரன் றொழுது தோன்றினான்.

(இ - ள்.) தேன் தரும் தெரியல்-தேனைச்சொரிகிற பூமாலையையுடைய, அ செம்மல் நால்வரை - பெருமைக்குணமுடைய (இராமன் முதலிய) அக்குமாரர் நால்வரை, ஈன்றவர்-பெற்றவர்களாகிய, மூவரோடு-(கௌசல்யை முதலிய தாய்மார்)மூவருடனும், இருமை நோக்குறும்-(பிறப்பு வீடு என்னும்) இரண்டனது துன்பவின்பத்தன்மைகளை ஆராய்ந்தறிகிற, சான்றவர் குழாத்தொடும் - பெரியோர்கூட்டத்தோடும், சுமந்திரன்—, தருமம் நோக்கிய தோன்றல்பால் - (எப்பொழுதுந் தருமத்தையே) சிந்திக்குந் தன்மையுள்ள ஸ்ரீராமபிரானிடம், தொழுது தோன்றினான்-அஞ்சலிசெய்துகொண்டு வந்து சேர்ந்தான்; (எ - று.)

"இருமைவகைதெரிந்து" என்ற குறளிற் பரிமேலழகர் உரைத்தவாறு, இங்கு 'இருமைநோக்குறும்' என்பதற்குப் பொருள் கொள்ளப்பட்டது. பி-ம்:—[1]ஈன்றவம். [2]நோக்குறும். (கக௭உ)

வேறு.

கூ௦.—இராமன் தாய்மாரைக்கண்டு கண்ணநீர் சிந்துதல்.

எந்தை யாண்டையா [1]னியம்பு வீரென
வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்
[2]சிந்தினின்றனன் சேந்த [3]கண்ணநீர்
முந்தை நான்முகத் தவற்கு முந்தையான்.

(இ - ள்.) (அப்பொழுது), முந்தை நான் முகத்தவற்கும் முந்தையான்- (எல்லாப்பிராணிகளுக்கும்) முற்பட்டபிரமனுக்கும்முற்பட்டவனான ஸ்ரீராமன், எந்தை யாண்டையான் இயம்புவீர் என - 'என்தந்தை எவ்விடத்திலுள்ளான்? கூறுங்கள்' என்று (பரிதாபத்தோடு) சொல்லி, வந்த தாயர்தம் வயங்கு சே அடி - அங்குவந்த அத்தாய்மார்களுடைய விளங்குகிற சிவந்தபாதங்களில், சேந்த கண்ண நீர் - சிவந்த (தன்) கண்களின் நீரை, சிந்தி நின்றனன் - இடைவிடாது சொரிந்து நின்றான்; (எ - று.)

'எந்தையாண்டையான் இயம்புவீர்' என்று கூறியது - இறந்தவரைப் பற்றி இங்ஙனம் விசாரிக்கின்ற ஓர் வழக்குநோக்கி யென்க: இங்ஙனம் விசாரிக்கும்வழக்கம், இப்போதும் உலகிலிருத்தலறிக. படைத்தற்கடவுளான பிரமனை உந்தித்தாமரையினின்று தந்ததனால், 'முந்தைநான்முகத்தவற்கு முந்தையான்' என்றார். பி-ம்:—[1]இயம்பும்நீவிரன. [2]சிந்த. [3]கண்ணினீர். ()

கூ௯.—இராமனைக் கட்டிக்கொண்டு தாய்மார் அழ, யாவரும் மனம்வருந்துதல்.

> தாய ருந்தலைப் பெய்து [1]தாந்தழீஇ
> [2]யோய்வி லன்பினூ [3]லுரற லோங்கினா
> ராய சேனையு மணங்க னார்களுந்
> [4]தீயில் [5]வீழ்ந்துதீ மெழுகிற் றேம்பினார்.

(இ - ள்.)(அப்பொழுது), தாயர்உம்-அத்தாய்மார்களும், தலைப்பெய்து- ஒருங்குகூடி, தாம் தழீஇ-தாங்கள்(தனித்தனி இராமனைத்)தழுவிக்கொண்டு, ஓய்வு இல் அன்பினால் - நீங்காத அன்போடு, உரறல் ஓங்கினார் - கதறுதல் மிக்கனர்; ஆய சேனைஉம்-திரண்ட அசசேனையிலுள்ளாரும், அணங்கு அனார் கள்உம்-தேவமகளிரையொத்த மாதர்களும், தீயில் வீழ்ந்து தீ மெழுகின் - அனலில்விழுந்து உருகுகிறமெழுகுபோல,தேம்பினார்-மனமுருகி வருந்தினார்.

தீமெழுகு-வினைத்தொகை. உரற லென்னுந் தொழிற்பெயரில், உரறு - பகுதி. அணங்கு - திருமகளும், மோகினியென்னும் பெண்தெய்வமுமாம். பி - ம்:—[1]தாமும்வீழ்ந்து. [2]ஓய்விறன்பினால். [3]உலறியேங்கினார், உரற்றியேங்கினார், உலறியேற்றியே. [4]தீயின். [5]வீழ்ந்தன. (கஎ௯)

கூ௨.—வந்த தாய்மார் சீதையைத்தழுவி வருந்திநிற்றல்.

> [1]பின்னவ் வீரரைப் பெற்ற பெற்றியப்
> பொன்ன னார்களுஞ் சனகன் பூவையைத்
> துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினா
> ரின்னல் வேலைபுக் [2]கிழிந்[3]த ழுந்துவார்.

(இ - ள்.) பின்-பின்பு, அ வீரரை பெற்ற பெற்றி அ பொன் அனார்கள் உம்-(இராமன்முதலிய) அந்தவீரர்களைப் புதல்வராக ஈன்ற பெருமையுடைய திருமகளையொத்த அத்தாய்மார்களும், சனகன் பூவையை - ஜநகராசன்

மகளான நாகணவாய்ப்பறவையின் சொற்போலும் இன்சொற்களையுடைய சீதையை, துன்னி - அடைந்து, மார்பு உற தொடர்ந்து புல்லினர் - மார்பிற் பொருந்தக் கட்டியணைத்தவர்களாய், இன்னல் வேலை புக்கு இழிந்து அழுந்துவார்-துன்பக்கடலிற் பிரவேசித்து உள்ளிறங்கி அமிழ்பவரானார்; (எ - று.)

சனகன்பூவை - ஜாநகி. பூவை - உவமவாகுபெயர். பி - ம்:—[1]பின்னர், பின்னை. [2]இடைந்து. [3]அழுங்குவார், இரங்குவார். (கசஎ௫)

**கூ௩.—சேனைவீரர் முதலியோர் மனவருத்தத்தோடு ஸ்ரீராமனை யடைதல்.**

சேனை வீரருந் [1]திருநன் மாநகர்
[2]மானை மாந்தரு மற்று ளோர்களு
மேனை வேந்தரும் பிறரும் யாவருங்
கோனை யெய்தினார் குறையுஞ் சிந்தையார்.

(இ-ள்.) சேனை வீரர்உம்-படைவீரர்களும், திரு நல் மா நகர் - (மற்றும்) அழகியசிறந்த பெரிய அயோத்தியாநகரத்திலுள்ள, மால் நை மாந்தர்உம் - (இராமன்பக்கலுள்ள) அன்பினால் வருந்துகிற ஆடவர்களும், மற்றுஉளோர்கள்உம் - மற்றுமுள்ளவர்களும் [மகளிரும்], ஏனை வேந்தர்உம் - மற்றும் அரசர்களும், பிறர்உம் - (அமைச்சர்முதலிய) மற்றையோரும், யாவர்உம்-(ஆகிய) எல்லோரும், குறையும் சிந்தையார் - அழியும்மனத்தையுடையராய், கோனை எய்தினார் - (தங்கள்) தலைவனான ஸ்ரீராமனை அடைந்தார்கள்; (எ - று.)

இரண்டாம்அடியில், மானம்என்பது மானையென ஈறுதிரிந்ததென்றலும் ஒன்று; சாமரை, சரிதை, வதை, காலை என்பனபோல. பி - ம்:—[1]திருவின். [2]மானமாந்தரும். (கசஎ௬)

**கூ௪.— சூரியாஸ்தமன வருணனை.**

படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினா
னிடஞ்செய் [1]தொல்குலத் திறைவ னாதலாற்
றடஞ்செய் தேரினான் றானு நீரினாற்
[2]கடஞ்செய் வானெனக் கடலின் மூழ்கினான்.

(இ - ள்.) படம் செய் - படத்தைவிரிக்குந் தன்மையுள்ள, நாக அணை - சேஷசயநத்தில், பள்ளி - படுத்தலை, நீங்கினான் - நீங்கிஇங்குஅவதரித்த திருமாலாகிய ஸ்ரீராமன், இடம் செய் - (அங்ஙனம் தான் அவதரித்தற்கு) இடமாகக்கொண்ட, தொல்குலத்து - தொன்றுதொட்டுவருகிற குலத்துக்கு, இறைவன் ஆதலால்-தலைவன் தானாதலால்,—தடம் செய் தேரினான்-பெருமைபொருந்தின தேரையுடைய சூரியன்,—தான்உம் நீரினால் கடம் செய்வான் என - (தன்குலத்தவனான தசரதசக்கரவர்த்தி இறந்ததற்குத்) தானும் நீரில் மூழ்கிச் செய்யவேண்டுங் கடமைகளைச் செய்பவன்போல,கடலில் மூழ்கினான் - மேற்குக்கடலில் முழுகினான்; [அஸ்தமித்தானென்றபடி;] (எ - று.)

சூரியன் இயல்பாக மறைந்து அஸ்தமித்ததற்குக் கவி இங்ஙனம் தாமாக ஒருகாரணத்தைக் கற்பித்துக் கூறியதனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. நாகணை - நாகவணை யென்பதன் விகாரம்; "நஞ்சுபதிகொண்ட வளநாகணை யினான்" எனச் சிந்தாமணியிலுங் காண்க. "பனிக்கடலுட் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்தென், மனக்கடலுள் வாழவல்லமாயமணாள நம்பீ" என் றாற்போல, 'நாகணைப்பள்ளிநீங்கினான்' என்றார்; இது - உபசாரம். நாகம் நீங்கினான் என்னாது 'நாகணைப்பள்ளிநீங்கினான்' என்றதனால், அவ்வாதி சேஷன் இங்கு இலக்குமணனாய் அவதரித்து இராமபிரானை என்றும் விட்டுப் பிரியாது அவனுக்குச் சகலவித கைங்கரியமுஞ் செய்யுந்தன்மை குறிப்பிக்கப் பட்டது. பி-ம்:—[1]தம். [2]கடன். (கக எஎ)

கூரு.—இதுவும் மேற்கவியும் - குளகம்: மறுநாள் அரசர்முதலியோர் சூழ்ந்திருக்க, விரதவேஷத்தைக்குறித்துப் பரதனை இராமன் வினவுதலைக் கூறும்.

அன்று தீர்ந்தபின் [1]னரச வேலையுந்
துன்று செஞ்சடைத் தவருஞ் சுற்றமுந்
தன்று ணைத் [2]திருத் [3]தம்பி மார்களுஞ்
சென்று சூழவாண் டிருந்த செம்மலான்.

(இ - ள்.) அன்று தீர்ந்த பின் - அன்றைத்தினம் கழிந்தபின்பு [மறு நாள்], அரசர் வேலைஉம் - அரசர்கூட்டமும், துன்று செம் சடை தவர்உம் - நெருங்கிய சிவந்தசடையையுடைய முனிவர்களும், சுற்றம்உம் - பந்துவர்க் கமும், தன் துணை திரு தம்பிமார்கள்உம் - தனக்குத்துணைவரான சிறந்த (பரதன்முதலிய) தம்பியரும், சென்று சூழ - வந்துசுற்றிலுமிருக்க, ஆண்டு இருந்த - அவ்விடத்தில் வீற்றிருந்த, செம்மல் - பிரபுவான ஸ்ரீராமன்,—(எ - று.)—"பரிந்துகூறினான்" என அடுத்த கவியோடு முடியும்.

அரசவேலை - உயர்திணை யீறு விகாரமாயிற்று. வேலை - கடலின்பெயர், கூட்டத்துக்கு உவமையாகுபெயர். பி-ம்:—[1]அரசர்வேலையும். [2]தனித். [3]தம்பி மாரொடும். (கக எஅ)

கூகூ. வரதன் றுஞ்சினான் வைய மாணையாற்
சரத நின்னதே மகுடந் தாங்கலாய்
விரத வேடநீ யென்கொல் [1]வேண்டுவான்
பரத [2]கூறெனப் [3]பரிந்து கூறினான்.

(இ-ள்.) 'பரத—! வரதன் துஞ்சினான் - (யாவர்க்கும்) வேண்டினவற்றைக் கொடுக்குந்தன்மையனான சக்கரவர்த்தி இறந்தான்: (பின்பு), வையம் - நில வுலகம், ஆணையால் - (அவனது) கட்டளையால், சரதம் - உண்மையாக, நின்னது - உன்னதேயாம்; (அங்ஙனமிருக்க), நீ—, மகுடம் தாங்கலாய்-முடி சூடாமல், விரதம் வேடம் வேண்டுவான் - தவவேஷத்தை விரும்பிப் பூண்டது, என் கொல் - யாதுகாரணத்தாலோ? கூறு-சொல்வாய்,' என -

என்று, பரிந்து கூறினன்-அன்புகொண்டு வினவினன்; (எ - று.)—வேண்டு வான் - எதிர்காலவினையெச்சம் தொழிற்பெயர்த் தன்மைப்பட்டுவந்தது. பி - ம்:—[1]வேண்டினய், மேவினய். [2]கூறெனப். [3]பணிந்து.          (கக௪௯)

கூள.—பரதன் கூறத்தொடங்குதல்.

என்ற லும்பதைத் தெழுந்து கைதொழா
[1]நின்று தோன்றலை நெடிது நோக்கிநீ
யன்றி யாவரே [2]யறத்து ளோரதர்
பின்று வாய்கொலா மென்னப் பேசுவான்.

(இ - ள்.) என்றலும்-என்று (இராமன்) வினவியவளவிலே,-(பரதன்), பதைத்து எழுந்து-மனம் துடிதுடித்தெழுந்து, கைதொழா நின்று-கைகூப்பி வணங்கி நின்று, தோன்றலை - இராமபிரானை, நெடிது நோக்கி - நெடும் பொழுது பார்த்து, '(உலகத்தில்), நீ அன்றி-நீயல்லாமல், அறத்து உளோர்-தருமநெறியில் நிற்பவர், யாவர்-யார்உளர்?(அங்ஙனமிருக்கவும்), அதர் பின்று வாய் கொல் - அவ்வறநெறியினின்றும் பின்னிடுவாயோ?' என்ன-என்று சொல்லி, பேசுவான்-(மற்றும்) கூறுபவனானன்; (எ - று.)—அதனை மேல் ஆறுகவிகளிற் காண்க. ஏ, ஆம் - அசைகள்.

கைதொழாநின்று என்பதை ஒருசொல்லாக நிகழ்காலவினையெச்ச மெனினுமாம்; ஆநின்று-இடைநிலை. அதர்-அருநெறி. பி-ம்:—[1]நின்ற. [2]அறத் துளாரதைப், அறத்துளோரதிற்.          (கக௮௦)

கூ௮.—இதுமுதல்-ஆறுகவிகள் ஒருதொடர்: பரதன் தன்கருத்தைத் தெரிவித்தல்.

[1]மனக்கொன் றாதன [2]வரத்தி னின்னையு
நினக்கொன் றாநிலை [3]நிறுவி நேமியான்
[4]றனைக்கொன் றாடருந் தனய [5]னாதலா
[6]லெனக்கொன் றாதவ மடுப்ப தெண்ணினல்.

(இ - ள்.) மனக்கு ஒன்றாதன - (பெரியோர்) மனத்துக்குப் பொருந்தா தனவாகிய, வரத்தின்-வரங்களால், நின்னை உம்-உன்னையும், நினக்கு ஒன்றா நிலை நிறுவி-உனக்குப்பொருந்தாதநிலைமையிலே நிறுத்தி, நேமியான்தனை - (தசரத)சக்கரவர்த்தியை,கொன்றாள்-இறக்கச்செய்தவளான கைகேயி,தரும்-பெற்ற, தனயன்-புத்திரனவேன், (யான்): ஆதலால் - ஆகையால், எனக்கு-(பாவியான)எனக்கு, தவம் அடுப்பது-தவவொழுக்கத்தை மேற்கொள்ளுதல், எண்ணினல் - ஆலோசிக்குமிடத்து, ஒன்றுஆ - தக்கதொன்றாகுமோ? [ஆகா தென்றபடி]; (எ - று.)

நல்லோர்செய்யுந் தவத்தைப் பிறப்பினல் இழிவையடைந்த யான் மேற் கொள்ளுதல் தகாதென்றவாறு. ஒன்றா என்பதை ஒன்றாது என்பதன் விகார மாகக் கொண்டு, பொருந்தாது எனினுமாம். தவம் அடுப்பதொன்றா என

இயைப்பினுமாம்; தவமானது பொருந்தின தொருகாரியமோ வென்க.
பி - ம்:—[1]மனைக்கொன்றுதன, மனைக்கொன்றுதவள். [2]வரத்து. [3]திறத்தி. [4]தனக்கொன்றாள். [5]ஆதலின். [6]எனக்கன்றோ, எனக்கன்றே. (ககஅக)

கூகூ. நோவ தாகவில் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த [1]பாவியேன்
சாவ தோர்கிலேன் றவஞ்செய் வேனலேன்
யாவ [2]னாகியிப் பழிநின் [3]றேறுவேன்.

(இ-ள்.) நோவது ஆக-வருந்தும்படி, இ உலகை நோய் செய்த-இந்நில வுலகத்தை வருத்தப்படுத்தின,—பாவகாரியின் - பாவியிடத்தினின்று, பிறந்த—, பாவியேன் - தீவினையுடையனான யான், சாவது ஓர்கிலேன் - இறக்கத்துணிந்தேனில்லை: தவம் செய்வேன் அலேன் - தவஞ்செய்வேனு மாகஅல்லேன்; யாவன் ஆகி இ பழிநின்று ஏறுவேன் - (இனி) எத்தன் மையனாய் இப்பழிப்பினின்று நீங்கி ஈடேறுவேன்? (எ - று.)

பாவகாரி=பாவகாரிணீ: வடசொல்: தீவினைசெய்தவள். இராமன் கானகமும் தசரதசக்ரவர்த்தி வானகமுஞ் செல்லக் காரணமாகி உலகத்தாரை யெல்லாம் துயர்க்குளழுந்துமாறு செய்தவளாதலின், கைகேயியை, 'நோவ தாகவிவ்வுலகை நோய்செய்தபாவகாரி' என்றான். தன்பழி நீங்குவது இறப் பினாலேனும் ஆகவேணும்: பிராயச்சித்தமாகத் தவஞ்செய்வதனாலேனும் ஆக வேணும்: இரண்டும் தன்னிடத்தி லில்லாமையால், 'யாவனாகி யிப்பழிநின் றேறுவேன்' என்கின்றான். பி-ம்:—[1]பாவியான். [2]ஆக. [3]ஏறுகேன். (ககஅஉ)

க00. நிறையி னீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையி னீங்கிய தவமும் பொங்கருட்
டுறையி னீங்கிய வறமுந் தொல்லையோர்
முறையி னீங்கிய [1]வரசின் முந்துமோ.

(இ-ள்.) நிறையின் நீங்கிய-கற்புநெறியில்நின்று விலகிய, மகளிர்-மாதர் களின், நீர்மைஉம் - குணமும், பொறையின் நீங்கிய - பொறுமையினின்று விலகிய, தவம்உம் - தவவொழுக்கமும், பொங்கு அருள் துறையின் நீங்கிய - விளங்குகிற கருணையின்வழியினின்று விலகிய, அறம்உம்-தருமமும், தொல் லையோர் முறையின் நீங்கிய - முன்னோர்களது முறைமையினின்று விலகிய, அரசின்-அரசாட்சியினும், முந்துமோ-(கொடுமையில்) முற்படுமோ? [படாது என்றபடி]; (எ - று.)

நிறையினீங்கியமகளிர் நீர்மை முதலியவற்றினும், தொல்லையோர்முறை யினீங்கிய அரசு மிகக்கொடியது என்பதாம். ஆதலால், "மூத்தவர்க்குரித்தா செனு முறைமையின்" தவறிய அரசியல் யான் கொள்ளத்தக்கதன்றுஎன்பது பெறப்படும். நிறை-நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல். பொறை - காரணம்

பற்றியாவது மடமையாலாவது ஒருவன் தமக்குக் குற்றஞ்செய்தவிடத்துத் தாமும் அதனை அவனிடஞ் செய்யாது பொறுத்தலோடு, விரதம்முதலிய வற்றால் தம் உயிர்க்கு வருந் துன்பங்களையும் பொறுத்தல். "அறனு, மருளுடையான் கண்ணதேயாகும்" என்பவாதலால், அருட்டுறையினீங்கிய அறம் தகாததாயிற்று. பி-ம்:—[1]அரசு. (ககஅ௩)

கூ0க. பிறந்து நீயுடைப் பிரிவி றொல்[1]பதந்
[2]துறந்து மாதவந் தொடங்கு வாயென்றான்
மறந்து நீதியிற் [3]றிறம்பி வாளிற்கொன்
றறந்[4] தின் றாலென [5]வரசு தாள்வெனோ.

(இ - ள்.) பிறந்துஉம் - (சக்கரவர்த்தியின் மூத்ததிருமகனாகப்) பிறந்திருந்தும், நீ—, உடை - (உனக்குச்சொந்தமாக) உடைய, பிரிவு இல் - நீங்கத்தகாத, தொல் - தொன்றுதொட்டுவருகிற, பதம் - (அரசாளும்) பதவியை, துறந்து - விட்டு, மா தவம் தொடங்குவாய் - பெரியதவத்தைச் செய்யத் தொடங்குவாய்,என்றால்—,—(யான்), மறந்துஉம் - மறந்தாயினும், நீதியின் திறம்பி - முறைமையினின்று வழுவி, அறம் வாளின் கொன்று தின்றால் என - தருமத்தை வாளினாற் கொன்று தின்றாற்போல, அரசு அது ஆள்வென் ஓ - அவ்வரசாட்சியை ஆள்வேனோ? (எ - று.)

மூத்தவனான நீ அரசொழிய இளையவனான யான் அரசாள்வேனாயின், அது தருமத்தை முற்றுங்கெடுத்ததாமென்றவாறு. பதம் - நிலைமை. அறங்கொன்றுதின்னுதல் - தருமத்தை முற்றுங் கெடுத்துவிடுதல். பி-ம்:—[1]அறம். துறந்த. [3]திறம்புவாளிற், [4]தின்றானென, தின்றயென. [5]யானது, அரசை. (ககஅச)

கூ0உ. தொகையி லன்பினா லிறைவன் றுஞ்சநீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
[1]வகையில் வஞ்சனா யரசு வவ்வயான்
பகைவ னேகொலா மிறவு [2]பார்க்கின்றேன்.

(இ - ள்.) தொகை இல் அன்பினால் - (உன்பக்கல்) அளவற்ற அன்பினால், இறைவன் துஞ்ச - சக்கரவர்த்தி இறக்க, நீ—, புகையும் வெம் சுரம் புகுத - புகைந்தெரிகிற வெவ்விய கொடுவனத்திற் பிரவேசிக்க, (அச்சமயத்தில்), புந்தியால் வகை இல் வஞ்சன் ஆய் அரசு வவ்வ - மனத்தினால் வகுத்தற்கரிய வஞ்சனையையுடையவனாய் (உனக்குஉரிய) அரசாட்சியைக் கவர்ந்து கொள்ளுதற்கு, யான்—, இறவு பார்க்கின்றேன் பகைவன் ஏ கொல் - சோர்கின்ற சமயம்பார்த்து நிற்கிற பகைவனேயோ? (எ - று.)

அரசாண்ட தந்தையும், அவ்வரசாட்சிக்குரிய மூத்த மைந்தனும் இல்லாத சமயத்தில் யான் அரசுகொள்வேனாயின், அது, அற்றம் நோக்கி யரசுகவரும் பகைவன்தொழிலே யாமென்க. இறவு-இறுஎன்னும் பகுதியடியாப் பிறந்த தொழிலாகுபெயர். பி-ம்:—[1]வகையும். [2]பார்த்தியான். (ககஅரு)

கOரு. உந்தை தீமையு முலகு றுதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையு
மெந்தை [1]நீங்கமீண் டரசு செய்[2]கெனச்
சிந்தை யாவதுந் தெரியக் கூறினன்.

(இ - ள்.) எந்தை - எமது தலைவனே! உந்தை - உனது தந்தையான தசரதன் (செய்த), தீமைஉம்—, உலகு - உலகத்துக்கு, உறுத நோய் தந்த - நேரத்தகாத துன்பத்தைச் செய்த, தீ வினை-பாவத்தொழிலையுடைய, தாய்-(என்)தாயான கைகேயி, செய் - செய்த, தீமைஉம்—, நீங்க - நீங்கும்படி, மீண்டு - (நீ அயோத்திக்குத்) திரும்பிவந்து, அரசு செய்க - அரசாட்சி செய்வாயாக, என - என்று, சிந்தை யாவதுஉம் தெரிய கூறினன் - (தன்) மனக்கருத்துமுழுவதும் (இராமனுக்கு) விளங்கச்சொன்னான், (பரதன்); (எ - று.)—பி-ம்:—[1]தீர, எனச். (ககஅசு)

கOசு.—அதுகேட்ட இராமன் கூறத்தொடங்குதல்.

சொற்ற வாசகத் துணிவு ணர்ந்தபி
[1]னிற்ற தோவிவன் [2]மனமென் றெண்ணுவான்
வெற்றி வீர[3]யான் விளம்பக் கேளென
[4]முற்று நோக்கினன் மொழிதன் மேயினன்.

(இ-ள்.) சொற்ற - (இங்ஙனம் பரதன்) சொன்ன, வாசகம்-வார்த்தையின், துணிவு - நிச்சயத்தை, உணர்ந்த பின் - அறிந்தபின்பு, (ஸ்ரீராமன்), இவன் மனம் இற்றது ஓ என்று எண்ணுவான் - இவன்கருத்து இத்தன்மையதோ என்று கருதுபவனாய், (அவனைநோக்கி), வெற்றி வீர யான் விளம்ப கேள் என - 'சயத்தையுடையவீரனே! யான் (சில) சொல்லக் கேட்பாய்' என்று, முற்றும் நோக்கினன் மொழிதல் மேயினன் - முழுவதும் ஆலோசித்துச் (சிலவார்த்தை) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை அடுத்த ஏழுகவிகளிற் காண்க.

தனக்கு இராச்சியத்தைக் கொடுப்பதற்காகவே பரதன் வருகின்றானென்பதை உய்த்துணர்ந்து இலக்குமணனிடத்து இராமன் முன்புகூறினானாயினும், அந்தப்பரதன் தான் அரசுபுரிவது அறத்திற்கு மாறான தென்று உறுதியான எண்ணங்கொண்டுள்ளானென்பது இப்போதுதான் தெற்றெனவிளங்கியதனால், பரதனது அக்கருத்தை மாற்றுவதற்கு ஏற்ப இராமன் கூறலானானென்க. முற்று நோக்கினன்-முழுவதும் அறிந்தவ [ஸர்வஜ்ஞ] னான ஸ்ரீராமனெனினுமாம். பி-ம்:—[1]இற்றவோவினை. [2]அறிவு. [3]நான். [4]முற்ற. (ககஅஎ)

கOரு.—இதுமுதல் ஏழுகவிகள் - இராமபிரான்
பரதனது கோள்கையைத் தவறெனக் காட்டுதலைத் தெரிவித்தும்.

[1]முறையும் [2]வாய்மையு முயனு நீதியு
மறையு [3]மேன்மையோ[4]டறனு [5]மாதியாந்
[6]துறையுள் யாவையுஞ் சுருதி நூல்[7]விடா
விறைவ[8]ரேவலா லியைவ காணையா.

ஒன்பது கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஐயா—! முறைஉம்-நல்லொழுக்கமும், வாய்மைஉம் - சத்திய மும், முயலும் நீதிஉம் - (யாவரும் அடைய) முயலத்தக்க நியாயமும், அறை யும் மேன்மையோடு - (சிறப்பித்துச்) சொல்லப்படுகிற மேன்மையும், அறன் உம் - தருமமும், ஆதி ஆம் - முதலான, துறைபுள் யாவைஉம்-நல்வழிகளிற் சேர்ந்தவையெல்லாம், சுருதி நூல் விடா இறைவர் ஏவலால் இயைவ-வேத சாஸ்திரங்களின்பொருளை விடாமற்கொண்ட அரசர்களது கட்டளையாலே (உலகத்தில்) உண்டாவன; காண் - (இதனை) அறிவாய்; (எ - று.)

முறைமுதலியன நிலைநிற்பதன்பொருட்டு இறைவரிருத்தல் இன்றி யமையாத தென்றவாறு: இனி, சக்கரவர்த்தியின் அனுமதிப்படியே நடப்பது தகுதி யென்றவாறுமாம். முயலுதல்-யத்தனப்படுவது. திருக்குறளில் 'இறை மாட்சி' என்றவிடத்து, 'உலகபாலருருவாய்நின்று உலகங்காத்தலின், இறை யென்றார்; "திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனே யென் னும்" என்று பெரியாரும் பணித்தார்' எனப் பரிமேலழகருரைத்ததை இங்கு 'இறைவர்' என்றதற்கு கொள்க. பி-ம்:—[1]முறையின். [2]வாய்மையின். [3]மெய்ம்மையோடு. [4]அறமும். [5]ஞானமும், வேள்வியும். [6]துறையும். [7]விடாது.

க0கூ. பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் [1]வினையின் மேன்மையு
முரவி லோய்தொழற் குரிய தேவருங்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்.

(இ - ள்.) உரம் விலோய் - வலிமையையுடைய வில்லையுடையவனே! ரவு கேள்விஉம்-சிறப்பித்துச் சொல்லப்படுகிற நூற்கேள்வியும், பழுது இல் ஞானம்உம் - குற்றமற்ற நல்லுணர்வும், விரவு சீலம்உம் - பொருந்தின நல் லொழுக்கமும், வினையின் மேன்மைஉம் [மேன்மையின் வினைஉம்] - மேம் பட்டதொழிலும், தொழற்கு உரிய தேவர்உம் - வணங்குதற்குரிய தேவர் களும், குரவர்ஏ - பெரியோர்களே, என - என்று, பெரிது கோடி - மிகவும் மனத்திற்கொள்வாய்; (எ - று.)

கேள்வி முதலியன குரவர்சொல்லுஞ்சொற்களால் உண்டாவனவென் றும், அவர்கள் குலதெய்வம்போலக் கொண்டாடத்தக்கவ ரென்றும் கருத்து. கேள்விமுதலியவற்றைக் குரவர் என்றது - உபசாரவழக்கு. பரவு - பரந்த எனினுமாம். ஞானத்துக்குப் பழுது - ஐயந்திரிபுகள். 'வினையின் மேன் மை' என்றவிடத்து மொழிமாற்றப்பட்டது. குரவர்-குரு என்பதன் பன்மை; குரவః - வடசொல். பி-ம்:—[1]வினையும். (கக அக)

க0எ. [1]அந்த நற்பெருங் குரவ ரா[2]ரெனச்
சிந்தை [3]தேர்வுறத் தெரிய [4]நோக்கினுற்
றந்தை தாயரென் றிவர்க டாமலா
லெந்தை [5]கூற[6]வே றெவரு மில்லையால்.

(இ - ள்.) எந்தை - எனது அன்புடையானே! அந்த நல் பெரு குரவர் - கீழ்க்கூறிய சிறந்தமகிமையையுடைய அப்பெரியோர், ஆர் - யாவர்? என - என்று, சிந்தை தேர்வு உற - மனந்தெளிவடைய, தெரிய நோக்கினுல் - விளங்க ஆராய்ந்தால், தந்தை தாயர் என்ற இவர்கள் தாம் அலால் - தந்தையுந் தாயுமென்ற இவ்விருவருமேயல்லாமல், கூற - சொல்லுதற்கு, வேறு எவர் உம் இல்லை—; (எ - று.)

கீழ்க்குரவர்பெருமையைத் தெரிவித்தவன், இதனுல், அக்குரவர் இன்னுரென்று விளக்குகின்ருன். தந்தைதாயர் - பன்மையீறுபெற்ற பொதுத்திணையும்மைத்தொகை. தம்பியை எந்தை யென்றது, அன்புபற்றிய மரபு வழுவமைதி. பி-ம்:—[1] அந்தமில். [2] எனில். [3] நேர்வுற. [4] எண்ணினுல். [5] கூறில். [6] வேறியைவதில்லையே, வேறியைவதில்லையால். (ககக0)

கo௲. தாய்வ ரங்கொளத் தந்தை யேவலான்
மேய [1]நங்குலத் தரும மேவினே
னீவ ரங்கொளத் [2]தவிர்த னீர்மையோ
வாய்வ ரும்புலத் தறிவு மேவினுய்.

(இ - ள்.) ஆய் வரும் - (பெரியோர்களால்) ஆராய்ந்துவரப்படுகிற, புலத்து - நூல்களின், அறிவு - உணர்வை, மேவினுய் - அடைந்தவனே! தாய் வரம் கொள - தாயான கைகேயி வரம்பெற்றுக்கொள்ள, தந்தை ஏவலால் - (அதற்குக் கட்டுப்பட்ட) தந்தையின் [தசரதனது] கட்டளையால், மேய நம் குலம் தருமம் மேவினேன் - (தாய்தந்தையர்சொற்படி நடத்தலென்கிற) பொருந்திய நமதுகுலத்துக்குஏற்ற ஒழுக்கத்தை விரும்பி ஏற்றுக் கொண்டேன்: (அவ்வறநெறியை), நீ வரம் கொள தவிர்தல் - நீவேண்டிக் கொள்ளுதலால் (நான்) நீங்குதல், நீர்மை ஓ - நற்குணமாகுமோ? [ஆகாது என்றபடி]; (எ - று.)

தாய்தந்தையரே குரவராதலாலும் அவர் சொல்லைமீறுதல் தகாதாதலாலும் யான் கானகஞ்சென்றிருக்க, அதனை உன் வேண்டுகோட்காகத் தவிர்தல் தக்கதன்றென்பதாம். 'ஆய்வரும்புலம்' என்றது - அரசர்கற்றற்குஉரிய அறநூலும், நீதிநூலும் முதலாயினவற்றை. இனி, ஆய்வு அரு எனப்பிரிப்பின் - ஆராய்ந்து அறிதற்கரிய எனப் பொருளாம். புலம் - நூலாதலை, தொல்காப்பியப்பாயிரத்தில் "புலந்தொகுத்தோனே" என்றவிடத்து விருத்தியுரையால் அறிக. இரண்டாமடியில், 'மேயகானகந் துருவிமேவினேன்' என்றும் பாடம். பி-ம்:—[1] எம். [2] தீர்தனேர்மையோ, தவிர்தனீதியோ. (கககக)

கoகூ. தனய [1]ராயினுர் [2]தந்தை தாயரை
வினையி [3]னல்லதோ ரிசையை வேய்தலோ
[4]நினைய லோவிடா நெடிய வன்பழி
புனைத லோ[5]வைய புதல்வ ராதருன்.

(இ - ள்.) ஐய-! தனயர் ஆயினார்-புத்திரரானவர்கள், தந்தை தாயரை-தமது)தந்தையையும் தாயையும், வினையின்-(தாம் செய்யுந்)தொழில்களால், ல்லது ஓர் இசையை வேய்தல்லு - சிறந்தவொரு கீர்த்தியை அடைவித் லோ, (அன்றி), நினையல் ஓவிடா - (யாவர்) நினைப்பினின்றும் நீங்காத, நெடிய வல் பழி-பெரிய கொடியபழிப்பை, புனைதல்லு-(அவர்களுக்குச்)சூட்டு லோ, புதல்வர் ஆதல்-(தாம்) மக்களாகப் பிறந்ததற்கு(ப்பயன்)? (எ - று.)

இருமுதுகுரவர்க்கு மக்கள்செய்யும் உதவி, அவர்களைப் புகழ்பூணு வித்தலேயன்றிப் பழிபூணுவித்தலாகாது; ஆதலால், கைகேயிபெற்ற வரமும் சரதன் வரமளித்த சொல்லின் மெய்ம்மையும் பழுதுபடாதபடி ஒழுகுவது முறைமை யென்றவாறு. பெற்றோர் விருப்பத்துக்கு மாறுபட நடத்தலாகா தென்பதை வற்புறுத்துதற்குக் கீழ்க்கூறியதையே வேறுவகையாக் கூறியது. 'ஓ'என்பதை அசையாகக்கொண்டு, நினையல் விடா-நினைத்தல் நீங்காத என் றலும் ஒன்று. 'ஐய' என்பதற்கு - குறிப்புப்பெயரெச்சமாக, அழகிய என்று உரைத்து, புதல்வர்க்கு அடைமொழியாக்குதலும் அமையும். பி-ம்:—[1]ஒயி னார். [2]தாதைதாயர்தம். [3]நல்லசொல்விசைமைமேவலோ, நல்லசொல்விசைய வெய்தலோ, நின்று சொல் விளம்பி மேவலோ, நல்லதொல்விசையமெய்த லோ. [4]நினைதலோ. [5]ஐயா. (௧௧௬௨)

௧௧௦ இம்மை [1]பொய்யுரைத் திவறி யெந்தையா
ரம்மை வெம்மைசேர் [2]நரக மாளயான்
கொம்மை [3]நன்னிதிக் குவையின் வைகிவாழ்
செம்மை சேர்நிலத் தரசு [4]செய்வெனோ.

(இ - ள்.) இவறி - (கைகேயிக்குக் கொடுத்த வரத்தை நிறைவேற்ற) லோபஞ்செய்து, எந்தையார்-எனதுதந்தையார், இம்மை - இப்பிறப்பிலே, பொய் உரைத்து—, அம்மை - மறுமையிலே, வெம்மை சேர் நரகம் ஆள - கொடுமைபொருந்தின நரகத்தைச் சேரும்படி, யான்—, கொம்மை நல்நிதி குவையின் வைகி வாழ் செம்மை சேர் நிலத்து அரசு செய்வெனோ-திரண்ட மிகுந்த பணக்குவியலிற் பொருந்திவாழ்கிற இன்பமமைந்த நிலவுலகத்து அரசாட்சியைச் செய்வேனோ? [செய்யேன் என்றபடி]; (எ - று.)

நான் கைகேயியின்வரத்தை நிறைவேற்றாமல் இராச்சியத்தை யரசுபுரிய உலோபஞ்செய்தால், அதனால் எந்தையார் பொய்யுரைத்தாராய் நரகஞ்சேர் வர்: தந்தையாரை நரகத்தினின்றுமீட்பது புத்திரனது கடமையோ? 'தந்தை நரகத்திற்கிடக்கட்டும்: நாம் அரசுபுரிவோம்' என்பது புத்திரரின்கடமையோ? மீட்பதே புத்திரர்கடமையாதலால், அரசுபுரிதல் தவறாகுமென்பதாம். எந் தையார்-ஆர் என்னும் பலர்பால் விகுதி, சிறப்புப்பொருளது. அம்மை-இறந்த பின்வரும்நிலை. குவை - மேடு. பி-ம்:—[1]மெய்யுரைதவறி. [2]நரகமாள்க. [3]வெம் மூலை. [4]செய்வனோ, செய்வதோ. (௧௧௬௩)

ககக. வரனி [1]னுந்தைசொன் [2]மரபி னாலுடைத்
தரணி நின்னதென் றியைந்த தன்மையா
[3]லுரனி னீபிறந் துரிமை [4]யாதலா
லரசு நின்னதே [5]யாள்க வென்னவே.

(இ - ள்.) வரன் - (கைகேயிக்குக் கொடுத்த) வரத்திலே, நில்-தவறாது நின்ற, உந்தை - உன் தந்தையினுடைய, சொல் - சொற்களின், மரபினால் - முறைமைப்படி, உடை தரணி-அவனுடையதான நிலவுலகம், நின்னது - உன்னுடையது, என்று—, இயைந்த - அமைந்த, தன்மையால் - தன்மையினாலும், நீ—, உரனின்-(அதனை ஆளுதற்கேற்ற) வலிமைகளோடு, பிறந்து-தோன்றி, உரிமை ஆதலால்-உரிமைபெற்றவனாதலாலும், அரசு நின்னதுஏ-அரசாட்சி உனக்கு உரியதேயாம்; (ஆதலால்), ஆள்க - (அதனை நீ) ஆளுவாயாக, என்ன - என்று (இராமன் பரதனைநோக்கிச்) சொல்ல,—(எ - று.)—(பரதன்) எனா (கக௨), எனாத் தாள்பூண்டு வேணடினான் (ககங) என மேலிரண்டுகவிகளில் தொடர்ந்து முடியும்.

கீழ் நூற்றைந்தாஞ்செய்யுளால் அரசு இன்றியமையாததெனை எடுத்துக் காட்டி,பிறகு தான் அரசுபூணுதல் கூடாதென்றற்குப் பலபாடல்களாற் காரணங் காட்டி,இதனால்,'உன்னுடையதை நீ அரசுபுரிக'என்று பரதனைநோக்கி இராமபிரான் கூறுகின்றனனென்க. தாய்க்கு வரமளித்த தந்தையின் மெய்ம்மைமொழியின்படி அரசாட்சி நினக்குஉரியதாதலாலும், தேகபலம் மனோபலம் முதலிய ஆற்றல்களால் நீ அதற்குஏற்றவனா மாதலாலும், 'அரசு நின்னதே, நீ ஆள்க'என்றனனென்க. இங்கு ஒருசாரார் 'பிறந்துரிமையாதலால்' என்பதற்கு-கைகேயிக்குப் புத்திரனாகப்பிறந்தமையாலேயே உனக்கு இவ்வுலகம் உரித்துஎன்றுகூறி, 'தசரதன் கைகேயியை மணந்தகாலத்து இராச்சியத்தைச் சுல்கமாகச்சபதஞ்செய்தான் என்று ஸ்ரீவான்மீகிராமாயணத்தில் க0எ ஆம் ஸர்க்கத்திற் கூறியிருப்பதால், 'இராச்சியம் கைகேயியினுடையதே: தசரதன் அதனுக்கு உரியவனல்லன்: பெண் அரசுபுரிதற்குப்பதில் இத்தசரதன் அரசுபுரிந்தான்: ஆகவே, கைகேயியின்புத்திரனான பரதனுக்குப் பிறப்புரிமையாகவுள்ளது அரசியல்: தசரதன் தன்னுடையதல்லாத இராச்சியத்தை இராமனுக்கு அக்கிரமமாகக் கொடுக்க, தனக்குரியது இராச்சியம் என்று மந்தரையாற் போதிக்கப்பட்டுத் தன்கணவனை அக்கிரமத்தினின்றுதடுக்கக் கற்புடைய கைகேயி வரவியாசத்தைக் கொண்டனள்'என வாதிப்பர். அன்னார் 'தன்னதல்லாத இராச்சியத்தை அரசன் தான் வரமாகக் கொடுத்தற்கும் உரியனல்லனே? அதுவும் பாதகத்திற் சேராதோ?' என்பதையும், 'இராசசியம் தன்னதானால் கணவனிஷ்டப்படி இராச்சியத்தை யிராமனுக்குக் கொடுத்திடாமல், தன்கணவனையும் உயிர்நீங்குமாறுசெய்வதுதானா கைகேயியின் கற்புக்கு அணி?'என்பதையும் ஆராயக்கடவர். இனி, கைகேயிக்குச் சுல்கமாக அளித்ததைப்பற்றி இரண்டுவகையாகச் சமாதானங் கூறப்படும்: விவாகம்முதலிய காலங்களிற் கூறிய சொல் பந்தப்படுத்தாது என்பது தருமநூற்

கொள்கையென்பது ஒன்று: மற்றொன்று - உத்தம குலத்தவராகிய கோசலை சுமித்திரையரைப் போலவே கைகேயியையும் பட்டமகிஷியாகக்கொண்டு, இவர்கள் வயிற்றிற்பிறந்தவர்களில் எவர் மூத்தவரோ அவர்க்கு அரசு என்றுனென்பது. இங்ஙனமாகச் சமாதானங்கூறுவதே, முன்பின்னுய்ந்து இவ்விராமாயணத்தின்பொருளை நேர்மையாகக் கூறவேண்டுமென்னுங் கருத்துக் கொண்ட பெரியோர்துணிபாம். பி - ம்:—[1]நுர்தை. [2]வரத்தினல். [3]உரனினேன். [4]ஆசையால். [5]ஆள்திையனீ, ஆள்கவையனீ, ஆள்கையையனீ. ()

ககஉ.—இதுவும், அடுத்த கவியும் - பரதன் 'அரசு என்னதாகில் நான் உனக்குத் தந்தேன்; நீ ஆள்க' என்று பிரார்த்தித்தலைத் தெரிவிக்கும்.

முன்னர் வந்துதித் துலக [1]மூன்றினு
நின்னை யொப்பிலா நீபி றந்தபா
[2]ரென்ன தாகில்யா [3]னின்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடெனு.

(இ - ள்.) 'முன்னர் வந்து உதித்து-(எனக்கு) முன்னே வந்துபிறந்து, உலகம் மூன்றின்உம் நின்னை ஒப்பு இலா-மூவுலகங்களிலும் உன்னையொப்பவரில்லாத, நீ—, பிறந்த—, பார் - பூமி, என்னது ஆகில் - (நீ சொன்னபடி) என்னுடையதானல், யான் இன்று தந்தனென்-நான் இப்பொழுது (அதனை உனக்குக்) கொடுத்தேன்; மன்ன - அரசனே! நீ—, போந்து - மீண்டுவந்து, மகுடம் சூடு - முடிதரிப்பாய்,' எனு - என்று (இராமனை நோக்கிப் பரதன்) சொல்லி,—(எ - று.)—'வேண்டினன்' என வருங் கவியோடு முடியும்.

'முன்னை வந்துதித்துலகமூன்றினும் நின்னை யொப்பிலாநீ பிறந்தபார்' என்றதனல், பார் எனக்கு உரியதாமாறு இல்லையென மறுத்தவாறு. பி-ம்:—[1]மூன்றினில். [2]என்னதாகநான். [3]உனக்கின்றீந்தனன். (ககஙூ)

ககங. மலங்கி வையகம் [1]வருந்தி [2]வைகநீ
யுலங்கொ டோளுனக் குறுவ செய்தியோ
கலங்கு றுவணங் காத்தி போந்[3]தெனுப்
பொலங்கு லாவுதாள் பூண்டு வேண்டினன்.

(இ - ள்.) 'வையகம் - நிலவுலகுமுழுவதும், மலங்கி - கலங்கி, வருந்தி வைக - வருந்திநிற்க, நீ—, உலம் கொள் தோள் உனக்கு உறுவ செய்திஓ - திரள்கற்றூணையொத்த தோள்களையுடைய உன்மனத்திற்கு இசைபவற்றைச் செய்வாயோ? [செய்தல் தகுதியன் றென்றபடி]; (ஆதலால்), கலங்குறுவணம் - (அவ்வுலகம்) கலங்காதபடி, போந்து - மீண்டுவந்து, காத்தி - பாதுகாப்பாய்,' எனு - என்றுஞ் சொல்லி, பொலம் குலாவு தாள் பூண்டு வேண்டினன் - அழகுவிளங்குகிற (ஸ்ரீராமனது) திருவடிகளைப் பிடித்துக்கொண்டு (பரதன்) பிரார்த்தித்தான்; (எ - று.)

உலகத்தார் வருந்திநிற்கையில் உன் மனம்போனபடி காட்டிலேயே வாசஞ்செய்வதென்று பிடிவாதங்கொள்ளாமல் மீண்டுவந்து அரசு பூண்பாயென்று பரதன் சரண்புகுந்தானென்க. "இவன் அவனைப் பெற நினைக்கும்போது இந்தப்ப்ரபத்தியும் உபாயமன்று; அவன் இவனைப் பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று: இவையிரண்டும் ஸ்ரீபரதாழ்வான்பக்கலிலும் ஸ்ரீகுகப்பெருமாள்பக்கலிலும் காணலாம். ஸ்ரீபரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாய்த்து; ஸ்ரீகுகப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாய்த்து" என்ற ஸ்ரீவசனபூஷணவாக்கியமும், "இப்படி ஸ்வரூபாநுரூபமான இத்தை [ப்ரபத்தியை] ஸாதனமாக்கிக்கொண்டு ஸ்வதந்த்ரனான அவனை இவன் பெறப்பார்க்குமன்று, அவன் [எம்பெருமான்] நினைவுகூடாதாகில் இது [ப்ரபத்தி] விபலிக்கும்... உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானேவந்து அங்கீகரிக்கக்கடவ பரதந்த்ரனான இச்சேதனன் தான் பலியாய் [பயனைப்பெறுபவனாகி] தன்ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப் பெறநினைக்குமளவில், அவன் நினைவு கூடாதாகில்...ப்ரபத்தியும் தல்லாபஸாதநமாகாது: ..பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம் பண்ணுவித்துத் தன்ஸ்வரூபாநுரூபமான அடிமையைப்பெற்றுவாழுகைக்காக வழியேபிடித்து மனோரதித்துக்கொண்டுசென்று பெரியஆர்த்தியோடே அவர் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணின ஸ்ரீபரதாழ்வானுக்கு அப்படிப்பண்ணின ப்ரபத்தியாகிற நன்மைதானே, ஸத்யப்ரதிஜ்ஞரான பெருமாள்திருவுள்ளத்துக்கு அநிஷ்டமாகையாலே தீமையாய் விட்டது. ஏழையேதலன் இத்யாதிப்படியே பெருமாள் தாமேவந்து அங்கீகரிக்கப்பெற்ற ஸ்ரீகுகப்பெருமாளுக்குத் தோஷமே பச்சையாக அங்கீகரிக்கையாலே பாதகமாகிற தீமைதானே நன்மையாய்விட்டது" என்ற வ்யாக்யாநவாக்கியங்களும் இங்குஉணர்தற்குஉரியன. பி-ம்:—[1]வருந்து, வருந்தும், வருந்த. [2]வைகனீ. [3]எனப். ()

**௧௧௪.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: அப்பொழுது இராமன் பரதனை நோக்கிக் கூறுவன.**

> பசைந்த சிந்தைநீ பரிவின் வையமென்
> வசஞ்செய் தாலது முறைமை யோவசைக்
> கசைந்த வெந்தையா ரருள [1]வன்றுநா
> னிசைந்த [2]வாண்டெலா [3]மின்று மேற்பனோ.

(இ-ள்.) பசைந்த சிந்தை நீ - (என்பக்கல்) அன்புள்ள மனத்தையுடைய நீ, பரிவின் - (உன்) விருப்பத்தின்படி, வையம்-உலகத்தை, என்வசம் செய்தால் - என்வசப்படுத்திவிட்டால், அது முறைமையோ - அது நீதியாகுமோ? [ஆகாது என்றபடி]; (ஏனெனில்), வசைக்கு அசைந்த - பழிக்குஅஞ்சிய, எந்தையார்-எமது தந்தையார், அருள - (கைகேயிக்குவரம்) அளிக்க, (அதன்படி); அன்று நான் இசைந்த - அந்நாளில் யான் சம்மதித்துவந்த, ஆண்டு

எலாம் - வருஷங்களெல்லாம் [வனவாசகாலமான பதினான்குவருடமும்], இன்றொடு ஏறும்ஓ - இன்றைத்தினத்தோடு முடிந்துவிடுமோ? [அங்ஙனம் முடியாதன்றோ?] (எ - று.)

யான் வனவாசஞ்செய்கின்ற இப்போது உன்னிராச்சியத்தை என்வசஞ் செய்தே னென்பது முறையாகுமோ? யான்தான் தந்தைபணியைச் செய் யாது விட்டிடலாமோ? என்றனன் இராமபிரா னென்க. பி-ம்:—[1]ஆண்டு. [2]நாள். [3]இன்றுதேயுமோ, இன்றொடானதோ. (ககககஎ)

ககரு. வாய்மை யென்னுமீ தன்றி வையகந்
தூய்மை [1]யென்றுமொன் றுண்மை சொல்லுமோ
தீமை [2]தானதிற் றீர்த லன்றியே
[3]யாய்மெய் [4]யாகவே [5]றறைய லாவதே.

(இ-ள்.) வாய்மை என்னும் ஈது அன்றி - சத்தியமென்கிற இக்குணமே யல்லாமல், வையகம்-உலகம், தூய்மை என்று ஒன்று உம் உண்மை சொல்லும் ஓ - பரிசுத்திகரமென்று வேறொருநற்குணத்தையும் உள்ளதாகக் கூறுமோ? [கூறாதன்றோ?] தீமைதான்-துர்க்குணந்தான், அதில் தீர்தல் அன்றி ஏ-அவ் வாய்மையினின்றுந் தவறுதலாகுமே யல்லாமல், வேறு அறையல் ஆவது ஏ- வேறு கூறத்தக்கதோ? மெய் ஆக ஆய்-உண்மையாக ஆராய்ந்துபார்; (எ-று.)

மனத்தைச் சுத்தமாக்கும் உயர்குணம், சத்தியத்தினும் வேறு இல்லை; ஒருயிரைப் பலதீங்குக்கும் உள்ளாக்குகிற தீக்குணம், அசசத்தியந்தவறுத லன்றி வேறில்லை யென்பது கருத்து: "புறந்தூய்மை நீரா னமையு மகந் தூய்மை, வாய்மையாற் காணப்படும்." "சேய்மையண்மையி லுயிர்க்குறு துணையெனச்சிறந்த, வாய்மையாலகந்தூய்மையாம் மற்றிலை" என்பன காண்க. பி-ம்:—[1]வேறுமுண்டென்று, வேறுமோருண்மை. [2]தானதைத். [3]ஆமெய். [4]ஆதலென்று, ஆகவென்று. [5]எண்ணலாகுமோ, எண்ணம் யாவதோ. (ககககஅ)

ககசு. எந்தை [1]யேவவாண் டேழொ டே[2]ழெனு
வந்த காலநான் [3]வனத்துள் வைகநீ
தந்த பாரகந் [4]தன்னை மெய்ம்மையா
லந்த நாளெலா மாளென் னாணையால்.

(இ - ள்.) எந்தை ஏவ-எமதுதந்தை நியமித்தபடி, ஆண்டு ஏழொடு ஏழ் எனு வந்த காலம் - பதினான்குவருஷகாலம், நான்—, வனத்துள் வைக-காட் டில் வசிக்க, நீ—,தந்த பார் அகம்தன்னை-(தந்தை) அளித்த இராச்சியத்தை, மெய்ம்மையால் - (அத்தந்தையின்) உண்மைதவறாதபடி, என் ஆணையால் - எனதுகட்டளையால், அந்த நாள் எலாம் ஆள் - அந்தப் பதினான்குவருஷகா லமும் அரசாள்வாய்; (எ - று.)

நான் சத்தியந்தவறக்கூடாதாகையால், நான் இப்போதுமீண்டு வரு தற்கு இல்லை: ஆதலால், இராச்சியத்தைப் பதினான்குவருஷம் நீயேயாள்க

என்றனன் இராமனென்க. ஆண்டு ஏழொடு ஏழ் எனு வந்த காலம்-வருஷங்கள் ஏழோடும் மற்றும் ஏழென்றுகூட்டிவந்த காலம் எனப் பதவுரை காண்க. நீ தந்த பாரகம் - நீ எனக்கு இப்போது கொடுத்த பூமியை, என் ஆணையால் ஆள்-எனினுமாம். பாரகம்-பூமியினிடம். பி-ம்:—[1]ஏய. [2]என. [3]வனத்து. [4]தாங்கு.

## வேறு.

ககஎ. மன்னவ னிருக்க வே[1]யு மணியணி மகுடஞ் சூடு
கென்ன யா[2]னி யைந்த தன்று னேயது மறுக்க வஞ்சி
யன்னது நினைந்து நீயென் னுணையை மறுக்க லாமோ
சொன்னது செய்தி யைய துய[3]ருழந் தயர லென்றான்.

(இ - ள்.) மன்னவன் - சக்கரவர்த்தி, இருக்கவேயும் - வாழ்ந்திருக்கையிலும், மணி அணி மகுடம் சூடு என்ன - இரத்தினங்கள் பதித்த அழகிய கிரீடத்தைத் தரிப்பாயென்று (என்னைநோக்கிச்) சொல்ல, யான் இயைந்தது-நான் (அப்பொழுது அதற்கு) உடன்பட்டது, அன்னோன் ஏயது மறுக்க அஞ்சி - அத்தந்தை ஏவினதை மறுத்தற்கு அஞ்சியேயாம்: [அரசாட்சியில் விருப்பத்தாலன்று என்றபடி]: (அவ்வாறிருக்க), அன்னது நினைந்து - அங்ஙனம் நான் உடன்பட்டதுமாத்திரத்தைக் கருதி, நீ என் ஆணையை மறுக்கல் ஆம் ஓ - நீ எனதுகட்டளையைத் தடுத்தல் தகுதியோ? [அன்று என்றபடி]: சொன்னது செய்தி - (நான்) சொன்னதைச் செய்வாய்: ஐய—! துயர் உழந்து அயரல்-துக்கமனுபவித்துத்தளராதே, என்றான்-என்று (பரதனைநோக்கி இராமன்) கூறினான்; (எ - று.)

இராமன் அரசாட்சிச்செல்வத்தை அனுபவித்தலில் விருப்புவெறுப் பில்லாமல் "தந்தைசொல் மிக்க மந்திரமில்லை" என்றது கருதியே முன்னம் முடிசூட உடன்பட்டன னென்பதை, கீழ் மந்திரப்படலத்தில் "தாதையப் பரிசுரைசெயத் தாமரைக்கண்ணன், காதலுற்றில னிகழ்ந்திலன் கடனி தென்றுணர்ந்தும், யாதுகொற்றவனேவியததுசெயலன்றோ, நீதியெற்கென நினைந்து மப்பணிதலைநின்றான்" என்றதனாலும் அறிக. அன்னதுநினைந்து - அத்தந்தை சொல்லை யெண்ணி எனினுமாம். பி-ம்:—[1]நீ. [2]இசைந்த. [3]உழன்று. (கஉ௦௦)

ககஅ.—மீண்டுஞ்சொல்லத்தொடங்கிய பரதனை விலக்கி வசிட்டன் கூறத்தொடங்குதல்.

ஒள்ளியோ [1]னினைய வெல்லா முரைத்தலு [2]முரைக்க லுற்ற
பள்ளநீர் வெள்ள மன்ன பரதனை விலக்கிப் பண்டு
[3]தெள்ளிய குலத்தோர் செய்கை [4]சிக்கறச் சிந்தை நோக்கி
வள்ளியோய் கேட்டி [5]யென்று வசிட்டமா முனிவன் [6]சொன்னான்.

(இ - ள்.) ஒள்ளியோன் - ஒளியையுடைய ஸ்ரீராமன், இனைய எல்லாம் உரைத்தலும் - இத்தன்மையனவான வார்த்தைகளையெல்லாம் கூறினவளவிலே, உரைக்கல் உற்ற - (அதற்கு மறுமொழி) கூறத்தொடங்கின, பள்ளம்

நீர் வெள்ளம் அன்ன பரதனை-ஆழமான கடல்நீர்ப்பெருக்கையொத்த [கம் பீரத்தன்மையுடைய] பரதனை, விலக்கி—, வசிட்டமாமுனிவன்—, (இராம னைப்பார்த்து), 'வள்ளியோய்-வரையாதருளுங் குணமுள்ளவனே! பண்டு - முன்புள்ள, தெள்ளிய குலத்தோர் தெளிவான (உன்) குலத்து அரசர்களின், செய்கை-நடத்தையை, சிக்கு அற - சந்தேகமில்லாதபடி, சிந்தை நோக்கி கேட்டி - மனத்திற் கவனித்துக் கேட்பாய்,' என்று - என்று சொல்லி, சொன்னான்-(சிலவார்த்தை) சொல்லலானான்; (எ-று.)—அவற்றை அடுத்த ஆறுகவிகளிற் காண்க.

வசிட்டமுனிவன் முன்புள்ள தெள்ளியகுலத்தோரின் செய்கைகளைச் சிக்கில்லாமல் தன் மனத்தில் ஆராய்ந்து'வள்ளியோய் கேட்பாய்'என்று இரா மனைநோக்கிச் சொன்னான் என்றுங் கொள்ளலாம். ஒள்ளியோன், ஒண்மை-தேககாந்தியும், அறிவுநுட்பமும்; புகழுமாம்: தாம் உறங்குகையிலும் உலகத் தைக்காக்கின்ற அரசர்க்குரிய தெய்வத்தன்மையெனினும் அமையும்; "உறங் குமாயினு மன்னவன் றன்னொளி,கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்றார் சிந்தாமணியிலும். பள்ளநீர் வெள்ளமன்ன பரதன் - நற்குணக் கடல்போன்ற பரதனெனினுமாம்; "தள்ளரிய பெருநீத்தந் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை" என்றார், கீழ்க் குலமுறைகிளத்துபடலத்தும்; இனி, கடல்வெள்ளம் பரதனுக்குக் கருநிறத் தில் உவமையெனினுமாம். பள்ளத்தில் வந்துவிழும் நீர்வெள்ளம்போன்ற எனக்கூறி உவமையாக்குதல் சிறப்பின்றாம்:, பி-ம்:—[1]இனையது. [2]இசைக்கல், இசையல். [3]தெள்ளியோர். [4]சிக்குறச. [5]என்ன. [6]சொல்வான், கூறும்.(கஉ0௧)

வேறு.

கககூ.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்: வசிட்டமுனிவன் முந்தையோர் செய்கையைக்கூறி, என்னுனையால் இராச்சியத்தை யங்கீகரிப்பா யெனல்.

கிளரகன் [1]புனலுணின் றரியொர் கேழலா
யிளையெனுந் திருவினை [2]யேந்தி னானரோ
[3]வுளைவரும் பெருமையோ ரெயிற்றி னுட்புரை
வளரிளம் [4]பிறையிடை மறுவிற் றோன்றவே.

(இ - ள்.) (பூர்வகாலத்தில்), அரி-திருமால், ஓர் கேழல் ஆய் - ஒப்பற்ற தொரு ஆதிவராகமூர்த்தியாய்,உளைவு அரு பெருமை ஓர் எயிற்றின் உள்பு ரை-வருந்துதலில்லாத பெருமையுடைய ஒரு கோரதந்தத்தின் உள்ளிடத்தில், வளர் இள பிறையிடை மறுவின் தோன்ற-வளருந்தன்மையுள்ள இளம்பிறை ச்சந்திரனிடத்துக் களங்கம்போலக் காணப்பட, கிளர் அகல் புனலுள்நின்று-பொங்குகிற பரந்த கடலினின்று, இளை எனும் திருவினை - பூமிதேவியை, ஏந்தினான் எடுத்தருளினான்; (எ - று.)

இப்பொழுதுநடக்கிற வராககல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய சலத்தில் முழுகியிருந்த பூமியை மேலேஎடுக்க நினைத்து ஸ்ரீவராகாவதாரத் தைச் செய்தருளிக் கோட்டுநுனியாலே பூமியை எடுத்துவந்தன னென்பது, இங்குக்குறித்த புராணவரலாறு. அரி - ஹரி; திருமால். அடியவர் துயரை அழிப்பவன். திரு என்னும் இலக்குமியின் பெயர், இங்கு, பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது; மாதர்களெல்லோரும் இலக்குமியின் அமிசமேயாத லால். "நிறக்குஞ் செழுஞ்சுடர்க் கோடுமிப்பாரு நிசாமுகத்துச், சிறக்கும் பிறையுங் களங்கமும்போலு மெனிற்சிறுகண், மறக்குஞ் சரஞ்செற்ற மாயோ னரங்கன் வராகமதாய்ப், பிறக்கும் பிறப்பின் பெருமையெவ் வாறினிப் பேசு வதே"என்ற திருவரங்கத்துமாலைச்செய்யுளிலும் ஸ்ரீவராகநாயனாது திரு வெயிற்றுக்குப் பிறையையும் பூமிக்குக் களங்கத்தையும் உவமைகூறியவாறு காண்க. பி-ம்:—[1]புனலின். [2]எய்தினன். [3]உளவெனும். [4]பிடி. (௧௨௦௨)

௧௨௦. [1]ஆதிய வமைதியி னறுதி யைம்பெரும்
பூதமும் வெளி[2]யொழித் தெவையும்புக்கபி
னாத[3]னவ் வகன்புன [4]னல்கி நண்ணருஞ்
[5]சோதியாந் தன்மையிற் றுயிறன் மேயினான்.

(இ-ள்.) ஆதிய-கீழ்நடந்த, அமைதியின் - அக்கல்பகாலத்தின், அறுதி-முடிவிலே, ஐ பெரு பூதம்உம்-பஞ்சமகாபூதங்களும், வெளி ஒழித்து-வெளிப் பட்டுவிளங்குந்தன்மையைப் போக்கி, எவைஉம் - எல்லாத்தத்துவங்களும், புக்க பின் - (தனது சொரூபத்திற்) பிரவேசித்து இலயமடைந்தபின்பு, நாதன்-தலைவனான அந்தமகாவிஷ்ணு, அ அகல் புனல் நல்கி - அந்தப் பரந்த சலத்தை யுண்டாக்கி, நண்ண அரு சோதி ஆம் தன்மையின் - (பிறர்க்குப்) பொருந்துதற்கரிய ஒளிவடிவமான தன்மையோடு, துயிறல் மேயினான்-அறி துயில்செய்தலைப் பொருந்தினான்; (எ - று.)

உலகமனைத்தையும் அழித்து மேலிட்ட பிரளயப்பெருங்கடலில் நாரா யணன் ஆலிலையின்மீது யோகநித்திரை செய்தருளுகின்றன னென்பது, நூல்துணிபு. ஆதிய அமைதியின் - முன்புஉண்டான முறைமைப்படியே, அறுதி - முடிவில், ஐம்பெரும் பூதமும் ஒடுங்கியபின் எனினும் அமையும்; சிருஷ்டிகாலத்தில் எந்தத்தத்துவத்தினின்றுஎந்தத்தத்துவம் உண்டாயிற்றோ, அந்தமுறைமைக்கு மாறாக லயகாலத்தில் காரியப்பொருள் காரணத்தினுள் ஒடுங்கிக்கொண்டே செல்ல, இறுதியாய்நின்ற பிரகிருதியும் புருஷனும் பர மாத்மாவினிடத்து லயப்படு மென அறிக. அகல் + புனல் = அகன்புனல்; சிறுபான்மை லகரம் னகரமாயிற்று. பி-ம்:—[1]ஆதியவிறுதியினமைதி, ஆதியி னிறுதியினமைதி, ஆதியவமைதியினிறுவி,ஆதியவமைதியினிறுதி. [2]ஒழிந்து. [3]இவ். [4]நண்ணி, [5]சோதியின்னதன்வயின், (௧௨௦௩)

கஉக. ஏற்றவித் [1]தன்மையி னமரர்க் கின்னமு
தூற்றுடைக் [2]கடல்வண னுந்தி யுந்திய
நூற்றிதழ்க் கமலத்தி னொய்தின் யாவையுந்
தோற்றுவித் [3]துதவிட முதல்வன் றோன்றினான்.

(இ-ள்.) ஏற்ற இ தன்மையின்-(இங்ஙனம் போகசித்திரையை) ஏற்றுக் கொண்ட இந்தத்தன்மையையுடைய, அமரர்க்கு இன் அமுது ஊற்று உடை கடல்வணன் தேவர்களுக்கு இனிய அமிருதத்தைச் சொரிதலையுடைய கடல் போலுங் கரிய திருநிறமுள்ள திருமாலினது, உந்தி-திருநாபி, உந்திய-தோற்றுவித்த, நூறு இதழ் கமலத்தின்-நூறு இதழ்களையுடைய தாமரைமலரினின்று, முதல்வன்-(எல்லாப்பிராணிகளுக்கும்) ஆதியாகிய பிரமன், நொய்தின் யாவை உம் தோற்றுவித்து உதவிட - எளிதில் எல்லாப்பொருள்களையும் உண்டாக்கித்தரும்பொருட்டு, தோன்றினான் - வெளிப்பட்டான்; (எ - று.)

பிரமன் திருமாலின் நாபீகமலத்தினின்று அப்பிரானது சங்கற்பத்தால் வெளியெழுந்து அழிந்தஉலகங்களை மறுபடி படைப்பானென்பது, நூற்கொள்கை. தன்மையிற் கடல்வணன் என இயையும். தேவர்களுக்குத் திருமால் அமுதமூற்றினது, தேவர்களையும் அசுரர்களையுங் கொண்டு திருப்பாற்கடலைக் கடைவித்த பொழுதில்என்க. இனி, 'அமரர்க்கின்னமுதூற்றுடை' என்றதனால், தேவர்களுக்குத் திருமால் அமிர்தம்போல இனிமைதருவனென்றதாகவுங் கொள்ளலாம். நூற்றிதழ்க்கமலம் - ஶதபத்திரம்; இங்கே, நூறு - பலவென்னும்பொருளது. நொய்தின் - விரைவாக என்றலுமாம். பி - ம்:—[1]தன்மையாலன்பர்க்கு. [2]கடலவன், கழலவன். [3]உதவிய.(கஉ0௪)

கஉஉ. அன்றவ னுலகினை யளிக்க [1]வாகிய
துன்றனிக் குலமுத லுள்ள வேந்தர்க
ளின்றள வினுமுறை [2]யிகந்து ளாரிலை
யொன்றுள துரையின [3]முணரக் கேட்டியால்.

(இ - ள்.) அன்று - அக்காலத்தில், அவன் - அப்பிரமன், உலகினை அளிக்க - உலகத்தைப்படைக்க, உன் தனி குலம் - உனது ஒப்பற்ற (சூரிய) குலம், முதல் ஆகியது - முதலில் உண்டாயிற்று; உள்ள வேந்தர்கள் - (அக்குலத்தில்) உள்ள அரசர்களுள், முறை இகந்துஉளார் - முறைமை தவறினவர், இன்று அளவின்உம் இலை - இன்றைவரையிலும் இல்லை; இனம் உரை ஒன்று உளது - இன்னமுஞ் சொல்லவேண்டுவது ஒன்று உள்ளது: உணர கேட்டி - தெரியக்கேட்பாய்; (எ - று.)

"ஆதிமாலமல னுபிகமலத் தயனுதித தயன் மரீசியெனு மண்ணலை யளித்தபரிசுங், காதல்கூர்தரு மரீசிமகனுகி வளருங் காசிபன் கதிரருக்கனை யளித்த பரிசும்" என்று தொடங்கிக் கலிங்கத்துப்பரணியிற் கூறியவாறுங்

காண்க. உணர - மனத்திற்பதிய. இதனால் நீ மூத்தவனாயிருந்து அரசுபுரிய மாட்டேனென்று கூறுவது முறைமையன்றென்றவாறு. பி-ம்:—[1]ஆக்கியது, ஆகிய. [2]இகழ்ந்துளார், இகழ்ந்துளோர். [3]உரைக்க, உணர்த்த, உணர்த்தல்.

கஉ௩. [1]இதவிய லியற்றிய குரவர் யாரினு
மதவியல் களிற்றினுய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் [2]பயக்கப் [3]பண்பினு
லுதவிய வொருவனே யுயரு மென்பரால்.

(இ - ள்.) மதம் இயல் களிற்றினுய்-மதத்தோடுபொருந்திய ஆண்யானை போன்றவனே! மறு இல் விஞ்சைகள் - குற்றமில்லாத கல்விகளை, பதவிய இருமைஉம் பயக்க - (உயிர்கள் அனுபவிக்கும்) பதவியாகவுள்ள இம்மை மறுமையென்னும் இரண்டினின்பங்களையும் உண்டாக்குமாறு, பண்பினால் உதவிய - அன்பொடு கற்பித்துக்கொடுத்த, ஒருவனே-ஆசிரியனொருத்தனே, இதம் இயல் இயற்றிய குரவர் யாரின்உம் - நன்மையாகிய செய்கைகளைச் செய்கிற ஐங்குரவருள்ளும், உயரும் - மேன்மையடைவான், என்பர் - என்று (நூலோர்) கூறுவர்; (எ - று.)

“தொழற்குரியதேவரும், குரவரேயெனப் பெரிதுகோடியால்”, “அந்த நற்பெருங்குரவராரெனச், சிந்தைதேர்வுறத் தெரியநோக்கினல், தந்தைதாயர்” என்று கீழ் இராமன்கூறியதனுல், அதற்கு மறுதலையாக வசிட்டமுனிவன் ‘குரவர்யாரினும்...விஞ்சைகள்...உதவிய வொருவனே யுயரும்’ என்கிறான்; “எழுத்தறிவித்தவனிறைவனாகும்” என்றார் பிறரும். இதம் - ஹிதம். குரவர் - பெரியோர்; “அரசனுபாத்தியான் தாய் தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவர்” என்றதனுல், ஐங்குரவரை யறிக. மத - வலிமையுமாம்: உரிச்சொல்; “மதவேமடனும் வலியுமாகும்” என்றார், தொல்காப்பியனார். பதவிய - குறிப்புப்பெயரெச்சம். பண்பு - கற்பிக்கும் முறைமையுமாம். பி-ம்:—[1]இதவியது. [2]பயந்த. [3]பண்டுதான். (கஉ0சு)

கஉஎ. என்றலால் யானுனை [1]யெடுத்து விஞ்சைக
ளொன்றலா தனபல வுதவிற் றுண்மையா
[2]லன்றெனு தின்றென தாணை யையநீ
நன்று[3]போந் தளியுனக் குரிய நாடென்றான்.

(இ - ள்.) என்றலால் - என்று (நூலோர்) கூறுதலால், யான் —, உனை எடுத்து-உன்னையாதரித்து, விஞ்சைகள் ஒன்று அலாதன பல-மிகப்பலவான கல்விகளை, உதவிற்று - (உனக்குக்) கற்பித்தது, உண்மையால் - உள்ளதாதலால், இன்று - இப்பொழுது, எனது ஆணை - என்னுடைய கட்டளையை, அன்று எனாது - தக்கதன்றென்று மறுக்காமல், ஐய—! நீ—, போந்து - (மீண்டு) வந்து, உனக்கு உரிய நாடு - உனக்குஉரிய இராச்சியத்தை, நன்று அளி - நன்றாகப் பாதுகாப்பாய், என்றான் - என்று (ஸ்ரீராமனைநோக்கி வசிட்டன்) கூறினான்; (எ - று.)

ஐங்குரவருள் விஞ்சையீந்தவனே யுயர்ந்தவ னென்று கீழ்க்கூறிய முனிவன், இதனால் உனக்கு விஞ்சையைக்கற்பித்த எனதுஉரைப்படி அரசுமேற்கொள்க என்கின்றனன். உனை-உனக்கு என்றுஉரைத்து, எடுத்து-தொடங்கியெனக் கொள்ளினுமாம். ஒன்றலாதன பல - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:—[1]எடுத்த. [2]அன்றெலாமின்றெனது. [3]யோந்தருள். (கஉ௦எ)

கஉ௫.—இராமன் வசிட்டனைநோக்கிக் கூறந்தொடங்குதல்.

கூறிய முனிவனைக் [1]குவிந்த தாமரை
சீறிய கைகளாற் றொழுது செங்கணா
[2]றறிய சிந்தனை [3]யறிஞ வொன்றுரை
கூறுவ துளதெனக் கூறன் மேயினான்.

(இ - ள்.) கூறிய-(இங்ஙனம்) சொன்ன, முனிவனை-வசிட்டனை, செங்கணான் - சிவந்ததிருக்கண்களையுடைய இராமன், குவிந்த தாமரை சீறிய கைகளால் தொழுது-குவிந்த செந்தாமரைமலர்களை (த் தமக்குப் பகையென்று) சினந்த [மிகவொத்த] தன்மைகளால் அஞ்சலிசெய்து வணங்கி, 'ஆறிய சிந்தனை அறிஞ - அடங்கிய மனத்தையுடைய யாவும் அறிந்தவனே! ஒன்று உரை கூறுவது உளது-(யான்) சொல்லவேண்டுவது ஒன்று உள்ளது', என-என்றுசொல்லி, கூறல் மேயினான் - (அதனைச்) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை மேல் மூன்றுகவிகளிற் காண்க.

கண்ணிற் சில சிவந்தரேகைக ளிருத்தல், உத்தமபுருஷலக்ஷணம்; "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப், பெரியவாய கண்கள்" என்றார், திருப்பாணாழ்வாரும். பி-ம்:—[1]குளிர்ந்த,குறித்த. [2]ஆறின. [3]அறிஞவேறுரை, அறியவேறுள. (கஉ௦அ)

கஉகூ.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: இராமனது மறுமொழி.

சான்றவ ராக[1]தன் குரவ[2]ராகதாய்
போன்றவ ராக[3]மெய்ப் புதல்வ ராகதான்
றேன்றரு மலருளான் சிறுவ செய்வெனென்
றேன்றபி னவ்வுரை மறுக்கு மீட்டதோ.

(இ - ள்.) தேன் தரு மலர் உளான் சிறுவ - தேனைச் சொரிகிற தாமரைமலரில் வீற்றிருக்கிற பிரமனது புத்திரனே! சான்றவர் ஆக - பெரியோர்களேயாகுக: தன் குரவர் ஆக - தனது ஆசிரியரேயாகுக: தாய் போன்றவர் ஆக - தாய்முதலியோரேயாகுக: மெய் புதல்வர் ஆக - சத்தியத்தையுடைய புத்திரரேயாகுக: தான் செய்வென் என்று ஏன்ற பின் - தான் (ஒருவர்வார்த்தைப்படி) செய்வேனென்று சம்மதித்துஏற்றுக்கொண்டபின், அ உரை -அந்தவார்த்தை, மறுக்கும் ஈட்டது ஓ - தடுக்கத்தக்க தன்மையுடையதோ? [அன்றுஎன்றபடி]. (எ - று.)

ஒருவார்த்தையைக்கூறினவர் தன்னினும் மேற்பட்டவரேயானாலும் கீழ்ப்பட்டவரேயானாலும் அவ்வார்த்தையின்படி செய்வதாக முன்னர் ஒரு

வன் ஒப்புக்கொண்டபின்பு அது மறுக்கத்தக்கதன்று என்பதாம். ஐங்குரவருள் ஆசிரியனை 'குரவர்' என்றதனாலும், மற்றைநால்வரை 'தாய்போன்றவர்' என்றதனாலுங் குறித்தான். 'தாய்போன்றவர்' என்றதில், போன்றவர் என்பது - ஒப்பில் போலியாய், உரையசைமாத்திரமாய் நின்றது; "ஒப்பில்போலியு மப்பொருட்டாகும்" என்ற இலக்கணத்தையும், "நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம், எரிப்பச்சுட்டெவ்வ நோயாக்கும்" என்ற இலக்கியத்தையுங் காண்க. இனி, குரவர் ஐங்குரவ ரெனக்கொண்டு, தாய்போன்றவர் - பெற்றதாய்போலத் தலைபணிசெய்பவர் என்பாரும் உளர். மெய்ப்புதல்வர் - உடம்பினின்று தோன்றிய புத்திர ரெனினுமாம். ஆக - இடைச்சொல் தன்மைப்பட்டு விகற்பப்பொருளில்வந்தது. பி-ம்:—[1]தம். [2]தந்தைதாய். [3]பொய்ப்புலையர். (கஉ0கூ)

கஉஎ. தாய்பணித் து[1]வந்தன தந்தை செய்கென
வேய[2]வெப் பொருள்களு மிறைஞ்சி மேற்கொளாத்
தீயவப் புலையனிற் செய்கை [3]தேர்கிலா
நாயெனத் [4]திரிவது [5]நல்ல தல்லதோ.

(இ - ள்.) தாய் பணித்து வந்தன - தாய் கட்டளையிட்டுவந்தவையும், தந்தை செய்க என ஏய - தந்தை செய்வாயென்று ஏவியவையுமாகிய, எ பொருள்கள் உம் எந்தக்காரியங்களையும், இறைஞ்சி மேல்கொளா-வணங்கிச் சிரமேற்கொள்ளாத, தீய அ புலையனின் - கொடிய அந்தப்புலையனைக்காட்டிலும், செய்கை தேர்கிலா நாய் என திரிவது-செய்பத்தக்கவற்றை அறியாத நாயாக எங்கும் அலைவது, நல்லது அல்லது ஓ -நல்லதன்றோ? (எ - று.)— அல்லதோ - தேற்றம்.

இன்னவை செய்யத்தக்கவையென்றும் இன்னவை செய்யத்தகாதவையென்றும் ஆய்ந்து உணரத்தக்க மானிடப்பிறப்பில் தோன்றி மாதாபிதாக்களது வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்யாத கருமசண்டாளனது பிறவியினும் விவேகமில்லாம லலைகிற நாய்ப்பிறப்பே நல்லது என்பதாம். தந்தைதாயர் சொல்லை மேற்கொள்ளாதவனைப் புலையனெனத் திட்டுகின்றான் இராமனென்க. மேற்கொள்ளாதவனுடைய குற்றத்தால் நாயாய்த்திரிவது நல்லதென நாய்ப் பிறவிக்கு மேன்மைகூறியது - அசமஞ்சியணியென்னும் உல்லாஸாலங்காரமாம். பி-ம்:—[1]வந்தது. [2]மெய்ப். [3]தேர்கலா. [4]திரிபவை. [5]நல்லவல்லவோ, நல்லவல்லவே, நல்லதாகுமோ. (கஉக0)

கஉஅ. முன்னுறப் பணித்தவர் மொழியை [1]யானென
சென்னியிற் [2]கொண்டது செய்வெ [3]னென்றதன்
பின்னுறப் பணித்தனை [4]பெருமை போயெனக்
கென்னினிச் [5]செய்வதை யுரைசெ யீங்கென்றான்.

(இ - ள்.) முன் உற - முற்பட, பணித்தவர் - கட்டளையிட்ட தாய்தந்தையரது, மொழியை-வார்த்தையை,யான்—, என சென்னியில் கொண்டு - எனது சிரசின்மேற்கொண்டு (கொண்டாடி), அது செய்வென் என்றதன்

பின் உற-அக்கட்டளையைச் செய்வேனென்று உடன்பட்டபின்னுக, பணித்தனை - (நீ வேறு இதனைக்) கட்டளையிட்டாய்: பெருமையோய்-சிறப்புடைய முனிவனே! இனி செய்வதை - இனி (நான்) செய்யத்தக்கதை, எனக்கு—, ஈங்கு - இப்பொழுது, என் உரை செய் - யாதென்று சொல்லியருள்வாய், என்றான் - என்று (வசிட்டனை நோக்கி இராமன்) வினவினான்; (எ - று.)

முன்னர்க்கூறிய தாய்தந்தையரின் வாக்கியமே பரிபாலிக்கத்தக்கது; அதற்கு மாருக நீ பின்னர்க் கூறியது செய்யத்தக்கதோ என்றபடி. செய்வதை என்பதில், ஐகாரத்தைச் சாரியையாக் கொள்ளுதலும் நேராம். [4]பெருமையோ என்றபாடத்திற்கு முன்னே கட்டளையிடப்பட்டு நான் செய்யுமாறு ஏன்றதைக் கைவிட்டிடும்படி பின்னே வந்த உன் சொல்லை மேற்கொள்ள வேண்டு மென்பது உண்டோ? என்றவாறு. பி-ம்:—[1]யானது. [2]கொண்டன்ன. [3]என்றபின், என்றதின். [5]செய்வதென்று. (கஉகக)

### கஉகூ.—வசிஷ்டமுனிவன் மாறுகூறமுடியாமலிருக்கப் பரதன் தன்துணிபு கூறுதல்.

முனிவனு முரைப்பதோர் முறைமை [1]கண்டில
னினியென விருந்தன னிளைய மைந்தனு
மனையதே [2]லாள்பவ ராள்க [3]நாடுநான்
பனிபடர் காடுடன் படர்தன் மெய்யென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டு), முனிவன்உம் - வசிட்டனும், இனி உரைப்பது ஓர் முறைமை கண்டிலம் என-இதற்குமாருகச் சொல்வதொருநீதியைக் காணேமென்று கருதி, இருந்தனன்-வாளாஇருந்தான்: (அதன்பின்), இளைய மைந்தன்உம் - பரதனும், 'அனையதுஎல் - அப்படியானுல், நாடு ஆள்பவர் ஆள்க - இராச்சியத்தை ஆளுபவர் ஆளட்டும்; (அதனைப்பற்றிச் சிந்தியாமல்), நான்-,பனி படர் காடு உடன் படர்தல் - பனி மிக்க காட்டில் இராமனுடன் செல்லுதல், மெய் - உண்மை,' என்றான் - என்று (உறுதியாகக்) கூறினான்; (எ - று.)

ஆள்பவர் ஆள்க - எவரேனும் ஆளட்டும் என்றபடி. பனி படர்-(அச்சம் விளைத்தலால்) நடுக்கந்தருந்தன்மை மிக்க என்றுமாம். பி-ம்:—[1]கண்டிலன். [2]ஆண்டவராள்க, ஆண்டவராண்ட. [3]நாடெனுப். (கஉகஉ)

### கஙo.—வானத்தில் தேவர்கூடி ஆராய்தல்.

அவ்வழி யிமையவ ரறிந்து [1]கூடினு
ரிவ்வழி யிராமனை யிவன்கொண் டேகுமேற்
செவ்வழித் தன்றுநஞ் செயலென் றெண்ணினூர்
கவ்வையர் விசும்பிடைக் [2]கழறன் மேயினூர்.

(இ - ள்.) அ வழி - அச்சமயத்தில், இமையவர் - தேவர்கள், அறிந்து - (இங்கு நடந்தவற்றையெல்லாம்) உணர்ந்து, கூடினூர் - ஒருங்கு சேர்ந்து,

'இ வழி - இப்பொழுது, இராமனை —, இவன் - பரதன், கொண்டு ஏகும் ஏல் - வலியமீட்டுக்கொண்டு செல்வானாயின், நம் செயல்-(அரக்கரை யழித்த லாகிய) நமது செய்கை,செவ் வழித்து அன்று-நல்லவழியில் நடப்பதாகாது,' என்று—, எண்ணினர் - ஆலோசித்தவர்களாய்,—கவ்வையர் - (அதனால்) துன்பமுற்றவர்களாய், விசும்பிடை - ஆகாயத்தில், கழறல் மேயினர்-சொல் லத்தொடங்கினார்கள்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க. கவ்வை-ஆரவாரமுமாம்.

'பரதன் இவ்வளவுபிடிவாதமாக நாடுசெல்லமாட்டேனென்று இருந் தானாகில், நாடு பாழாய்விடுமென்னுமது என்ற காரணத்தைமுன்னிட்டு இராமபிரான் ஒருகால் மீண்டு நகர்க்குச் சென்றிட்டானாகில் ராட்சசசங்கார மாகிற நமக்குவேண்டிய தொழில் நிறைவேறாதுபோய்விடுமே'என்று அஞ்சி விண்ணவா ஒன்றுகூடி ஆலோசித்துப் பின்வருமாறு கூறலாயின ரென்க. பி-ம்:—[1]கூறினார். [2]கழறினரரோ. (கஉகங)

கஉச.—இராமனைத் தந்தைசொல்லைப் புரக்குமாறும் பரதனைப் பதினான்காண்டு அரசுபுரியுமாறும் தேவர்கள் கூறுதல்.

ஏத்தரும் பெருங்குணத் திராம னிவ்வழி
[1]போத்தருந் தாதைசொற் புரக்கும் பூட்சியா
னாத்தவாண் டேழிரே டேழு மந்நிலங்
காத்தலுன் கட[2]னிவை கடமை யென்றனர்.

(இ - ள்.) 'ஏத்த அரு - புகழ்தற்கு அருமையான, பெரு குணத்து - சிறந்த குணங்களையுடைய, இராமன் —, தாதை சொல் புரக்கும் பூட்சியான்-தந்தையின் சொல்லைப் பாதுகாக்கும் உரிமையையுடையவனாய், இ வழி போத்தரும் - இவ்வனத்தினிடத்திற் செல்வான்; ஆத்த [யாத்த] - (தந்தை யால்) நியமிக்கப்பட்ட, ஆண்டு ஏழிரேடு ஏழ் உம் - பதினான்குவருஷகால மும், அ நிலம் காத்தல் - அவ்விராச்சியத்தைப் பாதுகாத்தல், உன் கடன் - உனதுமுறைமை: இவை கடமை - இவ்விரண்டும்(உம் இருவராலும் தவறாது நிறைவேற்றற்குரிய) கடமைகளாம்,' என்றனர் - என்று (தேவர்கள்) கூறி னார்கள்; (எ - று.)

போதரும் என்பது, எதுகைநோக்கி விரிந்துநின்றது. பூட்சி - ஏற்றுக் கொள்ளும் ஒழுக்கம்; பூண் என்னும்பகுதியும், சி என்னும் விகுதியும் பெற்ற தொழிலாகுபெயர். ஆத்த - யாத்த: இவ்வளவென்று வரையறுத்த என்க. பி-ம்:—[1]பூத்தருந். [2]இது. (கஉகச)

கஉஉ.—இராமன் 'தேவவாக்கியம் தவறத்தக்கதன்றதலால், அரசை மேற்கொள்க' என்று பரதனை வேண்டுதல்.

வானவ ருரைத்தலு மறுக்கற் பாலதன்
றியானுனை யிரந்தன னினியென் னாணையா
லானதோ [1]ரமைதியி னளித்தி பாரெனாத்
தானவன் [2]றாணைமலர்த் தடக்கை பற்றினான்.

(இ - ள்.) வானவர் உரைத்தலும் - தேவர்கள் (இவ்வாறு) கூறியவளவிலே, (ஸ்ரீராமன் பரதனை நோக்கி), 'மறுக்கற்பாலது அன்று - (இத்தேவவாக்கியம்) மறுத்தற்குரியதன்று: யான் உனை இரந்தனன் - நான் உன்னை வேண்டிக்கொண்டேன்; இனி—, என் ஆணையால் - எனது கட்டளைப்படி, ஆனது ஓர் அமைதியின் - தகுதியான முறைமையால், பார் அளித்தி-பூமியை அரசாள்வாய்,' என்று-என்றுசொல்லி, தான்—, அவன்-அப்பரதனது, துணை மலர் தட கை - இரண்டு தாமரைமலர்போன்ற பெரிய கைகளை, பற்றினான்-பிடித்துக்கொண்டான்; (எ - று.)

'வானவருரையும் மறுக்கத்தக்கதன்று. யானுங் கட்டளையிடுகிறேன்: நான் வனவாசஞ்செய்யுங்கால் நீ அரசுபுரிக' என்று வேண்டிக்கொண்டனன் இராமனென்க. பெரியோனாதலாற் கையைப் பற்றினான். 'ஆனதோரமைதியின்' என்பதற்கு - நியமிக்கப்பட்டதான ஒருகாலவரையறையளவும் என்றலும் ஒன்று. பி-ம்:—[1]அவதிபோய். [2]நறுமலர். (கஉகரு)

கஉ௩.—பரதன் இராமனைநோக்கிக் கூறும் பிரதிஜ்ஞை.

ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் [1]நெடுநகர் நண்ணி நானிலங்
[2]கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரி
[3]சாமிது சரதநின் னாணை சாற்றினேன்.

(இ - ள்.) ஆம் எனில் - அப்படியானால், ஏழ் இரண்டு ஆண்டில் - பதினான்குவருடங் கழிந்தவுடன், ஐய - தலைவனே! நீ—, நாம நீர் நெடு நகர் நண்ணி - (பகைவர்க்கு) அச்சந்தருகிற அகழிநீர்சூழ்ந்த பெரிய அயோத்தியா நகரத்தை யடைந்து, நானிலம் - பூமியை, கோ முறை புரிகிலை என்னின் - அரசாட்சி செய்திடாயாயின், (யான்), கூர் எரி சாம் இது - மிக்க அக்கினியிற்பிரவேசித்து இறப்பதாகிய இது, சரதம் - நிச்சயம்; நின் ஆணை சாற்றினேன் - உன்மேல் ஆணையிட்டுக் கூறினேன்; (எ - று.)

நீ பதினான்குவருடங்கழிந்ததும் ஒருநாள்கூடத் தாமதித்தலாகாது: வாராது ஒருநாள் தாழ்த்தா யாயினும் அக்கினிபிரவேசஞ்செய்து என்னுயிரை மாய்ப்பேனென்று பரதன் கூறினனென்க. நாம் - அச்சங்குறிக்கும் உரிச்சொல்; அ - சாரியை; இனி, நாமம் - வடசொல்லாய், பிரசித்தியுமாம். பி-ம்:—[1]அயோத்தியை. [2]கோன்முறை. [3]சாவது. (கஉகசு)

கஉ௪.—இராமன் பரதன்கூற்றுக்கு இணங்குதல்.

என்பது சொல்லிய பரதன் யாதுமோர்
[1]துன்பில னவனது துணிவை நோக்கினா
னன்பின னுருகின [2]னன்ன தாகென்றான்
றன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்,

(இ - ள்.) என்பது - என்ற இவ்வார்த்தையை, சொல்லிய-சொன்ன, பரதன்—, யாதுஉம் ஓர் துன்பு இலன் - யாதொருதுன்பமுமில்லாதவனு ஞன்; தன் புகழ்தன்னின்உம் பெரிய தன்மையான் - தனது கீர்த்திதன்னி லும் பெரியதாகப்பெற்ற தன்மையுடைய ஸ்ரீராமன், அவனது துணிவை நோக்கிஞன் - அப்பரதனது மனவுறுதியைக் கருதி, அன்பினன்-அன்புடை யவனுய், உருகினன் - மனமுருகினவனுய், அன்னது ஆக என்முன் - அவ் வாறேயாகுக வென்று கூறிஞன்; (எ - று.)

பதிஞன்குவருடங் கழிந்தவாறே தவருது வந்து அரசாள்வேன் என்ற னனென்பதாம். பரம்பொருளானஇராமனது பெருமையையறிந்து புகழ்ந் துரைப்பது உலகத்தில் எவராலும் இயலாதாதலால், 'தன்புகழ் தன்னினும் பெரியதன்மையான்'என்முர்: இனி, இதற்கு - தனதுகீர்த்தியினும் மிக்க நற் குணங்களையுடையா னெனினும் அமையும். பி - ம்:—[1]துன்பமேலாதவன், துன்பிலனன்னவன். [2]அழுதுசோர்ந்தனன். (கஉகஎ)

கக௫,—இராமனிடம் திருவடிநிலையைப் பரதன் வேண்டிப்பெறுதல்.

விம்மினன் பரதனும் வேறுசெய்வ தொன்
[1]றிின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்
[2]செம்மையின் றிருவடித் தலந்தந் தீகென
வெம்மையுந் [3]தருவன விரண்டு நல்கிஞன்.

(இ-ள்.) (பின்பு), பரதன்உம்—, வேறு செய்வது ஒன்று இன்மையின்- வேறு செய்யக்கடவதொன்று மில்லாமையால், அரிது என எண்ணி விம் மினன் ஏங்குவான்-(இராமபிரானைப் பிரிந்துசென்று அரசாளுதல்) அரியதா மென்று நினைத்துக் கலங்கித்திகைத்தவனுய், திரு அடி தலம் செம்மையின் தந்தீக என - (உனது) திருவடிநிலையை [பாதுகையை] அன்போடு கொடுத் தருள்வாயென்று (இராமனைப்) பிரார்த்திக்க,(அப்பெருமான்),எம்மைஉம் தரு வன இரண்டுஉம் நல்கிஞன் - எல்லாவுலக வின்பங்களையுங் கொடுத்தருள் வனவான (தன்) இரண்டுதிருவடிநிலையையுங் கொடுத்தருளிஞன்; (எ-று.)

தந்தீக என்பது - வியங்கோள்திரிசொல். இராமனது திருவடிநிலையே இம்மைமறுமையைத் தரவல்ல தென்க. திருவடிநிலையை எவர்கள் பூசிக்கின் றனரோ, அவர்மாட்டுத் திருமால் இரங்கி அருள்சுரப்பா ஞதலால், இவ்வாறு கூறியது. பி-ம்:—[1]இன்மையது. [2]செம்மறன், செம்மைநின். [3]தவிர்ப்பன.

வசிட்டன் இராமபிரானுள்ளஇடத்துக்குத் தாய்மார்களோடு வந்துசேர, இராமனைக்கண்ட தாய்மார் பேரொலியுண்டாகப்புலம்பிக் கண்ணீரைச் சொரிய, இராமன் சீதாலட்சுமணருடன் தாய்மாரை வணங்கினபின் வசிட் டனையும்வணங்க யாவரும் உரியபடி உட்கார்ந்தனராக, பிறகு பரதனைச் சடைமுடியுடனிருக்குங் காரணத்தை இராமன் வினவ, பரதன் இராமனை

இராச்சியத்தை யங்கீகரிக்கும்படி பிரார்த்திக்க, இராமன் 'தந்தையின் கட்டளையைக் கடக்கலாகாது: தந்தைகொடுத்த இராச்சியத்தை நீ பாதுகாக்க வேண்டும்: நான் வனவாசஞ்செய்யவேண்டும்' என்று திருபித்துச்சொல்லினன்: பின்பு இரவுகழிய, மறுநாள் பொழுதுபுலர்ந்து நித்தியகர்மானுஷ்டானங்களைச்செய்துவிட்டு இராமனுள்ளவிடத்து யாவருங் கூடினர். அப்போது பரதன் 'பிறனுடைய இராச்சியத்தை எப்படிக் கைப்பற்றலாமென்னவேண்டா;எனக்கு நீ கொடுத்த இராசசியத்தைத் திருப்பிக்கொடுக்கிறேன்:அங்கீகரித்து அரசுபுரிக' என்று வெகுவாகசசொல்லித் தந்தைமரணத்தைக் குறித்தும் இராமனது வனவாசத்தைக்குறித்தும் வெருவாக வருந்தியிருந்தான்; ருத்விக்குகளும் நகரத்தவரும் தாய்மார்களும் எல்லாரும் பரதனைக் கொண்டாடி, அரசைக் கைக்கொள்ளுமாறு இராமனை வேண்டினர். பிறகு இராமன் பலவகையான தத்துவ வசனங்களால் தேற்றித் தந்தையின் கட்டளையைத் தவறாமல் இருவரும் புரியவேணுமென்று வற்புறுத்திக் கூறினன். பின் பரதன் இராமனது தன்மையைக் கொண்டாடி, 'மதிமயங்கிப் பெண்வலைபிற்சிக்கித் தருமாதிக்கிரமத்தைச் செய்தால் சற்புத்திரன் அத்தீச்செயலுக்கு இடங்கொடுக்கலாமோ? தருமமுணர்ந்த நீ இப்போது கொண்டிருக்குந் தாபஸதர்மத்தைவிட்டு க்ஷத்திரியதருமத்தை மேற்கொண்டு இராசசியத்தைப் பரிபாலிப்பாயாக: இதுவே செய்யத்தக்க தருமம்' என்ன, இராமன் பரதனைநோக்கி, 'அரசர் விவாககாலத்தில் இராச்சியத்தைச் சுல்கமாக பிரதிஜ்ஞைஞ்செய்திருந்தனர். சம்பராசுரயுத்தத்தில் உன்தாய் உதவியதற்காகஇரண்டுவரஙகள் கொடுப்பதாக வாக்களித்தனர். அவள் அவ்வரங்களைக் கேட்க மன்னவர் தந்தனர்: ஆதலால், தருமாதிக்கிரமமில்லை. அவ்வரத்திற்குஏற்ப நான் சீதாலட்சுமணரோடு வனத்துக்கு வந்தேன்: நீ என்னைப்பற்றி மகாராஜர் கைகேயியினிடம் பட்ட கடன்தீரும்படி சத்துருக்கினனைத் துணையாகவைத்துக்கொண்டு அரசுபுரிக' என்றான். அப்போது ஜாபாலியென்னும் முனிவன் சார்வாகமதத்தை மேற்கொண்டு வெகுவாகச சொல்லி 'இராச்சியத்தைக் கைப்பற்றுக' என்ன, இராமபிரான் ஜாபாலி கூறிய மதத்தை மிக்க சினத்தோடு வெகுவாகக்கண்டித்து வைதிகமதத்தை நிலைநாட்டினன். அப்போது வசிட்டன் ஜாபாலியின்கருத்தைத் தெரிவித்துச் சினத்தைமாற்றி, முன்னையோரின் ஒழுக்கத்தை யெடுத்துக்காட்டி, 'நீயே அரசுபுரிதல் தக்கது' என்று சொல்லவும் 'தந்தையினுணைக்குக் கீழ்ப்படிவது முக்கியமேயன்றிக் குலதர்மத்தைக் கவனித்தல் முக்கியமன்று' என்ற கருத்துத்தோன்ற இராமன் வாளாவிருக்க, மீண்டும் வசிட்டன் 'ஞானத்தைத் தருங் குரு தந்தைதாயரைக்காட்டிலும் மேலானவனுதலால்,உன்தந்தைக்கும் உனக்கும் ஞானோபதேசஞ்செய்த என் வார்த்தையை மீறாமல் அரசுபுரிக' என்னே, இராமன் 'ஸமஸ்ததருமங்களைப் புரிவதற்குஞ் சாதனமான இந்த உடலைப் பெற்று வளர்த்துப் போற்றிய தாய் தந்தையர் ஞானசாரியனைக்காட்டிலும் மேலானவர்: மேலும் தந்தைக்கு முதலிற் பிரதிஜ்ஞைஞ்செய்துவிட்டதனால் இப்போது அதற்குமாறாகச செய்யத்தக்

கது யுக்தமன்று' என்றான். அப்பால் பரதன் மனந்தவித்து 'இராமன் என் மீது அருள்புரியாதிருக்கும்வரையில் இந்தப்பர்ணசாலையின் வாசலில் உணவின்றித் தருப்பத்தையிட்டு அவர்க்குக் குறுக்கே படுத்திருப்பேன்' என்று சொல்லி அங்ஙனமே செய்தான். இராமன் பரதனைப்பார்த்து 'குழந்தாய்! பிராமணன்மாத்திரம் தன்னிடம் கடன்வாங்கிக்கொண்டு ஏமாற்றப்பார்க்கிறவனிடம் இங்ஙனம் குறுக்காகப் படுத்துக்கொண்டு பீடித்துவாங்கலாமேதவிர, க்ஷத்ரியனாகிய நீ இங்ஙனஞ்செய்வது தருமமன்று:எழுந்திரு.புறப்பட்டு அயோத்திசேருக' என்றனன்: பரதன் உடன்வந்தவர்களைப் பார்த்து 'நீங்களாவது என்னண்ணனைத் திருப்பமாட்டீர்களா?' என்ன, அவர்களும் 'இராமனது தருமத்திற் பிடிமானத்தை நன்கறிந்திருக்கிறோம்: ஆகையால், இவனைத் திருப்பச் சாத்தியமில்லை' என்ன, இராமன் பரதனைப்பார்த்து, 'தருமத்திற் கண்வைத்த உன் நண்பர்களும் இவ்வாறு சொல்லுகின்றனர்: நீ க்ஷத்திரியர்க்குத்தகாத காரியத்தைச் செய்தாயாதலால், பிராயச்சித்தமாக என்னையும் ஜலத்தையும் பரிசிப்பாயாக' என்ன, பரதனும் எழுந்து அங்ஙனமேசெய்து, ஜனங்களைநோக்கி, 'நான் என் தந்தையையாவது இராச்சியம் வேணுமென்று கேட்டதில்லை: தாயையும் விதிக்கவில்லை. என் அண்ணன் வனஞ்செல்ல அனுமதியும்செய்யவில்லை; இராமன் தந்தையின் சொல்லைத் தவறாதுசெய்ய வேணுமாயின் அவனுக்காக நான் பதினாலுவருஷம் வனவாசஞ்செய்கிறேன்: எனக்குப்பதிலாக இராமன் இராச்சியத்தையாளட்டும்: அப்போது இருவரும் தந்தைசொல்லை நடத்தியவராவோம்' என்ன, இராமன் 'தந்தை எதைச்செய்தாரோ அதை மாற்ற நமக்கு வல்லமையில்லை; சக்தியில்லாமற்போனால் ஒருவனுக்குப்பதில் மற்றொருவன் அதைசசெய்யலாம்: சக்திமானாயிருப்பவன் செய்தல்கூடாது. ஆகையால், பதினான்குவருஷம் வனவாசஞ்செய்துமுடிந்ததும் இராச்சியத்தை யொப்புக்கொள்வேன்'என்று நகரத்தவர் முதலியோரை நோக்கிச்சொல்லி, பரதனைப்பார்த்து 'மன்னவர் வார்த்தையின்படி நான் நடந்து கொண்டேனாகையால்,நீ என் வார்த்தையின்படி பட்டங்கட்டிக்கொண்டு தந்தையைச் சத்தியந்தவறாதவராக்குக' என்றனன். அங்குக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருந்த வித்தர்கள் தேவரிஷிகள் முதலானோர் அவ்வுடன்பிறந்தோரின் தர்மஸ்வபாவத்தை மெச்சிக்கூறி, இராவணவதத்தைவிரும்பி, பரதனைநோக்கி 'இராமன் மொழிப்படியே செய்து தந்தையைச் சத்தியசந்தனாக்குக' என்றுசொல்லிச் சென்றனர். பரதன் தன்விருப்பம் ஈடேறாமலிருப்பதுகண்டு ஒளிகுன்றி, 'நீ எல்லா வுலகங்களையும் பாதுகாக்கவல்லவன்: பந்துக்கள் சேனாபதிகள் முதலியோர் உன்னையே யெதிர்பார்க்கின்றனர்: நீ குலதர்மத்துக்கு மாறுபடாமல் அரசு கைக்கொள்க' என்றுசொல்லிப் பாதங்களில் வீழ்ந்து பிரார்த்தித்தான்: பரதனை இராமன் கையினாலெடுத்துப் புகழ்ந்து தன்மனவுறுதியைக்கூறி 'உன்தாயின்மீது மனத்தாங்கலின்றிநடக்க வேண்டும்' என்றான். இராமனது மனவுறுதியைக்கண்டு 'இந்தப்பாதுகைகளில் உன்பாதங்களையிட்டு ஏறுவாயாக: இவையே எல்லாவுலகத்தின் யோகக்ஷேமத்தையும் நடத்தவல்லவை' என்ன, இராமபிரானும் தான் அவை

களின்மீது ஏறி இறங்கி அவைகளைத் தந்தனன். பரதன் அந்தப்பாதுகைகளை வணங்கி இராமனை நோக்கி 'நான் இவைகளின்மேல் அரசியலை வைத்துப் பட்டணத்திற்கு வெளியே வாசஞ்செய்திருப்பேன்: பதினான்குவருஷம் கழிந்ததும் வராவிடிலோ தீக்குதிப்பேன்' என்ன, இராமனும் இசைந்தா னென்பது முதனூலிற் கூறிய முறையாகும். (கஉகஅ)

கஙசு.—திருவடிநிலையைச் சூடியவண்ணம் பரதன் தொழுதுமீளுதல்.

அடித்தல மிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தல மிவையென முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினான்
பொடித்தல மிலங்குறு பொலங்கொள் மேனியான்.

(இ - ள்.) அழுத கண்ணினன் - அழுத கண்களையுடையவனும், தலம் பொடி இலங்குறு பொலம் கொள் மேனியான் - நிலத்தின் புழுதி(படிந்து) விளங்குகிற அழகுகொண்ட திருமேனியையுடையவனுமாகிய,பரதன்—, அடி தலம் இரண்டைஉம்- அந்தப்பாதுகையிரண்டனையும், முடி தலம் இவை என- கிரீடங்க ளிவையே யென்று கொண்டு, முறையின் சூடினன் - முறைமைப் படி சிரமேற்கொண்டவனாய், படித்தலத்து இறைஞ்சினன் - தரையில் விழுந்துவணங்கி, போயினான் - மீண்டுசென்றான்; (எ - று.)

அடித்தலம்-திருவடிநிற்குமிடம். முடித்தலம் - சிரசினிடத்திலிருப்பது.

கஙஎ.—இதுவும், அடுத்த கவியும் - பரதனுடன்வந்தவர் யாவரும் மீண்டுசென்றமையைத் தெரிவிக்கும்.

ஈன்றவர் முதலிய வெண்ணில் சுற்றமுஞ்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
[1]வான்றரு சேனையு மற்றுஞ் சுற்றுற
மூன்றுநூல் கிடந்ததோள் முனியும் போயினான்.

(இ - ள்.) ஈன்றவர் முதலிய-பெற்றதாய்மார் முதலான, எண் இல் சுற்றம்உம்-அளவில்லாத பந்துவர்க்கமும், சான்றவர் குழுவொடு - பெரியோர் கூட்டமும், தவத்து உளோர்கள்உம் - தவவொழுக்கத்திலுள்ள முனிவர்களும், வான் தரு சேனைஉம்-பெருமைபெற்ற சேனையும், மற்றுஉம் - மற்றுமெல்லாச்சனங்களும், சுற்றுற - (பரதனைச்) சூழ்ந்துசெல்ல, மூன்று நூல் கிடந்த தோள் முனிஉம் போயினான் - முப்புரிநூல்தங்கிய தோளையுடைய வசிட்டமுனிவனும் உடன்சென்றான்; (எ - று.)

வடமும் வடத்திற்புரியும் புரியில்நூலும் மும்மூன்றாகவே அமைந்ததாதலின், மூன்றுநூலென்று பூணூலுப் பெயர்; "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்" என்றார், திருமுருகாற்றுப்படையிலும். [1]மான்றருஞ்சேனையும் என்றபாடத்துக்கு, அருஞ் சேனையும் மான்று-அளவிடுதற்கு அரியசேனையும் (வருத்தத்தினால்) மனம்மயங்கி என்க. (கஉஉ௦)

கருஅ. பண்டைநூ றெரிபரத் துவனும் போயினான்
மண்டுநீர் நெடுநகர் [1]மாந்தர் போயினார்
விண்டுறை தேவரும் [2]விலகிப் போயினார்
கொண்டறன் றாணையாற் குகனும் போயினான்.

(இ - ள்.) பண்டை-பழமையான, நூல்-வேதசாஸ்திரங்களை, தெரி - அறிந்த, பரத்துவன் உம்-பரத்துவாசமுனிவனும், போயினான் - (தனது ஆச்சிரமத்துக்குச்) சென்றான்; மண்டு நீர் நெடு நகர் மாந்தர் - மிக்க அகழிநீர் சூழ்ந்த பெரிய அயோத்தியாநகரத்துச் சனங்களும், போயினார்-மீண்டுசென்றார்கள்; விண்டு உறை தேவர்உம் - ஆகாயத்திற்கூடிய தேவர்களும், விலகி போயினார் - விலகி(த் தத்தமிடஞ்)சென்றார்கள்; கொண்டல்தன் ஆணையால்- காளமேகம்போன்ற ஸ்ரீராமபிரானது கட்டளையால், குகன்உம் போயினான்-.

வேதம் கடவுள்போல நித்திய மாதலாலும், வினையினீங்கிவிளங்கியஅறிவின் முனைவன் கண்ட முதல்நூலாதலாலும், அதற்குமுந்தினநூல் எதுவுமின்றாதலாலும், 'பண்டைநூல்' எனப்படும். விஷ்ணுஎன்னும் வடசொல்- தமிழில் 'விண்டு'எனச் சிதையும்; 'விஷ்ணுபதம்' என்ற ஆகாயத்தின்பெயர், இங்கு ஒருபகுதி தொக்கு நின்றது: இதனை வடநூலார் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' என்பர்; இனிவிஷ்ணுஎன்கிற வடசொல்லே எங்கும் வியாபிப்பதுஎன்ற காரணம்பற்றி ஆகாயத்தைக்காட்டுமென்றும், அதுவே விண்டு எனச்சிதைந்துவந்ததென்றும் கொள்ளலும் ஒன்று. கொண்டல்-ஆகுபெயர். பரத்துவாசன் பரதனுடன்சென்றதாக முதனூலிற் கூறப்படவில்லை: மீண்டு வருகையில் தான் பாதுகம்பெற்றுச் செல்வதைப் பரத்துவாசமுனிவனுக்கு அறிவித்துப் பரதன்சென்றதாக முதனூலிலுள்ளது. பி - ம்:—[1]மைந்தர். [2]விரைவிற். சிலபிரதிகளில், மூன்றுநான்காமடிகள் மாறிக்கிடக்கின்றன. சிலபிரதிகளில் மூன்றாமடியில், 'எண்டிசைவாணரு மிரஙகிப்போயினார்' என்றும் 'எண்டிசையரசருமிரங்கிப்போயினார்' என்றும் பாடம். (கஉஉக)

**கருகூ.—இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்: பரதன் அயோத்தி சேராது நந்தியம்பதியிற் பாதுகத்துக்கு முடிசூட்டிச் செங்கோல் நடப்பித்தல்.**

பாதுகந் [1]தலைக்கொடு பரதன் பைம்புனன்
மோதுகங் கையின்கரை கடந்து முந்தினான்
போதுகுங் கடிபொழி லயோத்தி புக்கில
னோது[2]கங் குலினெடி துறக்க நீங்கினான்.

(இ - ள்.) பரதன்—,—பாதுகம் தலை கொடு-இராமபாதுகையைத் தலைமேற்கொண்டு, பை புனல் மோது கங்கையின் கரை கடந்து முந்தினான் - குளிர்ந்த நீர் வந்துமோதுகிற கங்கையின் கரையைத் தாண்டி முற்பட்டு, போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்-மலர்கள் சிந்துகிற நறுமணமமைந்த அயோத்தியாநகரத்திற் செல்லாதவனாய், ஓது கங்குலின் நெடிது உறக்கம் நீங்கினான்-சொல்லப்பட்ட இராத்திரியில் மிகவும் தூக்கமொழிந்து, —(எ - று.) "இருத்தனன்மேயினான்" என அடுத்தகவியோடு முடியும் நீங்கினான் - முற்றெச்சம். பி-ம்:—[1]தலைக்கொண்டு. [2]கங்குலும். (கஉஉஉ)

கசுO. நந்தியம் பதியிடை நாதன் [1]பாதுகஞ்
செந்தனிக் கோன்முறை [2]செலுத்தச் சிந்தையா
னிந்தியங் களையவித் திருத்தன் மேயினு
னந்தியும் பகலுநீ ரறுத கண்ணினன்.

(இ-ள்.) நந்தி அம் பதியிடை - நந்திக்கிராமமென்னுமிடத்திலே, நாதன் பாதுகம் - தலைவனான இராமனது திருவடிநிலை, செம் தனி கோல் முறை செலுத்த - ஒப்பற்ற செங்கோலை முறைப்படி செலுத்த, (பரதன்), அந்திஉம் பகல்உம் நீர் அறுத கண்ணினன் - இரவும்பகலும் நீர்ப்பெருக்கு இடையறுத கண்களையுடையவனாய், சிந்தையான் இந்தியங்களை அவித்து - மனத்தினால் ஐம்பொறிகளையும் அடக்கி, இருத்தல் மேயினன்-(அங்குத்) தங்கியிருத்தலைப் பொருந்தினான்; (எ - று.)—நந்தியம்பதி-அயோத்திநகரத்துக்கு அருகிலுள்ள தோர் ஊர்; அம்-சாரியை. பி-ம்:—[1]பாதங்கள். [2]செலுத்துஞ். (கஉஉரு)

கசுக.—இராமன் சீதாலட்சுமணரோடு தென்றிசைநோக்கிச் செல்லல்.

[1]குன்றினி லிருந்தன னென்னுங் [2]கொள்கையா
[3]னின்றவர் நலிவரா [4]னேயத் தாலெனுத்
தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலுந்
தென்றிசை [5]நெறியினைச் சேறன் மேயினன்.

(இ-ள்.) 'குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால்-(இராமன்) சித்திரகூடபருவதத்திலுள்ளான் என்ற எண்ணத்தால், நின்றவர் - (அயோத்தியாநகரத்தில்) உள்ளவர், நேயத்தால் - (நம்மீது உள்ள) அன்பினால், நலிவர்-(அடிக்கடிவந்து)வருத்துவர்,'எனு-என்றுஎண்ணி, (இராமபிரான்), தன் துணை தம்பிஉம்-தனக்குத் துணையாகவுள்ள தம்பியான இலக்குமணனும், தான்உம்-, தையல்உம் - சீதாதேவியுமாக, தென் திசை நெறியினை சேறல் மேயினன் - தெற்குத்திக்கை நோக்கிய வழியில் நடத்தலைப் பொருந்தினான்; (எ - று.)

சுற்றத்தவர் நண்பர் முதலிய அனைவரும் அறிந்த இவ்விடத்திலேயே இன்னமும் நாம் இருந்தால் மீண்டும்அவர்கள் அடிக்கடிவந்து நம்மை நகருக்கு மீளும்படி நிர்ப்பந்திக்கக்கூடுமென்று எண்ணி அப்பாற்செல்லலுற்றான் இராமனென்க. தம்பியும்தானும் தையலும் சேறல்மேயினன்-ஆண்பாலும் பெண்பாலும் கலந்து எண்ணிச் சிறப்பினால் ஆண்பால் முடிபைப்பெற்றன;"தானுந் தன்தையலுந் தாழ்சடையோ னுண்டிலனேல்" என்பதிற்போல. பி-ம்:—[1]குன்றினிது. [2]கொள்கைதான். [3]நின்றது. [4]நேசத்தார். [5]இராமனும். (கஉஉசு)

திருவடிசூட்டுபடலம் முற்றிற்று.

அயோத்தியாகாண்டம் முற்றுப்பெற்றது.

# கம்பராமாயணத்தில் அயோத்தியாகாண்டச்

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

# செய்யுண் முதற்குறிப்பகராதி

# கம்பராமாயணத்து அயோத்தியாகாண்டத்தின் அரும்பதவகராதி முதலியன. *





* இங்குக் காட்டப்படுபவை - படலப்பெயரின் முதற்குறிப்பும், படலச் செய்யுள்களினெண்ணும்.

அடியன்னசஞ்சம், கங்கை-20
அடியனேன், கைகேயி-110, நகர்-18
அடியுறத்தழுவுதல், தைல 25
அடியேன், நகர்-130
அடியோம், கங்கை-59
அடுக்கும்-தகும்: மந்திர-38
அடுத்தல்-நேர்தல்: நகர்-94
அடை-இலை: தைல-17
அடைக்கலப்பொருளை வெளவினேன், பள்ளி-103
அடையலர், நகர்-160
அடையாளம், தைல-19
அடைவரும் - பொருந்திய: ஆறுசெல்-15
அண்டர்தம்மனை, வனம்-10
அண்டர்நாயகன், மந்திர-57
அண்ணல், மந்திர - 52; நகர் - 18, 90; கஙகை - 63; வனம் - 39; பள்ளி 125
அண்ணல் வெங்கரி, குகப்-2
அண்முதல் - வந்துசேர்தல்: கஙகை-90
அணங்கினும் இனியாய், வனம்-15
அணஙகு-துன்பம்: மந்தரை-45
அணிகலனை நீத்தமகளிர் × பூவுதிர்கொம்பு: ஆறுசெல்-34
அணியர், நகர்-186
அணியிழை - அலங்கரித்தற்குரிய ஆபரணம்: வனம்-11
அணியிழைமயில்-சீதை: கங்கை-77
அணிவுறுமலை, மந்தரை-39
அணை - நீர்ப்பெருக்கைத்தடுப்பது : மந்திர-55
அத்திரம், கைகேசி-95
அத்தையர்-மாமிமார்: தைல-40
அதர்-வழி: வனம்-16, திருவடி-97
அதிர்கடல்வையகம், ஆறுசெல்-35
அந்தண்புனல், நகர்-82
அந்தணர், மந்திர - 74, நகர்-96, ஆறுசெல்-52
அந்தணர் எல்லாவற்றிலுஞ்சிறந்தவர், மந்தரை-7
அந்தணர் குழாம், மந்திர-76
அந்தணரிடத்து விடைகேட்டல், கங்கை-64
அந்தணருறையுளை யனலியூட்டினேன், பள்ளி-104
அந்தணன், வனம்-22
அந்தணாளிலறநெறி பிழைத்தவன், பள்ளி-100
அந்தணாளன் தாளினைச சென்னியிற்புனைந்தேத்தி ஏயினசெய்தி, மந்தரை-9
அந்தம், மந்திர-46
அந்தமில் குணத்தான், பள்ளி-42
அந்தமில்சோகம், நகர்-93
அந்தமில்பேரரசு, ஆறுசெல்-11
அந்தமில்வேதனை, ஆறுசெல்-56
அந்தமிலறிவன் - வசிட்டன்; மந்திர-14
அந்தமின்னலம், திருவடி-1
அந்தர் × நறையுண்டவண்டு;வனம்-13; × தென்றற்காற்று, திருவடி-14
அந்தர்க்குமற்றொருவர் கைதருதல், திருவடி-14
அந்தரத்தமரருமழுதுசோர, பள்ளி-90
அந்தரத்தளவுநின்றளிக்கு மானை, மந்திர-6
அந்தரத்தின், திருவடி-8
அந்தரந்தீர்ந்துலகளித்தல், மந்தரை-60
அந்தரம்-ஆகாயம்: மந்திர-6; வானுலகம்: ஆறுசெல் - 54; தீமை: கைகேசி-24
அந்தரமுனிவர், ஆறுசெல்-2
அந்தியும் பகலு நீரொழுத கண், திருவடி-140
அந்தியைநோக்குதல், சித்திர-43
அந்தோ, கைகேசி - 21; நகர்-57, 77, 114; தைல-55; வனம்-25; திருவடி-60
அப்பாலேற்றுதல்-அக்கரையிற்சேர்த்தல்: கங்கை 67
அப்புதல், திருவடி-5
அப்புறம், கங்கை-37
அப்புறுகடல், வனம்-26
அபயம், கைகேசி-33
அம்பரத்தினமும் பகைஞருளரோ, பள்ளி-53
அம்பரத்தினீங்காவரசு, திருவடி-6[illegible]
அம்பரம், கைகேசி 60, திருவடி-1[illegible]
அம்பனகண்ணவள், கைகேசி-16
அம்பி-ஓடம்: கங்கை-28

கொடுத்தால் முறைபிறழாதோ, நகர்-112

இராமனுடன்சென்று மீண்ட சனங்கள் × உலகம் வருத்துநாள் மண்முழுதேறியொடுங்குநகடல்: தைல-84

இராமனுடன் போகாதிருந்தது நன்று, குகப்-18

இராம னுன்மைந்த ஞணே,கைகேசி-7

இராமனெங்கன்னு தோன் றுகின்ருன், கைகேசி-86

இராம னென்மகனல்லன் உம்மகன், மந்திர-87

இராமனே யெல்லாவுறவும், பள்ளி-58

இராமனைக் கற்றறிந்தோரும் மறையோரும் உண்ணுநீரினுமுயிரினுமுவப்பார், மந்திர-42

இராமனைக்காணுதல் × இறந்ததாதையைக்காணுதல்: திருவடி-53

இராமனைக்குறைபடக்கூறிக் கோழடி நாளை யவன் குடுவனென்று ..னிகூறல், மந்தரை-50

இராமனைத் தழுவியது தோளும் மார்பும் பூபாரத்தைத் தாஙகும் பரப் னவோ என்று பார்ப்பதுபோலும், மந்திர-62

இராமனை நோக்கி மனங்களித்தல், கங்கை-11

இராமனைப் பிரிந்தபோது கணவனையுமிழந்த கோசலை×வானீர் சுண்டி மண்ணறவற்றி மறுகுற்ற மீன், தைல-64

இராமனைப் பிரியுங் கோசலை கன்றுபிரியுங கறவை: நகர்-14

இராமனைப் புகழ்ந்து முனிவன் கூறத் தசரதன் பிஞ்ஞகன் வில்லிறுத்ததைக் கேட்டநாள் முதலியவற்றினும் மிகமகிழ்தல், மந்திரப் 44

இராமனைப் புத்திரனுகப் பெற்ற தன் பயன் அரசியலிடும்பையில் நீங்குதல், மந்திர-67

இராமனைப் பெற்றபின் அவனியாள்வார் புத்திரரைப்பெறுதல் புல்லிது, கைகேசி-95

இராமனைப்பெற்றவள் தளர்வது தகுதியன்று, மந்திர 65

இராமனைப்பெற்ருர் குலமன்னவரில் முன் யாவருமில்லை, மந்திர-37

இராமனைப்போல வுயிர்களும் அவனிடத்து அன்பின, மந்திர-85

இராமனை முனிவர் மனையினீங்கிய மக்களை நேடிக் கண்டனர் போலக் காணுதல், கங்கை-13

இராமனையரிதிற் பெற்று வனத் திழக்கும் கோசலை, நகர்-13

இராமனை யூழ்வினைப்பயத்தாலும் வேள்விப்பயத்தாலுந் தசரதன் பெற்றது, மந்திர-67

இராமனை வணங்கினலன்றிச் சிந்தையின் றுயர் தீராது, பள்ளி-58

இராமனைவிடப் பரதனுயர்ந்தவன், குகப்-35

இராமனை வேதியர் முதலோர் அறப்பயனென்பர், மந்திர-41

இராமனேடுறைதலின் முனிவனும் குவனென்றது, வனம் 29

இராவணன், மந்திர - 3, மந்தரை - 39

இராவானது ஒன்றில் விருப்புற்ருர்க்கு நெடுகித்தோன்றுதல், கைகேசி - 55

இரிதல்-நிலைகெடுதல்: சித்திர-38

இரியல் போதல் - நிலைகெட்டோடுதல்; பள்ளி-109

இரியற்குரல்-கூக்குரல்: நகர்-35

இரீஇ, மந்திர-63

இருக்கை, மந்தரை-54

இருகணருவிசோர்தல், கங்கை-48

இருகுன்றுபோலக் குலவியதோள், சித்திர 53

இருகை, வனம்-36

இருகைகூப்புதல், பள்ளி-43

இருகையிற்கரி நிக ரெண்ணிறந்தவர், நகர்-178

இருட்பகை, கங்கை-49

இருட்பகையோட வெய்யவனெழுதல், கைகேசி-61

இருடியரில் மூத்தவர்க்கு யானைக் கன்று துளைக்கையா லருவிநீர் கொணாந்து குண்டிகையிற் பெய்தல், சித்திர-29

இருண்டகுஞ்சி, கங்கை 41

இருந்தவந்தணன்-பிரமன்;தைல 63

உதவுதல்-தருதல்: சித்திர-5
உதித்தல்-பருத்தல்; நகர்-135
உதிரத்தல்-குலுக்குதல்: சித்திர-14
உதிரம், சித்திர-6, திருவடி-32
உதிரமுமிழ் கண்கள், பள்ளி-66
உதிரவாரி, நகர்-177
உந்தி × சுழித்த செம்பொற் றெருளா: சித்திர-21
உந்திக்கமலத்திற் கடல்வண்ணன் யாவையுந்தோற்றுவித்தல், திருவடி - 121
உந்திப்போதல் - தள்ளிக்கொண்டு செல்லுதல்: ஆறுசெல்-54
உந்தியான்-பிரமன்: தைல-51
உந்துதல் - தூண்டுதல், செலுத்துதல், அலேமோதுதல்: நகர்-114; தைல-57, 75; பள்ளி-128
உந்தை, பள்ளி-2
உந்தையார், பள்ளி-123
உந்தையோவிறந்தனன், ஆறுசெல்-11
உபகாரம் = உபஹாரம், காணிக்கைப்பொருள்: கஙகை-36
உபயபங்கயங்கள், கங்கை-52
உம்பர்-தேவர்: பள்ளி 54, மேலிம் சித்திர-3
உம்பர்கோனுகரமிர்து, திருவடி-10
உம்பரேற்றுதல், குகப்-12
உம்பி-இலக்குமணன்: கங்கை-75: பரதன், கங்கை-76
உம்முனீத்தனன், ஆறுசெல்-11
உம்மை, கங்கை-69
உமிழ்தல் - வெளிப்படுதல்: கைகேசி-67, பள்ளி-17
உமைக்குநாதன், மந்தரை-15
உய்த்துரைத்த - ஆராய்ந்துகூறிய, நகர்-27
உய்தல், கஙகை-17
உய்திறம், திருவடி-78
உய்ந்துபோதல் - கடைத்தேறிப் போதல்: மந்திர-29
உய்யல், மந்திர-64
உயங்கல், பள்ளி-54
உயங்குதல் - வருந்துதல்: நகர்-81: மனந்தளர்தல், நகர் - 202, 219, பள்ளி-22
உயர்கோசலே, நகர்-51
உயர்தவத்தோரோங்கல், நகர்-92
உயல்வுறுதல் - நங்கிமறைதல்: குகப் 56
உயாவுற-பெருக திருவடி-55
உயிர்-மனம்: மந்திர-60
உயிர் ஒழுகுதல், நகர்-56
உயிர்காணுதல் - தப்பிய உணர்வுவரப்பெறுதல்: நகர்-39
உயிர்காப்பார்-அரசர்: தைல-65
உயிர்சென்றுனென்னுந் தன்மையெய்துதல், நகர்-67
உயிர்த்திலன், பள்ளி-45
உயிர்த்துணைவற்கு அரசு ஈதல், குகப்-12
உயிர்த்தோழமை தந்தான் - இராமன்: குகப்-17
உயிர்தளிப்ப, மந்திர-60
உயிர்துளங்குற, பள்ளி-127
உயிர்துறந்தாற்போல் முகவொளிதுறத்தல், நகர்-207
உயிர்துறப்பெளிதன்று, தைல-41
உயிர்நீங்குவதுானன்றுகும், நகர்-66
உயிர் நீத்தால்தான் கைகேயியின் பாவந்தீருமெனல், பள்ளி-86
உயிர்ப்பாரங் குறைந்து தேய்தல் - சுமையாகத்தோன்றும் உயிர் உற்சாகமற்றிருத்தல்: குகப் - 70: தேய தான் இடரிலாத என்க.
உயிர்ப்பெனுமூதை, நகர்-116
உயிர்ப்போடு அனற்கொழுந்தோடுதல் சினக்குறி, பள்ளி-66
உயிர் புகுதல் - உயிர் தளர்தல், நகர்-146
உயிர் போகுந்தருணத்து வருத்தம், நகர்-12
உயிர்போலும் மக்கள், வனம்-28
உயிர்போற்றுதல், நகர்-131
உயிர்போனதைக் கோசலே தொட்டுஅறிதல், தைல-62
உயிர் மருந்தன்று, குகப்-18
உயிர்வளர்த்துண்ணுமாசையான், பள்ளி-107
உயிர்வாழ்வேனே, நகர்-10
உயிர் வீகுதல், நகர்-90
உயிரலசுதல் - உயிரொடுங்குதல்: தைல-13
உயிரழிதல், நகர்-41
உயிரில் யாக்கையை அழுதிஞல்

உறுதுயர், கங்கை-76
உறுதுயர் எய்தியது ஒருவகைத் தன்று, பள்ளி-38
உறுபொருள் - எண்ணம்: ஆறுசெல்-3
உறுவது செய்தல், மந்திர-17
உறுவன-துன்பம்; மந்திர-12
உறை-உறுத்துதல்: வனம்-16, திருவடி-22
உறைபொதிந்த பவளத்தூண் X பனிபொதிகதிர்: மந்தரை-32
உறையுள்-வாழிடம்: கங்கை-26
உறைவிடம், கங்கை - 69, திருவடி-6
உறைவிடம் நல்கி, வனம்-28
உன்னருமுயிர், சித்திர-50
உன்ன வுன்ன நைந்துருகுதல், பள்ளி-120, 121
உன்னி, மந்திர-35
உன்னியது, மந்திர-15
உன்னுதல், மந்திர-31, நகர்-27
உன்னுந்தகைமைக் கடையாவுறு நோய், நகர்-34
உன்னுயிர்க்குக் கூற்றுருபுலகாளுதல், திருவடி-62
உன்னேல், கங்கை-74
உன்னைச்சார்ந்தோர்க்கு உதவலாகாது, மந்தரை-73
உன்னைப்பிரியின் கைகேசிநேராகேனோ, நகர்-65
உன்னையிரந்தோர்க்கு அளித்தலியலாது, மந்தரை-72
ஊககு-மிக்கது: மந்திர-48, தைல-53
ஊசலைக் கோங்கிலும் வேங்கையிலுந் தொடுத்தல், சித்திர-24
ஊடல் X கூடல்: கைகேசி-57: சித்திர-20
ஊடுகின்றனர், சித்திர-12
ஊடுதல், வனம்-7
ஊணை நாய்போலுண்டவன், பள்ளி-111
ஊதியம், சித்திர-57
ஊதுலையிற்கனலென்ன வுயிர்த்தல், கைகேசி-12
ஊதை, நகர்-98
ஊதைபிறங்குதல் - காற்றுவெளித்தோன்றுதல்: நகர்-116

ஊர்-ஊர்கோள்: தைல-57: "ஊர்கொண்டதிங்கள்" X உழையர் சுற்றிய மன்னன்.
ஊர்தி-பண்டி: மந்திர-68
ஊருணிநிறைதல் X இராமனுக்கு இராச்சியமளித்தல்; மந்திர-84
ஊருநர், பள்ளி-35
ஊழ்-முறை கைகேசி-42
ஊழ்வினையால் நீங்குறின் தீர்க்கவல்லாரில்லை, தைல-41
ஊழ்வினை யெவராலுமொழிக்கற்பாலதன்று, நகர்-164
ஊழி - முறைமை, உலகு, கற்பகாலம்: மந்திர 66
ஊழிதிரிதல் - யுகம்முடிவுபெறுதல், தைல-70
ஊழிநின்றெண்ணுதல், மந்திர-66
ஊழிபலவொன்றிவாழ்தல், நகா-6
ஊழிபேர்வது, கைகேசி-16
ஊழிபேரினு முய்குந ருய்குவர், நகர்-231
ஊழியருக்கன், நகர்-228
ஊழியிறுதி, குகப்-49
ஊழின்செயல், நகர்-80
ஊழுற, சித்திர-46
ஊற்றம்-வலிமை கங்கை-35
ஊற்றுடைக்கடல்வண்ணன், திருவடி-121
ஊற்றுமாறில, திருவடி-84
ஊற்றுறுகண பள்ளி-57
ஊறுகனி, வனம்-35
ஊறுகொண்டு - துன்பத்தையுண்டாக்கிக்கொண்டு: பள்ளி-106
ஊறுகொள்ளுதல் - அறையப்படுதல்: பள்ளி-17
ஊறுதல் - களிப்புமிகுதல்: கைகேசி-45
ஊன்புகுதல் - உடல்வற்றுதல்: நகர்-146
ஊன்றுதல்-எதிர்நிற்றல்: குகப்-12
ஊனகம் பற்றியவுயிர், தைல-44
ஊனடைந்த தெய்வ முயிரடைந்த வேல், திருவடி 65
ஊனம் குறைவு: திருவடி-9
ஊனம்வேறிலான், நகர்-197
ஊனைந்தவுயிர், பள்ளி-16
ஊனும்முயிரும் முடையார்-பிராணிகள்: நகர்-120
ஊனுமுடலும்போல், மந்திர-1

கடல் நதியைக்கொண்டது, குகப்-4
கடல் பாரின்மீது செல்லுதல், ஆறுசெல்-32
கடல்வண்ணன், மந்தரை-69
கடலமிர்து, கங்கை-2
கடலனையான், கங்கை-58
கடலிடை-பூமி: மந்திர-53
கடலுடைக்கிழவன், மந்திர-83
கடலென மந்திரிமார் மிகப்பலர் சுற்றுதல், மந்திர-13
கடவுட்டிங்கள், தைல-49
கடவுட்டிருநதி கங்கையென்பது, கங்கை-10
கடவுள் வைப்பெங்கும் உள்ளும் புறனும் உளனுதல் - ஊனும் உயிரும், உயிரும் உணரும் போலுதல்; மந்திர-1
கடவுளரை நிந்திப்போன், பள்ளி - 104
கடன்-முறை; மந்திர - 72, செய்ய வேண்டியது, ஆறுசெல்-4
கடனஞ்சனையாள், நகர்-39
கடனீர் குடித்த சரிதை, ஆறுசெல்-44
கடனெழுக்குதல், திருவடி-78
கடாவுதல்-தூண்டுதல்; பள்ளி-7
கடி-நறுமணம், காவல்: குகப்-13
கடிகமழ் கமலம், கங்கை-67
கடிகை-நாழிகை: தைல-55
கடித்தவாயினன், குகப் 9
கடிதில்-விரைவாக: சித்திர-5
கடிதினின், கங்கை-65
கடிது-மிகவும், தைல 82
கடிதுசெல்லுதல், கங்கை-66
கடியசாபம், நகர்-89
கடு விஷம்: தைல-5, வனம்-42
கடுங்குட்டி, நகர்-117
கடுத்தல்-ஒத்தல், ஆறுசெல்-47
கடுந்திறன் மடங்கல், கங்கை-51
கடுநடை, குகப்-52
கடுவன் ஆண்குரங்கு, சித்திர-14, 22
கடுவெந்தயர்கின்றபாம்பு, வனம்-42
கடைக்கண், மந்தரை-42
கடைசியர், பள்ளி-22
கடைத்தலை, பள்ளி-26
கடைப்பிடி, மந்தரை-6
கடைமுறை - முதுமைப் பருவம்; மந்திர, 66· இறுதியாக, தைல-25
கடையுகம்-யுகக்கடை: குகப்-11
கடையோட மெய்த்த வேந்தன், தைல-73
கடைவாய்பால்பாய்தல், கங்கை-8
கண் X மாவகிர்: தைல-12, பீலிக்கண்ணும், காணுங் கண்ணும், வனம்-4
கண்கள் X வாள், மந்திர-59
கண்கள்போல்வார்மக்கள், நகர்-144
கண்களின்வருணனை, சித்திர - 37
கண்களுக்கு வாள் வேல் வண்டு கெண்டை உபமானம், மந்திர-56
கண்குழித்தழுதல், நகர்-201
கண்கைமனம்செய்யான், நகர்-58
கண்ணொடு பிறத்தலுங் கடை, நகர் - 190
கணணகன்பெரும்புனல், குகப்-2
கண்ணகன்றடமார்பு, கங்கை-33
கண்ணநீர்வில்லொடு நிலத்து வீழ்தல், திருவடி-51
கண்ணநீரினுற் கழுவியாட்டுதல், பள்ளி-125
கண்ணன் - இராமன், கங்கை-41 ஆறுசெல்-50, திருவடி-50, 54
கண்ணிலாநாடு X அரசனை யிழந்த நாடு: பள்ளி 94
கண்ணி லுதிரவாரியுகுதல், நகர்-177
கண்ணிற் புதுப்புனலாட்டுதல், கங்கை-14
கண்ணினும் நீராய் நெஞ்சுகுதல், நகர்-148
கண்ணீர்-கள்ளாகிய நீர், கண்ணநீர்: தைல-4
கண்ணீர்மெழுகுதல், நகர்-108
கண்ணீர்விழிவழியுகுதல், வனம்-23
கண்ணீரருவியாடுதல், ஆறுசெல்-58
கண்ணீராயொழுகுதல், நகர்-56
கண்ணீராலியுகுதல் X தரளத்தாம் பற்றுகுதல், நகர்-101
கண்ணீருகுத்தலாற் கண்டதில்லை, திருவடி-79
கண்ணுடைநுதலவன், பள்ளி 50
கண்ணுண்மணிபோன்மகவு, நகர் 88
கண்ணுதல் - மூளுதல்: ஆறுசெல்-51

கோசலை மன்னவன் வாசகத்தைக் கேட்டு வருந்துதல், நகர் - 9

கோசலை மன்னவனைத் தேற்றுதல், நகர் - 70

கோசலை மன்னனதுமெய்ம்முதலியவற்றைத் தைவந்திடுதல், நகர்-71

கோசலை மன்னனிடத்து மகன்மேலன்பையொழிகவெனல், நகர் - 53

கோசலைமூர்ச்சித்துக் கிடக்கு மரசனை நோக்கிப் புலம்பல், நகர்-41-34

கோசலையாமன்னம், நகர்-54

கோசலையின் துயர்நிலை,நகர்-11,12

கோசலையுறுதி மறந்திலள், மந்தரை - 56

கோசிகனென்னும் முனிவரன், நகர் - 23

கோட்டிமாக்கள், பள்ளி - 31

கோட்டுதல் - அணியப்பெறுதல், ஆறுசெல்-37

கோடகம்-புதுமை,குதிரை, பேரொலி: திருவடி - 33

கோடல், மந்திர - 27

கோடி, மந்திர-65

கோடிமணி, கைகேசி-96

கோடிமேலு நிதியம், பள்ளி-6

கோடுகள் X கொங்கை: குகப்-53

கோத்தாய், மந்திர-1

கோதறுகுணம், ஆறுசெல்-5

கோதானம் முதலியன கௌசலை புரிதல், மந்திர-97, 98

கோதில் செல்வம், திருவடி 13

கோதை-மாலை: நகர்-238, வனம் - 3: நாண், ஆறுசெல் - 30, 47

கோதைபுடைபெயர்தல், கண்சிவத்தல், கலஞ்சிந்துதல், நகர் - 98

கோதையர்-மகளிர்: பள்ளி-11

கோதைவரிவிற்குமரற் கொடுத்த நிலம், நகர்-113

கோதைவில், கங்கை - 46

கோப்ப-நிறைய: கைகேசி-6

கோபக்குறி, குகப்-7

கோபத்தினம்இன் றுயில்வதிவன, வனம்-3: கோபம் X மணி.

கோபம் மணி நிறத்தன, வனம்-45

கோமகன் - தசரதனுமாம்: ஆறுசெல் - 42

கோமலரோன்-பிரமன்: திருவடி-69

கோமுடி சூடுஞ்செய்திசொல்லிய கூனிக்குக் கைகேயி மணிமாலையீதல், மந்தரை-52

கோமுறை, திருவடி-134

கோயில்-அரண்மனை: தைல - 36 பள்ளி-1

கோரம் வட்டில்: மந்திர-27

கோல் - அம்பு: சித்திர-45: ஆறுசெல்-50

கோல்கொள்ளுதல் - தேர்ப்பாகு செய்தல்: மந்திர-21

கோலத்தின்றுறை, ஆறுசெல் - 39

கோலம், அழகு, வடிவு: கைகேசி - 102, ஆறுசெல்-30

கோலமங்கையர், வனம்-44

கோலமழித்தல் - அலங்காரத்தைக் களைதல்: சித்திர-21

கோலிற்றுழாவிய நெடுநாவாய் X காலுடைநெடுநெண்டு, கங்கை - 66

கோலுதல்-முயன்றுசெய்தல்: சித்திர-45: கருதுதல், வனம்-4

கோலைக் கொண்டுங் குற்றமகற்றிக் குறிகொண்டார், கைகேசி - 25

கோலையுமிழ்சிலை, சித்திர-45

கோவைமாலை, கங்கை-21

கோவைமுத்து, ஆறுசெல்-37

கோழிகூவுதலின் உருணை, கைகேசி-47

கோள் - புத்திவலிமை, மந்திர - 9: யமன், நகர்-106: இடையூறு, நகர் - 135: மாறுபாடான எண்ணம், பள்ளி-78: பிடிக்கப்படுதல், பள்ளி-97: தீமை, பள்ளி-102: சுமத்தல், கங்கை - 57: மறைக்கை, வனம் - 17: வலிமை, திருவடி-25

கோளரி, திருவடி - 67

கோளிரும்படை, திருவடி-25

கோளுமைம்பொறி, மந்தரை - 14

கோளுறுமடங்கல் X பரதன்: பள்ளி-97

கோற்றுறத்தல், மந்திர-1

கோன்முறையூட்டுதல். தைல-47

கௌதமன் இந்திரனைச் சபித்தது, தைல-6

சக்கரத்தவன் யோகில் தமியனுதல், சக்கரத்தவன் - திருமால்: மந்திர-5

சக்கரம் சித்திர-41

சக்கரவாளம் பனிங்குச்சுவரிருளைக் கிறலால் எப்போதும் பிரிந்து தளராமை, மந்தரை-35

சகடம், கைகேசி - 109

சகரர், நகர்-25

சகுந்தம் பறவை: சித்திர-43

சங்கம், வனம்-31

சங்கம் முரலுதல், பள்ளி-9

சங்கார்த்திட, மந்திர - 54

சங்கை-குற்றம்; கைகேசி-65

சங்கை தீர்தல், பள்ளி-141

சடங்கு, திருவடி-81

சடை, திருவடி-2

சடைக்கற்றை, கங்கை - 18, 21

சடைகொள் சென்னியர், சித்திர-35

சடைமா மகுடம் புனைதல், நகர்-57

சத்திரம்-குடை: கைகேசி-95

சதமகற்கு அரசளித்த வாழியான்-தசரதன்: திருவடி 63

சதுரங்கசேனை செல்லுதலின் வருணனை, ஆறுசெல் - 32

சந்தங்கமழுந்தோள், நகர்-82

சந்தம் - சந்தனம், மணம், அழகு; நகர்-82

சந்த முதலியவற்றை வறியோர் கொளவழங்கென நிறைத்தல், கைகேசி-93

சந்தனஞ் செறிந்தமலை - சித்திரகூடம், சித்திர - 1

சந்திரற்குவமை வெண்குடை, மந்திர-6

சந்திரனனையவிமானம், தைல-61

சந்திரோதயததைக் கண்டகடல் Xஇராமனையழைத்துவரப் புறப்படுமாறு அறைந்த பறையோசை கேட்ட நகர்: ஆறுசெல் - 24

சந்திரோதய வருணனை, தைல-49, 50

சபதஞ் செய்கையில் அறம் நடுங்கும், பள்ளி-96

சம்பகநறும்பொழில், தைல-15

சம்பரன், மந்தரை-81, பள்ளி-53, திருவடி-63

சம்பரனை யமர்வென்றாய், தைல-68

சமைத்தல்-இயற்றுதல்: மந்தரை - 24: அமைத்தல், மந்தரை-15

சரணம், நகர்-89

சரதம்-திண்ணம்· மந்தரை - 57, திருவடி - 27, 96

சரந்தாழ்வில், கைகேசி-34

சரயு, பள்ளி - 130

சரிதல்-கீழேசிந்துதல்: மந்திர - 58

சருமன்-தோலையுடையவன்: வனம் - 21

சல போசனன், நகர் - 79

சலம்-கவலை, கோபமுமாம்: மந்திர-8, கைகேசி-13, சித்திர - 6

சலம்பிறிதுறுதல், பள்ளி-95

சலித்தல்-கோபித்தல்; நகர்-136

சலியா நிலை, நகர்-63

சன்னத்தன் - ஆயத்தமானவன், போர்க்கவசம் பூண்டவன்: நகர்-126

சனகன்பூவை, திருவடி - 92

சனகன்மாமடமயில், சித்திர - 1

சனகன்றையல், நகர் - 60

சனகி. மந்திர - 42, மந்தரை - 88, வனம் - 39

சனகி பூமிதேவி ஸ்ரீதேவி முதலியோரினும் நல்லள், மந்திர - 42

சாகலாவுயிர், நகர்-19

சாடுதல் - மோதியழித்தல்: குகப் - 22

சாதகர், திருவடி-35

சாதுகை - நல்லொழுக்கம், சாதுத்துவமுமாம்: கைகேசி - 66

சாந்தம், நகர்-184; ஆறுசெல்-47

சாந்துகொடுஅப்பினாற்போல் வாசகத்தாற் குளிர்தல், திருவடி - 5

சாபத்தால் தசரதன் மகிழ்தல், நகர் - 90

சாமகீதம், கைகேசி - 60

சாய்-பெருமை, கைகேசி-53

சாயல்-வடிவொப்புமை: வனம் - 4

சார்தல்-வந்துசேர்தல்: கங்கை-44

சார்பு-இடம்: பள்ளி - 53

சாரல்-மலைத்தாழ்வரை; சித்திர-2

சாரைப்பாம்பின் தலைய ஆம்பல், தைல - 51

சால, மந்திர - 64

சாலி, பள்ளி - 21

சாலை - பர்ணசாலை: சித்திர-45;

தசரதனே நீ தேம்பின் வையம்மு
மூதுந்துயரால் மறுகும், நகர் - 70

தசரதனை நகரத்தவரும் தேசத்தவ
ரும் இராமனைத்தேற்றிக் கொணர்வ
ரென்று ஆற்றியது, தைல - 24

தசும்புவேய்ந்தவ ரொத்தவர், சித்
திர - 36

தசைகவ்வுவன அம்புகள், திருவ
டி - 38

தஞ்சம்-இரட்சகம்; நகர்-10, ஆறு
செல்-12: தாழ்வு: தைல-64 [17

தஞ்சு - பற்றுக்கோடு, கைகேசி -

தஞ்செனவொதுங்கினோர், பள்ளி-
109: தஞ்சு - சரணம்.

தட்டு, குகப்-51, திருவடி-33

தடஞ்செய்தேரினன், திருவடி-94

தடந்தோள், நகர் - 95

தடம்-மலையடி, நீர்நிலை: X வனம்,
சித்திர-43, தாழ்வரை: சித்திர-4, 5

தடுக்கலாகலாத்துயரம், பள்ளி - 135

தடுமாறுதல், கைகேசி - 30

தண்டகம், தைல - 81

தண்டலை - குளிர்ந்த இடம், சோ
லை: கங்கை 7, சித்திர-4; வயல், பள்
ளி - 1

தண்டாத செங்கோற்றசரதன், ந
கர் - 94

தண்டாவனம், நகர் - 144

தண்டுளியருவிநீர், சித்திர-25

தண்டுறை, குகப் - 31

தண்ணுமை, நகர்-209

தண்ணுமையொலிபாடலைத் தழுவு
தல் X உடலையுயிர் தன்னுணர்வால்
தழுவுதல், பள்ளி - 16

தண்தங்குல் - குளிர்ச்சி தங்குதல்;
ஆறுசெல் - 37

தண்மை - இன்பம்: திருவடி - 71

தணப்பு - நீங்குதல்: நகர் - 174

தணிக்குறுபகை, பள்ளி-115 [83

தணிதல் - மகிழ்தல், மந்தரை -

தத்துவம் - மெய்ப்பொருள்: மந்த
ரை - 22 [ர - 8

தகைதல் - நெருங்குதல்: சித்தி

தந்தலையைத் தாம் துயர்மிகுதியிற்
கொய்து உருட்டுதல், நகர் - 178

தந்தவரத்தைத் தவிர்கெனலும் உர
மன்றியறமோ, கைகேசி - 34

தந்தி - ஆண்யானை: சித்திர - 43

தந்திரத்தலைவர், பள்ளி - 128, ஆ
றுசெல் - 2

தந்தீயும், கைகேசி - 29

தந்தைசார்விடம், பள்ளி - 39

தந்தைசொன்மிக்க மந்திரமில்லை,
மந்திர - 72

தந்தைதாயரே குரவர், திருவ
டி - 107

தந்தை துணை - சுமந்திரன்: குக
ப் - 27

தந்தையர் - மூதாதையர்: மந்தி
ர - 69

தந்தையாமென மாதவத்தோனைத்
தாழ்தல், திருவடி - 1

தந்தை யிறந்தபின் யார்முகத்து
விழிக்க ஆண்டு [அயோத்தி] வரு
வது, திருவடி - 64

தந்தையின் கட்டளையை என்ன
விளைந்தாலும் மறுக்கலாகாது, நகர் -
18

தந்தையினைய மந்திரியர், ஆறுசெ
ல் - 52

தந்தையினுங்களிகூரத் தழுவுதல்,
குகப் - 32

தந்தையுந் தாயுங் கொடியர், மந்த
ரை - 60

தந்தையுந்தாயு நீர், கைகேசி - 106

தந்தையைத் தாய்வாயால் நான்
கொன்றேன், பள்ளி - 84

தந்தையை மகன் நல்லுலகம் சேர்த்
தற்குப் பகீரதன் சரிதம் திருஷ்டாந்
தம், மந்திர - 69

தந்தையைவந்நீண் டஞ்சலெனுது
மகன் கொன்றான், தைல - 65

தபோதனர் இராமனைக்காணவரு
தல், கங்கை - 10

தபோதனர்க்குக் கடவுளால் இன்
பம் X இல்லறத்தோர்க்குப் பெண்பா
லால் இன்பம்: கங்கை - 11

தம்பி, சித்திர-45, கங்கை-40, 50

தம்பிக்குச் சொல்லியனுப்பிய உப
தேசம், தைல - 34

தம்பியர் இராமனைத் தாங்குதல்,
திருவடி - 67

தம்பியும் தானும் புக்கான், மந்தி
ர - 60

நடுவுறுதல் - உச்சியை யடைதல், வனம் - 34
நடை - நல்லொழுக்கம்: ஆறுசெல்- 15, × விடை: கங்கை - 2
நடைக்கு அஞ்சி அன்ன மொதுங்குதல், கங்கை - 20
நண்ணுதல் - அடைதல்: கங்கை - 37; திருவடி - 2. அறிதல், "தத்துவ நண்ணினோன்" மந்தரை - 22
நதிநீங்குதல் - நதியைக்கடத்தல், வனம் - 36
நதிவிடுதல் - நதியில் ஓடம்முதலியனசெலுத்துதல், கங்கை-65
நந்தலில் நகர், நகர் - 172
நந்தவனங்கள், திருவடி - 14
நந்தனவனம், கங்கை - 7
நந்தியம்பதி, திருவடி - 140
நந்துகள் தருதரளம், கங்கை - 7
நந்துதல்-அழிதல், கெடுதல், வளர்தல், பெருகுதல்: நகர்-179, திருவடி 8, 14; கொழித்தல், "பொன்னந்திய நதி" கங்கை - 7
நந்துறை புளினம், கங்கை 7
நம்பி, மந்திர-50, தைல 59, ஆறுசெல் - 22
நம்மனோர், சித்திர-50
நம்மின்மனம்வலியாரார், நகர்-106
நம்முன், குகப் - 38
நமைப்பயந்து புரந்தாள் - கைகேசி: நகர் - 134
நயம் - அழகு: குகப் 64
நயமினுவினோன், பள்ளி-105
நயனம், நகர் - 75, தைல-80
நயனம் அஞ்சம்பையும் அலகம்பையுங் கடத்தல், கங்கை - 3
நயனமிமைப்பிலன், குகப் - 42
நரகமுண்டெனு முரைபேணலன், பள்ளி - 111
நரகிடைவீழ்தல், பள்ளி - 103
நரகென்னதாக, பள்ளி - 105
நரம்பு, நகர் - 182, பள்ளி - 34
நரம்பெறிவுறுதல், சித்திர - 28
நரை, மந்திர - 3
நரைதோன்றுதலின் வருணனை, மந்திர 2
நல்கல்-கொடுப்பது, திருவடி - 46
நல்கிய - தந்த: மந்திர - 69
நல்கியது-அருளியது: ஆறுசெல்-41
நல்ல-புண்ணியகருமங்கள், வனம்-27
நல்லவர்-அமைச்சர், மந்தரை - 19
நல்லவன், தைல-59, ஆறுசெல்-22
நல்லவை, நகர் - 92
நல்லறப்பயன், மந்திர - 41
நல்லறம், சித்திர - 54
நல்லறம் இராச்சியத்தைத் தாங்குவதென்பது, மந்திர - 71
நல்லார்க்குப்பூண், நாண் மடமச்சம் பயிர்ப்பெனும் இவையே: கைகேசி - 39
நல்லான் றுஞ்சினன், பள்ளி - 82
நல்லியன் மங்கலநாள், மந்தரை-3
நல்லுரை, பள்ளி - 111
நல்லையல்லையென மந்தரையைப் பழித்தல், மந்தரை - 64
நல்வினை தீவினைகள் இன்பதுன்பங்கட்குக் காரணம், வனம் - 27
நல்வினையூற்றத்தினோர் - முனிவர்: மந்தரை - 20
நலம்-நன்மை: மந்திர-8,மந்தரை- 48; நற்குணம், மந்திர-62
நலம் நலியினும் மந்திரியர் நடுவுநோக்குதல், மந்திர - 7
நலம்பெய் வேதியர், சித்திர - 32
நலன்- இன்பம்: மந்திர - 28
நலிகிற்கும் வருத்தும்; நகர் - 146
நவ்வி-மான், தைல-10,திருவடி-11
நவை-குற்றம், மந்திர-19, 25, வனம்-18, திருவடி-40: பாவம்,வனம்-27
நள் - இடை, தைல - 87
நள்ளுறுதல் - விரும்புதல்: ஆறுசெல் - 7
நள்ளென்றொலித்தல், நகர் - 211
நள்ளென்னொலி, ஆறுசெல் - 27
நளிமுடி, மந்திர - 50, 75
நளிர்-குளிர்ச்சி, கைகேசி-46, திருவடி - 9
நளிர் கடனிலம், கங்கை - 73
நளிர் நிலம், மந்திர - 62
நளிர் புனற்கங்கை, குகப் - 60
நளிர்வல்லி, வனம் - 18
நளினபாதம், நகர் - 3
நளினம்போற் கையான், கைகேசி - 33
நற்றுதை நீ, நகர் - 137

